உ

ஓம் மஹாகணபதயே நம:

ஓம் ஸ்ரீ வாசுதேவாய நம:



# ஸ்ரீ பகவற்கீதை மூலமும்

ஸ்ரீ சிற்கனானந்தகிரி சுவாமிகளால்

செய்தருளப்பட்ட

## கூடார்த்ததீபிகையென்னும் உரையும்.

---

இவை

வேதாந்தபாஸ்கரரும் நியாயசந்திரருமாகிய

**ஸ்ரீ வீர-சுப்பய்ய சுவாமிகளவர்களால்**

மொழிபெயர்க்கப்பட்டு,

---

ஸ்ரீ வீர-மெய்யப்ப சுவாமிகளால்

சென்னை டைம்ஸ் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

---

1917

[*Copyright Registered.*]

விலை ரூபா. 5—0—0.

உ

ஓம் மகாகணபதயே நம:

ஸ்ரீ வாசுதேவாய நம:

# முகவுரை.

---

அறிவிற்சிறந்த பெரியீர்! சர்வகல்யாண குணகணாலங்கிருத சர்வேசுரரானவர்
இவ்வுலகைப்படைத்து அதனை நிலைபெறச்செய்ய அவாவினராய் மரீசி முதலாயி
னோரைப் பிரவிருத்தி தருமத்தின்கண்ணும், சனகாதியரை நிவிருத்தி தருமத்தின்
கண்ணும் முயலச்செய்தனர்; இவ்விரண்டுமே யுலகை யொழுங்குபடுத்துவன
வாதலின்.

அத்தருமமே நல்லோர் பல்லோராலும் அநுஷ்டிக்கப்பட்டு வந்ததாம். காலத்
திற்கேற்பக் காமமிகவே நன்மதி தேய்ந்து அதர்மம் விளையும், அவ்வதர்ம விளை
வால் தர்மம் தலைசாயும், சாயவே சகத்தின் நிலைகுலையும், அக்காற் கருணாமூர்த்தி
யும் ஆதிகர்த்தாவுமாய ஸ்ரீமந் நாராயணர் பிராஹ்மண்யத்தைக் காப்பாற்றும்
வாயிலாயுலகை நிலைபெறுத்த அவாவி ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாய் ஸ்ரீ தேவகியார்
திருவுதரத்தி லவதரித்தருளினரென்ப.

அக்கருணையை நிறத்தாற் காண்பிக்கும் கார்வண்ணன் தம்பொருட்டு
யாதொருபயனையும் விழையாரேனும், பிராணிகளை ஈடேற்ற வேண்டுமென்னுங்
காருண்யத்தால் அர்ச்சுனன் வாயிலாய் வேதவிகித இருதர்மங்களையும் விளக்கும்
கீதாமிருத விருஷ்டியைப் பொழிந்தனர்.

அக்கீதாமிருதத்தை, வேதராசிகளை நான்காய்ப்பகுத்துப் பைலாதிவாயிலாய்
விரிப்பித்தும் அதனது சூக்குமத்தன்மையால் அதனையறிய வல்லமையில்லாத அதி
காரிகள் தர்மாதி சர்வ புருஷார்த்தங்களையு மடையவேண்டுமென்னும் கருணை
யினால், சர்வஞ்ஞ சிகாமணியாகிய ஸ்ரீ வியாசபகவான் நூறாயிரம் கிரந்தவடிவ மகா
பாரதமெனப் பெயரிய ஒரு சம்மிதையைச்செய்து உடுக்கணத்தூடே யுவாமதி
யொளிர்வதொப்ப 700-சுலோகவடிவமாக வைத்தனர்.

அதன்கண்ணே, அதிகாரியானவன் பிரதமம் சுவர்க்காதிபயனைப் பயக்கும்
காமிய கருமத்தை யொழித்து நரகாதியைத்தரும் ஹிம்சை முதலியவற்றை
யெறிந்து பயனை விரும்பாதியற்றும் நிட்காம கர்மத்தைப் புரிந்து வரவேண்டு
மென்றும், அதனுள்ளும் பரமேசுராம ஜபஸ்துதி முதலியன பரமதர்மங்களென்
றும், அவ்விரண்டாலும் பாவமற்றுப் பரிசுத்தமான சித்தமுடையவனே ஆராய
அருகனென்றும், அவனுக்கதன்பின் முறையே நித்தியாநித்தியவஸ்து விவேகாதிய
நாற்சாதனங்களு முண்டாமென்றும், உண்டானபின் ஞானாசிரியரையடைந்து
சிசுரூஷை யாற்றவேண்டுமென்றும், ஆற்றிய தாலருளும் வேதாந்த சாஸ்திரத்தைக்
கேட்கவேண்டுமென்றும், கேட்டதைச் சிந்திக்கவேண்டுமென்றும், சிந்தித்ததைத்
தெளியவேண்டுமென்றும், அவற்றுள் முறையே பிரமாணகத அசம்பாவனை பிர
மேயகத அசம்பாவனை விபரீத பாவனை யென்பவை நீங்குமென்றும், அதன்பின்

குருவருளிய மகாவாக்கியத்தால் பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாமென்றும், உண்டாகவே அவித்தை யழியுமென்றும், அதனால் மயலையம் முதலியன நையுமென்றும், அங்ஙனே பிறப்பேயும் சர்வ சஞ்சிதகர்மங்களும் அழியுமென்றும், அந்த ஞானமகிமையா லாகாமிய கருமங்களுண்டாகாவென்றும், நீங்காப் பிராரப்தமும் சமாதியின் முயல்வால் நீங்குமென்றும், அதுவுங் கடவுள் வழிபாட்டால் அதி சுலபமாமென்றும், அதனான் மனோநாச வாசனாக்ஷயமுறவே தத்துவஞானத்தோடு ஏககாலப் பயில்வால் ஜீவன்முக்தியாமென்றும், அதன்பொருட்டே வித்வத் சந்யாசமென்றும், சவிகற்பத்தாற் சமைவுற்ற நிருத்த சித்தத்தே முப்பூமிய நிர்விகற்ப சமாதி யுண்டாமென்றும், முப்பூமியுற்றோரும் முறையே தம்மாலும், பிறராலும், இருவகையாலும் உத்தானதிசையை யடைவ ரடையாரென்றும், அத்தகைய பெரியோனையே நூலின்கண்ணே பிராமணன், பிரஹ்மவித் வரிஷ்டன், குணாதீதன், திரப்பிரஞ்ஞன் விஷ்ணுபக்தன் (பகவத்பக்தன்) அதிவர்ணாசிரமி, ஜீவன் முக்தன், ஆன்மாதி யெனக்கூறுவதாமென்றும், அவன்பால் விதிநிஷேதங்கள் செல்லாவென்றும், இவ்வெல்லாவற்றின்பொருட்டும் பகவத்பக்தி இன்றியமையாத சாதனமென்றும், ஜீவன்முக்தராய கிருதகிருத்தியரும் பயனின்றியுங் குதூஹலத்தாலிதனை யாற்றுவரென்றும், மைத்திரியாதிய குணம்போன்று பகவத்பக்தியு மியல்பேயாமென்றும், சர்வ மோக்ஷசாதனங்களும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாற் கூறப்பெற்றுள.

அதன் பெருமையை நோக்கிய ஸ்ரீ சங்கரபகவத்பாதாசாரிய சுவாமிகளும், ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும், ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி சுவாமிகளும், ஸ்ரீ நீலகண்ட பண்டிதரோ முதலாய அனேகம் பெரியோரும் உரையிட்டனர், ஆயினும் மவை வியாகரண வலியிலார்க்கு விளங்காமைகருதி அத்தேவ வாணியினுள்ள அவ்வியாக்கியானங்களைத் திரட்டி, ஸ்ரீ ஆன்மபுராணத்தையும், நியாயப்பிரகாசத்தையும், தத்வானுசந்தானத்தையும், இந்திபாஷையிற் கருணையாற்செய்த ஸ்ரீ சிற்கனனந்த சுவாமிகளால் கூடார்த்த தீபிகையெனப் பெயரிய ஒருரையானது அதிவிஸ்தாரமாய்ச் செய்யப்பட்டுள்ளது. அதனைத் தமிழ்மக்கட்குப் பயன்படும்வண்ணஞ் செய்யவெண்ணி நியாயசந்திரரும் வேதாந்த பாஸ்கரருமாகிய ஸ்ரீ வீர, சுப்பய்ய சுவாமிகளிடத்திற்றெரியப்படுத்த அவர்கள் தமது மாணாக்கரைக்கொண்டு 2-வது அத்தியாயம் 10-வது சுலோகம்வரை மொழிபெயர்க்கச்செய்தும் பின்னுமே ஸ்ரீமச் சங்கரபூஜ்யபகவத்பாத ஆசாரிய சுவாமிகள் பாடியமாரம்பித்த 2-வது அத்தியாய 11-வது சுலோகமுதற்கொண்டு மொழிபெயர்த்துத்தர அன்பொடுமேற்று அச்சியற்றி முடித்தேம். இதற்கு இடையில் அநேகமிடையூறு நேர்ந்தபோதினும் இனிது முடிப்பித்த இறைவனை யென்றுமேத்துவோமாக. இந்நூல் சர்வமத சம்மதமாயும் ஒவ்வொருமனுடனும் தொடக்கமுதல் முத்திவரை நடக்கவேண்டிய யாவற்றையும் புகல்வதாயும், தெளிவான உரையுடையதாயும், புராணப்பிரசித்தமாய மிகுந்த மகிமையோடு கூடியதாயுமிருத்தலின் ஒவ்வொருவர் கரத்திலும் கங்கணம் போலிலங்கவேண்டியதின்றியமையாததாம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

விலாசம்,

மூர்த்தி சுவாமிகள்,
வியாசர்பாடி, ஆநந்தாஸ்ரமம்,
பெரம்பூர் பாரக்ஸ் போஸ்டு, சென்னை.

இங்ஙனம்,
வீர-மெய்யப்ப சுவாமிகள்,
கோ. ஆ. பெரியமடம், பொருள்வைத்தசேரி,
சிக்கல் போஸ்டு, S. I. R.

சிவமயம்.

ஓம் தத்ஸத் பரப்பிரஹ்மணேநம:.

# ஸ்ரீ பகவற்கீதை மூலமும்

## கூடார்த்ததீபிகையென்னுமுரையும்.

### ஸ்ரீவிநாயகர் ஸ்துதி.

ஆரண மதிலுறை யகண்ட மாம்பரி
பூரண சொரூபமெய்ப் பொருளெ லாவற்றின்
காரண மெனப்புகல் கருணை வாரிதி
வாரண முகன்றனை வணங்கி வாழ்த்துவாம்.

### ஸ்ரீபகவத் ஸ்துதி.

கூரிரு ளாமஞ் ஞானக் கூட்டறவறுத்தங் கான
போரினைப் புரியு மாறு புகலுதற் கரிய தாகுஞ்
சீர்மிகுங் கருமம் பத்தி செப்பிய ஞான மூன்றுங்
கார்நிறக் கருணை மேனிக் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

### ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகள் ஸ்துதி.

பொங்கராப் பிறைமுக் கண்ணும் புனிதமா மகிமை தங்குங்
கங்கைநீ ரதுவும் வேய்ந்த கடவுளே கருணை கூர்ந்து
இங்குளா ரெவரு முய்ய விறைவனு யவத ரித்த
சங்கரா சார்ய னற்று டலமிசை யணிகின் றேனே.

### ஸ்ரீகுருவணக்கம்.

அண்மையி லிருந்திங் கருளெமக் களித்த வாரிய வீரசே கரனைத்
தண்மைசெய் யரிய நூல்களின் பொருளைத் தந்தசுப் பய்யதே சிகனை
உண்மையி னுளத்தி லிருத்திமுப் போது முயர்ந்தகூ டார்த்ததீ பிகையை
வண்மைநற்றமிழி லிசைப்பன்வான் கருணை வழங்கிட வேண்டுமென் றனக்கே.

### அவையடக்கம்.

ஒப்பறு மிந்திதன்னி லுரைத்தவிவ் வுரையை யென்ற
னற்பமா மதியினனே யறைந்தனன் றமிழி லீதிற்
செப்புறுங் குணங்க ளெல்லாந் தேசிக ருடைய தாகுந்
தப்புக ளென்ன தாகுந் தவிருக தமிழ்வ லாரே.

ஓம் ஸ்ரீகணேசாயநம: ஸ்ரீகாசிவிசுவேசுவராப்யாம்நம:
ஸ்ரீகுருப்யோநம: ஸ்ரீசங்கராசார்யேப்யோநம:.

### ச்லோகம்.

ஶங்கரம் ஶங்கராசார்யம் வ்யாஸம் நாராயணாத்மகம் ।
ஸர்வஜ்ஞம் ச ப்ரஹ்மாணம் ப்ரணமாமி புன: புன: ॥ க ॥

[illegible] ।
[illegible] ‖ ௨ ‖
[illegible] ।
[illegible] ‖ ௩ ‖

பொருளிதுவாம்:— ஸ்ரீ சங்கரவடிவமாகிய ஸ்ரீ சங்கராசாரியரையும், ஸ்ரீ நாராயணவடிவமாகிய ஸ்ரீ வியாசபகவானையும், ஸ்ரீ சரஸ்வதிதேவியையும், ஸ்ரீ சரஸ்வதிதேவியின் பதியாகிய ஸ்ரீபிரஹ்மாவையும் யான் எப்போதும் நமஸ்கரிக்கின்றேன். (1)

எந்தக்குருமூர்த்தியால் எனது ஹ்ருதயத்தின்கண் பிரஹ்ம தத்வம் பிரகாசிப்பிக்கப்பட்டதோ, எந்தக் குருமூர்த்தியானவர் விவேகம் வைராக்கியம் முதலியவுத்தம குணங்களோடுகூடின வரோ, எந்தக் குருமூர்த்தியானவர் அதிகாரிகளாகிய எம்மனோருக்கு ப்பிரணவமந்திரத்தை யுபதேசித்தாரோ, அக்குருமூர்த்திக்குயான் எப்போதும் நமஸ்காரஞ்செய்கின்றேன். (2)

இக்கீதாசாஸ்திரத்தின் கர்த்தாவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானது இருபாதகமலங்களையும் நமஸ்கரித்து முமுக்ஷுக்களின்பொருட்டு இக்கீதையின் ஒவ்வொரு அக்ஷரங்களின் அர்த்த நிச்சயம்செய்வதற்காக ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகளாலியற்றியபாஷ்யம் ஸ்ரீசங்கரானந்த சுவாமிகளாலியற்றிய * டீகை. ஸ்ரீமதுசூதன சரஸ்வதி சுவாமிகளாலியற்றிய டீகை, ஸ்ரீநீலகண்ட பண்டிதராலியற்றிய டீகை என்னுமிந் நான்கின் அபிப்பிராயங்களைக்கொண்டு கூடார்த்த தீபிகை யென்னும் டீகையை நான் செய்கின்றேன். (3)

இவ்வுலகத்தின்கண் மகத்தாகிய தபம், பலம், தேஜஸ் சக்தி என்னு மிவற்றோடு கூடியவரும் சர்வவித்தை கட்குஞ் சமுத்திரமானவரும், சம்பூர்ண ஸர்வஞ்ஞர்களின் பூஷணவடிவினரும், ஸாக்ஷாத் நாராயண வடிவினரும் பரமகிருபாலுவுமாகிய ஸ்ரீவியாசபகவான், மேலுண்டாம் அதிகாரிகளின் புத்தியின் மந்தத்தன்மையைப் பார்த்து அவ்வதி காரிகட்குத்தர்ம முதலிய புருஷார்த்தப் பிராப்தி உண்டாம்பொருட்டு அப்புருஷார்த்த சாதனங்களைக்கூறும் வேதராசிகளை இருக், யசுர், ஸாமம், அதர்வணம் என்னும் வேறுபாட்டால் நான்கு விதமாகப் பிரித்தனர். அவ்விருக்காதி நான்குவேதங்களிலுமுள்ள ஐதரேய முதலிய அனேக சாகைகளுள் ஒவ்வொருசாகையையும் பைலர், வைசம்பாயனர் முதலிய தமது சிஷ்ய ப்ரசிஷ்யவாயிலாக விருத்திசெய்தனர். இங்ஙனம் விருத்திசெய்தும் அவ்வேதங்களின்அருத்தம் அதிசூக்குமமும் அத்தியந்தங்கூடமும் அத்தியந்தந் †துர்விஜ்ஞேயமாயது மாதலால் அவ்வேதார்த்தங்களை யறிவதில் புத்தி சாமர்த்திய மின்றிய அதிகாரிகளினிடத்தே கிருபைகூர்ந்து அவ்வியாசபகவான் அவ்வதிகாரிகட்குத் தர்ம முதலிய ஸர்வபுருஷார்த்தங்களின் பிராப்தியுண்டாம் பொருட்டு அத்தர்ம முதலிய புருஷார்த்தங்களின் ஸாதனங்களைக் கூறுவதாகிய நூறாயிரம் சுலோகங்களடங்கிய பாரதமென்னும் ஒரு சம்ஹிதையைச் செய்தனர். எங்ஙனம் நட்சத்திரமாலையின் மத்தியில் சந்திரமண்டல மிருக்கின்றதோ அங்ஙனம் அப்பாரத மெனப்பெயரிய சம்ஹிதையின் மத்தியில் காரியப்பிரபஞ்ச சஹித அஞாதி யவித்தையின் நிவர்த்திவாயிலாய் விதேக கைவல்ய வடிவபலத்தின் பிராப்தியின்பொருட்டுச் சீவப்பிரஹ்மங்களின் அபேதத்தைப் பிரதிபாதிப்பதும் ஸ்ரீகிருஷ்ண அருச்சுன சம்வாத ரூபமாயதும் அத்வைதவடிவ அமிர்த வருஷத்தைப்பொழிவதும் எழுநூறு

* டீகை = உரை. † துர்விஜ்ஞேயம் = அறியத்தகாதது.

சுலோகவடிவதுமாகிய கீதா உபநிஷத் தெனப்பெயரிய பிரஹ்ம வித்தையைக் கேவலம் முமுக்ஷு ஜனங்களின்பொருட்டு ஸ்ரீவியாசபகவான் ஸ்தாபனம் செய்தனர் அஞ்ஞான சகிதசர்வப் பிரபஞ்சத்தின் அபாவவடிவமும் சச்சிதானந்த ஸ்வரூபமும் ஜீவனின் அபின்னமாய அத்விதீயப் பிரஹ்மவடிவமுமாகிய மோக்ஷமே அக்கீதை வடிவப் பிரஹ்மவித்தையின் பரமப் பிரயோஜனமாம்.

அவ்வத்விதீயப் பிரஹ்ம வடிவமோக்ஷத்தைச் சாஸ்திரங்களில் விஷ்ணுவின் பரமபதம் என்றறையப்பட்டுளது. அவ்வத்விதீயப் பிரஹ்மவடிவ மோக்ஷத்தின் பிராப்தியின் பொருட்டு, சிருஷ்டியின் ஆதிகாலத்தில் சர்வஞ்ஞராகிய ஈசுவரனால் கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்று காண்டங்களோடுகூடிய இருக்காதி வேதங்கள் உற்பத்திசெய்யப்பட்டன. இப்பதினெட்டத்தியாய வடிவமாகிய பகவத்கீதையும் இருக்காதி வேதவடிவமாம்; ஆகையினாலிஃதவ்வாறத்தியாய வடிவமூன்று ஷட்கங்களால் முறையே கர்மம், உபாஸனை, ஞானம் என்னும் மூன்று காண்டவடிவமாம். ஆண்டு ஆறத்தியாய வடிவ முதல் ஷட்கத்தின்கண் கர்ம நிஷ்டையும், ஆறத்தியாய வடிவ இரண்டாவது ஷட்கத்தின்கண் பகவத்பக்தி நிஷ்டாரூப உபாஸனையும், ஆறத்தியாயவடிவ மூன்றாவது ஷட்கத்தின்கண் ஞான நிஷ்டையும் கூறப்பெற்றிருக்கின்றன. அவற்றுள் மத்திய ஷட்கத்திலுள்ள பகவத்பக்தி நிஷ்டையானது கர்மநிஷ்டையினடைவிலும் ஞான நிஷ்டையினடைவிலும் பிரதிபந்தகமாகியயாதொரு பாபவடிவ விக்கினமுண்டோ அவ்விக்கினங்களனைத்தையும் நாசஞ்செய்வதாமாதலின் அப்பகவத்பக்தி நிஷ்டையானது கர்மநிஷ்டை ஞான நிஷ்டை யென்னுமிரண்டின் கண்ணும் * அநுகதமாம். அக்காரணத்தானே அப்பகவத்பக்தி நிஷ்டையானது கர்மமிசிரம் சுத்தம் ஞானமிசிரம் என்னும் பேதத்தால் மூவகைப்படும். ஆண்டு இக்கீதையின் பிரதம ஷட்கத்தின்கண்ணிரா நின்ற பகவத்பக்தி நிஷ்டை கர்மமிசிர மெனப்படும் துவிதீய ஷட்கத்திலிராநின்ற பகவத்பக்தி நிஷ்டை சுத்தமெனப்படும் திருதீய ஷட்கத்திலிராநின்ற பகவத்பக்தி நிஷ்டை ஞானமிசிரமெனப்படும் ; ஆண்டுக்கர்ம நிஷ்டையோடு கூடிய பகவத்பக்தி நிஷ்டைக்குக் கர்மமிசிரமென்றும், ஞான நிஷ்டையோடுகூடிய பகவத்பக்தி நிஷ்டைக்கு ஞானமிசிரமென்றும், கேவலம் பகவத்பக்தி நிஷ்டைக்குச் சுத்தமென்றும் பெயராம் ; இவ்வாறு இப்பகவத் கீதையானது இருக்காதி வேதங்களைப்போன்று மூன்றுகாண்டவடிவமாம். அவற்றுள் இக்கீதையின் பிரதம ஷட்கவடிவகர்ம காண்டத்தின்கண் கர்மம் கர்மத்தின்றியாகம் என்னு மிவைகளின் நிரூபணவாயிலாய் அநேகவிதயுக்திகளால் துவம்பதார்த்த வடிவ கூடஸ்த சுத்தாத்மாவின் நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இரண்டாவது ஷட்கவடிவ உபாஸனா காண்டத்தின்கண் பகவத்பக்தி நிஷ்டையின் வர்ணனை வாயிலாய்த் தத்பதார்த்த வடிவ பரமாத்மாவின் நிரூபணஞ்செய்யப்பட்டிருக்கின்றது. மூன்றாவது ஷட்க வடிவ ஞானகாண்டத்தின்கண் அந்தச் சோதிததத்துவம் பதார்த்தங்களின் அபேதவடிவ மகாவாக்கியங்களினர்த்தம் நிரூபணஞ்செய்யப்பட்டிருக்கின்றது. இவ்வாற்றால் மூன்று ஷட்க வடிவ முக்காண்டங்களின் பரஸ்பர ஸம்பந்தம் சம்பவிக்கின்றது. முன் முன் அத்தியாயத்தின் அர்த்தத்திற்குப் பின் பின் அத்தியாயத்தின் அர்த்தத்தோடு எவ்வெவ் பிரகாரம் சம்பந்தம் சம்பவிக்குமோ அவ்வச் சம்பந்தங்களை அவ்வவ்வத்தியாயத்தின் நிரூபணகாலத்திற் கூறுவாம்.

இப்போது இப்பதினெட்டத்தியாய வடிவ பகவத் கீதையின்கண் எவ்வெவ் மோக்ஷசாதனங்கள் விஸ்தாரமாய் நிரூபணஞ்செய்யப்பட்டுளவோ அவ்வெல்லாச் சாதனங்களையும் முதலில் சுருக்கமாக நிரூபிப்பாம்.

---

* அநுகதம் = தொடர்ந்து நிற்பதாம்.

இவ்வதிகாரி புருஷன் முதலிற்சொர்க்காதி பலத்தினடை
வதாகிய காமிய கர்மத்தின் பரித்தியாகத்தானும் நரகம் முத
யுண்டுபண்ணுவதாகிய இம்சை முதலிய நிஷித்த கர்மத்தின் நீக்
தினிச்சையின்றிக் கேவலம் நிஷ்காமகர்மங்களைச் செய்கின்றான்.
ங்களினும் பரமேசுவர நாமங்களின் ஜபம் ஸ்துதிமுதலியன
ளாம். அந்நிஷ்காம கர்மங்களாலும் பரமேஸ்வரஜபஸ்துதி மு
இவ்வதிகாரி புருஷனது சித்தமானது பிரதிபந்தகவடிவ சர்வபா
தாய் விசாரஞ்செய்ய யோக்யமாகின்றது. அதன் பின்னர் இவ்
னிடத்து நித்தியா நித்தியவஸ்து விவேகம் உற்பன்னமாகின்ற
தின் பின்னர் இவ்வுலகத்திலும் சுவர்க்காதிலோகங்களிலுமுள்ள
னிடத்துத் தோஷதிருஷ்டி பூர்வகமாய் வசீகாரமெனப் பெயரி
உற்பன்னமாகின்றது. அவ்வைராக்கிய அடைவின் பின்னர் சமம்,
சமாதானம், உபரதி, திதிக்ஷை என்னும் ஷட்சம்பத்தியின் பிரா
தின் பரித்தியாக வடிவ சந்நியாசத்தினடை வுண்டாம் அச்சந்
தரம் இவ்வதிகாரி புருஷனுக்கு மோக்ஷப்பிராப்தியின் இச்சை வடி
தன்மையினடைவுண்டாம் அம்முமுக்ஷுத்தன்மையை யடைந்த
வதிகாரி புருஷன் அசேஷ சாஸ்திர பாண்டித்தியமும் பிரஹ்ம நி
குருவின் பாற்செல்வன் அதனனந்தரம் இவ்வதிகாரி புருஷன்
வாகிய அக்குரு முகத்தால் வேதாந்த சாஸ்திரத்தின் சிரவணஞ்
னமே அச்சிரவணித்தபொருளை மனனஞ் செய்வன் அச்சிரவ
கண்ணேயே எல்லாவுத்தர மீமாம்சா சாஸ்திரத்தி னுபயோகமா
மனனத்தின்பரிபக்குவம் வந்தபின்னர் இவ்வதிகாரி புருஷன் நிதி
யடைவன், அந்நிதித்தியாசனத்தின் கண்ணேயே சர்வயோக
யோகமாம், ஆண்டுச் சிரவணத்தானே வேதாந்த சாஸ்திரவடி
அசம்பாவனையின் நிவர்த்தியும் மனனத்தால் ஆத்ம வடிவப் பிர
பாவனையின் நிவர்த்தியும், நிதித்தியாசனத்தால் தேகாதிகளி னி
புத்தி வடிவ விபரீத பாவனையின் நிவர்த்தியு முண்டாகின்றன.
அவ்வசம் பாவனை முதலிய தோஷங்களின்றிய சித்தத்தின்கண் கு
மஹாவாக்கியத்தால் பிரஹ்மாத்மாவின் சாக்ஷாத்காரம் உற்ப
அந்தப் பிரஹ்மாத்ம சாக்ஷாத்கார முற்பன்னமாகவே இவ்வதி
தையின் நிவர்த்தியுண்டாகின்றது. அவ்வாவரண சக்திப்பிரதா
யின் நிவர்த்தியுண்டாகவே இவ்வதிகாரி புருஷனுக்குப் பிரமம்
னும் இரண்டின் நிவர்த்தியுண்டாகின்றது. வரும்பிறப்பை யடை
சர்வசஞ்சித கர்மங்களும் நாசத்தை யடைகின்றன. அவ்வான்ம
தின் பிரபாவத்தால் (மகிமையால்) ஆகாமிய கர்மங்கள் உற்பத்திய
மற்றீறுபிராரப்த கர்மவடிவ விக்ஷேபத்தின் வசத்தால் இவ்வதிகா
வாசனை நிவர்த்தியாவதின்றாம். அவ்வாசனையானது யாவற்றி
றும், அத்தகையபலவானாகிய வாசனையும் சம்யமரூப (அடக்கும்
தால் நிவர்த்தியாகின்றது. ஆண்டுத்தாரணை தியானம் சமாதி
பாட்டால் அச்சம்யமமானது மூவகைப்படும். அச்சம்யமத்தினடை
ட்டே முதலில் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்
னும் ஐந்தின் உபயோகமாம் ஈசுவரவழி பாட்டால் இவ்வதிகாரி பு
சமாதி யானது விரைவாகவே கிடைக்கும். அச்சமாதி யாலிவ்வ
னுக்கு மனோநாசமும் வாசனாக்ஷயமுமுண்டாம். தத்துவஞான
வாசனாக்ஷயமென்னு மிம்மூன்றையும் ஏககாலத்தில் அப்பியாசஞ்
வதிகாரி புருஷனுக்குச் சீவன்முத்தியினடை வுண்டாம். இத்தகைய

யினடைவின் பொருட்டுச் சுருதியின்கண் வித்துவத்சன்னியாசங்கூறப்பட்டுளது. பூர்வம் சவிகற்ப சமாதியால் நிரோதத்தையடைந்த சித்தத்தின்கண் முப்பூமியை யுடைய நிர்விகற்ப சமாதியுற் பன்னமாகின்றது. அவற்றுள் முதற்பூமியின் கண்ணே இவ்வித்வானாகிய புருஷன் றனதிச்சையால் * உத்தானத்தையடைவன், இரண்டாவது பூமியின் கண்ணே அன்னியரா லுணர்த்தப்பட் டுத்தானத்தை யடைவன் மூன்றாம் பூமியிலோ தனதிச்சையாலும் அந்நியராலும் உத்தானத்தை யடையான்; ஆனால் அவனுக்கு எப்போதும் பிரஹ்மாகார விருத்தியிருக்கின்றது.

இத்தகைய நிருவிகற்ப சமாதியையுடைய புருஷனையே சாஸ்திரத்தின்கண், பிராஹ்மணனெனவும், பிரஹ்ம வித்வரிஷ்டனெனவும், குணாதீதனெனவும், ஸ்திதப்பிரஞ்ஞனெனவும், விஷ்ணுபக்த னெனவும், அதிவர்ணாசிரமி யெனவும், ஜீவன் முக்தனெனவும், ஆன்மரதி யெனவும், கூறப்படும். இத்தகைய ஜீவன் முக்தபுருஷன் கிருதகிருத்திய பாவத்தை யடைந்துளனாதலால் சாஸ்திரமும் இவனிடத்தினின்றும் நிவர்த்தியாகின்றது. க்ருத்திதுவாம் சாஸ்திரத்தின் விதிநிஷேதங்களாகிய வெவையும் அச்சீவன் முத்த புருஷனிடத்தின்றாம். அல்லது,

> 𑌯𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍇 𑌪𑌰𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌵𑍇 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌰𑍌 ।
> 𑌤𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌕𑌥𑌿𑌤𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍍𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

பொருளிதுவாம் :—எவ்வதிகாரிபுருஷனுக்குப் பரமாத்மாவினிடத்துப் பரமபக்தியிருக்கின்றதோ அங்ஙனமே குருவினிடத்தும் பரமபக்தியிருக்கின்றதோ அவ்வதிகாரி புருஷனுடைய புத்தியின்கண்ணே இச்சாஸ்திரத்திற்கூறப்பட்ட பொருள் பிரகாசிக்கும். இச்சுருதிப்பிரமாணத்தால் சரீரமனவாக்குகளாற்செய்யப்பட்ட பகவத்பக்தியினுபயோகம் சர்வ அவஸ்தைகளினிடத்து முளதெனப்பெறப் பட்டது. ஆண்டுப்பூர்வபூர்வ பூமியின்கண்ணே செய்யப்பட்ட பகவத்பக்தியானது உத்தரோத்தரபூமியினடைவைச் செய்விக்கின்றது. அப்பகவத்பக்தியாலன்றி விக்கினத்தின் மிகுதிப்பாட்டால் பலத்தின் பிராப்தி அத்தியந்தம் துர்லபமாம் இவ்வார்த்தை.

> 𑌪𑍂𑌰𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌹𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌹𑍍𑌯𑌵
> 𑌶𑍋𑌽𑌪𑌿 𑌸𑌃," "𑌅𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌃 ॥

(இதன்பொருள்.) அப்பூர்வாப்பியாசத்தால், முயல்விலானேனும் அவன் முயல்விக்கப்பெற்றுப் பரமாமிருதம்பெறுவன், அநேகம் பிறப்புகளில் அனுஷ்டிக்கப்பெற்ற சுத்த சம்ஸ்காரத்தையும் புண்ணிய மிகுதியையுமடைவுற்றவவன். என்பனமுதலிய பகவத்வசனங்களாலேயே பெறப்படுகின்றது. அல்லது, பூர்வ பூர்வ ஜன்மங்களில் உற்பன்னமாகிய அசிந்திய சக்தியையுடைய ஸம்ஸ்காரங்களின் பிரபாவத்தால் சில புருஷர் ஆகாசபலவீழ்ச்சியேபோலப் பூர்வமேகிருதகிருத்திய பாவத்தையடைவர். அப்புருஷரின்பொருட்டுஞ் சாஸ்திரத்தின் ஆரம்பஞ்செய்யப் படுவதின்றாம், எதனால் பூர்வசித்த சாதனங்களினப்யாசத்தால் பகவத்கிருபை அத்தியந்தம் துர்விஞ்ஞேயமாமோ. இங்ஙனம் பூர்வ பூமிகளின் சித்தியுண்டாயினும் உத்தரவுத்தர பூமிகளின் பிராப்தியின்பொருட்டு இவ்வதிகாரி புருஷன் பகவத்பக்தியை யவசியம் செய்தல்வேண்டும். என்னை? அப்பகவத்பக்தியினாலன்றி அவ்வுத்தரபூமிகளின் சித்தியுண்டாவதின்றாமன்றோ. எங்ஙனம் பூர்வ அவஸ்தையின்கண் பகவத்பக்தியின் பலத்தின் கற்பனையுண்டாமோ அங்ஙனம் ஜீவன் முக்திதசையில் அப்பகவத்பக்தியின் பலத்தின் கற்பனையுண்டாவதின்றாம், மற்றோ

---

* உத்தானம் = வெளிக்கிளம்புதல்.

அச்சீவன் முக்தனுகிய வித்வானிடத்து * அத்வேஷ்ட்ருத்துவம், அதம்பித்துவ முதலிய தர்மங்கள் இயல்பாகவேயிருப்பதுபோன்று பகவத்பக்தியும் இயல்பாக வேயிருக்கின்றது. இவ்வார்த்தை.

" தேஷாஂஜ்ஞாநிநித்யயுக்தஏகாபக்திர்விஶிஷ்யதே "

(இதன் பொருள்.) அவர்தம்முள் ஞானியானவன் சிறப்புடையவனுவன், எதனுல் ஸ்ரீபகவானிடத்தே ஒருமை பெறுமுளனுடையனுவனே அதனுனேயே ஸ்ரீபகவானெருவனிடத்திலேயே பிரியமுடையவனுவன். என்பதாதி வசனங் களால் ஸ்ரீபகவான் பிரதிபாதனம் செய்துளார். இக்காரணத்தினுனேயே அச் சீவன் முக்தவித்துவானே முக்கியப்பிரமையுடைய பக்தனுமெனக் கூறப் பெறுவன். என்றிவை முதலிய எல்லா மோக்ஷஸாதனங்களும் ஸ்ரீ கிருஷ்ணபக வானுல் இக்கீதாசாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டுள. அம்மோக்ஷ ஸாதனங் களைப்பார்த்து. ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளும், ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும், ஸ்ரீமது சூதன சுவாமிகளும், ஸ்ரீ நீலகண்ட பண்டிதரும் மிகுந்த உற்சாகத்துடன் இக்கீதாசாஸ்திரத்தின்மேல் ஸம்ஸ்கிருத வியாக்யானங்களைச்செய்தனர். அச் சம்ஸ்கிருத வியாக்கியானங்களால் வியாகரணம் முதலிய சாதன சம்பன்னர்க ளாகிய அதிகாரிகட்கு இக்கீதாசாஸ்திரத்தின் அர்த்தபோதமுண்டாமாயினும் வியாகரணம் முதலிய சாதனங்களின்றிக் கேவலம்பாஷை படிப்பவர்களாகிய முமுக்ஷுக்களுக்கு இக்கீதாசாஸ்திரத்தின் அர்த்தபோதமுண்டாதலரிதாகலின், அம்முமுக்ஷு ஜனங்களுக்கு இக்கீதாசாஸ்திரத்தின் அர்த்தத்தைத் தெரிவித்தற் பொருட்டு அச்சம்ஸ்கிருத வியாக்யானங்களின் கருத்தைக்கொண்டு கூடார்த்த தீபிகையெனப் பெயரிய இப்பிராகிருத வியாக்கியானத்தை யான் ஆரம்பிக்கின் றேன்.

ஆண்டு நிஷ்காமகர்மங்களி னநுஷ்டானத்தையே சாஸ்திரத்தில் மோக்ஷத் தின் மூலரூபமெனக் கூறப்பட்டிருக்கின்றது. சோக மோக முதலிய பாபவடிவ அசுரத்தன்மைகள் மோக்ஷப்பிராப்தியின் பிரதிபந்தகங்களாம். ஏனெனின்? அச் சோகமோகாதி அசுரத்தன்மையினடைவினுலேயிப்புருஷன் தனது வருணுசிரம தருமங்களினின்றும் பிரஷ்டனுகின்றுன். சாஸ்திரநிஷித்த கருமங்களைச் செய்ய முயல்கின்றுன். அங்ஙனமே பலத்தின் இச்சைவாயிலாய் அகங்காரத்தோடு நானுப் பிரகார கருமங்களையுஞ்செய்கின்றுன். இவ்வாறு சோகமோகாதிபாபவடிவ அசுர த்தன்மையோடுற்ற இப்புருஷன் மோக்ஷவடிவ புருஷார்த்தத்தையடையாமல் ஜன் மமரணுதி அநேக துக்கங்களை யடைகின்றனன். அத்துக்கம் இயல்பாகவே சர்வப் பிராணிகட்கும் துவேஷத்தின் விஷயமாமாகலின் அதன் நிவர்த்தியின்பொருட்டு அத்துக்கசாதனவடிவ சோகமோகாதிகள் அவசியம் தியாகஞ்செய்ய யோக்கியங் களாம். இவ்வனுதி சம்சாரத்தின்கண் அநேக ஜன்மங்களால் அச்சோகமோகாதி துக்கசாதனங்கள் திடத்தன்மையை யடைந்திருக்கின்றனவாகலின் அவற்றைத் தியாகம்செய்தல் அத்தியந்தம் கடினமாம். ஆனுல் அச்சோகமோகாதிகளின் நீக்கத்தானன்றி மோக்ஷத்தின் பிராப்தியுண்டாவதின்றும். ஆகையினுல் எனது சோகமோகாதிகள் எவ்வுபாயத்தால் நாசத்தையடையுமென்றிவ்வாறு மிகுந்த இச்சையையுடைய முமுக்ஷுக்கட்கு அறிவுறுத்தற்பொருட்டு ஸ்ரீ கிருஷ்ணபக வான் இக்கீதாசாஸ்திரத்தைக் கூறியருளினார். இக்கீதையின்கண் "கஂஶோ ஷ்யாநந்வஶோசஸ்த்வம்" என்பனவாதி சுலோகங்களால் சோகமோகாதி அசுரத் தன்மையின் நிவர்த்தி யுபாயத்தை யுபதேசித்து உனது வர்ணுசிரம தர்மங்களி

* அத்வேஷ்ட்ருத்துவம் = துவேஷமின்மை.

னனுஷ்டானத்தால் நீ மோக்ஷரூப புருஷார்த்தத்தையடைவாய் என்றிவ்வாறாகிய பகவானதுபதேசம் சர்வமுமுக்ஷுக்கட்கும் சாதாரணமாம். கேவலம் அர்ஜுனன் ஒருவன் பொருட்டாகிய வுபதேசமன்றாம்.

சங்கை: ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஒருக்கால் சர்வ முமுக்ஷுக்களின்பொருட்டுச் சாதாரணமாகவே யுபதேசித்தாரெனின் இக்கீதாசாஸ்திரத்தின்கண் ஸ்ரீகிருஷ்ண பகவான் அருச்சுனசம்வாதவடிவ * ஆக்கியாயிகை எதன்பொருட்டு வைத்தல் வேண்டும்.

சமாதானம்:—எங்ஙனம் உபநிஷத்துக்களி னுபதேசமானது சாதாரணமாய்ச் சர்வ முமுக்ஷுக்களின்பொருட்டாயினும் அவ்வுபநிடதங்களிலுள்ள சனகயாஞ்ஞவற்கியாதிகளின் சம்வாதவடிவ ஆக்கியாயிகைகள் அவ்வவ் வுபநிஷத்வடிவ பிரஹ்மவித்தையின் ஸ்துதியின்பொருட்டாமோ, அங்ஙனமே யிக்கீதாசாஸ்திரத்தின்கண்ணுள்ள ஸ்ரீ கிருஷ்ண அருச்சுனசம்வாதரூப ஆக்கியாயிகையும் இக்கீதை வடிவ பிரஹ்மவித்தையின் ஸ்துதியின்பொருட்டாம். அத்துதியின் பிரகாரம் இதுவாம்:—சர்வலோகப்பிரசித்தனும் மஹாநுபாவனுமாகிய அர்ச்சுனன் இராச்சியம், குரு, புத்திரன், மித்திரன் முதலிய பதார்த்தங்களினிடத்தே யானிவற்றினன் இவை என்னுடையன, என்றிவ்வாறாகிய புத்தியினால் சிநேகத்தையடைந்தனன்; அச்சிநேகத்தாலுற்பன்னமாகிய சோகமோகங்களால் நஷ்டமாகிய விவேக விஞ்ஞானங்களோடுற்ற அருச்சுனன் பூர்வசுபாவத்தாலேயே க்ஷத்திரிய தர்மவடிவயுத்தத்தின்கண் பிரவர்த்தனாகியும் அச்சோகமோகங்களின் பிரபாவத்தால் அத்தர்ம யுத்தத்தினின்றும் உபராமத்தையடைந்தனன். சந்நியாசிகளின் தருமமாகிய பிக்ஷாவிருத்தி ஜீவனமானது க்ஷத்திரிய வரசர்கட்குச் சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டிருப்பினும் அவ்வருச்சுனன் சோகமோகவயத்தால் அப்பிக்ஷாஜீவனவடிவ பரதர்மத்தைச் செய்தற்பொருட்டு முயன்றனன். இவ்வாறு அவ்வருச்சுனன் சோகமோகங்களின் வயத்தான் மகா அநர்த்தத்தின்கண் மூழ்கினன். இத்தகைய அருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானதுபதேசத்தால் இக்கீதைவடிவ பிரஹ்ம வித்தையையடைந்து அச்சோகமோகங்களின்றியவனாய் மீண்டும் தனது யுத்த வடிவ தர்மத்தின்கண் முயன்றனன். அதனாலவ்வருச்சுனன் கிருதகிருத்திய பாவத்தையடைந்தனன். இத்தகைய மகத்தாகியபயனை யடைவிக்கச்செய்தது இக்கீதைவடிவப் பிரஹ்மவித்தையாம். ஆகையினா லிஃதத்தியந்தஞ் சிரேஷ்டமாம். இவ்வாறு இக்கீதைவடிவப் பிரஹ்மவித்தையின் ஸ்துதியின்பொருட்டு ஸ்ரீ கிருஷ்ண அருச்சுனசம்வாதவடிவஆக்யாயிகை இக்கீதாசாஸ்திரத்தின்கண்ணுள்ளது. ஆகையினால் அருச்சுன சப்தத்தாலிக்கீதாசாஸ்திர வுபதேசத்தின் அதிகாரி மாத்திரத்தைக் கூறியதாம். இக்காரணத்தானே யுத்தரூப சுவதர்மத்தின்கண், முன்னர் அருச்சுனனுக்குப் பிரவிர்த்தியுண்டாகியும் அந்த யுத்தவடிவ தருமத்தின் நிவர்த்தியின் காரணவடிவ சோகமோகங்களை "கயம்ஹீஷகேஹம் ஸமவெ" என்பன முதலிய வசனங்களால் அருச்சுனன் காண்பித்துளான், அதை மேற்கூறுவாம்.

ஆண்டுயுத்தரூப சுவதர்மத்தின்கண் விவேகமின்றியே அருச்சுனனது பிரவிர்த்தி எந்நிமித்தத்தாலுண்டாயதென்னும் ஜிஞ்ஞாசையுண்டாய் 'உ௵தூ வாஃவாநீகஂ,' என்பது முதலிய வசனங்களால் அன்னிய சேனைகளின் சேஷ்டையே அப்பிரவிர்த்தியின் நிமித்தமெனக் கூறப்பட்டுளது. அவ்வர்த்த சித்தியின் பொருட்டு 'ய௨ழ்கேஷதெ' என்பது முதலிய சுலோகங்கள், திருதராஷ்டிரர்

* ஆக்கியாயிகை=உண்மையான பொருளுள்ள சரித்திரம்.

சஞ்சயரை வினவியவாம் "𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚." என்னும் வைசம்பாயனர் வசனம் ஜனமேஜயனைப்பார்த்துக் கூறியதாம்.

ஆண்டு முன்னர் பாண்டவர்களது ஜயத்தின் அநேகவிதகாரணங்களைக் கேட்டலால் தமது புத்திரர்கள் இராச்சியத்தினின்றும் பிரஷ்டராக்கப்படுவார்களென்று பயத்தையடைந்த அத்திருதராஷ்டிரர் தமது புத்திரர்களின் ஜயத்தை யிச்சித்து இவ்வாறு சஞ்சயரை வினவுவாராயினர்.

𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰 𑌉𑌵𑌾𑌚.

𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃 ।
𑌮𑌾𑌮𑌕𑌾𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑌿𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌤 𑌸𑌞𑍍𑌜𑌯 ॥ ௧ ॥

பதச்சேதம். 𑌧𑌰𑍍𑌮𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇[2], 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍇[3], 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾[5], 𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃[4], 𑌮𑌾𑌮𑌕𑌾𑌃[6], 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌶𑍍𑌚𑍈𑌵[7], 𑌕𑌿𑌂[8], 𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌤[9], 𑌸𑌞𑍍𑌜𑌯[1].

(இதன் பொருள்.) ஹேஸஞ்சய! தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தின்கண் யுத்தத்தின் இச்சையுடையவர்களாய் ஒருங்குகூடிய நமது புத்திரர்களும் பாண்டு அரசரின் மைந்தர்களும் என்ன செய்தனர்.

(வியாக்கியானம்.) உத்தமபூமிவடிவ க்ஷேத்திரமானது நெற் கோதுமை முதலிய அன்னங்களி னுற்பத்திக்கும் விருத்திக்கும் காரணமாவதேபோல முன்னில்லாத தருமத்தினுற்பத்திக்கும் முன்னுள்ள தருமத்தின் விருத்திக்கும் எது காரணமாமோ அல்லது தருமத்தின் க்ஷயத்தின்நின்றும் ரக்ஷையை (காப்பை) எது செய்யுமோ அதனைத் தருமக்ஷேத்திரமென்பர். குருதேசத்தினுள்ளிருப்பதாலதற்குக் குருக்ஷேத்திரமென்றும் பெயராம். இவ்வாறு நிவாசமாத்திரஞ் செய்வதால் தர்மம் அதன்பலம், என்னுமிவற்றினடைவைச் செய்வதாகிய தர்மக்ஷேத்திரவடிவ குருக்ஷேத்திரமானது சுருதிஸ்மிருதியாதி சர்வ சாஸ்திரங்களிலும் பிரசித்தமாம். ஆண்டுச்சுருதி "𑌯𑌦𑌨𑍁 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌯𑌜𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌦𑌨𑌂;

பொருளிதுவாம்:—குருக்ஷேத்திரமானது சர்வதேவதைகட்கும் தேவயஜனரூபமும் ஸர்வபூதப்பிராணிகட்கும் பிரஹ்மவடிவ மோக்ஷப்பிராப்தியின் ஸ்தானமுமாம். இச்சுருதி ஜாபால வுபநிஷத்தின்கண் பிரஹஸ்பதியால் யாஞ்ஞவற்கியரின்பொருட்டுக் கூறியதாம். 𑌕𑍁𑌰𑍁𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌦𑍇𑌵𑌯𑌜𑌨𑌂, என்னுமிச்சுருதியானது சதபதப் பிராமணத்தில் கூறப்பட்டுளது. இவைமுதலிய சுருதிஸ்மிருதிப் பிரமாணத்தாற் பெறப்பட்ட அத்தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில் யுத்தத்தின் வேட்கையுடையராய் ஒருங்குகூடிய துரியோதனாதி நமது புத்திரர்களும் யுதிஷ்டிராதி பாண்டவர்களும் ஆகிய அவ்வனைவரும் எக்காரியத்தைச் செய்தனர்.

ச-கை :—(𑌯𑍁𑌯𑍁𑌤𑍍𑌸𑌵𑌃) என்னும் விசேஷணத்தால் திருதராஷ்டிரரால் தமது புத்திரர்களிடத்தும் பாண்டவர்களிடத்தும் யுத்தத்தின்வேட்கை கூறப்பட்டது. ஆனால் இவ்வுலகத்தின்கண்ணி துநியமமாம்:—எப்புருஷனுக்கு எக்காரியம் செய்வதில் முன்னர் வேட்கையிருக்கின்றதோ அப்புருஷன் அவ்வேட்கையினனுசாரமாகவே அக்காரியத்தின்கண்ணே முயல்வன். வேறு காரியத்தின்கண்

முயல்வதின்றாம். ஆகலின் அப்பூர்வ யுத்தத்தினது இச்சையினனுசாரமாய் அத்துரியோதனாதியர் யுத்தவடிவ காரியத்தின்கண்ணேயே பிரவிர்த்தித்தல்வேண்டும். அந்நிய எக்காரியத்தின்கண்ணும் அவர்களின் பிரவிர்த்தியுண்டாகலாகாது. ஆகையினால் அவர்கள் பரஸ்பரம் எவ்வாறு யுத்தஞ்செய்தார்கள் என்றிவ்வாறாகிய கேள்வியே அத்திருதராஷ்டிரர் கேட்பது உசிதமாம். அக்கேள்வியைவிட்டு எமது புத்திரர்களும் பாண்டவர்களும் எக்காரியத்தைச் செய்தனர் என்னுமத்திருதராஷ்டிரரின் கேள்வியானது அசங்கதமாம்.

சமாதானம்:-- அத்திருதராஷ்டிரரின் கேள்விக்கிது கருத்தாம்:—அத்துரியோதனாதியராகிய எமது புத்திரரும் யுதிஷ்டிராதிபாண்டவர்களும் முன்னரூண்டாயயுத்தத்தில் வேட்கையினனுசாரமாய் யுத்தத்தையே செய்தனரா? அல்லது வேறெக்காரணத்தாலேனும் அந்த யுத்தத்தின் வேட்கையைவிடுத்து மற்றெக்காரியத்தையேனுஞ்செய்தனரா? அவற்றுள் யுத்தவேட்கையின் நிவிர்த்தியில் இருவகையாகிய காரணங்கள் சம்பவிக்கின்றன. ஒன்றோ திருஷ்டபயமாம். மற்றொன்று அதிருஷ்டபயமாம். அவற்றுள் பீஷ்ம அருச்சுனாதி மகாசூரவீரர்களின் றரிசனத்தாலுண்டாகிய திருஷ்டரூபபயம் யுத்தத்தின் நிவர்த்தியின் காரணமாமென்பது பிரசித்தமேயாம். ஆகையினால் அத்திருஷ்டபயவடிவ நிமித்தம் அத்திருதராஷ்டிரராற் கூறப்பட்டதன்றாம். மற்றோ அத்திருஷ்டபயரூபகாரணத்தைக் கூறுதற்பொருட்டு அத்திருதராஷ்டிரரால் குருக்ஷேத்திரத்திற்குத் தர்மக்ஷேத்திரமாகிய என்னும் விசேஷணங்கொடுத்ததாம். இத்தகைய தருமக்ஷேத்திரவடிவ குருக்ஷேத்திரத்தையடைந்த யுதிஷ்டிராதி பாண்டவர்கள் முன்னரே தர்மாத்மாக்களாயிருத்தலால் ஒருக்கால் இருசார்புகளினுமுண்டாவதாகிய இம்சாஜன்னிய அதர்மத்தாற் பயபீதர்களாய் அப்போரினின்றும் நிவர்த்தியடைவார்களேயாயின் எமது புத்திரர்களாகிய துரியோதனாதியர் அவசியம் இராச்சியத்தையடைவர் அல்லது பூர்வசுபாவத்தானேயே பாபான்மாக்களாகிய துரியோதனாதிய எமது புத்திரர்கள் அத்தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தின் பிரபாவத்தால் ஒருகால் அந்தக்கரண சுத்தராகியிருத்தல் வேண்டும், அச்சித்தசுத்தியால் பச்சாத்தாபத்தையடைந்து முன்கபடத்தால் அபகரித்த இராச்சியத்தை ஒருகால் பாண்டவர்கட்குக் கொடுத்து விடுவார்களேயாயின் நமது புத்திரர்கள் யுத்தமின்றியே நாசத்தையடைவர் என்றிவ்வாறு தமது புத்திரர்களினிராச்சிய ப்ராப்தியினும் பாண்டவர்களது அப்பிராப்தியினும் திடவுபாயத்தை யத்தியந்தந் தெரியாதவராகிய அத்திருதராஷ்டிரரது மகத்தாகிய கிளர்ச்சியே அக்கேள்வியின் பீஜமாம் அவற்றுள் "ஹே சஞ்சய" என்னுஞ் சம்போதனத்தால் அத்திருதராஷ்டிரராலிப்பொருள் தெரிவிக்கப்பட்டது. இராகத்துவேஷங்களை நன்றாகவென்றவனுக்குச் சஞ்சயனெனப் பெயராம். இங்ஙனந் தாங்கள் இராகத்துவேஷமற்றவராயிருத்தலின் பக்ஷபாதமின்றி எனக்கு எல்லா விருத்தாந்தங்களையுங் கூறுவீர்கள் என்பதாம். ஈண்டு (மாமகா: கிமகுர்வத) "நம்மவர்கள் என்ன செய்தார்கள்" என்னும் வசனமாத்திரத்தானே அத்திருதராஷ்டிரரது கேள்வி பெறப்படும் ஏனெனின்? அந்த யுதிஷ்டிராதி பாண்டவரும் அத்திருதராஷ்டிரரது சம்பந்திகளேயாமாகலின் (பாண்டவா:) பாண்டவர்கள் எனக்கூறியது பயனற்றதாமாயினும் "பாண்டவர்கள்" என்னுஞ் சத்தத்தை வேறாகக்கூறியதால் அத்திருதராஷ்டிரரால் அப்பாண்டவர்களிடத்து மமத்துவமின்மையைக் காண்பித்துத் தமது துரோகஞ் சூசிப்பிக்கப்பட்டது. (1)

அவதாரிகை.

ஹே ஜனமேஜய! இவ்வாறு கிருபாவடிவ நேத்திரமும் உலகப்பிரசித்த நேத்திரமும் இன்றியவரும் தமது புத்திரரிடத்தின் மாத்திரமும் சிநேகமுடையவரு

மாகிய அத்திருதராஷ்டிரரின் கேள்வியைக்கேட்டு அத்திருதராஷ்டிரரது அபிப்பிராயத்தைத் தெரிந்து அத்தர்மாத்மாவாகிய சஞ்சயர் அத்திருதராஷ்டிரரின் பொருட்டு இவ்வாறு கூறுவாராயினர்.

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

சு - ம். 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌸𑍍𑌤𑌦𑌾।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌮𑍁𑌪𑌸𑌂𑌗𑌮𑍍𑌯 𑌰𑌾𑌜𑌾 𑌵𑌚𑌨𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥ ௨ ॥

(ப - ம்.) [6] 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 - 𑌤𑍁 - [5] 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌾𑌨𑍀𑌕𑌂 - [4] 𑌵𑍍𑌯𑍂𑌢𑌂 - [3] 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌃 - [1] 𑌤𑌦𑌾 - [7] 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌂 । [8] 𑌉𑌪𑌸𑌂𑌗𑌮𑍍𑌯 - [2] 𑌰𑌾𑌜𑌾 - [9] 𑌵𑌚𑌨𑌂 - [10] 𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍.

(அ - ம்.) ஹே திருதராஷ்டிரரே! அந்தயுத்தத்தின் ஆரம்ப காலத்தில் இராஜாவாகிய துரியோதனன் அணிவகுத்து நிறுத்தப்பட்ட பாண்டவர்களின்படைகளைப் பார்த்துத் துரோணாசாரியரின் சமீபத்திற்சென்று இவ்வாறு கூறினான்.

(வி - ம்.) ஆண்டு யுதிஷ்டிராதி பாண்டவர்களிடத்துப் பீஷ்மாதி வீர புருஷரால் திருஷ்ட பயத்தின் சம்பாவனை மாத்திரமுமுண்டாகாது உறவினர்களினிம்சையாலுண்டாம்பாபவடிவ அதிர்ஷ்டத்தால் அருச்சுனன் எப்பயத்தையடைந்தனனோ அதுகேவலம் பிராந்தியினாலுண்டாயதாம் அவ்வருச்சுனனது அதிர்ஷ்ட பயமும் ஸ்ரீபகவானா லுபதேசிக்கப்பட்ட பிரஹ்ம வித்தையால் நிவர்த்தியாய் விட்டது என்றிவ்வாறு பாண்டவர்களின் உத்கிருஷ்டத் தன்மையைத் தெரிவித்தற் பொருட்டுச் சஞ்சயனால் (𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍁) "பார்த்து" என்னுஞ் சப்தங் கூறப்பட்டதாம். ஆண்டுத் துரியோதனாதியாகிய நமது புத்திரர்கள் தருமக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தின் பிரபாவத்தால் சுபபுத்தியுடையவர்களாய்ப் பாண்டவர்கட்கு இராச்சியத்தைக்கொடுத்து விடுவார்களென்னும் சங்கையால் நீதுன்புறுதேயென அத்திருதராஷ்டிரரைச் சந்தோஷிப்பிக்கும் பொருட்டு முன்னர் அச்சஞ்சயர் துரியோதனனுடைய துஷ்டகுணங்களை வர்ணிக்கின்றார். (𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍇𑌤𑌿) ஹே திருதராஷ்டிரரே! திருஷ்டத்யும்நன் முதலிய சூரவீர புருஷர்களால் அணிவகுத்து நிறுத்தப்பட்ட பாண்டவர்களின் படையை அத்துரியோதனராசன் தனது நேத்திரத்தாற் பிரத்தியக்ஷமாகப் பார்த்து வில்வித்தையின் சம்பிரதாயத்தைப் பிரவர்த்திப்பவராகிய துரோணாசாரியரிடம் தானே சென்று முற்கூறிய வசனங்களைக் கூறுவாராயினர். ஆண்டு அத்துரோணாசாரியரைத் தன்னிடத்தில் வரவழைத்து அவ்வசனங்களைக் கூறாமலத் துரியோதனராசன் தானே அவரிடஞ்சென்று இது கூறியதா லத்துரியோதனனிடத்துப் பாண்டவர்களின் சைன்னியத்தைப் பார்த்தலாலுண்டாகியபய மிருந்ததெனச் சூசிப்பித்ததாம். ஆண்டு அத் துரியோதனன் பயத்தாற்றனது ரக்ஷையின் பொருட்டு அத் துரோணாசாரியரிடஞ் சென்றானாயினும் அவன் இராசநீதியில் மகாகுசலனாதலால் ஆசாரியரிடம் சிஷ்யன்றானே செல்லுதல் வேண்டும் என்னும் ஆசாரியரது கௌரவத்தன்மையின் * வியாஜத்தாற்றனது பயத்தைக் கூடமாய் மறைத்துவைத்தனன் இவ்வாறாகிய அர்த்தத்தைத் தெரிவித்தற் பொருட்டுச் சஞ்சயராற்றுரியோதனனுக்கு "ராஜா" என்னும் விசேஷணங் கொடுக்கப்பட்டதாம். "துரோணாசாரியரிடம் துரியோதனன் கூறினான்" என்னுமிவ்வளவு கூறுவது மாத்திரத்தானேயே நிர்வாகமுண்டாம் "வசனம்" என்னும் பதங்கூறப் பட்டதாலியாதொரு பயனு மின்றாமாயினும் "வசனம்" என்

* வியாஜம் = கபடம்.

னும் பதத்தைக் கூறியதால் அவ்வாக்கியத்தின்கண் சுருக்கிய தாந்தன்மை அநேக அர்த்தபபிரதி பாதகத்தன்மை முதலிய வநேக குணமுடைமை கூறப்பட்டதாம் அல்லது அத்துரியோதனராசன் கேவலம் வசனமாத்திரத்தையே கூறினன் சிறிது மாத்திரமும் அர்த்தத்தைக் கூறவில்லை என்னு மிப்பொருள் வசன பதத்தால சூசிப்பிததததாம். (2)

(அ - கை.) ஆண்டு எவ்வசனம் அத்துரியோதனனாற் றுரோணுசாரிய ரிடஞ் சென்று கூறபபட்டதோ அவ்வசனம் (𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌂) என்பதுமுதல (𑌤𑌸𑍍𑌯 𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍𑌹𑌰𑍍𑌷𑌂) என்பதன்முன்னுள்ளகிரந்தஙகளால விஸ்தாரமாய் நிரூபிக்கப் பட்டுளது. ஆண்டு இத்துரோணுசாரியரின் அத்தியந்தம் பிரிய சிஷ்யராகியபாண் டவர்களிடத்து இத்துரோணுசாரியருக்கு அத்தியந்தம சிநேகமாமாதலின் இவர் நமது பக்ஷத்திலிருந்துகொண்டு அப்பாணடவர்களோடு யுத்தஞ்செய்யார், எனறிவ் வாருகியகருத்தைத் தனது மனத்தில்வைத்து அத்துரியோதனராஜன் அப்பாண் டவர்களிடத்து அத்துரோணுசாரியருக்குக் கோபமுண்டாம்பொருட்டு அத்துரோ ணுசாரியரிடம் அப்பாண்டவர்களின் அவஞ்ஞையை (அலக்ஷியத்தை) கூறக்கருதி இவ்வாருகியவசனத்தைக்கூறினன்.

𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌮𑌹𑌤𑍀𑌂 𑌚𑌮𑍂𑌮𑍍 ।
𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 𑌤𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣 𑌧𑍀𑌮𑌤𑌾 ॥ ௩ ॥

ப - ம். 𑌪𑌶𑍍𑌯 [6], 𑌏𑌤𑌾𑌂 [3], 𑌪𑌾𑌣𑍍𑌡𑍁𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 [2], 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯 [1], 𑌮𑌹𑌤𑍀𑌂 [4], 𑌚𑌮𑍂𑌂 [5], 𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 [11], 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌪𑍁𑌤𑍍𑌰𑍇𑌣 [10], 𑌤𑌵 [7], 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣 [9], 𑌧𑍀𑌮𑌤𑌾 [8].

(அ - ம்.) ஹே ஆசாரியரே? தங்களுடையசிஷ்யனுகியபுத்திமானுயுள்ள துரு பதபுததிரனுல அணிவகுத்து நிறுத்தப்பட்ட இப்பாண்டவர்களின் மகத்தாகிய சேனையைத தாஙகள் பாரப்பீர்களாக.

(வி - ம்.) ஹே ஆசாரியரே ? தங்களைப்போன்ற மஹானுபாவர்களையும் மதி யாமல அத்தியந்தஞ் சம்பிதது நிற்கும் இப்பாண்டவர்களின் சேனையானது அநேக *அக்ஷௌஹிணி எண்ணிக்கையுடையனவாயிருத்தலின் மிகப்பெரியதாம். இக் காரணததாலேயே அச்சேனைகளைத்தடுப்பது அசககியமாம் (முடியாததாம்.) இத் தகைய பாண்டவர்களின் சேனையைத் தாங்கள் நேத்திரத்தாற பிரத்தி யக்ஷமாகப் பார்ப்பீர்களாக யான் தங்களுடைய சிஷ்யனுயிருக்கின்றனுதலின் கேவலந்தங்க ளைப் பிரார்த்திக்கின்றேன் தங்களுக்கு யாதொரு ஆக்ஞையையும் செய்ய விலலை. ஆதலாலிவ்வெனது பிரார்த்தனையை யங்கீகரிததுத தாஙகள அப் பாண்டவாக ளின் சேனையைப் பார்ப்பீர்களாயின் அப்போது அப் பாண்டவர்களிடத்துள்ள அலக்ஷியத்தன்மையைத் தாங்களே நிச்சயஞ்செய்வீர்கள்.

அப்பாண்டவர்களாற் செய்யப்பட்ட எனதவமதிப்பு நீக்க முடியாத தாற் பொறுப்பதேயெனக்குத்தகுதியாம், என்றிவ்வாருகிய துரோணுசாரியரின சங்கைக்கு, அவ்வவமரியாதையை நீக்குதற்குள்ளவுபாயந்தங்களுக்கு அத்தியந்தம எளிதாம், என்றிவ்வாருகியவிடையை அத்துரோணுசாரியரிடங்கூறுதற் பொருட்டு, "𑌵𑍍𑌯𑍂𑌢𑌾𑌂 𑌤𑌵 𑌶𑌿𑌷𑍍𑌯𑍇𑌣" "உமதுசிஷ்யனுலணிவகுக்கப்பட்ட" எனக்கூறி யதாம். ஹே துரோணுசாரியரே? தங்களிடமிருந்து தனுர்வித்தையைக் கற்றுக்

* அக்ஷௌஹிணி = சேனைகளின் ஒருவகைப் பிரிவு.

கொண்ட அத்துருபதராஜரின் புத்திரன், திருஷ்டத்யும்னன்எனப்பெயரிய உமது புத்திமானுகிய சிஷ்யனும், அத்திருஷ்டத்யும்நனு லிப்பாண்டவர்களின் சேனை சகடாகாரமாயும் பத்மாகாரமாயுஞ் செய்யப்பட்டுளது. இன்னும் சிஷ்யனையபேக்ஷித்துக் குருவினிடத்து அதிகத்தன்மையேயுளது. இவ்வார்த்தை யுலகத்திலும் சாஸ்திரத்திலும் பிரசித்தமாம். ஆகையினுல் தங்களுக்கு அவர்களின் அவஞ்ஞையை நீக்குதற்குள்ளவுபாயம் அத்தியந்தம் சுகமமாம் (எளிதாம்.)

ஈண்டு "த்திருஷ்டத்யும்னனு லணிவகுக்கப்பட்ட அப்பாண்டவர்களின் சேனை" யெனக்கூருது துருபதபுத்திரனுலணிவகுக்கப்பட்ட பாண்டவர்களின் சேனையென அத்துரியோதனன் கூறியது துரோணுசாரியருக்குத்துருபதராசனேடு முன்னுள்ள வைரத்தை (துவேஷத்தைச்) சூசிப்பித்துக் குரோதத்தையுண்டுபண்ணும்பொருட்டாம். அத்துருபதபுத்திரனுக்கு "புத்திமான்" என்னும் விசேஷணம் துரியோதனனுற் கூறப்பட்டது, அது அத்துருபதபுத்திரனைத் தாங்கள் ஒருக்காலும் உபேக்ஷைசெய்யாதீர், என்னும் அவனது உபேக்ஷையின் அபாவத்தைத் தெரிவித்தற்பொருட்டுக்கொடுத்ததாம் ஆகையினுல் ஹேஆசாரியரே! தாங்கள் மற்றெல்லாக்காரியததையும் விட்டுச்சீக்கிரம் சென்று அப்படைகளைப்பார்ப்பீர்களாக. அல்லது இச்சுலோகத்தின் பதங்கட்கு இவ்வாருகிய சம்பந்தஞ்செய்க. (வாம்வ-வ-த் ாணாம்) "பாண்டுபுத்ரர்களின்" என்னும் பதத்தை. (சூவாய-ம்) "ஆசாரியர்" என்னும்பதத்தோடும். (வச-ம்) "சைன்னியத்தை" என்னும்பதத்தோடும்சேர்க்குக. அவ்வாறு அப்பதங்களைச் சேர்ப்பதால் இவ்வாருகிய பொருள் துணியப்படுகின்றது. ஹேபாண்டுபுத்ரரின்ஆசாரியரே அப்பாண்டவர்களின் சைன்னியத்தை நீவிர் பார்ப்பீராக. அப்பாண்டவர்களிடத்திலேயுமக்கு அத்தியந்தம் சிநேகமாம். ஆகையினு லப்பாண்டவர்கட்கே நீவிர் ஆசாரியராம். எனக்கு நீவிர் ஆசாரியான்ரும். உமது சிஷ்யனுகிய துருபதபுத்திரனு லிச்சேனையணிவகுக்கப்பட்டது எனக் கூறியதாலத் துரியோதனனுலிப்பொருள் குறிப்பிக்கப்பட்டதாம், நினதுநாசத் தின்பொருட்டு உற்பன்னனுயும் இத்துருபதபுத்திரன் உன்னுலேயேதனுர்வித்தை யப்பியசிக்கப்பட்டான். ஆகையினுலுனது இம்மூடத்தன்மையே எனது அனர்த்தத்தின் காரணமாம். இன்னமும் அத்துருபத புத்திரன் புத்திமான் எனக்கூறியதால் அத்துரியோதனனுல் இப்பொருள குறிப்பிடப்பட்டதாம், இத்துருபதபுத்திரனுல் தனது சத்துருக்களிடமிருந்தே அச்சத்துருக்களைக் கொல்லுதற்கு உபாயவடிவ தனுர்வித்தை கிரகிக்கப்பட்ட இத்துருபதபுத்திரன் அத்தியந்தம் புத்திமான் என்பதாம்.

ஹேஆசாரியரே? இத்தகைய தங்களுடைய சிஷ்யர்களின் சேனையைப்பார்ப்பதனுற்றங்களுக்கே ஆநந்தமுண்டாம். எக்காரணத்தால் தாங்கள் பிராந்தியடைந்திருக்கின்றீர்களோ பிராந்தியின்றிய மற்றெவருக்கும் அச்சைன்யத்தின் றரிசனத்தாலானந்தமுண்டாகமாட்டாது. எதற்காக இபபாண்டவர்களின் சைன்னியத்தை யான்காண்பிக்கவேண்டும்; ஆகையினுல் தாங்களே சென்று அப்பாண்டவர்களின் சேனையைப் பார்ப்பீர்களாக இவ்வாறு அத்துரோணுசாரியருக்குப் பாண்டவர்களின் சைந்நியத்தைக்காண்பிக்குந் தன்மையனுய் அததுரியோதனன் அவ்வாசாரியரிடந் தனதுகூடமாகிய துவேஷத்தைத் தெரிவித்தனன்.

அத்திருதராஷ்டிரரிடம் இவ்வளவு கூறியதால் அச்சஞ்சயரால் இப்பொருள் தெரிவிக்கப்பட்டது:—தர்மக்ஷேத்திரத்தையடைந்தும் உனது துரியோதனுதியராகியமைந்தர்கட்குத் தமது ஆசாரியரிடத்திலும் இத்தகையத் துவேஷபுத்தியுண்டாயது. அத்துரியோதனுதியர் தருமக்ஷேத்திரத்தின் பிரபாவத்தால் பச்சாத்தா

பத்தையடைந்து அப்பாண்டவர்கட்கு யுத்தமின்றியே ராச்சியத்தைக் கொடுப்பார்கள் என்னும் சம்பாவனை (கருத்து) உன்னால் ஒருக்காலும் செய்யத்தக்கதன்றென்பதாம்.

(அ - கை.) சர்வசூரவீரர்களிலும் அப்பிரசித்தனாகிய துருபதபுத்திரனொருவனை அணிவகுத்து நிறுத்தப்பட்ட இப்பாண்டவர்களின் சேனையை நம்மனோருக்குள் ஒருசாதாரண வீரசூர புருஷனும் ஜயித்துவிடுவான். நீ அப்பாண்டவர்களின் சைந்நியத்தால் எதன்பொருட்டுப் பயத்தையடைகின்றாய், என்று துரோணாசாரியருக்குச் சங்கையுண்டாக அத்துரியோதனராஜன் “அத்ர ஶூரா” ஆண்டிச்சூரர்கள், என்பனமுதலிய மூன்று சுலோகங்களால் அப்பாண்டவர்களின் சைந்நியத்தின் கண்ணுள்ள சூரவீரர்களின் பெயரை வர்ணிக்கின்றான்.

சு - ம். 𑌅𑌤𑍍𑌰 𑌶𑍂𑌰𑌾𑌮𑌹𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌾 𑌭𑍀𑌮𑌾𑌰𑍍𑌜𑍁𑌨𑌸𑌮𑌾𑌯𑍁𑌧𑌿
𑌯𑍁𑌯𑍁𑌧𑌾𑌨𑍋𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌶𑍍𑌚𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ॥ ௪ ॥
𑌧𑍃𑌷𑍍𑌟𑌕𑍇𑌤𑍁𑌶𑍍𑌚𑍇𑌕𑌿𑌤𑌾𑌨𑌃 𑌕𑌾𑌶𑌿𑌰𑌾𑌜𑌶𑍍𑌚𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌪𑍁𑌰𑍁𑌜𑌿𑌤𑍍𑌕𑍁𑌨𑍍𑌤𑌿𑌭𑍋𑌜𑌶𑍍𑌚 𑌶𑍈𑌬𑍍𑌯𑌶𑍍𑌚𑌨𑌰𑌪𑍁𑌙𑍍𑌗𑌵𑌃 ॥ ௫ ॥
𑌯𑍁𑌧𑌾𑌮𑌨𑍍𑌯𑍁𑌶𑍍𑌚𑌵𑌿𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌉𑌤𑍍𑌤𑌮𑍌𑌜𑌾𑌶𑍍𑌚𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌏𑌵𑌮𑌹𑌾𑌰𑌥𑌾𑌃 ॥ ௬ ॥

(ப - ம்.) அத்ர[1] - ஶூரா:[5] - மஹேஷ்வாஸா:[4] - பீமார்ஜுநஸமா:[3] - யுதி[2] - யுயுதாந:[7] - விராட:[9] - ச[8] - த்ருபத:[11] - ச[10] - மஹாரத:[6] த்ருஷ்டகேது:[14] சேகிதாந:[15] - காஶிராஜ:[16] - ச[12] - வீர்யவான்[13] - புருஜித்[18] - குந்திபோஜ:[20] - ச[19] - ஶைப்ய:[22] - ச[21] - நரபுங்கவ:[17] - யுதாமந்யு:[25] - ச - ச[23] - விக்ராந்த:[24] - உத்தமௌஜா:[28] - ச[26] - வீர்யவான்[27] - ஸௌபத்ர:[30] - த்ரௌபதேயா:[31] - ச[29] - ஸர்வ[32] - ஏவ - மஹாரதா: (6)

(அ - ம்.) இப்பாண்டவர்களின்சைந்நியத்தின்கண், போர் புரிவதில் பீமனுக்கும் அருச்சுனனுக்கும் சமானமாயவரும், மகாவில்லாளிகளும் ஆகிய அநேகம் சூரவீரர்களிருக்கின்றார்கள் அவர்களின் பெயர் இதுவாம்:— மஹாரதனாகிய யுயுதானராசன - விராடராஜன் துருபதராசன் -(4) விசேஷபராக்கிரமமுடைய திருஷ்டகேது வென்னும் அரசன் சேகிதானனென்னுமரசன் காசிராசன், சர்வமனுடரிலும் சிறந்தோனாகிய புருஜித்தெனப் பெயரியவரசன் குந்திபோஜனென்னும் அரசன் சைப்பியனென்னுமரசன் (5) விசேஷ பராக்கிரமசாலியாகிய யுதாமன்யுவென்னுமரசன் வீரியவானாகிய உத்தமௌஜாவெனப் பெயரிய அரசன் ஸௌபத்திரன் என்னுமரசன் துரௌபதியின் ஐந்து புத்திரர்கள் என்னுமிவ் வனைவருமே மகாரதர்கள். (5)

(வி - ம்.) ஹே ஆசாரியரே? பாண்டவர்களின் படைகளில் கேவலம் திருஷ்டத்யும்நனெனப் பெயரிய துருபதபுத்திர னொருவனே சூரவீரனன்றும் எதனாலிப் பாண்டவர்களின் சைனியத்தை யாமுபேக்ஷைசெய்யலாமோ; மற்றும், இப்பாண்டவர்களின் சேனையில் வேறும் அநேக சூரவீரர்களுளர். ஆகையினால் அவர்களை

ஜயித்தற்பொருட்டு நாம் பிரயத்தினம் அவசியம் செய்தல் வேண்டும். அவர்களை யுபேக்ஷிப்பது தகுதியன்றாம். இப்போது அச்சூரவீரர்களின் விசேஷணங்களைக் கூறுவாம். (மஹேஷ்வாஸா:) "மகாவில்லாளியாகிய" இஷு என்பது பாணத்திற்காம் அப்பாணவடிவ இஷுச்செலுத்தப்பெறுவது எதனாலோ அதற்கு "இஷுவாஸா" எனப்பெயராம் அத்தகையது தனுஷாம் அத்தகையதனுஷ்வடிவ இஷுவாஸா பெரிதாக எச்சூர வீரபுருஷரிட மிருக்கின்றதோ அப்புருஷருக்கு மஹேஷுவாஸா எனப்பெயராம் கருத்தின்தாம்:— அச்சூரவீரர் பாணங்களாற் சேய்மையினின்றே அந்நியசேனையை யோடச்செய்வதிற் குசலராம். அச்சூரவீரர் மஹாதனுஷை யுடையவராயினும் அவரிடத்தில் யுத்தஞ்செய்வதிற் குசலத்தன்மையின்றாம் என்னுந் துரோணாசாரியரின் சங்கைக்கு அத் துரியோதனன் விடையளிக்கின்றான். (பீமார்ஜுநஸமா யுதி) "யுத்தத்திற் பீமனுக்கும் அருச்சுனனுக்குஞ் சமானமானவர்கள்" என? ஹே ஆசாரியரே! சர்வலோகத்திலும் பிரசித்திபெற்ற பராக்கிரமசாலிகளாகிய பீமார்ச்சுனர்க்குச் சமானமாகவே இச்சூரவீரர்களும் யுத்தத்திற் பராக்ரமசாலிகளாம். அத்தகைய பராக்கிரமசாலிகள் எவரெவர்கள் என்னுந் துரோணாசாரியரது சங்கைக்கு அத்துரியோதனராஜன் அச்சூரவீரர்களின் பெயரைத் துரோணாசாரியரிடங் கூறுகின்றான். (யுயுதாநோ) "யுயுதானன்" அதிசயமாய் எவன் யுத்தஞ்செய்கின்றானோ அவன் யுயுதானனெனப்படுவன் அத்தகையன் "சாதயகி" எனப்பெயரிய அரசனும் சத்துருக்களை விசேஷமாய்ச் சுற்றச்செய்பவன் எவனோ அவனை விராடன் என்பர். (த்ருபத) என்பது விருக்ஷத்திற்காம் பதம் என்பது சின்ன (அடையாள)த்திற்காம் விருக்ஷத்தின் சின்னத்தைக் கொடியிலுடையவன் எவனோ அவனுக்குத் துருபதன் எனப் பெயராம் இம்மூவரும் மஹாரதர்களாம். (4)

சத்துருக்களுக்குப் பயத்தை யடைவிப்பது எதுவோ அதற்கு "த்ருஷ்டம்" எனப்பெயராம் "கேது" என்பது கொடிக்காம்பயத்தின் காரணமாகிய கொடியையுடையவன் எவனோ அவன் "திருஷ்டகேது" எனப்படுவன் சிகிதானனென்னும் அரசரின் புத்திரனுக்கு "சேகிதானன்" எனப்பெயராம். காசிதேசத்திற்கு அரசனாயிருப்பவனுக்குக் "காசிராஜன்" எனப்பெயராம். அம்மூன்றரசர்களும் வீரியவான்களாம். தேஜஸ், பலம், என்னுமிவற்றோடுற்ற சத்துருக்களையும் எவன் நானாப்பிரகாரமாக வோடச்செய்கின்றானோ அவன் வீரனென்னப்படுவன் அவ்வீர புருஷனுடைய செய்கையை வீரியமென்பர் இத்தகைய வீரியம் எவனிடத்திருக்கின்றதோ அவனுக்கு "வீரியவான்" எனப்பெயராம் "புரு" என்பது அநேகத்திற்காம் அவ்வநேக சூரர்களை எவன் வெல்கின்றானோ அவனுக்குப் "புருஜித்" எனப்பெயராகும். குந்தியின் பிதாவிற்குக் "குந்திபோஜன்" எனப்பெயராம் (சிபி) "சிபி" என்னும் அரசனது குலத்திலுற்பன்னமானவனுக்குச் (சைப்ய:) "சைப்யன்" எனப்பெயராம். இம்மூன்றரசர்களும் நரபுங்கவர்களாம் எல்லாமனிதர்களிலுஞ் சிறந்தவர்கட்கு "நரபுங்கவர்" எனப்பெயராம். (5)

(வி - ம்.) 'யுதா' என்பது யுத்தத்திற்காம் 'மன்யு' என்பது குரோதத்திற்காம் யுத்தத்திற்குரோதம் வேகமாய் அவனுக்கு உண்டாமோ அவனுக்கு "யுதாமன்யு" எனப்பெயராம். இந்த யுதாமன்யு பாஞ்சாலதேசத்திற்கு அரசனும் விக்ராந்தனுமாம். விசேஷமாகிய பராக்ரமம் எவனிடத்துளதோ அவனுக்கு விக்ராந்தனெனப் பெயராம். ஓஜஸ் என்பது பலத்திற்காம். உத்தமமாக ஓஜஸ் எவனிடத்துளதோ அவனை உத்தமௌஜா என்பர். அவ் வுத்தமௌஜாவென்னு மரசனும் பாஞ்சாலதேசத்தரசனும். அவ்வுத்தமௌஜாவென்னுமரசன் எத்தகையனெனின்

வீரியவானும் அல்லது வீரியவான், நரபுங்கவன், விக்ராந்தன், என்னும் மூன்று விசேஷணங்களும் யுயுதானன் முதலிய எல்லாராஜாக்கட்கு மாமென்றறிக. சுபத்திரையின் புத்திரனுக்குச் சௌபத்ரன், எனப்பெயராம் அத்தகையன் அபிமன்யுவாம். திரௌபதியின் பிரதிவிந்தியர் முதலிய ஐந்து புத்திரர்கட்கும், திரௌபதேயர் எனப்பெயராம். (த்ரௌபதேயாஶ்ச) 'திரௌபதேயரும், என்னும் பதத்தின்கண்ணுள்ள உம்மையால் முற்கூறிய அரசர்கட்கு வேறாகிய பாண்டியவரசன் கடோத்கசன் முதலிய எல்லா அரசர்களையும் கொள்க. யுதிஷ்டிரர் முதலிய பஞ்சபாண்டவர்கள் அத்தியந்தம் பிரசித்தர்களாகையால் துரியோதனனாலப்பாண்டவர்கள் கணிக்கப்படவில்லை. அல்லது, (பீமார்ஜுநஸமா யுதி) 'யுத்தத்திற் பீமனுக்கும் அருச்சுனனுக்கும் சமானமானவர்கள்' என்னும் வசனத்தால் யுயுதானன் முதலிய யாவரிடத்தும் பீமார்ச்சுன உவமை துரியோதனனாற் கொடுக்கப்பட்டதாம்; ஆகையினால் பீமார்ச்சுன என்னும்பதம் பஞ்சபாண்டவர்களின் உபலக்ஷகமாம். இவ்வாறு யுயுதானராஜனை முதற்கொண்டு திரௌபதியின் ஐந்து புத்திரர்கள் பரியந்தங்கூறிய பதினேழு அரசர்கட்கு வேறாயும் அவர்களது சம்பந்திகளாகிய அநேக சூரர்கள் உளர். அவ்வனைவர்களும் மஹாரதர்களாம். இவர்களில் ரதி அல்லது அர்த்தரதி ஒருவருமின்றாம். ஈண்டு மஹாரதர்கள் என்னும் சப்தத்தால் அதிரதியையுங்கொள்க. அவற்றுள் மஹாரதி, அதிரதி, ரதி, அர்த்தரதி என்னும் நால்வருக்கும் சாஸ்திரத்தில்இவ்வாறாகிய லக்ஷணங் கூறப்பட்டுளது.

சு - ம். ஏகோ தஶ ஸஹஸ்ராணி யோதயேத்யஸ்து தந்விநாம் |
ஶஸ்த்ர ஶாஸ்த்ர ப்ரவீணஶ்ச மஹாரத இதி ஸ்ம்ருத: ||
அமிதாந்யோதயேத்யஸ்து ஸம்ப்ரோக்தோऽதிரதஸ்து ஸ:
ரதஸ்த்வேகேந யோ யோத்தா தந்ந்யூநோऽர்த்தரத: ஸ்ம்ருத: ||

(இ - ள்.) எப்புருஷன் ஏகனாகவே வில்லையுடைய பதினாயிரம் சூரவீரர்களோடு போர்புரிகின்றானோ அங்ஙனமே சஸ்திர சாஸ்திரத்திலும் அத்தியந்தங் குசலனோ அப்புருஷனை மஹாரதி என்பர். எப்புருஷன் ஒருவனாகவே சங்கையில்லாத சூரவீரர்களோடு யுத்தஞ்செய்கின்றானோ அங்ஙனமே சஸ்திரசாஸ்திரத்தில் அத்தியந்தங் குசலனோ அப்புருஷனை 'அதிரதி' என்பர். எப்புருஷன் ஒரு சூரவீரனோடே யுத்தஞ்செய்கின்றானோ அவனை ரதி என்பர், ரதியினுங்குறைந்த பலமுடையவனை அர்த்தரதி என்பர். (6)

(அ - கை.) ஹே துரியோதன! இப்பாண்டவர்களின் சேனையிலுள்ள மஹா சூரவீரர்களைப்பார்த்து ஒருகால் உனக்குப் பயமுண்டாகுமாயின் இப்பாண்டவர்களோடுள்ள சத்துருத்தன்மையைவிட்டு நீ மித்திரத்தன்மையை யடைவாய், என் றிவ்வாறாகிய துரோணாசாரியரது அபிப்பிராயத்தின் ஆசங்கையைக்கொண்டு அத்துரியோதனன் றனது சைந்நியத்திலுள்ள சூரவீரர்களின் பெயர்களை வர்ணிக்கின்றான்.

சு - ம். அஸ்மாகம் து விஶிஷ்டா யே தாந்நிபோத த்விஜோத்தம |
நாயகா மம ஸைந்யஸ்ய ஸம்ஜ்ஞார்த்தம் தாந்ப்ரவீமி தே || எ ||

(ப - ம்.) அஸ்மாகம் (2) - து - விஶிஷ்டா: (4) - யே (3) - தாந் (5) - நிபோத (6) - த்விஜோத்தம (9) - நாயகா: (7) - மம (8) - ஸைந்யஸ்ய - ஸம்ஜ்ஞார்த்தம் (1) - தாந் (10) - ப்ரவீமி (13) - தே (12)

(அ - ம்.) ஹே! சர்வப்பிராமணர்களிலுஞ் சிறந்தோராகிய ஆசாரியரே எம்மனைவருள்ளுஞ் சிறந்தோராகிய எனது சேனையிலுள்ள யுத்தசாலிகளைத் தாங்கள் நிச்சயஞ்செய்க. அச்சேனையிற் பிரதானமாயுள்ள சில சேனைத்தலைவர்களை நாமவுச்சாரணத்தாற்றங்கள் பொருட்டு நான் கூறுகின்றேன்.

(வி - ம்.) ஹே ஆசாரியரே ? எனதுசேனையிலுள்ள வித்தை பலம் பௌருஷம் குலம் சீலம் என்பவற்றாற் சிறந்தவரும் எனது சைந்நியத்தை யவ்வவ்விடங்களிற் செலுத்துவதில் முக்கிய தலைவர்களும் ஆகிய யுத்தவீரர்கள் எண்ணிறந்தவர்களாமாயினும், அவ்வனைவருள்ளும் சிலயுத்தவீரர்களை நாமவுச்சாரணத்தால் அவர்களினும் வேறாகிய எல்லாயுத்த வீரர்களையும் குறிப்பிக்கும் பொருட்டு நான் தங்களுக்குக் கூறுகின்றேன். அவ்வெல்லாயுத்த வீரர்களையுந் தாங்கள் முன்னரே தெரிந்திருக்கின்றீர்களாதலால் தெரியாத சிலயுத்த வீரர்களைத் தெரிவித்தற் பொருட்டு நான் தங்களிடம் அவர்களின் பெயரைக் கூறுவதன்றும் மற்றேமுன்னரே தெரிந்திருக்கப்பட்ட யுத்தவீரர்களின் ஸ்மரணஞ் செய்யும் பொருட்டு அவர் நாமங்களைக் கூறுகின்றேன்.

ஈண்டு ( அஸ்மாகந்து ) என்னும் பதத்தின் கண்ணுள்ள து என்னுஞ் சத்தத்தால் அத்துரியோதனன் உள்ளே உற்பன்னமாகிய பயத்தை வெளிப்படுத்தாமல் தனது தைரியத்தன்மையைத் தெரிவித்ததாம். ( த்விஜோத்தம ) என்னும் விசேஷணத்தைக் கூறியதால் அத்துரியோதனன் துரோணாசாரியரை ஸ்துதித்துத் தனது யுத்தவடிவ காரியத்தில் அத்துரோணாசாரியரின் பிரவர்த்தியைச் சம்பாதிப்பதற்காம். இன்னமும் அத்துரோணாசாரியரின் துவேஷ பக்ஷத்திலோ அத்துரியோதனன் ( த்விஜோத்தம ) என்னும் விசேஷணத்தால் இவ்வர்த்தத்தைத் தெரிவித்தனன் நீர் பிராமணராதலின் யுத்தத்திற் குசலத்தன்மையுமக்கின்றாம். ஆகையினால்நீரொருகால் எம்மைவிட்டுப்பாண்டவர்களின் பக்ஷத்திற் செல்லினும் பீஷ்மர்முதலிய சிறந்த க்ஷத்திரியர் எமது பக்ஷத்தின்கண்ணுளர், ஆகையினால் நீரில்லாததனால் எமக்குச் சிறிதும் ஹானியுண்டாவதின்றாம். (ஸம்ஜ்ஞார்த்தந்தாந் ப்ரவீமி தே) எனக்கூறியதால் அத்துரியோதனனால் இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது உமது பிரியசிஷ்யர்களாகிய பாண்டவர்களின் சேனையைப் பார்த்து ஹர்ஷத்தால் வியாகுலமனத்தையுடையவுமக்கு எனது பீஷ்மர் முதலிய சூரபுருஷரின் மறதியுண்டாகாமல் அவர்களின் ஸ்மிருதியை யுண்டுபண்ணும் பொருட்டு அவர்களிற் சில சூரவீரர்களின் பெயரையுமக்குக் கூறுகின்றேன். (7)

(அ - கை.) இப்பொழுது அத்துரியோதனராஜன் துரோணாசாரியரிடஞ் சென்று தன் சேனையிலுள்ள சூரவீரர்களின் பெயரைக் கணிக்கின்றான்.

சு - ம். பவாந்பீஷ்மஶ்ச கர்ணஶ்ச க்ருபஶ்ச ஸமிதிஞ்ஜய: ।
அஶ்வத்தாமா விகர்ணஶ்ச ஸௌமதத்திர்ஜயத்ரத: ॥ அ ॥

(ப - ம்.)

| 1 | 3 | 2 | 5 | 4 | 8 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| பவாந் | பீஷ்ம: | ச | கர்ண: | ச | க்ருப: | ச | ஸமிதிஞ்ஜய: |

| 9 | 11 | 10 | 12 | 13 |
|---|---|---|---|---|
| அஶ்வத்தாமா | விகர்ண: | ச | ஸௌமதத்தி | ஜயத்ரத: |

(அ - ம்.) துரோணாசாரியாராகிய தாங்களும் * பிதாமஹனாகிய பீஷ்மரும் கர்ணனும் யுத்தத்திற் சயமுடையவராகிய கிருபாசாரியரும் அசுவத்தாமாவும் விகர்ணனும் சௌமதத்தியும் ஜயத்ரதனும்.

(வி - ம்.) ஹே ஆசாரியரே! எனது சேனையின்கண் முதன்மையாய் மஹாசூரவீரராய தாங்களிருக்கின்றீர்கள் அங்ஙனமே பீஷ்மபிதாமகரும் கர்ணனும்போரிற் சயம்புரிபவராகிய கிருபாசாரியருமுளர். துரோணாசாரியரின் புத்திரனாகிய அசுவத்தாமாவைக் கர்ணனின் பின்னர் †கணித்ததால் அத்துரோணாசாரியரின் மனத்திற் கோபமுண்டாமென்னும் ஆசங்கையால் அக்குரோதத்தை நிவர்த்தித்தற் பொருட்டு அத்துரியோதனன் இவ்வசுவத்தாமா முதலியநால்வருமோ எனது சேனையிலுள்ள எல்லாச் சூரவீரர்களிலும் சிறந்ததலைவர்களாம் என்றிவ்வாறாகிய வபிப்பிராயத்தால் அந்நால்வரையும் கணித்ததாம், (அஶ்வத்தாமா) "அசுவத்தாமா என. ஹே ஆசாரியரே தங்கள் புத்திரனாகிய அசுவத்தாமாவும் எனது இளைய சகோதரனாகிய விகர்ணனும், சோமதத்த அரசரின் மைந்தனாகிய சௌமதத்தியும் இவரை (ஸௌமதத்தி:) என்பர்" சிந்துதேசத்தினரசனாகிய ஜயத்திரதனும் ஆகிய இந்நால்வரும் மகாசூர வீரர்களாம். ஈண்டு, எங்ஙனந் துரியோதனனால் பீஷ்மாதிகளையபேக்ஷித்துத் துரோணாசாரியரைப் பிரதமத்திற் கணிக்கப்பட்டது அத்துரோணாசாரியரின் சந்தோஷத்தின் பொருட்டாமோ அங்ஙனமே விகர்ணன் முதலியோரை யபேக்ஷித்து அத்துரோணாசாரியரின் புத்திரராகிய அசுவத்தாமாவை முன்னர்க்கணித்ததும் அத்துரோணாசாரியரின் சந்தோஷத்தின் பொருட்டாம்; இவ்வுலகத்தில் தனது மேன்மையையும் தனது புத்திரனது மேன்மையையுங் கேட்பதனால் சர்வலோகர்கட்குஞ் சந்தோஷமுண்டாகின்றது. ஈண்டு (ஜயத்ரத:) என்னும் பதத்தின் ஸ்தானத்தில் (ததைவ ச) என்னும் பாடமுஞ் சில புஸ்தகங்களிலுளது. (8)

(அ - கை.) ஹே துரியோதன! நினது சேனையின் கண்ணென்ன இவ்வளவுதானா சூரவீரர்கள்? என்னுந் துரோணாசாரியரின் சங்கைக்கு அத்துரியோதனன் எனது சேனையில் வேறு மனேக சூரவீரர்களுளர் என்றிவ்வாறாகிய விடை கூறுகின்றான்.

(சு - ம்.) அந்யே ச பஹவ: ஶூரா மதர்தே த்யக்தஜீவிதா: ।
　　நாநாஶஸ்த்ரப்ரஹரணா: ஸர்வே யுத்தவிஶாரதா: ॥ கூ ॥

(ப - ம்.) அந்யே[1] - ச[2] - பஹவ:[3] - ஶூரா:[4] - மதர்தே[5] - த்யக்தஜீவிதா:[6] - நாநாஶஸ்த்ரப்ரஹரணா:[7] - ஸர்வே[8] - யுத்தவிஶாரதா:[9].

(அ - ம்.) ஹே ஆசாரியரே! எனது சேனையின்கண் முற்கூறிய சூரவீரர்களன்றிமற்றும் அநேக சூரவீரர்களுளர், அவர் எத்தகையரெனின்? எனது ஜயரூபப்பிரயோஜனத்தின் பொருட்டுத் தங்கள் ஜீவனத்திலுள்ள ஆசையை விட்டிருப்பவரும் யுத்தசாதனங்களாய நானாவித சஸ்திரங்களையுடையவரும் யுத்தத்தில் அத்தியந்தங்குசலர்களுமாவர்.

(வி - ம்.) ஹே ஆசாரியரே! கேவலம் முற் கூறிய பீஷ்மாதிகளே எனது சைந்நியத்தின் கண்ணின்றும் மற்றோ அப்பீஷ்மாதிகளின் வேறாயும் சல்யன், கிரு

---

* பிதாமஹன் = பாட்டன்.　　† கணித்தல் = எண்ணல்.

தவர்மா, பகதத்தன் முதலிய அநேக சூரவீரர்களுளர். அவர்களெத்தகைய சூரவீரர்களெனின் தமது பிராணன்களைப் பரித்தியாகஞ் செய்தேனும் இத்துரியோதனனது ஜயத்தை நாம் சம்பாதித்தல் வேண்டும் என்றிவ்வாறாகிய நிச்சயமுடையவரும், யுத்தசாதனங்களாகிய சூலம், சக்கிரம், கதை, கட்கம் முதலியசஸ்திரங்களையுடையவருமாவார். இக்காரணத்தானேயே அவ்வெல்லாச் சூரவீரர்களும் யுத்தத்தில் மிகு குசலர்களாவர். ஈண்டு "சூரர்கள்" என்பனமுதலிய விசேஷணங்களால் அத்துரியோதனன் தனது சேனையில் பாண்டவர்களது சேனையினின்றும் அதிகத்தன்மையுளதெனக் கூறியதாம்; தன்னிடத்து அச்சேனைகளின் அனன்னிய பக்தியையுங் கூறப்பட்டதாம்; அங்ஙனமே தனது சைந்நியத்தின் சௌரியத்தன்மை யுத்தத்தில் அத்தியந்தம் பிரயத்தனம் அத்தியந்தங் குசலத்தன்மை முதலியனவும் கூறப்பட்டதாம். இத்தகைய எனது சேனைகள் இப்பாண்டவர்களின் சேனையினுமதிக பலவான்களாம். (9)

(அ - கை.) ஹே துரியோதன ! எங்ஙனம் நினதுசைந்நியத்தின்கண் சஸ்திர அஸ்திரவித்தைகளிற் குசலர்களாகிய பீஷ்மர் முதலிய வநேக சூரவீரர்களுளரோ அங்ஙனமே பாண்டவர்களது சேனையிலும் அஸ்திரசஸ்திரவித்தையிற் குசலர்களாகிய அநேகம் சூரவீரர்களுளர். ஆகையினால் இவ்விரண்டு சேனைகளும் சமானமேயாம் என்னுந் துரோணசாரியரின் சங்கையுண்டாக அத்துரியோதனராஜன் வேறு விதத்தானும் அப்பாண்டவர்களின் சேனையினின்றுந் தனது சேனையில் அதிகத்தன்மையுளதென வர்ணிக்கின்றான்.

(சு - ம்.) அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தம் த்விதமேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥ க௦ ॥

(ப - ம்.) அபர்யாப்தம்[4] - தத்[2] - அஸ்மாகம்[1] - பலம்[3] - பீஷ்மாபிரக்ஷிதம்[5]. பர்யாப்தம்[6] - து[8] - இதம்[7] - ஏதேஷாம்[9] - பலம் பீமாபிரக்ஷிதம்[11].

(அ - ம்.) ஹே ஆசாரியரே ! எமது சேனை அநந்தமும் பீஷ்மரால் எல்லாப்பக்கங்களிலும் பாதுகாக்கப்பட்டதுமாம் இப்பாண்டவர்களின் சேனை குறைந்ததும் பீமனாற் பாதுகாக்கப்பட்டதுமாம். (10)

(வி - ம்.) ஹே ஆசாரியரே ! இவ்வெனது சேனைகள் பதினோரக்ரோணி சங்கையுடையதும், சர்வலோகத்திலும் பிரசித்திபெற்ற மகிமையும் அத்தியந்தஞ் சூக்ஷ்மபுத்தியுமுடையவராகிய பீஷ்மரால் நாற்புறமும் பாதுகாக்கப்பட்டதுமாம்; ஆகையினால் இவ்வெனது சேனைபாண்டவர்களது சேனையினும் பிரபலமாம். இப்பாண்டவர்களின் சேனையோ ஏழு அக்குரோணி சங்கையை யுடைத்தாதலால் எமது சேனையினுங் குறைந்ததும் அத்தியந்தஞ் சபலபுத்தியுடையவனும் துர்ப்பலனுமாகிய பீமசேனனாற் பாதுகாக்கப்பட்டதுமாம்; ஆகையினால் இப்பாண்டவர்களின் சேனை யெனது சேனையினும் அத்தியந்தந் துர்ப்பலமாம். அல்லது அபர்யாப்தம் தத் அஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் பர்யாப்தம் து இதம் ஏதேஷாம் பலம்பீஷ்மாபிரக்ஷிதம் என்னும் சுலோக பதங்களை இவ்வாறு கூட்டுக. அப்பாண்டவர்களின் சேனை என்னைப் பாராஜயஞ்செய்வதிற் சமர்த்துடையதன்றாம் எதனால் அப்பாண்டவர்களின் சேனை பீஷ்மரினின்றுங் காக்கப்பட்டதாமோ என்னை, மகாபராக்கிரமசாலியும் சூக்குமபுத்தியுடையவருமாகிய பீஷ்ம

பிதாமகன் என்னுல் ஸ்தாபிக்கப்பட்டார் அது பாண்டவர்களின் சேனையை நீக்கும்பொருட்டாம் இக்காரணத்தால் அப்பாண்டவர்களின் சேனை பீஷ்மரினின்றுங் காக்கப்பட்டதாம். அன்றியும் இவ்வெனது சேனையோ, பாண்டவர்களைப் * பராஜயஞ்செய்வதிற் சமர்த்துடையதாம். எதனுல் இவ்வெனது சேனை பீமனினின்றுங் காக்கப்பட்டதாமோ, என்னை? அத்தியந்தம் தைரியமற்றவனும் மிகத்தூல புத்தியுடையவனும் ஆகிய பீமசேனன் எனது சேனையை நீக்கும்பொருட்டு இவர்களால் ஸ்தாபனஞ்செய்யப்பட்டான். இக்காரணத்தாலிவ்வெனது சேனை பீமனினின்றுங் காக்கப்பட்டதாம். ஆகையினுலித்தகைய பாண்டவர்களிடத்தினின்றும் எனக்குச் சற்றும்பயமுண்டாவதின்றும். ஈண்டு முதல் வியாக்யானத்திலோ, பீஷ்மராற்காக்கப்பட்டது பீஷ்மா பிரக்ஷிதம் பீமனுற்காக்கப்பட்டது பீமா பிரக்ஷிதம் என மூன்றும் வேற்றுமைத்தொகையால் (ஹீஷாஹிரக்ஷிதம்) என்பது துரியோதனனது சேனைக்கு விசேஷணமாம் (ஹீமாஹிரக்ஷிதம்) என்பது பாண்டவர்களின் சேனைக்கு விசேஷணமாம். இரண்டாவது வியாக்கியானத்தில் பீஷ்மர்காக்கப்பட்டார் எதன்பொருட்டாய் அது பீஷ்மா பிரக்ஷிதமாம் பீமன் காக்கப்பட்டான் எதன்பொருட்டாய் அது பீமா பிரக்ஷிதமாம் என்றிவ்வாறு அன்மொழித்தொகையால் பீஷ்மாபிரக்ஷிதமென்பது பாண்டவர்களின் சேனைக்கும் பீமா பிரக்ஷித மென்பது துரியோதனனது சேனைக்கும் விசேஷணமாம். (10)

(அ - கை.) ஹே துரியோதன! இப்பாண்டவர்களின் சேனையை யபேக்ஷித்து உனது சேனைபிரபல மெனமதித்து அதனுல் நீ பயமின்றியவனுயின் எதன்பொருட்டு அநேக கற்பனைகளைச்செய்கின்றுய் என்னுமாசங்கையுண்டாகத் துரியோதன ராஜன் கூறுகின்றுன்.

(சு - ம்.) அயநெஷுவ ஸவெஷு யயாஹாமவஸ்திதாஃ ।
ஹீஷெவாஹிரக்ஷநு ஹவநஃ ஸவெவவஹி ॥ கக ॥

(ப - ம்.) அயநெஷு[5] - வ - ஸவெஷு[4] யயாஹாமம்[6] - அவஸ்திதாஃ[7] ஹீஷம்[8] வவ[9] - அஹிரக்ஷநு[10] - ஹவம்தஃ[2] - ஸவெ[3], வவ - ஹி[1].

(அ - ம்.) துரோணுசாரியாாகிய தாங்கள் முதலியயாவரும்அணிவகுக்கப்பட்ட சேனையைத் தத்தம்ஸ்தானங்களாகிய பிரவேசமார்க்கத்தில் நிறுத்தி இப்பீஷ்ம பிதாமகரையே எல்லாப் புறமுங் காத்தல்வேண்டும்.

(வி - ம்.) (அயநெஷுவ) என்னும் பதத்தின்கண்ணுள்ள சகாமானது (உம்மையானது) முற்கர்த்தவ்யத்தின் அபேக்ஷையால் கர்த்தவ்ய விசேஷத்தின் போதகமாம். யுத்தத்தின் ஆரம்பகாலத்தில் யுத்தபுருஷர்களை முறையே யுத்தபூமிக்கண் கிழக்கு வடக்குமுதலிய திசைகளில் வகுத்து நிறுத்தி நியமஞ் செய்யுமிடத்திற்கு அயனமெனப்பெயராம். எல்லாச்சேனைகட்குந் தலைவனே அச்சேனைகளைத் தமது ஆசிரிதத்தில்வைத்து அவ்வெல்லாச்சேனைகளின் மத்தியிலிருத்தல்வேண்டும் அத்தகையசேனுதிபதி யெனது பீஷ்மபிதாமகராம் அப்பீஷ்மபிதாமகர் யுத்தத்திலத்தியந்தமபிநிவேசமுடையாாதலால் தமதுமுன்னினும் பின்னினும் வலப்புறமும் இடப்புறமும் நோக்கார் ஆகையினுல் துரோணுசாரியாாகிய தாங்கள் முதலிய எல்லா யுத்தவீரர்களும் தங்கள் பின்ன பின்ன இரணபூமியை விடாமலே தங்கள் தங்கள்

* பாாஜயம்=தோல்வி.

யதாஸ்தானங்களிலிருந்துகொண்டு இப்பீஷ்மபிதாமகரையே எல்லாப்பக்கங்களி லுங் காத்தல்வேண்டும் அங்ஙனஞ் செய்வதனுல் அந்நியசேனையிலுள்ள எச்சத் துருவும் எவ்வழியாயேனும் வந்து இப்பீஷ்மபிதாமகரைக் கொல்லான் இவ்வாறு சாவதானமாய்ப் பாதுகாத்துக்கொள்க. தாங்களனைவரு மிப்பீஷ்மபிதாமகரைப் பாதுகாப்பீராயின் அப்போது அவரது கருணையால் நாமெல்லோரும் காக்கப்படு வோம். (11)

(அ - கை.) ஹே சஞ்சய? இவ்வாருகிய வசனங்களை அத்துரியோதனராஜன் கூறிய பின்னர் அப்பீஷ்மாதி யுத்தவீரர்கள் எக்காரியத்தைச் செய்தனர்? என்றிவ் வாறு திருதராஷ்டிரரின் ஆசங்கையுண்டாக "சிலர் என்னை ஸ்துதிக்குக அல்லது சிலர் என்னை நிந்திக்குக இத்துரியோதனன் பொருட்டு இவ்வெனது சரீரம் அவ சியம் விழவேண்டும் என்றிவ்வாருகிய கருத்தால் அப்பீஷ்மபிதாமகர் அத்துரி யோதனனது சித்தத்திற் சந்தோஷமுண்டாம் பொருட்டுச் சிம்மநாதத்தைச் செய்து உரக்கச் சங்கத்தொனியை முழக்கினர், என்றிவ்வாருகிய விடையை அச்சஞ்சயர் அத்திருதராஷ்டிரரின் பொருட்டுக் கூறலுற்ருர்.

(சு - ம்.) 𑌤𑌸𑍍𑌯𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍𑌹𑌰𑍍𑌷𑌂𑌕𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 ।
𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂𑌵𑌿𑌨𑌦𑍍𑌯𑍋𑌚𑍍𑌚𑍈𑌃 𑌶𑌙𑍍𑌖𑌂𑌦𑌧𑍍𑌮𑍌 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ॥

(ப - ம்) 𑌤𑌸𑍍𑌯 (4) - 𑌸𑌂𑌜𑌨𑌯𑌨𑍍 (6) - 𑌹𑌰𑍍𑌷𑌂 (5) - 𑌕𑌰𑍁𑌵𑍃𑌦𑍍𑌧𑌃 (2) - 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 (3) - 𑌸𑌿𑌂𑌹𑌨𑌾𑌦𑌂 (12) - 𑌵𑌿𑌨𑌦𑍍𑌯 (8) - 𑌉𑌚𑍍𑌚𑍈𑌃 (9) - 𑌶𑌙𑍍𑌖𑌂 (10) - 𑌦𑌧𑍍𑌮𑍌 (11) - 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 (1).

(அ - ம்.) ஹே திருதராஷ்டிரரே! மஹா பிரதாபவானும் குருவம் சத்தில் வயோதிகரும் ஆகிய பீஷ்மபிதாமகர் அத்துரியோதன ராஜனைச் சந்தோஷிப் பித்தற் பொருட்டுச் சிம்ஹநாதஞ்செய்து சங்கையுரக்க வூதினுர்.

(வி - ம்.) ஹே திருதராஷ்டிரரே! துரியோதனன் பாண்டவர்களின் சேனை யைப்பார்த்து அதனுலுண்டாகிய பயத்தை நிவிர்த்திசெய்தற்பொருட்டு அத் துரோணுசாரியரைக் கபடமாய்ச் சரணடைந்தனன்; இக்காலத்திலும் இத்துரியோ தனன் என்னிடத்திற் கபடஞ்செய்கின்றனன், என்றிவ்வாருகிய அசந்தோஷத் தால் வாக்குமாத்திரத்தானும் அவன் ஆசாரியரால் ஆதரஞ்செய்யப்பட்டானில்லை. அங்ஙனமாய துரோணுசாரியரின் உபேக்ஷையைத்தெரிந்து ( 𑌅𑌯𑌨𑍇𑌷𑍁 𑌚 ) (𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁) என்பனவாதி வசனங்களால் பீஷ்மபிதாமகரின் ஸ்துதியைச்செய் தனன். இத்தகைய துரியோதன ராஜனது பயத்தைநிவர்த்தி செய்வதும் அவனது ஜயத்தைச் சூசிப்பிப்பதும் ஆய புத்தியின்கண்ணுள்ள வுல்லாசரூபஹர்ஷத்தை வெளிப்படுத்துபவராய் அப்பீஷ்மபிதாமகர் மஹாசிம்ஹநாதத்தைச்செய்து உச்ச சுரத்தாற் சங்கத்தை முழக்கினர். ஈண்டுச் சஞ்சயரால் பீஷ்மருக்குக் குருவிருத் தர் பிதாமஹன் பிரதாபவான் என மூன்று விசேஷணங்கள் கொடுக்கப்பட்டன. அவற்றுள் குருவிருத்தர் என்னுமுதல் விசேஷணத்தாலோ பீஷ்மாசாரியரிடத் தில் துரோணுசாரிய துரியோதனரின் அபிப்பிராயஞானம் சூசிப்பித்ததாம். என்னை? உலகத்தின்கண் விருத்த புருஷரிடத்தே புத்திராதிகளி னபிப்பிராய ஞானமுண்டாமாதலின்.

பிதாமஹன் என்னும் இரண்டாவது விசேஷணத்தால் துரோணுசாரியரால் துரியோதனுதியர் உபேக்ஷிக்கப்பட்டதேபோல் நான் இவரை யுபேக்ஷைசெய்வது யோக்கியமன்றும். என்றிவ்வாருகிய அபிப்பிராயத்தைத் தெரிவித்ததாம். பிரதாப வான், என்னும் மூன்ருவது விசேஷணத்தால் இப்பொருள் சூசிப்பிக்கப்பட்டது **உச்சஸ்வரத்தால் ஸிம்ஹநாதபூர்வகமாய்ச் சங்கம் பீஷ்மரால் ஊதப்பட்டது.** அப்

பீஷ்மரின் சங்கத்தொனியானது பாண்டவர்களின் சேனைக்கு அவசியம் பயத்தை விளைவிக்கும் என்பதாம்.

(12)

(அ - கை.) இப்போது சேனாதிபதியாகிய பீஷ்மரின் பிரவிர்த்தியின் பின்னர் எல்லா யுத்த வீரர்களுக்கும் எவ்வகையாய பிரவிருத்தியுண்டாயது என்பதைச் சஞ்சயர் வர்ணிக்கின்றார்.

(சு - ம்.) 𑌤𑌤𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌶𑍍𑌚 𑌭𑍇𑌰𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃 ।
𑌸𑌹𑌸𑍈𑌵𑌾𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 𑌸 𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍁𑌮𑍁𑌲𑍋𑌽𑌭𑌵𑌤𑍍 ॥ ௧௩ ॥

1 2 3 4 5 6
(ப - ம்.) 𑌤𑌤𑌃 - 𑌶𑌙𑍍𑌖𑌾𑌃 - 𑌚 - 𑌭𑍇𑌰𑍍𑌯𑌃 - 𑌚 - 𑌪𑌣𑌵𑌾𑌨𑌕𑌗𑍋𑌮𑍁𑌖𑌾𑌃

7 8 9 10 11 12 13
𑌸𑌹𑌸𑌾 - 𑌏𑌵 - 𑌅𑌭𑍍𑌯𑌹𑌨𑍍𑌯𑌨𑍍𑌤 - 𑌸𑌃 - 𑌶𑌬𑍍𑌦𑌃 - 𑌤𑍁𑌮𑍁𑌲𑌃 𑌅𑌭𑌵𑌤𑍍.

(அ - ம்.) ஹே திருதராஷ்டிரரே! அச்சேனாதிபதியாகிய பீஷ்மரின் பிரவிர்த்தியின் பின்னர் அத்துரியோதனனது சேனையினிடத்தே அநேக சங்கங்களும், அநேகபேரிகளும், அநேக பணவங்களும் அநேக அநகங்களும், அநேக கோமுகங்களும் ஆகிய வாத்தியங்கள் அதிவேகமாகவே முழங்கின அச்சங்கத்தொனி முதலிய வொலிகள் நிரம்பிநின்றன.

(வி - ம்.) ஹே திருதராஷ்டிரரே! அந்தச் சேனாதிபதியாகிய பீஷ்மரின் சங்கநாதத்தைக் கேட்டலாலுற்பன்னமாகிய சந்தோஷத்துடன் துரோணாசாரியர் முதலிய எல்லா யுத்தவீரர்களும் தங்கள் தங்கள் சங்குகளை வேகமாகவே முழக்கினர் உடனே ஏனைய யுத்தபுருஷரும் பேரி, பணவம், அநகம், கோமுகம் முதலிய வாத்தியங்களை விரைவாகவே முழக்கினார்கள் அச்சங்கம்பேரி முதலியவற்றின் தொனிரூப சத்தங்கள் மகத்தா யிருந்தன. அம்மஹத்தாகிய சத்தங்களைக் கேட்டும் அப்பாண்டவர்கட்குச் சற்றுங்கலக்கமுண்டாக வில்லை. ஈண்டு, பணவ மென்பது மிருதங்கத்திற்காம், அநக மென்பது நகாராவிற்காம், கோமுக மென்பது ரணசிம்ஹத்திற்காம்.

(13)

(அ - கை.) இவ்வாறு துரியோதனராஜனது சேனைகளின் பிரவிர்த்தியைக் கூறி யிப்போது பாண்டவர்களது சேனையின் பிரவிர்த்தியை யச்சஞ்சயர் கூறுகின்றார்.

(சு - ம்.) 𑌤𑌤𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌰𑍍𑌹𑌯𑍈𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 𑌮𑌹𑌤𑌿 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇 𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 ।
𑌮𑌾𑌧𑌵𑌃 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 𑌶𑌙𑍍𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃 ॥

1 2 3 4 5 6
(ப - ம்.) 𑌤𑌤𑌃 - 𑌶𑍍𑌵𑍇𑌤𑍈𑌃 - 𑌹𑌯𑍈𑌃 - 𑌯𑍁𑌕𑍍𑌤𑍇 - 𑌮𑌹𑌤𑌿 - 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌨𑍇

7 8 10 9 11 21 13
𑌸𑍍𑌥𑌿𑌤𑍌 - 𑌮𑌾𑌧𑌵𑌃 - 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃 𑌚 - 𑌏𑌵 - 𑌦𑌿𑌵𑍍𑌯𑍌 - 𑌶𑌙𑍍𑌖𑍌 𑌪𑍍𑌰𑌦𑌧𑍍𑌮𑌤𑍁𑌃

(அ - ம்.) இச்சுலோகத்தின் அக்ஷரங்களின் அர்த்தம் ஸ்பஷ்டமேயாம்.

(அதன் பின்னர் மாதவனும் அர்ச்சுனனும் வெண்குதிரைகள் பூட்டிய அற்புதமாய தேரிலாரோஹணித்துத் திவ்யமாய சங்கை முழக்கினர்.

(வி - ம்.) பாண்டவர்களின் சேனையில் அர்ச்சுனனைப்போலும் கிருஷ்ண பகவானைப்போலும் மற்று மநேகயுத்த வீரர்கள் தங்கள் தங்கள் தேரிலேயேயிருந்த

* ரணசிம்ஹம் = ஊதுகொம்பு.

னாதலால் கேவலம் அருச்சுனனுக்கும் கிருஷ்ணபகவானுக்குமே தேரின்மேலி ருத்தலாகியவிசேஷணம் பொருந்தாதாயினும் (ச்வேதைர் ஹயைர் யுக்தே) "வெண்குதிரைகள் பூட்டிய" என்பனவாதி விசேஷணத்தோடுற்ற தேரில் அருச் சுனனும் பகவானும் இருந்தார்களெனக்கூறப்பட்டதன்று அது ஏனையதேர்க்களி னின்றும் அருச்சுனனது தேரின் மேம்பாட்டைத்தெரிவிக்கும் பொருட்டுக்கூறிய தாம் ஆகையினால் அக்கினிதேவதையால் கொடுக்கப்பட்ட அந்தத்தேரானது எந்தச் சத்துருவாலும் அசைக்கப்படமாட்டாததாம் இத்தகைய மஹாரதத்தின்கண் ணிருப்பவர் அருச்சுனனும் கிருஷ்ணபகவானுமாம் அவ்விருவரும் எச்சத்துரு வாலும் ஜயிக்கப்படமாட்டார்கள். (14)

(அ - கை.) இப்போது அவ்வர்ச்சுனனும் பகவானும் எச்சங்குகளை முழக் கினரோ அவைகளின் பெயரையும் பீமாதிகளின் சங்குகளின் பெயரையும் இர ண்டு சுலோகங்களால் வர்ணிக்கின்றார்.

(சு - ம்.) பாஞ்சஜந்யம் ஹ்ருஷீகேசோ தேவதத்தம் தநஞ்ஜய: ।

பௌண்ட்ரம் தத்⁴மௌ மஹாசங்க²ம் பீ⁴மகர்மா வ்ருகோத³ர: ॥ கரு ॥

(ப - ம்.) பாஞ்சஜந்யம் [2] - ஹ்ருஷீகேசோ [1] - தேவதத்தம் [5] - தநஞ்ஜய: [4] - பௌண் ட்ரம் [8] - தத்⁴மௌ [3] - மஹாசங்க²ம் [9] - பீ⁴மகர்மா [6] - வ்ருகோத³ர: [7].

(அ - ம்.) ஸ்ரீகிருஷ்ணபகவான் பாஞ்சஜந்நியமெனப் பெயரிய சங்கத்தையும், அர்ச்சுனன் தேவதத்தமெனப் பெயரிய சங்கத்தையும், உலகருக்குப் பயத்தை விளைவிப்பதாகிய தொழிலையும் விருகத்தை (நரியைப்) போன்றவயிற்றையுமுடைய பீமசேனன் பௌண்டிரமெனப் பெயரிய மஹாசங்கத்தையும் முழக்கினர்.

(வி - ம்) பஞ்ச (ஐந்து) ஜனங்களில்நின்றும் உற்பன்னமானதாலதற்குப் பாஞ்சஜன்யமெனப் பெயராம், அப்பாஞ்சஜன்யத்தை ஹ்ருஷீகேசனும் தேவதை களாற் கொடுக்கப்பட்டதனாலதற்குத் தேவதத்தமெனப்பெயராம், அத்தேவதத்த மெனப் பெயரிய சங்கைத் தனஞ்சயனும் ஊதினார்கள். ஈண்டுச்சஞ்சயர் ஸ்ரீ கிருஷ்ணபகவானை ஹ்ருஷீகேசனென்னும் பெயராற்கூறினர். அதன் கருத்திது வாம்:—ஹ்ருஷீகேச, என்னும் நாமத்தின்கண். ஹ்ருஷீக, ஈச, என்னுமிரண்டு பதங்களுள - அவற்றுள் ஹ்ருஷீக, என்பது இந்திரியங்கட்காம்; ஈச, என்பது பிரோகத்திற்காம். (ஏவுதற்காம்) அவ்விருபதங்களுமொருங்குகூடிச் சர்வ இந்திரி யங்களையுந் தத்தம் காரியங்களிற் செலுத்துபவரும் அந்தரியாமியுமாகிய ஈசுவர னைக்கூறியதாம். இத்தகைய யாவற்றிற்கு மந்தரியாமியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான். பாண்டவர்கட்குச் சகாயஞ் செய்யுந்தன்மையிலிருக்கின்றனர், அப்பாண்டவர்களை உனது துரியோதனாதியர் ஜயிப்பதின்றாம்.

இன்னமும் அச்சஞ்சயரால் அருச்சுனனுக்குத் தனஞ்சயனென்னும் பெயர் கூறப்பட்டது. அதற்கிது கருத்தாம். அர்ச்சுனன் சர்வதிசைகளையுஞ் சயித்தகா லத்தில் எல்லா அரசர்களையும் வென்று தனங்களைச் சேகரித்துவந்தனன் ; அக்கார ணத்தால் அவ்வர்ச்சுனனைத் தனஞ்சயனென்பர். அத்தகைய மஹாபராக்கிரமசாலி யாகிய அர்ச்சுனனை உனது புத்திரர்கள் ஜயிக்கமாட்டார்.

அன்றியும் அச்சஞ்சயரால் பீமசேனனுக்கு. விருகோதரன் என்னும் விசே ஷணங் கொடுக்கப்பட்டது. அதன்கருத்திதுவாம்:—வ்ருகத்தைப்போன்று அப் பீமசேனனிடம் மிகுதியாகிய அன்னங்களைப்பசனம் (ஜீரணம்) செய்வதாகிய சாமர்த்தியம் உளது ஆகையினாலப்பீமசேனன் அத்தியந்தம் பலவானும். (15)

(சு - ம்.) 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂 𑌰𑌾𑌜𑌾 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑍋 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃 ।
𑌨𑌕𑍁𑌲𑌃 𑌸𑌹𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌸𑍁𑌘𑍋𑌷𑌮𑌣𑌿𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌 ॥ ௧௬ ॥

(ப - ம்.) 𑌅𑌨𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌂[4] - 𑌰𑌾𑌜𑌾[2] - 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌪𑍁𑌤𑍍𑌰𑌃[1] - 𑌯𑍁𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌰𑌃[3] - 𑌨𑌕𑍁𑌲𑌃[5] 𑌸𑌹𑌦𑍇𑌵𑌃[7] - 𑌚[6] - 𑌸𑍁𑌘𑍋𑌷𑌮𑌣𑌿 𑌪𑍁𑌷𑍍𑌪𑌕𑍌[8].

(அ - ம்.) குந்தி புத்திரனுகிய யுதிஷ்டிரராஜன் அநந்தவிஜயமெனப் பெயரிய சங்கத்தையும் நகுலன் ஸஹதேவனென்னுமிருவரும் முறையே சுகோஷம் மணி புஷ்பகம் என்னு மிரண்டு சங்கங்களையும் ஊதினர்.

(வி - ம்.) நாசமின்றிய விஜயத்தை யடைவிப்பது எதுவோ அதற்கு அநந்த விஜயமெனப்பெயராம் அத்தகைய அநந்த விஜயமென்னும் சங்கத்தைக் குந்தியின் புத்திரனுகிய யுதிஷ்டிரராஜன் ஊதினன். ஈண்டு குந்திமாதாவானவள் மகத்தாகிய தபசால் தருமராஜரை யாராதித்தனள் அத்தர்மராஜாவால் குந்திதேவிக்கு யுதிஷ்டிரனென்னும் புத்திரப்பிராப்தி யுண்டாயது ஆகையினுல் இந்த யுதிஷ்டிரராஜன் மஹாபலவானும் இவ்வாறு அந்த யுதிஷ்டிரனது பிரபாவத்தை யுணர்த்தும் பொருட்டுச் சஞ்சயரால் யுதிஷ்டிரனுக்குக் குந்தீபுத்திரனென்னும் விசேஷணங் கொடுக்கப்பட்டதாம் அந்த யுதிஷ்டிரன் ராஜஸூயயாகத்தின் கர்த்தாவாம் ஆகையினுல் அரசன் என்னும் சப்தத்தின் முக்கிய அர்த்தத்தன்மை இந்த யுதிஷ்டிரனிடத்தே பொருந்தும், என்றிவ்வாருகிய அர்த்தத்தை தெரிவித்தற் பொருட்டுச் சஞ்சயரால் யுதிஷ்டிரனுக்கு ராஜா, என்னும் விசேஷணங் கொடுக்கப்பட்டதாம். யுத்தத்தின் கண் ஜயரூபபலத்தின் சேவிதனு (அனுபவியா) யிருப்பவனே யுதிஷ்டிரனென்பர் அந்தயுதிஷ்டிர பதத்தால் சஞ்சயர் இபபொருளை சூசிப்பித்தனர். இந்த யுத்தத்தில் ஜயரூபபலத்தின் பாகியாய் (அனுபவியாய்) இந்த யுதிஷ்டிரனே யிருப்பன் இவனது எதிர்க்கக்ஷிகளாகிய துரியோதனுதியர் ஜயரூபபலத்தின் பாகிகளாய் இச்சங்கிராம (யுத்த)த்தின் கண் இரார் என்பதாம். ஈண்டிரண்டு சுலோகங்களால் பாஞ்சஜன்யம், தேவதத்தம், பௌண்ட்ரம், அநந்தவிஜயம், சுகோஷம், மணிபுஷ்பகம் என்னும் ஆறுசங்கங்களின் பெயர்கள் கூறப்பட்டன. அதனுல் சஞ்சயர் இப்பொருளைத் தெரிவித்தனர்:—இப்பாண்டவர்களின் சேனையில் தத்தம் நாமங்களால் பிரசித்தமாகிய இவ்வளவு சங்கங்களிருக்கின்றன. ஆனுல் துரியோதனனது சைந்நியத்திலோ தனது நாமத்தாற் பிரசித்தமாகிய வொருசங்கமுமின்றும் ஆகையினு லிப்பாண்டவர்களின் சேனை நினது துரியோதனுதி மைந்தரின் சேனையினின்றும் அத்தியந்தம் பிரபலமாம். (16)

(அ - கை.) இப்போது திருதராஷ்டிரருக்குத் தமது புத்திரர்களின் ஜயத்திலுள்ள ஆசையை நிவர்த்தி செய்யும்பொருட்டு அச்சஞ்சயர் பாண்டவர்களின் பக்ஷத்திலுள்ள வேறு ராஜாக்களின் ஒரு மதிப்பை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்.

(சு - ம்.) 𑌕𑌾𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌮𑍇𑌷𑍍𑌵𑌾𑌸𑌃 𑌶𑌿𑌖𑌣𑍍𑌡𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌰𑌥𑌃 ।
𑌧𑍃𑌷𑍍𑌟𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑍋 𑌵𑌿𑌰𑌾𑌟𑌶𑍍𑌚 𑌸𑌾𑌤𑍍𑌯𑌕𑌿𑌶𑍍𑌚𑌾𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌃 ॥ ௧௭ ॥
𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑍋 𑌦𑍍𑌰𑍌𑌪𑌦𑍇𑌯𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇 ।
𑌸𑍌𑌭𑌦𑍍𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 𑌶𑌙𑍍𑌖𑌾𑌨𑍍𑌦𑌧𑍍𑌮𑍁𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍𑌪𑍃𑌥𑌕𑍍 ॥ ௧௮ ॥

(ப் - ம்.) 3 காஶ்ய: - ச - 2 பரமேஷ்வாஸ: - 6 ஶிகண்டீ - ச - 4 5 மஹாரத: - 7 த்ருஷ்டத்யும்ந: - 9 விராட: - ச 8 12 ஸாத்யகி: - ச - 10 அபராஜித: - 11 த்ருபத: - 13 த்ரௌப 15 தேயா: - 19 ஸர்வஶ: - 14 ச - 1 ப்ருதிவீபதே - 18 ஸௌபத்ர: - ச - 16 17 மஹாபாஹு: - 22 ஶங்கான் - 23 தத்மு: - 20 ப்ருதக் - 21 ப்ருதக்.

(அ - ம்.) ஹே பிருதுவியின் பதியாகிய திருதராஷ்டிரரே? மஹாதனுசை யுடைய காசிராஜனும் மஹாரதியாகிய சிகண்டியும், திருஷ்டத்யும்நனும், விராட ராஜனும், சத்துருக்களால் ஜயிக்கப்படாதவனாகிய சாத்யகிராஜனும். (17).

திருபதராஜனும், திரௌபதியின் ஐந்து புத்திரர்களும். மஹாபாஹுவை யுடைய சுபத்திரையின் புத்திரனும ஆகிய இவ்வெல்லா யுத்தவீரர்களும் வேறு வேறாகத் தத்தம் சங்குகளை யூதினர். (18)

(வி - ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ கிருஷ்ணபகவானோடு அருச்சுனன் முதலிய பாண்டவர்களின் பிரவிர்த்தியைப்பார்த்து அப்பாண்டவர்களின் பக்ஷபாதி களாகிய, காசிராஜன், சிகண்டி, திருஷ்டத்யும்நன், விராடராஜன், ஸாத்யகிராஜன், துருபதராஜன், துரோபதியின் பிரதிவிந்தியாதி யைந்துபுத்திரர்கள் சுபத்திரை யின் புத்திரனாகிய அபிமன்யு ஆகிய இவ்வெல்லா யுத்தவீரர்களும், வேறு வேறாகத் தத்தம் சங்குகளை முழக்கினர். ஈண்டு முகத்தின்கண் மீசை தாடியுடைமையில் லாததன் பெயர் சிகண்டமாம். அத்தகைய சிகண்டம் எவனிடத்துளதோ அவனு க்குச் சிகண்டியெனப் பெயராம். அச்சிகண்டி பாஞ்சாலதேசத் தரசனாம். (த்ருஷ்டத்யும்ந) என்னும் பெயரின்கண் த்ருஷ்டம் த்யும்நம் என இரண்டு பதங்க ளுள அவற்றுள் சத்துருக்கட்குப் பீடையை யுண்டுபண்ணுவதெதுவோ அதற்கு த்ருஷ்ட மெனப்பெயராம். த்யும்நம் என்பது பலத்திற்காம், சத்துருக்களை பீடிப் பதில் பலம் எவனிடமுளதோ அவனைத் திருஷ்டத்யும்னனென்பர். ஸாத்யக னென்னு மரசனது மைந்தனுக்குச் சாத்யகியெனப்பெயராம். முழந்தாள்வரை யிலும் எவனது கைகள் நீண்டிருக்கின்றனவோ அவனை மஹாபாஹுவென்பர்.

அவற்றுள் பரமேஷ்வாஸ: என்னும் விசேஷணம் காசிராஜனுக்காம் மஹாரத: என்னும் விசேஷணம் சிகண்டிராஜனுக்காம், அபராஜித: என்னும் விசேஷணம் ஸாத்யகி ராஜனுக்காம், மஹாபாகு என்னும் விசேஷணம் சுபத்திரையின் புத்திர னுக்காம் அல்லது பரமேஷ்வாஸ: மஹாரத: அபராஜித: மஹாபாகு என்னு மிந் நான்கு விசேஷணங்களும் காசிராஜன் முதற்கொண்டு எல்லா ராஜாக்கட்குமா மெனினுமமையும். (18)

(அ - கை.) அவ்வர்ச்சுனாதி பாண்டவர்களின் சங்கத்தொனியைக் கேட்ட வுடன் அத்துரியோதனாதிகளின் ஸ்திதி யெவ்வாறாயது என்னுந் திருதராஷ்டிர ரின் ஆசங்கைக்குச் சஞ்சயர் விடைகூறுகின்றார்.

(சு - ம்.) ஸகோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத் ।
நபஶ்ச ப்ருதிவீஞ்சைவ துமுலோ வ்யநுநாதயந் ॥ கக ॥

(ப - ம்.) 1 ஸ: - 3 கோஷ: - 8 தார்தராஷ்ட்ராணாம் - 9 ஹ்ருதயாநி - 10 வ்யதா ரயத். 4 நப: - 5 ச 6 ப்ருதிவீம் - ச ஏவ - 2 துமுல: - 7 வ்யநுநாதயந்.

(அ-ம்.) அம்மஹா சங்கத்தொனியானது தனது பிரதித்வனிரூப சத்தத்தால் ஆகாசத்தையும் பூமியையும் வியாபித்துத் திருதராஷ்டிரரின் புத்திர பௌத்திராதிகளாய பந்துக்களின் நெஞ்சுகளைப் பிளந்தது.

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! உமது துரியோதனாதியரின் சேனைகளிடத்தும் மஹத்தாகிய சங்கத்தொனி உண்டாயது. ஆயினும், அச்சங்கத்தொனியானது பாண்டவர்களைச் சற்றேனுங் கலங்கச்செய்யவில்லை. ஆனால் பாண்டவர்களின் சேனையிலுள்ள பாஞ்சஜன்யம் தேவதத்தம் பௌண்டரம் முதலிய சங்கங்களை யூதியதாலுண்டாய மகத்தாகிய சத்தமானது தனது பிரதித்தொனி ரூப சத்தத்தால் ஆகாசம் பிருதுவி கிழக்கு முதலிய திசைகள் பர்வதங்களின் குகைகள் என்பவையனைத்தையும் வியாபித்து உமது சம்பந்தியாகிய துரியோதனாதியரின் சேனாதிபதியாகிய பீஷ்மாதியரின் ஹ்ருதயங்களைப் பிளந்தது. கருத்திதுவாம்:— எங்ஙனம் சஸ்திரங்கொண்டு ஹ்ருதயதேசத்தைப் * பேதனஞ் செய்தால் துக்கமுண்டாமோ அங்ஙனமே அந்தச் சப்தமுந் துக்கத்தை விளைவித்தது என்பதாம். ஈண்டு (𑌵𑍍𑌯𑌨𑍁𑌨𑌾𑌦𑌯𑌨𑍍) என்னும் மூலசுலோகத்தின் பதத்தின்கண்ணுள்ள (உ) காரத்தால் (உம்மையால்) கிழக்கு முதலிய எல்லாத் திசைகளையும் பர்வதங்களின் குகைகளையுங் கொள்ளப்பட்டது. "𑌚" என்னும் சத்தம் சுலோகத்தின் பாதபூரணத்தின் பொருட்டாம். (19)

(அ-கை.) பூர்வசுலோகத்தில் திருதராஷ்டிரரின் புத்திர பௌத்திராதிகளாய சம்பந்திகளிடத்துப் பயத்தின் பிராப்தி கூறப்பட்டது. இப்போது அத்துரியோதனாதியரினின்றும் பாண்டவர்களிடத்தில் மாறுய நிர்ப்பயத் தன்மையின் நிரூபணஞ்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌥 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃 ।
𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌪𑌾𑌤𑍇 𑌧𑌨𑍁𑌰𑍁𑌦𑍍𑌯𑌮𑍍𑌯 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃 ॥ ௨௦ ॥
𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 𑌤𑌦𑌾 𑌵𑌾𑌕𑍍𑌯𑌮𑌿𑌦𑌮𑌾𑌹 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇 ।

ப-ம். (2) 𑌅𑌥 - (3) 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍 - (5) 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 - (4) 𑌧𑌾𑌰𑍍𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌨𑍍 - (9) 𑌕𑌪𑌿𑌧𑍍𑌵𑌜𑌃 - (8) 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 - 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰 (7) 𑌸𑌂𑌪𑌾𑌤𑍇 (11) 𑌧𑌨𑌃 - (12) 𑌉𑌦𑍍𑌯𑌮𑍍𑌯 (10) 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌃 - (13) 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌂 - (6) 𑌤𑌦𑌾 - (15) 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂 (14) 𑌇𑌦𑌂 (16) 𑌆𑌹 (1) 𑌮𑌹𑍀𑌪𑌤𑍇.

(அ-ம்.) ஹே பிருதுவியின் பதியாகிய திருதராஷ்டிரரே! அப்பயமுண்டாயதின் பின்னரும் யுத்தத்தில் முயற்சியுடையாராய் ஆயுதங்களை வழங்கத்தலைப்பட்டு நிற்கும் திருதராஷ்டிரரின் சம்பந்திகளைப் பார்த்து, அநுமத் கொடியையுடைய அர்ச்சுனன் காண்டீவமெனப் பெயரிய தனுஷைக் கையிலெடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் மேற்கூறப்படும் வசனங்களைச் சொல்லுவானாயினன்.

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! பாண்டவர்களின் சங்கங்களின் மகத்தாகிய சப்தங்களைக் கேட்டதால் உமது துரியோதனாதிகளின் சித்தத்தின்கண்ணுண்டாய பயத்தால் அவர்கட்கு அந்த யுத்தத்தில் நின்றும் ஓடிவிடுதலே

---

* பேதனம்=பிரித்தல்.

கூடுமாயினும் அவர்கள் தங்களது தைரிய சுபாவத்தால் அந்த யுத்தத்தினின்றும் பின்வாங்கவில்லை, மாறாய் யுத்தத்தில் முயற்சியுடையவர்களாய் யுத்த பூமியின்கண்ணே நின்றனர். இத்தகைய துரியோதனாதிகளை நேத்திரத்தாற் பார்த்தவுடன் * அக்கபித்துவஜனாகிய அர்ச்சுனன் யுத்தஞ் செய்தற்பொருட்டுக் காண்டீவமெனப் பெயரிய வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு தனது சாரதியாகிய பகவானிடம் இவ்வாறாகிய வசனங்களைக் கூறலுற்றான். ஈண்டு சர்வலோகப் பிரசித்தரும் பராக்கிரமசாலியுமாகிய ஹநுமாரைக் கபி என்னப்பட்டது. அத்தகைய அநுமாராகிய கபியைத் துவஜத்தி (கொடியி) லுடையவனாகையாலவனைக் கபித்வஜனென்பர். அக்கபித்வஜன் என்னும் விசேஷணத்தைக் கூறியதால் சஞ்சயராலிப்பொருள் குறிப்பிக்கப்பட்டது :—எந்த அநுமாரின் சகாயத்தைக்கொண்டு ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியால் இராவணாதி அசுரர்கள் கொல்லப்பட்டனரோ, அத்தகைய அநுமார் அர்ச்சுனனது கொடியின்கண்ணே இருக்கின்றனர். ஆகையினால் அவ்வர்ச்சுனனுக்கு எந்த யுத்த வீரரினின்றும் பயமுண்டாவதின்றாம். நேத்திராதி ஸர்வ இந்திரியங்களையும் பிரவர்த்திப்பவனாய்ச் சர்வ அந்தக்கரண விர்த்திகட்குஞ் சாக்ஷியாயிருப்பவனை ஹ்ருஷீகேசனென்பர். அத்தகைய அந்தரியாமியாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் அவ்வர்ச்சுனன் இவ்வாறாகிய வசனங்களைக் கூறுவானாயினன். அக்கிருஷ்ணபகவானது சம்மதமின்றி அர்ச்சுனன் அக்கால் சிறிது காரியத்தையுஞ் சுதந்திரமாய்ச் செய்யவில்லை என்பதாம். ஈண்டு ஹே மஹீபதே! என்னுஞ் சம்போதனத்தால், சஞ்சயரால் இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது :—இவ்வர்ச்சுனாதி பாண்டவர்கள் எவ்வெக்காரியத்தில் முயல்கின்றனரோ அதை முன்னர் விசாரித்தே செய்வர், விசாரித்தாலன்றி எக்காரியத்திலும் பிரவிர்த்தியார்? ஆகையினா லிப்பாண்டவர்கள் ராஜநீதியிலும் தர்மத்திலும் அத்தியந்தங் குசலர்களாம். உம்மால் இப்பாண்டவர்களின் ராச்சியங் கவரப்பட்டது, அது விசாரமின்றியே கவரப்பட்டதாம், ஆகையினால் உம்மிடத்தில் ராஜநீதி, தர்மம் என்னு மிரண்டுமின்றாம். ஆகையினால் உமக்கு ஒருக்காலும் ஜயமுண்டாகமாட்டாது, மற்றோ நீதி, தர்மங்களையுடைய இப்பாண்டவர்கட்கே ஜயமுண்டாம் என்பதாம். (20)

(அ-கை.) இப்போது இரண்டரைச் சுலோகத்தால் அர்ச்சுனனது வசனத்தை நிரூபிக்கின்றனர்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

சு-ம். 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌰𑌥𑌂 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯 𑌮𑍇𑌽𑌚𑍍𑌯𑍁𑌤 ॥ ௨௧ ॥

ப-ம். [3] 𑌸𑍇𑌨𑌯𑍋𑌃 - [2] 𑌉𑌭𑌯𑍋𑌃 - [4] 𑌮𑌧𑍍𑌯𑍇 - [6] 𑌰𑌥𑌂 - [7] 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯 - [5] 𑌮𑍇 [1] 𑌅𑌚𑍍𑌯𑍁𑌤.

(அ-ம்.) ஹே அச்சுத! இரண்டு சேனைகளின் மத்தியில் எனது தேரை நிறுத்துக.

(வி-ம்.) ஹே ஸ்ரீ கிருஷ்ணபகவன்! இஃதெனது சேனையாம். எனது எதிர்க்கக்ஷிகளாகிய துரியோதனாதியரின் சேனை யிதுவாம். அவ்விருசேனையின் மத்திய தேசத்தில் எனது ரதத்தைத் தாங்கள் நிறுத்துங்கள் என இவ்வாறாகிய ஆக்ஞையை அர்ச்சுனன் கிருஷ்ணபகவானுக்குச் செய்தனன். இத்துணை கூறியதா லிப்பொருள் குறிப்பிக்கப்பட்டதாம் :—பரமேஶ்வரனது அநன்னிய பக்தர்கட்கு இவ்வுலகத்தின்கண் முடியாத காரியம் யாதொன்றுமின்றாம். ஸாக்ஷாத் பரமேஶ்வரனும் அப்பக்தர்களின் ஆக்ஞையை அங்கீகரிக்கின்றனராதலினென்க.

* கபித்வஜன் = குரங்குக் கொடியோன்.

ஆகையினுல் இப்பாண்டவர்கட்கு நிச்சயமாக ஜயமுண்டாம் என்பதாம். ஹே அர்ச்சுன! இவ்விரு சேனைகளின் மத்தியில் நான் உனது தேரை நிறுத்துவனேயாயின், இத்துரியோதனுதி சத்துருக்கள் என்னை ரதத்தினின்றுங் கீழே தள்ளுவர், என்றிவ்வாறு ஸ்ரீ கிருஷ்ணபகவானது சங்கையுண்டாக அர்ச்சுனன் கூறுகின்றுன், "ஹே அச்யுத! என; ஹே பகவன்! ஸர்வதேசத்திலும், சர்வ காலத்திலும், சர்வ வஸ்துவிலும் நாசத்தை யடையாமலிருப்பதை அச்சுதமென்பர். அத்தகைய அச்சுதனுயிருக்குந் தங்களைக் கீழேதள்ள எப்புருஷன் ஸமர்த்தனுவன்? மற்றோ ஒருவனும் சமர்த்தனுகான். ஈண்டு "ஹே அச்யுத!" என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் நிர்விகாரத்தன்மையைப் போதிப்பித்தனன். நிர்விகாரத்திற் குரோதமுதலிய விகாரங்களுண்டாகாவாகலின் எனதுரதத்தைத் தாங்கள் நிறுத்துங்கள் என்றிவ்வாறு ஆக்ஞை செய்ததால் பகவானிடத்திற் கருதப்பட்ட அர்ச்சுனன் பேரிலுள்ள கோபத்தையும் அச்யுத, என்னும் சம்போதனத்தால் அர்ச்சுனன் நிவர்த்திசெய்தனன். (21)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்விருசேனைகளின் மத்தியிலோ உனது தேரை நான் செலுத்துகின்றேன், ஆனுல் அவ்விடத்தில் ரதத்தைச்செலுத்துவதால் உனக்கு என்ன பிரயோஜனம் உண்டாம்:—அந்தப் பிரயோஜனத்தை யென்னிடம் கூறுதி:—எதன்பொருட்டெனின்? பிரயோஜனமின்றி மந்த புருஷனும் பிரவர்த்திப்ப தில்லையாயின் புத்திமானுகிய புருஷனுக்குப் பிரயோஜனமின்றி எக்காரியத்திற் பிரவிர்த்தியுண்டாம்? மற்றோ உண்டாகாதென்னும் இத்தகைய ஸ்ரீ கிருஷ்ணபகவானது சங்கைக்கு அர்ச்சுனன் அதன் பிரயோஜனத்தைக் கூறுகின்றனன்.

சு-ம். யாவதே³தாந்நிரீக்ஷே(அ)ஹம் யோத்³து⁴காமாநவஸ்தி²தாந்
கைர்மயா ஸஹ யோத்³த⁴வ்யமஸ்மிந் ரணஸமுத்³யமே ॥ உஉ ।

ப-ம். யாவத் (1) - ஏதாந் (5) - நிரீக்ஷே (6) - அஹம் (2) - யோத்³து⁴காமாந் (3) - அவஸ்தி²தாந் (4) கை: (10) - மயா (9) - ஸஹ (11) - யோத்³த⁴வ்யம் (12) - அஸ்மிந் (7) - ரணஸமுத்³யமே (8).

(அ-ம்.) ஹே பகவன்! போர் செய்ய இச்சையுடையராய் இந்த * ரணபூமியில் நிற்கும் பீஷ்மர் முதலிய யுத்தவீரர்களை எவ்வளவு சென்று நின்ற இடத்தே நன்ருகப்பார்க்கலாமோ; அவ்விடத்தே எனது தேரை நிறுத்துவீராக. இந்தப் போர் வடிவவியாபாரத்தில் நான் எவருடன் போர்செய்வது யோக்கியமாம்?

(வி-ம்.) ஹே பகவன்! என்னேடு யுத்தஞ்செய்வதில் இச்சையுடையராய் இந்த ரணபூமியிலிரா நின்ற பீஷ்மத்துரோணுதி வீரபுருஷர்களை நன்ருகப் பார்த்த லெவ்விடத்திற் சென்ருற்கூடுமோ அவ்விடத்தே எனது ரதத்தைத் தாங்கள் நிறுத்துங்கள். அல்லது (யாவத்) என்னும் பதம் காலவாசகமாம், ஆகவே எதுகாலபரியந்தம் இப்பீஷ்மாதியெல்லா யுத்த வீரர்களையும் நான் நன்ருகப் பார்ப்பேனே அதுவரையிலும் எனது ரதத்தை இருசேனைகளின் மத்தியில் தாங்கள் நிறுத்துங்கள் என்பதாம். ஈண்டு (யோத்³து⁴காமாந்) "யுத்தத்தில் இச்சையுடையராய், என்னும் விசேஷணத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன்:—இப்பீஷ்மத் துரோணுதியர் கேவலம் யுத்தத்திலேயே இச்சையுடையர். ஆகையினுல் என்னேடு இவர் ஒருகாலும் மித்திரபாவத்தைச் செய்

* ரணபூமி=யுத்தபூமி, (போர்க்களம்.)

யார். (ஈவஷிதாநு) "நிற்கப்பட்ட" என்னும் விசேஷணத்தால் அர்ச்சுனன் இப்பொருளைச் சூசிப்பித்தனன் :—எனக்குப் பயந்து இந்தப் பீஷ்மத் துரோணாதியர் இந்த ரணபூமியினின்றும் ஒருகாலும் ஓடமாட்டார்கள் என்பதாம். ஹே அர்ச்சுன! நீயோ யுத்தஞ்செய்பவனும் யுத்தத்தைப் பார்ப்பவன் நீயன்றும்; ஆகையினால் பீஷ்மத்துரோணாதியரைப் பார்ப்பதனால் உனக்கு யாது பிரயோஜனத்தின் சித்தியுண்டாம்? என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் அவர்களைப்பார்ப்பதன் பிரயோஜனத்தைக் கூறுகின்றனன். (கைெஃ்யாஸஹயொ ஜவ்யூ) "எவர்களோடு நான் (என்னோடு எவர்) யுத்தஞ் செய்யத்தக்கது என; இவற்றுள் (ஸஹ) "கூட" என்னும் பதத்திற்கு (கைெஃ) "எவர்களோடு" (ஃமெ) "என்னோடு" என்னுமிரண்டுபதத்துடனும் சம்பந்தம் சம்பவிக்கின்றது. அதனாலிப்பொருள் பெறப்பட்டதாம் :—பந்துக்கட்கே பரஸ்பரம் யுத்தத்திற் பிரவர்த்தியுண்டாய இந்த ரணபூமியிலிருக்கும், எனது எதிர்க்கக்ஷிகளாகிய பீஷ்மத் துரோணாதிகளில் எந்த யுத்தவீரரோடு யான் போர் செய்வது உசிதம்? அங்ஙனமே அப்பீஷ்மத் துரோணாதியுத்தவீரருள் எவர் என்னோடு யுத்தஞ் செய்வது உசிதம்? என்றிவ்வாறாகிய ஒருமகத்தாகிய கௌதுக (சந்தோஷ)த்தின் ஞானமே இவ்விரு சேனைகளின் மத்தியில் தேரை நிறுத்துவதன் பிரயோஜனமாம்.

(அ-கை.) ஹே அர்ச்சுன! இப்பீஷ்மத்துரோணாதி பந்துக்களே யுத்தத்தின் சங்கற்பத்தைப் பரித்தியாகம் செய்து உங்களிருவருக்கும் ஒன்றற்கொன்று மித்திர பாவத்தைச் செய்துவைப்பர்; எதன்பொருட்டு நீ யுத்தத்தின் சங்கற்பத்தைச் செய்கின்றாய் என்னும் ஸ்ரீ கிருஷ்ணபகவானது ஆசங்கைக்கு அவ்வர்ச்சுனன் கூறுகின்றான்:—

கூ-ம். யொஸ்யொானவெகெக்ஷஹம் யஎதெதுஸாமதாஃ ।
யாதராஷ்டஸ்ய்ஊவ்வபெஃ யவெஸவி்யவிகீஷவஃ ॥ உந ॥

ப-ம். யொத்ஸ்யொானு[9] - அவெகெக்ஷ[11] - அஹம்[12] - யெ[5] - எதெ[6] - அத்[7] - ஸாமதாஃ[8] யாதராஷ்டஸ்ய[2] - ஊவ்வெ[1] - யவெஸ[3] - வி்யவிகீஷவஃ[4]

(அ-ம்.) துர்ப்புத்தியையுடைய இத்திருதராஷ்டிர புத்திரனாகிய துரியோதனனை யுத்தத்திற் பிரியப்படுத்த இச்சையுள்ள இப்பீஷ்மத் துரோணாதியர் இக்குருக்ஷேத்திரத்தின்கண்வந்துளார் யுத்தத்தில் இச்சையுடைய இவரை அர்ச்சுனனாகிய யான் நன்றாகக்காணல் வேண்டும்.

(வி-ம்.) ஹே பகவன்! தன்னைக்காப்பாற்றும் உபாயமறியாததுர்ப்புத்தியோடு கூடிய இத்திருதராஷ்டிர புத்திரனாகிய துரியோதனனைக் கேவலம்போரினாலேயே பிரியப்படுத்த இச்சையுற்ற இப்பீஷ்மத் துரோணாதியுத்தவீரர்கள் தர்மக்ஷேத்தரமாய குருக்ஷேத்திரத்தை யடைந்துளார். யுத்தத்தில் இச்சையுடையராகிய இப்பீஷ்மத்துரோணாதிகளை நான் நன்றாகப் பார்க்கும்பொருட்டு எனதுரதத்தைத் தாங்கள் நிறுத்துங்கள். ஈண்டு (யவெஸவியவிகீஷவஃ) "யுத்தத்திற் பிரியத்தையுடைபவர்களாய்" என்னும் விசேஷணத்தை அர்ச்சுனன் கூறியதால் இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது:—இந்தப் பீஷ்மத்துரோணாதி விருத்த புருஷரும் கேவலம் யுத்தத்தானேயே இத்துரியோதனனது ஹிதத்தை இச்சிக்கின்றனரேயன்றி அந்தத் துரியோதனனது துர்ப்புத்தியாதிகளை விலக்கி அவனது

ஹிதத்தை இச்சிக்கவில்லை. இத்தகைய பீஷ்மத்துரோணாதிகள் எம்மிருவருக்கும் மித்திரத்தன்மையைச் செய்வித்தலெங்ஙன்கூடும். (𑌯𑍋𑌦𑍍𑌧𑍁𑌕𑌾𑌮𑌾𑌨𑍍) "யுத்தத்தி விச்சையுடையவர்" என்னும் விசேஷணத்தைக் கூறியதால் இப்பொருள் அர்ச்சுனனாற் குறிப்பிக்கப்பட்டது :—இப்பீஷ்மத்துரோணாதியர்க்குக் கேவலம் என்னோடு யுத்தஞ்செய்வதிலே யிச்சையாம், இவர்கட்கு என்னோடு மித்திரபாவம் செய்வதில் இச்சையின்றாம். ஆகையினால், இவர்களோடு யுத்தஞ்செய்யும்பொருட்டு முதலில் இவர்களைப் பார்ப்பதே உசிதம். (23)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனனால் பிரேரணைசெய்யப்பட்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் அஹிம்ஸாவடிவ பரமதர்மத்தை யாசிரயித்தும் அவ்வர்ச்சுனனை அவசியம் அந்த யுத்தத்தினின்றும் நிவர்த்திப்பிக்கலாமே, என்றிவ்வாறாகிய திருதராஷ்டிரரின் அபிப்பிராயத்தின் ஆசங்கையைக்கொண்டு, அச்சங்கையை நிவர்த்தி செய்வதில் இச்சையுடையவராகிய சஞ்சயர் அத்திருதராஷ்டிரரிடம் இவ்வாறாகிய வசனங்களைக் கூறுவாராயினர். என்றிவ்வாறாகிய வசனம் வைசம்பாயனர் ஜனமேஜயருக்குக் கூறியதாம்.

𑌸𑌂𑌜𑌯 𑌉𑌵𑌾𑌚.

மூ-ம். 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤꞉ ।<br>
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥ ௨௪ ॥<br>
𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌤꞉ 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌚 𑌮𑌹𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌮𑍍 ।<br>
𑌉𑌵𑌾𑌚 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌪𑌶𑍍𑌯𑍈𑌤𑌾𑌨𑍍 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑍍 𑌕𑍁𑌰𑍂𑌨𑌿𑌤𑌿 ॥ ௨௫ ॥

ப-ம். [2] 𑌏𑌵𑌂 - [4] 𑌉𑌕𑍍𑌤𑌂 - [5] 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶꞉ - [3] 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶𑍇𑌨 - [1] 𑌭𑌾𑌰𑌤 - [7] 𑌸𑍇𑌨𑌯𑍋꞉ [6] 𑌉𑌭𑌯𑍋꞉ - [8] 𑌮𑌧𑍍𑌯𑍇 - [14] 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 - [13] 𑌰𑌥𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 - [9] 𑌭𑍀𑌷𑍍𑌮𑌦𑍍𑌰𑍋𑌣𑌪𑍍𑌰𑌮𑍁𑌖𑌤꞉ - [11] 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 - [10] 𑌚 - [12] 𑌮𑌹𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌂 - [21] 𑌉𑌵𑌾𑌚 - [15] 𑌪𑌾𑌰𑍍𑌥 - [19] 𑌪𑌶𑍍𑌯 - [16] 𑌏𑌤𑌾𑌨𑍍 - [17] 𑌸𑌮𑌵𑍇𑌤𑌾𑌨𑍍 [18] 𑌕𑍁𑌰𑍂𑌨𑍍 [20] 𑌇𑌤𑌿.

சஞ்சயர் கூறல்.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! இவ்வாறு குடாகேசனாகிய அர்ச்சுனனால் கூறப்பெற்ற ஹ்ருஷீகேசனாகிய பகவான் இருசேனைகளின் மத்தியில் பீஷ்மத் துரோணாதிகளின் எதிராய் அவ்வுத்தமமாகிய ரதத்தை நிறுத்தி, ஹே பார்த்த! இங்கு ஒருங்குகூடிய கௌரவர்களை நீ பார்ப்பாயாக என்றிவ்வாறாகிய வசனத்தைக்கூறினார்.

(வி-ம்.) "ஹே பாரத" என்பது திருதராஷ்டிரரின் சம்போதனையாம். அச்சம்போதனத்தால் சஞ்சயர் இப்பொருளைக் குறிப்பித்தனர் :—நீ பரதராஜ குலத்தில் ஜனித்தவனும், உனது அந்தப் பரதவம்சத்தின் மரியாதையை விசாரித்தேனும் உனது சம்பந்திகட்குச் செய்த துரோகத்தை யொழிப்பதே உனக்குத் தகுதியாம். ஈண்டு அர்ச்சுனனைக் குடாகேசனென்னு நாமத்தாற் கூறப்பட்டது, அந்தக் குடாகேச சத்தத்தின் பொருளிதுவாம் :—(𑌗𑍁𑌡𑌾𑌕𑌾𑌯𑌾꞉ 𑌈𑌶꞉) 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶꞉) பொருளிதுவாம். குடாகா என்பது நித்திரைக்காம் அந்த நித்திரையின் ஈசன், எவனால் நித்திரை வசம்பண்ணப்பட்டதோ அவனுக்குக் குடா

கேசனெனப் பெயராம். அல்லது (குடாவ ஸுகேசா:-யஸ்ய-ஸ-குடாகேச:) பொருளிதுவாம்—(அங்குஷ்ட தர்ஜநீயோகே குடாநாம்நீது முத்ரிகா) என்னும் சாஸ்திர வசனத்தால் கையின் *அங்குஷ்டத்திற்குத் †தர்ஜனி விரலோடுள்ள சம்பந்தம் குடாமுத்திரை யெனப்படும். அந்தக் குடா முத்திரையைப் போன்ற அளவு நுனித் தலைமயிர் எவனுக்குளதோ அவனுக்குக் குடாகேசனெனப் பெயராம். அல்லது (குடம், கரோதி வ்யாப்நோதீதி, குடாக: ஶிவ:, ஸஶிவ: ஈஶோயஸ்ய ஸ குடாகேஶ:) பொருளிதுவாம்:—(குடோகோளே இக்ஷுவிகாரயோ:) என்னும் கோசவசனத்தால் (குட) என்னும் சத்தம் கோளத்தி (உருண்டையி)ன் வாசகமாம். லோகப்பிரசித்த வெல்லத்தின் வாசகமுமாம். ஆண்டு அக்கினியால் தகிக்கப்பட்ட அயப்பிண்டத்தை அவ்வக்கினியானது உள்ளிலும் புறம்பிலும் எங்ஙனம் வியாபித்திருக்கின்றதோ அங்ஙனமே இப்பிரஹ்மாண்ட வடிவகோளத்தை உள்ளிலும் வெளியிலும் வியாபித்திருப்பவனுக்குக் குடாகன் எனப் பெயராம் அத்தகையன் பரமேஸ்வரனும். ஆண்டுச் சுருதி:—(விஶ்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வாஶிவம்) பொருளிதுவாம்:—சர்வ விசுவத்தையும் வியாபித்திருப்பவனாய பரமசிவத்தை தனது ஆத்மாவாகத் தெரிந்த இப்புருஷன் மோக்ஷத்தை யடைகின்றனன். இத்தகைய குடாகனெனப் பெயரிய பரமேஸ்வரன் எவனுக்கு ஈசனாயிருக்கின்றானோ அவனுக்குக் குடாகேசனெனப்பெயராம், அல்லது (குடவத் பக்தாநுக்ரஹாத் கரோதி வ்யாப்நோதீதி குடாக: ஶிவ: ஸஶிவ: ஈஶோயஸ்ய ஸ குடாகேஶ:) பொருளிதுவாம்:—எங்ஙனம் உலகத்தில் பிரசித்தமாகிய (குடம்) (வெல்லம்) மதுரமோ அங்ஙனம் மதுரமாகிய பக்தஜனங்களை யடைபவனுக்குக் குடாகனெனப் பெயராம். அத்தகையன் பரமேஸ்வரனும். ஆண்டுச்சுருதி:—“ஸ்வாதுர்க்ஷீராயம் பக்தாநாதாயம்” என, அத்தகைய பரமேஸ்வரன் எவனுக்கு ஈசனாயிருக்கின்றனனோ அவனுக்குக் குடாகேசனெனப்பெயராம்.

ஹ்ருஷீகமென்பது இந்திரியத்திற்காம் அவ்வெல்லா இந்திரியங்களையுந் தத்தங்காரியத்திற் பிரவிர்த்திக்கச் செய்பவனுக்கு ஹ்ருஷீகேச னெனப்பெயராம். அத்தகைய ஹ்ருஷீகேசனாகிய பகவானிடம் அக்குடா கேசனாகிய அர்ச்சுனன் இரண்டு சேனைகளின் மத்தியில் ரதத்தை நிறுத்தும்படி ஆக்ஞை செய்தபோதே, ஸ்ரீ கிருஷ்ணபகவான், இவ்வர்ச்சுனன் எனது தாசனும் எஜமானாகிய என்னை நீசத்தொழிலாகிய சாரதித் தன்மையில் ஏவினன் என்றிவ்வாறுதோஷ ஆரோபணத்தால் அவ்வர்ச்சுனன்மேல் குரோதம் வைக்கவில்லை; என்னை? அந்தக்கிருஷ்ணபகவான் எப்போதும் பக்தர்கட்கு அதீனராகவே யிருக்கின்றனரன்றோ, அவ்வர்ச்சுனனை யுத்தத்தில் நின்றும் நிவர்த்திக்கவுஞ் செய்திலரன்றோ, மற்றோ அவ்வர்ச்சுனனது வசனத்தை யங்கீகரித்து அவ்விருசேனைகளின் மத்தியில் பீஷ்மத்துரோணர் ஏனைய அரசர்கள் என்னுமிவர்களின் எதிரில் அர்ச்சுனனது உத்தமமாகிய ரதத்தை நிறுத்துவாராயினர். ஈண்டுச்சர்வ அரசர்களின் மத்தியில் ரதத்தை நிறுத்தினார் என்றிவ்வளவு மாத்திரங் கூறுவதானே பீஷ்மத்துரோணாதி யெல்லா அரசர்களின் கிரகணமாகையால், பீஷ்மத்துரோணர் என்னுமிவரைத் தனித்துக்கூறல் அநுசிதமாமாயினும் எல்லா அரசர்களினும் அப்பீஷ்மத் துரோணர்கட்கு அத்தியந்தம் பிரதானத்தன்மையைத் தெரிவித்தற்பொருட்டு

* அங்குஷ்டம்=பெருவிரல். † தர்ஜனி=ஆட்காட்டிவிரல்.

அவ்விருவரையும் தனித்துக் கிரகித்ததாம். ஆண்டு ரதத்தை நிறுத்தினர் என்றிவ்வளவு கூறுவதாலேயே நிர்வாகமுண்டாகின்றதாயினும் மற்றெல்லா ரதங்களினின்றும் அந்த ரதத்தில் மேம்பாட்டைத் தெரிவித்தற்பொருட்டு அதற்கு உத்தமமென்னும் விசேஷணங் கொடுத்ததாம். அந்த ரதத்தின் உத்கிருஷ்டத் தன்மையில் இது காரணமாம்:—ஒன்றோ அந்த ரதம் அக்கினிதேவரால் கொடுக்கப்பட்டதாம். மற்றொன்றோ ஸாக்ஷாத் கிருஷ்ணபகவான் அவ்விரதத்தின்கண் சாரதியாயிருந்து ஓட்டுவதாம், மற்றொன்றோ ஸாக்ஷாத் அர்ச்சுனன் அத்தேரில் இருப்பதாம், மற்றொன்றோ, அநுமார் அவ்விரதத்தின் கொடியிலிருப்பதாம் இவ்வளவு ஹேதுக்களால் அந்த ரதத்தில் சர்வ ரதங்களினின்றும் உத்கிருஷ்டத் தன்மையுளது. அத்தகைய உத்தம ரதத்தை இருசேனைகளின் மத்தியில் நிறுத்தி, சர்வ ஜனங்களின் உள்ளினுள்ள ரகஸ்யமான அபிப்பிராயங்களைத் தெரிந்தவராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வர்ச்சுனன் இப்பந்துக்களின் தரிசனத்தால் சோகமோகத்தை யடைந்திருக்கின்றனன் என்று தெரிந்து துக்கத்தோடுற்ற அவ்வர்ச்சுனனிடம் இவ்வாறாகிய வசனங்களைக் கூறுவாராயினர்.—ஹே பார்த்த! குருவம்சத்திற் சனித்த இந்தப் பீஷ்மாதியர் ஒருங்குகூடி யிருக்கின்றனர் இவர்களை நீ நன்றாகப்பார்ப்பாயாக. ஈண்டு "ஹே பார்த்த! என்னும் சம்போதனத்தால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் இப்பொருளைக் குறிப்பித்தனர்—பிருதை யெனப் பெயரியதாயின் மைந்தனாகையால் அவனுக்குப் பார்த்தனெனப் பெயராம். அந்தப்பிருதை தனது ஸ்திரீ சுபாவத்தால் எப்போதும் சோகமோக முடையவளாம் அந்தப் பிருதைக்கு நீ மைந்தனாகையால் உன்னிடத்தும் சோகமோகங்கள் அடைந்திருக்கின்றன; என்றிவ்வாறு அர்ச்சுனனது பரிகாசத்தைப் "பார்த்த", என்னுஞ் சத்தத்தாற் குறிப்பித்து ஸ்ரீ கிருஷ்ணபகவான் தம்மிடத்தில் ஹ்ருஷிகேச சத்தத்தின் அர்த்தரூப அந்தரியாமித் தன்மையையுந் தெரிவித்தனர். அல்லது, ஹே பார்த்த! என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனனுக்குப் பகவானால் இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது—எனது பிதாவின் சகோதரி பிருதையாம், அந்தப் பிருதைக்கு நீ புத்திரனும், ஆகையினால் நீ எனது சம்பந்தியாமாதலின் இக்கிருஷ்ணபகவான் எனது சாரதித்தன்மையை விட்டுத் துரியோதனனது பக்ஷத்திற் செல்வர் என்னும் சிந்தனையை நீ ஒருகாலுஞ் செய்யவேண்டாம். மற்றோ எனது ஸாரதித்தன்மையில் நீ யாதொரு சிந்தையுமின்றியவனாய் இப்பீஷ்மத்துரோணாதியரைச் சந்தேகமின்றிப் பார்ப்பாயாக. ஈண்டு, இப்பீஷ்மத்துரோணாதிகளை நீ பார்ப்பாயாக என்னும் வசனபரியந்தம் பகவான் கூறியதாம் அதன் அபிப்பிராயம் இதுவாம்—யான் உனது சாரதித்தன்மையில் அத்தியந்தம் சாவதானமுடையவனா யிருக்கின்றேன், நீயோ இப்போதே சோகமோகவயத்தால் ரதத்திலிருக்குந் தன்மையை விட்டுவிட இச்சிக்கின்றாய்; ஆகையினால் இச்சேனையின் றரிசனத்தால் உனக்கு யாது பிரயோஜனம் சித்தமாம் என்றிவ்வாறு அவ்வர்ச்சுனனுக்குத் தைரியத்தை யுண்டுபண்ணும்பொருட்டு அவ்வசனம் பகவானாற் கூறப்பட்டது. அன்றெனின் அப்பகவான் இருசேனைகளின் மத்தியில் ரதத்தை நிறுத்துவாராயினர் என்றிவ்வளவே கூறுவது உசிதமாம். (24–25)

(அ-கை.) அவ்விருசேனைகளின் மத்தியிலிருக்கும் அவ்வர்ச்சுனன் எதைப் பார்த்தனன் எனத்திருதராஷ்டிரரின் சங்கை யுண்டாகச் சஞ்சயர் கூறுகின்றார்.

மூ-ம். 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌨𑍍𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 𑌪𑌿𑌤𑍄𑌨𑌥 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌨𑍍 ।
𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌨𑍍𑌭𑍍𑌰𑌾𑌤𑍄𑌨𑍍𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌸𑌖𑍀𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 ॥
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌨𑍍𑌸𑍁𑌹𑍃𑌦𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 ॥ ௨௬ ॥

ப-ம். தத்ர[1] - அபஶ்யத்[20] - ஸ்தி²தாந்[5] - பார்த²:[2] - பித்ரூந்[6] - அத²[7] - பிதாமஹாந்[8] ஆசார்யாந்[9] - மாதுலாந்[10] - ப்⁴ராத்ரூந்[11] புத்ராந்[12] - பௌத்ராந்[13] - ஸகீ²ந்[15] - ததா²[14] ஶ்வஶுராந்[16] ஸுஹ்ருத³:[18] - ச[17] - ஏவ[19] - ஸேநயோ:[4] உப⁴யோ:[3] அபி.

(அம்.) இச்சேனையைப் பார்ப்பாயாக என்னும் பகவானது ஆக்ஞையின் பின்னர் அவ்வர்ச்சுனன் இருசேனைகளிலுமுள்ள, தந்தையர், பாட்டன், ஆசாரியர்கள், *மாதுலர்கள், சகோதரர்கள், புத்திரர்கள், †பௌத்திரர்கள், தோழர்கள், மாமன்மார்கள், மித்திரர்கள் என்னுமிவர்களையே காணலுற்றான்.

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! அக்கிருஷ்ணபகவான் யுத்தத்தின் ஆரம்பஞ் செய்விக்கும்பொருட்டு அவ்வர்ச்சுனனிடம் சேனைகளைநோக்க ஆக்ஞாபித்தவுடன் அவ்வர்ச்சுனன் இருசேனைகளிலுமுள்ள யுத்தவீரர்களை நோக்குவானாயினன்.

ஆண்டு அந்நிய சைந்நியத்துள், அவ்வர்ச்சுனன் தனது தந்தைமாராகிய பூரிசிரவாதியரையும், பீஷ்மர், ஸோமதத்தர் முதலிய பாட்டரையும் துரோணர், கிருபர் முதலிய ஆசாரியரையும், சல்யன் சகுனி முதலிய மாதுலர்களையும், துரியோதனன் முதலிய சகோதரரையும், லக்ஷ்மணன் முதலிய புத்திரரையும், அந்த லக்ஷ்மணாதி புத்திரரின் புத்திரராகிய பௌத்திரரையும், தனது சமான அவஸ்தையையுடைய அசுவத்தாமா, ஜயத்ரதன் முதலிய தோழர்களையும், கிருதவர்மா, பகதத்தன் முதலிய மித்திரர்களையும், காண்பானாயினன்.

ஜயிப்பதற்கு ஈண்டு மித்திரர் என்னுஞ் சுத்தத்தால் வேறேயும் உபகாரஞ் செய்பவராயிராநின்ற எம்மாதாமஹர் முதலியருளரோ அவ்வனைவரையுங் கொள்க. இவ்வாறு அந்நிய சேனையிலுள்ள தனது பிதிர்வ்யாதி சம்பந்திகளைப் பார்த்ததே போல தனது சேனையின்கண்ணும் அப்பிதிர்வ்யாதி சம்பந்திகளையே பார்த்தனன்.

இவற்றுள், தனது பிதாவின் சஹோதரனுக்கு பிதிர்வ்யன் எனப் பெயராம். தனது மாதாவின் சஹோதரனுக்கு மாதுலனெனப் பெயராம், மாதாவின் பிதாவிற்கு மாதாமஹன் எனப் பெயராம். (26)

(அ-கை.) இவ்வாறு எல்லாச் சம்பந்திகளின் தரிசனத்தின் பின்னர் இச்சம்பந்திகளின் ஹிம்சை மகா அதர்மரூபமாம் என்றிவ்வாறுருவ மோகவடிவ விபரீத புத்தியால் விவேகமின்றியவனும், இந்த யுத்தத்தின்கண்ணுள்ள ஹிம்சையானது சாஸ்திர விஹிதமாதலால் தர்மரூபமாம் என்னும் யதார்த்தஞானத்தைப் பிரதிபந்தஞ்செய்வதும் மமத்துவ புத்தியைக் காரணமாயுடையதுமாய சோக மோஹ வடிவ சித்தக்கலக்கத்தால் நிவிர்த்தியாகிய விவேகத்தையுடையவனுமாகிய அர்ச்சுனனுக்குமுன் ஆரம்பித்த யுத்தவடிவ ஸ்வதர்மத்தினின்றும் உபாரமத்தை யுண்டு பண்ணுவதாகிய இச்சையானது மஹா அனர்த்தத்தைக் கொடுப்பதாய் உற்பன்னமாயது. இப்பொருளை இப்போது நிரூபிக்கின்றனர்.

சு-ம். தாந் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வாந் ப³ந்தூ⁴நவஸ்தி²தாந் ।
க்ருபயா பரயாவிஷ்டோ விஷீத³ந்நித³மப்³ரவீத் ॥ ௨௭ ॥

ப-ம். தாந்[4] - ஸமீக்ஷ்ய[7] - ஸ[1] - கௌந்தேய: ஸர்வாந்[5] - ப³ந்தூ⁴ந்[6] - அவஸ்தி²தாந்[3] (27) க்ருபயா[9] - பரயா[8] ஆவிஷ்ட:[10] - விஷீத³ந்[11] - இத³ம்[12] அப்³ரவீத்[13].

* மாதுலன் = அம்மான். † பௌத்திரன் = பேரன்.

(அ-ம்.) அக்குந்தியின் புத்திரனாகிய அர்ச்சுனன் அப்போர்க்களத்துள்ள அவ்வெல்லாப் பந்துக்களையும் நன்றாகப் பார்த்து, மிகுந்த இரக்கத்தால் வியாபித்தவனாய்த் துக்கத்தை யடைந்து இவ்வாறாகிய வசனங்களைக் கூறுவானாயினன்.

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! அவ்வெல்லாப் பந்துக்களையும் பார்த்து இயல்பாயுள்ள இரக்கத்தால் வியாபிக்கப்பட்டவனாய அவ்வர்ச்சுனன் தாபவடிவ விஷாதத்தை யடைந்து இவ்வாறாகிய வசனங்களை ஸ்ரீ பகவானிடங் கூறுவானாயினன், ஈண்டு அவ்வர்ச்சுனனிடத்துள்ள இயல்பாய இரக்கத்தைத் தெரிவித்தற் பொருட்டு அந்தக் கிருபைக்கு பரா என்னும் விசேஷணங் கொடுத்ததாம். அல்லது (க்ருபயாவரயாவிஷ்டः) என்னும் வசனத்தில். (க்ருபயா அவரயா ஆவிஷ்டः) என்றிவ்வாறு பதச்சேதஞ் செய்க இப்பக்ஷத்தில் அவ்வசனத்திற்கு இங்ஙனம் பொருள் கொள்க:—

தனது சேனையினிடத்தோ முன்னரும் கிருபையிருந்தது. ஆனால் அக்காலத்திலோ அவ்வர்ச்சுனனுக்குக் கௌரவர்களின் சேனையிலும் அபரமெனப் பெயரிய வேறுகிருபை யுண்டாயது என்பதாம். இவற்றுள் (விஷீதந்நிதமப்ரவீத்) என்னும் வசனத்தால் விஷாதம் வசனவுச்சாரணம், என்னுமிரண்டிற்கும் சமானகாலத் தன்மை கூறப்பட்டது. அதனால் அவ்வசன உச்சாரண காலத்தில் தழுதழுத்த வாக்கு, கண்ணினீரொழுகுதல் முதலிய விஷாதத்தின் காரியங்களின் இருப்பைப் போதிப்பித்ததாம். ஏனெனின், இவ்வுலகத்தில் விஷாதமுடைய புருஷர்களின் வசனத்தில் இவ்வார்த்தை பிரசித்தமாய்க் காணப்படும். கௌந்தேய, என்னும் பதத்தின் அபிப்பிராயமோ முற்சுலோகத்தில் கூறியபார்த்த என்னும் பதத்தின் அபிப்பிராயம் போலென்றறிக, குந்திதேவியையே பிருதை யென்னும் நாமத்தாற் கூறப்பட்டதாம். (27)

(அ-கை.) இப்போது, ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் அர்ச்சுனன் கூறிய வசனத்தை (அர்ஜுந உவாச) என்பது முதற்கொண்டு (ஸஞ்ஜய உவாச: ஸம்ஜய உவாச) என்னும் வாக்கியத்தின் முன்னுள்ள சுலோகங்களால் சஞ்சயர் கூறுகின்றார்:— ஆண்டு சுவதர்மப் பிரவிர்த்தியின் காரணமாகிய தத்துவஞானத்தைப் பிரதிபந்திப்பது தனது சரீரத்திலும், பிறர் சரீரத்திலும், எனதென்னுமபிமானமாம் அவ்வபிமானத்தோடுற்றுக் கேவலம் அனாத்ம பதார்த்தத்தைத் தெரிபவனும், இந்த யுத்தத்தால் எனக்கும் பந்துக்கட்கும் அவசியம் நாசமுண்டாம் என்றிவ்வாறு காண்போனுமாகிய அவ்வர்ச்சுனனுக்கு மிகுதியாய சோகமுண்டாயது, அவ்வர்ச்சுனனது சோகத்தை, அச்சோகத்தால் வியாப்தமாய லிங்கங்களைக் கூறும் வாயிலாய் மூன்று சுலோகங்களால் நிரூபிக்கின்றார்:—

அர்ஜுந உவாச.

சு-ம். த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் ॥ ௨௮ ॥
ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிஶுஷ்யதி ।
வேபதுஶ்ச ஶரீரே மே ரோமஹர்ஷஶ்ச ஜாயதே ॥

ப-ம். [6]த்ருஷ்ட்வா - [4]இமம் - [5]ஸ்வஜநம் [1]க்ருஷ்ண - [3]யுயுத்ஸும் - [2]ஸமுபஸ்திதம் - [9]ஸீதந்தி - [7]மம - [8]காத்ராணி - [11]முகம் - [10]ச - [12]பரிஶுஷ்யதி - [16]வேபது: - [13]ச - [15]ஶரீரே - [14]மே - [19]ரோமஹர்ஷ: - [18]ச - [17]ஜாயதே - (29)

(அ-ம்.) ஹே கிருஷ்ண! போர்புரிய எண்ணங்கொண்டவராய் இப்போர்க் களத்தை யடைந்திருக்கும் எனது பந்துக்களைப் பார்ப்பதனால், என் கால் கை முதலிய அவயவங்கள் சோர்கின்றன. என் முகமுங் காய்கின்றது, என் சரீரத்தில் நடுக்கமும் மயிர்க்கூச்சு முண்டாகின்றன.

(வி-ம்.) ஹே ஸ்ரீ கிருஷ்ண பகவன்! போர்புரியு மெண்ணமுடையவராய் இந்த யுத்தபூமியை யடைந்திருக்கும் பீஷ்மாதியரான எனது பந்துக்களைத் தரிசிப்பதால், எனது சித்தத்தின்கண் ணுண்டாம் சோகத்தால் எனது ஹஸ்தபாதாதி அவயவங்கள் மிகுந்த தளர்ச்சியை யடைகின்றன. அங்ஙனமே முகமும் உலர்கின்றது. எனது சரீரத்தில் மயிர்க்கூச்சும் நடுக்கமுமுண்டாகின்றன.

ஈண்டு, (முகஞ் ச பரிசுஷ்யதி) என்றிவ்வளவு கூறுவதானே நிர்வாகமுண்டாயினும், சிரமமுதலிய நிமித்தத்தால் முகத்திற்கு உலர்ச்சி யுண்டாகின்றது. அதன் அபேக்ஷையால் சோகஜன்ய முகத்தின் உலர்ச்சியில் அதிகத்தன்மையைக் கூறும் பொருட்டு, (பரிசுஷ்யதி) என்னும் வசனத்தில் பரி என்னுஞ் சத்தங்கூறப் பட்டது. (28-29)

(அன்றியும்.)

சு-ம். காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக்சைவ பரிதஹ்யதே ।
ந ச ஶக்நோம்யவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந: ॥ ௩௦ ॥
நிமித்தானி ச பஶ்யாமி விபரீதானி கேஶவ ।

ப-ம். காண்டீவம்[3], ஸ்ரம்ஸதே[4] - ஹஸ்தாத்[2] - த்வக்[6] - ச[5] - ஏவ - பரிதஹ்யதே[7] - ந[14] - ச[12] - ஶக்நோமி[15] - அவஸ்தாதும்[13] - ப்ரமதி[11] - இவ[8] - ச[9] - மே[10] - மந: - (30) நிமித்தானி[18] - ச[16] - பஶ்யாமி[19] - விபரீதானி[17] - கேஶவ[1].

(அ-ம்.) ஹே கேசவ! எனது கையினின்றும் காண்டீவ வில் நழுவுகின்றது, சரீரம் எரிகின்றது, மனமும் சுழல்கின்றது. ஆகையினால், எனது சரீரத்தை நிலை நிறுத்தவும் எனக்குச் சாமர்த்தியமின்று (30) அங்ஙனமே விபரீத சகுனங்களையுங் காண்கின்றேன்.

(வி-ம்.) ஹே பகவன்! அச்சோகத்தால் இக்காண்டீவ தனுசும் எனது கையினின்று கீழே நழுவுகின்றது, எனது சரீரம் மிகவும் எரிகின்றது. இவற்றுள் எனது தனுசு கீழே நழுவுகின்றது, என்னும் வசனத்தைக் கூறியதால் அர்ச்சுனன் தனது அதைரியவடிவ துர்ப்பலத் தன்மையைத் தெரிவித்ததாம். எனது சரீரம் எரிகின்றது, எனக் கூறியதால் அர்ச்சுனன் தனது உள்ளிலுள்ள சந்தாபத்தைச் சூசிப்பித்ததாம். இக்காலத்தில் எனது சரீரத்தை நிலைநிறுத்தவும் சமர்த்துடையனன்றும். இவ்வளவு கூறியதால் அர்ச்சுனன் தனது மூர்ச்சையவஸ்தையைத் தெரிவித்ததாம். எக்காரணத்தாலெனின், மூர்ச்சை யவஸ்தையின் கண்ணே இப்புருஷன் தனது சரீரத்தை நிறுத்துவதில் சாமர்த்தியமின்றியவனாயிருப்பனென்க. இப்போது அம்மூர்ச்சை அவஸ்தையின் அடைவில் ஹேதுவைக் கூறப்படும்:—(ப்ரமதீவ ச மே மந) இவ்வெனது மனமானது சுழலாநின்றவனைப் போலச் சுழல்கின்றது. அச்சுழல்வோனுக்குச் சமானமாய் மனத்தின் யாதொரு விகார விசேஷமுளதோ, எதனை (இவ) என்னுஞ் சத்தத்தாற் கூறப்பட்டு

ளதோ, அவ்விகார விசேஷமே மூர்ச்சையின் முன்னுண்டாம் அவஸ்தையாம். (ந ச ஶக்நோமி) என்னும் பதத்தின்கண்ணுள்ள சகாரம் ஹேதுவின் வாசகமாம். அதற்கு இதுபொருளாம்:—எனது மனமானது மூர்ச்சையின்முன் அவஸ்தையையடைந்ததனால், நான் இப்போது எனது சரீரத்தைத் தாங்கச் சமர்த்துடையனல்லேன் என்பதாம். இப்போது சரீரத்தை நிலைநிறுத்தச் சாமர்த்திய மின்மையில் வேறு நிமித்தமுங்கூறப்படுகின்றது:—(நிமித்தாநி) ஹே பகவன்! சிறிதுகாலத்தில் துக்கத்தி னடைவைச் சூசிப்பதாகிய இடது நேத்திரம் துடித்தல் முதலிய விபரீத சகுனங்களையும் நான் அனுபவிக்கின்றேன், இக்காரணத்தானும் யான் நிலைநிறுத்தச் சாமர்த்தியமின்றியவனும். ஈண்டு, இருபத்தெட்டாவது சுலோகத்தில் (த்³ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண) என்னும் வசனத்தின் கண்ணுள்ள (க்ருஷ்ண) என்னும் சம்போதனையால் அர்ச்சுனன் இவ்வர்த்தத்தைச் சூசிப்பித்தனன்:—அர்ச்சுனனாகிய நான் அனாத்ம வேத்தா வாதலால் துக்கியாயிருக்கின்றேன், இக்காரணத்தால் நான் சோகஜன்ய கிலேசத்தை யனுபவிக்கின்றேன்.

கூ-ம். க்ருஷிர்பூ⁴வாசக: ஶப்³தோ³ ணஶ்ச நிர்வ்ருதிவாசக: ।
தயோரைக்யம் பரம் ப்³ரஹ்ம க்ருஷ்ண இத்யபி⁴தீ⁴யதே ॥

(பொருள்) (க்ருஷ்) என்னும் * தாது, சத்தையின் வாசகமாம்(ண); என்னும் †பிரத்தியயம் ஆனந்தத்தின் வாசகமாம், சத்தை ஆனந்தம் என்னும் இரண்டினது ஏகத்தன்மை வடிவ பரப்பிரஹ்மம் கிருஷ்ண என்னும் நாமத்தால் கூறப்படும் என்னும் சாஸ்திரத்தின் வசனத்தால் தாங்கள் சத்து ஆனந்த வடிவினராயிருத்தலின் சோகமோகாதி விகாரங்களின்றியவரா யிருக்கின்றீர். கருத்திதுவாம்:—பந்துக்களின் தரிசனம் எனக்குண்டாயதுபோலத் தங்களுக்கும் அப்பந்துக்களின் தரிசனமுண்டாயது. ஆனால், என்னைப்போல் தங்களுக்குச் சோகமோகாதி விகாரங்களுண்டாகவில்லை; இது தங்களிடத்துள்ள மஹா விசேஷத்தன்மையாம். ஆகையினால், தங்களைப் போன்று என்னையும் சோகமோக மின்றியவனாகச் செய்வீராக என்னு மிவ்வெல்லாப்பொருளையும், "ஹே கிருஷ்ண," என்னும் சம்போதனத்தால் அர்ச்சுனன் குறிப்பித்தனன். அவற்றுள் நினது சோகத்தை நிவிர்த்தி செய்வதற்கு என்னிடத்தில் சாமர்த்தியமின்றாம் என்னும் பகவானது ஆசங்கையை நிவிர்த்தி செய்யும்பொருட்டு, அவ்வர்ச்சுனன் "ஹே கேசவ" என்னுஞ் சம்போதனத்தால் பகவானிடத்தில் தனது சோகமோகத்தை நிவிர்த்தி செய்யக்கூடிய சாமர்த்தியம் உண்டென்பதைச் சூசிப்பித்தனன். அவற்றுள், (கேஶௌ ஆதி அநுகம்ப்யதயா யஸ்யாஸ்தீதி கேஶவ:) பொருளிதுவாம்:—ஜகத்தை உற்பத்திசெய்யும் பிரஹ்மாவிற்கு க, எனப்பெயராம். ஜகத்தைச் சம்ஹாரஞ் செய்யும் உருத்திரமூர்த்திக்கு ஈசன் எனப்பெயராம். அவ்விருவரையும் தமது அனுக்கிரகத்தின் பாத்திரமாமென யாவரடைவரோ அவர் கேசவனெனப்படுவர். அத்தகைய தங்களுக்கு எனது சோகமோகத்தை நிவிர்த்திசெய்வதிற் சற்றும் பிரயத்தினமின்றாம். அல்லது, கிருஷ்ண என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானிடத்தில் பக்தஜனங்களின் துக்கத்தின் நிவர்த்தகத்தன்மையை அர்ச்சுனன் தெரிவித்தனன். கேசவ என்னுஞ் சம்போதனத்தால் கேசி முதலிய துஷ்ட அசுரர்களை நிவிர்த்தி செய்து, எப்போதும் பக்தஜனங்களை இரக்ஷிக்குந் தன்மையுளதென்பதைச் சூசிப்பித்தனன். இத்தகைய தங்கள் சுபாவத்தால் என்னையும், சோகமோகத்தை நிவிர்த்தித்து அவசியம் ரக்ஷித்தல் வேண்டும் என்பதாம். (30)

---

* தாது=பகுதி. † பிரத்யயம்=விகுதி.

(அ-கை.) ஆண்டு, நற்றொழிலின் காரணவடிவ தத்வஞானத்தின் பிரதிபந்தகமாகிய சோகத்தை முன்னர் முகவுலர்ச்சி முதலிய லிங்கத்வாரா மூன்று சுலோகங்களால் நிரூபித்தனர். இப்போது அச்சோகத்தாலுண்டாகிய விபரீதப் பிரவிர்த்தியின் காரணவடிவ விபரீத புத்தியை நிரூபிக்கின்றனர் :—

சு-ம். ந ச ஶ்ரேயோऽநுபஶ்யாமி ஹத்வா ஸ்வஜநமாஹவே ॥ ௩௧ ॥

5 4 6 3 2 1
ப-ம். ந ச - ஶ்ரேய: - அநுபஶ்யாமி - ஹத்வா - ஸ்வஜநம் - ஆஹவே.

(அ-ம்.) இந்த யுத்தத்தில் எனது பந்துக்களைக் கொல்வதால், யான் நன்மையைக் காண்கின்றேனில்லை.

(வி-ம்.) ஹே பகவன்! இப்போரின்கண் பீஷ்மாதி பந்துக்களின் மரணத்தால் நான் எனது சிரேயசைப் பார்க்கின்றேனில்லை. ஈண்டு, சிரேயசு என்றது புருஷார்த்தத்திற்காம். இப்புருஷன் எப்பதார்த்தத்தின் அடைவைவேண்டுகின்றனனோ, அப்பதார்த்தம் புருஷார்த்த மெனப்படும். அந்தப் புருஷார்த்தவடிவ சிரேயசு இருவகையாம் :—ஒன்றோ திருஷ்ட சிரேயசும் மற்றொன்றோ அதிர்ஷ்ட சிரேயசுமாம். அவற்றுள் இவ்வுலகத்தின்கண்ணுள்ள ராச்சியமுதலிய சுகங்கட்குத் திருஷ்ட சிரேயசெனப் பெயராம். சுவர்க்காதி சுகங்கட்கு அதிர்ஷ்ட சிரேயசெனப் பெயராம், அவ்விரு வகையாய சிரேயசின் பிராப்தியை இப்பந்துக்களின் மரணத்தால் நான் பார்க்கின்றேனில்லை. ஹே அர்ச்சுன! இப்போரின்கண்ணே தன்னவரைக் கொல்லுதலால் சிரேயசின் அடைவோ உண்டாம்; ஆனால் இந்த சிரேயசு வடிவபலத்தின் பிராப்தி நன்றாய் விசாரஞ்செய்ததின் பின்னர்ப் பிரதீதியாம்; சிறிது விசாரத்தாற் பிரதீதியாவதின்றாம் என்னும் பகவானது ஆசங்கையை நிவிர்த்தி செய்தற்பொருட்டு, அர்ச்சுனனால் அநுபஶ்யாமி, என்னும் வசனத்தில் அநு என்னும் சத்தங்கூறப்பட்டது. அவ்வநு என்னுஞ் சத்தத்திற்கு 'பின்னர்' என்னும் பொருள் பெறப்படுகின்றது. முன் விருத்தாந்தங்களை யபேக்ஷித்தே 'பின்னர்' எனக்கூறல்வேண்டும். ஆகையினால் இப்பொருள் துணியப்பெறும் :—மிகுதியாய் விசாரஞ்செய்த பின்னரும் நான் பந்துக்களின் மரணத்தால் எனது சிரேயசைப் பார்க்கின்றேனில்லை என்பதாம். (ஸ்வஜநம்) எனக்கூறியதால் அர்ச்சுனன் இப்பொருளைச் சூசிப்பித்தனன் :—எனது சம்பந்திகளன்றியவரை யுத்தத்திற் கொல்வதாலும் நான் சிரேயசைக் காண்கின்றேனில்லை ; ஏனெனின், சாஸ்திரத்தில் இது கூறப்பட்டுளது:—

சு-ம். த்வாவிமௌ புருஷௌ லோகே ஸூர்யமண்டலபேதிநௌ * ।
பரிவ்ராட் யோகயுக்தஶ்ச ரணே சாபிமுகோ ஹத: ॥

(பொருள்) இவ்வுலகத்தின்கண் இருவிதமாகிய புருஷர்களே சூரிய மண்டலத்திற் செல்கின்றனர்; ஒருவரோ யோகத்தோடுற்ற சந்நியாசியர், மற்றவரோ யுத்தத்தில் எதிர்த்து நின்று மரணத்தை யடைந்தவர் என்பது முதலிய சாஸ்திர வசனத்தால் போரில் இறக்கும் புருஷனுக்கே சுவர்க்காதி சிரேயசின் அடைவு கூறப்பட்டுளது. கொல்பவனாகிய புருஷனுக்குக் கிஞ்சித்தேனும் சிரேயசின் அடைவு சாஸ்திரத்தாற் கூறப்படவில்லை. ஆகையினால் எனது பந்துக்களல்லாத ஜனங்களைக்கொல்வதாலும், எனக்குச் சிரேயசின் அடைவுண்டாகாதபோது எனது பந்துக்களைக் கொல்வதால் எனக்குச் சிரேயசினடைவு யாங்ஙனமுண்டாம்; மற்றோ

* (பேதிநௌ)=பேதிப்பவர்.

உண்டாகாதென்பதே; இவ்வெல்லாப் பொருள்களையும் அர்ச்சுனன் (ஸ்வஜநம்) என்னுஞ் சத்தத்தாற் சூசிப்பித்தனன். சித்தசாதனவடிவ தோஷத்தை நிவிர்த்தித்தற் பொருட்டு அர்ச்சுனனால் (ஆஹவே) என்னும் பதங்கூறப்பட்டது. ஏனெனின், (ஆஹவே) என்னும் யுத்தத்தின் வாசக பதத்தைக் கூறுவிடின், யுத்தமின்றிப் பந்துக்களின் ஹிம்சையால் சிரேயசின்பிராப்தி ஒரு சாஸ்திர முணர்ந்த புருஷனும் அங்கீகரிப்பதில்லை. அவ்வர்த்தத்தை அர்ச்சுனனாலுஞ் சித்தஞ் செய்யப்பட்டது. ஆகையினால், சித்தித்த அர்த்தத்தின் சாதனவடிவ சித்த சாதன தோஷம் அவ்வர்ச்சுனனுக்குண்டாம். அத்தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு, அர்ச்சுனனால் (ஆஹவே) என்னும் பதங்கூறப்பட்டது; கருத்திதுவாம்:—யுத்தமின்றிச் சம்பந்திகளைக் கொல்லுதலால், சிரேயசின் பிராப்தியை ஒருபுருஷரும் அங்கீகரியார். யானோ யுத்தத்திலும் சம்பந்திகளைக் கொல்லுதலால் சிரேயசின் அடைவைப் பார்க்கின்றேனில்லை என்பதாம். (31)

(அ-கை.) ஹே அர்ச்சுன! யுத்தத்தில் நினது பந்துக்களைக்கொல்லுதலால் சுவர்க்கரூப அதிர்ஷ்டப் பிரயோஜனத்தின் பிராப்தியோ உண்டாகவேண்டாம். ஆனால் உனக்கு அந்த சுவஜனங்களின் கொல்கையால் வெற்றி, ராஜ்யம், விஷயசுகமென்னும் திருஷ்டப் பிரயோஜனத்தின் பிராப்தியோ * நிர்விவாதமாம். என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான்:—

சு-ம். ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகாநி ச ।
கிம் நோ ராஜ்யேந கோவிந்த கிம் போகைர் ஜீவிதேந வா ॥ ௩௨ ॥

ப-ம். ந[3] - காங்க்ஷே[4] - விஜயம்[2] க்ருஷ்ண[1] - ந[7] - ச[5] - ராஜ்யம்[6] - ஸுகாநி[9] - ச[8] - கிம்[13] - ந:[11] ராஜ்யேந[12] - கோவிந்த[13] - கிம்[15] போகை:[14] ஜீவிதேந[17] - வா[16].

(அ-ம்.) ஹே கிருஷ்ண! எனக்கு வெற்றியும் வேண்டாம், ராஜ்யமும்வேண்டாம், சுகமும் வேண்டாம். ஹே கோவிந்த! எனக்கு ராஜ்யத்தாலும், விஷய சுகத்தாலும், வெற்றியாலும் என்ன பயனுண்டாம். மற்றோ அவற்றின் பிராப்தியால் கிஞ்சின்மாத்திரமும் பயனுண்டாகாதென்பதாம்.

(வி-ம்.) ஹே கிருஷ்ணபகவன்! எனது பந்துக்களின் ஹிம்சையாலுண்டாம் வெற்றியை யான் விரும்பேன், அந்த வெற்றியின் அனந்தரமுண்டாவதாகிய ராஜ்யத்தின் அடைவையும் விரும்பேன். அங்ஙனமே ராஜ்யத்தினடைவின் பின்னருண்டாம் விஷய சுகத்தினடைவையும் யான் விரும்பேன். இவ்வளவு கூறியதால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன்:—இவ்வுலகத்தில் அவ்வப்பயனின் வேட்கையுடைய புருஷரே அவ்வப்பலத்தின் உபாயத்தில் முயல்வர்; பலத்தில் இச்சையின்றிய புருஷர் அப்பலத்தின் உபாயத்தில் பிரவிர்த்தியார். எங்ஙனம் போஜனவடிவ பலத்தினடைவில் வேட்கையையுடைய புருஷனே போஜனவடிவ பலப்பிராப்தியின் உபாயவடிவ அன்னம் சமைத்தலாகிய பிரவிர்த்தியின்கண் முயல்வன். போஜனத்தின் இச்சையின்றிய புருஷன் அன்னத்தைப் பாகஞ்செய்வதில் பிரவிர்த்தியான். அங்ஙனம் வெற்றி, ராஜ்யம், விஷயசுகம் என்னு மிவற்றின் பலத்தினடைவில் எப்புருஷனுக்கு வேட்கையுண்டாமோ, அப்புருஷன் அவ்வெற்றிமுதலிய பலப்பிராப்தியின் உபாயவடிவ யுத்தத்தில் பிரவர்த்தனுவன்.

* நிர்விவாதம் = விவாதமற்றது.

ஆனுல், எனக்கோ அவ்விஜயம் ராஜ்யம் முதலிய பலங்களை யடைவதில் இச்சையின்றும். ஆகையினுல், இந்த யுத்தவடிவ உபாயத்தில் எனது பிரவிர்த்தி சம்பவியாது. ஹே அர்ச்சுன! அந்நிய துரியோதனுதிகளின் இச்சையின் விஷயவடிவமாய இந்த வெற்றி, ராஜ்யம், சுகம் என்னுமிவற்றில் நினது இச்சையின்மையின் காரணமென்னை கொலோ என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றுன். (கிம்நோராஜ்யேந) என, ஹே கோவிந்த! தர்மாதர்மத்தின் ஸ்வரூபத்தைத் தெரியாதவராகிய இத்துரியோதனுதியர்க்கு இந்த ராஜ்யம் சுகம் முதலிய விஷயங்களில் இச்சையுண்டாகுக. ஆனுல், தர்மாதர்மங்களின் ஸ்வரூபத்தைத் தெரிந்த எனக்கு இப்பிரசித்த ராச்சியத்தாலும் விஷயசுகங்களாலும் ஜீவனத்தின் சாதனவடிவ வெற்றியாலும் எப்பயனின் அடைவுண்டாம்; மற்றே அந்த ராஜ்ய முதலியவற்றுல் எனக்குக் கிஞ்சின்மாத்திரப் பிரயோசன சித்தியுமுண்டாகாது. கருத்திதுவாம்:—வெற்றி, ராஜ்யம், போகம் என்னும் இம்மூன்றனடைவின்றியே வனத்தில் வாசஞ்செய்யும் எனக்கு அந்தச் சந்தோஷத்தானே, இவ்வுலகத்தின்கண் கீர்த்தியோடுகூடிய ஜீவனமுண்டாம். ஆகையினுல் இந்த ராஜ்யாதிகளின் பிராப்தியில் எனக்கு இச்சையின்றும். ஈண்டு, ஹே கோவிந்த! என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன்:—(கோ) என்பது இந்திரியத்திற்காம். அவ்விந்திரியங்கட்கு அதிஷ்டான ரூபத்தால் நித்தியமாகவே இருப்போனுக்கு, கோவிந்தனெனப் பெயராம், இத்தகைய அந்தரியாமி வடிவமாகிய தாங்கள் எனக்கு இவ்வுலகத்திலுள்ள ராச்சிய முதலியவற்றின் பலங்களினின்றும் வைராக்கிய மிருத்தலை நன்றாக உணர்ந்துள்ளீர் என்பதாம்.
(32)

(அ.கை.) ஹே அர்ச்சுன! தர்ம சாஸ்திரத்தின்கண் இது கூறப்பட்டுளது:—

சு-ம். 𑌵𑍃𑌦𑍍𑌧𑍌 𑌚 𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑌰𑍌 𑌸𑌾𑌧𑍍𑌵𑍀 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌸𑍁𑌤𑌃 𑌶𑌿𑌶𑍁𑌃 ।
𑌅𑌪𑍍𑌯𑌕𑌾𑌰𑍍𑌯𑌶𑌤𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌭𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾 𑌮𑌨𑍁𑌰𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥

(பொருள்) தனது வயோதிகமாகிய தாய் தந்தையரும் பதிவிரதையாகிய ஸ்திரீயும், பால்ய அவஸ்தையையுடைய புத்திரரும் ஆகிய எல்லாப்பந்துக்களையும், இப்புருஷன் செய்யத்தகுதியல்லாத அனேக காரியங்களைச் செய்தும் இரக்ஷித்து வளர்ப்பதே தகுதியாம், என்னுமிவ்வார்த்தை மநுபகவான் கூறியிருக்கின்றனர். இது முதலியசாஸ்திரங்களின் வசனத்தால் வயோதிக மாதா பிதா முதலிய சம்பந்திகளை ரக்ஷித்தற்பொருட்டு, அதர்மத்தைச் செய்யினும் அது இப்புருஷனுக்குத் தோஷத்தின்பொருட்டாவதின்றும். ஆகையினுல் ஒருக்கால் உனக்கு இந்த ராஜ்ய சுகாதிகளினின்றும் வைராக்கியமுண்டாயினும், இந்த நினது சம்பந்திகட்கு ராஜ்யாதி சுகத்தின் பொருட்டு நீ யுத்தத்திற் பிரவிர்த்தித்தல்வேண்டும் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றுன்:—

சு-ம். 𑌯𑍇𑌷𑌾𑌮𑌰𑍍𑌥𑍇 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂 𑌨𑍋 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑍋𑌗𑌾𑌃 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿 𑌚 ।
𑌤 𑌇𑌮𑍇𑌽𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌾𑌨𑌿 𑌚 ॥ ௩௩ ॥

ப-ம். 𑌯𑍇𑌷𑌾𑌂[2] - 𑌅𑌰𑍍𑌥𑍇[3] - 𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌤𑌂[8] - 𑌨𑌃[1] - 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂[4] - 𑌭𑍋𑌗𑌾𑌃[5] - 𑌸𑍁𑌖𑌾𑌨𑌿[7] - 𑌚[6] - 𑌤𑍇[9] - 𑌇𑌮𑍇[10] - 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃[16] - 𑌯𑍁𑌦𑍍𑌧𑍇[15] - 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍[11] - 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾[14] - 𑌧𑌨𑌾𑌨𑌿[13] - 𑌚[12].

(அ-ம்.) ஹே பகவன் எச்சம்பந்திகளின் பொருட்டு ராஜ்யம், விஷயம், சுகம், என்னுமிவற்றை யபேக்ஷிக்கின்றோமோ, அவர்கள் தமது உயிர்பொருள் என்னுமிவற்றிலுள்ள ஆசையைவிடத் துணிந்து இப்போரின் முன்வந்து நிற்கின்றனர்.

(வி-ம்.) ஹே பகவன்! ஏகாங்கியாகிய புருஷனுக்கோ இந்த ராச்சியமுதலி யவற்றில் அபேக்ஷையுண்டாவதின்றாம், மற்றோ பந்துக்களின் பொருட்டு இந்த ராஜ்யம் சுகசாதனரூபவிஷயம், விஷயஜன்யசுகம் என்னுமிவற்றினபேக்ஷை யெனக்குண்டாகின்றது. அத்தகைய இவ்வெனது பந்துக்கள் தங்களது உயிர்பொருளென்னுமிவற்றிலுள்ள ஆசையைவிடுத்து, மரணத்தின் பொருட்டு இப்போர்க்களத்தில் நிற்கின்றனர். ஆகையினால் என்பொருட்டும் எனது சம்பந்திகளின் பொருட்டும் நான் யுத்தவடிவ காரியத்திற் பிரவிர்த்தியேன். ஈண்டு, முன் சுலோகத்தில் போகசத்தத்தால் விஷயஜன்யசுகம் கொள்ளப்பட்டது. ஆயினும் இச்சுலோகத்தில் போகத்தினின்றும் சுகத்தை வேறாகக் கொள்ளப்பட்டது. ஆகையினால் ஈண்டு போகசத்தத்தின் இலக்கணவிருத்தியால் சுகத்தின் சாதன வடிவ பரிசமுதலிய விஷயங்களைக்கொள்க. (𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌧𑌨𑌾𑌨𑌿 𑌚) என்னும் வசனத்தில், பிராணத்தியாகம், தனத்தியாகம் என்னுமிவை கூறப்பட்டன. ஜீவித அவஸ்தையில் பிராணத்தியாகம், தனத்தியாகம் என்னுமிவை சம்பவியாவாதலால், பிராணசத்தத்தின் இலக்கண விருத்தியால் பிராணனிடத்துள்ள ஆசையையும், தனசத்தத்தினிலக்கண விருத்தியால் தனத்தின் ஆசையையுங்கொள்க. அப்பிராணாதிகளின் ஆசையைப்பரித்தியாகஞ் செய்வது ஜீவித அவஸ்தையின்கண்ணும் சம்பவிக்கின்றது. ஆண்டுத் தனது பிராணனைத் தியாகஞ்செய்தும் தனது பந்துக்களின் சுகத்தின் பொருட்டுத் தனத்தின் ஆசையுண்டாமென்னுஞ் சங்கையை நிவிர்த்தித்தற் பொருட்டுப் பிராணனின் வேறாய்த் தனங்கிரகிக்கப்பட்டது. (33)

(அ-கை.) ஹே அர்ச்சுன! எப்பந்துக்களின் சுகத்தின் பொருட்டு நினக்கு இந்த இராஜ்யமுதலியவற்றில் இச்சையுண்டாயதோ அந்த உனது பந்துக்கள் இப்போரின்கண் வரவில்லையென்னும் பகவானது ஆசங்கையை நீக்குவான், அவ்வர்ச்சுனன் அப்பந்துக்களை விசேஷமாய் வர்ணிக்கின்றனன்.

சு-ம். 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 𑌪𑌿𑌤𑌰𑌃 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌚 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 𑌶𑍍𑌯𑌾𑌲𑌾𑌃 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌸𑍍𑌤𑌥𑌾 ॥௩௪॥

ப-ம். 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌃 (1) - 𑌪𑌿𑌤𑌰𑌃 (2) - 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃 (4) - 𑌤𑌥𑌾 (3) - 𑌏𑌵 (5) - 𑌚 - 𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌾𑌃 (6)
𑌮𑌾𑌤𑍁𑌲𑌾𑌃 (7) - 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌾𑌃 (8) - 𑌪𑍌𑌤𑍍𑌰𑌾𑌃 (9) 𑌶𑍍𑌯𑌾𑌲𑌾 (10) - 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑌃 (12) - 𑌤𑌥𑌾 (11).

(அ-ம்.) ஹே பகவன்! இப்போர்க்களத்தி லுள்ளவர்களிற் சிலர் எமது ஆசார்யராம், சிலர் தந்தையராம், சிலர் புத்திரராம், சிலர் பாட்டனாராம், சிலர் மாதுலராம், சிலர் மாமனாராம், சிலர் பௌத்ரர்களாம், சிலர் மைத்துனர்களாம், சிலர் சம்பந்திகளாம்.

(வி-ம்.) இச்சுலோகத்தின் பொருள் வெளிப்படையாம், இதனபிப்பிராய மிதுவாம்:—இப்போர்க்களத்தில் எவ்வளவு யுத்த வீரர்கள் ஒருங்குகூடியிருக்கின்றனரோ, அவ்வனைவரும் எனது சம்பந்திகளாம். அச்சம்பந்திகளின் வேறாய் ஒருவருமின்றாம், அவ்வெல்லாச் சம்பந்திகளும் இப்போது மாணத்தை யுடையத்

தலைப்பட்டிருக்கின்றனர். ஆகையினால் எச்சம்பந்திகளின் ராஜ்ய சுகாதிகளின் பொருட்டு யான் யுத்தத்தில் பிரவிர்த்திப்பது என்பதாம். (34)

(அ-கை.) ஹே அர்ச்சுன! நீ ஒருகால் கிருபையினால் இப்பீஷ்மத்துரோணாதியரைக் கொல்லாவிடினும், இப்பீஷ்மத்துரோணாதியர் ராஜ்யத்தின் லோபத்தால் உன்னை யவசியங்கொல்வர்; ஆகையினால் நீயே இப்பீஷ்மத்துரோணாதியரைக் கொன்று இராச்சியத்தை அநுபவித்துக்கொள், என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான்.

சு-ம். ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந ।
அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ॥ ௩௫ ॥

ப-ம். ஏதாந்[4] - ந[9] - ஹந்தும்[8] - இச்சாமி[10] - க்நத:[2] - அபி[3] - மதுஸூதந[1] - அபி[7] - த்ரைலோக்யராஜ்யஸ்ய[5] - ஹேதோ: கிம் நு[6] - [12] மஹீக்ருதே[11].

(அ-ம்.) ஹே மதுசூதன! என்னைக் கொல்லினும் இவ்வாசாரியர்களை மூவுலகுங் கிடைப்பதாயிருப்பினுங் கொல்ல இச்சியேன், எனின் இம்மண்ணுலகினடைவின் பொருட்டு, இவர்களைக் கொல்வதில் எனக்கு எங்ஙனம் இச்சையுண்டாம்.

(வி-ம்.) ஹே மதுசூதன பகவான்! கூர்மையுள்ள ஆயுதங்களால் என்னைக் கொல்பவராயினும், முற்கூறிய ஆசாரியர்களைக் கொல்வதில் எனக்கு இச்சை மாத்திரமுமுண்டாகாதாயின், அவ்வாசாரியர்களைக் கூர்மையாகிய சஸ்திரங்களால் யான் எவ்வாறு கொல்வேன், மற்றே கொல்லேன். அல்லது, அவ்வாசாரியர் முதலியோரைக் கொல்வதால் ஒருகால் பூமி, சுவர்க்கம், பாதாளம் என்னும் மூவுலகுங் கிடைப்பதாயிருப்பினும், இவ்வாசாரியர் முதலியோரைக் கொல்ல இச்சியேனாயின் இம்மண்ணுலகினடைவின் பொருட்டு இவர்களைக் கொல்லேனென்பதில் யாது கூறவேண்டும். ஈண்டு, (மதுஸூதந) என்னுஞ் சம்போதனத்தால், அர்ச்சுனன் ஸ்ரீ பகவானிடத்து வைதீகமார்க்கத்தின் பிரவர்த்தகத் தன்மையைச் சூசிப்பித்ததாம். இத்தகைய வைதீகமார்க்கத்தின் பிரவர்த்தகராய தாங்கள் ஆசாரியர் முதலியோரைக் கொல்வதில் என்னை எதன்பொருட்டுப் பிரவிர்த்திக்கச் செய்கின்றீர்கள் என்பதாம். (35)

(அ-கை.) ஹே அர்ச்சுன! ஆசாரியர் முதலியோரின் மரணத்தில் நீ தோஷத்தை யங்கீகரிக்கின்றே, அவர்களைவிட்டு வேறு திருதராஷ்டிரரின் புத்திரராகிய துரியோதனாதியரைக் கொல்வாய். ஏனெனின், இத்துரியோதனாதியர் உன்னை அரக்குமாளிகையில் அக்கினி முதலியவற்றால், அநேகவிதமாய்க் கோரமான துக்கத்தை யடையச்செய்தனர். ஆகையினால் அத்துரியோதனாதிகளைக் கொல்வதில் உனக்கு விருப்பமுண்டாம் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான் :—

சு-ம். நிஹத்ய தார்த்தராஷ்ட்ராந்ந: கா ப்ரீதி: ஸ்யாஜ்ஜநார்த்தந ।
பாபமேவாஶ்ரயேதஸ்மாந் ஹத்வைதாநாததாயிந: ॥ ௩௬ ॥

ப-ம். நிஹத்ய[3] - தார்த்தராஷ்ட்ராந்[2] - ந:[4] - கா[5] ப்ரீதி:[6] - ஸ்யாத்[7] - ஜநார்த்தந[1] - பாபம்[12] - ஏவ[13] - ஆஶ்ரயேத்[14] - அஸ்மாந்[11] - ஹத்வா[10] - ஏதாந்[8] ஆததாயிந:[9].

(அ-ம்.) ஹே ஜநார்த்தன! இத்துரியோதனுதியரைக் கொல்வதால் எனக்கு என்ன பிரீதியுண்டாம்; மற்றேரு ஒரு பிரீதியு முண்டாகாது. மாறுய் இவ்வாததாயிகளைக் கொல்வதால் யாங்கள் பாபமே யாசிரயிக்கும்படி நேரிடும்.

(வி-ம்.) ஹே ஜநார்த்தன! திருதராஷ்டிராரின் புத்திரராகிய இத்துரியோதனுதியர் எனது சகோதரர்களாம்; அச்சகோதரர்களைக் கொல்வதால் எங்கட்கு யாது சுகமுண்டாம். மற்றேரு அவர்களைக் கொல்வதால் எங்கட்குச் சிறிதுமாத்திரமும் சுகத்தின் பிராப்தியுண்டாகாது. கருத்திதுவாம்:—மூட ஜனங்களது பிரியவிஷயமாகிய க்ஷணமாத்திர மிருப்பதாய சுகாபாசத்தின் லோபத்தால் பகுகால பரியந்தம் நரகப் பிராப்தியின் ஹேதுவாகிய இப்பந்துக்களது ஹிம்சையைச் செய்வது எங்கட்குத் தகுதியன்றும். ஈண்டு, சுகரூபத்தன்மையற்றதும் சுகத்தைப்போன்று பிரதீதியாவது மெதுவோ அதைச் சுகாபாசமென்பர். அத்தகையது விஷயஜன்ய சுகமாம். ஹே ஜநார்த்தன! என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன்:—ஹே பகவன்! இத்துரியோதனுதியர் ஒருகால் கொல்லவே யோக்கியராயினும் தாங்களே இவர்களைக் கொல்லுவீராக. ஏனெனின், பிரளயகாலத்தில் சர்வ ஜனங்களைக் கொல்வதாலும், தங்களைப் பாபங் கிஞ்சித்தேனும் பரிசியாதன்றே.

ஹே அர்ச்சுன! சாஸ்திரத்தில் இது கூறப்பட்டுளது.

சு-ம். அக்நிதோ கரதச்சைவ ஶஸ்த்ரபாணிர் தநாபஹ: ।
க்ஷேத்ரதாராபஹாரீ ச ஷடேதே ஆததாயிந: ॥

(பொருள்.) நெருப்பை வைப்பவனும், விஷங்கொடுப்பவனும், ஆயுதங் கையிலுடையவனும், பரதனத்தைக் கவர்பவனும், பரக்ஷேத்திரத்தைக் கவர்பவனும், பரஸ்திரீயை யபகரிப்பவனும் ஆகிய இவ்வறுவரும் *ஆததாயிகளெனப்படுவர். ஆனல், இத்துரியோதனுதிகளிடத்தோ அவ்வறுவகையாகவே ஆததாயித்தன்மையுளது. அன்றியும் வேறு சாஸ்திரத்தின்கண் இது கூறப்பட்டுளது:—

சு-ம். ஆததாயிநமாயாந்தம் ஹந்யாதேவா விசாரயந் ।
நாததாயிவதே தோஷோ ஹந்துர்பவதி கஶ்சந ॥

(பொருள்.) அகஸ்மாத்தாய் எதிரில்வந்த ஆததாயி புருஷனை அக்காலத்திலேயே புத்திமானுகிய புருஷன் கொல்லல்வேண்டும். அவனைக் கொல்வதில் கிஞ்சித்தேனும் விசாரஞ்செய்ய வேண்டுவதில்லை. எக்காரணத்தாலெனின், அவ்வாததாயி புருஷனைக் கொல்வதில் அவனைக் கொல்பவனுகிய புருஷனுக்குக் கிஞ்சித்தேனும் தோஷமுண்டாவதின்றும். இச்சாஸ்திர வசனத்தால் ஆததாயி புருஷனது மரணத்தால் தோஷத்தின் அபாவம் பிரதீதியாகின்றது. ஆகையினுல் உன்னல் இத்துரியோதனுதி ஆததாயிகள் அவசியங் கொல்லத் தகுதியுடையவராம். என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றனன். (பாபமேவ) என, இத்துரியோதனுதி ஆததாயிகளையும் கொல்பவனுகிய நான் அவசியம் பாவத்தைச்செய்தவனுவேன், அல்லது இவர்களைக் கொல்வதால் எனக்குப் பாபமேயுண்டாவதன்றி வேறுதிருஷ்டப் பிரயோஜனம் அதிர்ஷ்டப் பிரயோஜனம் என்னுமிவற்றினடை வுண்டாவதின்றும். (ஆததாயிநம்ஹந்யாத்) என முன்னர்த் தாங்கள் கூறியவசனம் ஆததாயி புருஷர்களைக்கொல்ல விதானஞ் செய்கின்ற

* ஆததாயிகள்=கொடும்பாவியர்.

தாயினும், அவ்வசனம் அர்த்த சாஸ்திரத்தினதாம், தர்ம சாஸ்திரத்தின் வசனமன்றும்; அவ்வர்த்த சாஸ்திரத்தினும் தர்மசாஸ்திரம் பலவானும். ஆனால், தர்மசாஸ்திரமோ பிராணி மாத்திரத்தின் ஹிம்சையை நிஷேதஞ்செய்கின்றது. அத்தர்மசாஸ்திரம் :—( ஸஸவவாவிஷ்டஒரோய: கூயடுாஸ கூஉநாஸநஂ) எனவும், (நஹிஂஸ்யாஸ ஸவடுாஹாநி) எனவுமாம்; பொருள் :—எப்புருஷன் தனது குலத்தை நாசஞ்செய்கின்றானோ, அவனே அத்தியந்தம் பாபிஷ்டனென்றறிக, இப்புத்திமானாகிய புருஷன் சர்வபூதப் பிராணிகளையுங் கொல்லற்க என்பதாம். இத்தர்மசாஸ்திரம் முற்கூறிய அர்த்த சாஸ்திரத்தினின்றும் பலவானும். ஆகையினா லிப்பந்துக்களைக் கொல்வது எனக்குத் தகுதியன்றாம்.

அல்லது (வாவஒேவாஶ்யெஸ) என்பது முதலிய பாதிச்சுலோகத்திற்கு இவ்வாறு வேறு வியாக்கியானஞ் செய்க; ஹே அர்ச்சுன! இத்துரியோதனாதிகளைக் கொல்வதில் உனக்குப் பிரீதியுண்டாகாவிடினும் உன்னைக் கொல்வதில் இத்துரியோதனாதியர்க்குப் பிரீதியுண்டாம். ஆகையினால், இத்துரியோதனாதியர் உன்னை அவசியங் கொல்வர் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான் :—

(வாவஒேவ) என வாவஂ 5, ஸவ 6, ஆஶ்யெஸ 7, ஈஹூாநு 1, ஹத்வா 2, ஸதாநு 3, ஆததாயிந: 4.

(பொருள்.) என்னைக் கொல்லவந்து நிற்கும் இத்துரியோதனாதி ஆததாயிகட்குக் கேவலம் பாவமேயுண்டாவதன்றி, வேறொரு சுகத்தை இவர்களடையார். கருத்திதுவாம் :—இத்துரியோதனாதியர் முன்னரோ, ஆததாயிகளாகவேயிருக்கின்றனர்; யுத்தஞ் செய்யாதவனாகிய என்னைக்கொல்வதால் இப்போதும் இவர் பாபியரேயாவர் இதில் யாதொரு பாபமும் என்னைப்பற்றாது. ஆகையால் எனக்குக் கிஞ்சித்தேனும் கேடுண்டாகாது. (36)

(அ-கை.) ஆண்டு அந்நியப்பிராணிகளை ஹிம்சிப்பதில் யாதொரு பலமுமின்றாம், மாறாய் அநர்த்தத்தினடைவே யுண்டாம். ஆகையினால், எந்தப்பிராணியையுங் கொல்வது தகுதியன்றாம். இவ்வார்த்தை (நவஶ்யொநூவ்ஸ்யாஜி) என்பதுமுதல் இதுபரியந்தம் அர்ச்சுனனாற் கூறப்பட்டது; இப்போது இவ்வார்த்தையைச் சமாப்தி செய்கின்றான்.

**௩௭-ம்.** தஸ்ராநாஹாவயஂஹநூஂ யாதடுாஷாநு ஸவாஂயவாநு ।
ஸஜநஂஹிகயஂஹத்வாஸூவிந: ஸ்யாஒோயவ ॥

**ப-ம்.** தஸாஸ 2, ந 7, ஈஹா: 8, வயஂ 3, ஹநூஂ 6, யாதடுாஷாநு 5, ஸவாஂயவாநு 4, ஸஜநஂ 10, ஹி 9, கயஂ 12, ஹத்வா 11, ஸூவிந: 13, ஸ்யாஒ 14, ஒோயவ 1.

(அ-ம்.) ஹே மாதவ! அவ்வாற்றால் எனது பந்துக்களாகிய திருதராஷ்டிராது துரியோதனாதி மைந்தரை யான்கொல்வது தகுதியன்றாம். என்னை? எனது பந்துக்களைக் கொல்வதால், யான் எங்ஙனம் சுகியாவேன், மற்றோ சுகியாகேன் என்பது ஒருதலையேயன்றோ.

(வி-ம்.) ஈண்டு, (தஸ்மாத) என்னும் தத், சப்தத்தால் முற்கூறிய பந்துக்களின் ஹிம்சையில் அதிர்ஷ்ட ரூபபலத்தின் அபாவம் அனர்த்தத்தின் பிராப்தி என்னு மிரண்டையுங் கொள்க, அதனுவிப்பொருள் துணியப்பெறும் :—எக்காரணத்தால் பந்துக்களின் ஹிம்சையால் சுவர்க்காதிவடிவ அதிர்ஷ்ட பலத்தின் பிராப்தியுண்டாகாதோ மாருய் மகா அனர்த்தத்தின் பிராப்தியுண்டாமோ, அக்காரணத்தால் யான் எனது துரியோதனுதி பந்துக்களைக் கொல்லவிரும்பேன். ஹே அர்ச்சுன! பந்துக்களைக் கொல்வதால் சுவர்க்காதிவடிவ அதிர்ஷ்ட சுகத்தின் பிராப்தியுண்டாகாவிடினும் இவ்வுலகத்தின் திருஷ்ட சுகத்தினடைவு உனக்கு அவசியமுண்டாம் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றுன்:—(ஸ்வஜநம்ஹீதி) ஹே மாதவ! சிரேஷ்ட புருஷர்கட்குத் தமது சம்பந்திகளின் சுகத்தின் பொருட்டே பிரவர்த்தியுண்டாம். ஆகையினுல் எனது சம்பந்திகளையே கொல்வதால் எனக்கு எவ்வாறு சுகத்தின் பிராப்தியுண்டாம்; மற்றே மாருய்த் துக்கத்தினடைவேயுண்டாம், ஈண்டு, (மொதவ) என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன் :—(மா) என்பது லக்ஷ்மிக்காம். (தவ) என்பது பதிக்காம். இலக்ஷ்மியின் பதியாவரோ அவரை மாதவன் என்பர். அத்தகைய இலக்ஷ்மியின் பதியாகிய தாங்கள் என்னை இலக்ஷ்மியின்றிய பந்துக்களின் ஹிம்சைவடிவ நிந்திதகருமத்தில் பிரவிர்த்திக்கச்செய்வது யோக்கியமன்றன்றே: (37)

(அ-கை.) ஹே அர்ச்சுன! யுத்தத்தில் தனது பந்துக்களைக் கொல்வதால் ஒருக்கால் யாதாமொரு திருஷ்ட அதிர்ஷ்ட சுகத்தின் பிராப்தியு முண்டாகாமல் தோஷத்தினடைவே யுண்டாமாயின், இப்பீஷ்மர் முதலிய மகாபுருஷர்கள் தங்கள் குலத்தை க்ஷயஞ்செய்வதிலும், சுவஜனங்களை ஹிம்சிப்பதிலும் எதன்பொருட்டுப் பிரவிர்த்திக்கின்றனர் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றனன் :—

சு-ம். யத்யப்யேதே ந பஶ்யந்தி லோபோபஹதசேதஸ: ।
குலக்ஷயக்ருதம் தோஷம் மித்ரத்ரோஹே ச பாதகம் ॥

ப-ம். யத்யபி 3, ஏதே 2, ந 9, பஶ்யந்தி 10, லோபோபஹதசேதஸ: 1, குலக்ஷயக்ருதம் 4, தோஷம் 5, மித்ரத்ரோஹே 7, ச 9, பாதகம் 8.

(அ-ம்.) ஹே பகவன்! லோபத்தால் விழுங்கப்பட்ட மனத்தினரான இப்பீஷ்மாதியர் குலநாசத்தாலான தீங்கையும், மித்திரத் துரோகத்திலுண்டாம் பாதகத்தையும் நோக்காராயினும் நான் அவைகளை நோக்குகின்றேன்.

(வி-ம்.) ஹே பகவன்! கிடைத்த பதார்த்தத்தின் றியாகத்தைச் சகிக்கொணுமையை லோபமென்பர் அத்தகைய லோபத்தால் இப்பீஷ்மாதியரின் சித்தம் விழுங்கப்பட்டிருக்கின்றது. இக்காரணத்தால் இப்பீஷ்மாதியர் குலத்தை நாசஞ்செய்வதாலுண்டாம் பாபத்தையும், தமது மித்திரர்களைத் துரோகஞ்செய்வதாலுண்டாம் பாதகத்தையும் விசாரித்துப் பார்த்திலராயினும் நான் அத்தோஷத்தையும் பாதகத்தையும் நன்றாகத் தெரிந்திருக்கின்றேன். ஆகையினுல், இப்பீஷ்மாதியரிடத்தே யுத்தத்தின்கண் பிரவிர்த்தி சம்பவிக்குமாயினும், அந்த யுத்தத்தில் எனது பிரவிர்த்தி சம்பவியாது. இவ்வளவு கூறியதால் அர்ச்சுனன் இச்சங்கையை நிவர்த்தித்தனன். அச்சங்கையிதுவாம் :—ஹே அர்ச்சுன! இப்பீஷ்

மாதியர் சிஷ்டபுருஷர்களாம். அவர்களிடத்தோ தமது பந்துக்களைக் கொல்வதில் பிரவிர்த்தி காணப்படுகின்றது. யாது யாது சிஷ்டபுருஷர்களின் ஆசாரமாமோ அஃதது வேதமூலகமேயாம், சிராத்தாதி கர்மங்களில் பிரவிர்த்திவடிவ சிஷ்ட புருஷர்களின் ஆசாரம் வேதமூலகமாவதேபோல. அச்சிஷ்ட புருஷரின் ஆசாரத்தின் அனுசாரமாகவே வேறு புருஷர்கட்கும் பிரவிர்த்தியுண்டாம், ஆகையினால், இப்பீஷ்மாதி புருஷர்கள் தமதுபந்துக்களைக் கொல்வதிற் பிரவிர்த்திப்பதைப்பார்த்து, நீயும் அதன்கண் பிரவிர்த்தித்தல்வேண்டும் என்னும் பகவானது சங்கையை அர்ச்சுனனால், (லோபோபஹதசேதஸ:) என்னும் விசேஷணத்தைக்கொண்டு நிவிர்த்திசெய்யப்பட்டது. ஏனெனின், எச்சிஷ்ட புருஷரின் ஆசாரத்தில் லோபாதிதோஷங் காரணமன்றாமோ, மற்றுக் கேவலந் தர்மபுத்தியே காரணமாமோ அவ்வாசாரத்தின் கண்வேத மூலகத்தன்மையின் கற்பனை செய்யத்தக்கதாம். அதே சிஷ்டபுருஷரின் ஆசாரம் இதர ஜீவர்கள் அங்கீகரிப்பதற்கும் யோக்கியமாம். எச்சிஷ்ட புருஷரின் ஆசாரத்தில் கேவலம் லோபாதி தோஷமே காரணமாமோ, அச்சிஷ்ட புருஷரின் ஆசாரத்தில் வேத மூலகத்தன்மையின் கற்பனை செய்யப்படுவதின்றாம் மேலும் அந்த லோபாதிகளோடுகூடிய சிஷ்டபுருஷரின் ஆசாரம் இதர புருஷர்கள் அங்கீகரித்தற்கு யோக்கியமுமன்றாம். இப்பீஷ்மாதிகளின் கேவலம் லோபமுதலிய தோஷமே பந்துக்களைக் கொல்வதின் பிரவிர்த்திவடிவ ஆசாரத்திற் காரணமாம். ஆகையினால் இப்பீஷ்மாதியரின் ஆசாரம் வேதமூலகமன்றாம்; இத்தகைய பீஷ்மாதியரின் லோபமூலக ஆசாரத்தைக் கிரகணஞ்செய்து யான் இப்பந்துக்களைக் கொல்வதில் எங்ஙனம் முயல்வேன் மற்றன்று யான் அதில் ஒருக்காலும் முயலேன். (38)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இப்பீஷ்மாதியர் லோபத்தால் யுத்தத்திற் பிரவர்த்தித்தவராயினுந் தர்ம சாஸ்திரத்தில், (ஆஹூதோ ந நிவர்த்தேத த்யூதாதபி ரணாதபி) என்றும் (விஜிதம் க்ஷத்ரியஸ்ய) என்றும் கூறப்பட்டுளது; பொருளிதுவாம்:—க்ஷத்திரிய அரசனை எவனேனும், சூதாடும்பொருட்டேனும், யுத்தத்தின்பொருட்டேனும் அழைக்கின், க்ஷத்திரியன் அச்சூதினின்றும் அந்த யுத்தத்தினின்றும் நிவர்த்தனுகாமல் அப்புருஷனோடு சூதும் யுத்தமும் அவசியஞ் செய்தல் வேண்டும். யுத்தத்தா லொருங்குகூட்டிய யாதொரு தனமுண்டோ, அத்தனமே க்ஷத்திரியரின் தர்ம்ய தனமாம் என்பன முதலிய தர்ம சாஸ்திரத்தின் வசனங்களால் க்ஷத்திரிய வரசர்கட்கு யுத்தம் தர்மமென்பதும், யுத்தத்தாற் கிடைத்த தனமே தர்ம்மிய தனமென்பதும் பெறப்படும். உன்னை இப்பீஷ்மாதியர் யுத்தஞ்செய்தற்பொருட்டு அழைக்கின்றனர், ஆதலால் நீ இந்த யுத்தத்தில் அவசியம் பிரவிர்த்தித்தல் வேண்டும் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றனன்:—

**சு-ம்.** கதம் ந ஜ்ஞேயமஸ்மாபி: பாபாதஸ்மாந்நிவர்த்திதும் ।
குலக்ஷயக்ருதம் தோஷம் ப்ரபஸ்யத்பிர் ஜநார்த்தந ॥ ௩௯ ॥

**ப ம்.** கதம் 9, ந 10, ஜ்ஞேயம் 11, அஸ்மாபி: 5, பாபாத் 6, அஸ்மாத் 7, நிவர்த்திதும் 8, குலக்ஷயக்ருதம் 2, தோஷம் 3, ப்ரபஸ்யத்பி: 4, ஜநார்த்தந 1.

(அ-ம்.) ஹே ஜநார்த்தன! குலநாசஞ்செய்யுந் தோஷத்தைத் தெரிந்திருக்கும் யாங்கள் பாப காரணவடிவ இந்த யுத்தத்தினின்றும் நிவிர்த்தியாகும் பொருட்டு, விசாரஞ்செய்ய எங்ஙனந் தகுதியற்றவராவோம்; மற்றன்று அவசியம் விசாரஞ்செய்யத் தகுதியரேயாவோம்.

(வி-ம்.) ஹே ஜநார்த்தன! எமது குலத்தை நாசஞ்செய்வதா லுண்டாகுந் தோஷத்தை நன்றாகத் தெரிந்தவர்களாகிய நாங்கள் பாபத்தை யடைவிப்பதாகிய இந்த யுத்தத்தினின்றும் நிவர்த்தியாதற் பொருட்டு ஏன் விசாரஞ்செய்வது தகுதி யன்றாம், மற்றோ இந்த யுத்தத்தினின்றும் நிவர்த்தியாம்பொருட்டு அவசியம் விசாரஞ்செய்வதே எங்கட்குத் தகுதியாம், அன்றியும் (க்ரியாயுக்ராத்மநாம்) துராத்மாவாகிய புருஷர்கட்கு எக்காரியந்தான் செய்வது யோக்கியமன்று, மற்றோ துராத்ம புருஷர்கட்கு எல்லாஞ் செய்வது தகுதியாம் என்னும் நியாயத்தை அங்கீகரித்து, இத்துரியோதனாதியர் எங்ஙனம் ராஜ்யலோபத்தால் தமது குல நாசத்தையும், தமது மித்திரர் துரோகத்தையுஞ் செய்கின்றனரோ, அங்ஙனஞ் செய்வது எங்களுக்குத் தகுதியன்றாம். அன்றியும, (ஆஹூதோ ந நிவர்தேத) என்னுந் தர்ம சாஸ்திரத்தின் வசனம் முன்னர்த் தங்களாற் கூறப்பட்டது அவ் வசனம் கேவலம் லோப மூலகமாம் ஆகையினால் அவ்வசனம் (ஸ ஏவ பாபிஷ்டதமோ ய: குலக்ஷயகாரக:) (பொருள்) எவன் குலநாசத்தைச் செய்வனோ அவனே பாபிஷ்டதமனாம். என்னும் வசனத்தாற் பாதிக்கப்படுகின்றது. ஆகை யினால் அந்தலோப மூலவசனத்தை யங்கீகரித்து எனக்கு யுத்தத்தின் பிரவர்த்தி யுண்டாகாது. ஈண்டிது கருத்தாம்:—எப்புருஷனுக்கு எக்காரியத்தின்கண் இக்காரியம் எனது சிரேயசின் சாதனமாமென்று இவ்வாறு ஞானமுண்டாமோ, அப்புருஷனே அக்காரியத்திற் பிரவர்த்திப்பன். ஆகையினால், இஃதறியப்படுகின் றது:—சிரேயசின் சாதனத்தன்மை ஞானமே புருஷரின் பிரவர்த்தகமாம்; எதனோடு ஒருக்காலும் அஶ்ரேயசின் சம்பந்தமின்றோ அதற்குச் சிரேயசெனப் பெயராம் இங்ஙனம் அங்கீகரியாவிடினோ, சத்துருவின் மரணத்தின் பொருட்டுச் செய்யும் சேனயாகத்திற்குந் தர்மரூபத்தன்மை யுண்டாதல்வேண்டும், ஏனெ னின், சத்துருவின் மரண ரூபசிரேயசின் சாதனத்தன்மை அந்தச் சேனயாக த்திலுமுளது, ஆனால் அச்சத்துருவின் மரணரூப சிரேயசு, அஶ்ரேயசின் அசம் பந்தியன்றாம். மற்றோ, சேனயாகத்தாற் சத்துருவைக் கொல்லும் புருஷ னுக்கு நரக வடிவ அசிரேயசின் பிராப்தியுண்டாகின்றது. ஆகையினால், அச்சத்து ருவின் மரண வடிவசிரேயசு, நரகவடிவ அஶ்ரேயசின் சம்பந்தமுடையதேயாம் ஆகையினால், அச்சேனயாகத்தில் தர்மரூபத்தன்மை சம்பவியாது. இவ்வார்த்தை வேறு சாஸ்திரத்திலுங் கூறியுளது ஆண்டுச்சுலோகம்:—

ஸமுத்தாவிஷயக்ஷேத்ரே நாநர்த்தேநாநுபத்யதே ।
கேவலப்ரீதிஹேதுத்வாத் தத்தர்ம இதி கத்யதே ॥

(பொருள்.) எக்கர்மமானது தனது பலத்தின் பிராப்தியினாலும் அநர்த்தத் தோடு சம்பந்தமுடையதன்றாமோ, மற்றுக்கேவலம் சுகத்திற்கே காரணமாமோ அக்கர்மத்தைத் தர்மமென்னும் நாமத்தாற் கூறப்படும் என்பதாம். ஆகையி னால் சேனயாகமானது, (ஶ்யேநேநாபிசரந்யஜேத) என்பன முதலிய சாஸ்தி ரங்களால் விதானஞ் செய்யப்படுகின்றதாயினும் அச்சேனத்திற்குச் சத்துருவின் மரணரூபபலம், நரகவடிவ அஶ்ரேயசின் சம்பந்தமுடையதாம். ஆகையினால் சிரேஷ்ட புருஷர்கட்கு அச்சேன யாகத்திற் பிரவர்த்தி யுண்டாகாததேபோல் இந்த யுத்தத்தின்கண்ணும் (ஆஹூதோ ந நிவர்தேத) (பொருள்) அழைப் பின் மறுக்கொணா, என்பன முதலிய சாஸ்திரங்களால் விதானஞ் செய்யப்பட்டிருப் பினும், அந்தயுத்தத்தின் வெற்றி, ராஜ்யம் முதலியபலங்கள், (ஸ ஏவ பாபிஷ் டதமோ ய: குலக்ஷயகாரக:) என்பன வாதி வசனங்களாற் கூறப்பட்ட குல நாசத்தின் பாபவடிவ அஶ்ரேயசின் சம்பந்த முடையதேயாம். ஆதலின் அவ்

வெற்றி, ராஜ்யமுதலியபலங்கள் சிரேயசுவடிவ மன்றும். இத்தகைய வெற்றி, ராஜ்யமுதலிபவற்றினடைவின் பொருட்டு, இந்த யுத்தத்திற் பிரவிர்த்திப்பது எனக்குத் தகுதியன்றும். (39)

(அ-கை.) ஆண்டு யுத்தத்தின் பலவடிவ வெற்றி ராஜ்யமுதலியவைகள் அஶ்ரேயசுவடிவமாதலால், எனது இச்சையின் விஷயமன்றுமாதலின் அவ்வெற்றி, ராஜ்யமுதலியவற்றின் பிராப்தியின் பொருட்டு, இந்த யுத்தத்திற் பிரவிர்த்திப்பது எனக்குத் தகுதியன்றும். என்னு மர்த்தம் முற்சுலோகத்தின்கண் கூறப்பட்டது; இப்போது அவ்வர்த்தத்தை மீண்டுந் திடஞ்செய்தற்பொருட்டு, அவ்வெற்றி, ராஜ்யமுதலியவற்றில் அநர்த்தத்தின் சம்பந்தித் தன்மையைக்கூறி அஶ்ரேயசு வடிவத்தன்மையை ஐந்து சுலோகங்களால் அர்ச்சுனன் கூறுகின்றான் :—

சு-ம். 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 ।
𑌧𑌰𑍍𑌮𑍇 𑌨𑌷𑍍𑌟𑍇 𑌕𑍁𑌲𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑍋𑌽𑌭𑌿𑌭𑌵𑌤𑍍𑌯𑍁𑌤 ॥ ௪௦ ॥

ப-ம். 𑌕𑍁𑌲𑌕𑍍𑌷𑌯𑍇 1, 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 4, 𑌕𑍁𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 3, 𑌸𑌨𑌾𑌤𑌨𑌾𑌃 2, 𑌧𑌰𑍍𑌮𑍇 5, 𑌨𑌷𑍍𑌟𑍇 6, 𑌕𑍁𑌲𑌂 9, 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 7, 𑌅𑌧𑌰𑍍𑌮𑌃 10, 𑌅𑌭𑌿𑌭𑌵𑌤𑌿 11, 𑌉𑌤 8.

(அ-ம்.) ஹே பகவன்! குலத்திற்கு நாசமாங்கால் பரம்பரையாயடைந்துள்ள குலத்தின் சர்வ தர்மங்களும் நாசத்தை யடைகின்றன. தர்மத்தின் நாசமுண்டாகச் சேஷித்துள்ள குலமுழுவதையும் அதர்மந் தன்வயப்படுத்திக்கொள்ளும்.

(வி-ம்.) தமது வம்சபரம்பரையா யடைந்துள்ளதும், தமது குலாநுசாரமாயும், ஜாதியினனுசாரமாயும், செய்யத்தகுந்ததுமாகிய, அக்கினிஹோத்ராதி தர்மங்களின் பிரவிர்த்திசெய்பவராகிய விருத்த புருஷர்கள் நாசத்தையடையுங்கால், அந்தக் கர்த்தாக்களின் அபாவத்தால் அக்நிஹோத்ர முதலிய எல்லாக் குலதர்மங்களும் நாசத்தை யடைகின்றன. அவ்விருத்த புருஷரின் நாசத்தால், அவ்வெல்லாத் தர்மங்களும் நசித்தபின்னர் சிக்ஷிப்பவராகிய விருத்த புருஷரின் அபாவத்தால் சேஷித்துள்ள ஸ்திரீ பாலகர் முதலிய வடிவினதாகிய குலத்தை அநாசாரரூப அதர்மம் தன் வயப்படுத்திக்கொள்ளும். (40)

அன்றியும்.

சு-ம். 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑌰𑍍𑌣𑌸𑌙𑍍𑌕𑌰𑌃 ॥ ௪௧ ॥

சு-ம். 𑌅𑌧𑌰𑍍𑌮𑌾𑌭𑌿𑌭𑌵𑌾𑌤𑍍 2, 𑌕𑍃𑌷𑍍𑌣 1, 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 4, 𑌕𑍁𑌲𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 3, 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌷𑍁 7, 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍁 6, 𑌵𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑍇𑌯 5, 𑌜𑌾𑌯𑌤𑍇 9, 𑌵𑌰𑍍𑌣𑌸𑌙𑍍𑌕𑌰𑌃 8.

(அ-ம்.) ஹே கிருஷ்ண! அவ்வதர்மத்தின் வசத்தன்மையால் எல்லாக்குலஸ்திரீகளும் வியபிசாரிகளாகின்றனர். ஹே வார்ஷ்ணேய! அந்த வியபிசாரிகளாய ஸ்திரீகளிடத்தில் ஜாதிக்கலப்பான புத்திரர்கள் உற்பன்னமாகின்றனர்.

(வி-ம்.) ஹே கிருஷ்ண! அவ்வதர்மம் அதிகரித்த பின்னர் "எமது பதி தர்மத்தை யுல்லங்கனஞ் செய்து குலநாசஞ்செய்யின், எமக்குப்பதிவிரதா தர்மத்தை யுல்லங்கனஞ்செய்து, வியபிசாரஞ் செய்வதில் எத்தோஷமுளது." என்றிவ்வாறுய குதர்க்கத்தோடுகூடிய குலஸ்திரீகள் வியபிசார கர்மத்திற் பிரவிர்த்திப்பவராவர். அல்லது தர்மசாஸ்திரத்தில், பதியின் தர்மா தர்மங்களின் பலம் ஸ்திரீக்குங் கூறியிருக்கின்றது. ஆகையினுல், குலத்தை நாசஞ்செய்து பாபத்தை யடைந்து* பதிதனுயபதியின் சம்பந்தத்தால், அந்த ஸ்திரீச்கும் வியபிசார கர்மத்திற் பிரவர்த்தியுண்டாம். அந்த வியபிசாரிகளாய ஸ்திரீகளிடத்தே உயர்ந்த ஜாதியையுடைய புருஷரின் சம்பந்தத்தாலேனும், அல்லது நீச ஜாதியையுடைய புருஷரின் சம்பந்தத்தாலேனும் ஜாதிக்கலப்பாய புத்திரர்கள் உற்பன்னமாவர். (41)

அன்றியும்.

சு-ம். ஸங்கரோ நரகாயைவ குலக்நாநாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹ்யேஷாம் லுப்தபிண்டோதகக்ரியா: ॥ சஉ ॥

ப-ம். ஸங்கர: 3, நரகாய 5, ஏவ 6, குலக்நாநாம் 4, குலஸ்ய 2, ச 1, பதந்தி 10, பிதர: 8, ஹி 7, ஏஷாம் லுப்தபிண்டோதகக்ரியா: 9,

(அ-ம்.) ஜாதிக்கலப்பானது குலத்தை நாசஞ் செய்பவனுகிய புருஷனுக்கு நரகத்தின்பொருட்டேயாம். அங்ஙனமே இக்குலநாசஞ்செய்யும் புருஷனது பிதுர்க்களும் பிண்டஜலக்கிரியை யின்றியவராய் நரகத்தில் வீழ்கின்றனர்.

(வி-ம்.) ஹே பகவன்! குலத்தின் கண்ணுண்டாஞ் சாதிக்கலப்பானது குலத்தை நாசஞ்செய்பவனுகிய புருஷனுக்கு நரகத்தினடைவின் பொருட்டே யுண்டாகின்றது. அல்லது, அச்சாதிக்கலப்பானது கேவலம் குலத்தை நாசஞ் செய்யும் புருஷனது நரகத்தின் பொருட்டு மாத்திரமன்றும். மற்றே, அவ்வருண சங்கரத்தால் அவர்களது பிதுர்க்கட்கும் நரகத்தின் பிராப்தியுண்டா மென்னும் இப்பொருளைக் கூறுகின்றுன் :—(பதந்தி) தமது பிதுர்க்களின் பொருட்டுப் பிண்டக்கிரியையுஞ் சலக்கிரியையுஞ் செய்பவனுகிய புத்திரன் பின்னரிருப்பதின்று மாகையினுல், பிண்டோதகக் கிரியையின்றியவராய குலநாசஞ் செய்பவரின் பிதுர்க்கள் நரகத்தை யடையும்பொருட்டுச் சுவர்க்கத்தினின்றுங் கீழே வீழ்வர். ஈண்டு, இதிஹாச புராணுதிகளில் இவ்வார்த்தை கூறப்பட்டுளது :—ஏககாலத்தில் பரசுராமர் சர்வ க்ஷத்திரியர்களையுங் கொன்றனர்; அதன்பின்னர் அந்த க்ஷத்திரிய ஸ்திரீகள் பிராஹ்மணரினின்றும் புத்திரர்களை யுற்பத்திசெய்தனர். ஒருகால் அன்னிய புருஷரினின்றும் உற்பன்னராகிய புத்திரர்கள் கொடுக்கும் பிண்டோதகம் பிதுர்க்களை யடையாதாயின், அந்த க்ஷத்திரிய அரசர்களின் ஸ்திரீகள் பிராஹ்மணர்களினின்றும் புத்திரரை எதன்பொருட்டு உற்பத்திசெய்தனர்; ஆதலால் இஃதறியப்படுகின்றது :—எங்ஙனம் ஸ்திரீ வடிவ க்ஷேத்திரத்தில் வீரியரூப பீஜத்தை யடையச்செய்யும் பீஜபதியாகிய புருஷனை அப்புத்திரன் கொடுக்கும் பிண்டாதிகள் அடைகின்றனவோ, அங்ஙனமே அந்த ஸ்திரீ வடிவக்ஷேத்திரத்தின் பதியாகிய புருஷனையும் அப்பிண்டாதிகள் அடைகின்றன; என்றுலும், சுருதியில் அப்புத்திரன் கொடுக்கும் பிண்டாதிகள் பீஜபதி புருஷனையே அடையுமெனக் கூறப்பட்டுளது; க்ஷேத்திரபதி புருஷனை அப்புத்திரர்கள் ஈயும் பிண்டாதி

* . பதிதன் = தாழ்ந்தோன்.

கள் அடையுமெனக் கூறப்படவில்லை. ஆண்டுச்சுருதி :—(ந ஶேஷோ அக்நே அந்யஜாதமஸ்தி) (பொருள்) ஹே அக்நியே! எனது ஸ்திரீயினிடத்தே அந்நிய புருஷரினின்றும் உற்பன்னமாகும் புத்திரன் புத்திரனுகான், அல்லது இவ்வார்த்தை யாஸ்க முனிவராலுங் கூறப்பட்டுளது:—(அந்யோதர்யோ மநஸாபி ந மந்தவ்யோ மமாயம் புத்ர:) பொருளிதுவாம், தனது ஸ்திரீயினிடத்தே அந்நிய புருஷரினின்று முற்பன்னனுய புத்திரனை க்ஷேத்திர பதியாகிய புருஷன் இவனெனது புத்திரனென மனதினுலும் நினையற்க. அல்லது சுருதியில் தனது வர்த்தமான பிதாவின் சம்சயமுங் கூறப்பட்டுளது, ஆண்டுச்சுருதி :—(யே யஜாமஹே இதி யோ ஹ்யஸ்மி ஸ ஸந் யஜே இதி) பொருளிதுவாம். யானியாவனு யிருக்கின்றேனோ, அந்த யான் யஜிக்கின்றேன். யான் பிராஹ்மணனோ அல்லது அப்பிராஹ்மணனோ என்பதைத் தெரிந்திலேன்; ஏனெனின், லோகப்பிரசித்தமாயிருக்கு மிந்தப் பிதாவினின்றும் யான் உற்பன்னமானேனோ அல்லது வேறு பிதாவினின்று முற்பன்னமானேனோ என்னும் சம்சயத்தால் வியாபித்திருக்கின்றே னுதலால் இவரே எனது பிதா என்னும் நிச்சயம் சம்பவியாது. ஆகையினுல் யானியாவனுயிருக்கின்றேனோ, அந்த யான் யாகஞ்செய்கின்றேன் என்னுமிது முதலிய சுருதிவசனங்களாற் பீஜபதியாய பிதாவிற்கே பிண்டாதிகளின் பிராப்தியுண்டாம். க்ஷேத்திரபதியாய பிதாவிற்குப் பிண்டாதிகளின் பிராப்தியுண்டாகாது எனப்பெற்றது. அன்றியும் ஸ்திரீ வடிவக்ஷேத்திரத்தில் அன்னிய புருஷரினின்றும் புத்திர உற்பத்தியைக் கூறுவதாகிய ஸ்மிருதி முதலிய சாஸ்திரவசனத்திற்கு, இவ்வுலகத்திலுள்ள வம்சத்தை நிலைநிறுத்துவதிற் தாற்பரியமாம். எவனேனும் ஒரு க்ஷேத்திரபதியாகிய புருஷனை அப்புத்திரன் கொடுக்கும் பிண்டோதகங்கள் அடையுமென்பதில், அவ்வசனத்திற்குத் தாற்பரியமின்றும். ஆகையினுல், ஜாதிக்கலப்பாய புத்திரர்கள் உற்பன்னமாயின், அந்தக்குலநாசஞ்செய்த புருஷனது பிதுர்க்கள் பிண்டாதிக்கிரியை யின்றியவராய் அவசியம் நரகத்தில் வீழ்வர் என்பது முதலிய எல்லா அர்த்தங்களையும், (பதந்தி பிதரோ ஹ்யேஷாம்) என்னும் வசனத்தின்கண்ணுள்ள ஹி என்னும் சப்தத்தால், அர்ச்சுனன் சூசிப்பித்தனன். (42)

### அன்றியும்.

சு-ம். தோஷைரேதை: குலக்நாநாம் வர்ணஸங்கரகாரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதிதர்மா: குலதர்மாஶ்ச ஶாஶ்வதா: ॥ ௪௩ ॥

ப-ம். தோஷை: 4, ஏதை: 3, குலக்நாநாம் 1, வர்ணஸங்கரகாரகை: 2, உத்ஸாத்யந்தே 9, ஜாதிதர்மா: 6, குலதர்மா: 8, ச 7, ஶாஶ்வதா: 5.

(அ-ம்.) ஹே பகவன்! குலநாசஞ் செய்பவர்களுடைய ஜாதிக் கலப்பைச் செய்யுமிந்தத் தோஷத்தால் பரம்பரையா யடைந்துள்ள ஜாதிதர்மமுங் குலதர்மமும் நாசத்தையடைகின்றன.

(வி-ம்.) ஹே பகவன்! எப்புருஷர் எனக்கு இக்காரியஞ் செய்வது தகுதியாம், இக்காரியஞ் செய்வது தகுதியன்றும் என்றிவ்வாறுள்ள விசாரத்தைவிட்டுக் காமக்குரோத லோபாதிகளின் வயத்தராய்க் குலதர்மத்தைச் செய்பவராகிய புருஷரைக் கொல்கின்றுரோ அப்புருஷரைக் குலக்னர் என்பர், அந்தக் குலக்ன புருஷருடைய முற்கூறிய ஜாதிக்கலப்பை யுண்டுபண்ணுவதாகிய தோஷங்களால்

சுருதி ஸ்மிருதி மூலகமாயும் பரம்பரையா யடைந்ததாயுமுள்ள க்ஷத்திரியத்துவாதி ஜாதிப்பிரயுக்த தர்மங்களும், குலத்தின் அசாதாரண தர்மங்களுமாய எல்லாத்தர்மங்களும் நாசத்தையடைகின்றன. (43)

அன்றியும்.

சு-ம். 𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌨𑌰𑌕𑍇 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌵𑌾𑌸𑍋 𑌭𑌵𑌤𑍀𑌤𑍍𑌯𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 ॥

ப-ம். 𑌉𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌕𑌲𑌧𑌰𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 2 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 3 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 1 𑌨𑌰𑌕𑍇 4 𑌨𑌿𑌯𑌤𑌂 5 𑌵𑌾𑌸𑌃 6 𑌭𑌵𑌤𑌿 7 𑌇𑌤𑌿 8 𑌅𑌨𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 9.

(அ-ம்.) ஹே ஜநார்த்தன! குலம் ஜாதி முதலிய தர்மங்களை நஷ்டமாக்கிய ஜனங்கட்கு, நரகத்தின்கண் ணவதியின்றி வாஸமுளதாம். என ஆசாரியர்கள் வாயிலாய் நான் கேட்டிருக்கின்றேன்.

(வி-ம்.) ஹே ஜநார்த்தன! எப்புருஷன் லோபவசத்தால் தனது குலத்தைக் கொன்று தனது குலதர்மங்களையும், தனது ஜாதி தர்மங்களையும் நஷ்டஞ் செய்கின்றனனோ, அப்புருஷனுக்கு யுகம், மந்வந்தரம் முதலிய அவதியின்றி இரௌரவாதி நரகத்தின்கண் நிவாஸமுளதாம். இவ்வார்த்தையை நான் கேவலம் எனது புத்தியின் கற்பனையாற் கூறியதன்றாம்; மற்றோ, பூர்வாசாரியர்களின் வாயிலாகவும், மஹா இருஷிகளின் வாயிலாகவும் இவ்வார்த்தையை நான் கேட்டிருக்கின்றேன்.

சு-ம். 𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌕𑍁𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌃 𑌪𑌾𑌪𑍇𑌷𑍁 𑌨𑌿𑌰𑌤𑌾 𑌨𑌰𑌾𑌃 ।
𑌅𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌤𑌾𑌪𑌿𑌨𑌃 𑌪𑌾𑌪𑌾𑌨𑍍𑌨𑌿𑌰𑌯𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌿𑌦𑌾𑌰𑍁𑌣𑌾𑌨𑍍 ॥

(பொ-ள்.) எப்புருஷன் பாவத்திற் பிரீதி யுடையவனும், அந்தப் பாவத்தின் நிவிருத்தியின்பொருட்டுப் பிராயச்சித்தத்தைச் செய்யாதவனும், பச்சாத்தாபத்தை யடையாதவனும் இருக்கின்றானோ, அப்புருஷன் அந்தப் பாவத்தின் வசத்தால் * தாருண நரகத்தை யடைகின்றனன். என்னும் இது முதலிய அநேக வசனங்கள் பாவிகளுக்கு நரகத்தின் பிராப்தியைக் கூறியிருக்கின்றன; ஈண்டு (𑌨𑌰𑌕𑍇𑌽𑌨𑌿𑌯𑌤𑌂) என்னும் வசனத்தின் கண்ணுள்ள ககரத்தின் பின்னுள்ள அகாரத்தை லோபமென அங்கீகரித்து, அநியதம் எனப்பதச்சேதஞ் செய்யப்பட்டது; அவ்வநியத பதத்தின் அர்த்தம் முற்கூறப்பட்டது. அவ்வகாரலோபத்தை ஆண்டங்கீகரியாவிடினோ, நியதமெனப் பதச்சேதஞ் செய்து, அந்த நியதபதத்திற்கு அவசியமாய் எனப்பொருள்கொள்க. என்னை? இத்தகைய ஜனங்கட்கு நரகத்தில் அவசியம் நிவாஸமுளதாமென்க. (44)

(அ-கை.) ஆண்டுத் தனது பந்துக்களை ஹிம்சிப்பதிற் † பரியவசானமாய யுத்தஞ்செய்யும் நிச்சயமும், சர்வப்பிரகாரத்தானும் அத்தியந்தம் பாபிஷ்டமாமாயின், இந்த யுத்த வடிவ கர்மம் அத்தியந்தம் பாபிஷ்டமாமென்பதிற்கூற என்ன இருக்கின்றது; என்னுமிவ்வர்த்தத்தைக் கூறும்பொருட்டு, அந்த யுத்தத்தின் நிச்சயஞ் செய்வதால் தன்னைத் திக்காரஞ்செய்து அவ்வர்ச்சுனன் கூறுகின்றான்:—

சு-ம். 𑌅𑌹𑍋 𑌬𑌤 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾 𑌵𑌯𑌮𑍍 ।
𑌯𑌦𑍍𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌮𑍁𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 ॥

ப-ம். 𑌅𑌹𑍋 1 𑌬𑌤 2 𑌮𑌹𑌤𑍍𑌪𑌾𑌪𑌂 4 𑌕𑌰𑍍𑌤𑍁𑌂 5 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌾𑌃 6 𑌵𑌯𑌂 3 𑌯𑌤𑍍 7 𑌰𑌾𑌜𑍍𑌯𑌸𑍁𑌖𑌲𑍋𑌭𑍇𑌨 8 𑌹𑌨𑍍𑌤𑍁𑌂 10 𑌸𑍍𑌵𑌜𑌨𑌂 9 𑌉𑌦𑍍𑌯𑌤𑌾𑌃 11.

---

* தாருணம்=கோரம். †பரியவசானம்=முடிபு.

(அ-ம்.) மஹா ஆச்சர்யம்! மஹா துக்கம்!— நான் மஹா பாவத்தைச் செய்ய நிச்சயமுடையனுய் ராஜ்ய சுகலோபத்தால் எனது பந்துக்களைக் கொல்லத் துணிந்துவிட்டேன் அதுவே மஹா பாதகமாம்.

(வி-ம்.) ஹே பகவன்! இது எனக்கு மஹா ஆச்சரியத்தையும் துக்கத் தையு முண்டுபண்ணுகின்றது. நான் விசாரவானுயிருந்தும் இம்மஹா பாவத் தைச் செய்யும்பொருட்டுப் பிரயத்தினப் பட்டேனன்ரே? எதைச்செய்யும் பொரு ட்டு நீ பிரயத்தினப்பட்டனையோ, அது எத்தகைய பாவமாம்? என்னும் பக வானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்ருன்:—(யதிதி) ராஜ்யத்தின் பிராப் தியால் அடையப்படும் க்ஷணபங்குரமாய விஷய சுகத்திலுள்ள லம்படத்தன்மை வடிவ லோபத்தால் நான் எனது சகோதரபுத்திராதி பந்துக்களைக் கூர்மையான சஸ்திரங்களால் கொல்ல முயன்றனனன்ரே, அஃதே மஹாபாவமாம்; இதனினும் மேலாய் வேருெரு பாவமுமின்ரும். கருத்திதுவாம்:—உனக்கு இத்தகைய புத் தியிருப்பின் யுத்தத்தினபினிவேசத்தால் நீ ஈண்டெதன் பொருட்டு வந்தாய் என் றிவ்வாருகிய வசனத்தைத் தாங்கள் கூறலாகாது; ஏனெனின், விசாரமின்றியே காரியத்தை நான் செய்பவனுயிருக்கின்றேன், அத்தகைய என்னுல் இப்பெரிய களம்புகைத்தன்மை செய்யப்பட்டது. (45)

(அ-கை.) ஹே அர்ச்சுன! உனக்கு இந்த யுத்தத்தினின்றும் வைராக்ய முண் டாயினும், பீமசேனுதியருக்கு இந்த யுத்தத்தில் மஹாதீவிர இச்சையுளது; ஆத லினுல் பந்துக்களின் நாசமோ அவசியமுண்டாம்; பின்னர் உனக்கு எக்காரியஞ் செய்வது தகுதியாம்? என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்ருன்:-

சு-ம். யதிமாமப்ரதீகாரமஶஸ்த்ரம் ஶஸ்த்ரபாணய: ।
தார்த்தராஷ்ட்ரா ரணே ஹந்யுஸ்தந்மே க்ஷேமதரம் பவேத் ॥

ப-ம். யதி 1 மாம் 4 அப்ரதீகாரம் 2 அஶஸ்த்ரம் 3 ஶஸ்த்ரபாணய: 5 தார்த்தராஷ்ட்ரா: 6 ரணே 7 ஹந்யு: 8 தத் 9 மே 10 க்ஷேமதரம் 11 பவேத் 12.

(அ-ம்.) எப்போது எதிர்க்காமலும் சஸ்திரங்களின்றியும் நிற்கப்பட்ட என்னை இந்தச் சஸ்திரமுடைய திருதராஷ்டிர புத்திராதிகள் இப்போர்க்களத்திற் கொல்வார்களேயாயின், அது எனக்கு அத்தியந்தம் க்ஷேமரூபமாம்.

(வி-ம்.) ஹே பகவன்! தனது பிராண ரக்ஷையின் பொருட்டுச் செய்யும் பிரதிக்கிரியைக்குப் பிரதீகாரமெனப் பெயராம்; தனது பிராணரக்ஷையின் பொருட்டு அடிப்பவனுகிய புருஷனை யடித்தல் பிரதீகாரமாம்; அந்தப்பிரதீகார மின்றியிருத்தற்கு அப்பிரதீகார மெனப்பெயராம். அல்லது இப்பந்துக்களை யான் கொல்வேன் என்றிவ்வாறு நிச்சயமாத்திரத்தானே யுண்டாவதாகிய யாதொருபாவமுண்டோ, அப்பாவத்தை நிவிருத்திக்குஞ் சரீரநாசமின்றிய அந் நியப் பிராயச்சித்தத்திற்குப் பிரதீகார மெனப்பெயராம். அந்தப் பிரதீகாரமின்றி யிருத்தற்கு அப்பிரதீகார மெனப்பெயராம். அத்தகைய அப்பிரதீகாரனுய் நானிருக்கின்றேன். அக்காரணத்தாலே நான் சஸ்திர மின்றியவனு யிருக்கின் றேன். அத்தகைய பிரதீகாரமும் சஸ்திரமுமின்றிய என்னை ஒருகால் கரத்தி லாயுதத்தையுடைய இத்திருதராஷ்டிரரின் துரியோதனுதி புத்திரர்கள் யுத்த பூமிக்கண் கொல்வார்களேயாயின், அது எனக்கு அத்தியந்தம் ஹிதவடிவமாம். ஏனெனின், (அஹிம்ஸா பரமோதர்ம:) என்றறற்ருெடக்கத்து வசனங்களால் கூறப்பட்ட யாதொரு சர்வபூதப்பிராணிகளின் அஹிம்சைவடிவ தர்மமுண்டோ,

அத்தர்மமானது தனது பிராணனிலுமேலானதாம். ஏனெனின், இப்பிராண தாரணத்தால் அநேகவித பாவங்களுற்பத்தி யாகின்றன. ஆனால் அவ்வஹிம்சை வடிவதர்மத்தால் யாதொரு பாவமுமுண்டாவதின்றும். மாறாய் மகத்தாகிய புண்ணியமே யுண்டாம். ஆகையினால், இச்சீவனத்தை யபேக்ஷித்து எனது மரணமே அத்தியந்தம் ஹிதமாம். அன்றியும் எனது பந்துக்களின் மரணத்தைச் சங்கற்பித்தலால் உண்டாய பாவத்தை நிவிருத்திக்கும் மற்றொருபிராயச்சித்த மின்றும். மற்றோ, இவ்வெனது மரணமே அப்பாவ நிவிருத்தியின் பிராயச்சித்தமாம். இக்காரணத்தாலும் எனது மரணமே எனக்கு அத்தியந்தம் ஹிதமாம். ஈண்டுச் சில புஸ்தகங்களில் (தந்மே ப்ரியதரம் பவேத்) என்றிவ்வாறு பாடமுளது. அப்பாடத்திற்கும் முற்கூறிய பொருளேயாமென்றறிக. அல்லது, (தந்மே க்ஷேமதரம் பவேத்) என்னும் வசனத்திற்கு இவ்வாறு பொருள்கொள்க :— அம்மரணம் எனது க்ஷேமத்தின் பொருட்டேயாம். ஏனெனின், க்ஷேமத்தின் ஸ்வரூபம் சாஸ்திரத்தில் இவ்வாறு கூறப்பட்டுளது :—

அப்ராப்த ப்ராபணம் யோக: க்ஷேம: ஸம்ப்ராப்த ரக்ஷணம் ।

(பொருள்.) அப்பிராப்த வஸ்துவின் பிராப்திக்கு யோகமெனப் பெயராம்; முன்னுள்ள வஸ்துவின் ரக்ஷணைக்கு க்ஷேமமெனப் பெயராம். க்ஷேமத்தினு மதிக க்ஷேமத்திற்கு க்ஷேமதரமெனப் பெயராம். ஈண்டுப் பிரசங்கத்திலுள்ளது க்ஷேமதரமாம்; தனது குலநாசத்தாலுண்டாந் தோஷமும், அத்தோஷத்தாலுண்டாம் நரகப் பிராப்தியும், அங்ஙனமே இவ்வுலகத்திலடையப்படும் அபகீர்த்தியும் ஆகிய இவ்வெல்லா அநர்த்தங்களின் நிவிருத்திவாயிலாய் யாதொரு முன்செய்துள்ள புண்ணிய கர்மத்தினது நாசத்தின் அபாவமுளதோ, அதுவே க்ஷேமதரமாம் ; அந்த க்ஷேமதரம் எனக்கு இம்மரணத்தானே பிராப்தமாம். ஆகையினால், இப்பந்துக்களோடு யுத்தஞ் செய்வதினின்றும் எனது மரணமே சிரேஷ்டமாம்.

(அ-கை.) அதன் பின்னர் என்ன விருத்தாந்தமுண்டாயதெனத் திருதராஷ்டிரர் ஆசங்கிப்பச் சஞ்சயர் கூறுகின்றார் :—

ஸஞ்ஜய உவாச:

சு-ம். ஏவமுக்த்வார்ஜுந: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிசத் ।
விஸ்ருஜ்ய ஸசரம் சாபம் சோகஸம்விக்நமாநஸ: ॥

ப-ம். ஏவம் 4 உக்த்வா 5 அர்ஜுந: 2 ஸங்க்யே 3 ரதோபஸ்தே 9 உபாவிசத் 10 விஸ்ருஜ்ய 8 ஸசரம் 6 சாபம் 7 சோகஸம்விக்நமாநஸ: 1.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! சோகத்தாற் பீடிக்கப்பட்ட மனத்தையுடைய அர்ச்சுனன் போர்க்களத்தில் இவ்வாறாகிய வசனங்களைக் கூறிச் சரத்தோடு வில்லைப் பரித்தியாகஞ் செய்து தேர்த்தட்டில் இருந்தனன்.

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! தனது பந்துக்களின் விநாசரூப நிமித்தத்தாலுண்டாய சோகத்தாற் பீடிக்கப்பட்ட மனத்தையுடைய அர்ச்சுனன் அப்போர்க்களத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடம் முற்கூறிய வசனங்களைக்கூறி அம்போடு வில்லை யெறிந்து அத்தேரின்மேல் வீற்றிருந்தனன். (47)

ஸ்ரீ பரமஹம்ஸ பரிவிராஜகாசார்ய ஸ்ரீமத் உத்தவானந்தகிரி சுவாமிகளது பூஜ்யசிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரி சுவாமிகளாலியற்றி யருளிய பிராகிருத கூடார்த்த தீபிகையெனப் பெயரிய வியாக்கியானத்தின் முதலத்தியாயமுற்றிற்று.

சுபம்.

# இரண்டாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம꞉ ஸ்ரீ குருப்யோநம꞉ ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம꞉

ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம꞉

(அ—கை.) ஆண்டு, சர்வப் பிராணிகளின் அஹிம்சை பிக்ஷான்ன போஜனம் என்னு மிரண்டுமே எனது பரமதர்மமாம் என்றிவ்வாறாகிய புத்தியோடு அர்ச்சுனன் யுத்தத்தினின்றும் விமுகத்தன்மை யடைந்ததைக்கேட்டுத் தமது துரியோதனாதி புத்திரர்களி னிராஜ்யத்தின் சலனமின்மையை நிச்சயித்து ஸ்வஸ்த சித்தத்தை யடைந்த திருதராஷ்டிராருக்குச் சந்தோஷத்தா லுண்டாய "அதன் பின்னர் என்ன விருத்தாந்தமுண்டாயது" என்னும் ஆகாங்க்ஷையை நிவிருத்தி செய்யு மிச்சையையுடைய சஞ்சயர் அத்திருதராஷ்டிரரிடம் இவ்வாறாகிய வசனங்களைக் கூறுவாராயினர்:— இவ்வார்த்தை வைசம்பாயனர் ஜனமேஜயருக்குக் கூறியதாம்.

சு-ம். தம்ததா க்ருபயாவிஷ்டமஶ்ருபூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தமிதம் வாக்யமுவாச மதுஸூதந꞉ ॥

ப-ம். தம் 6 ததா 1 க்ருபயா 2 ஆவிஷ்டம் 3 அஶ்ருபூர்ணாகுலேக்ஷணம் விஷீதந்தம் 5 இதம் 8 வாக்யம் 9 உவாச 10 மதுஸூதந꞉

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! முற்கூறிய இரக்கத்தால் வியாபிக்கப்பட்டவனும், நீர்ததும்பி ஆகுலப்பட்ட நேத்திரத்தையுடையவனும், துக்கத்தை யடைந்திருப்பவனுமாகிய அர்ச்சுனனிடம் ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஈண்டு கூறப்படும் வசனங்களைக் கூறுவாராயினர்.

(வி-ம்.) இப்பீஷ்மர் துரியோதனன் முதலியோர் எனது சம்பந்திகளாமென்னும் மோகத்தைக் காரணமாயுற்ற சிநேக விசேஷத்தின் பெயர் கிருபையாம். அந்தக் கிருபையால் வியாபிக்கப்பட்டவன் அர்ச்சுனனும். ஈண்டு, க்ருபயாவிஷ்டம், என்னுமிவ்வளவு கூறியதால் அர்ச்சுனனிடத்து வியாப்தி ரூபக்கிரியையின் கர்மத்தன்மை கூறப்பட்டது. அந்தச் சிநேகரூபக் கிருபையில் அந்த வியாப்தி ரூபக்கிரியையின் கர்த்தாத்தன்மை கூறப்பட்டது. அது கூறியதால் அக்கிருபையின்கண் ஆகந்துகத்தன்மை நிவிருத்திசெய்யப்பட்டது. இத்தகைய ஸ்வபாவ சித்த கிருபையால் அர்ச்சுனன் வியாபிக்கப்பட்டவனுவன். இக்காரணத்தாலேயே அர்ச்சுனன் விஷாதத்தையடைந்தனன். ஆண்டுச் சிநேகத்தின் விஷயரூபமாய தனது பந்துக்களினது நாசத்தின் எண்ணத்தைக் காரணமாகவுடைய சோகவடிவ சித்தத்தின் வியாகுல பாவத்திற்கு விஷாதமெனப் பெயராம். ஈண்டு விஷீதந்தம் என்னுஞ் சத்தத்தால் அந்த விஷாதத்தின்கண் பிராப்திவடிவக் கிரியையின் கர்மத்தன்மை கூறப்பட்டது. அர்ச்சுனனிடத்து அந்தப்பிராப்தி வடிவக்கிரியையின் கர்த்தாத்தன்மை கூறப்பட்டது. அது கூறியதால் அவ்விஷாதத்தில் ஆகந்துகத்தன்மை சூசிக்கப்பட்டது. ஒருகாலுற்பன்னமாய பதார்த்தத்தை ஆகந்துக

மென்பர். இத்தகைய ஆகந்துக விஷாதத்தின் வசத்தால் *அசுரு ரூப ஜலம் நிறையப்பெற்று அதனால் வஸ்துக்களைப் பார்க்க வல்லமையின்றி ஆகுலத்தன்மையோடுற்ற கண்களையுடைய அர்ச்சுனனிடம் அம்மதுசூதனபகவான் அநேகவித யுக்திகளோடு மேற்கூறப்படும் வசனங்களைக் கூறுவாராயினர். அவ்வர்ச்சுனனை ஸ்ரீ பகவான் உபேக்ஷைசெய்யவில்லை. ஈண்டுச் சஞ்சயரால் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு மதுசூதனன் என்னும் பெயர் கூறப்பட்டதன்று. அதனால் சஞ்சயர் திருதராஷ்டிரரிடம் இப்பொருளைக் குறிப்பித்தனர்:—மதுவெனப் பெயரிய அசுரனை நாசஞ் செய்தவரை மதுசூதனனென்பர். அத்தகைய துஷ்டரைச் சம்ஹரிப்பவராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தனது ஸ்வபாவத்தி னநுசாரமாக அவ்வர்ச்சுனனிடமும், உனது துரியோதனாதி துஷ்ட புத்திரரைக் கொல்லும் பொருட்டே யுபதேசஞ்செய்வர் என்பதாம். அல்லது தனது மது சூதனனென்னும் பெயரை பயனுடையதாக்கும் பொருட்டு, அக்கிருஷ்ண பகவான் அர்ச்சுனனை நிமித்த மாத்திரமாகக்கொண்டு, தாமே உனது துஷ்டபுத்திரரைக் கொல்வர். ஆகையினால், நீ நினது புத்திரர்களின் ஜயத்தைப் பற்றிய ஆசையை யொருகாலுஞ் செய்யவேண்டாம். (1)

(அ-கை.) இப்போது அக்கிருஷ்ண பகவானது வசனத்தை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்.

ஸ்ரீப⁴க³வாநுவாச.

சு-ம். குதஸ்த்வா கஶ்மலமித³ம் விஷமே ஸமுபஸ்தி²தம் ।
அநார்யஜுஷ்டமஸ்வர்க்³யமகீர்த்திகரமர்ஜுந ॥

ப-ம். குத: 6 த்வா 3 கஶ்மலம் 5 இத³ம் 4 விஷமே 2 ஸமுபஸ்தி²தம் 7 அநார்ய ஜுஷ்டம் 8 அஸ்வர்க்³யம் 9 அகீர்த்திகரம் 10 அர்ஜுந 1.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்தப் பயத்தோடு கூடிய ஸ்தானத்தில், உன்னை இந்தக்கஶ்மலமா (மனநொய்ம்மையா)னது எக்காரணத்தால் அடைந்தது, அஃதேதத்தகைய கஶ்மலமெனின், சிரேஷ்ட புருஷர்கள் கைக்கொள்ளாததூஉம், சுவர்க்கத்தையடைய வொட்டாமற் றடுப்பதூஉம், அகீர்த்தியை யுண்டுபண்ணக் கூடியதூஉமாமென்க.

(வி-ம்.) ஸ்ரீ ப⁴க³வாநுவாச என்னும் வசனத்தின்கண் உள்ள ப⁴க³வாந் என்னும் பதத்திற்குச் சாஸ்திரத்தில் இவ்வாறு பொருள் கூறப்பட்டிருக்கின்றது.

சு-ம். ஐஶ்வர்யஸ்ய ஸமக்³ரஸ்ய த⁴ர்மஸ்ய யஶஸ: ஶ்ரிய: ।
வைராக்³யஸ்யாத² மோக்ஷஸ்ய ஷண்ணாம் ப⁴க³ இதீங்க³நா ॥

(பொ-ள்.) (1) சம்பூர்ண ஐஶ்வரியம் (2) சம்பூர்ண தர்மம் (3) சம்பூர்ண கீர்த்தி (4) சம்பூர்ண ஸ்ரீ (5) சம்பூர்ண வைராக்கியம் (6) சம்பூர்ண ஞானம் என்னும் இவ்வாறும் பகமெனப்படும். இத்தகைய ஐஶ்வரியாதி ஆறு பகமும் பிரதிபந்த மின்றி நித்தியமாகவே எவரிடம் இருக்கின்றதோ, அவருக்குப் பகவானெனப்பெயராம். அல்லது பகவானென்னுஞ் சத்தத்திற்கு இதுபொருளாம்:—

உத்பத்திஞ்ச விநாஶஞ்ச பூ⁴தாநாமாக³திம் க³திம் ।
வேத்தி வித்³யாமவித்³யாஞ்ச ஸ வாச்யோ ப⁴க³வாநிதி ॥

---

* அசுரு = கண்ணினீர்.

(போ-ள்.) எந்தச் சர்வஞ்ஞ புருஷர் சர்வ பூதங்களின் உற்பத்தியையும், அவ்வுற்பத்தியின் காரணத்தையும் தெரிவரோ, அங்ஙனமே அவ்வெல்லாப் பூதங்களின் நாசத்தையும், நாசகாரணத்தையுந் தெரிவரோ, அங்ஙனமே சர்வ பூதங்களின் சம்பத்துவடிவ ஆகதியையும் ஆபத்துவடிவ கதியையுந் தெரிவரோ, அங்ஙனமே வித்தையையும் அவித்தையையுந் தெரிவரோ, அந்தச்சர்வஞ்ஞ புருஷர் பகவானென்னு நாமத்தாற் கூறப்பட யோக்யராவர். அத்தகைய ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ச்சுனனிடம் இவ்வாருகிய வசனங்களைக் கூறுவாராயினர் :—ஹே அர்ச்சுன! சிநேகவடிவ கிருபை, முற்கூறிய விஷாதம், கண்ணினீரொழுகுதல் என்னு மூன்றையுங் காரணமாக வுடையதும், அங்ஙனமே சிட்ட புருஷர்களால் நிந்திதமாதலால் அத்தியந்த மலினவ்வடிவத்தை யுடையதும் ஆகிய இந்த யுத்தவடிவ ஸ்வதர்மத்தினின்றும் நிவிருத்திவடிவ கஸ்மலமானது, இந்தயுத்த பூமிக்கண் சர்வ க்ஷத்திரியர்களினுஞ் சிறந்தவனுகிய உன்னை எவ்வேதுவால் அடைவுற்றது? கருத்திதுவாம் :—அந்த யுத்தவடிவ ஸ்வதர்மத்தினின்றும் நிவிருத்திரூப கஸ்மலமானது உன்னை மோக்ஷத்தின் இச்சைவடிவ ஹேதுவாலடைவுற்றதா? அல்லது சுவர்க்கத்தின் இச்சைவடிவ ஹேதுவாலடைவுற்றதா? அல்லது கீர்த்தியின் இச்சைவடிவ ஹேதுவாலடைவுற்றதா? இப்போதம்மூன்று ஹேதுக்களையு முறையே. ஸுநாயஜுஷ்டம் அஸ்வர்க்யம் அகீர்த்திகரம் என்னு மூன்று விசேஷணங்களால் ஸ்ரீ பகவான் நிஷேதஞ் செய்கின்றனர், ஸுநாயஜுஷ்டம் என்றற்றொடக்கத்துப் பாதிச் சுலோகத்தால், ஹே அர்ச்சுன! தனது வர்ணுச்சிரம தர்மங்களால் அந்தக்கரண சுத்தியின் வாயிலாய் மோக்ஷத்தை இச்சிப்பவராகிய அசுத்த அந்தக்கரணமுடைய முமுக்ஷு ஜனங்களாலோ இந்த ஸ்வதர்மத்தினின்றும் நிவிருத்திவடிவ கஸ்மலம் ஒருகாலுங் கைக்கொள்ள யோக்கியமன்ரும். சர்வ கர்மங்களின் சந்நியாசத்தினது அதிகாரியோ சுத்த அந்தக் கரணமுடையவனேயாதல்வேண்டும், இவ்வார்த்தையை மேற்கூறுவாம்; ஆகையினுல் மோக்ஷத்தினிச்சைவடிவ ஹேதுவால் அந்தக் கஸ்மலத்தினடைவு பொருந்தாது. இந்த ஸ்வதர்மத்தின் நிவிருத்திவடிவ கஸ்மலம் சுவர்க்கத்தி னடைவைச் செய்வதாகிய தர்மத்தின் விரோதியாமாதலின், சுவர்க்கத்தி னிச்சையுடைய புருஷனுலும் கைக்கொள்ளப்படுவது தகுதியன்ரும். அக்கஸ்மலம் இவ்வுலகத்தில் கீர்த்தியி னபாவத்தைச் செய்வதாம். அல்லது அபகீர்த்தியைச் செய்வதாமாதலின், இவ்வுலகத்தின் கீர்த்தியை இச்சிப்பவனுகிய புருஷனுலும் அக்கஸ்மலம் கொள்ளத்தக்கதன்ரும். ஆகையினுல் இப்பொருள் துணியப்பெற்றது :—மோக்ஷத்தி னிச்சையுடைய புருஷனுலும், சுவர்க்கத்தி னிச்சையுடைய புருஷனுலும், கீர்த்தியி னிச்சையுடைய புருஷனுலும், இந்த ஸ்வதர்மத்தினின்றும் நிவிருத்திவடிவ கஸ்மலம் எப்போதும் பரித்தியாகஞ் செய்யத்தகுதியாம். நீயோ மோக்ஷம், சுவர்க்கம், கீர்த்தியென்னுமிவற்றின் இச்சையுடையவனுயிருந்தும் இக்கஸ்மலத்தைச் சேவிக்கின்ருய். ஆகையினுல் உனது இவ்வியவகாரம் அத்தியந்தம் அநுசிதமாம். (2)

(அ·கை.) ஹே பகவன்! எனது பந்துக்களின் சேனையைப் பார்த்தலால் உற்பன்னமாகிய அதைரியத்தின் வசத்தால் வில்மாத்திரமுந் தாங்க வல்லமையில்லாத நான் இப்போது எதைச்செய்வது தகுதியாம். என்னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் கூறுகின்ருர்.

சு-ம். க்லைப்யம்மாஸ்ம கம: பார்த்த நைதத்த்வய்யுபபத்யதே ।
க்ஷுத்ரம்ஹ்ருதயதௌர்பல்யம்த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥

ப-ம். க்லைப்யம் 2 மாஸ்மகம: 3 பார்த்த 1 ந 6 ஏதத் 5 த்வயி 4 உபபத்யதே 7 க்ஷுத்ரம் 9 ஹ்ருதயதௌர்பல்யம் 10 த்யக்த்வா 11 உத்திஷ்ட 12 பரந்தப 8

(அ-ம்.) ஹே பிருதையின் புத்திர! நீ இவ்வாண்மையற்ற தன்மையை படையாதே, அர்ச்சுனனாகிய உன்னிடத்து இவ்வாண்மையற்றதன்மை பொருந்தாது. ஹே பரந்தப! இவ்விழிவான மனதின் துர்ப்பலத்தைவிட்டு நீ யுத்தத்தின் பொருட்டு எழுந்திரு.

(வி-ம்.) ஹே பிருதையின் புத்திர! * ஓஜஸ் தேஜஸ் என்பன முதலியவற்றின் நாசவடிவ அதைரியமாய ஆண்மையற்ற தன்மையை நீ யடையாதொழிக. ஈண்டு, ஹே பார்த்த என்னுஞ் சம்போதனத்தால் பகவான் அர்ச்சுனனிடம் இப்பொருளைக் குறிப்பித்தனர் :—பிருதை மாதா தேவதைகளை ஆராதித்து, அத்தேவதைகளின் பிரசாதத்தால் உன்னைப் பெற்றனள். ஆகையினால் உன்னிடத்தில் பலத்தின் அதிகத்தன்மை மிகப்பிரசித்தமாம். இத்தகைய பிருதையின் புத்திரனாகிய நீ இவ்வாண்மையற்ற தன்மையை யடைவது தகுதியன்றாம். இப்போது அர்ச்சுனத்தன்மை யானும் அவ்வாண்மையற்ற தன்மையின் அயோக்யத்தன்மையை நிரூபிக்கின்றனர். நைதத்வயி சாக்ஷாத் மஹேஶ்வரனோடும் யுத்தஞ்செய்பவனும், அங்ஙனமே சர்வலோகப் பிரசித்த மஹாப் பிரபாவமுடையவனும் அர்ச்சுனரூப நீயாம், அவ்வுன்னிடத்து இவ்வதைரிய வடிவ ஆண்மையற்றதன்மை ஒருகாலும் பொருந்தாது.

ஹே பகவன்! ந அஹம் ஶக்நோமி அவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மந:

(பொ ள்.) எனது மனஞ்சுழல்கின்றது. ஆகையால் எனது சரீரத்தைத் தாங்கவும் வல்லமை யின்றியவனாயிருக்கின்றேன், என்னுமெனது விருத்தாந்தம் முன்னரே தங்களிடத்து என்னாற் கூறப்பட்டதன்றோ. ஆகையினால் இப்போது தாங்கள் அடிக்கடி யெனக்கு எதன்பொருட்டுக் கூறுகின்றீர்கள். என்னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் கூறுகின்றார் :-க்ஷுத்ரமிதி ஹே அர்ச்சுன! மனதின் துர்ப்பலத்தன்மை யெனப்படும் மனதின் சுழல்கை முதலிய வடிவ அதைரியமானது தன்னை யாசிரித்த புருஷனுடைய இழிவின்தன்மைக்குக் காரணமாயிருத்தலின் இழிவு வடிவமாம், அல்லது அச்சலனாதிவடிவ அதைரியம் எளிதாகவே நிவிருத்தி செய்யப்படும். ஆகையினால் இழிவு வடிவமாம், இத்தகைய இழிவாகிய அதைரியத்தை விசாரத்தின் பலத்தால் விரைவிலே பரித்தியாகஞ்செய்து இந்த ஸ்வதர்ம வடிவ யுத்தஞ் செய்யும்பொருட்டுத் திண்ணமுடையவனாகுதி ஈண்டு, ஹே பரந்தப என அர்ச்சுனனது சம்போதனங் கூறியதால் பகவான் அர்ச்சுனனிடமிப்பொருளைக் குறிப்பித்தனர் :—பரம் ஶத்ரும் தாபயதீதி பரந்தப:

(பொ-ள்.) தனது சத்துருக்கட்குச் சந்தாபத்தை யடைவிப்பவனுக்குப் பரந்தபனெனப் பெயராம். இத்தகைய பரந்தபனாயிருந்தும் அத்தியந்தம் இழிவாகிய அதைரியவடிவ சத்துருவை நாசஞ்செய்யாமலிருப்பது மிகு ஆச்சரியமானவார்த்தையாம். ஆகையினால் நினது பரந்தப நாமத்தைப் பயனுடையதாக்கும்பொருட்டு, நீ யிவ்வதைரிய வடிவ சத்துருவை அவசியம் நாசஞ்செய்வது தகுதியாம். (3)

(அ-கை.) ஹே பகவன்! யாதேனுஞ் சில சோக மோகாதிகளின் வசத்தால் நான் இந்த யுத்தத்தைப் பரித்தியாகஞ் செய்கின்றேனில்லை, மற்றோ இந்த யுத்தத்தில் தர்மரூபத்தன்மையின்றாம், மாறாய் அதர்மரூபத்தன்மை யுளது, இக்காரணத்தால் நான் இந்த யுத்தத்தைப் பரித்தியாகஞ் செய்கின்றேன் என்னும் அர்ச்சுனனது அபிப்பிராயத்தைச் சஞ்சயர் கூறுகின்றார் :—

அர்ஜுந உவாச.

கத²ம் பீ⁴ஷ்மமஹம் ஸங்க்²யே த்³ரோணம் ச மது⁴ஸூத³ந ।
இஷுபி⁴: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூத³ந ।

* ஓஜஸ் தேஜஸ்=பலம் காந்தி.

கதம் 10 பீஷ்மம் 6 அஹம் 4 ஸங்க்யே 3 த்ரோணம் ச 7 மதுஸூதந 1 இஷுபி꞉ 9 ப்ரதியோத்ஸ்யாமி 11 பூஜார்ஹௌ 5 அரிஸூதந 2.

(அ-ம்.) ஹே மதுசூதன! ஹே அரிசூதன! இப்போர்க்களத்தின்கண் அர்ச்சுனனாகிய என்னாற் பூஜிக்கப்படுபவராகிய பீஷ்மரையுந் துரோணரையும் நான் எவ்வாறு பாணங்களாற் கொல்வேன் மற்றோ! கொல்லேன்.

(வி-ம்.) ஹே பகவன்! எமது குலத்தில் விருத்தரும் அங்ஙனமே குணங்களால் விருத்தரும் இப்பீஷ்மபிதாமகராவர், அங்ஙனமே தனுர்வித்தையின் குரு இத்துரோணசாரியராவர், இவ்விருவரும் எனது பிதாவைப் போன்று புஷ்பம், சந்தனம், அக்ஷதை என்னுமிவற்றால் பூஜிக்கத்தகுந்தவராம். இத்தகைய பீஷ்மத்துரோணாதி விருத்தர்களோடு விளையாடுமிடத்தில் ஆநந்தத்தின்பொருட்டு லீலையாகயுத்தஞ்செய்வதும் எனக்குத் தகுதியன்றாமாயின் இந்தப் போர்க்களத்திற் கூர்மையாகிய சஸ்திரங்களால் அப்பீஷ்மத்துரோணாதியரைக் கொல்வது எனக்கு எவ்வாறுதகுதியாம்? மற்றோ, அவர்களைக்கொல்வது எனக்குத் தகுதியன்றாம். ஈண்டிது கருத்தாம்:— இந்தத் துரியோதனாதியர், பீஷ்மபிதா மஹரையும், துரோணசாரியரையும் விட்டொழித்தோ என்னோடு யுத்தஞ்செய்யார்; மற்றோ, பீஷ்மத்துரோணாதியரை எதிரில் வைத்தே என்னோடு யுத்தஞ்செய்வர். ஆனால் பீஷ்மத்துரோணாசாரியர்களோடு யுத்தஞ்செய்வது தர்மமோ அன்றாம்; ஏனெனின், வேதத்தில் விதிக்கப்பட்ட பலமுடைய பொருளைத் தர்மமென்பர். இவ்வாறாகிய தர்மத்தினிலக்கணம் பீஷ்மத்துரோணாதியரைப் பூஜிப்பதில் பொருந்துவதேபோல அவர்களோடு யுத்தஞ் செய்வதிற் பொருந்துவதின்றாம். ஆகையினாலந்த யுத்தந் தர்மவடிவமன்றாம்.

சங்கை:—ஹே அர்ச்சுன! எங்ஙனம் விருத்த புருஷர்களோடு யுத்தஞ் செய்வது சாஸ்திரத்தின்கண் விதிக்கப்படாமையால் அதன்கண் தர்மரூபத்தன்மை பொருந்தாதோ, அங்ஙனமே அந்த யுத்தத்திற்குச் சாஸ்திரத்தில் நிஷேதமுங் கூறப்படவில்லை. ஆகையினால் அதன்கண் அதர்மரூபத்தன்மையும் பொருந்தாது, சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டதுவே அதர்மமாம்.

சமாதானம்:—ஹே பகவன்! சாஸ்திரத்தில் இது கூறப்பட்டுளது:—

ஹுங்க்ருத்ய த்வங்க்ருத்ய விப்ராந்நிர்ஜித்ய வாதத꞉ ।
ஶ்மஶானே ஜாயதே வ்ருக்ஷ꞉ கங்கக்ருத்ரோபஸேவித꞉ ॥

(போ-ள்.) எப்புருஷன் தனது குருமூர்த்தியிடம் ஹூங்கார சத்தத்தையேனும் துங்காரசத்தத்தையேனுங் கூறுகின்றனனோ, அங்ஙனமே சாதுப்பிராஹ்மணரை விவாதத்தால் ஜயிப்பனோ, அப்புருஷன் மரித்து ஶ்மசானபூமியில் பருந்து கழுகு முதலிய பக்ஷிகளால் சேவிக்கப்பட்ட விருக்ஷ சரீரத்தை யடைவன் என்பதாம். இது முதலிய சாஸ்திரங்களின் வசனங்களால் சத்தமாத்திரத்தாலுங் குருவின் துரோகம் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. சத்தமாத்திரத்தாலும் குருத்துரோகம் அதர்மமாயின் அப்பீஷ்மத்துரோணாதி குருமார்களோடு கூர்மையான சஸ்திரங்களால் யுத்தஞ்செய்வது அதர்மரூபமாமென்பதில் யாது கூறவேண்டியுளது. ஈண்டு "மதுஸூதந, அரிஸூதந" என்னுமிரண்டு சம்போதனங்கள் பகவானுக்கு அர்ச்சுனனாற் கூறப்பட்டன; அவ்விரண்டிற்கும் பொருளொன்றேயாம். ஏனெனின், மதுவெனப் பெயரிய அசுரனைக் கொல்வதால் மதுசூதனனெனப்படும், மேலும் சத்துருக்களென்னும் அரிகளைக் கொல்வதால் அரிசூதனனெனப்படும். ஆகையினால் ஒருதரங் கூறவேண்டிய அர்த்தத்தை மீண்டுங் கூறுவதில் அர்ச்சுனனுக்குப்*புனருக்திதோஷமே பிராப்தமாமாயினும் அவன் அக்காலத்திற் சோகத்தால் வியாகுலமுற்றவனாதலால் முன்பின் அர்த்தங்களின் நினை

* புனருக்தி=கூறியது கூறல்.

வின்றுமாகலின் *புனருக்தி தோஷத்தினடைவுண்டாகாது. சலனமின்றிய சித்த முடைய புருஷனிடத்தில்தான் புனருக்தி தோஷங் கொடுக்கப்படும். அல்லது மதுசூதன அரிசூதன என்னுமிரண்டு சம்போதனங்களால் அர்ச்சுனன் பகவானிடம் இப்பொருளைக் குறிப்பித்ததாம் :—ஹே பகவன்! தாங்களோ மதுவசுரன்முதலிய சத்துருக்களையே கொல்வீர். தங்களது மித்திரர்களைக் கொல்லீராகலின் பூஜிக்கத் தகுந்தவராய இப்பீஷ்மத்துரோணாதி குருமாரை நீ கொல்லுதியெனக்கூறிய வசனந் தங்களுக்குத் தகுதியன்றாம். (4)

(அ-கை.) ஹே அர்ச்சுன! பீஷ்மபிதாமஹர் துரோணாசாரியர் கிருபாசாரியர் என்னு மிவர்களிடத்துப் பூஜிக்கப்படுந் தன்மையுளது, அந்தப் பூஜிக்கப்படுந்தன்மையில் குருத்தன்மையானன்றி மற்றொரு காரணமுமின்றாம். அந்தக் குருத்தன்மை பூர்வகாலத்தில் அப்பீஷ்மத் துரோணாதிகளிடத் திருந்ததாயினும், இக்காலத்தில் அப்பீஷ்மத் துரோணாதியரைக் குருரூபமா யங்கீகரிப்பது உனக்குத் தகுதியன்றாம். ஏனெனின், தர்மசாஸ்திரத்தின்கண் இது கூறப்பட்டுளது :—

சு-ம். குரோரப்யவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத: ।
உத்பதம் ப்ரதிபந்நஸ்ய பரித்யாகோ விதீயதே ॥

(பொ-ள்.) எந்தக் குருவானவர் அஹங்காராதி தோஷங்களால் உன்மத்த பாவத்தை யடைந்துளரோ அங்ஙனமே சாஸ்திரத்தில் விதித்துள்ள செய்ய யோக்கியமாய பொருளையும், அங்ஙனமே சாஸ்திரத்தில் நிஷேதித்துள்ள செய்யக் கூடாதனவாய பொருளையுந் தெரியாதவரோ, அங்ஙனமே சாஸ்திர நிஷித்தமார்க்கத்திற் பிரவர்த்திப்பவரோ, அக்குருவைச் சீடன் பரித்தியாகமே செய்தல்வேண்டும் என்பதாம். இவ்வெல்லா லக்ஷணமும் இப்பீஷ்மத் துரோணாதியரிடத்தே பொருந்தும். ஏனெனின், இப்பீஷ்மத் துரோணாதியர் யுத்தத்தின் கர்வத்தால் மிகுதியாகிய உன்மத்த பாவத்தை யடைந்திருக்கின்றனர்; அன்றியும் இப்பீஷ்மத் துரோணாதியர் கபடத்தால் ராஜ்யத்தை யபகரித்தனர், தமது சிஷ்யர்களோடு துரோகஞ்செய்கின்றனர். ஆகையினால் இவர் காரியாகாரியங்களின் ஞானமின்றியவருமாவர், இக்காரணத்தானே சாஸ்திர நிஷித்தமார்க்கத்திற் பிரவிருத்திப்பவராம். இத்தகைய பீஷ்மத்துரோணாதியரைக் கொல்வதே மேன்மையாம் என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான் :—

சு-ம். குரூநஹத்வா ஹி மஹாநுபாவாந்
ஶ்ரேயோ போக்தும் பைக்ஷ்யமபீஹ லோகே ।
ஹத்வார்தகாமாம்ஸ்து குரூநிஹைவ
புஞ்ஜீய போகாந் ருதிரப்ரதிக்தாந் ॥

ப-ம். குரூந் 3 அஹத்வா 4 ஹி 1 மஹாநுபாவாந் 2 ஶ்ரேய: 10 போக்தும் 8 பைக்ஷ்யம் 7 அபி 9 இஹ 5 லோகே 6 ஹத்வா 14 அர்தகாமாந் 11 து 12 குரூந் 13 இஹ 15 ஏவ 16 புஞ்ஜீய 19 போகாந் 18 ருதிரப்ரதிக்தாந் 17.

(அ-ம்.) ஹே பகவன்! மாட்சிமைதங்கிய குருமார்களைக் கொல்வதினும் இவ்வுலகத்திற் பிக்ஷையன்னத்தை யுண்பதும் மேன்மையாம். இப்பொருளில் இச்சையுடையவனும் யான் குருமார்களைக் கொல்வதால், இவ்வுலகத்திலேயே உதிரந் தோய்ந்த விஷயங்களைப் போகிப்பவனாவேன்.

* புனருக்தி = கூறியதுகூறல்.

(வி-ம்) ஹே பகவன்! பீஷ்மத்துரோணாதி ஆசார்யர்களைக் கொல்லா தொழிபின் எனக்குப் பரலோகமோ அவசியம் சித்தமாம். ஆனால் இவ்வுலகத்தின் கண்ணே அவர்களைக் கொல்லாததால் இராஜ்ய மின்றியவனாய் அரசர்கட்குச் சாஸ்திரத்தில் நிஷேதிக்கப்பட்டுள்ள பிக்ஷான்னத்தையும் புஜிப்பது எனக்கு அத்தியந்தஞ் சிரேஷ்டமாம். ஆனால் இப்பீஷ்மத் துரோணாதி ஆசாரியரைக் கொல்வதால் எனக்கு இவ்வரசும் உயர்வன்றாம். ஏனெனின், சாஸ்திரத்திலிது கூறப்பட்டுளது :—

சு-ம். அகுர்வாண: பராந் துக்காந் அகத்வா கலாந்தரம் ।
அந்திருந்தாய்‌ நாதிநந் யஃவத்ஸ் விததுஷ: ॥

(பொ-ள்.) அந்நியப் பிராணிகட்குத் துக்கத்தைச் செய்யாமலும், வேத விருத்த நாஸ்திகரின் ஆலயங்கட்குச் செல்லாமலும் தனது ஆன்மாவிற்குத் துக்கத்தை யடைவிக்காமலும் இருக்கின்ற புருஷனுக்கு அற்ப பதார்த்தத்தின் பிராப்தி யுண்டாயினும் அதை யவன் மிகுதியாக அங்கீகரித்தல்வேண்டும். ஆகையினால் இப்பீஷ்மத்துரோணாதியரைக் கொல்வதால் உண்டாவதாகிய ராஜ்யத்தைவிட இவர்களைக் கொல்லாததாலுண்டாம் பிக்ஷான்னத்தையே மிகுதியா யெண்ணுகின்றேன் என்னும் இப்பொருளை அர்ச்சுனன், ஹி, என்னுஞ் சத்தத்தாற் குறிப்பித்தனன்.

ஹே அர்ச்சுன! மாமொ பவதீவகுஸ் என முற்கூறிய வசனங்களால் இப்பீஷ்மத்துரோணாதியரிடத்துக் குருத்தன்மையி னபாவத்தை யான் கூறியுள்ளேனன்றோ? ஆதலின் அடிக்கடி நீ இவர்களிடத்தே குருபுத்தியை எதன் பொருட்டுச் செய்கின்றாய். என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான் :—ஹிமஹாநுபாவாந் என. ஹே பகவன்! சிரவணம், அத்தியயனம், தபசு, ஆசாரம் என்றற் றொடக்கத்தனவாய உந்நத குணங்களால் மஹாப் பிரபாவத்தையுடைய இப்பீஷ்மத்துரோணாதியர் காலகாமாதிகளையுந் தங்கள் வசப்படுத்துவர்; இத்தகைய மஹா புண்யவான்களாய பீஷ்மத் துரோணாதியரை முற்கூறிய இழிவாகிய பாவகர்மங்கள் பரிசமாத்திரமுஞ் செய்யமாட்டாவாதலின், இம்மஹாநுபாவ புருஷரிடத்து யாதோசில அற்பமாய அநுசிதகர்மங்களைப் பார்த்துக் குருத்துவ புத்தியை விடுவது எனக்குத் தகுதியன்றாம். அல்லது, ஹிமஹாநுபாவாந் என்னும் இது ஒரேபதமாம் இதற்கு இவ்வாறு பொருள்கொள்க :—

"ஹிமஂஜாட்யஂ ஹந்தீதி ஹிமஹா ஸூர்யோ வஹ்நிர்வா தயோரிவ அநுபாவ: ஸாமர்த்யஂ யேஷாஂ தே ஹிமஹாநுபாவா: தாந்."

(பொ-ள்.) ஜடத்தன்மை வடிவ ஹிமத்தை (பனியை) நாசஞ் செய்பவரெவரோ, அவருக்கு "ஹிமஹா" எனப் பெயராம் அத்தகையர். சூரிய பகவானும், அக்கினியுமாவர், அத்தகைய சூரியன் அக்கினியென்னுமிவரைப் போன்ற சாமர்த்தியம் எவரிடமுளதோ, அத்தகையருக்கு ஹிமஹானுபாவர், எனப் பெயராம்; அத்தகைய மிகுகாந்தி யுடையராய பீஷ்மத் துரோணாதியருக்கு முற்கூறிய இழிவாய பாவதோஷத்தின் அடைவுண்டாவதின்றாம்; இவ்வார்த்தை வேறு சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது :—

சு-ம். த்ருஷ்டோ தர்மவ்யதிக்ரம: ஸாஹஸஂ ச மஹதாம் ।
தேஜீயஸாஂ ந தோஷாய வஹ்நே: ஸர்வபுஜோ யதா ॥

(பொ-ள்) ஈஸ்வர புருஷர்களிடத்து விரைவிலேயே தர்ம மரியாதையின் உல்லங்கனங் காணப்படுகின்றது, காணப்படினும் எங்ஙனம் சுத்தா சுத்தங்களாய

எல்லாப் பொருள்களையும் புஜிப்பதாகிய அக்கினிக்கு அசுத்த வஸ்துவைப் புஜிப்பதால் தோஷத்தி னடைவுண்டாகாததேபோல, அத்தர்ம மரியாதையின் உல்லங்கனமானது தேஜசுடைய புருஷருக்குத் தோஷத்தின் பொருட்டாவதின்றே அங்ஙனமே இப்பீஷ்மத்துரோணாதி தேஜசுடைய புருஷருக்கு முற்கூறிய அநுசித கர்மங்கள் தோஷத்தின் பொருட்டாவதின்றாம்.

சங்கை :—ஹே அர்ச்சுன! இப்பீஷ்மத்துரோணாதியர் எப்போது தனத்தின் லோபத்தால் இந்த யுத்தத்தில் முயன்றனரோ, அப்போதே தங்களது ஆத்மாவை விற்றவர்களாவர்; இத்தகைய பீஷ்மத்துரோணாதியரிடத்து முற்கூறிய மஹாத்மத்தன்மை யெவ்வாறு பொருந்தும்? இவ்வார்த்தையைப் பீஷ்ம பிதாமகர், தாமே யுதிஷ்டிரரிடங் கூறியிருக்கின்றனர்.

𑌅𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑌾𑌸𑍋 𑌦𑌾𑌸𑌸𑍍𑌤𑍍𑌵𑌰𑍍𑌥𑍋 𑌨 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 ।

𑌇𑌤𑌿 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 𑌬𑌦𑍍𑌧𑍋𑌽𑌸𑍍𑌮𑍍𑌯𑌰𑍍𑌥𑍇𑌨 𑌕𑍌𑌰𑌵𑍈𑌃 ॥

(பொ-ள்.) ஹே யுதிஷ்டிரவரசனே! இப்புருஷன் பொருளிற்கே தாஸனாகின்றானேயன்றி அப்பொருள் எப்புருஷனுக்கும் அடிமையாவதின்றாம். சாஸ்திரத்திற் கூறப்பட்ட இவ்வார்த்தை சத்தியமாம். இக்காரணத்தானே அர்த்தத்தின் லோபத்தால் இக்கௌரவர்களாற் கட்டுப்பட்டிருக்கின்றேன் என்பதாம். ஆகையினால் தனத்தின் லோபத்தையுடைய இப்பீஷ்மத்துரோணாதியரிடத்து முற்கூறிய மஹாத்மத்தன்மை சம்பவியாது என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான். ஹக்வா என ஹே பகவன்! அப்பீஷ்மத்துரோணாதியர் தனத்தில் இச்சை யுடையவர்களாமாயினும், என்னை யபேக்ஷித்து அப்பீஷ்மத்துரோணாதியர் குருவே யாவரென்னு மிப்பொருளைப் பின்னருங் குரு சப்தத்தைக் கூறி அர்ச்சுனன் குறிப்பித்தனன். அங்ஙனம் பொருளினிச்சை யுடையாராயிருப்பினும் குருமார்களைக் கொல்வதால் நான் கேவலம் விஷயபோகத்தையே அநுபவிப்பனேயன்றி மோக்ஷத்தையோ அடையேன். அவ்விஷய போகமும் கேவலம் இவ்வுலகின்கண்ணே யெனக்குண்டாம்; பரலோகத்திலோ அது கிடைக்கமாட்டாது; இவ்வுலகத்திலும் சிரேஷ்ட புருஷரால் நிந்திக்கப்படாத விஷயபோகமெனக் குண்டாவதின்றாம். மற்றே, * யசசின்மைவடிவ ரத்தத்தால் தோயப்பெற்றதால் அத்தியந்தம் நிந்திதமாய விஷயபோகங்களினடைவு எனக்குண்டாம். கருத்திதுவாம் :—இப்பீஷ்மத்துரோணாதி ஆசார்யர்களைக் கொல்வதால் இவ்வுலகத்திலும் எனக்கிவ்வாறாகிய துக்கமுண்டாவதாயின், பரலோகத்திலுள்ள துக்கத்தை யானெவ்வாறு வர்ணிப்பேன். அல்லது 𑌅𑌰𑍍𑌥𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 என்பது விஷயரூப போகங்கட்கு விசேஷணமென்றறிக. அப்பக்ஷத்தில் இப்பொருள்கொள்க :— இப்பீஷ்மத்துரோணாதி ஆசாரியர்களைக் கொல்வதால் நான் கேவலம் அர்த்த காம வடிவ விஷயங்களையே போகிப்பேன். ஆனால் அவர்களைக் கொல்வதால் எனக்கு யாதொரு தர்மமும் மோக்ஷமும் உண்டாகாது. (5)

(அ-கை.) ஹே அர்ச்சுன! க்ஷத்திரியர்கட்குப் பிக்ஷை அன்னத்தை யுண்பது சாஸ்திரத்தில் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் யுத்தஞ்செய்வதோ, விதிக்கப்பட்டுளது. ஆகையினால் சுவதர்மமாயிருக்கும் யுத்தமே யுனக்கு மேன்மையை யுண்டுபண்ணா நிற்கும் என்னும் பகவானது ஆசங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான் :—

சு-ம். 𑌨 𑌚𑍈𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌮𑌃 𑌕𑌤𑌰𑌨𑍍𑌨𑍋 𑌗𑌰𑍀𑌯𑍋

𑌯𑌦𑍍𑌵𑌾 𑌜𑌯𑍇𑌮 𑌯𑌦𑌿 𑌵𑌾 𑌨𑍋 𑌜𑌯𑍇𑌯𑍁𑌃 ।

---

* யசசு = கீர்த்தி.

யாநேவ ஹத்வா ந ஜிஜீவிஷாம:

தேऽவஸ்திதா: ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: ॥

ப-ம். ந ச 5 ஏதத் 4 வித்ம: 6 கதரத் 2 ந: 1 கரீய: 3 யத்வா 7 ஜயேம 8 யதி வா 9 ந: 10 ஜயேயு: 11 யாந் 12 ஏவ 18 ஹத்வா 13 ந 15 ஜிஜீவிஷாம: 14 தே 16 அவஸ்திதா: 20 ப்ரமுகே 19 தார்தராஷ்ட்ரா: 17.

(அ-ம்.) ஹே பகவன்! பிக்ஷை யுத்தமென்னும் இரண்டு தர்மங்களுள் எனக்கு எது சிரேஷ்டமோ, அதை யானறிகின்றிலேன் போர்புரியினுமென்? யான் அவர்களை வெல்வனோ? அல்லது, இக்கௌரவர்கள் என்னை வெல்வரோ? அல்லது எந்தப் பீஷ்மத்துரோணாதி பந்துக்களைக் கொல்வதால், யாங்கள் உயிர் வாழ்க்கையி னிச்சையையும் செய்யேமோ அப்பீஷ்மத் துரோணாதி பந்துக்களே எங்கள் எதிரில் நிற்கின்றனர்.

(வி-ம்.) ஹே பகவன்! பிக்ஷையூண், யுத்தம் என்னுமிரண்டு தர்மங்களுள் எனக்கு எத்தர்மம் சிரேஷ்டமாம். ஹிம்சையின்றி யிருத்தலால் பிக்ஷான்னமே சிரேஷ்டமா? அல்லது சுவதர்மமாதலின் யுத்தமே சிரேஷ்டமா? இவ்விஷயத்தை யானறிந்திலேன். ஹே அர்ச்சுன! பயிக்கவுணவு, போர் என்னுமிரு தர்மத்தின் கண் சுவதர்மமாதலின் போரே யுனக்கு மேன்மையதாம் என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான்:—யத்வேதி ஹே பகவன்! ஒருகால் யான் போர்புரியினும் யானே இப்பீஷ்மாதியரை வெல்வனோ? அல்லது இப்பீஷ்மாதியரே என்னை வெல்வரோ? என்னுமிவ்விஷயத்தையும் யானறிந்திலேன்; ஒருகால் இப்பீஷ்மத்துரோணாதியரே யென்னை வெல்லின் முடிவில் யான் பிக்ஷைவாங்கியே போஜனம் செய்யவேண்டிவரும், அல்லது யான் மரிக்கவேண்டிவரும் என்னு மிவ்விரண்டு விஷயங்களுள் ஒன்றே அவசியமுண்டாம் ஆகையினால் அந்த யுத்தத்தின் முதலிலேயே பிக்ஷையேற்றுப் போஜனஞ்செய்வது எனக்கு உயர்வாம். ஹே அர்ச்சுன! எனக்கு வெற்றியுண்டாமோ? அல்லது இப்பீஷ்மத் துரோணாதியருக்கு வெற்றியுண்டாமோ? என்றிவ்வாறாகிய ஐயத்தை நீ யெதன்பொருட்டுச் செய்கின்றாய்? கிருஷ்ணபகவானாகிய யான் நினது சகாயமாக விருக்கின்றேனாதலால் நினக்கே அவசியம் வெற்றியுண்டாம் என்னும் பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான்:—யாநேவ இதி ஹே பகவன்! ஒருகால் தங்கள் சகாயத்தால் எனக்கு வெற்றிவரினும் அந்தவெற்றி யானது முடிவாய் எனக்குத் தோல்வியேயாம், ஏனெனின், எந்தப் பீஷ்மத்துரோணாதியரைக் கொல்வதால் யான் எனது உயிர் வாழ்க்கையை மாத்திரமும் இச்சியேனோ அவர்களைக்கொன்று யான் விஷய போகங்களை யெவ்வாறு விரும்புவேன்? மற்றே, விரும்பேன். அப்பீஷ்மத் துரோணாதியரே யாம் யுத்தத்திற் சாவேமென்னும் நிச்சயத்தோடு எனது எதிரில் நிற்கின்றனர். அத்தகைய பிரிய பந்துக்களை நாசஞ்செய்வதாலுண்டாம் வெற்றியும் தோல்வி வடிவமேயாம். ஆகையினால், பிக்ஷையன்னத்தைப் புஜிப்பதிலும் சிரேஷ்டத்தன்மை இப்போரின்கண்ணின்றாம்.

ஈண்டு எவரோ ஒரு உரையாசிரியர் நசைதத்வித்ம: கதரந்நோ கரீயோ என்னும் முதற்பாதத்திற்கு இவ்வாறு பொருள் கூறியிருக்கின்றார்:—எம்முள் எச்சேனை மிகுதியாமென்பதை யான் உணர்ந்திலேன் என்பதாம். அப்பொருள் சம்பவியாது, ஏனெனின், இச்சுலோகத்தின் மேற்சுலோகத்தின்கண் ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: என்னும் வசனத்தால் அர்ச்சுனன் தர்மத்தின் ஐயத்தையே காண்பித்துளான்; அவ்வசனத்தினநுசாரமாக இச்சுலோகத்திலும் பிக்ஷான்னம்

யுத்தம் என்னுமிரண்டு தர்மங்களிலேயே அர்ச்சுனனது சம்சயம் சம்பவிக்கும்; சேனையின் அதிகத்தன்மையில் சம்சயம் சம்பவியாது. அல்லது நவைத்கு: என்னும் வசனத்திற்குச் சேனையின் அதிகத்தன்மையின் ஐயத்தை யங்கீகரிக்கினே, அச்சேனையினது அதிகத்தன்மையின் ஐயத்தாலே வெற்றியினையம் துணியப்பெறும். ஆகையினுல் யதா ஜயெம யதி வா நொ ஜயெயுः என்னுமிரண்டாவது பாதத்திற் கூறப்பட்ட வெற்றியின் ஐயம் பயனற்றதாதல் வேண்டும் இக்காரணத்தால் முதலுரையே அநேக வுரையாசிரியர்களது சம்மதமாம்.

அ-கை. ஈண்டுமுற்கிரந்தத்தாற் சம்சாரதோஷங்களின் நிரூபணஞ்செய்யப்பட்டது; அதனுல் அதிகாரிபுருஷனது விசேஷணங் கூறப்பட்டதாயது. ஆண்டு நசெய ஸ்யொந வஸ்ஸாமி ஹக்ஷாஸ்வஜநாஹவெ: சு. (31) என்னும் வசனத்தில் போரில் மரித்த சூரவீர புருஷனுக்கு யோகமுற்ற சந்நியாசிக்கொப்பாய் யோகக்ஷேமத்தினடைவு கூறப்பட்டுளது. அது கூறிய தால் ஸநீதெஸ்யொசநீதுக்தைவ்யெ: என்னுங் கடவல்லி சுருதியால் பெறப்பட்ட மோக்ஷவடிவ சிரேயசும் அம்மோக்ஷவடிவ சிரேயசின் வேருய பதார்த்தங்களிடத்தே அப்ரேயசு வடிவத்தன்மையுங் கூறப்பட்டதாயிற்று. அது கூறியதால் நித்தியா நித்தியவஸ்து விவேகங் காண்பிக்கப்பட்டது. மேலும் நகாஂக்ஷெவிஜயஂக்ருஷ்ண (32) சுலோகத்தால் இவ்வுலகத்தின் விஷயஜன்னிய சுகத்தினின்றும் வைராக்கியம் காண்பிக்கப்பட்டது. அவிதை ஸ்ரொக்ஷஸ்ய ராஜ்ய ஸ்யைதொ: (35) என்னும் வசனத்தால் சுவர்க்காதிலோகங்களின் விஷயஜன்னிய சுகத்தினின்றும் வைராக்கியங் காண்பிக்கப்பட்டது. நஹகெநியதெஂவா வொ ஹவதி (44) என்னும் வசனத்தால் இத்தூலசரீரத்தின் வேருய் ஆன்மாவின் சொரூபங் காண்பிக்கப்பட்டது. கிஂநொராஜ்யெந மொவிந்த (32) என்னும் வசனத்தால் மனத்தின் நிக்கிரகரூப சமை காட்டப்பட்டது. கிஂஹொ மைஜீவிதெநவா (32) என்னும் வசனத்தால் இந்திரிய நிக்கிரஹவடிவ தமங் காட்டப்பட்டது யதூவெகுதெநவஸ்ஸுஜி (38) என்னும் வசனத்தால் லோபமின்மை காட்டப்பட்டது தரைக்ஷத்ராஂஹவெக (46) என்னும் வசனத்தால் திதிக்ஷை காண்பிக்கப்பட்டது. இவ்வாறு இக்கீதா சாஸ்திரத்தின் முதலத்தியாயத்தினது பொருள் சந்நியாசத்தின் சாதனங்களைக் குறிப்பிக்கின்றது.

இவ்விரண்டாவ தத்தியாயத்தின்கண்ணே ஸ்ரெயொஹொக்துஂ ஹைக்ஷ்ய வீஹலொகெ (5) என்னும் வசனத்தால் பிக்ஷான்ன போஜனத்தா லுபலக்ஷிதமாய சந்நியாசத்தின் நிரூபணஞ் செய்யப்பட்டது. இப்போது பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின்பொருட்டுச் சுருதியிற் கூறப்பட்டுள்ள பிரஹ்மவேத்தாவாய குருவினது சமீபத்தே சீடனது செல்கை நிரூபிக்கப்படும்:—ஏனெனின், எப்புருஷன் சம்சாரத்திலுள்ள சர்வ தோஷங்களையுந் தெரிந்து இவ்வுலகத்திலும் பரலோகங்களிலுமுள்ள விஷயஜன்னிய சுகங்களினின்றும் அத்தியந்தம் வைராக்கியத்தையடைந்து அதன்பின்னர் விதிப்படி பிரஹ்மவேத்தா குருவைச் சரணடைவனே, அத்தகைய சாதனசம்பன்ன புருஷனுக்கே பிரஹ்மவித்தையைக் கிரகணஞ் செய்வதில் அதிகாரமுளதாதலினென்க.

ஆண்டு முற்சுலோகத்தின்கண் பீஷ்மத்துரோணுதிகளது துக்கத்தின் வசத்தால் வ்யுத்தாயாथ ஹிக்ஷாசய்யஂ சரந்தி என்னுஞ் சுருதிமூலமாய்ப் பெறப்பட்ட பிக்ஷாசரியத்தில் அர்ச்சுனனது அபிலாஷை காண்பிக்கப்பட்டது. இப்போது விதிப்படி பிரஹ்மவேத்தாவாய குருவிடம் அர்ச்சுனனது செல்கையையும் அப்பீஷ்மத் துரோணுதியரின் துக்கத்தின் வியாஜத்தானே நிரூபிக்கின்ருர்:—

சு-ம். காவ்ய்ணயதொஷொ வஹதஸ்வஹாவः

வ்ருச்சாமி த்வாஂ ஧ர்மஸஂமூடசெதாः ।

𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑌯𑌃 𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 𑌤𑌨𑍍𑌮𑍇

𑌶𑌿𑌷𑍍𑌯𑌸𑍍𑌤𑍇𑌹𑌂 𑌶𑌾𑌧𑌿 𑌮𑌾𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌂 ॥

ப-ம். 𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯 3 𑌦𑍋𑌷𑍋𑌪𑌹𑌤𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 4 𑌪𑍃𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 3 𑌤𑍍𑌵𑌾𑌂 3 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌮𑍂𑌢𑌚𑍇𑌤𑌾𑌃 5 𑌯𑌤𑍍 7 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 8 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 6 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂 11 𑌬𑍍𑌰𑍂𑌹𑌿 9 𑌤𑌤𑍍 10 𑌮𑍇 14 𑌶𑌿𑌷𑍍𑌯𑌃 13 𑌤𑍇 12 𑌅𑌹𑌂 18 𑌶𑌾𑌧𑌿 17 𑌮𑌾𑌂 15 𑌤𑍍𑌵𑌾𑌂 16 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌂

(அ-ம்.) ஹே பகவன்! *கார்ப்பண்யதோஷத்தால் †திரஸ்காரத்தையடைந்த சுபாவவானும் தர்மத்தின் ஐயத்தால் வியாபிக்கப்பட்ட மனத்தினனும் ஆய அர்ச்சுனனாகிய யான் தங்களிடத்தே மேன்மையை வினவுகின்றேன்; ஆதலின், எது உறுதியான மேன்மையோ, அதைத் தாங்கள் என்பொருட்டுக் கூறுவீர்களாக. அடியேன் தங்களுடைய சீடனாயிருக்கின்றேனாதலால் தங்களைச் சரணாகதியாக அடைந்திருக்கும் என்னைத் தாங்கள் சிக்ஷித்தருள்வீராக.

(வி-ம்.) இவ்வுலகத்தில் எப்புருஷன் யாதேனும் அற்பதனத்தினாளியையும் பொறுக்கின்றானில்லையோ, அப்புருஷனைக் கிருபணனென்பர். மோக்ஷரூப புருஷார்த்தத்தின் அடைவின்றிய எல்லா அநாத்ம வேத்தாக்களாய அஞ்ஞானிகளும் அக்கிருபண புருஷனுக்குச் சமானராதலால் கிருபணர்களாம்.

𑌯𑍋 𑌵𑌾 𑌏𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌗𑌾𑌰𑍍𑌗𑍍𑌯𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 ।

𑌅𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌸 𑌕𑍃𑌪𑌣𑌃 ॥

(பொ-ள்.) ஹே கார்க்கியே! அதிகாரியாய மனுடசரீரத்தை யடைந்த எப்புருஷன் இவ்வக்ஷர ஆன்மாவை அறியாமல் இவ்வுலகத்தினின்றுஞ் செல்வனோ, அப்புருஷன் கிருபணனே யாவன் என்பதாம்.

𑌕𑍃𑌪𑌣𑍋𑌜𑌿𑌤𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌃 ॥

(பொ-ள்.) எப்புருஷன் தனது இந்திரியங்களை வெல்கின்றானில்லையோ, அப்புருஷன் கிருபணனே யாவன் என்றற்றொடக்கத்தனவாய சுருதி ஸ்மிருதிகளின் பிரமாணத்தால் அஞ்ஞானி புருஷரிடத்தே கிருபண ரூபத்தன்மை பெறப்படுகின்றது. அத்தகைய கிருபண புருஷரிடத் திராநின்ற எத்தேகாதி அநான்ம பதார்த்தங்களின் அத்தியாசமுண்டோ, அதற்குக் கார்ப்பண்யமெனப் பெயராம். அக்கார்ப்பண்யத்தாலுண்டாய, இஜ்ஜன்மத்தின்கண் இவரே யெனது பந்துக்கள் அவர்கள் நாசமுற்று யான் ஜீவித்திருப்பதிலென் பயன்? என்றிவ்வாறாகிய அபிநிவேச வடிவ மமதையாகிய தோஷத்தால் திரஸ்காரத்தை யடைந்துள்ள யுத்தத்தின் முயற்சிவடிவ சுபாவத்தோடு கூடியவனும், அங்ஙனே தர்மத்தில் நிர்ணயஞ் செய்வதாகிய பிரமாணத்தின் அதர்சனத்தால் இப்பீஷ்மாதியரைக் கொல்வதே யெனது தர்மமா? அல்லதென்? இப்பீஷ்மாதியரை ரக்ஷிப்பது எனது தர்மமா? அல்லதென்? பூமியைப் பரிபாலனஞ்செய்வது எனது தர்மமா? அல்லதென்? முன்னடைந்த வனத்தில் வாசஞ்செய்வதே யெனது தர்மமா? என்னுமிவை முதலிய அநேக சம்சயங்களால் வியாபிக்கப்பட்ட சித்தமுடையவனும் ஆகிய அத்தகைய யான் தங்களிடம் எனது மேன்மையை வினவுகின்றேன். ஆகையினால், எந்தப் பரம புருஷார்த்தமான சிரேயசு, ஏகாந்திக வடிவமும் ஆத்தியந்திக வடிவமும் நிச்சயமாயாமோ, அத்தகைய சிரேயசைத் தாங்கள் எனக்குக் கூறுவீர்களாக. அவற்றுள், தனது சாதனங்களின் பின்னர் அவசியம் உண்டாகுந் தன்மைக்கு ஏகாந்திகத்தன்மை யெனப்பெயராம். ஒருதரமுற்பன்னமாயதற்கு மீண்டொருக்காலும்

* கார்ப்பண்யம்=கிருபணத்தன்மை (லோபம்) † திரஸ்காரம்=நிந்தை.

நாசமுண்டாகாதிருத்தற்கு ஆத்தியந்திகத் தன்மையெனப் பெயராம். எங்ஙனம் உலகத்தில் ஔஷதங்கொண்ட பின்னர் ஒருகால் ரோகத்தின் நிவிருத்தி யுண்டாவதுமின்றாம். ஒரொருக்கால் அவ்வௌஷதத்தால் ரோகத்தின் நிவிர்த்தி யுண்டாகியும் விடும். ஆயினும், மீண்டும் ரோகத்தினுற்பத்தியால் அந்த ரோகத்தின் நிவிருத்தி நாசமடைந்துவிடும். இவ்வாறு யாகஞ்செய்தும் ஏதாவது பிரதிபந்தகத்தின் வயத்தால் சுவர்க்கப்பிராப்தியு முண்டாவதுமின்றாம். அந்த யாகத்தாலடையப்பெறினும், சுவர்க்கம் துக்கங்களால் * மிசிரிதமாகவே யுண்டாம்; அங்ஙனமே நாசத்தையுமடையும். ஆகையினால், ரோகநிவிருத்தியிலும் சுவர்க்கப் பிராப்தியிலும் அவ்வேகாந்திகத் தன்மையும் ஆத்தியந்திகத் தன்மையுஞ் சம்பவியாது. பிரஹ்மான்ம சாக்ஷாத்காரத்தின் பின்னர் அப்பரம புருஷார்த்த வடிவ சிரேயசானது அவசியம் பிராப்தமாம். ஆகையினால், அந்தச் சிரேயசில் ஏகாந்திகத் தன்மையுமுளது. ஒருதரம் அடையப்பெற்ற அந்தச் சிரேயசு ஒருக்காலும் நாசத்தையடைவதின்றாமாதலின், அதனிடத்து ஆத்தியந்திகத் தன்மையுமுளது. அத்தகைய சிரேயசைத் தாங்கள் எனக்கு உபதேசிப்பீராக.

ஹே அர்ச்சுன! சுருதியில் இஃதறையப்பட்டுளது :—

நாவ்ருதாயாஶிஷ்யாயவெவ்ருநூ ॥

(பொ-ள்.) எப்புருஷன் புத்திரபாவமும் சிஷ்யபாவமு மின்றியவனோ, அவனுக்குப் பிரஹ்மவித்தையி னுபதேசஞ் செய்யற்க என்பதாம். ஆனால், நீயோ எனது சிநேகிதனும். எனது சிஷ்யன் நீயன்றாம். ஆகையினால், உன்பொருட்டு யானெவ்வாறு சிரேயசை யுபதேசிப்பேனெனப்பகவானது சங்கையுண்டாக அர்ச்சுனன் கூறுகின்றான் :—ஶிஷ்யஸ்தேஹம் "உமது சீடனாயிருக்கின்றேன்" ஹே பகவன்! தங்களது சிக்ஷைக்குத்தகுதி யுடையனாதலால் யான் தங்களுடைய சிஷ்யனேயாம்; தங்களுடைய சிநேகிதனன்றாம். ஏனெனின், சமானஞானமுடைய புருஷர்கட்கே பரஸ்பரம் சிநேகித பாவமுண்டாம். ஏற்றத்தாழ்வாய ஞானமுடைய புருஷர்கட்குப்பரஸ்பரம் சிநேகிதபாவ முண்டாவதின்றாம்; ஆனால்,யானோ தங்களை யபேக்ஷித்து அத்தியந்தங் குறைந்த ஞானமுடையவனா யிருக்கின்றேன். ஆகையினால், யான் தங்களுடைய சிநேகிதனன்றாம்; மற்றோ சிஷ்யனும். ஆகையினால், தங்களைச் சரணாகதியாக வடைந்திருக்கும் சிஷ்யனாகிய எனக்குத் தாங்கள் கிருபையால் சிரேயசை யுபதேசஞ் செய்வீர்களாக. சிஷ்யபாவமின்மையினெண்ணத்தால் தாங்கள் என்னை யுபேக்ஷைசெய்து விடக்கூடாது; இவ்வளவால் பிரஹ்ம வேத்தாவாய குருவின் சமீபத்தே சீடனது செல்கையைத் தெரிவிப்பதாகிய இரண்டு சுருதிகளின் பொருள் நிரூபிக்கப்பட்டது. அவ்விரண்டு சுருதிகளும் :—

தத்விஜ்ஞாநாயஸ஗ுருமெவாபிக஛ெத் ஸமித்பாணிஃ

ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் எனவும்

ஹரிமெவெஜ்வாலிணி வருணம் விதரஉவஸஸார

அயீஹிஹமவொ ப்ரஹ்மஃ எனவுமாம்.

(பொ-ள்.) பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு இவ்வதிகாரி புருஷன் தனதுகையில் சமித்து முதலிய தக்ஷிணையைக் கவர்ந்துகொண்டு அசேஷசாஸ்திர பாண்டித்தியமும், பிரஹ்ம ஸாக்ஷாத்காரமுமுடைய குருவின்பாற் செல்க. வருணனது புத்திராகிய பிருகு இருஷியென்பவர் பிரஹ்ம ஞானத்தை யடையும் பொருட்டுத் தனது வருண பிதாவின் சமீபத்திற் சென்று. ஹே பகவன்!

* மிசிரிதம்=கலப்புற்றது.

என்பொருட்டுப் பிரஹ்மத்தின் உபதேசத்தைச் செய்யுங்கள் என்றிவ்வாறு வினவினர். இவ்வருண பிருகுவின் சம்வாதம் ஆத்ம புராணத்தின் பத்தாவதத்தியாயத்தில் யாம் விஸ்தாரமாய் நிரூபணஞ் செய்துளேம். (7)

(அ-கை.) ஹே அர்ச்சுன! நீ சர்வ சாஸ்திரங்களேயும் உணர்ந்தபண்டிதனும். ஆகையினுல், நீயே சிரேயசைவிசாரஞ் செய்தி, எதன் பொருட்டு எனக்குச் சிஷ்யனுகின்ருய்? எனப்பகவானது சங்கை யுண்டாக, அர்ச்சுனன் கூறுகின்ருன் :—

சு-ம். நஹிப்ரபஶ்யாமி மமாபநுத்யாத் ।
யச்சோகமுச்சோஷணமிந்த்ரியாணாம் ॥
அவாப்யபூமாவஸபத்நம்ருத்தம் ।
ராஜ்யம்ஸுராணாமபிசாதிபத்யம் ॥

ப-ம். நஹி 7 ப்ரபஶ்யாமி 8 மம 2 அபநுத்யாத் 6 யத் 1 ஶோகம் 5 உச்சோஷணம் 4 இந்த்ரியாணாம் 12 அவாப்ய 9 பூமௌ 10 அஸபத்நம் ருத்தம் 11 ராஜ்யம் 14 ஸுராணாம் 16 அபி 13 ச 15 அதிபத்யம்

(அ-ம்.) ஹே பகவன்! இவ்வுலகத்தில் பகைவரற்றுத் தனதான்யாதிகளோடு கூடிய ராஜ்யமும், தேவர்கட்குத் தலைவனுயிருத்தலுங் கிடைக்கப் பெறினும், இந்திரியங்களேச் சந்தாபப்படுத்தும் என்துயரத்தை நீக்குவதாகிய சிரேயசையான் அறிகின்றிலேன்.

(வி-ம்.) ஹே பகவன்! எந்தச் சிரேயசினடைவு எனது சோகத்தை நிவிர்த்தி செய்யுமோ அந்தச் சிரேயசை யான் உணர்கின்றிலேன், அதனுல்தாங்கள் என் பொருட்டு அந்தச் சிரேயசை யுபதேசியுங்கள். இத்துணை கூறியதால் அர்ச்சுனன் இச்சுருதியின் பொருளேக் குறிப்பித்தனன் :—

சுருதி. ஸோஹம் பகவ: ஶோசாமிதம்மா பகவாஞ்சோகஸ்ய ।
பாரம்தாரயது என

(பொ-ள்.) ஹே சனற்குமார பகவானே! ஆத்மாவை யுணர்ந்தோன் * சோகத்தைக் கடப்பன் என்னும் இவ்வார்த்தையை யான் தங்களேப் போன்ற வித்துவான்களாய புருஷர் வாயிலாய்க் கேட்டுளேன்; ஆனுல், நாரதனுகிய யானே சோகத்தை யடைகின்றேன். ஆகையினுல், யான் ஆன்மவேத்தாவல்லேன், இத்தகைய நாரதனுகிய என்னைச் சோகத்தின் கரைசேருமாறு செய்யுங்கள். கருத்திதுவாம் :—பிரஹ்ம வித்தையின் உபதேசத்தால் எனது சோகத்தைநாசஞ் செய்வீர்களாக என்பதாம். இச்சனற்குமார நாரதரின் சம்வாதத்தை ஆன்மபுராணத்தின் பதின்மூன்ரும் அத்தியாயத்தின்கண் யாம் விரிவாய் நிரூபித்திருக்கின்ரேம்.

ஹே அர்ச்சுன! அந்தச் சோகத்தை நிவிருத்தி செய்யாவிடினும் உனக்கு வரும் ஹானியென்? எனப்பகவானுக்கு ஆசங்கையுண்டாக, அர்ச்சுனன் அச்சோகத்திற்கு விசேஷணங் கூறுகின்ருன் இந்த்ரியாணாமுச்சோஷணம் என. ஹே பகவன்! அச்சோகமானது எக்காலத்திலும் எனது இந்திரியங்கட்குச் சோகத்தை யுண்டுபண்ணுவதாம்; அத்தகைய சோகமிருப்பதால் எனக்கு மிகுதி

* சோகம்=துக்கம்.

யாய ஹானியுளது. ஆகையினுல் அச்சோகத்தை அவசியம் நிவிருத்திசெய்தல்வேண்டும். ஹே அர்ச்சுன! நீயுத்தத்திற் பிரவிர்த்திக்கினே, உனக்குச் சோகத்தின்நிவிருத்தியவசியமுண்டாம். ஆண்டு யுத்தத்தில் நீ வெற்றியை யடையினே, ராஜ்யத்தினடைவாலுனக்குச் சோகத்தின் நிவிருத்தியுண்டாம். அன்றியும் யுத்தத்தில் நீ மரணத்தை யடையினே, சுவர்க்கத்தின் பிராப்தியால் உனக்குச் சோகத்தின் நிவிருத்தியுண்டாம். ஆகையினுல், சோக நிவிருத்தியின்பொருட்டு நீ யுத்தத்தை விட்டு வேறுபாயத்தை எதன்பொருட்டுத் தேடுகின்ருய்? எனப் பகவானது சங்கையுண்டாக அர்ச்சுனன் கூறுகின்ருன் :—அவாவஹுஹ‒ஒஉள என, ஹே பகவன்! இப்பூமியில் பகைவரின்றித் தனதான்யாதி பதார்த்தங்களோடுற்ற ராஜ்யத்தையடையினும், அங்ஙனமே இந்திரனே முதற்கொண்டு ஹிரண்யகர்ப்ப பரியந்தமுள்ள எல்லாத் தேவதைகளின் ஐசுவரியத்தை ஒருகால் யானடையப் பெற்றிடினும், எந்தச் சிரேயசு எனது சோகத்தை நிவிருத்திசெய்யுமோ, அதை யானறிகின்றிலேன். ஆகையினுல், அந்தச்சோகத்தை நிவிருத்திசெய்வதாகிய சிரேயசானது இந்த யுத்தத்திலும் வேருய ஒன்றேயாம். கருத்திதுவாம் :—இவ்வுலகத்தின் விஷயபோகத்திலும், அங்ஙனமே சுவர்க்காதி உலகங்களின் விஷயபோகத்திலும், சுருதிப்பிரமாணத்தாலும், யுக்திவடிவ அநுமானப் பிரமாணத்தாலும், அநித்தியத்தன்மையே பெறப்படுகின்றது. ஆகையினுல், அவ்வநித்திய போகங்களாற் சோகத்தின் நிவிருத்தி சம்பவியாது. மாருய் அப்போகங்கள் முக்காலத்திலும் இப்புருஷனுக்குச் சோகத்தையே விளைவிப்பனவாம். ஆண்டு அடையப்படாத போகத்தின் இச்சையால் இப்புருஷனுக்குச் சோகத்தினடைவுண்டாம். அன்றியும் அப்போகங்கள் அடையப்படுங்கால் பராதீனத் தன்மையாலும் நாசத்தின் பயத்தாலும் இப்புருஷனுக்குச் சோகத்தினடைவுண்டாம். அன்றியும் அப்போகங்கள் நாசமாகுங்கால் அவற்றின் வியோகத்தால் இப்புருஷனுக்குச் சோகத்தினடைவுண்டாம்; இத்தகைய சோகத்தைச் செய்வனவாகிய அநித்திய போகங்களால் சோகத்தின் நிவிருத்தி சம்பவியாது.

சு-ம். தஃ்யெஹ கஉ-ஜிதொ லொகஃ க்ஷீயதெ ।
ஊவஜெவாஉ‒தூ வ‒ணுஜிதொலொகஃ க்ஷீயதெ ॥ என

(பொ-ள்.) எங்ஙனங் கர்மத்தாலடையப்படுதலின், இவ்வுலகத்துள்ள பதார்த்தங்கள் நாசத்தை யடைகின்றனவோ, அங்ஙனமே புண்யகர்மத்தா லடையப்படுதலின், சுவர்க்காதி யுலகங்களிலுள்ள பதார்த்தங்களும் நாசத்தையடைவனவாம் என்பதாம். இச்சுருதியால் சர்வ போகங்களிடத்தும் அநித்தியத்தன்மையே பெறப்படுகின்றது. அன்றியும் இவ்வுலகத்தினவும் பரலோகத்தினவுமாய சர்வ பதார்த்தங்களும் அநித்தியமாதற்குரியனவாம், காரியமாயிருத்தலின், யாதுயாது காரியமாமோ அஃதஃதநித்தியமேயாம். எங்ஙனம் பிரசித்த கடாதிகளைப்போலும். என்றிவ்வாருகிய அநுமானவடிவ யுக்தியினுலும், அவ்வெல்லாப் போகங்களிலும் அநித்தியத் தன்மையே பெறப்படுகின்றது. ஆனல் இவ்வுலகத்துள பதார்த்தங்களின் நாசமோ, எல்லா வுலகருக்கும் பிரத்தியக்ஷமாகவே பிரதீதியாகின்றது. இத்தகைய அநித்திய பதார்த்தத்தி னடைவால் சோகத்தின் நிவிருத்தி சம்பவியாது. ஆகையினுல் சோகத்தின் நிவிருத்தியின் பொருட்டு யுத்தஞ்செய்வது எனக்குத்தகுதியன்ரும். இவ்வளவால் இகலோக பரலோக போகங்களின் வைராக்கியம் அதிகாரியின் விசேஷணரூபமாய் வர்ணிக்கப்பட்டது.

(அ-கை.) ஹே சஞ்சயரே! இவ்வாருகிய வசனங்களைக் கூறி அவ்வர்ச்சுனன் யாது செய்தனன்? எனத் திருதராஷ்டிரரின் ஆகாங்க்ஷை யுண்டாகச் சஞ்சயர் கூறுகின்ரூர் :—

ஸ-ம். ஏவமுக்த்வா ஹ்ருஷீகேஶம் குடாகேஶ: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥

ப-ம். ஏவம் 4 உக்த்வா 5 ஹ்ருஷீகேஶம் 3 குடாகேஶ: 2 பரந்தப: 1 ந 6 யோத்ஸ்யே 7 இதி 8 கோவிந்தம் 9 உக்த்வா 10 தூஷ்ணீம் 11 பபூவ ஹ 12

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! பகைவருக்குத் துயரைச் செய்பவனும் துயிலைவென்றவனுமாகிய அர்ச்சுனன் இருஷீகேசராகிய பகவானிடம் இவ்வாறாகிய வசனங்களைக்கூறி முடிவில் பின்னர் யான் போர்புரியேன் எனக் கோவிந்தனிடங் கூறிவிட்டுத் தூஷ்ணீம் பாவத்தை யடைந்தனன்:

(வி-ம்.) குடாகமென்பது நித்திரைக்காம், அந்த நித்திரையைத் தன்வயப் படுத்துபவனைக் குடாகேசனென்பர். குடாகேச சத்தத்திற்கு வேறுபொருள் முதலத்தியாயத்திற் கூறியுள்ளோம். அத்தகைய நித்திரைவடிவ * ஆலஸ்யமின்றிய வனும், தனது சத்துருக்கட்குத் துக்கத்தினடைவைச் செய்பவனுமாகிய அர்ச்சு னன், இருஷீகமெனப் பெயரிய இந்திரியங்களின் பிரவர்த்தக அந்தர்யாமியாகிய கிருஷ்ண பகவானிடம் அம்முறக்கூறிய வசனத்தைக் கூறியபின்னர் யான்இப்பீஷ் மத்துரோணாதியரோடு ஒருகாலும் போர்புரியேன், என்றிவ்வாறாகிய வசனத்தை அக்கோவிந்தனிடங் கூறிவிட்டுத் தூஷ்ணீம்பாவத்தை யடைந்தனன். ஈண்டு, கோவிந்தனென்னும் பதத்திற்குச் சாஸ்திரத்தில் இவ்வாறாகிய பொருள் கூறப் பட்டுளது.

கோபிர்வேதாந்த வாக்யைரேவ விந்த்ய
தே ஹ்யஸௌ இதி கோவிந்த:

(பொ-ள்.) கோ சப்தம், தத்துவமஸி, அஹம்பிரஹ்மாஸ்மி இவை முதலிய வேதாந்த வாக்கியங்களின் வாசகமாம். அவ்வேதாந்த வாக்கியங்களாலே அடை யப்படுபவனைக் கோவிந்தனென்பர். அல்லது,

காம் வேதரூபாம் வாணீம் விந்ததீதி கோவிந்த:

(பொ-ள்.) இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேத வடிவமாய †வாணிகளை எவன் நன்றாகத்தெரிந்தவனோ அவனைக் கோவிந்தனென் பர். இவ்வளவுகூறியதால் சர்வ வேதங்களின் உபாதான காரணத்தன்மை வடி வத்தாற் கிருஷ்ண பகவானிடத்துச் சர்வஞ்ஞத்தன்மை குறிப்பிக்கப்பட்டது. இச்சுலோகத்தின் ஆதியில் ஏவமுக்த்வா என்னும் வசனத்தால் அவ்வர்ச்சுனன் கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே என்றறற் றொடக்கத்து வசனங்களைக்கொண்டு யுத்தத் தின் ஸ்வரூபத்தினது அயோக்கியத் தன்மையைக் கூறினன். அதன்பின்னர் ந யோத்ஸ்யே என்னும் வசனத்தால் அவ்வர்ச்சுனன் அப்போரின் பலாபாவத்தைக் கூறினன் :—அதன்பின்னர் அவ்வர்ச்சுனன் தூஷ்ணீம் பாவத்தை யடைந்தனன். கருத்திதுவாம்:—யுத்தத்தின் பொருட்டு அர்ச்சுனனால் முன்னர் நேத்திராதி பாஹ்ய இந்திரியங்களின் தர்சனாதிவடிவ வியாபாரஞ் செய்யப்பட்டது. அவ் வெல்லா வியாபாரத்தின் நிவிருத்தியால் நிர்வியாபாரமுண்டாயது. இதுவே அர்ச் சுனனது தூஷ்ணீம் பாவமென்க. கேவலம் வாக்குமாத்திரத்தின் நிரோதம் தூஷ்ணீம் பாவமன்றென்றுணர்க. ஈண்டு பபூவஹ என்னும் வசனத்தின் கண்ணுள்ள 'ஹ' என்னுஞ் சத்தத்தால் இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது :— இயல்பாகவே ஆலஸ்யமின்றியவனும் எல்லாப் பகைவரையுந் துன்புறுத்துவோனு மாகிய அர்ச்சுனனிடத்தே ஆகந்துக ஆலஸ்யமும், அங்ஙனமே பகைவரைத்

* ஆலஸ்யம்=சோம்பல். † வாணி=வாக்கு.

துன்புறுத்தாமையும் ஒருகாலு மிருத்தல் கூடாதென்பதாம். சர்வஞ்ஞத்தன் மையைக் குறிப்பிப்பதாகிய 'கோவிந்த' பதம், சர்வசக்தி சம்பன்னத் தன்மை யைக் குறிப்பிப்பதாகிய 'இருஷீகேசபதம்' என்னும் இவ்விரு பதங்களால் அக் கிருஷ்ணபகவானிடம் அர்ச்சுனனது சோகமோகத்தை நிவிருத்தி செய்வதில் ஆயாசமின்மையைச் சூசிப்பித்ததாம். சர்வ சக்தி சம்பன்னரும் சர்வஞ்ஞரு மாகிய கிருஷ்ண பகவானுக்கு அத்தியந்தம் அற்பமாகிய சோகமோகத்தை நிவிருத்தி செய்வதில் என்னபரிசிரம முளது? என்பது கருத்தாம். (9)

(அ-கை.) ஆண்டு யுத்தத்தில் உபேக்ஷயுடைய அர்ச்சுனனைப் பகவானும் உபேக்ஷயே செய்தல் வேண்டுமெனவுண்டாம் துராசையை நிவிருத்தி செய்தற் பொருட்டு, யுத்தத்தில் அர்ச்சுனனது உபேக்ஷயைப் பார்த்தும் அக்கிருஷ்ண பகவான் அர்ச்சுனனை யுபேக்ஷ செய்யவில்லை என்னும் இவ்வசனத்தைச் சஞ்சயர் திருதராஷ்டிரரிடங் கூறலுற்றார்.

சு-ம். 𑌤𑌮𑍁𑌵𑌾𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍𑌨𑌿𑌵 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑍇𑌨𑌯𑍋𑌰𑍁𑌭𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌮𑌿𑌦𑌂 𑌵𑌚𑌃 ॥

ப-ம். 𑌤𑌂 7 𑌉𑌵𑌾𑌚 12 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑌃 2 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍 8 𑌇𑌵 9 𑌭𑌾𑌰𑌤 1 𑌸𑍇𑌨𑌯𑍋𑌃 4 𑌉𑌭𑌯𑍋𑌃 3 𑌮𑌧𑍍𑌯𑍇 5 𑌵𑌿𑌷𑍀𑌦𑌨𑍍𑌤𑌂 6 𑌇𑌦𑌂 10 𑌵𑌚𑌃 11

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! அக்கிருஷ்ண பகவான் இருசேனைகளின் மத்தியில் துக்கத்தை யடைந்து நிற்கும் அவ்வர்ச்சுனனிடம் புன்னகை செய்கிற வர்போன்று இவ்வார்த்தையைக் கூறலாயினர்.

(வி-ம்.) ஹே பாரதகுலத்தில் உற்பன்னராய திருதராஷ்டிரரே! முன்யுத்தத் தின் முயற்சியோடு அவ்விருசேனைகளின் மத்தியில்வந்து, அந்தமுயற்சியின் விரோதியாகிய மோகவடிவ விஷாதத்தை யடைந்த அவ்வர்ச்சுனனது அயோக்ய ஆசரணத்தைப் பிரகடஞ்செய்து லச்சைவடிவசமுத்திரத்தில் மூழ்குவித்தலொப்ப, அவ்வந்தரியாமியாகிய பகவான் அவ்வர்ச்சுனன் பொருட்டுப் பரம கம்பீரமாய பொருளையுடையதும், அங்ஙனமே அயோக்கிய ஆசாணத்தைப் பிரகாசிப்பிப்பது மாகிய, 𑌅𑌶𑍋𑌚𑍍𑌯𑌾𑌨𑍍 என்பன முதலிய மேற் கூறப்படும் வசனங்களைக் கூற லாயினர். ஈண்டு 𑌪𑍍𑌰𑌹𑌸𑌨𑍍 𑌇𑌵 என்னும் வசனத்தின்கண் உள்ள 𑌇𑌵, என் னுஞ் சத்தத்திற்கு இஃதபிப் பிராயமாம்:—அந்நிய புருஷனது அயோக்ய ஆச ரணத்தை வெளிப்படுத்தி அவனுக்கு லச்சையை (நாணத்தை) யுண்டு பண்ணுவ தற்கு 𑌪𑍍𑌰𑌹𑌾𑌸𑌂 எனப் பெயராம். ஆனால் அந்தலச்சை துக்கவடிவமேயாம். ஆகையினால் எப்புருஷன் எவனது துவேஷத்தின் விஷயனாவனோ, அப்புருஷனே அவனது பிரஹாஸத்தின் முக்கிய விஷயனாவன். அர்ச்சுனனோ, பகவானது துவே ஷத்தின் விஷயனன்றாம்; மற்றோ, பகவானது கிருபைக்கு விஷயனாம். அவ்வர்ச்சு னனது அயோக்கிய ஆசாணத்தைப் பிரகாசஞ் செய்வதுவும், அவனது லச்சை யினுற்பத்திக்குக் காரணமன்றாம்; மற்றோ, அர்ச்சுனனது விவேகத்தி னுற்பத்திக் குக் காரணமாம். ஆகையினால் அர்ச்சுனனிடத்து அந்தப் பிரஹாஸம் (புன்னகை) கௌணமாம், முக்கியமன்றாம். கருத்திதுவாம்:—எங்ஙனஞ் சிலபுருஷர் தமது பகைவர்கட்கு லச்சையை யுண்டுபண்ணும்பொருட்டு அவரது அயோக்ய ஆசா ணத்தைப் பிரகாசஞ் செய்வரோ, அங்ஙனமே அக்கிருஷ்ண பகவானும் அர்ச்சுன னுக்கு விவேகத்தை யுற்பத்தி செய்தற்பொருட்டு அவனது அயோக்ய ஆசாணத் தைப் பிரகாசஞ்செய்தனர். ஆனால் இலச்சையினுற்பத்தியோ, அயோக்கிய ஆசா ணத்தின் பிரகாசாநந்தரம் அவசியமேயுண்டாம். ஆகையினால் அந்த லச்சையி னுற்பத்தி ஆகுக; அல்லது ஆகாதொழிக. ஆனால் அந்த லச்சையை யுற்பத்தி

செய்வதிற் பகவானுக்குக் கருத்தின்றாம். கேவலம் விவேகத்தின் உற்பத்தியின் கண்ணே பகவானது தாற்பரியமாம். இவ்வெல்லாப் பொருள்களையும் உவ என்னுஞ் சத்தத்தாற் குறிப்பிக்கப்பட்டது. ஸெநயொரு—ஹயொஉ-ழயெர்விஷீஉஷஞ ஏன அர்ச்சுனனுக்கு விசேஷணங் கூறப்பெற்றதன்று அதனபிப்பிராயமிஃதாம்:— யுத்தமாரம்பிப்பதன் முன்னரே நினது கிருகத்திலிருந்தே ஒருகால் யுத்தத்தை யுபேக்ஷை செய்திருப்பையேயாயின், இவ்வுனது அயோக்யாசரணத்தைக் கூறு தொழிவேம்; ஆனால், நீயோ மிகுந்த சந்தோஷத்துடன் இப்போர்க்களத்தில் வந்து யுத்தத்தை யுபேக்ஷித்தனையாதலின், இவ்வுனது அத்தியந்தம் அயோக்கியமாய ஆசரணம் கூறப்பட்டதாம். இவ்வார்த்தை அஸொசூாநு என்பது முதலிய வசனங்களில் மேல்வெளியாம். (10)

மங்கலம்.

சேந்தா மரை புரை வீரநற் சேகரன் செய்ய பொற்று
ளிந்தா வேன வேனக் கீந்த போற் சீர்த்தியை யெண்ணி யெண்ணித்
தந்தோ மேன நிதம் பாடி நின் றாடி நற் சாரதி யாய்
வந்தே யருளரி கீதையைச் சேர்ந்தினி வாழ்கு வனே.

(அ-கை.) ஆண்டு அர்ச்சுனனுக்குப் போர்வடிவ சுவதர்மத்தின்கண்ணே முன்னமியல்பானே முயல்வுற்பன்னமாயினும் இருவகையாய மோகத்தானும், அம்மோகத்தானுற்ற சோகத்தானும் தடையுற்றதாதலின் மீண்டு மப்போர்வடிவ சுவதர்மத்தின்கண் அர்ச்சுனனை முயல்விக்குமாறு அவனதிருவகையாய மோகத்தை யொருதலைபாய்ச் சேய்மைத்தாக்குதலே தகுதியாம். அவற்றுள், சர்வ சம்சார தர்மமற்ற ஸ்வப்பிரகாச பரமாநந்தசொரூப ஆன்மாவின்கண்ணே ஸ்தூலசூக்ஷ்ம தேகங்கள் அவற்றின் காரணமாய அவித்தை யென்னும் மூன்றுபாதிகளின் விவேகமின்மையாற் பொய்த்தன்மைச் சம்சாரத்தின்கண் மெய்த்தன்மை ஆன்ம தர்மத்தன்மையே முதலாய தோற்றப்பாடே முதன்மோகமாம். அம்மோகமெல்லாப் பிராணிமாத்திரத்தே யுளதாமாதலின் அது சாதாரணமாம். போர்வடிவ சுவதர்மத்தின்கண்ணே ஹிம்சாதிகளின் மிகுதிப்பாட்டைக் கண்டு, அதன்மத்தன்மைத் தோற்றப்பாடே இரண்டாவது மோகமாம்; இம்மோகங் கருணாதிதோஷத்தாற் கேவலம் அர்ச்சுனனுக்கே உண்டாயதாதலின், இஃதசாதாரணமாம். ஆண்டு ஸ்தூலசூக்ஷ்ம காரணமென்னும் மூன்றுபாதிகளின் விவேகத்தாலுண்டாய சுத்தான்ம சொரூப போதமே முதன்மோக மோசகமாமாதலின், அஃதெல்லாப் பிராணிகட்குமே சாதாரணமாம். போரின்கண் ஹிம்சாதிகள் பொருந்தினும் அவை க்ஷத்திரிய மன்னர்கட்குத் தந்தர்மமாமாதலின், அவற்றின்கண் அதன்மரூபத்தன்மை யின்றாமென்னும் போதமே இரண்டாவது மோகத்தை யிரிப்பதாம். இப்போதமோ, கேவலம் அர்ச்சுனன் பொருட்டேயாமாதலின் அசாதாரணமாம். இவ்வண்ணம் இருவகையாய போதத்தால் இருவகையாய மோகமிரிக்கப்பெறவே அம்மோகரூப காரணங் கெட்டதால் அவனது சோகரூப காரியமும் தானே கெட்டுப்போம். அச்சோக நீக்கத்தில் வேறொரு சாதனாபேக்ஷை யின்றாமென்னுங் கருத்தால் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவ்விருவகையாய மோகத்தையுங் கூறியருளுபவராய் அர்ச்சுனனுக்கு உபதேசித்தருளத் தொடங்கி யருள்கின்றார்:—

ஸ்ரீ ஹமவாநு உவாச.

சு-ம். அஸொசூாநநுஸொசஸ்லம் ப்ரஜ்ஞாவாதாம்ஸ்ச ஹாஷஸெ ।
மதாஸூநமதாஸூம்ஸ்ச நாநுஸொசந்தி பண்டிதா: ॥ (11)

ப-ம். 1 அஸோச்யாநு 3 அந்வஸோசஃ 2 த்வம் 5 ப்ரஜ்ஞாவாதாநு 4 ச 6 பாஷஸே 8 கதாஸூநு 10 அகதாஸூநு 9 ச 11 ந 12 அநுஸோசந்தி 7 பண்டிதாஃ॥

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சோகித்தற்குரியரல்லாத பீஷ்மத்துரோணாதியரைக் குறித்து நீ சோகிக்கின்றனை. அங்ஙனே மதிமான்களால் மொழியத்தகாத மொழிகளை நீ மொழிகின்றனை; பண்டித புருஷரோ, உயிரற்ற உறவினரையும் உயிருற்ற உறவினரையும் பற்றிச் சோகியார்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆன்ம திருஷ்டியினானும், சரீர திருஷ்டியினானும் சோகித்தற்குரியரல்லாத இப்பீஷ்மத்துரோணாதியரைப் பற்றி நீ பண்டிதனாயிருந்தும் சோகிக்கின்றனை. இவர் என் நிமித்தமாய் மரணமுறுகின்றனர், என்றும் இவரின்றி யான் இராஜ்ஜிய சுகாதிகளை என்செய்வேன் என்றும் சோகத்தை த்ருஷ்ட்வேமம் ஸ்வஜநம் க்ருஷ்ண என்பதாதி வசனங்களாற்செய்தனை. அவ்வாறு சோகித்தல் தகுதியன்றாம்; ஏனெனின், சோகித்தற் கருகமல்லாத பொருளிற் சோகித்தல் தன்மைப் புத்திரூப மயலானது பசு பக்ஷிபாதி சர்வப் பிராணி மாத்திரத்தின் கண்ணும் சாதாரணமாம். நீயோ, அத்தியந்தம் பண்டிதனாகியும், அம்மயலையடைந்தனையாதலின், நினக்கு அம்மயலாதலத்தியந்தம் அனுசிதமாம். மேலும் குதஸ்த்வா கஸ்மலமிதம் என்பதாதி எனது வசனத்தால் நினக்கு இஃதென்னால் மிகவும் அனுசிதமாய்ச் செய்யப்பெற்றதென்னும், விசாரத்தினடைவுண்டாக வேண்டியதாயுமன்றோ விருந்தது; அன்றியும், நீ சுயமே புத்திமானாயிருந்தும், புத்திமான்களால் புகலத்தகாத கத²ம் பீ⁴ஷ்மம் அஹம் ஸங்க்²யே என்பதாதி வசனங்களையும் புகன்றனை. ஆனால் இலஜ்ஜையால் மௌனத்தை யுற்றிலை; இதனினும், மேலாய் வேறென்ன அனுசித விவகாரமுளதாம். ஆகையினால், அமரினின்று மகலுவதாய அதர்மத்தின்கண்ணே தன்மத்தன்மைப் புத்திரூப அசாதாரணமயலும், சமராகிய தன்மத்தின்கண் அதன்மத்தன்மைப் புத்திரூப அசாதாரணமயலும், அத்தியந்தம் பண்டிதனாகிய நினக் குசிதமன்றாம். அல்லது ப்ரஜ்ஞாவாதாம்ஸ்ச பாஷஸே என்னும் வசனத்திற் கிப்பொருள் கொள்ளுக:—ஆகத்தின் வேறாயான்மாவையறிந்த பிரஞ்ஞாவான்களுடைய நஷ்டே தேஹே ந ததம்வாஸஃ வதந்தி வித ஸோஹெந்த்யஷாம் என்பதாதி வசனங்களை மாத்திரமே நீ கூறுகின்றனையேயன்றி, அவரைப்போல அவ்வசனங்களின் உண்மையாய கருத்தை நீ யறிந்தாயில்லை, அறிவையேற் சோகமோகத்தை யடையாயன்றோ?

சங்கை:—ஹே பகவன்! வசிஷ்டாதி மகாபுருஷரும் தமது மைந்தர் முதலாகிய உறவினரின் மரணத்தால் மகாசோகத்தை யெய்தினராதலின், எனது உறவினரின் மரணத்தைப் பற்றிச்சோகித்தல் அனுசிதமன்றாம்; மற்றோ, சிஷ்டாசாரத்தாற் பெறலினுசிதமேயாம்.

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருள்கின்றார். கதாஸூநிதி ஹே அர்ச்சுன! விசாரத்தாலுதயமாய ஆன்மாவின் வாஸ்தவ சொரூப ஞானமுற்ற பண்டிதர் உயிரற்ற உறவினருடற்களைப் பற்றியும் உயிருற்ற உறவினருடற்களைப் பற்றியும் சோகியார். கருத்திதுவாம்:—மரணத்தை யடைந்த இவ்வெனது உறவினர் எல்லாப் பொருள்களையும் விட்டுவிட்டுச் சென்றனர். அவரிஞ்ஞான்றென்ன செய்கின்றனரோ, எத்தானத்துளரோ, இவ்வுயிர்வாழாநின்ற எனது உறவினர் மரித்த அவரை யொழித்தெங்ஙனம் உயிர்வாழ்வர், என்னும் வியாமோகத்தை அப்பண்டிதரடையார்; ஏனெனின், அந்தப் பிரஹ்ம வேத்தாக்களாய பண்டிதருக்குச் சமாதி காலத்திலோ, அவ்வுறவினரின் பிரதீதி யுண்டாகமாட்டாது; சமாதியினின்றும் வெளிக்கிளம்பிய காலத்திற் பந்துக்களின் பிரதீதியாயினும்,

அவர் அவரைப் பொய்யெனக் காண்பர். இரஜ்ஜுவடிவ அதிஷ்டான சாக்ஷாத்காரத்தாற் சர்ப்பமயல் நீங்கியபின் அதனுல் ஜனித்த பயகம்பாதிகள் சுயமே நீங்குவபோலவும், பித்த தோஷத்தோடுற்ற இரசனேந்திரியவானுக் கொருகால் வெல்லத்தின்கண்ணே கைப்பு ரசத்தோற்ற முளதேனும், அதன்கண் மதுர ரசத் துணிவு பலவானுதலின், கைப்பிரசேச்சையால் அதன்கண் முயல்வுண்டாகாததே போலவும், சோகவிஷயமல்லாப் பொருளிற் சோகித்தற்றன்மைப்புத்திரூப மயலும், அதிஷ்டானமாய ஆன்மாஞ்ஞானத்தால் ஆக்கப்பெற்றதாம். அதிஷ்டான ஆன்ம சாக்ஷாத்காரத்தால் அவ்வஞ்ஞான நிவிருத்தியுண்டாயின், அவ்வஞ்ஞானத்தின் காரியரூப சோகித்தற்றன்மை மயல் சுயமே நீங்கிவிடும். வசிஷ்டாதி மகா புருஷர் நுகர்வினையின் முதிர்ச்சியாற் சோகமோகாதி யுற்றனர்; அவற்றைச் சிஷ்டாசாரமெனக் கோடலேலாதாம். என்னே, சிஷ்டபுருஷர் தர்மபுத்தியால் அநுஷ்டியாநின்ற அலௌகிக வியவகாரமே சிஷ்டாசாரமெனக் கூறப்பெறுதலி னென்க. இச்சிஷ்டாசார இலக்கணம் அவ்வசிஷ்டாதியரின் சோகமோகாதிகளிற் பொருந்தாதாம். என்னே, அச்சோக மோகாதிகள் பசு பக்ஷி முதலிய எல்லாப் பிராணிகளிடத்தேயும் இயல்பானே யுளவாதலின், அவற்றில் அலௌகிக ரூபத் தன்மை சம்பவியாமையினென்க. அவ்வசிஷ்டாதியர் யாதேனுமொரு தர்மமதியாற் சோகமோகாதிகளைச் செய்திலராதலின், அவற்றின்கண்ணே சிஷ்டாசார ரூபத்தன்மை சம்பவியாது. இவ்வகையாய சிஷ்டாசார விலக்கணத்தைப் பரித்தியாகம் செய்து சாமானியமாய்ச் சிஷ்டபுருஷரின் வியவகார மாத்திரத்தையே பிரமாணமென அங்கீகரிக்கினே, அவர் தம் மல மூத்திராதி பரித்தியாகரூப இயல்பாய சேஷ்டையையும், சிஷ்டாசார ரூபமாய்க் கவரவேண்டும். ஆனல், அச்சேஷ்டையை எம்மதிமானுய புருஷனும் சிஷ்டாசார ரூபமாய்க் கவரானுதலின், வசிஷ்டாதியரின் சோகமோகத்தைக் கண்டு நீயும் சோகமோக முறல் யோக்கிய மன்றாம்

(அ-கை.) இப்போது நத்வேவாஹம் என்பதாதிய பத்தொன்பது சுலோகங்களால் அசோச்யாநந்வசோசஸ்த்வம் என்னும் வசனப்பொருளை விஸ்தாரமாய் நிருபித்து அதன்பின் ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய என்பதாதி எட்டுச் சுலோகங்களால் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே என்னும் வசனப் பொருளை விஸ்தாரமாய் நிரூபிப்பாம். என்னே, சாதாரண அசாதாரணமென முன்னம் புகன்ற இருவகையாய மோகங்களும் வேறுவேறான முயல்வானே நீங்குமன்றி ஒருமுயல்வால் நீங்காமையினென்க; ஆண்டுத் தூல சரீரத்தினின்றும் ஆன்மாவின் பேதத்தைத் துணிவு செய்தருளும்பொருட்டு, முதலில் ஆன்மாவின்கண் நித்தியத்தன்மையைத் துணிந்தருள்கின்றார் :—

சு-ம். நத்வேவாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமே ஜநாதிபா: ।
நசைவ நபவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ॥

ப-ம். 7 நதுஏவ 1 அஹம் 2 ஜாது 3 ந 4 ஆஸம் 8 ந 6 த்வம் 7 ந 9 இமே 10 ஜநாதிபா: 11 ந 12 ச 17 ஏவ ந 18 பவிஷ்யாம: 16 ஸர்வே 15 வயம் 13 அத: 14 பரம் ॥

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கிருஷ்ண பகவானுகிய யாம் இதன் முன்னம் ஒருகாலும் இல்லாதிருந்தேமெனக் கூறலடாதாம்; அங்ஙனமே அர்ச்சுனனுய நீ இதன் முன்னம் ஒருகாலும் இல்லாதிருந்தா யெனவுங் கூறலேலாதாம்; அங்ஙனே இவ் வெல்லாவிறைவரும் இதன்முன்னம் ஒருகாலும் இல்லாதிருந்தாரெனவுங் கூறல் கூடாதாம்; மற்றே, யாமும் நீயும் இவ்விறைவர் யாவரும் முன்னமிருந்தேயுளேம்;

அங்ஙனே இனிமேலும் நாம் யாவரும் இல்லாதிருப்பே மெனவுமியம்ப வேலாதாம். மற்றே, நாம் யாவரும் இனிமேலும் இருப்போமென்றுணர்க.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எல்லாவுலகிற்குங் காரணமாய கிருஷ்ண பகவானைய யாம் இதற்குமுன்னம் ஒருகாலும் இல்லாதிருந்தே மென்பதா யியம்பொணாதாம்; மற்றே, இதற்கு முன்னமும் யாமிருந்தேம். அவ்வாறே அர்ச்சுனனைய நீயும் இப்பீஷ்மத்துரோணாதியாய இறைவரியாவரும் இதற்குமுன்னம் ஒருகாலும் இல்லாதிருந்தேம் எனப்புகலப் போகாதாம். மற்றே அர்ச்சுனனைய நீயும் இப்பீஷ்மத்துரோணாதி இறைவரியாவரும் இதற்குமுன்பு மிருந்தேம். இத்துணையியம்பியதாலான்மாவின்கண் முன்னின்மையின் எதிர்மறைத்தன்மையின்மை காண்பிக்கப்பெற்றதாமென்க. கிருஷ்ணபகவானைய யாமும், அர்ச்சுனனைய நீயும், இப்பீஷ்மத்துரோணாதி யெல்லாவிறைவரும் இனிமேல் ஒருகாலும் இல்லாதிருப்பேம் எனச் சாற்றல் தகாதாம்; மற்றே, இனிமேலும் நாமியாவருமிருப்பவே யிருப்பேம். இத்துணையிம்பியதானே, ஆன்மாவின்கண்ணே பின்னின்மையின் எதிர்மறைத் தன்மையின்மையைக் காண்பிக்கப் பெற்றதென்றுணர்க. இஃதியியம்பியதால் இப்பொருள்துணியப் பெற்றதாம் :—இறந்தகாலத்தின்கண்ணும் எதிர்காலத்தின்கண்ணும் நிகழ்காலத்தின்கண்ணும் யாதுளதாமோ, அஃதை நித்தியமென்பர். இந்நித்திய இலக்கணமும் ஆன்மாவின்கண்ணே பொருந்துமன்றி, ஸ்தூலவாகத்துட் பொருந்தாதாதலின் இவ்வான்மாவே நித்தியமாம்; நித்தியமாதலினிவ்வான்மா ஸ்தூலசரீரத்தினின்றும் விலக்ஷணமே யெனத் துணியப்பெறும். இவ்விலக்ஷணத் தன்மையை நத்வேவாஹம் என்னும் இவ்வசனத்தின்கண் இராநின்ற "து" என்னுஞ் சத்தத்தாற் குறிப்பிக்கப்பெற்றதா மென்றறிக. (12)

(அ-கை.) ஹே பகவன்! சேதனத்தன்மைத் தன்மதத்தாற் சிறப்புற்ற இத்தூலவாக்கையே ஆன்மாவாமெனச் சார்வாகராய நாஸ்திகராங்கீகரித்துளார், இங்ஙனம் அங்கீகரித்தலின் அவர் தம்மதத்தே யான்ஸ்தூலன், யான் கௌரன் (வெள்ளையன்) யான் நடப்போன் என்பவாதி ஞானங்கட்குப் பிராமாண்யத் தன்மையும் பாதமின்றியே துணியப் பெறுமென்ப. இத்தேகத்தினும் வேறுயான்மாவை யுடன்படினே இவ்வெவ்லா ஞானங்களும் அப்பிரமை ரூபங்களாமாதலின், இத்தூலவாகத்தினும் ஆன்மா வேறன்றும்; மற்றே, ஸ்தூலத்தன்மை கௌரத்தன்மை முதலிய தர்மங்களோடு கூடிய இத்தூல தேகமே யான்மாவாம். அல்லது, இத்தூல சரீரத்தினும் ஆன்மாவை வேறெனை அங்கீகரிப்பினும், அவ்வான்மாவின் கண்ணே பிறப்பிறப்பின்மை சம்பவியாதாம். ஏனெனின், தேவதத்தன் எனப் பெயரிய புருஷன் பிறப்பை யடைந்தனன், இறப்பை யடைந்தனன் என்னுந் தோற்றம் யாவருக்கும் நிகழ்கின்றதாதலின் *ஆகப்பிறப்போடு ஆன்மாவும் பிறக்கும், ஆகவிறப்போடு ஆன்மாவுமிறக்கும் என அர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக அதற்குத்தரம் ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார் :—

சு-ம். தேஹிநோऽஸ்மிந்யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா ।
ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ்தத்ர ந முஹ்யதி ॥

ப-ம். 2 தேஹிந: 3 அஸ்மிந் 1 யதா 4 தேஹே 5 கௌமாரம் 6 யௌவநம் 7 ஜரா
8 ததா 9 தேஹாந்தரப்ராப்தி: 11 தீர: 10 தத்ர 12 ந 13 முஹ்யதி ॥

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேஹியாய ஆன்மாவிற்கு இத்தேகத்தின்கண்ணே கௌமாரம் யௌவனம் ஜரையென்னும் மூன்றவஸ்தைகள் அடைவுறு மாறே போல, வேறு தேகவடைவு முண்டாம். அதன்கண்ணே தீரனானவன் மோகத்தை யடைவுறான்.

* ஆகம்=சரீரம்.

(வி-ம்.) பூத பவிஷ்யத் வர்த்தமான மென்னும் மூன்றுகாலங்களில் இரா நின்ற எத்துணைச் சகத்மண்டலத்துள்ள தேகங்களோ, அவையாவும் எவர்க்காமோ, அவரைத் தேகியென்பர். அவ்வொரே தேகியாய ஆன்மா விபுவாதலிற் சர்வ சரீரங்களோடுஞ் சம்பந்த வானுமாதலின், அவ்வொரு சேதனமாய ஆன்மாவானே சர்வ சரீரங்களிற் பல்வகையாய சேஷ்டைகள் சித்தமாதல் கூடுமென்றறிக. ஆகந்தோறும் ஆன்மாவின் வேற்றுமையை யங்கீகரிப்பதிற் சிறிது மாத்திரையும் பிரமாணமின்றாம். இப்பொருளைக் குறிப்பிக்கும் பொருட்டே தேஹீ என்னும் பதத்தின்கண் ஒருமை மொழி மொழியப் பெற்றது. முற் சுலோகத்தின்கண்ணே ஸர்வே வயம் என்னும் பன்மை மொழி கூறப்பட்டதன்று, அதற்கோ சரீரங்களின் வேற்றுமையின்கண்ணே தாற்பரியமே யன்றி ஆன்மாவின் வேற்றுமையின்கண்ணே தாற்பரியமன்றாம். ஆதலின் முன்பின் மொழிகட்கு முரணின்றாமென்க. இத்தகைய ஒரு தேகியாய ஆன்மாவிற்கு, இத்தேகத்தின் கண்ணே பாலியம், யௌவனம், விருத்தம் என்னும் ஒன்றற்கொன்று முரணுய மூன்றவஸ்தைகளுளவாம். அப்பாலியாதி மூன்றவஸ்தைகளின் பேதத்தால் அத்தேகியாய ஆன்மாவிற்குப் பேதமுளதாகாது. ஏனெனின், முன்னம் பாலிய அவஸ்தையின்கண், எனது தாய்தந்தையரை யனுபவித்த யானே, இப்போது விருத்தாவஸ்தையின்கண் எனது புத்திர பௌத்திராதிகளை யனுபவிக்கின்றேன் என வுளதாம் பிரத்தியபிஞ்ஞை ஞானத்தின் பலத்தால் பாலிய அவஸ்தையி னுன்மாவிற்கும் விருத்தாவஸ்தையின் ஆன்மாவிற்கும் அபேதமேதுணியப்பெறும். பாலிய அவஸ்தையின் சரீரத்திற்கும், விருத்த அவஸ்தையின் சரீரத்திற்கும் உளதாய பேதமோ யாவருக்கும் கண் கூடாயே புலப்படும். ஆகையினுல், ஆகபேதத்தால் ஆன்மாவின் பேதமுளதாகாது. இங்ஙனம் ஜன்மாதி விகாரமற்ற ஆன்மாவிற்கு இச்சரீரத்தினின்றும் அத்தியந்தம் விலக்ஷணமாய சரீரத்தின் அடைவு கனவின் கண்ணும் யோகவைபவத்தால் உண்டாய ஐசுவரியத்தின் கண்ணும் உண்டாம். ஆண்டு, அவ்வத்தேகங்கட்கு வேற்றுமை புலப்படினும் அவனே யான் என்னும் பிரத்தியபிஞ்ஞை யுணர்ச்சியின் வலுவால் ஆன்மாவின் ஒருமையே துணியப்பெறும். ஒருகால் இத்தூல தேகமே ஆன்மாவாயின் பாலிய யௌவனுதி யவஸ்தைகளின் வேற்றுமையால் ஆகவேற்றுமை துணியப்பெறவே, அவனே யான், என்னும் பிரத்தியபிஞ்ஞை யுணர்ச்சியுண்டாகலாகாது. ஏனெனின், அந்நியனிடத்திருக்கும் சமஸ்காரமானது அந்நியனுடைய பிரத்தியபிஞ்ஞை யுணர்ச்சிக்குக் காரணமன்றாம்; மற்றோ ஒரு நிலைக்களத்துற்ற சமஸ்காரத்திற்கும் பிரத்தியபிஞ்ஞை ஞானத்திற்கும் பரஸ்பரம் காரண காரிய பாவமுண்டாம். அல்லது பாலியம், யௌவனம், விருத்தம் என்னும் மூன்றவஸ்தைகளும் வேற்றுமையுடையனவாயினும், அவ்வவஸ்தா ரூப தர்மங்களின் ஆசிரயமாய ஆகமானது பாலிய அவஸ்தை தொடங்கி விருத்த அவஸ்தைவரை ஒன்றேயுளது. அத்தேகத்தின் ஒருமையையே அந்தப் பிரத்தியபிஞ்ஞை ஞானம் விஷயம் செய்கிறது. ஆன்மாவின் ஒருமையை அது விஷயம் செய்வதின்றாம் என அச்சார்வாகன் சாற்றுவானுயின், அது சம்பவியாது. ஏனெனின், கனவின்கண்ணே நனுத்தேகத்தினும் வேறாயே தேகமுண்டாம்; யோகமகிமையால் யோகியானவன் ஆகங்களனேகத்தை யாக்குவன். ஆண்டுத் தன்மிகளாகிய ஆகங்கட்கே பேதமாம். ஆதலின் ஆண்டு அவனே யான் என்னும் பிரத்தியபிஞ்ஞை ஞான முண்டாகலாகாது; ஆனுல் அவனே யானென்னும் பிரத்தியபிஞ்ஞைஞானமோ கனுக்காண்போனுக்கும் யோகிக்கும் உண்டாம். ஆகையினுல் ஆகங்களின் ஒருமையை அந்தப் பிரத்தியபிஞ்ஞை ஞானம் விஷயம் செய்யமாட்டாது. இக்கருத்தேபற்றி பாலியாதி யவஸ்தைகளும், கனுக்காண்போன் யோகியென்னும் இருவரின் தேகங்களும் திருஷ்டாந்தமாய்க் கொடுக்கப்பட்டன. ஆகையினுல் எங்ஙனம் கானல் முதலியவற்றில் நீர்

முதலிய மதிமயல்வடிவமாமோ, அங்ஙனம் யான் றாலன், யான் கௌரன், (வெள்ளையன்) யான் நடப்போன் என்பன முதலியவாய மதிகளும் மயல்வடிவமேயாம்; ஏனெனின், அதிஷ்டான வஸ்துவின் ஞானத்தால் அவ்விருமதிகளும் பாதமுடையனவே யாமாதலினென்க; அதிஷ்டான ஞானத்தா லெதற்குப் பாதமுளதாமோ அதுமயலேயாம். இவ்விஷயம் ‘நஜாயதெ’ என்பதாதி வசனங்களில் மேல் வெளியாம். இத்துணை யியம்பியதால், ஆன்மா ஆகத்தின் வேறாயினும் ஆகம்பிறக்கின் ஆகத்தோடு பிறக்கும், ஆகமிறக்கின் ஆகத்தோடிறக்கும் என்னும் வாதியின் பக்கமும் கண்டனமாயதெனக் காண்க. ஏனெனின், அப்பக்ஷத்தில் பாலிய யௌவனாதி அவஸ்தைகள் வேற்றுமையோடுற்றதாயினும், அவனே யான் என்னும் பிரத்தியபிஞ்ஞைஞானம் தன்மியாகிய யாக்கையி னொருமையைக் கொண்டு சம்பவிக்கும்; அங்ஙனம் சம்பவிப்பதேயாயினும், தன்மிகளாய தேகங்கட்கே வேற்றுமையுறும் கனவின்கண்ணும், யோகஜன்னிய ஐஸ்வரியத்தின்கண்ணும் அவனே யான் என்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானம் அவ்வாதியின் மதத்திற் சம்பவியாது; ஆனால், ஆண்டும் அந்தப் பிரத்தியபிஞ்ஞை ஞானமோ உண்டாம். ஆகையினால் ஆகத்தின் உற்பத்தி நாசத்தோடு ஆன்மாவின் உற்பத்தி நாசம் அங்கீகரித்தல் முற்றும் முரணாம். அல்லது “தெஹிநொஸ்மிந்” என்னும் சுலோகத்திற்கு இவ்விரண்டாவது பொருட் கொள்க:—எங்ஙனம் ஜன்மாதி விகாரங்களற்ற ஒரே யான்மாவிற்குக் கௌமாராதி மூன்றவஸ்தைகளி னடைவுண்டாமோ, அங்ஙனம் இத்தேகத்தினின்றும் பிராணன் வெளிக்கிளம்பிய பின்னர் மற்றொரு தேகத்தினடைவுண்டாம். ஆண்டெங்ஙனம் பாலியாதி யவஸ்தைகளடையுங்கால் அவனே யான் என்னும் பிரத்தியபிஞ்ஞைஞானம் உண்டாமோ; அங்ஙனம், மரணத்தினனந்தரம் (பின்னர்) மற்றொரு சரீரத்தினடைவுண்டாகவே அவனே யானென்னும் பிரத்தியபிஞ்ஞைஞானம் உண்டாகாதாதலின், அவனே யானென்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானத்தால் ஆண்டு முன்பின்றேகங்களில் ஆத்மாவினொருமை துணியப் பெறாதெனினும், ஊகத்தால் அது துணியப்பெறுமென்க. அவ்வூகமிஃதாம்:—மாதாவி னுதரத்தினின்றும் வெளிப்போந்த பாலகனுக்கு அக்கால் மகிழ்ச்சி, வாட்டம், அச்சம் முதலியன உண்டாம். அம்மகிழ்ச்சி வாட்டம் முதலியவற்றினடைவில் வேறெக்காரணமும் சம்பவிப்பதின்றாம்; மற்றோ, கேவலம் முற்பிறப்பின் சமஸ்காரமே அவற்றின் காரணமாம். ஒருகால் முற்பிறப்பின் சமஸ்காரத்தையுடன்படாவிடினோ, தாயினுதரத்தினின்றும் வெளிப்போந்த தனயனுக்கு அக்காலத்தே அன்னையின் றனபானாதியில் முயல்வுண்டாதல் தகாதென வுணர்க. ஏனெனின், சேதனப் பிராணிகட்கு எவ்வெப்பிரவிருத்தியுளவாமோ, அவ்வப்பிரவிருத்தி இப்பொருள் எனதிஷ்டசாதனமாம், என்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானத்தானே யுற்பன்னமாம். இஷ்டசாதனஞானமின்றி எப்பிரவிருத்தியு முண்டாகாது. ஆகையினால் பாலகனுக்குத் தாயின் ஸ்தன்னியபானத்தின்கண் முதற் பிரவிருத்தியின் முன்னம், இத்தனபானம் எனதிஷ்ட சாதனமாமென்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானம் அப்பாலகனுக்கு அவசிய மங்கீகரித்தல் வேண்டும். பிறந்தகாலையில் அக்குமாரனுக்கு அவ்விஷ்டசாதனத் தன்மை ஞானம் அநுபவரூபமாயோ சம்பவியாது; மற்றோ, ஸ்மிருதிரூபமா யங்கீகரித்தல்வேண்டும். வேண்டவே யாது யாது ஸ்மிருதிரூப ஞானமாமோ, அஃதது பூர்வ அநுபவஜன்னிய சமஸ்காரத்தினின்றேயுண்டாம், சமஸ்காரத்தினாலன்றி யுண்டாகாதாம். ஆகையினால், அப்பாலகனுக்கு முற்பிறப்பின்கண் இத்தாயின் ஸ்தன்னிய பானம் எனது பசிநிவிருத்திரூப இஷ்டசாதனமாம், என்னுமநுபவம் அநந்தவாரமுண்டாயுளது; அவ்வநுபவஜன்னிய சமஸ்காரத்தானே அப்பாலகனுக்கு அந்த ஸ்மரணரூப இஷ்டசாதனத்தன்மைஞானம் பிறந்தகாலையிலுண்டாம் என அங்கீகரித்தல்வேண்டும். அச்சமஸ்காரமும் அனுற்புத்தமாயிருந்து ஸ்மிருதி ஞானத்தை

புற்பன்னஞ் செய்வியாது; மற்றே, உற்புத்தமாகியே செய்விக்கும். அனுற்புத்த சமஸ்காரத்தானும் வஸ்துவின் ஸ்மிருதியுண்டாமாயின், எப்போதும் அவ்வஸ்துவின் ஸ்மிருதியுண்டாதல் வேண்டுமாதலின், பிறந்தகாலேயில் அப்பாலகனது முற்பிறப்பின் சமஸ்காரத்தை உற்போதனஞ் செய்வதாய்ப் புண்ணியபாவரூப அதிருஷ்டமன்றி வேறெதுவும் சம்பவியாது; மற்றே, முற்பிறப்பின் எப்புண்ணிய பாவங்கள் இந்நிகழ்கால சரீரத்தைக் கொடுத்தனவோ, அவையே பிறந்தகாலேயில் முற்பிறப்பின் சமஸ்காரத்தை யுற்புத்தஞ் செய்விக்கும். அம்முற்பிறப்பின் சமஸ்காரமும் புண்ணியபாவரூப அதிருஷ்டமும் ஆன்மரூப ஆசிரயமின்றிச் சுதந்திரமாயிராவாதலின், முற்பிறப்பின்கண் ஆன்மாவினிருப்புண்மை யங்கீகரித்தல் வேண்டுமென்னும் ஊகத்தினுனே, முன்பின்சரீரத்தின்கண் ஆன்மாவினெருமை துணியப்பெறுமென்க. அல்லது 'தேஹிநோஸ்மிந்' என்னும் சுலோகத்திற்கு இம்மூன்றுவது பொருள்கொள்க: எங்ஙனம் நின் ஒரே யான்மாவிற்கு முறையே தேகத்தின் பாலியாதி யவஸ்தைகள் உற்பத்தி நாசமுற்றிடினும், நித்தியமாதலிற் பேதமின்றுமோ? அங்ஙனம், விபுவாதலின் நின் ஒரே ஆன்மாவிற்கு ஒரே காலத்தில் சர்வதேகங்களி னடைவுண்டாம். ஆண்டு ஆன்மாவை யாக்கை முதலியவற்றைப்போல மத்யமப்பரிமாணவானென உடன்படினே, ஆன்மாவின்கண் ஆகாதிகட்கொப்ப அநித்தியத் தன்மையினடைவுண்டாம். ஆன்மாவை அணுப்பரிமாணவானென உடன்படினே, சர்வசரீரத்தின்கண்ணும் வியாபக சுகதுக்கங்களின் பிரதீதியுண்டாகலாகாது; அவ்விருதோஷங்களேயும் நீக்கும்பொருட்டு ஆன்மாவை விபுவென வுடன்படல் வேண்டும். மேலும் சர்வ சரீரத்தின்கண்ணும் யானுளன், யானுளன் என்னும் ஏகாகாரப் பிரதீதி காணவருகின்றதாதலின், சர்வசரீரத்தின்கண்ணும் நின் ஒரேயான்மா வியாபகமாம். இவ்வாறு சர்வசரீரத்தின்கண்ணும் ஆன்மாவினெருமை துணியப்பெறினும், இப்பீஷ்மத் துரோணுதியர் கொல்லப்படுபவர்; அர்ச்சுனனுய யான் கொல்பவன் என்னும் பேதகற்பனையைச் செய்து நீ மோகத்தையடைந்தனே, அதன் கண் நினது அவித்வத்தன்மையே ஏதுவாம். சர்வசரீரத்தின்கண்ணும் ஆன்மாவினெருமையை யுணர்ந்த வித்வானுகிய தீரன் அதன்கண் மோகத்தையடையான்; ஏனெனின், யானிவரைக் கொல்பவன், இவரென்னுற் கொல்லப்படுபவர் என்னும் பேததரிசனம் அவர்க்குண்டாகாது. இது கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானத்தைக் குறிப்பித்தருளினர் :—வாதிகளின் விவாதவிஷயங்களாய இப்பீஷ்மத் துரோணுதி சரீரங்களெல்லாம், ஒரு போக்தான்மாவையுடையனவாம்; தேகத்தன்மைத் தன்மவான்களாதலின், நினது பாலியயௌவனுதி தேகங்களேப் போலவென்க. ஆண்டு "வகொஜெவஃ வவ-ஃ ஹ-ஜெதஷ-ஹ-ஜஃ வவ-ஃவஹாவீ வவ-ஃ ஹ-ஜ தாஜமாதூ" எனச் சுருதியுமுளது. பொருளிதுவாம் :—ஒரே யான்மா சர்வபூதப் பிராணிகளிடத்தும் வியாபகமாம், அவ்வண்ணமே காஷ்டத்தின்கண்ணே கனலேப்போன்று குகியமாம், அவ்வண்ணமே சர்வபூதப் பிராணிகளின் அந்தரான்மாவாம். இத்துணை யியம்பியதால் ஆன்மாவின்கண் நித்தியத்தன்மையும், விபுத்தன்மையும் துணியப்பெற்றதாம். ஆதலினுல் இவ்வளவு மதங்கள் கண்டிக்கப்பட்டனவாம் :—ஆண்டுச் சார்வாக நாஸ்திகனே, இத்தூலதேகத்தையே யான்மாவென அங்கீகரித்துளான். அச்சார்வாகரின் ஏகதேசியரிற் சிலரோ, இந்திரியங்களேயே யான்மாவென இடர்ப்படுவர்; சிலரோ, மனத்தையே யான்மாவென மயங்காநிற்பர்; சிலரோ, பிராணனேயே யான்மாவெனப் பிறழாநிற்பர்; சௌகதரோ, க்ஷணிகவிஞ்ஞானத்தையே யான்மாவெனச் சாற்றுநிற்பர்; திகம்பரரோ, தேகத்தின் வேறதாய், திரவியற்கையதாய், தேகசமவளவுற்றதாயதே யான்மாவெனத் திகையாநிற்பர்; திகம்பாரின் ஏகதேசியரோ, மத்யமபரிமாணவானிடத்தே நித்தியத்தன்மை சம்பவியா

தாதலின், நித்திய அணுப்பரிமாணவானே ஆன்மாவென நிகழ்த்தாநிற்பர். சித்தாந்தத்தில் ஆன்மாவை நித்தியவிபுவென வுடன்படவே, அவ்வெல்லா மதங்களும் கண்டிக்கப்பட்டனவா மென்றுணர்க. (13)

(அ-கை.) ஹே பகவன்! ஆன்மா நித்தியம் விபு என்னும் பொருளிலோ, யான் விவாதித்திலேன்; ஆனால், எல்லாத் தேகங்களிடத்தும் ஆன்மா ஏக மென்னும் பொருளை யான் சகிக்க வல்லேனல்லேன். ஏனெனின், புத்தி, சுகம், துக்கம், இச்சை, த்வேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம், சமஸ்காரம் என்னும் இவ்வொன்பது குணங்களோடுற்ற நித்திய விபு, ஆன்மாவாம்; அவ்வான்மா சரீரந்தோறும் வேறுவேறும், என வைசேடிகர் அங்கீகரித்துளார். இப்பக்ஷத்தையே வேறு தார்க்கிகர், மீமாம்சகர் முதலியோரும் அங்கீகரித்துளார். ஆன்மாவை நிர்க்குணமென வுடன்படும் சாங்கிய சாஸ்திரவான்களோ, ஆன்மா சுகதுக்காதி குணங்களுடைய தென்னும் பொருளில் விவாதிப்பவரேனும், சரீரந்தோறும் ஆன்மா வேறுவேறென்னும் பொருளில் விவாதியார். ஒருகால் சர்வ சரீரத்தின் கண்ணும் ஒரே ஆன்மாவை அங்கீகரிக்கினே, ஒரு சரீரத்தின்கண் இன்பத்தின் அடைவுறவே, சர்வ சரீரத்தின்கண்ணும் இன்பத்தினடைவுண்டாதல் வேண்டும். ஒரு சரீரத்தின்கண் துன்பின்னடைவுறவே, சர்வ சரீரத்தின்கண்ணுந் துன்பின் அடைவுண்டாதல்வேண்டும். ஆனால், ஒருசரீரத்தின்கண் இன்பத்துன்பங்களுறவே, சர்வ சரீரத்தின்கண்ணும் இன்பத்துன்பங்களுறல் காண வருவதின்றும். ஆகையினால், ஆகந்தோறும் வேறு வேறான்மா வுடன்படல்வேண்டும். இன்னணம் ஆன்மாவின் பேதந்துணியப்பெறவே, பீஷ்மத்துரோணாதிகளின் வேறாய என தான்மா நித்திய விபுவாயினும், சுகதுக்காதி குணங்களோடுற்றதா மாதலின், அப்பீஷ்மத் துரோணாதி யுறவினரின் தேகங்கள் நாசமுறின், என்னிடத்தே சுகவியோகமும் (நீக்கமும்) துக்க சம்பந்தமும் அவசியம் உண்டாம். ஆகையினால், யான் சோகமோகப்படல் அனுசிதமன்றும்; மற்றோ, உசிதமேயாம் என்னும் அர்ச்சுனனது கருத்தின் சங்கையைப்பற்றி ஸ்ரீ பகவான் இலிங்கதேக விவேகம் செய்யும்பொருட்டுக் கூறத்தொடங்கியருளுகின்றார்:—

சு-ம். மாத்ராஸ்பர்ஶாஸ்து கௌந்தேய ஶீதோஷ்ண ஸுகதுஃகதா:
ஆகமாபாயினோ(அ)நித்யாஸ்தாம்ஸ்திதிக்ஷஸ்வ பாரத

ப-ம். 4 மாத்ராஸ்பர்ஶா: து 1 கௌந்தேய 6 ஶீதோஷ்ண ஸுகதுஃகதா: 5 ஆகமாபாயின: 3 அநித்யா: 7 தான் 8 திதிக்ஷஸ்வ 2 பாரத ॥

(அ-ம்.) ஹே குந்திமைந்த! ஹே பரத வம்சத்தின் கண்ணுதித்த அர்ச்சுன! நியதமற்ற இயற்கையனவாய பொறிகட்குப் புலன்களோடுள்ள ஒற்றுமைகள், பிறந்திறக்கும் அந்தக்காணத்திற்கே குளிர் வெப்ப அடைவின் வாயிலாய் இன்பத்துன்பங்களைச் செய்விப்பனவாம்; அவற்றை நீ சகிப்பாயாக.

வி-ம். எவற்றால் விஷய மறியப் பெறுமோ அவற்றை மாத்திரைகளென்பர். அத்தகையன நேத்திராதிகளாம். நேத்திராதி இந்திரியங்களாலே ரூபாதிவிஷயங்களறியப்பெறுகின்றனவாம். அந்நேத்திராதி இந்திரியங்கட்கு ரூபாதிவிஷயங்களோடுள்ள தகுதியாய ஒற்றுமைகளையே மாத்ரா ஸ்பர்ஶங்களென்பர். அல்லது, நேத்திராதி இந்திரியங்களால் ஜனித்த அவ்வவ் விஷயாகார அந்தக்கரணத்தின் பரிணாம வடிவ விருத்திகளை மாத்ரா ஸ்பர்ஶங்களென்பர். அல்லது, கௌஷீதகி உபநிஷத்தின்கண் வாக்கு முதலிய பத்து இந்திரியங்களும் பிரஞ்ஞா மாத்திரைகளெனவும் நாமாதிய பத்து விஷயங்களும் பூதமாத்திரைகளெனவும் கூறப்பெற்றுள்ளன. அவ்வாக்காதிய பத்து இந்திரியங்களையும், நாமாதிய பத்து விஷயங்களையும் ஈண்டு

மாத்திரைச் சத்தத்தாற் கவர்ந்துகொள்க. அவ்விந்திரிய விஷயரூப மாத்திரை கட்குப் பரஸ்பரம் விஷய விஷயீபாவசம்பந்தங்களுள; அவற்றையே மாத்ரா ஸ்பர்ஶமென்பர். அல்லது மாத்ரா என்பது மூன்றும் வேற்றுமை முடிபாய பிரமா தாவின் வாசகமாம் பின்னபதமெனவறிக. அப் பிரமாதாவோடுள்ள விஷய இந்திரியங்களின் சம்பந்தங்களை மாத்ரா ஸ்பர்ஶங்களென்பர். ஆகமமென்பது பிறப்பிற்காம், அபாயமென்பது அழிவிற்காம். அவ்வாகமமும் அபாயமும் எதற் காமோ, அஃதாகமாபாயியெனப் பெயர் பெறும். அத்தகைய ஆகமாபாயியாய அந்தக்கரணத்திற்கே அம்மாத்ரா ஸ்பர்ஶங்கள் குளிர்வெப்பங்களை யடைவிக்கும் வாயிலா யின்பத்துன்பங்களை யடைவிக்கும். யாண்டும் நிறைந்த நித்திய ஆன்மா விற்கு அவை யவற்றை யடைவியா; ஏனெனின், அந்நித்திய ஆன்மா நிர்க்குண மும் நிர்விகாரமுமாதலினென்க. ஆண்டு "ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச" என்னும் மறையுமுளது. பொருளிஃதாம் :—இவ்வான்மதேவர் சர்வசாக்ஷியும், சேதனமும், அத்விதீயமும், நிர்க்குணமும், நிஷ்கிரியமுமாவர். இத்தகைய நிர் விகார நித்திய ஆன்மாவிற்கு, அநித்திய அந்தக்கரணத்தின் சுகதுக்காதிதர்மங்களி னாசிரயத்தன்மை சம்பவியாது. ஏனெனின், தர்மதர்மியிரண்டிற்கும் அபேத மேயாம், அபேதமின்றி வேறுயாதொரு சம்பந்தமும் அவற்றிற்குச் சம்பவியாது. அந்நித்திய அநித்தியங்கட்கபேதங் கூறல் முற்றினும் முரணுமன்றோ? ஆகையி னால், அச்சுகதுக்காதிகள் ஆன்மாவின் தன்மமன்றாம். சுகதுக்காதிரூப சாக்ஷிய பதார்த்தங்களிடத்தே சாக்ஷியான்மாவின்றன்மத் தன்மை யொருகாலுஞ் சம்ப வியாதாதலின் இப்பொருள் துணியப்பெறும் :—சுகதுக்காதி தர்மங்களினாசிரயம் கேவலம் அந்தக்கரணமேயாமன்றி ஆன்மாவன்றாம். அவ்வந்தக்கரணமும் சரீ ரந்தோறும் வேறுவேறாம், அதன்பேதத்தைக்கொண்டே சிலர்சுகிகள், சிலர்துக்கி கள் என்பனமுதலிய விவஸ்தை சம்பவித்தல் கூடும். ஆகையினால், சுகதுக்காதி களின் விவஸ்தை கூடாமையின் சரீரந்தோறும் ஆன்மாவின் பேதமுடன்படல் அத்தியந்தம் அசங்கதமாம். அல்லது எல்லாவுலகையு மிலக்கிவைப்பதும், பிறப்பு முதலிய விகாரங்களற்றதுமாய ஆன்மா சத்துருவமாயும், ஸ்புரணரூபமாயும் எல் லாப் பதார்த்தங்களிடத்துந் தொடர்ந்திலங்குமாதலின், அச்சத்தாஸ்புரணரூப ஆன்மாவின் பேதத்தில் யாதொரு அளவையுமின்றாம். மாறாய் "ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட:" என்பதாதி அநேக மறைகள் ஆன்மாவின் அபேதத் தின்கண்ணே பிரமாணமாம். அல்லது, சுகதுக்காதிகளின் உற்பத்தியின்கண் அந் தக்கரணத்திற்குக் காரணத்தன்மையுளதென்னு மிவ்விஷயம் நையாயிகர்கட்கும் சித்தாந்திகட்கும் உடன்பாடாம். அவற்றுள், நையாயிகரோ, மனரூப அந்தக்கர ணத்தைச் சுகதுக்காதி தர்மங்களின் நிமித்த காரணமெனவும், ஆன்மாவைச் சம வாயிகாரணமெனவும் உடன்பட்டுளார். சித்தாந்தத்தின்கண்ணோ, அந்தக்கரணத் தையே சுகதுக்காதிகளி னுபாதான காரணமென வுடன்பட்டுளது. ஆண்டு "ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச" என்பதாதி சுருதிகள் ஆன்மாவை நிர்க்குணமெனக் கூறுநிற்கும். ஆகையினால் நிர்க்குண ஆன்மாவின்கண் குணத் தின் சமவாயி காரணத்தன்மை கூறல் மறைக்கு முரணாம். அந்தக்கரணத்திற் கன்றி வேறெப் பதார்த்தத்திடத்தும் சுகதுக்காதிகளின் சமவாயிகாரணத் தன் மை சம்பவியாது; மேலும் நிமித்தகாரணத் தன்மையை யபேக்ஷித்துச் சமவாயி காரணத்தன்மை சிரேஷ்டமுமாம். ஆகையினால், நையாயிகரும் அந்தக்கரணத் தையே சுகதுக்காதிகளின் சமவாயிகாரணமென வுடன்படல் நலமாம். அல்லது கேவலம்யுக்தியினாலே அந்தக்கரணத்தின்கண் சுகதுக்காதிதர்மங்களின் உபாதான காரணத்தன்மை துணியப்பெறுவதன்றாம்; மற்றோ மறைமானத்தானுந் துணியப் பெறுமென்றறிக. ஆண்டு "காம: ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்தா அஶ்ரத்தா த்ருதிரத்ருதிர்ஹ்ரீர்தீர்பீரித்யேதத் ஸர்வம் மன ஏவ" என்னும் மறைமானமாம்

பொருளிஃதாம் :—இச்சை, சங்கற்பம், சம்சயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், இலஜ்ஜை, விருத்திஞானம், பயம் என்னுமிவையாவும் மனரூபமேயாம். இம்மறையானது காமாதிவிகாரங்களை மனத்தோடு அபேதப்படுத்திக் கூறுவதாய்மனத்தை அக்காமாதி விகாரங்கட்கு உபாதானகாரணமெனக் கூறுகின்றது. அச்சுருதியின்கண்ணே காமாதி விகாரம் சுகதுக்காதி தர்மங்கட்கும் உபலக்ஷகமாம். ஆன்மாவையோ, ஸ்வப்பிரகாச ஞான ஆநந்த ரூபத்தன்மையானே அநேகஞ் சுருதிகளறைகின்றன. ஆகையினால், ஆன்மாவிற்கு அச்சுகதுக்காதி தர்மங்களின் ஆசிரயத்தன்மை சம்பவியாதாதலின், நையாயிகாதியர் ஆன்மாவின்கண்ணே கேவலம் மயலினானே விகாரித்தன்மையையும், பேதத்தையும் அங்கீகரித்துளார். ஹே அர்ச்சுன! ஆகமாபாயி யாதலினானும், திருசியமாதலினானும் நித்திய திருஷ்டாவான ஆன்மாவின் வேறாய இவ்வந்தக்கரணத்தின்கண் இன்பத்துன்பங்களை யியற்றும் மாத்ரா ஸ்பர்ஶங்கள் நியதமாய வியற்கையனவன்றாம்; மற்றோ அநியத (நியதமற்ற) இயற்கையனவாம். என்னை? ஒருகாலத்திற் சுகத்தை யுதிப்பிப்பனவாய சீதோஷ்ணாதிகளே, மற்றொருகாலத்தே துக்கத்தையே யுதிப்பிக்கும், இவ்வாறே ஒருகாலத்தில் துக்கத்தை யுதிப்பிப்பனவாய சீதோஷ்ணாதிகளே, மற்றொரு காலத்தே சுகத்தையே யுதிப்பிக்கும். ஆகையினால், அம்மாத்ராஸ்பர்ஶங்கள் அநியதமாய இயற்கையனவாமென்றறிக. ஈண்டுச் சீதோஷ்ணக் கிரகணம் ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிகமென்னும் மூன்று வகையாய சுகதுக்கக்கிரகண உபலக்ஷகமுமாம். ஆண்டுச் சுரம் முதலிய வியாதிகளால் அந்தக் கரணத்தின்கண் உற்பன்னமாய துக்கத்தை ஆத்யாத்மிக துக்கமென்பர். சிங்க சர்ப்பாதி பூதங்களா லுற்பன்னமாய துக்கத்தை ஆதிபௌதிக துக்கமென்பர். நீர் நெருப்புக் கிரகாதிகளால் உற்பன்னமாய துக்கத்தை ஆதிதைவிக துக்கமென்பர். இவ்வண்ணம் சுகத்திற்கும், முப்பேதமுணர்ந்துகொள்க. ஆகையினால் ஹே அர்ச்சுன! முற்றிலும் நிலையற்ற வியற்கையதும், நினது நிர்விகார ஆன்மாவினும் வேறாய் விகாரியாயதுமான அந்தக்கரணத்திற்குச் சுகதுக்கங்களை யடைவிப்பனவாய பீஷ்மத்துரோணாதிகளின் சையோகவியோகரூப மாத்ரா ஸ்பர்ஶங்களை நீ பொறுத்துக்கொள். இம்மாத்ரா ஸ்பர்ஶங்கள் அவிகாரியாய எனதான்மாவைச் சிறிதுமாத்திரையும் கேடுசெய்யாவென விவேகித்து நீ யவற்றையுபேக்ஷைசெய்தி; துக்காதி தர்மங்களோடுகூடிய அந்தக்கரணத்தின்றாதான்மிய அத்தியாசத்தால் நீ நினதான்மாவைத் துக்கியாய் மதியாதிருத்தி; என்னுமிவையே அம்மாத்ரா ஸ்பர்ஶங்களின் பொறுக்கையாமென்பது கருத்தாம். ஈண்டு ஹெ கௌஜெய! ஹெ ஹாரத! என்னும் இவ்விரண்டு விளிகளால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—தாய் தந்தையர்தங் குலங்களால் முற்றினுந் தூயனாய நினக்கு இவ்வகையாய அஞ்ஞானம் உசிதமன்றாமென்பதே, ஒருரையின்கண் ஆமஊ வாயிநஃ என்னும் விசேஷணம் மாத்ரா ஸ்பர்ஶங்கட்கே கூறப்பெற்றுளது. ஆகமாபாயியாதலின், அம்மாத்ரா ஸ்பர்ஶங்கள் அநித்தியங்களாம் என அர்த்தமும் செய்யப்பெற்றுளது. ஆனால், இவ்வுரையின்கண் "ஶீதொஷ்ண ஸுவ உாஃ வ உாஃ" என்னும் மொழியான்மொழிந்த இன்பத்துன்பங்களை அம்மாத்ரா ஸ்பர்ஶங்கள் எதற்காற்றுமென அறியும் வேட்கையனாக, அந்தக்கரணத்திற்குச் சுகதுக்கங்களை யடைவிக்கும் எனப் பொருள் விரித்தலால் அந்தக்கரணத்தின் கவர்ச்சியுண்டாம். முன்னுரையில் ஆமஊ வாயிநஃ என்னுஞ்சத்தம் அந்தக் காணத்தின் வாசகமேயாமாதலின், அச்சத்தத்தானே அந்தக்கரணத்தின் அடைவுண்டாமெனவுணர்க. (14)

(அ-கை.) ஹே பகவன்! அந்தக்கரணத்தைச் சுகதுக்க ஆசிரயமென அங்கீகாரம் செய்யினோ, அவ்வந்தக் காணத்திற்கே கர்த்துரு போத்துருத்தன்மை

களின் அடைவுறச் சேதனத்தன்மை யங்கீகரிக்கவேண்டிவரும்; வரவே, அந்தக் கரணத்திற்கே சேதனரூபத்தன்மை துணியப்பெறவரும்; வந்த அஞ்ஞான்று, அந்தக்கரணத்தின் வேறாய் அதனை யொளிர்விக்கும் போக்தாவாய ஆன்மாவின் கண் யாதொரு பிரமாணமு மின்றாய் விடுமாதலின், கேவலம் நாமமாத்திரத்தில் விவாதஞ் சித்திக்கும்; அந்நாமங்கட்கு அர்த்தத்தின்கண் யாதொரு விவாதமுமுண்டாகமாட்டாது. சிலவாதியர் அதனை அந்தக்கரணமென்னும் பெயரால் அழைப்பர், மற்றுஞ் சிலவாதியரோ அதனை ஆன்மாவென்னும் பெயரால் அழைப்பர். மேலும், அவ்வந்தக்கரணத்தின் அயலாய்ச்சேதனமாய ஆன்மாவை யங்கீகரிக்கினே, வேதாந்த சித்தாந்தத்தின்கண் அங்கீகரிக்கப்பட்ட பந்த மோக்ஷங்களின் ஒரு நிலைக்களத் தன்மை துணியப் பெறமாட்டாது. மற்றே, அப்பந்த மோக்ஷங்கட்கு வேறு வேறு நிலைக்களமே துணியப்பெறும். அவற்றுள் இன்பத்துன்பங்களின் பற்றுக் கோடாயிருத்தலின் அந்தக்கரணமோ, பந்தத்தின் நிலைக்களமாம்; அதனின் வேறாய ஆன்மா, மோக்ஷத்தின் நிலைக்களமாம் என்னும் அர்ச்சுனனது சங்கையை நீக்கும் பொருட்டு ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். யஂஹிந வ்யயயந்த்யேதே புருஷஂ புருஷர்ஷப ।
ஸமது:கஸுகஂ தீரஂ ஸோऽம்ருதத்வாய கல்பதே ॥

ப-ம். 3 யஂ 7 ஹி 8 ந 9 வ்யயயந்தி 6 ஏதே 5 புருஷஂ 1 புருஷர்ஷப 2 ஸமது:கஸுகஂ 4 தீரஂ 10 ஸ: 11 அம்ருதத்வாய 12 கல்பதே ॥

(அ-ம்.) ஹே புருஷருக்குள் மேன்மையுற்ற அர்ச்சுன! துக்க சுகங்களைச் சமமாய்க் காணும் தீர புருஷரை இம்மாத்ரா ஸ்பர்சங்கள் துன் புறுத்தாத காரணத்தால் அத்தீர புருஷர் மோக்ஷ அடைவின் பொருட்டு யோக்கியராவர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! "அத்ராயஂ புருஷ: ஸ்வயஂஜ்யோதிர்பவதி:" பொருளிதுவாம் :—இக்கனுவவஸ்தையின்கண் ஆதித்தன் முதலிய ஒளிகளிலவாக இவ்வான்ம புருஷனே சுயஞ்சோதியாவன். என்னும் சுருதிப் பிரமாணத்தால் ஸ்வப்பிரகாசரூபமாய்ச் சித்தமாய சேதன ஆன்மாத் தனது பரிபூரண ரூபத்தால் சர்வ சரீர ரூப புரிகளின்கண் நிவாசஞ்செய்யும். இக்காரணம்பற்றியே அருமறையன்னையானவள் அச்சேதன ஆன்மாவைப் புருஷனென்னும் பெயரிட்டு அழைத்தனள். அல்லது அஷ்டபுரங்களில் நிவாசஞ்செய்பவனைப் புருஷனென்பர். அவ்வஷ்டபுரங்க ளிவையாம்.

சு-ம். கர்மேந்த்ரியாணி பஞ்சஂசாந்தராணி
ஜ்ஞானேந்த்ரியாணிச ஸுஹ்ருதஂசதுஷ்டயஂச ।
ப்ராணாதிபஂசகஂசவியதாதி கஂச
காமஸ்சகர்மசதம: புநரஷ்டமீபு: ॥

(பொ-ள்.) வாக்காதி ஐந்து கர்மேந்திரியங்கள் (1) சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியங்கள் (2) மனாதி நான்கு அந்தக்கரணங்கள் (3) பிராணாதி ஐந்து பிராணன்கள் (4) ஆகாசாதி பஞ்சபூதங்கள் (5) காமம் (6) கர்மம் (7) தமம் (8) என்னும் இவ்வெட்டிற்கும் புரமெனப் பெயராம். ஈண்டுத் தம சத்தத்தாற் காரண அஞ்ஞானத்தைக் கவர்ந்துகொள்க. ஆண்டு "ஸவாயஂ புருஷ: ஸர்வாஸு பூர்ஷு புரிஸய:" என்னுஞ் சுருதியுளது. பொருளிதுவாம் :—இச்சேதனன்மா சரீராதிரூப சர்வ புரிகளிடத்தும் நிவாசம் செய்வதாய்ப் புருஷ நாமத்தையடையும். இத்தகைய சுயஞ்சோதி ஆன்மாவிற்கு அனன்ம அந்தக்கரணத்தின் தர்மரூபத்தாலும், திருசிய ரூபத்தாலும் இத்துக்க

சுகம் சமானமேயாம். இக்காரணம் பற்றியே அவ்வான்மாவிற்குச் சமதுக்க சுகஞ் சாற்றப் பெற்றது. ஈண்டுத் துக்க சுகத்தைக் கவர்ந்தது முன் மொழிந்த அந்தக்கரணத்தின் காம சங்கற்பாதி சர்வ தர்மங்களின் உபலக்ஷகமாம். ஆண்டு "ஸஷ நிதெ்யாஊஹிஊ ஬்ராஹ்ணஸ்ய ந வயூதெ கஊணாநொக நீயாநு" என்னுஞ் சுருதிபிரமாணமாம். பொருளிதுவாம்:—பிரஹ்மரூபப் பிராஹ்மணனுக்கு இஃதோர் நித்திய மகிமையாம்; யாதெனின் புண்ணியகருமத்தாற் சுகரூப விருத்தியை யடையாமையும், பாவகர்மத்தால் துக்கரூப கநிஷ்டத்தன்மையை (தாழ்வை) யடையாமையுமேயாம். இம்மறையானது ஆன்மாவின்கண் இன்பத்துன்ப தர்மங்களை நிஷேதிக்கின்றது. இதனாற் காமசங்கற்பாதி சர்வ தர்மங்களின் நிஷேதத்தையும் உணர்ந்துகொள்க. அச்சுயஞ் சோதியாய ஆன்மாத் தனது சிற்போலி வாயிலாய் மதியோடு தாதாத்மிய அத்தியாசத்தை யடைந்து அம்மதியைச் சுபாசுபகாரியத்தின்கண்ணே பிரேரிப்பிக்குமாதலின் பிரேரகசாக்ஷியாய ஆன்மாவைத் தீரநாமத்தாலழைப்பர். "யியஊாய தீ தியீாஃ" (மதியை யேவுவது தீரமாம்) ஆண்டு "ஸயீஃ ஸ்வெொ ஹூதெ்ஸஂமொகஊதிக ராஊதி" என்னுஞ் சுருதியுளது. பொருளிதுவாம்:—மதிரூப உபாதியையுடைய இவ்வான்ம தேவர் கனவையடைந்து இநநனவை விடுப்பர். இத்துணையியம்பியதாலான்மாவின்கண்ணே பந்தத்தின் பிரசக்தி காண்பிக்கப்பட்டது. எந்நிலைக் களத்தின்கண் எப்பொருள் இயல்பாயே உண்டாகாதோ அந்நிலைக்களத்தின்கண் அப்பொருளினாரோபஞ் செய்தலைப் பிரசக்தியென்பர். இவ்விஷயம் வேறு நூலினும் நுதலப்பெற்றுளது: ஆண்டு அவ் வேறு நூலிஃதாம்:—

சு-ம். யதொஊநா நிவிஊ்ஞி ஜாம ஊஷி தாயஂதயா।
ஹாவாஹாவ விஹா மஸ்ஸப்ராஹ்ஷீ தி வொயதெ ॥பொருளிஃதாம்:—

எச்சுயஞ்சோதியாய ஆன்மாவால் பிரத்தியக்ஷாதி சர்வப்பிரமாணங்களுந் துணியப்பெறுமோ, நனவுமுதலிய மூன்றவஸ்தைகள் துணியப்பெறுமோ, இதுபாவ பதார்த்தமாம் இஃதபாவபதார்த்தமா மென்பதாதி வேற்றுமை துணியப்பெறுமோ, அச்சாக்ஷியாய ஆன்மாவே பிரஹ்மாஸ்மி என்பதாதி மகாவாக்கியங்களாற் போதிக்கப் பெறுகின்றதாம். இத்தகைய சமதுக்கசுகதீரபுருஷனுக்கு முன் மொழிந்த சுகதுக்கத்தைக் கொடுப்பனவாய மாத்ரா ஸ்பர்ஸங்கள் உண்மையாய்த் துன்பத்தையடைவியாவாம். ஏனெனின், அச்சுயம்சோதியாய புருஷன் விகாரங்களியாவற்றையும் விளக்கிவைப்பவனாதலின் அவ்விகாரங்கட் கருகனன்றாமாதலினென்க. ஆண்டருமறையு மிவ்வாறுளது:—

ஸூயெஷாயயா ஸவஷொகஸ்ய அக்ஷு
ந ஷுவிவ்யதெ அக்ஷுஷெவா ஷஹ்யதொஷெஃ।
ஸகஷ்யாஸவஷ ஹூதாஞாதா
நஷுவிவ்யதெமொக உஃவெ நவாஹ்ய ॥

(போ-ள்.) எவ்வண்ணம் எல்லாவுலகிற்கும் நேத்திரமாய சூரியபகவானனைவர் நேத்திரவிஷயமாகிய தோஷத்தாற் பற்றுறாரோ, அவ்வண்ணம் ஏக அத்விதீய ரூப சர்வபூதங்களினந்தராத்மா, பாகியலோக துக்கங்களாற் பற்றுறாது. இக்காரணத்தாலத்தீரபுருஷன் தனது சொரூபபூத பிரஹ்மான்மாவின் ஒருமை ஞானத்தாற் சர்வதுக்கங்களினுபாதானகாரணரூப அஞ்ஞான நிவிருத்திவாயிலாய் அத்விதீய ஸ்வப்பிரகாச பரமானந்தரூப மோக்ஷப் பிராப்தியின்பொருட்டு யோக்கியனாவன். ஒருகால் இச்சுயஞ் சோதியாய ஆன்மா ஆரோபித பந்தத்திற் காசிரயமாகாமல் இயல்பாயபந்தத்திற்காசிரயமாயினே தன்மியின் நீக்கமின்றி இயற்கையாய

தன்மங்களின் நீக்கம் கூடாதெனக்கொள்க. தழல் வடிவத்தன்மியின் நீக்கமின்றி அதனது வெம்மைமுதலிய இயற்கையாய தன்மங்களின் நீக்கம் உளதாகாததே போல, ஆன்மரூபத்தன்மியின் நீக்கமின்றி யதனது இயற்கையாய பந்தரூபதன்ம நீக்கம் ஒருகாலுமுளதாகாதென்பதொருதலையேயாம். ஆன்மாவோ நித்தியமாத லின் அதற்கொருகாலும் நீக்கம் சம்பவியாதாகவே அஃதெக்காலும் முக்தமாவதே யின்றா மென்றுணர்க. இவ்வார்த்தை

சு-ம். ஸூதாக த்ர-உாதிர-லெஹெடூநாகாம் க்ஷீஷஹி-உ-க்தாம் ।
நஹிஷ ஹாவொஹாவாநாம் வ்யாவதெ்த-உதளஷ்ணூ் வந்ரவெ: ॥

என வேறு நூலின்கண்ணுங் கூறப்பெற்றுளது. இதன்பொருளோ :—ஆன்மா வொருகா லியல்பாயே கர்த்துருத்வ போத்துருத்வாதிரூப பந்தவானாயின் ஹே மைந்த! நீ முத்தத்தன்மையை விழையாதொழிதி. ஏனெனின், பாவபதார்த்த முடைத்தான இயல்பாய தர்மமானது அப்பாவபதார்த்த ரூபதர்மியின் நிவிருத்தி யின்றி யொருகாலும் நிவிருத்த மாவதன்றாமன்றோ; சூரியனது ஸ்வாபாவிகதர்ம மாய உஷ்ணத்தை சூரியரூப தர்மியின் நிவிருத்தியினானன்றி நிவிருத்தமாகாதென யாவரே யுணராதார் என்பதாம். அல்லது ஆன்மாவின்கண் இயற்கையாய பந் தத்தை யங்கீகரிப்பினோ, எவருக்கும் மோக்ஷப் பிராப்தி யுண்டாகாது. அன்றியு மிவ்வார்த்தை "விஉ-க்ஷுஹவிஉ-அ்யதெ, ஜாநாதெவத-கெவஷும்" என்பன முதலிய, ஞானத்தால் மோக்ஷத்தின் அடைவைக் கூறாநிற்கும் அநேக சுருதிகட் கும் முரணாம்.

சங்கை :—ஆன்மாவின்கண் இயல்பாய பந்தத்தை ஒருகால் யான் அங்கீகரிக் கின், இம்முற்கூறிய தோஷம் என்னைப் பற்றாநிற்கும். ஆனால், ஆன்மாவின்கண் ணுள்ள பந்தத்தை இயல்பென அங்கீகரித்திலேன்; மற்றோ, அவ்வான்மாவின் கண்ணுள்ள பந்தம் புத்தி முதலிய உபாதிகளாலாக்கப்பெற்றதாம். ஆண்டுச் சுருதியுமுளது :— "ஹூதெ்நி்ரயஉநொய-க்தம் ஹொக்தெத்யாஹ-உ-நீஷிண:" பொருளிதுவாம் :—இந்திரிய மனரூப உபாதியோடுகூடிய ஆன்மாப் போக்தா வாம்; என்று புத்திமான்களாய புருஷர் கூறுவர். இவ்வண்ணம் ஆன்மாவின் கண் உபாதியாலாற்றப்பெற்ற பந்தத்தை யங்கீகரிக்கின், ஆன்மரூப தர்மியிருப்பி னும், ஔபாதிக பந்த நிவிருத்தியால் முக்தியின் அடைவுண்டாகியே விடு மன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! நீ இங்ஙனம் கூறியதால் இப்பொருளன்றோ துணியப்பெறுகின்றது :—எவ்வஸ்துவானது தனது தர்மத்தை அந்நிய வஸ்து வின்கண் இருக்குமாறு தோற்றுவிக்குமோ, அவ்வஸ்து உபாதியாம்; சிவப்பு வர்ணமுடைய ஜபாகுசுமமானது தனது சிவப்பு வர்ணத்தைச் சமீபித்துள்ள ஸ்படிகமணியின்கண் இருக்குமாறு தோற்றுவிக்குமாதலின், அந்த ஜபாகுசு மத்தை யுபாதியென்பது போலவாம். அங்ஙனமே, இப்புத்தி முதலியவையும், தமது சுகதுக்கமுதலிய தர்மங்களை ஆன்மாவின்கண் இருக்குமாறு தோற்று விக்கும் ஆதலின், இப்புத்தி முதலியவையும் உபாதிகளாம். எத்தர்மம் உபாதி யால் ஆக்கப் பெற்றதாமோ அத்தர்மம் அசத்தியமேயாம். எவ்வண்ணம் ஜபா குசுமரூப உபாதியால் ஆக்கப்பெற்ற ஸ்படிகமணியின்கண் இராநின்ற இரக்தத் தன்மையானது அசத்தியமேயாமோ, அவ்வண்ணம் புத்திமுதலிய உபாதி களால் ஆக்கப்பெற்ற ஆன்மாவின்கண்ணுள்ள கர்த்துருத்தன்மை போத்துருத் தன்மை முதலிய பந்தமும் அசத்தியமேயாம். இங்ஙனம் பந்தத்தின்கண் ஔபாதிகத் தன்மையை அங்கீகரித்து அசத்தியரூபத் தன்மையை அங்கீகாரம்

செய்யும் வாதியாய நீ எமது சித்தாந்தரூப மார்க்கத்தின்கண்ணே அடைவுற்றனை ; ஆதலின், நீ எமது அநுகூலனேயன்றிப் பிரதி கூலனன்றாயினை. ஆகையினால் இப்பொருள் துணியப் பெற்றதாம் :—உண்மையாய்க் கர்த்துருத்துவ போத் துருத்துவம் முதலிய சர்வ சம்சார தர்மங்களின் சம்பந்தமின்றிய ஆன்மாவின் கண்ணும் அந்தக்கரணாதி உபாதிவசத்தால் அச்சம்சார தர்மங்களின் சம்பந்தப் பிரதீதியே ஆன்மாவின்கண் பந்தமாம். தனது வாஸ்தவஸ்வரூப ஞானத்தால் எக்கால் தனது சொரூப அஞ்ஞான நிவிருத்தியாமோ, அஞ்ஞான காரியரூபபுத்தி யாதி உபாதிகளின் நிவிருத்தியாமோ, அவ்வுபாதிகளாற்றிய மயக்கம் யாவும் நிவி ருத்தியாமோ, அக்கால் சர்வ திருசியப் பிரபஞ்சத்தின் சம்பந்த மற்றிருத்தலின் சுத்தரூப ஸ்வப்பிரகாச பரமாநந்தரூபமாய் யாண்டும், நிறைந்துள்ள ஆன்ம தேவருக்குச் சுயமாகவே கைவல்ய ரூபமோக்ஷமுண்டாம். ஆகையினால், பந்த மோக்ஷம் இரண்டினுக்கும் பின்னபின்ன அதிகரணமின்றாம் ; மற்றே, ஒரே ஆன்மா இரண்டினுக்கு மதிகரணமாம். இதுகூறியதால், அந்தக்கரணம் ஆன்மா என நாமமாத்திரத்தின்கண்ணே விவாதமாம், அவ்விரண்டு நாமங்கட்கும் பொரு ளொன்றே யாம் ; என முன்னர் வாதிகூறியதும் கண்டிக்கப்பெற்றதென வுணர்க. ஏனெனின், பிரகாசியம் பிரகாசகமென்னும் இரண்டினுக்கும் ஒருமை சம்ப வியாது. எங்ஙனம் பிரகாசியங்களாய கட முதலிய பதார்த்தங்களும், பிரகாச கங்களாய தீபமுதலிய பதார்த்தங்களும், ஒருமையைப் பெறுவனவன்றாமோ அங்ஙனம், பிரகாசியங்களாய அந்தக்கரணாதிகளும், பிரகாசகமாய சாக்ஷியான் மாவும் ஒருமையைப்பெறா. மற்றே, பிரகாசியப்பொருள் பிரகாசகத்தினும், வேறே யாம். ஒருகால் ஒரே பொருட்குப் பிரகாசியத் தன்மையையும் பிரகாசகத் தன்மையையும் அங்கீகரிக்கின், ஒரே பதார்த்தத்தின்கண் பிரகாச ரூபக்கிரியை யின் கர்த்துருத்தன்மையும், கர்மத்தன்மையும் அடையும். அஃதத்தியந்தம் விருத்தமாம். ஒரே வஸ்துவின்கண் ஒருகிரியையால் நிரூபிக்கப்பட்ட கர்த் துருத்தன்மையும், கர்மத்தன்மையும் யாண்டும் கண்டிடவாராவென்றுணர்க.

சங்கை :—ஒரே வஸ்துவின்கண் பிரகாசியத்தன்மையும் பிரகாசகத்தன்மை யும் உண்டாகாதொழியின், ஆன்மாவின்கண்ணுந் தான் அவ்விரண்டும் எங்ஙனஞ் சம்பவிக்கும் ?

சமாதானம் :—சுயஞ்சோதியாய ஆன்மாவின்கண் யாம் கேவலம் பிரகாசகத் தன்மையையே அங்கீகரிக்கின்றோம். கடாதிய பதார்த்தங்கட்கேபோல, ஆன் மாவின்கண்ணே பிரகாசியத்தன்மையை அங்கீகரிப்பதின்றாம். மேலும், ஆன் மாவின்கண்ணுள்ள அந்தக் கரணாதிகளின் பிரகாசகத் தன்மையும் ஸ்வப்பிரகாச ஞானரூபத்தன்மையினும் பின்னமன்றாம் ; மற்றே, அந்தப் பிரகாசகத்தன்மை ஸ்வப்பிரகாச ஞானரூபத் தன்மையேயாம். இத்தகைய பிரகாசகத்தன்மை ஆன்மாவினும் வேறாய அந்தக் கரணாதிகளிடத்தே சம்பவியாது.

சங்கை :—புத்தி விருத்திகளினும் வேறாய் யாதொரு ஞானமுமின்றாம் ; ஆகையினால், புத்தி விருத்திகளே ஞானரூபங்களாம்.

சமாதானம் :—ஞானம் சர்வ தேசத்திலும், சர்வ காலத்திலும் தொடர்ந்து நிற்பதாம். பேதம் செய்வனவாய தர்மங்களற்றதாம் ; ஆகையினால், அந்த ஞானம் விபுவாம், நித்தியமாம், ஏகமாம். புத்தியின் பரிணாமரூப விருத்திகளோ பரிச் சின்னங்களாம், அநித்தியங்களாம், அநேகங்களாம். விபுவாய் நித்தியமாய ஏக ஞானத்திற்குக் கூறியவகையாய பரிச்சின்ன அநித்திய அநேக விருத்தி ரூபத் தன்மை சம்பவியாது.

சங்கை :—ஞானத்தை நித்தியமெனவும், ஏகமெனவும், அங்கீகாரம் செய்பினே, என்னிடத்தே முன்னர் கடஞானமழிந்தது. இப்போது படஞானம் உண்டாகியிருக்கின்றது, என்னுமித்தோற்றம் ஞானத்தின் உற்பத்தி நாசத்தையும், பேதத்தையும் விஷயஞ்செய்வது அசங்கதமாம்.

சமாதானம் :— அத்தோற்றம் ஞானத்தின் உற்பத்தி நாசங்களை விஷயம் செய்வதின்றாம்; மற்றோ, அச்சாக்ஷியாய ஆன்மரூப ஞானத்திற்குக் கடாதி விஷயங்களோடு விருத்திவாயிலாயுள்ள சம்பந்தத்தின் உற்பத்தி நாசங்களை அத்தோற்றம் விஷயஞ்செய்யும். அங்ஙனம் அங்கீகரியாவிடின், அந்த அந்த ஞானத்தினுற்பத்தி நாசம் பேதம் முதலியவற்றைக் கற்பனை செய்வதில் அத்தியந்தம் கௌரவ தோஷப் பிராப்தியுண்டாம். ஆகையினால், அந்தச் சாக்ஷியாய ஆன்மரூப ஞானம் நித்தியமாம், விபுவாம், ஏக அத்விதீயரூபமாம்.

சு-ம். "நஹித்ரஷ்டுர்த்ருஷ்டேர் விபரிலோபோ வித்யதே அவிநாசித்வாத்
ஆகாசவத் ஸர்வகதஶ்ச நித்ய:
ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம விஜ்ஞாநமாநந்தம் [ப்ரஹ்ம:"
நேஹநாநாஸ்தி கிஞ்சந ஏகமேவாத்விதீயம் ஸ்வப்ரகாஶம் ஸர்வம் ...

இதன்பொருள் :—திருஷ்டாவாய ஆன்மாவின் வடிவமாய ஞானரூப திருஷ்டி நாசமற்றதாம். ஆகையினால், அத்திருஷ்டியினுக்கு எவ்வவஸ்தையினும், அபாவ முண்டாகமாட்டாது. இந்த ஞானசொரூப ஆன்மா, ஆகாசம்போல யாண்டும் வியாபகமும் நித்தியமுமாம்; இந்த ஞானசொரூப ஆன்மா, மகத்வடிவத்தை யுடையதும், அநந்தமாயதும், அபாரமாயதும், விஞ்ஞான கனமாயதும் ஆம்; இந்த ஞானசொரூப ஆன்மாவாய பிரஹ்மம் காரணமற்றதும், காரியமற்றதும், உட்டன்மையற்றதும், வெளித்தன்மை யற்றதும் ஆம்; இந்த ஞானசொரூப ஆன்மாப் பிரஹ்மரூபமாம். என்பவை முதலிய அநேகம் சுருதிகள் ஆன்மாவை விபுநித்திய ஸ்வப்பிரகாச ஞானரூபமாய்க் கூறுகின்றன. இத்துணை கூறியதால், அவித்யாரூப காரண உபாதியினின்றும் ஆன்மாவிற்கு வேற்றுமை துணியப்பெறுமென்க. ஸ்தூலசூக்ஷ்ம காரணவடிவ அசத்திய உபாதிகளாலாக்கிய ஆன்மாவின் கண்ணுள்ள பந்தமயலின் நீக்கம் ஆன்மஞானத்தாலாம்போது இச்சுயஞ்சோதிப் புருஷனுக்கு மோக்ஷ அடைவுண்டாம். எனத் துணியப்பெறும். இத்துணிவின்கண் முன்மொழிந்த சிறிது மாத்திரைத்தோடமுமடைவுறாதென் றுணர்ந்துகொள்க. ஈண்டு 'ஸர்வாணிபூதாநி' என்னும் விளியால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :— ஸ்வப்பிரகாச சைதன்யரூபத் தன்மையாலே உன்னிடத்தே புருஷத்தன்மையுளது, பரமானந்தரூபத்தன்மையாலே உன்னிடத்தே சர்வ த்வைதப் பிரபஞ்சத்தின் அபேக்ஷையால், மேன்மைவடிவ இருஷபத்தன்மையுளது உனது புருஷத்தன்மையையும், இருஷபத்தன்மையையும் அறியாமலே நீ சோகத்தையடைந்தனை. ஆதலின் அச்சோக நிவிருத்திக்கு வேறு யாதொரு உபாயமுமின்றாம்; மற்றோ, உனது சொரூப ஞானத்தாலே உனது சோகநீக்கமுண்டாம். ஆண்டு சுருதியாம் :—" தரதி ஶோகமாத்மவித் " பொருளிதுவாம் :—ஆன்மாவையுணர்ந்தவன் சோகத்தைக் கடக்கின்றான். இச்சுலோகத்தின்கண் புருஷம் என்னும் ஏகவசனத்தால் (ஒருமையால்) சாங்கிய நூலுடையார் மதம் கண்டிக்கப்பெற்றதாம். ஏனெனின், அச்சாங்கிய நூலுடையார் அநேக புருஷரை யங்கீகரித்தலினென்றறிந்துகொள்க.

(அ-கை.) ஹே பகவன்! சேதன ஆன்மபுருஷன் ஒருவனே யாவன் எனினும், அப்புருஷனிடத்தே சத்தியரூப ஜடபதார்த்தங்களைக் காணுந் தன்மைவடிவ சம்சாரம் அசத்தியமன்றாம்; மற்றேே, அச்சம்சாரம் சத்தியமாம்; அச்சம்சாரம் சத்தியமாகவே, சீத உஷ்ணம் முதலிய சுகதுக்கங்களின் காரணங்கள் நிகழும் நிகழவே சுகதுக்கபோகமும் அவசியமுண்டாம். அன்றியும் சத்தியவத்துவின் நீக்கம் ஞானத்தாலுண்டாகாது; சத்தியவத்துவிற்கும் ஞானத்தால் நீக்கமுண்டாமாயின், சத்திய ஆன்மாவிற்கும் ஞானத்தால் நீக்கமுண்டாதல்வேண்டும். ஆகையினுல் முன்னர்க்கூறிய மாத்ராஸ்பரிசங்களின் திதிக்ஷை யெங்ஙனஞ் சம்பவிக்கும்? அங்ஙனமே இப்புருஷன் மோக்ஷத்தையடையும்பொருட்டு எங்ஙனந் தகுதியுடையவனுவன்? என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீபகவான் அருளிச்செய்வதாவது:—ஹே அர்ச்சுன! இப்பியின்கண் கற்பிதமாய வெள்ளிக்கு இப்பிரூப அதிஷ்டான ஞானத்தால் நீக்கமுண்டாவதேபோல, இவ்வெல்லா த்வைதப் பிரபஞ்சமும் ஆன்மாவின்கண் கற்பிதமாதலின், அவ்வதிஷ்டான ஆன்மஞானத்தால் அக்கற்பிதப் பிரபஞ்சத்தின் நீக்கம் உண்டாமென் றுணர்க. ஹே பகவன்! ஆன்மாவின் பிரதீதியாவதேபோல அனுன்மப் பிரபஞ்சத்தின் பிரதீதியும் உண்டாமாதலின், ஆன்மாவிற்கும் அனுன்மாவிற்கும் சமானப் பிரதீதியிருப்ப ஆன்மாவைப்போல அனுன்மஜகத்தும் சத்தியமேனுகமாட்டாது? அங்ஙனமே அனுன்மஜகத்தைப் போல ஆன்மாவும் அசத்தியமேனுகாது? என வுண்டாம் அர்ச்சுனன் சங்கைக் குத்தரம் அருளிச்செய்வான், ஸ்ரீ கண்ணபிரான் அவ்விரண்டினுள்ளும் விசேஷத் தன்மையை வருணித்தருளுகின்றார்:—

சு-ம். நாஸதோவித்யதே பாவோ நாபாவோவித்யதே ஸத:।
உபயோரபி த்ருஷ்டோந்தஸ்த்வநயோஸ்தத்வதர்சிபி:॥

ப-ம். 3 ந 1 அஸத: 4 வித்யதே 2 பாவ: 7 ந 6 அபாவ: 8 வித்யதே 5 ஸத: 10 உபயோ: 11 அபி 14 த்ருஷ்ட: 12 அந்த: 9 து, அநயோ: 13 தத்வதர்சிபி:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அசத்வஸ்துவிற்குச் சத்தை சம்பவியாது, அங்ஙனமே சத்வஸ்துவிற்கு அபாவம் சம்பவியாது; இச்சத்த சத்து என்னும் இரண்டு வஸ்துக்களின் மரியாதையையும் தத்துவ தரிசிகள் கண்டு கொண்டிருக்கின்றனர். (16)

(வி-ம்.) காலபரிச்சேதம், தேசபரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்னும் மூன்றுவித பரிச்சேதங்களையும் உடைய பதார்த்தம் அசத்தென்னப்படும். அத்தகையன கடாதியசத்பதார்த்தங்களாம். அவற்றுள், முன்னின்மை பின்னின்மைகளின் எதிர்மறைத் தன்மையைக் கால பரிச்சேதமென்பர்; கடத்தின் உற்பத்தியின் முன்னர் கடத்திற்கு மண்ணின்கண் முன்னின்மையுளது; அம்முன்னின்மையின் எதிர் மறைத்தன்மை அக்கடத்தின்கண்ணேயுளது. அக்கடத்தின் அழிவின்பின் அதன் பின்னின்மை அக்கடத்தின் கபாலங்களிலுளது, அப்பின்னின்மையின் எதிர் மறைத்தன்மை அக்கடத்தின்கண்ணேயுளது. ஆகையால் அக்கடம் காலத்தாலாக்கிய பரிச்சேத முடையதாம். கடமழிந்ததன் பின்னர் இராநின்ற ஓடுகள் யாவையோ அவையே கபால நாமத்தையியையும். முற்றுமின்மையின் எதிர்மறைத் தன்மையைத் தேசபரிச் சேதமென்பர், எவ்விடத்திற் கடமுளதோ அவ்விடத்தை யொழித்து, மற்றெல்லாவிடத்தும் அக்கடத்தின் அத்தியந்தா பாவமிருக்கும், அவ்வத்தியந்தா பாவத்தின் பிரதி யோகித்தன்மை (எதிர் மறைத்தன்மை) அக்கடத்தின்கண்ணே யிருக்கும். ஆகையினுல் அக் கடம் தேசத்தாலாக்கிய பரிச்சேத முடையதாம். ஆண்டு வேதாந்த சித்தாங்

தத்தின்கண் எப்பதார்த்தம் காலத்தால் ஆக்கிய பரிச்சேத முடையதாமோ, அப் பதார்த்தம் நியமமாய்த் தேசத்தாலாக்கிய பரிச்சேத முடையதுமாம்; ஆகையினால், காலத்தாலாக்கிய பரிச்சேதத்தைக் கவர்தலினாலேயே தேசத்தாலாக்கிய பரிச்சேதத்தைக் கவர்தலுமாம், அத்தேசத்தாலாக்கிய பரிச்சேதத்தை வேறாய்க் கவர்தல் சம்பவியாது. ஆயினும் நையாயிகர் பிருதுவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கின் பரமாணுக்களையும், மனத்தையும், மூர்த்த திரவியமெனவும், நித்தியமெனவும் அங்கீகரித்துளார். ஆகையினால், அந்நையாயிகர் அந்தப் பரமாணுக்களிடத்தும், மனத்தின்கண்ணும் கேவலம் தேசகாலத்தாலாக்கிய பரிச்சேதத்தையே அங்கீகாரம் செய்துளார், காலத்தாலாக்கிய பரிச்சேதத்தை யங்கீகரித்திலர். ஆகையால் ஈண்டுக் காலத்தாலாக்கிய பரிச்சேதத்தினும் தேசத்தாலாக்கிய பரிச்சேதம் வேறாய்க் கவரப்பட்டுளது. சஜாதீய, விஜாதீய, சுவகதபேத மென்னும் மூன்றையும் வஸ்து பரிச்சேத மென்பர். ஒரு தருவிற்கு மற்றொரு தருவினின்றும் உண்டாம் பேதத்தைச் சஜாதீய பேதமென்பர். அத்தருவிற்குக் கற்களினின்றும் உண்டாம் பேதத்தை விஜாதீய பேதமென்பர். அத்தருவிற்குத் தனது இலை, மலர், பலம் முதலியவற்றினின்றும் உண்டாம் பேதத்தைச் சுவகத பேதமென்பர். அல்லது, (1) ஜீவேசுவரர்களின் பேதம். (2) ஜீவஜகத்தின் பேதம். (3) ஜீவர்களின் பரஸ்பரபேதம். (4) ஈசுவர ஜகத்தின் பேதம். (5) ஜகத்தின் பரஸ்பரபேதம். இவ்வைந்து வகையாய பேதத்தின் பெயர் வஸ்து பரிச்சேதமாம். வேதாந்த சித்தாந்தத்தின்கண் எப்பொருள் காலத்தாலாக்கிய பரிச்சேத முடையதும், தேசத்தாலாக்கிய பரிச்சேத முடையதுமாமோ, அப்பொருள் நியமமாய் வஸ்து பரிச்சேத முடையதுமாம். ஆகையினால் காலத்தாலாக்கிய தேசத்தாலாக்கிய பரிச்சேதங்களைக் கவர்தலினானே வஸ்துவாலாக்கிய பரிச்சேதத்தைக் கவர்தலுமாம், அவ்வஸ்துவாலாக்கிய பரிச்சேதத்தை வேறாய்க்கவர்தல் உசிதமன்றாமாயினும், நையாயிகர் மதத்தில் ஆகாசம், காலம், திசை யென்னும் மூன்றும் நித்தியங்களாம் அங்ஙனமே விபுக்களாம். ஆகையினால் அவ்வாகாசாதிகளின்கண் அந்நையாயிகர் காலத்தாலாக்கிய பரிச்சேதத்தையும் தேசத்தாலாக்கிய பரிச்சேதத்தையும் உடன்படுகின்றாரில்லை; ஆனால் அவ்வாகாசாதிகளிடத்தே அந்நையாயிகர் வஸ்து பரிச்சேதமோ அங்கீகரித்துளார். ஆதலின் காலத்தாலாக்கிய பரிச்சேதம் தேசத்தாலாக்கிய பரிச்சேதம் என்னும் இரண்டினும் வஸ்துவாலாக்கிய பரிச்சேதம் வேறாய்க் கவரலாயது. இன்னணம் முப்பரிச் சேதங்களையும் உடையனவாதலின், அசத்துருவ சீதோஷ்ணாதிகளை யுடைய சர்வப் பிரபஞ்சங்கட்கும் சத்தைவடிவ பாவம் சம்பவியாது. ஈண்டுச் சத்தைச் சத்தத்தால் முப்பரிச்சேத மற்ற தன்மையதாய பாரமார்த்திகத் தன்மை யதைக் கவர்க. கடத்தன்மையும், கடத்தன்மையின்மையும் ஆய இரண்டு தர்மங்களும் பரஸ்பரம் விரோத முடையன வாதலின் ஒரு நிலைக்களத்தின்கண் ஒருகாலுமிரா. அங்ஙனமே பரிச்சின்னத் தன்மைவடிவ சத்துவமும், அபரிச்சின்னத் தன்மைவடிவ சத்துவமும் ஆய இரண்டு தர்மங்களும் பரஸ்பரம் விரோதிகளாதலின் ஒரு நிலைக்களத்தின்கண் ஒருகாலுமிரா. கருத்திதுவாம்:—அனாத்மவடிவ எத்துணைத் திருசியப் பிரபஞ்ச முளவோ அவை யாண்டுந் தொடர்ந்து நிற்பவன்றாம். ஆகையால், ஒருகாலத்தே ஒரு தேயத்தே ஒரு வத்துவின்கண் அத்திருசியப் பிரபஞ்சத்திற்கு நிஷேதியாமை யுண்டாகாது; மற்றோ, அதற்கு எல்லாத் தேசகால வத்துவின்கண்ணும் நிஷேதமேயாம். கடத்திற்குத் தனது உற்பத்தியின் முன்னரும், நாசத்தின் பின்னரும், தனது நிலைக்களத்தை யொழித்துப் பிற வெல்லா விடங்களிலும், படமுதலிய வஸ்துக்களிடத்தும், கடமின்றென்னும் நிஷேதமேயாம். சத்வஸ்துவோ யாண்டுந் தொடர்ந்து நிற்பதாம்; ஆகையினால்

சத்வஸ்துவிற்கு எக்காலத்திலும், எத்தேசத்திலும், எவ்வஸ்துவிலும் ஒருகாலும் நிஷேத முண்டாவதில்லை. ஆகையால், ஒரே இரஜ்ஜுவின்கண் தோற்றுநின்ற சர்ப்பம், தண்டம், ஜலதாரை, மாலை முதலியவற்றில் அந்த இரஜ்ஜுவானது இது சர்ப்பம், இது தண்டம், என இது வென்னும் வடிவத்தால் தொடர்ந்து பிரதீதியாம். ஆகையினால் அந்த இரஜ்ஜுவானது அக்கற்பித சர்ப்பதண்டாதிகளிடத்தே தொடர்ந்திருப்பதாம், அச்சர்ப்பத் தோற்றத்தில் தண்டத் தோற்ற முண்டாவதில்லை. அத்தண்டத் தோற்றத்தில் சர்ப்பத்தோற்ற முண்டாவதில்லை. ஆகையால், அக்கற்பித சர்ப்ப தண்டாதிகள் பரஸ்பரம் வியபிசாரியாயிருத்தலின் தொடர்ந் திருப்பனவன்றாம். அதனாலே அத்தொடர்ந்திராச் சர்ப்பதண்டாதிகள் அத்தொடர்ந்திருக்கும் இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாம். அங்ஙனமே கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என எல்லாவஸ்துக்களிலும் சத்வஸ்துவே தொடர்ந்திலங்கும்; அதனால் அச்சத்வஸ்து யாண்டுந் தொடர்ந்திருப்பதாம். கடம் படமன்று, படங்கடமன்று எனக் கடபடாதி பதார்த்தங்கள் பரஸ்பரம் வியபிசாரி யாதலின் தொடர்ந்திருப்பன வன்றாம். ஆகையால், இத்தொடர்ந்திராக் கடபடாதிப் பிரபஞ்சம் தொடர்ந்திருக்கும் சத்வஸ்துவின்கண்ணே கற்பிதமாம்.

சங்கை :—ஹே பகவன்! தொடர்ந்திருக்குந் தன்மைபற்ற வியபிசாரி வஸ்துவைக் கற்பிதமென உடன்படின் சத்வஸ்துவும் கற்பிதமாம். என்னை? அச்சத்வஸ்துவும், முயற்கோடு, மலடிமைந்தன் முதலிய துச்சபதார்த்தங்களினின்றும் நீங்கி யிருத்தலின் பிறழ்ச்சியுடையதே யாமன்றோ? என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் உத்தர மருளிச் செய்கின்றார் :—

சமாதானம் :—நாஸாவோவிஷ்யதெஸதஃ ஐதி. ஹே அர்ச்சுன! சத்தாய நிலைக்களத்தின்கண் இருப்பதாய பேதத்தின் பிரதியோகித் தன்மையின் பெயரே வஸ்து பரிச்சேதமாம். கடரூப சத்வஸ்துவின்கண் இராநின்ற படத்தின் பேத எதிர்மறைத்தன்மை படத்தின்கண்ணுளது. இதுவே அப்படத்தின்கண்ணே வஸ்து பரிச்சேதமாம். முயற்கோடு மலடிமைந்தன் முதலான அசத்பதார்த்தங்களில் சத்ரூபத்தன்மையின்றாம்; ஆகையால், அம்முயற்கோடு முதலிய அசத் பதார்த்தங்களினின்றும் சத்வஸ்துவின் பேதத்தை அங்கீகரித்திருப்பினும், அச் சத்வஸ்துவின்கண் வஸ்து பரிச்சேதத்தின் அடைவுண்டாகமாட்டாது. அன்றியும், ஸ்வப்பிரகாச நித்திய விபுரூப ஒரே சத்வஸ்து யாண்டும் வியாபகமாம்; ஆகையால், அச்சத்வஸ்துவின்கண் எச்சத்வியத்தியின் பேதமும் சம்பவியாது. ஏனெனின், கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்பவை முதலிய பிரதீதிகள் யாவருக்கு முண்டாகின்றன; ஆதலின் சத்வஸ்துவின்கண்ணே கடாதி பதார்த்தங்களில் இராநின்ற பேதப்பிரதியோகித்தன்மை சம்பவியாது. இத்தகைய தேச கால வஸ்து பரிச்சேதமற்ற சத்வஸ்துவிற்குத் தேசகால வஸ்து வாக்கிய பரிச்சின்னத்தன்மை வடிவ அபாவம் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் கடத்தன்மை, கடத்தன்மையினின்மை யென்னும் இவ்விரண்டு தர்மங்களும் பரஸ்பரம் விரோதிகளாயிருத்தலின், ஓரதிகரணத்தின்கண் இராவோ; அங்ஙனம், பரிச்சின்னத்தன்மை, அபரிச்சின்னத்தன்மை என்னும் இவ்விரண்டு தர்மங்களும் பரஸ்பரம் விரோதிகளாதலின் ஓரதிகரணத்தின்கண் இரா.

எதன்கண் தேசகாலவஸ்து பரிச்சேதத்தின் நிஷேதம் செய்யப்படுமோ, அத்தகைய ஒரு சத்வஸ்துவேயின்றாம். மற்றோ, சத்தை யென்பது ஒரு பரஜாதியாம், அச்சத்தா ஜாதி திரவியம், குணம், கர்மம் என்னும் மூன்று பதார்த்தங்களிலோ, சமவாய சம்பந்தத்தாலிருக்கும், அத்திரவியாதிகளில் இரா

நின்ற சாமானியம், விசேஷம், சமவாயம் என்னும் மூன்று பதார்த்தங்களில் அச்சத்தா ஜாதி சமநிலைக்களத்திலிருத்தற்றன்மைச் சம்பந்தத்தாலிருக்கும். இக்காரணத்தாலே அந்தத் திரவியாதி ஆறு பதார்த்தங்களில் திரவியம் இருக்கின்றது, குணமிருக்கின்றது என்பனவாதி இருப்பு வியவகாரமுண்டாம். ஆகையால், உற்பத்தியின்முன்னர் நிகழாநின்ற முன்னின்மையின் எதிர்மறையாதலின், அசத்துருவமாங் கடாதிகட்கே குலாலதண்டசக்கிராதி காரணங்களின் வியாபாரத்தால் சத்வமுண்டாம்; அச்சத்துருவ கடாதிகட்கே மண்முதலிய காரணங்களின்நாசத்தால் அபாவமுமுண்டாம். ஆகையினால், அசத்பதார்த்தத்திற்குப் *பாவமின்றும்; சத்வஸ்துவிற்கு அபாவமின்றும், எனத் தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய வசனம் சம்பவியாதென்னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச் செய்கின்றார். 'உபயோரபி' ஹே அர்ச்சுன! சத்வஸ்துவின் அசத்வஸ்துவின் அந்தத்தை, அஃதாவது :—யாது சத்வஸ்துவாமோ, அது சர்வகாலத்திலும் சத்வஸ்துவேயாம், ஒருகாலும் அசத்தாகாது; யாது அசத்வஸ்துவாமோ, அஃதெப்போதும் அசத்தேயாம், ஒருகாலும் சத்தாகாது. இவ்வகையாய நியமரூப மரியாதையாகிய அந்தத்தை, வஸ்துவின் உண்மையுருவுணர்ந்த பிரஹ்ம வேத்தாக்களே விசாரவாயிலாய்ச் சுருதி ஸ்மிருதி யுக்திகளால் துணிந்துளார். குதார்க்கிகராகிய நையாயிகரோ, அம்மரியாதையாகிய அந்தத்தைத் துணியாரென்க. ஈண்டுச்சுருதி ஸ்மிருதிப் பிரமாணங்களினின்றும் விருத்தமாய தர்க்கம் குதர்க்கமெனப்படும். அக்குதர்க்கங்களைக் கூறும் வாதியர் குதார்க்கிகர் எனப்படுவர். அத்தகைய குதார்க்கிக புருஷரிடத்தே முற்புகன்ற விபரீத மயல் சம்பவிக்கும். ஈண்டுச் சுலோகத்தின்கண்ணுள்ள 'த்ருஷ்டஸ்து' என்னும் வசனத்தின்கண் இராநின்ற 'து' என்னும் சப்தத்திற்கு நிச்சயரூபத் தேற்றம் பொருளாம். அந்த 'து' என்னும் சப்தத்தை "த்ருஷ்ட:" என்னும் சப்தத்தோடு கொண்டுகூட்டின், இப்பொருளுண்டாம் :—சத்தாய வஸ்துச் சத்தாய வஸ்துவேயாம். அசத்தாய வஸ்து அசத்தாய வஸ்துவேயாம். இவ்வண்ணம் சத்து அசத்துக்களின் நியமத்தையே தத்துவதரிசிகளாய புருஷர்கள் கண்டுளார்; அந்தச்சத்து அசத்து வஸ்துக்களின் அநியமத்தைக் கண்டிலர். அந்த "து" என்னும் சப்தத்தை "தத்வதர்சிபி:" என்னும் பதத்தோடு அன்வயம் செய்யின், இப்பொருள் துணியப்பெறும் :—தத்துவதரிசிகளே அந்தச்சத்து அசத்துக்களின் நியமத்தைக் கண்டுளார். அதத்துவதரிசிகள் அந்நியமத்தைக் கண்டிலர்.

சு-ம். "ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்."

"ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி ச்வேதகேதோ."

(பொ-ள்.) ஹே பிரியதரிசனனே! காணப்பட்ட இப்பிரபஞ்சமானது தனது உற்பத்தியின் முன்னர் சத்வஸ்துரூபமாயே இருந்தது, அச்சத்வஸ்து ஏக அத்விதீயரூபமாகவேயிருந்தது. இவ்வண்ணம், சாந்தோக்கிய உபநிஷத்தின் ஆறாவதத்தியாய முதலிற்கூறி, அதன்முடிவிலும் இது கூறப்பட்டுளது :—இவ்வெல்லாவுலகும் ஆத்மஸ்வரூபமேயாம், அவ்வான்மாவே சத்தியரூபமாம். ஹே சுவேதகேதுவே! அச்சத்வஸ்துவாகிய ஆன்மாவே நீயாயிருக்கின்றாய். இச்சுருதியானது சஜாதீய விஜாதீய சுவகதபேதமற்ற ஏக அத்விதீய வஸ்துவையே கூறுகின்றது.

"வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்."

(பொ-ள்.) கடசராவாதி விகாரங்கள் கேவலம் வாக்குமாத்திரமாதலின் மித்தையாம். அக்கடசராவாதி விகாரங்களின் காரணரூப மண்ணே சத்தியமாம்.

---

* பாவம் = இருப்பு.

இச்சுருதியானது, பரஸ்பரம் வியபிசாரிரூப கடசராவாதி விகாரங்களிடத்தே மித்தியாத்தன்மையையே புகல்கின்றது. அங்ஙனமே,

> ஶுங்கேந ஸோம்ய ஶுங்கேநாபோ மூலமந்விச்ச அத்பி:
> ஸோம்ய ஶுங்கேந தேஜோ மூலமந்விச்ச தேஜஸா ஸோ
> ம்ய ஶுங்கேந ஸந்மூலமந்விச்ச ஸந்மூலா: ஸோம்யேமா:
> ஸர்வா: ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:.” பொருளிதுவாம்.

(போ-ள்.) ஹே பிரியதரிசன சுவேதகேதுவே! இப்பிருதிவி ரூபகாரியங் கொண்டு நீ ஜலரூபகாரணத்தை நிச்சயம்செய்தி. அங்ஙனமே ஜலரூபகாரியங் கொண்டு நீ தேயுரூபகாரணத்தை நிச்சயம்செய்தி. அங்ஙனமே தேயுரூபகாரியங்கொண்டு நீ சத்வஸ்து ரூபகாரணத்தை நிச்சயம்செய்தி. ஹே சுவேதகேதுவே! இவ்வெல்லாப் பிரஜைகளும், அந்தச் சத்வஸ்துவினின்றுமே உண்டாயினர். அங்ஙனமே, அந்தச் சத்வஸ்துவின்கண்ணே யிருப்பர். அங்ஙனமே அச்சத்வஸ்துவின்கண்ணே இலயத்தை யடைவர். இச்சுருதியானது, அச்சத்வஸ்துவின்கண்ணே பிருதிவியாதி சர்வவிகாரங்களின் கற்பிதத்தன்மையைக் கூறியது. “ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்” என்பவாதி சர்வ சுருதிகளின் பொருளை ஸ்ரீ ஆன்மபுராணத்தின் பன்னிரண்டாவதத்தியாயத்தின் கண்ணே யாம் விஸ்தாரமாய்க் கூறியிருக்கின்றோம். அல்லது, பொருளிருக்கின்றது, பண்பிருக்கின்றது, என்பனவாதித் தோற்றத்திற்கு விஷயமாயசத்தை பரஜாதிரூபமாம் என நையாயிகர்கூறுவர்; அவர் கூற்று முற்றினும் முரணும். ஏனெனின், இருக்கின்றது, இருக்கின்றது என்னும் சத்தையை விஷயம் செய்யும் தோற்றம் பொருள் முதலிய எல்லாப் பதார்த்த மாத்திரங்களிடத்தும் சமானமாயிருக்கும். கேவலம், பொருள், பண்பு, வினை என்னும் மூன்றுபதார்த்தங்களிடத்தே மாத்திரம் அத்தோற்றமுண்டாவதின்றும். ஆகையால், இருக்கின்றது, இருக்கின்றது என்னும் தோற்றத்தால், பொருள், பண்பு, வினை மாத்திரத்தில் இராநின்ற சத்தாஜாதியின் கற்பனையுண்டாகாது. ஒருவடிவத்தோற்றம் ஒருவடிவ விஷயத்தானே துணியப்பெறும். அவ்வொருவடிவத் தோற்றத்தின்கண் சம்பந்தத்தின் வேற்றுமையையும், வடிவத்தின் வேற்றுமையையும் கற்பனைசெய்தல் தகுதியன்றும். அனேக கடங்களிடத்தே இதுகுடம், இதுகுடம் என்னும் ஒருவடிவத்தோற்றம் குடத்தன்மைவடிவ ஒருவடிவ விஷயத்தானே துணிதல்கூடும். ஆகையால் கடவடிவங்களிடத்தே கடத்தன்மைத் தன்மத்தின் சம்பந்த வேற்றுமையைக் கற்பித்தல் தகுதியற்றதாம். அதுபோல, இருக்கின்றது, இருக்கின்றது என்னும் ஒருவடிவத்தோற்றம், பொருள், பண்பு, வினை யென்னும் மூன்றுபதார்த்தங்களிடத்தோ சமவாய சம்பந்த விசிஷ்ட சத்தையை விஷயம்செய்யும். பொதுமை, சிறப்பு, சமவாயம், என்னும் மூன்றுபதார்த்தங்களிடத்தே ஒரு நிலைக்களத்திருக்குந் தன்மைச் சம்பந்தவிசிஷ்ட சத்தையை விஷயஞ்செய்யும். என இங்ஙனம் சம்பந்தத்தின் பேதகற்பனை செய்தல் தகுதியன்றும்; விஷயத்தின் ஒரு வடிவத்தன்மை யின்றும், ஒருகால் தோற்றத்தின் ஒரு வடிவத்தன்மையை அங்கீகரிக்கின், உமது மதத்தே எச்சாதியின் சித்தியும் உண்டாகாது. ஆகையால், இப்பொருள் துணியப்பெறும். நையாயிகர் அங்கீகரித்த சத்தா ஜாதியானது கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்பதாதி இருப்பு வியவகாரத்தின் சாதகமன்றும். மற்றோ, அறியப்பட்ட அறியப்படாத அவஸ்தைகளை யொளிர்விப்பதும், தானே யொளிருவதுமாய ஓரே சத்வஸ்துவானது தனது தாதாத்மிய அத்தியாசத்தால் எல்லாப் பதார்த்தங்களிலும் இருக்கின்றது, இருக்கின்றது என்னும் சத்வியவகாரத்தின்

சாதகமாம். அல்லது, இருக்கின்றது கடம், இருக்கின்றது படம் என்பதாதித் தோற்றம்; கடபடாதி வடிவங்களிடத்தே சத்தைவடிவத்தின் அபேதமாத்திரத்தை விஷயஞ்செய்யும். அக்கடபடாதி வடிவங்களிடத்தே சத்தா ஜாதியின் சமவாயித்தன்மையை அத்தோற்றம் விஷயஞ்செய்யாது. ஏனெனின், அபேதத்தை விஷயஞ்செய்யும் தோற்றத்திற்குப் பேதம்பொருந்திய சமவாய சம்பந்தத்தால் நிர்வாக முண்டாகமாட்டாது. இங்ஙனம், பொருளிருக்கின்றது, பண்பிருக்கின்றது என்பதாதித் தோற்றத்தால் அவ்வொரு சத்வஸ்துவிற்குப் பொருண் முதலிய எல்லாப் பதார்த்தங்களோடும் அபேதம் துணியப்பெறவே, அவ்வொரு சத்வஸ்துவோடு அபின்னமாதலின், அப்பொருள் பண்பு முதலிய பதார்த்தங்கட்குப் பரஸ்பரமும், பேதம் துணியப்பெறமாட்டாது. அப்பொருள் முதலியவற்றின்பேதம் துணியப்பெறாதாகவே, அப்பொருள் பண்புமுதலிய தருமிகளிடத்தே சத்தாஜாதி ரூபதர்மமும் கற்பிக்க முடியாததாம். ஆகையால், சத்வஸ்து ரூப தருமியின்கண் பொருள் பண்பு முதலிய பதார்த்தங்கட்கு அபேதம் அங்கீகரித்தலே தகுதியாம்; அந்த ஜடசேதனங்களின் அபேதம் உண்மையாயோ சம்பவியாது. மற்றோ, அத்தியாசத்தால் உண்டாம் அபேதமே சம்பவிக்கும். அல்லது, நையாயிகர் விபுரூபகால பதார்த்தத்திற்குச் சர்வ பதார்த்தங்களோடு சம்பந்தம் அங்கீகரித்துளார்; அக்கால சம்பந்தத்தைக் கவர்ந்தே கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்பதாதி சர்வ வியவகாரமும் சம்பவிக்கும். அக்கால சம்பந்தத்தினும் வேறாய்ச் சத்தா ஜாதிரூப பதார்த்தத்தை யுடன்படுவதில் யாதொரு பிரமாணமுமின்றாம்; ஆகையால், இப்பொருள் துணியப்பெறும்:—ஒரு தேசத்தில், ஒருகாலத்தில் கடமல்லாதனவாய படம் முதலிய பதார்த்தங்கட்கு, மற்றிடத்தே, மற்ற காலத்தே கடரூபத்தன்மை யுண்டாகாது. ஓரிடத்தே ஒரு காலத்தே கடரூபமாய் இராநின்ற கடத்திற்கு, மற்றிடத்தே, மற்ற காலத்தே, அகடரூபத்தன்மையை சாக்ஷாத் இந்திரனாலும் துணியப்பெறுத்த முடியாதாம். அங்ஙனமே ஓரிடத்தே, ஒருகாலத்தே அசத்துரூபமாய் இராநின்ற பதார்த்தத்திற்கு மற்றிடத்தே, மற்றகாலத்தே உண்மை துணியப்பெறமாட்டாது. அங்ஙனமே, ஓரிடத்தே, ஒரு காலத்தே சத்துரூபமாய் இராநின்ற பதார்த்தத்திற்கு, மற்றிடத்தே, மற்ற காலத்தே அசத்துத்தன்மை துணியப்பெறமுடியாது. ஆகையால், சத்து, அசத்து என்னுமிரண்டிற்கும் மாறுதவடிவமே உடன்படல் தகுதியாம். ஆகையால், ஒரே சத்வஸ்து மாயையாற் கற்பிக்கப்பட்ட அசத்தை நீக்கி மோக்ஷரூப அமிர்தத்தை அடைவிக்க யோக்கியமாம். அங்ஙனமே சத்வஸ்து மாத்திரத்தின் திருஷ்டியால் முற்புகன்ற திதிக்ஷையும் சம்பவிக்கும். (16)

(அ-கை.) ஹே பகவன்! முற்கூறியருளிய தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற சத்வஸ்துவானது ஞானரூப விளக்கத்தினின்றும் பின்னமா? அபின்னமா? அவற்றுள், முதலாவது பக்ஷம் சம்பவியாது. ஏனெனின், அந்தச் சத்வஸ்துவை ஞானரூப விளக்கத்தினின்றும் பின்னமென உடன்படின், அது பேதரூப வஸ்துபரிச்சேதமுடையதாம். அத்தோஷத்தை நீக்கும்பொருட்டு, அவ்வஸ்துவை ஞானரூப விளக்கத்தினின்றும் அபின்னமா யொப்பும் இரண்டாவது பக்ஷத்தை உடன்பட வேண்டிவரும், வரவே இது சர்ப்பம் என்னும் தோற்றத்தால் ரஜ்ஜுவின்கண் உண்டாம் சர்ப்பத்தின் அபேதம் உண்மையாயின்றாம்; மற்றோ, அது அத்தியாசத்தால் உண்டாயதாம். அங்ஙனமே சத்வஸ்துவின்கண் ஞானரூப விளக்கத்திற்கு அத்தியாசத்தால் பெறும் அபேதத்தை அங்கீகரிக்கின், அந்த ஞானவிளக்கத்தினின்றும் உண்மையாய்ப் பின்னமாய அச்சத்வஸ்து, கடாதி பதார்த்தங்களைப்போல ஜடமாம். ஆகையால், அச்சடத்தன்மைத் தோஷத்தை நீக்கும்பொருட்டு, அச்சத்வஸ்துவின்கண் ஞானரூப விளக்கத்திற்கு வாஸ்தவ

அபேதத்தை அங்கீகரிக்கவேண்டிவரும். அங்கீகரிப்பின் அச்சத்வஸ்துவின்கண் மீண்டும் தேச கால வஸ்து பரிச்சேதப் பிராப்தி உண்டாம். ஏனெனின், என்னிடத்தே முன்னரிருந்த கடஞானமழிந்து, இப்போது படஞானமுண்டாயிருக்கிறது என்னுந் தோற்றம் எல்லாருக்கும் உண்டாம். அத்தோற்றத்தால் ஞானரூப விளக்கத்திற்குத் தோற்றமும் அழிவும் துணியப்பெறும். யான் கடத்தை புணர்கின்றேன் என்னுந் தோற்றமும் யாவருக்கும் உண்டாகின்றது ; இத்தோற்றத்தால் யான் என்னும் சப்தார்த்தத்தின்கண் அந்த ஞானரூப விளக்கத்திற்கு ஆசிரயத்தன்மை சித்தமாம். கடத்தின்கண் அந்த ஞானரூப விளக்கத்திற்கு விஷயத்தன்மை சித்தமாம். ஆகையால், அந்த ஞானரூப விளக்கம் தேச கால வஸ்து பரிச்சேதமுடையதாயே துணியப்பெறும். அத்தகைய பரிச்சின்ன ஞானரூப விளக்கத்தோடு அச்சத் வஸ்துவிற்கு உண்மையாய் அபேதமாமேல், அச்சத்வஸ்துவின்கண்ணும் அத்தேச காலவஸ்து பரிச்சேத அடைவு உண்டாம். ஆகையால், அச்சத்வஸ்து, தேசகால வஸ்து பரிச்சேதமற்றதெனத் தாங்கள் கூறியருளியது பொருந்தாது. என்று அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார் :—

சு-ம்.　அவிநாஶி து தத்³வித்³தி⁴ யேந ஸர்வமித³ம் ததம் ।
விநாஶமவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித்கர்துமர்ஹதி ॥

ப-ம்.　6 அவிநாஶி 7 து 5 தத் 8 வித்³தி⁴ 1 யேந 3 ஸர்வம் 2 இத³ம் 4 ததம் 11 விநாஶம் 10 அவ்யயஸ்ய 9 அஸ்ய 14 ந 12 கஶ்சித் 13 கர்தும் 15 அர்ஹதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! எந்தச் சத்துருவ விளக்கம் இவ்வெல்லாத் திருசியப் பிரபஞ்சத்தையும் வியாபித்து நிற்குமோ, அச்சத்துருவ விளக்கத்தைப் பரிச்சேதரூப விநாசமற்றதென்றே நீ அறிதி. ஆதலின், இந்த அபரிச்சின்ன சத்துருவ விளக்கத்திற்குப் பரிச்சின்னத் தன்மைவடிவ விநாசத்தை எவரும் செய்ய வல்லரல்லர். (17)

(வி-ம்.) தேசத்தாலாம் பரிச்சேதம், காலத்தாலாம் பரிச்சேதம், வஸ்துவாலாம் பரிச்சேதம் என்னும் இம்மூன்றிற்கும் விநாசமெனப் பெயராம். அந்த விநாசத்தை உடையது யாதோ அது விநாசியெனப்படும். அத்தகையது பரிச்சின்ன பதார்த்தமாம். அதனின் வேறாயது அவிநாசியெனப்படும். படவே மூவகையாய பரிச்சேதமற்ற வஸ்து அவிநாசியாயதென் றறிந்துகொள்க. ஹே அர்ச்சுன ! அந்தச் சத்வஸ்துரூப விளக்கத்தை நீ இவ்வகையாய அவிநாசியென அறிந்து கொள்ளுதி. அந்தச் சத்வஸ்துரூப விளக்கமானது எங்ஙனமிருக்கின்றதென்னின், அந்த ஏக அத்விதீய நித்திய விபுரூப விளக்கமானது, சுயமாக இருப்பு விளக்கங்களற்ற இவ்வெல்லாத் திருசியப்பிரபஞ்சத்தையும் வியாபித்திருக்கின்றது. ரஜ்ஜுரூப அதிஷ்டானமானது தனது இதுவென்னும் அம்சத்தால் கற்பித, சர்ப்ப, தண்ட ஜலதாரை முதலியவற்றை வியாபித்து நிற்பதேபோல, சத்வஸ்துரூப விளக்கமும் தனது இருப்புவிளக்கங்களின் அத்தியாசத்தால் இவ்வெல்லாத் திருசியப்பிரபஞ்சத்தையும் வியாபித்து நிற்கும் ; அத்தகைய சத்வஸ்துரூப விளக்கத்தை நீ பரிச்சின்னத் தன்மைவடிவ விநாசமற்றதாயே அறிதி. ஏனெனின், பரிச்சேதரூப நாசமற்றதும், எப்போதும் அபரோக்ஷரூபமாயதும், யாண்டும் நிறைந்ததும், சத்துருவ விளக்கமாம். அச்சத்வஸ்துரூப விளக்கத்திற்குப் பரிச்சின்னத் தன்மைவடிவ விநாசத்தின் ஆசிரயத்தையேனும், விஷயத்தையேனும், இந்திரியார்த்தங்களின் சம்பந்தரூப ஏதுவையேனும் செய்ய எவர்க்கும் சமர்த்தின்றாம். என்னை ? கற்பித வஸ்துவானது, அகற்பித வஸ்துவின் பரிச்சேதத்தைச் செய்யமாட்டா

தன்றே? இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாய சர்ப்பதண்டாதிகள், அகற்பித ரஜ்ஜுவின் பரிச்சேதத்தை எங்ஙனம் செய்யமுடியாவோ? அங்ஙனம் சத்வஸ்துரூப விளக்கத்தின்கண்ணே கற்பிதமாய விஷய இந்திரியாதிகள், அக்கற்பிதமற்ற விளக்கத்தின் பரிச்சேதத்தைச் செய்யமுடியா. வாதியானவன் சத்வஸ்துரூப விளக்கத்தின்கண்ணே பரிச்சின்னத்தன்மையின் ஆரோபத்தை அங்கீகரிக்கின், உபாதியாலுற்ற அந்தப் பரிச்சின்னத்தன்மை நமக்கும் அங்கீகாரமாம். ஆனால், அந்த விளக்கத்தின்பால் உண்மையாய்ப் பரிச்சின்னத்தன்மையின்றும். அல்லது, யான் கடத்தை உணர்கின்றேன் என்னும் ஞானத்தின்கண் அகங்காரமோ ஆசிரயரூபமாய்த் தோற்றும். கடமோ விஷயரூபமாய்த் தோற்றும். உற்பத்தி நாசமுடைய அந்தக்கரண விருத்தியோ, யாண்டும் வியாபகமாயிராநின்ற சத்துருவ விளக்கத்தின் அபிவியஞ்சகத்தன்மை ரூபமாய்த் தோற்றும். அந்த அபிவியஞ்சக விருத்திரூப உபாதியின் உற்பத்தி நாசங்களாலேயே அந்த விருத்தி உபஹித சத்துருவ விளக்கத்தின்கண் உற்பத்தி நாசத்தோற்றம் உண்டாம்; உண்மையாய் அச்சத்துருவ விளக்கத்திற்கு உற்பத்தி நாசங்களில்லை. அல்லது, ஆன்ம மனங்களின் சையோகம் ஞானத்தின் காரணமாமென நையாயிகரும் அங்கீகரித்துளார். அச்சையோகரூப உபாதியின் உற்பத்தி நாசத்தாலே அச்சையோக உபஹித சத்துருவ விளக்கத்தின்கண் உற்பத்தி நாசங்கள் தோற்றும். உண்மையாய் அவ்விளக்கத்திற்கு உற்பத்தி நாசங்களின்றும். மீமாம்சகாது மதத்தின்கண் இயல்பானே உற்பத்தி நாசமற்ற வர்ணவடிவ சப்தத்தில் தொனிரூப உபாதியின் உற்பத்தி நாச ஆரோபம் உண்டாவதேபோலும், நையாயிகாது மதத்தின்கண் உண்மையாய் உற்பத்தி நாசமற்ற ஆகாசத்தின்பால் கடரூப உபாதியின் உற்பத்தி நாச ஆரோபம் உண்டாவதேபோலும், வேதாந்த சித்தாந்தத்தின்கண்ணும் உண்மையாய் உற்பத்தி நாசமற்ற ஞானரூப விளக்கத்தின் பால் அந்தக்கரண விருத்திரூப உபாதியின் உற்பத்தி நாச ஆரோபம் உண்டாம். அல்லது, ஆன்ம மன சையோகரூப உபாதியின் உற்பத்தி நாசம் அவ்விளக்கத்தின்கண் ஆரோபமாம், உண்மையாய் அந்தச் சத்வஸ்துரூப விளக்கத்திற்கு உற்பத்தி நாசம் உண்டாகாது. அந்தச் சத்வஸ்துரூப விளக்கத்தின்கண் இவ்வகங்காரம் கற்பிதமாம். ஆதலின், அக்கற்பித அகங்காரத்தின் மாட்டு, அவ்விளக்கத்தின் ஆசிரயத் தன்மை சம்பவியாதாம். ஆயினும், அவ்வகங்காரத்தின் விருத்தியோடு அவ்விளக்கத்திற்குத் தாதாத்மிய அத்தியாசம் இருத்தலின், அவ்விருத்தியின் ஆசிரயரூப அகங்காரத்தின் ஆசிரிதமாய் அவ்விளக்கம் புலப்படும். உண்மையாய் அவ்வகங்காரம் அவ்விளக்கத்தின் ஆசிரயமன்றும். ஏனெனின், துயில் அவஸ்தையின்கண் அவ்வகங்காரம் இன்றேனும், அவ்வகங்காரத்தின் ஸூக்ஷ்ம வாசனையோடு கூடிய அஞ்ஞானத்தை ஒளிர்விப்பதாய சைதன்யம் தானே விளங்கும். ஒருகால் துயில் அவஸ்தையின்கண் அச்சைதன்யம் தானே விளங்காதாயின், இது பரியந்தம் யான் சிறிது மாத்திரையும் அறிந்திலேன் என்பதாய அஞ்ஞான விஷய ஸ்மரணம் துயிலினின்றும் எழுந்த புருஷனுக்கு உண்டாகின்றதன்றே? அஃதுண்டாகலாகாது; இவ்வகையாய ஸ்மரணமே யாவருக்கும் உண்டாகின்றதாதலின், இஃதறிந்து கொள்ளலாமன்றே:— துயில் அவஸ்தையின்கண் அஞ்ஞானத்தை ஒளிர்விப்பதாய சைதன்யம் சுயமாகவே விளக்கரூபமாம். அவ்விளக்கரூப அனுபவத்தாலே நனவின்கண் அவ்வஞ்ஞான விஷயக ஸ்மரணமுண்டாம்; அல்லது, கேவலம் நனவின் ஸ்மரணம் பொருந்தாமையாலே துயிலில் சைதன்யரூப விளக்கத்தின் துணிவு உண்டாவதின்றும். மற்றே, சாக்ஷாத் சுருதிப் பிரமாணத்தாலே அந்த ஞானரூப விளக்கத்தின் துணிவுண்டாம். ஆண்டுச்சுருதி:—

ஆ-சு. "யத்வை தந்ந பஶ்யதி பஶ்யந் வை தத் த்ரஷ்டவ்யம் ந பஶ்யதி
நஹி த்ரஷ்டுர் த்ருஷ்டேர் விபரிலோபோ வித்யதே அவிநாஶித்வாத்"

(பொ-ள்.) துயிலின்கண்ணே இவ்வான்ம தேவர் துவைதப் பிரபஞ்சத்தைக் காணுதது, தமது சைதன்யரூப விளக்கத்தின் அபாவத்தால் காண்பதின்றும் என்னும் வார்த்தை யாண்டுஞ் செல்லாது. மற்றோ, அத்துயிலின்கண் இவ் வான்ம தேவர் தமது சைதன்யரூப விளக்கத்தாற் காணினும், ஆண்டுத் துவைதப் பிரபஞ்சமின்மையின் அதனைக் காண்பதில்லை. ஏனெனின், அந்தத் திருஷ்டாவாய ஆன்மாவின் சொரூபபூத விளக்கரூப திருஷ்டியானது நாசமற்றதாம். ஆதலின், அவ்விளக்கரூப திருஷ்டி எக்காலத்தும் அபாவமாவதின்றும். இச்சுருதியானது துயிலின்கண் ஸ்வப்பிரகாசரூப விளக்கத்தின் இருப்பையும், நித்தியத்தன்மை யையும் கூறுகின்றது. அல்லது, எங்ஙனம் அகங்காராதிகள் ஞானரூப விளக் கத்தின்கண் கற்பிதங்களாமோ, அங்ஙனம் கடாதி விஷயங்களின் அஞ்ஞாத அவஸ்தையை ஒளிர்விக்கும் சத்வஸ்துரூப விளக்கத்தில் அக்கடாதி விஷயங்களும் கற்பிதங்களாம். ஏனெனின், எக்கடத்தை யான் முன்னர் அறிந்திலேனே, அக்கடத்தையே இப்போது யான் அறிந்தேன் என்னும் அனுபவத்தாலே, அக்கடத்தின் அஞ்ஞாத அவஸ்தை துணியப் பெறும். எந்த ஞானம் அஞ் ஞாத வஸ்துவை ஒளிர்விக்குமோ, அந்த ஞானமே பிரமாஞான மெனப்படும். இவ்வண்ணம் அஞ்ஞாத அர்த்தத்தின் ஞாபகத்தன்மைவடிவ பிரமாஞானத்தின் இலக்கணத்தை எல்லா நூலாசிரியரும் உடன்பட்டுளார். இக்காரணத்தாலே நையாயிகரும் எதார்த்த அனுபவம் "பிரமை" என்னும், பிரமை இலக்கணத்தின் கண் முன்னர் அறியப்பட்ட அர்த்தத்தை விஷயஞ் செய்யும் ஸ்மிருதியை நீக்கும் பொருட்டு "அனுபவம்" என்னும் பதத்தைக்கூறியிருக்கின்றனர். ஆண்டுக்கடாதி விஷயங்களிடத்தே இராநின்ற அஞ்ஞாதத்தன்மை (அறியப்படாத தன்மை) நேத் திராதி இந்திரியங்களால் அறியமுடியாதாம். ஏனெனின், அந்த அஞ்ஞாதத்தன் மையை அறிவதில் நேத்திராதி இந்திரியங்கட்குச் சாமர்த்தியமின்றும். அக்கடாதி களின் அஞ்ஞாதத்தன்மை அனுமானப் பிரமாணத்தாலும் அறியமுடியாது. ஏனெ னின், பர்வதத்தின்கண் இராநின்ற அக்கினியை அறிவிப்பது தூமரூப லிங்கமாம். அதுபோல, அவ்வஞ்ஞாதத்தன்மையை அறிவிக்கும் லிங்கம் யாதொன்றுமின்றும். ஆண்டு வாதியானவன், அஞ்ஞாதத் தன்மையின் பெறுதியின்பொருட்டு இவ்வகை யாய அனுமானஞ் செய்வன்; இக்கடம், முன்னர் அறியப்படாததாம்: இப்போது அறியப்படுதலின்; என்னும் இவ்வனுமானத்தாலும் அக்கடத்தின் அஞ்ஞாதத் தன்மைப் பெறுதி உண்டாகாது. ஏனெனின், யாண்டு ஒரே கடத்தின்கண் தடையின்றி, இதுகடம், இதுகடம் என அநேக ஞானங்களுண்டாகின்றனவோ, ஆண்டு முதன்ஞானத்தை யொழித்து, இரண்டாவது மூன்றாவது முதலிய ஞானங் களின் விஷயமாய கடத்தின்கண் இக்காலத்தே அறியப்படுந் தன்மைவடிவ ஹேதுவோ இருக்கின்றது. ஆனால், முன்னர் அறியப்படாத்தன்மை வடிவ துணி பொருளின்றும். ஏனெனின், அத்தலத்தில் முன் முன் ஞானங்களால் அறியப் பட்ட கடத்தையே பின் பின் ஞானங்கள் விஷயஞ்செய்யும். ஆகையால், துணி பொருளில்லாத கடத்தின்கண் இராநின்ற ஹேது முறை பிறழ்தலை யுடையதாம். அவ்வேதுவால் முன்னர் அறியப்படாத்தன்மை வடிவ துணிபொருளின் பெறுதி உண்டாகாது. அல்லது இப்போதறியப்படுந் தன்மைவடிவ ஹேதுவிற்கு முன் னர் அறியப்படாத்தன்மை வடிவ துணிபொருளினின்றும், வேற்றுமையின் றுணி புண்டாகாது. ஏனெனின், யாது முன்னர் அறியப்படாததாய் இப்போது அறி யப்படுவதாமோ அதனையே இப்போது அறியப்படுவதெனப்படும். தனது துணி

பொருளினின்றும்வேறாகாத ஹேதுவே துணிந்ததைத்துணிதலென்னுந் தோஷத்தோடு கூடியதாம். இக்காரணத்தாலே, அத்துஷ்ட ஹேதுவால் அறியப்படாத் தன்மை வடிவத் துணிபொருட் பேறுதி யுண்டாகமாட்டாது. அல்லது, கடாதிகளின் அஞ்ஞாத அவஸ்தை ஞானமின்றி அக்கடாதிகளினிடத்தே தர்மை விஷயஞ்செய்யும், பிரத்தியக்ஷ ஞானகாரணத்தன்மை கவரமுடியாது. ஏனெனின், எவ்வஸ்துவின்கண் எக்காரியத்தினின்றும் நியமமாய் முன்னிருப்பின் ஞானமுண்டாமோ, அவ்வஸ்துவின்கண் அக்காரிய காரணத்தன்மை கவர்தலாகும். மண்ணின்கண் கடரூபகாரியத்தினின்றும் முன்னிருப்பின் ஞானம் உண்டான பின்னரே, அம்மண்ணின்கண் கடகாரணத்தன்மையின் ஞானம் உண்டாம். முன்னிருப்பின் ஞானமின்றி, காரணத்தன்மையின் ஞானமுண்டாகாது. ஆகையால், அக்கடப் பிரத்தியக்ஷ ஞானத்தின் முன் அக்கட அஞ்ஞாத அவஸ்தை ஞானம் அவசியம் அங்கீகரிக்கவேண்டும். அல்லது, அக்கட அஞ்ஞாத அவஸ்தையின் ஞானம் உண்டாகாதாயின் யான் கடத்தை அறிந்திலேன் என்னும் எல்லாருடைய அனுபவத்திற்கும் விரோதமாம். ஆகையால், இப்பொருள் துணியப்பெற்றது :—அஞ்ஞாத ரூபவிளக்கம், தனது சுயஞ்சோதி ரூபத்தால் ஒளிர்வதாய்த் தன்னிடத்தில் கற்பிதமாய கடாதி பதார்த்தங்களையும் ஒளிர்விக்கும். ஆகையால், அவ்வஞ்ஞாத ரூப விளக்கத்தின்கண்ணே அக்கடாதி பதார்த்தங்களின் கற்பிதத்தன்மை சித்தமாம். ஒருகால், அவ்வஞ்ஞாத ரூபவிளக்கம் அக்கடாதி பதார்த்தங்களை ஒளிர்வியாதாயின், அக்கடாதி பதார்த்தங்கள் இயல்பாயே ஜடமாதலின், அவற்றின் அஞ்ஞாதத்தன்மையும், அஞ்ஞாதத்தன்மையின் ஞானமும் சித்தமாகா. அந்தச்சத்வஸ்து ரூபவிளக்கத்தின்கண் உள்ள அஞ்ஞாதத்தன்மை தன்னிடத்தில் கற்பித அஞ்ஞானத்தாலே ஆம். இவ்வார்த்தையை :—"அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:" என்னும் இவ்வசனத்தால் ஸ்ரீ பகவான் தாமே மேல் அருளிச்செய்வர். இத்துணை கூறியதால், அச்சத்வஸ்து ரூபவிளக்கத்தின்கண் விபுத்தன்மை துணியப் பெற்றதாம்.

ஆ-சு. "மஹாந்தம் ப்ருஹந்தமபாரம் விஜ்ஞாநகந ஏவ

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம."

(பொ-ள்.) அந்தச் சத்வஸ்து ரூபவிளக்கம் மகாவடிவமாம், அநந்தமாம், அபாரமாம், விஞ்ஞானகனமாம், சத்தியமாம், ஞானரூபமாம், அநந்தமாம். இச்சுருதியானது அந்தச்சத்வஸ்து ரூபவிளக்கத்தின்கண் மகத்தன்மையையும் அநந்தத் தன்மையையும் கூறுகின்றது. ஆண்டு அந்த ஞானரூபவிளக்கத்தின்கண் கற்பிதமாய இவ்வெல்லா உலகோடும், அந்த விளக்கத்தின் கற்பிததாதான்மிய சம்பந்த மிருக்கின்றது ; இதுவே அவ்விளக்கத்தின்கண் மகத்தன்மையாம். தேசகாலவஸ்து பரிச்சேதமற்றதன்மையே அவ்விளக்கத்தின்கண் அநந்தத் தன்மையாம். இத்துணை கூறியதால் சூனியவாதிகளின் மதமும் கண்டிக்கப்பட்டதாம். ஏனெனின், அதிஷ்டானவஸ்துவின்றி எம்மயலும் உண்டாகாது. அதிஷ்டானமின்றி மயலின்பாதமும் உண்டாகாது. சூனியவாதிகளின் மதத்தில் சத்வஸ்து அதிஷ்டானமென்பது ஒன்றின்றும். ஆகையால், அவர்களுடைய மதம் அசங்கதமாம்.

ஆ.சு. "புருஷாந்ந பரம் கிஞ்சித்ஸா காஷ்டா ஸா பரா கதி."

(பொ-ள்.) ஸ்வயஞ்ஜோதிரூப புருஷனுக்கு மேலாய் எவ்வஸ்துவும் இன்றும். மற்றோ, ஸ்வயஞ்ஜோதி புருஷனே இவ்வெல்லா உலகிற்கும் முடிவுவடிவனும், மேலாய கதிவடிவனும். இச்சுருதி எல்லா உலக பாதத்தின் முடிவுவடிவனாக

யஞ்ஜோதிப் புருஷனைக் கூறும். இவ்வார்த்தை ஸ்ரீபகவான் பாடியக்கார கூறியருளியிருக்கின்றார்.

" ஸவஂம் விநஶ்யத்யவ்யக்தாதி ஜாதம் வஸ்து ஷாஶ்வதம் விநஶ்யதி
வஸ்து வினாஶம் விநாஶஹேதுவ ஸாவாந்து விநஶ்யதி."

பொ-ள்.) இத்தூலப் பிரபஞ்ச முதலாக அவ்வியாகிருதம்வரை எத்துணை ஸ்துக்களுளவோ அவையாவும் சைதன்யரூப புருஷபரியந்தம் நாசத்தை யும். அப்புருஷனை நாசஞ்செய்யுங் காரணம் யாதொன்றுமின்றாம். ஆகை அப்புருஷன் நாசத்தையடையான். இத்துணை கூறியதால், க்ஷணிக விஞ் வாதிகளின் மதமும் கண்டனம் செய்யப்பட்டதாயிற்று. ஏனெனின், ஒரு ஆத்மா க்ஷணிகமாயின் பாலிய அவஸ்தையின்கண் எனது மாதாபிதாக்களை வித்த யானே இப்போது விருத்த அவஸ்தையின்கண் அவர்களை ஸ்மரிக் றன் என்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானம் யாவருக்கும் உண்டாகின்றது; ண்டாகலாகாது. ஏனெனின், எப்புருஷன் எவ்வஸ்துவைக் காண்கின்றனோ, நஷனே மற்றொருகாலத்தே அவ்வஸ்துவை நினைப்பன். வேறொரு புருஷ ார்க்கப்பட்ட வஸ்துவை வேறொரு புருஷன் நினைத்தல் முடியாது. ஆகை அவ்வாத்மா க்ஷணிகமன்றாம். இதனால் இப்பொருள் துணியப்பெற்றது :— டும் நிறைந்த ஏக அத்விதீயரூப ஸ்வப்பிரகாச விளக்கவடிவ சத்வஸ்து முற் தேசகாலாதி சர்வபரிச் சேதங்களுமற்றதாம். ஆகையால், அச்சத்வஸ்து பாவம் ஒருகாலும் உண்டாகாது. என ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந் யது உண்மையேயாம். (17)

அ-கை.) முன்னர்த் தாங்கள் விளக்கரூப சத்வஸ்துவை அவிநாசியென்றருளி அது சம்பவியாது. ஏனெனின், வெற்றிலை, கத்தைக்காம்பு, சுண்ணும்பு, என்னும் இந்நான்கின் சமுதாயரூப தாம்பூலத்தில் சிவப்பு உண்டாவதே பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் இந்நான்கு பூதங்களின் சமுதாய க்தூலசரீரத்தில் ஒரு சைதன்யத் தன்மைத்தன்மம் உண்டாகின்றது. ஆகை ச்சைதன்யரூப விளக்கம் இத்தூலசரீரத்தின் தன்மமேயாம். இத்தூல ா கணந்தோறும் நாசத்தையடையும். ஆகையால் சரீரரூபதன்மி அழியவே நபவிளக்கமும் அவசியம் அழியும் இவ்வண்ணம் பூதசைதன்ய வாதி சங்கையுண்டாக அவர்களைக் கண்டிக்கும்பொருட்டு ஸ்ரீ பகவான் "நாஸதோ வித்யதே பாவோ" என முன்னர் அருளிய வசனத்தின்பொருளை இப்போது ரமாய் அருளிச்செய்கின்றார்.

அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தாஃ ஶரீரிணஃ ।
அநாஶினோऽப்ரமேயஸ்ய தஸ்மாத்யுத்யஸ்வ பாரத ॥ (18)

7 அந்தவந்தஃ 6 இமே 8 தேஹாஃ 2 நித்யஸ்ய 9 உக்தாஃ 3 ஶரீரிணஃ 4 அநாஶிநஃ 5 அப்ரமேயஸ்ய 10 தஸ்மாத் 11 யுத்யஸ்வ 1 பாரத.

பு-ம்.) ஹே பாரத! நித்தியமும், சரீரரூப உபாதியுடையதும், நாசமற்ற ரயோஜனமற்றதும் ஆய விளக்கவடிவம் ஆன்மாவாம். அவ்வான்மா ஒன்ற , இவ்வழிவுடைய தேகங்கள் முழுவதுங் கூறப்பட்டுள்ளன. அக்காரணத் போர்புரிதி.

பி-ம்.) விருத்தி, க்ஷயம் உடையதாதலின் சரீர நாமத்தால் பிரசித்தமாய சரூப அந்தமுடையதும் பிரத்தியக்ஷமாய இத்தேகமாம். ஈண்டு "தேஹாஃ"

என்னும் பன்மையால் ஸ்தூல, சூக்ஷ்ம, காரணரூப எத்துணை விராட்சூத்திர அவ்வியாகிருதப்பெயரிய சமஷ்டி வியஷ்டி சரீரங்களுளவோ, அவ்வெல்லாச் சரீரங்களையும் கவர்ந்து கொள்க. நித்தியமும், விநாசமற்றதும் அத்தியாசிகசம்பந்தத்தால் சரீரமுடையதும் ஆயது ஸ்வப்பிரகாச விளக்கரூப ஆன்மாவாம், அவ்வொரே ஆன்மாவிற்கு ஸ்தூல, சூக்ஷ்ம, காரணரூப சர்வசரீரங்களும் திருசியரூபங்களாம், போக்கியரூபங்களாம். ஆகையால், சுருதி பகவதியும், பிரஹ்ம வேத்தாக்களும், சர்வதேகங்களையும் திருசியத்தன்மை ரூபத்தாலும், போக்கியத்தன்மை ரூபத்தாலும், அவ்வொரே ஆன்மாவின் சம்பந்திகளாய்க் கூறியிருக்கின்றனர். ஆண்டு தயித்திரியக சுருதியின்கண் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்னும் பஞ்ச கோசங்களின் கற்பனையைச் செய்து, அவ்வெல்லாக் கோசங்களின் அதிஷ்டானரூப அகற்பித புச்சப் பிரதிஷ்டை வடிவ பிரஹ்மம் கூறப்பட்டுளது. ஆண்டு, பஞ்சீகிருதபஞ்ச மகாபூதங்கள், அவற்றின் காரியங்களாய சர்வ மூர்த்த பதார்த்தங்கள் என்பவற்றின் சமுதாய ரூபம் விராட்டாம். அது அன்னமய கோசமாம், ஸ்தூலசமஷ்டியாம். அத்தூல சமஷ்டியின் காரணரூப அபஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்கள், அவற்றின் காரியரூப சர்வ அமூர்த்த பதார்த்தங்கள் என்பவற்றின் சமுதாய ரூபம் சூத்திரம் என்னும் ஹிரண்ய கர்ப்பமாம்; அது சூக்ஷ்ம சமஷ்டியாம். ஆண்டு :— "த்ரயம்வா இதம்நாமரூபம் கர்ம" என்னும் இந்தப் பிருகதாரண்யக உபநிஷத்தாகிய சுருதியானது அந்தச் சூக்ஷ்ம சமஷ்டியை நாமம், ரூபம், கர்மம் என்னும் மூன்று ரூபமாய்க் கூறியிருக்கின்றது. ஆண்டு அச்சூக்ஷ்ம சமஷ்டியானது தன்னிடத்தில் இராநின்ற கருமரூபத்தன்மையால் கிரியா சக்திமாத்திரத்தைக் கவரும்போது, பிராணமயம் என்னும் பெயரைப் பெறும். அச்சூக்ஷ்ம சமஷ்டியானது தன்னிடத்தில் இராநின்ற நாமரூபத்தன்மையால் ஞானசக்தி மாத்திரத்தைக் கவரும்போது, மனோமய மென்னும் பெயரை மருவும். அச்சூக்ஷ்ம சமஷ்டியானது தன்னிடத்தில் இராநின்ற ரூபவடிவத்தன்மையால் அக்கிரியை, நாமம் என்னும் இரண்டன் ஆசிரயமாதலின், கர்த்துருத்தன்மை மாத்திரத்தைக் கவரும்போது, விஞ்ஞானமயமென்னும் பெயரை விரவும். இவ்வண்ணம் அவ்வொரே ஹிரண்ய கர்ப்பம் என்னும் லிங்கசரீர ரூபகோசம் பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் என்னும் முக்கோச வடிவமாம். அவ்விரண்ய கர்ப்பரூப லிங்க சரீரத்திற்கும் காரண ரூபமும், சர்வப்பிரபஞ்ச வாசனைவடிவ சமஸ்காரங்களின் ஆசிரயரூபமும் ஆய அவ்வியாகிருதமென்னும், மாயோப ஹித சைதன்ய ஆன்மா ஆநந்தமயகோசமாம். அவ்வன்னமயாதியாவும் ஒரே ஆன்மாவின் சரீரமெனச் சுருதி கூறுகின்றது.

ஆ-சு. "தஸ்யைஷஏவஶாரீர ஆத்மாயபூர்வஸ்ய."

(பொ-ள்.) முன்னர் அன்னமய கோசத்திற்குச் சத்தியஞான அநந்தரூப சாரீர ஆன்மா யாது கூறப்பட்டதோ, அதுவே பிராணமய கோசத்திற்கும் ஆன்மாவாம். சரீரத்தின்கண்ணே யாது இருப்பதாமோ, அது சாரீர மெனப்படும் என்னும் சுருதிவசனத்தை மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்னும் முக்கோசங்களினும் அறிந்துகொள்க. இப்பஞ்ச கோசங்களின் பிரக்கிரியை ஸ்ரீ ஆன்மபுராணத்தின் 10-வது அத்தியாயத்தின்கண் யாம் விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். அல்லது, "இமேலோகா இமேதேவா:" என்னும் இச்சுலோகத்தின் பதங்களை இவ்வகையாய் யோசனைசெய்க :— மூன்று லோகத்திலும் இராநின்ற சர்வப் பிராணிகளின் சம்பந்திகளாய ஸ்தாவர, ஜங்கமரூப தேகங்கள் யாவும் ஒரே ஸ்வயஞ்சோதி ஆன்மாவிற்குச் சுருதி கூறியுள்ளது.

ஆ-சு. "ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா கர்மாத்யக்ஷ: ஸர்வபூதாதிவாஸ: ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணஶ்ச."

(பொ-ள்.) ஏக அத்விதீய ஆன்மதேவர் சர்வ சரீரங்களிலும் இரகசியமாய் இருப்பர். சர்வ வியாபியாவர், சர்வ பூதங்களின் அந்தராத்மா ஆவர். புண்ணிய பாவரூப கர்மங்களின் பலதாதா ஆவர். சர்வ பூதங்களின் அதிஷ்டானமாவர். புத்தி முதலிய சர்வ சங்காதங்களின் சாக்ஷியாவர். சைதன்யரூபராவர், அத்விதீய ரூபராவர், நிர்க்குணராவர், நிஷ்கிரியராவர். இச்சுருதியானது ஸ்தாவர ஜங்கமரூப சர்வ சரீரங்களின் சம்பந்தமுடைய ஏக நித்திய விபுவாய ஆன்மாவைக் கூறுகின்றது.

ஹே பகவன்! எத்துணை இக்காலம் உளதோ, அத்துணை இருப்பது நித்தியத்தன்மை எனப்படும். அவ்விந்நித்தியத்தன்மைக் காலத்தோடு ஆன்மாவின் அழிவை அங்கீகாரஞ்செய்யினும், அவித்தை முதலியவற்றைப்போல, ஆன்மாவின்கண்ணே சம்பவிக்கும் என்னும் அர்ச்சுனனது சங்கைக்குப் பகவான் உத்தரமருளிச்செய்கின்றார் :—

(அநாஶிந:) என, ஹே அர்ச்சுன! தேசகாலவஸ்து பரிச்சேதங்களையுடைய அவித்தை முதலியன அதிஷ்டான ஆன்மாவின்கண் கற்பிதமாதலின், அநித்தியங்களாயினும் அவ்வவித்தை முதலியவற்றின்கண் எவ்வளவுகால இருப்புண்மை வடிவகௌண நித்தியத்தன்மை தோற்றுநிற்கும். முக்காலத்திலும் பாதிக்கப் படாத் தன்மைவடிவ முக்கிய நித்தியத்தன்மை அவற்றின்கண் இன்றாம். தேசகால வஸ்து பரிச்சேதமற்றதாதலின், கற்பிதமற்ற ஆத்மாவின் நாசத்திற்கு யாதொரு காரணமுமின்றாம். ஆகையால், அவ்வான்மாவின்கண் முக்கியமேயாய கூடஸ்தஸ்வரூப நித்தியத் தன்மையுளது. அவித்தை முதலியவற்றிற்கேபோலப் பரிணாமிரூப நித்தியத் தன்மையும், எவ்வளவுகால இருப்பு உண்மைவடிவ நித்தியத் தன்மையும் ஆன்மாவின்கண் இன்றாம்.

சங்கை :—இங்ஙனம் சர்வ தேகங்களின் சம்பந்தமுடைய சைதன்ய ஆன்மாவின்கண் யாதாவது பிரமாணம் உளதா? அல்லது இல்லையா? அவற்றுள் சைதன்ய ஆன்மாவின்கண் யாதொரு பிரமாணமும் இல்லையென்னும் இரண்டாவது பக்ஷமோ சம்பவியாது. ஏனெனின், எவ்வஸ்து ஒரு பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாகாதோ, அவ்வஸ்து அசத்தியமேயாகும். மலடிமகன், முயற்கோடு என்பவை ஒரு பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாகாமையின் அசத்தியமேயாம். அதுபோல, பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு அவிஷயமாதலின் அந்தச் சைதன்ய ஆன்மாவும் அசத்தியமேயாகும். அங்ஙனம் அவ்வான்மாவின் சாக்ஷாத்காரத்தின் பொருட்டு, சாஸ்திரத்தின் துவக்கமும் பயனற்றதேயாகும் என்பவை முதலிய எல்லாத் தோஷங்களின் நீக்கத்தின் பொருட்டு, அத்தேகியாகிய ஆன்மாவின்கண் பிரமாணம் ஒன்றுளதென்னும் முதற் பக்ஷத்தை அவசியமாய் அங்கீகாரம் செய்யவேண்டிவரும். அல்லது "ஶாஸ்த்ரயோநித்வாத்" என்னும் இச்சூத்திரத்தின் வியாக்கியானத்தின்கண் ஸ்ரீ பகவான் பாடியக்காரரும், ஆன்மாவின் சித்தியின்கண் உபநிஷத்துருவ சாஸ்திரம் ஒன்றே பிரமாணமெனக் கூறி இருக்கின்றார். அங்ஙனமே :—"தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி" என்னுஞ் சுருதியும் ஆன்மாவின் சித்தியின்கண் உபநிஷத் துருவப் பிரமாணத்தைக் கூறி

இருக்கின்றது. ஆகையால் பிரமாண விஷயமாதலின் சைதன்யரூப ஆன்மாவின் கண் பேதரூப வஸ்து பரிச்சேதம் அவசியம் உண்டாம்.

சமாதானம்:—என அர்ச்சுனனது சங்கை யுண்டாக ஸ்ரீ பகவான் உத்தர மருளிச்செய்கின்றார்:—"அப்ரமேயஸ்ய" என, ஹே அர்ச்சுன! கடபடாதி சர்வ பதார்த்தங்களையும் ஒளிர்விக்கும் சூரியபகவான் தம்மை யொளிர்விப்பான் கட படாதி பதார்த்தங்களின் அபேக்ஷை செய்வதில்லை. அங்ஙனம், பிரமாணப் பிரமேயாதி சர்வ ஜகத்தையும் ஒளிர்விக்கும் ஸ்வப்பிரகாச சைதன்யரூப ஆன்மா விற்குத் தன்னை ஒளிர்வித்துக் கொள்ளுவான் பிரமாணாதிகளின் அபேக்ஷை இன்றாம். இக்காரணத்தால் அவ்வான்மா அப்பிரமேயமாம்.

ஆ-சு. "ஏகமேவாத்விதீயஸ்ய சைதந்யஸ்யைவம் அப்ரமேயம் ஸ்வப்ரகாசம்
ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ
பாந்தி குதோயமக்நி: தமேவ பாந்தமநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி யேநேதம் ஸர்வம் விஜாநாதி
தம் கேந விஜாநீயாத் விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்."

(பொ-ள்.) இச்சைதன்ய ஆன்மா ஒரு பிரகாரமாயே பார்க்க யோக்கிய மாம். இவ்வான்மா அப்பிரமேயமாம், கூடஸ்தமாம், அப்பிரமேயமாம். சுவயஞ் ஜோதியாய ஆன்மாவின்கண் சூரியனும் பிரகாசியாது, சந்திரனும், நக்ஷத்திரக் கூட்டங்களும் பிரகாசியா, மின்னலும் பிரகாசியாது, இவ்வக்கினியும் பிரகாசி யாது. அச்சுவயஞ் ஜோதியாய ஆன்மாவின் பிரகாசத்தைப் பற்றியே பின்னர் இச்சூரியனும், சந்திரன் முதலிய சகல பதார்த்தங்களும் தோற்றா நிற்கும். அங்ஙனம் அவ்வான்மாவின் சுவயஞ் ஜோதிப் பிரகாசத்தாலே இச்சூரியன் சந்திரன் முதலிய சர்வ ஜகத்தும் ஒளிரா நிற்கும். எச்சுவயஞ் ஜோதி ஆத்மா வால் இவ்வுலகர் இவ்வெல்லாப் பதார்த்தங்களையும் உணர்வரோ, எல்லாவற்றின் திருஷ்டாவாயும், விஞ்ஞாதாவாயும் இராநின்ற அந்த ஆன்மாவை இச்சீவன் எப்பிரமாணத்தால் அறிவன். மற்றோ, எப்பிரமாணத்தாலும் அறியான் என் பதாம். இத்தகைய ஸ்வயஞ்ஜோதியாகிய ஆன்மாவிற்குத் தனது பிரகாசத்தின் பொருட்டு எப்பிரமாணத்தின் அபேக்ஷையும் இன்றாம். மற்றோ, தன்னிடத்திற் கற்பிதமாய காரிய சகித அஞ்ஞான நீக்கத்தின் பொருட்டு, அச்சுவயஞ்ஜோதி யாய ஆன்மாவிற்குக் கற்பித விருத்தி விசேஷத்தின் அபேக்ஷை உண்டாம். ஏனெனின், 'இயக்கனுக்கேற்றபலி' யென்னும் சாஸ்திர நியாயத்தால் கற்பிதவஸ்து விற்குக் கற்பிதவஸ்துவே விரோதியாம் எனத்துணியப் பெறும். ஆகையால், கற்பித அந்தக்கரண விருத்தியால் கற்பிதகாரிய சகித அஞ்ஞான நிவிருத்தி சம்பவிக்கும். கற்பித சர்வப் பிரபஞ்சத்தையும் நிவிருத்திசெய்யும் அந்தக்கர ணத்தின் விருத்தி விசேஷம், கேவலம், தத்துவமசி முதலிய வாக்கியமாத்திரை யானே யுண்டாமன்றிப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் உண்டாகமாட்டாது. ஆகையால், அவ்விருத்தி விசேஷத்தி னுற்பத்தியின்பொருட்டு நூற்றுவக்கமும் பயனுடையதாம். அந்தச் சைதன்யசொரூப ஆன்மதேவர் எக்காலத்தும் தாமே யொளிர்வர், சர்வ கற்பனையின் அதிஷ்டானமாவர், சர்வ திருசியப்பிரபஞ்சத்தின் பிரகாசகராவர். அத்தகைய ஸ்வப்பிரகாச அதிஷ்டான ஆன்மாவின்கண் மலடி மகன் முயற்கோடு முதலியவற்றிற்கேபோல அசத்திய வடிவத்தன்மை சம்பவி யாது. ஏகமேவாத்விதீயம், சத்யம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்பனாதி சாஸ்திரங்கள் அத்விதீயப் பிரஹ்மத்தினும் வேறாய சர்வ ஜகத்தின்கண்ணும் கற்பி தத்தன்மையைக் கூறுபவாய்த் தம்மிடத்தும் கற்பிதரூபத்தன்மையையுணர்த்தும்.

ஒருகால் அச்சாஸ்திரங்கள் தம்மிடத்தே கற்பிதத்தன்மையை உணர்த்தாவாயின், அவை சத்விதீயப் பிரஹ்மத்தை அத்விதீயப் ரூபமாய் உணர்த்துவனவாய்த் தாமே அப்பிரமாணரூபமாம். கற்பிதவஸ்து, அகற்பிதவஸ்துவின் பரிச்சேதத்தைச் செய்யாது என்பதை முன்னரே கூறிவந்தேம். ஆகையால், அச்சுவப்பிரகாச ஆன்மாவின்கண் பேதரூப வஸ்துபரிச்சேதத்தின் அடைவும் உண்டாகாது. அல்லது, எக்காலத்தும் ஆன்மாவின் ஸ்வப்பிரகாசத்தன்மை கேவலம் சுருதிப்பிரமாணத்தானே துணியப்பெறமாட்டாது; மற்றோ, ஸ்ரீ பகவான் பாடியக்காரர் யுக்தியினானும் அவ்வான்மாவின் ஸ்வப்பிரகாசத் தன்மையைத் துணிந்துளார். அந்த யுக்தியிதுவாம்:—யாவனுக்கு எதன்கண் ஐயம், திரிபு, வெதிரேகப்பிரமை என்னும் மூன்றன்கண் ஒன்றேனும் இன்றோமோ, அவனுக்கு அதன்கண் அவ்வைய முதலியவற்றின் விரோதி யுணர்வவசியமுண்டாம் என்னும் நியமம் யாண்டுங் காணவருகின்றது. யாவனுக்கு எக்கடத்தின்கண் கடமா? அன்றோ என்னும் ஐயம், கடம் அன்றென்னும் திரிபு, கடம் அன்றென்னும் வெதிரேகப்பிரமை என்னும் மூன்றனுள் ஒன்றேனும் உண்டாகாதோ, அவனுக்கு ஆண்டு அவ்வையம் முதலிய மூன்றன் விரோதியாய கடமிருக்கின்றதென்னும் ஞானம் அவசியம் உண்டாம். ஒருகால் அந்த விரோதி ஞானம் ஆண்டுண்டாகாதாயின், அவ்வையம் முதலிய மூன்றனுள் யாதாவதொன்று அவசியமிருக்கவேண்டும். ஆன்மாவின்கண்ணோ எவனுக்கும் யான் இருக்கின்றேனோ, அல்லதில்லனோ என்னும் ஐயம், யான் இலன் என்னும் திரிபு, யான் இலன் என்னும் வெதிரேகப்பிரமை என்னும் மூன்றனுள் ஒன்றேனும் உண்டாகாது. ஆகையால், யாவருக்கும் எக்காலத்தும் ஐயம் முதலியவற்றின்விரோதியாய ஆன்மாவின் உண்மைவடிவ ஞானத்தை யவசியம் கூறவேண்டும். ஒருகால் அவ்வான்மாவின் சொரூபஞானம் உண்டாகாதாமாயின், அவ்வையம் முதலியமூன்றனுள் யாதேனுமொன்று அவசியம் இருக்கவேண்டும். ஆன்மாவின்கண் ஐயம் முதலியன உண்டாவதின்றாம். ஆகையால், அவ்வான்மா எக்காலத்தும் ஸ்வப்பிரகாசசொரூபமாம். அல்லது, வேதாந்த சித்தாந்தத்தின்கண் அந்த ஸ்வப்பிரகாசஞானம் ஆன்மாவை யாசிரயித்திருக்கமாட்டாது. மற்றோ, அச்சுவப்பிரகாசஞானரூபமே ஆன்மாவாம். ஒருகால் ஆன்மாவை ஞானாசிரயமா யெக பினே, எவ்வஸ்து எஞ்ஞானத்தின் ஆசிரயரூப கர்த்தாவாமோ, அவ்வஸ்துவும் அந்த ஞானத்தின் விஷயரூப கர்மமாகமாட்டாது. மற்றோ, ஞானத்தின் கர்த்தாவும் கர்மமும் வேறு வேறாம். ஆதலின், அந்த ஞானத்தா லான்மாவின் துணிவு உண்டாகாது. அல்லது ஆன்மாவை ஞானத்தின் வேறா யுடன்படினோ, எவ்வெப்பொருள் ஞானத்தினும் வேறாமோ அவ்வப்பொருள் ஜடமேயாம்; ஞானத்தினும் வேறாதலின், கடாதிகள் ஜடரூபமாதலேபோல, ஞானத்தினும் வேறாதலின் ஆன்மாவும் ஜடரூபமாம். எவ்வெப்பொருள் ஜடமாமோ அவ்வப்பொருள் கற்பிதமாம்; ஜடமாதலின் கடாதிகள் கற்பிதங்களாதலேபோல ஜடமாதலின் ஆன்மாவும் கற்பிதமாம். ஆன்மாக்கற்பிதமாயின் சூனிய வாதத்தின் அடைவுண்டாம். ஆகையால், ஆன்மா ஞானத்தினும் பின்னமன்றாம். மற்றோ, ஆன்மா ஸ்வப்பிரகாச ஞானசொரூபமேயாம். அத்தகைய ஸ்வப்பிரகாசஞான சொரூபமாயிருப்பினும், இவ்வான்மா அவித்தைவடிவ உபாதியின் சம்பந்தத்தால் சாக்ஷி என்னப்படும். விருத்தியோடுகூடிய அந்தக்கரணரூப உபாதியின் சம்பந்தத்தால் பிரமாதாவென்னப்படும். அந்தப் பிரமாதாவிற்கு இந்தச் சக்ஷுராதி முதலிய இந்திரியங்கள் கரணங்களாம். அப்பிரமாதாவே அச்சக்ஷுராதி முதலிய இந்திரியங்களின் வாயிலாய் அந்தக்கரண விருத்திரூப பரிணாமத்தோடு வெளியிலுள்ள கடாதி பதார்த்தங்களை வியாபித்து, அக்கடாதிகளின் ஆகாரங்களை யடையும். அவ்வந்தக்கரணத்தின் ஒரே விருத்திரூப பரிணாமத்தின்கண்ணே கடாவச்சின்ன

சைதன்யமும், அந்தக்கரண வச்சின்ன சைதன்யமும் ஒருமையையடையும். வீட்டின்கண்ணே கடமடையின் வீட்டாகாசத்திற்கும் கடாகாசத்திற்கும் ஒருமையுண்டாம். அங்ஙனமே விருத்திரூப உபாதியும் கடரூப உபாதியும் ஒரு தேசத்தின்கண்ணே யிருப்பின், அவ்விருத்தி யுபஹித சேதனமும் கடவுபஹித சேதனமும் ஒருமையை யடையும். அதன்பின்னர் அக்கட அவச்சின்ன சைதன்யம் பிரமாதா சைதன்யத்தின் அபேதத்தால், தனது அஞ்ஞானத்தை நாசம் செய்வதாய் அபரோக்ஷமாம். தனது உபாதிரூப கடத்தை தனது தாதாத்மிய அத்தியாசத்தால் அச்சைதன்யம் ஒளிர்விக்கும். அத்தியந்தம் நிர்மலமாய அந்தக்கரணத்தின் பரிணமரூப விருத்தியை அவ்விருத்தி யுபஹித சைதன்யம் ஒளிர்விக்கும். இங்ஙனம் அந்தக்கரணம், விருத்தி, கடம் என்னும் மூன்றன் அபரோக்ஷமுண்டாம், யானறிகின்றேன் கடத்தை யென்பதே மூன்றன் அபரோக்ஷ ஆகாரமாம். இங்ஙனம், உள்ளும் வெளியும் இராநின்ற சர்வ அனான்ம பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கும் சைதன்யம் ஏகரூப மாயினும் கடாதிபாகிய பதார்த்தங்களை யொளிர்விப்பதில் அச்சைதன்யத்திற்கு அந்தக்கரண விருத்தியின் அபேக்ஷையுண்டாம். இக்காரணத்தானே அச்சைதன்யத்தின்கண்ணே பிரமாத்ருத் தன்மையாம். அந்தக்கரணத்தையும் அந்தக்கரண விருத்திகளையும் ஒளிர்விப்பதில், அச்சைதன்யத்திற்கு எவ்விருத்தியின் அபேக்ஷயுமின்றாம். இக்காரணத்தானே அச்சைதன்யத்தின்கண் சாக்ஷிரூபத்தன்மையாம். ஒருகால் அச்சைதன்யம் அந்தக்கரண விருத்தியைக் கடாதிகளைப்போல வேறு விருத்தியை யபேக்ஷித்து விளக்குமாயின், அவ்விரண்டாவது விருத்தியை மூன்றாவது விருத்தியை யபேக்ஷித்து விளக்கும். அம்மூன்றாவது விருத்தியை நான்காவது விருத்தியை யபேக்ஷித்து விளக்கும். இவ்வண்ணம் விருத்திகளின் தாரையை யுடன்படுவதில் அனவஸ்தா தோஷப் பிராப்தியுண்டாம். ஆகையால், அச்சாக்ஷியாய ஆன்மா தனது [illegible]ரூபத்தினனே அந்தக்கரணத்தையும் அதன் விருத்திகளையும் ஒளிர்விக்கும் [illegible]றை யொளிர்விப்பான் விருத்தியின் அபேக்ஷயின்றாம். ஆகையால், இப் [illegible]ருள் துணியப்பெற்றது :—எக்காரணத்தால் முற்கூறிய சுருதியுக்திகளால் [illegible]சுவப்பிரகாச ஸ்புரணரூப ஆன்மா எப்போதும் நித்தியமாமோ, யாண்டும் வியா[illegible]மாமோ, ஜன்மமரணரூப சம்சாரமற்றதாமோ, எல்லாப்பொருள்களையும் ஒளிர்[illegible]பதாமோ, எப்போதும் ஏகரூபமாயிருப்பதாமோ, அக்காரணத்தால் இத்தகைய [illegible]விநாசி யான்மாவின் நாச சங்கையால் உனது போர்வடிவ தர்மத்தின்கண் முன் [illegible]யன்ற நினக்கு அப்போரினின்றும் உபராமமாதல் தகுதியன்றாம். என்னும் வசனத்தை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை நோக்கிக் கூறியருளுகின்றார் 'தஸ்மாத் யுத்யஸ்வ பாரத' என, கருத்திதுவாம் :—ஸ்வப்பிரகாச ஞானரூப ஆன்மாவோ ஒருகாலும் [illegible]சமாகாது, இப்பீஷ்மத் துரோணாதிகளின் சரீரங்களோ பொய்வடிவினவாம், [illegible]த்தியங்களாம். ஆகையால், அத்தேகங்கள் தாமே நஷ்டமடைந்துபோம். அத்த[illegible]ப அநித்திய சரீரங்களின் * ஹனனத்தினின்றும் நீங்கி, நீ யுன்னுடைய சுவதர்[illegible]தை நாசஞ்செய்யாதே ; ஈண்டு 'யுத்யஸ்வ' என்னும் வசனத்தால் ஸ்ரீபகவானனை[illegible] அர்ச்சுனனை நோக்கிப் போர்வடிவகர்மத்தின் விதியைச் செய்தருளிலர். மற்றோ அவ்வசனத்தால் ஸ்ரீபகவானனவர் முற்கிடைத்தபோரின் அனுவாதமாத்திரஞ்செய்தருளினர். ஏனெனின், ஆன்மஞான உபதேசப் பிரசங்கத்தின்கண் அப்போர்வடிவ தர்மவிதி சம்பவியாது. மற்றோ, ஸ்ரீபகவானது உபதேசமின்றியே அவ்வர்ச்சுனன் முன் போரின்கண் முயன்றனன் ; ஆனல், சோகமோக வயத்தால் அவ்வர்ச்சுனன் அப்போரினின்றும் நீங்கினன். அச்சோக மோகங்கள் ஸ்ரீ பகவானது உபதேசஜன்னிய ஞானத்தால் நீங்கிவிட்டன. ஆகையால், "[illegible]

* ஹனனம் = கொல்கை.

" என்னும் நியாயத்தால் 'யாஜூஹூ' என்னும் ஸ்ரீ பகவானது வசனம் அனு
ுபமேயாம், விதிரூபமன்றும். ஈண்டு முற்கிடைத்த போரினுக்குச் சோக
ங்கள் அபவாதங்களாம். அச்சோகமோகங்கட்கு விசாரஜன்னிய ஞானம்
தமாம். அச்சோக மோகரூப அபவாதமும் விசாரஜன்னிய ஞானரூப அப
ும் இருப்ப ஆண்டு முற்கிடைத்த போர்வடிவ உத்சர்க்கத்தினிருப்பே யுண்
உண்ணமுயன்ற பசியுடையோன் யாதாவது அசுத்தி முதலியவற்றின்
பால் அவ்வுண்ணுதலினின்றும் நீங்குவன். ஒரு தர்மான்மாவானவன் அவன்
யை நிவிருத்தித்து அவனைநோக்கி நீ யுண்ணுதியெனக் கூறுவன். ஈண்டு
ணுதி யென்னும் வசனம் விதிரூபமன்றும். மற்றே, முற்கிடைத்த உண
்னுவாதரூபமாம். முன்னர்க்கிடையாத பொருளை யுணர்த்தும் வசனமே
மாம். சில நூலாசிரியரோ 'யாஜூஹூ' என்னும் வசனத்தை விதிரூபமென
்த மோக்ஷ அடைவின்கண் ஞானகர்மங்களின் சமுச்சயத்தை யங்கீகரித்
. அவர் கூற்று அசங்கதமாம். ஏனெனின், 'யாஜூஹூ' என்னுமிவ் வச
ல் மோக்ஷத்தினடைவு ஞானகர்மங்களின் சமுச்சயத்தாலுண்டாம் என்
பாருள் புலப்படுவதின்றும். ஞானகர்மங்களின் சமுச்சயத்தை மேல்விஸ்
ப்க் கண்டிப்பாம். (18)

்-கை.) ஹே பகவன்! "ஷெொஅ஧ாநதஷொஅஷ" என்பது முதலிய
களால் பீஷ்மத் துரோணாதி பந்துக்களின் நாச ஜன்னிய சோகம் நீங்கி
்ந்தப் பீஷ்மத் துரோணாதிகளை நாசம் செய்வதால் உண்டாம் பாவத்தை
ொரு உபாயமுமின்றும். யாண்டு சோகமின்றுமோ, ஆண்டு பாவமும்
் என்னும் நியமம் சம்பவியாது. ஏனெனின், ஒருவன் தனது பகைவ
மறையவனைக் கொல்லின் ஆண்டு அப்பகைவனாகிய மறையவனது கொல்
கண் அவனுக்குச் சோகமோ உண்டாகாது. ஆதலின், அவனுக்குப் பிரஹ்ம
ினால் ஜனித்த பாவமும் உண்டாகலாகாது. சோகமுண்டாகாதாயினும்
க்குப் பாவமோ அவசியமுண்டாம். ஆகையால், பீஷ்மத் துரோணாதிகளின்
கர்த்தாவாய எனக்கும் அக்காரியத்தில் என்னையேவும் தங்களுக்கும் அந்தப்
ளின் ஹிம்சையினால் உண்டாய பாவமானது அவசியம் உண்டாம். ஆகை
போர்செய்யென்று முன்னர்த் தாங்கள் பணித்தருளியது அசங்கதமாம்
் அர்ச்சுனனது சங்கை யுண்டாக. ஸ்ரீ பகவான் 'கடவல்லி' உபநிஷத்
திரங்களால் அச்சங்கையை நீக்கியருளுகின்றார்:—

யஊநஂவெதிஹஞாரஂ யஜ்நஂ உநூதெஹதஂ ।
உஹௌதௌநவிஜாநீதொ நாயஂஹஂதி நஹநூதெ ॥ (19)

யஃ 2 ஊநஂ 4 வெத்தி 3 ஹஞாரஂ 6 யஃ 5 அ 7 ஊநஂ 9 உநூதெ 8 ஹதஂ
11 உஹௌ 10 தௌ 12 ந 13 விஜாநீதஃ 15 ந 14 அயஂ 16 ஹஂதி 17 ந 18
ஹநூதெ.

-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் இவ்வான்மாவை ஹனனகர்த்தாவென
ோ, அங்ஙனமே யாவன் இவ்வான்மாவை ஹனனப்படுவதென்றறிவனோ,
வரும் ஆன்மாவை அறிந்திலர். ஏனெனின், இவ்வான்மா எவரையும்
ந்செய்யாது. அங்ஙனமே தானும் ஹனனத்தையடையாது. (19)

-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் யாம் கூறிய அவிநாசியாய் அப்பிரமேய
ஹியென்னும் ஆன்மாவை, யாவன் யான் இவ்வஸ்துவை ஹனனம் செய்
ா ஹனனரூபக் கிரியையின் கர்த்தாவாய் அறிவனோ, யாவன் இவ்வான்
தேகத்தின் ஹனனத்தால் யான் ஹனனமாயினேன் என ஹனனக்கிரியை

யின் கர்மரூபமாயறிவனோ, அவ்விருவரும் தேகாபிமானிகளாதலின் அதனின் கர்த்தாவாயும் கர்மமாயுமிராத அவிகாரியாய ஆன்மாவைச் சாஸ்திரப் பிரமாணத்தால் தேகாதிகளினும் வேறாய் அறிந்திலர். என்னை? இவ்வான்மா எப்பிராணியையும் ஹனனம்செய்யாது. தானும் எவற்றாலும் ஹனனமாகாது. இத்தகைய ஹனனக்கிரியையின் கர்த்தாவும் கர்மமும் ஆகாத ஆன்மாவை எம்மூடரானவர் ஹனனக்கிரியையின் கர்த்தாவாயும் கர்மமாயும் எண்ணுவரோ, அம்மூடரானவர் ஆன்மாவின் வாஸ்தவ சொரூபத்தை அறிந்திலர் என்பதில் யாது கொல்லையம். ஈண்டு "ய ஏநம் வேத்தி ஹந்தாரம் ஹதம் வா" இத்துணை வசனமாத்திரத்தைக் கூறுவதானே முற்புகன்ற அர்த்தத்தின் சித்தியுண்டாம். ஆதலின், "ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம்" என இருமுறை பதத்தின் ஆவிருத்தி செய்தல் பயனற்றதாம். ஆயினும், அப்பதத்தின் ஆவிருத்தி வாக்கியத்தின் அலங்காரப் பொருட்டாம். அல்லது, 'ய ஏநம் வேத்தி ஹந்தாரம்' என்னும் இவ் வசனத்தால் நையாயிகர்களைக் கூறியதாம். ஏனெனின், அவர் ஆன்மாவையே ஹனனாதிக்கிரியைகளின் கர்த்தாவாய் அங்கீகரித்துளார். மேலும் "யஶ்சைநம் மந்யதே ஹதம்" என்னும் இவ்வசனத்தால் சார்வாகர்களைக் கூறியதாம். ஏனெனின், அவர் சரீராதிரூப ஆன்மாவை அழிவுடையதென அங்கீகரித்துளார். அவ்விருவரும் ஆன்மாவின் வாஸ்தவசொரூபத்தை அறிந்திலர். இவ்வண்ணம் அவ்வாதியரின் வேற்றுமையை அறிவிக்கும்பொருட்டு இருமுறை பதத்தின் ஆவிருத்தி செய்யப்பட்டதென்றுணர்க. அல்லது, யாவன் ஆன்மாவை ஹனனக்கிரியையின் கர்த்தாவென அறிவனோ அவன் அத்தியந்தம் சூரவீரனவன். யாவன் ஆன்மாவை ஹனனக்கிரியையின் கர்மமென எண்ணுவனோ அவன் அத்தியந்தம் நிந்திதனவன் என்னும் இவ்வகைப் பேதத்தை உணர்த்தும்பொருட்டு இருமுறை பதத்தின் ஆவிருத்தி செய்யப்பெற்றதாமென்றுணர்க. ஈண்டு "ய ஏநம் வேத்தி ஹந்தாரம் யஶ்சைநம் மந்யதே ஹதம்" என்னும் இச்சுலோகத்தின் முற்பாதியில் "ஹந்தா சேந்மந்யதே ஹந்தும் ஹதஶ்சேந்மந்யதே ஹதம்" என்னும் கடவல்லி சுருதியின் முற்பாதியின் பொருள் நிரூபிக்கப்பட்டது. சுருதியின் சுலோகத்தின் பிற்பாதிகள் ஒன்றுபட்டனவேயாம். (19)

(அ-கை.) ஸ்ரீ பகவன்! இவ்வான்மதேவர் ஹனனரூபக்கிரியையின் கர்த்தாவும் கர்மமும் எக்காரணத்தாலல்லராவர்? என்னும் அர்ச்சுனனது சங்கையுண்டாக இவ்வான்மதேவர் ஜன்மமுதலிய விகாரங்கள் யாவும் அற்றவராதலின், ஹனனரூபக்கிரியையின் கர்த்தாவும் கருமமும் ஆகார் என்னும் உத்தரத்தை ஸ்ரீ பகவான் அக் கடவல்லி உபநிஷத்தின் இரண்டாவது மந்திரத்தால் கூறியருளத் தொடங்குகின்றார்.

சு-ம். நஜாயதே ம்ரியதே வா கதாசிந்நாயம் பூத்வா பவிதா வா ந பூய: ।
அஜோ நித்ய: ஶாஶ்வதோऽயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே ॥

ப-ம். 1 ந 2 ஜாயதே 4 ம்ரியதே 3 வா 7 கதாசித் 8 ந 6 அயம் 9 பூத்வா 11 பவிதா 5 வா 12 ந 10 பூய: 14 அஜ: 15 நித்ய: 16 ஶாஶ்வத: 13 அயம் 17 புராண: 20 ந 21 ஹந்யதே 19 ஹந்யமாநே 18 ஶரீரே. (20)

(அ-ம்.) ஸ்ரீஹ அர்ச்சுன! இவ்வான்மதேவர் பிறவார். அங்ஙனமே இறவார். அங்ஙனமே ஒருகாலும் முன்னரில்லாதவராய் மீண்டும் உற்பத்தியுடையவராகார். எதனாலெனின், இவ்வான்மதேவர் அஜர், நித்தியர், சாஶ்வதர், புராணர் என்னும் அதனாலென்ப, அத்தகைய ஆன்மதேவர் சரீரம் ஹனனமாயினும் ஹனனமாகார். (20)

(வி-ம்.) பிறத்தல், இருத்தல், வளர்தல், அயலொன்றாய் விளைந்தமைதல், தேய்தல், அறமாய்தல், என்னும் ஆறுபாவ விகாரங்கள் சாஸ்திரங்களின்கண்ணே கூறப் பெற்றுள்ளன. அவ்வாறனுள் ஆதியதாய பிறப்புருவ விகாரத்தையும் அந்தத்ததாய அறமாய்தலுருவ விகாரத்தையும் ஸ்ரீ பகவான் கண்டித்தருள்கின்றார் "நஜாயதே ம்ரியதே வா" என, ஹே அர்ச்சுன! இவ்வான்மதேவர் பிறப்பையடையார்; ஏனெனின், இவ்வான்மதேவர் எக்காலத்தும் முன்னரில்லாதவராய்ப் பின்னர்ப் பிறப்புடையவராயினாரல்லர். எப்பொருள் முன்னில்லாததாய்ப் பின்னுண்டாமோ அப்பொருளே பிறப்புருவ விக்கிரியையடையும். கடபடாதி பதார்த்தங்கள் முன்னில்லாதனவாய்ப்பின்னருண்டாம், ஆதலின் அவைபிறப்புருவ விகாரமுடையனவுமாம். இவ்வான்மதேவரோ முற்காலத்தும் உளர். ஆதலின் இவர் பிறப்புருவ விகாரத்தை யடைந்திலர். இக்காரணத்தால் இவர் அஜர். இவ்வான்மதேவர் இறப்புருவ விகாரத்தையு மடையார். ஏனெனின், இவர் முற்காலத்தே யிருந்து ஒருகாலும் பிற்காலத்தே இல்லாதவராகார். எப்பொருள் முற்காலத்திருந்து பிற்காலத்தில்லாததாமோ அப்பொருளே இறப்புருவ விகாரத்தை யடையும். கடமுதலிய பதார்த்தங்கள் முற்காலத்திருப்பனவாய்ப் பிற்காலத்தே இல்லாதனவாம். ஆதலின், அவை இறப்புருவ விகாரத்தையும் அடையும். இவ்வான்மதேவரோ, பிற்காலத்தும் இருக்கின்றனர். ஆகையால், இவர் இறப்புருவ விகாரத்தையடையார், இக்காரணத்தால் இவ்வான்மதேவர் நித்தியர்விநாசமாதற்கு யோக்கிரல்லர். ஈண்டு 'நஜாயதே ம்ரியதே வா' என்னும் வசனத்தால் ஆன்மதேவரின் பிறப்பிறப்பின் அபாவப்பிரதிஞ்ஞை செய்யப்பட்டது. 'கதாசிந்நாயம் பூத்வா பவிதா வா ந பூய:' என்னும் இவ்வசனத்தின்கண் இராநின்ற பதங்களை இருவிதமாய் யோஜனைசெய்து, அந்தப்பிரதிஞ்ஞை விரித்துரைக்கப்பட்டது. 'அஜோ நித்ய:' என்னும் வசனத்தால் அந்தப் பிரதிஞ்ஞை உபசம்ஹாரம் செய்யப்பட்டது. ஈண்டுப் பிறப்பு முதலிய ஆறுவிகாரங்களுள் பிறப்புருவ முதல்விகாரமும் இறப்புருவ முடிவுவிகாரமுமாய இரண்டின் நிஷேதத்தானே அவற்றின் இடையிலுள்ளனவும் அவற்றின் வியாப்பியங்களுமாய நான்கு விகாரங்களின் நிஷேதமுண்டாதல் கூடும். என்றாலும், ஈண்டுக் கூறாத போக்குவரவு முதலிய விகாரங்கள் யாவற்றையும் அறிவிக்கும் பொருட்டு, ஸ்ரீ பகவான் தேய்தல், வளர்தல் என்னும் இரண்டு விகாரங்களையும் சாஶ்வதர், புராணர் என்னும் இரண்டு சப்தங்களால் நிஷேதம் செய்தருளுகின்றார் 'சாஶ்வத' என, ஆண்டு இவ்வான்மதேவர் கூடஸ்தத் தன்மைவடிவ நித்தியத்தன்மையை யுடையவர். ஆகையால், இவ்வான்ம தேவர் சொரூபமாய்த் தேய்தலையடையார். இவர் நிர்க்குணர் ஆதலின் இவர் குணத்தானும் தேய்தலையடையார். இக்காரணத்தானே இவ்வான்ம தேவர் சாஶ்வதர். எவ்வஸ்து தேய்தல் விருத்தியற்றதாய் எல்லாக்காலத்தும் இராநிற்குமோ, அவ்வஸ்துவின் பெயர் சாஶ்வதமாம். அத்தகையர் இவ்வான்மதேவரே யாவர்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வான்மதேவர் தேய்தலையடைய வேண்டாம், விருத்தியை ஏன் அடையலாகாது? என அர்ச்சுனன் சங்கிப்ப :

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளிச் செய்கின்றார் 'புராண:' ஹே அர்ச்சுன! இவ்வான்ம தேவர் இதற்கு முன்னரேயும் நவீனரேயாவர், இப்போது மாத்திரம் இவ்வான்ம தேவர் நவீன அவஸ்தையை யடையவில்லை. ஆகையால் இவ்வான்மதேவர்புராணராவர். கருத்திதுவாம் :—எப்போதும் இவ்வான்மதேவர் ஏகரூபர் ஆவர், இவ்வுலகின்கண் எப்பொருள் வளர்தல்வடிவ நவீன அவஸ்தையையடையுமோ அப்பொருளே விருத்தியை யடையாநிற்கும்; சரீராதி பதார்த்தங்களைப் போல, இவ்வான்மதேவரோ எக்காலத்தும் ஏகரூபராதலின் குறைதலையேனும்

வளர்தலையேனும் அடையார். இக்காரணத்தால் இவ்வான்மதேவர் விருத்தியை யடைவதின்றும். ஈண்டுச் சுரமுதலிய நோய்களால் சரீர அவயவங்களின் க்ஷீணத் தன்மை, அபசய மென்னும் குறைதல் எனப்படும். உண்டி முதலியவற்றை யுண்ணலால் சரீர அவயவங்களின் விருத்தி, உபசய மென்னும் வளர்தல் எனப் படும். ஈண்டு உளவாதல், அயலொன்றாய் விளைந்தமைதல் என்னும் இரண்டு விகாரங்களும் பிறப்பு இறப்பு என்னும் இரண்டு விகாரங்களுக்குள் அடங்கும். ஆகையால், அவ்விரண்டையும் தனித்து நிஷேதிக்கவில்லை; பிறப்பிறப்பின் நிஷேத த்தால் உளவாதல், அயலொன்றாய் விளைந்தமைதல் என்னும் இரண்டின் நிஷேதங் களையும் அறிந்துகொள்க. ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் இவ்வான்ம தேவர் பிறப்பு முதலிய சர்வ விகாரங்களு மற்றவராவரோ, அக்காரணத்தால் சஸ் திராதி உபாயங்களால் இத்தேகம் கொல்லப்படினும், இச்சரீரத்தோடு கற்பித சம்பந்தத்தை இவ்வான்மதேவர் அடைந்திருப்பினும், இவ்வான்ம தேவர் எவ் வுபாயத்தானும் கொல்லப்படார். கடரூப உபாதி நாச முறினும் ஆகாசம் நாச மாகாததேபோல, தேகாதி யுபாதிகள் நாசமுறினும் ஆன்மாவின் நாசமுண்டாக மாட்டாது.

ஆ-சு. "அவிநாஶீ வா அரேऽயமாத்மா"

(பொ-ள்.) ஹே மைத்திரேயி! இவ்வான்மதேவர் விநாசமற்றவர். (20)

(அ-கை.) முன்னர் 'ய ஏநம் வேத்தி ஹந்தாரம்' என்னும் சுலோகத்தின்கண் 'நாயம் ஹந்தி ந ஹந்யதே' என்னும் வசனத்தால் ஆன்மா எவரையும் கொல்வது மில்லை, எவராலுங் கொல்லப்படுவதுமில்லை யெனப்பிரதிஞ்ஞை செய்யப்பட்டது. அவற்றுள், ஆன்மா எவராலும் கொல்லப்படுவதில்லை என்னும் பிரதிஞ்ஞையைப் பூர்வ சுலோகத்தின்கண் விஸ்தாரமாய்க் கூறியருளினர். இப்போது ஆன்மா எவரையுங் கொல்வதில்லை யென்னும் பிரதிஞ்ஞையை விரித்தருளுவான்; ஸ்ரீ பகவான் பூர்வப் பிரசங்கத்தை உபசங்காரம் செய்தருளுகின்றார் :—

சு-ம். வேதாவிநாஶிநம் நித்யம் ய ஏநமஜமவ்யயம் ।
கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம் ॥ (21)

ப-ம். 8 வேத 4 அவிநாஶிநம் 5 நித்யம் 2 ய: 3 ஏநம் 6 அஜம் 7 அவ்யயம் 13 கதம் 9 ஸ: 10 புருஷ: 1 பார்த்த 14 கம் 15 காதயதி 12 ஹந்தி 11 கம்.

(அ-ம்.) ஹே பார்த்த! யாவன் இவ்வான்மதேவரை அவிநாசி வடிவமாயும், நித்தியவடிவமாயும், அஜவடிவமாயும், அவ்யயவடிவமாயும் அறிவனோ, அவன் யாரைக் கொல்வன், எவ்வகையாற் கொல்வன், அவன் எவரைக் கொல்விப்பன், எவ்வகையாற் கொல்விப்பன்; மற்றோ, அவன் யாவரையும் கொல்லான் எவரை யுங் கொல்வியான். (21)

(வி-ம்.) விநாசமாமியற்கையற்றதியாதோ அது அவிநாசி யெனப்படும். அத்தகைய விநாசரூப ஈற்றுவிகாரமற்ற ஆன்மாவின் அவிநாசித் தன்மையில் ஹேது கூறியருளப் படுகின்றது. 'அவ்யயம்' என, எதன்கண்ணே அவயவங் களின் குறைவுவடிவ வியயமும் (நாசமும்) குணங்களின் குறைவுவடிவ வியயமும் இன்றோமோ அது அவ்யயம் எனப்படும். இவ்வுலகின்கண்ணே படம் முதலிய பதார்த்தங்களின் விநாசம் நூன்முதலிய அவயவங்களின் குறைவானும், உருவ முதலிய குணங்களின் குறைவானும் காணவருகின்றது. இவ்வான்மதேவரோ, நிரவயவராதலின், அவயவங்களின் குறைவற்றவராவர், அங்ஙனமே நிர்க்குணராத லின்; குணங்களின் குறைவற்றவராவர். ஆகையால், இவ்வான்மதேவருக்கு ஒரு

காலும் விநாசம் சம்பவியாது. இது கூறியது கொண்டு இவ்வனுமானம் சித்தமாயதாம்:—ஆன்மா, அவிநாசி யாதற்குத் தகுதியாயதாம்; அவ்யயமாதலின், எப்பொருள் அவிநாசியாகாதோ, அப்பொருள் அவ்யயமும் அன்றும், படம் முதலிய பதார்த்தங்களைப் போல.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மா விநாசியாதற்கு யோக்கியமாம், ஜன்னியமாதலின் கடாதிகளைப்போல என்னும் ஜன்னியத்தன்மை ஹேதுவால் ஆன்மாவின்கண் விநாசித்தன்மையின் அனுமானமும் உண்டாகக் கூடுமன்றோ?

சமாதானம் :—என்னும் அர்ச்சுனனது சங்கையை நிவிருத்தித் தருளும் பொருட்டு ஸ்ரீ பகவான் ஆன்மாவின்கண் அந்த ஜன்னியத்தன்மை ஹேதுவின் அசித்தியைக் கூறியருளுகின்றார் :—‘ அஜம் ’ என, ஒருகாலும் ஜன்மத்தையடையாதது அஜமாம். அத்தகைய ஜன்மரூப முதல்விகாரமற்றது ஆன்மாவாம். அவ்வஜத் தன்மையின்கண்ணே துவை யருளிச்செய்கின்றார் :—‘ நித்யம் ’ என, யாதெக்காலத்து மிருக்குமோ, அது நித்தியமாம். இவ்வுலகின்கண்ணே எப்பொருள் முன்னரிராதோ, அப்பொருட்கே ஜன்மத்தைக்கண்டோம். கடபடாதி பதார்த்தங்கள் தமதுற்பத்தியின் முன்னரில்லாதனவாயே பின்னர் ஜன்மத்தை யடைகின்றன போலவா மென்றுணர்க. இவ்வான்ம தேவரோ, எக்காலத்தும் இருக்கின்றனர். ஆகையால், இவர்க்கு ஒருகாலும் ஜன்மம் சம்பவியாது, இது கூறியதுகொண்டு இவ்வனுமானம் துணியப்பெற்றதாம் :—ஆன்மா, ஜன்மமற்றிருப்ப யோக்கியமாம், நித்தியமாதலின் எப்பொருள் ஜன்மமற்றதன்றுமோ, அப்பொருள் நித்தியமுமன்றும்; கடாதி பதார்த்தங்களைப் போல, அல்லது அவிநாசி யென்னும் பதத்தால் பாதமற்ற சத்தியவஸ்துவின் கிரகணம் செய்க. நித்திய சப்தத்தால் யாண்டும் வியாபகவஸ்துவின் கிரகணம் செய்க. அதன் கண்ணே துவைக் கூறியருளுகின்றார். ‘ அஜம் அவ்யயம் ’ என, ஈண்டு, ஜன்மமற்ற வஸ்துவின் பெயர் அஜமாம். நாசமற்ற வஸ்துவின் பெயர் அவ்யயமாம். இவ்வுலகின்கண்ணே எப்பொருள் உற்பத்தியுடையதாமோ, நாசமுடையதாமோ, அப்பொருள் சத்தியரூபமும் யாண்டும் வியாபகவடிவமு மாகாது. தோற்றங் கேடுகளையுடைய கடாதிகள் சத்தியரூபமும் யாண்டும் நிறைந்த வடிவுமுமன்றும். இவ்வான்ம தேவரோ, தோற்ற மாற்றங்களற்றவர். ஆகையால், இவர் சத்தியரூபரும், யாண்டும் நிறைந்த வடிவினருமாவர். இது கூறியது கொண்டு இவ்வனுமானம் துணியப் பெறும் :—ஆன்மா, அவிநாசியும் நித்தியமாவதற்குத் தகுதியதுமாம், அஜமும் அவ்யயமும் ஆதலின், எப்பொருள் அவிநாசியும் நித்தியமும் அன்றுமோ, அப்பொருள் அஜமும் அவ்யயமும் அன்றும்; கடாதி பதார்த்தங்களைப்போல, இவ்வண்ணம் அவிநாசிரூபமாயும், நித்தியரூபமாயும், அஜரூபமாயும், அவ்யயரூபமாயும் இராநின்ற ஆன்மதேவரை யாவன் குருசாஸ்திரோப தேசத்தால், யான் ஜன்மாதி சர்வ விகாரங்களுமற்றவன், மதிமுதலிய சர்வ பதார்த்தங்களையும் ஒளிர்விப்பவன், எல்லாத்துவைதப் பிரபஞ்சமுமற்றவன், பரமானந்த போதரூபன் எனச் சாக்ஷாத்கரிப்பனோ, அவ்வறிஞன் எவரைக் கொல்வன், எவ்வகையாற் கொல்வன். மற்றோ, அவ்வறிஞன் எவரையும் கொல்லான், எவ்வகையானும் கொல்லான். அவ்வித்துவான் எவரைக் கொல்விப்பன், எவ்வகையாற் கொல்விப்பன். மற்றோ, அவ்வறிஞன் எவரையும் கொல்வியான், எவ்வகையானும் கொல்வியான். ஏனெனின், ஜன்மாதி யெல்லா விகாரங்களுமற்றவனும், கர்த்துருத்தன்மை யற்றவனும் ஆய அறிஞனுக்கு ஹனன ரூபக்கிரியையின்கண் சாக்ஷாத் கர்த்துருத் தன்மையும் பிரயோஜகக் கர்த்துருத் தன்மையும் சம்பவியா.

ஆ-சு. ஞூதா நம் ஜெவி ஜாநீயாஜயஜஹீதிவஹெ ஷஃ
கிலி ஜூ நுஹஷகாஜாய ஸரீஜஜநு ஹஜ்வெநக.

(பொ-ள்.) இவ்வறிஞன் எப்போது பரிபூரண அத்விதீய பிரஹ்மம் யான் என ஆன்மாவை யறிவனோ, அப்போது எவ்வஸ்துவை இச்சித்து, யாவர்க்கென்ன பயனின் பொருட்டு இச்சரீரத்தைச் சந்தாபப்படுத்துவன்; மற்றோ படுத்தான். என்னுமிச்சுருதியானது சுத்த ஆன்மாவையறியும் வித்துவானிடத்தே கர்த் திருத் தன்மை போத்துருத் தன்மை முதலிய சம்சார அபாவத்தை யுணர்த்தும். கருத்திதுவாம்:—சுத்த ஆத்மாவின் ஞானத்தால் இவ்வறிஞனது அஞ்ஞான நிவிருத்தியுண்டாம். அவ்வஞ்ஞானம் நீங்கவே யான் எனது என்னும் அத்தியா சம் நீங்கும். அவ்வத்தியாசம் நீங்கவே இராகத் துவேஷாதிகள் நீங்கும். அந்த இராகத் துவேஷாதிகள் நீங்கவே, கர்த்துருத்துவ போத்துருத்துவம் முதலியன நீங்கும். இவ்வாறு ஆன்மாவின் ஞானமே சர்வ அனர்த்த நீக்கத்தின் காரண மாம். ஈண்டு இச்சுலோகத்தின்கண் ஸ்ரீ பகவானுடைய கருத்திதுவாம்:—உண் மையாய் விசாரித்துப் பார்க்கினோ, இவ்வான்மதேவர் சர்வவிகாரமுமற்றவர்; ஆத லின் எவரும் எக்காரியத்தையும் செய்யார் செய்வியார். ஆயினும் இம்மூடர் அஞ் ஞானவயப் பட்டவராய் கனவிற்போல, தமதான்மாவில் கர்த்துருத்துவாதி தர்மங் களையங்கீகரித்துளார். இவ்வார்த்தை 'உஹளதளநவிஜாநீதஃ' என்னுங் கீதாவச னத்தானே முன்னர்க் கூறிவந்தேம். ஆண்டுச்சுருதியுமுளது:—"யூாயதீவஹெநா யதீவ" பொருளிதுவாம்:—உண்மையாய்ச் சர்வ விகாரமுமற்ற இவ்வான்மதேவர் புத்திரூப உபாதி தியானம் செய்யும்போது, தியானம்செய்பவர் போன்றும், புத்தி ரூப உபாதி சலிக்கும்போது, சலிப்பவர் போன்றும் தோற்றுவர். இக்காரணத்தாற் சர்வ சாஸ்திரங்களும் அவித்வானாய அதிகாரியின் பொருட்டே கூறப்பட்டுள்ளன. வித்வானாய புருஷன் பொருட்டு எச்சாஸ்திரமுமின்றாம். ஏனெனின், அந்தவித் வானாய புருஷனோ, ஆன்மஞானத்தால் அஞ்ஞானரூப மூலத்தோடு கூடிய அத்தி யாசத்தை நீக்கியுள்ளான். ஆன்மாவின்கண் கர்த்துருத்துவ முதலியவற்றை யுடன்படான். கட்டையின் உண்மைவடிவத்தை யுணர்ந்தவன் அக்கட்டையின் கண் கள்ளத்தன்மையை எண்ணாததேபோல, ஆன்மாவின் அகர்த்துருத்தன்மை முதலிய உண்மை வடிவத்தையறிந்த அறிஞன் அவ்வான்மாவின்கண் கர்த்துருத் தன்மையை யுடன்படுவதில்லை. இதனாலிது துணியப்பெறும்:—சர்வ விகாரங் களு மற்றவனாதலினாலும், அத்விதீயரூப மாதலினாலும், அறிஞன் ஹனனாதிய செயலைச் செய்யான் செய்வியான்.

ஆ-சு. "ஞூநம்ஜம் ஬்ரஹ்மணொவிஜாநு நபிஹெதிகுதஸ்சந."

(பொ-ள்.) பிரஹ்மத்தின் சொரூபபூத ஆநந்தத்தையறிந்த அறிஞன் எவற் றினின்றும் பயத்தையடையான். ஈண்டு உபாயத்தின் நிஷேதம் சர்வ விகாரங் களின் நிஷேதத்தின் உபலக்ஷகமாம். இவ்வண்ணம் உண்மையாய் ஆன்மாவின் கண் கர்த்துருத்துவாதிகளின் அபாவம் உண்டாயினும், அவ்வர்ச்சுனன் தன் னிடத்தே அவ்வனன ரூபக்கிரியையின் கர்த்துருத்தன்மையை யாரோபித்தும், ஸ்ரீ பகவானிடத்தே அவ்வனன ரூபக்கிரியையின் பிரயோஜக கர்த்துருத்தன் மையை ஆரோபித்தும், தன்னிடத்தும், ஸ்ரீ பகவானிடத்தும், அவ்விம்சையா லுண்டாம் தோஷ சங்கையைச் செய்தனன். ஸ்ரீ பகவானும் அர்ச்சுனனுடைய கருத்தை யறிந்தருளி அவ்வர்ச்சுனனிடத்தே ஹனன ரூபக்கிரியையின் கர்த்து ருத்தன்மையை நிஷேதஞ் செய்தருளினர். தம்மிடத்தேயும் அவ்வனன ரூபக் கிரியையின் பிரயோஜக கர்த்துருத்தன்மையை நிஷேதஞ் செய்தருளினர்.

ஆண்டு எப்புருஷன் தான் அந்தக் கிரியையைச் செய்திலனாய், அந்தக் கிரியையின்
கண் பிறரையேவுவனோ, அப்புருஷன் பிரயோஜகக் கர்த்தாவெனப்படுவன். கருத்
திதுவாம் :—இவ்வான்மதேவர் உண்மையாய்ச் சர்வ விகாரங்களுமற்றவர். ஆத
லின், உன்னிடத்தே அவ்வனனரூபக் கிரியையின் கர்த்துருத்தன்மையை யாரோ
பித்துக்கொண்டு, எம்மிடத்தே ஹனனரூபக் கிரியையின் பிரயோஜகக் கர்த்துருத்
தன்மையை ஆரோபித்து, நீ பாவ அடைவின் சங்கையை ஒருகாலும் செய்யற்க.
ஈண்டு ஸ்ரீ பகவான் ஆன்மாவின்கண் அவிக்கிரியத்தன்மையைக் காண்பித்தருளிக்
கர்த்துருத்தன்மையை நிஷேதித்தருளினர். இதனைவிஃதறிந்து கொள்ளலா
மன்றே :—ஸ்ரீ பகவானுக்குச் சர்வ கர்மங்களின் நிஷேதத்தில் தாற்பரியமாம்.
கேவலம் ஹனனரூபக் கிரியையின் நிஷேதத்தின்கண்ணே தாற்பரியமின்றாம்.
ஆகையால், மூல சுலோகத்தின்கண் கேவலம் ஹனனக்கிரியையின் எந்நிஷேதம்
செய்யப்பட்டுளதோ, அந்நிஷேதம் எல்லாக் கர்மங்களின் நிஷேத உபலக்ஷகமாம்.
முற்பிரசங்கத்தின்கண் ஹனனரூபக் கிரியையே யடையப்பெற்றதாம். அதனால்,
ஸ்ரீ பகவான் அவ்வனனரூபக் கிரியையின் நிஷேதத்தைச் செய்தருளினார். ஆனால்
அவ்வனனரூபக்கிரியையை நிஷேதித்ததால் எல்லாக் கர்மங்களின் நிஷேதமே ஸ்ரீ
பகவானுக்குச் சம்மதமாம். ஏனெனின், அவிக்கிரியத்தன்மைரூப ஹேதுவானது
ஆன்மாவின்கண் எங்ஙனம் ஹனனரூபக் கிரியையின் நிஷேதத்தைச் செய்ததோ,
அங்ஙனம் வேறு சர்வ கர்மங்களையும் நிஷேதஞ்செய்ததாம். கேவலம் ஹனன
ரூபக் கிரியையின் நிஷேதஞ் செய்யவில்லை. இக்காரணத்தாலே 'தஸ்மாத்ஸர்வாணி
பூதாநி' என்னும் வசனத்தால் ஸ்ரீ பகவான் தாமே சர்வ கர்மங்களின் நிஷே
தத்தை இனிக் கூறியருளப்போகின்றார். இது கூறியதால், இவ்வகையாய மூடர்
களின் சங்கையும் கண்டனமாயதெனக்காண்க. அச்சங்கையிதுவாம் :—'கம்கா
தயதிஹந்திகம்' என்னும் வசனத்தால் ஸ்ரீ பகவான் கேவலம் ஹனனரூபக் கிரி
யையை நிஷேதஞ்செய்தருளினர்; வேறுகர்மத்தை நிஷேதஞ்செய்தருளிலர். ஆத
லின், அவ்வனனரூபக் கர்மத்தினும் வேறாய கர்மமோ, ஸ்ரீ பகவானுக்கும் செய்யற்
பாலதாமென உடன்பாடாம் என்பதே. இவ்வகை கூறும் வாதியின் சங்கை
சம்பவியாது :—ஏனெனின், 'தஸ்மாத்யுத்யஸ்வ பாரத' என்னும் வசனத்தால்
ஹனனரூபக் கர்மத்தையோ, ஸ்ரீ பகவான் தாமே விதானம் செய்தருளினார்.
ஆகையால், 'கம்காதயதிஹந்திகம்' என்னும் இவ்வசனத்திற்கு ஆன்மா உண்மை
யாய் ஹனனக்கிரியையின் கர்த்தாவன்று என்னும் பொருளே அங்கீகாரஞ் செய்ய
வேண்டிவரும். ஆன்மாவின்கண் உண்மையாய்க் கர்த்துருத் தன்மையின் அபா
வம் ஹனனரூபக் கிரியையின்கண் இருப்பதேபோல, வேறு கர்மத்தின்கண்ணும்
சமானமேயாம்.

(21)

(அ-கை.) ஹே பகவன்! முற்புகன்றருளிய சுருதியுக்திகளால் ஆன்மா
வின்கண்ணே, அவிநாசித் தன்மையே துணியப்பெறுமாயினும், இத்தூல சரீரங்
களில் அவ்வவிநாசித் தன்மையின்றாம். மற்றோ, இச்சரீரம் நாசமுடையதாம்.
இச்சரீரங்களை நாசம் செய்யும் சாதனம் இப்போராம். ஆதலின், அநேக
புண்ணிய கர்மங்களின் சாதனரூபமாய இப்பீஷ்மத் துரோணாதியரின் சரீரங்களைப்
போர்புரிந்து பொன்றவைத்தல் எனக்கெங்ஙன முசிதமாம். மற்றோ, இப்பீஷ்
மத் துரோணாதியரின் சரீரத்தை நாசம் செய்தல் எனக்கு உசிதமன்றாம் என்னும்
அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் உத்தரமருளிச் செய்கின்றார் :—

சு-ம். வாஸாம்ஸி ஜீர்ணாநி யதாவிஹாய நவாநி க்ருஹ்ணாதி நரோபராணி ।
தயா ஶரீராணி விஹாய ஜீர்ணாந்யந்யாநி ஸம்யாதி நவாநி தேஹீ ॥

ப-ம். 4 வாஸாம்ஸி 3 ஜீர்ணாநி 1 யதா 5 விஹாய 7 நவாநி 8 க்ருஹ்ணாதி 2 நர:
6 அபராணி 9 ததா 12 சரீராணி 13 விஹாய 11 ஜீர்ணாநி 14 அந்யாநி
16 ஸம்யாதி 15 நவாநி 10 தேஹீ. (22)

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனம் இப்புருஷன் கிழிந்த வஸ்திரத்தை எறிந்துவிட்டு வேறு புதிய வஸ்திரத்தைக் கவர்வனே அங்ஙனம், இத்தேகியும் இச்சிரணமாய சரீரத்தைப் பரித்தியாகம் செய்து, வேறு நவீன சரீரத்தை யடைவன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனம் விக்கிரியை யற்றவனுயே இப்புருஷன் முன்னருள்ள தாழ்வாய ஜீர்ண வஸ்திரத்தைப் பரித்தியாகம் செய்து, வேறு உயர்வாய நவீன வஸ்திரத்தைக் கவர்வனே, அங்ஙனம் உத்தம தர்மங்களைச் செய்யும் இந்தப் பீஷ்மத்துரோணுதி தேகிகளும் அவஸ்தையானும், தவத்தானும் இளைத்திருக்கும் இப்பீஷ்மாதி நாமங்கள் வாய்ந்த சரீரங்களைப் பரித்தியாகம் செய்து, முன்னர்ச் சம்பாதித்துள்ள புண்ணிய கர்மங்களின் பலத்தை யனுபவிக்கும்பொருட்டு, யாவற்றினும் மேலாய தேவதை முதலிய சரீரங்களை யடைவர்.

ஆ-சு. "அந்யந்நவதரம் கல்யாணதரம் ரூபம் குருதே
பித்ர்யம்வா காந்தர்வம்வா தைவம்வா ப்ராஜாபத்யம்வா ப்ராஹ்மம்வா."

(போ-ள்.) இஜ்ஜீவான்மா முற்சரீரத்தைப் பரித்தியாகம்செய்து, புண்ணியகர்மங்களின்வயத்தால்பிதுர்லோகத்தின்கண்ணேனும், கந்தர்வலோகத்தின்கண்ணேனும், தேவலோகத்தின்கண்ணேனும், பிரஜாபதிலோகத்தின்கண்ணேனும், பிரஹ்மலோகத்தின்கண்ணேனும் வேறுமேலாய தேவதைமுதலிய சரீரங்களையடையும். இது கூறியதுகொண்டு இது துணியப் பெறும்:—ஜீவனகாலம்வரை செய்த தர்ம அனுஷ்டானத்தால் உண்டாய கிலேசத்தால், அத்தியந்தம் மெலிந்த மேனிகளை யுடைய இப்பீஷ்மத் துரோணுதியர் இந்நிகழ்கால சரீர அழிவின்றி, அத்தர்மானுஷ்டான பல மனுபவிப்பதிற் சமர்த்தராகார். மற்றூ, அச்சுவர்க்கம் முதலிய சுகங்களின் அடைவின்கண்ணே தடையாய இந்நிகழ்கால சரீரம் நாசமான பின்னரே அந்தப் பீஷ்மத்துரோணுதியர் அச்சுவர்க்கம் முதலிய சுகங்களைப் போகிப்பதிற் சமர்த்தராவர். ஆகையால், தர்மப் போர்புரிந்து நீ இப்பீஷ்மத் துரோணுதியரின் நிகழ்கால சரீரங்களை வீழ்த்தின், இவர் ஜீர்ண சரீரரூபத் தடையற்றவராய்ச் சுவர்க்காதி லோகங்களில் திவ்விய சரீரங்களை யடைந்து, நானுவகையாய சுகங்களையடைவர் இது, அவர்கட்கு நீ பேருபகாரம் செய்ததேயாகும். ஆகையால் அவர்கட்குப் பேருபகாரம் செய்யும் இப்போரின்கண் அபகாரத்தன்மை மதிவடிவ மயக்கத்தை நீ யடையா தொழிதி, என்னும் இவ்வகையாய ஸ்ரீ பகவானது கருத்தை 'அபராணி அந்யாநிஸம்யாதி' என்னும் முப்பதங்களைக் கூறியருளியதாலறிந்து கொள்ளலாம். ஒருரையின்கண்ணே இச்சுலோகத்திற்கு இவ்வபிப்பிராயம் வர்ணனம் செய்யப்பட்டுளது. இத்தேவதத்தாதி நாமமுடைய புருஷர் முன்னுள்ள கந்தைத்துணிகளை எறிந்துவிட்டு, வேறு புதிய வஸ்திரங்களைக் கவர்வர். அதுபோல, இத்தேகியாய ஆன்மாவும் முன்னுள்ள ஜீர்ணசரீரங்களைப் பரித்தியாகம் செய்து, வேறு நவீன சரீரங்களை யடையும். ஆண்டு எங்ஙனம் வருகை, செல்கை, நாமரூபாதிகளின் விசித்திரதை, சிதிலதை முதலிய சர்வவிகாரங்களும் அவ்வஸ்திராதிகளின்கண்ணே யுண்டாமோ, புருஷனிடத்தே அவ்விகாரங்கள் உண்டாகாவோ, அங்ஙனம் உற்பத்தி நாசாதி சர்வ விகாரங்கள் இச்சரீரத்தின்கண்ணே யுண்டாம். நிரவயவ ஆன்மாவின்கண்ணே அவ்வுற்பத்தி நாசாதி விகாரங்களுண்டாகா. இத்துணை கூறியதால் ஆன்மாவின்

கண் தேக இந்திரியாதிகளினின்றும் வேறாந் தன்மையும், சர்வவிகாரங்களுமற்ற தன்மையும் நித்தியத்தன்மையும் குறிப்பிக்கப்பட்டன. (22)

(அ-கை.) ஹே பகவன்! எங்ஙனம் அக்கினியால் கிருகம் தகிக்கப்படின், அக்கிருகத்தின்கண் அகப்பட்ட புருஷனும் தாகமாய் விடுவனோ, அங்ஙனம் இத் தூலதேகம் நாசமுறின், அத்தேகத்துள் இராநின்ற ஆன்மாவிற்கும் நாசமுண்டாம் என்னும் அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் உத்தரம் கூறியருளுகின்றார் :—

சு-ம். நைநம் சிந்தந்தி ஶஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: ।
ந சைநம் க்லேதயந்த்யாபோ ந ஶோஷயதி மாருத: ॥ (23)

ப-ம். 3 ந 1 ஏநம் 4 சிந்தந்தி 2 ஶஸ்த்ராணி 7 ந 5 ஏநம் 8 தஹதி 6 பாவக:
12 ந 9 ச 10 ஏநம் 13 க்லேதயந்தி 11 ஆப: 15 ந 16 ஶோஷயதி 14 மாருத:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மாவை வாள் முதலிய சஸ்திரங்களும் வெட்டமாட்டா, இவ்வான்மாவை அக்கினியும் தகிக்கமாட்டாது, இவ்வான்மாவை ஜலமும் நனைக்கக் கரைக்கமாட்டாது, இவ்வான்மாவை வாயுவும் உலர்த்த மாட்டாது.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனம் வாள்முதலிய கூர்மையாய சஸ்திரங்கள் இத்தூல சரீரத்தைச் சேதிக்குமோ, அங்ஙனம் இவ்வான்மாவைக் கூர்மையாய சஸ்திரமும் சேதிக்கமாட்டாது; எங்ஙனம் அத்தியந்தம் ஓங்கி எரியாநின்ற அக்கினியானது இச்சரீரத்தைப் பஸ்மம் செய்யுமோ, அங்ஙனம் அவ்வோங்கி எரியாநின்ற அக்கினியும், இவ்வான்மாவைப் பஸ்மம் செய்யமாட்டாது. எங்ஙனம் அத்தியந்தம் வேகமுடைய நீரானது இச்சரீரத்தை நனைத்துக் கரைக்குமோ, (அவயவங்களைச் சிதிலம் செய்யுமோ) அங்ஙனம் அவ்வத்தியந்தம் வேகமுடைய நீரும் இவ்வான்மாவை நனைக்கக் கரைக்கமாட்டாது. எங்ஙனம் அத்தியந்தம் பிரபலமான வாயுவானது, இச்சரீராதிகளைச் சாரமற்றதாயாகுமாறு உலர்த்துமோ, அங்ஙனம் அவ்வத்தியந்தம் பிரபலமாய வாயுவும், இவ்வான்மாவை உலர்த்தமாட்டாது. ஈண்டு எத்துணை நாசஞ்செய்யும் பொருள்களுளவோ, அவை யாவுமே ஆன்மாவின்கண்ணே நிஷேதிக்கத் தக்கனவாய் விரும்பப்படுவனவாமாதலின், கேவல சஸ்திராதிகளை நிஷேதித்தல் உசிதமன்றாம். ஆயினும், போர்ச்சமயத்தே அச்சஸ்திராதிகளே பிராப்தங்களாம். ஆதலின், ஸ்ரீ பகவான் அச்சஸ்திராதிகளையே நிஷேதம் செய்தருளினர். அந்நிஷேதம் நாசஞ்செய்யும் சர்வ பதார்த்தங்களின் உபலக்ஷகமாம். அல்லது இவ்வுலகின்கண்ணே, பிருதிவி, ஜலம், அக்கினி, வாயு என்னும் நான்கன்கண்ணே நாச காரணத்தன்மை காணவருகின்றது; ஆகாசத்தின்கண்ணே எப்பொருளின் நாசகாரணத்தன்மையும் காணவருவதின்றாம். ஆகையால், ஈண்டுப் பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு பூதங்களையே கூறியருளினர்; ஆகாசத்தைக் கூறியருளவில்லை. இவ்வுலகின்கண்ணே எத்துணை நாசகாரணங்களுளவோ, அவை யாவும் பிருதிவி முதலிய நான்கு பூதங்கட்கு உள்ளடங்கியவாம். ஆதலின், பிருதிவி முதலிய நான்கின் நிஷேதத்தால், நாசஞ்செய்யும் எல்லாப் பொருள்களின் நிஷேதமும் துணிதல் கூடும். ஆண்டு வாள் முதலிய சஸ்திரங்கள் பிருதிவி விசேஷத்தின் விகாரரூபமாதலின் பிருதிவி ரூபமேயாம். (23)

(அ-கை.) ஹே பகவன்! ஆன்மாவைச் சஸ்திராதிகள் நாசஞ்செய்யமாட்டா, எனப் பிரதிஞ்ஞை செய்தருளன் மாத்திரையானே அர்த்தத்தின் சித்தியுண்டாக மாட்டாது. மற்றோ, யாதாவது ஏதுவினாலே அர்த்தத்தின் சித்தியாம். ஆதலின், ஆன்மாவை அச்சஸ்திராதிகள் நாசஞ்செய்ய முடியாவென்னும் பிரதிஞ்ஞையின்கண்ணே ஹேது யாதாம்? என்று அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அச்சஸ்திராதிகள் ஆன்மாவை நாசஞ்செய்யச் சமர்த்தற்றவை என்பதன் கண்ணும் ஆன்மாவிற்கு அவற்றானுண்டாம் நாச அயோக்கியத் தன்மையின்கண்ணும் ஹேதுவைக் கூறியருளுகின்றார்.

சு-ம். 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌮𑌦𑌾𑌹𑍍𑌯𑍋𑌽𑌯 𑌅𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑍋𑌽𑌶𑍋𑌷𑍍𑌯 𑌏𑌵 𑌚 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌰𑌚𑌲𑍋𑌽𑌯𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ॥ (24)

ப-ம். 2 𑌅𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌯𑌃 1 𑌅𑌯𑌂 4 𑌅𑌦𑌾𑌹𑍍𑌯𑌃 3 𑌅𑌯𑌂 5 𑌅𑌕𑍍𑌲𑍇𑌦𑍍𑌯𑌃 6 𑌅𑌶𑍋𑌷𑍍𑌯𑌃, 𑌏𑌵, 𑌚 8 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 9 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌃 10 𑌸𑍍𑌥𑌾𑌣𑍁𑌃 11 𑌅𑌚𑌲𑌃 7 𑌅𑌯𑌂 12 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மா சேதிக்கத்தகாததாம்; அங்ஙனமே, இவ்வான்மா தகிக்கத்தகாததாம்; அங்ஙனமே, நனைக்கத்தகாததாம்; அங்ஙனமே, உலர்த்தத்தகாததாம்; அங்ஙனமே, இவ்வான்மா நித்தியமாம்; அங்ஙனமே, சர்வகதமாம்; அங்ஙனமே, ஸ்தாணுவாம்; அங்ஙனமே, அசலமாம்; அங்ஙனமே, சநாதநமாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணததால் இவ்வான்மா சேதித்தற்குக் கூடாததாமோ, அக்காரணத்தால் இவ்வான்மாவை வாள் முதலிய சஸ்திரங்கள் சேதிக்கமுடியா. எக்காரணத்தால் இவ்வான்மா தகித்தற்குக் கூடாததாமோ, அக்காரணத்தால் இவ்வான்மாவை அக்கினி தகிக்க முடியாதாம். எக்காரணத்தால் இவ்வான்மா நனைக்கக்கூடாததாமோ, அக்காரணத்தால் இவ்வான்மாவை ஜலம் நனைக்க முடியாதாம். எக்காரணத்தால் இவ்வான்மா உலர்த்தற்குக் கூடாததாமோ, அக்காரணத்தால் இவ்வான்மாவை வாயு உலர்த்த முடியாதாம். இவ்வண்ணம் முறைப்படி சேதிக்கத்தகாதது என்னும் நான்கு ஹேதுக்களை முற்சுலோகத்தின்கண்ணே கூறியருளிய, பிரதிஞ்ஞையின்கண்ணே யோஜனை செய்துகொள்க. ஈண்டு 'ஏவ ச' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற 'ஏவ' என்னும் சப்தமானது அச்சேத்தியாதி நான்கினோடும் சம்பந்தமுற்றதாய் ஆன்மாவின்கண்ணே சேத்தியத்வாதி தர்மங்களை நீக்கும். அதாவது, ஆன்மா அச்சேத்தியமே யாமன்றிச் சேத்தியமாகாது. இங்ஙனம் அதாஹ்யத் வாதிதர்மங்களினும் அறிந்துகொள்க. "ச" என்னும் சப்தம் அவ் வச்சேத்தியத்வாதி நான்கையும், சமுச்சயம் (ஒருங்குகூடல்) செய்விப்பதற்காம். ஹே பகவன்! எவ்வச்சேத்யத்வாதி ஹேதுக்களின் வலிமையால் ஆன்மாவின்கண் சஸ்திராதிகளாக்கும் சேதித்தன் முதலியவற்றின் இன்மையைச் சித்தம் செய்தருளுகின்றீரோ, அவ்வச்சேத்யத்வாதி ஹேதுக்கள் ஆன்மாவின் கண்ணிராவாதலின், அவ்வச்சேத்யத்வாதி ஹேதுக்களால் ஆன்மாவின்கண்ணே சேதித்தன் முதலியவற்றின் இன்மை எங்ஙனம் சித்தமாம், என்னும் அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அவ்வச்சேத்தியத்வாதி ஹேதுக்களைச் சித்தியாக்கி யருளும்பொருட்டுச் சுலோகத்தின் பிற்பாதியால் ஹேதுவைக் கூறியருளுகின்றார். '𑌨𑌿𑌤𑍍𑌯𑌃' என. ஹே அர்ச்சுன! எப்பொருள் முற்பிற்றன்மையை யுடையதாமோ, அப்பொருள் அநித்தியமேயாம். கடாதியவஸ்துக்கள் முற்பிற் றன்மையுடையனவாமாதலின் அநித்தியங்களாம். இவ்வான்மதேவரோ, முற்பிற் றன்மையற்றவர் ஆதலின், நித்தியராம். நித்தியராதலினாலே இவ்வான்மதேவர் உற்பத்தியற்றவர்.

எப்பொருள் யாண்டும் வியாபகமன்றுமோ, அப்பொருள் அநித்தியமேயாம். கட முதலிய பொருள்கள் யாண்டும் வியாபகமன்றும். ஆதலின், அநித்தியங்களே யாம்; அஃதொப்ப இவ்வான்மதேவரும் ஒருகால் யாண்டும் வியாபகரல்லராயின், அநித்தியரேயாவர். நையாயிகர் பிருதிவிமுதலியவற்றின் பரமாணுக்களை அவ் வியாபகமாக வுடன்பட்டும், நித்தியமாயே வுடன்பட்டுளார்; ஆகையால், யாதவ் வியாபகமாமோ, அஃதநித்தியமேயாம் என்னும் நியமம் சம்பவியாது. ஆயினும் வேதாந்த சித்தாந்தத்தின்கண் அந்நித்திய பரமாணுவின் உடன்பாடின்றும்; ஆகையால், அந்நியமத்தின் பங்கமாகாதாம். இவ்வான்மதேவரோ, இருப்புவிளக்க இன்பவடிவத்தால் யாண்டும் வியாபகராவர். ஆதலின், இவ்வான்மதேவர் நித்திய ராவர், இதுகூறியதுகொண்டு இவ்வனுமானம் துணியப்பெற்றதாம்:—இவ்வான்மா நித்தியமாதற்கு யோக்கியமாம், யாண்டும் வியாபகமாதலின், எப்பொருள் நித்திய மாகாதோ, அப்பொருள் யாண்டும் வியாபகமுமன்றும்; கடாதிகளைப்போல. யாண் டும் வியாபகராதலின் இவ்வான்மதேவர் அடைவின் விடையருமல்லர். இவ்வுல கின்கண்ணே எவ்வெப்பொருள் விகாரியாமோ, அவ்வப்பொருள் யாண்டும் வியாபக மன்றும். கடமுதலிய பொருள்கள் விகாரிகளாதலின் யாண்டும் வியாபகங்களுமன் றும். அதுபோல, இவ்வான்மதேவரும் ஒருகால் விகாரியாவராயின் யாண்டும் வியாபகரல்லராவர். இவ்வான்மதேவரோ ஸ்தாணுவாவர், அதாவது அவிகாரியா வர். அதனுலிவர் யாண்டும் வியாபகராவர். இது கூறியதால் இவ்வனுமானந் துணி யப்பெறும்:—இவ்வான்மா, யாண்டும் வியாபகமாதற்கு யோக்கியமாம்; அவி காரியாதலின், எவ்வெப்பொருள் யாண்டும் வியாபகமன்றுமோ, அவ்வப்பொருள் அவிகாரியுமன்றும்; கடாதிபதார்த்தங்களே போலும். இத்துணையால் ஆன்மா வின்கண் விகாரியத் தன்மையின் நிஷேதம் செய்யப்பெற்றதாம். இவ்வுலகின்கண் எவ்வெப்பொருள் சலனரூபக்கிரியை யுடையதாமோ, அவ்வப்பொருள் விகாரியே யாம். கடமுதலிய பதார்த்தங்கள் சலனரூபக்கிரியை யுடையனவா மாதலின் விகாரிகளாம். அதுபோல, இவ்வான்மதேவரும் ஒருகால் சலனரூபக்கிரியை யுடையவராமாயின் விகாரியேயாவர். இவ்வான்மதேவரோ, அந்தச் சலனரூபக் கிரியை யற்றவராய அசலராம். அதனுல், இவ்வான்மதேவர் விகாரியுமாகார். இது கூறியதால் இவ்வனுமானந் துணியப்பெற்றதாம்:—இவ்வான்மா, அவி காரியாதற்கு யோக்கியம், அசலமாதலின், எவ்வெப்பொருள் அவிகாரியன்றுமோ, அவ்வப்பொருள் அசலமுமன்றும்; கடாதிபதார்த்தங்களைப் போலும். இத்துணை கூறியதால் ஆன்மாவின்கண் சம்ஸ்காரியத்தன்மையின் நிஷேதம் செய்யப்பட் டது. ஈண்டு முன்னவஸ்தையைப் பரித்தியாகம் செய்து, வேறு அவஸ்தையை யடைதலே விக்கிரியையாம். அவஸ்தை யொன்றுயினும், இயங்கன் மாத்திரை கிரியையெனப்படும். ஆதலின், அவிக்கிரியத்தன்மைச் சாத்தியத்திற்கும் அசலத் தன்மை யேதுவிற்கும் ஒருமை சித்தியா, எக்காரணத்தால் இவ்வான்மதேவர் நித்திய சர்வகத ஸ்தாணு அசலரூப ராவரோ, அக்காரணத்தால் இவ்வான்ம தேவர் சநாதநர். அதாவது எப்போதுமேகரூபர், எக்கிரியைக்குங் கர்மரூபரல்லர். கருத்திதுவாம்:—எப்பொருள் கிரியையால் உண்டாம் பலமுடையதாமோ, அப் பொருள் கர்மமெனப்படும். அக்கிரியையால் ஜனித்த, பலம், உற்பத்தி, பிராப்தி, விகிருதி, சம்ஸ்க்ருதி என்னும் பேதத்தால் நால்வகைத்தாம். அந்நால்வகைத் தாம் பல யோகத்தால் முறைப்படி அக்கர்மமும் உற்பாத்தியம், பிராப்பியம், விகார்யம், சம்ஸ்கார்யம் என்னும் பேதத்தால் நால்வகைத்தாம். ஆண்டிவ் வான்ம தேவர் நித்தியராதலின் உற்பாத்யரூப கர்மமுமில்லராவர். அநித்திய மாய கடாதிகட்கே உற்பாத்யரூப கர்மமுண்டாம். இவ்வான்மதேவர் யாண்டும் வியாபகராதலின் பிராப்பியரூப கர்மமுமில்லராவர். பரிச்சின்னமாய கிராமாதி

களே பிராப்பியரூப கர்மத்துடன் கூடும். இவ்வான்மதேவர் ஸ்தாணுரூபராத லின் விகார்ய ரூப கர்மமுமில்லராவர். ஸ்தாணுபாவமற்ற விக்கிரியையுடைய பால் முதலியவே விகார்ய ரூபங்களாம். இவ்வான்மதேவர் சலனரூபக் கிரியை யற்ற அசலர், ஆதலின் சம்ஸ்கார்யரூப கர்மமுமற்றவராவர். கிரியையுடைய தர்ப் பணுதிகளே சம்ஸ்கார்ய ரூபங்களாம்.

ஆ-சு. "ஆகாஶவத் ஸர்வகதஶ்ச நித்ய: வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேக: நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம்."

(பொ-ள்.) இவ்வான்மதேவர் ஆகாசம்போல யாண்டும் வியாபகர், நித்தியர், பெருமரம்போல அசலமாய் நிற்போர், தமது ஸ்வப்பிரகாச ஸ்வரூபத்தின் கண்ணே இருப்பவர், ஏக அத்விதீயரூபர், நிரவயவர், கிரியையற்றவர், சாந்த சொரூபர் என்பதாதி சுருதிகள் இவ்வான்ம தேவரை நித்திய சர்வகத ஸ்தாணு அசலரூபரெனக் கூறுகின்றன. அங்ஙனமே,

"ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யோऽப்ஸு திஷ்டந்நத்ப்யோऽந்தரோ யஸ்தேஜஸி திஷ்டம் ஸ்தேஜஸோऽந்தரோ யோ வாயௌ திஷ்டந் வாயோரந்தர:."

(பொ-ள்.) எவ்வான்ம தேவர் பிருதிவியின்கண்ணே யிருப்பவராய் அப் பிருதிவியினும் உள்ளாவரோ, எவ்வான்மதேவர் ஜலத்தின்கண்ணே இருப்பவ ராய் அஜ்ஜலத்தினும் உள்ளாவரோ, எவ்வான்மதேவர் அக்கினிரூப தேஜசின்கண் இருப்பவராய் அத்தேஜசினும் உள்ளாவரோ, எவ்வான்மதேவர் வாயுவின்கண் இருப்பவராய் அவ்வாயுவினும் உள்ளாவரோ என்பனவாய சுருதிகள் யாண்டும் வியாபக ஆன்மாவைச் சர்வாந்தர்யாமிரூபமாய்க் கூறுவனவாய் அவ்வான்மாவின் கண்ணே சஸ்திர முதலியவற்றாலாக்கும் சேதித்தன் முதலியவற்றின் அவிஷயத் தன்மையைக் கூறுகின்றன. கருத்திதுவாம் :—எப்பொருள் அச்சஸ்திர முத லிய வற்றுள் இராதோ, அப்பொருட்கே அச்சஸ்திராதிகள் சேதித்தன் முதலிய வற்றைச் செய்யும். இவ்வான்மதேவரோ அச்சஸ்திர முதலிய ஜடபதார்த்தங் கட்குச் சத்தா ஸ்பூர்த்தியை (இருப்புவிளக்கத்தை) கொடுப்பவராதலின், அச்சஸ் திராதிகளையும் ஏவும் அந்தர்யாமியாவர். ஆதலின், இவ்வான்மதேவரை அச்சஸ் திராதிகள் எங்ஙனம் சேதித்தன் முதலியன செய்யும்? மற்றேு, செய்யா வென்றுணர்க. இப்பொருளின்கண் "யேந ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த:" என்பதாதி சுருதிகளும் பிரமாணமாயுள வென உணர்ந்து கொள்க. இப்பொருளை இக்கீதையின் ஏழாவதத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் தாமே வெளிப்படுத்தி யருளுவர். (24)

(அ-கை.) அல்லது இவ்வான்மாவின்கண் சேத்தியத்தன்மை, தாஹியத் தன்மை முதலியவற்றை விஷயம் செய்யும் பிரமாணம் யாதொன்றுமின்றும். ஆதலினும் இவ்வான்மாவின்கண் அந்தச் சேத்தியத்தன்மை தாஹியத்தன்மை முதலியவற்றின் அபாவமுளதாம் என்னும் பொருளை 'அவ்யக்தோயம்' என்பதாதி பாதிச் சுலோகத்தால் ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றுர் :—

சு-ம். அவ்யக்தோऽயமசிந்த்யோऽயமவிகார்யோऽயமுச்யதே ।
தஸ்மாதேவம் விதித்வைநம் நாநுஶோசிதுமர்ஹஸி ॥ (25)

ப-ம். 2 அவ்யக்த: 1 அயம் 5 அசிந்த்ய: 4 அயம் 7 அவிகார்ய: 6 அயம் 3 உச்யதே 8 தஸ்மாத் 10 ஏவம் 11 விதித்வா 9 ஏநம் 13 ந 12 அநுஶோசிதும் 14 அர்ஹஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேதபகவானுனவர் இவ்வான்மாவை அவ்யக்தமெனக் கூறியுள்ளார், இவ்வான்மாவை அசிந்தியமெனக் கூறியுள்ளார், இவ்வான்மாவை அவிகார்யமெனக் கூறியுள்ளார்; அக்காரணத்தால் நீ இவ்வான்மாவை இவ்வண்ணம் அறிந்துகொண்டு பின்னர்ச் சோகத்தையுற யோக்கியனன்றுகின்றாய்.

(வி-ம்.) எப்பொருள் நேத்திராதி இந்திரியங்களாலுண்டாம் ஞானத்திற்கு விஷயமாமோ, அப்பொருள் பிரத்தியக்ஷ மெனப்படும். பிரத்தியக்ஷமாதலின், அப்பொருள் வியக்தமெனப்படும்; ரூபாதி குணங்களையுடைய கடாதி பதார்த்தங்களைப்போல. இவ்வான்மதேவரோ ரூபாதி குணங்களற்றவராவாதலின், நேத்திராதி இந்திரிய ஜன்னிய ஞானவிஷயமல்லர். இக்காரணத்தால் இவ்வான்மதேவர் அப்பிரத்தியக்ஷர்; அப்பிரத்தியக்ஷராதலின், இவ்வான்மதேவர் அவ்யக்தரெனப்படுவர். ஆதலின், பிரத்தியக்ஷப் பிரமாணம் அவ்வான்மாவின் சேத்தியத்தன்மை முதலியவற்றைக் கவராது.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்குப் பிரவிருத்தியின்றேனும், அனுமானப் பிரமாணம் பிரவிருத்திக்கும் என்னும் அர்ச்சுனனது சங்கையுண்டாக.

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். 'அசிந்த்யம்' என, எப்பொருள் அனுமானப்பிரமாண ஜன்னிய ஞானவிஷயமாமோ, அப்பொருள் சிந்தியமெனப்பெறும். மலை முதலியவற்றின்கண்ணே உள்ள வன்னி முதலிய பதார்த்தங்கள், அனுமான ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாதலின் சிந்தியமெனப்படும். இவ்வான்மதேவரோ, அவ்வக்கினி முதலிய அனுமேய பதார்த்தங்களினின்றும் விலக்ஷணராவர்; அனுமான ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாகார். ஆகையால், இவ்வான்மதேவர் அசிந்தியரெனப்படுவர். கருத்திதுவாம்:—எப்பொருள் எவ்விடத்தும் பிரத்தியக்ஷமாமோ, அப்பொருட்கே அந்நியஸ்தானத்தின்கண் அனுமானமாம். எவ்வாற்றாலும் பிரத்தியக்ஷமல்லாத பொருளுக்கு அனுமானமுண்டாகாது. கிருகம் முதலியவிடத்தே பிரத்தியக்ஷமாய அக்கினிக்குத் தூமத்தின்கண் வியாப்தி நிச்சயம்செய்து, இப்புருஷன் மலையின்கண்ணே புகையைக் கண்டு இம்மலை தீ யுடைத்து என அனுமானம் செய்வன். எப்பொருள் எவ்விடத்தும் பிரத்தியக்ஷமாகாதோ, அப்பொருளின் வியாப்தி ஞானமே சம்பவியாதாதலின், அப்பொருளின் அனுமானமும் உண்டாகாது. இவ்வான்மாவோ, நேத்திராதி இந்திரியங்களால் காட்சிப்படாததா மாதலின், அனுமானப் பிரமாணத்தாலும் ஆன்மாவின் சேத்தியத்தன்மை முதலியவற்றின் கவர்ச்சியுண்டாகாது.

சங்கை:— ஹே பகவன்! எப்பொருள் எவ்விடத்தேனும், பிரத்தியக்ஷமாமோ, அப்பொருட்கே அந்நிய இடத்தே அனுமானமுண்டாம். எவ்வாற்றாலும் அப்பிரத்தியக்ஷப் பதார்த்தத்திற்கு அனுமானமுண்டாகாது. எனத் தாங்கள் கூறியருளிய நியமம் சம்பவியாது. ஏனெனின், நேத்திராதி இந்திரியங்கட்கும், அறம் பாவங்கட்கும் எவ்விடத்தும் பிரத்தியக்ஷம் உண்டாகாது. ஆனால், அவற்றின்கண்ணும், அனுமான விஷயத்தன்மையோ காணவரும். அவ்வனுமானமாமாறு:— உருவாதிகளின் பிரதீதி, கரணத்தாற் சாதிக்க யோக்கியமாம்; கிரியை ஆதலின், யாது யாது கிரியையாமோ, அஃததது கரணத்தாற் சாதிக்கற்பாலதாம். வெட்டல் வடிவக்கிரியையானது கோடரிரூப கரணத்தாற் சாதிக்கற்பாலதேபோல. இவ்வகையாய அனுமானத்தால் உருவாதித் தோற்றங்களின் கரணரூபத்தால் நேத்திராதி இந்திரியங்களின் சித்தியுண்டாம். அங்ஙனமே இப்புருஷன் தர்மமுடையோன், சுகியாதலின், அங்ஙனமே இப்புருஷன் அதர்ம

முடையோன்; துக்கியாதலின் என்னும் இவ்வனுமானத்தால் தர்ம அதர்மங்களின் சித்தியுண்டாம். இதுபோல, அப்பிரத்தியக்ஷ ஆன்மாவின்கண்ணும், அனுமான விஷயத்தன்மை பொருந்தாது. என அர்ச்சுனனுடைய சங்கை உண்டாக ஸ்ரீ பகவான் உத்தரமருளிச் செய்கின்றார். 'அவிகாயெ-ஹாயம்' என, ஹே அர்ச்சுன! பலவகையாய விக்கிரியைகளையுடைய இந்திரியாதி பதார்த்தங்களே தமது காரியங்கள் வேறோராற்றாற்பொருந்தாமையின், கற்பிக்கப் பெறுவனவாய் அர்த்தாபத்திப் பிரமாணத்திற்கும் அனுமானப் பிரமாணத்திற்கும் விஷயமாம். இவ்வான்மதேவரோ, சர்வ விக்கிரியைகளுமற்றவர். இக்காரணத்தால் இவ்வான்ம தேவர், அர்த்தாபத்திப் பிரமாணத்திற்கும் அனுமானப் பிரமாணத்திற்கும் விஷயமாகார். அனுமானம்போல லௌகிக சப்தமும் பிரதியக்ஷாதிப் பிரமாண பூர்வகமேயாம். ஆகையால், அந்தப் பிரத்தியக்ஷப் பிரமாணம் நிஷேதமாகவே அந்த இலௌகிக சப்தமும் அர்த்தத்தாலே நிஷேதிக்கப்பட்டதாமெனத் துணிக.

சங்கை:—ஹே பகவன்! பிரத்தியக்ஷம், அனுமானம், அர்த்தாபத்தி, லௌகிக சப்தம் என்னும் நான்கு பிரமாணங்களும் அவ்வான்மாவின்கண்ணே சேத்தியத்தன்மை, தாஹியத்தன்மை முதலியவற்றைக் கிரகியாதொழிக; என்றாலும், வேதப்பிரமாணம் அவற்றைக் கிரகிப்பதில் யாது தடையுளது? என அர்ச்சுனன் வினவ,

சமாதானம்:—ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்:—'உஅஷெதெ' என, ஹே அர்ச்சுன! வேதபகவானே இவ்வான்மதேவரை அச்சேத்திய அவ்வியக்த ரூபமாய்ப் பிரதிபாதனம் செய்கின்றார். ஆதலின் இலக்கண விருத்தியால் நிர்விகார ஆன்மாவைப் பிரதிபாதனம் செய்யும் வேதபகவான் ஆன்மாவிற்குச் சேத்தியத் தன்மை முதலிய தர்மங்களை எங்ஙனம் பகர்வர்; மற்றோ பிரதிபாதனம் செய்யார். ஆதலின், ஆன்மாவின்கண்ணே சேத்தியத்தன்மை தாஹியத்தன்மை முதலிய தர்மங்களை விஷயம் செய்யும் பிரமாணம் யாதொன்றுமின்றாம். இக்காரணத்தால் இவ்வான்மதேவர் அச்சேத்திய அதாஹிய வடிவினராவர். ஈண்டு 'நெைநஂ ஹிஂஉஷிஶஹாணி' என்னு மிச்சுலோகத்தால் சஸ்திரம் அக்

து

கினி முதலியவற்றின்கண் ஆன்மாவை நாசம்செய்யும் சாமர்த்திய மின்றெனக் கூறப்பட்டது. 'அஜெஷெ§ாயஉஹாஹெ§ாயஂ' என்னு மிச்சுலோகத்தால் அவ்வான்மாவின்கண்ணே சேதித்தல் தகித்தல் முதலிய கிரியைகளின் கர்மத்தன்மையின் அயோக்கியத்தன்மை நிரூபணம் செய்யப்பட்டது. அன்றியும் 'அவஹெ்ரா யஉஹிஞெ§ாயஂ' என்னு மிப்பாதிச் சுலோகத்தால் அவ்வான்மாவின்கண்ணே சேத்தியத்தன்மை முதலியவற்றைக் கவரும் பிரமாணங்களின் அபாவம் கூறப்பட்டது. இக்காரணத்தால் ஈண்டு புனருக்தி (கூறியது கூறல்) என்னும் தோஷப் பிராப்தியுண்டாகாது. அன்றியும் 'வெஉாவிநாஶிநஂநிதஂ' என்பதாதி சுலோகங்களில் ஸ்ரீ பகவான் பாடியக்காரர் பொருளாலேனும் சப்தத்தாலேனும் புனருக்திதோஷ நிவிருத்தியாற்றியுள்ளார். அதன்கண்ணே பாடியக்காரருக்கிஂதபிப்பிராயமாம்:—இவ்வான்மதேவர் அத்தியந்தம் உணரத்தகாதவர்; ஆதலின், ஸ்ரீ கிருஷ்ண பகவான் அடிக்கடிப் பிரசங்கம் பெற்று இவ்வான்ம தேவரைச் சப்தாந்தரத்தால் நிரூபணஞ் செய்தருளியுள்ளார். ஏனெனின், இவ்வதிகாரிகளின் சம்சார நிவிருத்தியாற்றும்பொருட்டு, இவ்வான்மவஸ்து எவ்வகையாலேனும் இவ்வதிகாரி புருஷரின் மதியின்கண் ஆரூடமாயின் மேன்மையாம் என்பதே. ஆதலின் அறிதற்கருமையாய ஆன்மவஸ்துவை மீண்டும் மீண்டும் கூறுவதில் புனருக்தி தோஷப்பிராப்தி யுண்டாகாது. உலகப் பிரசித்த வஸ்துவை மீண்டும் மீண்டுங் கூறுவதாலே புனருக்தி தோஷப் பிராப்தியுண்டாம். ஈண்டு ஒருரையின்கண்

அவ்வியக்த அசிந்திய அவிகாரியமென்னும் முப்பதங்கட்கும் இவ்வகையாய பொ
ருள் செய்யப்பட்டுளது, பிரத்தியக்ஷப்பிரமாண விஷயமாய இத்தூலசரீரம் வியக்த
மாம். இத்தூலசரீரத்தினும் இப்பிரத்தியக்கான்மா வேறுமாதலின் இப்பிரத்தியக்
கான்மா அவ்வியக்தமெனப்படும். ரூபாதிகளின் பிரகாசரூபகாரியத்தால் அனுமா-
னஞ்செய்ய யோக்கியமாய சக்ஷுமுதலியவற்றின் சமுதாயரூப லிங்கசரீரம் சிந்திய
மெனப்படும். அந்தலிங்க சரீரத்தினும் இவ்வான்மா வேறுமாதலின் இவ்வான்மா
அசிந்தியமாம். ஸ்தூலசூக்ஷுமரூப காரியபாவத்தாலிருப்ப யோக்கியமாய முக்கு
ணான்மகமூலாஞ்ஞான ரூபகாரணசரீரம் கேவலம் சாக்ஷியானே அறியத் தக்கதாம்,
அதன்பெயரே விகாரியாம். அக்காரணசரீரத்தினும் இவ்வான்மாவேறும், ஆதலின்
இவ்வான்மதேவர் அவிகார்யமெனப்படுவர். இவ்வண்ணம் குருசாஸ்திரங்கள் அதி
காரிகளுக்கு ஸ்தூல சூக்ஷுமகாரண சரீரநிஷேதவாயிலாய் இவ்வான்மதே
வரையுபதேசிக்கும் ஒருவருக்குங் கோக்கோடுகோடும் நியாயம்பற்றி இவ்வகைய
திவ்வான்மாவென விதிவாயிலாய்க் கூறவேலாதாம். ஆண்டு எனது கோ யாது என
ஒருவன் கேட்டானாக, மற்றொருவன் அக்கோவின் கோட்டைப் பற்றி இது நினது
கோ எனக் கோவைக் காண்பித்தனன். என்னும், இதனைத்தான் "கோக்கோடு
கோடும் நியாயம்" என்பர். இவ்வாறு முற்புகன்ற அநேகம் வகையாய யுக்தி
களால் ஆன்மாவின் நித்தியத் தன்மையும் நிர்விகாரத் தன்மையும் துணியப்
பெறவே நீ சோகித்தல் தகுதியன்றாம் என்னும் உபசம்ஹாரத்தை ஸ்ரீ பகவான்
செய்தருளுகின்றார் 'தஸ்மாதேவம்' என்பதாதி பாதிச் சுலோகத்தால். ஹே
அர்ச்சுன! முன்னர் யாம் கூறிய நித்திய நிர்விகார ஆன்மாவின்வடிவ சாக்ஷாத்
காரமே சோக காரணரூப அஞ்ஞான நிவர்த்தகமாம். அத்தகைய ஆன்ம சாக்ஷாத்
காரத்தை யடைந்த நீ சோகித்தல் தகுதியன்றாம். காரணம் நீங்கின் காரியமும்
அவசியமாய் நீங்கும். கருத்திதுவாம் :—அத்தகைய நித்திய நிர்விகார ஆன்
மாவை யறியாது நீ முன்னர்ச் சோகித்தனை அஃதுனக்குத் தகுதியேயாம்;
ஆனால் இஞ்ஞான்று எமதுபதேசத்தால் ஆன்மாவின் வாஸ்தவ சொரூபத்தை
அறிந்த நீ சோகித்தல் தகுதியன்றாம்.

ஆ-சு. "தரதி ஶோகமாத்மவித்" (பொ-ள்.) ஆன்மாவின் உண்மை வடிவத்தை
யறிந்த அறிஞன் எல்லாச் சோகங்களுமற்றவனாவன். (25)

(அ-கை.) முற் பிரசங்கத்தே ஆன்மா ஜன்மமரணாதி விகாரங்களற்றது,
ஆதலின் நீ சோகித்தல் தகுதியன்று என்பதை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குக்
கூறியருளினர்; இப்போது இவ்வான்மாவின்கண்ணே ஜன்மமரணாதி விகாரங்களை
யங்கீகரித்தும் நீ சோகித்தற்கு யோக்கியனன்று என்னும் பொருளை ஸ்ரீ பகவான்
இரண்டு சுலோகங்களால் பிரதிபாதித்தருளுகின்றார். ஆண்டு ஆன்மா, விஞ்ஞான
சொரூபமும் கணந்தோறும் விநாச முறுவதும் ஆம் எனச் சௌகதர் சொல்லா
நிற்பர். இத்தூல தேகமே ஆன்மா, ஸ்தூலதேகரூப ஆன்மாத்திரமாயிருப்பினும்
கணந்தோறும் பரிணாமத்தையடையும், ஜன்மத்தையடையும், நாசத்தையடையும்
பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற் சித்தமாம். என இவ்வகை யான்மாவை உலகாய
தர் உடன்பட்டுளார். ஆன்மா தேகத்தினும் வேறாயினும் தேகத்தோடே பிறக்
கும் தேகத்தோடே யிறக்கும். என இவ்வகை யான்மாவை வேறு சிலரெண்ணா
நிற்பர். சிருஷ்டியின் ஆதிகாலத்தே எங்ஙனம் ஆகாசத்தின் உற்பத்தியாமோ
அங்ஙனம் ஆன்மாவிற்கும் உற்பத்தியாம். தேகங்கள் வேற்றுமை யுறினும்
அவ்வான்மா கற்பபரியந்தம் திரமாயிருக்கும், இக்கற்பாந்தத்தே அவ்வான்மா
நாசத்தையடையும், இவ்வகை ஆன்மாவை வேறு சிலருடன்பட்டுளார். ஆன்மா

நித்தியம்; அந்நித்தியமாய ஆன்மாவே ஜன்மத்தையும் மரணத்தையும் அடையும். என இவ்வகை ஆன்மாவைத் தார்க்கிகர் உடன்பட்டுளார். அந்தத் தார்க்கிகாது தாற்பரியமிதுவாம்:—அபூர்வதேக இந்திரியாதிகளின் சம்பந்தம் ஜன்மமாம். பூர்வதேக இந்திரியாதிகளின் சம்பந்த நீக்கம் மரணமாம். இச்சன்மம் மரண மிரண்டும் தர்ம அதர்மங்களாற் சனித்ததாம். ஆகலின் அந்தத்தர்ம அதர்ம ஆதாரரூப நித்திய வஸ்துவிற்கே இப்பிறப்பிறப்பு முக்கியமாம். சரீராதி அநித்திய வஸ்துவின்கண் தர்ம அதர்மங்களின் ஆதாரத் தன்மையை யங்கீகரிக்கின், ஆசிரய நாசத்தால் தர்ம அதர்மங்களின் நாசமுமுண்டாம். ஆதலின் செய்தகருமத்திற்குப் பலபோக மின்றியே நீக்கமாமென்னும், செய்தற்கின்றென்னுந் தோஷமும், செய்யாக்கர்மத்தின் பலபோகரூபமாம், செயாததற்கொன்றும் என்னுந் தோஷமும் உண்டாம். ஆதலின் அநித்தியவஸ்துவின்கண் அந்தத்தர்மஅதர்மங்களின் ஆதாரத் தன்மை சம்பவியாது. ஆகையால், சரீராதி அநித்தியவஸ்துவிற்குச் சன்மமரணம் முக்கியமன்றாம்; மற்றோ, கௌணமாம். இவ்வகையான்மாவைத் தார்க்கிகர் அங்கீகரித்துளர். சில நூலுடையரோ இங்ஙனமங்கீகரித்துளார்:—சுரோத்திரரூப நித்திய ஆகாசத்திற்குக் காணசட்குலியாகிய உபாதியின் ஜன்மத்தால் ஜன்மமுண்டாம், அவ்வுபாதியின் நாசத்தால் நாசமுண்டாம். அச்சன்மமரண மிரண்டும் ஔபாதிக மாதலின் அமுக்கியமாம். அங்ஙனமே, நித்திய ஆன்மாவிற்கும் தேகரூப உபாதியின் ஜன்மத்தால் ஜன்மமுண்டாம்; தேகரூப உபாதியின் மரணத்தால் மரணமுண்டாம். அச்சன்மமரண மிரண்டும் ஔபாதிகமாதலின் அமுக்கியமாம், முக்கியமன்றாம். இங்ஙனம் சில வாதியர் ஆன்மாவை அநித்தியமென அங்கீகரித்துளார்; சில வாதியர் ஆன்மாவை நித்தியமென அங்கீகரித்துளார். ஆண்டு ஆன்மா அநித்தியமாம் என்னும் இப்பக்ஷத்தின்கண்ணும் ஸ்ரீ பகவான் ஆன்மாவின் சோகத்தை நிஷேதித்தருளுகின்றார்.

சு-ம். அத சைநம் நித்யஜாதம் நித்யம்வா மந்யஸே ம்ருதம் ।
தயாபி த்வம் மஹாபாஹோ நைவம் ஶோசிதுமர்ஹஸி ॥ (26)

ப-ம். 1 அத 2 ச 3 ஏநம் 4 நித்யஜாதம் 6 நித்யம் 5 வா 8 மந்யஸே 7 ம்ருதம் 9 ததாபி 11 த்வம் 10 மஹாபாஹோ 14 ந 12 ஏவம் 13 ஶோசிதும் 15 அர்ஹஸி.

(அ-ம்.) அநித்திய பக்ஷத்தின்கண்ணும் நீ இவ்வான்மாவை நித்தியமும் ஜனிப்பதாயும், நித்தியமும் மரிப்பதாயும் அங்கீகரிப்பினும், ஹே பொருப்புறழ் புயத்தோய்! ஹே அர்ச்சுன! நீ இங்ஙனம் சோகமுற அருகனன்றுகின்றாய். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மா அத்தியந்தம் அறிதற்கரியது; ஆதலின், அடிக்கடி இவ்வான்மாவைக் கேட்பினும், இவ்வான்மாவை நிச்சயம் செய்ய ஆற்றலில்லாமல் முற்கூறிய எமதுபக்ஷத்தை அங்கீகரியாது, நீ வேறொரு பக்ஷத்தை அங்கீகரிப்பினும், அவ்வேறு பக்ஷத்தின்கண்ணும் ஆன்மா அநித்தியமென்னும் அநித்திய பக்ஷத்தை அங்கீகரித்து நீ இவ்வான்மாவை நித்தியமும் பிறப்பது, நித்தியமும் இறப்பது என உடன்படினும், ஆண்டு விஞ்ஞானரூப ஆன்மா க்ஷணிகமாம் என்னும் இந்த க்ஷணிக பக்ஷத்தின்கண்ணே நித்தியமென்னும் சப்தத்திற்குக் கணந்தோறும் எனப்பொருளுரைக்கினும், அதாவது ஆன்மாவைக் கணத்துக்குக்கணம்பிறப்பதாயும், இறப்பதாயும்அங்கீகரிப்பினும் என்பதாம். அந்த க்ஷணிக பக்ஷத்தினும் வேறாய மற்றப் பக்ஷத்தின்கண்ணே, அந்த நித்திய சப்தத்திற்கு ஆவசியகமாதலின் நியதம் எனப்பொருள் கோடினும், அஃதாவது இத்தேவதத்தன் பிறந்தனன், இத்தேவதத்தன் மரித்தனன் என்னும் இலௌ

தால் போரினின்றும் உபராமத்தை யடைந்தனனென எண்ணுவர். ஆகையால், எப்பீஷ்மத்துரோணுதியர் பூர்வம் நின்னை மேன்மையாய் எண்ணியிருந்தனரோ, இப்போது இப்போரினின்றும் நீங்கி, நீ அவருக்கே அநாதர ரூபலாகவமாய்த் தோற்றப்போகின்றாய் (35)

(அ-கை.) ஹே பகவந்! யான் போரினின்றும் நீங்கியதைக் கண்டு, இப் பீஷ்மத்துரோணுதி மகாரதிகர் என்னைமேன்மையனுக எண்ணுதொழிக. ஆனல், யான் போரினின்றும் நீங்குதல் எனது பகைவராய துரியோதனுதியர்க்கு மிகவும் அநுகூலமேயாகுமாதலின், அப்பகைவரோ யான் போரினின்றும் நீங்கியதைக் கண்டு மேன்மையாய் எண்ணுவர். என, அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் உத்தரமுரைத் தருளுகின்றார்.

சு-ம். அவாச்யவாதாம்ஶ்ச பஹூந் வதிஷ்யந்தி தவாஹிதா: ।
நிந்தந்தஸ்தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ (36)

ப-ம். 7 அவாச்யவாதாந் 3 ச 8 பஹூந் 9 வதிஷ்யந்தி 1 தவ 2 அஹிதா: 6 நிந்தந்த: 4 தவ 5 ஸாமர்த்யம் 10 தத: 11 து:கதரம் 12 நு கிம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நினது துரியோதனுதி பகைவரும், நினது சாமர்த்தியத்தை நிந்திப்பவராய்க் கூறுவதற்குக்கூடாத அநேகவகை வசனங்களைக் கூறுநிற்பர்; இதனினும் மேலாய் அதிக துக்கம் யாது வேண்டும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இப்போரினின்றும் நீ நீங்குவையேயாயின், சர்வ லோகத்திலும் பிரசித்தமாய உனது சாமர்த்தியத்தை நிந்திப்பவராய், இந்தத் துரியோதனன், கர்ணன், விகர்ணன் முதலிய நினது சத்துருக்களும் கூறுதற்குத் தகுதியற்ற அநேகம் வகையாய திக்கார சப்தங்களைக் கூறுநிற்பர்.

சங்கை :—ஹே பகவன்! பீஷ்மத்துரோணுதிகளின் நாசத்தால் உற்பன்ன மாகாநின்ற அத்தியந்த கஷ்டரூப துக்கத்தைச் சகியாதவனுய், இப்போரினின்றும் நீங்கிய யான் அப்பகைவரால் செய்யப்பட்ட எனது சாமர்த்திய நிந்தையால் உண்டாம் துக்கத்தைச் சகிப்பேன்.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் உத்தரமருளுகின்றார் :—ததோ து:கதரம் நு கிம் என, ஹே அர்ச்சுன! லோக நிந்தையினுல் உண்டாய துன்பத்தைக் காட்டிலும் வேறு அதிக துக்கம் யாது. மற்றே, அந்நிந்தையினின்றும் உண்டாய துக்கத்தினும், அதிகமாய் எத்துக்கமு மின்றுமாதலின், அந்நிந்தையாலுண்டாகும் துக்கத்தைச் சகியாய். (36)

(அ-கை.) ஹே பகவன்! யான் இப்போரின்கண் பீஷ்மத்துரோணுதி ஆசிரியர்களைக் கொல்வனேயாயின், மத்தியஸ்த புருஷன் என்னை நிந்திப்பன்; யான் இப்போரினின்றும் நீங்கிவிடுவனேயாயின், இத்துரியோதனுதிய பகைவர் என்னை நிந்திப்பர்; ஆதலின், இப்போரைச் செய்யும் பக்ஷத்திலும், செய்யாதபக்ஷத்திலும் அந்த நிந்தையாலுண்டாம் துக்கத்தின் அடைவு சமானமேயாம். என, அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் *ஜய பக்ஷத்திலும், †பராஜய பக்ஷத்திலும் நினக்கு நிச்சயமாய் இலாபத்தின் அடைவேயுண்டாம். ஆகையால், போரின்பொருட்டே நீ கிளம்பவேண்டும் என்னும் வசனத்தை அர்ச்சுனனுக்குக் கூறியருளத்தொடங்குகின்றார்.

சு-ம். ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம் ।
தஸ்மாதுத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருதநிஶ்சய: ॥ (37)

---

* ஜயம்=வெற்றி. † பராஜயம்=தோல்வி.

ப-ம். 3 ஹத꞉ 2 வா 5 ப்ராப்ஸ்யஸி 4 ஸ்வர்கம் 7 ஜித்வா 6 வா 9 போக்ஷ்யஸே 8 மஹீம் 10 தஸ்மாத் 13 உத்திஷ்ட 1 கௌந்தேய 12 யுத்தாய 11 க்ருதநிஸ்சய꞉.

(அ-ம்.) ஹே குந்திமைந்தனே அர்ச்சுன! ஒருகால் நீ போரின்கண் மரண மடைவையேயாயின், சுவர்க்கத்தை அடைவாய். அல்லது இப்பகைவரை வெற்றி கொண்டு இம்மண் உலகைப் போகிப்பாய்; அக்காரணத்தால் நிச்சயத்தோடு கூடி னவனாய் நீ இப்போரின்பொருட்டுக் கிளம்பி நிற்றி.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இப்போரின்கண் நீ ஒருகால் இத்துரியோதனாதி பகைவரால் மரணத்தை அடைவையாயின், அவசியம் சுவர்க்கத்தை அடைவாய்; ஒருகால் நீ இவரை வெற்றிகொள்ளின், பகைவர்களாகிய முட்களற்ற இம்மண் உலகைப் போகிப்பாய். எக்காரணத்தால் தோல்விப்பக்கத்தின்கண்ணும், வெற்றிப் பக்கத்தின்கண்ணும் நினக்கு ஊதியத்தின் அடைவே யுண்டாமோ, அக்காரணத் தால் இத்துரியோதனாதிய பகைவரை வெற்றிகொள்வேம்; அல்லது மரணத்தை அடைவேம் என்னும் திடநிச்சயத்தோடு கூட இப்போர் புரியும்பொருட்டுக் கிளம்பி நிற்றி. இத்துணை கூறியருளியதால் "நசைதத்வித்ம꞉ கதரந்நோ கரீய꞉" என்பதாதி அர்ச்சுனனது சர்வ வசனங்களும் கண்டித்தருளப்பட்டனவாயின. ()

(அ-கை.) ஹே பகவன்! ஒருகால் யான் சொர்க்க அடைவின்பொருட்டு இப் போரைச் செய்வனாயின், சோதிட்டோமாதி யாகங்களைப்போல இப்போரினுக்கு நித்திய கர்மரூபத்தன்மை சம்பவியாது; மற்றோ, காமிய கர்மரூபத்தன்மை சம்பவிக்கும். ஒருகால் யான் இம்மண்ணுலகை ஆளும்பொருட்டு இப்போரைப் புரிவனாயின், போரைவிதிக்கும் சாஸ்திரத்திற்கு அர்த்த சாஸ்திரரூபத்தன்மை அடையாநிற்கும். அதனால், அச்சாஸ்திரத்தின்கண் தர்ம சாஸ்திரத்தைக்குறித்துத் துர்ப்பலத்தன்மை துணியப்பெறும். ஆகையால், காமியகர்மரூபப் போரைச் செய் யாததால் எனக்கு எங்ஙனம் பாவமுண்டாம்; மற்றோ, உண்டாகமாட்டாது. மண்ணுலகாளும் பிரத்தியக்ஷப் பிரயோஜனப் பிராப்தியைப் பெறுவிக்கும் குரு பிராஹ்மணர்களின் ஹனனவடிவப் போரின்கண் எங்ஙனம் தர்ம ரூபத்தன்மை யுண்டாம்; மற்றோ, உண்டாகமாட்டாது. ஆகையால், "அதசேத்த்வமிமம் யுத்தம்" என்னும் இப்பூர்வ சுலோகத்தின் பொருள் அசங்கதமாம் என, அர்ச்சுனன் சங் கிப்ப ஸ்ரீ பகவான் உத்தரம் அருளிச்செய்கின்றார்:—

சு-ம். ஸுகது꞉கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥ (38)

ப-ம். 1 ஸுகது꞉கே 4 ஸமே 5 க்ருத்வா 2 லாபாலாபௌ 3 ஜயாஜயௌ 6 தத꞉ 7 யுத்தாய 8 யுஜ்யஸ்வ 11 ந 9 ஏவம் 10 பாபம் 12 அவாப்ஸ்யஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சுகதுக்கங்கள் இரண்டையும், லாபாலாபங்கள் இரண்டையும், ஜயாஜயங்கள் இரண்டையும் சமானமாக்கி, அதன்பின்னர் நீ போர்புரியும் பொருட்டு முயல்வுடையவனாகுதி. இங்ஙனம் போர்செய்யும் நீ பாவத்தை அடையாய்.

(வி-ம்.) இஷ்ட அநிஷ்ட பதார்த்தங்களின் அடைவில் ராகத்துவேஷங்கள் அற்றிருத்தல் சமத்தன்மையாம். சுகத்தின்கண்ணும், சுககாரண வடிவலாபத் தின்கண்ணும், லாபகாரணமாகிய ஜயத்தின்கண்ணும் விழைவுறாமல், அங்ஙனமே துக்கத்தின்கண்ணும், துக்ககாரணமாகிய நஷ்டத்தின்கண்ணும், நஷ்டகாரண மாகிய அபஜெயத்தின்கண்ணும் வெறுப்புறாமல், நீ இப்போர்புரியும் பொருட்டு முயல்வுடையவனாகுதி. இவ்வண்ணம் சுகவிழைவை ஒழித்து, துக்க நீக்கத்தின்

விழைவையும் ஒழித்து, கேவலம் சுவதர்ம புத்தியால் நீ இப்போரைப் புரிவையாயின், இந்தக் குரு பிராஹ்மணர்களின் ஹனன ஜன்னிய பாவத்தையும், நித்திய கர்மத்தைச் செய்யா தொழிந்ததால் உண்டாம் பாவத்தையும் நீ அடையாய். எப் புருஷன் இவ்வுலக பலத்தையேனும், அவ்வுலக பலத்தையேனும் விரும்பி யுத்தஞ் செய்வனே, அப்புருஷன் குரு பிராஹ்மணாதிகளைக் கொன்றதால் உண்டாம் பாவத்தை அவசியம் அடைவன். எப்புருஷன் அப்போரைப் புரியானே, அப் புருஷன் அந்த நித்திய கர்மத்தைச் செய்யாததால் உண்டாம் பாவத்தை அடைவன். ஆகையால், பல இச்சையின்றிக் கேவலம் சுவதர்மமென நினைந்து போர் செய்தலால் இப்புருஷன் அவ்விருவகையாய பாவத்தையும் அடையான். 'ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்க்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்' என்னும் வசனத்தால் யாம் முன்னர் போரின்பலத்தைக் கூறியது சேர்க்கை வயத்தாய பலத்தைக் கூறியதாம். ஆகையால், முன்வசனத்திற்கும் முரணின்றாம், இவ்வார்த்தையை ஆபஸ் தம்ப இருஷியும் கூறியிருக்கின்றார்.

> தத்யதாம்ரே பலார்த்தே நிமிதே சாயா கந்த இத்யநூத்பத்யேதே
> ஏவம் தர்மம் சர்யமாணமர்த்தா அநூத்பத்யந்தே நோ சேதநூத்பத்யந்தே
> ந தர்மஹாநிர்பவதீதி.

(பொ-ள்.) இவ்வுலகின்கண்ணே மாங்கனியடைவான் நட்டானுக்கு, நட்ட மாங்கன்றின் நிழலும், நறுநாற்றமு மவசியம் கிடைக்கும். ஆண்டு நிழல்நறு நாற்ற அடைவு, கன்றின் சேர்க்கைவயத்தாய பயனும். அதுபோல, இத்தர்மம் யானவசியம் செய்யத் தகுதியதாம் என சுவதர்ம புத்தியால் செய்த தர்மத்தால் மண்ணுலக விண்ணுலகப் பிரயோஜன அர்த்தங்களும் அவசியமுண்டாம். ஆனால், அவை அந்தத் தர்மத்தின் சேர்க்கைவயத்தாய பலரூபமாம். ஒருகால் அம்மண் விண்ணுலக அர்த்தங்கள் அடையக் கிடையாவாயினும், செய்த தர்மத்திற் கானி யுண்டாகமாட்டாது. ஆகையால், போரை விதிக்கும் சாஸ்திரம் அர்த்த சாஸ்திர ரூபமன்றாம். மற்றோ, தர்மசாஸ்திர ரூபமாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான்! 'பாபமேவாச்ரயேதஸ்மாந்' என்பதாதிய அர்ச்சுனனது வசனங்கள் கண்டித்தருளப்பட்டனவாயின.

(38)

(அ-கை.) ஹே பகவன்! சுவதர்மபுத்தியால் யுத்தம் செய்யும் புருஷனுக்குத் தாங்கள் பாவத்தின் அபாவத்தைக் கூறியருளினீர்கள், அஃதுண்மையே யாகும்; ஆயினும் எனக்குப் போர்செய்யுமாறு உபதேசித்தருளல் தங்களுக்குசிதமன்றாம். ஏனெனின், முன்னர்த் தாங்கள் 'யஏநம் வேத்தி ஹந்தாரம் கதம் ஸ புருஷ: பார்த்த கம் காதயதி ஹந்தி கம்' என்பதாதி வசனங்களால் அறிஞனிடத்தே சர்வகர்மங்களின் நிஷேதத்தைக் கூறியருளினீர்கள். அகர்த்தாவாயும், அபோக்தாவாயும், சுத்த சொரூபனுயும் யானிருக்கின்றேன் என்பதும், இப்போரைப் புரிந்து யான் அதன் பலத்தைப் போகிப்பேன் என்னும் ஞானமும் சம்பவியாது. அகர்த்துருத்துவ புத்திக்கும் கர்த்துருத்துவ புத்திக்கும், பரஸ்பரம் விரோதமாம். ஒரு நிலைக்களத்தின்கண்ணே ஒரேகாலத்தே அவ்விரண்டுணர்வுகளுமுண்டாகா. எங்ஙனம் ஒளிக்கும் இருட்கும் சமுச்சய முண்டாகாதோ, அங்ஙனம் ஞானம் கர்மம் என்னும் இரண்டினுக்கும் சமுச்சய முண்டாகாது என்னும் அர்ச்சுனனது அபிப்பிராயம், 'ஜ்யாயஸீசேத்' என்னும் சுலோகத்தின்கண் மேல் வெளியாம். ஆகையால், அர்ச்சுனனாகிய என் ஒருவன்பொருட்டே ஞானோபதேசமும், கர்மோபதேசமும் சம்பவியா; என்று அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் அறிந்த அவஸ்தை, அறியாத அவஸ்தைகளின் பேதத்தால் ஒரே புருஷனிடத்தே ஞான உபதேசமும் கர்ம உபதேசமும் சம்பவித்தல் கூடும் என உத்தரம் அருளிச் செய்கின்றார் :—

சு-ம். ஏஷாதேஹி ஹிதாஸாංவெ௯ லு௱ிலெ௨ாமெஶி ஊ௦ஜு ணு ।
லு௱ா௯௱ஶொ யயாவாய௨ கஊ௨ஸ௦ய௦ வூஹாஸ௯ஸி ॥ (39)

ப-ம். 3 ஏஷா 2 தெ 6 சுஹிஹிதா 5 ஸாංவெ௯ 4 லு௱ி 8 யொமெ 7 து௱ 9 ஊ௦ 10 ஜுணு 12 லு௱ா 13 ய௱க்ஷ 11 யயா 1 வாய௨ 14 கஊ௨ஸ௦ய௦ 15 வூஹாஸ௯ஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாம் நின் பொருட்டு முன் உபதேசித்த இப்புத்தி பிரஹ்மத்தின்கண்ணே கூறினேம்; இப்போது கர்ம யோகத்தின்கண்ணே கூறு மிப்புத்தியை நீ கேட்டி. இப்புத்தியோடு கூடியவன் நீ யாகுதியேல் கர்ம பந்தத்தைக் கடிதில் விட்டொழிப்பாய்.

(வி-ம்.) தேகாதி சர்வ உபாதிகளினின்றும் வேறுபடுத்தி, எதனுற் பரமான்மாவின் உண்மை வடிவத்தைப் பிரதிபாதிக்கலாமோ அது சங்கியமாம். அத்தகையது உபநிஷத்துருவ சாஸ்திரமாம். அவ்வுப நிஷத்தால் எவ்வஸ்துப் பிரதிபாதிக்கப்படுமோ, அது சாங்கியமாம். அத்தகையது ஜீவர்களின் வாஸ்தவ வடிவமாய பரமான்மாவாம். அத்தகைய சாங்கியமெனப் பெயரிய பரமான்மாவிடத்தே 'நலெவாஹ௦ ஜாது௱நாஸ௦' என்னும் இச்சுலோகமே முதலாய் 'ஸுயஊ௨ஊவிஆவெக்ஷ௯' என்னும் இச்சுலோகத்தின் முன்னுள்ள 21 சுலோகங்களால் ஞானரூப புத்தி நம்மால் நின்பொருட்டுக் கூறப்பட்டது. இப்புத்தியானது ஜன்ம மரணுதி சர்வ அனர்த்தங்களின் நிவிருத்திக்குக் காரணமாம். அத்தகைய புத்தியை எவ்வதிகாரி யடைந்திருக்கின்றனனே, அவ்வதிகாரியை நோக்கி ஒருகாலும் யாம் கர்ம கர்த்தவ்வியத் தன்மையைக் கூறினேமில்லை. ஏனெனின், 'தஸ௯காய௨௦ நவிஃ௯தெ' என்னும் வசனத்தால் அவ்வறிஞனிடத்தே சர்வ கர்மங்களின் கர்த்தவ்வியத் தன்மையின் அபாவத்தை மேல் யாம் கூறுநிற்பேம். ஒருகால், இப்போது யாம் அவ்வறிஞனிடத்தே கர்மங்களின் கர்த்தவ்வியத் தன்மையைக் கூறி, மேல் அவ்வறிஞனிடத்தே சர்வ கர்மங்களின் கர்த்தவ்யத் தன்மையின் அபாவத்தைக் கூறின், எமக்கு முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரணுந் தோஷமுண்டாம். ஆனல், அறிஞனிடத்தே கர்ம கர்த்தவ்வியத் தன்மையின்கண் எமது கருத்தின்றும்; மற்றே, எமது கருத்திதுவாம்:—இங்ஙனம் ஆன்மோபதேசஞ் செய்யினும், ஒருகால் உனது சித்த தோஷத்தால் உனக்குப் பிரஹ்மாத்மாகார புத்தி உண்டாகாதாயின், அச்சித்த தோஷத்தை நீக்கி, ஆன்ம சாக்ஷாத்கார அடைவின் பொருட்டு, நினக்கு நிஷ்காம கர்மயோகமே அனுஷ்டானஞ் செய்யத்தக்கதாம். இக்கர்ம யோகத்தின்கண் செய்யற்பாலதாய 'ஸு௱வ ஊ௱ஃ வெஸெகூக்ஷா' என்னும் சுலோகத்தின்கண் கூறிய பலத்தின் விழைவைத் தியாகம் செய்யும் புத்தியை இப்போது விஸ்தாரமாய் யாம் கூறுநிற்பேம். நீ அதனை ஒருமைபெறும் உளத்தொடு கேட்பாயாக. ஈண்டு "யொமெது௱" என்னும் இவ்வசனத்தின்கண் இரா நின்ற "து௱" என்னும் சப்தமானது முற்கூறிய ஞானரூபப் புத்தியின்கண் கர்ம யோக விஷயத்தன்மையின் அபாவத்தைக் குறிப்பிக்கின்றது. ஆகையால், இப்பொருள் துணியப்பெறும். எவ்வதிகாரியின் அந்தக்கரணம் தூயதாய் இருக்கின்றதோ, அவன் பொருட்டோ ஆன்ம ஞானமே உபதேசிக்கத் தக்கதாம். எப்புருஷனுடைய அந்தக்கரணம் மலினத்தை மருவிநிற்குமோ, அவன் பொருட்டோ கர்மமே உபதேசிக்கத் தக்கதாம். ஆகையால் ஞானம், கர்மம் என்னும் இரண்டன் சமுச்சய சங்கையால் விரோதத்தின் பிராப்தியுண்டாகாது. இப்போது பலத்தைக்கூறும் வாயிலாய் இக்கர்மயோக விஷயக புத்தியை ஸ்துதித்தருளுகின்றார். 'லு௱ா௯யயா' என, வியவசாய வடிவபுத்தியால் இந்நிஷ்காம கர்மத்தின்கண் சேர்க்கப்பட்ட நீ கர்ம ஜன்னிய அந்தக் கரணத்தின் அசுத்திரூப பந்

த்தைப் பரித்தியாகம் செயதல்கூடும். ஈண்டிது கருத்தாம் :—பாவ கர்ம ஜன்னிய அந்தக் கரணத்தின் அசுத்திவடிவ ஞானத்தடையோ, தர்மரூப கர்மத்தாலே நீக்கும். வேறெவ்வுபாயத்தானும் அத்தடை நீங்காது.

ஆ-சு. "யஜ்ஞாவாவ உவநாஷதி."

(பொ-ள்.) இவ்வதிகாரியானவன் நிஷ்காம கர்மரூப தர்மத்தால் பாவத்தை நீக்குவன். சிரவண மனனுதிரூப விசாரமோ, பாவ கர்மரூபத் தடையற்ற புருஷனுக்கு அசம்பாவனை, விபரீத பாவனை, வடிவத்தடையை நீக்கும். ஆகையால், பாவகர்ம ரூபத்தடை நீக்கத்தின் பொருட்டு, சிரவணுதிரூப விசாரம் உபதேசிக்கப்பட மாட்டாது. இக்கால் உனது அந்தக் கரணம் அத்தியந்தம் மலினமாயிருக்கின்றதாதலின், இப்போது நீ பகிரங்க சாதனரூப கர்மத்தையே செய்தல்வேண்டும். இக்கால் நின்பால் சிரவணுதிகளின் யோக்கியதையும் உண்டாகவில்லையாயின், ஞான யோக்கியதை எங்ஙனம் உண்டாம்; மற்றே, இக்கால் ஞான யோக்கியதை நின்பால் இன்றும். என்னும் இவ்வார்த்தையே 'கஊஜ்ஞெ வாயிகாரஷ்தெ' என்னும் சுலோகத்தின்கண் மேற்கூறியருளப்படும். இத்துணை கூறியதால் சாங்கிய புத்தியின் சிரவணுதிவடிவ அந்தரங்க சாதனங்களை ஒழித்தருளி, ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குக் கர்மரூபப் பகிரங்க சாதனத்தை யாதின் பொருட்டு உபதேசித்தருளுகின்றார் என்னும் சங்கையும் கண்டிக்கப்பட்டதாயது.

(அ-கை.) ஹே பகவன்! "தமெதம்வெஷாநுவசநெந ப்ராஹ்மணாவிவிஷிஷந்தியஜ்ஞெநதாநெநதபஸாநாஸகெந" என்னுஞ் சுருதியானது *விவிதிஷையின் அடைவின் பொருட்டும், ஞான அடைவின் பொருட்டும், யாகம், தானம், தபம் முதலிய கர்மங்களை விதிக்கின்றது. ஆண்டு யாகதானுதி கர்மங்களால் சாக்ஷாத்தாயோ, விவிதிஷை, ஞானம் என்பவற்றின் அடைவு உண்டாகாது. மற்றே, அந்தக்கரண சுத்திவாயிலாய் அவற்றின் அடைவு உண்டாம். இக்காரணத்தால் தாங்கள் என்பொருட்டு, கர்மானுஷ்டானத்தை விதித்தருளுகின்றீர்கள். சுருதியோ, கர்மபலத்தை அழிவுடையதெனக் கூறுகின்றது.

"தஷ்யெஹகஊஜிதொ லொகஃக்ஷீயதெ।
ஹவமெவாமு தூவுணூ ஜிதொலொகஃக்ஷீயதெ."

(பொ-ள்.) இவ்வுலகின்கண் கர்மத்தால் உண்டாதலின், எங்ஙனம் இல்லம், தனம் முதலிய பதார்த்தங்கள் அழிவை அடைகின்றனவோ, அங்ஙனம் அவ்வுலகின்கண் புண்ணிய கர்மத்தால் உண்டாதலின், சுவர்க்காதி பதார்த்தங்களும் அழிவை யடையும். அல்லது சுவர்க்காதிகளை அடையும் பொருட்டு செய்த ஜோதிட்டோமாதி யாகங்கள் காமிய கர்மங்களாவதேபோல, ஞான அடைவின் பொருட்டேனும், ஞானத்தின் இச்சைவடிவ விவிதிஷையின் அடைவின் பொருட்டேனும் செய்த யாகதானுதி கர்மங்களும் காமிய கர்ம ரூபங்களேயாம். யாது யாது காமிய கர்மமாமோ, அஃதது சர்வ அங்கங்களின் சம்பூரணத்தன்மை வாயிலாய் அனுஷ்டானம் செய்வதாலே பலஹேதுவாம். சிறிது அங்கத்தின் †வைகுண்யத்தாலும் அக்காமிய கர்மம் பல அடைவை யுண்டாக்காது. ஆதலின், ஒரு சிறிது அங்கத்தின் குறைவு மிகுதிகளாலும், அந்த யாகதானுதி கர்மங்களில் வைகுண்யத்தோட அடைவு சம்பவிக்கும். "யஜ்ஞெநதாநெந" என்னும் இச்சுருதி விதித்த யாகதானுதி சர்வ கர்மங்களையும் ஒரு புருஷன் தனது நூறு வருஷ ஆயுட் சமாப்தி பரியந்தமும் செய்ய முடியாதாம். ஆகையால், "கஊஜ்பெயம் ப்ராஹாவஷ்வி" என்னும் இவ்வசனத்தால் தாங்கள் கூறியருளிய கர்ம

* விவிதிஷை=அறியும் வேட்கை. † வைகுண்யம்=கெடுதி.

யோக பலப்பிராப்தியின் ஆசை எனக்கு உண்டாவதில்லை. என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் உத்தரங்கூறி யருளுகின்றார் :—

சு-ம். நேஹாபிக்ரமநாசோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।
ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ (40)

ப-ம். 3 ந 1 இஹ 2 அபிக்ரமநாச: 4 அஸ்தி 5 ப்ரத்யவாய: 6 ந 7 வித்யதே 10 ஸ்வல்பம் 11 அபி 8 அஸ்ய 9 தர்மஸ்ய 14 த்ராயதே 12 மஹதோ 13 பயாத்.

(அ-ம்) ஹே அர்ச்சுன! இந்நிஷ்காம கர்ம யோகத்தின்கண் கர்ம பல நாசம் உண்டாகாது. அங்ஙனம், பிரத்திய வாயமும் உண்டாகாது. அங்ஙனம், இந்நிஷ்காம கர்மத்தின் ஒரு சிறிதளவும், இப்புருஷனை மகா பயத்தினின்றும் காப்பாற்றும்.

(வி-ம்.) யாகதானாதி கர்மங்கள் எப்பலத்தைத் தொடங்குகின்றனவோ, அப்பலம் அபிக்கிரம மெனப்படும். ஆண்டு "ததேயதேஹ" என்னும் சுருதி வசனத்தால் கூறப்பட்ட பலத்தின் அழிவு இந்நிஷ்காம கர்மரூப யோகத்தின்கண் ஒருகாலும் உண்டாகாது. ஏனெனின், "ததேயதேஹ கர்மஜிதோ" என்னும் இச்சுருதியோ, கர்மத்தாலடைவுற்ற உலகத்தின் அழிவைக் கூறுகின்றது. ஆண்டு, உலகசப்தம் கேவலம் போக்கிய பதார்த்தங்களின் வாசகமேயாம். நிஷ்காம கர்மரூப யோகத்தின் பலவடிவ சித்த சுத்தியானது பாவங்களின் க்ஷயரூபமாமாதலின், அச்சித்த சுத்திரூப பலத்தின்கண் அவ்வுலக சப்தத்தின் அர்த்த ரூபத்தன்மையின்றும். இக்காரணத்தால் அச்சித்த சுத்திரூப பலத்திற்குச் சுவர்க்காதிகட்கேபோல க்ஷயம் சம்பவியாது. அல்லது, தத்துவ சாக்ஷாத்கார பரியந்தம் இருப்பதாய விவிதிஷையே அந்த யாகதானாதி கர்மங்களின் பலவடிவமாம். அத்தத்துவ சாக்ஷாத்காரம் தடையின்றியே அஞ்ஞான நிவிருத்தி வடிவபலத்தையுண்டாக்குவதாம்; சூரியாதிகளின் பிரகாசம் தடையின்றியே அந்தகார நீக்கத்தைச் செய்வதேபோலவாம். ஆதலின், அத்தத்துவ சாக்ஷாத்காரம் அஞ்ஞான நிவிருத்தி ரூபபலத்தை உற்பத்திசெய்யாது அழியாதாம். மற்றோ, அஞ்ஞான நிவிருத்தி ரூபபலத்தை உற்பத்தி செய்தே பின் அத்தத்துவ சாக்ஷாத்காரம் அழியும். சூரியாதிகளின் பிரகாசம் அந்தகாரத்தை அழித்தே அழிவதுபோலவாம். இக்கருத்தேபற்றி ஸ்ரீ பகவான் 'நேஹாபிக்ரமநாசோஸ்தி' என்னும் வசனத்தைக் கூறியருளினர். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

ததேயதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயதே ஏவமேவாமுத்ர புண்யசிதோ லோக: க்ஷீயதே ।
மஹத்வாத்து பரித்யஜ்ய க்ரதும் கர்மவிபாகிக்ரது: ॥

(பொ-ள்.) "ததேயதேஹ கர்மஜிதோ: லோக: க்ஷீயதே" என்னுஞ் சுருதி வசனமானது கூறிய நிந்தை சுவர்க்காதி பல விஷயத்ததேயாம். யாகதானாதி கர்ம விஷயத்தது அன்றாம். பல இச்சையை ஒழித்துச் செய்த யாகதானாதி கர்மங்கள் இவ்வதிகாரியின் அந்தக்கரண சுத்தியைச் செய்வனவாமன்றோ? அங்ஙனமே, அந்த யாகதானாதி கர்ம அங்கங்களின் குறைவு மிகுதிவடிவ வைகுண்யத்தால் செய்யப்பட்ட அக்கர்மங்களின் வைகுண்யரூபப் பிரத்திய வாயமும், இந்நிஷ்காம கர்மரூப யோகத்தின்கண் இன்றாம். ஏனெனின், "தமேதம் வேதாநுவசனேந" என்னும் இச்சுருதி யாகதானாதி நித்திய கர்மங்களையே தடையாய பாவங்களின் நீக்கவாயிலாய் விவிதிஷையின்கண் உபயோகமெனக் கூறுகின்றது. அந்நித்திய கர்மத்தின்கண் எல்லா அங்கங்களின் சம்பூரணத்தன்மை நியமமின்றாம். "தமேதம் வேதாநுவசனேந" என்னும் இச்சுருதியானது யாகதானாதி

காமிய கர்மங்களையும் அவ்விதிதிஷையின்கண் உபயோகமெனக் கூறுகின்றது. இப்பக்கத்தை அங்கீகரிப்பினும், பல வேட்கை அற்றிருத்தலின், அந்த யாக தானாதி காமிய கர்மங்களும் நித்திய கர்ம சமானமேயாம். ஏனெனின், காமிய கர்மரூப அக்கினி ஹோத்திரமும், நித்திய கர்மரூப அக்கினி ஹோத்திரமும் ஆய இரண்டன்கண் சொரூபமாயோ யாதொரு விசேஷமுமின்றாம். மற்றோ, எவ்வக்கினி ஹோத்திரம், சுவர்க்காதி பல இச்சைவாயிலாய்ச் செய்யப்படுமோ, அவ்வக்கினி ஹோத்திரத்தின்கண் காமிய கர்ம ரூப வியவகாரம் உண்டாம். எவ் வக்கினி ஹோத்திரம் சுவர்க்காதி பல வேட்கையின்றிச் செய்யப்படுமோ, அதன் கண் நித்தியகர்மரூப விவகாரம் உண்டாம். இங்ஙனம், சுவர்க்காதி பல இச்சை யாலும், இச்சையின் அபாவத்தாலுமே, அவ்வக்கினி ஹோத்திரத்தின்கண் காமிய கர்மரூபத் தன்மையும், நித்திய கர்மரூபத் தன்மையும் துணியப்பெறும். ஆகை யால், இப்பொருள் சித்தமாம் :—சுவர்க்காதி பல அடைவின் பொருட்டுச் செய்யப் பட்ட யாகதானாதி சகாமகர்மங்களிலோ விதிப்படி சர்வ அங்கங்களின் பூரணத் தன்மையைச் செய்தலே நியமமாம். ஒருகால் இச்சகாம புருஷன் விதிவாயி லாய் அக்கர்மத்தின் சர்வ அங்கங்களையும் பூரணம் புரியாதொழியின், அந்த யாகதானாதி கர்மங்கள் வைகுண்ய பாவத்தையடைந்து பலத்தின் அடைவைச் செய்யா ; பல வேட்கையின்றிக் கேவலம் அந்தக்கரண சுத்தியின் பொருட்டுச் செய் யப்பட்ட யாகதானாதி நிஷ்காம கர்மங்கட்கோ, எஜமானரூப கர்த்தாவினும் வேறாய பிரதிநிதிபாதிகளாலும் முடிவுண்டாதல் கூடும். ஆகையால், அந்நிஷ் காம கர்மத்தின்கண் அங்கங்களின் வைகுண்யத்தால் உண்டாய பிரத்தியவாயம் உண்டாகாது. ஈண்டு எஜமானன் யாதாவதொரு நோய் முதலிய நிமித்தத்தால் எக்கருமத்தைச் செய்வதன்கண் வல்லனாகானோ, அக்கர்மத்தை எம்மறையவன் வாயிலாய் முடிப்பனோ, அம்மறையவன் பிரதிநிதி யெனப்படுவன். அல்லது, "தமேதம்வெதாநுவசநேந" என்னும் இச்சுருதி விதித்த அந்தக்கரணத் தூய் மையின் பொருட்டு யாகதானாதி கர்மங்கள் ஆம். அக்கர்ம மத்தியில் சங்கை யாலேனும், அங்கங்களாலேனும், அத்தியந்த அற்ப எக்கர்மம் பகவதாராதனத் தின் பொருட்டு அனுஷ்டானம் செய்யப்படுமோ, அவ்வற்ப கர்மமும் இவ்வதிகாரி யின் ஜன்மமாணரூப சமுசார மகா பயத்தினின்றும் காப்பாற்றும். இவ்வார்த்தை ஸ்மிருதியின்கண்ணும் இயம்பப் பெற்றுளது.

"ஸவஃவாவவ்ர ஸக்தோ வியஃாயநிமிஷஃஅச்யுதம் ।
ஊயவஸ்வவஹீ ஸவதிவங்க்தி வாவநவாவநஃ." ॥

(பொ-ள்.) சர்வ பாவகர்மங்களில் பிரீதியுடையனாயினும், இப்புருஷன் அநந் நியமாய் ஒரு நிமிஷமாத்திரமேனும் அச்சுதனாகிய பரமான்ம தேவரைத் தியா னஞ் செய்யின், அந்தத் தியான மகிமையால் மீண்டும் தவத்தை யுடையவனாவன். அங்ஙனமே, பந்தியைப் பவித்திரஞ் செய்யும் புருஷனையும், பவித்திரஞ் செய்பவ னாவன். "தமேதம்வெதாநுவசநேந" என்னும் சுருதி வசனங்களின்கண் சர்வ கர்மங்களின் சமுச்சயத்தை விதிக்கும் வசனம் யாதொன்றுமின்றாம். ஆகை யால், அந்தக்கரண அசுத்தியின் குறைவு மிகுதியால் அந்த யாகதானாதி கர்மங் களின் அனுஷ்டானக் குறைவு மிகுதியும் சம்பவிக்கும்.ஆகையால், "கஃஃவஂயஂ வ்ரஹாவஸ்லி" இவ்வெமது வசனம் உண்மையாமென்க. (40)

(அ-கை.) இப்போது இம்முச் சுலோகத்தின்கண் கூறியருளிய பொருளை வெளிப்படுத்தியருளும் பொருட்டு, "தமேதம்வெதாநுவசநேந" என்னும் சுருதி விதித்த யாகதானாதி கர்மங்களில் ஒரு பொருட்டன்மையை நிரூபித்தருளு கின்றார்.

சு-ம். வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ குருநந்தந ।
பஹுஶாகா ஹ்யநந்தாஶ்ச புத்தயோ வ்யவஸாயிநாம் ॥ (41)

ப-ம். 3 வ்யவஸாயாத்மிகா 4 புத்தி: 5 ஏகா 2 இஹ 1 குருநந்தந 8 பஹுஶாகா:, ஹி 10 அநந்தா: 9 ச 7 புத்தய: 6 அவ்யவஸாயிநாம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்த மேன்மையாய மார்க்கத்தின்கண் ஆன்ம தத்துவ நிச்சயரூப புத்தியொன்றே கூற அவாவியதாம். அன்றியும், சகாம புருஷர்களின் புத்திகளோ மிகு சாகைகளை யுடையனவாம்; அங்ஙனமே அநந்தமாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இம்மோக்ஷரூப மேன்மையாய நெறியின்கண், அல்லது. "தமேதம் வேதானுவசநேந" என்னும் சுருதிவசனத்தில் பிரஹ்மசரிய, கிருஹஸ்த, வானப்பிரஸ்த, சந்நியாச மென்னும் நான்கு ஆசிரமங்கட்கும், ஆன்மதத்துவ நிச்சயரூப புத்தி ஒன்றேயெனத் துணியக்கூறும் வேட்கையுளது. ஏனெனின், "வேதானுவசநேந யஜ்ஞேந தாநேந தபஸா அநாஶகேந" என்னும் பதங்களின் ஈற்றில் இருக்கும் மூன்றும் வேற்றுமையானது அவ்வேதானு வசனுதிகளிடத்தே பரஸ்பரம் நிரபேக்ஷ சாதனரூபத் தன்மையை உணர்த்தும். ஆண்டு, குருமுகமாய் வேத அத்தியயனம் செய்வதே வேதானுவசனமெனப்படும். அவ்வேதாத்தியயனம் பிரஹ்மசாரிக்குரிய எல்லாத் தர்மங்கட்குள்ளும் முக்கிய தர்மமாம். ஆகையால், அவ்வேதானு வசனத்தால் பிரஹ்மசாரியின் சர்வ தர்மங்களையும் கவர்ந்துகொள்க. அங்ஙனமே, யாக தானமென்னும் இரண்டும் கிருகஸ்தனது சர்வ தர்மங்களுள்ளும் முக்கியமாயினவாம். ஆகையால், அந்த யாகதானத்தால் கிருகஸ்தனது சர்வ தர்மங்களையும் கவர்ந்துகொள்க. கிரிச்சிர சாந்திராயணம் தவமெனப்படும். அத்தவம் வானப்பிரஸ்தனுடைய சர்வ தர்மங்களுள்ளும் முக்கிய தர்மமாமாதலின், அத்தவத்தால் வானப்பிரஸ்தனுடைய சர்வ தர்மங்களையும் கவர்ந்துகொள்க. ஆண்டு, மிருத்தியுவிற்குக் காரணமான அநாசன விரதத்தை நீக்கும்பொருட்டு, அத்தவத்திற்கு அநாசகம் என்னும் விசேஷணம் கொடுக்கப்பட்டது. இவ்வண்ணம் சர்வ பூதப் பிராணிகளின் அபயதானம்; அங்ஙனமே, பிரணவாதி மந்திரங்களின் ஜபம் என்பன முதலிய சந்நியாசிகளின் தர்மங்களையும் அறிந்துகொள்க. ஸ்ரீ பகவான் பாஷியக்காரரோ, இச்சுலோகத்திற்கு இவ்வியாக்கியானம் செய்துளார். சாங்கிய விஷயகமாயும் யோக விஷயகமாயும் இராநின்ற புத்திகள், ஓரே பலத்தை யுண்டாக்குவனவாதலின் ஒன்றும். அப்புத்தி நிர்த்தோஷ வேதவாக்கியங்களினின்று முண்டானதால் வியவசாயவடிவமாம்; அதாவது, சர்வவிபரீத புத்திகளின் பாதகமாம். அவ்வியவசாயிகளாய அஞ்ஞானிகளின் மிகுசாகைகளையுடைய அநந்த புத்திகள் விபரீதங்களாதலின், அந்த வியவசாயவடிவ புத்தியாற் பாத்தியங்களாம். ஒருரையின்கண்ணே இப்பொருள் செய்யப்பட்டுளது :—பரமேஸ்வர ஆராதனத்தானே யான் இச்சம்சார சமுத்திரத்தைத் தாண்டுவேன் என்னும் நிச்சயரூப ஒருமை நிஷ்டைமதியே இக்கர்மயோகத்தின் கண்ணுண்டாம். எவ்வகையானும் ஞானகாண்ட அனுசாரத்தால் "ஸ்வல்பமப்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்" என்னும் வசனத்தின் பொருள் மிக நலமாய்த் துணியப்பெறும். கர்ம காண்டத்தின்கண்ணே, அவ்வச் சுவர்க்காதி பலன்களை விரும்பிய அவ்வியவசாயிகளின் புத்திகளோ மிகு சாகைகளை யுடையனவாம். அதாவது இச்சையின் அநேகபேதத்தால் அப்புத்திகளும் அநேக பேதமுடையனவாம்; அங்ஙனமே கர்மபலம், குணபலம் என்பன முதலியவற்றை விஷயம்செய்வனவாய உபசாகைகளின் பேதத்தால் அப்புத்திகள் அநந்தங்களாம். ஆண்டு, "அநந்தாஹி" என்னு மிவ்வசனத்தின்கண் இராநின்ற "ஹி" என்னுஞ் சப்தம் அச்சகாம புருஷரின் புத்திகளின்கண் அநந்த ரூபத்தன்மையின்

பிரசித்திபை புணர்த்தும்பொருட்டாம். ஆகையால், இப்பொருள் துணியப் பெறும் :—அந்தக்கரண சுத்திபாம்பொருட்டுச் செய்யும் நிஷ்காம கர்மத்தின்கண் சகாமகர்மத்தைக் குறித்து மகா விலக்ஷணத்தன்மையுளது. (41)

(அ-கை.) ஹே பகவன்! எங்ஙனம் நிஷ்காம அதிகாரிகட்கு, அந்த வியவசாய வடிவ புத்தியுண்டாகின்றதோ, அங்ஙனம் ஏன் சகாம புருஷருக்கு அஃதுண்டாகவில்லை; மற்றோ, சகாம புருஷருக்கும் அஃதுண்டாகவேண்டும். என்னை, சாஸ்திரரூபப் பிரமாணமோ அவ்விருவருக்கும் சமானமேயாமன்றோ? என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் பிரதிபந்தவயத்தால் அச்சகாம புருஷருக்கு அந்த வியவசாய வடிவபுத்தி யுண்டாகமாட்டாதென்னு முத்தரத்தை முச்சுலோகங்களால் மொழிந்தருளுகின்றார் :—

மூ-ம். யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த்யவிபஶ்சித: ।
வேதவாதரதா: பார்த² நாந்யதஸ்தீதி வாதிந: ॥ (42)

காமாத்மாந: ஸ்வர்க³பரா ஜந்மகர்மப²லப்ரதாம் ।
க்ரியாவிஶேஷப³ஹுலாம் போ⁴கை³ஶ்வர்யக³திம் ப்ரதி ॥ (43)

போ⁴கை³ஶ்வர்யப்ரஸக்தாநாம் தயாபஹ்ருதசேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா பு³த்³தி⁴: ஸமாதௌ⁴ ந விதீ⁴யதே ॥ (44)

ப-ம். 3 யாம் 4 இமாம் 7 புஷ்பிதாம் 5 வாசம் 6 ப்ரவத³ந்தி 2 அவிபஶ்சித: 11 வேத³வாத³ரதா: 1 பார்த² 13 ந 12 அந்யத் 14 அஸ்தி 15 இதி 16 வாதி³ந: 17 காமாத்மாந: 18 ஸ்வர்க³பரா: 8 ஜந்மகர்மப²லப்ரதா³ம் 10 க்ரியாவிஶேஷப³ஹுலாம் 9 போ⁴கை³ஶ்வர்ய க³திம் ப்ரதி 19 போ⁴கை³ஶ்வர்ய ப்ரஸக்தாநாம் 20 தயா 21 அபஹ்ருதசேதஸாம் 23 வ்யவஸாயாத்மிகா 24 பு³த்³தி⁴: 22 ஸமாதௌ⁴ 25 ந 26 விதீ⁴யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த விசார ஹீன புருஷன் எந்தப் பிரசித்தமாய கர்மகாண்டரூப வாணியைக் கூறுவனோ அவ்வாணி யெத்தகையதென்னின், அவிசாரத்தால் இரமணீயமாய்த் தோற்றுவது; அங்ஙனமே, ஜன்ம கர்மபலத்தைக் கொடுப்பது, அங்ஙனமே, போகஐசுவரிய அடைவின்பொருட்டு, அக்கினி ஹோத்திராதி கர்மங்களை விஸ்தாரமாய்ப் பிரதிபாதனம் செய்வது. அத்தகைய வாணியைக்கூறும் அந்த விசார ஹீன புருஷரெத்தகையரெனின், வேதத்தினர்த்த வாதங்களிற் பிரீதியுடையவர், அங்ஙனமே, கர்மபலத்தினும் வேறாய் யாதொரு ஞான பலமுமின்றெனக் கூறுநிற்பவர், அங்ஙனமே காமரூபர், அங்ஙனமே சுவர்க்கமே மேலினும் மேலாயதெனக் கொண்டவர், அங்ஙனமே, போகஐசுவரியங்களில் மிகப் பற்றுடையோர், அங்ஙனமே, அவ்வாணியான் மறைபட்ட சித்தமுடையவர், அத்தகைய வெளி நாட்டமுடைய புருஷர்களின் அந்தக்கரணத்தின்கண் அந்த வியவசாயவடிவமாய புத்தி யுண்டாகாது. (44)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! "ஸ்வாத்⁴யாயோऽத்⁴யேதவ்ய:" (பொருள்) இவ்வதிகாரியானவன் வேத அத்தியயனம் செய்க. என்னும் அத்தியயன விதியாலடையப் பெறுவதால், அத்தியந்தம் பிரசித்தமாய அக்கர்ம காண்டரூப வாணியெத்தகையதெனின், எங்ஙனம் நாற்றமற்ற புஷ்பங்களோடு கூடிய பலாச விருக்ஷமானது சேய்மைக்கண் இருந்துநோக்க இரமணீயமாய்த் தோற்றுநிற்குமோ, அங்ஙனம் அவ்வாணியும், அவிசாரத்தாலே இரமணீயமாய்த் தோற்றும். ஏனெனின், அவ்வாணியாற் கேவலம் சுவர்க்காதி பலன்களையும், யாகாதி சாதனங்களை

யும், அவற்றின் பரஸ்பர சம்பந்தத்தையுமே கோசரிக்கும் ஞானமுண்டாம்; நிரதிசய ஆநந்தரூப பலப்பிராப்தி யுண்டாகாது.

சங்கை :—ஹே பகவன்! அக்கர்மகாண்ட ரூபவாணியால் நிரதிசய ஆநந்தரூப பல அடைவு உண்டாவதின்றென்பதன்கண் யாது காரணம்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—' ஜந்மகர்மபலப்ரதாம் ' என, அபூர்வசரீர இந்திரியாதிகளின் சம்பந்தரூப ஜன்மத்தையும், அந்த ஜன்ம அதீன அவ்வவ்வருணாச்சிரம அபிமானத்தால் ஜனித்த அக்கினி ஹோத்திராதி கர்மத்தையும், அக்கர்மத்தின் அதீன புத்திர பசு சுவர்க்காதி ரூப நாசமுடைய பலத்தையுமே ஏற்றச்சாற்போல இடையறாமல் இக்கர்ம காண்டரூப வாணியான தடைவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! அந்த வாணியானது ஜன்மாதிகளையே யடைவிக்குமென்பதை யெங்ஙன மறிதல் கூடும்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். " ஹோமைஶ்வர்யகதிம் ப்ரதி க்ரியாவிஶேஷபஹுளாம் " என, அமிருதபானம், ஊர்வசி முதலிய தேவஸ்திரீகளோடு விகாரம், பாரிஜாத விருக்ஷத்தின் சுகந்தம், என்பவாதி பதார்த்த அடைவாலுண்டாய போகம், அப்போகத்தின் காரணரூப தேவதை முதலியோரின் ஸ்வாமித் தன்மைவடிவ ஐஶ்வரியம், என்னுமிரண்டையு மடையும்பொருட்டுச் சாதனமாயிராநின்ற அக்கினி ஹோத்திரம், தரிசபௌர்ணமாசம், சோதிட்டோமம் என்பன முதலிய கிரியா விசேஷங்களால் அவ்வாணி மிகவும் விஸ்தாரத்தையடைந்திருக்கிறது. அதாவது போக ஐஶ்வரிய மென்னு மிரண்டனுக்கும் சாதனமாயிராநின்ற கிரியா விசேஷங்களை அவ்வாணியானது அத்தியந்தம் விஸ்தாரமாய்ப் பிரதிபாதனம் செய்வதாயிருக்கின்றது. அக்கர்ம காண்டத்தின்கண் ஞானகாண்டத்தை யபேக்ஷித்து, அத்தியந்தம் விஸ்தாரத் தன்மையுள தென்பது, யாண்டும் வெளிப்படையேயாம்; அத்தகைய கர்மகாண்டரூப வாணியானது பரமார்த்தரூப சுவர்க்காதி பலபரத் தன்மையதென அங்கீகரிக்கின்றனர்.

சங்கை :—ஹே பகவன்! அக்கர்ம காண்டரூப வாணியைச் சுவர்க்காதி ரூபபலபரத் தன்மையதென யாவரங்கீகரிக்கின்றனர்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் ' அவிபஶ்சித: ' எப்புருஷர் விசார ஜன்னிய தாற்பரிய ஞானமற்றவரோ, அப்புருஷரே அவ்வாணியைச் சுவர்க்காதிரூப பலபரத் தன்மையதென அங்கீகரித்துளார். இக்காரணத்தாலே அச்சகாம புருஷர் வேதத்தின்கண் இருக்கும் " அக்ஷய்யம்ஹவை சாதுர்மாஸ்யயாஜிந: ஸுக்ருதம்பவதி " சாதுர்மாசிய யாகத்தைச் செய்யும் புருஷருக்கு அக்ஷய சுகிர்தமுண்டாம் என்பதாதிய அர்த்தவாதங்கள் உண்மையனவேயாம் எனப்பொய் நம்பிக்கையுற்று மகிழ்வை யடைகின்றனர். இக்காரணத்தாலே அச்சகாம புருஷர் இவ்வகையாய வசனத்தைக் கூறாநிற்பர். கர்மகாண்டத்தை யபேக்ஷித்து ஞானகாண்ட மென்பதொன்று பின்னமாயின்றாம்; மற்றோ, அந்த ஞானகாண்டம் கர்மகாண்டத்திற்கே சேஷரூபமாம். ஆண்டு, ஞான காண்டத்தின்கண் இராநின்ற தத்பதார்த்த போதகவசனமோ தேவதை, வடிவத்தை யுணர்த்தும்; துவம் பதார்த்த போதகவசனமோ, கர்மகர்த்தாவாய யஜமான சொரூபத்தை யுணர்த்தும். தத்துவம் பதார்த்தங்களின் அபேதத்தைப் போதிப்பிக்கும் வசனமோ, கர்ம கர்த்தா சாக்ஷாத் ஈஶ்வரனேமென அவனைத் துதிக்கும். இங்ஙனம் சம்பூரண வேதமும் கர்மபரமேயாம். கர்மபலரூப சுவர்க்காதிகளை யபேக்ஷித்து, மற்றொரு ஞானத்திற்கு நிரதிசய ஆநந்தரூப பலமின்றாம்; இங்ஙு

னம் அச்சகாம புருஷர் அநேக வகையாய்க் கற்பனைபுரிந்து, எல்லாவகையானும் ஞானகாண்டத்தின் முரணாய அர்த்தத்தையே கூறுபவராவர்.

சங்கை :—ஹே பகவன்! அந்தப் பகிர்முக (வெளிநாட்டமுடைய) சகாம புருஷர் நிரதிசய ஆநந்தரூப மோக்ஷத்தின்கண் யாதின் பொருட்டுத் துவேஷம் செய்கின்றனர்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். 'காமாத்மாந:' என, ஹே அர்ச்சுன! இச்சைகளின் விஷயரூப அநேகவகையாய விஷயங்களால் சித்தமானது சந்ததம் வியாகுலப் பட்டுழலுவதானே, அக்காமிகள் சாக்ஷாத் மோக்ஷத்தின் கண்ணும் துவேஷத்தை யடைகின்றனர்.

சங்கை :—ஹே பகவன்! அச்சகாம புருஷர் எங்ஙனம் வேறு விஷயங்களை விழைகின்றனரோ, அங்ஙனம் நிரதிசய ஆநந்தரூப மோக்ஷத்தையுமேன் விழைகின்றிலர்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—'ஸ்வர்கபரா' ஹே அர்ச்சுன! ஊர்வசி நந்தனவனம், அமிருதம் என்பன முதலிய அநேக விஷயங்களோடு கூடிய சுவர்க்கமே யாவற்றிலும் மேலாயதென எண்ணுபவரும், அச்சுவர்க்கத்தினும் வேறாய் மற்றொரு புருஷார்த்த மின்றாமென்று நினைப்பவருமாய மயங்கிய புருஷரிடத்தே விவேக வைராக்கியாதி சாதனங்களின் அபாவமுளது ஆதலின், அம்மயங்கிய புருஷர் மோக்ஷத்தின் கதைமாத்திரத்தையும் பொறுக்கிலராயின், அம்மூடரிடத்தே மோக்ஷ இச்சை யாங்ஙன முண்டாம். இங்ஙனம் முற்கூறியபோக ஐஸ்வரியமிரண்டனுள் க்ஷயத்தன்மை ஜாதிக்ஷயத்தன்மை என்பதாதி தோஷங்களின் அதரிசனத்தால், அத்தியந்தம் ஆசக்தியைப் (பற்றுதலை) யடைந்த அந்தக்கரணமுடையவரும், கர்மகாண்ட வாணியால் மறைபட்டுக் கெட்ட விவேக ஞானமுடையவரும், "அக்ஷய்யம்ஹவை" என்பதாதி அர்த்தவாத வசனங்கள் கேவலம் ஸ்துதிபரங்கள் எனவும் வேறு பிரமாணங்களாற் பாதிக்கக் கூடாத தாற்பரியவிஷயபூத அர்த்தத்தின்கண்ணே வேதாந்தங்கட்குப் பிரமாண ரூபத்தன்மையாம் எனவும் பிரசித்தமாய் இராநின்ற அர்த்தத்தையும் அறிவதில், ஆற்றலற்றவரும் ஆய சகாம புருஷர்கட்குச் சமாதி எனப் பெயரிய அந்தக்கரணத்தின்கண் அந்த வியவசாயவடிவ புத்தியுண்டாகாது. அல்லது, சமாதியென்னும் சப்தத்தாற் பரமான்மாவைக் கவர்ந்துகொள்க. அப்பரமான்ம விஷயக அந்த வியவசாயவடிவ புத்தி அப்புருஷர்கட்கு உண்டாகாது. "ஸமாதீயதேஸ்மிந் ஸர்வம் ஸமாதி:" என வியுற்பத்தி செய்யின், அந்தக் கரணத்தின்கண்ணும், பரமான்மாவின்கண்ணும் அச்சமாதி சப்தத்தின் அர்த்தரூபத்தன்மை சம்பவிக்கும். ஒருரையாசிரியரோ, சமாதி சப்தத்திற்கு இப்பொருள் கூறுகின்றனர் :—யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன், என்னுமிருப்புச் சமாதியெனப்படும்; அச்சமாதியினிமித்தமாய் அப்புருஷர்கட்கு அந்த வியவசாயவடிவ புத்தி உற்பன்னமாகாது. ஈண்டிஃதபிப்பிராயமாம் :—சுவர்க்காதி பலப்பிராப்தியைச் செய்யும் காமிய அக்கினி ஹோத்திரம் முதலியன, அந்தக்கரண சுத்தியின்பொருட்டுச் செய்ய யோக்கியமாய அக்கினி ஹோத்திரமுதலியவற்றினும் விலக்ஷணமன்றாம். என்றாலும், சுவர்க்காதி பல இச்சைவடிவ தோஷ வயத்தால் அக்காமிய அக்கினி ஹோத்திராதி கர்மங்கள் அந்தக்கரண சுத்தியைச் சம்பாதியாவாம். போகங்கட்கனுகூலமாய அந்தக்கரணசுத்தி அச்சகாம கர்மத்தானுமுண்டாம்; ஆயினும், அவ்வந்தக்கரணசுத்தி ஆன்மஞானத்தின் உபயோகியன்றாம்; இப்பொருளை யுணர்த்தும்பொருட்டு, ஸ்ரீ பகவான், "ஹோமைஷ்வர்யக்ஷ ப்ரஸக்தாநாம்" என்னும் வசனத்தை மீண்டுங் கூறியருளினர். பல இச்சையின்றிச் செய்யப்பட்ட நிட்

காமிய அக்கினி ஹோத்திராதி கருமங்களோ ஆன்ம ஞானத்திற்குபயோகியாய் அந்தக்கரண சுத்தியையே சப்பாதிக்கும். ஆகையால், நிட்காம அறிஞனது பலத்தின்கண்ணும் சகாம அறியானது பலத்தின்கண்ணும் மகா விலக்ஷணத் தன்மை சித்தமாம். இவ்வார்த்தையை மேல் விஸ்தாரமாய் நிரூபணஞ் செய்தருளுவர். (42, 43, 44.)

(அ-கை.) ஹே பகவன்! அச்சகாம புருஷருக்குத் தமதந்தக்கரண தோஷத்தால் வியவசாயவடிவ புத்தி யுண்டாகவேண்டாம். ஆனால், அந்த வியவசாய வடிவபுத்தியால் அக்கினி ஹோத்திராதி கருமங்களைச் செய்யும் நிட்காம புருஷருக்கு அவை தம்மியல்பாலே சுவர்க்காதி பலன்களை யடைவிக்குமன்றே. ஆதலின் ஆன்மஞானத்தின் தடை சகாம நிட்காமமென்னு மிரண்டன்கண்ணும் சமானமே யாம் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்:—

சு-ம். த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந।
நிர்த்வந்த்வோ நித்யஸத்வஸ்தோ நிர்யோகக்ஷேம ஆத்மவாந்॥ (45)

ப-ம். 3 த்ரைகுண்யவிஷயா: 2 வேதா: 4 நிஸ்த்ரைகுண்ய: 5 பவ 1 அர்ஜுந
6 நிர்த்வந்த்வ: 7 நித்யஸத்வஸ்த: 8 நிர்யோகக்ஷேம: 9 ஆத்மவாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இக்கருமகாண்டரூப வேதம் திரைகுண்யத்தை விஷயஞ்செய்வதாம். நீ அந்தத் திரைகுண்ய மற்றவனாகுதி, அங்ஙனமே துவந்துவதர்ம மற்றவனாகுதி, அங்ஙனமே நித்திய சத்துவத்தின்கண் இருத்தி, அங்ஙனமே யோக க்ஷேமமற்றவனாகுதி, அங்ஙனமே ஆன்மவானாய் இருத்தி. (45)

(வி-ம்.) சத்துவம், இரஜசு, தமசு என்னும் முக்குணத்தின் காரியமியாதோ அது திரைகுண்யமாம். அத்தகையது இக்காம மூலக சம்சாரமாம். அக்காம மூலக சம்சாரம் பிரகாசியத் தன்மை ரூபத்தால் விஷயம் எவற்றிற்கோ அவை திரைகுண்ய விஷயங்களாம். அத்தகையன இக்கரும காண்டரூப வேதங்களாம். அதாவது எப்புருஷன் எப்பலத்தை அடையும் விருப்புடையான், அப்புருஷனுக்கு இவ்வேதங்கள் அப்பலத்தை உணர்த்துவனவாம். கருத்திதுவாம்:—எப்புருஷன் எப்பலத்தை விழைந்து எக்கருமத்தைச் செய்கின்றனனோ, அப்புருஷனுக்கு அக்கருமம் அப்பலத்தை அடைவிக்கும். அவ்வப்பல விழைவின்றி எக்கருமமும் அவ்வப்பலத்தின் அடைவைச் செய்வியா. ஆகையால், அன்வய வியதிரேகத்தால் இப்புருஷனது வேட்கையே பலவடைவின்கண்ணே காரணமாம். ஆகையால், ஹே அர்ச்சுன! நீ நிஸ்திரைகுண்யனாகுதி, அதாவது சுவர்க்காதி பலவேட்கையற்றவனாகுதி என்பதாம். அப்பலத்தின் வேட்கையற்ற நினக்குச் சம்சாரப் பிராப்தி உண்டாகாது. இத்துணை கூறி யருளியதால் நிட்காம புருஷருக்கும் அக்கினி ஹோத்திராதி கருமங்களின் இயற்கையானே சுவர்க்காதி சம்சாரப் பிராப்தி உண்டாம் என்னும் அர்ச்சுனனது சங்கை கண்டித்தருளப்பட்டவாறு காண்க.

சங்கை:—ஹே பகவன்! சீதோஷ்ணாதிகளை நீக்கும் பொருட்டு ஆடைமுதலிய பதார்த்தங்களின் அபேக்ஷை அவசியம் சம்பவிக்கும். அவ்வபேக்ஷை இருப்ப நிட்காமத் தன்மை எங்ஙனம் உண்டாம்?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் உத்தரம் அருளிச் செய்கின்றார் 'நிர்த்வந்த்வ:' என. ஈண்டு 'நிஸ்த்ரைகுண்யோ பவ' என்னும் வசனத்தின்கண் இராநின்ற 'பவ' என்னுஞ் சப்தத்தை உத்தர சப்தங்களோடு யாண்டும் ஒட்டுக. ஹே அர்ச்சுன! 'மாத்ராஸ்பர்சாஸ்து' என்னும் சுலோகத்தின்கண்ணே முன் கூறிய யுக்தியாற்

சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், மானம், அபமானம், பகை, உறவு என்பன முதலிய சர்வ துவந்துவ தர்மங்களற்றவனாகுதி, அதாவது அவ்வெல்லாத் துவந்துவ தர்மங்களையும் சகிக்கும் இயற்கையனாகுதி என்பதாம்.

சங்கை :—ஹே பகவன் ! பொறுக்கமுடியாத துக்கத்தை எங்ஙனம் பொறுப்பது ?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறி அருளுகின்றார் :—'நித்யஸத்வஸ்த:' என. நித்தியம் என்னும் சலனமற்ற தைரியமென்னும் சத்துவத்தின்கண் இருப்பவன் நித்திய சத்துவஸ்தனாவன். அத்தகைய நித்திய சத்துவஸ்தன் நீ ஆகுதி என்றருளியபடி. கருத்திதுவாம் :—எப்புருஷனுடைய சத்துவம், ரஜதமோ குணங்களால் திரஸ்காரத்தை அடையுமோ, அப்புருஷன் சீத உஷ்ண முதலியவற்றால் உண்டாம் பீடையால் யான் இப்போது மரிப்பேன் எனத் தன்னை எண்ணியவனாய்த் தன் தருமத்தினின்று ம்திரும்புவன். அர்ச்சுனனாய நீயோ ; ரஜதமோ குணங்களைத் திரஸ்காரஞ்செய்து கேவலம் சத்துவ தருமத்தை யாசிரயஞ்செய்தி.

சங்கை :—ஹே பகவன் ! சீதோஷ்ண முதலியவற்றைப் பொறுக்கினும், பசிதாக நீக்கத்தின்பொருட்டு முன்னர் அடையாத அன்ன முதலியவற்றை அடைவதற்காகவும், முன்னர் அடையப்பெற்ற அன்னாதிகளைக் காப்பாற்றுவதற்காகவும், அவசியம் முயல வேண்டிவரும், வரவே அந்நித்திய சத்துவஸ்தத் தகைமை யாங்ஙனம் உண்டாம் ? மற்றேறு உண்டாகாதாம்.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'நிர்யோகக்ஷேம:' என. ஹே அர்ச்சுன ! முன்னர் அடையாத வஸ்துவின் அடைவுயோகமாம், முன்னர் அடைந்த வஸ்துவின் காப்பு க்ஷேமமாம். அந்த யோக க்ஷேமங்களற்றவனாகுதி, அதாவது சித்தத்தின் விக்ஷேப ஹேதுவாய பதார்த்தங்களின் பெறுகையற்றவனாகுதி என்பதாம்.

சங்கை :—ஹே பகவன் ! யான் யோக க்ஷேமங்க ளற்றவனாவனேயாயின் எங்ஙனம் ஜீவிப்பேன் ; மற்றேறு எனது ஜீவனம் நடவாதாம்.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் நீ உனது ஜீவன சிந்தையைச் செய்யாதொழிதி ; சர்வ அந்தரியாமியாகிய பரமேஸ்வரரே நினது யோக க்ஷேமாதிகளை நிர்வாகஞ் செய்வர் என உத்தரமருளிச்செய்கின்றார். 'ஆத்மவாந்' என, ஆத்மா என்னும் பரமாத்மாவானவர் தேயத்தன்மை (தியான விஷயத்தன்மை) உருவத்தானும், அங்ஙனமே யோக க்ஷேமாதிகளை நிர்வாகஞ் செய்யும் உருவத் தன்மையானும் இருக்கின்றனர் எப்புருஷனுக்கோ அவன் ஆத்மவானாம். அத்தகைய ஆத்மவான் நீயாகுதி. அதாவது எல்லா இச்சைகளையும் விட்டொழித்துப் பரமேஸ்வராதாதனையைச் செய்யும் என்னால் எனது உடலோம்பு தன்மாத்திரப்பொருட்டு, அவாவப்பட்ட அன்னவஸ்திராதி எல்லாப் பதார்த்தங்களையும் அந்தர்யாமியாய ஈஸ்வரரே கிடைத்திடுமாறு செய்விப்பர். என்னும் நிச்சயத்தைச் செய்து நீ நிர்ச்சிந்தனையிருத்தி யென்றருளியதாம். அல்லது ஆன்மவானாகுதி, அதாவது அப்பிரமத்தனாகுதியென அருளியதாமென்க. (45)

(அ-கை.) ஹே பகவன்! சுவர்க்காதி பலவிஷயகமாய எல்லா இச்சைகளையும் பரித்தியாகஞ்செய்து கருமத்தைச்செய்யும் அர்ச்சுனனாகிய யான் அவ்வக் கருமத்தாலடைய யோக்கியமாய எச்சுவர்க்காதி ஆநந்தங்களுளவோ, அவ்வெல்லா ஆநந்தங்களு மில்லாதவனன்றோ வாவேன். என்னை இச்சையின்றி அச்சுவர்க்காதி ஆநந்தங்களினடை வுண்டாகாது என்னும் வார்த்தையைத் தாங்கள் முன்னரே யருளி இருக்கின்றீர்களன்றோ, என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் பிரஹ

மாநந்தத்தை யடையின், அவ்வெல்லா ஆநந்தங்களும் அடைந்தனவாகும் என்னு முத்தாத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். யாவாநய௨ உ௨வாநெ ஸவ-௨தஃ ஸம்ஸ்லு-ொதா௨கெ ।
தாவாநூ ஸவெ-௨ஷு- வெநெஷு- ஙு-ாஹணஸ்ூ விஜாநதஃ ॥ (46)

ப-ம். 2 யாவாநூ 3 அய௨ஃ 1 உ௨வாநெ 4 ஸவ-௨தஃ 5 ஸம்ஸ்லு-ொதா௨கெ 6 தாவாநூ 7 ஸவெ-௨ஷு- 8 வெநெஷு- 10 ஙு-ாஹணஸ்ூ 9 விஜாநதஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அற்ப நீரையுடைய கூபாதிகளிடத்தே எத்துணை ஸ்நாநபாநாதிரூபப் பிரயோஜனங்கள் சித்தமாமோ, அவை யாவுமே நாற்புறமும் நிறைந்த பெருநீருடைய தடாகத்தின்கண்ணே அவசியம் சித்தமாம் அதுபோல, வேதம் விதித்த காமிய கருமங்கள் யாவற்றானும் எத்துணை ஹிரணிய கருப்பபரியந்தம் உள்ள ஆநந்தங்கள் அடையப்படுமோ, அவை யாவுமே பிரஹ்ம சாக்ஷாத்காரமடைந்த பெரியோனுக்கு எளிதிற்கூடும். (46)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மலையினின்றும் விழும் அநேகம் நீரருவிகள் ஒரு கீழ்ப் பூமியின்கண்ணுற்று ஒருங்குசேர்ந்து தடாகமெனப்பெறும். ஒவ்வொரு அருவி நீரான் முறைப்படி முடியும், குளித்தல், குடித்தல், ஆடை வெளுத்தன் முதலிய பயன்கள் யாவுமே அருவியின் கூட்டத்தாலாய மகா தடாகத்தின்கண்ணே அவசியம் முடியும்; ஏனெனின், எல்லா அருவிகளின் நீர்களும் அத்தடாகத்தின் கண்ணே உள்ளடங்கியவாம். அதுபோன்றே வேதத்தின்கண்ணே விளம்பியிருக்கும் எத்துணை அக்கினிஹோத்திரம், ஜோதிட்டோமம், அசுவமேதம் முதலிய காமிய கருமங்களால் இச்சகாம புருஷனுக்கு முறையே கிடைக்கும் சுவர்க்க லோகமே முதலாய்ப் பிரஹ்மலோகபரியந்தம் உள்ள விஷயஜன்னிய ஆநந்தங்கள் யாவும், இந்தப் பிரஹ்ம சாக்ஷாத்கார புருஷனுக்கு ஒரே காலத்தில் கிடைக்கும்; ஏனெனின் பூவுலகமே முதலாகப் பிரஹ்மலோக பரியந்தம் எத்துணைவிஷய ஜன்னிய துச்ச ஆநந்தங்களுளவாமோ, அவை யாவும் பிரஹ்மாநந்தத்தின் அம்ச ரூபமாதலின், அவ்வெல்லாத் துச்ச ஆநந்தங்களும் அந்தப் பிரஹ்மாநந்தத்தின் உள்ளடங்கியவாம்.

ஆ-சு. "ஊதஸெ்யவாநம்உஸாநூ்யாநி ஹூதாநிஉ தா௨-ாஉ-வஜீவந்தி."

(பொ ள்.) பிரஹ்மாவே முதலான எல்லாப் பிராணிகளும் இந்தப் பிரஹ்மாநந்தத்தின் அம்சமாத்திரத்தை அங்கீகரித்து, ஆநந்த பூர்வகமாய் ஜீவிக்கின்றனர். ஓர் அத்விதீயப் பிரஹ்மாநந்தத்தின்கண்ணே அம்ச அம்சீ பாவம் சம்பவிப்பதின்றும். ஆயினும் ஒரே ஆகாசத்தின்கண்ணே கடாதி யுபாதிகளின் வசத்தால் அம்ச அம்சீ பாவ வியவகார முண்டாமாறுபோல ஒரே பிரஹ்மாநந்தத்தின் கண்ணே அவித்தையாலாக்கப்பெற்ற அந்தக்கரணாதி யுபாதிகளின் வயத்தால் அம்ச அம்சீ பாவ வியவகாரமுண்டாம். உண்மையாய் அவ்வம்ச அம்சீ பாவமின்றும்; ஆகையாலிப்பொருள் துணியப்பெறும் :—நிட்காம கருமத்தால் நினதந்தக்கரணம் சுத்தமாகுமாயின், நினக்கு ஆன்மஞான அடைவுண்டாம். அவ்வான்ம ஞானத்தால் நினக்குப் பிரஹ்மாநந்தத்தின் அடைவுண்டாம். அப்பிரஹ்மாநந்தத்தின்கண்ணே ஹிரண்ய கர்ப்பாதி எல்லா ஆநந்தங்களின் உள்ளடக்கமாம். ஆகையால், அந்தப் பிரஹ்மாநந்தத்தின் அடைவால் நினக்கு அவ்வெல்லா ஆநந்தங்களினடைவு முண்டாம். ஆதலின் அவ்விஷய ஜன்னிய துச்ச ஆநந்தத்தையடையும்பொருட்டு, நீ அக்காமிய கருமங்களைச்செய்தல் சிறிதும் பயனற்றதாமாதலின், அந்தப் பிரஹ்மாநந்தத்தை யடைவிக்கும் ஆன்மஞான அடைவின்பொருட்டு நீ நிட்காம கருமத்தைச் செய்தி. ஒருசார் யாசிரியரோ இச்

சுலோகத்தின் பதங்களை இவ்வண்ணம் யோஜனைசெய்து, இப்பொருளைச் செய்துளார் :—"யாவாந், அர்த்த:, உதபாநே, ஸர்வத:, ஸம்ப்லுதோதகே தாவாந், ஸர்வேஷு, வேதேஷு, ப்ராஹ்மணஸ்ய, விஜாநத:" நாற்புறத்தும் மிகுநீர் நிறைந்த பெரிய தடாகத்தின்கண்ணே இப்புருஷனுடைய ஸ்நாநபாநாதி சர்வ பிரயோஜனங்களும் ஒரு குடஜல மாத்திரத்தானே சித்தமாம். அஃதன்றி அம் மகா தடாகத்தின் நீர் முழுவதையுஞ் செலவு செய்தலாற்றான் அந்த ஸ்நாநபாநாதி சர்வ பிரயோஜனங்களுஞ் சித்திக்குமென்பதின்றாம். அதுபோலத் தூய மனத்தையுடைய முமுக்ஷுவிற்கு எல்லாப் பயன்களுஞ் சர்வ வேதங்களினுஞ் சிரோபூதமாய உபநிஷத்வடிவ வேதத்தின் ஏகதேச பாகத்தைச் சிரவணமாத்திரஞ் செய்தே சித்தமாம். அஃதன்றி அந்த முமுக்ஷு ஜனங்கள் தமது பிரயோஜன சித்தியின்பொருட்டுச் சர்வ வேதார்த்தங்களின் அனுஷ்டான அபேக்ஷை செய்ய வேண்டிய அவசிய மின்றாம்; ஒரு பிறப்பில் சர்வ வேதங்களின் அர்த்தத்தை அனுஷ்டானம் செய்தல் சம்பவிக்கமாட்டாதாதலின் என்பதாம். இவ்விரண்டு உரைகளுள் முதலுரை அநேக உரையாசிரியர்கட்குச் சம்மதமாம். மற்றைய உரையோ ஒருரை யாசிரியர் செய்துளார். ஆனால் அம்முதலுரையின்கண்ணே சுலோகத்தின் முற்பாதியில் "அநேகஸ்மிந், யதா, ததா, பவதி" என்னும் நான்கு பதங்களை அத்தியாஹாரஞ்செய்யவேண்டும். மேலும் சுலோகத்தின் பிற்பாதியிலிராநின்ற தார்ஷ்டாந்திக பாகத்தின்கண்ணே முற்பாதியினின்றும் 'யாவாந், தாவாந்' என்னும் இரண்டு பதங்களைச் சேர்க்கவேண்டும். அப்பதங்களின் அத்தியாகாரமுஞ் சேர்க்கையும் இம்மற்றைய உரையின்கண்ணே செய்யவேண்டியதின்றாம். அவற்றுள், முன்னர்க் கேளாத பதத்தை வாக்கியத்தின்கண்ணே சம்பந்தஞ்செய்தல் அத்தியாகாரமாம். முன் வாக்கியத்தின்கண்ணே இராநின்ற பதத்தைப் பின் வாக்கியத்தின்கண்ணே சம்பந்தஞ்செய்தல் சேர்க்கையாம். (46)

(அ-கை.) சங்கை:—ஹே பகவன்! அந்த நிட்காமகருமஞ் சுதந்திரமாகவே அந்தப் பிரஹ்மாநந்தத்தின் அடைவை யுண்டாக்கமாட்டாது; மற்றோ, அந்தக்கரண சுத்திவாயிலாய் ஆன்மஞான சம்பாதனஞ்செய்தே அந்நிஷ்காம கருமம் அந்தப் பிரஹ்மாநந்தத்தின் அடைவைச் செய்விக்குமாதலின், எவ்வான்மஞானத்தாற் சாக்ஷாத்தாகவே பிரஹ்மாநந்தத்தின் அடைவுண்டாமோ, அதுவே எனக்கு முதலிற் சம்பாதிக்கத் தகுதியதாம். அவ்வான்ம ஞானத்தை விடுத்து மிகுந்த முயல்வால் சித்தமாகத்தக்கதும் பகிரங்கசாதன பூதமும் ஆய நிட்காமகருமத்தைச் செய்வதில் யாதொரு பயனுமின்றாம் என, அர்ச்சுனனது சங்கையுண்டாக அதற்கு ஸ்ரீ பகவான் இப்போது நினக்கு அந்நிட்காம கருமத்தின்கண்ணே அதிகாரமாம் என உத்தரமருளிச் செய்கின்றார் :—

சு-ம். கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந ।
மா கர்மபலஹேதுர்பூர்மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி ॥ (47)

ப-ம். 2 கர்மணி 3 ஏவ 14 அதிகார: 1 தே 8 மா 6 பலேஷு 7 கதாசந 10 மா 9 கர்மபலஹேது: 11 பூ: 15 மா 13 தே 14 ஸங்க: 5 அஸ்து 12 அகர்மணி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நினக்குக் கருமத்தின்கண்ணே அதிகாரமிருக்கின்றது; கருமபலத்தின்கண்ணே யொருகாலும் நினக்கதிகாரமின்றாம். நீ கருமபலத்தை யுண்டாக்குபவனாகாதொழிதி. கருமத்தைச் செய்யாதிருப்பதில் நினது பிரீதியுண்டாகாதொழிக.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆன்மஞான உற்பத்தியிற் றகுதியற்ற அசுத்த அந்தக்கரணமுடைய உனக்கு இப்போது அந்தக்கரணத்தைச் சுத்திசெய்யும்

நிட்காம கருமத்தின்கண்ணே அதிகாரமாம்; அதாவது எனக்கிப்போது இந்நிட்காம கருமமே செய்யத்தகுதியதாம் என்னும் உணர்வுண்டாகவேண்டும். ஞான நிஷ்டைவடிவ வேதாந்த வாக்கியங்களின் விசாரத்தின்கண்ணே கருத்தவ்யத்தன்மையின் உணர்வு இப்போதுனக்கு உண்டாகலாகாது. இவ்வண்ணங் கருமத்தைச் செய்யாநின்ற நினக்கு அக்கருமத்தின் சுவர்க்காதி பலத்தினிடத்தே அக்கருமானுஷ்டானத்தின் முற்காலத்தும் பிற்காலத்தும் அனுஷ்டானகாலத்தும் ஒருகாலும் அதிகார முண்டாகவேண்டியதின்றாம். அதாவது இக்கருமத்தின் சுவர்க்காதி பலத்தை யான் அனுபவிக்கவேண்டும் என்னும் உணர்வு ஒருகாலும் நினக்கு உண்டாகவேண்டியதில்லை.

சங்கை:—ஹே பகவன்! யான் இக்கருமத்திற்குச் சுவர்க்காதிபலனை யனுபவிக்கவேண்டு மென்னும் புத்தியை அடையாதிருப்பினும், அக்கருமம் தனது ஆற்றலினானே சுவர்க்காதி பலனை யடைவிக்குமன்றோ?

சமாதானம்:—ஸ்ரீ பகவன் பல இச்சையின்றி அக்கருமம் அப்பலப்பிராப்தியை யுண்டாக்கமாட்டாது என அருளிச்செய்கின்றார். 'மா கர்மபலஹேதுர்பூ:' என, ஹே அர்ச்சுன! பலத்தின் விழைவால் அக்கருமங்களைச் செய்யு மிப்புருஷன் அதனை யுண்டாக்குபவனாவன். நீ அப்பல விழைவின்றியவனாய் அக்கருமபலத்தை யுண்டாக்குபவனாகா தொழிதி; நிட்காம புருஷன் பகவதர்ப்பண புத்தியால் செய்த கருமஞ் சுவர்க்காதி பல அடைவை யுண்டாக்காதாதலின், இவ்விஷயத்தை முன்னர்க் கூறிவந்தேம்.

சங்கை:—ஹே பகவன்! ஒருகால் அக்கருமம் தனது ஆற்றலாற் பலத்தினடைவை யுண்டாக்காதாயின், அத்தகைய நிட்பலகருமத்தைச் செய்வதற்குத்தான் யாது பயன்?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'மா தே ஸங்கோஸ்த்வகர்மணி' என, ஒருகால் சுவர்க்காதிபலத்தினடைவை இச்சியாதிருப்பின், துக்கரூப கருமத்தைச் செய்வதற்குத்தான் யாதுபயன் என, அக்கருமத்தைச் செய்யாதிருப்பதில் நினது பிரீதியுண்டாகாதொழிக. (47)

(அ-கை.) இப்போது முற்கூறிய பொருளையே விஸ்தாரமாய் நிரூபித்தருளுகின்றார்:—

சு-ம். யோகஸ்த²: குரு கர்மாணி ஸங்க³ம் த்யக்த்வா த⁴னஞ்ஜய ।
ஸித்³த்⁴யஸித்³த்⁴யோ: ஸமோ பூ⁴த்வா ஸமத்வம் யோக³ உச்யதே. (48)

ப-ம். 2 யோகஸ்த²: 9 குரு 8 கர்மாணி 3 ஸங்க³ம் 4 த்யக்த்வா 1 த⁴னஞ்ஜய 5 ஸித்³த்⁴யஸித்³த்⁴யோ: 6 ஸம: 7 பூ⁴த்வா 10 ஸமத்வம் 11 யோக³: 12 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நீ யோகத்தின்கண்ணே நிலைபெற்றவனாய்ப் பலேச்சையைப் பரித்தியாகஞ்செய்து, பல அடைவினும் அடைவின்மையினும் மகிழ்ச்சி வாட்டமற்றுக் கருமத்தைச் செய்தி. அம்மகிழ்ச்சி வாட்டத்தன்மையே யோகமெனப்படும். (48)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நீ யோகத்தின்கண்ணே நிலைபெற்றவனாய்ச் சுவர்க்காதி பலத்தின் இச்சைவடிவ சங்கத்தையும், யான் இக்கருமத்தின் கருத்தாவாயிருக்கிறேன் என்னுங் கருத்திருத் தகைமை யபிநிவேசத்தையும் அறவே விட்டுக் கருமத்தைச் செய்தி. இப்போ தச்சங்கத்தியாக உபாயத்தை அருளிச்செய்கின்றார். 'ஸித்³த்⁴யஸித்³த்⁴யோ: ஸமோபூ⁴த்வா' என. ஹே அர்ச்சுன! அங்க அவ

மறை அறைந்த கருமத்தின் சுவர்க்காதி பல அடைவின்கண்ணே நீ மகிழ்வையும், அதனடையாமையின்கண்ணே வாட்டத்தையும் விட்டொழித்துக் கேவலம் ஈஸ்வர ஆராதன புத்தியால் அக்கருமத்தைச் செய்தி.

சங்கை :—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் யோக சப்தத்தாற் கருமத்தைக் கூறியருளினீர்கள். இப்போது யோகத்தின்கண்ணே நிலைபெற்று நின்று நீ கருமத்தைச் செய்தியெனக் கூறியருளுகின்றீர்கள். ஆதலின், தங்களுடைய முன்பின் வசனங்களின் அபிப்பிராயத்தை யான் அறிந்திலேன்?

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளிச் செய்கின்றார். 'ஸமத்வம்யோக உச்யதே' ஹே அர்ச்சுன! கருமபல அடைவின்கண்ணும், கருமபல அடைவின்மையின்கண்ணும், மகிழ்ச்சிவாட்டமற்ற தன்மைவடிவச் சமத்தன்மையே ஈண்டு, 'யோகஸ்த: குரு கர்மாணி' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற யோகசப்தத்தாற் கூறியதாம். அந்த யோகசப்தத்தால் யாதொரு கருமத்தையுங் கூறவில்லை. ஆகையால், பூர்வ உத்தர வசனங்களின் விரோதம் உண்டாகமாட்டாது. ஆண்டு முன்னர் 'ஸுகது:கே ஸமே க்ருத்வா' என்னும் சுலோகத்தின்கண்ணே ஜயாஜயமிரண்டின் சமத்தன்மையால் கேவலம் போர்மாத்திரத்தின் கர்த்தவ்வியத் தன்மை கூறப்பட்டது; அதனுன் முற்பிரசங்கத்தின்கண்ணே போரின் கருத்தவ்வியத் தன்மையே யடைவுற்றதாம். ஈண்டோ திருஷ்ட அதிருஷ்டரூப சர்வ பலன்களையும் பரித்தியாகஞ்செய்து, தனதுவருண ஆசிரம சர்வ கருமங்களின் கருத்தவ்யத் தன்மை கூறப்பட்டதாம். ஆகையால், பூர்வ உத்தர வசனத்தின்கண்ணே புனருக்தியென்னுங் கூறியது கூறற்றோடவடைவுண்டாகமாட்டாது. (48)

(அ-கை.) ஹே பகவன்! கேவலங் கருமானுஷ்டானமே புருஷார்த்தரூபமாமென, அல்லவாயின் எப்போதும் நிட்காம கருமத்தையே புருஷன் செய்ய வேண்டும் என்னும் உபதேசத்தைத் தாங்கள் அடிக்கடி செய்யமாட்டீர்களன்றோ? அல்லது, "பயனைக்குறியாது பாமரமந்தனும் முயலான்" என்னும் உலகப் பிரசித்த நியாயத்தானும் அந்நிட்காம கருமத்தின்கண்ணே முயற்சி சம்பவியாது. ஆகையால், பல இச்சையின்றி நிட்பல கருமத்தைச் செய்வதினும், பலத்தை இச்சித்துக் கருமானுட்டானஞ் செய்தலே மேன்மையாம் என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவானுத்தாம் அருளிச்செய்கின்றார் :—

சு-ம். தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தநஞ்ஜய ।
புத்தௌ ஶரணமந்விச்ச க்ருபணா: பலஹேதவ: ॥ (49)

ப-ம். 5 தூரேண 2 ஹி 6 அவரம் 4 கர்ம 3 புத்தியோகாத் 1 தநஞ்ஜய 7 புத்தௌ 8 ஶரணம் 9 அந்விச்ச 11 க்ருபணா: 10 பலஹேதவ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் நிட்காம கருமத்தினுஞ் சகாம கருமம் அத்தியந்தந் தூரமாய அதமமாமோ, அக்காரணத்தால் பரமான்ம புத்தி நிமித்தமாய் நிட்காம கரும யோகத்தைச் செய்வதற்கு நீ இச்சைசெய்தி. யாவன் பல இச்சை உடையவனுவனே அவன் கிருபணனுவன். (49)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் ஆன்ம ஞானரூப புத்தியின் சாதனரூப நிட்காம கருமயோகம், புத்தியோகம் எனப் பெயர்பெறுமோ, அப்புத்தியோகத்தினும் ஜன்மமரண ஹேதுரூப சகாம கருமம் அத்தியந்தந் தூரமாய அதமமாமோ, அல்லது பரமான்ம விஷயக புத்திவடிவ யோகம், புத்தியோகம் எனப்பெறுமோ, அப்புத்தியோகத்தினும் இவ்வெல்லாக் கருமமும் அதமமாமோ, அக்காரணத்தால் எல்லா அநர்த்தங்களையும் நிவிருத்தி செய்யும் பரமான்ம விஷயக

புத்தியை அடைவதற்குப் பிரதிபந்தகமாய பாவகரும நிவிருத்தி வாயிலாய் நிட்காம கருமயோகத்தைச் செய்ய நீ இச்சை செய்தி. ஹே அர்ச்சுன! சுவர்க் காதி பலத்தை இச்சியாநின்ற எப்புருஷன் அச்சகாம கருமத்தைச் செய்வனோ, அப்புருஷன் கிருபணனாவன். அதாவது, அச்சகாம புருஷன் எப்போதும் ஜன்ம மரணாதிரூப கடீயந்திரத்திற் சுழன்று, நானாவகையாய தீன தசைகளை அடைவன்.

ஆ-சு. "யொவாவஹத உக்ஷரஂ மாமஶ்ஷுவிகிக்ஷா ।
ஹாஸ்லொகா ொதி ஸகூவணஃ."

(பொ-ள்.) ஹே கார்க்கியே! இந்தப் பரத கண்டத்தின்கண்ணே அதி காரியான மனுஷ சரீரத்தை அடைந்து, எப்புருஷன் இவ்வக்ஷரமாய பரமான்ம தேவரை அறியாமல் இம்மனுஷ லோகத்தினின்றுஞ்செல்வனோ, அப்புருஷன் கிருப ணனெனவே அறியவேண்டும். ஹே அர்ச்சுன! அத்தகைய அதிகாரியாய மனுஷ சரீரத்தை அடைந்து நீயும் அத்தகைய கிருபணனாகா தொழிதி. மற்றோ, ஜன்ம மரணாதி சர்வ அநர்த்தங்களையும் நிவிருத்தி செய்யும் ஆன்ம ஞானத்தை அந்தக் கரண சுத்திவாயிலாய் உற்பன்னஞ் செய்விக்கும் நிட்காமகருமரூப யோகத்தையே நீ செய்தி. ஈண்டு 'கூவணாஃ' என்னும் பதத்தைக் கூறியருளியதால், ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இப்பொருளைக் குறிப்பித்தருளினார்:—எங்ஙனம் இவ் வுலகின்கண்ணே எக்கிருபணனானவன் அநேகம் வகையாய துக்கங்களைச் சகித் துக்கொண்டு, நானாவகையாய சூது, வஞ்சகங்களால் தனத்தை மிகவுஞ் சேக ரிப்பனோ, அக்கிருபண புருஷன் இவ்வுலகின் ஒரு சிறிது விஷய ஜன்னிய சுக லோபத்தால் அத்தனத்தைத் தானஞ்செய்யான். இக்காரணத்தால் அக்கிருபண புருஷன் அத்தன தானாதிகளால் ஜனித்த மகா சுகத்தை அநுபவிக்கமாட்டான். மற்றோ அத்தனத்தை ஒன்று சேர்ப்பதின் பொருட்டுச் செய்த பாவகருமத்தின் பலமாய நரகாதி துக்கங்களையே அக்கிருபண புருஷன் அநுபவிப்பன். ஆகை யால், அக்கிருபண புருஷன் தனதானியைத் தானே செய்வன். அதுபோல, இச் சகாம புருஷனும் மகா துக்கங்களைச் சகித்துக்கொண்டு அக்கருமங்களைச் செய் வன். ஆனால் சுவர்க்கம், தனம், புத்திரன், பசு என்பனவாதி அற்ப பலங்களின் லோபத்தால் அச்சகாம புருஷன் அக்கருமங்களால் மோக்ஷரூப பரமாநந்தத்தை அடையான். மற்றோ, அநேக துக்கங்களோடு கூடி இராநின்ற அச்சுவர்க்காதி துச்சபலங்களையே யடைவன். இக்காரணத்தால் அச்சகாம புருஷன் தனதானி யைத்தானே செய்வன். அத்தகைய சகாம புருஷரின் தௌர்ப்பாக்கியத் தன்மை யையும் மூடத்தன்மையையும் நோக்கி மதிமான்களாய புருஷர் மிகுந்த சோகத்தை யடைகின்றனர். என்னும் இவ்வெல்லாப் பொருள்களையும் ஸ்ரீ பகவான் கிருபண பதத்தாற் குறிப்பித்தருளினர். (49)

(அ-கை.) இவ்வண்ணம் அப்புத்தி யோகமின்றாயிற் றோட நிரூபணஞ்செய் தருளப்பட்டது. இப்போது அஃதுண்டாயின், குண நிரூபணஞ் செய்தருளப்படு கின்றது:—

சு-ம். பு–ஷியு–க்தோ ஜஹாதீஹ உஹெ ஸு–கூதது–ஷ்கூதெ ।
தஸ்மாஜ்யொாய யு–ஜஸ்வ யொமஃ கஂமஸு–களஶலம் ॥ (50)

ப-ம். 2 பு–ஷியு–க்தஃ 5 ஜஹாதி 1 உஹ 4 உஹெ 3 ஸு–கூதது–ஷ்கூதெ 6 தஸ்மாக 7 யொமாய 8 யு–ஜஸ்வ 9 யொமஃ 10 கஂமஸு 11 களஶலம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் இக்கருமங்களில் சமத்வபுத்தி யோடு கூடியபுருஷன் புண்ணிய பாவ மிரண்டையும் பரித்தியாகஞ் செய்வனோ,

அக்காரணத்தால் அந்தச் சமத்தன்மைப் புத்திரூப யோகத்தின்பொருட்டு, நீ முயற்சியுடையவனாகுதி. எக்காரணத்தால் அந்த யோகமே அக்கருமங்களிற் குசலத்தன்மையாம். (50)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! சாஸ்திரம் விதித்த அக்கினி ஹோத்திராதி கரும பலத்தின் அடைவினும், அடைவின்மையினும் மகிழ்ச்சிவாட்டமற்ற தன்மைவடிவ சமத்தன்மைப் புத்தியோடுகூடிய அதிகாரியானவன், எக்காரணத்தால் புண்ணிய பாவ மிரண்டையும் அந்தக்கரணத்தின் சுத்தி, ஞானத்தின் அடைவு வாயிலாய்ப் பரித்தியாகஞ் செய்கின்றனனோ, அக்காரணத்தால் அந்தச் சமத்வ 'புத்திரூப யோக அடைவின்பொருட்டு நீ திடமுயற்சி யுடையவனாகுதி. அந்தச் சமத்வ புத்தி ரூப யோகமே அக்கருமங்களில் முயன்ற புருஷனுக்குக் குசலத்தன்மையாம். கருத்திதுவாம் :—உண்மையாய்ப் பந்த ஹேதுவடிவ கருமங்களையுஞ் சமத்வ புத்திரூப யோகம் மோக்ஷத்தின்கண்ணே உபயோகமாகச் சித்தஞ்செய்யும். இஃதே அந்தச் சமத்வ புத்திரூப யோகத்தின்கண்ணே மகா குசலத்தன்மை யென்பதாம். இத்துணைகூறியருளியதால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—சமத்தன்மைப் புத்தியோடுகூடிய கருமயோகம், தான் கருமரூபமாயினும், தனது சஜாதீய துஷ்ட கருமத்தை நாசஞ்செய்யும். ஆகையால், அக்கரும யோகம் மகாகுசலமாம். அர்ச்சுனனாகிய நீ சேதன ரூபமாயினும், உனது சஜாதீய துரியோதனாதி துஷ்டர்களை நாசஞ்செய்யாதிருக்கின்றாய். ஆகையால், நீ குசலனன்றாகின்றாயென்பதாம். அல்லது, இச்சுலோகத்திற்கு இவ்வேறு பொருள்கொள்க.

"ஸுத்தியுக்தஃ, ஜஹாதி, இஹ, உபெ, ஸுக்ருத து₃ஷ்க்ருதெ, தஸ்மாத், யொகா₃ய, யுஜ்யஸ்வ, யொக₃ஃ, கர்மஸுகௌஶலம்."

(பொ-ள்.) சமத்வ புத்தியோடு கருமங்களைச்செய்து அந்தக்கரண சுத்தி வாயிலாய்ப் பரமாத்ம சாக்ஷாத்காரத்தோடுகூடிய இப்புருஷன், எக்காரணத்தால் புண்ணிய பாவ மிரண்டையும் பரித்தியாகஞ்செய்வனோ, அக்காரணத்தால் நீ சமத்வபுத்தியோடுகூடிய கரும யோகத்தை யடையும்பொருட்டுப் பிரயத்தனமுடையவனாகுதி. சர்வ கருமங்களின் மத்தியில் அந்தச் சமத்தன்மைப் புத்தியோடுகூடிய கருமயோகம், துஷ்டகருமத்தை நிவிருத்திசெய்வதில் மிகவும் ஆற்றலுடையதாம்.

(அ-கை.) ஹே பகவன் ! இவ்வதிகாரியின் பாவகரும நிவிருத்தியோ அபேக்ஷிதமாம். ஆனால், புண்ணிய கருமங்களின் நிவிருத்தி அபேக்ஷிதமன்றாம். புண்ணியகரும நிவிருத்தியுமாகுமாயின், புருஷார்த்தத்தின் ஹானியேயுண்டாம் என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் சுவர்க்காதி துச்ச பலத்தைத் தியாகஞ் செய்தலாற் பரம புருஷார்த்தத்தின் அடைவு வடிவபல முண்டாமென உத்தரமருளிச் செய்கின்றார் :—

சு-ம். கர்மஜம் ஸுத்தியுக்தா ஹி ப₂லம் த்யக்த்வா மநீஷிணஃ ।
ஜந்மப₃ந்த₄விநிர்முக்தாஃ பத₃ம் க₃ச்ச₂ந்த்யநாமயம் ॥ (51)

ப-ம். 3 கர்மஜம் 2 ஸுத்தியுக்தாஃ 1 ஹி, ப₂லம் 5 த்யக்த்வா 6 மநீஷிணஃ ஜந்மப₃ந்த₄விநிர்முக்தாஃ 9 பத₃ம் 10 க₃ச்ச₂ந்தி 8 அநாமயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் அந்தச் சமத்வ புத்தியோடுகூடிய புருஷன் கரும ஜன்னிய பலத்தைத் தியாகித்து ஆன்ம சாக்ஷாத்காரமுடையவனாவனோ, ஜன்மரூப பந்தமற்றவனாய் அவித்தை முதலிய நோயற்ற மோக்ஷரூப பதத்தையடைவனோ, அக்காரணத்தால் நீயும் அங்ஙனம் ஆகுதி. (51)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்தச் சமத்வ புத்தியையுடைய புருஷன் அக்கினி ஹோத்திராதி கருமங்களால் ஜன்னிய சுவர்க்காதிரூப பலத்தைப் பரித்தியாகஞ்

செய்து, கேவலம் ஈஸ்வர ஆராதனத்தின்பொருட்டு அக்கருமங்களைச்செய்து, அந்தக்கரணசுத்திவாயிலாய்த் தத்துவமசி முதலிய வாக்கியஜன்னிய ஆன்மாகாரபுத்திரூப மனத்தையடைந்து, அவ்வதிகாரியானவன் ஜன்மரூப பந்தத்தினின்றும் அத்தியந்த முக்தனுய்க் காரியசஹித அவித்தைவடிவ நோயற்றுப் பயம் யாவுமற்று, பரமாநந்தவடிவப் பிரஹ்மரூப மோக்ஷமாகிய புருஷார்த்தத்தை அபேதமாயடைவனென்பதாம். ஈண்டு ஸ்ரீ பகவானுடைய திருக்கருத்திதுவாம் :—எக்காரணத்தால் பலத்தினிச்சையைப் பரித்தியாகஞ்செய்து, அந்தச் சமத்வ புத்தியால் தனது வருணுசிரமக்கருமங்களை அனுஷ்டானஞ் செய்யும் புருஷன் அந்நிட்காம கருமமகிமையால் சுத்த அந்தக்கரணமுடையவனுவனே, அவ்வந்தக்கரணசுத்தியின் பின்னர் அவ்வதிகாரியானவன் தத்துவமசி முதலிய பிரமாணத்தா லுற்பன்னமாய ஆன்மஞான மகிமையால் காரியசகித அவித்தைபற்றவனுய்ச் சர்வ அநர்த்த நிவிருத்தி வாயிலாய்ப் பரமாநந்த அடைவுவடிவ மோக்ஷத்தை யடைவனே, அம்மோக்ஷமே சாஸ்திரத்தின்கண்ணே விஷ்ணுவின் பரமபதரூபமெனக் கூறப்பெற்றுளதாமோ, அக்காரணத்தால் நீயும் 'யச்ச்ரேய: ஸ்யாந்நிச்சிதம் ப்ரூஹி தந்மே' என முற்கூறிய வசனத்தால் மோக்ஷரூப சிரேயஸினிச்சை யுடையவனுகின்றனை எனப் புலப்படுகின்றதாதலின், நீயும் அம்மோக்ஷத்தை யடையும்பொருட்டு இவ்வண்ணமாய நிட்காம கருமயோகத்தைச் செய்தி. (51)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வண்ணம் நிட்காம கருமத்தைச் செய்து வருதலால் எக்காலத்தே எனது அந்தக் கரணத்தின் சுத்தியுண்டாம் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் அதன்கண்ணே காலநியம அபாவத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥ (52)

ப-ம். 1 யதா 2 தே 4 மோஹகலிலம் 3 புத்தி: 5 வ்யதிதரிஷ்யதி 6 ததா 11 கந்தா 12 அஸி 10 நிர்வேதம் 7 ச்ரோதவ்யஸ்ய 9 ச்ருதஸ்ய 8 ச.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காலத்தே நினது அந்தக்கரணம் அவிவேகரூப களங்கத்தைப் பரித்தியாகஞ்செய்யுமோ, அக்காலத்தே சிரவணஞ்செய்ய யோக்கியமாய கருமபலத்தின் வைராக்கியத்தையும், சிரவணஞ் செய்துள்ள கருமபலத்தின் வைராக்கியத்தையும் நீ அடைந்தவனுவாய். (52)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்நிட்காம கருமத்தைச் செய்துகொண்டுவரின் இத்துணைக் காலத்தின் பின்னர் அந்தக்கரணத்தின் சுத்தியுண்டாம் எனக் காலவரை ஈண்டின்றும். மற்றோ, அந்நிட்காம கருமத்தைச் செய்பவனுய் எக்காலத்தே நினதந்தக்கரணம் இவன் யான் எனவும் இஃதென்னதெனவும் உண்டாம் யானெனதென்னு மபிமானவடிவ அவிவேகரூபகளங்கத்தைப் பரித்தியாகஞ்செய்யுமோ, அதாவது இராஜோகுண தமோகுணரூப மலத்தைப் பரித்தியாகஞ் செய்து, கேவலம் சுத்த சத்துவ பாவத்தை யடையுமோ, அக்கால் இப்போது சிரவணஞ்செய்ய யோக்கியமாய அக்கினி ஹோத்திராதி கருமங்களின் சுவர்க்காதி பலத்தின் வைராக்கியத்தையும், முன் சிரவணித்துள்ள கருமங்களின் சுவர்க்காதி பலத்தின் வைராக்கியத்தையும் நீ அடைவாய். அதாவது அச்சுவர்க்காதி பலன்களை மித்தையெனவறிந்து அவற்றை அடையவேண்டும் என்னும் இச்சைபற்றவனுவாய் என்பதாம்.

ஆ-சு. பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்,

(பொ-ள்.) பிரஹ்மத்தை அடையவேண்டும் என விச்சித்த அதிகாரியானவன் கருமத்தாலாகிய சுவர்க்காதி லோகங்களை அநித்திய துக்கரூபம் எனவறிந்து அவற்றினின்றும் வைராக்கியத்தை அடைவன் என்பதாம். ஈண்டு ஸ்ரீ பகவானது திருக்கருத்திதுவாம்:—அசுத்த அந்தக்கரணத்தின்கண்ணே வைராக்கியம் உண்டாகமாட்டாது; மற்றோ, சுத்த அந்தக்கரணத்தின்கண்ணே அந்த வைராக்கியம் உண்டாம். ஆகையால், எக்கால் நினக்கு இவ்வுலக விஷய சுகத்தின்கண்ணும், சுவர்க்காதி லோகங்களின் விஷய சுகத்தின்கண்ணும் தோஷ திருஷ்டிவாயிலாய்த் தீவிர வைராக்கியத்தின் அடைவுண்டாமோ, அக்கால் அந்த வைராக்கியரூப பலத்தைக்கொண்டு நினதந்தக்கரண சுத்தியை நீ யறிதி. எதுவரை அவ் விஷயங்களினின்றும் வைராக்கியம் உண்டாகவில்லையோ, அதுவரை நீ உனதந்தக்கரணத்தை மலினம் எனவறிதி. (52)

(அ-கை.) ஹே பகவன்! அந்நிட்காம கரும அனுஷ்டானத்தால் உண்டாம் அந்தக்கரண சுத்தியால் ஜனித்த வைராக்கிய முடையவனுக்கு எக்கால் ஆன்ம ஞான அடைவுண்டாம் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் உத்தரம் அருளுகின்றார்:—

சு-ம். ஶ்ருதிவிப்ரதிபந்நா தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா ।
ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி ॥ (53)

ப-ம். 1 ஶ்ருதிவிப்ரதிபந்நா 2 தே 4 யதா 8 ஸ்தாஸ்யதி 6 நிஶ்சலா 5 ஸமாதௌ 7 அசலா 3 புத்தி: 9 ததா 10 யோகம் 11அவாப்ஸ்யஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் நானு பலன்களைச் சிரவணித்துச் சம்சயத்தை அடைந்த நினது புத்தி எக்கால் பரமான்ம தேவரிடத்தே நிச்சலமாய் அசலமாய் நிலைபெறுமோ, அக்கால் நீ ஜீவப்பிரஹ்ம அபேத ஞானத்தை அடைவாய். (53)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உண்மையாய தாற்பரியம் விசாரிக்கப்படாத சுவர்க்காதி நானுவகையாய பலன்களின் சிரவணத்தால் அடைவுற்ற நானுவகையாய சம்சய விபரீத பாவனைகளால் முன்னர் விக்ஷேபத்தை அடைந்திருக்கும் நினது புத்தி எக்கால் அந்தக்கரண சுத்தியால் அடைந்திருக்கும் விவேக ஜன்னிய பதார்த்தத்திடத்துள்ள தோஷ தரிசனத்தால் அந்த விக்ஷேபத்தைப் பரித்தியாகஞ் செய்து உட்பரமான்ம தேவரிடத்தே நிச்சலத்தை அடைந்து, அதாவது நனுக்கனுத்தரிசனரூப விக்ஷேபமற்ற தன்மையை அடைந்து, அப்பரமான்ம தேவரிடத்தே அசலத்தை அடைந்து, அதாவது துயில் மூர்ச்சை தம்பித்து நிற்றல் என்பனவாதியின் இலய விக்ஷேபரூபம்என்னுமிரண்டையும் பரித்தியாகஞ்செய்து, எப்போதுஅப்பரமான்ம தேவரிடத்தே ஏகாக்கிரத் தன்மையை அடையாநிற்குமோ, அல்லது 'நிஶ்சலா அசலா' என்னும் இவ்விரண்டு பதங்கட்கும் இப்பொருள் கொள்க. 'நிஶ்சலா' அசம்பாவனை விபரீத பாவனையற்றதாய், 'அசலா' நீள்காலம், ஆதரம், நிரந்தரம், சற்காரம் என்னும் நான்கால் சேவிக்கப்பட்டு விஜாதீய விருத்திகளால் தூஷிதமற்றதாய் இலங்கும் அப்புத்தி எக்கால் வாயுவற்ற விடத்துள்ள தீபம்போலும் அப்பரமான்ம தேவரிடத்தே நிலைபெறுமோ, அக்கால் தத்துவமசி முதலிய வாக்கியத்தால் ஜனித்த ஜீவப் பிரஹ்மங்களின் அபேத சாக்ஷாத்காரரூப யோகத்தை நீ அடைவாய். அந்த ஞானகாலத்தே வேறு யாதொரு கர்த்தவ்யமும் இன்றாம். ஆகையால், அக்கால் நீ கிருதகிருத்தியனுவாய்; ஸ்திதப்பிரஞ்ஞனுவாய் என்பதாம்.

(அ-கை.) ஆண்டு இவ்வகையாய அவசரத்தை அடைந்து, அவ்வர்ச்சுனன் ஜீவன் முக்தர்களுடைய இலக்கணத்தையே முமுக்ஷுக்களின் மோக்ஷோபாய

ரூபம் என எண்ணியவனுய் அந்த ஸ்திதப் பிரஞ்ஞனுடைய இலக்கணத்தை அறியும்பொருட்டு இவ்வகையாய வினவை வினவுகின்றனன் :—

அர்ஜுந உவாச.

ஸு-ம். ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேஶவ ।
ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ॥ (54)

ப-ம். 3 ஸ்திதப்ரஜ்ஞஸ்ய 5 கா 4 பாஷா 2 ஸமாதிஸ்தஸ்ய 1 கேஶவ 6 ஸ்திததீ: 7 கிம் 8 ப்ரபாஷேத 9 கிம் 10 ஆஸீத 12 வ்ரஜேத 11 கிம்.

(அ-ம்.) ஹே கேசவ! சமாதியின்கண்ணேயிருக்கும் ஸ்திதப்பிரஞ்ஞனுக்கு யாது இலக்கணம்? சமாதியினின்றும் எழுந்த ஸ்திதப் பிரஞ்ஞன் எங்ஙனம் பேசுவன்? எங்ஙனம் பாகிய இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்வன்? எங்ஙனம் விஷயங்களை யடைவன்? (54)

(வி-ம்.) யான் பிரஹ்மமாய் இருக்கின்றேனென நிச்சலத்தை யடைந்த பிரஞ்ஞை உடையவன் ஸ்திதப் பிரஞ்ஞன். அந்த ஸ்திதப் பிரஞ்ஞன் இருவகையாய அவஸ்தைகளை உடையவனுவன். ஒருவகையோ சமாதியின்கண்ணே நிலைபெற்றிருத்தலாம்; மற்றொருவகையோ, அச்சமாதியினின்றும் எழுந்த சித்தமுடைத்தாயிருத்தலாம். இக்காரணத்தானே, அந்த ஸ்திதப் பிரஞ்ஞ புருஷனுக்குச் சமாதியின்கண்ணே இருக்கும் என விசேஷணங் கொடுக்கப்பட்டது. இங்ஙனம், சமாதியின்கண்ணே இராநின்ற ஸ்திதப் பிரஞ்ஞனுக்கு யாது இலக்கணம்; அதாவது அச்சமாதியின்கண்ணே இராநின்ற ஸ்திதப்பிரஞ்ஞனை, எவ்விலக்கணத்தால் வேறு புருஷன் அறிவன் என்பது முதல் வினவாம். 1. அச்சமாதியினின்றும் எழுச்சியை யடைந்த சித்தத்தையுடைய இரண்டாவது அவஸ்தாவானுகிய ஸ்திதப் பிரஞ்ஞன், தனது ஸ்துதியின்கண்ணும் நிந்தையின்கண்ணும் மகிழ்ச்சிவாயிலாய் வாட்டவாயிலாய் வசனங்களை எங்ஙனம் வசனிப்பன் என்பது இரண்டாவது வினவாம். 2. அச்சமாதியினின்றும் எழுச்சியை யடைந்த சித்தத்தை நிக்கிரகஞ் செய்யும்பொருட்டு அந்த ஸ்திதப் பிரஞ்ஞ புருஷன் நேத்திராதிபாகிய இந்திரியங்களை நிக்கிரகம் எங்ஙனஞ் செய்வனென்பது மூன்றாவது வினவாம். 3. அந்தப் பாகியேந்திரிய நிக்கிரக அபாவகாலத்தின்கண்ணே, அந்த ஸ்திதப் பிரஞ்ஞ புருஷன் எங்ஙனம் விஷயங்களை யடைவன் என்பது நான்காவது வினவாம். 4. கருத்திதுவாம் :—அவ்வெழுந்த சித்தத்தையுடைய ஸ்திதப் பிரஞ்ஞனது உரைத்தல், இருத்தல், சரித்தல் என்னும் இம்மூன்றும் அஞ்ஞானிகள் பாலிருப்பதினும் எவ்வகையாய விலக்ஷணமாம். இவ்வண்ணம் அர்ச்சுனனது நான்கு வினக்கள் சித்தமாம்; ஆண்டு சமாதியின்கண் இராநின்ற ஸ்திதப் பிரஞ்ஞனிடத்தோ முதல்வினவொன்றும். சமாதியினின்றுங் கிளம்பிய சித்தத்தையுடைய ஸ்திதப் பிரஞ்ஞனிடத்தோ மூன்று வினக்களாம். ஆண்டு 'ஹே கேஶவ' என இச்சம்போதனத்தைக் கூறியதால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன். சர்வத்திற்கு மந்தரியாமியாதலின் தாங்களே இந்த இரகசியப் பொருளை இயம்பியருளுவதற்குச் சமர்த்தராவீரென்பதாம். (54)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் இந்நான்கு வினக்கட்கும் முறைப்படி விடைகளை இந்த இரண்டாவது அத்தியாய முடிவு பரியந்தம் கூறியருளுவர். அவற்றுள், ஒரு சுலோகத்தால் முதல் வினவின் உத்தரத்தை உரைத்தருளுகின்றார் :—

ஶ்ரீ ப⁴க³வாநுவாச.

சு-ம். ப்ரஜஹாதி யதா³ காமாந் ஸர்வாந் பார்த² மநோக³தாந் ।
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்தி²தப்ரஜ்ஞஸ்ததோ³ச்யதே ॥ (55)

ப-ம். 6 ப்ரஜஹாதி 2 யதா³ 5 காமாந் 4 ஸர்வாந் 1 பார்த² 3 மநோக³தாந் 7 ஆத்மநி 9 ஏவ 8 ஆத்மநா 10 துஷ்ட: 12 ஸ்தி²தப்ரஜ்ஞ: 11 ததா³ 13 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்கால் அச்சமாதியிலிருக்கும் புருஷன் தன் மனத்தின்கண் இருக்கும் சர்வ காமங்களையும் பரித்தியாகஞ்செய்வனே, ஆன்மாவின்கண்ணே ஆன்மாவானே திருப்தனுவனே, அக்கால் அச்சமாதியிலிருக்கும் புருஷன் ஸ்திதப் பிரஞ்ஞனெனக் கூறப்பெறுவன். (55)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! காம சங்கற்பாதிய மனத்தின் விருத்தி விசேஷங்கள் யாவையுளவோ, எக்காம சங்கற்பாதி விருத்தி விசேஷங்கள் அந்நிய சாஸ்திரத்தின்கண்ணே பிரமாணம், விபர்யயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்னும் பேதத்தால் ஐந்து வகையாய்க் கூறப்பெற்றுளவோ, அக்காம சங்கற்பாதிய சர்வ விருத்திகளையும் எக்காலத்தே இவ்வறிஞன் காரணத்தைப் பாதித்துப் பரித்தியாகஞ்செய்வனே, அதாவது எக்கால் அக்காம சங்கற்பாதி சர்வ விருத்திகளுமற்றவனுவனே, அக்கால் அச்சமாதியில் இருக்கும் அறிஞன் ஸ்திதப் பிரஞ்ஞனெனப்படுவன். இப்போது அக்காம சங்கற்பாதியின்கண்ணே அனுன்மவஸ்துத் தன்மைவடிவத் தன்மையை யறைந்தருளும் வாயிலாய்ப் பரித்தியாகஞ் செய்யத் தகுதியுண்மையை நிரூபித்தருளுகின்றார். 'மநோக³தாந்' என ஹே அர்ச்சுன! அக்காம சங்கற்பாதி சர்வ தருமங்களும் மனத்தினவேயாம், ஆன்மாவினவன்றும். ஒருகால் அவை ஆன்மாவி னியற்கையாய தருமங்களாமாயின், அக்கினியின் இயற்கையாய தருமமாமுஷ்ணத்தன்மை அக்கினியிருப்ப ஒருகாலும் நீங்காததே போல, ஆன்மாவிருப்ப அக்காம சங்கற்பாதி தருமங்களும் ஒருகாலும் நீங்கமாட்டா. ஆகையால், அக்காம சங்கற்பாதிகள் ஆன்மாவின் தருமங்களன்றும், மனத்தின் தருமமேயாம். ஆகையால், அக்காரணரூப மனத்தைப் பரித்தியாகஞ்செய்யின், அக்காம சங்கற்பாதிகளைப் பரித்தியாகஞ் செய்தல் கூடும். அக்காம சங்கற்பாதிகள் மனத்தின் தருமங்களேயாம் என்பதன்கண்ணே 'காம: ஸங்கல்போ விசிகித்ஸா' என்பதாதி சுருதியே பிரமாணரூபமாம். இத்துணை கூறியதால் புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தருமம், அதருமம் என்னும் எட்டும் ஆன்மாவின் தருமம் என உடன்படும் நையாயிகமதமும் கண்டிக்கப்பட்டதாயது.

சங்கை:—ஹே பகவன்! அந்தச் சமாதியிலிருக்கும் ஸ்திதப் பிரஞ்ஞ வித்வானுடைய முகம் பிரசன்னமாகப் பிரதீதியாகும். அம்முகத்தின் பிரசன்னத்தன்மை உண்மகிழ்ச்சியின்றி உண்டாகமாட்டாது. ஆகையால், அம்முகத்தின் பிரசன்னத் தன்மைரூப ஹேதுவினுல் அந்த ஸ்திதப் பிரஞ்ஞனுடைய சந்தோஷத்தை அனுமானஞ் செய்துகொள்ளலாம். அச்சந்தோஷ விசேஷம் சர்வ விருத்திகளையும் பரித்தியாகஞ் செய்வதால் எவ்வண்ணஞ் சம்பவிக்கும்?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் 'ஆத்மந்யேவாத்மநா துஷ்ட:' என. ஹே அர்ச்சுன! அந்த வித்வானுனவன் பரமாநந்த ஸ்வரூப ஆன்மாவின் கண்ணே பரமபுருஷார்த்தப் பிராப்தியால் திருப்தியை யடைந்துளான். எவ்வனுன்ம துச்ச பதார்த்தத்தின்கண்ணும் அந்த அறிஞன் திருப்தியை யடையான். அந்தப் பரமாநந்த ஸ்வரூப ஆன்மாவின்கண்ணும் ஸ்வப்பிரகாச சைதன்யரூபமாய்

இலங்காநின்ற ஆன்மாவாலே திருப்தியை யடைந்துளான். எம்மனோவிருத்தி விசேஷத்தானும் திருப்தியை யடைந்திலான். ஆகையால், அந்த ஸ்திதப் பிரஞ்ஞ புருஷனிடத்தே மனோவிருத்தியின்றியும் மகிழ்ச்சி விசேஷமுண்டாதல் கூடும்.

ஆ-சு. “யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ஸ்ரிதா: ।
அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே.”

(பொ-ள்.) இப்புருஷனது மனத்தின்கண்ணே இராநின்ற எக்காம சங்கற்பாதிகளுளவோ, அவை யாவும் எக்கால் எஞ்சுதலின்றி நிவிருத்தியாமோ, அக்கால் இந்தஜீவன் அமிருத பாவத்தை யடைவன். அங்ஙனமே இச்சரீரத்தின் கண்ணே ஆநந்தவடிவப் பிரஹ்மத்தை அனுபவிப்பன். ஆகையால், அச்சமாதியின்கண்ணே இராநின்ற ஸ்திதப் பிரஞ்ஞ புருஷன் இவ்வகையாய இலக்ஷணவாசக சப்தங்களால் கூறப்பெறுவன் என முதல்வினாவின் விடை துணியப்பெற்றது. (55)

(அ-கை.) இப்போது சமாதியினின்றுங் கிளம்புதலை யடைந்த ஸ்திதப் பிரஞ்ஞனுடைய உரைத்தல், இருத்தல், சரித்தல் என்னும் மூன்றன்கண்ணும், மூட புருஷரின் உரைத்தல் முதலியவற்றினும் விலக்ஷணத்தன்மையைக் கூறியருளுபவராய் ஸ்ரீ பகவான் ‘கிம்ப்ரபாஷேத’ என்னும் இரண்டாவது வினாவின் விடையை இரண்டு சுலோகங்களாற் கூறியருளுகின்றார் :—

சு-ம். து:கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷு விகதஸ்ப்ருஹ: ।
வீதராகபயக்ரோத: ஸ்திததீர்முநிருச்யதே ॥ (56)

ப-ம். 1 து:கேஷு 2 அநுத்விக்நமநா: 3 ஸுகேஷு 4 விகதஸ்ப்ருஹ:, வீதராகபயக்ரோத: 7 ஸ்திததீ: 6 முநி: 8 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! துக்கங்களிடத்து உத்வேகத்தை அடையாத மனத்தையுடையவனும், விடயாநந்தங்களிடத்தே இச்சையற்றவனும், இராகம், பயம், குரோதம் அற்றவனும் ஆகிய மனனசீலன் ஸ்திதப்பிரஞ்ஞன் எனப்படுவன்.

(வி-ம்.) ஆத்யாத்மிக துக்கம், ஆதிபௌதிக துக்கம், ஆதிதைவிக துக்கம் என மூவித துக்கமுண்டாம். அவற்றுள், சோகமோகாதி ஆதிகளாற் சனித்த துக்கமும், சுரம் சூலை முதலியவற்றாற் சனித்த துக்கமும், ஆத்தியாத்மிக துக்கம் எனப்படும். புலி, பாம்பு முதலியவற்றாற் சனித்த துக்கம் ஆதிபௌதிக துக்கம் எனப்படும். அதிகக்காற்று, அதிகமழை, அக்கினியாதியாற் சனித்த துக்கம் ஆதிதைவிக துக்கம் எனப்படும். அவ்வெல்லாத் துக்கமும் இரஜோகுணத்தின் பரிணாமரூபமும் சந்தாபரூப அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷரூபமுமாம். அங்ஙனமே பாவகருமரூபப் பிராரப்தத்தாற் பிராப்தமாயவாம். அத்தகைய துக்கங்களின் அடைவின்கண்ணே, அத்துக்கங்களை நிவிருத்தி செய்வதின் அசாமர்த்தியத் தன்மையால் அடையப்படாத *உத்வேகமனம் எவனுக்கோ அவன் அநுத்விக்ந மனத்தனவன். அவிவேகி புருஷனுக்கோ அத்துக்க முண்டாங்காலத்தின் கண் இவ்வகையாய உத்வேகமுண்டாம். யான் மிகுந்த பாவான்மாவாய் இருக்கின்றேன், இங்ஙனங் கொடிய துக்கத்தை அனுபவிக்கும் எனக்குத் திக்காரமாம். இத்தகைய எனது துக்கத்தை யாவர் நீக்குவர் என்பதாம். இவ்வகையாய அநுதாபரூப மயல்வடிவ தமோகுண பரிணாமமாகிய அந்தக்கரண விருத்தி விசேஷம் உத்வேகம் எனப்படும். அவ்வுத்வேகம் அவிவேகிகட்குத் துக்கரூப பலத்தை

* உத்வேகம் = புலப்பம்.

அடைவிக்குங்கால் எங்ஙனமாமோ, அங்ஙனம் ஒருகால் அது அவ்வவிவேகி கட்குப் பாவகருமத்தைச் செய்யுங் காலத்தே உண்டாகுமாயின், அப்பாவ கருமப் பிரவிருத்தியின் பிரதிபந்தகமாதலின் அவ்வுத்வேகம் சபலமாகும்; ஆனால் அப்பாவ கருமங்களைச் செய்யுங் காலத்தே அவ்வவிவேகிகட்கு அவ்வுத்வேகம் உண்டாவதின்றாம். அப்பாவகருமங்களின் துக்கரூப பல போககாலத்தே அவ் வுத்வேகம் உண்டாயினும், வீட்டில் அக்கினி பற்றியபின் அதனை யணைத்துச் சாந்த மாக்கும் பொருட்டுக் கூபந்தோண்டல் பயனற்றதாமாறுபோலப் பயனற்றதே யாகும். ஏனெனின், பாவவடிவ காரணம் இருப்பின் துக்கரூப காரியம் அவசிய மாய் உற்பன்னமாம். அக்காலத்தே உத்வேக மாத்திரத்தால் அத்துக்கத்தின் நிவிருத்தி உண்டாகமாட்டாது. அத்துக்கத்தின் பாவரூப காரணம் இருப்பினும், எனக்கேன் துக்கமுண்டாம் என்னும் அவிவேகம் மயல்வடிவமாம். ஆகையால், அம்மயல்வடிவ அவிவேகம் அந்த ஸ்திதப் பிரஞ்ஞனிடத்துச் சம்பவிக்கமாட் டாது. அந்த வித்வானுடைய சரீரமும் புண்ணிய பாவகருமங்களால் ஆக்கப் பெற்றதாம். ஆகையால், அந்தப் பிராரப்த பாவகருமம் அவ்வித்வானுக்குக் கேவ லந் துக்கமாத்திரத்தையே அடைவிக்கும்; ஆனால், அத்துக்க அடைவின் பிற்கா லத்தே அவ்வவிவேக ரூபமயலின் அடைவை உண்டாக்கமாட்டாது.

சங்கை:—ஹே பகவன்! துக்க அடைவின் பிற்காலத்தே உண்டாகும் அவி வேகரூப மயலும் வேறு துக்கத்தின் காரணமாகும்; ஆகையால், அவ்வவிவேக ரூப மயலும் வேறு பிராரப்த கருமத்தானே யுண்டாம். ஆகையால், அறிஞனுக் கும் பிராரப்த கருமவயத்தால் அவிவேகரூபப் பிரமம் (மயல்) அவசியமுண்டாம்.

சமாதானம்:—ஹே அர்ச்சுன! அம்மயலின் உபாதான காரணமாய அஞ்ஞா னம் ஸ்திதப் பிரஞ்ஞனுக்கு நாசமே யாகிவிட்டது. ஆகையால், அந்த ஸ்திதப் பிரஞ்ஞனிடத்தே அவ்வவிவேகரூப மயல் சம்பவிப்பதின்றாம். அங்ஙனமே அவ் வறிஞனிடத்தே அம்மயலாற் சனித்த துக்கப் பிராப்தியைச் செய்விக்கும் பிராரப்த கருமமும் இன்றாம். எவ்வாற்றாலேனும் அவ்வறிஞனுடைய தேகயாத்திரை மாத் திரையின் நிர்வாகத்தைச் செய்யும் பிராரப்த கருமபலத்தின் போகம் மயலின்றே னும், பாதிதானு விருத்தியினால் அவ்வறிஞனிடத்தே சம்பவிக்கும் என்னுமிவ் வார்த்தையை மேல்விஸ்தாரமாய் விளம்புவேம். அல்லது, அவ்வறிஞன் எங்ங னந் துக்க அடைவின்கண்ணே உத்வேகமற்றவனாவனோ, அங்ஙனம் சுக அடை வின்கண்ணே இச்சையு மற்றவனாவன். ஆண்டுச் சத்துவகுணத்தின் பரிணாமரூப அந்தக் கரணத்தின் பிரீதிவடிவ விருத்தி விசேஷஞ் சுகமெனப்படும். அச்சுகமுந் துக்கத்தைப்போல ஆத்தியாத்மிக சுகம், ஆதிபௌதிகசுகம், ஆதிதைவிகசுகம் என்னும் வேறு பாட்டால் மூவகைத்தாம். அவற்றுள், பிரியவஸ்துவின் தியா னத்தானும், பாண்டித்தியாதியின் அபிமானத்தானும் உண்டாய சுகம் ஆத்தியாத் மிக சுகமெனப்படும். ஸ்திரீ புத்திர மித்திராதியரால் உண்டாகிய சுகம் ஆதிபௌ திக சுகமெனப்படும். மந்தமந்தமாய மாருதம் மழை முதலியவற்றாலுண்டாஞ் சுகம் ஆதிதைவிக சுகமெனப்படும். அல்லது, இக்கீதா சாஸ்திரத்தின் பதினெட் டாவது அத்தியாயத்தே கூறிய ரீதியாய்ச் சாத்விகம், இராஜசம், தாமசம் என்னும் வேறுபாட்டால் அச்சுகம் மூவகைத்தாம். அல்லது, அந்நிய சாஸ்திரரீதியாய், வைஷயிக, ஆபிமானிக, மானோரதிக, ஆப்யாசிக வேறுபாட்டால் அச்சுகம் நான்கு வகைத்தாம். அவற்றுள் விஷய சம்பந்தத்தால் உண்டாஞ் சுகம் வைஷயிக சுக மெனப்படும். இராஜ்ய பாண்டித்யாதிகளின் அபிமானத்தால் உண்டாகிய சுகம் ஆபிமானிக சுகமெனப்படும். பிரியவிஷயங்களைத் தியானித்தலால் உண்டாஞ் சுகம் மானோரதிக சுகமெனப்படும். சூரியபகவானுடைய நமஸ்காராதிகளால் உண்டாஞ் சுகம் ஆப்யாசிக சுகமெனப்படும். இங்ஙனம் அநேகம் வகையாய சுகங்களை அறி

விக்கும்பொருட்டு, ஸ்ரீ பகவானனவர் 'ஸ௱வெஷு' என்னும் பன்மை வசனத்தைப் பகர்ந்தருளினர். அவ்வெல்லாச் சுகங்களும் புண்ணிய கருமரூபப் பிராரப்தத்தால் பிராப்தமாம். அவ்வெல்லாச் சுகங்களிடத்தும் அவ்வறிஞன் இச்சையற்றவனுவன். ஆண்டு, அவ்வச்சுக அனுபவகாலத்தின்கண்ணே அவ்வச்சுக சமானஜாதியையுடைய வேறு சுகத்தை அடைவிக்கும் தருமத்தை அனுஷ்டானஞ்செய்யாது, அவ்வச்சுக அடைவின் ஆசைவடிவ தாமச அந்தக்கரண விருத்தி விசேஷம் இச்சை எனப்படும். அவ்விச்சை மயல்வடிவமாம். அத்தகைய மயல்வடிவ இச்சை அவிவேகிகளிடத்தே உற்பன்னமாம். விவேகிகளிடத்தே அம்மயல்வடிவ இச்சையுண்டாகமாட்டாது. ஆகையால், இப்பொருள் துணியப்பெற்றதாம் :—எங்ஙனம் பாவ கருமரூப காரணமிருப்பினும், துக்கரூப காரியம் எனக்குண்டாகாதொழிக என்னும் பயனற்ற ஆகாங்க்ஷைவடிவ உத்வேகம் விவேகியினிடத்தே சம்பவிக்கமாட்டாதோ, அங்ஙனம் புண்ணிய கருமரூப காரணம் இல்லாவிடினும், சுகரூபகாரியம் எனக்குண்டாகுக என்னும் பயனற்ற ஆகாங்க்ஷைவடிவ திருஷ்ணை என்னும் நாமம் படைத்த இச்சையும் அந்த விவேகியினிடத்தே சம்பவிக்கமாட்டாது. பிராரப்த புண்ணிய கருமமோ, அவ்வித்வானுக்குக் கேவலம் சுகமாத்திரத்தையே அடைவிக்கும் அன்றிச் சிறிதும் அம்மயல் வடிவ இச்சையை அடைவிக்கமாட்டாது. அல்லது, மகிழ்ச்சி வடிவ அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷம், இச்சை எனப்படும். ஆண்டு எவ்வெனக்கு இத்தகைய மேலாய சுகங் கிடைத்ததோ, அவ்வியான் தன்னியனேன். மூவுலகத்தின்கண்ணும் எனக்குச் சமான சுகமுடையவர் எவருமின்றாம். எவ்வுபாயத்தானும் இவ்வெனது சுகம் அழிவுறாமல் இருக்கவேண்டும், என்பனமுதலிய வடிவமாய் விரிந்த அந்தக்கரணத்தின் தாமசவிருத்தி விசேஷம், மகிழ்ச்சி எனப்படும். அம்மகிழ்ச்சிவடிவ இச்சையும் மயல் வடிவமேயாம். இச்சை சப்தத்தின் இப்பொருளையே ஸ்ரீ பகவான் "ஹவ்ரஷெஹஷ்ரியம் வ்ராவஹ்ரொஷி ஜெத்ராவஹ் ஶாவிஂயஷ" என்னும் சுலோகத்தின்கண்ணே மேற் கூறியருளுவர். அம்மகிழ்ச்சிவடிவ மயனும், அவ்வறிஞனிடத்தே சம்பவிக்கமாட்டாது. மீண்டும் அவ்வறிஞன் எத்தகையன் என்னின், இராகபயக் குரோதங்கள் அற்றவனுவன். அவற்றுள், இவ்விஷயம் மிகவும் சுந்தரமாயிருக்கின்றது என்னும் சோபனபுத்தி வடிவ அத்தியாசத்தால் உண்டாகிய இரஞ்சனவடிவ அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷம் இராகமெனப்படும்; இதுவே அத்தியந்தம் அபினிவேசம் எனப்படும். இந்த இராகத்திற்கு விஷயமாய பதார்த்தத்தை நாசஞ்செய்யுங் காரணமொன்றடையின், அதனை நீக்குவதில் தனக்கு ஆற்றலின்றென்று எண்ணுபவனுடைய தீனத்தன்மைவடிவ அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷம் பயமாம். அந்த இராகத்திற்கு விஷயமாகிய பிரிய வஸ்துவை நாசஞ்செய்யுங் காரணம் ஒன்று அடையுமாயின், அதனை நீக்குவதில் தனக்கு ஆற்றலின்றென்று எண்ணுபவனுடைய பேரெரிச்சல்வடிவ அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷம், குரோதம் எனப்படும். அந்த இராகம், பயம், குரோதம் என்னும் மூன்றும் மயல் வடிவமேயாம். அத்தகைய மயல்வடிவ இராகம், பயம், குரோதம் என்னும் மூன்றும் எவன்பானின்றும் நீங்கியிருக்கின்றதோ, அவன் வீதராக பயக்குரோதன் எனப்படுவன். இவ்வாறாய மனனசீல சந்யாசி ஸ்திதப்பிரஞ்ஞனெனப்படுவன். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும் :—இங்ஙனமாய ஸ்திதப் பிரஞ்ஞன் தனது உள்ளனுபவத்தை வெளிப்படுத்தித் தனது சீடரைச் சிக்ஷிக்கும்பொருட்டு, உத்வேகமற்ற தன்மையையும், இச்சையற்ற தன்மையையும், இராக பயக்குரோதமற்ற தன்மையையும் கூறும் வசனம் யாதுளதோ அதனையே கூறுநிற்பன். அதாவது என்னைப்போல வேறு முமுக்ஷுவுந் துக்கத்திடத்தே உத்வேகஞ் செய்யா

தொழிக, சுகத்திடத்தே இச்சைசெய்யாதொழிக, இராக பயக்குரோதமற்றவனாகுக வென்பதாம். (56)

(அ-கை.) அன்றியும்:—

சு-ம். யஃஸவ்ஹ்ரநபிஸ்நேஹஸ் தத்தத்ப்ராப்ய ஶுபாஶுபம் ।
நாபிநந்தி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ (57)

ப-ம். 1 யஃ 2 ஸர்வத்ர 3 அநபிஸ்நேஹஃ 4 தத் 7 ப்ராப்ய 6 ஶுபாஶுபம் 8 ந 9 அபிநந்தி 10 ந 11 த்வேஷ்டி 12 தஸ்ய 13 ப்ரஜ்ஞா 14 ப்ரதிஷ்டிதா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வறிஞன் தேகாதி சர்வ பதார்த்தங்களிடத்தும் நேய மற்றவனாவனோ, அவ்வப்பிரிய அப்பிரிய வஸ்துக்களை யடைந்தும் புகழானோ, இகழானோ, (மகிழானோ, வாடானோ) அவ்வறிஞனுடைய பிரஞ்ஞை நிலைபெற்றதாகும். (57)

(வி-ம்.) அறிஞனாகிய முனிவனானவன், தனது தேக ஜீவனாதி சர்வ பதார்த்தங்களிடத்தும் நேயமுடையவனாகான். ஈண்டு எஃதிருப்பின், அந்நிய வஸ்துவின் ஹானி, விருத்திகள் தன்னிடத்தே ஆரோபணஞ்செய்யப்படுமோ, அத்தகைய அவ்வந்நிய வஸ்துவை விஷயமாகவுடைய அந்தக் கரணத்தின் தாமச விருத்தி விசேஷம் நேயமாம்; அதுவே பிரேமையெனப்படும். அந்நேயவயத்தானே இவ்வுலகர் தமது மனைவி, மைந்தர், தனம் முதலிய பதார்த்தங்களின் ஹானி, விருத்தியைத் தம்மிடத்தே எண்ணுவர். அந்நேயத்தால் எவ்வாற்றானுங் கட்டுப்படாதோன் அநபிஸ்நேகன் எனப்படுவன். அத்தகைய அநபிஸ்நேக அறிஞனும், பரமாநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே எல்லாவகையானும் நேயமுடையவனாவன். ஏனெனின், தேகாதி அனான்ம பதார்த்தங்களின் நேய பரித்தியாகம் அந்தரான்மாவின் நேயத்தின்பொருட்டேயாம். ஆன்மாவின் நேயமின்றிப் பாகிய பதார்த்தத்தின் நேயத்தைப் பரித்தியாகஞ்செய்தல் பயனற்றதாம். எவ்வறிஞனானவன், புண்ணிய கருமவடிவ பிராரப்தம் அடைவித்த சுககாரணரூபப் பிரிய விஷயத்தை யடைந்தும், மகிழ்ச்சி விசேஷ வாயிலாய் அவ்விஷயங்களைப் பிரசம்சை செய்வதின்றோ; பாவகருமரூபப் பிராரப்தமடைவித்த துக்ககாரணரூப அப்பிரிய விஷயங்களையடைந்து, அசூயைவாயிலாய் அவ்வறிஞனானவன் அவ்வப்பிரிய விஷயங்களை இகழான். கருத்திதுவாம்:—அஞ்ஞானிகட்குச் சுகஹேது வடிவமான தமது மனைவி, மைந்தர் முதலிய பதார்த்தங்கள் சுபவிஷயங்களாம். அந்தச் சுபவிஷயங்களின் குணத்தைக் கூறுவதின்கண்ணே முயல்விக்கும். அவர்தம் அந்தக்கரணத்தின் பிராந்திரூப தாமசவிருத்தி விசேஷம், அபிநந்தனம் எனப்படும். ஆண்டு அம்மனைவி, மைந்தர் முதலிய பதார்த்தங்களின் குணங்களைக் கூறல், அந்நிய புருஷர்களின் பிரீதியின்பொருட்டன்றாம்; ஆகையால், பயனற்றதேயாம். இவ்வண்ணம் அந்நிய புருஷரின் வித்தை, பிரதிஷ்டை முதலிய குணங்கள் ஈரிஷையை உண்டாக்கும் வாயிலாய் அவ்வஞ்ஞர்களின் துக்கத்திற்கே காரணமாம். ஆகையால், அவ்வந்நியரின் வித்தை முதலிய குணங்கள் அவர்களைக்குறித்து அசுப விஷயங்களாம். அவ்வசுப விஷயங்களின் நிந்தை முதலியவற்றின்கண்ணே முயல்விக்கும் அவ்வஞ்ஞானிகளின் அந்தக்கரண மயல் வடிவ விருத்தி விசேஷம், துவேஷம் எனப்படும். அந்தத் துவேஷமும், தமோகுணத்தின் பரிணாமமாம். அவ்வஞ்ஞானி செய்த நிந்தை அவ்வந்நிய புருஷரின் வித்தை முதலிய மேலாய தன்மையை நிவாரணஞ் செய்யமாட்டாது. ஆகையால், அந்நிந்தை பயனற்றதேயாம். ஆகையால், அவ்வபிநந்தனமும், துவேஷமும் மயல் வடிவமாம். அங்ஙனமே தமோகுண பரிணாமமாம். அத்தகைய அபிநந்த

னம், துவேஷம் என்னும் இரண்டும் மயலற்ற சுத்த அந்தக்கரணமுடைய ஸ்திதப் பிரஞ்ஞ புருஷனிடத்தே எங்ஙனஞ் சம்பவிக்கும்? மற்றோ சம்பவிக்கமாட்டா. அந்தத் துவேஷாதி தாமசவிருத்திகளே, அந்தக்கரணத்தைச் சுழற்றுவிப்பனவாம். அந்தத் துவேஷாதிகளின்றாயின், அந்த நேயமற்ற மகிழ்ச்சி வாட்டமற்ற வித்துவானுப முனிவனுக்கு, அந்த ஆன்ம தத்துவத்தை விஷயமாயுடைய பிரஞ்ஞையானது பிரதிஷ்டிதமேயாம். (நன்னிலை பெற்றதேயாம்.) அதாவது, மோக்ஷரூப பலத்தின்கண்ணே இனிது முடிபை உடையதாம்; அம்முனிவனே, ஸ்திதப்பிரஞ்ஞன் எனப்படுவன். இவ்வண்ணம் வேறு முமுக்ஷுவும் சர்வ பதார்த்தங்களினும், நேயமற்றவனாய்ப் பிரிய விஷயங்களை அடைந்தும், அவற்றைப் புகழானாய், அப்பிரிய விஷயங்களை அடைந்தும், அவற்றை இகழானாய் இருப்பன். ஆதலின், இப்பொருள் துணியப்பெறும்:—அஞ்ஞானியானவன் சுப, அசுப பதார்த்தங்களின் பிராப்திகாலத்தின்கண்ணே, பிரசம்சை வடிவ வசனங்களையும், நிந்தை வடிவ வசனங்களையும் கூறுவதேபோல; அவ்வித்துவானானவன் அந்தச் சுப, அசுப பதார்த்தங்களின் பிராப்திகாலத்தே பிரசம்சா வசனங்களையும் நிந்தை வசனங்களையுங் கூறான். மற்றோ, அந்தச் சுபம், அசுபம் என்னும் இரண்டின் பிராப்திகாலத்தே, அவ்வறிஞனானவன் உதாசீனனாகியே இருப்பன். (57)

(அ-கை.) இப்போது ‘கிஞாஸீத’ என்னும் இம்மூன்றாவது வினாவின் விடையை ஸ்ரீ பகவான், ஆறு சுலோகங்களாற் கூறியருளுகின்றார். ஆண்டு, பிராரப்த கருமவசத்தால் சமாதியினின்றுங் கிளம்பி விக்ஷேபத்தை அடைந்த இந்திரியங்களை மீண்டும் உண் முகப்படுத்திச் சமாதியின் பொருட்டே, அந்த ஸ்திதப் பிரஞ்ஞனுடைய ஸ்திதி உண்டாம் என்னும் இப்பொருளை நிரூபணஞ் செய்தருளும்பொருட்டு, ஸ்ரீ பகவான், கூறியருளுகின்றார்:—

சு-ம். யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ(அ)ங்கானீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்தேப்யஸ்தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ (58)

ப-ம். 5 யதா 10 ஸம்ஹரதே 9 அ 4 அயம் 1 கூர்ம: 2 அங்கானி 3 இவ 6 ஸர்வஶ: 7 இந்த்ரியாணி 8 இந்த்ரியார்தேப்ய: 11 தஸ்ய 12 ப்ரஜ்ஞா 13 ப்ரதிஷ்டிதா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனம், கூர்மம் தனது சிரம், கால் முதலிய அங்கங்களைச் சுருக்கிக்கொள்ளுமோ; அங்ஙனம் இவ்வறிஞன் எக்காலத்தே, தனது எல்லாப் பொறிகளையும் சப்தாதி விஷயங்களினின்றும் மீண்டும் சுருக்கிக்கொள்வனோ, அக்காலத்தே இவ்வறிஞனது பிரஞ்ஞை நிலைபெற்றதாம். (58)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனம் கூர்மம் அந்நியத்தின் பயத்தால் தனது தலை, கால் முதலிய சர்வ அங்கங்களையும், தனது சரீரத்தின்கண்ணே சங்கோசஞ் செய்துகொள்ளுமோ, அங்ஙனம் சமாதியினின்றும் வெளிக்கிளம்பிய இவ்வறிஞன் எக்காலத்தே இராகாதி தோஷ அடைவின் பயத்தாலும்; சமாதி விக்கின பயத்தாலும், தனது சுரோத்திராதி சர்வ இந்திரியங்களையும் சப்தாதி சர்வ விஷயங்களினின்றும் மீண்டுஞ் சங்கோசஞ் செய்துகொள்வனோ; அக்காலத்தே அவ்வறிஞனுடைய அந்தப் பிரஞ்ஞை, பிரதிஷ்டிதமாம். ஆண்டு, முந்திய இருசுலோகங்களால் சமாதியினின்றும்,வெளிக்கிளம்பிய தசையின்கண்ணும், அவ்வறிஞனிடத்தே சர்வ தாமச விருத்திகளின் அபாவம் அறைந்தருளப்பெற்றது. இப்போது இச்சுலோகத்தால், மீண்டும் சமாதி அவஸ்தையின்கண்ணே அச்சகல விருத்திகளின் அபாவம் அறைந்தருளப்பெற்றது. இத்துணை முன்னினும் ஈண்டு விலக்ஷணத் தன்மையுளது. (58)

(அ-கை.) ஹே பகவன்! சப்தாதி விஷயங்களினின்றும் சுரோத்திராதி இந்திரியங்களின் நிவிருத்தியானது; ஒருகால் ஸ்திதப்பிரஞ்ஞத்தன்மைக் கேது வாகுமாயின், ரோகாதி நிமித்த வயத்தால் மூடர்களின் சுரோத்திராதி இந்திரியங்களும், சப்தாதி விஷயங்களினின்றும் நிவிருத்தி அடைதல் காணவருகின்ற தாதலின், அந்த ரோகாதிகளையுடைய சர்வ மூடரும், ஸ்திதப்பிரஞ்ஞர் ஆதல் வேண்டும் என அர்ச்சுனன் சங்கிப்ப; ஸ்ரீ பகவான் உத்தரம் அருளுகின்றார் :—

சு-ம். விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹிந: ।
ரஸவர்ஜம் ரஸோऽப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥ (59)

ப-ம். 3 விஷயா: 4 விநிவர்த்தந்தே 1 நிராஹாரஸ்ய 2 தேஹிந: 5 ரஸவர்ஜம் 9 ரஸ: 10 அபி 6 அஸ்ய 7 பரம் 8 த்ருஷ்ட்வா 11 நிவர்த்ததே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்திரியங்களால் விஷயங்களைக் கவர்வதில் ஆற்ற வின்றிய நோயாளிக்குச் சப்தாதி விஷயங்கள் நீங்கிவிடும்; ஆனால், அவ்விஷயங் களின் இச்சைநீக்கம் உண்டாகமாட்டாது. இந்தஸ்திதப்பிரஞ்ஞ புருஷனுக்கோ, பரப்பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் அந்த இராகமும் நீங்கிவிடும். (59)

(வி-ம்.) சுரோத்திராதி இந்திரியங்களால், சப்தாதி விஷயங்களைக் கவர்வ தில் ஆற்றலற்ற தேகாபிமானமுடைய நோயாளியாகிய மூட புருஷனுக்கும், காஷ்டத்தைப்போலச் சர்வ இந்திரியங்களின் சேஷ்டையற்ற தவத்தை யுடைய வனுக்கும், அச்சப்தாதி விஷயங்கள் நீங்கிவிடும்; ஆனால், அவ்வஞ்ஞானிகட்கு அச் சப்தாதி விஷயங்களின் இராகம் நீங்கமாட்டாது; மற்றே, அந்த விஷயங்களின் இராகம் அக்காலத்தும் அவ்வஞ்ஞானிகட்கு இருந்துகொண்டிருக்கும். இந்த ஸ்திதப்பிரஞ்ஞனாகிய அறிஞனுக்கோ, பரமாநந்த ஸ்வரூபப் பிரஹ்மம் யான் என் னும் சாக்ஷாத்காரத்தால் அச்சப்தாதி விஷயங்களும், அவற்றின் இச்சையும் நீங்கிவிடும்; இவ்வார்த்தை 'யாவாநர்த்த உதபாநே' என்னும் சுலோகத்தின் கண்ணே, முன்னர்க் கூறியருளப்பெற்றது. ஆகையால், இராகத்தோடு கூடிய விஷயங்களின் நிவிருத்தியே, அந்த ஸ்திதப்பிரஞ்ஞனுடைய இலக்கணமாம். அவ்விலக்கணத்திற்கு நோய் முதலியவற்றோடு கூடிய மூட புருஷனிடத்தே, அதி வியாப்தி உண்டாகமாட்டாது. ஆதலின், இப்பொருள் துணியப்பெறும் :—எக் காரணத்தால், பரமான்மாவின் உண்மைச் சாக்ஷாத்காரமின்றி இராக சகித விஷ யங்களின் நிவிருத்தி உண்டாகமாட்டாதோ, அக்காரணத்தால் இவ்வதிகாரியான வன் அந்த இராக சகித விஷயங்களை நீக்குவதும், உண்மையாய ஞான வடிவின தும் ஆய பிரஞ்ஞையின் திரத்தன்மையை, அவசியமாய்ச் சம்பாதனஞ் செய்தல் வேண்டும். (59)

(அ-கை.) ஆண்டு, அந்தப் பிரஞ்ஞையின் ஸ்திரத்தன்மையின்கண்ணே பாகிய இந்திரியங்களின் நிக்கிரகமும், அந்தர மனத்தின் நிக்கிரகமும் அசாதா ரண காரணங்களாம். அவ்விரண்டின் அபாவம் உளதாகவே, அந்தப் பிரஞ்ஞை யின் அழிவுண்டாதல் காணவருகின்றது. இப்பொருளைக் கூறியருளும்பொரு ட்டு முதலில், பாகிய இந்திரியங்களைத் தடைப்படுத்தாதிருப்பதின்கண்ணே தோஷத்தை வருணித்தருளுகின்றார் :—

சு-ம். யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித: ।
இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந: ॥ (60)

ப-ம். 2 யதத:, ஹி 6 அபி 1 கௌந்தேய 4 புருஷஸ்ய 3 விபஸ்சித: 8 இந்த்ரியாணி 7 ப்ரமாதீநி 10 ஹரந்தி 9 ப்ரஸபம் 5 மந:.

(அ-ம்.) ஹே குந்தியின் மைந்தனாகிய அர்ச்சுன! முயலும் விவேகி புருஷ னுடைய மனத்தையும் அத்தியந்தம் பலத்தையுடைய சுரோத்திராதி இந்திரியங் கள் பலாத்காரமாய் விகாரத்தை அடையுமாறு செய்விக்கும். (60)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அடிக்கடி சப்தாதி விஷயங்களிடத்தே தோஷ தரிசனவடிவ முயற்சியைச் செய்யும் அத்தியந்த விவேகமுற்ற புருஷனுடைய கண மாத்திரை நிர்விகாரஞ் செய்யப்பட்ட மனத்தையும், இந்தச் சுரோத்திராதி இந்திரி யங்கள் நானாவகையாய விகாரங்களை அடையுமாறு செய்விக்கும்.

சங்கை :—ஹே பகவன்! அவ்விகாரத்தின் விரோதியாய விவேகமிருப்பின், அந்த விவேகியின் மனத்தை அவ்விந்திரியம் விகாரம் அடையுமாறு செய்விக்க முடியாதன்றோ?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் அவ்விந்திரியங்களின் மகிமையைக் கூறியருளு கின்றார் :—'ப்ரமாதீநி' என. ஹே அர்ச்சுன! இந்தச் சுரோத்திராதி இந்திரியங் கள் அத்தியந்தம் பலமுடையவாம். ஆதலின் இவ்விந்திரியங்கள் அந்த விவேகத்தை வெற்றிகொள்வதில் ஆற்றலுற்றனவாம். ஆகையால், அந்த விசாரமுடைய புருட வடிவ சுவாமி கண்டுகொண்டிருப்பவே, அந்த விவேகரூப இரக்ஷகன் இருந்த போதினும், யாவரையும் வெற்றிகொண்டு இச்சுரோத்திராதி இந்திரியங்கள்; அந்த விவேக ஜன்னியப் பிரஞ்ஞையின்கண்ணே அடைவுற்ற மனத்தை அந்தப் பிரஞ் ஞையினின்றும் நீக்கித் தமது சப்தாதி விஷயங்களிடத்தே பலாத்காரமாய் அடை யுமாறு செய்விக்கும். ஈண்டு :—'யததோஹி' என்னும் இவ்வசனத்தின்கண்ணே இராநின்ற "ஹி" என்னுஞ் சப்தத்தால் ஸ்ரீ பகவானானவர், இவ்வுலகப் பிரசித்தி யையுணர்த்தியருளினர். இவ்வார்த்தை உலகின்கண்ணும் பிரசித்தமாம் :—அதா வது, ஒரு பலவானாகிய பகைவனானவன் தனிகரையும், தனத்தைக் காப்பாற்றும் புருஷரையும், திரஸ்காரஞ்செய்து அவர்கள் கண்டுகொண்டிருப்பவே பலாத்கார மாய் அவருடைய தனமுதலிய பதார்த்தங்களைக்கொண்டு செல்வன். அதுபோல, இந்தச் சுரோத்திராதி இந்திரியங்களும், சப்தாதி விஷயங்களின் சமீபத்தை யடைந்து, அந்த விவேகாதிகளை வெற்றிகொண்டு பலாத்காரமாய் மனத்தை அவ் விஷயங்களிடத்தேகொண்டு செல்லுமென்பதாம். (60)

(அ-கை.) ஹே பகவன்! அந்தச் சுரோத்திராதி இந்திரியங்கள் இவ்வாறு பலமுடையனவாயின், அவ்விந்திரியங்களின் நிரோதம் என்னாலெங்ஙனங்கூடும்; என அருச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான், அவ்விந்திரியங்களின் நிரோத உபாயத்தை நிகழ்த்தியருளுகின்றார் :—

சு-ம். தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர: ।
வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ (61)

ப-ம். 2 தாநி 3 ஸர்வாணி 4 ஸம்யம்ய 5 யுக்த: 6 ஆஸீத 1 மத்பர: 9 வஶே, ஹி 7 யஸ்ய 8 இந்த்ரியாணி 10 தஸ்ய 11 ப்ரஜ்ஞா 12 ப்ரதிஷ்டிதா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எனது அனன்னிய பக்தன், அவ்வெல்லா இந்திரி யங்களையும் வயப்படுத்தி; உண் முகப்படுத்திய மனத்தை யுடையவனாயிருப்பன். எப்புருஷனுக்கு இவ்விந்திரியம் வயமாய் வயங்குமோ, அப்புருஷனுடைய பிரஞ் ஞை நிலையுடையதாகும். (61)

(வி-ம்.) ஞான சாதனரூப சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியங்களையும், கிரியா சாதனரூப வாக்காதி ஐந்து கருமேந்திரியங்களையும், தன்வயப்படுத்தி அதாவது, சப்தாதி விஷயங்களினின்றும் அவ்விந்திரியங்களைத் தடைப்படுத்தி,

இவ்விவேகியானவன் மனோ நிக்கிரகமுடையவனாய் நிலைபெற்றிருப்பன்; அதாவது உள்ளும் வெளியுமுள்ள உலக வியவகாரங்கள் யாவு முறுதவனாயிருப்பன் என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் அவ்விந்திரியங்களை மகா பலமுடையனவெனக் கூறியருளினீர்கள்; அத்தகைய பலமுடைய இந்திரியங்களை தன்வயப்படுத்தல் எங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—'மத்பர:' என. ஹே அர்ச்சுன! எல்லாப் பிராணிகட்கும் ஆன்மரூபமாயிலங்கும் வாசுதேவனாகிய யானே; யாவரினும் மேலாயவன் என எவன் எண்ணுகின்றனனோ, அவன் மத்பரனவன். அத்தகைய எனது அனன்னிய பக்தனே அவ்விந்திரியங்களைத் தன் வயப்படுத்துவன்.

ஆ-சு. நவாஸுதேவ ஹக்தாநா உஶுஹம் விதூதெக்வசித்.

(பொ-ள்.) எல்லாப் பிராணிகட்கும், ஆன்மவடிவமாகிய வாசுதேவனுடைய அநந்நிய பக்தர்கட்கு எக்காரியத்தின்கண்ணும் அசுப அடைவுண்டாகமாட்டாது; மற்றோ, சருவ காரியமும் அவர்கட்கு விக்கினமின்றிச் சமாப்தமாகும் என்பதாம். இவ்வார்த்தை உலகின்கண்ணும் பிரசித்தமாம்:—இப்புருஷன் எதுவரை ஒரு பலமுடைய மகாராஜாவை ஆசிரயஞ் செய்யவில்லையோ, அதுவரையுமே அப்புருஷனுக்கு அந்நிய சத்துரு துக்கத்தையடைவிப்பன். இப்புருஷன் எப்போது அந்தப் பலமுடைய மகாராஜாவின் ஆசிரயத்தையடைவனோ, அப்போது இப்புருஷன், இப்போது மகாராஜாவின் ஆசிரயத்தைப் பெற்றுளானென வெண்ணி, அச்சத்துருவானவன் தானே இவன் வசம் ஆய்விடுவன். அதுபோல, இவ்வதிகாரி புருஷனும் எதுவரை சர்வாந்தரியாமியாகிய ஈஸ்வரரது சரணத்தை அடையவில்லையோ; அதுவரையுமே இந்தச் சுரோத்திராதி இந்திரியங்கள் இவ்வதிகாரி புருஷனைப் பகிர்முகப்படுத்தும். இவன் எப்போது அந்தரியாமியாகிய ஈஸ்வரரது சரணத்தையடைவனோ, அப்போது, இவ்வதிகாரியானவன் இப்போது அந்தரியாமியாகிய ஈஸ்வரரது சரணத்தை அடைந்துளான் என எண்ணி இந்திரியங்கள் தாமே அவ்வதிகாரியின் வசமாய்விடும். இவ்வெல்லாப் பொருளையும் 'வஶெஹி' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற 'ஹி' என்னுஞ் சப்தத்தால் ஸ்ரீ பகவானவர் குறிப்பித்தருளினர். இத்தகைய பகவற் பக்தியின் மகா மகிமையை மேல் விஸ்தாரமாய் நிரூபிப்பாம். இப்போது, ஸ்ரீ பகவான் அவ்விந்திரியங்களின் வசத்தைச் செய்வதாலுண்டாம் பயனைத் திருவாய் மலர்ந்தருளுகின்றார். 'வஶெஹி' என. ஹே அர்ச்சுன! எவ்வறிஞனுக்கு அந்தச் சுரோத்திராதி இந்திரியங்கள் வசமாமோ, அவ்வறிஞனுடைய அந்தச் சாஸ்திர ஜன்னியப் பிரஞ்ஞை நிலைபெற்ற தன்மையையடையும். ஆகையால் (கிஶாஸீத) என்னும் மூன்றாவது வினாவிற்கு இவ்விடை துணியப்பெற்றதாம்:—அவ்வறிஞனவன் சுரோத்திர முதலிய சர்வ இந்திரியங்களையும் தனது வயப்படுத்தி நிலைபெற்றிருப்பன் என்பதாம். (61)

(அ-கை.) ஹே பகவன்! மனத்தின்கண்ணே இருக்கும் அநர்த்த காரணத் தன்மையானது பாகிய இந்திரியங்களின் பிரவிருத்தி வாயிலாகவேயாம். இயல்பாயோ, மனத்தின்கண்ணே அநர்த்த காரணத்தன்மையின்றாம். ஆகையால், எப்புருஷன் சுரோத்திராதி பாகிய இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்கின்றனனோ, அப்புருஷனுக்குப் பற்பிடுங்கப்பட்ட பாம்பைப்போல மனத்தை நிக்கிரகஞ்செய்யாவிடினும், எவ்வனர்த்தத்தின் அடைவு முண்டாகமாட்டாது. மற்றோ, பாகியப் பிரவிருத்தியின் அபாவத்தானே அப்புருஷன் கிருதகிருத்தியனாவன். ஆகையால், பூர்வ சுலோகத்தின்கண்ணே, 'யுக்த ஆஸீத மத்பர:' என்னும் திருவாய்மொழி

களால் தாங்கள் கூறிபருளிய மனத்தின் நிக்கிரகம் பயனற்றதேயாம், என அர்ச்சுனன் சங்கிப்ப ; ஸ்ரீ பகவான் சர்வஇந்திரியங்களையும் நிக்கிரகஞ்செய்யும் புருஷனுக்கும் மனம் நிக்கிரகப்படா திருக்குமாயின், சர்வ அநர்த்தத்தினடைவுண்டாவதை இரண்டு சுலோகங்களால் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—

சு-ம். த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே ।
ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோऽபிஜாயதே ॥ (62)
க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: ।
ஸ்ம்ருதிப்ரம்ஶாத் புத்திநாஶோ புத்திநாஶாத் ப்ரணஶ்யதி ॥ (63)

ப-ம். 2 த்யாயத: 1 விஷயாந் 3 பும்ஸ: 5 ஸங்க: 4 தேஷு 6 உபஜாயதே 8 காம: 10 காமாத் 11 க்ரோத: 12 அபிஜாயதே 13 க்ரோதாத் 15 பவதி 14ஸம்மோஹ: 16 ஸம்மோஹாத் 17 ஸ்ம்ருதிவிப்ரம: 18 ஸ்ம்ருதிப்ரம்ஶாத் 19 புத்திநாஶ: 20 புத்திநாஶாத் 21 ப்ரணஶ்யதி.

(அ-ம்.) சப்தாதி விஷயங்களை மனத்தால் தியானஞ்செய்யும் புருஷனுக்கு அவ்விஷயங்களிடத்தே சங்கம் உண்டாகும்; அச்சங்கத்தாற் காமமுண்டாம், அக்காமத்தாற் குரோதமுண்டாம், அக்குரோதத்தால் சம்மோகமுண்டாம், அச்சம்மோகத்தால் ஸ்மிருதியின் பிறழ்ச்சியுண்டாம், அந்த ஸ்மிருதியின் பிறழ்ச்சியால் புத்தியின் நாசமுண்டாம், அந்தப் புத்தியின் நாசத்தால் அவன் நாசத்தை யடைவன். (63)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் தனது சுரோத்திராதி யாகிய இந்திரியங்களைச் சப்தாதி விஷயங்களினின்றும் தடைப்படுத்தியும், மனத்தால் அடிக்கடி அச்சப்தாதி விஷயங்களைச் சிந்திக்கின்றனனோ, அப்புருஷனுக்கு அவ்விஷயங்களிடத்தே அவசியம் சங்கமுண்டாம். ஈண்டு, இவ்விஷயம் எனது சுக சாதனமாம்; என்னுஞ் சோபன அத்தியாசரூபப் பிரீதிவிசேஷஞ் சங்கமாம். அச்சுக சாதனத்தன்மை ஞானரூப சங்கத்தால், அப்புருஷனுக்கு அவ்விஷயங்களிடத்தே காமம் உண்டாம். ஈண்டு, இவ்விஷயம் எனக்கு எப்போது கிடைக்கும் என்னும் திருஷ்ணைவிசேஷம் காமமாம். அந்நிய புருஷரால் ஹனனத்தையடைந்த அந்தத் திருஷ்ணை வடிவக் காமத்தால், ஹனனஞ்செய்யும் அந்நிய புருஷ விஷயகமாய பேரெரிச்சல் வடிவக் குரோத முற்பன்னமாம். அந்தப் பேரெரிச்சல் வடிவக் குரோதத்தால் காரிய அகாரிய விவேகமின்றிய சம்மோக முற்பன்னமாம். அச்சம் மோகத்தால், குரு சாஸ்திரம் உபதேசித்தருளிய பொருளின் அனுசந்தானரூப ஸ்மிருதியின் பிறழ்ச்சி உண்டாம். அந்த ஸ்மிருதியின் பிறழ்ச்சியால் அத்விதீய ஆன்மாவின் ஆகாரமுற்ற மனோவிருத்திரூப புத்தி நாசத்தையடையும். கருத்திதுவாம்:—விபரீத பாவனையின் விருத்திரூப தோஷத்தால் பிரதிபந்தப்படுதலின் அப்புத்தியின் உற்பத்தியே உண்டாகமாட்டாது. உற்பன்னமாயினும் அப்புத்தி பலத்தை அடைவிப்பதில் யோக்கியமற்றதாய் விலயமாய் விடும்; இதுவே அப்புத்தியின் நாசமாம். அந்தப் புத்தியின் நாசத்தால் அப்புருஷன் நாசத்தை அடைவன்; அதாவது சர்வ புருஷார்த்தங்கட்கும் அயோக்கியனவன். ஏனெனின், இவ்வுலகின்கண்ணும் எப்புருஷன் புருஷார்த்தத்திற்கு அயோக்கியனவனோ, அப்புருஷன், இவன் மரித்துவிட்டனன் என்னும் லோக வியவகார விஷயனவன். அதுபோலச் சர்வ புருஷார்த்தங்கட்கும் அயோக்கியனாகிய இப்புருஷன் மரித்தவனென்றே யறிக. ஆகையால், இப்பொருள் துணியப் பெற்றது:—எப்புருஷன் மனோ நிக்கிரகத்தைச் செய்யாது கேவலம் பாகிய இந்திரியங்களையே நிக்கிரகஞ் செய்வனோ, அப்புருஷனுக்கும் மகா அநர்த்தமானது உண்டா

குமாயின், மனம் இந்திரியம் என்னும் இரண்டின் நிக்கிரகமற்ற புருஷனுக்கு மகா அநர்த்தம் உண்டாம் என்பதன்கண்ணே யாது கூறவேண்டி இருக்கின்றது. ஆகையால், இவ்வதிகாரி புருஷன் எப்பெரு முயற்சியைச் செய்தேனும், அம்மனோ நிக்கிரகத்தைச் செய்தல்வேண்டும். அம்மனோ நிக்கிரகமின்றிக் கேவலம் பாகிய இந்திரியங்களின் நிக்கிரக மாத்திரத்தால் அந்த ஸ்திதப் பிரஞ்ஞத் தன்மை உண்டாக மாட்டாது. (63)

(அ-கை.) ஆண்டு முற் சுலோகத்தின்கண்ணே பாகிய இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்யினும் மனத்தை நிக்கிரகஞ் செய்யாதொழியின் தோஷ அடைவு கூறி அருளப்பட்டது. இப்போது மனத்தை நிக்கிரகஞ்செய்து பாகிய இந்திரியங்களை நிக்கிரகஞ்செய்யா தொழியினும், தோஷத்தின் அடைவு உண்டாகமாட்டாது என்னும் பொருளைக் கூறி அருளுபவராய் ஸ்ரீ பகவான் 'கிம்வ்ரஜேத' என்னும் நான்காவது வினவின் விடையை எட்டுச் சுலோகங்களால் இயம்பி அருளுகின்றார் :—

சு-ம். ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைச்சரந் ।
ஆத்மவச்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி ॥ (64)

ப-ம். 3 ராகத்வேஷவியுக்தை: 2 து 6 விஷயாந் 5 இந்த்ரியை: 7 சரந் 4 ஆத்மவச்யை: 1 விதேயாத்மா 8 ப்ரஸாதம் 9 அதிகச்சதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மனத்தை நிக்கிரகிக்கும் புருஷனே, இராகத்துவேஷமற்ற மனத்தின் அதீனமாய இந்திரியங்களால் விஷயங்களைக் கவரினுஞ் சித்தத்தின் நின்மலத்தன்மையையே அடைவன். (64)

(வி-ம்.) எப்புருஷன் மனத்தின் நிக்கிரகத்தைச் செய்யானோ, அப்புருஷன் பாகிய சுரோத்திராதி இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்யினும், இராகத்துவேஷத்தோடு கூடியமனத்தோடு சப்தாதி விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டே இருந்து, எங்ஙனம் புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டனாவனோ, அங்ஙனம் மனத்தை நிக்கிரகஞ்செய்த புருஷன் அந்தப் புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டனாகான். இவ்வகையாய விலக்ஷணத்தன்மையை உணர்த்திவைத்தருளும்பொருட்டு, ஸ்ரீ பகவானவர், 'ராகத்வேஷ வியுக்தைஸ்து' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற 'து' என்னுஞ் சப்தத்தைக் கூறியருளினர். ஹே அர்ச்சுன! எப்புருஷன் தனது மனத்தை நிக்கிரகஞ்செய்துளானோ, அப்புருஷன் அந்த வயஞ்செய்த மனத்தின் அதீனமாயிருப்பனவும், இராகத் துவேஷமற்றனவும் ஆய சுரோத்திராதி இந்திரியங்களால் சாஸ்திர விகிதமாய சப்தாதி விஷயங்களைக் கவரினும் பிரசாதத்தையே யடைவன். ஈண்டுப் பரமான்மாவின் சாக்ஷாத்கார யோக்யதை வடிவ சித்தத்தின் தெளிவுடைமை பிரசாதமெனப்படும். எவ்விந்திரியம் இராகத்துவேஷத்தோடு கூடி நிகழுமோ, அவ்விந்திரியமே தோஷகாரணமாம். இவ்வறிஞனவன் மனத்தைத் தன்வயப்படுத்திக் கொள்வானாயின், இராகத்துவேஷமென்னும் இரண்டும் நீங்கிவிடும். அந்த இராகத்துவேஷம் இன்றாகவே, அந்த இராகத்துவேஷத்தின் அதீனமாய இந்திரியங்களின் பிரவிருத்தி உண்டாகமாட்டாது. பிராரப்த கருமமிருப்ப அச் சப்தாதி விஷயங்களின் பிரதீதி நீக்க முடியாததாகும். ஆகையால், சாஸ்திர விகித சப்தாதி விஷயங்களின் பிரதீதி மாத்திரம் அவ்வறிஞனுக்குத் தோஷ அடைவைச் செய்விக்கமாட்டாது. இத்துணை கூறியதால் இச்சங்கையின் நீக்கமுஞ் செய்யப்பட்டதாயது :—அச் சப்தாதி விஷயங்களின் ஸ்மரண மாத்திரமும் அநர்த்த காரணமாகுமாயின், அவ்விஷயங்களின் போகமோ, மகா அநர்த்த காரணமாகும். ஆகையால், தனது பிராணனைக் காப்பாற்றும்பொருட்டு, அவ்விஷ

யங்களைப் போகிப்பவனுய் அவ்வறிஞனவன் அவ்வநர்த்தத்தை ஏன் அடைய மாட்டான்? மற்றே, அவ்வறிஞனும் அவசியமாய் அநர்த்தத்தையடைவன் என்பது சங்கையாமென்றறிக. ஆகலின், 'கிம்வ்ரஜேத' என்னும் நான்காவது வினவிற்கு இவ்விடை துணியப்பெற்றதாம்:—இராகத் துவேஷமற்ற தனது வசத்திலிருக்கும், சுரோத்திராதி இந்திரியங்களால் அவ்வறிஞனவன் சாஸ்திர விகித சப்தாதி விஷயங்களையடைவன் என்பதேயாம். (64)

(அ-கை.) ஆண்டு முற்சுலோகத்தின்கண்ணே அம்மனே நிக்கிரகத்தையுடைய புருஷன் பிரசாதத்தை யடைவன் என்னு மிவ்வார்த்தை கூறியருளப்பட்டது. ஆண்டு அச்சித்தத்தின் தெளிவுடைமை வடிவப் பிரசாதத்தை அடையின் யாது பலங்கிட்டும் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் அந்தப் பிரசாதத்தின் பலத்தைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். ப்ரஸாதே ஸர்வது:கானாம் ஹாநிரஸ்யோபஜாயதே ।
ப்ரஸந்நசேதஸோ ஹ்யாஶு புத்தி: பர்யவதிஷ்டதே ॥ (65)

ப-ம். 1 ப்ரஸாதே 3 ஸர்வது:கானாம் 4 ஹாநி: 2 அஸ்ய 5 உபஜாயதே 7 ப்ரஸந்நசேதஸ: 6 ஹி 9 ஆஶு 8 புத்தி: 10 பர்யவதிஷ்டதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்தப் பிரசாதத்தை அடையின் இவ்வறிஞனகிய சந்யாசிக்குச் சர்வ துக்கங்களின் நாசமுண்டாம். எக்காரணத்தால் அந்தத் தெளிந்த சித்தமுடைய சந்யாசியின் புத்தி விரைவாகவே ஸ்திரமாமோ என்பதாம். (65)

(வி-ம்.) அந்தச் சித்தத்தின் தெளிவுடைமை வடிவப் பிரசாதத்தை யடைவுற்ற இவ்வித்வானய சந்யாசியினது அஞ்ஞான ஜன்னிய ஆத்யாத்மிக ஆதிபௌதிக, ஆதிதைவிக சர்வ துக்கங்களின் நாசமுண்டாம். எக்காரணத்தால் அந்தத் தெளிந்த சித்தத்தையுடைய சந்யாசியினுக்குப் பிரஹ்ம ஆத்மாக்களின் அபேதத்தை விஷயஞ்செய்யும் புத்தி விரைவாகவே ஸ்திரமாமோ. ஏனெனின், அசம்பாவனை விபரீதபாவனை என்னும் இரண்டுமே அந்தப் புத்தியின் ஸ்திரத் தன்மைமையின்கண்ணே பிரதிபந்தகமாகும். அவ்விருபாவனைகளும் அவ்வறிஞனிடத்தே இன்றாம். ஆகையால், பிரதிபந்தமற்ற அப்புத்தி விரைவாகவே ஸ்திர பாவத்தை யடையும். ஈண்டு சித்தத்தின் தெளிவுடைமை வடிவப் பிரசாதங் கிடைப்பினும் சாக்ஷாத் ஆத்தியாத்மிகாதி துக்கங்களின் நிவிருத்தி உண்டாகமாட்டாது. மற்றே, பரம்பரையாய் அத்துக்கங்களின் நிவிருத்தி உண்டாம். ஆண்டுச் சித்தப் பிரசாதத்தால் புத்தியின் ஸ்திரத் தன்மையுண்டாம், அதனல் அதன் விரோதியாய அஞ்ஞான நிவிருத்தி உண்டாம். அதனல் அதன் காரியமாய சகல துக்கங்களின் ஹானி உண்டாம். இவ்வகையாய பரம்பரையால் அத்துக்கங்களின் நிவிருத்தி உண்டாம். ஆகையால், சித்தப் பிரசாத முண்டாயின் சர்வ துக்கங்களின் நாசமுண்டாமெனக் கூறல் சம்பவிக்க மாட்டாதாயினும், அந்தச் சித்தப் பிரசாதத்தை அடையும் பொருட்டுப் பெருமுயற்சி வேண்டுமென அறிவிப்பதற்காக அச்சித்தப் பிரசாதத்தின்கண்ணே சர்வ துக்கங்களின் நாசகாரணத் தன்மை கூறப்பட்டது. ஆகையால், சிறிது மாத்திரையும் விரோத அடைவு உண்டாக மாட்டாது. (65)

(அ-கை.) ஆண்டு முற் சுலோகத்தின்கண்ணே அன்வய வாயிலாய்க் கூறியருளிய பொருளை இப்போது வியதிரேக வாயிலாய்த் திடப்படுத்தி யருளுகின்றார்:—

சு-ம். நாஸ்தி புத்திரயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவநா ।
ந சாபாவயத: ஶாந்திரஶாந்தஸ்ய குத: ஸுகம் ॥ (66)

ப-ம். 3 ந 4 அஸ்தி 2 புத்தி: 1 அயுக்தஸ்ய 8 ந 5 ச 6 அயுக்தஸ்ய 7 பாவநா 12 ந 9 ச 10 அபாவயத: 11 சாந்தி: 13 அசாந்தஸ்ய 15 குத: 14 ஸுகம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சித்தஜயமின்றிய அயுக்த புருஷனுக்குப் புத்தி உண்டாகமாட்டாது, அயுக்த புருஷனுக்குப் பாவனை உண்டாகமாட்டாது, பாவனையற்ற புருஷனுக்குச் சாந்தி உண்டாகமாட்டாது. சாந்தியற்ற புருஷனுக்குச் சுகம் எங்ஙனம் உண்டாம்? (66)

(வி-ம்.) எப்புருஷன் தனது சித்தத்தை வசஞ்செய்கின்றானில்லையோ, அப்புருஷன், அயுக்தன் எனப்படுவன். அத்தகைய அயுக்த புருஷனுக்குச் சிரவணமநநரூப வேதாந்த விசாரத்தால் ஜன்னிய, ஆன்ம விஷயக புத்தி உற்பன்னமாகமாட்டாது. அப்புத்தியின்றாகவே அவ்வயுக்த புருஷனுக்கு, விஜாதிய விருத்திகளின் வியவதானமற்ற (தடையற்ற) சஜாதிய விருத்திகளின் பிரவாஹரூப நிதித்தியாசனமாகிய பாவனை உற்பன்னமாகமாட்டாது. அந்த நிதித்தியாசனரூப பாவனையற்றவனுக்குக் காரிய சகித அவித்தையை நீக்குவதும், தத்வமசி முதலிய வேதாந்த வாக்கியங்களால் ஜன்னியமும், ஜீவப்பிரஹ்ம அபேதத்தை விஷயஞ்செய்வதும் ஆய சாக்ஷாத்காரரூப சாந்தி உண்டாகமாட்டாது. அவ்வான்ம சாக்ஷாத்காரரூப சாந்தியற்றவனுக்கு, மோக்ஷாநந்தரூப சுகம் உண்டாகமாட்டாது. (66)

(அ-கை.) ஹே பகவன்! அவ்வயுக்த புருஷனிடத்தே அப்புத்தி எக்காரணத்தால் உண்டாகமாட்டாது, என அருச்சுனன் சங்கிப்ப; ஸ்ரீ பகவான் அப்புத்தியின் உற்பத்தி உண்டாகாமையின் கண்ணே காரணத்தைக் கூறி அருளுகின்றார்:—

சு-ம். இந்த்ரியாணாம்ஹி சரதாம் யந்மநோऽநுவிதீயதே ।
ததஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர்நாவமிவாம்பஸி ॥ (67)

ப-ம். 3 இந்த்ரியாணாம் 1 ஹி 2 சரதாம் 4 யத் 5 மந: 6 அநுவிதீயதே 7 தத் 8 அஸ்ய 10 ஹரதி 9 ப்ரஜ்ஞாம் 14 வாயு: 13 நாவம் 11 இவ 12 அம்பஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் தத்தம் விடயங்களிடத்தே முயன்ற இந்திரியங்களின் மத்தியில் எவ்வோர் இந்திரியத்தையேனும் இலக்ஷியமாக்கி, இம்மனம் பிரவிருத்திக்குமாயின், அவ்வோர் இந்திரியமும் இச்சாதக புருஷனுடைய பிரஞ்ஞையை ஹரணஞ்செய்யும்; நீரின்கண்ணே இருக்கும் ஓடத்தைப் பிரதிகூல வாயுவானது ஹரணஞ்செய்வதேபோலும். (67)

(வி-ம்.) தத்தம் சப்தாதி விஷயங்களிடத்தே முயலும் வசஞ்செய்யப்படாத சுரோத்திராதி இந்திரியங்களின் மத்தியில், எவ்வோரிந்திரிய அநுசாரியாயேனும் இம்மனம் முயலுமாயின், அம்மனத்தோடு கூடிய ஓரிந்திரியமும், இச்சாதகபுருஷனுடைய அல்லது அம்மனத்தினுடைய சாஸ்திர ஜன்னிய ஆன்ம விஷயகப்பிரஞ்ஞையை நீக்கிவிடும். எங்ஙனம் நீரின்கண்ணே நிற்கும் ஓடத்தைப்பிரதிகூல வாயுவானது இழுத்துக்கொண்டு போய்க் கன் முதலியவற்றின்கண்ணே மோதி நாசமாக்கிவிடுமோ, அங்ஙனம் அவ்வோரிந்திரியமும் இவ்வதிகாரி புருஷனுடைய பிரஞ்ஞையைப் பகிர்முகப்படுத்தி நாசஞ்செய்துவிடும் கருத்தியதுவாம்:— இராகத்துவேஷத்தோடு கூடிய மனத்தின் சகாயத்தைக்கொண்டு தனது விஷயத்தின் கண்ணே முயன்ற ஓரிந்திரியமும் இவ்வதிகாரியின் பிரஞ்ஞையை நாசஞ்செய்யுமாயின், அவ்வெல்லா இந்திரியங்களும் இவ்வதிகாரியின் பிரஞ்ஞையை நாசஞ்செய்யும் என்பதன்கண்ணே யாது கூறவேண்டியிருக்கின்றது. ஆண்டுப் பிரதி

கூல வாயுவிற்குச் சலத்தின்கண்ணே ஓடத்தையுடைக்கும் ஆற்றலுளது; பூமியின்கண்ணே நிற்கும் ஓடத்தைஉடைக்கும் ஆற்றலின்றாம் என்னும் இப்பொருளைக் குறிப்பித்தருளும் பொருட்டே, திருஷ்டாந்தத்தின்கண்ணே '𑌅𑌂𑌭𑌸𑌿' என்னும் பதத்தைத் திருவாய்மலர்ந்தருளியதாம். இவ்வண்ணம், தார்ஷ்டாந்திகத்தின்கண்ணே ஜல சமானமான மனத்தின் சஞ்சலத்தன்மையிருந்தே அவ்விந்திரியத்திற்கு அந்தப் பிரஞ்ஞையை ஹரணஞ்செய்யும் ஆற்றலுண்டாம். பிருதிவிக்குச் சமானமாய மனத்தின் ஸ்திரத்தன்மையிருப்பின் அவ்விந்திரியத்திற்கு அந்தப் பிரஞ்ஞையை ஹரணஞ்செய்யும் ஆற்றல் உண்டாகமாட்டாது. ஈண்டு மற்றைய உரைகளில் '𑌯𑌦𑍍 𑌯𑌦𑍍' என்னும் இரண்டு சப்தங்களால் மனத்தைக்கவர்ந்து இப்பொருள் செய்யப்பட்டுளது :—விஷயங்களிடத்தே பிரவிருத்தமாய இந்திரியங்களை இலக்ஷியமாக்கி, அவற்றின் அநுசாரமாயுழலும் மனம் இப்புருஷனது பிரஞ்ஞையை ஹரணஞ் செய்யும் என்பதாம். (67)

சு-ம். 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍀𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 ॥ (68)

ப-ம். 1 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 3 𑌯𑌸𑍍𑌯 2 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 7 𑌨𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌾𑌨𑌿 4 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 5 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 6 𑌇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 8 𑌤𑌸𑍍𑌯 9 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 10 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾.

(அ-ம்.) எக்காரணத்தால் இங்ஙனமாமோ, அக்காரணத்தால் ஹேமகாபுயபலவானாகியஅர்ச்சுன! எப்புருஷனுக்கு அவ்வெல்லா இந்திரியங்களும் தமது சப்தாதி விஷயங்களினின்றும் நீங்கியிருக்குமோ, அப்புருஷனுக்கே அந்தப் பிரஞ்ஞை நிலைபெற்று நிற்கும். (68)

(வி-ம்.) ஹேமகாபுயவலிமையையுடையஅர்ச்சுன! எக்காரணத்தால் பகிர்முகத்தை அடைந்த இவ்விந்திரியம் இப்புருஷனுடைய பிரஞ்ஞையை நாசஞ் செய்யுமோ, அக்காரணத்தால் எப்புருஷனுக்கு இம்மனசகிதசுரோத்திராதிசர்வ இந்திரியங்களும், தத்தமதுசப்தாதிவிஷயங்களினின்றும் நிக்கிரகத்தை அடைந்தனவோ, அந்தத் தத்துவவேத்தாவாகியசித்தபுருஷனுக்கே, அல்லது முமுக்ஷுரூப சாதக புருஷனுக்கே அவ்வான்மவிஷயகப்பிரஞ்ஞை ஸ்திரமாம். இந்திரியங்களின் நிக்கிரகமற்ற புருஷனுடைய அந்தப் பிரஞ்ஞை ஸ்திரமாகமாட்டாது. ஈண்டு '𑌹𑍇 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋' என்னும் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—அர்ச்சுனனாகிய நீ சர்வபாகிய சத்துருக்களையும் நிவாரணஞ்செய்வதன்கண்ணே சமர்த்தனுவாயாதலின், அந்தர் இந்திரியரூப சத்துருக்களை நிவிருத்திசெய்வதன்கண்ணும் நீ சமர்த்தனுவாய் என்பதாம். ஆண்டு, மனசகிதஇந்திரியங்களின் சம்யமமானது தத்வவேத்தாவாகிய ஸ்திதப்பிரஞ்ஞபுருஷனுக்கோ இலக்கணரூபமாம்; முமுக்ஷுக்களைக்குறித்தோ அது அந்தப் பிரஞ்ஞையை அடையச் சாதனரூபமாம். இக்காரணத்தானே '𑌤𑌸𑍍𑌯' என்னுஞ் சப்தத்தால் தத்வவேத்தாவும், முமுக்ஷுவும் கவரப்பட்டனர். ஆகலின், முமுக்ஷுக்கள் தமதுபிரஞ்ஞையைத்திரஞ்செய்யும்பொருட்டு, மிகுந்த முயல்வோடும் அவ்விந்திரியங்களைச் சம்யமஞ் (அடக்கஞ்) செய்தல்வேண்டும். (68)

(அ-கை.) இப்போது அந்த ஸ்திதப்பிரஞ்ஞனுக்குச் சர்வ இந்திரியங்களின் சம்யமந் தானேசித்தமாம் என்னும்பொருளை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். 𑌯𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 𑌸𑌂𑌯𑌮𑍀 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌾 𑌨𑌿𑌶𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍋 𑌮𑍁𑌨𑍇𑌃 ॥ (69)

ப-ம். 1 𑌯𑌾 3 𑌨𑌿𑌶𑌾 2 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 4 𑌤𑌸𑍍𑌯𑌾𑌂 6 𑌜𑌾𑌗𑌰𑍍𑌤𑌿 5 𑌸𑌂𑌯𑌮𑍀 7 𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 9 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌿 8 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 10 𑌸𑌾 13 𑌨𑌿𑌶𑌾 11 𑌪𑌶𑍍𑌯𑌤𑌃 12 𑌮𑍁𑌨𑍇𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எந்தச் சாக்ஷாத்காரரூபப் பிரஞ்ஞை சர்வஅஞ்ஞானிகட்கும்இரவாமோ, அந்தப் பிரஞ்ஞைவடிவ இரவின்கண்ணே இந்திரியங்களின்சம்யமம்உடையவன் விழித்திருக்கின்றனன்; அன்றியும் இவ்வெல்லா அஞ்ஞானிகளும் எந்த அவித்தைவடிவ நித்திரையின்கண்ணே விழித்திருக்கின்றார்களோ, அந்த அவித்தை, சாக்ஷாத்காரமுடைய ஸ்திதப் பிரஞ்ஞனுக்கு இரவாம்.

(வி-ம்.) வேதாந்த வாக்கியங்களால் ஜனித்த யான் பிரஹ்மமாய் இருக்கின்றேன் என்னும் சாக்ஷாத்காரரூபப் பிரஞ்ஞையானது அஞ்ஞானிகளைக் குறித்து அப்பிரகாசரூபமாம். ஆதலின், அவ்வான்ம சாக்ஷாத்காரரூபப் பிரஞ்ஞை, அவ்வஞ்ஞானிகளைக் குறித்து உலகப் பிரசித்த இரவைப்போல இரவு வடிவமாம். அந்தப் பிரஹ்ம வித்தைவடிவ சர்வ அஞ்ஞானிகளின் இரவின்கண்ணே மனசகித இந்திரியங்களின் சம்யமம் உடைய ஸ்திதப்பிரஞ்ஞ புருஷன் அஞ்ஞானரூப நித்திரையினின்றும் விழித்தவனாய்ச் சாவதானமாய் இருப்பன். எந்தத்துவைததரிசனரூப அவித்யா நித்திரையின்கண்ணே உறங்கும் இவ்வஞ்ஞானியானவன் கனவிற்போல நானாவகையாய வியவகாரங்களைச் செய்வனோ அவ்வவித்தை, ஆன்ம சாக்ஷாத்காரத்தையுடைய ஸ்திதப் பிரஞ்ஞனுக்கு உலகப்பிரசித்த இரவுபோன்றிரவாம். கருத்திதுவாம்:—எதுவரை இப்புருஷன் நித்திரையினின்றும் விழிக்கிலனோ அதுவரையுமே நானாவகையாய கனாத்தரிசன முண்டாம். அந்நித்திரையினின்றும் விழித்த பின்னர் அக்கனவின் தரிசனமுண்டாகமாட்டாது. ஏனெனின், பாதம்வரையுமே மயலின் இருப்புண்டாகும்; பாதத்தின்பின்னர் அம்மயல்இராது. எங்ஙனம் இது சர்ப்பமன்று, மற்றோ இரஜ்ஜுவாம் என்னும் பாதம்வரையுமே அச்சர்ப்ப மயலின் திதி உண்டாமோ, அந்தப் பாதமாகவே அச்சர்ப்பமயல் இராதோ, அங்ஙனம், இவ்வதிகாரிக்கு எதுவரை தத்துவஞானத்தின் அடைவுண்டாகவில்லையோ, அதுவரையுமேஇச்சம்சாரமயல்இருக்கும், தத்துவஞானத்தையடையவே இச்சம்சார மயல்நீங்கிவிடும்.ஆகையால், அந்த ஞானகாலத்தின்கண்ணே அவ்வறிஞனுக்கு அம்மயலாற் சனித்த வியவகாரம் எதுவும் உண்டாகமாட்டாது என்பதாம். இவ் விஷயத்தை வார்த்திகக்கிரந்தகர்த்தாவாகிய ஸ்ரீ சுரேஶ்வர ஆசிரியரும் கூறி இருக்கின்றார்கள்:—

ஆ-சு. காரகவ்யவஹாரே ஹி ஶுத்தம் வஸ்து ந வீக்ஷ்யதே ।
ஶுத்தே வஸ்துநி ஸித்தே ச காரகவ்யாப்ருதி꞉ குத꞉ ॥ (1)

காகோலூகநிஶேவாயம் ஸம்ஸாரோऽஜ்ஞாத்மவேதினோ꞉ ।
யா நிஶா ஸர்வபூதானாமித்யவோசத் ஸ்வயம் ஹரி꞉ ॥ (2)

ஶுத்தகவஸ்த்ரேகோயம் ஜகொஃதத விஶாஅவக ।
ஶுத்தகெவா விநொகவஸ்த்ர ஜகொஃதத விஶாஅவக ॥ (3)

(பொ-ள்.) கர்த்தா, கரணம்என்பனமுதலிய காரகங்களின்வியவகாரம் உண்டாகுமாயின் சுத்தஆன்மவஸ்துவானது காணமுடியாததாகும். அந்தச் சுத்த ஆன்மவஸ்துச்சித்தமாகுமாயின், அச்சர்வ காரகங்களின் நிவிருத்தி உண்டாகிவிடும். (1) அல்லது, காகத்திற்குரிய இவ்வுலகப்பிரசித்த இரவானது உலூகத்திற்கு இன்றாம். மற்றோ, உலூகத்திற்கு அவ்விரவுடு நானாவகையாய உண்ணல் குடித்தல் முதலிய வியவகாரங்கள் உண்டாம். அவ்வுலூகத்தினது இவ்வுலகப்பிரசித்த தினரூப இரவானது அக்காகத்திற் கிரவன்றாம்; மற்றோ, அத்தினத்தில் காகந் தனது உண்ணல்குடித்தல் முதலிய நானாவகையாய வியவகாரங்களைச் செய் ...துபோன்றே, அஞ்ஞானியினுக்கும் ஆன்மவேத்தாவிற்கும் இச்சம்சாரமாம்

என்னும் வார்த்தையை 'யாநிசா ஸர்வபூதாநாம்' என்னுந் திருவாய்மொழியால் ஸ்ரீகிருஷ்ணபகவான் தாமே திருவாய்மலர்ந் தருளியிருக்கின்றார். (2) அல்லது, எப்புருஷன் தனது உண்மையாய வடிவத்தை யறிந்திருக்கின்றனனோ அவ்வறிஞனுக்கு இவ்வெல்லா வுலகரும் ஜட, உன்மத்த, பிசாசு முதலியவற்றைப்போலத் தோற்றுவர். இவ்வெல்லா உலகருக்கும் அவ்வறிஞன் ஜட, உன்மத்த, பிசாசு முதலியவற்றைப்போலத் தோற்றுவன் (3) ஆகையால், இப்பொருள் துணியப்பெற்றதாம்:— எப்புருஷனுக்கு எவ்வஸ்துவின் விபரீத தரிசனமாமோ, அப்புருஷனுக்கு அவ்வஸ்துவின்சம்யக்தரிசனமுண்டாகமாட்டாது. ஏனெனின், அவ்வஸ்துவின் விபரீத தரிசனம் அவ்வஸ்துவின்சம்யக்தரிசனத்தை (நற்காக்ஷியை) அபாவப்படுத்தியே ஜனியாநிற்கும். எப்புருஷனுக்குஎவ்வஸ்துவின் சம்யக்தரிசனமாமோ, அப்புருஷனுக்கு அவ்வஸ்துவின் விபரீத தரிசனமுண்டாகமாட்டாது. ஏனெனின், அவ்விபரீததரிசனத்தின் காரணரூபஅவ்வஸ்துவின் அதரிசனமானது. அவ்வஸ்துவின் சம்யக்தரிசனத்தால் நிவிருத்தமாய்விடும். எப்புருஷனுக்கு இரஜ்ஜுவின்கண்ணே இது சர்ப்பம் என்னும் விபரீததரிசனம் உண்டாமோ, அப்புருஷனுக்கு அக்காலத்தே இது இரஜ்ஜுவாமென்னுஞ் சம்யக் தரிசன முண்டாகமாட்டாது. எப்புருஷனுக்கு இது இரஜ்ஜுவாம் என்னுஞ் சம்யக்தரிசனமுண்டாமோ, அப்புருஷனுக்கு அக்காலத்தே இது சர்ப்பமென்னும் விபரீததரிசன முண்டாகமாட்டாது. அதுபோல, ஆன்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தை அறிந்துள்ள அறிஞனுக்குப் பிரபஞ்சவிஷயகவிபரீததரிசன முண்டாகமாட்டாது. பிரபஞ்ச விஷயக விபரீததரிசனமுடைய அஞ்ஞானிகட்கு ஆன்மாவின் சம்யக்தரிசன முண்டாகமாட்டாது.

ஆ-சு. யத்ர வா அந்யதிவ ஸ்யாத் தத்ராந்யோ(அ)ந்யத் பச்யேத் ।
யத்ர த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத்கேந கம் பச்யேத் ॥

(பொ-ள்.) எவ் வவித்யாகாலத்தின்கண் இவ்வத்விதீயஆன்மா துவைதத்தைப் போலாமோ, அவ்வவித்யாகாலத்தின்கண்ணே இப்புருஷன் தன்னை அந்நியனாகநினைந்து தன்னிற் பின்னமாயஅந்நியங்களைக்காண்பன். எவ்வித்யாகாலத்தின் கண்ணே இவ்வறிஞனுக்கு இவ்வெல்லாஉலகுந்தனதுஆன்மரூபமாகவே ஆய்விடுகின்றதோ, அவ்வித்யாகாலத்தின்கண்ணே இவ்வறிஞன் எக்காரணத்தால் எப்பதார்த்தத்தைத்தன்னிற் பின்னமாய்க்காண்பன்; மற்றே, இவ்வறிஞன் தன்னிற் பின்னமாயஎப்பதார்த்தத்தையுங்காணான் என்னுமிவ்விரண்டுசுருதிகளும் முறைப்படி அவித்தையின்வியவஸ்தையையும், வித்தையின்வியவஸ்தையையும் கூறுகின்றன. ஆகையால், தத்துவதரிசியாயவித்துவானிடத்தே அவித்தையால்ஆக்கப்பெற்ற கிரியை, காரகம்முதலியவியவகாரம் ஒருகாலுஞ்சம்பவியாது. ஆகையால், அந்தஸ்திதப்பிரஞ்ஞஅறிஞனுக்கு அவ்விந்திரியங்களின் சம்பமம் இயற்கையாயே சித்தமாம். முமுக்ஷுவைப்போல ஒரு முயற்சியாற் சாதிக்கவேண்டியதின்றாம்.

(அ-கை.) ஆண்டு அந்த ஸ்திதப்பிரஞ்ஞஅறிஞனுடைய இந்திரியங்களின் சம்யமம் எங்ஙனம் இயல்பாயே சித்தமாமோ, அங்ஙனம் அந்த ஸ்திதப்பிரஞ்ஞ அறிஞனுடைய சர்வவிக்ஷேபங்களின்சாந்தியும் இயல்பாயே சித்தமாம் என்னும் இப்பொருளை ஸ்ரீ பகவான் திருஷ்டாந்தத்தால் நிரூபித்தருளுகின்றார்:—

சு-ம். ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவிசந்தி யத்வத் ।
தத்வத்காமா யம் ப்ரவிசந்தி ஸர்வே ஸ சாந்திமாப்நோதி ந காமகாமீ ॥ (70)

ப-ம். 2 ஆபூர்யமாணம் 3 அசலப்ரதிஷ்டம் 4 ஸமுத்ரம் 5 ஆப: 6 ப்ரவிசந்தி 1 யத்வத் 7 தத்வத் 10 காமா: 8 யம் 11 ப்ரவிசந்தி 9 ஸர்வே 12 ஸ: 13 சாந்திம் 14 ஆப்நோதி 16 ந 15 காமகாமீ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வாறு சர்வநதிகளாலும் நிறைவிக்கப்பெற்றதும். அசலப்பிரதிஷ்டையுடையதுமாய சமுத்திரத்தை மழைநீர் அடையுமோ, அவ்வாறே எந்த ஸ்திதப்பிரஞ்ஞ புருஷனைச் சர்வசப்தாதிவிஷயங்களும் அடையுமோ, அந்த ஸ்திதப்பிரஞ்ஞ புருஷனே சர்வவிக்ஷேபநிவிருத்திரூப சாந்தியை அடைவன். விஷயங்களை இச்சித்தவன் அந்தச் சாந்தியை அடையான். (70)

(வி-ம்.) ஸ்ரீ கங்கை, யமுனை, கோதாவரி, சிந்து, சரஸ்வதீ என்பனவாதி சர்வ நதிகளின் ஜலங்களால் எல்லாப் புறமும் நிறைந்துள்ள சமுத்திரத்தையே மழை முதலியவற்றினின்றும் உற்பன்னமாய சர்வ ஜலங்களும் அடையும். அவ்வெல்லா ஜலங்களும் அடைந்தபோதினும், அச்சமுத்திரம் அசலப்பிரதிஷ்டமேயாம். தனது மரியாதையைத் தாண்டாததுயாதோ, அது அசலப் பிரதிஷ்டமாம். அல்லது, மைநாகாதி பர்வதங்களின் நாமம் அசலமாம். அந்த அசலங்களின் ஸ்திதி எதன்கண்ணுமோ, அது அசலப்பிரதிஷ்டமாம். இத்துணை கூறியருளியதால் அச்சமுத்திரத்தின் கம்பீர மிகுதி வருணித்தருளப்பட்டது. அத்தகைய மகா கம்பீர சமுத்திரத்தின்கண்ணே அவ்வெல்லா நீரும் அடையும். ஆனால், அந்நீர்கள் பிரவேசித்தலான் அக்கடல் சிறிது மாத்திரையுங் கலக்கத்தை அடையமாட்டாது என்னும் இவ்விஷயம் யாவருக்கும் அநுபவ சித்தமாம். அதுபோல, நிர்விகாரரூபமாய் இராநின்ற எந்தஸ்திதப்பிரஞ்ஞபுருஷனை இவ்வஞ்ஞானிகளின் இச்சைக்கு விஷயமாய் இராநின்ற சப்தாதி விஷயங்கள் பிராரப்த கருமவயத்தால் அடையாநிற்பினும், அவை விகாரத்தைஅடையுமாறு செய்யமாட்டாவோ, அத்தகைய மகாசமுத்திரத்திற்குச் சமானமான அந்த ஸ்திதப்பிரஞ்ஞஅறிஞனே இலௌகிக வைதிக சர்வகருமங்களின் நிவிருத்திவடிவ காரியசகிதஅவித்தையின் நிவிருத்திவடிவசாந்தியைஅடைவன். எப்புருஷன் அச்சப்தாதிவிஷயங்களையடைய இச்சையுடையவனாவனோ, அப்புருஷன் அச்சாந்தியைஅடையமாட்டான்; மற்றோ, அந்த விஷயாசக்த புருஷன் சர்வகாலத்தின்கண்ணும் அந்த இலௌகிக வைதிக கருமரூப விக்ஷேபத்தால் மகாக்லேசரூபசமுத்திரத்தின் கண்ணே மூழ்குவன். இத்துணைகூறியருளியதால் இப்பொருள் கூறியருளியதாயது:—எப்புருஷனுக்குக் குரு சாஸ்திர உபதேசத்தால் ஆன்மசாக்ஷாத்கார அடைவுண்டாமோ, அந்த ஞானமுடைய புருஷனுக்கே பலரூப வித்வத்சந்யாசம் கிடைக்கும். அங்ஙனமே அந்த ஞானமுடைய புருஷனுக்கே சர்வவிக்ஷேபநிவிருத்திரூப ஜீவன்முக்தியுண்டாம். அங்ஙனமே விஷயபோகங்கள் அடைவுறினும், நிர்விகாரத் தன்மையேஉண்டாம்என்பதாம். (70)

(அ-கை.) எக்காரணத்தால் விஷயங்களை இச்சித்தபுருஷன் அந்தச் சாந்தியை அடையானோ, அக்காரணத்தால் இவ்விவேகியானவன் அடைவுறினும் அவ்விஷயங்களைப் பரித்தியாகமேசெய்வன் என்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்:—

சு-ம். 𑌵𑌿𑌹𑌾𑌯 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌮𑌾𑌂𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌨𑌿𑌃𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 ।
𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌸 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ (71)

ப-ம். 5 𑌵𑌿𑌹𑌾𑌯 4 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 1 𑌯𑌃 3 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 2 𑌪𑍁𑌮𑌾𑌨𑍍 9 𑌚𑌰𑌤𑌿 6 𑌨𑌿𑌃𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 7 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 8 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 10 𑌸𑌃 11 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍍 12 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் சர்வகாமங்களையும் பரித்தியாகஞ்செய்து, இச்சையின்றியவனாய், மமதையற்றவனாய், அகங்காரமின்றியவனாய்ச் சஞ்சரிப்பனோ, அந்த ஸ்திதப்பிரஞ்ஞன் அந்தச்சாந்தியை அடைவன். (71)

(வி-ம்.) கிருகம், க்ஷேத்திரம், தனம் முதலிய எத்துணை வெளிக்காமங்களுளவோ, மனோராஜ்யரூபஎத்துணை யுட்காமங்களுளவோ, வாசனை மாத்திரவடிவ எத்துணைக் காமங்களுளவோ, அம்மூன்றுவகையாய காமங்களையும் எப்புருஷன் மார்க்கத்திற் செல்லுங்கால் திருணங்களைத் தீண்டுவதேபோலத் துச்சமெனவறிந்து உபேக்ஷை செய்துவிடுவனோ, எப்புருஷன் தனது சரீர ஜீவனமாத்திர இச்சையும் அற்றவனுவனோ, எப்புருஷன் சரீரஇந்திரியம்முதலியசங்காதத்தின் கண்ணே இதுவேயான் என்னும் அபிமானரூபஅகங்காரமற்றவனுவனோ, அல்லது வித்தை, உத்தம ஆசிரமம் முதலியவற்றின்அடைவினால் உண்டாகிய தன்பான் மேலாயதன்மைப்புத்திரூப அகங்காரமற்றவனுவனோ, அகங்காரமற்றிருத்தலின் எப்புருஷன் மமதையற்றவனுவனோ, அதாவது சரீர நிர்வாகத்தின் பொருட்டுப் பிராரப்தகருமம்அடைவித்த கந்தைகௌபீனம் முதலியவற்றின்கண்ணும் இஃதென்னதென்னும் அபிமானம் எப்புருஷனற்றவனுவனோ, இவ்வாறு சர்வ பதார்த்தங்களையும் உபேக்ஷித்து, இச்சையற்று நிரகங்காரத்தையுற்று மமதையற்ற பான்மையை மருவி எப்புருஷன் பிராரப்தகருமவயத்தான் சாஸ்திர விஹித போகங்களைப் போகிப்பனோ, அல்லது தனது இச்சைவாயிலாய்யாண்டாண்டேனுந் திரிவனோ, இவ்வகையாய அந்த ஸ்திதப்பிரஞ்ஞ புருஷன் சர்வ சம்சார துக்கங்களின் உபாமத்தன்மை வடிவினதும், காரியசகித அவித்தை நிவிருத்தி வடிவினதும் ஆய சாந்தியை ஆன்மஞானபலத்தால் அடைவன். இவ்வகையாய சஞ்சாரம் அந்த ஸ்திதப்பிரஞ்ஞபுருஷனுக்குண்டாம். இத்துணை கூறியருளியதால் 'கிம் வ்ரஜேத' என்னும் நான்காவது வினாவிற்கு விடை சித்தித்தது. (71)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ கிரந்தத்தே நான்கு வினாக்கள் நான்கு விடைகள் என்பவற்றின் வாயிலாய் ஸ்திதப்பிரஞ்ஞபுருஷனுடைய சர்வ இலக்கணங்களையும், முமுக்ஷு ஜனங்கள் அவசியஞ் சம்பாதிக்கவேண்டும் என்னும்பொருள் அருளிச் செய்யப்பட்டது. இப்போது நிட்காம கரும யோகத்தின் பலவடிவசாங்கிய நிஷ்டையின் பலத்தை நிரூபித்து, துதிசெய்துகொண்டு ஸ்ரீ பகவான் அதனை உபசம்ஹரித் தருளுகின்றார் :—

சு-ம். ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ।
ஸ்தித்வாஸ்யா மந்தகாலேபி ப்ரஹ்மநிர்வாணம்ருச்சதி ॥ (72)

ப-ம். 2 ஏஷா 3 ப்ராஹ்மீ 4 ஸ்திதி: 1 பார்த்த 7 ந 5 ஏநாம் 6 ப்ராப்ய 8 விமுஹ்யதி 11 ஸ்தித்வா 9 அஸ்யாம் 10 அந்தகாலே 12 அபி 13 ப்ரஹ்மநிர்வாணம் 14 ருச்சதி.

(அ-ம்.) ஹே பார்த்த! இந்தப் பிரஹ்மவிஷயகஸ்திதியையடைந்து எப்புருஷனும் மோகத்தையடைவதேயில்லை. அந்திய அவஸ்தையின்கண்ணே இந்த ஸ்திதியிலிருந்தபோதினும், இப்புருஷன் பிரஹ்மநிர்வாணத்தை யடைவன். (72)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் யாம் நின்பொருட்டு ஸ்திதப்பிரஞ்ஞனுடைய இலக்கணங்களை ஒன்றன்வாயிலாகக் கூறினோம். அங்ஙனமே 'ஏஷாதேஹி ஹிதாஸாம்க்யேபுத்தி:' என்னும் வசனத்தால் கூறிய சர்வகருமங்களின் சந்யாசபூர்வக பரமான்மஞானரூபஸ்திதியானது பிரத்தியக்கபின்னப்பிரஹ்மத்தை விஷயஞ்செய்வதாம். ஆகையால், அந்தஸ்திதி, பிராஹ்மியெனப்படும். அத்தகைய பிரஹ்மநிஷ்டைவடிவஸ்திதியை யாவனொருவன் அடைவனோ, அவன் மீண்டொருகாலும் அஞ்ஞானரூப மோகத்தையடையான். ஏனெனின், அவ்வஞ்ஞானம் அநாதியாம் அதாவது உற்பத்தியற்றதாம். ஆதலின், ஆன்ம ஞானத்தால் ஒருமுறை நாசத்தை அடையின், அது மீண்டொருகாலும் உண்டாகமாட்டாது.

அத்தகைய பிரஹ்மநிஷ்டைவடிவஸ்திதியின்கண் யாவனேனுமொருவன் அந்திய அவஸ்தையின்கண்ணேனும் நிலைபெறுவனாயின், அப்புருஷனும் பிரஹ்ம நிர்வாணத்தையடைவன். அதாவது, பிரஹ்மத்தின்கண்ணே ஆநந்தத்தை அடைவன் அல்லது, பிரஹ்மரூபஆநந்தத்தை யான்பிரஹ்மரூபனாயிருக்கின்றேனென்னும் அபேதவடிவத்தால் அடைவன். ஈண்டு 'நிர்வாணம்' என்னும்பதம்ஆநந்தபோதகமாம். ஒருரையின்கண்ணே, 'ப்ரஹ்மநிர்வாணம்' என்னுமிவ்விரண்டு பதங்களையும் பின்னமெனவுடன்பட்டு, இப்பொருள் செய்யப்பட்டுளது :—அந்தப் பிராஹ்மீ ஸ்திதியின்கண்ணே நிலைபெற்றுநின்று அவ்வறிஞனவன் பிரஹ்மத்தை அடைவன். எங்ஙனம் சுவர்க்கம்முதலியலோகங்கள் கமனரூபக்கிரியையினால்கிடைக்குமோ, அங்ஙனம் அந்தப்பிரஹ்மமும்கமனரூபக்கிரியையால் கிடைத்தல் கூடும் எனச்சங்கையுண்டாக அதனை நீக்குவான் அந்தப் பிரஹ்மத்திற்கு விசேஷணங் கூறியருளியதாம் 'நிர்வாணம்' என்பது 'நிர்கதம்வாநம் கமநம் யஸ்மிந் ப்ராப்தவ்யே ப்ரஹ்மணி தந்நிர்வாணம்'

(பொ-ள்.) எந்தப் பிரஹ்மத்தின்கண்ணே கமனரூபக் கிரியை நீங்கிவிட்டதோ, அது நிர்வாணமெனப்படும்.

ஆ-சு. ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி அத்ரைவ ஸமவநீயந்தே ।

ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி ॥

(பொ-ள்.) மரணகாலத்தின்கண்ணே எங்ஙனம்அஞ்ஞானிகளின்பிராணன் இச்சரீரத்தினின்றுங்கிளம்புமோ, அங்ஙனம், அந்தப்பிரஹ்மவேத்தாவாயஞானியின்பிராணன் இச்சரீரத்தினின்றும் வெளியேகிளம்புவதினன்றும்; மற்றோ, அந்தப் பிராணன் இச்சரீரத்தினுள்ளே இலயபாவத்தைஅடையும். இவ்வறிஞனவன் பிரஹ்மரூபமாயே பிரஹ்மத்தைஅடைவன் என்பதாம். ஈண்டு 'அந்தகாலேऽபி' என்னும் வசனத்தின்கண்ணேஇராநின்ற 'அபி' என்னுஞ் சப்தத்தால் ஸ்ரீ பகவானனவர் இந்தக்கைமுதிகநியாயத்தைக் குறிப்பித்தருளினர்:—இவ்வதிகாரியானவன் அந்தியஅவஸ்தையின்கண்ணும் அந்தப்பிரஹ்மநிஷ்டையின்கண்ணே இருந்து அந்த ஆநந்தவடிவப்பிரஹ்மத்தையே அடைவனாயின் எப்புருஷன் பிரஹ்மசரிய ஆசிரமத்திருந்தே சந்யசித்துக்கொண்டு மரண பரியந்தம் அந்தப்பிராஹ்மீஸ்திதியின்கண்ணே நிலைபெற்றிருப்பனோ அப்புருஷன் அந்தப்பிரஹ்மத்தை அடைவன் என்பதன்கண்ணே கூறவேண்டியது யாதுளது.

ஆ-சு. விஜ்ஞாய அவஸ்தாம் தேவதாஜ்ஞயா ஸ்வ்யவோதத: ।

ஸர்வோத்தம: ராஜர்ஷி: கட்வாங்க: முஹூர்த்தாந் முக்திமேயிவாந் ॥

(பொ-ள்.) சர்வ இராஜாக்களினும் மேன்மையனாகிய கட்வாங்கன் எனப் பெயரிய இராஜரிஷி தனது அந்தியஅவஸ்தையைநோக்கித் தேவதைகளின் உபதேசத்தால ஒரு முகூர்த்தமாத்திரத்தே கைவல்யமுக்தியை அடைந்தனன் என்பதாம். இப்போது இந்த இரண்டாவது அத்தியாயத்தின்கண்ணே விஸ்தாரமாய் நிரூபித்தருளிய பொருள் யாவற்றையும் சுருக்கமாய்க் கூறும் சுலோகத்தைக் கூறுவாம்:—

ஜ்ஞாநம் தத்ஸாதநம் கர்மஸத்வஶுத்திஶ்ச தத்பலம் ।
தத்பலம் ஜ்ஞாநநிஷ்டைவ த்விதீயேऽஸ்மிந் ப்ரகீர்த்திதம் ॥

(பொ-ள்.) இந்த ஸ்ரீமற்பகவற்கீதையின் இரண்டாவதுஅத்தியாயத்தின் கண்ணே ஆன்மஞானமும், அதன் பரம்பராசாதனரூப நிட்காமகருமமும், அதன் அந்தக்கரணசுத்திரூப பலமும், அதற்கு ஞானநிஷ்டைவடிவபலமும் ஆகிய இவைகள் கூறியருளப்பட்டுள்ளன.

ஸ்ரீ பரமஹம்ஸ பரிவிராஜகாசார்ய ஸ்ரீமத்உத்தவாநந்தகிரிசுவாமிகளது பூஜ்யபாதசிஷ்யராகிய ஸ்ரீ சித்கனாநந்தகிரிசுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகை எனப் பெயரிய வியாக்கியானத்தின்

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# மூன்றாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

(அ-கை.) ஆண்டு இந்த ஸ்ரீமத்பகவற்கீதையின் முதலத்தியாயத்தால் உபோத்காதஞ் செய்யப்பட்ட சம்பூரணகீதாசாஸ்திரத்தின் அருத்தங்கள் சூத்திரமாய் இரண்டாவது அத்தியாயத்தால் குறிப்பித்தருளப்பட்டன; அவ்வகையைக் காண்பிப்பாம் :—இவ்வதிகாரிக்கு முதலில்நிட்காமகருமநிஷ்டையுண்டாம், அதன்பின் அந்தக்கரணசுத்தியுண்டாம், அதன்பின் சமதமாதி சாதனவாயிலாய்ச் சர்வ கருமங்களின் சந்யாசமுண்டாம், அதன்பின் வேதாந்த வாக்கியங்களின் விசாரசகித பகவற்பக்திநிஷ்டையுண்டாம், அதன்பின் தத்துவஞானநிஷ்டையுண்டாம், அதன்பின் முக்குணவடிவஅவித்தைநிவிருத்திவாயிலாய் ஜீவன்முக்திரூபதத்துவஞானநிஷ்டையின்பலமுண்டாம், அந்த ஜீவன்முக்திரூபபலம் பிராரப்தகருமத்தின் பலபோகபரியந்தம்இருக்கும், அந்தப் பிராரப்தகருமஞ் சமாப்தியான பின்னர் விதேகமுக்தியுண்டாம். ஆண்டு ஜீவன்முக்திதசையின்கண்ணே பரம புருஷார்த்தத்தைப்பற்றி இப்புருஷனுக்குப் பரவைராக்கியப்பிராப்தி உண்டாம். அந்தப் பரவைராக்கியப்பிராப்தியின்கண்ணே, தைவீசம்பத்து எனப்பெயரிய சுப வாசனை உபயோகியாகும். ஆகையால், அந்தச் சுபவாசனையோ கிரகணஞ்செய்யயோக்கியமாம். ஆசுரீசம்பத்து எனப்பெயரிய அசுபவாசனை அந்தப்பரவைராக்கியப் பிராப்தியின்கண்ணே விரோதியாமாதலின், அது பரித்தியாகஞ்செய்யத் தகுந்ததாம். அவற்றுள், தைவீசம்பத்திற்கு அசாதாரணகாரணம் சாத்விகீ சிரத்தையாம். ஆசுரீ சம்பத்திற்கு அசாதாரணகாரணம் இராஜசீசிரத்தையும், தாமசீ சிரத்தையுமாம். இவ்வண்ணம் கவருதற்குத்தகுதியும், பரித்தியாகஞ் செய்தற்குத்தகுதியும்ஆய பதார்த்தவிபாகத்தால் சர்வகீதாசாஸ்திர அர்த்தத்தின் பரிசமாப்தியாம். அவ்வெல்லாப்பொருள்களும் இந்தக்கீதையின் சூத்திரரூப இரண்டாவது அத்தியாயத்தின்கண்ணே குறிப்பித்தருளப்பட்டன. ஆண்டு, இக்கீதையின் இரண்டாவதுஅத்தியாயத்தின்கண்ணே 'யோகஸ்த: குரு கர்மாணி' என்பதாதி வசனங்களாற் குறிப்பித்தருளப்பட்ட அந்தக்கரணசுத்தியின் சாதனரூப நிட்காமகருமநிஷ்டை சாமானியரூபமாயும், விசேஷரூபமாயும் இக்கீதையின் மூன்றாவது, நான்காவது என்னும் இரண்டுஅத்தியாயங்களில் நிரூபித்தருளப்பட்டுளது. அதன் பின்னர் 'விஹாய காமாந் ய: ஸர்வாந்' என்பதாதி வசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட சுத்தஅந்தக்கரணமுடைய அதிகாரிக்குச் சமதமாதி சாதனசம்பத்திபூர்வக சர்வகருமங்களின்சந்யாசநிஷ்டை இக்

கீதையின் ஐந்தாவது, ஆறாவது என்னும் இரண்டு அத்தியாயங்களில் நிரூபித்தருளப்பட்டுளது. இத்துணையால் துவம்பதார்த்த நிரூபணஞ் சித்தமாம். அதன் பின்னர் 'யாவாநர்த்த உதபாநே' என்பதாதி வசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட வேதாந்த வாக்கியங்களின் விசாரசகித அநேகம்வகையாயபகவத்பக்தி நிஷ்டை இக்கீதையின் ஏழாவது, எட்டாவது, ஒன்பதாவது, பத்தாவது, பதினொன்றாவது, பன்னிரண்டாவது என்னும் ஆறு அத்தியாயங்களில் நிரூபித்தருளப்பட்டுளது. இத்துணையால் தற்பதார்த்தநிரூபணஞ் சித்தமாயது. ஆண்டு, முன்முன் அத்தியாயத்திற்குப் பின்பின் அத்தியாயத்தோடு சம்பந்தரூப அவாந்தர சங்கதியும், அவாந்தரப் பிரயோஜனங்களின் பேதமும், அவ்வவ்வத்தியாய வியாக்கியானத்தின்கண்ணே எம்மாற் காண்பிக்கப்பெறும். அதன்பின் 'வேதாவிநாசிநம் நித்யம்' என்பதாதிவசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட தத்துவம் பதார்த்தங்களின் அபேதஞானரூபதத்துவஞானநிஷ்டை இக்கீதையின் பதின்மூன்றாவது அத்தியாயத்தின்கண்ணே பிரகிருதிபுருஷவிவேகவாயிலாய் நிரூபித்தருளப்பட்டுளது. அதன்பின் 'த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந' என்பதாதிவசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட திரைகுண்ய நிவிருத்திரூப அந்தஞானநிஷ்டையின்பலம் இக்கீதையின் பதினான்காவது அத்தியாயத்தின்கண்ணே நிரூபித்தருளப்பட்டுளது. அந்தத் திரைகுண்ய நிவிருத்தியே ஜீவன்முக்தியாம். இவ்வார்த்தை குணாதீதனுடைய இலக்கணங்களைக் கூறியருளும் வாயிலாய் நிரூபித்தருளப்பட்டுளது. அதன்பின் 'ததா கந்தாஸி நிர்வேதம்' என்பதாதிவசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட பரவைராக்கியநிஷ்டை இக்கீதையின் பதினைந்தாவது அத்தியாயத்தின்கண்ணே சம்சாரரூப விருக்ஷத்தை வெட்டும் வாயிலாய் நிரூபித்தருளப்பட்டுளது. அதன்பின் 'து:கேஷ்வநுத்விக்நமநா:' என்பதாதி வசனங்களில் ஸ்திதப்பிரஞ்ஞனுடைய இலக்கணத்தால் குறிப்பித்தருளப்பட்ட அந்தப்பரவைராக்கியத்தின் உபயோகியாய தைவீகசம்பத்தோ கவாத்தக்கதாம். 'யா நிஶா ஸர்வபூதாநாம்' என்பதாதிவசனங்களால குறிப்பித்தருளப்பட்ட அந்தப்பரவைராக்கியத்தின் விரோதி, ஆசுரீ சம்பத்தாம்; அது பரித்தியாகஞ்செய்யத்தகுதியதாம் என்னும் இவ்வெல்லா விஷயமும் இக்கீதையின் பதினாறாவது அத்தியாயத்தின்கண்ணே கூறியருளப்பட்டுளது. அதன்பின் 'நிர்த்வந்த்வோ நித்யஸத்த்வஸ்த:' என்பதாதி வசனங்களால் குறிப்பித்தருளப்பட்ட அத்தைவீசம்பத்தின் அசாதாரணகாரணரூப சாத்விகீசிரத்தை இக்கீதையின் பதினேழாவது அத்தியாயத்தின்கண்ணே இராஜசீ தாமசீ சிரத்தைகளின் நிவிருத்திவாயிலாய்க் கூறியருளப்பெற்றுளது. இவ்வண்ணம் பதின்மூன்றாவது அத்தியாயமே முதலாகப் பதினேழாவது அத்தியாயபரியந்தம் உள்ள ஐந்து அத்தியாயங்களில்பலசகிதஞானநிஷ்டை நிரூபித்தருளப்பட்டுளது. அதன்பின், இக்கீதையின் பதினெட்டாவது அத்தியாயத்தின்கண்ணே முன்னர்க் கூறியருளிய சர்வ அர்த்தங்களின் உபசம்ஹாரஞ் செய்தருளப்பட்டுளது. இவ்வாறாகச் சர்வகீதையின்அர்த்தத்தின் பரஸ்பர சம்பந்தஞ் சித்தமாமெனவுணர்க. ஆண்டு, முன்னர் இரண்டாவது அத்தியாயத்தின்கண்ணே சாங்கியபுத்தியை ஆசிரயித்து ஸ்ரீ பகவானனவர் 'ஏஷா தேऽபிஹிதா ஸாங்க்யே' என்பதாதி வசனங்களால் ஞானநிஷ்டை கூறியருளினர். அங்ஙனமே யோகபுத்தியை ஆசிரயஞ்செய்து ஸ்ரீபகவானனவர் 'யோகே த்விமாம் ஶ்ருணு' என்பதாதியாய் 'கர்மண்யேவாதிகாரஸ்தே மா தே ஸங்கோऽஸ்த்வகர்மணி' என்பது பரியந்தம் உள்ள சர்வவசனங்களாலும் கரும நிஷ்டை கூறியருளினர். ஆனல், ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்னுமிரண்டின் அதிகாரிகளின்பேதத்தை ஸ்ரீபகவானனவர் வெளிப்படையாய்க் கூறியருளவில்லை.

சங்கை :—அவ்விரண்டு நிஷ்டைகட்கும் அதிகாரியொருவனேயாவன் ; ஏனெனின், ஞானம், கருமம் என்னும் இரண்டின்சமுச்சயமே மோக்ஷ அடைவிற்கேதுவாம்.

சமாதானம் :—ஞானம், கருமம் என்னுமிரண்டின்சமுச்சயத்தை அங்கீகரித்து, அவ்விரண்டிற்கும் ஓரதிகாரியை அங்கீகரித்தல் ஸ்ரீபகவானுக்கு இஷ்டமின்றாம். ஏனெனின், '஦ூரேண ஹ்யவரம் கர்ம பு஡்தியோகா஦்தநஞ்ஜய' என்னுந் திருவாக்கால் ஸ்ரீபகவானனவர், ஞானநிஷ்டையை அபேக்ஷித்துக் கருமநிஷ்டையின்கண்ணே தாழ்வுடைமையைக் கூறியருளினமையினென்க. 'யாவாநர்த்த உதபாநே' என்னுந்திருவசனத்தால் ஸ்ரீபகவானனவர் ஆன்மஞானபலத்தின் கண்ணே சர்வகருமபலஉள்ளடக்கத்தையுங் காண்பித்தருளினர். ஸ்திதப்பிரஞ்ஞபுருஷனுடைய இலக்கணத்தைக்கூறியருளி ஸ்ரீபகவானனவர் 'ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த' என்னுந்திருமொழிபால்பிரசம்சையோடு ஞானபலத்தை உபசம்ஹரித்தருளினர். 'யஸ்மிந்ஸ்திதோ ந து:கேந' என்பதாதி திவ்யவசனங்களால் ஸ்ரீபகவானனவர், ஞானமுடையவனுக்குத் துவைததரிசனமின்மையானே கருமானுஷ்டானஅசம்பவத்தைக்கூறியருளினர். எங்ஙனம் உலகின்கண்ணே இருள் நீக்குமிடத்துக்கேவலம் ஒளிமாத்திரமே காரணமென உடன்பாடோ, அங்ஙனம் அவித்திபாநிவிருத்திவடிவமோக்ஷபலத்தின்கண்ணும் கேவலம்ஞானமாத்திரமே காரணமாம். சுருதியும் ஞானமாத்திரத்தானே மோக்ஷப்பிராப்தியையுரைக்கின்றது.

ஆ-சு. தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதே(அ)யநாய.

(பொ-ள்.) இவ்வதிகாரியானவன் ஆனந்தவடிவஆன்மாவைச் சாக்ஷாத்கரித்துச் சம்சாரரூபமிருத்யுவைநாசஞ்செய்வன் மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு ஆன்மசாக்ஷாத்காரமின்றி வேறொருமார்க்கமுமின்றாம். ஆகையால், ஞானம், கருமம் என்னுமிரண்டின்சமுச்சயஞ் சம்பவியாது ; அங்ஙனமே ஓரதிகாரியாதலுஞ் சம்பவியாது.

சங்கை:—ஒளியும் இருளும் பரஸ்பரம்விரோதியாமாதலின், அவ்விரண்டின் சமுச்சயஞ் சம்பவியாததேபோல, ஆன்மஞானமும் கருமமும் பரஸ்பரம்விரோதியாமாதலின், அவ்விரண்டின சமுச்சயமுஞ் சம்பவியாது. ஆகையால், ஞானம், கருமம் என்னுமிரண்டிற்கும் வேறுவேறே அதிகாரியாவர்.

சமாதானம் :—ஞானங் கருமம் என்னுமிரண்டிற்கும் வேறுவேறே அதிகாரியாவர் என்னும்வார்த்தை சத்தியமாமாயினும், அர்ச்சுனனொருவன்பொருட்டே ஞானத்தையுங்கருமத்தையும்உபதேசித்தருளல் சம்பவிக்கமாட்டாது; ஏனெனின், எத்தேகாபிமானியானவன் கருமாதிகாரியாவனோ, அவனுக்கு ஞானநிஷ்டையை உபதேசித்தல் தகுதியாகமாட்டாது. எத்தேகாபிமானமற்றவன் ஞானாதிகாரியாவனோ, அவனுக்குக் கருமநிஷ்டையை உபதேசித்தல் தகுதியாகமாட்டாது.

சங்கை :—ஒரே புருஷனைக்குறித்து விகற்பமாக ஞானகருமங்களின் உபதேசஞ் சம்பவிக்குமன்றோ ?

சமாதானம் :—சமானஇயற்கையையுடையபதார்த்தங்கட்கே விகற்பமாக விதானமானது கூடும். ஹோமத்தின்கண்ணே சமான இயற்கையையுடைய விரீகி (நெல்) யவை (கோதுமைவகுப்பு) முதலிய பதார்த்தங்கட்கு விகற்பமாக விதானமானது கூடும். ஆனல், உயர்ந்துதாழ்ந்தொரநின்றபதார்த்தங்கட்கு விகற்பமாகவிதானமானது கூடாதாம். ஆன்மஞானத்தை யபேக்ஷித்துக் கருமத்தின்கண்ணே தாழ்வும், கருமத்தை யபேக்ஷித்து ஆன்மஞானத்தின்கண்ணே உயர்வும் '஦ூரேண ஹ்ய

'𑌹𑍍𑌯𑌵𑌰𑌂𑌕𑌰𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌧𑌨𑌂𑌜𑌯' என்பதாதி வசனங்களால் வெளிப்படையேயாம். ஆகையால், ஞானங் கருமம் என்னுமிரண்டிற்கும் விகற்பஞ்சம்பவியாது. அல்லது, காரியசகிதஅவித்தையின் நிவிருத்தியால் உபலக்ஷிதமாகிய பிரஹ்மாநந்தரூபமோக்ஷத்தின்கண்ணே கருமங்களின் சுவர்க்காதிபலன்களைப்போல குறைவுமிகுதிசம்பவியாது. இக்காரணத்தானும் ஞானகருமமிரண்டின் சமுச்சயஞ் சம்பவியாது. ஆகையால், இப்பொருள் துணியப்பெற்றது :—ஞானநிஷ்டை கருமநிஷ்டையென்னும் இரண்டிற்கும் ஒருகால் வேறுவேறாய அதிகாரியை உடன்படினே, ஒருவனைக் குறித்து அவ்விரண்டுநிஷ்டைகளின் உபதேசஞ்சம்பவிக்கமாட்டாது. அவ்விரண்டு நிஷ்டைகட்கும் ஒருகால் ஒரே அதிகாரியைஅங்கீகரிக்கின், பரஸ்பரம்விருத்தமாய அவ்விரண்டுநிஷ்டைகட்குஞ் சமுச்சயஞ்சம்பவியாது. அங்ஙனமே கருமத்தையபேக்ஷித்து ஆன்மஞானத்தின்கண்ணே மேன்மையுஞ்சித்திக்கமாட்டாது. ஞானங்கருமமென்னுமிரண்டிற்கும் ஒருகால் விகற்பத்தைஅங்கீகரிக்கின், யாவற்றினும் மேன்மைமிக்கதும், பரிசிரமமின்றியே சித்திக்கத்தக்கதும் ஆய ஆன்மஞானத்தைப் பரித்தியாகஞ்செய்து, மிகப்பரிசிரமத்தால் சித்திக்கத்தக்கதும், அத்தியந்தந்தாழ்மையதுமாய கருமானுஷ்டானத்தை எவனுஞ்செய்யமாட்டான் எனஎண்ணி, அத்தியந்தம்வியாகுலத்தையடைந்த புத்தியையுடைய அர்ச்சுனன் ஸ்ரீபகவானைநோக்கி இங்ஙனங் கூறத்தொடங்கினன்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

சு-ம். 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 𑌚𑍇𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌣𑌸𑍍𑌤𑍇 𑌮𑌤𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 ।
𑌤𑌤𑍍𑌕𑌿𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌘𑍋𑌰𑍇 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ॥ (1)

ப-ம். 6 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑍀 3 𑌚𑍇𑌤𑍍 4 𑌕𑌰𑍍𑌮𑌣𑌃 2 𑌤𑍇 7 𑌮𑌤𑌾 5 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 1 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 8 𑌤𑌤𑍍 13 𑌕𑌿𑌂 11 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 10 𑌘𑍋𑌰𑍇 12 𑌮𑌾𑌂 14 𑌨𑌿𑌯𑍋𑌜𑌯𑌸𑌿 9 𑌕𑍇𑌶𑌵.

(அ-ம்.) ஹே ஜநார்த்தன! தங்கட்கு நிட்காமகருமத்தினும் ஆன்மதத்துவவிஷயகபுத்திமேன்மையதெனத் திருக்கருத்திருப்பின், ஹே கேசவ! ஹிம்சைவடிவகோரகருமத்தின்கண்ணே அடியேனை, தேவரீர் யாதின்பொருட்டு ஏவியருளுகின்றீர்கள்.

(வி-ம்.) ஹே ஜனார்த்தன! ஒருகால் நிட்காமகருமத்தினும் ஆன்மதத்துவவிஷயகபுத்தி அத்தியந்தம் மேன்மைமிக்கதாகத் தங்கட்குஅபிமதமாகுமாயின், ஹே கேசவ! ஹிம்சைமுதலிய அநேக ஆயாசங்களோடுகூடிய இப்போர்வடிவகோரகருமத்தின்கண்ணே அத்தியந்தம்பக்தனாய என்னை '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑍇𑌵𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍇' என்பதாதிய திருமொழிகளால் தாங்கள் அடிக்கடியாதின்பொருட்டு ஏவியருளுகின்றீர்கள் :—

ஆ-சு. 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑍍𑌜𑌨𑍈𑌰𑌰𑍍𑌦𑍍𑌯𑌤𑍇 𑌯𑌾𑌚𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 ।
𑌅𑌭𑍀𑌷𑍍𑌟𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑍇 𑌇𑌤𑌿 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 ॥

(பொ-ள்.) தத்தமது சித்தத் திச்சித்த பதார்த்தஅடைவின்பொருட்டுச் சர்வஜனங்களும் எவரைப்பிரார்த்தனைசெய்கின்றார்களோ அவர்ஜனார்த்தனராம்.

அல்லது, "𑌜𑌨𑌂 𑌜𑌨𑌨𑌂 𑌤𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 ।
𑌸𑍍𑌵𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑌾𑌰𑍇𑌣𑌾𑌰𑍍𑌦𑌯𑌤𑌿 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑍀𑌤𑌿 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃."

(பொ-ள்.) ஜன்மத்தையும், ஜன்மத்தின்காரணமாயஅஞ்ஞானத்தையும் எவர் தமதுசாக்ஷாத்காரத்தால் நாசஞ்செய்வரோ, அவர் ஜனார்த்தனராம். ஈண்டு '𑌹𑍇 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨' என்னும்சம்போதனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக்குறிப்பித்த

னன் :—இங்ஙனம்பிரார்த்தனைசெய்யும் பக்தஜனங்கள்பொருட்டுத் தாங்கள் சித்தத்திச்சித்த வேண்டும்பதார்த்தங்களை அடைவிப்பவரன்றோ. ஆகையால், எனது மேன்மையை நிச்சயஞ்செய்யும்பொருட்டுத் தங்களை யான் பிரார்த்தித்தது அநுசிதமன்றாம். 'ஹே கேஶவ' என்னுஞ்சம்போதனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன். யாவருக்கும் ஈஶ்வரராயும், சர்வஇஷ்டபதார்த்தங்களையும் அடைவிப்பவராயும், பகவானுயும் இராநின்றதங்களையே 'ஶிஷ்யஸ்தேऽஹம் ஶாதி மாம்' என்பதாதி பிரார்த்தனைவாயிலாய்ச்சரணமாகஅடைந்தபக்தனுகிய அர்ச்சுனன் யான்; என்னைவஞ்சிப்பது தங்கட்குசிதமன்றாம். (1)

(அ கை.) ஹே அர்ச்சுன! கிருஷ்ணபகவானுகியயான் எந்தப்பிராணியையும் வஞ்சனைசெய்வதில்லையாயின், அத்தியந்தம் பிரியபக்தனுயநின்னைஎங்ஙனம் வஞ்சிப்பேன்; மற்றோ, வஞ்சியேன். நீஎன்னிடத்தேவஞ்சித்தற்குரிய எக்குறிப்பைக்கண்டனைஎன, ஸ்ரீபகவான் சங்கித்தருள, அர்ச்சுனன் ஸ்ரீபகவானைநோக்கிக் கூறுகின்றான் :—

சு-ம். வ்யாமிஶ்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே ।
ததேகம் வத நிஶ்சித்ய யேந ஶ்ரேயோऽஹமாப்நுயாம் ॥ (2)

ப-ம். 1 வ்யாமிஶ்ரேண 2 இவ 3 வாக்யேந 5 புத்திம் 7 மோஹயஸி 6 இவ 4 மே 8 தத் 9 ஏகம் 11 வத 10 நிஶ்சித்ய 12 யேந 14 ஶ்ரேய: 13 அஹம் 15 ஆப்நுயாம்.

(அ-ம்.) ஹே பகவன்! கலந்த வசனம்போன்ற வசனத்தால் தாங்கள் எனது புத்தியை மோககர்த்தாவைப்போன்று மோகமடையுமாறு செய்தருளுகின்றீர்கள் எதனால் யான்மோக்ஷத்தைஅடைவேனோ, அத்தகையஓர் அதிகாரத்தைத் தாங்கள் நிச்சயமாய்எனக்குஉபதேசியுங்கள். (2)

(வி-ம்.) ஹே பகவன்! 'த்ரைகுண்யவிஷயா வேதா நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந' என்பதாதிவசனங்களால் தாங்கள்முன்னர்ச்சிலவிடத்தோ வேத நிஷ்டையின்பரித்தியாகத்தைச் செய்வித்தருளினீர்கள். 'கர்மண்யேவாதிகாரஸ்தே' என்பதாதிவசனங்களால் முன்னர்ச்சிலவிடத்தோ தாங்கள் அந்தவேத நிஷ்டையின்கவர்ச்சியைச்செய்வித்தருளினீர்கள். 'நிஷ்காமகர்மயோகேந ஜ்ஞாநயோகஸ்ய ஸித்தி:' என்பதாதிவசனங்களால் முன்னர்ச்சிலவிடத்தோ தாங்கள் நிவிருத்திமார்க்கஉபதேசத்தைச்செய்தருளினீர்கள். 'யஜ்ஞார்த்தாத் கர்மணோऽந்யத்ர லோகோऽயம் கர்மபந்தந:' என்பதாதிவசனங்களால் முன்னர்ச்சிலவிடத்தோ தாங்கள் பிரவிருத்திமார்க்கத்தைஉபதேசித்தருளினீர்கள். இவ்வண்ணம் ஞான நிஷ்டையையும் கருமநிஷ்டையையும் பிரதிபாதித்தருளும் தங்களுடைய திருமொழிகள் கலந்தபொருள்களைக் கழறியருளுவனவன்றாம்; மற்றோ, வேறு வேறு பொருள்களை விளம்பி அருளுவனவாம். ஆயினும், எனக்கு எனதுபுத்திதோஷத்தால் ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்னும் இரண்டினுக்கும் ஒரே அதிகாரியா? அல்லது வேறு வேறு அதிகாரியா? என்னும் ஐயத்தால் கலந்தபொருளைக் கூறும் வாசகங்கள்போற்பிரதீதியாகின்றன. என்னும் இப்பொருளை அர்ச்சுனன் 'வ்யாமிஶ்ரேணேவ' என்னும்வசனத்தின்கண்ணே இராநின்ற 'இவ' என்னும்சப்தத்தால் சூசனைசெய்தனன். ஹேபகவன்! இத்தகைய ஞானகருமநிஷ்டைகளைப் பிரதிபாதித்தருளும் கலப்புடையதிருவாக்கியங்களால் தாங்கள் மந்த புத்தியையுடைய எனது அந்தக்கரணத்தை மோகமடையுமாறுசெய்தருளுகின்றீர்கள். ஈண்டு 'மோஹயஸீவ' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற 'இவ' என்னும்சப்தத்தால்

அர்ச்சுனன் இப்பொருளைக்குறிப்பித்தனன் :— தாங்கள் பரமகிருபாளுவாவீர்களாதலின், எனது மோகத்தை நிவிருத்தித்தருளும்பொருட்டே முயன்றருளினீர்களன்றி, என்னை மோகிப்பித்தருளும்பொருட்டுத் தாங்கள் முயன்றருளவில்லை; ஆயினும், தங்களுடைய திருவாக்கியங்களைக் கேட்டு எனக்கு மயல்வடிவமோகமுண்டாயது, அது எனது அந்தக்கரண தோஷத்தால் உண்டாயதாம். ஹே பகவன்! ஞானங் கருமம்என்னும் இரண்டினுக்கும் ஒருகால் ஒருவனே அதிகாரியாயின், பரஸ்பரம்விருத்தமாதலின், அந்த ஞானங்கருமம் என்னும் இரண்டினுக்குஞ்சமுச்சயஞ்சம்பவிக்கமாட்டாது; ஞானங்கருமம் என்னும் இரண்டும் ஓர் அர்த்தத்தின் வேறுதுவன்றுமாதலின், அவ்விரண்டினுக்கும் விகற்பமுஞ்சம்பவியாது. முற்கூறியமுறையே ஒருகால் தாங்கள் ஞானங், கருமம்என்னும் இரண்டினுக்கும் அதிகாரிகளின் பேதத்தை அங்கீகரிப்பீர்களாயின், அர்ச்சுனனாகிய என் ஒருவன்பொருட்டே பரஸ்பரம் விருத்தமாய ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்னும் இரண்டின் உபதேசஞ்சம்பவிக்கமாட்டாது. எங்ஙனம் ஒரேபுருஷன் ஒரேகாலத்தில் பரஸ்பரம்விருத்தமாய இருப்பையுங் கமனத்தையுஞ்செய்வதன்கண்ணே ஆற்றலுடையவனாகானே, அங்ஙனம் அர்ச்சுனனாகியயானொருவனே ஒரேகாலத்தின்கண்ணே பரஸ்பரம் விருத்தமாய ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்னும் இரண்டையும் அனுஷ்டானஞ் செயவதன்கண்ணே ஆற்றலுடையவனாகேன். ஆகையால், ஞானத்தின்அதிகாரம், கருமத்தின்அதிகாரம் என்னும் இரண்டனுள்ளே ஓர் அதிகாரத்தைத்தாங்கள் நிச்சயித்தருளி எனக்குபதேசித்தருளல்வேண்டும். எவ்வதிகாரநிச்சயவாயிலாய்த் தங்கள் திவ்யவசனத்தால் அர்ச்சுனனாய யான் ஞானம், கருமம்என்னும் இரண்டன்மத்தியில் ஒருஞானத்தையேனும், ஒருகருமத்தையேனும் அனுஷ்டானஞ்செய்து, மோக்ஷரூபசிரேயசையடைந்துவாழ்வனே. ஈண்டு ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்னும்இரண்டுநிஷ்டைகட்கும் ஓர்அதிகாரியை அங்கீகரிப்பின், அவ்விரண்டு நிஷ்டைகட்கும் விகற்பமேனுஞ் சமுச்சயமேனுஞ் சம்பவிக்கமாட்டா. ஆதலின், அவ்விரண்டுநிஷ்டைகட்கும் அதிகாரிபேதத்தைஅறியும்பொருட்டு, இவ்விரண்டுசுலோகங்களால் அர்ச்சுனன் வினவியதாம்எனத்துணியப்பெறும். (2)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனன்ஞானநிஷ்டைகருமநிஷ்டைஎன்னும் இரண்டின் அதிகாரிபேதத்தைவினவியபோது, ஸ்ரீ பகவான் அவ்வர்ச்சுனனது வினாவின் அனுசாரியாய் விடையை விளம்பியருளுகின்றார் :—

ஸ்ரீ பகவாநுவாச.

சு-ம். லோகேஸ்மிந் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாநக !
ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம் ॥ (3)

ப-ம். 3 லோகே, அஸ்மிந் 6 த்விவிதா 7 நிஷ்டா 4 புரா 8 ப்ரோக்தா 5 மயா 1 அநக 10 ஜ்ஞாநயோகேந 9 ஸாங்க்யாநாம் 12 கர்மயோகேந 11 யோகிநாம். (3)

(அ-ம்.) ஹே பாவமற்ற அர்ச்சுன! இவ்வுலகின்கண்ணே பூர்வஅத்தியாயத்தே யாம் இருவகையாய நிஷ்டைகளைக் கூறினோம்; ஆண்டுத் தத்துவ வேத்தாப்புருஷர்கட்கு ஞானரூபயோகத்தால் அந்த நிஷ்டைகூறினோம். கரும யோகத்தையுடைய புருஷருக்குக் கருமரூபயோகத்தால் அந்நிஷ்டைகூறினோம். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அதிகாரிரூபமாய்அங்கீகரித்தசுத்த அந்தக்கரணமுடையவர், அசுத்தஅந்தக்கரணமுடையவர், என்பவர்இருவகையராவர். அவ்விருவகையரும் நிறைந்தஇவ்வுலகின்கண்ணே ஞானபரத்தன்மை, கருமபரத்தன்மைகளாகிய இருவகைஸ்திதிரூபநிஷ்டையைப் பூர்வஅத்தியாயத்தின்கண்ணே யாம் நின்பொருட்டு வெளிப்படையாய்க் கூறினோம். ஆகையால், ஞானநிஷ்டை, கருமநி

ஷ்டையென்னுமிரண்டனுள் ஓர் அதிகாரியின்சங்கையால் நீ கிலானியை அடையா தொழிக. ஈண்டு 'ஹே அநக' ஹேபாவமற்றவனே! என்னுஞ்சம்போதனத்தால் ஸ்ரீபகவானானவர் அவ்வர்ச்சுனனிடத்தே பிரஹ்மவித்தையின் உபதேசயோக்கிய தையைக்குறிப்பித்தருளினர். ஏனெனின், 'ஜ்ஞாநமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத்பாபஸ்ய கர்மண:' என்பதாதிசாஸ்திரவசனங்கள் பாவகருமங்களற்றபுருஷரிடத்தே ஆன்மஞானஉற்பத்தியோக்யதையைக் கூறின. அவ்வொரேஸ்திதிரூபநிஷ்டையானது சாத்தியஅவஸ்தை, சாதன அவஸ்தையென்னும்இரண்டுபேதத்தால்இருவகைத்தாம். இரண்டு நிஷ்டைகளும் சுவதந்திரங்களாமென்பதுமின்றும். இப்பொருளைஉணர்த்தியருளும்பொருட்டே ஸ்ரீபகவானானவர் 'நிஷ்டா' என்னும்பதத்தின்கண்ணே ஒருமையோதிஅருளினர். ஒருகால் அவையிரண்டுஞ் சுவதந்திரங்கள் என ஸ்ரீ பகவானுக்கு அபிமதமிருக்குமாயின், 'நிஷ்டே' என இருமையைத்தோதியருளுவரன்றோ. இப்பொருளை 'ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி' என்னும் வசனத்தால் ஸ்ரீபகவான் மேற்கூறியருளுவர். இப்போது அந்த ஸ்திதிரூப நிஷ்டையையே இருவகைத்தாகவருணித்தருளுகின்றார் 'ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம்' பிரத்தியக்கபின்னப்பிரஹ்மத்தைவிஷயஞ்செய்யும் புத்தியானது சங்கியையெனப்படும்; அதனை அடைந்தவன் சாங்கியனெனப்படுவன். அதாவது, எப்புருஷன் பிரஹ்மசரிய ஆசிரமத்திலிருந்தே சந்நியாசத்தைத் தரித்துளானோ, அங்ஙனமே எப்புருஷன் வேதாந்தசிரவணமநநமுதலியவற்றால் ஆன்மவஸ்துவை நிச்சயஞ்செய்துளானோ, அங்ஙனமே எப்புருஷன் ஞானபூமியின்கண்ணே ஆரூடனாயிருக்கின்றனனோ, அத்தகைய சுத்தஅந்தக்கரணமுடைய சாங்கியனுக்கு 'தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:' என்பதாதி வசனங்களால் பூர்வம் ஞானரூபயோகத்தானே அந்நிஷ்டை கூறியருளப்பட்டது.

"யுஜ்யதே ப்ரஹ்மணா அநேந ஸ யோக:."

(பொ-ள்.) இவ்வதிகாரியானவன் எதனால் பிரஹ்மத்தோடுசேர்க்கப்பட்டுளானோ, அதுயோகமெனப்படும். இவ்வதிகாரியானவன் அந்தஞானத்தானே பிரஹ்மத்தோடுஅபேதபாவத்தை அடைவன்; ஆகையால், அந்த ஞானமே யோகரூபமாம். எப்புருஷரின் அந்தக்கரணம்தூயதாகவில்லையோ, எப்புருஷன் ஞானபூமியின்கண்ணே ஆரூடனாகவில்லையோ, அத்தகையகருமத்திற்கதிகாரியாய யோகிக்கு, அந்தக்கரண சுத்திவாயிலாய் ஞானபூமியின்கண்ணே ஏறும்பொருட்டு, 'யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே' என்பதாதி வசனங்களால் கருமரூப யோகத்தானே பூர்வம் அந்நிஷ்டைகூறியருளப்பெற்றது.

"யுஜ்யதே அந்த:கரணஶுத்த்யா அநேந ஸ யோக:"

(பொ-ள்.) இவ்வதிகாரியானவன் எதனால் அந்தக்கரணசுத்தியோடுசேர்க்கப்பட்டுளானோ, அது யோகமெனப்படும். அத்தகைய அந்தக்கரணசுத்தியைச் செய்வது நிட்காமகருமமாமாதலின், அந்நிட்காமகருமமே யோகரூபமாம். இது கூறியருளியதால் இப்பொருள் துணிந்தருளப்பெற்றதாம்:—ஞானங் கருமம் என்னுமிரண்டற்கும் முற்கூறிய முறையே சமுச்சயமேனும் விகற்பமேனுஞ் சம்பவியா; மற்றோ, முதலில் நிட்காமகருமங்களால் அந்தக்கரணசுத்தியை அடைந்தவராய அதிகாரிகட்குச்சர்வகருமசந்யாசத்தானே ஆன்மஞானஅடைவுண்டாம். ஆகையால், சித்தசுத்திவடிவம், சித்தஅசுத்திவடிவங்களென்னுமிரண்டவஸ்தைகளின் பேதத்கால் அர்ச்சுனனாகிய நின்னொருவனுக்கே எம்மால் '[illegible]' என்பதாதிவசனங்களால் அவ்விருவகையாய நிஷ்டை கூறப்பட்டது. ஆகையால், பூமிகையின்பேதத்தால் ஒருவனுக்கே ஞானங் கருமமென்னும் இரண்டின் உபயோகஞ் சம்பவித்தல் கூடும்.

ஆகையால், ஞானங்கருமம் என்னும் இரண்டிற்கும் அதிகாரபேதமுண்டாயினும், உபதேச வியர்த்தத்தன்மை உண்டாகமாட்டாது. இப்பொருளை அறிவித்தருளும்பொருட்டு, ஸ்ரீ பகவான் இந்தமூன்றாவதத்தியாயத்தின்கண்ணே அசுத்த சித்தமுடையபுருஷனுக்கு அச்சித்தசுத்திபரியந்தம் நிட்காமகருமஅனுஷ்டான கருத்தவ்யத்தன்மையை 'நகர்மணாமநாரம்பாத்' என்பதுமுதல் 'மோகம் பார்த்த ஸஜீவதி' என்னும்வசனபரியந்தம் உள்ளபதின்மூன்றுசுலோகங்களால்கூறியருளுவர். எப்புருஷரின்சித்தந்தூய்தாயுளதோ, அத்தகைய ஞானிகட்கோ அக்கருமஞ்சிறிதுமாத்திரையும் அபேக்ஷிதமாகமாட்டாது என்னும் பொருளை, யஸ்த்வாத்மரதிः' என்பதாதி இரண்டு சுலோகங்களால் கூறியருளுவர். அதன்பின்பு 'தஸ்மாதஸக்தः' என்பதாதி வசனங்களாலோ பந்த ஹேது வடிவகருமங்கட்கும், பல இச்சையற்றதன்மைவடிவகௌசல்வியத்தன்மைபால் அந்தக்கரணத்தின் சுத்தி ஞானத்தின்உற்பத்திவாயிலாய் மோக்ஷகாரணத்தன்மையேசம்பவிக்கும் என்னும் பொருளைக்கூறியருளுவர். அதன்பின்னர் 'அத கேந ப்ரயுக்தோயம்' என்னும் அர்ச்சுனனதுவினாக்கிளம்பக் காமதோஷத்தானேகாமியகருமங்களுக்கு அந்தக்கரணசுத்திகாரணத்தன்மையின்றாமாதலின், அக்காமமற்றவனாய்க் கருமங்களைச் செய்பவனாய் அர்ச்சுனனாய நீ அந்தக்கரணசுத்தியால் ஞானாதிகாரியாவாய் என, ஸ்ரீ பகவான் இம்மூன்றாவதுஅத்தியாய முடிபுபரியந்தங்கூறியருளுவர். (3)

(அ-கை.) ஆண்டு எங்ஙனம் மண், தண்டம், சக்கிரம், குலாலன் முதலிய காரணமின்றாகவே கடரூபகாரியஉற்பத்தியேஉண்டாகமாட்டாதோ, அங்ஙனம் நிட்காமகருமரூபகாரணமின்றாகவே ஞானரூபகாரியஉற்பத்தியேஉண்டாகமாட்டாது என்னும்பொருளை ஸ்ரீபகவான் அர்ச்சுனனை நோக்கிக்கூறியருளுகின்றார்:—

சு-ம். ந கர்மணாமநாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோऽஶ்நுதே ।
ந ச ஸம்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ (4)

ப-ம். 5 ந 2 கர்மணாம் 3 அநாரம்பாத் 4 நைஷ்கர்ம்யம் 1 புருஷः 6 அஶ்நுதே 11 ந 7 ச 8 ஸம்ந்யஸநாத் 9 ஏவ 10 ஸித்திம் 12 ஸமதிகச்சதி.

(அ-ம்.) ஹே அருச்சுன! இவ்வதிகாரியானவன் நிட்காமகருமத்தைச்செய்யாமையினால் நிட்கருமபாவத்தையடையான்; அங்ஙனமே, சந்யாசத்தினாலும், ஞானநிஷ்டையை அடையான். (4)

(வி-ம்) "தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந" என்னுஞ் சுருதியானது ஆன்மஞானஅடைவின் பொருட்டுக்கூறிய தத்தமதுவருணஆசிரமத்திற்குரிய வேதாத்தியயனம், யஞ்ஞம், தானம், தவம் என்பன முதலிய நித்தியநைமித்திககருமங்களை எப்புருஷன் நிட்காமமாய்ச்செய்யானோ, அப்புருஷனுடைய அந்தக்கரணஞ்சுத்தமாகமாட்டாது. அந்தக்கரணசுத்தியினானன்றி அப்புருஷன் ஆன்மஞானத்தையடையயோக்கியனாகான். ஆகையால், நிட்காமகருமத்தைச்செய்யாமையால், அந்தஅசுத்த சித்தத்தையுடையபுருஷன் சர்வகருமங்களினின்றும்இரகிதத்தன்மைவடிவநைஷ்கர்ம்யத்தையடையமாட்டான். அதாவது ஞானரூபயோகத்தால்அந்நிட்டையையடையமாட்டான் என்பதாம்.

சங்கை :—ஹே பகவன்! சுருதியின்கண்ணே சர்வகருமங்களின்சந்யாசத்தினானே அந்தஞானநிஷ்டையின்அடைவு கூறப்பட்டுளது. அங்ஙனமே அக்கருமங்களால் ஞானநிஷ்டையின்அடைவு நிஷேதமுஞ்செய்யப்பட்டுளது.

ஆ-சு. "ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்தः ப்ரவ்ரஜந்தி." எனவும்,
"ந கர்மணா ந ப்ரஜயா தநேந த்யாகேநைகேऽம்ருதத்வமாநஶு:."

(போ-ள்.) சந்நியாசிகட்கு அடையயோக்கியமாய அத்விதீயப்பிரஹ்மரூப லோகமாகியவஸ்துவையடைய இச்சித்தவனுபஇவ்வதிகாரியானவன் சந்யாசத்தைக் கவர்வன் எனவும், முன்னர் எவ்வறினும் பிரஹ்மபாவத்தின்அடைவுவடிவ மோக்ஷத்தை அக்கினிஹோத்திராதிகருமங்களாலும், மைந்தர்முதலிய பிரஜை களாலும், சுவர்ணுதிதனங்களாலும் அடையவில்லை; மற்றோ ஒருதியாகமாத்தி ரத்தானே அந்தமோக்ஷரூப அமிருதத்தையடைந்தனன் எனவுமாம். ஆகையால், சர்வகருமங்களின்சந்யாசத்தானே அந்தஞானநிஷ்டைகிடைத்தல்கூடும். அந்த ஞானநிஷ்டையை அடையும்பொருட்டுக் கருமங்களைச்செய்தல்பயனற்றதாம்.

சமாதானம்:—ஸ்ரீபகவான் அருளிச்செய்கின்றார்:—'ந ச ஸந்ந்யஸநாத்' என. ஹே அர்ச்சுன! நிட்காமகருமஅனுஷ்டானத்தால் அந்தக்கரணத்தின் சுத்தியைச் செய்யாமலே செய்துகொண்ட சந்நியாசத்தால் அவ்வசுத்தஅந்தக்கரணமுடைய புருஷன் மோக்ஷரூபபலத்தையடைவிப்பதாயஞானநிஷ்டைவடிவசித்தியை அடைய மாட்டான். கருத்திதுவாம்:—நிட்காமகருமஅனுஷ்டானத்தாற்சன்னிய சித்த சுத்தியினுலன்றி முதலில் சந்நியாசமேசம்பவிக்கமாட்டாது. ஏனெனின், "யதஹரேவ விரஜேத் தத‌ஹரேவ ப்ரவ்ரஜேத்" (போ-ள்.) இவ்வதிகாரியானவன் எத் தினத்தேசர்வவிஷயசுகங்களினின்றும்வைராக்கியத்தையடைவனே அத்தினத்தே சந்நியாசத்தைக் கவர்ந்துகொள்க. என்னுமிச்சுருதியானது வைராக்கியபுருஷ னையே சந்நியாசஅதிகாரியெனக்கூறுகின்றது. அவ்வைராக்கியம் அசுத்தசித்த முடையபுருஷனுக்குண்டாகமாட்டாது. அவ்வசுத்தசித்தமுடையபுருஷன் ஒரு கால் "த்ரிதண்டம் ப்ரஹ்மணோ தத்வா நரோ நாராயணோ பவேத்" (போ-ள்.) தண்ட முதலிய குறிகளைக்கவர்வதுமாத்திரையானே இப்புருஷன் நாராயணரூபனுவன் என்பனமுதலிய உருசிதரும்வசனங்களின்சிரவணத்தால் உற்சாகமாத்திரையானே சந்நியாசத்தைக் கிரகணஞ்செய்தபோதினும் அந்தஅசுத்தசித்தமுடையபுருஷ னுக்குஅச்சந்நியாசம் ஞானநிஷ்டைவடிவபலப்பிராப்தியைச்செய்விக்கமாட்டாது; மாறாய்ப் பிரத்தியவாயத்தையே செய்விக்கும். ஈண்டுக்காரிய அதிகாரத்தையும் பலத்தையும் விசாரஞ்செய்யாது, அக்காரியத்தின்கண்ணேமுயல்விக்கும்மகிழ்ச்சி விசேஷம்உற்சாகமாம். அவ்வுற்சாகத்தைக்குதூஹலமெனவும், ஔத்சுக்கியமென வுங்கூறுநிற்பர். முன்னர்ச்சர்வகருமத்தியாகரூபசந்யாசத்தால் மோக்ஷஅடை வைக்கூறும் சுருதிவசனத்தைக்கூறியது சுத்தசித்தத்தையுடைய புருஷனுக்கே யாம்; அசுத்தசித்தமுடையபுருஷனுக்கன்றாம். (4)

(அ-கை.) ஆண்டு நிட்காமகரும அனுஷ்டானத்தால் எப்புருஷனுடைய சித் தம் தூய்தாகவில்லையோ அப்புருஷன் எப்போதும் பகிர்முகனுகவேயிருப்பன் என் னும் பொருளை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை நோக்கிக்கூறியருளுகின்றார்:—

சு-ம். ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |
கார்யதே ஹ்யவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: || (5)

ப-ம். 7 ந 1 ஹி 2 கஶ்சித் 4 க்ஷணம் 5 அபி 3 ஜாது 8 திஷ்டதி 6 அகர்மக்ருத் 15 கார்யதே 9 ஹி 12 அவஶ: 14 கர்ம 13 ஸர்வ: 10 ப்ரக்ருதிஜை: 11 குணை:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வஞ்ஞானியும் ஒருகணமாத்திரையேனும் கரு மங்களைச்செய்யாமல் இருக்கவேமாட்டான். பிரகிருதிஜன்னியசத்துவமுதலிய குணங்கள் சுவதந்திரமற்றவர்களாய்ச் சர்வஅஞ்ஞானிகளையும் இலௌகிகவைதிக கருமங்களைச்செய்யுமாறுசெய்விக்கின்றன. (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் மனசகித இந்திரியங்களைத் தனது வயப்படுத்தவில்லையோ, அத்தகைய இந்திரியங்களை வெற்றிகொள்ளா எப்புருஷனும் எக்காரணத்தால் ஒருகணமாத்திரைக் காலபரியந்தமும் உண்ணல் குடித்தல் முதலிய இலௌகிககருமங்களையும், அக்கினிஹோத்திராதி வைதிககருமங்களையும் செய்யாமலிருக்கமாட்டானே; மற்று அத்தகையபொறிவெல்லாப்புருஷன் இலௌகிகவைதிககருமங்களைச்செய்துகொண்டேயிருப்பனே, அக்காரணத்தால் அவ்வசுத்தசித்தமுடைய புருஷனுக்குச் சர்வகருமங்களின் சந்யாசம்செய்துகொள்ளல் சம்பவிக்கமாட்டாது.

சங்கை :— ஹே பகவன்! அந்த அசுத்தசித்தத்தையுடைய அஞ்ஞன் இலௌகிகவைதிககருமங்களைச்செய்யாதவனாயிரான், மற்று, அக்கருமங்களைச்செய்துகொண்டேயிருப்பன் என்பதன்கண்ணே யாதுகாரணம்?

சமாதானம் :— ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் 'காய-உதெஹி' என. ஹே அர்ச்சுன! மூலப்பிரகிருதியினின்றும் உற்பன்னமாய சத்துவம், இரஜசு, தமசு, என்னும் முக்குணங்கள், அல்லது பிரகிருதியென்பது இயற்கைக்காம், அவ்வியற்கைவடிவப்பிரகிருதியினின்றும்உற்பன்னமாய இராகத்துவேஷாதிகுணங்கள், எக்காரணத்தால் சித்தசுத்திபற்றசுவதந்திரமின்றிய சர்வப்பிராணிகளையும் இலௌகிகவைதிக சர்வகருமங்களையும்செய்யுமாறு செய்விக்கின்றனவோ, அல்லது காயத்தாலாவன, வாக்காலாவன, மனத்தாலாவனவாய சர்வகருமங்களையுஞ்செய்யுமாறு செய்விக்கின்றனவோ, அக்காரணத்தால் அசுத்தசித்தத்தையுடைய எவ்வஞ்ஞானியும் அக்கருமங்களைச் செய்யாதவனாயிரான்; மற்று, அந்தப்பிரகிருதி ஜன்னியகுணங்களால் சுழற்றிவிடப்பட்ட இப்பராதீனஅஞ்ஞானியானவன் சர்வகாலத்தும், அக்கருமங்களைச்செய்பவனாகவேயிருப்பன். அத்தகைய அசுத்தசித்தத்தையுடையவனுக்குச் சர்வகருமங்களின் சந்யாசஞ்செய்தல் சம்பவியாது. அந்தஅசுத்தசித்தமுடைய புருஷனுக்குச் சந்யாசமேசம்பவியாதாயின், அச்சந்யாசஜன்னிய ஞானநிஷ்டை சம்பவிக்கமாட்டாதென்பதன்கண்ணே யாதோதற்குளது. (5)

(அ-கை.) அல்லது எப்புருஷன் நிட்காமகருமஅனுஷ்டானத்தால் தனது சித்தத்தைச் சுத்தஞ்செய்யானோ; மற்று ஔத்சுக்யமாத்திரத்தால் முதலில் சந்யாசத்தையேசெய்துகொள்வனோ, அத்தகையஅசுத்தசித்தமுடையபுருஷன் அச்சந்யாசபலத்தை யடையான்என்னும்பொருளை ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 𑌯 𑌆𑌸𑍍𑌤𑍇 𑌮𑌨𑌸𑌾 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ (6)

ப-ம். 3 𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 4 𑌸𑌂𑌯𑌮𑍍𑌯 1 𑌯𑌃 8 𑌆𑌸𑍍𑌤𑍇 6 𑌮𑌨𑌸𑌾 7 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 5 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍 2 𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 10 𑌮𑌿𑌥𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑌃 9 𑌸𑌃 11 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்மூடாத்மாவாயபுருஷன் வாக்குமுதலியகருமேந்திரியங்களை நிக்கிரகஞ்செய்து சப்தாதிவிஷயங்களைமனத்தால்ஸ்மரணஞ்செய்துகொண்டிருப்பனோ, அப்புருஷன் மித்தியாசாரமுடையவனெனக்கூறப்பெறுவன்.

(வி-ம்.) இராகத்துவேஷங்களாற்றூஷிக்கப்பட்டஅசுத்த அந்தக்கரணத்தையுடைய எப்புருஷன்கேவலம் ஔத்சுக்யமாத்திரத்தாலே வாக்குப்பாணி பாதம் முதலிய கருமேந்திரியங்களை நிரோதித்து, அதாவது பாகியஇந்திரியங்களால் அக்கருமங்களைச்செய்யாதவனாய், இராகத்துவேஷத்தால் ஏவப்பட்டமனத்தால் சப்தப்பரிசாதி விஷயங்களைஸ்மரித்துக்கொண்டிருப்பனோ, ஆன்மதத்துவத்தைஸ்மரித்துக்கொண்டிரானோ, அதாவது யான் சர்வகருமங்களையுஞ் சந்யாசஞ்செய்துளேன்

என்னும் அபிமானத்தால் எப்புருஷன் சர்வகருமங்களுமற்றவனுயிருப்பனே ; அப்புருஷன் மித்தியாசாரமுடையவனெனக் கூறப்பெறுவன். கருத்திதுவாம் :—அப்புருஷனுக்கு அந்தக்கரணசுத்தியாகவில்லையாதலின் ஞானநிஷ்டைவடிவப்பலஅடைவிற்கு அயோக்கியனுய அவன் பாவஆசாரத்தையுடையவனெனக் கூறப்பெறுவன் என்பதாம். இவ்வார்த்தை தருமசாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது.

ஆ-சு. த்வம்பதார்த்தவிவேகாய ஸந்ந்யாஸ: ஸர்வகர்மணாம் ।
ஶ்ருத்யேஹ விஹிதோ யஸ்மாத்தத்த்யாகீ பதிதோ பவேத் ॥

(பொ-ள்.) எக்காரணத்தால் இவ்வதிகாரி லோகத்தின்கண்ணே சுருதிபகவதியானவள் துவம்பதார்த்தஆன்மவிசாரம்செய்யும்பொருட்டே சர்வகருமங்களின்சந்யாசத்தைவிதித்துளாளோ, அக்காரணத்தால் எவ்வசுத்தசித்தத்தையுடையபுருஷன் ஔத்சுக்யமாத்திரத்தால் அச்சந்யாசத்தைக்கவர்ந்து, துவம்பதார்த்தஆன்மவிசாரத்தைச்செய்பவில்லையோ, அந்தப்பகிர்முகனுசந்யாசியானவன் பதிதனுவன் என்பதாம். ஆகையால், அசுத்த அந்தக்கரணத்தையுடையபுருஷன் அச்சந்யாசத்தால் ஞானநிஷ்டைவடிவசித்தியைஅடையான் என ஸ்ரீபகவான் கூறியருளியதுண்மையேயாகுமென்க. (6)

(அ-கை.) ஆண்டுச்சித்தசுத்தியின்றிக் கேவலம் ஔத்சுக்யமாத்திரத்தாலே சர்வகருமங்களின்சந்யாசத்தைச்செய்யாமல் இவ்வதிகாரியானவன் தனது சித்தசுத்தியின்பொருட்டுச் சாஸ்திரவிஹிதநிட்காமகருமத்தையேசெய்வன் என்னுமிப்பொருளை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனைநோக்கிக்கூறியருளுகின்றார் :—

சு-ம். யஸ்த்விந்த்ரியாணி மநஸா நியம்யாரபதேऽர்ஜுந ।
கர்மேந்த்ரியை: கர்மயோகமஸக்த: ஸ விஶிஷ்யதே ॥ (7)

ப-ம். 2 ய:, து 4 இந்த்ரியாணி 3 மநஸா 5 நியம்ய 9 ஆரபதே 1 அர்ஜுந 7 கர்மேந்த்ரியை: 8 கர்மயோகம் 6 அஸக்த: 10 ஸ: 11 விஶிஷ்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் மனத்தோடுகூடியசுரோத்திராதி ஞானேந்திரியங்களைத்தடுத்துப் பலஇச்சையற்றவனுய் வாக்குமுதலியகருமேந்திரியங்களால்நிட்காமகருமத்தைச்செய்வனே, அப்புருஷன் அசுத்தசித்தத்தையுடைய சந்யாசியினும் அத்தியந்தம்மேன்மையனும். (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரியானவன் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, இரசனம், கிராணம் என்னும் ஐந்துஞானேந்திரியங்களை மனத்தோடு கூட்டத்தடைப்படுத்தி, அதாவது பாவமுண்டாதற்கேதுவாய சப்தாதிவிஷயங்களின் ஆசக்தியினின்றும் சுரோத்திராதி இந்திரியங்களைத்திருப்பி, அல்லது விவேகத்தோடுகூடியமனத்தால் அந்தச்சுரோத்திராதி இந்திரியங்களைத்திருப்பி வாக்குப்பாணிமுதலிய கருமஇந்திரியங்களால் சாஸ்திரவிஹிதகருமங்களைச்செய்து, அக்கருமங்களின் பலஇச்சையைச்செய்யாது, இராநின்றஅந்நிட்காமகருமத்தைச் செய்யும்அதிகாரியானவன் முற்கூறிய அசுத்தஅந்தக்கரணமுடைய மித்தியாசாரசந்யாசியினும் மிகவும்மேன்மைமிக்கவனுவன். இவ்விலக்ஷணத்தன்மையை யறிவித்தருளும்பொருட்டே ஸ்ரீபகவானுனவர் மூலசுலோகத்தின்கண்ணே 'யஸ்து' என்பதில் 'து' என்னும் சப்தத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். கருத்திதுவாம் :—ஹே அர்ச்சுன! இம்மகாஆச்சரியத்தை நீபார், அவ்விருவருக்கும் பரிசிரமமோ சமானமேயாமாயினும் ஒருவனே வாக்குமுதலியகருமேந்திரியங்களைத் தடைப்படுத்தி மனசகித சுரோத்திராதி ஞானேந்திரியங்களை விஷயங்களிடத்தே பிரவிருத்திப்பவனுய்ப் பரமபுருஷார்த்தரூபபலமற்றவனுவன். மற்றொருவனே,

மனசகித சுரோத்திராதி ஞானேந்திரியங்களைச் சப்தாதிவிஷயங்களினின்றும் நீக்கிவாக்குமுதலியகருமேந்திரியங்களால் கருமங்களைச்செய்தபோதினும் பரமபுருஷார்த்தத்தையடைவன். ஆகையால், சித்தசுத்தியற்றசந்யாசியினும் அந்நிட்காமகருமத்தைச்செய்யும்புருஷன் அத்தியந்தம்மேன்மையனும். (7)

(அ-கை.) எக்காரணத்தால் அசுத்த அந்தக்கரணத்தையுடைய சந்யாசியினும் நிட்காமகருமத்தைச்செய்யும் புருஷன் மிகவும்மேன்மையனே அக்காரணத்தால் நீ மனசகித ஞானேந்திரியங்களைத் தடைப்படுத்தி வாக்குமுதலிய கருமேந்திரியங்களால் நித்தியநைமித்திக கருமங்களைச்செய்தி. என ஸ்ரீபகவான் அருச்சுனனை நோக்கியருளுகின்றார் :—

சு-ம். நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ।
ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்⁴யேத³கர்மண: ॥ (8)

ப-ம். 2 நியதம் 4 குரு 3 கர்ம 1 த்வம் 7 கர்ம 8 ஜ்யாய: 5 ஹி 6 அகர்மண: 12 ஶரீரயாத்ரா 13 அபி 9 ச 11 தே 14 ந 15 ப்ரஸித்⁴யேத் 10 அகர்மண:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நீ நித்தியநைமித்திக கருமங்களையேசெய்தி; கருமங்களைச் செய்யாதிருப்பதினும் கருமமே சிரேஷ்டமாமாதலின். அங்ஙனம் கருமங்களற்ற நினது சரீரக்காப்பும் சித்தமாகமாட்டாது. (8)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்தக்கரணசுத்தியைச்செய்யும் கருமானுஷ்டானமற்ற நீ சுவர்க்காதிபலன்களின் இச்சையற்றவனுய்ச் சுருதியின்கண்ணும் ஸ்மிருதியின்கண்ணும் கூறப்பட்ட சந்தியாஉபாசனுதிநித்தியகருமங்களையும், கிரகணம், சிராத்தம் முதலிய நைமித்திக கருமங்களையுமேசெய்தி.

சங்கை :—ஹே பகவன்! அசுத்த அந்தக்கரணமுடையவன் எக்காரணத்தாற் கருமமேசெய்ய யோக்கியனுகின்றான்?

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார் 'கர்மஜ்யாயோ ஹ்யகர்மண:' என எக்காரணத்தால் அந்நித்தியநைமித்திககருமங்களைச்செய்யாதிருப்பதினும் அவற்றைச்செய்வதே மிகவும்மேன்மையாமோ, அக்காரணத்தால் அசுத்தஅந்தக்காணமுடையபுருஷன் பலஇச்சையற்றவனுய் அந்நித்தியநைமித்திககருமங்களையே அவசியம்செய்க. 'ஸம்ந்யாஸ ஏவாத்யரேசயத்' என்னுஞ்சுருதியானதுதர்மாதி சர்வசாதனங்களினும் சந்யாசத்தையே மேன்மைமிக்கதெனக்கூறுகின்றது. ஆதலின் சந்யாசத்தினும்கருமத்தின்கண்ணே மேன்மையைக்கூறல் சம்பவியாது; ஆயினும் ஜீவன்முக்திச்சுகத்தின்பொருட்டுப் பிரஹ்மத்தையுணர்ந்த புருஷன் செய்துகொண்டவித்வத்சந்யாசம், அங்ஙனமே ஆன்மஞானப்பிராப்தியின்பொருட்டுச் சுத்தசித்தமுடையமுமுக்ஷுவானவன் செய்துகொண்டவிவிதிஷாசந்யாசம், என்னுமிவ்விருவகையாயசந்யாசத்தின்கண்ணே அந்தச்சுருதியானதுதர்மாதிசர்வசாதனங்களினும் மேன்மையுளதெனக்கூறியது. ஈண்டுப் பிரசங்கத்தின்கண்ணே சந்யாசத்தினுங் கருமத்தின்கண் மேன்மை கூறியருளப்பட்டது. அந்த அசுத்த சித்தமுடையபுருஷன் கேவலம் ஔத்சுக்ய மாத்திரத்தால்செய்துகொண்ட சந்யாசத்தினும் நிஷ்காமகருமத்தின்கண்ணே மேன்மைகூறியருளப்பட்டதேயன்றிச் சந்யாசநிந்தையின்கண்ணே ஸ்ரீபகவானது திருக்கருத்தின்றாம். (ஆண்டுத்தருமம், சத்தியம், தபம், தமம், சமம், தானம், பிரஜனனம், ஆஹிதாக்நி, அக்கினிஹோத்திரம், யாகம், மாநசம் என்னும் பதினொரு சாதனங்களினும் சந்யாசத்திற்கதிகத்தன்மை ஆன்மபுராணத்தின் பத்தாவதத்தியாயமுடிவில் யாம்விஸ்தாரமாய்க் கூறிவந்துளோம்.) அல்லது, ஹே அர்ச்சுன! அந்தநித்தியநைமித்திக கருமத்தைச்

செய்யாமையாற் கேவலம் நினது அந்தக்கரணசுத்தியினபாவமேயுண்டாகமாட்டாது; மற்றோ, போர்முதலிய கருமங்களைச்செய்யாமையால் நினது சரீரத்தின் உண்ணல் குடித்தல் முதலியவியவகாரங்களும் சித்திக்கமாட்டா. ஈண்டுபகவானுடைய திருக்கருத்திதுவாம்:—நீ க்ஷத்திரியனுதலின் சந்யாசஆசிரமத்தைத்தரித்துக்கொண்டு பிக்ஷாவிருத்தியினால் சரீரநிர்வாகஞ்செய்வதன்கண்ணே நினக்கதிகாரமின்றாம்; ஏனெனின், சுருதிஸ்மிருதிகளில் பிராஹ்மணனுக்கே சந்யாசஞ்செய்துகொள்ள அதிகாரங்கூறப்பெற்றுளது.

ஆ-சு. "ப்ராஹ்மணா꞉ வ்யுத்தாயைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச ।
லோகைஷணாயாஶ்ச வ்யுத்தாயாத² பி⁴க்ஷாசர்யம் சரந்தி" ॥

(பொ-ள்.) புத்திர ஏஷணையையும், வித்த ஏஷணையையும், லோக ஏஷணையையும் பரித்தியாகஞ்செய்து, வைராக்கியமுடைய பிராஹ்மணன் சந்யாச வாயிலாய்ப் பிக்ஷாவிருத்தியைச் செய்கவென்பதாம்.

ஆ-சு. "சத்வார ஆஶ்ரமா ப்ராஹ்மணஸ்ய த்ரயோ ராஜந்யஸ்ய த்³வௌ வைஶ்யஸ்ய."

(பொ-ள்.) பிரஹ்மசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்யாசம் என்னும் நான்காசிரமங்கள்பிராஹ்மணர்கட்குரியனவாம். பிரஹ்மசரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம் என்னும் மூன்றாசிரமங்கள் க்ஷத்திரியர்கட்குரியனவாம். பிரஹ்மசரியம், கிருஹஸ்தம் என்னும் இரண்டாசிரமங்கள் வைசியர்கட்குரியனவாம் என்பதாம்.

ஆ-சு. "முக²ஜாநாமயம் த⁴ர்மோ வைஷ்ணவம் லிங்க³தா⁴ரணம் ।
பா³ஹுஜாதோ ருஜாதாநாம் நாயம் த⁴ர்மோ விதீ⁴யதே" ॥

(பொ.ள்.) பரமேஸ்வரது முகத்தினின்றும் உற்பன்னமாய பிராஹ்மணர்கட்கே இத்தண்டாதி குறிகளைத்தரிக்கும்வாயிலாய்ச் சந்யாசம் தருமமாம். பரமேஸ்வரதுபுயத்தினின்றும் உண்டாய க்ஷத்திரியர்கட்கும், அங்ஙனமே பரமேஸ்வரது துடையினின்றும் உண்டாய வைசியர்கட்கும், இந்த லிங்கசந்யாசம் விதிக்கவில்லையென்பதாம். என்பனமுதலிய அநேகசுருதிஸ்மிருதி வசனங்களில் பிராஹ்மணர்கட்கே சந்யாச ஆசிரமத்தின் அதிகாரங்கூறப்பெற்றுளது. க்ஷத்திரிய வைசியர்கட்கோ சந்யாசத்தின் அதிகாரம் கூறப்பெறவில்லை. இவ்வகையாய திருக்கருத்தானே ஸ்ரீ பகவானுனவர் அர்ச்சுனனைநோக்கிப் போர்முதலிய கருமங்களின்றாயின், நினதுசரீரத்தின் உண்ணல் பருகல்முதலிய வியவகாரமுஞ் சித்தமாக மாட்டாது எனத்திருவாய்மலர்ந்தருளினர். (8)

(அ-கை.) ஹே பகவன்! "கர்மணா ப³த்⁴யதே ஜந்துர்வித்³யயா து விமுச்யதே" (பொ-ள்.) இச்சீவன் கருமத்தைச்செய்தோ சம்சாரத்தின்கண்ணே கட்டுப்படுவன்; வித்தையினால் அச்சம்சாரத்தினின்றும் விடுபடுவன் என்பதாம். என்னும் ஸ்மிருதிவசனத்தால் அந்தச் சர்வகருமங்களிடத்தும் பந்த ஹேதுத்தன்மையே சித்தமாம். ஆகையால் முமுக்ஷுஜனங்கள் பந்தத்திற்கேதுபூதமாய கருமத்தைச்செய்வது தகுதியன்றாம் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீபகவான் அவ்வர்ச்சுனனைநோக்கிக் காமியகருமத்திற்கே பந்தஹேதுத்தன்மையுளது; ஈஸ்வர அர்ப்பண புத்தியால் செய்யப்பட்ட கருமங்கட்குப் பந்தஹேதுத்தன்மையின்றாம் என விடையளித்தருளுகின்றார்:—

சு-ம். யஜ்ஞார்தா²த்கர்மணோ(அ)ந்யத்ர லோகோ(அ)யம் கர்மப³ந்த⁴ந꞉ ।
தத³ர்த²ம் கர்ம கௌந்தேய முக்தஸங்க³꞉ ஸமாசர ॥ (9)

ப-ம். 4 யஜ்ஞார்த்தாத் 5 கர்மண: 6 அந்யத்ர 3 லோக: 2 அயம் 7 கர்மபந்தந: 9 ததர்த்தம் 10 கர்ம 1 கௌந்தேய 8 முக்தஸங்க: 11 ஸமாசர.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகர் பரமேஸ்வர ஆராதனையின்பொருட்டுச் செய்யுங்கருமத்தினும், அயற்கருமத்தின்கண்ணே முயல்பவராய்க் கருமத்தாற் கட்டுப்படுகின்றனர். ஆதலின் நீ பலஇச்சையற்றவனாய் அந்தப் பரமேஸ்வர ஆராதனையின்பொருட்டுக் கருமத்தை யினிதுசெய்தி. (9)

(வி-ம்.) 'யஜ்ஞோவை விஷ்ணு:' [விஷ்ணுபகவான் யாகவடிவமாம்.] இச்சுருதியினால் யாகமென்பது பரமேஸ்வரவாசகமெனத் துணியப்பெறும். அந்தப் பரமேஸ்வர ஆராதனையின்பொருட்டு, எந்நித்திய நைமித்திக கருமஞ்செய்கின்றனமோ, அக்கருமம் யஞ்ஞார்த்த கருமமெனப்பெறும். அத்தகைய நிட்காம கருமத்தினும்வேறாய சுவர்க்காதி பல அடைவின்பொருட்டுள்ள காமியகருமத்தின்கண்ணே முயன்ற இக்கருமஅதிகாரியே அக்காமிய கருமத்தாற் கட்டுப்படுவன். பரமேஸ்வரருடைய ஆராதனத்தின்பொருட்டுச் செய்யப்பட்ட நிட்காமகருமத்தால் இவ்வதிகாரியானவன் கட்டுப்படமாட்டான். ஆகையால், 'கர்மணா பத்யதே ஜந்து:' என்னும் முற்கூறிய ஸ்மிருதியும், கேவலம் காமியகருமத்தின்கண்ணே பந்தஹேதுத்தன்மையைக் கூறியதேயன்றி, நிட்காம கருமத்தின்கண்ணே பந்தஹேதுத்தன்மையைக்கூறவில்லை யென்றுணர்தல்வேண்டும். ஆகையால், ஹே அர்ச்சுன! நீ சுவர்க்காதி பலத்தில் இச்சையற்றவனாய்க் கேவலம் பரமேஸ்வர ஆராதனத்தின்பொருட்டுச் சிரத்தைபக்திவாயிலாய் அந்நித்தியநைமித்திக கருமங்களைச்செய்தி. (9)

(அ-கை.) பகவானாகிய பிரஜாபதியின் வசனத்தினாலும் இவ்வதிகாரியானவன் அக்கருமத்தையே செய்ய யோக்கியனாவன் என்னும் பொருளை ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் அர்ச்சுனனைநோக்கி யறைந்தருளுகின்றார் :—

சு-ம். ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அநேந ப்ரஸவிஷ்யத்வமேஷ வோऽஸ்த்விஷ்டகாமதுக் ॥ (10)

ப-ம். 3 ஸஹயஜ்ஞா: 4 ப்ரஜா: 5 ஸ்ருஷ்ட்வா 1 புரா 6 உவாச 2 ப்ரஜாபதி: 7 அநேந 8 ப்ரஸவிஷ்யத்வம் 9 ஏஷ: 10 வ: 12 அஸ்து 11 இஷ்டகாமதுக்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கற்பஆதியின்கண்ணேபிரஜாபதி யஜ்ஞஅதிகாரிப் பிரஜைகளையுண்டாக்கி இவ்வசனத்தைக்கூறினர் :—ஹே பிரஜைகளே! இந்த யஞ்ஞத்தால் நீங்கள்விருத்தியையடையுங்கள்; இந்த யஜ்ஞமே உங்கட்கு மனோவாஞ்சிதபலன்களை அடைவிக்குமாதலின்.

(வி-ம்.) சுருதிஸ்மிருதிகளால் விதிக்கப்பட்ட தனது வருணஆசிரமத்திற்குரிய யஞ்ஞாதிரூபகருமத்தோடுகூடியிருப்பது சஹயஞ்ஞமெனப்படும்; அதாவது கருமஅதிகாரியானவன்சஹயஞ்ஞனெனப்படுவன். அத்தகைய யஜ்ஞாதிரூபகரும அதிகாரிகளாய பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் மூவகைத்தாய பிரஜைகளைச்சிருஷ்டியின்ஆதிகாலத்தே பரமகிருபாலுவாய்ப் பகவானாயிராநின்ற பிரஜாபதியானவர் உண்டாக்கி, அந்தமூவர்ணங்களையுடைய பிரஜைகளை நோக்கி, இவ்வசனத்தைக்கூறுவாராயினர் :—ஹே பிரஜைகளே! தத்தம்வருணாசிரமத்திற்குரிய யஞ்ஞாதிரூபதருமங்களால் நீங்கள் உத்தரோத்தரகாலத்தே விருத்தியையடையுங்கள்.

சங்கை :—இந்த யஜ்ஞாதிரூப தருமங்களால் எங்ஙனம் விருத்தியுண்டாம்?

சமாதானம் :—பிரஜாபதிகூறல், 'ஏஷவொஸ்த்விஷ்டகாமதுக்' என. ஹே பிரஜைகளே! இந்தயஜ்ஞாதிரூபதருமங்களே அதிகாரிகளாய நீங்கள்மனத்தெண்ணிய பயன்களேயடைவிப்பனவாம்.

சங்கை :—'ஸஹயஜ்ஞா:' என்னும் வசனத்தின்கண்ணே செய்யப்பட்ட யஜ்ஞபதத்தின்கிரகணம், அவசியஞ்செய்வதற்குயோக்கியமாய நித்தியநைமித்திக கருமத்தின் உபலக்ஷகமேயாகும். காமியகருமத்தின் உபலக்ஷகமன்றும்; ஏனெனின், அக்கருமங்களைச் செய்யாதொழியின் பிரத்தியவாயத்தின் அபாவமே லேகூறப்பெறுவதாகும். அந்தப்பிரத்தியவாயத்தினடைவு நித்தியநைமித்திக கருமத்தைச் செய்யாமையினுனேயுண்டாம். காமியகருமத்தைச் செய்யாமையால் எப்பிரத்தியவாயமும் உண்டாவதின்றும். அல்லதுஇக்கீதாசாஸ்திரத்தின்கண்ணே அக்காமியகருமத்தைக் கூறுவதற்குயாதொரு பிரசங்கமுமின்றும். மாறாய் 'காமாத்மதா நப்ரஶஸ்தா' என்னும் வசனத்தால் அக்காமியகருமம் நிஷேதமே செய்யப்பட்டுளது. ஆகையால், நிட்காமகருமப் பிரசங்கத்தின்கண்ணே இந்த யஜ்ஞாதிரூபதருமங்கள் உங்கள்மனத்தெண்ணியபலன்களை அடைவிக்கும் என்னும் பலக்கூற்று அசங்கதமேயாகும்.

சமாதானம் :—காமியகருமத்தைப்போல நித்தியநைமித்திக கருமமும் ஆநுஷங்கிகபலத்தோடு கூடியதேயாகும். இவ்வார்த்தையை ஆபஸ்தம்ப இருஷியும் கூறியுள்ளார்.

"தத்யதாம்ரே பலார்த்தே நிமிதே சாயா கந்த
இத்யனூத்பத்யேதே ஏவம் தர்மம்
சர்யமாணமர்தா அனூத்பத்யந்தே
நோ சேதனூத்பத்யந்தே ந தர்மஹாநிர்பவதி" ॥ என

(பொ-ள்.) ஒருவன் பலஅடைவின்பொருட்டு நட்டமாமரமானது நிழல், நறுநாற்றமென்னும் இரண்டுஆநுஷங்கிகபலன்களையும் நட்டபுருஷனுக்குக் கொடுப்பதேபோல, இவ்வதிகாரியானவன் தனது தருமமெனஅறிந்து செய்தநித்திய நைமித்திக கருமத்தின்பின்னர் அதனைச்செய்த இவனுக்கு மனத்தெண்ணிய பதார்த்த அடைவுவடிவ ஆநுஷங்கிகபலம் அவசியமுண்டாம். ஒருகாலிவனுக்கு அப்பலம்அடையக்கிடையாதாயினும், அந்நித்தியநைமித்திகரூப தர்மஹானியுண்டாகமாட்டாது; அந்தக்கரணசுத்திவாயிலாய் மோக்ஷரூப பரமபலம் இவனுக்கவசியமுண்டாமாதலின் என்பதாம்.

சங்கை :—காமியகருமத்தைப்போல ஒருகால்நித்தியகருமத்திற்குமங்கீகரிக்கின், காமியகருமத்தினும் நித்தியகருமத்தின்கண்ணே விலக்ஷணத்தன்மைசித்தமாகமாட்டாது.

சமாதானம் :—காமியகருமம் நித்தியகருமம் என்னு மிரண்டின்கண்ணும் பலகாரணத்தன்மை சமானமாயினும், பலஇச்சையாற் செய்தகருமத்திற்குக்காமியகருமமெனப் பெயராம், பலஇச்சையற்றுச் செய்தகருமத்திற்கு நித்தியகருமமெனப்பெயராம். இம்முறையால்அக்காமியகருமத்தினும் நித்தியகருமத்தின்கண்ணே விலக்ஷணத்தன்மை சம்பவிக்கும். வஸ்துவினியல்பானே இச்சியாதபலத்தின் உற்பத்தியையும் அங்கீகாரஞ்செய்யின், அவ்விரண்டின்கண்ணும் விசேஷத்தன்மை சம்பவியாது என்னுமிவ்வார்த்தையைமேல்விஸ்தாரமாய் நிரூபிப்பாம். ஆகையால், இந்தயஜ்ஞாதி ரூபதருமங்கள் உங்கட்கு மனத்தெண்ணிய பலத்தையடைவிக்கும் என்னுமிவ்வசனம் அசங்கதமன்றும், மற்றேு உண்மையாம்.

ஆ-சு. " 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌯𑍇 𑌤𑍁 𑌸𑌤𑌤𑌂 𑌸𑌂𑌶𑌿𑌤𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ।
𑌵𑌿𑌧𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌸𑍍𑌤𑍇 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 " ॥

(பொ-ள்.) எப்புருஷன் நிரந்தரஞ்சிரத்தைபக்திவாயிலாய்ச் சந்தியை யுபாசனைசெய்கின்றனனோ, அப்புருஷன் சர்வ பாவங்களுமற்றவனும் நோய்முதலிய விகாரங்களற்ற பிரஹ்மலோகத்தை யடைவன்என்பதாம். என்பனமுதலிய அநேக வசனங்களால் சந்தியையுபாசனாதி நித்தியகருமங்கட்குப் பிரஹ்மலோகாதிகளின் அடைவுவடிவ ஆநுஷங்கிகபலம் கூறப்பெற்றுளது. (10)

(அ-க.) ஹே பகவன்! யஜ்ஞாதிரூபதருமங்கட்கு மனத்தெண்ணிய பலப் பிராப்தியின்ஹேதுத்தன்மைஎவ்வாறும் எனச்சங்கிப்ப, அந்தப்பிரஜாபதியானவர் அவ்வாற்றை நிரூபிக்கின்றார்:—

சு-ம். 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌭𑌾𑌵𑌯𑌤𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 𑌵𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥 ॥ (11)

ப-ம். 2 𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 3 𑌭𑌾𑌵𑌯𑌤 1 𑌅𑌨𑍇𑌨 4 𑌤𑍇 5 𑌦𑍇𑌵𑌾𑌃 7 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑍁 6 𑌵𑌃 8 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 9 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 11 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 10 𑌪𑌰𑌂 12 𑌅𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥.

(அ-ம்.) ஹே பிரஜைகளே! அதிகாரிகளாய நீங்கள் இந்தயஜ்ஞாதிரூபதருமங்களால் இந்திராதிதேவதைகளை மகிழ்வியுங்கள்; அதன்பின்னர் அவ்விந்திராதிதேவதைகள் உங்களைமகிழ்விப்பர். இவ்வாறுபரஸ்பரம் மகிழ்வித்துக்கொள்பவராய் நீங்கள் இருவர்களும் மேலாயசிரேயசையடைவீர்கள். (11)

(வி-ம்.) ஹே பிரஜைகளே! யஜமானர்களாய நீங்கள்யாவரும் இந்தயஜ்ஞாதிரூபதருமங்களால்இந்திராதிதேவதைகளை மகிழ்வியுங்கள்; அந்தயஜ்ஞத்தின்கண்ணுள்ள ஹவிஷ்பாகங்களால் நீங்கள் சந்தோஷப்படுத்திய இந்திராதிதேவதைகள் மழைபெய்விப்பதுமுதலியவற்றால் அன்ன உற்பத்திவாயிலாய் யஜமானர்களாய உங்களைமகிழ்விப்பர்கள். இவ்வண்ணம் பரஸ்பரம்மகிழ்வித்துக் கொள்பவர்களாய்ப் பிரஜைகளாய நீங்களும் இந்திராதிதேவதைகளும் ஆகிய இருவருமேமனத்தெண்ணிய பொருள்வடிவ பரமசிரேயசையடைவீர்கள். ஆண்டு உங்களைமகிழ்விப்பதால் இந்திராதிதேவதைகளோ திருப்திரூபபரமசிரேயசையடைவர்கள். இந்திராதிதேவதைகளை மகிழ்விப்பதால் பிரஜைகளாய நீங்கள் சுவர்க்கரூபபரமசிரேயசையடைவீர்கள். (11)

(அ-கை.) அல்லது அந்தயஜ்ஞாதிரூபதருமங்களால் உங்கட்குக்கேவலம் பரலோகத்தின்கண்ணேயிராநின்ற சுவர்க்காதிரூப பலப்பிராப்தி மாத்திரமே யுண்டாவதன்றாம்; மற்றோ, இவ்வுலகின்கண்ணே இராநின்ற அன்னம், சுவர்ணம், பசுமுதலிய பலத்தின் பிராப்தியுமுண்டாம் என்னும்பொருளை பிரஜாபதியானவர் கூறுகின்றார்:—

சு-ம். 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 𑌹𑌿 𑌵𑍋 𑌦𑍇𑌵𑌾 𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍈𑌰𑍍𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑍈𑌭𑍍𑌯𑍋 𑌯𑍋 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌸𑍍𑌤𑍇𑌨𑌏𑌵𑌸𑌃 ॥ (12)

ப-ம். 5 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 6 𑌭𑍋𑌗𑌾𑌨𑍍 1 𑌹𑌿 4 𑌵𑌃 3 𑌦𑍇𑌵𑌾 7 𑌦𑌾𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 2 𑌯𑌜𑍍𑌞𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 8 𑌤𑍈𑌃 9 𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑍍 11 𑌅𑌪𑍍𑌰𑌦𑌾𑌯 10 𑌏𑌭𑍍𑌯𑌃 12 𑌯𑌃 13 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 15 𑌸𑍍𑌤𑍇𑌨𑌃 16 𑌏𑌵 14 𑌸𑌃.

(அ-ம்.) எக்காரணத்தால் யஜ்ஞத்தால் சந்தோஷத்தை யடைந்த தேவதைகள் உங்களுக்கு மனத்தெண்ணிய போகங்களைக் கொடுப்பார்களோ, அக்காரணத்

தால் அத்தேவதைகள்கொடுத்த போகங்களை அத்தேவதைகட்குக் கொடாமல் எப்புருஷன் போகிக்கின்றனனோ, அப்புருஷன் கள்வனேயாவன். (12)

(வி-ம்.) ஹேபிரஜைகளே! இவ்வண்ணம் சுருதிசம்பந்த ஸ்மிருதிசம்பந்தமாய யஜ்ஞரூபதருமங்களால் மகிழ்வையுற்ற இந்திராதிதேவதைகள் கருமகருத்தாக்களாய் யஜமானர்களாய உங்களுக்கு அன்னம், பசு, சுவர்ணம் என்பதாதி மனத்தெண்ணிய போகங்களைக் கொடுப்பார்கள். ஒருவன் மற்றொருவனுக்குக் கடன்கொடுப்பதேபோல, அவ்விந்திராதி தேவதைகள் உங்களுக்குக் கொடுத்த அன்னம்முதலியபோகங்களை அவர்கட்குக்கொடாமல் அதாவது, இந்திராதிதேவதைகளையுத்தேசித்து விரீகி யவை முதலிய பதார்த்தங்களின் தியாகரூபவைஸ்வதேவம், அக்கினிஹோத்திரம், ஜாதேஷ்டி என்பன முதலிய நித்தியநைமித்திக யாகங்களைச் செய்யாமல், எப்புருஷன்கேவலம் தனது தேகேந்திரியாதிகளைப் புஷ்டியாக்கும் பொருட்டு, அவ்வன்னுதிய பதார்த்தங்களைப் போகிக்கின்றனனோ, அப்புருஷன் அத்தேவதைகளின் கள்வனேயாவன். அங்ஙனமே செய்ந்நன்றி கொன்றவனேயாவன்; ஏனெனின், அப்புருஷன் தேவதைகளின் அன்னுதிபதார்த்தங்களையோ கவர்ந்தனன். ஆனல் யஜ்ஞாதிகளால் அத்தேவதைகளின் கடனை நிவிருத்திக்கவில்லையன்றோ. (12)

(அ-க.) அல்லது அந்தயஜ்ஞாதி கருமங்களைச் செய்யாமையால், இவ்வதிகாரிக்குக்கேவலம் கள்வத்தன்மையுஞ் செய்ந்நன்றி கொன்றதன்மையும் மாத்திரம் உண்டாகமாட்டாது. மற்றோ, அந்தயஜ்ஞாதிகருமங்களைச் செய்யாமையால் இவ்வதிகாரிக்குப் பிரத்தியவாயப் பிராப்தியுமுண்டாம் என்னும்பொருளை அன்வய வியதிரேகத்தால் நிரூபிக்கின்றார்:—

சு-ம். யஜ்ஞஶிஷ்டாஶிநஃ ஸந்தோ முச்யந்தே ஸர்வகில்பிஷைஃ ।
஭ுஞ்ஜதே தே த்வகம் பாபா யே பசந்த்யாத்மகாரணாத் ॥ (13)

ப-ம். 1 யஜ்ஞஶிஷ்டாஶிநஃ 2 ஸந்தஃ 4 முச்யந்தே 3 ஸர்வகில்பிஷைஃ 12 ஭ுஞ்ஜதே 10 தே 5 து 11 அகம் 7 பாபாஃ 6 யே 9 பசந்தி 8 ஆத்மகாரணாத்.

(அ-ம்.) யாவன் யஜ்ஞசேஷ அன்னத்தைப் போஜனஞ்செய்கின்றனோ, அச்சிஷ்டபுருஷன் சர்வபாவங்களையும் பரித்தியாகஞ்செய்வன். அங்ஙனம் எப்பாவாத்மாவாய புருஷன் கேவலம் தன்பொருட்டே அன்னத்தைப் பக்குவஞ்செய்வனோ, அப்புருஷன் பாவத்தையே போஜனஞ்செய்பவனாவன்.

(வி-ம்.) எவ்வதிகாரிகள் இருஷியஜ்ஞம், தேவயஜ்ஞம், பிதிருயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்னும்ஐந்துயஜ்ஞங்களால் எஞ்சியிருக்கும் அமிருதரூப அன்னத்தைப்போஜனஞ்செய்கின்றார்களோ அவர்களேசிஷ்டரெனப்படுவர். ஏனெனின், சிரத்தைபக்திவாயிலாய்வேதவிஹிதகருமங்களைச்செய்யும் புருஷரேசாஸ்திரத்தின்கண்ணேசிஷ்டர்எனப்படுவர். அத்தகையசிஷ்டர் சர்வபாவங்களையும் பரித்தியாகஞ்செய்வர். கருத்திதுவாம்:—பிரமாதத்தாற்செய்யப்பட்டபாவமும், ஐந்து *சூனுவடிவநிமித்தத்தால் உண்டாகியபாவமும், விஹிதகருமத்தைச்செய்யாமையாலுண்டாகியபாவமும் அவரைப்பற்றமாட்டா. இத்துணைகூறியதால், அந்தயஜ்ஞாதிகளைச்செய்யும் புருஷருக்குப்பாவ அடைவின் அபாவங்கூறப்பட்டது. இப்போதுஅந்தயஜ்ஞாதிகருமங்களைச்செய்யாதபுருஷருக்குப்பிரத்தியவாயத்தினடைவைக் கூறுகின்றார்:—'஭ுஞ்ஜதேதேத்' என. அந்த ஐந்து மகாயஜ்ஞங்களைச் செய்யாமல் எப்பாவான்மாவாய புருஷன் கேவலம் தனதுதாத்தைநிரப்பும்பொ

* சூனு=வதஸ்தானம்.

ருட்டே அன்னத்தைப்பக்குவஞ்செய்கின்றனனோ, தேவதை, அதிதி முதலியவரின் பொருட்டு அன்னத்தைப் பக்குவஞ்செய்திலனோ, அப்புருஷன் கேவலம்பாவத்தையேபுசிப்பன், அன்னத்தைப்புசியான். அந்தப்பாபாத்மாவின்திருட்டியாலோ அஃதன்னமாமாயினும், சாஸ்திரதிருஷ்டியாலும் தேவதைகளின் திருஷ்டியாலும் அவ்வன்னம் பாபரூபமேயாம். ஈண்டு, 'பாபாந்ஸ பு⁴ங்க்தே' என்னும் வசனத்தால் இப்பொருளுணர்த்தப்பெற்றதாம்:—எப்புருஷன் அந்த ஐந்துயஜ்ஞங்களைச் செய்யாமல் கேவலம் தனதுதரத்தைநிரப்பும்பொருட்டே அன்னத்தைப் பக்குவப்படுத்துவனோ, அப்புருஷன் முன்னமே பஞ்சசூனைகளாலாக்கப்பட்ட பாவத்தையுடையவனும், பிரமாதத்தாற்செய்த ஹிம்சையாற்சனித்த பாவத்தையுடையவனுமேயாயினும், மீண்டும் வைஶ்வதேவாதிநித்தியகருமங்களைச் செய்யாமையாலுண்டாகிய வேறுபாவத்தையுமடைவன்.

ஆ-சு. கண்டநீ பேஷணீ சுல்லீ உதகும்பீ ச மார்ஜநீ ।
பஞ்ச ஸூநா க்ருஹஸ்தஸ்ய தாபி: ஸ்வர்க்கம் ந விந்ததி ॥
பஞ்சஸூநாக்ருதம் பாபம் பஞ்சயஜ்ஞைர்வ்யபோஹதி ॥

(பொ-ள்.) கிருஹஸ்தபுருஷரின் கிருகத்தின்கண்ணே ஜீவர்கட்கிம்சையுண்டாம் ஐந்துஸ்தானங்களுள்ளன. ஒன்றாவதோ, உரலின்கண்ணே அன்னத்தையிட்டுக்குத்துவதால் ஜீவர்கட்கிம்சையுண்டாம். இரண்டாவதோ, கற்றிகிரியின்கண்ணே அன்னத்தைவைத்தரைத்தலான் ஜீவர்கட்கிம்சையுண்டாம். மூன்றாவதோ, அன்னத்தைப் பக்குவஞ்செய்யும்பொருட்டு அடுப்பின்கண்ணே அக்கினியை எரித்தலான் ஜீவர்கட்கிம்சையுண்டாம். நான்காவதோ, பாத்திரங்களில் ஜலத்தையெடுத்தன்முதலியவற்றால் ஜீவர்கட்கிம்சையுண்டாம். ஐந்தாவதோ, மண்நீர்முதலியவற்றால்வீட்டைமெழுகன்முதலியவற்றால் ஜீவர்கட்கிம்சையுண்டாம். இவ்வைவகையாய ஜீவஹிம்சைகளால் இந்தக்கிருஹஸ்தபுருஷன் சுவர்க்கத்தையடையான். அந்த ஐந்து ஹிம்சைஸ்தானங்களினின்றும் உண்டாய பாவம் ஐந்துயஜ்ஞங்களால் நீங்கிவிடும் என்பதாம். அந்த ஐந்துயஜ்ஞங்களிவையாம்:—

ஆ-சு. ருஷியஜ்ஞம் தேவயஜ்ஞம் பூதயஜ்ஞம் ச ஸர்வதா ।
ந்ருயஜ்ஞம் பித்ருயஜ்ஞம் ச யதாஶக்தி ந ஹாபயேத் ॥

(பொ-ள்.) இந்தப் பிராஹ்மணாதிகிருஹஸ்தபுருஷர் நாடோறும் இருஷியஜ்ஞம், தேவயஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம், பிதிருயஜ்ஞம் என்னும் பஞ்சயஜ்ஞங்களைச் சக்தியனுசாரஞ்செய்க. இந்தப்பஞ்சயஜ்ஞங்களின் பரித்தியாகத்தை ஒருகாலும் செய்யாமலிருக்குக. அவற்றுள், வேதத்தைப்படித்தல், படிப்பித்தல் அங்ஙனமே சந்தியை உபாசனைசெய்தல் இருஷியஜ்ஞமாம். அக்கினிஹோத்திராதிகளைச்செய்தல் தேவயஜ்ஞமாம். பலிவைஶ்வதேவங்களைச்செய்தல் பூதயஜ்ஞமாம். கிருகத்தின்கண்ணேவந்த அதிதியை அன்னமுதலியவற்றால் மகிழ்வுறச்செய்தல் மனுஷ்யயஜ்ஞமாம். சிராத்தம், தர்ப்பணஞ்செய்தல் பிதிருயஜ்ஞமாம். இந்தயஜ்ஞங்களைச்செய்யாத கிருஹஸ்தபுருஷருக்குத் தோஷ அடைவுபாராசரஸ்மிருதியின்கண்ணும் கூறப்பெற்றுளது.

ஆ-சு. "வைஶ்வதேவவிஹீநா யே ஆதித்யேந பஹிஷ்க்ருதா: ।
ஸர்வே தே நரகம் யாந்தி காகயோநிம் வ்ரஜந்தி தே ॥

காஷ்டபார ஸஹஸ்ரேண க்ருதகும்ப ஶதேந ச ।
அதிதிர்யஸ்ய பக்நாஶஸ்தஸ்ய ஹோமோ நிரர்த்தக: ॥

(பொ-ள்.) எப்பிராஹ்மணுதிகிருஹஸ்தர் வைஶ்வதேவஞ் செய்திலரோ, அதிதிகளுக்குப் போஜனங்கொடுத்திலரோ, அப்புருஷர் மரித்தபின்னர் நரகத்தையடைவர், அதன்பின்னர்க்காகயோனியையடைவர். அல்லது, எந்தக்கிருஹஸ்தனுடைய கிருகத்தினின்றும் அதிதியானவன் அன்னுதிகளின் அடைவின்றிக் கோபத்துடன் சென்று விடுவனே, அந்தக்கிருஹஸ்தன் ஆயிரங்கட்டுக் காட்டத்தானும், நூறுகும்பம் நெய்யானுஞ் செய்தஹோமமானது, அவனுக்குச் சிறிது மாத்திரையும் பயனைப்பயவாதாம். அதிதியின் இலக்கணம் பாராசரஸ்மிருதியின் கண்ணே இங்ஙனங் கூறியிருக்கின்றது.

ஆ-சு. ஓஷ்டொவாயதிவா உேஷஷ்யோ மூவெஷாவண்டிதவெவவா ।
ஸம்வாமோவெ ஶ்வஷேவெதுஸொதிதிஃ ஸ்வஃக ஸம்க்ரமஃ ॥
அளெெராவாயதி அாஂஸாஃ ஸஂதா-வ-ஜா விஶூலாதகஃ ।
வெஶ்வஷெவெ தூவஸம்வாவே ஸொதிதிஃ ஸவஷஂவஂமஜஃ ॥
நவூஷ்தூஷூஃ மொதஜாரெணெ ஸ்வாயஷூாயஂஅ வாதாஃகி அ ।
ஊஂதஷயஂ கஷ்வயெதஷ்வி நவஷெவ உயொஹிஸஃ ॥

(பொ-ள்.) எப்புருஷன் தூரமார்க்கத்தினின்றுஞ்சென்றுவந்தனனே, இளைப்படைந்து விட்டனனே, வைஶ்வதேவஞ்செய்யுங் காலத்தே அடைவனே அவனை யதிதியெனவறிக. தனது எப்புரோஹிதாதியர் முன்னரே ஆண்டுளரோ அவரை யதிதியெனக்கூறுவதில்லை. வைஶ்வதேவஞ் செய்யுங்காலத்தே பிராஹ்மணுதிகிருஹஸ்தபுருஷரின் கிருகத்தின்கண்ணே அன்னபிலாஷையுடைய ஒருகள்வன்வரினும், அல்லது சண்டாளன்வரினும், அல்லது சத்துருவரினும், அல்லது பிதாவைஹனனஞ்செய்தவன்வரினும், அவனையதிதியெனவறிக; சர்வசற்சங்காதிகளின் காரணமெனவறிக. அல்லது இக்கிருஹஸ்தபுருஷன் கிருஹத்தின்கண்ணேயுற்ற அவ்வன்னபிலாஷையையுடைய அதிதியைக்கோத்திரங் கேட்காதொழிக, வேதசாகாதிகளையுங் கேட்காதொழிக, இருக்குவேதாதி யத்தியயனத்தையுங் கேளாதொழிக, பிரஹ்மசரியாதி விரதத்தையுங் கேளாதொழிக; மற்றே, அக்கிருஹஸ்தன் அவ்வதிதியினிடத்தே இவ்வதிதியானவன் சர்வதேவமய விஷ்ணுரூபனுவன் எனப்பாவனைசெய்து அவ்வதிதிக்கு அன்னுதிகளை ஈக. ஆகையால், எந்தப் பிராஹ்மணுதி கிருஹஸ்தபுருஷர் முற்கூறிய ஐந்துயஜ்ஞங்களைச் செய்யாமல் கேவலந்தனதுதரத்தை நிரப்பும்பொருட்டே அன்னத்தைப்பாகஞ் செய்கின்றனரோ, அப்புருஷர் அன்னரூபமாயிராநின்ற பாவத்தையே போஜனஞ் செய்வர். (13)

(அ-கை.) அல்லது கேவலம் முற்கூறியபிரஜாபதி வசனமாத்திரத்தானே அந்தயஜ்ஞாதிகருமங்கள் செய்யத்தக்கனவன்றும்; மற்றே, இவ்வுலகவடிவ சக்கரத்தின்பிரவிருத்தியின் ஹேதுவாதலினுனும், அவை செய்யத்தக்கனவாம் என்னும்பொருளை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு மூன்று சுலோகங்களால் கூறியருளுகின்றார் :—

சு-ம். அநூாஂ ஹவந்தி ஹூதாநி வஜ-ந்யாஷநஸம்ஹவஃ ।
யஜ்ஞாஂ ஹவதி வஜ-நெ்யா யஜ்ஞஃ கஃஸமுஷ்ஹவஃ ॥ (14)

ப-ம். 1 அநூாக் 3 ஹவந்தி 2 ஹூதாநி 5 வஜ-ந்யாக் 4 அநூஸம்ஹவஃ 7 யஜ்ஞாக் 8 ஹவதி 6 வஜ-ந்யஃ 9 யஜ்ஞஃ 10 கஃஸமுஷ்ஹவஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அன்னத்தினின்றும் சரீரம் உற்பன்னமாம், அவ்வன்னத்தின் உற்பத்தி ஜலவிருஷ்டியினுலுண்டாம், அந்த நீரின்விருஷ்டி அபூர்வரூபதருமத்தாலுண்டாம், அந்த அபூர்வரூபதருமங் கருமத்தாலுண்டாம். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! போஜனவாயிலாய்ப் புருஷஸ்திரீகளின் சரீரத்தின்கண்ணே புகுந்து சுக்கிலசோணிதசொரூபமாய்ப் பரிணமத்தையடைந்த நெற்கோதுமை முதலியனவாய அன்னங்களினலே சர்வமனுஷ்யாதி பிராணிகளின் சரீரம் உற்பன்னமாம். அந்நெற்கோதுமை முதலிய அன்னத்தினுற்பத்தி ஜலவிருஷ்டியினலுண்டாம் என்னும் வார்த்தை சர்வப்பிராணிகட்கும் பிரத்தியக்ஷசித்தமாம். காரீரீ, இஷ்டி, அக்கினிஹோத்திரம் முதலியவற்றினின்றும் உற்பன்னமாய தருமஞ் சாஸ்திரத்தின்கண்ணே அபூர்வம், அதிருஷ்டம் எனக்கூறப்பெறும். அந்தத்தருமரூப யஜ்ஞத்தினின்றும் ஜலவிருஷ்டியுற்பன்னமாம்.

ஆ.சு. 𑌅𑌗𑍍𑌨𑍌 𑌪𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑌾𑌹𑍁𑌤𑌿𑌃 𑌸𑌮𑍍𑌯𑌗𑌾𑌦𑌿𑌤𑍍𑌯 𑌉𑌪𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍇 ।
𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌵𑍃𑌷𑍍𑌟𑌿 𑌵𑍃𑌷𑍍𑌟𑍇𑌰𑌨𑍍𑌨𑌂 𑌤𑌤𑌃 𑌪𑍍𑌰𑌜𑌾𑌃 ।

(போ-ள்.) வைதிக அக்கினியின்கண்ணே காலையிலும் மாலையிலுஞ் சிரத்தைபக்திவாயிலாயிடப்பட்ட நெய்முதலிய பதார்த்தங்களின் ஆஹுதிகள் சூக்ஷ்மரூபமாய் ஆதித்தியனிடத்தே நிலைபெறும். அவ்வாஹுதி விசிஷ்ட ஆதித்தியனிடத்திருந்தும் மேகவாயிலாய் ஜலவிருஷ்டி உற்பன்னமாம். அந்த ஜலவிருஷ்டியினின்றும் நெற்கோதுமைமுதலிய அன்னங்கள் உற்பன்னமாம். அவ்வன்னத்தினின்றும் இம்மனுஷ்யாதி சரீரங்களுண்டாம். அந்தத் தர்மரூப யஜ்ஞம், அக்கினிஹோத்திரம், காரீரீ, இஷ்டிமுதலிய கருமங்களினின்றும் உற்பன்னமாம். (14)

(அ-கை.) அன்றியும் :—

சு-ம். 𑌕𑌰𑍍𑌮 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌮𑍍 ॥ (15)

ப-ம். 1 𑌕𑌰𑍍𑌮 2 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 3 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 4 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 5 𑌅𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 6 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 7 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 9 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 8 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 10 𑌯𑌜𑍍𑌞𑍇 11 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வக்கினிஹோத்திராதி கருமங்கள் நீ வேதத்தினின்றும் உற்பன்னமாயினவென அறிதி. அவ்வேதத்தையும் பரமான்மதேவரினின்றும் உற்பன்னமானதென அறிதி. அக்காரணத்தினலே சர்வஅர்த்தத்தின்பிரகாசகமாய நாசமற்றஅவ்வேதம் அத் தருமரூபயஜ்ஞத்தின்கண்ணே ஸ்திதமாம். (15)

(வி-ம்.) பிரஹ்மமென்பது வேதமாம். அந்த வேதரூபப் பிரஹ்மம் எதன்கண்ணே பிரமாணமாமோ, அது பிரஹ்மோத்பவமாம். அந்த அக்கினிஹோத்திராதி கருமங்களை நீ பிரஹ்மோத்பவமென அறிதி. கருத்திதுவாம் :—வேதம்விதித்த அக்கினிஹோத்திராதி கருமங்களையே நீ அபூர்வரூப தருமத்தின் சாதனமெனவறிதி. வேறுபாஷண்ட சாஸ்திரங்கள் பிரதிபாதித்த கருமங்களை நீ அபூர்வரூப தருமசாதனமென அறியாதொழிதி.

சங்கை :—ஹே பகவன்! அந்தப்பாஷண்ட சாஸ்திரங்களையபேக்ஷித்து வேதத்தின்கண்ணே யாது விலக்ஷணத்தன்மையுளது? எவ்விலக்ஷணத்தன்மையால் வேதப்பிரதிபாதித அர்த்தமே தருமரூபமாமோ; வேறு பாஷண்ட சாஸ்திரப்பிரதிபாதிதஅருத்தம் தருமரூபம் அன்றாமோ.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் அவ்வேதத்தின்கண்ணே வேறுபாஷண்ட சாஸ்திரத்தினும விலக்ஷணத்தன்மையைக் கூறியருளுகின்றார். '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂' என. ஹே அர்ச்சுன! பிரமம், பிரமாதம், கரணஅபாடவம், விப்ரலிப்சை, என்பனமுதலிய சர்வதோஷங்களற்ற அக்ஷர பரமான்மதேவரிடத்

திருந்தே புருஷனுக்குநிசுவாசமுண்டாவதேபோல, முயல்வின்றியே அந்த இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் என்னும் வேதங்கள் உற்பன்னமாயின. இக்காரணத்தால், பிரமம், பிரமாதம் முதலிய தோஷங்களின் சங்கையற்று, அவ்வபௌருஷேயவேதங்களின் வசனமே, தருமரூப அதீந்திரியஅர்த்தவிஷயகப்பிரமையின் ஜனகத்தன்மையால் பிரமாணரூபமாம். பிரமப்பிரமாதமுதலிய தோஷங்களையுடைய புருஷர்களாற்செய்யப்பட்ட பாஷண்டவாக்கியம், அவ்வதீந்திரியதரும விஷயகப்பிரமையை உற்பன்னஞ்செய்யமாட்டாது. ஆகையால், அப்பாஷண்டசாஸ்திரம் அத்தருமத்தின்கண்ணே பிரமாணரூபமன்றும். ஈண்டு அந்யபதார்த்தத்தின்கண்ணே அந்நிய புத்தியுண்டாதல் பிரமமாம். அவசியஞ் செய்யத்தகுதியாய அருத்தத்தையுஞ் செய்யாதிருத்தல் பிரமாதமாம். நேத்திராதி கரணங்களிடத்தே வஸ்துவின் பதார்த்தக் கிருகணஞ்செய்யும் ஆற்றலிலாமை கரணாபாடவமாம். அந்நியரை வஞ்சிக்கவேண்டுமென்னுமிச்சை விப்ரலிப்சையாம். ஆண்டு அக்ஷரபரமாத்மதேவரிடத்திருந்தே வேதங்களின் பிராதுர்ப்பாவம் (உற்பத்தி) உண்டாம் என்னும் வார்த்தை சுருதியின்கண்ணுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. "அஸ்யமஹதோ பூதஸ்ய நி:ஶ்வஸிதமேதத்ருக்வேதோ யஜுர்வேத:
ஸாமவேதோऽதர்வாங்கிரஸ இதிஹாஸ: புராணம் வித்யா உபநிஷத:
ஶ்லோகா: ஸூத்ராண்யநுவ்யாக்யாநாநி வ்யாக்யாநாநி."

(பொ-ள்.) இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என்னும் நான்குவேதங்களும் இந்தமகாபரமாத்மதேவருடைய நிசுவாசரூபங்களாம். அந்நான்குவேதங்களும், இதிகாசம், புராணம், வித்தை, உபநிஷத், சுலோகம், சூத்திரம், அநுவியாக்கியானம், வியாக்கியானம் என்னும்பேதத்தால் எட்டுவகையாம். (இதிகாசம், புராணம்முதலிய எட்டின்பொருளை ஆத்மபுராணத்தின் ஏழாவதத்தியாயத்தின்கண்ணே யாம் விஸ்தாரமாய்க்கூறியிருக்கின்றேம்.) இவ்வண்ணம் சாக்ஷாத்பரமாத்மதேவரிடத்திருந்தே யுற்பன்னமாதலின் சர்வஅருத்தங்களின்பிரகாசகமும் அவிநாசியுமாய அவ்வேதம் அதீந்திரியதருமரூபயஜ்ஞத்தின்கண்ணே தனதுதாற்பரியத்தால் நிலைபேறுடையதாம். ஆகையால், பாஷண்டசாஸ்திரத்தாற் பிரதிபாதிதமாய கீழானதருமபரித்தியாகஞ்செய்து இவ்வதிகாரியானவன் வேதப்பிரதிபாதிததருமத்தையே அனுஷ்டானஞ்செய்யவேண்டும். (15)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறுவேதாதிகளின் உற்பத்தியாகுக. இதுகூறியதால் ஈண்டிப்பிரசங்கத்தின்கண்ணே யாதுபலம்சித்திக்கும் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீபகவான்கூறியருளுகின்றார் :—

சு-ம். ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நாநுவர்த்தயதீஹ ய: |
அகாயுரிந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி || (16)

ப-ம். 4 ஏவம் 5 ப்ரவர்த்திதம் 6 சக்ரம் 7 ந 8 அநுவர்த்தயதி 2 இஹ 3 ய: 10 அகாயு: 11 இந்த்ரியாராம: 12 மோகம் 1 பார்த்த 9 ஸ: 13 ஜீவதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகின்கண்ணே எவ்வதிகாரியானவன் இவ்விதம் பிரவிருத்திக்கும் சக்கிரத்தை அங்கீகாரஞ்செய்திலனோ, அந்தப்பாவஜீவனத்தையுடைய இந்திரியாராமபுருஷன் வீணாகவேஜீவிக்கின்றனன். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முதலில் சர்வஞ்ஞபரமேஸ்வரரிடத்தினின்றும் சர்வ அர்த்தத்தையும்பிரகாசஞ்செய்வதாய நித்தியநிர்த்தோஷவேதத்தின் உற்பத்தியுண்டாம். அதன்பின்னர் அவ்வேதத்தின்கண்ணேகூறிய கருமங்களின்ஞானமுண்டாம். அக்கருமங்களின் ஞானத்தின்பின்னர் அக்கருமஅனுஷ்டானத்தால்

அபூர்வரூபதரும உற்பத்தியுண்டாம். அந்தத்தரும உற்பத்தியின்பின்னர் ஜலவிருஷ்டியுண்டாம். அந்தஜலவிருஷ்டியால் நெற்கோதுமைமுதலிய அன்னங்கள் உற்பன்னமாம். அவ்வன்னத்தினின்றும்மனுஷ்யாதிபூதங்கள் உற்பன்னமாம். அதன் பின்னர் அம்மனுஷ்யாதிகட்குமீண்டும் கருமத்தின்கண்ணே பிரவிருத்தியுண்டாம். இவ்வண்ணம் சர்வஜகத்தையும் நிர்வாகஞ்செய்யும்பொருட்டுப் பரமேஸ்வரர் பிரவிருத்திப்பித்த இச்சக்கிரத்தை எவ்வதிகாரியங்கீகரிக்கவில்லையோ, அவன்பாவரூப ஜீவனமுடையவனாதலின் வீணாகவேஜீவிக்கின்றனன். அதாவது அப்புருஷன் ஜீவிப்பதினும் மரணமடைவதேமேன்மையாம்; ஏனெனின், அச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து வேறுஜன்மத்தின்கண்ணே அப்புருஷனுக்குமொருகால்தருமத்தின் அனுஷ்டானஞ்சம்பவித்தல்கூடும். அங்ஙனமே இந்தஜன்மத்தின்கண்ணே வேதவிகிதகருமத்தைச்செய்யாமையால் பாவத்தைச்சேகரித்தலினின்றுந் தப்பித்துக்கொள்வன். ஆகையால், அப்புருஷன் ஜீவிப்பதினும் மரித்தலேமேன்மையாம்.

சங்கை :—ஹே பகவன்! முற்கூறியருளிய சக்கிரத்தை அங்கீகரியாத பிரஹ்மத்தையுணர்ந்தபுருஷனுடைய ஜீவனமும் நிஷ்பலமேயாகுமன்றே?

சமாதானம் :—அச்சங்கையை நீக்கியருளும்பொருட்டு ஸ்ரீபகவான் அவ்வஞ்ஞானிகட்கு விசேஷணங்கொடுத்தருளுகின்றார் 'ஸம்ரியாராம꞉' என சுரோத்திராதி இந்திரியங்களால் சப்தாதிவிஷயங்களிடத்தே எப்புருஷன் இரமிக்கின்றனனோ, அவன் இந்திரியாராமனாவன். அத்தகையவிஷயலம்பட புருஷன்கேவலங் கருமத்திற்கேயதிகாரியாவன், அங்ஙனமாகியும் எவன்கருமத்தைச் செய்கின்றானில்லையோ, அவன் அவ்விகிதகருமத்தைச்செய்யாமையால் கேவலம் பாவத்தையே சேகரிப்பவனாய் வீணாகவேஜீவிப்பன். ஜீவன்முக்தவித்துவானோ இந்திரியாராமனாகாகலின் அக்கருமங்களைச்செய்யாமையால் அவ்வித்துவானவன் பிரத்தியவாயத்தையடையான். (16)

(அ-கை.) அல்லது எப்புருஷன் இந்திரியாராமனாகானோ அங்ஙனமேபரமார்த்தவஸ்துவை எப்போதும் பார்ப்பவனாவனோ, அவ்வறிஞன் இச்சகத்துருவச்சக்கிரத்தின் ஹேதுபூதகருமத்தையனுஷ்டியாவிடினும் பிரத்தியவாயத்தையடையான்; என்னை? அவ்வறிஞன்கிருதகிருத்தியபாவத்தையடைந்திருத்தலின்; என்னும் பொருளை ஸ்ரீபகவான் இரண்டுசுலோகங்களாற்கூறியருளுகின்றார் :—

சு-ம். யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதாத்மத்ருப்தஶ்ச மாநவ꞉ ।
ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ (17)

ப-ம். 2 ய꞉ 1 து 4 ஆத்மரதி꞉ 5 ஏவ 6 ஸ்யாத் 8 ஆத்மத்ருப்த꞉ 7 ச 3 மாநவ꞉ 10 ஆத்மநி 11 ஏவ 9 ச 12 ஸந்துஷ்ட꞉ 13 தஸ்ய 14 கார்யம் 15 ந 16 வித்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் எம்மனுஷ்யன் ஆன்மாவின்கண்ணே பிரீதியுடையவனேயாவனோ; அங்ஙனமே, ஆன்மாவாலேதிருப்தனாயுளானோ; அங்ஙனமே, ஆன்மாவின்கண்ணே சந்துஷ்டனாவனோ; அப்புருஷனுக்குச்சிறிதுமாத்திரையுஞ்செய்யத்தக்ககாரியமொன்றுமின்றாம். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் இந்திரியாராமனாவனோ, அவ்விஷயலம்படபுருஷன் மாலைசந்தனவனிதைமுதலிய விஷயங்களையடைந்தே இரதியையடைவன்; அங்ஙனமே அப்புருஷன்மனோஹர அன்னபானாதி பதார்த்தங்களையடைந்தே திருப்தியையடைவன்; அங்ஙனமே, அவ்விந்திரியாராமபுருஷன் சுவர்ணம், மைந்தர், பசுக்கள்முதலிய பதார்த்தங்களினடைவானும், நோய்முதலியவற்றின் அடைவின்மையானுமே சந்தோஷத்தையடைவன். அப்பதார்த்தங்கள்கிடையா

விடின், அவ்விந்திரியாராம இராகிகளிடத்தேமுறைப்படி அரதி, அதிருப்தி அதுஷ்டிகளேகாணவரும். ஈண்டு இரதி, திருப்தி, துஷ்டியென்னும்மூன்றும் மனத்தின்விருத்திவிசேஷங்களாம். அம்மூன்றும் சாக்ஷிரூப அனுபவத்தாற்சித்தமாம். எவ்வறிஞனுக்குப்பரமானந்தவடிவமாய பரமான்மதேவராது அடைவுகிடைத்ததோ அவ்வறிஞன், துவைததரிசன அபாவத்தானும், விஷயசுகங்களிடத்தே துச்சபுத்தியையுடைமையானும் அவ்விஷயசுகங்களினிச்சையைச் செய்வதில்லே. என்னும் இவ்வார்த்தையை 'யாவாநய உஷவாநெ' என்னுஞ்சுலோகத்தின்கண்ணே முன்னமேகூறிவந்தேம். இக்காரணத்தால் அந்தப்பிரஹ்மவேத்தாவாய அறிஞன் ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே இரதிசெய்வன். ஸ்திரீமுதலிய விஷயங்களிடத்தே இரதி செய்யான்.

சங்கை :—ஹே பகவன்! ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே எல்லாப்பிராணிமாத்திரங்கட்கும் நிருபாதிகப்பிரீதியாம். தன்னான்மாவின்பொருட்டேஸ்திரீபுத்திராதிகளிடத்தே பிரீதியுண்டாம். ஆகையால், அவ்வான்மரதியாகிய அறிஞபுருஷனிடத்தே அஞ்ஞானிகளினும் விலக்ஷணத்தன்மை சித்தமாகமாட்டாது.

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார் 'ஆத்மத்ருப்த:' என. ஹே அர்ச்சுன! அவ்வறிஞனவன் பரமாநந்தவடிவ ஆன்மாவானே திருப்தனவன். அஞ்ஞானியைப்போல அவ்வறிஞன்மனோரம்மியமங்கையர்களாலேனும், இனிய அன்னத்தாலேனும்திருப்தனுகான்.

சங்கை :—ஹே பகவன்! எப்புருஷனுடையஜாடராக்கினி, நோய்முதலியவற்றால் மந்தத்தையடைந்துளதோ, தாதுக்ஷயமாய்விட்டதோ, அப்புருஷன் இனிய அன்னத்தாற்றிருப்தனுகான், மனோரம்மியமங்கையரிடத்தும் இரமிக்கமாட்டான். ஆகையால், அந்நோயாளியினும் அவ்வறிஞனிடத்தே விலக்ஷணத்தன்மைசித்தமாகமாட்டாது.

சமாதானம் :—ஸ்ரீ பகவான்கூறியருளுகின்றார் 'ஆத்மந்யேவ ச ஸந்துஷ்ட:' என. ஹே அர்ச்சுன! அவ்வறிஞனவன் கேவலம் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே சந்தோஷத்தையடைந்துளான். வேறொரு அனான்மபதார்த்தங்களிடத்தே அவ்வறிஞன்சந்தோஷத்தையடையான். நோய்முதலியவற்றால் எப்புருஷனுக்குச் சாடராக்கினிமந்தமாய்விட்டதோ, தாதுக்ஷயமுண்டாய் விட்டதோ அப்புருஷனே ஜாடராக்கினியோங்கும்பொருட்டும், தாதுவைவிருத்திசெய்யும்பொருட்டும் நானாவகையாய ஔஷதங்களின்பொருட்டு யாண்டாண்டோசுற்றிக்கொண்டேதிரிவன். ஆனந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே அவ்வஞ்ஞானியானவன் சந்தோஷத்தையடையான். இவ்விலக்ஷணத்தன்மையையுணர்த்தியருளும்பொருட்டு, ஸ்ரீ பகவானவர் 'யஸ்த்வாத்மரதி:' என்னும் திருவசனத்தின்கண்ணே 'து' என்னும்சப்தத்தைக்கூறியருளினர்.

ஆ-சு. "ஆத்மக்ரீட ஆத்மரதி: க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம்வரிஷ்ட:"

(பொ-ள்.) பிரஹ்மவித்துக்களுண்மேன்மையனுய இவ்வறிஞன் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே கிரீடிப்பன். ஆன்மாவின்கண்ணே இரதிசெய்வன். ஆன்மாவின்கண்ணே கிரியையுடையவனுவன் என்பதாம். இத்தகையபிரஹ்மத்தையுணர்ந்த வித்துவானிடத்தேகருமஅதிகாரத்தன்மை இருப்பதற்குயாதொரு ஹேதுவுமின்றாம். இக்காரணத்தால் அவ்வறிஞனுக்கு யாதொரு இலௌகிக வைதிககாரியமுஞ் செய்யத்தக்கதின்றாம்; மற்றோ, அவ்வறிஞன் கிருதகிருத்தியனேயாவன். ஈண்டு 'ஏஷ:' என்னும்பதத்தால் ஸ்ரீ பகவானவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—இவ்வண்ணம் ஆத்மரதியாய், ஆத்மதிருப்தனுய்

ஆத்மசந்துஷ்டனுய் எம்மனுஷனேனுமிருப்பனேயாயின், அம்மனுஷனே கிருத கிருத்திய பாவத்தையடைவன். அந்தக்கிருதகிருத்தியபாவவடைவின்கண்ணே பிராஹ்மணத்தன்மைமுதலியஉத்தமஜாதியினுபயோகஞ்சிறிதுமாத்திரையு மின்றாம். (17)

(அவ-க.) ஹே பகவன்! ஆன்மசாக்ஷாத்காரமுடையபுருஷனும், துறக்க முதலியவற்றின் இன்பவடைவின்பொருட்டேனும், முத்தியடையும்பொருட்டே னும், பிரத்தியவாயம்நீங்கும்பொருட்டேனும், இன்றியமையாது அக்கருமஞ் செய்தல்தகுதியாம் என அர்ச்சுனன்சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடையருளிச்செய் கின்றார்.

சு-ம். நைவ தஸ்ய க்ருதேநார்தோ நாக்ருதேநேஹ கஶ்சந ।
ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சித³ர்த²வ்யபாஶ்ரய꞉ ॥ (18)

ப-ம். 4 ந, ஏவ 1 தஸ்ய 2 க்ருதேந 3 அர்த²꞉ 8 ந 5 அக்ருதேந 6 இஹ 7 கஶ்சந 14 ந 9 ச 10 அஸ்ய 11 ஸர்வபூதேஷு 12 கஶ்சித் 13 அர்த²வ்யபாஶ்ரய꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வறிஞனுக்குக் கருமஞ்செய்வதால் யாதொரு பயனுமின்றாம்; கருமஞ்செய்யாதிருப்பதாலீண்டு யாதொருஅனர்த்தமுமின்றாம்; என்னை? இவ்வறிஞனுக்குச் சர்வபூதங்களிடத்தும் யாதொருபயனுடைச் சம்பந் தமுமின்றாமாதலின். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் ஆன்மாதியோ, ஆன்மதிருப்தனே, ஆன்ம சந்துஷ்டனே, ஆன்மாவையறிந்த அவனுக்கு நித்தியநைமித்திக கருமங்களால் யா தொருதுறக்கமாகிய பயனேனும், மோக்ஷமாகிய பயனேனுமின்றாம். ஏனெனின், அவ்வறிஞனுக்குத் துறக்கமுதலியவற்றை யடையவேண்டுமென்னுமெண்ண மாத்திரமுமின்றாம். மோக்ஷமோ கருமங்களாற் சாதிக்கத்தக்கதேயன்றாம்.

ஆ-சு. "பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்³ராஹ்மணோ ।
நிர்வேத³மாயாந்நாஸ்த்யக்ருத꞉ க்ருதேந" ॥

(பொ-ள்.) இவ்வதிகாரியாய பிராஹ்மணன் புண்ணியகருமங்களாலாக்கப் பட்டசுவர்க்காதி லோகங்களை, அநித்தியத்தன்மை, அதிசயத்தோடுகூடியதாந் தன்மைமுதலிய தோஷங்களுடையனவெனவறிந்து, அந்தச்சுவர்க்காதி லோகங்க ளினின்றும் வைராக்கியத்தை யடைவன்; என்னை? ஆன்மவடிவ நித்திய மோக்ஷம், நித்தியநைமித்திக கருமங்களால் அடையப்படமாட்டாதாதலினென்க. ஈண்டு 'நைவ தஸ்ய' இவ்வசனத்தின்கண்ணே இராநின்ற 'ஏவ' என்னுஞ்சப்தம், அவ்வான்மவடிவ நித்தியமாயமோக்ஷத்தின்கண்ணே ஞானத்தாற்சாதிக்கத்தக்க தாந்தன்மையின்நீக்கத்தையுங் குறிப்பித்ததாமெனக்கொள்க. அதாவது, அவ் வான்மவடிவ நித்தியமோக்ஷம் எங்ஙனங் கருமத்தாற் சாத்தியமன்றாமோ, அங்ங னம் ஞானத்தானுஞ்சாத்தியமன்றாம்; ஏனெனின், அவ்வான்மரூபமோக்ஷம் உண் மையாயோ இச்சீவனுக்கு நித்தியமுமே அடையப்பெற்றதாம், ஆயினும் ஆன்மா வின் அஞ்ஞானமே அம்மோக்ஷத்தின் அடைவின்மையாம். அவ்வஞ்ஞானம் தத் துவஞான மாத்திரத்தால் நீங்கும், அத்தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நீங்கிய பின்னர், அவ்வறிஞனுக்குக் கருமத்தாற் சித்தமாகத்தக்கதும், தத்துவஞானத் தாற் சித்தமாகத்தக்கதும் ஆகிய எப்பயனும் எஞ்சியிராதென்பதே.

சங்கை:—ஹே பகவன்! நித்தியநைமித்திககருமங்களைச் செய்யாதொழித லாற் சாஸ்திரத்தின்கண்ணே பிரத்தியவாயத்தினடைவு கூறப்பட்டுளது; ஆதலின்

அவ்வறிஞனும் பிரத்தியவாயத்தை நீக்கும்பொருட்டு, அக்கருமங்களை அவசியஞ் செய்தல் தகுதியாம்.

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார் :—'நாக்ருதேநேஹ கஶ்சந' என. ஹே அர்ச்சுன! அந்தப்பிரஹ்மவேத்தாவாய அறிஞனுக்கு அநித்திய நைமித்திககருமங்களைச் செய்யாதொழிதலால் இவ்வுலகின்கண்ணே சிறிதுமாத்திரையும் நிந்தைவடிவ அநர்த்தமும், பிரத்தியவாயத்தின் பிராப்திவடிவ அநர்த்தமும் உண்டாகமாட்டாவென்பதாம். ஆண்டு இந்தச் சுலோகத்தின் முற்பாதியாலருளிச்செய்யப்பட்ட எல்லாப்பொருளின்கண்ணும் 'ந சாஸ்ய ஸர்வபூதேஷு கஶ்சிதர்த்தவ்யபாஶ்ரய:' என்னுமிப்பிற்பாதியால் ஊகமருளிச்செய்கின்றார்:—ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் இந்தப்பிரஹ்மத்தையுணர்ந்த புருஷனுக்குப் பிரஹ்மாமுதல் ஸ்தாவரம்வரையுமுள்ள சர்வபூதங்களிடத்தும் யாதொருபயனுடைச் சம்பந்தமுமின்றோ, அதாவது எப்பிராணிவிசேஷத்தையாசிரயித்தேனுங் கிரியையாற்சாதிக்கத்தக்கதெப்பொருளுமின்றோ, அக்காரணத்தால் இவ்வறிஞனுக்கு அநித்தியநைமித்திககருமங்களைச்செய்தலும், அவற்றைச்செய்யாதிருத்தலும் பயனற்றனவாம்.

ஆ-சு. "நைநம் க்ருதாக்ருதே தபத:."

(பொ-ள்.) இந்தப் பிரஹ்மவேத்தாவாய அறிஞனைக் கருமத்தைச் செய்தலுந் தவிர்தலுந் தபியாவாம்.

சங்கை :—ஹே பகவன்! அந்தப் பிரஹ்மவேத்தாவாய அறிஞனுக்கும் வீடடைவதன்கண்ணே இந்திராதி தேவதைகள் நானாவகையாய விக்கினங்களைச் செய்வாராதலின், அவற்றை நீக்கும்பொருட்டு அவ்வறிஞனும் அத்தேவதைகளின் ஆராதனைவடிவ கருமத்தை அவசியஞ் செய்யவேண்டுமன்றோ.

சமாதானம் :—ஹே அர்ச்சுன! ஆன்மஞானத்தினும்முன்னர்த்தான் அத்தேவதைகள் விக்கினஞ்செய்வர். ஆன்மஞான மடைந்தபின்னரோ மோக்ஷ அடைவின்கண்ணே அவர்கள் விக்கினஞ்செய்ய ஆற்றலற்றவராவர்.

ஆ-சு. "தஸ்ய ஹ ந தேவாஶ்ச நாபூத்யா ஈஶத ஆத்மா ஹ்யேஷாம் ஸ பவதி."

(பொ-ள்.) எக்காரணத்தால் அந்தப் பிரஹ்மவேத்தாவாகிய புருஷன் அந்தத் தேவதைகளின் ஆன்மவடிவனுவனே, அக்காரணத்தால் அவ்விந்திராதி தேவதைகள் அந்தப்பிரஹ்மவேத்தாவை யவமதித்துபத்திரவிப்பதில் ஆற்றலுடையவராகார் என்பதாம். ஆகையால், விக்கினங்களின் நிவிருத்தியின்பொருட்டு, அத்தேவதைகளின் ஆராதனைவடிவ கருமமும் அவ்வறிஞன்செய்யவேண்டுவதின்றாம். அத்தகைய பிரஹ்மவேத்தாவாகிய புருஷனை ஏழு பூமிகளின்பேதத்தால் ஸ்ரீ வசிஷ்டபகவானும் நிரூபித்தருளியுள்ளார் :—

ஆ-சு. "ஜ்ஞாநபூமி: ஶுபேச்சாக்யா ப்ரதமா பரிகீர்த்திதா ।
விசாரணா த்விதீயா ஸ்யாத் த்ருதீயா தநுமாநஸா ॥
ஸத்த்வாபத்திஶ்சதுர்த்தீ ஸ்யாத் ததோ(அ)ஸம்ஸக்திநாமிகா ।
பதார்த்தாபாவநீ ஷஷ்டீ ஸப்தமீ துர்யகா ஸ்ம்ருதா" ॥

(பொ-ள்.) 1 சுபேச்சை, 2 விசாரணை, 3 தநுமாநசை, 4 சத்துவாபத்தி, 5 அசம்சக்தி, 6 பதார்த்தாபாவநீ, 7 துரீயை (துரியகை) என்னும் ஏழுபூமிகள் ஞானத்திற்காம். அவற்றுள் நித்திய அநித்தியவஸ்துவின்விசாரம், இகலோக பரலோகவிஷயசுகங்களினின்றும்வைராக்கியம், சமதமாதிஷட்சம்பத்தி என்னும்

மூன்று சாதனவாயிலாய்ப் பலபரியந்தமுள்ள முமுக்ஷுதையெனப் பெயரிய மோக்ஷஇச்சை சுபேச்சையாம். 1 அதன்பின்னர் அசேஷசாஸ்திரபாண்டித்தியமும் பிரஹ்மநிஷ்டையுமுடைய ஆசிரியரின் சமீபத்தையடைந்து வேதாந்தவாக்கியங்களைச் சிரவணஞ்செய்தலும் அவ்வர்த்தத்தை மனனஞ்செய்தலும் விசாரணையெனப் பெறும். 2 அதன்பின்னர் நிதித்தியாசனரூப அப்யாசத்தாலுண்டாமுளத்திரெருமைப்பாட்டால் அம்மனத்தின்கண்ணே சூக்ஷ்மவஸ்துக்கவரும்யோக்யதை தனுமானசையாம். 3 இம்மூன்றுபூமிகளும் ஞானஅடைவிற்குச்சாதனரூபமாம். இம்மூன்றுபூமிகளிலும் இவ்வெல்லாவுலகும் பேதத்தோடுகூடியதாய்த் தோற்றும். ஆகையால், இம்மூன்று பூமிகளும் நனவவஸ்தையெனக் கூறப்பெறும். இவ்விஷயமும் ஸ்ரீ வசிஷ்டபகவானால் கூறியருளப்பெற்றுளது.

ஆ-சு. "ஹூமிகாத்ரயமெதத்ஸ் ராமஜாக்ரதிஸ்திதம் ।
யதாவத்பேதபுத்த்யேதம் ஜகஜ்ஜாக்ரதி த்ருஶ்யதே" ॥

(பொ-ள்.) ஹே இராமச்சந்திர! எங்ஙனம் நனவவஸ்தையின்கண்ணே இவ்வுலகம் உள்ளபடியே பேதபுத்தியாற்காணப்பெறுகின்றதோ; அங்ஙனம், இம்முப்பூமியின்கண்ணும் இவ்வெல்லாவுலகும் உள்ளபடியே பேதபுத்தியாற் காணப்பெறும். ஆகையால, சுபேச்சை, விசாரணை, தனுமானசை என்னும் மூன்றுபூமிகள் நனவவஸ்தையெனக் கூறப்பெறும். அதன்பின்னர் இவ்வதிகாரிபுருஷனுக்குத் தத்வமசிமுதலியவேதாந்த வாக்கியத்தால் நிர்விகற்பகப் பிரஹ்மான்மைக்கிய விஷயகசாக்ஷாத்காரமுண்டாம்; அதுசத்துவாபத்தியெனப்பெறும். 4 அந்தச்சத்துவாபத்தியெனப் பெயரிய நான்காவது பூமியின்கண்ணே இவ்வெல்லாவுலகும் கனவைப்போலப்பொய்யாய்த் தோற்றும்; ஆதலின் அந்தப் பலவடிவ சத்துவாபத்தி கனவவஸ்தையெனக் கூறப்பெறும். இவ்விஷயமும் ஸ்ரீ வசிஷ்டபகவானாற் கூறியருளப்பட்டுளது :—

ஆ-சு. "அத்வைதே ஸ்தைர்யமாயாதே த்வைதே ப்ரஶமமாகதே ।
பஶ்யந்தி ஸ்வப்னவல்லோகம் சதுர்த்தீம் பூமிகாமிதா:" ॥

(பொ-ள்.) எக்கால், அத்வைதஸ்திரத் தன்மையடையப் பெறுமோ, துவைத நிவிருத்தியாமோ, எல்லாவுலகையும் கனவைப்போலப் பொய்யெனக் காண்பனோ; அக்கால், நான்காவதுபூமியென நவிலப்பெறும். அந்நான்காவது பூமியையடைந்த யோகியானவன் பிரஹ்மவித்தெனப் பேசப்பெறுவன். ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது, என்னும்மூன்றுபூமிகளோ ஜீவன்முத்தியின் உட்பட்டபேதமேயாம். அவற்றுள், சவிகற்பசமாதியின் அப்யாசத்தால் தடைபடுத்தியமனத்தின்கண்ணேயுண்டாம் நிர்விகற்பக சமாதியவஸ்தை யாதுளதோ அது அசம்சக்தியெனப் பெறும். அவ்வசம்சக்தியெனப்பெயரிய ஐந்தாவது பூமியைத் துயிலெனச் சொல்லுவர். அவ்வைந்தாவது பூமியையுடைய யோகியானவன் தானே சமாதியினின்றும் கிளம்புகையையடைவன். ஆகையால், அவ்வைந்தாவது பூமியையுடைய யோகியானவன் பிரஹ்மவித்வரனென்னும் பெயரால்அழைக்கப் பெறுவன். அதன்பின்னர், அவ்வசம்சக்தியெனப் பெயரிய ஐந்தாவதுபூமியின்பரிபக்குவத்தால் நெடுங்காலம்வரைநிலைபெற்ற அந்நிர்விகற்பகசமாதியவஸ்தை பதார்த்தாபாவநீயெனப்பகரப்பெறும். 6 அப்பதார்த்தாபாவநீயெனப்பெயரிய ஆறாவதுபூமியைப் பெருந்துயிலெனப்பேசாநிற்பர். அந்தப்பதார்த்தாபாவநீயெனப் பெயரிய ஆறாவது பூமியையடைந்த அந்தயோகியானவன்றானே சமாதியினின்றுங் கிளம்பான் [illegible] ...டோர்முதலிய மற்றையரானே அவன்சமாதியினின்றுங் கிளம் ...ந்த ஆறாவது பூமியையுடைய யோகியானவன் பிரஹ்ம

வித்வரியான் எனப்பெயர்பெறுவன். இவ்விஷயத்தையும் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறியருளியிருக்கின்றார் :—

ஆ-சு. வஞுஃஹூமிகாஜெதூ ஷாஷாவிவசுநாஸிகாம ।
ஷஷ்ஃமாஜஷாஷாவஹூாவஹூாம் கூாக வதகிஹூமிகாழ ॥

(பொ-ள்.) இந்தயோகியானவன் துயிலெனப்பெயரிய ஐந்தாவதுபூமியை யடைந்து முறையே பெருந்துயிலெனப்பெயரிய ஆறாவதுபூமியை அடைவன் என்பதாம். எச்சமாதியவஸ்தையினின்றும் இந்தயோகியானவன் தானாகவுங்கிளம்பானோ, சீடர் முதலியமற்றையாராலுங் கிளம்பானோ, மற்றோ, எவ்வாற்றானும் பேததரிசனமின்மையானோ, அவ்வுருவமேயாவனோ, தனது முயல்வின்றியே பரமேஸ்வரரால் ஏவப்பட்ட பிராணவாயுவசத்தாலும், பிராரப்தகருமவசத்தாலும் எவ்வறிஞனுடைய தேகவியவகாரத்தை மற்றையரே சித்தஞ்செய்வரோ, எவ்வறிஞன் எப்போதும் பரிபூரணபரமாநந்தகனமாய் நிலைபெற்றிருப்பனோ, அத்தகைய அவஸ்தையைத்துரீயையென்னும் ஏழாவது பூமியென்பர். 7. அவ்வேழாவது பூமியையடைந்த அந்தயோகியானவன் பிரஹ்மவித்வரிஷ்டனென்னும் பெயரால் அழைக்கப்பெறுவன். இவ்வேழுபூமிகளின் சங்கிரக சுலோகமிதுவாம் :—

" அதாயீ-ஹூமி காஜூாநம் திஹூவெஹூாஃ ஷாயநம்வாா ।
ஜீவநூக்ைவஹூாஹூா வாாதிஹூ வூகீதிஹதாஃ ॥

(பொ-ள்.) சுபேச்சை, விசாரணை, தநுமாநசை என்னும் இம்மூன்மூன்று பூமிகளோ சாதனரூபங்களாம். சத்துவாபத்தியெனப்பெயரிய நான்காவது பூமி ஞானவடிவமாம். அசம்சக்தி, பதார்த்தாபாவநீ, துரீயையென்னும் மூன்றுபூமிகள் ஜீவன்முக்தியின் அவஸ்தைவிசேஷங்களாம். இவ்வேழுபூமிகளையும் கூறுவதற்கீண்டிப் பிரசங்கத்தின்கண்ணேயிதுபயனும் :— எப்புருஷன் சுபேச்சை, விசாரணை, தநுமாநசை என்னுஞ் சாதனரூப முதன்மூன்றுபூமிகளையும் அடைந்துளானோ, அப்புருஷனுங்கருமங்கட்கதிகாரியல்லனாயின் நான்காவது பூமியின் கண்ணே நிலவும் ஞானவானானவனும், மேன்மூன்றுபூமியின்கண்ணே நிலவும்ஜீவன் முக்தர்களும் அக்கருமஅதிகாரிகளன்றென்பதன்கண்ணே யாதோதற்குளது என்பதாம். (18)

(அ-கை.) எக்காரணத்தால் அர்ச்சுனனாகிய நீ இவ்வகையாய ஞானவானாக வில்லையோ ; மற்றோ, கேவலங் கருமங்கட்கேமாத்திரம் நீ அதிகாரியாவையோ ; அக்காரணத்தால், பலஇச்சையற்று நீ நித்தியநைமித்திக கருமங்களையே செய்தி என ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை நோக்கி யருளுகின்றார் :—

சு-ம். தஹூாஷஹக்ஃ ஷததம் காயஜம் கூஜ ஷஸாாா ॥
அஷக்ொ ஹூாசாநூஜ வாஸாவொதி வூாஷஃ ॥ (19)

ப-ம். 1 தஹூாக 2 அஷக்ஃ 3 ஷததம் 4 காயஜம் 5 கூஜ 6 ஷஸாாா 9 அஷக்ஃ 7 ஹி 11 கூாா 10 கூஜ 12 வாம 13 கூவொதி 8 வூாஷஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அக்காரணத்தால் நீ பலேச்சையற்றவனாய் எப்போதும் அவசியஞ் செய்யத்தக்கனவாய நித்தியநைமித்திக கருமங்களை நன்றாகச் செய்தி ; எக்காரணத்தால் இப்புருஷன் பலேச்சையற்றவனாய்க் கருமத்தைச்செய்து மோக்ஷத்தையேயடைவனோ. (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! எக்காரணத்தால் நீ ஞானவானன்றோ ; மற்றோ, கேவலங்கருமத்திற்கேயதிகாரியோ ; அக்காரணத்தால் " யாவஜீவஆிஹொதூம்

ஜாஸாயாக" என்பகாதி சுருதிகள் விதித்தனவும், "தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந" என்னுஞ் சுருதி ஆன்மஞானத்தின்கண்ணே உபயோகமெனக் கூறியவையும் ஆய நித்திய நைமித்திக கருமங்களை நீ பலஇச்சையற்று சிரத்தைபக்திவாயிலாய் நிரந்தரஞ் செய்தி. எக்காரணத்தால் இப்புருஷன்பலஇச்சையற்றவனாய் நிரந்தரம் நித்திய நைமித்திககருமங்களைச்செய்து, அந்தக் கரணசுத்திவாயிலாயும், ஆன்மஞானவாயிலாயும் மோக்ஷத்தையேயடைவனே. (19)

(அ-கை.) ஹே பகவன்! ஞானத்தையடைய இச்சையையுடைய புருஷனுக்கும், அந்த ஞானநிஷ்டையையடையும்பொருட்டுச் சிரவணமனன நிதித்தியாசன அனுஷ்டானஞ்செய்யச் சர்வகருமங்களின்றிபாகவடிவ சந்யாசம் சாஸ்திரங்களில் விதிக்கப்பெற்றுளது. ஆகையால், கேவலம் ஞானவானுக்கே அக்கருமங்களில் அநதிகாரமின்றாம்; மற்றே, அந்த ஞானத்தையடைய விருப்பமுடைய விரக்த புருஷருக்கும் அக்கருமங்களில் அநதிகாரமேயுளதாம். ஆகையால், ஞானத்தையடையும் வேட்கையையுடையவனும், விரக்தனும், ஆகியயானும் அக்கருமபரித்தியாகயோக்கியனேயாவேன் என்னும் அர்ச்சுனனது சங்கையை ஸ்ரீ பகவான் க்ஷத்திரிபஅரசர்கட்குச் சந்யாசஅநதிகாரத்தையருளிச்செய்துகொண்டு நீக்கியருளுகின்றார்:—

சு-ம். கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய: ।
லோகஸம்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்துமர்ஹஸி ॥ (20)

ப-ம். 3 கர்மணா 4 ஏவ 1 ஹி 5 ஸம்ஸித்திம் 6 ஆஸ்திதா 2 ஜநகாதய: 7 லோகஸம்க்ரஹம் 11 ஏவ 9 அபி 8 ஸம்பஶ்யந் 10 கர்தும் 12 அர்ஹஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எக்காரணத்தால் முன்னர் ஜனகாதிக்ஷத்திரிய இராஜாக்கள் கருமத்தாலே ஞானநிஷ்டையை அடைந்தனரோ, அக்காரணத்தால் நீயுங் கருமமேசெய்ய யோக்கியனாவாய், அல்லது லோகசங்கிரகத்தைக் காண்பவனாயும், நீ கருமஞ்செய்வதற்கே யோக்கியனாவாய். (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுருதிஸ்மிருதியின்கண்ணே பிரசித்தமாய ஜனகராஜா, அஜாதசத்துருஅரசர், அசுவபதியரசர், பகீரதமன்னவன் என்பவராதிய க்ஷத்திரியஅரசர்களாயஅறிஞரும் நித்தியநைமித்திககருமங்களைச்செய்தே அந்தக்கரணத்தூய்மைவாயிலாய்ச் சிரவணமநநாதிகளாற்சாதிக்கத்தக்கஞானநிஷ்டையை அடைந்தனரேயன்றிக் கருமத்தைத்தியாகஞ்செய்து, அந்த ஞானநிஷ்டையை அடைந்திலர். இவ்வார்த்தை உண்மையாதலின், க்ஷத்திரியனாகியநீயும் ஞானஇச்சையையுடையவனாயேனும், அல்லது அறிஞனாயேனும், எல்லாவகையானுங் கருமமேசெய்யத்தகுதியனாவாய். கருமத்தைத்தியாகஞ்செய்ய நீ யோக்கியனல்லை. ஏனெனின், "ப்ராஹ்மணா: புத்ரைஷணாயாஶ்ச வித்தைஷணாயாஶ்ச லோகைஷணாயாஶ்ச வ்யுத்தாயாத பிக்ஷாசர்யம் சரந்தி" என்னுஞ் சந்யாசஆசிரமத்தை விதிக்குஞ் சுருதிவசனத்தின்கண்ணே பிராஹ்மணனுக்கே சந்யாசத்தின்கண்ணே அதிகாரங்கூறப்பெற்றுளது. க்ஷத்திரியவைசியர்கட்கோ அதிகாரங்கூறப்பெறவில்லை. "ராஜா ராஜஸூயேந யஜேத" என்னும் வசனத்தின்கண்ணே இராஜசூயயாகத்தே க்ஷத்திரிய இராஜாவிற்கே அதிகாரங்கூறப்பெற்றுளது. பிராஹ்மணாதிகட்கு அதிகாரங் கூறப்பெறவில்லை.

"சத்வார ஆஶ்ரமா ப்ராஹ்மணஸ்ய த்ரயோ ராஜந்யஸ்ய த்வௌ வைஶ்யஸ்ய."

(பொ-ள்.) பிரஹ்மசர்யம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நான்காசிரமங்கள் பிராஹ்மணர்கட்கேயுண்டாம். சந்யாசத்தையொழித்

தொழிந்த மூன்றாசிரமங்கள் க்ஷத்திரியஅரசனுக்குண்டாம். பிரஹ்மசர்யம், கிருஹஸ்தம் என்னும் இரண்டாசிரமங்கள் வைசியர்கட்குண்டாம். என்பனமுதலிய அநேக சுருதிஸ்மிருதி வசனங்களில் க்ஷத்திரிய வைசியர்கட்குச் சந்யாசமின்மை கூறப்பெற்றுளது. அந்தச்சுருதிஸ்மிருதிவசனங்களின்கருத்தையுணர்ந்தஜனகன் முதலிய க்ஷத்திரியர்களாகிய அரசர்கள் நித்தியநைமித்திக கருமங்களைச்செய்தே ஞானநிஷ்டையை யடைந்தனர். அக்கருமத்தியாகரூபசந்யாசத்தால் அஜ்ஜனகாதியர் ஞானநிஷ்டையை யடைந்திலர். அல்லது,

"ஸர்வே த⁴ர்மா ராஜப்ரதா⁴நா: ராஜாநம் ஸர்வ ஆஶ்ரிதா:."

(பொ-ள்.) சுருதிஸ்மிருதிகளாற் பிரதிபாதிக்கப்பட்ட சர்வதருமங்களும் அரசனைப்பற்றியேநிற்கும். இவ்வரசனே சர்வதருமங்களையுந் தரிப்பவனுவன் என்பதாம். என்னுமிந்த ஸ்மிருதி வசனத்தால் சர்வ வருண ஆசிரமங்களின் தருமப் பிரவர்த்தகத்தன்மை க்ஷத்திரிய அரசனிடத்தே சித்தமாகும். என்னும் இக்காரணத்தினுலும், இந்த க்ஷத்திரியஅரசன் அவசியமாய்க்கருமத்தையே செய்கவென்னும் பொருளை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் :—'லோகஸங்க்³ரஹமேவாபி' என, உலகரைத்தத்தந் தருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பித்தல், அதருமத்தினின்றும் நிவிருத்திப்பித்தல் என்பது லோகசங்கிரகமாம். அவ்வுலகசங்கிரகத்தைப் பார்த்தேனும், அல்லது பூர்வஜனகாதிக்ஷத்திரியஅரசர்களது சிஷ்டாசாரத்தைப் பார்த்தேனும், அர்ச்சுனனுகிய நீ நித்தியநைமித்திக கருமங்களைச் செய்வதற்கே யோக்கியனுகின்றாய். கருத்திதுவாம் :— க்ஷத்திரியப்பிறப்பை யடைவிப்பதாயகருமம்ஆரம்பித்த சரீரத்தையுடைய அர்ச்சுனனுகிய நீ அறிஞனயினும், ஜனகாதியரைப்போலப் பிராரப்தகருமபலத்தால் அவ்வுலகசங்கிரகத்தின்பொருட்டுக் கருமஞ்செய்யவே யோக்கியனுயிருக்கின்றாயேயன்றிக் கருமத்தைத்தியாகஞ்செய்ய யோக்கியனல்லனுகின்றாய். எக்காரணத்தால் கருமங்களைச்சந்யாசஞ்செய்யயோக்கியமாய பிராஹ்மணசரீரம் நினக்குப்பிராப்தமாகவில்லையோவென்பதாம். இவ்வகையாய ஸ்ரீ பகவானது திருக்கருத்தையறிந்த ஸ்ரீ பகவான் பாடியக்காரர் பிராஹ்மணர்கட்கே சந்யாசத்தின்கண்ணே அதிகாரமாம். அந்நியக்ஷத்திரியாதியர்க்குச் சந்யாசத்தின்கண்ணே அதிகாரமின்றாம், என நிர்ணயஞ்செய்துளார்.

"ஸர்வாதி⁴கார விச்சே²தி³ ஜ்ஞாநம் ஸந்ந்யாஸவேத்³யதே ।
க்ஷத்ராதி⁴கார நியமோ வைஶ்யாதே³: க்ரியதே ப³லாத்" ॥

(பொ-ள்.) சர்வஅதிகாரத்தையும் விச்சேதஞ்செய்யும் ஞானத்தை க்ஷத்திரியவைசியர்கட்குடன்படின் சந்யாசத்தின்கண்ணேமறையவர்க்கே அதிகாரமாம். க்ஷத்திரியவைசியர்கட்கின்றாம் எனச் சந்யாசஅதிகாரநியமத்தைப் பலாத்காரமாய் யாதின்பொருட்டுடன்படல்வேண்டும் ; மற்றோ, இந்நியமமும் உடன்படலாகாதென்பதே. என்பது முதலியவற்றால் ஸ்ரீ வார்த்திகாசிரியர் க்ஷத்திரிய வைசியர்கட்குஞ் சந்யாச அதிகாரத்தைச் சித்தஞ்செய்துளார் ; ஆனுலது பிரௌடிவாதத்தாற் சித்தஞ்செய்ததாம். எவ்வாற்றானும் பொருந்தாத பொருளையும், தனது பிரஞ்ஞையின் பலத்தால் சித்தஞ்செய்தல் பிரௌடிவாதமாம். அல்லது க்ஷத்திரியவைசியர்கட்குச் சந்யாசத்தைப் பிரதிபாதிக்கும் வசனத்திற்குப் பாதஇருஷபாதியர்க்கே போல அலிங்க வித்வத்சந்யாசத்தின்கண்ணே கருத்தாம். எவ்வாற்றானும் தண்டாதிலிங்கவாயிலாய் விவிதிஷாசந்நியாசத்தின்கண்ணே பிராஹ்மணனொருவனுக்கே அதிகாரமாம். க்ஷத்திரியாதியர்க்கோ இன்றாம். (20)

(அ-கை.) ஹே பகவன்! ஒருகால் அர்ச்சுனனுகிய யான் அக்கருமங்களைச் செய்தபோதினும் மற்றையர் அக்கருமங்களை எவ்வண்ணமியற்றுவர் என அர்ச்

சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான், மற்றையர் மேலோரினஆசாரானுசாரமாயே முயல்வரென விடையளித்தருளுகின்றார் :—

சு-ம். யத்யதாசரதி ஶ்ரேஷ்டஸ்தத்ததேவேதரோ ஜந꞉ ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததநுவர்த்ததே ॥ (21)

ப-ம். 2 யத் 3 யத் 4 ஆசரதி 1 ஶ்ரேஷ்ட꞉ 5 தத் 6 தத் 7 ஏவ 8 இதர꞉ 9 ஜந꞉ 10 ஸ꞉ 11 யத் 12 ப்ரமாணம் 13 குருதே 15 லோக꞉ 14 தத் 16 அநுவர்த்ததே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மேலோர் எவ்வெக்கருமத்தைச் செய்வரோ, அவ்வக்கருமத்தையே மற்றையர்களும் செய்வர். அன்றியும் அம்மேலோர் எதனைப் பிரமாணமெனக் கொள்ளுகின்றனரோ, அதனையே மற்றையரும் பிரமாணமெனக் கொள்ளுவர். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவருள்ளும் முக்கியராஇராநின்ற அரசர்முதலியமேன்மையர் எவ்வெச்சுபகருமங்களை அல்லது அசுபகருமங்களைச் செய்வரோ, அவ்வச்சுபகருமங்களையும், அசுபகருமங்களையும் அவ்வரசரின் ஆணைக்குட்பட்டு நடக்கும் மற்றையரும் செய்வர். அவ்வரசர்களினின்றுஞ் சுவதந்திரராயிருக்கும் மற்றையரோ, சிறிதுமாத்திரையும் அக்காரியத்தைச் செய்யார்.

சங்கை :—ஹே பகவன்! அம்மற்றையர் சாஸ்திரத்தை நன்காராய்ந்து, சாஸ்திரத்திற்குவிருத்தமாய அரசர்முதலிய மேலோரது ஆசாரத்தைப் பரித்தியாகஞ்செய்து, கேவலஞ் சாஸ்திரவிகித ஆசாரத்தை ஏன் செய்யமாட்டார்?

சமாதானம் :—அம்மற்றையர்க்கு மேலோராசாரத்தைப்போலப் பிரமாணத்தன்மையின் நிச்சயமும், அம்மேலோரின் அனுசாரமாகவே யுண்டாமென, ஸ்ரீ பகவான்றிருவாய் மலர்ந்தருளுகின்றார் :—'ஸயத்ப்ரமாணம் குருதே' என. ஹே அர்ச்சுன! அவ்வரசர் முதலிய மேலோர் எவ்விலௌகிக பதார்த்தங்களை அல்லது எவ்வைதிக பதார்த்தங்களைப் பிரமாணரூபமாய் அங்கீகரிக்கின்றனரோ, அவ்விலௌகிக பதார்த்தங்களையும், வைதிகபதார்த்தங்களையுமே மற்றையரும் பிரமாணமாய் அங்கீகரிப்பர். அம்மற்றையர் அவ்வரசர்முதலிய மேலோரினின்றுஞ் சுவதந்திரமாயெப்பதார்த்தத்தையும் பிரமாண ரூபமாயங்கீகரியார்; ஆதலின் ஹே அர்ச்சுன! யாவருள்ளும் முக்கியனும் அரசனுமிருக்கும் நீ உலகரைக்காப்பாற்றும் பொருட்டு அவசியமாய்க் கருமஞ்செய்ய யோக்கியனுகின்றாய். சுபகருமத்தின்கண்ணே நினது பிரவிருத்தியைக் கண்டு மற்றையரும் அவசியமாய் அந்தச் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பர். எக்காரணத்தால் அரசர்முதலிய முக்கியபுருஷரின் அனுசாரமாகவே மற்றெல்லாருடைய வியவகாரமுமுண்டாமோ. (21)

(அ-கை.) ஹே அர்ச்சுன! மற்றையர்க்குச் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்தியுண்டாகும்பொருட்டு அரசர்முதலியமேலோர் அவசியமாய்ச்சுபகருமத்திற் பிரவிருத்திக்கவேண்டுமென்பதன்கண்ணே, ஸ்ரீ கிருஷ்ணபகவானுகியயானே திருஷ்டாந்தமாவேனென மூன்றுசுலோகங்களால் ஸ்ரீபகவான் திருவாய்மலர்ந்தருளுகின்றார் :—

சு-ம். ந மே பார்தா²ஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந ।
நாநவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥ (22)

ப-ம். 7 ந 2 மே 1 பார்த² 8 அஸ்தி 6 கர்தவ்யம் 3 த்ரிஷு 4 லோகேஷு 5 கிஞ்சந 11 ந 9 அநவாப்தம் 10 அவாப்தவ்யம் 14 வர்தே 15 ஏவ 13 ச 12 கர்மணி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எனக்கு மூவுலகங்களிலுஞ் சிறிது மாத்திரையும் செய்யத்தக்கதின்றாம். எக்காரணத்தால் எனக்கு முன்னர்க்கிடையாத பலஞ் சிறிது மாத்திரையுங் கிடைக்கத்தக்கதாயில்லையோ; ஆயினும், யான் கருமத்தின்கண்ணே பிரசித்தமாய் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றேன். (22)

(வி-ம்.) எங்ஙனம் வீட்டெஜமானனுக்கு அவ்வீட்டின்கண்ணேயிருக்கும் எல்லாப்பொருள்களும் கிடைத்திருப்பனவேயாமோ, அங்ஙனம் சர்வ பிரஹ்மாண்டத்திற்கும் சுவாமியாயிராநின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானாகியயான் இந்தப்பிரஹ்மாண்டத்துள்ள சர்வ பதார்த்தங்களையும் அடைந்தேயிருக்கின்றேன்; எப்பதார்த்தமும் எனக்கப்பிராப்தமின்றாம். உலகின்கண்ணே முற்கிடையாத வஸ்துக்கிடைக்கும்பொருட்டே முயலுவர்; முற்கிடைத்த வஸ்துக்கிடைக்கும்பொருட்டு எவரும் முயலார். ஆகையால், மூவுலகின்கண்ணும் எப்பதார்த்தத்தினடைவையுத்தேசித்தும் எனக்குச் சிறிதுமாத்திரையுஞ் செய்யத்தக்கதின்றாமாயினும், ஸ்ரீ கிருஷ்ண பகவானாகியயான் வேதவிகிதசுபகருமத்தின்கண்ணே பிரவிருத்தித்துக்கொண்டே இருக்கின்றேன். அந்தச்சுபகருமத்தை யானொருகாலும் பரித்தியாகஞ்செய்வதில்லை. அந்தச்சுபகருமத்தின்கண்ணே எனது பிரவிருத்தி நினக்கும் பிரத்தியக்ஷமாய்த் தெரிந்ததேயாகும். இந்தப் பிரசித்தியையுணர்த்தும்பொருட்டே ஸ்ரீ பகவானனவர் 'வர்த்த ஏவ ச' என்னுந் திருமொழியின்கண்ணே இராநின்ற 'ச' என்னுஞ் சப்தத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். அன்றியும் 'ஹே பார்த்த' என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர்:—சுத்த க்ஷத்திரியவம்சத்தின்கண்ணே யுதித்திருத்தலின் அர்ச்சுனனாகிய நீ எனக்குச் சமானமாகவே சூரவீரனாவாய், ஆதலின் என்னைப்போல நீயுஞ் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பதே தகுதியாம். (22)

(அ-கை.) ஹே பகவன்! தாங்கள் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்தியுற்றருளி மற்றையவரையும் அந்தச் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பிக்கச் செய்தருளுவதாகிய லோகசங்கிரகத்தைச் செய்தருளுவதால் யாதொருபயனுமின்றாம். ஆதலின், அவ்வுலகசங்கிரகமும் தேவரீருக்குச் செய்யத்தக்கதன்றாம் என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடைகூறியருளுகின்றார்:—

சு-ம். யதி³ ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்³ரித꞉ ।
மம வர்த்மானுவர்தந்தே மனுஷ்யா꞉ பார்த² ஸர்வஶ꞉ ॥ (23)

ப-ம். 2 யதி³, ஹி 4 அஹம் 7 ந 8 வர்தேயம் 3 ஜாது 6 கர்மணி 5 அதந்த்³ரித꞉ 10 மம 11 வர்த்ம 13 அனுவர்தந்தே 9 மனுஷ்யா꞉ 1 பார்த² 12 ஸர்வஶ꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஒருகால் ஸ்ரீ கிருஷ்ணபகவானாகிய யான் ஆலசியமற்றுச் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திக்காமலிருப்பனாயின், கருமத்திற்கதிகாரியாய மனுஷர் எனது மார்க்கத்தையே எல்லாவாற்றானும் அங்கீகரிப்பர். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யான் இப்போது கிருதார்த்தனாயிருக்கின்றேன், கருமத்தைச் செய்வதால் இப்போது எனக்குச் சிறிதுமாத்திரை அர்த்தமும்சித்தஞ்செய்யத் தகுதியதாயிருக்கவில்லை. இவ்வகையாய கிருதகிருத்திய புத்தியால் ஒருகால் ஸ்ரீ கிருஷ்ணபகவானாகிய யான் ஆலசியமற்றுச் சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திக்காமலிருந்துவிடுவேனாயின், கருமத்திற்கதிகாரிகளாயுள்ள மனுஷர் யாவரும் யான் சுபகருமத்தினின்றும் நழுவியிருப்பதைக்கண்டு, தாமுஞ் சுபகருமமற்றவராவர்; ஏனெனின், இந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான்சர்வஞ்ஞன் என, என்னிடத்தே சர்வஞ்ஞத்தன்மைப் புத்தியால் இவ்வெல்லாஅதிகாரிமனுஷ்யர்களும் எல்லாவகையானும் எனதுமார்க்கத்தையே அங்கீகரிப்பர். (23)

(அ-கை.) ஹே பகவன்! எல்லாப் புருஷருள்ளும் மேன்மைமிக்கவராய தங்களுடைய சுபகருமத்தியாகரூபமார்க்கத்தையங்கீகரித்தல் இவ்வதிகாரிகளாய மனுஷ்யர்கட்கு உசிதமேயாம்; அதனால் இவ்வதிகாரிகட்கு யாது கோதாமென அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றார் :—

சு-ம். உத்ஸீதேயுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேதஹம் ।
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யாமிமா: ப்ரஜா: ॥ (24)

ப-ம். 8 உத்ஸீதேயு: 6 இமே 7 லோகா: 4 ந 5 குர்யாம் 3 கர்ம 1 சேத் 2 அஹம்
10 ஸங்கரஸ்ய 9 ச 11 கர்த்தா 1 ஸ்யாம் 15 உபஹந்யாம் 13 இமா: 14 ப்ரஜா:

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஒருகால்ஈப்வரனாகியயான் சுபகருமத்தைச் செய்யேனாயின், இவ்வெல்லாவுலகரும் நாசத்தையடைவர். அங்ஙனம் யானே வருணசங்கரத்திற்குக் கருத்தாவாவேன். அங்ஙனம் இவ்வெல்லாப் பிரஜைகளையும் யானே கொன்றவனாவேன். (24)

(வி-ம்) ஹே அர்ச்சுன! சர்வத்திற்கும் ஈப்வரனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானாய யான் ஒருகால் சாஸ்திரவிஹித சுபகருமங்களைச் செய்யாதிருப்பனாயின், எனதனுசாரமாய்நிகழாநிற்கும் மனுமுதலிய மேலோரும், அச்சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்தராகார். ஆகையால், நீரின் விருஷ்டிவாயிலாய்ச் சர்வலோகங்களின் ஸ்திதியின்காரணரூபயஜ்ஞாதிகருமங்கள்யாவற்றிற்கும் உலோபமுண்டாகும்; அவையாவும் உலோபமாகவே எல்லாவுலகரும் நாசத்தை யடைவர்; நாசத்தின்பின்னர் உண்டாம் வருணசங்கரத்தையும் யானே செய்பவனாவேன். அதனால் யானே இவ்வெல்லாப் பிரஜைகளையுங் கொல்பவனாவேன். இவ்விஷயம் எனக்கத்தியந்தம் அனுசிதமாம்; ஏனெனின், சர்வப்பிரஜைகட்கும் அனுக்கிரகஞ் செய்யும்பொருட்டுப் பிரவிருத்தியுடையவனாயிருக்கின்றேன். அத்தகைய எனக்குத் தருமலோபத்தால் எல்லாப் பிரஜைகளையுங்கொல்லுதல்உசிதமன்றாம். அல்லது, 'யத்யதாசரதி ச்ரேஷ்ட:' என்பதாதிநான்குசுலோகங்களுக்கு இவ்வேறு பொருள்கொள்க. ஹே அர்ச்சுன! கேவலம் லோகசங்கிரகத்தைநோக்கிமாத்திரம் நீ கருமஞ் செய்வதற்கு யோக்கியனல்லை; மற்றோ, மேலோராசரணத்தினாலும் நீ கருமஞ் செய்ய யோக்கியனாவாயென்னும் பொருளை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—'யத்யதாசரதி ச்ரேஷ்ட:' என. ஆகையால்சர்வப்பிராணிகட்கும்மேலாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானாகிய யான் எவ்வகையாய ஆசாரத்தைக் கொண்டுளேனோ, அவ்வகையாய ஆசாரத்தை எனதனுசாரமாய்நிகழாநிற்கும்அர்ச்சுனனாகியநீயுஞ்செய்ய யோக்கியனாவாய். என்னினும் சுவதந்திரனாய்ச் சிறிதுமாத்திரையும் வேறாசாரத்தை நீ செய்ய யோக்கியனாகாய். ஹே பகவன்! தங்களுடைய ஆசாரம் எத்தகையதாம். எவ்வாசாரத்தை யான் அவசியமாய் யங்கீகரித்தல் தகுதியாமோ என அர்ச்சுனன் சங்கிப்ப, அதற்குச்சமாதானமாய்ஸ்ரீபகவான் "நமே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம்." என்பதாதிமூன்றுசுலோகங்களால் அருளிச்செய்தனர். (24)

(அ-கை.) ஹேபகவன்! தாங்கள்ஈப்வரராதலின், உலகசங்கிரகத்தின்பொருட்டுச் சுபகருமங்களைச் செய்தருளியபோதினும், யான் எப்போதும் அகர்த்தாவாவேன்எனக் கருத்திருத்துவஅபிமானமின்மையின் தங்களுக்குச் சிறிதுமாத்திரையும் ஹானியுண்டாகமாட்டாது. அர்ச்சுனனாகிய யானோ ஜீவனாதலின், லோகசங்கிரகத்தின்பொருட்டு அச்சுபகருமங்களைச்செய்வதால் யான்கருமங்களின் கருத்தாவாவேன் என்னுங்கருத்திருத்துவ அபிமானத்தால் எனது ஞானத்தின் மறைப்பு அவசியமுண்டாம்என அர்ச்சுனன்சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடையருளிச் செய்கின்றார் :—

சு-ம். ஸக்தாஃ கஉ-ணூவிஆாஂஸொ யமா கூவ-ந்தி ஹாரத ।
கூ-யாஆ் ஆாஂஸ்தமாஸக்த ஸ்சிகீஷ-ு-லொகஸஂமஹஂ ॥ (25)

ப-ம். 5 ஸக்தாஃ 4 கஉ-ணி 3 அவிஆாஂஸஃ 2 யமா 6 கூவ-ந்தி 1 ஹாரத 12 கூ-யாத் 10 விஆாந் 7 தமா 11 அஸக்தஃ 9 சிகீஷ-ுஃ 8 லொகஸஂமஹஂ.

(அ-ம்.) ஹே பாரத! எங்ஙனம் அஞ்ஞானியானவன் கருமத்தின்கண்ணே அபினிவேசமுடையவனுய்க்கருமத்தைச்செய்வனே, அங்ஙனம்லோகசங்கிரத்தைச் செய்யவிச்சித்தஅறிஞனவன் அபினிவேசமற்றவனுய்க் கருமத்தைச்செய்வன்.

(வி-ம்.) ஹே பாரத! ஆன்மஞானமற்ற அஞ்ஞானியானவன் யான்கரும கருத்தாவாவேன்எனக்கருத்திருத்துவஅபிமானத்தோடும், சுவர்க்காதிபலஇச்சையோடும், யஞ்ஞாதிகருமங்களிடத்தே அபினிவேசமுடையவனுய் எங்ஙனஞ் சிரத்தைபக்தியோடு அந்தயஞ்ஞாதிகருமங்களைச்செய்வனே, அங்ஙனம் லோகசங்கிரகஞ் செய்யவிச்சித்த அறிஞனுஞ்சிரத்தைபக்திவாயிலாய் அந்தயஞ்ஞாதி கருமங்களைச்செய்வன். ஆனுல் அவ்வறிஞன் கருத்திருத்துவ அபிமானமற்றவனுய், சுவர்க்காதி பலேச்சையற்றவனுய் அச்சுபகருமங்களைச் செய்வன். ஈண்டு 'ஹெ ஹாரத' என்னுஞ் சம்போதனத்தான் ஸ்ரீ பகவான் அருச்சுனனுக்கு இப்பொருளைக்குறிப்பித்தருளினர் :—பரதவம்சத்தின்கண்ணேயாவன்உதித்தவனே, அவன் பாரதனெனப்படுவன். அல்லதுபாவென்பதுஞானத்திற்காம், அந்தஞானத்தின்கண்ணே பிரீதியையுடையவன்யாவனே, அவன் பாரதனெனப்படுவன். அத்தகைய பாரதனெனப்பெயர்பெற்றவன்நீயாதலின், அஞ்ஞானியைப்போலஅறிஞனும் லோகசங்கிரகத்தின்பொருட்டுச் சுபகருமங்களைச்செய்கவென்னுஞ் சாஸ்திரப்பொருளைத் தாரணஞ்செய்தற்கு, நீ தகுதியுடையவனுகின்றுய். அப்பொருளைத்தாரணஞ்செய்வதானே உன்னிடத்தே அப்பாரதனெனும் பெயர் பொருளுடையதாகும். (25)

(அ-கை.) ஹே பகவன்! அறிஞனவன் சுபகருமத்தையநுஷ்டானஞ் செய்தே லோகசங்கிரகஞ்செய்க, தத்துவஞான உபதேசத்தால் அந்தலோகசங்கிரகத்தைச் செய்யாதொழிக, என்பதன்கண்ணே யாது ஹேதுவாம்? என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றுர் :—

சு-ம். ந பு-ஷிஹெஉஂ ஜநயெ உஜ்ஞாநாஂ கஉ-ஸஂமிநாஂ ।
ஜொஷயெத்ஸவ-கஉ-ாணி விஆாந்யுக்தஃ ஸமாசரந் ॥ (26)

ப-ம். 4 ந 3 பு-ஷிஹெஉஂ 5 ஜநயெத் 2 அஜ்ஞாநாஂ 1 கஉ-ஸஂமிநாஂ 10 ஜொஷயெத் 8 ஸவ-கஉ-ாணி 6 விஆாந் 7 யுக்தஃ 9 ஸமாசரந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வறிஞனவன் கருமசங்கிகளாயஅவிவேகி புருஷரின் புத்திபேதத்தைச் செய்யாதொழிக மற்றே, அவ்வறிஞன் ஆதரபூர்வகமாய்ச் சர்வகருமங்களையுஞ் செய்பவனுய் அவ்வவிவேகி புருஷரையும் அக்கருமத்தின்கண்ணே சேர்ப்பன். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கருத்திருத்துவ அபிமானத்தால் சுவர்க்காதிபல இச்சையினுல் யஞ்ஞாதிகருமங்களிடத்தே அபினிவேசத்தையுடைய அஞ்ஞானி புருஷரின், யான்இக்கருமத்தைச்செய்வேன், யான்இப்பலத்தைப்போகிப்பேன், என்பதாய புத்திபேதத்தை இவ்வறிஞன் உண்டாக்காதொழிக. அதாவது, ஆன்மவடிவமாகிய நீ அகர்த்தாவாவாய், அபோக்தாவாவாய் எனவுபதேசித்து அவ்வஞ்ஞானிகளின் புத்தியை அந்தச்சுபகருமத்தினின்றுந் திருப்பமுயலவேண்டாம்; மற்றே, லோகசங்கிரகத்தைச்செய் [illegible] இச்சையையுடைய அவ்வறிஞன் தான் சிரத்

தைபக்திவாயிலாய் அச்சுபகருமங்களைச் செய்பவனாய் அவ்வஞ்ஞானிகளையும், அச்சுபகருமத்தின்கண்ணே சிரத்தையடையும்படி செய்வித்து, அவரை நிரந்தரம் அதன்கண்ணே சேர்ப்பிப்பன்; ஏனெனின், சாஸ்திரவிகித சுபகருமானுஷ்டானத்தால் எப்புருஷனுடைய அந்தக்கரணம் சுத்தமாமோ, அப்புருஷனே அகர்த்தாவாய ஆன்மாவின் உபதேச அதிகாரியாவன். அசுத்த அந்தக்கரணமுடைய புருஷர் அகர்த்தாவாய ஆன்மாவினுபதேச அதிகாரியாகார். அத்தகைய அனதிகாரிகட்கு அகர்த்தாவாய ஆன்மாவினுபதேசத்தைச்செய்து, அவர்களுடையபுத்தியைச் சுபகருமத்தினின்றுந் திருப்பிவிடின், அவர்கட்குச் சுபகருமத்தின்கண்ணே சிரத்தை நீங்கிவிடும். ஆகையால் அவ்வஞ்ஞானிகட்குச் சுவர்க்காதியுத்தம லோகப் பிராப்தியுமுண்டாகாது. அசுத்த அந்தக்கரணத்தின்கண் ஆன்மஞானமும் உண்டாகமாட்டாது. ஆதலின், அவ்வஞ்ஞானிகள் போகம், மோக்ஷம் என்னுமிரண்டினின்றும் பிரஷ்டராவர். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின்கண்ணுங் கூறப்பெற்றுளது :—

ஆ-சு. 𑌅𑌜𑍍𑌞𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌧𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌯𑍋 𑌵𑌦𑍇𑌤𑍍 ।
𑌮𑌹𑌾𑌨𑌿𑌰𑌯𑌜𑌾𑌲𑍇𑌷𑍁 𑌸 𑌤𑍇𑌨 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌜𑌿𑌤𑌃 ॥

(பொ-ள்.) அந்தக்கரண சுத்தியற்றவனும், விஷயங்களிலாசக்தியுடையவனும், ஆகிய கேவலகருமாதிகாரியும், பாதிதெளிந்தவனுமான அஞ்ஞானியினுக்கு எவ்வறிஞனவன் நீயுநானுமிப்புவியாவும் பிரஹ்மரூபமேயாம் என உபதேசிக்கின்றனனோ, அவ்வறிஞனவன் அவ்வஞ்ஞானியை மகாரௌரவ நரகாதிகளிடத்தேயடைவித்தவனேயாவன்; என்பதாம். ஆதலின் இவ்வறிஞனவன் தான் சுபகருமத்தின்கண்ணேபிரவிருத்தியுடையவனாய் அவ்வஞ்ஞானியையுஞ்சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பன். அச்சுபகருமங்களைச்செய்வதால் அவ்வஞ்ஞானிகளின் அந்தக்கரணசுத்தியுண்டாகுமாயின், இவ்வறிஞனவன் அவ்வஞ்ஞானிக்கு அகர்த்தாவாய்அபோக்தாவாயிருக்கும்ஆன்மாவினுபதேசத்தைச்செய்ய வேண்டும்.

(அ-கை.) ஆண்டஞ்ஞானியும், ஞானியும் சுபகருமானுஷ்டான சமானத்தன்மையுடையவராயினும், கருத்திருத்துவ அபிமானம் அஃதின்மையென்னும் இரண்டேதுக்களால் அஞ்ஞானி, ஞானியென்பவரின் விலக்ஷணத்தன்மையைக் காண்பித்தருளுபவராய் ஸ்ரீ பகவான் '𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑌾𑌗𑌯𑍋𑌃' என முற்புகன்றருளிய சுலோகத்தின்பொருளை இரண்டு சுலோகங்களால் வெளிப்படுத்தியருளுகின்றார் :—

சு-ம். 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌗𑍁𑌣𑍈𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌰𑍍𑌤𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇 ॥ (27)

ப-ம். 1 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 5 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 2 𑌗𑍁𑌣𑍈𑌃 4 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 3 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 6 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌤𑍍𑌮𑌾 8 𑌕𑌰𑍍𑌤𑌾 7 𑌅𑌹𑌂 9 𑌇𑌤𑌿 10 𑌮𑌨𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மாயையின்குணங்கள் எல்லாவகையானும் எல்லாக்கருமங்களையுஞ் செய்கின்றன. அகங்காரத்தால் விசேஷ மூடத்தன்மையையடைந்த அந்தக்கரணத்தையுடைய அஞ்ஞானியானவன் யான் கருமகருத்தாவாவேன் என வெண்ணுகின்றனன். (27)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எம்மாயையானது சத்துவம், இராஜசு, தமசு என்னும் முக்குணரூபமாமோ, பொய்ஞ்ஞானவடிவமாமோ, "𑌦𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌶𑌕𑍍𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌨𑌿𑌗𑍂𑌢𑌾𑌂" என்னுஞ் சுவேதாசுவதர உபநிஷத்தின்கண் எம்மாயை பரமேஸ்வர சக்தியெனக்கூறப்பெற்றுளதோ, அம்மாயை பிரகிருதியெனப்படும்.

ஆ-சு. "மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்."

(பொ-ள்.) மாயையை ஜகத்தின்பிரகிருதி யெனவுணர்க; மாயையாகிய உபாதியையுடையவனை மகேஶ்வரனெனவுணர்க என்பதாம். அத்தகையமாயையாகிய பிரகிருதியின் விகாரரூபங்களாய எத்துணை உடற்பொறியுட்கரணமுதலியனவாகிய காரிய காரணரூப குணங்களுளவோ, அவையே எல்லாவகையானும் இலௌகிக வைதிக சர்வகருமங்களையுஞ் செய்கின்றன, இவ்வசங்க ஆன்மா அவற்றையாற்றுவதில்லை; ஆயினும் காரியகாரணரூபசங்காதத்தின்கண்ணே, ஆன்மத்தன்மைப் புத்திவடிவ அகங்காரத்தால் விமூடமாகிய, அதாவது விவேகஞ் செய்வதன்கண்ணே யாற்றலற்றதாகிய, ஆன்மா, அந்தக்கரணம், யாவனுக்கோ அவன் அகங்காரவிமூடாத்மாவாவன். அத்தகைய அனான்ம பதார்த்தங்களிடத்தே ஆன்மத்தன்மையபிமானத்தைச்செய்யும் அஞ்ஞானியானவன், அவ்வாகாதிகளின் அத்தியாசத்தான் அவ்வெல்லாக்கருமங்களையும் யானேசெய்கின்றேன் எனத்தனதான்மாவையே கருத்தாவெனவெண்ணுவன். அந்தப்பிரகிருதியின்குணங்களைக்கரும கருத்தாவெனவெண்ணுகின்றானில்லை. (27)

(அ-கை.) இப்போது எங்ஙனம் அஞ்ஞானியானவன் அக்கருமத்தின் கருத்தாவாய்த்தன்னான்மாவினையே அங்கீகரித்துளானோ, அங்ஙனம் அறிஞனாகியஞானியும் அக்கருமத்தின் கருத்தாத் தனதான்மாவென வங்கீகரித்திலன்; என ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்:—

சு-ம். தத்த்வவித்து மஹாபாஹோ குணகர்மவிபாகயோ: ।
குணா குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ (28)

ப-ம். 3 தத்த்வவித் 4 து 1 மஹாபாஹோ 2 குணகர்மவிபாகயோ: 5 குணா:
6 குணேஷு 7 வர்த்தந்தே 8 இதி 9 மத்வா 10 ந 11 ஸஜ்ஜதே.

(அ-ம்.) ஹே மகாபாகுவையுடைய அர்ச்சுன! குணகருமவிபாகத்தின் உண்மையாய சொரூபத்தையுணர்ந்த அறிஞனோ, இந்திரியமுதலிய கரணங்களே உருவமுதலிய விஷயங்களிடத்தேதபிரவிருத்திக்கும்; அசங்க ஆன்மாவன்றும் என எண்ணிக்கருத்திருத்துவாபிமானஞ்செய்யான். (28)

(வி-ம்.) தத்துவமென்பது யதார்த்தஸ்வரூபத்திற்காம், அதனை யாவனறிவனோ, அவன் தத்வவித்தாம். ஈண்டு 'தத்த்வவித்து' என்னும் வசனத்தின்கண்ணே இராநின்ற 'து' என்னுஞ் சப்தமானது முற்சுலோகத்தின்கண்ணே மொழிந்தருளிய அஞ்ஞானியினும் தத்துவவேத்தாவினிடத்தே விலக்ஷணத்தன்மையைக்கூறுகின்றது.

சங்கை:—ஹே பகவன்! அவ்வறிஞனவன் எவ்வஸ்துவைத்தத்துவமெனவறிவன்?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—'குணகர்மவிபாகயோ:' என. யானென்னுமபிமானத்திற்கு விஷயங்களாய தேகேந்திரிய அந்தக்கரணங்கள் குணங்களாம். எனதென்னுமபிமானத்திற்குவிஷயங்களாய தேகேந்திரிய அந்தக்காணங்களின் வியாபாரங்கள், கருமங்களாம். எவ்வஸ்துவானது சர்வஜடவிகாரங்களின் பிரகாசகமாதலின் அவற்றினின்றும்தனித்ததாமோ அதுவிபாகமெனப்படும். அத்தகையது ஸ்வப்பிரகாசஞானவடிவ அசங்க ஆன்மாவாம். ஆண்டு அக்குணகருமங்களோ பாஸ்யங்களும் ஜடங்களும்விகாரிகளுமாம். இவ்விபாகவடிவ ஆன்மதேவரோ பாஸகரும் சேதனரும் நிர்விகாரருமாவர். இவ்வண்ணங் குணகருமம், விபாகம் என்னுமிரண்டின் உண்மையாயவடிவத்தையுணர்ந்த அறிஞ

னவனே, இவ்விந்திரியாதிகரணங்களேவிகாரியாதலின் தத்தம்ரூபாதிவிஷயங்களிடத்தே பிரவிருத்திக்கும். நிர்விகார ஆன்மா அவ்வுருவாதிவிஷயங்களிடத்தே பிரவிருத்தியாது என நிச்சயஞ்செய்து, அஞ்ஞானியைப்போலத் தனதான்மாவின்கண்ணே கருத்திருத்துவாபிமானஞ்செய்யான். ஒருரையின்கண்ணே, 'தத்த்வவித்து மஹாபாஹோ' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வகையாயபொருள்செய்யப்பட்டுளது :—சக்ஷுமுதலிய ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்குமுதலிய ஐந்து கருமேந்திரியங்களும், புத்தியும், மனமும் என்னுமிவற்றிற்குக் குணமெனப்பெயராம். இவற்றின்வியாபாரத்திற்குக்கருமமெனப்பெயராம். விபாகமென்னும் பதத்திற்குக் குணபதத்தோடுங் கருமபதத்தோடுஞ் சம்பந்தஞ்செய்வதால் இப்பொருளுண்டாம் :—சக்ஷு சுரோத்திராதி இந்திரியங்கட்கே தரிசன சிரவணாதிக்கிரியைகளாம். வாக்குப்பாணிமுதலிய இந்திரியங்கட்கே வசன ஆதானாதிக்கிரியைகளாம். புத்தியினுக்கே அகங்காரரூபக்கிரியையாம், மனத்தினுக்கே சங்கற்பரூபக்கிரியையாம். ஆன்மாவிற்கு யாதொருகிரியையுமின்றாம். மற்றோ, இவ்வான்மதேவர் எப்போதுங் கூடஸ்தஅசங்கசித்துருவமாய் நிலைபெற்றுநிற்பர்; இவ்வண்ணமாய குணவிபாகத்தையும், கருமவிபாகத்தையும், ஆன்மாவின்யதார்த்தஸ்வரூபத்தையும் யாவன்நன்றாகவறிந்துளானோ அவன் தத்துவவித்தாம். அத்தகைய தத்துவவேத்தாவாயஅறிஞனே, சர்வகருமங்களிடத்தும் இச்சக்ஷுமுதலிய இந்திரியங்களே உருவமுதலியவிஷயங்களிடத்தே பிரவிருத்திக்கும். வாக்குமுதலிய இந்திரியங்களே வசனாதிகளிடத்தே பிரவிருத்திக்கும், புத்தியே அச்சக்ஷுமுதலியஇந்திரியங்களின் கருமங்களிடத்தே யான்கருத்தாவென வபிமானிக்கும், ஆன்மாவாகியயானோ சிரவணஞ்செய்வதுமில்லை, காண்பதுமில்லை, பேசுவதுமில்லை, செய்வதுமில்லை, நடப்பதுமில்லை, மற்றோ கூடஸ்த அசங்கசேதன ரூபத்தால் எப்போதுஞ் சுகமாகவேயிருப்பேன் எனநிச்சயஞ்செய்து அவ்விந்திரியாதிகளின் கருமங்களிடத்தே யான்எனதுஎனஅபிமானஞ் செய்யான் என்பதாம். மற்றோருரையின்கண்ணே 'தத்த்வவித்து' என்னும் இச்சுலோகத்தின் பதங்கட்கு இவ்வண்ணம் யோஜனைசெய்து இவ்வகையாய பொருள்கூறப்பட்டுளது :—'யஸ்த்வவித் ஸ மஹாபாஹு: குணகர்மவிபாகயோ: அஹங்காரமமாபிமானம் ந குருதே' என்பதுயோஜனையாம். பொருளோ :—ஆன்மா அனான்மா என்னுமிரண்டின் உண்மைவடிவத்தையறிந்த அறிஞனானவன் புத்தி சக்ஷு முதலிய குணமே சுகரூபாதிவிஷயங்களிடத்தே பிரவிருத்திக்கும், ஆன்மாவோ எவ்விஷயத்தின்கண்ணும் பிரவிருத்திக்கமாட்டாது என நிச்சயஞ்செய்து குணவிபாகத்தின்கண்ணுங் கருமவிபாகத்தின்கண்ணும், யான் எனதுஎன்னும் அபிமானத்தைச் செய்வதின்றாம். ஈண்டு சத்துவம், இரஜசு, தமசுஎன்னும்மூன்றுகுணங்களின் புத்தி அகங்காரஞானேந்திரிய கருமேந்திரிய விஷயரூபத்தால் வேறுவேறாய நிலைபேறேகுணவிபாகமாம். அக்குணவிபாகத்தின்கண்ணே, யான்புத்தி அகங்காராதிரூபனாவேன், என்னும் அகமபிமானத்தை அத்தத்துவ வித்தானவன் செய்யான். அந்தப்புத்தியகங்காராதிகளின் வேறுவேறாயகருமமே கருமவிபாகமாம். அக்கருமவிபாகத்திகண்ணே இக்கருமமென்னுடையது என்னும் மமஅபிமானத்தை அத்தத்துவவேத்தாவானவன் செய்யான். ஈண்டு 'ஹே மஹாபாஹோ' என்னுஞ்சம்போதனத்தால் ஸ்ரீபகவானானவர் இப்பொருளைக்குறிப்பித்தருளினர் :—முழந்தாள் பரியந்தம்யாவனுக்கு நீண்டகரமுளதோ அவன் மகாபாகுவாவன். சாமுத்திரிக சாஸ்திரத்தின்கண்ணே மகாபாகுத்தன்மை மேலாயபுருஷ விலக்கணமெனக் கூறப்பெற்றுளது? ஆகையால் அத்தகையசிரேஷ்ட புருஷரின் இலக்கணமுடையவனாகியும் நீ மற்றவரைப்போல அவிவேகியாதற்கு யோக்கியனன்றாவாயென்பதாம்.

(அ-கை.) ஆண்டுப்பூர்வப்பிரசங்கத்தின்கண்ணே அறிஞனிடத்தும் அறியானிடத்தும் கருமானுஷ்டான சமானத்தன்மையைக் கூறியருளி, அவ்வறிஞனை

வன் அறியானதுபுத்தியைப்பேதிக்கக்கூடாது என்னும்பொருளைக் கூறியருளினர். இப்போது அப்பொருளையுபசம்ஹரித்தருளுகின்றார் :—

சு-ம். 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌗𑍁𑌣𑌸𑌂𑌮𑍂𑌢𑌾𑌃 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ।
𑌤𑌾𑌨𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌦𑍋 𑌮𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌨𑍍𑌨 𑌵𑌿𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍 ॥ (29)

ப-ம். 1 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 2 𑌗𑍁𑌣𑌸𑌂𑌮𑍂𑌢𑌾𑌃 4 𑌸𑌜𑍍𑌜𑌨𑍍𑌤𑍇 3 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 5 𑌤𑌾𑌨𑍍 6 𑌅𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌦𑌃 7 𑌮𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 8 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌿𑌤𑍍 9 𑌨 10 𑌵𑌿𑌚𑌾𑌲𑌯𑍇𑌤𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிரகிருதியின் குணங்களாற் சம்மூடனாய எவ்வஞ்ஞானியானவன் அக்குணங்களின் கருமங்களிடத்தே ஆசக்திசெய்வனோ அவ்வனான்ம வேத்தாவாய அநதிகாரிக்குச் சுபகருமத்திருக்கும் சிரத்தையை ஆன்மவேத்தாவானவன் நீக்கான் (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த மாயைவடிவப் பிரகிருதியின் காரியமாதலின் தருமரூபமாய தேகேந்திரிய அந்தக்கரணாதி விகாரங்களாகிய குணங்களால், சம்மூடனாய அதாவது, ஸ்வரூப விளக்கமின்மையால்அத்தேகாதிகளையே ஆன்மரூபமாயபிமானித்தவனாய அஞ்ஞானியானவன் அத்தேகேந்திரிய அந்தக்கரணாதிகளின் வியாபாரங்களிடத்தே யான் சுவர்க்காதிபலத்தை யடையும் பொருட்டுக் கருமஞ்செய்வேன் என அந்தியந்தந்திடமாய தனதாந்தன்மைப்புத்தியைச்செய்வன். அவன் அக்கருமங்களின்அதிகாரியும், அனான்மபதார்த்தங்களினபிமானமுடையவனும், அசுத்தசித்தமுடையவனுமாதலின் ஞானாதிகாரத்தை யடைந்திலன். அத்தகைய அஞ்ஞானியை, இப்பரிபூரண ஆன்மாவையுணர்ந்த அறிஞனவன், பலத்தை இச்சித்துக்கருமஞ் செய்யற்கவென்றேனும், அல்லது இக்கருமபலம் அசத்தாமென்றேனும், அல்லது கருமங்களின் கருத்தாமுதலியன பொய்யேயாம், அல்லது, நீ பிரஹ்மரூபம் நினக்குச் சிறிதுமாத்திரையுஞ்செய்யத்தக்கதின்றாம், என்பனவாதி உபதேசங்களால் சுபகருமங்களில் வைத்திருக்குஞ் சிரத்தையிலிருந்து திருப்பலாகாது; மற்றோ, மாறாய் அந்தச் சுபகருமங்களின்துதிகளால் அவ்வறிஞன் அவ்வஞ்ஞர்களை அச்சுபகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பிக்கவேண்டும். எப்புருஷன் சுத்தஅந்தக்கரணமுடையவனாதலின் அதிகாரியாவனோ, அப்புருஷனே உபதேசமின்றியே விவேகத்தினுதயத்தால் தானே திருப்புகையின்றி ஞானாதிகாரத்தையடைவன். ஈண்டு எவ்வஸ்துவின் ஞானமுண்டாகியும், அதனினும் அந்நியவஸ்துவின் ஞானமுண்டாகமாட்டாதோ, எவ்வஸ்துவின் ஞானமுண்டாகாவிடினும், அதனினும் அந்நிய வஸ்துவின் ஞான முண்டாகிவிடுமோ, அது அகிருத்ஸ்நமெனப்படும். ஒரு கடத்தின் ஞானமுண்டாயினும், அக்கடத்தினும் வேறாய படாதிகளின் ஞானமுண்டாகமாட்டாது. அக்கடத்தின் ஞானமுண்டாகாவிடினும், அக்கடத்தினும் வேறாய படாதிபதார்த்தங்களின் ஞானமுண்டாகிவிடும் என்பதுபோலவாம். ஆகையால், அக்கடாதி சர்வ அனான்மபதார்த்தங்களும் அகிருத்ஸ்நம் என்னும் நாமத்தால் கூறப்பெறும். எவ்வேக வஸ்துவின் ஞானத்தால் சர்வ வஸ்துவின் ஞானமுண்டாகிவிடுமோ, எவ்வேக வஸ்துவின் ஞானமுண்டாகாவிடின், சர்வ வஸ்துவின் ஞானமுண்டாகமாட்டாதோ அவ்வஸ்து கிருத்ஸ்நம் எனப்படும். ஏக அத்விதீய ஆன்மஞானமுண்டாயின், சர்வ அனான்மபதார்த்தங்களின் ஞானமுண்டாகிவிடும். அவ்வத்விதீய ஆன்மாவின் ஞானமுண்டாகாவிடின், அவ்வெல்லா அனான்ம பதார்த்தங்களின் ஞானமுண்டாகமாட்டாது என்பதுபோலவாம். ஆகையால் அவ்வத்விதீய ஆன்மாக்கிருத்ஸ்நமெனக் கூறப்பெறும்.

ஆ-சு. "𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 [illegible] ।
𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑌿𑌤𑌮𑍍" ॥

(போ-ள்.) ஹே மைத்திரேயி! அதிஷ்டானரூபஆன்மாவின் தரிசனத்தாலும், சிரவணத்தாலும், மனனத்தாலும், விஞ்ஞானத்தாலும், இவ்வெல்லா அனுன்மவுலகும்அறியப்பெறும். இவ்வகையாய அகிருத்ஸ்நம்,கிருத்ஸ்நம் என்னும் இவ்விரண்டுசெப்தங்களின்பொருளேவார்த்திகக்கிரந்தத்தின்கண்ணே ஸ்ரீ சுரேஸ்வர ஆசாரியர்கூறியிருக்கின்றனர். ஒருரையின்கண்ணே '𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃' என்னும் பதத்தை '𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌸𑍁' என்னும் பதங்களோடு அன்வயஞ்செய்து இப்பொருள்செய்யப்பெற்றுளது :—அகங்காராதிகுணங்களால் சம்மூடனாகிய அஞ்ஞானியானவன் பிரகிருதியின் றேகாதிகுணங்களிடத்தேயும்,கமனாதிகருமங்களிடத்தேயும், யான் பிராஹ்மணன், இவையெனது யஜ்ஞாதிகள், எனவிவ்வண்ணம் யான் எனது என்னும் அபிமானத்தைச் செய்வன். (29)

(அ-கை.) முற்பிரசங்கத்தின்கண்ணே அஞ்ஞானி ஞானியென்னுமிருவரிடத்துஞ் சுபகருமங்களின் அனுஷ்டான சமானத்தன்மையிருப்பினும், அஞ்ஞானியினிடத்தோ கருத்திருத்துவத்தின் அபிமானமிருக்கும், ஞானியினிடத்தோ அக்கருத்திருத்துவ அபிமானத்தின் அபாவமிருக்கும், எனவிவ்வண்ணம் இருவரின் விலக்ஷணத்தன்மையுங் கூறியருளப்பட்டது. இப்போது அஞ்ஞானியும் இருவகையாவன், ஒருவனே மோக்ஷ இச்சையுடையவனாகிய முமுக்ஷுவாவன், மற்றொருவனே, மோக்ஷ இச்சையற்ற அமுமுக்ஷுவாவன். அவ்விருவருள் அமுமுக்ஷு அஞ்ஞானியை யபேக்ஷித்து, முமுக்ஷு அஞ்ஞானியின்கண்ணே சர்வ கருமங்களின் ஸ்ரீ பகவதர்ப்பணம், பல இச்சையினபாவம் என இவ்வகை விலக்ஷணத்தன்மை கூறியருளிக்கொண்டு, ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்தும் முமுக்ஷு அஞ்ஞானித்தன்மையால் கருமாதிகாரத்தைத் திடப்படுத்தியருளுகின்றார் :—

சு-ம். 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑍇𑌤𑌸𑌾 ।
𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌰𑍍𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 𑌵𑌿𑌗𑌤𑌜𑍍𑌵𑌰𑌃 ॥ (30)

ப-ம். 1 𑌮𑌯𑌿 3 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 4 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 5 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 2 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌚𑍇𑌤𑌸𑌾 6 𑌨𑌿𑌰𑌾𑌶𑍀𑌃 7 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 9 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 10 𑌯𑍁𑌧𑍍𑌯𑌸𑍍𑌵 8 𑌵𑌿𑌗𑌤𑌜𑍍𑌵𑌰𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நீ பரமேஸ்வரனாய என்னிடத்தே அத்தியாத்மசித்தத்தால் சர்வகருமங்களேயுஞ் சமர்ப்பணஞ்செய்து இச்சையற்று, மமதையற்று, சோகமற்று இப்போரைப் புரிதி. (30)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வஞ்ஞனுய்ச் சர்வஜகத்திற்கும் நியந்தாவாய்ச் சர்வான்மவடிவப் பரமேஸ்வர வாசுதேவனாகிய என்னிடத்தே நீ சர்வ இலௌகிக வைதிககருமங்களேயும், அத்தியாத்மசித்தத்தால் சமர்ப்பணஞ்செய்தி. ஈண்டு ஆன்மாவைப்பிரதிபாதனஞ் செய்யும்பொருட்டு எச்சாஸ்திரம் பிரவிருத்திக்குமோ. அச்சாஸ்திரம் அத்தியாத்மமெனப்படும்; அத்தகையது உபநிஷத்துருவ வேதாந்த சாஸ்திரமாம். அவ்வத்தியாத்ம சாஸ்திர விசாரத்தின்கண்ணே எச்சித்தந் தற்பரமாமோ, அது அத்தியாத்ம சேதஸ் எனப்படும். அதாவது, ஆன்மானுன்மவிவேகமுடைய சித்தத்தின்பெயர் அத்தியாத்மசேதஸ் எனப்படும். அத்தகைய அத்தியாத்மசித்தத்தால் நீ சர்வகருமங்களேயும் பரமேஸ்வரனாகிய என்னிடத்தே சமர்ப்பணஞ்செய்தி. கருத்திதுவாம் :—அர்ச்சுனனாகிய யான் கருத்தாவடிவ அந்தரியாமியாகிய ஈஸ்வர அதீனன், எங்ஙனஞ் சேவகன் மகாராஜாவின்பொருட்டே சர்வகருமங்களேயுஞ்செய்வனே; அங்ஙனம் யானும் அவ்வீஸ்வரன் பொருட்டே சர்வகருமங்களேயுஞ் செய்கின்றேனென்னும்புத்தியால் அவ்வெல்லாக் கருமங்களேயும் ஈஸ்வரனாகிய என்னிடத்தே அர்ப்பணஞ்செய்து, சர்வஆசைகளேயும் விட்டொழித்து,தேகபுத்திரசகோதராதிகளிடத்தே மமதைஅபிமானமுமற்று, இவ்வுல

கின்கண்ணே அபகீர்த்தியின் ஹேதுவடிவ பரலோகத்தின்கண்ணே நரக அடைவின் ஹேதுவடிவ சோகரூபஜ்வரமற்று முமுக்ஷு அஞ்ஞானியாகிய நீ இப்போரைப்புரிதி. அதாவது, சாஸ்திரவிகித சுபகருமத்தைச்செய்தி. ஈண்டு ஸ்ரீ பகவதர்ப்பணமும், நிட்காமத்தன்மையும் போரின்கண்ணே புகன்றருளப்பெற்றது. ஏனெனின், அப்போரினும் வேறுய எக்கருமத்தின்கண்ணும் அவ்வர்ச்சுனனுக்கு மமதை சோகங்களினடைவின்றும்; மற்றேறு அப்போரின்கண்ணே இருந்ததாம்.

(அ-கை.) ஆண்டுச் சுவர்க்காதி பலஇச்சையற்று, ஸ்ரீ பகவதர்ப்பண புத்தியால் வேதவிகித சுபகருமங்களை யனுஷ்டித்தலே அந்தக்கரண சுத்திவாயிலாயும், ஆன்மஞானவடைவு வாயிலாயும், முக்திரூபபலத்தை யடைவிப்பதாம் என்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான்கூறியருளுகின்முர் :—

சு-ம். 𑌯𑍇 𑌮𑍇 𑌮𑌤𑌮𑌿𑌦𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌨𑍍𑌤𑍋𑌽𑌨𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑍋 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑍇𑌽𑌪𑌿 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 ॥ (31)

ப-ம். 1 𑌯𑍇 5 𑌮𑍇 8 𑌮𑌤𑌂 6 𑌇𑌦𑌂 7 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 9 𑌅𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 2 𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 3 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌨𑍍𑌤𑌃 4 𑌅𑌨𑌸𑍂𑌯𑌨𑍍𑌤𑌃 13 𑌮𑍁𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 10 𑌤𑍇 11 𑌅𑌪𑌿 12 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவனெருவன் சிரத்தையுடையவனும் அசூயையற்றவனும் எனது இந்நித்தியமதத்தை அங்கீகரிக்கின்றனனே, அவனும் புண்ணிய பாவ கருமங்களைப் பரித்தியாகஞ்செய்வன் (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பலஇச்சையற்றவனும் ஸ்ரீ பகவதர்ப்பணபுத்தியால், இவ்வதிகாரியானவன் சாஸ்திரவிகித சுபகருமத்தைச் செய்யவேண்டுமென்பது எனதுமதமாம். இவ்வெனது மதமானது நித்தியவேதத்தால் உணர்த்தப்பட்டிருத்தலின், அநாதிபரம்பரையால் அடையப்பெற்றதாமாதலின் நித்தியமாம். அல்லது இவ்வெனது மதம் அதிகாரிகள் அவசியமாய்ச் செய்தற்குத் தகுதியதாமாதலின் நித்தியமாம். இத்தகைய எனதுநித்தியமதத்தை எம்மனுஷன் சிரத்தையுடையவனும் அசூயை யற்றவனும் அங்கீகரிக்கின்றனனே, அதாவது ஈண்டு சாஸ்திரமும் ஆசிரியரும் உபதேசித்தபொருள் ஒருகால் தனதனுபவத்தின்கண்ணே வாராவிடினும், அப்பொருளின்கண்ணே இப்பொருள் இத்தகையதாம் என்னும் விசுவாசஞ் சிரத்தையெனப்படும். ஒரு புருஷனுடைய குணங்களிடத்தே தோடங்களைப் பிரகடஞ்செய்தல் அசூயையாம். அவ்வசூயை ஈண்டுப் பிரசங்கத்தின்கண்ணே இவ்வண்ணமடைவுற்றதாம். இத்துக்கவடிவபோர்த்தருமத்தே அர்ச்சுனனுகிய என்னைப் பிரவிருத்திப்பவராயஇந்தஸ்ரீபகவான் கருணையற்றவர் என்பதாம். இத்தகைய அசூயையைச் சர்வப் பிராணிகட்குஞ் சுகிருதவடிவனும், ஆசிரியவடிவனும் ஆய ஸ்ரீபகவான் வாசுதேவனென்னும் என்னிடத்தேசெய்யாதவனும் எம்மனுஷன் எனதிம்மதத்தைச் சிரத்தைபக்திவாயிலாய் அங்கீகரிக்கின்றனனே, அம்மனுஷனும் அந்தக்கரணத் தூய்மைவாயிலாய், ஞானஅடைவு வாயிலாய் உண்மைஞானியைப்போலப் புண்ணிய பாவகருமங்களைப் பரித்தியாகஞ்செய்வன்; அதாவது புண்ணியபாவங்களற்றவனுவன் என்பதாம். கருத்திதுவாம் :— அந்த ஞானிக்கு வருஞ்சரீரங்களை யடைவிப்பனவாய எத்துணைப் புண்ணிய பாவரூபசஞ்சிதகருமங்களுளவோ அவையோ, ஞானரூப அக்கினியால் தகிக்கப்பட்டுப்போம், எந்தப் பிராரப்த கருமமானது இச்சரீரத்தைக்கொடுத்ததோ, அது போகத்தால் க்ஷயமாய்விடும். அந்தஞானி இவ்வர்த்தமான சரீரத்தின்கண்ணே செய்யும் புண்ணிய பாவ கருமம்அந்த ஞானிக்குச் சேவைசெய்யும் பக்தர்களும், நிந்திக்கும் துஷ்ட ஜனங்களும் கொண்டு செல்வர்.

ஆ-சு. "தஸ்யவு த்ராதாய உவயாந்தி ஸுஹ்ருத: ।
ஸாயுக்ருத்யாம் த்விஷந்த: பாவக்ருத்யாம்." ॥

(பொ-ள்.) அந்த ஞானியின் தனுதிபதார்த்தங்களையோ புத்திர சிஷ்யாதிகள் கொண்டுசெல்வர். அவ்வறிஞனது புண்ணியகருமங்களையோ சேவைசெய்யும் பக்தர் கொண்டுசெல்வர். அவ்வறிஞனது பாவகருமங்களையோ, நிந்தைசெய்யுந் துஷ்டஜனங்கள் கொண்டுசெல்வர். இவ்வண்ணம் அவ்வறிஞன் ஸர்வபுண்ணிய பாவகருமங்களுமற்றவனுவன். ஈண்டுச் சாஸ்திரவிகித நித்திய நைமித்திக கருமங்களினதிகாரம் மனுஷ்யனுக்கேயாம்; மற்றொருவருக்கு மதிகாரமின்றும். ஆகையால், ஸ்ரீ பகவானுனவர் 'மாநவா:' என்னும் வசனத்தைக் கூறியருளினர். (31)

(அ-கை.) ஆண்டு முற்சுலோகத்தின்கண்ணே ஸ்ரீ பகவதர்ப்பணபுத்தியால் நிட்காமகருமத்தின் அனுஷ்டானரூப ஸ்ரீ பகவானுடைய மதத்தை அங்கீகாரஞ் செய்வதாகிய அன்வயத்தின்கண்ணே அந்தக்கரணத்தூய்மைவாயிலாய் ஞான அடைவுவாயிலாய்ச் சர்வ கருமங்களுமற்ற தன்மைவடிவ குணத்தைக் கூறியருளினர். இப்போது இச்சுலோகத்தின்கண்ணே அந்த ஸ்ரீ பகவானது மதத்தை அங்கீகரியாததாய வியதிரேகத்தின்கண்ணே தோஷஅடைவைக் கூறியருளுகின்றுர்:—

சு-ம். யெ த்வேதத₃ப்₄யஸூயந்தோ நாநுதிஷ்ட₂ந்தி மே மதம் ।
ஸர்வஜ்ஞாநவிமூடா₄ம்ஸ்தாந் வித்₃தி₄ நஷ்டாநசேதஸ: ॥ (32)

ப-ம். 2 யெ 1 து 5 ஏதத் 3 அப்₄யஸூயந்த: 7 ந 8 அநுதிஷ்ட₂ந்தி 4 மே 6 மதம் 12 ஸர்வஜ்ஞாநவிமூடா₄ந் 9 தாந் 11 வித்₃தி₄ 13 நஷ்டாந் 10 அசேதஸ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் எப்புருஷன் தோடத்தை யாரோபணஞ் செய்பவனுய் முற்கூறிய எனதுமதத்தை யங்கீகரிக்கின்றிலனே, அவனை நீ துஷ்ட சித்தமுடையவனென வறிதி, சர்வ ஞானத்தின்கண்ணும் மூடனெனவறிதி, சர்வ புருஷார்த்தங்களினின்றும் பிரஷ்டனுனவனெனவறிதி. (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் நாஸ்திகத்தன்மையால் குருசாஸ்திர வசனங்களில் சிரத்தையுறுது, குணங்களில் தோஷத்தைக்கூறும் அசூயையையுற்று முன்மொழிந்த எனது மதத்தையங்கீகரித்திலனே, அவனை நீ அத்தியந்தந் துஷ்டசித்தமுடையவனுயறிதி. இக்காரணத்தானே கருமவிஷயக ஞானம், சகுண நிர்க்குணப் பிரஹ்மவிஷயக ஞானம் என்னும் எல்லா ஞானங்களினும், பிரமாணத்தாற் பிரமேயத்தாற் பிரயோஜனத்தால் அவன் விசேஷமாய் மூடனுயிருப்பனென்றறிதி. கருத்திதுவாம்:—அக்கருமவிஷயக ஞானமும், சகுணநிர்க்குணப் பிரஹ்மவிஷயக ஞானமும் எப்பிரமாணத்தாலுண்டாம், அந்த ஞானங்களின் பிரமேயம் யாதாம். அந்த ஞானங்கட்குப் பிரயோசனம் யாதாம் என்னும் பொருளை அவன் அறியமுடியாதவனுவன். இக்காரணத்தானே அப்புருஷனை நீ யாவரினும் பிரஷ்டனுனவனெனவறிதி. (32)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வுலகின்கண்ணே எப்புருஷன் மகாராஜாவின் ஆஞ்ஞையை உல்லங்கனஞ்செய்வனே, அப்புருஷனுக்கு மகாபயத்தின் அடைவுண்டாவதேபோல, ஈஸ்வரராகிய தங்களது ஆஞ்ஞையை யுல்லங்கனஞ் செய்வதன்கண்ணே மகாபயவடைவுண்டாமெனக் கண்டும், அவன் எக்காரணத்தால் அசூயையுற்றவனுய்த் தங்கள் மதத்தை யங்கீகரித்திலன்? எக்காரணத்தால் புருஷார்த்த சாதனங்கள் யாவற்றினும் பிரதிகூலத்தன்மைப் புத்தியைச் செய்கின்றனன்? என அர்ச்சுனன் சங்கிப்ப, ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றுர்:—

சு-ம். ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞாநவாநபி ।
ப்ரக்ருதிம் யாந்தி பூதாநி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ॥ (33)

ப-ம். 5 ஸத்ருஶம் 6 சேஷ்டதே 3 ஸ்வஸ்யா: 4 ப்ரக்ருதே: 1 ஜ்ஞாநவாந் 2 அபி
8 ப்ரக்ருதிம் 9 யாந்தி 7 பூதாநி 10 நிக்ரஹ: 11 கிம் 12 கரிஷ்யதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஞானத்தையுடைய புருஷனும், தனது பிரகிருதியையனுசரித்தே சேஷ்டிப்பன், ஆதலின் சர்வப்பிராணிகளும் அந்தப் பிரகிருதியையே அனுசரிப்பர்கள்; ஆண்டெனது நிக்கிரகம் யாது செய்யும். (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பூர்வஜன்மத்தின்கண்ணே செய்த தர்மம், அதர்மம், ஞானம், இச்சைமுதலியவற்றின் சமஸ்காரம் இந்தஜன்மத்தின்கண்ணே அபிவியக்தியையடையும்; அந்த அபிவியக்த சமஸ்காரமே பிரகிருதியாம். அது எல்லாவகையானும் பலமுடையதாம். அத்தகைய பலமுடைய பிரகிருதியின் அனுசாரமாகவே பிரஹ்மத்தையுணர்ந்த புருஷனும் சேஷ்டிப்பன். அல்லது ' ஜ்ஞாநவாந் ' என்னும் பதத்தால் கேவலங் குணதோஷத்தையறிந்த புருஷனைக்கொள்க. ஆண்டு ஸ்ரீ வியாச சூத்திரம்.—"ஸ்வாதிஷ்டாவிஶேஷாத்"

(பொ-ள்.) உண்ணல் குடித்தல் முதலிய வியவகாரகாலத்தின்கண்ணே அறிஞனுக்குப் பசுவாதிகளோடு துல்லியத்தன்மையேயுளது என்பதாம். அத்தகைய பிரஹ்மவேத்தாவாய ஞானமுடையவனும், அல்லது குணதோஷத்தையறிந்துள்ள ஞானவானும், தனது சமஸ்காரரூபப் பிரகிருதியின் அனுசாரமாகவே சேஷ்டிப்பனாயின், வேறஞ்ஞானி மூர்க்க புருஷன் தனதுபிரகிருதியின் அனுசாரமாகவே சேஷ்டிப்பன் என்பதன்கண்ணே யாது கூறவேண்டியிருக்கின்றது. ஆகையா லந்தப்பிரகிருதி அவிவேகிப் பிராணிகட்குப் புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டத்தன்மையையுண்டாக்குமேனும், அவ்வெல்லாப் பிராணிகளும் அந்தப் பிரகிருதியையே அனுசாரஞ்செய்யும். ஆண்டுப் பரமேஸ்வரனாகிய யான் செய்யும் நிக்கிரகமும், அரசன் செய்யும் நிக்கிரகமும் யாது செய்யும். அதாவது மேலாய இச்சையாற் பாவகருமத்தின்கண்ணே பிரவிருத்திக்கும் புருஷரை அந்நிக்கிரகம் அப்பாவகருமத்தினின்றும் நிவிருத்திசெய்வதன்கண்ணே யாற்றலற்றதாம். கருத்திதுவாம்:—எப்புருஷன் பாவகருமத்தின்கண்ணே மகாநரக சாதனத்தன்மையையறிந்தும் துர்வாசனையின் பிரபலத்தன்மையால் மீண்டும், அப்பாவ கருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பனோ, அப்புருஷன் எனது ஆஞ்ஞையைத் தாண்டுவதாலுண்டாம் தோஷத்தால் ஒருகாலும் பயத்தையடையான். (33)

(அ-கை.) ஹே பகவன்! ஒருகால் எல்லாப்பிராணிகளுந் தத்தமது பிரகிருதியின் அனுசாரமாகவே நடப்பாராயின், இலௌகிக புருஷார்த்தத்திற்கும் வைதிக புருஷார்த்தத்திற்கும் யாதொருவிஷயமும் உண்டாகமாட்டாது. ஆகையால், துறக்ககாமன்வேட்க என்பதாதி விதிவாக்கியங்களின்கண்ணும், பிறர்மனை நாடேல் என்பதாதி நிஷேதவாக்கியங்களின்கண்ணும் அநர்த்தகத்தன்மையுண்டாம். ஏனெனின், இவ்வுலகின்கண்ணே பூர்வசமஸ்காரரூபப் பிரகிருதியற்ற எப்பிராணியுமின்றாகும், இருப்பினன்றோ அவ்விதி நிஷேத வாக்கியங்கள் பயனுடையனவாம். என இவ்வண்ணம் அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் விடையளித்தருளுகின்றார்:—

சு-ம். இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ ।
தயோர்ந வஶமாகச்சேத்தௌ ஹ்யஸ்ய பரிபந்திநௌ ॥ (34)

ப-ம் 1 இந்த்ரியஸ்ய 2 இந்த்ரியஸ்ய 3 அர்தே 4 ராகத்வேஷௌ 5 வ்யவஸ்திதௌ 6 தயோ: 8 ந 7 வசம் 9 ஆகச்சேத் 11 தௌ 10 ஹி 12 அஸ்ய 13 பரிபந்திநௌ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்திரிய இந்திரியங்களின் சப்தாதி விஷயங்களிடத்தே இராகத்துவேஷமிரண்டும் நியமபூர்வகமாயிருக்கின்றன. அவ்விராகத்துவேஷங்களிரண்டின் வசத்தைப் பிராணிகள் அடையலாகாது; அவ்விராகத்துவேஷமிரண்டும் இப்பிராணியின் சத்துருவேயாம். (34)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, இரசனம், கிராணம் என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்களாம். வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், பாயு என்னு மைந்தும் கருமேந்திரியங்களாம். அவ்விருபஞ்சகங்கட்கும் முறையே சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம், வசனம், ஆதானம், கமனம், ஆநந்தம், மலவிசர்ச்சனம் என்பன பத்தும் விஷயங்களாம். அச்சப்தாதி விஷயங்களிடத்தும், அவ்வசனாதி விஷயங்களிடத்தும், எவ்வெவ்விஷயம் இப்புருஷனுக்கனுகூலமாமோ, அவ்வவ்விஷயம் ஒருகால் சாஸ்திர நிஷித்தமாயினும், அவ்வவ் விஷயத்தின்கண்ணே இப்புருஷனுக்கு இராகமேயுண்டாம். அவ்விஷயங்களிடத்தே எவ்வெவ்விஷயம் இப்புருஷனுக்குப் பிரதிகூலமாமோ, அவ்வவ்விஷயம் ஒருகால் சாஸ்திரவிகிதமாயினும் அவ்வவ்விஷயத்தின்கண்ணே இப்புருஷனுக்குத் துவேஷமேயுண்டாம். இவ்வண்ணம் சுரோத்திராதி சர்வேந்திரியங்களின் சப்தாதி சர்வ விஷயங்களிடத்தே அநுகூலத்தன்மையானும், பிரதிகூலத்தன்மையானும் இராகத்துவேஷங்களிரண்டும் நியம பூர்வகமாகவேயிருக்கின்றனவேயன்றி அநியமமாக இல்லவேயில்லை. ஆண்டிப்புருஷன் அவ்விராகத்துவேஷவயத்தையடையாதிருக்குமிதுவே தனது புருஷார்த்தத்தின் விஷயமுஞ் சாஸ்திரத்தின் விஷயமுமாம். ஈண்டிது தாற்பரியமாம்:—இப்பரஸ்திரீ கமனாதிகருமங்கள் மகா நரகப்பிராப்தியைச் செய்விப்பனவாம் என்னும் பலவத்தநிஷ்டசாதனத்தன்மை ஞானத்தினபாவத்தோடுகூடிய இப்பரஸ்திரீ கமனாதிகருமங்கள் எனது விஷயசுகரூப இஷ்டசாதனமாம் என்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானத்தால் உண்டாய பரஸ்திரீ கமனாதிகருமங்களிடத்தேயிருக்கும் இராகத்தையங்கீகரித்தே அந்தப் பிரகிருதி இந்தப்புருஷனைப் பரஸ்திரீகமனாதி நிஷித்தகருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பிக்கும். இவ்வண்ணம் இச்சந்தியா வந்தனாதிகருமங்கள் சுவர்க்காதி பலத்தையுண்டாக்குவனவாம் என்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அபாவத்தோடுகூடிய இச்சந்தியா வந்தனாதிகருமங்கள் எனது துக்கரூப அநிஷ்ட சாதனங்களாம் என்னும் அநிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தாலுண்டாய அந்தச் சந்தியாவந்தனாதி கருமங்களிடத்தேயிருக்குந் துவேஷத்தை யங்கீகரித்தே அப்பிரகிருதி அப்புருஷனை அந்தச் சந்தியாவந்தனாதி விகிதகருமங்களினின்றும் நிவிருத்திப்பிக்கும். ஆண்டு எக்கால் தருமசாஸ்திரம் அந்தப் பரஸ்திரீ கமனாதிகருமங்களின்கண் இப்பரஸ்திரீ கமனமுதலிய கருமங்கள் நரகவடைவைச் செய்விப்பன என்னும் பலவத்தநிஷ்டசாதனத்தன்மையை யுணர்த்துமோ, அக்கால் பலவத்தநிஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அபாவமிருக்கமாட்டாது. கடரூபப் பிரதியோகியிருக்குமாயின் கடாபாவமிராததேபோலும். அந்தப் பரஸ்திரீகமனாதி நிஷித்தகருமங்களிடத்தே இராகோற்பத்தியுண்டாக்குவதில் இஷ்டசாதனத்தன்மைஞானத்திற்கு, அந்த பலவத்தநிஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அபாவமே சககாரிகாரணமாம். அந்தச் சககாரிகாரணமிலதாயின் கேவலம் அவ்விஷ்ட சாதனத்தன்மைஞானம் அந்தப் பரஸ்திரீ கமனாதி நிஷித்த கருமங்களிடத்தே இராகத்தையுண்டாக்கமாட்டாது. மதுவிஷங்கள் சேர்ந்த அன்னத்தின்கண்ணே இவ்வன்னம் எனது பசிநிவிருத்தியின் சாதனமாம் என்னும் இஷ்டசாதனத்தன்மை

ஞானமுண்டாயினும், எப்புருஷனுக்கவ்வன்னத்தின்கண் இவ்வன்னம் எனதுமரண சாதனம் என்னும் அநிஷ்டசாதனத்தன்மை ஞானமுண்டாமோ, அப்புருஷனுக்குக் கேவலம் இஷ்ட சாதனத்தன்மை ஞானம் அவ்வன்னத்தின்கண்ணே இராகத்தையுண்டாக்கமாட்டாது. இங்ஙனம் எக்காலத்தே தருமசாஸ்திரஞ் சந்தியாவந்தனாதிவிகித கருமங்களின்கண் இவை சுவர்க்காதி சுகஅடைவின் சாதனமாம் என்னும் பலவத்திஷ்டசாதனத்தன்மையை யுணர்த்துமோ, அக்காலத்தே அவற்றின்கண் பலவத்திஷ்டசாதனத்தன்மை ஞானத்தினபாவமிருக்கமாட்டாது; கடரூபப் பிரதியோகியிருக்குமாயின், கடாபாவமிராததேபோலும் அவற்றின்கண்ணே துவேஷத்தினுற்பத்தி செய்வதில் அவ்வநிஷ்டசாதனத்தன்மை ஞானத்திற்கு அந்தப்பலவத்திஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினபாவமே சககாரி காரணமாம். அந்தச்சககாரிகாரணமின்றாயின் கேவலம் அவ்வநிஷ்ட சாதனத்தன்மை ஞானம் அவற்றின்கண்ணே துவேஷ உற்பத்தியைச் செய்விக்கமாட்டாது. ஆகையால் இப்பொருள் துணியப்பெறும்:—பிரதிபந்தமற்ற அந்தச்சாஸ்திரம் இப்புருஷனைச் சந்தியாவந்தனாதி விகிதகருமங்களிலோ பிரவிருத்திப்பிக்கும், பரஸ்திரீகமனாதி நிஷித்த கருமங்களினின்றும் நிவிருத்திப்பிக்கும். இவ்வண்ணம் சாஸ்திர விசார ஜன்னிய ஞானத்தின் பிரபலத்தன்மையால் அவ்வியற்கையாய இராகத்துவேஷ காரணநிவிருத்தியுண்டாமாயின், அக்காரண நிவிருத்தியால் அந்த இயற்கையாய இராகத்துவேஷரூப காரியமும் நீங்கிவிடும். ஆகையால், அந்தப் பிரகிருதி விபரீதமார்க்கத்தின்கண்ணே சாஸ்திர திருஷ்டியையுடைய புருஷனைப் பிரவிருத்திப்பிக்கமாட்டாது. ஆதலின் சாஸ்திரத்திற்கும் புருஷார்த்தத்திற்கும் பயனற்றதாந்தன்மையினடைவுண்டாகமாட்டாது. இவ்வபிப்பிராயத்தால் ஸ்ரீபகவானனவர் 'தயோர்ந வஶமாக³ச்சே²த்' என்னும் வசனத்தைத் திருவாய் மலர்ந்தருளினர். அதாவது, இப்புருஷன் அந்த இராகத்துவேஷாதியின் அதீனனாய் எக்கருமத்தின்கண்ணும் பிரவிருத்தியையேனும் எக்கருமத்தினின்றும் நிவிருத்தியையேனுமடையலாகாது. மற்றே, சாஸ்திர ஜன்னியஞானத்தால் அந்த இராகத்துவேஷங்களின் காரணநாச வாயிலாய் அவற்றை நாசமே செய்யவேண்டும்; இயற்கையாய தோஷ ஜன்னிய அவ்விரண்டும் இந்த மோக்ஷரூப சிரேயசினிச்சையையுடைய புருஷனுக்குச் சத்துருவேயாம். கருத்திதுவாம்:—எங்ஙனம் மார்க்கத்தின்கண்ணே நடவாநின்ற புருஷர்கட்குத் துஷ்டசோரர் அநேகம் வகையாய விக்கினங்களைச் செய்வரோ, அங்ஙனம் மோக்ஷரூப சிரேயசின் ஆன்மஞானரூபமார்க்கத்தின்கண்ணே பிரவிருத்திக்கும் இவ்வதிகாரி புருஷனுக்கு அவ்விராகத்துவேஷமிரண்டும் அநேகம் வகையாய விக்கினங்களைச்செய்யும். ஆகையால் இவன் அவற்றை அவசியமாய் நாசஞ்செய்யவேண்டுமென்க. (34)

(அ-கை.) ஹே பகவன்! இயற்கையாய இராகத்வேஷத்தால் ஜன்னியமாய பசு மனுஷ்யாதி சர்வப் பிராணிகளின் சாதாரணப் பிரவிருத்தியை நிவிருத்திசெய்து, இப்புருஷன் சாஸ்திரவிகித கருமத்தையே செய்யயோக்கியனுவனுயின், எங்ஙனம் இப்போரின்கண்ணே சாஸ்திரவிகித கருமரூபத்தன்மையாமோ, அங்ஙனம் சந்நியாச பூர்வக பிக்ஷான்ன போஜனத்தின்கண்ணுஞ்சாஸ்திரவிகித கருமரூபத்தன்மையுளதாதலின், அத்தியந்தஞ் சுகமும் ஹிம்சாதிகளற்றதும் ஆய பிக்ஷான்னபோஜனமே எனக்குச் செய்பத்தக்கதாகும். அத்தியந்தந்துக்கரூபமும் ஹிம்சை முதலியவற்றின் காரணமும்ஆய இப்போர்புரிவதின்கண்ணே எனக்குயாது பிரயோஜனம் எனஅர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் விடையருளிச் செய்கின்றார்:—

சு-ம். ஶ்ரேயாந் ஸ்வத⁴ர்மோ விகு³ண: பரத⁴ர்மாத் ஸ்வநுஷ்டி²தாத் ।
ஸ்வத⁴ர்மே நித⁴நம் ஶ்ரேய: பரத⁴ர்மோ ப⁴யாவஹ: ॥ (35)

ப-ம். 5 ஶ்ரேயாந் 4 ஸ்வதர்ம: 3 விகுண: 2 பரதர்மாத் 1 ஸ்வநுஷ்டிதாத் 6 ஸ்வதர்மே 7 நிதநம் 8 ஶ்ரேய: 9 பரதர்ம: 10 பயாவஹ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ அங்கங்களின் சம்பூரணத்தன்மைவாயிலாய்ச் செய்யப்பட்ட பரதருமத்தினுஞ் சிறிது அங்கத்தின் குறைவுவாயிலாய்ச் செய்யப்பட்ட தனது தருமம் அத்தியந்தம் மேன்மையுடையதாம். இக்காரணத்தால் அந்தத் தனது தருமத்தின்கண்ணே மரணமும் மேன்மையதாம் பரதர்மமோ பயத்தையேயுண்டாக்குவதாம். (35)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிராஹ்மணாதி நான்கு வருணங்களின்கண்ணும், பிரஹ்மசரியாதி நான்காசிரமங்களின்கண்ணும், எவ்வெவ்வருணங்களைக்குறித்து, எவ்வெவ்வாசிரமங்களைக் குறித்துத் தருமசாஸ்திரமானது எவ்வெத்தருமத்தை விதித்துளதோ, அவ்வத்தருமம் அவ்வவ்வருணத்திற்கும், அவ்வவ்வாசிரமத்திற்கும் ஸ்வதருமமெனப்படும். வேறு வருணத்திற்கும் வேறு ஆசிரமத்திற்கும் அவ்வத்தருமம் பரதருமமெனப்படும். பிருஹஸ்பதிஸவமெனப்பெயரிய யாகத்தைச்சாஸ்திரம் பிராஹ்மணனொருவன்பொருட்டே விதித்திருக்கின்றது, க்ஷத்திரியாதிகளின்பொருட்டு விதிக்கவில்லையாதலின், அந்த யாகம் பிராஹ்மணர்கட்கு ஸ்வதருமமாம். க்ஷத்திரியாதியர்க்கோ பரதருமமாம். இவ்வண்ணம் ராஜசூயமெனப்பெயரிய யாகத்தை க்ஷத்திரியனொருவனுக்கே சாஸ்திரம் விதித்துளது, பிராஹ்மணாதியரின்பொருட்டு விதிக்கவில்லையாதலின், அந்த யாகம் க்ஷத்திரியனுக்கோ ஸ்வதருமமாம், பிராஹ்மணாதிகட்கோ பரதருமமாம். இவ்வண்ணம் சர்வ அசாதாரண தருமங்களிலும் ஸ்வதருமத்தன்மையையும் பரதருமத்தன்மையையும் அறிந்துகொள்க. ஈஶ்வரநாமஸ்மரணாதிகளாகிய சாதாரண தருமங்களிடத்தே சர்வப்பிராணிகட்கும் ஸ்வதருமத்தன்மையேயிருக்கும், எப்பிராணியினுக்கும் பரதருமத்தன்மையிராதாம். இக்காரணத்தானே சாதாரண தருமமெனக்கூறப்பட்டது.— [illegible] வுண்டு திரவியம் மந்திரம் [illegible] என்பனவாதி சர்வ அங்கங்களின் சம்பூரணத்தன்மையின்றியே எத்தருமஞ்செய்[illegible]ப்படுமோ, அத்தருமம் விகுணமெனப்படும். இவ்வகையாய விகுணமாகிய ஸ்வதரும[illegible] சர்வ அங்கங்களின் சம்பூரணத்தன்மைவாயிலாய்ச் செய்யும் பரதருமத்தினும் அத்தியந்தம் மேன்மையுடையதாம். ஏனெனின், வேதப்பிரமாணமொன்றை விடுத்து வேறு பிரமாணமெதுவுந் தருமத்தின்கண்ணேயின்றும்; மற்றோ, தருமத்தின்கண்ணே வேதமொன்றே பிரமாணமாம். இவ்வார்த்தை 'சோதநாலக்ஷணோர்த்தோ தர்ம:' என்னும் பூர்வ மீமாம்சா சூத்திரத்தின்கண்ணே விஸ்தாரமாய்க் கூறப்பெற்றுளது. ஆகையால், பரதருமமும் அனுஷ்டிக்கற்பாலது, தருமமாதலின்; ஸ்வதருமத்தைப்போலும் என்னும் அனுமானம் அத்தருமத்தின்கண்ணே பிரமாணமாகவேமாட்டாது. ஆகையால், ஒரு சிறிதங்கங்களின் குறைவால் விகுணபாவத்தையடைந்த ஸ்வதருமத்தின்கண்ணும் நிலைபெற்றிருக்கும் புருஷனுடைய மரணமும், பரதருமத்தின்கண்ணிராநின்ற புருஷனுடைய ஜீவனத்தினும் அத்தியந்தம் மேன்மையுடையதாம். ஏனெனின், ஸ்வதருமத்தின்கண்ணேயிருக்கும் புருஷனுடைய மரணம் இவ்வுலகின்கண்ணே அப்புருஷனுக்குப் புகழைபடைவிப்பதாம், பரலோகத்தின்கண் ஸ்வர்க்காதிகளினடைவைச் செய்விப்பதாம். ஆகையால், அம்மரணமும் அத்தியந்தம் மேன்மையதாம். பரதருமமோ இப்புருஷனுக்கிகலோகத்தின்கண்ணே அகீர்த்தியையடைவிப்பதாம். பரலோகத்தின்கண்ணே நரகாதிகளையடைவிப்பதாம். ஆகையால், எங்ஙனம் இராகத்வேஷத்தாலுண்டாய இயல்பாய பிரவிருத்தி இப்புருஷனுக்குப் பரித்தியாகஞ்செய்ய யோக்கியமாமோ, அங்ஙனம் இப்பரதருமமும் பரித்தியாகஞ்செய்யயோக்கியமாம். ஆண்டுப் பூர்வப் பிரசங்கத்தின்கண்ணே ஸ்ரீ பகவானுடைய மதத்தை யங்கீகாரஞ்செய்யும் புருஷர்கட்குச்

சிரேயசின் அடைவு கூறியருளப்பெற்றது. அந்த ஸ்ரீ பகவானது மதத்தை அங்கீகரியாத புருஷர்கட்கு அந்தச் சிரேயசுமார்க்கத்தினின்றும் பிரஷ்டத்தன்மை கூறியருளப்பெற்றது. அந்தச்சிரேயசு மார்க்கத்தினின்றும் பிரஷ்டமாவதன்கண்ணும், பலத்தின் இச்சைவாயிலாய்க் காமியகருமத்தைச் செய்வதன்கண்ணும், கேவலம் பாவ கருமங்களைச் செய்வதன்கண்ணும் 'யெவெதநுஹஸ்யஹெயஷஃ' என்பதாதி வசனங்களால் அநேக காரணங்கள் அறையப்பெற்றுள்ளன. அவ்வெல்லாக்காரணங்களையுந் தொகுத்துக்கூறுஞ் சுலோகமிதுவாம்.

> "ஶ்ரத்தாஹாநிஸ்ஸூயா ஸ்யாந்சித்தஸ்ய ஶாட்யதா ।
> ப்ரக்ருதேவஶவர்த்தித்வம் ராகத்வேஷௌ ச பாதகே ॥
> ஸங்கோ வர்த்தநே த்ருஷ்டா துர்மார்ககாரகாஃ" ॥

(பொ-ள்) சிரத்தையற்றிருத்தல், அசூயைப்படல், சித்தத்தின் துஷ்டத்தன்மை, மூடத்தன்மை, பிரகிருதியின்வயம் நிகழ்தலாதல், புட்கல இராகத்துவேஷங்கள், பாதருமத்தின்கண்ணே பிரீதிப்படல் என்னுமிவையாவும் துன்மார்க்கத்தையடைவிப்பனவாம். (35)

(அ-கை.) ஆண்டு இப்புருடனுக்குக் காமியகருமத்தின்கண்ணே பிரீதியைச் செய்விப்பதும், நிஷித்தகருமத்தின்கண்ணே பிரீதியைச்செய்விப்பதும், ஆகிய காரணத்தை நிவிருத்தித்து ஸ்ரீபகவான் பூர்வமருளிய மதத்தைக்கைக்கொள்ளும் பொருட்டு அருச்சுனன் முதலில் அக்காரணத்தின் வடிவத்தைக்கேட்கின்றனன்.

அர்ஜுந உவாச.

சு-ம். அத² கேந ப்ரயுக்தோऽயம் பாபம் சரதி பூருஷஃ ।
அநிச்ச²ந்நபி வார்ஷ்ணேய ப³லாதி³வ நியோஜிதஃ ॥ (36)

ப-ம். அத 9 கேந 10 ப்ரயுக்தஃ 2 அயம் 11 பாபம் 12 சரதி 3 பூருஷஃ 4 அநிச்சந் 5 அபி 1 வார்ஷ்ணேய 6 பலாத் 8 இவ 7 நியோஜிதஃ.

(அ-ம்) ஹே வார்ஷ்ணேய! இப்புருடன் பாவஞ்செய்வதற்கிச்சியாவிடினும் பலாத்காரமாய்ப் பிரவிருத்திப்பிக்கப்பட்ட புருடனைப்போல எதனால் பிரவிருத்திப்பிக்கப்பட்டவனாய்ப்பாவகருமத்தைச்செய்கின்றனன்?

(வி-ம்) ஹே பகவன்! "யெ்யாமதாவிஷயாநு வந்ஸ்ஃ" என்பதாதிவசனங்களால் முன்னரும் தாங்கள் அநர்த்தமூலமெனக் கூறியருளினீர்கள். இப்போதுந் தாங்கள் "ப்ரக்ருதெகுணஸம்மூடாஃ" என்பதாதி வசனங்களால் பலவகையாய் அவ்வனர்த்தமூலத்தைக் கூறியருளினீர்கள். ஆண்டு, அவையாவுமே சமானப்பிரதானத்தன்மையால் அநர்த்தகாரணங்களா? அல்லது அவ்வியாவற்றினுள்ளும் ஒன்றே முக்கியகாரணம் மற்றவையாவும் கௌணம் என்பதா? அவற்றுள் முதற்பக்ஷத்தின்கண்ணே? அவ்வெல்லாக்காரணங்களையும் வேறுவேறாய் நிவிருத்திசெய்வதன்கண்ணே மகா பரிசிரமமுண்டாவதாகும். மற்றையபக்ஷத்திலோ அவ்வொரே முக்கியகாரணத்தை நிவிருத்திசெய்துவிடின், இப்புருடனுக்குக்கிருதகிருத்தியபாவ அடைவுண்டாம். ஆகையால், ஹே பகவன்! தாங்களிதனைத் திருவாய்மலர்ந்தருளல்வேண்டும்:—தேவரீரது மதத்தைத்தழுவாதவனுய்ச்சர்வஞானங்களினும் மூடனானவன் எப்பலமுடைக்காரணத்தாலேவப்பட்டவனாய் அநர்த்தத்தையீயும் பலவகை நிஷித்தகாமியகருமங்களைச் செய்கின்றனன். ஈண்டு, பிறர்மனைதழுவன் முதலியன நிஷித்தங்களாம், சத்துருவைக்கொல்லும் சேனயாக முதலியன காமியங்களாம். இவ்விரண்டும் அநர்த்தத்தையே அடைவிப்பனவாமாதலின் பாபசப்தத்தாற் கவரப்பெற்றன. ஹே பகவன்! இவன்தான் இப்பாவங்களையியற்ற

இச்சியானாயினும், பலாத்காரமாய் இவற்றையேசெய்வன். பரமபுருஷார்த்த சாதனமெனத் தாங்கள் உபதேசித்தகருமத்தைச்செய்ய விச்சிப்பினும், அதனைச் செய்கின்றிலனாதலின், இஃதறிந்துகொள்ளக் கிடக்கின்றது:—இவன் பரதந்திரனே யன்றிச் சுதந்திரனல்லன், பரதந்திரத்தன்மையினானன்றி இவ்வார்த்தை சம்பவியாதாமாதலின் மகாராஜாவால் ஒருகாரியத்தே பலாத்காரமாயேவப்பட்ட ஒரு சேவகன் அக்காரியஞ்செய்ய இச்சியானேனும் அதனை யவசியஞ்செய்வதேபோல எப்பலமாய காரணத்தால் ஏவப்பட்டவிவன் தேவரீரது மதவிரோதியாய பாவத்தைச் சர்வாநர்த்த மூலபூதமென வறிந்தும் அதனையேசெய்வன். அவ்வநர்த்தத்தே ஏவும் காரணவடிவத்தைத்தாங்கள் என்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருள வேண்டும். அதன்வடிவத்தையறியின் அதன் அழிவின்பொருட்டு முயல்வேன். ஈண்டு, "அநிச்சந்நபி" என்னும் வசனத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன்:—முற்கூறிய இராகத்வேஷத்தின்கண்ணும் பிரவிருத்தி காரணத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், இராகமிருப்பின் இச்சை யவசியமுண்டாமாதலின், இச்சையில்லாதிருப்பின் இராகத்திற்கு அபாவமேநேரும். இராகத்தே அப்பிரவர்த்தகத்தன்மை சித்தமாயபோது இராகஜன்னிய சம்ஸ்காரங்களாலுண்டாய அறம்பாவத்தின்கண்ணும் பிரவர்த்தகத்தன்மை சம்பவியாதாம். அவற்றின்மாட்டு அப்பிரவர்த்தகத்தன்மையுளதாகவே அவற்றையபேக்ஷிக்கும் ஈசுவரனிடத்தும் பிரவர்த்தகத்தன்மை சம்பவியாதாம். 'வார்ஷ்ணேய' என்னும் இவ்விளிமொழிதலால் அர்ச்சுனன் இப் பொருளைக் குறிப்பித்தனன்:—எனது மாதாமககுல விருஷ்ணிவம்சத்தே தங்களுடைய பக்தர்களைக் கடத்தேற்றியருளும்பொருட்டுத் தாங்களவதரித்தருளினீர்கள்; யானும் அவ்வம்சத்தே யுதித்த குந்திதேவியின் மைந்தனாதலின், என்னைத் தங்களுடையவனாய் நினைந்தருளி யுபேக்ஷிக்கலாகாதாம்; மற்றே, எனது வினாவிற்குத் தாங்கள் உண்மையாய விடையைத் தந்தருளல்வேண்டுமென்பதாம். (36)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனனால் வினவப்பட்ட ஸ்ரீ பகவான் "காமமய ஏவாயம் புருஷ இதி ஸ யதாகாமோ பவதி தத்க்ரதுர் பவதி" "ஸோகாமயத ஜாயா மே ஸ்யாத் அத ப்ரஜாயேய அத வித்தம் மே ஸ்யாத் அத கர்ம குர்வீய" என்பன முதலிய சுருதிகளாலும், "அகாமஸ்ய க்ரியா காசித் த்ருச்யதே நேஹ கர்ஹிசித். யத்யத்தி குருதே ஜந்து: தத்தத் காமஸ்ய சேஷ்டிதம்" ॥ என்பதாதி ஸ்மிருதிகளாலும் சித்தமாய உத்தரத்தைக்-(பொ-ள்.—இவன் காமமயனேயாவன் இவ்வுலகுண்டாவதன்முன் ஓரான்மாவேயிருந்தது, அது எனக்கு ஜாயையுண்டாகுக, பிரஜையுண்டாகுக, தனமுண்டாகுக யான் கருமத்தைச் செய்வேன் என இச்சித்தது. இவ்வுலகத்தே இச்சையற்றவனுக்கு எக்கிரியையும் காணவருவதின்றாமாதலின் ஜீவன்செய்யுங் கருமங்களியாவும் காமசேஷ்டையினானேயாம்) கூறியருளுகின்றார்:—

ஸ்ரீபகவாநுவாச.

சு-ம். காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: ।
மஹாசநோ மஹாபாப்மா வித்த்யேநமிஹ வைரிணம் ॥ (37)

ப-ம். 2 காம: 1 ஏஷ: 4 க்ரோத: 3 ஏஷ: 5 ரஜோகுணஸமுத்பவ: 6 மஹாசந: 7 மஹாபாப்மா 11 வித்தி 9 ஏநம் 8 இஹ 10 வைரிணம்.

(அ-ம்.) ஹே அர்ஜுன! அவ்வநர்த்தமார்க்கத்தே யேவுவது இக்காமமேயாம், இஃதே குரோதமாம், இரஜோகுணத்துண்டாயதாம், மகா ஆகாரத்தையுடையதாம், அத்தியந்தம் உக்கிரமாம். ஆதலின், இச்சம்சாரத்தே இக்காமத்தையே நீ வைரியெனவுணர்தி.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவனைப் பலாத்காரமாய் அநர்த்தமார்க்கத்தே யேவுங்காரணமன்றோ நீ கேட்டாய்? அது இக்காமரூப மகாசத்துருவேயாம். இதனானே இவ்வுயிர்கட்குச் சர்வ அநர்த்தமுண்டாம்.

சங்கை:—ஹே பகவன்! இக்காமம் உயிர்களை அநர்த்தத்தே யேவுவதே போலக் குரோதமுமேவுமாதலின் கேவலங் காமத்தே யேவுதல் சம்பவியாதாம்.

சமாதானம்:—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார்:—'க்ரோத ஏஷ:' என. ஹே அர்ச்சுன! விஷயாபிலாஷை வடிவகாமத்தினும் குரோதம் வேறன்றாம்; மற்றோ, இதுவே அதுவாம். கருத்திதுவாம்:—ஒருவன் தனமுதவியவற்றை விழைந்து ஒரு தனிகன்பாற்செல்ல முற்பட்ட துட்டனொருவன் விழைவு நிறைவேறவிடானாயின், அக்காமமே துட்டன்மேற் குரோதமாய்ப் பரிணமிக்கும். இவ்விஷயம் யாவருக்குமனுபவசித்தமாமாதலின், அக்காமமே குரோதரூபமாம். அக்காமரூபமகாசத்துருவையொழிக்கின் சர்வபுருஷார்த்த அடைவுண்டாம். இப்போது அப்பகையை நீக்குமுபாயத்தை யறிவித்தருளும்பொருட்டு அதன்காரணத்தை யறைந்தருளுகின்றார். 'ரஜோகுணஸமுத்பவ:' ஹே அர்ச்சுன! துக்கப்பிரவிருத்தி பலரூப இரஜோகுணத்தைக் காரணமாகவுடையது காமமாம். உலகத்தேகாரணசமானவியற்கைத்தாயதே காரியமாகுமாதலின் இரஜோகுணகாரணம் துக்கப்பிரவிருத்தியாதி ரூபமாவதேபோல, அக்காமகாரியமும் துக்கப் பிரவிருத்தியாதி ரூபமேயாம். இரஜோகுணம்போலத் தமோகுணமும் அக்காமகாரணமாகுமாதலின், 'ரஜோகுணஸமுத்பவ:' என்னும் வசனம்போல 'தமோகுணஸமுத்பவ:' என்னும் வசனமும் கூறியருள்வது தகுதியாமாயினும் துக்கத்தின்கண்ணும் பிரவிருத்தியின்கண்ணும் இரஜோகுணத்திற்கே பிரதானத்தன்மையாமன்றித் தமோகுணத்திற்கின்றாம். ஆதலின், ஈண்டு இரஜோகுணமே கூறியருளப்பெற்றது. இத்துணை கூறியதால் ஸ்ரீபகவானனவர் இப்பொருளுணர்த்தியருளினார்:—சாத்துவிகவிருத்தியால், இரஜோகுணரூபகாரணம் நீங்கப்பெறின் காமரூபகாரியம் தானே நீங்குமாதலின் அச்சாத்துவிகவிருத்தியே இரஜோகுணநிவிருத்திவாயிலாய்க் காமநிவிருத்தியின் உபாயமாம். அல்லது ஹே பகவன்! அக்காமத்திற்கு எவ்வாற்றால் அநர்த்தத்தின்கண்ணே பிரவர்த்தகத்தன்மையென அருச்சுனன் வினவ, ஸ்ரீபகவான்கூறியருளுகின்றார். 'ரஜோகுணஸமுத்பவ:' என. ஹே அர்ச்சுன! துக்கப்பிரவிருத்தியாதிரூப ரஜோகுணத்திற்குற்பத்தி எதனினின்றுமாமோ அது இரஜோகுண சமுத்பவமாம் அத்தகையது அக்காமமாம். கருத்திதுவாம்:—விடயங்களின் அபிலாஷைவடிவ அக்காமம் வெளிப்பட்டு இரஜோகுணத்தையேவி இப்புருஷனைத் துக்கரூப கருமத்தின்கண்ணே பிரவிருத்திப்பிக்கும். ஆகையால், அதிகாரியாலக்காமசத்துரு அவசியம் ஜயிக்கப்படவேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! இவ்வுலகத்தே சத்துருவை வெற்றிகொள்ளும் பொருட்டுச் சாமம், தானம், பேதம், தண்டம், என்னும் நான்குபாயங்கள் உள்ளனவாம். அவற்றுண் முதன் மூன்றால் வசமாகாத சத்துருவைவெற்றிகொள்ளத் தண்டோபாயஞ்செய்க; ஆனால் அம்மூவுபாயங்களைச் செய்யாமலே முதலிலேயே அத்தண்டரூப உபாயஞ்செய்தலுசிதமன்றாம்.

சமாதானம்:—ஸ்ரீ பகவான் அக்காமரூபசத்துருவை வெற்றிகொள்வதில் முதன் மூவுபாயங்கட்கு அசம்பவங் கூறியருளும்பொருட்டு அச்சத்துருவிற்கு இரண்டு விசேஷணங் கொடுத்தருளுகின்றார். "மஹாஸந: மஹாபாப்மா" மகா ஆகாரம் எதற்கோ, அது மகாசனமெனப்படும்; அத்தகையது காமமாம். கருத்திதுவாம்:—அநேகவகையாய மகாபோகங்களையடைந்தும் இக்காமம் திருப்தியை ஒருகாலும் அடைவதின்றாம் இவ்வார்த்தை ஸ்மிருதியின்கண்ணும் கூறப்பட்டுளது.

“ நஜாது காம꞉ காமாநாமுபபோகேந ஶாம்யதி ।
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவாபிவர்த்ததே
யத்ப்ருதிவ்யாம் வ்ரீஹியவம் ஹிரண்யம் பஶவ꞉ ஸ்த்ரிய꞉
நாலமேகஸ்ய தத்ஸர்வமிதி மத்வா ஶமம் வ்ரஜேத் ॥

(போ-ள்.) இக்காமம் பதார்த்தபோகத்தால் ஒருகாலும் சாந்தியையடைவ
தின்றும்; மற்றே, அக்கினியானது நெய் காஷ்டம் முதலியவற்றைப் பெய்தலால்
விருத்தியடைவதேபோல இக்காமமும் மிகு பதார்த்தபோகத்தால் நாடோறும்
விருத்தியையடையும். இப்பிருதிவியின்கண்ணே நெற்கோதுமை முதலிய அன்
னங்களும், பொன்முதலிய தனங்களும், கோ அசுவாதி பசுக்களும், சுந்தர ஸ்திரீ
களும், மற்றும் பிறவும் இச்சையையுடைய ஒரு புருஷனுக்குக் கிடைப்பினும்,
அவை யாவும் காமத்தைத் திருப்திசெய்வதில் சமர்த்துடையதாகாவாயின், அற்ப
போகங்களால் இக்காமசாந்தியெவ்வாறுகும்? மற்றே, ஆகாதாம்; இவ்வாறுராய்
ந்து சாந்தியடையக்கடவன். ஆகையால் தானரூப உபாயத்தால் இக்காம சத்துரு
வசமாகான்; இவ்வாறு சாமபேதமென்னு முபாயங்களாலும் வசமாகான். என்னே?
இக்காமசத்துரு ‘மஹாஶந’ அதாவது, அத்தியந்தம் உக்கிரனுதலின்என்க. இக்
காரணத்தானே இக்காமத்தாலே ஏவப்பட்டவன் பாவகருமத்தாற் றுக்கரூப பலப்
பிராப்தியைபறிவானுயினும், மீண்டும் அப்பாவத்தையேசெய்வன். இத்தகைய அத்
தியந்த முக்கிரமாய இக்காமரூப சத்துரு சாமபேதமென்னு மிரண்டுபாயங்களால்
வசப்படான். என்னே, லோகத்தே நேரான வியற்கையையுடைய சத்துருவே சாம
பேதோபாயங்களால் வசமாவன் என்க. ஆகையால், ஹே அர்ச்சுன! இச்சம்
சாரத்தே நீயிக்காமத்தையே பகைவடிவமாயறிதி. (37)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தே அத்தியந்தம் உக்கிரரூபமாய் அக்
காமத்தே கூறியருளிய சத்துருத்தன்மையை இப்போது மூன்று திருஷ்டாந்தங்க
ளால் வெளிப்படுத்தியருளுகின்றார் :—

சு-ம். தூமேநாவ்ரியதே வஹ்நிர்யதாதர்ஶோ மலேந ச ।
யதோல்பேநாவ்ருதோ கர்ப்பஸ்ததா தேநேதமாவ்ருதம் ॥ (38)

ப-ம். 2 தூமேந 4 ஆவ்ரியதே 3 வஹ்நி꞉ 1 யதா 7 ஆதர்ஶ꞉ 6 மலேந 5 ச 8 யதா
9 உல்பேந 11 ஆவ்ருத꞉ 10 கர்ப்ப꞉ 12 ததா 13 தேந 14 இதம் 15 ஆவ்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எங்ஙனந் தூமமானது அக்கினியை மறையா
நிற்குமோ இரஜரூபமலம் தர்ப்பணத்தை மறையாநிற்குமோ, ஜராயுசருமம் கர்ப்
பத்தை மறையாநிற்குமோ அங்ஙனம், காமம் ஞானத்தை மறையாநிற்கும். (38)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்தூலதேக ஆரம்பத்தின்முன்னர் அந்தக்கர
ணம் காமாதி விருத்திகளையடையாதாதலின், இத்தூல முதிப்பதற்குமுன்னந்தக்
கரணம் சூக்ஷ்மமெனப்படும். அறம்பாவத்தாலுண்டாய இத்தூலத்தேயிருந்து
அந்தக்கரணம் காமாதி விருத்திகளையடையுமாதலின், தூலசரீராவச்சின்ன அந்
தக்கரணத்தின்கண்ணபிவியக்தியையடைவுற்ற அக்காமம் தூலமெனப்படும். அது
வே விஷயங்களின் சிந்தன அவஸ்தையின்கண்ணே அடிக்கடி விருத்தியாகி தூல
தரமெனப்படும். அதுவே விஷயபோகாவஸ்தையில் அத்தியந்தம் விருத்தியாகி
தூலதமம் எனப்படும். ஈண்டு தூலத்தினும் அதிகதூலம் தூலதரமாம், அதனினும்
அதிகதூலம் தூலதமமாம். இவ்வாறவ்வொரேகாமம் கூறிய மூவவஸ்தைகளையெய்
தும். ஆண்டதன்றன் முதற்றூலாவஸ்தையின்கண்ணே திருஷ்டாந்தம் கூறியருளப்
பெறுகின்றது. “தூமேநாவ்ரியதே வஹ்நி꞉” என. ஹே அர்ச்சுன! அக்கினியோ

டுண்டாய அப்பிரகாசரூப தூமம் பிரகாசரூப அக்கினியை மறைப்பதேபோல இத் தூலகாமம் ஞானத்தைமறைக்கும். இப்போது அதன் றன் இரண்டாவது தூலதர அவஸ்தையின்கண்ணே திருஷ்டாந்தங் கூறியருளப்பெறுகின்றது. "யதாஉஶெநா உமெநாஉ" என ஹே அர்ச்சுன! கண்ணாடியினின்றும் பின்னருண்டாய இரஜ ரூபமலம் அதனை மறைப்பதேபோல இத்தூலதரகாமமும் ஞானத்தை மறைக்கும். இப்போது அதன்றன் மூன்றாவது தூலதம அவஸ்தையின்கண்ணே திருஷ்டாந் தங் கூறியருளப்பெறுகின்றது. "யதொஜெநாவுதம் மஹ" என. ஹே அர்ச் சுன! தாயுதரத்தேயிருக்குங் கர்ப்பத்தை எல்லாப்புறத்தும் மூடிக்கொண்டிருக் கும் ஜராயுசருமம் கர்ப்பத்தைமறைப்பதேபோல இத்தூலதமமும் ஞானத்தை மறைக்கும். ஈண்டிம்முத்திருஷ்டாந்தத்தேபரஸ்பரம் இத்துணை விசேஷத்தன் மையுளது :—தூமத்தால் மறைபடினும் அக்கினி தாகாதிரூப தனது காரியத்தை யவசியஞ்செய்யும். இரஜரூபமலத்தால் மறைபட்ட தர்ப்பணமோ பிரதிபிம்பக் கிர கணரூபதன் காரியத்தைச் செய்யாதாம். தர்ப்பணத்தின் சுவச்சத்தன்மைமாத் திரம் இரஜரூபமலத்தால் மறைபட்டுநிற்கும்; ஆனால், அது சொரூபமாயோ பிர தீதியாய்க்கொண்டிருக்கும். ஜராயுவென்னும் சருமத்தால் மறைபட்ட கர்ப்பமோ ஹஸ்தபாதாதிகளை யசைத்தல்வடிவ தனது காரியத்தையும் செய்யாது தனது சொரூபமாயும் பிரதீதியாகாது. இவ்வாறு இத்திருஷ்டாந்தங்களின் விலக்ஷணத் தன்மையை யங்கீகரித்தே அக்காமத்தைத் தூலம், தூலதரம், தூலதமம் என்னும் மூன்றவஸ்தைகளில் முறைப்படி மூன்று திருஷ்டாந்தங்கள் மொழியப்பெற்றன.()

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தே 'தயாதெநெஉாவுதழ்' எனக் கூறி யருளப்பட்ட சங்கிரக வசனத்தின் பொருளை இப்போது விஸ்தாரமாய்க் கூறியரு ளுகின்றார் :—

சு-ம். ஆவுதம் ஜூாநமெதெந ஜூாநிநொ நிதூவெரிணா ।
காஊ‍ரூவெண களஞெய உஷூரெணாநலெநசு ॥ (39)

ப-ம். 4 ஆவுதம் 3 ஜூாநம் 2 வஏதெந 5 ஜூாநிநஃ 6 நிதூவெரிணா 7 காஉ ரூவெண 1 களஞெய 10 உஷூரெண 8 சுநலெந 9 அ.

(அ-ம்.) ஹே கௌந்தேய! இக்காமமே ஞானத்தை மறைப்பதாம், இக்கா மம் ஞானிகட்கு நித்தியமும் வைரியாம், இச்சை திருஷ்ணைவடிவமாம், அக்கினி யைப்போலப் பூர்த்தியற்றதாம். (39)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வஸ்துவையறியும் ஞானமென்னு மந்தக்கரணத் தானே வஸ்துவறியப்பெறும். அல்லது, அந்தக்கரணத்தின் விருத்திவடிவ விவேக விஞ்ஞானமாய ஞானத்தை இக்காமமே மறைத்திருக்கின்றது.

சங்கை :—ஹே பகவன்! இக்காமம் அந்த ஞானத்தை மறைத்திருப்பினும், அவிசாரசித்த சுகவேதுவாதலின் இக்காமம் சுவா யோக்கியமாம்.

சமாதானம்:—ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார். 'ஜூாநிநொநிதூவெரிணா' ஹே அர்ச்சுன! இக்காமம் ஞானிகட்கோ நித்தியமும் வைரியாம்; ஏனெனின், அஞ்ஞானியோ விஷயபோககாலத்தே அக்காமத்தை மித்திரனைப்போன்றே யறி கின்றனன்; அக்காமகாரியரூபதுக்கம் வந்து அடைவுறின்றோ இக்காமமே எனக் குத் துக்கத்தை யடைவித்ததெனஅதனைச் சத்துருவாயெண்ணுவனாதலின், அஞ் ஞானிகட்குக் காமம் நித்தியமும் வைரியன்றாம்; மற்றோ, துக்க பரிணாமகாலத்தே வைரியாம் ஞானியோ விஷயபோககாலத்தும் இக்காமமே என்னை இவ்வனர்த்தத் தின்கண்ணே யேவியதெனக் காமத்தை வைரியேயாயெண்ணுவனாதலின், ஞானி

விடயபோககாலத்தும், துக்கபரிணாமகாலத்தும் இக்காமத்தால் துக்கியேயாவன். இக்காரணத்தால் இது ஞானிக்கு நித்தியமும் வைரியாம் வைரியாமிதனை ஞானி அவசியமாய்க் கொல்லல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! இக்காமவடிவத்தை யறியாது கொல்லல் சம்பவியாதாதலின், இதன் வடிவத்தைக் கூறியருளல்வேண்டும்.

சமாதானம் :—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார். 'காமரூபேண' என. ஹே அர்ச்சுன! இச்சை திருஷ்ணைவடிவ காமமேயாயுள்ளது.

சங்கை :—ஹே பகவன்! அக்காமம் விவேகிக்கு நித்தியமும் வைரியாமாதலின் விவேகியோ அதனை யவசியமாய்க் கொல்லல்வேண்டுமாயினும் அவிவேகிக்கது நித்தியவைரியன்றாதலின், அவனோ அதனை யவசியம் கவரவேண்டும்.

சமாதானம்:—ஸ்ரீபகவான் அருளுகின்றார். 'துஷ்பூரேணாநலேந ச' என. ஹே அர்ச்சுன! அக்கினியானது நெய் விறகு முதலியவற்றாற் றிருப்தியடையாததேபோலக் காமமும் பல்வகையாய போகங்களினானும் திருப்தமாகாதாம்; இக்காரணத்தானே இக்காமம் நிரந்தரம் சந்தாபஹேதுவேயாமாதலின் விவேகியைப் போலவே அவிவேகியும் அக்காமபரித்தியாகமேசெய்க. அல்லது,

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலகத்தே உண்டாமிச்சைகளெல்லாம் விரும்பிய விடயங்கிடைப்பின் நீங்கிவிடும்; இக்காமமும் இச்சைவடிவமேயாதலின் அவ்வவ்விடயபோகத்தால் தானே நீங்கிவிடும்; அதனை நீக்குவான் வேறுபாயத்திற்கு யாதொரு பயனுமின்றாம்.

சமாதானம் :—ஸ்ரீபகவானருளிச்செய்கின்றார். 'துஷ்பூரேணாநலேந ச' என. ஹே அர்ச்சுன! விடய அடைவுகாலத்தே அவ்விச்சை மறைபடினும் காலாந்தரத்தே மீண்டும் அது கிளம்புமாதலின், விடய அடைவு அவ்விச்சையின் நிவர்த்தகமன்றாம்; மற்றோ, விடயங்களிடத்தே அடிக்கடி தோஷதிருஷ்டியே அவ்விச்சையின் நிவர்த்தகமாம். (39)

(அ-கை) ஹே பகவன்! இவ்வுலகத்தே இடமறியப்பெற்ற சத்துருவே ஜயிக்கப்பெறுவன்; இடமறிந்தாலன்றி ஜயிக்கப்பெறானாதலின், இக்காமசத்துருவை ஜயிக்கும்பொருட்டு முதலில் இதனதிஷ்டானத்தை யறிதல்வேண்டும். எவ்வதிஷ்டானத்தைப்பற்றிநின்று இக்காமம் உலகர்க்கு அநர்த்தத்தையீயுமோ அவ்வதிஷ்டானம் யாதாம்? என அருச்சுனற்கு ஆசங்கை நிகழ ஸ்ரீ பகவான் அக்காமாதிஷ்டானத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். இந்த்ரியாணி மநோ புத்திரஸ்யாதிஷ்டாநமுச்யதே ।
ஏதைர்விமோஹயத்யேஷ ஜ்ஞாநமாவ்ருத்ய தேஹிநம் ॥ (40)

ப-ம். 1 இந்த்ரியாணி 2 மந: 3 புத்தி: 4 அஸ்ய 5 அதிஷ்டாநம் 6 உச்யதே 7 ஏதை: 12 விமோஹயதி 8 ஏஷ: 9 ஜ்ஞாநம் 10 ஆவ்ருத்ய 11 தேஹிநம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்திரியம், மனம், புத்தி, என்னுமிம்மூன்றுமே இக்காமாதிஷ்டானமென வியம்பப்பெறும். இம்மூன்றானுமே இக்காமம் ஞானத்தை மறைத்துத் தேகாபிமானிகட்கு மோகத்தைக்கொடுக்கும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சப்தாதியைந்தையும் முறைப்படி விஷயஞ்செய்யும் சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியம், வசனாதியைந்தையும் முறைப்படி யாற்றும் வாக்காதி ஐந்து கருமேந்திரியம் என்னும் பத்து, சங்கற்பவடிவமனம், நிச்சய

வடிவபுத்தி, என்னுமிம்மூன்றுமே இக்காமாதிஷ்டானமாய்க் கழறப்பெறும். இம் மூன்றுமே இது விவேகஞானத்தை மறைத்துத் தேகாபிமானியை நானுவகையாய மோகத்தையடையுமாறு செய்யும். (40)

(அ-கை.) அவ்விந்திரியாதிகளைப்பற்றியே இக்காமம் தேகாபிமானியைஅநேகவகை மோகமடையுமாறு செய்யுமாதலின், நீ முதலில் அவ்விந்திரியாதிகளையே வெற்றிகொள். அவை வெற்றிகொள்ளப்படவே அக்காமமும் எளிதாகவே வெற்றிகொள்ளப்படும் என்னும் பொருளை ஸ்ரீபகவான் அருச்சுனனைநோக்கி யறைந்தருளுகின்றார் :—

சு-ம். தஸ்மாத்த்வமிந்த்ரியாண்யாதௌ நியம்ய பரதர்ஷப ।
பாப்மாநம் ப்ரஜஹி ஹ்யேநம் ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம் ॥ (41)

ப-ம். 2 தஸ்மாத் 3 த்வம் 5 இந்த்ரியாணி 4 ஆதௌ 6 நியம்ய 1 பரதர்ஷப 7 பாப்மாநம் 11 ப்ரஜஹி 10 ஹி 9 ஏநம் 8 ஜ்ஞாநவிஜ்ஞாநநாசநம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அதனால் நீ முதலில் அவ்விந்திரியங்களை வயஞ்செய்து சர்வபாவமூலபூதமும் ஞானவிஞ்ஞான நாசஞ்செய்வதுமாய இக்காமத்தையே நாசமாக்குதி.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஓரரசனுக்குப் பர்வதம் துர்க்கம் முதலன அதிஷ்டானமாயிருப்பதேபோல இக்காமத்திற்குச் சுரோத்திராதியே அதிஷ்டானமாமாதலின், நீ இக்காமமாக்கியமோகத்தின்முன்னேனும், இக்காமநிரோதத்தின் முன்னேனும், அச்சுரோத்திராதிகளை வயஞ்செய்து இக்காமத்தை நாசஞ்செய்தி. அவ்விந்திரியங்களை வயஞ்செய்தாலன்றி இக்காமநாசஞ்செய்ய வியலாதாம். மலை துர்க்காதியின்கண்ணேயிருக்கும் ஓர் அரசனுடைய அவற்றைத் தன்வயஞ்செய்தே மற்றோரரசன் அவ்வரசனைக்கொல்வன், அவற்றை வயஞ்செய்யாமல் கொல்லமுடியாததேபோல இந்திரியங்களை வயஞ்செய்யாமற் காமநாசமாகாதாம்; அவற்றை வயமாக்கியபின்னர் மனம் புத்தியென்னுமிரண்டும்வயமாதலாம்; ஏனெனின், சங்கற்பரூபமனமும் நிச்சயரூபபுத்தியும் பாகியேந்திரியஜன்னிய விருத்திகள்வாயிலாயே அநர்த்தகாரணமாம், அவையின்றி அவ்விரண்டின்கண்ணே அத்தன்மை சம்பவியாதாமாதலின் அப்பொறிகள் வயமானபின்னர் அவ்விரண்டும் அவசியமாய் வயமாம். இக்காரணத்தானே பூர்வசுலோகத்தே 'இந்த்ரியாணி மநோபுத்தி' என்னும் வசனத்தால் இந்திரியம், மனம், புத்தி என்னும் மூன்றையும் வேறுவேறாய்க்கூறியருளியும் இச்சுலோகத்தே 'இந்த்ரியாணி' என்னும் வசனத்தால் கேவலம் சுரோத்திராதி இந்திரியங்களையே கூறியருளினர். அல்லது பாகிய சப்தாதிகளின் ஞானத்தே சுரோத்திராதிகட் கிந்திரியரூபத்தன்மை யிருப்பதேபோல உட்சுகதுக்காதிகளின் ஞானத்தே மனபுத்திகட்கும் இந்திரியரூபத்தன்மையாம். ஆதலின், 'இந்த்ரியாணி' என்னும்பதத்தால் மனபுத்திகளின் கவர்ச்சியுமுண்டாம். ஈண்டு 'ஹே பரதர்ஷப' இச்சம்போதனத்தைக் கூறியருளலால் ஸ்ரீபகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—மகாபரதவம்சத்தே நீ யுதித்தனையாதலின் இந்திரியங்களை வயஞ்செய்வதில் வல்லவனுவாய்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலகத்தே மகா அபராதத்தைச்செய்தவனையே அரசர்முதலாயினோர் அழிப்பர் அபராதமின்றியெவனையும் எவரும் அழியார். அவ்வாறெவ்வபராதத்தையிக்காமம்செய்தது? அபராதமிருப்பினன்றோ யானிதை நாசஞ்செய்தல்வேண்டும்.

சமாதானம் ;—ஸ்ரீபகவான் இக்காமமியற்றிய அபராதத்தை வருணித்தருளுகின்றார். "பாப்மாநம் ஜ்ஞாநவிஜ்ஞாந நாசநம்" என. ஹே அர்ச்சுன! இச்

சீவன் இக்காமவசமாயே சர்வபாவங்களையுஞ்செய்வன்; காமமின்றியவன் எப்பாவத்தையுஞ்செய்யானாதலின் அன்வயவியதிரேகத்தால் இக்காமமே எல்லாப்பாவங்கட்கும் மூலரூபமாம். குருசாஸ்திர உபதேசத்தாலுண்டாய ஆன்மபரோக்ஷ ஞானம், அதன்பலமாய அபரோக்ஷவிஞ்ஞானம் என்னும் மோக்ஷத்தை யடைவிக்குமிரண்டையும் இக்காமம் நாசஞ்செய்வதாம். இத்தகைய மகா அபராதமுடைய காமத்தை யவசியம் நாசஞ்செய்யவேண்டும். (41)

சங்கை :—(அ-கை.) ஹே பகவன்! இக்காமநாசஞ்செய்யும்பொருட்டுப் பூர்வம் தாங்கள் இந்திரியவயஞ்செய்யக் கூறியருளினீர்கள் அஃதொருவாறு பாகிய சுரோத்திராதிகளை வயஞ்செய்தல் கூடுமாயினும் உட்டிருஷ்ணையைத் தியாகித்தல் மிகவும் கூடாததாம்.

சமாதானம் :—ஹே அர்ச்சுன! '𑌰𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇' என்னும் வசனத்தே முன்னர் யாம் பரவஸ்துவின்றரிசனமே இரசரூப திருஷ்ணையின் நிவிருத்தியின்கண்ணே காரணமெனக் கழறிவந்தேம். ஹே பகவன்! எப்பரவஸ்துவின்றரிசனத்தால் அத்திருஷ்ணை நீக்கமாமோ அப்பரவஸ்து யாதாமென அர்ச்சுனனது ஆசங்கை நிகழ, ஸ்ரீ பகவான் அப்பரசப்தத்தின் அர்த்தரூப தூய ஆன்மாவைத் தேகாதிகளினின்றும் வேறுபடுத்தி நிரூபித்தருளுகின்றார் :—

சு-ம். 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌪𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 ।
𑌮𑌨𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑍁 𑌸𑌃 ॥ (42)

ப-ம். 1 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 2 𑌪𑌰𑌾𑌣𑌿 3 𑌆𑌹𑍁𑌃 4 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 6 𑌪𑌰𑌂 5 𑌮𑌨𑌃 8 𑌮𑌨𑌸𑌃 7 𑌤𑍁 10 𑌪𑌰𑌾 9 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 12 𑌯𑌃 13 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 14 𑌪𑌰𑌤𑌃 11 𑌤𑍁 15 𑌸𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சுருதிகள் இத்தூலத்தினும் சுரோத்திராதிகள் பரங்கள் எனக் கூறும், இந்திரியங்களினும் மனம்பரமாம், மனத்தினும் புத்திபரமாம், புத்தியினும் யாதுபரமாமோ அதுவே பரமான்மாவாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தூலமும் ஜடமும் பரிச்சின்னமும் பாகியமும் ஆயதேகாதிகளை யபேக்ஷித்துச் சுரோத்திராதிகள் சூக்ஷ்மமும் பிரகாசகமும் வியாபகமும் உட்டிதமும் ஆமாதலின், வேதவேத்தாக்கள் அல்லது சுருதிகள் தேகாதிகளினும் சுரோத்திராதிகள் பரங்கள் அதாவது உற்கிருஷ்டங்கள் எனக் கூறும். இங்ஙனம் மேலுமறிக. சங்கற்ப விகற்பரூபமனமே சுரோத்திராதிகளை யேவுவதாம்; மனத்தானன்றி அவற்றின் பிரவிருத்தியுண்டாகாதாதலினானே மனசாவதானத்தானன்றிச் சமீப வஸ்துவிற்கும் நேத்திராதிகளால் கவர்ச்சி யேலாதாதலின், சுரோத்திராதிகளினும் மனம் பரமாம். நிச்சயரூப புத்திபூர்வகமாயே மனோசங்கற்பமுண்டாம் அஃதின்றியஃதுண்டாகாதாமாதலின் மனத்தினும் புத்திபரமாம். எவ்வான்மாப் புத்தியின் பிரகாசகமாதலின் புத்தியினும் பரத்தேயிருக்குமோ, எத்தேகியாய ஆன்மாவிற்கு இந்திரியாதி யாசிரயங்களோடுகூடிய இக்காமம் ஞான ஆவரணவாயிலாய் மோகத்தையடைவிக்குமோ அப்புத்தியைக் காணுஞ் சாக்ஷியான்மாவே பரசப்தத்தின்பொருளாம். ஈண்டு "𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑍁 𑌸𑌃" என்னும் வசனத்தின்கண்ணேயிருக்கும் '𑌸𑌃' என்னும் பதத்தால் வியவதானமற்ற வஸ்துவின் பராமர்சமேயாமன்றி மற்றதாகாதாயினும் சுருதியின் கண்ணே, "𑌆𑌤𑍍𑌮𑌨 𑌆𑌕𑌾𑌶𑌃" என்னும் வசனத்தால் ஆன்மாப் பிரதிபாதிக்கப்பட்டு அதன்பின்னர் அநேக பதார்த்தங்கள் பிரதிபாதிக்கப்பட்டு அதன் பின்னர் "𑌸 𑌏𑌷 𑌇𑌹 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌃" என்னும் வசனங்கூறப்பெற்றுளது. இதன்

கண்ணேயிருக்கும் '𑌸𑌃' என்னும் பதத்தால் முன்னர், "𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌵𑍈𑌰𑌿𑌣𑌾" என்னும் வசனத்தின்கண்ணே கூறப்பெற்ற வியவகித ஆன்மாவையும் பராமரிசம் செய்திருப்பதேபோல ஈண்டும் 40-வது சுலோகத்தே. "𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍" என்னும் பதத்தால் கூறப்பெற்ற ஆன்மாவின் பாராமரிசம் '𑌸𑌃' என்னும் பதத்தாற் சம்பவித்தல்கூடும்.

> "𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾 𑌅𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌮𑌨𑌃 ।
> 𑌮𑌨𑌸𑌸𑍍𑌤𑍁 𑌪𑌰𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌹𑌾𑌨𑍍𑌪𑌰𑌃 ॥
> 𑌮𑌹𑌤𑌃 𑌪𑌰𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃 ।
> 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍𑌨 𑌪𑌰𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌸𑌾 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾 𑌸𑌾 𑌪𑌰𑌾 𑌗𑌤𑌿𑌃" ॥

(பொ-ள்.) சுரோத்திராதிகளினும் சப்தாதிகள் பரமாம், அவற்றினும் மனம் பரம், அதனினும் வியஷ்டிபுத்திபரம், அதனினும் ஹிரண்யகர்ப்பாது சமஷ்டி புத்திபரம், அதனினும் மாயைவடிவ அவ்வியாகிருதம்பரம், அதனினும் சர்வ ஜடங்களையும் ஒளிர்விக்கும் பூரண ஆன்மாப்பரம். இத்தகைய பரிபூரண ஆன்மாவினும் யாதாவது பரமாயுண்டோவென ஆசங்கையுண்டாகச் சாக்ஷாத் சுருதி பகவதியானவள் உத்தரங்கூறுகின்றாள்:—'𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍𑌨 𑌪𑌰𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍' என. அப்பரமான்மாவினும் பரமாயெப்பொருளுமின்றாம். இதனானே அப்பரமான்மாவே காஷ்டைவடிவமாம், அதாவது சர்வாதிஷ்டானமாதலின் சமாப்தி வடிவமாம். "𑌸𑍋𑌽𑌧𑍍𑌵𑌨𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍" என்பதாதி சுருதிகளாற் சித்தமாய பராகதிரூபமும் அப்பரமான்மாவேயாம். இவ்வெல்லாப்பொருளையும் "𑌯𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌤𑌸𑍍𑌤𑍁 𑌸𑌃" என்னும் வசனத்தால் ஸ்ரீ பகவான் அருளிச்செய்தனர். ஈண்டுச்சுருதிக்கும் பகவத்வசனத்திற்கும் ஆன்மபரத்வத்திலேயே தாற்பரியமாமன்றி இந்திரியாதிகளின் பரத்வத்திற்றாற்பரியமின்றாம். சுருதியின்கண்ணே "𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃" என்னும் வசனமிருக்குந்தானத்தே ஸ்ரீ பகவானனவர் "𑌅𑌰𑍍𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌰𑌾𑌣𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿" என்னும் வசனத்தைக் கூறியருளினர். ஆண்டுச் சப்தாதிகளில் இந்திரியத்தினும் பரத்வம் சம்பவித்ததேபோல முற்கூறிய ஹேதுவால் இந்திரியங்களிடத்தும் தேகாதிகளினும் பரத்வஞ் சம்பவிக்குமாதலின் அச்சுருதி வசனத்தோடு ஸ்ரீ பகவானது வசனத்திற்கு முரணுண்டாகாதாம். இவ்விரு சுருதிகளின்பொருளை ஸ்ரீ ஆத்மபுராணத்தின் ஒன்பதாவது அத்தியாயத்தே யாம் விஸ்தாரமாய்க் கூறியிருக்கின்றேம். (42)

(அ-கை.) இப்போது பூர்வவசனங்களாற் சித்தித்த பலிதார்த்தத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—

சு-ம். 𑌏𑌵𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 𑌪𑌰𑌂 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌸𑌂𑌸𑍍𑌤𑌭𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 ।
𑌜𑌹𑌿 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍 ॥ (43)

ப-ம். 2 𑌏𑌵𑌂 3 𑌬𑍁𑌦𑍍𑌧𑍇𑌃 4 𑌪𑌰𑌂 5 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 8 𑌸𑌂𑌸𑍍𑌤𑌭𑍍𑌯 6 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 7 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 12 𑌜𑌹𑌿 11 𑌶𑌤𑍍𑌰𑍁𑌂 1 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 9 𑌕𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 10 𑌦𑍁𑌰𑌾𑌸𑌦𑌮𑍍.

(அ-ம்.) ஹே மகாபாகுவையுடைய அர்ச்சுன! இவ்வாறு ஆன்மாவைப் புத்தியினும் பரமெனவறிந்து மனத்தை நிச்சயமய புத்தியாற்றிரஞ்செய்து இத்திருஷ்ணைவடிவமாய்த் துக்கத்தால் வயமாம் காமசத்துருவை நீ நாசஞ் செய்தி.()

(வி-ம்.) ஹே அர்ச்சுன! "𑌰𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌸𑍍𑌯𑌪𑌰𑌂𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇" என்னும் சுலோகத்தே பரசப்தத்தாற் கூறப்பெற்ற பரிபூரண ஆன்மாவைப் புத்தியினும் பரமெனச் சாக்ஷாத்கரித்து, இச்சாக்ஷி புத்தியினும் பரம் என்னும் நிச்சய

புத்தியால் மனத்தை ஸ்திரஞ்செய்து நீ சர்வபுருஷார்த்தத்தையும் நாசஞ்செய்யும் இக்காமசத்துருவை நாசஞ்செய்தி. இது இச்சை திருஷ்ணைவடிவமாம், பரமான்ம சாக்ஷாத்காரமின்றி மிகுந்த துயரானும் கெடுக்கவொண்ணாததாம். இத்தகைய காமம் நசித்தபின்னர் சர்வ அநர்த்த நிவிருத்தியுண்டாம். இதனழிவின்றி ஜன்மமரணாதி யநர்த்த நிவிருத்தியுண்டாகாதாம். ஈண்டு, 'துராஸதம்' எனக் காமத்திற்குக்கூறியருளிய விசேஷணம், இதனையழிக்கும்பொருட்டு அதிகாரி அத்தியந்தம் அதிகமாகமுயல்கவென்னும் பொருளைத் தெரிவித்தருளும்பொருட்டாம். ஹே மகாபாஹோ, வென்னும் சம்போதனையால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—மகா பராக்கிரமத்தையுடைய உனக்கு இக்காமசத்துருவை நாசஞ்செய்தல் அத்தியந்தம் சுகமம் என்பதாம். இம்மூன்றாவது அத்தியாயத்தின் சர்வார்த்தங்களையும் சுருக்கிக்கூறுஞ் சுலோகமிதுவாம் :—

"உபாயகர்மநிஷ்டாத்ர ப்ராதாந்யேநோபஸம்ஹ்ருதா ।
உபேயஜ்ஞாநநிஷ்டாது தத்குணத்வேந கீர்த்திதா ॥

(பொ-ள்.) ஞானநிஷ்டையின் உபாயவடிவ நிஷ்காம கர்மநிஷ்டை இம்மூன்றாவது அத்தியாயத்தே பிரதானமாய்ப் பிரதிபாதிக்கப்பட்டது, பலரூப ஞானநிஷ்டையோ கௌணரூபமாய்க் கூறப்பெற்றது. (43)

ஸ்ரீ பரமஹம்ஸ பரிவிராஜகாசார்ய ஸ்ரீமத்உத்தவாநந்தகிரிசுவாமிகளது பூஜ்யபாதசிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரிசுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகை எனப் பெயரிய வியாக்கியானத்தின்

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# நான்காவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

(அ-கை.) ஆண்டுப் பூர்வாத்தியாயத்தே உபாயத்தாலடைய யோக்கியமாய உபேயரூப ஞானயோகம், அதன் உபாயமாய கருமயோகம் என்னுமிரண்டினையும் முறைப்படி உபேயமாகவும் உபாயமாகவும் ஸ்ரீபகவான் கூறியருளினர். ஆயினும், "ஸாங்க்யம் யோகம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி" எனக்கூறியருளும் வசனரீதியாய்ச்சாத்தியரூப ஞானயோகம், அதன் சாதனரூப கருமயோகமென்னும் இரண்டுயோகங்களின் பலவொருமையால் ஒருமையைக் கூறியருளி அவ்விரண்டு யோகத்தையும் அநேகவித குணவிதானத்தின்பொருட்டு ஸ்ரீ பகவான் வித்யாவம்சத்தைக் கூறும்வாயிலாய்த் துதித்தருளுகின்றார் :—

ஶ்ரீபகவாநுவாச.

சு-ம். இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவாநஹமவ்யயம் ।
விவஸ்வாந்மநவே ப்ராஹ மநுரிக்ஷ்வாகவேऽப்ரவீத் ॥ (1)

ப-ம். 2 இமம் விவஸ்வதே 4 யோகம் 6 ப்ரோக்தவாந் 1 அஹம் 3 அவ்யயம் 7 விவஸ்வாந் 8 மநவே 9 ப்ராஹ 10 மநு: 11 இக்ஷ்வாகவே 12 அப்ரவீத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாம் இந்நாசமற்ற ஞானயோகத்தை முதலில் சூரியனுக்குபதேசித்தனம், அச்சூரியன் தனது மனுவென்னும் புத்திரனுக்குப தேசித்தனன், அம்மனு தன்னிக்ஷுவாகுவென்னும் மைந்தனுக்கு உபதேசித்த னன். (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! துவிதீய திருதீய அத்தியாயங்களாற் கூறப்பெற்ற எஞ்ஞானநிஷ்டையாகிய ஞானயோகம் கருமநிஷ்டையாகிய கருமயோக உபா யத்தால் அடையப்பெறுமோ அதனைச் சர்வசகத்தையுங் காப்பாற்றும் வாசுதேவ ராகிய யாம் சிருஷ்டியின் ஆதிகாலத்தே சூரியன்பொருட்டு உபதேசித்தனம், அவன் சர்வ க்ஷத்திரியவம்சத்திற்கும் விரையாவன். கருத்திதுவாம்:—ஞான யோக அடைவுவாயிலாய் அரசர்களிடத்தே பலத்தையுண்டாக்கி அவ்வரசரதீன மாய்ச் சர்வஜகத்தையுங் காக்கும்பொருட்டு யாம் அவர்களுக்கு ஞானயோகத்தைக் கூறினேம். ஹே பகவன்! இந்த ஞானயோகத்தால் அவ்வரசர்கள்பால் எவ்வாறு பலமுண்டாம் என அர்ச்சுனனது ஆசங்கைநிகழ, ஸ்ரீபகவான் இந்தஞானயோகத் தே விசேஷணமாய்ப்பலமுண்டாங்காரணத்தன்மையை நிரூபித்தருளுகின்றார் 'அவ்யயம்' என. ஹே அர்ச்சுன! நாசமற்ற வேதபகவானே ஞானயோகத்திற்கு மூலரூபமாமாதலின் இது அவ்யய நாமத்தாற்கூறப்பெறும். அல்லது, ஞான யோகபலமாய மோக்ஷம் நாசமற்றதாமாதலினானும் இது அவ்யயமெனப்பெறும். இவ்வாறு வேதரூபமூலத்தாலும் மோக்ஷபலத்தாலும் நாசமற்ற ஞானயோகத்தே அரசர்கட்குப் பலமுண்டாந்தன்மை சம்பவிக்கும். ஹே அர்ச்சுன! எமதுசீடனா கிய சூரியன் தனது வைவஸ்வதமனுவென்னும் புத்திரன்பொருட்டு இந்த ஞான யோகத்தை யுபதேசித்தனன், அம்மனு தனது இக்ஷுவாகு மைந்தன்பொருட்டு இதனை யுபதேசித்தனன், அவ்விக்ஷுவாகு சர்வராஜாக்களினும் ஆதிராஜாவாம். ஸ்ரீபகவானதுபதேசம் மந்வந்தரந்தோறும் ஸ்வாயம்புவமனுவாதி சர்வமனுக்கட் கும் சாதாரணமேயாமாயினும், இப்போதிருக்கும் வைவஸ்வதமன்வந்தர அபிப் பிராயத்தால் ஸ்ரீபகவான் சூரியனிலிருந்து வித்தியா சம்பிரதாயத்தை எண்ணிக் கை செய்தருளினர். (1)

(அ-கை.) அன்றியும்:—

சு-ம். ஏவம் பரம்பராப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது: ।
ஸ காலேநேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ॥ (2)

ப-ம். 2 ஏவம் 3 பரம்பராப்ராப்தம் 4 இமம் 5 ராஜர்ஷய: 6 விது: 7 ஸ: 11 காலேந 9 இஹ 10 மஹதா 8 யோக: 12 நஷ்ட: 1 பரந்தப.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு பரம்பரையாய் அடைவுற்ற இந்தஞான யோகத்தை இராஜஇருஷிகள் அறிந்திருந்தனர். இது இப்போது தீர்க்ககாலமாய் நஷ்டமடைந்துவிட்டது. (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு சூரியனேமுதலாகக் குருசிஷ்யபரம் பரையாய் அடைவுற்ற இந்த ஞானயோகத்தை நிமி, ஜனகன், அஜாதசத்துரு, கைகேயன் முதலிய இராஜஇருஷிகள் சூக்ஷுமஅர்த்தத்தையறிந்திருந்த தத்தமது ஆசிரியர் பிதாமுதலியவரிடத்திருந்தறிந்தனர். இராஜாக்களாய் இருஷிகளுமா யிருப்பவர் இராஜஇருஷிகளாவர். அதாவது, க்ஷத்திரிய அரசர்கட்கு இராஜஇரு ஷிகளெனப்பெயராம். அல்லது 'ராஜர்ஷய:' என்னும் பதத்தால் அரசர்களையும்

இருஷிகளையும் வேறுவேருய்க்கவர்க. ஆண்டு இராஜசப்தத்தாளே, நிமிமுதலிய
வரைக்கொள்க. இருஷிசப்தத்தாளே, சனக வசிஷ்டாதியரைக் கவர்க என்னும்
பொருள் ஒருரையின்கண்ணே கூறப்பெற்றுளது. மற்ருேருரையிலோ, 'ராஜ
ஷ-ஷய:' என்னும் பதத்தால் முற்கூறியமுறையே க்ஷத்திரிய இராஜாக்களேயே
கொண்டுளார், ஆனல் அப்பதத்தைச் சனகவசிஷ்டாதிய பிராஹ்மண இருஷிகட்
கும் உபலக்ஷகமாயுமங்கீகரித்துளார். ஆதலின் இஞ்ஞானயோகம் அநாதிவேத
மூலகமாதலினனும், நாசமற்ற மோக்ஷரூப பலஜனகமாதலினனும், அநாதிகுரு
சீடரின்பரம்பரையாய்ப் பிராப்தமாதலினனும் கிருத்திரிம சங்கைக்கு விஷயமாகா
தாம். கருத்திதுவாம் :—இஞ்ஞானயோகம் முன்னரின்ரும்; மற்ருே, இப்போது
தானுண்டாயது என்னும் கிருத்திரிமசங்கை இதன்கண்ணே சம்பவியாதாம்.
இத்தகைய மகாமகிமைவாய்ந்தது இந்த ஞானயோகமாம். இங்ஙனம் இதன்பால்
முமுக்ஷுக்கட்கு அத்தியந்தம் சிரத்தையுண்டாக்கும்பொருட்டு ஸ்ரீ பகவானனை
வர் இதன்றுதியைக் கூறியருளினர். ஹே அர்ச்சுன! இத்தகைய மகாப்பிரயோஜ
னமுடையதேனும் ஞானயோகம் தருமக்குறைவைச்செய்யும் தீர்க்ககாலத்தால்
இத்துவாபராந்தத்தே எமதுன துவிபவகாரகாலத்தே துர்ப்பல அஜித இந்திரிய
அநதிகாரிகளையடைவுற்றுக் காமக்குரோதாதி விகாரங்களால் குன்றுதலையடைந்த
தாய் விச் சின்னசம்பிரதாயமுடையதாயது இந்தஞானயோகத்தானன்றி அதிகாரி
கட்கு மோக்ஷரூப பரமபுருஷார்த்தப் பிராப்தியுண்டாகாதாதலின், இவ்வுலகர்க்
கத்தியந்தம் துர்ப்பாக்கியமாம். ஈண்டு, 'ஹெ வரஜவ' என்னும் சம்போதனத்
தைக்கூறலால் ஸ்ரீபகவானனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் : வரஃ
ஶத்ரூஂதாவயதீதிவரஃதவஃ காமக்குரோதாதி சத்துருக்கள் பரமெனப்படுவர்;
அவற்றையாவன்றன்சௌரியத்தன்மையினனேனும்,பலமாயவிவேகத்தானேனும்,
தவத்தானேனும் சூரியனைப்போலத்தபிப்பிப்பனே அவன் பரந்தபனெனப்படுவன்;
அதாவது ஜிதேந்திரிய புருடனுக்குப் பரந்தபனெனப்பெயராம். நினது ஜிதேந்திரி
த்தன்மை ஊர்வசியாதி தேவாங்கனைகளை யுபேக்ஷித்தலால் பிரசித்தமேயாம் அத் (2)
தகையனுதலின் நீ இஞ்ஞானயோகத்தே அதிகாரியாவாய்.

(அ-கை) அன்றியும் :—

சு-ம். ஸ ஏவாயம் மயாதெ௨ஷ்ய யொமு வெ்ராக்தஃ வ—ராதநஃ ।
ஹக்தொஷி மெஸவாசெதி ரஹஸ்யூ ஹெ்யதஉ—தூஃ॥ (3)

ப-ம. 1 ஸஃ 2 ஏவ 3 அயஂ 7 மயா 8 தெ 6 அஷ்ய 5 யொமுஃ 9 வெ்ராக்தஃ 4 வ—
ராதநஃ 12 ஹக்தஃ 13 அஷி 11 மெ 15 ஸவா 14 அ 10 இதி 19 ரஹஸ்யூஂ
16 ஹி 17 ஏதக் 18 உத்தூஂ.

(அ-ம்) ஹே அர்ச்சுன! அவ்விந்த அநாதியாய ஞானயோகமே இக்கால்
எம்மால் நின்பொருட்டுபதேசிக்கப்பெற்றது நீ யெனது பக்தனும் தோழனுமாத
லின், இந்தஞானயோகம் உத்தமமும் அத்தியந்தம் இரகஸ்யமுமாமாதலின்னென்க.

(வி.ம்.) ஹே அர்ச்சுன! ஞானயோகத்தை முன்னர் யாம் சூரியாதி சீடர்
பொருட்டுபதேசஞ் செய்தனமாயினும் இக்கால் அதிகாரிகளினபாவத்தால் விச்
சின்ன சம்பிரதாயமுடையதாயது. இந்த ஞானயோகமின்றி இப்புருடர்கட்கு
மோக்ஷரூப பரமபுருஷார்த்தப்பிராப்தி யுண்டாகாது. இத்தகைய குருசீடபரம்ப
ரையால்அநாதியாய ஞானயோகமே சம்பிரதாயவிச்சேத இக்காலத்தே அதிசிநேக
த்தோடுகூடிய யாம் நின்பொருட்டு விஸ்தாரமாய் உபதேசித்தனம். வேறெவனே
னும் ஒருவனுக்கு யாமிதனை யுபதேசித்திலம். நீ எமது பக்தனுதலினனும்,
அதாவது எமது சரணுகதியையடைந்த நீ எம்மிடத்தே அத்தியந்தம் பிரீதியுடை

யவனாதலினாலும், நீ யெமது தோழனாதலினாலும், அதாவது எமது சமான அவஸ்தையுடையவனாதலினாலும், எம்மிடத்தே சிநேகமுடையவனாதலினாலும், எமக்குச் சகாயஞ்செய்பவனாதலினாலும், இந்த ஞானயோகத்தை யாமுனக்குபதேசித்தனம்.

சங்கை :—ஹே பகவன் ! இந்த ஞானயோகத்தை யென்னினும் வேறாயவர்க்குத் தாங்கள் ஏனுபதேசிக்கவில்லை ?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளிச்செய்கின்றார். ‘ரஹஸ்யம் ஹ்யேதது³த்தமம்’ என. ஹே அர்ச்சுன ! எதனால் இந்த ஞானயோகம் அத்தியந்தமுத்தமமும், அத்தியந்தம் இரகசியமாய்வைக்கத் தகுதியதும் ஆமோ அதனால் யாம் இதனை வேறெவருக்கு முபதேசித்திலம்.

> “ வித்³யாஹவை ப்³ராஹ்மணமாஜகாம கோ³பாயமாம் ஸேவதி⁴ஷ்டேஹமஸ்மி ।
> அஸூயகாயாந்ருஜவேயதாய நமாப்³ரூயாவீர்யவதீ ததா²ஸ்யாம் ॥

(பொ-ள்.) ஒருகாலத்தே பிரஹ்மவித்தை பிரஹ்மவேத்தாவாய பிராஹ்மணர்சமீபத்தே சென்று அவர்களைநோக்கி இவ்வாறுகூறினள் :—ஹே பிராஹ்மணர்களே ! நீங்கள் என்னை அத்தியந்தம் இரகசியமாய்வையுங்கள், அதனால் யான் உங்கட்குப்போகமோக்ஷமிரண்டையுங் கொடுக்கின்றனன், கிருபையோடு கூடியவர்களாய் என்னை இரகசியமாய் வைக்க முடியாதவர்களாவீரேனும் விவேக வைராக்கியாதி சாதனசம்பன்ன அதிகாரிகட்கு என்னையுபதேசியுங்கள். யாவன் அசூயையுடையவனோ, நேர்மையற்றவனோ, மனசகித இந்திரியங்களை நிக்கிரகஞ்செய்யாதவனோ அவ்வநதிகாரிக்கு ஒருகாலும் என்னையுபதேசிக்கவேண்டாம் ; மற்றோ, அதிகாரிகட்கே உபதேசியுங்கள். அங்ஙனஞ்செய்யின் யான் பலகாரணமாவேன். இச்சுருதியின் விரிவாயபொருளை ஆன்மபுராண இரண்டாவது அத்தியாயத்தே யாம் கூறியுள்ளேமாதலின் ஈண்டு சுருக்கிக்கூறினேம்.　(3)

(அ-கை.) சாஸ்திரவிசாரமற்ற மூர்க்கர்கட்கு வசுதேவர் திருக்குமாராய ஸ்ரீபகவானிடத்தே மனுஷ்யத்தன்மை வடிவஹேதுவால் அசர்வஞ்ஞத்தன்மை அநித்தியத்தன்மைச் சங்கையுண்டாதலை நீக்கும்பொருட்டு அச்சங்கையையனுவதித்து அர்ச்சுனன் ஸ்ரீபகவானை வினவுகின்றனன் :—

அர்ஜுந உவாச.

சு-ம்.　அபரம் ப⁴வதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத꞉ ।
　　கத²மேதத்³விஜாநீயாம் த்வமாதௌ³ ப்ரோக்தவாநிதி ॥　(4)

ப-ம்.　3 அபரம் 1 ப⁴வத꞉ 2 ஜந்ம 6 பரம் 5 ஜந்ம 4 விவஸ்வத꞉ 12 கத²ம் 11 ஏதத் 13 விஜாநீயாம் 7 த்வம் 8 ஆதௌ³ 9 ப்ரோக்தவாந் 10 இதி.

(அ-ம்.) ஹே பகவன் ! தேவரீருடைய அவதாரமோ இப்போதுண்டாகியிருக்கின்றது, சூரியனது உற்பத்தியோ முன்னருண்டாகியிருக்கின்றது. ஆதலின் தேவரீர் சிருஷ்டியினாதியில் சூரியனுக்கு இந்த ஞானயோகத்தைக் கூறியருளினீர்களென்னும் வார்த்தையை யான் எவ்வாறு நிச்சயஞ்செய்வேன் ?

(வி-ம்.) ஹே பகவன் ! தேவரீருக்குத் திருமேனி கவர்தல்வடிவ அவதாரமோ இந்தத் துவாபராந்தத்தே வசுதேவரது கிருகத்தே உண்டாகியிருக்கின்றது. மனுஷ்யத்தன்மைச்சாதியுடையதாதலின் தாழ்ந்ததாம். சூரியனது ஜன்மமோ சிருஷ்டியாதிகாலத்தே யுண்டாகியிருக்கின்றது தேவத்தன்மைச்சாதியுடையதாதலின் உயர்ந்ததாம். ஈண்டு, ‘நஜாயதே ம்ரியதேவாகதா³சித்’ என்பதாதி வசனங்

களால் பூர்வம் ஆன்மாவின் ஜன்மாபாவம் விஸ்தாரமாய்க்கூறப்பெற்றதாதலின்,
ஆன்மாவின் ஜன்மத்தின்கண்ணே அர்ச்சுனன்வினுச் சம்பவிக்கமாட்டாது ; மற்
றே, தூலதேக ஜன்ம அபிப்பிராயத்தானே சம்பவிக்கும். ஆதலின், இக்காலவத
ரித்த அசர்வஞ்ஞமனுஷ்யாகிய தேவரீர் முன்னர்ச் சிருஷ்டியாதிகாலத்தே யுற்ப
ன்னமாய சர்வஞ்ஞ சூரியன்பொருட்டு இந்த ஞானயோகத்தை எவ்வாறுகூறியரு
ளினீர்? இப்பொருளை யான்முரண்படாது துணிவுபடுத்திக்கோடல் யாங்ஙனமாம்?
மற்றே, தேவரீரது வாக்கியப்பொருள் முற்றினும் முரண்பாடுடையதாய் எனக்கு
த்தோற்றுகின்றது. ஈண்டர்ச்சுனனதபிப்பிராயமிதுவாம்:—இத்திருமேனியினும்
வேறுய திருமேனிகொண்டு சூரியனுக்கு இந்த ஞானயோகத்தை யுபதேசித்தீர்
களா? அல்லது இத்திருமேனிகொண்டேயா? முதற்பக்ஷஞ்சம்பவியாது, ஏனெ
னின், முற்பிறப்பில் அனுபவித்த பொருளின் ஸ்மரணம் பின்வேறுபிறப்பில் அசர்
வஞ்ஞர்க்குண்டாகாது ; அவ்வாறுண்டாகுமாயின் எனக்குமங்ஙனுண்டாகவேண்
டும், ஆனுலுண்டாவதோ இன்றும். தேவரீரிடத்தும் என்னிடத்தும் மனுஷ்யரூ
பத்தன்மையானே அசர்வஞ்ஞத்தன்மை துல்லியமேயாமாதலின் எனக்கேபோலத்
தேவரீருக்கும் முற்பிறப்பிலனுபவித்ததின் ஸ்மரணம் இப்பிறப்பிலுண்டாகமா
ட்டாது. இரண்டாவது பக்ஷமுஞ்சம்பவியாது ; ஏனெனின், இப்போதுள்ள வசு
தேவபிதாவினின்று முண்டாய இத்திருமேனி சிருஷ்டியாதிகாலத்தேயின்றமாத
லின் இதனுனும் சூரியனுக்குத் தேவரீரது உபதேசஞ்சம்பவியாதாம். இதனுலிப்
பொருடுணிபப்பெறும் :—இத்திருமேனியினுமயலாய் வேறெத்திருமேனியினுலே
னும் சிருஷ்டியாதிகாலத்தே தேவரீரது திதி சம்பவிக்குமேனும் அதனுலனுபவித்
த அர்த்தஸ்மரணம் இதன்பாற்சம்பவியாதாம். இதனுல் ஸ்மரணசித்தியுண்டா
மேனும் சிருஷ்டியாதிகாலத்தே இத்திருமேனியின்றிதி சம்பவியாதாம். இவ்வாறு
அசர்வஞ்ஞத்தன்மை அநித்தியத்தன்மையென்னும் இரண்டேதுவால் அர்ச்சுனனு
டைய இரண்டு பூர்வபக்ஷங்களும் சித்தமாம். (4)

(அ-கை.) ஆண்டு ஸ்ரீபகவான் தம்மிடத்தே சர்வஞ்ஞத்தன்மையைக் கூறி
யருளி முதற்பூர்வபக்ஷத்தின் பரிகாரத்தைக் கூறி யருளுகின்றார் :—

ஸ்ரீபகவாநு உவாச.

சு-ம். பஹூநி மெ வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ।
தாந்யஹம் வெத ஸர்வாணி ந த்வம் வெத்த பரந்தப ॥ (5)

ப-ம். 5 பஹூநி 2 மெ 7 வ்யதீதாநி 6 ஜந்மாநி 4 தவ 3 ச 1 அர்ஜுந 8 தாநி
10 அஹம் 11 வெத 9 ஸர்வாணி 14 ந 13 த்வம் 15 வெத்த 12 பரந்தப.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எமக்கும் உனக்கும் அநேக ஜன்மங்கள் கழிந்தன
வாம் அவ்வியாவற்றையும் யாமறிவேம் ஹே பரந்தப! நீயவற்றையறியாய்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகர், எப்போதுமிருக்கும் சூரியனுக்கும்
உதயமங்கீகரித்திருப்பதேபோல உண்மையாய் ஜன்மமற்றிருப்பினும் லோகதிரு
ஷ்டியபிப்பிராயங்கொண்டு லீலாமாத்திரமாய்த் தேகக்கிரகணரூப அநேக ஜன்
மங்கள் எமக்குக்கழிந்தன. ஆன்மஞானமற்ற நினக்கும் கருமவயத்தால் தேகக்
கிரகணவடிவ அநேக ஜன்மங்கள் முன்னருண்டாயின. ஈண்டு 'தவ' என்னும்
இவ்வொரு அர்ச்சுனவாசகபதம் வேறு ஜீவர்கட்கும் உபலக்ஷகமாம். அல்லது,
'தவ' என்னும் பதம் ஏகஜீவவாத அபிப்பிராயத்தானே கூறியருளியதாம். ஹே
அர்ச்சுன! எமது, உனது, மற்றையாது சர்வ ஜன்மங்களையும் சர்வஞ்ஞ சர்வசக்தி
சம்பன்ன ஈஶ்வராராய யாமேயறிவேம். மறைபட்ட ஞானசக்தியையுடைய அஞ்
ஞானியாகிய நீ அவ்வியாவற்றையுமறியாய். கருத்திதுவாம்:—நீ அஞ்ஞான

தோஷவசத்தால் முன்னர்க்கழிந்த நினது ஜன்மங்களையுமறியாயெனின் முன்னர்க் கழிந்த எமது ஜன்மங்களையும் மற்றையரது ஜன்மங்களையும் நீ யெங்ஙனமறிவாய்; மற்றே, நீ யறியாய். ஈண்டு, "ஹே அர்ஜுந" என்னும் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—சாஸ்திரத்தின்கண்ணே ஒரு விருக்ஷ விசேஷம் அர்ச்சுனமெனப்பட்டுளது, அதனது ஞானசக்தி மறைபட்டிருப்பதேபோல நினது ஞானசக்தியும் மறைபட்டேயிருக்கின்றதாதலின் நின்பிறப்பையும் எமது ஜன்மத்தையும் நீயறியாய். ஹே பரந்தப! என விளித்தலால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர்:—பரம் சத்துருவாம்; அதனைப் பேத திருஷ்டியாற் கற்பித்து, அதனைக்கொல்வதில் நீ முயன்றுளாய்; ஒரு மூடபாலகன் தன்தேகத்தையே பேயெனக் கற்பித்து அதைக்கொல்வதில் முயல்வதேபோலும். ஆகையால் விபரீத தரிசியாதலின் நீ பிராந்தனுவாய். ஈண்டு 'ஹே அர்ஜுந ஹே பரந்தப' என்னுமிரண்டு சம்போதனங்களால் ஸ்ரீ பகவானனவர் ஆவரண விக்ஷேபமென்னுமிரண்டன்கண்ணஞ்ஞானரூபத்தன்மையைக் கூறியருளினர். (5)

(அ-கை.) ஹே பகவன்! பூர்வங்கழிந்தனவாய தேவரீரது அநேக ஜன்மங்களைத் தாங்கள் ஸ்மரணஞ்செய்தருளுவீர்களாயின் தேவரீரும் ஜாதிஸ்மரரெனப் பெயரிய ஜீவ விசேஷமாவீர்கள்; ஏனெனின், ஜாதிஸ்மரயோகிகட்குச் சர்வான்ம அபிமானத்தால் வேறு ஜன்மங்களின் ஞானமும் சம்பவித்தல்கூடும். வாமதேவருக்குச் சர்வான்ம அபிமானத்தால் பூர்வ அநேக ஜன்மங்களின் ஸ்மரணமுண்டாயது. ஆண்டுஅவர் தாயுதரத்திருந்து இவ்வகை வசனத்தைக்கூறினர் :—ஹே அதிகாரிகளே! வாமதேவனுய யான் ஜீவனுயினும் முன்னர் மனுவாயிருந்தேன், சூரியனுயிருந்தேன், கக்ஷீவான் இருஷியாயிருந்தேன். இங்ஙனம் அவர் சர்வான்ம அபிமானத்தால் பூர்வ அநேக ஜன்மங்களை ஸ்மரணஞ்செய்தனர். அதனுல் அவரிடத்தே முக்கிய சர்வஞ்ஞத்தன்மை சித்தமாகாததேபோலப் பூர்வஜன்மங்களின் ஸ்மரணத்தால் தேவரீரிடத்தும் அது சித்தமாகாதாம். ஆதலின், ஈசுவரபாவமற்ற தேவரீர் பூர்வம் சர்வஞ்ஞ சூரியன்பொருட்டு ஞானயோகத்தை எங்ஙனம் உபதேசித்தீர்கள்; மற்றே, அவ்வுபதேசஞ் சம்பவியாதாம். ஜீவனிடத்தே முக்கிய சர்வஞ்ஞத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், வியஷ்டியுபாதியுடையவன் ஜீவனெனப்படுவன். அவன் பரிச்சின்னனேயாவனுதலின், அவனுக்குப் பூதபவிஷ்யத் வர்த்தமான சர்வ பதார்த்தங்களோடு சம்பந்தமே சம்பவியாதாம்; ஆகவே சர்வபதார்த்த ஞானஞ்சம்பவியாதாம். சமஷ்டியுபாதியையுடைய விராட்டிற்கும் அத்தகைய ஹிரண்யகர்ப்பருக்கும் சர்வபதார்த்த ஞானம் சம்பவியாதாமெனின், வியஷ்டியுபாதிகனுக்கு யாது வார்த்தையுளது? ஏனெனின், விராட்டிற்குத் தூல பூதகாரிய விஷயஞானஞ் சம்பவிக்குமாயினும், சூக்ஷ்மபூத பரிணுமவிஷய ஞானமும் மாயாபரிணுமவிஷய ஞானமும் சம்பவியாதாம். இவ்வாறே ஹிரண்ய கர்ப்பருக்கு, தூலசூக்ஷ்மபூத பரிணுமவிஷய ஞானஞ்சம்பவிக்குமாயினும், அச்சூக்ஷ்மபூதகாரணரூப மாயாபரிணுமவடிவ ஆகாசாதி சிருஷ்டிக்கிரமாதிவிஷயக ஞானஞ்சம்பவியாதாம். ஆகையால், விராட்டிரண்ய கர்ப்பர்களிடத்தும் முக்கிய சர்வஞ்ஞத்தன்மை சம்பவியாதாயின், வியஷ்டியுபாதியையுடைய ஜீவனிடத்தே அஃதெங்ஙனஞ் சம்பவிக்கும்; மற்றே, சம்பவியாதாம். ஆகையால், மாயாரூபகாரண உபாதியுடையதாதலின் பூத பவிஷ்யத் வர்த்தமான சர்வபதார்த்த விஷயக ஞானமுடைய ஈஸ்வரரே முக்கிய சர்வஞ்ஞராவர். இத்தகைய ஜன்மமரணமற்ற நித்திய சர்வஞ்ஞ ஈசுவரரிடத்தே புண்ணியபாவ கருமமின்றுமாதலின், அவருக்கு முதவிலோ ஜன்மமாதலே சம்பவியாதாமாயின் முன்கழிந்த அநேக ஜன்மங்கள் அவருக்கு எங்ஙனஞ் சம்பவிக்கும்; மற்றே, சம்பவியாவாம். ஆதலின், இப்பொருள் துணியப்பெறும்:—தேவரீர் ஜீவனுயின் என்போலத் தேவரீரிடத்தும் சர்வஞ்ஞத்தன்மை சம்பவியாதாம். தேவரீரீசுவரராயின், தேவரீரிடத்தே தேகக் கவர்ச்சி

வடிவஜன்மஞ் சம்பவியாதாம் எனவுண்டாம் அர்ச்சுனனது இரண்டு சங்கைகளை யும் நீக்கியருளுபவராய ஸ்ரீ பகவான் முன்மொழிந்த அநித்தியத்வபக்ஷத்திற்கும் பரிகாரமருளிச்செய்கின்றார் :—

சு-ம். அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥ (6)

ப-ம். 1 அஜ: 3 அபி 2 ஸந் 4 அவ்யயாத்மா 5 பூதாநாம் 6 ஈஶ்வர: 8 அபி 7 ஸந் 10 ப்ரக்ருதிம் 9 ஸ்வாம் 11 அதிஷ்டாய 13 ஸம்பவாமி 12 ஆத்மமாயயா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! யாம் ஜன்மமரணமற்றிருப்பினும், சர்வ பூதங்கட்கும் ஈசுவரராயினும் எமது மாயையைப்பற்றி எமது மாயையால் ஜன்மமுடைய வராவேம்.

(வி-ம்.) அபூர்வ தேகேந்திரியாதிகளின் கிரகணம் ஜன்மமாம், முற்கவர்ந்த அவற்றை வியோகித்தலாய மரணம் விபயமாம் ; இவ்விரண்டையுமே நையாயிகர் பிரேத்யபாவமென்பர். இவ்விரண்டையும் 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்னும் வசனத்தால் முற்கூறிபருளப்பட்டது. இவ்விரண்டும் ஜீவர்கட்கு அறம்பாவவயத்தால் எய்தும். அவ்வறம்பாவவயத்தன்மை தேகாபிமானிகளாய அஞ்ஞானிகட்குக்கர்மாதிகாரித்தன்மையினுனேயாம். சர்வகாரணரூப சர்வஞ்ஞ ஈசுவரருக்கு இவ்வாறாகத் தேகக்கிரகணவடிவ ஜன்மம் சம்பவியாதாமென முன்னர்க்கூறிய்து உண்மையேயாம் ; ஏனெனின், ஈசுவரரது சரீரம் தூலபூதங்களின் காரியரூபமாம், அவ்வாறாகியும் அது வியஷ்டிரூபமாயின் நனவின்கண்ணேயிருக்கும் நம்மனோராய விசுவஜீவ தூல்வியரேயாவர். சமஷ்டிரூபமாயின் அவரிடத்தே விராட்டுச் சிவத்தன்மையுண்டாம் ; சமஸ்டிதூல உபாதியையுடையது விராட்டேயாதலின், சூக்ஷ்மபூதங்களின் காரியரூபமாயினும் வியஷ்டிரூபமாயின், அவரிடத்தே கனவின்கண்ணுள்ள தைஜசதூல்வியத்தன்மையுண்டாம் ; சமஷ்டிரூபமாயின், அவரிடத்தே ஹிரண்யகர்ப்ப ஜீவத்தன்மையுண்டாம். சமஷ்டி சூக்ஷ்ம உபாதியையுடையவர் ஹிரண்யகர்ப்பரேயாவராதலின், இப்பொருள் துணிபப்பெறும் :—பௌதிகமாயதும் எஜ்ஜீவனுமாசிரயியாததும் ஆய சரீரம் ஈசுவரர்க்குச்சம்பவியாதாம். ஒரு ஜீவனோடுகூடிய பௌதிகசரீரத்தே பூதாவேசம்போல அவ்வீசுவரர் புகுந்துளாரெனக்கூறலுஞ் சம்பவியாதாம் ; ஏனெனின், எஜ்ஜீவ[illegible] பௌதிக சரீரத்தே அவ்வீசுவரர் பிரவேசித்தனரோ அச்சரீரத்தால் அச்சீவ[illegible] சுகதுக்க[illegible]ண்டாமா ? அல்லதின்றோ ? ஆண்டு முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கின் அந்தரியாமிரூபத்தால் அவ்வீசுவரரது பிரவேசம் சர்வ சரீரங்களிலும் இருக்கின்றதாதலின் அவருக்குச்சரீரவிசேஷ அங்கீகாரஞ்செய்தல் பயனற்றதாம். இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கினோ அச்சரீரம் ஜீவனுக்குச் சம்பவியாதாமாதலின், எவ்வாற்றானும் ஈசுவரருக்குப் பௌதிக சரீரம் சம்பவிக்கமாட்டாதாம். என்னுமிவ்வெல்லாப்பொருளையும் ஸ்ரீ பகவான் சுலோகத்தின் பூர்வார்த்தத்தால் அங்கீகரிததருளியுள்ளார் "அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந்" என. ஹே அர்ச்சுன! அபூர்வதேகக்கிரகணரூப ஜன்மமற்றவர் யாமாவேம். பூர்வதேக பரித்தியாகரூபவியயமாகிய மரணமற்றவரும் யாமாவேம். பிரஹ்மாமுதற் றம்பமீறாகியுள்ள சர்வ பூதங்கட்கும் யாம் ஈசுவரராவேம். இத்துணை கூறியருளியதால் ஸ்ரீ பகவானவர் தம்மிடத்தே அறம்பாவவயத்தன்மையை நீக்கியருளினர். ஜன்மமரணமுடைய பராதீனஜீவனே அவ்வறம்பாவவசமாவன் சுதந்திரராகிய ஈசுவரர் ஆகார்.

**சங்கை :—ஹே பகவன்! இத்தகைய ஜன்மமாணுதி விகாரமற்ற ஈசுவரராகிய தேவரீருக்குத் திருமேனிக்கிரகணம் எவ்வாறு சமபவிக்கும்?**

சமாதானம் :—சுலோக உத்தரார்த்தத்தால் ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார். "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி" என. ஹே அர்ச்சுன! உண்மையாய் யாம் ஜன்மமரணாதி சர்வ விகார ரகிதரேயாவேம். ஆயினும், எமக்குபாதியும் விசித்திர அநேக சக்தியோடுகூடியதும், அகடித கடநா படீயசி யெனப் பெயரியதும், சத்துவ ரஜ தம முக்குணரூபமுற்றதும் ஆப மாயாரூபப் பிரகிருதியை எமது சிதாபாசவாயிலாய் வயப்படுத்தி அம்மாயாபரிணாம விசேஷங்களினாலே தேகமுடையவர்போலவும் ஜன்மமுடையவர்போலவும் புலப்படுகின்றோம். கருத்திதுவாம் :—உற்பத்திபற்றதாதலின் அநாதியாய மாயையே எமக்குபாதியாம். அது வியவகார காலபரியந்தம் ஸ்தாயியாதலின் நித்தியமாம். எம்மிடத்தே சர்வ ஜகத்காரணத்தன்மையைச்சம்பாதிப்பது எமதிச்சையினாலே அது பிரவிருத்திக்கும். இத்தகைய அதுவே விசுத்த சத்துவரூபமாய எமது மூர்த்தியாம் அம்மூர்த்தி விசிஷ்ட எம்மிடத்தே ஜன்மமரணமற்றதன்மையும் சர்வ பூதங்களின் ஈசுவரத்தன்மையும் சம்பவிக்குமாதலின், அந்தச்சுத்த சத்துவப்பிரதான மாயாரூப நித்தியதேகத்தினாலே யாம் சிருஷ்டியினாதிகாலத்திலே, சூரியனுக்கும் இப்போது உனக்கும் இந்த ஞானயோகத்தை யுபதேசித்தனம். இவ்வர்த்தத்தாலே சிறிதுமாத்திரையும் பூர்வோக்ததோஷப் பிராப்தியுண்டாகாதாம். "ஆகாச சரீரம் ப்ரஹ்ம" ஆகாசமெனப் பெயரிய மாயாரூப அவ்யாகிருத சரீரமுடையது பிரஹ்மமாம், என்பதாதி சுருதிகளின்கண்ணே பிரஹ்மத்திற்கு மாயையே சரீரமெனக் கூறப்பெற்றுளது. அம்மாயைச் சரீரத்தால் ஜகதுற்பத்தி ஸ்திதிப் பிரளய காலத்தும் எமது ஸ்திதி சம்பவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! தேவரீருக்குக் கேவலம் மாயையே சரீரமாம் பௌதிகமன்றாமாயின், பௌதிகசரீர தர்மமாய மனுஷ்யத்வாதி இத்திருமேனியின்கண்ணே ஏன் புலப்படுகின்றது?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'ஆத்மமாயயா' என. ஹே அர்ச்சுன! எம்மிடத்தே தோற்றும் மனுஷ்யத்வாதி தருமங்கள் வாஸ்தவமாகவோ வின்றாம்; மற்றோ, உலகர்க்கனுக்கிரகஞ்செய்யும்பொருட்டு எமது மாயையினாலே அவை எம்மாற்புலப்படும். இவ்வார்த்தை மோக்ஷதருமத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது.

> "மாயா ஹ்யேஷா மயா ஸ்ருஷ்டா யந்மாம் பச்யஸி நாரத ।
> ஸர்வபூதகுணைர்யுக்தம் நைவம் த்வம் ஜ்ஞாதுமர்ஹஸி" ॥

(பொ-ள்.) ஹே நாரத! எச்சரீரவிசிஷ்ட எம்மை நீ இச்சரும சக்ஷுவாற் காண்கின்றனையோ அவ்விதை யாம் மாயையாற்செய்துளேம் காரணமாயாரூப சரீரமுடைய எம்மைச் சரும சக்ஷுவால் நீ காணமுடியாய். ஆண்டநேக சக்தியையுடைய மாயையெனப்பெயரிய நித்தியகாரணவுபாதியே பரமேசுவரரது திருமேனியாம். இத்துணையால் ஸ்ரீ பகவான் பாடியக்காரரதுமதம் நிரூபிக்கப்பெற்றது. வேறொருசாஸ்திரமுடையரோ பரமேசுவரரிடத்தே தேகதேகிபாவத்தை யங்கீகரித்திலர்; மற்றோ, சச்சிதானந்தகன பகவான் வாசுதேவ பரிபூரணநிர்க்குண பரமான்மாவே பரமேசுவரரது சரீரமாம். வேறொரு பௌதிகமாயிகசரீரம் பரமேசுவரருக்கின்றாம். "ஸ பகவ: கஸ்மிந் ப்ரதிஷ்டித: ஸ்வே மஹிம்நி" ஹே பகவன்! அப்பரமான்மாயாதின் கண்ணேயிருக்கும் எனச் சங்கையுண்டாக அது தனது சச்சிதானந்தரூபமகிமையின்கண்ணேயிருக்கும் என்பதுமுதலிய சுருதிகளில் அப்பரமான்மாவிற்குத்தமது சொரூபத்தின்கண்ணே ஸ்திதி கூறப்பெற்றுளதேயன்றி மாயிகசரீரத்தின்கண்ணேனும் பௌதிகசரீரத்தின்கண்ணேனும் கூறப்பெறவில்லை. இப்

பக்ஷத்தோ இச்சுலோகத்திற்கு இவ்வாறு யோஜனைசெய்க. "𑌆𑌕𑌾𑌶𑌵𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌶𑍍𑌚 𑌨𑌿𑌤𑍍𑌯𑌃 𑌅𑌵𑌿𑌨𑌾𑌶𑍀 𑌵𑌾 𑌅𑌰𑍇𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌨𑍁𑌚𑍍𑌛𑌿𑌤𑍍𑌤𑌿𑌧𑌰𑍍𑌮𑌾" இப்பரமான்மா ஆகாசத்தைப்போலயாண்டும் வியாபகமும் நித்தியமுமாம். ஹே மைத்திரேயி! இவ்வான்மாச்சொரூபமாகவும் நாசமற்றதாம். தர்மநாசப்பிரயுக்தநாசமுமற்றதாம், என்பன முதலிய சுருதிப்பிரமாணங்களால் பரமான்மாவாய யாம் உண்மையாய் ஜன்மமரணாதி விகாரமற்றிருப்பினும், சர்வஜகத்தின் பிரகாசமாயினும், சர்வஜகத்தின் காரணரூப மாயையின் அதிஷ்டானமாதலின் சர்வபூதங்கட்கு ஈசுவரராயிருப்பினும், '𑌸𑍍𑌵𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂' எமது ஸ்வரூபபூத சச்சிதானந்தகன ஏகரச ஸ்வபாவரூபப்பிரகிருதியை '𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌯' ஆசிரயித்து, அதாவது அவ்வெமதுவடிவத்தே ஸ்திதிபெற்றுநின்று '𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿' தேகதேகிபாவமின்றியே உலகப்பிரசித்ததேகமுடைய ஜீவர்கள்போல இப்பரமேசுவரர் தேகமுடையவர் என்னும் வியவகாரத்திற்கு விஷயமாவேம்.

சங்கை :—ஹே பகவன்! மாயிகபௌதிக தேகங்களற்ற சச்சிதானந்தகனத் தேவரீரிடத்தே இம்மனுடதேகத்தன்மையின் பிரதீதி ஏனுண்டாகின்றது?

சமாதானம்:—ஸ்ரீபகவான்கூறியருளுகின்றார். '𑌆𑌤𑍍𑌮𑌮𑌾𑌯𑌯𑌾' என. ஹே அர்ச்சுன! தேகதேகிபாவமற்ற யாம் நித்திய சுத்த சச்சிதானந்தகன பகவான் வாசுதேவராம். இத்தகைய எம்மிடத்தே தேகதேகிவடிவமாயபிரதீதி மாயாமாத்திரமேயாமன்றி உண்மையாயின்றாம். இவ்வார்த்தை அன்னிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது :—

> "𑌕𑍃𑌷𑍍𑌣𑌮𑍇𑌨𑌮𑌵𑍇𑌹𑌿 𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ।
> 𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑌾𑌯 𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍀𑌵𑌾𑌭𑌾𑌤𑌿 𑌮𑌾𑌯𑌯𑌾 ॥
> 𑌅𑌹𑍋 𑌭𑌾𑌗𑍍𑌯𑌮𑌹𑍋 𑌭𑌾𑌗𑍍𑌯𑌂 𑌨𑌨𑍍𑌦𑌗𑍋𑌪𑌵𑍍𑌰𑌜𑍌𑌕𑌸𑌾𑌂 ।
> 𑌯𑌨𑍍𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

(பொ-ள்.) இக்கிருஷ்ணபகவானை நீ சர்வபூதப்பிராணிகளின் ஆன்மரூபமெனவறிதி. அவ்வாறிருப்பினும், அவர் இவ்வுலகத்தே அன்பர் யாவரையுமுத்தாரணஞ்செய்யும்பொருட்டுத் தமது மாயையால் தேகமுடைய ஜீவர்களைப்போலப் பிரதீதியாவர் அல்லது விரஜபூமியின்கண்ணே இராநின்ற நந்தகோபகோபியர்க்கு அகோபாக்கியம்! அகோபாக்கியம்!! என்னை? அவ்விரஜவாசிகட்கு இப்பரமானந்த பரிபூர்ண சநாதனப்பிரஹ்மம் கிருஷ்ணரூபமாய் மித்திரபாவத்தை யடைந்ததன்றோ! சிலரோ, அப்பரமான்மாவை நித்திய நிரவயவ நிர்விகார பரமானந்த உருவமெனவங்கீகரித்தும் அதனிடத்தே அவயவ அவயவீபாவத்தை வாஸ்தவமாகவே அங்கீகரித்துளார்; அவர்கூற்று அத்தியந்தம் ஊகமற்றதாம். (6)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு சச்சிதானந்தகனரூபத்தேவரீருக்கு எக்காலத்தே எப்பிரயோஜனப்பொருட்டுத் தேகமுடைய ஜீவர்களைப்போல வியவகாரமுண்டாம் என அர்ச்சுனனுக்கு ஆசங்கைநிகழ ஸ்ரீபகவான் உத்தரங்கூறியருளுகின்றார் :—

சு-ம். 𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ (7)

ப-ம். 2 𑌯𑌦𑌾 3 𑌯𑌦𑌾, 𑌹𑌿 4 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 5 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌃 6 𑌭𑌵𑌤𑌿 1 𑌭𑌾𑌰𑌤 8 𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌂 7 𑌅𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 9 𑌤𑌦𑌾 11 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂, 12 𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 10 𑌅𑌹𑌂,

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வெக்காலத்தே தர்மஹானியாமோ அதர்ம விருத்தியாமோ அவ்வக்கால் பரமான்மாவாய யாம் தேகோற்பத்தியைச்செய்வேம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வேதத்தால் விதிக்கப்பெற்ற பிரவிருத்தி நிவிருத்திரூப தருமம் காமனுபூர்வகமாய்ச் செய்யப்பெற்றதாய்ப் பிராணிகட்குச்சுவர்க்காதிரூப அப்யுதய சாதனமாம்; நிட்காமமாய்ச் செய்யப்பெற்றதாய் மோக்ஷரூப நிஃரேயசின் சாதனமாம்; அத்தருமம் பிராஹ்மணுதி நான்கு வருணங்களின் பிரஹ்மசரியாதி நான்காசிரமங்களின் அபிவியஞ்சகமாம் அதாவது அவற்றை அறிவிப்பதாம். ஆண்டுச் சிரத்தாபக்திவாயிலாய் அக்கினிஹோத்திராதி கருமங்களைச் செய்தல் பிரவிருத்திரூப தருமமாம். பரஸ்திரீகமனுதிகளைச் செய்யாதிருத்தல் நிவிருத்திரூப தருமமாம். இத்தகைய தருமம் எவ்வெக்காலத்தே ஹானியாமோ, வேதத்தால் நிஷேதிக்கப்பட்டதும், நாநாவகைத் துக்கங்கட்குச் சாதானரூபமும், தருமவிரோதியும் ஆய அதர்மமானது எவ்வெக்காலத்தே விருத்தியாமோ அவ்வக்காலத்தே யாம் எமது தேகத்தையுண்டாக்குகின்றேம்; அதாவது, நித்தியசித்தமாய எமது தேகத்தை மாயையால் செய்வதேபோலக் காண்பிப்பேம். ஈண்டு, 'ஹே ஹாரத' என்னும் சம்போதனத்தைக் கூறியருளலால் ஸ்ரீ பகவானுனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர்:—பரதவம்சத்தே யுற்பன்னமாயவன் பாரதனுவன்; அல்லது, 'ஹா' என்பது ஞானமாம்; அதன்கண்ணே யாவன் ரதனுவனே அதாவது ஞானத்தின்கண்ணே யாவன் பிரீதியுடையவனுவனே அவன் பாரதனுவன். இப்பாரதப்பெயர்வாய்ந்த நீ தருமஹானியைச் சகிக்கச் சமர்த்தனன்றுவாய். (7)

(அ-கை.) ஹே பகவன்! தருமஹானி அதருமவிருத்தியென்னும் இரண்டும் தங்கட்கு மகிழ்ச்சி காரணமாம்; அதனாலன்றே தேவரீர் அக்காலத்தே அவதரிக்கின்றீர்; ஆதலின், தேவரீரது அவதாரம் மாறுய் உலகர்க்கு அநர்த்தப்பிராப்தியை யடைவிப்பதேயாயதாம்; என அர்ச்சுனனது ஆசங்கைநிகழ ஸ்ரீ பகவான் விடை அருளிச்செய்கின்றார்:—

சு-ம். வரித்ராணாய ஸாயூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம் ।
யூஸம்ஸ்தாவநாயூாய ஸம்ஹவாமி யுமெயுமெ ॥ (8)

ப-ம். 2 வரித்ராணாய 1 ஸாயூநாம் 5 விநாஶாய 3 ச 4 துஷ்க்ருதாம் 6 யூஸம்ஸ்தாவநாயூாய 9 ஸம்ஹவாமி 7 யுமெ 8 யுமெ,

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாதுக்களை ரக்ஷிக்கும்பொருட்டும், பாவியரைச் சிக்ஷிக்கும்பொருட்டும், தருமத்தை இனிது நிலைநிறுத்தற்பொருட்டும் பரமேசுவரராய யாம் யுகந்தோறும் அவதரிப்பேம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தருமஹானியால் ஹானியையடைந்து நிரந்தரம் வேதப்பிரதிபாதிதமார்க்கத்தே நின்று வேதவிகித புண்ணியகருமங்களைச் செய்யும் மேன்மையர் தமது பிராணன் நாசமெய்தினும், தமது தருமத்தைப் பரித்தியாகித்திலர்; அவர்களே சாதுக்களாவர். அவர்களைக் காக்கும்பொருட்டும் அதருமவிருத்தியால் விருத்தியடைந்து வேதமார்க்க விரோதியாய் சரீரமனவாணியால் எப்போதும் வேதநிஷித்த பாவகருமங்களைச்செய்யும் துஷ்டரை அதாவது துஷ்கிருதரை மூலத்தோடு நாசஞ்செய்யும்பொருட்டும் பரமேசுவரராகிய யாம் யுகந்தோறும் அவதரிப்பேம்.

சங்கை:—ஹே பகவன்! சாதுக்களின் காப்பையும் துஷ்டரின் விநாசத்தையும் தேவரீர் எங்ஙனஞ்செய்வீர்?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'தர்மஸம்ஸ்தாபநார்தாய' என. ஹே அர்ச்சுன! முன்னர் விருத்தியையடைந்த அதருமத்தை நீக்கித் தருமத்தின் நற்ரூபனத்தைச் செய்யும்பொருட்டே யாம் அவதரிப்பேம். வேதமார்க்க பரிரக்ஷணமே தர்ம ஸம்ஸ்தாபனமாம். அதனால் சாதுக்கட்குக் காப்பும் துஷ்டர்கட்கு விநாசமும் அவசியமுண்டாம். ஆகையினால், எனதவதாரம் எவருக்கும் அநர்த்தத்தை யடைவிக்கமாட்டாது. (8)

சு-ம். ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத: ।
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥ (9)

ப-ம். 5 ஜந்ம 7 கர்ம 6 ச 3 மே 4 திவ்யம் 8 ஏவம் 2 ய: 10 வேத்தி 9 தத்த்வத: 13 த்யக்த்வா 12 தேஹம் 14 புந: 15 ஜந்ம 16 ந 17 ஏதி 18 மாம் 19 ஏதி 11 ஸ: 1 அர்ஜுந.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் எமது திவ்ய ஜன்மத்தையும் கர்மத்தையும் இவ்வாறு உண்மையாய் அறிவனோ, அவன் இத்தேகத்தைப் பரித்தியாகஞ் செய்து மீண்டும் ஜன்மத்தையடையான்; மற்றோ, பரமேசுவராகிய எம்மையே யடைவன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நித்தியசித்தமாய யாம் சச்சிதானந்தகனமாம். அத்தகைய எமக்கு எமது லீலாமாத்திரத்தால் உலகப்பிரசித்தஜீவர்களின் ஜன்மமே போல ஜன்மானுகாணமாத்திரம் ஜன்மமாம், நித்தியசித்த வெமக்கு வேதவிகித தர்மஸ்தாபனஞ்செய்தலால் ஜகத்பரிபாலனம் கர்மமாம், இவ்விரண்டும் திவ்யமாம். அதாவது, மற்றைய பிராகிருதபுருடர்கள் செய்யமுடியாததாம், கேவலம் எமக்கே சிறந்ததருமமாம். எமது திவ்யமாய இவ்விரண்டையும் யாவன் 'அஜோऽபி ஸந்நவ்யயாத்மா' என்பதாதி வசனங்களிற் கூறியபடியே உண்மையாயறிவனோ அதாவது மூடனே ஸ்ரீ பகவானிடத்தே மனுஷ்யத்தன்மைப் பிராந்தியால் வேறு ஜீவர்களைப் போலக் கர்ப்பவாசாதிரூபஜன்ம ஆரோபணஞ்செய்வன். தமது போகார்த்தப்பொருட்டுக் கர்ம ஆரோபணஞ்செய்வன். அவ்வாரோபித ஜன்மகர்மங்களை உண்மையாய்ச் சுத்த சச்சிதானந்தரூபஞானத்தால் நிவிருத்தித்து ஜன்மமற்ற பரமேசுவராருக்கும், தமதுமாயையால் லீலாமாத்திரமாய் உலகப்பிரசித்த ஜீவர்களின் ஜன்மமே போல ஜன்மானுகாணமாத்திரம் சம்பவிக்கும், உண்மையாய் அகர்த்தாவாய பரமேசுவராருக்கும் மற்றையர்க்கனுக்கிரகிக்கும்பொருட்டு உலகப்பிரசித்த ஜீவர்களின் கருமமேபோலக் கர்மானுகாணமாத்திரம் சம்பவிக்கும். இவ்வாறு யாவன் எமது ஜன்மகருமங்களை வாஸ்தவமாயறிவனோ இவ்வாறு தனது வாஸ்தவஸ்வரூபத்தையுமறிவனோ அவன் இவ்வர்த்தமான சரீரத்தைப் பரித்தியாகித்து மீண்டும் வேறு ஜன்மத்தையடையான்; மற்றோ, அவன் சச்சிதானந்தகன பகவான்வாசுதேவராகியவெம்மையே அடைவன்; அதாவது, சச்சிதானந்தரூப பரமான்மா யான் என்னும் அபேதஞானத்தால் அவன் இச்சம்சாரத்தினின்றும் முக்தனாவன். (9)

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தே 'மாமேதி ஸோऽர்ஜுந' என்னும் வசனம் திருவாய்மலர்ந்தருளப்பட்டது. இப்போது ஸ்ரீபகவான் தமது வாஸ்தவ வடிவத்திற்குச் சர்வமுக்தர்களும் அடையும் பதவடிவத்தாற் பரமபுருஷார்த்தரூபத்தன்மையையும், இம்மோக்ஷமார்க்கத்திற்கு அநாதிபரம்பரையாய்ப் பிராப்தத் தன்மையையும் கூறியருளுகின்றார் :—

சு-ம். வீதராகபயக்ரோதா மந்மயா மாமுபாஸ்ரிதா: ।
பஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்பாவமாகதா: ॥ (10)

ப-ம். 1 வீதராமஹயக்ரோயாஃ 2 உநயாஃ 3 ஊ○ 4 உவாஶ்ரிதாஃ 7 ஬ஹவஃ 5 ஜ்ஞாநதவஸா 6 வூதாஃ 8 உஹ்ாவ○ 9 ஞுமதாஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இராக பயக் குரோதமற்ற எமதிடத்தழுந்திய சித்த முற்று எமதுசரணத்தையடைந்து, ஞானரூபதவத்தாற் பாவமற்று அநேகர் எமது வடிவத்தையடைந்தனர்.

(வி-ம்.) அவ்வச்சுவர்க்காதி பலன்களை யடையும் திருஷ்ணை இராகமாம். ஸ்திரீபுத்திரதனாதி சர்வ விஷயங்களையும் பரித்தியாகித்து ஞானமார்க்கத்தே ஸ்திதிபெற்ற எனது ஜீவனம் எவ்வாறு நடைபெறும் என்னும் திராசம் பயமாம். சர்வவிஷயங்களையும் மூலத்தோடு கெடுக்கும் ஞானமார்க்கம் எனக்கெவ்வாறிதமாம்; மற்றோ, ஹிதமாகாதாம் என்னும் துவேஷம் குரோதமாம். இம்மூன்றும் விவேகத்தால் நீக்கிய புருடர்வீதராக பயக்குரோதராவர். அதாவது தூயமனமுடையராவர். மீண்டும், அவர் 'உநயாஃ' தற்பதார்த்தரூப எம்மைத்துவம்பதார்த்தரூப தம்மோடு அபேதமாய்ச் சாக்ஷாத்காரம்புரிந்தவராவர். அல்லது, 'உநயாஃ' பரமான்மாவாய வெம்மிடத்தே சித்தமுடையவராவர். மீண்டுமவர் 'ஊஉவாஶ்ரிதாஃ' அநன்யப் பிரேமபக்தியோடுமெம்மையே சரணுபடைந்தவராவர். இத்தகைய அநேக சுகவாமதேவாதியர் ஞானரூப தவத்தாற் சர்வ பாவங்களுமற்றவராய், அதாவது காரியசகித அஞ்ஞானரூபமலமற்றவர்களாய் எமது சச்சிதாநந்த ஸ்வரூபபூத மோக்ஷத்தை யடைந்தனர். அல்லது, 'ஜ்ஞாநதவஸாவூதாஃ' ஞானரூபதவத்தால் ஜீவன்முக்தியைபடைந்தவர் 'உஹ்ாவஊமதாஃ' எமது விஷபக ரதியாகிய பிரேமைத்தன்மையைபடைந்தனர். இப்பொருளை ஸ்ரீபகவான் தாமே 'தெஷா○ ஜ்ஞாநீ நித்யயுக்த வகஹக்திவிஶிஷ்யதெ' என்னும் வசனத்தால் மேற்கூறியருளுவர். (10)

(அ.கை.) ஹே பகவன்! யாவர் ஞானரூபதவத்தாற் பவித்திரமாயுளரோ அந்நிட்காமபுருடரோ தேவரீரது பாவத்தையடைவர்; பவித்திரமாகாத சகாமபுருடர் அடையார். இவ்வாறு இருவர்க்கும் அடைவு அடைவின்மைகளைச்செய்யும் ஈசுவரராய தங்கட்கு விஷமத்தன்மைத் தோஷ அடைவும் நிர்த்தயைத்தன்மைத் தோஷ அடைவும் அவசியமுண்டாம் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீபகவான் உத்தரமருளிச்செய்கின்றார் :—

சு-ம். யெ யயா ஊ○ வ்ரவஷூஜெ தா○ ஹவெயெவ ஹஜாஹூஹூ ।
ஊவ ஜ்ஞாநுவத்ஜெ உநுஷூஃ வாயஜ வஹஜஶஃ ॥ (11)

ப-ம். 2 யெ 3 யயா 4 ஊ○ 5 வ்ரவஷூஜெ 6 தாநு 8 தயா 9 வவ 10 ஹஜாஶி 7 அஹ○ 13 ஊஊ 14 வதஜ 15 அநுவத்ஜெ 11 உநுஷூஃ 1 வாயஜ 12 வவஜ ஶஃ.

(அம்.) ஹே பார்த்த! யாவன் எவ்வகையாய் எம்மைப் பஜிக்கின்றனனோ, அவனுக்கு யாம் அவ்வகையாயே அனுக்கிரகிக்கின்றோம். இக்கருமாதிகாரிகளாய மனுஷ்யர், எல்லாவகையானும் எமது பஜனைமார்க்கத்தையே அனுசரிப்பர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகத்தே துயரடைந்தஆர்த்தன், தனாதிகளையடையவிச்சித்த அர்த்தார்த்தி, ஆன்மாவையறியவிரும்பும் ஜிஞ்ஞாசு, தத்துவ சாக்ஷாத்காரமுடையஞானி, என்னும் இந்நால்வகைப்புருஷருள் எவ்வெப்புருஷர் சகாமத்தன்மையினனும் நிட்காமத்தன்மையினனும் சர்வ கருமங்களின் பலன்களைக்கொடுக்கும் ஈசுவரராகிய எம்மைப் பஜிக்கின்றனரோ அவர்கட்கு அவ்வவ்வெண்ணிய பலன்களைக்கொடுத்து அனுக்கிரகிப்பேம். அவ்வன்பர்கட்கு யாம்

விபரீதபலத்தைக்கொடேம். அவருள், மோக்ஷ இச்சையற்ற ஆர்த்தனுக்கோ உற்ற பீடைபைநீக்கி அநுக்கிரகிப்பேம். மோக்ஷ இச்சையற்ற அர்த்தார்த்திக்கோ தனாதிகளைக்கொடுத்து அநுக்கிரகிக்கின்றேம். "தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந" என்னுஞ் சுருதியானது விதானஞ்செய்த நிட்காமகருமத்தைச்செய்யும் ஜிஞ்ஞாசுக்கட்கோ ஆன்மஞானத்தைக்கொடுத்து அநுக்கிரகிக்கின்றேம். ஞானவான்கட்கோ மோக்ஷத்தைக்கொடுத்து அநுக்கிரகிக்கின்றேம். ஒரு வஸ்துவை விரும்பிய அன்பர்க்கு மற்றொரு வஸ்துவைக் கொடுப்பதில்லை. ஆகையால், அவர் தம்பாவனாநுசாரமாய்ப் பலத்தைக்கொடுக்கும் எம்மிடத்தே விஷமத்தன்மை நிர்த்தயைத்தன்மைத் தோஷப்பிராப்தி சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள் உலகரின் பாவனையின் அநுசாரமாகவே அவ்வப்பலன்களைக் கொடுத்தருள்கின்றீர்களாயினும் தங்களுடைய பக்தர்கட்கே கொடுத்தருள்கின்றீர்களன்றி இந்திராதி தேவதைகளின் பக்தர்கட்குத் தாங்கள் கொடுத்தருள்வதில்லையாதலின், தங்களிடத்தே அவ்விரு தோஷங்களும் அவ்வாறேயிருக்கும்.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருள்கின்றார் "மம வர்த்மாநுவர்த்தந்தே மநுஷ்யா: பார்த்த ஸர்வஶ:" என. ஹே அர்ச்சுன! எவ்வதிகாரிகள் இந்திரன் அக்கினி சூரியன் என்னும் தேவதைகளையும் பஜிக்கின்றார்களோ அவர்களும் அந்தர்யாமியாய் வாசுதேவராய எமது ஞான கருமரூப மார்க்கத்தையே அநுசரிக்கின்றனர்; அதாவ்து, அவர்களும் எம்மையே பஜிக்கின்றனர். அவர்தம் அன்பர்கட்கும் யாமேஅவ்வத்தேவதைவடிவமாய் அவ்வப்பலத்தைக் கொடுக்கின்றோமாதலின், எம்மிடத்தே சிறிதுமாத்திரையும் அவ்விரு தோஷங்களினடைவும் சம்பவியாதாம். இப்பொருளை 'பலமத உபபத்தே:' என்னுஞ் சூத்திரத்தால் ஸ்ரீ வியாசபகவானுங் கூறியருளியிருக்கின்றார். அங்ஙனமே யிப்பொருளை 'யேவ்யந்ய தேவதாபக்தா:' என்பது முதலிய வசனங்களால் ஸ்ரீ பகவான், தாமே மேல் வெட்டவெளியாய்க் கூறியருளுவர். அங்ஙனமே இப்பொருளை 'இந்த்ரம் மித்ரம் வருணமக்நிமாஹு:' என்பது முதலிய வேதமந்திரமும் கூறும். (11)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு தாங்களே இந்திராதிரூபமாய் யாவருக்கும் அவ்வப்பலத்தைக் கொடுத்தருளுவீராயின், அவ்வியாவரும் சாக்ஷாத் தேவரீரையே ஏன் பஜிப்பதில்லை? தேவரீரைவிடுத்து இந்திராதிகளை ஏன் பஜிக்கின்றனர்? என அர்ச்சுனனது ஆசங்கைநிகழ ஸ்ரீ பகவான் விடையருளிச்செய்கின்றார் :

சு-ம். காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா: ।
க்ஷிப்ரம் ஹி மாநுஷே லோகே ஸித்திர்பவதி கர்மஜா ॥ (12)

ப-ம். 4 காங்க்ஷந்த: 2 கர்மணாம் 3 ஸித்திம் 6 யஜந்தே 1 இஹ 5 தேவதா: 12 க்ஷிப்ரம் 7 ஹி 8 மாநுஷே 9 லோகே 11 ஸித்தி: 13 பவதி 10 கர்மஜா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகத்தே கருமபலத்தை யிச்சித்த சகாமன் இந்திராதி தேவதைகளைப் பூஜைசெய்வன். அதனுல் இவ்வுலகத்தே அச்சகாமனுக்குக் கருமஜன்னியபலம் விரைவாகவே வுண்டாம். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் இவ்வுலகத்தே யாகாதிகட்குத் தன்மைந்தராதிபலன்களை யிச்சிப்பனே, அவன் இந்திராதி தேவதைகளையே பூஜிப்பன்; அவன் நிட்காமனுய் ஒருகாலும் எம்மைப் பூஜிப்பதில்லை; ஏனெனின், யாவன் அவ்வப்பலத்தை விழைந்து இந்திராதிகளைப் பூஜிப்பனே, அதாவது யாகாதிக

ளால் இந்திராதி தேவதைகளை மகிழ்விப்பனே, அவனுக்கு அவ்வக்கருமஜன்னிய பலப்பிராப்தி இம்மனுஷலோகத்தே விரைவாகவேயுண்டாம். ஆன்மஞானத்தின் மோக்ஷரூப பலமோ, அந்தக்கரணசுத்தியினாலன்றி யெய்தாதாம்; மற்றோ, அது தன்னடைவில் மனத்தூய்மையின் அபேக்ஷையை அவசியஞ் செய்யும். அத் தூய்மை அநேக ஜன்ம புண்ணியகருமத்தாலாமாதலின், கருமபலத்தைப்போல ஞானபலம விரைவாகவேயடைவுறாதாம். ஈண்டு மநுஷலோகத்தே கருமபலம் விரைவாகவேயடைவுறும் என்னும் வசனத்தைக் கூறியருளிடதால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—இவ்வுலகினும் வேறாய உலகங்களின்மாட்டும் வருண ஆசிரமதருமத்தினும் வேறாய அன்னிய கருமஞ்செய்தலால் பலவடைவு அவசியமுண்டாம் ஆதலின் ஹே அர்ச்சுன ! மோக்ஷத்தில் விருப்பமில்லாத சகாமன் அவ்வத் துச்சபலவடைவின்பொருட்டு அன்னிய இந்திராதி தேவதைகளைப் பூஜிக்குங்காரணத்தால் முமுக்ஷுக்கள் சாக்ஷாத்தெம்மையே பூஜிப்பதேபோலச் சகாமன் சாக்ஷாத்தெம்மைப் பூஜியான். (12)

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தே சகாமத்தன்மை நிட்காமத்தன்மைப் பேதத்தால் யாவரிடத்தும் சமானவியற்கையி னபாவங்கூறியருளப்பெற்றது. இப் போது சரீரத்தை யாரம்பிக்கும் சத்துவாதிகுணங்களின் விஷயத்தன்மையினு னும் அவ்வியாவரிடத்தும் சமானவியற்கையினபாவத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகஶ: ।
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தாரமவ்யயம் ॥ (13)

ப-ம். 3 சாதுர்வர்ண்யம் 1 மயா 4 ஸ்ருஷ்டம், 2 குணகர்மவிபாகஶ: 5 தஸ்ய 6 கர்த்தாரம் 7 அபி 8 மாம் 11 வித்தி 9 அகர்த்தாரம் 10 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுவரராய யாம் குணகருமவிபாகத்தால் நான்கு வருணங்களையுண்டாக்கினோம், அவற்றிற்குக் கர்த்தாவாயிருப்பினும் எம்மை நீ அகர்த்தாவாயும் அவ்யயமாயுமறிதி. (13)

(வி-ம்.) ஹே அர்ச்சன ! ஈசுவரராய யாம் சிருஷ்டியினாதிகாலத்தே சத்துவாதி குணங்களின் பேதத்தாலும் சமதமாதி கருமங்களின் பேதத்தாலும் பிராஹ்மணாதி நான்கு வருணங்களை வேறு வேறாயுண்டாக்கினோம். சத்துவகுணத்தைப் பிரதானமாகவுடைய பிராஹ்மணர்கட்கோ சத்துவகுண காரியரூப சமதமாதிகளே கருமமாம். சத்துவகுணத்தை அப்பிரதானமாகவும் இரஜோகுணத்தைப் பிரதானமாகவுமுடைய க்ஷத்திரியர்கட்கோ அக்குணகாரியரூப சௌரியம் தேஜசாதிகளேகருமமாம். தமோகுணத்தை அப்பிரதானமாகவும் இரஜோகுணத்தைப் பிரதானமாகவுமுடைய வைசியர்கட்கோ அக்குணகாரியரூப கிருஷிவாணிஜ்யாதிகளே கருமமாம். தமோகுணத்தைப் பிரதானமாகவுடைய சூத்திரர்கட்கோ அக்குணகாரியரூப மூவருணத்தினரின் சேவைமுதலியவையே கருமமாம். இவ்வாறு குணபேதத்தானும் கருமபேதத்தானும் நான்கு வருணங்கள் நிலைபெற்றனவாம்.

சங்கை :—ஹே பகவன் ! இங்ஙனம் குணகருமபேதத்தால் விஷம சுபாவத்தையுடைய நால்வருணங்களையுண்டாக்கும் தேவரீரிடத்தே விஷமத்தன்மைத் தோஷவடைவு அவசியமுண்டாமன்றோ ?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—' தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்த்யகர்த்தாரமவ்யயம் ' என. ஹே அர்ச்சுன ! யாம் வியவகாரதிருஷ்டியால் விஷமவியற்கையையுடைய நால்வருணத்தையும் செய்கின்றேமாயினும் பரமார்த்த திரு

ஷ்டியாலே எம்மை அகர்த்தாரூபமாகவேயறிதி. அவ்வயரூபமாயறிதி; அதாவது, நிரகங்காரத்தன்மையானே அபாதித மகிமையுடையேமென்றறிதி. ஒருரையின் கண்ணே 'ம~ணாகஉ-ஷிஹாமயஃ' என்னும் வசனத்தே 'ம~ணாகஉ-ஷிஹாமயஃ' என இரண்டு பதங்களை அங்கீகரித்து இப்பொருள் கூறப்பெற்றுளது:—நான்கு வருணங்கட்கும் ஹிதரூபமாயிருப்பது சாதுர்வர்ண்யமாம். அத்தகைய திரவிய தேவதைமுதலிய குணங்கள் அக்கினிஹோத்திராதி கருமங்கள் ஆகிய ஹிதங்களை யாம், 'ஷிஹாமயஃ ஸ்ரஷ்டு' சாதாரண அசாதாரண பேதத்தாலுண்டாக்கி னேம். அவற்றுள் தான ஜபாதிகருமங்கள் சர்வவருணங்கட்கும் சாதாரண தருமங்களாம். அக்கினிஹோத்திரம், வேதாத்தியயனம், சந்தியோபாசனம் என்பன முதலிய கருமங்களோ பிராஹ்மணாதி மூவருக்குமேயாம்; சூத்திரர்க்கின்றாம். அம் மூவருணத்துள்ளும் பிருஹஸ்பதி ஸவாதிகள் கேவலம் பிராஹ்மணர்கட்கே அசா தாரணதருமமாம், க்ஷத்திரியாதியர்க்கின்றாம். இராஜசூயாதிகள் கேவலம் க்ஷத் திரியர்க்கேயசாதாரண தருமமாம், பிராஹ்மணாதிகட்கின்றாம். வைசியஸ்தோ மாதிகள் கேவலம் வைசியர்கட்கே யசாதாரண தருமமாம் பிராஹ்மணாதிகட்கின் றாம். மூவருணத்தினர்க்கும் சேவைசெய்தல் முதலியவை கேவலம் சூத்திரர்க்கே அசாதாரண தருமமாம். பிராஹ்மணாதிகட்கின்றாம். இவ்வாறு அக்கினிஹோத்தி ராதி கருமங்கள் பேதமுறவே அவற்றினங்கபூதமாய திரவிய தேவதைமுதலிய குணங்கட்கும் பேதமேயுண்டாம். இங்ஙனம் அந்நான்கு வருணங்களின் குணத் தையும் கருமத்தையும் யாமே சாதாரண அசாதாரணரூபமாயுண்டாக்கினேம். ஆகையால், புத்திரனது பிரசன்னத்தன்மையானே பிதாவிற்குப் பிரசன்னத்தன் மையாமாறு இந்திராதியரின் பிரசன்னத்தன்மையினானே எமக்கும் பிரசன்னத் தன்மையுண்டாம். இவ்வாறு பிரசன்னத்தன்மையையடைந்த யாம் அவர்தமன்பர் கட்கும் அவ்வப் பலத்தைக்கொடுப்பேம். (13)

(அ-கை.) ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் கர்த்தாரூபமாய எம்மை நீ அகர்த்தாரூபமாயறிதி; எனக் கூறியருளினீர்களன்றா? அஃதெங்ஙனஞ் சம்பவிக் கும்? என அருச்சுனனது ஆசங்கை நிகழ, ஸ்ரீ பகவான் அப்பொருளை வெளிப் படையாய் நிரூபித்தருளுகின்றார்:—

சு-ம். நஉாம் கஉ-ஹாணி ஷிம்வஷி நமெ கஉ-ஹஸெ ஸ்ரஹா।
ஊதி உாம் யொஹிஜாநாதி கஉ-ஹிந-ஹஸ ஙயஷ்தெ ॥ (14)

ப-ம். 3 ந 1 உாம் 2 கஉ-ஹாணி 4 ஷிம்வஷி 8 ந 5 மெ 6 கஉ-ஹஸெ 7 ஸ்ரஹா 9 ஊதி 11 உாம் 10 யஃ 12 ஷஹிஜாநாதி 14 கஉ-ஹிஃ 15 ந 13 ஸஃ 16 ஙயஷ்தெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்மையிக்கருமம் பற்றமாட்டாது; எமக்கிக் கரும பலத்தே திருஷ்ணையுமின்றாம் இவ்வாறு யாவன் எம்மையறிவனோ அவனும் கரு மங்களாற் கட்டுப்படான். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நிரகங்காரத்தன்மையானே கர்த்திருத்துவ அபி மானமற்ற எம்மை இவ்வுலகவுற்பத்தி திதிமுதலிய கருமங்கள் பற்றா; அதாவது, அன்னிய அஞ்ஞானிகளை இக்கருமம் தேக ஆரம்பத்தானே கட்டுப்படுத்துவதே போல எம்மைக் கட்டுப்படுத்தாதாதலின் வியவகார திருஷ்டியால் யாம் கருமங் களைச் செய்யினும் வாஸ்தவமாய் அகர்த்தாரூபமேயாவேம் இவ்வாறு ஸ்ரீ பகவான் தம்மிடத்தே கருத்தாத்தன்மையை நிஷேதித்தருளி, இப்போது போக்தாத்தன் மையையும் நிஷேதித்தருளுகின்றார்:—'நமெகஉ-ஹஸெஸ்ரஹா' என. ஹே அர்ச் சுன! அஞ்ஞானிகட்குக் கருமங்களின் சுவர்க்காதி பலன்களிடத்தே இப்பலம் என [illegible] திருஷ்ணையுண்டாவதேபோல ஆப்தகாமனெமக்குண்டா

காதாம். 'ஸூவஹாஉவஷூகாஷூரஹா' சர்வான்மதிருஷ்டியால் சர்வ பதார்த்தங் களின் அடைவுடையயான் ஆப்தகாமனுவன். இத்தகைய ஆப்தகாமனுக்குச் சிறிது மாத்திரையும் எப்பலத்திருஷ்ணையுமுண்டாகாதாம். கருத்திதுவாம் :— இவ்வுல கத்தே அஞ்ஞானிகளைக் கட்டுப்படுத்தும் கருமமானது, யானிக்கருமங்களின் கரு த்தா, இக்கருமபலத்தை யானடைவேன் எனக் கர்த்திருத்துவ அபிமானம், பலத் தின் திருஷ்ணையென்னுமிரண்டினுனே கட்டுப்படுத்தும். இவ்விரண்டினுனன்றிக் கருமம் எவரையுங்கட்டாதாம். இவ்விரண்டும் ஆப்தகாம எம்மிடத்தேயின்றுமாத லின், எம்மைக்கட்டுப்படுத்தா. இவ்வாறு கருமத்தைச் செய்தபோதினும் யாம் உண்மையாய் அகர்த்தாவேயாவேம்.

சங்கை :— ஹே பகவன்! இவ்வாறு தங்களிடத்தே அகர்த்தாத்தன்மையும் அபோக்தாத்தன்மையும் சித்தமாயினும் அதனையறிதலால் எம்மனோர்க்கு எப்பலப் பிராப்தியுண்டாம்?

சமாதானம் :— ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'உதிஊாஂயொஉஹிஜாநாதி' என. ஹே அர்ச்சுன! இங்ஙனம் மற்றையரும் அகர்த்தா அபோக்தாவாய எம்மைத் தமதான்மவடிவமாய் அறியின், அவரும் எம்மைப்போல அக்கருமத்தாற் கட்டுப் படார்; அதாவது, அகர்த்தான்ம ஞானத்தால் அவரும் அக்கருமத்தினின்று விடு பாடேயடைவர். (14)

(அ-கை.) யான் கருத்தாவல்லேன், கருமபல திருஷ்ணையும் எனக்கின்று என்னும் ஆன்மஞானத்தால் புருஷன் கருமத்தாற் கட்டுப்படானுதலின் பூர்வம் அநேகமகான்கள் ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவெனவறிந்து கருமத்தையே யனுட்டித்தனர் அவ்வாறே நீயும் கருமத்தையே செய்தி! என்னும் பொருளை இப் போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி: ।
குரு கர்மைவ தஸ்மாத்த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥ (15)

ப-ம். 1 ஏவம் 2 ஜ்ஞாத்வா 7 க்ருதம் 6 கர்ம 3 பூர்வை: 5 அபி 4 முமுக்ஷுபி: 15 குரு 13 கர்ம 14 ஏவ 11 தஸ்மாத் 12 த்வம் 8 பூர்வை: 9 பூர்வதரம் 10 க்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவென வறிந்து பூர்வமுமுக்ஷுக்களும் கருமத்தையே செய்தனர் அவ்வாறே அவரினும் பூர்வமுமுக்ஷுக்கள் யுகாந்தரத்தே கருமத்தையே செய்தனர் அதனுல் நீயும் கரு மத்தையே செய்தி! (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்துவாபரயுகத்தே பூர்வம் மோக்ஷேச்சுக்க ளாய யயாதி, யது முதலிய அரசர்களும் ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவென வறிந்து தமது வருணுசிரமகருமங்களையே செய்தனரன்றிக் கருமபரித்தியாகஞ் செய்து தூஷ்ணீம் பாவத்தையேனும் சந்யாசத்தையேனும் செய்திலர்; அதனுல் நீயும் ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவென வறிந்து கருமத்தையே செய்தி! தூஷ்ணீம் பாவத்தையேனும் சந்யாசத்தையேனும் நீ செய்யாதொழிதி! நீ தத்து வவேத்தாவல்லாதிருப்பின் மனத்தூய்மையின்பொருட்டுக் கருமஞ்செய்தி. நீ தத் துவவேத்தாவாயிருப்பின் லோகசங்கிரத்தின்பொருட்டுக் கருமத்தைச் செய்தி. எல்லாவகையானும் நினக்குக் கருமஞ்செய்யத் தகுதியதாம்.

சங்கை :— ஹே பகவன்! இத்துவாபரயுகத்தே பூர்வம் யயாதி, யதுமுதலிய அரசர் கருமஞ்செய்தனர் எனத்தாங்கள் கூறினீர்கள். அதனுல் கேவலம் இத்

துவாபரயுகத்தேயே அக்கருமஞ்செய்ய அதிகாரமாம். திரேதாயுகங்களில் கருமஞ் செய்ய அதிகாரமின்றாமென அறியலாமன்றோ?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'வூ஼ெவெ-ஃவூ஼வ-ஃதரஂ கூதஂ' என. ஹே அர்ச்சுன! கேவலம் இத்துவாபரயுகத்தேமாத்திரம் பூர்வம் யயாதி யாதியர் கருமஞ்செய்திலர்; மற்றோ, முன் திரேதாயுகங்களில் ஜனகாதி யரசரும் ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவெனவறிந்து கருமத்தையேசெய்தனர். ஆதலின், இப்பொருள் துணியப்பெறும்:—இந்த யுகத்தேயும் வேறு யுகத்தேயும் முமுக்ஷுக்களும் தத்துவவேத்தாக்களும் ஆய அரசர்கள் மனத்தூய்மையின் பொருட்டும் லோகசங்கிரகப்பொருட்டும் தமது வருணாசிரம கருமங்களை அவசிய மாகவேசெய்தனர். ஆகையால், அவர்களைப்போல நீயும் நினது வருணாசிரம கரு மத்தை அவசியஞ் செய்யவேண்டும். (15)

(அ-கை.) ஹே பகவன்! அக்கருமத்தே யாதேனும் ஐயமுமுளதோ? எதனால் தாங்கள் 'வூ஼ெவெ-ஃவூ஼வ-ஃதரஂகூதஂ' என்னும் வசனத்தால் அத்தியந்தம் திடஞ்செய்தருளுகின்றீர்கள்? என அர்ச்சுனனது ஆசங்கைநிகழ, ஸ்ரீபகவான் அக்கருமத்தே ஐயமுளதாதலினானே அதன்கண் மதிமானும் மோகத்தை யடைகின்றனன் என விடைகூறியருளுகின்றார்:—

சு-ம். கிஂ கஶ கிஶகஶெ-ஃதி கவயொவூ஦ு ஜொஹிதாஃ ।
தத்தெ கஶ வுவக்ஷ்யாமி யஜ் ஜ்ஞாத்வா ஜொக்ஷ்யஸெஶுஹாத் ॥ (16)

ப-ம். 2 கிஂ 1 கஶ 4 கிஂ 3 ஶகஶ 5 உதி 7 கவயஃ 8 அபி 6 அத்ர 9 ஜொஹிதாஃ 10 தத் 11 தெ 12 கஶ 13 வுவக்ஷ்யாமி 14 யத் 15 ஜ்ஞாத்வா 17 ஜொக்ஷ்யஸெ 16 அஶுஹாத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கருமம் யாது? அகருமம் யாது? என்னும் பொருளில் மதிமானும் மோகத்தையடைகின்றனன்; அதனால் நினக்கு அக்கரும அகருமங்களை யாம் கூறுகின்றேம் அதைபுணர்ந்து நீ சம்சாரத்தினின்றும் விடுபடுவாய்? (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஓடத்துள்ள புருஷனுக்குத் தீரத்திருக்கும் கமன மற்ற தருவின்மாட்டும் கமனமயல் காணவருகின்றது. கமனமுடைய புருடனிடத்தும் தூரத்தால் கமன அபாவமயல் காணவருகின்றது. ஆகையால், உண்மையாய் அக்கருமம் என்ன வஸ்து? அகருமம் என்னவஸ்து? என்னும் பொருளின்கண் மதிமான்களும் மோகத்தையடைகின்றனர்; அதாவது அவற்றின் வடிவநிர்ணயத்தே அசமர்த்தராவர். ஒருரையின்கண்ணே, 'கிஂகஶ கிஶகஶெ-ஃதி கவயொவூ஦ு ஜொஹிதாஃ' என்னுமரைச்சுலோகத்திற்கு இப்பொருள் கூறப்பெற்றுளது:— சுருதிஸ்மிருதிரூப சாஸ்திரத்தால் விதித்த அருத்தம் கருமமாம்; விதியாதது அகருமமாம். என இவ்வாறு சிலபண்டிதர் அவற்றின் வடிவத்தைக்கூறுகின்றனர். சிலபண்டிதரோ விதித்ததைக் கருமமெனவும் விடுத்ததை அகருமமெனவும் கூறுவர். சில அறிஞரோ காருகமனுதிக்கிரியை கருமமெனவும், தூஷ்ணீம் ஸ்திதி அகருமமெனவுமறையாநிற்பர். இவ்வாறு அக்கரும, அகருமசொரூபத்தே அநேகம் வகையாய விவாதம் காணவருகின்றதாதலின், கருமசப்தவாச்சியார்த்தம் யாது? அகருமசப்தவாச்சியார்த்தம் யாது? என்னும் பொருளின்கண்ணே நூலுணர்ந்தோரும் மோகத்தையடைகின்றனர்; அதாவது, அவற்றின் வாஸ்தவவடிவ நிர்ணயத்தின்கண்ணே அசமர்த்தராயினர். அதனால் யாம் நினக்கு அவற்றின் சொரூபத்தைச் சம்சய நிவிருத்தி பூர்வகமாய்க் கூறினேம்.

சங்கை :—ஹே பகவன்! அவற்றை யறிதலால் எப்பலப் பிராப்தியுண்டாம்?

சமாதானம் :—அதன் பலத்தை ஸ்ரீ பகவானருளுகின்முர் 'யஜ்ஞாத்வா' என. ஹே அர்ச்சுன! அவற்றின் உண்மையாயவடிவத்தையுணர்தியேல் நீ இச்சம் சாரமற்றவனுவாய்! அதாவது, இச்சம்சாரமுத்தியே அவற்றின் ஞானபலமாம் 'தத்தேகர்ம ப்ரவக்ஷ்யாமி' என்னும் வசனத்தே கேவலம் கருமபதமேயுளதாயி னும் 'தத்தே' என்னும் இப்பதத்தின்முன் அகாரத்தைக் கிளப்பி அகர்மத்தின் கவர்ச்சியுமாதல் கூடும். (16)

(அ-கை.) ஹே பகவன்! கரும அகருமங்களின் சொரூபம் சர்வலோகத் தும் பிரசித்தமேயாமாதலின் யானும் அவற்றின் வடிவத்தையறிவேன். அவற் றுள் உடற்பொறியாதியின் வியாபாரம் கருமமாம். சும்மாவிருத்தல் அகருமமாம். இத்துணைப் பிரசித்தமாய விதன்கண்ணே தாங்கள் வேறு யாதுகூறற்குளது என அர்ச்சுனனது ஆசங்கை நிகழ ஸ்ரீ பகவான் கூறியருளுகின்முர்.

சு-ம். கர்மணோஹ்யபி போத்தவ்யம் போத்தவ்யஞ்ச விகர்மண: ।
அகர்மணஸ்ச போத்தவ்யம் கஹநா கர்மணோ கதி: ॥ (17)

ப-ம். 1 கர்மண: 10 ஹி 2 அபி 3 போத்தவ்யம் 6 போத்தவ்யம் 4 ச 5 விகர்மண: 8 அகர்மண 7 ச 9 போத்தவ்யம் 13 கஹநா 11 கர்மண: 12 கதி:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாஸ்திரவிகித கருமத்தின் தத்துவத்தையும் நிஷி த்தகருமத்தின் தத்துவத்தையும் அகருமத்தின் தத்துவத்தையும் அறிதல் தகுதி யாம். எக்காரணத்தால் கரும விகரும அகருமங்களின் தத்துவம் அத்தியந்தம் துர்ப்போத்தியமாமோ.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுருதி ஸ்மிருதிகள்விதித்த அருத்தம் கருமமாம், அதனுண்மைவடிவமு முன்னுலவசிய மறியத்தகுதியதாம், அதையறியாமல் அத னனுஷ்டானமுண்டாகமாட்டாது. அவை நிஷேதித்த அர்த்தம்விகருமமாம், அதனுண்மைவடிவமு முன்னுலவசியமறியத்தகுதியதாம். அதையறியாமல் அத னினின்றும் நீக்கமுண்டாகாதாம். சர்வவியாபாரமுமற்றுச் சும்மாவிருத்தல் அக ருமமாம், அதனுண்மைவடிவமு முன்னுலவசியமறியத்தகுதியதாம். எதனுற்கரும விகரும அகருமமென்னும் மூன்றன் உண்மைவடிவம் அத்தியந்தம் துர்விஞ்ஞேய மாமோ. ஈண்டு 'கஹநாகர்மணோகதி:' என்னும்வசனத்தின்கண்ணே இருக்கும் கர்மசப்தம் விகர்ம அகர்ம மிரண்டற்கும் உபலக்ஷகமாம்; அதாவது, கர்மசப்தத் தால் மூன்றையுங்கவர்க. 'கர்மண: விகர்மண: அகர்மண:' என்னும் மூன்றன் பின்னும், தத்துவம், என்னும் பதத்தை அத்தியாகாரஞ்செய்க. 'போத்தவ்யம்' என் னும் மூன்றுபதங்களின்பின்னும் அஸ்தி என்னும்பதத்தை அத்தியாகாரஞ்செய்க. அதனுல் 'கர்மணஸ்தத்த்வம் போத்தவ்யம் அஸ்தி' என மூன்றுவாக்கியங்கள் சித்த மாகும். ஆண்டுக் கருமத்தின் உண்மைவடிவமும் நீ யறியத்தக்கதாம்; என அவ் வாக்கியங்களின்பொருள் சித்தமாம். (17)

(அ-கை.) ஹே பகவன்! கரும விகரும அகருமமென்னும் மூன்றன் உண் மைவடிவம் என்னுலவசியமறியத்தக்கதேயாம். அவற்றினுண்மைவடிவம் எத்த கையதென அருச்சுனனது சங்கையுண்டாக, ஸ்ரீ பகவான் அவற்றினுண்மைவடி வத்தைக்கூறியருளுகின்முர்.

சு-ம். கர்மண்யகர்ம ய: பஶ்யேத் அகர்மணி ச கர்ம ய: ।
ஸ புத்திமாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்நகர்மக்ருத் ॥ (18)

ப-ம். 2 கர்மணி 3 அகர்ம 1 ய: 4 பச்யேத் 7 அகர்மணி 5 ச 8 கர்ம 6 ய: 9 ஸ: 11 புத்திமாந் 10 மநுஷ்யேஷு 12 ஸ: 13 யுக்த: 14 க்ருத்ஸ்நகர்மக்ருத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் கருமத்தின்கண்ணே அகருமத்தைக்காண்பனோ, யாவன் அகருமத்தின்கண் கருமத்தைக்காண்பனோ அவனே எல்லாமனுஷருள்ளும், மதிமானவன்; அவனேயோகத்தோடு கூடியவனாவன். சருவகருமங்களையுஞ் செய்பவனாவன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுருதி ஸ்மிருதிவிகித நிஷித்த தேக இந்திரிய புத்தி முதலியவற்றின் வியாபாரம்கருமமாம். அஃதுண்மையாயே தேகேந்திரியாதிகளிடத்தேயிருக்கும். அசங்க ஆன்மாவின்கண் அக்கருமமிராதாயினும், யானாற்றுகின்றேன் என்னுங் கருமாத்தியாசரூபப் பிரதீதியின்பலத்தால் ஆன்மாவின்கண்ணே ஆரோபணஞ் செய்யப்படும். நதிதீரத்திருக்குந் தருவின்கண்ணே உண்மையாய்க் கமனரூபக்கிரியையின்றாமாயினும் ஓடத்திருப்பவன் ஓடமோடலால் தருவின்கட்கமனத்தை யாரோபித்தலேபோலச் சாஸ்திரவிசாரமற்ற மூடன் அக்கிரிய ஆன்மாவில் கருமத்தை யாரோபிப்பன். ஆன்மாவின்கண்ணாரோபித்தகருமத்தே யாவன் ஆன்மாவின் அகர்த்தாவடிவத்தை விசாரித்து உண்மையாய்க்கர்மாபாவத்தையே காண்பனோ; கருத்திதுவாம்:—ஓடத்திருப்பவன் தீரத்தருவின்கண்ணே கமனத்தையாரோபிக்கினும் உண்மையாய் அதன்கண்ணே கமனாபாவமேயிருப்பதுபோல மூடன் அக்கிரியஆன்மாவில் கருமத்தை யாரோபிக்கினும்அதன்கண் ணுண்மையாய்க் கருமத்தின் அபாவமேயுளது. இவ்வாறு யாவன் கருமத்தின்கண்ணே அகருமத்தைக்காண்பனோ என்பதாம். முக்குணான்மிக மாயாபரிணாமமாதலின் எக்காலத்தும் கருமத்தையுடைய தேகேந்திரியாதிகளிடத்தே உண்மையாய்க் கருமாபாவமிராதாம்; மற்றோ அவற்றின்பால் அதனபாவஆரோபணமாம். சக்ஷுசம்பந்தமுற்ற தூரதேசத்திருக்கும் கமனமுடையவனிடத்தே உண்மையாய்க் கமனாபாவமின்றேனும் தூரதோஷவயத்தால் அவன்பால் அதன் ஆரோபணமாம். ககனத்துள்ள மதியுடுக்கணத்தே உண்மையாய்க் கமனாபாவமின்றாம்; மற்றோ, எப்போதும் கமனமேயுளது; எனினும் தூரதோஷவயத்தால் அவற்றின்கண்ணே கமனாபாவ ஆரோபணமாம். அதுபோல, எப்போதும் கருமத்தோடுகூடிய தேகேந்திரியாதிகளிடத்தே உண்மையாய்க் கர்மாபாவமின்றாம். மற்றோ, யான் சும்மாவிருக்கின்றேன், சிறிதுமாத்திரையும் கருமஞ்செய்திலன், என்னும் அத்தியாசப் பிரதீதியின் பலத்தால் அவற்றின்கண்ணே அதன் ஆரோபஞ்செய்யப்பெறும். இத்தகைய தேகேந்திரியாதிகளிடத்தே ஆரோபிக்கப்பட்ட வியாபார உபரமத்தன்மைவடிவ அகர்மத்தின்கண்ணே யாவன் அவற்றின் சந்ததவியாபாரமுடைமைவடிவ வாஸ்தவரூபத்தை ஆராய்ந்து உண்மையாய்க் கருமத்தைக் காண்பனோ; அதாவது ஆரோபித அகருமத்தே கருமநிவிருத்தியெனப் பெயரிய நிக்கிரகமென்னும் முயற்சிவடிவ வியாபாரமாகிய கருமத்தை யாவன் காண்பனோ, கருத்திதுவாம்:—நேத்திர சம்பந்தமுற்ற தூரதேசத்திருக்கும் கமனமுடையவனிடத்தும், ககனத்தின்கண்ணிருக்கும்கமனமுடைய உடுக்கணத்தும் தூரதோஷத்தால் கமனாபாவப் பிரதீதியுண்டாமாயினும் புருஷனும் உடுவும் உண்மையாய்க் கமனம்பற்றல் திண்ணமாம். அதுபோலச் சும்மாவிருக்கும் யான் சிறிதுமாத்திரையும் ஒன்றையும் செய்வதில்லையென்னும் அத்தியாசரூபப் பிரதீதிபலத்தால், தேகேந்திரியாதிகளிடத்தே கருமாபாவம் பிரதீதியாயினும் அவை உண்மையாய்க் கருமமுடையனவேயாம். உதாசீன அவஸ்தையின்கண்ணும் யான் உதாசீனனாயிருந்தேன் என்னும் அபிமானமே ஒரு கருமமாம். இவ்வாறு கருமத்தே அகருமத்தையும் அகருமத்தே கருமத்தையும் காணும் பரமார்த்த தரிசியானோ

னே சர்வ மனுஷருள்ளும் மதிமானவன்; யோகத்தோடுகூடியவனவன். சர்வ கருமங்களையுஞ் செய்பவனுவன். ஈண்டுக் கூறியருளிய மூத்தருமங்களால் ஸ்ரீ பகவானவர் பரமார்த்ததரிசியின் ஸ்துதி கூறியருளினர். ஆண்டு, 'கர்மண்யகர்ம ய: பஸ்யேத்' என்னும் பிரதமபாதத்தால் ஸ்ரீ பகவானவர் கருமவிகருமங்களின் வாஸ்தவவடிவத்தை தரிசிப்பித்தருளினர்; எதனாற் கருமசப்தம் விகிதகருமம் நிஷித்த கருமம் என்னும் இரண்டினுக்குமே வாசகமாமோ, 'அகர்மணி ச கர்ம ய:' என்னும் துவிதீயபாதத்தால் ஸ்ரீ பகவானவர் அகருமத்தின் வாஸ்தவவடிவத்தைக் காண்பித்தருளினர். ஆகையால் ஹே அர்ச்சுன! நீ இவ்வெல்லாக் கருமங்களும் பந்தஹேதுவாமாதலின், இவை எனக்குச்செய்யயோக்கியமன்றாம்; மற்றே, தூஷ்ணீம் பாவமாயே சுகபூர்வகமாயிருத்தல் யோக்கியமாம் என நினைத்தல் மித்தையேயாம். ஏனெனின், யான் கருமகருத்தாவென்னும் கர்த்திருத்துவ அபிமானம்எதுவரை உளதாமோ அதுவரையுமே அவ்விகித நிஷித்தகருமங்கள் பந்தத்தையுண்டாக்கும். அவ் வபிமானமற்றுக் கேவலம் தேக இந்திரியாதிகளின் தருமமெனவெண்ணிச் செய்த அவை பந்தத்தையுண்டாக்கா. இப்பொருளை 'ந மாம் கர்மாணி லிம்பந்தி' என்பதாதி வசனங்களாற் பூர்வம் கூறிவந்தேம். ஹே அர்ச்சுன! அக்கர்த்திருத்துவ அபிமானமிருப்ப யான் சும்மாவிருக்கின்றேன் என்னும் உதாசீனத்தன்மையின் அபிமானமாத்திரரூப கருமமும் பந்தத்தின் ஹேதுவேயாகும்; எதனாற் கர்த்திருத்வ அபிமானியானவன் வஸ்துவின் வாஸ்தவவடிவத்தையறிந்திலனே? ஆகையால், ஹே அர்ச்சுன! கருமம், விகருமம், அகருமம் என்னும் முன்மொழிந்த மூன்றன் வாஸ்தவவடிவத்தையறிந்து விகரும அகருமங்களைப் பரித்தியாகஞ்செய்து கர்த்திருத்துவ அபிமானம்விடுத்து பலேச்சையற்று நீ சாஸ்திரவிகித சுபகருமத்தையே செய்தி. அல்லது இச்சுலோகத்திற்கு இவ்வேறுபொருள்கொள்க:—பிரத்தியக்ஷாதிப் பிரமாண ஜன்னியஞான விஷயம் கருமமாம். அத்தகையது இத்திருசிய ஜடரூபப் பிரபஞ்சமாம். கூறிய ஞானவிஷயமன்றாயது அகருமமாம். அத்தகையது ஸ்வப்பிரகாச சர்வப் பிரமாதிஷ்டானரூப சைதன்யமாம். ஆண்டு யாவன் ஜகத்துருவகருமத்தே தனது சத்தாஸ்புரணரூபத்தால் அநுஸ்யூதஸ்வப்பிரகாச அதிஷ்டான சைதன்யரூப அகருமத்தைப் பரமார்த்த திருஷ்டியாற் காண்பனோ? யாவன் அவ்வகருமத்தே அம்மாயாமய திருசியப்பிரபஞ்சரூப கருமத்தைக் கற்பிதமெனக் காண்பனே, அதாவது காண்பானுக்கும் காண்பவற்றிற்கும் யாதொரு சம்பந்தமும் சம்பவிப்பதின்றாமாதலின், இத்திருசியப்பிரபஞ்சம் அத்திருஷ்டாவின்கண்ணே உண்மையாயின்றாம் என இவ்வாறு யாவன் காண்பனோ?

> யஸ்து ஸர்வாணி பூதாநி ஆத்மந்யேவாநுபஸ்யதி ।
> ஸர்வபூதேஷு சாத்மாநம் ததோ ந விஜுகுப்ஸதே ॥

(பொ-ள்.) யாவன் சர்வ பூதங்களையும் அதிஷ்டான ஆன்மாவின்கண்ணே கற்பிதமெனக் காண்பனோ, அச்சர்வபூதங்களிடத்தும் சத்தாஸ்புரணரூபத்தால் ஆன்மாவை அநுஸ்யூதமெனக் காண்பனோ, அப்பரமார்த்ததரிசியாயவனே யாவரினும் மேன்மையனுவன். இவ்வாறு சைதன்ய ஆன்மாவிற்கும் திருசியஜகத்திற்கும் பரஸ்பரம் அத்தியாசமிருப்பினும் யாவன் உண்மையாய்ச் சுத்தசைதன்யத்தையே காண்பனோ, அவ்வித்துவானே சர்வ மனுஷர் மத்தியில் அத்தியந்தம் புத்திமானுவன்; அவனினும் வேறாய எவனும் புத்திமானல்லன்; ஏனெனின், இவ்வுலகத்தும் உண்மையாய் வஸ்துவின் வடிவத்தை அறிபவனே புத்திமானெனப்படுவன்; மற்றையனல்லன். இரஜ்ஜுவை இரஜ்ஜுவடிவத்தால் அறிபவன் மதிமானுவன்; அதனைச் சர்ப்பமென வுணர்பவன் மதிமானல்லன். அதுபோலச் சர்வாதிஷ்டானரூப சுத்த சைதன்யத்தைக் காண்பவனே பரமார்த்ததரிசியாதலின் மதிமானுவன்.

அநான்மப் பிரபஞ்சத்தைக்காணும் அஞ்ஞானியோ, மித்தியாதரிசியாதலின் மதிமானாகான். அப்பரமார்த்ததரிசியே அப்புத்தியின் சாதனரூப யோகத்தோடுகூடியவனாவன். அதாவது, அந்தக்கரணசுத்தியால் ஏகாக்கிரமனமுடையவனாவன். இக்காரணத்தால் அவனேமனத்தூய்மைக்குச் சாதனரூப சர்வகருமங்கட்கும் கருத்தாவாவன். இவ்வாறு மதியுடைமை, யோகமுடைமை, சர்வகருமச்செயலுடைமை என்னும் வாஸ்தவ முத்தருமங்களால் அப்பரமார்த்ததரிசியானவன் துதிக்கப்பெறுவன் ஹே அர்ச்சுன! அப்பரமார்த்ததரிசி இவ்வாறு மகத்தன்மையையடைந்திருத்தலின் நீயும் பரமார்த்ததரிசியாதி! அத்தன்மையினானே நின்பாற் சர்வ கர்மகர்த்ருத்தகைமைசித்தமாம்; ஆதலின் எக்கரும அகருமஸ்வரூபத்தை யறிந்து நீ இச்சம்சாரத்தினின்றும் முக்தனாவாயெனப் பூர்வம் யாது அருளினேமோ, கருமாதி மூன்றன்வாஸ்தவஸ்வரூபம் நீயறிதல் தகுதியதாம் எனப்பூர்வம் யாது அருளினேமோ, அவனே மதிமான் என்பது முதலிய ஸ்துதியாது அருளினேமோ, அவையாவும் பரமார்த்த வஸ்துவின்றரிசனமுண்டானபின்னரே சம்பவிக்கும், அன்னிய வஸ்துவின்றரிசனத்தாற் சம்பவியாவாம்; ஏனெனின், அச்சைதன்யமாகிய பரமார்த்தவஸ்துவினும் வேறாயுள்ள அநான்மபதார்த்தங்களின் ஞானத்தால் அசுப சம்சாரத்தினின்றும் முக்தி சம்பவியாதாம் மாறாய்ப் பந்தத்தின் அடைவேயுண்டாம்; அப்பரமார்த்த வஸ்துவினும் வேறாயயாவும் அதத்வரூபமாதலின் அது அறியத்தகுதியதுமாகாதாம். அவ்வநான்மஞானத்தால் புருஷன்பால் மதிமானாந்தன்மையும் சம்பவியாதாம். ஆகையால், பரமார்த்த தரிசிகட்கு இம்முன்மொழிந்த வியாக்கியானம் பொருத்தமாயதேயாம். ஒருரையின்கண்ணே, 'கர்மண்யகர்ம யஃபச்யேத்' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் கூறப்பெற்றுளது:—பரமேசுவரது மகிழ்வின்பொருட்டுச் செய்யப்பட்ட அக்கினிஹோத்திர சந்தியா உபாசனாதி நித்தியகருமங்கள் பந்தஹேதுவாகமாட்டாவாதலின் அவற்றில் யாவன் இவை பந்த அஹேதுவாதலின் அகர்மரூபமேயாம் எனக்காண்கின்றனனோ நித்திய கருமங்களைச்செய்யாதொழிதல் அகருமமாம், அது பிரத்தியவாய ஹேதுவாம்; ஆதலின் அதன்கண் யாவன் இது பிரத்தியவாய ஹேதுவாதலின் கர்மரூபமேயாம் எனக்காண்கின்றனனோ அவனே யாவருள்ளும் மதிமானாவன். யோகத்தோடு கூடியவனாவன். சர்வகருமங்கட்குங் கருத்தாவாவன். என்பதாம். இப்பொருள் அசங்கதமாம்; ஏனெனின், அந்நித்தியகருமத்தே இஃதகருமமென்னும் ஞானம் தாம்பின்கண்ணே பாம்பின் ஞானம்போல மயல்வடிவமேயாமாதலின் அம்மயக்கவுணர்வின்கண்ணே 'யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே அசுபாத்' என்னும் வசனத்தாற் கூறியருளிய அசுபசம்சாரத்தினின்றும் மோக்ஷஹேதுத்தன்மை சம்பவியாதாம்; மற்றோ, அது மித்தையாதலின், தானே அசுபரூபமாம். அம்மயக்கவுணர்வு '[illegible]' என்னும் வசனத்தால் கூறியருளிய அறியத்தகுந்த தத்துவரூபமுமன்றாம். அம்மயக்கவுணர்வையடையின், மதியுடைமை, யோகமுடைமை முதலிய ஸ்துதியும் சம்பவியாதாம். மாறாய், அம்மயக்கவுணர்வையுடையவன் மித்தியாதரிசியெனக் கூறப்பெறுவன். அந்நித்திய கருமத்தின் அநுஷ்டானமோ, ஸ்வரூபமாயே மனத்தூய்மைவாயிலாய் ஆன்மஞானத்தின்கண்ணே உபயோகியாம். அந்நித்திய கருமத்தின்கண்ணே அகருமபுத்தியோ எதன்கண்ணும் உபயோகியன்றாம்; ஏனெனின், எப்பொருள் சாஸ்திரத்தால் விகிதமாமோ, அப்பொருளே மனத்தூய்மையின்கண்ணும், ஞானத்தின்கண்ணும் உபயோகியாம். நாமம் வாக்கு மனம் முதலியவற்றே சாஸ்திரம் பிரஹ்மதிருஷ்டியை விதித்துளதாதலின் அத்திருஷ்டிக் கந்தக்கரண சுத்திவாயிலாய் ஞானத்தின்கண்ணே உபயோகமாவதேபோல, நித்திய கருமம் அகருமமென்னுந் திருஷ்டியை எந்நாலும் விதிக்கவில்லையாதலின், அத்திருஷ்டிக்கு எவ்வர்த்தத்தின்கண்ணும் உபயோகஞ் சம்பவியாது. ஆண்டு 'கர்

ணூகஉ-ழயஃ வபெஷூகூ' என்னுங் கீதாவசனமே அக்கருமத்தே அகருமதிருஷ்டியை விதிக்கின்றது எனக்கூறிற்சம்பவியாதாம்; ஏனெனின் இக்கீதாவசனத்திற்கு இவ்வகைப் பொருள்கோடலால் பூர்வம் 'யஜ்ஞ ாகூவாஜொகூஷூவெஉஹா-ஹாகூ' என்பது முதலிய உபக்கிரமாதி வசனங்களின் விரோதம் கூறப்பெற்றுளது. இவ்வாறு நித்தியங்களைச் செய்யாமை வடிவ அகருமமும் ஸ்வரூபமாயே அந்நித்திய கருமத்திலும் விருத்தகருமத்தின் இலக்ஷகத்தன்மையினுனே உபயோகியாம் அவ்வகருமத்தே கருமதிருஷ்டி எப்பொருளின்கண்ணும் உபயோகியாகமாட்டாது. அந்நித்தியகருமத்தைச் செய்யாமையால் பிரத்தியவாயமுமுண்டாகாதாம்; ஏனெனின், அதனைச்செய்யாமை அபாவவடிவமாம், பிரத்தியவாயம்பாவவடிவமாம். அவ்வபாவத்தினின்றும் பாவோற்பத்தி சம்பவியாதாம், அங்ஙனமாகுமாயின், அபாவமோ, சர்வதேசகாலத்துமிருக்கின்றதாதலின் சர்வதேசகாலங்களில் சர்வகாரியோற்பத்தியுண்டாதல்வேண்டும்; ஆனாலவ்வாறு காணுமாதலின் அவ்வாறுடன்படல் முற்றிலும் முரணும். அல்லது, பாவரூப அர்த்தமே தர்ம அதர்மரூப அபூர்வத்தின் ஜனகமாம். அபாவரூப அர்த்தம் அபூர்வ ஜனகமாகாதாமாதலின், நித்திய கருமாபாவம் பிரத்தியவாய ஜனகமன்றும்; மற்றே, அந்நித்தியகரும அனுஷ்டானகாலத்தே அதன் விரோதியாய சயன உபவேசனுதி நித்தியகரும அகரணுபலக்ஷித பாவரூபகருமமே, அப்பிரத்தியவாய ஹேதுவாம். இது சர்வ வைதிகபுருடரின் சித்தாந்தமாமாதலின் மித்தியாஞானநிவிருத்திப் பிரசங்கத்தே அதன் வியாக்கியானமே செய்தல் முற்றிலும் முரணும். ஸ்ரீபகவத்வசனம் நித்தியகரும அனுஷ்டானபரமென எவனேனுங் கூறின் அதுசம்பவியாதாம். ஏனெனின், இவன் நித்தியகருமத்தைச் செய்கவென்பதனை 'கஉ-ணூகஉ-ழயவெபெஷூகூ' என்னும் வசனம் கூறிலது. அப்பொருளை யறிவித்தருளும்பொருட்டு ஸ்ரீபகவான் அவ்வசனத்தைக் கூறியருளியிருப்பாராயின் ஸ்ரீபகவானிடத்தே மித்தியாவாதித்தன்மை சித்தமாகும். ஒருரையின்கண்ணே, 'கஉ-ணூகஉ-ழயஃ வபெஷூகூ' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் கூறப்பெற்றுளது:—ஆண்டுப்பூர்வம் 'கஉ-ணொஹூவிபொஉவூ' என்னும் சுலோகத்தின்கண்ணே கருமம் விகருமம் அகருமம் என்னும் மூன்றன்பரியவசானரூபகதி அத்தியந்தங் ககனமாமாதலின் அதிகாரியானவன் கருமங்களின்கதியை யவசியம் அறியவேண்டும் என்னுமிப்பொருள் ஸ்ரீபகவானுற் கூறியருளப்பெற்றதாம். அப்பொருளின் வியாக்கியானவடிவமே 'கஉ-ணூகஉ-ழயஃ வபெஷூகூ ஸஉகூ-ஷெஷூஷ- ப-ஹீஜாஙூ' என்னுமிவ்வசனமாம். அஃதாமாறுகாட்டுதும்:—'கஉ-ணி' என்னும்பதத்தால் கருமம் அகருமம் விகருமம் என்னும் மூன்றையுங்கவர்க. 'சுகஉ-' என்னும் பதத்தால் அம்மூன்றினும் விபரீதபாவத்தைக்கொள்க. ஆண்டு யாவன் கருமத்தின்கண்ணே அகருமத்தைக்காண்பனே அதாவது கருமத்தினும் விபரீதபாவத்தைக் காண்பனே ஆண்டு அம்மூன்றன்கண்ணும் அக்கர்மாதிகளினும் விபரீதரூபத்தன்மை சாஸ்திரப்பிரமாணத்தாற்காணவரும். கருமத்தின்கண்ணே சிரத்தையற்றவன் செய்தயாகம் பலகாரணமன்றுதலின் செய்யினும் செய்யாததற்கொப்பேயாமாதலின் சிரத்தையற்றவன் செய்தயாககருமம் அகருமத்தின்கண்ணே பரியவசானத்தையடையும். இடாம்பிகன்செய்த யாககருமம் விகருமத்தின்கண்ணே பரியவசானத்தையடையும். இப்பொருளை ஸ்ரீபகவான் தாமே 'சுஸ்ரூயாஹ- தஂஉதஂ தவஸ் தஂகரு தஂஅயகூ। சுஸதிதூ-அூதெவாய-ழ நஅதகூவெ ரதூ-நொ உஹ' என்னும் சுலோகத்தின்கண்ணே மேற்கூறியருளுவர், இவ்வாறு சர்வவியாபாரமற்ற உதாசீனத்தன்மை அகர்மரூபமாயினும் துக்கிகளைக் காப்பாற்றுவதிற் சமர்த்தன் ஔதாசீனத்தன்மையை யங்கீகரித்துத் துக்கிகளின்காப்பைச் செய்யாதொழியின் அவனது உதாசீனத்தன்மைரூப அகருமம் விகருமத்தின்கண்ணே பரியவசானத்தையடையும். பிதிர்யாகாதி ஐந்தனையுங் குறித்தகாலத்தே செய்யாமை அகர்

மரூபமாயினும் அக்கால் ஈசுவர ஆராதனத்தே அத்தியந்தம் ஆசக்தியுடையவனு
க்கு அவ்வைர்த்தனையும் செய்யாமை வடிவ அகருமமும் கருமத்தின்கண்ணே பரிய
வசானத்தையடையும். இவ்வார்த்தையை 'ஸவ-ூயஉ-ராதூரிதூஜஜூஊ ஒகூஂமாா
ணஂவ்ரஜ' என்னும் சுலோகத்தே ஸ்ரீபகவான் தாமே திருவாய்மலர்ந்தருளியுள்
ளார். நித்தியகரும பரித்தியாகத்தால் பாவப்பிராப்திகூறப்பெற்றதும் அதுசெய்
யுங்காலத்தே சாஸ்திர நிஷித்தலௌகிக வியவகாரஞ்செய்வதனனே பாவ அடைவு
கூறப்பெற்றுளது. ஆனால், அக்கால் ஈசுவர ஆராதனத்தே பற்றுதலுற்றவன் பிர
த்தியவாயத்தையடையான்; இக்காரணத்தானே பூர்வம் நீர்முதலியவற்றின் உள்
ளிருந்து தவஞ்செய்யும் இருஷிகள் அக்கால் நித்தியகருமத்தைச் செய்யாமையாற்
பிரத்தியவாயத்தை யடைந்திலர். இவ்வாறு ஒருமிருகத்தைக் கொல்லல் விகர்மரூப
மெனினும் 'ஃஜூரீஷொரீயஂ வஶு-ஊலுஹெதூ' என்னும் வசனத்தால் யாகத்தே
செய்யும் ஹிம்சை கருமத்தின்கண்ணே பரியவசானத்தையடையும். வாளா அம்மி
ருகம்நஷ்டமாயின் அதனிம்சையினின்றும் கருமரூப அபூர்வம் உற்பன்னமாகாதா
மாதலின் அதுகருமரூபமுமன்றும். இச்சையுடையோன் அப்பசுஹிம்சையைச்செய்
யானாதலின் அது விகர்மரூபமுமன்றும்; மற்றோ, எஞ்சியதாய்ச் செய்யப்படினும்
அவ்விம்சை செய்யாமைக்கொப்பேயாம். ஆகையினால், அவ்வியர்த்தமாய ஹிம்சை
அகருமத்தின்கண்ணே பரியவசானத்தையடையும், இவ்வாறு கள்வனைவிட்டுவிடு
தல் அவனோடுகூடியார்க்குக் கருமரூபமேயாயினும் அரசனுக்கு விகருமமேயாகும்;
ஏனெனின், 'ஷெதூஙவ்ரஉ-ஊகொாஜதிா வாவஊஷீ-ூ' என்பதுமுதலிய வசனங்க
ளில் கள்வனைவிடுதல் அரசனுக்குப் பாவ அடைவின் ஹேதுவெனக் கூறப்பெற்று
ளது. அதேகள்வன் விடுபாடுநிட்காமசந்நியாசிக்கு உபேக்ஷாவிஷயமாதலின்
அகர்மரூபமேயாம். இவ்வாறு மெய்பேசுதல் கர்மரூபமாயினும் அதனாலொருபிரா
ணிக்கிம்சையுண்டாயின் அதுவும் விகருமத்தே பரியவசானத்தையடையும். இவ்
வாறு பொய்மொழிபுகலல் விகருமரூபமாயினும் அதனாலொருபிராணியின் காப்
புண்டாயின் அதற்குக் கருமத்தின்கண்ணே பரியவசானமுண்டாம். இவ்வாறு
யாவன் சாஸ்திரப்பிரமாணத்தால் கருமத்தின்கண்ணே அகருமத்தன்மையையும்
விகருமத்தன்மையையும் காண்பனோ அகருமத்தின்கண்ணே கருமத்தன்மையை
யும் விகருமத்தன்மையையும் காண்பனோ, விகருமத்தின்கண்ணே கருமத்தன்மை
யையும் அகருமத்தன்மையையும் காண்பனோ; காரிய அகாரிய விபாகத்தை யுண
ர்ந்தவவன் கருமாதிகளின் வாஸ்தவஸ்வரூப முணர்ந்தவனாதலின் மதிமான் எனப்
படுவன் என்பதாம். பூர்வம் 'கிஂகஉ-ூகிஉகூஒஉ-ூகி' என்னும் சுலோகத்தே எக்க
ரும அகருமஸ்வரூபத்தே கவிகட்கும் மோகவடைவுகூறப்பெற்றதோ 'யஜஜ்ஞாஸ்வா
ஓாக்ஷூவொஉஶு-ஹாஸ' என்னும் வசனத்தே எக்கரும அகருமஞானம் அசுப
சம்சாரத்தினின்றும் மோக்ஷஹேது கூறப்பெற்றதோ அக்கரும அகருமங்களின்
ஸ்வரூபத்தன்மை யாம் நினக்குக்கூறுகின்றேம் என ஸ்ரீபகவான் அருச்சுனனுக்
குக் கூறியருளினர். அவ்வசனத்தின் வியாக்கியானரூபம் 'கூகஉ-ூணிஅகஉ-ூயஃ
வமெஶ்ூதூயா-கூஃ' என்னும் வசனமாம். ஆண்டிவ்வசனத்தின்கண்ணேயிருக்கும்
'அ'காரம் கருமத்தின்கண்ணே அகரும தரிசனத்தையும் அகருமத்தின்கண்ணே
கருமதரிசனத்தையும் சமுச்சயஞ்செய்விக்கவாம். அதனாலிப்பொருள் அணியப்
பெறும்:—யாவன் மதிமானோ யுக்தனோ அவனே முழுக்கருமஞ் செய்தவனாவன்,
யாவன் கேவலம் மதிமானேயாவனோ யுக்தனல்லனோ அவனும் முழுக்கருமஞ்செய்
தவனாகான். யாவன் கேவலம்யுக்தனேயாவனோ மதிமானல்லனோ அவனும் முழுக்
கருமஞ்செய்தவனாகான், இப்பொருளை இப்போது வெளிப்படையாய்க் காண்பிப்
பாம்:—யாவன் அகருமத்தே கருமத்தைக்காண்பனோ அவன் யுக்தனெனப்படு
வன். அசைவற்ற கூடஸ்தஆத்மா அகருமமாம். அசைவுற்ற ஆகாசாதியாகியப் பிர
பஞ்சமும் மனோபுத்தியாதி ஆந்தரப்பிரபஞ்சமும் கருமமெனப்படும். அவ்வகரும

த்தே அக்கருமத்தை ஆதார ஆதேய பாவத்தாலேனும் உபாதான உபாதேயபாவத்தாலேனும் அதிஷ்டான அத்தியஸ்தபாவத்தாலேனும் கண்டுகொண்டு நூலுணர்ந்தோன் கருமத்தைச்செய்வன். ஆண்டு முதலிற் சாங்கியசாஸ்திரமுடையரோ ஜபாகுசுமத்தின் செம்மை வெண்மணியின்கண்ணே தோற்றுதலேபோலச் சங்காதத்தின் கர்த்திருத்துவாதி தர்மம் அசங்ககூடஸ்த என்னிடத்தே அவிவேகத்தாற்றோற்றுகின்றது எனப்பாவித்து கருமத்தைச்செய்வர் மற்றைய உபநிஷத்துணர்ந்தவரோ பொன்னில்விளைந்த குண்டலகங்கணாதி காரியங்கள் பொன்னேயாவதேபோலப் பிரஹ்மத்தினின்றும் உற்பன்னமாய இச்சர்வஜகத்தும் பிரஹ்மரூபமேயாமாதலின் யாகாதிகருமங்களும் திரவியதேவதைமுதலிய சாதனங்களும் கர்த்தவாய யாமும் பிரஹ்மரூபமேயாம் எனப் பாவித்துக் கருமத்தைச்செய்வர், இவ்விருவரும் யுக்தரெனப்படுவர். ஆண்டு முற்கூறியமுறையே யாவன் மதிமானுபினும் இவ்வகை யுக்தனல்லனோ, அம்மதிமானுப அயுக்தன்செய்யுங் கருமமெல்லாம் அசத்தேயாகுமாதலின், அவை அவனை அசுப சம்சாரத்தினின்றும் விடுபடுத்தா. "யொவாவஊ ஒக்ஷரஂ மாமஜூவிஜிக்ஷாஃஸ்மிநு ஜொகெஜ௱ஹொதிஜெதெதவஜூஷ்வதெ ஷஹ௱நிவஷஊவ ஹஸ்ரானஹீஷ்வஷெவாஸ்யூ தஜூவதி" (போ-ள்.) ஹே கார்க்கியே! யாவன் இவ்வக்ஷரஆன்மாவை அறியாது இம்மனுஷலோகத்தே எவ்வெவ்வோமத்தையும் எவ்வெவ்வியாகத்தையும் செய்வனோ, அநேக ஆயிரவருஷபரியந்தம் எவ்வெத்தவத்தையியற்றுவனோ அவை யாவுமிவனுக்கு அழிவுடைய பலத்தையேயடைவிக்கும். யாவன் யுக்தனுய்ப் புத்திமானல்லனோ அவன் செய்யத்தகாத தொழிலையும் செய்வன். அதனுல் அவன் பிரத்தியவாயத்தையேயடைவன்; ஏனெனின், பாவந் தீண்டாக்காரணமாய அபரோக்ஷஞானம் அந்நிர்ப்புத்தி யுக்தனுக்கின்றும்; மற்றோ, அவனுக்குக் கேவலம் பரோக்ஷஞானமேயுளது. இக்கருமத்தையும் பரோக்ஷஞானத்தையும் 'விஜூாஂஆஃ விஜூாஂஅ' என்னுஞ் சுருதி அவித்தை வித்தை என்னும் இரண்டு சப்தத்தால் கூறி அவ்விரண்டன் சமுச்சயத்தைக் கூறியிருக்கின்றது. அல்லது, அகருமத்தின்கண்ணே கருமதரிசனம், பரோக்ஷ அபரோக்ஷதரிசனம் என விருவகையாம். அவற்றுள் பரோக்ஷதரிசனமுடையவனே ஞானகரும சமுச்சய அனுஷ்டான கர்த்தாவாதலின் புத்திமானெனப்படுவன். அபரோக்ஷதரிசனமும், உபாஸ்ய சாக்ஷாத்காரமெனவும், தத்துவ சாக்ஷாத்காரமெனவும் இருவகையாம். உபாசனைசெய்யப்படுவது உபாஸ்யமாம், அதுவும் வியாகிருதம் அவ்வியாகிருதம் என இருவகைத்தாம். அப்பேதத்தால் அச்சாக்ஷாத்காரமும் இருவகைத்தாம். காரியரூப சூத்திரான்மா வியாகிருதமாம், சர்வஜகத்தின் காரணம் அவ்வியாகிருதமாம். அந்த வியாகிருத சாக்ஷாத்காரமுடையவன் தேகாபிமானமற்றவனுதலின் யோகசாஸ்திரத்தே விதேகனெனப்படுவன். அவ்யாகிருத சாக்ஷாத்காரமுடையவன் பிரகிருதி லயனெனப்படுவன். இவ்விரண்டு உபாசனைகட்கும் 'ஸநூஷெவாஹ௱ஃ ஸஂஹவாக' என்பதாதி சுருதி சம்பவம் அசம்பவம் என்னும் இரண்டு சப்தங்களாற்கூறிச் சமுச்சய விதானஞ்செய்துளது. அவ்வுபாசகன் யுக்தனெனப்படுவன். இவனுக்கும் மேலெஞ்சிய கர்த்தவ்யமிருக்கின்றதாதலின், இவனும் முழுக்கருமஞ்செய்தவனுகான்; மற்றோ, யாவன் பிரபஞ்சரூப கருமத்தைப் பாதித்துக் கூடஸ்த ஆத்மரூப அகருமத்தின் முக்கிய தரிசனத்தை யடைந்துளானோ, அத்தத்துவ சாக்ஷாத்காரமுடையவனே கிருதகிருத்தியனுதலின் முக்கிய முழுக்கருமஞ்செய்தவனுவன். இவ்வியாவருள்ளும்முதலில்ஞானகருமசமுச்சய அனுஷ்டானஞ்செய்யும் புருஷனே தேகாபிமானி மனுஷருள்ளேமதிமானுவன் ஆகையால், அக்கிராந்ததரிசியாதலின் அவன் அகவியேயாவன். வியாகிருத சாக்ஷாத்காரமுடையவனும் அவ்வியாகிருத சாக்ஷாத்காரமுடையவனும் ஆகிய மத்திய இருவரும் க்ராந்ததரிசிகளாதலின், கவிகளாவாராயினும் தத்துவவஸ்துவின்கண்ணே மூடராதலின், இவ்விருவரும் 'கவயொ

வ்ருத்ரோஹிதாஃ' என்னும் வசனத்தாற் கூறியருளப்பெற்றனர். இவ்விருவருக்கும் வியவதானமாய் அசுபசம்சாரத்தினின்றும் முக்தியுண்டாம். தத்துவ சாக்ஷாத்கார உத்தமனே ஜீவிக்குங்காலத்தே அசுபசம்சாரத்தினின்றும் முக்தனாவன். ஈண்டு சூக்ஷ்மதரிசிக்குக் கிராந்ததரிசி யெனப் பெயராம். அல்லது, 'கர்மண்யகர்ம ய: பஶ்யேத்' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் செய்க. பூர்வம் 'தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி' என்னும் வசனத்தே ஸ்ரீ பகவானனவர் கருமம் அகருமமிரண்டையும் வக்தவ்யரூபமாய்க் கூறியருளினர். 'கர்மணோ ஹ்யபி போத்தவ்யம்' என்னும் வசனத்தே அவ்விரண்டையும் போத்தவ்யரூபமாய்க் கூறியருளினர். அவ்விரண்டின் போதம் இலக்ஷணமின்றி யுண்டாகாதாதலின், இச்சுலோகத்தே அவ்விரண்டின் இலக்ஷணங் கூறியருளலே உசிதமாம். ஆண்டு, 'கர்மண்யகர்ம ய: பஶ்யேத்' என்னும் வசனத்தால் அகருமத்தால் விசேஷிதமாயதே கருமமாம்; அன்னியங் கருமமன்றாம் எனக் கரும இலக்ஷணம் கூறியருளப்பெற்றுளது. 'அகர்மணி ச கர்ம ய:' என்னும் வசனத்தால் கருமத்தால் விசேஷிதமாயதே அகருமமாம் என அகரும இலக்ஷணங் கூறியருளப்பெற்றது. இவ்வியாக்கியானத்தே சுலோகாக்ஷரங்களின்பொருள் இவ்வாறு கொள்க. திரவியதேவதாதி சாதனசகித யாகாதிகள் கருமமாம். அசைவற்ற கூடஸ்தப்பிரஹ்மம் அகருமமாம். ஆண்டு, யாவன் சாதனசகித யாகாதிரூப கருமத்தே கூடஸ்தப்பிரஹ்மரூப அகருமத்தைக் காண்பனோ; அதாவது, "ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம் । ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதினா" ॥ என்னும் பகவத் வசனங் கூறியமுறையே அவ்வியாகாதிகருமத்தே அதன் திரவிய தேவதாதி அங்கங்களில் யாவன் பிரஹ்மதிருஷ்டிசெய்வனோ, அத்திருஷ்டியினனன்றி எக்கருமம் செய்யப்படுமோ அது வியர்த்தசேஷ்டை வடிவமேயாம். இக்காரணத்தால் கருமத்தின் கதி அத்தியந்தம் ஆழ்ந்ததாம்.

சங்கை:—ஹே பகவன்! எவ்வகருமம் கருமத்தின்கண்ணே ஆரோபணஞ் செய்யப்பட்டதோ அஃதென்னவஸ்துவாம்?

சமாதானம்:—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார். 'அகர்மணி ச கர்ம ய:' என ஹே அர்ச்சுன! எவ்வஸ்துவின்கண்ணே புண்ணியபாவரூப கருமம் 'புண்யோ வை புண்யேன கர்மணா பவதி பாப: பாபேன' என்னுஞ் சுருதியின்பலத்தால் பிரதீதியாமோ, எவ்வஸ்துவின்கண்ணே அக்கருமத்தின் சுகதுக்கரூப பலம் யான் சுகி யான் துக்கி என்னும் பிரதீதியின்பலத்தால் பிரதீதியாமோ, அந்தப் பிரத்தியக்குச் சேதனமே அகருமரூபமாம். சர்ப்பபாவமற்ற இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் அத்தியஸ்தமாவதேபோல அசைவற்ற சேதனரூப அகருமத்தே இவ்வசைவுறுங் கருமம் அத்தியஸ்தமாம். இவ்வாறு யாவன் அகருமத்தே கருமத்தைக்காண்பனோ. ஈண்டிது கருத்தாம்:—இரஜ்ஜுவின்கண்ணே அத்தியஸ்த சர்ப்பத்தைக் காண்பவனுக்கு இது சர்ப்பமன்று; மற்றோ, இரஜ்ஜுவேயாம் என்னும் ஆப்தவக்தாவின் வசனத்தால் விக்ஷேபப் பிரபலத்தால் இரஜ்ஜுத்வஞானம் உண்டாகாதாயின், அவ்வாப்தன் பிராந்தனுக்கு இச்சர்ப்பத்தை நீ இரஜ்ஜுதிருஷ்டியால் உபாசனை செய்தியென வுபதேசித்தபோது அவன் அவ்வுபாசனையின் திடத்தால் அச்சர்ப்பத்தைமறந்து இரஜ்ஜுத்தன்மையையே சாக்ஷாத்காரஞ்செய்வன். யாவன் இது சர்ப்பமன்று; மற்றோ, இரஜ்ஜுவேயாம் என்னும் வசனத்தினனே ரஜ்ஜுவின் வாஸ்தவவடிவத்தை யுணர்வனோ அவனுக்கு இச்சர்ப்பம் ரஜ்ஜுவேயாமென்னும் விருத்தியின் நிரந்தரப் பிரவாகரூப உபாசனைசெய்வதற்குச் சிறிதுமாத்திரையும் பிரயோஜனமின்றாம். இவ்வாறு கூடஸ்தப் பிரஹ்மரூப அகருமத்தின்கண்ணே அத்தியஸ்தகர்த்தா கிரியாதி பிரபஞ்சரூபகருமத்தைத் தத்வமசியென்னும்

வசனத்தாற் பாதித்து தூயமனமுடையவனுக்குக் கூடஸ்தப்பிரஹ்மரூப அகருமத்தின்போதமாதல்கூடும். மனத்தூய்மைபெறாதவன் கருமத்தை அகருமதிருஷ்டியால் உபாசனைசெய்யின் அதன்றிடத்தால் அவனும் அக்கருமமறைப்பால் அகருமவாஸ்தவஸ்வரூபத்தைச் சாக்ஷாத்கரிப்பன் என விலக்ஷண வியாக்கியானஞ்செய்து அவ்வுரைகாரர் ஸ்ரீபாஷியக்கார பகவானது சந்நிதியில் இவ்வகைப் பிரார்த்தனை செய்துகொள்கின்றார். "வ்யாவ்யாதா²ஈவி௭ஜநாஷி ஹாஷ்யகாரெண தா²ஊயீதா । ம²ஹாவஜெ்யாதிரொ வ்ஹூிகிம் தீ³வஸ்யாக-உதா²ஊயீதா" ॥ (பொ-ள்.) இவ்வகையாய விலக்ஷணவியாக்கியானத்தையுஞ்செய்யு மெனக்கு ஸ்ரீ பகவான் பாஷியக்கார துல்லியத்தன்மை யுண்டாகமாட்டாது. குகையின்கண்ணே பிரகாசிக்கும் தீபத்திற்குச் சூரியபகவத்துல்லியத்தன்மை யுண்டாகாததேபோலும்.(18)

(அ-கை.) இப்போது பூர்வங்கூறிய பரமார்த்ததரிசிக்குக் கர்த்திருத்துவ அபிமானமின்மையின் கருமத்தாற் பற்றின்மையை ஸ்ரீபகவான் 'யஸ்யஸவெ-உ' என்னும் வசனமேமுதலாக 'ஸ்ரூஹகஉ-உஸஉாயிநா' என்னும் வசனம்வரைவிஸ்தாரமாய்க் கூறியருளுவர்:—

சு-ம். யஸ்ய ஸவெ-உ ஸஉாரா²ஹா꞉ காஉஸம்கல்ப வஜி-உதா꞉ ।
ஜ்ஞாநாஙீ்உயகஉ-உாணம் தஉாஹு²꞉ வம்ஷிதம் ப³ுயா꞉ ॥ (19)

ப-ம். 1 யஸ்ய 2 ஸவெ-உ 3 ஸஉாரா²ஹா꞉ 4 காஉஸம்கல்ப வஜி-உதா꞉ 5 ஜ்ஞாநாஙீ்உயகஉ-உாணம் 6 தம் 9 ஆஹு²꞉ 8 வஷிதம், 7 ப³ுயா꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவனுக்குச் சர்வகர்மங்களும் காமசங்கற்பமற்றவாமோ, ஞானக்கினியால் தக்தமாயகர்மம் யாவனுக்கோ அவனைப் பிரஹ்மவேத்தாக்கள் பண்டிதனென்பர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பூர்வசுலோகத்தின்கண்ணே கூறப்பெற்ற எப்பரமார்த்ததரிசிக்குச் சர்வ லௌகிக வைதிக கருமங்கள் காமமற்றவாமோ சங்கற்பமற்றவாமோ, ஈண்டுச் சுவர்க்காதிபலன்களின் இச்சை காமமெனப்படும். யான் கருமகருத்தாவென்னுமபிமானம் சங்கற்பமாம். எவனதுகருமம் அவ்விரண்டுமற்றதாமோ; அதாவது யாவனுக்குச் சர்வகருமங்களும் கேவலம்லோகசங்கிரகத்தின் பொருட்டேனும் சரீரஜீவனமாத்திரப்பொருட்டேனும், பிராரப்த கருமவேகத்தால் வியர்த்தசேஷ்டைவடிவமாமோ பூர்வசுலோகத்தின்கண்ணே கூறியபிரபஞ்சரூபகருமத்திற் சத்தாஸ்பூர்த்திரூபமாய்ச் சைதன்ய பிரஹ்மரூப அகருமத்தின்றரிசனமும் அவ்வகருமத்தே கற்பிதரூபமாய்க் கருமதரிசனமும் ஞானமெனப்படும். அது அக்கினியைப்போலச் சர்வகருமங்களின் தாககமாதலின் அக்கினிரூபமாம். அவ்வக்கினியால் தக்தமாயது சுபாசுபகருமமெவனுக்கோ, ஆண்டு ஸ்ரீவியாசசூத்திரம் 'தஷயிமஉ உத்தரவெ-உாவயொர-ஷ்லெஷ விநாஸௌ தத்³வ்யவஜெஸாஜ'

(பொ-ள்.) அந்தப்பரமான்மதேவரது சாக்ஷாத்காரமுண்டாகவே அதன்பின்னர்ச்செய்த புண்ணியபாவகருமங்களின் சம்பந்தமேயறிஞனுக்குண்டாகாதாம். அதன்முன்னராற்றிய சஞ்சிதத்தின் நாசம் ஞானக்கினியாலுண்டாம். இவ்வார்த்தை அநேக சுருதிஸ்மிருதிகளில் காணவருகின்றது. இத்தகையவறிஞனை பிரஹ்மவேத்தாக்கள் உண்மையாய்ப்பண்டிதனென்பர். ஈண்டு யாண்டும் சைதன்யப்பிரஹ்மமாத்திரத்தை விஷயஞ்செய்யும் அந்தக்கரணவிருத்தி பண்டாவெனப்படும், அது எவனந்தக்கரணத்தேயுண்டாமோ அவன் பண்டிதனாவன். உலகின்கண்ணும் நற்றறிசியே பண்டிதனெனப்படுவன், மயங்கியோன் பண்டிதனெனப்படான், அந்நற்றறிசித்தன்மை அறிஞனிடத்தேயுளது அஞ்ஞானியிடத்தே அஃதின்றாதலின் அவ்வறிஞனே பண்டிதனாவன். (19)

(அ-கை.) ஹே பகவன்! அந்த ஞானாக்கினியால் பூர்வமாரம்பிக்கப்பட்ட பிராரப்தகருமத்தினும் வேறாய கருமதாகமாகுக ஆகாமிபவினைவு முண்டாகாதொழிக; ஆனால், ஞானோற்பத்திகாலத்தே செய்யப்பட்டகருமம் பூர்வகருமத்தானேனும் உத்தரகருமத்தானேனும் அந்தர்ப்பூதமாகாதாமாதலின் அதுவோ ஞானவானுக்கு அவசியம்பலவனைவை யுண்டாக்கும் என அர்ச்சுனனது ஆசங்கைநிகழ ஸ்ரீபகவான் அதனை நீக்கி யருளுகின்றார் :—

சு-ம். த்யக்த்வா கர்மபலாஸங்கம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ।
கர்மண்யபிப்ரவ்ருத்தோऽபி நைவ கிஞ்சித்கரோதி ஸ: ॥ (20)

ப-ம். 2 த்யக்த்வா 1 கர்மபலாஸங்கம் 3 நித்யத்ருப்த: 4 நிராஶ்ரய: 5 கர்மணி 6 அபிப்ரவ்ருத்த: 7 அபி 10 ந, ஏவ 9 கிஞ்சித் 11 கரோதி 8 ஸ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கர்மபல ஆசங்கத்தைப் பரித்தியாகித்து நித்திய திருப்தனாய் நிராசிரயனாய்க் கருமத்தின்கண்ணே பிரவிருத்தனாகியும் அவ்வறிஞன் சிறிதுமாத்திரையும் செய்யாதவனேயாவன்,

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நித்தியநைமித்திக கருமத்தின்கண்ணே யான்இவற்றின்கருத்தா என்னும் அபிமானம் கரும ஆசங்கமெனப்படும். அதற்குச் சுவர்க்காதிபலத்தின்கண்ணே போகாபிலாஷை பல ஆசங்கமாம். அவ்விரண்டையும் பரித்தியாகித்து அதாவது அகர்த்தா அபோக்தாவாகிய ஆன்மாவின் யதார்த்தஞானத்தால் அவ்வாசங்கத்தைப் பாதித்து யாவன் நித்தியதிருப்தனாவனோ அதாவது பரமாநந்த ஸ்வரூபலாபத்தால் யாவன் சர்வபதார்த்தங்களிடத்தும் நிராகாங்க்ஷையடைவனோ, யாவன் நிராசிரயனோ, அதாவது அத்வைத ஆத்மதரிசனத்தால் யாவன் தேகேந்திரியாதிரூப ஆசிரய அபிமானமற்றவனோ, அத்தகைய ஜீவன் முக்தன் சமாதியினின்றும் கிளம்பியதசையில் பிராரப்தகருமவயத்தால் லோகதிருஷ்டியால் லௌகிக வைதிக கருமத்தைச் சாங்கோபாங்கமாய் அனுட்டிக்கும்பொருட்டுப் பிரவிருத்திப்பினும் அவ்வறிஞன் தனது பரமார்த்ததிருஷ்டியாற் சிறிதுமாத்திரையும் கருமத்தைச்செய்திலன். எதனால் நிஷ்கிரிய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தால் அவ்வறிஞனது சருவகருமமும் பாதத்தையடையுமோ ஈண்டு, அவ்வறிஞனுக்கு ‘நித்யத்ருப்த: நிராஶ்ரய:’ என இரண்டு விசேஷணங்கள் கூறியருளப்பெற்றன, அவை யேதுவடிவமாம். பல ஆசங்க நீக்கத்தின்கண்ணே நித்தியதிருப்தன் என்னுமேதுவாம். கரும ஆசங்கநீக்கத்தின்கண்ணே நிராசிரயன் என்னுமேதுவாம். அதனால் இவ்விரண்டனுமானங்கள் சித்தங்களாம் :—அறிஞன் பல ஆசங்கமற்றவனாவன், நித்தியதிருப்தனாதலின் யாவனவ்வாறாகானோ அவனிவ்வாறுமாகான், அஞ்ஞானியேபோலும். அறிஞன், கரும ஆசங்கமற்றவனாவன்; நிராசிரயனாதலின், யாவனவ்வாறாகானோ அவனிவ்வாறுமாகான், அஞ்ஞானியேபோலும். (20)

(அ-கை) ஆண்டு, அத்தியந்த விக்ஷேப ஹேதுவாய ஜோதிஷ்டோமாதி கருமமும் நன்ஞானவயத்தால் பந்த ஹேதுவாகாதாயின், சரீர ஸ்திதிமாத்திர ஹேதுவும் விக்ஷேபத்தையியற்றாத பிக்ஷாடனாதி யதிகருமமும் நற்றரிசனபலத்தால் பந்தஹேதுவாகாதென்பதன்கண்ணே யாது கூறவேண்டியுளது. இவ்வாறாய கைமுதிக நியாயத்தால் ஸ்ரீ பகவான் பிக்ஷாடனாதி கருமத்தே பந்தஹேதுவின் அபாவத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். நிராஶீர்யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ: ।
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் ॥ (21)

ப-ம். 1 நிராஶீ: 2 யதசித்தாத்மா 3 த்யக்தஸர்வபரிக்ரஹ: 5 ஶாரீரம் 4 கேவலம் 6 கர்ம 7 குர்வந் 9 ந 10 ஆப்நோதி 8 கில்பிஷம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் திருஷ்ணையற்றவனோ, வெற்றிகொண்ட சித்தாத்மாவையுடையவனோ, சர்வ பரிக்கிரகத்தையுந் தியாகஞ்செய்தவனோ; அவன் கர்த்திருத்துவ அபிமானமற்ற சரீரஸ்திதியின்கண்ணே உபயோகியாய பிக்ஷாடனாதி கருமத்தைச் செய்பவனாய்க் கில்பிஷத்தையடையான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் சுவர்க்காதிபல திருஷ்ணையற்றவனோ, அந்தக்கரணரூப சித்தத்தையும் பாகிய இந்திரியசகித தேகரூப ஆன்மாவையும் பிரத்யாகாரஞ்செய்து நிக்கிரகஞ்செய்துளானோ, எதனால் அவன் ஜிதேந்திரியனாவனோ அதனானே அவன் திருஷ்ணையற்றவனாதலின் தியக்த சர்வ பரிக்கிரகனாவன். ஈண்டு விஷயபோக சாதனரூப தனாதி யுபகரணம் பரிக்கிரகமாம். அச்சர்வபரிக்கிரகத்தையும் தியாகஞ்செய்தவன் தியக்த சர்வ பரிக்கிரகனாவன். இத்தகைய நிராசியும் யதசித்தாத்மாவும், தியக்த சர்வபரிக்கிரகனும் ஆய சந்நியாசி பிராரப்தகருமவயத்தால் சரீரகருமத்தைச்செய்பவனாய்க் கில்பிஷத்தையடையான். ஈண்டுச் சரீரஸ்திதிமாத்திரம் பிரயோஜனம் யாவனுக்கோ அத்தகைய கந்தைகௌபீனமுதலியவற்றின் கவர்ச்சிவடிவ பிக்ஷாடனாதிரூப காயிகவாசிகமானஸ கருமத்தைச் சந்நியாசிக்குச் சாஸ்திரம் விதானஞ்செய்துளது. அது சாரீரகருமமாம். அதனைக் கர்த்திருத்வ அபிமானமற்று அந்நியாரோபித கர்த்திருத்வரூபத்தாற் கர்த்தாவாய் அச்சந்நியாசி தருமாதரும பலபூத அநிஷ்ட சம்சாரரூப கில்பிஷத்தையடையான். பாவத்தையே கில்பிஷமெனப்படுமாயினும், பாவத்தைப்போலச்சகாமபுண்ணியமும் அநிஷ்ட பல ஹேதுவேயாமாதலின் அதுவும் கில்பிஷரூபமேயாம். ஒருரையின்கண்ணே, 'ஶாரீரம்' என்னும் பதத்திற்கு இப்பொருள் கூறப்பெற்றுளது:— சரீரத்தால் எக்கருமமாமோ அது சாரீரமாம். இவ்வுரையின்கண்ணே, 'கேவலம் கர்ம குர்வந்' இத்துணை வசனமாத்திரங் கூறலாற் சித்திப்பதினுமதிக அர்த்தம் சாரீரபதங் கூறலாற் சித்தமாகாதாமாதலின், இதர கருமத்தின் அவ்வியாவர்த்தகமாதலின், அப்பதம் வியர்த்தமேயாகும். வாசிகமானசகரும வியாவிருத்தியின் பொருட்டுச் சாரீரபதமாதலின், அப்பதம் வியர்த்தமாகாதாம் என அவர் கூறின், அதுவும் சம்பவியாது; ஏனெனின், 'ஶாரீரம் கேவலம் கர்ம' என்னும் வசனத்தின்கண்ணே ஸ்திதமாய கருமபதம் விகிதகருமவாசகமா? அல்லது, விகிதநிஷித்தசாதாரண கருமமாத்திரவாசகமா? முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கினோ, அதற்கு சாஸ்திரவிகித சாரீரகருமத்தைச்செய்பவனாய் அறிஞன் அக் கில்பிஷத்தை யடையமாட்டான், எனப்பொருளாம். ஆண்டு விகிதகருமத்தே கில்பிஷஹேதுத்தன்மையாண்டுமுண்டாகாதாம், பிராப்த அருத்தத்திற்கே பிரதிஷேதமாகுமன்றி அப்பிராப்தத்திற்காகாதாமாதலின், அதன் பிரதிஷேதமுறலின் அவ்வசனம் அநர்த்தகமாம். சாஸ்திரவிகித சாரீரகருமத்தைச்செய்பவனாய் அறிஞன் கில்பிஷத்தையடையான். இதுகூறியதால் சாஸ்திரவிகிதவாசிகமானச கருமத்தைச் செய்பவனாய் அவன் அக்கில்பிஷத்தையடைவன் எனத்துணியப்பெறும், இவ்வார்த்தை சாஸ்திரவிருத்தமேயாகும். இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அதற்குச் சாஸ்திரவிகித நிஷித்த சாரீரகருமத்தைச்செய்பவனாய் அறிஞன் கில்பிஷத்தையடையானெனப்பொருளாம். இக்கூற்றும் பூர்வம்போலமுற்றினும் முரணுமாதலின் இச்சாரீரபத வியாக்கியானம் அத்தியந்தம் அசங்கதமாம்; மற்றோ, முற்கூறியவியாக்கியானமே நலமுடையதாமென்க. (21)

(அ-கை.) ஆண்டுப்பூர்வசுலோகத்தே சர்வபரிக்கிரகத்தையும் தியாகம்செய்த சந்நியாசியினுக்குச் சரீரஸ்திதிமாத்திரத்தின்கண்ணே உபயோகியாயகர்மத்

தின் கர்த்தவ்வியத்தன்மை கூறியருளப்பெற்றது; ஆண்டன்னவஸ்திராதிகளின்றி சரீரஸ்திதியே சம்பவியாதாமாதலின் யாசனைமுதலிய தனது பிரயத்தினத்தினுலும் சந்நியாசியானவன் அவற்றைச்சம்பாதித்தல்வேணடும் எனப்பொருள்பட ஸ்ரீ பகவான் அதன்கண்ணே நியமத்தை நிகழ்த்தியருளுகின்றூர் :—

சு-ம். யத்ருச்சாலாபஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।
ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வாபி ந நிபத்யதே ॥ (22)

ப-ம். 1 யத்ருச்சாலாபஸந்துஷ்ட: 2 த்வந்த்வாதீத: 3 விமத்ஸர: 7 ஸம: 4 ஸித்தௌ 6 அஸித்தௌ 5 ச 8 க்ருத்வா 9 அபி 10 ந 11 நிபத்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் யதிருச்சாலாபத்தாற் சந்துஷ்டனே துவந்துவதர்மரகிதனே, மற்சரமற்றவனே, பிராப்தியின்கண்ணும் அப்பிராப்தியின் கண்ணும் சமானனே அவன் பிக்ஷாடனுதிகருமங்களைச் செய்தும் பந்தத்தை யடையான்,

(வி-ம்.) சந்நியாசிக்குச் சாஸ்திரம்விதித்த சரீரஸ்திதிமாத்திரத்தின்கண்ணே உபயோகியாய சாஸ்திரவிகிதப் பிரயத்தினத்தினும் வேருய யாசனை கிருஷி சேவை வாணிஜ்யம் முதலிய பிரயத்தினங்களைச் சந்நியாசிக்குச் சாஸ்திரம் நிஷேதித்துளது. அதனைச்செய்யாதிருத்தல் யதிருச்சையாம். அதனுற் சாஸ்திரவிகித அன்னவஸ்திராதிபதார்த்தலாபத்தால் எச்சந்நியாசிசந்துஷ்டனே அதாவது, அவற்றினும் அதிகபதார்த்தத் திருஷ்ணையற்றவனுவனே அவன் யதிருச்சாலாப சந்துஷ்டனுவன். ஆண்டுச் சாஸ்திரத்தே 'பைக்ஷ்யம் சரேத்' என்னும் வசனத்தால் சந்நியாசிக்குப் பிக்ஷாவிதானஞ்செய்து பின்னரிவ்வசனங் கூறியுள்ளது. 'அயாசிதம் யதோபபந்நம் யத்ருச்சயா' (பொ-ள்.) பயிக்கமேற்பமுயல்வதன் முன்னே அவனுக்கு மேன்மையாய கிருகஸ்தன் விருந்திட்ட பிக்ஷான்னம் அயாசிதமாம்; அதனையும் சந்நியாசிகவரலாம். சங்கற்பமின்றியே 5 அல்லது 7 கிருகங்களினின்றும் மாதுகரிவிருத்தியாற்கிடைத்த அன்னம் அசங்கில்ருப்தமாம்; அதனையும் சந்நியாசிகவரலாம். அவனது பிரயத்னமின்றியே அவன்சமீபத்தே பக்தஜனங்கள் அடைவித்த பக்குவஅன்னம் உபபன்னமாம்; அவ்வன்னத்தையும் சந்நியாசி கவரலாம். இவ்வார்த்தை அன்னிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது. "மாதுகரமஸங்க்லுப்தம் ப்ராக்ப்ரணீதமயாசிதம் । தாத்காலிகோபபந்நம் ச பைக்ஷ்யம் பஞ்சவிதம் ஸ்ம்ருதம்" ॥ (பொ-ள்.) மாதுகரம் 1, பிராக்பிரணீதம் 2, அயாசிதம் 3, தாத்காலிகம் 4, உபபன்னம் 5, இவ்வகையாய பிக்ஷான்னம் சந்நியாசியின்பொருட்டாம். ஆண்டு மனேசங்கற்ப அவிஷயபூத 3 அல்லது 5, அல்லது 7 வீடுகளிற்கிடைத்த அன்னம் மாதுகரமாம். சயனத்தினின்றுங் கிளம்புவதற்குமுன் னெவ்வன்பனது பிரார்த்தனையாலேனும் கிடைத்தபிக்ஷான்னம் பிராக்பிரணீதமாம். பயிக்கமேற்பமுயல்வதன்முன் விருந்தாக எவ்வன்பனேனும் தந்த பிக்ஷான்னம் அயாசிதமாம். பிக்ஷையேற்பமுயன்றபின் எவ்வன்பனேனும் பிரார்த்தித்த பிக்ஷான்னம் தாத்காலிகமாம். பிக்ஷாசமயத்தே தன்னுசனசமீபத்தே எவ்வன்பனேனும் பக்குவான்னத்தையுதவின் அது உபபன்னமாம் என்பதுமுதலிய சாஸ்திரவசனம் அச்சந்நியாசிக்குப் பிக்ஷான்னநியமத்தை விதித்து அந்யயாசனுதிப் பிரயத்னங்களின் நிவிருத்தியைக்கூறுகின்றது. இவ்வார்த்தையை மனுபகவானுங்கூறியிருக்கின்றூர் :—"நசோத்பாதநிமித்தாப்யாம் நநக்ஷத்ராங்கவித்யயா। நாநுசாஸநவாதாப்யாம் பிக்ஷாம் லிப்ஸேத கர்ஹிசித்" ॥ இச்சந்நியாசி உற்பாதத்தானும், நிமித்தத்தானும், நக்ஷத்திரவித்தையினுனும், அங்கவித்தையினுனும், அனுசாசனத்தானும், வாதத்தானும், ஒருகாலேனும் பிக்ஷையைக்கவர

இச்சிக்கலாகாது. ஈண்டுப் பூகம்பாதி சுபாசுபபலங்கூறல் உற்பாதமாம். நேத்திர முதலியவை அசைதலின் சுபாசுபபலங்கூறல் நிமித்தமாம், நக்ஷத்திரங்களின் சுபா சுபபலங்கூறல் நக்ஷத்திரவித்தையாம். கரரேகையின் சுபாசுபபலங்கூறல் அங்க வித்தையாம். இந்நீதிமார்க்கம் இவ்வகையாம், இவ்வகை நீ இந்நீதிமார்க்கத்தின் கண்ணே நடவெனவுபதேசித்தல் அநுசாசனமாம். சாஸ்திரார்த்தங்கூறல் வாத மாம் என்பனமுதலிய உபாயங்களால் சந்நியாசியானவன் தனது சரீரநிர்வாகம் ஒருகாலும் செய்யற்க. மற்றே, முற்கூறிய முறையே பிக்ஷான்னத்தால் சரீர நிர்வாகஞ்செய்க. 'யதயொஹக்ஷாஃ௰ஂ ஶூஂ௱ஂவிஶஂதி' என்பது முதலிய சாஸ்திரம் விதித்தசந்நியாசியின் பிக்ஷாப்பிரயத்நமோ சந்நியாசி அவசியம் செய் யத்தக்கதாம்; அதனால் அடையத் தகுதியாய அன்னவஸ்திராதி பதார்த்தமும் சாஸ்திரநியதமேயாமாதலின் அம்முயல்வால் அவ்வஸ்துக்களின் லாபம் யதிருச் சாலாபமேயாம். இவ்வார்த்தை யன்னியசாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெற்று ளது:—'கௌவீநயுமஂவாஸஃ கஂயாஂஶீததிவாரணீஂ। வாடுகெஆவி மூஜ்யாக கூயஂஶதநதவூ ஸஂமூஹஂ॥' (பொ-ள்.) இத்துறவி இருகௌ பீனம், இரண்டு வஸ்திரம், சீதநீக்கத்திற்காகக் கம்பளாதிகந்தை, பாதுகைகவர்க. இவற்றினும் அதிகமாய் திரவியாதிகளின் சங்கிரகம் செய்யலாகாது. இவ்வாறு வேறுவிதி நிஷேதவசனங்களையு முணர்ந்துகொள்க.

சங்கை:—ஹே பகவன்! யாசனைமுதலான தன்முயல்வின்றியே அன்னவஸ் திராதிகள் கிடையாவிடின் பசி, தாகம், சீதம், உஷ்ணம், முதலியவற்றாற் பீடிக்க ப்பட்ட சந்நியாசி எவ்வாறு ஜீவிப்பன்?

சமாதானம்:—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார்:—'ஃஂஆதீதஃ' என. ஹே அர்ச்சுன! பசி, தாகம், சீதோஷ்ணம், மழை, காற்று என்பன முதலிய சர்வதுவ ந்துவ தர்மங்களினும் சந்நியாசி ரகிதனவன். கருத்திதுவாம்:—சமாதிதசையின் கண்ணே அந்தப் பிரஹ்மவேத்தாச் சந்நியாசிக்கு அத்துவந்துவங்கள்விளங்கவே மாட்டா, கிளம்பியகாலத்தோ அவைதோற்றுமேனும் பரமாநந்தவடிவ அத்விதீய அகர்த்தா அபோக்தாத்ம சாக்ஷாத்காரத்தால் அவ்வெல்லாவற்றின் பாதமுண்டா மாதலின் அந்தப்பாதிததருமத்தால் கொல்லப்படினும் அச்சந்நியாசி சித்தக்கலக்க மற்றவனேயாவன். அவன் துவந்துவ தருமமற்றவனாதலினானே அன்னியர்க்கு ஒரு வஸ்துவின் பிராப்தியிலும், தனக்கொருவஸ்துவின் அப்பிராப்தியிலும் மற் சரமற்றவனவன். ஈண்டு அன்னியன்மேன்மையைச் சகியாமைவாயிலாய்த் தனது மேன்மையினிச்சை மற்சரமாம், அஃதற்றவன் விமற்சரனவன் அவன் அத்விதீய ஆத்மசாக்ஷாத்காரத்தால் அம்மற்சரமற்றவனாதலினானே அந்த யதிருச்சாலாபப் பிராப்தியின்கண்ணும் அப்பிராப்தியின்கண்ணும் சமானனேயாவன். அதாவது யதிருச்சாலாபப் பிராப்தியின்கண்ணே மகிழ்வற்றவனவன் அப்பிராப்தியின்கண் ணே வாட்டமற்றவனவன். இத்தகையவவன் தனதனுபவத்தானே அகர்த்தாவே யாவன், ஆனால் அன்னியர் அவன்பால் ஆரோபித்த கர்த்திருத்துவத்தால் சரீர ஸ்திதிமாத்திரத்தே உபயோகியாய பிக்ஷாடனாதி சாஸ்திரவிகிதகருமத்தைச் செய் யினும் பந்தத்தையடையான்; எதனாற் பந்தஹேதுவாய அஞ்ஞானசகிதகருமம் ஞானாக்கினியால் தகிக்கப்பெற்றதோ. (22)

(அ-கை.) ஹே பகவன்! முன்னர்த்தாங்கள், சர்வபரிக்கிரகத்தையும் தியா கஞ்செய்தவனும், யதிருச்சாலாபத்தாற் சந்துஷ்டசித்தனும் ஆகிய சந்நியாசியின் ஸ்திதிமாத்திரையின்கண்ணே உபயோகியாய பிக்ஷாடனாதி கருமத்தைச்செய்த போதினும் அவன் பந்தத்தையடையான் என முன்னர்த்தாங்கள் கூறியதால் இப் பொருள் பிரதீதியாகின்றது. இல்லறத்தே யிருக்கும் ஜனக அஜாதசத்துருமுத

விய பிரஹ்மவேத்தாக்களின் யாகாதிகருமங்கள் அவர்கட்கவசியம் பந்தஹேது வாம் என அருச்சுனனது ஆசங்கைநிகழ அதனை நீக்கியருளும்பொருட்டு ஸ்ரீபகவான் 'த்யக்த்வா கர்மபலாஸங்கம்' என்பதாதி வசனத்தால் கூறியருளிய பொருளை இப்போது வெளிப்படையாய் விளம்பியருளுகின்றார் :—

ச-ம். கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: ।
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥ (23)

ப-ம். 1 கதஸங்கஸ்ய 2 முக்தஸ்ய 3 ஜ்ஞாநாவஸ்திதசேதஸ: 4 யஜ்ஞாய 5 ஆசரத: 6 கர்ம 7 ஸமக்ரம் 8 ப்ரவிலீயதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலாபிலாஷையற்றவனும், அத்தியாசமற்றவனும், ஞானத்தே ஸ்திதசித்தமுடையவனும், யாகாதிகளின் சம்ரக்ஷணத்தின்பொருட்டு ஆசரிப்பவனும் ஆகிய அறிஞனுடைய யாகாதிகருமங்கள் பலசகிதம் நாசத்தை யடையும். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் கதசங்கனோ அதாவது சுவர்க்காதிபலாபிலாஷையற்றவனோ, யாவன் முக்தனோ அதாவது யான் கர்த்தா யான் போக்தாவென்னும் கர்த்திருத்துவ போக்திருத்துவ அத்தியாசமற்றவனோ, யாவன் ஞானாவஸ்திதசேதசனோ அதாவது தத்வமசிமுதலிய மகாவாக்கியத்தாலுண்டாய நிர்விகற்பவடிவ ஜீவப்பிரஹ்ம அபேதஞானத்தே அவஸ்திதமாய சித்தம் யாவனுக்கோ; அத்தகைய ஸ்திதப்பிரஞ்ஞபுருஷன் யாவனோ ஈண்டு 'கதஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞாநாவஸ்திதசேதஸ:' என்னும் மூன்று பதங்களால் அவ்வறிஞனுக்கு மூன்றுவிசேஷணம் கூறியருளப்பெற்றது. முன் முன்விசேஷண சித்தியின்கண் பின் பின்விசேஷணம் ஹேதுரூபமாம். அதனால் இவ்விரண்டனுமானங்கள் சித்திக்கும்:—அறிஞன், பலாபிலாஷைவடிவ சங்கமற்றவனவன், கர்த்திருத்துவ போக்திருத்துவ அத்தியாசமற்றவனாதலின், அவ்வாறல்லாதவன் இவ்வாறுமல்லன், அஞ்ஞானியேபோலும். அறிஞன், அத்தியாசமற்றவனவன்; ஸ்திதப்பிரஞ்ஞனாதலின், அவ்வாறல்லாதவன், இவ்வாறுமல்லன்; அஞ்ஞானியேபோலும். இத்தகைய பிரஹ்மவேத்தாவாயவனும் பிராரப்தகருமவசத்தால் வேதவிகித யாகதானாதிகளைச் சம்ரக்ஷணைசெய்யும்பொருட்டு அதாவது ஜோதிஷ்டோமாதியாகத்தே சிரேஷ்டாசாரத்தன்மையால் உலகரைப் பிரவிருத்திப்பிக்கும்பொருட்டு அல்லது 'யஜ்ஞோவை விஷ்ணு:' என்பதாதி வசனங்களில் யாகசப்தத்தாற்கூறிய விஷ்ணுவின் பிரசன்னப்பொருட்டு யாகதானாதிகளைச்செய்வன். ஆனால், அவனது அத்தொழில்களியாவும் சமக்ரநாசத்தையுறும். ஈண்டு அக்ரம் பலமாம். அஃதோடுகூடியிருப்பது சமக்ரமாம்; அதாவது, தத்துவசாக்ஷாத்காரபலத்தால் அவித்யாரூபகாரணம் நீங்குதலானே கருமம் நாசத்தையேயடையும். 'தத்யதேஷீகாதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேதைவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே' (பொ-ள்.) ஓங்கியெரியாநின்ற அக்கினியின்கண்ணடைவுற்ற ஈஷிகையின் பஞ்சு நாசத்தையடைவதேபோல அறிஞனது அறம்பாவமியாவும் ஞானக்கினியால் நாசத்தையடையும். இப்பொருளை ஸ்ரீபகவான் தாமே 'ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேऽர்ஜுந' என்னும் சுலோகத்தே வெளியிட்டருளுவர். (23)

(அ-கை.) ஹே பகவன்! செய்யப்பெற்றகருமம் பலத்தையுண்டாக்காது எவ்வாறழியும், மற்றோ பலங்கொடாதொழியாது; ஏனெனின், 'நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி' (பொ-ள.) பலபோகமின்றி இச்சுப அசுபகருமம் கற்பகோடி சதங்களாலும் நாசமடையமாட்டாது. இதுமுதலிய வசனத்தே பல போகமின்றிக் கருமநாசம் நிஷேதமே செய்யப்பெற்றுளது என அருச்சு

சங்கையுண்டாக ஸ்ரீபகவான் பிரஹ்மசாக்ஷாத்காரத்தால் கருமகாரண நாசமாதலின் அதுவும் நாசத்தையேயடையும் என விடையளித்தருளுகின்றார்.—

சு-ம். ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்ம ஹவிர்ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணாஹுதம் ।
ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா ॥ (42)

ப-ம். 2 ப்ரஹ்ம 1 அர்பணம் 5 ப்ரஹ்ம 4 ஹவி: 6 ப்ரஹ்மாக்நௌ 7 ப்ரஹ்மணா 8 ஹுதம் 9 ப்ரஹ்ம 3 ஏவ 10 தேந 11 கந்தவ்யம் 12 ப்ரஹ்ம 13 கர்மஸமாதிநா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அர்ப்பணமும் பிரஹ்மமேயாம் அவியும் பிரஹ்மமேயாம், பிரஹ்மரூப அக்கினியின்கண்ணே பிரஹ்மரூபகருத்தாவானவன் செய்த ஹவனமும் பிரஹ்மமேயாம், அதனாற்சித்திக்கும் சுவர்க்காதியும் பிரஹ்மரூபமேயாம். கருமத்தின்கண்ணே பிரஹ்மபுத்தியினையுடைய புருஷனும் அடையத்தக்கது பரமானந்தவடிவப் பிரஹ்மமேயாம்.

(வி-ம்.) கர்த்தா, கருமம், காணம், சம்பிரதானம், அதிகாணம் என்னும் இவ்வைவகைபாய காரகங்களால்,யாகாதிரூபக்கிரியை சித்தமாம். ஆண்டிந்திராதிதேவதைகளை யுத்தேசித்து நெய் முதலிய திரவியத்தைத் தியாகஞ்செய்தல் யாகமாம். அதுவே தியாகஞ்செய்ய யோக்கியமாய நெய்முதலிய திரவியத்தை அழலின்கண்ணே பெய்தலால் ஹோமமெனப்படும். ஆண்டுத்தேசித்த இந்திராதிதேவதைகளோ சம்பிரதானமாம். தியாகஞ்செய்யும் நெய்முதலியவை ஹவிஷ்சப்தத்தாற் கூறப்பெறும். அதுவோ தியாகப்பிரக்ஷேபரூப தாதுவர்த்தத்தின் சாக்ஷாத்கருமரூபமாம். அதன் பல பூதஸ்வர்க்காதிகள் வியவகிதபாவனையின் கருமரூபமாம். அக்கினியின்கண்ணே நெய்முதலிய அவிஷின் பிரக்ஷேபத்தே (பெய்தலின்கண்ணே) அதன் தாரகமாதலின் ஜுஹு முதலியவை காணரூபமாம். இந்திராதிரூப அர்த்தத்தைப் பிரகாசித்தலால் 'ஐம் இந்த்ராய ஸ்வாஹா' என்னும் மந்திராதியும் காணரூபமேயாம். இவ்வாறு காரகஞாபகபேதத்தால் காணம் இருவகையாம். இவ்வாறு தேவதையை யுத்தேசித்து நெய்முதலிய திரவியத்தியாகம், அதனை யக்கினியின்கண்ணே பெய்தல், என்பன இருவகைத்தொழிலாம். ஆண்டு முதலில் தியாகரூப கிரியையின்கண்ணே யஜமானனே கருத்தாவாவன். இரண்டாவது பிரக்ஷேபரூபக் கிரியையின்கண்ணே யஜமானன் தக்ஷிணைகொடுத்து ஸ்தாபித்த அத்வர்யு கர்த்தாவாவன். ஆகவனீயாதி யக்கினி ஹவிஷின்பெய்தற் கதிகாணமாம். இவ்வாறு தேசகாலாதிகளும் சர்வக்கிரியைகட்கும் சாதாரண அதிகாணமெனவறிக. இவ்வாறு கிரியா காரக வியவகாரங்கள்யாவும் பிரஹ்மஅஞ்ஞானத்தாற் கற்பிதமாமாதலின் இரஜ்ஜுவின் அஞ்ஞானத்தாற் கற்பிதமாய சர்ப்பம், தண்டம், மாலைமுதலியவை இரஜ்ஜுரூப அதிஷ்டான ஞானத்தால் பாதமாய்விடுவதேபோல அதிஷ்டானப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் கிரியை காரகாதி சர்வவியவகாரமும் பாதத்தையடையுமாதலின், அவ்வறிஞனிடத்தே பாதிதானுவிருத்தியால் அவ்வியவகாராபாசம் தோற்றினும் வெந்த புடவைபோல் எபபல உற்பன்னஞ்செய்வதினும் ஆற்றலுடையதாகாதாம். இப்பொருளையே ஸ்ரீ பகவான் இச்சுலோகத்தாற் கூறியருளினர். பிரஹ்மதிருஷ்டியே சர்வ யாகவடிவம் எனப் பிரஹ்மதிருஷ்டியைத் துதித்தருளினர். இப்போது அவ்வகையைக் காண்பிப்பாம்:—'அர்ப்யதே அநேந இதி அர்பணம்' எதனால் நெய் முதலிய ஹவிஷ் அக்கினியின்கண்ணே அர்ப்பிக்கப்பெறுமோ அஃதர்ப்பணமாம்; என்னுங் காண வியுற்பத்தியால் அப்பதம் ஜுஹு முதலிய காணங்களின் மந்திராதி காணங்களின்வாசகமாம். 'அர்ப்யதே அஸ்மை இதி அர்பணம்' நெய்முதலிய அவிஷ்யாதின்பொருட்டு அர்ப்பிக்கப்பெறுமோ

அது அர்ப்பணமாம்; என்னும் வியுற்பத்தியால் அப்பதம் இந்திராதி தேவதை வடிவ சம்பிரதானவாசகமாம். 'அர்ப்யதே அஸ்மிந் அர்ப்பணம்' நெய்முதலிய ஹவிஷ் அர்ப்பிக்கப்பெறும் எதன்கண்ணே அது அர்ப்பணமாம்; என்னும் வியுற்பத்தியால் அப்பதம் தேசகாலாதிரூப அதிகரணவாசகமாம். இவ்வாறு ஒரே அர்ப்பணபதம் கரணம், சம்பிரதானம், அதிகரணம் என்னும் மூன்று காரகங்களின் வாசகமாமாதலின், ஜுஹு மந்திராதிரூப கரணகாரகம், தேவதாதிரூப சம்பிரதான காரகம், தேசகாலாதிரூப அதிகரணகாரகம் என்னும் இவ்வியாவும் பிரஹ்மத்தின்கண்ணே கற்பிதமாதலின் பிரஹ்மரூபமேயாம். கருத்திதுவாம் :— இரஜ்ஜுவின்கண்ணே கற்பித சர்ப்ப தண்டாதிகள் அவ்வதிஷ்டானத்தினும் வேறாய் அசத்தேயாவதேபோல, அவையும் அதிஷ்டானப் பிரஹ்மத்தினும் வேறாய் அசத்தேயாம். யஜமான கர்த்திருகத்தியாகரூபக்கிரியைக்கும், அத்வர்யு கர்த்திருகப் பிரக்ஷேபரூபக்கிரியைக்கும் சாக்ஷாத் கருமரூபம் நெய் முதலியவையாம். அவ்வவிஷ்ரூப கருமகாரகமும் பிரஹ்மரூபமேயாம். எவ்வாகவனீயாதி அக்கினியின்கண்ணே நெய் முதலிய ஹவிஷ் போடப்படுமோ, அவ்வதிகரண காரகமும் பிரஹ்மரூபமேயாம். எந்த யஜமானன் தேவதையையுத்தேசித்து நெய்முதலிய ஹவிஷைத் தியாகஞ்செய்வனோ, எவ்வத்வர்யுநெய்முதலிய ஹவிஷை அக்கினியின் கண்ணே பிரக்ஷேபஞ்செய்வனோ, அவ்விரண்டு கர்த்திருகாரகங்களும் பிரஹ்மரூபமேயாம். ஹுதம் என்னும் சப்தத்தால் கூறிய தியாக பிரக்ஷேபக்கிரியை வடிவ ஹவனமும் பிரஹ்மரூபமேயாம். ஹவனரூபக்கிரியையாலடைய யோக்கியமாய சுவர்க்காதிரூப வியவஹித கருமகாரகமும் பிரஹ்மரூபமேயாம். இவ்வாறு அக்கருமத்தே பிரஹ்மதிருஷ்டிரூப சமாதியாவனுக்கோ அவன்கருமசமாதியாவன். இத்தகைய கருமானுஷ்டானனுப பிரஹ்மவேத்தாவும் பரமாநந்தவடிவ அத்விதீயப் பிரஹ்மத்தையேயடைவன். ஈண்டு 'கர்மஸமாதிநா' என்னும் வசனத்தின் பின்னர் 'ப்ரஹ்ம கந்தவ்யம்' என்னும் இரண்டு பதங்களையும் பூர்வவாக்கியத்தோடு அனுஷங்கஞ்செய்க. அல்லது, 'அர்ப்யதே அஸ்மை பலாய அர்ப்பணம்' எப் பலப்பிராப்தியின்பொருட்டு ஹவிஷ் அர்ப்பிக்கப்பெறுமோ அது அர்ப்பணமாம் என்னும் வியுற்பத்தியால் அப்பதத்தானே அச்சுவர்க்காதிபலத்தையும் கவர்க. 'கந்தவ்யம்' என்னும் பதத்தாலதனைக் கவராதொழிக. ஆகையால், 'ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா' என்னும் சுலோகத்தின் பிற்பாதி ஞான பலத்தைக் கூறும்பொருட்டேயாம். இவ்வுரையே நலமுடையதாம். ஆண்டு, இவ்விரண்டாவதுரையின்கண்ணே 'ப்ரஹ்மகர்மஸமாதிநா' இஃதொரே சமஸ்தபதமாம். அல்லது, 'ப்ரஹ்மைவ தேந' என்னும் வசனத்தேயிருக்கும் பிரஹ்மமென்னும் பதத்தையோ பூர்வ 'ஹுதம்' என்னும் பதத்தோடு அன்வயஞ்செய்க. 'ப்ரஹ்மகர்மஸமாதிநா' என்னும் வசனத்தேயிருக்கும் பிரஹ்மமென்னும் பதத்தையோ 'கந்தவ்யம்' என்னும் பதத்தோடு அன்வயஞ்செய்க. ஆகையினால், 'ப்ரஹ்மகர்மஸமாதிநா' என்னும் இரண்டு பதங்களும் வேறுவேறேயாம். இவ்விரண்டாவதுரையின்கண்ணே பூர்வ வியாக்யானம்போல 'ப்ரஹ்ம கந்தவ்யம்' என்னும் இருபதங்கட்கும் அநுஷங்கரூபக் கிலேசவடைவுண்டாகாதாம். ஈண்டு, 'ப்ரஹ்மைவ தேந கந்தவ்யம் ப்ரஹ்மகர்மஸமாதிநா' என்னும் வசனத்தால் ஸ்ரீ பகவானவர் பிரஹ்மவேத்தாவிற்குப் பிரஹ்மப்பிராப்தி கூறியருளியது யான் பிரஹ்மரூபமாயுள்ளேன் என்னும் அபேதரூபத்தானேயன்றிச் சுவர்க்காதிபோலப் பின்னரூபமாயேனும் அல்லது சுவாமிசேவகபாவமாயேனுமன்றாம். 'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' பிரஹ்மத்தையுணர்ந்த புருஷன் பிரஹ்மரூபமேயாவன். இக்காரணத்தால் பிரஹ்மவேத்தாவானவன் சுவர்க்காதி துச்சபலத்தையடையான். எதனால் பிரஹ்மவேத்தாவிற்குப் பிரஹ்மவித்தையால் அவித்தையாலாக்கப்பெற்ற சர்வ காரகவியவகாரம் நாசத்தையடைந்துள்ளதோ. இவ்வார்த்தையை வார்த்திக

கிரந்தகர்த்தாவாய ஸ்ரீ சுரேஸ்வர ஆசாரியருங்கூறியிருக்கின்றனர் :—'காரக வ்யவஹாரே ஹி ஶுத்தம் வஸ்து ந வீக்ஷ்யதே । ஶுத்தே வஸ்துநி ஸித்தே ச காரக வ்யாப்ருதி: குத:' (பொ-ள்.) கர்த்தா கருமாதிகாரகங்களின் வியவகாரமிருக்கின், ஆன்மாவாகிய தூயவஸ்துவின் சாக்ஷாத்காரமுண்டாகாதாம் அஃதுண்டாகவே அவற்றின் வியாபாரமுண்டாகாதாம். ஒருரைகாரரோ இச்சுலோகத்திற்கு இவ்வுரை கூறியுள்ளார். நாமம், வாக்கு, மனம் என்பன முதலியவற்றின் ஸ்வரூபத்தைப் பாதியாது அவற்றின்கண்ணே சுருதியானது பிரஹ்மதிருஷ்டியை விதித்துள்ளதேபோல, ஈண்டு ஸ்ரீ பகவானும் அர்ப்பணாதிகாரகங்களின் ஸ்வரூபத்தைப் பாதியாது அவற்றின்மாட்டுப் பிரஹ்மதிருஷ்டியை விதித்தருளியுள்ளார். இவ்வுரையை ஸ்ரீ பகவான் பாடியக்காரர் தாற்பரிய நிச்சயஞ்செய்யும் உபக்கிரமாதிகளின் விரோதத்தானும், பிரஹ்மவித்தைப் பிரகரணத்தின்கண்ணே சம்பத்துபாசனைமாத்திரப் பிராப்தியேயின்றாம் என்னும் யுக்திகளானும் விஸ்தாரமாய்க் கண்டித்தருளியுளார். (24)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் 'ப்ரஹ்மார்ப்பணம்' என்னும் மந்திரரூப சுலோகத்தின்கண்ணே யாண்டும் பிரஹ்மதிருஷ்டிவடிவ நற்றரிசனத்தை யாகரூபமாய்த் துதித்தருளி இப்போது அதனை மீண்டும் துதித்தருளும்பொருட்டு ஸ்ரீ பகவான் மற்றைய யாகங்களையும் திருவாய்மலர்ந்தருளுகின்றார் :—

சு-ம். தைவமேவாபரே யஜ்ஞம் யோகிந: பர்யுபாஸதே ।
ப்ரஹ்மாக்நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேநைவோபஜுஹ்வதி ॥ (25)

ப-ம். 3 தைவம் 5 ஏவ 1 அபரே 4 யஜ்ஞம் 2 யோகிந: 6 பர்யுபாஸதே, 8 ப்ரஹ்மாக்நௌ 7 அபரே 9 யஜ்ஞம் 10 யஜ்ஞேந 11 ஏவ 12 உபஜுஹ்வதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேறு கருமிகளோ தெய்வயாகத்தையே சந்ததம் புரிவர் வேறு தத்துவவேத்தாக்களோ, பிரஹ்மரூப அக்கினியின்கண்ணே ஆன்மாவை யான்மரூபமாயே ஹோமஞ்செய்வர். (25)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இந்திரன், அக்கினி, வாயு முதலிய தேவதைகள் எதனால் மகிழ்வுறுவரோ அது தெய்வமாம். அத்தகைய தரிசபூரணமாச ஜோதிஷ்டோமமுதலியதெய்வயாகங்களையே மற்றையகருமியர் சந்ததம்புரிவர். அவர் ஞானயாகத்தை ஒருகாலும் செய்யார். இவ்வாறு கருமயாகத்தைக் கூறியருளி மனத்தூய்மைவாயிலாய் அக்கருமயாகத்தின் பல பூதஞான யாகத்தை ஸ்ரீ பகவான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். 'ப்ரஹ்மாக்நௌ' என. ஹே அர்ச்சுன! சத்தியஞான அநந்த ஆநந்தரூபமாய்ச் சர்வ விசேஷமற்ற தற்பதார்த்தரூபப் பிரஹ்மமே அறியப்பெற்றதாய்ச் சர்வகருமங்களின் தாஹகமாதலின், அக்கினியைப்போல அக்கினிரூபமாம். இத்தகைய தற்பதார்த்தரூபப் பிரஹ்மத்தீயின்கண்ணே மற்றைய தத்துவவேத்தாவாய சந்நியாசி, துவம்பதார்த்தரூபபிரத்தியக்கான்மாவைஅபின்னரூபமாய் ஹோமஞ்செய்வன். அதாவது, தத்துவம் பதார்த்தரூபப் பிரத்தியக்கான்மாவைப் பிரஹ்மரூபமாய்க் காண்பன். ஈண்டு, 'யஜ்ஞேநைவ' என்னும் வசனத்தின்கண்ணேயிருக்கும் 'ஏவ' என்னும் சப்தம் ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தை நீக்கும்பொருட்டாம். ஈண்டு, ஜீவப்பிரஹ்ம அபேதஞானத்தை யாகரூபத்தால் சம்பாதனஞ்செய்து 'ஶ்ரேயாந் த்ரவ்யமயாத்யஜ்ஞாஜ்ஜ்ஞாநயஜ்ஞ:' என்பதாதி வசனங்களால் அந்த ஞானயாகத்தைத் துதித்தருளும்பொருட்டு அந்த ஞானயாகத்தின் சாதனரூப யாகங்களின் மத்தியில் ஸ்ரீ பகவானனவர் அந்த ஞான யாகத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். (25)

(அ-கை.) இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவானவர் முக்கியயாகம் கௌணயாகம் என்னுமிரண்டையும் கூறியருளினர். இப்போது வைதிகத்தே எத்துணைச் சிரேயஸ்சாதனங்கள் கூறப்பட்டுள்ளனவோ அவ்வியாவற்றையும் ஸ்ரீ பகவான் யாகரூபமாய்ப் பிரதிபாதித்தருளுகின்றார் :—

சு-ம். 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 𑌸𑌂𑌯𑌮𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ।
𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑌨𑍍𑌯 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ॥ (26)

ப-ம். 2 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑌿 3 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 1 𑌅𑌨𑍍𑌯𑍇 4 𑌸𑌂𑌯𑌮𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 5 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 7 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑍀𑌨𑍍 8 𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍 6 𑌅𑌨𑍍𑌯𑍇 9 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌷𑍁 10 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றைபரோ சுரோத்திராதி இந்திரியங்களைச் சம்யமரூப அக்கினியின்கண்ணே ஹோமஞ்செய்வர். மற்றையரோ, சப்தாதி விஷயங்களைச் சுரோத்திராதி இந்திரியரூப அக்கினியின்கண்ணே ஹோமஞ்செய்வர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யமநியம ஆசனப்பிராணாயாமமென்னும் நான்கன் சித்தியால் கேவலம் பிரத்யாகார பராயணராய சிலரோ சுரோத்திராதி பஞ்சஞானேந்திரியங்களைத் தத்தமது சப்தாதிவிஷயங்களினின்றும் நிவிருத்தித்து சம்யமரூப அக்கினியின்கண்ணே ஹோமஞ்செய்வர். ஈண்டு '𑌤𑍍𑌰𑌯𑌮𑍇𑌕𑌤𑍍𑌰 𑌸𑌂𑌯𑌮𑌃' என்னும் பதஞ்சலிபகவானது சூத்திரத்தே ஏகவஸ்துவை விஷயஞ்செய்யும் தாரணை, தியானம், சமாதியென்னும் மூன்றும் சம்யமசப்தத்தாற் கூறப்பெறும். ஆண்டிருதயகமலாதி ஸ்தானங்களில் நெடுங்காலம்வரை மனத்தைத் தாபனஞ்செய்தல் தாரணையாம். இவ்வாறு ஏகஸ்தானத்தே தாரணஞ்செய்யப்பெற்ற சித்தத்தின் உத்தர உத்தரவிஜாதீய விருத்திகளாற்றிய வியவதானசகித பகவதாகார சஜாதீயவிருத்திகளின் பிரவாஹம் தியானமாம். அச்சித்தத்தின் விஜாதீய விருத்திகளின் வியவதானமற்ற கேவலம் பகவதாகார சஜாதீயவிருத்திகளின் பிரவாஹம் சமாதியாம். அதுவும் சித்தபூமிகளின் பேதத்தால சவிகற்பம் நிர்விகற்பமென இருவகையாம். க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம், நிருத்தம் என்னுமைந்துபூமியும் சித்தத்திற்காம். அவஸ்தாவிசேஷம்பூமியாம். ஆண்டு இராகத்வேஷாதிகளின்வயத்தால் விஷயங்களிடத்தே அத்தியந்த அபிநிவேசமுடைய சித்தம் க்ஷிப்தமெனப்படும். நித்திரையாலசியாதிகளால் கவரப்பட்டசித்தம் மூடமெனப்படும். எப்போதும்விஷயங்களில் ஆசக்தியுடையதேனும் ஒருகாற் றெய்வயோகத்தால் தியானநிஷ்டையையும் அடையும் சித்தம் க்ஷிப்தத்தினும் மேன்மையதாதலின், விக்ஷிப்தமெனப்பெறும். ஆண்டு க்ஷிப்த சித்தத்தின்கண்ணும், மூடசித்தத்தின்கண்ணும் சமாதியுண்டாஞ்சங்கையேயின்றும். விக்ஷிப்தசித்தத்தின்கண்ணே ஒருகாற்சமாதிகூடினும் விக்ஷேபப்பிரதானத்தால் அது யோகபக்ஷத்தே நிலவாதாம். மற்றோ, பெருங்காற்றுலைசைவுற்ற தீபமானது தானே நாசமாவதேபோல ஒருகாற்றோற்றிய சமாதியும் தானே நாசத்தையுறும். அச்சித்தத்தே ஏகவஸ்துவை விஷயஞ்செய்யும் தாராவாகிகவிருத்திகளின்சாமர்த்தியம் ஏகாக்கிரமாய். ஆண்டுச் சத்துவகுணவிருத்தியால் தமோகுணமாக்கிய ஆலசியாதிரூபலயமிலயமாகவே ஆன்மாகாரவிருத்தியுண்டாம். அதுஇரஜோகுணம் விளைத்த சஞ்சலத்தன்மையாகிய விக்ஷேப அபாவத்தால் ஏகவஸ்துவிஷயகமேயாம். இவ்வாறு சுத்தசத்துவகுணத்தையுற்றே அச்சித்தம் ஏகாக்கிரத்தையடையும், அவ்வொருமைபெறுமுள்ளத்தே அச் சவிகற்பசமாதியுண்டாம். அதன்கண்ணே தியேயாகாரவிருத்தியும் தோற்றும். எக்காலதுவும் நிரோதத்தையுறுமோ அக்காலது நிருத்தமெனப்பெறும். அந்நிருத்தசித்தத்தே நிர்விகற்பசமாதியுண்டாம், இதுவே சர்வசுகங்களினும் விரக்தயோகியின் திடபூமிவடிவமாய்த் தருமமேகம் எனக் கூறப்பெறும். இவ்வாறு அநேக

ரூபமாய்த் தாரணாதி சம்யமபேதமாம். ஆகையாற்றான் 'ஸம்யமாக்நிஷு' என்னும் வசனத்தே ஸ்ரீ பகவானவர் பன்மை பகர்ந்தருளியுள்ளார். இத்தகைய சம்யமரூப அக்கினிகளில் சிற்சில அதிகாரிகள் சுரோத்திராதியிந்திரியங்களை ஹோமஞ்செய்வர். அதாவது, தாரணை, தியானம், சமாதி என்னும் மூன்றன் சித்தியின்பொருட்டுச் சுரோத்திராதி இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களினின்றும் பிரத்தியாஹாரணஞ்செய்வர், அவ்வாறு விஷயங்களினின்றும் திரும்பியபொறிகள் சித்தரூபமேயாகும். இதுவே சாஸ்திரத்தின்கண்ணே பிரத்தியாகாரம் எனக்கூறப்பெறும். இதன்பின்னர் விக்ஷேப அபாவத்தால் சித்தம் தாரணாதிகளைச் சம்பாதிக்கும். இத்துணைகூறியதால் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னும் நான்கங்கங்கள் யோகத்திற்குக் கூறப்பெற்றனவாம். அவற்றுற் சமாதியவஸ்தையின் கண்ணே சர்வஇந்திரிய ஜன்னியவிருத்திகளின் நிரோதத்தை யாகரூபமாய் வருணித்தருளப்பெற்றது. இப்போது அச்சமாதியினின்றும் கிளம்பியதசையில் இராகத்துவேஷமற்ற சாஸ்திரவிகிதவிஷயபோகமும் ஒரு யாகரூபமேயாம். இப்பொருளை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:— 'ஶப்தாதீந்விஷயாநந்ய இந்த்ரியாக்நிஷு ஜுஹ்வதி' ஹே அர்ச்சுன! அச்சமாதியினின்றும் கிளம்பிய யோகியானவன் இராகத்துவேஷரகிதனாய்ச் சுரோத்திராதி இந்திரியங்களால் சாஸ்திர அவிருத்த சப்தாதிவிஷயங்களைக்கவர்வன். இதுவே சப்தாதிவிஷயங்கட்குச் சுரோத்திராதி இந்திரியங்களின்கண்ணே ஹோமமாம்.

(அ-கை.) ஆண்டிப்பூர்வசுலோகத்தே பாதஞ்சலமதத்தை யனுசரித்து இலயபூர்வக சமாதிரூபவியுத்தான தசைவடிவ இரண்டு யாகங்களும் கூறப்பெற்றன. இப்போது இச்சுலோகத்தே பிரஹ்மவாதிபுருஷரின் மதானுசாரமாய்ச் சர்வ சாதனங்களின் பல ரூபகாரண நாசத்தால் வியுத்தானமற்ற நிரோதபூர்வக சமாதிரூப வேறு யாகத்தை ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார்:—

சு-ம். ஸர்வாணீந்த்ரியகர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ।
ஆத்மஸம்யமயோகாக்நௌ ஜுஹ்வதி ஜ்ஞாநதீபிதே ॥ (27)

ப-ம். 2 ஸர்வாணி 3 இந்த்ரியகர்மாணி 5 ப்ராணகர்மாணி 4 ச 1 அபரே 7 ஆத்மஸம்யமயோகாக்நௌ 8 ஜுஹ்வதி 6 ஜ்ஞாநதீபிதே.

(அ-ம்) ஹே அர்ச்சுன! வேறுசில அதிகாரிகளோ சர்வ இந்திரியங்களின் பிராணன்களின் கருமங்களையும் ஞானத்தாற் றீபித ஆத்ம சம்யம யோகரூப அக்கினியின்கண்ணே ஹோமஞ்செய்வர். (27)

(வி-ம்.) ஆண்டுச் சமாதி இலயபூர்வகமெனவும் பாதபூர்வகமெனவும் இருவகையாம். ஆண்டு, 'தத³நந்யத்வமாரம்பணஶப்³தா³தி³ப்⁴ய꞉' என்னும் சூத்திரத்தே ஸ்ரீவியாசபகவானவர் காரணத்தினும் வேறாய்க் காரியத்திற் கசத்துவங்கூறி யருளியுள்ளார். ஆகையால், பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியவியஷ்டிரூபம் சமஷ்டிரூப விராட்டின்காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அச்சமஷ்டிரூபகாரியமும் அபஞ்சீகிருதபஞ்ச மகாபூதங்களின் காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அவற்றுள்ளும் சப்தாதி ஐந்துகுணமுடைய பிருதிவி நான்குகுணமுடைய ஜலகாரியமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும் மூன்றுகுணமுடைய தேயுவின் காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும் இரண்டுகுணமுடைய வாயுவின்காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும் ஒருகுணமுடைய ஆகாசத்தின் காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும் 'ப³ஹு ஸ்யாம்' என்னும் சுருதிகூறிய பரமேசுவர சங்கற்பரூப அகங்கார காரியமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும் 'ததை³க்ஷத' என்னுஞ் சுருதிகூறிய மாயையீக்ஷணரூப மகத்தத்துவத்தின் காரியரூபமாதலின் அதனினும் வேறன்

றும். அதுவும் மாயாரூபபரிணாமமாதலின் அதனினும் வேறன்றாம். அதுவும்ஜட ரூபமாதலின் சைதன்யரூபப் பிரஹ்மத்தின்கண்ணே அத்தியஸ்தமாமாதலின் அதனினும் வேறன்றாம் என நிரந்தரம் சிந்தித்துக் காரியகாரணரூப சர்வப் பிரபஞ்சமிருப்பினும் சைதன்ய பிரஹ்மமாத்திர விஷயக சமாதி லயபூர்வக சமாதியெனப்பெறும். அதன்கண்ணே அதிகாரிக்குத் தத்துவமசி முதலிய வேதாந்த மகாவாக்கியங்களின் அர்த்தஞானமின்றாமாதலின் காரியசகித அவித்தையின்நாசமுண்டாயதில்லை. மற்றோ, அவ்வவித்தை அந்த இலயசிந்தனகாலத்தே இருக்கவேயிருக்கின்றது அஃதிருப்ப அதனினின்றும் மீண்டும் சம்சாரரூப காரியோற்பத்தியுண்டாமாதலின் இவ்விலயபூர்வக சமாதி துயிலைப்போலச்சவிகற்ப சமாதியேயாம் முக்கிய நிர்விகற்ப சமாதியன்றாம். எக்கால் தத்துவமசிமுதலிய மகாவாக்கியஜன்னிய சாக்ஷாத்காரத்தால் அவித்தையின் நிவிருத்தியாமோ, உற்பத்திக்கிரமமாய் அவ்வவித்தையின் மகத்தத்துவாதி சர்வகாரியங்களின் நிவிருத்தியாமோ, தத்துவசாக்ஷாத்காரத்தால் ஒருமுறை நாசத்தையடைந்த அநாதியவித்தை மீண்டும் ஒருகாலும் கிளம்புகையையடையாதோ, அவ்வவித்தையின்காரியமும் மீண்டும் கிளம்புகையை யடையாதோ; அக்கால் அவ்வறிஞனுக்கு முக்கிய நிர்ப்பீஜ (நிர்விகற்ப) பாதபூர்வக சமாதியுண்டாம். அதுவே இச்சுலோகத்தால் ஸ்ரீபகவான் கூறியருளியதாம். அவ்வகையைக்காட்டுதும் :—ஆண்டுள்வெளிப்பேதத்தால் இந்திரியம் இருவகையாம். சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியங்கள் வாக்காதிஐந்து கருமேந்திரியங்கள் பாகியேந்திரியமெனப்பெறும். மனமும் புந்தியும் ஆந்தரேந்திரியமெனப்பெறும். இவற்றிற்குள்ள தூலரூப சமஸ்காரரூப கருமமியாவும், அதாவது சப்தாதிகளின் கவர்ச்சிமுறையே சுரோத்திராதிகளின் கருமமாம். வசனித்தன் முதலியவை முறையே வாக்காதிகளின் கருமமாம். சங்கற்பநிச்சயங்கள் மனோபுத்திகளின் கருமங்களாம். இவ்வாறே பஞ்சப்பிராணன்களின் கருமமியாவும்அதாவது வெளிப்போதல், கீழ்ச்செல்லல், சுருங்கல் விரிதல், அயினுமன்றுதியை சமானப்படுத்தல், மேற்கிளம்பல் முறையே பிராண அபான வியான சமான உதானன்களின் கருமமாம். இத்துணையால் பதினேழு தத்துவவடிவ இலிங்கசரீரங்கூறப்பெற்றது. அச்சூக்ஷ்மசரீரமும் ஈண்டுச் சூக்ஷ்மபூதங்களின் சமஷ்டிரூப ஹிரண்யகர்ப்பமேயென விளம்பும் வேட்கையாம். இப்பொருளை யறிவிக்கும் பொருட்டு ஸ்ரீபகவானவர் அவ்விந்திரியப்பிராண கருமங்கட்கு 'ஸவ-ாணி' என்னும் விசேஷணத்தைக்கூறியருளினர். இத்தகைய பதினேழின்மயமான இலிங்கசரீரத்தைச் சில அறிஞர் ஆத்மசம்யம யோகாக்கினியின்கண்ணே ஹோமம் செய்வர். ஆண்டான்மாவை விஷயஞ்செய்யும் தாரணை, தியானம், சவிகற்பசமாதிரூபசம்யமமாம். அதன்பரிபாகத்தானே சித்தமாய நிரோதசமாதிரூபயோகம் ஆன்மசம்யம யோகமாம். இதனைப் பதஞ்சலிபகவானும் யோகசூத்திரத்தே கூறியருளினர் 'வ்யுத்தாநநிரோயஸம்ஸ்காரயோரபிஹவ ப்ராதுர்பாவள நிரோயக்ஷண சித்தாந்வயோ நிரோயவரிணாமஃ' என. க்ஷிப்தமூடவிக்ஷிப்தமென்னும்மூன்றுபூமிகள் வியுத்தானமெனப்படும் அதன்சமஸ்காரம் சமாதிவிரோதியாம். அதுவே யோகியின் முயல்வால் தினந்தோறும் கணந்தோறும் அபிபவத்தையடையும். அதன்விரோதிபாப நிரோதசமஸ்காரம் தினந்தோறும் கணந்தோறும் உதயமாம். அதன்பின்னர் நிரோதமாத்திர க்ஷணத்தோடு சித்தத்தின்சேர்க்கை நிரோதபரிணாமமெனப்படும். இந்நிரோதசமாதியின் பலத்தையும் ஸ்ரீ பதஞ்சலிபகவான்யோகசூத்திரத்தே கூறியருளியுள்ளார். 'தஸ்ய ப்ரஶாந்தவாஹிதா ஸம்ஸ்காராத்' நிரோதபரிணாமத்தின் பின்னர் நிரோதசமஸ்காரங்களின் திடத்தன்மையால் அச்சித்தத்திற்குப் பிரசாந்தவாஹித்தன்மையுண்டாம்; அதாவது தமோகுண இரஜோகுணங்களழிந்தபின்னர் இலயவிக்ஷேபதோஷமற்ற தன்மையால் சுத்த சத்துவ சித்தம் பிரசாந்தமெனப்பெறும் பூர்வ பூர்வப் பிரசமசமஸ்காரங்களின் மிகு

திபைக்குறித்து அதனினும் மிகுதித்தன்மையைப் பிரசாந்தவாஹித்தன்மையென்பர். அந்நிரோத சமாதியின் காரணத்தையும் ஸ்ரீ பதஞ்சலிபகவான் யோக சூத்திரத்தே கூறியருளியுள்ளார். 'विरामप्रत्ययाभ्यासपूर्वः संस्कारशेषोऽन्यः' விருத்தியின் உபராமத்தன்மையாகிய விராமத்தின் பிரத்யயத்தை, அதாவது காரணத்தை, அதாவது விருத்தியின் உபராமத்தன்மையின்பொருட்டுண்டாம் புருஷப் பிரயத்தனத்தை, மீண்டும் மீண்டும் சம்பாதித்தல் வடிவ அப்பியாசத்தாலுளதாய சவிகற்பசமாதியினும் விலக்ஷண நிர்விகற்பசமாதியுண்டாம். இவ்வாறுப நிரோதசமாதிரூப ஆத்மசம்யமயோகமே அக்கினிரூபமாம். அது ஞானத்தாற்றீபிதமாம்; அதாவது, வேதாந்தவாக்கியத்தாற் சனித்த பிரஹ்மாத்ம ஐக்கிய சாக்ஷாத்காரத்தால் காரியசகித அவித்தையின் நாசவாயிலாய் அத்தியந்த உஜ்வலிதமாம். இங்ஙனம் ஞானத்தாற்றீபித ஆத்மசம்யமயோகாக்கினிரூப பாதபூர்வக சமாதியின்கண்ணே வேறொரு அறிஞன் சமஷ்டி லிங்கசரீரத்தை ஹோமம் செய்வன்; அதாவது, அச்சமாதியின்கண்ணே லிங்க சரீரத்தைப் பிரவிலாபனம் செய்வன். ஈண்டு, 'सर्वाणि अग्नौ ज्ञानदीपिते' என்னும் மூன்று விசேஷணங்களைக் கூறியருளியதானும் 'जुह्वति' என ஏகவசனங்கூறியருளியதானும் பூர்வங் கூறியருளிய யாகத்தினும் இவ்வியாகத்தே விலக்ஷணத்தன்மை குறிப்பித்தருளப்பெற்றது. ஆகையினால், ஈண்டுக்கூறியது கூறலென்னும் தோஷஅடைவுண்டாகாதாம்.()

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் 'दैवमेवापरे यज्ञं' என்பது முதலிய மூன்று சுலோகங்களால் ஸ்ரீபகவானவர் பஞ்சயஜ்ஞங்களைக் கூறியருளினர்; இப்போது இவ்வொரே சுலோகத்தால் ஆறு யாகங்களைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।
स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥ (28)

ப-ம். 2 द्रव्ययज्ञाः 3 तपोयज्ञाः 5 योगयज्ञाः 4 तथा 1 अपरे 7 स्वाध्यायज्ञानयज्ञाः 6 च 8 यतयः 9 संशितव्रताः.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சில அதிகாரிகள் திரவியத்தியாகரூப யாகத்தையும், சிலர் தவவடிவ யாகத்தையும், சிலர் யோகரூப யாகத்தையும், சிலர் வேதாப்யாசரூப யாகத்தையும் ஞானரூப யாகத்தையும், சில யத்னசீலர் அத்தியந்தம் திடவிரதரூப யாகத்தையும் செய்வர். (28)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாஸ்திரவிதிப்பிரமாணமாய்த் திரவியத்தியாகமே யாகமெனவுடையார் திரவியயாகர்கள் ஆவர்கள்; அதாவது, பூர்த்தம் தத்தம் ஆகிய ஸ்மார்த்தகருமத்தைச்செய்பவர் திரவியயாகர் எனப்பெறுவர். அவ்விரண்டின் வடிவம் ஸ்மிருதியின்கண்ணே இங்ஙனியம்பப்பெற்றுளது.

"वापीकूपतडागादि देवतायतनानि च ।
अन्नप्रदानमारामः पूर्तमित्यभिधीयते ॥
शरणागतसंत्राणं भूतानां चाप्यहिंसनम् ।
बहिर्वेदि च यद्दानं दत्तमित्यभिधीयते" ॥

(பொ-ள்.) வாபீ கூப தடாகங்களைச்செய்தல், விஷ்ணு சிவாதியாலயங்கள் செய்தல், பசியுடையார்க் கன்னமுதவல், வழிப்போக்கர் தங்கத் தர்மசாலைசெய்தல் என்னுமிவையாவும் பூர்த்தமாம். சரணாகதர்களைக்காத்தல், எப்பூதப் பிராணிகட்கும் ஹிம்சைசெய்யாதிருத்தல், வேதியினின்றும் பாகியதானம், என்னுமிவை யாவும் தத்தமாம். இவ்விரண்டு ஸ்மார்த்தகருமங்களைச் செய்பவர் திரவியயாகர்

34

எனப்படுவர். இஷ்டமென்னும் ஸ்ரௌதகருமத்தையோ 'தைவமேவாபரேயஜ்ஞம்' என்னும் வசனத்தால் முன்னர்க் கூறியருளப்பெற்றது. எத்தானம் வேதிக்குட் கொடுக்கப்படுமோ அதுவும் ஸ்ரௌதகரும அந்தர்ப்பூதமேயாம். கிருச்சிரசாந்திராயணாதிரூப தவமே யாகரூபமாயுடையவர் தபோயாகர் எனப்படுவர்; அதாவது சில தவத்தோர் கிருச்சிரசாந்திராயணாதி தவரூப யாகத்தையே செய்வர். சித்தவிருத்திநிரோதரூப அஷ்டாங்கயோகத்தையே யாகரூபமாயுடையவர் யோகயாகர் எனப்படுவர்; அதாவது, சிலர் அஷ்டாங்கயோகரூப யாகத்தையே செய்வர். இயமம் 1, நியமம் 2, ஆசனம் 3, பிராணயாமம் 4, பிரத்யாஹாரம் 5, தாரணை 6, தியானம் 7, சமாதி 8, இவை யோக அஷ்டாங்கமாம். பிரத்தியாஹாரஸ்வரூபமோ 'ஶ்ரோத்ராதீநீந்த்ரியாண்யந்யே' என்னும் வசனத்தே முன்னர்க் கூறியருளப்பெற்றது. தாரணை, தியானம், சமாதி என்னும் மூன்றன்வடிவமோ 'ஸர்வாணீந்த்ரியகர்மாணி' என்னும் வசனத்தே முன்னர்க்கூறியருளப்பெற்றது. பிராணயாமவடிவமோ 'அபாநே ஜுஹ்வதி ப்ராணம்' இம்மேற்சுலோகத்தே கூறியருளப்பெறும். ஆகையாலிப்போது இயம நியம ஆசனமென்னும் மூன்றன்வடிவத்தைக்கூறுவாம்:— அஹிம்சை 1, சத்தியம் 2, அஸ்தேயம் 3, பிரஹ்மசரியம் 4, அபரிக்கிரகம் 5, இவை இயமமாம்.—சௌசம் 1, சந்தோஷம் 2, தவம் 3, ஸ்வாத்யாயம் 4, ஈஶ்வரப்பிரணிதானம் 5 இவை நியமமாம். ஆசனமோ பத்மம், சுவஸ்திகம், பத்திரம் என்பதாதி பேதத்தால் அநேகவகையாம். ஆண்டுச் சாஸ்திரத்தாற் கூறப்பெறாத ஒரு பிராணியை வதஞ்செய்தல் ஹிம்சையாம். இதுகூறியதால், 'அக்நீஷோமீயம் பஶுமாலபேத' என்பதாதி சாஸ்திரம் விதித்தயாகத்தே பசுவதத்தின்கண்ணே ஹிம்சைத்தன்மை நீக்கப்பெற்றதாம். அதுவும், கிருத காரித அநுமோதித பேதத்தால் மூவகையாம். தானே செய்தல் கிருதமாம், பிறர்வாயிலாய்ச் செய்வித்தல் காரிதமாம், செய்ததை மகிழ்தல் அநுமோதிதமாம். இவ்வகை யிம்சையினின்றும் நிவிருத்திரூப உபராமம் அஹிம்சையாம். அவ்வாறல்லாததைப் பேசுதல், கொல்லத் தகுதியற்ற பிராணி யிம்சையினனுகூலவுண்மையுரைத்தல் என்பது பொய்பேசுதலாம். இருவகைப் பொய்ம்மொழிதலினின்றும் நிவிருத்திரூப உபராமத்தன்மை சத்தியமாம். சாஸ்திரத்தாற் கூறப்பெறாத மார்க்கத்தால் பிறர் பொருளை வவ்வுதல் ஸ்தேயமாம்; அஃதின்மை அஸ்தேயமாம். சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பெற்ற மைதுனமற்றிருத்தல் பிரஹ்மசரியமாம். சாஸ்திரநிஷித்த மார்க்கத்தால் காயக்காப்பின் நிர்வாக போகசாதனத்தினின்றும் மிகுதியைத் தேடல் பரிக்கிரகமாம். அஃதின்மை யபரிக்கிரகமாம். இனி நியமத்தை நிரூபிப்பாம். சௌசம்,பாகியம், ஆந்தரம்என விருவகையாம். தோயமுமண்ணுங்கொண்டு காயத்தைத் தூயதாக்குதல், ஹித மித மேத்திய (சுத்த) ஆகாராதிகொள்ளல், பாகியமாம். மைத்திரி கருணை முதிதை யுபேக்ஷையென்பதாதி குணங்களால் சித்தத்தின் மதமாநாதிரூப மல நிவிருத்திசெய்தல் ஆந்தரமாம். சுகிகள்பான் மித்திர பாவம் மைத்திரி. துக்கிகண்மேற்கிருபைபுரிதல் கருணையாம். புண்ணியவான்களைக்கண்டு மகிழுதல் முதிதையாம். பாவியர் துஷ்டருடன் சேர்க்கையறல் உபேக்ஷையாம். தனக்குக் கிடைத்த போகசாதனங்களினும் அதிகத்தைத்தேட வொழாவிழைவுவடிவ சித்தவிருத்திவிசேஷம் சந்தோஷமாம். பசிதாகம் சீதோஷ்ணம், என்பனமுதலிய துவந்துவ தர்மங்களைச் சகித்தல், காஷ்டமௌனம் ஆகாரமௌனம் என்பனவாதிய விரதங்கள் தவமாம். காமுதலியவற்றின் சேஷ்டையாலும் தனதபிப்பிராயத்தை வெளிப்படுத்தாதிருத்தல் காஷ்டமௌனமாம். முற்கூறியமுறை வெளிப்படுத்துதலோடு வாய்திறந்துபேசாமை ஆகாரமௌனமாம். மோக்ஷப்பிரதிபாதக வேதாந்தசாஸ்திர அத்தியயனம் பிரணவமந்திரஜபம் ஸ்வாத்தியாயமாம். அவ்வப்பல இச்சையற்றுச் சர்வ கருமங்களையும் பரமகுருவாகிய ஈசுரரிடத்தே அர்ப்பித்தல் ஈசுவரப்பிரணிதானமாம். இது யோக சாஸ்திரமுறையே

ஐவகை இயம நியமங்கள் அறையப்பெற்றன. புராணத்தே, கள்ளாமை, தயை, ஆர்ச்சவம், சாந்தி, சௌசம், திருதி, மிதாஹாரம், மெய்பேசுதல், அஹிம்சை, பிரஹ்மசரியம் என்னும் பேதத்தால், பத்துவகையாய் இயமம் கூறப்பெற்றுள்ளது. ஆஸ்திகத்தன்மை, மகிழ்வு, தவம், தேவார்ச்சனம், தானம், இலச்சை, உண்மையுணர்வு, ஹோமம், நற்கேள்வி, ஜபம் என்னும் பேதத்தால் பத்துவகையாய் நியமம் நிகழ்த்தப்பெற்றுளது. இவையும் அவ்வைந்தனுள்ளேயடங்கும். இவ்வகையாய இயமநியமாதி எட்டு அங்கங்களைப் பயிலுமதிகாரிகள் யோகயாகரெனப்படுவர். யாவர் விதிபூர்வகமாய்க் குருசமீபத்தேயிருந்து வேதங்களைப் பயில்வரோ அவர் சுவாத்தியாய யாகர் எனப்படுவர்; அதாவது, சிலர் வேதாப்யாசரூப யாகத்தையே செய்வர். யாவர் அநேக யுக்திகளோடு வேதார்த்தத்தை நிச்சயிப்பரோ, அவர் ஞானயாகரெனப்படுவர்; அதாவது, சிலர் வேதார்த்த நிச்சயரூப யாகத்தையேசெய்வர். இப்போது வேறு யாகத்தைக் கூறியருளுகின்றார் 'யதயஃ ஸம்ஶிதவ்ரதாஃ' என. ஹே அர்ச்சுன! சில யத்தனசீலரோ சம்சித விரதரூப யாகத்தையே செய்வர். நன்றாக அத்தியந்தந் திடமாய அஹிம்சாதி விரதத்தையுடையவர் சம்சிதவிரதரெனப்படுவர். இவ்வார்த்தையை ஸ்ரீ பகவான் பதஞ்சலியாரும் யோகசாஸ்திரத்தே யருளியுள்ளார். 'ஜாதிதேஶகாலஸமயாநவச்சிந்நாஃ ஸார்வபௌமா மஹாவ்ரதம்' என. அஹிம்சைமுதலிய ஐந்துயமமே ஜாதிதேசம் காலம் சமயம் என்னும் நான்கால் அநவச்சின்னமாதலின், அத்தியந்தம் திடபூமி வடிவமாய் மகாவிரதமெனப்பெறும். இப்போதவ்வைந்தன்கண் ஜாதியாதியாலனவச்சின்னத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் அவ்வஹிம்சைமுதலியவற்றே ஜாதியாதியா லவச்சின்னத்தன்மையை நிரூபிப்பாம்:—ஒரு மிருகத்தைவிடுத்து கோமுதலியவற்றை யொருகாலும் கொல்லேன் என்னும் சங்கற்பத்தை மனத்தேகொண்டு அவற்றினஹிம்சை ஜாதியவச்சின்னமெனப்படும். தீர்த்தத்தே எவ்வுயிரையும் ஹிம்சியேன் என்னும் சங்கற்பம் மனத்தேகொண்டு ஆங்கு உயிரை ஹிம்சியாதுற்ற அஹிம்சை தேசாவச்சின்னமெனப்படும். ஏகாதசி முதலிய புனிதகாலத்தே எச்சீவரையும் வதையேன் என்னுமெண்ணத்தை மனத்தேகொண்டு அக்கால் எவ்வுயிரையும் வதையாமையாகிய அஹிம்சை காலாவச்சின்னமெனப்படும். சுரர் பூசுரர்க்குப் பயன்படுதலன்றிப் போரினன்றி எவ்வுயிரையுங்கொல்லேன் எனவுளங்கொண்டு அப்பயனின்றிக்கொல்லாமை சமயாவச்சின்னமாம். ஈண்டுச் சமயமென்பது பிரயோஜன விசேஷமாம். இவ்வாறே விவாகாதிப் பிரயோஜனமின்றிப் பொய்பேசேன் என்னுமெண்ணத்தை யுட்கொண்டு அப்பயனின்றிப் பொய்பேசலொழித்தலாம் சத்தியம் சமயாவச்சின்னமாம். இவ்வாறு ஆபத்துக்காலத்தானன்றிப் பசிநீக்கும் பொருள்களினும் வேறாய பொருளைத் திருடேன் என்னுமெண்ணத்தை யுள்ளத்தேகொண்டு திருடாமையாய அஸ்தேயம் காலாவச்சின்னமெனப்படும். இங்ஙனம், இருதுகாலமொழிந்தகாலத்தே என் மனைவியைப் போகியேன் என்னும் எண்ணத்தை மனத்தேகொண்டு மைதுனமொழித்தலாம்பிரஹ்மசரியம் காலாவச்சின்னமாம். இவ்வாறு குருதேவதையாதியரின் பயனுக்கன்றி அதிக பதார்த்த பரிக்கிரகத்தைச் செய்யேன் என்னும் சங்கற்பம் மனங்கொண்டு கொள்ளாமையாம் அபரிக்கிரகம் சமயாவச்சின்னமெனப்படும். இம்முறையே அஹிம்சை முதலியவற்றே தக்கபடி ஜாதியவச்சின்னத்தன்மை முதலியவற்றை யறிந்துகொள்க. ஜாதி முதலிய நான்கு அவச்சேதகங்களை நீக்கி எக்கால் அவை சர்வ ஜாதியாதிகளிலாமோ அதாவது ஒரிடத்தும் ஓர் காலத்தும் ஒரு பிரயோஜனப்பொருட்டும் யாரையும் ஹிம்சியேன்; பொய், களவு, மைதுனம், பரிக்கிரகம், செய்யேன் என்னும் எண்ணத்துடன் அவை நிரவச்சின்னங்களாங்கால் அவை மகாவிரதமெனப்பெறும். இவ்வாறு காஷ்டமௌனாதி விரதங்களையுமறிந்துகொள்க. இங்ஙனம் அஹிம்சாதி விரதம் திடமாகவே நரகத்துவா

பூத காமக் குரோத லோப மோகமென்னும் நான்கன் நீக்கமாம். அகிம்சையானும் பொறுமையானும் குரோத நீக்கமாம். பிரஹ்மசரியத்தானும் வஸ்து விசாரத்தானும் காம நிவிருத்தியாம். அஸ்தேய அபரிக்கிரகரூப சந்தோஷத்தால் லோப நீக்கமாம். சத்தியத்தானும் உண்மை யுணர்வுவடிவ விவேகத்தானும் மோக நீக்கமாம். இவ்வாறு அக்காமக்குரோதாதிகளின் நீக்கமானபின், அவற்றின் காரியரூப சர்வ அனர்த்த நீக்கமாம். இவற்றிற்கு அநேக பலம் சகாமர்க்கு யோகசாஸ்திரத்தே கூறப்பெற்றுளது. (28)

(அ-கை.) பிராணாயாமரூப யாகத்தை யொன்றரைச்சுலோகத்தால் ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். 𑌅𑌪𑌾𑌨𑍇 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌾𑌨𑌂 𑌤𑌥𑌾𑌪𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ॥ (29)
𑌅𑌪𑌰𑍇 𑌨𑌿𑌯𑌤𑌾𑌹𑌾𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 ।

ப-ம். 2 𑌅𑌪𑌾𑌨𑍇 4 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 3 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 6 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 7 𑌅𑌪𑌾𑌨𑌂 5 𑌤𑌥𑌾 1 𑌅𑌪𑌰𑍇 10 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑌿 11 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 12 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌯𑌾𑌮𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 9 𑌅𑌪𑌰𑍇 8 𑌨𑌿𑌯𑌤𑌾𑌹𑌾𑌰𑌾𑌃 14 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑍍 13 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 15 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேறு சிலரோ, அபானனில் பிராணனை ஹோமம் செய்வர், பிராணனில் அபானனை ஹோமஞ்செய்வர். நியத ஆகாரமுடைய வேறு சிலரோ, பிராண அபானகதியை நிறுவிப் பிராணாயாமபராயணராய்ப் பிராணன்களிடத்தே ஞானகரும இந்திரியங்களை ஹோமஞ் செய்வர். (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சிற்சிலரோ அபானனது பிரசுவாசரூப விருத்தியின்கண்ணே பிராணனது சுவாசரூப விருத்தியை ஹோமஞ்செய்வர்; அதாவது வெளிவாயுவைத் தேகத்துள்ளே புகுத்திப் பூரகப்பிராணாயாமத்தைச் செய்வர்; அவர் பிராணனது சுவாசரூப விருத்தியின்கண் அபானனது பிரசுவாசரூப விருத்தியை ஹோமஞ் செய்வர்; அதாவது தேகத்துள்ளுள்ளவாயுவைப் பாகிய தேசத்தின்கண்ணே வெளிப்படுத்தி ரேசகமென்னும் பிராணாயாமத்தைச்செய்வர். ஈண்டுப் பூரகம் ரேசகம் என்னும் இருவகையாய பிராணாயாமத்தைக் கூறியருளி, ஸ்ரீ பகவானானவர் இருவகையாய கும்பகத்தையும் அருத்தத்தானே அறைந்தருளினர்; எதனானே அப்பூரகரேசகமின்றி அவ்விருவகைக் கும்பகம் சித்தமாகமாட்டாதோ, ஆண்டு ஆந்தர கும்பகம், பாகிய கும்பகம் என்னும் வேற்றுமையுற்று அஃதிருவகையாம். ஆண்டு முடிந்தவளவு வெளிவாயுவை நாசிகை வாயிலாய்த் தேகத்துள்ளே பூரித்துப் பின் சுவாசப் பிரசுவாசங்களைத்தடைப்படுத்தல் ஆந்தர கும்பகமெனப்பெறும்; முடிந்தஅளவுசரீர உள்வாயுவை நாசிகைவாயிலாய்ப் பாகிய பரித்தியாகஞ்செய்து பின் சுவாசப்பிரசுவாசங்களை யடக்கல் பாகிய கும்பகமெனப்பெறும். இப்போது முன்னருளிய பூரகாதி மூவகைப்பிராணயாம அனுவாத பூர்வகம் நான்காவது கும்பகத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் '𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑌗𑌤𑍀 𑌰𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾' என. ஹே அர்ச்சுன! முகநாசிகைவாயிலாய்ச் சரீர உள்வாயுவை வெளிப்படுத்தல் சுவாசமாம், அதுவோ பிராணனது கதியாம். வெளிப்போந்தவாயுவை வாய் மூக்குவாயிலாய் தேகத்துட்புகுத்தல் பிரசுவாசமாம்; அது அபானனது கதியாம். ஆண்டுப் பூரகத்தின்கண்ணே பிராணனது சுவாசரூப கதி தடைப்படும். ரேசகத்தின்கண்ணே அபானனது பிரசுவாசரூபகதி தடைப்படும். கும்பகத்தின்கண்ணே இருகதியும் தடையாம். இவ்வாறு முறையாயேனும் ஓர்காலத்தேனும் அந்தப் பிராண அபான சுவாசப் பிரசுவாசரூப கதியைத்தடைப்படுத்தி மூவகைப்பிராணாயாமபராயணராய், ஆகாரநியமாதி யோக

ாதனங்களோடு கூடியவராய சிலரோ பாகிய ஆந்தரகும்பக அப்யாசத்தால்
'க்கிரகித்த பிராணன்களிடத்தே ஞானகரும இந்திரியரூபப் பிராணன்களை
ஹாமஞ்செய்வர்; அதாவது, சதுர்த்தகும்பக அப்யாசத்தால் அவ்விந்திரியங்
ளை நிக்கிரகித்த பிராணன்களிடத்தே இலயஞ்செய்வர். இவ்வெல்லாப்பொருளை
ம் ஸ்ரீபகவான் பதஞ்சலியானவர் யோகசூத்திரத்தே சுருக்கமாயும் விஸ்தார
ாயும் கூறியருளியுள்ளார். அச்சம்க்ஷேப சூத்திரமிதுவாம்:—'[illegible]' அவ்வாசனம் திர
றவே பிராணுயாமம் செய்யத்தக்கதாம். அது சுவாசப் பிரசுவாசகதியின்
ரோதரூபமாம்; அதாவது, பிராண அபானன்களின் முறையாய தருமரூப சுவா
ப் பிரசுவாசங்களின் புருஷ முயல்வின்றியேயுண்டாம் இயல்பாய சலனரூப
தியை முறையாயேனும் ஒருகாலத்தேயேனும் புருஷப்பிரயத்ந விசேஷத்தால்
டைப்படுத்தும் வடிவதே பிராணுயாமமெனப்படும். இச்சுருங்கியபொருளை இப்
பாது விஸ்தரிப்பாம்:—'[illegible]' அந்தப் பிராணுயாமம் பாகியவிருத்தி, அப்யந்
ரவிருத்தி, ஸ்தம்பவிருத்தி, துரீயம் என்னும்பேதத்தால் நான்குவகையாம்.
வற்றுள், பாகியகதியின் நிரோதரூபமாதலின் பூரகம் பாகிய விருத்தியெனப்பெ
ம். அந்தர்க்கதியின் நிரோதரூபமாதலின் ரேசகம் ஆந்தரவிருத்தியாம். அல்லது,
ரகியவிருத்தி சப்தத்தால் ரேசகத்தைக்கவர்க; அப்யந்தரவிருத்திசப்தத்தால் பூர
த்தைக்கவர்க. ஒரேகாலத்தே அவ்விருகதிகளின் நிரோதம் ஸ்தம்பமாம்; அவ்
ருவமாதலிற் கும்பகம் ஸ்தம்பவிருத்தியெனப்படும்; அதாவது யாண்டுச் சுவா
ப்பிரசுவாசங்களின் அபாவம் ஒரேவிதாரகப் பிரயத்னத்தால், ஆமோ பூர்வம்போ
ப் பூரணத்தின் பிரயத்னவிதாரணமும், ரேசனத்தின் பிரயத்னவிதாரணமும்
ண்டாகாதாம்; மற்றே, அக்கினியாற் றபிக்கப்பெற்ற கன்மேலிட்டநீர்வற்றி
ண்டும் சங்கோசத்தை யடைவதேபோல எப்போதும் சலனசுபாவத்தையுடைய
ப்பிராணவாயுவும் பலமுடை விதாரகப் பிரயத்னத்தால் சலனக்கிரியையற்றதாய்
ரீரத்தின்கண்ணே சூக்ஷ்மமாய்த்திதமாம். அக்கால் அச்சூக்ஷ்மப் பிராண
ாயு பூரணத்தையு மடையாதாதலின் பூரகமுமாகாதாம்; ரேசனத்தையுமடையா
ாதலின் ரேசகமுமாகாதாம்; மற்றே, எஞ்சியதாய்த் தடைப்பட்டவது கும்பகமே
ாகும். பூரகரேசககும்பகமென்னும் மூவகையாய பிராணுயாமம் தேசத்தானும்
ாலத்தானும் சங்கியையானும் பரீக்ஷைசெய்யப்பெற்றதாய்த் தீர்க்க சூக்ஷ்மப்
பயரையடையும். கனமாய பஞ்சின்பிண்டம் விரிக்கப்பெற்றதாய் விரலத்தன்மை
ானே தீர்க்கமாகும் சூக்ஷ்மமுமாகும். அதுபோல இப்பிராணவாயுவும் தேச
ாலசங்கியைகளின் மிகுதியால் பயிலப்பெற்றதாய்த் தீர்க்கமும் துர்லக்ஷியத்தன்மை
ானே சூக்ஷ்மமுமாம். அவ்வகையை யிப்போது காட்டுதும்:—பிராணனது
திரூபசுவாசமோ இதயத்தினின்றுங்கிளம்பி நாசி நுனியின்முன் 12 அங்குலம்
ரையுறுமிடஞ்சென்று முடிவுறும்; அபானகதிரூபப் பிரசுவாசமோ சுவாசம்முடி
ற்ற இடத்தினின்றும் மீண்டுந் திரும்பி இதயத்தையுற்று முடிவுறும். இதுயாவ
க்குமுற்ற வியற்கையாய பிராண அபானனதுகதியாம். பயில்வாரே அதுமுறைப்
டி நாபியினின்றுங்கிளம்பி அல்லது ஆதாரத்தினின்றுங்கிளம்பி நாசி நுனிமுன்
4 அங்குலம்வரையுறுமிடத்தேனும் 36 அங்குலம்வரையுறுமிடத்தேனும் சென்று
டிவுறும். மீண்டும் அம்முடிவுற்ற தேயத்தினின்றுமே திரும்பி அந்நாசிவாயி
ாய் நாபியிலேனும் ஆதாரத்திலேனும் சேரும். பாகியதேயத்தே வாயுவின் சம்
ந்தமோ வாயுவற்ற தேயத்தே தன் மூக்கின்முன் சூக்ஷ்மமாய பஞ்சைவைத்து
துதன் சலனத்தால் அனுமானம் செய்யப்பெறும். தேகத்துள்ளோ எறும்பின்
ரிச சமான பரிசத்தால் அனுமிக்கப்பெறும் அவ்விதுவே தேயபரீக்ஷையெனப்
பெறும். இமைக்கொட்டலானே வரைந்துகொண்ட நான்கிலொருபாகம் க்ஷணமெ

னப்பெறும். க்ஷணங்கள் இத்துணையென நிச்சயித்தல் காலபரீக்ஷையாம். தனது ஜானுமண்டலத்தைத் தனது அஸ்தத்தால் பிரதக்ஷிணைபோல மும்முறை தீண்டிச் செய்யும் சோடிகா முத்திரையானே வரைந்துகொண்ட காலம் மாத்திரை யெனப் படும். 36 மாத்திரைகளான் முதலுற்காதம் மந்தமாம். அதுவே முன்னினும் இருமடங்காக்கப்பெற்று இரண்டாவதாய மத்தியமாம். அதுவே மும்மடங்காக்கப் பெற்று மூன்றாவதாய தீவிரமெனப்பெறும். நாபியினின்றும் கிளப்பி விரேசனம் செய்யப்பெற்ற பிராணவாயுவானது தலையிற்றாக்கல் உற்காதமாம். இது சங்கியையின் பரீக்ஷையாம்; அல்லது பிரணவமந்திரஜப ஆவிருத்திபேதத்தால் சங்கியையின் பரீக்ஷை அறிக. அல்லது சுவாசப்பிரவேசங்களின் கணக்காற் சங்கியை பரீக்ஷையறிக. இவ்வாறு காலம் சங்கியை என்னும் இரண்டிற்கும் ஒரு சிறிது பேதமுடன்பட்டு வேறுவேறாய்க் கூறப்பெற்றது. கும்பகத்தின்கண்ணே பூரகரேசகம் போலத் தேசவியாப்தி பிரதீதியாகாதெனினும் காலவியாப்தியும் சங்கியைவியாப்தியும் அக்கும்பகத்தின்கண்ணும் அறியப்பெறும். மூவகையாய பிராணாயாமம் தினந்தோறும் அப்யசிக்கப்பெற்றதாய்த் திவசம், பக்ஷம், மாசம் என்பதாதி முறைப்படி அதிக தேசகாலத்தே வியாபகமாதலின் தீர்க்கமெனப்படும்; பரம நைபுண்ய சமாதியாலறியப்பெறுதலின் ஸூக்ஷ்மமெனப்படும். இத்துணையால் பூரகரேசக கும்பகமென்னும் மூவகைப் பிராணாயாமம் கூறப்பெற்றது. இப்போது பலரூப சதுர்த்தப் பிராணாயாமத்தை நிரூபிப்பாம்:—'பாஹ்யாப்யந்தர விஷயாக்ஷேபீ சதுர்த²:' பாகியவிஷய சுவாசம் ரேசகமெனப்படும். ஆந்தரவிஷயப் பிரசுவாசம் பூரகமெனப்படும். அல்லது, பாகியவிஷய சப்தத்தால் பூரகத்தைக் கவர்க. அப்யந்தரவிஷயசப்தத்தால் ரேசகத்தைக்கவர்க. அவ்விரேசக பூரகங்களை யபேக்ஷித்து ஒரேபலமுடைய விதாரகப்பிரயத்ன வயத்தால் வெளியுட்பேதங்கொண்டு இருவகை மூன்றாவது கும்பகமாகும். இவ்விரண்டையபேக்ஷியாமலே கேவலம் கும்பகத்தின் அப்பியாசதிடத்தாற் பன்முறை அவ்வம்முயல்வின் வயத்தால் நான்காவது கும்பகமாகும். அல்லது இச்சூத்திரத்திற்கு இவ்வேறுரைசெய்க. முன்மொழிந்த 12 அங்குலம்வரை, 24 அங்குலம்வரை, 36 அங்குலம்வரை, பிராணன்செல்லும் வெளியிடமாம். இதுவே வெளிவிஷய சப்தத்தாற் கவர்க. உள்விஷய சப்தத்தானே இருதயநாபி சக்கிரமுதலியவற்றைக்கவர்க. இவ்விரண்டுவிஷயங்களையும் ஸூக்ஷ்ம திருஷ்டியால் நிச்சயித்துத் தம்பரூபகதியின் விச்சேதம் நான்காவது பிராணாயாமமெனப்படும். மூன்றாவது கும்பகமெனப்பெயரிய பிராணாயாமமோ வெளியுள் விஷய நிச்சயமின்றியே விரைவாகவேயாம். இத்துணையே மூன்றாவதற்கும் நான்காவதற்கும் சிறப்பாம். இந்நான்குவகையாய பிராணாயாமத்தையே ஸ்ரீபகவானவர் 'அபாநே ஜுஹ்வதி ப்ராணம்' என்பது முதலிய ஒன்றைச்சுலோகத்தால் கூறியருளினர். (29)

(அ-கை.) ஆண்டு 'தை³வமேவாபரே யஜ்ஞம்' என்பது முதலாக ஐந்தரைச் சுலோகங்களால் 12 யாகங்கள் கூறப்பெற்றன. இப்போது அப்பன்னிருவகையை யறிந்தவர்க்கும் அநுஷ்டிப்பவர்க்கும் கிடைக்கும் பயனை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸர்வே(அ)ப்யேதே யஜ்ஞவிதோ³ யஜ்ஞக்ஷபிதகல்மஷா: ॥ (30)
யஜ்ஞஶிஷ்டாம்ருதபு⁴ஜோ யாந்தி ப்³ரஹ்ம ஸநாதநம் ।
நாயம் லோகோ(அ)ஸ்த்யயஜ்ஞஸ்ய குதோ(அ)ந்ய: குருஸத்தம ॥ (31)

ப-ம். 5 ஸர்வே 6 அபி 4 ஏதே 1 யஜ்ஞவித³: 2 யஜ்ஞக்ஷபிதகல்மஷா: 3 யஜ்ஞஶிஷ்டாம்ருதபு⁴ஜ: 9 யாந்தி 8 ப்³ரஹ்ம 7 ஸநாதநம் 14 ந 12 அயம் 13 லோக: 15 அஸ்தி 11 அயஜ்ஞஸ்ய 17 குத: 16 அந்ய: 10 குருஸத்தம.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாகஞ்செய்பவரும், அதனுற் கன்மஷமற்றவரும், அதன்பின்னர் அமிருதரூப அன்னத்தைப் புஜிப்பவரும், ஆகிய இவர் யாவருமே நித்தியப்பிரஹ்மத்தை யடைவர். அவ்வியாகமற்றவர்க்கு இம்மனுஷ்யலோகமும் கிடைத்தற்கரிதெனின் சுவர்க்காதிலோகமெவ்வாறு கிடைக்கும்? (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த பன்னிருயாகங்களை யாவர் குரு சாஸ்திரவாயிலா யுணர்வரோ அல்லது அவற்றையடைவரோ, அதாவது அவற்றை யாவர் சிரத்தையோடும் செய்வரோ, அவர் 'யஜ்ஞவிதஃ' எனப்படுவர். இவ்வாறு யாகங்களை யறிபவரும், அவற்றைச்செய்பவரும், அவற்றால் அழிவுற்ற பாவ கருமரூப கன்மஷரும், அவற்றைச்செய்து எஞ்சியிருந்தகாலத்தே, அமிருதரூப அன்னத்தைப் போஜனஞ்செய்பவரும் ஆகியயாவருமே மனத்தூய்மைவாயிலாயும், ஞானவடைவுவாயிலாயும், நித்தியப்பிரஹ்மத்தையே யடைவர்; அதாவது இச்சன்மமரணுதிரூப சம்சாரத்தினின்றும் அவர் முக்தராவர். இத்துணை கூறியருளி யதால் யாகஞ்செய்பவர்க்குப் பலப்பிராப்தி கூறியருளப்பெற்றது; இப்போது அவற்றைச் செய்யாதவர்க்குத் தோஷ அடைவுகூறியருளப்பெறுகின்றது 'நாயம் லொகொஸ்த்யயஜ்ஞஸ்ய' என. ஹே அர்ச்சுன! முன்மொழிந்த பன்னிரண்டுயாகங்களுள் எவ்வியாகமும் எவருக்கின்றுமோ அவர் அயஜ்ஞர் எனப்படுவர். அத்தகையருக்கு இவ்வற்பசுகத்தையுடைய மனுஷ்யலோகமும் கிடைக்கமாட்டாதெனின் சர்வசிஷ்டபுருஷரால் நிந்திக்கப்பெறுதலின் துக்கியாய அவர் மகாபுண்ணியகருமத்தாலடையத்தக்கனவாய சுவர்க்காதிரூப லோகங்களை எவ்வாறடைவர்; மற்றோ எவ்வுலகத்தையுமடையார். (31)

(அ-கை.) ஹே பகவன்! பூர்வம் தாங்கள் கூறியருளிய பலசகிதயாகங்கள் கேவலம் தங்கள் கற்பனையேயாகும் அவற்றின்கண் வேறொரு பிரமாணமுமின்றும் என அருச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் சாக்ஷாத் வேதமே பிரமாணமாமென விடையருளிச்செய்கின்றார்:—

சு-ம். ஏவம் பஹுவிதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகெ ।
கர்மஜாந்வித்தி தாந்ஸர்வாநேவம் ஜ்ஞாத்வா விமொக்ஷ்யஸெ ॥ (32)

ப-ம். 1 ஏவம் 2 பஹுவிதாஃ 3 யஜ்ஞாஃ 6 விததாஃ 4 ப்ரஹ்மணஃ 5 முகெ 9 கர்மஜாந் 10 வித்தி 7 தாந் 8 ஸர்வாந் 11 ஏவம் 12 ஜ்ஞாத்வா 13 விமொக்ஷ்யஸெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு அநேகம்வகை யாகங்கள் வேதமுகத்தே விஸ்தாரமாம். அவ்வெல்லா யாகங்களையும் நீ கருமஜன்னியமேயென வறிதி. இங்ஙனம் உணர்ந்து நீ இச்சம்சாரத்தினின்றும் முக்தனுதி. (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'தைவமேவாபரெயஜ்ஞம்' என்னும் வசனந்தொடங்கி முற்புகன்ற சர்வவைதிகசிரேயசின் சாதனரூப சர்வயாகங்களும் இருக்காதி வேதமுகத்தே விஸ்தாரமாம், அதாவது இருக்காதி வேதவாயிலாயே அவ்வெல்லாயாகங்களு மறியப்பெறும். கேவலம் எமது கற்பனையால் யாம் அவற்றைக் கூறவில்லை. அவ்வியாவற்றையும் நீ காயிக வாசிக மானச கருமத்தினின்றே யுண்டானதாயறிதி; அவற்றை ஆன்மாவினின்றும் உண்டானதாய் அறியாதொழிதி. இவ்வான்மாச் சர்வ வியாபாரங்களுமற்றதாமாதலின், அவைஆன்மாவின் வியாபாரரூபமன்றும்; மற்றோ, சர்வ வியாபாரமுமற்ற அசங்க உதாசீனமாம். இவ்வாறு ஆன்மாவை அசங்க உதாசீனமென வறிந்து நீ இச்சம்சார பந்தத்தினின்றும் முக்தனுதி. (32)

(அ-கை.) ஆண்டுப் பூர்வப் பிரசங்கத்தே ஸ்ரீ பகவானுனவர் சர்வ யாகங்களையும் சமமாகவே கூறியருளினாராதலின் கருமயாகமும் ஞானயாகமும் சமான

மேயாகும் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவானுனவர் அவ்விரண்டின் சமானத்தன்மையை நீக்கும்பொருட்டு ஞானயாகத்தின் மேன்மையைக் கூறியருளுகின்றார்.

சு-ம். ஶ்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாநயஜ்ஞ: பரந்தப ।
ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே ॥ (33)

ப-ம். 5 ஶ்ரேயாந் 2 த்ரவ்யமயாத் 3 யஜ்ஞாத் 4 ஜ்ஞாநயஜ்ஞ: 1 பரந்தப 7 ஸர்வம் 9 கர்ம 8 அகிலம் 6 பார்த்த 10 ஜ்ஞாநே 11 பரிஸமாப்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பொருண்மயயாகத்தினும் ஞானயாகம் முற்றினும் மேன்மையதாம். எதனால் ஹே பார்த்த! சர்வ நிரவசேஷகர்மமும் ஞானத்தின் கண்ணே பரியவசானத்தை யடையாநிற்குமே. (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பொருண்மயயாகமே முதலாகவுள்ள ஞானசூனிய சர்வயாகங்களினும் ஞானயாகம் முற்றினும் மேன்மையதாம்; ஏனெனின், அவை யாவுமோ சம்சாரரூப பலத்தையே யடைவிப்பனவாம். ஞானயாகமோ சாக்ஷாத் மோக்ஷரூப பலத்தையே அடைவிப்பதாம். 'ஜ்ஞாநாதேவ து கைவல்யம்' அதிகாரிக்கு ஞானத்தானே கைவல்யமோக்ஷத்தினடைவாம். இப்போது ஞானயாக மேன்மையின்கண்ணே ஸ்ரீ பகவான் ஹேதுவைக் கூறியருளுகின்றார் 'ஸர்வம் கர்மாகிலம்' என. ஹே அர்ச்சுன! அக்கினிஹோத்திரம் ஜோதிஷ்டோமம், சோமயாகம், சயனயாகம் என்னும் இவை முதலாகிய சிரௌதகருமமும், உபாசனுரூப ஸ்மார்த்தகருமமும் நிரவசேஷமாய்ப் பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தின்கண்ணே சமாப்தமாம்; அதாவது அவையாவும் பாவரூபப் பிரதிபந்த நிவிருத்திவாயிலாய் ஆன்மஞானத்தின்கண்ணே பரியவசானத்தையடையும். 'தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந, யஶேஷு ணவாவ உவந்யூதி' இவ்வதிகாரிப் பிராஹ்மணர் வேதாத்தியயனத்தாலும், யாகத்தாலும், தானத்தாலும், தவத்தாலும் ஆன்மாவையறிய இச்சிக்கின்றனர். இவ்வதிகாரிகள் தருமத்தால் பாவத்தை நீக்குகின்றனர். சர்வ சுபகருமங்களும் பிரதிபந்தகப் பாவநீக்கவாயிலாய் ஆன்மஞானத்தின்கண்ணே உபயோகமாம். இப்பொருளை ஸ்ரீ வியாசபகவானும் ஸ்ரீமத் பகவான் பாடியக்காரரும் 'ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதி ஶ்ருதேரஶ்வவத்' என்னும் சூத்திரத்தின்கண்ணே விஸ்தாரமாய்க் கூறியருளியிருக்கின்றனராதலின், இந்த ஞானரூபயாகமே சர்வ யாகங்களினும் மேன்மையதாம். (33)

(அ-கை.) ஹே பகவன்! எவ்வான்மஞானத்தே சர்வ சுபகருமங்களும் பரியவசானமாமோ அதனடைவில் அத்தியந்த சமீப உபாயம் யாதாம் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அவ்வுபாயத்தைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா ।
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிந: ॥ (34)

ப-ம். 1 தத் 5 வித்தி 2 ப்ரணிபாதேந 3 பரிப்ரஶ்நேந 4 ஸேவயா 10 உபதேக்ஷ்யந்தி 8 தே 9 ஜ்ஞாநம் 7 ஜ்ஞாநிந: 6 தத்த்வதர்ஶிந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வான்மஞானத்தை நீ பிரஹ்மவேத்தாவாய குருவின் சந்நிதியிற் றண்டம்போல நமஸ்கரித்து வினவிச் சேவித்து அடைதி. அதனுனை மகிழ்வெய்திய தத்துவதரிசியாய ஞானுசிரியர் நின்பொருட்டு ஞானத்தை யுபதேசிப்பர். (34)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! சர்வ சுபகருமங்களின் பலபூதமாய ஆன்மஞானத்தை நீ அவசியமடைதி. அதன்பொருட்டு நீ இவ்வகை யுபாயத்தைச்செய்தி. 'ஆசாயுவாநு வுஷொவெ௨' என்னுஞ்சுருதியானது பிரஹ்மவேத்தாவாய ஆசிரியருபதேசத்தானே ஞானஅடைவைக் கூறுகின்றது. ஆகையினால், நீயும் பிரஹ்மவேத்தாவாய ஆசிரியரது சமீபத்தே சென்று முதலில் தண்டம்போல நமஸ்கரித்து எல்லாவாற்றானும் ஆசிரியரது அனுகூலத்தன்மையைச்சம்பாதிக்கும் வியாபார விசேஷமாகிய சேவையைச்செய்தி. அதன்பின்னர் ஹே பகவன் ! யான் யாவன்? யான் எவ்வகையாய்க் கட்டுப்பட்டுளேன்? எவ்வுபாயத்தால் யான் இச்சம்சாரத்தினின்றும் முக்தனாவேன்? என்னும் வினவை ஆசிரியர்பாற் செய்தி. இவ்வாறு பக்தி சிரத்தை வாயிலாய் நீ செய்த தண்டம்போன்ற நமஸ்காரத்தாலும் சேவையாலும் மகிழ்வுற்ற அத்தத்துவ தரிசியாய ஞானாசிரியர் நின்பொருட்டு ஆன்மஞானத்தையுபதேசிப்பர் ; அது சாக்ஷாத் மோக்ஷரூப பலத்தையடைவிப்பதாம். ஈண்டு பதஞானத்தேயும் வாக்கியஞானத்தேயும் நானுவகையாய யுக்திகளின் ஞானத்தேயும் அத்தியந்தங் குசலர் ஞானியெனப்படுவர். யாவருக்குச் சம்சய விபரீத பாவனையின்றி ஆன்மாவின் சாக்ஷாத்காரமுண்டாமோ, அவர் தத்துவதரிசியாவர். இத்தகைய அவர் உபதேசித்த ஆன்மஞானமே மோக்ஷரூப பலத்தை யடைவிக்கும். அத்தத்துவ தரிசித்தன்மையின்றிக் கேவலம் பதவாக்கிய யுக்தியாதிகளின் ஞானத்தின்கண்ணே குசலர் உபதேசித்த ஆன்மஞானம் மோக்ஷரூபபலத்தை யடைவியாது. அதாவது, சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவானவர் உபதேசித்த ஆன்மஞானமே மோக்ஷரூபபலத்தை யடைவிக்கும். ஆண்டு, 'ஜ்ஞாநிந:' என்னும் பதத்தால் ஸ்ரீ பகவானனவர் சுரோத்திரியனைக் கூறியருளினர். 'தத்த்வதர்சிந:' என்னும் பதத்தால் பிரஹ்மநிஷ்டனைக் கூறியருளினர். இப்பொருளைச் சாக்ஷாத் சுருதி பகவதியும் 'தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத் ஸமித்பாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம்' எனக் கூறியுள்ளாள். (பொ-ள்.) பரமான்மாவின் சாக்ஷாத்காரப்பொருட்டு அதிகாரியானவன் சக்திக்கியைந்தவாறு பலாதிகைக்கொண்டு சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவின் சமீபஞ்செல்க. ஈண்டு, 'ஜ்ஞாநிந:, தத்த்வதர்சிந:' என்னும் ஆசிரியவாசக இரண்டு பதங்களினும் ஸ்ரீ பகவானனவர் பன்மைகூறியருளியது ஆசிரியரது பெருமையை யுணர்த்தியருளும்பொருட்டேயாமன்றி, அநேக ஆசிரியரென்பதற்கன்றாம் ; ஏனெனின், சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட ஒரே ஆசிரியரால் அதிகாரிக்குத் தத்துவசாக்ஷாத்காரப் பிராப்தியாமாதலின், அதன்பொருட்டு அநேக ஆசிரியர் சமீபத்தே செல்வதற்குச் சிறிதுமாத்திரையும் பிரயோஜனமின்றாம். (34)

(அ-கை.) ஹே பகவன் ! இத்தகைய அத்தியந்த திடவுபாயத்தால் ஆன்மஞானமுண்டாயிருப்பினும் அதனால் யாது பயன் கிட்டும் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் ஆன்மஞான பலத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். யஜ்ஜ்ஞாத்வா ந புநர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ।
யேந பூதாந்யசேஷேண த்ரக்ஷ்யஸ்யாத்மந்யதோ மயி ॥ (35)

ப-ம். 2 யத் 3 ஜ்ஞாத்வா 7 ந 4 புந: 6 மோஹம் 5 ஏவம் 8 யாஸ்யஸி 1 பாண்டவ 9 யேந 11 பூதாநி 10 அசேஷேண 15 த்ரக்ஷ்யஸி 12 ஆத்மநி 13 அதோ 14 மயி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! எப்பூர்வம் புகன்ற ஞானத்தையடைந்து நீ மீண்டும் இவ்வகையாய மோகத்தையடையாயோ, எதனால், இவ்வெல்லாப் பூதங்களையும் நின்வடிவத்தும் எம்மிடத்தும் அபேதரூபமாய்க் காண்பாயோ,

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட ஆசிரியர் உபதே சித்த ஆன்மஞானத்தையடைந்து இவ்வுறவினரின் வதமுதலிய நிமித்தத்தாலுண் டாய மயக்கரூப சோகத்தை நீ மீண்டும் அடையமாட்டாய்; ஏனெனின், ஆன்மா வின் அஞ்ஞானத்தாலுண்டாய பிரஹ்மாமுதல் தம்பமீருயுள்ள பிதாபுத்திராதி பூதப்பிராணிகள் யாவற்றையும் எவ்வான்மஞானத்தால் நீ நினது துவம்பதார்த்த ஆன்மாவின்கண்ணும் வாஸ்தவமாய்ப்பேதமற்ற சர்வாதிஷ்டானபூத தற்பதார் த்த பரமேசுவரராய எம்மிடத்தும் அபேதமாய்க் காண்பாயோ, எதனால் அதிஷ் டானத்தினும் வேறாய்க் கற்பிதவஸ்துவின்றாமோ. கருத்திதுவாம் :—பகவான் வாசுதேவராகிய எம்மை நின்னான்மரூபமாயறிந்து அஞ்ஞானம் நாசமானபின்னர் அதன் காரியரூப இச்சர்வபூதப்பிராணிகளும் ஸ்திதமாகாதாம். ஈண்டு, ஒருரை யின்கண்ணே 'ஆத்மநி அதோ' என்னும் இவ்விரண்டுபதங்கட்கும் சமானாதிகரணத் தை அங்கீகரித்து ஆன்மரூப எம்மிடத்தே சர்வ பூதங்களையும் நீ காண்பாயெனப் பொருள்கூறப்பட்டிருக்கின்றது. (35)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வகையாய ஆன்மஞானத்தையடைந்தும் யான் பீஷ்மத்துரோணாதியாசிரியரையும், துரியோதனாதி யுறவினரையும் கொல்வதா லுண்டாம் பாவத்தினின்றும் விடுபடேன் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அவ்வான்மஞானத்தின் பரமமாகாத்மியத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். அபி சேதஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாபக்ருத்தம: ।
ஸர்வம் ஜ்ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥ (36)

ப-ம். 5 அபி 1 சேத் 6 அஸி 3 பாபேப்ய: 2 ஸர்வேப்ய: 4 பாபக்ருத்தம:
7 ஸர்வம் 9 ஜ்ஞானப்லவேன 10 ஏவ 8 வ்ருஜினம் 11 ஸந்தரிஷ்யஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஒருகால் நீ சர்வ பாவஞ்செய்யும் புருஷர்களினும் அத்தியந்தம் பாவஞ்செய்பவனாயினும், நீ சர்வ பாவரூப சமுத்திரத்தையும் ஞான ரூப ஓடத்தானே கடப்பாய். (36)

(வி-ம்.) ஈண்டு 'அபி சேத்' என்னுமிரண்டுபதங்களும் அசம்பாவித அர்த் தஉடன்பாட்டின் போதகமாம்; அதாவது சர்வபாவிகளினும் அத்தியந்தம் பாவித் தன்மை அர்ச்சுனனிடத்தே இன்றாயினும், ஞானபலத்தைக் கூறியருளும்பொரு ட்டு அவன்பால் அத்தியந்த பாவித்தன்மையை அங்கீகரித்தருளி ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் :—ஹே அர்ச்சுன! ஒருகால் நீ சர்வபாவிகளினும் அத்தியந் தம்பாவியேயாயினும், சர்வ பாவரூபசமுத்திரத்தை இந்த ஞானரூப ஓடத்தானே தாண்டுவாயன்றி வேறுபாயத்தானே முடியாது. 'தரதி சோகமாத்மவித்' ஆன் மவித்தானவன் சர்வ சம்சாரரூப சோகத்தைக்கடக்கின்றான். ஈண்டு 'வ்ருஜினம்' என்னும் சப்தத்தால் சம்சாரரூப பலப்பிராப்தியை யடைவிக்கும் சர்வதரும அத ருமரூப கருமங்களைக்கவர்க; ஏனெனின், மோக்ஷ இச்சையையுடையவனுக்குப் பாவகருமத்தைப்போலப் புண்ணியகருமமும் அநிஷ்டமேயாகும். (36)

(அ-கை.) ஹே பகவன்! அதிகாரியானவன் ஆன்மஞானரூப ஓடத்தால் புண்ணிய பாவரூபசமுத்திரத்தைத் தாண்டுவன் என முன்னர்த் தாங்கள்கூறி யருளினீர்கள். ஆண்டு ஓடத்தால் கடலைக்கடக்கினும், கடலழியாததேபோல ஆன் மஞானரூப ஓடத்தால் இவ்வறம்பாவவடிவக் கடலைக்கடக்கினும் அதன் நாசமாக மாட்டாது என அருச்சுனனது சங்கையுண்டாக, ஸ்ரீ பகவான் ஆன்மஞானத் தால் அக்கருமநாசத்தே வேறு திருஷ்டாந்தத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். யதைதாம்ஸி ஸமித்தோऽக்நிர்பஸ்மஸாத்குருதேऽர்ஜுந ।
ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா ॥ (37)

ப-ம். 2 யதா 5 ஏதாம்ஸி 3 ஸமித்த: 4 அக்நி: 6 பஸ்மஸாத் 7 குருதே 1 அர்ஜுந 9 ஜ்ஞாநாக்நி: 10 ஸர்வகர்மாணி 11 பஸ்மஸாத் 12 குருதே 8 ததா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஓங்கியெரியாநின்ற அக்கினி இந்தனங்களைச்சாம்பராக்குவதேபோல ஞானரூப அக்கினி சர்வகருமங்களையும் சாம்பராக்கும் (37)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்றினும் ஓங்கியெரியாநின்ற அக்கினி அளவிறந்த இந்தனங்களையும் சாம்பராக்கிவிடுவதேபோல யான் பிரஹ்மரூபன் என்னும் ஆன்மஞானரூப அக்கினியும் பிராரப்தகருமத்தினும் வேறாய சர்வ புண்ணிய பாவகருமங்களையும் சாம்பராக்கிவிடும்; அதாவது ஞானாக்கினியானது கருமங்களின் காரணபூத அஞ்ஞானத்தையழித்துக் கருமத்தையுமழிக்கும் 'பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ்சித்யந்தே ஸர்வஸம்ஸயா: । க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ॥'' (பொ-ள்.) பிரஹ்மாதிதேவதைகளினும் முற்றும் மேன்மையுற்ற பரமான்மாவின் சாக்ஷாத்காரத்தை யடைந்தவனுக்கு ஆத்மாநாத்மாக்களின் அத்தியாசரூப ஹ்ருதயக்கிரந்திநாசமுறும், ஆன்மா தேகாதிகளினும் வேறா, தேகாதிரூபமா? தேகாதிகளினும் வேறாயினும் ஆன்மாப்பிரஹ்மரூபமா, பிரஹ்மத்தினும்வேறா? இவை முதலாக எத்துணைச்சம்சயங்களுளவோ அவையாவும் நாசத்தைப்படையும்; இத்தேகத்தைக்கொடுத்த பிராரப்தத்தை விடுத்து, மற்றைய எல்லாக்கருமங்களும் நாசத்தைபடையும். இவ்வார்த்தையை ஸ்ரீவியாசபகவானும் பிரஹ்மசூத்திரத்தின்கண்ணே திருவாய்மலர்ந்தருளியுள்ளார். 'தததிகம உத்தரபூர்வாகயோரஸ்லேஷவிநாஸௌ தத்வ்யபதேஸாத்' யான் பிரஹ்மரூபன் என ஆன்ம சாக்ஷாத்காரமுற்ற அறிஞனது பூர்வ சஞ்சிதகருமமோ நாசமாகும். நீரின்கண்ணுற்ற பதுமபத்திரத்தை நீரின்பரிசம் உறாததேபோல ஆன்மஞானானந்தரம் செய்யப்பட்டகருமம் அறிஞனைத் தீண்டவேமாட்டாது என்னும் இவ்வார்த்தை அநேக சுருதிஸ்மிருதிகளில் கூறப்பெற்றிருக்கின்றது. ஆன்மசாக்ஷாத்காரத்தையடையும் சரீரத்தை ஆரம்பிக்கும் அறிஞன் கருமமோ சரீரநாசகாலத்தே நாசமாம். 'தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யேऽத ஸம்பத்ஸ்யே' அறிஞனுக்கு விதேகமோக்ஷ அடைவின்கண்ணே அத்துணையே தடையாம்; எத்துணைப்பிராரப்தபோகவாயிலாய் இச்சரீரநீக்கம் உண்டாகாதோ, இது நீங்கியபின்னரோ அறிஞன் விதேகமுத்தியை யடைவன். இவ்வார்த்தை ஸ்ரீவியாசபகவானும் கூறியருளியுள்ளார். 'போகேந த்விதரே க்ஷபயித்வா ஸம்பத்யதே' சஞ்சித ஆகாமியங்களின் வேறாய பிராரப்தகருமத்தைப் போகத்தாலழித்து அறிஞன் விதேகமோக்ஷத்தையடைவன். வசிஷ்டாதியதிகாரிகட்கோ ஞானமுண்டானபின்னரும் வேறுதேகவடைவு நூற்கட் காணவருகின்றதாதலின், 'யாவததிகாரமவஸ்திதிராதிகாரிகாணாம்' என்னும் சூத்திர வியாக்கியானத்தின்கண்ணே ஸ்ரீ பகவான் பாஷ்யக்காரர் இவ்வகை வியவஸ்தையைக் கூறியருளியுள்ளார். ஸ்ரீ வசிஷ்டாதிகள் ஆன்மஞானமடைவுற்ற சரீரத்தைபாரம்பிக்கும் பிராரப்தகருமமே அவர்கட்கு வேறு சரீரத்தையுமாரம்பிக்கும். கருத்திதுவாம்:—அநேக சரீரத்தை ஆரம்பிக்கும் பலமுடைப் பிராரப்தம் அதிகாரமாம். அது வசிஷ்டாதி யுபாசகர்க்கேயாகும்; ஏனையர்க்கின்றாம், அஃதிருக்கும்வரையுமே அவர்தம் திதியாம். ஆதலினிது துணிவாம்:— தனது பலாரம்பத்தைச் செய்யாத கருமமோ ஆன்மஞானாக்கினியால் நாசமாம், செய்வதோ போகசமாப்தி பரியந்தமிருக்கும். அப் பிராரப்தபோகம் அறிஞராய நம்மனோரிடத்தோ ஒரே தேகத்தாலாம். வசிஷ்டாதிகளிடத்தோ அநேகந்தேகத்தாலாம். (37)

(அ-கை.) இவ்வான்ம ஞானத்திற்கு இத்தகைய மகா மகிமையிருத்தலின் இதற்குச் சமானமாய் வேறெப்பொருளுமின்றாம் என்னும் பொருளை இப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—

சு-ம். ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹ வித்யதே ।
தத் ஸ்வயம் யோகஸம்ஸித்த: காலேநாத்மநி விந்ததி ॥ (38)

ப-ம். 6 ந 1 ஹி 3 ஜ்ஞாநேந 4 ஸத்ருஶம் 5 பவித்ரம் 2 இஹ 7 வித்யதே 8 தத் 11 ஸ்வயம் 10 யோகஸம்ஸித்த: 9 காலேந 12 ஆத்மநி 13 விந்ததி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எதனால் இவ்வேதத்தின்கண்ணும் லோகத்தின்கண்ணும் ஞானத்திற்குச் சமானமான பவித்திரம் இன்றோமோ, அந்த ஞானத்தை நெடுநாட் பின் கருமயோகத்தாற் சுத்த சித்தத்தையுடையவன் தானே அந்தக்கரணத்தேயடைவன். (38)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வேதத்தும் உலகவியவகாரத்தும் இவ்வான்மஞானத்திற்குச் சமானமாய் வேறொரு பொருள் தூய்மை செய்வதின்றாம்; மற்றோ, இவ்வொரு ஆன்மஞானமே தூய்மை செய்வதாம். ஏனெனின், இதனினும் வேறாயுள்ள கரும உபாசனாதியுபாயங்கள்யாவும் அஞ்ஞானத்தை நீக்காவாதலின், அவை அஞ்ஞான மூலத்தோடுகூடிய பாவநீக்கத்தைச்செய்யா; மற்றோ, ஒரு சிறிது பாவநீக்கத்தைச்செய்யும்பிராயச்சித்தம் ஒரு சிறிது பாவத்தை நீக்குவதுபோலும். சர்வபாவங்களின் மூலகாரணரூப அஞ்ஞானமிருக்கும்வரை பிராயச்சித்தாதியுபாயங்களால் ஒருபாவமழியினும் மற்றொருபாவம் அவசியம் எழும். ஆன்மஞானத்தாலோ அஞ்ஞானமொழியவே மூலத்தோடு சர்வபாவநிவிருத்தியாமாதலின், அதற்குச் சமானமாய்த் தூய்மை செய்வது வேறொன்றும் இல்லையாம்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வான்மஞானம் யாவருக்கும் விரைவாகவே ஏன் உண்டாவதில்லை?

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'தத் ஸ்வயம்யோகஸம்ஸித்த:' என. ஹே அர்ச்சுன! எவ்வதிகாரியானவன் நெடுநாள்வரை முன்மொழிந்த கருமயோகத்தால் அந்தக்கரணத் தூய்மைவாயிலாய் ஆன்மஞான யோக்யதையையடைவனோ, அவனே தன்னந்தக்கரணத்தே தானே ஆன்மஞானத்தையடைவன்; அதனையடையானோ ஆன்மஞானத்தையுமடையான். அன்னியன் கொடுத்தவுணர்வைத்தன்பாலிருப்பதாயும் அடையான்; அன்னியன்பாலிருக்கும் ஞானத்தைத் தன்னதாகவுமடையான்; மற்றோ, தூயமனத்தன் தானே தன்மனத்தே அவ்வான்மஞானத்தையடைவன். (38)

(அ-கை.) ஆண்டு, எவ்வுபாயத்தால் நியமமாய் ஆன்மஞான அடைவாமோ, அது முன்மொழிந்த நமஸ்காரசேவை முதலிய உபாயங்களையபேக்ஷித்து அத்தியந்தம் சமீபமாம். அதனை இப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். ஶ்ரத்தாவாந் லபதே ஜ்ஞாநம் தத்பர: ஸம்யதேந்த்ரிய: ।
ஜ்ஞாநம் லப்த்வா பராம் ஶாந்திமசிரேணாதிகச்சதி ॥ (39)

ப-ம். 1 ஶ்ரத்தாவாந் 5 லபதே 4 ஜ்ஞாநம் 2 தத்பர: 3 ஸம்யதேந்த்ரிய: 6 ஜ்ஞாநம் 7 லப்த்வா 9 பராம் 10 ஶாந்திம் 8 அசிரேண 11 அதிகச்சதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் சிரத்தையுடையவனோ குரு உபாசனையின்கட்டற்பரனோ ஜிதேந்திரியனோ, அவனே ஆன்மஞானத்தையடைவன்; அதனையடைந்து விரைவாகவே கைவல்லிய முத்தியையடைவன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரஹ்மவேத்தாவாய குருவசனத்தே வேதாந்த சாஸ்திரத்தே இம்மொழி உண்மைப்பொருளையே யுரைப்பது என்னும் பிரமை

வடிவ ஆஸ்திக்ய புத்தியே சிரத்தையாம்; அச்சிரத்தையுடையவனே ஆன்மஞானத்தையடைவன்.

சங்கை :—அவ்வகையனேனும் அத்தியந்தம் ஆலசியமுடையவனாயின், அவனுக்கும் ஆன்மஞானவடைவுண்டாதல்வேண்டும் ?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'தத்பர:' என. ஹே அர்ச்சுன ! சிரத்தையுடையவனும், ஆன்மஞான அடைவினுபாயமாய பிரஹ்மவேத்தாவின் உபாசனை முதலியவற்றே ஆலசியமற்றவனாய் அத்தியந்தம் தற்பரனும் ஆய அவனே ஆன்மஞானத்தையடைவன். அத்தற்பரத்தன்மையின்றிக் கேவலம் சிரத்தையை யுடையவன் ஆன்மஞானத்தை யடையான்.

சங்கை :—ஹே பகவன் ! சிரத்தை யுற்றவனாகியும், பிரஹ்மவேத்தாவின் உபாசனைமுதலியவற்றே தற்பரனாகியும் சுரோத்திராதிகளைத் தத்தம் சப்தாதிவிஷயங்களினின்றும் நீக்காதவனாகிய அஜிதேந்திரியனுக்கும் ஆன்மஞான அடைவுண்டாதல்வேண்டும்.

சமாதானம் :—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் 'ஸம்யதேந்த்ரிய:' என. ஹே அர்ச்சுன ! சிரத்தாவானாகியும் தற்பரனாகியும் ஜிதேந்திரியனல்லனாயின் அவனும் ஆன்மஞானத்தை யடையான் ; மற்றே, ஜிதேந்திரியத்தன்மையையுங்கூடவுடையவனே ஆன்மஞானத்தை யடைவன். 'தத்வித்தி ப்ரணிபாதேந' என்னும் சுலோகத்தே நமஸ்காரம், வினா, சேவை என மூன்றுபாயங்கள் ஆன்மஞானத்திற்குக் கூறியருளப்பெற்றன. பாகியமாய அவை இடாம்பிகமாயாவியின்பாலும் நிகழுமாதலின், அவை நியமமாய் ஆன்மஞான அடைவின்கண் ஏதுவாகாவாம். இச்சுலோகத்தே கூறியருளிய சிரத்தை, தற்பரத்தன்மை, ஜிதேந்திரியத்தன்மை என்னும் ஆந்தர உபாயம் மூன்றுமோ நியமமாய் ஆன்மஞானத்தையடைவிக்கும். இவற்றால் அதிகாரியானவன் ஆன்மஞானத்தையடைந்து காரியசகித அவித்தையின் நிவிருத்திவடிவ கைவல்யமுக்தியைத் தடையின்றியே யடைவன். கருத்திதுவாம் :—தீபமானது தன்னுதயமாத்திரத்தானே அந்தகாரநீக்கத்தைச் செய்யும் ; அதன்கண்ணே அது எச்சகாயத்தையும் விரும்பாததேபோல இவ்வான்மஞானமும் தன்னுற்பத்திமாத்திரையானே அஞ்ஞானநீக்கத்தைச் செய்யும், அதன்கண்ணே அது வேறெப்பிரசங்கியானுதியுபாயத்தையும் விரும்பாதாம். (39)

(அ-கை.) ஆண்டு இம்மூன்மொழிந்த பொருளின்கண்ணே நீயொருகாலும் ஐயப்படவேண்டியதில்லை ; ஐயமுடையவன்மகாஅநர்த்தத்தையடைவன் என்னுமிப்பொருளை ஸ்ரீபகவா னிப்போதியம்பியருளுகின்றார்.

சு-ம். அஜ்ஞஶ்சாஶ்ரத்³த³தா⁴நஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।
நாயம் லோகோऽஸ்தி ந பரோ ந ஸுக²ம் ஸம்ஶயாத்மந: ॥ (40)

ப-ம். 1 அஜ்ஞ: 2 ச 3 அஶ்ரத்³த³தா⁴ந: 4 ச 5 ஸம்ஶயாத்மா 6 விநஶ்யதி 10 ந 8 அயம் 9 லோக: 11 அஸ்தி 13 ந 12 பர: 15 ந 14 ஸுக²ம் 7 ஸம்ஶயாத்மந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! அஞ்ஞானியும் சிரத்தையற்றவனும் ஐயமுற்றவனும் விநாசத்தையே யடைவன். அவ்வையமுற்றவனுக்கு இம்மனுஷலோகமும் சுவர்க்காதிரூப பரலோகமும் சித்தியாவாம் ; போஜனாதியாலுண்டாம் சுகமும் உண்டாகாதாம். (40)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! வேதாந்தசாஸ்திர அத்தியயனமின்மையின் ஆன்மஞானசூன்யன் அஞ்ஞனவன். பிரஹ்மவேத்தாவாய ஆசிரியர்கூறியபொருளி

னும் வேதாந்தசாஸ்திரங்கூறிய பொருளினும் இப்பொருள் இவ்வகையின்றும் என்னும் விபரீதரூப நாஸ்திக்யபுத்தி அசிரத்தையாம். அதனோடுகூடியவன் அசிரத்ததானனவன். இலௌகிக வைதிக சர்வ அர்த்தங்களினும் இப்பொருள் இவ்வகையா, அல்லது வேறுவகையா? என்னும் ஐயத்தோடு கூடியவன் சம்சயாத்மாவாம்; இம்மூவரும் நாசத்தையேயடைவர். அதாவது தமதர்த்தத்தினின்றும் பிரஷ்டராவர்; ஈண்டு, அச்சம்சயாத்மா உறும் வகை யநர்த்தத்தை அஞ்ஞனும் அசிரத்ததானனுமடையார்; மற்றோ, குறைவாயடைவர். இவ்வாறு சம்சயாத்மாவினும் அவ்விருவரிடத்தே குறைவை யுணர்த்தும்பொருட்டு அவ்விருவாசக பதங்களின் ஈற்றில் 'அ' காரம் கூறியருளப்பெற்றது.

சங்கை :—ஹே பகவன்! ஐயமுற்றவன் அஞ்ஞபுருஷனினும் சிரத்தையற்றவனினும் அதிக அநர்த்தத்தையடைவன் என எவ்வாறறிதல்கூடும்?

சமாதானம்:—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் 'நாயம்லோக:' என. ஹே அர்ச்சுன! எப்போதும் ஐயத்தோடுகூடியவன் தனது மித்திரனிடத்தும், இவன் எனதுமித்திரனா, அல்லது சத்துருவா? என ஐயமேயுறுவன். மேலுமவன் தனுதிகளை ஒருங்குசேர்ப்பதிலும் முயலான். ஆகையால், அவனுக்கிம்மனுஷலோகமும் சித்தமாகாதாம். அவனுக்கு வேதத்தின்கண்ணும் எப்போதும் ஐயமுண்டாமாதலின் அவனால் தருமஞானசம்பாதனமும் முடியாததாம். முடியாததாகவே அவனுக்குச் சுவர்க்கமோக்ஷாதிரூப பரலோகமும் சித்தியாதாம். அவனுக்குப் போஜனுதியின்கண்ணும் இவற்றைக்கொள்ளலாமா, அல்லது தள்ளலாமா? என்னும் ஐயம் எப்போதுமிருக்குமாதலின், விஷயசுகமும் உண்டாகாதாம். கருத்திதுவாம்:— அஞ்ஞனுக்கும் சிரத்தை யற்றவனுக்கும் பரலோகப்பிராப்தி யுண்டாகாதெனினும் இவ்வுலகமும் உணவு முதலியவற்றாலுண்டாம் விஷயசுகமும் உண்டாம். இக்காரணத்தானே நூலுணர்ந்தோர் அஞ்ஞனைச் சுசாத்தியனெனவும், சிரத்தையற்றவனைப் பிரயத்தனசாத்தியனெனவும், ஐயுற்றானை அசாத்தியனெனவும் கூறுவர். ஈண்டு, யாவனுக்குச் சுகமாகவே சன்மார்க்கத்தே பிரவிருத்திகூடுமோ அவன் சுசாத்தியனெனப்படுவன். யாவனுக்கு மிகுமுயல்வால் சன்மார்க்கத்தே பிரவிருத்திகூடுமோ அவன் பிரயத்தன சாத்தியனெனப்படுவன். எவ்வாற்றானும் யாவனுக்குச் சன்மார்க்கத்தே பிரவிருத்தி கூடாதோ அவன் அசாத்தியன் எனப்படுவன். ஆதலின் ஐயப்பாடுடையோன் யாவரினும் அத்தியந்தம் பாபிஷ்டனுவன்.()

(அ-கை.) ஈண்டுச் சர்வானர்த்த மூலபூத சம்சயநீக்கப்பொருட்டு ஆன்ம நிச்சயரூப உபாயத்தைக் கூறியருளுபவராய் ஸ்ரீபகவான் இரண்டத்தியாயங்களால் கூறியருளிய பூர்வ உத்தரபூமிகளின் பேதத்தாலாய கருமஞானமய இருவகைப் பிரஹ்மநிஷ்டையை இப்போது உபசம்ஹரித்தருளுகின்றார் :—

சு-ம். யோகஸந்ந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்சிந்நஸம்ஶயம் ।
ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ॥ (41)

ப-ம். 2 யோகஸந்ந்யஸ்தகர்மாணம், 3 ஜ்ஞாநஸஞ்சிந்நஸம்ஶயம் 4 ஆத்மவந்தம் 6 ந 5 கர்மாணி 7 நிபத்நந்தி 1 தநஞ்ஜய.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சமத்வபுத்திரூபயோகத்தாற் பகவதர்ப்பணஞ் செய்த கருமியும் ஆன்மஞானத்தால் சேதித்த சம்சயனும் ஆய பிரமாதமற்றவனைக் கருமம் கட்டுப்படுத்தமாட்டாது.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பகவதாராதனரூப சமத்வபுத்தி யோகமாம்; அதனால் ஸ்ரீபகவானிடத்தே கருமத்தைச் சமர்ப்பித்தவனும். அல்லது பரமார்த்த

வஸ்துவின்றரிசனம் யோகமாம்; அதனால் சருவகருமத்தையும் தியாகித்தவனும் ஆயவன் யோகசந்யஸ்த கருமியெனப்படுவன்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வையமிருப்ப யோகசந்யஸ்த கர்மத்தன்மை தானெங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம் :—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் 'ஜ்ஞாநஸஂசிந்நஸஂஶய:' என. ஹே அர்ச்சுன! ஆன்மாவின் நிச்சயரூபஞானத்தால் சம்சயத்தை யறுத்தவன்.

சங்கை :—ஹே பகவன் விஷயங்களின் பரவசத்தன்மைரூபப் பிரமாதமிருப்ப ஞானோற்பத்தியே சம்பவியாதாம்.

சமாதானம் :—ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் 'ஆத்மவந்தம்' என. ஹே அர்ச்சுன! யாவன் பரவசத்தன்மைரூபப்பிரமாதமற்றவனுவனோ, அதாவது, யாவன் எப்போதும் சாவதானனோ, இவ்வாறு யாவன் அப்பிரமாதியாதலின் ஞானவானுவனோ, ஞானசஞ்சின்னசம்சயனுதலின் யோகசந்யஸ்தகருமியாவனோ, அவ்வறிஞனை லோகசங்கிரகப்பொருட்டு அவனுற்றியகருமமேனும், வியர்த்தசேஷ்டையாகிய கருமமேனும் கட்டுப்படுத்தமாட்டா; அதாவது அவை தேவதாதிரூப இஷ்டசரீரங்களையும் பசு முதலிய அநிஷ்டசரீரங்களையும், மனுடாதி மிசிரசரீரங்களையும் ஆரம்பியா. (41)

(அ-கை.) ஆன்மஞானத்தால் ஐயத்தையறுத்த அறிஞனை லௌகிக வைதிக கருமங்கள் கட்டுப்படுத்தாவாதலின், நீயும் அதனால் சம்சயத்தையறுத்து சுவதருமத்தின்கண்ணே தற்பரனுதியென்னும் பொருளை யிப்போது ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். தஸ்மாதஜ்ஞாநஸஂபூதஂ ஹ்ருத்ஸ்தஂ ஜ்ஞாநாஸிநாத்மந: ।
சிஜ்வைநஂ ஸஂஶயஂ யோகமாதிஷ்டோத்திஷ்ட பாரத ॥ (42)

ப-ம். 2 தஸ்மாத் 3 அஜ்ஞாநஸஂபூதஂ 4 ஹ்ருத்ஸ்தஂ 8 ஜ்ஞாநாஸிநா 7 ஆத்மந: 9 சித்வா 5 ஏநஂ 6 ஸஂஶயஂ 10 யோகஂ 11 ஆதிஷ்ட 12 உத்திஷ்ட 1 பாரத.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அதனால் அஞ்ஞானத்தினின்று முண்டாய்ப் புத்தியின்கண்ணேயிருக்கும் இவ்வையத்தை ஆன்மஞானரூபகட்கத்தால் வெட்டி நீ நிட்காம கருமத்தைச்செய்தி. இக்காரணத்தானே நீ யிப்போது போர்புரியும் பொருட்டு எழுந்து நில்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவிவேகரூப அஞ்ஞானத்தினின்றுமுண்டாய்ப் புத்திரூப இருதயத்தின்கண்ணே யிருக்கும் சர்வ அநர்த்தமூலபூதசம்சயத்தை ஆன்மவிஷயக நிச்சயவடிவ கட்கத்தால்வெட்டி நீ நற்காட்சியுபாயபூத நிட்காம கருமயோகத்தைச்செய்தி. இக்காரணத்தானே நீ இக்கால் போர்புரியும்பொருட்டு எழுந்துநிற்றி. ஈண்டு, 'அஜ்ஞாநஸஂபூதஂ' என்னும் பதத்தால் ஸ்ரீபகவானுனவர் அச்சம்சய காரணத்தைக் கூறியருளினர். மேலும் 'ஹ்ருத்ஸ்தஂ' என்னும் பதத்தால் அச்சம்சய ஆசிரயத்தைக்கூறியருளினர். அக்கூற்றால் இப்பொருளுணர்த்தியருளியதாயது :—உலகத்தே சத்துருவின் காரணத்தையும் ஆசிரயத்தையும் தெரிந்துகொள்ளின் அச்சத்துருவைச் சுகமாகவே கொல்லலாம். அதுபோல இச்சம்சயரூப சத்துருவின் காரணத்தையும் ஆசிரயத்தையும் தெரிந்துகொண்டபின் இதுவும் காரணுதிகளின் நீக்கவாயிலாய்ச் சுகமாகவே கொல்லப்பெறும்.

‘ஹெ ஹாரத’ என்னும் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானுனவர் இப்பொருளைக் குறிப்பித்தருளினர் :—பாதவம்சத்தின்கண்ணே உண்டாய உன்னுடைய இப்போர்முயற்சி நிட்பலமாகாதாம்; மற்றேு, அந்தக்காண சுத்திவாயிலாய் ஞானவேதுவாதலின்சபலமாம். இந்நான்காவது அத்தியாயத்தின் சர்வ அர்த்தத்தையும் சுருக்கிக்கூறும் சுலோகமிதுவாம்:—‘ ஸ்ரீ ஸூாநீஙக்ஷுவாயெுந ஹக்ஷிரு ஸெஷூஜீகூஜதெ। யீஹெதா஼ கஉஉநிஷூாஅஹஙிணெஹொ வஸஂஹூஜதா ॥

(பொ-ள்.) இந்நான்காவது அத்தியாயத்தே ஸ்ரீ பகவானுனவர் தமது அநீசுவரத் தன்மையை நீக்கியருளித் தம்பால் அர்ச்சுனனது பக்திசிரத்தைகளைத் திடஞ்செய்தருளினர்; அன்றியும் ஆன்மஞான காரணரூப கருமநிஷ்டையை உபசம்ஹரித்தருளினர். (42)

ஸ்ரீ பரமஹம்ஸ பரிவிராஜகாசார்ய ஸ்ரீமத் உத்தவாநந்தகிரி சுவாமிகளது பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனனந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகை எனப் பெயரிய வியாக்கியானத்தின்

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# ஐந்தாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நமஃ ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

(அ-கை.) ஆண்டு முன்னர் மூன்றுவது நான்காவது அத்தியாயங்களால் கருமஞான நிரூபணஞ்செய்யப்பட்டது; இப்போது ஐந்தாவது ஆறுவது அத்தியாயங்களால் கருமம், கருமத்தியாகவடிவ சந்நியாசம் என்னும் இவ்விரண்டின் நிரூபணஞ் செய்யப்படுகின்றது. ஆண்டு, முன்னர் மூன்றுவது அத்தியாயத்தில் ‘ஜூாயஸீ செக்ஷஉணஹெ’ என்பது முதலிய வாக்கியங்களால் அர்ச்சுனனுல் வினவப்பட்ட ஸ்ரீ பகவான் ஞானகரும விகற்ப சமுச்சயங்கட்கசம்பவங்கூறியருளி அதிகாரிகளின் பகுப்பால் “இவ்வுலகத்தில்இருவகைநிஷ்டை முன்எம்மாற் கூறப்பட்டது” என்பது முதலிய வாக்கியங்களால் நிச்சயித்தருளினர்; ஆதலின், இப்பொருள் பெறப்பட்டதாம். அஞ்ஞானியைஅதிகாரியாயுடைய கருமம் ஆன்மஞானத்தோடு சமுச்சயத்தையடையாது. ஒளிவடிவ அக்கினிக்கும் அந்தகாரவடிவ திமிரத்திற்கும் பாஸ்பாம் சமுச்சயஞ் சம்பவியாததேபோல ஞானகருமங்கட்கும் பாஸ்பாஞ் சமுச்சயஞ் சம்பவியாது. என்னை? கருமத்தின் காரணவடிவ பேதபுத்தியை நாசம் பண்ணுவது ஆன்மஞானமாதலின், ஆன்மஞானம் கருமத்திற்கு விரோதியாம். விரோதமுடையவை ஓர் தேசத்திலேனும் ஓர் காலத்திலேனும் கூடி நிற்றல் ஒரு காலத்துஞ் சம்பவியாது; அக்கருமம் ஞானத்தோடு விகற்பத்தையும் அடையாது என்னை? எவ்விருபதார்த்தங்கள் ஒரே காரியத்தைப் பெறுவித்தற்பொருட்டாகின்றனவோ அவ்விரண்டிற்கே பாஸ்பாம் விகற்பமாம். ஈண்டு ஞானமும் கருமமும் ஒரே காரியத்தைப் பெறுவிப்பனவன்று. என்னை, ஆன்ம

ஞானத்தின் காரியம் அஞ்ஞான நிவிருத்தியாம் அது கருமத்தாலாகாது; மற்றோ, கேவல ஞானத்தானேயாம். ‘[illegible]’ அவ்வான்மதேவனை யுணர்ந்து இவ்வதிகாரி காரியத்தோடு அஞ்ஞானத்தைக்கெடுக்கின்றான். அஞ்ஞான நிவிர்த்திவடிவ மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு ஆன்மஞான மொழித்து வேறுமார்க்கமின்றாம்; மற்றோ, ஆன்மஞானமொன்றே அம்மோக்ஷப் பிராப்திமார்க்கமாம். அன்றியும், அவ்வான்மஞானந்தோன்றிய தன் பின்னர். அக்கருமத்தின்காரியம் சிறிதளவும் அவாவப்பெறமாட்டாது. இப்பொருள் ‘[illegible]’ என்னுமிச்சுலோகத்தில் முன் கூறியருளப் பட்டுளது. இவ்வாறு ஞானமுடைய புருஷரிடத்துக் கருமத்தின் அநதிகாரம் நிச்சயமாகவே பிராரப்த கருமவசத்தால் வியர்த்த சேஷ்டையால் அக்கருமானுஷ்டானமாகுக; அல்லது, சர்வ கருமத்தின் சந்நியாசஞ்செய்குக. என்னும் இவ்வார்த்தை வாதமின்றியதென நான்காவது அத்தியாயத்தில் நிச்சயம்பண்ணப்பட்டது. ஆன்மஞானப் பேறின்றிய அஞ்ஞானியினால் அந்தக்காண சுத்திவாயிலாக அவ்வான்மஞானம் உண்டாம்பொருட்டு, அக்கருமம் அவசியஞ் செய்யத்தக்கது. ‘[illegible]’ என்னும் இச்சுருதியால் வேதாத்தியயனம், யஜ்ஞம், தானம், தவம், என்பன முதலிய சர்வ கருமங்கட்கும் அந்தக்காண சுத்திவாயிலாய் ஆன்மஞானத்தில் உபயோகம் என்பது கூறப்படுகின்றது. அன்றியும், ‘[illegible]’ என்னும் இவ்வாக்கியத்தில் ஸ்ரீ பகவான் தாமே சர்வ கருமங்கட்கும் ஆன்மஞானத்தில் உபயோகம் என்பதையருளிச் செய்தனர். சுருதியால் ஆன்மஞானப் பிராப்தியின்பொருட்டு சர்வ கருமானுஷ்டானங் கூறப்பட்டதேபோல சர்வ கருமத்தியாகவடிவ சந்நியாசமுங் கூறப்பட்டுளது. ஆண்டுச்சுருதி, ‘[illegible]’ (போ-ள.) சந்நியாசிகளடையத்தகுந்தஆன்மவடிவ வுலகமடைதற்கிச்சித்து இவ்வதிகாரிகள் சருவகருமத்தியாகவடிவ சந்நியாசத்தைச் செய்கின்றனர். இவ்வதிகாரி சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் இவ்வாறையு மடைந்தவனாகித் தனது அந்தக்காணதேசத்தில் பிரத்தியக்கான்மாவைப் பார்க்கின்றனன். ஈண்டு, உபரதிசத்தத்தால் சந்நியாசமே கொள்ளப்படுகின்றது என்பது முதலிய சுருதிகளால் சருவகரும சந்நியாசமே ஆன்மஞானத்திற்குக் காரணமெனக் கூறப்படுகின்றது. ஆண்டு, ஞானகருமங்கட்குச் சமுச்சயமமையாததேபோல, கருமம் அதன்றியாகம் என்பவற்றிற்கும் சமுச்சயங் கூடாதாம். என்னை, ஒரேகாலத்தில் கூடிநிற்பனவாய பதார்த்தங்கட்கே பாஸ்பாம் சமுச்சயமாமன்றி வேறு தேசகாலத்திருப்பவற்றிற்குப் பாஸ்பாஞ் சமுச்சயமாகாதாம். கருமம் அதன்றியாகம் என்னுமிரண்டிற்கும் இருளொளிபோலத் தம்முள் மாறுபாடுளதாதலின், ஒரேகாலத்திற் கூடியிருத்தல் பொருந்தாது. இதனானே இவ்விரண்டிற்குஞ் சமுச்சயம் பொருந்தாதாம்.

சங்கை :—இவ்விரண்டிற்கும் ஆன்மஞானமே பலமாதலின், ஓர் பயனுடைமை யுண்மையின் விகற்பங்கூடாதென்பது யாங்ஙனமாம்?

சமாதானம் :—ஆன்மஞானோற்பத்தியாக்கலிற் கரும அதன் றியாகத்துவாரம் வேறுவேறாதலின், இவ்விரண்டின் விகற்பமும் பொருந்தவில்லை. யாண்டு, இரண்டு பதார்த்தத்திற்கு ஒரு காரியத்தைத் தோற்றுவிப்பதில் ஒரேவாயிலாமோ, ஆண்டே அவ்விருபதார்த்தத்திற்கும் விகற்பமாம். ஆன்ம ஞானோற்பத்தியில் பிரதிபந்தகமாவது பாபகருமமாம், அதனிவிருத்தி நித்திய நைமித்திக கருமத்தாலேயாமாதலின், அவ்விரண்டற்கும் பாபநிவிர்த்திவடிவ அதிருஷ்டமே துவார

மாம். இலௌகிக வைதிக கருமத்தால் அத்தியந்த விக்ஷிப்த சித்தத்தினர்க்கும் ஆன்மஞானப்பிராப்தியாவதின்றும். அவ்விக்ஷேப நிவிருத்தி சந்நியாசத்தாலேயாகின்றதாதலின், அதற்கோ விட்சேபநிவிருத்தியால் ஆன்மவிசாரத்திற் கிடவடைவு வடிவ திருஷ்டமே துவாரமாம். ஆதலின், ஆன்மஞானப்பிராப்தியின் பொருட்டாமாயினும் கருமமும் அதன்றியாகமும் திருஷ்ட அதிருஷ்ட துவார பேதத்தால் விகற்பமடையாதாமாதலின், சமுச்சயமேனும் விகற்பமேனும் சம்பவியாது. இவ்விரண்டும் கிரமப்படியே அநுஷ்டிக்கத்தக்கன. அந்தக்கிரமபக்ஷத்திலும் சந்நியாசத்தின்பின்னர்க் கருமாநுஷ்டானஞ் செய்பத்தக்கதா? அல்லது, இதன் பின்னரது செய்யத்தக்கதா? முதலாவது சம்பவியாது? என்னை? இவ்வதிகாரி ஒருகால் சந்நியாசத்தின்பின்னர்க் கருமானுஷ்டானஞ் செய்வானாகில் பரித்தியாகம்பண்ணிய பூர்வாசிரமத்தின் அங்கீகாரம் மீண்டுமாம். ஆதலின், அத்தியாகியானவன் ஆரூடபதிதனவன் அக்கருமத்திற்கதிகாரியுமாகான். ஆதலின், சந்நியாசதாரணஞ்செய்து மீண்டும் கருமஞ்செய்வானாகில் முன்னர்க் கிரகணம் பண்ணிய சந்நியாசமேஅவனுக்குப் பயனில்லதாம். எதனால் அச்சந்நியாசம் கருமம்போல அதிருஷ்டபலனுடையதாவதின்றே; மற்றே, விக்ஷேப நிவிருத்திவடிவ திருஷ்ட பயனுடையதேயாமோ. அன்றியும், முன்னர்ப் பண்ணப்பட்ட சந்நியாசத்தானே அப்புருஷனுக்கு ஞானாதிகாரப்பிராப்தி யுண்டாகின்றது. அச்சந்நியாசத்தின்பின்னர்க் கருமானுஷ்டானஞ்செய்தலும் பயனற்றதேயாம். ஆதலின், சந்நியாசத்தின்பின்னர் இவ்வதிகாரி கர்மானுஷ்டானம் ஒருபோதும் செய்யத்தக்கதன்று. மற்றே, முன்னர்ப் பகவதர்ப்பணபுத்தியால் நிட்காமகருமஞ்செய்யற்பாலது அதனால் அந்தக்கரணசுத்தியானதின்பின்னர் தீவிர வைராக்கியத்தால் ஆன்மஞான விச்சையுண்டாம். அவ்விச்சை சுருதியில் விவிதிஷாசத்தத்தாற் கூறப்படுகின்றது. அக்காலே வேதாந்தவாக்கிய சிரவண மனனநிதித்யாசனவடிவ விசாரஞ்செய்தற்பொருட்டு இவ்வதிகாரி சந்நியாசஞ் செய்யத்தக்கது; இதுவே ஸ்ரீகிருஷ்ணபகவானது திருக்கருத்தாம். அங்ஙனமே சருவவேதத்திற்குமாம். ஸ்ரீபகவான் இத்திருக்கருத்தை ‘நகர்மணாமநாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோஶ்நுதே’ என்னும்வாக்கியத்தால் முன்னர்க் கூறியருளினர். அன்றியும், இக்கருத்தையே ஸ்ரீபகவான் ‘ஆருருக்ஷோர்முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே’ என்னுஞ்சுலோகத்தால் பின்னர்கூறியருளுவர். ஈண்டு, யோகசப்தத்தால் தீவிர வைராக்கிய பூர்வக விவிதிஷாவின் கிரகணஞ்செய்யத்தக்கது. இது வார்த்திகக்காரராலுங் கூறப்பட்டுளது. ‘ப்ரத்யக்விவிதிஷாஸித்த்யை வேதாநுவசநாதய: । ப்ரஹ்மாவாப்த்யை து தத்த்யாக ஈப்ஸந்தீதி ஶ்ருதேர்பலாத்’ ॥ (பொ-ள்.) ‘தமேதம் வேதாநுவசநேந’ அவ்வான்மாவை வேதவசனத்தால் என்னுஞ்சுருதியால் விதானம்பண்ணப்பட்ட வேதாத்தியயனம், தானம், யக்ஞம், தவம் முதலிய கருமங்களோ பிரத்தியக்கான்மாவை யறியும் வேட்கைவடிவ விவிதிஷாப் பிராப்தியின்பொருட்டாம்; பிரத்தியக்கபின்னப் பிரஹ்மப்பிராப்தியின் பொருட்டோ, ‘ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி’ என்னுஞ் சுருதிகூறிய சருவகருமத்தியாகமேயாம் என்க. ஆண்டு ஸ்மிருதியுமிதுவாம் ‘கஷாயே கர்மபி: பக்வே ததோ ஜ்ஞாநம் ப்ரவர்த்ததே’ நிஷ்காம கர்மானுஷ்டானத்தால் அந்தக்கரணஞ் சுத்தியானதின்பின்னர்ச் சருவ கருமத்தியாகத்தால் ஆன்மஞானப்பிராப்தி யுண்டாகின்றது. ஆண்டு ஆன்மஞானப்பிராப்தியின் காரணவடிவ விவிதிஷா சந்நியாசமும் கிரமம் கிரமமற்றது என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவற்றுள், முன்னர்ப் பிரமசரியமும், அதன்பின்னர் கிருகஸ்தாசிரமமும், அதன்பின் வானப்பிரஸ்தாசிரமமும், அதன்பின் சந்நியாசாசிரமமுங் கொள்ளத்தக்கது இது கிரமசந்நியாசமாம். சம்சாரத்தில் மிகுந்த தீவிர வைராக்கியத்தையுடைந்து பிரமச்சரிய முதலிய ஆசிரமத்தின்பின்னரே சந்நியாசத்தையடைதல்

கிரமமின்றியதாம். ஆண்டுச்சுருதி, 'ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் க்ருஹாத் வநீ பூத்வா ப்ரவ்ரஜேத் யதிவேதரதா ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத் க்ருஹாத்வா வநாத்வா யதஹரேவ விரஜேத் தத்ஹரேவ ப்ரவ்ரஜேத்' இவ்வதிகாரி பிரமச்சரியத்தை முடித்துக் கிருகஸ்தனுகுக; பின்னர் வானப்பிரஸ்தனுகிச் சந்நி யாசத்தையடையத்தக்கது. ஒருகா லிவனுக்குப் பூர்வபுண்ணியகருமப் பிரபாவத் தால் முன்னரே தீவிர வைராக்கியப் பிராப்தியுண்டாகில், பிரமசரியாசிரமத்தின் பின்னரே சந்நியாசாசிரமத்தைத் தாரணஞ்செய்க; அல்லது, கிருகஸ்தாசிர மத்தின் பின்னர்ச்செய்க; அல்லது வானப்பிரஸ்தாசிரமத்தின் பின்னர்ச்செய்க; அதிற்சிறிதுங்கிரமமின்றும். மற்றோ, இவ்வதிகாரி தீவிர வைராக்கியத்தை யடைந்த அன்றே சந்நியாசஞ்செய்க, இதனல் இப்பொருள்பெறப்பட்டது:—ஒரே முமுக்ஷுவிற்கு வைராக்கியமின்றிய காலத்தில் நிஷ்காமகருமமும் வைராக்கிய காலத்தில் அதின் சந்நியாசமும் அவசியம் செய்யத்தக்கன. அச்சந்நியாசமே சிர வணமனனஞ் செய்தற் கவகாசந்தந்து அவன் ஞானத்திற்கு நிமித்தமாகின்றது. இவ்வாறுய இவ்விரண்டின் பேதத்தால் ஒரே முமுக்ஷுவிற்குக் கருமத்தின் கர்த் தவ்யத்தன்மையும் அதன்றியாகவடிவ சந்நியாசத்தின் கர்த்தவ்யத்தன்மையும் கூறியருளுவான் ஸ்ரீபகவான் இந்த ஐந்தாவது ஆறுவது அத்தியாயங்களை யாரம் பித்தருளினர். அன்றியும் ஆன்மஞானமடைந்ததன் பின்னர் ஜீவன்முத்திச் சுகத் தின்பொருட்டு செய்யத்தக்கது வித்வத்சந்நியாசமாம். அதுவோ, ஆன்மஞானத் தின் பலத்தால் அர்த்தத்தானே பெறப்படுகின்றது; ஆதலின், அதிற் சந்தேக மின்மையின் அதனை விசாரிக்கவில்லை. மற்றோ, விவிதிஷா சந்நியாசமே ஈண்டு விசாரிக்கப்பெற்றது. ஸ்ரீபகவானது இத்திருக்கருத்தையறியாது அருச்சுனன் இவ் வாறு சந்தேகமடைந்தனன். ஸ்ரீபகவான் ஒரே அஞ்ஞானியாகிய முமுக்ஷுவிற்கு ஆன்மஞானமடைதற்பொருட்டுக் கருமம் அதன்றியாகம் இரண்டையுங்கூறியருளி னர். அவ்விரண்டும் இருளொளிபோலத் தம்முள் விரோதியாதலின், ஒரேகாலத் தில் ஓர் அதிகாரியால் அநுஷ்டானஞ்செய்யப்படாது. ஆதலின், முமுக்ஷுவாகிய என்னல் இப்போது அந்தக்கருமமே செய்யத்தக்கதா? அல்லது அதன்றியாக வடிவ சந்நியாசஞ்செய்யத்தக்கதா? எனச் சந்தேகமடைந்த அர்ச்சுனன் ஸ்ரீ பக வானை வினவுகின்றனன்.

அர்ஜுந உவாச.

சு-ம். ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புநர்யோகம் ச ஶம்ஸஸி ।
யச்ச்ரேய ஏதயோரேகம் தந்மே ப்ரூஹி ஸுநிஶ்சிதம் ॥ (1)

ப-ம். 3 ஸந்ந்யாஸம் 2 கர்மணாம் 1 க்ருஷ்ண 5 புநः 6 யோகம் 4 ச 7 ஶம்ஸஸி 9 யத் 11 ஶ்ரேயः 8 ஏதயோः 10 ஏகம் 12 தத் 13 மே 15 ப்ரூஹி 14 ஸுநிஶ்சிதம்.

(அ-ம்.) ஹே கிருஷ்ண பகவன்! தாங்கள் கருமத்தின் சந்நியாசத்தையுங் கூறுகின்றீர்கள் மீண்டும் கருமயோகத்தையுங் கூறுகின்றீர்கள் இவ்விரண்டனுள் யாதொன்று மேன்மையதோ அதை எனக்கு நிச்சயஞ்செய்து கூறியருளுவீர்க ளாக. (1)

(வி-ம்.) ஹே பகவன்! ஹே சத்தியவானந்தவடிவ! ஹே பக்தஜனங்களின் துக்கங்களை நிவிருத்திசெய்பவ! 'யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹோதி । கர்மண்யேவாபிகுர்வீத ஜிஜீவிஷேச்சதம் ஸமா:' என்னுஞ்சுருதிகளாற்கூறப்பட்ட நித்திய நைமித்திக கருமத்தின் தியாகவடிவ சந்நியாசத்தையும் தாங்கள் முமுட்சுவைக் குறித்து, 'ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி' என்னுஞ் சுருதி

வாக்கியத்தாலும், 'நிராஶீ:யதசித்தாத்மா த்யக்தஸர்வபரிக்ரஹ꞉ । ஶாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம்' எனக் கூறியருளிய கீதாவாக்கியத்தாலுங் கூறியருளுகின்றீர்கள். அங்ஙனமே கருமத்தின் தியாகவடிவ சந்நியாசத்திற்கு முற்றினும் மாறுப கருமானுஷ்டானவடிவ கருமயோகத்தையும் தாங்கள் அம்முமுக்ஷுவைக்குறித்து 'தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந' என்னுஞ் சுருதியாலும் 'நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண꞉' என்னும், கூறியருளிய கீதா வாக்கியத்தாலுங் கூறியருளுகின்றீர்கள். ஈண்டு, கருமத்தின் சந்நியாசத்தையும் கருமயோகத்தையும் தாங்கள் இக்கீதாவாக்கியத்தாற் கூறியருளிய இவ்வளவே சம்பவமாம், இச்சுருதிவாக்கியத்தாற் கூறியருளியது சம்பவியாதாயினும், 'புநர்யோகம் ச ஶம்ஸஸி' என்னும் இவ்வாக்கியத்திலுள்ள (புந꞉) என்னுஞ் சப்தத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக் குறிப்பித்தனன் :—இப்போது இக்கீதா வசனத்தால் ஒரே முமுக்ஷுவைக்குறித்துக் கருமத்தையும் அதன் தியாகத்தையும் கூறியருளியதே போலச் சிருட்டியினுதியில் வேதங்கட்குக் கர்த்தாவாகிய தாங்கள் அவ்வேதங்களிலும் இவ்வாறே கூறியருளினீர்கள். ஹே பகவன்! ஒரே முமுக்ஷுவைக்குறித்துக் கருமம் அதன் தியாகம் என்னும் இரண்டையுங் கூறியருளினீர். அவ்விரண்டையும் ஒரு காலத்தே ஓரதிகாரியால் அனுஷ்டானஞ்செய்தல் பொருந்தாது; ஒரு காலத்தில் ஒரு புருஷனிடத்து நிற்றல் நடத்தல் இரண்டுங் கூடாதன்றே; ஆதலின், கருமம் அதன் தியாகவடிவ சந்நியாசம் என்னும் இவ்விரண்டனுள் எதைத் தாங்கள் மிகுந்த மேம்பாடுடையதாய்ச் சம்மதித்தருளுகின்றீரோ, அதை எனக்கருளுவீர். தங்களது நிச்சயமாகியசம்மதத்தை யான் மோட்சசாதனமெனக் கருதி அனுஷ்டிக்கின்றேன். (1)

(அ-கை.) இவ்விதமாகிய அர்ச்சுனனுடைய வினாவைக் கேட்டு ஸ்ரீ பகவான் உத்தரமருளுகின்றனர்.

ஶ்ரீபகவாநுவாச.

சு-ம். ஸந்ந்யாஸ꞉ கர்மயோகஶ்ச நிஶ்ஶ்ரேயஸகராவுபௌ ।
தயோஸ்து கர்மஸந்ந்யாஸாத் கர்மயோகோ விஶிஷ்யதே ॥ (2)

ப-ம். 1 ஸந்ந்யாஸ꞉ 3 கர்மயோக꞉ 2 ச 5 நிஶ்ஶ்ரேயஸகரௌ 4 உபௌ 6 தயோ꞉ 7 து 8 கர்மஸந்ந்யாஸாத் 9 கர்மயோக꞉ 10 விஶிஷ்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சந்நியாசமும், கருமயோகமும் மோட்சசாதனமாம். இவ்விரண்டனுள்ளும் கருமசந்நியாசத்தினும் கருமயோகமே சிரேஷ்டமாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாஸ்திரத்தின் விதி பூர்வகமாய்ச் சர்வ கருமங்களின் தியாகவடிவம் சந்நியாசமாம்; தத்தம் வருணாசிரமானுசார நித்திய நைமித்திக கருமத்தின் அனுஷ்டான வடிவம் கருமயோகமாம். இவ்விரண்டும் ஆன்மஞானோதய காரணமானதால் மோக்ஷத்தையே பெறுவிப்பவாமாயினும், இவ்விரண்டில் அந்தக்கரண சுத்தமின்றிய அனதிகாரியாற் செய்யப்பட்ட கருமசந்நியாசத்தினும் கருமயோகமே மேன்மையதாம். என்னை? அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனாற் செய்யப்பட்ட சந்நியாசம் அவனிடத்தில் ஆன்மஞானத்தின் அதிகாரித்தன்மையையுண்டுபண்ணுவதாகாதாம். நிஷ்காம கருமயோகமோ அவனிடத்து ஆன்மஞானத்தின் அதிகாரித்தன்மையை யுண்டுபண்ணுகின்றது. ஆதலின், அக்கருமயோகம் சந்நியாசத்தினுஞ் சிரேஷ்டமாம். (2)

(அ-கை.) இப்போது அதிகாரிக்கு அதிற் பிரவிருத்தியாம் பொருட்டு மூன்று சுலோகத்தால் ஸ்ரீ பகவான் அந்நிஷ்காம கருமயோகத்தைத் துதித்தருளுகின்றனர்.

சு-ம். ஜ்ஞேய: ஸ நித்யஸம்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।
நிர்த்வந்த்வோ ஹி மஹாபாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ॥ (3)

ப-ம். 10 ஜ்ஞேய: 8 ஸ: 9 நித்யஸந்ந்யாஸீ 2 ய: 3 ந 4 த்வேஷ்டி 5 ந 6 காங்க்ஷதி 7 நிர்த்வந்த்வ: 11 ஹி 1 மஹாபாஹோ 12 ஸுகம் 13 பந்தாத் 14 ப்ரமுச்யதே.

(அ-ம்.) ஹே அருச்சுன! எப்புருஷன் துவேஷிப்பதில்லையோ, சுவர்க்கமுதலிய பலத்தை இச்சிப்பதில்லையோ, இராகத்துவேஷரகிதனே, அப்புருஷன் நித்திய சந்நியாசியென அறியத்தக்கவனாவன்; எதனால் அவன் பந்தத்தினின்று சுகபூர்வகமாய் விடுபடுகின்றானே. (3)

வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் பகவதர்ப்பணபுத்தியால் செய்யப்பட்ட நித்திய நைமித்திககருமங்களில் இக்கரும மனைத்தும் பயனற்றவைகளே என்னும் நிஷ்பலத்தன்மைச் சங்கையால் துவேஷிப்பதில்லையோ, எவ்வதிகாரி அக்கருமங்கட்குச் சுவர்க்கமுதலிய பலத்தை விரும்புவதில்லையோ, அத்தன்மையன் இராகத்துவேஷ ரகிதனாவன். அப்புருஷன் நித்திய நைமித்திககருமங்களிற் பிரவிருத்தனாகியும் நித்தியசந்நியாசியாவனென வறிக. நிஷ்காமகருமத்தைச் செய்யுமதிகாரி அந்தக்கரணத்தின் அசுத்திவடிவ ஞானப்பிரதிபந்தத்தினின்றும் நித்தியாநித்தியவஸ்து விவேகத்தால் ஆயாசமின்றியே விடுபடுகின்றான், அதாவது சுத்தாந்தக்கரணமுடையவனாவன் என்பதாம். (3)

(அ-கை.) ஹே பகவன்! தனது நித்திய நைமித்திக கருமங்களிற் பிரவிருத்தன் எவ்வாறு நித்திய சந்நியாசியென அறியப்படுவன். மற்றோ, அக்கருமஞ் செய்பவனிடத்துச் சந்நியாசத்தன்மை சம்பவியாது. என்னை? நித்திய நைமித்திக கருமம் அதன்தியாகவடிவ சந்நியாசம் என்னும் இவ்விரண்டும் இருளொளிபோல் உருவத்தானே விரோதியாம், யாண்டுக் கருமித்தன்மையுளதோ ஆண்டுச் சந்நியாசித்தன்மையின்றாம்; யாண்டுச் சந்நியாசித்தன்மையுளதோ ஆண்டுக் கருமித்தன்மையிராது. அன்றியும் தாங்கள் இரண்டிற்கும் பலமொன்றேயாதலின் நிஷ்காம கருமஞ்செய்யும் புருஷனிடத்து அச்சந்நியாசமும் பொருந்தியதாமெனக் கூறியருளுவீரேல் அதுவும் சம்பவியாது; என்னை? வடிவத்தால் மாறுபட்டதாய சாதனங்கள் தம் பலத்தின்கண்ணும் விரோதமேயாம். அவற்றின் பல ஒருமையுண்டாகாதாம். ஆதலின் அவ்விரண்டும் மோக்ஷத்தைப் பெறுவிப்பனவாம் எனக் கூறியருளிய வசனமும் சம்பவியாது என அருச்சுனனது ஆசங்கை நிகழ ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்;—

சு-ம். ஸாங்க்யயோகௌ ப்ருதக் பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।
ஏகமப்யாஸ்தித: ஸம்யக் உபயோர்விந்ததே பலம். (4)

ப-ம். 2 ஸாங்க்யயோகௌ 3 ப்ருதக் 1 பாலா: 4 ப்ரவதந்தி 6 ந 5 பண்டிதா: 7 ஏகம் 8 அபி 10 ஆஸ்தித: 9 ஸம்யக் 11 உபயோ: 13 விந்ததே 12 பலம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! விசாரமின்றிய புருஷர் சந்நியாசம், கருமயோகம் இரண்டையும் விரோதபலமுடையவையெனக் கூறுகின்றனர். விசாரமுடைய பண்டிதர் அவ்வாறு கூறிலர், அவ்விரண்டனுள் ஒன்றையேனும் நன்றாயனுஷ்டிப்பவர் மோக்ஷவடிவமாகிய அவ்விரண்டின் பலத்தையும் அடைவர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சந்தேகவிபரீத பாவமின்றிய உண்மையாகிய ஆன்மாகார புத்தி சங்கியை, அதைப்பெறுவிப்பது சாங்கியம். ஆன்மஞானத்திற்கு அந்தரங்க சாதனமானதால் அத்தகையது சந்நியாசமேயாம். அவ்விதசாங்கியமாகிய சந்நியாசமும் கூறிப்போந்த கருமயோகமும்வேறுவேறுபலனுடையன வெனச் சாஸ்திரார்த்த விவேகஞானமின்றியவனே கூறுகின்றனன். விவேகஞான முடைய பண்டிதரோ அங்ஙனம் கூறிலர்.

சங்கை :—ஹே பகவன்! அப்பண்டிதர் அவ்வாறு கூறிலரேல் அவருடைய மதம் யாது?

சமாதானம் :—ஸ்ரீ பகவான் அப்பண்டிதர் மதத்தைக் கூறியருளுகின்றார். 𑌨 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾𑌃' என. ஹே அர்ச்சுன! அப்பண்டிதரின் மதமிதுவாம். நிஷ்காம கருமம் அதன் சந்நியாசம் இரண்டனுள் ஒன்றையே எவன் தனது அதிகாரத்தையநுசரித்து சாஸ்திரவிதி பூர்வகஞ் செய்கின்றானோ. அவன் ஆன்மஞானேத் பத்தி வாயிலாக அவ்விரண்டிற்கும் மோட்சரூபமாகிய ஒரு பலத்தையே அடைகின்றான். ஆதலின், அந்நிஷ்காமகருமகருத்தனாகிய புருஷனிடத்துச் சந்நியாசித் தன்மை சம்பவியாது. (4)

(அ-கை.) ஹே பகவன்! சந்நியாசம் கருமயோகம் என்னும் இவ்விரண்டனுள் ஒன்றை யனுஷ்டிப்பதால் இவ்வதிகாரிபுருஷன் அவ்விரண்டின் பலத்தையும் எவ்வாறடைவன் என்றிவ்வாறு அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். 𑌯𑌤𑍍𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑍍𑌯𑍋𑌗𑍈𑌰𑌪𑌿 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 ।
𑌏𑌕𑌂 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 𑌚 𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ (5)

ப-ம். 2 𑌯𑌤𑍍 1 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑍈𑌃 4 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇 3 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 5 𑌤𑌤𑍍 6 𑌯𑍋𑌗𑍈𑌃 7 𑌅𑌪𑌿 8 𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 13 𑌏𑌕𑌂, 10 𑌸𑌾𑌂𑌖𑍍𑌯𑌂 11 𑌚 12 𑌯𑍋𑌗𑌂, 𑌚 9 𑌯𑌃 14 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 15 𑌸𑌃 16 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாங்கிய புருஷன் அடையும் ஸ்தானத்தையே யோகி புருஷனுமடைகின்றான் ஆதலின் சாங்கியத்தையும் யோகத்தையும் ஒரு வடிவமாய்க் காண்பவனே நன்றாய்ப் பார்ப்பவன். (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஞான நிஷ்டையோடுகூடிய சந்நியாசி யாவன் இந்த ஜன்மத்தில் கருமானுஷ்டான மில்லாதவனாயினும் பூர்வ ஜன்ம கருமத்தாற் சுத்தாந்தக் கரணமுடையவனாவனே அச்சந்நியாசியால் சிரவணமனனாதி பூர்வகமாய் ஞான நிஷ்டையால் எம்மோட்சரூபஸ்தான மடையப்படுகின்றதோ, ஈண்டு எதில் ஸ்திதியடைந்து வித்வான் ஓர்காலும் மீண்டும் வருதல் சம்பவியாதோ அது ஸ்தானமாம். அவ்வித ஸ்தானவடிவ அவித்தியா நிவிருத்தி பூர்வக அத்துவிதீய நிர்க்குணப் பிரஹ்மத்தன்மையின் பிராப்திவடிவ மோக்ஷத்தினின்றும் பின்னமாகிய பிரம,வைகுண்ட,கோ,சுவர்க்கலோகம்முதலியவற்றையடைந்தும் இவன்மீண்டும் பிறப்பிறப்புவடிவச் சுழலையேயடைகின்றான். இவ்வார்த்தை ஸ்ரீபகவான்தாமே '𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍁𑌵𑌨𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨' என்னும் வசனத்தால் நன்குவிளக்கியருளியுள்ளார். ஆதலின், ஈண்டு ஸ்தானசத்தத்தால் அப்பிரமலோக முதலியவை கொள்ளற்கேலா. அத்தன்மையதாய பிரஹ்மரூபமோக்ஷம் இவ்வதிகாரிக்கு எப்போதும் நித்தியப்பிராப்தமே ஆயினும் அஞ்ஞானத்தின் ஆவரணசத்தியால் பிராப்தமாகாததுபோலானது மகாவாக்கியத்தாலுண்டாம் தத்துவசாக்ஷாத்காரத்தால் எப்போது அவ்வாவரணம் நிவிருத்தியாமோ அப்போது அம்மோக்ஷம் பிராப்தியானதுபோற் சொல்லப்படுகின்றது. எங்ஙனம், கண்டத்தி

னுள்ள மறந்துபோன பூஷணத்தின் ஞானத்தால் மீண்டும் அடையப்பட்டதாய்க் கூறப்படுகின்றதோ, பலவிச்சையிலதாய்க் கேவலம் பகவதர்ப்பணபுத்தியாற் செய்யப்பட்ட சாஸ்திரவிகித நித்திய நைமித்திக கன்மங்கள் யோகமாம். அந்நிஷ்காம யோகத்தையுடையவன் யோகியாவன். அந்தயோகியும் இச்சன்மத்தில் அல்லது முன் ஜன்மத்தில் அந்தக்கரணசுத்தியால் சந்நியாச பூர்வகம் சிரவணாதிகள் செய்தடைந்த ஞானநிஷ்டையால் அம்மோக்ஷவடிவ ஸ்தானத்தை யடைகின்றான். இவ்வாறு சருவகருமத்தியாகவடிவ சந்நியாசத்திற்கும் நிஷ்காம கருமயோகத்திற்கும் மோக்ஷவடிவபல மொன்றேயாதலின் சாங்கிய சந்நியாசத்தையும் நிஷ்காமகரும யோகத்தையும் ஒரு வடிவமாகக் காண்பவனே உண்மையாய்ப்பார்ப்பவன் அவ்விரண்டையும் வேறுவேறாய்க் காண்பவன் உண்மையாய்ப் பார்ப்பவனெனக் கூறப்படான்; மற்றோ, அவன் விபரீதமாய்க் காண்பவன் எனப்படுகின்றான். ஈண்டு ஸ்ரீபகவானுடைய திருக்கருத்திதுவாம்:—எவ்வதிகாரிபுருஷனிடத்து இப்போது சந்நியாச பூர்வக ஞானநிஷ்டை காணப்படுகின்றதோ கருமநிஷ்டை காணப்படவில்லையோ அப்புருஷனிடத்து அவ்விலிங்கத்தால் பூர்வம் அனேக ஜன்மங்களில் பகவதர்ப்பித கருமநிஷ்டை அனுமானிக்கப்படுகின்றது. என்னை? காரணமின்றிக் காரியோத்பத்தியின்றாமன்றோ. அக்காரணம் ஒருகால் பிரத்தியக்ஷமாய்த் தோற்றப்படவில்லையேற் அக்காரியவடிவ இலிங்கத்தால் அக்காரணத்தின் அனுமானம் பண்ணப்படும். எங்ஙனம் மழைகாலத்தின் காரியவடிவமாகிய ஆற்றுநீரின் பெருக்காகிய காரியத்தால் வேறு தேசத்தில் மழைவடிவ காரணத்தின் அனுமானஞ் செய்யப்படுகின்றதோ, அங்ஙனமே இச்சன்மத்தில் சந்நியாச பூர்வக ஞானநிஷ்டைவடிவ காரியத்தால் முன் ஜன்மத்தில் அக்கருமநிஷ்டை அனுமானிக்கப்படுகின்றது. எவ்வதிகாரி புருஷனிடத்து இப்போது பகவதர்ப்பிதகருமநிஷ்டை காணப்படுகின்றதோ சந்நியாச பூர்வகஞானநிஷ்டை காணப்படுவதில்லையோ அப்புருஷனிடத்து அக்கருமநிஷ்டைவடிவ இலிங்கத்தால் வருங்காலத்தாம் சந்நியாச பூர்வக ஞானநிஷ்டை அனுமிக்கப்படும். என்னை? யாண்டு காரண சாமக்கிரியையுளதோ ஆண்டுக்காரியம் அவசியந்தோன்றற்பாலதாதலின் அக்காரண சாமக்கிரியையால் இனிமேலாம் காரியத்தின் அனுமானம் பண்ணப்படுகின்றது. எங்ஙனம் மேகங்களின் உற்பத்திவிசேஷத்தால் வருங்காலத்துண்டாம் மழையின் அனுமானமாகின்றதோ அங்ஙனமே பகவதர்ப்பித கருமநிஷ்டையால் வருங்காலத்துண்டாம் ஞானநிஷ்டை அனுமிக்கப்படுகின்றது. ஆதலின் அஞ்ஞானிகளாகிய முமுட்சு ஜனங்கள் அந்தக்கரண சுத்தியின்பொருட்டு முதலில் நிஷ்காம கருமமே செய்யத்தக்கது சந்நியாசம் முதலிற் செயற்பாலதன்று, அச்சந்நியாசமோ தீவிர வைராக்கியத்தையடைய இயல்பாகவே பெறப்படும். (5)

(அ-கை.) ஹே பகவன்! ஞானநிஷ்டைக்குக் காரணமாதலின் அச்சந்நியாசமோ அவசியஞ் செய்யத்தக்கதாம். ஆதலின், எங்ஙனம் சுத்தாந்தக்கரணமுடைய புருஷன் ஞானநிஷ்டையின் பிராப்தியின்பொருட்டுச் சந்நியாசஞ்செய்கின்றானோ அங்ஙனமே அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனும் அச்சந்நியாசத்தையே முதலிற் செய்யக்கூடாதென்பதென்னை? மற்றோ, அப்புருஷனும் முன்னர்ச் சந்நியாசமே செய்யத்தக்கது என்றிவ்வாறு அர்ச்சுனனாசங்கிப்ப ஸ்ரீபகவானருளிச் செய்கின்றார்.

சு-ம். 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍁𑌃𑌖𑌮𑌾𑌪𑍍𑌤𑍁𑌮𑌯𑍋𑌗𑌤𑌃 ।
𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌚𑌿𑌰𑍇𑌣𑌾𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ (6)

ப-ம். 3 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 4 𑌤𑍁 1 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 5 𑌦𑍁𑌃𑌖𑌮𑍍 6 𑌆𑌪𑍍𑌤𑍁𑌮𑍍 2 𑌅𑌯𑍋𑌗𑌤𑌃
7 𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 8 𑌮𑍁𑌨𑌿𑌃 9 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 10 𑌨𑌚𑌿𑌰𑍇𑌣 11 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿.

(அ-ம்.) ஹே அருச்சுன! கருமயோகமின்றிச் செய்யப்பட்ட சந்நியாசமோ துக்கப்பிராப்தியையே தரும். கருமயோகத்தோடுகூடிய புருஷனே சந்நியாசியாகிப் பரமான்மாவைச் சீக்கிரமே சாக்ஷாத்காரஞ்செய்கின்றான்.

(வி-ம்.) ஹே அருச்சுன! அந்தக்கரணசுத்தியைத்தரும் சாஸ்திரவிகித நித்திய நைமித்திக கருமங்களைச்செய்யாது எப்புருஷன் கேவலம் அடத்தால்முதலில் சந்நியாசஞ்செய்கின்றானோ, அவ்வட பூர்வகஞ் செய்யப்பட்ட சந்நியாசம் அப்புருஷனுக்குக் கேவலந் துக்கப்பிராப்தியையே தரும். அதனால் இவனுக்குச் சிறிதளவும் சுகமாவதின்றாம். என்னை, அவனுடைய அந்தக்கரணஞ் சுத்தப்படவில்லையாதலின் சந்நியாசத்தின் பலவடிவமாகிய ஞானநிஷ்டை அவனுக்கு ஒருபோதும் பெறப்படாது. அன்றியும், நிஷ்காமகருமமோ அந்தக்கரணசுத்திசெய்வது அக்கருமஞ் செய்வதிலோ அச்சந்நியாசிக்கு அதிகாரமின்றாம். ஆதலின், கருமநிஷ்டை, ஞானநிஷ்டை என்னுமிவ்விரண்டினுந் தவறினவனாதலின் அவ்வசுத்தாந்தக் கரணமுடைய சந்நியாசி மிகுந்த சங்கடத்தையடைகின்றான், எப்புருஷன் அந்தக்கரணசுத்தியைத் தரும் நிஷ்காமகருமத்தோடு கூடினவனோ அவன் சுத்தாந்தக்கரணமுடையனாதலின், மனனசீல சந்நியாசியாகிச் சச்சிதானந்தவடிவப் பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தைச் சீக்கிரமே சாக்ஷாத்கரிக்கின்றான். இவ்வெல்லாப் பொருளையும், 'ந கர்மணாமநாரம்பாந்நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே । ந ச ஸந்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி' என்னு மிச்சுலோகத்தால் மூன்னரே கூறியருளப்பட்டது. ஆதலின், கருமயோகமும் சந்நியாசமும் ஒரே பலத்திற்குக் காரணமாயினும் அசுத்தாந்தக்கரணமுடைய புருஷனாற் செய்யப்பட்ட சந்நியாசத்தினும் அக்கருமயோகம் மிகுந்த சிறப்புடையதாம் என முற் கூறியருளியதும் பொருத்தமுடையதேயாம். (6)

(அ-கை.) ஹே பகவன்! 'கருமத்தால் பந்தப்படுகின்றார்கள் ஜனங்கள்' என்பதுமுதலிய வாக்கியங்களில் அக்கருமம்பந்தத்திற்கே காரணமெனக் கூறப்பட்டிருக்கின்றதாதலின், கருமயோகத்தோடுகூடிய புருஷன் பிரஹ்மசாக்ஷாத்காரஞ் செய்கின்றான் எனத் தாங்கள் கூறியருளிய வார்த்தை அசங்கதமாமென்று அர்ச்சுனன் ஆசங்கிப்ப ஸ்ரீ பகவான் அருளுகின்றார்

சு-ம். யோகயுக்தோ விசுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।
ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே ॥ (7)

ப-ம். 1 யோகயுக்த: 2 விசுத்தாத்மா 3 விஜிதாத்மா 4 ஜிதேந்த்ரிய: 5 ஸர்வபூதாத்ம பூதாத்மா 6 குர்வந் 7 அபி 8 ந 9 லிப்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் யோகத்தோடுகூடியவனோ விசுத்தாத்மாவோ, விஜிதாத்மாவோ, ஜிதேந்திரியனோ சர்வபூதங்களின் ஆன்மவடிவத்தை ஆன்மாவாகவுடையவனோ அவன் அக்கருமத்தைச்செய்யினும், பற்றையடைவதில்லை.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பகவதர்ப்பணத்தன்மை பலேச்சையின்றியதன்மை முதலிய குணங்களோடுகூடிய சாஸ்திரவிகித நித்திய நைமித்திக கருமங்கள் யோகமாம். அதோடுகூடியவன் யோகயுக்தனாவன் முதலில் விசுத்தாத்மாவாகின்றான். ஈண்டு, விசுத்த இராஜத தாமதகுணமின்றிய ஆத்மா அந்தக்கரணம் எவனுக்குளதோ, அவன் விசுத்தான்மாவாவன். இத்தன்மைத்தாயவனே விஜிதான்மாவாகின்றான். ஈண்டு, ஆன்மாவென்பது தேகத்திற்காம். அது எவனால் வசம் பண்ணப்பட்டதோ, அவன் விஜிதான்மாவாவன். இத்தன்மைத்தாயவன் ஜிதேந்

ரியனுகின்றான். ஈண்டு, சர்வ பாகியேந்திரியங்களையும் எவன் தனது வசமாக் னவனே அவன் ஜிதேந்திரியனுவன். ஈண்டு, விசுத்தான்மா, விஜிதான்மா, தேந்திரியன் என்னும் மூன்று பதங்களால் ஸ்ரீ பகவான் முறைப்படி மனோ ண்டம், காயதண்டம், வாக்குத்தண்டம் என்னும் மூன்றோடுகூடிய திரிதண்டி பக் கூறியருளினர். இவ்வார்த்தை மனுபகவானாலுங் கூறப்பட்டுளது.

"வாக்தண்டோத² மநோத³ண்ட³: காயத³ண்ட³ஸ்ததை²வ ச ।
யஸ்யைதே நியதா த³ண்டா³: ஸ த்ரித³ண்டீதி கத்²யதே ॥

(பொ-ள்.) வாக்குத்தண்டம், மனோதண்டம், காயத்தண்டம் என்னும் மூன் ம் எப்புருஷனுக்கு நியதபூர்வகமுள்ளனவோ அப்புருஷன் திரிதண்டியென் யும் பெயராற் கூறப்படுவன். ஈண்டு, 'வாக்கு' என்னுஞ் சத்தம் சர்வ பாகியேந் ரியங்களின் உபலக்ஷகமாம். இவ்வித திரிதண்டி புருஷனுக்குச் சர்வான்மஞா ம் அவசியமேயாம். இப்பொருளை ஸ்ரீபகவான் 'சர்வ பூதாத்ம பூதாத்மா' என்ப ாற் கூறியருளினர். பிரமன்முதல் தம்பமீருய சேதனவடிவ ஆகாயமுதலிய அசே னவடிவ சர்வ பூதங்களின் சொரூபபூதமாகிய பிரத்தியக்சேதன ஆன்மா எவனுக் கா அவன் சர்வபூதான்மபூதான்மாவாவன். கருத்திதுவாம்:—குண்டல கங் ண முதலிய பூஷணங்களுக்குச் சுவர்ணமேயுண்மைவடிவமாவதுபோலச் சர்வ டாசடப் பிரபஞ்சத்திற்கும் யானே உண்மைவடிவமாவேன். என்றிவ்வாறு எவன் ிவப் பிரபஞ்சத்தையும் தனது ஆன்மவடிவமாய்க் காண்கின்றானே, அப்பரமார் ததரிசியாகிய வித்துவான் அன்னியரின் திருஷ்டியால் அக்கருமத்தைச் செய்பவ பினும் கருத்திருத்துவாபிமானமின்மையின், அக்கருமத்தோடு பற்றுறான். தாவது, அக்கருமம் அப்புருஷனைப் பந்தப்படுத்துவதின்றாம்; தனது திருஷ்டி ால் அப்புருஷனிடத்து அக்கருமத்தின் கருத்திருத்தன்மையின்றாமாதலின். ண்டு ஒருரையில் சர்வ பூதாத்மபூதாத்மா என்பதற்கு இப்பொருளுரைக்கப்பட் ளது:—'சர்வம்' என்னுஞ்சத்தம் ஆகாசமுதலிய ஜடப்பிரபஞ்சத்தின் வாசகமாம். ஆத்மா' என்னுஞ் சத்தம் அஜடப்பிரபஞ்சத்தின் வாசகமாம். இவ்விரண்டினீற் னுள்ள 'பூதம்' என்னுஞ் சப்தம் சொரூபவாசகமாமாதலின், இப்பொருள் றப்பட்டது:—சர்வபூதம்,ஆன்மபூதம்,ஆத்மாஎதற்கோ அதன் பெயர் சர்வ தாத்மபூதாத்மாவாம். இவ்வாறு பொருள்கொள்ளாது சர்வ பூதங்களின் ன்மவடிவ ஆத்மா எவனுக்கோ அவன் சர்வ பூதாத்ம பூதாத்மாவாவன் எனப் பாருள்கொள்ளினே சர்வ பூதாத்மாவெனக் கூறுவதானே இச்சித்த பொருள் மைவதால் 'ஆன்மபூதம்' என்னும் பதம் அதிகமாய்க் கூறியதாம். இவ்வாறு தல் வியாக்கியானத்தில் 'ஆன்மபூதம்' என்னும் பதத்திற்கு அதிகத் தன்மை டிவ தூஷணங்கொடுத்துப் பொருள்கூறிய வுரையினும் அப்பதத்திற்கு அதிகத் ன்மைவடிவதூஷணம் பிராப்தமாம். என்னை? 'சர்வ' என்னும் பதத்தானே ர்வ ஜடாஜடப் பிரபஞ்சத்தின் கிரகணமாமாதலின், அச்சர்வபதத்தைச் சங் காசஞ்செய்து கேவல சடப்பிரபஞ்சத்தின் கிரகணஞ் சம்பவியாது. ஆதலின், ர்வபூதாத்மபூதாத்மா என்னும் பதத்திற்கு ஸ்ரீ பாடியக்காரரனுசாரமாய தல் வியாக்கியானமே இனியதாம். (7)

(அ-கை.) இப்போது கூறிப்போந்த இப்பொருளை ஸ்ரீ பகவான் இரண்டு லோகங்களால் விளக்கியருளுகின்றார்.

-ம். நைவ கிஞ்சித்கரோமீதி யுக்தோ மந்யேத தத்த்வவித் ।
பஶ்யஞ் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶஞ் ஜிக்⁴ரன்னஶ்நன் க³ச்ச²ன் ஸ்வபஞ் ஶ்வஸன் ॥ (8)
ப்ரலபன் விஸ்ருஜன் க்³ருஹ்ணன்னுன்மிஷன் நிமிஷன்னபி ।
இந்த்³ரியாணீந்த்³ரியார்தே²ஷு வர்தந்த இதி தா⁴ரயன் ॥ (9)

ப-ம். 24 ந 23 ஏவ 22 கிஞ்சித் 25 கரோமி 26 இதி 1 யுக்த: 27 மந்யேத 2 தத்வவித் 3 பஶ்யந் 5 ஶ்ருண்வந் 6 ஸ்ப்ருஶந் 7 ஜிக்ரந் 8 அஶ்நந் 9 கச்சந் 10 ஸ்வபந் 11 ஶ்வஸந் 12 ப்ரலபந் 13 விஸ்ருஜந் 14 க்ருஹ்ணந் 15 உந்மிஷந் 16 நிமிஷந் 4 அபி 17 இந்த்ரியாணி 18 இந்த்ரியார்தேஷு 19 வர்தந்த 20 இதி 21 தாரயந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யோகத்தோடுகூடிய பரமார்த்ததரிசி பார்த்தும், சிரவணித்தும், பரிசித்தும், முகர்ந்தும், புசித்தும், நடந்தும், உறங்கியும், பிராணனை யெழுப்பியும், உச்சரித்தும், மலவிசர்ச்சனஞ்செய்தும், கிரகணஞ்செய்தும், கண்திறந்தும், மூடியும், இவ்விந்திரியங்களே தங்கள் தங்கள் ரூபமுதலிய பொருள் களில் பிரவிர்த்திக்கின்றன என்றிவ்வாறு எண்ணிக்கொண்டிருக்கும்; நான் சிறி தளவுஞ் செய்பவனல்லன் என்றிவ்வாறுணர்கின்றனன். (8, 9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் யுக்தனோ, அதாவது நிரோத சித்தமுடையவனோ, தத்துவவித்தோ, பரமார்த்ததரிசியோ, அல்லது எவன் முன்னர் நிஷ்காம கருமத்தோடு கூடினவனோ, பின்னர் மனத்தூய்மைவாயிலாய்த் தத்துவவேத்தா வாயினனோ; அத்தன்மைய பரமார்த்ததரிசி ஐவகை ஞானேந்திரியங்களால் ஐவகைக் கருமேந்திரியங்களால் ஐவகைப் பிராணனால் நான்கந்தக்கரணத்தால் சாஸ்திரவிகித ரூபாதிவிஷயங்களைக் கிரகணஞ்செய்தும், அந்த ரூபாதி விஷயங்களில் இவ்விந்திரிய முதலியவைகளே பிரவிர்த்திக்கின்றன. அசங்க ஆன்மவடிவமாகிய நான் இவைகளில்ஒருகாலும் பிரவிருத்திப்பவனல்லன் என நிச்சயித்துஅசங்கான்மாவாகிய நான் சிறிதளவுஞ் செய்திலேன் எனத் தத்துவவேத்தா எப்போதும் நினைக்கின்றான். ஈண்டு, 'பஶ்யந், ஶ்ருண்வந், ஸ்ப்ருஶந், ஜிக்ரந், அஶ்நந்' என்னு மிவ்வைந்து சப்தங்களால் ஸ்ரீ பகவான் முறைப்படி நேத்திரம் முதலிய ஞானேந்திரியங்களின் தொழிலைக்கூறியருளினர். அவற்றுள் உருவமுதலியவைகளைப்பார்த்தல், சப்தத்தைக்கேட்டல், பரிசத்தைக் கிரகணம்பண்ணல், கந்தத்தைக் கிரகணம் பண்ணல், இரசத்தை கிரகணம்பண்ணல் நேத்திராதிகளின் வியாபாரமாம். அவ்வாறே 'கச்சந், ப்ரலபந், விஸ்ருஜந், க்ருஹ்ணந்' என்னும் இந்நான்கு பதங்களால் ஸ்ரீ பகவான் முறைப்படி பாதம் முதலிய கருமேந்திரியங்களின் தொழிலைக் கூறியருளினர். நடத்தல், வசனித்தல், மலநீக்கல், கிரகணம் முதலியனபாதாதிகளினவாம். இந்நான்கும்உபஸ்தேந்திரியத்தின் விஷயாநந்தவடிவ வியாபாரத்திற்கும் உபலக்ஷகங்களாம். 'ஶ்வஸந்' என்னும் பதத்தால் கூறப்பட்ட பிராணனுடைய சுவாசவடிவ வியாபாரம் பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன் என்னும் ஐந்து பிராணன்களின் வியாபாரத்திற்கு முபலக்ஷகமாம் 'உந்மிஷந் நிமிஷந்' என்னும் பதத்தால் கூறப்பட்ட வியாபாரமானது நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் ஐந்து பிராணன்களின் வியாபாரத்திற்கும் உபலக்ஷகமாம். 'ஸ்வபந்' என்னும் பதத்தாற் கூறப்பட்ட புத்தியினுடைய நித்திரைவடிவ வியாபாரமானது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களின் வியாபாரத்திற்கும் உபலக்ஷகமாம். இவ்வாறு தத்துவவேத்தாவாகிய புருஷன் சர்வவியாபாரத்தினும் ஆன்மாவை அகர்த்தாவாயே பார்க்கின்றானதலின், இவ்விந்திரிய முதலியவைகளால் எல்லா வியாபாரத்தையுஞ் செய்யினும் அதனால் பந்தப்படான். (8, 9)

(அ-கை.) ஹே பகவன்! வித்துவானாகிய புருஷன் கருத்திருத்வாபிமானமின்மையின் எல்லாக் கருமங்களையுஞ்செய்யினும், பந்தப்படுவதில்லை யென்பதை முன்னர்த் தாங்கள் கூறியருளினீர்கள். இதனால் அவித்துவானாகிய புருஷனே கரு

த்திருத்துவாபிமான வசத்தால் அக்கருமங்களைச்செய்து அவசியம் பந்தப்படுவன் என்பதறியப்படுகின்றது. ஆதலின், அக்கருமத்திற் பிரவிருத்தித்த அவ்வித்துவானுக்கு அந்தச் சந்நியாச பூர்வக ஞானநிஷ்டை எவ்வாறு பிராப்தமாகும். மற்றோ, பிராப்தமாகாது என்றிவ்வாறு அர்ச்சுனன் ஆசங்கிப்ப ஸ்ரீபகவான் அருளுகின்றார்.

சு-ம். ப்ரஹ்மண்யாதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய꞉ ।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா ॥ (10)

ப-ம். 2 ப்ரஹ்மணி 3 ஆதாய 6 கர்மாணி 4 ஸங்கம் 5 த்யக்த்வா 7 கரோதி 1 ய꞉
4 லிப்யதே 13 ஸ꞉ 12 பாபேந 10 பத்மபத்ரம் 11 இவ 9 அம்பஸா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனிடத்திற் சமர்ப்பித்துப் பலேச்சையை விடுத்துக் கருமத்தைச் செய்கின்றவன் தண்ணீரோடு தாமரையிலைபோலக் கருமத்தால் பந்தமடையான். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் பரமேசுரனிடத்தில் இலௌகிக வைதிக சர்வகருமங்களையுஞ் சமர்ப்பித்து அங்ஙனமே அக்கருமங்களின் சுவர்க்க முதலிய பலேச்சையைவிட்டு எங்ஙனம் அடிமையானோன் ஆண்டான்பொருட்டு சர்வகருமங்களையுஞ் செய்கின்றானோ, அங்ஙனமேயானும் கேவலம் பரமேசுரனுடைய பிரீதியின்பொருட்டே எல்லாக் கருமங்களையுஞ் செய்கின்றேன் என்னும் இவ்வித எண்ணத்தோடு அக்கருமங்களனைத்தையுஞ் செய்கின்றானோ அப்புருஷனும் அவ்வித்துவானைப்போல புண்ணிய பாவ கருமங்களால் பந்தப்படுவதில்லை. எங்ஙனம் தாமரையிலைமேல் இருக்கப்பட்ட தண்ணீரால் அத்தாமரையிலை சம்பந்தப்படுவதில்லையோ, அங்ஙனமே பகவதர்ப்பண புத்தியாற் செய்யப்பட்ட கருமங்களால் இவ்வதிகாரி பந்தத்தை யடைவதில்லை. அதாவது அந்நிஷ்காமகருமம் இவ்வதிகாரியின் பந்தத்திற் காரணமாவதில்லை. மற்றோ, அது அந்தக்கரணசுத்திக்கே காரணமாம். (10)

(அ-கை.) இப்போது ஸ்ரீபகவான் இவ்வர்த்தத்தை விளக்கியருளுகின்றார்.

சு-ம். காயேந மநஸா புத்த்யா கேவலைரிந்த்ரியைரபி ।
யோகிந꞉ கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்மஶுத்தயே ॥ (11)

ப-ம். 6 காயேந 7 மநஸா 8 புத்த்யா 5 கேவலை꞉ 9 இந்த்ரியை꞉ 11 அபி
1 யோகிந꞉ 10 கர்ம 12 குர்வந்தி 2 ஸங்கம் 3 த்யக்த்வா 4 ஆத்மஶுத்தயே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அதிகாரிகள் பலேச்சையைவிடுத்து அந்தக்கரணசுத்தியின்பொருட்டுக் கேவலம் சரீரத்தால், மனதால், புத்தியால், இந்திரியங்களால் கருமத்தையே செய்கின்றனர். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மோக்ஷேச்சையுடைய அதிகாரிகள் தமது அந்தக்கரணத்தைச் சுத்திசெய்தற்பொருட்டுச் சுவர்க்கமுதலிய பலேச்சையைப் பரித்தியாகஞ்செய்து கேவலம் சரீரத்தால், கேவலம் மனதால் கேவலம் புத்தியால், கேவலமிந்திரியங்களால் தமது வருணாசிரமாநுசார நித்திய நைமித்திக கருமங்களையே செய்கின்றார்கள். ஈண்டு, இக்கருமத்தை யான் ஈசுவரப் பிரீதியின்பொருட்டே செய்கின்றேனேயன்றிச் சுவர்க்கமுதலிய பலப்பிராப்தியின்பொருட்டுச் செய்யவில்லை என்றிவ்வாறு மமதையின்மையே சரீரம் முதலிய நான்கினும் கேவலவடிவத்தன்மையாம். (11)

(அ-கை.) ஹே பகவன்! கருத்திருத்துவாபிமானம் சமமாயினும், அக்கருமத்தால் சிலரோ முத்தர்களாகின்றார்கள் சிலர்கள் பந்தப்படுகின்றார்கள். இவ்வித

மாகிய விஷமத்தன்மையிற் காரணம் யாது என்று அர்ச்சுனன் சங்கிக்க ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌮𑍍 ।
𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 𑌫𑌲𑍇 𑌸𑌕𑍍𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥ (12)

ப-ம். 1 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 2 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 3 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 5 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 6 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 4 𑌨𑍈𑌷𑍍𑌠𑌿𑌕𑍀𑌂 7 𑌅
𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 8 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑍇𑌣 9 𑌫𑌲𑍇 10 𑌸𑌕𑍍𑌤𑌃 11 𑌨𑌿𑌬𑌧𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யுக்த புருஷன் கருமபலத்தைத் தியாகம்பண்ணிக் கருமத்தைச்செய்து சத்துவ சுத்திக்கிரமமாயுண்டாகிய மோக்ஷவடிவ சாந்தியை யடைகின்றான். அயுக்த புருஷனோ காமத்தால் பலத்தை இச்சித்துப் பந்தப்படுகின்றான். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வெல்லாக்கருமங்களும் பரமேசுரப் பிரீதியின் பொருட்டேயன்றி எனது பலத்தின்பொருட்டன்று என்னும் எண்ணமுடையவன் யுக்தன். இத்தன்மைத்தாய யுக்தன் அக்கருமத்தின் சுவர்க்க முதலிய பலேச்சையை நீக்கி நித்திய நைமித்திக கருமத்தைச்செய்து மோக்ஷவடிவ சாந்தியையே யடைகின்றான் அது நைஷ்டிகமாம்; அதாவது முன்னர் அந்தக்கரணசுத்தி அதன்பின் நித்தியாநித்திய வஸ்து விவேகம் அதன்பின் சந்நியாச பூர்வக ஞானநிஷ்டை என்னுங் கிரமத்தாலுண்டாகிய மோட்சவடிவ சாந்தியை யுக்தன் அடைகின்றான். அயுக்தனோ அதாவது இவ்வெல்லாக்கருமங்களும் பரமேசுரன்பொருட்டேயன்றி எனதுபலத்தின்பொருட்டன்று என்னுமெண்ணமில்லானோ, காமத்தால் அச்சுவர்க்கமுதலிய பலத்தில் யானிச் சுவர்க்கமுதலிய பல மடைதற்பொருட்டே கருமத்தைச் செய்கின்றேன் என்றிவ்வண்ண மிச்சைசெய்து அவற்றாற் பந்தப்படுகின்றான். அதாவது அதனால் அவன் சம்சாரவடிவ பந்தத்தையே யடைகின்றான். ஆதலின், ஹே அருச்சுன! நீயும் யுக்தனாகி அக்கருமத்தைச் செய்தி. (12)

(அ-கை.) ஆண்டு, அசுத்தாந்தக்கரணமுடையவனுக்குக் கேவலஞ் சந்நியாசத்தினும் கருமயோகமே சிறந்தது என முற்கூறியருளப்பட்ட அர்த்தத்தை இதுகாறும் விஸ்தாரமாய்க் கூறியருளினர். இப்போது சுத்தாந்தக் கரணமுடையவனுக்கு அச்சருவகரும சந்நியாசமே சிறந்தது என்னுமர்த்தத்தை ஸ்ரீபகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑍇 𑌸𑍁𑌖𑌂 𑌵𑌶𑍀 ।
𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑍇 𑌦𑍇𑌹𑍀 𑌨𑍈𑌵 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍 ॥ (13)

ப-ம். 1 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 2 𑌮𑌨𑌸𑌾 3 𑌸𑌂𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 9 𑌆𑌸𑍍𑌤𑍇 8 𑌸𑍁𑌖𑌂 5 𑌵𑌶𑍀
6 𑌨𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇 7 𑌪𑍁𑌰𑍇 4 𑌦𑍇𑌹𑍀 10 𑌨 𑌏𑌵 11 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 12 𑌨 13 𑌕𑌾𑌰𑌯𑌨𑍍

(அ-ம்.) ஹே அருச்சுன! சருவகருமத்தையு மனதால் பரித்தியாகஞ்செய்து சரீரத்தினும் வேறாகிய ஆன்மாவையுணர்ந்த வசிபுருஷன் ஒன்பது துவாரமுடைய இத்தேகத்தில் சுகபூர்வகமாய் இருக்கின்றான். ஒருகாரியத்தைச் செய்தேனும் செய்வித்தேனுமிருப்பதில்லை.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நித்தியம், நைமித்திகம், காமியம், பிரதிஷித்தம் எனக் கருமம் நால்வகைத்தாம். இக்கருமங்களை '𑌕𑌰𑍍𑌮𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌯𑌃𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍' என்னுஞ் சுலோகத்திற் கூறப்பட்ட அகர்த்தாவாகிய ஆன்மரூபத்தின் இனிய தரிசனத்தோடுகூடிய மனதால் பரித்தியாகஞ்செய்து பிராரப்த கருமவசத்தால் அச்

சந்நியாசி நிலைத்திருக்கின்றான், ஆண்டு அவன் என்னை? துக்கபூர்வகமாகவாவிருக்கின்றான் என ஆசங்கிப்ப, ஸ்ரீபகவானருளுகின்றார். 'ஸுகம்' ஹே அருச்சுன! சரீர வாக்காதி இந்திரிய மனோவியாபாரமே இப்பிராணிகட்குத் துக்கத்தைக்கொடுப்பதாம். துக்க காரணமாகிய அம்மூன்று வியாபாரமும் இச்சந்நியாசியிடத்தின்றாமாதலின், இவன் துக்கமின்றியவனாகியே யிருக்கின்றான்.

சங்கை :—ஹே பகவன்! சந்நியாசியின்சரீரம், இந்திரியம், மனம், என்னும் மூன்றும் சுவதந்திரமாய்த் தத்தம் வியாபாரத்தில் எக்காரணத்தாற் பிரவிருத்திப்பதில்லை ?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார். 'வஶீ' என. ஹே அர்ச்சுன! சந்நியாசி இக்காரிய காரணவடிவ சங்காதத்தைத் தன்வசப்படுத்தியுள்ளானாதலின், அம்மூன்றும் சுவதந்திரமாய் ஒரு வியாபாரத்திலும் பிரவிருத்திப்பதில்லை.

சங்கை :—ஹே பகவன்! இவ்வாறு சர்வவியாபாரமுமின்றிய சந்நியாசி எந்த ஸ்தானத்தில் ஸ்திதிபெறுவன் ?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார்; 'நவத்வாரே' என. சுரோத்திரம் இரண்டு, நேத்திரமிரண்டு, நாசியிரண்டு, முகமொன்று இவ்வெழுவகைத் துவாரங்களும் மேலாகிய சிரசிலிருக்கின்றன. பாயு, உபஸ்தம் இவ்விரண்டும் கீழிருக்கின்றன. இவ்வொன்பதுவகைத் துவாரத்தோடுகூடிய இத்தூலசரீரத்தில் சந்நியாசி வசிக்கின்றான்.

சங்கை :—ஹே பகவன்! சந்நியாசி, அசந்நியாசி, வித்துவான், அவித்துவான் முதலிய சருவப்பிராணிகளும் இவ்வொன்பதுவகைத் துவாரமுடைய தேகத்தின்கண்ணே வசிக்கின்றனர். கேவலம் இச்சந்நியாசிமாத்திரமே இத்தேகத்தில் வசிப்பதில்லை.

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார். 'தேஹீ' என. ஹே அருச்சுன! அவ்வித்துவான் இவ்வொன்பதுவகைத்துவாரமுடைய தேகத்தின்கண்ணே யிருப்பினும் இத்தேகத்தினும் வேறாய்த் தனது ஆன்மாவைக் காண்கின்றான், தேகவடிவமாக ஆன்மாவைப் பார்ப்பதில்லை. ஆதலின், எங்ஙனம் பிரவாசியாகிய புருஷன் அயலான்வீட்டில் வாசஞ்செய்யினும், அவ்வீட்டின் விருத்திஹானிகளால் அவன் சுகதுக்கங்களை யடைவதில்லையோ அங்ஙனமே வித்துவானாகிய சந்நியாசியும் இச்சரீரத்தின் துதி நிந்தைகளாற் சுகதுக்கங்களை யடைவதில்லை; மற்றோ, அகந்தை மமதையின்றி இத்தேகத்தி லிருப்பன். அஞ்ஞானியோ தேகத்தின் தாதாத்மிய அபிமானத்தால் தன்னைத் தேகவடிவமாக அபிமானிக்கின்றானன்றித் தன்னைத் தேகியாக அபிமானிப்பதில்லை. ஆதலின், அவ்வஞ்ஞானி இத்தேகத்தின் இடத்தையே ஆன்மாவின் இடமாயெண்ணி யான் இவ்வீட்டிலிருக்கின்றேன், யான் இப்பூமியிலிருக்கின்றேன், யான் இவ்வாசனத்திலிருக்கின்றேன்; என்றிவ்வாறு தன்னை யெண்ணுகின்றான்; யான் இத்தேகத்திலிருப்பவன் என அஞ்ஞானி தன்னை யுணராமையின் அவன் தேகபின்னமாய் ஆன்மாவை யறிவதில்லை. இக்கூட்டத்தினும் வேறாய் ஆன்மாவையுணர்ந்த சருவ கருமசந்நியாசியாகிய வித்துவான் யான் இத்தேகத்திலிருப்பவனென்றிவ்வண்ணம் தன்னை எண்ணுகின்றான்; தன்னைத் தேகவடிவமாய் அபிமானிப்பதில்லை. ஆதலின், கிரியையின்றிய ஆன்மாவினிடத்தில் அவித்தையாலாரோபிக்கப்பட்ட தேகாதிகளின் வியாபாரமனைத்தும் தத்துவ சாக்ஷாத்காரத்தால் பாதமாகின்றன. அதுவே சர்வ கரும சந்நியாசமென்று சொல்லப்படுகின்றது. இவ்வாறு அஞ்ஞானி புருஷர்களின் விலக்ஷணத் தன்மையை அங்கீகரித்தருளியே ஸ்ரீ பகவான் அவ்வித்துவானை 'நவத்வாரே புரே தேஹீ' எனச் சிறப்பித்துக் கூறியருளினர்.

சங்கை :—ஹே பகவன்! எங்ஙனம் ஓடத்தின் சலனவடிவமாகிய வியாபாரம் கரையிலுள்ள விருக்ஷத்தில் ஆரோபிக்கப்படுகின்றதோ, அங்ஙனமே ஆன்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்ட தேகாதி வியாபாரங்களுக்கு வித்தையால் பாதமுண்டாயினும் ஆன்மாவினிடத்தில் தனது வியாபாரத்தால் கர்த்தாத்தன்மையும் தேகாதிவியாபாரத்தில் பிரயோசக கர்த்தாத்தன்மையும் உள.

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார். 'நைவகுர்வந்நகாரயந்' என. ஹே அர்ச்சுன! இவ்வான்மதேவர் தாம் ஒருகாரியத்தையுஞ் செய்துகொண்டிருப்பவரல்லர். பிரேரித்துத் தேகேந்திரியாதிகளால் ஒரு வியாபாரத்தையுஞ் செய்வித்துக்கொண் டிருப்பவருமல்லர். மற்று, உதாசீனமாயிருப்பவர் ஓர் உரையில் 'நவத்வாரேபுரே' என்னும் வாக்கியத்திற்குச் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, ரசனம், கிராணம், பிராணன், புத்தி, அகங்காரம், சித்தம் இவ்வொன்பது துவாரங்களும் எதனிடத்துளவோ, அத்தன்மைய சரீரவடிவமாகிய புரத்தில் அவ்வித்துவான் ஸ்திதனாகின்றான் எனப்பொருளுரைக்கப்பட்டுளது. கருத்திதுவாம்.—எங்ஙனம் உலகப்பிரசித்தமாகிய புரத்திலுள்ள இராஜனுக்கு அப்புரத்தின் துவாரத்தானே வெளிவிஷயங்கள் கிடைக்கின்றனவோ, அங்ஙனமே இத்தேகவடிவ புரத்திற்கு அதிபதியாகிய சீவான்மவடிவ இராஜனது போகத்தின்பொருட்டு வெளியிலுள்ள சத்தமுதலிய விஷயங்கள் அச்சுரோத்திரமுதலிய துவாரங்களாலே உள்ளே பிரவேசமாகின்றனவாதலின், அச்சுரோத்திரம் முதலியன பிரசித்தியாகிய புரத்தின் துவாரங்களைப்போலத் துவாரங்களா. (13)

(அ-கை.) ஹே பகவன்! எங்ஙனம் தேவதத்தன் என்னும் பெயருடைய புருஷனிடத்தில் உண்மையாயுள்ள கமனவடிவ கிரியையானது அவன் நிலைத்திருக்குங்காலத்தில் உண்டாவதில்லையோ, அங்ஙனமே ஆன்மாவினிடத்துண்மையாயுள்ள செய்யுந்தன்மை செய்விக்குந்தன்மையானவை சந்நியாசகாலத்தில் அவ்வான்மாவினிடத்தின்றாம் என்பது தாங்கள் கூறியருளிய கருத்தாம். அல்லது ஆகாசத்தில் தலம் மலினம் முதலிய தன்மைகள் உண்மையாயில்லாததேபோல ஆன்மாவினிடத்திலும் செய்யுந்தன்மையும் செய்விக்குந்தன்மையும், உண்மையிலின்றாம் என்பது தாங்கள் கூறியருளியதின் கருத்தாம் என்றிவ்வாறுளதாம் அர்ச்சுனன் சந்தேகத்தை நிவிருத்தித்தருளற்பொருட்டு ஸ்ரீ பகவான் அந்தத்திலுள்ள பக்ஷத்தை அங்கீகரித்தருளுகின்றார்.

சு-ம். ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।
ந கர்மபலஸம்யோகம் ஸ்வபாவஸ்து ப்ரவர்த்ததே ॥ (14)

ப-ம். 4 ந 3 கர்த்ருத்வம் 7 ந 6 கர்மாணி 2 லோகஸ்ய 5 ஸ்ருஜதி 1 ப்ரபு:
9 ந 8 கர்மபலஸம்யோகம் 11 ஸ்வபாவ: 10 து 12 ப்ரவர்த்ததே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மதேவர் தேகாதிகளின் கருத்திருத்துவத்தன்மையை உண்டாக்கவில்லை கருமங்களையு முண்டாக்கவில்லை, பல சம்பந்தத்தையுமுண்டாக்கவில்லை. மற்று, அஞ்ஞானவடிவமாயையே சர்வ காரியமுஞ் செய்வதிற் பிரவிருத்திக்கின்றது. (14)

(வி ம்.) ஹே அர்ச்சுன! தேகேந்திரியாதி சர்வ சங்காதத்தின் சுவாமிவடிவ ஆன்மதேவரானவர் அவற்றின் கருத்திருத்தன்மையை உற்பத்திசெய்வதில்லை. அதாவது, நீ இக்காரியத்தைச்செய்வாய்! என்றிவ்வண்ணம் பிரேரித்து ஒரு காரியத்தையுஞ் செய்விப்பதில்லை ஆதலின், இவ்வான்மதேவரிடத்தும் பிரயோஜககர்த்தாத்தன்மைவடிவச் செய்விக்குந்தன்மை சம்பவியாது; தேகேந்திரி

யாதிகளுக்கு வேண்டுவனவாய குடமுதலிய கருமங்களையும் இவ்வான்மதேவர் உற்பத்திசெய்வதில்லை. அதாவது, அக்கடாதி பதார்த்தங்கட்கு கருத்தாவுமல்லர் ஆதலின் இவரிடத்துக் கருத்திருத்தன்மையும் இன்றாம். கருமத்தைச்செய்ப வர்க்கு அவ்வக்கருமத்தின் பலத்தோடு சம்பந்தத்தையும் இவருற்பத்தி செய்ய வில்லை. அதாவது இவர் ஒருவருக்கும்பலத்தைப்போகம்பண்ணுவிப்பவருமல்லர்; தாம்போகம்பண்ணுபவருமல்லர். ஆதலின், இவரிடத்தில் உண்ணுவிக்குந்தன் மையும் உண்ணுந்தன்மையும் சம்பவியா என்னுமிவ்வர்த்தத்தை 'ஸரீரஸ்தோ௸பி களஜெயநகரொதி நலிவ்யதெ' என்னும் இக்கீதாவாக்கியமுங் கூறியது.

சங்கை:—ஹே பகவன் இவ்வான்மதேவர் ஒருகாலும் தாம் சிறிதளவும் காரியஞ்செய்பவரல்லர் செய்விப்பவருமல்லரேல் மற்றியார் செய்தும் செய்வித்தும் பிரவிருத்திப்பவர்?

சமாதானம்:—ஸ்ரீபகவான் அருளுகின்றார். 'ஸ்வஹாவஸ்து ப்ரவதெ—தெ' என. ஹே அர்ச்சுன! அஞ்ஞானவடிவ தெய்வீகமாயை பிருகிருதியென்று கூறப்படுகின் றது; அதுவே காரியஞ்செய்வதில் செய்விப்பதில் பிரவிர்த்திக்கின்றது. ஈண்டோரு ரையில் 'ஸ்வஹாவஸ்து ப்ரவதெ—தெ' என்னும் வாக்கியத்திற்கு இப்பொருள் கூறப் பட்டிருக்கின்றது:—இச் சைதன்யவடிவ ஆன்மாச்சூரியன்போன்று எல்லாவற் றையும் விளக்குவதுமாத்திரமேயன்றிக் கருமமுதலியவைகளிற் பிரவிருத்தி செய் விப்பதின்று; மற்றோ, எவ்வெவ்வஸ்துவிற்கு எவ்வெவ்வாறு சுபாவமோ அதுவே அவ்வவ்வண்ணம் பிரவிர்த்திக்கின்றது. ஒரே சூரியனுதிப்பத்தாமரைப்பூக்கள் இயல்பானே விரிகின்றன; குமுதங்கள் இயல்பானே சுருங்குகின்றன. அச்சூரியன் ஒன்றையும் விரித்தொடுக்குவதில்லை. அதுபோல ஒரேயான்மாப்பிரகாசிப்பக் கடாதி பதார்த்தங்கள் சேஷ்டிக்கவில்லை மநுஷ்யாதிகளோ பலவகையாய்ச் சேஷ் டிக்கின்றார்கள் அவ்வான்மா ஒரு பொருளையும் பிரவிருத்திப்பதுமில்லை நிவிர்த் திப்பதுமில்லை. (14)

(அ-கை.) ஹே பகவன்! ஈஸ்வரனே பிரேரணைசெய்து ஜீவனுக்காகக் கருமங் களைச் செய்விப்பவன்; சீவனே அதனைச்செய்பவன் ஆதலின், ஈசுரனிடத்துச் செய்விக்குந்தன்மையும் ஜீவனிடத்துச் செய்யுந்தன்மையுமுளவாம். இவ்வார்த்தை சுருதியினும் ஸ்மிருதியினுங் கூறப்பட்டுளது. சுருதி யிதுவாம்:—

> ஏஷஉஹெ்யவஸாய—கஉ—காரயதிதம யஎெஹெ்யாஞொகெஹ்ய உநிநீஷ
> ஏஷஉஹெ்யவாஸாய—கஉ—காரயதிதமய உயொநிநீஷதெ ॥ [தெ।

(பொ-ள்.) பரமேசுரர் எப்புருஷனை இவ்வுலகத்தின் மேலாகிய சுவர்க்க முதலிய உலகங்களிற் கொண்டுபோக விச்சிக்கின்றாரோ அவனைப் பிரேரித்துப் புண்ணிய கருமத்தைச் செய்விக்கின்றார். அப்பரமேசுரர் எவனை நரகமுதலிய கீழுலகங்களிற்கொண்டுபோக விச்சிக்கின்றாரோ அப்புருஷனைப் பிரேரித்துப் பாவ கருமத்தைச் செய்விக்கின்றார். என்னுமிச்சுருதி ஈசுரனிடத்துப் புண்ணிபாவ கருமங்களின் காரயித்திருத்தன்மையையும் ஜீவனிடத்துக் கர்த்திருத்தன்மையை யுங் கூறுகின்றது. ஸ்மிருதி யிதுவாம்:—

> "அஜ்ஞாஜஂதுர நீஶொயஂாத்மநஃ ஸுவது—ஃவயொஃ।
> ஈஶ்வர ப்ரெரிதொ மச்சேஸ்வஂ வாஶ்வஹ் ஏவவா" ॥

(பொ-ள்.) இவ்வஞ்ஞானியாகிய ஜீவன் தனது சுகத்திலும், துக்கத்திலும் வலியற்றவன். மற்றோ, ஈசுரனாற் பிரேரிக்கப்பட்டுத் தனது புண்ணியபாவவசத் தால் சுவர்க்க நரக முதலியவைகளை யடைகின்றான். எப்புருஷன் புண்ணிய பாவ

கருமத்தைச் செய்கின்றானோ, எவன் பிரேரணைபண்ணி அப்புண்ணியபாவ கருமங்களைச் செய்விக்கின்றானோ, அவ்விருவர்க்கும் அப்புண்ணியபாவகருமங்களின் சம்பந்தம் அவசியமாய் உண்டாமாதலின், அது சீவனிடத்தோ கருத்தாத்தன்மையால் ஈசுரனிடத்தோ காரயிதாத்தன்மையாலாம். ஆதலின், இவ்வான்மாதேவர் செய்பவருமல்லர் செய்விப்பவருமல்லர். மற்றோ, இப்பிரகிருதி வடிவ சுபாவத்தானே சர்வ காரியங்களிலும் பிரவிர்த்திக்கின்றனன் எனத்தாங்கள்கூறியருளியது சுருதிஸ்மிருதிகட்கு மாறாதலின் அசங்கதமாம் என்றிவ்வாறு அர்ச்சுனன் ஆசங்கிப்ப ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். நாத3த்தே கஸ்யசித்பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு4꞉ ।
அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ꞉ ॥ (15)

ப-ம். 4 ந 5 ஆத3த்தே 2 கஸ்யசித் 3 பாபம் 9 ந 6 ச 8 ஏவ 7 ஸுக்ருதம் 1 விபு4꞉ 10 அஜ்ஞாநேந 11 ஆவ்ருதம் 12 ஜ்ஞாநம் 13 தேந 15 முஹ்யந்தி 14 ஜந்தவ꞉.

(அ-ம்) ஹே அர்ச்சுன! பரமேசுரன் எஜ்ஜீவனுடைய பாவத்தையாவது புண்ணியத்தையாவது கிரகிப்பதில்லை. மற்றோ, அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட ஞானத்தால் இச்சீவன் மோகத்தையடைகின்றான். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்விடத்தும் வியாபகமாதலின் கிரியையின்றிய பரமேசுரன் எஜ்ஜீவனுடைய புண்ணியத்தையேனும் பாவத்தையேனுங் கிரகணஞ் செய்வதில்லை. என்னை? பரமார்த்த திருஷ்டியால் இச்சீவனிடத்தோ அப்புண்ணியபாவ கருமங்களின் கருத்தாத்தன்மையின்றாம்; ஈசுரனிடத்தும் அப்புண்ணிய பாவங்களின் காரயிதாத்தன்மையின்றாமாதலின்.

சங்கை:—ஹே பகவன்! ஒருகாலும் பரமேசுரனிடத்து உண்மையாய்க் கருமங்களின் காரயிதாத்தன்மையும் சீவனிடத்து கருத்திருத்தன்மையுமில்லாவிடினோ, அவ்விருவரிடத்தும் அவ்விரண்டையுங் கூறும் முற்கூறிய சுருதிஸ்மிருதிகள் அசங்கதமாம். அன்றியும், இவ்வுலகத்திலும் சிஷ்டபுருஷன் பரமேசுரப்பிரீதியின் பொருட்டுப் புண்ணியகருமத்தைச் செய்கின்றான் இன்றெனிலோ பயமடைகின்றான் என்னுமுலகவழக்கும் அசங்கதமாம்.

சமாதானம்:—ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். 'அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ꞉' என. ஹே அர்ச்சுன! ஆவரண விக்ஷேப சக்தியுடைய மாயாவடிவ மித்தையாகிய அஞ்ஞானதமத்தால் மறைபட்ட சீவேசுவர ஜகத்பேதப் பிராந்தியின் அதிஷ்டானமும் நித்திய சுவப்பிரகாச சச்சிதானந்த அத்துவிதீயவடிவமும் பரமார்த்த சத்தியவடிவமுமாகிய ஞானவடிவ ஆன்மாவின் அஞ்ஞானத்தால் தனது உண்மைவடிவத்தையுணராத சம்சாரியாகிய இச்சீவன் மோகத்தையடைகின்றான். அதாவது பிரமாதா, பிரமாணம், பிரமேயம், கருத்தா, கருமம், காணம், போக்தா, போக்கியம், போகம் என்னுமிவ்வொன்பதுவகையான சம்சாரப் பிராந்திவடிவ விக்ஷேபமாகிய மோஹத்தை இச்சீவனடைகின்றான் என்பதாம். இதனாலிப்பொருள் பெறப்பட்டது:—உண்மையில் அகர்த்தா அபோக்தாவடிவ பரமாநந்த அத்துவிதீய ஆன்மாவின் உண்மைவடிவத்தி னுணர்வின்மையால் அவிவேகிக்கு இவன்சீவன் இவ னீசுவரன் இதுவுலகம் என்பன முதலிய பேதப்பிராந்தி தோற்றுகின்றது. அதாவது, இச்சீவன் புண்ணிய பாவ கருமத்தைச் செய்பவன் ஈசுரன் அதைச் செய்விப்பவன் என்பன முதலிய பேதம் பிரதீதியாகின்றதென்பதாம். அவ்வஞ்ஞானியின் பிராந்திஞானத்தையே "இவனே புண்ணியகருமத்தைச் செய்விக்கின்றான்" என்பது முதலிய சுருதிஸ்மிருதி

வாக்கியம் அநுவாதமாத்திரஞ்செய்கின்றதேயன்றி பேதப் பிராந்தியை அறிவிப்பதின்று. ஆகையால், உண்மையில் அத்துவிதவான்மாவையுணர்த்தும் தத்துவமசி முதலியமகாவாக்கியங்கட்கே அங்கமாம் சுருதிஸ்மிருதிவாக்கியங்கள். ஆகவே அச்சுருதிஸ்மிருதிவாக்கியங்கட்கும் ஈண்டு விரோதமில்லை. ஒருரையில் 'அஜ்ஞாநேநா வ்ருதம்ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:' என்னும் வாக்கியத்திற்குக் கருத்திது கூறப்பட்டுளது:—எங்ஙனம் சக்கரவர்த்தியாகிய மகாராசனுக்குச் சாக்கிரகாலத்தில் யான் சர்வப்பிரசைகளின் ஈசுரன் என்றுண்டாம் ஞானம் நித்திரைவடிவ அஞ்ஞானத்தாலொருகால் மறைக்கப்படில் அம்மஹாராஜன் அச்சொப்பனவத்தையில் பலவகையான துக்கத்தையடைகின்றானோ, யான் அத்தியந்தந்தீனன் யான் அத்தியந்தந்துக்கி என்றிவ்விதமான மோகத்தையுமடைகின்றானோ, அங்ஙனமே இச்சீவனும் யான் பிரஹ்மமாகின்றேன் என்பது முதலிய வேதவாக்கியங்களால் தனது பிரஹ்மத்தன்மையையுணராது ஈசுரனைத் தனக்கு வேறாயுணர்ந்து அதாவது ஈசுரனைச் சுவாமியாயெண்ணித் தன்னை அவ்வீசுரரின் சேவகனாயெண்ணி அடிக்கடி ஜன்மமரணவடிவ மோகத்தையடைகின்றான். இவ்வார்த்தை சுருதியினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. அயயொ ந்யாம் தெவதா உபாஸ்தெந்யொஸாவந்யா ।
ஹமஸ்மீதி நஸவெத யதாபஸுரெவ ஸதெவாநாம் ॥
உதாஹும் தாம் கா்யாந்தெ அய தவஸ்யஹயம் ஹவதி ।
ஏதேந்யோ:ஸ ஏதத்யூபாஸ்நோதிய உஹநாநெவ வஸ்யதி ॥

(பொ-ள்.) எந்தப் புருஷன் இத்தேவதை அன்னியம் யானும் அன்னியன் எனப் பின்னமாய்க்கருதி அத்தேவதையைத் தியானிக்கின்றானோ, அப்பேதத்தைக் காண்கின்ற புருஷன் தேவதாவடிவத்தையும் தனது வடிவத்தையும் உண்மையாயுணர்ந்திலன். எங்ஙனம் குதிரை எருமை முதலிய பசுக்கள் சிறிதளவு முணரவில்லையோ அங்ஙனமே அப்பேததரிசியும் அத்தேவதைகளுக்குப்பசுவேயாம். பேததரிசி தேவதைகளுக்குப் பசுவாம் என்னுமிவ்வார்த்தை ஆத்மபுராணத்தின் நான்காவது அத்தியாயத்தில் தத்தியங் அதர்வண தேவராச விந்திர சம்வாதத்தில் விரிவாய்க்கூறினும். எப்புருஷன் ஈசுரனினின்றுந் தன்னைச் சிறிதளவேனும் பேதமாயொப்புகின்றானோ அப்பேததரிசிக்கு மிகுந்த பயப்பிராப்தியுண்டாகின்றது. எவன் இவ்வத்துவிதீய பிரஹ்மத்தினிடத்தில் நானாபாவத்தைக்காண்கின்றானோ அப்பேததரிசி புருஷன் மிருத்துவினின்று மிருத்துவையடைகின்றான், அதாவது அடிக்கடி பிறப்பிறப்பை யடைகின்றான் என்பதாம். (15)

(அ-கை.) ஹே பகவன்! எல்லாச் சீவர்களும் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டவர்களாங்கால் இப்பிறப்பிறப்பு வடிவ சம்சார நிவிருத்தி எவ்வாறுண்டாம்? என அர்ச்சுனன் ஆசங்கிப்ப ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். ஜ்ஞாநேந து தத்ஜ்ஞாநம் யெஷாம் நாஸிதமாத்மந: ।
தெஷாமாதித்யவத் ஜ்ஞாநம் ப்ரகாஸயதி தத்பரம் ॥ (16)

ப-ம். 6 ஜ்ஞாநேந 1 து 3 தத் 4 அஜ்ஞாநம் 2 யெஷாம் 7 நாஸிதம் 5 ஆத்மந:
8 தெஷாம் 11 ஆதித்யவத் 10 ஜ்ஞாநம் 13 ப்ரகாஸயதி 9 தத் 12 பரம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் எப்புருஷனுக்கு அவ்வஞ்ஞானம் ஆன்மஞானத்தால் நாசமாகின்றதோ அப்புருஷனுக்கு அவ்வான்மஞானம் இரவிபோன்று பரமான்மாவைப் பிரகாசஞ்செய்கின்றது. (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆவரண விட்சேப சத்தியுடையதும், அநாதியும் அதாவது உத்பத்தியின்றியதும், அநிர்வசனமும், அதாவது சத்து, அசத்து, சதசத்து இம்மூவகைப் பக்ஷமுமின்றியதும் எல்லாத்துக்கங்கட்குங் காரணமும் தனதாசிரயா பின்ன விஷயமுடையதும் எங்ஙனம் இருள் வீட்டைப்பற்றியிருந்து கொண்டு அவ்வீட்டையே மறைக்கின்றதோ, அங்ஙனமே இவ்வஞ்ஞானமும் அவ்வான்மதேவனைப் பற்றியிருந்து அவ்வான்மதேவனையே மறைப்பதும் சாத்திரத்தில் மாயை, அவித்தை, பிரகிருதி, பிரதானம், அவ்வியக்தம், சக்தி என்பன முதலியபெயராற் கூறப்படுவதுமாகிய அஞ்ஞானம் எவ்வதிகாரியின் ஆன்மவிஷயக ஞானத்தால் நாசமாயதோ அதாவது எந்த ஞானம் பிரஹ்மமுணர்ந்த குருவால் உபதேசிக்கப்பட்டதும், வேதாந்த மகாவாக்கிய சன்னியமும், சிரவணமனன நிதித்தியாசனங்களின் பரிபாகத்தால் நிருமலமான அந்தக்கரணவிருத்தியும், சோதனைபண்ணிய தத், துவம், பதார்த்தங்களின் அபேதவடிவ சுத்த சச்சிதானந்த அகண்டைகரசவஸ்துவை விஷயஞ்செய்வதுமாமோ, அத்தன்மைய நிருவிகற்ப ஆன்ம சாக்ஷாத்காரத்தால் எவ்வதிகாரிக்கு அவ்வஞ்ஞானம் நாசமடைந்ததோ, கருத்திதுவாம்:—சுத்தியில் ரசதப் பிராந்தியின் பின்னருண்டாகிய இது சுத்தியே, வெள்ளியன்று என்னும் சுத்திஞானமானது அச்சுத்தியினிடத்தில் ரசதத்தின் முக்காலத்தினும் அசத்துவடிவமாகிய பாதத்தைச்செய்கின்றதேபோல அவ்வான்மஞானமும் அத்துவிதீயப் பிரஹ்மத்தினிடத்தில் அவ்வஞ்ஞானத்தின் முக்காலத்திலும் அசத்துவடிவாகிய பாதத்தைச்செய்கின்றதேயன்றித் தண்டஅடியானது கடத்தின் நுண்ணியாவத்தைவடிவ துவம்சம்பண்ணுகின்றதேபோல அவ்வான்மஞானம் அவ்வஞ்ஞானத்தின் நுண்ணியாவத்தைவடிவ துவம்சஞ்செய்வதில்லை. அத்தன்மைய வதிகாரியின் ஆன்மஞானம் உலகப்பிரசித்த சூரியன்போன்று சத்திய ஞானானந்த அனந்தரூப ஒரே அத்துவிதீயப் பரமான்ம தத்துவத்தைப் பிரகாசிக்கின்றது. எங்ஙனம் இச்சூரியன் தனது உதயமாத்திரத்தானே இருளனைத்தையும் நீக்கிக்கடமுதலிய பதார்த்தங்களை விளக்குகின்றனனோ, அவ்விருணிவிருத்தியின்பொருட்டு அச்சூரியன் மற்றொன்றின் உதவியை யபேக்ஷிப்பதில்லையோ அங்ஙனமே சுத்தசத்துவத்தின் பரிணாமமாதலின் வியாபகமும் பிரகாசமுமாகிய பிரஹ்மஞானமானது தனதுற்பத்திமாத்திரத்தானே காரியத்தோடு அஞ்ஞானத்தை நாசஞ்செய்து அத்துவிதீயப் பரமான்மதத்துவத்தைப் பிரகாசஞ்செய்கின்றது. காரியத்தோடு அவ்வஞ்ஞானத்தை நிவிர்த்திப்பதில் மற்றொன்றின் உதவியை யபேக்ஷிக்கின்றதில்லை. ஈண்டு, 'தத்ஜ்ஞாநம் பரம் ப்ரகாஶயதி' என்னுமிவ்வசனத்தால் அத்துவிதீய சுயம்பிரகாசப் பிரஹ்மத்திற்கு ஞானத்தாற் செய்யப்பட்ட பிரகாசியத்தன்மைகூறப்பட்டதும், அஞ்ஞானவடிவ ஆவரண நிவிருத்திபூர்வக பிரஹ்மத்தினபிவியத்தி (விளக்கம்) மாத்திரமென்றறிக. வேதாந்தசாத்திரத்தில் இதையே விருத்திவியாப்தி என்னும் பெயராற் கூறுப. 'அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம் ஜ்ஞாநேந து தத் அஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந:' என்னுமிவ்விரண்டு வாக்கியங்களால் ஸ்ரீபகவான் அஞ்ஞானத்திற்கு ஆவரணத்தன்மையும் ஞானத்தாற் கேடாந்தன்மையுங் கூறியருளியதால் அவ்வஞ்ஞானத்திற்கு நியாயமதத்தார்கள் உடன்பட்டிருக்கும் ஞானபாவ வடிவத்தன்மை நிராகரித்தருளப்பட்டதாம். என்னை, அபாவமானது ஒரு வஸ்துவையும் மறைக்காது ஞானபாவம் அந்த ஞானத்தானிவிருத்தியுமாகாது. உள்பொருள்கட்கே தம்முள் நாசப்படுந்தன்மை நாசப்படுத்துந்தன்மை பொருந்தும். ஆதலின், ஞானபாவம் அஞ்ஞானமென்பதில்லை; மற்றோ, யான் அஞ்ஞானி யான் என்னையு மன்னியரையு மறியேன் என்பன முதலிய சாக்ஷிவடிவப் பிரத்தியக்ஷத்தாற் பெறப்பட்ட உளதாம்வடிவமே அஞ்ஞானமாம். 'யேஷாம் தேஷாம்' என்னு மிப்பன்மை முடிபேய்ந்த சாமானியார்த்த வாசகமாகிய எது அது என்னும் இவ்விரண்டு சொற்களால் ஸ்ரீபகவான் பிராஹ்மணர் முத

லிய உத்தம ஜாதிகளாலும், உத்தமவாசிரமங்களாலுந்தான் அவ்வான்மஞான மடையப்படும். அவர் ஞானத்தாற்றான் அஞ்ஞானநிவிருத்தியுமாம். வேறு ஜாதியாலும் வேறு ஆசிரமிகளாலும் ஆன்மஞானமடையப்படாது. அங்ஙனமே ஞானத்தால் அஞ்ஞானநிவிருத்தியுமாகாது. என்றிவ்வாறுபய நியமமின்மையைக் கூறியருளினர். மற்றோ, சர்வ ஜாதிகளுக்கும் அங்ஙனமே சர்வ ஆசிரமங்களுக்கும் சிரவணமுதலிய சாதனங்களால் ஆன்மஞானப்பிராப்தியும் அங்ஙனமே ஞானத்தால் அஞ்ஞான நிவிருத்தியும் அமையும். இவ்வார்த்தை சுருதியினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. தத்யோ யோ தேவாநாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ ததபவத் ।
ததர்ஷீணாம் ததா மநுஷ்யாணாம் ॥

(பொ-ள்.) தேவதைகளுக்குள் எவ்வெத்தேவதை இவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தை யான் பிரஹ்மம் எனத் தனது ஆன்மவடிவமா யறிகிறதோ, அவ்வத்தேவதை அஞ்ஞானநிவிருத்தி பூர்வகமாய் பிரஹ்மவடிவமேயாகின்றது. அங்ஙனமே இருஷிகளுக்குள் எவ்வெவர்கள் இவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தைத் தமது ஆன்மவடிவமா யறிந்தனர்களோ அவ்வவ்விருஷிகள் அஞ்ஞான நிவிருத்திபூர்வகமாய்ப் பிரஹ்மவடிவமேயாகின்றார்கள். அங்ஙனமே, மனுஷியர்களுக்குள் எவ்வெவ் மனிதர்கள் இவ்வத்விதீயப் பிரஹ்மத்தை தமது ஆன்மவடிவமாயறிந்தனர்களோ அவ்வவ் மநுஷியர்கள் அஞ்ஞானநிவிருத்தி பூர்வகமாய்ப் பிரஹ்மவடிவமேயாகின்றார்கள். என்பது முதலிய சுருதிகள் மநுஷியமாத்திரத்திற்கே ஆன்மஞானப் பிராப்தியும் அவ்வான்மஞானத்தால் மோக்ஷப்பிராப்தியுமாமென்று கூறுகின்றன. ஆதலின், ஆன்மஞானத்திலும் அவ்வான்மஞானத்தாலாம் மோக்ஷப்பிராப்தியிலும் உத்தமஜாதியாசிரமங்களின் நியமம் சிறிதளவுமில்லை; மற்றோ, அவ்வான்மஞான மடைதற்குச் சாதனவடிவமாகிய சிரவணத்திலே நியமமுளது. ஆண்டுப் பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியாகிய மூன்று வருணத்தார்களும் வேத வாக்கியங்களின் சிரவணத்தால் ஆன்மஞானஞ் சம்பாதிக்கத்தக்கவர்கள். ஏனைய சூத்திரர் முதலியோர்களோ அத்துவிதீயத்தைக் கூறும் புராண முதலியவைகளின் சிரவணத்தால் அவ்வான்மஞானஞ் சம்பாதிக்கத்தக்கது. இச்சிரவண நியமத்தின் பிரக்கிரியை ஆத்மபுராணத்தின் ஏழாவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறினும். ஈண்டு, 'அஜ்ஞாநேநாவ்ருதம் ஜ்ஞாநம்' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் ஆன்மாவினிடத்தில் அஞ்ஞானத்தாலுளதாய மறைப்பைக் கூறியருளினர். 'ஜ்ஞாநேந து ததஜ்ஞாநம் யேஷாம் நாஶிதமாத்மந:' என்னு மிவ்வசனத்தால் ஆன்மஞானத்தால் ஆவரண நிவிருத்தியைக்கூறியருளினர். அவ்வஞ்ஞானத்தாலுண்டாகிய மறைப்புமிருவகைத்தாம். ஒன்றோ அசத்துவாபாதக ஆவரணமாம். ஏனையதோ, அபானுபாதக வாவரணமாம். அவ்வாவரணம் இருவகைத்தாவதேபோல அவ்வான்மஞானமு மிருவகைத்தாம். அவற்றுள் ஒன்று பரோக்ஷஞானமாம்; மற்றொன்று, அபரோக்ஷஞானமாம். அவற்றுள் அவாந்தரவாக்கியத்தாலுண்டாவது பரோக்ஷமாம்; மகாவாக்கியத்தாலுண்டாவது அபரோக்ஷமாம். அவற்றுள் தத், துவம், பதார்த்த வடிவமாகிய சீவேசுரர்களின் சொரூபமாத்திரத்தைக் கூறும் வாக்கியம் அவாந்தரவாக்கியமெனப்படும். சத்தியம்ஞானம்அனந்தம் பிரமம் என்பது முதலிய வாக்கியங்களேபோலும். சீவேசுரர்களின் அபேதத்தைக் கூறும் வாக்கியம் மகாவாக்கியமெனப்படும். தத்துவமசி அகம்பிரஹ்மாஸ்மி என்பது முதலிய வாக்கியங்களேபோலும். அவற்றுள், பிரஹ்மமில்லை என்னும் பிரதீதியை யுண்டுபண்ணும் முதலாவதாகிய அசத்துவாபாதக ஆவரணமோ பரோட்ச சாதாரணப் பிரமாணசந்நிய ஞானத்தானே நிவிருத்தியாம். என்னை, எங்ஙனம் மலையில் புகைவடிவ ஏதுவைக் காண்பதால் இம்மலை தீயுடைத்து என் மலையில் தீயில்லை னுமித்தன்மைய அநுமிதி வடிவ பரோக்ஷஞானந் தோற்றினும் மலையில் தீயில்லை

என்னும் பிராந்தி நிவிருத்தியாகிறதோ அங்ஙனமே சத்தியஞான மனந்தமாகிய பிரஹ்மமுளது என்னும் வாக்கியத்தால் பிரஹ்மத்தின் பரோக்ஷ நிச்சயமுண்டான போதிலும் பிரஹ்மம் இல்லை என்னும் பிராந்தி நிவிருத்தியாகின்றது. பிரஹ்மமுளதாயினும், அது எனக்குத் தோற்றவில்லை என்னும் பிராந்தியை யுண்டாக்குவது அபானுபாதகாவரணமாம்; அதுவோ யான் பிரஹ்மஸ்வரூபம் என்னும் அபரோக்ஷஞானத்தானே நிவிர்த்தியாகின்றது. பரோக்ஷஞானத்தால் அபானுபாதகாவரண நிவர்த்தியாவதில்லை. யான் பிரஹ்மஸ்வரூபம் என்னும் ஞானம் வாக்கியத்தாலுண்டாயினும், பத்தாமவன் நீ யாகின்றாய் என்னும் வாக்கியத்தாலுண்டாகும் ஞானம்போல அபரோக்ஷவடிவமேயாம். இது சர்வ வேதாந்த சாஸ்திரங்களிலும் நிச்சயமானதாம். (16)

(அ-கை.) ஹே பகவன்! அவ்வான்மஞானத்தால் பரமான்ம தத்துவம் பிரகாசமாயின் அடையப்படும் பலன் யாது? என்றர்ச்சுனன் ஆசங்கிப்ப ஸ்ரீபகவான் அவ்வான்மஞானத்திற்கு விதேகமுத்திவடிவபலமாம் எனக் கூறியருளுகின்றார்.

சு-ம். தத்புத்தயஸ்ததாத்மாநஸ்தந்நிஷ்டாஸ்தத்பராயணா: ।
கச்சந்த்யபுநராவ்ருத்திம் ஜ்ஞாநநிர்தூதகல்மஷா: ॥ (17)

ப-ம். 1 தத்புத்தய: 2 ததாத்மாந: 3 தந்நிஷ்டா: 4 தத்பராயணா: 7 கச்சந்தி 6 அபுநராவ்ருத்திம் 5 ஜ்ஞாநநிர்தூதகல்மஷா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவனுடையபுத்தி பரமான்மாவிலோ எவனுடைய வான்மாப் பரப்பிரஹ்மமோ எவனுக்குப் பரமான்மாவில் நிஷ்டையோ எவனுக்குப் பரமான்மாவே யடையத்தகுமோ எவனுடைய புண்ணியபாவகருமம் ஞானத்தானிவிருத்தியானதோ அவ்வித்துவானாகிய சந்நியாசி மறித்தும் வாராத்தன்மையை யடைகின்றான். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஞானத்தாற் பிரகாசிதமாகிய சச்சிதானந்த கனப் பரமான்மதத்துவத்தில் வெளிவிஷயத் தியாகபூர்வகமாய் விவேகமுதலிய சாதனங்களின் பரிபக்குவத்தால் பரியவசானத்தையடைந்த அந்தக்கரணத்தின் சாக்ஷாத்காரவடிவ விருத்தியையுடையவன் அப்புத்தியெனப்படுவன். அதாவது, எவன் எப்போதும் நிருவிகற்ப சமாதியுடையவனே என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! 'தத்புத்தய:' என்னும் வாக்கியத்தால் சீவனே விருத்திவடிவ ஞானாசிரயன் எனத் தோற்றுகின்றனன். பரப்பிரஹ்மமோ அவ்விருத்திவடிவ ஞானத்தின் விஷயமெனத் தோற்றுகின்றது. ஆதலின், சீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் தம்முள் அறிவது அறியப்படுவதாகிய பேதம் அவசியமாம். ஆண்டு, ஞானாசிரயம் அறிவது ஞானவிஷயம் அறியப்படுவதாம்.

சமாதானம்:—ஸ்ரீபகவானருளுகின்றார். 'ததாத்மாந:' என ஹே அர்ச்சுன! அப்பரப்பிரஹ்மமே ஆன்மா எவனுக்கோ அவ்வித்துவான் அவ்வடிவினன் எனப்படுகின்றனன். ஆதலின், மாயையாற் கற்பிக்கப்பட்ட அறிவது அறியப்படுவதாந் தன்மை உண்மையாகிய அபேதத்திற்கு விரோதியாகாதாம்.

சங்கை:—ஹே பகவன்! இவ்வித்துவானாகிய புருஷனுக்குத் ததாத்மானன் என்னும் விசேஷணந் தங்களாற் கூறியருளப்பட்டது. அது பயனற்றதாம். ஏனெனின், எவ்விசேஷணம் இவ்வித்துவத் புருஷனை அஞ்ஞானிபுருஷர்களினின்றும் வேறுபடுத்துமோ அதுவே இவனுக்குப் பயனுடையதாம். அவ்வேறுபடுத்துந் தன்மை 'அவ்வடிவினன்' என்னும் விசேஷணத்திலமையாது உண்மையில் அஞ்ஞானிபுருஷனும் பரமான்மவடிவமேயாதலின்,

சமாதானம்:—ஹே அர்ச்சுன! 'அவ்வடிவினன்' என்னும் விசேஷணத்திற்குத் தேகாதிகளிடத்து ஆன்மபுத்தியை நீக்குவதிற் கருத்தாம். ஈண்டிஃது அபிப்பிராயமாம். அஞ்ஞானியோ உண்மையில் பிரஹ்மரூபமாயினும் அப்பிரஹ்மத்தினிடத்து ஆன்மபுத்தி செய்வதின்றாம்; மற்றோ, அநான்மவடிவ தேகாதிகளிடத்திலேயே ஆன்மாபிமானம் பண்ணுகின்றான். ஆதலின், அவ்வஞ்ஞானி அவ்வடிவினன் எனக் கூறப்படான். ஞானமுடையவனோ அவ்வநான்மவடிவ தேகாதிகளில் ஆன்மாபிமானஞ்செய்வதில்லை. மற்றோ, அப்பிரஹ்மத்தின்கண்ணே ஆன்மபுத்திசெய்கின்றான் ஆதலின், அந்த ஞானமுடைய புருஷனே அவ்வடிவினன் என்னும் பெயராற் கூறப்படுவான். படவே அவ்வடிவினனென்னும் ஞானியின் விசேஷணம் பயனுடைத்தாம்.

சங்கை:—ஹே பகவன்! இலௌகிக வைதிக கருமங்களின் அனுஷ்டான வடிவ விக்ஷேபமிருக்கும்போது அத்தேகாதிகளின் அபிமான நிவிருத்தியாவது யாங்ஙனம் மற்றோ ஆகாதாம்.

சமாதானம்:—ஸ்ரீபகவானருளுகின்றார். 'தந்நிஷ்டா:' என ஹே அர்ச்சுன! அச்சர்வகருமங்களின் அநுஷ்டானவடிவ விக்ஷேபத்தை நிவிருத்தித்து அப்பிரஹ்மத்திலேயே நிலைத்திருத்தல் எவர்கட்கோ அவர்கள் அந்நிஷ்டர்களாவர். அதாவது எவர்கள் அச்சர்வகருமங்களையுந் தியாகம்பண்ணி பிரஹ்ம விசாரமொன்றின்கண்ணே பராயணராகின்றார்களோ என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! அந்தவந்தச்சுவர்க்க முதலிய பலவிஷயகாரகமுளதாக அவ்வப் பலசாதனவடிவ கருமத்தின் றியாகம் எவ்வாறாம் மற்றோ ஆகாதாம்.

சமாதானம்:—ஸ்ரீபகவானருளுகின்றார். 'தத்பராயணா:' என ஹே அர்ச்சுன! ஒரே பரப்பிரஹ்மத்தை யடையுந்தகுதி எவர்கட்கோ அவர்கள் அப்பராயணர்கள். அதாவது எவர்கட்கு அச்சுவர்க்க முதலிய பலேச்சையில்லையோ என்பதாம். ஈண்டு, 'தத்புத்தய:' என்னும் பதத்தால் ஸ்ரீபகவான் பிரஹ்மசாக்ஷாத்காரத்தைக் கூறியருளினர். 'ததாத்மாந: தந்நிஷ்டா: தத்பராயணா:' என்னும் மூன்று பதங்களால் ஸ்ரீபகவான் அப்பிரஹ்மஞானத்தின் சாதனத்தைக் கூறியருளினர். அவற்றுள், 'ததாத்மாந:' என்னும் பதத்தால் ஸ்ரீபகவான் தேகமுதலிய அநான்மபதார்த்தங்களில் ஆன்மாபிமானவடிவ விபரீதபாவனையின் நிவிருத்தியைப் பலமாகவுடைய பரிபக்குவமாகிய நிதித்தியாசனத்தைக் கூறியருளினர். 'தந்நிஷ்டா:' என்னும் பதத்தால் சர்வகருமங்களின் தியாகபூர்வகப் பிரமாண பிரமேயத்துள்ள அசம்பாவனை நிவிருத்தியைப் பலமாகவுடைய பரிபக்குவ சிரவண மனனவடிவ வேதாந்தவிசாரத்தைக்கூறியருளினர். 'தத்பராயணா:' என்னும் பதத்தால் இவ்வுலக பரவுலக விஷய சுகத்தில் தீவிர வைராக்கியத்தைக் கூறியருளினர். அவற்றுள், பின் பின்னுள்ள சாதனத்திற்கு முன் முன்னுள்ள சாதனங் காரணமாம். பிரஹ்மசாக்ஷாத்காரத்திலோ நிதித்தியாசனங் காரணம் அதில் சிரவணமனனவடிவ வேதாந்தவிசாரங் காரணம். அதில் வைராக்கியம் காரணம், இவ்வாறு தத்புத்திகள், தத்வடிவினர்கள், தன்னிஷ்டர்கள், தத்பராயணர்கள் என்னுமிந்நான்கு விசேஷணத்தோடுகூடிய சந்நியாசிகளோ மீண்டுஞ் சரீரசம்பந்தமின்மைவடிவ அபுனராவிருத்தியையடைவர்; அதாவது விதேகமுத்தியை யடைவர் என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! ஒருதரம் முக்தனாயினும் அவ்வித்வானுக்கு மீண்டும் தேகசம்பந்தமில்லாததென்னை?

சமாதானம்:—ஸ்ரீபகவானருளுகின்றார். 'ஜ்ஞாநநிர்தூதகல்மஷா:' யான் பிரஹ்மஸ்வரூபம் என்னும் ஞானத்தால் மூலத்தோடு நிவிருத்தியடைந்தது மறித்தும் தேகசம்பந்தத்தின் காரணவடிவ புண்ணிய பாவ கல்மிஷம் எவனுக்கோ

அவன் ஞான நிர்த்தூத கல்மிஷனுவன். அத்தன்மைய வித்வத் புருஷன் மறித்துஞ் சரீரத்தையடையான். ஆன்ம சாக்ஷாத்காரத்தால் அவ்வித்துவானாகிய புருஷனுக்கு அனுதியாகிய அஞ்ஞான மொழியவே அஞ்ஞானத்தின் காரியமாகிய புண்ணியபாவமும் நாசமாகின்றது. அதன் வசத்தானே இச்சீவனுக்கு மறித்தும் தேகாந்தரப் பிராப்தியாகின்றது. அது நாசமாகவே அவனுக்கு மறித்தும் வேறு தேகப் பிராப்தியாதல் யாங்ஙனம்? மற்றேே, ஆகாதாம் என்பது கருத்தாம். (18)

(அ-கை.) ஆண்டு 'தஜ்ஜ்ஞாநநிர்தூதகல்மஷா:' என்னும் பூர்வ சுலோகத்தில் தேகம் விழுந்ததின்பின்னர் ஆன்மஞானத்திற்கு விதேக கைவல்லிய வடிவபலன் கூறியருளினர். இப்போது ஸ்ரீ பகவான் பிராரப்த கருமவசத்தால் அத்தேக முள்ளபோதும் அவ்வான்மஞானத்திற்குச் சீவன் முத்திவடிவ பலத்தைக் கூறியருளுகின்றார்.

சு-ம். வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஶிந: ॥ (18)

ப-ம். 2 வித்யாவிநயஸம்பந்நே 3 ப்ராஹ்மணே 4 கவி 5 ஹஸ்திநி 7 ஶுநி 6 ச 11 ஏவ 9 ஶ்வபாகே 8 ச 1 பண்டிதா: 10 ஸமதர்ஶிந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஞானமுடைய புருஷன் வித்திபாவினயத்தோடு கூடிய பிராஹ்மணனிடத்திலும் கோவின் கண்ணும் யானையிடத்தும் நாயிடத்தும் சண்டாளனிடத்தும் சமபார்வையுடையவனுகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வேதார்த்தத்தின் உண்மைஞான வடிவம் வித்தையாம்; அல்லது, அத்துவிதீய பிரஹ்மப்பிரதிபாதனஞ்செய்யும் பிரஹ்மவித்தைவடிவம் வித்தையாம்; அதையடைந்தும்அகங்காரமின்மை விநயமாம். அவ்விரண்டோடு கூடிய எவரினும்மேலாகிய சாத்துவிகன் பிராஹ்மணன் அவனினும் மத்திமமாய்ச் சமஸ்காரமின்றிய இராஜசமுடையது கோ மிகுந்த தமோகுணமுடையது யானை, நாய், சண்டாளன் அதாவது முறைப்படி உத்தம மத்தியம அதமவடிவ சாத்துவிக முறைப்படி ராசததாமதம் என்னும் மேல் கீழாகிய பிராணிகளை அந்த ஞானி சமமாய்ப் பார்க்கின்றான் என்பதாம். அதாவது, அச்சத்துவாதி குணங்களாலும் அக்குண ஜந்நிய சமஸ்காரங்களாலும் பரிசம் பண்ணப்படாத பரப்பிரஹ்மத்தின் பெயர் சமம் அப்பிரஹ்மத்தை வித்துவான் எல்லாவிடத்துங் காண்கின்றான் என்பதாம்; இவ்வார்த்தை ஏனைய நூல்களிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. அஸ்தி பாதி ப்ரியம் ரூபம் நாம சேத்யம்ஶபஞ்சகம் ।
ஆத்யம் த்ரயம் ப்ரஹ்மரூபம் ஜகத்ரூபம் ததோ த்வயம் ॥

(பொ-ள்.) சத்து சித்து ஆநந்தம் நாமம் ரூபம் இவ்வைவகை யம்சம் யாண்டும்வியாபாகம், அவற்றுள் முந்தியமூன்றம்சமும் பிரஹ்மரூபமாம்; அந்திய இரண்டம்சமும் உலகரூபமாம். இங்ஙனம் வித்துவான் எவ்விடத்தும் சச்சிதாநந்த வடிப் பிரஹ்மத்தையே பார்க்கின்றான். மிகுந்த சுத்தமாகிய கங்கை நீரிலும், தடாக நீரிலும், மிகுந்த நிஷித்தமாகிய கள்ளின்கண்ணும், மிகுந்த அசுத்தமாகிய மூத்திரத்தும் பிரதிபிம்பித்த சூரியன் அந்நீர் முதலியவைகளின் குணதோஷ சம்பந்தமுடையவனுகாததேபோலத் தனது சிதாபாசவாயிலாக மேல்கீழாகிய சர்வவுபாதிகளிலும் பிரதிபிம்பித்த பிரஹ்மத்தையும் அவ்வுபாதிகளின் குணதோஷங்கள் சம்பந்தியா என்றிவ்வாறு நிரந்தரம் விசாரஞ்செய்து அவ்வித்துவான் யாவற்றிலுஞ் சமபார்வையால் இராகத்துவேஷமின்றிப் பரமாநந்தத்தின் ஸ்பூர்த்தியால் சீவன் முத்திச் சுகத்தையே எப்போது மனுபவிக்கின்றான். (18)

(அ-கை.) ஹே பகவன்! ஒன்றற்கொன்று விஷம சுபாவத்தையுடைய சாத்துவிக ராசத தாமதர்களாகிய பிராணிகளிடத்தில் சமத்துவ புத்திபண்ணுவது நிஷேதம் தருமசாத்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுக்கெளதம ஸ்மிருதி, 'தஸ்ரூநெஜாஞுஸவதி ஸஜாஸஜாஞூாம் விஷஜஸெவாஜாதஃ' (போ-ள்.) நான்கு வேதத்தின் ஞானவடிவத்தன்மையாலும் சதாசாரப் பிரவிருத்தித்தன்மையாலுஞ் சமமாகிய இரண்டு பிராஹ்மணர்களில் எவன் ஒருவனை வஸ்திராலங்காரம் அன்ன முதலியவைகளின் தான பூர்வகமாய் எவ்வண்ணம் பூசித்தானோ, அவ்வண்ணம் மற்றொரு பிராஹ்மணனுக்குச் செய்யாது குறைத்துச்செய்தனனோ ஒரு பிராஹ்மணன் நான்கு வேதத்தையுங் கூறுபவன் சதாசாரமுடையவன். மற்றொருவன் சிறிது வேதங்கூறுபவன் சதாசாரமின்றியவன். இவர்களை எவன் வஸ்திராலங்காரம் அன்னமுதலிய தான பூர்வகம் சமானமாய்ப் பூசிக்கின்றானோ, அப்பூஜை பண்ணும் புருஷனுடைய அன்னத்தைச் சிஷ்ட புருஷன் போஜனஞ் செய்யக்கூடாது. அன்றியும் சமபுருஷர்களுக்கு விஷமபூஜையும், விஷம புருஷர்களுக்குச் சமபூஜையும் பண்ணுவோனுக்குத் தருமசாஸ்திரத்தில் தோஷப்பிராப்தியும் கூறப்பட்டிருக்கிறது. ஆண்டுத் தருமசாஸ்திரம் 'வூஜயிதாவுதிவத்தி விஸெஷகூவஜ யஜஜாஞநாஹீயதெ ஊதி' (போ-ள்.) பூஜைபண்ணும் புருஷன் சமவிஷமத்தன்மையை விசாரியாது தருமம், தனம் இன்றியவனாகின்றான். என எப்போதும் பிராஹ்மணன், கோ, யானை, நாய், சண்டாளன் முதலிய சர்வ மேற்கீழாகிய பதார்த்தங்களிடத்தில் சமபுத்திபண்ணும் பிரஹ்மஞானியாகிய சந்நியாசி திரவியத்தையும் அன்னத்தையும் கிரகணம்பண்ணுதலின், அவனிடத்தில் உண்ணப்படாத அன்னத்தன்மையுந் தனமின்மையும் இயல்பாகவேயுளது. ஆயினும் அச்சமபுத்தியால் அச்சந்நியாசியிடத்தும் தருமத்தின் நாசவடிவ தோஷம்அவசியமுளதாம். அன்றியும் உண்மையாய் ஆராய்ந்துபார்க்கினோ ("அவனுடைய அன்னம் போஜனஞ்செய்யத்தக்கதன்று") என்னும் வசனத்தாற்கூறிய உண்ணத்தகாத வன்னத்தையும் அச்சமபுத்தியுடைய புருஷனிடத்து அசுசித்தன்மையால் பாவோற்பத்திக்கே உபலக்ஷகமாம். அப்பாவோற்பத்தி அச்சந்நியாசியிடத்தும் சம்பவித்தல்கூடும். தவமுடையோர்க்குத் தவமே தனமாதலின், அத்தவவடிவ தனத்தின் நாசமும் அவரிடத்துச் சம்பவமாதல்கூடும். கூடவே எல்லாவிடத்தும் சமதரிசியாகிய பண்டிதபுருஷன் சீவன்முத்தனவன் எனத் தாங்கள் கூறியருளியது சம்பவியாது என்று அர்ச்சுனனுசங்கிப்ப ஸ்ரீபகவானருளுகின்றார்.

சு-ம். ஊஹைவ தைஜிதஃஸுமெ்ா யெஷாம் ஸாஜெ்யூ ஸ்திதம்ஜநஃ।
நிஜெ்ாஷம்ஹி ஸஜம் ப்ரஹ்ம தஸ்ாஜ்ஹணி தெஸ்திதாஃ॥ (19)

ப-ம். 6 ஊஹ 7 ஸவ 5 தைஃ 9 ஜிதஃ 8 ஸமஃ 1 யெஷாம் 3 ஸாஜெ்யூ 4 ஸ்திதம் 2 ஜநஃ 12 நிஜெ்ாஷம் 10 ஹி 13 ஸஜம் 11 ப்ரஹ்ம 14 தஸ்ாத் 16 ப்ரஹ்மணி தெ 17 ஸ்திதாஃ

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷனுடைய மனம் பிரஹ்மபாவத்தில் நிலைத்திருக்கின்றதோ அப்புருஷன் இச்சீவிதகாலத்திலே இத்துவிதப் பிரபஞ்சத்தைக் கடந்தவனாகின்றான்; எதனால் அப்பிரஹ்மம் நிர்த்தோஷமாமோ சமமோ அதனால் அச்சமத்தைக் காண்பவன் அப்பிரஹ்மத்தின்கண்ணே நிலைக்கின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஒன்றற்கொன்று விஷமசுபாவமுடைய சர்வபூதங்களிடத்தும் பிரஹ்மம் சச்சிதானந்தவடிவத்தால் சமமாகவேயிருக்கின்றது. அத்தன்மைப் பிரஹ்மபாவத்தில் எவ்வித்துவானுடைய சுத்தமனம் நிலைத்ததோ அச்சமதரிசியாகிய பண்டிதன் இச்சீவனகாலத்திலே இத்துவிதப்பிரபஞ்சத்தைக் கடந்தவனவன். அதாவது, இச்சர்வ துவைதப்பிரபஞ்சத்தையும் பாதம் பண்

ணினவன் என்பதாம். ஜீவனகாலத்திலே அவ்வித்துவான் இத்துவிதப்பிரபஞ்சத்தைக் கடந்தனனென்னின் இத்தேகம் விழுந்தபின்னர் அவ்வித்துவான் இத்துவைதப்பிரபஞ்சத்தைக் கடக்கின்றான் என்பதில் கூறற்பாலதென்னையுளது? எக்காரணத்தால் அப்பரப்பிரஹ்மம் நிர்த்தோஷமும் சமமுமாமோ அதாவது அப்பரப்பிரஹ்மம் ஜன்மமரணமுதலிய விகாரமின்றியதும் கூடஸ்த நித்தியவேகரச அத்துவிதிய ரூபமுமாமோ; அக்காரணத்தால், அவ்வித்துவானாகிய புருஷன் அவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தினிடத்தில் அபேதரூபமாய் நிலைக்கின்றான். ஈண்டு ஸ்ரீபகவானுடைய திருக்கருத்திதுவாம்:—வஸ்துவினிடத்தில் துஷ்டத்தன்மையானது இருவகையாலாம் ஒன்றோ இயல்பாய் துஷ்டமின்றிய பொருளாயினும் யாதானுமொரு துஷ்டவஸ்துவின் சேர்க்கையால் துஷ்டத்தன்மையதாகும். இயல்பானே தோஷமின்றிய கங்கைநீர் மூத்திரவிடத்தின்சேர்க்கையால் துஷ்டமாகின்றதேபோலும்; மற்றதோ வஸ்துவினிடத்தில் இயல்பானே துஷ்டத்தன்மையாம். மூத்திரமுதலிய மலினபதார்த்தங்களில் இயல்பானே துஷ்டத்தன்மையிருப்பதேபோலும் ஆண்டு இயல்பாய்த் தோஷமுடைய நாய் முதலியவைகளைப் பரிசஞ்செய்துகொண்டிருக்கும் பிரஹ்மம் அவைகளின் தோஷங்களால் அவசியந் துஷ்டத்தன்மையையடையும் என விசாரமின்றிய மூடபுருஷர்கள் அவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தினிடத்தில் அத்துஷ்டத்தன்மையை சம்பாவனைபண்ணினும் அப்பிரஹ்மம் சர்வதோஷங்களுமின்றியதாம் அப்பிரஹ்மம் ஆகாசம்போல அசங்கமாதலின் ஒரு தோஷத்தின் பரிசமுமற்றதாம்.

ஆ-சு. [illegible] ।
[illegible]

[illegible] ।
[illegible] ॥

(போ-ள்.) இவ்வான்மதேவர் அசங்கர் ஆதலின் இவர் ஒருபொருளோடுஞ் சம்பந்தப்படார். எங்ஙனம் சர்வ வுலகத்தையும் பிரகாசிப்பிக்கும் சூரியபகவான் பிரகாசிப்பிக்கப்பட்ட கடமுதலிய பதார்த்தங்களின் தோஷத்தோடு சம்பந்தப்படுவதில்லையோ அங்ஙனமே சர்வபூதங்களின் அந்தரான்மவடிவ ஏக அத்துவிதீயப் பிரஹ்மமும் தேக முதலியவைகளின் துக்கமுதலிய தருமங்களோடு சம்பந்தத்தையடைவதில்லை. ஆதலின் துஷ்டமான வுபாதிகளின் சேர்க்கையால் ஆன்மாவினிடத்துத் துஷ்டத்தன்மை சம்பவியாது. அங்ஙனமே காமாதி தருமமுடைமையால் அவ்வான்மதேவரிடத்தில் இயல்பாகவும் அத்துஷ்டத்தன்மை பொருந்தாது என்னை, அக்காமாதிகள் ஆன்மாவின் தருமங்களாயிடினன்றோ அவைகளால் ஆன்மாவில் தானாகவே துஷ்டத்தன்மையுண்டாம்; ஆனால், அவைகள் ஆன்மாவின் தருமங்களன்று. மற்றோ, காமம் சங்கல்பம் விசிகிச்சை என்னு மிச்சுருதியில் அக்காமாதிகளனைத்தும் அந்தக்கரணத்தின் தருமமெனக் கூறப்படுகின்றன ஆன்மாவிற்கொரு தருமமுங் கூறவில்லை. மற்றோ, சாக்ஷி சேதாகேவலோ நிர்க்குணமும், என்னு மிச்சுருதியால் ஆன்மாச் சர்வ தருமங்களுமின்றிய நிர்க்குணமெனக் கூறப்படுகிறது. இவ்வாறு சர்வதோஷங்களுமின்றிய பிரஹ்மத்தையே தனது ஆன்மவடிவமாயறிகின்ற ஜீவன் முத்தனாகிய சந்நியாசிக்குப் பாபோற்பத்தி தவவடிவ திரவியநாசம் தருமநாசம் என்பனமுதலிய தோஷங்களால் துஷ்டத்தன்மைகூறல் முற்றும் மாறுபாடாம். ‘[illegible]’ என்னும் முற்கூறியமிருதிவாக்கியமோ அஞ்ஞானியாகிய கிருகஸ்தனை விஷயஞ்செய்வதேயாம் அம்மிருதி பிரஹ்மஞானியாகிய சந்நியாசி விஷயகமன்று என்னை அம்மிருதியில் அவனுடைய அன்னம் அபோச்சியம் என்றிவ்வாறு முதலில் உபக்கிரமஞ்செய்து அதன்பின் இடையில்

'ஸமாஸமாப்⁴யாம் விஷமஸமே பூஜாத:' என்னும் வாக்கியங் கூறப்பட்டிருக்கிறது. அதன்பின்னர் பூசிப்பவன் சமத்தன்மை விஷமத்தன்மையை விசாரியாது தனமும் தருமமும் இன்றியவனுகின்றான் என்றிவ்வாறு உபசம்ஹாரம் பண்ணப்பட்டிருக்கின்றது அந்த உபக்கிரம உபசம்ஹார வாக்கியங்களால் அவித்துவானுகிய கிருகஸ்தனே தோற்றப்படுகின்றான். என்னை எவ்வஸ்து யாண்டுப் பிராப்தமாமோ அவ்வஸ்துவிற்கே நிஷேதம் ஆண்டாம்; அப்பிராப்தவஸ்துவின் நிஷேதமின்றாம். அந்நம், தனம், இவற்றின் சங்கிரகம் கிருகஸ்த புருஷனிடத்தே பிராப்தமாம் சந்நியாசியினிடத்து அஃதின்று. ஆதலின், சமத்திற்கு விஷமபூஜையும் விஷமத்திற்குச் சமபூஜையும் பண்ணுகின்ற புருஷனுடைய அந்நம் போஜனஞ் செய்யத்தகுதியதன்று. அவ்வாறு பூஜிப்பவன் தனம், தருமம், இன்றியவனுகின்றான் என்னு மிவ்விதமாகிய நிஷேதம் அவித்துவானுகிய கிருகஸ்தனிடத்தே அமைகின்றது அந்தப்பிரஹ்மஞானியாகிய சந்நியாசியினிடத்தின்று. அன்றியும் அன்னம் போச்சியம் என்னும் வாக்கியத்திற்கு முக்கியார்த்தத்தையொழித்து அவ்வாக்கியத்தால் பரபோற்பத்தியைக்கொள்வதும், தனம் என்னுஞ் சத்தத்திற்குச் சுவர்ண முதலிய முக்கியார்த்தத்தையொழித்து அச்சத்தத்தால்தவத்தைக்கொள்வதும்முற்றும் அசங்கதமாம்; இதனுலிப்பொருள்பெறப்பட்டது. எங்ஙனம் சுவர்ணமயமாகிய தேவதைகளின் பிரதிமைகளிடத்தும் அவற்றின் பொற்சிம்மாசனத்தும் சுவர்ண திருஷ்டியுடைய புருஷன் சமானத்தன்மையைக் காண்கின்றானே, சுவர்ண திருஷ்டியின்றிக் கேவலம் ஆகார (வடிவ) திருஷ்டியையுடைய பூஜை பண்ணும் புருஷன் அவ்விரண்டினிடத்து மிருந்த விஷமத்தன்மையைப் பார்க்கின்றானே அங்ஙனமே பிரஹ்மஞானியாகிய வித்துவான் அந்தப் பிராஹ்மணன் கோ, யானை, நாய், சண்டாளன் இவை முதலிய பதார்த்தங்களில் ஒரே பரிபூரணமாகிய பிரஹ்மத்தையேபார்க்கின்றான். அஞ்ஞானியோ அப்பதார்த்தங்களினிடத்தும் மிருந்த விஷமத்தன்மையைப் பார்க்கின்றான். ஆதலின், ஸ்மிருதியானது பிராந்தியாற் செய்யப்பட்ட நியூனதிகத்தன்மையை விஷயஞ்செய்கின்றது. 'வித்³யாவிநயஸம்பந்நே' என்னும் ஸ்ரீ பகவான் வாக்கியமோ பரமார்த்த வஸ்துவை விஷயஞ்செய்வதாதலின், அம்மிருதிக்கு ஈண்டு விரோதமின்றாம். (19)

(அ-கை.) எதனால் அப்பரப்பிரஹ்மம் நிர்த்தோஷமும் யாண்டும் சமமுமாமோ அதனால் அதனைத் தனது ஆன்மவடிவமாயுணர்ந்து அப்பிரஹ்மஞானியாகிய புருஷன் தானும் இராகத்துவேஷமின்றியிருக்கின்றான் என்னும் அர்த்தத்தை ஸ்ரீபகவான் இப்போது கூறியருளுகின்றார்.

சு-ம். ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம்ப்ராப்ய நோத்³விஜேத் ப்ராப்ய சாப்ரியம் ।
ஸ்தி²ரபு³த்³தி⁴ரஸம்மூடோ⁴ ப்³ரஹ்மவித்³ ப்³ரஹ்மணி ஸ்தி²த: ॥ (20)

ப-ம். 3 ந 4 ப்ரஹ்ருஷ்யேத் 1 ப்ரியம் 2 ப்ராப்ய 8 ந 9 உத்³விஜேத் 7 ப்ராப்ய 5 ச 6 அப்ரியம் 10 ஸ்தி²ரபு³த்³தி⁴: 11 அஸம்மூட⁴: 12 ப்³ரஹ்மவித் 13 ப்³ரஹ்மணி 14 ஸ்தி²த:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வித்துவானுகியபுருஷன் பிரியவஸ்துவையடைந்து சந்தோஷப்படுவதில்லை. அங்ஙனமே அப்பிரியவஸ்துவையடைந்து கிலேசப்படுவதில்லை. எக்காரணத்தால் அவ்வித்துவான் ஸ்திரபுத்தியோ மோகமற்றவனே பிரஹ்மஞானியோ பிரஹ்மத்தினிடத்திலே நிலைபெற்றவனே. (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சமதரிசனமுடைய வித்துவானுகிய சந்நியாசி சுகத்தைக்கொடுக்கும் பிரியவஸ்துவையடைந்து சந்தோஷப்படுவதில்லை. துக்கத்தைக் கொடுக்கும் அப்பிரிய வஸ்துவையடைந்து கிலேசப்படுவதில்லை. இவ்விரண்டை

யும் தனது பிராரத்தகருமத்தின் பலவடிவமாயறிந்து எப்போதும் ஏகரூபமாக வேயிருப்பன். இவ்வர்த்தமனைத்தும், 'ஊ:வெஷ்ட ந காஂக்ஷதி' என்னுஞ் சுலோகத்தில் முன்விரிவாய்க் கூறியருளப்பட்டன. பிரியாப் பிரிய வஸ்துவை யடைந்தும் சந்தோஷ விஷாதமின்மை என்பது முதலிய ஜீவன் முக்த புருஷனுடைய இயல்பாகிய சரிதத்தை முமுட்சு ஜனங்கள் பிரயத்தன வசமாய்ச் சம்பாதிக்கவேண்டும் என்பதை அறிவுறுத்தி யருளற்பொருட்டே ஸ்ரீ பகவான் 'நவ்ரஹஷ்யேத் ப்ரியம்ப்ராப்ய' என்னு மிரண்டுபதங்களினும் விதி வாசகமாகிய லிங் முயற்சியைக் கூறியருளினானன்றி சீவன்முக்தரிடத்து அவ்விதி வசனமின்றும். எல்லாவிடத்தும் அத்துவிதீயமாகிய ஆன்மாவைப்பார்க்கின்ற அறி ஞனுக்குத் தன்னிற் பின்னமாய்ப் பிரியாப்பிரிய வஸ்துப்பிராப்தியில்லை. உலகத் தில் தன்னிற் பின்னமாயறியப்பட்ட வஸ்துவே சந்தோஷ விஷாதத்திற்குக் காரணமாம். தனதான்மா ஒருவர் சந்தோஷ விஷாதத்திற்குங் காரணமாவதில்லை. ஆதலின், பிரியாப்பிரிய வஸ்துவையடைந்தும் அறிஞன் சந்தோஷ விஷாதத்தையடைவதில்லை என்பது கருத்து. இப்போது எவ்வத்துவிதீய ஞானத்தால் அவ்வித ஜீவன்முக்தனாகிய புருஷனுக்குச் சந்தோஷ விஷாதமடையப்படுவதில்லையோ சாதன பூர்வகமாய் அவ்வான்மஞானத்தைக் கூறியருளுகின்றார். 'ஸ்திரபுத்திரஸம்மூடோ ப்ரஹ்மவித் ப்ரஹ்மணிஸ்தித:' என. ஸ்திரமாக, சந்நியாச பூர்வகமாக வேதாந்த வாக்கியங் களின் விசார பரிபக்குவத்தால் சம்சயமில்லாமல் பிரஹ்மத்தினிடத்தில் புத்தி எவ னுக்கோ அவன் ஸ்திர புத்தியாம். அதாவது சிரவணத்தின் பலவடிவமாகிய பிர மாணத்திலுள்ள அசம்பாவனை நிவிருத்தி, மனனத்தின் பலவடிவமாகிய பிரமே யத்திலுள்ள அசம்பாவனைநிவிருத்தி என்னும் இவ்விரண்டு பலத்தையுமெவன் அடைகின்றானோ அவன் என்பதாம்.

சங்கை :— ஹே பகவன்! அவ்விரண்டசம்பாவனையுமின்றிய புருஷனுக்கு விபரீதபாவனைவடிவப் பிரதிபந்தத்தால் ஆன்மசாக்ஷாத்காரமுண்டாகாதன்றோ?

சமாதானம் :— ஸ்ரீ பகவான் நிதித்தியாசனத்தைக் கூறியருளுகின்றார். 'அஸம்மூடோ' என. ஆண்டு, அநான்மாகார விஜாதீய விருத்திகளின் வியவதானமின் றிய ஆன்மாகார சஜாதீய விருத்திப் பிரவாஹத்தின் பெயர் நிதித்தியாசனமாம். அதன் பரிபக்குவத்தால் விபரீதபாவனைவடிவ மோகமின்றிய புருஷன் அசம்மூட னவன். ஈண்டு, வேதாந்தநூல் சீவப்பிரஹ்மங்களின் அபேதத்தைக் கூறு கின்றதா அல்லது, பேதத்தைக் கூறுகின்றதா என்னும் ஐயப்பாட்டின் பெயர் பிரமாணகத அசம்பாவனையாம். இச்சீவான்மாப் பிரஹ்மவடிவமா, அல்லவா என் பது முதலியவையப்பாடுகளின் பெயர் பிரமேயகத அசம்பாவனையாம். தேக முத லியவைகளில் ஆன்ம புத்தியின் பெயர் விபரீதபாவனையாம். இவ்வசம்பாவனை விப ரீதபாவனைகள் ஆன்மஞானத்திற்குத்தடையாம். இவைகள் சிரவண மனன நிதித் தியாசனத்தால் நிவிருத்தியாங்கால் சர்வப் பிரதி பந்தங்களுமின்றியவனாய்ப் பிரஹ் மஞானியாகின்றான். அதாவது யான் பிரஹ்மவடிவம் எனப்பிரஹ்மத்தைத் தன தான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின்றான் என்பதாம். அதன் பின்னர் சமாதியின் பரிபக்குவத்தால் அவ்வறிஞன் அங்கிர்த்தோஷமாகிய சமப்பிரஹ்மத்தின்கண்ணே அபேதமாய் நிலைக்கின்றான். பிரஹ்மபின்னமாகிய பதார்த்தத்தினிலைப்பதில்லை. இவ்வாறு பிரஹ்மத்தின்கண் ணிலைத்த அவன் சீவன்முக்தனெனப்படுகின்றான். ஸ்திதப்பிரஞ்ஞனெனவும் படுகின்றான். அத்தன்மைய சீவன்முக்தனுக்குத் துவைதப் பிரபஞ்சப் பார்வையின்மையின் பிரியாப் பிரிய வஸ்துவடையப்படினும் சந்தோஷ விஷாதமில்லையெனக் கூறியருளியது தகுதியேயாம். சாதக முமுக்ஷுக்கட்கோ துவைததரிசனமுளதேனும் விஷயங்களின் தோஷதிருஷ்டியால் சந்தோஷ விஷா தம் பிரயத்தனத்தால் நீக்கற்பாலதாம்.

(அ-கை.) ஹே பகவன்! சத்தமுதலிய பாகிய விஷயங்களின் பிரீதியானது முன்னர் அநேக ஜன்மங்களில் அனுபவிக்கப்பட்டதாதலால், மிக்க வலியுடையதாதலின் அப்பாகிய விஷயங்களில் மனம் பொருந்திய புருஷனுக்குச் சர்வ திருஷ்ட சுகங்களின்றிய அலௌகிகப் பிரஹ்மத்தில் ஸ்திதமாதல் யாங்ஙனமாம்? மற்றேறு, ஆகாதாம் அன்றியும், பிரஹ்மம் பரமாநந்தவடிவமாதலின் பாகிய விஷயங்களின் பிரீதிநீக்கத்தால் அப்பிரஹ்மத்தில் அப்புருஷனுக்கு நிலைத்தல் சம்பவமாதல்கூடும் எனத் தாங்கள் கூறியருளுவதும் அசம்பவமாம். என்னை, அப்பிரஹ்மாநந்தம் அநுபவமாதலின்மையின், அப்பிரமாநந்தத்திற்குச் சித்தநிலைத்தற் கேதுவாந்தன்மை பொருந்தாது. அநுபவித்த ஆநந்தமே சித்தநிலைத்தற்குக் காரணமாம் என்று அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளுகின்றார்.

சு-ம். ப³ாஹ்யஸ்பர்ஶேஷ்வஸக்தாத்மா விந்த³த்யாத்மநி யத்ஸுக²ம் ।
ஸ ப்³ரஹ்மயோக³யுக்தாத்மா ஸுக²மக்ஷயமஶ்நுதே ॥ (21)

ப-ம். 1 ப³ாஹ்யஸ்பர்ஶேஷு 2 அஸக்தாத்மா 6 விந்த³தி 3 ஆத்மநி 4 யத் 5 ஸுக²ம் 7 ஸ: 8 ப்³ரஹ்மயோக³யுக்தாத்மா 10 ஸுக²ம் 9 அக்ஷயம் 11 அஶ்நுதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சத்தமுதலிய பாகிய விஷயங்களில் ஆசத்தியின்றிய புருஷன் அந்தக்கரணத்திலுள்ள சுகத்தையடைகின்றான். இச்சையற்ற பிரஹ்மயோகத்தைப்பொருந்திய மனமுடையோன் கேடிலாச் சுகத்தையும் அடைகின்றான். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுரோத்திரமுதலிய இந்திரியங்களாற் கிரகிக்கத்தக்க சத்தமுதலிய விஷயங்கள் அனான்மவஸ்துவின் தருமமானதால் பாகியமெனப்படுகின்றன. அத்தன்மைய சத்தமுதலிய வெளி விஷயங்களில் ஆசத்தியடையாத சித்தமுடைய புருஷன் திருஷ்ணையின்றியவனாதலின் மிக்க விரத்தனாய்த் தனதந்தக்கரணத்திலுள்ள வெளி விஷயங்களின் அபேக்ஷையின்றிய வுபசமவடிவ சுகத்தையே நிருமல அந்தக்கரணவிருத்தியால் அநுபவிக்கின்றான். இவ்வார்த்தை பாரதத்திலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. யச்ச காமஸுக²ம் லோகே யச்ச தி³வ்யம் மஹத்ஸுக²ம் ।
த்ருஷ்ணாக்ஷயஸுக²ஸ்யைதே நார்ஹத: ஷோட³ஶீம் கலாம் ॥

(பொ-ள்.) ஈண்டு, காமசந்நியசுகம் சுவர்க்கமுதலிய உலகங்களிலுள்ள மிகுந்த திவ்யசுகம் அனைத்தும் திருஷ்ணாநிவிருத்தியாற் றோன்றுஞ் சுகத்தின் பதினாறிலோர்பாகத்திற்குஞ் சமமாகாது. அல்லது, 'ஆன்மாவில்' என்னும் பதத்தால் பிரத்தியக்கான்மாவைக் கொள்ளும்பக்ஷத்தில் அவ்வாக்கியத்திற்குப்பொருள் செய்யத்தக்கது. துவம்பதார்த்தவடிவப் பிரத்தியக்கான்மாவினிடத்திலுள்ள சொரூபவடிவ சுகமோ சுழுத்தியவஸ்தையில் சர்வப் பிராணிகட்கும் அநுபவமாகின்றது. அச்சுகம் பாகியவிஷயங்களின் ஆசத்திவடிவப் பிரதிபந்தகவசத்தாற் றோற்றுவதில்லை. அச்சொரூபவடிவ சுகத்தை அறிஞன் பாகியவிஷயங்களின் ஆசத்தி அபாவத்தால் அடைகின்றான். அல்லது, அவ்வித்துவான் கேவலம் துவம்பதார்த்த ஆன்மாவின் சுகத்தையேயடைவதில்லை. மற்றேறு, தத்பதார்த்தத்தின் ஏகத்துவாநுபவத்தாற் பூரணசுகத்தையுமனுபவிக்கின்றான். இவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவான் 'ஸ ப்³ரஹ்மயோக³யுக்தாத்மா ஸுக²மக்ஷயமஶ்நுதே' எனக் கூறியருளினர். பரமான்மவடிவமாகிய பிரஹ்மத்தினிடத்திலுண்டாஞ் சமாதிவடிவமாகிய யோகத்திற்குப் பிரஹ்மயோகமெனப் பெயர். அதனோடுகூடிய ஆத்மா, அந்தக்கரணம் [illegible] பொருந்திய மனமுடை[illegible]
எவனுக்கோ அதாவது அதன்கண்[illegible]

பிரஹ்மயோக யுக்தான்மா எனப் பெயர். அல்லது, பிரஹ்மசத்தத்தால் தத்பதா
த்தங் கொள்ளற்பாலது. அத்தத்பதார்த்தவடிவப் பிரஹ்மத்தினிடத்தில் மக
வாக்கியார்த்தத்தின் அநுபவவடிவ சமாதி யோகத்தால் யுக்தமாயது, ஏகத்துவ
தையடைந்தது, துவம்பதார்த்தவடிவ ஆன்மா எவனுக்கோ அவன் பிரஹ்மயோ
யுக்த ஆன்மாவாவன். அத்தன்மைய வறிஞன் உத்பத்தி நாசமின்றிய தனது செ
ரூபவடிவ நித்தியசுகத்தையேயடைகின்றான். அதாவது, அவன் எக்காலத்து
சுகாநுபவவடிவமேயாகின்றான் என்பதாம். அந்நித்தியசுகம் உண்மையில் தத்து
சாக்ஷாத்காரத்தின்முன்னரும் அடையப்பட்டதேயாதலின், அவற்றின் பிராப்தி
பொருந்தாது; முன்னடையப்படாத வஸ்துவே பிராப்தியாம். ஆயினும், தத்து
சாக்ஷாத்காரத்தின்முன்னர் அந்நித்தியசுகம் அவித்தையான் மறைக்கப்பட்டிரு
தது; அதுவே அதனப்பிராப்தியாம். தத்துவ சாக்ஷாத்காரத்தால் அவ்வவித்தை
நிவிருத்தியாவதே அதன் பிராப்தியாம். அதாவது, அந்நித்தியசுகத்தை யுணரா
தன்மையே அதனப்பிராப்தியாம். அந்நித்தியசுகத்தை யபரோக்ஷமாயுணர்தலே
அதன் பிராப்தியாம். ஆதலின், பிரத்தியக்கான்மாவில் அபேதவடிவமாயுள்ள நி
தியசுகத்தின் அநுபவத்தை யிச்சித்து இவ்வதிகாரிபுருஷன் மிக்க நரகத்தை
தரும் கணிக பாகியவிஷயப் பிரீதியினின்றும் தனது இந்திரியங்களை நிவிருத்தி
செய்யவே பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தின்கண் ணிலேக்கின்றான். (21

(அ-கை.) ஹே பகவன்! பாகிய விஷயங்களின் பிரீதி நிவிருத்தியாகுங்கா
ஆன்மாவின் நித்தியசுகம் அநுபவமாகும். ஆகவே அதன் பிரசாதத்தால், பாகி
விஷயங்களின் பிரீதி நிவிருத்தியாகும். இவ்வாறு நித்திய சுகத்தின் அநுபவமு
பாகிய விஷயங்களின் பிரீதி நிவிருத்தியும் ஒன்றனை யொன்று பற்றுதலாந்தன்
மையை யடைகின்றன. எப்பதார்த்தங்களில் ஒன்றனை யொன்று பற்றுந்தன்மை
யுளதோ அப்பதார்த்தங்களுள் ஒன்றாகினும் பெறப்படாது என்றிவ்வாறு அர்
சுனன் ஆசங்கிப்ப, ஸ்ரீ பகவான் விஷயங்களின் தோடதரிசனப்பயில்வானே அ
விஷயங்களின் பிரீதியொழிகின்றது. ஒழியவே ஒன்றனை யொன்று பற்றுங் குற்
மின்றாமென்று உத்தரமருளுகின்றார்.

சு-ம். யெஹி ஸம்ஸ்பஶஜா ஹொமாஃ ஊஃவயொநய ஊவதெ।
ஆஊ்யந்தவஞஃ களெஞய ந தெஷு ரமதெ பு்யஃ॥ (22

ப-ம். 3 யெ 2 ஹி 4 ஸம்ஸ்பஶஜாஃ 5 ஹொமாஃ 7 ஊஃவயொநயஃ 8 ஊவ 6 தெ
9 ஆஊ்யந்தவஞஃ 1 களெஞய 12 ந 11 தெஷு 13 ரமதெ 10 பு்யஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எதனுல் விஷயேந்திரியங்களின் சம்பந்தத்த
லுண்டாகிய போகங்களனைத்துந் துக்ககாரணமாமோ, ஆதியந்தமுடையனவே
அதனுல் விவேகியர் அப்போகத்தை இச்சிப்பதில்லை. (22

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்தமுதலிய விஷயங்களோடு சுரோத்திரமுத
லிய இந்திரியங்களின் சம்பந்தம் சம்ஸ்பரிசமாம். அதனுலுண்டாம் மிகத் தாழ்ந்த
லேசமாத்திர சுகத்தின் அநுபவ வடிவமான போகங்களனைத்தும் இவ்வுலகத்து
பரவுலகத்தும் இராகத்துவேஷங்களால் வியாப்தமானதால் துக்ககாரணமேயாம்
அதாவது இம்மனுஷ்யலோகமே முதலாகப் பிரஹ்மலோகபரியந்தமுமுள்ள சர்வ
போகங்களும் முக்காலத்தும் துக்ககாரணமேயாம் இது விஷ்ணுபுராணத்திலு
கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. யாவதஃ குருதெஜஞுஃ ஸம்பந்யாநுநஸஃ விரியாநு।
தாவதொஸ்ய நிவநந்தெ ஹரநயெஶொகஶங்கவஃ॥

(பொ-ள்.) இஜ்ஜீவன் எவ்வளவு மனவேட்கைச் சம்பந்தம்பண்ணுகின்றானோ அவ்வளவு சோகவடிவவூசிகள் இவனது உள்ளத்தைத் துளைக்கின்றன. இங்ஙனமாய அப்போகமும் ஒரு நிலையற்றதாம்; மற்றொ, ஆதியந்தமுடையதாம். ஈண்டு, விஷயேந்திரியங்களின் சம்பந்தம் ஆதியாம். அவற்றின் வியோகம் அந்தமாம். அவ்விரண்டும் எப்பொருளினுளவாமோ அது ஆதியந்தமுடையதாம் அதாவது அப்போகம் ஆதிகாலத்திலுமின்று, அந்தகாலத்திலுமின்று. மற்றொ, கனப்பொருள்போல இடைப்பட்டகாலத்தே தோற்றுவதாம். ஆகலின், அப்போகம் கனப்பொருளைப் போல க்ஷணிகமாம், மித்தியாவடிவமாம். இதை ஸ்ரீகௌடபாதாசாரியருங் கூறியிருக்கின்றார் 'ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமாநேऽபி தத்ததா' (பொ-ள்.) எப்பதார்த்தம் ஆதிகாலத்திலும், அந்தியகாலத்திலுமில்லையோ, அப்பதார்த்தம் வர்த்தமான காலத்திலும் உண்மையாயில்லை; சுவப்பனபதார்த்தம் போலும். ஹே அர்ச்சுன! இவ்விஷயஜந்நிய போகமித்தன்மையதாமாதலின், விவேகி இப்போகத்தில் பிரீதியடைதல்கூடாது. அதாவது இதனைப்பிரதிகூலமாயறிந்து விவேகி பிரீதிபண்ணுவதில்லை. இதை ஸ்ரீ பதஞ்சலிபகவானும் யோகசூத்திரங்களிற் கூறியிருக்கின்றார். 'பரிணாமதாபஸம்ஸ்கார து:கைர்குணவ்ருத்திவிரோதாச்ச து:கமேவ ஸர்வம் விவேகிந:' (பொ-ள்.) கிலேசமுதலியவைகளின் சொரூபத்தைத் திடமாய் நிச்சயம்பண்ணிய விவேகிக்கு இவ்வுலக பரவுலக விஷயசுகங்களனைத்தும் துக்கவடிவமாயே தோற்றும். அவிவேகிக்கு விஷயசுகந் துக்கமாய்த் தோற்றுவதில்லை. அதுபற்றியன்றோ சாஸ்திரங்களில் விவேகி அக்ஷிபாத்திரத்திற்குச் சமமாய்க் கூறப்பட்டிருக்கின்றான். சிலந்திப்பூச்சி யுண்டாக்கிய நூலானது மிக நுண்ணியதாயும் மிருதுவாயுமிருப்பினும் நேத்திரத்திற் படிலோ தனது பரிசத்தால் நேத்திரத்திற்குத் துக்கத்தையே கொடுக்கின்றது. நேத்திரத்தினும் வேறாகிய முகமுதலிய அங்கங்களிற் படிலோ அந்நூல் துக்கப்படுத்துவதில்லை. அதுபோலத் தேனும் விஷமுங்கலந்த அன்னபோஜனம்போல முக்காலத்தினும் கிலேசம் முதலியவைகளோடு கலக்கப்பட்ட விஷயபோகசாதனம் அவ்விவேகிக்கே துக்கத்தையே கொடுக்கின்றது. அதாவது விவேகியே அதைத் துக்கரூபமாயெண்ணுகின்றான் என்பதாம். பகலிரவுகளிற் பலவகைப்பட்ட துக்கங்களைப் பொறுத்துக்கொள்ளும் அவிவேகிக்கு அவ்விஷயபோகசாதனந் துக்கத்தைக் கொடுப்பதில்லை, அதாவது அவன் அப்போகசாதனத்தைத் துக்கரூபமாய் நினைப்பதில்லையென்பதாம். ஆண்டு, அப்பாதஞ்சல சூத்திரத்தில் பரிணாம தாப சமஸ்கார துக்கங்களால் என்னும் பதங்களால் செல்காலம் நிகழ்காலம் வருங்காலமென்னுமுக் காலத்தினுந் துக்கத்தோடுகூடினவாதலின் அவ்விஷய சுகங்களில் ஔபாதிக துக்கத்தன்மை கூறப்பட்டது. குணவிருத்தி விரோதத்தால் என்னும் பதத்தால் அவ்விஷயசுகங்கள் சொரூபத்தானுந் துக்கவடிவங்களாமெனக் கூறப்பட்டன. ஆண்டு, பரிணாமதாப சமஸ்கார துக்கங்களால் என்னும் வாக்கியத்தில் அந்தத்திலுள்ள துக்கமென்னும் பதத்தைப் பரிணாமம், தாபம், சமஸ்காரம் என்னும் மூன்று பதங்களோடுஞ் சேர்த்துக்கொள்க. அதனாலிது பெறப்படும் :—பரிணாம துக்கம், தாபதுக்கம், சமஸ்கார துக்கம் என இம்மூன்று வடிவத்தால் அவ்விஷய சுகந்துக்கவடிவமேயாம். அஃதாமாறு தெரிப்பாம் : எத்துணை விஷயசுகமனுபவிக்கப்படுகின்றனவோ அவ்வனைத்தும் இராகத்தோடு கூடியவைகளே இராகமின்றி விஷயசுகாநுபவங்கூடாது என்னை? எப்புருஷனுக்கு எவ்வஸ்துவில் ராகமுளதோ அப்புருஷனே அவ்வஸ்துப் பிராப்தியால் சுகமடைகின்றான். எப்புருஷனுக்கு எவ்வஸ்துவினிடத்தில் ராகமில்லையோ அப்புருஷன் அவ்வஸ்துகிடைத்ததால் சுகமடைவதில்லை. இஃதெல்லா வுலகத்தும் பிரசித்தமாதலின் விஷயங் கிடைப்பதின்முன்னர் வெளிப்பட்ட இராகமே அவ்விஷயத்தை யடைந்தபோது சுகவடிவமாய்ப் பரிணமிக்கின்றது. அது ஒவ்வொருக்ஷணத்தினு மிகுதிப்பாட்டையடைகின்றது. அவ்விராக விஷய பதார்த்த

மானது அடையப்படாக்கால் அவசியமாய்த் துக்கப்பிராப்தியாகின்றது. ஆதலின், அவ்விராகந் துக்கவடிவமாம். ஆண்டுப் போகங்களில் இனிய திருப்தியால் இந்திரியங்களினுபசாந்தி சுகமாம். அப்போகங்களில் திருப்தியின்மையால் இந்திரியங்களினுபசாந்தியின்மை துக்கமாம். மிகுந்த போகத்தை யநுபவித்து அவ்விந்திரியங்களைத் திருஷ்ணையின்றியவைகளாய்ச் செய்வதில் சமர்த்த ரொருவருமில்லர். மறுதலையாய் மிகுந்த போகத்தை யநுபவிப்பதால் திருஷ்ணை யதிகப்படுகின்றது. நெய், விறகுகளை யடைவதால் அக்கினி மிகுதிப்படுகின்றதேபோலும். ஆதலின், துக்கவடிவ இராகத்தின் பரிணாமமானதால் அவ்விஷயசுகமுந் துக்கவடிவமேயாம். காரிய காரணங்கட் கபேதமாதலினென்க இத்துணையானே அவ்விஷய சுகத்தில் பரிணாம துக்கரூபத்தன்மை கூறப்பெற்றது. இனித் தாபதுக்கத்தைக் கூறுவாம். ஆண்டு, இப்புருஷன் எக்காலத்தில் அவ்விஷய சுகத்தை யநுபவிக்கின்றானோ அக்காலத்தில் அதின்பிரதிகூலமாகிய துக்கசாதனமனைத்தையுந் துவேஷிக்கின்றான். அவற்றைக் கெடுக்காது அஃதனுபவிக்கப்படுவதில்லையாதலின் அதன் பொருட்டு அந்தப் பிரதிகூலவடிவத்தை அவசியமாய்க் கெடுக்கின்றான். ஆண்டு, துக்கசாதனமனைத்தும் எனக்குக் கிடைக்காதொழிக, என்னுமித்தன்மைச் சங்கற்ப விசேஷத்தின் பெயர் துவேஷமாம். அத்துவேஷ விஷயவடிவ துக்கசாதனமனைத்தையும் நிவிர்த்திக்க வொருவரானு முடியாது. ஆதலின், அதையநுபவிக்குங் காலத்தும் அதின் விரோதிவிஷயகமாகிய துவேஷமிருந்துகொண்டேயிருக்கும். அஃதுளதாகவே அத்தாபதுக்கத்தை நிவிருத்திக்க முடியாதாம். ஈண்டு; தாபமே துவேஷமெனப்படுகின்றது. இவ்வாறு அத்துக்க சாதனத்தை நீக்கற்கேலாத புருஷன் அப்போது மோகத்தையுமவசியமடைகின்றானாதலின், தாபதுக்கம்போன்று அம் மோக துக்கமு நீக்குதற்கேலாததேயாம். ஆண்டுத் தாபவடிவ துவேஷத்தால் கர்மாசய முண்டாகின்றது; என்னை, எவன் விஷய சுகத்தின் சாதனத்தை இச்சிக்கின்றானோ அவன் சரீரத்தாலேனும் மனத்தாலேனும் வாக்காலேனும் அவசியம் பிரவிருத்திபண்ணுகின்றான். அதன்பின் தனதநுகூலப் பிராணிகட்கனுக்கிரகம் பண்ணுகின்றான். தனது பிரதிகூலப்பிராணிகளை இம்சிக்கின்றான். அந்த அனுக்கிரக நிக்கிரக மிரண்டும் அவனுக்குப் புண்ணியபாவத்தை யுண்டுபண்ணுகின்றன. அதன் பெயர் கருமாசயமாம். அதுவும் உலோபமோகங்களாலாம் இத்துணையானேவிஷய சுகத்தின் தாபதுக்கங் கூறப்பட்டது. இனிச் சமஸ்கார துக்கத்தைக் கூறுவாம். ஆண்டு, நிகழ்காலத்துண்டாம் விஷய சுகாநுபவமானது தனது நாசகாலத்தில் இப்புருஷனுடைய வுள்ளத்தில் சமஸ்காரத்தை யுண்டுபண்ணுகின்றது. அதற்குமேல் அந்தச்சமஸ்காரம் அவ்விஷயசுக நினைவையுண்டுபண்ணுகின்றது. அதன்பின்னர் அந்நினைவு அதில் ராகத்தை யுண்டுபண்ணுன்கிறது. அதன்பின் அவ்விராகமானது அச்சுகப் பிராப்தியின்பொருட்டு தேகமன வாக்குக்களைச் செலுத்துகின்றது. அதன்பின் தேக முதலியவைகளின் சேஷ்டையானது புண்ணிய பாவவடிவ கருமாசயத்தை யுண்டுபண்ணுகின்றது. அதன்பின் அப்புண்ணிய பாவம் பிறப்பு முதலியவைகளைத் தருகின்றது இதன் பெயர் சமஸ்கார துக்கமாம். இங்ஙனமே தாப மோகங்களின் சமஸ்காரத்தையுமறிந்துகொள்க. இத்துணையான் முக்காலத்தினுந் துக்கத்தோடுகூடியவாதலின் இவ்விஷயசுகமனைத்துந் துக்கவடிவமேயெனக் கூறப்பட்டன. இனிக் குணவிருத்தி விரோதத்தால் என்னும் வாக்கியத்தால் அவ்விஷயசுகங்கள் வடிவத்தானுந் துக்கசொரூபமாமெனக் கூறப்படுகின்றன. ஈண்டு, சுகவடிவ சத்துவகுணம் துக்கவடிவ ரசோகுணம் மோகவடிவ தமோகுணம் என்னும் இம்மூன்றும் குணசத்தத்தாற் கொள்ளத்தக்கன. இம்மூன்றும் ஒன்றற்கொன்றுமாறுபட்ட சுபாவமுடையனவாயினும் எண்ணெய், திரி, தீ, மூன்றுங்கூடி தீபவடிவ ஒருகாரியமியற்றியவாறுபோல இப்புருஷன் போகத்தின் பொருட்டு முக்குணவடிவ காரியத்தைச் செய்தனன். அக்காரியத்திலும் ஒரு

குணமோ முக்கியமாம் ஏனையவிரண்டுங்கௌணமாம். அவ்வொரு முக்கிய குணத்தையுடன்பட்டே அம்முக்குணவடிவ காரியமும் சாத்துவிகம் இராசதம் தாமதம் என்றிவ்வாறு ஒவ்வொரு குணமாய்க் கூறப்படுகின்றது. அவற்றுள் சுகத்தின் உபபோகவடிவத்தோற்றம் வெளிப்பட்ட சத்துவகுணத்தின் காரியமேனும் வெளிப்படாத இராசத தாமதங்களின் காரியமுமாம். அப்பிரத்தியயம் கேவலஞ் சத்துவ குணத்தின் காரியமன்றாதலின் அதுவும் முக்குணவடிவமேயாம். ஆகவே அதன் கண்ணே சுகவடிவத்தன்மை துக்கவடிவத்தன்மை விஷாதவடிவத்தன்மை மூன்றுமுளவாதலின், விவேகிக்குச் சர்வ விஷயசுகாநுபவங்களும் துக்கவடிவமேயாம். இத்தன்மைய துக்கவடிவ விஷயசுகத்தின் உபபோகவடிவப் பிரத்தியடமும் சிறிதும் நிலையுள்ளதன்று. மற்றோ, அது விரைவாகவே நாசமாம். சலமே குணவிருத்தம் என்னும் வாக்கியத்தால் சித்தத்திற்கு விரைவுறு பரிணாமத்தன்மை கூறப்பட்டிருத்தலின்.

சங்கை :—ஒரே தோற்றமானது ஒரே காலத்தில் ஒன்றற்கொன்று மாறுபட்ட சுகதுக்கமோக வடிவத்தை எவ்வாறடையும்?

சமாதானம் :—உற்பூதம் அநுற்பூதம் இவ்விரண்டிற்கும் தம்முள் விரோதமில்லை. மற்றோ, சமமாயுள்ள குணங்கட்கே ஒரு காலத்தில் ஒன்றற்கொன்று விரோதப்படும், மாறுபாடாயுள்ள குணங்களுக்கு விரோதமில்லை. இப்புருஷனிடத்தில் அபிவியக்தியையடைந்த தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியமென்னு மிந் நான்கும் தமக்குச் சமமாய் அபிவியக்தியையடைந்த அதருமம் அஞ்ஞானம் அவைராக்கியம் அனைசுவரியம் என்னும் நான்கோடும் முறையாக விரோதப்படும். அபிவியக்தியடையாத அதரும முதலியவைகளோடு அபிவியக்தியையடைந்த தரும முதலியவைகள் விரோதப்படா. இவ்வுலகத்திலும் முக்கியமாகிய ஒரு புருஷனுக்கு மற்றொரு முக்கிய புருஷனோடே விரோதமாம். துர்ப்பல புருஷனோடு அம்முக்கிய புருஷனுக்கு விரோதமாவதின்றாம். அதுபோல, சத்துவ ரசசு தமசு என்னும்முக்குணங்களும் ஒரேகாலத்தில் ஒன்றற்கொன்று பிரதானத்தன்மை மாத்திரத்தைப் பொறுப்பதில்லையேயன்றி ஒன்று மற்றொன்றன் சத்பாவமாத்திரத்தைப் பொறுப்பதில்லையென்பதில்லை. இங்ஙனமே பரிணாமதுக்கம் சமஸ்காரதுக்கம் தாபதுக்கம் இம்மூன்றிலும் ஒரேகாலத்தில் ராகம் த்வேஷம் மோஹம் இம்மூன்றினிருப்பையுங் கண்டுகொள்க. அவ்விராகத்துவேஷ முதலிய கிலேசங்கள், பிரசுப்தம், தநு, விச்சின்னம், உதாரம் என்னுமிந்நான்கு வடிவங்களால் நான்கவத்தையுடையனவாகின்றன. இப்போது அக்கிலேச முதலியவடிவத்தையே சாத்திராநுசாரமாய்க் கூறுவாம் :—ஆண்டு, யோகசூத்திரங்கள் "𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌿𑌤𑌾 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌾𑌃 𑌪𑌂𑌚𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌃 (1) 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑍁𑌤𑍍𑌤𑌰𑍇𑌷𑌾𑌂 𑌪𑍍𑌰𑌸𑍁𑌪𑍍𑌤𑌤𑌨𑍁𑌵𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑍋𑌦𑌾𑌰𑌾𑌣𑌾𑌂 (2) 𑌅𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌶𑍁𑌚𑌿𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌸𑍁 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑍁𑌚𑌿𑌸𑍁𑌖𑌾𑌤𑍍𑌮𑌖𑍍𑌯𑌾𑌤𑌿𑌰𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 (3) 𑌦𑍃𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑍋𑌰𑍇𑌕𑌾𑌤𑍍𑌮𑌤𑍈𑌵𑌾𑌸𑍍𑌮𑌿𑌤𑌾 (4) 𑌸𑍁𑌖𑌾𑌨𑍁𑌶𑌯𑍀 𑌰𑌾𑌗𑌃 (5) 𑌦𑍁𑌃𑌖𑌾𑌨𑍁𑌶𑌯𑍀 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 (6) 𑌸𑍍𑌵𑌰𑌸𑌵𑌾𑌹𑍀 𑌵𑌿𑌦𑍁𑌷𑍋𑌽𑌪𑌿 𑌤𑌥𑌾𑌰𑍂𑌢𑍋𑌽𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶𑌃 (7) 𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑍍𑌰𑌸𑌵𑌹𑍇𑌯𑌾𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌃 (8) 𑌧𑍍𑌯𑌾𑌨𑌹𑍇𑌯𑌾𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃 (9) 𑌕𑍍𑌲𑍇𑌶𑌮𑍂𑌲𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌶𑌯𑍋 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌦𑍃𑌷𑍍𑌟𑌜𑌨𑍍𑌮𑌵𑍇𑌦𑌨𑍀𑌯𑌃 (10) 𑌸𑌤𑌿 𑌮𑍂𑌲𑍇 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌾𑌕𑍋 𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑍁𑌰𑍍𑌭𑍋𑌗𑌾𑌃 (11) முறைபாய்ப் பதினொரு சூத்திரங்களின் பொருளைக் கூறுவாம். அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம் என்பன ஐங்கிலேசங்களாம். ஆண்டுக் கருமத்தில் அல்லது கருமபலத்தில் பிரவர்த்தித்த புருஷனுக்குத் துக்கத்தைக்கொடுப்பது கிலேசமாம். இத்தன்மைய இலக்கணம் இவ்வவித்தைமுதலிய ஐந்தினிடத்தும் பொருந்துகின்றதாதலின் இவ்வவித்தைமுதலிய ஐந்துங் கிலேசங்களாயின. (1) இவ்வைந்தனுள் முந்திய கிலேச

வடிவ அவித்தையே பிரசுப்தாதி நான்கவத்தையுடையது. அதுவே அஸ்மிதை முத லிய நான்கு கிலேசங்களின் காரணவடிவமாம். ஆண்டு அஃதில்லாததின்கண்ணே அஃதுண்டென்னும்புத்தி, விபரியயம், மித்தியாஞானம், அவித்தை என்னுமிந் நான்கும் ஒருபொருட் கிளவிகளாம். (2) அவ்வவித்தை நால்வகைத்தாம். அவற் றுள் அநித்தியபதார்த்தத்தில் நித்தியமென்னும் புத்தியுண்டாக்குவது முதலா வது அவித்தையாம். மண், மதி, இரவி, உடுக்கள், சுவர்க்கம் அமரர் முதலிய அநித் தியபதார்த்தங்களில் இவ்வனைத்தும் நித்தியமென்னும் புத்தியுண்டாக்குவதுபோ லவாம். அசுசியாகிய பதார்த்தங்களில் சுசிபுத்தியுண்டாக்குவது இரண்டாவது அவித்தையாம். அசுசியாகிய மகளிர் ஆக்கையில் சுசிபுத்தி இதை ஸ்ரீ வியாசபக வானுங் கூறியருளியிருக்கின்றார்.

ஆ-சு. 𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌦𑍍𑌬𑍀𑌜𑌾𑌦𑍁𑌪𑌷𑍍𑌟𑌮𑍍𑌭𑌾𑌨𑍍 𑌨𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌦𑌾𑌨𑍍 𑌨𑌿𑌧𑌨𑌾𑌦𑌪𑌿 ।
𑌕𑌾𑌯𑌮𑌾𑌧𑍇𑌯 𑌶𑍌𑌚𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌾 𑌹𑍍𑌯𑌶𑍁𑌚𑌿𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 ॥

(பொ-ள்.) சாஸ்திரத்தின் உண்மைக் கருத்தறியும் வித்துவான் இச்சரீரத்தை ஸ்தானம், பீசம், உபஷ்டம்பம், நிஷ்பந்தம், நிதனம், ஆதேய சௌசம், இத்தனை யே துக்களால் அசுசியேயென்றறிகின்றான். அவற்றுள் மலமூத்திரத்தோடுகூடிய மாதாவினுதரம் ஸ்தானமாம் அத்தானத்தே இச்சரீரத்தினிருப்பாதலின் இச்சரீ ரம் ஸ்தானத்தானு மசுசியேயாம். மாதா பிதாக்களின் சப்தமதாது வடிவாகிய சுக் கிலசு ரோணிதம் பீஜமாம். அதனாலுண்டாதலின் பீஜத்தானு மசுசியேயாம். அந் நத்தின் பரிணாமமாகிய வுதிர முதலியவை உபஷ்டம்பமாம். அதனானும் அசுசியே யாம். முகம் நாசி செவி கண் பாயு உபஸ்தம் இச்சர்வ துவாரங்களால் மலம் வெளிப் படுவது நிஷ்பந்தமாம்; அதனானு மசுசியேயாம். மரணத்தின்பெயர் நிதனமாம். எம் மரணத்தால் வித்துவானாகிய பிராஹ்மணன் சரீரமும சுசியாகின்றதோ அதனானு மசுசியேயாம். நீராடல்சந்தனமிடன் முதலியவைகளால் இச்சரீரத்தில் சுசியைச் சம் பாதிப்பது ஆதேய சௌசமாம் அதனானுமிஃ தசுசியேயாம். இத்தன்மைய அசுத்த முடைய மகளிராக்கையில் சுத்தமுடையதென்னும் புத்தியுண்டாக்குவது இரண் டாவ தவித்தையாம். துக்கவடிவ விஷயபோகத்தில் சுகபுத்தியுண்டாக்குவது மூன்றாவதவித்தையாம். துக்கத்தில் சுக புத்தியோ, 'பரிணாம தாபசமஸ்கார துக் கங்களானும் குணவிருத்தி விரோதத்தானும் சர்வமுந் துக்கமே விவேகிகட்கு' என்னுஞ் சூத்திர வுரையில் முன் கூறப்பட்டது. அநான்மவஸ்துவில் ஆன்மபுத்தி பண்ணிவைப்பது நான்காவதவித்தையாம். அநான்மவடிவ இத்தூலசரீரத்தில் நான் மனுஷியன் நான் பிராஹ்மணன் என ஆன்மபுத்தி பண்ணுவதுபோலவாம். இவ்வாறு நால்வகைப் பேதத்தோடுகூடிய அவித்தையே, அஸ்மிதை முதலிய சர் வகிலேசங்களின் மூலவடிவமாம். இவ்வவித்தையே சாஸ்திரத்தில் தமமெனக்கூற ப்படுகிறது. (3) திருக்குச் சத்தியாகிய புருஷனும் தரிசன சத்தியாகிய புத்தியும் போக்தா போக்கிய ரூபதத்தால் அத்தியந்தம்வேறாம். அத்தன்மைய விரண்டினது அவித்தையாலாகிய அபேதாபிமானம் அஸ்மிதையாம். இதையே பிராஹ்மஞானி கள் இருதயக்கிரந்தியென்பர். இதை வேறுசாஸ்திரத்தில் மோகமெனவுங் கூறப் படுகின்றது. (4) அவ்வச்சுகப்பிராப்தியின் சாதனங்களனைத்துமின்றிய புருஷனு க்கு எவ்வகைச்சுகமு மெனக்குளவாருக என்றுண்டாம் விபரியய விசேஷத்தின் பெயரிராகமாம்; இதுவே சாஸ்திரத்தில் மஹாமோகமெனக் கூறப்படுகின்றது. (5) துக்கத்தைக்கொடுக்குஞ் சாதனங்களிருக்குமாயினும் எனக்கோர்வகைத் துக்கமு மின்றாகின்றாருக என்றுண்டாம் விபரியய விசேஷம் துவேஷமாம்; இதுவே சாஸ் திரத்தில் தாமிசிரமெனக் கூறப்படுகின்றது. (6) சீவனத்தின் காரணமாகிய ஆயு ளிலதேனும் இவ்வநித்தியமாகிய தேகேந்திரிய முதலியவைகளோடு எனக்கோர்

போதும் வியோகமடையாதொழிக என ஞானி யஞ்ஞானி சர்வப்பிராணிக்கும் பொதுவாயுண்டாம் மரணபயவடிவ விபரியயம் அபினிவேசமாம். இதுவே சாஸ்திரத்தில் அந்ததாமிசிரமெனக் கூறப்படுகின்றது. இது புராணத்திலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. தமோமோஹோ மஹாமோஹஸ் தாமிஸ்ரோஹ்யந்தஸம்ஜ்ஞித: ।
அவித்யா பஞ்சபர்வைஷா ப்ராதுர்பூதா மஹாத்மந: ॥

(பொ-ள்.) இப்புருஷனதவித்தை தமம், மோகம், மஹாமோகம், தாமிசிரம், அந்ததாமிசிரம் இவ்வைந்துவகைகளால் தோற்றப்படுகின்றது. இவ்வவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்களும் பிரசுப்தம், தநு, விச்சின்னம், உதாரம் என நான்கவத்தையுடையன, அவற்றுள், அசத்காரிய மொருபோதுந்தோற்றாதாதலின், இவ்வவித்தை முதலிய பஞ்சக்கிலேசத்தின் உற்பத்தியின்முன்னர் வெளிப்படாதடங்கிக்கிடந்தமை பிரசுப்தாவத்தையாம். வெளிப்படினும் அவைகளில் வேறு சககாரிகாரணமின்மையால் காரியந்தோற்றாதிருத்தல் தநுவவத்தையாம். அக்கிலேசம் வெளிப்பட்டும் தன் தன்காரியத்தை யுண்டுபண்ணியும் அது மற்றியாதானுமோர் வலியுடைத்தோற்றத்தால் மறைபட்டிருத்தல் விச்சின்னவத்தையாம். எக்கிலேசம் அபிவியத்தியையுமடைந்து வேறு சககாரிகாரணத்தையும்பெற்றுப் பிரதிபந்தகமின்றியதாய்த் தன் தன் காரியத்தை யுண்டாக்குகின்றதோ அது உதாராவத்தையாம். இத்தன்மைய நான்கவத்தையோடுகூடிய விபரியயபுத்திவடிவ அஸ்மிதை முதலிய நான்குகிலேசங்களுக்குச் சாமான்யவடிவ அவித்தையே க்ஷேத்திரவடிவமாம். அது இந்நான்குகிலேங்களு முண்டாவதற்குப் பூமியாம். இச்சர்வக் கிலேசங்களிடத்தும் விபரியயபுத்திவடிவத்தன்மை முன்னர்க் கூறப்பட்டதாதலின், அவ்வவித்தை நிவிருத்தியானே அவ்வஸ்மிதை முதலிய சர்வக்கிலேசங்களும் நிவிருத்தியாம். அவையும் சூட்சுமம், தூலம் என்னும் பேதத்தாலிருவகையாம். அவற்றுள், பிரகிருதியில் இலயமடைந்தவர்களின் பிரசுப்தக்கிலேசமும், விரோதிபாவனையால் தநுச்செய்யப்பட்ட யோகிபுருஷரின் தநுக்கிலேசமும், சூட்சுமமென்று சொல்லப்படுகின்றன. அந்தச் சூட்சுமக்கிலேசங்களோ மனநிரோதவடிவ நிருவிகற்பசமாதியானே நிவிருத்தியாம். இம்மனநிரோதத்தைச் சூத்திரத்தில் பிரதிப்பிரசவமென்னும்பெயராற் கூறினர். (8) அந்தச் சூட்சுமக்கிலேசத்தின் காரியவடிவ விச்சின்ன உதாராவத்தைகளையுடைய இரண்டுகிலேசங்களுந் தூலமெனப்படுகின்றன. இடையில் விச்சேதத்தை யடைந்து அவ்வவ்வடிவத்தால் மறித்து மறித்தும் தோற்றப்படுகின்ற கிலேசங்கள், விச்சின்னமெனப்படுகின்றன. இராககாலத்தில் குரோதமுளதேனும் தோற்றுவதில்லை; மற்றோ, மற்றொருபோது அது தோற்றுகின்றதாதலின் அது விச்சின்னமெனப்படுகின்றது. இவ்வாறு எக்காலத்தில் சைத்திரனென்பவன் ஒருமாதிடத்து இராகமுடையனோ அக்காலத்தில் வேறுமாதிடத்து விரத்தியை யடைவதில்லை; மற்றோ, அக்காலத்தில் அவனுடைய இராகம் அவ்வோர்மாதிடத்தே யிருப்பதாம்; பிறமாதிடத் தினிவரக்கூடும். ஆதலின், அக்காலத்தில் அவ்விராகம் விச்சின்னமெனப்படுகின்றது; இஃதாமாறு மற்றைய கிலேசங்களிடத்து மறிந்துகொள்க. எந்தக்கிலேசம் எக்காலத்தில் விஷயத்திலிருப்பதாகின்றதோ அது அக்காலத்தில்எல்லாவடிவத்தானுந் தோற்றப்பட்டு உதாரமெனப்படுகின்றது. அந்த விச்சின்ன உதாராவத்தைகளையுடைய இருவகைக்கிலேசமும் மிகத் தூலமாமாதலின், சுத்தசத்துவவடிவ பகவத்தியானத்தானே நிவிருத்தியாம். அவ்விரண்டு தூலக்கிலேசங்களும் தமது நிவிருத்தியில் மன நிரோதத்தை யபேக்ஷிப்பதில்லை; சூட்சுமக்கிலேசமே தனது நிவிருத்தியில் மனநிரோதத்தை யபேக்ஷிக்கின்றது. உலகத்தில் வஸ்திரத்தின் தூல அழுக்கானது நீரிற்றோய்த்தலால் நீங்குகின்றது. சூட்சும அழுக்கோ

உவர்மண்ணிடல் முதலியவைகளால் நீங்குகின்றது; அதுபோல, அத்தூலக்கிலேசம் பகவத்தியானத்தால் நீங்குகின்றது. சூட்சுமக்கிலேசம் மனோநிரோதத்தால் நீங்குகின்றது. இதனுவிப்பொருள் பெறப்பட்டது :—கூறிப்போந்த பரிணாமதுக்கம், தாபதுக்கம், சமஸ்காரதுக்கம் என்னும் மூன்றிலும் பிரசுப்தம், தநு, விச்சின்னம் என்னு மூவடிவங்களானும் அக்கிலேசங்கள் எப்போது முள்ளனவாம். உதாராவத்தையோ யாதானு மோர்போது யாதானுமோர் கிலேசத்திற்கேயாம். இவ்வவித்தைமுதலிய ஐந்தும் பாதவடிவ துக்கங்களை யுண்டுபண்ணிக் கிலேச சத்தவாச்சியமாம். (9) தருமாதருமவடிவ கருமாசயமானது கிலேசகாரணமாகவே யுண்டாகின்றது; அதாவது, அக்கிலேசமே காரணவடிவம் என்பதாம். அக்கிலேசத்தைக் காரணமாகவுடைய கருமாசயமும் இருவகைத்தாம்; ஒன்றே திருஷ்டசன்மவேதநீயமாம், மற்றையதோ அதிருஷ்டசன்மவேதநீயமாம். அவற்றுள், எத்தேகத்தால் அத்தருமாதருமவடிவ கருமஞ்செய்யப்படுகின்றதோ அத்தேகத்தானே அக்கருமபலம் அநுபவிக்கப்படுவதின்பெயர் திருஷ்டசன்மவேதநீயமாம். கருமாசயபல மித்தேகத்தநுபவிக்கப்படாது மற்றொரு சன்மத்தநுபவிக்கப்படுவது அதிருஷ்டசன்மவேதநீயமாம். (10) ஆண்டு மூலவடிவக்கிலேசங்களுளவாகவே தருமாதருமவடிவக் கருமாசயபலம் அவசியமாயுண்டாம். அப்பலமும் சாதி, ஆயுள், போகம் என்னும் பேதத்தால் மூவகைத்தாம்; அவற்றுள், சன்மம் சாதியாம்; அல்லது, பிராஹ்மணத்தன்மை தேவத்தன்மை முதலியவை சாதியாம். தேகம் பிராணனிரண்டினது நீண்டகாலபரியந்தமுள்ள சம்பந்தம் ஆயுளாம். சுரோத்திரமுதலிய விந்திரியங்களால் சத்தமுதலிய விஷயங்களை யநுபவித்தல் போகமாம்; இம்மூன்றனுள்ளும் போகம் முக்கியமாம். சாதி, ஆயுள் இரண்டு மதன்சேடமாம். (11) இவ்வாறு இவ்வவித்தை முதலிய கிலேசங்களின் சந்ததி நிரந்தரம் பிரவிருத்தியாகிக்கொண்டிருக்கின்றது எனக் கூறிப்போந்த எல்லாக் கருத்தையும் திருவுளத் துட்கொண்டவராய் ஸ்ரீ பகவான் 'யெஹிஸஂஸ்பர்ஶஜா ஹொமா ஊுகெயொநயவதெ கூநூஷுவணு:' என்னும் வாக்கியத்தைக் கூறியருளினர். ஆண்டு அவ்விஷயபோகங்களில் துக்ககாரணத்தன்மை பரிணாம தாபசமஸ்கார துக்கங்களானும், குணவிருத்திவிரோதத்தானும், என்னும்வாக்கியத்தால் முன்னர்க் கூறப்பட்டது. ஆதியந்தமுடையதாந்தன்மையோ சலம்ஹி குணவிருத்தம் என்னும் வாக்கியத்தால் முன்னர்க் கூறப்பட்டது. இச்சருவவுரையும் யோகசாஸ்திரத்தைத் தழுவிப்பண்ணப்பட்டது, வேதாந்தமதந்தழுவியோ இதுபொருளாம்:—பிரஹ்மத்தை யாசிரயித்து பிரஹ்மத்தையே விஷயம்பண்ணும் அநாதிபாவவடிவமான வஞ்ஞானம் அவித்தையாம்; சுகதுக்கமுதலிய தருமங்களோடு ஆன்மாவினிடத்தில் அகங்காரத்தின் அத்தியாசம் அஸ்மிதையாம், இராகத்துவேஷ அபினிவேசம் இம்மூன்றுமோ அகங்காரத்தின் விருத்திவிசேஷமாம். இவ்வாறு சர்வசம்சாரமும் அவித்தையைக் காரணமாகவுடையதாதலின் அவித்தைவடிவமேயாம். ஆகவே அச்சர்வபோகங்களும் மித்தியாவடிவமாயினும் பழுதையிற் பாம்புபோலத் துக்ககாரணங்களேயாம்; கனாப்பொருள்போலத் திருஷ்டிசிருஷ்டிமாத்திரமானதால் ஆதியந்தமுடையதுமாம். எவனுக்கு அதிஷ்டானமாகிய ஆன்மசாக்ஷாத்காரத்தால் அஞ்ஞானத்தோடு பிராந்தி நிவிருத்தியானதோ அவ்வித்துவான் அம்மித்தியாபோகங்களில் பிரீதியடையான். கானனீரின் உண்மைவடிவத்தையுணர்ந்த புருஷன் நீர்வேட்கையால் ஆண்டு முயலாததேபோல, அதிஷ்டானமாகிய வான்மஞானத்தால் சர்வ உலகத்தையும் பொய்யென்றறிந்த வித்துவான் அவ்விஷயபோகங்களிற் பிரீதிபண்ணுவதில்லை; மற்றோ, இச்சம்சாரத்தில் சுககந்தங்கூட இல்லை என நிச்சயித்து இதினின்றுஞ் சர்வ இந்திரியங்களையு மடக்கிக்கொள்ளுகின்றான்

(அ-கை.) ஆண்டுச் சர்வ துக்கமடைதற்குக் காரணமும் மோக்ஷமார்க்கத்தின் விரோதியும் சிறிது முயல்வால் ஒழியாததுமாகிய இவ்வத்தியந்தங் கஷ்ட

வடிவதோஷம் மிகுந்த பிரயத்தனத்தால் முமுக்ஷுக்களால் நிவிருத்தி பண்ணத் தகுதியதாம் எனப் பிரயத்தனத்தின் மிகுதித்தன்மையை விதானஞ்செய்தருளற் பொருட்டு ஸ்ரீ பகவான் மீண்டுங் கூறியருளுகின்றார்.

சு-ம் ஶக்நோதீஹைவ ய꞉ ஸோடும் ப்ராக்ஶரீரவிமோக்ஷணாத் ।
காமக்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த꞉ ஸ ஸுகீ நர꞉ ॥ (23)

ப-ம். 9 ஶக்நோதி 5 இஹ 7 ஏவ 1 ய꞉ 8 ஸோடும் 6 ப்ராக் 2 ஶரீரவிமோக்ஷணாத் 3 காமக்ரோதோத்பவம் 4 வேகம் 10 ஸ꞉ 11 யுக்த꞉ 12 ஸ꞉ 13 ஸுகீ 14 நர꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எந்தத் தீரன் தேகநாசபரியந்த முண்டாகத்தக்க காமக்குரோதத்தால் தோன்றும் வேகத்தைப் பாகியேந்திரியங்களின் பிரவிருத்தியின்முன்னரே சகனஞ்செய்வதில் வல்லனோ அவனே யுக்தனுவன், சுகியாவன், புருஷனுவன். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரத்தியட்சமாய்க்கண்ட, சிரவணஞ்செய்த, ஸ்மரணஞ்செய்த எத்தனை ஆன்மாநுகூல விஷய சுகசாதனங்களுளவோ அவைகளின் சௌந்தரியமுதலிய குணங்களை அடிக்கடி சிந்தனைசெய்வதால் அவற்றிலுண்டாகப்பட்ட ரதியென்னு மிச்சை திருஷ்ணை லோபமேகாமமாம்; ஸ்திரீ புருஷர்களுக்குத் தம்முளுண்டாம் விஷய சம்பந்த விச்சையின்கண்ணே காமசத்தம் நிரூடமாம். இக்கருத்தினுலன்றோ காமக்குரோதம் அங்ஙனமே லோபம் என்னும் வாக்கியத்தில் திரவியேச்சை லோபமெனவும் மாதர்களின் சேர்க்கைவேட்கை காமமெனவும் காமம் லோபம் இரண்டையும் வேறு வேருய்க் கூறியருளினர். அங்ஙனமாயினும், ஈண்டே காமம் லோபமிரண்டினும் பொதுவாயுள்ள திருஷ்ணையைப்பற்றியே கேவல காமசத்தங் கூறியருளப்பட்டது. அதனினும் வேருய் லோப சத்தங் கூறியருளவில்லையென்க. பிரத்தியட்சமாய்ப்பார்த்த சிரவணம்பண்ணிய ஸ்மரணஞ்செய்த ஆன்மாவின் பிரதிகூலமாகிய துக்கசாதனங்களில் அடிக்கடி தோஷத்தைச் சிந்திப்பதாலுண்டாகிய தீ வடிவ மந்யுவென்னுந் துவேஷம் குரோதமாம், அக்காமக்குரோதங்களின் உத்கடாவத்தையானது உலக வேதங்களின் விரோதஞானத்திற்குப் பிரதிபந்தகமாதலின், உலகவேதங்களினும் மாறுபட்ட பொருளில் பிரவிருத்தியின் உன்முகத்தன்மைவடிவமாம். அது பிரசித்தமாகிய ஆற்று வேகத்திற் கொப்பாமாதலின் வேகமெனப்படும். நதியின் வேகம், மழைகாலத்தில் மிகுந்த வலியுடையதாமாதலின், உலகவேதங்களின் விரோதஞானத்தால் பள்ளஞ் சுழல் முதலியவைகளில் விழுவதற்கு இச்சையின்றிய புருஷனையும் பலாத்காரமாய்ப் பள்ள முதலியவைகளில் கொண்டுபோய் அமிழ்த்துவிக்கின்றது. தாழ்ந்த தேசத்திற்குங் கொண்டுபோகின்றது. அதுபோல, அக்காமக்குரோதங்களின் வேகமும் நிரந்தரம் விஷய சிந்தனவடிவ மழைக்காலத்தில் மிக்க வலியுடையதாய் உலகவேதங்களின் விரோத ஞானத்தால் அவ்விஷயத்திலிச்சையின்றிய புருஷனையும் அவ்விஷயவடிவ சுழலிற்கொண்டுபோய்ச் சம்சாரவடிவ சமுத்திரத்தில் அமிழ்த்துவிக்கின்றது. மஹா நரகவடிவ தாழ்ந்த தேசத்திற்குங் கொண்டுபோகின்றது. இவ்வர்த்தங்களனைத்தையும் ஸ்ரீ பகவான் வேகம் என்னுஞ் சத்தத்தாற் குறிப்பித்தருளினர். இவ்வர்த்தமனைத்தும் 'அத கேந ப்ரயுக்தோ(அ)யம் பாபம் சரதி பூருஷ꞉' என்னுஞ் சுலோகத்தில் முன்னர்க் கூறியருளப்பட்டது. இவ்வாறு அந்தக்கரணத்தின் கலக்கவடிவ காமக்குரோதங்களின் வேகம் பலவகையான பாகிய விகாரவடிவ லிங்கங்களால் அறியப்படுகின்றது. அவற்றுள், மயிர்க் கூச்சுண்டாதல், முகங் கண்கள் பிரசன்னமாயிருத்தல் முதலிய பாகிய

லிங்கங்களால் அக்காமவேகம் அனுமிக்கப்படுகின்றது. தேகம் நடுங்கல் பெருமூச்செறிதல் பற்களால் உதட்டைக்கடித்தல் கண்கள் சிவத்தல் முதலிய பாகிய லிங்கங்களால் அக்குரோதவேகம் அனுமிக்கப்படுகின்றது. எக்காமக்குரோத வேகம் தேகநாசபரியந்தம் பலவகையான காரணவசத்தால் எப்போதும் சம்பாவனை பண்ணப்படுகின்றதோ, உள்ளே யுண்டாகிய அதை எத்தீரனாகிய சந்நியாசி பாகியேந்திரிய வியாபாரவடிவக் குழியில் வீழ்வதற்குமுன்னரே விஷயங்களில் அடிக்கடி தோஷ சிந்தனத்தாலுண்டாகிய வசீகாரமென்னும் வைராக்கியத்தால் சகனஞ்செய்வதில் சமர்த்தனோ, அதாவது திமிங்கிலம் என்னும் மீனானது தனது வலியால் நதிவேகத்தைத் தடுக்கின்றதேபோலத் தீரனாகிய புருஷன் வைராக்கியத்தின் பலத்தால் அக்காமக்குரோத வேகத்தைத் தடுக்கின்றானோ, ஆண்டுக் காமக்குரோதங்களின் வேகத்தால் பாகிய அநர்த்தங்களிற் பிரவிருத்திவடிவகாரியத்தைக் சம்பாதியாது அவ்வேகத்தைப் பலனற்றதாய்ச் செய்தலே அதைச் சகனஞ்செய்தலாம். அப்புருஷனே யோகியாவன் சுகியாவன் அவனே பரமபுருஷார்த்தத்தைச் சம்பாதித்தவனாதலின் புருஷனாவன்; அவனினும் வேறாகிய விஷயேச்சையுடைய புருஷர்களனைவரும் உண்ணல் உறங்கல் வெருளல் முதலிய பசுக்களின் தருமத்தில் பிரவிருத்தியுடையவர்களாதலின் மநுஷவடிவாயினும் பசுவடிவரேயாம். இது பிறநூலினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. [illegible] ।
[illegible] ॥

(பொ-ள்.) எவ்வான்மதேவனின் ஆநந்தவடிவத்தன்மை சுழுத்தி யவத்தையில் எல்லாப்பிராணிகளின் அனுபவத்தானும் பெறப்பட்டதோ அவ்வாநந்தவடிவ ஆன்மாவினிடத்தில் எவ்விஷயாசக்த புருஷனுக்குபேட்சையுளதோ அப்பகிர்முகனினும் வேறாகியதோ பசு? மற்றன்று, அவனே பசுவாவன். ஒருரையில் 'ப்ராக்ஶரீர விமோக்ஷணாத்' என்னும் வாக்கியத்திற்கு இப்பொருள் கொள்ளப்பட்டது. எங்ஙனம் மரணத்தின்பின்னர் அழுதுகொண்டிருக்கும் அழகுள்ள மாதராலிங்கனஞ் செய்யினும் புத்திரன் முதலியோர் தீயிற் சுடினும் இப்புருஷன் பிராணனின்றியவனாதலின் அக்காமக்குரோதத்தைச் சகித்துக்கொள்ளுகின்றானோ அங்ஙனமே மரணத்தின் முன்னரும் சீவித்திருக்குங்கால் எவன் காமக்குரோத வேகத்தை சகித்துக்கொள்ளுகின்றானோ அவனே யுக்தனாவன்; சுகியாவன், இதை ஸ்ரீ வசிட்டபகவானுங் கூறியிருக்கின்றார்.

ஆ-சு. 𑌪𑍍𑌰𑌾𑌣𑍇 𑌮𑍃𑌤𑍇 𑌯𑌥𑌾 𑌦𑍇𑌹𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 ।
𑌤𑌥𑌾 𑌚𑍇𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌣𑌯𑍁𑌕𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌸 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑍇 𑌵𑌸𑍇𑌤𑍍 ॥

(பொ-ள்.) பிராணனீங்கியபின்னர் இத்தேகம் எங்ஙனம் சுகதுக்கத்தையடைவதில்லையோ அங்ஙனமே பிராணனோடுகூடிய புருஷனும் சுகதுக்கத்தையடையானாயின் அவனே கைவல்லிய மோக்ஷத்தில் நிலைப்படுகின்றான். ஆனால், இவ்விதமானவுரையும் மரணாவத்தைபோன்று சீவித்திருக்கும்போதும் காமக்குரோதத்தின் உற்பத்திமாத்திரங்கூட உடன்பாடில்லையேல் சித்தமுடையதாம். ஈண்டு, பிரசங்கத்திலோ அக்காமக்குரோதங்களின் உற்பத்தியின்மைமாத்திரம் பிராப்தியில்லை; மற்றன்று, உள்ளே யுண்டாய காமக்குரோதங்களின் வேகசகனமே யீண்டுப் பிராப்தமாமாதலின், அவற்றின் உத்பத்தியின்மைமாத்திரத்திற்குத் திருஷ்டாந்தவடிவத்தன்மை யமையாதாதலின் முற்கூறிய வுரையே இனியதாம். மற்றோருரையிலோ தேகம் விழுவதன்முன்னர் என்னும் வாக்கியத்திற்கு இவ்வாறு பொருள் கூறப்பட்டுளது. ஈண்டுச் சரீரபதத்தால் சரீரத்திற் காசிரயமாயுள்ள கிருகத்தாச்

சிரமங் கொள்ளத்தக்கது அவ்வாசிரமத்தின் தியாகவடிவ சந்நியாசத்தின் முன்னரே எவ்வதிகாரி புருஷன் விவேக வைராக்கியங்களால் அக்காமக்குரோத வேகத்தைச் சகனஞ்செய்வதில் வலியுடையனே அப்புருஷனே பின்னர்ச் சந்நியாச பூர்வக சிரவணமுதலிய சாதனங்களால் ஆன்மஞானத்தைச் சம்பாதித்துப் பிரஹ்மயோகமுடையனுதற்கும் பிரஹ்மாநந்தமுடையனுதற்குந் தக்கவனுவன். எவன் சந்நியாசத்தின் முன்னர் அக்காமக்குரோத வேகத்தைச் சகிக்கவில்லையோ, அதாவது அக்காமக்குரோதத்தை ஜயிக்கவில்லையோ அவ்வசுத்தாந்தக்கரணமுடைய புருஷன் சந்நியாசாசிரமத்தோடு சிரவண முதலியவைகளைச் செய்யினும் ஆன்மஞானத்தையும் அதன் பலவடிவ மோக்ஷத்தையுமடையான். (23)

(அ-கை) இவ்வதிகாரி புருஷன் கேவலம் அக்காமக்குரோதங்களின் வேகத்தைச் சகித்துக்கொள்வதனுனே மோக்ஷமடையான்; மற்றே, அதனினதிகமாயும் சிறிது செய்யற்பாலன வுளவாமென்னும் அர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றுர்.

சு-ம். யோऽந்த꞉ஸுகோऽந்தராராமஸ் ததாந்தர்ஜ்யோதிரேவ ய꞉ ।
ஸ யோகீ ப்ரஹ்மநிர்வாணம் ப்ரஹ்மபூதோऽதிகச்சதி ॥ (24)

ப-ம். 1 ய꞉ 2 அந்த꞉ஸுக꞉ 5 அந்தராராம꞉ 4 ததா 7 அந்தர்ஜ்யோதி꞉ 3 ஏவ 6 ய꞉ 8 ஸ꞉ 9 யோகீ 12 ப்ரஹ்ம 11 நிர்வாணம் 10 ப்ரஹ்மபூத꞉ 13 அதிகச்சதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் அந்தர்ச்சுகனேயாவனே அந்தராராமனேயாவனே அந்தர்ச்சோதியேயாவனே அப்புருஷனுகிய யோகி பிரஹ்மரூபனுயே மோக்ஷவடிவப் பிரஹ்மத்தையடைகின்றுன். (24)

(வி-ம்.) பாகிய விஷயங்களின் அபேட்சையின்றியே அந்தர்ச் சொரூபவடிவ சுகப்பிராப்தி எவனுக்கோ அவன் அந்தர்ச்சுகமாவன்; அதாவது பாகியவிஷய சந்நிய சுகமின்றியவன் என்பதாம்.

சங்கை :—ஹே பகவன்! அப்புருஷனுக்குப் பாகிவிஷய சுகாநுபவமில்லாதது என் நிமித்தத்தால்?

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளுகின்றுர். (அந்தராராம)என ஹே அர்ச்சுன! எதனுல் அப்புருஷன் உட்டிருப்பதனே அதனுனே அவன் பாகிய விஷய சுகமிலாதோன் அந்தர் ஆன்மாவினிடத்தில் கிரீடைவடிவ ஆராமமுடையவன். பாகிய விஷய சுகசாதனவடிவ ஸ்திரி புத்திர திரவிய முதலியவைகளில் கிரீடைவடிவ ஆராமமின்றியவன் அந்தராராமனுவன். அதாவது, சர்வ பரிக்கிரகமின்மையின் பாகியவிஷய சுகசாதனமின்றியவனுவன்.

சங்கை :—ஹே பகவன்! சர்வ பரிக்கிரகமுமின்றிய விரத்தியுடைய சந்நியாசிக்கும் வேட்கையின்றிக் கிடைத்த குயில் முதலியவைகளின் இனிய குரலைச் சிரவணித்து மிகவினிய தென்றற்காற்றைப் பரிசித்துச் சந்திரனைத் தரிசித்து மயில் நடனத்தைப்பார்த்து மிக்க மதுரந்தண்மையுடைய கங்கைநீரைப் பருகி தாழம்பூ முதலியதின் நறு நாற்றத்தைக்கவர்ந்து சுகந்தோற்றுதல் பொருந்துமாதலின், பாகிய சுகாபாவமும் சுகசாதனபாவமுங் கூறல் பொருந்தாதாம்?

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளுகின்றுர். 'ததாந்தர்ஜ்யோதிரேவ ய꞉' என ஹே அர்ச்சுன! அவ்வித்துவானுக்கு அந்தர் ஆன்மாவினிடத்தில் சுகமாம் பாகிய விஷயங்களாலின்றுவதேபோல அந்தர் ஆன்மாவினிடத்திலேயே சோதியென்னும் விருத்திவடிவ விஞ்ஞானம் எவனுக்கோ பாகியேந்திரியங்களால் அவ்விஞ்ஞான

வடிவ சோதி எவனுக்கின்றோ அவன் அந்தர்ச்சோதியாவன். அதாவது சுரோத்திரமுதலிய விந்திரிய சந்நிய சத்தமுதலிய ஞானமின்றியவன் என்பதாம். கருத்திதுவாம்:—அவ்வித்துவானுக்குச் சமாதிகாலத்திலோ அச்சத்த முதலிய விஷயந் தோன்றுவதில்லை; வெளிக் கிளம்பியகாலத்தில் சத்த முதலியவைகளின் றோற்ற முளதாமாயினும், அவன் அவைகளைக் கானனீர்போலக் கண்டிருத்தலின் சுகத்தோற்றம் பொருந்தாது. இவ்வாறு எவன் அந்தர்ச்சுகன் அந்தராராமன் அந்தர்ச்சோதி, அவனே மனத்தோடு சர்வ இந்திரியங்களின் நிரோதவடிவ யோகமுடைய யோகியாவன்; அத்தன்மையனே தத்துவ சாக்ஷாத்காரத்தால் அவித்தைவடிவ ஆவரண நிவிருத்தியால் பரமாநந்தவடிவப் பிரஹ்மத்தையடைகின்றான். அது நிருவாணமாம் அதாவது கற்பிதப் பிரபஞ்சத்தின் நிவிருத்தி வடிவமாம் கற்பித வஸ்துவினபாவம் அதிட்டானவடிவமேயாம்; அதனின் வேறன்றாம். இத்துணை கூறியதால் துவைதப்பிரபஞ்சவடிவ துக்கநிவிருத்திபூர்வக பரமாநந்தப்பிராப்திவடிவமோக்ஷங் கூறப்பட்டது. அத்தன்மைய நிருவாணப் பிரஹ்மத்தை இவ்வித்துவான் தான் பிரஹ்மவடிவமிலனாகி யடைவதில்லை; மற்றோ, எப்போதும் பிரஹ்மவடிவமாயிருந்தே பிரஹ்மத்தையடைகின்றான். அதாவது, நித்தியப்பிராப்தப் பிரஹ்மமே யடையப்படுகின்றது என்பதாம். 'ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி' வித்துவானாகிய புருஷன் ஞானத்தின்முன்னரே உண்மையில் பிரஹ்மவடிவமேயாயினும் அஞ்ஞானத்தால் மறந்தவனாகி ஆன்மஞானத்தினால் மறித்தும் பிரஹ்மத்தையேயடைகின்றான். (24)

(அ-கை.) ஆண்டு மோட்சப்பிராப்திக்குக் காரணமாகிய ஆன்மஞானத்திற்குமுன்னர்ப் பலவகைச் சாதனங்கள் கூறியருளப்பட்டன, இப்போது அவ்வான்மஞானத்தின் மற்றச் சாதனத்தையும் ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். லபந்தே ப்ரஹ்மநிர்வாணம் ருஷய: க்ஷீணகல்மஷா: ।
சின்னத்வைதா யதாத்மான: ஸர்வபூதஹிதே ரதா: ॥ (25)

ப-ம். 9 லபந்தே 8 ப்ரஹ்ம 7 நிர்வாணம் 2 ருஷய: 1 க்ஷீணகல்மஷா: 3 சின்னத்வைதா: 4 யதாத்மான: 5 ஸர்வபூதஹிதே 6 ரதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எந்தப்புருஷன் பாபமின்றியவன், சந்நியாசமுடையோன், சம்சயமிலாதோன், ஒருமைமனத்தோன், எப்பிராணிகளிடத்தும் பிரீதியுடையோன் ஆவனோ அத்தன்மையனே அந்நிருவாணப்பிரஹ்மத்தையடைகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் முன்னர் யக்ஞமுதலிய நிஷ்காம கருமங்களால் பாபவடிவதோஷமின்றியவனாவனோ அதன்பின் அந்தக்கரணசுத்தியால் எவன் இருஷித்தன்மையை யடைகின்றானோ, அதாவது நுண்ணியபொருளை விவேகம் பண்ணுவதில் வலியுடைய சந்நியாசியோ என்பதாம் அதன்பின் எவன் வேதாந்த சாத்திரத்தின் சிரவண மனனங்களின் பரிபக்குவத்தால் துவைதமற்றவனாவனோ, அதாவது பிரமாணகத சம்சயம் பிரமேயகத சம்சயம் முதலியவையின்றியவனோ, அதன்பின் நிதித்தியாசனத்தின் பரிபக்குவத்தால் யதாத்மனோ அதாவது விபரீதபாவனையினிவிருத்தி பூர்வகம் ஒரே பரமான்மாவினிடத்தில் ஒருமைப்பட்ட மனமுடையனோ அதன்பின் துவைதரிசனமின்மையின் சர்வப் பிராணிகளிதத்தும் பிரீதியுடையனோ, அதாவது சரீரவாக்குமனங்களால் சர்வப் பிராணிகளின் இம்சையின்றியவனோ அத்தன்மைய பிரஹ்மஞானியே சர்வத் துவைத நிவிருத்தி வடிவப் பரமாநந்த சொரூபத்தை அபேதமாயடைகின்றான்.

ஆ-சு. யஸ்மிந் ஸர்வாணி பூதாநி ஆத்மைவா பூத்விஜாநத: ।
தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வமநுபச்யத: ॥

(பொ-ள்.) எஞ்ஞானகாலத்தில் இவ்வித்துவானுக்கு இச்சர்வபூதமும் தன தான்மவடிவாகவேயானதோ அந்த ஞானகாலத்தில் ஒரே யத்துவிதீயவான்மாவைப் பார்க்கின்ற பிரஹ்மஞானிக்குத் துவைததரிசனமிலதாகவே, எச்சோக மோகப்பிராப்தியும் எக்காலுமின்றும். (25)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் '𑌶𑌕𑍍𑌨𑍋𑌤𑍀𑌹𑍈𑌵 𑌯𑌃 𑌸𑍋𑌢𑍁𑌂' என்னுஞ் சுலோகத்தில் உத்பந்நமாயினும் காமக்குரோதவேகம் இவனால் சகிக்கற்பாலது என்னுமர்த்தங் கூறியருளப்பட்டது; இப்போது இப்புருஷன் காமக்குரோதங்களின் உற்பத்தியையே தடைப்படுத்தத்தக்கது. அதாவது காமக்குரோத முற்பத்தியாதற்கே யிடங்கொடுக்கற்க என்னு மிவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂 𑌯𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 ।
𑌅𑌭𑌿𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 ॥ (26)

ப-ம். 1 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌵𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 4 𑌯𑌤𑍀𑌨𑌾𑌂 2 𑌯𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌂 5 𑌅𑌭𑌿𑌤𑌃 7 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 6 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌂 8 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 3 𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்புருஷன் காமக்குரோதோத்பத்தியின்றியவனோ மனத்தினிக்கிரகமுடையனோ, ஆன்ம சாக்ஷாத்காரமுடையனோ அத்தன்மைய சந்நியாசிக்கு எக்காலத்தினும் அந்நிருவாணவடிவப் பிரஹ்மம் பிராப்தமாம். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வெத்தனமுடைய சந்நியாசி காமக்குரோத பிரண்டின் தோற்றமின்மையோடு கூடியவனோ அதாவது எவனுக்கு அக்காமக்குரோத முத்பத்தியேயாவதில்லையோ அதனானே எவன் சித்த நிரோதத்தோடு கூடியவனோ தத்பதார்த்தவடிவ பரமான்மதேவனைத் தன தான்மவடிவமாய்ச் சாக்ஷாத்காரம்பண்ணியவனோ, அத்தன்மைய வித்துவானாகிய சந்நியாசிக்குச் சீவனகால மரணகாலமிரண்டினும் அந்நிருவாணவடிவ மோக்ஷம் சர்வதாப்பிராப்தியாம். எதனால் அப்பிரஹ்மவடிவ மோக்ஷம் நித்தியமாமோ சுவர்க்கம் போன்றடையப்படுவதில்லையோ அதனால் அவ்வித்துவானுக்கு அப்பிரஹ்மவடிவ மோக்ஷம் இனிப்பிராப்தமாம் என்னுமித்தன்மைய வருங்கால வியவகாரம் அம்மோக்ஷத்தினுண்டாகாதாம், (26)

(அ-கை.) ஆண்டுப் பூர்வப் பிரசங்கத்தில் இது கூறியருளப்பட்டுளது; சர்வ கருமத்தையும் ஈசுரார்ப்பணம்பண்ணிய அதிகாரியின் அந்தக்காணம் அந்நிஷ்காமகருமயோகத்தால் சுத்தமானதின்பின்னர்ச் சர்வ கர்ம சந்நியாசமாம்; அதன்பின் சிரவண மனன முதலியவைகளில் தற்பரனாகிய புருஷனுக்கு மோக்ஷ சாதனவடிவ தத்துவஞானம் பிராப்தமாம் என இவ்வியாவும் கூறியருளப்பட்டன. இப்போது 'அந்த யோகி பிரஹ்ம நிருவாணம்' என்னும் பூர்வ வாக்கியத்தில் ஸ்ரீ பகவான் குறிப்பித்தருளிய தியானயோகம் அத்தத்துவ சாக்ஷாத்காரத்திற்கு அந்தரங்க சாதனமாம் என்னுமர்த்தத்தை விரிவாய்க் கூறியருளும்பொருட்டுச் சூத்திரவடிவ மூன்று சுலோகத்தைக் கூறியருளினர். ஆறுவது அத்தியாய முழுதும் அவற்றின் உரைவடிவமாம் அவற்றுள்ளும் முந்திய விரண்டு சுலோகங்களால் சுருக்கமாக யோகத்தைக் கூறியருளினர்; மூன்றுவது சுலோகத்தால் அத்தியானயோக பலத்தைக் கூறியருளினர்.

சு-ம். 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌨𑍍 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌬𑌹𑌿𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌂𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 ।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 𑌸𑌮𑍌 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌚𑌾𑌰𑌿𑌣𑍌 ॥ (27)

சு-ம். 𑌯𑌤𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌮𑍁𑌨𑌿𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ।
𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑍋 𑌯𑌃 𑌸𑌦𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤 𑌏𑌵 𑌸𑌃 ॥ (28)

ப-ம். 2 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌾𑌨𑍍 4 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 3 𑌬𑌹𑌿𑌃 1 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌨𑍍 6 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 5 𑌚 9 𑌏𑌵 8 𑌅𑌂𑌤𑌰𑍇 7 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 10 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨𑍌 11 𑌸𑌮𑍌 13 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 12 𑌨𑌾𑌸𑌾𑌭𑍍𑌯𑌂𑌤𑌰𑌚𑌾𑌰𑌿𑌣𑍌 14 𑌯𑌤𑍇𑌂𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 18 𑌮𑍁𑌨𑌿𑌃 16 𑌮𑍋𑌕𑍍𑌷𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 15 𑌵𑌿𑌗𑌤𑍇𑌚𑍍𑌛𑌾𑌭𑌯𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 17 𑌯𑌃 20 𑌸𑌦𑌾 21 𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 22 𑌏𑌵 19 𑌸𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பாகியத்திலுள்ள சத்த முதலிய விஷயங்களை மறித்தும் பாகியமாக்கி நேத்திரத்தை இரண்டு புருவத்திற் கிடையிலேயே நிறுத்திப்பிராணாபான னிரண்டையும் சமமாய் நாசிக்குள்ளே நிரோதம்பண்ணி எவனிந்திரியமனம் புத்திகளை ஜெயித்தவனோ இச்சை பயங் குரோதங்களொழிந்தவனோ சர்வ விஷயங்களினின்றும் விரத்தனோ அத்தன்மைய மனன சீலனாகிய சந்நியாசி எப்போது முத்தனாவன். (27,28)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இயல்பானே வெளித்தேசத்திருக்கும் சத்த முதலிய விஷயங்கள் பாகியமாயினும் சுரோத்திரமுதலிய விந்திரிய வாயிலாய் அந்த அந்தச் சத்தமுதலிய வாகாரத்தையடைந்த அந்தக்கரண விருத்திவாயிலாய் உள்ளே சித்தத்திற் புகுகின்றது; அத்தன்மைய சத்தமுதலிய விஷயங்களை எவன் மறித்தும் பாகியமாயே செய்வனோ, அதாவது எவன் பரவைராக்கியத்தின் பிரபாவத்தால் அவ்வச் சத்தமுதலியவாகாரமாகிய விருத்தியைத் தோற்றுவியானோ, ஈண்டு ஸ்ரீ பகவான் சத்தமுதலிய விஷயங்கட்குப் பாகியங்களென்னும் விசேஷணங் கூறியருளியதின்றிருக்கருத்திதுவாம் :—இச்சத்த முதலிய விஷயங்கள் ஒருகால் இயல்பாயே அந்தரமாகிடினோ ஆயிர முபாயத்தானும் இவ்விஷயங்கள் மீண்டும் பாகியமாய்ப் பண்ணமுடியா ; இயல்பானே அந்தரமாகிய விஷயங்களைப் பாகியமாய்ப் பண்ணினோ அவ்விஷயங்களின் இயல்பாந்தன்மைக் கேடாகின்றது. வஸ்துவின் சுபாவமோ கெடுவதில்லையாம். தீயின் உஷ்ண சுபாவம் ஒருகாலுங் கெடுவதில்லாததேபோலும். அவ்விஷயங்கள் இயல்பானே பாகியமெனக் கொள்ளினோ இராகவசத்தால் உள்ளே சித்தத்தில் பிரவேசித்த அச்சத்தமுதலிய விஷயங்களைப் பரவைராக்கியவசத்தால் மறித்தும் வெளியிலிழுத்துவரல் கூடும். இயல்பாய்ச் சுத்த வஸ்திரத்தில் பாகியத்தினின்று மடைந்திருந்த மண்ணானது உவர்மண் நீரால் கழுவுதலால் நிவிருத்தியாகின்றதேபோலும்; இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் வைராக்கியத்தைக் கூறியருளினர். இப்போது அப்பியாசத்தைக் கூறியருளுகின்றார். '𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑍈𑌵𑌾𑌂𑌤𑌰𑍇 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃' என ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி தனது நேத்திர திருஷ்டியை இரண்டு புருவமத்தியில் நிறுத்துக. அப்புருவமத்தியில் நேத்திர நிலைத்திருத்தல் நேத்திரத்தைப் பாதி மூடலாலாகின்றது, நேத்திரத்தை முழுதும் மூடினாலும் அல்லது முழுதுந்திறந்தாலும் புருவத்திற்கிடையினிலைக்குந்தன்மைகூடாது. கருத்திதுவாம்:—இவ்வப்பியாசம் பண்ணுகின்ற புருஷன் ஒருகால் நேத்திரத்தை முழுதும் மூடினோ இவனுக்கு நித்திரைவடிவ லயவிருத்தியாய்விடும், முழுதுந்திறக்கினோ பிரமாண விபரியய விகற்ப ஸ்மிருதி என்னும் நால்வகை விக்ஷேப விருத்திகளுள்ளனவாய்விடும். நித்திரை முதலிய அவ்வைந்து விருத்திகளும் யோகாப்பியாசத்தின் விரோதியானதால் இவ்வதிகாரி அவ்வைந்து விருத்திகளையும் நிரோதஞ்செய்யத்தக்கது ; அந்த நிரோதம் புருவத்திடை நேத்திரத்தை நிறுத்தலினானேயாம். இவ்வதிகாரி தனது பிராணாபானனைச் சமஞ்செய்க அதாவது பிராணனின் மேலோட்டத்தையும் அபானனின் கீழோட்டத்தையும் கும்பகத்தால் விச்சேதஞ்செய்து அப்பிராணாபானன்களை இருதயமுதலிய விடங்களில் நிறுத்தல்வேண்டும் என்பதாம். இவ்வித வுபாயத்தால்

நிரோதமுற்ற இந்திரியமன புத்திகளையுடைய மோக்ஷபராயணன், அதாவது சர்வ விஷயங்களினின்றும் விரக்தன் என்பதாம் அப்புருஷனே முனியாவன், அதாவது மனன சீலனுவனென்பதாம். எவன் இச்சை பயம் குரோதங்களின்றியவனோ நீங்கிய இச்சை பயக்குரோதம் என்னும் வாக்கியத்தின் அர்த்தம் நீங்கியராக பயக்குரோதம் என்னும் வாக்கியத்தினுரையில் முன்விரிவாய்க் கூறப்பட்டது. இத்தன்மைய இலக்கணத்தோடுகூடியவன் எப்போதுஞ் சந்நியாசியாவன் அவன் முத்தனேயாவன். அவனுக்கு மோக்ஷம் செய்யற்பாலதன்று. அல்லது, எப்போதும் என்னும் பதத்தை முத்தனே யென்னும் பதத்தோடு கூட்டத்தக்கது அதனு லிப்பொருள் பெறப்பட்டது. இத்தன்மைய சந்நியாசியானவன் ஜீவித்திருப்பினும் முத்தனேயாவன். (27, 28)

(அ-கை.) ஹே பகவன்! இத்தன்மைய யோகத்தோடுகூடிய அதிகாரி எப்பொருளையுணர்ந்து முத்தியையடைகின்றான் என்றருச்சுனனுசங்கிப்ப ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ (29)

ப-ம் 2 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 1 𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 3 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 5 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 4 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 7 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 6 𑌮𑌾𑌂 8 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 9 𑌋𑌚𑍍𑌛𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வயக்ஞ தவங்களின் போக்தாவடிவமும் சர்வ வுலகங்களின் மகத்தாகிய வீசுரவடிவமும் சர்வப் பிராணிகளின் சுகிருதவடிவமுமாகிய ஸ்ரீ பகவானுகிய எம்மை ஆன்மரூபமாயுணர்ந்தே யோகி மோக்ஷத்தையடைகின்றான். (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வேதத்திற்கூறிய ஜோதிட்டோம முதலிய யக்ஞங்களின் கிருச்சிர சாந்திராயண முதலிய தவங்களின் எஜமானன்முதலிய கருத்தாவடிவத்தானும் இந்திரன் முதலிய தேவதாவடிவத்தானும் போக்தாவடிவமும் இரட்சிப்பவரும் பரமேஸ்வரராகிய நாமே அங்ஙனமே சர்வ வுலகங்கட்கும் மகத்தாகிய வீசுரரும் யாமேயாம் அதாவது இரணிய கருப்பன் முதலிய வீசுரர்களையும் ஆணையில் நடத்துவிப்பவர் யாமே. அங்ஙனமே சர்வப் பிராணிகட்கும் சுகிருதவடிவமும் யாமே அதாவது கைம்மாறபேட்சியாமலே சர்வப்பிராணிகட்கு முதவிசெய்பவர் யாமே என்பதாம். இத்தன்மைய சர்வாந்தரியாமி சர்வப் பிரகாசக பரிபூரண சச்சிதாநந்தவடிவ ஏகரச பரமார்த்த சத்திய சர்வ ஆன்மவடிவமாகிய நாராயணராகிய வெம்மைத் தனதான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தே அந்த யோகத்தோடுகூடிய புருஷன் சர்வசமுசாரத்தினிவிருத்திவடிவ மோக்ஷரூப சாந்தியையடைகின்றான். ஈண்டு, ஹே பகவன்! சங்கு சக்கரம் கதை பத்மம் என்னு மிந்நான்கையுமுடைய சதுர்ப்புஜ வடிவமானது வசுதேவர் தேவகி என்னுமிவர்களிடத்தினின்று முண்டானது, எனது இரதத்திலுமிருக்கின்றது என்னுந்தன்மையதாய தங்களது வடிவத்தை யுணரினும் அர்ச்சுனனுகிய யான் ஏன் மோக்ஷமடையேன்? என்னுமருச்சுனனது சங்கையை நிவிருத்தித்தருள ஸ்ரீ பகவான் தமது சொரூபத்தை '𑌯𑌜𑍍𑌞𑌤𑌪𑌸𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂' என்னும் மூன்று விசேஷணத்தாற் கூறியருளுகின்றார். இத்தன்மைய எமது சொரூபஞானமே மோக்ஷகாரணம், கேவலம் எமது தூலவியக்தி ஞானமன்றும். இப்போது ஐந்தாவதத்தியாயத்தின் சர்வார்த்தத்தையுஞ் சுருக்கிக் கூறுஞ் சுலோகஞ் சொல்லப்படுகின்றது.

ஸு-ம். அநேகஸாதநாப்யாஸ நிஷ்பந்நம் ஹரிணோதிதம் ।
ஸ்வஸ்வரூபபரிஜ்ஞாநம் ஸர்வேஷாம் முக்திஸாதநம் ॥

(போ-ள்.) பலவகையான சாதனப்பியாசத்தாலுத்பன்னமும் சர்வ அதிகாரிகளுக்கு மோக்ஷசாதனவடிவமுமாகிய தமது சொரூபஞானத்தை ஸ்ரீ பகவான் இவ்வைந்தாவது அத்தியாயத்தில் கூறியருளினர். (29)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளது பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனாநந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகையெனப் பெயரிய வியாக்கியானத்தின்

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# ஆறுவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம꞉ ஸ்ரீ குருப்யோநம꞉ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம꞉
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம꞉.

(அ-கை.) ஆண்டுத்தொடக்கச் சுலோகம்.

ஸு-ம். யோகஸூத்ரம் த்ரிபி꞉ ச்லோகை꞉ பஞ்சமாந்த்யைரிதீரிதம் ।
ஷஷ்டேந ஹ்யத்யாயேந வ்யாக்யாநாய விஸ்தராத் ॥

(போ-ள்.) ஐந்தாவது அத்தியாயத்தினீற்றில் மூன்று சுலோகங்களாற் கூறியருளிய யோகசூத்திரங்களை விரிவாயுரைசெய்தருளற்பொருட்டு இவ்வாறுவது அத்தியாயம் ஆரம்பித்தருளப்படுகின்றது. அதில் சருவகருமங்களின் தியாகங் கூறியருளி ஸ்ரீபகவான் யோகவிதானஞ் செய்தருளினர். ஆதலின், அச்சருவகருமங்களும் தியாகம்பண்ணத்தக்கமையின் சந்நியாசத்திலும் யோகத்திலும் மிகக் கீழாமென் றருச்சுனன் ஆசங்கிக்க ஸ்ரீபகவான் இரண்டு சுலோகத்தால் அருச்சுனனை யுத்தவடிவகருமத்தில் பிரவிருத்தித்தருளற்பொருட்டு மீண்டும் அக்கருமயோகத்தைத் துதித்தருளுகின்றனர்.

ஸ்ரீபகவாநுவாச.

ஸு-ம். அநாச்ரித꞉ கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய꞉ ।
ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்நிர்ந சாக்ரிய꞉ ॥ (1)

ப-ம். 3 அநாச்ரித꞉ 2 கர்மபலம் 4 கார்யம் 5 கர்ம 6 கரோதி 1 ய꞉ 7 ஸ꞉ 13 ஸந்ந்யாஸீ 14 ச 15 யோகீ 9 ச 16 ந 8 நிரக்நி꞉ 12 ந 10 ச 11 அக்ரிய꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கருமபலத்தை விரும்பாது அவசியஞ் செய்யத்தக்க நித்தியகருமத்தைச் செய்பவன் எப்போதும் அக்கினியற்றவனும் கிரியையற்றவனுமன்றேனும் சந்நியாசியும் யோகியுமாவன். (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் சுவர்க்கமுதலிய கருமபலேச்சையின்றிச் சாத்திரத்திற் செய்யற்பாலனவடிவமாய் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திரமுதலிய நித்திய நைமித்திக கருமங்களைப் பிரீதியோடுஞ்செய்கின்றானோ அவன் கருமியாயினும் சந்நியாசியும் யோகியுமேயாவன் என்றிவ்வாறு கருமி புகழப்படுகிறான். என்னை? தியாகத்தின்பெயர் சந்நியாசமாம்; சித்தவிக்ஷேபமின்மையின்பெயர் யோகமாம்; இத்தன்மைய சந்நியாசயோகமிரண்டும் இந்நிட்காம புருஷனிடத்துள்ளன; இவன் பலத்தியாகியாதலின் சந்நியாசியாம், பலதிருஷ்ணைவடிவ விக்ஷேபமிலாதவனாதலின் யோகியாம் என்பது பொருள். ஈண்டுச் சகாமபுருஷாபேக்ஷையால் நிஷ்காமபுருஷனிடத்து மேலாந்தன்மை கூறுதற்பொருட்டு ஸ்ரீபகவான் கௌணிவிருத்தியை யங்கீகரித்தருளிச் சந்நியாச சத்தத்தால் கருமபலத்தியாகத்தைக் கூறியருளினர். யோகசத்தத்தால் பலதிருஷ்ணாத்தியாகத்தைக் கூறியருளினர். அன்றியும், சந்நியாசசத்தத்தின் முக்கியப்பொருள் பலத்தோடு சருவகருமங்களின் தியாகவடிவமாம்; யோகசத்தத்திற்கு முக்கியப்பொருள் சருவசித்தவிருத்திநிரோதவடிவமாம்; இவ்விரண்டும் நிஷ்காமபுருஷனுக்கு ஒருதலைபாயுண்டாதற்பாலனவாமாதலின், நிஷ்காம கருமஞ்செய்வோன் எப்போதும் அக்கினியற்றவனல்லன்; அதாவது அக்கினிபாற் பெறப்படுவதாகிய அக்கினிஹோத்திரமுதலிய சிரௌதகருமத்தியாகமுடையோனல்லன். அந்தக் கருமிபுருஷன் கிரியையற்றவனுமல்லன் அதாவது அக்கினியை யபேட்சியாத ஸ்மார்த்தக்கிரியாத்தியாகியுமல்லன். அங்ஙனமாயினும் அந்நிஷ்காமகருமியைச் சந்நியாசியென்றும் யோகியென்றுமுணர்க. அல்லது, 'ஸஸந்ந்யாஸீ அ யோகீ அ நநிரக்நிர்ந சாக்ரிய:' என்னும் வாக்கியத்திற்கு இப்பொருட்செய்க:—சிரௌதாக்கினியின்றிய புருஷன் சந்நியாசியெனப்படுவதில்லை; கிரியையின்றிய புருஷன் யோகியெனப்படுவதில்லை; மற்றோ, சிரௌதாக்கினியும் கிரியையுமுடையவனுய் நிஷ்காமகருமத்தைச்செய்யுங் கருமியையே சந்நியாசியென்றும் யோகியென்றுமுணர்க. இவ்வண்ணம் நிஷ்காமகருமி புகழப்படுகின்றான். ஈண்டு அக்கிரியன் என்னும் பதத்தானே சர்வ கருமங்களின் சந்நியாசியின் றோற்றமாதல் கூடுமாதலின், நிரக்கினி என்னும் பதம் பயனிலதாம் அங்ஙனமாயினும் அக்கினிசத்தத்தால் சர்வகருமத்தையுங்கொண்டருளி நிரக்கினிசத்தத்தால் சந்நியாசியைக் கூறியருளினர். கிரியாசப்தத்தால் சர்வசித்தவிருத்திகளைக் கவர்ந்தருளி, அக்கிரியாசப்தத்தால் நிருத்தசித்தவிருத்தியையுடைய யோகியைக் கூறியருளினர். ஆதலின், இப்பொருட்பெறப்படுகிறது; அந்நிரக்கினி புருஷன் சந்நியாசியெனப்படுவதில்லை. அங்ஙனமே அக்கிரியபுருஷன் யோகியெனப்படுவதில்லை; மற்றோ, நிஷ்காமகருமஞ்செய்யுங் கருமியே சந்நியாசியென்றும் யோகியென்றுஞ் சொல்லப்படுகின்றனன். (1)

(அ-கை.) எங்ஙனம் சிங்கந் தேவதத்தன் என்னும் வாக்கியத்தில் பசுவடிவ சிங்கத்தின்வேறாகிய மனுஷியவடிவ தேவதத்தனிடத்தில் அச்சிங்கத்தின் ஒப்புமையாகிய சூரத்தன்மை கோரத்தன்மை முதலிய குணங்களைக்கொண்டு அச்சிங்கசத்தம் எழுகின்றதோ அங்ஙனமே சந்நியாசாபாவத்தில் சந்நியாசசப்தம் பிரவிருத்திக்கும்; யோகாபாவத்தில் யோகசத்தம் பிரவிருத்திக்குங் காரணமாகிய ஒப்புமைக்குணத்தை ஸ்ரீபகவான் உபதேசித்தருளுகின்றார்.

சு-ம். யம் ஸம்ந்யாஸமிதி ப்ராஹுர்யோகம் தம் வித்தி பாண்டவ |
நஹ்யஸம்ந்யஸ்த ஸங்கல்போ யோகீ பவதி கஶ்சந || (2)

ப-ம். 2 யம் 3 ஸம்ந்யாஸம் 4 இதி 5 ப்ராஹு: 7 யோகம் 6 தம் 8 வித்தி 1 பாண்டவ 13 ந 9 ஹி 10 அஸம்ந்யஸ்தஸங்கல்ப: 12 யோகீ 14 பவதி 11 கஶ்சந.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எது சுருதியிற் சந்நியாசமென்னும் பெயராற்கூறப்படுகின்றதோ அதுவே யோகமென் றுணர்தி; எதனால் சங்கற்பத்தியாகமிலாத எவனும் யோகியாவதின்றே. (2)

(வி-ம்.) 'ஏதாவன்வாதிரெ அயக ஃராஹணாஃ வ்ஜெத்ஷணாயாஸ் வித்தைஷணாயாஸ் ரோகைஷணாயாஸ் வ்யுத்தாயாஃ ஹிக்ஷாசயம்சாஹு' என்பதுமுதலிய பலசுருதிகளில் பலத்தோடு சர்வ கருமத்தியாகம் சந்நியாசமென்னும்பெயராற்கூறப்படுகின்றது அதையே யோகமென்றுணர்தி. ஈண்டுப் பலவேட்கை கருத்திருத்துவாபிமானங்களை விடுத்து நூல்விதித்த சுபகருமத்தைச் செய்வதன்பெயர் யோகமாம். அச்சந்நியாசத்தை நீ நிட்காமகரும யோகமென்றறிதி. ஹே பகவன்! பிரமதத்தனலாதோனை இவன் பிரமதத்தனெனக்கூறுவதால் இவன் பிரமதத்தனுக்கொப்பானேன் என்றுணரப்படும். என்னை? வேறுபொருளின் வாசகசத்தமானது மற்றியாதானுமோர் பொருளை யறிவுறுத்தற்பொருட்டுக் கூறிடுதே அச்சத்தம் கௌணிவிருத்தியாலேனும் அத்தன்மையினாரோபத்தாலேனும் அவ்வந்நியப்பொருளில் தனது வாச்சியார்த்தத்தின் ஒப்புமையையே தெரிவிக்கின்றது. ஈண்டுப் பிரசங்கத்தில் அவ்வொப்புமையாதாம் என்றருச்சுனன் ஆசங்கிக்க ஸ்ரீபகவான் அவ்வொப்புமைத் தருமத்தைக்கூறி யருளுகின்றார் 'நஹ்யஸந்யஸ்தஸங்கல்போ யோகீ பவதி கஶ்சந இதி' எதனால் பல சங்கற்பதியாகமின்றிய எவனும் யோகியாவதில்லை; மற்றே, சர்வ யோகிபுருஷர்களும் பல சங்கற்பத்தியாகிகளே யாகின்றார்கள். அதனால், பலத்தியாகவடிவ பலதிருஷ்ணாரூபச் சித்தவிருத்தி நிரோதவடிவ ஒப்புமைத்தருமங்களினின்றுங் கௌணிவிருத்தியால் அக்கருமிபுருஷனே சந்நியாசியும் யோகியுமாவன். சந்நியாசி சத்தத்தின் முக்கியப்பொருளாகிய பல சகித சர்வ கருமத்தியாகியிடத்தில் சுவர்க்கமுதலிய பலத்தியாக மிருப்பதேபோல நிஷ்காமகருமி புருஷனிடத்தும் அஃதிருத்தலின் அச்சந்நியாசிசத்தம் கௌணிவிருத்தியால் அக்கருமிபுருஷனிடத்தே பிரவிருத்திக்கின்றது. யோகிசத்தத்தின் முக்கியப்பொருளாகிய சருவ சித்தவிருத்தி நிரோதமுளோனிடத்தில் பலதிருஷ்ணைவடிவ சித்தவிருத்திநிரோத மிருப்பதுபோன்று, நிஷ்காமகருமியினிடத்தும் அஃதிருத்தலின் யோகிசத்தம் கௌணிவிருத்தியால் அவனிடத்துப் பிரவிர்த்திக்கின்றது என்பதுகருத்து. இவ்வர்த்தத்தை யோகசூத்திரங்களால் விளக்குகின்றார்.

ஆ-சு. யோகஶ்சித்தவ்ருத்தி நிரோதஃ। ப்ரமாணவிபர்யய விகல்ப நித்ராஸ்ம்ருதயஃ இதி. (பொ-ள்.) சித்தவிருத்திகளினது நிரோதத்தின்பெயர் யோகமாம். அவ்விருத்திகளும் பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதிஎன்னும் வேறுபாட்டால் ஐவகைப்படும். அவற்றுள், பிரமாகரணம் பிரமாணமெனப்படும். அதுவும் பிரத்தியட்சம், அனுமானம், சத்தம், உபமானம், அருத்தாபத்தி, அநுபலப்தி என்னும் வேறுபாட்டால் அறுவகைப்படும் என்றிவ்வாறு ஆன்றோர்களுடன்படுகின்றார்கள். பிரத்தியட்சம், அநுமானம், சத்தம் என மூவகைப்பிரமாணமென்று யோகநூலார் கொள்கின்றனர். ஆண்டுச் சில பிரமாணத்திற்குச் சில பிரமாணத்திலந்தர்ப்பாவமாம். சிலதிற்குச் சிலதினின்றும் பகிர்ப்பாவமாம். இவ்வாறு அப்பிரமாணங்கட்கு ஒன்றற்கொன்று அந்தர்ப்பாவ பகிர்ப்பாவத்தைக்கொண்டு சில நூலில் அப்பிரமாணங்களைச்சுருக்கினர், சில நூலிற் பெருக்கினர். நியாயமதத்தில் பிரத்தியட்சம், அநுமானம், உபமானம், சத்தம் இந்நான்கே பிரமாணமாம். அவற்றுள், அருத்தாபத்திப் பிரமாணத்தைக் கேவல வியதிரேகாநுமானத்திலடக்கிக்கொண்டனர், அநுபலப்திப்பிரமாணத்தைப் பிரத்தியட்சப் பிரமாணத்தி லடக்கிக்கொண்டனர். இங்ஙனமே பிறமதத்திலும் அப்பிரமாணங்களின் குறைவுமிகுதிகளை யுணர்

ந்துகொள்க. நியாயமதத்தில் பிரத்தியட்சமுதலிய பிரமாவின் கரணமாதலின் இந்திரிய முதலியவைகளே பிரத்தியட்சமுதலிய பிரமாணமாமாயினும், யோக நூலார்மதத்தில் இந்திரிய முதலியவைகளாலுண்டாகும் மனோவிருத்திகளே பிரத்தியட்சமுதலிய பிரமாணவடிவங்களாம். அவ்விருத்திகளிடத்துள்ள சேதனப் பிரதிபிம்பங்கள் பிரத்தியட்சாதிப் பிரமாவடிவங்களாமாதலின், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களைச் சித்தவிருத்திவடிவமாய்க் கூறினர். (1) மித்தியாஞானம் விபரியயமாம். அதுவும் அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம் என்னும் வேறுபாட்டால் ஐவகைப்படும்; அவைகளின் வடிவம் ஐந்தாவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பட்டுளது. (2) சத்தங்கேட்டதன்பின் தோன்றும் அர்த்தவடிவ வஸ்துவற்ற சித்தவிருத்தி விசேஷத்தின் பெயர் விகற்பமாம். மலடிமகனுளான் மனுடக்கொம்புண்டு என்பனமுதலிய சத்தங்களைக் கேட்போனுக்கு மலடிமகனையும் மனுடக்கொம்பையும் விடயஞ்செய்வதான சித்தவிருத்தி அவசியமாயுண்டாம். அவ்விருத்தியின் விடயவடிவ மலடிமகன் மனுடக்கோடிமிக்க வசத்தாமாதலின், அதை விடயம்பண்ணும் விருத்தியும் விகற்பமெனப்படுகின்றது. இவ்விகற்பம் விஷயவடிவ வஸ்துவின்றியதாதலின், பிரமாவடிவமன்றெனவும்படுகின்றது. இவ்விகற்பம் பாதஞானமுளதாயினும் அவசியமாய்த் தோன்றுவதாதலினானும் வியவகாரத்திற்குக் காரணமாதலானும் விபரியயவடிவமன்றென்க. சைதன்யமே புருஷனும் எனச் சைதன்ய புருஷர்கட்கு அபேத நிச்சயமுளதாயினும் புருஷனது சைதன்யம் எனக் கேட்போனுக்குச் சைதன்யம் புருஷன் என்பவற்றின் பேதத்தைக் கவரும் விகற்பஞானமுண்டாகின்றதாதலின், அது விபரியயவடிவமன்று. பாதஞானமுளதாகவே அவ்விபரியயஞானந் தோற்றுவதில்லை; மற்றேு, விகற்பஞானம், பிரமாஞானம் பிராந்திஞானமிரண்டினும் வேறும். சத்த ஞானானுபாதி வஸ்து சூன்யோவிகல்பம் என்னுஞ் சூத்திரத்தில் ஸ்ரீ பதஞ்சலிபகவான் கூறியருளியதே விகல்பவடிவமாம். (3) பிரமாணம், விபரியயம், விகற்பம், ஸ்மிருதி இந்நால்வகைச் சித்தவிருத்திகளின் அபாவத்திற்குக் காரணமாகிய தமோகுணத்தை விஷயஞ்செய்யும் விருத்தி விசேடத்தின்பெயர் நித்திரையாம். இத்துணை கூறியதால் ஞான முதலியவைகளின் அபாவமாத்திரத்திற்கு நித்திரைத்தன்மை கூறும் மதமும் மறுக்கப்பட்டது. அபாவப் பிரத்தியயாலம்பன விருத்தி நித்திரை என்னுஞ் சூத்திரத்தில் ஸ்ரீபதஞ்சலிபகவான் கூறியருளியதே நித்திரையின் வடிவமாம். (4) பூருவானுபவத்தாலுண்டாய சமஸ்காரமாத்திரத்தால் தோன்றுவது ஸ்மிருதியாம். அஃது எல்லா விருத்திகளானுமுண்டாகுமாதலின், பகவான் பதஞ்சலியார் அம்மிருதியைச் சர்வ விருத்திகட்கிடையிற் கூறியருளினர். (5) இலஜ்ஜைமுதலிய பலவகையாயுண்டாகும் விருத்திகட்கு இப்பிரமாண முதலிய ஐந்து விருத்திகட்குள்ளே அந்தர்ப்பாவமாம். இவ்வாறு சர்வ விருத்திகளின் நிரோதம் யோகமெனவும் சமாதியெனவுங் கூறப்படுகின்றது. கருமபலத்தின் சங்கற்பமும் ஐவகையான விபரியயங்களில் இராகமெனப்பெயரிய மூன்றாவது விபர்யய விசேடமாம். அவ்விராகவடிவ பல சங்கற்ப நிரோதமாத்திரமே ஈண்டு கௌணிவிருத்தியால் யோகமென்னும் பெயரானும் சந்நியாசமென்னும் பெயரானுங் கூறப்படுகின்றது. ஆதலின், ஈண்டுச் சிறிதளவும் விரோதமென்பதின்றாம்.

(அ-கை.) ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் கருமயோகத்தை மேம்பாடுடையதாய்க் கூறியருளினீர்களாதலின் அது மேம்பாடுடையதாம்; ஆகவே இவ்வதிகாரியாற் சீவனகாலபரியந்தம் அதுவே செய்யத்தக்கதென் றுணரப்படுகிறது. யாவஜ்ஜீவ மக்கினிஹோத்திரஞ்ஜுஹோதிச் சுருதியும் அங்ஙனமே கூறுகின்றதென்று அர்ச்சுனன் ஆசங்கிக்க ஸ்ரீ பகவான் அக்கருமயோகத்தின் முடிவைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். ஆருருக்ஷோர்முநேர்யோகம் கர்ம காரணமுச்யதே ।
யோகாரூடஸ்ய தஸ்யைவ ஶம: காரணமுச்யதே ॥ (3)

ப-ம். 2 ஆருருக்ஷோ: 3 முநே: 1 யோகம் 4 கர்ம 5 காரணம் 6 உச்யதே 7 யோகாரூடஸ்ய 8 தஸ்ய 10 ஏவ 9 ஶம: 11 காரணம் 12 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யோகத்தில் ஆரூடமாவதற்கு இச்சையுடைய முனிக்கு அந்த யோகமடைவதில் நித்தியகருமமே சாதனவடிவமெனக் கூறப்பட்டது. அந்த யோகத்தில் ஆரூடனாகிய புருஷனுக்கு ஞானநிட்டை யடைதற்பொருட்டுச் சந்நியாசமே சாதனவடிவமெனக் கூறப்பட்டது. (3)

(வி-ம்.) அந்தக்கரணசுத்தி பூர்வகம் சர்வ விடய சுகங்களினின்றுந் தீவிர வைராக்கியம் யோகமாம். அவ்வியோகத்தில் ஆருடமாவதற்கு இச்சையையுடைய புருஷன் ஆருருக்ஷுவாம். அவன் அந்தக்கரணசுத்தியின்பின்னர்ப் பின்னால் சர்வ கருமங்களின் தியாகவடிவ சந்நியாசமுடையவனாதலின், இப்போது அவனை முனியெனப்பட்டது. அல்லது, இப்போதே பல திருஷ்ணையின்றியவனாதலின் முனியெனப்பட்டது. அத்தன்மைய ஆருருக்ஷுவாகிய முனியைக்குறித்து யோகத்தில் ஆரூடமாம்பொருட்டு யோகத்தை யடைதற்பொருட்டு வேதத்தில் விதித்த நிஷ்காமமாகிய அக்கினிஹோத்திர முதலிய நித்திய நைமித்திக கருமமே சாதனவடிவமென எம்மாலும் வேதத்தாலும் விதிக்கப்படுகின்றது. அக்கருமி அந்நிஷ்காமகருமத்தால் அந்தக்கரணசுத்திவடிவ யோகத்தையடைவனேல் யோகாரூடனெனப்படுகின்றான். அத்தன்மைய புருஷனுக்கு மறித்தும் அக்கருமஞ் செய்யற்பாலதன்று; மற்றோ, அந்த யோகாரூட புருஷனுக்கு ஞானநிட்டையை யடைதற்பொருட்டுச் சர்வ கரும சந்நியாசவடிவ சமமே சாதனவடிவமாய் விதிக்கப்பட்டது. இது கருத்தாம்:—எவ்வளவு காலபரியந்தம் இவ்வதிகாரி அந்தக்கரண சுத்திபூர்வக வைராக்கியத்தை யடையவில்லையோ அதுகாறும் இவன் அவ் வைராக்கியத்தை யடைதற்பொருட்டுப் பல வேட்கையின்றியவனாய்ச் சாத்திரத்தில் விதித்த நித்திய நைமித்திக கருமங்களையே செய்யவேண்டும். இவனுக்கு அந்நிஷ்காமகருமத்தால் அந்தக்கரண சுத்திபூர்வகம் வைராக்கியமடையப்படில் மறித்தும் அக்கருமஞ் செய்யற்பாலதன்று; மற்றோ, அக்காலத்தில் சிரவணமனன முதலிய வாயிலாய் ஞானநிட்டையையடைவன். சர்வ கருமத் தியாகவடிவ சந்நியாசமே செய்யற்பாலது; ஆதலின், அந்தக்கரணசுத்திவரையினுமே அக்கருமஞ் செய்யத்தக்கது; சீவனகாலபரியந்தஞ் செய்யத்தக்கதன்று. சீவனகாலபரியந்தம் என்னுஞ் சுருதியோ வைராக்கியமின்றிய புருஷன்மேற்றாயது, வைராக்கியமுடையன்மேற்றாயதன்று. (3)

(அ-கை.) ஹே பகவன்! எந்த யோகாரூடாவத்தையையடைந்து இவ்வதிகாரி சர்வ கருமத் தியாகம்பண்ணத்தக்கவனாகின்றானோ அந்த யோகாரூடாவத்தையை இவனடையுங்காலம் யாது? என்று அர்ச்சுனன் ஆசங்கிக்க அக்காலத்தை ஸ்ரீ பகவான் அருளுகின்றார்:—

சு-ம். யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வநுஷஜ்ஜதே ।
ஸர்வஸங்கல்பஸந்ந்யாஸீ யோகாரூடஸ்ததோச்யதே ॥ (4)

ப-ம். 1 யதாஹி 3 ந 2 இந்த்ரியார்த்தேஷு 6 ந 5 கர்மஸு 4 அநுஷஜ்ஜதே 7 ஸர்வ ஸங்கல்பஸந்ந்யாஸீ 9 யோகாரூட: 8 ததா 10 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்போது இவ்வதிகாரி சத்தமுதலிய விடயங்களிலும் கருமத்திலும் இச்சையின்றியவனாகின்றானோ, சர்வ சங்கற்பமுமிலாதோனாகின்றானோ அப்போது யோகாரூடனெனப்படுகின்றான். (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சித்தநிரோதம்பண்ணுங்கால் இவன் சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் சத்தமுதலிய விடயங்களிடத்தும் நித்திய நைமித்திக காமிய லௌகிக பிரதிஷித்த முதலிய கருமங்களிலும் சம்பந்தப்படுத்துவதில்லை. அச்சத்த முதலிய விஷயங்களிலும் அக்கருமங்களிலும் மித்தியா புத்தியாலும் அகர்த்தாவும் அபோக்தாவும் அத்விதீய பரமாநந்த சொரூபமுமாகிய ஆன்ம தரிசனத்தால் விஷயங்களிலும் கருமத்திலும் தனது பயனின்மையை நிச்சயித்து எவன் இக்கருமத்தை யான் செய்கின்றேன் இவ்விஷயமெனது போகத்திற்குரித்து என்னு மித்தன்மைய அபிநிவேசவடிவ சம்பந்தத்தைச் செய்வதில்லையோ, இதனுனே யாவன் சர்வ சங்கற்பத்தையும் விடுத்தோனுவனே, அதாவது இக்கருமம் என்னல் செய்யத்தக்கது இப்பலம் என்னல் அநுபவிக்கத்தக்கது என்னும் மனோ விருத்தி விசேஷமாகிய சங்கற்பம், அதன் விஷய வடிவமான பலவகைக் காமங்கள் அவற்றின் சாதனவடிவ கருமங்கள் என்னுமனைத்தையும் விடுத்தோனுகிய இச்சையின்றியவனுவனே அவன் அக்காலத்தில் சமாதிவடிவ யோகத்திலாரூடனுதலின், யோகாரூடனெனப்படுகின்றான். சத்த முதலிய விஷயங்களிலுங் கருமத்திலும் அபினிவேசவடிவ அநுஷங்கம் அதன் காரணவடிவ சங்கற்பம் என்னுமிரண்டுமே யோகாரூடமாதற்குத் தடைகளாம் அத்தடைகளொழியும்போது இவ்வதிகாரி புருஷன் யோகாரூடனெனப்படுகிறான் என்பதுகருத்து. (4)

(அ-கை.) அல்லது, இவ்வதிகாரி இத்தன்மைத்தாய யோகாரூடனுகுங்கால் தனதான்மாவை ஆன்மாவினலே இச்சம்சார சமுத்திரத்தினின்றும் கரையேற்றுவனுதலின், இவன் யோகாரூடனுய்த் தனதான்மாவை இச்சம்சாரத்தினின்றும் அவசியங்கரையேற்றுகின்றான் என்னுமர்த்தத்தையே இப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந: । (5)

ப-ம். 3 உத்தரேத் 2 ஆத்மநா 1 ஆத்மாநம் 5 ந 4 ஆத்மாநம் 6 அவஸாதயேத் 8 ஆத்மா 9 ஏவ 7 ஹி 10 ஆத்மந: 11 பந்து: 12 ஆத்மா 13 ஏவ 15 ரிபு: 14 ஆத்மந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி தனதான்மாவை விவேகத்தோடு கூடியமனதால் இச்சமுசாரத்தினின்றுங் கரையேற்றத்தக்கது; சீவான்மாவைச் சம்சார சமுத்திரத்தில் மூழ்கும்படி செய்யற்க; தனதான்மாவே ஆன்மாவிற்குச் சுற்றமும் சத்துருவுமாமாதலின். (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உலகப்பிரசித்தமாகிய சமுத்திரம்போன்று இச்சம்சாரசமுத்திரமும் தையல், குழவி, தனம், மித்திரன் என்பனமுதலிய பொருள்களை விஷயம்பண்ணும் மகாமோகவடிவ பல சுழல்களுடையது காமம், குரோதம் லோபம், அகங்காரம், மமகாரம், என்பனமுதலிய மனோவிகாரவடிவ பல மகா முதலைகளையுடையது. பலவகையாய பெருநோய்வடிவ திமிங்கிலங்களோடு கூடியது, பசிதாகாதி மகாதரங்கங்களையுடையது முத்தாபவடிவவடவானலமுடையது. பிரியப்படும் பொருளின் பிரிவாலுண்டாய பலவகைப்பிரலாபவடிவ பேரொலியுடையது. நாடோறுந் துர்வாசனைவடிவ பாசிப்படலமுடையது. விஷயவடிவ விஷத்தால் நிரம்பியது இத்தன்மைய சம்சாரசாகரத்தில் மூழ்கிய தனதுசீவான்மாவை இவ்வதிகாரி விவேகத்தோடுகூடிய மனதால் வெளிப்படுத்தல்வேண்டும் அதாவது விஷயாசத்தியையொழித்து அந்த யோகாரூடத்தைச் சம்பாதிக்கவேண்டும் இதுவே சீவனைப் பவக்கடலினின்றும் வெளிப்படுத்துவதாம் இவ்வதிகாரி அவ்விஷயங்களிலுள்ள வேட்கையால் தனதான்மாவைப் பவக்கடலில்மூழ்கச்செய்யற்க. இவ்வான்மாவே

தனக்கினிதுசெய்யுஞ் சுற்றம் அதாவது சம்சாரபந்தத்தினின்று விடுவிப்பதாம், ஆன்மாவின் வேறான மற்றெச்சுற்றமும் இனிது செய்வதில்லை என்னே ? இவ்வுல கத்திலுள்ள தையல், குழவி, தமையன் முதலிய சுற்றங்களோ தனதிடத்தில் சிநே கத்தை யுண்டுபண்ணும் வாயிலானும், நிறைத்தல் வளர்த்தல்களின் சிந்தனைவாயி லானும் இச்சீவனுடைய பந்தனகாரணமே யாதலின், அவர்களிடத்துச் சுற்றத் தன்மை பொருந்தாதாம். கோசகாரக்கீடம் தானே தனது அகிதகாரியாமாறு போல, விடயவடிவ பந்தனவீட்டிற்புகுவதால் இவ்வான்மாத்தானே தனக்ககிதம் பண்ணுஞ் சத்துருவாகின்றது மற்றெம்மாற்றானுமிதற்கின்று. அன்றியும் உலகத் தில் விளக்கமாகிய பாகியசத்துருவினிடத்தும் இவ்வான்மாவே சத்துருத்தன்மை பண்ணுவதால் இச்சீவான்மாத்தானே தனது சத்துருவென்க. (5)

(அ-கை.) ஹே பகவன்! எவ்விதமாகிய வான்மாத் தனது சுற்றமாம், எவ் விதமாகிய வான்மாத் தனது சத்துருவாமென்றருச்சுனன் ஆசங்கிக்க ஸ்ரீ பக வான் சுற்ற ஆன்மாச் சத்துரு ஆன்மாக்களின் இலக்கணங்கூறியருளுகின்றார்.

சு-ம். பந்துராத்மாத்மநஸ்தஸ்ய யேநாத்மைவாத்மநாஜித: ।
அநாத்மநஸ்து ஶத்ருத்வே வர்தேதாத்மைவ ஶத்ருவத் ॥ (6)

ப-ம். 9 பந்து: 7 ஆத்மா 8 ஆத்மந: 6 தஸ்ய 1 யேந 2 ஆத்மா 4 ஏவ 3 ஆத்மநா 5 ஜித: 11 அநாத்மந: 10 து 12 ஶத்ருத்வே 16 வர்தேத 14 ஆத்மா 15 ஏவ 13 ஶத்ருவத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வான்மா இச்சங்காதத்தை விவேகத்தோடு கூடிய மனதானே ஜயித்ததோ அவ்வான்மாவிற்கு அவ்வான்மாவே பந்துவாம்; அன்றியும், ஜயிக்காத வான்மாவிற்கு வெளியிலுள்ள சத்துருப்போலத் தனதான் மாவே சத்துருத்தன்மையதாயிருக்கின்றது. (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வான்மா இத்தேகமுதலிய வடிவ சங்காதத் தைக் கேவலம் விவேகயுக்த சுத்தமனத்தானே தனது வசப்படுத்தினதோ, மற் றோர் சாஸ்திரமுதலியதினாலன்றே; அவ்வான்மாவிற்குத் தனதான்மாவே பந்து வாம். என்னே? விலங்குவடிவ பந்தனமுடைய புருஷன் தனதிச்சைப்படி பிரவிரு த்தித்தற் கேலாவாறு, இவ்வான்மாவும் தனதிச்சைப்படி எவ்விடத்தும் பிரவி ருத்திப்பதில்லை; அன்றியும், இவ்வான்மாவிற்கு நேத்திரமுதலிய இந்திரியவாயி லாய் உருவமுதலிய விடயங்களிற் பிரவிருத்தித்தலே பலவகையான துக்ககாரண மாம்; அப்பிரவிருத்தி தேகேந்திரிய முதலியவைகளை வசப்படுத்தலான் நிவி ருத்தியாமாதலின் விவேகமுடைய மனதால் அச்சங்காதத்தை வசம்பண்ணிய வான்மாத்தானே தனது பந்துவாம்; அன்றியும், தேகமுதலிய சங்காதங்களை விவேகத்தோடுகூடிய மனதால் வசம்பண்ணாத வான்மாவிற்குத் தனதான்மாவே வெளிச்சத்துருப்போன்றுச் சத்துருத்தகைமையிலிருக்கின்றது விலங்குவடிவ பந் தனமிலாதோன் தனதிச்சைப்படி செல்லுமாறு விவேகமனத்தால் தேகாதிகளை வசம்பண்ணாத வான்மாவும் இச்சைப்படி சத்தமுதலிய விடயங்களிற் செல்லுகின் றது அவ்விடயத்தழுந்திய பிரவிருத்தியால் அவ்வான்மாத்தானே தனது சத்து ருவாம் என்பது கருத்து. (6)

(அ-கை.) இப்போது தேகாதிகளை வசம்பண்ணிய ஆன்மாவிற்குத் தனது பந்துத்தன்மையை விளக்கமாயருளுகின்றார்.

சு-ம். ஜிதாத்மந: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
ஶீதோஷ்ண ஸுகது:கேஷு ததா மாநாவமாநயோ: ॥ (7)

ப-ம். 4 ஜிதாத்மந: 5 ப்ரஶாந்தஸ்ய 6 பரமாத்மா 7 ஸமாஹித: 1 ஶீதோஷ்ண ஸுக து:கேஷு 2 ததா 3 மாநாபமாநயோ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சீதோஷ்ண சுகதுக்கங்களை யடையினும் மானுப மானங்களை யடையினும் ஜயமும் சாந்தமுமுடைய ஆன்மாவிற்கே பரமான்மாச் சமாதிவிஷயமாம். (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சித்தத்தை விட்சேபப்படுத்தும் சீதோஷ்ண சுக துக்கமுதலிய துவந்துவ தருமங்களாயினும் சித்தத்தை விட்சேபப்படுத்தும் துதி வடிவமானம், பரநிந்தைவடிவ அவமானம் என்னுமிரண்டுமுளவாயினும் அவை களை யடைவதில் சமபுத்தியால் ஜயித்த வான்மா அதாவது சுரோத்திர முதலிய விந்திரியங்களைத் தன்வசம்பண்ணிய வான்மா, சாந்தமுடையது அதாவது எவ் விடத்துஞ் சமபுத்தியால் இராகாதிகளின்றியது யாதோ அதற்குச் சுயம்பிரகாச ஞானசுபாவ ஆன்மாச்சமாகிதமாம் சமாதிவிஷயமாம், யோகாரூடமாமென்பது பொருள். அல்லது, பரமான்மா என்னும் வாக்கியத்தில் பரம் ஆன்மா என இரண் டுபதமாகில் அவற்றுள் பரம் என்னும் பதத்திற்குக் கேவலம் எனப் பொருள்கொள் ளலால் ஜிதாத்மாவும் பிரசாந்தமுமுடைய வான்மாவிற்கே கேவலான்மாச் சமாகி தமாம் பிறவற்றிற்கன்றுமென்னும் பொருள் பெறப்படுகிறது; ஆதலின், இச்சீ வான்மா ஜிதாத்மாவாகவும் பிரசாந்தமாகவும் அவசியமாகத்தக்கது. (7)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா கூடஸ்தோ விஜிதேந்த்ரிய: ।
யுக்த இத்யுச்யதே யோகீ ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: ॥ (8)

ப-ம். 1 ஜ்ஞாநவிஜ்ஞாநத்ருப்தாத்மா 2 கூடஸ்த: 3 விஜிதேந்த்ரிய: 6 யுக்த: 7 இதி 8 உச்யதே 5 யோகீ 4 ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:.

(அ-ம்) ஹே அருச்சுன! ஞானவிஞ்ஞானங்களால் திருப்தியுடைய மன மும் சருவ விக்கிரியையின்மையும் இந்திரிய ஜயமும் மண்ணுண்டை, பாஷா ணம், பொன் இவைகளிற் சமத்தன்மையுமுடைய யோகிபுருஷன் யோகாரூட னென்னும்பெயரால் கூறப்படுகிறான். (8)

(வி-ம்.) குருவினுபதேசத்தாற் றோன்றிய சாத்திரத்திற்கூறிய பதார்த் தத்தை விஷயஞ்செய்யும் புத்தி ஞானமாம். அப்புத்தி விடயமாயுடைய அப்பிர மாண்ய சங்கை நிவிருத்திவடிவ பலமுடைய விசாரத்தால் அச்சாத்திரத்திற்கூறி யபொருளை அவ்வண்ணமாகவே தனதனுபவத்தால் அபரோட்சஞ்செய்தல் விஞ் ஞானமாம்; அத்தன்மைய ஞான விஞ்ஞானங்களிரண்டானும் திருப்தியுடைய மனத்தோன் ஞான விஞ்ஞான திருப்தாத்மனுவன்; ஆதலினுனே, அவன் கூடத் தனுவன். அதாவது கொல்லனது கூடம் சலனமில்லாததுபோல விடயங்களின் சமீ பத்தை யடையினும் அவ்விடயத்தை நுகா வலியுளதேனும் சலனமிலாதோனு வன்; அதனுனே அவன் இந்திரியங்களை ஜயித்தவனுவன். ஆண்டு இராகத்துவே ஷ பூர்வகம் சத்தமுதலிய விடயக்கவர்ச்சியினின்றும் சுரோத்திரமுதலிய விந்தி ரியங்களை நிவிர்த்திபண்ணினேன் விஜிதேந்திரியனுவன். அதனுனே அவன் ஓடு பொன் முதலிய திலொப்புளனுவன். இப்பொருள் என்னுல்கொள்ளத்தக்கது இஃது என்னுற்றள்ளத்தக்கது என்னுமித்தன்மைய கொள்ளுநீக்கும் புத்தியின்மையின் லோஷ்டமென்னும் மண்ணுண்டையும் அஸ்மமென்னும் பாஷாணமும் காஞ்சன மென்னுஞ் சுவர்ணமும் சமானமாம் இத்தன்மைய பரமஹம்ச பரிவிராஜகயோகி

பரவைராக்கியவடிவ யோகமுடையனும் யோகாரூடனென்னும் பெயராற் கூறப்படுகின்றான். (8)

(அ-கை.) அல்லது சத்துரு மித்துரு முதலியவைகளிடத்துச் சமபுத்தியுடையோனே சருவயோகிகளினின்றும் மேலானவனுவன் என்று மார்க்கத்தை ஸ்ரீபகவான் கூறியருளுகின்றார்.

ச-ம். ஸுஹ்ருந்மித்ராயுதாஸீநமத்யஸ்தத்³வேஷ்யப³ந்து⁴ஷு ।
ஸாது⁴ஷ்வபி ச பாபேஷு ஸமபு³த்³தி⁴ர்விஶிஷ்யதே ॥ (9)

ப-ம். 1 ஸுஹ்ருந்மித்ராயுதாஸீநமத்யஸ்தத்³வேஷ்யப³ந்து⁴ஷு 2 ஸாது⁴ஷு 4 அபி ச 3 பாபேஷு 5 ஸமபு³த்³தி⁴: 6 விஶிஷ்யதே.

(அ-ம்.) ஹே அருச்சுன! நன்மைசெய்வோன், மித்துரு, தீமைசெய்வோன், உதாசீனன், மத்தியஸ்தன், துவேஷியன், பந்து என்னு மிவரிடத்தும் சாதுக்களிடத்தும், பாவிகளிடத்தும், ஏனைய சருவப்பிராணிகளிடத்தும் சமபுத்திபண்ணும் புருஷன் எல்லாரினும் மேலாவன். (9)

(வி-ம்.) பிரதியுபகாரத்தை அவாவாது பூருவசிநேகம் பூருவசம்பந்தமுமின்றியே உதவிபண்ணுவோன் சுகிருதாம். பூருவசிநேகத்தை யபேட்சித்து உதவிசெய்வோன் மித்திரனுவன், தான் பண்ணிய அபகாரத்தை யபேட்சியாது கேவலம் தனது கோரசுபாவத்தானே அபகாரஞ்செய்வோன் அரியாவன். ஒன்றற்கொன்று வாதம்பண்ணும் இருவராது இதத்தையேனும் அகிதத்தையேனும் விரும்பாது அவ்விருவரையு முபேட்சித்திருப்போன் உதாசீனனுவன். ஒன்றற்கொன்று விவாதம் பண்ணுமிருவர்களின் இதத்தை யிச்சிப்போன் மத்தியஸ்தனுவன். தான் பண்ணிய அபகாரத்தைக் கருதியே அபகாரஞ்செய்வோன் துவேஷியாவன். சிறிதளவுசம்பந்தத்தால் உதவிசெய்வோன் பந்துவாவன். சாஸ்திரவிகித கருமம்பண்ணுவோன் சாதுவாவன். சாஸ்திரநிஷித்த கருமத்தைச்செய்வோன் பாபியாவன். இவ்வனைவரிடத்தும் ஏனைய சர்வப்பிராணிகளிடத்தும் சமபுத்திபண்ணுவோன், அதாவது, எப்புருஷன் எக்கருமமுடையோன் என்றிவ்வாறு மனதிற் கொள்ளாது எவ்விடத்தும் இராகத்துவேஷமின்றியவன்; அத்தன்மைய சமபுத்தியுடையன், எல்லாரினும் மேலானவன். சில புத்தகத்தில் விசிஷ்யதே என்னும் பதமுள்ள விடத்தில் விமுச்சியதே என்பதும் பாடமாம். அப்பட்சத்தில் எல்லாவிடத்தும் சமபுத்தியுடைய புருஷன் இச்சம்சார பந்தத்தினின்றும் மோட்சமடைகின்றான் எனப் பொருள்கொள்க. (9)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் ஸ்ரீ பகவான் யோகாரூட புருஷனது இலக்கணமும் பயனுங் கூறியருளினர் இப்போது 'யோகீ யுஞ்ஜீத ஸததம்' என்னும் வாக்கிய முதற்கொண்டு 'ஸயோகீ பரமோமத:' என்னும் வாக்கிய மீறாகிய மூன்று சுலோகங்களால் யோகாரூட புருஷனது அங்கசகித யோகத்தைக் கூறியருளுகின்றார்.

ச-ம். யோகீ³ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்தி²த: ।
ஏகாகீ யதசித்தாத்மா நிராஶீரபரிக்³ரஹ: ॥ (10)

ப-ம். 1 யோகீ³ 10 யுஞ்ஜீத 9 ஸததம் 8 ஆத்மாநம் 2 ரஹஸி 3 ஸ்தி²த: 4 ஏகாகீ 5 யதசித்தாத்மா 6 நிராஶீ: 7 அபரிக்³ரஹ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகாரூட புருஷன் ஏகாந்த தேசத்திலிருப்பவனுய் ஏகாங்கியாய் எத்தனமுடைய சித்தனுய் நிராசியாய் பரிக்கிரகமின்றியவனுய் தனது சித்தத்தை நிரந்தரம் சமாதியுடையதாய்ச் செய்யவேண்டும். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யோகாரூட புருஷன் தனது சித்தத்தை நிரந்
தரம் சமாகிதஞ்செய்யவேண்டும்; அதாவது க்ஷிப்த மூட விக்ஷிப்த மூன்று பூமியை
யும்விடுத்து ஏகாக்கிரம் நிரோதம் என்னும் இரண்டு பூமியுடையதாக்கிச் சித்தத்
தைச் சமாகிதஞ்செய்க அவன் எத்தன்மையனாகிச் சித்தசமாகிதம் பண்ண
வேண்டுமென்று அர்ச்சுனன் ஆசங்கிக்க ஸ்ரீ பகவான் அந்தப் பிரகாரத்தை வரு
ணித்தருளுகின்றார் (ரகசித்திதன் என) ஹே அர்ச்சுன! அவன் யோகசித்தியிற்
றடைபண்ணும் துஷ்ட ஜனமின்றிய யாதேனுமோர் பருவதக்குகை முதலிய ஏகா
ந்த தேசத்திலிருக்கவேண்டும்; ஏகாங்கியாகவேண்டும். அதாவது, வீட்டிலுள்ள
சர்வ பரிஜனங்களையும் விடுத்துச் சந்நியாசியாகவேண்டும். எத்தனசித்தனாகவேண்
டும் ஈண்டுச் சித்தமென்பது அந்தக்கரணமாம். ஆன்மாவென்பது இந்திரியத்
தோடுகூடியதேகமாம். இவ்விரண்டினது யோகப்பிரதிபந்தக வியாபாரமின்றிய
வன் யத்தன சித்தனானவன் நிராசியாகவேண்டும். அதாவது, தோஷதிருஷ்டி பூர்
வக வைராக்கியத்தின் திடத்தால் சர்வப்பொருள்களின் திருஷ்ணையின்றியவனாக
வேண்டும். அபரிக்கிரகனாகவேண்டும். அதாவது யோக சித்தியிற்றடைப்படுத்
தும் பதார்த்தங்களைக் கிரகியாதிருத்தல்வேண்டும், இத்தன்மையனாகி அவன்
தனது சித்தத்தைச்சமாகிதம் பண்ணல்வேண்டும். ஈண்டுச் சததம் என்னும் பதத்
தால் யோகம் பயிலுவதில் நிரந்தரத்தன்மை கூறப்பட்டது. நிராசி என்னும் பதத்
தால் ஆதரவு கூறப்பட்டது. நிரந்தரம் ஆதர பூர்வகம் செய்யப்பட்டயோகாப்பி
யாசமே பல காரணமாம் என்பது பொருள். (10)

(அ-கை.) ஆண்டு அந்த யோகமடைதற்பொருட்டு முதலில் ஆசன நிய
மம் அவசியம் வேண்டியதாதலின் அவ்வாசன நியமத்தை ஸ்ரீ பகவான் இரண்டு
சுலோகங்களாற் கூறியருளுகின்றார்.

சு-ம். ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மந: ।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம் ॥ (11)

ப-ம். 1 ஶுசௌ 2 தேஶே 6 ப்ரதிஷ்டாப்ய 4 ஸ்திரம் 5 ஆஸநம் 3 ஆத்மந: 7 ந
8 அதி 9 உச்ச்ரிதம் 10 ந 11 அதி 12 நீசம் 13 சைலாஜிநகுஶோத்தரம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகி பவித்திரதேயத்தே தனது நிச்சல
ஆசனத்தை நிலைபெறுத்துக. அது அதிக உயரமாகவேனும் அதிகத் தாழ்ந்ததாக
வேனும் இருக்கலாகாது. தர்ப்பையின்மீது மான்றோல் வஸ்திரம் விரிக்கப்பெற்ற
தாகவேண்டும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இயல்பானே சுத்தமாயும் அல்லது மண்ணிடன்
முதலியவைகளாற் சுத்தப்பட்டதாயும் ஜனக்கூட்டமின்றியதாயும் பயமின்றியதாயு
முள்ள அத்தன்மைய கங்கைக்கரை அல்லது பருவதக் குகைமுதலிய சமஇடங்களில்
இவ்வதிகாரி தனது நிச்சலாசனத்தை நிறுத்தி, ஈண்டுத்திரம்மென்னும் பதத்தால்
கூறப்பட்ட ஆசனத்தின் நிச்சலத்தன்மை மண்மய ஸ்தலவடிவ ஆசனத்தின்கண்
ணேயமையும் காஷ்டமய ஆசனத்தில் அந்நிச்சலத்தன்மை பொருந்தாது; ஆத
லின், ஸ்திரம் என்னும் ஆசனவிசேடணத்தால் காஷ்ட்மய ஆசனம் நீக்கப்பட்
டது; அவ்வாசனம் எவ்வண்ண மாதல்வேண்டுமெனின் மிக உயர்ந்ததும் மிகத்
தாழ்ந்ததுமன்று. என்னை மிக்கவுயரமான வாசனத்திலோ ஓர்கால் பரவசத்தாற்
கீழேவிழப்படும். மிகத்தணிந்தவாசனத்தில் குளிர், சூடு, மழை, நீர்படல், கன்
முதலியவைகளிலூரஞ்சல்முதலியவைகளுண்டாமாதலின் யோகப்பயிற்சியில் தடை
யாம் ஆதலின் மிகவுயரமும் மிகத்தணிவுமாகா; மற்றோ, அவ்விரண்டினும் வேறா
தல்வேண்டும். அத்தன்மைய மண்வடிவ ஆசனத்தின்மேல் முதலில் தர்ப்பையை

விரித்து அதன்மேல் மிகமிருதுவான மாந்தோலேனும் புலித்தோலேனும் ்
த்து அதன்மேல் மிருதுவான வஸ்திரத்தை விரித்தல்வேண்டும், வஸ்திரந் தா
திரிய துக்காய தாரு ரோகாய சோபலம் என்னும் மிருதிவாக்கியத்தால் வஸ்
ரம் நிஷேதிக்கப்பட்டதாயினும் அந்நிஷேதம் கிருகத்தவிஷயகமாம்; சந்நிய
விஷயகமன்று. ஈண்டு, ஆத்மநः என்னும் பதத்தால் பிறபுருஷன்பண்ணிய வா
நீக்கங் கூறப்பட்டது; அன்னியபுருஷரினிச்சை ஒரு நியமமன்றும். ஓர்கால் அ
வன்னியன் பண்ணியகாரியம் தனக்கநுகூலமாம்; ஓர்கால் பிரதிகூலமாம். ஆதலி
அன்னியன் பண்ணிய வாசனமும் யோகவிட்சேப காரணமாதலின் அதைப்பயி
வோன் தனதாசனத்தைத் தானேசெய்யவேண்டுமென்க. (1

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு ஆசனத்தை யமைத்து அந்தயோக
பயிலும் புருஷன் செயற்பாலதாங் காரியம்யாது என்றருச்சுனன் சங்கிக்க ஸ்ரீ
வான் அவன்செயற்பாலதாயதை யருளிச்செய்கின்றார்.

சு-ம். தத்ரைகாக்ரம் மந: க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரிய: ।
உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத் யோகமாத்மவிஶுத்தயே ॥ (1

ப-ம். 1 தத்ர 6 ஏகாக்ரம் 5 மந: 7 க்ருத்வா 4 யதசித்தேந்த்ரியக்ரிய: 3 உ
விஶ்ய 2 ஆஸநே 10 யுஞ்ஜ்யாத் 9 யோகம் 8 ஆத்மவிஶுத்தயே.

(அ-ம்.) ஹே அருச்சுன! அவ்வாசனத்தின்மே லுட்கார்ந்து இந்திரிய
ணங்களின் தொழிலைச் செயித்தபுருஷன் தனது மனத்தை யேகாக்கிரமாச்செய்
அந்தக்கரண சுத்தியின்பொருட்டுச் சமாதிவிஷயக அப்பியாசஞ் செய்பத்த
கது. (12

(வி-ம்.) ஹே அருச்சுன! யோகம் பயிலுவோன் முற்கூறிய வாசனத்திலுட
கார்ந்து மனத்தொழில் இந்திரியத்தொழில்களை நிரோதம்பண்ணி சமாதிவடி
யோகமுயலத்தக்கது. அதில் சத்தமுதலிய விஷயங்களை ஸ்மரித்தல் மனத்தொழி
லாம் அச்சத்தமுதலிய விஷயங்களைக் கவர்தல் சுரோத்திர முதலிய இந்திரியங்க
ளின் தொழிலாம். இவ்விருவகைத்தொழிலும் அச்சமாதிவடிவ யோகதடைய
மாதலின் பயிலுவோன் அக்கிரியைகளை நிரோதம்பண்ணத்தக்க தொருதலையாம்.

சங்கை :—ஹே பகவன்! யோகம்பயிலுவோன் எப்பலனடைவான் அச்ச
மாதியைப் பயிலல்வேண்டும்?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளிச்செய்கின்றார் ஆன்ம விசுத்தயே என ஈண்
டான்ம சத்தத்தாற் கொள்ளப்பட்ட அந்தக்கரணசுத்தியின்பொருட்டுப் பயிலுக.
அவ்வந்தக்கரணத்தில் சருவவிட்சேப நிவிருத்தியாக்கிய மிகச்சூட்சுமத்தன்மையா
லடையப்பட்ட பிரஹ்மசாக்ஷாத்காரத்தின் யோக்கியத்தன்மையே அந்தக்கரணசுத்
தியாமென்றறிந்துகொள்க. இது சுருதியிலுங் கூறப்பட்டுளது. 'த்ருஶ்யதே த்வக்ர்
யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி:' நுண்ணிய பார்வையுடையோர்க
ளால் ஒருமையாகிய சூட்சும மனத்தால் இப்பிரத்தியக் கபின்ன பிரஹ்மசாக்ஷாத்
காரஞ்செய்யப்படுகிறது.

சங்கை :—ஹே பகவன்! அவ்வதிகாரி என்னசெய்து அந்தயோகம் பயில
வேண்டும்?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார் 'ஏகாக்ரம் மந: க்ருத்வா இதி' கூறிப்
போந்த ராசத தாமத வடிவ க்ஷிப்தம் மூடம் விக்ஷிப்தம் என்னும் வியுத்தான
வடிவமூன்று பூமிகளையும் தியாகம்பண்ணி விஜாதீய விருத்தி வியவதானமின்றி
ஒரே பிரத்தியக் கபின்னப் பிரஹ்மத்தை விஷயம்பண்ணும் அநேக சஜா

தீய விருத்திப் பிரவாகத்தோடுகூடிய சத்துவப் பிரதானமனம் ஏகாக்கிரமெனக் கூறப்பட்டது அத்தன்மைய ஏகாக்கிரத்தைத் திடபூமியோடுகூடி முயற்சியால் சம்பாதித்து அவ்வேகாக்கிரம் விருத்தியாதற்பொருட்டு சம்பிரஞ்ஞாதவடிவ யோகத்தைப் பயிலல்வேண்டும் அந்தப் பிரஹ்மாகார மனோவிருத்திகளின் பிரவாகமே நிதித்தியாசமெனச் சொல்லப்படுகின்றது. இது பிறநூலின்கண்ணும் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ப்ரஹ்மாகாரமனோவ்ருத்தி ப்ரவாஹோஹங்க்ருதிம்விநா ।
ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதிஸ்ஸ்யாத் த்யாநாப்யாஸப்ரகர்ஷஜ: ॥

(பொ-ள்.) அகங்கிருதியிலாமலே பிரஹ்மாகார மனோவிருத்திகளின் பிரவாகத்தினது பெயர் சம்பிரஞ்ஞாத சமாதியாம். அது தியானுப்பியாசங்களின் மிகுதிப்பாட்டால் பெறப்படுகின்றது. இக்கருத்தானே ஸ்ரீ பகவான் 'யோகீ யுஞ்ஜீத ஸததமாத்மாநம் ரஹஸி ஸ்திதஃ' என்பன முதலிய அநேக வாக்கியங்களால் தியானுப்பியாசங்களின் மிகுதிப்பாட்டையே கூறியருளினர். (12)

(அ-கை.) ஆண்டு 'ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய' என்பது முதலிய சுலோகங்களால் முன்னர் அந்த யோகாப்பியாசத்தின்பொருட்டுப் பாகிய வாசனங்கூறப்பட்டது இப்போது அவ்வாசனத்தின்மீதிருந்து யோகம் பயிலும் புருஷன் தனது தேகத்தை எவ்வாறு நிறுத்தல்வேண்டும் என்னுமர்த்தத்தை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸமம் காயஶிரோக்ரீவம் தாரயந்நசலம் ஸ்திர: ।
ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திஶஶ்சாநவலோகயந் ॥ (13)

ப-ம். 3 ஸமம் 2 காயஶிரோக்ரீவம் 5 தாரயந் 4 அசலம் 1 ஸ்திர: 8 ஸம்ப்ரேக்ஷ்ய 7 நாஸிகாக்ரம் 6 ஸ்வம் 10 திஶ: 9 ச 11 அநவலோகயந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகம் பயிலும் புருஷன் திடமுயற்சியுடையனாகி உடல் தலை கழுத்து மூன்றையும் சமானமாகவும் அசலமாகவும் நிறுத்தித் தனது நாசிநுனியைப்பார்த்துத் திசைகளை நோக்காது இருத்தல்வேண்டும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகப்பயிற்சியுடையபுருஷன் மிகுந்த திடப்பிரயத்தனனாகித் தனது சரீரத்தின் மத்திய தேசவடிவ காயத்தையும் சிரசையும் கண்டத்தையும் சமானமாய்த் தாரணஞ்செய்து அதாவது கோணலிலாது தண்டம்போலச்சமமாய் நிறுத்தி தலையையுங் கழுத்தையு மசலமாய்த்தரித்து அதாவது கம்பமற நிறுத்தியிருத்தல்வேண்டும். உடல் தலை கழுத்திவைகளைநோக்கி வலப்பக்கம் இடப்பக்கம் பின்புறங்களிலுள்ள ஒரு பொருளையும் நோக்கலுந் தொடலுமாகாதாயினும், ஈ எறும்பு முதலிய பிராணிகளாற் செய்யப்பட்ட துக்கமுண்டாகவே சரீரங் கம்பமாதல்கூடுமென்னும் சம்பாவனையை நீக்குவான் ஸ்ரீ பகவான் அசலமென்னும் விசேஷமருளினர் அங்ஙனமே யோகம்பயிலுவோன் தனது நாசி நுனிப்பாகத்தை நேத்திரத்தாற் பார்த்திருத்தல்வேண்டும். ஈண்டு, நேத்திரத்தால் நாசி நுனிப் பார்வைகூறியது நேத்திரத்தால் உருவமுதலியவைகளைக் கவராக என்னும் நியமத்தின்பொருட்டாம். நாசிநுனியைப் பார்ப்பதின்பொருட்டன்று; அவ்வசனத்தால் நாசி நுனிப்பார்வையே ஸ்ரீபகவானது திருக்கருத்தாமெனிலோ மனது அவ்வாகாரமாய் அந்த நாசி நுனிப்பாகத்தின்கண்ணே ஒருமைப்படுமாதலால் பிரஹ்மத்திலொருமைப்படாதாம் அன்றியும், பிரஹ்மத்தில் மனதை நிறுத்தலே சமாதியெனப்படும் இதுவே சமாதிவடிவமென ஸ்ரீ பகவான் 'ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா' என்னும் வாக்கியத்தாற் கூறியருளினர். ஆதலின் நாசிநுனியைப் பார்க்

கவேண்டும், உருவமுதலியவைகளைக் கவரக்கூடாது என்றது சட்சு விந்திரியத்தின் சஞ்சலத்தை நீக்கற்காம். இதனாலிப்பொருள் பெறப்பட்டதாம்:—எங்ஙனம் 'ஸம் ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம்' என்னும் வசனத்தால் நேத்திரத்தாலுருவ முதலியவைகளைக் கவராமையே ஸ்ரீ பகவானது திருக்கருத்தாமோ அங்ஙனமே, சுரோத்திர முதலிய விந்திரியங்களால் சத்த முதலிய விஷயங்களைக் கவராமையுங் கருத்தாம். என்னை? நேத்திரேந்திரிய வியாபாரம் யோகத்திற்குத் தடையாவதுபோலச் சுரோத்திரமுதலிய விந்திரிய வியாபாரங்களுந் தடைகளாம் அங்ஙனமே யோகப்பயிற்சியோன் மேற்குக் கிழக்கு முதலிய திசைகளைப் பாராதிருத்தல்வேண்டும். நாசிநுனியைப் பார்த்தலானே திசைமுதலிய சர்வ பொருள்களும் நோக்கப் படாவென்பது பெறப்பட்டது. ஆதலின் வேறாய் அத்திசைகளின் பார்வை நீக்கல் பொருந்தாதாயினும், ஓர்கால் கிழக்கு முதலிய திக்குகளில் பயங்கரமான ஒலியெழவே அத்திக்கு நோக்கஞ் சம்பாவனையாதல்கூடும் அத்தன்மையவொலியெழினும் அத்திக்கைப்பார்த்தல்கூடாது. அன்றியும், திசையையும் என்னும் வாக்கியத்திலுள்ள உம்மையால் தனதுடலையுங்கொள்ளல்வேண்டும், யோகம்பயிலுவோன் அக்காலத்தில் தனதுடலையும் பார்க்கொணாது என்பதுபொருள். திக்குடல்களைப்பார்த்தல் யோகத்திற்குத் தடையேயாம், இவ்வாறு சர்வ விருத்திகளையும் நிரோதித்து யோகம் பயிலுவோன் அவ்வாசனத்திலிருத்தல் வேண்டும். (13)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ப்ரஶாந்தாத்மா விகதபீர் ப்ரஹ்மசாரிவ்ரதே ஸ்தித: ।
மந꞉ ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

ப-ம். 1 ப்ரஶாந்தாத்மா 2 விகதபீ: 3 ப்ரஹ்மசாரிவ்ரதே 4 ஸ்தித: 5 மந: 6 ஸம்யம்ய 7 மச்சித்த: 9 யுக்த: 10 ஆஸீத 8 மத்பர:. (14)

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அப்பயிலுவோன் பிரசாந்தான்மாவாய்ப் பயமின்றியவனாய்ப் பிரமசரியவிரதத்தில் நிலைப்பவனாய் மனத்தை நிக்கிரகம்பண்ணி எமதிடத்துள்ள மனமுடையனாகிப் பரமேச்சுரராகிய எமது பராயணனாய்ச் சம்பிரஞ்ஞாத சமாதியுடையனாகி நிலைத்திருக்கின்றான். (14)

(வி-ம்.) இராகத்துவேஷாதிகளின் காரண நீக்கத்தாற் பிரசாந்தமாய அதாவது இராகத்துவேஷாதிகளின்றியதாய ஆன்மாவென்னும் அந்தக்காரணமுடையோன் பிரசாந்தான்மாவாவன், அங்ஙனமே சாஸ்திரத்தின் திட நிச்சயத்தால் பயமொழிந்தோன் நீங்கிய பயனாவன் ஆண்டுச் சகலகருமங்களையுந் தியாகம்பண்ணலெனக்குரியதோ? அல்லது உரித்தன்றோ? என்றிவ்வாறு கருமத்தியாகத்திலுண்டாம் சங்கைபயமாம். அது சாத்திர திடநிச்சயத்தாலெவனுக்கொழிந்ததோ அங்ஙனமே பிரஹ்மசரியம் குருபணிவிடை பிக்ஷான்னம் முதலிய பிரஹ்மசாரியின் விரதத்தினிலைத்தவனாய்த் தனது மனத்தை விஷயாகாரமின்றியதாக்கிப் பிரத்தியக்சைதன்னிய வடிவப் பரமேசுரராகிய எமது சகுணவடிவத்திலேனும் நிர்க்குணவடிவத்திலேனும் சித்தமுடையோன் யாவனோ அவன் மச்சித்தனாவன்; அதாவது பரமேஸ்வரனைவிஷயம் பண்ணும் சித்தவிருத்திப் பிரவாகமுடையோனென்பதாம்.

சங்கை :—ஹே பகவன் சிந்தனைபண்ணுதற்குரிய பெண் பொன் புத்திரன் முதலிய பிரியப்படுபொருளுள்ளனவாக மச்சித்தனாந்தன்மை யாவதெங்ஙனம்?

சமாதானம் :—ஸ்ரீ பகவானருளுகின்றார் மத்பரன் என. பரமேஸ்வரராகிய யாம் பரமாநந்தவடிவமாதலின் பரமபுருஷார்த்தவடிவர். அதாவது எவனுக்கு நாம் பரமப்பிரியம் அவன் மத்பரனாவன், அத்தன்மையோன் பிறபொருளைப் பிரியமெனவுணரான்.

ஆ-சு. தசைதசையஃ வாஜுநாசைதயொவிகூாக। 
வெமயொதஷூஹூாவஉூாஷஙு தமயமாதூ உதி ॥

(பொ-ள்.) ஆனந்தவடிவ ஆன்மாத் தேக விந்திரிய பிராண மன புத்தி முதலிய சர்வபதார்த்தங்களினின்று மிகவுமுள்ளாம். இவ்வான்மதேவர் புத்திரனைப் பார்க்கினும் பிரியராவர், பொன்னைப்பார்க்கினும் பிரியராவர், மற்றையவெல்லாப் பொருள்களைப்பார்க்கினும் பிரியராவர், இவ்வாறு விஷயாகார சர்வ விருத்திகளின் நிரோதத்தால் ஒரே பகவதாகாரமாய்ச் சித்த விருத்திகளின் பிரவாகத்தைச் செய்தோனாகிய சம்பிரஞ்ஞாத சமாதியுடைய புருஷன் தனதாற்றலளவு அதிலிருக்கத் தக்கது, தனதிச்சையானே சீக்கிரம் அதினின்றெழக்கூடாது. ஈண்டு மச்சித்தன் மத்பரன் என்னும் இரண்டு பதங்கட்கு ஸ்ரீ பாடியக்காரரிப்பொருள்செய்தனர்:—ஒரு விஷயாசக்தனாகிய ராகி தனதுள்ளத்தில்நிரந்தரம் ஸ்திரீ சிந்தனம்பண்ணித் தையல் மனத்தோனாகின்றான், ஆனால் அந்த ராகி அம்மாதைப் பரத்துவவடிவத்தானும் ஆராதனைக்குரிய வடிவமாகவுங் கிரகிப்பதில்லை; மற்றோ, அவன் மகாராஜனை அல்லது, யாதானுமோர் தேவதையைப் பரத்துவ வடிவத்தானும், ஆராத்திய வடிவத்தானும் கிரகணம் பண்ணுகின்றான். இவ்வதிகாரியோர் பரமேஸ்வரராகிய எம்மொருவரிடத்திலே மச்சித்தனாகின்றான் அங்ஙனமே மத்பரனாகின்றான். சர்வ ஆராத்திய வடிவமாய்ப் பரமேசுரராகிய எம்மையே யெண்ணுகின்றான் என்பது பொருள். இவ்வாறு ஸ்ரீ பாடியக்காரரது வியாக்கியானத்தினும் சிறிது விலட்சணமாகிய முற்கூறிய வியாக்கியானத்தைச்செய்து இவ்வியாக்கியான கருத்தர் ஸ்ரீபாடியக்காரரினும் இவ்வணம் தனது நியூனத்தன்மையைக் கூறுகின்றார்:—

ஆ-சு. வஹூாவஹூாதுகெஙவிஜெநாகு ஹாஷ்யகாரெண தூுஷூதா। 
மஜாயாஃ கிஂதூஹெஜைக தூுஹாரொஹெ விதூுஷூதா ॥

(பொ-ள்.) இக்கீதையின் வியாக்கியானம்பண்ணும் யான் ஸ்ரீபகவான் பாடியக்காரரோ டொப்பல்லேன் எங்ஙனம் ஒரே துலாத்தட்டிற் சுவர்ணத்தோடேறிய குன்றிமணி அப்பொன்னோ டொப்பல்லவோ அங்ஙனமே ஒரே கீதாசாத்திரத்திற்கு வியாக்கியானஞ்செய்வான் புகுந்த ஸ்ரீபாடியக்காரரோடு உரைகாரனாகிய யான் ஒப்பல்லேன். (14)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு சம்பிரஞ்ஞாத சமாதிவடிவயோகத்தால் நிலைத்தோனுக்குப் பிராப்தமாம் பலன் யாது என்றருச்சுனன் சங்கிக்க ஸ்ரீ பகவான் அதிகாரி ஜனங்களை அதிற்செலுத்துவான் அப்பலனை யருளுகின்றார்.

சு-ம். யுஜநெவம் ஸஜாதாநம் யொகீ நியதமாநஸஃ। 
மாஷிம் நிவாணவரமாம் மதஂஷூாமயிமஜுதி ॥ (15)

ப-ம். 3 யுஜநு 1 ஏவம் 4 ஸஜா 2 சூதூநம் 5 யொகீ 6 நியதமாநஸஃ 9 மா ஷிம் 8 நிவாணவரமாம் 7 மதஂஷூாம் 10 அயிமஜுதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறியபிரகாரமாய்த் தனது மனத்தைச் சமாகிதமாக்கி எப்போதும் யோகம் பயிலுவோன் மன நிரோதமுடையனாய் எனது சொருபபூத நிருவாண பரமசாந்தியை யடைகின்றான். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஏகாந்ததேசத்திருத்தன்முதற்கொண்டு கூறிப்போந்த நியமங்களனைத்தால் தனது மனதைப் பயிற்சி விராகங்களின்வலியால் சமாகிதமாகச்செய்து எப்போதும் யோகப்பயிற்சிப் பராயணனாகிய யோகியானவன் நியதமனத்தோனாய்ச் சாந்தியை யடைகின்றான்; ஆண்டுப் பயிற்சித்திடத்தால்

தனதுமனத்தை நிரோதம்பண்ணினேன் நியதமனத்தன், அல்லது பாயிற்சிவவியால் மனோவிருத்திவடிவ விகாரத்தைக்கெடுத்தோன் நியதமனத்தன். அத்தன்மைய யோகி சருவவிருத்திகளின் உபராமத்தன்மைவடிவப் பிரசாந்தவாஹிதா எனப்பெயரிய சாந்தியை யடைகின்றான் அது நிருவாண பரமாவாம். அதாவது, தத்துவ சாக்ஷாத்கார வுத்பத்திவாயிலாய்ச் சருவகாமகருமம அஞ்ஞான நிவிருத்திவடிவ முத்தியில் பரியவசானமுடைய சாந்தியாம். மத்சம்ஸ்தாவாம் அதாவது எனது பரமானந்தவடிவத்தின் நிஷ்டைவடிவமாம். இத்தன்மைத்தான சாந்தியையே யோகி யடைகின்றான். அநான்ம வஸ்துக்களை விடயம்பண்ணும் சாம்சாரிக வைசுவரியவடிவ சமாதிப்பயனை அவனடைவதில்லை; என்னை? அந்த ஐசுவரியவடிவ சித்திகள் மோட்ச வுபயோகியாகிய சமாதிக்குத் தடைகளேயாம். இதை ஸ்ரீ பதஞ்சலிபகவானும் யோகசூத்திரத்தில் சமாதியின் அந்தவந்த வியவகாரிக சித்திவடிவபலத்தைக் கூறுவதாற் கூறியருளினர். ஆண்டுச்சூத்திரம்.

௫௧. ஸ்தாந்யுபநிமந்த்ரணே ஸங்கஸ்மயாகரணம் புநரநிஷ்டப்ரஸங்காத் ॥

(பொ-ள்.) முற்கூறிய பலவகையான சித்திகளினாலே இந்த யோகிபுருஷன் கிருதகிருத்தியனாகுவன் என்றாசங்கித்து ஸ்ரீபதஞ்சலிபகவான் கூறியருளுகின்றார் மோக்ஷவடிவ பலத்தைக்கொடுக்கும் சமாதியில் பிரீதியுடைய யோகிக்கு முற்கூறிய வியாவகாரிக சித்திகள் தடைகளேயாதலின் மோட்சமடையும் வேட்கையோன் தடைகளாகிய அச்சித்திகளை யுபேட்சிக்கத் தக்கோன்; ஆன்மஞானமின்றிக் கோடி சித்திகளானும் அந்தக்கிருதகிருத்தியத்தன்மை யாகாதாம். அன்றியும், அந்த மோக்ஷத்தின் காரணவடிவ சமாதியில் வேட்கையின்றி வியுத்தானத்திலே வேட்கையுள்ள யோகிக்கோ அந்த வியவகாரிக சித்திகளேயுண்டாம். (1) ஆண்டு அந்தவந்தஸ்தானாதிபதிவடிவ மகேந்திரன் முதலிய தேவதைகள் அந்த யோகியைக்குறித்து இவ்வாறு வேண்டுகின்றார்கள் ஹே யோகிகளே! இந்தச் சுவர்க்கமுதலிய விடங்கட்குத் தாங்கள் வந்து நிவாசம்பண்ணுங்கள் அங்ஙனமே ரமித்திருங்கள் பாருங்கள் இத்தெய்வமாது எத்தன்மைய ரமணியை இத்திவ்விய போகம் எத்தன்மைய ரமணீயம், இந்த ரசாயன வமிருத முதலியவைகள் மூப்பிறப்பை நீக்கத்தக்கன, இந்த விமானம் எத்தன்மைய திவ்யமானது இவ்விதமான திவ்ய பதார்த்தங்களை இங்கே வந்து அநுபவியுங்கள் இவ்வாறு அத்தேவதைகளால் பிரார்த்தனைசெய்யப்படினும் அந்தயோகி அப்பதார்த்தங்களில் காமமடையான். இவ்வெனது யோகத்திற்கு மிகுந்த ஆச்சரியவடிவ பிரபாவமாம் சாக்ஷாத் தேவதையும் என் முன்னின்று இவ்வாறு வேண்டுகின்றதென்னு மித்தன்மைய கர்வவடிவ ஸ்மயத்தையு மோர்காலுமடையலாகாது. மற்றோ, யோகி அந்தவிஷய போகங்களில் இவ்வாறு தோடதிருட்டிசெய்க நெடுநாள் இக்குடும்பவடிவத் தீயில் வெந்து பிறப்பிறப்புகளின் பிரவாகவடிவ சக்கரத்திற்பட்டு யான் யாதோவொரு பூர்வ புண்ணிய கருமத்தின் பிரபாவத்தால் மிகுந்த முயற்சியோடு இக்கிலேசகருமவடிவ விருளையோட்டும் யோகவடிவ தீபத்தை மிகுந்தவொளியுடையதாக்கினேன். அத்தீபத்தை நாசம்பண்ணுவது இத்திருஷ்ணையைத் தோற்றுவிக்கும் விஷய வடிவக் காற்றாம். யான் அத்தன்மைய யோகவடிவ தீபவொளியைப்பெற்றும் பல முறை இந்த விஷய வடிவக்கானனீரால் வஞ்சிக்கபட்டவனாகியும் மறித்தும் அவ்விஷயத்தையடைதற்பொருட்டு இந்தச் சம்சாரவடிவ அக்கினிக்கு என்னைக் காஷ்டவடிவாய்ச் செய்வதெற்றினுக்கோ. மற்றோ, மறித்தும் அவ்வாறு செய்வதெனக்குத் தகுதியன்றாம். ஆதலின் கிருபணபுருஷர்களால் வேண்டப்பட்டதும் கனாப்பொருள் போன்று பொய்வடிவமுமாகிய போகத்தினின்றும் யான் உபரதியடைந்தேன் என்றிவ்வாறு அப்போகத்தில் தோடதிருட்டிபண்ணி அந்த யோகியானவன் அச்சமா

தியைத் திடப்படுத்தல்வேண்டும். அன்றியும் அந்தக் காமவடிவச் சங்கத்தில் வீழ்ந்தோனுக்கும் அங்ஙனமே கருவவடிவ ஸ்மயத்தில் கிருத கிருத்தியத்தன்மையையெண்ணியவனுக்கும் யோகப்பெறுதியின்றாம். அந்தச் சங்க ஸ்மயங்களின் வசத்தால் அந்த யோகத்தினின்றும் நழுவிய புருஷனுக்கு மறித்தும் இஷ்டமின்றிய சம்சாரமே பிராப்தியாம். ஆதலின் அந்தச் சங்கம் ஸ்மயம் இரண்டையுஞ் செய்யாதிருத்தலே கைவல்லிய மோட்சத்தின் தடையை நீக்குமுபாயமாம். (2) ஆண்டு யுஞ்சந்நேவம் சதாத்மாநம் என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் ஏகாக்கிர பூமியில் சம்பிரக்ஞாதசமாதியைக் கூறியருளினர். நியதமாநசஃ என்னும் வசனத்தால் நிரோத பூமிகையின்கண்ணே சம்பிரஜ்ஞாத சமாதியின் பலபூத அசம்பிரஜ்ஞாத சமாதி கூறப்பெற்றது. சாந்திம், என்னும் பதத்தால் அந்த நிரோத சமாதியிற்றோற்றிய சமஸ்காரங்களின் பலவடிவ பிரசாந்தவாகிதாவைக் கூறியருளினர். நிருவாணபரமாம் என்னும் வாக்கியத்தால் தருமமேகமெனப் பெயரிய சமாதியைத் தத்துவஞானவாயிலாய்க் கைவல்லிய மோக்ஷத்திற்குக்காரணமெனக் கூறியருளினர் மத் சமஸ்தாம் என்னும் வாக்கியத்தால் வேதாந்த சித்தாந்தத்தி லுடன்பட்ட கைவல்லிய மோட்சத்தைக்கூறியருளினர் இச்சமாதிகளை யோகநூலில் விரிவாய்க் கூறியருளினர். இவ்வாறு இந்த யோகம் மகத்தாகிய பலத்தைத்தருவதாதலின் இவ்வதிகாரிபுருஷன் மிகமுயன்று இந்த யோகத்தைச் சம்பாதிக்கவேண்டும்.

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் இரண்டு சுலோகங்களால் அந்த யோகம் பயில்வோனது உணவின் நியமத்தை யுபதேசித்தருளுகின்றார்.

சு-ம். நாத்யஶ்நதஸ்து யோகோஸ்தி ந சைகாந்தமநஶ்நத: ।
ந சாதிஸ்வப்நஶீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுந ॥ (16)

ப-ம். 6 ந 2 அதி 3 அஶ்நத: 4 து 5 யோக: 7 அஸ்தி 11 ந 8 ச 9 ஏகாந்தம் 10 அநஶ்நத: 15 ந 12 ச 13 அதி 14 ஸ்வப்நஶீலஸ்ய 17 ஜாக்ரத: 19 ந 18 ஏவ 16 ச 1 அர்ஜுந.

(அ-ம்) ஹே அர்ச்சுன! மிகுந்த அன்னமுண்போனுக்கும் அத்தியந்த முணுதோனுக்கும் அந்தயோகங்கைகூடாது; அங்ஙனமே மிகுந்த நித்திரையுடையோனுக்கும் மிகவிழித்திருப்போனுக்கும் அந்தயோகங் கிட்டாது. (16)

(வி-ம்.) போசனம்பண்ணச் சாடராக்கினியால் சீரணத்தன்மையை யடைவதாயும் தேகத்தில் காரியஞ்செய்வதற்கு வலியைத்தருவதாயும் உள்ள அந்நம் சாத்திரங்களில் ஆன்ம சம்மிதம் எனக் கூறப்படுகிறது. அவ்வன்னத்தை யுண்ணுதொழித்து லோபவசத்தால் மிகுந்த அன்னத்தை யுண்போனுக்கும் அந்தச் சமாதிவடிவ யோகம்கிட்டாது. என்னை? மிகவுண்ட அவ்வன்னம் அசீரணபாவத்தையடைந்து அப்புருஷனிடத்துத் தாதுக்களின் விஷமத்தன்மை வாயிலாக பலவகையான சுரமுதலிய வியாதிகளையுண்டாக்கும் அந்த வியாதிகளாற் றுக்கமுற்ற புருஷனால் அந்தயோகப்பயிற்சி செய்யொணுது; அன்றியும் அத்தியந்தம் அன்னமுண்ணுதோனுக்கும் மிகக் குறைந்த வன்னமுண்போனுக்கும் அந்தயோகமடையப்படாது. என்னை? அன்னமுண்ணுமையானும் மிகக்குறைந்த வன்னமுண்பதனுனும் ரசமுதலிய தாதுக்களால் சரீரபோஷணையின்றுமாதலின் அச்சரீரம் ஒருகாரியஞ் செய்வதற்கு மேலாததாகும்; அங்ஙனமே பசியால் வருந்திய புருஷனது விருத்தியுமொருமைப்படாது. அத்தன்மைய வலியற்ற தேகத்தால் யோகப்பயிற்சி யமையாது; இது சதபத சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. யது ஹவா ஆத்மஸம்மிதமந்நம் ததவதி தந்ந ஹிநஸ்தி யத்பூயோ ஹிநஸ்தி தத்யத்கநீயோ நாவதி இதி ॥

(பொ-ள்.) ஆன்மசம்மிதமா யுண்ணப்பட்ட வன்னமானது உண்ணும்புருஷ னிடத்து வேதப்பொருளை யொழுகுவதற்குத் தகுதியைச்சம்பாதித்து அவ்வொ ழுக்கவாயிலாய் உண்போனை யிரட்சிக்கின்றது. அந்த ஆன்மசம்மித வன்னமானது தாதுக்களின் விஷமத்தன்மையால் சுரமுதலியவைகளை யுண்டுபண்ணும்வாயிலாய் அவ்வுண்போனைக் கொல்லாது; அன்றியும் அவ்வான்மசம்மித வன்னத்தினும் அதிகமாயுண்ட வன்னமோ தாதுக்களின் விஷமத்தன்மை வாயிலாய்ச் சுரமுதலிய வியாதிகளை யுண்டாக்கி உண்போனைக் கொன்றுவிடும். அங்ஙனமே தருமநாசத் தையுஞ் செய்யும். மிகக்குறைவாயுண்ட வன்னமோ உண்போனை யிரட்சியாது; அதாவது பசி நிவிருத்தி செய்தற்பொருட்டும் தருமத்தின் நிர்வாகஞ்செய்தற் பொருட்டும் வலியற்றதாம்; ஆதலின் யோகம்பயிலும் புருஷன் மிகவதிகமான வன்னத்தையும் மிகக்குறைந்த வன்னத்தையும் அத்தியந்த முண்ணுமையையும் விடுத்து அவ்வான்ம சம்மிதவன்னமே யுண்ணத்தக்கது அல்லது,

ஆ-சு. 𑌪𑍂𑌰𑌯𑍇𑌦𑌶𑌨𑍇𑌨𑌾𑌰𑍍𑌧𑌂 𑌤𑍃𑌤𑍀𑌯𑌮𑍁𑌦𑌕𑍇𑌨 𑌤𑍁 ।
𑌵𑌾𑌯𑍋𑌃 𑌸𑌂𑌚𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌮𑌵𑌶𑍇𑌷𑌯𑍇𑌤𑍍 ॥

(பொ-ள்.) இந்த யோகம்பயிலும்புருஷன் தனது வயிற்றின் இரண்டுபாகத் தை யன்னத்தா னிரப்பல்வேண்டும்; மூன்றுவது பாகத்தை நீரானிரப்பல் வேண் டும்; பிராணன் இனிதிலங்குதற்பொருட்டு நான்காம்பாகத்தை வெறிதுவைத்தல் வேண்டும்: என்றிவ்வாறு யோகநூலிற் கூறப்பட்ட அன்னமுண்ணுதலின் அள வினின்றும் குறைந்தவளவேனும் மிகுந்தவளவேனும் அன்னமுண்ணிடினே அந் தயோகங் கிட்டாது; மற்றே, யோகநூலிற் கூறிய அளவே அன்னமுண்பதனுல் அந்தயோகமடையப்படும். மிகுதுயிலுடையானுக்கும் அது சித்தியாது, அஃது அதற்குத் தடையேயாகலின். அல்லாமலும் மிகவிழித்திருப்போனுக்கும் அந்தயோ கம்கிட்டாது. என்னை? அத்தியந்தம் விழித்திருத்தலால் யோகம் பயிலுங்காலத்தில் ஒருதலையா யுறக்கம் வருதலின் '𑌨𑍈𑌵 𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரமானது ஈண்டுக்கூறுத தோஷத்தையுங் கொள்ளுதற்பொருட்டாம். அத் தோடங்கள் மார்க்கண்டேயபுராணத்திற் கூறியுள்ளன.

ஆ-சு. 𑌨𑌾𑌧𑍍𑌮𑌾𑌤𑌃 𑌕𑍍𑌷𑍁𑌧𑌿𑌤𑌃 𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌕𑍁𑌲𑌚𑍇𑌤𑌨𑌃 ।
𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 𑌯𑍋𑌗𑌂 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌯𑍋𑌗𑍀 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥ (1)
𑌨𑌾𑌤𑌿𑌶𑍀𑌤𑍇 𑌨 𑌚𑍌𑌷𑍍𑌣𑍇 𑌚 𑌨 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍇 𑌨𑌾𑌨𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌕𑍇 ।
𑌕𑌾𑌲𑍇𑌷𑍍𑌵𑍇𑌤𑍇𑌷𑍁 𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 𑌨 𑌯𑍋𑌗𑌂 𑌧𑍍𑌯𑌾𑌨𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 ॥ (2)

(பொ-ள்.) ஹே ராஜேந்திர! இந்தயோகி அன்னமிக்குண்டு பொருமுதலு ளனையும் மிகுந்தபசியுடையனையும் மிகுந்த ஆயாசமுடையனையும் கலக்கமனத்தனு யுமிருந்து யோகஞ்செய்யற்க (1) அங்ஙனமே மிகுந்த குளிர்காலத்தும் மிகுந்த வுஷ்ணகாலத்தும் மிகுந்த காற்றுக்காலத்தும் இத்தியானபரனுகிய புருஷன் யோகஞ்செய்யற்க (2). (16)

(அ-கை.) ஆண்டுப் பூருவசுலோகத்தில் உண்ணலாதிகளில் நியமமின்றிய புருஷனுக்கு அந்தயோகங் கைகூடாது என்றிவ்வாறு வியதிரேகத்தால் அவ் வுண்ணலாதி நியமத்தில் யோகிக்குக் காரணத்தன்மை கூறப்பட்டது. இப்போது அவ்வுண்ணலாதிகளில் நியமமுடையோனுக்கு அந்தயோகம் அவசியங் கைகூடும் என்றிவ்வாறு அந்நுவயத்தாலும் அவ்வுண்ணலாதிகளின் நியமத்தில் அந்தயோ கத்திற்குக் காரணத்தன்மையை ஸ்ரீபகவானருளுகின்றுர்.

சு-ம். 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌹𑌾𑌰𑌵𑌿𑌹𑌾𑌰𑌸𑍍𑌯 𑌯𑍁𑌕𑍍𑌤𑌚𑍇𑌷𑍍𑌟𑌸𑍍𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 ।
𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌾𑌵𑌬𑍋𑌧𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌹𑌾 ॥ (17)

ப-ம். 1 யுக்தாஹாரவிஹாரஸ்ய 3 யுக்தசேஷ்டஸ்ய 2 கர்மஸு 4 யுக்தஸ்வப்நாவபோதஸ்ய 5 யோக: 7 பவதி 6 துக்கஹா.

(அ-ம்.) ஹே அருச்சுன! நியதமான ஆகாரவிகாரங்களும் ஓங்கார செப முதலிய கருமங்களில் நியதமான பிரவிருத்தியும் நியதமான விழிப்புறக்கங்களும் உடையவனுக்கே அந்தத் துக்கத்தைக் கெடுக்கும் யோகமானது அடையப்படும்.

(வி-ம்.) ஹே அருச்சுன! அன்னவடிவ ஆகாரம், போதல் வருதல்வடிவ விகாரம் என்னுமிவ்விரண்டையும் நியமபூர்வகமாயுடையவனும் ஓங்கார செபம் உபநிடத பாடம் முதலிய கருமங்களில் காலநியத பூர்வகப் பிரவிருத்தியுடையவனும் அங்ஙனமே நித்திரைவடிவ கனவும் சாக்கிரவடிவ விழிப்பும் காலநியத பூர்வகமுடையவனும் ஆகிய சாதன சம்பன்னபுருஷனுக்கே அச்சாதனங்களின் திடத்தால் அச்சமாதிவடிவ யோகம் கைகூடும். அவ்வாகார விகார முதலியவைகளின் நியமமற்றோனுக்கின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வாறு முயன்று சம்பாதித்த யோகத்தால் அவனுக்குண்டாம் பலம் யாது?

சமாதானம் :—ஸ்ரீபகவானருளுகின்றார் 'துக்கஹா இதி' ஹே அர்ச்சுன! சம்சாரசம்பந்தமாயுள்ள சர்வதுக்கங்கட்குங் காரணமாகிய அஞ்ஞானத்தை நாசம் பண்ணுகின்றது பிரஹ்மஞானமாம். அதை யுண்டாக்குவது இந்தயோகமாமாதலின் இச்சமாதிவடிவயோகம் பிரஹ்மஞானோத்பத்திவாயிலாய் மூலாவித்தையோடு சருவதுக்க நிவிருத்திக்குக் காரணமாம். அத்தன்மைய பெரும்பயனுடைய இச்சமாதிவடிவ யோகத்தை இவ்வதிகாரி அவசியமடையத்தக்கவனுவன். ஆண்டு ஆகாரநியமமோ பூர்வசுலோகத்தில் 'யதுஹவா' என்னுஞ் சுருதிவாக்கியத்தானும் பூரயேதசநேநார்த்தம் என்னுஞ் யோகநூலின் வாக்கியத்தானும் கூறியுளது. போதல் வருதல்வடிவ விஹார நியமமோ 'யோஜநாத்பரம்நகச்சேத்' யோசனை தூரத்திற்குமேல் செல்லற்க; மற்றோ, அதற்குள்ளுள்ளாகவே செல்க. என்பது முதலிய வாக்கியத்தாற் கூறப்பட்டது. வாக்கு முதலிய விந்திரியங்களின் சபலத்தன்மை விடுதலே செபமுதலியகருமங்களிற் சேஷ்டை நியமமாம். சூரியன் அஸ்தமான காலமுதற்கொண்டு மறித்தும் உதயமாமளவும் இரவாம். அதை மூன்றாய்ப்பகுத்து அதில் முதற்பாக கடைப்பாகங்களில் விழித்திருத்தல்வேண்டும் இடைப்பாகத்தி லுறங்கல்வேண்டும். இதுவே விழிப்புறக்கங்களின் நியமமாம். இதுமுதலாகப் பலவகை நியமம் யோகநூலிற் கூறப்பட்டுள்ளது. (17)

(அ-கை.) ஆண்டு முற்பிரசங்கத்தால் ஏகாக்கிரபூமியில் சம்பிரக்ஞாத சமாதி கூறப்பட்டது. இப்போது நிரோதபூமியில் அசம்பிரஞ்ஞாத சமாதியருளுவான் தொடங்கினர்.

சு-ம். யதா விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே ।
நிஸ்ப்ருஹஸ்ஸர்வகாமேப்யோ யுக்த இத்யுச்யதே ததா ॥ (18)

ப-ம். 1 யதா 2 விநியதம் 3 சித்தம் 4 ஆத்மநி 5 ஏவ 6 அவதிஷ்டதே 8 நிஸ்ப்ருஹ: 7 ஸர்வகாமேப்ய: 10 யுக்த: 11 இதி 12 உச்யதே 9 ததா.

(அ-ம்.) ஹே அருச்சுன! எப்போது நிரோதம்பண்ணிய சித்தமானது ஆன்மாவின்கண்ணே நிலைக்கின்றதோ சருவவிடயவேட்கை யொழிந்ததோ அப்போது யுக்தம் என்னும் பெயராற் கூறப்படுகின்றது. (18)

(வி-ம்.) எப்போது இவ்வந்தக்கரணவடிவ சித்தமானது தனது நின்மலசுபாவ வசத்தால் தனது விடயாகாரத்தைக் கிரகணஞ்செய்வதில் வலிமையுடையதே

னும் பர வைராக்கியவசத்தால் சர்வ விருத்திகளின் நிரோதமுடையதும் ரசக மங்களற்றதுமாகி பிரத்தியக் சைதன்யவடிவ ஆன்மாவினிடத்திலே எக்காலத்தும் அசலமாய் நிலைத்திருக்குமோ அச்சர்வவிருத்தி நிரோதகாலத்தில் சமாதிவடிவ யோகத்தோடு கூடியது எனக் கூறப்படும். அவ்வாறு கூறப்படுவதுயாதெ'ன் றருச்சுனன்சங்கிக்க அருளுகின்றார். 'நிஸ்பிருகஃ சர்வகாமேப்யஃ' என பரவுலக இவ்வுலகங்களிலுள்ள விடயங்களனைத்தின் பெயர் காமம். அவ்விஷயவடிவ சர்வ காமங்களினின்றும் திருஷ்ணைவடிவ ஸ்பிருகா நீங்கியது நிஸ்பிருகமாம் அத் தன்மைய நிஸ்பிருகம் யுக்தமெனப்படுகின்றது இத்துணைகூறியதால் தோஷதிருஷ் டிபூர்வக பரவைராக்கியத்தில் அசம்பிரக்ஞாத சமாதியின் சாதனவடிவத்தன்மை கூறப்பட்டது. (18)

(அ-கை.) இப்போது சமாதியில் சர்வவிருத்திகளுமின்றிய சித்தத்திற் கொப்புமை கூறியருளுகின்றார்.

சு-ம். யயா தீவொ நிவாதஸ்ஹொ நெஂமதெ ஸொவமா ஸ்ரு[ம]தா ।
யொமிநொ யதசித்தஸ்ய யுஂஜதொ யொமமாத்மநஃ ॥ (19)

ப-ம். 1 யயா 3 தீவஃ 2 நிவாதஸ்ஹஃ 4 ந 5 ஐஂமதெ 6 ஸா 7 உவமா 13 ஸ்ரு[3]தா 11 யொமிநஃ 8 யதசித்தஸ்ய 10 யுஂஜதஃ 9 யொமஂ 12 ஆத்[3]மநஃ

(அ-ம்.) ஹே அருச்சுன! எங்ஙனம் காற்றில்லாத தேசத்திலுள்ள தீபம் சலிப்பதில்லையோ அதுவே நிரோத சித்தமுடைய யோகாநுட்டானம் பண்ணப் பட்ட புருஷனது அந்தக்கரணத்திற்குத் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. (19)

(வி-ம்.) ஹே அருச்சுன! தீபஞ்சலித்தற்குக் காரணமாகிய காற்றிலாத இடத்திலுள்ள தீபமானது சலிப்பிக்குங் காற்றிலாமையின் சலனப்படாததுபோல ஏகாக்கிரபூமியில் சம்பிரக்ஞாத சமாதியுடையவனும் அப்பியாசத்தின் மிகுதிப் பாட்டால் சர்வவிருத்திகளையும் நிரோதம்பண்ணியவனும் நிரோதபூமியில் அசம்பி ரக்ஞாதவடிவ யோகத்தைப் பயிலுவோனுமாகிய யோகியின் அந்தக்கரணம் விளக்கொப்ப நிச்சலமும் சத்துவகுணத்தின் மிகுதிப்பாட்டால் பிரகாசமுமாம்; ஆதலின், அந்த யோகியின் அந்தக்கரணத்திற்கு யோகநூலில் சலனமற்ற விளக் கையே திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது; அவ்விளக்குச்சலியாததுபோல யோகியி னந்தக்கரணமும் சலனமற்றதென்பது பொருள். அன்றியும், இவ்வியாக்கியானத் தில் ஆத்மனஃ என்னும் பதத்தால் அந்தக்கரணத்தைக் கொள்ளவில்லை; மற்றோ, அவ்வான்ம சத்தத்தால் பிரத்தியக்கான்மாக் கொள்ளப்பட்டது 'ஆத்[3]மநஃயொமஂ யுஂஜதஃ' எனப்பதத்தை அந்நுவயம்பண்ணி ஆன்மவிஷயக யோகம்பண்ணும் யோகியெனப் பொருள்பண்ணப்பட்டது அவ்வியாக்கியானத்தில் தீபவடிவ உபமா னமாகிய திருஷ்டாந்தத்திற்கு உபமேயவடிவ தாஷ்டாந்தமொன்றும் பெறப்பட வில்லை அல்லது, இவ்வியாக்கியானத்தில் ஆத்மநஃ என்னும் பதமே பயனற்றதாம்; என்னை? எல்லா வவத்தைகளிலும் சித்தத்திற்கு ஆன்மாகாரத்தன்மை இயல்பாக வே சித்தமாம். ஒருயோகத்தானுஞ் சம்பாதிக்கவேண்டுவதில்லை; மற்றோ, அச் சித்தத்தில் ஒருகால் கருமத்தாற்றோற்றிய அநான்மாகாரத்தன்மையே யோகத் தால் நீக்கற்பாலது இது சம்க்ஷேபசாரீரகத்திலும் கூறப்பட்டுளது :—

ஆ-சு. ஸ்வாஹாவிகீஹி வியக்ஷிதஸ்வதாவடாஜெஃ
க்ஷீராதிவஸ்து வடநாவஂநாநஸ்யெஜெதஂஃ ।
ஸாவஂயியாஃ விதி[க்ஷ]நிதஸ்ஹாஃநிஸித்தஂ
ப்ஸ்வாதிவஸ்து வடநாவ[மு]ஂ கஃஷஸெஜெதஂஃ ॥

(பொ-ள்.) கடாதிகட்கு ஆகாசத்தோடுள்ள சம்பந்தம் இயற்கையதாம்; மற்றோர் முயற்சியாலன்று அவற்றிற்கு பால் முதலிய பொருளோடுள்ள சம்பந்தமோ இயற்கையதன்று; மற்றோ, கருமத்தாலாயது அங்ஙனமே புத்திகட்குச் சேதனத்தோடுள்ள சம்பந்தம் இயற்கையதாம் மற்றொருகருமத்தாலாயதன்று அப்புத்திகளுக்கு விடயங்களோடுள்ள சம்பந்தமோ கேவலங் கருமத்தாலாயதாம் இயற்கையதன்று. ஆதலின் ஆத்மநா என்னும் பதம் பிரத்தியகான்ம வாசகமன்று; மற்றோ, அந்தக்கரணவடிவ தாஷ்டாந்தத்தின் போதகமாம் அல்லது இவ்வியாக்கியானத்தில் தாஷ்டாந்தலாபத்தின்பொருட்டு 'யதசித்தஸ்ய' என்னும் வாக்கியத்தில் 'யதம் அதச் சித்தம்' யதமாகிய சித்தம், நிரோதமாகிய சித்தமென்பது பொருள் எனக் கருமதாரய சமாசத்தை (பண்புத்தொகையை) யுடன்பட்டுச் சித்தத்தையே கிரகிக்கவேண்டும். (19)

(அ-கை.) இவ்வாறு பொதுவடிவமாய்ச் சமாதியை யருளிச்செய்து இப்போது ஸ்ரீ பகவான் அவ்வசம்பிரஞ்ஞாதமெனப் பெயரிய நிரோதசமாதியை விரிவாயருளத் தொடங்குகின்றார்.

சு-ம். யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா ।
யத்ர சைவாத்மநாத்மாநம் பஶ்யந்நாத்மநி துஷ்யதி ॥ (20)

ப-ம். 2 யத்ர 5 உபரமதே 4 சித்தம் 3 நிருத்தம் 1 யோகஸேவயா 7 யத்ர 6 அ 12 ஏவ 8 ஆத்மநா 9 ஆத்மாநம் 10 பஶ்யந் 11 ஆத்மநி 13 துஷ்யதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யோகாநுஷ்டான சேவையால் எப்பரிணாம விசேஷந்தோற்றி, நிரோதமான இச்சித்த உபசாந்தியையும், சுத்தாந்தக்கரணத்தால் பிரத்தியக் சைதன்ய ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்து ஆன்மாவின்கண்ணே சந்தோஷத்தையுமடைகின்றானோ அதை யோகமென்றுணர்க. (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நிரந்தரமாதரவோடு யோகாநுஷ்டானஞ்செய்வதால் எப்பரிணாம விசேஷந்தோற்றி நிரோதமான சித்தம் ஒரே வஸ்துவை விஷயஞ்செய்யும் விருத்திகளின் பிரவாகவடிவ ஏகாக்கிரத்தை விடுத்து விறகின்றிய எரிபோல் உபசாந்தியடைகின்றதோ அதாவது அச்சித்தம் சர்வ விருத்திகளுமற்றதாமாதலின், சர்வ விருத்தி நிரோதவடிவமாய்ப் பரிணமிக்கின்றதென்பது பொருள். அங்ஙனமே எப்பரிணாம விசேஷந்தோற்றி ரசதமசுகளாலமிழ்த்தப்படாத சுத்த சத்துவமாத்திரவடிவ அந்தக்கரணத்தால் பரமான்மாவினும் வேறிலாத சச்சிதானந்தகன அனந்தாத்துவிதீய பிரத்தியக்கான்மாவைக்கண்டு அதாவது வேதாந்தப்பிரமாணத்தாற்றோற்றிய விருத்தியால் சாக்ஷாத்கரித்து, அப்பரமானந்தகன ஆன்மாவின்கண்ணே சந்தோஷமடையப்படுகின்றதோ ஆன்மபின்னதேகேந்திரியமுதலிய சங்காதங்களிலும் போக்கியப்பொருள்களிலும் சந்தோஷத்தையடைவதில்லையோ. 'ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா ஭வதி' பிரஹ்மா முதற்கொண்டு தம்பமீறாகிய சர்வப் பிராணிகட்கும் ஆனந்தத்தைக்கொடுக்கின்ற அப்பரமான்மதேவனைச் சாக்ஷாத்கரித்து வித்துவான் யான் கிருதார்த்தனாயினேன் எனச் சந்தோஷத்தையடைகின்றான். அந்தச் சர்வ விருத்திகளின் நிரோதவடிவ அந்தக்கரண பரிணாமத்தை யோகசத்தத்தின்பொருளெனவுணர்க. இவ்வாறு 'தம் வித்யாத் துக்கஸம்யோக' என்னும் 23வது சுலோகத்தோடு 20வது சுலோகத்தையும் மேற்கூறும் 21வது சுலோகத்தையும் அந்வயஞ்செய்க. சில வியாக்கியானத்தில் 'யத்ரோபரமதே சித்தம்' என்னும் வாக்கியத்திலுள்ள யத்ர என்னுஞ் சத்தத்திற்கு எக்காலத்தில் எனப்பொருள்செய்யப்பட்டது அஃது இவ்வியாக்கி

யானத்தில் 'தம்விந்யாத்' என மேற்கூறும் வாக்கியத்திலுள்ள தத்என்னுஞ் சத்தத்திற்கு அக்காலத்தோடு அந்நுவயம் பொருந்தாதாம்; காலத்தில் யோகசத்தார்த்தவடிவத்தன்மை அமையாமையின் இவ்வியாக்கியானம் நலமென்றும். என்க. (20)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் பிரத்தியகான்மாவினிடத்தில் சந்தோஷத்தைபடைவன் என்னுமர்த்தத்தைக் கூறியருளினர். இப்போது அவ்வர்த்த சித்தியில் ஏதுவைக்கூறியருளுகின்றார்.

சு-ம். ஸுகமாத்யந்திகம் யத்தத் புத்திக்ராஹ்யமதீந்த்ரியம் ।
வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதச்சலதி தத்வத: ॥ (21)

ப-ம். 2 ஸுகம் 3 ஆத்யந்திகம் 1 யத் 6 தத் 5 புத்திக்ராஹ்யம் 4 அதீந்த்ரியம் 8 வேத்தி 7 யத்ர 14 ந 9 ச 13 ஏவ 11 அயம் 10 ஸ்தித: 15 சலதி 12 தத்வத:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எந்தச்சுகம் அனந்தமும் இந்திரிய விஷயமல்லதும் கேவல சுத்தபுத்தியாற் கவருவதுமாமோ அந்தச்சுகத்தை இந்த யோகி எவ்வவத்தையிலநுபவிக்கின்றனே அங்ஙனமே எதில் நிலைபெற்று இவ்வித்துவான் தனதான்மவடிவத்தினின்று ஓர் போதுஞ் சலனப்படுவதில்லையோ அதுவே யோகசத்தார்த்தவடிவ மென்றுணர்க. (21)

(வி-ம்.) எச்சுகம் ஆத்தியந்திகமாமோ அதாவது தேசகாலவஸ்து பரிச்சேதரகித நிரதிசயப் பிரஹ்மவடிவமாமோ அதீந்திரியமாமோ அதாவது நேத்திராதிய இந்திரியசம்பந்தத்தாற் றோற்றும் ஞானவிடயமன்றோ, ரசதமவடிவமலமின்றிய கேவலசத்துவப் பிரதானபுத்தியால் கவரப்படுகிறதோ அத்தன்மைய சுகத்தை இந்தயோகி எவ்வவத்தையி லநுபவிக்கின்றனே அங்ஙனமே எவ்வவத்தையினிலைத்து இவ்வித்துவான் தனது பரிபூரண அத்துவிதீய ஆன்மசொரூபத்தினின்றும் ஓர் காலுஞ் சலனப்படுவதில்லையோ அந்நிரோத பரிணாமவடிவ வவத்தையே யோகசத்தார்த்தவடிவமென்றுணர்க. ஈண்டு ஸ்ரீபகவான் அச்சொரூபசுகத்தை ஆத்தியந்திகம், அதீந்திரியம், புத்திக்கிராகியம் என்னு மூன்றுவிசேடணங்களாற் கூறியருளினர். அவற்றில் ஆத்தியந்திகமென்னும் விசேடணத்தால் பிரஹ்மசொரூபசுகத்திற்கு 'யோவைபூமாதத்சுகம்' என்னுஞ் சுருதியாற் சித்தித்த மூவிதபரிச்சேதமற்ற அநந்தவடிவங்கூறியருளினர். 'அதீந்திரியம்' என்னும் விசேடணத்தால் அப்பிரஹ்மவடிவசுகத்தில் விடயஜன்னிய சுகத்தினும் வேறுந்தன்மை கூறியருளினர். விடயத்தாற்றோன்றுஞ் சுகம் விடயேந்திரியங்களின் சம்பந்தத்தை ஒருதலைபாய் வேண்டுவதாதலின் புத்திக்கிராகியமென்னும் விசேடணத்தால் பிரஹ்மசொரூபசுகத்தில் சுழுத்திச் சுகத்தினும் வேறுந்தன்மையைக் கூறியருளினர். என்னை? சுழுத்திகாலத்தில் புத்தி விலயப்படுதலால் சுழுத்திச்சுகம் புத்தியாற் கவரப்படுவதன்று. சமாதியவத்தையிலோ அப்புத்தி சர்வவிருத்திரகிதமாய் நிலைத்திருத்தலின் ஆண்டு அப்பிரஹ்மசொரூபச் சுகம் புத்தியால் கிரகிக்கப்படுகிறது. இது ஸ்ரீகௌடபாதாசாரியராலுங் கூறப்பட்டிருக்கிறது:—'லீயதே ஹி ஸுஷுப்தௌ தந்நிக்ருஹீதம் நலீயதே' அம்மனம் சுழுத்தியவத்தையிலோ அஞ்ஞானத்தில் விலய பாவத்தையடைகின்றது. சமாதியிலோ நிரோதமாகிய மனம் இலயபாவத்தையடைவதில்லை இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஸமாதி நிர்தௌதமலஸ்ய சேதஸோ நிவேசிதஸ்யாத்மநி யத்ஸுகம் பவேத் ।
ந சக்யதே வர்ணயிதும் கிரா ததா ஸ்வயம் ததந்த:கரணேந க்ருஹ்யதே ॥

(பொ-ள்.) சமாதியால் ரசதமவடிவமலம் அல்லது பாபவடிவமலம் ஒழிந்து ஆன்மாவி னிலைத்திருக்கும் சித்தத்திற்கு அக்காலத்தில் பிராப்தியாகும் சுகத்தை

வாக்கால் வருணிக்கமுடியாதாம்; மற்றோ, சர்வவிருத்திகளும் நிரோதமாகிய அந்தக்கரணத்தானே அச்சுகம் கிரகிக்கப்படுகின்றது. அல்லது அச்சமாதி யவத்தையின்கண்ணே விருத்தியால் சுகமநுபவிப்பதை ஸ்ரீகௌடபாதாரியரே மறுத்திருக்கின்றனர். 'நாஸ்வாதயேத்ஸுகம் தத்ர நி꞉ஸங்க꞉ ப்ரஜ்ஞயா பவேத்' இச்சமாதியில் யான் இம்மகத்சுகத்தை அநுபவிக்கின்றேன் என்னுஞ்சவிகற்பகவிருத்தியின் பெயர் பிரஞ்ஞாவாம், அப்பிரக்ஞையால் சுகாஸ்வாதனம் வியுத்தானவடிவமாதலின் சமாதிவிரோதியாம், ஆதலின் அப்பிரஞ்ஞையால் ஓர்போதும் யோகி சுகாஸ்வாதனம் பண்ணக்கூடாது. இக்காரணத்தானே யோகி அப்பிரஞ்ஞையோடு சம்பந்தப்படுவதின்றாம்; அவ்விருத்திவடிவப் பிரஞ்ஞையை நிரோதம்பண்ணவேண்டுமென்பது பொருள். அன்றியும் சர்வ விருத்திகளுமற்ற சித்தத்தால் அச்சொரூபசுகாநுபவம் அக்கௌடபாதாசாரியரானே 'ஸ்வஸ்தம் ஶாந்தம் ஸநிர்வாணம் அகத்யம் ஸுகமுத்தமம்' என்பது முதலிய வசனங்களால் கூறப்பட்டுளது; இதன்பொருளைப் பின்னர்விளக்குவாம். (21)

(அ-கை.) ஆண்டு முற் சுலோகத்தில் 'யத்ர நைவாயம் ஸ்திதஶ்சலதி தத்த்வத꞉' என்னும் வாக்கியத்தால் எவ்வவத்தையி னிலையடைந்து இந்த யோகி தனது அத்துவிதீய ஆன்மசொரூபத்தினின்றுஞ் சலனப்படுவதில்லையோ என்னுமர்த்தத்தைக் கூறியருளினர். இப்போதிச்சுலோகத்தால் அவ்வர்த்தத்தை யுபபாதனஞ்செய்தருளுகின்றார்.

சு-ம். யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத꞉ ।
யஸ்மிந் ஸ்திதோ ந து꞉கேந குருணாபி விசால்யதே ॥ (22)

ப-ம். 1 யம் 2 லப்த்வா 9 ச 3 அபரம் 4 லாபம் 8 மந்யதே 7 ந 6 அதிகம் 5 தத꞉ 10 யஸ்மிந் 11 ஸ்தித꞉ 15 ந 13 து꞉கேந 12 குருணா 14 அபி 16 விசால்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வவத்தை விசேஷத்தையடைந்து இந்த யோகி மற்றோரிலாபத்தை அதனின் அதிகமென எண்ணுவதில்லையோ எவ்வவத்தையினிலைபெற்று இந்த யோகி பெருந்துக்கத்தாலும் சலனப்படுவதில்லையோ. (22)

(வி-ம்.) நிரதிசய ஆன்மவடிவ நித்திய சுகத்தின் அபிவியஞ்சகமாகிய சர்வவிருத்திகளுமற்ற சித்த நிரோதமெனப் பெயரிய அவத்தை விசேஷத்தை நிரந்தரயோகாநுஷ்டான பரிபக்குவத்தினின்றுஞ் சம்பாதித்த அவத்தைவிசேஷத்தின்மேலாக மற்றோர் லாபத்தையும் அதிகமாய்க் கருதுவதில்லையோ; மற்றோ, எவ்வவத்தை விசேஷத்தையடைந்ததால் தன்னைக்கிருத கிருத்தியனாகவும் பிராப்தப் பிராபணீயனாகவும் எண்ணுகின்றானோ பலவித உபாயங்களாலடையப்படுஞ் சுகத்தை ஒரே காலத்திலடைந்தவன் பிராப்தப் பிராபணீயன் எனக் கூறப்படுகின்றான். 'ஆத்மலாபாந்ந பரம் வித்யதே' ஆனந்தசொரூப ஆன்ம சாக்ஷாத்காரவடிவலாபத்தினும் மேலாகிய லாபம் மற்றொன்றில்லை? என்கின்றதுமிருதியும்? என்னை? ஆனந்தவடிவ ஆன்மாவின் வேறாகிய சுவர்க்கலோகம், வைகுண்டலோகம் கோலோகம் பிரஹ்மலோகம் என்பனமுதலியவைகளனைத்தும் சாதிசயத்தன்மை தீனத்தன்மை கீழே விழும்பயம் ஈரிஷை என்பன முதலிய தோஷங்களால் எப்போதும் வியாபிக்கப்பட்டனவாதலின் சித்த நிரோதத்தினும் மேலாகிய லாப வடிவத்தன்மைபொருந்தாது. வேதாந்த சித்தாந்தத்தே பிரத்தியக்க பின்ன பிரஹ்ம சாக்ஷாத்காரமே பரமலாபமெனப்பெறுமாதலின் சித்த நிரோதத்திற்குப் பரமலாபரூபத்தன்மை சம்பவியாதாயினும் சுருதியில் சத்தியமான பிரஹ்மத்தை யடைவிக்கும்

பதா வாக்கிய ஜன்னிய விருத்திவடிவ ஞானத்தையும் சத்தியவடிவமாய்க் கூறப்பட்டிருத்தல்போல ஸ்ரீ பகவானும் பரமலாபவடிவ ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைவிக்கும் சித்தத்தின் நிரோதாவத்தையே பரமலாபமாய்க் கூறியருளப்பட்டது. அதில் முற்பாதியிற் பாகிய விஷய வாசனையால் அந்தயோகிக்கு அச்சமாதியினின்று சலனப்படுத லுண்டாவதில்லையெனக் கூறியருளப்பட்டது. இப்போது குளிர், சூடு, காற்று, கொசு, இவை முதலியவைகளாலுண்டாகும் துக்கத்தை நீக்கற்பொருட்டும் அந்த யோகிக்குச் சமாதியினின்றுஞ் சலனத்தன்மையுண்டாவதில்லை என்பதைப் பிற்பாதியிற் கூறியருளுகின்றார். 'யஸ்மிந் ஸ்தித: இதி' ஆன்மவடிவச் சுகாபிவிபஞ்சகமாகிய சர்வ விருத்திகளில்லாத சித்தத்தினவத்தை விசேஷத்தையடைந்த யோகியை ஆயுதத்தாலடித்தல் முதலிய நிமித்தத்தாற்றோன்றிய பேரார்த்தையும் சலனப்படுத்துவதின்றெனில் குளிர் முதலியவைகளாலுண்டாகும் சிற்றார்த்தைபோ அவனை சலனப்படுத்துஞ் சமர்த்துடைத்து. மற்றோ, சலனப்படுத்தமுடியாததேயாமென்க. (22)

(அ-கை.) ஆண்டு 'யத்ரோ பரமதேசித்தம்' என்னுஞ் சுலோகமுதற்கொண்டு மூன்று சுலோகங்களால் கூறியருளிய சித்தத்தின் அவத்தா விசேஷத்தில் யோகசத்தார்த்தவடிவத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். தம் வித்யாத் து:கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் ।
ஸ நிஶ்சயேந யோக்தவ்யோ யோகோ(அ)நிர்விண்ணசேதஸா ॥ (23)

ப-ம். 2 தம் 4 வித்யாத் 1 து:கஸம்யோகவியோகம் 3 யோகஸம்ஜ்ஞிதம் 5 ஸ: 7 நிஶ்சயேந 9 யோக்தவ்ய: 6 யோக: 8 அநிர்விண்ணசேதஸா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! துக்கத்தொடர்பின்றிய நிரோதாவத்தையே யோகசத்தப்பொருளென்றுணர்க. அந்தயோக நிச்சயத்தானும் உத்வேகமின்றிய சித்தத்தானும் அப்பியாசஞ்செய்யத்தக்கது. (23)

(வி-ம்.) 'யத்ரோபரமதே சித்தம்' என்னும் வாக்கிய முதற்கொண்டு பல விசேஷணங்களாற் கூறப்பட்ட சர்வ விருத்திகளற்றதும் பரமானந்தத்தின் அபிவிபஞ்சகமுமாகிய சித்த நிரோதமெனும் அவத்தை விசேஷமானது சித்தவிருத்திவடிவ சர்வதுக்கங்கட்கும்விரோதியாதலின் அந்தத்துக்க சம்பந்தத்தின் நீக்கவடிவமாம்; அதாவது அத்தியான்மிக ஆதிபௌதிக ஆதிதைவிகமாகிய துக்கங்களனைத்தின் சம்பந்தம் சர்வ விருத்தி நிரோதாவத்தையிலின்மையின் அந்நிரோதம், வியோகம் என்னும் பெயராற் கூறத்தக்கதாமாயினும் விரோதி லட்சணையால் அந்நிரோதத்தை யோகசத்தப்பொருளென்றுணர்க. அந்தயோக சத்தாநுசாரத்தால் அந்நிரோதம் சிறிதளவுஞ் சம்பந்தமடைவதில்லை. இவ்வர்த்தத்தையே ஸ்ரீ பகவான் பதஞ்சலியும் 'யோகஶ்சித்த வ்ருத்தி நிரோத:' சர்வ சித்த விருத்திகளின் நிரோதத்திற்கு யோகமெனப் பெயர் என்னுஞ் சூத்திரத்தாற் கூறியருளினர். கூறியவித்துணையானே 'யோகோபவதி துக்கஹா' என்னும் வாக்கியத்தால் முற் கூறிய யோகப்பயனை முடித்தருளினர். இப்போது நிச்சயத்திலும் நிர்வேதமின்மையிலும் அந்தயோகசாதனரூபத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். 'ஸ நிஶ்சயேந யோக்தவ்ய இதி' இவ்வாறு மகத்தாகிய பலத்தைக்கொடுக்கின்ற யோகமானது இவ்வதிகாரி புருஷனால் நிச்சயமா யநுஷ்டிக்கத்தக்கது. ஈண்டு ஆசாரிய சாஸ்திரவசனங்களின் தாற்பரிய விஷயவடிவ சர்வார்த்தங்களும் உண்மையே என்னுமித்தன்மைய திடபுத்தியின் பெயர் நிச்சயமாம். அந்நிச்சயத்தால் யோகமநுட்டிக்கத்தக்கது அங்ஙனமே இவன் நிர்வேதமின்றியவனாய் யோகம் பயிலத்தக்கது; ஈண்டு இவ்வளவு காலபரியந்தம் அப்பியாசம்பண்ணியும் எனக்கிந்தயோகம் கிட்ட

வில்லையெனின் இனிமேலெவ்வாறு கிட்டும் என்னு மநுதாபத்தின் பெயர் நிர்வேத மாம்; அந்நிர்வேதமின்றிய சித்தத்தால் யோகம் பயிலுக. நிரந்தரமப்பியாசிக்கின் இச்சென்மத்திலேனும் மறுசென்மத்திலேனும் யோகங் கைகூட லொருதலையே. அதில் அதிவிரைவுறுவதிற் பயனென்னும் என்னுந் தைரியத்தோடுகூடிய மனத் தால் அந்த யோகாப்பியாசஞ் செய்யற்பாலது. இது ஸ்ரீ கௌடபாதாசாரியரா லுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. உத்ஸேக உததேர்யத்வத் குசாக்ரேணைகபிந்துநா ।
மநஸோ நிக்ரஹஸ்தத்வத் பவேதபரிகேதத: ॥

(பொ-ள்.) எங்ஙனம் ஒரு சிட்டுக்குருவி சமுத்திரத்தைவற்றச்செய்ய நிச்சயித்துத் தர்ப்பைநுனிபோன்ற தனது மூக்கினுல்சமுத்திரசலத்தின் துளியையெடுத் துக் கரையிற்றெளித்ததோ அங்ஙனமே கேதாகிதனுய் அப்பியாசஞ்செய்வதனுலே இம்மனோநிக்கிரகமாகும். ஈண்டு வேதாந்த சம்பிரதாயமுணர்ந்த ஆன்றோர்கள் இவ்வாறு கதைசொல்லுகின்றனர் :—சமுத்திரக்கரையிலுள்ள ஒரு சிட்டுக்குருவி யின் முட்டையைச் சமுத்திரந் தனது அலையின் வேகத்தாலடித்துக்கொண்டுபோய் விட்டது. பின்னர் அச்சிட்டுக்குருவி கோபப்பட்டு இச்சமுத்திரத்தை யான் அவசிய மாய்க் காயும்படிசெய்வேனென நிச்சயித்து அதிற் பிரவிருத்தித்து, சமுத்திரத்தி னின்றும் தனது மூக்கின் நுனியால் ஒவ்வொரு நீர்த்துளியாயெடுத்து வெளியிற் கொண்டுபோய்ப் போட்டுக்கொண்டிருந்தது. அக்காலத்தில் அச்சிட்டுக்குருவியைத் தனதினங்களாகிய பல பறவைகள் அதினின்று நிவிருத்திபண்ணினும் உபராம மடையவில்லை. அதன்பின் அவ்விடத்தில் தெய்வகிருபையால் நாரதமுனிவர்வந்த னர், அவரும் இதை அதினின்று நீக்கினும் நீங்கவில்லை; மற்றே, இச்சன்மத்தி லேனும் அல்லது மறுசன்மத்திலேனும் யான் இச்சமுத்திரத்தை அவசியமாய்க் காயும்படி செய்வேன் என்று துணிபுகூறி அச்சிட்டு அந்நாரதமுனிவரின் முன் பாகவே செய்தது. அதன்பின் தெய்வகிருபையால் கிருபாளுவாகிய நாரதமுனிவர் கருடன்சமீபத்திற்சென்று ஹே கருட! இச்சமுத்திரம் உனது சமானசாதீய பற வைத் துரோகம்பண்ணி உன்னையே அவமானஞ்செய்தது என்றிவ்வண்ணம் சொல் லிவிட்டு நாரதமுனிவர் கருடனை அங்கேயனுப்பினர். அக்கருடனின் சிறகுகளின் காற்றுல் வற்றுவதாய சமுத்திரம் பயமடைந்து அம்முட்டையை அதற்குக் கொடு த்துவிட்டது. என இவ்வாறு யோகி துக்கமற்றவனுய் மனநிரோதவடிவ பரமகரு மத்தில் பிரவிருத்தனுதல்வேண்டும். அந்த யோகியின்மீது சாக்ஷாத் ஈசுரர் தாமே அநுக்கிரகம் செய்வர்; அவ்வநுக்கிரகத்தால் சிட்டுக்குருவிபோன்று இந்த யோகிக் கும் மன நிரோதவடிவ வேட்கைப்பட்ட பொருள் அவசியமாயுண்டாகும். இச்சிட் டுக்குருவியின் கதையை ஸ்ரீ ஆத்மபுராணத்தின் பதினோராவது அத்தியாயத்தில் யாம் விரிவாய்க் கூறினும். (23)

(அ-கை.) ஆண்டு எவ்வுபாயத்தால் அந்த யோகம் பயிலத்தக்கது என்றர்ச் சுனனுக்கறியும் வேட்கைநிகழ ஸ்ரீ பகவான் அந்த யோகவுபாயத்தை வருணித் தருளுகின்றுர் :—

சு-ம். ஸங்கல்பப்ரபவாந் காமாம்ஸ்த்யக்த்வா ஸர்வாநசேஷத: ।
மநஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥ (24)

ப-ம். 1 ஸங்கல்பப்ரபவாந் 3 காமாந் 5 த்யக்த்வா 2 ஸர்வாந் 4 அசேஷத: 6 மநஸா 7 ஏவ 8 இந்த்ரியக்ராமம் 10 விநியம்ய 9 ஸமந்தத:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி சங்கற்பஜன்னிய சர்வ காமத்தையும் வாசனையோடு விடுத்து மனதானே இந்திரியக் கூட்டங்களைச் சர்வ விஷயங்களி னின்றுந் திருப்பி மனநிரோதஞ்செய்யற்பாலதாம்.

(வி-ம்.) இகவுலக பரவுலகங்களிலுள்ள விஷயங்கள் துக்ககாரணமானதால் அத்தியந்தந் துஷ்டமாம் என அதிலுள்ள அசுத்தத்தன்மையைப் பாராது அதில் இவ்விஷயம் மிக ரமணீயமாம் என்னும் சுத்தத்தன்மையின் அத்தியாசம் சங்கற்பமாம். அதனாற்றோன்றிய இவ்விஷயம் எனக்குக் கிடைக்கவேண்டும் என்னும் விஷயேச்சை வடிவம் காமமாம்; அவ்விரண்டையும் சேடமின்றி விடுத்து இவன் மெல்லமெல்ல மன நிரோதம்பண்ணவேண்டும். அத்தியான்ம நூலாராய்ச்சியிற் றோன்றிய அவ்விஷயத்திலுள்ள அசுத்தத்தன்மையின் நிச்சயத்தால் சுத்தமென்னு மத்தியாசந் தொலைந்தபின்னர் மாலைசந்தனமாது முதலாகக் காணப்படும் விஷயங்களிலும் சந்திரவுலகம், பாரிசாதம், அமிருதம், அப்சரா என்பனமுதலிய காணப்படாத விஷயங்களிலும் நாய் தின்று கக்கிய அசனம்போலச் சர்வ காமங்களையும் சூக்ஷ்மவாசனையோடு அறவிடுத்து மனநிரோதம்பண்ணல்வேண்டும். அவ்விஷயாபிலாஷைவடிவ காமத்தினாலே நேத்திரமுதலிய விந்திரியங்கள் தத்தம் விஷயங்களிற் செல்கின்றன; அஃதன்றி அவைகள் செல்வதில்லை. ஆதலின் அக்காமமற்ற விவேகமுடைய மனத்தால் நேத்திரமுதலிய விந்திரியக்கூட்டங்களை உருவமுதலிய சர்வ விஷயங்களினின்றுந் திருப்பி இவன் மெல்லமெல்லத் தனது மனதை நிறுத்தல்வேண்டும் என்றிவ்வாறு மேற்சுலோகத்தோடு இச்சுலோகத்தை அந்நுவயிக்கவேண்டும். ஈண்டு 'அசேஷதஃ' என்னும்பதத்தால் ஸ்ரீபகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர். ஒருபாத்திரத்தில் தைலத்தைவிட்டு அப்பாத்திரத்தினின்றும் தைலத்தை ஊற்றிக்கொண்டதன்பின்னர் அதில் லேபவடிவத்தால் தங்கியிருக்குந் தைலத்தின் பெயர் சேஷமாம். அங்ஙனமே விடயேச்சையை விடுத்தும் எதுகாறும் அதன் வாசனைவடிவ சேஷமிருக்கின்றதோ அதுகாறும் அவ்வாசனையா விழுக்கப்பட்ட மனமானது சமாதியினிலையாதாதலின் வாசனைவடிவசேஷம் மீதியாயிருக்கவொண்ணாத பரித்தியாகம் பண்ணவேண்டும். அன்றியும், மனத்தானே என்னும் பதத்தால் ஸ்ரீ பகவான் இந்நேத்திரமுதலிய விந்திரியங்கள் மனதோடு சேராது ஒருவிடயத்திலும் சுவதந்திரமாய்ச்செல்லா; மற்று, மனதோடுசேர்ந்தே இவைகள் தத்தம் விடயத்திற் செல்வனவாமாதலின் இந்நேத்திரமுதலிய விந்திரியங்களோடு மனதைச் சேர்க்கற்க என்னும் பொருளைக் குறிப்பித்தருளினர்; இதுவே நேத்திரமுதலிய இந்திரியங்களின் நியமமாம். (24)

சு-ம். 𑌶𑌨𑍈𑌃𑌶𑌨𑍈𑌰𑍁𑌪𑌰𑌮𑍇𑌦𑍍 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾 ।
𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 𑌮𑌨𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑌪𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥ (25)

ப-ம். 3 𑌶𑌨𑍈𑌃 4 𑌶𑌨𑍈𑌃 5 𑌉𑌪𑌰𑌮𑍇𑌤𑍍 2 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 1 𑌧𑍃𑌤𑌿𑌗𑍃𑌹𑍀𑌤𑌯𑌾 6 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌂 7 𑌮𑌨𑌃 8 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 11 𑌨 9 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍 10 𑌅𑌪𑌿 12 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகி தைரியமுடைய மனத்தால் மெல்லமெல்ல மனநிரோதஞ்செய்க; பிரத்தியக்கான்மாவினிலைப்பதாய் மனத்தைச்செய்து சிறிதளவுஞ் சிந்தனைசெய்யற்க. (25)

(வி-ம்.) தைரியவடிவ திடத்தால் அநுக்கிரகிக்கப்பட்ட அவசியஞ்செய்யற்பால தின்நிச்சயவடிவபுத்தி, அஃதாவது யாதேனுமோர்போது இந்தயோகம் ஒருதலையாய்க் கைகூடும். இதிற் சீக்கிரஞ்செய்வதிற் பயன்யாது என்னுந் தைரியத்தால் அநுக்கிரகம் பண்ணப்பட்ட புத்தி; அதனால் இவ்வதிகாரி குருவுபதேசித்தமார்க்கத்தால் பூமிகளின் செயக்கிரமத்தால் மெல்ல மெல்ல மனநிரோதஞ் செய்யற்பாலது. இத்துணை கூறியதால் முன் யோகசாதனவடிவத்தாற் கூறப்பட்ட அநிர்வேதம் நிச்சயமிரண்டும் விளக்கப்பட்டன; இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌯𑌤𑍋 𑌯𑌤𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌲𑌤𑌿 𑌮𑌨𑌶𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌸𑍍𑌥𑌿𑌰𑌮𑍍 ।
𑌤𑌤𑌸𑍍𑌤𑌤𑍋 𑌨𑌿𑌯𑌮𑍍𑌯𑍈𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌵 𑌵𑌶𑌂 𑌨𑌯𑍇𑌤𑍍 ॥

(பொ-ள்.) இலௌகிக வைதிக வாக்குகளை இப்புத்திமானுகிய வதிகாரிதொ
டைய மனத்தில் லயஞ்செய்க; அஃதாவது வாக்கிந்திரியத்தின் தொழிலனைத்
யும் விடுத்துக்கேவல மனோவியாபார மாத்திரமுடையவனாகுக. 'நாநுத்யாயாத்
பஹூஞ்சப்தாந் வாசோ விக்லாபநம் ஹி தத்' அநான்மபதார்த்தங்களின் வாசக
ய பலசத்தங்களை இவ்வதிகாரி மொழியற்க. அச்சத்தங்கள் வாக்கிந்திரியத்
கு வருத்தத்தையே கொடுப்பனவாமாதலின் எனச்சுருதியும் கூறுகின்றது.
க்குமுதலிய கருமேந்திரிய மைந்தையும் சுரோத்திரமுதலிய ஞானேந்திரிய
ந்தையும் சககாரியாயும் பலவகைச் சங்கற்பத்திற்குச் சாதனவடிவமாயுமுள்ள
ணவடிவமனத்தை ஞானரூபவான்மாவில் லயஞ்செய்க; ஈண்டறிவதுணர்வாம்.
ாவது, பொருளை யுணர்வதின்பெயர் ஞானமாம் என விரித்துக் கூறுவதால்
னசத்தம் ஞாதாவின் வாசகமாம்; அத்தன்மைய ஞாதாவாகிய வான்மாவில் மன
லயஞ்செய்க. அஃதாவது, ஆன்மாவிலுள்ள ஞாதிருத்தன்மையின் உபாதியா
அகங்காரத்தில் மனதை லயம்பண்ணுக. மனத்தின் சங்கற்ப விகற்பமுதலிய
லாத்தொழில்களையும் விடுத்து அகங்காரமாத்திரத்தைப் பரிசேடமாய் வைத்தல்
ண்டும். அதன்பின் ஞாதிருத்தன்மையின் உபாதியாகிய அகங்காரவடிவஞானத்
த எங்கும் வியாபகமாகிய மகதத்துவ ஆன்மாவில் லயஞ்செய்க. ஆண்டு அவ்வகங்
ரம் இருவகைத்தாம்:—ஒன்றோ விசேடவடிவ அகங்காரமாம். மற்றையதோ,
மான்யவடிவ அகங்காரமாம்; அதில் யான் தேவதத்தனெனும்பெயரோன் யான்
ஞதத்தன் புதல்வன் என்றிவ்வாறு விளக்கமான அபிமானம்விசேடவடிவ அகங்
ரமாம். இதுவே வியட்டியகங்காரமெனப்படுகின்றது. நானிருக்கிறேன் என்றித்
ணமாத்திரவபிமானம் சாமான்ய அகங்காரமாம்; அதுவே சமட்டியகங்காரமெ
படுகிறது. அச்சமட்டியகங்காரம் எவ்விடத்தும் அநுசூதமாதலின் இரண்யகரு
னெனவும் மஹாநாத்மாவெனவுங் கூறப்படுகின்றது; இவ்விருவகை யகங்காரத்தி
ம் வேறாகிய சர்வாந்தர சிதேகரசவான்மாவின்பெயர் சாந்தான்மாவாம். அதில்
ட்டிபுத்திவடிவ மகதான்மாவை லயஞ்செய்க; இவ்வாறு அச்சமட்டி புத்திவடிவ
தத்துவத்தின் காரணவடிவ அவ்வியத்தத்தையு மதிலடக்குக. இவ்வண்ணம்
ரியகாரணவடிவ சர்வ சமுதாயத்தையும் லயஞ்செய்தபின்னர் இவ்வதிகாரி புரு
னுக்குச் சர்வ உபாதிகளுமற்ற துவம்பதலட்சியார்த்தவடிவ சுத்தான்மாப் புலப்ப
த்தோற்றும். ஆண்டு அச்சுத்த சிதேகரச பிரத்தியக்கான்மாவில் சடசத்திவடிவ
ிர்வசநீய அவ்வியக்தமென்னும் பிரகிருதியானது உபாதியாம்; அப்பிரகிருதி
தலில் சாமான்யாகங்காரவடிவமாய் மகதத்துவமென்னும் நாமம்பூண்டு வெளிப்ப
ின்றது. அதன்பின் பாகிய விசேடாகங்காரவடிவமாய் வெளிப்படுகின்றது.
தன்பின் அதனினும் பாகியமாகிய மனவடிவமாய் வெளிப்படுகின்றது. அதன்
ன் அதனினும் பாகியமான வாக்கிந்திரியவடிவமாய் வெளிப்படுகின்றது. இவ்
ர்த்தமனைத்தும் நேரே சுருதியானே கூறப்பட்டிருக்கின்றது.

-௬. இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்த்தா அர்த்தேப்யஶ்ச பரம் மந:
மநஸஸ்து பரா புத்திர் புத்தேராத்மா மஹாந் பர: ।
மஹத: பரமவ்யக்த மவ்யக்தாத் புருஷ: பர:
புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி: ॥

(பொ-ள்.) சுரோத்திரமுதலிய விந்திரியங்களினின்றுஞ் சத்தமுதலிய விஷ
ங்கள் மேலாம்; அதினின்றும் மனமேலாம்; அதினின்று வியட்டி புத்தி மேலாம்;
தினின்று மகதத்துவமென்னும் சமட்டிபுத்தி மேலாம்; அதினின்று அவ்வியத்
மேலாம்; அதினின்றும் அதிட்டானவடிவப் பரமான்மா மேலாம்; அப்புருஷனின்
லாகிய தோர் பொருளுமில்லை மற்றோ, அதுவே சர்வத்தின் அவதிவடிவமும்

பராகதிவடிவமுமாம். ஆண்டுக் கோ எருமை முதலிய பசுக்களில் வாக்கிந்திரிய நிரோதமிருப்பதுபோல வாக்கிந்திரிய நிரோதம்பண்ணல் முதற் பூமியெனப்படும். சிறுவரிடத்தும் மூடரிடத்தும் மனமிலாத்தன்மையிருப்பதுபோல நிர்மனத்துவ முடையனுதல் இரண்டாவது பூமியெனப்படும். நித்திராவத்தையில் யான் பிரா ஹ்மணன் யான்மநுடன் என்னு மகங்கார மிலாமையைப்போல எப்போதும் அகங் காரமிலதாந்தன்மை மூன்ருவது பூமியெனப்படும். சுழுத்தியில் மகதத்துவ மிலா ததுபோல மகதத்துவமற்றதாந்தன்மை நான்காம் பூமியெனப்படும். இந்நான்கு பூமியையுமபேட்சித்தே ஸ்ரீ பகவான் சனைஃ சனைஃ உபரமேத், என்னும் வாக்கி யத்தை யருளினர். ஈண்டு மகதத்துவ சாந்தான்மா விடையில் இந்திரியங்களி னின்றும் விஷயங்கள்மேல் என்னுஞ் சுருதியால் மகதத்துவத்தின் உபாதானவடிவ அவ்வியாகிருதமென்னுந் தத்துவங் கூறப்பட்டிருக்கின்றதாயினும் வாக்குமுதலிய தத்துவங்கட்கு மனமுதலிய தத்துவங்களில் லயம் சுருதியாற் கூறப்பட்டிருப்பது போல மகதத்துவத்திற்கு அவ்வியாகிருதத்தில் லயங் கூறப்படவில்லை. அதிலிது காரணமாம்.—மகதத்துவத்தை அவ்வியாகிருதத்தி லயம்பண்ணில் சுழுப்திபோலச் சொரூபலயத்தின் பிராப்தியேயாம்: அன்றியும் அதிலவ்விலயம் போகத்தருங்கருமமொழிந்ததின் பின்னர்ப் புருஷ முயற்சியின்றி இயல்பானே பெறப்படும். அங் ஙனமே அதிலதன்லயம் தத்துவ தரிசனத்தில் உபயோகமற்றதுமாம். 'ஓ௱பஷ் தெகவ ஹ௱ஷூா ஸ௱ஊாவ-ஆகூயா வ-ஆகூஓபபி-உஹிஃ' என்னும் வாக்கியத்தைக் கூறி அச்சுக்ஷ௱மத்தன்மை சித்தித்தற்பொருட்டு மனதில் வாக்கை லயஞ்செய்க என்னுஞ் சுருதியில் நிரோதசமாதியின் விதானம்பண்ணப்பட்டது; ஆதலின், அந் நிரோத சமாதி சிஞ்ஞாசுக்கட்குத் தத்துவசாக்ஷாத்காரத்தின்பொருட்டு வேண் டற்பாலதாம்; தத்துவஞானியாகிய புருஷனுக்கும் சருவக்கிலேச நிவிருத்திவடிவ சீவன் முத்தியடைதற்பொருட்டு வேண்டற்பாலதாம் ஆதலின் சிஞ்ஞாசுக்களும் தத்துவஞானிகளும் அந்நிரோத சமாதியை அவசியஞ் சம்பாதித்தல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! சாந்தான்மாவில் இலயப்பட்ட சித்தமானது அக் காலத்தில் சர்வ விருத்திகளு மற்றதாமாதலின், சுழுத்திபோல அச்சித்தத்தில் ஆன்மதரிசனத்தின் காரணத்தன்மை பொருந்தாது.

சமாதானம் :—அந்த நிரோதகாலத்தில் சர்வ விருத்திகளும் அபாவமாயினும் அந்நிரோதமாகிய சித்தத்தால் ஆன்மதரிசனம் இயல்பாகவேயாம்; அதை ஒரு வாதியும் நீக்கற்கேலாது. இது பிறநூலினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. ஞூத்தாநாத்தாகார௱ ஷஹாவதோவஷிதம் ஸதாஷிதம் ।
ஞூதைகாகார தயாநிரஸ்தாநாத்ம ஓ௱ஷிம்விஷயீத ॥

(பொ-ள்.) இச்சித்தம் தனது விஷயத்தோடு கூடியிருக்கு மியல்பினுனே எப்போதும் ஆன்மாகாரத்தையேனும் அநான்மாகாரத்தையேனும் அடைந்தே நிலத்திருக்கும். அதில் இவ்வதிகாரி சித்தத்தின் ஆன்மாகாரத்தன்மையையே சம் பாதித்துக்கொண்டு அநான்மாகார திருட்டியை விடுத்து அதை நிரோதம்பண்ண வேண்டும். ஈண்டிது கருத்தாம்.—தோன்றுகின்ற கடமானது இயல்பாய் ஆகா சத்தால் பூரணமாகியே தோன்றும்; மற்ருேர் புருஷ முயற்சியால் அக்கடம் ஆகா சத்தா னிரப்பப்படவில்லை. அக்கடத்தில் நீரரிசி முதலியவைகளின் நிறைதலோ கடந்தோற்றியதின்பின்னர்ப் புருஷப்பிரயத்தனத்தா லுண்டானதாம். அதில் அக்க டத்தினின்று நீரரிசிமுதலியவைகளை வெளிப்படுத்தினும் ஆகாசத்தை வெளிப் படுத்தமுடியாது. கடத்தின் வாயிலை மூடினும் அவ்வான் அதனுள்ளேயிருக்கும். அதுபோல இச்சித்தமும் தோன்றிடில் சைதன்யவடிவ ஆன்மாவால் பூரணமாகியே

தோன்றும்; தோன்றிய சித்தத்தில் பின்னர்க் கருக்குகையில்விட்ட செம்புநீர்போலக் குடதுக்கமுதலிய வடிவத்தன்மை போகத்தின் காரணமாகிய தருமாதருமத்தோடுகூடிய சாமக்கிரிவசத்தால் பிராப்தமாகின்றது. ஆண்டு, யோகாப்பியாசவலியால் அவ்வநான்மாகாரத்தன்மை நிவிருத்தியாயினும் காரணமின்றியேயுண்டாகிய சித்தத்தின் சிதாகாரத்தன்மை நீங்குவதன்றும். ஆதலின் நிரோத சமாதியினால் சர்வ விருத்திகளின் ரகிதமும் சமஸ்காரவடிவமாத்திரமுமாதலின் அத்தியந்தஞ் சூட்சுமமாகிய நிருபாதிக சைதன்ய வான்மாவின் அபிமுகமடைந்த நிரோத சித்தத்தால் விருத்திகளின்றியே தடையின்றி யான்மானுபவ மமைதல் கூடும். கூறிப்போந்த இச்சர்வார்த்தங்களையும் ஸ்ரீபகவானருளுகின்றார். 'ஆத்மஸம்ஸ்தம் மந: க்ருத்வா ந கிஞ்சிதபி சிந்தயேத்' சர்வவுபாதிகளுமற்றபிரத்தியக்கான்மாவில்சம்ஸ்தா என்னும் சமாப்தியடைந்தவன்பெயர் ஆத்மசம்ஸ்தனும். பலவகையான விருத்திகளுமற்றுச் சுபாவசித்த ஆன்மாகாரமாகிய ஆன்மசம்ஸ்தமனத்தை முற்கூறிய தைரியத்தோடுகூடிய புத்தியால் சம்பாதித்து அசம்பிரக்ஞாத சமாதியில் நிலைபெற்றிருக்கும் யோகியானவன் ஒரு பொருளையுஞ் சிந்தனைசெய்யற்க, அதாவது யாதேனுமோர் அனான்மபதார்த்தத்தையேனும் பிரத்தியக்கான்மாவையேனும் விருத்தியால் விஷயஞ்செய்யற்க. என்னை, அவ்வசம்பிரக்ஞாத காலத்தில் ஒருபோது அனான்மாகாரவிருத்தி தோன்றிடினே அச்சமாதியினின்று வியுத்தானமே யடையப்படும். ஒருகால் ஆன்மாகார விருத்தியுண்டாயினோ சம்பிரக்ஞாத சமாதியேயாம்: அசம்பிரக்ஞாத சமாதியன்று. ஆதலின் யோகியானவன் அசம்பிரக்ஞாத சமாதியை நிலைபண்ணற்பொருட்டு ஓர் ஆன்மாகார விருத்தியையேனும் அனான்மாகார விருத்தியையேனும் உண்டாக்கக்கூடாது. (25)

(அ-கை.) இவ்வணம் நிரோத சமாதியைச்செய்யும் யோகி தனது மனத்தைச் சர்வ விஷயங்களினின்றுந் திருப்பி அந்தராத்மாவில் நிறுத்துக என்னுமர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.

சு-ம். யதோ யதோ நிஶ்சரதி மநஶ்சஞ்சலமஸ்திரம் ।
ததஸ்ததோ நியம்யைததாத்மந்யேவ வஶம் நயேத் ॥ (26)

ப-ம். 1 யத: 2 யத: 3 நிஶ்சரதி 5 மந: 6 சஞ்சலம் 4 அஸ்திரம் 7 தத: 8 தத: 10 நியம்ய 9 ஏதத் 11 ஆத்மநி 12 ஏவ 13 வஶம் 14 நயேத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வெந்நிமித்தத்தால் விட்சேபோன்முகமேனும் இலயோன்முகமேனுமாகி இம்மனம் விஷயாகார விருத்தியைத் தோற்றுவிக்கின்றதோ அவ்வந்நிமித்தத்தினின்றும் மனத்தைத் திருப்பி ஆன்மாவின்கண்ணே நிரோதமாக்குக. (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சித்த விட்சேபத்தையுண்டாக்கும் சத்த முதலிய விஷயங்களுக்குள் எவ்வெச்சத்தமுதலிய விஷய நிமித்தத்தானும் ராகத்துவேஷமுதலிய நிமித்தத்தானும் விட்சேபப்பட்டு இம்மன மலைகின்றதோ அதாவது விடயாபி முகமாய்ப் பிரமாண விபரியய விகற்ப ஸ்மிருதி என்னுஞ் சமாதி விரோதியாகிய நான்கு விருத்தியில் யாதேனுமோர் விருத்தியைத் தோற்றுவிக்கின்றதோ அங்ஙனமே லயத்தின் காரணவடிவ நித்திராசேடம் மிகுந்தான்னமுண்ணல் மிகச்சிரமம் என்பன முதலிய நிமித்தங்களுக்குள் எவ்வெந்நிமித்தத்தால் லயாபிமுகமாய் இம்மனமலைகின்றதோ அதாவது இலயமாகிய சமாதிவிரோதி நித்திரைவடிவ விருத்தியைத் தோற்றுவிக்கின்றதோ அந்தந்த விட்சேப நிமித்தம் இலய நிமித்தங்களினின்றும் இம்மனத்தை நியமஞ்செய்து அதாவது சர்வ விருத்திகளு

மற்றதாக்கி ஸ்வப்பிரகாச பரமானந்தனை ஆன்மாவின்கண்ணே நிரோதஞ்செய்க; செய்யவே நிரோதமானமனம் விட்சேபத்தையும் லயத்தையுமடையாதின்றாம். இவ் வர்த்தமனைத்தும் ஸ்ரீ கௌடபாதா சாரியரால் கூறப்பட்டிருக்கின்றன.

சு-ம். உபாயேந நிக்ருஹ்ணீயாத்விக்ஷிப்தம் காமபோகயோ: ।
ஸுப்ரஸந்நம் லயே சைவ யதா காமோ லயஸ்ததா ॥ (1)

து:கம் ஸர்வமநுஸ்ம்ருத்ய காமபோகாந்நிவர்தயேத் ।
அஜம் ஸர்வமநுஸ்ம்ருத்ய ஜாதம் நைவ து பஶ்யதி ॥ (2)

லயே ஸம்போதயேச்சித்தம் விக்ஷிப்தம் ஶமயேத்புந: ।
ஸகஷாயம் விஜாநீயாத்ஸமப்ராப்தம் ந சாலயேத் ॥ (3)

நாஸ்வாதயேத்ஸுகம் தத்ர நி:ஸங்க: ப்ரஜ்ஞயா பவேத் ।
நிஶ்சலம் நிஶ்சரச்சித்தமேகீகுர்யாத்ப்ரயத்நத: ॥ (4)

யதா ந லீயதே சித்தம் ந ச விக்ஷிப்யதே புந: ।
அநிங்கநமநாபாஸம் நிஷ்பந்நம் ப்ரஹ்ம தத்ததா ॥ (5)

(பொ-ள்.) இப்போது யதாக்கிரமமாய் இவ்வைந்து சுலோகார்த்தத்தையும் நிருபிப்பாம் காமபோகங்களில் விட்சேபப்பட்டமனம் அதாவது பிரமாண விபரியய விகற்ப ஸ்மிருதி என்னும் நான்கு விருத்திகளில் யாதானுமோர் விருத்தி வடிவமாய்ப் பரிணமித்த மனதை இந்த யோகியானவன் மேற்கூறும் வைராக்கியாப்பியாசவடிவ வுபாயத்தால் பிரத்தியக்கான்மாவில் நிறுத்தல்வேண்டும். ஆண்டுச் சத்தமுதலிய விஷயங்கட்கு இருவகை யவத்தையாம்; ஒன்றோ சிந்தியமானவவத்தையாம்; மற்றையதோ புஜ்யமானுவத்தையாம். அவற்றுள் சத்தமுதலிய விஷயங்களைச் சிந்தனை பண்ணலின் பெயர் சிந்தியமானுவத்தையாம்; சத்தமுதலிய விஷயங்களை யநுபவித்தலின்பெயர் புஜ்யமானுவத்தையாம். இவ்விரண்டவத்தையுமறிவுறுத்துவான் காமபோகங்களில் என்னும் வசனத்தில் இருமை கூறியருளினர். இவ்விரண்டவத்தையும் மனோவிட்சேபத்திற்கேதுவாம். எதில் லயத்தன்மையையடைகின்றதோ அதன் பெயர் லயம். அத்தன்மையது சுழுத்தியாம்; அச்சுழுத்திவடிவ லயத்தில் இம்மனம் சுப்பிரசன்னமாகின்றது, அதாவது சர்வ துக்கமற்றதாகின்றது; அத்தன்மைய மனத்தையும் யோகி நிக்கிரகிக்கவேண்டும். சுழுத்தியில் சர்வ துக்கமற்றதாயிடின் மனம் அதை நிக்கிரகம்பண்ணல் எதன் பொருட்டு எனச் சங்கை நிகழக்கூறுகின்றார். 'யதா காமோ லயஸ்ததா இதி' எங்ஙனம் காமம், விஷயகோசரமாகிய பிரமாணமுதலிய விருத்திகளைத்தோற்றுவித்துச் சமாதியின் விரோதியாகின்றதோ அங்ஙனமே லயமும் நித்திரைவடிவ விருத்தியை யுண்டுபண்ணிச் சமாதி விரோதியாகின்றது. சர்வ விருத்திகளின் நிரோதமே சமாதியெனப்படுவதால் காமமுதலன வாக்கிப விட்சேபத்தினின்று மனநிரோதம் பண்ணத்தக்கதேபோலப் பரிசிரமமுதலிய செய்த லயத்தினின்றும் மனநிரோதஞ் செய்யத்தக்கதாம் (1) ஆண்டு முற்சுலோகத்தில் உபாயத்தால் நிக்கிரகஞ்செய்க என்னும் வசனத்தாற் பொதுவாக வுபாயத்தைக்கூறினர். அம்மனோநிக்கிரக வுபாயம் யாதென வினவக்கூறுகின்றார். 'து:கம் ஸர்வமநுஸ்ம்ருத்யேதி' அவித்தையால் கற்பிக்கப்பட்ட துவைதவுலகமனைத்தும் பரிச்சின்னமானதால் துக்கவடிவமே என்று நிரந்தரஞ் சிந்தித்து அதாவது, 'யோ வை பூமா தத்ஸுகம் நால்பே ஸுகமஸ்தி யதல்பம் தத்து:கம் இதி' தேசகாலவஸ்து பரிச்சின்னமின்றிய சேதனமே சுகவடிவமாம். பரிச்சின்னப்பொருளில் சுகவடிவத்தன்

மையின்றும். எவ்வெப்பொருள் பரிச்சின்னமாமோ அவ்வப்பொருள் நாசமுடையது தும் துக்கவடிவமுமாம். இது முதலிய சுருதியர்த்தத்தைக் குருவுபதேசத்தின் பின்னர் நிச்சயித்து யோகியானவன் காமபோகங்களைத் தன் மனத்தினின்று நிவிருத்திசெய்க. அதாவது சிந்தியமான வவத்தையையுடைய விஷயங்களையும் புஞ்யமானவத்தையையுடைய விஷயங்களையும் தன் மனத்தினின்றும் நீக்குக. அல்லது, அக்காமபோகங்களினின்றுந் தன்மனதை நிவிருத்திசெய்க. இத்துணை கூறினதால் துவைத வுலகத்தின் ஸ்மரணகாலத்தில் வைராக்கிய பாவனையின்கண்ணே மனோநிக்கிரகவுபாயவடிவத்தன்மை சொல்லப்பட்டது. இப்போது சர்வ துவைத வுலகத்தின் விஸ்மரணவடிவ பரம்வுபாயத்தைக் கூறுகின்றார். 'சுஜஂ லவ―உ உஉ ஜூரதூ ஊதி' பிறப்பற்றபிரஹ்மவடிவமே யிவ்வுலகம்; அதனின்வேறுப்ச் சிறிதளவு பொருளுமில்லை எனக் குருசாஸ்திரவுபதேசத்தின்பின்னர் விசாரித்து அத்துவிதீய பிரஹ்மத்தினும் மாறாய் இத்துவித மாத்திரத்தைப்பார்ப்பதில்லை. அதிட்டான ஞானத்தால் கற்பிதப் பொருளபாவமாதலின் எங்ஙனம் கயிறுவடிவ அதிட்டானத்தின் ஞானந்தோற்றவே அதிற் கற்பிதமான மாலைதண்ட முதலியன அபாவமாயினவோ அங்ஙனமே அதிட்டானமாகிய பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாகவே அதிற் கற்பிதமான துவைதவுலகம் அபாவமாகின்றது. ஆண்டு முற்கூறிய வைராக்கியபாவனைவடிவ வுபாயாபேட்சையால் துவைத நிவிருத்திவடிவ வுபாயத்தில் விலக்ஷணத்தன்மை தெரிவிப்பான் சுலோகத்தில் 'து' என்னுஞ் சத்தத்தைக் கூறினரென்க. (2) இவ்வாறு வைராக்கிய பாவனை தத்துவதரிசனம் என்னு மிரண்டுபாயங்களாலும் விஷயத்தினின்றும் நிவிருத்திபண்ணிய சித்தமானது நாடோறும் இலயமாக்கும் அப்பியாசவசத்தால் அந்தலயாபிமுகமாயிடினே நித்திராசேடம், மிகுந்தவன்னமுண்ணல், மிகுந்த பரிசிரமம் என்பன முதலிய லயகாரணங்களை நிரோதம்பண்ணி அந்தயோகியானவன் உத்தானத்திற்கு முயற்சிசெய்து மனதை லயத்தினின்றும் விழித்திருக்கும்படிசெய்க. அவ்வாறு செய்தமனம் ஒருகால் அதிலதில் விழித்திருந்த அப்பியாசவசத்தால் மறித்தும் அக்காமபோகத்தில் விக்ஷிப்தமாயிடினே முற்கூறிய வைராக்கிய பாவனையாலும் தத்துவ சாக்ஷாத்காரத்தினாலும் மறித்தும் சித்தத்தை நிரோதித்தல்வேண்டும். இவ்வாறு மறித்து மறித்து அப்பியாசவலியால் லயத்தினின்றுஞ் சாக்கிரத்தையும் சத்தமுதலிய விஷயங்களினின்றும் நிவிருத்தியையும் அடைந்த சித்தமானது அதாவது லயவிட்சேப தோடங்களின்றிய மனமானது ஒருபோதும் பிரஹ்மவடிவ சமபாவத்தையடையாது. மற்றோ, இடையினிலைத்த அச்சித்தம் ஸ்தப்தமாகின்றது. அதையே கஷாயதோடமெனக்கூறுவர். அத்தோஷம் இராகத்துவேஷாதிகளின் பிரபலவாசனைவடிவ ராகவசத்தாலடையப்படுகிறது. அக்கஷாய தோஷத்தோடுகூடிய மனதைச் சகஷாயமெனக் கூறுவர். அத்தன்மைய சகஷாயசித்தத்தை யோகி சமாகிதசித்தத்தால் விவேகித்துணர்வன். அதன்பின் எனதுசித்தம் இப்போது சமாகிதப்படவில்லை என்று நிச்சயித்து யோகி லயவிட்சேபதோஷங்களினின்றும் மனதை நிரோதம்பண்ணியதுபோலக் கஷாயத்தினின்றும் மனதை நிரோதம்பண்ணல்வேண்டும். அதன்பின் லயவிட்சேப கஷாயதோஷங்களில்லாத மனமானது பரிசேடத்தால் அந்தச்சமவடிவ பிரஹ்மத்தையேயடைகின்றது. அதினிலைத்தமனதை யோகிகஷாயலயங்களின் பிராந்தியால் அலையவிடக்கூடாது; மற்றோ, தைரியானுக்கிரகம்பண்ணியமனத்தால் இலயகஷாயங்களை யடைவதினின்றும் விவேகம்பண்ணிச் சமவடிவப் பிரஹ்மமடைவதின்கண்ணே மிகமுயன்று மனதை நிலைப்படுத்தல்வேண்டும். (3) அல்லது அந்நிரோதசமாதி பரமசுகாபிவியஞ்சகமாயினும் யோகி அதில் அச்சுகத்தை அநுபவிக்கக்கூடாது. அதாவது, இதுகாறும் யான் சுகியாயிருந்தேன் எனசுகாசுவாதனவடிவவிருத்தியை யோகிஉண்டாக்கக்கூடாது. ஒருகாற் சுகாகாரவிருத்தியை யுண்டுபண்ணினே அசம்பிரஞ்ஞாதசமாதிக்குக் கேடாம். இது முன்னரே

கூறப்பட்டது. அல்லதுபிரக்ஞையாற்றோன்றுஞ்சுகம் அவித்தையாகற்பிதமாதலின் மித்தையாம் எனப்பாவித்து யோகி சர்வசுகத்திலுஞ் சங்கமற்றவனாதல்வேண்டும்; அதாவது அச்சுகேச்சையற்றவனாதல்வேண்டும்; அல்லது 'நிஃஸங்கஃ ஸுஜ்ஞயாஹ வெங' என்னும் வாக்கியத்திற்கு இவ்வேறுபொருளைச்செய்க. சவிகற்பமாகிய சுகாகாரவிருத்திவடிவ பிரஞ்ஞையோடு யோகிபுருஷன் சங்கத்தைவிடவேண்டும். சர்வ விருத்திகளுமற்ற சித்தத்தால் அநுபவிக்கப்படும் சுகாநுபவத்தை யோகிபுருஷனால் ஒருபோதும் நீக்கமுடியாது. விருத்தியின்றி இயல்பாயடையப்படும் சொரூப சுகாநுபவம் நீக்கற்கேலாதாதலின் இவ்வாறு சர்வ விஷயங்களினின்றுந் திருப்பி முயற்சிவலியால் சலனமற்றசித்தமானது ஒருகால் தனது சஞ்சலசுபாவத்தால் விஷயாபிமுகத்தால் வெளியிற்செல்லினும் யோகி நிரோத முயற்சியால் மீண்டுமதை சமப்பிரஹ்மத்தில் ஒருமைப்படுத்தல்வேண்டும். (4) அச்சமப்பிரஹ்மத்தில் நிலைத்த மனம் எத்தன்மைத்தாமென்றுணரும் வேட்கையுண்டாக அதன்வடிவத்தைக்கூறுகின்றார். 'யதாநியதெ ஜதி' சித்தமானது லயத்தையேனும் ஸ்தப்தவடிவகஷாயத்தையேனும் சத்தமுதலிய விஷயாகாரவிருத்திவடிவ விட்சேபத்தையேனுமடையாதகாலத்தில் சமாதிச்சுகமும் விருத்தியா லநுபவிக்கப்படுவதில்லை. சுலோகத்தில் லயவிட்சேப மிரண்டையுங்கூறிக் கஷாயம் சுகாஸ்வாதங்கள் கூறாதொழிந்தனவேனும் லயகஷாயமிரண்டுந் தமோகுணகாரியமாதலின் தமோகுணத்தன்மை பொதுவாயிருத்தல்பற்றி லயசத்தம் கஷாயத்திற்குமுபலட்சகமானது. இவ்வாறு விட்சேப சுகாஸ்வாதமிரண்டும் ரசோகுணகாரியமாதலின் ரசோகுணத்தன்மை பொதுவாயிருத்தல்கொண்டு விக்ஷேபசத்தம் சுகாஸ்வாதத்திற்குமுபலட்சகமாம். இச்சுகாஸ்வாதத்தை யோகநூலில் ரசாஸ்வாதமெனவுங்கூறுவர். லயமுதலியதோஷங்களை நீக்கற்குத் தனித்தனி முயலுதற்பொருட்டு இந்நான்கும் முன்னர் வேறுவேறாய்க்கூறப்பட்டன. இவ்வாறு லயகஷாய விட்சேப சுகாஸ்வாதங்களின்றிய சித்தம் அநிங்கனமாம். ஈண்டு இங்கனமென்பது சலனமாம். வாயுவினுள்ள விளக்கு லயாபிமுகவடிவ சலனமுடையதுபோல் லயாபிமுகவடிவ இங்கனமின்றிய மனம் அநிங்கனமெனப்படுகிறது. அதாவது, காற்றிலாதவிடத்திலுள்ள விளக்கெனச் சித்தம் சலனவடிவ இங்கனமற்றதாகின்றது. அவ்வாறே அநாபாசமுமாம்; அதாவது சித்தமொரு விஷயாகாரமாய்த் தோற்றுவதில்லை. இவ்வாறு சித்தத்தில் லயகஷாய விட்சேப சுகாஸ்வாதமாகிய நான்கு தோஷங்களுமில்லாதகாலத்தில் சமமாகிய பிரஹ்மத்தை யடைகின்றது. (5) இத்தன்மைத்தாய யோகம் நேரே சுருதியானுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. யதாவஂசாவதிஷ்டந்தெ ஜ்ஞாநாநிமநஸாஸஹ
பு஦்திஶ்சநவிசெஷ்டதெ தாமாஹு: பரமாஂகதிஂ ।
தாஂயொகமிதி மந்யந்தெ ஸ்திராமிந்஦்ரியதாரணாஂ
அப்ரமத்தஸ்ததாபவதி யொகொஹி ப்ரபவாப்யயௌ இதி ॥

(பொ-ள்.) எக்காலத்தில் மனதோடு ஐவகை ஞானேந்திரிய நிரோதமும் புத்திசேஷ்டையின்றியதுமாகின்றனவோ அந்தத்திரமாகிய விந்திரியங்களின் தாரணையை யோகநூலுணர்ந்தோர் பரமகதியென்றும் யோகமென்றுங்கூறுவர். அக்காலத்தே முயற்சியின்றிச் சித்தம் பிரஹ்மாகாரத்தையடைகின்றது. இம்முதனூலையும் உடன்பட்டு ஸ்ரீ பதஞ்சலிபகவான் யோகச்சித்தவிருத்தி நிரோதஃ என்னுஞ் சூத்திரத்தைக் கூறியருளினர். ஆதலின், 'தத்ஸதொ நியமெஂ தாதஂநை வவஶஂநயெ' என ஸ்ரீ பகவான் கூறியருளியது சுருதி சூத்திரங்களைத் தழுவினவாதலின் உண்மையுரையாம் என்க. (26)

(அ-கை.) இவ்வாறு யோகப்பயிற்சி வலியால் யோகியின்மனம் பிரத்தியக்கான்மாவின்கண்ணே ஒருமைப்படுகின்றது. ஆதலின் அவனுக்குப் பலப்பிராப்தியாம் என்பதை ஸ்ரீ பகவானிப்போ தருளிச்செய்கின்றார்.

சு-ம். ப்ரஶாந்தமநஸம் ஹ்யேநம் யோகிநம் ஸுகமுத்தமம் ।
உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூதமகல்மஷம் ॥ (27)

ப-ம். 1 ப்ரஶாந்தமநஸம்ஹி 5 ஏநம் 6 யோகிநம் 8 ஸுகம் 7 உத்தமம் 9 உபைதி 2 ஶாந்தரஜஸம் 4 ப்ரஹ்மபூதம் 3 அகல்மஷம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிரசாந்தமனமும் ரசோகுண நிவிருத்தியும் தமோகுண நிவிருத்தியுமுடைய பிரஹ்மரூபமாகிய யோகி புருஷனுக்கு நிரதிசய சுகப்பிராப்தியாம். (27)

(வி-ம்.) பிரசாந்தமாகிய மனதுடையோன் அதாவது சர்வ விருத்திகளுமின்மையின் சமஸ்காரமாத்திராவசேடமாய் நிரோதமாகிய மனமுளோன் பெயர் பிரசாந்தமனதன் இவனையே சாத்திரங்களில் நிர்மனஸ்கனெனவுங் கூறுவர். இப்போது யோகிபுருஷனது நிர்மனஸ்கத்தன்மையில் ஹேது! கர்ப்ப விசேடணங் கூறியருளுகின்றார். 'ஶாந்தரஜஸம் அகல்மஷம் உதி' விக்ஷேபகாரணமாகிய ரசோகுணத்தின் சாந்தமாகிய நிவிருத்தியையுடையோன்பெயர் சாந்தரசசன்; அதாவது, யோகிபுருஷன் விக்ஷேபத் தோடமற்றவன், அங்ஙனமே லயத்தின் காரணமாகிய தமோகுணவடிவ கல்மஷமில்லாதவன்பெயர் அகல்மஷனும்; அதாவது, யோகியானவன் லயதோடமற்றவன். ஈண்டு, சாந்தரசசம் என்னும் பதத்தையே தமோகுணத்தின் உபலட்சணமென் றுடன்படிலோ, அகல்மஷம் என்னும் பதத்திற்குச் சம்சாரத்தின் காரணபூதமாகிய தருமாதருமவடிவ கல்மிஷமற்ற யோகியின்பெயர் அகல்மஷனும் எனப் பொருள்செய்க. அங்ஙனமே யோகிபுருஷன் பிரஹ்மபூதனும் அதாவது, இவ்வுலகனைத்தும் பிரஹ்மசொரூபமே என்னும் நிச்சயத்தால் சமமாகிய பிரஹ்மத்தையடைந்த சீவன் முத்தபுருஷன் என்னு மித்தன்மைய யோகிபுருஷனுக்கு நிரதிசய சுகப் பிராப்தியுண்டாம். ஆண்டு, மனம் மனவிருத்திகளினபாவத்திலும் சுழுத்தியிற் சொரூப சுகாநுபவம் மிக விளக்கமாம்; அவ்விளக்கத்தை யறிவுறுத்துவான் மூல சுலோகத்தில் 'ஹி' என்னும் சத்தத்தைக் கூறியருளினர். இது 'ஸுகமாத்யந்திகம் யத்தத்' என்னுஞ் சுலோகத்தில் முன் கூறப்பட்டது.()

(அ-கை.) கூறிய யோகி புருஷனது சுகத்தை விளக்கியருளுகின்றார்:—

சு-ம். யுஞ்ஜந்நேவம் ஸதாத்மாநம் யோகீ விகதகல்மஷ: ।
ஸுகேந ப்ரஹ்மஸம்ஸ்பர்ஶமத்யந்தம் ஸுகமஶ்நுதே ॥ (28)

ப-ம். 4 யுஞ்ஜந் 1 ஏவம் 2 ஸதா 3 ஆத்மாநம் 6 யோகீ 5 விகதகல்மஷ: 7 ஸுகேந 8 ப்ரஹ்மஸம்ஸ்பர்ஶம் 9 அத்யந்தம் 10 ஸுகம் 11 அஶ்நுதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு எப்போதும் தனது மனத்தை ஆன்மாவின்கண்ணே சமாகிதம்பண்ணிய தர்மாதர்மமின்றிய யோகி புருஷன் வருத்தமின்றிப் பிரஹ்மவடிவ அபரிச்சின்ன சுகத்தையே யநுபவிக்கின்றான். (28)

(வி-ம்.) 'யதா விநியதம் சித்தமாத்மந்யேவாவதிஷ்டதே' என்பது முதலிய வாக்கியங்களால் கூறிப்போந்த கிரமத்தால் யோகி புருஷன் தனது மனத்தை எப்போதும் பிரத்தியக்கான்மாவில் சமாகிதம்பண்ணி நிலைத்தவன் விகதகல்மஷன்; அதாவது, சம்சாரத்தைக்கொடுக்கும் தருமாதருமவடிவ கல்மஷங்கணீங்கியவன், அத்தன்மைய யோகி புருஷன் ஈஸ்வரப் பிரணிதானத்தால் சர்[illegible]

நீக்கி வருத்தமின்றியே சுகத்தை யனுபவிக்கின்றான். இப்போது சன்னியசுகத்தை நீக்குவான், சுகத்திற்கு இரண்டு விசேஷணமருளுகின்றார். 'ப்ரஹ்மஸம்ஸ்பர்ஶம் ஸுகம் அத்யந்தம் இதி' விடயசம்ஸ்பரிசமின்றி பிரஹ்மத்தின் தாதான்மியவடிவ சம்ஸ்பரிசமுள்ள சுகத்தின் பெயர் பிரஹ்மசம்ஸ்பரிசமாம்; அதாவது, பிரஹ்ம வடிவம் சுகமாம். அங்ஙனமே அத்தியந்தம் சுகமாம். ஈண்டு, தேசகாலவஸ்து பரிச்சேதங்களின் பெயர் அந்தம், அவ்வந்தத்தைக் கடந்திருக்குஞ் சுகத்தின் பெயர் அத்யந்தமாம். இவ்வபரிச்சின்னப் பிரஹ்மவடிவ சுகத்தை, யோவை, பூமா, தத் சுகம் என்னுஞ் சுருதி கூறுகின்றது. அத்தன்மைய நிரதிசயப் பிரஹ்மானந்தத்தை யோகி புருஷன் சர்வ விஷயங்களினின்றும் நிரோதம்பண்ணிய மனதால் லய விக்ஷேபத்தினும் வேறாய் அநுபவிக்கின்றான். ஆண்டு, விக்ஷேபமுளதாகவே விருத்தி யவசியமாயுண்டாம்; லயமுளதாகவே மனவடிவமேயின்றாம். ஆதலின், சுகாநுபவத்தை லயவிக்ஷேபங்களினும் வேறாய்க் கூறப்பட்டது. அன்றியும், சர்வ விருத்திகளுமற்ற சூக்ஷுமமனத்தால் சுகாநுபவம் கேவலம் அசம்பிரஞ்ஞாத சமாதியின்கண்ணேயுண்டாம்; வேறிடத்தின்றாம். ஈண்டுச் 'சுகேந' என்னும் பதத்தால் பிரதிபந்தக அந்தராயங்களின் நிவிருத்தியைக் கூறியருளினர். அவ்வந்தராயங்களை யோகசூத்திரத்தில் ஸ்ரீ பதஞ்சலிபகவான் கூறியிருக்கின்றார்.

ஆ-சு. வ்யாதிஸ்த்யாநஸம்ஶய ப்ரமாதாலஸ்யாவிரதி ப்ராந்திதர்ஶநா
லப்தபூமிகத்வாநவஸ்திதத்வாநி சித்தவிக்ஷேபாஸ்தேऽந்தராயா: ॥

(பொ-ள்.) வியாதி, ஸ்தியானம், சம்சயம், பிரமாதம், ஆலசியம், அவிரதி, பிராந்திதரிசனம், அலப்தபூமிகத்துவம், அநவஸ்திதத்துவம் இவ்வொன்பதுவகைச் சித்த விக்ஷேபங்களும் அந்தராயமெனப்படுகின்றன. அவற்றுள், சித்தத்தை யோகத்தினின்றும் விக்ஷேபப்படுத்துவது; அதாவது, சித்தத்தை யோகத்தினின்றும் வெளிமுகமாக்குவது சித்த விக்ஷேபமெனப்படுகிறது. அச்சித்த விக்ஷேபங்கள் யோகத்தின் விரோதிகளானதால் அந்தராயமெனப்படுகின்றன. அவற்றுள்ளும், சம்சயம் பிராந்திதரிசனம் இரண்டும் விருத்தி நிரோதவடிவ யோகத்திற்கு நேரே விரோதிகளாகின்றன. ஏனைய வியாதி முதலியனவோ எப்போதும் விருத்தியோடு சஞ்சாரமானதால் அவ்விருத்திக்கே விரோதிகளாகின்றன. அதில் வாதபித்த முதலியவைகளின் ஏற்றத்தாழ்வைக் காரணமாகவுடைய சுரமுதலிய விகாரங்களின் பெயர் வியாதியாம். 1. கருமமிலாத் தன்மையின் பெயர் ஸ்தியானமாம்; அதாவது, யோகநூலுணர்ந்தோரால் நன்கு சிக்ஷிக்கப்படினும், சிஷ்யனிடத்து ஆசனமுதலிய கருமங்கட்குத் தகுதியற்றதன்மை. 2. இந்த யோகம் எனக்குக் கிட்டுமோ கிட்டாதோ என்னும் பாவாபாவவடிவ இருகோடியை விஷயம்பண்ணும் ஞானத்தின் பெயர் சம்சயமாம். அதனபாவமுடையதில் அதன் புத்தி வடிவ விபரியயம்போல சம்சயத்திலுமாம். ஆதலின், சமுசயம் விபரியயத்திற்குள் அடங்குதல்கூடும்; அங்ஙனமாயினும், சம்சயத்திலோ இரண்டுகோடி காணப்படுகிறது, விபரியயத்திலோ ஒருகோடியே காணப்படுகிறது; இத்துணை இடைப்பட்ட விசேஷத்தை யுடன்பட்டே ஈண்டுச் சமுசயத்தை விபரியயத்தினின்றும் வேறாய்க் கூறினர் என்க. 3. சமாதியின் சாதனத்தை யநுட்டிக்க வலியுளதேனும் அச்சாதனத்தை யநுட்டியாதிருத்தலின் பெயர் பிரமாதமாம்; அதாவது, வேறு விஷயத்தில் பிரவிருத்தித்துக்கொண்டு யோகசாதனத்தில் உதாசீனமாயிருத்தல். 4. அவ்வுதாசீனம் நீங்கினும் கபமுதலிய தாதுக்களின் மிகுதிப்பாட்டாலேனும் தமோகுணத்தின் மிகுதிப்பாட்டாலேனும் சரீரத்திலும் சித்தத்திலுமுள்ள கனத்தன்மையின்பெயர் ஆலசியமாம். அவ்வாலசியம் வியாதிவடிவாற் பிரசித்தமின்றேனும் யோகத்தில் பிரவிருத்தியின் விரோதியாம். 5. யாதானுமோர் விஷய விசேஷத்தில் சித்தத்தினது நிரந்தராபிலாஷையின்பெயர் அவிரதியாம்.

6. யோகசாதனமலாததில் யோகசாதன மென்னும் புத்தியும், அங்ஙனமே யோக சாதனத்தில் யோகசாதனமலவெனும் புத்தியும் பிராந்தி தரிசனமாம். 7. சமாதியின் ஏகாக்கிரபூமியின் லாபமின்மை அதாவது க்ஷிப்தமூட விக்ஷிப்த வடிவத்தை யடைதலின் பெயர் அலப்த பூமிகையாம். 8. அப்பூமி கிட்டினும் தனது முயற்சியின் வழுவலால் அப்பூமியில் சித்தம் நிலைக்காமையின் பெயர் அநவஸ்திதமாம். 9. இவ்வொன்பதுவகைச் சித்த விக்ஷேபங்களும் யோக மலங்களென்றும் யோகப் பிரதிபக்ஷங்களென்றும் யோகாந்தராயங்களென்றும் கூறப்படுகின்றன. அல்லது, இதற்கயலாய் விக்கினவடிவ வேறந்தராயங்களும் ஸ்ரீபதஞ்சலி பகவானால் கூறப் பட்டுள்ளன.

ஆ-சு.　ஓுஃ2வஉளச2ஜமஸஸ்ாுஂமெஜயகூவஸ்ாஸ।
　　　வஸ்ாஸா விக்ஷேவ ஸஹஹுஃவ2॥

(பொ-ள்.) துக்கம், தௌர்மனஸ்யம், அங்கமேஜயத்துவம், சுவாசம், பிரசுவாசம் என்னு மிவ்வைந்தும் சமாகிதசித்தத்திற் காகாதனவாம் மற்றே, விக்ஷிப்த சித்தத்திற் கியைவனவாமாதலின் இவ்வைந்தும் விக்ஷேபத்தோடு தோற்றும் அந்தராயங்களெனப் படுகின்றன. இவற்றுள் சித்தத்தின் வாதனைவடிவ ராசஸ பரிணாமத்தின்பெயர் துக்கமாம்; அத்துக்கமும் ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் வேறுபாட்டான் மூவகைத்து. அதில் சுர முதலிய நோயினாலுண்டாகிய உடலையடுத்ததுக்கம், காமக்குரோதமுதலியவைகளா லுண்டாகும் மனதையடுத்த துக்கம் என்னு மிவ்விருவகைத்துக்கமும் ஆத்தியான்மிகதுக்கமெனப்படும். புலி, பாம்பு, திருடர், முதலியவைகளாலுண்டாகுந் துக்கம் ஆதிபௌதிக துக்கமெனப்படும். கோள் பீடை முதலியவைகளாலுண்டாகுந் துக்கம் ஆதிதெய்விக துக்கமெனப்படும். இம்மூவகைத் துக்கமும் துவேஷ வடிவ விபரியயத்திற்குக் காரணமாதலின் சமாதி விரோதியாம். 1. இச்சைக் கேடு முதலிய பெருந் துக்கானுபவத்தாற் றோன்றிய சித்தத்தின் தாமச பரிணாம விசேடம் க்ஷோபமெனவும் தப்தீபாவமெனவுஞ் சொல்லப்படும்; அதன் பெயர் தௌர்மன ஸ்யமாம். அது கஷாயவடிவமாதலின், லயம்போலச் சமாதி விரோதியாம். 2. கை கால் முதலிய அங்கங்களின் கம்பனத்தின்பெயர் அங்கமேஜயத்துவமாம்; அஃதாசன நிலைமைக்கு விரோதியாம். 3. பிராணனால் வெளிக்காற்று உள்ளே செல்லலின்பெயர் சுவாசமாம்; அது சமாதியங்கவடிவ ரேசகவிரோதியாம். 4. பிராணனால் உட்சென்ற வாயு வெளியிலோடலின்பெயர் பிரசுவாசமாம், அது சமாதியங்க பூரகவிரோதியாம். 5. முற்கூறிய இவ்விரண்டுசூத்திரங்களாற் கூறிய விக்கினவடிவ பதினான்கு அந்தராயங்களும் அப்பியாச வைராக்கியங்களால் இனி விருத்தியாகும் அல்லது ஈசுரப்பிரணிதானத்தால் நிவிருத்தியாகும். ஆண்டு யோக சூத்திரங்களில் ஸ்ரீபதஞ்சலிபகவான் 'தீவ்ரசம்வேகாநாமாசன்ன:' என்னுஞ் சூத்திரத்தில் தீவிர வைராக்கியமுடையவனுக்கு அசம்பிரக்ஞாத சமாதிலாபம் மிகச் சமீபம் எனக் கூறி, 'ஈசுவரப் பிரணிதாநாத்வா' என்னுஞ் சூத்திரத்தில் வேறோர் பக்ஷம் விகற்பித்துக்கூறி பிரணிதேய ஈசுர சொரூபத்தை 'கிலேசகர்ம விபாகாசயை ரபராமிருஷ்டப்புருஷ விசேஷ ஈசுர:, தத்திரநிரதிசயம் சர்வஞ்ஞபீசம், சபூர்வேஷாமபிகுரு காலேனானவச்சேதாத்' என்னும் இம்மூன்று சூத்திரங்களாற் கூறி ஈசுரப்பிரணிதானத்தை 'தஸ்யவாசக: பிரணவ: தஜ்ஜபஸ்த்ததர்த்த பாவனம்' என்னு மிரண்டு சூத்திரங்களாற் கூறினர். அதன்பின் ஸ்ரீபதஞ்சலிபகவான் 'தத: பிரத்தியக்சேதனாதிகமோபி அந்தராயாபாவச்ச' என்னுஞ் சூத்திரத்தைக் கூறினர். இப்போது இவ்வேழு சூத்திரார்த்தத்தையும் முறைப்படி நிரூபிப்பாம். ஈசுரனிடத்திலுள்ள காயிக வாசிக மானசமென்னும் மூவகையான பத்தி விசேடத்தின் பெயர் ஈசுரப் பிரணிதானமாம் அதனால் இந்தயோகி புருஷனுக்கு மிக நெருங்கிய

அசம்பிரக்ஞாத சமாதிலாபமாம். அச்சூத்திரவீற்றிலுள்ள ‘வா’ என்னுஞ் சத்தம் முற்கூறிய தீவிர வைராக்கியவடிவ வுபாயத்தோடு ஈசுரப்பிரணிதானவடிவ வுபாயத்தின் விகற்பத்தை யுணர்த்துதற்பொருட்டாம். அதாவது, தீவிரவைராக்கியத்தாற் சமாதிலாபங் கிட்டுமாபோல ஈசுரப் பிரணிதானத்தானுமாம். பக்தியாற் றிருப்தியுற்ற வீசுரன் இவ்விஷ்டப்பொருள் இப்பக்தஜனத்திற்குப் பிராப்தமாகுக என்றிவ்வாறு அவசியம் அநுக்கிரகிப்பனுதலின் என்க. 1. இப்போது எந்த வீசுரனது பிரணிதானத்தால் அந்தராய நிவிருத்தி பூர்வகம் சமாதிலாபங் கிடைக்குமோ அவ்வீசுரசொரூபத்தை மூன்று சூத்திரங்களால் வர்ணிக்கின்றார். கிலேசம், கருமம், விபாகம், ஆசயம், என்னும் நான்கோடும் முக்காலத்தும் சம்பந்தமற்ற புருஷவிசேஷத்தின் பெயர், ஈசுரனும். அவற்றில், அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேசம் என்னு மிவ்வைந்தின் பெயர் கிலேசமாம்; இக்கிலேசங்களின் சொரூபம் முன்னர் ஐந்தாவதத்தியாயத்தில் கூறப்பட்டது. விதி நிடேதக்கிரியையாற் றோன்றிய தருமாதருமத்தின் பெயர் கருமமாம்; தருமாதருமப் பலத்தின் பெயர் விபாகமாம். அப்பலனை யநுபவித்தற் கநுகூலமாகிய சமஸ்காரத்தின் பெயர் ஆசயமாம். இவன் பாபகருமத்தால் ஒட்டைச்சன்மத்தையடையில் அதில் முட்டின்னும் சம்ஸ்காரமுண்டாகின்றது. இவ்வாறு இச்சீவன் எந்தெந்தச் சாதியுடைய சரீரத்தை யடைகின்றனே அந்தந்தச் சாதியுடைய சரீரபோகத்தில் மூந்திய சம்ஸ்காரத்தானே பிரவர்த்திக்கின்றான், சம்ஸ்காரம் வெளிக்கிளம்பாது ஆக்கை பிழைத்திருத்த லமையாது, இவ்வாறு சித்தத்திலுள்ள கிலேச முதலியவைகளோடு இச்சம்சாரி புருஷன் சம்பந்தப்படுகிறான், அஃதில்லாத புருஷவிசேஷன் ஈசுரனெனப்படுகின்றான். இச்சூத்திரத்திலுள்ள விசேஷமென்னுஞ் சத்தம் மூக்காலத்திலுஞ் சம்பந்தப்படாத வடிவார்த்தவாசகமாம்; அதனால், ஈசுரன் முக்தபுருஷனிலும் வேறெனக் கூறப்பட்டது. முக்தபுருஷனிடத்து இப்போது கிலேசவடிவ பந்தமின்றாமாயினும், தத்துவ சாக்ஷாத்காரத்தின் முற்காலத்தில் அவனிடத்தும் அச்சம்பந்தமிருந்ததாதலின் முக்காலத்தும் கிலேச முதலியவற்றின் சம்பந்தமின்மை அம்முக்தனிடத்து மமையாது. மற்றோ, எவன் சர்வஞ்ஞன், சர்வவித் என்பதுமுதலிய சுருதிகளாற் கூறிய சர்வஞ்ஞனாகிய ஈசுரனிடத்தே பொருந்துமாம் என்க. 2. இப்போது ஈசுரனது சர்வஞ்ஞத்தன்மையில் அநுமானப்பிரமாணங் கூறுகின்றார். ஆண்டு, நம்மனோர்க்குள்ள ஞானம் சாதிசயமானதால் நிரதிசய ஞானத்தால் வியாப்தமாம்; எவ்வெப்பொருள் சாதிசயமாமோ அவ்வப்பொருள் தனது சமானசாதியுடைய நிரதிசயப்பொருளால் வியாபிக்கப்பட்டதாம். எங்ஙனம் கடத்தின் பரிமாணம் சாதிசயமாதலின், பரிமாணத்தன்மையால் தனது சமானசாதியுடைய விபுப் பரிமாணத்தால் வியாப்தமாம், அத்தன்மைய நிரதிசய ஞானம் கேவலம் ஈசுரனிடத்திலேயுளதாம், மற்றொன்றிலும் இராதாம். நிரதிசய ஞானமே சர்வஞ்ஞத்தன்மையின் ஞாபகமாம். அதாவது, யாண்டு நிரதிசயஞானமாமோ ஆண்டுச் சர்வஞ்ஞத்தன்மை யுணரப்படுகின்றது. நிரதிசயஞானமுடையோனுதலின் ஈசுரன் சர்வஞ்ஞனுமென்க. 3. இப்போது ஈசுரன், பிரமன் முதலிய தேவதைகளினின்றும் விசேடன் எனக் கூறுகின்றார். சிருட்டிகாலமுதற்கொண்டு தோற்றப்பட்ட பிரமன்முதலிய தேவர்கள் அனைவரும் கால பரிச்சேதமுடையவர்; அத்தன்மைய கால பரிச்சின்னர்களாகிய பிரமன் முதலியோர்கட்கும் ஈசுரன் குருவாம் என்னை? ஈசுரன் காலத்தால் அபரிச்சின்னனுதலின் அதாவது முதலீறிலாதோன்.

ஆ-சு. யொஸ்ரூஹாணம் விஜயாதிவாஙெவடும் ।
யொவெஷாங்ஹு வ ஹிணொதிதவெஷ ॥

(பொ-ள்.) ஈசுரன் சிருட்டியின் ஆதிகாலத்தில் இரணியகருப்பவடிவப் பிரமாவை உண்டுபண்ணினான். அப்பிரமாவின்பொருட்டு எல்லா வேதத்தையு மீந்தனன் என்பது முதலிய சுருதிகளால் ஈசுரனிடத்துப் பிரமன் முதலியோர்களது குருத்தன்மை சித்தமாகின்றது. 4. முற் சூத்திரங்களாற் கூறிய ஈசுரனது பிரணிதானத்தை இப்போதிரண்டு சூத்திரங்களாற் கூறுகின்றார். முற்கூறிய வீசுரனது வாசகம் ஓங்காரவடிவப் பிரணவமாம். 5. அவ்வீசுரவாசக பிரணவத்தினிரந்தர ஜபமும் அப்பிரணவப்பொருளாகிய வீசுரனைத் தியானம்பண்ணலும் ஈசுரப் பிரணிதானமாம். 6. அப்பிரணவ ஜபவடிவமும் பிரணவார்த்தத்தின் தியானவடிவமுமாகிய ஈசுரப் பிரணிதானத்தால் அந்த யோகி புருஷனுக்குப் பிரத்தியக்சைதன்ய வான்ம சாக்ஷாத்காரமுண்டாகின்றது. அங்ஙனமே முன்னர் வியாதிஸ்தியானம் என்பது முதலிய இரண்டு சூத்திரங்களாற்கூறிய விக்கினவடிவ பதினான்கு அந்தராயங்களு மபாவமாகின்றன. 7. ஈசுரப் பிரணிதானத்தால் அவ்வந்தராயங்கள் நீங்குவனபோல அப்பியாச வைராக்கியங்களினாலும் நீங்குவனவாம். அவ்வப்பியாச வைராக்கியங்களால் அந்தராய நிவிருத்தியில் அவ்வப்பியாசத்தைத் திடம்பண்ணற் பொருட்டு ஸ்ரீபதஞ்சலிபகவான் இரண்டு சூத்திரங் கூறியருளினர்.

ஆ-சு. தத்ப்ரதிஷேதார்த்தமேகதத்வாப்யாஸ꞉ ॥ (1)

மைத்ரீகருணாமுதிதோபேக்ஷாணாம் ஸுகது꞉கபுண்யாபுண்ய-
விஷயாணாம் பாவநாதஶ்சித்தப்ரஸாதநம் ॥ (2)

(பொ-ள்.) முற்கூறிய விக்கினவடிவ அந்தராய நிவிருத்தியின்பொருட்டு யோகி புருஷன் யாதேனுமோர் இஷ்ட தத்துவத்தில் மனதை மறித்து மறித்துப் புகவிடல் வடிவ அப்பியாசஞ் செய்யவேண்டும். 1. ஈண்டு நன்மைசெயுந்தன்மை மைத்திரியாம்; கிருபை கருணையாம்; சந்தோஷம் முதிதையாம்; உதாசீனத்தின் பெயர் உபேக்ஷையாம்; அன்றியும், சுகம், துக்கம், புண்யம், அபுண்யம் இந்நான்கு பதங்களும் யதாக்கிரமம் சுகமுடையன், துக்கமுடையன், புண்யமுடையன், அபுண்யமுடையன் வாசகங்களாம் ஆதலி னிப்பொருட் பெறப்பட்டது. சுகபோக சம்பந்தமுடைய பிராணிகளிடத்தில் எனது மித்திரர்களாகிய விவர்கட்குக் கிடைத்த சுகப்பேறு எப்போதும் நழுவாதிருக்கவேண்டும் என மைத்திரியை இவன் செய்யவேண்டும். சுகியாகிய அப்பிராணிகளைப்பார்த்து இச்சுகம் இவர்கட்கேன் கிடைத்தது என ஈரிஷைபண்ணக்கூடாது. ஈண்டுத்துக்கப்படும்பிராணிகளிடத்தில் எவ்வாற்றாலேனும் இவர்களுடைய துக்கம் நீங்கிடின் நலம் எனக் கிருபைசெய்யவேண்டும். இவர்களிடத்தில் உபேட்சாபுத்தியையும் ஈரிஷையையும் செய்யப்படாது புண்ணியவானிடத்தில் அப்புண்ணியத்தைப் புகழ்வதோடு சந்தோஷத்தையும் அடையவேண்டும் அவனிடத்தில் துவேஷத்தையும் உபேட்சையையும் செய்யக் கூடாது; பாபியாகிய துஷ்டர்களிடத்தில் உதாசீனவடிவ வுபேட்சைபண்ணவேண்டும். அவர்களிடத்தில் சந்தோஷ துவேஷங்களைச் செய்யக்கூடாது; இவ்வாறு மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்னும் நான்கையு மனுஷ்டிக்கும் புருஷனிடத்தில் சுக்கிலமென்றோர் தருமமுண்டாகின்றது. அத்தரும விசேடத்தின் பிரபாவத்தால் இராகத்துவேஷமுதலிய மலமின்றிய சித்தம் பிரசன்னமாய் ஏகாக்கிரத்தை யடைகின்றது. 2. ஈண்டு, மைத்திரி முதலிய நான்கு தருமங்களும் தெய்வசம்பத்து வடிவ வேறு தருமத்திற்கு முபலக்ஷணமாம் அத்தருமம். 'அபயம் ஸத்வஸம்ஶுத்தி' என்பது முதலிய வசனங்களாலும் 'அமாநித்வமதம்பித்வம்' என்பது முதலிய வசனங்களாலும் ஸ்ரீ பகவான் தாமே பின்னர்க் கூறியருளுவர். அச்சர்வ தருமங்களும் சுபவாசனை வடிவமனதால் மலினவாசனையை நிவிருத்திப்பதாமாதலின், சர்வ புருஷார்த்தத்திற்கும் தடையானதால் மிகச் சத்துருவடிவ

இராகத்துவேஷாதிகளை இவ்வதிகாரிபுருஷன் மிக முயன்றேனும் நீக்கவேண்டும். ஸ்ரீ பதஞ்சலிபகவான் யோகசாத்திரத்தில் சித்தசாந்தியின்பொருட்டு மைத்திரி கருணை முதலிய வுபாயங்களைக் கூறியதுபோல பிராணாயாமம் முதலிய வேறுபா யங்களையுங் கூறினர். அத்தன்மைய சித்தசாந்தியைத் திருவருளாலடைந்த பகவ தநுக்கிரகமுடைய புருஷனுக்கே 'சுகேந' என்னும் வசனத்தை ஸ்ரீபகவான் கூறி யருளினர். அந்தப் பகவதநுக்கிரகமின்றி இம்மனோ நிக்கிரகம் முடியாதென்க. (28)

(அ-கை.) இவ்வாறு நிரோதசமாதியால் துவம்பத தத்பத லட்சியார்த்த வடிவ சுத்தசேதன சாக்ஷாத்காரத்தின்பின்னர் அந்த லட்சியசேதனங்களின் ஐக் கியத்தை விஷயம்பண்ணுவதும் தத்துவமசி முதலிய மகாவாக்கிய சன்னியமும் நிருவிகற்ப சாக்ஷாத்காரவடிவமுமாகிய அந்தக்கரணவிருத்தி யுண்டாகின்றது. அதை வேதமுணர்ந்தவர் பிரஹ்மவித்தையெனக் கூறுவர். அவ்வித்தையினால் அவி த்தை அதன் காரியமாகிய வுலகம் அனைத்தும் நிவிருத்தியாய் இவ்வதிகாரி புரு ஷன் பரிச்சின்னமற்ற பிரஹ்மசொரூபசுகத்தை அநுபவிக்கின்றான் என்னு மிவ் வர்த்தமனைத்தையும் ஸ்ரீ பகவான் மூன்று சுலோகத்தால் அருளிச்செய்கின்றார். அவற்றுள், இம்முதற்சுலோகத்தால் முன்னர் துவம்பதலட்சியார்த்தத்தைக் கூறி யருளுகின்றார்.

சு-ம். ஸர்வபூதஸ்தமாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி ।
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந: ॥ (29)

ப-ம். 4 ஸர்வபூதஸ்தம் 5 ஆத்மாநம் 8 ஸர்வபூதாநி 6 ச 7 ஆத்மநி 9 ஈக்ஷதே 1 யோகயுக்தாத்மா 2 ஸர்வத்ர 3 ஸமதர்சந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யோகம்பொருந்திய மனத்தோன் சர்வ உலகத்தி லும் சமபுத்தியுடையனுய்ச் சர்வ பூதங்களிலுள்ள வான்மாவையும் ஆன்மாவில் சர்வ பூதத்தையும் பார்க்கின்றான். (29)

(வி-ம்.) தாவரசங்கம சரீரவடிவ பூதங்களனைத்திலும் போக்தாவடிவமா யிருக்கப்பட்ட ஏக அத்துவிதீய விபு சச்சிதாநந்த வடிவமாகிய பிரத்தியக் சாக்ஷி யாகிய வான்மாவைப் பொய்சடப் பரிச்சின்ன துக்கவடிவமாகிய விளக்கப்படு பொருள்களின் வேறாய் சாக்ஷாத்கரிக்கின்றான். அங்ஙனமே அப்பிரத்தியக் சாக்ஷி யாகிய வான்மாவில் ஆரோபித சம்பந்தத்தாலிருக்கப்பட்ட பொய்வடிவ பரிச்சின்ன சடதுக்கவடிவ சர்வ பூதங்களையும் அப்பிரத்தியக் சாக்ஷியாகிய வான்மாவில் கற்பித வடிவமாய் சாக்ஷாத்கரிக்கின்றான். யாவன் அதைச் சாக்ஷாத்கரிக்கின்றான் என் றுணரும் வேட்கைநிகழ அருளுகின்றார். 'யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந: இதி' ஆண்டு, பொருளாராய்ச்சியின் மிகுந்த குசலத்தன்மைவடிவ யோகயுக்த மெனப்படும் சாந்தியையடைந்த ஆன்மாவெனப்படும் அந்தக்கரணமுடையோன் பெயர் யோகயுக்தான்மாவாம். அங்ஙனமே அந்த யோகத்தாலுண்டாகிய ரிதம் பரையெனப் பெயரிய பிரத்தியட்சத்தால் நுண்ணிய பொருள்களையும் மறைபட்ட பொருள்களையும் தூரத்தனவாகிய பொருள்களையும் ஒரேகாலத்தில் சமமாய்ப்பார்க் கின்றான். இவ்வண்ணம் பார்ப்பவன் பெயர் சமதரிசனனும். அத்தன்மைய சமதரி சனனாகிய யோகயுக்தான்மா பிரத்தியக்கான்மாவையும் அதிற் கற்பிதமாகிய அநா ன்ம வுலகத்தையும் முற்கூறியவாற்றால் உள்ளவாறுணர்வன் என்னுங் கூற்றொக் கும் அல்லது, இச்சுலோகத்திற்கு வேறு பொருள்செய்க. யோகயுக்தான்மாவும் யாண்டும் சமதரிசியானவனே இப்பிரத்தியக் சாக்ஷியை சாக்ஷாத்கரிக்கின்றான். இத்துணைகூறியதால் யோகி சமதரிசி இருவரும் ஆன்ம சாக்ஷாத்காரத்திற் கதி காரியெனக் கூறப்பட்டனர். கருத்திதுவாம்:—சித்தவிருத்தி நிரோதவடிவ

யோகம் சாக்ஷியாகிய வான்மாவை சாக்ஷாத்கரித்தற் கேதுவாமாறு சடப்பிரபஞ் சத்தின் விவேகத்தால் சர்வத்திலும் அநுசூதமாகிய சைதன்யவடிவ வான்மாவை வேறு பிரித்தல்வடிவ விசாரமும் ஆன்ம சாக்ஷாத்காரத்திற் கேதுவாம். அவ்வா ன்மசாக்ஷாத்கார மடைவதில் கேவலம் யோகமே மிக்கபேட்சிதமன்றும். இக்கருத் துப்பற்றியே ஸ்ரீ வசிட்டபகவானும் ராமச்சந்திரனைக்குறித்து இவ்வாக்கியத்தை யருளினர்.

ஆ-சு. द्वौ क्रमौ चित्तनाशस्य योगो ज्ञानं च राघव ।
योगस्तद्वृत्तिनिरोधो हि ज्ञानं सम्यगवेक्षणम् ॥ (1)

असाध्यः कस्यचिद्योगः कस्यचिज्ज्ञाननिश्चयः ।
प्रकारौ द्वौ ततो देवो जगाद परमः शिवः ॥ (2)

(பொ-ள்.) ஹே ராமச்சந்திர! சாக்ஷியாகிய வான்மாவின் உபாதிவடிவ சித் தத்தை அதனின் வேறுக்கிச்சாக்ஷியாகிய வான்மாவைப்பார்த்தலே சித்தநாசமாம். அதற்கு இரண்டுபாயம், ஒன்று யோகம் மற்றையது ஞானம்; அவற்றுள் சர்வ விருத்திகளின் நிரோதவடிவ அசம்பிரஞ்ஞாத சமாதி யோகமாம். அது சம்பிரஞ் ஞாத சமாதியால் அடையப்படும். அவற்றுள், சம்பிரஞ்ஞாத சமாதியில் ஏக வான் மாகாரவிருத்திப்பிரவாகத்தோடுகூடிய அந்தக்கரணமிருப்பதைச் சாக்ஷி யுணர்கின் றது. அசம்பிரஞ்ஞாத சமாதியிலோ சர்வவிருத்தி நிரோதத்தோடு அந்தக்கரண சத்வ முபசாந்தமானதால் சாக்ஷி யநுபவிப்பதில்லை. இத்துணையே அவ்விரண்டின் விசேடமாம்; சாக்ஷியிற் கற்பிதமாகிய இச்சாக்ஷியவுலகம் மித்தையானதால் முக்கா லத்திலுமில்லை. ஒரே சாக்ஷியாகிய வான்மாவே பரமார்த்தசத்தியம் என நன்றாய் விசாரித்தலின் பெயர் ஞானமாம். 1. அவற்றில் சில அதிகாரிக்கு யோகங் கடின மும் விசாரஞ் சுலபமுமாம்; சிலர்க்கு யோகஞ் சுலபமும் விசாரங் கடினமுமாம். அக்காரணத்தானே பரமான்மாவாகிய சிவபெருமான் அவ்விரண்டையுங் கூறியரு ளினர். 2. ஆண்டு, இவ்விருவகை யுபாயத்திலும் முதலாவதாகிய யோகவடிவ வுபாயத்தை உலகமுண்மையெனக்கொள்ளும் ஹைரணியகருப்பர் முதலியோர் உடன்பட்டுக்கொண்டனர். அவர் மதத்தில் பரமார்த்தசத்திய சித்தத்தைத் தரிசி யாது சாக்ஷியாகிய வான்மாவைத் தரிசிப்பதில் சித்தநிரோதமொழித்து மற்றோரு பாயமின்றும். மற்றோ, கேவலஞ் சித்தநிரோதமே சாக்ஷியாகிய வான்மதரிசனத் திற்கேதுவாம் என்க. ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாசாரிய மதத்தையநுசரித்த உலகம் பொய்யென வுடன்படும் ஔபநிடதர்களோ இரண்டாவதாகிய விசார வடிவ உபாயத்தையே உடன்பட்டுக்கொண்டனர், அவ்வுபநிடதத்தைத் தழுவி னோர்க்கு அதிட்டானமாகிய சேதனத்தின் திட சாக்ஷாத் காரத்தின் பின்னர் அவ்வதிட்டானத்திற் கற்பிதமாகிய சித்தம், திருசியப் பிரபஞ்சமிவற்றின் தோற்ற மின்மை ஆபாசமின்றியே பொருந்துதல் கூடும். அவ்வுலகத்தோற்ற மின்மையில் அவர்கட்கு யோகாபேட்சையின்றும் அதுபற்றியன்றோ ஸ்ரீமது சங்கரபகவத் பாதாசாரியர் ஓரிடத்தும் பிரஹ்மமுணர்ந்த புருஷனுக்கு யோகாபேக்ஷை கூறி யருளவில்லை. அதனானே உபநிடதாவலம்பியாகிய பரமஹம்சசந்நியாசியும் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் பொருட்டு பிரஹ்மமுணர்ந்த ஆசாரியரை யணுகி வேதாந்தவாக் கியங்களின் சிரவண மனனவடிவ விசாரத்திலே முயல்கின்றனன் யோகத்தில் முய லுவதின்றும் என்னை அந்த யோகத்தால் சித்தத்தின் காமக்குரோதமுதலிய தோட நிவிருத்தியாகி அஃதொழிந்த மற்றோருபாயத்தால் நீங்காதாகின் யோகமே அவசியம் வேண்டற்பாலதாம் ஆனாலோ சித்த தோஷம் விசாரத்தானும் நிவிருத்தி யாகின்றது ஆதலின், அவ்வுபநிடதாவலம்பிகட்குப் பிரஹ்மசாக்ஷாத்காரமடைதற் பொருட்டு யோகம் அவசியம் வேண்டற்பாலதன்றும்; மற்றோ, வேதாந்தவாக்கிய

விசாரமே ஒரு தலையாய் வேண்டற்பாலதாம் இதனாற்றான் தைத்திரீய வுப நிடதத்தில் வருணரிஷி பிருகு புத்திரரைக்குறித்து அடிக்கடி விசாரவடிவ தவத் தையே விதித்தருளினர் என்க. (29)

(அ-கை.) ஆண்டு முற்சுலோகத்தில் சுத்தமாகிய துவம்பதார்த்தத்தைக் கூறியருளினர் இப்போதிந்தச் சுலோகத்தில் சுத்தமாகிய தத்பதப்பொருளை அரு ளிச்செய்கின்றார்.

சு-ம். *யொ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி ।*
*தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மெ ந ப்ரணஶ்யதி ॥* (30)

ப-ம். 1 *யஃ* 3 *மாம்* 4 *பஶ்யதி* 2 *ஸர்வத்ர* 6 *ஸர்வம்* 5 *ச* 7 *மயி* 8 *பஶ்யதி* 9 *தஸ்ய* 10 *அஹம்* 11 *ந* 12 *ப்ரணஶ்யாமி* 14 *ஸஃ* 13 *ச* 15 *மெ* 16 *ந* 17 *ப்ரண ஶ்யதி.*

(அ-ம்.) ஹே அர்ச்சுன எந்த யோகி புருஷன் சர்வவுலகத்திலும் பரமேசுர னாகிய என்னையும் அவ்வுலகனைத்தையும் பரமேசுரனாகிய என்னிடத்திலும் பார்க் கின்றானோ அவனுக்கு நான் பரோட்சமாகமாட்டேன் அவனும் எனக்குப் பரோட்ச மாகமாட்டான். (30)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தத்துவமசி முதலிய மகாவாக்கியத்திலுள்ள தத் பதார்த்தவடிவ பரமேசுரனாகிய யான் எத்தன்மையனெனின் மாயோபாதிகனாகிய சர்வ வுலககாரணன் உண்மையிலோருபாதியுமற்றவன் அங்ஙனமே பரமார்த்த சத்திய ஆனந்தகனன் மூவித பரிச்சேதமற்றவனாதலின் அனந்தவடிவன் எல் லாவுலகத்திலும் சத்தாஸ்புரணவடிவத்தால் அநுகூதன் அத்தன்மைய பரமேசுர னாகிய என்னை யோகி புருஷர்கள் சர்வவுலகத்திலும் வியாபகமாய்ப் பார்க்கின்றார் கள் யோக சன்னியப் பிரத்தியட்ச ஞானத்தால் பரமேசுரனாகிய என்னைச் சாக்ஷாத் கரிக்கின்றார்கள் என்பது பொருள். அங்ஙனமே இவ்வுலகனைத்தையும் பரமேசுர னாகிய என்னிடத்திற் பார்க்கின்றார்கள் பரமேசுரனாகிய என்னிடத்தில் மாயை யாற் கற்பிக்கப்பட்ட சர்வ வுலகத்தையும் அதிட்டானவடிவ பரமேசுரனாகிய என் னின் வேறாய் மித்தியாவடிவமாய்ப் பார்க்கின்றார்கள் என்பது பொருள் என்னை யும் உலகத்தையும் உள்ளவாறுணர்ந்தயோகி புருஷனுக்கு தத்பதப் பொருள் வடிவப் பரமேசுரனாகிய நான் ஓர்காலும் பரோட்சமாவதில்லை ஈசுரன் என்னின் வேறு என்றிவ்வாறு யோகி புருஷரின் பரோக்ஷஞானத்திற்கு யான் விஷயமாக மாட்டேன் மற்றோயோகத்தாலுண்டாய அவரது அபரோக்ஷஞானத்திற்கு விஷய மாகின்றேன். தத்பதார்த்த ஈசுரனிடத்துள்ள வாக்கிய சன்னிய அபரோட்சஞான விஷயத்தன்மை துவம்பதார்த்த சீவனோடு அபேதவடிவத்தானே யாம் கேவலம் ஈசுரனிடத்து வாக்கிய சன்னிய அபரோட்ச ஞானவிஷயத்தன்மையின்றாம் ஆயி னும் யோக சந்நிய அபரோட்சஞான விஷயத்தன்மை கேவல ஈசுரனிடத்தும் பொருந்துதல்கூடும் இவ்வாறு யோகசந்நியப்பிரத்தியட்ச ஞானத்தால் பரமேசுர னாகிய என்னைச் சாக்ஷாத்கரித்த யோகி புருஷன் பரமேசுரனாகிய எனக்கும் பரோட்சமாவதில்லை என்னை அவ்வித்துவான் எனதான்மவடிவமும் மிகப் பிரிய முமாம் இஃதனைத்தும் '**ஜ்ஞாநீத்வாத்மைவமே மதம்**' என்பது முதலிய வாக்கியங் களால் மேலும் விளக்கப்படும் தனதான்மா ஒருவர்க்கும் பரோட்சமாவதில்லை மற்றோ, யாவர்க்கும் அபரோட்சமேயாம் ஆதலின் அவ்வித்துவான் எப்போதும் எனது அபரோட்சஞானத்திற்கே விஷயமாம் என்னுமிஃதனைத்தும் '**யெயதாமாம் ப்ரபத்யந்தெ தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்**' என்னும் கீதாவாக்கியத்தானே சித்த மாம் அன்றியும் இதுமாபாரதத்திலும் யுதிஷ்டிரனுக்கு ஸ்ரீபகவான் அருளியிருக் கின்றார்.

ஆ-சு. ஸவிஷாம்ஸ த்ஸாதர ஐவிஸம்தம் ஹமவஷம் நவஸ்யதி ।
ஸதோஹமவாத்ஸ்யந்நவிதம் நவஸ்யதி ॥

(பொ-ள்.) ஹே யுதிஷ்டிர! ஆன்மஞானமிலாத வஞ்ஞானி தனதான்மவடிவாயிருப்பினும் பரமேசுரனைப் பார்ப்பதில்லை; இதனல் பரமேசுரனுகிய யானும் எனது சர்வஞ்ஞ சுபாவத்தால் சர்வ வுலகத்தையும் பார்க்கினும் அவ்வஞ்ஞானி புருஷனைப் பார்ப்பதில்லை இது சுருதியிலுங் கூறப்பட்டுளது. 'ஸவாநஐவிதொநஹந்தி' அப்பரமான்மா எப்போதும் இச்சீவான்மவடிவமாயிருந்தும் அறியப்படாதவப் பரமான்மா இச்சீவனைப் பிறப்பிறப்புவடிவ சம்சாரத்தினின்று பிரட்சிப்பதில்லை வீட்டிலிருப்பினும் தனம் அறியப்படாது அவ்வீட்டிலுள்ள புருஷனது தரித்திரத்தை நிவிருத்தியாததுபோலவாம். வித்துவானே எப்போதும் அத்தியந்த சமீப பகவானது அநுக்கிரகபாத்திரனும் என்க. (30)

(அ-கை.) ஆண்டு முன்னிரண்டு சுலோகங்களால் தத்துவம் பதங்களின் சுத்தார்த்தங்களைக் கூறியருளினர். இப்போது அவ்விருபொருளின் அபேதவடிவ தத்துவமசி மகாவாக்கியப் பொருளை யருளிச்செய்கின்றர்.

சு-ம். ஸவ-ஹூஸ்திதம் யொமாம் ஹஜத்யெகத்வமாஸ்திதஃ ।
ஸவ-ஙா வத-மானொவி ஸ யொகீ மயி வத-தெ ॥ (31)

ப-ம். 2 ஸவ-ஹூஸ்திதம் 1 யஃ 3 மாம் 6 ஹஜதி 4 ஏகத்வம் 5 ஆஸ்திதஃ 9 ஸவ-ஙா 10 வத்-மாநஃ 11 அபி 7 ஸஃ 8 யொகி 12 மயி 13 வத்-தெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எந்த யோகி சர்வ பூதத்திலுமுள்ள தத்பதார்த்தமாகிய என்னைத் துவம்பதார்த்தமாகிய தன்னேடு அபேதமென்று நிச்சயித்து அபரோட்சஞ்செய்கின்றனே அந்த யோகி புருஷன் பலவாருப் விவகரிப்பினும் பரமான்மாவாகிய என்னிடத்திலே அபேதவடிவமாயிருக்கின்றன். (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ பூதத்திலும் அதிட்டானவடிவத்தாலிருக்கப்பட்டதும் சத்தாஸ்புரணவடிவத்தால் அநுகூதமுமாகிய சத்தாமாத்திர தத்பதலட்சியார்த்தவடிவப் பரமேசுரனுகிய என்னைத் துவம்பத லட்சியார்த்தவடிவ தனது பிரத்தியக் சாட்சியோடு அபேதமாய் நிச்சயித்து அதாவது கடவடிவ வுபாதியை நீக்கக் கடவான்மாவானேபோன்று அவித்தை அந்தக்கரணமுதலிய வுபாதியை நீக்கிப் பரமேசுரனுகிய என்னைத் தனதான்மாவோடு அபேத நிச்சயம்பண்ணி எவ்வதிகாரி என்னைப் பஜனைசெய்கின்றனே அதாவது அகம்பிரஹ்மாஸ்மி என்னும் வேதாந்தவாக்கியத்தாலுண்டாய சாக்ஷாத்காரத்தால் பரமேசுரனுகிய என்னை அபரோட்சமாயறிகின்றனே அவ்வதிகாரி காரியத்தோடு அஞ்ஞானநிவிருத்தியால் சீவன் முத்தனுய கிருதகிருத்தியனுகின்றன். அவனுக்குப் பாதிதாநுவிருத்தியால் சரீர முதலிய தோற்றமுள்ளவரையில் விலட்சணப்பிராரப்தகருமவலியால் அப்பிரஹ்மஞானியாக்ஞவற்கியர் முதலியோர்போலச் சர்வ கருமங்களையும் விடுத்தேனும் வசிஷ்டர் ஜனகர் முதலியோர்போல அக்கினிஹோத்திரமுதலிய விகிதகருமத்தை யநுஷ்டித்தேனும் இருப்பினும் அல்லது தத்தாத்திரயர் முதலியோர்போல நிஷித்தமாகிய கருமத்தோடிருந்து பலவகையாய் விவகரிப்பினும் யான் பிரஹ்மமென வுணர்ந்து பரமான்மாவாகிய என்னிடத்திலே அபேதமாயிருக்கின்றன்; எனது பரமானந்த வடிவத்தினின்றும் அவன் நழுவுவதின்றும். அவ்வித்துவானுக்கு எவ்வாற்றுலேனும் மோட்சப் பிரதிபந்தக் சங்கையேயின்றுமென்பது பொருள். இது சுருதியினுங் கூறப்பட்டுளது.

ஆ-ச. தஸ்ஹைநதேவாஸ்நாஹ்லந்யா ஈசதே I
ஸ்ஹ்யாத்மா ஸ ஹவதி II

(பொ-ள்.) மகாப் பிரபாவமுள்ள இந்திரன் முதலிய தேவர்களும் அவ்வித்துவானது மோட்சத்தில் தடைசெயற்கேலாது அவன் அத்தேவர்களின் ஆன்மவடிவமேயாதலின் தனதான்மாவிற் கொருவரும் கேடுறுத்துவதில்லை. இந்திரன் முதலிய தேவர்கட்கும் தடைசெய்தற்கேலாதாகில் ஏனைய அற்பப் பிராணிகள் தடைப்படுத்தாதென்பதிற் கூறவேண்டுவதென்னை. நிடேதகருமத்திற் செலுத்தும் இராகத்துவேஷம் பிரஹ்மஞானியிடத்தின்றுமாதலின், அவனுக்கு நிடேதகருமத்திற் பிரவிருத்தியு மமையாது. அங்ஙனமாயினும் பிரஹ்மஞானிக்கு நிடேதகருமத்திற் பிரவிருத்தியை யுடன்பட்டு ஆன்மஞானத்தைத் துதித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான், 'ஸர்வதா வர்த்தமானோபி' என்னும் வாக்கியத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். 'ஸர்வாபிஸ் ஐாஸம் ஜ்ஞாநமஹநிந ஸந்தரிஷ்யஸி' என முன்னர் ஞானத்தைத் துதித்தற்பொருட்டுக் கூறியருளியதுபோலவே இம்மொழியுமாம். தத்தாத்திரயபகவானது நிடேதகருமப் பிரவிருத்தியோ ஓரிராகத்துவேஷங்களாலன்று. மற்றோ, பகிர்முகமாகிய வுலக சகவாசத்தை நீக்குதற்பொருட்டாம். இஃதனைத்தும் ஆத்மபுராணத்தின் பதினோராவதத்தியாயத்தில் விரிவாய்க் கூறினோம்.

(அ-கை.) இவ்வாறு பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாயினும் சில வித்துவான் மனோநாசம் வாசனாக்ஷய மின்மையின் சீவன் முத்திச்சுகத்தை யநுபவிப்பதில்லை சித்தவிட்சேபத்தால் திருஷ்டதுக்கத்தையநுபவிப்பவன் அபரமயோகியெனப்படுகிறான். அவன் இத்தேகம் விழுந்ததின் பின்னரோ விதேக கைவல்லியத்தையடைகின்றான். இத்தேகமுள்ளவரையிலும் விட்சேபத்தால் திருஷ்டதுக்கத்தை யநுபவிக்கின்றானாதலின், தத்துவஞான மனோநாசம் வாசனாக்ஷய மூன்றையும் ஒரே காலத்திலப்பியாசம்பண்ணித் திருஷ்டதுக்க நிவிருத்தி பூர்வகம் சீவன் முத்திச்சுகத்தை யநுபவித்துப் பிராரப்தகருமவசத்தால் சமாதியினின்று வெளிப்பட்டபோது சர்வப் பிராணிகளையும் தனதான்மாவிற் கொப்பெனப் பார்ப்பவன் பரமயோகி யெனப்படுவன் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோऽர்ஜுந I
ஸுகம் வா யதி வா து:கம் ஸ யோகீ பரமோ மத: II (32)

ப-ம். 4 ஆத்மௌபம்யேந 3 ஸர்வத்ர 8 ஸமம் 9 பஶ்யதி 2 ய: 1 அர்ஜுந 5 ஸுகம்வா 6 யதிவா 7 து:கம் 10 ஸ: 11 யோகீ 12 பரம: 13 மத:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் சர்வப்பிராணிகளிடத்தும் தனதான்ம திருட்டாந்தத்தால் சுகத்தையேனும் துக்கத்தையேனும் சமமாய்ப் பார்க்கின்றானோ அந்தப் பிரஹ்மவேத்தாவாகிய யோகி மேலானவனென்றெண்ணப்படுகிறான். (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எந்த வித்துவான் சர்வப் பிராணிகளிடத்தும் சுகத்தையேனும் துக்கத்தையேனும் தனதான்மதிருஷ்டாந்தத்தால் சமமாய்ப் பார்க்கின்றானோ அதாவது எந்த வித்துவான் துவேஷமின்றியவனாதலின் தனக்கிஷ்டமிலாததைச் சம்பாதியாததுபோல, அன்னியப் பிராணிகட்கும் அநிட்டத்தைச் சம்பாதிப்பதில்லையோ அங்ஙனமே இராகமின்றியவனாதலின், தனக்கிஷ்டத்தைச் சம்பாதிப்பதுபோல அன்னியப் பிராணிகட்கும் இஷ்டத்தைச் சம்பாதிக்கின்றானோ நிர்வாசனையால் சாந்தமனதுடைய அந்தப் பிரஹ்மஞானியாகிய யோகி முற்கூறிய அபரமயோகியினும் மேலானவனும். அதாவது, மனோநாச வாசனா

க்ஷயமின்றிய கேவல தத்துவஞானியினும் மனோநாச வாசனக்ஷயமுடைய தத்து வஞானி மேலாம். ஆதலின், தத்துவஞான மனோநாச வாசனக்ஷய மூன்றும் முறை ப்படி அநுட்டித்தற்பொருட்டு இவ்வதிகாரி பெருமுயற்சி செய்யவேண்டும் என்க. இப்போது தத்துவஞான, மனோநாச, வாசனக்ஷய மூன்றின் வடிவம் வர்ணிக் கப்படுகின்றது. அவற்றுள், துவைதமாகிய இவ்வுலகனைத்தும் அத்துவிதீய சச்சி தானந்தவடிவப்பரமான்மாவில் மாயையாற் கற்பிதமாதலின் பொய்யேயாம் பரமான் மாவொன்றே பரமார்த்த சத்தியமாம் அதுவே நான் என்னும் ஞானம் தத்துவ ஞானமெனப்படுகின்றது. தீபச்சுவாலையின் சந்தானம்போல விருத்திகளின் சந் தானவடிவத்தால் பரிணமத்தையடைந்த அந்தக்கரணவடிவ திரவியம் மனனவடி வத் தன்மையால் மனமெனப்படும். அவ்விருத்திவடிவ பரிணமங்களைவிடுத்து அச் சர்வவிருத்திகளின் விரோதியாகிய நிரோதாகாரபரிணமமே மனோநாசமாம். முன் பின் விசாரியாது சீக்கிரமுண்டாகும் குரோதமுதலிய விருத்தி விசேடங்கட்குக் காரணபூதமாகிய சித்தத்திலுள்ள சமஸ்காரத்தின் பெயர் வாசனையாம். அதில் விவேகத்தாலுண்டாகிய சித்தசாந்தியின் திடவாசனவலியால் குரோதமுதலியவை களை யுண்டுபண்ணும் பாகியநிமித்தமிருப்பினும் குரோதமுதலியன தோன்றாமை யின் பெயர் வாசனக்ஷயமாம் இப்போது இம்மூன்றற்கும் ஒன்றற்கொன்று காரண காரிய பாவத்தைத் தெரிவிப்பாம் அவற்றுள் தத்துவ ஞானந்தோன்றியதின்பின் னர் மித்தைவடிவமான வுலகத்தில் மநுடக்கோடு முதலியனபோலப் புத்திவிருத்தி யெழாது அப்போது ஆன்மா அபரோட்சமாதலின் அதனிடத்தும் விருத்தியினுப யோகமில்லை. பரிசேடத்தால் விறகின்றிய தீப்போல மனங்கெடுகின்றது இவ்வாற் றால் தத்துவஞானம் மனோ நாசத்திற்குக் காரணமாம் அம்மனங் கெட்டபின்னர் சமஸ்காரத்தை யெழுப்பும் பாகிய நிமித்தந்தோற்றாமையின் சமஸ்காரவடிவ வாச னையும் நாசமாகின்றது. ஆதலின், மனோநாசம் வாசனக்ஷயத்திற்குக் காரணமாம் அவ்வாசனை கெட்டபின்னர் காரணமபாவமானதால் குரோதமுதலிய விருத்திகளுற் பத்தியாவதில்லையாதலின், அம்மனமும் நாசமாகின்றது. ஆதலின், வாசனக்ஷயம் மனோ நாசத்திற்குக் காரணமாம் மனம் நாசமானபின்னர் சமதமமுதலிய சாதன சம்பத்தியால் தத்துவஞானமுண்டாகின்றது. ஆதலின், மனோநாசம் தத்துவஞா னத்திற்குக் காரணமாம், தத்துவஞானந் தோன்றினபின்னர் இராகத்துவேஷாதி வடிவ வாசனையும் நாசமாதலின் தத்துவஞானம் வாசனக்ஷயத்திற்குக் காரணமாம் வாசனை கெட்டபின்னர் பிரதிபந்தக மபாவமாதலின், தத்துவஞான முண்டாகின் றது. ஆதலின், வாசனக்ஷயம் தத்துவஞானத்திற்குக் காரணமாம். இவ்வாறு தத்துவஞான மனோநாச வாசனக்ஷயம் மூன்றும் ஒன்றற்கொன்று காரிய காரணத் தன்மையடைந்தன. இது ஸ்ரீ வசிட்டபகவானும் ஸ்ரீ ராமச்சந்திரனைக்குறித்து அருளியிருக்கின்றார்.

ந-சு. தத்வஜ்ஞாநம் மநோநாஶோ வாஸநாக்ஷய ஏவ ச ।
மிதஃகாரணதாம் கத்வா து:ஸாத்யாநி ஸ்திதாநி ஹி ॥ (1)
தஸ்மாத்ராகவ யத்நேந பௌருஷேண விவேகிநா ।
போகேச்சாம் தூரதஸ்த்யக்த்வா த்ரயமேதத் ஸமாஶ்ரயேத் ॥ (2)

(பொ-ள்.) தத்துவஞான முதலிய மூன்றும் ஒன்றற்கொன்று காரிய கார ணத்தன்மையடைந்து ஈண்டடைதற்கரிதாயிருக்கின்றது. ஆதலின், ஹே ராம! விவேகமுடைய புருஷ முயற்சியால் போகேச்சையை தூரத்தில் விடுத்து இவ்வதி காரி இம்மூன்றையும் பற்றவேண்டும் ஈண்டு எவ்வித வுபாயத்தாலேனும் இம்மூன் றையும் யான் அவசியஞ் சம்பாதிப்பேன் என்னும் உற்சாக விசேடத்தின் பெயர் புருஷமுயற்சியாம்; இம்மூன்றிற்கும் வேறுவேறு சாதனமென்று நிச்சயித்தலின்

பெயர் விவேகமாம். தத்துவஞானத்திற்குச் சிரவணமுதலியன சாதனம், மனோ நாசத்திற்கு யோகம் சாதனம், வாசனுக்ஷயத்திற்குப் பிரதிகூல வாசனைதோன்றல் சாதனம், அத்தன்மைய விவேகமுடைய புருஷ முயற்சியால் போகேச்சையை நெடுந்தூரத்திற்றள்ளி இம்மூன்றையும் பற்றல்வேண்டும். ஆண்டு, நெய் முதலிய ஹவிஷ் அக்கினி விருத்தியாதற்குக் காரணமாவதுபோல, போகேச்சை மிகச் சிறிதாயினும் வாசனை வளருவதற்குக் காரணமாம். ஆதலின், அதை நெடுந்தூரத்திற்றள்ளவேண்டுமென்றருளினர். (2) ஈண்டிதுகருத்தாம். பிரஹ்மஞானத்திற்கு அதிகாரி யிருவகையாம். ஒருவனே கிருதோபாசகன், மற்றவனே அகிருதோபாசகன் அதில் உபாசிக்கப்பட்ட தேவதையின் சாக்ஷாத்காரபரியந்தம் உபாசித்துப் பின்னர் தத்துவஞானத்தின்பொருட்டுப் பிரவிருத்தித்தவன் கிருதோபாசகனெனப்படுவன். அவனுக்கு மனோநாசம் வாசனுக்ஷயமிரண்டும் தத்துவஞானத்தின்முன்னரே திடமாதலின், தத்துவஞானத்தின்பின்னர் அவனுக்குச் சீவன் முத்தி இயல்பாகவே யுண்டாம். தத்துவஞானத்தின்முன்னர் உபாசனைபண்ணுதவன் அகிருதோபாசகனெனப்படுகிறுன். இக்காலத்திய முமுட்சுஜனங்கள் பெரும்பாலும் அகிருதோபாசர்களேயாவர். அவர்கள் ஊக்கமாத்திரத்தால் சீக்கிரமே ஞானத்தில் பிரவிர்த்திக்கின்றுர்கள். அசம்பிரக்ஞாதவடிவ யோகமின்றியே சேதனசடப்பொருள்களின் விவேகமாத்திரத்தானே தாற்காலிகமனோநாச வாசனுக்ஷயத்தைத்தேடிக்கொண்டு சமதம முதலிய சம்பத்தியால் சிரவண மனன நிதித்தியாசனங்களைச் சம்பாதிக்கின்றுர்கள். திடமாயநுட்டித்த அச்சிரவணுதிகளால் சர்வ பந்தத்தையும் நாசப்படுத்தும் தத்துவ ஞானமுண்டாகின்றது. அதனுல் அவித்தியாக்கிரந்தி, பிரஹ்மமின்றியதன்மை, இருதயக்கிரந்தி, சம்சயம், கருமம், சர்வகாமத்துவமின்மை, பிறப்பிறப்பு, சர்வத்தன்மையின்மை என்பன முதலிய சர்வ பந்தங்களும் நீங்குகின்றன.

ஆ-சு. ஷ தத்வாவெஷ நிஹிதம் ம ஹாயாம்ஸொ விக்ஷா ம யிம ।
விகிர ஹீதிஹெ ஸஷஜ்ய ஙு ஹுவெஷ ஙு ஹ்ஹெவ ஹவதி ॥
ஹிஷ்தெ ஹா ஷய ம ம்யிஸ்ஷஜ்ஜெ ஸவ ஸம்ஸயாஃ ।
க்ஷீயஜெ அாஸ்யகஷா ணி தஸிஷ்ஷெ வஸாவமெ ॥
ஸ தஜ்ஜாநஷநஷம் ஙு ஹ்யொவெஷ நிஹிதம் ।
ம ஹாயாம் வஸஷவெ்ஷாஷு ஷொஸூ தெ ஸவா ஷு காஷாஹுஹ
தஷெவ விஜிக்ஷா தி ஷ தா ஷ திம்யஹ வி ஜ்ஞா நவாஹு ।
ஹவதஷ நஷஃ ஸஷாஸ ஜிஃ ஸ தா தத ஷஷாநொதி யஷா
ஷ ஜியொ நஜாயதெய ஷவம் வெஷாஹம் ।
ஙு ஹாஹீதிஸ ஜஷம்ஸவஷம் ஹவதி ॥

இப்போது முறைப்படி அச்சர்வ சுருதிகளின் பொருளையுங் கூறுவாம்:— ஹே பிரியதரிசன! ஹிருதயவடிவக் குகையிலுள்ள இவ்வான்மாவைச் சாக்ஷாத்கரித்தவன் அவித்தியாக்கிரந்தியை நாசம்பண்ணுகிறுன்; பிரஹ்மசாக்ஷாத்காரஞ்செய்தவன் பிரஹ்மவடிவமாகின்றுன். பாமான்மாவைச் சாக்ஷாத்கரித்த வித்துவானது ஹிருதயக்கிரந்தி பேதனப்படுகிறது. சர்வ சமுசயமும் சேதமாகின்றது; பிராரப்தகருமமொழிந்த மற்றக் கருமங்கள் நாசமாகின்றன. பாமாகாசவடிவ ஹிருதயக்குகையிலுள்ள சத்தியஞானநந்தப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்காரம்பண்ணியவன் சர்வ காமத்தையுமடைகிறுன்; அவ்வான்மசாக்ஷாத்காரத்தால் இவ்வித்துவான் மிருத்தியுவற்றவனுகின்றுன்; விஞ்ஞானமும் மன நிரோதமும் எப்போதும் சுசியும் உள்ளவன் புனராவிருத்தியின்றிய அப்பாமபதத்தையடைகிறுன். யான் பிரஹ்மவடிவமென்றுணர்வோன் சர்வ வுலகத்திற் கான்மாவாவன் என்பது முதலிய

சுருதிகளில் தத்துவஞானத்தால் சர்வ பந்த நிவிருத்தியும் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு சர்வ பந்தங்களின் நிவிருத்திவடிவ விதேகமுத்தி இத்தேகமிருப்பி னும் தத்துவ ஞானோற்பத்தியின் சமகால மென்றுணர்க. என்னை, பிரஹ்மத்தில் அவித்தையாலாரோபிதமான முற்கூறிய பந்தம் தத்துவஞானத்தின் முன்னமே யுளது; தத்துவஞானத்தால் அவித்தை நாசமானபின்னர் அப்பந்தமும் நாசமா கின்றது. தத்துவஞானத்தால் ஒருதரம் நாசமாகிய அவித்தியாசக்கித பந்தம் மறித்தும் உண்டாவதில்லை. ஆதலின், தத்துவஞானத்தைச் சிதையச்செய்கின்ற காரணுபாவத்தினின்றும் தத்துவஞானம் இவ்வித்துவானுக்கு எவ்வாற்ருலேனும் நிலைத்திருக்கவேண்டும். முன்னர்த் தத்துவஞானத்தை யடைதற்பொருட்டு தாற் காலிகமாய்ச் சம்பாதித்த மனோநாச வாசனக்ஷயங்கள் திடாப்பியாசமின்மையா னும் போகத்தைத்தரும் பிராரப்தகருமத்தால் பாதப்படுதலானும் வாயுவோடு கூடிய விடத்திலுள்ள இனிய தீபம்போலச் சீக்கிரம் நீங்கிவிடுகின்றது. இக்காரண த்தால் இக்காலத்திய அகிருதோபாசகனாகிய தத்துவஞானிக்கு முன்னர்க் கிடை த்த தத்துவஞானத்தில் சிறிதளவும் முயற்சி யவாவின்றேனும் மனோநாச வாசன க்ஷய மிரண்டும் முயற்சியானே அடையப்படுவனவாம். ஆண்டு, மனோநாசம் முன் னர் அசம்பிரக்ஞாத சமாதியைக் கூறியதால் கூறப்பட்டது; ஆதலின், இப்போது வாசனக்ஷயங் கூறப்படுகிறது. அதில் வாசனையுணர்விலாது வாசனக்ஷயஞ்செய்ய முடியாது; ஆதலின், முதலில் வாசனவடிவத்தைக் கூறவேண்டும். ஆண்டு, வாச னசொரூபம் ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளிச்செய்திருக்கின்றார்.

ஆ-சு. த்ருடபாவநயா த்யக்த பூர்வாபர விசாரணம் ।
யதாதாநம் பதார்த்தஸ்ய வாஸநா ஸா ப்ரகீர்த்திதா ॥

(பொ-ள்.) திடபாவனையால் முன்பின்னாராய்ச்சியின்றிப் பொருளைக் கவர்த லின் பெயர் வாசனையாம். ஈண்டு, தனது தேச வொழுக்கத்திலும் குல தரு மத்திலும் சுபாவத்திலும் தேசத்திலுள்ள தீயவுரை இனியவுரையினும் பிராணி கட்குள்ள அபினிவேசத்தின் பெயர் வாசனையாம். இது வாசனையின் பொதுவடிவ மாம். இப்போது சிறப்புவகையாற்கூறுவாம். வாசனை இருவகைத்து: ஒன்று சுத்த வாசனை, மற்றது அசுத்தவாசனை. அதில் மானமிலாமை தம்பமிலாமை முதலிய மேற்கூறப்படும் தெய்விகசம்பத்துச் சுத்தவாசனை யெனப்படும். அது தத்துவ ஞானத்தின் சாதனவடிவமாதலின் ஒருருவேயாம். மற்றைய மலினவாசனையோ மூவகைத்தாம்; உலகவாசனை, சாத்திரவாசனை, தேகவாசனை என்ப. அவற்றுள் இவ்வுலகம் எவ்வாற்ருலென்னை யிகழாதோ மற்றோ, புகழுமோ அவ்வாறொழுகு வேன் யான் என்னும் அமையாப்பொருளின் அபினிவேசம் உலகவாசனையெனப் படும். அவ்வுலகவாசனை தேடற்கரிதாம். என்னை, முன் இராமகிருஷ்ணர் முதலிய அவதாரங்களையும் உலகனைத்தும் புகழவில்லை. மற்றோ, சில துஷ்டர்கள் அவர்களை யும் இகழ்ந்திருக்கின்றார்கள். சாக்ஷாத் ஈசுரனையும் உலகனைத்தும் புகழவில்லை யெனின் இக்காலத்திய சிலர்களை உலகனைத்தும் புகழ்வது யாங்ஙனம்? மற்றோ, புக ழாது. ஆதலின், உலகவாசனை தேடற் கேலாமையானும் புருடார்த்தத்திற்கு உப யோகமின்மையானும் அது மலினமாமென்க. இரண்டாவது சாத்திரவாசனை மூவகைத்தாம்; பாடவியசனம், பலசாத்திரவியசனம், சாத்திரார்த்தாநுட்டான வியசனம் என்ப. அவற்றுள், பாடவியசனவடிவ சாத்திரவாசனையோ பாரத்துவா சற்குண்டாயிருந்தது. பலசாத்திரவியசனவடிவ சாத்திரவாசனையோ துருவாசற் குண்டாயிருந்தது. அநுட்டானவடிவ சாத்திரவாசனையோ நிதாகர்க்குண்டாயி ருந்தது. இம்மூவகை வாசனையும் பல கிலேசத்தோடு கூடியதினாலும் புருஷார்த் தத்திற்கு உபயோகமின்மையானும் அபிமானத்திற்கும் சன்மத்திற்கும் காரண

மாதலினாலும், இது உலகவாசனைபோன்று மலினமேயென்க. மூன்றாவது தேக வாசனையு மூவகைத்தாம். அவற்றுள், ஒன்று தேகத்தில் ஆன்மாவென்னும் பிராந்திவடிவமாம். இரண்டாவது குணாதானத்துவப்பிராந்திவடிவமாம். மூன்றாவதோ தோஷாபநயநவடிவமாம். அவற்றுள் முதலாவதோ உலகாயதர்களிடத்தும் அவரைத் தழுவிய இக்காலத்திய பலரிடத்தும் மிக விளக்கம். இரண்டாவது இருவகைத்தாம். லௌகிககுணந் தேடல், சாஸ்திரீயகுணந் தேடல் என. அவற்றுள் இனிய சத்தமுதலிய விஷயங்களைச் சம்பாதித்தல் லௌகிககுணாதானமாம். கங்கைநீராடல் சாலிக்கிராம தீர்த்த முதலியவைகளைச் சம்பாதித்தல் சாஸ்திரீய குணாதானமாம். இதுபோல் மூன்றாவதாகிய தோஷாபநயனம் இருவகைத்தாம். லௌகிகம் சாஸ்திரீயம் என. அவற்றுள் வைத்தியன் கூறிய ஔடதத்தால் சுரமுதலியவைகளை நிவிருத்திபண்ணல் லௌகிகமாம். சாத்திரோக்த ஸ்நாந ஆசமன முதலியவைகளால் அசௌச முதலியவைகளை நிவிருத்திபண்ணல் சாஸ்திரீயமாம். இம்மூவகையான தேகவாசனையும் பிராமாணிகமின்மையானும் செய்தற்கேலாததானும் புருஷார்த்தவுபயோகமிலாததானும் மறித்தும் பிறப்பிற்கேதுவாதலானும் மலினமாமென்பது சாஸ்திரங்களில் மிக விளக்கம். இவ்வாறு மூவகையான மலினவாசனையும் அவிவேகிகட்குக் கொள்ளற்பாலதாய்த் தோற்றும். அங்ஙனமாயினும் இம்மூன்றும் சிஞ்ஞாசுக்கட்கு ஞானமுண்டாவதில் விரோதியாம். வித்துவானுக்கு ஞானநிட்டைக்கு விரோதியாம். ஆதலின், சிஞ்ஞாசு ஞானியிருவராலும் ஞானமடைதற்பொருட்டும் ஞானநிட்டை யடைதற்பொருட்டும் இம்மூன்றுந் தள்ளத்தக்கனவாம். இத்துணை கூறியதால் பாகியவிஷயவாசனை மூன்றுங் கூறப்பட்டன. அந்தர் மலினவாசனையோ காமக்குரோதமுதலிய அசுர சம்பத்துவடிவமாம். அது சர்வானர்த்தத்திற்கும் மூலபூதமான மானசவாசனையெனப்படும். இதனால்ப்பொருள் பெறப்பட்டது.—உலகவாசனைமுதலிய பாகியவாசனை மூன்றும் அசுரசம்பத்துவடிவ அந்தர்வாசனை ஒன்றும், ஆகிய விந்நான்கையும் அதிகாரியானவன் சுத்தவாசனையாற் கெடுக்கவேண்டும். இதை ஸ்ரீ வசிட்டபகவானும் இராமச்சந்திரனைக்குறித்து அருளியிருக்கின்றார்.

ஆ-சு. ஊநவீவாஸநாஃ வலிவடும் தஜ்ஜாவிஷய வாஸநாஃ ।
மைத்ர்யாதிவாஸநா ராமக்ருஹாணாமலவாஸநாஃ ॥

(பொ-ள்.) ஹே ராமச்சந்திர! விஷயவாசனையெனப்படும் உலகவாசனை முதலிய மூன்று மலின வாசனைகளையும் காமக்குரோதமுதலிய அசுரசம்பத்துவடிவ மலினமாகிய மானசவாசனையையுந்தள்ளி மைத்திரி கருணை முதிதைமுதலிய சுத்த வாசனையைக் கொள்ளுதி. அல்லது இச்சுலோகத்திலுள்ள விஷயவாசனை மானசீ வாசனை என்னும் இருபதத்திற்கும் வேறோரர்த்தஞ்செய்க. சத்தமுதலிய ஐந்தின் பெயர் விஷயமாம்; அவைகட்கு இரண்டவஸ்தையாம். புஜ்யமானவஸ்தையொன்று காம்யமானவஸ்தையொன்று. அவற்றுள், போகத்தின் விஷயத்தன்மை புஜ்யமானத்தன்மையாம். காமத்தின் விடயத்தன்மை காமியமானத்தன்மையாம். ஆண்டு, அச்சத்த முதலிய விஷயங்களின் புஜ்யமானத்துவதசையிலுண்டாகிய சமஸ்காரத்தின் பெயர் விஷய வாசனையாம். காம்யமானத்துவதசையிலுண்டாகிய சமஸ்காரத்தின் பெயர் மானச வாசனையாம். இப்பட்சத்தில் கூறிப்போந்த நால்வகை வாசனைகளும் இவ்விரண்டிலடங்கும்:—பாகிய, ஆந்தர இருவகை வாசனைகளின் வேறு யொருவாசனையின்மையின் சர்வ வாசனைகளும் இவ்விரண்டிலடங்கும். ஆண்டு, மலினவாசனைகளின் விருத்தமாகிய மைத்திரி கருணை முதலிய சுத்த வாசனை தோன்றலே மலினவாசனையைத் தள்ளுவதாம். ஸ்ரீ பதஞ்சலிபகவானால் யோகசூத்திரத்திற் கூறப்பட்ட அம்மைத்திரி முதலிய சுத்த வாசனைகள் முன்னர்ச் சுருக்கமாய்க்கூறினும். ஆயினும் முற்கூறியவர்த்தத்தைத் திடப்படுத்து

வான் மறித்துமவைகளின் சொரூபத்தைக்கூறுவாம். ஆண்டு, இவனது சித்தத்தை இராக, துவேஷ, புண்ணிய, அபுண்ணியமென்னும் நான்குமே மலினப்படுத்துகின்றன. அதில் ஒரு சுகத்தை யநுபவித்தபின்னர் அன்னினைவால் அச்சுகத்தின் சஜாதீயமாகிய வேறு சுகத்திலும் அதன் சாதனத்திலும் சாதனத்தோடு சர்வ விஷய சுகங்களும் எனக்குக் கிடைக்கவேண்டும். என்னும் அந்தக்கரணத்தின் ராசஸவிருத்தி விசேஷவடிவ திருஷ்ணையின்பெயர் இராகமாம். ஆண்டு அந்தச் சர்வ சுகத்தையுங்கொடுக்கும் திருஷ்டாதிருஷ்டவடிவ காரண சாமக்கிரியையின்மையின் அதைச் சம்பாதிப்பது மிகவும் முடியாததாம். ஆதலின், விஷயப்பிராப்தியின்றிய அவ்விராகம் இவனதுள்ளத்தை மலினப்படுத்துகின்றது. இவ்வதிகாரி சர்வ சுகிப்பிராணிகளிடத்தும் இவ்வனைவரும் எம்மவரே என்னும் மைத்திரியைச் சம்பாதிக்கின் அவர்களுடைய சுகம் தன்னுடையதே என்பது பெறப்படுகின்றது. இவ்வாறு பாவனைபண்ணும் புருஷனது சித்தத்தில் அவ்விராகம் நீங்கிவிடுகின்றது. ஒரு ராசன் தான் இராச்சியத்தினின்று வைராக்கியத்தையடைந்தும் தனது புத்திரன் முதலியோரது இராச்சியத்தையே தனது இராச்சியமாய் அபிமானிப்பதுபோல அவனும் தனக்குச் சுகவிஷயக ராகமின்றேனும் வேறுபிராணிகளின் சுகத்தையே தனதாயபிமானிக்கின்றான். இவ்வாறு மைத்திரிபாவனையால் இராகம் நீங்கின் மழை யோய்ந்தபின்னர்த் தண்ணீர் சுத்தமாவதுபோல அச்சித்தம் சுத்தமாமென்க. ஒரு துக்கத்தை யநுபவித்த பின்னர் அதன் ஸ்மரணத்தால் அத்துக்கத்தின் சஜாதீயமாகிய வேறு துக்கத்திலும் அதன் சாதனத்திலும் இச்சாதன சகித சர்வ துக்கமும் எனக்கு ஓர்போதும் கிடைக்காதாகுக என்னும் தமங்கலந்த ரசோகுண பரிணமவடிவ அந்தக்கரணவிருத்தி விசேடத்தின் பெயர் துவேஷமாம். ஆண்டு, துக்ககாரணமாகிய சத்துரு புலி முதலியன உள்ளனவாகவே அத்துக்கத்தை நீக்கமுடியாது. அச்சர்வ துக்ககாரணத்தையுங் கெடுப்பதில் சமர்த்த ரொருவருமிலர் ஆதலின், அத்துவேஷம் இவனதுள்ளத்தைக் கொதிக்கும்படிசெய்யும். இவ்வதிகாரி சர்வ துக்கிப் பிராணிகளிடத்தும் தன்னைப்போன்று அவர்கட்கும் இத்துக்கம் வாராதொழிக என்னுங் கருணையைச்செய்யின், இவனுக்குச் சத்துரு முதலியோர்களிடத்துள்ள துவேஷம் நிவிருத்தியாகின்றது. அதன்பின் இவ்வதிகாரியினது சித்தம் நிர்மலமாகின்றது. இது ஸ்மிருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌯𑌥𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌭𑍀𑌷𑍍𑌟𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌤𑍇 𑌤𑌥𑌾 ।
𑌆𑌤𑍍𑌮𑍌𑌪𑌮𑍍𑌯𑍇𑌨 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌦𑌯𑌾𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌾𑌧𑌵𑌃 ॥

(பொ-ள்.) இவனுக்குத் தனது பிராணன் மிகப் பிரியமாவதுபோலச் சர்வ பிராணிகட்கும் தனது தனது பிராணன் மிகப் பிரியமாம் என விசாரித்து மேலாகிய மகாத்துமாக்கள் தனதான்மாவைப்போலச் சர்வ பிராணிகளிடத்துந் தயைபண்ணுவார்கள். இவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவான் இங்கே '𑌆𑌤𑍍𑌮𑍌𑌪𑌮𑍍𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌯𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨' என்னுஞ் சுலோகத்தில் திருவாய்மலர்ந்தருளினர் என்க இப்பிராணிகள் இயல்பாய்ப் புண்ணிய கருமத்தை அநுட்டியாது பாவ கருமத்தையே அநுஷ்டிக்கின்றார்கள். இது சாத்திரத்திலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌪𑍁𑌣𑍍𑌯𑌸𑍍𑌯 𑌫𑌲𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌨𑍇𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 ।
𑌨 𑌪𑌾𑌪𑌫𑌲𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌪𑌾𑌪𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌤𑍍𑌨𑌤𑌃 ॥

(பொ-ள்.) இம்மக்கள் புண்ணியகருமத்தின் சுகவடிவ பலனை யிச்சிக்கின்றார்கள்; ஆனாலோ அப்புண்ணியகருமத்தை யிச்சிப்பதில்லை பாவகருமத்தின் துக்கவடிவ பலத்தை யிச்சிப்பதில்லை. அப்பாவகருமத்தையே முயற்சியோடு செய்கின்றார்கள். ஆண்டுப் புண்ணியகருமத்தைச் செய்யாதவனுக்கும் பாவகருமத்தைச் செய்தவனுக்கும் பச்சாத்தாபம் பிராப்தியாம். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. [illegible] ॥

(பொ-ள்.) புண்ணிய கருமத்தைச் செய்யாதவன் வேறு புண்ணியவான் சுகியாயிருப்பதைப்பார்த்து இவ்வாறு சுகங்கொடுக்கும் புண்ணிய கருமத்தை யான் எக்காரணத்தாற் செய்யாதொழித்தேன் எனப் பச்சாத்தாபப்படுவன். ஆதலின், புண்ணியகருமத்தைச் செய்யாதவனுக்குப் பச்சாத்தாபம் பிராப்தியாம். பாவ கருமத்தைச் செய்தவன் அதன் பலமாகிய துக்கத்தை யடைந்தபோது இத் தன்மைய துக்கத்தைக்கொடுக்கும் பாவ கருமத்தை யான் எக்காரணத்தாற் செய்தேனோ எனப் பச்சாத்தாபமடைகிறான். ஆதலின், பாவகருமம்பச்சாத்தாப மடைவிப்பதாம். இவ்வதிகாரி புண்ணியவானிடத்தில் முதிதையைச் செய்யின் அந்தச் சுத்தவாசனையுடையவன்தானே சாதனமாய அசுக்கில கிருஷ்ணமெனப் பெயரிய புண்ணிய விசேடத்திற் பிரவிர்த்திக்கின்றான். இது யோகசூத்திரத்தில் ஸ்ரீ பதஞ்சலிபகவானாலுங் கூறப்பட்டிருக்கிறது. ‘ கர்மாஶுக்லாக்ருஷ்ணம் யோகிநஸ்த்ரிவிதமிதரேஷாம் ’ என யோகி புருஷர்களின் கருமமோ அசுக்கில கிருஷ்ணமாம்; ஏனையோர்க்குச் சுக்கிலம், கிருஷ்ணம். சுக்கிலகிருஷ்ணம் எனக் கருமம் மூவகைத்தாம். அவற்றுள், கேவல மனவாக்குகளாற்செய்யப்பட்டதாயும் சுகவடிவ பல மொன்றையே தருவதாயுமுள்ள கருமம் சுக்கிலகருமமெனப்படும். அத்தன்மைய சுக்கிலகருமம் வேதாத்தியயன பாராயணனாகிய பிரஹ்மசாரிக்கும் தவமுளோனுக்கு முளதாம். கேவலந் துக்கத்தையே தருங் கருமம் கிருஷ்ணகருமமெனப்படும். அத்தன்மைய கருமமோ துஷ்டர்கட்குளதாம். சுகதுக்கமிரண்டையுங் கலந்துகொடுப்பதாயும் நெல்யவ முதலிய பாகிய சாதனத்திலுண்டாவதுமாகிய கருமம் சுக்கில கிருஷ்ணமெனப்படும். அதுவோ சோமயாகமுதலியவற்றிற் பிரவிருத்தித்தவனுக்குளதாம். என்னை, சோமயாகத்தில் நெற்குத்தன் முதலியதால் எறும்பு முதலிய பிராணிகட்குத் துக்கமுண்டாகிறது. தட்சிணைகொடுத்தன் முதலியதால் அந்தணர் முதலியோர்க்குச் சந்தோஷமுண்டாகின்றது. ஆதலின், அக்கருமம் சுக்கிலகிருஷ்ணமெனப்படும். இம்மூவகைத்தான கருமங்களும் யோகியலாதோரிடத்துள்ளன. சந்நியாசியாகிய யோகியோ நென் முதலிய பாகிய சாதனங்களாலமையப்பட்ட யாகாதிகளைத் தியாகம்பண்ணினவனாதலின், அவனுக்குச் சுக்கில கிருஷ்ண கருமமும் உண்டாவதில்லை. அவித்தை முதலிய சர்வ கிலேசங்களுமில்லாமையின் கிருஷ்ணகருமமும் இன்றாம். யோக சன்னிய தருமபலத்தை யிச்சியாமல் அத்தருமத்தை ஈசுரார்ப்பணஞ்செய்ததால் அவனுக்குச் சுக்கிலகருமமுமின்றாம். மற்றோ, சித்த சுத்திவாயிலாகவும் விவேகக்கியாதிவாயிலாகவும் மோட்சவடிவமாகிய ஒரே பலனைத் தருவதான அசுக்கிலகிருஷ்ணமெனப் பெயரிய புண்ணியகருமமுண்டாகின்றது. அன்றியும் இவ்வதிகாரி பாபிகளிடத்தில் உபேட்சை பண்ணித்தானும் அவ்வாசனையுடையனாய்ப் பாவகருமத்தினின்றும் நிவிருத்தியாகின்றான். இதனாலிப்பொருள் பெறப்பட்டது:—புண்ணியவானிடத்தில் முதிதையும் பாபியிடத்தில் உபேட்சையுஞ் செய்பவனுக்குப் புண்ணியபாவகருமங்களைச் செய்யாமை செய்தலாகிய நிமித்தங்களாலுண்டாம் பச்சாத்தாபமுண்டாவதில்லை. அஃதிலதாகவே சித்தம் நிர்மலமாகின்றதென்க. அல்லது, இவ்வாறு சுகிப் பிராணிகளிடத்தில் மைத்திரி பாவனை பண்ணுவோனுக்குக் கேவலம் இராகமொன்றே நிவிருத்தியாவதில்லை; மற்றோ, அசூயை ஈரிஷை முதலியனவும் நிவிருத்தியாகின்றன. ஆண்டுப் பிறர் குணத்திற்றோடத்தை வெளிப்படுத்தல் அசூயையாம் பிறர் குணத்தைச் சகிக்காமை ஈரிஷையாம் மைத்திரி பாவனை வசத்தால் இவ்வதிகாரி சர்வப் பிராணிகளையும் தனதாயபிமானிக்குங்கால் அவனுக்குப் பிறர் குணத்தின் அசூயை ஈரிஷைகளும் ஓர்போது மின்றாம் இவ்வாறு துக்கிப் பிராணிகளிடத்தில் கருணையைப் பாவிப்பவனுக்குச் சத்துரு முதலியவைகளை வதஞ்செய்யப்பட்ட துவேஷம்

நீங்கும்போது பிறர் துக்கத்தையும் தனது சுகத்தையும் பார்த்துண்டாம் தர்ப்ப மும் நிவிருத்தியாகின்றது. இவ்வாறே ஏனையதோஷ நீக்கமுமறிந்துகொள்க. இத ஞலிப்பொருள் பெறப்பட்டது. இவ்வதிகாரி சிவன்முத்திச் சுகத்தின்பொருட்டுத் தத்துவஞானம் மனோ நாசம் வாசனக்ஷயம் என்பவற்றை அப்பியாசம் பண்ண வேண்டும். ஆண்டு, எவ்வாற்ருலேனும் மறித்து மறித்துத் தத்துவத்தை ஸ்மரணை பண்ணல் தத்துவஞானப்பியாசமாம். இது பிறநூலினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌤𑌚𑍍𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑌂 𑌤𑌤𑍍𑌕𑌥𑌨𑌮𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌬𑍋𑌧𑌨𑌮𑍍 ।
𑌏𑌤𑌦𑍇𑌕𑌪𑌰𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 ॥ (1)
𑌸𑌰𑍍𑌗𑌾𑌦𑌾𑌵𑍇𑌵 𑌨𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 𑌤𑌤𑍍𑌸𑌦𑌾 ।
𑌇𑌦𑌂 𑌜𑌗𑌦𑌹𑌂 𑌚𑍇𑌤𑌿 𑌬𑍋𑌧𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌪𑌰𑌂 ॥ (2)

(பொ-ள்.) அத்துவிதீயப் பிரஹ்மத்தை அடிக்கடி சிந்தித்தலும் சொல்லு தலும் ஒன்றற்கொன்று போதித்தலும் நிரந்தரம் அப் பிரஹ்மபரத்தன்மை என் பவற்றைப் பிரஹ்மாப்பியாசமெனக் கூறுவர். (1) காணப்படு மிவ்வுலகம் சிருட்டி யின் முற்காலத்திற் ருேன்றவில்லையாதலின், முக்காலத்துமில்லை. சுயஞ்சோதியும் அதிட்டானவான்மாவுமாகிய நான் எப்போதுமுள்ளவன் என நிரந்தரம் விசாரம் பண்ணுவதை ஞானப்பியாசமெனக் கூறுவர். (2) காணப்படு முலகத்தோற்றத் திற்கு விரோதியாகிய யோகாப்பியாசத்தை மனோநிரோதமெனக் கூறுவர். இஃ தன்னியநூலினும் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌭𑌾𑌵𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑍌 𑌜𑍍𑌞𑌾𑌤𑍃𑌜𑍍𑌞𑍇𑌯𑌸𑍍𑌯 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑌃 ।
𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌰𑍍𑌯𑌤𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇 𑌤𑍇𑌽𑌪𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌿𑌨𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 ॥

(பொ-ள்.) ஞாதாஞேயவஸ்துக்களின் மித்தியாத்துவ புத்தியின் பெயர் அபாவசம்பத்தியாம்; அவ்விரண்டின் வடிவத்தோற்றமின்மை அத்தியந்தாபாவ சம்பத்தியாம். அதன்பொருட்டு யோக சாத்திரங்களால் முயற்சிபண்ணுபவன் மனோநிரோதாப்பியாசமுடையவனெனப்படுகிருன். திருசியப்பிரபஞ்சத்தின் அசம் பவஞானத்தால் இராகத்துவேஷாதிகளைக் கேடடையச்செய்தல் வாசனக்ஷயாப்பி யாசமெனக் கூறுவர். இஃதன்னியசாத்திரத்திலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌦𑍃𑌶𑍍𑌯𑌾𑌸𑌂𑌭𑌵𑌬𑍋𑌧𑍇𑌨 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿𑌤𑌾𑌨𑌵𑍇 ।
𑌰𑌤𑌿𑌰𑍍𑌬𑌲𑍋𑌦𑌿𑌤𑌾 𑌯𑌾𑌸𑍌 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌃 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

(பொ-ள்.) இக்காணப்படு முலகத்தின் அசம்பவஞானத்தால் இராகத்து வேஷாதிகளை க்ஷீணஞ்செய்வதில் உண்டாகின்ற திடமான ரதி பிரஹ்மாப்பி யாசமெனப்படுகின்றது. இதனுலிப்பொருள் பெறப்பட்டது, தத்துவஞான முத லிய மூன்றப்பியாசங்களாலும் இராகத்துவேஷ முதலிய விகாரங்களற்று சுக துக்காதிகளின் சமதிருஷ்டியுடையவன் பரமயோகியாம்; விஷமதிருஷ்டியுடைய வன் தத்துவஞானியேனும் அபரமயோகியாம் என்க. (32)

(அ-கை.) ஆண்டு, ஸ்ரீ பகவான் விரிவாய்க் கூறியருளிய மனோநிரோதத் தைச் செய்தவனுய் விஞவுகின்ருன்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ।

சு-ம். 𑌯𑍋𑌽𑌯𑌂 𑌯𑍋𑌗𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 𑌸𑌾𑌮𑍍𑌯𑍇𑌨 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨 ।
𑌏𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚𑌞𑍍𑌚𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌮𑍍 ॥ (33)

ப-ம். 3 ய: 4 அயம் 5 யோக: 2 த்வயா 7 ப்ரோக்த: 6 ஸாம்யேந 1 மதுஸூதந 8 ஏதஸ்ய 11 அஹம் 12 ந 13 பஶ்யாமி 14 சஞ்சலத்வாத் 10 ஸ்திதிம் 9 ஸ்திராம்.

(அ-ம்.) ஹே மதுசூதன! நீர் சமத்துவத்தன்மையாற் கூறியருளிய யோகத்தின் ஸ்திர நிலையை மனத்தின் அதி சஞ்சலத்தால் நான் பார்க்கின்றேனில்லை.

(வி-ம்.) ஹே மதுசூதன! அதாவது, ஹே சர்வ வைதிக சம்பிரதாயப் பிரவர்த்தக சர்வஞ்ஞேசுரனுய நீ எல்லாவிடத்தும் சமதிருஷ்டிவடிவ மேலான யோகத்தைச் சமபாவத்தாற் கூறியருளினை; அதாவது, சித்தத்திலுள்ள விஷம திருஷ்டிக்குக் காரணமாகிய இராகத்துவேஷாதிகளின் நிராகரணத்தால் யோகத்தைக் கூறியருளினை. அச்சர்வ மனோவிர்த்தி நிரோதவடிவ யோகத்தின் நெடுநாளிருக்கப்பட்ட நிலையை அர்ச்சுனனாகிய யான் பார்த்திலேன். அதாவது, அத்தன்மைய சர்வவிருத்தி நிரோதவடிவயோகம் நெடுநாள்வரையினிலைக்கும் என்னும் சம்பாவனை எனக்குண்டாகவில்லை.

சங்கை :—ஹே அர்ச்சுன! அத்தன்மைய சம்பாவனை உனக்கு எக்காரணத்தாலுண்டாகவில்லை ?

சமாதானம் :—ஹே பகவன்! இம்மனம் மிகச் சஞ்சலமானது ஒரு க்ஷண மாத்திரமேனும் நிலைப்பதில்லையாதலின் அத்தன்மைய சம்பாவனை எனக்குண்டாக வில்லை. (33)

(அ-கை.) அர்ச்சுனன் இப்போது அம்மனத்தின் சஞ்சல சுபாவத்தைச் சர்வவுலக சாத்திரப் பிரசித்தமென்றுபபாதனஞ்செய்கின்றான்.

சு-ம். சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥ (34)

ப-ம். 4 சஞ்சலம் 3 ஹி 2 மந: 1 க்ருஷ்ண 5 ப்ரமாதி 6 பலவத் 7 த்ருடம் 8 தஸ்ய 10 அஹம் 9 நிக்ரஹம் 14 மந்யே 11 வாயோ: 12 இவ 13 ஸுதுஷ்கரம்.

(அ-ம்.) ஹே கிருஷ்ண! பிரசித்தமான சஞ்சலமும் பிரமாதியும் பலவானுந் திடமுமுடைய இம்மனத்தின் நிக்கிரகத்தை நான் வாயுவின் நிக்கிரகம்போல மிகக் கடினமென்றெண்ணுகிறேன்.

(வி-ம்.) ஹே கிருஷ்ணபகவன்! இம்மனஞ் சஞ்சலமானது. அதாவது, மிகுந்த சலன சுபாவமுடையது, ஒருபோதும் நிலைப்படுவதில்லை; இஃதெல்லாவுலகத்திலும் அநுபவசித்தமாம், அஃதல்லாமலும் பிரமாதியுமாம். ஈண்டு, தேகேந்திரியங்களைக் கலக்கமடையச் செய்யுஞ் சுபாவம் பிரமாதியாம். அதாவது, இம்மனம் தேகேந்திரியங்களைக் கலக்கமடையச் செய்வதாதலின், அவைகளின் விவசகாரணமாதலின் பிரமாதியாம், அஃதல்லாமலும் பலமுடையதுமாம். அதாவது, அபிப்பிராயப்பட்ட விஷயத்தினின்றும் இம்மனமெவ்வுபாயத்தானுந் திருப்ப முடியாததாம். இவ்வுலகத்திலும் ஒரு காரியத்தில் முயன்றவனை அதினின்றொருவரானுந் திருப்ப முடியாததாகில் அவன் பலமுடையானெனப் படுவதேபோல மனமுமாம். அங்ஙனமே இம்மனந் திடமுடையதுமாம், அதாவது பலபிறப்பின் பல்லாயிரம் வாசனைகளோடு கூடியதாதலின் பேதித்தற்கு முடியாததாம். அல்லது தந்துநாகம்போலச் சேதிக்கப்படாததால் திடமாம். ஈண்டு, நாகபாசத்தின்பெயர் தந்துநாகமாம், அல்லது நீர் மடுவிலுள்ள பிராணி விசேடமாம். அதைக்குர்ச்சர முதலிய தேசங்களில் தாந்தனீயெனக் கூறுவர். ஈண்டு அர்ச்சுனன் கூறிய சஞ்

சலம் பிரமாதி பலவத் திருடம் என்னும் நான்கு மனோ விசேடங்களில் முன்முன் விசேஷண சித்தியில் பிற்பின் விசேஷணங் காரணமாம். இம்மனம் திடமாதலின் பலவான், ஆதலினால் பிரமாதி, ஆதலினால் சஞ்சலம். மிக்க மதமுடைய காட்டானையை அடக்கல் மிகக் கடினமாபோல இம்மன மடக்கலுமாம். அதாவது சர்வ விருத்திகளற்றதாய்ச் செய்வது மிகக் கடினமென்றுணர்கின்றேன். அதாவது எவ்வாற்றாலேனும் அடக்கமுடியாதென்றுணர்கின்றேன்; அதில் திருஷ்டாந்தங்கூறுகின்றான். 'வாயோரிவ' என; ஹே பகவன் வானிலுலாவிக்கொண்டிருக்குங் காற்றைச்சலிப்பின்றி யடக்கல் முடியாததேபோல எப்போதும் சலித்துக்கொண்டிருக்கு மனதைச் சலிப்பற வடக்கல் முடியாததாம். இது பிறநூலின்கண்ணுங்கூறப்பட்டுளது.

ஆ-சு.　　அபவ்ஸ்யாநாநஹதஃ ஸுமெரு ரந்மூநாகவி ।
　　அபிவஹ்யஸநாதாயொ விஷஃஸ்ரிதந்நிமநஹஃ ॥

(பொ-ள்.) சாதுவே! பெருங்கடலைக் குடித்தலினும், மேரு மலையை அடியோடு பெயர்த்தலினும், தீயை யுண்ணலினும், இம்மனத்தையடக்கல் மிகக் கடினமாம் ஈண்டு, ஹே கிருஷ்ண என்னும் சம்போதனையால் அர்ச்சுனன் ஸ்ரீபகவானைக்குறித்து இப்பொருட் சூசிப்பித்தான். தோஷங்களை கிருஷதி நிவாரயதி ஆதலின் கிருஷ்ணன் அல்லது புருடார்த்தங்களை ஆகர்ஷதி பிராபயதி ஆதலின் கிருஷ்ணன்; பொருளிதுவாம்: அன்பர்களின் நீக்கமுடியாத தோஷத்தை நிவிருத்திபண்ணுவதனால் அல்லது அன்பர்கட்கு எவ்வாற்றானுமடையக்கூடாத புருடார்த்தத்தைக் கொடுப்பதினால் கிருஷ்ணன் எனப்படுவன். தாங்களத்தன்மைய பெயருடையாதலின், தங்களுடைய பெயரைப்பொருளுடையதாக்குதற்பொருட்டு என் மனோசஞ்சலம் நீக்கொணாததேனும் தாங்களவசியமாய் நீக்கி யருளுவீர். அங்ஙனமே இச்சமாதிச் சுகம் கொடுக்கொணாததேனும் தாங்களவசிமாய்க் கொடுத்தருளுவீர், ஈண்டு, அர்ச்சுனனுக்கிது கருத்தாம். தத்துவஞான முண்டாயினும் பிராரப்தகருமத்தை நுகர்தற்பொருட்டுச் சீவித்திருக்கும் வித்துவானுக்குக் கருத்திருத்துவ போக்திருத்துவ சுகதுக்க ராகத்வேஷ முதலிய சித்த தருமங்கள் பாதிதானுவிருத்தியானுள்ளதாயினும், கிலேச காரணங்களாதலின் பந்தவடிவமேயாம். அன்றியும், சர்வ சித்த விருத்தியின் நிரோதவடிவ யோகத்தால் பந்த நிவிருத்திவடிவ சீவன் முத்தியைத் தேடிக்கொள்வதால் அவ்வித்துவான் பரம யோகியெனப்படுவன் எனத் தாங்கள் முற்கூறியருளிய வர்த்தத்தில் யான் கூறுவதாவது, அப்பந்தநிவிருத்தி சாக்ஷி சேதனத்திற்கா, அல்லது சித்தத்திற்கா; முதலாவதெனின் பொருந்தாது, என்னை, முன்னுண்டாகிய தத்துவஞானமே அச்சாக்ஷியினது பந்தத்தை நிவிருத்திக்கில் அதில் யோகத்திற்குச் சிறிதளவு முபயோகமின்றாம்; இரண்டாவதெனின், அதுவுமமையாது. என்னை, அப்பந்தம் சாக்ஷி சேதனத்திலாரோபிதமாவதுபோலச்சித்தத்திலுமாரோபிதமாகில்நிவிருத்திகூடும்; மற்றோ, அப்பந்தம் சித்தத்தின் சுபாவமாம். ஆரோபிதமன்று. எதற்கெதுசுபாவமோ அது ஆயிரமுபாயத்தானு மகலா. எங்ஙனம் நீரின்றண்மை தீயின் வெப்பம் பலவுபாயத்தானும் நீரினின்றும், தீயினின்றும் நீக்கமுடியாததுபோலச் சித்தத்தின் சுபாவமும் நீக்கொணாதாம். சாஸ்திரத்தில் சித்தம் க்ஷணபரிணாமியெனக் கூறப்பட்டிருக்கிறது. 'ப்ரதிக்ஷணபரிணாமிநோஹிபாவா ருதேசிதிஶக்தேஃ' சைதன்யத்தினும் வேறாகிய அனான்ம வஸ்துக்களனைத்தும் க்ஷணபரிணாமத்தையடையும் அல்லது, பிராரப்தகருமவடிவப் பிரதிபந்தகமுளதாகவே பந்தநிவிருத்தி கூடாது. என்னை, அஞ்ஞான மஞ்ஞான காரியங்களைக் கெடுக்கப்புகுந்த தத்துவஞானத்தைப் பிராரப்தகருமந் தடைப்படுத்தித் தனது போகத்தைக் கொடுத்தற்பொருட்டு இத்தேகாதி சமுதாயத்தை நிலைப்படுத்துகின்றது; அதாவது, அச்சங்காதத்

தை நிவிருத்தியாகவிடுவதில்லை. சித்தவிருத்தியன்றி அப்பிராரப்தகருமம் சுகதுக்கவடிவ தனது பலத்தைச் சம்பாதியாது. சுகாகாரமாகவேனும் துக்காகாரமாகவேனும் உண்டாகுஞ் சித்தவிருத்தியைச் சாஸ்திரத்தில் போகமெனக் கூறுவர். அஃதிலாது சுகதுக்க போகமமையாது. ஆதலின், யோகத்தால் சுபாவமான சித்த பரிணாமத்தின் அடக்கம் ஏகதேசத்திலுண்டாயினு முண்டாகும். அங்ஙனமாயினும், தத்துவஞானத்திலும் பிரபலமானதுபோல யோகத்தினும் பிராரப்தகருமம் பலமுடையதாம்; அஃதுள்ளத்திலுளதாகவே சலனத்தன்மையு மவசியமேயாம். ஆதலின், யோகத்தால் சித்த சஞ்சலத்தை நீக்குவது கூடாதென்று எனதஞ்ஞானத்தாலுணர்கின்றேன். அங்ஙனமாகவே தாங்கள் தனதான்மாவைப்போல எவ்விடத்துஞ் சமமாய்ப்பார்ப்பவன் பரமயோகியெனத் திருவாய்மலர்ந்தருளியது அமையாது. இவ்விரண்டு சுலோகங்களான் அர்ச்சுனன் சங்கித்தனன் என்க. (34)

(அ-கை.) இப்போது அவ்வர்ச்சுனன் சங்கையை ஸ்ரீபகவான் நிவிருத்தித்தருளுகின்றார்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 .

சு-ம். 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌂 ।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 ॥ (35)

ப-ம். 5 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 1 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 2 𑌮𑌨𑌃 3 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 4 𑌚𑌲𑌂 8 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 6 𑌤𑍁 7 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 10 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 9 𑌚 11 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே மஹாபாஹோ! இம்மனம் அடக்கற்கரிதென்பதும் சஞ்சலமென்பதும் உண்மையாயினும் கௌந்தேய! அப்பியாச வைராக்கியங்களால் நிக்கிரகம்பண்ணல்கூடும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உனது வாக்கால் உனது சித்தசரிதம் நன்குணர்ந்தேன், ஆனாலோ நீ இம்மன நிக்கிரகம்பண்ணுவதில் சமர்த்தன் என அர்ச்சுனனைச் சந்தோஷப்படுத்துவான் ஸ்ரீபகவான் அர்ச்சுனனை விளித்தருளுகின்றார். ஹே மஹாபாஹோவென நேரே மகாதேவனோடும் போர்புரிந்ததால் மகத்தாகிய தோள்களையுடையவன் மகாபாகுவாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்தில் நிரதிசய வுத்கிருஷ்டத்தன்மையைக் குறிப்பித்தருளினர். அதாவது, அத்தன்மையனாகிய நீ இம்மனமடக்குவதில் அவசியமாய்ச் சமர்த்தனாகுவை என்பதாம். நீ முன்னர் மனம் துர்நிக்கிரகமென்றும் அதாவது, பிராரப்தகருமப் பிரபலத்தால் அடக்கமிலா மனத்தோனுக்குக் கஷ்டத்தானும் மனோநிக்கிரக முடியாதெனவும் சுபாவமாகவே சஞ்சலமெனவும் கூறினை. முற்கூறிய பிரமாதி பலவத் திருடம் என்னும் விசேஷணங்களை ஒன்றுபடுத்தி ஈண்டு துர்நிக்கிரகம் எனக் கூறியருளினர். நீ கூறியதில் சிறிதளவும் ஐயமில்லை. அதாவது நீ கூறியதுண்மையே அங்ஙனமாயினும் அடக்கமுள மனத்தோன் சமாதி மாத்திரவடிவ உபாயத்தானும், யோகியானவன் அப்பியாச வைராக்கியவடிவ உபாயங்களானும் மனநிக்கிரகம்பண்ணுவன். அதாவது, மனதைச் சர்வ விருத்திகளுமற்றதாய்ச் செய்வன். ஈண்டு, மனநிரோதம் பண்ணாத அடக்கமிலா மனத்தோனின் மனநிரோதம்பண்ணும் அடக்கமுள மனத்தோன் விசேஷமுடையன் என்றுணர்த்தியருளற்பொருட்டுச் சுலோகத்தில் 'து' என்னுஞ் சத்தமும் மன நிக்கிரகத்தில் அப்பியாச வைராக்கியங்களின் சமுச்சயமுணர்த்துவான் 'ச' என்னுஞ் சத்தமும் கூறியருளினர். அன்றியும், ஹே கௌந்தேய என்னுஞ் சம்போதனத்தால் எனது தந்தையின் சகோதரி புத்திரனானதால் யான் உனக்கு அவசியம் சுகத்தையே கொடுப்பேன் எனக் குறிப்பித்தருளினர். ஈண்டுச் சுலோகத்தின் முதற்பாதியால் சித்தத்

தின் அட நிக்கிரகங் கூடாதென்பதைக் கூறியருளினர். இரண்டாவதுபாதியால் சித்தத்தின் கிரமநிக்கிரகங் கூடுமென்றருளினர் ஈண்டு ஸ்ரீபகவானுக்கிது கருத்தாம்:—மனநிரோதம் இருவகைத்தாம், அடநிக்கிரகம், கிரமநிக்கிரகம் என. ஆண்டு, ஞானேந்திரியங்களும் கருமேந்திரியங்களும் கோளகமாத்திர நிரோதத்தால் அடமாய் நிக்கிரகப்படுவனபோல மனதையும் அடமாய் நிக்கிரகம்பண்ணுவேன் என்னும் பிராந்தி மூடனுக்குண்டாம்; ஆனாலோ இந்திரியங்களைப்போல மனத்தின் அடநிக்கிரகங்கூடாது. என்னை, மனமிருத்தற்கிடம் இருதயமாம், அதை நிரோதித்தற் கேலாமையின் கிரமமாயடக்கலே உசிதமாம். இது ஸ்ரீவசிஷ்டபகவானாலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌉𑌪𑌵𑌿𑌶𑍍𑌯𑍋𑌪 𑌵𑌿𑌶𑍍𑌯𑍈𑌵 𑌚𑌿𑌤𑍍𑌤𑌜𑍍𑌞𑍇𑌨 𑌮𑍁𑌹𑍁𑌰𑍍𑌮𑍁𑌹𑍁𑌃 ।
𑌨𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 𑌮𑌨𑍋𑌜𑍇𑌤𑍁𑌂 𑌵𑌿𑌨𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌿 𑌮𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌾𑌮𑍍 ॥ (1)

𑌅𑌂𑌕𑍁𑌶𑍇𑌨 𑌵𑌿𑌨𑌾𑌮𑌤𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾𑌦𑍁𑌷𑍍𑌟 𑌮𑌤𑌂𑌗𑌜𑌃 ।
𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌿𑌗𑌮𑌃 𑌸𑌾𑌧𑍁𑌸𑌂𑌗𑌮 𑌏𑌵𑌚 ॥ (2)

𑌵𑌾𑌸𑌨𑌾𑌸𑌂 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌪𑌂𑌦 𑌨𑌿𑌰𑍋𑌧𑌨𑌂 ।
𑌏𑌤𑌾𑌸𑍍𑌤𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌯𑌃 𑌪𑍁𑌷𑍍𑌟𑌾𑌃𑌸𑌨𑍍𑌤𑌿 𑌚𑌿𑌤𑍍𑌤𑌜𑌯𑍇𑌕𑌿𑌲 ॥ (3)

𑌸𑌤𑍀𑌷𑍁𑌯𑍁𑌕𑍍𑌤𑌿𑌷𑍍𑌵𑍇𑌤𑌾𑌸𑍁 𑌹𑌠𑌾𑌨𑍍𑌨𑌿𑌯𑌮𑌯𑌨𑍍𑌤𑌿𑌯𑍇 ।
𑌚𑍇𑌤𑌸𑍍𑌤𑍇𑌦𑍀𑌪 𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌿𑌨𑌿𑌘𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌤𑌮𑍋𑌂𑌜𑌨𑍈𑌃 ॥ (4)

(பொ-ள்.) சித்தசுபாவத்தையுணர்ந்தவன் உத்தமமானயுத்திகளின்றிக்கேவலம் ஆசனத்தில் உட்கார்ந்து உட்கார்ந்து மனதைச் செயிக்கமாட்டான். (1) துஷ்டமதயானை அங்குசமின்றி வசப்படாததுபோல இம்மனம் உத்தமயுத்திகளின்றி வசப்படாது. அந்த யுத்திகளாவன, முதலாவது அத்தியான்ம வித்தியாப்பிராப்தி இரண்டாவது மகாத்துமாக்களின்சங்கம். (2) மூன்றாவது வாசனாத்தியாகம் நான்காவது பிராணனடக்கலாம். இவைகளே மனோஜயத்தின் காரணங்கள். இவைகளிருக்கினும் அடமாய் மனநிக்கிரகம்பண்ணுவோன் தீபத்தையொழித்து மையினால் இருணீக்குவனாவன் (4) இப்பொருளையே விளக்கிக்கூறுவாம். ஆண்டுக் கிரமமாய் மனோநிக்கிரகம்பண்ணுவதில் அத்தியான்மவித்தையொன்றே யுபாயமாம். என்னை, அவ்வித்தைகாணப்படுமுலகம் மித்தையெனவும் திருஷ்டாவும் சாட்சியுமாகிய ஆன்மாப் பரமார்த்த சத்தியமாயும் பரமானந்த சுவப்பிரகாசமாயும் உள்ளதெனவும் உணர்த்துகின்றது. அத்தன்மைய வுணர்வு உண்டானதின்பின்னர், இம்மனம் தனது விஷயபூத திருசியப்பொருள்களில் மித்தையென்னும் ஏதுவால் பிரயோசனமின்மையை நிச்சயித்து, பிரயோசனமுடையது பரமார்த்த சத்திய பரமானந்தவடிவ திருஷ்டாவெனச் சுவப்பிரகாசமாகிய ஏதுவால் நிச்சயித்து விறகின்றிய தீப்போலத் தானே சாந்தியாகின்றது. ஆதலின், அவ்வத்தியான்மவித்தியாப்பிராப்தி மனநிக்கிரக வுபாயமாம்; உணர்த்திய தத்துவத்தை நன்குணராதோனும் உணர்த்திய தத்துவத்தை மறப்பவனுமாகிய இவர்கட்கு மனநிக்கிரகத்தில் சாதுசங்கமே வுபாயமாம். என்னை, அம்மகாத்துமாக்கள் இவ்வதிகாரிக்கு அடிக்கடி தத்துவ வுணர்வையும் ஸ்மரணத்தையும் உண்டாக்குவார்கள். வித்தியாமதமுதலிய மலின வாசனையால் பீடிதனாய் சாதுசங்கத்தை யடையாதவனுக்கு முற்கூறிய விவேகத்தால் அவ்வாசனையின்பரித்தியாகமே உபாயமாம். அதை நீக்கமுடியாதவனுக்குப்பிராணஸ்பந்தன நிரோதமே உபாயமாம். என்னை, பிராணசலனம், வாசனை இவ்விரண்டுமே சித்தத்தைச் செலுத்துவனவாம். இவ்விரண்டினிரோதத்தால் சித்தசாந்தி அவசியமாம். இது ஸ்ரீவசிட்டபகவானாலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. செஸீஜெ விதவ்ருக்ஷஸ்ய ப்ராணஸ்பந்தவாஸநெ ।
ஏகஸ்மிம்ஸ்தயோ꞉ க்ஷீணெக்ஷிப்ரம்செவி நஸ்யத꞉ ॥ (1)

ப்ராணாயாமத்ருடாப்யாஸைர்யுக்த்யா ச குருத்தயா ।
ஆஸநாஸநயொகெந ப்ராணஸ்பந்தொ நிருத்யதெ ॥ (2)

அஸங்கவ்யவஹாரித்வாத்பவபாவநவர்ஜநாத் ।
ஸரீரநாஸதர்ஸித்வா வாஸநா ந ப்ரவர்த்ததெ ॥ (3)

வாஸநாஸம்பரித்யாகாச்சித்தம் கச்சத்யசித்ததாம் ।
ப்ராணஸ்பந்தநிரொதாச்ச யதெச்சஸி ததா குரு ॥ (4)

ஏதாவந்மாத்ரகம் மந்யெ ரூபம் சித்தஸ்ய ராகவ ।
யத்பாவநம் வஸ்துநொந்தர்வஸ்துத்வெந ரஸெந ச ॥ (5)

யதா ந பாவ்யதெ கிஞ்சித்தெயொபாதெயரூபியத் ।
ஸ்தீயதெ ஸகலம் த்யக்த்வா ததா சித்தம் நஜாயதெ ॥ (6)

அவாஸநத்வாத்ஸததம் யதா ந மநநம் பவெத் ।
அமநஸ்தா ததொதெதி பரமாத்மபதப்ரதா ॥ (7)

(பொ-ள்.) ஹே ராமச்சந்திர! இந்தச் சித்தமாகிய விருக்ஷத்திற்கு இரண்டு பீசமாம்; ஒன்று பிராணசலனம், மற்றது வாசனை. இவற்றுள் ஒன்று கெடின் இரண்டும் நாசமாம். (1) பிராணாயாம திடாப்பியாசத்தானும், குரு வுணர்த்திய யுத்தியானும், ஆசன போசன முதலியவைகளி னியமத்தானும், பிராணசலன நிரோதமாகின்றது. (2) அசங்கனெனும் வியவகாரத்தானும், உலகசிந்தனை நீக்கத்தானும், தேகத்தை நாசமுடையதெனப் பார்த்தலானும், இவ்வதிகாரிக்கு வாசனை யெழுவதில்லை. (3) வாசனை நீக்கத்தானும், பிராணசலன நிரோதத்தானும், சித்தம் சித்தமற்ற தன்மையையடைகின்றது. உனக்கெது இச்சையோ அதைச் செய்குதி. (4) ஹே ராம! பாகியமான அனான்மபதார்த்தங்களை வஸ்து வடிவத்தானும் இராகத்தானும் உள்ளே சிந்தித்தன்மாத்திரமே சித்தவடிவமென் றெண்ணுகின்றேன். (5) எக்காலத்திலிவன் விடத்தக்கதும் கொள்ளத்தக்கதுமாகிய வஸ்துவைச் சிறிதளவுஞ் சிந்தியாது எல்லாவற்றையும் நீக்கியிருக்குங்காலத்தில் சித்தமுற்பன்னமாகாது. (6) மனம் சர்வ வாசனைகளுமின்மையின் வஸ்துவைச் சிறிதளவும் மனனம்பண்ணதபோது அமனஸ்தன்மையுண்டாகின்றது. அது பரமான்மபதத்தைக் கொடுக்கத்தக்கதாம். (7) இத்துணை கூறியதால் இரண்டுபாயஞ் சித்திக்கின்றது. பிராண சலன நிரோதத்தின்பொருட்டு அப்பியாசவடிவ வுபாயமும், வாசனை நீக்கத்தின்பொருட்டு வைராக்கிய வடிவ வுபாயமுமாம். சாதுசங்கமும் அத்தியான்மஞானப் பிராப்தியும் இவ்விரண்டினுபபாதகமானதால் அந்நியதாசித்தமாம். ஆதலின், இவ்விரண்டும் அப்பியாச வைராக்கியங்களில் அடங்குவனவாம். இதுபற்றியே பகவான் இரண்டுபாயத்தையே அருளிச்செய்தனர் இவ்வர்த்தத்தை ஸ்ரீபதஞ்சலி பகவானும் யோகசூத்திரத்திற்கூறியருளியிருக்கின்றூர். 'அப்யாஸ வைராக்யாப்யாந்தந்நிரோத꞉' முற்கூறிய பிரமாணமுதலிய ஐவகை விருத்தி அசுரத்தன்மையால் கிலிஷ்டமெனவும் தெய்விகத்தன்மையால் அக்கிலிஷ்டமெனவும் கூறப்படும். அதனிரோதம் அதாவது விறகின்றிய தீப்போல உபசாந்தவடிவ பரிணாம விசேடம் அப்பியாச வைராக்கியங்களாலாம் என்க. யோகபாடியத்தில் ஸ்ரீவியாச பகவானும் இது கூறப்பட்டுளது. '**சித்தநதீநாமொபயதொவாஹிநீவஹதி கல்யாணாயவஹதி பாபாய ச**' ஸ்ரீகங்கை யமுனை முதலிய நதிகள் பள்ளமான பூமியிற்

சென்று கடலையடைகின்றன. அதுபோலச் சித்தமாகிய நதியும் விவேகவடிவ பள்ளமான பூமியிற் சென்று கைவல்யவடிவ பலத்தில் முடிவுறுகின்றது; அது கல்யாணவடிவப்பிரவாகமெனப்படும். அவிவேகவடிவப்பள்ளப் பூமியிற்சென்று சம்சாரத்தில் முடிவுறும்; அது பாபவடிவப் பிரவாகமெனப்படும். இவ்வாறு சித்தவடிவ நதி இருபக்கமுஞ்செல்கின்றது. ஆண்டு, விஷயத்தில் அடிக்கடி தோஷ திருஷ்டியாலுண்டாகிய வைராக்கியத்தால் விஷயபக்கத்திற்செல்லும் சித்த நதியின் பிரவாஹம் கட்டுப்படுகின்றது. விவேக தரிசனவடிவ அப்பியாசத்தால் பிரத்தியக்கான்மாவில் சித்த நதி பிரவாஹமாய்ச் செல்கின்றது. இவ்வாறு வைராக்கியாப்பியாசங்களின் வசமாம் சித்த நிரோதம் கேவலவைராக்கியத்தானும் கேவல அப்பியாசத்தானும் ஆவதில்லை. கருத்திதுவாம்:—தீவிரமான வேகத்தோடுகூடிய நதிப்பிரவாகத்தை மரம் மண் முதலியவைகளால் வாராவதி கட்டித்தடுத்து அங்கொரு மதகமைத்து வயலுக்கு நேராய் வக்கிரப்பிரவாஹம் உண்டாக்குவதுபோல வைராக்கியத்தால் சித்தநதியின் விஷயாபி முகப்பிரவாகத்தை நிவிருத்தித்துச் சமாதி யப்பியாசத்தால் பிரத்தியக்குப் பிரவாகமுண்டாக்கப்படுகின்றது. இவ்வாறு வைராக்கியாப்பியாசங்கட்குச் சித்தநிரோதத்தில் வெவ்வேறு வாயிலானதால் அவ்விரண்டற்குஞ் சமுச்சயமே பொருந்துகின்றது. ஒரே ஹோமத்தில் நெற்கோதுமை யிரண்டற்கும் வாயிலொன்றானதால் விகற்பமடைந்ததுபோல அப்பியாச வைராக்கியங்கட்கு வாயிலொன்றாயின் விகற்பமாமென்க.

மந்திரதவ தேவதாத்தியான முதலியவைகள் கிரியாவடிவமானதால் மறித்து மறித்து ஆவிருத்திவடிவ அப்பியாசங்கூடும். ஆனால் சர்வ வியாபாரோபரமவடிவ சமாதிக்கோர் அப்பியாசமும் பொருந்தாது என்னுஞ் சங்கையை நிவிருத்தித்தருளற்பொருட்டு இவ்வாறு அப்பியாசவடிவத்தைக் கூறியருளினர். 'தத்ர ஸ்திதௌ யத்நோ(அ)ப்யாஸ:' தனது சொரூபத்தினிலைத்த திருஷ்டாவடிவ சுத்த சிதான்மாவில் சர்வ விருத்திகளற்ற பிரசாந்தப் பிரவாகவடிவ சலனமற்ற நிலையின்பொருட்டு மானச உற்சாகவடிவ யத்தநமாம். அதாவது, தனது சஞ்சல சுபாவத்தால் பாகியப் பிரவாகமுடைய சித்தத்தை எவ்வாற்றானும் நிரோதம்பண்ணுவேன் என்னும் மனதின் உற்சாகவடிவ யத்தநத்தை அடிக்கடி ஆவிருத்தித்தல் அப்பியாசமெனப்படுகிறது. வேறு சூத்திரம், 'ஸ து தீர்க்க கால நைரந்தர்ய ஸத்காராஸேவிதோ த்ருடபூமி:' முற்கூறிய அப்பியாசமானது உத்வேகமின்றி தீர்க்ககாலபரியந்தம் வியவதானமின்றி நிரந்தரமாய்ச் சிரத்தாதிசயவடிவ சத்காரத்தாற் சேவிக்கப்பட்டுத் திடபூமியாகின்றது. அதாவது அவ்வப்பியாசம் விஷய சுகவாசனையால் சலனப்படுவதில்லை. ஆண்டு, அவ்வாறுசேவனையின்றேல் லயமுதலிய தோஷங்கள் நீங்கா; வியுத்தான சமஸ்காரத்தின் பிரபலத்தால் அவ்வப்பியாசம் அதிட பூமியாகிய பலனைத் தாரா. இது பற்றியே ஸ்ரீபதஞ்சலிபகவான் தீர்க்ககால நைரந்திரிய சத்காரம் என்னு மூன்றையுங் கூறினர். இத்துணை கூறியதால் அப்பியாசவடிவங் கூறப்பட்டது. இனி வைராக்கிய சொரூபத்தைக்கூறுவாம் அபரவைராக்கியம் பரவைராக்கியம் என்னும் வேறுபாட்டால் வைராக்கியம் இருவகைத்தாம். அவற்றுள், அபரவைராக்கியம் யதமானம், வெயதிரேகம்; ஏகேந்திரியம், வசீகாரம் என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். ஆண்டு, பூர்வ பூமியைச் செயித்து உத்தர பூமியின் சம்பாதன விவட்சையால் ஸ்ரீபதஞ்சலிபகவான் நான்காவதாகிய வசீகார வைராக்கியத்தையேகூறினர். 'த்ருஷ்டாநுச்ரவிக விஷய வித்ருஷ்ணஸ்ய வசீகார ஸம்ஜ்ஞா வைராக்யம்' ஸ்திரி அன்னபான மைதுன ஐசுவரியம் முதலியன எவ்வுலகத்தும் பிரத்தியட்சமானதால் திருஷ்டவிஷய மெனப்படுகின்றன. சுவர்க்கம் விதேகத்தன்மை பிருகிருதிலயம் முதலியன கேவல சாத்திரப்பிரமாணத்தாலறியப்பட்டனவாதலின், ஆநு சிராவிக விஷயமெனப்படும். இவ்விருவகை விஷயங்களின் திருஷ்ணையிருப்பினும் விவேகத்தின் நிரூபாதிகத்தன்மையால் யதமானமுதலிய

மூன்று வைராக்கியமுமுண்டாகும். ஆண்டு, உலகத்திலுள்ள சாராசாரப் பொருள்களைக் குரு நூற்களால் நிச்சயம்பண்ணுவேன் என்னும் முயற்சி யதமானமாம். தனது சித்தத்திலுள்ள தோஷங்களுக்குள் அநுட்டித்த விவேகத்தால் எத்தனை பக்குவமாயின எத்தனை பாக்கியுள்ளன என வைத்தியன்போல் பகுத்தல் வெயதிரேகமாம். இருவகை விடயமுயற்சியும் துக்கவடிவமென்றுணர்ந்து பாகியேயந்திரிப் பிரவிருத்திபண்ணுதிருந்தும் திருஷ்ணையின் கிளர்ச்சி மாத்திரமாய் மனதிற் றக்குதல் ஏகேந்திரியமாம். அதுவுமின்றி எவ்வாற்றானும் திருஷ்ணையின்மை அதாவது, திருஷ்ணு விரோதியான ஞானப் பிரசாதவடிவ சித்தவிருத்தி விசேஷம் வசீகாரமாம். அது சம்பிரக்ஞாத சமாதியின் அந்தரங்க சாதனமாம். அசம்பிரக்ஞாத சமாதியின் பகிரங்கசாதனமாம். இதற்குப் பரவைராக்கியமே அந்தரங்க சாதனமாம். அதன் சொரூபத்தை ஸ்ரீபதஞ்சலிபகவான் யோகசூத்திரத்திற் கூறியிருக்கின்றார். 'தத்பரம் புருஷக்யாதேர்குண வைத்ருஷ்ண்யம்' சம்பிரக்ஞாத சமாதியின்திடத்தால் முக்குணவடிவப் பிரதானத்தினும் வேறுபிரித்த புருஷசாக்ஷாத்காரமுண்டானதின்பின்னர்ச் சம்பூரண குண வியவகாரத்தில் திருஷ்ணையின்மை பரவைராக்கியமெனப்படும். அதாவது, சர்வத்தினும் மேலாகிய பலவடிவ வைராக்கியமெனப்படும். அதன்பரிபாகத்தால் சித்த உபசமபரிபாகமாய்ச்சீக்கிரமே கைவல்யமடையப்படும். இச்சர்வார்த்தங்களையும் வைத்துக்கொண்டு ஸ்ரீ பகவான் 'அப்பியாசேனது கௌந்தேய வைராக்கியேணச கிருகியதே' எனத் திருவாய் மலர்ந்தருளினரென்க. (35)

(அ-கை.) ஹே அர்ச்சுன! நீ, தத்துவஞானத்தினும் பிரபலமாகிய பிராரப்தகருமமானது பலத்தைக் கொடுத்தற்பொருட்டு மனோவிருத்தியைத் தோற்றுவித்தே பல நுகரச்செய்கின்றது. அத்தன்மைய சித்தவிருத்தி நிரோதங் கூடாதெனக் கூறினை. அதனுத்தரத்தைக் கேள்.

மூ-ம். அஸம்யதாத்மநா யோகோ துஷ்ப்ராப இதி மே மதிஃ ।
வஶ்யாத்மநா து யததா ஶக்யோऽவாப்துமுபாயதஃ ॥ (36)

ப-ம். 1 அஸம்யதாத்மநா 2 யோகஃ 3 துஷ்ப்ராபஃ 4 இதி 5 மே 6 மதிஃ 9 வஶ்யாத்மநா 7 து 8 யததா 12 ஶக்யஃ 11 அவாப்தும் 10 உபாயதஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அடக்கமிலாமனத்தோனால் அந்த யோகம் வருத்தத்தானுமடையப்படாது. இஃதெனக்குஞ் சம்மதம்; அங்ஙனமாயினும் அடக்கமுள்ள சுவாதீன மனத்தனால் உபாயத்தாலடையத்தக்கதாம. (36)

(வி-ம்.) தத்துவ சாட்சாத்காரமுண்டாயினும், வேதாந்தநூலின் வியாக்கியானத்தில் மனப்பற்றுளதாலேனும் ஆலசிய முதலிய தோஷத்தாலேனும் அப்பியாச வைராக்கியங்களால் நிரோதப்படாத மனமுடையோன் அசம்யதாத்மாவாம். அத்தன்மையன் தத்துவ சாக்ஷாத்காரமுடையவனாயினும் பிராரப்தத்தானுண்டாகும் மனோசஞ்சலத்தால் சர்வ விருத்தி நிரோதவடிவ யோகத்தை வருத்தத்தாலேனு மடையான் என நீ கூறியது எனக்குஞ் சம்மதமாம். அதாவது, நீ கூறிய துண்மையே.

சங்கை :—ஹே பகவன்! அடக்கமிலாத மனத்தோன் அந்த யோகத்தை அடையானெனில், மற்றெவனடைபவன்;

சமாதானம் :— 'வஶ்யாத்மநா து இதி' வைராக்கியத்தின் பரிபாகத்தால் வாசனாக்ஷயமாய் வசியமான, சுவாதீனப்பட்ட, அதாவது, விஷயங்களின் பரதந்திரத்தன்மையிலாத ஆன்மாவெனும் அந்தக்கரணமுடையோன் வசியாத்மாவாம்.

ஈண்டு, வசியாத்மநாது என்னும் வாக்கியத்திலுள்ள ‘து’ சத்தமானது முற்கூறிய அடக்கமிலாத மனத்தோனினும் வசம்பண்ணிய மனத்தோன் விலக்ஷணனென்றுணர்த்தற்பொருட்டாம் அல்லது, நிர்ணயார்த்தகமாம். வைராக்கியத்தால் சித்தவடிவநதியின் விஷயாபிமுகப்பிரவாகத்தைத் திருப்பிப் பிரத்தியக்ஞானாபிமுகப்பிரவாகமாக்கற்பொருட்டு முற்கூறிய அப்பியாசம்பண்ணுவோன் யத்தனியாம். இவ்விரண்டு முடையவனே சித்த சலனத்தைக்கொடுக்கும் பிராரப்தகருமத்தையும் அமிழ்த்திவிட்டுச் சர்வவிருத்தி நிரோதவடிவ சமாதியை யடைவதற்குச் சமர்த்தனவன்.

சங்கை :—மிக வலியுடைய பிராரப்தகருமத்தை யமிழ்த்தல் எவ்வாறாம் ?

சமாதானம் :—ஹே அர்ச்சுன! புருஷப் பிரயத்தனவடிவ உபாயமே அதை அமிழ்த்துவதாம். என்னை, லௌகிக வைதிகப் பிரயத்தனங்கள் பிராரப்தகருமாபேட்சையால் வலியுடையனவாம் இன்றெனிலோ உலகத்தார் பயிரிட முயலலும் வைதிகர் சோதிட்டோமாதிப் பிரயத்தனமும் பயனற்றனவாம். சர்வ காரியங்களினும் பிராரப்தகருமம் உளதிலதென்னும் விகற்பமே வருவதால் ஒரு காரியத்தினும் முயற்சி யெழாதாம். என்னை, பிராரப்தகருமமுளதெனில் அதனானே பலப்பிராப்தியுமாம். ஆகவே, அதிற் புருடப் பிரயத்தனம் சிறிதும் பயனற்றதாம். பிராரப்தகருமமின்றெனிலோ எவ்வாற்றானும் பலப்பிராப்தியிலதாகும். ஆனதாலும் புருடப் பிரயத்தனம் பயனற்றதாம் என்றிவ்வாறு ஆராய்ந்து ஒருவரும் இக்கருமங்களில் முயலார்.

சங்கை :—பிராரப்தகருமவடிவ அதிருஷ்ட காரணமானது திருஷ்டகாரணமிலாது, காரியத்தைத் தோற்றுவியாது; ஆனாலோ திருஷ்டகாரணத்தின் சகாயத்தால் காரியத்தைத் தோற்றுவித்தலால் அதிருஷ்டகாரணவடிவப் பிராரப்தமும் திருஷ்டசாதன சம்பத்தியின்றிப் பலத்தையுண்டாக்குவதற்கேலாததாம். ஆதலின், பயிரிடன் முதலிய லௌகிக காரியங்களினும் சோதிட்டோமமுதலிய வைதிக காரியங்களினும் பிராரப்தகருமத்திற்குப் புருடப் பிரயத்தனம் மொருதலையே யபேட்சிதமாம்.

சமாதானம் :—இது யோகாப்பியாசத்தினுஞ் சமமாம். என்னை, யோகாப்பியாசத்தாற் பெறப்படும் சீவன் முத்தியும் சுகாதிசய வடிவமானதால் பிராரப்தகருமபலத்திலேயடங்கும். இதுபற்றியே அத்தியான்ம நூலில் சீவன்முத்தி, பலபிறப்பின் புண்ணியபலவடிவமெனக் கூறப்பட்டது. ஆதலின் சீவன் முத்திவடிவப் பலமடைதற்குத் திருஷ்டகாரணவடிவ யோகாப்பியாசந் தேடற்பாலதென்பது பொருந்தும். தத்துவஞானிக்குத் தேகேந்திரியக்கூட்டம்நிலைநிறுத்தல்கண்டு பிராரப்தகருமத்தைத் தத்துவஞானத்தினும் வலியுடையதெனக் கற்பிக்குமாறுபோல யோகாப்பியாசம் பிராரப்தகருமத்தினும் வலியுடையதென்பதுமாம். நூற் கூறிய பிரயத்தனத்திற்கு எவற்றினும் வலியுடையதாந்தன்மை காணப்படுதலின், என்க. இது ஸ்ரீ வசிட்டபகவானானுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ஸம்ஸாரெ ஹிஸ்ஹா ஸம்ஸாரெ ரகு நந்தந ।
ஸம்யக் ப்ரயுக்தாத் ஸர்வேண பௌருஷாத் ஸமவாப்யதே ॥ (1)

உச்சாஸ்த்ரம் ஶாஸ்த்ரிதம் சேதி பௌருஷம் த்விவிதம் ஸ்ம்ருதம் ।
தத்ரோச்சாஸ்த்ரம் அநர்தாய பரமார்த்தாய ஶாஸ்த்ரிதம் ॥ (2)

ஶுஹாஶுஹாஹ்யாம் ஊமாஃஹ்யாம் வஹந்தீ வாஸநாஸரிகூ ।
வளஈஷெண வ்யத்நெந யொஜநீயா ஶுஹெவமி ॥ (3)

ஃஶுஹெஷு ஸஊவிஷ்டம் ஶுஹெஷெவாவதாரய ।
ஸ்வஉநஃ வஈஷாயெஃந ஶ்வெந ஶ்வீநாம்வர ॥ (4)

வ்ராமஹ்யாஸ வஶாதூதி யதாதெவாஸ நொதயம் ।
தபாஹ்யாஸஸ்ய ஸாஃஹத்யம் விஃ்ஞ ஊிஃஃந ॥ (5)

ஸம்யிஓயாஃ விஹ்ரஶம் ஶுஹாஃவ ஸஊஹா ।
ஶுஹயாம் வாஸநாவ்ருஃ்ள தாதஜெஷொந க்ஷூந ॥ (6)

ஃவ்ஃத்வஞ உநாயா வஹாவாந ஜ்ஞாததத்வஃ ।
மஈபாஹூ்த வ்ரஊணெந்ஷம் நிணீஃதஞாவ உாஅர ॥ (7)

ததஃவக்க கஷாயெண நஃஉநம் விஜ்ஞாதவஸ்துநா ।
ஶுஹொவ்ய ஸளகயாதாஜெஹா வாஸநள வொஃநி மொயிநா ॥ (8)

(போ-ள்.) ஹே ரகுநந்தன! இவ்வுலகத்தில் யாவராலும் இனிய முயற்சியாற் பொருளனைத்தும் அடையத்தக்கனவே; புருஷ முயற்சியால் அடையப்படாத பொருளொன்றில்லை. 1. புருஷப் பிரயத்தனம் இருவகைத்தாம்; ஒன்றோ உத்சாத்திரம், மற்றது சாஸ்திரிதம். சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்பட்டது உத்சாத்திரம், சாஸ்திரத்தால் விதித்தது சாத்திரிதமெனப்படும். அவற்றுள், உத்சாத்திரம் நரகப்பிராப்தியின்பொருட்டாம்; சாத்திரிதம் அந்தக்கரணசுத்தி வாயிலாக மோட்சப் பிராப்தியின்பொருட்டாம். 2. இந்த வாசனைவடிவ நதியானது சுப மார்க்கம் அசுபமார்க்கம் இரண்டினுஞ் செல்கின்றது. அவற்றுள், இவ்வதிகாரி, புருஷப் பிரயத்தனத்தால் இந்நதியை அசுபமார்க்கத்தினின்றுந் திருப்பிச் சுப மார்க்கத்திற் செலுத்தவேண்டும். 3. வல்லார்களின் மேலோய் அசுபகருமத்திற் சென்ற மனத்தை நீ முயற்சியால் அதினின்றுந் திருப்பிச் சுபகருமத்திற் செலுத்துவாய். 4. மாற்றானையடுவோய் முன் அப்பியாசவசத்தால் உனக்குச் சுபவாசனையுண்டாகில் தனது முயற்சி பலமுடையதென உணர்தி. 5. அவ்வாசனை நிர்ணயப்படாவிடினும், நீ நிரந்தரம் அதையே சம்பாதிப்பாய். மைந்த! அவ்வாசனை விருத்தியடையில் சிறிதுந் தோஷமில்லை; அசுபவாசனை மிகுதியே தோஷமாம். 6. எதுகாறும் வியுத்பன்ன மனமும் பரமபத ஞானமும் உனக்கில்லையோ அதுகாறும் குரு நூற்பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டவர்த்தத்தை நீ சிரத்தையோடும் அநுட்டிப்பாய். 7. இவ்வாறு உபாயத்தால் பாபவடிவ கஷாய நிவிருத்தியும் ஆன்மவஸ்து நிச்சயமும் மனநிரோதமுமுண்டாகில் அச்சுபவாசனையையும் நீக்குதி. 8. என்பது முதலிய வாக்கியத்தால் ஸ்ரீ வசிஷ்டபகவான் புருஷப் பிரயத்தனத்தின் பிரபலத்தன்மையைக் கூறியருளினராதலின், சாத்திரீயப் புருஷப் பிரயத்தனம் எவற்றினும் வலியதாம். அதனால் பிராரப்தகருமத்தை அமிழ்த்தலுங் கூடும். இத்துணை கூறியதால் அர்ச்சுனன் சங்கைக்குப் பெறப்பட்ட உத்தரம் இஃதாம் சாட்சியிலுள்ள அஞ்ஞானத்தாலாய சம்சாரபந்தம் விவேக சாக்ஷாத்காரத்தால் நிவிருத்தியாயினும் பிராரப்தகருமம் நிலைப்படுத்திய சித்தத்தின் சுபாவவிருத்திகளை யோகாப்பியாசத்தால் நிவிருத்திபண்ணிய சீவன்முத்தன், பரமயோகியெனப்படுவன்; அஃதிலாதோன் தத்துவஞானியாயினும் பரமயோகியெனப்படான். மற்றோ, அபரமயோகியெனப்படுவன் என்க. (36)

(அ-கை.) ஆண்டு, இப்பூர்வ கிரந்தத்தால் தத்துவஞானத்தையடைந்தும் சீவன் முத்தியடையாதோன் அபரமயோகியெனப்படுவன்; அவ்விரண்டையுமடை

ந்தவன் பரமயோகியெனப்படுவன் எனவுங் கூறப்பட்டது. ஆண்டு, அவ்விருவருக்கும் தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நாசமாயினும் பிராரப்தகருமமுள்ளவரையில் தேஹேந்திரிய சங்காதமும் நிலைத்திருக்கும்; அது நாசமாகவே, அவ்விருவர்களின் தேக சங்காதமும் நாசமாகின்றது. ஒருபோது நாசமானது மறித்து ஒருகாலுமுண்டாகாது; அதை யுண்டாக்கும் அவித்தை காமகருமங்கள் அவனுக்கு நாசமாயினவாதலின். இவ்விருவகை வித்துவான்களும் விதேகமுத்தியடைவதில் சிறிதளவும் வழக்கில்லை. ஆனாலோ, முன்னர்ச் செய்த நிஷ்காமகருமத்தால் விவிதிஷாபரியந்த சித்தசுத்தியையடைந்து பின் விதிபூர்வகம் அக்கருமங்களனைத்தையும்விடுத்து விவிதிஷாவடிவப் பரமஹம்ச சந்நியாசத்தையடைந்து அதன்பின் சுரோத்திரியப்பிரஹ்மநிஷ்ட சீவன்முத்தசந்நியாசியாகிய குருவையணுகி அவரால் வேதாந்த மகாவாக்கிய உபதேசத்தைப்பெற்று அதிலுள்ள அசம்பாவனை விபரீத பாவனைவடிவப் பிரதிபந்தநிவிருத்தியின்பொருட்டு, 'அதாதோபிரஹ்மஜிக்ஞாசா' என்னுஞ் சூத்திரமுதற்கொண்டு, 'அநாவிருத்தி சப்தாத்' என்னுஞ் சூத்திரபரியந்தமுள்ள நான்கத்தியாயவடிவ உத்தரமீமாஞ்சா சாஸ்திரமுழுதானும் சிரவணாதிகளைக்குருவின் பிரசாதத்தாற் செய்யவேண்டுமெனத் தொடங்கற்பாலது. அவ்வதிகாரி சிரத்தையுடையவனாயினும் ஆயுளற்பமாக அற்பப்பிரயத்தனவானாதலின் இப்பிறப்பில் ஞானத்தையடையாது, சிரவணாதிகளைச்செய்தே இடையில் மரணமடையின் ஆன்மஞானமிலதாகவே அஞ்ஞானநாசமின்மையின்மோட்சமடையான். அவன் கருமோபாசனைகளை முன்விடுத்தோனாதலின், அர்ச்சிராதிமார்க்கத்தால் தேவலோகவடிவ உபாசனாசகித கருமபலத்தையுமடையான். தூமாதி மார்க்கத்தால் பிதுருலோகவடிவ கேவல கருமபலத்தையு மடையான்; ஆனால், யோகத்தில் வழுவிய அவன் கீடபதங்கமுதலிய தன்மையையடைந்து கஷ்டகதியையே பொருந்துவன், வருணாச்சிரம ஒழுக்கத்தில் வழுவியவனைப்போல ஆன்மஞானமின்றியவனாய்த் தேவயான பிதுருயான மார்க்க சம்பந்தமிலாதோனாதலின், அல்லது அக்கஷ்டகதியை அடையான்; வாமதேவரைப்போலச் சாத்திர நிஷேதகருமமின்றியவனாதலின் என்று ஐயமுற்று வியாகுலமடைந்த அர்ச்சுனன் தனதையப்பாட்டை நீக்கவேண்டி ஸ்ரீ பகவானை வினவுகின்றான்.

அஜ-ுந உவாச.

சு-ம். அயதிঃ ஶ்ரத்ஷயொவெதொ யொமாலுலிதமாநஸঃ।
அவாவ்ய யொமஸம்ஸித்திம் காம் மதிம் க்ருஷ்ண மஜ்ஹதி ॥ (37)

ப-ம். 2 அயதிঃ 3 ஶ்ரத்ஷயா 4 உவெதঃ 5 யொமாக் 6 அலிதமாநஸঃ 8 அவாவ்ய 7 யொமஸம்ஸித்திம் 9 காம் 10 மதிம் 1 க்ருஷ்ண 11 மஜ்ஹதி.

(அ-ம்.) ஹே கிருஷ்ண! அற்ப முயற்சியும் சிரத்தையும் தத்துவ சாக்ஷாத்காரத்தினின்று சலனப்பட்ட மனமும் உடையவன் தத்துவஞானபலத்தை யடையாது மரணமாயின், எக்கதியையடைவன்? (37)

(வி-ம்.) ஹே கிருஷ்ணபகவன்! ஆயுளற்பத்தால் அற்ப முயற்சியும் குருவேதாந்த வாக்கியத்தில் விசுவாச புத்திவடிவ சிரத்தையு முடையவன் ஈண்டுச் சிரத்தையானது தன்னோடுள்ளனவாகிய சமதம முதலியவைகளின் உபலக்ஷணமாம். சிரத்தையோடுகூடிய அச்சமதமாதிகள் 'சாந்தோதாந்த வுபரதஸ்திதிக்ஷுঃ சிரத்தாவித்தோ பூத்வாத்மன்யே வாத்மானம் பஶ்யதி' என்னுஞ் சுருதியிற்கூறப்பட்டுள்ளன. இதனாலிதுபெறப்படுகின்றது. நித்தியாநித்தியவஸ்துவிவேகம்,இகாமுத்திரபல போகவிராகம், சமதமாதி ஷட்சம்பத்தி,முமுட்சுத்தன்மையென்னும் நான்குமுடையவன், சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவையடைந்து

வேதாந்தவாக்கியத்தின் சிரவணுதிகளைச்செய்தும் ஆயுளற்பத்தன்மையால் மரண காலத்தில் இந்திரியங்கள் கலக்கமடைய அச்சிரவணமுதலிய சாதனங்களின் நிடா நட்டான மையையின் யோகத்தினின்றும் சலனப்பட்ட மனத்தன். ஈண்டுச் சிரவணுதிகளின் பரிபாகத்தால் உண்டாகிய தத்துவ சாக்ஷாத்காரம் யோகமாம்; அதினின்றுஞ் சலித்ததென்பது அதன் பலத்தையடையாமையாம். அத் தன்மைய மனத்தோன் அந்த யோகசித்தியையடையாது; அதாவது, தத்துவ சாக்ஷாத்காரத்தால் அடையத்தகுந்தபுனராவிருத்தியின்றிய,காரியசகித அஞ்ஞான நிவிருத்தி யோகசித்தியாம், அதையடையாது தத்துவமுணராதவனுய் இடையில் மரணமடைந்தவன் எந்தக் கதியையடைவன். அதாவது, நற்கதியையடைவனு அல்லது 'துர்க்கதியையடைவனு? கருத்திதுவாம். நித்திய நைமித்திககருமங்களையோ பரித்தியாகம்பண்ணிவிட்டான், தத்துவஞானமோ உற்பத்தியாகவில்லை, ஆதலின், அவன் துர்க்கதியையடை வன் எனவுஞ் சம்பாவனைபண்ணலாம். சாஸ்திரோக்த மோட்சசாதனத்தை யநுட்டித்தவன் சாஸ்திர நிஷேதகருமத்தைத் விடுத்தவனுதலின், நற்கதியையடைவனெனவும் சம்பாவனைபண்ணலாமென்க. ()

(அ-கை.) இப்போது முற்கூறிய சம்சய காரணத்தை விளக்கிக்கூறுகின்றான்.

ஸ-ம். கச்சிந்நோபயவிப்ரஷ்டச்சிந்நாப்ரமிவ நச்யதி ।
அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ (38)

ப-ம். 9 கச்சித் 10 ந 6 உபயவிப்ரஷ்ட: 7 சிந்நாப்ரம் 8 இவ 11 நச்யதி 5 அப்ரதிஷ்ட: 1 மஹாபாஹோ 4 விமூட: 2 ப்ரஹ்மண: 3 பதி.

(அ-ம்) ஹே திண்புயமுடையகிருஷ்ண! பிரஹ்மப்பிராப்தியின் ஞானவடிவ மார்க்கத்தில் மூடனும் கருமோபாசனைகளின்றியவனுமாகிய உபயப் பிரஷ்டன் விச்சேதமான மேகம்போல் எவ்வாறு நாசமடையான். (38)

(வி-ம்.) ஹே திண்புயத்தோய்! அதாவது சர்வ அன்பர்கட்குமுபத்திரவங்களை யொதுக்குவதில் சமர்த்தமுடைய நாற்புய முடையவன் அல்லது சர்வ பக்தர்கட்கும் தருமமாதி நான்கு புருடார்த்தத்தையுங் கொடுப்பதில் சமர்த்தன நாற்புயத்தோன் பெயர் திண்புயத்தோனும். ஈண்டு, திண்புயத்தோய் என்னுஞ் சம்போதனத்தால் தனது வினுவால் பகவானுக்குக் குரோதமின்மையையும் தனது வினுவிற்கு உத்தரமளிப்பதில் சமர்த்தரென்பதையும் அர்ச்சுனன் குறிப்பித்தனன் கச்சித் என்னும்பதம் வேட்கைசகிதவினுக்கிளவியாம். அதைத்தெரிப்பாம்:—ஹே பகவன் அத்துவிதீயப் பிரஹ்மப்பிராப்தியின் ஆன்மஞானவடிவ மார்க்கத்தில் விமூடன்; அதாவது, பிரஹ்மான்மாக்களின் ஏகத்துவ சாட்சாத்கார முண்டாகாதான். அப்பிரதிஷ்டன் அதாவது பிதிருயான மார்க்க தேவயானமார்க்கப் பிராப்தியின் சாதனங்களான கருமோபாசனைகளுமின்றியவன். உபாசனையோடு கருமத்தையும் முன்னமே தியாகம் பண்ணியவனுதலின் அத்தன்மைய உபயப் பிரஷ்டன் அதாவது கருமமார்க்கம், ஞானமார்க்கம் இரண்டினும் வழுவியவன். விச்சேதமடைந்த மேகம்போல் எவ்வாறு நாசமடையான் அதாவது காற்றினுல் வேறுபடுத்தப்பட்ட மேகம் பூர்வ மேகத்தினின்று நீங்கியதாய் உத்தரமேகத்தையுமடையாததாய் மழைக்குத் தகுதியின்றி இடையிலே கெடுகின்றதுபோல, யோகப் பிரஷ்டனும் முந்திய கருமமார்க்கத்தினும் வழுவியவனுய்ப் பிந்திய ஞானமார்க்கத்தையுமடையாது இடையிலேகெடுகின்றான். அத்தன்மையன் கரும, ஞான, பலனை அடைதற்கு யோக்கியனுதல் யாங்ஙனமென்க. இத்துணை கூறியதால் கரும ஞானங்களின் சமுச்சயமு நீக்கினமை காண்க; என்னை; சமுச்சய பட்சத்தில் ஞானபல மடையாதொழியினும் கரும பல மடைதல் பொருந்தும் ஆதலின் சமுச்சயம் பண்ணுவோ

னிடத்தில் உபயப் பிரஷ்டத்தன்மை சம்பவியாது. ஈண்டு, அவனுக்குக் கருமஞ் சம்பவமாயினும் கரும பலேச்சை விடுத்துளனாதலின் கருமஞ் செய்யினும் உபயப் பிரஷ்டத்தன்மை பொருந்துமென்றுசங்கிக்கில் அதுவுமமையாது ; என்னை ? சகாம கருமத்திற்குப் பலனுண்டாவதுபோல நிட்காம கருமத்திற்குமாம். இது முன்னர் ஆபஸ்தம்ப சூத்திரத்தைப் பிரமாணமாய்க் கொடுத்துக் கூறப்பட்டது. ஆதலின் ஞான கருமங்களின் சமுச்சயத்தை யநுட்டிக்கும் புருஷனிடத்து இவ்வினு வமையாது மற்றோ, சர்வ கருமங்களின் தியாகியின் மீதாம் அனர்த்தப் பிராப்தியாட்சேபம் அவனிடத்தே சம்பவமாதலின் என்க. (38)

(அ-கை.) இப்போது முற்கூறிய ஐயமகற்றுவான் அந்தரியாமியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அர்ச்சுனன் பிரார்த்திக்கின்றான்.

சு-ம். ஏதந்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யஶேஷத: ।
த்வத³ந்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்³யதே ॥ (39)

ப-ம். 3 ஏதம் 2 மே 4 ஸம்ஶயம் 1 க்ருஷ்ண 6 சேத்தும் 7 அர்ஹஸி 5 அஶேஷத: 9 த்வத³ந்ய: 11 ஸம்ஶயஸ்ய 10 அஸ்ய 12 சேத்தா 13 ந 8 ஹி 14 உபபத்³யதே.

(அ-ம்.) ஹே கிருஷ்ண ! எனதையப்பாடு முழுதையும் நீக்குதற்குத் தாங்களே யோக்கியர் ஆதலின் உமக்கன்னியமான ஒருவரும் இவ்வையமகற்றுபவரா கார். (39)

(வி-ம்.) ஹே கிருஷ்ண பகவன் ! முன்னிரண்டு சுலோகங்களால்யான் விளக்கிய எனது ஐயப்பாட்டைச் சேடமின்றி நிவிருத்திசெய்வதற்கு அதாவது சமசய காரணமான அதர்மாதிகளின் சேத பூர்வகம் அதை நீக்குவதற்குத் தாங்களே யோக்கியர். ஹே அர்ச்சுன ! என்னின் வேறாய் ரிஷியேனும் தேவர்களேனும் உனதையமொழிப் போரிலரோவென அர்ச்சுனன் கூறுகின்றான். 'த்வத³ந்ய: இதி' ஹே பகவன் சர்வக்ஞர் சர்வ நூற்கருத்தர் பரமகுரவர் கிருபாலு என்னுமித்தன்மைய பரமேசுரராகிய தங்களின் வேறான ரிஷிமுதலியோர்கள் ஈசுரர்களல்லாதலின் சர்வஞ்ஞமற்ற அவ்வெவரும் எனது சமுசயத்தை நன் கொழிப்பவராகார்கள். ஆதலின், யாவர்க்குங் குருவாகவும் எல்லாப்பொருளேயும் புலப்படக் காணுபவராயுமுள்ள ஈசுரராகிய தாங்களே எனதைய மொழிக்கத்தக்கவர். (39)

(அ-கை.) இவ்வணம் அர்ச்சுனனது யோகி நாசமாவன் என்னுஞ் சங்கையகற்றுதற்கு உத்தரமருளுகின்றார்.

ஶ்ரீ ப⁴க³வாநுவாச.

சு-ம். பார்த² நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்³யதே ।
ந ஹி கல்யாணக்ருத்கஶ்சித் து³ர்க³திம் தாத க³ச்ச²தி ॥ (40)

ப-ம். 1 பார்த² 6 ந 4 ஏவ 3 இஹ 9 ந 8 அமுத்ர 5 விநாஶ: 2 தஸ்ய 7 வித்³யதே 15 ந 10 ஹி 12 கல்யாணக்ருத் 13 கஶ்சித் 14 து³ர்க³திம் 11 தாத 16 க³ச்ச²தி.

(அ-ம்.) ஹே பார்த்த ! அந்தயோகப் பிரஷ்டனுக்கு இவ்வுலகத்திலும் பரவுலகத்திலும் ஒருபோதும் நாசமில்லை. தாத ! சாஸ்திரம் விதித்தவா றொழுகியவர் ஒருவரும் துர்க்கதியை யடைவதில்லை. (40)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உபயப்பிரஷ்டனாகிய யோகி நாசமடைவன் என. நீ முற்கூறிய வாக்கியத்திற்குப்பொருள் யாது அவன் விதித்த கருமத்தை விடுத்தோனாதலின் இவ்வுலகத்தில் யாதேனுமொரு பிரமாத புருஷனைப்போல் பெரியோர்களாலிகழப்படுவனென்பதா அல்லது சுருதிகூறியபடியாய பரவுலகத்தில் தாழ்ந்தகதியை யடைவனா.

ஆ-ச. கச்சிந்நோபயவிப்ரஷ்டஶ்சிந்நாப்ரமிவ நஶ்யதி ।
கீடா: பதங்கா மஶகா இதி ஹீநயோநய: ॥

(பொ-ள்.) தேவ வுலகமடைவிக்கும் தேவயான மார்க்கம் பிதிருலோகமடைவிக்கும் பிதிருயான மார்க்க மிரண்டனுள் ஒன்றிலேனும் அவன் பிரவிருத்தியான் அவ்வஞ்ஞானி கீடபதங்க மசகமுதலிய பாபயோனியை அடிக்கடியடைவன் என. இவ்விருவகை நாசமும் அவனுக்கின்றாம். என்னுமர்த்தத்தை ஸ்ரீபகவானருளுகின்றார். ஹே பார்த்த! சாஸ்திரம் விதித்தவாறு சர்வ கருமங்களையுந் தியாகம்பண்ணி விரத்தனாய்க் குருவையடைந்து சிரவணாதிகள்செய்கை இடையில் மரணமானவன் இரண்டுலகத்திலும் நாசமாகான் அதிற்காரண மருளுகின்றார். ‘நஹிகல்யாணக்ருத் கஶ்சித்’ தாத! சாஸ்திரத்தில் விதித்தபொருளைச் சிறிதனுஷ்டிப்பினும் ஒருவரும் அபகீர்த்திவடிவ துர்க்கதியையுமடைவதில்லை, பரவுலகத்தில் கீடமுதலிய பாபயோனியுமடைவதில்லை. சாமான்யமாய்விதித்த பொருளை யநுட்டித்தவனும் துர்க்கதியடையானெனின் எவரினும் மேலாகிய யோகப் பிரஷ்டன் துர்க்கதியடையானென்பதில் கூறற்பாலதென்னை. ஈண்டு ஸ்ரீபகவான் அர்ச்சுனனை தாத என விளித்ததற்கு ‘தநோத்யாத்மாநம் புத்ரரூபேணேதி தாத:’ தன தான்மாவையே புத்திரவடிவமாய் விரிப்பவன் என்பது கருத்து. இவ்வணம் தாத சத்தம் பிதாவாசகமாம் பிதாவே புத்திரவடிவமாதலின் புத்திரனைப் பிதாவெனக் கூறியதென்க. அன்றியும் சீடனும் புத்திர சமமானதால் புத்திரஸ்தானத்தில் சீடனையேவிளித்ததாம்; சீடனிடத்துக் கிருபாதிசயத்தைக் குறித்தற்பொருட்டென்க ஆண்டுமுற்பிரசினத்தில் யோகப்பிரஷ்டன் துர்க்கதியையடைவன் அஞ்ஞானியாய்த் தேவயான பிதிருயானமார்க்கங்களின் சம்பந்தமிலாமையால் தனது கருமத்தினின்றும் வழுவியவனைப்போன்று எனக்கூறியதுமசங்கதம் என்னை யோகப் பிரஷ்டன் தேவயானமார்க்கசம்பந்தமில்லாதவனன்று; மற்றோ, சம்பந்தமுடையவன் ஆதலின் அவ்வனுமானத்தில் அவ்வேதுவே அசித்தமாம். அதாவது, அவனிடத்ததின்று. பஞ்சாக்கினி வித்தையில் இவ்வார்த்தை கூறப்பட்டுளது. ‘யே சேமே(அ)ரண்யே ஶ்ரத்தா⁴ம் ஸத்யமுபாஸதே தே(அ)ர்சிஷமபி⁴ஸம்ப⁴வந்தி’ இச்சுருதியில் பஞ்சாக்கினியை யறிந்தவனைப்போலச் சிரத்தையும் சத்தியமுமுடைய முமூட்சுக்கட்குத் தேவயான மார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகப் பிராப்தி கூறப்பட்டிருக்கிறது. சிரவணாதிகளைச் செய்த யோகப் பிரஷ்டனுக்கும் சிரத்தாவனாய் என்னு முற்கூறிய சுருதியால் சிரத்தையும், சாந்தோதாந்த என்னுஞ் சுருதியால் பொய் சொல்லும் வாக்கிந்திரியத்தொழில் நிரோதவடிவ சத்தியமும், அவனுக்குப் பிராப்தமாம் என்னை; சுரோத்திரமுதலிய விந்தியங்களின் தொழிலையடக்கல் தமமாம்; அது பிராப்தமாகவே சத்தியமும் பிராப்தமாம். அல்லது, யோகசாத்திரத்தில் யோகாங்கமெனக்கூறிய அஹிம்சை சத்தியம் முதலிய ஐந்தும் யமமாம் அஃதை யடையவே சத்தியமும் பிராப்தமாம். முற்கூறிய சுருதியிலுள்ள சத்திய என்னுஞ் சத்தத்தால்பிரஹ்மத்தையே கொள்ளினும் இழுக்கின்றாம்; என்னை; வேதாந்தசாஸ்திர சிரவணாதிகளும் அந்தச்சத்தியமான பிரஹ்ம சிந்தனைவடிவமே. எவனுக்கெப் பொருளில் மன நிலைக்கின்றதோ அவன் மரித்தபின்னர் அப்பொருளையே யடைகின்றான், என்னும் நியமஞ் சாஸ்திரத்திலுங் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் சத்தியவடிவ பிரஹ்மசிந்தனம் பண்ணுகின்ற புருஷனுக்குப் பிரஹ்மலோகப் பிராப்தி

கூறுதல் பொருந்தாதாயினும் இந்நியமம் யாண்டுஞ் சம்பவியாது பஞ்சாக்கினிவித்தையிற் பிறழ்தலின்; பஞ்சாக்கினி வித்தையுடையோனுக்குப் பிரஹ்மவுலகம் பிராப்தியாவதுபோலச் சத்தியப்பிரஹ்மசிந்தனம் பண்ணுவோனுக்கும் பிரஹ்மவுலகப் பிராப்திகூடும். அன்றியும் சந்நியாசாத்பிரஹ்மணஃ ஸ்தானம் என்னு மிருதியும் சந்நியாசத்தால் பிரஹ்மவுலகப் பிராப்தி கூறியிருக்கின்றது. அன்றியும் ஒவ்வொரு நாளிலும் அன்போடு செய்யப்பட்ட வேதாந்த சாஸ்திர விசாரத்தை நூறுகிருச்சிரபலத்திற்குச் சமமாய் ஸ்மிருதியில் கூறப்பட்டிருக்கிறது. இதனால் இப்பொருள் பெறப்படுகின்றது: சிரத்தை, சத்தியம், பிரஹ்மவிசாரம், சந்நியாசம். இந்நான்கில் ஒவ்வொன்றும் பிரஹ்மவுலகப் பிராப்தியிற் காரணமாயின் யோகப்பிரஷ்டனிடத்துள்ள இந்நான்கும் பிரஹ்மவுலகப் பிராப்தியின் காரணமென்பதில் கூறற்பாலதென்னை? இதனாற்றான் தைத்திரிய சாகையையுடைப் பிராமணம் 'தஸ்ய ஹவா ஏதஸ்ய விதுஷோ யஜ்ஞஸ்ய' என்பதுமுதலிய வாக்கியங்களால் யோகிசரிதம் சர்வசுகிருதமெனக் கூறியது. அங்ஙனமே ஸ்மிருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு.　ஸ்நாதம் தேந ஸமஸ்த தீர்த்த ஸலிலே ஸர்வாபி தத்தாவநி
யஜ்ஞாநாஞ்ச க்ருதம் ஸஹஸ்ர மகிலா தேவாஶ்ச ஸம்பூஜிதாஃ ।
ஸம்ஸாராச்ச ஸமுத்த்ருதாஃ ஸ்வபிதரஸ் த்ரைலோக்ய பூஜ்யோப்யஸௌ
யஸ்ய ப்ரஹ்ம விசாரணே க்ஷணமபி ஸ்தைர்யம் மநஃ ப்ராப்நுயாத் ॥

(பொ-ள்.) எவனுடைய மனம் ஒரு கணமேனும் பிரஹ்மவிசாரத்தினிலைக்கின்றதோ அவன் சர்வ தீர்த்தமுமாடினவன் சர்வ பூமிதானமும் பண்ணினவன் ஆயிரயாகமுஞ் செய்தவன் பிரஹ்மன் முதலிய சர்வ தேவர்களையும் பூசித்தவன் தனது பிதிர்க்களைப் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றியவன் மூவுலகத்தும் பூச்சியனுமாவன். (40)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வணம் யோகப்பிரஷ்டன் நன்மை யாற்றிய தன்மையால் இரண்டுலகத்தும் நாசமுறானேனும் வேறெப்பலனையடைவன் என்று அர்ச்சுனனுக்குணரும் வேட்கையுண்டாக ஸ்ரீபகவானருளுகின்றார்.

சு-ம்.　ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீஃ ஸமாஃ ।
ஶுசீநாம் ஶ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே ॥　(41)

ப-ம்.　4 ப்ராப்ய 2 புண்யக்ருதாம் 3 லோகாந் 7 உஷித்வா 5 ஶாஶ்வதீஃ 6 ஸமாஃ
8 ஶுசீநாம் 9 ஶ்ரீமதாம் 10 கேஹே 1 யோகப்ரஷ்டஃ 11 அபிஜாயதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யோகப்பிரஷ்டன் புண்ணியவான்களா லடையத்தக்க உலகத்தையடைந்து ஆண்டுப் பல்லாண்டுவரையினுமிருந்து பின்னர்ப் பவித்திரமான ஸ்ரீமான் வீட்டிற் பிறப்பன். (41)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யோகமார்க்கத்தில் முயற்சித்துச் சர்வகருமங்களையும் விடுத்து நிரந்தரஞ் சிரவணாதிகளைச் செய்துகொண்டிருந்தபுருஷன் இடையில் மரணமடைந்தனன்; அதிலும் ஒருவன் முன்னுகர்ந்த விஷயவாசனை வெளிப்பட்டதால் விஷயங்களை யிச்சிக்கின்றான், மற்றொருவன் வைராக்கிய பாவனையின் திடத்தால் விஷயங்களையிச்சிப்பதில்லை இவற்றுள் முந்தினவன் சரிதை ஈண்டுக்கூறப்படுகின்றது அதில் உபாசனையோடு அசுவமேதமுதலிய யக்ஞங்களைப் பண்ணும் புருஷன் அடையத்தக்க பிரஹ்மவுலகத்தை யோகப்பிரஷ்டன் அர்ச்சிராதிமார்க்கமாய் அடைந்து அதில் பிரஹ்மனாயுளளவுகாலம் வசித்துப் பின்னர்ப் பவித்திரமும் ஐசுவரியமுமுடைய மகா ராஜாவாகிய சக்கரவர்த்தி வீட்டில் போக வாசனை சேட

மிருத்தலின் அஜாத சத்துரு ஜனகன் முதலியோர்களைப்போன்று சென்மத்தை யடைவன். அதாவது போகவாசனை வலியால் யோகப் பிரஷ்டன் பிரஹ்ம வுலகத்தின் அந்தத்திற் சர்வகருமங்களையும் தியாகம்பண்ணயோக்கியமிலாத மஹாராஜாவாகுவன்என்பதாம். ஈண்டு ஒரேபிரஹ்மவுலகத்தில் உலகங்களைஎனப்பன்மைகூறியது பிரஹ்மவுலகத்திலுள்ள போகஸ்தானத்தைப்பற்றியென்க. ஸ்ரீமானானவன் திரவியத்தால் பாவ கருமங்களைச்செய்து அதோகதியை யடைவனாதலின் யோகப்பிரஷ்டனும் அவன் வீட்டிற்பிறந்து அதோகதியையடைவன் என்னும் அர்ச்சுனன் சங்கையை யகற்றுவான் ஸ்ரீமான் புருஷனுக்கு சுசி என்னும் விசேடமருளினர். அதாவது பவித்திரமான ஸ்ரீமானானவன் பாவகருமத்தில் திரவியாதிகளைச் செலவிடான்; மற்றோ, புண்ணியகருமத்திற் செலவிட்டுப் பூர்வகதியினும் மிக்குயர்ந்த கதியையடைவன் என்க. (41)

(அ-கை.) இப்போது விஷயங்களிலிச்சையற்ற மற்றொரு யோகப் பிரஷ்டனது மரணத்தின் அனந்தரகதியை அருளுகின்றார்.

சு-ம். 𑌅𑌥𑌵𑌾 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍇𑌵 𑌕𑍁𑌲𑍇 𑌭𑌵𑌤𑌿 𑌧𑍀𑌮𑌤𑌾𑌮𑍍 ।
𑌏𑌤𑌦𑍍𑌧𑌿 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌤𑌰𑌂 𑌲𑍋𑌕𑍇 𑌜𑌨𑍍𑌮 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑌮𑍍 ॥ (42)

ப-ம். 1 𑌅𑌥𑌵𑌾 3 𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 5 𑌏𑌵 4 𑌕𑍁𑌲𑍇 6 𑌭𑌵𑌤𑌿 2 𑌧𑍀𑌮𑌤𑌾𑌂 12 𑌏𑌤𑌤𑍍 7 𑌹𑌿 13 𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌤𑌰𑌂 8 𑌲𑍋𑌕𑍇 11 𑌜𑌨𑍍𑌮 10 𑌯𑌤𑍍 9 𑌈𑌦𑍃𑌶𑌂

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அல்லது அந்த யோகப் பிரஷ்டன் பிரஹ்மவித்தையுடைய தரித்திரமுடைய பிராஹ்மண குலத்திலே பிறப்பன் இவ்வுலகத்தில் இத்தன்மைய ஜன்மம் மிகவுமரிதாம். (42)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சிரத்தை வைராக்கிய முதலிய குணமிகுதிப் பாட்டால் விஷயபோக வாசனையின்றிய யோகப் பிரஷ்டன் மரணானந்தரம் புண்ணியவான்களடையத்தக்க உலகத்தையடைந்து பிரஹ்மவித்தையும் யோகாப்பியாசமுமுடைய தரித்திரியாகிய பிராஹ்மணகுலத்திற் பிறப்பன் இராஜகுலத்திற் பிறவான் அத்தன்மைய பிறப்புப் பிரமாத காரணங்களனைத்து மின்மையின் மிகவரிதாம் கருத்திதுவாம் இவ்வுலகத்தில் சீமான் குலத்திற் பிறத்தலும் பல சுகிருதங்களாலடையப்படுவதானும் மோட்சத்தில்முடிவுறுதலினாலும் அதுவுமரிதாம். பவித்திரப் பிரஹ்மவித்தையுடைய தரித்திரப் பிராஹ்மண குலப்பிறப்புப் பிரமாத காரணமாகிய திரவியமுதலிய பதார்த்தங்களின்மையினால் மிகவரிதாம். இவ்வணம் இரண்டாவதுயோகப்பிரஷ்டன் புகழத்தக்கவனும். கருத்திதுவாம் ஸ்ரீமான் குலத்திற்பிறந்த முதலாவது யோகப்பிரஷ்டனுக்குச் சித்தவிட்சேபப்படுத்தும் பலவித நிமித்தங்கள் பிராப்தியாயின; அவைகள் இயல்பாயே மற்றையோனுக்கில்லை. சித்தவிட்சேப நிமித்தங்கள் சாஸ்திரங்களிற் கூறப்படுகின்றன.

ஆ-சு. 𑌮𑌨𑍋𑌹𑌰𑌾𑌣𑌾𑌂 𑌭𑍋𑌜𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌯𑍋𑌷𑌿𑌤𑌾𑌂 𑌚 𑌵𑌾𑌸𑌸𑌾𑌂 ।
𑌵𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌚 𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌾𑌚𑍍𑌚𑌲𑌿𑌤𑌂 𑌮𑌹𑌤𑌾𑌮𑌪𑌿 ।
𑌤𑌤𑍍𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌂 𑌤𑌤𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌦𑍂𑌰𑌾𑌦𑍍𑌦𑍂𑌰𑌤𑌰𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ॥

(பொ-ள்.) மனதைக் கவ்ரும்படியான உண்ணப்படுபொருள்கள், பெண், ஆடை, பொன் இவைகளின் சமீபத்தால் மேலானவர்களும் சலனப்படுவார்கள். ஆதலின் அவைகளை நீக்கி வேறிடத்திருக்கவேண்டும் என்பதாம். ஆதலின் போகவாசனையின்மையின் சர்வத்தியாகம்பண்ணத்தக்க இரண்டாவதுயோகப்பிரஷ்டன் முதலாமவனினும் மேலானவன் என்க. (42)

(அ-கை.) ஹே பகவன்! யோகப்பிரஷ்டனது இருவகைப் பிறப்பும் அரிதா மென்பது எதனால் என்றுணரும் வேட்கையுண்டாக அதிலேதுவை அருளு கின்றார்.

சு-ம். தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம் ।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தந ॥ (43)

ப-ம். 2 தத்ர 4 தம் 5 புத்திஸம்யோகம் 6 லபதே 3 பௌர்வதேஹிகம் 11 யததே 9 ச 7 தத: 10 பூய: 8 ஸம்ஸித்தௌ 1 குருநந்தந.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகப்பிரஷ்டன் அவ்விருவகைப் பிறப்புக் களிலும் முற்பிறப்பிற்றொடங்கிய அச்சிரவணமுதலிய சாதனங்களையடைந்து பின்னர் மோட்சத்தின்பொருட்டு மீண்டும் மிக முயல்வன். (43)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரஹ்மான்ம ஏகத்துவ ஞானத்தின்பொருட்டு முற்பிறப்பிற்றொடங்கின விவேகாதி, சந்நியாசம், குருவினடைவு, சிரவணாதி, சர்வசாதனங்களுள் எதை யெதை எத்துணை யெத்துணை அநுட்டித்திறந்தனனோ அதையதை அத்துணை அத்துணை இருவகைப்பிறப்பிலுமடைவன். ஆதியிலிருந்து அநுட்டிக்கவேண்டுவதில்லை. தீர்த்தமாடக்கருதித் தனது கிராமத்தினின்றும் வெளிப்பட்டு மார்க்கத்தில் ஓரிடத்தில் இரவினித்திரைபண்ணிப் பிராதக்காலத்தில் அவ்விடத்தினின்று முன்செல்கின்றனரேயன்றி தமது கிராமத்தினின்றுஞ் செல்வதில்லை; அதுபோல, யோகப்பிரஷ்டனும் முற்பிறப்பின் சாதனத்தினின்று மீண்டும் அதிக சாதனத்தை யடைதற்பொருட்டு முயல்கின்றான். அதாவது, இந்த யோகப்பிரஷ்டன் முன் சென்மத்திற்றேடின பூமியினின்றும் மேற்பூமியையே மோட்சமடைதற்பொருட்டுத் தேடுகின்றனன் என்பதாம்; ஈண்டு, ஹே குருநந்தன என்னுஞ் சம்போதனையால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர். உலகத்தில் மிகப் பிரபாவமும் மிகச் சுத்தமும் மிக ஐசுவரியமுமுடைய குருராஜன் குலத்தில் நீ பிறந்தனையாதலின், நீயும் யோகப் பிரஷ்டனென்றே அறியப்படுகின்றாய் ஆதலின் பூர்வஜன்ம சம்ஸ்காரவசத்தால் இப்பிறப்பில் சிறிது முயற்சியானே உனக்கான்மஞான முண்டாம். என்க. ஸ்ரீ வசிஷ்ட பகவானாலும் இது கூறப்பட்டுளது. ஸ்ரீராமர் வினவல்.

ஆ-சு. ஏகாம்த்விதீயாம்வா த்ருதீயாம் பூமிகாமுத ।
ஆரூடஸ்ய ம்ருதஸ்யாஸ்ய கீத்ருசீ பகவந்கதி: ॥

(பொ-ள்.) ஹே பகவன்! முதற் பூமியையேனும் இரண்டாவது பூமியையேனும் மூன்றாவது பூமியையேனுமடைந்து மரணமானவன் அதன்பின் எவ்வித கதியையடைவன்? ஏழுபூமிகளையும் இதின் மூன்றாவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறினம். ஸ்ரீ இராமர் வினாவிற்கிது கருத்தாம்:—நித்தியாநித்தியமுதலிய மூன்று சாதனங்களையுமடைந்து சர்வ கருமசந்நியாசபூர்வகம், மிகுந்த மோட்ச வேட்கை வடிவ முமூட்சுத்தன்மை, சுபேச்சையென்னு முதற்பூமியாம்; இது சாதன சதுட்டயவடிவமாம். பின்னர்ப் பிரஹ்மவேத்தாவாகிய குருவையடைந்து வேதாந்தவாக்கியங்களைவிசாரித்தல் விசாரணையென்னும் இரண்டாவது பூமியாம்; இது சிரவண மனனவடிவமாம். பின்னர்ச்சிரவணமனனங்களாற்கிடைத்ததத்துவஞானத்திலையமகலல் தநுமானசியென்னும் மூன்றாவதுபூமியாம்; இது நிதித்தியாசனவடிவமாம். இம்மூன்றுபூமிகளும் தத்துவ சாட்சாத்காரத்திற்குச் சாதனங்களாம். சத்துவாபத்தியென்னும் நான்காம்பூமி தத்துவ சாக்ஷாத்காரவடிவமாம். மேல் மூன்று பூமிகளும் சீவன் முக்தியின் அவாந்தரபேதங்களாம். ஆண்டு, நான்காம்பூமியையுடை

ந்து மரணமானவனுக்குச் சீவன் முத்தியின்றேனும் விதேகமுத்தியடைவதில் சிறி தளவும் ஐயமின்றாம். மேல் மூன்று பூமிகளையுமடைந்தவன் சீவித்திருப்பினும் முத்தனும். அவன் சீவித்திருந்தே முத்தனுகில் விதேகமுத்தியிற்கூறுவதென்னை ? மேற்பூமிகள் நான்கினும் சிறிதளவும் ஆட்சேபமில்லை; மற்றோ, சாதனவடிவ கீழ் மூன்றுகளில் சர்வ கருமங்களையும் விடுத்தனன் ஞானத்தையுமடைந்திலனுதலின், ஆட்சேபமுண்டாகும்; இதுபற்றியே ஸ்ரீ இராமர் அம்மூன்று பூமிகளையேவினுவி னர் என்க. ஸ்ரீ வசிஷ்ட பகவான் உத்தரமருளுகின்றார்.

ஆ-சு. யொமஹூமிக யொத்க்ராந்த ஜீவிதஸ்ய ஶரீரிண: ।
ஹூமிகாம்ஶாநு ஸாரெண க்ஷீயதெ பூவ-ஃது-ஷ்க்ருதம் ॥ (1)

தத:ஸுரவிமாநெஷு லொகபாலெஷு மெருஷு ।
ஸெரவவ-ஃத காஂஜெஷு ரமதெ ஸரஸீஸவ: ॥ (2)

ததஸ்ஸுக்ருத ஸம்ஹாரெ து-ஷ்க்ருதெஷு வாஸாக்ருதெ ।
ஹொமக்ஷயாத்வரிக்ஷீணெ ஜாயந்தெயொமிநொஹஸி ॥ (3)

ஶுசீநாம் ஸ்ரீமதாம் மெஹெ முதெ முணவதாம் ஸதாம் ।
ஜநித்வா யொமமெவ ஸெவதெ யொமவாஸிதா: ॥ (4)

தத்ர ப்ராக்ஹாவநாஹ்யஸ்தம் யொமஹூமிக்ரமம் புந: ।
த்ருஷ்ட்வா பரிவதம் தஸ்மாதுத்தரம் ஹூமிகாக்ரமம் ॥ (5)

(போ-ள்.) ஞானயோக பூமியையடைந்து மரணமானவனது பூர்வ பாவகரு மம் யோகபூமி யநுசாரம் நாசமாகின்றது. (1) அதன்பின் மேருபருவத குஞ்சங் களிலும் இந்திரன்முதலிய வுலகபாலர்களின் புரியிலும் தேவவிமானத்திற்சென்று தேவமாதோடு ரமிக்கின்றனன். (2) அதன்பின் முன்தேடின புண்ணியபாவங்கள் போகத்தால் நாசமாகவே மறித்தும் இவ்வுலகத்திற் பிறக்கின்றான். (3) ஆண்டு, இவ்வுலகத்திலும் பவித்திரனும் சீமானும் வித்தைமுதலிய சிரேஷ்ட குண முடையவனுயுமுள்ள நல்லவர் வீட்டில் ஜென்மத்தையடைந்து முந்திய யோகபூமி களின் சமஸ்காரவசத்தால் மீண்டும் அவைகளையே சம்பாதிப்பன். (4) ஆண்டுப் பூர்வ ஜென்மத்தி லநுட்டித்த பூமிகளை விசாரித்து அவ்வறிவுளான் அதனின் உத்தரபூமிகளை முயன்றடைவன். (5) ஈண்டு, முன்னர் அதிகமான போகவாசனை யின் பிரபலத்தால் சிறிதுநாள் அநுட்டித்த வைராக்கிய வாசனையின் துர்ப்பலத் தால் பிராணன் வெளிப்படும்போது வெளிப்பட்ட போகவாசனையுடைய சந்நியாசி யையே ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறியருளினர். வைராக்கிய வாசனையின் பிரபலத்தா லும் மிகப் புண்ணியத்தாற்பெற்ற பரமேஸ்வரகிருபையாலும் பிராணன் வெளிப் படுங்கால் போகேச்சையின்றிய சந்நியாசி விடயபோக மறைப்பின்றியே பிரஹ்ம வித்தையுடைய தரித்திரப் பிராமணர்களின் சர்வப் பிரமாதகாரண ரகிதமான குலத்தில் பிறப்படைவன். அத்தன்மையனுக்குப் பூர்வ சமஸ்காராபிவியக்தியின் றியே முயற்சியுண்டாம்; ஆதலின், அவன்போல் இவனுக்குமோக்ஷத்தில் சிறிதள வுஞ் சங்கையில்லை. இவ்விரண்டாவது யோகப்பிரஷ்டனை ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறவில்லை; மற்றோ, பரமகிருபாலுவாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானே, ‘அதவாயோகி நாமேவ’ என்னும் பட்சாந்தரத்தையுடன்பட்டுத் திருவாய்மலர்ந்தருளினர். (43)

(அ-கை.) ஹே பகவன்! பிரஹ்மவித்தையுடைய தரித்திரப் பிராமணகுலத் தில் பிறந்தவனுக்கு இடையில் விடயபோக மறைப்பின்மையின், மறைப்பற்ற பூர்வ சமஸ்காரத்தின் உற்போதத்தால் அவன் மறித்தும் சர்வகரும சந்நியாசபூர்வகம்

ஞானத்தின் சிரவணமுதலிய சாதனங்களையடைவன். ஆனால், சீமானாகிய ராஜகுலத்தில் பலவித விஷயபோக மறைப்புடன் பிறந்தவனுக்கு விடயபோக வாசனையின் பிரபலத்தானும் திரவியமுதலிய பிரமாத காரணங்கள் பொருந்தியிருத்தலினானும் மறைபற்ற பூர்வஞான சமஸ்காரத்தின் உற்போதமும், க்ஷத்திரியனானதால் சர்வ கர்ம சந்நியாசத்திற் கயோக்கியனாகிய அவனுக்கு ஞானசாதனப் பிராப்தியும், எவ்வாறுண்டாம்; மற்றோ, உண்டாகாது என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீபகவான் உத்தரமருளுகின்றார்.

சு-ம். பூர்வாப்யாஸேந தேநைவ ஹ்ரியதே ஹ்யவஶோऽபி ஸ: ।
ஜிஜ்ஞாஸுரபி யோகஸ்ய ஶப்தப்ரஹ்மாதிவர்ததே ॥ (44)

ப-ம். 5 பூர்வாப்யாஸேந 4 தேந 6 ஏவ 7 ஹ்ரியதே 8 ஹி 2 அவஶ: 3 அபி 1 ஸ: 10 ஜிஜ்ஞாஸு: 11 அபி 9 யோகஸ்ய 12 ஶப்தப்ரஹ்ம 13 அதிவர்ததே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த யோகப்பிரஷ்டன் முயலானேனும் அந்தப் பூர்வாப்பியாசமே முயல்விக்கின்றது, பிரத்தியக்கபின்னப் பிரஹ்ம சிஞ்ஞாசுவாயினும் கருமகாண்டவடிவ வேதத்தைக் கடந்திருப்பன். (44)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உத்தமகுலத்தில் போகத்தை நுகர்ந்து சீமானாகிய ராஜவீட்டில் பிறந்த யோகப்பிரஷ்டனது அத்தியந்த மறைப்புடைய பூர்வஜன்மத்தில் சம்பாதிக்கப்பட்ட ஞானசமஸ்காரம் பூர்வாப்பியாசமாம்; அது இப்பிறப்பில் மோட்சசாதனத்தின்பொருட்டு முயற்சியிலானேனும் அப்புருஷனைத் தன்வசப்படுத்துகின்றது. அதாவது, பூர்வ சமஸ்காரத்தால் காரணமின்றியே போகவாசனைநீங்கி அவன் மோட்சசாதனத்திற் பிரவிர்த்திக்கின்றான். அந்த ஞானவாசனை சிறிதுகால மநுட்டிக்கப்பட்டது, போகவாசனை நீண்டகால மநுட்டிக்கப்பட்டது; அங்ஙனமாயினும், ஞானவாசனை வஸ்துவிடயகம், போகவாசனை அவஸ்து விடயகம்; ஆதலின், ஞானவாசனை போகவாசனையினும் மிகவும் பிரபலமாம். அதனால் துர்ப்பலமான போகவாசனையின் அடக்கம் கூடும். ஆகாசத்தில் நீலஞானத்தாலுண்டாகிய வாசனை நீண்டநாள் அநுட்டித்ததேனும் வான் உருவமற்றது என்பது முதலிய சாத்திரஞானஜன்ய அற்பகாலத்திய வாசனையால் அவ்வாசனை பாதமாகின்றது. ஆதலின், வாசனையின் பிரபலத்தன்மை துர்ப்பலத்தன்மைகளில் நெடுநாள் அப்பியாச விஷயத்தன்மை அற்பநாள் அப்பியாச விஷயத்தன்மை காரணமல்ல; மற்றோ, வஸ்து விஷயத்தன்மை அவஸ்து விஷயத்தன்மைகளாம். வஸ்துவிஷயமோ ஞானவாசனையிலேயாம்; போகவாசனையிலின்றாம். ஆதலால், ஞானவாசனையே பிரபலமாம். இதை உன்னிடத்திலே காணுதி. வேறிடத்திற் காணற்க; நீ முன்னர்க் கேவலம் போர்புரியத்தொடங்கினை, ஞானத்தின்பொருட்டன்று. ஆனாலோ முந்திய ஞானவாசனையின் பிரபலத்தால் காரணமின்றியே நீ ரணபூமியில் போரினின்றும் உபாமத்தையடைந்து ஞானத்திலே பிரவிருத்தனாயினை; இதுபற்றியே, முன்னர் 'நைஷா ஹி க்ருபண: ஸ்ம்ருதா' என்னும் வாக்கியம் உன்னைக்குறித்துக் கூறியதாம். கருத்திதுவாம்:—பல்லாயிரம் பிறப்புக்களால் மறைக்கப்பட்டதாயினும், அந்த ஞான சமஸ்காரம் விரோதிகளை விநாசம்பண்ணித் தனது காரியத்தை ஒருதலையாப் பெறுவிக்கும் என்பதாம். க்ஷத்திரியராஜனுக்கு சர்வகரும சந்நியாசமின்றேனும் ஞானாதிகாரத்தன்மை பிராப்தியாம்; ஈண்டு, ஹ்ரியதே என்பதால் ஸ்ரீபகவான் இதைக் குறிப்பித்தருளினர். இரட்சிப்போர்கள் பலரின் மத்தியிலுள்ள கோ, குதிரை முதலியவைகள் செல்வதற் கிச்சியாதனவாயினும், திருடன் சர்வ ரட்சகர்களுக்குந் தெரியாமல் தனது சாமர்த்திய விசேடத்தால் அவைகளைக் கவர்ந்துகொள்கின்றான்; அதுபோல, பலவிதமான ஞானப்பிரதிபந்தகங்களோடுகூடிய யோகப்பிரஷ்டன் தானே ஞானத்தை இச்சியா

னேனும் பூர்வஜன்ம ஞான சமஸ்காரம், தன் சாமர்த்திய விசேடத்தால் சர்வப் பிரதிபந்தங்களையும் அடக்கிவிட்டு தனது வசப்படுத்துகின்றது; அதாவது, மறித்து ஞானத்திற் பிரவிருத்திப்பிக்கின்றது. இதுபற்றியே சமஸ்காரத்தின் பிரபலத்தால் பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தையுணர விச்சித்த அதாவது சுபேச்சை வடிவ முதற்பூமியினிலைத்த சந்நியாசியும் அப்பூமியின்கண்ணே மரித்து இடையில் பலவித விஷயபோகங்களைநுகர்ந்து மகாராஜாவின் குலத்திற் பிறந்தும் அந்த யோகப்பிரஷ்டன் முற்றேடிய ஞானசமஸ்காரப் பிரபலத்தால் அப்பிறப்பிலே கருமத்தைக் கூறும் வேதபாகத்தைக்கடந்து நிலைக்கின்றான்; அதாவது, கருமாதிகாரத்தைவிடுத்து ஞானத்திற் கதிகாரியாகின்றான். இதனானும் ஞான கருமங்களின் சமுச்சய மறுக்கப்பட்டதென் றுணர்க. என்னை? சமுச்சயபட்சத்தில் ஞானமுடையோனுக்குக் கருமபரித்தியாக மமையாமையின் என்க.

(அ-கை.) இவ்வாறு முதற் பூமியில் மரிக்கினும் பல போகவாசனையால் மறைக்கப்படினும் பலவித பிரமாத காரணங்களுடைச் சீமான்வீட்டில் ஜன்மமெடுத்தும் அந்த யோகப்பிரஷ்டன் முற்றேடிய ஞானசமஸ்காரத்தின் பிரபலத்தால் கருமாதிகாரத்தைவிடுத்து ஞானதிகாரியாகின்றானெனில், இரண்டாவது மூன்றாவது பூமிகளில் மரணமடைந்து உத்தமகுலத்திற்பிறந்து பலவித போகத்தைநுகர்ந்து பின்னர்ச் சீமான்குலத்தில் ஜனித்த யோகப்பிரஷ்டன் அக்கருமாதிகாரத்தை விடுத்து ஞானதிகாரியாவனென்பதிற் கூறற்பாலதென்னை? அல்லது, அம்மூன்றுகளில் மரணமடைந்து உத்தமகுலத்திற்பிறந்து போகங்களை நுகராது பிரஹ்மவித்தையுடைய பிராமணகுலத்திற்பிறந்த இச்சையின்றிய யோகப்பிரஷ்டன் கருமாதிகாரத்தைவிடுத்துக் கேவலம் ஞானதிகாரியாய் அதன் சாதனங்களாகிய சிரவணாதிகளைச் சம்பாதித்து அதன் பலமாகிய ஞானத்தால் சர்வ சம்சாரத்தினின்றும் முத்தனாவன் என்பதிற் கூறற்பாலதென்னை? இவ்வாறு கைமுதிக நியாயத்தாற் சித்தித்த அர்த்தத்தை ஸ்ரீபகவா னிப்போதருளுகின்றார்.

சு-ம். ப்ரயத்நாத்யதமாநஸ்து யோகீ ஸம்ஸுத்தகில்பிஷ: ।
அநேகஜந்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ (45)

ப-ம். 2 ப்ரயத்நாத் 4 யதமாந: 3 து 1 யோகீ 5 ஸம்ஸுத்தகில்பிஷ: 6 அநேகஜந்மஸம்ஸித்த: 7 தத: 10 யாதி 8 பராம் 9 கதிம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பூர்வ முயற்சியினும் அதிகமாய் முயற்சிப்பவனும் பாவ மலங்கழுவப்பட்டவனும் அநேக சுகிருதத்தாற்பெற்ற அந்திய ஜன்மமுடையவனுமாகிய அந்த யோகி அச்சாதனங்களின் பரிபாகத்தால் பரம முத்தியையடைகின்றான். (45)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்பிறப்பிற்செய்த முயற்சியினும் அதிகாதிக முயற்சிபண்ணும் யோகி அதாவது முற்பிறப்பிற்றேடிய ஞான சமஸ்காரவடிவ யோகத்தோடுகூடியவன் அந்த யோக முயற்சிவடிவபுண்ணியத்தால் பாவவடிவ மலங் கழுவப்பட்டவன் அதாவது அப்புண்ணியவடிவ நீரால் ஞானத்தின் பிரதிபந்தக பாவவடிவமலங் கழுவப்பட்டவன் இக்காரணத்தானே ஞான சமஸ்காரத்தின் விருத்தியினாலும் புண்ணியத்தின் விருத்தியானும் பல ஜன்மங்களிற் சித்தமானவன்; அதாவது, முந்திய பல பிறப்பின் ஞான சமஸ்காரத்தின் பிரபாவத்தானும் புண்ணியகருமத்தின் பிரபாவத்தானும் அந்திய ஜன்மத்தையடைந்தவன், அத்தன்மைய யோகப்பிரஷ்டன் சிரவணமுதலிய சாதனங்களின் பரிபாகத்தால் பரமான்மைக்கியசாக்ஷாத்காரத்தையடைந்து புனராவிருத்தியின்றிய பரம முத்தியையடைவன்; இதிற் சிறிதளவுமையமில்லை. (45)

(அ-கை.) இப்போது அர்ச்சுனனுக்குச் சிரத்தாதிசயோற்பன்ன பூர்வகம் கூறியருளிய யோகத்தை விதித்தருளற்பொருட்டு ஸ்ரீ பகவான் அதைத் துதித் தருளுகின்றார்.

சு-ம். தவஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞாநிப்யோऽபி மதோऽதிக: ।
கர்மிப்யஶ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுந ॥ (46)

ப-ம். 2 தவஸ்விப்ய: 3 அதிக: 1 யோகீ 5 ஜ்ஞாநிப்ய: 6 அபி 4 மத: 7 அதிக: 10 கர்மிப்ய: 8 ச 11 அதிக: 9 யோகீ 12 தஸ்மாத் 14 யோகீ 15 பவ 13 அர்ஜுந.

(அ-ம்) ஹே அர்ச்சுன! அந்தத் தத்துவ வேத்தாவாகிய யோகி, தவசிகளினும் பரோட்சஞானியினும் கருமிகளினும் மேலானவனென்றெனக்குடன்பாடாதலின், நீ அத்தன்மைய யோகியாகுவாய். (46)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தத்துவஞானமுண்டானதன் பின்னர்ச் சீவன்முத்திச் சுகத்தின்பொருட்டு மனோநாசவாசனக்ஷயங்களைச் செய்யும் யோகியானவன் கிருச்சிர சாந்திராயணாதி தவம் பண்ணுவோனினும் மேலாமென்றெனதெண்ணம்; அஃதாவது, அந்த யோகி புருஷனைத் தவசியினின்றும் உற்கிருஷ்டனென்றெண்ணுகிறேன் என்பதாம்.

ஆ-சு. வித்யயா ததாரோஹந்தி யத்ர காமா: பராகதா: ।
ந தத்ர தக்ஷிணாயந்தி நாவித்வாம்ஸஸ்தபஸ்விந: ॥

(பொ-ள்.) தத்துவ ஞானியானவன் யான் பிரஹ்மசொரூபம் என்னும் பிரஹ்மஞானத்தால் அப்பதத்தை யடைகின்றான்; அதன்கட் சர்வகாமங்களு முடிகின்றன. யாகாதிகளை யாற்றுபவரும் அடையார்; வித்துவானலாத தவசியும் அடையான் என்க. இதுபற்றியே தக்ஷிணையோடு சோதிட்டோம முதலிய கருமங்களைச் செய்பவனினும் அந்த யோகி மேலானவனென்பதெனதெண்ணம். என்னை? அக்கருமி தவசிகள் தத்துவஞானமின்றியவர்களாதலின், மோக்ஷத்திற் குரியாரல்லர்கள்; ஆன்மாவினது பரோட்சஞான முடையோனினும் யோகி மேலானவனென்றெனதெண்ணம். மனோநாச வாசனக்ஷயங்களின்மையால் சீவன்முத்திச் சுகத்தை யடையாத அபரோட்ச ஞானியினும் மனோநாச வாசனக்ஷயங்களுடைய சீவன்முத்தனாகியயோகி மேலானவனென்றெனதெண்ணம். ஆதலின், யோகப் பிரஷ்டனாகிய நீயும் இப்போதே முயற்சிவலியால் தத்துவஞான மனோநாசவாசனக்ஷயங்களையடைந்து சீவன்முத்த யோகியாகுவாய்; அதுவும் (சயோகி பரமோமத:) என்னும் வாக்கியத்தால் நானுனக்கு முன்னர்க்கூறியதாமென்றுணர்வாய். ஈண்டு, ஹே அர்ச்சுன! என்னுஞ் சம்போதனையால் ஸ்ரீபகவான் அர்ச்சுனன் சுத்தமானவனென்றுணர்த்தி யருளினாராதலின், அவன் அந்தயோகத்தைச் சம்பாதித்தற்குரியனெனக் குறிப்பித்தருளினர். (46)

(அ-கை.) இப்போது சர்வ யோகியினும் மேலான யோகியைத் திருவாய் மலர்ந்தருளி ஸ்ரீபகவான் ஆறாவது அத்தியாயத்தை முடித்தருளுகின்றார்.

சு-ம். யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா ।
ஶ்ரத்தாவாந்பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥ (47)

ப-ம். 9 யோகிநாம் 10 அபி 8 ஸர்வேஷாம் 3 மத்கதேந 4 அந்தராத்மநா 2 ஶ்ரத்தாவாந் 6 பஜதே 1 ய: 5 மாம் 7 ஸ: 12 மே 11 யுக்ததம: 13 மத:

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் சிரத்தையுடையவனுய் என்னிடத்து நிலைத்த அந்தக் காணத்தால் பரமேசுரனுகிய என்னைப் பூசிக்கின்ருனே அவன் சர்வ யோகிகளுக்குள்ளும் மிக மேலானவனென்று எனது சம்மதம். (47)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வாசுதேவனுகிய என்னிடத்தில் புண்ணிய பரிபாக விசேஷத்தினின்று அன்பின் வசத்தாலுண்டாகிய அந்தக்காணத்தால் முன் சமஸ்காரத்தானும் சாதுசங்கத்தானும் என்னிடத்துச் சிரத்தையுளனுய் என்னைப் பூசிக்கின்ருன்; அதாவது ஈசுரர்கட்கு மீசுரவடிவ நாராயணனுகிய என்னைச்சகுணமாகவேனும் நிர்க்குணமாகவேனும் இக்கிருஷ்ணன் மனுஷ்யன், மற்ருேரீசனுக் கொப்பானேன் என்னு மித்தன்மைய பிராந்தியைவிடுத்து நிரந்தரம் சிந்தனைசெய்பவன், வசுருத்திரன்முதலிய அன்னிய தேவதைகளைப் பூசிக்கும்சர்வயோகியினும் மிகுந்த உத்தமனென்பது எனதுசம்மதம்; அதாவது சர்வ சமாகிதச் சித்தமுடையவர்களினும் இவனை மேலானவனென்றெண்ணுகின்றேன். கருத்திதுவாம்:—யோகாநுட்டானக் கிலேசமும் பூசனைக்கிலேசமும் சமமாயினும் எனது பக்தியின்றிய யோகியினும் எனது பக்தன் மிகச்சிரேஷ்டனும். நீயும் எனது பரமபக்தனுதலின் ஆயாசமின்றியே மேலான யோகியாதற்குச் சமர்த்தன் என்க. இவ்வாருவது அத்தியாயத்தில் ஸ்ரீபகவான் இத்துணைப்பொருள் கூறியருளினர். அவற்றுள் முதலில் சித்த சுத்திக்குக் காரணமாகிய கருமயோகமும், அதன்பின் சர்வ கருமங்களையுந்தியாகம் பண்ணியவன் செய்யத்தக்க அங்கசகித யோகமும், அதன்பின் அர்ச்சுனனது ஆட்சேப நிராகரணபூர்வகம் மனநிக்கிரகோபாயமும், அதன்பின்யோகப்பிரஷ்டனது புருஷார்த்தமின்மையின் மறுப்புமாமென்க. ஸ்ரீபகவான் இவ்வர்த்தங்களைத் திருவாய் மலர்ந்து பிரதமஷட்கவடிவ கருமகாண்டத்தையும் துவம்பதார்த்த நிரூபணத்தையு முடித்தருளினர்மேல் 'சிரத்தாவான்பஜதே யோமாம்' என்னும் வாக்கியத்தாற் சூசிப்பித்தருளிய பக்தி யோகத்தையும் அதன் விஷயமான வாசுதேவவடிவ தத்பதார்த்தத்தையும் அருளிச்செய்வான் மேலைய ஆறத்தியாயவடிவ உபாசனகாண்டந் தொடங்கியருளப்படும். (47)

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசார்ய ஸ்ரீ உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூச்சியபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனனந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்த தீபிகை எனப் பெயரிய வியாக்கியானத்தின்,

ஆருவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

# ஏழாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ ஸ்ரீ குருப்யோநமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

சு-ம். யத்பக்திம் ந விநா முக்திர்ய: ஸேவ்ய: ஸர்வயோகிநாம் ।
தம்வந்தே பரமாநந்தம் ஶ்ரீநந்தநந்தநம் ॥

(பொ-ள்.) அன்பர்களைக்கரையேற்றுவான் ஸ்ரீநந்தரின் மைந்தத்தன்மையை யடைந்த எக்கிருஷ்ணபகவான் பத்தியின்றி அதிகாரிகள் மோட்சத்தையடையார்களோ அந்தச் சர்வ யோகிகளாற் சேவ்யனும் பரமாநந்தகனனும் உள்ள ஸ்ரீ கிருஷ்ணபகவானை அடிக்கடி வணங்குகின்றேன். ஆண்டுச் சர்வகருமங்களின் சந்நியாசவடிவ சாதனம் பிரதானமாயுள்ள முதலாவது ஷட்கத்தால் ஸ்ரீ பகவான் யோகத்தோடு துவம்பத லட்சியார்த்தவடிவ ஞேயவஸ்துவைத் திருவாய்மலர்ந் தருளினர். இப்போது தியேயப் பிரஹ்மத்தின் பிரதிபாதனத்தைப் பிரதானமாக வுடைய இரண்டாவது ஷட்கத்தால் தத்பதார்த்தவடிவப் பரமான்மாவைக் கூறி யருளுவர். அதிலும் 'யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா' 'ஶ்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:' என்னுஞ் சுலோகத்தால் முற்கூறி யருளிய தமதுவசனத்தை வியாக்கியானஞ்செய்வான் ஸ்ரீபகவான் இந்த ஏழாவது அத்தியாயத்தைத் தொடங்கி யருளுகின்றார். ஆண்டு, எத்தன்மைய பகவத்வடிவம் பஜனைபண்ணத்தக்கதென்றும் அவ்வடிவத்தில் இம்மனம் எவ்வாறு நிலைக்குமென்றும் அர்ச்சுனன் வினவத்தக்கவன். ஆனாலோ, இருவகை வினாக்களையும், ஸ்ரீபகவானிடத்தில் வினாவிலனேனும் பரமகிருபாலுவாகிய ஸ்ரீபகவான் வினாவின்றியே அர்ச்சுனனுக்கு இவ்விரண்டின் உத்தரத்தை யருளிச்செய்கின்றார்.

ஶ்ரீபகவாநுவாச.

சு-ம். மய்யாஸக்தமநா: பார்த யோகம் யுஞ்ஜந்மதாஶ்ரய: ।
அஸம்ஶயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு ॥ (1)

ப-ம். 2 மயி 3 ஆஸக்தமநா: 1 பார்த 5 யோகம் 6 யுஞ்ஜந் 4 மதாஶ்ரய: 7 அஸம்ஶயம் 8 ஸமக்ரம் 9 மாம் 10 யதா 11 ஜ்ஞாஸ்யஸி 12 தத் 13 ஶ்ருணு

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னிடத்தில் ஆசத்தமனத்தனும் எனது சரணத்தனுமாகி முற்கூறிய யோகத்தைச்செய்து ஐயமின்றிச் சர்வ விபூதிகளையுமுடைய என்னை எவ்வாற்றா னறிவையோ அப்பிரகாரத்தைக் கேட்பாய். (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ வுலகத்தின் உற்பத்தி திதி லயங்களின் காரணமுதற்கொண்டு பலவிதமான விபூதிகளையுடைய பரமேசுரனாகிய என்னிடத்தில் ஆசத்த மனமுடைய நீ, இதுபற்றியே எனது ஒரே சரணத்தையுமடைந்தவன். கருத்திதுவாம்:—இராஜனுடைய வேலைக்காரன் இராஜாவைத் தழுவியவனாயினும் அவனிடத்து ஆசக்த மனமுடையவனல்லன்; மற்றோ, தனது மனைவிமக்கள் முதலியோர்களிடத்தே யாசக்தனவன் இவ்வண்ணன் நீயலன். மற்றோ, ஒரே

பரமேசுரனிடத்தில் ஆசிரிதனும் ஆசத்தமனமுடையவனுமாவாய் அத்தன்மைய முமுட்சுவாகிய நீயேனும் உன்னைப்போன்ற மற்ற முமுட்சுவேனும் ஆறுவது அத்தியாயத்திற் கூறிய ரீதியாய் மனநிரோதவடிவ யோகத்தைச்செய்து ஐயப்பாடின்றிப் பலம் சத்தி ஐசுவரியமுதலிய சர்வ விபூதிகளுமுடைய என்னை எவ்வாறுணர்வையோ அவ்வாற்றை யுனக்குச் சொல்கின்றேன் சாவதானமாய்க்கேட்பாய்.

(அ-கை.) ஆண்டு, இம்முற் சுலோகத்தில் 'மாம்ஞாஸ்யசி' என்னும் வாக்கியத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாக்கியத்தால் பகவத்விஷயகஞானம் பரோட்சமேயாம் எனத் தோற்றுகின்றது என்னு மர்ச்சுனன் சங்கையை நிவிர்த்தித்தருளி ஸ்ரீபகவான் கேட்போன் ஞானுபிமுகமாதற்பொருட்டு ஞானத்தைத் துதித்தருளுகின்றார்.

சு-ம். ஜ்ஞாநந்தேஹம் ஸவிஜ்ஞாநமிதம் வக்ஷ்யாம்யஶேஷத: ।
யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூயோந்யஜ்ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே ॥ (2)

ப-ம். 5 ஜ்ஞாநம் 2 தே 1 அஹம் 4 ஸவிஜ்ஞாநம் 3 இதம் 7 வக்ஷ்யாமி 6 அஶேஷத: 8 யத் 9 ஜ்ஞாத்வா 14 ந 10 இஹ 11 பூய: 12 அந்யத் 13 ஜ்ஞாதவ்யம் 15 அவஶிஷ்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய நான் உனக்கு அவ்விஞ்ஞான சகிதஞானத்தைச் சாதனபலன் முதலியவைகளோடு கூறுகின்றேன். எந்தச் சைதன்ய வடிவஞானத்தை யுணர்ந்து ஈண்டு மறித்தும் அறியத்தக்க பொருள் ஒன்றும் சேடமில்லையாமோ. (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எனதத்துவிதீப சொரூபத்தை விஷயம் பண்ணப்பட்ட ஞானம் இயல்பானே அபரோட்சமாயினும் அசம்பாவனை முதலிய தோஷவசத்தால் தனது பலத்தைக் கொடுக்காது பரோட்சமெனப்படுகின்றது. சிரவணமுதலியவைகளின் பரிபாகத்தால் தடைகணீங்கிய பின்னர் அவ்வாக்கியத்தாலுண்டாகிய ஞானம் தடைகளின்மையின் தனது பயனைத்தரவே அபரோட்சமெனப்படுகின்றது. இவ்வாறு சிரவணமுதலிய விசாரத்தாலுண்டானதால் அதுவே விஞ்ஞானமெனப்படுகிறது. இவ்வாறு விஞ்ஞானத்தோடுற்ற மகாவாக்கிய ஜன்ய இவ்வபரோட்சஞானத்தை உண்மைகூறுவோனுகிய நான் உனக்குச் சேடமிலாது சொல்கின்றேன். அதாவது, அவ்வபரோட்ச ஞானத்தின் பலன் சாதனங்களனைத்தையும்உனக்குக்கூறுகின்றேன். எந்த நித்தியசைதன்யவடிவஞானத்தையுணர்ந்து அதாவது யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் வேதாந்த வாக்கிய ஜன்ய மனோவிருத்திக்கு விஷயமாக்கி ஈண்டு மறித்தொரு பொருளும் உனக்கறியத் தகுதியதின்றாமோ.

ஆ-சு. யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதம் ।
கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி ॥

(போ-ள்.) என்பனமுதலிய சுருதிகளில் ஒருபாமான்மஞானத்தானே சர்வவுலகஞானமுமாமென்பது கூறப்பட்டிருக்கிறது. கருத்திதுவாம்:—அஞ்ஞானத்தாற் கயிற்றிற்றோற்றும் சர்ப்பதண்ட முதலியவைகட்குக் கயிறுகிய அதிட்டானத்தை யுணர்ந்த பின்னர்ப் பாதமுண்டாகின்றது. பின்னர்க் கயிறொன்றே சேடமாயிருப்பதுபோல, அதிட்டானமாகிய சத்தியப் பிரஹ்மத்தில் கற்பிதமான இவ்வுலகனைத்தும் அவ்வதிட்டான ஞானத்தால் பாதமாகின்றன; பின்னர் அதிட்டானமாகிய பிரஹ்மமே சேடமாயிருக்கின்றது; அத்தன்மைய ஞானத்தானே நீ கிருதார்த்தனுகுவாய்.

(அ-கை) ஹே அர்ச்சுன! அத்தன்மைய பெரும் பயனைத்தரும் எனது சொரூபஞானம் எனதநுக்கிரகமின்றி மிகவரிதாம் என அதனருமையைக்கூறி யருளி அதிகாரிகளதில் முயலுவான் அந்த ஞானத்தை ஸ்ரீபகவான் துதித்தருளு கின்றார்.

சு-ம். மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத꞉ ॥ (3)

ப-ம் 1 மநுஷ்யாணாம் 2 ஸஹஸ்ரேஷு 3 கஶ்சித் 5 யததி 4 ஸித்தயே 6 யததாம் 8 அபி 7 ஸித்தாநாம் 9 கஶ்சித் 10 மாம் 12 வேத்தி 11 தத்த்வத꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பல்லாயிர மநுடர்களுக்குள் ஒருவனே ஞானமுண் டாதற்பொருட்டு முயலுவான்; அவ்வாறு முயலுமதிகாரிகளுக்குள்ளும் ஒருவனே என்னையுள்ள வாறுணர்வன். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாத்திரத்திற் கூறப்பட்ட கருமஞானங்களையநுட் டிக்கத்தக்க பல்லாயிர மதிகாரிகளுக்குள் ஒருவனே முற்பிறப்பின் புண்ணியவசத் தால் நித்தியாநித்திய விவேகமுடையனாய் அந்தக்கரணசுத்திவாயிலாய் ஞான முண்டாதற்கு முயலுவான்; அவ்வாறு முயலும் பல்லாயிரமதிகாரிகளுக்குள் ஒரு வனே சிரவணாதிகளின் பரிபாகத்தின்பின்னர்ப் பரமேசுரனாகிய என்னைச்சாட்சாத் கரிக்கின்றான்.

சங்கை :—ஹே பகவன்! விஷ்ணுவையும் ராமரையும் தங்களையும் தேவர் அசுரர் மநுடர் முதலிய பல பிராணிகளும் அறிகின்றார்களாதலின், பல்லாயிர மநுடர்களுக்குள் ஒருவனே என்னையறிவன் எனத்தாங்கள் கூறியது சம்பவியாது.

சமாதானம் :— 'தத்த்வத꞉' என. ஹே அர்ச்சுன! சங்கு, சக்கரம், கதை, பத்மங்களையுடைய நான்குபுயத்த எனது தூலவடிவத்தைத் தேவர்முதலிய பல் லோர்கள் உணர்கின்றார்கள் ஆயினும் இஃதெனக் குண்மைவடிவமன்று; மற்றே, மாயையாற் பண்ணப்பட்டது. ஆதலின், அவர்கள் என்னை உள்ளவாறுணர்ந்திலர்; அன்றியும், பிரஹ்ம வேத்தாக்குரு வுபதேசத்தால் யான் பிரஹ்மசொரூபம் எனத் தனது பிரத்தியக்கான்மாவிற் கபின்னமாய் என்னை யுணர்ந்தவனே எனது உண் மைவடிவத்தை யுணர்ந்தவன். இவ்வாறுணர்பவன் பல்லாயிரர்களுக்கு ளொருவ னே. இதனால் இப்பொருள் பெறப்பட்டது: முதலில் பல்லோர்களுக்குள் ஆன்ம ஞானத்தின் சாதனத்தை யநுட்டிப்பவரே மிக வரியர்; அதை யநுட்டிக்கும் அநே கர்களுக்குள்ளும் ஞானவடிவபலத்தை யடைபவர் மிக வரியர்; அத்தன்மைய பிரஹ்மஞானத்தின் பெருமையைக் கூறற் கெவராலேலும். (3)

(அ-கை.) இவ்வண்ணம் ஆன்மஞானத்தைத்துதித்துக் கேட்போனை அதி லபிமுகப்படுத்தி இப்போது சர்வான்மவடிவ காரணத்தால் ஆன்மாவின் பரிபூர ணத்தன்மையைக் கூறுதற்பொருட்டு முதலில் அபரப்பிரகிருதியை யருளிச்செய் கின்றார். 'பூமிராப' என. அல்லது, 'யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யஜ்ஜ்ஞாதவ்யமவ ஶிஷ்யதே' என்னும் வாக்கியத்தால் ஒரு பரமான்மாவின் ஞானத்தால் சர்வ வுலக ஞானமுமாமென்னும் பிரதிஞ்ஞை செய்யப்பட்டது; அது பிரஹ்மத்தை ஜகத் காரணமெனக்கொள்ளிற் சித்தமாம் என்னை உலகத்தி னுபாதான காரணத்தின் ஞானத்தானே அதன் காரியங்களனைத்தின் ஞான முண்டாம் ஒரேமண்வடிவ கார ணஞானத்தால் அதன் காரியவடிவ கடசராவமுதலிய சர்வ ஞானங்களு முண்டா கின்றன; காரண ஞானமின்றிக் காரியஞான முண்டாகாதாகலின் முற்பிரதிஞ் ஞையை உபபாதனம் பண்ணற்பொருட்டு ஸ்ரீபகவான் அந்த ஞானவடிவப் பிரஹ்

மத்தினின்றும் சடாசட வடிவ சர்வ வுலகோற்பத்தியை 'பூமிராப:' என்பது முதலிய மூன்று சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஹூமிராவொநலொ வாயு: வம் மநொ வுஷிரெவ ச ।
அஹஂகார இதீயஂ மெ ஹிநா ப்ரக்ருதிரஷ்டயா ॥ (4)

ப-ம். 1 ஹூமி: 2 ஆப: 3 அநல: 4 வாயு: 5 வம் 6 மந: 7 வுஷி: 8 ஏவ 9 ச 10 அஹஂகார: 11 இதி 13 இயம் 12 மெ 16 ஹிநா 14 ப்ரக்ருதி: 15 அஷ்டயா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மண்ணீரொளிகால்வான் மனம் புத்தி யகங்காரம் என்னு மிவ்விதமாய பரமேசுரனுகிய எனது பிரகிருதி எண்வகைப் பேதமுடையதாம். (4)

(வி-ம்.) ஆண்டு, சாங்கிய நூலார் ஐந்துதன் மாத்திரைகள் அகங்காரமகதத்துவ அவ்வியக்தம் என்னும் இவைகளை அஷ்டப் பிரகிருதியென்பர், மாபூதமைந்து கருமேந்திரியங்களைந்து ஞானேந்திரியங்களைந்து மனமொன்று என்னும் இப் பதினாறையும் ஷோடசவிகாரமெனக்கூறுவர், இவ்விரண்டையுங் கூட்டி இருபத்துநான்கு தத்துவமென்பர். ஆண்டு, மண்முதலிய ஐந்து சத்தங்களால், இலட்சணு விருத்தியால் அவைகளின் சூட்சுமாவத்தைவடிவ கந்தமுதலிய ஐந்து தன்மாத்திரைகளையுங் கொள்ளவேண்டும். அதாவது, பூமி என்பதால் கந்ததன் மாத்திரையும், சலம் என்பதால் ரசதன் மாத்திரையும், அநலம் என்பதால் ரூபதன்மாத்திரையும், வாயு என்பதால் பரிசதன் மாத்திரையும், கம் என்பதால் சத்ததன் மாத்திரையும் கவரல் ஆம். புத்தி யகங்காரங்களென்னுஞ் சத்தங்கள் மிக விளக்கமான தமதர்த்தங்களையே விளக்குகின்றன. மனமென்பதால் பரிசேடமாகிய அவ்வியக்தமுங்கொள்ளப்படுகின்றதாம். என்னை, மனச்சத்தத்திற்குப் பிரகிருதிசத்தத்தோடு சமானுதி காணமாதலின், தனதர்த்தத்தை விடுத்து அவ்வியக்தத்தில் இலட்சணை பண்ணல் உசிதமாம். அல்லது, இலட்சணு விருத்தியால் மனத்தின் காரணமாகிய அகங்காரத்தைக்கொள்ளவேண்டும் என்னை, முற்கூறிய கந்தமுதலிய பஞ்சதன் மாத்திரைகள் அகங்காரத்தினின்றே உற்பத்தியாகின்றனவாதலின், தன்மாத்திரைகளின் சமீபத்தன்மையால் ஈண்டு, மனச்சத்தத்தால் அகங்காரமே கொள்ளற்பாலது. புத்திசத்தமோ அகங்காரத்தின் காரணவடிவமகதத்துவத்தைச்சக்திவடிவ முக்கிய விருத்தியானே கூறுகின்றது. அகங்கார சத்தத்திற்கு இலக்கணு விருத்தியால் சர்வ வாசனையோடுகூடிய அவித்தைவடிவ அவ்வியத்தங் கொள்ளற் பாலது. என்னை, பிரவர்த்தகத்தன்மைமுதலிய அசாதாரண தருமங்கள் இரண்டிலுஞ்சமமாயிருத்தலின் என்க. இவ்வாறு சாட்சியான்மாவால் பிரகாசிக்கப்படுவதால் அபரோட்சமாயும் பரமேசுரனது சத்திவடிவாயும் அநிருவசன சுபாவமுடையதாயும் முக்குணவடிவாயுமுள்ள மாயாரூபப் பிரகிருதியானது, பஞ்ச தன்மாத்திரைகள் அகங்காரம் மகதத்துவம் அவ்வியத்தம் என்னும் எண்வகையான பேதமடைந்தது. அவ்வெண்வகைப் பிரகிருதியினுள்ளே இச்சடவுலகங்களனைத்து மடங்கும். இவ்வுரை சாங்கியநூலைத் தழுவிக் கூறப்பட்டது. வேதாந்தநூலின்கண்ணோ பூமி அப்பு அநலம் வாயு கம் என்னும் ஐந்து சத்தங்களானும் பஞ்சீகரியாத மண்முதலிய ஐவகைப் பூதங்களே கொள்ளற்பாலன. புத்தி சத்தத்தால் சிருஷ்டியினுதிகாலத்திய பரமேசுரனது மாயையின்பரிணுமவடிவ ஈக்ஷணத்தைக்கொள்ளவேண்டும்; அகங்கார சத்தத்தால் அம்மாயையின் பரிணுமவடிவ சங்கற்பமே கொள்ளற்பாலதென்க. (4)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்திற் கூறப்பட்ட க்ஷேத்திரவடிவ எண் வகைப் பிரகிருதிகளில் அபரத்தன்மையைக் கூறியருளி ஸ்ரீபகவான் இப்போது க்ஷேத்திரஞ்ஞவடிவப் பரப்பிரகிருதியைக் கூறியருளுகின்றார்.

சு-ம். அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் ।
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥ (5)

ப-ம். 3 அபரா 2 இயம் 5 இதஃ 4 து 6 அந்யாம் 10 ப்ரக்ருதிம் 11 வித்தி 7 மே 9 பராம் 8 ஜீவபூதாம் 1 மஹாபாஹோ 12 யயா 13 இதம் 15 தார்யதே 14 ஜகத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய அஷ்டப்பிரகிருதியானது அபராவெனப் படுகின்றது. இப்பொழுது இதனின்வேறான பரமேசுரனது சீவவடிவப் பரப்பிர கிருதியை நீயுணர்தி, இதுவே இவ்வுலகனைத்தையுந் தரிக்கின்றது. (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்சுலோகத்திற் கூறிய அசேதனவர்க்க வடிவ க்ஷேத்திரமெனப் பெயரிய எண்வகைப் பிரகிருதியை அபரமென்றுணர்தி, அதாவது அப்பிரகிருதி சடமாதலினானும் பரத்தின்பொருட்டாதலினானும் சம்சாரபந்த வடிவமாதலினானும் நிக்கிருஷ்டமேயாம். அன்றியும், அசேதனவர்க்கவடிவமும் க்ஷேத்திரவடிவமும் ஆயதினும் விலக்ஷணமுமான தத்பதார்த்தவடிவப் பரமேசுரனாகிய எனது சேதனசீவவடிவக்ஷேத்திரஞ்ஞப் பிரகிருதியைப்பரப்பிரகிருதியென் றுணர்தி, அதாவது எல்லாவற்றினும் மேலென்றுணர்தி. ஈண்டு, இதஸ்து என்னும் வாக்கியத்திலுள்ள 'து' என்னும் சத்தமானது முற்கூறிய க்ஷேத்திரவடிவச் சடப் பிரகிருதியினும் க்ஷேத்திரஞ்ஞவடிவச்சேதனப் பிரகிருதியில்முற்றும் விலட்சணத் தன்மையை யறிவுறுத்தற்பொருட்டாம், அதாவது இவ்விரு பிரகிருதிகட்கும் எவ் வாற்றாலேனும் ஏகத்தன்மை யமையாதாம். ஹே அர்ச்சுன! சர்வசங்காதத்திலும் பிரவிஷ்டமான க்ஷேத்திரஞ்ஞனென்னும் சீவவடிவப் பரப்பிரகிருதியானதே இத் தேகேந்திரியாதிவடிவ சடவுலகத்தைத் தாரணைசெய்கின்றது.

ஆ-சு. அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணி ॥

(பொ-ள்.) பரமான்மாவாகிய நான் இச்சீவவடிவத்தாற் பிரவேசித்து நாம ரூபங்களை வெளிப்படுத்துவேன். இவ்வாறு க்ஷேத்திரஞ்ஞமென்னும் சீவவடிவப் பரப்பிருகிருதியே இவ்வுலகனைத்தையுந் தாரணைபண்ணுகின்றது; அதனின் வேறாகிய ஒருபொருளும் ஒருபொருளையுந் தாரணஞ்செய்வதிற் சமர்த்தமுடைய தன்று என்க. (5)

(அ-கை.) ஆண்டு, முன்னிரண்டு சுலோகங்களால் பராபரையாகிய இரு வகைப் பிரகிருதிகளுங் கூறப்பட்டன. இப்போது அவ்விரண்டு பிரகிருதிகளினும் காரிய விலிங்கமுடைய அநுமானப் பிரமாணத்தைக் காண்பித்தருளி ஸ்ரீ பகவான் தாம் அதன் வாயிலாய் உலகத்தோற்ற முதலியவைகட்குக் காரணரென் றருளிச் செய்கின்றார்.

சு-ம். ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய ।
அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகதஃ ப்ரபவஃ ப்ரலயஸ்ததா ॥ (6)

ப-ம். 3 ஏதத்யோநீநி 2 பூதாநி 1 ஸர்வாணி 4 இதி 5 உபதாரய 6 அஹம் 7 க்ருத்ஸ்நஸ்ய 8 ஜகதஃ 9 ப்ரபவஃ 11 ப்ரலயஃ 10 ததா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இப்பூதங்களனைத்தும் இவ்விரண்டு பிரகிருதி களின் காரியங்களென நிண்ணயித்துணர்தி; ஆதலின், பரமேசுரனாகிய நானே உலகனைத்தின் உற்பத்தி பிரளயங்கட்குக் காரணன். (6)

(வி-ம்) ஹே அர்ச்சுன! முன்னர் அபராபரவடிவங்களாற் கூறிய க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞன் என்னுமிரண்டையுங் காரணமாகவுடையன ஏதத்யோனிகளாம்; அத்தன்மைய யோனிவடிவ உற்பத்தித்தருமமுடைய சேதனுசேதனவடிவ சர்வ பூதங்களையும் நீ யுணர்தி. கருத்திதுவாம்:—காரியமியாவும் சேதனுசேதனங்களின் கிரந்திவடிவமாதலின் அக்காரிய வடிவவேதுவால் அதன் பிரகிருதிவடிவ காரணத்தையும் சேதனுசேதனங்களின் கிரந்திவடிவமென் றனுமானிப்பாயாக, காரணகாரியங்கட்குச் சமான சுபாவமே உலகத்திற் காணப்படுகின்றது. சேதனுசேதனவடிவ காரியத்தால் சேதனுசேதன வடிவகாரணமே அநுமானித்தல் பொருத்தமாம். இவ்வாறு க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞங்களாகிய இரு பிரகிருதிகளும் பரமேசுரனுகிய எனது வுபாதியாதலின் சர்வஞ்ஞனுயும் அனந்த சத்தியுடையனுயும் மாயோபகிதனுயுமுள்ள பரமேசுரனுகிய நான் முற்கூறிய பிரகிருதிவாயிலாய்ச் சர்வ உலகத்தின் உற்பத்திலய காரணமாகின்றேன். அதாவது கனுப்பொருள்களின் உபாதானமுந் திருஷ்டாவும் ஒன்றேயாவதுபோல மாயையின் ஆசிரயமும் விஷயமுமானதால் மாயாவியாகிய நானே இம்மாயிகவுலகத்திற்கு உபாதானமுந் திருஷ்டாவுமாவேன். (6)

(அ-கை.) பரமேசுரனுகிய நானே எனது மாயாசத்தியால் சர்வவுலகத்தின் உற்பத்தி திதி லயகாரணமாதலின் உண்மையில் எனக்கயலா யொருபொருளுமில்லையென்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவானிப்போ தருளுகின்றூர். 'மத்த꞉ பரதரம் நாந்யத்' அல்லது, 'யஜ்ஞாத்வா நேஹ பூயோ(அ)ந்யஜ் ஜ்ஞாதவ்யமவசிஷ்யதே' என்னும் வாக்கியத்தால் முன்னர், ஓரான்மவஸ்து ஞானத்தால் சர்வ வுலகத்தின் ஞானமுமாமெனக் கூறியருளப்பட்டது. அந்தப் பிரதிக்ஞையை உபபாதனஞ்செய்தருளற் பொருட்டு ஆன்மாவைச் சர்வசகவுபாதானமெனக் கூறியருளியதால் ஆன்மாவின் நிருவிகாரத்திற் கிழுக்காமென்னுஞ் சங்கைக்கு ஸ்ரீ பகவானருளுகின்றூர்.

சு-ம். மத்த꞉ பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய ।
மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ (7)

ப-ம். 2 மத்த꞉ 5 பரதரம் 6 ந 3 அந்யத் 4 கிஞ்சித் 7 அஸ்தி 1 தனஞ்ஜய 11 மயி 13 ஸர்வம் 12 இதம் 14 ப்ரோதம் 9 ஸூத்ரே 10 மணிகணா꞉ 8 இவ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய எனக்கயலாய் ஒரு பொருளும் உண்மையாயில்லை: நூலில் மணிகள் கோர்த்திருக்குமாபோலப் பரமேசுரனுகிய என்னிடத்தில் இவ்வுலகனைத்துங் கோர்த்திருக்கின்றது.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! காணப்படும் உலகாகாரமாய்ப் பரிணமித்த மாயாதிஷ்டானமும், சகத்பிரகாசகமும், சத்தாஸ்புரணத்தால் உலகனைத்திலும் அநுசூதமும் சுவப்பிரகாச பரமானந்த சைதன்யகனமும் உண்மையிற் பரமார்த்த வடிவமும் ஆகிய பரமேசுரனுகிய எனக்கயலாய் ஒரு பொருளும் உண்மையிற் சத்தியமன்று. கனுவைக் காண்பவனின் வேறுய்க் கனுப்பொருள்கள் உண்மையிற் சத்தியமலாததுபோலும், மாயிகனுக்கயலாய் மாயிகபதார்த்தம் உண்மையிலிலாதது போலும், சுத்தியவச்சின்ன சைதன்யத்தின்வேறுய்க் கற்பிதரசதம் உண்மையிலிலாததுபோலும் பரமேசுரனுகிய என்னிடத்திற் கற்பிதமாகிய உலகனைத்தும் உண்மையில் எனக் கன்னியமாயின்று. இஃதனைத்தும் 'ததனன்யத்வ மாரம்பண சப்தாதிப்ய꞉' என்னுஞ் சூத்திரபாடியத்தில் ஸ்ரீ பகவான் பாடியக்காரரால் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. வியவகார திருஷ்டியாலோ இச்சடவுலகம் சத்துருபமும் புரணருபமுமாகிய என்னிடத்தில் கோர்த்திருக்கின்றது: அதாவது, பரமேசுரனுகிய எனது சத்தையினுல் இவ்வுலகனைத்தும் சத்துப்போலவும் எனது ஸ்புரண

வடிவத்தால் புரணம்போலவுந் தோற்றுகின்றன. ஆண்டு, இவ்வுலகனைத்தும் சைதன்யத்தில் கோர்த்திருக்கின்றன என்னு மித்துணைமாத்திரத்தில் திருஷ்டாந்தங் கூறியருளுகின்றார். ‘ஸூத்ரே மணிகணா இவ’ நூலில் மணிக்கூட்டங்கள் கோர்த்திருக்குமாபோலச் சத்தாஸ்புரணவடிவப்பரமேசுரனாய என்னிடத்தில் இவ்வுலகனைத்துங் கோர்த்திருக்கின்றன. அல்லது ‘சூத்திரேமணிகணுவிவ’ என்னும் வாக்கியத்திற்கு இவ்வணம் பொருள்பண்ணுக.—இரணியகர்ப்பவடிவ சுவப்பன திருஷ்டாவாகிய தைஜசான்மா சூத்திரமாம்; சுவப்பனத்துண்டாய அதன்கண் மணிக்கூட்டங்கள் கோர்த்திருக்குமாபோல என்னிடத்தும் இவ்வுலகனைத்துங்கோர்த்திருக்கின்றது. இவ்விரண்டாவது வியாக்கியானத்தில் காரணகாரியபாவ திருஷ்டாதிரிசியபாவம் என்பனமுதலிய எல்லா அம்சத்திலும் திருஷ்டாந்தம் பொருந்துகின்றது. பிரதமவியாக்கியானத்திலோ கோர்த்திருக்குந்தன்மைமாத்திரத்திற்குத் திருஷ்டாந்தமாம் என்க. ஒரு வியாக்கியானத்தில் இதற்கிவ்வணம் பொருள் கூறப்பட்டுளது. ஹே அர்ச்சுன! சர்வக்ஞனும், சர்வ சத்திமானும் சர்வகாரணவடிவனும் பரமேசுரனுமாகிய எனக்கயலாய் மற்றொன்றும் உலகத்தினுற்பத்தி பிரளயங்கட்குச் சுவதந்திரகாரணமாய்ப் பிரசித்தமில்லை: மற்றோ, நானே காரணன். அதனால் காரணனாகிய என்னிடத்தில் இவ்வுலகனைத்தும் கோர்த்திருக்கின்றது; எனக்கன்னியத்திலின்று. மணிக்கூட்டம் நூலின்கண்ணே கோர்த்திருக்கின்றதன்றி மற்றொன்றிலுமல்லாததுபோலவாம். ஈண்டுச் சூத்திரமணிகளின் திருட்டாந்தம் கேவலம் கோர்த்திருத்தற் றன்மைமாத்திரத்திற்காம்; காரணத்தன்மையிலிது பொருந்தாது. சூத்திரம் மணிகட்குக் காரணமன்மையின் காரணத்திலே பொன்னிற்குண்டல முதலியவைகளின் திருஷ்டாந்தம் பொருந்தும் என்ப. ஒரு வியாக்கியானத்தில் இவ்வாறு பொருட்படுத்தினர். வியவகாரகாலத்தில் மண்முதலிய காரணங்கட்கும், கடமுதலிய காரியங்கட்கும், ஒன்றற்கொன்று பேதந் தோற்றுகின்றதாதலின் மண்முதலிய காரணங்களினும் கடாதிகாரியங்கள் பரமாம்: அதாவதுவேறாம். கடாதிகட்கு மண்ணுபாதானமானதுபோல ஆ, குதிரை முதலியவற்றிற்கன்றாதலின் அவைகள் மண்ணினின்றும் பாதரமாம். அதுபோலப் பரமான்மாவின் ஒருகாரியமும் பாதரமன்று: அதாவது நான் உபாதான காரணமல்லாத காரியமொன்றில்லை. இத்துணை கூறியருளியதால் பிரபஞ்சத்தில் பிரஹ்மத்தின் வியதிரேகமின்மை கூறியருளப்பட்டது. அதைத் திருஷ்டாந்தத்தோடு திருவாய் மலர்ந்தருளுகின்றார். ‘மயி ஸர்வமிதம்’ ஹே அர்ச்சுன! ஒன்றற்கொன்றுஞ் சூத்திரத்தினும் விலகிய மணிகள், மணிகளில் கலந்துநிற்கும் நூலில் கோர்த்திருக்கின்றனபோல சத்தாரூபத்தாலும் புரணரூபத்தாலும் எவ்விடத்தும் கலந்துநிற்கும் பரமேசுரனாகிய என்னிடத்தில் பரஸ்பரம் விலகியவுலகங் கோர்த்திருக்கின்றது. வெவ்வேறான மணிகளில் கலந்திருக்கும் நூல் பின்னமானதுபோல வேறுபாடுடைய இவ்வுலகத்தி லநுசூதமாயிருக்கும் யானும் பின்னமாவன். இவ்வாறு சர்வப்பிரபஞ்சாகிதமான பரமேசுரனாகிய என்னிடத்தில் விகாரித்தன்மை சம்பவியாது, இவ்வியாக்கியானத்தைத்தழுவிச் சுலோகத்தொடக்கத்தில் அல்லது என்பதுமுதலிய அவதாரிகை கூறப்பட்டதென்க. (7)

(அ-கை.) ஹே பகவன்! நீர்முதலியவைகள் இரசமுதலியவைகளிற் கோர்த்திருத்தல் காணப்படுகின்றதாதலின், பரமேசுரனாகிய என்னிடத்து இவ்வுலகனைத்துங் கோர்த்திருக்கின்றதெனத் தாங்கள் கூறுவது எவ்வணம் பொருந்துமென்னும் அர்ச்சுனன் சங்கைக்குப் பரமேசுரனாகிய நானே இரசமுதலிய வடிவமாய் நிற்கின்றேனாதலின், இரசமுதலியவைகளில் ஜலமுதலியவைகளின் கோர்த்திருக்குந் தன்மை பரமேசுரனாகிய என்னிடத்திலேயாம் என ஐந்து சுலோகங்களால் உத்தரமருளுகின்றார்.

சு-ம். ரஸொஹமவூ களெைய வூஹாஷி ஸஶிஸூயொ: ।
வூணவஸுவவெஷெஷு ஸஷஂவெ வளருஷஂ நூஷு ॥ (8)

ப-ம். 3 ரஸஃ 4 அஹம் 2 அவூ 1 களெைய 7 வூஹா 5 அஷி 6 ஸஶிஸூயொ: 9 வூணவஃ 8 ஸவவெஷெஷு 11 ஸஷஂ: 10 வெ 13 வளருஷஂ 12 நூஷு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஜலங்களிலுள்ள இரசம் நானாகின்றேன், இரவிமதிக ளிடத்துள்ள பிரபையும் நானே, சர்வ வேதங்களுக்குள்ளும் பிரணவம் நானே, வானிலுள்ள ஒலியும் நானே, சர்வ புருஷர்களிடத்திலுள்ள புருஷத்தன்மையும் நானே. (8)

வி-ம். ஹே அர்ச்சுன! எல்லா நீர்களிலுமுள்ள ரசதன்மாத்திரைவடிவப் புண்ணியமதுரமாயும் அந்தச் சர்வ ஜலத்தின் சாரபூதமாயும், காரணமாயும், அநுசூதமாயும் உள்ள ரசமும் நானே: அதாவது, அத்தன்மைய ரசவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அந்தச் சர்வ ஜலமும் புரோதமாம். சர்வ உலக வியவகாரத்திற் கேதுவாகிய இரவிமதிகளிடத்துள்ள பிரபைவடிவப் பிரகாசமும் நானே. அதாவது, சாமான்யப் பிரகாசவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் சந்திர சூரியர்கள் புரோதமாம். சர்வ வேதங்களிலும் அநுசூதமாய்நிற்கும் ஓங்காரவடிவப் பிரணவமும் நான். அதாவது, அந்தப் பிரணவவடிவமாகிய என்னிடத்தில் அவ்வேதங்களனைத்தும் புரோதமாம்.

ஆ-சு. தஷூயாஸஂகூநா ஸவூாணி வணூாநி ஸஂதூணாநி ।
ஸவ ஹொஂகாரெண ஸவூாவாகு ஸஂதூணா இதி ॥

(பொ-ள்.) இலைகளனைத்தும் தமது நாடிகளாற் கட்டப்பட்டிருக்கின்றன போலச் சர்வவேதவாக்குகளும் ஓங்காரத்தாற் கட்டப்பட்டிருக்கின்றன என்பதாம். வான் முழுதும் அநுசூதமாயும், வானின் காரணமாயும், உள்ள சத்த தன்மாத்திரைவடிவப் புண்ணியசத்தம் நானே. அதாவது, அச்சத்தவடிவமாகிய என்னிடத்தில் அவ்வாகாசம் புரோதமாம். எல்லாப் புருஷரிடத்தும் அநுசூதமாய் நிற்கும் புருஷத்துவ சாமான்யவடிவப் பௌருஷமும் நானே. அதாவது, அப்பௌருஷவடிவ என்னிடத்தில் அப்புருஷர்களனைவரும் புரோதராம். ஈண்டிது கருத்தாம். சர்வ ஒலிகளிடத்தும் அநுசூதமாய்நிற்கும் ஒலித்தன்மைவடிவ சாமான்யத்தில் துந்துபிச்சத்தத்தன்மை முதலிய விசேஷங்கள் புரோதமாம். அதுபோல் ரசாதி சாமான்யவடிவமாகிய என்னிடத்தில் ஜலமுதலிய சர்வ விசேஷங்களும் புரோதங்களாம். இவ்வாறு மேல் நான்கு சுலோகங்களிலும் யாண்டு முணரற்பாலது. ஆண்டு, துந்துபி, சங்கம், வீணை இம்மூன்று திருஷ்டாந்தங்களும் ஸ்ரீ ஆத்மபுராணத்தின் ஏழாவது அத்தியாயத்தில் எம்மால் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. ஈண்டு, ‘ரசோகமப்சு’ என்பது முதலிய ஐந்து சுலோகங்களால் ஸ்ரீ பகவான் தமது விபூதியைக் கூறியருளினர். அது கேவலந் தியானம்பண்ணுதற்பொருட்டாதலின் இத்தியேயவடிவத்தில் மிகுந்த அபினிவேசம் பண்ணத் தக்கதன்று. (8)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். வூணெஷா மஂயஃவூயிவஷாஂசு தெஜஷூாஷி விஹாவஸள ।
ஜீவநஂ ஸவவூஹூதெஷு தவஷூாஷி தவஷிஷு ॥ (9)

ப-ம். 2 வா³ண்ய³ 3 க³ந்த⁴: 1 வுரயிவ்யாம், ச 7 தேஜ: 5 ச 4 அஸ்மி 6 விபா⁴வஸௌ 9 ஜீவநம் 8 ஸர்வபூ⁴தேஷு 12 தப: 10 ச 13 அஸ்மி 11 தபஸ்விஷு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மண்ணினுள்ள புண்ணியகந்தமும் நான், தீயினுள்ள ஒளியும் நான், எல்லாப் பிராணிகளிடத்துமுள்ள சீவனமும் நான், தவசிகளுக்குள்ள தவமும் நான். (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வப்பிருதிவியினும் சாமான்யவடிவமாயும் அநுகூதமாயும் பிருதிவியின் காரணமாயுமுள்ள தன்மாத்திரைவடிவப் புண்ணியகந்தம் அதாவது விகாரத்தன்மையிலாத சுகந்தமும் நானே. அதாவது, அப்புண்ணியகந்த வடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அப்பிருதிவி புரோதமாம். ஈண்டு, 'புண்யோகந்த: பிருதிவியாம்ச' என்னும் வாக்கியத்தினுள்ள சகாரமானது ரசமுதலியவைகளிடத்தும் அப்புண்ணியத்தைச் சம்பந்தப்படுத்துதற்பொருட்டாம். கருத்திதுவாம்:—சத்தமுதலிய ஐந்தினிடத்தும் இயல்பானே புண்ணியத்தன்மையேயுளது பிராணிகளின் அதருமவிசேஷத்தால் அச்சத்தமுதலியவைகளில் அபுண்ணியத்தன்மையுமுண்டாம். இயல்பாய் அது அவைகளிடத்தின்றாம். ஈண்டு, துர்க்கந்தமுதலிய விகாரத்தன்மையின்மை புண்ணியத்தன்மையாமென்க. அக்கினியினுள்ள எல்லாப்பொருளையும் எரிக்கும் விளக்குஞ் சாமர்த்தியவடிவமாயும் உஷ்ணபரிசத்தொடு கூடியதாயும், வெண்ணிறமுடையதாயும் சர்வ திக்களினும் அநுகூதமாயுமுள்ள தேசசும் நான். அதாவது, அத்தேஜசுவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அவ்வக்கினி புரோதமாம். ஈண்டு, 'தேஜஸ்சாஸ்மி' என்னும் வாக்கியத்தினுள்ள சகாரத்தால் வாயுவின் பரிசத்தையுங் கொள்ளவேண்டும். அதாவது, உஷ்ணஸ்பரிசத்தால் வெந்துயரடைந்தோனுக்குத் தண்மையையுண்டாக்கும் வாயுவின் தட்பப் பரிசமும் நானே. அச்சீதவடிவான என்னிடத்தில் அவ்வாயும் புரோதமாம். தாவரசங்கமவடிவச் சர்வப் பிராணிகளிடத்துமுள்ள பிராணதாரணையாகிய ஆயுள்வடிவச் சீவனமும் நானே. அதாவது, ஆயுள்வடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அப்பிராணிகளனைத்தும் புரோதமாம். அல்லது, ஜீவதி அனேன இதி ஜீவனம். அதாவது, சீவனத்தை யடைவதெதனால் அது சீவனம் என இவ்வாறு விரித்துக்கூறலால் சீவனசத்தம் விராட்டுவடிவ சமட்டியன்னத்தின் வாசகமாம். அவ்வன்னவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அப்பூதங்களனைத்தும் புரோதமாம். நாடோறுந் தவத்தோடுகூடியுள்ள வானப்பிரஸ்தன்முதலிய தவசிகளிடத்தினுள்ள சீதோஷ்ணுதிகளைச் சகித்தல்வடிவ தவமும் நானே. அதாவது, அத்தவவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அத்தவசிகள் புரோதராம். ஈண்டு, 'தபஸ்சாஸ்மி' என்னும் வாக்கியத்தினுள்ள சகாரத்தால் உள்வெளித் தவங்களனைத்தையுங் கொள்ளவேண்டும். அதில் மனவொருமை, உள்தவம்: நாக்கு, உபத்தாதிகளைக் கட்டுப்படுத்தல் வெளித்தவம் என்க. (9)

(அ-கை.) ஹே பகவன்! ஆகாஶாத்³வாயு:, வாயோரக்³நி:, அக்³நேராப:, அத்³ப்⁴ய: ப்ருதி²வீ' என்னுஞ் சுருதியில் வானில் வாயும் வாயுவில் தீயும் தீயில் நீரும் நீரில் மண்ணும் உற்பத்தியாமெனக் கூறப்பட்டிருக்கிறது. காரியத்திற்குத் தனது காரணத்தின்கண்ணே புரோதத்தன்மையாமாதலின், சர்வ பூதங்களும் தத்தங் காரணத்தின்கண்ணே புரோதமாம். அகாரணவடிவ உம்மிடத்தி லொருபொருளும் புரோதமின்று என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு 'ஆத்மந ஆகாஶ: ஸம்பூ⁴த:, யதோ வா இமாநி பூ⁴தாநி' என்பது முதலிய சுருதிகளில் பரமேசுரனாகிய என்னிடத்திலே சர்வ பூதங்கட்கும் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றதாதலின் பரமேசுரனாகிய நானே சர்வ பூதங்கட்கும் காரணன் என. ஸ்ரீபகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌬𑍀𑌜𑌂 𑌮𑌾𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌤𑍇𑌜𑌸𑍍𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑌾𑌮𑌹𑌮𑍍 ॥ (10)

ப-ம். 5 𑌬𑍀𑌜𑌂 3 𑌮𑌾𑌂 4 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 6 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 1 𑌪𑌾𑌰𑍍𑌥 2 𑌸𑌨𑌾𑌤𑌨𑌂 8 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 7 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌤𑌾𑌂 10 𑌅𑌸𑍍𑌮𑌿 12 𑌤𑍇𑌜𑌃 11 𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑌾𑌂 9 𑌅𑌹𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தோற்றமீறிலாத பரமேசுரனாகிய என்னைச் சர்வ பூதங்கட்குங் காரணமென்றுணர்தி: புத்திமான்களிடத்துள்ள புத்தியும் தேசசு புருஷர்களிடத்துள்ள தேசசும் நானே. (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தாவரசங்கமவடிவ சர்வ பூதங்கட்கும் சநாதனமாகிய பீசம் அதாவது தனது தோற்றத்திற் காரணத்தை யவாவாத ஒரு நித்திய காரணமானது ஒவ்வொரு வியத்தியினும் பேதமுடையதன்று அநித்தியமுமன்று. அத்தன்மைய அவ்வியாகிருதமெனப் பெயரிய சகத்தின் பீசவடிவம் பரமேசுரனாகிய நானேயென்றுணர்தி. எனக்கன்னியமான மற்றொருபொருளும் சர்வ சகத்திற்குங் காரணமன்று. சுருதி வான்முதலியவைகளினின்று வாயு முதலியவைகட்குற்பத்தி கூறியதும் கேவலம் சடத்தினின்றன்று; மற்றோ, வானாதியுபகித பரமேசுரனாகிய என்னிடத்தினின்றே வாயுமுதலியவைகளின் உற்பத்திகூறுகின்றது. ஆதலின், சர்வ பூதங்களின் அவ்வியாகிருதமெனப் பெயரிய பீசவடிவமாகிய என்னிடத்திலே சர்வ பூதங்களின் புரோதத்தன்மை பொருந்துமென்க: அல்லது, தத்துவா தத்துவவடிவப்பொருளின் விவேகமாகிய சாமர்த்தியம் புத்தியாம். அஃதுடையோன் புத்திமான்: அவர்களிடத்துள்ள புத்தியும்நானே. அதாவது அப்புத்திவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அவர்கள் புரோதமாவர்கள் அன்னிய சத்துருக்களை யடக்குஞ் சாமர்த்தியத்தால் தான் அவர்களா லடக்கப்படாதிருத்தல் தேஜசாம்: அதை யுடையவர்கள் தேஜஸ்விகளாம். அவர்களிடத்துள்ள தேஜசும் நான். அதாவது, அத்தேஜசுவடிவப் பரமேசுரனாகிய என்னிடத்தில் அவர்கள் புரோதர்களாவார்கள் என்க. (10)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌬𑌲𑌂 𑌬𑌲𑌵𑌤𑌾𑌂 𑌚𑌾𑌹𑌂 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌧𑌰𑍍𑌮𑌾𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑍋 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌕𑌾𑌮𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥ (11)

ப-ம். 4 𑌬𑌲𑌂 2 𑌬𑌲𑌵𑌤𑌾𑌂 7 𑌚 5 𑌅𑌹𑌂 3 𑌕𑌾𑌮𑌰𑌾𑌗𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 9 𑌧𑌰𑍍𑌮𑌾𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌃 8 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 10 𑌕𑌾𑌮𑌃 6 𑌅𑌸𑍍𑌮𑌿 1 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலமுடைய புருஷர்களின் காமராகமின்றிய பலமும் நானே. சர்வப்பிராணிகளிடத்தும் தருமத்தினும் மாறுபடாத காமமும் நானே. ()

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அடையாததை அடைவிக்குங் காரணமின்றேனும் இவ்விஷயம் எனக்குண்டாகுக என்னும் சித்தவிருத்தி விசேடத்தின் பெயர் காமமாம்; அடைந்ததைக் கெடுக்கத்தக்க காரணமிருக்கினும் இவ்விஷயம் கேடுறு தொழிக என்னும் பிரியவடிவ சித்தவிருத்தி விசேஷம் ராகமாம். அத்தன்மைய காமராகங்களின்றிய பலம் அதாவது எவ்வாற்றானும் காமராகங்களையுண்டாக்காத ரசதமங்களின்றிய தனது தருமானுட்டானத்தின் பொருட்டுத் தேகேந்திரிய முதலியவைகளின் தாரணையாகிய சாமர்த்திய வடிவபலமுடைய புருஷர்களாகிய சம்சார பராமுக பலவான்களிடத்துள்ள பலமும் நானே. அதாவது, அச்சாத்துவிக பலவடிவ என்னிடத்தில் அவர்கள் புரோதராகின்றார்கள். கருத்திதுவாம்:— அக்காமராகங்களின்றிய பலமே பரமேசுரனாகிய எனது வடிவமாய்த் தியானம்

பண்ணத்தக்கது; காமராகங்களையுண்டாக்கப்பட்ட விஷபாசத்தர்களின்பலமன்று. அல்லது, 'காமராக விவர்ஜிதம்' என்னும் வாக்கியத்திலுள்ள ராகசத்தத்தால் க்ரோதத்தையே கொள்ளவேண்டும். அல்லது தருமசாஸ்திரம் தருமமாம் அதற்கவிருத்தம் அதாவது அதனால் நிஷேதிக்கப்படாதது. அல்லது, தருமத்திற் கநுகூலமாகிய சர்வப் பிராணிகளிடத்துள்ள சாத்திராநுசார மனைவி மக்கள் விஷயக அபிலாஷைவடிவ காமமும் நான் அதாவது சாத்திரத்திற் கவிரோதமாகிய காமவடிவ பரமேசுரனாகிய என்னிடத்தில் அக்காமத்தோடுகூடிய சர்வப்பிராணிகளும் புரோதர்களாவர்கள். (11)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்வாறு பலபொருளையு மெண்ணுவதிலென் பயன்? இவ்வுலகங்களனைத்தும் பரமேசுரனாகிய என்னிடத்திலேயுண்டாகி என்னிடத்திலே புரோதமாம் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவானிப்போதருளுகின்றார்.

சு-ம். யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாஶ்ச யே ।
மத்த ஏவேதி தாந்வித்தி நத்வஹம் தேஷு தே மயி ॥ (12)

ப-ம். 1 யே 5 ச 2 ஏவ 3 ஸாத்விகா: 4 பாவா: 7 ராஜஸா: 9 தாமஸா: 8 ச 6 யே 11 மத்த: 12 ஏவ 13 இதி 10 தாந் 14 வித்தி 18 ந 15 து 16 அஹம் 17 தேஷு 19 தே 20 மயி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றுமுள்ள சாத்விகராஜத தாமதபதார்த்தங்களியாவும் பரமேசுரனாகிய என்னிடத்தினின்றே முற்கூறியமுறையாய் உண்டாயினவென வுணர்தி, ஆயினும், யான் அவற்றிலில்லேன் அவைபோ என்பாலேயுள்ளனவாம். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறியபொருளின் வேறான மற்றெதுவும் அந்தக்கரண பரிணாமவடிவ சமதமமுதலிய சாத்துவிகபாவமும் அர்ஷமுதலிய ராஜசபாவமும் சோகாதி தாமசபாவமும் ஆகிய இவ்வனைத்தும் வித்தை கருமாதிகளின் வசத்தாலுண்டாகின்றன. அவ்வனைத்தும் 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ:' என்பது முதலிய வாக்கியப்பிரகாரமாய்ப் பரமேசுரனாகிய என்னிடத்திலே உண்டாகின்றன என்றுணர்தி; அல்லது சத்துவகுணப் பிரதானமாகிய தேவ, ரிஷி, பிராஹ்மண, சர்க்கரை முதலிய பொருள்களும் ரசோகுணப் பிரதானமாகிய கந்தருவ, யக்ஷ, க்ஷத்திரிய, மிளகாய் முதலிய பதார்த்தங்களும் தமோகுணப் பிரதானமாகிய ராக்ஷஸ, சூத்திர, வெள்ளைப்பூண்டு முதலிய பதார்த்தங்களும் பரமேசுரனாகிய என்னிடத்தினின்றேயுண்டாகின்றன. இவ்வாறு அச்சர்வபதார்த்தங்களும் என்னிடத்திலே தோன்றினபோதிலும் பரமேசுரனாகிய நான் அவைகளிடத்தில் ஆதேயவடிவத்தானிலத்திலேன்; அதாவது, இரச்சுவடிவ அதிட்டானம் கற்பிதமாகிய சர்ப்பமுதலிய விகற்பங்களால் தூஷிதப்படாததுபோலப் பரமேசுரனாகிய நானும் அநான்மபதார்த்தங்களின் வயப்பட்டு அவ்விகாரங்களால் தூஷிதப்படேன். சம்சாரிகளோ அவைகளால் தூஷிக்கப்படுவர் அச்சடவடிவப் பதார்த்தங்களனைத்தும் ரச்சுவில் சர்ப்பமுதலியவைகளைப்போலப் பரமேசுரனாகிய என்னிடத்திற் கற்பிதங்களாம். அதாவது, என்னிடத்தினின்றுஞ் சத்தாஸ்பூர்த்திகளையடைந்து அவ்வனைத்தும் என தநீனங்களாம். (12)

(அ-கை) ஹே பகவன்! 'மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே' என்பது முதலிய வாக்கியங்களால் தாங்கள் உலகனைத்தையும் தங்கள் சொரூபமாகவும் தங்களை ஸ்வதந்திரரெனவும் நித்திய சுத்தமுத்த சுபாவரெனவுங் கூறியருளினீர்கள் அத்தன்மைய தங்கட்கபின்னமாகிய இவ்வுலகத்தில் சம்சாரித்தன்மை எவ்வாறாம்? மற்றோ

ஆகாது. ஆண்டு, எமது சுவதந்திர நித்திய சுத்த முத்த சொரூபத்தின் அஞ்ஞானத்தால் ஈண்டுச் சமுசாரித்தன்மையாம் உண்மையின்று எனக் கூறியருளினும் அச்சொரூபாஞ்ஞானம் இவ்வுலகத்தி லெக்காரணத்தாலாம்? என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் தமது சொரூபாஞ்ஞானத்திற்குக் காரணங் கூறியருளுகின்றார்.

சு-ம். த்ரிபிர் குணமயைர் பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் ।
மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥ (13)

ப-ம். 3 த்ரிபி: 2 குணமயை: 4 பாவை: 1 ஏபி: 6 ஸர்வம் 5 இதம் 7 ஜகத் 8 மோஹிதம் 13 ந 14 அபிஜாநாதி 12 மாம் 9 ஏப்ய: 10 பரம் 11 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய குணமயமான மூவகைப்பாவங்களால் இவ்வுலகனைத்தும் மோகிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலின், இக்குணமய பாவங்களினின்றும் பரமாகவும் அவிக்கிரியமாகவுமுள்ள பரமேசுரனாகிய என்னை யுணருவதில்லை. (13)

(வி-ம்) ஹே அர்ச்சுன! முற்கூறிய முக்குணங்களின் விகாரவடிவ மூவகைப் பாவபதார்த்தங்களானே இப்பிராணிகளனைத்தும் மோகிக்கப்பட்டன அதாவது நித்தியாநித்தியப் பொருள்களின் விவேகத்திற் கயோக்கியத்தன்மையை யடைந்தன. இதனானே பரமான்மாவாகிய என்னை யுணருவதில்லை. பரமேசுரனாகிய நான் இம்மூவகைப் பாவங்களினும் பரன், அதாவது எல்லாப் பாவகற்பனைகட்கும் அதிஷ்டாரூபன். அப்பாவப்பொருள்களினும் மிக விலட்சணமானவன் என்பதில் ஏது கர்ப்பவிசேடணமருளுகின்றார். 'அவ்யயம்' என அதாவது தோற்ற முதலிய சர்வ விகாரங்களுமற்றவன், இக்காரணப்படு மூலகற்றவன், ஆனந்தகனன், தன் பேரொளியாலொளிர்பவன், சர்வப் பிராணிகளின் ஆன்மவடிவன், அவ்வணம் மிகச் சமீபித்திருக்கினும் என்னை யறிந்திலர்; பிரத்தியக்கபின்னப் பரமேசுரனை என்னை யறியாமையினனே இவர்கள் மறித்தும் மறித்தும் பிறப்பிறப்பை யடைகின்றார்கள். ஆதலின், இவ்வவிவேகிகட்கு மிகவும் பாக்கியமில்லை. அந்தோ, ஆண்டு முக்குணபாவத்தால் இவர்கள் மோகமடைந்ததன்மை பிறநூலினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு உபஸ்தாயாஸ்யாதுர்ஜயாஸ்யாம் ஆஸ்யாமேவ ஹதம் ஜகத் ।
அஹோ உபஸ்தஜிஹ்வாஸ்யாம் ப்ரஹ்மாதிமசகாவதி ॥

(பொ-ள்.) அற்பப் பிரயத்தனத்தால் அகற்றமுடியாத உபஸ்தமும் ஜிஹ்வேந்திரியமுமே பிரமன்முதற்கொண்டு மசகமீறுயுள்ள இவ்வுலகனைத்தையும் நாசஞ்செய்தன இது மிகவற்புதம். தத்தம் விடயங்களிற்சென்ற நேத்திரமுதலிய இந்திரியங்களனைத்தும் இவனது துக்கத்திற்கே காரணங்களாயினும் அவ்வனைத்துள்ளும் உபஸ்தம் ஜிஹ்வை இரண்டுமே மிகப் பிரபலங்களாதலின் அவைகளே ஈண்டுக் கொள்ளப்பட்டன. (13)

(அ-கை.) ஹே பகவன்! முற்கூறிய அநாதியாகிய மாயையின் முக்குணத்தால் சம்பந்தப்பட்ட இவ்வுலகங்களனைத்தும் சுவதந்திரமின்மையின் முக்குண வடிவமாயையை நிவிருத்திக்கவலியிலையாதலின் ஒருபோதும் அம்மாயாநிவிருத்தி யுண்டாகாதாம் என்னை? உண்மைப்பொருளை யுணருமாற்றலின்மைக்குக் காரணமாகிய அம்முக்குணவடிவ மாயை சநாதனமாம் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு, அன்னிய வுபாயத்தால் அம்மாயை அகற்றொணாதேனும் பகவத்திருவடியொன்று

னே அடையப்பெற்ற தத்துவஞானத்தால் நிவிருத்தியாம் என ஸ்ரீ பகவான் உத்தரமருளுகின்றார்.

சு-ம். தெைவீ ஹெஷா ம௱ணமயீ மம மாயா ௨௱தயா !
மாமெவ யெ ப்ரவதூஜெ மாயாமெதாஂ தரஂதி தெ ॥ (14)

ப-ம். 5 தெைவீ 4 ஹி 2 ஏஷா 3 ம௱ணமயீ 1 மம 6 மாயா 7 ௨௱தயா 9 மாஂ 10 ஏவ 8 யெ 11 ப்ரவதூஜெ 14 மாயாஂ 13 ஏதாஂ 15 தரஂதி 12 தெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது இச்சத்துவாதிகுணவடிவ விளக்கமான தெய்வீக மாயை கடக்கொணாதது என்னைச் சாட்சாத்கரித்தவனே இம்மாயையைக் கடப்பான். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'ஏகோதேவ சர்வ பூதேஷு௱கூட:' என்பது முதலிய சுருதியாற் கூறப்பட்ட சுவப்பிரகாச சைதன்யானந்தவடிவ ஜீவேசுர பேதமிலாத சுத்த தேவனை யாசிரயித்து விஷயம்பண்ணுவதாகிய மாயை தெய்வீகமாம்; அதாவது, இருளானது வீட்டைத் தழுவிநின்று அதையே மறைப்பது போல இம்மாயையும் சுத்த சைதன்யதேவனைத் தழுவிநின்றவனையே விஷயம் பண்ணுகின்றது. இத்தன்மையதாதலின் தெய்வீக மாயை யெனப்படுகின்றது. பிறநூலினும் இஃதறையப்பட்டுளது.

ஆ-சு. ஆஶ்ரயத்வ விஷயத்வ ஹாமிநீநிவி௨ஹாம ஸிதிரெவ கெவலா !
ப௱வ௨வலீஸ தமஸொஹி வஸ்தொ நாஶ்யொஹவதிநா விமொஅ௱: ॥

(பொ-ள்.) ஜீவேசபேதமற்ற கேவலசைதன்யமே அநாதிசித்த அஞ்ஞாசிரயத்தன்மையையும், விஷயத்தன்மையையும் பொருந்துகின்றது. அநாதியாகிய அஞ்ஞானத்திற்கு அதன்பினுண்டாகிய வொருபொருளும் ஆசிரயமும் விஷயமுமாகாதாதலின் என்க. அத்தெய்வீக மாயை என்னையானுணர்ந்திலேன் என்னுஞ் சாட்சிவடிவப் பிரத்தியட்சத்தாற் பெறப்படுகின்றதாதலின் தள்ளொணாததாம். அன்றியும், கனுப்பிராந்தி முதலியவைகளின் வேறோராற்றாற் பொருந்தாமை வடிவ அருத்தாபத்திப் பிரமாணத்தானும் பெறப்படும். இம்மாயையின் பிரசித்தியை ஏஷா, ஹி என்னு மிரண்டு சத்தங்களானுங் கூறியருளினர். ஆண்டு, ஏஷா, என்னுஞ் சத்தத்தால் சாட்சிப் பிரத்தியட்சத்தாற் பெறப்படுந்தன்மையும் 'ஹி' என்னுஞ் சத்தத்தால் அருத்தாபத்தியாற் பெறப்படுந்தன்மையுங் கூறப்பட்டன. இம்மாயை குணமயமாம் அதாவது, சத்துவாதி முக்குணவடிவமாம் கருத்திதுவாம்:— மும்மடங்குகொண்ட கயிறு மிக வலியானதால் புருஷபந்தனத்திற்குக் காரணமாவதுபோல மிக வலியுடையதாதலின் முக்குணவடிவமாயையும் ஜீவர்களின் பந்தனகாரணமாம். இவ்வர்த்தத்தைத் தெரிவித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் மாயையைக் குணமயீ என விசேடித்தனர்; அத்தன்மைய பரமேசுரனாகிய எனது மாயை; அதாவது, சர்வ சகத்காரணனும் சர்வஞ்ஞனும் சர்வ சக்திமானும் மாயாவியுமாகிய பரமேசுரனாகிய எனக்கு வீட்டிலுள்ளவனுக்கு வீடு முதலியனபோல என தென்பதற்கு விஷயமாகிய மாயை எனததீனமானதால் இவ்வுலகின் தோற்றமாதியை நிருவகிப்பதாம் தத்துவவத்துவை விளங்காதபடி மறைத்து அதத்துவ வத்துவை விளக்குவதற்குக் காரணமாகிய ஆவரண விட்சேப சத்திகளையுடைய அஞ்ஞானவடிவமாம், சர்வ சகத்தின் பிரகிருதிவடிவமாம். 'மாயாஂது ப்ரக்ருதிஂ வித்யாந்மாயிநஂது மஹேஶ்வரஂ' மாயை உலகோபாதானகாரணமெனவும் அம்மாயையுடையோன் மகேசுரன் எனவும் ஆம் ஈண்டிப் பிரக்கிரியையாம்: ஜீவேசபேதமற்ற சுத்த சைதன்யத்தில் அத்தியஸ்தமாகிய அநாதி மாயாவடிவ அவித்தை சத்

துவகுணப் பிரதானமானதால் மிக ஸ்வச்சமாம், மிகத் தூய்மையான கண்ணுடி முகாபாசத்தைக் கவருமாபோல அதுவும் சேதனுபாசத்தைக் கவருகின்றது. ஆண்டுக் கண்ணுடிவடிவ வுபாதியின் கருமைமுதலிய தோஷங்கள் முகவடிவப் பிம்பத்தைப் பற்றுதனபோல அவித்தைவடிவ வுபாதியின் தோஷத்தோடு பற்றுருமையின் பரமேசுரன் விம்பனுவன். கண்ணுடியிலுள்ள பிரதிவிம்பம் தர்ப்பணத்தின் கருமைமுதலிய தோஷங்களோடு சம்பந்தப்படுவதுபோல அவித்தியோபாதியின் தோஷத்தோடு பற்றுற்றமையின் சீவான்மாப் பிரதிவிம்பமாம். ஆண்டு, விம்பவடிவ ஈசுரன் வாஞுதி முறைப்படி தேகாதிக் கூட்டங்களையும் அவைகளின் போக்கியவடிவ உலகனைத்தையும் ஜீவபோகப்பொருட்டு உண்டாக்கினன் எனக் கற்பிக்கப்படுகின்றது. ஆண்டு, விம்பப் பிரதிவிம்ப மிரண்டினும் சுத்தமுகம் அநுகதமாய் நிற்பதுபோலச் சீவேசர்களிடத்தும் அநுகதமாகிய மாயோபகித சைதன்யம் சாட்சியெனப்படும். அந்தச் சாட்சியால் தனதிடத்து அத்தியஸ்தயான மாயை அதன் காரியவடிவ உலகங்களனைத்தும் விளக்கப்பட்டனவாதலின், அதன் கருத்தைக் கொண்டே ஸ்ரீ பகவான் மாயையை தெய்வீகமாயையெனக் கூறியருளினர். விம்பவடிவ ஈசுராபிப்பிராயத்தால் எனதுமாயையெனக் கூறியருளினர். ஓரவித்தையிற் பிரதிவிம்பவடிவ சீவனென்றேயாமாயினும் அதனிடத்துள்ள அந்தக்கரண சமஸ்காரம் வெவ்வேறுதலின், அதை யுபாதியாகவுடைய சீவனும் இக்கீதையிலுட் சுருதியிலும் பின்னமாய்க் கூறப்பட்டது. அவற்றுள், இந்நூலின்கண் 'மாமேய பிரபத்யந்தே, துஷ்கிருதினேமூடா: நப்பிரபத்யந்தே சதுர்விதாபஜந்தேமாம்' என்பனமுதலியவாக்கியங்களால் கூறப்பட்டிருக்கிறது. சுருதியில், 'தத்யோயோதேவாநாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ தத்பவத்ததா ருஷீணாம் ததாமநுஷ்யாணாம்' என்பதுமுதலிய வாக்கியங்களாற் கூறப்பட்டிருக்கிறது. அவ்வந்தக்கரண வுபாதிபேதங்களை விசாரியாமலோ சீவத்தன்மைக்குக் காரணமாகிய அவித்தியோபாதி ஒன்ருனதால் சீவனுமொன்றென்றே; இக்கீதையிலுஞ் சுருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது. கீதையில், க்ஷேத்திரக்ஞஞ்சாபிமாம்வித்தி சர்வ க்ஷேத்ரேஷுபாரத, 'பிரகிருதிம்புருஷம்சைவ வித்யனுதி உபாவபி, மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: சநாதன:' என்பனமுதலிய வாக்கியங்களாலும் சுருதியில்,

ஆ-சு. ப்ரஹ்ம வா இதமக்ர ஆஸீத்ததாத்மானமேவாவேத். அஹம் ப்ரஹ்மாஸ்மீதி தஸ்மாத் தத்ஸர்வமபவத் தத்யோ யோ தேவாநாம் ப்ரத்யபுத்யத ஸ ஏவ தத்பவத்ததா ருஷீணாம் ததா மநுஷ்யாணாம் … ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வவ்யாபீ ஸர்வபூதாந்தராத்மா … ஜீவ: … ஜ்ஞேய: ஸ ஆநந்த்யாய கல்பதே ॥

என்பதுமுதலிய வாக்கியங்களாலுங்கூறப்பட்டிருக்கிறது. கண்ணுடியிலுள்ள சைத்திரனது பிரதிவிம்பம் தன்னையுட் பிறரையுமுணராது; என்னை? சடசேதனக்கூட்டவடிவச் சைத்திரனது சரீரவடிவ அசேதனும்சமோ அதிற் பிரதிவிம்பித்தது சேதனும்சமன்று. ஆதலின், அது தன்னையும் பிறரையுமறிவதன்று அங்ஙனமாயினும் அவித்தையிலுள்ள சேதனப்பிரதிவிம்பம் சேதனவடிவமாதலின், தன்னையும் பிறரையுமுணர்கின்றது. என்னை? பிரதிவிம்பபக்ஷத்தில் அது மித்தையன்று. மற்றோ, அவ்விம்ப சைதன்யத்தில் உபாதியிலிருக்குந் தன்மைமாத்திரமே கற்பிதமாம். ஆபாசபக்ஷத்தில் அச்சிதாபாசன் கிளிஞ்சில் வெள்ளிபோல அநிருவசனமாய்த் தோற்றுவதாயினும் கடமுதலியவைகளினும் விலட்சணமாதலின், தன் உணர்வும் பிறருணர்வுமுண்டாம். அச்சிதாபாசன் தன்னைப் பரமேசுரவடிவ விம்பத்தோடொன்றுயுணரும்வரையினும் சலத்திலுள்ள சூரியன் சலத்தின் சலனமுதலியவிகாரங்களை அடைவதுபோல அப் பிரதிவிம்பவடிவ சீவனும் அவித்தியோபாதியின் ஆயிரவிகாரங்களையடைவன் இவ்வர்த்தமனைத்தையும் அருளுகின்ருர்.

'ஊஊாயாதூ¯ா தூியா ஊதி' விம்பவடிவப் பரமேசுரனது ஏகத்துவ சாக்ஷாத்கார மின்றி என்னுடையமாயை கடக்கொணாதது ஆதலின் கடக்கப்படாததாம் இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. யதாஅஊ வதாகாஶம் வெஷயிஷ்யூஂதி ஊாநவாஃ ।
தஹாதெவஊ விஜ்ஞாய தூ¯ஃவஸ்யாணொஹ விஷ்யூதி ॥

(பொ-ள்.) ஒருவன், வானைத்தோல்போல் வளைபச்செய்வனேல் நான் பிரஹ்மமென்னும் பரமான்ம ஞானமின்றி அவித்தியா துக்கங்களனைத்தையும் நாசமாக்குவன். கருத்திதுவாம்:—அவயவமிலாத ஆகாசத்தைச் சுருட்டுதற்கேலாததுபோலப் பிரஹ்ம சாக்ஷாத்காரமின்றி அவித்தியாதுக்கத்தைக் கெடுத்தலுமேலாதாம் என்க. இதனானே அச்சீவன் அந்தக்கரணவச் சின்னனாதலின் அந்தக்கரணத்திற் சம்பந்தப்படு பொருளையே நேத்திராதி இந்திரியவாயிலாய் விளக்கி அற்பஞ்ஞனெனப்படுகிறான், இதனானே அவன் நான் அறிகின்றேன், செய்கின்றேன், உண்கின்றேன் என்பனமுதலிய அத்தியாசவடிவ ஆயிரந் துக்கத்திற்குப் பாத்திரனாவன். பிரதிவிம்பவடிவ சீவன் தனது விம்பவடிவ ஈசுரனை ஆராதிக்குங்கால்; அதாவது அனந்த சக்திகளையுடையவன் அவித்தைவடிவ மாயையின் நியந்தா, உலகனைத்து முணர்பவன் புண்ணியாபுண்ணிய கருமபலனைக் கொடுப்பவன் பரிபூரண ஆனந்தகன மூர்த்தி அன்பர்களைக் கரையேற்றுதற்பொருட்டு அநேகாவதாரமெடுத்தவன் எல்லாவற்றின் குரு என்னும் விம்பனாகிய ஈசுரனுக்குப் பிரதிவிம்பவடிவ சீவன் சர்வ கருமங்களையுஞ் சமர்ப்பித்து ஆராதனைபண்ணுங்கால் விம்பத்தேற்றிபகுணம் பிரதிவிம்பத்துக்கானதால் இச்சீவன் சர்வ புருஷார்த்தத்தையு மடைகின்றான். இது பிரகலாதராலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. நைவாத்மநஃ ப்ரஹ¯ாயம் நிஜலாஹ லஂமொா–ஊ
ஊாநஂ ஜநாதவிதூ¯ஷஃ கர¯ணொா வூணீதெ ।
யதூஜநொ ஹமவதெவித யீதஊாநஂ
தஜ்ாதநெ ப்ரதிஊ¯வஸ்ய யஶாஊ¯வஸ்ரீஃ ॥

(பொ-ள்.) கண்ணாடியிற் பிரதிவிம்பித்தமுகத்தில் திலகமுதலிய அலங்காரத்தை யபேட்சிக்கில் விம்பபூதமாகிய முகத்தில் திலகமுதலிய குறிகளையிடல்வேண்டும். அவைகள்தாமே இதிற்றோன்றும் விம்பத்தில் திலகமிடன் முதலிய உபாயந் தவிர்த்துப் பிரதிவிம்பத்தில் திலகமுதலியவைகளை அடைவிப்பதற்கோருபாயமுமின்றாம்; அதுபோல விம்பபூத ஈசுரனிடத்துச் சமர்ப்பித்த தருமமுதலிய புருடார்த்தங்களையே பிரதிவிம்பவடிவ ஜீவனடைவன்; அஃதொழித்து மற்றொன்றானும் இவன் அதையடையான். இவ்வாறு சர்வ பரிபூரணமாகிய வாசுதேவனை ஆராதிக்கும் அதிகாரியினது அந்தக்கரணம், ஞானப் பிரதிபந்தகமாகிய பாபங்களிலாதொழிந்து ஞானத்திற் கநுகூலமாகிய புண்ணியத்தோடு கூடுங்கால் மிகத் தூய்தான கண்ணாடியில் முகம் விளக்கமாய்த் தோற்றுவதுபோலச் சர்வ கருமத்தியாக சமதமாதிபூர்வகம் பிரஹ்மவேத்தாவாகிய குருவையடைந்துசெய்த சிரவணாதிகளால் மிகத் தூய்மையாகிய. அதன்கண் நான் பிரஹ்மசொரூபம் என்னும் சாக்ஷாத்காரவிருத்தி யுண்டாகின்றது. பிரஹ்மவேத்தாக் குரு வுபதேசித்த தத்துவமசி என்னும் வேதாந்தவாக்கியத்தா லுண்டான்தும் அஹன்மாகாரமற்றதும் சுத்த சைதன்யாகாரமானதுமாகிய சாக்ஷாத்காரவிருத்தியில் பிரதிபலித்த சைதன்யம் அக்காலத்திலே தனதாசிரய விடயக அவித்தையை நாசஞ்செய்கின்றது. விளக்குண்டானகாலத்திலே இருளொழிவதுபோல அவ்வவித்தை நாசத்தின்பின்னர் அவ் விருத்திசகித, சர்வ காரியப் பிரபஞ்சங்களூ நாசமாகின்றன என்னை, உபாதான

காரண நாசத்தின்பின்னர் உபாதேயகாரிய நாசத்தைச் சர்வ நூலாரும் உடன்பட்டனர்களாதலின், இவ்வர்த்தமனைத்தையும் ஸ்ரீபகவானருளுகின்றார், 'ஊஜெவயெ ப்ரவஃூஹெஊயாஜெதாං தாஜ்ஷிதெ' ஆண்டு, 'ஆத்மா இத்யேவோபாசித, ததாத்மானமேவாவேத், தமேவதீரோவிக்ஞாய; தமேவவிதித்வா' என்பன முதலிய வாக்கியங்களிலுள்ள ஏவகாரசத்தமானது பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தில் சர்வோபாதி ரகிதத்தன்மையை விளக்குமாறுபோல 'மாமேவபிரபத்யந்தே' என்னுமிக் கீதைவாக்கியத்திலுள்ள ஏவகாரமும் பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தில் சர்வோபாதி ரகிதத்தன்மையை அறிவுறுத்துகின்றது அதாவது, தூலசூட்சும காரணவடிவமாகிய சர்வோபாதிகளுமின்றிய சச்சிதானந்தாகண்ட அத்துவிதீயவடிவப் பரமான்மாவாகிய என்னை எவ்வதிகாரியானவன் சாக்ஷாத்கரிக்கின்றானோ அவனே அவ்வவித்தைவடிவ மாயையை நாசமாக்குகின்றான். கருத்திதுவாம்:—தத்துவமசிமுதலிய வேதாந்தவாக்கிய சன்னியமாயும் நிருவிகற்ப சாக்ஷாத்காரவடிவமாயும் சொல்லத்தகாத சுத்த சித்தாகாரத்துவ தருமத்தோடு கூடியதாயும் சர்வசுகிருதபலமாயும் நிதித்தியாசனத்தின் பரிபாகத்தாற் றோன்றியதாயும், சர்வகாரியசகித அஞ்ஞானத்திற்கு விரோதியாயுமுள்ள சாக்ஷாத்காரவிருத்தியால் தத்பதார்த்தவடிவப் பரமான்மாவாகிய என்னைத் தனது சொரூபமாய்ச் சாக்ஷாத்கரிக்கும் அதிகாரியே எனதவித்தைவடிவ மாயையை ஆயாசமின்றி நாசம்பண்ணுகின்றான்; அம்மாயை நான் பிரஹ்மசொரூபம் என்னும் எனது சாட்சாத்காரத்தையொழித்து வேறு பல வுபாயங்களானும் நாசஞ்செய்யொணாதது சர்வானர்த்தங்கட்கும் சென்மபூமியாம்; அதை எனது சாக்ஷாத்காரத்தால் அவ்வதிகாரி ஆயாசமின்றி நாசஞ்செய்கின்றான். அதாவது, சர்வோபாதிகளையும்விடுத்து அவன் சச்சிதானந்தகனப் பரமான்மசொரூபமாய் நிலைக்கின்றான்; அப் பிரஹ்மவேத்தாப் புருஷனுக்கு ஒருவரும் பிரதிபந்தகம்பண்ண முடியாது.

ஆ-சு. தஸ்ய ஹ ந தேவாஶ்சநாபூத்யா ஈஶதே ஆத்மா ஹ்யேஷாம் ஸ பவதி ॥

(பொ-ள்.) அப் பிரஹ்மவேத்தாப்புருஷனை யடக்குவதற்கு இந்திராதிதேவர்கட்கும் வலியில்லை, அவன் சர்வ தேவதைகளின் ஆன்மசொரூபமாதலின் என்க. ஆண்டு, யெ - தெ - என ஸ்ரீ பகவானாலருளின வெகுவசனமிரண்டும் தேகேந்திரியாதி பேதத்தாற் கற்பிக்கப்பட்ட ஆன்மபேதப் பிராந்தியை யனுவாதம்பண்ணுகின்றன. உண்மையாய் ஆன்மபேதத்தை அறிவுறுத்துவனவன்று; அன்றியும், 'மாமேவயே பிரபத்யந்தே' என்னும் வாக்கியங் கூறுமிடத்தில் 'மாமேவயே பிரபஶ்யந்தி' என்னுஞ் சாக்ஷாத்கார வாசகவாக்கியமே ஸ்ரீ பகவானால் கூறியருளத்தக்கது என்னை? சாக்ஷாத்காரத்தானே அம்மாயை நிவிருத்தியாகின்றது. கருமோபாசனைகளாலன்றாம்; அவ்வாக்கியத்தை யருளாதொழித்து 'மாமேவயேபிரபத்யந்தே' என்னும் வாக்கியத்தை அருளினதால் இப்பொருளைக் குறிப்பித்தருளினர். பரமேசுரனாகிய எனது சரணமொன்றையேயடைந்து பரமானந்தகனப் பரிபூரணவாசுதேவனாகிய என்னையே சிந்தித்து நாட்கழிக்கு மதிகாரி எனது பிரியத்தானுண்டாகிய பேரானந்தக்கடலில் மூழ்கினவனாதலின் எனது மாயையின் சர்வ குணங்களானும் அமிழ்த்தப்படான். மற்றோ, மாறாய் அம்மாயை இப்பகவத் சரணாகத புருஷன் எனது விலாசவினோதத்தில் குசலனாகாமையின் என்னைக் கெடுத்தற்கு வலியுளான் எனச் சிந்தித்து அப்பக்தனைவிட்டுத் தானே விலகுகின்றது. குபேரதமுடைய தபஸியிடத்தினின்றுங் காமமாது நிவிருத்தியாவதுபோலும் ஆதலின் இவ்வதிகாரி எனது மாயையைக் கடத்தற்பொருட்டுப் பரிபூரண பரமான்ம வாசுதேவபகவானாகிய என்னை நிரந்தரந் தியானிக்குக. (14)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வணம் பரமேசுரனாகிய தங்கள் சரணாகதமாய்த் தங்களையே நிரந்தரந் தியானித்தலால் அம்மாயை நிவிருத்தியாமெனின் சர்வா

னர்த்த காரணமாகிய இம்மாயையை நீக்குதற்பொருட்டு எல்லாமனுஷரும் தங்கள் சரணாகதியை அடையாததென்னை, என்னு மர்ச்சுனன் சங்கைக்குப் பல பிறப்பிற் றேடிய பாபவடிவப் பிரதிபந்தகத்தால் அனைவரும் எனது சரணத்தை யடைந்திலர் என உத்தரமருளுகின்றார்.

சு-ம். 𑌨 𑌮𑌾𑌂 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑍋 𑌮𑍂𑌢𑌾𑌃 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃 ।
𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾 𑌆𑌸𑍁𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥ (15)

ப-ம். 10 𑌨 9 𑌮𑌾𑌂 1 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌨𑌃 2 𑌮𑍂𑌢𑌾𑌃 11 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 3 𑌨𑌰𑌾𑌧𑌮𑌾𑌃 4 𑌮𑌾𑌯𑌯𑌾 5 𑌅𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 6 𑌆𑌸𑍁𑌰𑌂 7 𑌭𑌾𑌵𑌂 8 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பாபகருமமுடையவனும், மூடனும், நராதமனும், மாயையால் ஞானம் நிவிருத்திக்கப்பட்டவனும், இடம்பமுதலிய அசுரபாவத்தை யடைந்தவனுமாகிய அவன் பரமேசுரனாகிய என்னைப் பஜனைபண்ணான். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சந்ததம் பாவகருமத்தோடுகூடிய பாவியானவன் யாவருள்ளும் அதமனாவன்; அதாவது, அவன் ஈண்டோ மேலோரா லிகழப்படுவன், ஆண்டோ ஆபிரமனர்த்தத்தையடைவன்.

சங்கை:—ஹே பகவன்! அவன் அநர்த்தத்தையடைவிக்கும் பாவத்தையே எப்போதும் ஏன் செய்கின்றனன்?

சமாதானம்:—ஹே அர்ச்சுன! '𑌮𑍂𑌢𑌾𑌃' மூடனாதலின், அதாவது இக்காரியம் எனதர்த்தசாதனம், இக்காரியம் என தனர்த்தசாதனம் என்னும் இஷ்ட அநிஷ்ட விவேகமற்றவனாதலின், எப்போதும் பாவத்தையேசெய்வன்.

சங்கை:—ஹே பகவன்! நூற் பிரமாணமிருப்ப அவன் அவ்விவேகத்தை ஏன் செய்திலன்?

சமாதானம்:—ஹே அர்ச்சுன! '𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃' உடற்பொறிக் கூட்டத்தோ தாதான்மிய மயல்வடிவத்தாற் பரிணாமத்தையுற்ற மாயையால் கட்டுப்பட்டது; விவேகமாற்று மாற்றல்வடிவ உணர்ச்சி யாவனுக்கோ அவன் மாயயாபஹ்ருதஞானனாவன். அவன் அத்தகையனாதலின், காரியாகாரிய விவேகமாற்றிலன். இதனானே, '𑌦𑌂𑌭𑍋 𑌦𑌰𑍍𑌪𑍋𑌽𑌭𑌿𑌮𑌾𑌨𑌶𑍍𑌚 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌪𑌾𑌰𑍁𑌷𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚' என்பதுமுதலிய வசனங்களால் மேற்கூறப்பெறும் கொலை களவு முதலிய ஆசுர சுபாவத்தையே பற்றுநிற்பன். இவ்வண்ணம் என்னைச் சாக்ஷாத்கரிக்கத் தகுதியற்ற துட்டன் என்னைப் பணிந்திலனாதலின் அவனது துர்ப்பாக்கியம் யாவரும் வியக்கத் தக்கதேயாம். ஒருரையின்கண்ணே இச்சுலோகத்திற்கு இப்பொருள் இயம்பப்பட்டுளது:—அவன் துட்டனாதலின் மனத்தூய்மையற்ற மூடனாவன். அதாவது, ஆன்மாநான்ம விவேகமற்றவன் அதனானே அவன் மநுடர்களுக்குளதமன் அத்தன்மைய துஷ்கிருதியாகிய அதமன் என்னைப் பஜனைபண்ணான்; அவன் எதனால் துஷ்கிருதியெனின் அருளுகின்றார். '𑌮𑌾𑌯𑌯𑌾𑌪𑌹𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌃 𑌇𑌤𑌿' அவித்தை வடிவ மாயையால் அவனது அகண்டசைதன்யப் பிரஹ்மஞானம் மறைக்கப்பட்டதால் அவன் துஷ்கிருதியாயினன், இத்துணையும் மாயையின் ஆவரணசத்தி கூறப்பட்டது. மறித்துமவனெத்தன்மையனெனின் ஆசுரபாவத்தைப்பற்றியவன் அதாவது தேகேந்திரியாதி சங்காதங்களே ஆன்மாவாதலின் அச்சங்காதத்தையே எல்லாவிதத்தானும் திருப்திபண்ணவேண்டும் என்னும் அசுரவிரோசனனது உள்ளக்கருத்தே ஆசுரபாவமாம், அத்தன்மைய ஆசுரபாவத்தையடைந்தவன் இத்துணையும் மாயையின் விக்ஷேபசத்தி கூறப்பட்டது. இதனாலிப்பொருள் பெறப்பட்

டது:—இந்த மாயையானது தனது சொரூபானந்தத்தை மறைத்துத் தேகத்தி லுண்டாக்கிய ஆன்மபுத்திப் பிராந்தியால் அதைப் புஷ்டிசெய்தற்பொருட்டு அவன் பலவித துஷ்கிருதியைச்செய்கின்றான், அப்பாபகருமத்தால் மூடனாய் மநுஷர்க்கு ஈதமனாப் பரமேசுரனாகிய என்னை அவன் பஜனைபண்ணுகின்றிலன்; ஆதலின், இவ்வவித்தைவடிவ மாயையே சர்வானர்த்தத்திற்குங் காரணமாமென்க.

(அ-கை.) அல்லது, அவ்வாசுரபாவத்தையடையாது, சர்வதா புண்ணிய கருமமும் இஷ்டாநிஷ்டவஸ்து விவேகமுமுடையவர்கள் புண்ணியத்தின் நியூ னாதிகதன்மையால் நால்வகையாய் என்னைப் பஜனைபண்ணுகின்றார்கள். அவர்கள் கிரமமாய்க் காமமற்றவர்களாய்ப் பரமேசுரனாகிய எனது பிரசாதத்தால் அம்மாயை யைக் கடக்கின்றார்கள் என்னுமர்த்தத்தை ஸ்ரீ பகவானிப்போ தருளுகின்றார்.

சு-ம். அதுவிடிய ஹஜஹெ ஊ ஜநாஸுகூதிநொஜ-உூந ।
ஸூதெ-உா ஜிஜூாஸு-யஉாமீ-உ ஜூாநீ அ ஹாதஷ-உஹ ॥ (16)

ப-ம். 8 அதுவிடியாஃ 12 ஹஜஹெ 11 ஊ 10 ஜநாஃ 9 ஸுகூதிநஃ 2 அஜு-உந 3 ஸூதெ-உஃ 4 ஜிஜூாஸுஃ 5 அயஉாமீ-உ 7 ஜூாநீ 6 அ 1 ஹாதஷ-உஹ.

(அ-ம்.) ஹே பரதவம்ச சிரேஷ்டனாகிய அர்ச்சுன! ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி, ஞானி என்னும் இந்நால்வகையான சுகிருதிஜனங்கள் பரமேசுரனா கிய என்னைப் பஜனைபண்ணுகின்றார்கள். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுகிருதிகள், அதாவது முற் பல பிறப்புக்களில் புண்ணியத்தைத் தேடினவர்கள் சபலசென்மர்கள். அவர்களின் அபலார்கள் பய னிலாப் பிறப்புளார்கள் அத்தன்மையர்களே பரமேசுரனாகிய என்னைப் பஜனை (ஆராதனை) பண்ணுகின்றார்கள். அவர்களும் ஆர்த்தன், சிஞ்ஞாசு, அர்த்தார்த்தி, ஞானி என்னும் பேதத்தால் நான்குவகைப்படுவர்கள். அவர்களுள், ஆர்த்தன் முதலிய மூவரும் சகாமர்களாவர்கள்; ஞானியொருவனே நிட்காமனாவன். ஆண் டுச் சத்துரு வியாக்கிரமுதலிய வடிவ ஆபத்து ஆர்த்தியாம் அதனால் கிரகிக்கப் பட்டவன் ஆர்த்தனாவன், அத்தன்மைய ஜனங்கள் அவ்வாபத்துவடிவ ஆர்த்தியை நீக்குதற்பொருட்டுப் பரமேசுரனாகிய என்னை ஆராதிக்கின்றார்கள். எஞ்ஞபங்கத் தாற் குரோதமடைந்த இந்திரன் இடைச்சேரியில் மிகு விருஷ்டிபெய்வித்ததால் துக்கமடைந்த இடைச்சேரியிலுள்ள ஜனங்களும், சராசந்த ராஜாவினது காராக் கிரகத்தையடைந்து ஆர்த்தர்களான ராஜாக்கள் அனைவரும், துரியோதனனவை யில் துகிலுரிந்ததால் ஆர்த்தையாகிய துரோபதையும், முதலை பிடித்துக்கொ ண்ட கஜேந்திரனும், மற்றும் பலரும், ஆர்த்தர்களாகிப் பரமேசுரனாகிய என்னை ஆராதித்ததுபோலாமெனக. சர்வதா ஆன்மஞானத்தையடைய விரும்புவோன் சிஞ்ஞாசுவாம். அவனும் அவ்வான்மஞானத்தை யடைதற்கு என்னை ஆராதிக் கின்றான்; முசுகுந்தச் சக்கரவர்த்தி, ஜனகராஜா, உத்தவர் முதலியவர்போ லவாம்; இரண்டுலகத்திலுமுள்ள பொன், பெண், புத்திரன் முதலிய போகசாத னங்கள் அர்த்தமாம் அதை இச்சிப்போன் அர்த்தார்த்தியாம்; அவனும் அவ்வர் த்தத்தின்பொருட்டு என்னை யாராதிக்கின்றான்; சுக்கிரீவன், விபீஷணன், உப மன்னியு முதலியவர்கள் இகலோக போகசாதனங்களை விரும்பியும் துருவன் முத லியோர்கள் பரலோக போகசாதனங்களை விரும்பியும் என்னை யாராதித்தார்கள். ஆண்டு, தத்துவவேத்தாவானவன் மாயையைக் கடப்பதுபோல ஆர்த்தன்முதலிய மூவரும் என காரணத்தால் மாயையைக் கடக்கின்றார்கள். அவர்களுள் சிஞ்ஞா ...த்தியால் நேரேமாயையைக் கடக்கின்றான்; மற்றிருவ ...க்கின்றார்கள். இம்மூவர்களுக்குள்ளு மித்துணை

விசேடமாம்; ஆண்டு, ஆர்த்தனுக்கும் அர்த்தார்த்திக்கும் சிஞ்ஞாசுத்தன்மைபொருந்தும். சிஞ்ஞாசுவுக்கும், ஆர்த்தத்தன்மையும் ஆன்மஞானத்தின் சாதனவடிவ அர்த்தார்த்தித்தன்மையும் பொருந்தும். இதுபற்றியே ஸ்ரீ பகவான் ஆர்த்த அர்த்தார்த்திகட்கிடையில் சிஞ்ஞாசுவைக் கூறியருளினர். இத்துணையால் சகாமர்களாகிய ஆர்த்தன்முதலிய மூவருங் கூறப்பட்டார். நிஷ்காமனாகிய நான்காவது பக்தனைக் கூறியருளுகின்றார் ஞாநீச என. ஆண்டு, சர்வ பரிபூரண அத்துவிதிய பரமான்மாவே நான் என்னும் பகவத்துண்மைவடிவத்தின் சாக்ஷாத்காரம் ஞானமாம். அதோடுகூடியவன் ஞானியாவன் அவன் அவ்வான்மஞானத்தால் எனது மாயையைக் கடந்தவன்; சர்வகாமமற்ற அத்தன்மையஞானியும் என்னை ஆராதிக்கின்றான். ஈண்டு, ஞாநீச என்னும் வாக்கியத்திலுள்ள சகாரமானது யாராகினும் நிஷ்காமபக்தர்களுளரேல் ஞானிக்கு ளடங்குவரென் றுணர்த்தியருளற்பொருட்டாம்; நிஷ்காமப்பிரேமபக்தனும் ஞானிக்குளடங்குவனென்க. ஆதலின், ஐவகையாய்க் கூறத்தக்கதென்னும் குறைவுபாட்டுச் சங்கை கூடாதாம். அன்றியும், ஹே பரதர்ஷப என்னுஞ் சம்போதனத்தால் இப்பொருள் சூசிப்பித்தருளப்பட்டது. அர்ச்சுனனாகிய நீ சிஞ்ஞாசுவேனும் ஞானியேனுமாகுவை; ஆதலின், நால்வருள் நான் யாரெனுஞ் சங்கையொழிப்பாய் என்பதாம்; ஆண்டு, சனகாதிகளும் நாரதரும், பிரகலாதரும், பிருதுராஜாவும், சுகதேவரும் நிஷ்காமஞானிகளாகிய பக்தர்களாவர்கள். நிஷ்காமசுத்தப் பிரேமபக்தர்களோ ஆயர்குலமாதர்கள், அக்குரூரன், யுதிஷ்டிரன் முதலியோர்களாவர்கள். அன்றியும், கம்சன், சிசுபாலன் முதலியோர்களோ பயத்தானும், துவேஷத்தானும், பகவத்சிந்தனையை நிரந்தரம் பண்ணினவர்களேனும் பக்தர்களெனப்படார்கள்; அவர்கட்குப் பரமேசுரனிடத்தில் பகவத்பிரீதிவடிவ பக்தியின்மையின் என்க. (16)

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் நால்வகைப் பக்தர்களும் சுகிருதிகளெனக் கூறியருளப்பட்டனராதலின், ஸ்ரீ பகவானுக்கு அந்நால்வருஞ் சமமானவர்களே என்பது கருத்தாம் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு நால்வரிடத்தும் சுகிருதித்தன்மை யுளதேனும் சுகிருதத்தின் மிகுதிப்பாட்டாலடைவுற்ற நிஷ்காமப் பிரேமை மிகுந்ததால் ஞானியே சர்வ சிரேஷ்டனாவன் என உத்தரமருளுகின்றார்.

சு-ம். 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤 𑌏𑌕𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ।
𑌪𑍍𑌰𑌿𑌯𑍋𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌹𑌂 𑌸 𑌚 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ (17)

ப-ம். 1 𑌤𑍇𑌷𑌾𑌂 4 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 2 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 3 𑌏𑌕𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 5 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 10 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 6 𑌹𑌿 8 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 9 𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 7 𑌅𑌹𑌂 12 𑌸𑌃 11 𑌚 13 𑌮𑌮 14 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்நால்வர்களுக்குள் நித்தியயுக்த ஒரு பக்தியுடைய ஞானி மேலாவன்; பரமேசுரனாகிய நான் அவனுக்கு மிகப் பிரியன், அவனும் எனக்கு மிகப் பிரியனாவன். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆர்த்தன் முதலிய நான்கன்பர்களுக்குள் சர்வ பரிபூரண அத்துவிதீயப் பிரஹ்மமே நான் என்னுந் தத்துவஞானத்தையுடைய சர்வ காமமற்ற ஞானியானவன் எல்லாரினு முத்கிருஷ்டனாவன். அதில் அவனுக்கு இரண்டு ஏதுகர்ப்பவிசேடணமருளுகின்றார். '𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌏𑌕𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 𑌇𑌤𑌿' நித்தியயுக்தன் அதாவது சர்வ விக்ஷேபங்களுமின்மையின் பிரத்தியக்கபின்னப் பரமான்மாவில் எப்போதுஞ் சமாகித சித்தமுடையவன்; அதனாலவன் ஏகபக்தனாவன். அதாவது, ஒரே பிரத்தியக்கபின்னப் பரமான்மாவினிடத்தில் அநுரக்திவடிவப் பக்தியுடையோன் மற்றொன்றிலிலாதவனாவன். இவ்வாறு நித்தியயுக்த

ஞனதானும் ஏகபக்தி யுடையனுனதானும் அந்த ஞானி மிகச் சிரேஷ்டனுவன்; அவ்வேகபக்தியிற் காரணமருளுகின்ருர். 'ப்ரியோஹி இதி' அவனுக்கு நான் மிகப் பிரியனுதலின், அதாவது நிருபாதிகப்பிரீதிக்கு விஷயனுதலின். அவன் ஏக பக்தனுவன், இதனுனே எனக்கவன் மிகப் பிரியன். என்னே, தனதான்மா மிகப் பிரியமாம் என்பது சுருதியினும் உலகத்தினும் மிக விளக்கமேயாம் என்க. ஒரு வியாக்கியானத்திலோ இச்சுலோகத்திற் கிவ்வாறு பொருள்பண்ணப்பட்டது: அந் நால்வர்களுள் ஞானியே சிரேஷ்டனுவன்; அவன் நித்தியயுக்தனுதலின், அதா வது சர்வதா எனதாராதனையிலே யுக்தன். சகாமர்களாகிய ஆர்த்தன் முதலி யோர்கள் காமம் பூரணமாகும்வரையிலுமே எனதாராதனையில் யுக்தர்கள்; பின்ன ரல்லர் ஆதலின், அவர்கள் நித்திய யுக்தர்களெனப்படார்கள். அங்ஙனமே ஞானி யும் ஏகபக்தனுவன்; அதாவது பரமேசுரனுகிய என்னையே ஏகபாவனையா லாரா திப்பவன் மற்றவைகளை யாராதியாதவன். ஆர்த்தன் முதலியோர் அவ்வகைய ரல்லர்கள்; ஆண்டு ரோகமடைந்த ஆர்த்தபுருடனே சூரியனையும், சிஞ்ஞாசுக் களோ சாசுவதியையும், அர்த்தார்த்திகள் குபேரன் முதலியோர்களையும் ஆராதிக் கின்ருர்கள். இவ்வாறு ஆர்த்தன் முதலியோரிடத்தும் அவ்வக்காமப்பிராப்தியின் பொருட்டுப் பலவகைப்பக்திகள் பார்க்கப்படுகின்றன. ஞானியினது நித்தியயுக்தத் தன்மையிலும் ஏக பக்தித்தன்மையிலும் காரணமருளுகின்ருர். 'ப்ரியோஹி இதி' பரமேசுரனுகிய நான் அவனுக்கு மிகப்பிரியன். என்னே, நான் அவன தான்மவடிவமேயாவன். தனதான்மா நிருபாதிகப் பிரீதிவிடயமானதால் சர்வர் களுக்கும் பிரியமேயாம். கருத்திதுவாம்:—நிருபாதிகம், சோபாதிகம் எனப் பிரீதி இருவகைத்தாம். அவற்றுள், எப்பிரீதி எப்பொருளில் பிறவற்றின்பொருட் டாமோ, அது சோபாதிகமாம். தனதான்மசுகத்தின்பொருட்டுப் பெண் பொன் ஞதிகளிலுள்ளதுபோலாம். எப்பிரீதி எப்பொருளில் பிறவற்றின் பொருட் டன்றே அது நிருபாதிகமாம். தனதான்மாவிலுள்ள பிரீதிபோலவாம்.

ஆ-சு. தஸ்ய தஸ்ய வ்ரத்யாஸ்ய ப்ரியோ விஸ்வாஸ்ய ப்ரியோ மத ।
ஸாத்வஸ்வஸ்வாராஸ்ரம யஜ்யதாத்ம இதி ॥

(பொ-ள்.) புத்தி முதலிய சர்வ சங்காதங்களினும் அந்தரமாகிய இவ் வான்மா, புத்திரனினும் தனத்திலும் ஏனையபொருளனைத்தினும் மிகப்பிரியமாம். அத்தன்மைய நிட்காமஞானியாகிய பக்தன் மிகவரியனுவன், எனதான்மசொரூப மாதலின் எனக்கு மிகப்பிரியனுவன் என்க. (17)

(அ-கை.) ஹே பகவன்! 'ஸ அஸ்ய ப்ரிய:' என்னுந் தங்கள் வாக்கியத்தால் ஏகஞானியாகிய பக்தனே தங்கட்குப் பிரியனுவன். ஏனையாலர்கள் எனத்தோற்று கின்றது என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு அவர்களும் பிரியர்களே. ஆனுலோ, அவர்கள் மிகப் பிரியர்களலர்கள். ஞானியாகிய பக்தன் எனதான்மவடிவமான தால் மிகப்பிரியன் என ஸ்ரீ பகவான் உத்தரமருளுகின்ருர்.

சு-ம். உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ।
ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் ॥ (18)

ப-ம். 3 உதாரா: 2 ஸர்வே 4 ஏவ 1 ஏதே 6 ஜ்ஞாநீ 5 து 7 ஆத்மா 8 ஏவ 9 மே 10 மதம் 18 ஆஸ்தித: 12 ஸ: 11 ஹி 13 யுக்தாத்மா 14 மாம் 15 ஏவ 16 அநுத்தமாம் 17 கதிம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வார்த்தன் முதலிய மூவர்களும் உத்கிருஷ் டர்களே ஆனுலோ, பிரஹ்மஞானியோ எனதான்மாவே என எனது நிச்சயம்

அந்த ஞானி பரமேசுரனாகிய என்னிடத்தில் சமாகிதச்சித்தமுடையனாய் என்னையே எல்லாவற்றினும் மேலாகிய பரமபலவடிவமாய்க் கொள்கின்றான். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆர்த்தன் முதலிய மூவர்களும் சகாமர்களாயினும் எனது பக்தியிலாத பிராணிகளைப்பார்க்கினும் உத்கிருஷ்டர்களே. என்னை, முற்பிறப்பில் அவர்கள் பல சுகிருதகாரிகளாவர்கள். இப்பிறப்பில் அவர்கட்கு எனது பக்தி கிடைத்ததாதலின் பூர்வ சுகிருதமொழித்து எனது பக்தி கிடைக்காது. ஒருபோது அவர்கட்கு முற்பிறப்பில் பல சுகிருதமின்றேல் பரமேசுரனாகிய என்னை ஒருபோதும் ஆராதியார்கள். இவ்வுலகத்தில் பரமேசுரனாகிய என்னின் பகிர்முகமாகிய ஆர்த்தன் முதலியோர்கள் அன்னியமான அற்ப தேவதைகளை ஆராதிப்பது காணப்படுகிறது. ஆதலின், இச்சன்மத்திலுள்ள எனதாராதனையால் அவர்களின் முற்பிறப்பின் சுகிருதம் அநுமானம் பண்ணப்படுகின்றது. அத்தன்மைப் பூருவஜன்மப் புண்ணியப்பிரபாவத்தால் என்னையாராதிக்கின்ற ஆர்த்தன் முதலிய மூவரும் எனக்குப் பிரியர்களேயாவர்கள். எனது பக்தர்கள் ஞானிகளாயினும் அஞ்ஞானிகளாயினும் எனக்கப்பிரியரலர். ஆனாலோ, எப்புருஷர்க்கெவ்வண மென்னிடத்திற் பிரீதியுளதோ பரமேசுரனாகிய எனக்கும் அப்புருஷரிடத்து அவ்வணமே பிரீதியுண்டாம். இஃதுலகனைத்தும் மிக விளக்கமாம். ஆண்டு, ஆர்த்தன் முதலிய மூவர்கட்கும் பரமேசுரனாகிய நான்மாத்திரம் பிரியமாவதில்லை. மற்றோ, இச்சைக்கு விடயமான பொருளுமாம். ஞானிக்கோ யானொழிந்த மற்றெப்பொருளும் பிரியமாவதில்லை. மற்றோ, அவனுக்கு நானே நிரதிசயப்பிரீதிவிடயமாகின்றேன். இதனானே, நிஷ்காமனாகிய ஞானியும் எனக்கு நிரதிசயப்பிரீதி விஷயமாகின்றான். நான் அவ்வாறலனெனின் செய்தநுணருந் தன்மை என்னிடத்து எவ்வாறு உளதாம் 'செய்ததழிக்குந்' தன்மையே யுளதாம். ஆதலின், என்னிடத்தில் கிருதக்ஞத்தன்மை சித்தித்ததற்கும் கிருதக்கினத்தன்மை நீக்குதற்கும் பரமேசுரனாகியநானும் ஞானிகளாகிய பக்தர்களிடத்தில் நிரதிசயப் பிரியஞ்செய்வேன். இதுபற்றியே பூர்வசுலோகத்தில் 'அத்யர்த்தம்' என்னும் விசேடணங் கூறியருளப்பட்டது. 'யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் ஹவதி' என்னுஞ் சுருதியில் வித்தை சிரத்தை முதலியவைகளால் செய்யப்பட்ட கருமமே வீரியவத்தரமெனக்கூறப்பட்டிருக்கிறது. ஈண்டு, வீரியவத்தரம் என்னும் வாக்கியத்தீற்றிலுள்ள 'தர' விகுதிக்கு அதிசயவடிவார்த்தமே உடன்பாடாம். அதனாலிப்பொருள் பெறப்படுகின்றது; வித்தை முதலியவைகளாற்செய்யப்பட்ட கருமம் அதிசயமான வீரியமுடையதாகின்றது என்ப. அவ்வித்தை முதலியவைகளாலாக்கப்படாத கருமமும் வீரியமுடையதாகின்றது. அதுபோல, ஞானியாகிய பக்தன் பரமேசுரனாகிய எனக்கு 'அத்யர்த்தம்பிரியன்' என்னும் பகவத் வாக்கியத்திலுள்ள அத்யர்த்தம் என்னும் பதத்திற்கு அதிசயத்தன்மைவடிவார்த்தமே யுடன்பாடாம். அதனாலிப்பொருள் பெறப்படுகின்றது. ஞானியானவன் எனக்கு மிகப்பிரியன், ஞானமின்றிய ஆர்த்தன் முதலியோர்களும் பிரியர்களே. இவ் வபிப்பிராயத்தால் ஸ்ரீ பகவான் அந்த ஞானிக்கு அத்யர்த்தம் என்னும் விசேடணங் கூறியருளினர். இவ்வர்த்தத்தை 'யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ ஹஜாம்யஹம்' என்னும் வாக்கியத்தால் தாமே திருவாய்மலர்ந்தருளினர். இதனால் பரமேசுரனாகிய என்னைத் தனதான்மவடிவாயுணரும் ஞானியாகிய பக்தன் எனதான்மவடிவனேயாவன். என்னினவன் வேறல்லன் 'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ ஹவதி' பிரஹ்மத்தைத் தனதான்மவடிவமாயுணர்ந்தவன் பிரஹ்மசொரூபமேயாகின்றான் எனச் சுருதியுங்கூறுகின்றது. இவ்வாறெனது நிச்சயம். ஈண்டு, 'ஞானீ து' என்னும் வாக்கியத்திலுள்ள 'து' என்னும் சத்தமானது சகாமன் பேததரிசி ஆர்த்தன் முதலிய மூன்றன்பர்களினும் அந்த ஞானியி

னிடத்து நிஷ்காமத்தன்மை அபேததரிசித்தன்மைவடிவ விசேடணங்களை அறிவுறுத்தற்பொருட்டாம். இப்போது ஞானியின் ஆன்மரூபத்தன்மையிற் காரண மருளுகின்றார். 'ஸஹியுக்தாத்மா ஐதி' அர்ச்சுன! அந்த ஞானியாகிய பக்தன் யுக்தான்மாவாதலின் அதாவது நானே பகவானாகிய வாசுதேவன் என அபேதமாய்ப் பரமேசுரனாகிய என்னிடத்தில் எப்போதும் சமாகிதச்சித்தமுடையனாய் ஆநந்தகனமாகிய என்னையே எவற்றினும் மேலாகிய பலமென வுடன்பட்டுப்பரமான்மாவாகிய எனக்கயலாய் மற்றொரு பலத்தையுமுடன்படாதவன் ஆதலின் அவன் எனதான்மவடிவமேயாவனென்க. (18)

(அ-கை.) ஹே அர்ச்சுன! அந்த ஞானி, பரமேசுரனாகிய என்னையே பரம பலவடிவமெனக் கொள்கின்றானாதலின், அவன் என்னையே அபேதமாயடைவன். அத்தன்மைய ஞானியே மிகவரியனாவன் என்பதை ஸ்ரீ பகவான் இப்போதருளுகின்றார்.

சு-ம். பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே ।
வாஸுதேவஃ ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லபஃ ॥ (19)

ப-ம். 2 பஹூநாம் ; 3 ஜந்மநாம் 4 அந்தே 1 ஜ்ஞாநவாந் 8 மாம் 9 ப்ரபத்யதே 6 வாஸுதேவஃ 5 ஸர்வம் 7 இதி 10 ஸஃ 11 மஹாத்மா 12 ஸுதுர்லபஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞானியானவன் பல சன்மாந்தத்தில் இவ்வுலகனைத்தும் வாசுதேவசொரூபமே என்னும் உணர்வுடையனாய்ப் பரமேசுரனாகிய என்னை அபேதரூபமாய் ஆராதிப்பன் அம்மகாத்துமா மிகவரியன். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சிறிது சிறிது புண்ணிய சம்பாதனத்திற்குக் காரணவடிவ முற்போன பல சன்மாந்தத்தில் அதாவது சர்வ சுகிருதங்களின் பல வடிவ அந்திய சன்மத்தில் ஞானியாகிய புருஷன் இவ்வுலகனைத்தும் வாசுதேவ சொரூபமே என்னும் ஞானமுடையனாய், நிருபாதிகப் பிரிய விடயவடிவ பரமேசுரனாகிய என்னையே எப்போதும் எல்லாப் பிரேமைவிஷயவடிவமாய் ஆராதிக்கின்றான். என்னை, நானும் இவ்வுலகனைத்தும் பரமேசுரனாகிய வாசுதேவ சொரூபமே என்னும் பார்வையால் அவனது பிரேமைகளனைத்தும் பரமேசுரனாகிய என்னிடத்திலேயே முடிவுறுகின்றன. இதனானே, அந்த ஞானபூர்வகமாக எனது பக்தி பண்ணுவோன் மகாத்மாவாவன்; அதாவது, மிகவுந் தூயமனத்தோனாதால் அச்சீவன் முத்தன் சருவத்தினும் உத்கிருஷ்டனாவன். அவனுக்கிணையாய் மற்றொருவரில்லை. அவனுக்கொப்புளோரிலையெனில் அவனின் மேலோர் எவ்வாறுவர். இதுபற்றியே அச்சீவன்முக்தனாகிய ஞானி மிகத் துர்லபமாவன்; அதாவது, அவ் வித்துவான், பல்லாயிர மனுடர்க்குள்ளும் துக்கத்தானுங் கிடைக்கொணாதோன். அத்தன்மையோனது துர்லபத்தன்மையை (மனுஷ்யாணாம் சஹஸ்ரேஷு) என்னும் வாக்கியத்தில் ஸ்ரீ பகவான் விளக்கமாய்த் திருவாய்மலர்ந்தருளினர். ஆதலின், அச்சீவன் முத்தன்பரமேசுரனாகிய எனது நிரதிசயப்பிரிய விடயமாவன் என வருளியதற்கிழுக்கின்றாமென்க. (19)

(அ-கை.) ஆண்டு, 'தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விஶிஷ்யதே' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் ஆர்த்தன் முதலிய மூவரபேக்ஷையால் ஞானியாகிய பக்தன் மேலானவன் என, பண்ணியருளிய பிரதிக்ஞை இத்துணை பரியந்தஞ் சித்தமானது. அன்றியும் சகாமத்தன்மை பேததரிசித்தன்மைகள் ஒப்பாயினும் வேறு தேவதைகளின் பக்தர்களை யபேக்ஷித்து ஆர்த்தன் முதலிய [illegible] ஷ்டர்கள் என்னும் பிரதிக்ஞையை 'உதாரா: சர்வ [illegible] க்தால் ஸ்ரீ பகவான் முன்னருளியிருந்தனர். இப்

போது இவ்வேழாவது அத்தியாயம் முடிவுறும்வரையினும் அப்பிரதிக்ஞையைச் சித்திபண்ணியருளுகின்றார். ஈண்டு, பரமகிருபாலுவாகிய ஸ்ரீ பகவானுக்கிது கருத்தாம்:—ஆர்த்தன் முதலிய எனது பக்தர்களிடத்தும் அன்னியதேவதை களின் பக்தர்களிடத்தும் ஆயாசம், சகாமத்தன்மை, பேததரிசித்தன்மைமுதலிய தருமங்கள் சமமேயாயினும் பரமேசுரனாகிய எனதன்பர்கள் பூமிகைமுறையாய் எல்லாவற்றினும் மேலாகிய மோக்ஷவடிவ பலத்தையே அடைவர்கள். அற்ப தேவ தைகளின் பக்தர்கள் மறித்தும் மறித்தும் பிறப்பிறப்பையே தரும் அற்பபலத் தையே அடைவார்கள். ஆதலின், ஆர்த்தன் முதலிய பக்தர்களனைவரும் பரமே சுரனாகிய எனது சரணாகதியைப்பெற்று ஆயாசமின்றியே எல்லாவற்றினும் மேலா கிய மோக்ஷவடிவபலத்தை அடைவார்கள் என்க. ஈண்டு, மோக்ஷவடிவப் பரம புருஷார்த்தமாகிய பலத்தைத் தருவது எனதாராதனையேயாம். எனது ஆராத னையை யுபேக்ஷித்து அற்பபலத்தைத் தருவதாகிய அற்பதேவதா ஆராதனை பண் ணப்புகுவதில் பூர்வசம்ஸ்காரவடிவ வாசனாவிசேடமே அசாதாரண காரணமாம் என்னுமர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளுகின்றார்.

சு-ம். காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽந்யதேவதா: ।
தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ (20)

ப-ம். 3 காமை: 1 தை: 2 தை: 4 ஹ்ருதஜ்ஞாநா: 13 ப்ரபத்யந்தே 12 அந்ய தேவதா: 8 தம் 9 தம் 10 நியமம் 11 ஆஸ்தாய 6 ப்ரக்ருத்யா 7 நியதா: 5 ஸ்வயா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வக்காமங்களால் பரமேசுரனாகிய என்னிற் பகிர் முகமாகிய அந்தக்கரணமுடையோர்கள் பூர்வ வாசனைவடிவப் பிரகிருதியால் வசம் பண்ணப்பட்டவர்களாய் அவ்வந்நியமத்தைத்தழுவி அன்னிய தேவர்களை ஆராதிப் பார்கள்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மாரண, மோகன, உச்சாடன, தம்பன, ஆகர் ஷண, வசீகரண முதலியவைகளை விடயம்பண்ணப்பட்ட அபிலாஷை காமமாம்; அதின் விடயங்களான மாரணாதிகள் பகவத்சேவையால் அடையமுடியாதனவென அவர்கள் எண்ணினவர்கள். அத்தன்மைய அவ்வக்காமங்களால் அபகிருதமான அதாவது, பகவானாகிய வாசுதேவனிற் பகிர்முகமாய் அவ்வம்மாரணாதிபலத்தைத் தருபவர்களெனக் கொள்ளப்பட்ட அற்ப தேவர்களின் அபிமுகமாகிய, ஞான மெனு மந்தக்கரணமுடையோர்கள் அபகிருதஞானர்கள். எனக் கன்னியமான அவ்வற்ப தேவதைகளின் ஆராதனையில் பிரசித்தமாகிய ஜபம், உபவாசம், பிரதட் சிணை, நமஸ்காரம்முதலிய அவ்வந்நியமங்களைத்தழுவி மாரணமுதலிய அவ்வற்ப பலனை இச்சித்து ஆராதிக்கின்றார்கள். அவ்வற்ப தேவதைகளுக்குள்ளும் பூர்வாப் பியாச சன்னிய தனது தனது அசாதாரண வாசனாவசப்பட்டு ஒரு தேவதை யையே சிலர் ஆராதிக்கின்றார்கள். (20)

(அ-கை.) ஹே பகவன்! அன்னியமான அற்ப தேவதைகளை ஆராதிப்பவர் களுக்கும் அவ்வத்தேவதைகளின் பிரசாதத்தால் சர்வேசுரனாகிய ஸ்ரீ பகவான் வாசுதேவனிடத்தில் அவசியமாய்ப் பக்தியுண்டாகுமென்னும் அர்ச்சுனன் சங் கைக்கு ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். யோ யோ யாம் யாம் தநும் பக்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி ।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விதநாம்யஹம் ॥ (21)

ப-ம். 1 யோ 2 ய: 4 யாம் 5 யாம் 6 தநும் 3 பக்த: 7 ஶ்ரத்தயா 8 அர்சிதும் 9 இச்சதி 10 தஸ்ய 11 தஸ்ய 14 அசலாம் 15 ஶ்ரத்தாம் 12 தாம் 13 ஏவ 17 விததாமி 16 அஹம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வெச் சகாமபுருஷன் பக்தியுடையனாய் எவ்வெத் தேவதாமூர்த்தியைச் சிரத்தையோடும் ஆராதிக்க முயல்கின்றானோ அவ்வப்புருஷனுக்கு அவ்வத்தேவதாமூர்த்தியினிடத்தே நிலையுறுபக்தியை அந்தர்யாமியாகிய நான் உண்டாக்குவேன். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வன்னியதேவதைகளை ஆராதிப்பவர்களுள் எவ்வெச்சகாமபுருஷர்கள் பக்தியுடையர்களாய் எவ்வெத்தேவதாமூர்த்தியை முற்பிறப்பின் வாசனாவலியால் வெளிப்பட்ட அன்புபூண்டு ஆராதித்தற்கெத்தனிக்கின்றார்களோ அவ்வவர்கட்கு அவ்வத் தேவதாமூர்த்தியின்கண்ணேயே முன்வாசனையாலுண்டாகிய பக்திவடிவச்சிரத்தையை அந்தர்யாமியாகிய நான் நிலைப்படுத்துவேன். அப்புருஷர்க் கத்தேவதைகளினின்றும் சிரத்தையைத்திருப்பி என்னிடத்திற் சிரத்தையுண்டாமாறு செய்வதில்லை. ஒரு வியாக்கியானத்தில் 'தாம்' (அதை) என்னும் பதத்தால் சிரத்தையே கொள்ளப்பட்டது. ஆனால், இவ்வியாக்கியானத்திற் கூறிப்போந்த 'யாம் யாம், எதை எதை, இத்தேவதா வாசக எது' என்னுஞ் சத்தத்திற் கன்வயம்படாது. அல்லது, 'அது' என்னுஞ் சத்தத்தைச் சேர்த்துக்கொண்டே அஃதன்வயப்படும். என்னை, 'எது அது' என்னுஞ் சத்தங்கட்கு அவாய்நிலை அவசியமாயுண்டாம். ஆதலின், ஈண்டு 'தாம்' (அதை) என்னுஞ் சத்தத்தின் முன்பைக்குறித்து இச்சத்தத்தை அத்தியாகாரம் பண்ணி 'தாம்' (அதை) என்னுஞ் சத்தத்தால் முன்னர் 'யாம் யாம்' (எதை எதை) என்னுஞ் சத்தத்தாற் கூறப்பட்ட தேவதையையே பராமரிசித்தனர் என்க. (21)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ஸ தயா ஶ்ரத்தயா யுக்த: தஸ்யாராதநமீஹதே ।
லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥ (22)

ப-ம். 1 ஸ: 2 தயா 3 ஶ்ரத்தயா 4 யுக்த: 5 தஸ்ய 6 ஆராதநம் 7 ஈஹதே 16 லபதே 8 ச 9 தத: 14 காமாந் 10 மயா 11 ஏவ 12 விஹிதாந் 15 ஹி, 13 தாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அச்சகாமன் அவ்வன்புடையனாய் அத்தேவதாமூர்த்தியை ஆராதிக்கின்றான். அங்ஙனமே அத்தேவதாமூர்த்தியினின்றும் பரமேசுரனாகிய என்னாலே கற்பிக்கப்பட்ட முன்னினைத்திருந்த காமத்தை நன்கடைகின்றான். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அம்மாரணமோகனாதிபலனை யடைய விரும்பி அச்சகாமன் பரமேசுரனாகிய என்னால் அவ்வத்தேவதைகளிடத்தில் திரம்பண்ணப்பட்ட பக்தியுடையனாய் அவ்வம்மூர்த்தியையே ஆராதிக்கின்றான். அதையொழித்து என்னை ஆராதிப்பதில்லை. அதனால், அவன் அம்மூர்த்தியினின்றுமே முன்னிச்சித்த மாரண முதலியவைகளை யடைகின்றான்.

சங்கை :—அன்னிய தேவதைகளும் தத்தம் அன்பர்களுக்கு அவ்வக் கருமபலனைக்கொடுப்பதில் சுவதந்திரர்களாயிடில் தங்களிடத்துச் சர்வ கருமபலனையுங் கொடுக்குந் தன்மை பொருந்தாதன்றோ?

சமாதானம்:—'ஃயெவவிஹிதாநூ ஐதி' ஹே அர்ச்சுன! சர்வ ஜீவர்களின் புண்ணிய பாவங்களை அறிபவனும், அவ்வக்கரும பலன்களைக் கொடுப்பவனும், அச்சர்வ தேவர்களின் அந்தரியாமியுமாகிய நானே அவ்வக்கருமபலனை விபாகம் பண்ணும்போது மாரண முதலிய பலனை யுண்டாக்குகின்றேன். பரமேசுரனாகிய என்னையன்றி அவ்வக்கருமபலனை உண்டாக்குவதில் அத்தேவதைகள் சமர்த்தரா கார்கள். நானுண்டாக்கின அம்மாரணாதிபயனையே அவர்களடைகின்றார்கள். ஆதலின், பரமேசுரனாகிய நானே நேராகவேனும் மற்றெவ்வாயிலாகவேனும் சர்வ கருமபலனையுங் கொடுப்பவன். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் சர்வ தேவர் களும் தனதாஞ்ஞாவசத்தர்களென அறிவுறுத்தருளினர் எனக. அல்லது, மூல சுலோகத்தில் 'ஹிதான்' என்பது ஒரு பதமாகவே யுணரற்பாலது; அதாவது, உண்மையில் மாரணாதிகள் ஹிதவடிவங்களன்றேனும் அவர்கட்கு ஹிதவடிவங் களாய்த் தோற்றுகின்றனவாம். (22)

(அ-கை.) அத்தேவதைகளும் சர்வான்மவடிவ பரமேசுரனாகிய எனது மூர்த்திகளே ஆதலின், அவர்களின் ஆராதனமும் உண்மையின் எனதாராதனமே. எவ்விடத்தும் பலன்கொடுப்பவனும் அந்தரியாமியாகிய நானே அங்ஙனமாயினும் சாக்ஷாத் எனது பக்தர்களுக்கும் அன்னிய தேவதைகளின் பக்தர்களுக்கும் விஷமமாகவே பலப்பிராப்தியுண்டாகின்றது. அதுவோ, வஸ்துவின் விவேக அவிவேகங்களானேயாம். ஆண்டு, எனது பக்தர்களிடத்து வஸ்து விவேகமுளது. அன்னிய தேவதாபக்தர்களிடத்து அஃதின்று. இதனானே விஷம பலப்பிராப்தி யுண்டாகின்றதென்பதை ஸ்ரீ பகவான் இப்போதருளுகின்றார்.

சு-ம். அனவத்து ஃலும் தெஷாம் தத்வதூலெய வஸாம் ।
தெவாநூதெவயஜொ யாஂதி மஜ்ஜக்தா யாஂதி ஊவி ॥ (23)

ப-ம். 5 அனவத் 6 து 4 ஃலும் 1 தெஷாம் 3 தத் 7 ஃவதி 2 அஃபெயஸாம் 9 தெவாநூ 8 தெவயஜ: 10 யாஂதி 11 மஜ்ஜக்தா: 14 யாஂதி 12 ஊம் 13 அவி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வற்ப புத்தியுடையவர்களின் அப் பலம் நாச முடையதேயாம். அத்தேவதைகளை ஆராதிப்பவர்கள் அத்தேவதைகளையே அடைகின்றார்கள். பரமேசுரனாகிய எனது பக்தர்கள் என்னையே யடைகின்றார்கள். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அற்ப புத்தியாகிய மேதையையுடையவர்கள் அதாவது, மந்தத்தால் உண்மைப்பொருளை யுணருவதில் சமர்த்தமின்மைவடிவ மேதையையுடையவர்கள் அற்ப மேதசுகள் அத்தன்மைய அவ்வத்தேவதைகளின் பக்தர்களுக்கு அந்தரியாமியாகிய நானே அவ்வவ் வாராதனத்தாலுண்டாம் பலனைக் கொடுக்கின்றேன். அங்ஙனமாயினும் அப்பலம் நாசமுடையதேயாம். அதாவது பரமார்த்த வஸ்துவின் விவேகம் பண்ணும் பரமேசுரனாகிய எனது பக்தர்களின் மோக்ஷவடிவப் பலம் நாசமுறாததுபோல் அன்னிய தேவதாபக்தர்களின் மாரண முதலிய பலன்கள் நாசமடையாதனவல்ல; மற்றோ, நாசமுடையனவே யாம். பரமார்த்தவஸ்து விவேகமின்றியவர்கட்குக் கருமத்தால் நாசப்படும் பலமே பிராப்தியாம் இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. யொவா ஸதஷரம் மாமஂவிஃித்வாஸ்லீம் ஜொகெஜுஹொதி । [ஜூவதி.
யஜதெதவஸூவஷூதெ ஃஹூநிவஷுவ ஸஸ்ராணஷூவ தெவாஸூத

(போ-ள்.) ஹே கார்க்கி! இவ்வக்ஷரமாகிய பரமான்மாவை யுணராது இவ் வுலகத்தில் ஹோமமும் யக்ஞமும் பல்லாயிரம் வருஷ தவசும் செய்பவனுக்கு அக்கருமங்கள் அநித்திய பலத்தையே கொடுக்கும் என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! அன்னிய தேவதைகளை ஆராதிப்பவர்கள் அநித்தியபலத்தையும், உனது பக்தர்கள் நித்திய பலத்தையுமடைவதிற் காரணம் யாது?

சமாதானம்:—'தேவாந் தேவயஜோ யாந்தி' ஹே அர்ச்சுன! எனக்கன்னியமான இந்திராதி தேவர்களை ஆராதிப்பவர்கள் அநித்தியமான அவர்களையே அடைகின்றார்கள்; பரமேசுரனாகிய என்னை அடைகின்றிலர்கள். இவ்வாறே யக்ஷராக்ஷச பக்தர்களும் பூதப்பிரேத பக்தர்களுமாவர்கள். ஈண்டு, இந்திரன் முதலிய தேவதைகள் அவர்களின் பக்தர்கள்; சாத்துவிகர்களாவர்கள். யக்ஷராக்ஷசர்கள் அவர்களின் பக்தர்கள் ராஜசர்களாவர்கள்; பூதப்பிரேதங்கள் அவைகளின் பக்தர்கள்; தாமதர்களாவர்கள். எவன் எவன் எதையெதை ஆராதிக்கின்றானோ அவனவன் அதையதை அடைகின்றான். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. கர்மணா பித்ருலோகோ வித்யயா தேவலோகஃ।
தேவோ பூத்வா தேவாநப்யேதி ॥

(பொ-ள்.) பிதிருகருமத்தால் பிதிருலோகத்தை யடைகின்றார்கள். தேவதாவுபாசனையால் தேவலோகத்தை யடைகின்றார்கள். அவ்வத்தேவதாராதனத்தால் அவ்வத்தேவபாவத்தையடைந்து அவ்வத்தேவலோகத்தை யடைவர்கள். இது முதலிய சுருதிவாக்கியங்கள் அவ்வத் தேவதைகளை ஆராதிப்பவர்கட்கு அவ்வத்தேவதாப்பிராப்தியைக் கூறுகின்றன. ஆர்த்தன் முதலிய மூன்று பக்தர்களும் நேரே யென்னையே ஆராதித்து என்னையே யடைகின்றார்கள். ஈண்டு, 'மாமபி' என்னும் வாக்கியத்திலுள்ள 'அபி' என்னுஞ் சத்தத்தால் பகவான் இவ்வர்த்தத்தைக் குறிப்பித்தருளினர். ஆர்த்தன் முதலிய எனது பக்தர்கள் மூவரும் முதலில் எனது பிரசாதத்தால் மனவாஞ்சிதப்பொருளையடைந்து, பின்னர் எனதுபாசனை பரிபாகத்தால் அனந்த ஆநந்தகன பரமேசுரனாகிய என்னையும் அடைகின்றார்கள் என்பதாம். இதனால், இப்பொருள் பெறப்படுகின்றது:—எனது பக்தர்களும் அன்னிய தேவதாபக்தர்களுமாகிய ஆர்த்தன் முதலிய மூவருக்கும் சகாமத்தன்மை சமமாயினும், நித்திய அநித்தியபலப் பிராப்தியால் அத்தியந்தம் அவர்கள் பேதமாவர்கள். இதனால், 'உதாராஃஸர்வ ஏவைதே' எனப் பகவானருளிய வாக்கியத்திற்கிழுக்கின்றாமென்க. ஆர்த்தன் முதலிய பரமேசுர பக்தர்களால் தத்தங் காமனானுசாரம் துக்க நிவிருத்தி வாஞ்சிதார்த்தப் பிராப்தி முதலிய அடையப்படும் சாம்சாரிகப்பலன்கள் அநித்தங்களேயாம். ஆயினும், பரமேசுராராதனத்தின் பரமபலமாகிய மோட்சமோ நித்தியமாம். அம்மோக்ஷவடிவப்பலனை யுத்தேசித்தே அப்பரமேசுர பக்தர்களுக்கு நித்தியபலப்பிராப்தி கூறப்பட்டது. ஈண்டு, ஒரு வியாக்கியானத்தில் 'அற்பமேதசாம்' என்னும் வாக்கியத்திற் கிவ்வாறு பொருள் பண்ணப்பட்டது:—'அல்ப்ம் ஹ்யாரேஷாம்' சுருதியில், அற்பசத்தத்தாற் கூறப்பட்ட இத்துவித வுலகத்திற் புத்திவடிவமேதையுடையவன் அற்பமேதசாம்; அதாவது, வெளிப்பொருளை விழைவோனவன்.

ஆ-சு. யத்ர த்வைதமிவ பவதி தத் இதர இதரம் பஶ்யதி।
அந்யச்சாந்யத் விஜாநாதி தத் அல்பம் ॥

(பொ-ள்.) துவிதபாவத்தில் இவன் அன்னிய எப்பொருளைப் பார்க்கின்றான், கேட்கின்றான், மனனம் பண்ணுகின்றான், அறிகின்றானோ, அந்தத்துவைதப்பிரபஞ்சம் அற்பமாமென்க.

(23)

(அ-கை.) ஹே பகவன்! நேரே பகவதாராதனை ஒருகால் நாசமற்ற உத்தம பலத்தைக் கொடுக்குமேல், ஈண்டுப் பெரும்பாலும் இவர்கள் அப்பகவானி

னும் விமுகர்களாய்ப்போகின்றது என்னை என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதிற் காரணமருளுகின்றார்.

சு-ம். 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 ।
𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮𑌾𑌵𑍍𑌯𑌯𑌮𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥ (24)

ப-ம். 8 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 10 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 11 𑌆𑌪𑌨𑍍𑌨𑌂 12 𑌮𑌨𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 9 𑌮𑌾𑌂 1 𑌅𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 3 𑌪𑌰𑌂 5 𑌭𑌾𑌵𑌂 7 𑌅𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌃 2 𑌮𑌮 4 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 6 𑌅𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! விவேகமின்றிய புருஷர்கள் பரமேசுரனாகிய என்னுடைய சர்வகாரணவடிவமும் நித்தியமுமாகிய சோபாதிக சொரூபத்தையும், சர்வத்தினு மேலாகிய நிருபாதிக சொரூபத்தையுமுணராது அவ்வியக்தவடிவப் பரமேசுரனாகிய என்னை வியக்தமானவனாய்க் கொள்கின்றார்கள். இதனாலே, அவர்கள் பரமேசுரனினின்றும் பகிர்முகமாகின்றார்கள். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! விவேகமற்றவர்கள் அவ்வியக்தவடிவப் பரமேசுரனாகியஎன்னை வியக்தபாவத்தையடைந்தவனென எண்ணுகின்றார்கள். அதாவது, இத்தேகம் எடுப்பதற்குமுன் காரியஞ் செய்வதில் வலியற்ற வடிவமாய் நிலைத்திருந்த பரமேசுரனாகிய என்னை இப்போது வசுதேவர்வீட்டில் பௌதிகதேகத்தால் காரியஞ்செய்வதில் சாமர்த்தியத்தைப்பெற்ற ஒரு சீவவிசேடன் எனக் கொள்கின்றார்கள். அல்லது, அவ்வியக்தம், சர்வ காரணவடிவ பரமேசுரனாகிய என்னை வியக்திமாபன்னம், மீனாதி அவதாரத்தால் காரியபாவத்தை யடைந்தவன் என எண்ணுகின்றார்கள்.

ஹே பகவன்! அவர்கள் உமது சொரூப விவேகம்பண்ணாததென்னை என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் காரணமருளுகின்றார். '𑌅𑌬𑍁𑌦𑍍𑌧𑌯𑌃 𑌇𑌤𑌿' அர்ச்சுன! அவர்கள் எனது சொரூப விவேகபுத்தியில்லாதவர்கள். அதனால் என்னை அவ்வாறுணர்கின்றார்கள். ஆண்டு, அவ்வாறு கொள்வதில் கூறப்பட்ட அபுத்தய꞉ என்னும் ஏதுவை இப்போது விளக்கியருளுகின்றார். '𑌪𑌰𑌂𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌃 𑌇𑌤𑌿' அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது மேன்மைபொருந்திய அவ்வியய பாவத்தை அதாவது, சகத்காரணமும் நித்தியமுமாகிய எனது சோபாதிக சொரூபத்தையும் அநுத்தமபாவம் அதாவது, 'புருஷாந்நபரம்கிஞ்சித் சாகாஷ்டா சாபராகதி꞉ என்பது முதலிய சுருதிகளாற் கூறப்பட்ட சர்வத்தினும் மேலாகியதாயும் நிரதிசயமாயும் அத்துவிதீய பரமாநந்தகனமாயும் பரிச்சேதமற்றதுமாகிய எனது நிருபாதிக சொரூபத்தையும் அவர்களுணரார்கள். இதனாலே, அவ்விவேக சூனியர்கள் அன்னிய சீவனைப்போல எனது விநோதமாத்திர காரியத்தைப்பார்த்து இவனுமொரு ஜீவ விசேடனேயென் றெண்ணுகின்றார்கள். ஈசுர சொரூபமாய் என்னைக் கொள்வதில்லை. இதனாலே, என்னை ஒழித்து மிக விளக்கமான இந்திரன் முதலிய அன்னிய தேவர்களை ஆராதிக்கின்றார்கள். அதனாலவர்கள் அநித்திய பலத்தையே அடைவார்கள். இதை ஸ்ரீ பகவான், '𑌅𑌵𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌂 𑌮𑍂𑌢𑌾 𑌮𑌾𑌨𑍁𑌷𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌂' என்னும் வாக்கியத்தால் மேலுந் திருவாய்மலர்ந்தருளுவர் என்க.

(அ-கை.) ஹே பகவன்! தாங்கள் சன்மகாலத்தும் சர்வயோகிகளுந் தியானிக்கத்தக்கதும் ஸ்ரீ வைகுண்டத்திலுள்ளதுமாகிய அத்தன்மைய ஈசுர சம்பந்தமுடைய சொரூபமாய் ஆவிர்ப்பவித்தீர்கள். வர்த்தமான காலத்திலோ ஸ்ரீ வத்சகௌஸ்துபமணி வனமாலை முகுடகுண்டல திவ்ய அலங்காரத்தோடு கூடியவரும் சங்குசக்கர கதாபத்மங்களேந்திய நாற்புயத்தரும், கருடவாகனரும், சர்வதேவர்

களாற் சம்பாதிக்கப்பட்ட ராஜ ராஜேசுவராபிடேக முதலிய மகா வைபவத்தோடு கூடினவரும், சர்வ சுராசுரர்களை வெற்றிபெறுபவரும், பலவிதமான திவ்யவிநோத விலாசத்தைச் செய்பவரும், இராமன் முதலிய அவதாரங்களுக்குள் சிரோமணியும் நேரே வைகுண்ட உலகாதிபரும், சர்வ உலகத்தையும் ஈடேற்றுவான் இப்பூமியில் அவதாரம் பண்ணியவரும், பிரஹ்மசிருட்டியில் தோற்றத்தகாத நிரதிசய சுந்தரத் தன்மை வாய்ந்தவரும், பால லீலையால் சாக்ஷாத் பிரஹ்மாவையும் மோகிக்கச் செய்பவரும், சூரிய கிரணம்போன்ற திவ்ய பீதாம்பரத்தைத் தரித்தவரும், ஒப்பற்ற நீலமேனியையுடையவரும் பாரிசாதத்தின்பொருட்டு நேரே இந்திரனையும் பராசயம் பண்ணியவரும், பாண யுத்தத்தில் சாக்ஷாத் மகாதேவரையும் பாராஜயம் பண்ணியவரும், சர்வ சுராசுரர்களையுஞ் ஜயம்பண்ணுபவராய்த் தைத்தியர்களின் பிராணனீருயுள்ள சர்வப்பொருளையுங் கைக்கொண்டவரும், ஸ்ரீ தாமாதிப்பாமரங் கங்குறித்துப் பெரும் வைபவத்தைக்கொடுப்பவரும், ஒரே காலத்தில் பதினாறாயிரம் திவ்ய வடிவத்தை யெடுத்தவரும், அளவறுகுணமுடையரும், பெரு மகிமையுடையரும், நாரதர் முதலிய மகாமுனிகளால் துதிக்கப்பட்டவரும், இன்னும் இவை முதலாய பலவித திவ்ய குணங்களுள்ளவருமாயிருக்குந்தன்மை தேவரீரிடத்தே யமையும், எச் சீவனிடத்தும் அமையா ; மற்றோ, ஈசுரனிடத்தே அக்குணங்கள் பொருந்துவனவாம். அத்தன்மைத்தாய தங்களிடத்தே அவிவேகிகட்கும் மனுஷ்யத்துவ புத்தியும் சீவத்துவ புத்தியும் எவ்வாறாம்? என்னும் அர்ச்சுனன் சங்கையை நிவிர்த்தித் தருளுகின்றார்.

சு-ம். நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: ।
மூடோऽயம் நாபிஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ॥ (25)

ப-ம். 4 ந 1 அஹம் 3 ப்ரகாஶ: 2 ஸர்வஸ்ய 5 யோகமாயாஸமாவ்ருத: 6 மூட: 7 அயம் 12 ந 13 அபிஜாநாதி 8 லோக: 11 மாம் 9 அஜம் 10 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நான் சர்வ உலகத்திற்கும் வெளிப்படமாட்டேன். யான் யோகமாயையால் ஆவிருதப்பட்டவனாதலின் மூடர்களாய இவ்வுலகம் சன்மமரணமின்றிய என்னை யுணருவதில்லை. (25)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நான் எல்லா உலகத்திற்கும் எனது சொரூபத்தோடு வெளிப்படமாட்டேன் ; மற்றோ, பரமேசுரனாகிய என் பக்தர்களுள் சிலர்க்கே உள்ளவாறு தோற்றுவேன்.

சங்கை :—ஹே பகவன்! சர்வ உலகத்திற்குந் தாங்கள் வெளிப்படாததென்னை ?

சமாதானம் :—ஹே அர்ச்சுன! ‘யோகமாயாஸமாவ்ருத:’ என ஈண்டு, எனது பக்தியிலாதோர்கள் என்னை உள்ளவாறுணராதொழிக ; என்னும் என் சங்கற்பம் யோகமாம். அதன் வசப்பட்ட அநாதி அநிருவசன அவித்தியாவடிவமாயை யோகமாயையாம். அதாவது, எனது சங்கற்பத்தைத் தழுவியுள்ள மாயை யோகமாயையாமென்க. அதனால் நான் நன்கு மறைக்கப்பட்டேன் அதாவது, எனது சொரூபவிஷயகஞானத்தின் காரணங்களிருப்பினும் அம்மாயையால் அந்த ஞான விடயமாதற்குத் தகுதியிலாது செய்தனன். இதனானே, சர்வ உலகத்திற்கும் எனதுண்மைவடிவத்தோடு வெளிப்படுவதில்லை. ஆதலின், ‘பரம் பாவமஜாநந்தோ மமாவ்யயமநுத்தமம்’ என்னும் வாக்கியத்தாற் புகன்ற சோபாதிகநிருபாதிக சொரூபங்களின் ஞானமின்மைக்கு எனது மாயாப்பிரேரக சங்கற்பமே காரணமாம் என்க. இதனானே, எனது யோகமாயையால் மூடமாய் அதாவது, முற்கூறிய ஆர்த்தன் முதலிய நால்வகைப் பக்த ஜனங்களின் வேறானவர்கள் மறைபட்ட ஞான

சக்தியுடையர்களாய் எனது விடயகஞானகாரணங்களிருப்பினும் உற்பத்தி நாசமின்றிய என்னை யுணருவதில்லை. மற்றோ, அம்மூடர்கள் விபரீத திருஷ்டியால் பரமேசுரனுகிய என்னை யாரோ ஒரு மனுஷ்ய விசேடமென் றெண்ணுகின்றார்கள். இதனுனே விபரீத திருஷ்டியுடைய அம்மூடர்கள் பரமேசுரனுகிய என்னை யொழித்து வேறே இந்திராதி தேவர்களை ஆராதிக்கின்றார்கள். ஆண்டு, பொருட்குள்ள உண்மைவடிவத்தை மறைத்து அதற்கிலாத பொய்ம்மைவடிவத்தைக்காட்டுதல் மாயைக்கியல்பாம். அது, லௌகிக இந்திரசாலிகமாயையினிடத்து மிக விளக்கமென்க. ஈண்டு, ஒரு வியாக்கியானத்தில் 'யோகமாயா' என்பதற்குத் தனதாவரணசத்தியால் இவனைச் சென்ம மரணவடிவ துக்கப்பிரவாகத்தோடு சம்பந்தப்படுத்துவது யோகமாம். அத்தன்மைய யோகமாகியமாயை யோகமாயையாம் எனப் பொருட்படுத்துகின்றனர். ஸ்ரீ பகவான் பாடியக்காரரோ சத்துவ முதலிய முக்குணங்களின் சம்பந்தம் யோகமாம்; அதையுடைய மாயை யோகமாயையாம் எனப் பொருள்கொண்டனர். ஒரு வியாக்கியானத்தில் 'யோகமாயாசமாவிருத ஃ என்பதில் யோகம், மாயா சமாவிருத ஃ என இரு பதமாக்கிச் சித்த நிரோதவடிவ யோகமுள்ளவன் யோகமாம் எனப் பொருட்படுத்தி யோகின்' என்னுஞ் சத்தம் போல அர்ச்சுனன் சம்போதனமெனக்கொண்டனர். அதாவது, ஹே யோகியே! மாயையால் மறைக்கப்பட்ட நான் எல்லா வுலகிற்குந் தோற்றுவதில்லை என்பதாம்.

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்வாறு என தகீனமான மாயையால் பரமேசுரனுகிய நான் சர்வ பூதங்களையும்மோகிக்கச்செய்கின்றேன். நான் பிரதிபந்தமின்றிய ஞானசத்தியுடையேனுதலின் அச் சர்வபூதங்களையும் அறிகின்றேன். என்னை எனது பக்தியின்றி ஒருவரு முணரார் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின்றார்

சு-ம். வேதா³ஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந ।
ப⁴விஷ்யாணி ச பூ⁴தாநி மாம் து வேத³ ந கஶ்சந ॥ (26)

ப-ம். 9 வேத³ 2 அஹம் 3 ஸமதீதாநி 5 வர்த்தமாநாநி 4 ச 1 அர்ஜுந 7 ப⁴விஷ்யாணி 6 ச 8 பூ⁴தாநி 10 மாம் 11 து 14 வேத³ 13 ந 12 கஶ்சந.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய நான் சென்ற நிகழ்கின்ற வருங்காலத்த சர்வ பூதங்களையு மறிவேன். என்னை அபக்தர்கள் ஒருவருமுணரார். ()

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தடையற்ற சர்வ விடயகஞானமுடைய பரமேசுரனுகிய நான் எனது மாயையால் சர்வ உலகங்களையும் மோகிக்கச்செய்யினும் முக்காலத்திலுமுள்ள தாவரசங்கமவடிவ பூதங்களனைத்தையும் அபரோட்சமாயுணர்வேன். இதனுனே நான் சர்வக்ஞன். இதிற் சிறிதும் ஐயமுறுதே. அத்தன்மைய பரமேசுரனுகிய என்னை எனது மாயையான் மோகிக்கப்பட்டு ஒருபிராணிகளு முணர்வதில்லை. அதாவது, உலகத்தில் இந்திரசாலிகனது மாயையான் மோகிக்கப்பட்டவர்கள் அவனை யுணருகின்றிலர். மற்றோ, அம்மாயாவியி னனுக்கிரகத்திற்குப்பாத்திரமாய அவனுடைய புத்திரன் முதலியோர்களே அவனை யுணருகின்றார்கள். அதுபோல என தனுக்கிரகபாத்திரர்களாகிய எனதன்பர்களொழிந்த மற்றனைவரும் எனது மாயையால் மோகிக்கப்பட்டவர்களாய் என்னை யுணரார்கள். மற்றோ, எனது பக்தர்களே உள்ளவாறுணர்வார்கள். இதனுனே, எனதுண்மைவடிவினுணர்வின்மையால் என்னையுமொரு மனிதனென்று ஆராதியாது இந்திரன் முதலிய தேவர்களை ஆராதிக்கின்றார்கள். ஈண்டு, 'மாம் து' என்பதிலுள்ள து-என்னுஞ் சப்தத்தால் தமதபக்தர்களிடத்துப் பரமேசுர விடயகஞானத்தின்

தடையைக் குறிப்பித்தருளினர். அதாவது, யாதேனுமொரு தடையின்வசத்தால் அவ்வபக்தர்கள் என்னை உள்ளவாறுணர்வதில்லை என்பதாம். (26)

(அ-கை.) ஆண்டுப் பரமேசுரனது உண்மைவடிவத்தின் ஞானப்பிரதிபந்தகத்தில் முற்கூறிய யோகமாயை காரணமெனக் கூறப்பட்டது. இப்போது அதில் தேகேந்திரியாதிகளின் அபிமானுதிசயபூர்வகம் போகாபினிவேசவடிவ மற்றோர் ஏதுவை அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨 𑌭𑌾𑌰𑌤 ।
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌂𑌮𑍋𑌹𑌂 𑌸𑌰𑍍𑌗𑍇 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌂𑌤𑌪 ॥ (27)

ப-ம். 5 𑌇𑌚𑍍𑌛𑌾𑌦𑍍𑌵𑍇𑌷𑌸𑌮𑍁𑌤𑍍𑌥𑍇𑌨 6 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍋𑌹𑍇𑌨 1 𑌭𑌾𑌰𑌤 3 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 7 𑌸𑌂𑌮𑍋𑌹𑌂 4 𑌸𑌰𑍍𑌗𑍇 8 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 2 𑌪𑌰𑌂𑌤𑌪.

(அ-ம்.) ஹே பாரத! பரந்தப! இச்சர்வபூதப் பிராணிகளும் தூலவுடலுண்டாயதன்பின்னர் இச்சாத்துவேஷங்களாலுண்டாக்கப்பட்ட சீதோஷ்ணுதி துவந்துவ நிமித்தக மோகத்தால் நன்கு மோகத்தையடைவர்கள். (27)

(வி-ம்.) பரதவம்சத்திற் றோன்றினவனும் சத்துருக்களைக் கெடுப்பவனுமாகிய ஹே அர்ச்சுன! அனுகூலவஸ்துவை விடயம்பண்ணுவதான இப்பொருள் எனக்குக் கிடைக்கவேண்டும் என்னும் இச்சையும், பிரதிகூல வஸ்துவை விடயம்பண்ணப்பட்ட இப்பொருள் எனக்குக் கிடைக்காதொழிக என்னும் துவேஷமும், அவைகளாலுண்டான சீதோஷ்ண சுகதுக்க பசிதாகமுதலிய துவந்துவ தருமங்களைக் காரணமாகவுடைய நான் சுகி, நான் துக்கி என்பனமுதலிய விபரியய வடிவ மோகத்தால் இச்சர்வபூதப் பிராணிகளும் தூலவுடல் தோன்றியபின்னர் நித்தியாநித்தியவஸ்து விவேகத்திற்கயோக்கியவடிவ சம்மோகத்தையடைகின்றார்கள். ஈண்டுப் பாரத பரந்தப என்னும் சம்போதனங்களால் அர்ச்சுனனிடத்துக்குலமகிமையையும் சொரூபத்தாற் சத்தியையும் ஸ்ரீ பகவான் கூறியருளி அவனிடத்திலிதைக் குறிப்பித்தருளினர்:—குலமகிமையோடும் சொரூபசத்தியோடுங் கூடிய உன்னைத் துவந்துவமோகவடிவ சத்துருவானது பராஜயப்படுத்துவதில் வலியற்றதாம்; மற்றே, நீயே அதைப் பராஜயம்பண்ணுவதிற் சமர்த்தன் என்பதாம். ஈண்டிது ஸ்ரீ பகவானது கருத்தாம்:—இச்சாத்துவேஷங்களற்றவரொருவருமிலர். மற்றே, அனைவர்களு மவைகளையுடையவர்களே. அவ்விச்சாத்துவேஷங்களோடு கூடியவர்களுக்கு வெளிப்பொருள் விடயகஞானமே அமையாதெனின், அந்தரான்ம விடயகஞானம் எவ்வாறுண்டாம்? மற்றே, உண்டாகாது. இராகத்துவேஷங்களால் வியாகூலப்பட்ட அந்தக்கரணமுடையவர்களாதலின், சர்வப்பிராணிகளும் பரமேசுரனாகிய என்னைத் தமதான்மசொரூபமாய் அறிகின்றிலர்கள். இதனானே ஆராதனைபண்ணற்குரித்தாய என்னையும் ஆராதிக்கின்றார்களில்லை. (27)

(அ-கை.) ஹே பகவன்! 'சர்வபூதானி சம்மோஹம்யாந்தி' என்னும் வாக்கியத்தால் தாங்கள் சர்வப் பிராணிகட்கும் சம்மோகப்பிராப்தி கூறியருளினீர்கள், 'சதுர்விதாபஜந்தேமாம்' என்னும் வாக்கியத்தால் ஆர்த்தன்முதலிய நால்வகைப் பக்தர்கட்கும் பரமேசுர பஜனைப் பிராப்தியுங் கூறியருளினீர்கள். இவ்விரண்டும் தம்முள் மாறுபட்ட பொருளையே கூறுகின்றன. இவற்றுள், ஒன்றைப் பிரமாணமாகக்கொள்ளினோ ஒன்று அசங்கதமாகும் என அர்ச்சுனன் சங்கிப்பச் சர்வ பாபகருமமுமொழிந்து புண்ணியமிகுந்தவர்களென்னை யாராதிக்கின்றார்களென்பதை 'சதுர்விதாபஜந்தேமாம்' என்னும் வாக்கியத்தான் முற்கூறினும்.

அவர்களின் விலக்ஷணமானவர்களே 'சர்வபூதானி சம்மோஹம்யாந்தி' என்னும் வாக்கியத்தாற் கூறினுமாதலின், அவ்விரு வாக்கியங்கட்கும் தம்முள் மாறுபாடின்றாமென் றுத்தரமருளுகின்றார்.

சு-ம். யெஷாம் ஸ்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் ।
தெ த்வந்த்வமோஹநிர்முக்தா பஜந்தெ மாம் த்ருடவ்ரதா: ॥ (28)

ப-ம். 2 யெஷாம் 1 து 6அந்தகதம் 5 பாபம் 4ஜநாநாம் 3புண்யகர்மணாம் 7தெ 8 த்வந்த்வமோஹநிர்முக்தா: 11 பஜந்தெ 10 மாம் 9 த்ருடவ்ரதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் எப்புண்ணியகருமமுடையோனுக்குப் பாபந் தொலைகின்றதோ, அவன் துவந்துவ மோகமின்றியவனுய்த் திடசங்கற்பமுடையவனுய்ப் பரமேசுரனுகிய என்னை ஆராதிக்கின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்பிறப்பிற்றேடிய புண்ணியகருமத்தாலடைவுற்ற சபல ஜன்மமுடைய யாவரினும் விலக்ஷணமான அதிகாரிக்கு அவ்வப் புண்ணியகருமத்தால் ஞானத் தடைகளுசமாகவே அவன் பிரதிபந்தகவடிவ பாபங்களொழிந்து துவந்துவமோகம் விடுபட்டவனுய் அதாவது, பாபத்தை நிமித்தமாகவுடைய இராகத்துவேஷாதிகளாலுண்டாகிய நான் சுகி, நான் துக்கி என்பன முதலிய துவந்துவவடிவ மோகத்தால் புனராவிருத்திக்குரித்தல்லனெனத் தள்ளப்பட்டவனுய்த் திடவிரதமெனும் அசல சங்கற்பமுடையனுய் அதாவது, எல்லாவாற்றானும் இப்பரமேசுரரே ஆராதிக்கத்தக்கவர், அவர் இத்தன்மையரே என்னும் நூலளவையாலுண்டாகியதாயும், அப்பிராமாணிய சங்கையற்றதாயுமுள்ள ஞானமுடையனுய்ப் பரமேசுரனுகிய என்னை ஆராதிக்கின்றான்; அதாவது, அநன்ய சரணனுய் எனக்கே சேவைசெய்கின்றான் என்பதாம். இத்தன்மைய அதிகாரிகளையே 'சதுர்விதாபஜந்தேமாம்ஜநா: சுகிருதினோர்ச்சுன' என முற்கூறியருளிய வாக்கியத்திலுள்ள சுகிருதிகளென்னுஞ் சத்தத்தாற் கூறியருளினர்; இதனுலிப் பொருள் பெறப்பட்டது. 'சர்வபூதானி சம்மோஹம்யாந்தி' என்னும் வாக்கியம் உத்சர்க்கவடிவ (சாமானியவடிவ) மாம். சர்வப்பிராணிகளுக்குள் புண்ணியகருமமுடையவன் அம்மோகமின்றியவனுய்ப் பரமேசுரனுகிய என்னை ஆராதிக்கின்றான் என்னும் அர்த்தத்தை உணர்த்தும் 'சதுர்விதாபஜந்தேமாம்ஜநா: சுகிருதினோர்ச்சுன' என்னும் வாக்கியமும் 'ஏஷாந்த்வந்தகதம்பாபம் ஜநானாம்புண்ய கர்மணாம்' என்னு மிவ்வாக்கியமும் அச்சாமான்யத்தின் அபவாதவடிவ, 'சிறப்புவடிவ' மாம். பொதுவாய் எவ்விடத்தும் பிரவிருத்தியாவது உத்சர்க்கமாம். யாதேனுமோரிடத்திற் பிரவிருத்திப்பது அபவாதமாம். ஆண்டு, எவ்விடத்தில் அபவாதம் பிரவிருத்திக்கின்றதோ அவ்விடத்தில் உத்சர்க்கம்பிரவிர்த்திப்பதில்லை. மற்றோ, அதனினும் வேறிடத்திலேயே அவ்வுத்சர்க்கம்பிரவிருத்தியாம். எங்ஙனம், எவ்வுயிரையுங்கொல்லற்க, என்னும் இச் சர்வபூதங்களின் ஹிம்சையின் நிடேதவாக்கியமோ உத்சர்க்க(சாமான்ய)வடிவமாம். அக்கினிஷோமசம்பந்தமாய, பசுவைக்கொல்லுக, என விம்மகத்தில் பசு ஹிம்சையை விதிக்கும் வாக்கியமோ அபவாத (சிறப்பு) வடிவமாம். அபவாதஸ்தானத்தே உத்சர்க்கப்பிரவிருத்தி கூடாதாம், மற்றிடத்தே கூடும்; அதாவது, மகமும் போருமல்லாவிடத்தில் ஒரு பிராணியையுங் கொல்வதொழிக என்பது, சாமான்ய வாக்கியார்த்தமாம். அங்ஙனமே, 'சர்வபூதானி சம்மோஹம்யாந்தி என்னும் சாமான்யவாக்கியத்திற்கும் ஆர்த்தன் முதலிய நால்வகைப் பக்தர்களொழித்து மற்றவரிடத்தே பிரவிர்த்தியுண்டாம். அதாவது, எனது பக்தர்களொழிந்த மற்றனைவரும் சம்மோகத்தை யடைகின்றார்கள் என்பது சாமான்யவாக்கியத்தின்பொருளாம். இவ்விதமாகிய சாமான்யவாக்கியம் முன்னரும் 'திரிபிர்குணமயைர்பாவைரேபி: சர்வமிதஞ்சகத்மோஹிதம் நாபிஜா

நாதிமாமேப்யஃ பரமவ்யயம், என்னுஞ் சுலோகத்திற் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் இவ்விரண்டு வாக்கியங்கட்கும் தம்முள் விரோதப்படுவதின்றுமென்க. ஆதலின், அந்தக்கரணத்தைச் சுத்திபண்ணப்பட்ட புண்ணிய கருமங்கேடுவான் இவ்வதிகாரி எப்போதும் முயலவேண்டுமென்க.

(அ-கை.) இப்போது மேற்கூறும் அர்ச்சுனனுடைய வினாவைக் கிளப்பியருளும்பொருட்டுச் சூத்திரவடிவங்களான இரண்டு சுலோகங்களை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார். மேல் எட்டாவது அத்தியாயம் இவற்றின் வியாக்கியான வடிவமென்றே யுணரற்பாலது.

சு-ம். ஜராமரணமொக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தியெ ।
தெ ப்ரஹ்ம தத்விதுஃ க்ருத்ஸ்னமத்யாத்மம் கர்ம சாகிலம் ॥ (29)

ப-ம். 2 ஜராமரணமொக்ஷாய 3 மாம் 4 ஆஶ்ரித்ய 5 யதந்தி 1 யெ 6 தெ 8 ப்ரஹ்ம 7 தத் 14 விதுஃ 9 க்ருத்ஸ்னம் 10 அத்யாத்மம் 13 கர்ம 11 ச 12 அகிலம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிறப்பிறப்பை யறுத்தற்பொருட்டுச் சகுண பரமேசுரனாகிய என்னை ஆசிரயித்து முயல்பவன் தத்பதவிலக்கியார்த்தவடிவ நிர்க்குணப் பிரஹ்மத்தையும், அபரிச்சின்ன துவம்பதவிலக்கியார்த்தவடிவ ஆன்மாவையும் சிரவணாதி சாதனங்களனைத்தையும் உணரவேண்டும். (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மூப்பிறப்பு முதலிய துக்கங்களால் சம்சாரத்தினின்றும் வைராக்கியத்தையடைந்த அதிகாரிகள் மூப்பிறப்பாதி பலவிதமான பேராந்தையை வேரறுப்பான், சகுண பரமேசுரனாகிய என்னை ஆசிரயித்து அதாவது, மற்றனைத்தினும் பராமுகனாகிப் பரமேசுரனாகிய எனது சரணமொன்றையே யடைந்து யத்தனிப்பான்; அதாவது, பலேச்சையின்றிச் சாஸ்திரத்தில் விதித்த சுபகருமத்தை எனக்கர்ப்பணமாய்ச்செய்வன் என்பதாம். அவ்வதிகாரி முறையாய்ச் சுத்தாந்தக்கரணமுடையனாய் அப்பிரஹ்மத்தை யுணர்வன்; அதாவது, இச்சர்வப்பிரபஞ்சகாரணமாகிய மாயா திட்டானவடிவமாயும் தத்பத லட்சியார்த்த வடிவமாயும் சர்வ உபாதிரகிதமாயுமுள்ள நிர்க்குணப்பிரஹ்மத்தை அவனுணர்வன். அங்ஙனமே உடலைத்தழுவி ஒளிராநிற்பதால் அத்தியான்மமெனப் பெயருடைய சேர்க்கையாலாய பரிச்சேதங்களனைத்துமின்றிய துவம்பத லட்சியார்த்த வடிவப் பிரத்தியக்கான்மாவையும் அவனுணர்வன்; அத்தத் துவம்பதங்களின் லட்சியார்த்த விடயஞானத்தின் சாதனங்களான பிரஹ்மவேத்தாக்குருவைக் கிட்டியிருத்தல், சிரவணமனன நிதித்தியாசனமுதலிய ஞானவடிவபலத்தை நியதமாய்க் கொடுக்கப்பட்ட அனைத்தையும் உணர்வன்.

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யெ விதுஃ ।
ப்ரயாணகாலெபி ச மாம் தெ விதுர்யுக்தசெதஸஃ ॥ (30)

ப-ம். 2 ஸாதிபூதாதிதைவம் 5 மாம் 4 ஸாதியஜ்ஞம் 3 ச 1 யெ 6 விதுஃ 9 ப்ரயாணகாலெ 10 அபி, ச 11 மாம் 7 தெ 12 விதுஃ 8 யுக்தசெதஸஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரி புருஷர்கள் அதிபூத அதிதெய்வ அதியஞ்ஞத்தோடும் பரமேசுரனாகிய என்னைச் சிந்திக்கின்றார்களோ அவர்கள் எனதிடத் தொருமைப்பட்ட மனதுடையர்களாய்ச் சாம்போதும் பரமேசுரனாகிய என்னையே அறிவார்கள். (30)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வாறு எனது பக்தர்கள் மாணகாலத்தே இந்திரியமுதலிய காணங்களை வயப்படுத்தாமையால் பரமேசுரனாகிய என்னை மறந்துவிடுவார்களென்னும் சங்கையை நீ செய்யற்க. அதிபூத அதிதெய்வ அதியக்ஞங்களோடும் பரமேசுரனாகிய என்னை எப்போதுஞ் சிந்திக்கின்றவர்கள், எப்போதும் எமதிடத் தொருமைமனமுடையர்களாய்ப் பூர்வாப்பியாசசன்னிய சமஸ்கார வலியால் ஆவியகலுங்காலத்திலும் சர்வான்மவடிவாகிய என்னையே யுணர்கின்றார்கள். அதாவது, மாணகாலத்தில் இந்திரியமுதலிய காணங்கள் ஒருமைப்படாவிடினும் எமது கிருபையாலும் பூர்வாப்பியாச சமஸ்கார வலியாலும் அவர்களுடைய அந்தக்காணவிருத்தி எனதாகாரமேயாம்; மற்றோரனன்மாகாரமாகாதாம். ஆதலின், இவ்வதிகாரிகள் பரமேசுரனாகிய எமது பக்தி யோகத்தால் கிருதார்த்தர்களாகின்றார்கள். ஆண்டு, அதிபூதம், அதிதெய்வம், அதியக்ஞம் என்னுஞ் சத்தார்த்தங்களை ஸ்ரீ பகவான் தாமே எட்டாவதத்தியாயத்தில் அர்ச்சுனன் வினவாயிலாய் விளக்கியருளுவர். ஆதலின், ஈண்டு அவ்வர்த்தங்களைக் கூறவில்லை என்க. ஆண்டு, இவ்வேழாவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் உத்தமாதிகாரிகளைக்குறித்து இலக்கணவிருத்தியால் தத்பதப் பிரதிபாத்தியஞேயப் பிரஹ்மத்தைக் கூறியருளினர்; மத்திமாதிகாரிகளைக்குறித்தோ சக்திவடிவ முக்கியவிருத்தியால் தத்பதப் பிரதிபாத்திய தியேயப்பிரஹ்மத்தைத் திருவாய்மலர்ந்தருளினரென்க.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளது பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனாநந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகையெனப் பெயரிய வியாக்கியானத்தின்

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# எட்டாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

ஆண்டு, முந்திய ஏழாவது அத்தியாயத்தினீற்றில் 'ஸாதிபூதாதிதைவம்' என்னும் ஒன்றரைச் சுலோகத்தால் ஸ்ரீ பகவான் ஏழுபொருளை ஞேயவடிவமாய்ச் சூத்திரித்தருளினர். அச்சூத்திரவடிவ வாக்கியத்தாலருளின ஏழுவகைப்பொருளின் வியாக்கியான வடிவமேயாகிய இவ்வெட்டாவது அத்தியாயத்தைத் தொடங்கியருளுகின்றார். ஆண்டு, முன்னர்ச் சூத்திரவடிவ வாக்கியத்தால் சாமான்யமாயுணரப்பட்ட அவ்வெழுவகைப்பொருளையும் மறித்தும் விசேடவடிவமாயுணர விச்சித்து இரண்டு சுலோகங்களால் அர்ச்சுனன் அவற்றை வினவுகின்றான்.

அர்ஜுந உவாச.

சு-ம். கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம ।
அதிபூதம் ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே ॥

அயியஜ்ஞஃ கயம் கொத்ர தெஹெஸ்மிந்மயுஸூடிந ।
வ்ரயாணகாலெ அ கயம் ஜ்ஞெயொஸி நியதாத்மபிஃ ॥ (2)

ப-ம். 5 கிம் 3 தக் 4 ப்ரஹ்ம 7 கிம் 6 அய்யாத்மம் 8 கிம் 9 கஉம 1 வுருஷொத்தம 11 அயிஹுதம் 10 அ 12 கிம் 13 வ்ராக்தம் 14 அயிதெவம் 15 கிம் 16 உஅ்யதெ 18 அயியஜ்ஞஃ 20 கயம் 19 கஃ 17 அத்ர 22 தெஹெ 21 அஸ்மிந் 2 மயுஸூடிந 24 வ்ரயாணகாலெ 23 அ 26 கயம் 27 ஜ்ஞெயஃ 28 அஸி 25 நியதாத்மபிஃ

(அ-ம்.) ஹே சர்வ புருடர்க்குள்ளுஞ் சிரேட்ட மதுசூதன! அப்பிரஹ்மம், அத்தியான்மம், கருமம், அதிபூதம், அதிதெய்வம் என்பவையாவை? அதியக்ஞம் யாது? அஃதெவ்வாறு சிந்திக்கத்தக்கது? அஃதிவ்வுடலில் உள்ளதா உடற்கயலாயுள்ளதா? மரணகாலத்தில் ஒருமைப்பட்ட மனத்தோன் உன்னை எவ்வணமறிவன்? (1, 2)

(வி-ம்.) ஹே பகவன்! முன்னர் ஞேயவடிவமாய்த் தங்களாற் கூறியருளப்பட்ட பிரஹ்மம் யாது? சோபாதிகமா அல்லது நிருபாதிகமா என்பது முதல்வினா. (1) ஆன்மசம்பந்தமுடைமையின் ஆன்மாவெனப்படும் தேகத்தைத் தழுவியிருப்பது அத்தியான்மமாம். அஃதியாது? அதாவது, சுரோத்திராதிகரணக் கூட்டமா அல்லது பிரத்தியக்சைதன்யமா என்பது இரண்டாவது வினா. (2) 'கர்மசாகிலம்' என, முன்னர்த் தாங்கள் அருளிய கருமம் யாது? அதாவது, யக்ஞவடிவமா, அல்லது அதற்கன்னியமான பொருளா, 'விஞ்ஞானம் யக்ஞம் தநுதே கர்மாணி தநுதேபிச' என்னுஞ்சுருதி யஞ்ஞ கருமங்களை வேறுவேறாய்க் கூறுதலின் என்பது மூன்றாவது வினா. (3) பூதங்களை யாசிரயித்திருப்பது அதிபூதம் அஃதெதுவென அருளுகின்றீர்; அதாவது, அதிபூதமென்பதால் தங்கட்கு மண்ணுதிகளைத் தழுவிக்கொண்டிருக்கும் சிறிது காரியம் கூறியருளவிழைவா? அல்லது சர்வகாரியங்களுமா என்பது நான்காவது வினா (4) தெய்வத்தைத் தழுவிக்கொண்டிருப்பது அதிதெய்வம்; அஃதெதுவென அருளுகின்றீர்? அதாவது தேவதாவிடயத்தியானமா? தேவர்களின் ஆதித்தியமண்டல முதலியவைகளில் கலப்புற்றிருக்கும் சைதன்யமா என்பதைந்தாவது வினா. (5) யக்ஞத்தைத் தழுவிக்கொண்டிருப்பது அதியக்ஞமாம்; அஃதீண்டியாது? அதாவது, யாதானுமொரு தேவதாவிசேடமா அல்லது பரப்பிரஹ்மமா? அவ்வதியக்ஞம் இவ்வதிகாரியால் எவ்வணஞ் சிந்தித்தற்குரித்தாம், அதாவது, தாதான்மியவடிவமாகவா அல்லது முற்றுமபேதமாகவா. அங்ஙனமே, அது எல்லாவாற்றானும் இத்தேகத்திலிருக்கின்றதா, தேகத்திற்கயலாகவா, இத்தேகத்திலெனில் அஃதியாது. புத்தி முதலிய வடிவமா, அதற்கயலா என்பது ஆறாவது வினா. (6) மரணகாலத்தில் இந்திரியங்கள் சிதிலமடைவதால் அப்போதுன்னை ஒருமைமனத்தோன் எவ்வாறுணர்வன்? என்பது ஏழாவது வினா. (7) ஹே பகவன்! தாங்கள் எல்லா மறிந்து பரமகிருபாலுவாதலின் இவ்வர்த்தங்களனைத்தையும் சரணாகதனாகிய எனக்கு அருளிச்செய்வீராக. ஈண்டு, நீயு நானுமொப்பாதலின் இவ்வர்த்தங்களை எனதிடத்திற் கேட்பதென்னை? என்னுஞ் சங்கையை நீக்குவான், அர்ச்சுனன், புருஷோத்தமன் எனச் சம்போதனைசெய்து சர்வ புருடர்க்குள்ளும் சர்வக்ஞ முதலிய குணங்களுடைய உத்தமன் புருடோத்தமனாவன் அத்தகைமை தங்கட்குளதாதலின், அறியப்படாதபொருளொன்றில்லை. மற்றேறு, உள்ளங்கை நெல்லிக்கனியெனச் சர்வ பொருள்களும் புலப்படக் காணப்பட்டனவேயாம். எனக் கவ்வாறின்றாதலின் தாங்களே அவ்வர்த்தங்களனைத்தையு மருளிச்செய்யவேண்டும் என்பதைக் குறிப்பித்தனன். 'மதுசூதன' என்னுஞ் சம்போதனத்தால் தாங்கள் பரமகிருபை

யுடையவராதலின் மது முதலிய தைத்தியர்களைக்கொன்று மிக வருத்தமுற்றே னும் சர்வ உபத்திரவத்தை நீக்கி யருளுகின்றீர்கள். அத்தன்மைத்தான தங்கட்கு ஆயாசமின்றியே எனதையவடிவச் சிறிய உபத்திரவத்தை நிவிர்த்திப்பது தகுதி யேயாம் என்பதைக் குறிப்பித்தனன். (1,2)

(அகை.) இவ்வாறு இரண்டு சுலோகங்களால் வினவிய எழுவகை வினக் கட்கும் ஸ்ரீ பகவான் முறைப்படி மூன்று சுலோகங்களாலுத்தர மருளிச்செய் கின்றார்.

ஸ்ரீபகவாநு உவாச.

சு-ம். அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: ॥ (3)

ப-ம் 2 அக்ஷரம் 3 ப்ரஹ்ம 1 பரமம் 5 ஸ்வபாவ: 6 அத்யாத்மம் 4 உச்யதே 7 பூத பாவோத்பவகர: 8 விஸர்க: 9 கர்மஸம்ஜ்ஞித:.

(அ-ம்.) அர்ச்சுன! பரமாக்ஷரம் பிரஹ்மமெனப்படும். சுபாவம் அத்தி யான்மமெனப்படும். பூதோத்பத்தி வளர்ச்சிசெய்யும் யாகதான முதலியன கரும மெனப்படும். (3)

(வி-ம்.) ஆண்டெம்முறையாய்ச் சீடனால் வினவப்பட்டனவோ அம்முறை யாகவே குரு அவைகட் குத்தரமருளிச்செய்யின் ஆயாசமின்றியே வினவிய சீடனுக்கு இஷ்டங் கைகூடுமென்னுங் கருத்தால் ஸ்ரீ பகவான் முதற் சுலோகத் தில் மூன்று வினவிற் குத்தரமும், இரண்டாவது சுலோகத்தில் மூன்று வினவிற் குத்தரமும், மூன்றாவது சுலோகத்தில் ஒரு வினவிற் குத்திரமும் அருளிச்செய் தனர். ஆண்டு, பிரஹ்மமென்னுஞ் சத்தத்தால் நிருபாதிகப்பிரஹ்மமே ஈண் டியம்பவேட்கையாம்; சோபாதிகப்பிரஹ்மமன்று என முதல் வினவிற் குத்தர மருளினர். ஆண்டு, 'ந க்ஷரதி ந நஶ்யதீதி அக்ஷரம்' பொருளிதுவாம். ஞானத் தாலேனும், அஞ்ஞானத்தாலேனும், தேச காலங்களினாலேனும், மற்றெப்பொரு ளினாலேனும் நாசப்படாதது அக்ஷரமெனப்படும் என்பதாம். அல்லது, 'அஶ்நுதே வ்யாப்நோதீதி அக்ஷரம்' பொருள்: நீ இருப்புப்பிண்டத்தை உள் வெளியினும் வியாப்பியம் பண்ணிக்கொண்டிருப்பதுபோல அவ்வியாகிருதமதன் காரியமென் னும் சர்வத்தையும் புறம்பினும் உள்ளினும் வியாப்பியம் பண்ணிக்கொண்டிருப் பது அக்ஷரமெனப்படும்; அதாவது, தோற்றமீறற்றதும் யாண்டும் வியாபகமு மாகிய பொருள் அக்ஷரமென்பதாம். இதையே பிருகதாரண்யோபநிடத்தும் கூறுகின்றது: ஆண்டு, யாக்ஞவற்கியமுனி கார்க்கியைக்குறித்துக் கூறுகின்றார். 'ததேதத் அக்ஷரம் கார்கி ப்ராஹ்மணா அபிவதந்த்யஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கம்' பொருளிதுவாம். ஹே கார்க்கி! பிரஹ்மவேத்தாவாகிய பிராமணன் இவ்வக்ஷ ரத்தைத் தூலத்தன்மையும், அணுத்தன்மையும், இரஸ்வத்தன்மை, தீர்க்கத்தன் மைகளும் இன்றியதெனக் கூறுகின்றனன், எனத்தொடங்கி இடையில் யாக்ஞ வற்கியமுனி அக்கார்க்கியைக்குறித்து இவ்வாக்கியத்தைக் கூறுகின்றார்:—

ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ।
ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத: நாந்யதோऽஸ்தி த்ரஷ்டா ॥

(பொ-ள்.) ஹே கார்க்கி! இவ்வக்ஷரத்தினது ஆணையால் இரவிமதிகள் நியமத்தோடிருக்கின்றன. இதற்கயலாய்த் திருஷ்டா வொன்றில்லை. இதுவே

திருஷ்டாவாம். என இடையிற்கூறி அந்தத்தில் அவ்வியாக்ஞவற்கியர் இவ்வாறு முடித்தனர் :—'ஏதஸ்மிந்நு கல்வக்ஷரே கார்க்யாகாச ஓதச்ச ப்ரோதச்ச' பொருள். ஹே கார்க்கி! இவ்வக்ஷரத்தில் அவ்வியாகிருதாகாசம் குறுக்கும் நெடுக்குமாம் என, இவ்வணம் தாத்பரிய நிண்ணயம் பண்ணப்பட்ட உபக்கிரம உபசம்மார முதலிய இலிங்கங்களால் சர்வோபாதிகளின்றியதும், சூரியன் முதலிய உலகனைத்திற்கும் ஆணை தருவதும், அவ்வியாகிருதவடிவ ஆகாசமீறுய உலகனைத்தையுந் தாரணைபண்ணுவதும், இத்தேகேந்திரியாதிகளில் விஞ்ஞாதாவும் ஆகிய நிருபாதிக சைதன்யமே அக்ஷரசத்தார்த்தமெனப் பெறப்படுகின்றது. அதுவே, ஈண்டுப் பிரஹ்மசத்தத்தால் கூறப்பெறும் இவ்வர்த்தத்தை விளக்குவான் அவ்வக்ஷரத்திற்கு விசேடணங்கூறுகின்றூர். 'பரமம்' என அதாவது, அவ்வக்ஷரம் சுவப்பிரகாசபரமானந்த சொரூபமாம், கருத்திதுவாம் :—சூரிய சந்திரர்களின் நியந்தாத்தன்மை சர்வ சடவுலகத்தாரணத்தன்மை சர்வ திருஷ்டாத்தன்மை முதலியவாய்ச்சுருதியாற் கூறப்பட்ட அக்ஷர லிங்கங்கள் பிரஹ்மத்தின்கண்ணேயே பொருந்துவனவாம். மற்றெப்பொருளினுமன்று. ஆதலின், அவ்வக்ஷரம் பிரஹ்ம சொரூபமேயென்க. இது வியாசபகவானுலும் பிரஹ்மசூத்திரத்திற் கூறப்பட்டிருக்கிறது. 'அக்ஷரமம்பராந்தத்ருதே:' பொருளிதுவாம். பிருகதாரண்யோபநிடதத்தில் அக்ஷரம் அவ்வியாகிருதமென்னும் ஆகாசபரியந்தமயய உலகனைத்தையுந் தரிக்கின்றதாமெனக் கூறப்பட்டது. அது பிரஹ்மத்தின்கண்ணே பொருந்துவதாம் ; மற்றெப்பொருளினுமில்லை. ஆதலின் அக்ஷரசத்தத்தால் பிரஹ்மமே கொள்ளற்பாலதென்க.

சங்கை :—ஹே பகவன்! 'ஓமித்யேததக்ஷரம்' என்றற்றொடக்கத்துச் சுருதிகளினும், 'ஓமித்யேகாக்ஷரம் பிரஹ்ம' என்றற்றொடக்கத்து மிருதிகளினும் ஓங்காரவடிவப் பிரணவமே அக்ஷரமெனப்படுகின்றது. உலகத்திலும் அக்ஷர சத்தம் எழுத்திற்கிடுகுறியாம். ஆண்டு, 'ரூடிர்யோகமபஹரதி' பதத்தின் ரூடிசத்தியோகசத்தியின் பாதகமாம் ; என்னும் நியாயத்தால் ரூடிசத்திக்கு நக்ஷரதி என அக்ஷரம் என்னும் யோகசத்தியினும் பிரபலத்தன்மை பெறப்படுகின்றதாதலின் அக்ஷர சத்தத்தால் ஓங்காரமே கொள்ளற்பாலது. அல்லது, 'சம்யுக்தமேதத்க்ஷரமக்ஷரஞ்ச' என்பது முதலிய சுருதியில் அவ்வியக்தமும் அக்ஷரமெனப்படுகின்றதாதலின் அக்ஷர சத்தத்தால் அவ்வியக்தமே கொள்ளற்பாலதாம்.

சமாதானம் :—ஹே அர்ச்சுன! உலகனைத்தின் நியந்தாத்தன்மை, தாரணத்தன்மை, திருஷ்டாத்தன்மை முதலியவாய் முற்கூறிய அக்ஷரவிலிங்கங்கள் ஓங்காரவடிவப்பிரணவத்திலும் மாயாவடிவ அவ்வியத்தத்திலும் பொருந்தாதனவாம். அங்ஙனமே, 'தஸ்ய வ்யக்திஸ் தஸ்ய' என்னுஞ் சுருதி அப்பிரணவத்திற்கும் இலயங்கூறுகின்றது. 'தாத்ருவிஷ்வம்விதாதா' என்னு மிருதியும் மாயைவடிவ அவ்வியத்தத்திற்கும் நாசங்கூறுகின்றது. ஆதலின், ஈண்டு அக்ஷரசத்தத்தால் எழுத்துவடிவப் பிரணவமேனும், மாயாவடிவ அவ்வியத்தமேனுங் கொள்ளற்பாலதன்று. சுருதிமிருதிகளில் பிரணவத்தை அக்ஷரமெனக்கூறியது நித்தியத்தன்மையைக்கொண்டன்று ; மற்றே, சத்தியமான பிரஹ்மத்தை அடைவிக்கும் ஞானத்தைச் சுருதியில் சத்தியமெனக்கூறியதேபோல, அக்ஷரப் பிரஹ்மத்தின் வாசகமானதால் பிரணவத்தையு மக்ஷரமெனக்கூறியதாம். இவ்வாறு சுருதியில் அவ்வியத்தத்தை அக்ஷரமெனக்கூறியது, அதன் நித்தியத்தன்மையைக்கொண்டன்று ; மற்றே, தனது காரியாபேட்சையால் அவ்வியத்தம் நெடுநாளிருப்பது பற்றி அக்ஷரமெனப்பட்டது. 'க்ஷரம்பிரதானமம்ருதாக்ஷரம்ஹர:' என்னுஞ் ... வியத்தத்திற்கு நாசத்தன்மையையும் பரப்பிரஹ்மத் ...ங் கூறுகின்றது. அன்றியும், முற்கூறின உலககார

ணத்தன்மை முதலிய அக்ஷரத்தின் இலிங்கங்கள் எழுத்துவடிவப் பிரணவத்திற் கேலாதனவாமாதலின், ஈண்டு, அக்ஷரசத்தத்தின் யோகசத்தியே ரூடிசத்தியி னும் பிரபலமாம். அக்ஷரசத்தத்தால் தோற்றமீறின்றிய சைதன்யமே ஈண்டு கொள்ளற்பாலது; பிரணவமேனும் அவ்வியத்தமேனுங் கொள்ளற்பாலதன்று. அப்பிரணவாவ்வியத்தங்களை நீக்குதற்கே ஸ்ரீ பகவான் அக்ஷரத்திற்கு 'பரமம்' என்னும் விசேடமருளினர். இதுவரையிலும், 'கிந்தத்பிரஹ்மம்' என்னும் முதல் வினவிற்குத்தரங்கூறியருளியதாம். இப்போது 'கிமத்தியான்மம்' என்னும் இரண் டாவது வினவிற் குத்தரமருளுகின்றார். 'ஸ்வபாவோऽத்யாத்மமுச்யதே' ஹே அர்ச்சுன! முற்கூறிய அக்ஷரப்பிரஹ்மத்தின் சுபாவம். அதாவது, அதனது சொரூபபூத பிரத்தியக்சைதன்யமே இத்தேகவடிவ மித்தையான்மாவை ஆசிர யித்துப் போக்தாவடிவாயிருந்து அத்தியான்மமெனப்படுகின்றது. அதற்கயலான சுரோத்திராதி கரணக்கூட்டங்களன்று, இஃதிரண்டாவது வினவிற் குத்தரமாம். (2) இப்போது 'கிம்கர்ம' என்னும் மூன்றாவது வினவிற்குத்தரமருளுகின்றார். 'விஸர்க: கர்மஸம்ஜ்ஞித:' ஹே அர்ச்சுன! இந்திரன் முதலிய தேவதைகளை யுத்தேசித்துத் திரவியத் தியாகவடிவயாகம், வைதிகத்தீயில் நெய் சோதுமை முதலிய பதார்த்தங்களின் பிரக்ஷேபவடிவ ஹோமம், அந்தணர்கட்குப் பொன் முதலிய வளித்தல் வடிவதானம் என்னும் இம்மூன்றனுள்ளும் தியாகவடிவம் அநுகதமாம். ஆதலின், தியாகவாசகமாகிய விசர்க்க சத்தத்தால் இம்மூன்றுங் கொள்ளற்பாலனவாம். இவைகளே ஈண்டுக் கருமசத்தத்தாற் கூறப்பட்டன, உதாசீனக்கிரியைமாத்திர மன்று. அத்தியாகவடிவ விசர்க்க மெப்படிப்பட்ட தெனின் பூதபாவோத்பவகரமாம்; அதாவது, தாவரசங்கமவடிவ பூதங்களின் உத்பத்திவடிவபாவம் விருத்திவடிவ உத்பவம் என்னு மிரண்டையுஞ்செய்யப்பட் டது. யஞ்ஞ ஹோமாதிகளினனே, சர்வ பூதங்களின் உத்பத்திவிருத்தி சுருதி மிருதியில் விளக்கமாம்.

ஆ-மி. அக்னௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யகாதித்யமுபதிஷ்டதே ।
ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர்வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: ॥

(பொ-ள்.) வைதிகத்தீயில் அன்போடு போடப்பட்ட ஆகுதியானது நுண் ணியவடிவமாய்ச் சூரியமண்டலத்தினிலைத்திருக்கின்றது. அவ்வாகுதியோடுகூடிய சூரியனிலிருந்து நீரின் விருஷ்டியுண்டாகின்றது. அதிலிருந்து நெல் முதலியன வும், அதிலிருந்து தாவரசங்கமவடிவப் பிரஜைகளுமுண்டாகின்றன. அவ்வன்னத் தானே அப்பிரஜைகள் விருத்தியடைகின்றன. இவ்வாறு பரம்பரையாய் யஞ்ஞ ஹோமாதிகளே சர்வ பூதங்களின் உத்பத்திவிருத்திகட்குக் காரணங்களாம். இவ் வர்த்தத்தையே 'தேவா ஏதே ஆகுதி உத்கிராமந்த:' என்னுஞ் சுருதியுங் கூறு கின்றதென்க. ஒரு வியாக்கியானத்தில் 'பூதபாவோத்பவகர:' மனுஷ்யாதி பூதங் களின் சாத்துவிக ராசதவடிவபாவமும் உத்பத்திவடிவ உத்பவமுஞ் செய்கின்றது எனவாம். ஆண்டு, பூதங்கட்கு யஞ்ஞாதிகளினின்று முத்பத்தியோ அக்னௌபி ராஸ்தாகுதி, எனக் கூறிப்போந்த மிருதிவாக்கியத்தானே சித்தமாம். பூதங்களின் சாத்துவிக முதலிய பாவங்கட்குக் கருமத்தினின்றும் உத்பத்தியும் புத்தி கரு மானுசாரமாகவுடையது; அதாவது, தனது கருமாநுசாரமாகவே சாத்துவிக ராசதபுத்தியுண்டாகின்றது, என்னும் மிருதிவாக்கியத்தாற் சித்தமாம் எனப் பொருள்கொள்கின்றனர். ஒரு வியாக்கியானத்தில் 'பூதபாவோத்பவகர:' என்ப தற்கு பூதவடிவமாகிய பாவத்தையே பூதபாவமென்பர்; அதாவது, தாவரசங்கம வடிவ பதார்த்தங்களே பூதபாவங்களாமென்க. அத்தன்மைய பூதபாவத்தை யுண் டாக்குவது பூதபாவோத்பவகரம் எனப் பொருள் கூறுகின்றனர். இது மூன்று வது வினவிற் குத்தரமாம். (3)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் பிரஹ்மம் அத்தியாத்மம் கருமம் யாதென்பதற் குத்தரங்கூறியருளப்பட்டது. இப்போது அதிபூதம், அதிதெய்வம், அதியஞ்ஞம் எது. என்னு மூன்று வினக்கட் குத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌕𑍍𑌷𑌰𑍋 𑌭𑌾𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌶𑍍𑌚𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂 ।
𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑍋𑌽𑌹𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌰 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾𑌂 𑌵𑌰 ॥ (4)

ப-ம். 5 𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 3 𑌕𑍍𑌷𑌰𑌃 4 𑌭𑌾𑌵𑌃 7 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 6 𑌚 8 𑌅𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂 9 𑌅𑌧𑌿𑌯𑌜𑍍𑌞𑌃 10 𑌅𑌹𑌂 11 𑌏𑌵 12 𑌅𑌤𑍍𑌰 13 𑌦𑍇𑌹𑍇 1 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾𑌂 2 𑌵𑌰.

(அ-ம்.) ஹே சர்வப்பிராணிகட்குள்ளும் சிரேஷ்டனாகிய அர்ச்சுன! நாசப் படுபொருள் அதிபூதமெனப்படும். இரணிய கருப்பனென்னும் புருஷன் அதி தெய்வமெனப்படுவன். விஷ்ணுவடிவ அதியக்ஞம் வாசுதேவனாகிய நானே. அவ் வதியஞ்ஞம் இம்மனுடதேகத்தின்கண்ணே யுளதாம். (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நாசப்படுபொருள் க்ஷரமாம். தோற்றப்படு பொருள் பாவமாம், உத்பத்தி விநாசங்களையுடைய பொருள்களனைத்தும் சர்வப் பிராணி மாத்திரவடிவ பூதத்தை யாசிரயித்தேயுண்டாகின்றனவாதலின் அதிபூத மெனப்படும். அற்பமானபொருள் அதிபூதமெனப்படாது. இது நான்காவது வினவிற் குத்தரம். (4) இப்போது அதிதெய்வம் யாது என்னும் ஐந்தாவது வின விற் குத்தரமருளுகின்றார். 'புருஷச்சாதிதைவதம்' என. ஆண்டுச் சர்வகாரி யங்களும் எதனாற் பூரணிக்கப்படுகின்றனவோ அது புருஷனாம். அல்லது சரீர வடிவ சர்வ புரங்களிலுமிருப்பது புருஷனாம். அத்தன்மைய புருஷன் இரணியகருப் பனாவன். அவன் சமட்டிலிங்க சொரூபனும் சூரியன் முதலிய வடிவங்களால் வியட் டியாகிய காணங்கட் கனுக்கிரகம்பண்ணுபவனும் 'ஆத்மைவேதமக்ர ஆசீத்புருஷ வித: ஹிரண்யகர்ப்ப: சமவர்த்ததாக்ரே பூதஸ்ய.' என்பது முதலிய சுருதியாற் கூறப்படுபவனும். அன்றியும்,

𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑌰𑍀𑌰𑍇 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌚 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥

என்னு மிருதியானுங் கூறப்படுபவனும், ஆதித்தன் முதலிய தேவதைகளை யாசிர யித்துச் சட்சு முதலிய காணங்கட்கு அநுக்கிரகம் பண்ணுபவனுமாவனாதலின் அவ் விரணியகருப்பனே அதிதெய்வமெனப்படுவன். தேவதாவிஷயகத்தியான முதலியவைகள் அப்பெயரினவாகா. ஈண்டுப் 'புருஷச்ச' என்பதிலுள்ள சகாரத் தால் அவன் சுருதிமிருதிப் பிரசித்தனெனக் கூறப்பட்டனன். ஒரு உரையில் அச் சகாரத்தால் சுரோத்திர முதலிய பதினான்கு காணங்களின் பிரவர்த்தகங்களாகிய திசைகாலிரவி முதலிய பதினான்கு தேவதைகள் கொள்ளப்பட்டன. அதாவது, இரணியகருப்ப புருஷனும் திசைகாலிரவியாதி தேவதைகளனைத்தும் அதிதெய்வ மெனப்படுமென்பதாம். இது ஐந்தாவது வினவிற்குத்தரம். (5) இப்போது, 'அதி யஞ்ஞ:க:' என்னும் ஆறாவது வினவிற்குத்தரமருளுகின்றார். 'அதியஞ்ஞோஹம்' என, ஆண்டுச் சர்வ யஞ்ஞங்கட்கும் அதிட்டானத்தன்மைவடிவாயும் சர்வயஞ்ஞ பலனைத் தருபவராயும் சர்வ யஞ்ஞங்களின் அபிமானியாயும் உள்ள விஷ்ணுவே கூறிப்போந்த விசர்க்கவடிவ யஞ்ஞத்தை யாசிரயித்திருத்தலின் அதியஞ்ஞமெனப் படுவர். "யஞ்ஞோவை விஷ்ணு:" என்னுஞ்சுருதியும் அங்ஙனமே கூறுகின்றது. அத்தன்மைய அந்தரியாமியாகிய விஷ்ணுவடிவ அதியஞ்ஞம் வாசுதேவனாகிய நானேயன்றி மற்றொன்றில்லை. இத்துணைகூறியதால் ஆறாவது வினவில் 'கதம்' எப்படி, என்னுஞ் சத்தத்தாற்கூறப்பட்ட அதியஞ்ஞம் தாதான்மியவாகவோ அல்

லது, அபேதமாகவோ தியானிக்கத்தக்கதென்னும் ஐயப்பாடுமொழிந்ததாம்; அதாவது, அப்பரப்பிரஹ்மவடிவவிஷ்ணு அத்தியந்தம் அபேதமாகவே சிந்திக்கத்தக்கவராமென்க. அத்தன்மைய விஷ்ணு இம்மநுடதேகத்தின்கண்ணே யஞ்ஞவடிவமாயிருக்கின்றனர். வியாபகமானதால் பரிச்சின்னமான புத்தி முதலியவைகளினும் பின்னமாம். இதனானே, அவ்வதியஞ்ஞம் தேகத்திலுள்ளதோ அல்லது இதனின் வெளியிலுள்ளதோ. தேகத்திலிருப்பினும் புத்தியாதிவடிவமோ அவைகளின் வேறோ என்னும் சந்தேகங்களு நீங்கினவாம். அதாவது, அதியஞ்ஞவடிவ விஷ்ணு யஞ்ஞவடிவத்தா லிவ்வுடலின்கண்ணேயிருக்கின்றார். புத்தி முதலிய வடிவங்களல்லர் என்னு முத்தாஞ்சித்தமானது. ஈண்டு, இம்மனுடதேகத்தானே அவ்வத்துப்பெறப்படுகின்றது; மற்றைய தேகங்களாலின்று. ஆதலின், இம்மனுடதேகத்தின்கண்ணே உள்ளதெனக் கூறப்பட்டது. ஆண்டு, ஹே தேகபிருதாம்வர! அதாவது சர்வ பிராணிகட்குள்ளுஞ் சிரேஷ்டனாகிய அர்ச்சுன, என்னுஞ் சம்போதனமானது ஒவ்வொரு கணத்திலும் பரமேசுரனாகிய எனது சம்பாஷணையால் கிருதகிருத்தியனாகிய நீ எனது உபதேசத்தை யுணர்தற்குரியோன் என, உத்சாகப்படுத்தும்பொருட்டாம். இது, ஆறுவது வினாவிற் குத்தரமாம். (4)

(அ-கை.) 'ப்ரயாணகாலே ச கத²ம் ஜ்ஞேயோஸி' அதாவது, ஒருமைப்பட்ட மனத்தோன் மரணகாலத்தில் எவ்வாறும்மை யுணர்வன் என்னும் வினாவிற் குத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேவரம் ।
ய꞉ ப்ரயாதி ஸ மத்³பா⁴வம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய꞉ ॥ (5)

ப-ம். 2 அந்தகாலே 3 ச 4 மாம் 5 ஏவ 6 ஸ்மரந் 8 முக்த்வா 7 கலேவரம் 1 ய꞉ 9 ப்ரயாதி 10 ஸ꞉ 11 மத்³பா⁴வம் 12 யாதி 15 ந 16 அஸ்தி 13 அத்ர 14 ஸம்ஶய꞉.

(அ-ம்.) எவன் மரணகாலத்திலும் பரமேசுரனாகிய என்னையே சிந்தித்து இவ்வுடலை விட்டேகின்றானோ அவன் பரமேசுரனாகிய எனது சொரூபத்தையே அடைகின்றான்; இதிற் சிறிதுமையமில்லை. (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அதியஞ்ஞவடிவச்சகுணப்பிரஹ்மமாகிய என்னையேனும், பரம அக்ஷரவடிவ நிர்க்குணப்பிரஹ்மமாகிய என்னையேனும் சிந்தித்து அச்சிந்தனையின் வலியால் சுரோத்திர முதலிய கரணங்கள் சிதிலத்தன்மையை யடைந்த மரணகாலத்திலும் ஸ்மரணை பண்ணிக்கொண்டு இவ்வுடலை விடுத்து; அதாவது, இவ்வுடலில் நானெனதென்னு மபிமானத்தைவிடுத்து ஆவி நீங்குங் காற்செல்பவன் என்னையே யடைகின்றான்; அதாவது, நிர்க்குணப் பிரஹ்மபாவத்தை யடைகின்றான். ஆண்டுச் சகுணத்தியானபக்ஷத்திலோ 'அக்னிர்ஜ்யோதிரஹ꞉ சுக்ல' என்பது முதலிய மேற்கூறுஞ் சுலோகத்தால் கூறப்படுந் தேவயானமார்க்கமாய்ப் பிரஹ்மவுலகத்தையடைந்து அவ்வுபாசகன் இரணியகருப்பவுலகத்தை யனுபவித்து அந்தத்தில் நிர்க்குணப்பிரஹ்மத்தையே யடைகின்றான். நிர்க்குணப் பிரஹ்மசொரூப ஸ்மரணபக்ஷத்தில் இவ்வுடலைவிட்டேகின்றான் என்பது கேவலம் உலகதிருஷ்டியினபிப்பிராயத்தாலென்றுணர்க. என்னை, நான் பிரஹ்மசொரூபம் என நிர்க்குணப்பிரஹ்மசாக்ஷாத்காரம் வந்தவனது பிராணன், மரணகாலத்தில் தேகத்திற்கு வெளியிற்செல்வதின்றாம்; அஃதின்றேல் வேறுலகத்தையடைதல் யாங்ஙனம்? இது, சுருதியினுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. "ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்த்யத்ரைவ ஸமவலீயந்தே"

(பொ-ள்.) பிரஹ்மவேத்தாவின் பிராணன் இவ்வுடலின் வெளியிற் செல்வ தில்லை; மற்ருே, இவ்வுடற்குள்ளே அதிட்டான சைதன்யத்தில் லயபாவத்தை யடைகின்றது. அத்தன்மைய பிரஹ்மஞானி நேரே நிர்க்குணப்பிரஹ்மபாவத்தை யடைகின்ருன். சுருதியும் 'ப்ரஹ்மைவஸந் ப்ரஹ்மாப்யேதி' அத்தத்துவ வேத் தாவானவன் பிரஹ்மமாகியே பிரஹ்மத்தையடைகின்ருன் எனக் கூறுகின்றது. தேகத்தின் வேருக ஆன்மாவிருப்பதிலும் நிர்க்குணப்பிரஹ்மத்தை யடைவதி லும் சிறிது மையமின்ரும்; அதாவது, ஆன்மாத்தேகத்தினும் பின்னமா அலவா, பின்னமாயினும், ஈசுரனினின்றும் பின்னமா, அபின்னமா என்னுஞ் சந்தேகஞ் சிறிதேனுமில்லை யென்பதாம். தத்துவ சாக்ஷாத்காரத்தின்பின்னர் 'சித்யந்தே சர்வசம்சயாஃ, என்னுஞ் சுருதியால் சர்வ சம்சயநிவிருத்திகூறப்பட்டிருக்கிறது. ஈண்டு, 'கலேவரமுக்த்வாபிரயாதி' என்னும் வாக்கியத்தாலோ ஸ்ரீ பகவான் சீவான்மா, இத்தேகத்தினும் பின்னமாமென வருளினர். 'மத்பாவம்யாதி' என் பதாலோ சீவனுக்கு ஈசுரனேடு அபேதங்கூறியருளினர். இச்சீவப்பிரஹ்மா பேதத்தையே தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களுங் கூறுகின்றன. இஃதேழா வது வினுவிற் குத்தரம். (5)

(அ-கை.) அந்த காலத்தில் பரமேசுரத்தியானம் பண்ணுபவன் அப்பரமே சுரனையே அவசியமடைவன் என முற்கூறிய அர்த்தத்தையே விளக்குவான் வேறு தேவதைகளைத் தியானம் பண்ணுபவர்க்கும் நியமமாய் அவ்வத்தேவதாப்பிராப் தியை அருளுகின்ருர்.

சு-ம். யம் யம் வாபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவிதஃ ॥ (6)

ப-ம். 5 யம் 6 யம் வா 7 அபி 9 ஸ்மரந் 8 பாவம் 11 த்யஜதி 4 அந்தே 10 கலேவரம் 12 தம் 13 தம் 14 ஏவ 15 ஏதி 1 கௌந்தேய 2 ஸதா 3 தத்பாவபாவிதஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்போதும் எவ்வெத்தேவதாவிஷயகபாவனை யுடையனுய் மரணகாலத்திலுமெவன் எவ்வெத்தேவதைகளை ஸ்மரித்துக்கொண்டு இவ்வுடலை விடுகின்ருனே அவன் அவ்வத்தேவதா பாவத்தையே யடைகின்ருன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மரணகாலத்தில் பரமேசுரனுகிய என்னை ஸ்மரித் துக்கொண்டு எனதுபாவத்தையேயடைகின்ருன் என்பதே நியமமன்று; மற்ருே, அக்காலத்திலெவன் எவ்வெத்தேவதா விசேடத்தையேனும் வேறுபிரியாப் பிரிய மான பொருளையேனும் ஸ்மரித்துக்கொண்டு சரீரத்தைவிடுகின்ருனே அவன் அம் மரணத்தின்பின்னர் அவ்வப்பாவத்தையே யடைகின்ருன்; மாருயின்று. ஈண்டிது கருத்தாம்: நிரந்தரம் ஒரு பொருளைத் தியானிப்பவனுக்கு அத்தியானபலத் தால் வேறு தேகத்தையடையாமலே இச்சீவனகாலத்தில் அப்பொருட்பிராப்தி யாதேனு மோரிடத்துக்காணப்படுகின்றது; குளவியைநினைத்த பசும்புழுவைப் போலும். அன்றியும் நந்திகேசுரர் இடைவிடாது இறைவனைச்சிந்தித்து வே றுடலையெடாது அவ்விறைவனுக்கொப்பான வடிவத்தையடைந்தனர்; இது நூற் பிரசித்தம். அவ்வப்பொருளைச் சிந்திப்பவரும் சீவித்திருக்கும்போதே அத்தியான வலியால் தியானித்த அவ்வப்பொருளை யடைவரெனின் அவ்வத்தேவதா விசே டத்தை இடைவிடாது தியானிப்பவர் மரணத்தின்பின் அவ்வத்தேவதா விசேடத் தையடைவதிற் கூறற்பாலதென்னை. அக்காலத்தில் அவ்வவற்றின் ஸ்மரணமெழல் கூடாதாயினும் பூர்வாப்பியாசசமஸ்காரவடிவ வாசனையே அந்தஸ்மரணத்திற்குக் காரணமாம் இவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவானருளுகின்ருர்: 'சதாதத்பாவபாவிதஃ' என. ஆண்டு, மரணத்தின் முன்னிடைவிடாதுசெய்த அவ்வத்தேவதாபாவ

னாசன்னியசமஸ்காரவடிவவாசனை தத்பாவமாம், அதையுடையவன் தத்பாவபாவிதன்; அதாவது பூர்வாப்பியாச சமஸ்காரபலத்தானே அக்காலத்தில் அவனுக்கு அவ்வத்தேவதாஸ்மரணமுண்டாகிறது. ஈண்டு, ஹே கௌந்தேய! என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனனிடத்துத் தமது பிதாவின் சகோதரி புத்திரத்தன்மையைக்கூறியருளிச் சிநேகாதிசயத்தைக் குறிப்பித்தருளுகின்றனர். இதனானே, பரமேசுரனாகிய நான் அவசியமாய் உனக் கனுக்கிரகிப்பேன் என்னுமர்த்தங் குறிப்பித்தருளப்பட்டது. இதனானே, ஸ்ரீ பகவான் என்னை வஞ்சிக்கின்றார் என்னுஞ் சங்கை இன்றென்பதுங் குறிப்பித்தருளப்பட்டது. ஈண்டு ஒரு வியாக்கியானத்தில் 'யம்யம்சாபி' என, மூலபாடங்கற்பித்துக்கொண்டு 'யம் யம்' என்பதால் அவ்வத்தேவதாவிசேடமே கொள்ளப்பட்டது; சகாரத்தால் வேறு பொருள் கொள்ளப்பட்டது. ஆனாலோ, பல மூலகிரந்தங்களில் 'யம்யம்வாபி' என்பதே பாடமாதலின் அதுவே ஈண்டெழுதப்பட்டதென்க. (6)

(அ-கை.) ஹே அர்ச்சுன! பூர்வஸ்மரணாப்பியாசசன்ய மரணகாலத்திய அந்தியபாவனையே அக்காலத்திற் பரவசமாகியவனுடைய தேசாந்தரப்பிராப்தியில் காரணமாதலினால் நீயும் அவ்வந்தியபாவனையுண்டாதற்கு எக்காலத்தும் என்னையே சிந்திப்பாய் என்னு மர்த்தத்தைப் பகவானருளுகின்றார்.

சு-ம். 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰 𑌯𑍁𑌧𑍍𑌯 𑌚 ।
𑌮𑌯𑍍𑌯𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌂𑌶𑌯𑌂 ॥ (7)

ப-ம். 1 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 2 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 3 𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 4 𑌮𑌾𑌂 5 𑌅𑌨𑍁𑌸𑍍𑌮𑌰 7 𑌯𑍁𑌧𑍍𑌯 6 𑌚 8 𑌮𑌯𑌿 9 𑌅𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑌨𑍋𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 10 𑌮𑌾𑌂 11 𑌏𑌵 12 𑌏𑌷𑍍𑌯𑌸𑌿 13 𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌇𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆதலின் எப்போதும் எனது சிந்தனத்தையும் யுத்தத்தையும் செய்தி. எனதிடத்தர்ப்பணம்பண்ணிய மனமுடைய நீ பரமேசுரனாகிய என்னையே அடைவாய். இதிற்சிறிது மையமின்றாம். (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்தவாற்றால் முந்திய அப்பியாசசன்னிய அந்தியபாவனையே வேறு தேகமெடுப்பதற்குக் காரணமாதலின், எனது விஷயக அவ்வந்தியபாவனையுண்டாதற்கு நீயும் அம்மரணத்தின் முன்னரே இடைவிடாதன்போடுஞ் சகுணப்பிரஹ்மமாகிய என்னையே சிந்திப்பாய். ஒருகால் உனதுள்ளம் நிர்மலமின்மையின் இடைவிடாதென்னைச் சிந்தித்தற்கேலாதெனினோ, அவ்வந்தக்கரணஞ் சுத்தமாதற்பொருட்டு யுத்தத்தைச்செய்தி. ஈண்டு யுத்தமென்னுஞ் சத்தம் தனது வர்ணாசிரம சர்வநித்திய நைமித்திககருமங்கட்கும் உபலட்சணமாம். பிரசங்கத்தில் முன்னர் யுத்தமே பிராப்தமாதலின் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை யுத்தஞ்செய்தி என விதித்தருளினர்; அதாவது, அந்தக்கரண சுத்தியாதற்பொருட்டு நீ யுத்த முதலிய நித்திய நைமித்திககருமங்களையே செய்தி. அதனால், அந்தக்கரணஞ் சுத்தமானதின்பின்னர் எனதிடத்தில் மனோபுத்திகளை அர்ப்பணம் பண்ணிய நீ, அதாவது எப்போதும் எனது சிந்தனபரனாகிய நீ என்னையே அடைவாய்; இதிற் சிறிது மையமில்லை. சகுணப்பிரஹ்மோபாசகர்கட்கே பகவானிஃதருளினர்; அவர்க்கு அந்தியகாலபாவனை அவசியமாமாதலின் என்க. நிர்க்குணப்பிரஹ்மசாக்ஷாத்காரமுடைய தத்துவஞானிக்கோ அக்காலத்திலே அஞ்ஞானநிவிர்த்திவடிவ முத்திசித்தமாமாதலின் அவனுக்கு இவ்வந்தியபாவனையை அவாவுதல் யாங்ஙனமாம்? ஈண்டுச் சிந்திக்கப்படுபொருள் வடிவச்சித்தவிருத்திபாவனையாமென்றுணர்க.

(அ-கை.) இவ்வண்ணம் அர்ச்சுனனது எழுவகைவினுக்கட்கும் உத்தரமருளிச்செய்து மரணகாலத்திய பரமேசுரஸ்மரணத்திற்குப் பயனுங்கூறியருளினர். அவைகளைவிரித்துக் கூறியருள ஸ்ரீ பகவான் தொடங்கியருளுகின்றார்.

சு-ம். 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 𑌚𑍇𑌤𑌸𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌗𑌾𑌮𑌿𑌨𑌾 ।
𑌪𑌰𑌮𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 ॥ (8)

ப-ம். 3 𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑌯𑍋𑌗𑌯𑍁𑌕𑍍𑌤𑍇𑌨 5 𑌚𑍇𑌤𑌸𑌾 4 𑌨𑌾𑌨𑍍𑌯𑌗𑌾𑌮𑌿𑌨𑌾 6 𑌪𑌰𑌮𑌂 8 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 7 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 9 𑌯𑌾𑌤𑌿 1 𑌪𑌾𑌰𑍍𑌥 2 𑌅𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 𑌇𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இடைவிடாது பரமான்மாவைச் சிந்தித்து இவன் அப்பியாசவடிவ யோகமுடையதும் பிறவிடயத்திற் செல்லாததுமாகிய மனத்தால் பரம திவ்ய புருஷனையடைகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன குருநூலுபதேசத்தின் பின்னர் நிரந்தரம் பரமான்மாவைச் சிந்தித்துச் சித்தத்தாற் சுத்தான்மாவையடைகின்றான். சித்தத்தில் அஃதடையும் யோக்கியத்தன்மையை யறிவுறுத்துவான் அதை விசேடித்தருளுகின்றனர். 'அப்பியாசயோகயுக்தேன நான்யகாமினு' என, ஈண்டுப் பரமேசுரனிடத்திலுறும் விஜாதீயவிருத்தி மறைப்பற்ற சஜாதீய விருத்திப்பிரவாஹம் அப்பியாசமாம். அஃதாறுவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பட்டது. அதுவே சமாதிவடிவயோகமாம். அஃதோடுகூடிய சித்தம் அதாவது, அநான்மாகாரவிருத்திகளனைத்து நீங்கி அவ்வப்பியாசயோகத்தில் மிகப் பற்றுற்ற அங்ஙனமே அன்னியகாமியல்லா; அதாவது, நிரோதமுயற்சியின்றேனும் அஃதனுன்மப்பொருளிற் செல்லுந் தன்மையதல்லாத சமாகித சித்தத்தானே இவ்வதிகாரி பரமான்மாவையடைகின்றான். அது பரமமென்னும் நிரதிசயாநந்தவடிவமாம், யாண்டும் பரிபூரணமாம், திவ்யமாம்; அதாவது 'ஒளிவடிவ இரவியில் அந்தரியாமியாயிருப்பது 'யஸச்சாஸௌ ஆதித்யே' என்னுஞ் சுருதியும் அவ்வாறு கூறுகின்றது. அத்தன்மைய பரம திவ்வியபுருஷனை அபேதமாய்ச் சிந்தித்து இவ்வதிகாரி ஆறு கடலடைவதொப்பப் பரமான்மாவை யடைகின்றான். இது சுருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. 𑌯𑌥𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 𑌸𑍍𑌯𑌨𑍍𑌦𑌮𑌾𑌨𑌾𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇𑌽𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑍇 𑌵𑌿𑌹𑌾𑌯 ।
𑌤𑌥𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯 𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍.

(பொ-ள்) ஸ்ரீ கங்கை, யமுனை முதலிய நதிகள் தமது நாமவுருவங்களையொழித்துக் கடலில் ஏகத்துவத்தையடைகின்றனபோல இவ்வித்துவானும் புண்ணியபாவங்களைவிடுத்துச் சூத்திரான்மாவினும் பரமாகிய அந்தரியாமியெனுந் திவ்வியபுருஷனை அபேதமாயடைகின்றான் என்பதாம். (8)

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் ஸ்ரீ பகவான் அதிகாரிகட்குச் சிந்தித்தற்குரியதாயும் அடைவதற்குரியதாயும் முற்கூறப்பட்ட பரம திவ்ய புருஷனையே மறித்தும் பல விசேடணங்களால் இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌕𑌵𑌿𑌂 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰𑌂 𑌅𑌣𑍋𑌰𑌣𑍀𑌯𑌾𑌂𑌸𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇𑌦𑍍𑌯𑌃 ।
𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌧𑌾𑌤𑌾𑌰𑌮𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 ॥

ப-ம். 1 𑌕𑌵𑌿𑌂 2 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 3 𑌅𑌨𑍁𑌶𑌾𑌸𑌿𑌤𑌾𑌰𑌂 4 𑌅𑌣𑍋𑌃 5 𑌅𑌣𑍀𑌯𑌾𑌂𑌸𑌂 13 𑌅𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍 12 𑌯𑌃 6 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 7 𑌧𑌾𑌤𑌾𑌰𑌂 8 𑌅𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌰𑍂𑌪𑌂 9 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌂 10 𑌤𑌮𑌸𑌃 11 𑌪𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 𑌇𑌤𑌿

(அ-ம்.) ஹே அர்ச்சுன்! சர்வக்ஞனும் அநாதியும் சர்வநியந்தாவும் சூட்சுமத்திநுஞ் சூட்சுமனும் எல்லாவற்றையுந் தரிப்பவனும் அசிந்தியவடிவுடையனும் இரவிபோலொளியுடையனும் அஞ்ஞானத்தின்மேலுள்ளவனும் ஆகிய அத்தன்மைய திவ்ய புருஷனை எவன் சிந்திக்கின்றானோ அவனேயடைகின்றான். (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மோட்சவேட்கையுடைய அதிகாரிகள் சிந்தித்தற்கும் அடைவதற்கும் தக்கது பரம திவ்ய புருஷனாகும். அது கவியாம்; அதாவது முக்காலப்பொருளெலா முணர்வதால் சர்வக்ஞனும். புராணனும். அதாவது, எல்லாவுலகிற்குங் காரணமாதலின் அநாதியாம். அது சாசிதாவாம். அதாவது, இரவிமதியாதிகளை நியதத்தோடு செலுத்துவதாம். அல்லது, சர்வப்பிராணிகளின் உள்ளத்திலுமிருந்து அவர்களின் கருமாநுசாரமாய் அவர்களைப் புண்ணிய பாவகருமங்களில் முயல்விப்பதாம். வானாதி யுலகனைத்திற்கும் உபாதான காரணமாதலின், அவ்வானாதி நுண்ணியபொருள்களினும் மிக நுண்மையதாம். காரியாபேட்சையால் அதனுபாதானகாரணத்திற்கு மிகச் சூக்ஷுமமாந்தன்மை ஆடைநூலாதிகளில் மிக விளக்கமாம். ஈண்டு, சூக்ஷுமத்தன்மையால் துர்விஞ்ஞேயத்தன்மை கொள்ளற்பாலதாம்; பிறவெனிலோ, 'மஹதோமஹீயான்' என்னுஞ் சுருதி அசங்கதமாம். சர்வத்தையுந் தரிப்பதாம்; அதாவது, புண்ணிய பாவங்களாலுண்டாகும் பலனைச் சர்வப் பிராணிகட்கும் தத்தங் கருமாநுசாரமாய் விசித்திரவடிவமாய் வேறுவேறாக்கிக்கொடுப்பதாம் இது 'பலமதவுபபத்தேঃ' என்னுஞ் சூத்திரவியாக்கியானத்தில் ஸ்ரீ பாடியக்காரர் விரிவாய்க் கூறியிருக்கின்றனர். அசிந்தியரூபமாம்; அதாவது, அளவறுமகிமையுடையதாதலின் சிந்தித்தற்கொணாதவடிவதாம். ஆதித்தியவர்ணமாம்; இரவிபோல் எல்லாவற்றையும்விளக்குமொளியதாம்; அதாவது, சூரியன்போல் எல்லாவற்றையும் பிரகாசிப்பதாம். ஒளிவடிவதாதலின் தமத்தினின்றும்பரமாம். ஈண்டு, அஞ்ஞானவடிவ மோகவிருள் தமமாம் அதனின்றும் பாம்; அதாவது, ஒளிவடிவாதலின் அவ்விருளுக்கு விரோதியாம். அத்தன்மைத்தான பரமான்மவடிவ திவ்யபுருஷனை எவ்வதிகாரி சிந்திக்கின்றானோ அவனே அவ்வப்பியாசவலியால் அடைகின்றான். இவ்வாறு இச்சுலோகத்தை முற்சுலோகத்தோடந்நுவயிக்க 'அல்லது சதம்பரம்புருஷமுபைதிதிவ்யம்' என்னும் மேல்வருஞ் சுலோகத்தோடு சம்பந்திக்குக. (9)

(அ-கை.) ஹே பகவன்! தாங்கள் அடிக்கடி பரமேசுரஸ்மரணத்தில் முயற்சியின் மிகுதிப்பாட்டை அருளிச்செய்கின்றீர்கள். அஃதெக்காலத்தில் வேண்டும் என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் அக்காலத்தை யருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 𑌮𑌨𑌸𑌾𑌽𑌚𑌲𑍇𑌨
𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇𑌨 𑌚𑍈𑌵 ।
𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌾𑌵𑍇𑌶𑍍𑌯 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍
𑌸 𑌤𑌂 𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍁𑌪𑍈𑌤𑌿 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 ॥ (10)

ப-ம். 1 𑌪𑍍𑌰𑌯𑌾𑌣𑌕𑌾𑌲𑍇 3 𑌮𑌨𑌸𑌾 2 𑌅𑌚𑌲𑍇𑌨 4 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 5 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 7 𑌯𑍋𑌗𑌬𑌲𑍇𑌨 6 𑌚 𑌏𑌵 9 𑌭𑍍𑌰𑍁𑌵𑍋𑌃 10 𑌮𑌧𑍍𑌯𑍇 11 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 13 𑌆𑌵𑍇𑌶𑍍𑌯 12 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 8 𑌸𑌃 14 𑌤𑌂 15 𑌪𑌰𑌂 17 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 18 𑌉𑌪𑍈𑌤𑌿 16 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் மாணகாலத்தில் ஒருமைப்பட்ட மனத்தால் அத்திவ்யபுருஷனை ஸ்மரிப்பவனும் பக்தியுடையவனும் யோகமுடையனும் ஆவனோ அவனே இருபுருவத்திடையிற் பிராணனை வலிமையினிறுத்தி அப்பரமான்மபுருஷனை யடைகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வுபாசகபுருஷன் மரணகாலத்தில் ஒருமை மனத்தோனாய் அத்திவ்யபுருஷனை ஸ்மரணஞ்செய்பவனும் பக்தியுடையவனும் அதாவது, பரமேசுரவிஷயகபரமப்பிரீதியுடையவனும், யோகவலிவுடையனும் ஆவனோ; ஈண்டுச்சமாதி, யோகமாம். அதன்வலி அதாவது, சமாதிவடிவயோகத் தாலுண்டாகிய சமஸ்காரசமூகம். அது, சமாதியினின்று வெளிப்படுத்துஞ் சமஸ் காரங்களின் விரோதியாம். அத்தன்மைய யோகவலியுடையோன் தனதுள்ளக் கமலத்தில் பிராணனை வசப்படுத்திப்பின்னர் இருதயதேசத்தின்மேலே செல்கின்ற சுழுமுனை நாடிவடிவமார்க்கமாய்ப் பூர்வபூர்வ பூமிகளின் சயத்தால் இரண்டு புருவத்திடையிலுள்ள ஆக்ஞாசக்கரத்தில் நிறுத்திச் சாவதானமாய்ப் பத்துவாயி லுடைய பிரமரந்தரத்தால் வெளியிற் செல்லுபவனான அத்தன்மைய உபாசக புரு ஷனே கவி, புராணன் என்பது முதலிய லக்ஷணங்களாற் கூறப்பெற்ற அப்பரம திவ்யபுருஷனை யடைகின்றான். ஈண்டு, ஆதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் அறுவகைச் சக்கரவடிவங்களும் அதனிட மும் தேவதைகளும் அவைகளிற் பிராணனை நிறுத்துமாறும் ஆன்மபுராணத்தின் பதினோராவது அத்தியாயத்தில் விரிவாய்க்கூறினும் ஈண்டுக்காண்க. (10)

(அ-கை.) முற்பிரசங்கத்தில் பரமேசுரபாவத்தை யடைதற்பொருட்டு ஸ்ரீ பகவான் பரமேசுரஸ்மரணம் விதித்தருளினர்; ஈண்டிவ்வையமுண்டாகின்றது. தியானகாலத்தில் யாதேனுமொரு நாமத்தால் ஸ்மரிக்கலாமோ, அல்லது நிய தமாய் ஒரே நாமத்தானே ஸ்மரிக்கத்தக்கதோ என அஃதகற்றுவான் ஸ்ரீ பகவான்,

ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத்

என்பது முதலிய சுருதியாற்கூறப்பட்ட ஓங்காரவடிவ பிராணவநாமத்தானே சிந் திக்கத்தக்கது வேறு மந்திரங்களாலன்று என்னும் நியமத்தை யருளுகின்றார்.

சு-ம். யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத்யதயோ வீதராகா:।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவக்ஷ்யே॥

ப-ம். 2 யத் 3 அக்ஷரம் 1 வேதவித: 4 வதந்தி 8 விசந்தி 7 யத் 6 யதய: 5 வீதராகா: 9 யத் 10 இச்சந்த: 11 ப்ரஹ்மசர்யம் 12 சரந்தி 13 தத் 15 தே 14 பதம் 16 ஸங்க்ரஹேண 17 ப்ரவக்ஷ்யே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேதமுணர்ந்தோர் எவ்வக்ஷரத்தை உச்சரிக்கின் றார்களோ இச்சையற்ற சந்நியாசி எவ்வக்ஷரத்தை யடைகின்றானோ சாதகபுருஷன் எவ்வக்ஷரத்தை யிச்சித்துப் பிரஹ்மசரிய மனுட்டிக்கின்றானோ அவ்வக்ஷரத்தை யானுனக்குச் சுருக்கிக் கூறுகின்றேன். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஓங்காரமெனப் பெயரிய விநாசமற்ற பிரஹ்மத் தை வேதமுணர்ந்தோர்கள் கூறுகின்றார்கள். அதாவது, 'ஏதத்வை ததக்ஷரம் கார்கி ப்ராஹ்மணா அபிவதந்தி அஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கம்' என்பது முத லிய சுருதிவாக்கியங்களால் தூல முதலிய சர்வ விசேடதருமங்களற்றதாகவே அவ்வக்ஷரப்பிரஹ்மம் பிரதிபாதிக்கப்படுகின்றது. அஃதன்றியும் முத்தர்களடை யத்தக்கதானதால் அவர்களு மனுபவிக்கின்றார்கள் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவானருளுகின்றார், 'விசந்தி' என விடயசுகங்களனைத்துமின்றிய யத்தனசில சந்நியாசிகளும் நான் பிரஹ்மசொரூபன் என்னும் ஆன்மஞானத்தால் அதைத் தமது சொரூபமாயடைகின்றார்கள். அஃதன்றியும் சாதகர்களாகிய முமுட்சுக் களும் அதையடைவான் மிகமுயற்சிக்கின்றார்கள் என்பதை அருளிச்செய்கின்றார்,

யதிச்சந்தஃ என, அவ்வக்ஷரப்பிரஹ்மத்தை அடைவதற்கிச்சித்து நைட்டிகப் பிரஹ்மசாரி குருகுலவாசம்பண்ணிப் பிரஹ்மசரிய பூர்வகம் வேதாந்தசாத்திர சிரவணாதிகளைச் செய்கின்றார்கள். அத்தன்மைய அக்ஷரப்பிரஹ்மவடிவபதத்தை உனக்குச் சுருக்கிக் கூறுகின்றேன். அதாவது, எவ்வாற்றானுனக்கு ஐயமின்றி அவ்வக்ஷரப்பிரஹ்மஞான முண்டாமோ அவ்வாறே யுனக்குக் கூறுகின்றேன். ஆதலின், அதை எவ்வாறுணர்வேன் என்னுஞ் சிந்தையால் வியாகூலப்படாதே. ஆண்டு, இவ்வோங்காரவடிவப்பிரணவம் பரப்பிரஹ்மத்தின் வாசகமேயாம். அல்லது, சாலிக்கிராம முதலிய பிரதிமைகள்போலப் பிரஹ்மத்தின் பிரதீகமாம். ஆதலினால், பிரஹ்மவாசகவடிவத்தாலேனும் பிரதீகவடிவத்தாலேனும் சுருதி மாதா மந்தமத்தியம புத்தியுடையோர்களைக்குறித்துக் கிரமமுத்திவடிவப் பலமுடைய அப் பிரணவோபாசனையைக் கூறுகின்றனள்.

ஆ-சு. यः पुनरेतं त्रिमात्रेणोमित्यनेनैवा ।
क्षरेण परं पुरुषमभिध्यायीत स तमधिगच्छति ॥

(பொ-ள்.) எவன் அகார உகார மகாரமென்னு மூன்று மாத்திரைகளுடைய ஓமெனு மக்கரத்தால் பரமபுருஷனைச் சிந்திக்கின்றானோ அவன் அப்பரமபுருஷனையே அடைகின்றான் என்க. இவ்வணஞ் சுருதியிற்கூறப்பட்ட பிரணவோபாசனையே ஸ்ரீ பகவானுக்கீண்டு விவக்ஷிதமாம். ஆதலின், இவ்வெட்டாவது அத்தியாயமுடிவு வரையிலும் ஸ்ரீ பகவான் அந்த யோகதாரணையோடுகூடிய ஓங்காரோபாசனை, உபாசனையின் தனது சொரூபவடிவப் பலப்பிராப்தி, அப்பலத்தால் புனராவிருத்தியின்மை, அம்மார்க்கம் இவ்வனைத்தும் அருளிச்செய்கின்றார். (11)

(அ-கை.) 'தத்தேபதம் பிரவக்ஷ்யே' என்னும் முற்கூறிய வாக்கியத்தாற் பிரதிஞ்ஞைபண்ணிய அர்த்தத்தைச் சாதனத்தோடு இரண்டு சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ (12)

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ (13)

ப-ம். 2 सर्वद्वाराणि 3 संयम्य 5 मनः 6 हृदि 7 निरुध्य 4 च 9 मूर्ध्नि 10 आधाय 11 आत्मनः 8 प्राणम् 13 आस्थितः 12 योगधारणाम् 14 ओम् 15 इति 17 एकाक्षरम् 16 ब्रह्म 18 व्याहरन् 19 माम् 20 अनुस्मरन् 1 यः 23 प्रयाति 22 त्यजन् 21 देहम् 24 सः 27 याति 25 परमाम् 26 गतिम्.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வுபாசக புருஷன் சர்வேந்திரியவாயில்களை அடைத்துக்கொண்டு மனத்தை இருதயத்தினிறுத்திப் பிராணனை உச்சித்தேசத்திலிருத்தி ஆன்மவிஷயகசமாதிவடிவதாரணை பண்ணி ஓம் என்னும்பிரஹ்மவடிவ ஏகாக்ஷரத்தை யுச்சரித்துப் பரமேசுரனாகிய என்னைச் சிந்தித்து இத்தேகத்தை விடுத்துச்செல்கின்றனனோ அவ்வுபாசகன் பரமகதியை யடைகின்றான். (12, 13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வுபாசக புருஷன் சுரோத்திர முதலிய இந்திரியங்களைத் தத்தம் சத்த முதலிய விடயங்களினின்றுந்திருப்பி நிலைப்படுத்தினோன். அதாவது, அச்சத்த முதலிய விடயங்களில் அடிக்கடி தோடங்காணு

மப்பியாசத்தால் அவ்விடயங்களினின்று பாராமுகப்பட்ட அவ்விந்திரியங்களால் அவ்விடயங்களைக் கவராது நிறுத்துவன்.

சங்கை :—ஹே பகவன்! சுரோத்திர முதலிய வெளி யிந்திரியங்களை நிரோதம் பண்ணினும் உள்ளே மனத்தால் அவ்விடயசிந்தனை யுண்டாகும் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சமாதானம் —ஹே அர்ச்சுன! 'மனோஹ்ருதிநிருத்தியச' எனப் பூர்வா த்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பட்ட அப்பியாச வைராக்கியங்களால் மனதை இருதயதேயத்தில் சர்வ விருத்திகளற்றதாய் நிறுத்தினேன் அதாவது, உள்ளேயும் விடயசிந்தனைபண்ணாது நிலைத்தோன் இங்ஙனம் உள்வெளியுணர்ச்சிகளின் துவாரவடிவ மனசகித இந்திரியத் துவாரங்களை நிரோதம்பண்ணியவன் கிரியையின் துவாரபூதமாகிய பிராணனையும் எல்லாவாற்றானு நிக்கிரகித்து உச்சித் தேசத்தினிறுத்தியிருப்பவன் அதாவது எவன் குருவுபதேசித்த மார்க்கத்தால் முன் முற்பூமிகளின் ஜயக்கிரமமாய் முதலில் பிராணனை இருபுருவத்திடையி னிறுத்திப் பின்னர் அதன்மேல் உச்சித்தேசத்தில் நிலைப்படுத்தியிருப்பவன் அங்ஙனமே பிரத்தியக்கான்ம விடயக சமாதிவடிவதாரணை செய்திருப்பவன் 'ஈண்டான்ம' என்னும் பதம் அன்னிய தேவதாவிஷயகதாரணை நீக்குதற்காம். அன்றியும் ஓமெனு மேகாக்கரம் பிரஹ்மவாசகமானதாலேனும், சாலிக்கிராம முதலிய பிரதிமைகள்போலப் பிரஹ்மப்பிரதீகமானதாலேனும் பிரஹ்மரூபமாகிய அவ்வக்கரத்தை உச்சரித்திருப்போன். ஈண்டு, 'ஓமிதிவ்பாஹரன்' என்னு மித்துணை கூறுவதானே நிர்வாகமாம், ஏகாக்ஷரம் என்பதால் அதிகப்பொருளமையவில்லையாயினும் அஃது ஆயாசமின்மையைக்கூறி அப்பிரணவோச்சாரணத்தைப் புகழுதற்காம். அல்லது, 'ஓமிதிவ்பாஹரன் ஏகாக்ஷரம் பிரஹ்மமாம் அநுஸ்மரன், எனப்பதங்களை அந்நுவயம் பண்ணுக. பொருள், எவன் ஓமென்னும் பிரணவ மந்திரத்தை யுச்சரித்து அதனர்த்தமாகிய அத்துவிதீய விநாசமற்ற சர்வ வியாபக பரமேசுரனாகிய என்னையும் ஸ்மரித்துக்கொண்டிருப்பவன் என்பதாம். இவ்வண்ணம் பிரணவமந்திரத்தைச் செபித்துக்கொண்டும் அதனர்த்தவடிவமாகிய என்னைச் சிந்தித்துக்கொண்டும் மரணகாலத்தில் சுழுமுனையெனும் மூர்த்தினி நாடிவடிவ மார்க்கமாய் இத்தேகத்தைவிடுத்துச் செல்லுமுபாசகனாகிய அவன் தேவயான மார்க்கவாயிலாய்ப் பிரஹ்மவுலகமடைந்து அங்குள்ள திவ்ய போகங்களை நுகர்ந்து அந்தத்தில் பரமகதியை யடைகின்றான் அதாவது, நான் பிரஹ்மசொரூபன் என்னுந் தத்துவசாக்ஷாத்காரத்தால் எவற்றினு மேலாகிய பிரஹ்மபாவத்தை யடைகின்றான். இது சுருதியிலுங்கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ஸஷாஸ஫ூவரஊமதி ஸெஷாஸ஫ூவரஊஸம்வஷெஷொஸ஫ூ வரஉகூ ௩௩.

(பொ-ள்.) இவ்வத்துவிதீய ஆநந்தவடிவப் பிரஹ்மமே இவ்வித்துவானது பரமகதியும் பரமசம்பத்தும் பரமானந்தமுமாமென்க. (12,13)

(அ-கை.) ஹே பகவன்! கூறிப்போந்தவாற்றால் மரணகாலத்தில் பிராண நிரோதமின்மையின் இருபுருவத்திடை பிராணனைநிறுத்தி மூர்த்தினிநாடிமார்க்கமாய்த் தனதிச்சையால் இத்தேகத்தை விடுவதற்கு வலியற்றுப் பிராரத்தகர்ம மொழியவே மரணகாலத்தில் பிறவயத்தனாய் இத்தேகத்தை விடுத்தவனுக்கு என்பலன் பிராப்தியாம் என்னு மர்ச்சுனன் சங்கைக்குப் பகவான் அப்பலத்தையருளிச் செய்கின்றார்.

சு-ம். அநந஫ூசெதாஃ ஸததம் யொஊம் ஸஹரதி நித஫ூஶஃ ।
தஸ஫ூாஹம் ஸுலஃ வாஐ நித஫ூயுக்தஸ஫ூ யொமிநஃ ॥ (14)

ப-ம். 3 அநந்யசேதா꞉ 4 ய꞉ 2 ஸததம் 6 மாம் 7 ஸ்மரதி 5 நித்யஶ꞉ 8 தஸ்ய 11 அஹம் 12 ஸுலப꞉ 1 பார்த்த 9 நித்யயுக்தஸ்ய 10 யோகிந꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் வேறிலாமனத்தனாய் இடைவிடாது சீவனகாலம்வரையில் பரமேசுரனாகிய என்னைச் சிந்திக்கின்றானோ அச்சமாகித சித்தமுடைய யோகிக்கு யான் மிகச்சுலபன். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனக்கபலாய் மற்றொரு பொருளினும் ஆசத்தியின்றிய மனத்தோன் அநன்யசேதாவாவன்; அச்சீவகாலபரியந்தம் இடைவிடாது சிந்திக்கும் சாமாகிதமனத்தோன் முற்கூறியவாறாகச் சுவாதீனமாய்த் தேகத்தை விடுக்கினும் அல்லது பராதீனமாய் விடுக்கினும் எல்லாவாற்றானும் அவனுக்கு நான் சுலபனாவன்; அதாவது, ஏனையோர்கட்கு மிகத் துர்லபமாயினும் அவனுக்கு சுகமாகவே அடைதற்குரியனாவன். அர்ச்சுன! நீயும் இவ்வண்ணம் அனன்யபக்தனாதலின் உனக்கு மிகச்சுலபமாவேன். ஆதலின், எவ்வாற்றானும் பயமுறாதே என்பதாம். ஈண்டு, 'அநன்யசேதா꞉' என்பதால் ஸ்ரீ பகவான் அப்பரமேசுர ஸ்மரணத்தில் மிக்காதரவுவடிவ சத்காரத்தையும் சததம் என்பதால் நிரந்தரத்தன்மையையும், நித்யஶ꞉ என்பதால் தீர்க்ககாலத்தன்மையையும் கூறியருளினர். அதனால், 'ஸ து தீர்க்ககாலநைரந்தர்யஸத்காராஸேவிதோ த்ருடபூமி꞉' எனப் பதஞ்சலி கூறிய சூத்திரத்தை ஸ்ரீ பகவானனுசரித்தருளினர். இச்சூத்திரத்தில் ஸ꞉ 'அது' என்னும் பதத்தால் ஸ்ரீ பதஞ்சலிபகவான் அப்பியாசத்தைக் கூறினர். ஈண்டு, ஸ்ரீ பகவான் 'மாம்ஸ்மரதி' என்பதால் ஸ்மரணத்தைக் கூறியருளினர். ஆயினும் அவ்வப்பியாசம் பரமேசுரனது ஸ்மரணத்திலே முடிவுறும். இதனாலிப்பொருள் பெறப்பட்டது:—மற்றொரு விக்ஷேபமின்றி மிகவன்போடு சீவனகாலபரியந்தம் வியவதானமின்றி இடைவிடாது பரமேசுரனாகிய என்னைச் சிந்தித்தலே அம்மோக்ஷவடிவப் பரமகதியையடைதற்குக் காரணமாம். அவ்விதச் சிந்தனையைப்பெறவே தனதிச்சையால் சுழுமுனைநாடிவாயிலாய்ப் பிராணன் வெளிப்படுக அல்லது வெளிப்படாதொழிக; இதில் மிக்க ஆக்கிரகமின்றாம். எல்லாவாற்றானும் பரமேசுரனைச் சிந்திப்பவன் அப்பரமகதியையே அடைவன் என்க.

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு இடைவிடாது பரமேசுரனைச்சிந்தித்துப் பரமேசுரனை அடைந்த அதிகாரிகள் புனராவிருத்தியைப்டைவார்களோ அலவோ என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அவர்கள் புனராவிருத்தியையடையார்களென உத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். மாமுபேத்ய புநர்ஜந்ம து꞉காலயமஶாஶ்வதம் ।
நாப்நுவந்தி மஹாத்மாந꞉ ஸம்ஸித்திம் பரமாம் கதா꞉ ॥ (15)

ப-ம். 1 மாம் 2 உபேத்ய 3 புந꞉ 6 ஜந்ம 4 து꞉காலயம் 5 அஶாஶ்வதம் 7 ந 8 ஆப்நுவந்தி 9 மஹாத்மாந꞉ 11 ஸம்ஸித்திம் 10 பரமாம் 12 கதா꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உபாசகர்கள் பரமேசுரனாகிய என்னையடைந்து மறித்தும்எவ்வகைத் துக்கத்திற்குமிருப்பிடமாகிய நாசமுறும் பிறப்படையார்கள். அம்மகாத்துமாக்கள் எவற்றினு மேலான மோக்ஷமடைந்தவர்களாதலின் என்க.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுபாசகன் பரமேசுரனாகிய என்னையடைந்து மறித்தும் மனுடாதி தேகசம்பந்தவடிவப் பிறப்பையடைவதில்லை. எத்தன்மைத்தாமப்பிறப்பெனின் துக்காலயமாம்; அதாவது, கருப்பையிற்கட்டுப்படல் யோனித்துவாரத்தானெருக்குப்படல்முதலிய கருப்போபகிடதத்திற்கூறிய துக்கங்களைத்

திற்கு மிடமாம். இன்னும் நிலைபற்றதாம் அதாவது திரமற்றதும் தானிகழுங்க
த்திலும் நாசமானதுபோன்றதாம் அத்தன்மைய தேகசம்பந்தத்தை அவர்களடை
வதில்லை; அதாவது, அவர்கள் புனராவிருத்தியை அடையார்களென்பதாம். அவ
கள் அங்ஙனடையாமையில் காரணவடிவ இரண்டு விசேடணமவர்கட்கருளுகின்ற
'𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑌰𑌮𑌾𑌂 𑌗𑌤𑌾𑌃' என. அர்ச்சுன! அவர்கள் மகாத்துமாக்க
ளாதலானும் அதாவது, ரசோதமோகுணங்களின்றியவர்கள் ஆதலானும்; பர
சம்சித்தியை யடைந்தவர்களாதலானும் அதாவது, எனதுலகையடைந்து ஆண்டு
பலவகைத் திவ்யபோகங்களை நுகர்ந்து அந்தத்தில் பிரஹ்மஞானத்தையடைந்த
எவற்றினு மேலாகிய கைவல்யமோக்ஷத்தையடைந்தவர்கள் ஆதலானுமென்
ஈண்டுப் பரமேசுரனாகிய என்னையடைந்து மோக்ஷமடைகின்றார்களெனக் கூறின
மையின் அவர்கட்கு ஸ்ரீ பகவான் கிரமமுத்திப்பேற்றைக்காட்டினர். ஆண்டு
உபாசனைவழியால் தேவயான மார்க்கமாய்ப் பிரஹ்மவுலகத்தையடைந்து ஆண்டு
திவ்யபோகங்களை நுகர்ந்து அதன்பின் தத்துவஞானத்தால் முத்திப்பெறுதல்
கிரமமுத்தியாம். இது ஸ்மிருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾 𑌸𑌹 𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌸𑌂𑌚𑌰𑍇 ।
𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑍇 𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿 𑌪𑌰𑌂 𑌪𑌦𑌮𑍍 ॥

(பொ-ள்.) அவ்வுபாசகர்கள் பிரஹ்மவுலகஞ்சென்று ஆண்டுப்பிரஹ்மப்பிர
ளயமாகவே தத்துவ சாக்ஷாத்காரமுடையராய் அப்பிரஹ்மனுசத்தின்பின்னர்
பிரஹ்மனோடு விதேககைவல்லியத்தை யடைகின்றார்கள். ஈண்டுப் பரமேசுரனாகிய
என்னையடைந்து மோக்ஷத்தையடைகின்றார் என்னும் பகவானது வாக்கியத்தால்
பிரஹ்மலோகத்திற்கயலாய் விஷ்ணுவுலகமென்பதொன்று அறியப்படவில்லை. எங்ங
னம் பௌராணிகர்கள் பிரஹ்மவுலகம், விஷ்ணுவுலகம், ருத்திரவுலகமென்னும்
இவைகளை வெவ்வேறாய் மேன்மேற் கற்பிக்கின்றார்களோ, அங்ஙனம் வேதாந்தக்
கோட்பாட்டின்றாம்; மற்றோ அவ்வுலகங்கள் சத்தியவுலகமெனும்பிரஹ்மலோகத்
திலே அடங்கும். ஆண்டு, விஷ்ணுவுபாசகர்கட்கு அதுவே விஷ்ணுலோகமா
யும் உருத்திரோபாசகர்கட்கு ருத்திரவுலகமாயுந் தோன்றுகின்றதென்க. இவ்வ
னைத்தும் '𑌪𑌰𑌾𑌃 𑌪𑌰𑌾𑌵𑌤𑍋 𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇𑌷𑌾𑌮𑌿𑌹 𑌨 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃',
என்னும் பிருகதாரண்யோபநிஷத்சுருதி வியாக்கியானத்தில் ஸ்ரீ பாடியக்காரரா
லும் பாடிய வியாக்கியானக்காரர்களாலும் நன்கு கூறப்பட்டிருக்கின்றமை காண்க.

(அ-கை.) ஆண்டுப்பரமேசுரோபாசனையால் பரமேசுரனையடைந்து தத்துவ
சாக்ஷாத்காரமுடையராய அவ்வுபாசகர்கட்குப் புனராவிருத்தியின்மைகூறவே
அப்பரமேசுரரின் விமுகராய்த் தத்துவஞானமின்றியவர்க்கு அவ்வுலகத்தினின்
றும் புனராவிருத்தியானது அர்த்தத்தாலே சித்தமாகின்றதென்பதை இப்போது
ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍁𑌵𑌨𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌃 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 ।
𑌮𑌾𑌮𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ (16)

ப-ம். 2 𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍁𑌵𑌨𑌾𑌤𑍍 3 𑌲𑍋𑌕𑌾𑌃 4 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑌃 1 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 6 𑌮𑌾𑌮𑍍
8 𑌉𑌪𑍇𑌤𑍍𑌯 7 𑌤𑍁 5 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 9 𑌪𑍁𑌨𑌃 10 𑌜𑌨𑍍𑌮 11 𑌨 12 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிரமவுலகசகித சர்வ உலகங்களும் புனராவிருத்தி
யுடையனவேயாம். கௌந்தேய! பரமேசுரனாகிய என்னையடையினோ புனராவிரு
த்தியின்றாம்.

(16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னிற் பராமுகராய்த் தத்துவ ஞானமின்றியவர்களனைவர்களுக்கும் பிரஹ்மலோக சகித சர்வ போகபூமிவடிவ லோகங்கள் புனராவிருத்தியுடையனவேயாம். அதாவது, பரமேசுரனாகிய என்னின் விமுகபடைந்தோர்கள் பிரஹ்மலோக முதலிய சர்வ உலகங்களினின்றும் கீழேவிழுந்து மறித்தும் பிறப்பையே யடைவார்கள்.

சங்கை :—ஹே பகவன்! பரமேசுரனாகிய உனையடைந்த அதிகாரிகட்கும் அவர்களைப்போன்று புனராவிருத்தியே பிராப்தமாங்கொல்?

சமாதானம் :—'மாமுபேத்ய து' ஹே கௌந்தேய! பரமேசுரனாகிய என்னையே யடைந்து பரமானந்தத்தைப்பெற்ற அதிகாரிகள் மறித்தொருகாலும் பிறப்பதில்லை. அதாவது, அவர்களொருபோதும் புனராவிருத்தியடைவதில்லை. ஈண்டு, ஹே அர்ச்சுன, என்னுஞ் சம்போதனத்தால் அவனிடத்து இயல்பாயுள்ள மகானுபாவத்தன்மையையும் 'கௌந்தேய என்னுஞ் சம்போதனத்தால் மாதாவைப்பற்றிய மகாநுபாவத்தன்மையையு மருளிச்செய்தனர். அதனானே, ஆன்மஞானப்பேற்றின்பொருட்டுச் சொரூபத்தானும், காரணத்தானும் தூய்தாந் தன்மை குறிப்பித்தருளினரென்க. ஈண்டு, 'ஆப்ரஹ்மஸதநாத்' எனச் சில புஸ்தகத்திற் பாடமுளதாயினும் கூறிப்போந்த அர்த்தத்தினும் விலக்ஷணத் தன்மையின்றாம். என்னை 'பவந்த்யஸ்மிந் பூதாநீதி பவநம்' எதிற்பூதங்களிருக்கின்றனவோ அது புவனமாம் என விரித்துரைப்பதால் புவனசத்தம் உலகவாசகமாம். அன்றியும், நிவாசத்தானப்பவனமாம், அதுவும், லோகவாசகமேயாம். ஈண்டு, 'ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்திநோர்ஜுந' என்னும் பூர்வார்த்தத்தால் ஸ்ரீ பகவான் பிரஹ்மலோகத்தையடைந்தவர்களின் புனராவிருத்தியைக் கூறியருளினர். 'மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே' என்னு முத்தரார்த்தத்தால் அப்பிரஹ்மலோகத்தினின்றும் புனராவிருத்தியின்மையைக் கூறியருளினர். ஈண்டிப்பகுப்பாம் :—கிரமமுத்தியைப்பலமாகவுடைய தகரோபாசனையால் தேவயானமார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்த உபாசகர்களே ஆண்டுண்டாகிய தத்துவசாக்ஷாத்காரஞானத்தால் பிரஹ்மாவோடு மோக்ஷமடைகின்றனர். ஆதலினவர்கள் புனராவிருத்தியடைவதில்லை. பஞ்சாக்கினிவித்தை முதலியவைகளாற் பிரஹ்மலோகத்தையடைபவர்கட்கு ஆண்டுத் தத்துவசாக்ஷாத்காரப் பேறின்றாமாதலின் அவர்களாங்கேபோகத்தை நுகர்ந்து மறித்தும் பிறப்பெடுத்தல் திண்ணமே. ஆனாலோ, அவர்கள் பிரஹ்மலோகத்தையடைந்த கற்பத்திலே புனராவிருத்தி யடைவதில்லை. மற்றோ, வேறு கற்பத்திலாமாதலின் 'பிரஹ்மலோகமபிசம்பத்யதே நசபுனராவிர்த்ததே' என்பது முதலிய சுருதிகளும் 'அனாவிருத்திசப்தாத்' என்னுஞ் சூத்திரமும் பிரஹ்மலோகத்தையடைந்த வுபாசகர்கட்கு. புனராவிருத்தியின்மை கூறுவது கிரமமுத்தியுடைய வுபாசகர்கட்காம். சுருதி ஸ்மிருதிவாக்கியங்கள் பிரஹ்மலோகத்தை யடைந்தவர்கட்குப் புனராவிருத்தியைக் கூறுவதோபஞ்சாக்கினிவித்தை முதலியவைகளால் பிரஹ்மலோகத்தையடைந்தவர்கட்காம். ஆதலின், உபாசகர்கட்குப் பிரஹ்மலோகத்தினின்று புனராவிர்த்தியின்மையையும் புனராவிருத்தியையும் கூறும்வாக்கியங்கள் தம்முள் முரண்படாதனவாம். பஞ்சாக்கினிவித்தை ஆன்மபுராணத்தின் ஆறாவது அத்தியாயத்தில் எம்மால் விரிவாய்க்கூறப்பட்டிருக்கிறது ஆண்டுக்காண்க. (16

(அ-கை.) ஆண்டு, பிரஹ்மலோகசகித சர்வ உலகங்களும் காலத்தாற் பரிச்சின்னப்படுதலின் புனராவிருத்தியையுடையன என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளுகின்றார்.

ஸு-ம். ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத்ப்ரஹ்மணோ விது꞉ ।
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேஹோராத்ரவிதோ ஜநா꞉ ॥ (17)

ப-ம். 3 ஸஹஸ்ரயுகபர்யந்தம் 4 அஹ꞉ 1 யத் 2 ப்ரஹ்மண꞉ 5 விது꞉ 7 ராத்ரிம் 6 யுகஸஹஸ்ராந்தாம் 8 தே 10 அஹோராத்ரவித꞉ 9 ஜநா꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் ஆயிரஞ்சதுர்யுகங்கொண்டது பிரஹ்மாவின் தினமென்றும் ஆயிரஞ் சதுர்யுகங்கொண்டது இரவென்றும் அறிகின்றானோ அந்த யோகியே இரவுபகல்களையுணர்ந்தோனவன். (17)

(வி-ம்.) சத்தியயுகத்திற்கு வரு பதினேழுலட்சத்து இருபத்தெண்ணாயிரம் 17,28,000 ஆம். திரேதாயுகத்திற்கு வரு பன்னிரண்டுலட்சத்துத் தொண்ணூற்றாறாயிரம் 12,96,000 ஆம். துவாபரயுகத்திற்கு வரு எட்டுலட்சத்து அறுபத்தெண்ணாயிரம் 8,68,000 ஆம். கலியுகத்திற்கு வரு நான்குலட்சத்து முப்பத்தீராயிரம் 4,32,000 ஆம். இச்சதுர்யுகம் ஆயிரமாகில் பிரஹ்மாவிற்கொருதினமாம்; இச்சதுர்யுகம் ஆயிரமாகில் பிரஹ்மாவிற்கோரிரவாம். இதுவே 'அத யுகஸஹஸ்ராந்தம் ப்ரஹ்மணோ தின உச்யதே' என்பது முதலிய புராணவாக்கியங்களாலும் கூறப்படுகின்றது. இவ்வாறு பிரஹ்மாவின் பகலிரவுணர்ந்த யோகியே பகலிரவுணர்ந்தோனவன். இரவிமதிகள் நடத்தல்கொண்டு பகலிரவறிபவன் சிறிதுணர்ந்தோனாதலின் உணர்ந்தவனல்லன் என்க. (17)

(அ-கை.) இவ்வாற்றால் பதினைந்துநாளாகில் பிரஹ்மாவிற்கொரு பக்ஷமாம். இரண்டு பக்ஷம் ஒருமாதமாம். பன்னிரண்டு மாதம் ஒரு வருஷமாம். நூறுவருஷம் பிரஹ்மாவின் பரமாயுளாம். அதில் முன் ஐம்பது வருஷம் பிரதமபரார்த்தமெனப்படும், பின்னைம்பது வருஷம் துவிதீயபரார்த்தமாம் அவ்வாறு நூறு வருடம்போகித்துப் பிரஹ்மா நாசமாகின்றார். இவ்வாற்றால் பிரஹ்மாவும் காலத்தாற் பரிச்சின்னனாதலால் அநித்தியமேயாவர். ஆதலின், கிரமமுத்தி யின்றியவர்க்கு அப்பிரஹ்மலோகத்தினின்றும் புனராவிருத்தி பொருந்துமாறதேயாம். இந்திராதிதேவர்கள் அப்பிரஹ்மாவினின்று மிகக் கீழோராம். அவ்விந்திராதிதேவர்கள் பிரஹ்மாவின் ஒரு தினப்போதாற் பரிச்சின்னப்படுவரேல் அவ்வுலகத்தினின்றும் இவர்கள் புனராவிருத்தி யடைவரென்பதிற் சொல்லவேண்டுவதென்னை என்னும் இவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

ஸு-ம். அவ்யக்தாத்வ்யக்தய꞉ ஸர்வா꞉ ப்ரபவந்த்யஹராகமே ।
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ॥ (18)

ப-ம். 2 அவ்யக்தாத் 4 வ்யக்தய꞉ 3 ஸர்வா꞉ 5 ப்ரபவந்தி 1 அஹராகமே 6 ராத்ர்யாகமே 10 ப்ரலீயந்தே 7 தத்ர 9 ஏவ 8 அவ்யக்தஸம்ஜ்ஞகே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அப்பிரஹ்மாவின் பகல் வரில் அவ்வியத்தத்தினின்றும் இவ்வியத்தங்களனைத்துமுண்டாகின்றன. இரவு வரில் அவ்வனைத்தும் அதின்கண்ணே பிரளயமாகின்றன.

(வி-ம்.) கூறிப்போந்த பிரஹ்மாவின் ஒரு தினத்தில் அதாவது, நனவு காலத்தில் அவ்வியத்தத்தினின்றும் இவ்வியத்தங்களனைத்து முண்டாகின்றன. வேறிடங்களில் அவ்வியத்தசத்தம் அவ்வியாகிருதாவத்தையின் வாசகமேயாயினும் ஈண்டதுகொள்ளத்தக்கதன்று; என்னை, பிரசங்கத்தில் பிரஹ்மாவின் ஒவ்வொரு தினத்திற் சிருட்டியையும் ஒவ்வோரிரவிற் பிரளயத்தையுங்கூறற்பொரு

ட்டே தொடங்கினதாம். அப்பிரஹ்மாவின் பகலிரவுகளிலுண்டாம் சிருட்டிலயங்களில் வானுதிபூதங்கள் தோற்றிக்கெடுவனவன்றும்; மற்றோ அதிலவைகள் கெடாதிருக்கின்றனவாதலின் அவ்வியக்த சத்தத்தால் வானுதிகளின் காரணவடிவ அவ்வியாகிருதாவஸ்தையைக்கொள்ளாது பிரஹ்மாவின் சுழுப்தியவஸ்தையையே கொள்ளவேண்டும். அதாவது, சுழுப்தியடைந்த பிரஜாபதியின்பெயர் அவ்வியத்தமாம். அதினின்று போகத்தின் பூமிவடிவ தேகம்விடயாதிகளாகிய வியத்திகளுண்டாகின்றன; அதாவது, முன்னர்ச் சூட்சுமவடிவாயிருந்த அவ்வியத்திகள் வழங்குதற்குத் தக்கவடிவோடு வெளிப்படுகின்றன என்பதாம். அப்பிரஜாபதியாகிய பிரஹ்மாவின் இரவுபகல் வருவதற்குள்; அதாவது, சுழுத்திகாலத்தில் அவ்வியக்தவடிவகாரணத்தில் வெளிப்பட்ட வியத்திகள் லயப்படுகின்றனவென்க. (18)

(அ-கை.) இவ்வாறு இச்சம்சாரம் சீக்கிரத்திலே கெடுவதாயினும் நிவிர்த்தியாவதில்லை. என்னை, அவித்தை காமகருமங்களால் பரதந்திரத்தையடைந்த இச்சம்சாரம் மீண்டு மீண்டும் உண்டாகின்றது. அங்ஙனமே, அவைகளின் வசத்தால் மீண்டும் மீண்டும் நாசமுமாகின்றது, அத்தன்மைய வருதல்போதலுடைய சம்சாரத்திலுள்ள பிராணிகளனைத்தும் அவித்தை காமகருமங்களினல் பரதந்திரர்களே யாவர்கள் அவர்கட்குப் பிறப்பிறப்பாதி துக்கங்களுண்டாம். ஆதலின், இதினின்றும் நீங்கலே மேலாம் என்னும் வைராக்கியமுண்டாதற்கும், இச்சம்சாரம் சமமான நாமரூபங்களோடே மறித்து மறித்துந்தோன்றலின் செய்தது கெடல், செய்யாதது கொளல் என்னுந் தோடத்தை நீக்குதற்பொருட்டும் அருளிச்செய்கின்றூர்.

சு-ம். பூதக்ராமஸ் ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமேऽவச: பார்த்த ப்ரபவத்யஹராகமே ॥ (19)

ப-ம். 5 பூதக்ராம: 2 ஸ: 3 ஏவ 4 அயம் 6 பூத்வா 7 பூத்வா 12 ப்ரலீயதே 11 ராத்ர்யாகமே 8 அவச: 1 பார்த்த 10 ப்ரபவதி 9 அஹராகமே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முன் கற்பத்திலுள்ள பிராணிசமுதாயங்களே உத்தரோத்தர கற்பத்திலுமுண்டாகின்றன. உண்டாகிப் பரவசப்பட்டுப் பிரஹ்மாவின் பகற்குள்தோன்றி இரவிற்குள்ளிலயமாகின்றன. (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பூர்வகற்பத்திலுள்ள தாவரசங்கமபூதசமுதாயங்களே உத்தரோத்தர கற்பத்திலுமுண்டாகின்றன. ஒவ்வொரு கற்பத்திலும் வெவ்வேறு புதிதாயுண்டாவதில்லை. என்னை, நியாயமதத்தில் அசத்காரியமுண்டாகின்றதெனக் கொள்வதுபோல, வேதாந்த சித்தாந்தத்திலுடன்பாடில்லை, ஒருகால் அசத்தானகாரியமே தோன்றுகின்றதாமெனின், மநுடக்கோடு மலடிமகன் முதலியவைகளுந் தோற்றவேண்டுமாதலின் அசத்காரியந் தோற்றுவதில்லை. மற்றோ, தனது தோற்றத்தின் முன்னர்த் தனது காரணத்தில் சூட்சுமவடிவமாயிருக்கப்பட்டகாரியமே காரணசாமக்கிரிவசத்தால் மறித்தும் வெளிப்படுகின்றது. பிறவெனின், ஒவ்வொரு கற்பத்திலும் வெவ்வேறு புதிய பிராணிகளின் உற்பத்தியுடன்படிலோ, பூர்வ கற்பாந்தத்தில் பிராணிகளாற் செய்யப்பட்ட கருமங்கள் போகமின்றியே நாசப்படுகின்றனவாம். இக்கற்பத்தின் முதலில் உண்டாகப்பட்ட பிராணிகட்குப் பூர்வஞ்செய்யாத புண்ணியபாவ கருமங்களின் சுகதுக்கவடிவ பலன் அனுபவிக்கப்படும். இதுவே நூற்களில் கிருதநாசம் அகிருதாப்யாகமமெனவழங்கப்படுகின்றது. ஆன்மஞானமிலாதோர்க்குச்செய்த கருமம் பலபோகமின்றி நாசப்படலும், செய்யாத கருமபலபோகமுங்கூறுதல் சாஸ்திரத்திற்கமாணம் என்னை? சாஸ்திரத்தில்,

ஆ-சு. ஃவஶ்ய ஜெவஹொ தவ்ஷாங்கூர் தங்களுடு ஶூஹாஶூஹம்।
நாஹ-கூங்க்ஷீயதேகஉ கல்ப கொடி ஶதைரவி ॥

(பொ-ள்.) ஆன்மஞானமின்றிய அஞ்ஞானியாற்செய்யப்பட்ட சுபாசுப கருமங்கள் அவசியமாய் அநுபவிக்கப்படுகின்றன. அவனுக்கு அது போகத்தைக் கொடாது நூறுகோடி கற்பமாயினும் நாசப்படாது. ஆதலினாலும், ஒவ்வொரு கற்பத்திலும் புதிதுபுதிதாய பிராணிகளின் றோற்றமுண்டாகாது. மற்றோ, முன்னுள்ளதற்கேயாம். இது யுக்திமாத்திரத்தாற் பெறப்படுவதில்லை நேரே சுருதியுங் கூறுகின்றது.

ஆ-சு. ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத் ।
திவஞ்ச ப்ருதிவீஞ் சாந்தரிக்ஷமதோ ஸுவ: ॥

(பொ-ள்.) சூரியன் சந்திரன் பிருதிவி அந்தரிக்ஷம் சுவர்க்க முதலிய சர்வ வுலகத்தையும் முன்னுள்ளவாறே உத்தரோத்தர கற்பத்திலும் பரமேசுரன் சிருட்டித்தனன், அத்தாவரசங்கம பூதசமுதாயங்களே அவித்தை காமகருமங்களால் பரவசப்பட்டுப் பிரஹ்மாவின் பகலில் அவ்வியத்தத்தினின்றும் வெளிப்படுகின்றன. இரவில் அதின்கண்ணே லயமடைகின்றனவென்க. (19)

(அ-கை.) இவ்வாறு அவித்தியாகாமகருமங்களினதீனமான பிராணிகட்கு அடிக்கடி தோற்றநாசங்காண்பித்து,'ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்திநோர்ஜுந' எனக் கூறிப்போந்த வாக்கியார்த்தத்தை மூன்று மூன்று சுலோகங்களால் உபபாதனம்பண்ணி யருளினர். இப்போது 'மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே' என முற்கூறிய வாக்கியார்த்தத்தை இரண்டு சுலோகங்களால் உபபாதனம்பண்ணி யருளுகின்றார்.

சு-ம். பரஸ்தஸ்மாத்து பாவோந்யோவ்யக்தோவ்யக்தாத்ஸநாதந: ।
ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥ (20)

ப-ம். 5 பர: 3 தஸ்மாத் 2 பாவ: 6 அந்ய: 7 அவ்யக்த: 4 அவ்யக்தாத் 8 ஸநாதந: 1 ய: 9 ஸ: 10 ஸர்வேஷு 11 பூதேஷு 12 நஶ்யத்ஸு 13 ந 14 விநஶ்யதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சத்தாவடிவபாவமானது அவ்வியக்தத்தினின்றும் பரமாம், முழுதும் விலட்சணமாம், இந்திரியங்கட்கவிடயமாம், நித்தியமாம். அத்தன்மைய சத்தாவடிவபாவமானது சர்வ பூதங்களும் நாசப்படினும் நாசப்படாததாம். (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கற்பிதமான சர்வ வுலகத்திலும் அநுசூதமான சத்தாவடிவபாவமானது முற்கூறிய சராசரதூலப்பிரபஞ்சகாரணவடிவ இரணியகருப்பனெனும் அவ்வியக்தத்தினின்றும் பரமாம். அதாவது, அதனின்வேறாம். அல்லது சிரேட்டமாம். என்னை? சத்தாவடிவபாவமானது இரணியகருப்பவடிவ அவ்வியக்தத்திற்குங் காரணமாமாதலின்.

சங்கை:—ஹே பகவன்! சத்தாவடிவபாவமானது அவ்வியக்தத்தினும் வேறாயினும் அதற்கொப்பாம். ஆயின் வேறான ஆமா ஆவிற்கொப்பாவது போலும்?

சமாதானம்:—'அந்ய: இதி' ஹே அர்ச்சுன! சத்தாவடிவபாவமானது அவ்வியக்தத்தினும் வேறாம் அதாவது, முழுதும் விலட்சணமாம், எக்கூற்றாலேனு

மொப்பற்றதாமென்க. 'நதஸ்ஸுவு்ஜிஸாக்ஷி' சத்தாவடிவ பரமான்மாவிற்கொப்பான ஒருபொருளுமின்றும் என்பதும் ஆண்டுச்சுருதியாம்.

சங்கை :—ஹே பகவன்! அத்தன்மைத்தாய சத்தாவடிவபாவத்தை உலகனைத்தும் புலப்படக்காணுததென்னை?

சமாதானம் .—'அவ்யக்தஃ இதி' ஹே அர்ச்சுன! அச்சத்தாவடிவபாவமானது உருவாதிகுணங்களற்றதானதால் நேத்திர முதலிய இந்திரியங்கட்கு விடயமாவதில்லை. சுருதியும் 'நஅக்ஷுஷாவஸ்யதி கஸ்சநைநம்' இவ்வான்மாவை நேத்திராதி யிந்திரியங்களால் ஒருவரும் காண்பதில்லை எனக் கூறுகின்றது. அது சநாதனமாம்; அதாவது, தோற்றமீறின்மையின் எப்போதுமுள்ளதாம். ஈண்டு 'தஸ்மாத்து' என்பதிலுள்ள 'து' சத்தமானது, தள்ளத்தகுந்த அநித்தியமான அவ்வியக்தத்தினின்றும் அச்சத்தாவடிவ அவ்வியக்தத்தில் கிராகியத்தன்மைவடிவ விலட்சணத்தன்மையைக் குறிப்பிக்கின்றது. அல்லது, நியாயநூலார் கற்பிக்கின்ற சாதிவடிவசத்தாநிவிர்த்தியை அறிவுறுத்துகின்றது. என்னை? அந்தச்சாதிவடிவ சத்தையானது திரவிய குண கர்மமென்னும் முப்பொருளினுங்கலந்து நிற்பினும் சாமான்ய விசேட சமவாய அபாவங்களுள் இருப்பதில்லை. இச்சைதன்யவடிவசத்தையோ எல்லாப்பொருளினும் அநுசூதமாயிருக்கின்றது. இத்தன்மையசத்தாவடிவபாவமானது அந்த அவ்வியக்தமெனும் இரணியகருப்பன்போன்று பூதங்களனைத்துங் கெடினுங்கேடுறுது. அப்பூதங்களைப்போலத் தோன்றுவதுமன்றும். அவ்வியக்தமென்னும் இரணியகருப்பனோ, தான்காரியமும் பூதாபிமானியுமாதலின் அப்பூதங்களின் உத்பத்திநாசங்களால் உத்பத்தி நாசங்களோடுகூடியவனுவன். பூதாபிமானியும் காரியவடிவமுமிலாத சத்தாவடிவ பரமான்மாவிற்கோ அப்பூதங்களின் உத்பத்திநாசங்களால் உத்பத்திநாசங்களில்லை யென்க. (20)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். அவ்யக்தொக்ஷர இத்யுக்தஸ்தமாஹுஃ வரமாம் மதிம்।
யம் வு்ராவ்ய நநிவத்தந்தெ தஷாம வரமம் மம॥ (21)

ப-ம். 1 அவ்யக்தஃ 2 அக்ஷரஃ 3 இதிஃ 4 உக்தஃ 5 தம் 8 ஆஹுஃ 6 வரமாம் 7 மதிம் 9 யம் 10 வு்ராவ்ய 11 ந 12 நிவத்தந்தெ 13 தத் 16 மம 15 வரமம் 14 மம.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஈண்டு, அவ்வியக்தம் அக்ஷரம் என்னும் பெயர்களாற்கூறப்பட்ட சத்தாவடிவபாவத்தைச் சுருதி ஸ்மிருதிகள் பரமகதி எனக் கூறுகின்றன. எந்தச் சத்தாவடிவபாவத்தையடைந்து இவ்வதிகாரிகள் மறித்தும் பிறப்பையடைவதில்லையோ அதுவே பரமேசுரனுகிய எனக்கு எவற்றினு மேலான வடிவமாம். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இந்நூலின்கண் இந்திரியங்கட்கவிடயமானதால் அவ்வியக்தமெனவும், நாசமின்மையின் அல்லது, யாண்டும் வியாபகமானதால் அக்ஷரமெனவுங்கூறப்பட்டுள்ள சத்தாவடிவபாவத்தை சுருதிமிருதிகள் பரமகதிவடிவமாய்க்கூறுகின்றன. ஈண்டு, 'வரமாம்' என்பதால் தோற்றமீறிலாத சுயம்பிரகாசபரமானந்தரூபமே கொள்ளத்தக்கது. அன்றியும், ஆன்மஞானமொன்றனே முமுட்சுக்கட்குப்பிராப்தியாம் புருடார்த்தம் கதியெனப்படும்; அதாவது, அச்சத்தாவடிவப்பாவத்தையே சுருதி ஸ்வப்பிரகாசபரமானந்தவடிவ பரமபுருடார்த்தமெனக் கூறுகின்றது. அல்லது, பிரமவுலகமீறுகிய கதிகளனைத்தும் காரியவடிவமாதலின் அபரங்களாம். இச்சைதன்யவடிவகதியோ காரியகாரணத்தன்மைகளற்றதானதால் பரமாமென்க. சுருதியும் 'வஸாகாஷ்டா வராகதிஃ

𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌨𑍍𑌨 𑌪𑌰𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌤𑍍𑌸𑌾𑌕𑌾𑌷𑍍𑌠𑌾𑌸𑌾𑌪𑌰𑌾𑌗𑌤𑌿𑌃’ இச்சச்சிதானந்தவடிவ பரமான்மாவே இவ்வித்துவானது பரமகதியாம், அதற்குமேலாம் பொருளொன்றில்லை. மற்றோ, அப்பரமான்மாவே சர்வத்தின் அவதியும் பரமகதியுமாமென்க. எந்தச் சத்தாவடிவபாவத்தையடைந்து முமுட்சுக்கள் மறித்துஞ் சம்சாரத்தில் விழுவதில்லையோ அதாவது, மறித்தும் பிறப்பையடைவதில்லையோ அச்சத்தா வடிவபாவம் பரமேசுரனாகிய எனது பரமதாமமாம். அதாவது, அதுவே பரிபூரண விஷ்ணுவாகிய எனது எவற்றினுமேலானதும் சர்வோபாதிகளற்றதுமான உண்மை வடிவமாம். சுருதியும் ‘𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌂’ எந்தச் சச்சிதானந்தவடிவ நிர்க்குணப்பிரஹ்மத்தை நான் பிரஹ்மமென அபேதமாயடைந்து தத்துவஞானி மறித்தும் பிறப்பிறப்பாகிய சம்சாரத்தையடைவதில்லையோ, அவ்வத்விதீய நிர்க்குணப்பிரஹ்மமே விஷ்ணுவின் பரமபதமாம். அதாவது, அவ்விஷ்ணுவின் உண்மைவடிவமாமென்க. ஈண்டு, இராகுவினது தலை, புருஷனது சைதன்யம், என்னுமிடங்களில் இராகுக்குந் தலைக்கும், புருடனுக்குஞ் சைதன்யத்திற்கும் அபேதமிருப்பினும், கற்பிதபேதத்தால் ஆறும்வேற்றுமையாம், உண்மையில் அபேதமே போல ‘𑌈𑌶𑍍𑌵𑌰𑌃’ என்பதானும் பரமேசுரனுக்கும் சத்தாசொரூபதாமத்திற்கும் உண்மையில் அபேதமிருப்பினும் கற்பிதபேதத்தால் ஆறும்வேற்றுமையாம். இதனலிது பெறப்பட்டது:—எந்த அக்ஷர அவ்வியக்தவடிவபாவத்தைச் சுருதி பரமகதியெனக் கூறுகின்றதோ அது பரமேசுரனாகிய எனது சொரூபமாம் என்க.

(அ-கை.) ஆண்டு, ‘𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑍇𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂𑌯𑍋𑌮𑌾𑌂 𑌸𑍍𑌮𑌰𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯𑌯𑍋𑌗𑌿𑌨𑌃’ என்னுஞ் சுலோகத்தால் கூறப்பட்ட பக்தியோகமே அப்பரமகதியை யடைவதற்கு உபாயமாம் என்றுமர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌸 𑌪𑌰𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌲𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 ।
𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌂 ॥ (22)

ப-ம். 4 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 2 𑌸𑌃 3 𑌪𑌰𑌃 1 𑌪𑌾𑌰𑍍𑌥 6 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 8 𑌲𑌭𑍍𑌯𑌃 7 𑌤𑍁 5 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑌾 9 𑌯𑌸𑍍𑌯 11 𑌅𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 10 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 12 𑌯𑍇𑌨 14 𑌸𑌰𑍍𑌵𑌂 10 𑌇𑌦𑌂 15 𑌤𑌤𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய நிரதிசயபரமான்மாவானது அநன்யபக்தியானே அடையப்படுகின்றது. அப்பரமான்மாவினுள்ளிருப்பதாம் இவ்வுலகங்களனைத்தும் அதனாலே வியாபிக்கப்பட்டதுமாம். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நிரதிசயபரமான்மாவாகிய நான் அநன்யபக்தியொன்றானே பிராப்தமாவேன். ஆண்டு, பரமான்மாவொழிந்த வேறு விடயமிலாத பிரேமையே அநன்யபக்தியாம். அந்நிரதிசயபுருஷன் யாவனென அர்ச்சுனனுக்கு உணரும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவானருளுகின்றார். ‘𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌇𑌤𑌿’ ஹே அர்ச்சுன! எந்தக்காரணவடிவ புருஷனிடத்துக் காரியவடிவ பூதங்கள் அந்தர்வர்த்திகளாம் (உள்ளிருப்பனவாம்). என்னை? இவ்வுலகத்துட் யாது யாது காரியமாமோ அது அது தனது உபாதானகாரணத்தின் அந்தர்வர்த்தியாம். கடசராவமுதலிய காரியங்கள் மண்வடிவகாரணத்திற்குள்ளே இருப்பன போல, இச்சர்வ காரியப்பிரபஞ்சங்களும் காரணவடிவ புருஷனிடத்து அந்தர்வர்த்திகளாம். இதனானே, அப்புருஷனால் இவ்வுலகம் வியாப்தமாம். மண்வடிவ காரணத்தால் கடசராவ முதலிய காரியங்கள் வியாபிக்கப்பட்டனபோலுமென்க.

ஆ-சு. 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌨𑌾𑌪𑌰𑌮𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌣𑍀𑌯𑍋 𑌨 𑌜𑍍𑌯𑌾𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 ।
𑌵𑍃𑌕𑍍𑌷 𑌇𑌵 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋 𑌦𑌿𑌵𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑍍𑌯𑍇𑌕𑌸𑍍𑌤𑍇𑌨𑍇𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 ॥
𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 𑌯𑌚𑍍𑌚 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 । [𑌯𑌣𑌃 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ॥
𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇𑌽𑌪𑌿 𑌵𑌾 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌬𑌹𑌿𑌶𑍍𑌚 𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾

(பொ-ள்.) எப்பரமான்மதேவனினின்றும் பராபரப்பொருளும் மிகச்சிறிதும் மிகப்பெரிதுமாகிய பொருளும் ஒன்றுமில்லையோ, எப்பரமான்மதேவன் பெரிய மரம்போல் சலிப்பற்றவனே, தனது சுயம்பிரகாசத்தில் நிலைப்பவனே, அப்பரமான்மதேவனாலே இவ்வுலகங்களனைத்தும் பூரணம்பண்ணப்பட்டது. இவ்வுலகத்தில் ஒரு பொருளுங் காணப்படவுங் கேட்கப்படவுமில்லை. இவ்வுலகனைத்தையும் உள்ளிலும் வெளியிலும் வியாபித்துக்கொண்டே நாராயணனிருக்கின்றான் என்பதாம். என்பது முதலிய அநேக சுருதிகள் அப்பரமான்மதேவனது வியாபகத்தன்மையைக்கூறுகின்றது. அத்தன்மைத்தான பரமான்மதேவன் அநன்யபக்தியொன்றானே அடையப்படுவன். ஈண்டு, நான் பிரஹ்மசொரூபம் என்னுந் தத்துவஞானமே அப்பரமான்மாவினது பிராப்தியாம். அதற்கு அப்பரமான்மாவின் அநன்யபக்தியே உபாயமாம் இது சுருதியிலுங் கூறப்படுகின்றது.

ஆ-சு. 𑌯𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍇 𑌪𑌰𑌾 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌵𑍇 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌰𑍌 ।
𑌤𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌕𑌥𑌿𑌤𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍍𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

(பொ-ள்.) எவ்வதிகாரிக்குப் பரமேசுரனிடத்துள்ள அநன்யபக்திபோலவே குருவினிடத்தும் உளதோ அம்மகாத்துமபுருஷனுக்கு இவ் வேதாந்தத்தாற் கூறப்பட்ட அர்த்தம்புலப்படத்தோன்றும் அஃதிலானுக்கின்றாம்; ஆதலின், ஜிஞ்ஞாசுக்கட்கு அப்பரமேசுரபக்தி அவசியம் கர்த்தவ்யமாமென்க. (22)

(அ-கை) ஆண்டுப் பூர்வமிது கூறப்பட்டது. சகுணப்பிரஹ்மோபாசகன் அச்சகுணப்பிரஹ்மத்தையடைந்து புனராவிருத்தியடைவதில்லை. மற்றோ, ஆண்டுக்கிரமமுத்தியையே யடைகின்றான். சகுணப்பிரஹ்மலோகபோகத்தின்முன்னர் ஆன்மஞானமுண்டாகாத உபாசகனுக்குப் பிரஹ்மலோகத்தையடைவற்கு மார்க்காபேட்சை ஒரு தலையாயுளது, தத்துவஞானிகட்குப்போல அவாவில்லையென வில்லை ஆதலின், உபாசகர்கள் அப்பிரஹ்மவுலகத்தை யடைதற்பொருட்டு ஸ்ரீ பகவான் தேவயான மார்க்கத்தைக்கூறி யருளினர். ஈண்டுப் பிதிருயானமார்க்கத்தையுங் கூறினது தேவயானமார்க்கத்துதியின்பொருட்டாம்.

சு-ம். 𑌯𑌤𑍍𑌰 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍍𑌵𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 𑌚𑍈𑌵 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ।
𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌕𑌾𑌲𑌂 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭 ॥ (23)

ப-ம். 2 𑌯𑌤𑍍𑌰 3 𑌕𑌾𑌲𑍇 𑌤𑍁 6 𑌅𑌨𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 8 𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌂 7 𑌚 9 𑌏𑌵 5 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 4 𑌪𑍍𑌰𑌯𑌾𑌤𑌾𑌃 10 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 11 𑌤𑌂 12 𑌕𑌾𑌲𑌂 13 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 1 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்மார்க்கத்திற்செல்கின்ற உபாசக கருமிகள் ஆவிருத்தியின்மையையும் ஆவிருத்தியையுமே அடைகின்றார்களோ அம்மார்க்கத்தை அருளுகின்றேன். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்தேகத்தினின்றுமாவிவெளிப்பட்டதின்பின்னர் எக்காலத்திற்செல்லும் யோகியானவன் அதாவது, பகலிரவு முதலிய காலாபிமானிதேவதைகளா லுபலக்ஷிக்கப்பட்ட மார்க்கத்திற்செல்லும் யோகி புருஷன் அநாவிருத்தியையும் ஆவிருத்தியையும் அடைகின்றானே, அக்காலத்தை உனக்

கருளுகின்றேன். அதாவது, அக்காலாபிமானி தேவதைகளால் உபலக்ஷிக்கப்பட்ட அநாவிருத்திமார்க்கம் ஆவிருத்திமார்க்கங்களை உனக்கருளுகின்றேன். ஈண்டு, 'யோகிந:' என்னும் பதத்தால் கர்மோபாசகர்களைக் கொள்ளவேண்டும். அவற்றுள், தேவயானமார்க்கமாய்ச் செல்லுகின்ற உபாசகனே அநாவிருத்தியையடைவன். பிதிருயானமார்க்கத்திற்செல்லும் கருமியோ ஆவிருத்தியையடைவன். தேவயானமார்க்கத்திற்செல்லு முபாசகனும் புனராவிருத்தியடைவன் என்பது, 'ப்³ரஹ்மலோகா: புநராவர்தி³நோঽர்ஜுந' என்னும் வாக்கியத்தான் முன்னர்க்கூறப்பட்டது. அங்ஙனமாயினும், பிதிருயானமார்க்கத்திற்செல்கின்ற கருமிகளனைவரும் நியதமாய் ஆவிருத்தியையே யடைகின்றார்கள். ஒருவரேனும் ஆண்டுக் கிரமமுத்தியையடைவதில்லை. தேவயானமார்க்கத்திற் செல்பவர்க்குள்ளோ யாரேனும் ஒருவர் பஞ்சாக்கினிவித்தையினப்யாசத்தால் தேவயானமார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்தும் புனராவிருத்தியை யடைகின்றார்கள். அங்ஙனமாயினும் எந்தவுபாசகன் தகரவித்தை முதலிய உபாசனைகளால் தேவயானமார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தை யடைகின்றானோ அவன் புனராவிருத்தியையடைவதில்லை; மற்றோ, அப்பிரஹ்மலோகபோகானந்தரம் கிரமமுத்தியை யடைகின்றான். ஆதலின், தேவயானமார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்த உபாசகர்களனைவர்களுமே ஆவிருத்தியையடைவதில்லை. இதுபற்றியே நியமமாய்ப் பிதிருயானமார்க்கம் ஆவிருத்திவடிவ பலமுடையதானதால் நிக்கிருஷ்டமாம்; இத்தேவயானமார்க்கமோ அநாவிருத்திவடிவபலமுடையதாதலின் உத்கிருஷ்டமாம். இவ்வாற்றால் தேவயானமார்க்கத்தைப் புகழ்தல்பொருந்துமாறு காண்க. தேவயானமார்க்கத்திற் செல்பவர்கள் அனைவர்களுமறித்தும் ஆவிருத்தியையடைவர்களேனும் அதிற்சென்ற உபாசகர்களனைவரும் புனராவிருத்தியை யடையார்கள். ஆதலின், தேவயானமார்க்கம் ஆவிருத்தியின்மைவடிவ பலமுடையதாதல் சம்பவமாமென்க. ஈண்டு, 'யத்ர காலே த்வநாவ்ருத்திம்' என்பதிலுள்ள காலசத்தத்தால் இலக்ஷணாவிருத்தியால் பகலிரவு முதலிய காலாபிமான தேவதாவுபலட்சிதமார்க்கத்தைக் கொள்ளாதொழித்து முக்கியார்த்தமானகாலத்தையே கொள்ளிலோ மேற்கூறுஞ் சுலோகத்தில் 'அக்³நிர்ஜ்யோதி:' என்பது அமையாதாம், அவ்வாக்கியார்த்தம் காலமாகாமையின். அன்றியும் மிக விளக்கமார்க்க வாசகமாகிய மேற்கூறும் கதி, ஸ்ருதி, என்னுஞ் சத்தங்களும் அமையாதனவாம். ஆதலின், காலசத்தத்திற்கு மார்க்கத்தில் இலட்சணைகொள்ளப்பட்டதாம். அம்மார்க்கத்தில் காலாபிமான தேவதைகள் பலவாதலின் ஸ்ரீ பகவான் மார்க்கோபலட்சக காலசத்தத்தைக் கூறியருளினர் என்க. (23)

(அ-கை.) முதலில் உபாசகர்களின் தேவயானமார்க்கத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். அக்³நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா க³ச்ச²ந்தி ப்³ரஹ்ம ப்³ரஹ்மவிதோ³ ஜநா: ॥ (24)

ப-ம். 2 அக்³நி: 1 ஜ்யோதி: 3 அஹ: 4 ஶுக்ல: 5 ஷண்மாஸா 6 உத்தராயணம் 7 தத்ர 8 ப்ரயாதா 12 க³ச்ச²ந்தி 11 ப்³ரஹ்ம 9 ப்³ரஹ்மவித³: 10 ஜநா:

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்மார்க்கத்தில் ஒளிவடிவ அக்கினியும் பகலும் சுக்கிலபட்சமும் ஆறுமாதமாகிய உத்தராயணமும் உள்ளதோ, அத்தேவயான மார்க்கத்தில் செல்லப்பட்ட சகுணப்பிரஹ்மோபாசகர்கள் அச்சகுணப்பிரஹ்மத்தையேயடைகின்றார்கள். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எத்தேவயானமார்க்கத்தில் முதலில் ஒளிவடிவமான அக்கினியுள்ளதோ அதன்பின் பகலும் அதன்பின் சுக்கிலபட்சமும் அதன்பின் ஆறுமாதவடிவ உத்தராயணமும் இருக்கின்றனவோ. ஈண்டு, 'ஜ்யோதி' என்பதால் அக்கினியபிமான தேவதையைக் கொள்ளவேண்டும். இவ்வக்கினியையே சுருதியானது அர்ச்சியெனக் கூறுகின்றது. 'அஹ:' என்பதால் தினபிமான தேவதையைக்கொள்ளவேண்டும். 'சுக்கில' என்பதால் சுக்கிலபட்சாபிமான தேவதையைக்கொள்ளவேண்டும். 'ஷண்மாசா உத்தராயணம்' என்பதால் அதனபிமான தேவதையைக்கொள்ளவேண்டும். ஈண்டுக்கூறிய தேவதைகள் சுருதியிற்கூறப்பட்ட ஏனைய தேவதைகட்கும் உபலக்ஷகங்களாம்.

ஆ-சு. தெசுஅிுரஹிஸம் ஹவம் தூ்அிுஷொ ஊரஹூ் கூவமெயுஉாண வக்ஷஉா வமெயுஉாண வக்ஷாஉூாங ஷஊஉஹிகிஉாஸாம் ஷாதூா ஸெஹூஃ ஸம்வஸ்ரூம் ஸம்வஸ்ரராஉா திதூஉாதிதூாஆ்ம் உூஉஸம்அம் உூஉஸொவிஉூஷம் தஸ்ூாஷொ உாநவஃ ஸஊதாங வூஊறயதெூஷ தெுவயொவூ ஊவயஊதெ நவூிவஉூஉாநா உஉம்உாநவஉாவதூு நாவதூுஜெ.

(பொ-ள்.) அவ்வுபாசகபுருஷன் முதலில் அர்ச்சியபிமானதேவதையையடைகின்றான். பின்னர்த் தினபிமானதேவதையை யடைகின்றான், பின்னர்ச் சுக்கிலபட்ச அபிமானதேவதையை யடைகின்றான். பின்னர் ஆறுமாதவடிவ உத்தராயணாபிமான தேவதையயடைகின்றான். அதன்பின் வருடாபிமான தேவதையை யடைகின்றான். பின்னர் ஆதித்தியனையும், பின்னர்ச் சந்திரனையும்; பின்னர் நக்ஷத்திரத்தையும் அடைகின்றான். ஆண்டு, அமானவபுருடன்வந்து இவனைப் பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுபோகின்றான். இதுவே தேவமார்க்கமும் பிரஹ்மமார்க்கமுமாம். இத்தேவயானமார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்த வுபாசகன் மீண்டு மநுடத்தன்மையை யடைவதின்றாம்; அச்சுருதியில் மற்றொரு சுருதியை அனுசரித்து சம்வத்சரத்தின் பின்னர்த் தேவலோக தேவதையையும், அதன்பின் வாயுதேவதையையும், அதன்பின் ஆதித்தியதேவதையையுங் கொள்ளவேண்டும். அங்ஙனமே, நக்ஷத்திரத்தின்பின்னர் வருணேந்திரப் பிரஜாபதிகளைக் கொள்ளவேண்டும். இவ்வாறு ஸ்ரீ பாடியக்காரரால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டு, அவ்வுபாசகனை முதலில் அக்கினிதேவதை கொண்டுபோகும், அவ்வக்கினிலோகத்தினின்றுந் தினபிமானிதேவதை தனது லோகத்திற்குக்கொண்டு போகும் இவ்வண்ணமே மேலுமுணர்ந்துகொள்க. மின்னலின் லோகத்தில் பிரஹ்மலோகவாசியாகிய அமானவபுருஷன் வந்து அவ்வுபாசகனை வருணலோகத்திற்குக்கொண்டுபோவான் உபாசகன் அமானவபுருஷன் இருவரோடும் நக்ஷத்திராபிமானிதேவதை வருணலோகம்வரையிற் செல்லும், பின்னர் வருணதேவதை அவ்விருவரோடும் இந்திரலோகம்வரையிற்செல்லும், பின்னர் அவ்விந்திரதேவதை அவ்விருவரோடும் பிரஜாபதிலோகம்வரையிற்செல்லும், பின்னர் அப்பிரஜாபதிக்குப் பிரஹ்மலோகத்திற் செலவலியின்மையின் கேவலம் அமானவபுருஷனே அவ்வுபாசகனைப் பிரஹ்மலோகத்திற்கொண்டுபோகின்றான். ஈண்டுப் பிரஜாபதி என்பதால் விராட்டைக்கொள்ளவேண்டும். ஆண்டு, ஸ்ரீ பகவானும் அக்கினியபிமானதேவதை தினபிமானதேவதை சுக்கிலபட்சாபிமானிதேவதை உத்தராயணாபிமானதேவதை என்னும் நான்கு தேவதைகளையே கூறியருளினர். சம்வத்சர தேவலோகவாயு ஆதித்தியன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், பிரஜாபதி முதலிய தேவதைகளை ஈண்டருளவில்லையாயினும் சுருதியை யநுசரித்து அத்தேவதைகளையுங் கொள்ளவேண்டுமென்க. எம்மார்க்கத்தில் அக்கினிமுதற்கொண்டு பிரஜாபதியீறான சர்வதேவதைகளும் இருக்கின்றனவோ அத்தேவயான

மார்க்கத்தில் செல்லப்பட்ட சகுணப்பிரஹ்மோபாசகர்கள் இரண்யகருப்பவடிவ சகுணப்பிரஹ்மத்தையே யடைகின்றார்கள். அதன் வாயிலாய் அவர்கள் நிர்க்குணப்பிரஹ்மத்தையடைகின்றார்கள். இஃதனைத்தும் 'கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹாத: பரமபிதாநாத்' என்னுஞ் சூத்திரத்தில் ஸ்ரீ பகவான் பாடியக்காரர் விரிவாய்க் கூறியிருக்கின்றனர். ஈண்டு, 'ஏதேந ப்ரதிபத்யமாநா இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே' என்னுஞ் சுருதியில் 'இமம்' எனக்கூறப்பட்ட விசேடணத்தால் இப்பொருடோற்றுகின்றது:—இக்கற்பத்தின் பின் வேறுகற்பத்தில் பஞ்சாக்கினி வித்தையையுடைய யாவனுகினுமோருபாசகன் அப்பிரஹ்மலோகத்தினின்று புனராவிருத்தியையடைகின்றான். அவனுக்கே பகவான் 'ஆப்ரஹ்மபுவநால்லோகா: புநராவர்த்திநோர்ஜுந' என்னும் வாக்கியத்தால் ஆவிருத்தியைக்கூறியருளினர். இதுபற்றியே ஈண்டு ஸ்ரீ பகவான் கூறியருளிய மார்க்கத்திற்குச் சுருதிசொல்லிய மார்க்கத்தைத்தழுவியே உரைபண்ணினும். இதனது விரிவோ ஸ்ரீ ஆன்மபுராணம் ஆறாவது அத்தியாயத்தில் மிக விளக்கமாம். (24)

(அ-கை.) கூறிப்போந்த தேவயான மார்க்கத்தைத்துதிப்பான் ஸ்ரீ பகவான் பிதிருயானமார்க்கத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் ।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதி யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ॥ (25)

ப-ம். 1 தூம: 2 ராத்ரி: 3 ததா 4 க்ருஷ்ண: 5 ஷண்மாஸா: 6 தக்ஷிணாயநம் 7 தத்ர 9 சாந்த்ரமஸம் 10 ஜ்யோதி: 8 யோகீ 11 ப்ராப்ய 12 நிவர்த்ததே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்மார்க்கத்தில் தூமமும் இரவும் கிருஷ்ணபக்ஷமும் ஆறுமாதவடிவமாகிய தக்ஷிணாயநமும் இருக்கின்றனவோ அம்மார்க்கத்திற் செல்லப்பட்ட கருமியானவர்கள் சந்திரனினின்று கிட்டிய கருமபலத்தையடைந்து புனராவிருத்தியை யடைகின்றார்கள்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எந்தப்பிதிருயானமார்க்கத்தில் முதலில் தூமமும் பின்னர் இரவும் அதன்பின்னர்க் கிருஷ்ணபக்ஷமும் அதன்பின்னர் ஆறுமாதவடிவ தக்ஷிணாயநமும் இருக்கின்றனவோ ஈண்டும், தூமம் இரவு கிருஷ்ண: ஷண்மாசா தக்ஷிணாநம் என்பவைகளால் அவ்வவ்வபிமான தேவதைகளைக்கொள்ள வேண்டும். இங்கேயும் கூறப்பட்ட தூமமுதலிய நான்கு தேவதைகளும் சுருதியிற் கூறப்பட்ட ஏனைய தேவதைகட்கும் உபலக்ஷகங்களாம்.

ஆ-சு. தே தூமமபிஸம்பவந்தி தூமாத்ராத்ரிம் ராத்ரேரபரபக்ஷமபரபக்ஷாத்யாந்ஷட் தக்ஷிணைதி மாஸாம் ஸ்தாந்மாஸேப்ய: பித்ருலோகம் பித்ருலோகாதாகாஶமாகாஶாச்சந்த்ரமஸம் தஸ்மிந்யாவத்ஸம்பாதமுஷித்வாதைதமேவாத்வாநம் புநர்நிவர்த்தந்தே.

(பொ-ள்.) அக்கருமிபுருஷன் முதலில் தூமாபிமானிதேவதையை யடைகின்றான். பின்னர் இரவபிமானிதேவதையையும் அதன்பின் கிருஷ்ணபக்ஷாபிமானிதேவதையையும் அதன்பின் ஆறுமாதவடிவ தக்ஷிணாயந அபிமானி தேவதையையும் அதன்பின் பிதிர்லோகாபிமானி தேவதையையும் அதன்பின் ஆகாசாபிமானி தேவதையையும் அதன்பின் சந்திரனையும் அடைகின்றான். அந்தச்சுவர்க்கமெனும் பெயருள்ள சந்திரலோகத்தில் புண்ணியகரும போககால பரியந்தம் வசித்துப் பின்னர்ச் சேடித்திருந்த புண்ணியபாவ கருமங்களின்வசத்தால் மறித்தும் அம்மார்க்கவாயிலாகவே நிவிருத்தனுகின்றான். ஈண்டு ஸ்ரீ பக

வான் தூமாபிமானதேவதை இராத்திரியபிமானதேவதை கிருஷ்ணபக்ஷாபிமான தேவதை தக்ஷிணாயனாபிமானதேவதை என்னும் இந்நான்கையுமருளினர். பிதுருலோகாபிமானதேவதை ஆகாசாபிமானதேவதை சந்திரதேவதை என்னும் இம்மூன்றையு மருளிச்செய்யவில்லையாயினும், சுருதியநுசாரமாய் அம்மூன்றையும் ஈண்டுக்கொள்ளவேண்டும். இவ்வணம் தூமாபிமான தேவதை முதற்கொண்டு சந்திரதேவதையீறாகக் கூறப்பட்ட தேவதைகளனைத்தும் எம்மார்க்கத்திலுள்ளனவோ அப்பிதுருயானமார்க்கத்தில் செல்லப்பட்ட இஷ்டபூர்த்ததத்த என்னு மூவகைக்கருமங்களையுஞ்செய்யப்பட்ட கருமிபுருஷன் சந்திரலோகத்தில் அச்சந்திரனினின்று கிடைத்த அக்கருமபலமாகிய சுகதுக்கங்களையடைந்து அக்கருமநாசமானபின்னர் மறித்தும் இம்மநுடலோகத்திற் சுழலுகின்றான். ஆதலின், ஆவிருத்தியையுடைய இப்பிதுருயானமார்க்கத்தினின்று ஆவிருத்தியின்றிய தேவயானமார்க்கம் மிகச் சிரேட்டமாம். ஈண்டு, அக்கினிஹோத்திரமுதலியன இஷ்டகருமமாம். ஏரி கிணறு குளம் தருமசாலை முதலியன பூர்த்தகருமமாம். நல்லவர்கட்கு கோ பொன் முதலியவைகளைத் தானம்பண்ணல் தத்தகருமமாம். இம்மூவகைக்கருமங்களை முன்னரும் விரிவாய்க்கூறினும். (25)

(அ-கை.) கூறிப்போந்த இருவகை மார்க்கங்களையும் உபசம்மாரம்பண்ணியருளுகின்றார்.

சு-ம் ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே ।
ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததே புந: ॥ (26)

ப-ம். 4 ஶுக்லக்ருஷ்ணே 5 கதீ 3 ஹி 2 ஏதே 1 ஜகத 6 ஶாஶ்வதே 7 மதே 8 ஏகயா 10 யாதி 9 அநாவ்ருத்திம் 11 அந்யயா 13 ஆவர்த்ததே 12 புந:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! இவ்வுலகத்தில் மிக விளக்கமான சுக்கிலகிருஷ்ண மார்க்கங்களிரண்டும் அநாதிசித்தங்களாம். அவற்றுள் சுக்கிலமார்க்கத்தால் சிலவுபாசகர்கள் அநாவிருத்தியை யடைகின்றார்கள். கிருஷ்ணமார்க்கத்தாலோ சர்வர்களுமே புனராவிருத்தியை யடைகின்றார்கள். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! முன்னர், பிரஹ்மலோகமடைவதற்கு மார்க்கமாமெனக்கூறிய தேவயானமார்க்கம் ஞானவடிவப் பிரகாசமிகுதிப்பாட்டையுடைய அக்கினி முதலிய தேவதையுடையதும் பிரகாசவடிவ சகுணப்பிரஹ்மவித்தையாலடையப்படுவதும் பிரகாசமயலோகங்கள் பலவுள்ளதும் சுவப்பிரகாசப் பிரஹ்மத்தையடைவதற்குக் காரணமானதுமாதலின் உத்கிருஷ்டமாம். ஞானவடிவப்பிரகாசமயமாதலின் அது சுக்கிலமெனப்படுகின்றது. சுவர்க்கலோகமடைவதற்குக் காரணமெனக்கூறிய பிதுருயானமார்க்கமோ, ஞானமயப்பிரகாசமின்மையின் தமோமயமும், அப்பிரகாசவடிவ புகையிரவு முதலியவைகளோடு கூடியதும், மறித்தும் பிறவிக்கேதுவுமாதலின் நிக்கிருஷ்டமாம்; ஆதலின் அதுவும், கிருஷ்ணமெனப்படுகின்றது. இவ்வணம் சுக்கில கிருஷ்ணநாமங்களாற் பிரசித்தமான இரண்டு மார்க்கங்களும் இவ்வுலகிற்கநாதிசித்தமாம்; அதாவது, இச்சம்சாரம் பிரவாகவடிவத்தால் அநாதியாமாதலின் இதன்கணுற்ற அவ்விரண்டும் அநாதியாம். உலகம் என்பது பிராணிமாத்திரவாசகமாயினும், ஈண்டதனால் சகுணப்பிரஹ்மவித்தையினதிகாரியையும் கருமாதிகாரியையும் நூலுணர்ந்தார்களையுமே கொள்ளவேண்டும்; பிராணிமாத்திரம் கொள்ளப்படுவதில்லை; என்னை, இவ்விரண்டுமார்க்கமும் எல்லாரானும் அடையப்படுவதன்று, மற்றே, கேவலம் உபாசக கருமிகளாலே யடையப்படுகின்றது. கருமோபாசனைகளின்றிய பாபிகளாகிய அஞ்ஞானிகட்கு, அதோகதியிற் சேர்ப்பிக்கும் மூன்றாவது ஸ்தானம் எனப்படும் மார்

க்கமே பிராப்தியாகின்றது. ஆதலின், ஈண்டுச்சகத்து என்னுஞ் சத்தத்தால் கருமி உபாசகர்களைக்கொள்வதே தகுதியாமென்க. ஹே அர்ச்சுன! இவ்விரண்டுமார்க்கத் துள்ளும் முதலாவது தேவயானவடிவ சுக்கிலமார்க்கத்தால் பிரஹ்மலோகத்தை,க யடைந்த உபாசகர்களுள் எவராகினுமொருவர் அனுவிருத்தியையே யடைகின்றார் கள். சுருதியும் 'நசபுநராவர்த்ததே' கிரம முத்தியையுடைய உபாசகன் புனராவிருத்தியையடைவதில்லை. இரண்டாவது பிதுருயானமெனும் கிருஷ்ண மார்க்கத்தால் சுவர்க்கத்தையடைந்த கருமிகளனைவர்களுமே புனராவிருத்தியை யடைகின்றார்கள்.

ஆ-சு. ஶ்ராவஹ்நஷும் கஉ-ழணஷஹ யக்ஷெ ஹகரொதயம் ।
தஷா ஷொகாத நரொதிகஷெஷொகா யகஉ-ழணெ ॥

(பொ-ள்.) இவன் ஈண்டெவ்வெக் கருமம்பண்ணுகின்றானோ அவ்வப் புண் ணிய கருமவசத்தால் சுவர்க்கலோகத்தையடைந்து அப்புண்ணிய கருமத்தை யநு பவித்தலால் நாசம்பண்ணி மறித்தும் இம்மநுடலோகமடைய வருகின்றான் என்பதாம். (26)

(அ-கை.) ஆண்டுச் சகுணப்பிரஹ்மோபாசனை பிரஹ்மலோகமடைதற்குக் காரணமானதுபோல தேவயானமார்க்க சிந்தனையுங் காரணமாமாதலின் அம்மார்க் கோபாசனையைச் செய்விப்பான் ஸ்ரீ பகவான் அம்மார்க்கஞானத்தைத் துதித்தரு ளுகின்றார்.

சு-ம். நைதெ ஸ்ருதீ வாய-உஜாநந் யொகீ உ-ஹ்யதி கஶ்சந ।
தஷாத்ஸவெ-ஷு காலெஷு யொகயுக்தொ ஹவாஜுந ॥ (27)

ப-ம். 7 ந 2 ஏதெ 3 ஸ்ருதீ 1 வாய-உ 4 ஜாநந் 6 யொகீ 8 உ-ஹ்யதி 5 கஶ்சந 9 தஷாத் 11 ஸவெ-ஷு 12 காலெஷு 13 யொகயுக்தஃ 14 ஹவ 10 அஜுந.

(அ-ம்.) ஹே பார்த்த! கூறிப்போந்த இவ்விரண்டு மார்க்கங்களையுமுணர் ந்து ஒரு தியானபராயணரும் மோகத்தையடையார். ஆதலின், எக்காலத்தும் நீ தியானபரனாகுதி. (27)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்தேவயானமார்க்கமெனும் சுக்கிலமார்க்கமோ கிரமமுத்தியையே தருவதாம். இப்பிதுருயானமார்க்கமெனும் கிருஷ்ணமார்க் கமோ மறித்தும் பிறவியையே தருவதாம். என்றிவ்வணம் இவ்விருமார்க்கங் களையு முணரப்பட்ட சகுணப்பிரஹ்மத்தியான பராயணர்கள் ஒருவரும் மோக த்தையடையார்கள். அதாவது, பிதுருயானமார்க்கத்தைப் பயப்பிக்கும் இஷ்ட பூர்த்தகருமங்களே எனக்குச் செயற்பாலனவாம், மற்றொன்றுமில்லை; என்றிவ்வ ணம் கருமமேகர்த்தவ்யமாமென்று நிச்சயியார்கள். ஹே அர்ச்சுன! சகுணப் பிரஹ்மத்தியானரூப யோகம் அபுனராவிருத்திவடிவ பலத்தையே தருவதாமாத லின் நீயும் அப்பலத்தின்பொருட்டு அந்த யோகத்தையே செய்குதி. அதாவது, சமாகிதச்சித்தமுடையனாகுதி என்பதாம். (27)

(அ-கை.) இப்போது அந்தத்தியானவடிவ யோகத்தில் அதிகாரிகட்கு அன்புமிக்குண்டாக்குவித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் மீண்டும் அந்தயோகத்தைத் துதித்தருளுகின்றார்.

சு-ம். வெஜெஷு யஜ்ஞெஷு தவஃஸு செவ
உாநெஷு யத்புண்யஹலம் ப்ரதிஷ்டம் ।
அத்யெதி தத்ஸவ-மிஉம் விஉிலா
யொகீ வரம் ஸ்தாநமுவெதி சாஉ-ஹ ॥ (28)

ப-ம். 1 வெதெஷு 2 யஜ்ஞெஷு 4 தவஃஸு 3 அ 5 ஷவ 6 தாநெஷு 7 யக் 8 வுணுூஃலம்ஃ 9 வுஜிஷ்டிஃ 15 கதெகீ 10 தக் 11 ஸவஃ 13 ஜஃ 14 விஜிக்வா 12 யொஹீ 17 வரஃ 19 ஸூாநஃ 20 உவெதி 16 அ 18 சூஃஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேதத்திலும் யஞ்ஞத்திலும் தவத்திலும் தானத்திலும் எப்புண்ணியபலம் சாத்திரத்திற் கூறப்பட்டுள்ளதோ, அவ்வனைத்தையும் அந்தத் தியானநிஷ்டன் கூறிப்போந்த வர்த்தத்தையுணர்ந்து அதிக்கிரமணஞ் செய்கின்றான். எவற்றினும் மேலான காரணவடிவ ஸ்தானத்தையுமடைகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வேதாத்தியயனகாலத்தில் சாஸ்திரத்திற்கூறிய பிரமசரிய முதலிய நியமபாலனபூர்வகம் வியாகரண முதலிய ஆறங்கத்தோடு இருக்காதிவேதங்களை அத்தியயனம் பண்ணுகின்றவனுக்கும், அங்கோபாங்க சிரத்தைகளோடு அசுவமேத முதலிய யஞ்ஞங்களை நன்கநுட்டிப்பவனுக்கும், மன புத்திகளின் ஒருமைப்பாட்டால் சிரத்தையோடு கிருச்சிரசாந்திராயண முதலிய தவம்பண்ணுகின்றவனுக்கும், நல்ல தேசகாலத்தில் சத்பாத்திரங்களுக்குச் சாத்திரத்தில் விதித்தபடி அன்போடு கோ, பொன் முதலியவைகளைத் தானம்பண்ணுகின்றவனுக்கும் சாத்திரத்தில் எப்புண்ணியபலம் விதிக்கப்பட்டிருக்கின்றதோ; அதாவது, சார்வபௌமன் முதற்கொண்டு விராட்டுலகசுகமீறாய்த் தைத்திரீய சுருதியில் நூறு நூறு பங்கு அதிகமெனக் கூறப்பட்ட அச்சுகங்களனைத்தையும் அந்தத்தியானபாராயண புருஷன் அதிக்கிரமணஞ்செய்கின்றான். எப்பொருளையுணர்ந்தெனின், ஸ்ரீ பகவான் அருளுகின்றார். 'ஊஃவிஜிக்வா ஊதி.' அர்ச்சுன! இவ்வெட்டாவதத்தியாயத்தில் முற்கூறிய எழுவகை வினாக்களின் வாயிலாய் அருளிச்செய்யப்பட்ட வர்த்தங்களை நன்றாய் நிச்சயித்துச் சிரத்தையோடு மநுட்டிக்கும் அச்சகுணப் பிரஹ்மோபாசகன் அப்புண்யபலன்களனைத்தையுந் தாண்டுகின்றான்.

சங்கை:—ஹே பகவன்! அவ்வுபாசகனுக்குக் கேவலம் அப்புண்ய பலன்களைக் கடத்தலொன் பயனோ, அல்லது, மற்றியாதானும் வேறு பயனுமுளதோ?

சமாதானம்:—'வரஃஸூாநஃ உவெதி ஆஃஃ' என; அர்ச்சுன! அந்தத்தியானபாராயண புருஷன் அச்சுவர்க்கமுதலிய பலன்களை அதிக்கிரமணித்தன்மாத்திரமன்று மற்றோ, சர்வத்தினும் மேலானதாயும், சர்வகாரணரூபமுமாகிய ஈசுரசம்பந்தமுடைய ஸ்தானத்தையுமடைகின்றான்; அதாவது, அந்தத்தியான நிஷ்ட வுபாசக புருஷன் சர்வத்திற்குங் காரணவடிவப் பிரஹ்மத்தையுமடைகின்றான் என்பதாம். ஆண்டு, இவ்வெட்டாவது அத்தியாயத்தால் ஸ்ரீ பகவான் தியேயத்துவரூபத்தால் தத்பதார்த்தத்தைத் திருவாய் மலர்ந்தருளினரெனக. (28)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளது பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருத கூடார்த்ததீபிகையெனப் பெயரிய வியாக்கியானத்தின்

எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

# ஒன்பதாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

ஆண்டுப் பூர்வம் எட்டாவது அத்தியாயத்தில் சுழுமுனையெனும் மூர்த்தன்ய நாடி கமனத்துவாரமும் இருதயம் கண்டம் புருவமத்தியம் இது முதலிய விடங்களில் பிராணதாரணையும் சர்வேந்திரிய வாயில்களின் பந்தனவடிவகுணமும் இருக்கப்பட்ட யோகத்தால் தனதிச்சாபூர்வகம் இத்தேகத்தினின்றும் பிராணன் வெளிப்பட்டவனும் அர்ச்சிராதிமார்க்கத்தால் பிரஹ்மலோகத்தையடைந்தவனுமாகிய உபாசக புருஷன் அவ்வுலகத்தில் திவ்ய போகங்களை நுகர்ந்ததின் பின்னர்ப் பிரஹ்மஞான முண்டாவதால் அக்கற்பாந்தத்தில் பிரஹ்மப்பிராப்திவடிவக்கிரமமுத்தியை யடைகின்றான் எனக் கூறப்பட்டது. ஆண்டு, இவ்வையப்பாடு நிகழ்கின்றது. இவ்வதிகாரிக்குக் கூறிப்போந்தவாற்றானே மோட்சப்பிராப்தியாமா? அல்லது வேறு மார்க்கத்தானுமாமா என்பதே; இவ்வண நிகழ்ந்த அச்சங்கையை நீக்குவான்,

ஈந நுயெதாஃ ஸதநம் யொஉாம் ஷூ ஈதி நிதுயஶஃ
தஸுாஷம் ஸூஹஃ வாய உ திதுயாகூஸுயொமிநஃ

(அகை.) என்பது முதலிய வசனங்களால் பகவானது உண்மைவடிவ விஞ்ஞானத்தினின்றுமே நேரே மோக்ஷப்பேறு கூறப்பட்டது. அப்பேற்றில் அநன்ய பகவத்பக்தியே முக்கிய காரணமாமென்பதும், 'வஈஷஃ ஸவஈஃ வாய உஹ தூுஹுஸுநநுயா' என்னும் வாக்கியத்தாற் கூறப்பட்டது. இஃதனைத்தும் பூர்வாத்தியாயத்தில் கூறப்பட்டதாம். ஆண்டு, முற்கூறிய தாரணைபூர்வக பிராணோத்கிரமணமும் அர்ச்சிராதிமார்க்க கமனமும் பலநாட்செலன் முதலிய கிலேசங்களின்றியே நேரே மோட்சப்பிராப்தியின்பொருட்டு ஸ்ரீ பகவானது உண்மைவடிவத்தையும் அவரது பக்தியையும் விரிவாய் நிரூபணஞ் செய்தற்பொருட்டு இவ்வொன்பதாவது அத்தியாயந் தொடங்கப்படுகின்றது. ஆண்டுப் பூர்வாத்தியாயத்தில் தியேயப்பிரஹ்மத்தை நிரூபித்து அதன் தியானபுருஷரின்கதி கூறப்பட்டது. இப்போது ஒன்பதாவது அத்தியாயத்தில் ஞேயப்பிரஹ்மத்தின் நிரூபணத்தால் ஞானநிஷ்டர்களின்கதி கூறப்படுகின்றது. அதில் மேற்கூறும் ஞானத்தைத் துதித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் மூன்று சுலோகங்களை அருளிச்செய்கின்றார்.

ஸ்ரீஹமவாநுவாச.

சு-ம். ஐஉம் தெ ம ஹுதஉம் வுவக்ஷூா உநஸஹயவெ ।
ஜுாநம் விஜுாநஸஹிதம் யஜ்ஜாகுா ஜொக்ஷுவெஸஹாக ॥ (1)

ப-ம். 3 ஐஉம்து 2 தெ 4 ம ஹுதஉம் 7 வுவக்ஷூாசி 1 ஈநஸஹயவெ 6 ஜுாநம் 5 விஜுாநஸஹிதம் 8 யக 9 ஜுாகுா 11 ஜொக்ஷுவெ 12 ஈஶஹாக.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அசூயை யின்றிய உனக்கு யானிப்பரமரகசியமாயும் விஞ்ஞானசகிதமாயுமுள்ள ஞானத்தை யருளிச்செய்கின்றேன். எந்த ஞானத்தைப்பெற்று நீ சம்சாரத்தினின்றும் மோட்சமடைவையோ. (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கேவல மகாவாக்கியவடிவ சத்தப்பிரமாணத்தா லுண்டானதாயும், பிரத்தியக்கபின்ன பிரஹ்மத்தை விஷயம்பண்ணப்பட்டதாயு முள்ள நான் பிரஹ்மசொரூபன் என்னும் எந்த ஞானத்தை முன்னரும் பலவாற்றாற் கூறினேனோ, மேலுங் கூறுவேனோ, இவ்வத்தியாயத்திலு மருளுவேனோ அதை உனக்கருளுகின்றேன் நீ சாவதானமாய்க்கேட்பாய். ஈண்டு, 'இதம்து' என்பதி லுள்ள 'து' சத்தமானது பூர்வாத்தியாயத்திற் கூறப்பட்ட சகுணப்பிரஹ்மத்தி யானத்தினின்று இந்த ஞானத்தில் விலக்ஷணத்தன்மையைக் காட்டுகின்றது. அதாவது, இவ்வான்மஞானமே நேரே மோக்ஷமடைதற்குக் காரணமாம். முற்கூறிய தியானமன்றாம். என்னை, ஆன்மஞானம் அஞ்ஞானத்தைக்கெடுப்பதுபோல அத் தியானம் கெடுக்கமாட்டாததலின் அது நேரே மோக்ஷமடைதற்குச் சாதனமன் றாம். மற்றோ, அந்தத்தியானம் அந்தக்கரணசுத்திவாயிலாய் ஆன்மஞானத்தைச் சம்பாதித்தே கிரமமாய் அம்மோக்ஷத்தைப் பயப்பிக்கும் என்பது முந்தின அத்தி யாயத்திலுங் கூறப்பட்டது. மீண்டும், எத்தன்மையதாமெனின், அந்த ஞானம் பரமரகசியமாம். அதாவது, மிக ரகசியமானதால் மறைத்துவைக்கத்தக்கதாம். இப்போது அந்த ஞானத்தை ஒளித்துவைக்கும் விஷயத்தில் ஞானத்திற்கு ஏது கர்ப்ப விசேடணமருளுகின்றார். 'விஜ்ஞாநஸஹிதம் இதி' ஹே அர்ச்சுன! அந்த ஞானம் விஞ்ஞானசகிதமாம் அதாவது, நான் பிரஹ்மசொரூபன் என்னும் அப ரோட்சானுபவ பரியந்தமானது; இதனுனே அஃதொளித்துவைக்கத்தக்கதாம். இவ்வணம் மிகுரகசியமாயினும் நானுனக்கு அருளுகின்றேன். அவ்வர்ச்சுனனிட த்து இந்த ஞானோபதேசத்திற்கு யோக்கியத்தன்மையை அறிவுறுத்துவான் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை விசேடித்தருளுகின்றார். 'அநஸூயவெ' ஹே அர்ச்சுன! நீ அசூயை இன்றியவனுதலின் இந்த ஞானத்தையுபதேசித்தற்கு அதிகாரியா வாய். ஆண்டுக் குணத்திற்றோடதிர்ஷ்டிபண்ணல் அசூயையாம். அஃதின்றியவன் நீ. அதாவது இக்கிருஷ்ணபகவான் எனது சமீபத்தில் எப்போதுந் தமதைசுவரி யத்தைச் சொல்லிக்கொண்டு தம்மையே துதிக்கின்றார் என்னு மசூயை இன்றிய வனும். ஈண்டு, அசூயையின்மை ஏனைய ஆர்ச்சவசம்யம முதலிய சிஷ்யகுணங்கட் கும் உபலக்ஷகமாம். அதாவது, சீடர்களின் குணங்களனைத்து நிறைந்துள்ள உனக்கு இந்த ஞானத்தை யுபதேசிக்கின்றேன் என்பதாம்.

சங்கை :—ஹே பகவன்! அத்தன்மையஞானப்பேற்றால் எனக்கெப்பயன் வாய்க்கும்?

சமாதானம் :—'யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுபாத்' ஹே அர்ச்சுன! எவ் வான்மஞானத்தையடைந்து நீ சீக்கிரமே சர்வ துக்கங்கட்குங்காரணவடிவ சம்சா ரத்தினின்று முக்தனுகுவையோ.

(அ-கை.) இப்போது அவ்வான்மஞானத்தில் அதிகாரிகட் கபிமுகத்தன் மையை யுண்டாக்குதற்பொருட்டு ஸ்ரீ பகவான் மீண்டு மந்தஞானத்தைத் துதித் தருளுகின்றார்.

சு-ம். ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்துமவ்யயம் ॥ (2)

ப-ம். 2 ராஜவித்யா ராஜகுஹ்யம் 5 பவித்ரம் 1 இதம் 4 உத்தமம் 6 ப்ரத்யக்ஷா வகமம் 7 தர்ம்யம் 8 ஸுஸுகம் 9 கர்தும் 10 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மஞானம் சர்வவித்தைகட்கும் ராஜனும் இரகசியப் பொருளனைத்திற்கு மிராஜனும் எல்லாவற்றினு முத்தமமும் பவித்திர

மும் பிரத்தியக்ஷப் பிரமாணமுடையதும் சர்வ தருமங்களின் பலரூபமும் சுக பூர்வகமே செய்யத்தக்கதும் நித்திய பலமுடையதுமாம். (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வான்மஞான மெத்தன்மைத்தாமெனின் லௌகிக வைதிக வித்தைகளனைத்திற்கும் ராஜனும். அதாவது, அவ்வனைத்தினும் மேலானதாம். என்னை, இவ்வான்மஞானம் காரியத்தோடு அவித்தையை முழுது நாசம் பண்ணுவதாம். இஃதொழிந்த மற்றைய வித்தைகள் அவ்வாறு கெடுப்பன வன்றாம். மற்றோ, அம்மூலாவித்தைக்கு ஏகதேசமே விரோதிகளாம். அவ்வேக தேசத்தைச் சாஸ்திரத்தில் தூலாவித்தையென்றும், அவஸ்தாஞ் ஞானமென்றுங் கூறுவர். மறித்து மெத்தன்மைத்தாமெனின், அவ்வான்ம ஞானம் உலகத்திலும் சாஸ்திரத்திலுமுள்ள இரகசியப் பொருளனைத்திற்கு மிராஜனும். அதாவது, அவ்விரகசியப் பொருளனைத்தினும் மிக ரகசியமாம். என்னை, இவ்வான்மஞானம் பலசென்மத்திற் செய்யப்பட்ட நிஷ்காம புண்ணிய கருமத்தானே பிராப்தமாம். அஃதின்றியவன் தனது புத்திவலியால் பல விரகசியப் பொருள்களை யுணரினும் இவ்வான்மஞானத்தை யுணரச் சமர்த்தனல்லன். ஆதலின், இது இரகசியப் பொருளனைத்தினும் மிக ரகசியமாம். அன்றியும், எவற்றினும் உத்தம பவித்திரமாம். என்னை, தரும நூலிற் பாவ நிவிருத்தியின்பொருட்டுக் கூறப்பட்ட பிராயச்சித்தம் இவனுடைய பாவங்களனைத்தையு நிவிருத்தியாது; மற்றோ, யாதானுமொருபாவத்தையே நிவிருத்திக்கும். அங்ஙனம் நிவிருத்தியாயினும், அப்பாவம் தனது காரணத்தில் சூட்சுமவடிவாயிருக்கின்றது. இதனாலே இவன் மறித்தும் பாவஞ்செய்வதில் முயலுகின்றான். ஆதலின் அப்பிராயச்சித்தம் சர்வத்தினும் உத்தம பவித்திரமன்றாம். இவ்வான்மஞானமோ பல்லாயிரம் பிறப்பிற் றேடியதும், தூல சூட்சும அவஸ்தைகளையுடையதுமான அப்பாவங்களனைத்தையும் அவற்றின் காரண வடிவ அஞ்ஞானத்தையும் சீக்கிரமே நாசஞ்செய்வதாமாதலின், இது சர்வத்தினும் உத்தம பவித்திரமாம்; அதாவது சுத்தப்படுத்துவதாம். ஹே பகவன்! அதீந்திரியமாகிய தருமத்தில் உலகத்திற் சந்தேகமுள்ளதுபோல, இந்த ஞானத்திலும் சந்தேகமிருக்கும் என்னும் அர்ச்சுனனது சங்கை நிகழ இவ்வான்மஞானம் தனது சொரூபத்தானும் பலத்தானும் பிரத்தியட்சமேயாம் என ஸ்ரீ பகவான் உத்தர மருளுகின்றார். 'ப்ரத்யக்ஷாவகமம் இதி' என. ஆண்டு, 'அவகம்யதே அநேந தத்வமஸௌ நம்' எதனாற் பொருளுணரப்படுகின்றதோ அது அவகமமாம். இவ்வாறு விரித்துரைத்தலால் 'அவகமம்' என்னுஞ் சத்தம் பிரமாணத்தின் வாசகமாம். 'அவகம்யதே ப்ராப்யதே இத்யவகம: பலம்' அதிகாரிக்குப் பிராப்தியாவது அவகமமாம். இவ்வாறு விரித்துரைத்தலால் அவகமசத்தம் பலவாசகமுமாம். அவற்றுள் முதலாவதர்த்தத்தில் பிரத்தியக்ஷம் அவகமம் (பிரமாணம்) எதில், அது பிரத்தியக்ஷாவகமமாம் என்னும் அன்மொழித்தொகையால் விருத்தி வடிவ ஞானத்தில் சாக்ஷிப்பிரத்தியக்ஷத்துவஞ் சித்தமாகின்றது. இரண்டாவது அர்த்தத்தில் பிரத்தியக்ஷம் அவகமம் பலம் எதற்கு, அது பிரத்தியட்சாவகமமாம் என்னும் அன்மொழித்தொகையால் அவ்விருத்தி ஞானத்தில் பலத்தானும் சாட்சிப் பிரத்தியக்ஷசத்துவம் சித்தமாம். ஆண்டு யானிப்பொருளையுணர்ந்ததால் இப்போதெனக்கு இப்பொருள் விஷயக அஞ்ஞான நீங்கியது என்னுஞ் சாட்சியநுபவம் எல்லாவுலகத்து நிகழும். அச்சாட்சியநுபவம் அவ்விருத்தி ஞானத்தை உருவத்தானும் அஞ்ஞான நிவிருத்திவடிவப் பலத்தானும் விஷயஞ்செய்கின்றதாமெனக. இவ்வாறு வித்துவான்களது சாட்சிரூப அநுபவத்தால் அவ்வான்ம ஞானம் பெறப்படினும் தனது தருமத்திற்குப் பிரதிகூலமன்றாம். மற்றோ, தருமியவடிவமாம்; அதாவது பலபிறப்பிற்றேடிய நிஷ்காம தருமங்களின் பல வடிவமாம்.

சங்கை :—ஹே பகவன்! அத்தன்மைய ஆன்மஞானம் பெருந்துன்பத்தாற் சம்பாதிப்பதாமன்றோ?

சமாதானம் :—'ஸுஸுகம் கர்தும் இதி' ஹே அர்ச்சுன! பிரஹ்மவேத்தாவாகிய குருவின் கிருபையாற் கிடைக்கப்பெற்ற விசாரத்தைச் சககாரியாக வுடைய தத்துவமசி முதலிய மகா வாக்கியத்தால் அத்தத்துவஞானம் அநாயாசமாகவே சம்பாதித்தற்கேலும்; அது தனதுற்பத்தியில் தேசகாலமுதலியவைகளின் வியவதானத்தை யபேட்சிப்பதன்று. என்னை, அந்த ஞானம் கேவலம் வஸ்துப் பிரமாணாதீனமேயாம். தியானம்போல புருஷேச்சையதீனமன்றும். பொருளோடு பிரமாணஞ் சம்பந்தப்பட்டதின்பின்னர் அப்பொருளுணர்ச்சி யவசியமாய் நிகழுமாதலின்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வாறு அநாயாசமாய் ஆன்மஞானசித்தி உடன்படிலோ, அற்பாயாசத்தாற் சாத்தியமான கிரியைக்கு அற்பமே பலமாம்; மகத் பலமன்றாமாதலின், ஆன்மஞானத்திற்கும் பலமற்பமேயாம், பெரும் பயனிலதாம். மிகுந்த பிரயாசத்தாற் சாத்தியமான கருமத்திற்கே பெரும்பயன் காணப்படுகின்றதாதலின்.

சமாதானம் :—'அவ்யயம் இதி' ஹே அர்ச்சுன! இவ்வான்மஞானம் அநாயாசமாகவே சித்தமாமாயினும் மோட்சவடிவ அதன்பலம் நாசமாவதின்றும். ஆதலின், இஃதவ்வியயமாம் அதாவது, நாசமற்ற மோட்சவடிவ பலமுடையதாம். அந்தக்கரணவிருத்திவடிவ ஞானத்தில் அவ்வியயவடிவத்தன்மை பொருந்தாதாயினும் சுருதியில் சத்தியமான பிரஹ்மத்தை யடைவிப்பதால் ஞானத்தைச் சத்தியமெனக் கூறியதுபோல ஈண்டு ஸ்ரீ பகவானும் மோக்ஷவடிவ அவ்வியய பலத்தைத் தருவதால் அந்த ஞானத்தையும் அவ்வியயமெனக் கூறியருளினர். அக்கினிஹோத்திர முதலியவைகள் பெருமாயாசத்தாற் சித்திப்பனவாமாயினும் அவைகள் நாசமுடைய பலமுடையனவேயாம். இது சுருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. யோ வா ஏதத³க்ஷரம் கா³ர்க்³யவிதி³த்வாஸ்மிம்ல்லோகே ஜுஹோதி யஜதே தப
ஸ்தப்யதே ப³ஹூனி வர்ஷஸஹஸ்ராண்யந்தவதே³வாஸ்ய தத்³ப⁴வதி.

(பொ-ள்.) ஹே கார்க்கி! எவன் இவ்வக்ஷரப் பரமான்மாவை யுணராது இவ்வுலகத்தில் ஹோமமும் யஞ்ஞமும் பல்லாயிரம் வருடம் தவசுஞ் செய்கின்றனோ அக்கருமங்களனைத்தும் இவனுக்கு நாசமுடைய பலத்தையே கொடுக்கின்றன எனபதாம். இவ்வாற்றால் இவ்வான்மஞானஞ் சர்வத்திலும் மேலானதாமாதலின், இதுவே முமுட்சுக்களால் மிகவுமாதரிக்கத்தக்கதாமெனக. (2)

(அ-கை.) ஹே பகவன்! இவ்வாறு இவ்வான்மஞானம் அத்தியந்த சுகமும் சர்வத்திலுமேலானதும் பெரும் பயனுக்குக் காரணமுமாகுமேல், யாவரும் அதன்கண் ஏன் முயலவில்லை? மற்றோ, அவசியம் முயலவேண்டும். பெரும் பயனுடைய சுகமகாரியத்தில் உலகனைத்தும் இயல்பானே பிரவிருத்திக்குமாதலின், யாவர்களு மதிற் பிரவிருத்திக்கவே சம்சாரமார்க்கமே உச்சேதமாம் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். அஶ்ரத்³த³தா⁴னா: புருஷா த⁴ர்மஸ்யாஸ்ய பரந்தப।
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி ॥ (3)

ப-ம். 4 அஶ்ரத்³த³தா⁴னா: 5 புருஷா: 3 த⁴ர்மஸ்ய 2 அஸ்ய 1 பரந்தப 7 அப்ராப்ய 6 மாம் 9 நிவர்தந்தே 8 ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வான்மஞானவடிவ தருமத்திற் சிரத்தையிலாதோன் பரமேசுரனாகிய என்னை யடையாது மிருத்யுவையுடைய சம்சாரமார்க்கத்தில் நிரந்தரம் சுழலுவன். (3)

(வி-ம்) ஹே அர்ச்சுன! இவ்வான்மஞானம் தேடற்கனுயாசமாகவும் சர்வத்தினின்றும் உத்கிருஷ்டமும் மகத்பலமுடையதுமாயினும், இதிற் சர்வப்பிராணிகட்கும் பிரவிருத்தியுண்டாவதில்லை. இதில் இவர்களுடைய சிரத்தையின்மையே காரணமாம். ஹே அர்ச்சுன! இவ்வான்மஞானவடிவ தருமத்தின் சொரூபமும் சாதனமும் பலமும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருப்பினும், அவற்றில் சிரத்தை பண்ணுதவன்; அதாவது, வேதத்திற்கு மாறுன கெட்ட காரணங்களின் தெரிசனத்தால் மலினுந்தக்கரணனுதலின் அவன் ஆன்மஞானத்தின் சொரூப சாதன பலன்களை அப்பிரமாணவடிவமெனவே கொள்கின்றுன். அங்ஙனமே, எப்போதும் பாவத்தையே செய்பவனும் தம்ப முதலிய அசுரசம்பத்தையே தாரணம் பண்ணுபவனுமாகிய அப்பாபான்ம புருஷன் தனது புத்தியாற் கற்பித வுபாயத்தால் ஒருவாறுய் முயலினும், நூல்விதித்த முயற்சியின்மையால் என்னை யடைவதில்லை; என்னை யடைவிக்குஞ்சாதனத்தையுமடைவதில்லை. இதனுனே, சிரத்தையின்றிய அவன் மிருத்யுவையுடைய இச்சம்சாரமார்க்கத்தில் சுழலுவன். அதாவது, அவன் அடிக்கடி கீடபதங்க முதலிய நாகசம்பந்த யோனியின்கண்ணே சுற்றுவன் என்பதாம். (3)

(அ-கை.) ஆண்டுப்பூர்வம் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குச் சொல்லுதற்பொருட்டுப் பிரதிக்ஞைபண்ணிய அவ்வான்மஞானத்தை விதிமுகத்தானும் நிடேதமுகத்தானும் துதித்தருளினர். அதில் முதற்சுலோகத்தாலோ விதிமுகமாய்த் துதித்தருளினர். 'அஶ்ரத்ததாநாஃ புருஷாஃ' என்னும் மூன்றுவது சுலோகத்தாலோ நிடேதமுகமாய்த் துதித்தருளினர். அவற்றுள் எப்பொருட்பேற்றுல் எப்பெரும்பயனைக் கூறப்படுகின்றதோ அஃதப்பொருளின் விதிமுகத்துதியாம். எப்பொருட்பேறின்மையால் எப்பெருந்துன்பங் கூறப்படுகின்றதோ அஃதப்பொருளின் நிடேதமுகத்துதியாம். இவ்வாறு மூன்று சுலோகங்களால் ஆன்மஞானத்தைத்துதித்ததால் அதில் அபிமுகமாகிய அர்ச்சுனனுக்கு ஸ்ரீ பகவான் இப்போதிரண்டு சுலோகங்களால் அவ்வான்மஞானத்தை யருளிச்செய்கின்றுர்.

சு-ம். மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா ।
மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்திதஃ ॥ (4)

ப-ம். 2 மயா 6 ததம் 3 இதம் 4 ஸர்வம் 5 ஜகத் 1 அவ்யக்தமூர்த்திநா 8 மத்ஸ்தாநி 7 ஸர்வபூதாநி 12 ந 9 ச 10 அஹம் 11 தேஷு 13 அவஸ்திதஃ

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வியக்தமூர்த்தியுடைய பரமேசுரனாகிய என்னுல் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. இதனுனே, இச்சர்வபூதங்களும் என்னிடத்திருக்கின்றனவாம். பரமேசுரனாகிய நானே இப்பூதங்களிடத்திருப்பவனலேன்! (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பூதபௌதிகவடிவமும் அவைகளின் காரணவடிவமுமாகக் காணப்படு மிவ்வுலகனைத்தும் பரமேசுரனாகிய எனதஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டனவாம். இவ்வுலகனைத்தும் அதிட்டானவடிவமும் பாமார்த்த சத்திய வடிவமுமாகிய என்னுல் சத்துரூபத்தானும் ஸ்புரணரூபத்தானும் வியாபிக்கப்பட்டன. கயிற்றிற் கற்பிதமான பாம்பு மாலை தண்டம் நீர்த்தாரை முதலியவைகட்கு

அதிட்டானமாகிய கயிறு தனது இதமம்சத்தான் வியாபித்திருப்பதுபோல அதிட்டானவடிவ பரமேசுரனுகிய நானும் எனது சத்தாஸ்புரணரூபங்களால் இவ்வுலகனைத்தும் வியாபித்திருக்கின்றனன்.

சங்கை :—ஹே பகவன்! எனது ரதத்திலுள்ள பரிச்சின்னமான வசுதேவ புத்திரனுகிய தங்களால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டதே யெவ்வாறும், மற்றோ, வியாபித்தல்கூடாது. தாங்கள் கூறியது பிரத்தியட்ச விரோதமாதலின்.

சமாதானம் :—‘ 𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾 ’ என, இந்திரியங்கட்குப் புலப்படாத ஸ்வப்பிரகாச அத்துவிதீய சச்சிதானந்தமூர்த்தியையுடையவன் அவ்வியக்தமூர்த்தியாம். அத்தன்மைத்தான பரமேசுரனுகிய என்னுல் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவாம். உனது மாம்சமயநேத்திரத்தாற் காணப்பட்ட இத்தூல சரீரத்தால் யானிவ்வுலகனைத்தையும் வியாபிக்கவில்லை. ஆதலின், நான் கூறியது பிரத்தியட்சத்திற்குமாறின்றும். என்னுல் வியாபிக்கப்பட்டிருத்தலினுனே எனது சத்தாஸ்புரணரூபங்களால் சத்துப்போலவும் ஸ்புரணம்போலவும் யாவு மிருக்கின்றன. அங்ஙனமாயினும், நான் அக்கற்பித பூதங்களிடத்தில் உண்மையிலிருப்பவனலேன். என்னை, கற்பிதமிலாத எனக்கும் கற்பிதமாகிய அவைகட்கும் சம்பந்தமொன்று மமையாமையின், சம்பந்தமிலாது அப்பூதங்களிடத்தில் உண்மையில் என திருப்புப்பொருந்தாது; இதுபற்றியே வேதமுணர்ந்தோர் இவ்வாக்கியங் கூறுகின்றனர் :—

ஆ-சு. 𑌯𑌤𑍍𑌰 𑌯𑌦𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌕𑍃𑌤𑍇𑌨 𑌗𑍁𑌣𑍇𑌨 𑌦𑍋𑌷𑍇𑌣 𑌵𑌾𑌣𑍁 ।
𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣𑌾𑌪𑌿 𑌨 𑌸 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 ॥

(பொ-ள்.) எவ்வதிட்டானத்தில் எப்பொருள் கற்பிதமாமோ அக்கற்பிதப் பொருளாய குணத்தோடாயினும் தோடத்தோடாயினும் அவ்வதிட்டானம் சிறிதளவும் சம்பந்தப்படுவதின்றும். (4)

(அ-கை.) ஹே பகவன்! சர்வவிகாரரகிதமும், சர்வ பரிபூரணமுமாகிய தாங்கள் பரப்பிரஹ்மமே; அத்தன்மைத்தான தங்கட்குப் பூதங்களிடத்திருப்பு உண்மையில் இலாதொழிக; ஆனுல், அப்பூதங்களோ தங்களிடத்தில் உண்மையிலிருக்கின்றனவாம் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌨 𑌚 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌭𑍂𑌤𑌭𑍃𑌨𑍍𑌨 𑌚 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑍋 𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃 ॥ (5)

ப-ம். 3 𑌨 𑌚 2 𑌮𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌿 1 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 7 𑌪𑌶𑍍𑌯 4 𑌮𑍇 6 𑌯𑍋𑌗𑌂 5 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂 10
𑌭𑍂𑌤𑌭𑍃𑌤𑍍 14 𑌨 12 𑌚 13 𑌭𑍂𑌤𑌸𑍍𑌥𑌃 8 𑌮𑌮 9 𑌆𑌤𑍍𑌮𑌾 11 𑌭𑍂𑌤𑌭𑌾𑌵𑌨𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சர்வ பூதங்களும் பரமேசுரனுகிய என்னிடத்திலாதனவாம். என்னுடைய இவ்வற்புதப் பிரபாவத்தை நீ காணுதி. எனது சச்சிதானந்த சொரூபம் பூதங்களைத் தாரணம் பண்ணினும் பூதங்களை யுண்டாக்கினும் அப்பூதங்களிடத்திருப்பதன்றும். (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வானிலுள்ள சூரியனிடத்தில் நீரலைதல் முதலிய விகாரங்கள் ஆரோபிக்கப்படுவதுபோல, பரமேசுரனுகிய என்னிடத்தில் இப்பூதங்களனைத்தும் உண்மையில் இருப்பனவன்றும். அர்ச்சுன! நீ இப்பிரகிருதி சம்பந்தமாகிய மநுட புத்தியை விடுத்து நுண்ணிய விசாரதிருட்டியால் எனதைசுவரியத்

தைக்காணுதி. அதாவது, உலகப்பிரசித்தமான மாயாவியினுடைய செய்யொணுப் பொருளைச்செய்விக்குஞ் சாமர்த்தியவடிவப்பிரபாவம்போல, மாயாவிவடிவப் பரமேசுரனாகிய என்னுடையசெய்யொணுததைச்செய்யும் சாமர்த்தியவடிவப் பிரபாவத்தை நீ காணுதி. நான் உண்மையில் எப்பொருட்கும் ஆதாரவடிவமுமலேன் ஆதேயவடிவமுமலேனுயினும் இப்பூதங்களிடத்துள்ளேன்; என்னிடத்திவைகளுமுள்ளன; இஃதெனது மாமாயையாம். அர்ச்சுன! எனக்குச் சச்சிதானந்தகனவேகரசமே பரமார்த்தசொரூபமாம்; அதுவே பூதபிருத்தாம். அதாவது, என்னுடைய அந்தச்சொரூபமே உபாதானகாரணரூபத்தன்மையால் இக்காரியவடிவபூதங்களனைத்தையுந் தாரணமும் போஷணமும் பண்ணுகின்றது. ஆதலின், எனது சொரூபம் பூதபிருத்து எனப்படுகின்றது. அன்றியும் அந்த எனது சொரூபமே கருத்தாவடிவத்தால் பூதங்களனைத்தையும் உண்டாக்குகின்றது. ஆதலின், எனது சொரூபம் பூதபாவனமெனப்படுகின்றது. இவ்வாறு இப்பூதங்களனைத்திற்கும் உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாயினும் எனது சச்சிதாநந்தவடிவம் உண்மையில் அசங்க அத்துவிதீய சொரூபமாதலின் அப்பூதங்களிடத்திருப்பதன்றும். அதாவது, கனக்காண்போன் உண்மையில் கனப்பொருளோடு சம்பந்தப்படாததுபோல எனது சொரூபமும் உண்மையில் இக்கற்பிதபூதங்களோடு சம்பந்தப்படாததேயாம். ஈண்டு, 'மத்ஸ்தாநி' என்னும் வாக்கியத்திலுள்ள ஆறும் வேற்றுமையானது கற்பனுபேதத்தாலாம்; இராகுவினது சிரசு என்னும் வாக்கியத்தில் இராகுவிற்குஞ் சிரசிற்கும் அபேதமாயினும் கற்பனுபேதத்தால் ஆறும்வேற்றுமையமையுமாறு போலாமென்க. (5)

(அ-கை.) ஈண்டுப் பூர்வசுலோகத்தில் ஸ்ரீ பகவான் பரமேசுரனாகிய எனக்கும் இப்பூதங்களனைத்திற்கும் உண்மையாய்ச் சிறிதுஞ் சம்பந்தமில்லையாயினும் நான் அப்பூதங்களிலிருப்பவன், என்னிடத்தவைகளிருப்பனவாம் எனத் திருவாய் மலர்ந்தருளினர். ஈண்டு பரமேசுரனாகிய தங்கட்கும் இப்பூதங்கட்கும் உண்மையிற் சம்பந்தமின்றேல் தங்கட்கு மவைகட்கும் ஆதாராதேயத்தன்மை எவ்வாறும் எனச் சங்கையுண்டாக அச்சங்கை யகற்றுவான் ஸ்ரீ பகவான் உண்மையிற்றம்முள் சம்பந்தமிலாத பொருள்கட்கும் ஆதாராதேயத்தன்மையை உலகப்பிரசித்ததிட்டாந்தத்தால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். யதாகாஶஸ்திதோ நித்யம் வாயுஃ ஸர்வத்ரகோ மஹாந் ।
ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்தாநீத்யுபதாரய ॥ (6)

ப-ம். 1 யதா 6 ஆகாஶஸ்திதஃ 4 நித்யம் 5 வாயுஃ 2 ஸர்வத்ரகஃ 3 மஹாந் 7 ததா 8 ஸர்வாணி 9 பூதாநி 10 மத்ஸ்தாநி 11 இதி 12 உபதாரய.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எல்லாத்தேசங்களினுஞ் செல்லப்பட்டதாயும் மகத்பரிமாணமுடையதாயும் இடைவிடாது சலிக்கு மியல்புடையதாயுமுள்ள வாயுவானது வானிலிருப்பதுபோல, இப்பூதங்களனைத்தும் பரமேசுரனாகிய என்னிடத்தி னிலைத்திருப்பனவென நீ நிச்சயித்துக்கொள்ளுதி. (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கிழக்கு முதலிய சர்வ திசைகளிலும் கமனம் பண்ணப்பட்டதாயும் மகத்பரிமாணமுடையதாயும் உத்பத்தி திதிலய காலங்களில் சலனசுபாவத்தையுடையதாயுமுள்ள வாயுவானது அசங்கசுபாவமுடைய ஆகாசத்தி னிலைத்திருக்கின்றது. ஆனாலோ அவ்வாயு அவ்வசங்காகாசத்தோடு உண்மையில் ஒருபோதும் சம்பந்தப்படாததுபோல, அசங்க சுபாவமுடைய பரமேசுர

ளுகிய என்னிடத்தில் சம்பந்தமின்றியே இவ்வாளுதி பூதங்களிலேத்திருக்கின்றன வாம். கருத்திதுவாம் :—அசங்க சுபாவமுடைய ஆகாசத்தில் உண்மையில் வாயு வின் சம்பந்தமிலாதிருந்தும் வாயு வானிலுள்ளது எனச் சொல்லப்படுவதுபோல, அசங்க சுபாவமுடைய பாமேசுரளுகிய என்னிடத்தில் உண்மையில் இவ்வாளுதி பூதங்களின்றேனும் இவைகள் என்னிடத்திருப்பனவெனச் சொல்லப்படுகின்றன. இவ்வாறு உண்மையிற் சம்பந்தமின்றேனும் என்னிடத்தில் இக்கற்பிதவுலகத்தின் ஆதாரத்தன்மையும், அதில் எனது ஆதேயத்தன்மையும் ஆகாச திருஷ்டாந் தத்தால் விசாரித்து நிச்சயம் பண்ணுதி. அல்லது, 'ஸஂ மொஹஂயவ-ஷஃ ஸஂமொஹிநஹஜ்தெ' என்பது முதலிய பல சுருதிகள் பிரத்தியக்க பின்ன அசங்கப்பிரஹ்மத்தினிடத்தில் வாளுதி சர்வ பூதங்களின் சம்பந்தத்தையு நிடேதிக்கின்றன. அச்சுருதிகளிடத்தில் விசுவாசமின்றி அப்பிரஹ்மத்தினிடத் தில் வாளுதி பூதங்களின் சம்பந்தத்தை அங்கீகரிக்கும் வாதியை இது விளுவ வேண்டும் :—அவ்வசங்கப் பிரஹ்மத்தினிடத்தில் அப்பூதங்கள் சம்யோக சம்பந் தத்தாலிருக்கின்றனவோ? அல்லது சமவாய சம்பந்தத்தாளுே? அல்லது தாதான் மிய சம்பந்தத்தாளுே? அவற்றுள் முதலாவது சம்யோக பட்சத்திலும், பிரஹ்மத் திற்கும் பூதங்கட்கும் சர்வாம்சமும் சம்யோகமாமெனின் அஃதேலாது. அபரிச் சின்னமாகிய பிரஹ்மத்திற்குப் பரிச்சின்னமாகிய பூதங்களோடு சர்வாம்சமும் சம்யோகமாதல் பொருந்தாது. ஏகதேசத்தாற் சம்யோகமெனிலோ அதுவும் பொருந்தாததாம். என்னே, எப்பொருள்கள் சாவயவமாமோ அவைகட்கே தம் முள் ஏகதேசத்தாற் சம்பந்தமாம்; விருக்ஷவானரங்கட்கேபோலும். பிரஹ் மமோ நிரவயவமாமாதலின் அதற்கும் அப்பூதங்கட்கும் ஏகதேசத்தாலும் சம்பந்தமமையாதாம். சமவாய சம்பந்தத்தாலேனும் இரண்டாவது பக்ஷத்தை அவன் கொள்ளினே அதுவும் பொருந்தாது; என்னே, குணகுணிக்கும் ஜாதிவியத் திக்கும் அவயவி அவயவங்கட்குமே வாதியால் சமவாய சம்பந்தங்கொள்ளப்பட் டிருக்கிறது. ஈண்டுப் பிரஹ்மத்திற்கும் பூதங்கட்கும் குண குணித்தன்மையே னும் சாதிவியக்தித்தன்மையேனும் அவயவி அவயவத்தன்மையேனும் பொருந்தா தாதலின் சமவாய சம்பந்த பக்ஷமுமசங்கதமாம். தாதான்மியத்தாலேனும் மூன் ருவது பக்ஷத்தைக் கொள்ளினே அதுவுமமையாது. என்னே, பிரஹ்மமோ சச்சி தாநந்த பரிபூரணசொரூபமாம். ஆகாசாதிகளோ அசத்து ஜட துக்க பரிச்சின்ன வடிவங்களாம். அத்தன்மைய மாறுபாடான சுபாவமுடைய ஆகாசாதி பூதங்கள் பிரஹ்மத்தினிடத்தில் தாதான்மிய சம்பந்தத்தானிருப்பனவா மென்பதமையாது. ஆதலின், பரிசேடமாய் ஆகாசாதிகட்குப் பிரஹ்மத்தினிடத்தில் ஆரோபிதவடிவ கற்பித சம்பந்தமே கொள்ளத்தக்கதாம்; அஃதெமக்கும் இஷ்டமேயாம். என்னே, எவ்வதிட்டானத்தில் எப்பொருள் ஆரோபிதமாமோ அப்பொருள் அவ்வதிட்டா னத்தில் பெயர் மாத்திரமேயாம்; உண்மையிலுளதன்று. கயிற்றிற் கற்பிதமான சர் ப்பம் கிளிஞ்சியில் கற்பிதமான வெள்ளி நாமமாத்திரமேயன்றி உண்மையிலாதன போலப் பிரஹ்மத்தினிடத்திற் கற்பிதமான ஆகாசாதிகளும் நாமமாத்திரமேயன்றி உண்மையிலின்றும். அத்தன்மைய கற்பித பூதங்களின் சம்பந்தத்தால் அதிட் டானப் பிரஹ்மத்தின் இயல்பாகிய அசங்கத்தன்மைக் கிழுக்கின்றுமென்க. ஒரு வியாக்கியானத்தில் இச்சுலோகத்திற்கு இவ்வாறு பொருள்பண்ணுகின்றார்கள். அஃதாமாறு :—முன்னர் எட்டாவது அத்தியாயத்தில் 'கிஂதஜ்ஹ' அப்பிரஹ்மம் யாது என்னும் விளுவிற்கு 'அக்ஷரஂவரஂ஬்ரஹ்ம' அக்ஷரமெனும் சுத்த துவம் பதார்த்தமே நிருபாதிகப்பிரஹ்மம் என உத்தரங் கூறப்பட்டது. அந்நிருபாதிகப் பிரஹ்மமே. ஈண்டு, 'ஶயாதஶிஂஸவ-ഉ' என்பது முதலிய சுலோகங்களாற் பிரதிபாதிக்கப்படுகின்றது. இப்போது அந்நிருபாதிகப்பிரஹ்மத்திற்கு அக்ஷர

மெனுஞ் சீவனோடு அபேதத்தைத் திருட்டாந்தத்தாற் கூறுகின்றார் 'யதா
ஸ்தித: இதி' என. ஈண்டு, வாயுவென்பதால் சூத்திரான்மாவே கொள்ளத்
எதனாலெனின், 'வாயுர்வை கௌதம தத் ஸூத்ரம்' என்னுஞ்சுருதியில் சூத்திர
வாயுவென்னும் பெயராற் கூறப்படுகின்றது. அச்சூத்திரான்மவடிவ வாயு
டுங் கமனம்பண்ணுவதாம். அதாவது, சமட்டிலிங்கதேகவடிவமானதால்
டும் வியாபகமாம். அஃதன்றியும் அது மகத்தாம். அதாவது, இவ்வெளி
னின்றும் விலட்சணமாம். அத்தன்மைய சூத்திரான்மவடிவ வாயுத் தனது
வடிவ அவ்வியாகிருதமெனும் ஆகாசத்தில் நித்தியமாயிருப்பதுபோல,
நித்தியமென்றதால் சூத்திரான்மாவிற்கு முக்காலத்தும் அவ்வியாகிருத
மாகாசத்தோடு சம்பந்தங்கூறப்பட்டது. இப்பூதங்களனைத்தும் பரமேசு
என்னிடத்தி னிலைத்திருப்பனவாம். ஈண்டு, பூதமென்பதால் உபாதியற்ற
பதார்த்தவடிவ சீவசேதனமே கொள்ளற்பாலது. அஃதுண்மையிலொன்
னும் உலகதிருட்டியால் ஸ்ரீ பகவான் பலவென வருளினர். கருத்திதுவா
சர்வ காரியங்களும் தமது தோற்றத்தின்முன்னரும் நாசத்தின் பின்னரும்
திரிகாலத்தும் தமதுபாதானகாரணத்தில் அபேதரூபமாயிருப்பனபோன்
சீவர்களனைவரும் அந்தக்கரண முதலியவுபாதிகள் தோற்றுவதற்கு முன்னும்
மானதின் பின்னும் இடையிலும் அப்பிரஹ்மத்தினின்றுவேறன்றாம். கட
கடவடிவவுபாதி தோன்றுவதற்கு முன்னும் நாசமானதின் பின்னும் இருக்கு
போதும் மாவானினும் பின்னமன்றாம்; மற்றோ, அக்கடவான் முக்கால
மாவான்வடிவமேயாதல்போல இச்சீவனும் முக்காலத்தும் பிரஹ்மவடிவமே
சுருதியும், 'அயமாத்மா ப்ரஹ்ம அஹம் ப்ரஹ்மாஸ்மி' இப்பிரத்தியக்கான்மாப் பிர
வடிவமேயாம், நான் பிரஹ்மரூபமாகின்றேன் எனக் கூறுகின்றதென்க.

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் இவ்வுலகந்தோற்றும்போதும்
கும்போதும் அஃதோடு அசங்கவான்மாவிற்குச் சம்பந்தமின்மை கூறப்பட்
பிரளயகாலத்திலும் சம்பந்தமின்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥

ப-ம். 3 ஸர்வபூதாநி 1 கௌந்தேய 5 ப்ரக்ருதிம் 6 யாந்தி 4 மாமிகாம் 2 கல்ப
க்ஷயே 7 புந: 10 தாநி 8 கல்பாதௌ 11 விஸ்ருஜாமி 9 அஹம்.

(அ-ம்.) ஹே கௌந்தேய! பிரளயகாலத்தில் இப்பூதங்களனைத்தும் பர
சுரனாகிய எனது சத்திவடிவ முக்குணவடிவப்பிரகிருதியையடைகின்றன. மீண்
சிருட்டிகாலத்தில் நான் இப்பூதங்களை உண்டாக்குவேன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எனது சத்திவடிவமாய்க்கற்பிக்கப்பட்ட மாயை
'மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத்' என்னுஞ் சுருதி உலகமனைத்திற்கும் பிர
வடிவமெனக்கூறுகின்றது. அத்தன்மைத்தான காரணவடிவ மாயாப்பிர
யையே ஆகாசாதி பூதங்களனைத்தும் பிரளயகாலத்தில் அடைகின்றன.
அவ்வாகாசாதிபூதங்களனைத்தும் பிரளயகாலத்தில் தமது காரணவடிவ
யெனும் பிரகிருதியின்கண்ணே சூட்சுமவடிவத்தாலிலயபாவத்தையடைகின்
அர்ச்சுன! அப்போது பிரகிருதியில் பின்னமின்மையைடைந்திருந்த அவ்வா
களையே சர்வ சக்தியையுடைய சர்வக்ஞ பரமேசுரனாகிய நான் சிருட்டிகால
வெவ்வேறாக்கி வெளிப்படுத்துகின்றேன்.

மேசுரன் இவ்வாறுதியுலகைத் தோற்றுவி
போகத்தின்பொருட்டோ? அல்லது வே

போகத்தின்பொருட்டோ? அவற்றுள் தனது போகத்தின்பொருட்டெனின் அமை யாது. எதனாலெனின், சர்வசாக்ஷிவடிவமும் சைதன்யமாத்திரவடிவுமாகிய பர மேசுரனிடத்தில்சுகதுக்கங்களின்போக்திருத்தன்மைபொருந்தாது. ஓர்காலுடன் படினே அவனிடத்துநம்மனோர்கள்போலச்சம்சாரித்தன்மையுமுடன்படல்வேண் டும் அதுவோ பொருந்தாது. என்னை, எதனிடத்துச் சம்சாரித்தன்மையுளதோ அதனிடத்து ஈசுரத்தன்மை யிராது; எதனிடத்து ஈசுரத்தன்மை யுளதோ அத னிடத்துச் சம்சாரித்தன்மை யிராது. ஆதலின், பரமேசுரன் தனது போகத்தின் பொருட்டுச் சிருட்டியாமெனலடாது: வேறெவர் போகத்தின் பொருட்டேனும் எனும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. எதனாலெனின், 'நாந்யோऽதோஸ்தி த்ரஷ்டா' என்பது முதலிய சுருதி பரமேசுரரின் வேறாய் வேறு சேதனமின்மையைக் கூறுகின்றது. சீவசேதனம் பரமேசுரனின் வேறாமெனின்அதுவு மசங்கதமாம். என்னை, 'அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி' என் பது முதலிய சுருதிகள் அப்பரமேசுரனுக்கே யாண்டுஞ் சீவத்தன்மை கூறுதலி னானும் 'தத்த்வமஸி அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பன முதலிய மகாவாக்கியங்கள் சீவ னுக்குப் பிரஹ்மத்தன்மையைக் கூறுதலினானும் பரமேசுரனின் வேறாய்ச் சேதன வடிவபோக்தாவென்பதொன்றின்றாம். சைதன்யவடிவப் பரமேசுரனின் வேறு பொருள் சடமாமாயினும் அச்சடபதார்த்தத்தில் சுகதுக்கபோக்திருத்தன்மையே பொருந்தாது. அல்லது, அச்சடபதார்த்தங்கட்குப் போக்தாத்தன்மையை யுடன் படினே போக்தாபோக்கியம் என்னும் பேதமே பெறப்படாதாமாதலின் அச்சட பதார்த்தங்களின் போகத்தின்பொருட்டுச் சிருட்டியாமெனலும் அசங்கதமாம். அல்லது ஒருவர் போகத்தின்பொருட்டு இச்சிருட்டி யமையாவாறுபோல ஒருவ ரின் மோட்சத்தின்பொருட்டும் பொருந்தாதாம். என்னை, பந்தமென்பதொன் றுண்மையிலுளதாமெனின் அதன் மோட்சத்தின்பொருட்டுச் சிருட்டியுமாம். பந்தமென்பதே ஒன்று உண்மையிலின்றாம். அன்றியும், இச்சிருட்டி அம்மோட் சத்திற்கு மாறுபாடாய் விரோதியேயாம். எது எதற்கு விரோதியாமோ அஃததன் பிராப்திக்காகாவாமாதலின் ஒருவர் மோட்சத்தின்பொருட்டும் இச்சிருட்டியாகாத தாம். இதுமுதற் பலவகையான பொருத்தமிலாத்தன்மைகள் இச்சிருட்டியிற் பிராப்தமாகின்றன. அப்பொருத்தமின்மைகளே சிருட்டியில் மாயாமயத்தன் மையைப் பெறுவிக்கின்றனவாதலின் அப்பொருந்தாமைகள் எமது சித்தாந்தத் திற்குப் பிரதிகூலமாகாதனவேயாம். மற்றோ, அநுகூலமேயாம். இதுபற்றியே அவ்வநுபபத்திகள் பரிகரிக்கத்தக்கனவன்றாம். இக்கருத்துக்களைப்பற்றியே ஸ்ரீ பகவான் மாயாமயத்துவ ஏதுவினால் மித்தியாத்தன்மையைச் சித்தம் பண்ணற் பொருட்டு மூன்று சுலோகங்களாற் றொடங்கியருளுகின்றார்.

சு-ம். ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய விஸ்ருஜாமி புந: புந: ।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்நமவஶம் ப்ரக்ருதேர்வஶாத் ॥ (8)

ப-ம். 2 ப்ரக்ருதிம் 1 ஸ்வாம் 3 அவஷ்டப்ய 12 விஸ்ருஜாமி 10 புந: 11 புந: 9 பூதக்ராமம் 7 இமம் 8 க்ருத்ஸ்நம் 6 அவஶம் 4 ப்ரக்ருதே: 5 வஶாத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய யான் எனது மாயைவடிவப் பகுதியைப்பற்றி அம்மாயையின் மகிமையால் உண்டாகிய இவ்வெல்லா ஆகாசாதி பூதங்களின் சமுதாயத்தை மீண்டும் மீண்டும் உண்டாக்குவேன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னிடத்திற் கற்பிதமாகவும் எனததீனமாகவுமுள்ள மாயையெனும் அநிருவசனீயமான எனது பிருகிருதியை

ஆசிரயித்தே அதாவது, அப்பிரகிருதியை எனது சத்தாஸ்பூர்த்திப்பிரா்தி வாயிலாய்த்திடப்படுத்தி மாயாவியாம் பரமேசுரனாகிய நான் பிரத்தியட்சப் பிரமா ணத்தாற் சித்தமாகிய இவ்வானுதிகளின் சமுதாயவடிவப்பிரபஞ்சத்தை ஜீவர்களின் கருமத்தை யநுசரித்துப் பலவகையாயுண்டாக்குவேன். அதாவது, ஸ்வப்ன திருஷ் டாவாகிய புருஷன் கனவுலகைக் கற்பனாமாத்திரத்தால் உத்பத்தி செய்கின்றதே போலப் பரமேசுரனாகிய நானும் இவ்வாகாசாதிகப்பிரபஞ்சத்தைக் கற்பனாமாத்தி ரத்தால் உற்பத்தி பண்ணுவேன். எத்தன்மைத்தாமெனின் இவ்வாகாசாதிபூதக் கூட்டங்கள் பிரகிருதிவசத்தாற் றோற்றுவனவாம்; அதாவது, மாயாவடிவப் பிர கிருதியின் அவித்தை முதலிய ஐவகைக்கிலேசங்கட்குங் காரணவடிவமான ஆவர ணவிட்சேபசத்திரூபப்பிரபாவத்தாலுண்டாகின்றனவாம். ஒரு வியாக்கியானத் தில் 'ஸவஸ்ய வாசுரதெவ-ஜஸாக' என்னும் வாக்கியத்திற்குத் தனது சுபாவம் பிரகிருதியாம். அதன் வசத்தால் இவ்வுலகம் அவசமாம்; அதாவது, இராகத்து வேஷாதிகளின் அதீனமாம் எனப்பொருளுரைத்தனர். வேறு ஒரு வியாக்கியா னத்தில் இவ்வாக்கியத்திற்கு அவித்தை முதலிய ஐவகைக்கிலேசங்களும் ஈண்டுப் பிரகிருதிசத்தத்தாற் கொள்ளற்பாலன. அக்கிலேசவடிவப் பிரகிருதிவசத்தால் அதாவது சுபாவத்தால் இப்பூதசமுதாயம் அவசமாம். அதாவது, சுவதந்திர மின்றியதாமென்க. (8)

(அ-கை.) இவ்வுலகத்தின் தோற்றநிலை யீறு முதலியன கனப்போல மித்தி யாவடிவமாதலின் உண்டுபண்ணல் முதலிய அக்கருமங்கள் கனக்காண்போனைப் போலப் பரமேசுரனாகிய என்னைப் பந்தப்படுத்துவனவன்றாம் என்னுமர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ந ச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ।
உதாஸீநவதாஸீநமஸக்தம் தேஷு கர்மஸு ॥ (9)

ப-ம். 10 ந ச 7 மாம் 8 தாநி 9 கர்மாணி 11 நிபத்நந்தி 1 தநஞ்ஜய 2 உதாஸீ நவத் 3 ஆஸீநம் 6 அஸக்தம் 4 தேஷு 5 கர்மஸு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உதாசீனனைப்போலுள்ளவனும் அக்கருமங்களில் ஆசக்தியின்றியவனுமாகிய என்னை அச்சிருட்டியாதிகருமங்கள் பந்தப்படுத்துவன வன்றாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மாயாவியானவன் தனது மாயையால் பலவகைப் பொருள்களைத்தோற்றுவித்து நிலைப்படுத்தி யொடுக்குகின்றான். ஆனாலோ, அக் கருமங்கள் அவனைப் பந்தப்படுத்தாததேபோலவும் ஸ்வப்பன திருஷ்டாவான புருஷன் ஸ்வப்பனத்தில் பலவகைப்பொருள்களின் தோற்றமாதிகளைச் செய் யினும் அக்கருமங்கள் அவனைப்பந்தப்படுத்தாதனபோலும் பரமேசுரனாகிய நானும் எனது மாயாசத்தியால் இவ்வானுதிப்பிரபஞ்சத்தின் சிருட்டியாதிகளைச்செய்கின் றேனாயினும் அக்கருமங்கள் பரமேசுரனாகிய என்னைப் பந்தப்படுத்துவனவன்றாம். அதாவது, அச்சிருட்டியாதிகருமங்கள் அநுக்கிரக நிக்கிரகங்களால் சுகிதுக்கியாக என்னைச் செய்வதின்றாமாதலின் அவைகள் சுவப்பனம்போல மித்தியாவடிவமே யாம். அக்கருமங்கள் தங்களை எக்காரணத்தாற் பந்தப்படுத்துவதில்லை என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதிற் காரணங்கூறியருளுகின்றார். 'உதா ஸீநவதாஸீநம் இதி' அர்ச்சுன! தம்முள் விவாதமிடும் இருவர்களின் வெற்றி வெற்றியின்மைவடிவ கருமசம்பந்தமற்றவனும் அவ்விருவரிடத்தும் உபேட்சை செய்பவனுமாகிய ஒருதாசீனபுருஷன் அவர்களின் ஜயாபஜயத்தாலாய சுகதுக்கங் களற்றவனாய் விகாரமற்றிருக்கின்றான். அதுபோல அசங்கபரமேசுரனாகிய நானும்

எப்போதும் நிருவிகாரவடிவமாயிருக்கின்றேன். ஈண்டுப் பரமேசுரவடிவ தாஷ்டாந்தத்தில் உதாசீனவடிவ திருஷ்டாந்தத்தைப்போல விவாதமிடு மிருவரிலரேனும் இரண்டிலும் உபேட்சகத்தன்மை சமமேயாம். அதைக்கொண்டே இங்கே 'உதாஸீநவதாஸீநவத்' என்னும் வாக்கியத்தினீற்றில் 'வது' என்னும் பிரத்தியயத்தைக் கூறியருளினர். அர்ச்சுன! பரமேசுரனாகிய நான் உதாசீனனைப்போல சுகதுக்க முதலிய விகாரங்களற்றவனாயிருத்தலின் நான் அக்கருமங்களில் அசக்தனானேன். அதாவது, நானிக்கருமத்தைச்செய்கின்றேன், இக்கருமபலத்தை நுகர்வேன் என்னும் கருத்திருத்துவாபிமான வடிவமும், பலாபிலாஷை வடிவமுமாகிய சங்கமற்றவன். இதனாலேயே என்னை அக்கருமங்கள் பந்தப்படுத்துவனவன்றாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவானிப்பொருளைக் காண்பித்தருளினர்:—கருத்திருத்துவாபிமானமும் பலேச்சையுமின்றிய என்னை அக்கருமங்கள் பந்தப்படுத்தாதவாறுபோல மற்றோரதிகாரியும் அவ்வாறிருந்து கருமத்தைச்செய்யினும் அந்த லௌகிக வைதிககருமங்கள் அவனைப் பந்தப்படுத்தமாட்டாதனவாம். கருத்திருத்துவாபிமானமும் பலேச்சையுமிருந்திடினோ இம்மூடபுருஷன் கோசகாரப்புழுவைப்போல அக்கருமங்களாற் பந்திக்கப்படுகின்றானென்பதாம். ஈண்டுப் பகவான் தானுபதேசித்த அர்த்ததாரணத்தில் அர்ச்சுனனை உற்சாகம் பண்ணற்பொருட்டு 'ஹெயுநஂஜய' என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனனது மகத்பிரபாவத்தைக் குறிப்பித்தருளினர். அதாவது, யுதிட்டிராது ராஜசூயயாகத்தின்பொருட்டு நீ சர்வ ராஜாக்களையுஞ் செயம்பண்ணித் தனத்தைக் கொண்டுவந்தனையாதலின் உனக்குத் தனஞ்சயன் என்னும் பெயர் வந்தது. அத்தன்மைய பிரபாவமுடையவன் நீ என்பதாம். ஒரு வியாக்கியானத்தில் இச்சுலோகத்திற்கு இப்பொருட்படுத்துகின்றனர் :—

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலகத்தில் சில பிராணிகள் சுகிகள், சிலர் துக்கிகள், சிலர் தனிகர்கள், சிலர் தரித்திரர்கள், சிலர் புத்திமான்கள், சிலர் மூடர்கள் என்றிவ்வணம் விஷமசிருட்டிபண்ணுந் தோஷமும் தயையின்றிய தோஷமும் தங்கட் கவசியம் உண்டாமன்றோ?

சமாதானம் :—"நஅஉாஂதாநிகஉஓாணி" ஹே அர்ச்சுன! விஷமசிருஷ்டி வடிவவினை என்னைப் பந்தப்படுத்தாது. அதன்கண் ஏதுவையருளுகின்றார். 'உதாஸீநவதாஸீநஂ' என. அர்ச்சுன! மேகமானது ஒரு வித்தின்கண் ராகத்தையும் ஒரு வித்தின்கண் துவேஷத்தையுஞ் செய்யாது உதாசீனமாய் நீரைப் பெய்கின்றது. பின்னரோ அவ்வவ்வித்துவின் அநுசாரமாய் வெவ்வேறு பலனுண்டாகின்றது. அதுபோல, பரமேசுரனாகிய நானும் புண்ணியவான்களிடத்தும் பாபிகளிடத்தும் இராகத்துவேஷங்களைச் செய்யாது இவ்வுலகத்தை உண்டாக்குகின்றேன். பின்னர் பிராணிகள் தத்தம் புண்ணியபாவ அனுசாரமாய் அவ்வச்சுக துக்காதிரூப வெவ்வேறு பலத்தைபடைவர்கள். ஆதலின், பரமேசுரனாகிய எனக்கு விஷமத்தன்மையானும் தயையின்மையானுமுண்டாந் தோஷங்களின்றாமென்க. (9)

(அ-கை.) ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் 'ஹூதமாஉஂ ஸஜாமி' என்னும் வாக்கியத்தால் தங்கட்குச் சர்வ பூதங்கட்கும் கருத்தனாந்தன்மையைக் கூறியருளினீர்கள். 'உதாஸீநவதாஸீநஂ' என்னும் வாக்கியத்தால் தங்கட்கு உதாசீனத்தன்மையைக் கூறியருளினீர்கள். தங்களுடைய இவ்விரண்டு வாக்கியங்களும் தம்முள் மாறுபட்ட அர்த்தத்தைப் போதிப்பனவாதலின் அசங்கதமாம். எதனாலெனின், எதனிடத்துக் கருத்தாத்தன்மையுளதோ அதனிடத்தில் உதாசீனத்தன்மையிராது. எதனிடத்தில் உதாசீனத்தன்மை யிருக்கின்றதோ அதனி

டத்தில் கருத்திருத்தன்மையிராதாம் என்னு மர்ச்சுனன் சங்கையை நீக்கியருளும்பொருட்டு ஸ்ரீ பகவான் மீண்டும் இவ்வுலகத்திற்கு மாயாமயத்தன்மையையே அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஶயாயூக்ஷெண ப்ரகூதிஃ ஸூயதெ ஸசராசரம் ।
ஹெதுநாநெந கௌந்தெய ஜகத்விபரிவத்ததெ ॥ (10)

ப-ம். 3 ஶயா 2 அயூக்ஷெண 4 ப்ரகூதிஃ 6 ஸூயதெ 5 ஸசராசரம் 8 ஹெதுநா 7 அநெந 1 கௌந்தெய 9 ஜகத் 10 விபரிவத்ததெ.

(அ-ம்.) ஹே கௌந்தேய! பிரகாசவடிவ பரமேசுரனாகிய என்னால் பிரகாசிப்பிக்கப்பட்ட மாயாவடிவப் பிரகிருதியே இச்சராசரமான வுலகைத் தோற்றுவிக்கின்றது இப்பிரகாசகத்துவ நிமித்தத்தானே இவ்வுலகம் பற்பலவகையான விகாரத்தை யடைகின்றது.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கேவலம் திருஷ்டாவடிவமும் சர்வ விகார ரகிதமும் தனது சந்நிதிமாத்திரத்தாற் சர்வத்தினியந்தாவும் சர்வப்பிரகாசகமுமாகிய பரமேசுரனுமென்னால் பிரகாசிப்பிக்கப்பட்ட மாயாவடிவப் பிரகிருதியானது முக்குணவடிவமும் சத்து அசத்து சதசத்துவடிவங்களாற் கூறொணாததுமாம். அம்மாயாரூபப்பிரகிருதியே தாவரசங்கமவடிவ இவ்வுலகனைத்தையும் தோற்றுவிக்கின்றது. மாயாவிபுருஷனாற் செலுத்தப்பட்டமாயை கற்பிதமான யானை குதிரை முதலிய பதார்த்தங்களை உண்டாக்குகின்றதுபோல, பரமேசுரனாகிய என்னாற் பிரகாசிப்பிக்கப்பட்ட அம்மாயையே இக்கற்பிதப்பிரபஞ்சத்தை உண்டாக்குகின்றது. பரமேசுரனாகிய நானோ காரியசகித அம்மாயையைக் கேவலம் பிரகாசஞ்செய்தன்மாத்திரமேயன்றி மற்றொரு தொழிலும் யான் செய்திலேன். அர்ச்சுன! அந்தப்பிரகாசகத்துவ நிமித்தத்தானே இத்தாவரசங்கமவடிவ உலகனைத்தும் பற்பலவகையாய்ப் பரிவர்த்தமானமாகின்றன; அதாவது, இவ்வுலகம் தோற்றமுதற்கொண்டு நாசமீறாகப் பலவிதமான விகாரத்தை எப்போது மடைகின்றது. ஆதலின், 'ஸூஜாமி' பரமேசுரனாகிய நான் இவ்வுலகனைத்தையு முண்டாக்குகின்றேன் என யாது முன் கூறப்பட்டதோ. அது இப்பிரபஞ்சத்தின் காரணவடிவ மாயையைப் பிரகாசிக்குமாத்திரவடிவ வியாபாரத்தைப்பற்றியே கூறப்பட்டது. இவ்வுலகத்தில் சூரியாதிகளின் பிரகாசத்தானே சர்வ காரியங்களுமுண்டாகின்றனவாயினும், அதனானே அவைகட்குக் கருத்தனுந்தன்மை யடையாததுபோல அக்காரணவடிவமாயையின் பிரகாசகத் தன்மைமாத்திரத்தானே பரமேசுரனாகிய எனக்கும் கருத்தனுந்தன்மை அமையாது என்னு மபிப்பிராயத்தானே முன்னர் யான் 'உதாஸீநவதாஸீநம்' எனக்கூறினேன். ஆதலின், முற்கூறிய வாக்கியமிரண்டிற்கும் தம்முள் மாறுபாடின்மைகாண்க. இஃதன்னிய நூலினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. அஸ்ய த்வைதெந்த்ரஜாலஸ்ய யதுபாதாந காரணம் ।
அஜ்ஞாநம் தது பாஶ்ரித்ய ப்ரஹ்மகாரண முச்யதெ ॥

(பொ-ள்.) இத்துவிதப்பிரபஞ்சவடிவ இந்திரஜாலத்திற்கு உபாதானகாரணவடிவ அஞ்ஞானத்தைப் பிரகாசிப்பிக்குந் தன்மையினானே பிரஹ்மம் ஜகத்காரணமெனப்படுகின்றது. உண்மையில் அஃததற்குக்காரணமன்றாம். ஒரு வியாக்கியானத்திலோ இச்சுலோகத்திற்கு இக்கருத்துக்கூறுகின்றனர்:—காந்தக்கல் தனதன்மைமாத்திரத்தானே இரும்பைச்செலுத்தினும் உண்மையில் உதாசீனமாயிருப்பதுபோல, பரமேசுரனாகிய நானும் எனது சமீபமாத்திரத்தானே மாயா

வடிவப் பிரகிருதியை உலகத்தைத்தோற்றுவிட்பதிற் செலுத்துவனுயினும் உதாசீனமாகவே யிருக்கின்றேன். ஆதலின், 'ஹேதுநாநேந ஜகத்விபரிவர்த்ததே' என்னும் இரண்டு வாக்கியங்களும் தம்முள் முரண்படாவென்க. (10)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்வாறு நித்தியசுத்த புத்த முக்த சுபாவமும் சர்வப் பிராணிகளின் ஆன்மரூபமும் ஆனந்த கனமும் தேசகாலவஸ்துபரிச்சேத ரகிதமுமாகிய அத்தன்மைய பரமேசுரனாகிய என்னை இவ்வவிவேகி புருஷர்கள் மநுஷ்யனென்றெண்ணி ஆதரம் பண்ணுவதில்லை; மாறாய் நிந்திக்கின்றார்கள் என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவானிப்போ தருளிச்செய்கின்றார்.

சு-ம். அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாஶ்ரிதம் ।
பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேஶ்வரம் ॥ (11)

ப-ம். 11 அவஜாநந்தி 10 மாம் 1 மூடா: 7 மாநுஷீம் 8 தநும் 9 ஆஶ்ரிதம் 4 பரம் 5 பாவம் 6 அஜாநந்த: 2 மம 3 பூதமஹேஶ்வரம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவிவேகிகள் பரமேசுரனாகிய எனது, சர்வ பூதங்கட்கு மகத்தாகிய ஈசுரவடிவ எல்லாவற்றினு மேலாகிய பரமார்த்தமான தத்துவத்தை அறியாது மனுடவடிவெடுத்திருக்கப்பட்ட பரமேசுரனாகிய என்னை அனாதரஞ்செய்கின்றார்கள். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! விசாரமற்ற மூடர்கள் பரமேசுரனாகிய என்னையும் இக்கிருஷ்ணபகவான் சாட்சாதீசுரனே என ஆதரிப்பதில்லை; மாறாய் என்னையே நிந்திக்கின்றார்கள். அவர்கள் செய்யும் அவமதிப்பில் பிராந்திவடிவகாரணத்தை அருளிச்செய்கின்றார் :—'மாநுஷீம் தநுமாஶ்ரிதம்' என. அர்ச்சுன! மநுஷ்யவடிவமாய்த்தோற்றும் இம்மூர்த்தியைப் பரமேசுரனாகிய நான் எனதிச்சையான பக்தர்கட் கநுக்கிரகிப்பான் எடுத்துக்கொண்டேன். அதாவது, மனுடவடிவமாய்த் தோற்றுமித்தேகத்தால் வியவகரிக்கின்றேன். இதனானே, இக்கிருஷ்ணனும் என்னைப்போன்ற ஒரு மநுடனேயாவன் என்னும் பிராந்தியால் மறைக்கப்பட்ட அந்தக்கரணத்தையுடைய அம்மூடர்கள் பரமேசுரனாகிய எனது பரம்பாவத்தையுணராது அதாவது, எனது சர்வத்தினு மேலாகிய பாரமார்த்திக தத்துவத்தை யுணராது என்னை அனாதரமும் நிந்தையும் பண்ணுகின்றார்கள்; அம்மூடர்களுக்கது பொருந்துவனவேயாம். அர்ச்சுன! யான், சர்வ பூதங்கட்கு மகத்தான ஈசுரனுவேன். அதாவது, சர்வ பூதங்களையுஞ் செலுத்துபவனுவேன். (11)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்வணம் பரமேசுரனாகிய என தவமதிப்பால் உண்டாகிய பாவத்தால் பிரதிபந்திக்கப்பட்ட புத்தியையுடைய மூடர்கள் நிரந்தரம் நரகத்தின்கண்ணே வசிக்கத்தக்கவர்களாவர்கள் என்பதை ஸ்ரீ பகவானிப்போ தருளிச்செய்கின்றார்.

சு-ம். மோகாஶா மோககர்மாணோ மோகஜ்ஞாநா விசேதஸ: ।
ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ஶ்ரிதா: ॥ (12)

ப-ம். 1 மோகாஶா: 2 மோககர்மாண: 3 மோகஜ்ஞாநா: 4 விசேதஸ: 5 ராக்ஷஸீம் 7 ஆஸுரீம் 6 ச 10 ஏவ 9 ப்ரக்ருதிம் 8 மோஹிநீம் 11 ஶ்ரிதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பயனற்ற வேட்கையுடையனும் பயனிலாக் கருமமுடையனும் பயனிலா வுணர்வுடையனுமாகிய அத்தன்மைய விவேகமின்றிய புருஷன் ராக்ஷஸி ஆசுரிமோகினிப் பிரகிருதியையே ஆசிரயிக்கின்றான். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்தரியாமியாகிய பரமேசுரனன்றியே கேவலங் கருமமே எனக்குப் பலத்தைக்கொடுக்கும் என்னும் நிஷ்பலமேயான பலத்தின் பிரார்த்தனவடிவ ஆசை எவனுக்கோ அவன் மோகாசாவாம். கருத்திதுவாம்:— அந்தரியாமியுஞ் சர்வஞ்ஞனுமாகிய ஈசுரனன்றிச் சடமாகிய கருமத்தில் சுவதந்திரமாய்ப் பலங்கொடுத்தற்குச்சாமர்த்தியமின்றாம். அத்தன்மைய அசமர்த்த கருமத்தினின்றேபலமடைய விச்சித்தல் நிஷ்பலமேயாம். இதனானே பரமேசுரனினின்றும் புறம்பானதால் மோகமெனும் கேவல மாயாசவடிவ கருமமெவனுக்கோ அவன் மோககருமாவாவன். அதாவது பரமேசுரனின் விமுகமானவனுக்கு அவ்வக்கினிஹோத்திராதி கருமங்கள் கேவலம் பரிசிரமத்திற்கே காரணங்களாம்; மற்றொரு பயனைப் பயப்பியாதனவாம். ஈசுரனைப் பிரதிபாதனம்பண்ணாத குதர்க்கநூலாற் றோன்றிய நிஷ்பலஞான மெவனுக்கோ அவன் மோக ஞானனாவன். அதாவது பரமேசுரனைப் பிரதிபாதிக்கும் அத்தியான்ம நூலானுண்டாகும் ஞானமே இவ்வதிகாரிக்குப் பலத்தைக் கொடுக்கும். பரமேசுரனைப் பிரதிபாதியாதுகண்டனம் பண்ணுகின்ற குதர்க்க நூலாராய்ச்சியானுண்டாகிய ஞானம் இவ்வதிகாரிக்குச் சிறிதளவும் பயனைப் பயப்பியாதாதலின் அந்த ஞானம் நிஷ்பலமேயாம். இப்போது கூறிப்போந்த அர்த்தத்தில் காரணங்கூறுகின்றார். 'விசேதஸஃ' என. ஆண்டுப் பரமேசுரனது அவமதிப்பாலுண்டாகிய பெரும்பாவத்தாற் பிரதிபந்தப்பட்ட விவேக விஞ்ஞானம் எவனுக்கோ அவன் விசேதசாவாவன். அத்தன்மைய விசேதசனாதினானே அம்மூட புருஷன் மோகாசாவும், மோககர்மாவும், மோகஞானனுமாகின்றான். அல்லது அம்மூட புருஷன் பரமேசுரனாகிய எனதவமதிப்பின் வசத்தால் ராக்ஷஸீ ஆசுரீ மோகினீப் பிரகிருதியையே ஆசிரயிக்கின்றான். சாஸ்திரம் விதிக்காத ஹிம்சையின் காரணபூத துவேஷம் பிரதானமெதனிற் கண்டோ, அத்தன்மைய தாமசப் பிரகிருதி ராக்ஷஸப் பிரகிருதியாம். சாஸ்திர விகிதமின்றிய விஷயபோகத்திற்குக் காரணபூதமான ராகம் பிரதானமாமெதனில், அத்தன்மைய ராஜஸப் பிரகிருதி ஆசுரப்பிரகிருதியாம். சத்சாஸ்திர ஜன்னிய ஞானத்தினின்றும் வழுவுதலைச்செய்வது மோகினிப்பிரகிருதியாம். ஈண்டுப் பிரகிருதியென்பது சுபாவத்திற்காம். இவ்விதமான பிரகிருதிகளையே அம்மூட புருஷன் பற்றுவனாதலின் அவை நரகப் பிராப்தியின் வாயிலைத்தருவதால் நிரந்தர நரகத்தையே அநுபவிக்கின்றான். அந்நரகத்துவாரம் சாஸ்திரத்திலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶநமாத்மந: ।
காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத்த்ரயம் த்யஜேத் ॥

(பொ-ள்.) காமக்குரோத லோபமென்னும் இம்மூன்றுமே இவனுக்கு நரகப் பிராப்தியின் துவார பூதங்களாகின்றனவாதலின் இம்மூன்றையுந் தள்ளவேண்டுமென்பதாம். (12)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் இவ்வார்த்தை கூறப்பட்டது. அது வருமாறு:— பரமேசுரனுக்குப் புறம்பானவனது பலேச்சையும், அதனாலுண்டான நித்திய நைமித்திக காமிய கருமானுஷ்டானங்களும், அவற்றினுபயோகமான சாஸ்திர ஜன்யஞானமும் பயனற்றனவேயாமாதலின், அவன் பரலோக பலமும் சாதனமும் இன்றியவனாகின்றான்; அன்றியும் அவனுக்கு இவ்வுலக பலனுங் கிடைப்பதில்லை; அவன் விவேக விஞ்ஞான சூனியனாகவேவிசேதசாவாகின்றானாதலின். பரமேசுரனின் விமுகமான தீனபுருஷன் சர்வ புருடார்த்தத்தினின்று நழுவி யாவர்களும் வருத்தப்படத்தக்கவனாவன் என்னு மிவ்வனைத்து முன்னர்க்கூறப்பட்டனவாம். அற்றேல், சர்வ புருடார்த்தத்தை யடைபவனும், யாவரும் வருத்தப்படத்தகாதவனும் யாவன்

என அர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாகப் பரமேசுரனது சரணமொன்றை யடைந்தவனே இத்தன்மையனுவன் என்பதை இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். உஹாத்மாநஸ்து மாம் பாா்த2 தை3வீம் ப்ரக்ருதிமாஸ்ரிதா: ।
ஹஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா ஹூதாதி3மவ்யயம் ॥ (13)

ப-ம். 6 உஹாத்மநஃ 7 து 8 மாம் 1 பார்த2 2 தை3வீம் 3 ப்ரக்ருதிம் 4 ஆஸ்ரிதாஃ 12 ஹஜந்தி 5 அநந்யமநஸஃ 11 ஜ்ஞாத்வா 9 ஹூதாதி3ம் 10 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தெய்வீகப் பிரகிருதியை ஆசிரயிப்பவனும் பரமேசுரனுகிய என்னினின்று மன்னியத்தின் மனம் பற்றுதோனுமாகிய மகாத்ம புருஷனே என்னைச் சர்வ பூதங்கட்குங் காரணவடிவமாயும் நாசமற்றவனுகவுமுணர்ந்து பஜனை பண்ணுகின்றான். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மகத் ஆத்மா 'அந்தக்கரணம்' எவனுக்கோ அவன் மகாத்மாவாவன்; அதாவது, பல பிறப்புக்களில் செய்யப்பட்ட புண்ணிய கருமத்தாற் சுத்தமானதும் அற்பமான காமாதி விகாரங்களாலபிபவஞ் செய்யமுடியாததுமாகிய அந்தக்கரணமெவனுக்கோ அவன் மகாத்மாவாவன். எதனுலவன் மகாத்மாவோ அதனுனே 'ஸஹஸம் ஸக்ஷஸம் ப்ராப்தி:' என்பது முதலிய வாக்கியங்களான் மேற்கூறும் தெய்வீகமெனும் சாத்துவிகப் பிரகிருதியை ஆசிரயித்தவனெவனே அதை யாசிரயித்த அதனுனே பரமேசுரனுகிய என்னினன்னியப் பொருளில் பற்றிலாதமனம் எவனுக்கோ அத்தன்மைய மகாத்மபுருஷன் பரமேசுரனுகிய என்னைக் குருசாஸ்திரோபதேசத்தால் சர்வ சகத்காரணவடிவமாகவும் அவிநாசவடிவமாகவும் உணர்ந்து பஜனை பண்ணுகின்றான். அதாவது, பரமேசுரனுகிய எனக்குச் சேவை செய்கின்றான். ஈண்டு, 'உஹாத்மநஸ்து' என்பதிலுள்ள 'து' சத்தமானது முன்னர்க் கூறப்பட்ட மூடபுருஷனினும் இம்மகாத்ம புருஷன் முழுதும் விலட்சணன் எனக்குறிப்பிக்கின்றது. (13)

(அ-கை.) ஹே பகவன்! அம்மகாத்ம புருஷன் பரமேசுரனுகிய தங்களை எவ்வாற்றாற் பஜனை பண்ணுகின்றான் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு இரண்டு சுலோகங்களால் அப்பஜனப் பிரகாரத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஸ்ச த்3ருட4வ்ரதாஃ ।
நமஸ்யந்தஸ்ச மாம் ஹக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ (14)

ப-ம். 1 ஸததம் 3 கீர்த்தயந்தஃ 2 மாம் 5 யதந்தஃ 4 ச 6 த்3ருட4வ்ரதாஃ 9 நமஸ்யந்தஃ 7 ச 8 மாம் 10 ஹக்த்யா 11 நித்யயுக்தா 12 உபாஸதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அம்மகாத்மபுருஷன் எப்போதும் பரமேசுரனுகிய என்னைக் கீர்த்தித்தும் முயன்றும் திடவிரதனுகியும் நமஸ்கரித்தும் எனது பக்தியோடு நித்திய யுக்தனுய் என்னைச் சிந்தனைசெய்வான். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அம்மகாத்ம புருஷன் எப்போதும் பரமான்மாவாகிய என்னையே கீர்த்தனைசெய்கின்றான்; அதாவது, சர்வோபநிடதங்களாலும் பிரதிபாதிக்கப்பட்ட நிர்க்குணப்பரமான்மாவாகிய எனது சொரூபத்தை அவன் பிரஹ்மவேத்தாகுருவின் சமீபஞ்சென்று வேதாந்த வாக்கியவிசாரஞ்செய்து கீர்த்தனஞ் செய்கின்றான். குரு சமீபத்தையடையாத வேறு காலத்தில் பிரணவ முதலிய மந்திரசெபத்தானும் உபநிடதங்களின் ஆவிருத்தியினுனும் கீர்த்தனை பண்ணுவான். கருத்திதுவாம்:—அம்மகாத்மாவானவன் நிர்க்குணப் பிரஹ்மமாகிய

என்னை எக்காலத்தும் வேதாந்தசாஸ்திராத்தியயனவடிவ சிரவணவியாபாரத்திற்கு விஷயம்பண்ணுவன். இத்துணை கூறியதால் சிரவணவடிவசாதனம் நிரூபிக்கப்பட்டது. இப்போது மனனவடிவசாதனத்தை நிரூபித்தருளுகின்றார். 'யததே இதி' அர்ச்சுன! மீண்டும், அம்மகாத்மபுருஷன் குரு சமீபத்தையடைந்து அல்லது வேறிடத்தில் வேதாந்தத்திற்கு விரோதமில்லாத தர்க்கானுசந்தானத்தால் குருவுபதேசித்த நிர்க்குணப்பிரஹ்மவடிவ பரமேசுரனாகிய எனது சொரூபத்தை அப்பிராமாண்யசங்கையிலாது நிச்சயித்தற்பொருட்டு முயலுவன்; அதாவது சிரவணத்தால் நிர்ணயம்பண்ணப்பட்ட பொருளைப் பாதப்படுத்தும் சங்கையை நிவிர்த்திபண்ணப்பட்ட தர்க்கானுசந்தானரூப மனனபராயணனாகுவன் என்பதாம். இத்துணை கூறியதால் மனனம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அச்சிரவணமனனாதிகாரத்தின்பொருட்டுச் சமதமாதிசாதனங்களை நிரூபித்தருளுகின்றார். 'த்ருடவ்ரதா: இதி' அர்ச்சுன! அம்மகாத்மபுருஷன் அச்சிரவணமனனாதிகாரப்பிராப்தியின்பொருட்டு முதலில் திடவிரதனாகின்றான். ஆண்டு, விரோதிகளால் சலனப்படுத்துவதற்கேலாத திட அகிம்சை, சத்திய, அஸ்தேய, பிரஹ்மசரிய, அபரிக்கிரகம் என்பது முதலிய விரதமெவனுக்கோ அவன் திடவிரதனாம்; அதாவது, அம்மகாத்மபுருஷன் சமதமாதிசாதனசம்பன்னனாகின்றான். ஆண்டு, அகிம்சை முதலிய விரதங்களில் திடத்தன்மை பதஞ்சலிபகவானாலும் யோகசூத்திரத்திற் கூறப்பட்டுளது.

ஆ-சு. அஹிம்ஸாஸத்யாஸ்தேயப்ரஹ்மசர்யாபரிக்ரஹா யமா: ।
ஜாதிதேசகாலஸமயாநவச்சிந்நா: ஸார்வபௌமா மஹாவ்ரதம் ॥

(பொ-ள்.) அகிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், அபரிக்கிரகம் என்னுமிவ்வைந்தும் யமமெனப்படுகின்றன. அந்த அகிம்சை முதலிய ஐவகையானயமம், க்ஷிப்த மூட விக்ஷிப்த பூமிகளிலும் சம்பாவனை பண்ணப்படுகின்றனவாதலின் அவ்வைந்துஞ் சார்வபௌமமெனப்படுகின்றன. அத்தன்மைய அகிம்சை முதலிய ஐவகையும் ஜாதி தேசகாலசமயம் என்னும் நான்கானுமனவச்சின்னப்பட்டு மகாவிரதமெனப்படுகின்றன. ஈண்டுச் சாதி சப்தத்தால் பிராமணத்தன்மை முதலிய சாதிகளும், தேசசத்தத்தால் தீர்த்த முதலிய உத்தம தேசங்களும், காலசத்தத்தால் ஏகாதசி அமாவாசை முதலிய புண்ணிய தினங்களும், சமய சப்தத்தால் பிரயோசனவிசேடங்களும் கொள்ளற்பாலனவாம். ஆண்டு, பிராஹ்மணர் முதலிய உத்தமப்பிராணிகளை நான் கொல்லேன். என நினைத்து அவர்களைக் கொல்லாதிருக்கும் அகிம்சை சாதியால் அவச்சின்னமெனப்படுகின்றது. தீர்த்த முதலிய உத்தம தேசங்களில் யாதொரு பிராணியையுங்கொல்லேன் என நினைத்து ஆண்டொன்றையுங் கொல்லாதிருக்குமகிம்சை தேசத்தாலவச்சின்னப்பட்டதாம். ஏகாதசி முதலிய புண்ணிய தினங்களில் யாதொன்றையுங்கொல்லேன் என நினைத்து அப்போதொன்றையுங் கொல்லாதிருக்குமகிம்சை காலத்தா லவச்சின்னப்பட்டதாம். யஞ்ஞயுத்த முதலிய பிரயோசனமின்றி ஒரு பிராணியையுங்கொல்லேன் என நினைத்து அஃதன்றி யொன்றையுங் கொல்லாதிருக்குமகிம்சை சமயத்தாலவச்சின்னப்பட்டதாம். இவ்வாறே சத்திய முதலியவைகளிலும் தக்கவாறு சாதி முதலியவைகளால் அவச்சின்னமாந்தன்மையையுங் கண்டுகொள்க. எல்லாத்தேசத்திலும் எல்லாக்காலத்திலும் எவ்விதப் பிரயோசனத்தின்பொருட்டேனும் எவ்விதமான ஜாதியுடைய சீவர்களையும் நான் கொல்லேன் என்றெண்ணி எவ்வாற்றானும் ஒரு பிராணிகளையுங் கொல்லாதிருத்தலாகிய அகிம்சையே சாதி முதலிய நான்கானும் அனவச்சின்னமெனப்படும். இவ்வாறே சத்திய முதலியவைகளிலும் சாதி முதலியவைகளால் அனவச்சின்னத்தன்மையை அறிந்துகொள்க. இவ்வண்ணம்

சாதி முதலியவைகளால் அவச்சின்னமின்றிய அகிம்சை முதலிய யமம் மகாவிரதமெனப்படுகின்றதென்க. இவ்விரண்டு யோகசூத்திரங்கட்கும் இக்கீதையின் நான்காவதத்தியாயத்தில் 'த்ரவ்யயஜ்ஞா ஸ்தபோயஜ்ஞா:' என்னுஞ் சுலோகவியாக்கியானத்தில் விரிவாய்க்கூறினோம். இவ்வாற்றால் திடமான அகிம்சை முதலிய விரதங்களையுடையவனுக்கே அவன் திடவிரதனாவன். அம்மகாத்மாவானவன் பரமேசுரனாகிய என்னையே நமஸ்கரிக்கின்றான். அதாவது, அவனுக்கு இஷ்டதேவதாவடிவமாகவும் சர்வ குணங்களின் நிதானவடிவ குருரூபமாயுமிருக்கும் பகவான் வாசுதேவனாகிய என்னையே முக்கரணத்தானும் வழிபடுகின்றான். ஈண்டு, 'நமஸ்குரு' என்பதிலுள்ள சகாரத்தால் நூற்பிரசித்தமான சிரவணாதிகளையுங்கொள்ளவேண்டும்.

ஆ-சு. ஶ்ரவணம் கீர்த்தநம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவநம் ।
அர்ச்சநம் வந்தநம் தாஸ்யம் ஸக்யமாத்மநிவேதநம் ॥

(பொ-ள்.) எங்கும் வியாபகமாகிய விஷ்ணுவைச் சிரவணம்பண்ணலும் கீர்த்தித்தலும் ஸ்மரித்தலும் அவர் பாதங்களை வழிபடலும் அர்ச்சித்தலும் வந்தனஞ்செய்தலும் தாசபாவம் பண்ணலும் சகாபாவம் பண்ணலும் தனதான்மாவை சமர்ப்பித்தலுமாம். இச்சுலோகத்திற்கூறப்பட்ட வந்தனமே பகவானாலும் 'நமஸ்குரு' என்னும் வாக்கியத்தாற் கூறப்பட்டுளது. ஆதலின், இச்சுலோகத்தில் அவ்வந்தனத்தோடிருக்கப்பட்ட சிரவணாதிகளையும் அச் சகாரத்தாற்கொள்வதமையும். புஷ்பசந்தன முதலியவைகளால் அர்ச்சித்தலும் பாதசேவையும் நேரே ஈசுரனுக்குச் சம்பவியாதாயினும், அவ்வீசுரனே குருவடிவெடுத்துச் சிஷ்யனுக்குபதேசிக்கின்றார் என்பது சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றதாதலின், அக்குருவடிவ ஈசுரனுக்கு அர்ச்சனை பாதசேவை யிரண்டும் அமைதற்பாலனவேயாம். அல்லது,

ஆ-சு. த்வே ரூபே வாஸுதேவஸ்ய சலஞ்சாசலமேவ ச ।
சலம் ஸந்ந்யாஸிநோ ரூபமசலம் ப்ரதிமாதிகம் ॥

(பொ-ள்.) எங்கும் வியாபகமாகிய விஷ்ணுவுக்கு இரண்டு வடிவமாம். ஒன்றோ சலிக்கப்பட்டரூபமாம். மற்றொன்றோ அசலரூபமாம். அவற்றுள், சந்நியாசியின் சொரூபஞ்சலனரூபமாம்; பிரதிஷ்டை பண்ணப்பட்ட பாஷாணமய அல்லது, தாதுமயப் பிரதிமை முதலியவைகள் அசலரூபமாம். என்பது முதலிய சாஸ்திர வசனத்தில் பிரதிமையும் விஷ்ணு வடிவமெனக் கூறப்பட்டதாதலின் அதற்கு அர்ச்சனபாத சேவனங்கள் சம்பவமாம். இதனானே, சாஸ்திரங்களில் அவ்விரண்டு வடிவங்களையும் நமஸ்காரம் பண்ணாதானுக்கு நரகப்பிராப்தி கூறப்பட்டிருக்கிறது :—

ஆ-ம். தேவதா ப்ரதிமாம் த்ருஷ்ட்வா யதிம் த்ருஷ்ட்வா த்ரிதண்டிநம் ।
ப்ரணிபாதமகுர்வாணோ ரௌரவம் நரகம் வ்ரஜேத் ॥

(பொ-ள்.) விஷ்ணு, சிவன் முதலிய பிரதிமைகளைத்தரிசித்தும் தண்டமுடைய சந்நியாசியைத்தரிசித்தும் வணங்காதிருந்தவன் ரௌரவநரகத்தையடைகின்றான் என்பதாம். ஈண்டு, 'நமஸ்குரு மாம்' என்னும் வாக்கியத்திலுள்ள 'மாம்' [என்னை] என்னும் பதம் இரண்டாந்தரங் கூறப்பட்டது. அது சகுணவடிவத்தைப் போதித்தற்பொருட்டாம். அவ்வாறு கொள்ளவில்லையேல் 'கீர்த்தயந்தோ மாம்' என்னும் பூர்வ வாக்கியத்திலுள்ள 'மாம்' [என்னை] என்னுஞ் சப்தத்தானே அர்த்தசித்தியுண்டாக, மறித்தும் 'மாம்' [என்னை] என்று கூறல் பயனிலதாமாதலின் முதலாவது 'மாம்' என்னுஞ் சத்தம் நிர்க்குணவடிவத்தைத் தெரிவிப்ப

தாம். இரண்டாவதோ, சகுணவடிவத்தைத் தெரிவிப்பதாம் எனப் பொருள்கோடலே தகுதியாமென்க. அங்ஙனமே அம்மகாத்மாக்கள் எப்போதும் பரமேசுரனாகிய எனது விஷயக பரமப்பிரேமவடிவ பக்தியுடையர்களாவர்கள். இத்துணை கூறியதால் சர்வ சாதனங்களின் புஷ்கலத்தன்மையும் பிரதிபந்தகமின்மையுங்காட்டப்பட்டன. அதாவது, எவ்வதிகாரி சர்வதாபரமேசுரபக்தியுடையனோ அவ்வதிகாரி அப்பக்தியின் பிரபாவத்தால் சர்வப் பிரதிபந்தங்களு நீங்கியவனாய்ச் சீக்கிரமே ஆன்மஞானத்தையடைகின்றான். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது :—

ஆ-சு. യസ്യ ദേവേ പരാ ഭക്തിര്യഥാ ദേവേ തഥാ ഗുരൗ ।
തസ്യൈതേ കഥിതാ ഹ്യർഥാഃ പ്രകാശന്തേ മഹാത്മനഃ ॥

(பொ-ள்.) எவ்வதிகாரி புருஷனுக்குப் பரமான்மதேவனிடத்தில் பராபக்தியிருப்பதுபோலவே, பிரஹ்மோபதேசகராகிய குருவினிடத்தில்பரமபக்தியுளதோ அம்மாகாத்துமாவாகிய அதிகாரிக்கே இவ்வேதாந்தப்பிரதிபாதிதார்த்தம் புத்தியில் நன்கு விளங்குமென்பதாம். இது பதஞ்சலி பகவானால் யோகசூத்திரத்திலுங் கூறப்பட்டிருக்கிறது :—

ஆ-சு. തതഃ പ്രത്യക്ചേതനാധിഗമോഽപ്യന്തരായാഭാവശ്ച ।

(பொ-ள்.) அப்பரமேசுரனது அநன்யபக்திவடிவப் பிரணிதானத்தால் இவ்வதிகாரிக்குப்பிரத்தியக்சேதன சாக்ஷாத்காரமுண்டாகின்றது. அங்ஙனமே சர்வ விக்கினங்களின் அபாவமுமுண்டாகின்றது. இவ்வாறு அம்மகாத்துமாக்கள் சமததாதிசாதன சம்பன்னர்களாயும் வேதாந்த சாஸ்திர சிரவணமனனபராயணர்களாயும் பரமகுருவாகிய என்னிடத்திலுள்ள பரமப்பிரேமையானும் நமஸ்கார முதலியவைகளினாலும், சர்வ விக்கினங்களின்றியவர்களாயும் பரமேசுரனாகிய என்னை உபாசிக்கின்றார்கள்; அதாவது, சிரவணமனனங்களின் பரிபாகத்தின் பின்னருண்டாகத்தக்க அநான்மாகாரவிஜாதீய விருத்திகளின் வியவதானமின்றிய பரமேசுரனாகிய எனதாகாரசஜாதீய விருத்திப்பிரவாகத்தால் நிரந்தரம் என்னையே சிந்திப்பார்களென்பதாம். இத்துணை கூறியதால் தத்துவ சாக்ஷாத்காரத்திற்கு மிகச் சமீபமானதால் பரமசாதனவடிவ நிதித்தியாசனத்தைக்காண்பித்தனர். இவ்வாறு சிரவணாதிசாதனங்களின் புஷ்கலத்தன்மையாகவே இவ்வதிகாரிக்கு வேதாந்த வாக்கியத்தாலுண்டானதும், அகண்ட வஸ்து விஷயகமும், நான் பிரஹ்மசொரூபன் என்னும் சாக்ஷாத்காரவடிவமுமாகிய ஆன்மஞானமுண்டாகின்றது. சர்வ சாதனங்கட்கும் பலபூதமாகிய அவ்வான்மஞானம் சர்வ சங்கைவடிவ கலக்கங்களின்றியதாய்க் கேவலந்தனதுத்பத்திமாத்திரத்தானே சர்வாஞ்ஞானத்தையும் அதன் காரியமாகிய சர்வப் பிரபஞ்சத்தையும் நாசம்பண்ணுகின்றது. தீபமானது தனதுத்பத்தி மாத்திரத்தானே இருளை யிரிக்கின்றது. அதில் மற்றொரு சாதனத்தையுமபேட்சிப்பதில்லை. மற்றோ, அத்தீபம் தனது தோற்றத்தின்கண்ணே எண்ணை திரி முதலிய சாதனங்களை யபேட்சிக்கின்றதுபோல, அவ்வான்மஞானமும் காரிய சகித அஞ்ஞானத்தை நிவிருத்திப்பதில் மற்றொரு சாதனத்தையுமபேட்சிப்பதில்லை; மற்றோ, தனதுத்பத்தியின்கண்ணே சிரவணமுதலிய சாதனங்களை யபேட்சிக்கின்றது. ஆதலின், அவ்வான்மஞானம் நிரபேட்சகமாகியே நேரே மோட்சத்திற்கேதுவாகின்றது. அம்மோட்சத்தைப் பயப்பிப்பதில் அவ்வான்ம சாட்சாத்காரம் பூமிகளின் ஜயக்கிரமமாய்ப் புருவத்திடையிற் பிராணப் பிரவேசத்தையும் அபேட்சிப்பதில்லை. அங்ஙனமே, சுழுமுனையென்னும் மூர்த்தினி நாடியால் பிராணன் வெளிப்படுதலையும் அபேட்சிப்பதில்லை. அங்ஙனமே, அர்ச்சிராதிமார்க்கத்தால் பிரஹ்மலோகமடைதலையும், பிரஹ்மலோக போகாந்த காலவரையில் விலம்

பத்தையும் அபேட்சிப்பதில்லையாதலின், ஸ்ரீ பகவான் ‘ இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே ஜ்ஞாநம்’ என்னும் வாக்கியத்தால் முன்னர்ப் பிரதிஞ்ஞை செய்யப்பட்ட ஞானோபதேசத்தை இச்சுலோகத்திலருளிச்செய்தனர். இவ்வான்ம ஞானத்தினது துக்க சம்சாரத்தின் மோட்சவடிவபலம் ஸ்ரீ பகவானால் முன்னரே அருளப்பட்டமையின் மறித்துமீண்டருளவில்லை. இச்சுலோகத்தில் இவ்வாறு ஸ்ரீ பகவானுடைய ஆழ்ந்த கருத்திருந்தமைகாண்க. சுலோகத்தின் மேலாகிய அர்த்தமோவிளக்கமே யென்க. (14)

(அ-கை) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் கூறப்பட்ட தத்துவஞானத்தின் சாதனவடிவ சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்யற்கேலாத புருஷனும், உத்தம மத்தியம மந்த பேதங்களால் மூவகையாவன். அவர்கள் தத்தம் புத்தியநுசாரமாய்ப் பரமேசுரனாகிய என்னைச் சிந்திக்கின்றார்கள் என்பதை ஸ்ரீ பகவானிப்போ தருளிச்செய்கின்றார்.

சு-ம். ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாமுபாஸதே ।
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம் ॥ (15)

ப-ம். 2 ஜ்ஞாநயஜ்ஞேந 7 ச 4 அபி 1 அந்யே 3 யஜந்த: 6 மாம் 8 உபாஸதே 5 ஏகத்வேந 9 ப்ருதக்த்வேந 10 பஹுதா 11 விச்வதோமுகம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்நியர்களாகிய உத்தமாதிகாரிகள் ஞானவடிவ யக்ஞத்தால் என்னைப் பூசிப்பவர்களாய்க் கேவலம் ஏகத்துவரூபஞானத்தால் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள். சிலமத்தியமாதிகாரிகளோ பேதவடிவத்தானே சிந்திக்கின்றார்கள். சிலமந்தர்களோ பலவகையாய்ப் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பூர்வ சுலோகத்தில் கூறப்பட்ட சிரவணமுதலிய சாதனங்களை யநுட்டிப்பதில் சாமார்த்தியமின்றிய சில அதிகாரிகள் பரமேசுரனாகிய என்னை ஞானவடிவ யக்ஞத்தால் சிந்திக்கின்றார்கள். அவர்களுள்ளும் சில உத்தமாதிகாரிகளோ கேவலம் ஏகத்துவ ஞானயக்ஞத்தானே சிந்திக்கின்றார்கள். ஈண்டுச் சுருதியிற் கூறப்பட்ட உபாசியோபாசகங்களின் அபேத சிந்தனவடிவ அஹங்கிரகோபாசனை ஞானமாம்.

ஆ-சு. த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே அஹம் வை த்வமஸி ।

(பொ-ள்.) ஹே பகவன்! சகுண நிர்க்குண தேவதையாகிய நீ நானே நானே நீ, உமக் கெனக்குஞ் சிறிதளவும் பேதமில்லையென்பதாம். இத்தன்மைய அஹங்கிரகோபாசனவடிவ ஞானமே பரமேசுரனது யஜனரூபமானதால் யக்ஞ வடிவமாம். ஈண்டு, ‘ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே’ என்பதிலுள்ள ‘ச-அபி’ என்னு மிரண்டு சத்தங்களில், சகாரமோ ஏகாரத்தின் அவதாரணவடிவ அர்த்தத்தை யறிவுறுத்துகின்றது. அதை ‘மாம்’ [என்னை] என்பதனோடும் அந்வயஞ் செய்க. அபி-சத்தமோ வேறு சாதனவிலக்கை யறிவுறுத்துகின்றது. இதனால் இப்பொருள்பெறப்படுகின்றது:—சில அதிகாரிகள் வேறு சாதனேச்சையின்றியவர்களாய் உபாசிய வுபாசகங்களின் அபேத சிந்தனவடிவ அஹங்கிரகோபாசனவடிவ ஞானயஞ்ஞத்தால் பரமேசுரனாகிய என்னையே சிந்தனைசெய்கின்றார்கள் என்பதாம். இவ்வாறு சிந்திப்பவர்கள் உத்தமர்களெனப்படுவர்கள். மற்றுஞ் சில மத்தியமாதிகாரிகள் பின்னரூபமாய் என்னையே சிந்திக்கின்றார்கள். அதாவது ‘ஆதித்யோ ப்ரஹ்மேத்யாதேச: ...’ என்பது முதலிய சுருதிகளாற் கூறப்பட்ட உபாசியோபாசகங்களின் பேதவடிவப் பிரதீகோபாசனைவடிவ ஞான

யஞ்ஞத்தால் என்னைச் சிந்திக்கின்றார்கள். அவ்விருவகையானுஞ் சிந்தித்தற் கேலாதமந்தன் யாதேனுமொருவேறு தேவதையை யுபாசித்தேனும், யாதானுமொரு கருமத்தைச் செய்தேனும் பற்பல வகையானும் விசுவரூப பரமேசுரனாகிய என்னையே அவ்வத்தேவதா வுபாசனவடிவ ஞானயஞ்ஞத்தால் சிந்திக்கின்றான். அவற்றுள், அந்தவந்த ஞானயஞ்ஞத்தால் உத்தரோத்தர புருஷனுக்குக் கிரமமாய்ப் பூர்வ பூர்வ பூமியின் லாபமவசியமுண்டாம். ஒரு வியாக்கியானத்தில் இச்சுலோகத்திற்கு இவ்வாறு பொருள் கூறப்பட்டது. அது வருமாறு:—பாதஞ்சலர்களாகிய யோக நூலார்கள் நிருவிகற்ப சமாதிவடிவ ஞானயஞ்ஞத்தால் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள். உபநிடதாவலம்பிகள் நான் பகவானாகிய வாசுதேவசொரூபன் என அபேதமாய் என்னையே சிந்திக்கின்றார்கள். விசாரமின்றிய பிராகிருத சனங்கள் இவ்வீசுரன் எனது சுவாமி, யானிவர்க்குத்தாசன் எனப்பின்னமாய் என்னையே சிந்திக்கின்றார்கள். மற்றுஞ் சிலர்கள் பலவாற்றால் விசுவதோமுகமாம்வண்ணம் என்னையே சிந்திக்கின்றார்கள். அதாவது, யாதேனுமொரு பொருள் காணப்படின் அது பகவான் வடிவமேயாம். யாதேனுமோரொலி செவிக்குப்புலப்படின் அது பகவான் நாமமேயாம். யாதேனுமொரு பொருளையீயினும் அனுபவிக்கினும் அவ்வனைத்தும் பகவானிடத்திலே அர்ப்பணமாகின்றன. இவ்வாறு எல்லாவகையானும் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள். (15)

அ-கை.) ஹே பகவன்! அவர்கள் பற்பலவகையாய் உபாசிக்கினும் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள் என்னுந் தங்கள் வாக்கியம் எவ்வாறு சங்கதமாகும்? என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் தனது விசுவரூபத்தன்மையை வர்ணித்தருளுகின்றார்.

சு-ம். அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதாஹமஹமௌஷதம் ।
மந்த்ரோஹமஹமேவாஜ்யமஹமக்நிரஹம் ஹுதம் ॥ (16)

ப-ம். 1 அஹம் 2 க்ரது: 3 அஹம் 4 யஜ்ஞ: 6 ஸ்வதா 5 அஹம் 8 ஔஷதம் 10 மந்த்ர: 9 அஹம் 11 அஹம் 12 ஏவ 13 ஆஜ்யம் 14 அஹம் 15 அக்நி: 16 அஹம் 17 ஹுதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே கிருதுரூபமாகின்றேன், யஞ்ஞரூபமாகின்றேன், ஸ்வதாரூபமாகின்றேன், ஔடதரூபமாகின்றேன், மந்திரரூபமாகின்றேன், ஆஜ்யரூபமாகின்றேன், அக்கினிரூபமாகின்றேன், ஹவனரூபமாகின்றேன். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஸ்ரௌதகருமமெனும் அக்கினிஷ்டோமாதி கருமங்கிருதுவாம், அதுவும் நானே. ஸ்மார்த்தமெனும் வைசுவதேவ முதலியவைகள் ஸ்மிருதியில் மகா யஞ்ஞவடிவமாய்க் கூறப்படுகின்றன. அக்கருமங்கள் எக்ஞமெனப்படும் அவையும் நானே. பிதிர்க்கட்குக்கொடுக்கப்பட்ட அன்னம் சுவதாவாம், அதுவும் நானே. வனஸ்பதிவடிவ ஓஷதிகளால் உண்டாக்கப்பட்டுச் சர்வப்பிராணிகளாலு முண்ணப்படும் அன்னம் ஔடதமாம். அல்லது, நோய் நீக்கற்குபாயவடிவ மருந்தும் ஔடதமெனப்படும், அந்த ஔடதவடிவமும் நானே. சுவாகா, சுவதா என்னுஞ் சப்தங்கட்கிடையிலுள்ள எவ்வேதவாக்கியங்களைக்கூறித் தேவதைகட்கும் பிதிர்க்கட்கும் ஹவிசுகொடுக்கப்படுமோ அவ்வேதவாக்கியம் மந்திரமாம். ‘ஓம் இந்த்ராய ஸ்வாஹா, பித்ருப்ய: ஸ்வதா’ என்பது மந்திரங்கள். அம்மந்திரங்களும் நானே. அம்மந்திரத்தால் அக்கினியில் விடப்பட்ட நெய் ஆச்சியமாம். அது நெல் முதலிய ஹவிஷ்மாத்திர உபலக்ஷணமாம், அதுவும் நானே. அந்த நெய் முதலிய வடிவ ஹவிசு விடுவதற்கிடமான ஆஹவநீய முதலிய அக்கினியும் நானே. அவ்வக்கினியில் நெய் முதலியவைகளை விடுதலாகிய ஹவனம் ஹுதமாம்,

அந்த ஹவனமும் நானே. ஈண்டு, நான் என்னும் ஒரே சத்தத்தானே கூறிய பொருள் பெறப்படுமோமாயினும், ஒவ்வொரு கிருது யஞ்ஞ முதலிய சத்தங்களோடு நான் என்னுஞ்சத்தத்தைக்கூறியது, அக்கிருதுயக்ஞ முதலியவைகளில் ஒவ்வொன்றின் ஞானமும் பரமேசுரனுகிய எனதுபாசனேயேயாம் என்னு மர்த்தத்தை அறிவுறுத்தற்பொருட்டாம். ஆண்டு, இச்சுலோகத்தின் பிண்டப்பொருளிதுவாம்:— கிரியைகளும், அவைகளைத்தோற்றுவிக்குங் காரகங்களும், அவ்விரண்டானும் பெறப்படு பலமும் ஆகிய இவ்வனைத்தும் எனது சொரூபமேயாம்; என்னி னன்னிய மற்றென்று மில்லை என்பதாம். ஒரு வியாக்கியானத்தில் கிருது சத்தத்தால் தேவதாவிஷயகத் தியானவடிவ சங்கற்பத்தையும், யஞ்ஞ சத்தத்தால் ஶ்ரௌத ஸ்மார்த்த கருமங்களையுங் கொண்டனர். (16)

(அகை.) அன்றியும்,

சு-ம். பிதாஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ꞉ ।
வேத்யம் பவித்ரமோங்கார ருக்ஸாம யஜுரேவ ச ॥ (17)

ப ம். 3 பிதா 7 அஹம் 1 அஸ்ய 2 ஜகத꞉ 4 மாதா 5 தாதா 6 பிதாமஹ꞉ 9 வேத்யம் 10 பவித்ரம் 11 ஓங்கார꞉ 12 ருக் 13 ஸாம 14 யஜு꞉ 15 ஏவ 8 ச.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகத்திற்குப் பிதாவடிவமும், மாதாவடிவமும், தாதாவடிவமும், பிதாமஹவடிவமும் பரமேசுரனுகிய நானே. அங்ஙனமே வேத்தியப்பொருள் வடிவமும், பவித்திரவஸ்து வடிவமும், ஓங்காரவடிவமும் இருக்கு வேத சாமவேத யசுர்வேதவடிவமும் பரமேசுரனுகிய நானே. (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வப் பிராணிமாத்திரவடிவ இவ்வுலகத்தைத் தோற்றுவிக்கும் பிதாவடிவமும் நானே, மாதாவடிவமும் நானே, தாதாவடிவமும் நானே. அதாவது, போஷிப்பவனும் அவ்வப்புண்ணியபாவ கருமங்கட்குச் சுக துக்கவடிவபலனைக்கொடுப்பவனும் நானே. இப்பிராணிகளின் பிதாவின்பிதா பிதாமகனும்; அப்பிதாமகனும் நானே. ஈண்டு ஒரு வியாக்கியானத்தில் உலக சத்தத்தால் வானுதிசர்வ காரியப்பிரபஞ்சங்களையுங்கொண்டு மாயாவிசிஷ்ட சபலப் பிரஹ்மம் அதற்குப்பிதாவடிவமெனவும், அவ்வியத்தமென்னும் அபரப்பிரகிருதி மாதாவடிவமெனவும், மாயோபகித அக்ஷரம் பிதாமகனெனவும் கூறப்பட்டன. அதிகாரிகளா லறியத்தக்க பரப்பிரஹ்மவஸ்து வேத்தியமாம். அச்சொரூபமும் நானே. அல்லது, சர்வப்பிராணிகளா னுணரத்தக்க சத்தஸ்பரிச முதலியபொருள்கள் வேத்தியங்களாம், அவைகளும் நானே. அதிகாரிகளைச் சுத்தப்படுத்துவது பவித்திரமாம், அத்தன்மைய கங்கை நீராடல் காயத்திரி செபமுதலிய பவித்திர வடிவங்களும் நானே. அறியத்தக்க பிரஹ்மஞானத்தின் சாதனவடிவ ஓங்காரமும் நானே. அக்கினி ஹோத்திரமுதலிய கருமசித்தியி லுபயோகியும், வேத்தியப் பிரஹ்மத்தில் பிரமாண பூதமுமாகிய இருக்கு சாம யஜுர் வேதங்களும் நானே. ஈண்டு, 'யஜுரேவச' என்பதி லுள்ள சகாரத்தால் அதர்வண வேதமுங் கொள்ளத்தக்கது. (17)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். கதிர்பர்த்தா ப்ரபு꞉ ஸாக்ஷீ நிவாஸ꞉ ஶரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ꞉ ப்ரளய꞉ ஸ்தானம் நிதானம் பீஜமவ்யயம் ॥ (18)

ப-ம். 1 கதி꞉ 2 பர்த்தா 3 ப்ரபு꞉ 4 ஸாக்ஷீ 5 நிவாஸ꞉ 6 ஶரணம் 7 ஸுஹ்ருத் 8 ப்ரபவ꞉ 9 ப்ரளய꞉ 10 ஸ்தானம் 11 நிதானம் 13 பீஜம் 12 அவ்யயம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே கதிரூபமும், பர்த்தாரூபமும், பிரபுரூபமும், சாக்ஷிரூபமும், நிவாசரூபமும், சரணரூபமும், சுகிருத்ரூபமும், பிரபவரூபமும், பிரலயரூபமும், ஸ்தானரூபமும், நிதானரூபமும், நாசமற்ற பீசரூபமுமாவேன். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கருமத்தாற் பிராப்தமாம்பலம் கதியாம். அத்தன்மைய சுவர்க்காதிரூப கதியும் பரமேசுரனாகிய நானே. சுகசாதனத்தைக்கொடுத்துப் போஷிப்பவன் பர்த்தாவாம், அவனும் நானே. புத்திரன் முதலிய பொருள்கள் எம்முடையவைகளே எனச் சுவீகரிக்குஞ் சுவாமி பிரபுவாம், அப்பிரபுவும் நானே. சர்வப்பிராணிகளின் புண்ணிய பாவகருமங்களை இரவிமதி முதலியனபோலக் காண்பது சாக்ஷியாம், அச்சாக்ஷிவடிவமும் நானே. எதில் நிவாசஞ்செய்யப்படுகின்றதோ அது நிவாசமாம். அதாவது, போகஸ்தானம் நிவாசமாம் அதுவும் நானே. துன்பம் நீங்குவது எதனதின் சமீபம் அது சரணம். அதாவது, சரணாகதமாயடைந்தவர்களின் துக்கத்தை நீக்குவது சரணமாம், அதுவும் நானே. பிரதியுபகாரத்தையபேட்சியாது உபகரிப்பது சுகிருதாம், அதுவும் நானே. தோற்ற ஈறு நிலைகள் பிரபவ பிரலய ஸ்தானங்களாம் அவைகளும் நானே. அல்லது, எதனுல் இக்காரியமுண்டாகின்றதோ அது பிரபவமாம் அதாவது, சிருட்டிப்பது பிரபவமாம். எதனுல் இலயபாவத்தையடைகின்றதோ அது பிரலயமாம். அதாவது, சங்கரிப்பது பிரலயமாம். இக்காரியம் எதனிடத்தினிலைத்திருக்கின்றதோ அது ஸ்தானமாம். அதாவது ஆதாரம் ஸ்தானமாம், அவ்வடிவங்களும் நானே. இப்போது நுகரத்தகாமையின் வேறு காலத்தினுகரத்தக்கதாம்பொருள் நிலைப்படுதெதின்கண்ணே அது நிதானமாம். அதாவது, சூட்சுமப்பொருள்களின் அதிகரணமாகிய பிரலயஸ்தானம் நிதானமாம். அல்லது, சங்கபத்மமுதலிய நிதிகள் நிதானமாம், அந்நிதானமும் நானே. உத்பத்திக்கேதுவானது பீஜமாம். எந்தப்பீஜம் அவ்வியயமோ அதாவது, நெற்கோதுமை முதலிய வித்துக்கள் விநாசத்தையடைவனபோல எது விநாசத்தையடைவதில்லையோ அத்தன்மைய தோற்றமீறின்றிய சர்வ காரணரூப பீஜமும் நானே என்பதாம். (18)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌤𑌪𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑌹𑌂 𑌵𑌰𑍍𑌷𑌂 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑍍𑌯𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌚 ।
𑌅𑌮𑍃𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌚 𑌸𑌦𑌸𑌚𑍍𑌚𑌾𑌹𑌮𑌰𑍍𑌜𑍁𑌨 ॥ (19)

ப-ம். 4 𑌤𑌪𑌾𑌮𑌿 2 𑌅𑌹𑌂. 5 𑌅𑌹𑌂 6 𑌵𑌰𑍍𑌷𑌂 7 𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑌾𑌮𑌿 9 𑌉𑌤𑍍𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 8 𑌚 12 𑌅𑌮𑍃𑌤𑌂 10 𑌚 3 𑌏𑌵 14 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 13 𑌚 15 𑌸𑌤𑍍 17 𑌅𑌸𑌤𑍍 16 𑌚 11 𑌅𑌹𑌂 1 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே தபிப்பிப்பவனும் சலவடிவ ரசத்தைக் கிரகிப்பவனும் அவ்விரசத்தை மீண்டு மண்ணில் விடுபவனும் அமிருதரூபனும் மிருத்துரூபனும் சத்துரூபனும் அசத்துரூபனுமாவேன். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வத்திற்கும் ஆன்மவடிவ அந்தரியாமியென்னும் பரமேசுரனாகிய நானே சூரியரூபனாய் இவ்வுலகத்தில் தபிப்பிக்கின்றேன். அத்தபனவசத்தால் சூரியவடிவமாகிய நானே முன்பெய்த விருஷ்டிவடிவாசத்தை எனது கிரணத்தால் கார்த்திகைமுதலிய எட்டுமாதங்களிலிம்மண்ணினின்றுங் கிரகிப்பேன். பின்னர், அச்சூரியவடிவாகியநானே கிரகித்த ரசத்தை ஆடிமுதல் நான்குமாதங்களில் எனது கிரணத்தால் இம்மண்ணில் விருஷ்டிரூபமாய் விடுவேன். தேவர்களுண்டு மாணப்படாத அன்னம் அமிருதமாம். அல்லது, சர்வப் பிராணிகளின்

ஜீவனத்தின் பெயர் அமிருதமாம், அவ்வமிருத ரூபமும் நானே. சர்வப்பிராணிகளை யுங்கொல்வது மிருத்துவாம், அல்லது சர்வப்பிராணிகளின் நாசம் மிருத்துவாம் அவ்வடிவமும் நானே. எப்பொருள் எந்நிலைக்களத்தின் சம்பந்தமுடைய தாகியிருக் கின்றதோ அப்பொருள் அந்நிலைக்களத்திற் சத்தெனப்படுகின்றது; எப்பொருள் எந்நிலைக்களத்தின் சம்பந்தமுடையதாகியிருப்பதில்லையோ அப்பொருள் அந்நிலைக் களத்தில் அசத்தெனப்படுகின்றது; உருவம் மண்ணீரொளிகளின்வடிவ ஆதார சம்பந்தமுடையதாகியிருக்கின்றதாதலின், அவ்வுருவம் மண்ணீரொளிவடிவ ஆதா ரத்திற் சத்தெனப்படுகின்றது; அவ்வுருவமே கால் வான்வடிவ ஆதார சம்பந்த முடையதாகியிராமையின், அவ்வுருவம் கால் வான்களில் அசத்தெனப்படுகின்றது. இங்ஙனமே சத்தசத்துவடிவத்தை ஏனையபொருள்களினு முணர்ந்துகொள்க; அச் சத்தசத்துவடிவமும் நானே. ஒரு வியாக்கியானத்தில் சத்தசத்தென்னுஞ் சத் தங்கட்குச் சாத்திரம் விதித்த நற்கருமம்சத்தாம், சாஸ்திரநிஷேதித்த துற்கரும மசத்தாம் எனவும், மற்றும் ஒரு வியாக்கியானத்தில் எப்பொருள் இஃதிருக்கின் றது இஃதிருக்கின்றது என நாமரூபங்களாற் சொல்லப்படுகின்றதோ அப்பொருள் வியக்தமெனப்படும்; அத்தன்மைய நாமரூபவடிவகாரியங்கள் சத்தெனப்படுகின் றன. அவற்றின் வேறாய் அவற்றின் காரணவடிவ அவ்வியக்தம் அசத்தெனப்படும். அல்லது தூலவடிவதிருசியம் சத்தாம், சூக்ஷுமவடிவ அதிருசியம் அசத்தாம், அவ் வடிவம் நானே எனக்கூறுகின்றனர். ஈண்டு, 'ஸதஸத்' என்பதிலுள்ள சகார மானது வியக்தாவ்வியக்தவடிவங்களை நிஷேதித்து அதன் அவதிவடிவமாயிருக்கப் பட்டதும் காரியகாரணபாவமின்றியதுமாகிய நிருவிசேஷப்பரப்பிரஹ்மமும் நானே என்னும் பொருளைக் குறிப்பித்தற்பொருட்டாம். இதனால்இப்பொருள் பெறப்பட் டது :—சர்வத்திற்கு மான்மவடிவ பரமேசுரனாகிய என்னை யுணர்ந்து அதிகாரிகள் தங்கள் தங்கள் அதிகாரானுசாரமாய்க் கூறிப்போந்தபலவாற்றானும் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றார்கள் என்பதாம். (19)

(அ-கை.) இவ்வாறு அஹங்கிரகோபாசனைவடிவ ஏகபாவத்தானும், பிரதீ கோபாசனைவடிவ பின்னபாவத்தானும், மற்றும் பற்பலவகையானும் என்னை நிஷ்காமமாய்ச் சிந்திக்கப்பட்ட கூறிப்போந்த உத்தமமத்திபமந்த அதிகாரிகள் அந்தக்கரணசுத்தித்துவாரா ஆன்மஞானஞேதப்பத்திவாயிலாய்க் கிரமமாய் மோட் சத்தையே யடைகின்றார்கள். சகாமராய் எவ்வாற்றானும் எனைச்சிந்தியாது தத்தங் காமனுவிஷய சுவர்க்கமுதலிய சுகங்களையடைதற்பொருட்டுக்காமியகருமத்தையே செய்கின்றார்களோ, அவர்கள் அந்தக்கரண சுத்திபண்ணும் நிஷ்காமகருமமின்றிய வர்களாதலின் ஆன்மஞானத்தின் சிரவணமுதலிய சாதனங்கட்கயோக்கியர்களாய் மறித்தும் மறித்தும் பிறப்பிறப்புவடிவ சம்சாரத்தையே அநுபவிக்கின்றார்கள் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவான் இரண்டு சுலோகங்களால் இப்போதருளிச் செய்கின்றார்.

சு-ம். த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோக
மச்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந் ॥ (20)

ப-ம். 1 த்ரைவித்யா: 3 மாம் 5 ஸோமபா: 6 பூதபாபா: 2 யஜ்ஞை: 4 இஷ்ட்வா 7 ஸ்வர்கதிம் 8 ப்ரார்த்தயந்தே 9 தே 10 புண்யம் 12 ஆஸாத்ய 11 ஸுரேந்த்ரலோகம் 16 அச்நந்தி 14 திவ்யாந் 16 திவி 15 தேவபோகாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இருக்குமுதலிய மூன்றுவேதங்களையு முணர்ந்த வர்களாய்க் காமிய யக்ஞத்தால் பரமேசுரனாகிய என்னையே பூசித்துச் சோமபானம் பண்ணிப் பாபமின்றியவர்களாய்ச் சுவர்க்கமடைய விரும்புஞ் சகாமர்கள் புண்ணிய பலரூப அச்சுவர்க்கலோகத்தையடைந்து ஆண்டுத் திவ்யமாகிய தேவபோகங்களை அநுபவிக்கின்றார்கள். (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யக்ஞத்தில் ஹோதா, அத்துவர்யு, உத்காதா என்னுமிவர்களாற்செய்யப்பட்ட கருமஞானத்திற் கேதுவாகிய இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வித்தைகளையுடையவன் திரைவித்தையாவன். அல்லது, அந்த இருக்குமுதலிய மூன்று வித்தையையும் நன்குணர்ந்தவன் திரைவித்தை யாவன். ஆண்டு, இம்மூன்று வேதங்களுங்கூறிய கருமத்தைச் செய்விப்பதிலும் செய்வதிலும் சாமர்த்தியமாந்தன்மையே அவ்வேதங்களை நன்குணர்வதாம், அவ் வாறுணர்ந்த யாக்ஞகபுருஷன் அக்கினிஷ்டோமமுதலிய காமியகருமங்களால் இந் திரவசு ருத்திர ஆதித்தியவடிவ பரமேசுரனாகிய என்னைப் பூஜித்து; அதாவது இப் பரமேசுரனே இந்திரன் முதலிய தேவர்களாவன் என இந்திரன் முதலிய வடிவங்க ளாக என்னையுணராவிடினும் வஸ்துகதியில் அவ்விந்திரன் முதலிய தேவர்களின் பூஜையினால் அந்தரியாமியாகிய என்னையே பூஜித்து; சோமபானம் பண்ணுகின் றவர்களாகின்றார்கள். ஈண்டு, சோமக்கொடிரசத்தைப் பிழிந்தெடுத்து அதை வைதிகாக்கினியில் ஹவனஞ்செய்து, மீந்த சோமரசத்தைப் பருகுவோன் சோம பானனாவன்; அதனானே பூதபாபனாகிய அதாவது, சுவர்க்கபோகத்திற்குத்தடை யாகிய பாபமின்றியவனாகியசகாமபுருஷன் கேவலம் சுவர்க்கமடையவே விரும்பு கின்றான்; அந்தக்கரணசுத்தி ஆன்மஞானப்பிராப்திகளை விரும்புவதில்லை அதா வது, சுவர்க்கலோகத்தில் சிறிதளவும் பயமுண்டாவதில்லை, சுவர்க்கத்தில் வசிக் கும் தேவதைகள் அமிருதபாவத்தை அடைகின்றார்கள் என்னுமர்த்தவாத வாக் கியத்தைக்கேட்டுச் சகாம புருஷன் அச்சுவர்க்கலோகம் எனக்குக்கிடைக்குக, எனக் கேவலஞ் சுவர்க்கசுகத்தையே இச்சிக்கின்றான். சுவர்க்கேச்சையுடைய அச் சகாம புருஷன் அக்கினிஷ்டோமாதிகளின் பலவடிவ சுராதிபனது சுவர்க்கலோக வடிவஸ்தானத்தையடைந்து ஆண்டு திவ்யபோகங்களை நுகர்வன். மநுடர்க்குக் கிட்டாதபோகம் திவ்யபோகமெனப்படும். அன்றியும் தேவதாதேகத்தானே அநு பவிக்கப்படும்போகம் திவ்யபோகமாம். அல்லது சுவர்க்கத்தில் தேவதைகளால் கொடுக்கப்பட்டது திவ்யபோகமாம். ஈண்டுப் போகசத்தத்தால் விடய சுகங் கொள்ளற்பாலது. அல்லது, அச்சுகத்தின் சாதனமான விடயங்களே கொள்ளற் பாலனவாம். அவற்றுள், விடயசுகம்போகமாம் இப்பக்ஷத்திலோ, 'அச்நந்தி' என்ப தற்கு, அநுபவிக்கின்றனர், எனப்பொருள் கொள்ளவேண்டும். விஷயமே போக மென்னும் பக்ஷத்திலோ புசிக்கின்றனர் எனப்பொருள்படுத்தவேண்டும். அதா வது, அச்சகாமன் சுவர்க்கலோகத்தில் விடயஜன்னிய திவ்யசுகத்தையேனும், திவ்யவிஷயங்களையேனும் அனுபவிக்கின்றான் என்பதாம். (20)

(அ-கை.) ஹே பகவன்! அச்சுவர்க்கலோகத்தில் திவ்யபோகங்களை அநுப வித்தலால் அச்சகாம புருஷர்கட்கு வருமிழுக்கென்னை? என்னும் அர்ச்சுனன் சங் கைக்கு அவர்கட்குப் பெருமநிட்டம் பிராப்தியாம் என ஸ்ரீ பகவானருளுகின்றார்.

சு-ம். தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி।
ஏவம் த்ரயீதர்மமநுப்ரபந்நா
கதாகதம் காமகாமா லபந்தே॥ (21)

ப-ம். 1 தே 2 தம் 5 புக்த்வா 4 ஸ்வர்கலோகம் 3 விஶாலம் 7 க்ஷீணே 6 புண்யே 8 மர்த்யலோகம் 9 விஶந்தி 10 ஏவம் 11 ஹி 12 த்ரயீதர்மம் 13 அநுப்ரபந்நா: 15 கதாகதம் 14 காமகாமா: 16 லபந்தே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! அச்சகாம புருஷர்கள் விரிவான அச்சுவர்க்கலோகத்தை யநுபவித்து அப்புண்ணியம் நந்துழி மறித்தும் இம்மநுடலோகத்தை யடைகின்றார்கள். இவ்வாற்றால் மிக விளக்கமான வேதப் பிரதிபாதிதமாகிய காமிய கருமத்தை மீண்டும் நிச்சயித்துணர்ந்தும் திவ்யபோகங்களையிச்சித்தும் அவர்கள் அடிக்கடி போதல் வருதலையே அடைகின்றார்கள். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! அச்சகாம புருஷர்கள் அக்காமியரூப அப்புண்ணிய கருமத்தால் அடையப்பட்ட விரிவுடைய சுவர்க்கலோகத்தை யநுபவித்து ; அதாவது, தத்தம் புண்ணிய கருமமிருதிப்பாட்டால் அச்சுவர்க்கத்தின் பேரின்பத்தை யநுபவித்து அப்போகத்தையுண்டாக்கும் புண்ணிய கருமநாசமானதின் பின்னர் தேவதேக நாசமாகவே மறித்துந் தேகமெடுப்பான் இம்மநுஷ்யலோகத்தை யடைகின்றார்கள். அதாவது, மறித்துக் கருப்பத்தில் வசித்தல் முதலிய பலவகைத் துன்பங்களை யநுபவிக்கின்றார்கள். முன்னர் மநுடதேகத்தில் அக்கருமியானவன் திரை தருமத்தை 'மூன்று தருமத்தன்மையை' நிர்ணயம் பண்ணியிருந்ததொப்ப இம்மநுடதேகத்தும் அம்மூன்று தருமங்களையே நிச்சயிக்கின்றான். அதாவது அந்தத்திரைதருமாநுஷ்டானத்திலே தற்பரனாகின்றான். ஆண்டு இருக்காதி மூன்று வேதங்களாற் கூறப்பட்ட ஹோதா அத்துவர்யு உத்காதாக்களின் தரும விசேடமாகிய அம்மூன்று தருமங்கட்கும் யோக்கியமான சோதிட்டோம முதலிய கருமங்கள் திரை தருமமாம். அன்றியும், 'ஏவம் த்ரயீதர்மம் அநுப்ரபந்நா:' என மூல சுலோகபாடமிருக்கினும் கூறிப்போந்த வர்த்தத்தினும் விலக்ஷணமான அர்த்தஞ் சித்திபாது. மற்றே, கூறிப்போந்த அர்த்தமேசித்தமாம். ஆண்டு இருக்குமுதலிய மூன்று வேதங்களும் திரயியாம். அவற்றாற் பிரதிபாதிக்கப்பட்ட சோதிட்டோமமுதலிய காமிய தருமம் திரயீதருமமாம். ஆண்டு, ஹோதா அத்துவர்யு உத்காதா என்பவர்கள் யக்ஞஞ்செய்விக்கும் அந்தணர்களாவர்கள். அக்கினிட்டோமம் சோதிட்டோமம் என்பது யக்ஞவிசேடமாம். 'அநுப்ரபந்நா:' என்னும் வாக்கியத்தின் ஆதியிலுள்ள அநு என்பது உத்தரோத்தர சன்மத்தின் கருமவிஷயக நிச்சயத்தில் பூர்வ பூர்வ சன்மத்தின் கருமவிஷயக நிச்சயாபேட்சையைக் குறிப்பிக்கின்றது. இதனாலிப்பொருள் பெறப்படுகின்றது.

ஆ-சு. த்ரைவித்ய கர்மக்ருதஜந்ம ஸ்யாத் தக்ஷிணாவந்தோ அம்ருதத்வம் பஜந்தே ।

(பொ-ள்.) மூன்று வேதங்களானுங் கூறப்பட்ட கருமத்தைச் செய்பவன் பிறப்பிறப்பையடையான், தக்ஷிணையுடையவன் அமிருதத்தன்மையை யடைகின்றான் என்பது முதலிய துதிவடிவ அர்த்தவாதத்தைக் கூறும் வாயிலாய் இருக்காதி வேதங்களாற் கூறப்பட்ட காமிய கருமங்களே போக மோட்சப் பிராப்தியில் முக்கியகாரணங்களாம் ; மனவொருமை வடிவசமம், இந்திரியங்களையடக்கும்வடிவ தமம், சர்வ கருமங்களையும் விடல், ஆன்மஞானம், ஈசுரன் என்னுமிவ்வனைத்தினுள்ளும் ஒன்றேனும் அதற்குச் சாதனமாகாது இவ்விதமான பூர்வ பூர்வ சன்மத்தின் நிச்சயத்தைக்கொண்டு உத்தரோத்தர ஜன்மத்திலும் அச்சகாம புருஷன் அவ்விதமான நிச்சயத்தையேயடைகின்றான் இதனானே அவன் மறித்தும் அத்திவ்ய போகத்தை யிச்சித்துப்போதல் வருதலையடைகின்றான். அவற்றுள் புண்ணிய கருமத்தால் இம்மநுடலோகத்தினின்றும் சுவர்க்கலோகத்திற்குச் செல்லல் போத

லாம். புண்ணிய கருமக்ஷயமாக அச்சுவர்க்கலோகத்தினின்றும் மறித்தும் இம்மநுடலோகத்திற்கு வரல்வருதலாம்; அதாவது, அச்சகாமபுருஷன் காமியகருமத்தால் சுவர்க்கத்தையடைகின்றான் அக்கரும நாசமானபின்னர் அதினின்று மநுடலோகத்திற்கு வந்து பூர்வசம்ஸ்காரவசத்தால் மறித்துங் கருமத்தைச்செய்கின்றான், அக்கருமபோகத்தை நுகர்தற்குச் சுவர்க்கத்திற்குச் செல்கின்றான், அதினின்று மறித்தும் மநுடலோகத்தையடைகின்றான் இவ்வணம் அச் சகாம புருஷனுக்குக் கருப்பவாசமுதற்கொண்டு பலவகையான துக்கப் பிரவாஹம் நிரந்தரம் இருந்துகொண்டேயிருக்கும் இதுவே அவனுக்குப் பெருமிட்டமிலாப் பிராப்தியாமென்க. அவ்வநிட்டப் பிராப்தி முண்டகோப நிஷத் சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. ஸ்லவாஹெூதெ அஉ்ரஸாயஜ்ஞ ரூவா அஷாஉரொகு உவரம் யெஷுகூஉ-ு ।
ஸதஜெூயொயெ ஹிநஂஉ்தி உூஸாஜுரா உரதஜூம் தெவாநவெவா வியாந்தி ॥

(போ-ள்.) பதினாறு இருத்துவிக்குகள், யஜமாநன், அவன் மனைவி என்னும் செலுத்துகின்ற பதினெட்டுத்தீவார்கள் எதற்கோ அத்தன்மைய காமிய கரும வடிவ திடமிலா ஓடம் இவனைப் பெரும் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றுவதில்லை. அத்தன்மைத்தான காமிய கருமத்தைத் தனது சிரேயசாதனமென்றெண்ணிச் சந்தோஷப்படும் மூடபுருஷன் மறித்து மறித்தும் பிறப்பிறப்பையேயடைகின்றான் என்பதாம். இச்சுருதியின் அர்த்தம் ஆன்மபுராணத்தின் பதினாறாவது அத்தியாயத்தில் விரிவாய்க்கூறினமாதலின் ஈண்டு விரித்திலேம். அநேக மூலப் புஸ்தகத்தில் 'ஸவஂதுயிஂயஉ-உநாவுவநாஃ' எனவே பாடமுளது. அங்ஙனமே, ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும், ஸ்ரீ நீலகண்ட பண்டிதரும் இவ்விதமான பாடத்தை அங்கீகரித்தே வியாக்கியானஞ் செய்தனர்கள். அங்ஙனமாயினும், கீதாபாடியத்தின் வியாக்கியானக்காரர்களாகிய ஸ்ரீ ஆனந்தகிரிசுவாமிகளும், ஸ்ரீ மதுசூதன சுவாமிகளும் 'ஸவஂஹிதெயஉூ-உநாவுவநாஃ' என்னும் பாடத்தை யுடன்பட்டே வியாக்கியானஞ்செய்தனர்கள் ஆதலின் 'ஸவஂஹிதெயஉூ-உநாவுவநாஃ' என்னும் பாடமே இந்நூலினும் வைக்கப்பட்டதென்க.

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் இரண்டு சுலோகங்களால் தத்துவஞானமின்றிய சகாமபுருஷர்களின் கதியை அருளிச்செய்தனர். இப்போது தத்துவஞானமுடைய நிஷ்காமபுருஷரின்கதியை அருளிச்செய்கின்றார்.

சு-ம். அநநூாஸ்ரீநயஞொ உாஂ யெ ஜநாஃ வயுவாஸதெ ।
தெஷாஂ நிதூாஹியுகூாநாஂ யொமக்ஷெஂ வஹாஉூஹஂ ॥ (22)

ப-ம். 3 அநநூாஃ 4 திநயஞஃ 5 உாஂ 1 யெ 2 ஜநாஃ 6 வயுவாஸதெ 7 தெஷாஂ 8 நிதூாஹியுகூாநாஂ 9 யொமக்ஷெஂ 11 வஹாமி 10 அஹஂ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரிகள் அநன்யமாய்ச்சிந்தித்துப் பரமேசுரனாகிய என்னைச் சாட்சாத்கரிக்கின்றார்களோ அந்த நித்தியயுக்தர்களின் யோகக்ஷேமங்களைப் பரமேசுரனாகிய நானே அடைவிக்கின்றேன். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அன்னியமெனும் பேததிருட்டிக்கு விடயம் எவனுக்கில்லையோ அவன் அநன்யமாவன். அதாவது, யாண்டும் அவ்வத்துவிதீயப் பிரஹ்மத்தையே பார்த்துச் சர்வவிடய போகேச்சையின்றியவனும் ஸ்ரீ பகவான் வாசுதேவனாகிய நானே சர்வான்மரூபன், எனக்கன்னியம் சிறிதளவுமில்லை என

நிச்சயித்து அப்பிரத்தியக்கான்மாவை இடைவிடாது சிந்தித்துச் சாதனசதுட்டய சம்பன்ன எவ்விரக்தசந்நியாசியானவன் பரப்பிரஹ்மமாகிய என்னைத் தனதான்ம வடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின்றானோ அந்தத் தத்துவவேத்தாவானவன் பரிபூர ணப்பிரஹ்மமாகிய எனது அபேதபாவத்தால் கிருதகிருத்தியனேயாகின்றான்; அத்தத்துவஞானிக்கு மறித்துஞ் சம்சாரப்பிராப்தியில்லை.

சங்கை :—ஹே பகவன்! அத்வைத தரிசனத்தில் நிஷ்டையையும், அத்தி யந்த நிஷ்காமத்தன்மையையும், தனதிச்சாபூர்வகம் பிரயத்தனமின்மையையு முடைய தத்துவஞானியின் சரீர ரக்ஷகத்தின்பொருட்டு யோகக்ஷேமம் எவ்வா றமையும்?

சமாதானம் :—'தேஷாம்நித்யாபியுக்தாநாம்' ஆண்டு நிரந்தரம் ஆதர வோடு பரமேசுரத் தியானத்தில் தற்பரனுவோன் நித்தியாபியுக்தனுவன், தனது தேகங்காத்தன் மாத்திரத்திற்கேனும் முயலாத தத்துவஞானியினது யோக க்ஷேமங்களைப் பரமேசுரனுகிய நானே அடைவிக்கின்றேன். ஆண்டு, முன்னரடை யாத அன்னம், ஆடை முதலியவைகளின் பிராப்தியோகமாம். அடையப்பட்ட பொருள்களை யிரட்சித்தல் க்ஷேமமாம். தத்துவஞானி தனது தேகம் நிலைத்திருப் பான் யோகக்ஷேமங்களை யிச்சியானேனும் அந்தரியாமியாகிய நான், சுயமே அவனுக்கடைவிப்பேன். தமக்கிச்சையின்றிய மக்களின் யோகக்ஷேமங்களை அவர் தம் தாய்தந்தையர்களே அமைவிக்குமாபோல, பரமேசுரனுகிய நானும் தத்துவ ஞானியின் யோகக்ஷேமங்களைப் பெறுவிக்கின்றேன்.

ஆ-சு. ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த்த மஹம் ஸ ச மம ப்ரிய: ।
உதாராஸ்ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம் ॥

(பொ-ள்.) என்பது முதலிய வாக்கியங்களால் பரமேசுரனுகிய நான் அந்த ஞானியை எனதான்மரூபமாய்க்கூறினேன். அங்ஙனமே, எனதான்மரூபமானதி னாலே எனக்கவன் மிகப்பிரியன், நான் அவனுக்குப் பிரியன், அவ்வணம் ஆன்மரூப னும் அத்தியந்தப்பிரியனுமாகிய ஞானியின் யோகக்ஷேமங்களைப்பெறுவித்த லெனக்குரித்தேயாம். எல்லாப்பிராணிகளின் யோகக்ஷேமங்களையும் பரமேசுரனு கிய நானே அடைவிக்கின்றேன்; ஆன்பஞானிக்குமாத்திரமன்று; அங்ஙனமாயி னும் ஏனையருக்கு முதலில் பிரயத்தனத்தைத்தோற்றுவித்து அதன் வாயிலாகவே அவர்கட்கு யோகக்ஷேமங்களை அடைவிக்கின்றேன்; முயற்சியின்றியின்றாம். ஞா னிக்கோ முயற்சியைத்தோற்றுவியாமலே அடைவிக்கின்றேன். இதில் இத்துணை விசேடமாமென்க. ஒரு வியாக்கியானத்தில் யோகக்ஷேமமென்பதற்கு இவ்வாறு பொருட்படுத்தினர் :—முன்னடையாத யோகபூமியின் பிராப்தியோகமாம். முன் னடைந்தயோகபூமியைக்காத்தல் க்ஷேமமாம். மற்றுமொரு வியாக்கியானத்தில் யோகத்தினுடைய க்ஷேமம் யோகக்ஷேமம் என வேற்றுமைத்தொகையாக்கி யோகக்ஷேமமென்பதற்கு இவ்வண்ணம் பொருள்பண்ணுகின்றனர் :—நிரந்தரப் பிரஹ்மநிஷ்டையோகமாம்; அதனது க்ஷேமம் அதாவது, அத்தியான்மிக முதலிய துன்பங்களால் விச்சேதமிலாமை யோகக்ஷேமம் என்பதாம். அத்தகைய யோக க்ஷேமத்தைப் பரமேசுரனுகிய நானே எப்போதும் அடைவிக்கின்றேன் என்க.

(அ-கை.) ஹே பகவன்! பரமேசுரராகிய தங்கட்கயலாய் மற்றொருபொரு ளில்லை; மற்றோ, எல்லாப்பொருளும் உமதுவடிவமேயாமாதலின், இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளும் உமது சொரூபமே, உமக்கன்னியமல ஆத லின், உமது பக்தனுகிய நான் நேரே யுன்னைப் பூசிப்பதுபோல இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளின் பக்தர்களும் வஸ்துகதியால் பரமேசுரராகிய உம்

மையே பூஜிக்கின்றார்கள். இவ்வாற்றால் உமது பக்தர்கட்கும் அன்னிய விந்திராதி தேவதாபக்தர்கட்கும் சிறிதளவும் விசேடம் பெறப்படாமையின் அன்னிய தேவதாபக்தர்கள் மறித்துமறித்தும் போதல் வருதலையடைகின்றார்கள். அநன்யமாய்ச்சிந்திக்கும் ஞானியாகிய பக்தனேகிருதகிருத்தியனாகின்றான் என முற்கூறியருளிய தங்கள் வசனம் எங்ஙனம் பொருந்தும் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍇𑌽𑌪𑌿 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥ (23)

ப-ம். 2 𑌯𑍇 4 𑌅𑌪𑌿 3 𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 7 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 5 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 6 𑌅𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 8 𑌤𑍇 9 𑌅𑌪𑌿 11 𑌮𑌾𑌂 12 𑌏𑌵 1 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 13 𑌯𑌜𑌨𑍍𑌤𑌿 10 𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂.

(அ-ம்.) ஹே கௌந்தேய! எவ்வன்னிய தேவதாபக்தர்களும் சிரத்தையோடு பூஜிக்கின்றார்களோ அவர்களும் அஞ்ஞான பூர்வகம் என்னையே பூஜிக்கின்றார்கள்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எனது பக்தர்கள் பரமேசுரனாகிய என்னையே பூஜிப்பதுபோல, இந்திரன் முதலிய அன்னியதேவதா பக்தர்கள் ஆஸ்திக்கிய புத்திவடிவ சிரத்தையோடு சோதிட்டோம முதலிய எக்ஞங்களால் அவ்விந்திரன் முதலிய தேவதைகளைப் பூசிக்கின்றார்கள். அவர்களும் வஸ்துகதியால் அவ்வத் தேவதாவடிவமாயிருக்கப்பட்ட பரமேசுரனாகிய என்னையே பூஜிக்கின்றவர்களாவர்கள். ஆனாலோ, என்னை அவிதிபூர்வகமாகவே பூஜிக்கின்றார்கள். ஈண்டு, அவிதியென்பது அஞ்ஞானமாம். அவ்வஞ்ஞானபூர்வகமாயே என்னைப் பூஜிக்கின்றார்கள். அதாவது, இப்பரமேசுரனே எல்லாவற்றின் ஆன்மவடிவன் என என்னைச் சர்வான்மகமாயுணராது, இந்திரன் முதலிய தேவர்களை எனக்கன்னியமாய்க் கற்பித்து அவர்கள் என்னைப் பூஜிக்கின்றார்கள். இதனானே அவர்கள் மறித்து மறித்தும் சன்மமரணத்தையடைகின்றார்கள் என்க. ஒரு வியாக்கியானத்தில் 'அவிதிபூர்வகம்' என்பதற்கு, அபேதபுத்திவிதியாம். அஃதிலாதேதான் ஆனதால் அவர்கள் வஸ்துகதியால் சர்வான்மக பரமேசுரனாகிய என்னைப் பூசிப்பினும், அவர்களின் பூஜை அவிதிபூர்வகமேயாம். அபேதபுத்தி பூர்வகஞ்செய்யப்பட்ட எனது பூஜையே விதிபூர்வகமாமெனப் பொருளுரைக்கின்றனர். (23)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் அச்சகாமர்களின் பூஜையில் அவிதிபூர்வகத்தன்மையை விளக்குவித்து, அவர்கள் அச்சுவர்க்க முதலிய பலங்களினின்று நழுவுவார்களென்பதை அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌹𑌂 𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍇𑌵 𑌚 ।
𑌨 𑌤𑍁 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨𑌾𑌤𑌶𑍍𑌚𑍍𑌯𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 ॥ (24)

ப-ம். 1 𑌅𑌹𑌂 7 𑌹𑌿 3 𑌸𑌰𑍍𑌵𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 4 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌚 6 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 2 𑌏𑌵 5 𑌚 11 𑌨 8 𑌤𑍁 9 𑌮𑌾𑌂 12 𑌅𑌭𑌿𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑌿 10 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇𑌨 13 𑌅𑌤𑌃 15 𑌚𑍍𑌯𑌵𑌨𑍍𑌤𑌿 14 𑌤𑍇

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே சர்வயக்ஞங்கட்கும் போக்தாவும் பலப் பிரதாதாவுமாவேன்; இது மிக விளக்கம். ஆனாலோ அச்சகாமர்கள் பரமேசுரனாகிய என்னை அவ்வடிவமாய்ப் பார்ப்பதில்லை இதனானே அவர்கள் புனராவிருத்தியையடைகின்றார்கள். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அதிகாரிகளைக்குறித்துச் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட சிரௌதஸ்மார்த்த யக்ஞங்களின் போக்தா அவ்விந்திரன் முதலிய தேவதா

வடிவமாக யானே யாகின்றேன். அங்ஙனமே, பரமேசுரனாகிய நானே அந்தரியாமிவடிவத்தால் அதியக்ஞ வடிவனானதால் அந்த யக்ஞங்களின் பலத்தைக் கொடுப்பவனுமாகின்றேன் இது சுருதி மிருதிகளிற் பிரசித்தமாம். அத்தன்மைய பரமேசுரனாகிய என்னை அன்னிய தேவதைகளின் சகாம பக்தர்கள் அத்தத்துவ வடிவமாயறிவதில்லை; அதாவது, ஸ்ரீ பகவானாகிய இவ்வாசுதேவரே இந்திராதி தேவதாவடிவத்தால் அந்த யக்ஞங்களின் போக்தாவும், தமது அந்தரியாமிவடிவத்தால் அந்த யக்ஞ பலத்தைக்கொடுப்பவருமாகின்றார். அத்தன்மைய சர்வான்ம வடிவ பரமேசுரருக்கயலாய் ஒன்றும் பூஜிக்கத்தக்கதின்றும் இவ்வாறென்னை அச்சகாம புருஷர்களுணர்வதில்லை. இதனானே அவர்கள் அவ்வப்பலத்தினின்று நழுவுகின்றார்கள் அதாவது, பரமேசுரனாகிய எனது உண்மைவடிவத்தை யுணராது அச்சகாமர்கள் மிக வருத்தத்தால் அவ்விந்திராதி தேவதைகளைப் பூசிப்பினும் எமக்கர்ப்பணம் பண்ணாத காமியகருமங்களின் பிரபாவத்தால் முற்கூறிய தூமாதிமார்க்கத்தால் அவ்வத்தேவதாலோகத்தையடைந்து அதனது போகாந்தத்தில் அதினின்றும் நழுவுகின்றார்கள். கருத்திதுவாம்:—அவ்வவ்வுலக போகங்களையுண்டாக்கும் புண்ணிய கருமபோகத்தால் நாசமடைந்தபின்னர் அச்சகாமர்கள் அவ்வத்தேவதா தேகாதிகளினின்று பிரிவடைந்தவர்களாய் மறித்தும் தேகமெடுப்பான் இம்மநுடலோகத்தையடைகின்றார்கள். எவ்வதிகாரி இந்திரன் முதலிய அத்தேவர்களிடத்தில் சர்வாந்தரியாமியாகிய பகவானையே பார்த்து அந்த யக்ஞாதி கருமங்களைச் செய்கின்றானோ அங்ஙனமே, அக்கருமங்களை அந்தரியாமியாகிய பரமேசுரனுக்கே அர்ப்பணஞ் செய்கின்றானோ அந்நிஷ்காம புருஷன் அவ்வுபாசனாசகித கருமங்களின் பிரபாவத்தால் முற்கூறிய அர்ச்சிராதிமார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்து ஆண்டான்மஞானத்தைப்பெற்று அப்பிரஹ்மலோகத்தின் போகாந்தத்தில் கைவல்லியமாகிய மோட்சத்தையடைகின்றான். இவ்வாற்றால் சகாம நிஷ்காமர்களின் பலத்தில் பெரும்பேதமாமென்க. (24)

(அ-கை.) இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளைப் பூஜிப்பவர்க்குப் புனராவிருத்தியின்மைவடிவ பல மின்றேனும் அவ்வத்தேவதா பூசாநுசாரமாய் அவ்வற்பபலப் பிராப்தி அவசியமுண்டாம் என்னு மர்த்தத்தைக்கூறி நேரே பரமேசுரனைப் பூசிக்கும் பக்தர்கட்கு அவர்களினின்றும் விலக்ஷணத்தன்மையை அருளிச்செய்கின்றார்.

சு-ம். யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந்யாந்தி பித்ருவ்ரதா: ।
பூதாநி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்யாஜிநோபி மாம் ॥ (25)

ப-ம். 3 யாந்தி 1 தேவவ்ரதா: 2 தேவாந் 5 பித்ரூந் 6 யாந்தி 4 பித்ருவ்ரதா:
8 பூதாநி 9 யாந்தி 7 பூதேஜ்யா: 13 யாந்தி 10 மத்யாஜிந: 12 அபி 11 மாம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேவதைகளைப்பூஜிப்பவன் அவர்களையேயடைவன். பிதுர்க்களைப் பூஜிப்பவன் அவர்களையேயடைவன்; பூதங்களைப் பூஜிப்பவன் அவர்களையேயடைவன்; பரமேசுரனாகிய என்னைப் பூஜிப்பவன் என்னையேயடைவன். (25)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்தக்கரணவடிவ வுபாதியின் முக்குணத்தால் அவிதி பூர்வகம் பூஜிப்பவர்களும் சாத்துவிக முதலிய பேதங்களான் மூவகைப்படுவர்கள். அவற்றுள், இந்திரன் முதலிய தேவதைகட்குப் பலிப்பிரதானம் பிரதக்ஷிணை நமஸ்காரமுதலிய பூசைவடிவ விரதமுடையவர்கள் தெய்வவிரதிகள். அவ்விந்திரன் முதலிய தேவதைகளையே அடைகின்றார்கள் அவர்கள் சாத்துவிகர்களெனப்படுவர்கள். சிராத்தமுதலிய கருமங்களால் பிதிர்க்கட்கு ஆராதனைபண்ணு

பவர்கள் பிதிருவிரதர்கள் அவர்கள் அப்பிதிர்க்களையே அடைகின்றார்கள் அவர்கள் ராஜஸரெனப்படுவர்கள். யக்ஷராக்ஷச விநாயகமாதிருகணம் முதலியவைகளைப்பூஜிப்பவர்கள் பூத பூஜகர்களாவர்கள். அவ்வாறு பூஜிப்பவர் அப்பூதங்களையே அடைவார்கள் அவர்கள் தாமதர்களெனப்படுவர்கள். இத்துணை கூறியதால் பரமேசுரனுக்கன்னியமான தேவதாராதனத்திற்கு அவ்வத்தேவதா சொரூபப் பிராப்தி வடிவ அநித்திய பலங்கூறப்பட்டது. இப்போது பரமேசுர ஆராதனத்திற்குப் பரமேசுரப் பிராப்திவடிவ நித்தியபலத்தை அருளிச்செய்கின்றார். 'யாஙி ஊஷ௱ஜி ரொவிஊ' என. அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னைப் பூஜிக்கு மியல்புளோன் மத்யாஜியாவன் அதாவது, எவன் இந்திரன் முதலிய சர்வ தேவதைகளிடத்தும் பரமேசுரனாகிய என்னையே வியாபகமாய்ப்பார்த்து இடைவிடாதென்னையே யாராதிக்கின்றானோ அந்த எனதன்பன் என்னையே யபேதமாயடைவான். எவன் எதை ஆராதிக்கின்றானோ அவன் அப்பாவத்தையே யடைகின்றான் இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

தெயமாய யொவாவ தெத தெவஹவதி ।

(பொ-ள்.) எவன் எத்தேவதையை உபாசிக்கின்றானோ மாணத்தின்பின்னர் அவன் அவ்வத்தேவதா பாவத்தையே அடைகின்றான் என்பதாம். ஈண்டிது பகவானது கருத்தாம்:—பரமேசுரனை ஆராதிப்பதிலும் இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளை ஆராதிப்பதிலும் ஆயாசஞ் சமமாயினும் நித்திய பலத்தைத் தரத்தக்க அந்தர்யாமியாகிய பரமேசுர ஆராதனத்தைத்தள்ளி அன்னியமான இந்திரன் முதலிய தேவதைகளை யாராதித்து அநித்திய பலத்தையேயடைகின்றார்கள்; ஆதலின் இவ்வஞ்ஞானிகளின் தூரதிருஷ்டத்தின் பிரபாவம் ஆச்சரியவடிவமாம் அதன் பிரபாவத்தால் இவ்வஞ்ஞானிகள் மோட்சத்தைத்தரும் பரமேசுர ஆராதனத்தைத் தள்ளிவிட்டு அநித்திய பலத்தைக்கொடுக்கும் இந்திராதி தேவதாராதனத்தைச் செய்கின்றார்கள். (25)

(அ-கை.) ஆதலின் பரமேசுரனுக் கன்னியமான தேவதைகளைவிடுத்து இவ்வதிகாரி பரமேசுர ஆராதனமே செய்யற்பாலது. அஃதிவனுக்கு நித்தியமான மோட்சபலத்தைக் கொடுக்கின்றதன்றோ? அன்றியும் அன்னியதேவதா ஆராதனத்தில் இவனுக்குத் திரவியச்செலவு முதற்கொண்டு எத்துணைத்துன்பமுண்டோ அத்துணை யரந்தை பரமேசுர ஆராதனத்திலுண்டாவதில்லை; மற்றோ, இது மிகச் சுலபமாமென்பதை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். வதஂ வுஂ ஹுஜொயஂ யொ செ ஹக்ஷா வுயதி ।
தஊஹஂ ஹக்ஷுவஹூத உஸாவி விுயதாதூநஃ ॥ (26)

ப-ம். 4 வதஂ 5 வுஂ 6 ஹுஂ 7 தொயஂ 1 யஃ 2 செ 3 ஹக்ஷா 8 வுயதி
10 தக் 12 அஹஂ 11 ஹக்ஷுவஹூதஂ 13 அஸாவி விுயதாதூநஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் பரமேசுரனாகிய எனக்கு அன்போடு பத்திரத்தையேனும், புஷ்பத்தையேனும், பலத்தையேனும், சலத்தையேனும் கொடுக்கின்றானோ அந்தச் சுத்தபுத்தியுடையோன் அன்போடர்ப்பித்த பத்திர புஷ்பாதிகளைப் பரமேசுரனாகிய நான் ஏற்றுக்கொள்கின்றேன். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பத்திரம் புஷ்பம் பலம் தோயமுதற்கொண்டு பிரயத்தனமிலாது மிகவுமெளிதாய்க் கிடைக்கும் சுலபமான வஸ்துக்களில் யாதானுமொருபத்திர புஷ்பபல முதலியவைகளை யாவன் பேரைசுவரியமுடைய எனக்கு அன்போடளிக்கின்றானோ அதாவது பரமேசுரனுக்குமேல் மற்றொன்றுமில்லை

யென்னும் புத்தி பூர்வக நிரதிசயப் பிரீதியோடு எவன் அடிமையனைப்போலப் பரமேசுரனாகிய எனக்கு அப்பொருளை அர்ப்பணம் பண்ணுகின்றானோ; கருத்திதுவாம் :—மகாராசனது ராச்சியத்திலுள்ள பொருள்களனைத்தும் வஸ்து கதியால் அம்மகாராசனதேயாம் அப்பொருள்களையே அடிமைக்காரர்கள் அன்போடு அர்ப்பணஞ்செய்கின்றார்கள் அதனால் அம்மகாராசாவானவர் சந்தோடத்தையடைவதுபோல உலகத்திலுள்ள பதார்த்தங்களனைத்தும் பரமேசுரனாகிய என்னுடையதேயாம். இவ்வுலகத்தில் என்னுடையதல்லாததொரு பொருளில்லை அத்தன்மைத்தாய எனக்கு எவர்களன்போடு எனது பதார்த்தத்தையே அர்ப்பணஞ்செய்கின்றார்களோ அச்சுத்த புத்தியுடையோர்கள் அன்போடளித்த பத்திர புஷ்பமுதலியவைகள் மிகவுமற்பமேனும் நான் உண்பேன். அதாவது, ஒருவன் அன்னமுண்டு திருப்தியடைவதுபோலப் பரமேசுரனாகிய நானும் அப்பத்திரமுதலிய பதார்த்தங்களை அன்போடேற்றுக்கொண்ட மாத்திரத்தானே திருப்தியடைவேன். ஈண்டு, 'அஶ்நாமி' 'உண்கின்றேன்' என்னும் பதத்திற்கு முக்கியார்த்தமாகிய போஜன கருத்திருத்துவத்தைவிட்டு அப்பதத்திற்கு இலக்கணா விருத்தியால் அன்போடு சுவீகருத்திருத்துவத்தைக்கொண்டது பிரீதி யதிசய காரணத்தை யறிவுறுத்தற்பொருட்டு அதாவது, அன்போடர்ப்பணஞ்செய்த பத்திர புஷ்பாதிகளின் சுவீகாரமாத்திரத்தானே நான் மிகப்பிரசன்னனாகின்றேன். சுருதியிலும் தேவதைகளுக்கு மநுடரைப்போலப்போசன கருத்திருத்தன்மை நிடேதிக்கப்பட்டிருக்கின்றது. இதனானும் 'அஶ்நாமி' என்னும் பதத்திற்கு சுவீகாரார்த்தத்தில் லட்சணை பண்ணுவதுரித்தாம்.

ஆ-சு. நஹவை தேவா அஶ்நந்தி நபிபந்தி ।
ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி ॥

(பொ-ள்.) மநுஷ்யர்கள் அன்ன முதலிய பொருள்களை யுண்ணுவதுபோலும் தண்ணீர் முதலியவைகளைக் குடிப்பதுபோலும் தேவதைகள் அன்னமுதலியவைகளை யுண்ணுவதும் நீர் முதலியவைகளைக்குடிப்பதுமில்லை; மற்றோ, அவர்கள் அமிருத தரிசனமாத்திரத்தானே திருப்தியடைவர்களென்பதாம். ஹே பகவன்! தாங்கள் சாக்ஷாத் பரமேசுரனாயிருந்தும் அத்தன்மைய பத்திர புஷ்பமுதலிய வற்ப வஸ்துவைச் சுவீகாரம்பண்ணுவதெற்றுக்கோ? மகத்புருஷர்கட்கு மகத்தாம் பொருளைச்சுவீகாரம்பண்ணலே யுரித்தாம் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு அதிற் காரணமருளிச்செய்கின்றார். 'பக்த்யுபஹ்ருதம்' என, அவைகளற்பமாயினும் அவர்கள் மிகவன்போடெனக் கர்ப்பித்தமையின் நான் அவைகளை மகத் பொருளென ஏற்றுக்கொள்கின்றேன். அதாவது, அப்பொருளை யேற்றுக்கொள்வதில் சௌந்தரியத்தன்மை முதலியன காரணமன்று, மற்றோ, போன்பே காரணமாம் என்க. ஈண்டு, 'பக்த்யா ப்ரயச்சதி' என்னும் வாக்கியத்தில் பக்தியை யருளிச்செய்து 'பக்த்யுபஹ்ருதம்' என்னும் வாக்கியத்திலும் மீண்டும் பக்தியை அருளிச்செய்தது இப்பொருளைக்குறிப்பித்தற்காம் :—பிராமணனாயும் பெருந்தவனாயுமிருந்தும் எனது பக்தியின்றியவன் பெரும்பொருளை யர்ப்பணம் பண்ணினும் நானதை யேற்றுக்கொள்ளேன் ஆதலின், பரமேசுரனாகிய என்னாலாக்கப்பட்ட பொருளை யேற்றுக்கொள்வதில் பிராமணன் முதலிய உத்தமசாதியும் தவமும் காரணமன்றாம்; மற்றோ, அர்ப்பணஞ் செய்வோனது போன்பே காரணமாமென்க. அல்லது, மிகவுமன்போடு தாய் கொடுத்தபொருளைப் பாலகன் உண்ணத்தக்கது தகாதது என்னும் விசாரமின்றி உண்ணுமாறுபோல, அன்பர்கள் பேரன்போடர்ப்பணஞ்செய்த உண்ணத்தக்கதகாதவஸ்துக்களின் ஞானமுடையநானும் அவர்களன்போடர்ப்பணஞ்செய்த பத்திர புஷ்பாதிகளை எனது லீலாவதாரத்தால் நேரே

யுண்கின்றேன். ஸ்ரீதாமப்பிராஹ்மணர் போன்போடளித்த தண்டுலத்தையும், சபரரால் போன்போடு கொடுக்கப்பட்ட பதரிப்பலத்தையும் யான் உண்ணுதொழி த்தேனே! ஆதலின், கேவலம் அநன்ய பக்தியே எனது சந்தோஷகாரணமாம். ஏனைய இந்திரன் முதலிய தேவதைகளைச் சந்தோஷப்படுத்துவதில் பெரும்பொ ருட்செலவு தேகவருத்தம் முதலியன காரணமாபோல, என்னைச் சந்தோஷப் படுத்துவதில் அக்காரணங்கள் அவசியாபேட்சிதமன்று; மற்றோ, கேவலம் பத்தி யொன்றே அபேட்சிதமாமாதலின் அதிகாரிகள் வேறு தேவதைகளைவிடுத்துப் பர மேசுரனாகிய என்னை யொருவனையே ஆராதிக்கவேண்டுமென்பதாம். ஒரு வியாக்கி யானத்தில் பத்திரம் புஷ்பம் என்னு மிச்சுலோகத்திற்கு இவ்வாறு பொருள்படுத் துகின்றனர் :—

ஆ-சு. ஜொ௱வெ வாஸ௱ தெவ ஸ்ர அமுஞூாஅமுஜெவஅ ।
அமுஂ ஸநூாவி நொ ௱வஜஅமுஂ வ்ரதிஶாநிகஂ ॥

(போ-ள்.) பரமேசுரனாகிய வாசுதேவனுக்குச் சல மசலம் என இரண்டு ரூபங்களாம். அவற்றில் சந்நியாசியோ சலரூபமாம், சாளிக்கிராமமுதலிய பிரதிமை கள் அசலரூபமாம் என்னுமிச்சாத்திரவாக்கியத்தில் சந்நியாசியும் சாளிக்கிராம முதலிய பிரதிமைகளும் பரமேசுரனது சொரூபமெனக் கூறப்பட்டிருக்கின்றன. அன்றியும் 'அஹூாமதஃ ஸ்வயஂவிஷ்௱ஃ' உண்ணும்போது மனைக்கண்வந்த அதிதி சாட்சாத் விஷ்ணுரூபமாமென்க. இம்மிருதியிலும் அதிதியை விஷ்ணு வெனக் கூறப்பட்டிருக்கின்றதாதலின், அதிகாரியானவன் சாளிக்கிராமத்திற் கேனும்பிரதிமைக்கேனும் அன்போடு என்பொருட்டு அர்ப்பணஞ்செய்யவேணும். அவ்வாறு அர்ப்பித்ததை நானேற்றுக்கொள்வேன். அல்லது, எவன் உண்ணும் போது மனைக்கண்வந்த அன்னம் வேண்டுமதிதிக்குச் சாகம் பல முதலிய எதையுண்கின்றானோ அதை அன்போடு கொடுக்கின் அவன் அன்போடளித்த அப்பத்திர புஷ்பபலாதிகளை அதிதி முகத்தால் நேரே நானே யுண்கின்றேன் என்க. (26)

(அ-கை.) ஹே பகவன்! எப்பூஜையால் தாங்கள் பிரசன்னராவீர்களோ அப்பூஜை எவ்வாறு செய்யற்பாலதாம்? என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பக வானருளிச்செய்கின்றார்.

சு-ம். யத்கரொஷி யத்ஶாஸி யஜ்ஜுஹொஷி ஜஜாஸி யத் ।
யத்தவஸ்யஸி கௌந்தெய தத்கு௱ஷ்வ மத்வ‌ணம் ॥ (27)

ப-ம். 2 யத் 3 கரொஷி 4 யத் 5 அஶ்ாஸி 6 யத் 7 ஜுஹொஷி 9 ஜஜாஸி 8 யத் 10 யத் 11 தவஸ்யஸி 1 கௌந்தெய 12 தத் 14 கு௱ஷ்வ 13 மத்வணம்.

(அ-ம்.) ஹே கௌந்தேய! நீ யாது செய்கின்றனையோ, யாது உண்ணுகின் றனையோ, எவ்வோமஞ் செய்கின்றனையோ, எத்தானம் பண்ணுகின்றனையோ, எத் தவம் பண்ணுகின்றனையோ, அவ்வனைத்தையும் எனதர்ப்பணமாய்ச் செய்குதி.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நூலாக்ஞையின்றிக் கேவலம் ராகத்தால் வந்த கமனகமனவடிவ எந்த லௌகிக கருமத்தை நீ செய்கின்றனையோ அங்ஙனமே, எனது திருப்தியின்பொருட்டேனும் கருமசித்தியின்பொருட்டேனும் எவ்வன் னத்தை யுண்கின்றனையோ, சாஸ்திரபலத்தால் எந்த நித்திய அக்கினிஹோத்திர முதலிய ஹோமத்தைச் செய்கின்றனையோ ஈண்டு 'ஜுஹொஷி' என்னும் ஹொ மவாசகபதமானது சிரௌதஸ்மார்த்த சர்வ ஹோமங்கட்கும் உபலக்ஷணமாம்.

அதாவது, சிரௌதஸ்மார்த்த எத்துணை ஹோமம் நீ செய்கின்றனையோ, அதிதி பிராஹ்மணன் முதலியோர்கட்கு எந்த அன்ன சுவர்ணமுதலிய பதார்த்தங்களைக் கொடுக்கின்றனையோ ஒவ்வொருவருடத்திலும் அறியாமலும் மயங்கியுஞ் செய்யப்பட்ட பாபநிவிருத்தியின்பொருட்டு எந்தச் சாந்திராயணமுதலிய தவஞ்செய்கின்றனையோ அல்லது, இச்சைப்படியுண்டாம் பிரவிருத்தியை நிவிருத்திப்பான் தேகேந்திரியாதிகளையடக்கும் வடிவ எந்தத்தவத்தைச் செய்கின்றனையோ, இத்தவம் சர்வ நித்திய நைமித்திககருமங்கட்கு முபலக்ஷணமாம். அக்கருமங்களனைத்தையும் பரமேசுரனாகிய எனக்கர்ப்பணஞ் செய்குதி. அதாவது, பிராணியின் சுபாவ வசத்தால் சாஸ்திரமின்றி அவசியஞ் செய்பத்தக்க போதல்வருதல் முதலிய லௌகிக கருமங்களையும் சாஸ்திர பலத்தால் அவசியஞ்செய்பத்தக்க ஹோமதான முதலிய கருமங்களையும் வேறு நிமித்தத்தாற் செய்யப்படு மிவ்விருவித கருமங்களையும் பரமேசுரனாகிய எனக்கர்ப்பணமாம் வண்ணமே செய்குதி. ஈண்டு, 'குருஷ்வ' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் காண்பித்தனர்.—இவ்வணமெவன் சர்வ கருமங்களையும் பரமேசுரனாகிய எனக்கர்ப்பணஞ்செய்கின்றானோ அவனுக்கு மோட்சவடிவபலம் பிராப்தியேயாகும்; அதனால் எனக்குச் சிறிதளவும் பலனுண்டாவதில்லையென்க. இதனாலிப்பொருள் பெறப்பட்டது:—அவசியஞ்செய்யத்தக்க கருமங்களைப் பரமகுருசொரூப பரமேசுரனாகிய எனக்கு அர்ப்பணஞ்செய்தலே எனதாராதனையாம். அதில் மற்றொரு தொழிலும் வேறாய்ச் செய்யத்தக்கதின்றாமென்க. (27)

(அ-கை.) இப்போது கூறிப்போந்த ஆராதனையின் பலத்தை அதிகாரிகளையாராதனத்தில் முயலுவிப்பான் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஶுபாஶுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தநை: ।
ஸந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி ॥ (28)

ப-ம். 2 ஶுபாஶுபபலை: 1 ஏவம் 4 மோக்ஷ்யஸே 3 கர்மபந்தநை: 5 ஸந்யாஸயோகயுக்தாத்மா 6 விமுக்த: 7 மாம் 8 உபைஷ்யஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அத்தன்மைய ஆராதனையையுடைய நீ இஷ்டாநிஷ்டபலமுடைய கருமவடிவ பந்தங்களினின்று விடுபடுவாய். அங்ஙனமே சந்நியாச யோகயுக்தான்மாவாகிய நீ அக்கருமபந்தங்களினின்று விமுக்தனாய்ப் பரப்பிரஹ்மமாகிய என்னையே யடைவாய். (28)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்தவகையால் ஆயாசமின்றியே சித்தமாகும் சர்வ கருமங்களையும் எனதர்ப்பணமாக்கல்வடிவ எனதாராதனையையடைந்த நீ இஷ்டாநிஷ்டபலங்களையுடைய கருமபந்தனவடிவ லௌகிகவைதிக கருமங்களினின்று நீங்குவை; அதாவது, அச்சர்வ கருமங்களும் எனக்கர்ப்பணமானதால் உனக்கதனோடு சம்பந்தம் பொருந்தாதாதலின் அக்கருமங்களானும் அதனுடை இஷ்டாநிஷ்ட பலங்களானும் நீ சம்பந்தியாகமாட்டாய்; அதன்பின்னர் சன்னியாசயோக யுக்தனாகிய நீ; ஈண்டுச் சர்வகருமங்களையும் பரமேசுரனுக் கர்ப்பணம்பண்ணல் சந்நியாசமாம்; அதுவே யோகம்போலச் சித்தசோதகமானதால் யோகரூபமாம்; அத்தன்மைய சன்னியாச யோகயுக்தனென்பது சோதிக்கப்பட்ட ஆன்மாவெனு மந்தக்கரணமுடையோன் சன்னியாசயோகயுக்தான்மாவாம்; அல்லது, அச்சந்நியாசயோகத்தில் யுக்தன் என்பது ஆசக்தாந்தக்கரணமுடையனுவன்; அல்லது, பலத்தோடு சர்வ கருமங்களின் தியாகம் சந்நியாசமாம், அச்சந்நியாசயோகத்தோடுகூடிய மனமுடையோன் சந்நியாசயோக யுக்தான்மாவாம்; அத்தன்மையனாய்ச் சீவித்திருப்பினும் அக்கருமவடிவபந்தங்களினின்று விடுபட்டவனை

கிய நீ; என்னையே யடைவாய். அதாவது, சம்யக்தரிசனத்தால் அஞ்ஞானவடிவ ஆவரணத்தை நிவிருத்தித்துப் பரப்பிரஹ்மமாகிய என்னை 'நான் பிரஹ்மமாகின்றேன்' எனச் சாக்ஷாத்கரிப்பாய். அதன்பின்னர்ப் போகத்தால் பிராரத்தகருமநாசமாயித் தேகம் விழவே விதேககைவல்லியவடிவ பரப்பிரஹ்மமாகிய என்னையடைவாய். நிகழ்காலத்தும் பரப்பிரஹ்மமாகிய எனது சொரூபனுச் சர்வோபாதிகளினிவிருத்தியால் மாயையாலான பேதவிபவகாரவிடயமாகாய். (28)

(அ-கை.) ஹே பகவன்! நீரும் உமதன்பர்கட் கநுக்கிரகம்பண்ணி அன்பிலார்க்குச் செய்யாதொழிவீரேல் எம்மனோர்களைப்போல ராகத்துவேஷங்களையுடையராதலின் பரமேசுரராதல் யாங்ஙனமாம்? மற்றோ, எம்மனோர்களைப்போல நீருமொரு சீவவிசேஷராகுகிர் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிசெய்கின்றார்.

சு-ம். 𑌸𑌮𑍋𑌽𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌨 𑌮𑍇 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌯𑍇 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌯𑌿 𑌤𑍇 𑌤𑍇𑌷𑍁 𑌚𑌾𑌪𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ (29)

ப-ம். 3 𑌸𑌮𑌃 1 𑌅𑌹𑌂 2 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 6 𑌨 4 𑌮𑍇 5 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑌃 7 𑌅𑌸𑍍𑌤𑌿 9 𑌨 8 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 11 𑌯𑍇 14 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 10 𑌤𑍁 12 𑌮𑌾𑌂 13 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 17 𑌮𑌯𑌿 15 𑌤𑍇 20 𑌤𑍇𑌷𑍁 16 𑌚 19 𑌅𑌪𑌿 18 𑌅𑌹𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய நான் சர்வப் பிராணிகளிடத்தும் சமானனுதலின், ஒரு பிராணியும் எனக்குத் துவேஷ விஷயமும் பிரீதிவிஷயமுமின்றேனும், எவன் என்னை அன்போடு சேவிக்கின்றானோ அவனே என்னிடத்துள்ளான்; நானுமவனிடத்திலேயுளேன். (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய எனது பக்தாபக்தர்களனைவரிடத்தும் நான் சமானனே அதாவது, பரமேசுரனுகிய எனக்குச் சுபாவிகம், உபாதியாலாயது என இருவகை வடிவங்களுண்டு. அவற்றுள், சச்சிதானந்த மூன்றும் எனது சுபாவிகவடிவமாம். அந்தரியாமித்தன்மை யுபாதியாலாயதாம். சுபாவிகமான சச்சிதானந்தவடிவங்களால் அப்பிராணிகளனைத்திலுஞ் சமானன், உபாதியாலாகிய அந்தரியாமிவடிவத்தானுஞ் சமானன், இதனுனே ஒரு பிராணியும் எனக்குத் துவேஷவிஷயமும் பிரீதிவிஷயமுமன்றாம். வானமண்டலத்தில் வியாபகமாகிய இரவியொளிக்கு ஒரு பொருளினும் விருப்பு வெறுப்பின்றாம்; மற்றோ, யாண்டுஞ் சமானமாவதுபோலாம். ஹே பகவன்! ஒரு பிராணியிடத்தும் உமக்கு விருப்பு வெறுப்பின்றேல் உமது பக்தாபக்தர்களிடத்துப் பல விஷமத்தன்மை எவ்வாறாம்? என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதிற்காரணமருளிச்செய்கின்றார். '𑌯𑍇 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿' என, அர்ச்சுன! எவர்கள் சர்வ கருமங்களையும் பரமேசுரார்ப்பணம் பண்ணல் வடிவ பக்தியால் என்னைச் சேவிக்கின்றார்களோ அவர்கள் சிரேஷ்டர்களாவர்கள். ஈண்டு, '𑌯𑍇 𑌭𑌜𑌨𑍍𑌤𑌿 𑌤𑍁' என்பதிலுள்ள 'து' சத்தமானது அபக்தர்களபேட்சையால் பக்தர்களின் விசேஷத்தன்மையை அறிவுறுத்தற்பொருட்டாம்; அவ்விசேடத்தன்மையாதாமெனின் அருளுகின்றார் '𑌮𑌯𑌿 𑌤𑍇 𑌤𑍇𑌷𑍁 𑌚𑌾𑌪𑍍𑌯𑌹𑌮𑍍' என. அர்ச்சுன! எனக்கர்ப்பணம்பண்ணிய நிஷ்காமகருமத்தால் எவன் சுத்தாந்தக்கரணமுடையனே அவனே என்னிடத்திருக்கின்றான்; அதாவது ரஜோதமங்களொழிந்து சத்துவ குணமிருந்ததால் மிகவும் சுவச்சமாகிய அந்தக்கரணவிருத்தியைப் பரமேசுரனுகிய எனதாகாரமாய் உபநிஷத் பிரமாணத்தாலுண்டுபண்ணிய பக்தர்களே என்னிடத்திருக்கின்றார்கள். அபக்தர்கள் என்னிடத்திவ்வாறிரார்கள். பரமேசுரனுகிய நானும் அந்தப் பக்தர்களிடத்திலிருக்கின்றேன்; அதாவது

நானும் அவர்களுடைய சுவச்சமாகிய அந்தக்கரணவிருத்தியிற் பிரதிவிம்பிதனுகி அவர்களிடத்திருக்கின்றேன்; என்னை, இவ்வுலகத்தில் யாது யாது சுவச்சத்திரவியமோ அதுவதற்கு இது சுபாவமேயாம்:—எப்பொருளோடு அதற்குச் சம்பந்தமுண்டாகின்றதோ அப்பொருளாகாரத்தை அது தன்னிடத்திழுத்துக்கொள்ளல். அச்சுவச்சத்திரவியத்தோடு சம்பந்தமுடையவை எவ்வெப்பொருள்களோ அப்பொருள்கட்கு மிதுவே சுபாவமாம்; அச்சுவச்சத்திரவியத்தினிடத்தில் பிரதிவிம்பதன்மையையடைதல். அன்றியும், சுவச்சமிலாத்திரவியங்கட்கும் அதனேடு சம்பந்தமான பொருள்களுக்கும் அவ்வாகாரத்தைக் கிரகியாததும் அதிற் பிரதிவிம்பபாவத்தையடையாததுமேசுபாவமாம். இரவியொளியானது எவ்விடத்துஞ் சமமேனும் சுவச்சமாகிய தர்ப்பணமுதலியவைகளிலே விளக்கமாகின்றது. சுவச்சமிலாத கடமுதலியவைகளிலின்று இத்துணையானே அப்பிரகாசத்திற்கு தர்ப்பணத்தில் ராகமும் கடாதிகளிடத்தில் துவேஷமும் சித்தமாவதில்லாததேபோலப் பரமேசுரனுகிய நான் எல்லாவிடத்துஞ் சமமாயினும் பக்தர்களின் நின்மலாந்தக்கரணத்தில் விளக்கமாகின்றேன்; அபக்தர்களின் மலினந்தக்கரணத்தில் விளக்கமாகிலேன். இத்துணையானே எனக்குப் பக்தர்களிடத்து ராகமும் அபக்தர்களிடத்துத்துவேஷமும் சித்தியாதாமாதலின், பரமேசுரனுகிய என்னிடத்திற் சிறிதளவும் விஷமத்தன்மையின்றும். கருத்திதுவாம்.—இராகத்துவேஷங்களின்றியதாயினும் அக்கினியானது தன்னிடத்தில் நெருங்கியிருப்போர்களின் சீதத்தை நீக்குகின்றது. நெருங்காதோர்களின் சீதத்தை நிவிருத்திப்பதில்லை. அங்ஙனமே இராகத்துவேஷங்களின்றிய கற்பகவிருக்ஷமும் தனையணுகினேர்க்கு மனநிவிச்சித்தபொருளைக்கொடுக்கின்றது அணுகாதோர்க்கில்லை. இத்துணையானே அக்கினியினும் விருக்ஷத்தினும் விஷமதோஷப் பிராப்தியாகாதவாறேபோல, இராகத்துவேஷங்களின்றிய பரமேசுரனுகிய நானுஞ் சரணுகதமான பக்தர்களின் பந்தத்தையே நிவிருத்திப்பேன் ஏனையோர்களின் பந்தத்தை நிவிருத்தியேன் இத்துணை மாத்திரத்தால் என்னிடத்தில் விஷமதோஷப் பிராப்தியின்றும் என்க. (29)

(அ-கை.) எவ்விடத்துஞ் சமானமாகிய என்னிடத்தில் விஷமத்தன்மையைக் காட்டுவது பரமேசுரனுகிய எனது பக்தியின் பிரபாவமாம். அப்பக்தியின் பிரபாவத்தை நீ கேளுதி.

சு-ம். அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக் ।
ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ: ॥ (30)

ப-ம். 2 அபி 3 சேத் 1 ஸுதுராசார: 6 பஜதே 5 மாம் 4 அநந்யபாக் 8 ஸாது: 9 ஏவ 7 ஸ: 10 மந்தவ்ய: 13 ஸம்யக் 14 வ்யவஸித: 11 ஹி 12 ஸ:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஒருவன் மிகவும் துராசாரமுடையவனுயினும் அநன்யசித்தனுய்ப் பரமேசுரனுகிய என்னை ஆராதிப்பனேல் அவன் சாதுவேயென மதித்தல்வேண்டும்; அவன் உள்ளவாறு நிச்சயமுடையோனுதலின். (30)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாரேனுமொருவன் அஜாமிளாதிகளைப்போல முற்றுந்துராசாரமுடையனுயினும் பூர்வ புண்ணியோதயத்தால் அநன்ய சித்தனுய் என்னை யாராதிப்பனேல் அவன் முன்னர் அசாதுவாயினும் அப்போது சாதுவென்றே கொள்ளவேண்டும். எதனுலவன் அக்காலத்தில் இனிய நிச்சயமுடையோனுவனே ஆண்டுத் துராசாரமுடையவனும் பரமேசுரனதாராதனத்தால் சாதுவேயாவன் என்பது அன்னிய சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌅𑌤𑌿𑌪𑌾𑌪 𑌪𑍍𑌰𑌸𑌕𑍍𑌤𑍋𑌽𑌪𑌿 𑌧𑍍𑌯𑌾𑌯 𑌨𑍍𑌨𑌿𑌮𑌿𑌷 𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌮𑍍 ।
𑌭𑍂𑌯 𑌸𑍍𑌤𑌪𑌸𑍍𑌵𑍀 𑌭𑌵𑌤𑌿 𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿𑌪𑌾𑌵𑌨𑌪𑌾𑌵𑌨𑌃 ॥ (1)

𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌨𑍍𑌯𑌶𑍇𑌷𑌾𑌣𑌿 𑌤𑌪𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑌾𑌨𑌿 𑌵𑍈 ।
𑌯𑌾𑌨𑌿 𑌤𑍇𑌷𑌾 𑌮𑌶𑍇𑌷𑌾𑌣𑌾𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌣𑌂𑌪𑌰𑌮𑍍 ॥ (2)

(பொ-ள்.) அத்தியந்த பாவகருமத்திலழுந்தினவனும் அனன்ய சித்தனாய் ஒருகணப்போது என்னையாராதிப்பனேல், அதன் பிரபாவத்தால் சர்வ பாபமற்றவனாகி மீண்டுந்தவசுடையனாகின்றான். பாப மலத்தைச் சுத்தம்பண்ணும் சதாசாரமுடையவர்களையும் தனது தரிசனத்தால் சுத்தம் பண்ணுகின்றவனுமாகின்றான். அல்லது, பாவநிவிருத்தியின்பொருட்டுத் தருமசாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கிருச்சிர அதிகிருச்சிர மஹாகிருச்சிர சாந்திராயணமுதலிய பிராயச்சித்தங்களனைத்தினும், வாஜபேய ராஜசூய அசுவமேத யஞ்ஞமுதலிய கருமரூபப் பிராயச்சித்தங்களனைத்தினும் ஸ்ரீ கிருஷ்ணபகவானது ஸ்மரணமேலானதாமென்க. கருத்திதுவாம்:—அக் கிருச்சிரமுதலிய பிராயச்சித்தங்கள் எவ்வெப்பாவ நிவிருத்தியின் பொருட்டுச் செய்யப்படுகின்றதோ அவ்வப்பாவத்தையே நிவிருத்திக்கும்; ஏனைய பாவத்தையகற்றாது. இப்பரமேசுர ஸ்மரணமோ! நூறுகோடி கற்பங்களின் பாவத்தையும் நாசம்பண்ணும். இது பிறநூலினுங்கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌯𑌶𑍍𑌚𑍈𑌕𑌾 𑌗𑍍𑌰𑌮𑌨𑌸𑌾 𑌸𑌕𑍃𑌤𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌰𑌤𑌿 𑌪𑌾𑌪𑌾𑌨𑌂 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌃 𑌕𑍃𑌤𑌮𑍍 ॥

(பொ-ள்.) எவன் ஒருமைப்பட்ட மனத்தால் ஒருதரம் யான் பிரஹ்மசொரூபம் என அபேதமாய் என்னைச் சிந்திக்கின்றானோ அவன் நூறுகோடி கற்பத்திற் செய்யப்பட்ட சர்வ பாவங்களையு நாசஞ்செய்கின்றான் என்பதாம். (30)

(அ-கை.) ஆண்டு அநன்ய சித்தனாய்ப் பரமேசுரனை ஸ்மரித்தலே மோட்ச சாதனம் என்னுந் திடநிச்சயத்தால் அவன் முந்திய துராசாரங்களை நீக்கிச் சீக்கிரமே தருமான்மாவாகின்றான், என்பதை ஸ்ரீ பகவான் இப்போதருளிச் செய்கின்றார்.

சு-ம். 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ।
𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌨 𑌮𑍇 𑌭𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ (31)

ப-ம். 1 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌰𑌂 3 𑌭𑌵𑌤𑌿 2 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 4 𑌶𑌶𑍍𑌵𑌤𑍍 5 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 6 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 7 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 12 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 10 𑌨 8 𑌮𑍇 9 𑌭𑌕𑍍𑌤𑌃 11 𑌪𑍍𑌰𑌣𑌶𑍍𑌯𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவன் சீக்கிரமே தருமான்மாவாகின்றான் நித்திய சாந்தியையுமடைகின்றான்; கௌந்தேய! எனது பக்தன் நாசமாகானென நீ பிரதிஞ்ஞை செய்குதி. (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர்ப் பல்காலம் அதர்மான்மாவானவனும் பரமேசுரனாகிய எனது பஜனையின் பிரபாவத்தால் சீக்கிரமே தருமான்மாவாகின்றான்; அதாவது, அவன் அவ்வாராதனையின் பிரபாவத்தால் முந்திய துராசாரத் தன்மையை விடுத்துத் தருமத்திற் பிரீதியுடையவனாகின்றான். அல்லது, எனதன்பனாகிய அவனுக்குக் கேவலம் இத்துணைப்பலமன்று, மற்றோ இதனினும் மிகுந்த பலனுண்டாமென்பதை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார். '𑌶𑌶𑍍𑌵𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌨𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿' என, அர்ச்சுன! எனதாராதனையின் பிரபாவத்தால் அவன் நித்திய சாந்தியையடைகின்றான்; அதாவது, பரனாகிய எனதாராதனையால் சுத்தாந்தக்கரணனாகிய

அவன் தீவிர வைராக்கியமுடையனும்ச் சகல விடயபோகங்களினிச்சையற்றவனு கின்றான். ஹே பகவன்! பரமேசுரனைப் பஜனைபண்ணுவோனும் முந்திய துராசாரத்தைவிடாது தருமான்மாவாகாதொழிகின்றானாதலின் அவன் நாசத்தையே யடைவான் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் பக்தர்களிடத்துள்ள கிருபாபரவசத்தால் வெகுண்டவனைப்போன்று அவனுக்கருளிச்செய்கின்றார். ‘ கௌந்தேய ’ என முன்னர்த்துராசாரனாயினும் இவன் பரமேசுரனாகிய எனது பஜனையின் பிரபாவத்தால் அத்துராசாரத்தைவிடுத்துச் சீக்கிரமே தருமான்மாவாகின்றான், நித்தியசாந்தியையுமடைகின்றான். இஃதோ ரற்புதமென நீ யறியற்க; மற்றோ, எனது பக்திப்பிரபாவம் நிச்சயமேயாதலின் இவ்விஷயத்தில் வாதம்பண்ணும் பிரதிவாதியின் முன்னின்று கரமேலெடுத்து அப்பிரதிவாதியின் அவமான பூர்வகம் கருவத்தோடும் பரமேசுர பக்தன் மிகவும் துராசாரனாயினும், பிராணசங்கடத்தையடையினும், மிக மூடனாயினும், அசரணனாயினும் நாசத்தையே அடையான் எனப் பிரதிக்ஞை செய்வாய். அதாவது, துர்க்கதியையடைவதில்லை. மற்றோ, எல்லாவாற்றானும் எனது பக்தன் கிருதார்த்தனேயாகின்றான். இதில் அஜாமிலன், பிரகலாதன், துருவன், கஜேந்திரன் முதலிய அநேக திருட்டாந்தம் மிகப்பிரசித்தமாம். அங்ஙனமே,

ஆ-ம். ந வாஸுதேவ ஭க்தாநா மஶுபம் வித்யதே க்வசித் ।

(பொ-ள்.) பரமேசுர பக்தனுக்கு ஒருக்காலும் அசுபமின்மையுண்டாகாதாம் என்பது முதலிய பல சாத்திரவசனங்களும் பிரமாணமாமென்க.

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் இடையில்வரும் தோடத்தால் துஷ்டனானவனுக்குப் பகவத்பக்திப்பிரபாவத்தால் ஈடேறுந்தன்மை கூறப்பட்டது. இப்போது சுபாவிகதோஷத்தோடுகூடிய துஷ்டனுக்கும் அதன் பிரபாவத்தால் ஈடேறுந்தன்மை கூறியருளுகின்றார்.

சு-ம். மாம் ஹி பார்த² வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா² ஶூத்³ராஸ்தேऽபி யாந்தி பராம் க³திம் ॥ (32)

ப-ம். 2 மாம் 17 ஹி 1 பார்த² 3 வ்யபாஶ்ரித்ய 4 யே 6 அபி 7 ஸ்யு: 5 பாபயோநய: 9 ஸ்த்ரிய: 10 வைஶ்யா: 8 ததா² 11 ஶூத்³ரா: 12 தே 13 அபி 16 யாந்தி 14 பராம் 15 க³திம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னை ஆசிரயித்தவர்கள் பாபயோனிகளாயினும் ஸ்திரீகளாயினும் வைசியர்களாயினும் சூத்திரர்களாயினும் பரமகதியையே அடைவார்கள் என்னும் இது நிச்சயமேயாம். (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது சரணத்தையடைந்தவர்கள் பாபிகளாயினும் அதாவது, சாதிதோடத்தால் துஷ்டர்களாகிய சண்டாளர்களாயினும், சர்ப்ப முதலிய திரியக்யோனிகளாயினும், வேதாத்தியயனமிலாமையின் அதிநிக்கிருஷ்டர்களாகிய ஸ்திரீகளேனும், கிருஷிவாணிச்சிய முதலியவைகளில் தத்பரராகிய வைசியர்களேனும், வேதாத்தியயன முதலியவைகளின்மையின் பரமகதிக் கயோக்கியமான சூத்திரர்களேனும், பரமேசுரனது பக்திப்பிரபாவத்தால் சுத்தாந்தக்கரணமுடையராய்ப் பிரஹ்மசாட்சாத்காரவாயிலாய் மோக்ஷவடிவப் பரமகதியையே அடைகின்றார்கள் இஃதுண்மையென்றுணர்தி. இதிற் சிறிதளவு மையமுறாதொழி நீ. ஈண்டு, ‘ மாம்ஹி ’ என்பதிலுள்ள ‘ ஹி ’ சத்தத்தால் இவ்வர்த்தத்தில் நூற்பிரமாண சித்தியுமுளதெனத் தெரிவிக்கப்பட்டதாம். அம்மானமிதுவாம்.

ஆ-சு. கிராத ஹூணாந்த்ர புலிந்த புல்கஸா ஆபீர கங்கா யவநா:
ஸாதய: யேந்யே ச பாபா யதுபாச்ரயாச்ரயா:
சுத்த்யந்தி தஸ்மை ப்ரபவிஷ்ணவே நம:

(பொ-ள்.) கிராத, ஹூண, அந்திர, புலிந்த, புல்கஸ, ஆபீர, கங்க, யவன, கச, என்பன முதலிய தாழ்ந்த சாதியுடைய பிராணிகளும் மற்றும் பாபாசரணமுடையர்களனைவர்களும் எந்தப் பரமேசுரனது சரணத்தையடைந்து சுத்தர்களாகின்றார்களோ அப்பரமேசுரனை யான் நமஸ்கரிக்கின்றேன். ஈண்டு, அவர்களும் என்பதிலுள்ள. உம்மையால் 'ஸ்த்ரியோ வைஸ்யாஸ்ததா சூத்ரா' என, முற்சுலோகத்திற்கூறப்பட்ட துராசாரமுடையோர்களையுங் கொள்ளவேண்டும். (32)

(அ-கை.) ஆண்டு இவ்வாறு ஸ்திரீசூத்திரர் முதலியோர்களும் பரமேசுரனது பக்தியால் பரமகதியையடைவர்களேல், பிராஹ்மணர், முதலிய உத்தமர்கள் அப்பக்தியால் பரமகதியை அடைவார்களென்பதில் வியப்பென்னை? என்னுங் கைமுதிக நியாயத்தால் ஸ்ரீ பகவான் அவ்வுத்தமர்கட்குப் பக்தியில் பிரவிருத்தியுண்டாம்பொருட்டுப் பகவத்பத்தியின் பிரபாவத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். கிம் புநர்ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ்ததா ।
அநித்யமஸுகம் லோகமிமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ (33)

ப-ம். 7 கிம் 6 புந: 3 ப்ராஹ்மணா: 2 புண்யா: 1 பக்தா: 5 ராஜர்ஷய: 4 ததா 9 அநித்யம் 10 அஸுகம் 11 லோகம் 8 இமம் 12 ப்ராப்ய 14 பஜஸ்வ 13 மாம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எனது பக்தனாகிய உத்தமஜாதியையுடை பிராமணனும் க்ஷத்ரியனும் பரமகதியை அடைவார்கள் என்பதன்கண்ணே மறித்தும் யாதோ தற்குளது! ஆதலின், நீ அநித்தியமும் துக்கத்தோடுற்றதும் ஆய மனுட தேகத்தை அடைந்து பரமேஸ்வரனாகிய என்னை ஆராதிப்பாயாக. (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய ஸ்திரீசூத்திரர் முதலியோர்களும் பரமேசுரனாகிய எனது பக்தியால் பிரஹ்மஞானப்பிராப்திவாயிலாய் மோக்ஷமாகிய பரமகதியையடைவர்களெனின், உத்தமாசார உத்தமஜாதியுடைய பிராஹ்மணர்களும் சூட்சுமப்பொருளை விவேகம் பண்ணப்பட்ட க்ஷத்திரியர்களும் எனது பக்தியால் பிரஹ்மஞானவாயிலாய் மோட்சமாகிய பரமகதியை யடைவர்களென்பதில் கூறற்பாலதென்னை? மற்றோ, இதிலொருவர்க்கேனுஞ் சந்தேகமின்றாம். அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது பக்தியின் மஹாப் பிரபாவமிவ்வாறாமாதலின் சர்வ புருடார்த்தத்தையு மடையத்தக்கதும் மிக வருமையுமாகிய இம்மனுஷ்யதேகத்தை அதிகாரியாகிய நீ அடைந்தும், எத்துணைக்காலம்வரையில் இம்மநுடதேகம் நாசத்தையும் நோயால் கிலேசத்தையும் அடையவில்லையோ அத்துணைக்குள் மிகச்சீக்கிரமாய்ப் பெருமுயற்சியால் பரமேசுரனாகிய எனது சரணாகதனாகுதி. அர்ச்சுன! இம்மநுடதேகம் எத்தன்மையதெனின், அநித்தியமாம். அதாவது, சீக்கிரமே நாசமாகப்பட்டது. அசுகமாம், அதாவது கருப்பத்திருத்தன் முதற்கொண்டு பலவிதத் துக்கத்தொடக்குற்றது. இவ்வணம் அநித்தியமு மசுகமுமாதலின் நீ பரமேசுர பஜனையில் விலம்பஞ்செய்யாதே, இச்சரீர சுகத்தின்பொருட்டு முயல்வதொழிப்பாய். அர்ச்சுன! முன்னர் உத்தமாசாரமுடைய ஜனகாதி ராஜரிஷிகள் பரமேசுரனாகிய எனதாராதனத்தால் தமது சென்மத்தை சபலப்படுத்தினது போல, நீயும் எனது பஜனையால் உனது சென்மத்தைச் சபலம்பண்ணுதி. அதிகாரமுடைய இம்மநுடதேகத்தை யெடுத்தும் எனது சிந்தனைபரனாகாதொழிவை

யேல், அத்தன்மைய உனது சரீரம் பயனற்றதாம். இது சுருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. 𑌇𑌹 𑌚𑍇𑌦𑌵𑍇𑌦𑍀𑌦𑌥 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌚𑍇𑌦𑌿𑌹𑌾𑌵𑍇𑌦𑍀𑌨𑍍𑌮𑌹𑌤𑍀 𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌿𑌃 ।

(பொ-ள்.) இப்பாரதகண்டத்தில் அதிகாரமுடைய மநுடதேகத்தை எடுத்து இவன் பரமான்மாவைச் சாட்சாத்கரிப்பனேல் இவனுக்கு மோக்ஷவடிவ நித்திய பலமே பிராப்தியாம். இவன் இத்தன்மைய தேகமெடுத்தும் பரமான்மாவைச் சாட்சாத் கரியானேல் இவனுக்கடிக்கடி பிறத்தலிறத்தல்வடிவ சம்சாரமே பிராப்தியாம் என்க.

(அ-கை.) கூறிப்போந்த பஜனைப்பிரகாரத்தை அருளிச்செய்து ஸ்ரீ பகவான் இப்போது இவ்வொன்பதாவது அத்தியாயத்தைச் சமாப்திசெய்தருளுகின்றார்.

சு-ம். 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾 𑌭𑌵 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍋 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 𑌮𑌾𑌂 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 ।
𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌸𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ (34)

ப-ம். 1 𑌮𑌨𑍍𑌮𑌨𑌾𑌃 2 𑌭𑌵 3 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌃 4 𑌮𑌦𑍍𑌯𑌾𑌜𑍀 5 𑌮𑌾𑌂 6 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍁 11 𑌮𑌾𑌂 12 𑌏𑌵 13 𑌏𑌷𑍍𑌯𑌸𑌿 10 𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 7 𑌏𑌵𑌂 9 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 8 𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌯𑌣𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நீ என்னிடத்தில் மனமுடையவனும் எனது பக்தனும் எனது பூஜாபராயணனும் ஆகுதி. எனக்கு நமஸ்காரமுஞ் செய்குதி. இவ்வாறு எனது சரணாகதனாகிய நீ உனதுள்ளத்தை எனதிடத்திலே செலுத்தி என்னையே யடைகுவாய். (34)

(வி-ம்) ஹே அர்ச்சுன! எவனது மனம் கேவலம் பரமேசுரனிடத்திலேயே பற்றுவதும் மற்றைய புத்திரமனைவி முதலியவைகளில் பற்றாததுமாமோ, அவன் என்னிடத்தில் மனமுடையனாவன்; அவ்வண்ணம் நீ யாகுதி. எவன் பரமேசுரனாகிய எனக்கொருவனுக்கே பக்தனாய்த் திரவிய முதலியவைகளை யடைதற்பொருட்டு ஏனைய இராஜன் முதலியோர்கட்குப் பக்தனாகானோ, அவன் எனது பக்தனாகுவான்; நீயுமப்படிப் பக்தனாகுதி. கருத்திதுவாம்:— இவ்வுலகத்தில் இராஜன் முதலியோர்களின் அடிமைக்காரர்கள் திரவிய முதலியவற்றின் பிராப்தியின் பொருட்டு அவ்விராசனுக்குப் பக்தர்களாயினும் அந்த ராஜன் முதலியோர்களிடத்தில் அவர்கள் மனம் பற்றுடையதன்றாம்; மற்றோ, தமது மனைவி மக்களிடத்தில் பற்றுளதாம். ஆதலின், அவர் இராஜாவின் பக்தராகினும் அவனிடத்தில் மனமுடையோரலர், அவருடைய புத்திராதிகளிடத்தில் மனமுளோராவர். அங்ஙனமே, என்னிடத்தில் பக்தியுடையோனாயினும் பிறவற்றில் மனமுளனாகற்க, என்னிடத்தில் மனமுள்ளோனேனும் பிறவற்றிற் பக்தியுளனாகற்க; மற்றோ, என்னிடத்திலே மனமும் பக்தியுமுடையனாகுதி என்பதாம். மத்யாஜியாகுவாய்; அதாவது, எனது பூஜாபராயணனாகுதி, முக்கரணத்தானும் என்னை வணங்குதி. இவ்வாறு எனது பராயணனாகிய நீ அதாவது, பரமேசுரனாகிய என்னை யொருவனையே சரணாகதமாயடைந்த நீ உனது அந்தக்கரணத்தை எனது சிந்தனத்தின்கண்ணே செலுத்திப் பரமானந்தகன சுவப்பிரகாச நிருபத்திரவ அபயபரப்பிரஹ்மமாகிய என்னையே கடவான் மாவானாவதுபோலவும், ஆறுகடலாவதுபோலவும் அபேதமாயடைகுவாய். கருத்திதுவாம்:—கடோபாதியொழியவே கடவான் அபேதமாய் மாவானை யடைவதுபோலவும், ஸ்ரீ கங்கை யமுனை முதலிய நதிகள் தமது நாமரூபங்களைவிடுத்துச் சமுத்திரத்தை அபேதமாயடைவதுபோலவும், நீயும் பரமேசுரனாகிய எனது பக்தியாலுண்டாகிய பிரஹ்மசாட்சாத்காரத்தால் அவித்தை

முதலிய சர்வோபாதிகளும் இன்றியவனாய் நிர்க்குணப்பிரஹ்மமாகிய என்னையே அபேதமாயடைவாய்.

ஆ-சு. யதா2 நத்3ய: ஸ்யந்த3மாநா: ஸமுத்3ரே(அ)ஸ்தம் க3ச்ச2ந்தி நாமரூபே விஹாய ।
தயா2 வித்3வாந் நாமரூபாத்3 விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி தி3வ்யம்.

(பொ-ள்.) ஸ்ரீ கங்கை யமுனை முதலிய நதிகள் தமது நாமரூபங்களை விடுத்துக் கடலிற்சென்று ஒன்றுந்தன்மையடைவதுபோல, இவ்வித்துவானும் நாமரூபமின்றியவனாய்ச் சர்வோத்கிருஷ்ட சுயஞ்சோதியாகிய பரமான்மபுருஷனையே அபேதமாயடைகின்றானென்பதாம். ஒரு வியாக்கியானத்தில் 'பராதே3வ பராத்பரம் புருஷம்' எனப் பதத்தை அந்நுவயித்து 'பராத்பரம்' என்பதால் பரமான்மாவையே கொண்டனர். (34)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரி சுவாமிகளால் இயற்றியருளிய பிராகிருதடீகையெனப் பெயரிய பகவற்கீதை கூடார்த்ததீபிகையின்

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பத்தாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம: ஸ்ரீ குருப்யோநம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

ஆண்டுப் பூர்வம் ஏழு எட்டு ஒன்பது அத்தியாயங்களால் தத்பதார்த்தவடிவப் பரமேசுரனது சோபாதிக நிருபாதிக சொரூபங்களைக் காண்பித்தருளினர். அந்தத் தத்பதார்த்த பரமேசுரனது விபூதிகள் ; அவ்விருவகைச் சொரூபங்களிலும் ஒன்றில் தியானத்திற்கும் மற்றொன்றில் ஞானத்திற்கும் உபாயங்களாம். அத்தன்மைத்தான பரமேசுரனுடைய விபூதிகள் ஏழாவது அத்தியாயத்தில் 'ரஸோऽஹமப்ஸு கௌந்தேய' என்பது முதலிய வசனங்களாலும், ஒன்பதாவது அத்தியாயத்தில் 'அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ:' என்பது முதலிய வாக்கியங்களாலும் சுருக்கிக் கூறிபருளப்பட்டன. அவைகளை விரித்துக்கூறவேண்டுவதொருதலையாம். என்னை, பகிர்முகமுடையோர்கட்கு அப்பரமேசுர சொரூபம் தியானித்தற்கும் மிகவுந் துர்விஞ்ஞேயமாம், அத்தன்மைய சொரூபத்தை மறித்து மறித்தும் அருளிச்செய்வது அதனுணர்ச்சியின்பொருட்டேயாமாதலின், ஸ்ரீ பகவான் இப்பத்தாவது அத்தியாயத்தை ஆரம்பித்தருளுகின்றார். ஆண்டு முதலில் அர்ச்சுனனது உள்ளத்தில் உத்சாகமுண்டாக்குவான் பரமகிருபாளுவாகிய ஸ்ரீ பகவான் வினவாமலே அவனுக்கு அருளிச்செய்கின்றார்.

(அ-கை.) 'ஸ்ரீ ப4க3வாநுவாச.'

சு-ம். பூ4ய ஏவ மஹாபா3ஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।
யத்தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ (1)

ப-ம். 2 𑌭𑍂𑌯𑌃 3 𑌏𑌵 1 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 7 𑌶𑍃𑌣𑍁 4 𑌮𑍇 5 𑌪𑌰𑌮𑌂 6 𑌵𑌚𑌃
8 𑌯𑌤𑍍 11 𑌤𑍇 9 𑌅𑌹𑌂 12 𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯 13 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 10 𑌹𑌿𑌤𑌕𑌾𑌮𑍍𑌯𑌯𑌾.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் என்னுடைய உத்தமவாக்கியத்தை நீ கேட்குதி. அவ்வாக்கியத்தை நான் உனது இதவேட்கையால் அன்புளவுனக்குக் கூறுகின்றேன். (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! திண்புயமுடைய நீ மீண்டும் எனதுத்தமவசனத்தைக் கேட்குதி. அவ்வாக்கியத்தை ஆப்தனாகிய நான் உனதிட்ட சித்திவேட்கையால் உனக்குபதேசிக்கின்றேன். அர்ச்சுனனுக்கு அவ்வுபதேசஞ் செய்வதில் யோக்கியத்தன்மையை அறிவுறுத்துவான் அவனை விசேடித்தருளுகின்றனர். '𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯' என. அமிருதம் பருகலால் ஆனந்தமனுபவிக்கப்படுவதுபோல, எனது வாக்கியவடிவ அமிருதத்தைப் பருகலால் நீ பிரீதியை அடைகின்றனையாதலின் உனக்கு மறித்துஞ் சொல்கின்றேன். ஈண்டு, '𑌪𑍍𑌰𑍀𑌯𑌮𑌾𑌣𑌾𑌯' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் இப்பொருளைக் குறிப்பித்தருளினர்:—இவரது வாக்கியத்தைக்கேட்பதால் எனதிட்டசித்தி அவசியமாம் என்னுந் திடபாவனையால் எவன் பிரியத்தோடு அவ்வாக்கியத்தைக்கேட்கின்றானோ அவ்வதிகாரியின் பொருட்டே தத்துவஞானியால் பிரஹ்மவித்தை உபதேசிக்கத்தக்கது அஃதிலானுக்கின்றாம் என்பதாம். அவ்வாக்கியத்தைப் பரமம் என விசேடித்தலால் எனது வாக்கியம் மிகவும் உத்கிருஷ்டமாமாதலின் அதைக் கேட்கு முனக்கு அவசியமாயிஷ்ட சித்தியுண்டாமென்பதைக் குறிப்பித்தருளினர் என்க. (1)

(அ-கை.) ஹே பகவன்! அத்தன்மையவாக்கியத்தை முன்னர்த் தாங்களெனக்குப் பலதரமும் உபதேசித்தருளினீர்கள்; மீண்டும், அதையே எதன்பொருட்டுபதேசிக்கின்றீர்கள் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் துர்விஞ்ஞேய வஸ்துவை மறித்துமறித்தும் உபதேசித்தலினனே போதமுண்டாகும் என்னும் அபிப்பிராயத்தால் தனது சொரூபத்தின் துர்விஞ்ஞேயத்தன்மையை அருளிச்செய்கின்றார். அல்லது, ஹே பகவன்! எனக்குப் பரமேசுரராகிய உம்முடைய சொரூபத்தை யுபதேசிப்பவர்கள் இந்திரன் பிருகு முதலிய ரிஷிகள் அநேகர்களிருக்கின்றார்கள் அவர்கள் வாக்கியங்கேட்பதனனே எனக்குத் தங்கள் சொரூபஞானமுண்டாகும் இதைத் தாங்கள் கூறுவதெற்றிற்கு என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு, எந்த இந்திரன் முதலியோர்களின் வாக்கியத்தால் எனது சொரூபஞானத்தையடைய விரும்புகின்றனையோ, அவ்விந்திரன் முதலியோர்கட்கும் எனது சொரூபம் துர்விஞ்ஞேயமென்பதை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌨 𑌮𑍇 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌸𑍁𑌰𑌗𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 𑌨 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 ।
𑌅𑌹𑌮𑌾𑌦𑌿𑌰𑍍𑌹𑌿 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌞𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ॥ (2)

ப-ம். 4 𑌨 1 𑌮𑍇 5 𑌵𑌿𑌦𑍁𑌃 3 𑌸𑍁𑌰𑌗𑌣𑌾𑌃 2 𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 7 𑌨 6 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃 9 𑌅𑌹𑌂
14 𑌆𑌦𑌿𑌃 8 𑌹𑌿 10 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 12 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 11 𑌚 13 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது பிரபாவத்தை இந்திரன் முதலியதேவர்களும் பிருகு முதலிய மகரிஷிகளும் உணரார்கள்; எதனால் பரமேசுரனாகிய நான் தேவர்கட்கும் அம்மகரிஷிகட்கும் எல்லாவாற்றானுங்காரணனே.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது பிரபாவம் அதாவது:— வானாதியுலகனைத்தின் தோற்றநிலையிறு பிரவேச நியமன நிக்கிரஹாநுக்கிரகம் என்பன முதலியவைகளைச்செய்யுஞ் சாமர்த்தியவடிவப் பிரபாவம். அல்லது, அநேக விபூதிகளால் ஆவிர்ப்பாவரூபப் பிரபாவமாம். என்னுடைய அப் பிரபா

வத்தை இந்திரன் முதலிய தேவர்களும் பிருகு முதலிய மகரிஷிகளும் சர்வக்ஞர்களேனு முணரார்கள்.

சங்கை :—ஹே பகவன்! அவர்கள் அதை யுணராதது எக்காரணத்தால்?

சமாதானம் :—'அஹமாதிஹி-' எதனுல் பரமேசுரனுகிய நான் அவ்விந்திரன் முதலிய தேவர்கட்கும் மகரிஷிகட்கும் எல்லாவகையானும் காரணனுகின்றேனே. அதாவது, நான் அவர்கட்கு உண்டாக்குந்தன்மையானும் புத்தியாதிகளைப் பிரவிர்த்திப்பிக்குந் தன்மையானும் காரணனுகின்றேன் என்பதாம். அல்லது, அவர்களின் உபாதானரூபத்தானும் நிமித்தரூபத்தானுங்காரணன், அவர்கள் எனது காரியங்கள், ஆதலின் எனது பிரபாவத்தை யுணருகின்றார்களில்லை, பிதாவின் பிரபாவத்தைப் புத்திரனு லறியொணுததுபோலாமாதலின் நானே எனது பிரபாவத்தை உனக்குபதேசிக்கின்றேன். ஆண்டு, பரமேசுரனின்றே சர்வதேவதைகளும் ரிஷிகளுமுண்டாயினார்கள் என்பது "எதில் மகரிஷிகளும் தேவர்களும் யுக்தர்களோ அதினின்றும் பல தேவர்கள் உண்டாயினார்கள்" என்பது முதலிய சுருதியிற் பிரசித்தமாமென்க. (2)

(அ-கை.) ஆண்டுப் பரமேசுரனது பிரபாவஞானம்மகத்பலத்திற் கேதுவாமாதலின், யாராகினுமோரதிகாரியே அதை யுணர்வானென்பதை ஸ்ரீ பகவானிப்போதருளிச்செய்கின்றார். அல்லது, ஹே பகவன்! அவ்விந்திரன் முதலிய தேவர்களும் பிருகு முதலிய மகரிஷிகளும் ஓர்கால் தங்களுடைய பிரபாவத்தை உபதேசஞ்செய்வதில் சமர்த்தர்களல்லரேல், தாங்களே எனக்கு அதை உபதேசிக்கலாம். ஆனுல், தங்களுடைய அப் பிரபாவத்தையுணர்வதால் எனக்கெப்பயனுண்டாம்? என்னு மருச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதன் ஞானபலத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். யொ மாமஜமநாதிஞு வெத்தி லொகமஹெஶ்வரம் ।
அஸம்மூடஃ ஸமர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதெ ॥ (3)

ப-ம். 6 யஃ 5 மாம் 1 அஜம் 3 அநாதிம் 2 ச 7 வெத்தி 4 லொகமஹெஶ்வரம் 10 அஸம்மூடஃ 8 ஸஃ 9 மர்த்யேஷு 11 ஸர்வபாபை: 12 ப்ரமுச்யதெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சன்மமும் காரணமுமின்றிய சர்வலோகமகேசுர பரமேசுரனுகிய என்னை எவன் உணர்வனோ அவன் எல்லா மநுடர்க்குள்ளும் சம்மோகரகிதனுகிச் சர்வ பாபத்தினின்றும் விடுபடுகின்றான். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய நான் சர்வ வுலகத்திற்குங் காரணனாதலின், ஆதியென்னுங்காரணமில்லாத வநாதிவடிவம் நானுகின்றேன். அனுதியானதால் நான் அஜன், அதாவது :—உற்பத்திவடிவ சென்மமிலாதவன், சர்வவுலகங்கட்கு மகேசுரன். அத்தன்மைத்தாய என்னை எவ்வதிகாரியானவன் தனதான்மாவினபின்னமாய்ச் சாட்சாத்கரிக்கின்றானே அவன் சர்வ மநுடர்க்குள்ளும் அசம்மூடனுய் அதாவது :—அஞ்ஞான நிவிருத்தித்துவாரா ஆன்மாநான்மாக்களின் தாதான்மியாத்தியாசவடிவ சம்மோகமின்றியவனுய்ச் சர்வ பாபத்தினின்றும் விடுபடுகின்றான்; அதாவது, புத்திபுத்தி பூர்வகமாய்ச்செய்யப்பட்ட முக்காலத்திய பாபங்களினின்றும் அத்தத்துவஞானி முக்தனுகின்றான். ஈண்டு, 'ப்ரமுச்யதெ' என்பதிலுள்ள 'ப்ர' என்னுஞ் சத்தத்தால் ஸ்ரீ பகவானிப்பொருளைக் குறிப்பித்தருளினார் :—அஞ்ஞானியும் அப்பாபகருமங்களைப் போகத்தானும் பிராயச்சித்தத்தானும் நிவிருத்திக்கின்றானுபினும், அவன் அதினின்றும் அத்தியந்த முக்தனுவதில்லை. என்னை? சர்வ பாபங்கட்கும் காரணமாகிய அஞ்ஞானமுமதனு

லாகிய தேகாதிகளில் நான்எனது என்னும் அத்தியாசமும் அவ்வஞ்ஞானியி னிடத்திலிருத்தலால் மீண்டுப்பாபோத்பத்தியுண்டாம். அப்பாபகருமம் போகத் தால்நாசமாயினும் சமஸ்காரவடிவமாய் அவ்வஞ்ஞானியினிடத்திலேயே அஃதிருக் கின்றது. இதனுனே, அச்சமஸ்காரவசத்தனுய் மறித்தும் பாபகர்மத்திற் பிரவிர்த் திக்கின்றுன். தத்துவஞானிக்கோ ஆன்மசாட்சாத்காரத்தால் அஞ்ஞானவடிவமூல காரணமும் அதனுலாயவத்தியாசமும் சமஸ்காரத்தோடு சர்வ பாபங்களும் எஞ்சுதலின்றி நிவிருத்தியாகின்றனவாதலின், அத்தத்துவஞானியானவனே அச் சர்வ பாபங்களினின்றும் அத்தியந்த முக்தனுகின்றுன். இதில்,

ஆ-சு. க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ।
ஜ்ஞாநாக்நி: ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே ததா ॥

(போ-ள்.) என்பது முதலிய சுருதிமிருதி வாக்கியங்கள் பிரமாணமென் றறிக.

(அ-கை.) ஆண்டுப் பூர்வசுலோகத்தில் ‘லோகமஹேச்வரம்’ என்னும் வாக் கியத்தால் ஸ்ரீ பகவான் தன்னிடத்தில் சர்வ வுலகங்கட்கு மகேசுரத்தன்மையைக் கூறியருளினர். இப்போது அதையே விரிவாய் அருளிச்செய்கின்றூர்.

சு-ம். புத்திர்ஜ்ஞாநமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: சம: ।
ஸுகம் து:கம் பவோ(அ)பாவோ பயம் சாபயமேவ ச ॥
அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோ தாநம் யசோ(அ)யச: ।
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥ (4)

ப-ம். 1 புத்தி: 2 ஜ்ஞாநம் 3 அஸம்மோஹ: 4 க்ஷமா 5 ஸத்யம் 6 தம: 7 சம: 8 ஸுகம் 9 து:கம் 10 பவ: 11 அபாவ: 12 பயம் 13 ச 14 அபயம் 22 ஏவ ச 15 அஹிம்ஸா 16 ஸமதா 17 துஷ்டி: 18 தப: 19 தாநம் 20 யச: 21 அயச: 28 பவந்தி 24 பாவா: 25 பூதாநாம் 26 மத்த: 27 ஏவ 23 ப்ருதக்விதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! புத்தி, ஞானம், மோகமின்மை, க்ஷமை, சத்தி யம், தமம், சமம், சுகம், துக்கம், பவம், பாவம், பயம், அபயம், அகிம்சை, சமத் தன்மை, துஷ்டி, தவம், தானம், யசசு, அயசசு, என்னும் உலகப்பிரசித்தமான நானுவிதமான சர்வப்பிராணிகளின் காரிய விசேடங்களையும் நானே உண்டாக்கு கின்றேன். (4-5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வப்பிராணிகளின் புத்திமுதற்கொண்டு அயசசு ஈருகிய காரிய விசேடங்களை நானே உண்டாக்குகின்றேன்; மற்றொன்று முண் டாக்குவதில்லை. அந்தப் புத்தியாதிகளின் வடிவத்தைக்கூறுவாம்:—அவற்றுள், சூட்சுமப்பொருள்களை விவேகம் பண்ணத்தக்க அந்தக்கரணத்தின் சாமர்த்தியம் புத்தியாம். ஆன்மானுன்ம சர்வ பொருள்களையுமுணரல் ஞானமாம். அறியத்தக்க தன் ரூபத்தாலேனும் செய்யத்தக்க தன் ரூபத்தாலேனும் கிடைக்கப்பட்டபொரு ளில் வியாகூலமின்றி விவேக பூர்வகப் பிரவிருத்தி அதாவது, அதன் இஷ்டா நிஷ்டரூப பல விசாரபூர்வகமுண்டாகும் பிரவிருத்தி அசம்மோகமாம். கடுஞ் சொலாலேனும் தண்டத்தாலேனும் சிக்ஷிக்கப்பட்டவனது சித்தத்தின் நிருவிகா ரத்தன்மை அதாவது, அவ்வாறு சிட்சித்தவர்கட்கு அநிட்டத்தைச் சிந்தியாமை க்ஷமையாம். அல்லது, ஆத்தியான்மிக முதலிய மூவகைத் துன்பங்களைச் சகித்தல் க்ஷமையாம். ஆண்டு, சுர முதலியநோயால் வருந்துன்பம் ஆத்தியான்மிகமாம். மிகுந்ததண்மை, மிகுந்தவெப்பம், மிகுந்த விருஷ்டி என்பது முதலியவைகளால்

வருந்துன்பம் ஆதிதெய்விகமெனப்படும். அரவம் புலி மாற்றான் முதலியவைக ளால் வருந்துன்பம் ஆதிபௌதிகமெனப்படும். காட்சியால் எப்பொருள் எவ்வாறு நிச்சயிக்கப்பட்டதோ அப்பொருளை அவ்வாறே கூறுதல் சத்தியமாம். சுரோத்திர முதலிய பாகியேந்திரியங்களைச் சத்தமுதலிய தத்தம் விஷயங்களினின்றுந் திருப்பல் தமமாம். அந்தக்கரணத்தை விஷயங்களினின்றுந் தடைப்படுத்தல் சமமாம். கேவலம் தருமத்தை முக்கிய காரணமாகவுடையதும் அநுகூலரூபதன்மையானே சர்வப்பிராணிகளின் ஞானவிஷயமாவதுமாகிய ஆனந்தம் சுகமெனப்படும். கேவல அதருமத்தையே அசாதாரண காரணமாகவுடையதும் சர்வப் பிராணிகளின் பிரதிகூல ஞானத்திற்கு விஷயமாவதுமாகிய பரிதாபம் துக்கமெனப்படும். தோற்றுவது பவமாம். சத்தையின் பெயர் பாவமாம் அல்லது, 'ஸவொஸாவஃ' என்னும் வாக்கியத்தை 'ஸவஃ சுஸாவஃ' எனப்பதச்சேதஞ்செய்யத்தக்கது. அதில், அசத்தின் பெயரபாவமாம். அச்சம் பயமாம், அஃதின்மை அபயமாம் ஈண்டு, 'ஊயம் அாஸயெவ' என்னும் வாக்கியத்திலுள்ள முதலாவது சகாரமோ கூறிப்போந்த புத்தி முதலிய வைகளைச் சேர்த்துக்கொள்ளுதற்பொருட்டாம். இரண்டாவது சகாரமோ முன்னர்க்கூறப்படாத புத்தியாதிகட்கு மாறாகிய அபுத்தி, அஞ்ஞானம், சம்மோகம், அக்ஷமை, அசத்தியம் என்பது முதலியவைகளைக் கூட்டிக்கொள்ளற்பொருட்டாம். ஏவ காரமானது அவைகள் சர்வலோகப் பிரசித்தமென் றறிவுறுத்தற்பொருட்டாம் அதாவது இவைகள் உலகனைத்திலும் மிக விளக்கங்கள் என்பதாம். தாவரசங்கம சர்வப் பிராணிகளையும் பீடிக்காமை அகிம்சையாம்; அதாவது, முக்கரணங்களானும் யாதொரு பிராணியையும் துன்பப்படுத்தாமை அகிம்சையாம். இஷ்டா நிஷ்ட வஸ்துக்கள் கிடைக்குங்கால் இராகத்துவேஷாதிகளின்றியவவத்தை சமத்தன்மையாம். பிராரப்தகருமவசத்தால் யாதேனுஞ் சிறிது போக்கியப்பொருள் கிடைப்பினும் இதனானே எனக்குத் திருப்தியாயிற்று என்னும் போதுமெனும் புத்தியாகிய சந்தோஷமே துஷ்டியாம். நூல் விதித்த வழியில் தேகேந்திரியங்களைச் சுருங்கவைத்தல்அதாவது, கிருச்சிர சாந்திராயணாதி விரதத்தால் சரீரேந்திரியங்களின் வலியைக்குறைத்தல் தவமாம். உத்தமமான தேசகாலங்களில் சத்பாத்திரங்கட்கு சிரத்தையோடு தனக்கியன்ற வரையில் அன்னம் பொன் முதலிய பதார்த்தங்களைச் சமர்ப்பித்தல் தானமாம். தருமவடிவ நிமித்தத்தாலுண்டாகிய உலகத்தில் கீர்த்தி முதலிய பிரசித்திகள் யசசாம். அதருமவடிவ நிமித்தத்தாகிய உலகநிந்தை வடிவப்பிரசித்தி அயசசாம். இவையே புத்திமுதல் அயசசீறாய காரிய விசேடங்களாம். இவைகள் தருமாதருமமுதலிய சாதனங்களின் விசித்திரத்தன்மையால் பலவகைகளாம். அத்தன்மைய புத்தி முதலியவை சர்வப் பிராணிகட்கும் தத்தம் காரணத்தோடு பரமேசுரனாகிய என்னிடத்தினின்றே உண்டாகின்றன; மற்றெவற்றினின்றுந் தோற்றுவனவன்றாம் அத்தன்மைய சர்வகாரண பரமேசுரனாகிய என்னிடத்தில் அச்சர்வலோகங்களின் மகேசுரத்தன்மையிற் கூறற்பாலதென்னை. (4-5)

(அ-கை.) ஹே அர்ச்சுன! கேவல புத்தி முதலியவைகட்குக் காரணனாதலின் மாத்திரம் எனக்கிந்தச் சர்வலோக மகேசுரத்தன்மையின்று; மற்றோ, பிருகு முதலிய மகாரிஷிகட்கும் சுவாயம்பு முதலிய மனுக்கட்கும் காரணமாதலினாலுமாம் என்பதை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். மஹர்ஷயஃ ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா ।
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோக இமாஃ ப்ரஜாஃ ॥ (6)

ப-ம். 3 மஹர்ஷயஃ 2 ஸப்த 1 பூர்வே 5 சத்வாரஃ 6 மநவஃ 4 ததா 7 மத்பாவாஃ 8 மாநஸாஃ 13 ஜாதாஃ 9 யேஷாம் 10 லோகே 11 இமாஃ 12 ப்ரஜாஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சிருட்டியின் ஆதிகாலத்தில் உண்டாகிய பிருகு முதலிய சப்தரிஷிகளும் சாவருணி முதலிய நான்கு மனுக்களும் எந்தப் பிருகு முதலியவர்கள் எனது சிந்தனுபராயணர்களும் மனோசங்கற்பமாத்திரத்தாலுண் டானவர்களும் ஆவர்களோ எந்தப் பிருகு முதலியவர்கட்கு இவ்வுலகத்தில் இப் பிராஹ்மணர் முதலிய பிரஜைகள் உள்ளார்களோ அப்பிருகு முதலியோர்களும் பரமேசுரனுகிய என்னிடத்தினின்றே உண்டானவர்கள். (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சிருட்டியினுதிகாலத்தில் உண்டாகிய பிருகு முதலிய சப்தரிஷிகளும், வேதபாடத்தையும் வேதார்த்தத்தையு முள்ளவா றுணர்ந்தவர்களும், சர்வக்ஞர்களும், வேதவித்தையின் சம்பிரதாயப் பிரவிருத்த கர்களுமாவர்கள். இதனுனே, அவர்களைச் சாஸ்திரம் மகரிஷிகளெனக்கூறுகின் றது. அவர்களின் பெயரும் சிருட்டியின் ஆதிகாலத்தில் அவர்களின் உற்பத்தியும் புராணத்திலுங் கூறப்பட்டுள்ளன.

ஆ-சு. ஹரமாஂ உரீஶிரதிகு வாஂமுஷூஂ வாமுஹஂ கருதாஂ।
வஸிஷூஂஶ உஹாதேஜாஃ ஸொஹஸ்ரஜநுஉநவா வாஂதாஂ ॥

(பொ-ள்.) பிருகு, மரீசி, அத்திரி, புலத்தியர், புலஹர், கிருது, வசிஷ்டர் என்னும் இந்த ஏழு ரிஷிகளாகிய புத்திரர்களை அந்தப் பேரொளியையுடைய பிரஹ்மா சிருட்டியின் ஆதிகாலத்தில் தமது மனத்தால் உண்டாக்கினர் என்ப தாம். அங்ஙனமே, சிருட்டியினுதிகாலத்தில் உண்டாகிய சாவர்ணி முதலிய பெய ரால் மிக விளக்கமான நான்கு மனுக்களுமாவர்கள். அல்லது, 'உஹஷ-ுயஃ ஸவு' என்பதால் பிருகு முதலிய சப்தமஹரிஷிகளையுங் கொள்ளவேண்டும் 'வாஂவெ-ூ அசுவாரஃ' என்பதால் அப்பிருகு முதலிய சப்தரிஷிகளுக்கு முன்னருண்டாகிய சனகர் முதலிய நான்கு மகரிஷிகளையுங்கொள்க. 'உநவஷூயா' என்பதால் சுவா யம்பு முதலிய பதினுன்கு மனுக்களையுங்கொள்கஎன்பதாம். அவர்கள் எத்தன்மை யர்களெனின், மத்பாவர்கள். ஆண்டு, பரமேசுரனுகிய என்னிடத்தில் பாவம் அதா வது, பாவனை எவர்கட்கோ அவர்கள் மத்பாவர்களாவர்கள்; அதாவது, பரமேசுர னுகிய எனது சிந்தனுவடிவபாவனுவசத்தால் வெளிப்பட்ட என்னுடைய ஞான ஐசுவரிய முதலிய பலவிதமான சத்திகளெவர்க்கோ அவர்கள் என்பதாம். அன்றி யும் மானசர்கள் அதாவது, பிரஹ்மாவின் மனோசங்கற்பமாத்திரத்தானே உண் டானவர்கள். ஏனையோர்கள்போல யோனியாற்றோற்றினவர்களன்றுவர்கள். இத னுனே, சுத்த சன்மர்களானதால் அவர்கள் சர்வப்பிராணிகளினும் சிரேஷ்டர்க ளாவர்கள். சாஸ்திரத்தில் 'யோனிம்விஞநசரீரம், என்னும் வாக்கியத்தில், யோனிசத்தம் மாதர்யோனிவாசகமன்று; மற்றோ, காரணவாசகமாம்; அதாவது, காரணமின்றித் தேகந்தோன்றுதென்பதாம். அத்தன்மைய பிருகு முதலிய சப்த மகரிஷிகளும் சனகர் முதலிய நான்கு மகரிஷிகளும், சுவாயம்பு முதலிய பதி னுன்கு மனுக்களும் சிருட்டியினுதிகாலத்தில் இரணியகருப்பவடிவப் பரமேசுர னிடத்தினின்றே உண்டாயினுர்கள். அவர்கட்கோ இவ்வுலகத்தில் சன்மத்தானும் வித்தையானும் இப்பிராஹ்மணர் முதலிய சர்வப் பிரஜைகளும் சந்ததிரூபமாவர் கள். ஈண்டு, ஒரு வியாக்கியானத்தில் 'ஜொகஉஊஃ' என்னும் வாக்கியத்தில் 'ஜொகஃ' என்னும் முதல் வேற்றுமை முடிவுப்பதத்தைக்கொண்டு இவ்வாறு பொருள்படுத்துகின்றனர்:—அப்பிருகு முதலியோர்கட்குச் சராயுஜ முதலிய நான்குவகைப் பிரஜைகளும் அவர்கள் வசித்தற்காதாரமான உலகங்களும் சந்ததி ரூபங்களாவர்கள். அல்லது, 'யெஷாஂ' என்னும் ஆறும் வேற்றுமை 'யெஹூஃ' என்னும் ஐந்தாம் வேற்றுமைப்பொருளில் வந்தது, இதனுலிப்பொருள் பெறப்படு கின்றது:—எந்தப்பிருகு முதலியோர்களிடத்தினின்றும் எந்தச்சராயுஜ முதலிய

நால்வகைப் பிரஜைகளும் லோகங்களும் உண்டாயினவோ அந்தப் பிருகுமுதலியோர்கட்குங் காரணவடிவப் பரமேசுரனாகிய வென்னிடத்தில் சர்வலோக மகேசுரத்தன்மையுள்ளதென்பதில் கூறற்பாலதென்னே என்க. (6)

(அ-கை.) இவ்வாறு சோபாதிகப் பரமேசுரனது பிரபாவத்தை அருளிச்செய்து இப்போது அப்பிரபாவஞானபலத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஏதாம் விபூதிம் யோகஞ்ச மம யோ வேத்தி தத்வத: ।
ஸோவிகம்பேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்ஶய: ॥ (7)

ப-ம். 3 ஏதாம் 4 விபூதிம் 6 யோகம் 5 ச 2 மம 1 ய: 8 வேத்தி 7 தத்வத: 9 ஸ: 10 அவிகம்பேந 11 யோகேந 12 யுஜ்யதே 15 ந 13 அத்ர 14 ஸம்ஶய:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் கூறிப்போந்த பரமேசுரனது விபூதியையும் யோகத்தையும் உள்ளவாறுணர்கின்றானோ அவன் அசலமான யோகத்தோடு கூடியவனாகின்றான். இதில் ஒரு தடையுமில்லை. (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் 'புத்திர்ஜ்ஞாநம்' என்பது முதலிய மூன்று சுலோகங்களால் கூறப்பட்ட புத்தி முதல் அயசசு ஈறாகிய எனது விபூதிகளையும், பிருகு முதலிய சப்தரிஷிவடிவமும் சனகர் முதலிய நான்கு மகாரிஷி வடிவமும் சுவாயம்பு முதலிய பதினான்கு மநுவடிவமுமாகிய எனது விபூதிகளையும், அதாவது, அவ்வப்புத்தி முதலிய வடிவங்களாகவும் அவ்வம்மகரிஷி வடிவங்களாகவும் பரமேசுரனாகிய எனது நிலைமையேயிருக்கின்றது, அத்தன்மைய எனது விபூதிகளையும், எனது யோகத்தையும், எவ்வதிகாரி குருசாஸ்திரோபதேசத்தால் உள்ளவாறுணர்கின்றானோ. ஈண்டு, அவ்வப்பொருளை உண்டாக்குவதிற் சாமர்த்தியவடிவப் பரமேசுரனது ஐசுவரியம் யோகமாம். அதையும் எவ்வதிகாரி அறிகின்றானோ அவன் சலிப்பற்ற யோகமுடையனாகின்றான்; அதாவது, தத்துவ ஞானியின் ஸ்திரத்தன்மைவடிவ சமாதியுடையவனாகின்றான். அர்ச்சுன! இதிற் சிறிது ஐயமில்லை; அதாவது, தடைப்படுத்துவது ஒன்றுமின்றென்பதாம். ()

(அ-கை) ஆண்டுப் பரமேசுரனது எந்த விபூதியோகங்களின் ஞானத்தால் இவ்வதிகாரிக்கு அசலசமாதிவடிவ யோகப்பிராப்தியாமோ; அந்த ஞானத்தின் சொரூபத்தை ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।
இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா: ॥ (8)

ப-ம். 1 அஹம் 2 ஸர்வஸ்ய 3 ப்ரபவ: 4 மத்த: 5 ஸர்வம் 6 ப்ரவர்த்ததே 7 இதி 8 மத்வா 12 பஜந்தே 11 மாம் 9 புதா: 10 பாவஸமந்விதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே சர்வ சகத்திற்கும் உற்பத்திகாரணன், என்னாலே சர்வமும் பிரவிர்த்திக்கின்றன, என்றபிமானித்துப் புத்திமான்கள் பிரேமவடிவபாவத்தோடு கூடியவர்களாகி என்னை ஆராதிக்கின்றார்கள்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வாசுதேவனெனும் பரப்பிரஹ்மமாகிய நானே இவ்வுலகனைத்தின் உற்பத்திகாரணன்; அதாவது, பரமேசுரனாகிய நானே இவ்வுலகனைத்திற்கும் உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாவேன். இவ்வுலகத்தின் நிலையீறு முதலிய வியாபாரங்களும் என்னினின்றே பிரவிர்த்திக்கின்றன; அதாவது, சர்வ சக்தி சம்பன்ன சர்வக்ஞனாகிய என்னாற் பிரேரிக்கப்பட்டு இந்த இரவிமதி முதலிய உலகனைத்தும் தத்தம் மரியாதையைக்கடவாது பிரவிர்த்திக்

கின்றன. அல்லது, பிரத்தியக்சாட்சியான்மவடிவமாகிய எனதுசத்தாஸ்பூர்த்தி யைப்பெற்றே இப்புத்தி யிந்திரிய முதலிய வுலகமனைத்தும் பலவகையாய்ச் சேஷ்டிக்கின்றன. இவ்வாறெனது சொரூபத்தையுணர்ந்து விவேகத்தால் தத்துவப் பொருளை யுணர்ந்தவனெவனோ அத்தன்மைய புத்திமான் பரமார்த்த தத்துவக் கிரகணவடிவப் பிரேமரூபபாவத்தோடு கூடியவனாய் என்னையே பஜனை செய்கின்றான்; அதாவது, நித்திய நிரந்தரப் பரமேசுரனாகிய என்னையே சிந்திக்கின்றானென்பதாம். (8)

(அ-கை.) ஹே பகவன்! அந்தப் பிரீதிபூர்வக பஜனை எவ்வாறாமென்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதனது சொரூபத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍 ।
𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌮𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚 ॥ (9)

ப-ம். 1 𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 2 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃 4 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 3 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 8 𑌕𑌥𑌯𑌨𑍍𑌤𑌃 5 𑌚 7 𑌮𑌾𑌂 6 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 9 𑌤𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 10 𑌚 11 𑌰𑌮𑌨𑍍𑌤𑌿 𑌚.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னிடத்திற் சித்தமுடையவர்களும் என்னையடைந்த பிராணனுடையர்களுமாய்ப் பரஸ்பரம் என்னையே அறிவுறுத்தியும் நித்தியம் என்னையே யுரைத்தும் எனதன்பர்கள் சந்தோடத்தை யடைவார்கள் சுகத்தையுமனுபவிப்பார்கள். (9)

(வி-ம்.) பரமேசுரனாகிய என்னிடத்திற் சித்தமுடையவர்கள் என் சித்தத்தவர்கள். அல்லது, பரப்பிரஹ்மமாகிய நானே எவர்களது சித்தத்தின்கண்ணோ அவர்கள் எனது சித்தத்தவர்கள்; அதாவது, எவர்கள் மனத்தால் என்னையெப்போதும் சிந்திக்கின்றார்களோ அவர்கள் என்பதாம். பரமேசுரனாகிய என்னையே யடைந்தனவோ பிராணனெனும் நேத்திர முதலிய விந்திரியங்கள் எவர்கட்கோ, அவர்கள் எனையடைந்த பிராணர்கள். அதாவது :—பரமேசுரனாகிய என்பொருட்டேவிழி முதலிய இந்திரியங்களின் வியாபாரம் எவர்களுக்கோ அவர்கள் எனையடைந்த பிராணர்கள். அல்லது, பாகியவிடயங்களைவிடுத்து என்னிடத்திலே நேத்திர முதலிய விந்திரியங்களை எவர்கள் இலயம்பண்ணுபவர்களோ, அல்லது எனது பஜனையின்பொருட்டு எவர்கட்குப் பிராணனெனும் சீவனமாமோ, அயற்பலப்பொருட்டன்றாமோ அவர்கள் எனையடைந்த பிராணர்கள். அங்ஙனமே எவர்கள் அறிஞர்களவையில் சுருதிவாக்கியத்தாலும் அதற்கிசைந்த யுக்திகளாலும் ஒருவர்க்கொருவர் என்னையே அறிவுறுத்துகின்றார்களோ, எவர்கள் எப்போதும் தமது மாணாக்கர்களின்பொருட்டு என்னையே ஞேயரூபத்தாலும் தியேயரூபத்தாலும் உபதேசிக்கின்றார்களோ அவர்கள் அவ்வாறாவர்கள். இவ்வாறு பரமேசுரனாகிய என்னிடத்தில் சித்தத்தையும் பாகியமான நேத்திர முதலிய கரணங்களையும் தமது சீவனத்தையும் அர்ப்பணஞ்செய்வதும், தமக்கொத்தவர்கட்கு ஒருவர்க்கொருவர் என்னையறிவுறுத்துதலும், தம்மிற்குறைந்த அறிவுடைய மாணாக்கர்கட்கு என்னையே உபதேசிப்பதுமாகிய விதுவே எனதாராதனையாம். இவ்வாறு, ஆராதிக்கும் வித்துவான்கள் சந்தோடத்தையடைவர்கள்; அதாவது, இப்பரமேசுர வாராதனையினாலே நான் கிருத கிருத்தியனானேன், இதையொழித்தொரு பொருளும் எனதிட்ட சாதனமன்று என்னு முணர்ச்சிவடிவ சந்தோஷத்தையடைவர்கள். அதனாலே, பரமசுகத்தை யனுபவிக்கின்றார்கள். சந்தோஷத்தால் பரமசுகப் பிராப்தியாமென்பது பதஞ்சலிபகவானாலுங் கூறப்பட்டுளது. '𑌸𑌨𑍍𑌤𑍋𑌷𑌾𑌦𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌃 𑌸𑍁𑌖𑌲𑌾𑌭𑌃' என. பொருள்:—இவ்வதிகாரிக்குச்

சந்தோஷத்தானே எவற்றினுமேலாகிய சுகம் பிராப்தியாகின்றது புராணத்தினு மிது கூறப்பட்டுளது.

ஆ-சு. யஅுகா உஸ-வ௦ ௵ரகெயஅு திவ௱௦ உஹதூ-வ௦ ।
தரஷூா கூயஸ-வவெஷ௱தெ நாஹ-ஒதஃ ஷொட-ஶீ௦கஹாழு ॥

(போ-ள்.) இவ்வுலகத்தில் விஷயத்தாலுண்டாஞ் சுகங்களெவ்வளவோ, சுவர்க்கம் முதலிய வுலகங்களில் விஷயத்தாலுண்டாம் பெரிய திவ்ய சுகங்களெவ்வளவோ, அந்தச் சுகங்களனைத்தும் திருஷ்ணை நிவிர்த்திவடிவச் சந்தோஷத்தாலுண்டாஞ் சுகத்தின் பதினறிலொரு கூறிற்கிணைபற்றனவாம் என்க. (9)

(அ-கை.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரிகள் கூறிப்போந்தவாற்றால் என்னை யாராதிக்கின்றார்களோ அவர்கட்கு யானும் அந்தப் புத்தியோகத்தைக்கொடுத்து எனது நிர்க்குணவடிவத்தையும் அடைவிப்பேன் என்பதை ஸ்ரீ பகவான் இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். தெஷா௦ ஸததயுக்தா நா௦ ஹஜதா௦ வீ்ரதிவூவ-ஒக௦ ।
ஒஓாமி பு-ஷியொ௦௦ தெ௦ யெந உஉ-வயா௦தி தெ ॥ (10)

ப-ம். 4 தெஷா௦ 1 ஸததயுக்தாநா௦ 3 ஹஜதா௦ 2 வீ்ரதிவூவ-ஒக௦ 7 ஒஓாமி 6 பு-ஷியொ௦௦ 5 த௦ 8 யெந 10 உா௦ 11 உவயா௦தி 9 தெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னிடத்தில் ஒருமைப்பட்ட மனமுள்ளவர்களும் பிரீதியோடு என்னை யாராதிப்பவர்களுமாகிய அந்தப் பக்தர்கட்குக் கூறிப்போந்த அந்த ஞானயோகத்தைப் பரமேசுரனாகிய நான் உண்டாக்குவேன். எந்த ஞானயோகத்தால் அவர்கள் என்னைத் தமதான்மவடிவமாயடைகின்றார்களோ. (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் 'உஹீதா உஷதவ்ராணாஃ' என்னுஞ் சுலோகத்தாற் கூறப்பட்ட எனதாராதனைப் பிரகாரத்தாலெவர்கள் என்னை யாராதிக்கின்றார்களோ எப்போது என்னிடத்தொருமைப்பட்ட உள்ளத்தவர்களென இதனானே எவர்கள் ஊதியம், பூஜை, புகழ், என்பன முதலிய ஒரு பயனையு மிச்சியாது மஹாவன்போடு என்னை யாராதிக்கின்றார்களோ; அப்பக்தர்கட்குக் கூறிப்போந்த ஞானயோகத்தை நானே உண்டாக்குவேன்; அதாவது, 'ஹொவிக௦ வெநயொமெநயு-ஜ௱தெ' என்னும் வாக்கியத்தான் முன்னர்க் கூறப்பட்ட எனது வாஸ்தவ சொரூபத்தை விஷயம்பண்ணும் சம்யக்ஞானமாகிய புத்தியோகத்தை நானே யுண்டாக்குவேன் என்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! அந்தப் புத்தியோகத்தால் அதிகாரிகள் எப்பயனை யடைவர்கள்?

சமாதானம்:—'யெநஉா உ-வயா௦திதெ' என அர்ச்சுன! எந்தப் புத்தியோகத்தால் எனதன்பர்கள் என்னையே தமதான்மவடிவமாயடைகின்றார்களோ; அதாவது, கடமாகிய வுபாதியொழியவே கடவான் அபேதமாய் மாவானையடைவதுபோலவும், ஸ்ரீ கங்கை யமுனை முதலிய நதிகள் தத்தம்வடிவத்தை விடுத்துக் கடலில் அபேதத்தன்மையை யடைவதுபோலவும் எனது பக்தர்களும் எனது பக்தியாலுண்டாகிய தத்துவ சாட்சாத்காரத்தால் என்னையே அபேதமாயடைகின்றார்கள் என்பதாம்; அதாவது, அத்துவிதீய நிர்க்குணப்பரமேசுரனாகிய என்னைத் தமதான்மாவாயே உணர்கின்றார்கள் என்பது பொருள். (10)

(அ-கை.) ஆண்டுத் தனதன்பர்கட்குப் பரமேசுரனால் அடைவிக்கப்பட்ட தத்துவஞானரூப புத்தியோகமானது எந்த அஞ்ஞான நிவிருத்திவடிவ வியாபாரமுடையதாய் ஆநந்தமாகிய தனதான்மாவின் பிராப்திவடிவ பலத்தைக்கொடுக்கின்றதோ இடையிலுள்ள அவ்வியாபாரத்தை ஸ்ரீ பகவானிப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். தெஷாமெவா நுகம்வாயு உஹமஜ்ஞா நஜம் தமஃ ।
நாமயாம்யாத்மஹாவஸ்தொ ஜ்ஞா நதீவெ ந ஹாஸ்வதா ॥ (11)

ப-ம். 1 தெஷாம் 2 வாவ 3 அநுகம்வாயு உம் 5 அஹம் 8 அஜ்ஞாநஜம் 9 தமஃ 10 நாமயாமி 4 ஆத்மஹாவஸ்தஃ 7 ஜ்ஞாநதீவெந 6 ஹாஸ்வதா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்தப் பக்தர்கட்கே அனுக்கிரகார்த்தம் அவர்களது ஆன்மாகார விருத்தியிலிருக்கப்பட்டவனுப் பிரஹ்மமாகிய நான் சிதாபாசத்தோடுகூடிய அந்த விருத்தி ஞானவடிவ தீபத்தால் அவர்களின் அஞ்ஞானத்தாலுண்டாய ஆவரணவடிவ இருளை நாசஞ்செய்வேன். (11)

(வி-ம்) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த பிரகாரத்தால் என்னையாராதிக்கும் அந்தப் பக்தர்களின் அநுக்கிரகார்த்தம்; அதாவது இந்த எனதன்பர்கட்கு எவ்வாற்றானும் மேன்மையுண்டாகுக என்னும் அநுக்கிரகத்தின்பொருட்டுச் சுயம்பிரகாசசைதன்ய ஆநந்தாத்துவிதீய பிரத்திபக்கான்மவடிவமாகிய நான் அவர்களது ஆன்மபாவத்தில் ஸ்திதமாய்; அதாவது அவர்களுடைய மகாவாக்கிய ஜன்னிய ஆன்மாகார அந்தக்கரண விருத்தியில் விஷயவடிவத்தால் ஸ்திதனாய்; சிதாபாசத்தோடுகூடிய அவ்வந்தக்கரணவிருத்திவடிவ ஞானதீபத்தானே அஞ்ஞான ஜன்னிய விருளையிரிப்பேன்; அதாவது, அஞ்ஞானத்தை உபாதானகாரணமாகவுடைய மித்தியாஞானவடிவ ஆன்மவிடயக ஆவரணவடிவாந்தகாரத்தை, அதன் உபாதானகாரணமாகிய அஞ்ஞானத்தை நாசஞ்செய்து கெடுப்பேன். என்னை, உலகப்பிரசித்தமான சர்வப்பிராந்திஸ்தலங்களினும் அந்தப் பிராந்தியின் உபாதானகாரணமாகிய அஞ்ஞானமானது அதிட்டான ஞானத்தானே நிவிருத்தியாகின்றது, மற்றோருபாயத்தானுமன்று. பாம்புவெள்ளி வடிவப்பிராந்திகட்கு உபாதானகாரணமாகிய அஞ்ஞானமானது கயிறு கிளிஞ்சில் முதலிய அதிட்டான ஞானத்தானே நிவிருத்தியாகின்றது; மற்றோருபாயத்தானுமன்று. எவ்விடத்தும் உபாதானகாரண நாசத்தானே உபாதேயவடிவ காரியங்களும் நாசமாமென்பதோருதலையே. மண் நூல் முதலிய உபாதானகாரண நாசத்தால் உபாதேயவடிவ குடம் ஆடை முதலிய காரியங்களுமவசியமாய் நாசமாவதுபோன்று, ஆன்மாகார அந்தக்கரணவிருத்திவடிவஞானத்தால் அஞ்ஞானவடிவ உபாதானகாரணம் நாசமாகவே ஆவரணவடிவ உபாதேயத்தின் நாசமுமொருதலையேயாமென்க. ஈண்டு, 'ஜ்ஞாநதீவெந' என்பதால் ஸ்ரீ பகவான் ஆன்மஞானத்தில் தீப ஒப்புமைவடிவ உருவாலங்காரமருளியதால் இப்பொருளைக்குறிப்பித்தருளினர்:—விளக்கு இருளை யொதுக்குவதில் கேவலம் தமதுற்பத்திமாத்திரமே அபேட்சிக்கின்றது. அஃதன்றி, மற்றொரு கரணங்களையேனும் அப்பியாசத்தையேனும் அபேட்சிப்பதில்லை. அவ்விளக்கால் இருணீங்கிய பின்னர் முன்னுள்ளனவாகிய கட முதலிய பொருள்களே வெளிப்படுகின்றன. முன்னுண்டாகாத பொருள்களன்றாம். அதுபோல ஆன்மஞானத்தால் அஞ்ஞானத்தை நிவிருத்திசெய்வதில் அவ்வான்மஞானத்தின் உற்பத்திமாத்திரமே அபேட்சிதமாம். அஃதன்றி வேறோர் கருமமேனும் அப்பியாசமேனுமபேட்சிதமன்றாம். அவ்வான்மஞானத்தால் அஞ்ஞான நாசமானதின் பின்னர் முன்னுள்ள பிரஹ்மபாவவடிவமோட்சமே வெளிப்படுகின்றது. முன்

னுண்டாகாத மோட்சமுண்டாவதில்லை; எந்த வுற்பத்தியால் அம்மோட்சத்திற்குச் சுவர்க்க முதலிய பலன்கள்போல நாசமாந்தன்மையும் கருமமுதலியவைகளின் அபேட்சையுமாமோ. அன்றியும் 'ஹாஸ்வதா' என்பதால் ஸ்ரீ பகவானிப்பொருளைக் குறிப்பித்தருளினர்:—காற்றின்றிய தேசத்திலுள்ள பிரகாசமான தீபத்தில் தீவிரமான காற்று முதலிய தடைகளில்லாததுபோலப் பரமேசுரனாகிய எனது பக்தியால் கிடைத்த ஆன்மஞானத்தில் அசம்பாவனை முதலிய தோஷப்பிரதிபந்தங்களின்றாமென்க. (11)

(அகை.) இவ்வாறு பரமேசுரனது விபூதியையும் யோகத்தையும் சாமான்யமாய்க்கேட்டு மறித்தும் அதை விசேடமாய்க்கேட்க மிகவேட்கையடைந்து அர்ச்சுனன் ஸ்ரீ பகவானைத்துதிக்கின்றான்.

அர்ஜுந உவாச—

சு-ம். பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந் ।
புருஷம் ஶாஶ்வதம் திவ்ய மாதிதேவ மஜம் விபும் ॥ (12)
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ (13)

ப-ம். 1 பரம் 2 ப்ரஹ்ம 3 பரம் 4 தாம 6 பவித்ரம் 5 பரமம் 7 பவாந் 18 புருஷம் 19 ஶாஶ்வதம் 20 திவ்யம் 21 ஆதிதேவம் 22 அஜம் 23 விபும் 24 ஆஹு: 17 த்வாம் 9 ருஷய: 8 ஸர்வே 11 தேவர்ஷி: 12 நாரத: 10 ததா 13 அஸித: 14 தேவல: 15 வ்யாஸ: 26 ஸ்வயம் 25 ச 27 ஏவ 28 ப்ரவீஷி 16 மே.

(அ-ம்.) ஹே பகவன்! பரப்பிரமமும் பரமதாமமும் பரமபவித்திரமும் தாங்களேயாவீர். எதனாலெனின், பிருகு முதலிய சர்வ ரிஷிகளும் தேவரிஷி நாரதர்களும் அசித தேவல வியாசர் முதலிய அனைவரும் உன்னைப் புருஷன் சாசுவதன் திவ்யன் ஆதிதேவன் அஜன் விபுவடிவன் என்று எனக்குபதேசித்திருக்கின்றார்கள். அங்ஙனமே, நேரே தாங்களும் அருளிச்செய்தீர்கள். (12,13)

(வி-ம்.) ஹே பகவன்! தாங்கள் பரப்பிரஹ்மமாவீர்கள், அதாவது, தத்துவஞானிபாலடையத்தக்க சர்வ வுபாதிகளின்றிய நிருவிசேடப்பிரஹ்மம் தாங்களேயாவீர்கள். ஈண்டுப் பரம் என்னும் விசேடணத்தால் உபாசித்தற்குரிய சோபாதிக அபரப்பிரஹ்மத்தின் நீக்கங்கூறப்பட்டது. என்னை 'ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே' என்னுஞ் சுருதியானது உபாசனை பண்ணுதற்குரிய சோபாதிக அபரப்பிரஹ்மத்தை நிஷேதித்து நிர்விசேஷ சைதன்யத்தையே பிரஹ்மமெனக் கூறுகின்றது. இன்னுந் தாங்கள் எத்தன்மையரெனின், பரந்தாமனாகுவீர்; அதாவது, தூலமுதற்கொண்டு அவ்வியாகிருதமீறாகிய எல்லாவுலகத்திற்கு மாசிரயமாவீர். அல்லது, பரமப்பிரகாசரூபமாவீர். ஈண்டும் பரம் என்னும் விசேடணத்தால் விருத்திவடிவ அபரப்பிரகாசநீக்கங்கூறப்பட்டதாம். என்னை, 'ஹ்ரீர்தீர்பீரித்யேதத்ஸர்வம் மந ஏவ' என்னுஞ் சுருதி அவ்விருத்திவடிவ ஞானத்தை மனத்தின் பரிணாமவிசேடமெனக் கூறுகின்றது. இன்னுந் தாங்களெத்தன்மையரெனின் பரமபவித்திரமாவீர்; அதாவது, உலக சாஸ்திரப் பிரசித்தமாகிய எத்துணைப் பவித்திரம் பண்ணும் தீர்த்த முதலியவைகளுள்ளனவோ அவ்வனைத்தினும் தாங்கள் பரமோத்தமமான பவித்திரம் பண்ணுபவர். எதனாலெனின் அன்போடுசெய்யப்பட்ட அத்தீர்த்தமுதலியவைகள் இவனது கேவலம் பாவத்தையே நாசஞ்செய்யும்; அப்பாவகருமத்திற்குக் காரணமான அஞ்ஞானத்தைக்கெடுக்காது; பரப்பிரஹ்மமாகிய தாங்களோ இவ்வதிகாரியின் விருத்தியி

லாரூடமாய் அஞ்ஞானவடிவகாரணத்தோடு சகல பாவகருமத்தையும் நாசஞ்செய்கின்றீர் ஆதலினானே 'பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களானாஞ்ச மங்களம்' என்பது முதலிய மிருதிவாக்கியங்கள் தங்களைப் பவித்திரம் பண்ணப்பட்ட தீர்த்தம் முதலிய சர்வ பவித்திரங்கட்கும் பவித்திரம் பண்ணுபவரென்றும் சர்வ மங்கலங்கட்கும் மங்கலவடிவமெனவுங் கூறுகின்றன.

சங்கை:—ஹே அர்ச்சுன! அத்தன்மைய எனது வடிவத்தைக்கேவலமுனது புத்தியால் நிச்சயித்தனையோ, யாதேனுமொரு பிரமாணத்தால் நிச்சயித்தனையோ என்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்குக் கூறியவத்தன்மைய வடிவத்தில் பரமாப்தர்களாகிய ரிஷிகள், நேரே ஸ்ரீ பகவான் என்னும் இவர்களது வாக்கியவடிவப் பிரமாணத்தைக் கூறுகின்றான். 'புருஷம் ஶாஶ்வதம்' என்பது முதலிய ஒன்றரைச்சுலோகத்தால் ஹே பகவன்! ஞானநிஷ்டையுடைய பிருகுவசிட்டர் முதலிய ரிஷிகளும் தேவரிஷியாகிய நாரதரும் அசிததேவலரிஷிகளும் சாட்சாத் விஷ்ணு அவதாரமாகிய ஸ்ரீ வியாசமுனியும் இத்தன்மைய உனது சொரூபத்தை எனக்குபதேசித்திருக்கின்றார்கள். எவ்வணமுபதேசித்தார்களெனின்?

சமாதானம்:—'புருஷம்' என, ஹே பகவன் அந்தப் பிருகு முதலிய ரிஷிகள் அந்தமிலா மகிமையுடைய பரமேசுரனாகிய தங்களைப் புருஷனென வருளினர்; அதாவது, 'புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி:' என்னும் இச்சுருதியில் புருஷசத்தத்தாற் கூறப்பட்ட நிர்விசேடப்பரப்பிரஹ்ம சொரூபம் தாங்களேயென உபதேசித்தார்கள். அவர்கள் தங்களைச் சாசுவதமெனவுங் கூறினர்கள்; அதாவது முக்காலத்திலும் ஏகரூபமெனக் கூறினார்கள். அவர்கள் தங்களைத் திவ்யமெனவுங்கூறினர். ஆண்டு, 'பரமே வ்யோமந் ஸர்வாணி பூதாநி' என்னுஞ் சுருதியில் பரமவியோம சத்தத்தாற் கூறப்பட்ட தமது சொரூபம் திவமாம். அதிலொளிர்வது திவ்யமாம், அதுவே தாங்கள் எனக்கூறினர்; அதாவது சர்வவுலக ரகிதமெனக் கூறினார்களென்பதாம். அவர்கள் தங்களை ஆதிதேவனெனவுங்கூறினர். ஈண்டு எல்லாவுலகத்திற்குங் காரணமென்பது தியாம், சுவப்பிரகாசமென்பது ஆதிதேவனும். ஆதியும் தேவனுமாவது ஆதிதேவனும்; அதாவது, அவர்கள் தங்களைச் சர்வ வுலகத்திற்குங் காரணவடிவமாயும் சுவப்பிரகாச வடிவமாகவுங் கூறினரென்பதாம். ஈண்டுக்காரணத்திற்குச் சுவப்பிரகாசத்தன்மை கூறியதால் நியாய நூலாரும் சாங்கிய நூலாருங் கற்பித்த பரமாணுவடிவகாரணமும் பிரதானவடிவகாரணமும் நீக்கப்பட்டன. அவைகள் சடமானதால் பரப்பிரகாசமேயாம். அவர்கள் தங்களை அஜனெனவுங் கூறினர்; அதாவது, தோற்றமின்றியவரெனக் கூறினர். அவர்கள் தங்களை விபுவெனவுங்கூறினர்; அதாவது, யாண்டும் வியாபகமெனவுங்கூறினர். ஹே பகவன்! கேவலம் அந்தப்பிருகு முதலிய ரிஷிகள்மாத்திரம் எனக்கித்தன்மைய உனது சொரூபத்தைக்கூறிலர்; மற்றோ, எந்தப் பரமேசுரனாகிய தங்களுடைய வேதரூபவாக்கியத்தை யநுசரித்தே அந்த ரிஷி முதலியோர்களின் வாக்கியங்கள் பிரமாணமாமோ அத்தன்மைய ஸ்ரீ பகவானாகிய தாங்களும் நேரே எனக்கு 'ஹொத்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வஹ்ருதம் யோகம்' என்பது முதலிய வாக்கியங்களால் இத்தன்மைத்தான தங்களுடைய வடிவத்தை அருளிச்செய்தீர்கள். ஈண்டு, 'ஆஹுஸ்த்வாம் ருஷய: ஸர்வே' என்னும் வாக்கியத்திலுள்ள சர்வம் என்னுஞ் சப்தத்தானே அந்த நாரதர் முதலிய சர்வரிஷிகளுங் கொள்ளப்படுவர்களாயினும் நாரத அசிததேவலவியாசர் என நான்கு பெயர்களால் அர்ச்சுனன் வெவ்வேறாய்க்கொண்டது சாக்ஷாத் பரமேசுரனுடைய சொரூபத்தைக் கூறுபவர்களாதலின் அவர்கள் மிகவும் சிரேஷ்டர்களென்றறிவுறுத்தற்பொருட்டாமென்க. அன்றியும், 'ஆஹுஸ்த்வாம் ருஷய: ஸர்வே' என்னும் வாக்கியத்தால் அர்ச்சுனன் தனது நிச்சயத்தில் ரிஷிகள் வாக்கியத்தின்

சம்மதிகூறியதால் இது குறிப்பிக்கப்பட்டது:—இவ்வதிகாரி சாஸ்திரத்துவாரா தனது புத்தியால் நிச்சயம்பண்ணினும் ஆன்மசொரூபத்தில் மறித்தும் சம்சய மெழாவண்ணம் பிரஹ்மவேத்தாவாகிய வித்துவானுடைய சம்மதமும் அவசிய மாய்க்கொள்ளற்பாலதென்பதாம். (12,13)

(அ-கை.) ஆண்டு, குருநூற்களானுபதேசிக்கப்பட்ட வர்த்தத்தில் இவ்வதி காரி ஒருபோதும் சம்சயப்படல்கூடாது. அவ்வர்த்தம் உண்மையே என்னும் சத்தியத்துவபுத்தி பண்ணல்வேண்டும் என்னு மர்த்தத்தைக்குறிப்பித்து அர்ச் சுனன் அந்த வாக்கியத்தில் தனது சத்தியத்துவபுத்தியைக் கூறுகின்றான்.

சு-ம். 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌤𑌦𑍃𑌤𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌯𑌨𑍍𑌮𑌾𑌂 𑌵𑌦𑌸𑌿 𑌕𑍇𑌶𑌵 ।
𑌨 𑌹𑌿 𑌤𑍇 𑌭𑌗𑌵𑌨𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌦𑍇𑌵𑌾 𑌨 𑌦𑌾𑌨𑌵𑌾𑌃 ॥ (14)

ப-ம். 6 𑌸𑌰𑍍𑌵𑌂 5 𑌏𑌤𑌤𑍍 7 𑌋𑌤𑌂 8 𑌮𑌨𑍍𑌯𑍇 3 𑌯𑌤𑍍 2 𑌮𑌾𑌂 4 𑌵𑌦𑌸𑌿 1 𑌕𑍇𑌶𑌵 14 𑌨 9 𑌹𑌿 11 𑌤𑍇 10 𑌭𑌗𑌵𑌨𑍍 12 𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌂 15 𑌵𑌿𑌦𑍁𑌃 13 𑌦𑍇𑌵𑌾𑌃 17 𑌨 16 𑌦𑌾𑌨𑌵𑌾𑌃.

(அ-ம்.) ஹே கேசவ! அர்ச்சுனனாகிய எனக்குத் தங்களால் எவ்வாக்கியங் கள் அருளிச்செய்யப்பட்டனவோ அவ்வாக்கியங்களனைத்தையும் நான் உண்மை யென்றெண்ணுகின்றேன். ஹே பகவன்! எக்காரணத்தால் உமது பிரபாவத் தைத் தேவர்களுமுணரார்களோ அங்ஙனமே தானவர்களுமுணரார்களோ. (14)

(வி-ம்.) ஹே கேசவ! எனக்கு முன்னர்த்தாங்களும் தங்களுடைய சொரூ பத்தை அருளிச்செய்தீர்கள். அங்ஙனமே ரிஷிகளும் அருளிச்செய்தார்கள். அவ் வாக்கியங்களனைத்தும் நான் உண்மையென்றே எண்ணுகின்றேன். ஹே பகவன், உமது வாக்கியத்தி லெனக்குச் சிறிதளவும் அப்பிரமாணசங்கையில்லை. எனதுள் ளத்திலுள்ளவைகளனைத்தையும் தாங்கள் சர்வஞ்ஞானதால் உணருகின்றீர்கள் என்னுமர்த்தத்தை அர்ச்சுனன் கேசவ என்னுஞ் சம்போதனத்தால் குறிப்பித்த னன். ஆண்டு,

ஆ-சு. 𑌕𑍇𑌶𑌵𑌾𑌦𑌿𑌤𑌿 𑌕𑌶𑍍𑌚𑍇𑌶𑌂𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌯𑌾 𑌸𑍍𑌵𑌮𑌹𑌿𑌮𑍍𑌨𑍀𑌤𑌿 𑌕𑍇𑌶𑌵𑌃 !

(போ-ள்) ‘க’ என்பது பிரஹ்மாவிற்காம், ஈசனென்பது ருத்திரனுக்காம், அவ்விருவர்க்கும் அநுக்கிரகத்தால் எது பிராப்தமாமோ அது கேசவமாம். இவ் வாறு விரித்துக்கூறுவதால் அக்கேசவசத்தம் நிரதிசய ஐசுவரியத்தைப் பிரதி பாதிக்கின்றது. அத்தன்மைய கேசவனெனும் பெயருடைய பரமேசுரனாகிய தாங் கள் எனது இருதயத்திலுள்ள விருத்தாந்தத்தை அறிகின்றீர் என்பதாம். ஆத லின், ஹே பகவன்! முன்னர்த்தாங்கள் ‘𑌨 𑌮𑍇 𑌵𑌿𑌦𑍁𑌃 𑌸𑍁𑌰𑌗𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌂 𑌨 𑌮𑌹𑌰𑍍𑌷𑌯𑌃’ என்பது முதலிய வாக்கியங்களால் முன்னர்க்கூறியருளினீர்கள். அவ்வாக்கியங்களனைத்தும் உண்மையேயாம். ஹே பகவன்! அதாவது, ஹே சம்பூர்ண ஐசுவரிய முதலிய ஆறு பக சம்பன்ன! உமது பிரபாவத்தை மிகுந்த அறிவுடைய இந்திரன் முதலிய தேவர்களும் மது முதலிய தானவர்களும் பிருகு முதலிய ரிஷிகளும் உணருமாற்றலிலாதவர்கள். உமது பிரபாவத்தை அத்தன் மையவர்களே யுணராரெனின் இக்காலத்திய சிற்றறிவுடைய மனுடர்கள் அப்பிர பாவத்தையுணரார்களென்பதில் கூறற்பாலதென்னை. (14)

(அ-கை.) ஹே பகவன்! எக்காரணத்தால் பரமேசுரராகிய தாங்கள் அத் தேவதை ரிஷி முதலிய சர்வர்கட்கும் ஆதிகாரணரும் அவர்களால் அறியொணாத வருமாகின்றீரோ; அக்காரணத்தானே தாங்களே தங்களது பிரபாவத்தை உள்ளவாறுணர்ந்தவராவீர் என்னுமர்த்தத்தை அர்ச்சுனன் கூறுகின்றான்.

சு-ம்.   ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவந பூதேஶ தேவதேவ ஜகத்பதே ॥ (15)

ப-ம்.   6 ஸ்வயம் 7 ஏவ 9 ஆத்மநா 10 ஆத்மாநம் 11 வேத்த 8 த்வம் 1 புருஷோத்தம 2 பூதபாவந 3 பூதேஶ 4 தேவதேவ 5 ஜகத்பதே.

(அ-ம்.) ஹே புருஷோத்தம! ஹே பூதபாவன! ஹே பூதேச! ஹே தேவ தேவ! ஹே ஜகத்பதியே! ஹே பகவன்! பிறருபதேசமின்றியே நீங்கள் தங்கள் சொரூபத்தானே தங்களதான்மாவையுணர்கின்றீர்கள். (15)

(வி-ம்.) ஹே பகவன்! பிறருபதேசமில்லாமலே தாங்களே தங்கள் சுவப்பிரகாச சொரூபத்தால் நிருபாதிக சொரூபத்தையும் சோபாதிக சொரூபத்தையுமுணர்கின்றீர்கள். அவற்றுள் நிருபாதிக சுத்தசொரூபத்தையோ பிரத்தியக்குரூபத்தானும் அவிஷயத்தன்மைரூபத்தானும் உணர்கின்றீர்கள். சோபாதிக சொரூபத்தையோ நிரதிசய ஞான ஐசுவரியாதிக சத்திகளுடைய வடிவமாயுணர்கின்றீர்கள். ஏனைய தேவதைகளேனும் ரிஷிகளேனும் தானவர்களேனும் மனுஷ்யர்களேனும் உமது சொரூபத்தையுணரார்கள். ஹே அர்ச்சுன! ஏனையதேவர்களாலுணரமுடியாத சொரூபத்தைப் பரமேசுரனாகிய நானும் எவ்வாறுணர்வேன் என்னும் ஸ்ரீ பகவானது சங்கையை நிவிருத்தித்து அர்ச்சுனன் பிரேமையின் மிகுதிப்பாட்டால் ஸ்ரீ பகவானைப் பலவிதமாய்ச் சம்போதனைசெய்கின்றான். ஹே புருஷோத்தம! அதாவது, சர்வ புருடர்கட்குள்ளும் சிரேஷ்ட! கருத்திதுவாம். உனதபேட்சையால் ஏனைய சர்வபுருடர்களும் அபகிருஷ்டர்களே யாதலின் (தாழ்ந்தவர்களேயாதலின்) அவர்களாலுணரப்படாத வர்த்தமும் சர்வோத்கிருஷ்ட பரமேசுரனுக்கு உணருவதற்கேலுமாமென்பதாம் இப்போது பரமேசுரனிடத்துக்கூறப்பட்ட புருஷோத்தமத் தன்மையை மறித்தும் நான்குவகைப்பாய்ப் பிரதிபாதிக்கின்றான். 'ஹே பூதபாவன' என. ஆண்டுச் சர்வபூதங்களையுமுண்டாக்குவோன் பூதபாவனனாவன்; அதாவது, சர்வ பூதங்கட்கும் பிதாவே என்பதாம். ஈண்டொரு புருஷன் பிதாவாயினும் புத்திரன் முதலியோர்கட்கு நியந்தாவாவதில்லை. அதுபோலப் பரமேசுரனும் அச்சர்வ பூதங்கட்கும் பிதாவாயினும் நியந்தாவாகான்; மற்றோ, அவர்க்கு வேறு யாரேனுமொருவன் நியந்தாவாகுவன் என்னுஞ் சங்கையை நீக்குவான், அர்ச்சுனன் அப்பரமேசுரனை வேறு வகையிற் சம்போதிக்கின்றான். ஹே பூதேச! என, அதாவது சர்வ பூதங்கட்கும் நியந்தாவே. ஆண்டு இவ்வுலகத்தில் ராஜன் முதலிய யாராகினுமொருவன் தனது பிரஜைகட்கு நியந்தாவாயினும் அப்பிரஜைகளால் ஆராதிப்பதற்குத் தக்கவனாவதில்லை அதுபோல பரமேசுரனும் அச்சர்வ பூதங்கட்கும் நியந்தாவாயினும் அப்பூதங்களால் ஆராதிப்பதற்குரியானலன்; மற்றோ, அவனின் வேறாயொருவன் ஆராதிப்பதற்குரியனாகின்றான் என்னுஞ் சங்கையை நீக்குவான் அர்ச்சுனன் பகவானை வேறொரு விதமாய்ச் சம்போதனைசெய்கின்றான். 'ஹே, தேவதேவ' என. ஆண்டுச் சர்வப் பிராணிகளாலும் ஆராதிப்பதற்குரிய இந்திரன் முதலிய தேவதைகளாலும் ஆராதிக்கப்படுவோன் தேவதேவனாவன்; அதாவது தேவர்கள் முதற்கொண்டு சர்வப் பிராணிகளாலுமாராதிப்பதற்குரியோய் என்பதாம். ஆண்டு, இவ்வுலகத்தில் ஒருவன் ஆராதிப்பதற்குரியனாயினும் பாலனகர்த்தாவடிவாய்ப் பதியாவதில்லை. அதுபோலப் பரமேசுரனும் ஆராதிப்பதற்குரியானேனும் பாலன கர்த்தாவடிவத்தாற் பதியாகான், மற்றோ அவனின் வேறாகிய ஒருவனே இவ்வுலகத்திற்குப் பதியாவன் என்னுஞ் சங்கையை நீக்குவான் அர்ச்சுனன் அப்பரமேசுரனை வேறொரு விதமாய்ச் சம்போதனை செய்கின்றான், 'ஹே ஜகத்பதே' என. அதாவது அதிகாரிகளை இதோபதேசத்தால் சுபகருமத்தில் பிரவிருத்திப்பதும் அகிதோபதேசத்

தால் அசுபகருமத்தினின்றும் நிவிருத்திப்பதுமாகிய வேதத்தைச் சிருட்டியின் ஆதி காலத்திலுண்டாக்கித் தாங்களே இவ்வுலகனைத்தையும் இரட்சிக்கின்றீர். இதனு லிப்பொருள்பெறப்பட்டது, இவ்வாறு சர்வ விசேடணங்களோடுகூடிய பரமேசுர ராகிய தாங்கள் சர்வப்பிராணிகட்கும் பிதாவும் குருவும் ராஜாவுமாவீர்; இதனுனே தாங்கள் சர்வப் பிரகாரத்தானும் சர்வப்பிராணிகட்கும் ஆராதிப்பதற்குரியரேயா வீர் இத்தன்மைய மகாபிரபாவமுடைய தங்களிடத்துப் புருஷோத்தமத்தன்மை யுளதென்பதிற் கூறற்பாலதென்னை யென்பதாம். (15)

(அ-கை.) ஹே பகவன்! எக்காரணத்தால் பரமேசுரனுகிய தங்களுடைய விபூதியை மற்றைய தேவரிஷி தானவமனுடரொருவரும் உணர்வதற் கேலாத வர்களோ; அந்த விபூதியை யான் அவசியமாயுணரவேண்டுமோ. அக்காரணத் தால் தங்களுடைய விபூதிகளைத் தாங்களே எனக்கு விரிவாய் அருளிச்செய்ய வேண்டுமென்று அர்ச்சுனன் பிரார்த்திக்கின்றுன்.

சு-ம். வக்தும்ஹஸ்யஶேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।
யாபிர்விபூதிபிர்லோகாநிமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥ (16)

ப-ம். 12 வக்தும் 13 அர்ஹஸி 10 அஶேஷேண 9 திவ்யா: 8 ஹி 11 ஆத்மவிபூதய: 1 யாபி: 2 விபூதிபி: 4 லோகாந் 3 இமாந் 6 த்வம் 5 வ்யாப்ய 7 திஷ்டஸி.

(அ-ம்.) ஹே பகவன்! எந்த விபூதிகளால் இவ்வுலகனைத்தையும் வியாப்பி யஞ்செய்து நீரிருக்கின்றீரோ அவ்விபூதிகள் எதனுல் திவ்யமாமோ அதனுல் தாங்களே தங்களுடைய விபூதிகளனைத்தையும் அருளிச்செய்யத்தக்கவராவீர். (16)

(வி-ம்.) ஹே பகவன் எந்தத் தமது விபூதிகளால் தாங்கள் இம்மநுட லோகமுதற்கொண்டு பிரஹ்மலோக மீருயுள்ள சர்வ வுலகங்களையும் வியாபித் திருக்கின்றீரோ அந்தத் தங்களுடைய அசாதாரண விபூதிகள் எதனுல் திவ்ய மாமோ அதாவது சிற்றறிவுடைய எம்மனோர்களால் தானுகவேயுணரமுடியாத தாமோ அங்ஙனமே அவசியமறியவேண்டியதாமோ அதனுனே சர்வக்ஞனுகிய தாங்களே தங்களுடைய விபூதிகளனைத்தையும் அருளிச்செய்வதற்குரியராவீர் என்பதாம். (16)

(அ-கை.) ஹே அர்ச்சுன! உலகத்தில் பயனிலாது ஒரு சேதனப்பிராணி களும் பிரவிருத்திப்பதில்லை; மற்றூ, யாதேனுமொரு பலனைக்குறித்தே பிரவிர்த் திக்கின்றனவாதலின் அவ்விபூதிகளையுணருவதால் உனக்கு எப்பயன் சித்தமாமோ அதை முன்னர் எனக்குக் கூறுவையேல் பின்னருனக்கு விபூதிகளனைத்தையு முப தேசிப்பேன் என்னும் ஸ்ரீ பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் இரண்டு சுலோகங்க ளால் தனது பயனைக் கூறுகின்றுன்.

சு-ம். கதம் வித்யாமஹம் யோகிம்ஸ்த்வாம் ஸதா பரிசிந்தயந் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோஸி பகவந்மயா ॥ (17)

ப-ம். 6 கதம் 7 வித்யாம் 2 அஹம் 1 யோகிந் 5 த்வாம் 3 ஸதா 4 பரிசிந்தயந் 9 கேஷு 10 கேஷு ச 11 பாவேஷு 13 சிந்த்ய: 14 அஸி 8 பகவந் 12 மயா.

(அ-ம்.) ஹே யோகின்! தூலவறிவுடைய அர்ச்சுனனுகிய நான் இடை விடாது உம்மைத்தியானித்து உன்னை யெவ்வாறுணர்வேன். ஹே பகவன்! எவ் வெவ்வஸ்துவில் நானுமைச்சிந்திக்கத்தக்கவன். (17)

(வி-ம்.) ஹே யோகின்! ஈண்டு நிரதிசய ஐசுவரியமுதலிய சக்திகள் யோகமாம், அந்த யோகம் எவனிடத்திருக்கின்றதோ அவன் யோகின் எனப்படுவன் அதாவது ஹே நிரதிசய ஐசுவரிய முதலிய சக்திகளையுடைய கிருஷ்ண பகவன் மிகவுந்தூல வறிவுடைய அர்ச்சுனனாகிய நான் இடைவிடாதும்மைத் தியானித்துத் தேவர்களாலுமுணரமுடியாத வும்மை யெவ்வாறுணர்வேன். அற்றேல் ஹே அர்ச்சுன! எனது விபூதிகளிடத்தென்னைத் தியானித்துப் பரமேசுரனாகிய என்னை யுணர்வாய் இதுவே எனையுணருமாறும் என்னும் ஸ்ரீ பகவானது சங்கைக்கு எந்த விபூதிகளிலுள்ள தங்களைத் தியானித்துத் தங்களை யுணர்வேனோ அந்த விபூதிகளையே முன்னர் யானுணர்ந்திலேன் என்னு முத்தரத்தை அர்ச்சுனன் கூறுகின்றான். 'கெஷுகெஷு அஹாவெஷு ஐதி' ஹே பகவன்! உமது விபூதிவடிவ எந்த எந்த சேதனாசேதனவடிவ வஸ்துக்களில் தாங்கள் சிந்திக்கத்தக்கவர்; அதாவது, எவ்வெவ் விபூதிகளில் தங்களை யான் சிந்திப்பேன் என்பதாம். (17)

(அ-கை) ஹே பகவன் எவ்வெவ் விபூதிகளில் தாங்கள் சிந்தித்தற்குரியரோ அவ்வவ் விபூதிகளை யானுணர்ந்திலேன். இதனையே, தாங்களே கிருபையால் தங்களுடைய விபூதிகளை அருளிச்செய்யவேண்டும் என்று அர்ச்சுனன் பிரார்த்திக்கின்றான்.

சு-ம். விஸ்தரெணாத்மநோ யொமம் விஹூதிஞ்ச ஜநாதந ।
ஹூயஃ கமய த்ரூவிஹி-உ ஶூண்வதொ நாஸ்தி செஅுதம் ॥ (18)

ப-ம். 7 விஸ்தரெண 2 ஆத்மநஃ 3 யொமம் 5 விஹூதிம் 4 அ 1 ஜநாதந 6 ஹூயஃ 8 கமய 13 த்ரூவிஃ 9 ஹி 11 ஶூண்வதஃ 14 ந 15 அஸ்தி 12 செ 10 அஅுதம்.

(அ-ம்.) ஹே ஜனார்த்தன! தாங்கள் தமது யோகத்தையும் விபூதியையும் மீண்டும் விரிவாய் அருளிச்செய்வீர். எக்காரணத்தால் உமது திருவாக்காகிய அமிருதத்தைச் சிரவணத்தாற் பானம்பண்ணி எனக்குத் திருப்தியுண்டாகவில்லையோ. (18)

(வி-ம்.) ஹே ஜனார்த்தன சர்வக்ஞத்தன்மையும் சர்வசக்தியுடையதாந் தன்மை முதலிய ஐசுவரியமுமாகிய யோகம் அதிகாரிகளின் தியானத்தின் ஆலம்பனவடிவ விபூதி என்னு மிவ்விரண்டையும் மீண்டு மெனக்கு விரிவாயருளிச்செய்வீர். தங்களுடைய யோகத்தையும் விபூதியையும் ஏழாவது ஒன்பதாவது அத்தியாயங்களில் சுருக்கமா யருளிச்செய்தீராயினும் அவைகளை இப்போது விரிவாயருளிச்செய்வீர் என்னும் பொருளை அர்ச்சுனன் 'ஹூயஃ' என்னுஞ் சப்தத்தைக் கூறுவதாற் குறிப்பித்தனன். அன்றியும், 'ஹே ஜனார்த்தன' என்னுஞ் சம்போதனத்தால் அர்ச்சுனன் ஸ்ரீ பகவானைக்குறித்து இப்பொருளைக் குறிப்பித்தனன். சர்வ ஜனங்களும் சுவர்க்க முதலிய சுகமடைதற்பொருட்டும் மோட்சப்பிராப்தியின் பொருட்டும் எதனைக்குறித்துப் பிரார்த்திக்கின்றார்களோ அது ஜனார்த்தனமாம். அத்தன்மை ஜனார்த்தனனது சந்நிதியில் இந்த எனது யாசகமும் உரித்தேயாமென்க. அற்றேல், ஹே அர்ச்சுன! முன்னர் அருளிச்செய்த அர்த்தத்தை மறித்தும் கூறும்படி நீ யாசித்தல் எக்காரணத்தால், முன்னர்க் கூறிய பொருளை மறித்துங்கூறுதல் அரைத்த அன்னத்தை மறித்தரைத்தலேய்ப்பப் பொருந்தாது என்னும் ஸ்ரீ பகவானது சங்கைக்கு அர்ச்சுனன் அதிற்காரணங் கூறுகின்றான். 'த்ரூவிஹி-உ ஶூண்வதொ நாஸ்திசெஅுதம்' என. பகவன் எக்காரணத்தால் அமிருதம்போல் இனியரசமுடைய ஒவ்வொரு பதங்களாலாகிய தங்களுடைய அமிருதமாகிய வாக்கியங்களைச் செவிப்புலன்வடிவ வாயாற்பருகியும் எனக்குத் திருப்தியுண்டாகதில்லையோ. அதாவது, இவ்வாக்கியத்தைக்கேட்டு நானிப்போது

திருப்தனுனேன் என்னும் வேண்டாமெனும் புத்தியால் அதன் சிரவணவிடயக இச்சை எனக்கு நிவிருத்தியாகவில்லை. அதனுனே, தங்களுடைய யோகத்தையும் விபூதியையும் மறித்து மெனக்கு விரிவாய் அருளிச்செய்யவேண்டுமென்பதாம்.

(அ-கை.) இப்போது கூறிப்போந்த அர்ச்சுனன் வினுவிற்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்ருர்.

ஸ்ரீஹமவாநுவாச.

சு-ம். ஹந்த தெகயிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதயஃ ।
ப்ராயாந்யதஃ குருஶ்ரெஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மெ ॥ (19)

ப-ம். 2 ஹந்த 3 தெ 8 கயிஷ்யாமி 5 திவ்யாஃ 4 ஹி 6 ஆத்மவிபூதயஃ 7 ப்ராயாந்யதஃ 1 குருஶ்ரெஷ்ட 12 ந 13 அஸ்தி 11 அந்தஃ 10 விஸ்தரஸ்ய 9 மெ.

(அ-ம்.) ஹே குருவம்சத்திற் சிரேஷ்டனுகிய அர்ச்சுன! உனக்கு யானிப்போது பிரசித்தமும் திவ்யமுமாகிய எனது விபூதிகளைப் பிரதானத்தன்மையாய் அருளிச்செய்கின்றேன். எக்காரணத்தால் எனது விபூதியின் விஸ்தாரத்திற்கு அந்தமொன்றுமின்ருே. (19)

(வி-ம்.) ஈண்டு 'ஹந்த' என்னுஞ் சத்தம் இக்காலத்தின் வாசகமாம்; அதாவது, இப்போதே அந்த விபூதிகளை உனக்குச்செப்புகின்றேன். அல்லது, ஹந்த என்னுஞ் சத்தம் அநுமதியின் வாசகமாம். அதாவது, பரமேசுரனுகிய எனது சந்நிதியில் எப்பொருளை யுணரவிரும்பிப் பிரார்த்தித்தனையோ அப்பொருளை அவசிய முனக்கு உபதேசிக்கின்றேன், நீ வியாகூலமடையற்க. இவ்வணம் அர்ச்சுனனைத் தைரியப்படுத்தி ஸ்ரீ பகவான் அப்பொருளை யுபதேசிக்கத் தொடங்கினர். ஹே அர்ச்சுன! பரமேசுரனுகிய எனது அசாதாரண விபூதிகள் திவ்யரூபத்தாற் பிரசித்தமாயுள்ளன அவ்விபூதிகளைப் பிரதானமாய் உனக்குக் கூறுகின்றேன்; அதாவது என்னுடைய முக்கியமுக்கியமான விபூதிகளைச் செப்புகின்றேன். அற்றேல் ஹே பகவன் பிரதான அப்பிரதானவடிவத் தங்களுடைய விபூதிகளனைத்தையும் எனக்கருளிச்செய்வீர் கேவலம் முக்கியமுக்கியமான விபூதிகளை அருளிச்செய்வதெற்றுக்கு என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் தமதுவிபூதிகளின் அனந்தத்தன்மையை அருளிச்செய்கின்ருர். 'நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்யமெ' என. அர்ச்சுன! பிரதானுப் பிரதானமாகிய பரமேசுரனுகிய எனது விபூதிகளனைத்தையும் கூறற்கேலாது எனது விபூதியின் விஸ்தரத்திற்கு அந்த மொன்றுமின்மையின்; அதாவது அவ்விபூதிகள் இவ்வளவுதானெனும் எண்ணிக்கையின்மையால் முக்கிய முக்கியங்களாகிய விபூதிகளை யுனக்குக் கூறுகின்றேனென்பதாம்.

(அ-கை.) ஆண்டு, அந்த முக்கியமான விபூதிகளுக்குள்ளும் சிந்திக்கத்தக்க முதன் முக்கிய வஸ்துவைக்கேளுதி.

சு-ம். அஹமாத்மா குடாகெஶ ஸர்வபூதாஶயஸ்திதஃ ।
அஹமாதிஶ்ச மத்யம் ச பூதாநாமந்த ஏவ ச ॥ (20)

ப-ம். 4 அஹம் 3 ஆத்மா 1 குடாகெஶ 2 ஸர்வபூதாஶயஸ்திதஃ 6 அஹம் 9 ஆதிஃ 5 ச 11 மத்யம் 10 ச 8 பூதாநாம் 13 அந்தஃ 7 ஏவ 12 ச.

(அ-ம்.) ஹே குடாகேச! சர்வ பூதங்களின் இருதயதேசத்திலுள்ள சைதன்யானந்தகனமும் நானே. சர்வ பூதங்களின் உத்பத்தியும் ஸ்திதியும் விநாசமும் நானே. (20

(வி-ம்.) ஹே குடாகேசனாகிய அர்ச்சுன! சர்வப் பிராணிகளின் இருதயத்திலும் அந்தரியாமிரூபமாகவும் பிரத்தியக்கான்மரூபமாகவும் இருக்கப்பட்ட சைதன்ய சொரூப ஆனந்தகனப் பரமான்மதேவன் வாசுதேவனாகிய நானே இவ்வாறு அபேதரூபமாய்ப் பரமேசுரனாகிய என்னைத் தியானம்பண்ணுதி. ஈண்டு, ஹே குடாகேச! என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவானிப்பொருளைக்குறிப்பித்தருளினர்:—குடாகா வென்பது நித்திரையாம், அதைத் தன் வசப்படுத்தியவன் குடாகேசனாவன், அத்தன்மைய நித்திரை முதலிய விகாரங்களைத் தன்வசப்படுத்தும் நீ அபேதமாய் என்னைத் தியானிப்பதில் சமர்த்தனாதலை என்பதாம். இத்துணையானே உத்தமாதிகாரிகள் செய்யுந் தியானமுறை கூறப்பட்டதாம். இப்போது மத்திமாதிகாரியின் தியானமுறையை நிரூபித்தருளுகின்றார். 'அஹமாதி:' என ஹே அர்ச்சுன! இவ்வாறென்னை அபேதமாய்த் தியானிப்பதற் கசமர்த்தனாகுவையேல் மேற்கூறத்தக்க தியானம் உனக்குச் செய்யத்தக்கதாம். அதிலும் முன்னர் எவ்வஸ்து தியானித்தற்குரியதாமோ அதை ஸ்ரீ பகவான்! அருளிச்செய்கின்றார். 'அஹமாதி:' என ஹே அர்ச்சுன! உலகத்திற் சேதனவடிவமாய்ப் பிரசித்தமான எவ்வளவு பிராணிகள் உளவோ அவைகளனைத்திற்கும் பரமேசுரனாகிய நானே உற்பத்தியாவேன், அங்ஙனமே, ஸ்திதியும் விநாசமு நானாகின்றேன்; அதாவது, அந்தப் பிராணிகளனைத்தின் தோற்றநிலைமை யீறுவடிவமாகவும் காரணவடிவமாகவும் நானுனக்குத் தியானித்தற்குரியோன். இவ்வளவானே மத்தியமாதிகாரியின் தியானப்பிரகாரங் கூறப்பட்டதாம். (20)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இவ்வாறு தியானஞ்செய்வதிலும் அசமர்த்தனாகுவையேல் மேற்கூறத்தக்க பாகியத்தியானமே உனக்குச் செயத்தக்கதாம் என்னு மபிப்பிராயத்தால் ஸ்ரீ பகவான் மந்தாதிகாரிகளிடத்துள்ள கிருபையால் அந்தப் பாகியத்தியானத்தை இவ்வத்தியாயத்தின் முடிவுவரையிலும் விரிவாய் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஆதித்யாநாமஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிரம்ஶுமாந் ।
மரீசிர்மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் ஶஶீ ॥ (21)

ப-ம். 1 ஆதித்யாநாம் 3 அஹம் 2 விஷ்ணு: 5 ஜ்யோதிஷாம் 7 ரவி: 6 அம்ஶுமாந் 9 மரீசி: 8 மருதாம் 4 அஸ்மி 10 நக்ஷத்ராணாம் 12 அஹம் 11 ஶஶீ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆதித்தியர்களுக்குள் விஷ்ணுவெனு மாதித்தியன் நானாகுவேன், பிரகாசகங்களுக்குள் பேரொளியையுடைய இரவி நானாகுவேன், மருத்கணங்களுக்குள் மரீசியெனு மருத்து நானாகுவேன், நக்ஷத்திரங்களுக்குள் சந்திரனும் நானாகுவேன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பன்னிரண்டிரவிகளுக்குள் விஷ்ணுவெனும் பெயருடைய இரவி நானாகுவேன், அல்லது விஷ்ணுவெனப்படும், வாமனாவதாரம் நானாகுவேன். அக்கினி முதற்கொண்டு பிரகாசம்பண்ணப்பட்ட சர்வப்பிரகாசங்களுக்குள்ளும் எல்லாவுலகத்தும் வியாபகமாகிய பிரகாசமுடைய சூரியன் நானாகுவேன். மருத்துவெனும் தேவதாவிசேடமாகிய மருத்துக்களுள் மரீசியெனு மருத்து நானாகுவேன். அசுவினிமுதற்கொண்டு வானிலுள்ள உடுக்கணங்களுக்குள் அவ்வுடுக்கணங்கட்கு அதிபதியாகிய சந்திரன் நானாகுவேன். கருத்திதுவாம்:—பன்னிரு சூரியர்கள், அக்கினி முதலிய சர்வ சோதிகள், மருத்கணங்கள், அசுவினி முதலிய நக்ஷத்திரங்கள், என்னு மிவ்வனைத்தும் சாமான்யவடிவத்தால் எனது விபூதிகளேயாயினும்; அவைகளுக்குள், விஷ்ணுவெனு மாதித்தியன், இரவியெனுஞ் சோதி, மரீசியெனு மருத்து, சந்திரனெனு நக்ஷத்திரம், என்னுமிவைகள்

எனது பிரபாவத்தின் மிகுதிப்பாட்டால் என்னுடைய விசேடவிபூதிகளாமாதலின் பன்னிரு ஆதித்தியர்களுக்குள்ளும் விஷ்ணுவெனு மாதித்தியன் பரமேசுரனே யாவன் எனப் பரமேசுர புத்தியால் அவ்வாதித்தியன் இவ்வதிகாரியாற் சிந்தித்தற் குரியோன். இவ்வாறே இரவி மரீசி சந்திரன் என்னு மூன்றும் பரமேசுரரூப மாய்த் தியானஞ்செய்யற்பாலனவாம். இந்தத்தியான முறையை இவ்வத்தியாய முடிவுபரியந்தம் சர்வபரியாயத்தானு முணர்ந்துகொள்க. ஈண்டு, வாமன, ராம என்பது முதலியன சாக்ஷாத் பரமேசுராவதாரங்களேயாயினும் அங்ஙனமே ஐசு வரியமுடையவைகளாயினும் ஆதித்தியன் முதலியவைகள்போலப் பரமேசுரனது விபூதிவடிவங்களன்றுமாயினும் 'வ்ருஷ்ணீநாம் வாஸுதேவோஸ்மி' என மேற் கூறப்படும் வாக்கியத்தில் ஸ்ரீ பகவான்! வாசுதேவவடிவத்தால் பரமேசுரனை தியா னித்தற்பொருட்டுத் தன்னையும் அவ்விபூதிகளுக்குள் கூறியிருக்குமாறுபோல வாமனராமாதிகட்கும் அவ்வவ் வடிவத்தால் பரமேசுரனை ஆராதித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் தனது விபூதிகளுக்குள் கூறியருளினரென்பதாம். (21)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: ।
இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா ॥ (22)

ப-ம். 1 வேதாநாம் 2 ஸாமவேத: 3 அஸ்மி 4 தேவாநாம் 6 அஸ்மி 5 வாஸவ: 8 இந்த்ரியாணாம் 9 மந: 7 ச 10 அஸ்மி 11 பூதாநாம் 16 அஸ்மி 12 சேதநா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! வேதங்களுக்குள் சாமவேத நானுகின்றேன் தேவர்களுக்குள் இந்திரன் நானுகின்றேன் இந்திரியங்களுக்குள் மனம் நானுகின் றேன் பூதங்களுக்குள் சேதனம் நானுகின்றேன். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான் குவேதங்களுக்குள்ளும் கானத்தின் மதுரத்தன்மையால் மிகவும் ரமணீயமான சாமவேதம் நானுகின்றேன் அக்கினி வாயு முதலிய சர்வ தேவதைக்குள்ளும் அவைகளின் அதிபதியாகிய இந்திரன் நானுகின்றேன் நேத்திரமுதற்கொண்டு மன மீருய பபதினொரு இந்திரியங்களுக்குள்ளும் இந்திரியங்களைச் செலுத்தும் மனம் நானுகின்றேன் சர்வப் பிராணிகளின் சம்பந்தமுடைய பரிணாமங்களனைத்தும் பூதங்களாம் அத்தன்மைய பூதங்களுக்குள் சைதன்யாபிவியக்தி பண்ணப்பட்ட புத்திவிருத்திவடிவ சேதனம் நானுகின்றேன். (22)

(அ-கை.) ஆனாலும்,

சு-ம். ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் ।
வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு: ஶிகரிணாமஹம் ॥ (23)

ப-ம். 1 ருத்ராணாம் 2 ஶங்கர: 4 ச 3 அஸ்மி 6 வித்தேஶ: 5 யக்ஷரக்ஷஸாம் 8 வஸூநாம் 9 பாவக: 7 ச 10 அஸ்மி 12 மேரு: 11 ஶிகரிணாம் 13 அஹம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உருத்திரர்களுக்குள் சங்கரர் நானுகின்றேன் யக்ஷ ராக்ஷஸர்களுக்குள் குபேரன் நானுகின்றேன் வசுக்களுக்குள் அக்கினி நானுகின் றேன் இரத்தினமுடைய மலைகளுக்குள் மேருமலை நானுகின்றேன். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஏகாதசவுருத்திரர்களுக்குள் தனதன்பர்கட்கு நிரதிசய மோக்ஷவடிவ ஆனந்தத்தைக்கொடுக்கும் சங்கரனெனும் உருத்திரன் நானுகின்றேன் யக்ஷராக்ஷஸர்களுக்குள் எல்லாத்தனங்கட்கும் அதிபதியாகிய

குபேரன் நானாகின்றேன் அஷ்டவ சுக்களுக்குள் மிகவுஞ் சிறந்த அக்கினி நானாகின்றேன் பலவகையான இரத்தினமய சிகரங்களுடைய பருவதங்களுக்குள்ளும் சுவர்ணமயமான மிகவும் ரமணீய மேருபருவதம் நானாகின்றேன். (23)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌪𑍁𑌰𑍋𑌧𑌸𑌾𑌂 𑌚 𑌮𑍁𑌖𑍍𑌯𑌂 𑌮𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌮𑍍 ।
𑌸𑍇𑌨𑌾𑌨𑍀𑌨𑌾𑌮𑌹𑌂 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌃 𑌸𑌰𑌸𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌸𑌾𑌗𑌰𑌃 ॥ (24)

ப-ம். 2 𑌪𑍁𑌰𑍋𑌧𑌸𑌾𑌂 7 𑌚 4 𑌮𑍁𑌖𑍍𑌯𑌂 3 𑌮𑌾𑌂 6 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 1 𑌪𑌾𑌰𑍍𑌥 5 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌂 8 𑌸𑍇𑌨𑌾𑌨𑍀𑌨𑌾𑌂 10 𑌅𑌹𑌂 9 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌃 11 𑌸𑌰𑌸𑌾𑌂 13 𑌅𑌸𑍍𑌮𑌿 12 𑌸𑌾𑌗𑌰𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ புரோஹிதர்களுக்குள்ளும் மகா மேலாகிய பிருகஸ்பதிரூபம் நானே யென்றுணர்தி; சேனாபதிகளுக்குள் கந்தர் நானாகின்றேன்; நீர் நிலைகளுக்குள் சமுத்திரம் நானாகின்றேன்

(வி-ம்.) சர்வ ராஜாக்கட்குள்ளும் மூன்றுலகங்கட் கதிபதியாகிய தேவராஜனாகிய இந்திரன் சிரேஷ்டனாவன். அத்தன்மைய இந்திரனினும் சர்வ புரோஹிதர்களுக்குள்ளும் சிரேஷ்டனாகிய பிருகஸ்பதி சிரேட்டனாவன். ஆதலின் புரோஹிதர்களுக்குள் பிருகஸ்பதி ரூபம் நானென்றுணர்தி சர்வ சேனாதிபதிகளுக்குள்ளும் தேவர்களின் சேனாதிபதியாகிய கந்தன் நானாகின்றேன். தேவர்களால் கெல்லப்பட்ட தண்ணீரிருப்பதற்கிடமாகிய நீர் நிலைகளுள் சகரபுத்திரராற் கெல்லப்பட்ட சாகரம் நானாகின்றேன். (24)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌭𑍃𑌗𑍁𑌰𑌹𑌂 𑌗𑌿𑌰𑌾𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑍇𑌕𑌮𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 ।
𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 𑌜𑌪𑌯𑌜𑍍𑌞𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿𑌮𑌾𑌲𑌯𑌃 ॥ (25)

ப-ம். 1 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 2 𑌭𑍃𑌗𑍁𑌃 3 𑌅𑌹𑌂 4 𑌗𑌿𑌰𑌾𑌂 7 𑌅𑌸𑍍𑌮𑌿 5 𑌏𑌕𑌂 6 𑌅𑌕𑍍𑌷𑌰𑌂 8 𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌂 9 𑌜𑌪𑌯𑌜𑍍𑌞𑌃 10 𑌅𑌸𑍍𑌮𑌿 11 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌾𑌣𑌾𑌂 12 𑌹𑌿𑌮𑌾𑌲𑌯𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மகரிஷிகளுக்குள் பிருகுவெனப் பெயரிய இருஷி நானாவேன். சர்வ வாக்குகளுள்ளும் ஓங்காரவடிவ ஒரு அக்ஷரம் நானாவேன் சர்வ யாகங்களுள்ளும் ஜபரூபயாகம் நானாவேன். சர்வ ஸ்தாவரங்களுக்குள்ளும் ஹிமாலயபர்வதம் நானாவேன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரமாவின் புத்திரர்களாகிய மகரிஷிகளனைவர்களுக்குள்ளும் மிகுந்த தேசசியாகிய பிருகுரிஷி நானாகின்றேன். அர்த்தவாசக பதவடிவ வாக்குகளுக்குள் பிரஹ்மவாசகமாகிய ஏகாக்ஷரவடிவ ஓங்காரமெனும் பத நானாகின்றேன். அசுவமேதம் சோதிட்டோமம் முதலாய் வேதத்திற் கூறப்பட்ட யஞ்ஞங்களனைத்தினுள்ளும் ஹிம்சை முதலிய சர்வ தோடங்களுமின்றிய மிகவுஞ் சுத்தம்பண்ணப்பட்ட ஜபவடிவ யக்ஞம் நானாகின்றேன். இவ்வுலகத்தில் சலிப்பற நிலைத்திருக்கும் ஸ்தாவரப் பொருள்களுள் இமாலய நானாகின்றேன். (25)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌚 𑌨𑌾𑌰𑌦𑌃 ।
𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌃 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌕𑌪𑌿𑌲𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃 ॥ (26)

ப-ம். 2 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌃 1 𑌸𑌰𑍍𑌵𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 4 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 3 𑌚 5 𑌨𑌾𑌰𑌦𑌃 6 𑌗𑌨𑍍𑌧𑌰𑍍𑌵𑌾𑌣𑌾𑌂 7 𑌚𑌿𑌤𑍍𑌰𑌰𑌥𑌃 8 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 9 𑌕𑌪𑌿𑌲𑌃 10 𑌮𑍁𑌨𑌿𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ விருக்ஷங்களுக்குள் பிப்பலவி
வேன். சர்வ தேவரிஷிகளுக்குள் நாரதர் நானுவேன். சர்வ கந்தர்
சித்ரரதன் நானுவேன். சர்வ சித்தர்களுக்குள் கபிலமுனி நானுவேன்

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வனஸ்பதியாகிய விருக்ஷங்களி
பிப்பலமெனும் விருக்ஷம் நானுகின்றேன் தேவர்களாயிருந்து வேதம
தரிசனத்தால் ரிஷிபாவத்தையடைந்த சர்வ தேவரிஷிகளுக்குள்
யாகிய நாரதர் நானுகின்றேன். கானம்பண்ணப்பட்ட கந்தர்வர்க
ளும் சித்திரரதனெனும் கந்தர்வன் நானுகின்றேன். முயற்சியின்றி
திரத்தானே தருமஞான வைராக்கிய ஐசுவரிய முதலிய குணங்க
களும் பரமான்மாவை நிச்சயித்துணர்ந்தவர்களுமாகிய சித்தர்கள
முனி நானுகின்றேன்.

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌮𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 ।
𑌐𑌰𑌾𑌵𑌤𑌂 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂𑌚 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌂 ॥

ப-ம். 3 𑌉𑌚𑍍𑌚𑍈𑌃𑌶𑍍𑌰𑌵𑌸𑌂 1 𑌅𑌶𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 5 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 4 𑌮𑌾𑌂 2 𑌅𑌮𑍃𑌤𑍋𑌦𑍍𑌭
𑌵𑌤𑌂 6 𑌗𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 9 𑌨𑌰𑌾𑌣𑌾𑌂 8 𑌚 10 𑌨𑌰𑌾𑌧𑌿𑌪𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ அசுவங்களுக்குள்ளும் அமிரு
காலுண்டாகிய உச்சைச்சிரவமெனும் அசுவம் நானுகின்றேன்
சர்வ கஜங்களுக்குள்ளும் ஐராவதம் நானென்றுணர்தி. சர்வ நரர்க
ராஜா நானுகின்றேன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ அசுவங்களுக்குள்ளும் மிகு
மாகிய உச்சைச் சிரவசெனும் அமிருதத்தையடைவான் தேவர்களு
களும் மதனஞ்செய்யமிடத்துச் சமுத்திரத்தில் வெளிப்பட்ட அசு
றுணர்தி. சர்வ கஜங்களுக்குள்ளும் ஐராவதமெனுங்கஜம் நானென்று
அமிருதத்தின்பொருட்டுத் தேவதைத்தியர்கள் மதனஞ்செய்யுங்கா
தினின்றும் வெளிப்பட்டதாம். சர்வ நரர்களுக்குள்ளும், எல்லா
தருமங்களிற்செலுத்தல் மறித்தல் செய்யப்பட்ட இராஜா நானுகின்

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌆𑌯𑍁𑌧𑌾𑌨𑌾𑌮𑌹𑌂 𑌵𑌜𑍍𑌰𑌂 𑌧𑍇𑌨𑍂𑌨𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍 ।
𑌪𑍍𑌰𑌜𑌨𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑌂𑌦𑌰𑍍𑌪𑌃 𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌮𑌸𑍍𑌮𑌿 𑌵𑌾𑌸𑍁𑌕𑌿𑌃 ॥

ப-ம். 1 𑌆𑌯𑍁𑌧𑌾𑌨𑌾𑌂 3 𑌅𑌹𑌂 2 𑌵𑌜𑍍𑌰𑌂 5 𑌧𑍇𑌨𑍂𑌨𑌾𑌂 4 𑌅𑌸𑍍𑌮𑌿
8 𑌪𑍍𑌰𑌜𑌨𑌃 7 𑌚 10 𑌅𑌸𑍍𑌮𑌿 9 𑌕𑌂𑌦𑌰𑍍𑌪𑌃 11 𑌸𑌰𑍍𑌪𑌾𑌣𑌾𑌂 13
𑌵𑌾𑌸𑍁𑌕𑌿𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ ஆயுதங்களுக்குள்ளும் வச்சி
றேன். சர்வ தேனுக்களுள்ளும் காமதேனு நானுகின்றேன். சர்வ
குள்ளும் புத்திரோத்பத்தியின்பொருட்டாகிய காமம் நானுகின்றேன்
பங்களுக்குள்ளும் வாசுகி என்னுஞ் சர்ப்பம் நானுகின்றேன்.

(வி-ம்.) அஸ்திரவடிவ ஆயுதங்களனைத்துள்ளும் ததீசியி
னின்று முண்டாகிய வச்சிரம் நானுகின்றேன் பாலைக்கொடுக்குந் தே

துள்ளும் மனோவேட்கைப்படி பொருளைக்கொடுப்பதும் சமுத்திர மதநஞ் செய்யுங்கால் வெளிப்பட்டதுமாகிய வசிஷ்டருடைய காமதேனு நானுகின்றேன். புணரும் வேட்கைவடிவச் சர்வ காமங்களுக்குள்ளும் புத்திரோத்பத்தியின்பொருட்டுண்டாம் காமவடிவ கந்தர்ப்பன் நானுகின்றேன். ஈண்டு, 'ப்ரஜநஶ்ச' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரமானது புத்திரோத்பத்தியின்றி வாளா மைதுநகாரண வடிவ காமநிவிருத்தியை அறிவுறுத்துகின்றது. சர்வ சர்ப்பங்கட்குள்ளும் சர்ப்பராஜனுகிய வாசுகி நானுகின்றேன். ஈண்டு, சர்ப்ப ஜாதியினின்று நாகஜாதி பிந்நமாம். சர்ப்பமோ விஷமுடையதாம், நாகமோ விஷமின்றியதாம், இவற்றிற்கித்துணைப்பேதமாம். ஆதலின், 'அநந்தஶ்சாஸ்மி நாகாநாம்' என மேற்கூறும் வாக்கியத்தில் புநருக்தி யின்றுமென்க. (28)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். அநந்தஶ்சாஸ்மி நாகாநாம் வருணோ யாதஸாமஹம் ।
பித்ருணாமர்யமா சாஸ்மி யம꞉ ஸம்யமதாமஹம் ॥ (29)

ப-ம். 2 அநந்த꞉ 5 ச 4 அஸ்மி 1 நாகாநாம் 7 வருண꞉ 6 யாதஸாம் 3 அஹம் 9 பித்ருணாம் 10 அர்யமா 8 ச 11 அஸ்மி 13 யம꞉ 12 ஸம்யமதாம் 14 அஹம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நாகங்கட்குள் அநந்தனெனும் நாகம் நானுகின்றேன், ஜலசரர்கட்குள் வருணன் நானுகின்றேன், பிதிர்களுக்குள் அரியமா நானுகின்றேன், நியமநம்பண்ணுபவர்களுக்குள் யமன் நானுகின்றேன். (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ நாகங்களுக்குள்ளும் அவைகளின் ராஜனுகிய சேஷனெனும் அநந்தநாகம் நானுகின்றேன். சலத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்குஞ் சீவர்களுக்குள் அவைகட்கெல்லாம் ராஜாவாகிய வருணன் நானுகின்றேன். சர்வ பிதிர்களுக்குள்ளும் அவர்கட்கெல்லாம் ராஜாவாகிய அரியமாவெனும் பிதிர் நானுகின்றேன், தருமாதருமங்களின் சுகதுக்க பலன்களைக்கொடுத்து நிக்கிரகாநுக்கிரகமாகிய சம்யமம் பண்ணப்பட்ட சமர்த்தர்களனைவர்களுக்குள்ளும் யமன் நானுகின்றேன். (29)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ப்ரஹ்லாதஶ்சாஸ்மி தைத்யாநாம் கால꞉ கலயதாமஹம் ।
ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோऽஹம் வைநதேயஶ்ச பக்ஷிணாம் ॥ (30)

ப-ம். 2 ப்ரஹ்லாத꞉ 5 ச 4 அஸ்மி 1 தைத்யாநாம் 7 கால꞉ 6 கலயதாம் 3 அஹம் 9 ம்ருகாணாம் 8 ச 10 ம்ருகேந்த்ர꞉ 11 அஹம் 14 வைநதேய꞉ 12 ச 13 பக்ஷிணாம்.

(அ-ம்.) ஹே அர்ஜுன! தைத்தியர்களுக்குள் பிரகலாதன் நானுகின்றேன், எண் கணக்கிடுபவர்களுக்குள் காலம் நானுகின்றேன், மிருக முதலிய பசுக்களுக்குள் சிங்கம் நானுகின்றேன், புட்களனைத்துள்ளும் கருடன் நானுகின்றேன்.

(வி-ம்.) ஹே அர்ஜுன! திதிவம்சத்திலுண்டாகிய தைத்தியர்களுக்குள் தனது சாத்துவிக சுபாவத்தால் சர்வப்பிராணிகட்கும் மிகவும் ஆநந்தத்தைக் கொடுக்கின்ற பிரகலாதன் நானுகின்றேன், எண்கணிப்பவர்களனைவர்க்குள்ளும் காலம் நானுகின்றேன், மிருக முதலாகிய பசுக்களனைத்துள்ளும் அவைகட்கு ராஜாவாகிய சிங்கம் நானுகின்றேன், பட்சிகட்குள் அவைகளின் ராஜாவாகிய கருடன் நானுகின்றேன். (30)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ (31)

ப-ம். 2 पवनः 1 पवताम् 4 अस्मि 6 रामः 5 शस्त्रभृताम् 3 अहम् 8 झषाणाम् 9 मकरः 7 च 10 अस्मि 11 स्रोतसाम् 13 अस्मि 12 जाह्नवी.

(அ-ம்.) ஹே அர்ஜுன! வேகமுடையவற்றுள், யான் வாயுவாவேன். ஆயுத பாணிகட்குள், ஸ்ரீ ராமன் நானாவேன். மீனங்கட்குள், மகரம் நானாவேன், நதிகட்குள், கெங்காநதி நானாவேன்.

(வி-ம்.) ஹே அர்ஜுன! பாவநம்பண்ணப்பட்ட பொருள்கள் அல்லது வேகமுடைய பொருள்களனைத்துள்ளும் பவநன் நானாகின்றேன், யுத்தத்தின் மிகக் குசலர்களாய்ச் சஸ்திரந்தரித்த போர்வீரர்களுள் சர்வ ராக்ஷசர் குலத்தையுந் தலைசாயப்பண்ணிய மிகவும் வீரசூர தசரதபுத்திரராகிய ஸ்ரீ ராமர் நானாகின்றேன், மீன்களனைத்தினுள்ளும் மகரமெனும் மீன் நானாகின்றேன், வேகமாய்ச்செலுந் நீரையுடைய யமுனை, கோதாவரி முதலிய நதிகட்குள்எல்லாவற்றினுஞ் சிறந்த கங்கை நானாகின்றேன். (31)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ (32)

ப-ம். 2 सर्गाणाम् 3 आदिः 7 अन्तः 6 च 5 मध्यम् 4 च 9 एव 8 अहम् 1 अर्जुन 11 अध्यात्मविद्या 10 विद्यानाम् 13 वादः 12 प्रवदताम् 14 अहम्.

(அ-ம்.) ஹே அர்ஜுன! அசேதநமாகிய காரியங்களின் தோற்றநிலையிறுகள் பரமேசுரனாகிய நானாகின்றேன், சர்வ வித்தைகளுக்குள்ளும் அத்தியாத்மவித்தை நானாகின்றேன், விவாதம் பண்ணுபவர்களின் கதைகளுக்குள் வாதமெனுங்கதை நானாகின்றேன். (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அசேதனவடிவமாய் விளங்கும் தோற்றப்படுங் காரியங்களின் உற்பத்தி ஸ்திதி லயங்கள் நானாகின்றேன், 'अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च' என்னும் வாக்கியத்தில் முன்னரும் ஸ்ரீ பகவான் தமக்குச் சர்வ பூதங்களின் உற்பத்தி ஸ்திதி லயவடிவங்கூறியருளினர். ஆயினும் முன்னரோ சேதனவடிவாய் விளங்கும் பூதங்களின் தோற்றநிலையிறுவடிவமே சொல்லப்பட்டது. இப்போதோ அசேதநமாய் விளங்கும் பூதங்களின் தோற்றநிலையிறு வடிவுஞ் சொல்லப்படுகின்றதாதலின், ஈண்டுக் கூறியது கூறல் என்னுந் தோடமின்றாமென்க. சர்வ வித்தைகளுக்குள்ளும் மோட்சமடைவதற்குக்காரணவடிவமும் சிவப்பிரஹ்மங்களின் அபேதத்தைப் பிரதிபாதிப்பதுமாகிய உபநிடதவடிவ அத்தியான்மவித்தை நானாகின்றேன், பரஸ்பரம் வாதம்புரிபவர்களின் வாத ஜல்ப விதண்டை என்னும் மூவகையான கதைகளுக்குள்ளும் வாதமெனுங்கதை நானாகின்றேன். ஈண்டு, 'प्रवदताम्' என்னுஞ்சப்தம் விவாதம்பண்ணுபவர்களின் வாசகமேயாம். அவர் கதையின் வாசகமன்று. ஆயினும், முன்னர் 'भूतानामस्मि चेतना' என்னும் வாக்கியத்தில் பூதங்கட்கு என்னுஞ் சப்தத்திற்கு

அப்பூதசம்பந்தி பரிணாமத்தில் இலக்கணை அங்கீகரித்ததுபோன்று ஈண்டும், பிரவததாம் என்னுஞ்சப்தத்திற்கு விவாதம்பண்ணுபவர்களின் கதையில் இலக்கணை கோடலுரித்தாம். ஆண்டு, ஒருவர்க்கொருவர் இராகத்துவேஷங்கள் ஜயபாஜயங்களின்றிப் பரஸ்பரம் தத்துவபோதத்தின்பொருட்டிச்சையுடையவர்களாய் ஒரு குருவினிடம் அத்தியயநம்பண்ணுமிரண்டு சிஷ்யர்கள் அல்லது குருசிஷ்யர்கள் இருவர்களின் தத்துவநிர்ணயபரியந்தம் தம்முள் கடாவிடைகளாய கதையின் பெயர் வாதகதையாம். வாதகதையின் பலமாகிய தத்துவநிர்ணயத்தைப் பிரதிவாதியை மறுத்து இனிது காத்தற்பொருட்டுத் தம்முள் வெற்றிகோடும் வேட்கையுடைய இருவர்களின் வெற்றிதோல்வி மாத்திரபரியந்தம் தம்முளுண்டாங்கதை ஜல்பகதையாம். விதண்டைக்கதையும் அத்தன்மையதேயாம். ஆண்டு, சலம், ஜாதி, நிக்கிரகத்தானம் மூன்றுகளானும் பாபக்கத்தைத் தூஷித்தல் என்னும் இத்துணைக்கூறு இரண்டினும் சமானமேயாயினும்; விதண்டையில் ஒருவன் தனது பக்கத்தை கேவலம் நிலைநிறுத்துகின்றான், பாபக்கத்தைத் தூஷணப்படுத்துவதில்லை. மற்றொருவனோ அப்பக்கத்தில் கேவலந் தூடணங்கொடுப்பதேயன்றித் தனது மதத்தை நிலைநிறுத்துவதில்லை. ஜல்பத்தின்கண்ணோ விவாதம்பண்ணுமிருவருக்கும் தத்தம் பக்கத்தைத் தாபித்தலும் பாபக்கத்தைத் தூஷித்தலுமுண்டு, ஜல்பவிதண்டைகட்கு இத்துணை வேறுபாடாம். ஆண்டு, மற்றொருபொருளின் அபிப்பிராயத்தால் உச்சரித்த ஒரு வாக்கியத்திற்கு மற்றொரு பொருளைக் கற்பித்துக்கொண்டு தூஷித்தல் சலமாம். அசத்துத்தரம் ஜாதியாம்; தோல்விக்குக் காரணம் நிக்கிரகத்தானமாம். இம்மூன்றின் விபாகமும் உதாகரணமும் நியாயநூலில் மிக விளக்கமாம். (32)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். அக்ஷராணாமகாரோஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹமேவாக்ஷய: காலோ தாதாஹம் விஶ்வதோமுக: ॥ (33)

ப-ம். 1 அக்ஷராணாம் 2 அகார: 3 அஸ்மி 6 த்வந்த்வ: 5 ஸாமாஸிகஸ்ய 4 ச 7 அஹம் 8 ஏவ 9 அக்ஷய: 10 கால: 11 தாதா 13 அஹம் 12 விஶ்வதோமுக:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அக்ஷரங்களுக்குள் அகாரம் நானாகின்றேன். சமாசக்கூட்டங்களுக்குள் துவந்துவசமாசம் நானாகின்றேன். அக்ஷயமாகிய காலமும் பலன்கொடுக்கு மவர்க்குள்ளும் சர்வ கருமபலனையுங்கொடுப்பவனும் அந்தரியாமியாகிய நானாகின்றேன். (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன வர்ணவடிவ அக்ஷரங்களனைத்தினுள்ளும் 'அகாரோ வை ஸர்வா வாக்' என்னுஞ் சுருதியால் சர்வ வாக்குவடிவமாய்க்கூறப்பட்ட அகாராக்ஷரம் நானாகின்றேன் சர்வ சமாசங்க (தொகைக)ளுக்குள்ளும் உபயபதார்த்தப்பிரதானமாகிய 'ராமக்ருஷ்ணௌ' இராமகிருஷ்ணர்கள் என்னும் துவந்துவசமாசம் (உம்மைத்தொகை) நானாகின்றேன். ஆண்டு, உபகும்பம் என்பது முதலிய அவ்யயீபாவசமாசமோ பூர்வபதார்த்தப்பிரதானமாம். ராஜ புருஷன் என்பது முதலிய தத்புருஷசமாசமோ 'வேற்றுமைத்தொகை' உத்தர பதார்த்தப் பிரதானமாம். சித்திரகு, என்பது முதலிய பகுவிரீஹி சமாசமோ 'அன்மொழித்தொகை' அன்னியபதார்த்தப் பிரதானமாம். இவ்வணம், துவந்துவசமாசத்திற்கு வேறாகிய சமாசங்களொன்றும் உபயபதார்த்தப்பிரதானமாவதின்றாதலின் அவைகளினின்று துவந்துவசமாசம் சிரேஷ்டமாம். க்ஷணம் கடிகை முதலிய நாசமுடைய காலாபிமானரூபமும் காலங்களனைத்தையும் அறிபவருமாகிய பரமேசுரன் அக்ஷயகாலமாவன். 'காலு காலோऽஹமக்ஷய: விகரோ:' என்பது

தைத்தரும் உமது விசுவரூபத்தைப்பார்த்துச் சர்வப் பிராணிகளும், நானும் வியாகூலத்தையடைகின்றோம். (23)

(வி-ம்.) ஹே பெருந்தோளுடைய விசுவவடிவ பகவன்! உம்முடைய இவ் வற்புதமான விசுவரூபத்தைப்பார்த்துப் பயத்தால் சர்வப் பிராணிகளும் மிக வியாகூலமடைகின்றார்கள், நானுமதை யடைகின்றேன். அஃது எத்தன்மையதாமெனின் மகத்தாம்; அதாவது மிகுந்த பரிமாணத்தையுடையதாம். இன்னும் பல முகங்களையும், பல நேத்திரங்களையும், பல தோள்களையும், பல தொடைகளையும், பல பாதங்களையும், பல வயிறுகளையும், கோரப்பற்களால் மிகப் பயத்தையுடையதுமாகிய தங்களுடைய சொரூபத்தைப் பார்த்தமாத்திரத்தானே என்னோடெல்லாப் பிராணிகளும் பயத்தாற் பீடையடைகின்றார்கள். (23)

(அ-கை.) இப்போது அர்ச்சுனன் அவ்விசுவரூபத்தில் பயப்படக்கூடிய தன்மையை விளக்கிக்கூறுகின்றான்.

சு-ம். நப:ஸ்ப்ருஶம் தீப்தமநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீப்தவிஶாலநேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி ஶமம் ச விஷ்ணோ ॥ (24)

ப-ம். 2 நப: 3 ஸ்ப்ருஶம் தீப்தம் 4 அநேகவர்ணம் 5 வ்யாத்தாநநம் 6 தீப்தவிஶாலநேத்ரம் 8 த்ருஷ்ட்வா 9 ஹி 7 த்வாம் 10 ப்ரவ்யதிதாந்தராத்மா 11 த்ருதிம் 14 ந 15 விந்தாமி 13 ஶமம் 12 ச 1 விஷ்ணோ.

(அ-ம்.) ஹே விஷ்ணுபகவன்! வான்முழுதினும் வியாபகமும் மிகுந்த தேஜசும் பலவர்ணமுமுடையதும், படர்ந்தமுகமும் ஒளிபொருந்தியகன்ற நேத்திரமுமுடைய உம்மைத் தரிசிக்கவே வியாகூலமனத்தனாகிய நான் தைரியத்தையும் சாந்தியையுமடைந்திலேன். (24)

(வி-ம்.) ஹே விஷ்ணுவே! அதாவது, எவ்விடத்தும் வியாபகமாகிய பகவன்! நானும்மைத்தரிசித்துப் பயத்தால் கேவலம் வியாகூலத்தை மாத்திரம் அடைந்திலேன்; மற்றோ, பயத்தால் அத்யந்தம் வியாகூலப்பட்ட மனத்தனாகிய நான் தைரியத்தையுமடைந்திலேன். அதாவது தேகேந்திரிய முதலிய சமுதாயத்தைத் தரிக்குஞ் சாமர்த்தியவடிவ தைரியத்தையுமடைந்திலேன். அங்ஙனமே மனத்தின் ஸ்திரத்தன்மைவடிவச் சமர்த்தையுமடைந்திலேன். தங்களுடைய சொரூபம் சம்பூரண ஆகாசவடிவ அந்தரிக்ஷலோகத்தில் வியாபகமாயிருக்கின்றது. அல்லது ஆகாயம்போல் எல்லாப்பொருள்களையுஞ் சம்பந்தித்திருக்கிறது; தீப்தமானது, அதாவது பெருந்தீயென மிகுந்த தேசசாயிருக்கின்றது; பலவர்ணமானது அதாவது பயப்படுத்தத்தக்க பல ரூபங்களையுடையது, மிக விரிந்த காந்தியானமுகமுடையது, சூரியமண்டலம்போன்ற ஒளியும் விசாலமுமுள்ள நேத்திரங்களையுடையது. இத்தன்மைத்தாய தங்களுடைய சொரூபத்தைத் தரிசிக்கவே பயத்தால் வியாகூலப்பட்ட மனத்தனாகிய நான் தைரியத்தையும் சமர்த்தையுமடைந்திலேன். ஈண்டு ஹே விஷ்ணோ! என்னும் சம்போதனத்தால் அர்ச்சுனன் விசுவரூபமாகிய பகவானுடைய வியாபகத்தைக்கூறினன். இதனுலிப்பொருளைக் காண்பித்தனன்:—விசுவரூபமாகிய தாங்கள் யாண்டும் வியாபகமாதலினால் உம்மோடுகூடிய பயகாரண தேசத்தைவிடுத்து வேறிடத்திற்கேகச் சமர்த்தனலே

ன் பயப்படத்தக்க இவ்விசுவரூபத்தைத் தாங்கள் அந்தர்த்தானஞ் செய் பீர் என்பதாம். (24)

|-கை.) இப்போது கூறிப்போந்த அர்த்தத்தையே மீண்டும் வேறு ய்க்கூறி ஸ்ரீ பகவானுடைய பிரசன்னத்தின்பொருட்டுப் பிரார்த்திக் ர.

சு-ம். 𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 𑌚 𑌤𑍇 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿
𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑍈𑌵 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌾𑌨𑌿 ।
𑌦𑌿𑌶𑍋 𑌨 𑌜𑌾𑌨𑍇 𑌨 𑌲𑌭𑍇 𑌚 𑌶𑌰𑍍𑌮
𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 𑌦𑍇𑌵𑍇𑌶 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸 ॥ (25)

ப-ம். 1 𑌦𑌂𑌷𑍍𑌟𑍍𑌰𑌾𑌕𑌰𑌾𑌲𑌾𑌨𑌿 2 𑌚 4 𑌤𑍇 5 𑌮𑍁𑌖𑌾𑌨𑌿 6 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 7 𑌏𑌵 3 𑌕𑌾𑌲𑌾𑌨𑌲𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌾𑌨𑌿 8 𑌦𑌿𑌶𑌃 9 𑌨 10 𑌜𑌾𑌨𑍇 13 𑌨 14 𑌲𑌭𑍇 11 𑌚 12 𑌶𑌰𑍍𑌮 17 𑌪𑍍𑌰𑌸𑍀𑌦 15 𑌦𑍇𑌵𑍇𑌶 16 𑌜𑌗𑌨𑍍𑌨𑌿𑌵𑌾𑌸.

-ம்) ஹே பகவன்! பயங்கரமான கோரப்பற்களையும் ஊழித்தீபோன்ற தயுந் தரிசிக்கவே நான் திசைகளையுமறிந்திலேன், சுகத்தையுமடைந்திலே , ஹே தேவேச! ஹே ஜகந்நிவாச! என்மேற் கிருபைபாலிப்பீர். (25)

-ம்.) ஹே பகவன்! பற்களின் வரிசையால் மிக விகாரமாயிருத்தலின் த்தக்க பிரளயத்தீபோன்ற முகங்களை அவற்றிற்படாவிடினும் நான் கேவ த்தநிலையே பயவசத்தால் கிழக்கு மேற்கு என்பன முதலிய திசை ணர்ந்திலேன், இதனானே உமது தரிசனத்தாற் சுகத்தையுமடைந்திலேன் ஹே தேவேச! ஜகந்நிவாச! என்மேற் கிருபைபாலிப்பீர்; எதனால் வனுய் உனது தரிசன சன்னிய சுகத்தை அடைவனே ஆண்டுப் பிறவற் லாது தானே பிரகாசிப்பவர் தேவராவர். தனதண்மை மாத்திரத்தால் ற்றையுஞ் செலுத்துவோர் ஈசராவர். தேவரு மீசருமானவர் தேவேச யம்பிரகாசவடிவமாய் எல்லாவற்றையுஞ் செலுத்துபவர் தேவேசராவர். இந்திரன் முதலிய சர்வ தேவர்கட்கு மீசராகுபவர் தேவேசராவார். இவ் த்திற்கும் எவர் நிவாசராவரோ அதாவது அதிட்டானரோ அவர் ஜகந் வர் என்க. (25)

கை.) ஆண்டுப் பூர்வம் பதினோராவது அத்தியாயத்தின் ஏழாவது த்தில் '𑌮𑌮 𑌦𑍇𑌹𑍇 𑌗𑍁𑌡𑌾𑌕𑍇𑌶 𑌯𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌦𑍍 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌮𑌿𑌚𑍍𑌛𑌸𑌿' என்னும் வாக் ல் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு எப்போதும் உனது வெற்றியையும் துரி திகளின் தோல்வியையும் பார்ப்பதெனக்கிட்டமாதலின், அவற்றையும் நீ ப் என்னும் வாக்கியத்தைத் திருவாய் மலர்ந்தருளினர். இப்போது அவற் பார்க்கின்றேன் என்னும் அர்த்தத்தை அர்ச்சுனன் ஐந்து சுலோகங்களால் றுன்.

சு-ம். 𑌅𑌮𑍀 𑌚 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌧𑍃𑌤𑌰𑌾𑌷𑍍𑌟𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌃
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌸𑌹𑍈𑌵𑌾𑌵𑌨𑌿𑌪𑌾𑌲𑌸𑌙𑍍𑌘𑍈𑌃 ।
𑌭𑍀𑌷𑍍𑌮𑍋 𑌦𑍍𑌰𑍋𑌣𑌃 𑌸𑍂𑌤𑌪𑍁𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌸𑍌
𑌸𑌹𑌾𑌸𑍍𑌮𑌦𑍀𑌯𑍈𑌰𑌪𑌿 𑌯𑍋𑌧𑌮𑍁𑌖𑍍𑌯𑍈𑌃 ॥ (26)

வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தம்ஷ்ட்ராகராலாநி பயாநகாநி ।
கேசித்விலக்நா தசநாந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: ॥ (27)

ப-ம். 2 அமீ 1 ச 10 த்வாம் 3 த்ருதராஷ்ட்ரஸ்ய 4 புத்ரா: 5 ஸர்வே 7 ஸஹ 8 ஏவ 6 அவநிபாலஸங்கை: 12 பீஷ்ம: 13 த்ரோண: 16 ஸூதபுத்ர: 14 ததா 15 அஸௌ 20 ஸஹ 17 அஸ்மதீயை: 18 அபி 19 யோதமுக்யை: 24 வக்த்ராணி 23 தே 9 த்வரமாணா: 11 விசந்தி 21 தம்ஷ்ட்ராகராலாநி 22 பயாநகாநி 25 கேசித் 29 விலக்நா: 28 தசநாந்தரேஷு 30 ஸந்த்ருச்யந்தே 26 சூர்ணிதை: 27 உத்தமாங்கை:.

(அ-ம்.) ஹே பகவன்! மற்றும் இத்திருதராஷ்டிரரின் புத்திரர்கள் சர்வ ராஜசமூகங்களோடுகூடவே மிகுவிரைவுடையர்களாய்ப் பரமேசுரராகிய உம்மிடத்திற்பிரவேசிக்கின்றார்கள். அங்ஙனமே, பீஷ்மத்துரோணகர்ணர்களும் எனது சம்பந்திகளாகிய முக்கிய யோத்தாக்களோடு உம்மிடத்திற் பிரவேசிக்கின்றார்கள். ஹே பகவன்! கோரப்பற்களின் வரிசைகளால் பயங்கரமுடைய உமது வாயில் இத்துரியோதனன் முதலிய அனைவர்களும் சீக்கிரமாய்ப் பிரவேசிக்கின்றார்கள். ஆண்டுச் சில யோத்தாக்கள் பொடிப்பொடியான தலையையுடையர்களாய்ப் பல்லிடையிற்றொங்குகின்றவர்களாகக் காணப்படுகின்றார்கள். (26-27)

(வி-ம்.) ஹே பகவன்! இத்திருதராட்டிரரின் புத்திரராகிய துரியோதனன் முதலியவர்கள் சால்யராஜன் முதலிய சர்வ ராஜாக்களோடு மிகவுஞ் சீக்கிரமாய் உம்மிடத்திற் பிரவேசிக்கின்றார்கள். ஹே பகவன்! கேவலம் அவர்கள் மாத்திரமன்று; மற்றோ, யாவர்களும் ஜயிக்க முடியாதவர்களாகச் சம்பாவனை பண்ணும் பீஷ்ம பிதாமகரும், துரோணாசாரியரும் எப்போதுமென்னிடத்தில் துவேஷமுடைய இச்சூத புத்திரனாகிய கர்ணனும், எனது சம்பந்திவடிவ திருட்டத்துய்மன் முதலிய முக்கிய யோத்தாக்களோடு பரமேசுரராகிய உம்மிடத்திற் பிரவேசிக்கின்றார்கள். இப்போது விசுவரூபத்தில் அந்தத் துரியோதனன் முதலியோர்களின் பிரவேசத் துவாரத்தைக்கூறுகின்றான். 'வக்த்ராணி' ஹே பகவன்! கோரதந்தவரிசைகளையுடைய மிகப்பயங்கரமான தங்களுடைய வாயின் கண்ணே இத்துரியோதனன் முதலிய சர்வர்களும் அதிசீக்கிரமாய்ப் புகுகின்றார்கள். அவ்வணம் புகுவோர்க்குள்ளுஞ் சில யோத்தாக்கள் பொடிபட்ட தலையையுடையர்களாய்த் தங்களுடைய பல்லிடையிற்றொங்குவதை நான் பார்க்கின்றேன். சில வியாக்கியானத்தில் இவ்விரண்டு சுலோகங்களின் பதத்தையும் 'அமீ ச த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா: த்வாம் விசந்தி பீஷ்மத்ரோணாதய: தே வக்த்ராணி விசந்தி' என அந்நுவயம்பண்ணி இப்பொருள் பண்ணுகின்றனர்:—மிகப் பாபிகளாகிய திருதராஷ்டிரரின் புத்திரர்களெனும் துரியோதனன் முதலியோர்கள் மூவுலகவடிவ சரீரத்தையுடைய பரமேசுரராகிய தங்களிடத்திற் பிரவேசித்தார்கள். அதாவது, அத்துரியோதனன் முதலியோர்கள் தத்தம் பாவ கருமாநுசாரமாக விசுவரூபவடிவ பகவானது பாயுஸ்தானத்திலிருக்கப்பட்ட நரகத்தையே யடைந்தார்கள். பீஷ்மத்துரோணர் முதலியோர்களோ தங்களுடைய பக்தர்களானதால் தீயந்தணர் தேவு

தைகள் தோன்றும் தங்களுடைய முகத்துக்குள் பிரவேசமானுர்கள்; இவ்வணம் துரியோதனன் முதலியோர்களுடையவும் பீஷ்மன் முதலியோர்களுடையவும் கதியின் விலட்சணத்தன்மையை அறிவுறுத்தற்பொருட்டு இவ்வாறு பதங்களை அந்நுவயித்தல் தக்கதேயாமென்க. (26-27)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் துரியோதனன் முதலிய சர்வ ராஜாக்கட்கும் ஸ்ரீ பகவானுடைய வாயிற் பிரவேசங்கூறப்பட்டது. அப்பிரவேசம் புத்தி பூர்வகமெனவும், அபுத்தி பூர்வகமெனவும் இருவகைத்தாம். உணராது புகுதல் அபுத்தி பூர்வகமாம், உணர்ந்து புகுதல் புத்தி பூர்வகமாம்; அவற்றில் ஸ்ரீ பகவானுடைய திருவாயில் அவ்விராஜாக்கள் அபுத்தி பூர்வகம் பிரவேசமானதிற்கெடுத்துக்காட்டுக் கூறுகின்றான்.

சு-ம். யதா நதீநாம் பஹவோம்புவேகா: ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி।
தயா தவாமீ நரலோகவீரா விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥ (28)

ப-ம். 1 யதா 2 நதீநாம் 3 பஹவ: 4 அம்புவேகா: 6 ஸமுத்ரம் 7 ஏவ 5 அபிமுகா: 8 த்ரவந்தி 9 தயா 12 தவ 10 அமீ 11 நரலோகவீரா: 16 விசந்தி 15 வக்த்ராணி 13 அபித: 14 ஜ்வலந்தி.

(அ-ம்.) ஹே பகவன்! ஆற்றின் மிகு நீர்வேகம் கடலின் அபிமுகமாய்ச் சமுத்திரத்தையேயடைவதுபோல, இம்மானுடலோக வீரர்கள் எப்புறத்தும் விளங்கும் தேவரீரது முகத்தின்கண்ணேயே பிரவேசமாகின்றார்கள்.

(வி-ம்.) ஹே பகவன்! பல வழியாய்ச் செல்லுகின்ற ஸ்ரீ கங்கை, யமுனை முதலிய நதிகளின் மிகுந்த ஜலங்களின் வேகமானது அதாவது, அவ்வேகமுடைய ஜலங்களின் பிரவாகமானது சமுத்திராபிமுகமாய்ச் சமுத்திரத்தின்கண்ணேயே அபுத்தி பூர்வகம் பிரவேசமாகின்றதுபோல, இம்மனுடலோகத்தில் மிகச் சூரவீரர்களாகிய துரியோதனன் முதலியோர்கள் எப்புறத்தும் விளங்கும் தங்களுடைய முகங்களில் அபுத்தி பூர்வகம் பிரவேசமாகின்றார்கள். ஆண்டுச் சில புஸ்தகங்களில் 'அபிதோஜ்வலந்தி' என்னும் வாக்கிய மிருக்குமிடத்து 'அபிவிஜ்வலந்தி' எனப் பாடமுமுளது; அதற்கும் கூறிப்போந்த அர்த்தமென்றேயுணர்க. (28)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவானுடைய முகத்தில் புத்தி பூர்வகம் அவ்விராஜாக்கள் பிரவேசமானதற்கு அர்ச்சுனன் திட்டாந்தங்கூறுகின்றான்.

சு-ம். யதா ப்ரதீப்தம் ஜ்வலநம் பதங்கா விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா:।
ததைவ நாசாய விசந்தி லோகாஸ் தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: ॥ ()

ப-ம். 1 யதா 5 ப்ரதீப்தம் 6 ஜ்வலநம் 2 பதங்கா: 7 விசந்தி 4 நாசாய 3 ஸம்ருத்தவேகா: 8 தயா 9 ஏவ 13 நாசாய 16 விசந்தி 10 லோகா: 14 தவ 11 அபி 15 வக்த்ராணி 12 ஸம்ருத்தவேகா:.

(அ-ம்.) ஹே பகவன்! பதங்கமானது அத்தியந்தம் வேகமுடையதாய்த் தன் நாசப்பொருட்டு ஓங்கியெரியும் எரியின்கண்ணே புகுவதேபோல, இத்துரியோதனாதியரும் மிக வேகமுடையாராய்த் தம்மழிவின்பொருட்டுத் தேவரீரது முகத்தே புகுகின்றனர்.

(வி-ம்.) ஹே பகவன்! பதங்கமானது மிக வேகமுடையதாய்த் தனது மரணத்திற்கு மிக்கொளியாகிய தீயில் புத்தி பூர்வகம் பிரவேசிக்கின்றதுபோல, இந்தத் துரியோதனன் முதலிய சர்வ ராஜாக்களும் மிக வேகத்தர்களாகித் தமது மரணத்தின்பொருட்டுப் பரமேசுரராகிய உம்முடைய முகத்தில் புத்தி பூர்வகம் பிரவேசமாகின்றார்கள் என்பதாம். (29)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் யுத்தவேட்கையுடைய ராஜர்கட்கு ஸ்ரீ பகவானது முகத்திற் பிரவேசப்பிரகாரங் கூறப்பட்டது. இப்போது அக்காலத்தில் ஸ்ரீ பகவானுடைப் பிரவிருத்திப்பிரகாரத்தையும், தீப்திவடிவப் பிரகாசத்தின்பிரவிருத்திப் பிரகாரத்தையு மருச்சுனன் கூறுகின்றான்.

சு-ம். லேலிஹ்யஸே க்ரஸமாந꞉ ஸமந்தாத்
லோகாந் ஸமக்ராந் வத³நைர் ஜ்வலத்³பி⁴꞉ ।
தேஜோபி⁴ராபூர்ய ஜக³த் ஸமக்³ரம்
பா⁴ஸஸ்தவோக்³ரா꞉ ப்ரதபந்தி விஷ்ணோ (30)

ப-ம். 8 லேலிஹ்யஸே 4 க்ரஸமாந꞉ 7 ஸமந்தாத் 3 லோகாந் 2 ஸமக்³ராந் 6 வத³நை꞉ 5 ஜ்வலத்³பி⁴꞉ 11 தேஜோபி⁴꞉ 12 ஆபூர்ய 10 ஜக³த் 9 ஸமக்³ரம் 15 பா⁴ஸ꞉ 13 தவ 14 உக்³ரா꞉ 16 ப்ரதபந்தி 1 விஷ்ணோ.

(அ-ம்) ஹே விஷ்ணுபகவன்! எல்லா வுலகங்களையும் ஒளிபொருந்திய முகங்களால் எடுத்து விழுங்கி நாற்புறத்தும் ஆஸ்வாதிக்கின்றீர்; இவ்வுலகனைத்தையும் உமது பேரொளியால் வியாபித்து உக்கிரமான பிரபையால் மிகத்தபிக்கின்றீர். (30)

(வி-ம்.) ஹே விஷ்ணுவே! அதாவது சர்வவியாபகமாகிய விசுவரூப ஸ்ரீ பகவன்! இவ்வண்ணம் மிக வேகமாய் உமது முகத்திற் பிரவேசித்த துரியோதனாதிகளை விழுங்கி அதாவது, உமது வாயின்வழியாய் உதிரத்தையடையச்செய்து, உமது ஒளி முகங்களால் நாற்புறத்தும் ஆஸ்வாதனம் பண்ணுகின்றீர்; அதாவது மநுடர் மதுரப்பொருளைப்புசித்துத் தமது நாவால் தானு ஒஷ்டங்களை நக்குவதுபோல, நீரும் துரியோதனன் முதலிய ராஜாக்களைப்புசித்து, உமது நாவால் தானு ஒஷ்டங்களை நக்குகின்றீர்; என் செய்தெனின், தீப்திவடிவ ஒளியால் இவ்வுலகனைத்தையும் வியாபித்து. ஹே பகவன்! எக்காரணத்தால் உமதொளியால் இவ்வுலகனைத்தையும் வியாபித்தீரோ, அதனாலே உமது பேரொளியானது மிகத்தேசுடைய தீப்போல மிகத்தாபப்படுத்துகின்றது என்பதாம். (30)

(அ-கை.) இவ்வாறு ஸ்ரீ பகவானுடைய தீப்தியால் வியாகூலப்பட்ட அர்ச்சுனன் இவர் சாட்சாத்பரிபூரணமாகிய பகவான் என்று அவருடைய சொரூபத்தை ஸ்மரியாது ஸ்ரீ பகவானைக்குறித்துக் கூறுகின்றான்.

சு-ம். ஆக்²யாஹி மே கோ ப⁴வாநுக்³ரரூபோ
நமோऽஸ்து தே தே³வவர ப்ரஸீத³ ।
விஜ்ஞாதுமிச்சா²மி ப⁴வந்தமாத்³யம்
ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ (31)

ப-ம். 5 ஆக்²யாஹி 4 மே 3 க꞉ 2 ப⁴வாந் 1 உக்³ரரூப꞉ 8 நம꞉ 9 அஸ்து 7 தே 6 தே³வவர 10 ப்ரஸீத³ 13 விஜ்ஞாதும் 14 இச்சா²மி 12 ப⁴வந்தம் 11 ஆத்³யம் 18 ந 15 ஹி 19 ப்ரஜாநாமி 16 தவ 17 ப்ரவ்ருத்திம்.

(அ-ம்.) ஹே பகவன்! அத்தன்மைய உக்கிரமுடைய தாங்கள் யாரென்பதை எனக்கருள்வீர். ஹே சர்வ சுரசிரேஷ்ட! உமக்கு நான் நமஸ்காரம் பண்ணுகின்றேன் பிரசன்னமாவீர். நான் சர்வ காரணராகிய உம்மை யறிய விரும்புகின்றேன். எக்காரணத்தால் உமது சேஷ்டையை நானுணர்ந்திலனே.

(வி-ம்.) உக்கிரம் 'குரூரம்' ரூபம் 'ஆகாரம்' எவனுக்கோ அவன் உக்கிர ரூபனாவன்; அல்லது, பிரளயகாலத்தில் உலகனைத்தையும் சம்மரிக்குமுருத்திரன் உக்கிரனாவன். அந்த உக்கிரரூபம்போன்ற உருவமுடையவன் உக்கிரரூபமுடையவனாவன். அல்லது, உலகனைத்தையும் பயமுறுத்தும் உருவமுடையவன் உக்கிர ரூபனாவன்; அல்லது, உக்கிரமெனும் குரூரமாகிய கர்மமுடையவன் உக்கிரரூபனாவன். அத்தன்மைய உக்கிரரூபமுடைய தாங்கள் யார்? அதாவது பிரளயகால உருத்திரரோ? அக்கினியோ? அல்லது மகா மிருத்யுவோ? அல்லது காலாந்தகரோ? அல்லது பரமபுருஷரோ? அல்லது இவைகட் கன்னியமா யொருவரோ? இப்போது தங்களுடைய சொரூபத்தை எனக்குத் தயையோடருளிச்செய்வீர். இதனானே நான் உலக குருவெனும் பரமேசுரராகிய தங்கட்கு நமஸ்காரம் பண்ணுகின்றேன். சுர சிரேஷ்ட பகவன்! என்மீது கிருபை செய்வீர்; அதாவது, குரூரத்தன்மை விடுத்துச் சந்தோடராவீர். ஹே பகவன்! சர்வ வுலகத்திற்குங்காரணமாகிய பரமேசுரராகிய தங்களை விசேடமாயறிய விரும்பினேன். அற்றேல், ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய எனது சொரூபமோ எனது சேஷ்டையைக்காண்டலானே யுணர்தற்கேலுமாதலின், 'கொஹவாநு' தாங்கள் யார்? என்னுமுனது வினாப்பொருந்தாது, என்னும் ஸ்ரீ பகவான் சங்கைக்கு அர்ச்சுனன் கூறுகின்றான். 'நஹிவ்ரஜாநாமி உதி' ஹே பகவன்! நான் தங்களுடைய சகாவாயிருப்பினும் தங்களுடைய சேஷ்டாவடிவப் பிரவிருத்தியை யுணர்ந்திலனாதலின், தங்களுடைய சொரூபத்தைத் தாங்களே அருளிச்செய்வீர் என்பதாம். (31)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனனாற் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீ பகவான் தமது சொரூபத்தையும், தமது பிரவிருத்தி எக்காரியத்தின் பொருட்டென்பதையும், மூன்று சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

ஸ்ரீஹமவாநுவாச.

சு-ம். காலொஸ்மி லொகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்தொ
லொகாந்ஸமாஹர்துமிஹ ப்ரவ்ருத்த: ।
ருதெபி த்வா ந ஹவிஷ்யந்தி ஸவெ
யெவஸ்திதா: ப்ரத்யநீகெஷு யொயா: ॥ (32)

ப-ம். 3 காலு: 4 அஸ்மி 1 லொகக்ஷயக்ருத் 2 ப்ரவ்ருத்த: 6 லொகாந் 7 ஸமாஹர்தும் 5 இஹ 8 ப்ரவ்ருத்த: 15 ருதெ 16 அபி 14 த்வா 17 ந 18 ஹவிஷ்யந்தி 13 ஸவெ 10 யெ 12 அவஸ்திதா: 9 ப்ரத்யநீகெஷு 11 யொயா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உலகனைத்தையும் சம்ஹரிப்பதும், அத்தியந்த விருத்தியையடைந்ததுமாகிய காலரூப பரமேசுரனாகிய நான் இப்போது துரியோதனன் முதலியோர்களைப் பக்ஷணஞ் செய்தற்பொருட்டுப் பிரவிருத்திக்தேனாதலின், பிரதிவாதிகளின் சேனைகளுக்குள்ளிருக்கப்பட்ட யோத்தாக்களனைவர்களும் உனது யுத்தரூப வியாபாரமின்றியும் இருக்கமாட்டார்கள். (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இப்பூமியின் பாரமாகிய துட்டப் பிராணிகளை நாசஞ் செய்பவனும், அல்லது பிரளயகாலத்தில் சர்வப்பிராணிகளையும் நாசம் பண்ணுபவனும், மிக விருத்தியையடைந்த கிரியாசத்தி யுபகித காலரூப பரமேசுரனாகிய நான். இவ்வணந்தமது சொரூபத்தைக்கூறியருளித் தமது பிரவிருத்தியை அருளிச் செய்கின்றார், 'ஹொகாஜ' என. ஹே அர்ச்சுன! நானிப்போது எக்காரியத்தின் பொருட்டுப் பிரவிருத்தித்தேனெனின், அதைக்கேள்: பூமிக்குப் பாரமாகிய துரியோதனன் முதலியோர்களைப் பக்ஷணஞ்செய்தற்பொருட்டாம். அற்றேல், எனது பிரவிருத்தியிலாது தாங்களவர்களை எவ்வாறு நாசஞ்செய்வீர்கள்? என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ஐதெவிகூா உதி' ஹே அர்ச்சுன! உன்னை யன்றியும், அதாவது உனது யுத்தரூப வியாபாரமின்றியும் கேவல பரமேசுரனாகிய எனது பிரவிருத்தியினாலேயும் இப்பீஷ்மத்துரோணர் முதலிய யோத்தாக்களையும், இத்துரியோதனன் சேனையிலுள்ள அவர்கட்கயலான மற்றெத்துணை யோத்தாக்களிருக்கின்றார்களோ அவ்வனைவர்களையும் நானே நாசம் பண்ணுவேன். ஆதலின் அவர்களைக்கொல்லும்பொருட்டு உன்னுடைய யுத்தரூபமான வியாபாரம் மிக்க அவசியமன்றாம். உனது வியாபாரமின்றியே துரியோதனன் முதலிய அனைவர்களையும் நாசஞ் செய்வேன் என்க. (32)

(அ-கை.) ஹே பகவன்! எனது யுத்தரூபமான வியாபாரமின்றியே துரியோதனாதிகள் ஒருபோது நாசமடைவரேல், அடிக்கடி என்னை யுத்தத்திற் செலுத்துவ தெக்காரணத்தாலாம்? என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். தஸ்ராகூஉ-ுதிஷ்ட யபொா ஞஹஸ்வ
ஜிகூா ஶதூ-ஸுஹ-ஂகூ ராஜ்யஂ ஸஂரூஸஂ ।
உயெவெதெ நிஹதாঃ வூவ-ுஉெவ
நிமிதூஉாதூஂஹவ ஸவ்யஸா஡ிநு ॥ (33)

ப-ம். 1 தஸ்ராகூ 2 கூஂ 3 உதிஷ்ட 4 யஶঃ 5 ஞஹஸ்வ 7 ஜிகூா 6 ஶதூ-ஸு 10 ஹ-ஂகூ 9 ராஜ்யஂ 8 ஸஂரூஸஂ 15 உயா 16 ஸவ 12 ஸவெத 17 நிஹதாঃ 13வூவ-ுஂ 14 ஸவ 18 நிமிதூஉாதூஂ 19 ஹவ 11 ஸவ்ய ஸா஡ிநு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆதலின் நீ யுத்தத்திற் பிரவிருத்தனாகுதி. யசசையுமடைவாய்; சத்துருக்களை ஜயித்து நிருபத்திரவராச்சியத்தையும் அநுபவி. ஹே வாமகரத்தானும் சரந்தொடுக்குமியல்புளோய்! உனது சத்துருக்களை உனது யுத்தத்திற்கு முன்னரே நானே நாசம்பண்ணிவிடுகின்றேன், நீ கேவலநிமித்த மாத்திரமாவாய். (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எதனால் உன்னுடைய யுத்தரூப வியாபாரமின்றியும் இப்பீஷ்மத்துரோணர் முதலியோரை அவசியமாய் நாசம்பண்ணுவனோ, அதனானே நீ இப்போது யுத்தம்பண்ணுதற்பொருட்டுப் பிரவிருத்தனாகுதி; அந்த யுத்தத்தில் இப்பீஷ்மத்துரோணாதிகளை நாசஞ்செய்து யசசையடைவாய்; அதாவது இந்திரன் முதலிய தேவர்களானும் ஜயிக்கமுடியாத பீஷ்மத்துரோணர் முதலிய அதிரதர்களை இவ்வருச்சுனன் சீக்கிரமாய் ஜயம்பண்ணினன் என்னும் புகழைப் பெறுதி. இத்தன்மையபுகழ் பெரும்புண்ணிய கருமத்தாற் கிடைப்பதாதலின்; அதையடைவான் யுத்தத்தில் முயலுதி; அதாவது உனக்கு இத்தன்மைய பெரும் புகழை யடைவித்தற்பொருட்டே இப்போரினுன்னைச்செலுத்துகின்றேனென்பதாம். உனது போரிலாது பீஷ்மர் முதலியோர்கள் நாசமடையார்களென்ன முயல்விப்ப

தன்ரும். ஹே அர்ச்சுன! இச்சத்துருக்களை நாசஞ்செய்து நீ கேவலம் புகழை மாத்திரமடையாய், மற்றே இவர்களை முயற்சியின்றியே ஜயம்பண்ணிச் சர்வ ஐசுவரியங்களையுமுடைய நிருபத்திரவ இராச்சியத்தையுமநுபவி. அற்றேல், அதிரதியெனும் யோத்தாக்களாகிய இப்பீஷ்மர் முதலியோர்களிருக்குமிடத்துத் துரியோதனன் முதலியோர்களை ஜயம்பண்ணுவது மிகவுமரிதாம் என்னும் அர்ச்சுனன் சங்கையை அகற்றுவான் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றூர். 'உயெ வெதெ உதி' ஹே அர்ச்சுன! உனது யுத்தவடிவ வியாபாரத்திற்கு முன்னரே இப்பீஷ்மத்துரோணாதிகள் காலரூபப் பரமேசுரனுகிய என்னுல் ஆயுளற்றவர்களாக்கப்பட்டிருக்கின்றூர்கள்; கேவலம் உனது புகழின் பொருட்டே அவர்களை நான் இரத்தத்தின் கீழ்க் கிடத்தவில்லை. ஆதலின், ஹே இருகரத்தானும் பாணந்தொடுப்போய்! நீ கேவலம் நிமித்தமாத்திரமாவாய்; அதாவது,இப்பீஷ்மத்துரோணர் முதலியோர்களை அர்ச்சுனனே ஜயித்தனன், என்னும் உலகவார்த்தைக் காசிரயமாகுதி. கருத்திதுவாம்:— இருகரச்சரந்தொடுக்கும் பேராற்றலுடைய உனக்கு இப்பீஷ்மத்துரோணர் முதலியோர்களைச்சயித்தல் அசம்பவமன்று, மற்றே சம்பவமேயாமாதலின்,உனது யுத்தரூப வியாபாரத்தின்பின்னர் இப்பீஷ்மத்துரோணர் முதலியோர்களை இரத்தத்தின் கீழ்ப்போடுவேன், அதைப்பார்த்து உலகனைத்தும் இவ்வருச்சுனனே இப்பீஷ்மத் துரோணர் முதலியோர்களைக் கொன்றுவிட்டான் எனக் கற்பிக்கும். (33)

(அ-கை.) ஹே பகவன்! இத்துரியோதனன் சேனைகளிலுள்ள சர்வப் பிராமணர்களுள் சிரேஷ்டரும், தனுர் வேதாசாரியரும், எங்களுடைய குருவும், திவ்யாத்திரமுடையருமாகிய துரோணுசாரியரும்; தனதிச்சையால் மரிக்கப்பட்டவரும், திவ்யாத்திரமுடையரும், பரசுராமராலும் பராஜயம்பண்ணமுடியாதவருமாகிய பீஷ்மபிதாமகரும்; விருத்த க்ஷத்திரனெனும் எவனுடைய பிதா, எந்த யுத்தவீரன் எனது புத்திரனுடைய சிரசைத் தரையில்விழும்படி செய்வானே அந்த யுத்த வீரனது சிரசும் அப்போதே தரையில் விழுந்துவிடும் எனச் சங்கற்பித்துத் தவம் பண்ணினானே, எவன் மகாதேவ பக்தனுவனே, திவ்யாத்திரமுடையனே, அத்தன்மைய ஜயத்திரதராஜனும்; இரவிக்கொப்பானவனும், சூரியனை யாராதித்துப்பெற்ற திவ்யாத்திரமுடையனும், ஒருவனைக் கெடுக்கப்பட்டதும் வியர்த்தமாக்கற்கசக்கியமானதுமாகிய இந்திரனுற்கொடுக்கப்பட்ட வேலாயுதத்தையுடையவனுமாகிய கர்ணனும்; இவர்கள் முதற்கொண்டு ஏனைய கிருபாசாரியர், அசுவத்தாமா, பூரி சிரவர்கள் முதலிய மகாப் பிரபாவமுடைய யுத்தவீரர்களாகிய அனைவர்களும் எவ்வாற்றானுஞ் சயித்தற்கரியர்களேயாவர்கள்; அத்தன்மையர்களிருக்குமிடத்து நான் துரியோதனன் முதலிய சத்துருக்களைவென்று நிருபத்திரவ ராஜ்யத்தை அநுபவித்தலும், யசசையடைதலும் யாங்ஙனம்? என்னும் அர்ச்சுனன் சங்கையை நீக்குவான் ஸ்ரீ பகவான் அச்சங்கையின் விஷய பூதர்களாகிய யுத்தம் பண்ணுபவர்களைத் தத்தம் நாமத்தாற் கூறி அருளிச்செய்கின்றூர்.

சு-ம். ஜெ_ராணஞ ஹீஷ்ஞ ஜயஉ_ரயஞ
கணஂ தயாநூாநவி யொயவீராநூ ।
உயா ஹதாஂஹ்ஸ்ஂ ஜஹி ஊ வழூயிஷா
யாுயூஸ் ஜெதாஸி ரணெ ஸவநூாநூ ॥ (34)

ப-ம். 1 ஜெ_ராணஂ 2 அ 3 ஹீஷஂ 4 அ 5 ஜயஉ_ரயஂ 6 அ 7 கணஂ 8 தயா 9 சுநூாநூ 10 சுவி 11 யொயவீராநூ 12 உயா 13 ஹதாநூ 14 ஸ்வஂ 15 ஜஹி 16 ஊ 17 வழூயிஷாஃ 18 யாுயூஸ் 21 ஜெதாஸி 19 ரணெ 20 ஸவநூாநூ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! துரோணசாரியரையும், பீஷ்ம பிதாமகரையும், ஜயத்திரதனையும், கர்ணனையும், இதற்கன்னியமான யுத்தவீரர்களையும் பரமேசுரனாகிய நானே ஹதம்பண்ணிவைத்திருக்கின்றேன்; அவர்களை நீ அதஞ்செய்வாய், வியாகூலமடையாதே: யுத்தம்பண்ணுதி; இப்போரில் மாற்றார்களை அவசியம் ஜெயிப்பாய். (34)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! துரோணசாரியர் முதலியோர்களையும் ஏனைய யுத்த வீரர்களையும் எவ்வாறு ஜயிப்பேன் என்னு முனது சங்கைக்கு விஷயர்களு மாகிய அனைவர்களையும் காலரூபப் பரமேசுரனாகிய நான் உனது யுத்தத்திற்கு முன்னரே ஹதம்பண்ணிவிட்டேன், அத்தன்மைத்தான அவர்களை நீ இப்போது ஹனனம் பண்ணுதி. முன் ஹதம்பண்ணப்பட்டவர்களை ஹதம்பண்ணுவதில் உனக்குப் பரிசிரமமாவதென்கொல்? அதிலுனக்கொரு துன்பமும் வாராததலின் வியாகூலப்படாதே; அதாவது இவர்களை எவ்வாறு ஜயிப்பேம் என்னும் பயத்தா லுண்டாம் பீடைவடிவ வியாகூலத்தை யடையாதே. அர்ச்சுன! அப்பீதியை விடுத்துப் போர்புரிதி. இவ்வணம் பயத்தைவிடுத்து யுத்தம் புரிவையேல், இந்த ரணத்தின்கண்ணே கொஞ்சநேரத்தில் இத்துரியோதனன் முதலிய மாற்றார்களை ஜயிப்பாய். கருத்திதுவாம்:—துரியோதனன் சேனைகளிலுள்ள யுத்தவீரர்களில் யாராகினுமொருவர் உன்னைப் பராஜயம்பண்ணி விடுவார்களென்னுஞ் சங்கையை யொழிப்பாய். யாராகினுமொரு யோத்தாவைக் கொல்வனேல் பாபம் பற்றும் என்னும் சங்கையையும் ஒழிப்பாய். (34)

(அ-கை.) ஆண்டுத் துரியோதனன் வெற்றி பெறுவனெனும் ஆசைக்கு விஷயமாகிய துரோணசாரியர் முதலிய நான்கு யோத்தாக்களையுங் கொன்றதின் பின்னர், நிராதாரமான துரியோதனனும் கொல்லப்படுவான் என விசாரம்பண்ணி இத்திருதராஷ்டிரன் தனது வெற்றி வேட்கையைவிடுத்து இப்பாண்டவர்களோடு மித்திரபாவத்தையடைந்து யுத்த நீங்குமேல், பாண்டவர்கட்கும் கௌரவர்கட்கும் சாந்தியுண்டாகும் என்னும் அபிப்பிராயத்தையுடைய சஞ்சயர், பின்னர் என்ன விருத்தாந்தமாயிற்று எனத்திருதராஷ்டிரனுக்கறியும் வேட்கையுண்டாகக் கூறுகின்றார்.

ஸஞ்ஜய உவாச.

சு-ம். ஏதச்ச்ருத்வா வசநம் கேஶவஸ்ய க்ருதாஞ்ஜலிர்வேபமாந꞉ கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம் ஸகத்கதம் பீதபீத꞉ ப்ரணம்ய ॥ ()

ப-ம். 2 ஏதத் 4 ச்ருத்வா 3 வசநம் 1 கேஶவஸ்ய 5 க்ருதாஞ்ஜலி꞉ 6 வேபமாந꞉ 8 கிரீடீ 10 நமஸ்க்ருத்வா 13 பூய꞉ 14 ஏவ 15 ஆஹ 9 க்ருஷ்ணம் 12 ஸகத்கதம் 7 பீதபீத꞉ 11 ப்ரணம்ய.

(அ-ம்.) ஹே திருதராட்டிர! கூறிப்போந்த ஸ்ரீ பகவானுடைய திருவாக்கைக்கேட்டு இருகை கூப்பியதோடு, தேக கம்பனத்தையும் பயத்தையுமடைந்த அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நமஸ்கரித்து மிகுந்த நம்ரபாவத்தனாய்த் தழு தழுத்த வாக்கோடுங் கூறுகின்றான். (35)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிர! கூறிப்போந்த ஸ்ரீ பகவானுடைய வாக்கியத்தைக்கேட்டுக் கிரீடியாகிய அர்ச்சுனன், அதாவது இந்திரனாற் கொடுக்கப்பட்ட கிரீடியெனும் பரமவீரரூபத்தாற் பிரசித்தனாகிய அர்ச்சுனன் நடுக்கமுடையனாய்; அதாவது பரமாச்சரிய தரிசனத்தாற் சம்பிரமத்தாற் கம்பனமடைந்த அர்ச்சுனன்

ஸ்ரீ கிருஷ்ணபகவானை நமஸ்கரித்துத் தழுதழுப்புடன் கூறுகின்றான். ஆண்டுப் பயத்தாலேனும் சந்தோடத்தாலேனும் வெளிப்பட்ட கண்ணீரால் நேத்திரம் பூரணமாய், ஐயினான்மிடறடைப்புண்டலால் வாக்கின் மந்தம், நடுக்கமுதலிய விகாரங்களையுடையனாய், மிகப்பயந்தவனாய் ஸ்ரீ பகவானைமறித்து மறித்தும் வணங்கி; அதாவது மிகத்தாழ்ந்தவனாய் மறித்தும் மேற்கூறும் வாக்கியத்தைக்கூறினன் என்பதாம். ஈண்டு, ஒரு வியாக்கியானத்தில் ‘𑌸𑌵𑌾𑌹’ என்பதை ‘𑌸𑌵 𑌆𑌹’ எனப் பதத்தைப்பிரித்து ‘𑌆𑌹’ என்னும் பதத்தைப் பிரசித்தவாசகமாகிய அவ்வியயபதமெனக்கொண்டனர். என்னை, ‘𑌆𑌹’ எனப் பதத்தைப்பிரித்து வசனவடிவக் கிரியாவாசகபதமெனக் கொள்ளிலோ, மறித்தும் ‘𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚’ என மேற்கூறும் வாக்கியம் புனருத்தியாம். ஆதலின், ‘𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯𑌾𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚’ எனப்பதத்தை அந்நுவயஞ்செய்யவேண்டும். ‘𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌆𑌹’ எனப் பதத்தை அந்நுவயப்பண்ணற்க என்பதாம். (35)

(அ-கை.) பதினொரு சுலோகங்களால் அர்ச்சுனன் ஸ்ரீ பகவானுக்கவ்வாக்கியத்தைக் கூறுகின்றான்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

சு-ம். 𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌤𑌵 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌾<br>
𑌜𑌗𑌤𑍍𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑍍𑌯𑌨𑍁𑌰𑌜𑍍𑌯𑌤𑍇 𑌚 ।<br>
𑌰𑌕𑍍𑌷𑌾𑌂𑌸𑌿 𑌭𑍀𑌤𑌾𑌨𑌿 𑌦𑌿𑌶𑍋 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿<br>
𑌸𑌰𑍍𑌵𑍇 𑌨𑌮𑌸𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌚 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃 ॥ (36)

ப-ம். 16 𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 1 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 2 𑌤𑌵 3 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌾 4 𑌜𑌗𑌤𑍍 5 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌯𑌤𑌿 7 𑌅𑌨𑍁𑌰𑌜𑍍𑌯𑌤𑍇 6 𑌚 8 𑌰𑌕𑍍𑌷𑌾𑌂𑌸𑌿 9 𑌭𑍀𑌤𑌾𑌨𑌿 10 𑌦𑌿𑌶𑌃 11 𑌦𑍍𑌰𑌵𑌨𑍍𑌤𑌿 13 𑌸𑌰𑍍𑌵𑍇 15 𑌨𑌮𑌸𑍍𑌯𑌂𑌤𑌿 12 𑌚 14 𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑌙𑍍𑌘𑌾𑌃.

(அ-ம்.) ஹே இருஷீகேச! உனது பிரகீர்த்தியால் இவ்வுலகனைத்தும் சந்தோடத்தை யடைகின்றன. அங்ஙனமே அநுராகத்தையும் அடைகின்றன. இராக்கதர்கள் பயமடைந்து எல்லாத் திக்குகளினும் ஓடினர். சர்வ சித்தகணங்களும் நமஸ்கரிக்கின்றனர் என்னும் இவ்வனைத்தும் பொருத்தமேயாம். (36)

(வி-ம்.) ஹே இருஷீகேச! அதாவது சர்வேந்திரியப்பிரவர்த்தகப் பரமேசுரனாகிய நீ அத்தியந்த அற்புதப்பிரபாவமுடைய பக்தவத்சலனாதலின், உனது பிரகீர்த்தியால் அதாவது, உனது நிரதிசய உத்கிருஷ்டத்தின் கீர்த்தனத்தாலும், சிரவணத்தாலும் கேவலம் நான் மாத்திரமே சந்தோஷத்தையடைவதில்லை; மற்றோ, ராக்ஷஸர்கட்கு விரோதியாகிய சேதனமாத்திரமாகிய உலகனைத்தும் தங்களுடைய பிரகீர்த்தியால் பேரானந்தத்தையடைகின்றன என்பதூஉம் உரித்தானதேயாம். அங்ஙனமே, அத்தன்மைய உனது பிரகீர்த்தியால் இவ்வுலகனைத்தும் பரமேசுரனாகிய,உனது விஷயக அநுராகத்தையடைவதும், சர்வ ராக்ஷஸர்களும் பீதியுற்றுச் சர்வ திக்குகளிலும் ஓட்டமாய் ஓடிவிட்டதும், கபிலர் முதலிய சித்தகணங்கள் உன்னை யன்போடு நமஸ்கரிக்கின்றனவென்பதூஉம் உரித்தானதேயாம். ஒரு வியாக்கியானத்திலோ ‘𑌸𑍍𑌥𑌾𑌨𑍇𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶’ என்னு மிச்சுலோகத்திற்கு இவ்வாறு பொருள்பண்ணுகின்றனர்:—ஹே இருஷீகேச,

[illegible] 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 ।

(பொ-ள்.) பூமி பாரமாகிய துஷ்ட ஜனங்களைச் சம்பரிக்கற்பொருட்டுக் கால ரூப பரமேசுரனாகிய நான் பிரவிருத்தித்தேன்; என உன்னால் முன்னர்க்கூறி யருளப்பட்டது. உன்னுடைய அந்தப் பிரகிருஷ்டவாக்கியவடிவப் பிரகீர்த்தியைச் சிரவணம்பண்ணுஞ் சாதுக்களாகிய வுலகம் பரமசந்தோடத்தையடைகின்றதென்பதும், அதாவது, சாதுக்களை யிரட்சிப்பான் பரமேசுரன் சர்வ துஷ்டர்களையும் சம்மரித்தலால் அச்சாதுக்கட்குப் பரமசந்தோடப்பிராப்தியாமெனல் உரியதே யாம். உன்னுடைய பிரகீர்த்தியைக்கேட்டு அச்சாதுக்கள் பக்தவத்சலனும், சர்வ பூதங்கட்கும் சுகிருத்ரூபமுமாகிய பராத்மதேவனிடத்தில் அநுராகத்தையடைகின்றார்கள் என்பதும், அதாவது, சர்வ வுலகங்களின் உபத்திரவத்தை நீக்குதற் பொருட்டு முயற்சியையுடைத்தாய்ப், பரமகிருபாளுரூபனுமாகிய பரமேசுரனாகிய உன்னிடத்தில் அவர்கட்கநுராகமுண்டாதல் உசிதமேயாம். உனது பிரகீர்த்தியைக்கேட்டுச் சர்வ ராக்ஷஸர்களும் பயமுற்றுக் கிழக்கு முதலிய திசைகளின் மூலைகளில் ஓட்டமாய் ஓடிவிட்டார்களென்பதும் உசிதமேயாம். உனது கீர்த்தியைக் கேட்டு உலகனைத்திற்கு மின்பத்தைச்செய்யும் சித்தர்கணங்களனைத்தும் உனக்கு நமஸ்காரம்பண்ணுகின்றதென்பதும் உசிதமேயாம். ஈண்டுச் சித்தர் எனுஞ் சத்தம் தேவஜாதிமாத்திரத்திற்குபலக்கணமாம்; அதாவது தேவ, ரிஷி, சித்த, கந்தருவ, சாரண என்பது முதலிய சர்வ தேவத்தன்மைச் சாதியையுடையவர்கள். ஹே சுவாமின்! நீ துஷ்டர்களைச் சம்மரித்தற்பொருட்டுக் கூறிய உறுதிமொழியை அவசியமாய்ப் பூரணஞ்செய்யவேண்டும்: என்னும் பிரார்த்தனை பூர்வகம் உனக்கு நமஸ்காரம் பண்ணுகின்றார்களென்பதும் உரித்தானதேயாமென்க. ஈண்டு, 'ஸ்தாநே ஹ்ருஷீகேஶ' என்னுஞ் சுலோகம் 'ரக்ஷோக்ந' மெனு மந்திர ரூபத்தால் மந்திரநூலிற் பிரசித்தமாம். எம்மந்திரத்தை யநுட்டித்ததால் துஷ்ட ராக்ஷசர்கள் நாசமடைவர்களோ அம்மந்திரம் 'ரக்ஷோக்ந' மந்திரமெனப்படும் என்பதாம். (36)

(அ-கை.) ஈண்டுப் பூர்வ சுலோகத்தில் அர்ச்சுனன் ஸ்ரீ பகவானிடத்து உலகனைத்தின் சந்தோட விஷயத்தன்மையையும், அநுராகவிஷயத்தன்மையையும், நமஸ்காரியத்தன்மையையுங் கூறினன். இப்போது அதைச் சித்தம்பண்ணுதற்பொருட்டு ஹேதுவைக் கூறுகின்றான்.

சு-ம். கஸ்மாச்ச தே ந நமேரந் மஹாத்மந் கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।
அநந்த தேவேஶ ஜகந்நிவாஸ த்வமக்ஷரம் ஸதஸத்தத்பரம் யத் ॥ (37)

ப-ம். 10 கஸ்மாத் 13 ச 9 தே 11 ந 12 நமேரந் 1 மஹாத்மந் 7 கரீயஸே 5 ப்ரஹ்மண: 6 அபி 8 ஆதிகர்த்ரே 2 அநந்த 3 தேவேஶ 4 ஜகந்நிவாஸ 14 த்வம் 19 அக்ஷரம் 15 ஸத் 16 அஸத் 17 தத்பரம் 18 யத்.

(அ-ம்.) ஹே மகாத்மன்! அனந்த! தேவேச! ஜகன்னிவாச! பிரமனுக்குங் குருரூபமும் ஜனகரூபமுமாகிய தங்கட்கு ஏன் நமஸ்காரஞ்செய்யார்கள்? மற்றோ, அவசியமே செய்வார்கள். ஹே பகவன்! சத்தசத்து ரூபமும், அவைகட்குப் பரமுமாகிய அக்ஷரப்பிரஹ்மமும் நீரே யாகின்றீர். (37)

(வி-ம்.) ஹே மகாத்மன்! அதாவது, ஹே பரமோதாரமனமுடையோய்! ஹே அனந்த! அதாவது, மூவகைப்பரிச்சேதமிலாதோய். ஹே தேவேச! அதாவது, இரணியகருப்பன் முதலிய சர்வ தேவதைகட்கும் நியந்தாவே! ஹே ஜகந்நிவாச! அதாவது, ஹே சர்வஜகத்திற்கு மாதாரரூப! உமக்குச் சித்தகணங்களனைத்தும் தேவதைகளும் ஏன் நமஸ்காரம்செய்யார்கள்? மற்றோ, அவ்வனைவர்களும்

தங்களை வணங்கவேண்டுவது உசிதமேயாம். உலகனைத்திற்குங் குருவாகிய பிரஹ்மாவிற்குங் குருரூபமும், இவ்வுலகனைத்திற்குங் காரணமாகிய பிரஹ்மாவிற்குங் காரணரூபமுமாகிய தங்கட்கு அவ்வனைவர்களும் நமஸ்காரம்பண்ணவேண்டுவது உசிதமேயாம். ஈண்டு, 'கஸ்மாத்' என்னும் வாக்கியத்தி னீற்றிலுள்ள சகாரத்தால் அர்ச்சுனன் இப்பொருளைக்குறிப்பித்தனன்:—பிரஹ்மன் முதலிய தேவதைகளின் நியந்தாத்தன்மை, உபதேசகத்தன்மை, ஜனகத்தன்மை என்பது முதலிய ஹேதுக்களுள் எவ்வோரேதுவும் தங்களிடத்து அவ்வனைவர்களும் நமஸ்காரம் பண்ணத்தக்க தன்மைக்குக்காரணமாயின், மகாத்துமாத்தன்மை, அனந்தத் தன்மை, ஜகந்நிவாசத்தன்மை என்பன முதலிய பல கல்யாணகுணங்களோடு கூடிய ஏதுக்கள் தங்களிடத்து நமஸ்காரம்பண்ணத்தக்க தன்மைக்குக்காரணமா மென்பதில் வியப்பென்னை? தாங்கள் சத்தசத்துவடிவமானவர். அவற்றில் 'இருக்கிறது' என்னும் விதிமுகப்பிரதீதியால் எப்பொருள் தோற்றப்படுமோ அது சத் தாம் 'இல்லை' என்னும் நிஷேதமுகப்பிரதீதியால் எப்பொருள் தோற்றப்படுமோ அது அசத்தாம். அல்லது, வியத்தம் சத்தாம். அவ்வியத்தம் அசத்தாம். அந்தச் சத்தசத்துக்களினும் வேறாய்ச் சர்வத்திற்கு மூலகாரணமாகிய அக்ஷரப்பிரஹ்மமும் தாங்களே; தங்கட்கயலாய் ஒரு பொருளுமின்றாம். 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இவ்வுலகனைத்தும் பிரஹ்மசொரூபமே எனச்சுருதியுங் கூறுகின்றது. ஹே பகவன்! கூறிப்போந்த இச்சர்வ ஹேதுக்களால் சித்தர் முதலிய யாவர்களும் பரமேசுரராகிய உம்மைப்பணிகின்றார்கள். மிக்கானந்தத்தையும் அநுராகத்தையுமடைகின்றார்கள் என்பதிலோர் ஆச்சரியமுமின்றாம். (37)

(அ-கை,) இப்போது மிகுந்த பக்தியின் வேகத்தால் அர்ச்சுனன் மறித்தும் ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் துதிக்கின்றான்.

சு-ம். த்வமாதிதேவ: புருஷ: புராண ஸ்த்வமஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதானம் ।
வேத்தாஸி வேத்யஞ்ச பரஞ்ச தாம த்வயா ததம் விஶ்வமனந்தரூப ॥ (38)

ப-ம். 2 த்வம் 3 ஆதிதேவ: 4 புருஷ: 5 புராண: 6 த்வம் 7 அஸ்ய 8 விஶ்வஸ்ய 9 பரம் 10 நிதானம் 11 வேத்தா 12 அஸி 14 வேத்யம் 13 ச 16 பரம் 15 ச 17 தாம 18 த்வயா 20 ததம் 19 விஶ்வம் 1 அனந்தரூப.

(அ-ம்.) ஹே அனந்தரூப! நீயே ஆதிதேவன், புருஷன், புராணன், நீயே இவ்வுலகிற்குப் பரமநிதானம், முற்றுமறிபவன், சர்வதிருசியரூபம், பரமதாமரூபம்; நீயே இவ்வுலகனைத்தையும் வியாபித்திருக்கின்றனை. (38)

(வி-ம்.) ஹே அனந்தரூப! அதாவது மூவகைப் பரிச்சேதமிலாதோய்! இவ்வுலகனைத்தின் உற்பத்தி காரணனாதலின் நீயே ஆதிதேவனாவாய். எவ்விடத்தும் அஸ்திபாதிப்பிரிய ரூபங்களாற் பூரணனாதலின் நீயே புருஷன்; அல்லது, புரிரூப சர்வதேகத்தின்கண்ணும் தூங்குபவனாதலின் நீயே புருஷன். நீயே புராணன்; அதாவது அநாதி: அல்லது, இவ்வாக்கைகள் கெடினும் நீ கேடுறாதிருத்தலின் புராணனாவாய். நீயே உலகனைத்திற்கும் பரமநிதானன். அதாவது, இவ்வுலகனைத்து மொடுங்கற்கிடமாவாய். ஈண்டு 'ஆதிதேவ: பரம் நிதானம்' என்னுமிரண்டு பதங்களால் அர்ச்சுனன் பகவானிடத்து இவ்வுலகனைத்தின் உற்பத்தி காரணத்தன்மையையும், இலயத்திற்குத்தானத்தன்மையையுங்கூறினன். இதனால் பரமேசுரனே உலகனைத்திற்கு முபாதானகாரணன் எனக் கூறப்பட்டதாம். என்னை, எதிற்காரியந்தோற்றி யொடுங்குகின்றதோ அது உபாதானகாரணமேயாம்; மண்ணிற்கடந்தோற்றி யொடுங்குகின்றதாதலின் அம்மண் அக்கடத்திற்குபாதானமே

யாதல்போலவாம். இவ்வாறு பரமேசுரனிடத்து உலகனைத்தின் உபாதான காரணத்தன்மையைக்கூறி, இப்போது சர்வக்ஞத்தன்மையாகிய ஹேதுவால் சாங்கியநூலார் கற்பித்த ஜடப்பிரதானரூபகாரணத்தை விலக்கி, அப்பரமேசுரனிடத்து உலகத்திற்கு நிமித்தகாரணத்தன்மையையுங் கூறுகின்றான். 'வெத்தாஸி ஐதி' ஹே பகவன்! சர்வக்ஞனாதால் நீயே இவ்வுலகனைத்தையு மறிபவனாவாய். அதாவது, நீயே இவ்வுலகனைத்திற்குங் கருத்தாவடிவ நிமித்தகாரணனாவாய். ஈண்டு, இவ்வுலகனைத்தையும் பரமேசுரனுக்கயலாகக்கொள்ளினோ, துவிதப்பிராப்தியாம். அதை நீக்குவான் அர்ச்சுனன் கூறுகின்றான் 'வேத்தியம்' என:—ஹே பகவன்! திருசியப்பிரபஞ்ச முழுதும் நீயே யாவாய்; அதாவது, ஞானசொரூப பரமேசுரனாகிய உன்னிடத்து இச்சடரூபத் திருசியப்பிரபஞ்சங்கட்கு ஒரு சம்பந்தமும் உண்மையின்றாமாதலின், இஃதனைத்தும் உன்னிடத்திற் கற்பிதமேயாம், கற்பிதப்பொருள் அதிட்டானத்தினும் வேறன்றாம், கற்பிதமானபாம்பு முதலியவைகள் கயிறாகிய அதிட்டானத்தினும் வேறாகாததுபோலவாம். ஆதலின், துவிதபாவப்பிராப்திவாராதென்க. இதனானே நீ பரமதாமனாவாய்; அதாவது, சச்சிதானந்தகனமும், காரியத்தோடு அஞ்ஞானமற்றதுமாகிய வியாபக விஷ்ணுவின் பரமபதமும் நீயேயாவாய். ஹே பகவன்! இயல்பாய்ச் சத்தாஸ்பூர்த்தியின்றிய இவ்வுலகத்தை திரிகாலத்தில் மாயிகசம்பந்தத்தால் நீ சத்தாஸ்புரணரூபகாரணத்தால் வியாபித்தனை, கயிறாகிய வதிட்டானம் தனது இருவெனும் ரூபத்தால் கற்பிதமான பாம்பு, தடி முதலியவைகளை வியாபித்திருப்பதுபோலப் பரமேசுரனாகிய நீயும் உனது அஸ்திபாதிப்பிரியரூபத்தால் இவ்வுலகனைத்தையும் வியாபித்திருக்கின்றாய். (38)

(அ-கை.) இப்போது அர்ச்சுனன் ஸ்ரீ பகவானைச் சர்வதேவதாரூபத்தாற் றுதிக்கின்றான்.

சு-ம். 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌯𑌮𑍋𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍁𑌣𑌃 𑌶𑌶𑌾𑌂𑌕𑌃
𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌶𑍍𑌚 ।
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑍁 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌵𑌃
𑌪𑍁𑌨𑌶𑍍𑌚 𑌭𑍂𑌯𑍋𑌪𑌿 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 ॥ (39)

ப-ம். 1 𑌵𑌾𑌯𑍁𑌃 2 𑌯𑌮𑌃 3 𑌅𑌗𑍍𑌨𑌿𑌃 4 𑌵𑌰𑍁𑌣𑌃 5 𑌶𑌶𑌾𑌂𑌕𑌃 6 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 9 𑌤𑍍𑌵𑌂 8 𑌪𑍍𑌰𑌪𑌿𑌤𑌾𑌮𑌹𑌃 7 𑌚 12 𑌨𑌮𑌃 13 𑌨𑌮𑌃 10 𑌤𑍇 14 𑌅𑌸𑍍𑌤𑍁 11 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌵𑌃 17 𑌪𑍁𑌨𑌃 15 𑌚 19 𑌭𑍂𑌯𑌃 18 𑌅𑌪𑌿 20 𑌨𑌮𑌃 21 𑌨𑌮𑌃 16 𑌤𑍇.

(அ-ம்.) ஹே பகவன்! வாயு, எமன், அக்கினி, வருணன், சந்திரன், பிரஜாபதி, பிரபிதாமகர் என்பவாய சர்வ தேவதாரூபமும் பரமேசுரனாகிய நீயேயாகின்றாய்; ஆதலின், உனக்கு நான் பல்லாயிரந்தரம் நமஸ்காரம்பண்ணுகின்றேன், நமஸ்காரம்பண்ணுகின்றேன். உனக்கு மறித்தும் அடிக்கடி நமஸ்காரம் நமஸ்காரம். (39)

(வி-ம்.) ஹே பகவன்! பரமேசுரனாகிய நீயே வாயுரூபமும், யமரூபமும், அக்கினிரூபமும், வருணரூபமும், சந்திரரூபமுமாவாய். ஈண்டு, '𑌶𑌶𑌾𑌂𑌕𑌃' என்னுஞ் சத்தம் சூரியன் முதலிய தேவதைகட்கும் உபலக்ஷகமாம். அதாவது, பரமேசுரனாகிய நீயே சூரியன் முதலிய சர்வ தேவதாரூபமும், பிரஜாபதிரூபமுமாவாய். ஈண்டுப் பிரஜாபதி என்னுஞ் சத்தத்தால் விராட்டையேனும், இரணியகருப்பனையேனும், தக்ஷன் முதலியோர்களையேனுங் கொள்ளவேண்டும். நீயே

பிரபிதாமகரூபமுமாவாய். அதாவது, அவ்விரணியகருப்பனுக்கும் பிதாரூபகாரணைப் பிரஹ்மமும் நீயேயாகின்றாய். ஹே பகவன்! எக்காரணத்தால் சர்வ தேவதா வடிவமானதால் பரமேசுரனாகிய நீ சர்வப்பிராணிகளாலும் நமஸ்கரித்தற்குரியனாகின்றனையோ! அதனாலேயே, மிகவும் அனுக்ஞனாகிய நான் உன்னைப் பல்லாயிரந்தரம் நமஸ்கரிக்கின்றேன்: நமஸ்கரிக்கின்றேன். மறித்து முனக்கு நமஸ்காரம்: நமஸ்காரம். ஈண்டு, மறித்து மறித்தும் நமஸ்காரத்தின் ஆவிருத்தியால் அர்ச்சுனன் பக்திசிரத்தாபூர்வகம் பகவானுடைய நமஸ்காரத்தில் போதும் எனும் புத்தியின்மையைக்குறித்தனன்; அதாவது, பரமேசுரனாகிய உனக்குச் சிரத்தை பக்திபூர்வகம் மறித்து மறித்தும் நமஸ்காரம் பண்ணுவதில் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை என்பதாம். (39)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். நம: புரஸ்தாத³த² ப்ருஷ்ட²தஸ்தே
நமோ(அ)ஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அனந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்னோஷி ததோ(அ)ஸி ஸர்வ: ॥ (40)

ப-ம். 4 நம: 3 புரஸ்தாத் 6 அத² 7 ப்ருஷ்ட²த: 2 தே 8 நம: 5 அஸ்து 9 தே 10 ஸர்வத: 11 ஏவ 1 ஸர்வ 13 அனந்தவீர்யாமிதவிக்ரம: 12 த்வம் 14 ஸர்வம் 15 ஸமாப்னோஷி 16 தத: 18 அஸி 17 ஸர்வ:.

(அ-ம்.) ஹே சர்வ! உனது முன்பக்கத்தும் பின்பக்கத்தும் நான் நமஸ்கரிக்கின்றேன். உன்னை எல்லாத்திக்குகளிலுமே நமஸ்கரிக்கின்றேன். பரமேசுரனாகிய நீ அனந்தவீரிய அமித விக்கிரமமுடையனும், இவ்வுலகனைத்தையும் வியாபித்தவனுமாதலின் நீ சர்வனெனப்படுகின்றாய். (40)

(வி-ம்.) ஹே சர்வ! அதாவது சர்வான்மகரூப பகவன்! நான் உனக்கு முன்பக்கத்தும் பின்பக்கத்தும் எத்திக்குகளிலும் நமஸ்காரம் பண்ணுகின்றேன். ஈண்டு, சர்வான்மரூப வியாபக பரமேசுரனுக்கு முற்பக்கமுதலியவைகள் பொருந்தா; பரிச்சின்னப் பொருட்கேயாம்; அங்ஙனமாயினும் நான் அவைகளைக் கற்பித்துக்கொண்டு நமஸ்கரிக்கின்றேன், உண்மையிலின்றாம். ஒரு வியாக்கியானத்திலோ 'புரஸ்தாத்' என்னும் பதத்திற்குக் கருமத்தின்றொடக்கத்திலும், பிருஷ்டத: என்னும் பதத்திற்குக் கருமத்தினீற்றிலும், சர்வத: என்னும் பதத்திற்குக் கருமத்திற்கிடையிலும் நான் உனக்கு நமஸ்காரம் பண்ணுகின்றேன் எனப் பொருள் பண்ணப்பட்டிருக்கிறது; அதாவது கருமந்தொடங்கும்போதும் இடையிலும் ஈற்றிலும் உன்னை நமஸ்கரிக்கின்றேன் என்பதாம். இவ்வியாக்கியானம் சர்வான்மரூபப் பரமேசுரனுக்கு முற்பக்க முதலிய கற்பனைகளைச் செய்யாதொழிந்ததென்க. ஹே பகவன்! அனந்தவீரிய அமித விக்கிரமமாவாய்; ஆண்டு அனந்த வீரியத்தையும் அமிதவிக்கிரமத்தையும் உடையவன் அனந்த வீரியாதி விக்கிரமனாவன். அவற்றில் தேகத்தினாற்றல் வீரியமாம்: சிக்ஷா நூலின் பிரயோகத்தின் குசலத்தன்மை விக்கிரமமாம். ஆண்டு ஏக வீரியத்தானே அதிகத்தன்மையும். ஏக விக்கிரமத்தானே அதிகத்தன்மையுமோ பீம துரியோதனன் முதலியோர்களிடத்தும், அன்னிய ராஜாக்களிடத்துமிருக்கின்றது; ஆனால் அனந்த வீரியத்தால் அதிகத்தன்மையும் அமித விக்கிரமத்தால் அதிகத்தன்மையும் பரமேசுரனாகிய நின்னையொழிந்த ஏனையோர்களிடத்தின்றாம்; மற்றோ, நீயே நின்னிடத்தேயாம். அல்லது, அனந்தவீரிய அமித விக்கிரமம் என்பதை இரண்டு பதங்களென்

றுணரவும். அவற்றுள் அனந்தவீரிய என்னும் பதமோ, ஹே அனந்தவீரிய! எனப் பகவானுடைய சம்போதனமாம். ஆண்டு அர்ச்சுனன் ஸ்ரீ பகவானை 'ஹே சர்வ' எனச் சம்போதனை பண்ணியிருந்தனன், அச்சர்வ சப்தத்தின் அர்த்தத்தை இப் போது கூறுகின்றான்.— 'ஸவஊ ஸஊாவொதெ ஜிதொஹிஸவஃ' என: ஹே பகவன்! எக்காரணத்தாற் பரமேசுரனாகிய நீ இவ்வுலகனைத்தையும் உனது சத்தாஸ் புரணரூபத்தால் வியாபித்திருக்கின்றனையோ, அக்காரணத்தானே நீ சர்வன் எனக்கூறப்படுகின்றாய்; அதாவது உனைத்தவிர வொருபொருளுமின்றென்பதாம்.

(அ-கை.) ஹே பகவன்! எக்காரணத்தால் பரமேசுரனாகிய உன் மகாத் மியத்தை யுணராமல் உனக்கபராதம் பண்ணினேனோ, அதனானே பரமகிருபாலு வாகிய வுனக்குத் தண்டம்போல் நமஸ்காரஞ்செய்து அவ்வபராதங்களைச் சாந்தி பண்ணுகின்றேன் என்பதை அர்ச்சுனன் இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றான்.

சு-ம். ஸவெதி உதா வஸஹம் யஉக்தம்
ஹெ கூஷ்ண ஹெ யாஉவ ஹெ ஸவெதி ।
அஜா நதா உஹிஊா நம் தவெஉம்
உயா வஊாஉாக வணயெந வாவி ॥ (41)

ப-ம். 6 ஸவா 7 ஊதி 8 உதா 18 வஸஹம் 13 யக 19 உக்தம் 14 ஹெகூஷ்ண 15 ஹெயாஉவ 16 ஹெஸவெ 17 ஊதி 4 அஜாநதா 3 உஹிஊாநம் 1 தவ 2 ஊஉம் 5 உயா 9 வஊாஉாக 11 வணயெந 10 வா 12 அவி.

(அ-ம்.) ஹே பகவன்! உனது விசுவரூபத்தையும் ஐசுவரியத்தையு முண ராது, நான் இக்கிருஷ்ணன் என்சகா எனவெண்ணிச் சித்த விக்ஷேபத்தாலேனும், சிநேகத்தாலேனும், ஹே கிருஷ்ண! ஹே யாதவ! ஹே சகே! என மறைப் போடுகூடிய எவ்வாக்கியத்தைச் சொன்னேனோ, அவ்வனைத்தையும் நீ க்ஷமித் தருள்வாய். (41)

(வி-ம்.) ஹே பகவன்! இக்கிருஷ்ணன் எனது சகாவாவன். அதாவது சமான வயதுடையவன்: அல்லது, எனதுமாமன்புத்திரன் என உன்னை யெண்ணி நான் எனது சித்தவிக்ஷேபரூபப்பிரமாதத்தால் அல்லது, சிநேகத்தால், உன்னைக்குறித்து இழிவாகிய எவ்வார்த்தையைக் கூறினேனோ, அதாவது எனது மேம்பாட்டை வெளிப்படுத்தல்வடிவ இறுமாப்பினால் உசிதமிலா எவ்வசனத்தைக்கூறினேனோ, என்னுடைய அவ்வபராதங்களனைத்தையும் க்ஷமித்தருள்வாய். அர்ச்சுன! அத் தன்மைய உசிதமிலா வசனத்தை எக்காரணத்தாற் கூறினை எனப் பகவான் சங் கிப்ப அதிற் காரணங்கூறுகின்றான்.—'அஜாநதா உஹிஊாநம் தவெஉம் ஊதி' ஹே பகவன்! உன்னுடைய விசுவரூபத்தையும் ஐசுவரிய வடிவமகிமையையும் நான் முன் அறியாததால் அத்தன்மைய உசிதமிலா வாக்கியத்தைக் கூறினேன். ஹே அர்ச்சுன! நீ என்னவார்த்தை அநுசிதமாய்க் கூறினை எனப் பகவான் வினவ, அர்ச்சுனன் அவ்வார்த்தையின் சொரூபத்தைக் கூறுகின்றான்.—ஹே கிருஷ்ண! ஹே யாதவ! ஹே சகே! என. ஹே பகவன்! உலகனைத்தின் தோற்ற நிலையிறு களைச் செய்யப்பட்டவனும், பிரஹ்மன் முதலிய சர்வ தேவதைகட்குங் குருரூபமு மாகிய பரமேசுரனை உன்னை நான் ஹே கிருஷ்ண! ஹே யாதவ! ஹே சகே! எனச் சம்போதித்தேன் (கூப்பிட்டேன்). ஆண்டு ஒரு மூல புஸ்தகத்தில் 'உஹிஊா நஊவெஉம்' எனவும் பாடமுளது. அதில் 'உஹிஊாநம் ஊஉம்' என்னு மிரண்டு பதங்கட்குஞ் சமானாதிகரணமே யுணரத்தக்கது: அதாவது உன்னுடைய விசுவரூப இம்மகிமையை நான் முன்னருணர்ந்திலேன் என்பதாம். (41)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌯𑌚𑍍𑌚𑌾𑌵𑌹𑌾𑌸𑌾𑌰𑍍𑌥𑌮𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑍋𑌸𑌿
𑌵𑌿𑌹𑌾𑌰𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑌭𑍋𑌜𑌨𑍇𑌷𑍁 ।
𑌏𑌕𑍋𑌥𑌵𑌾𑌪𑍍𑌯𑌚𑍍𑌯𑍁𑌤 𑌤𑌤𑍍𑌸𑌮𑌕𑍍𑌷𑌂
𑌤𑌤𑍍𑌕𑍍𑌷𑌾𑌮𑌯𑍇 𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑍍 ॥ (42)

ப-ம் 9 𑌯𑌤𑍍 2 𑌚 3 𑌅𑌵𑌹𑌾𑌸𑌾𑌰𑍍𑌥𑌂 10 𑌅𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑌃 11 𑌅𑌸𑌿 4 𑌵𑌿𑌹𑌾𑌰𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑌭𑍋𑌜𑌨𑍇𑌷𑍁 5 𑌏𑌕𑌃 6 𑌅𑌥𑌵𑌾 7 𑌅𑌪𑌿 1 𑌅𑌚𑍍𑌯𑍁𑌤 8 𑌤𑌤𑍍𑌸𑌮𑌕𑍍𑌷𑌂 12 𑌤𑌤𑍍 16 𑌕𑍍𑌷𑌾𑌮𑌯𑍇 14 𑌤𑍍𑌵𑌾𑌂 13 𑌅𑌹𑌂 15 𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌂.

(அ-ம்.) ஹே அச்சுத! அங்ஙனமே பரிகாசத்தின்பொருட்டு விளையாட்டு, படுக்கை, ஆசன போஜனங்களில் ஒன்றாய் உட்கார்ந்திருப்பவனாகி; அல்லது ஒரு போது அச்சகாவின் முன்னிலுட்கார்ந்திருப்பவனாய், நான் தங்கட்கு நிந்திதமாகச் செய்த அபராதங்களனைத்தையும் அப்பிரமேயனைக்குறித்து க்ஷமைப்படுத்துகின்றேன். (42)

(வி-ம்.) ஹே அச்சுத! அதாவது சர்வதா நிருவிகார! கிரீடைவடிவ விவகாரத்திலும், ஆடை பஞ்சு முதலியனவகளாற்செய்யப்பட்ட உறங்குமிடமாகிய படுக்கையிலும், சிம்மாசன முதலிய ஆசனங்களிலும் என்ஜாதியார் பலரோடு உண்ணுதலாகிய போஜனத்திலும், சர்வ சகபாடிகளையும் விடுத்துத் தனித்திருக்கப்பட்ட அல்லது, பரிஹாசம் பண்ணிக்கொண்டு அச்சகாபாடிகளோடு கூடிக்கொண்டிருக்கப்பட்ட தங்களைக் கேலியின்பொருட்டு நிந்தித்த அநுசிதவாக்கியரூப சர்வாபராதங்களையும் அல்லது, அசத்காரணவடிவமாகிய அபராதங்கள் அனைத்தையும் க்ஷமிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். தாங்களெத்தன்மையரெனின், அப்பிரமேயராவீர்; அதாவது அசிந்தியப் பிரபாவமுடையவராவீர். கருத்திதுவாம்:— அசிந்தியப்பிரபாவமுடையரும், சர்வ விகாரமின்றியவரும், பரமகிருபாளுரூபருமாகிய பரமேசுரவடிவ தங்களுடைய பிரபாவத்தையறியாத நான் செய்த அபராதங்களை க்ஷமைசெய்தருள்வீர் என்பதாம். (42)

(அ-கை.) இப்போதர்ச்சுனன் ஸ்ரீ பகவானைக்குறித்துக் கூறிப்போந்த அசிந்தியப்பிரபாவத்தை விளக்கமாய் வருணிக்கின்றான்.

சு-ம். 𑌪𑌿𑌤𑌾𑌸𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯
𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌪𑍂𑌜𑍍𑌯𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 ।
𑌨 𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑍋𑌸𑍍𑌤𑍍𑌯𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃 𑌕𑍁𑌤𑍋𑌨𑍍𑌯𑍋
𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵 ॥ (43)

ப-ம். 6 𑌪𑌿𑌤𑌾 7 𑌅𑌸𑌿 4 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 3 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯 5 𑌤𑍍𑌵𑌂 2 𑌅𑌸𑍍𑌯 9 𑌪𑍂𑌜𑍍𑌯𑌃 8 𑌚 10 𑌗𑍁𑌰𑍁𑌃 11 𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 16 𑌨 13 𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑌃 17 𑌅𑌸𑍍𑌤𑌿 18 𑌅𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃 19 𑌕𑍁𑌤𑌃 15 𑌅𑌨𑍍𑌯𑌃 12 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇 14 𑌅𑌪𑌿 1 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵.

(அ-ம்.) ஹே ஒப்பிலாப் பிரபாவமுடையோய்! இந்தச் சராசரமாகிய உலகனைத்திற்கும் நீர் பிதாரூபரும், பூஜ்யரும், குருரூபரும், குருசிரேஷ்டருமாவீர். மூவுலகத்தும் உமக்கொப்புமையுமின்றேல் உம்மிலதிகமாதல் யாங்ஙனமாம்? (43)

(வி-ம்.) ஹே பகவன்! இந்தத் தாவரசங்கமவடிவ உலகனைத்திற்கும் நீரே பிதா அதாவது, உண்டுபண்ணுபவர்: 'யதோவாஇமாநி பூதாநிஜாயந்தே' எப்பரமான்மாவினின்றும் இப்பூதங்களனைத்துமுண்டாகின்றன: என்பது முதலிய சுருதிகளிலும் பரமேசுரராகிய வுமக்கு உலகனைத்தையு முண்டாக்குந்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. சர்வத்திற்கு மீசரானதால் தாங்களே பூஜ்யராவீர். தாங்களே நூல்களனைத்தையு முபதேசிக்குங்குருவுமாவீர். இதனானே, எவ்வாற்றானும் தாங்களே குருசிரேஷ்டராவீர். அதாவது, எவற்றினும் மேம்பட்டவராவீர். இதனானே, மூவுலகத்துள்ளும் உமக்கொப்பானே ரொருவரில்லை. அங்ஙனமேல் உம்மிலதிகமாய் ஒருவருளரென்பது யாங்ஙனம்? மற்றோ, ஒருவருமேயின்றாம், கருத்திதுவாம்.—பரமேசுரராகிய உமக்கொப்பானோர் வேறொருவருமிலர், என்னை ஒருகால் உமக்கொப்பாய் ஒருவரையுடன்படில் அவரு மீசுரரே என்பது சித்தமாம். ஆகவே, ஓரீசன் இவ்வுலகையுண்டாக்கவேண்டுமென இச்சிப்பன், மற்றோரீசன் அக்காலத்திலேயே இவ்வுலகைச் சம்மரிக்கவேண்டுமென் றிச்சிப்பன். ஆதலின், ஒரு வியவகாரமும் பொருந்தாதாம். மற்றோ, சர்வ வியவகாரங்களும் மறைபட்டுப்போம். ஆதலின், உமக்கொப்பானோர் வேறொருவருமிலர். அங்ஙனமேல் உம்மிலதிகமெவராவர்? மற்றோ, எவ்வாற்றானும் உம்மிற்சிறந்தோரிலர். ஆண்டுச்சுருதி.—

*நதத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே।*

(பொ-ள்.) அப்பரமேசுரருக்கொப்பும் அதிகமுங் காணப்படவில்லை என்பதாம். ஆண்டு, உமக்கொப்பானோரில்லை எனக் கூறிப்போந்த அர்த்தத்தில் அர்ச்சுனன் காரணங்கூறுகின்றான்.—'ப்ரதிமப்ரபாவ இதி' ஒப்புப் பிரதிமாவாம், அஃதின்றியது அப்பிரதிமாவாம், அத்தன்மைய சாமர்த்தியமுடையவர் அப்பிரதிமப்பிரபாவமுடையவராவர் என்பதாம். (43)

(அ-கை.) தாங்களித்தன்மையராதலின் என்னுடைய அபராதத்தை க்ஷமைசெய்விப்பான் தங்களுடைய சந்நிதியில் தண்டம்போல் நமஸ்கரித்துப் பிரார்த்திக்கின்றேன் என்பதை இப்போ தருச்சுனன் கூறுகின்றான்.

சு-ம். தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாமஹமீசமீட்யம்।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யுஃ
ப்ரியஃ ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்॥ (44)

ப-ம். 1 தஸ்மாத் 2 ப்ரணம்ய 4 ப்ரணிதாய 3 காயம் 9 ப்ரஸாதயே 7 த்வாம் 5 அஹம் 8 ஈசம் 6 ஈட்யம் 12 பிதா 13 இவ 11 புத்ரஸ்ய 15 ஸகா 16 இவ 14 ஸக்யுஃ 18 ப்ரியஃ 17 ப்ரியாயாஃ 20அர்ஹஸி 10தேவ 19ஸோடும்.

(அ-ம்.) ஹே பகவன்! ஆதலின் உம்மை நமஸ்கரித்து எனதாக்கையைத் தண்டம்போல் தாரணம்பண்ணி எல்லாப்பிரகாரத்தானும் ஸ்துதித்தற்குரிய உம்மை கிருபைபாலிப்பீர் எனப் பிரார்த்திக்கின்றேனாதலின், தேவனே! புத்திரன் பிழையைப் பிதாவும், சகாவின் பிழையை சகாவுடையனும், மனையாள் பிழையைக் கணவனும் பொறுத்துக்கொள்வதுபோல, என்னுடைய அபராதத்தைத் தாங்கள் க்ஷமித்துக்கொள்ளற்குரியரே. (44)

(வி-ம்,) ஹே பகவன்! பரமேசுரராகிய தாங்கள் உலகனைத்திற்கும் பிதாவும் குருவுமாவீராதலின், நானும்மை நமஸ்கரித்து எனதாக்கையைத் தரையிற் படியச்செய்து உமக்கன்புண்டாம் வண்ணம் பிரார்த்திக்கின்றேன்; அதாவது, அபராதியாகிய நான் என தபராதத்தை க்ஷமை செய்வித்தற்பொருட்டு என்னிடத்தன்புகூர்வீர் எனத் தங்களுடைய சந்நிதியிற் பிரார்த்திக்கின்றேன். தாங்கள் எத்தன்மையரெனின், இவ்வுலகனைத்திற்கு நியந்தாவாகிய வீசுரராவீர். பிரஹ்மன் முதலிய தேவர்களாலுந் துதிக்கத்தக்கவராவீர். இதனானே தேவனெனனும் சுயம் பிரகாசரூபரே! புத்திரன் குற்றத்தைப் பிதாவும், சகாவின் குற்றத்தைச் சகியும், பத்தினியாகிய பிரியாள் குற்றத்தைப்பதியும் க்ஷமித்துக்கொள்வதுபோல, எனது குற்றத்தையும் தாங்கள் க்ஷமித்தற்குரியரேயாவீர். நான் கேவலம் உமது திருவடி ஊழியனேயன்றி மற்றெவர்க்குமிலன் ஆதலின், எனது பிழையைப் பொறுத்தருள்செய்தற்குரியரே என்பதாம். ஈண்டு, ‘ப்ரியாயாஹ்ஸி’ என்னும் வாக்கியத்தில், வது, என்பதின் உலோபமும், விசர்க்கலோபமாகினுஞ் சந்தியும், சந்தசு சம்பந்தத்தாலென்க. (44)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனன் தனதபராதத்தை க்ஷமிக்கும் வண்ணம் ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து, மீண்டும் அவ்விசுவரூப உபசம்மார பூர்வகம் முந்தியரூப தரிசனத்தின் பிரார்த்தனையை இரண்டு சுலோகங்களாற்செய்கின்றான்.

சு-ம். அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோஸ்மி த்ருஷ்ட்வா
பயேந ச ப்ரவ்யதிதம் மநோ மே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ (45)

ப-ம். 1 அத்ருஷ்டபூர்வம் 3 ஹ்ருஷித: 4 அஸ்மி 2 த்ருஷ்ட்வா 6 பயேந 5 ச 9 ப்ரவ்யதிதம் 8 மந: 7 மே 11 தத் 13 ஏவ 10 மே 14 தர்சய 15 தேவ 12 ரூபம் 18 ப்ரஸீத 16 தேவேச 17 ஜகந்நிவாஸ.

(அ-ம்.) ஹே பகவன்! முன்னர்க்காணாத விசுவரூபத்தைக்கண்டு நான் சந்தோடமுடையனானேன், பயத்தால் எனதுள்ளம் வியாகூலத்தை அடைந்தது; ஆதலின், எனக்கு முந்தியவடிவத்தையே காட்டியருள்வீர். ஹே தேவதேவேச! ஜகந்நிவாச! என்னிடத்தில் அன்புகூர்ந்தருள்வீர். (45)

(வி-ம்.) ஹே பகவன்! நான் முன்னொருபோதுங் காணாத தங்களுடைய விசுவரூபத்தைத் தரிசித்துச் சந்தோடத்தையடைந்தேன். அக்கோரரூப தரிசனத்தாலுண்டாகிய பயத்தால் மனோ வியாகூலத்தையுமடைந்தேன். ஆதலின், ஹே பகவன்! எனக்கு மிகப் பிரியமான முந்தியவடிவத்தைக் காட்டியருள்வீர். ஹே தேவனென்னும் சுயம்பிரகாசரூப! சர்வ தேவதைகட்கு நியந்தாவாகிய தேவேச! உலகனைத்திற்கும் ஆதாரமாகிய ஜகந்நிவாஸ! என்மே லன்புகூர்ந்து முந்திய தரிசனவடிவப் பிரசாதமளித்தருள்வீர். (45)

(அ-கை.) தரிசனத்தின்பொருட்டுப் பிரார்த்தித்த முந்தியவடிவத்தை விசேடணங்களோடு வர்ணிக்கின்றான்.

சு-ம். கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்த
மிச்சாமி த்வாம் த்ரஷ்டுமஹம் ததைவ ।
தேநைவ ரூபேண சதுர்புஜேந
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே ॥ (46)

ப-ம். 2 கிரீடிநம் 3 கதிநம் 4 சக்ரஹஸ்தம் 9 இச்சாமி 5 த்வாம் 8 த்ரஷ்டும் 1 அஹம் 6 ததா 7 ஏவ 12 தேந 15 ஏவ 14 ரூபேண 13 சதுர்புஜேந 10 ஸஹஸ்ரபாஹோ 16 பவ 11 விச்வமூர்த்தே.

(அ-ம்.) ஹே பகவன்! நான் கிரீடத்தையும், கதையையும், கரத்திற் சக்கரத்தையும் உடைய உனது சொரூபத்தை முன்போற்றரிசித்தற் கிச்சிக்கின்றேனாதலின், ஹே ஆயிரந்தோளுடையோய், ஹே விசுவமூர்த்தியே! இப்போது முந்திய சதுர்ப்புஜரூபமாகவே பிரகடனமாவாய். (46)

(வி-ம்.) ஹே பகவன்! கிரீடத்தையும், கதையையும், கரத்திற் சக்கிரத்தையும் உடைய பரமேசுரனாகிய உனது அழகிய சொரூபத்தை இவ்விசுவரூபத்திற்கு முன்னர்ப் பார்த்தபடி பார்த்தற்கு இச்சிக்கின்றேனாதலின், ஹே ஆயிரந்தோளுடையோய்! ஹே சர்வ விசுவரூப மூர்த்தியைத்தரித்தவனே! இப்போது அவ் விசுவரூபத்தை அடக்கிக்கொண்டு முந்திய சதுர்ப்புஜரூபமாய்ப் பிரகடமாவாய். இத்துணை கூறியதால் அர்ச்சுனன் எப்போதும் ஸ்ரீ பகவானுடைய சதுர்ப்புஜ முதலிய சொரூபத்தையே தரிசித்துக்கொண்டிருந்தான் என்பது குறிப்பிக்கப் பட்டதாம். (46)

(அ-கை.) இவ்வாறு அர்ச்சுனனாற் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீ பகவான் அவ் வர்ச்சுனன் பயத்தாற் பீடையுற்றதைப்பார்த்து விசுவரூபத்தை அடக்கிக்கொண்டு உசிதமான வார்த்தைகளால் அவ்வர்ச்சுனனைச் சந்தோடப்படுத்தி அருளிச்செய் கின்றார்.

ஸ்ரீ பகவாநுவாச.

ஸு-ம். மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்மயோகாத் ।
தேஜோமயம் விச்வமநந்தமாத்யம்
யந்மே த்வதந்யேந ந த்ருஷ்டபூர்வம் ॥ (47)

ப-ம். 3 மயா 2 ப்ரஸந்நேந 5 தவ 1 அர்ஜுந 6 இதம் 8 ரூபம் 7 பரம் 9 தர்சிதம் 4 ஆத்மயோகாத் 10 தேஜோமயம் 11 விச்வம் 12 அநந்தம் 13 ஆத்யம் 14 யத் 15 மே 16 த்வதந்யேந 17 ந 18 த்ருஷ்டபூர்வம்.

(அ-ம்) ஹே அர்ச்சுன! பிரசன்னமுடைய பரமேசுரனாகிய நான் எனது வலியாலுனக்கு இவ்விசுவரூப சிரேஷ்ட வடிவத்தைக்காட்டியருளினேன்; அச் சொரூபம் தேஜோமயமாம், சர்வ விசுவரூபமாம், அனந்தமாம், அநாதியாம், முன்னெவராலுங் காணப்படாத்துமாம். (47)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நீ எனது விசுவரூபத்தைப் பார்த்துப் பயமுறாதே. உனக்கொருபயமுண்டாம்வண்ணம் இவ்விசுவரூபத்தை நானுனக்குத் தரிசிப் பிக்கவில்லை. மற்றோ, சந்தோடமுடைய நான் அதாவது, உனது விஷயக மிக்க கிருபையையுடைய நான் உனக்குச் சிரேட்டமாகிய எனது விசுவரூபத்தை எனதாற்றலாற்றரிசிப்பித்தேன், கேவலம் உன்னிடத்துள்ள கிருபையாலே காண்பித்தேன். ஆண்டு, பரம் என்னும் விசேடணத்தால் அவ்விசுவரூபத்திற்குக் கூறப் பட்ட சிரேஷ்டத்துவரூபமாகிய பரத்துவத்தையே இப்போது விளக்கிக் கூறுகின்றார் 'தேஜோமயம்' என. ஹே அர்ச்சுன! எனது விசுவரூபம் எத்தன்மையதெனின்,

தேஜோமயம் அதாவது, கோடியிரவிகளின் பிரபைக்கொப்பான பிரபையையுடைய தாம், விசுவரூபமான தாம், முதலீறிலாததாம், அத்தன்மைய விசுவரூபத்தை நான் கேவலம் மிகப்பிரிய பக்தனாகிய உனக்குத் தரிசிப்பித்தேன். ஹே பகவன்! தாங்களிவ்வாறு கூறல் தகாது; என்னே, திருதராஷ்டிரன் மனையில் பீஷ்மர் முதலியோர்கட்கும், பாலியாவத்தையில் உமது மாதாவாகிய யசோதைக்கும், அக்ரூரனுக்கும் தாங்கள் இவ்விசுவரூபத்தைக் காட்டியிருத்தலின்; என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு, ஹே அர்ச்சுன! நான் அவர்க்குக்காட்டிய விசுவரூபம் இவ்விசுவரூபத்திலிடைப்பட்ட தொரு சொரூபமாதலின், அது உத்தமமன்று. உனக்குக் காண்பித்த விசுவரூபமோ எல்லாவற்றினுஞ் சிறந்ததாம், மற்றெவருமிதைப் பார்த்திலார் என உத்தரமருளிச்செய்கின்றார்:—'யந்நேஜதி' ஹே அர்ச்சுன! என்னுடைய இந்த விசுவரூபத்தை உனக்கன்னிய ரெவரும் பார்த்திலார், கிருபையாலுனக்கிதைத் தரிசிப்பித்தேன் என்பதாம். (47)

(அ-கை.) ஹே அர்ச்சுன! இந்த விசுவரூபதரிசனமாகிய மிகத்துர்லபமான எனது பிரசாதத்தையடைந்து நீ கிருதார்த்தனாபினாப் என்னு மபிப்பிராயத்தால், ஸ்ரீ பகவான் அவ்விசுவரூபத்தின் துர்லபத்தன்மையை இப்போதருளிச்செய்கின்றார்.

சு-ம். ந வேதயஜ்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை꞉ ।
ஏவம்ரூப꞉ சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதன்யேன குருப்ரவீர ॥ (48)

ப-ம். 9 ந 7 வேதயஜ்ஞாத்யயனை꞉ 12 ந 11 தானை꞉ 15 ந 13 அ 14 க்ரியாபி꞉ 18 ந 17 தபோபி꞉ 16 உக்ரை꞉ 3 ஏவம் 4 ரூப꞉ 10 சக்ய꞉ 5 அஹம் 2 ந்ருலோகே 8 த்ரஷ்டும் 6 த்வதன்யேன 1 குருப்ரவீர.

(அ-ப.) ஹே குருவம்சத்தில் அதிவீரசூரனாகிய அர்ச்சுன! இம்மநுடலோகத்தில் இத்தன்மைத்தானவிசுவரூபமுடைய பகவானாகிய நான், நீயொழிந்தவனையோர்களால், வேதங்களின் யஞ்ஞங்களின் அத்தியயனத்தால் காணற்கொணாதோன் நான். அங்ஙனமே தானங்களானு மறியப்படேன். அங்ஙனமே கருமங்களாலும் தவங்களாலும் காணற்கரியேன். (48)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் வேதங்களைக் குருமுகமாய் அக்ஷரக்கிரகணரூப அத்தியயனம், அங்ஙனமே பூர்வமீமாஞ்சை, கற்பசூத்திர முதலியவைகளால் வேதபோதித கருமரூப யக்ஞங்களின் அர்த்தவிசாரரூப அத்தியயனம் என்னு மிவ்விருவகை அத்தியயனங்களாலும், யாகங்களின் அத்தியயனத்தாலும், துலா புருஷதானம், கன்னியாதானம், கோ பொன் அன்னதான முதலிய பலவகைத் தானங்களானும், அக்கினிஹோத்திர முதலிய சிரௌதஸ்மார்த்தகருமங்களாலும், காயபுலன்கள் காய்ந்துவிடுதலால் செய்வதற்கு மிகக் கஷ்டமாகிய கிருச்சிர சாந்திராயண முதலிய தவங்களாலும், இம்மநுடலோகத்தில் இத்தன்மைய விசுவரூபத்தை நீயொழிந்தவனையோர்களால் பார்க்கொணாது. அதாவது, எனதநுக்கிரகமின்றியவனால் கூறிய வேதாத்தியயன முதலியவைகளால் எனது விசுவரூபத்தைத் தரிசிக்கமுடியாது. அத்தன்மைத்தான இவ்விசுவரூபத்தைக் கிருபையாலுனக்குக் காண்பித்தேன். அதன்றரிசனத்தால் இப்போது நீ கிருதார்த்தனாபினாப் என்க. ஆண்டு, மூலசுலோகத்தில் 'சக்ய அஹம்' என்னும் வாக்கியங்கூறியவிடத்தில் 'சக்யோஹம்' என்னும் வசனங்

கூறற்பாலதாமாயினும், 'ஶகூஂ ஸஹஂ' என்பதிலுள்ள விசர்க்கலோபம் சந்தசு சம்பந்தத்தாலாம். அன்றியும், நகாரம் ஒன்றைக்கூறுவதனானே அத்தியயன முதலிய சர்வத்தையும் நிடேதம்பண்ணியதாம். ஆயினும், அத்தியயன முதலிய நான்கோடும் தனித்தனி நகாரபாடம் விசுவரூபதரிசனத்தில் அத்தியயன முதலியவைகளின் நிடேதம் திடமாதற்பொருட்டாம். அன்றியும், 'ந ச க்ரியாபிঃ' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரமானது ஈண்டுக் கூறுத ஏனையசாதனங்களையுங் கொள்ளுதற்பொருட்டாம்; அதாவது பரமேசுரனாகிய எனதனுக்கிரகமின்றி மற்றெந்தச் சாதனங்களினானும் எனது விசுவரூபங்காணொணாதென்பதாம். (48)

(அ-கை.) ஹே அர்ச்சுன! உன தனுக்கிரகத்தின்பொருட்டு என்னாற் பிரகடம் பண்ணப்பட்ட எனது விசுவரூபத்தால் உனக்கு ஒருகால் வியாகுலமுண்டாகில், நான் எனது சொரூபத்தை இப்போதே அடக்கிக்கொள்கிறேன்: நீ வியாகூலமுறாதே என்பதை ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக் கருளிச்செய்கின்றார்.

சு-ம். மா தே வ்யதா மா ச விமூடபாவோ
 த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங் மமேதம் ।
வ்யபேதபீঃ ப்ரீதமனாঃ புனஸ்த்வம்
 ததேவ மே ரூபமிதம் ப்ரபஶ்ய ॥ (49)

ப-ம். 9 மா 7 தே 8 வ்யதா 12 மா 10 ச 11 விமூடபாவঃ 6 த்ருஷ்ட்வா 5 ரூபம் 4 கோரம் 2 ஈத்ருக் 1 மம 3 இதம் 13 வ்யபேதபீঃ 14 ப்ரீதமனாঃ 16 புனঃ 15 த்வம் 18 தத் 21 ஏவ 17 மே 20 ரூபம் 19 இதம் 22 ப்ரபஶ்ய.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னுடைய இத்தன்மைத்தான இக்கோரரூபத்தைப்பார்த்து வியாகூலப்படாதே; விமூடபாவத்தையுமடையாதே; மற்றோ, பயமின்றிச் சந்தோடமனத்தனாய் நீ மறித்தும் என்னுடைய முந்திய இச்சொரூபத்தையே நோக்குதி. (49)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பலமுகந் தோள்களோடு கூடினமையின் மிகப் பயங்கரமான எனது விசுவரூபத்தைப்பார்த்துநின்ற நீ வியாகூலத்தை யடையாதே; அதாவது, பயமாகிய நிமித்தத்தாலுண்டாகிய பீடையையடையாதே. எனது விசுவரூபத்தைப்பார்த்து விமூடபாவமாகிய வியாகூலமனத்தன்மை, சந்தோடமின்மைகளை யடையாதே; மற்றோ, பயமின்றியவனாய், சந்தோடமனத்தனாய் நீ மீண்டும் எனது சதுர்ப்புஜரூபத்தைத் தரிசிப்பாய்; அதாவது, இவ்விசுவரூபத்திற்குமுன் நீ எப்போதுந் தரிசித்த எனது சதுர்ப்புஜரூபத்தைப் பயமிலாது சந்தோடமனத்தனாய்த் தரிசிப்பாய். ஈண்டுப்பயமின்மை சந்தோடங்கள் ஸ்ரீ பகவான் 'ப்ரபஶ்ய' இனிது நோக்குதி, என்பதிலுள்ள 'ப்ர' இனிது, என்னுஞ் சத்தத்தாற் கூறியருளினார் என்க. (49)

(அ-கை.) இப்போது சஞ்சயர் திருதராஷ்டிரர்க்குச் சொல்கின்றார்.

ஸஂஜய உவாச.

சு-ம். இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்ததோக்த்வா
 ஸ்வகம் ரூபம் தர்ஶயாமாஸ பூயঃ ।
ஆஶ்வாஸயாமாஸ ச பீதமேனம்
 பூத்வா புனঃ ஸௌம்யவபுர்மஹாத்மா ॥ (50)

சாதனமாம், அதனபேட்சையால் கருமபலத்தியாகம் பாகிய சாதனமாம் ஆதலின் அந்தர சாதனுபேட்சையால் பாகிய சாதனங்கட்குச் சிரேஷ்டத்தன்மைகூறல் அசங்கதமாமாயினும், அந்தர சாதனுபேட்சையால் பாகிய சாதனங்கள் செய்தற்குச் சுலபமாகின்றன. சோபானக்கிரமமாய் பாகிய சாதனப்பிராப்தி பூர்வகமே அந்தர சாதனப்பிராப்தியாமாதலின், ஸ்ரீ பகவான் அப்பாகியசாதனத்தில் அதிகாரிகளைப் பிரவிருத்திசெய்தற்பொருட்டுப் பூர்வ பூர்வசாதனுபேட்சையால் அவ்வப்பாகிய சாதனங்களில் சிரேஷ்டத்தன்மையைத் திருவாய்மலர்ந்தருளினரென்க.

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் மந்தாதிகாரியின்பொருட்டு மிகத்துஷ்கரமான தால் நிர்க்குண அக்ஷரப்பிரஹ்மோபாசனையை நிடேதித்து, மிகச் சுககரமான சகுணப் பிரஹ்மோபாசனை விதானம் பண்ணப்பட்டது, அதில் அசமர்த்தனுனவனுக்கு வலியின்மையின் தாரதம்மியங்களை அநுசரித்து வேறு அப்பியாசமுதலிய சாதனங்களும் ஸ்ரீ பகவானுல் விதானம்பண்ணப்பட்டன. சகுணப் பிரஹ்மோபாசனையும் அப்பியாசமுதலிய மூவகைச் சாதனங்களையுமருளிச்செய்வதில் ஸ்ரீ பகவானுக்கிதுகருத்தாம்:- இவ்வதிகாரிகள் யாதேனுமொரு பிரகாரத்தால் பிரதிபந்தங்களைத்து மற்றவர்களாய் உத்தமாதிகாரிகளாய்ச் சாதனங்களனைத்தின் பலரூபமாகிய நிர்க்குணப் பிரஹ்மவித்தையின்கண் பிரவேசமாகுக என்பதாம். என்னை, சாதனவிதானம் பலத்தின்பொருட்டேயாம்; பலமிலாதில்லை, ஆதலின் ஈண்டுப் பகவான் சகுணப் பிரஹ்மோபாசனையையும் அப்பியாசமுதலிய மூவகைச் சாதனங்களையும் விதானம்பண்ணியருளினர். அவைகளை நிர்க்குணப் பிரஹ்மவித்தைவடிவ பலத்தின்பொருட்டே விதித்தருளினர். இது பிறநூலினுங் கூறப்பட்டுளது:—

ஆ-சு. 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌃 ।
𑌯𑍇 𑌮𑌨𑍍𑌦𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌸𑌵𑌿𑌶𑍇𑌷𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑍈𑌃 ॥ (1)

𑌵𑌶𑍀𑌕𑍃𑌤𑍇 𑌮𑌨𑌸𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌸𑌗𑍁𑌣𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑍀𑌲𑌨𑌾𑌤𑍍 ।
𑌤𑌦𑍇𑌵𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌵𑍇𑌤𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌪𑍇𑌤𑍋𑌪𑌾𑌧𑌿𑌕𑌲𑍍𑌪𑌨𑌮𑍍 ॥ (2)

(பொ-ள்.) நிர்விசேஷ பரப்பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்தற்குச் சாமர்த்தியமற்ற மந்தாதிகாரிகள் சகுணப் பிரஹ்ம நிரூபணத்தால் அநுக்கிரகிக்கப்படுகின்றார்கள்; அதாவது, சுருதிபகவதியும் பிரஹ்மஞானிகளும் மந்தாதிகாரிகளிடத்துள்ள அநுக்கிரகத்தால் சகுணப் பிரஹ்மத்தை நிரூபணஞ்செய்கின்றார்கள் (1). அச்சகுணப் பிரஹ்மத்தியானத்தால் அவர்கள் மனம் வசமாகுங்கால் அவர்கட்கு சர்வோபாதிகற்பனைகளொழிந்த நிர்க்குணப் பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாகின்றது (2). இது பதஞ்சலிபகவானுலும் யோகசூத்திரத்திற் கூறப்பட்டுளது:—

ஆ-சு. 𑌸𑌮𑌾𑌧𑌿𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌪𑍍𑌰𑌣𑌿𑌧𑌾𑌨𑌾𑌤𑍍 ।
𑌤𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌧𑌿𑌗𑌮𑍋𑌽𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌾𑌯𑌾𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 ॥

(பொ-ள்.) இவ்வதிகாரிகட்கு ஈசுரசிந்தனரூப ஈசுரப்பிரணிதானத்தால் சமாதிப் பிராப்தியாம்; இதனுனே, இவ்வதிகாரிக்குப் பிரத்தியக்சேதன சாக்ஷாத்காரமுண்டாகின்றது விக்கினவடிவ அந்தராயத்தின் அபாவங்களுமுண்டாகின்றன என்பதாம் ஆதலின் முன்னர் '𑌕𑍍𑌲𑍇𑌶𑍋𑌽𑌧𑌿𑌕𑌤𑌰𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌮𑍍' என்பது முதலிய வாக்கியங்களால் செய்யப்பட்ட நிர்க்குணேபாசனையின் நிந்தை சகுணப் பிரஹ்மோபாசனையின் துதியின்பொருட்டாம்; நிர்க்குணப் பிரஹ்மோபாசனையை நிடேதித்தற்பொருட்டன்றாம். உதிதஹோமவிதானத்தில் அநுதிதஹோமநிந்தைஉதிதஹோமத்தின் துதியின்பொருட்டேயாம்; அநுதித ஹோமத்தை நிடேதித்தற்பொருட்

டன்றும். ஆண்டுச் சூரியோதயத்திற் செய்யப்பட்டது உதிதஹோமமாம். சூரி யோதயத்திற்கு முன்னர்ச் செய்யப்பட்ட ஹோமம் அநுதிதஹோமமாம். அது போன்று சகுணப் பிரஹ்மோபாசனையை விதிக்குமிடத்துச் செய்யப்பட்ட நிர்க் குணப் பிரஹ்மோபாசனையின் நிந்தையும் சகுணோபாசனையின் துதியின்பொருட் டேயாம் ; நிர்க்குணப் பிரஹ்மோபாசனையை நிந்தித்தற்பொருட்டன்றும். என்னை, நூலுடையார் இந்நியாயங்கூறியிருக்கின்றனர் :—

𑌨𑌹𑌿 𑌨𑌿𑌨𑍍𑌦𑌾 𑌨𑌿𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑍁𑌂 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌵𑌿𑌧𑍇𑌯𑌂 𑌸𑍍𑌤𑍋𑌤𑍁𑌂 ।

(பொ-ள்.) சாஸ்திரத்திலுள்ள நிந்தைவாக்கியங்கள் அந்நிந்திக்கப்பட்ட பொருளை நிந்தித்தற்பொருட்டன்று ; மற்றோ, பிரசங்கத்தில் வந்த விதேயப் பொருளைத்துதித்தற்பொருட்டு அந்நிந்தாவாக்கிய மெழுந்ததாம் ; ஆதலின், நிர்க் குண அக்ஷரப்பிரஹ்மோபாசகர்களே உண்மையில் யோகவித்தமர்களாவர்கள் அவர்களையே ஸ்ரீ பகவான்,

𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌹𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑍋𑌽𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌮𑌹𑌂 𑌸 𑌚 𑌮𑌮 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌉𑌦𑌾𑌰𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵𑍈𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌂 ॥

என்பது முதலிய வாக்கியங்களால் மறித்து மறித்தும் சிரேஷ்டமாய்த் துதித் திருக்கின்றனர். அர்ச்சுன ! நீயும் அதிகாரத்தைத் தேடிக்கொண்டு அந்த நிர்க் குணப் பிரஹ்மவேத்தாக்களின் ஞானத்தையும் தருமத்தையுமே அநுசரிக்கத் தக்கவன் ஆவாய். இவ்வாறு அர்ச்சுனனுக் கறிவுறுத்தும் வேட்கையையும் அர்ச் சுனனது பரமஹிதத்திற்கு வேட்கையையுமுடைய ஸ்ரீ பகவான் எழுசுலோகங் களால் அந்தஅபேத தர்சனமுடையதும், கிருத கிருத்தியபாவத்தைப்பெற்றது மாகிய நிர்க்குணப் பிரஹ்மோபாசனையைத் துதிக்கின்றார்.

சு-ம். 𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃 𑌕𑌰𑍁𑌣 𑌏𑌵 𑌚 ।
𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑍋 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 𑌕𑍍𑌷𑌮𑍀 ॥ (13)

ப-ம். 2 𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 1 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 3 𑌮𑍈𑌤𑍍𑌰𑌃 6 𑌕𑌰𑍁𑌣𑌃 4 𑌏𑌵 5 𑌚 7 𑌨𑌿𑌰𑍍𑌮𑌮𑌃 8 𑌨𑌿𑌰𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 9 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 10 𑌕𑍍𑌷𑌮𑍀.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! எவன் சர்வ பூதங்கட்கும் அத்துவேஷ்டன், மைத் திரியையுடையவன், கருணையுடையவன், நிர்மமன், நிரசங்காரன், சுகதுக்க சமன், க்ஷமையுடையவன். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! அந்த நிர்க்குணப் பிரஹ்மவேத்தாவானவன் தாவ ரசங்கமரூப சர்வ பூதங்களையும் தனதான்மவடிவமாய்ப் பார்க்கின்றானாதலின், தனக்குத் துக்ககாரணமாகிய வஸ்துவிலும் அவனுக்குப் பிரதிகூலபுத்தியுண்டாகிற தில்லை. எப்பொருளில் இவ்வஸ்து எனது துக்கசாதனம் என்னும் பிரதிகூல புத்தி யுண்டாகின்றதோ அவ்வஸ்துவின்கண்ணே துவேஷமுண்டாம், அப் புத்தி யின்றி அஃதுண்டாகாது. அந்தப் பிரதிகூல புத்தியின்றிய தத்துவவேத்தாச் சர்வ பூதங்களையுந் துவேஷிப்பதில்லை. மற்றோ, அவைகளிடத்தில் மைத்திரியுடைய வனேயாகுவன் : அதாவது, அச்சர்வ பூதங்களிடத்தும் சிநேகமுடையவனேயா வன் அம்மைத்திரிபாவத்தில் இப்போது காரணத்தை அருளிச்செய்கின்றார்.— '𑌕𑌰𑍁𑌣𑌃' என அர்ச்சுன ! அவன் சர்வ பூதங்களிடத்தும் கருணையுடையவ னாதலினாலே மைத்திரியுடையவனாகின்றான். ஆண்டு, துன்பப்படும் பிராணிக ளிடத்துள்ள தயை கருணையாம்; அதையுடையவன் கருணையனாவன். அதாவது,

அந்தத்தத்துவவேத்தாவானவன் சர்வ பூதங்கட்கும் அபயதானங் கொடுக்கும் பரமஹம்ஸ சந்நியாசியாவன். நிர்மமனுமாவன்; அதாவது, தனதாக்கையின்கண் எனதென்னும் புத்தியிலாதோன். நிரஹங்காரனுமாவன்; அதாவது, அஞ்ஞானி சிறந்த வொழுக்கத்தானும் வேதவித்தையானும் அகங்காரத்தையடைவதுபோல அவைகளால் அகங்காரத்தையடையாதவன். ராகத்துவேஷங்களின்றியவனாதலின் சுகதுக்கங்களைச் சமமாகவுடையவன். இதனானே, அவன் க்ஷமையுடையவன், தாடன முதலியவைகளானும் குரோத்தை யடையானென்க.

(அ-கை.) இப்போது பூர்வ சுலோகத்திற் கூறப்பட்ட நிர்க்குணப் பிரஹ்ம வேத்தாவினுடைய வேறு விசேடணங்களையு மருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸந்துஷ்டஸ் ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிஶ்சய: ।
மய்யர்பிதமநோபுத்திர் யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ (14)

ப-ம். 3 ஸந்துஷ்ட: 2 ஸததம் 4 யோகீ 5 யதாத்மா 6 த்ருடநிஶ்சய: 7 மயி 8 அர்பிதமநோபுத்தி: 1 ய: 9 மத்பக்த: 10 ஸ: 11 மே 12 ப்ரிய:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்போதும் சந்துஷ்டனும், சமாகிதசித்த முடையவனும், சங்காதத்தை வசம் பண்ணியவனும், திடநிச்சயமுடையவனும், பரமேசுரனிடத்து மனம் புத்திகளை அர்ப்பணஞ்செய்தவனுமாகியவன் எனது பக்தனவன்; எனக்குப் பிரியனவன். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் எப்போதுஞ் சந்துஷ்டனவனோ, அதாவது தேக நிலைத்தற்குக்காரணமாகிய அன்னம், ஆடை முதலியவைகள் கிடைக்கினும் கிடைக்காவிடத்துஞ் சந்தோடமுடையவனவனோ. ஈண்டு, 'ஸததம்' (எப்போதும்) என்னும் பதத்தைச் சர்வ விசேஷணங்களோடும் அந்நுவயம்பண்ணுக. எவன் சர்வதா யோகியாவனோ, அதாவது, எப்போதுஞ் சமாஹித சித்தமுடையனோ. எவன் நிக்கிரகமுடையனோ, அதாவது, தேகேந்திரிய முதலிய கூட்டங்களை வசம்பண்ணியவனோ. திடநிச்சயனோ: திடம் குதார்க்கிகனால் பேதித்தற்கொணாத ஸ்திரமாகிய, நிச்சயமெனும், அகருத்தா அபோக்தா சச்சிதானந்தாத் துவிதீய பிரஹ்மமே நான் என்னும் ஞானமுடையவனோ. அதாவது, திடப்பிரக்ஞன் திட நிச்சயனவன். நிர்க்குணப்பிரஹ்மமாகிய என்னிடத்தில் சங்கற்ப விகற்பமான மனத்தையும், நிச்சயான்மக புத்தியையும் அர்ப்பணஞ்செய்தவனே எனது பக்தனவன்; அதாவது, சர்வோபாதிகளுமொழிந்த சுத்தமான அக்ஷரப்பிரஹ்மத்தைத் தனதான்மவடிவமா யறிந்த தத்துவவேத்தாவானவன் எனக்கு எனதான்ம வடிவனாதலின் மிகப்பிரியனவன் என்னுமர்த்தத்தை மேலைச்சுலோகத்து முணர்ந்துகொள்க. (14)

(அ-கை.) இப்போது மீண்டும் அந்தத் தத்துவவேத்தாவினுடைய விசேஷணங்களை யருளிச்செய்கின்றார்.

சு-ம். யஸ்மாந்நோத்விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ (15)

ப-ம். 1 யஸ்மாத் 3 ந 4 உத்விஜதே 2 லோக: 7 லோகாத் 8 ந 9 உத்விஜதே 5 ச 6 ய: 12 ஹர்ஷாமர்ஷபயோத்வேகை: 13 முக்த: 11 ய: 14 ஸ: 10 ச 15 மே 16 ப்ரிய:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவனினின்றும் இவ்வுலகம் சந்தாபத்தையடைகிறதில்லையோ, எவன் இவ்வுலகத்தினின்றுஞ் சந்தாபத்தையடையானோ, அங்

னமே எவன் அர்ஷம், அமர்ஷம், பயம், உத்வேகம் என்பவைகளை விட்டவனோ, அத்தத்துவவேத்தாவானவன் எனக்கு மிகப்பிரியனாவன். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வப் பிராணிகட்கும் அபயத்தைக்கொடுக்கும் பரமஹம்ச சந்நியாசியினின்று யாதொரு பிராணியும் சந்தாபத்தையடைவதில்லை; அதாவது, தத்துவவேத்தாவானவன் முக்கரணங்களாலும் யாதொரு பிராணியையும் பீடியான் என்பதாம். அபராதமின்றியே சந்தாபத்தை யுண்டு பண்ணுந் துஷ்டப்பிராணியாகிய வுலகத்தினின்றும் எவன் சந்தாபத்தையடைவதில்லையோ, அவன் யாண்டும் அத்வைதான்மாவைப் பார்ப்பவனும் பரமகாருணிகனுமானதால் க்ஷமையே சுபாவமாகவுடையவன். எவன் ஹர்ஷம், அமர்ஷம், பயம், உத்வேகம் என்பவைகளை விடுத்தவன். ஆண்டு, இஷ்டவஸ்து லாபமாகவே உரோமஞ்சிலிர்த்தல், கண்ணீர் ததும்பல் முதலியவைகட்குக் காரணமாகியதும், இன்பத்தை யினிதிலக்குவதுமாகிய சித்தவிருத்தி விசேஷம் ஹர்ஷமாம். பிறர் மேம்பாட்டின் சகியாமைவடிவ சித்தவிருத்தி விசேஷம் அமர்ஷமாம். புலி, கள்வர், மாற்றார் முதலிய அநிஷ்டவஸ்துக்களைக் காண்பதாலுண்டாகும் பீதிவடிவ சித்தவிருத்தி விசேடம் பயமாம். பிராணிகளிலாத ஏகாந்தஸ்தானத்தில் ஒன்றையுங் கைக்கொள்ளாது தனித்திருக்கப்பட்ட நான் எவ்வாறு பிழைப்பேன்? என்னும் வியாகூலரூப சித்தவிருத்தி விசேடம் உத்வேகமாம். என்னுமிவைகளை விடுத்தவன்; அதாவது, அவன் அத்வைத தரிசியானதால் ஹர்ஷாதிகட்கு யோக்கியனாகாமையின் அவைகள் தாமே அவனைவிட்டு விலகிவிடுகின்றன. அதன்பொருட்டு அவனுக்கொரு தொழிலுமின்றாம். இது ஸ்மிருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. யதா பர்வதமாதீப்தம் நாஶ்ரயந்தி ம்ருகத்விஜா: ।
தத்வத் ப்ரஹ்மவிதம் தோஷா நாஶ்ரயந்தே கதாசந ॥ (1)

மந்த்ரௌஷதபலைர்ஜீர்யதே பக்ஷிதம் விஷம் ।
தத்வத் ஸர்வாணி பாபாநி ஜீர்யந்தே ஜ்ஞாநிந: க்ஷணாத் ॥ (2)

(பொ-ள்.) தீயாற் கொளுத்தப்பட்ட மலையை மிருக பக்ஷி முதலியவைகள் ஆசிரயாததுபோல, பிரஹ்மவேத்தாவை ராகத்துவேஷ முதலியவைகள் ஆசிரயிப்பதில்லை. உண்ணப்பட்ட விஷம் மந்திர ஔடதங்களின் பலத்தால் ஜீரணமாவதுபோல, ஞானியினுடைய புண்ணியபாவங்களாகிய கருமங்களனைத்தும் ஒரு கணப்போதில் நாசமாகின்றன என்பதாம். இத்தன்மைத்தான குணமுடையோன் எனது பக்தனாவன். அவன் எனது ஆன்மவடிவனாதலின் எனக்கு மிகப்பிரியனாவன் என்க.

(அ-கை.) அன்றியும்,

சு-ம். அநபேக்ஷ: ஶுசிர்தக்ஷ உதாஸீநோ கதவ்யத: ।
ஸர்வாரம்பபரித்யாகீ யோ மத்பக்த: ஸ மே ப்ரிய: ॥ (16)

ப-ம். 2 அநபேக்ஷ: 3 ஶுசி: 4 தக்ஷ: 5 உதாஸீந: 6 கதவ்யத: 7 ஸர்வாரம்பபரித்யாகீ 1 ய: 8 மத்பக்த: 9 ஸ: 10 மே 11 ப்ரிய:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் நிரபேக்ஷனும், சுசியும், தக்ஷனும், உதாசீனனும், கதவியதனும், சர்வாரம்ப பரித்தியாகம் பண்ணினவனுமாவனோ! அத்தன்மையனான எனது பக்தன் எனக்கு மிகப் பிரியனாவன். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவன் அனபேக்ஷன்; அதாவது, முயற்சியின்றி இச்சைவயத்தாற் கிடைத்த போகசாதனங்களைக்[illegible]

வன் சுசியாவன்; அதாவது, உள்வெளியெனும் இருவகைச்சௌசமுடையவன்; [அ]வற்றில் நீர், மண் முதலியவைகளால் தேகத்தைக் கழுவுதல் பாகிய சௌசமாம், [மை]த்திரி, கருணை முதலியவைகளால் அந்தக்காணத்தை இராகத்துவேஷமுதலிய [வை]களின் ரகிதமாகச்செய்தல் ஆந்தா சௌசமாம். எவன் தக்ஷன்; அதாவது, [அ]வசியமாய் அறியத்தக்கதும் செய்யத்தக்கதுமாகிய பொருள்கள் கிட்டில், அவை[க]ளை அறிதற்குஞ் செய்தற்குஞ் சமர்த்தன். எவன் உதாசீனன்; அதாவது, [மி]த்திரன் முதலியோர்களது பக்ஷத்தையும் கிரகணம் பண்ணுதவன். எவன் கத[வ்]யதன் அதாவது, யாராகினு மொருதுஷ்டன் அடிக்கினும் பீடைவடிவ விகார[மி]லாதோன். எவன் சர்வாரம்ப பரித்தியாகி; ஆண்டு, இவ்வுலக பாவுலக பலன்[க]ளைக்கொடுக்கப்பட்ட லௌகிக வைதிக கர்மங்கள் சர்வாரம்பமாம், அதை விடுத்[த]தாலுகிய பரமஹம்ச சந்நியாசியே சர்வாரம்ப பரித்தியாகியாவன். இத்தன்மைத்[தா]ன எனது பக்தன் எனதான்மவடிவனுதலின் எனக்கு மிகப்பிரியனுவன் என்ப[தா]ம். (16)

(அ-கை.) அன்றியும்,

[மூல]ம். யொ ந ஹ்ரூஷ்யதி ந ஜெஷ்டி ந ஶொசதி ந காஂக்ஷதி ।
ஶுபாஶுபபரித்யாகீ பக்திமாநூஃ ஸ மெ ப்ரியஃ ॥ (17)

[பத]ம். 1 யஃ 2 ந 3 ஹ்ரூஷ்யதி 4 ந 5 ஜெஷ்டி 6 ந 7 ஶொசதி 8 ந 9 காஂக்ஷதி 10 ஶுபாஶுபபரித்யாகீ 12 பக்திமாநு 11 யஃ 13 ஸஃ 14 மெ 15 ப்ரியஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் சந்தோஷ விஷாதங்களிலாதோன், சோகேச்சயின்றியவன், புண்ணிய பாவகருமங்களைப் பரித்தியாகம்பண்ணியவன், அத்தன்[மை]மய பக்திமானுனவன் எனக்குப் பிரியனுவன். (17)

(வி-ம்.) ஆண்டுப் பூர்வம் 13-வது சுலோகத்தில் 'ஸஂதுஷ்டஃ ஸததஂ' [எ]னக்கூறப்பட்ட விசேடணங்களையே இப்போது விரிவாய் அருளிச்செய்கின்றுர்.—[ஹே] அர்ச்சுன! எவன் பிரியாப்பிரிய வஸ்துக்களையடைந்து சந்தோஷ விஷாதங்[க]ளையடையாதவன், கிடைத்த பிரிய வஸ்து நீங்குழி எவன் சோகப்படுவதில்லை, [எ]வன் இஷ்டா நிஷ்ட வஸ்துக்களின் சேர்தல் பிரிதல்களை இச்சிப்பதில்லை. இப்[போ]து 'சர்வாரம்ப பரித்தியாகி' என முற்கூறிய விசேடணத்தை வர்ணிக்கின்றுர்.—'[ஶு]பாஶுபபரித்யாகீ' என.—அர்ச்சுன! இன்பதுன்பங்களைத்தரும் புண்[ணி]யா புண்ணிய கருமங்களைப் பரித்தியாகஞ்செய்தவன்; அத்தன்மைய பரமேசுர[ப]க்தியையுடைய பிரஹ்மவேத்தாவானவன் எனதான்மவடிவனுதலின் எனக்கு [மி]கப்பிரியனுவன். (17)

(அ-கை.) அன்றியும்,

[மூல]ம். ஸமஃ ஶத்ரௌ ச மித்ரெ ச ததா மாநாவமாநயொஃ ।
ஶீதொஷ்ண ஸுகதுஃகெஷு ஸமஃ ஸங்கவிவர்ஜிதஃ ॥ (18)

[பத]ம். 5 ஸமஃ 2 ஶத்ரௌ 1 ச 4 மித்ரெ 3 ச 6 ததா 7 மாநாவமாநயொஃ 8 ஶீதொஷ்ண ஸுகதுஃகெஷு 9 ஸமஃ 10 ஸங்கவிவர்ஜிதஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் எவன் சத்துருமித்துருக்களிடத்திற் சமா[ன]னும், மானுவமானங்களிற் சமானனும், தட்பவெப்ப இன்பதுன்ப முதலியவை[க]ளிற் சமானனும், சங்கமற்றவனும். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகத்தில் அபகாரம்பண்ணும் பிராணி சத்[து]ருவாம். உபகாரம்பண்ணும் பிராணிமித்துருவாம். அவ்விருதன்மையரிடத்துஞ்

சமானன் எவன் அதாவது, தனது பாபபுண்ணியவடிவ பிராரப்த கர்மவசத்தானே இவ்வுடற்கு அபகாரம் பண்ணுகின்றவன் சத்துருவாகின்றான். உபகாரம் பண்ணுகின்றவன் மித்துருவாகின்றான் என மனத்திலாராய்ந்து அவ்விருவர்களிடத்தும் எவன் சமதிருஷ்டியனாகின்றான், எவன் இனியவராற் செய்யப்பட்ட பூஜனரூப மானத்திலும், தீயோராற் செய்யப்பட்ட நிந்தைவடிவ அவமானத்திலும் சமானன் அதாவது, அவ்விரண்டானுமுண்டாகும் சந்தோஷ விஷாதங்களை யடையாதவன், பிராரப்த கருமவசத்தாற் கிட்டிய சீதோஷ்ணசுகதுக்க முதலிய துவந்துவதருமங்களில் எவன் சமானன், எவன் சங்கமிலாதோன்; அதாவது, இவ்வுலகத்தில் சேதனா சேதனரூபங்களாய் விளங்கும் பதார்த்தங்களனைத்தினுள் இப்பொருள் மிகரமணீயமானது என்னும் சோபனப் பிராந்தியிலாதோன் என்பதாம்.

(அ-கை.) அன்றியும்,

சு-ம். துல்யநிந்தாஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித் ।
அநிகேத: ஸ்திரமதிர்பக்திமாந்மே ப்ரியோ நர: ॥ (19)

ப-ம். 1 துல்யநிந்தாஸ்துதி: 2 மௌநீ 5 ஸந்துஷ்ட: 3 யேந 4 கேநசித் 6 அநிகேத: 7 ஸ்திரமதி: 8 பக்திமாந் 10 மே 11 ப்ரிய: 9 நர:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நிந்தைஸ்துதிகளிற் சமனும், மௌனமுடையவனும், எவ்வித அன்னவஸ்திரங்களானுஞ் சந்துஷ்டனும், இல்லமிலானும், திரமனத்தோனுமாகிய பக்திமானே எனக்குப் பிரியனாகின்றான். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஒருவருடைய தோடத்தைக்கூறல் நிந்தையாம், ஒருவருடைய குணத்தைக்கூறல் துதியாம், இவ்விரண்டினுஞ் சமன்; அதாவது, அஞ்ஞானி தனது துதி நிந்தைகளைக்கேட்டு இன்பதுன்பங்களை யடைவதுபோல, தனது துதி நிந்தைகளைக்கேட்டுச் சுகதுக்கங்களையடையாதவன். மௌனி; அதாவது தனது வாக்கிந்திரியத்தை நிக்கிரகம் பண்ணியவன். அற்றேல், ஹே பகவன்! தனது சரீரயாத்திரா நிர்வாகத்தின்பொருட்டேனும், அவனுக்கு வாக்கின் தொழில் அவசியம் வேண்டற்பாலதன்றோ? என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.—'சந்துஷ்டோயேநகேநசித்' என. அர்ச்சுன! தனது முயற்சியின்றியே பிராரப்தத்தின் வலியால் கிட்டிய தேகநிலைத்தற்குக் காரணமான எவ்வித அன்னவஸ்திர முதலியவைகளினாலேயும் சந்துஷ்டன்; அதாவது, கிடைத்ததற்கதிகமாய் விரும்பாதவன். மனையிலான்; அதாவது, நியமத்தோடு ஓரிடத்து வசியாதவன். ஸ்திரமதி அதாவது, திரபாமார்த்த சத்திய வஸ்துவிஷயக, மதிபுத்தி விருத்தி, உடையவன்; இத்தன்மைய பக்திமானாகிய வன் எனதான்மவடிவனாதலின் எனக்கு மிகப்பிரியமாவன். ஆண்டுச் சாத்திரத்தில் நிர்க்குணப் பிரஹ்மபக்திக்கு இவ்விலக்கணங் கூறப்பட்டிருக்கிறது:—

ஆ-சு. ஸர்வத்ர பக்திரேஷா விஜ்ஞேயஸ்வ தத்வதீக்ஷணம் ।
அஹைதுக்யவ்யவஹிதா யா பக்தி: புருஷோத்தமே ॥
லக்ஷணம் பக்தியோகஸ்ய நிர்குணஸ்ய உதாஹ்ருதம்

(பொ-ள்.) உலகனைத்திலும் அஸ்திபாதிப்பிரிய ரூபமாய்ப் பரமான்மாவைத் தரிசித்தலே அதனது ஏகாந்தபக்தியாம்; அதாவது, அனன்யபக்தியாம். விபரீத பாவனையின் நீக்கம் முதலிய பயனுற்றதும், விஜாதீயவிருத்தி மறைப்பிலாததுமாகிய பிரஹ்மவேத்தாவின் பிரத்திக்கபின்ன பரமான்மதேவனிடத்துள்ள அகண்டாகார விருத்திவடிவ பக்தியே, வித்துவானால் நிர்க்குணப்பிரஹ்ம விஷயக

பக்திவடிவமெனக் கூறப்பட்டிருக்கிறது என்பதாம். இத்தன்மைய பக்தியுடைய பிரஹ்மவேத்தாவையே ஈண்டுப் பகவான் பக்திமான், பக்தன் என்னுஞ் சத்தங்களாற் கூறியருளினர். ஈண்டுப் பகவான் மறித்து மறித்தும் பக்தியை அருளியது அனன்யபக்தியே மோட்சப்பேற்றில் புஷ்கல (சிறந்த) காரணமென்னும் அர்த்தத்தைத் திடமுறுத்துதற்பொருட்டாம். இது சுருதியினுங் கூறப்பட்டுளது :—

ஆ-சு. 𑌯𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑍇 𑌪𑌰𑌾𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌯𑌥𑌾 𑌦𑍇𑌵𑍇 𑌤𑌥𑌾 𑌗𑍁𑌰𑍌 ।
𑌤𑌸𑍍𑌯𑍈𑌤𑍇 𑌕𑌥𑌿𑌤𑌾 𑌹𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑍍𑌤𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ॥

(பொ-ள்.) எவ்வதிகாரிக்குப் பரமான்மாவினிடத்தில் அனன்யபக்தியிருப்பதுபோலவே, பிரஹ்மவேத்தாவாகிய குருவினிடத்திலும் அனன்யபக்தியிருக்கிறதோ அந்த மகாத்துமாவிற்கே வேதங்கூறிய பொருள் இனிது விளங்கும். ()

(அ-கை.) ஆண்டு, '𑌅𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂' என்பது முதலிய சுலோகங்களால் நிர்க்குணமான அக்ஷரப் பிரஹ்மசிந்தனை பண்ணுஞ் சீவன்முக்த பரமஹம்ஸ சந்நியாசியின் இலக்கணவடிவமும், இயல்பானே பெறப்பட்ட அத்துவேஷ்டாத்தன்மை முதலிய தர்மங்களுங் கூறப்பட்டன. வார்த்திகத்தில் ஸ்ரீ சுரேசுராசாரியராலு மிவ்வார்த்தை கூறப்பட்டுளது :—

ஆ-சு. 𑌉𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌵𑌬𑍋𑌧𑌸𑍍𑌯 𑌹𑍍𑌯𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌯𑍋 𑌗𑍁𑌣𑌾𑌃 ।
𑌅𑌯𑌤𑍍𑌨𑌤𑍋 𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌤𑍁 𑌸𑌾𑌧𑌨𑌰𑍂𑌪𑌿𑌣𑌃 ॥

(பொ-ள்.) குருசாஸ்திரோபதேசத்தால் நான் பிரஹ்மசொரூபன் என்னும் ஆன்மஞானமுண்டாகிய பிரஹ்மவேத்தாவிற்கு ஸ்ரீ பகவான் திருவாய்மலர்ந்தருளிய அத்துவேஷ்டிருத்தன்மை முதலிய குணங்கள் பிரயத்தனமின்றியே இயல்பானே பெறப்படுவனவாம். எங்ஙனம் முமுட்சுக்களிடத்து அக்குணங்கள் முயற்சியாற் பெறுவனவும், சாதனரூபமுமாகின்றனவோ அங்ஙனம் பிரஹ்மவேத்தாவினிடத்து அக்குணங்கள் பிரயத்தனத்தாற் பெறுவனவும், சாதனரூபமுமன்றாம் என்க. இந்த அத்துவேஷ்டிருத்வ முதலிய தருமமே முன்னர்க்கூறப்பட்ட திடப்பிரக்ஞனது இலக்கணரூபமாய்க் கூறப்பட்டது. அக்குணங்களே முயற்சியாற் சம்பாதித்த முமுட்சுக்கட்கு மோட்சசாதனரூபங்களாம் என்னு மர்த்தத்தைப் பிரதிபாதனஞ்செய்து, ஸ்ரீ பகவான் இவ்வத்தியாயத்தைச் சமாப்திசெய்கின்றார்.

சு-ம். 𑌯𑍇 𑌤𑍁 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌮𑌿𑌦𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑌾 𑌭𑌕𑍍𑌤𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌤𑍀𑌵 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ॥ (20)

ப-ம். 2 𑌯𑍇 1 𑌤𑍁 8 𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 5 𑌇𑌦𑌂 6 𑌯𑌥𑌾 7 𑌉𑌕𑍍𑌤𑌂 9 𑌪𑌰𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇
3 𑌶𑍍𑌰𑌦𑍍𑌦𑌧𑌾𑌨𑌾𑌃 4 𑌮𑌤𑍍𑌪𑌰𑌮𑌾𑌃 11 𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 10 𑌤𑍇 13 𑌅𑌤𑍀𑌵 𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌃

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் எம்முமுட்சுக்கள் சிரத்தாவான்களாய், பரமேசுரபராயணர்களாய் இந்த முன்னர்க்கூறிய தருமரூப அமிருதத்தைச் சம்பாதிக்கின்றார்களோ! அந்த முமுட்சுக்களாகிய பக்தர்களும் எனக்கு மிகப்பிரியர்கள்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர்க்கூறிய சீவன்முக்தரின் வேறான முமுட்சுக்களாகிய சந்நியாசிகள் சிரத்தாவான்களாய்; அதாவது, இந்த அத்துவேஷ்டிருத்துவ முதலிய தருமங்களே மோட்சசாதனம் என்னும் விசுவாசவடிவ சிரத்தையுடையர்களாய், எனது பரர்களாய்; அதாவது, அக்ஷரமும் நிர்க்குணப் பிரஹ்மமுமாகிய நானே பரமமெனும் அடையத்தக்க நிரதிசயகதி எவர்கட்கு அத்தன்மைய எனது பரர்களாய், இந்தப் பூர்வங்கூறிய தர்மரூப அமிருதத்தைச் சம்பாதிக்

கின்றார்கள்: அதாவது, மோக்ஷவடிவ அமிருதத்திற்குச் சாதனமாதலினாலும், அமிருதம்போலச் சுவைத்தற்கு யோக்கியமாதலினாலும் அமிருதரூபமாகியதும், 'அத்வேஷ்டா ஸர்வபூதாநாம்' என்பது முதலிய வாக்கியங்களாற் கூறப்பட்டதுமாகிய அத்துவேஷ்டிருத்தன்மை முதலிய தருமங்கள் முமுட்சுக்களான் முயற்சியாற் சம்பாதிக்கற்பாலன; அப்பக்தர்கள் அதாவது, நிருபாதிகப் பிரஹ்மமாகிய என்னைப் பஜனைபண்ணப்பட்டவர்கள், எனக்கு மிகப்பிரியர்கள் என்னும் இப்பகவான் வாக்கியமானது 'ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:' என முன்னர்க்கூறியவாக்கியத்தாற் குறிப்பித்த அர்த்தத்தின் உபசம்மாரமாம். ஆகலின், இச்சுலோகத்திற் கிப்பொருள்பெறப்பட்டது:—இந்த அத்துவேஷ்டிருத்தன்மை முதலிய தருமரூப அமிருதத்தை, சிரத்தையோடு சம்பாதிக்கப்பட்ட அதிகாரிகள் எனக்கு மிகப் பிரியர்களாதலின், ஞானிகட்குச் சுபாவசித்தமாதலால் இலக்கணவடிவமாயினும் அத்தருமம் தத்துவஞானேச்சையுடையவரும், விஷ்ணுவின் பரமபதத்தையடைய விரும்பியவருமாகிய முமுட்சுக்களால் ஆன்மஞான உபாயரூபமாய் மிக முயற்சியாற் சம்பாதிக்கத்தக்கதாம் என்க. இதனாலிப்பொருள் பெறப்பட்டது.—முன்னர்க்கூறிய சோபாதிக சகுணப்பிரஹ்மோபாசனையின் பரிபக்குவத்தின் பின்னர், நிருபாதிக நிர்க்குணப் பிரஹ்மசிந்தனை பண்ணியவனும், அத்துவேஷ்டிருத்துவ தருமமுடையவனும், இடைவிடாது சிரவணாதிகள் செய்பவனுமாகிய உத்தமாதிகாரிக்கு வேதாந்தவாக்கியார்த்தத்தின் தத்துவ சாக்ஷாத்காரம் அவசியமாயுண்டாம். அதனால் அவனுக்கு அவசியமாய் மோட்சப் பிராப்தியுமாம். ஆதலின், மோட்சத்திற்குக் காரணரூபமாகிய வேதாந்தமகா வாக்கியார்த்தத்தின் அந்நுவய யோக்கிய தத்பதார்த்தவடிவ பரமேசுரன் அதிகாரிகளால் அவசியமாய்ச் சிந்திக்கத்தக்கவன்; என்னு மர்த்தம் உபாசனாகாண்டரூபமாகிய இம்மத்திய ஷட்கத்தாற் சித்தமானது என்பதாம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யாராகிய ஸ்ரீ 'சித்கனாநந்தகிரி' ஸ்வாமிகளாலியற்றியருளிய பிராகிருதடீகையெனப் பெயரிய கீதா கூடார்த்ததீபிகையின்,

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பதின்மூன்றாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

ஆண்டு, பூர்வம் முதலாவது அத்தியாயம் முதல் ஆறாவது அத்தியாயமீறாகிய முதலாவது ஷட்கத்தில் துவம்பதார்த்த நிரூபணம் பண்ணப்பட்டது. ஏழாவது அத்தியாயம் முதல் பன்னிரண்டாவது அத்தியாயமீறாகிய இரண்டாவது ஷட்கத்தில் தத்பதார்த்த நிரூபணம் பண்ணப்பட்டது. இப்போது சோதித தத்துவம் பதார்த்தங்களின் அபேதரூப மகாவாக்கியார்த்தத்தைக் கூறுவதும், தத்துவஞானத்தைப் பிரதானமாகவுடையதுமாகிய பதின்மூன்றாவது அத்தியாய முதற்கொண்டு பதினெட்டாவது அத்தியாயமீறாகிய மூன்றாவது

ஷட்கம் ஆரம்பிக்கப்படுகின்றது. ஆண்டுப் பூர்வம் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் '𑌤𑍇𑌷𑌾𑌮𑌹𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑌰𑍍𑌤𑌾 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌾𑌤𑍍 𑌭𑌵𑌾𑌮𑌿' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் தம்மாட்டு அதிகாரி ஜனங்களைப் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றுங் கருத்திருத்தன்மையுளதெனக் கூறியருளினர். அந்த ஆன்ம விஷயக அஞ்ஞானரூப மிருத்துவினின்றுங் கரையேற்றுந்தன்மை ஆன்மஞானமின்றி அமையாததாம். மற்றேரு, 'தரதிசோகமாத்மவித்.' தரத்யவித்யாம் விததாம் ஹ்ருதியஸ்மின்னிவேசிதே, என்பது முதலிய சுருதிஸ்மிருதிவாக்கியங்கள் ஆன்மஞானத்தானே அவித்தியாரூப அஞ்ஞான நிவிருத்தியைக்கூறுகின்றன. ஆதலின், எவ்வான்மஞானத்தால் மிருத்தியு சம்சார நிவிருத்தியாகின்றதோ, எத்தத்துவ ஞானியாகிய அத்துவேஷ்டிருத்துவாதி குணமுடைய சந்நியாசி பன்னிரண்டாவது அத்தியாயத்திற் கூறப்பட்டனரே! அவ்வான்மஞானம் இப்போது கூறத்தக்கதவசியமாம். அந்தத்தத்துவஞானம் அத்துவிதீயப் பரமான்மாவோடு சீவான்மாபேதத்தையே விஷயம்பண்ணுவதாம்; என்னை, பிறப்பிறப்பு முதலாகிய அனர்த்தங்களனைத்திற்கும் சீவப் பிரஹ்மபேதப் பிராந்தியே காரணமாதலினென்க.

𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌃 𑌸 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌯 𑌇𑌹 𑌨𑌾𑌨𑍇𑌵 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।

(பொ-ள்.) அத்துவிதீயப் பிரஹ்மத்தின்கண்ணே துவைதபாவத்தைக்காண்பவன் அடிக்கடி பிறப்பிறப்பையடைவன். அத்தன்மைய பேதப்பிராந்தி நிவிருத்தி சீவப்பிரஹ்ம அபேத ஞானமின்றியுண்டாகாது; மற்றேரு, அதனானே நிவிருத்தியாம். இதிலிச் சங்கையுண்டாகின்றது:—நான் சுகி, நான் துக்கி, நான் கர்த்தா நான் போக்தா என்னுமநுபவம் சர்வப்பிராணிகட்குமாமாதலின், இச்சீவான்மா சுகதுக்கமுதலிய சம்சாரமுடையதும் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறுமாம். ஒருகால் சர்வ சரீரங்களிலும் ஆன்மா ஒன்றாகிலோ! ஒரு சரீரத்திற் சுகதுக்கா நுபவமுண்டாகுமிடத்து எல்லாச் சரீரங்களிலும் அந்தச் சுகதுக்காநுபவம் உண்டாதல் வேண்டும். அங்ஙனமின்மையின், ஒவ்வொரு சரீரத்திலும் ஆன்மாவெவ்வேறாம். பரமான்மாவோ சுகதுக்கமுதலிய பந்தமற்றதும், ஏகமுமாம். அத்தன்மைய அநேக சம்சாரிகளாகிய சீவர்கட்கு ஏகமான அசம்சாரியாகிய பரமான்மாவோடு அபேதஞ் சம்பவியாது என்னுஞ் சங்கையுண்டாகவே: அந்தச் சுகதுக்கமுதலிய வடிவ சம்சாரமும் வெவ்வேறாதலும் அவித்தியாகற்பித அநான்மவஸ்துவின் தருமங்களேயாம், சீவான்மாவினதன்று; என்னும் விவேசனம் அவசியமாய்ச் செய்யவேண்டும். அதன்பொருட்டுத் தேகேந்திரியாந்தக்கரண பிராணனென்பன முதலியவடிவ க்ஷேத்திரத்தினின்றும் வேறுபிரித்து க்ஷேத்திரக்ஞனெனும் சீவான்மாச் சர்வ க்ஷேத்திரங்களிலும் ஒன்றேயாம், நிர்விகாரமாம் என்னுமர்த்தத்தைப் பிரதிபாதிப்பான் இவ்வத்தியாயத்தில் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் விவேசனம் பண்ணப்படுகின்றது. ஆண்டுப் பூர்வம் ஏழாவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவானால் குறிப்பித்தருளப்பட்ட பூமி முதலிய எண்வகையான அபரைப் பிரகிருதியெனும் க்ஷேத்திரத்தையும், சீவவடிவ பரப்பிரகிருதியெனும் க்ஷேத்திரஞ்ஞனையும் வெவ்வேறாய் நிரூபணஞ்செய்பவராய் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக் கருளிச்செய்கின்றார்.

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

சு-ம். 𑌇𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌏𑌤𑌦𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞 𑌇𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃 ॥

ப-ம். 2 𑌇𑌦𑌂 3 𑌶𑌰𑍀𑌰𑌂 1 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 4 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 5 𑌇𑌤𑌿 6 𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 7 𑌏𑌤𑌤𑍍 8 𑌯𑌃 9 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 10 𑌤𑌂 14 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 12 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌂 13 𑌇𑌤𑌿 11 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சரீரம் க்ஷேத்திரமெனப்படும், இதையறிபவன் க்ஷேத்திரக்ஞனெனப்படுவன் என அவ்வுணர்வுடையோரறைவர். (1)

(வி-ம்.) ஹே கௌந்தேய! அதாவது, குந்திபுத்திர! சுரோத்திரமுதலிய பத்திந்திரியங்களோடு கூடியதும், அந்தக்கரணம், ஐவகைப் பிராணன் இவைகளோடு கூடியதுமாகிய இந்த இன்பதுன்ப நுகர்தற்கிடமான சரீரம் க்ஷேத்திரமெனப்படும். க்ஷேத்திர சப்தப்பொருள் கூறப்படுகின்றது:— ஆண்டு, அவித்தையால் ஆன்மாவை க்ஷயம்பண்ணுவதும், வித்தையால் ஆன்மாவை யிரட்சிப்பதும் எதுவோ அது க்ஷேத்திரமெனப்படும். அல்லது, இராகத்துவேஷமுதலிய தோடங்களையுடையன் எதனால் க்ஷயத்தையடைகின்றனோ அது க்ஷேத்திரமாம். அல்லது, சமதமமுதலிய சாதனங்களையுடையவனுக்குப் பிறப்பிறப்பாதி அனர்த்தவடிவ க்ஷயத்தினின்றும் இரட்சிப்பது க்ஷேத்திரமாம். அல்லது, எப்போதும் தீபசிகையைப்போன்று தான் நஷ்டமாகின்றது க்ஷேத்திரமாம். அல்லது, சுகதுக்க முதலிய பலோத்பத்தியில் உலகசித்த பூமிரூபக்ஷேத்திரம்போல, ஆசாணைசெய்வது க்ஷேத்திரமாம். இத்தன்மைய இச்சரீரரூப க்ஷேத்திரத்தை எவன் அறிகின்றனோ; அதாவது, இதில் நானெனதென்று அபிமானிக்கின்றனோ அவன் க்ஷேத்திரக்ஞனெனப்படுவன். கருத்திதுவாம்:—பயிரிடப்பட்ட பயிர்த்தொழிலோன் பூமிவடிவ க்ஷேத்திரபலத்தை நுகர்வதுபோல, இச்சிவனும் இச்சங்காதவடிவ க்ஷேத்திரத்தின் சுகதுக்கமாகிய பலத்தை நுகர்பவனாதலின், இவன் க்ஷேத்திரக்ஞனெனப்படுகின்றான். அற்றேல், ஹே பகவன்! இச்சீவனை க்ஷேத்திரக்ஞனெனக் கூறுவோர்யாவரெனின் அருளிச்செய்கின்றார் 'தத்விதஃ' என. அர்ச்சுன! இந்த க்ஷேத்திரம் அசத்து சடதுக்கமெனவும், க்ஷேத்திரக்ஞனாகிய ஆன்மா சச்சிதானந்தரூபமெனவும், இவ்விரண்டையும் வேறு பிரித்தறியப்பட்ட விவேகியே இச்சீவான்மாவை க்ஷேத்திரக்ஞனெனக் கூறுகின்றான் என்க. சண்டு ஒரு மூலப் புஸ்தகத்தில் 'ஸ்ரீபகவாநுவாச । இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' என்னுஞ் சுலோகத்திற்குப் பூர்வம் அர்ச்சுனனுடைய வினாவடிவமான இந்தச்சுலோகமிருக்கின்றது:— (1)

அர்ஜுந உவாச.

ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞமேவ ச ।
ஏதத்வேதிதுமிச்சாமி ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ச கேசவ ॥

(பொ-ள்.) ஹே கேசவ! பிரகிருதி, புருஷன், க்ஷேத்திரம், க்ஷேத்திரஞ்ஞன், ஞானம், ஞேயம் என்பவைகள் யாவை என அறியவிரும்புகிறேன், தாங்கள் கிருபையோடு இதை எனக்கருளிச்செய்வீர்களாக என்பதாம். ஆனால் இந்தச் சுலோகத்தை ஸ்ரீ பாடியக்காரரே முதல் ஒருரைகாரரும் கொள்ளவில்லையாதலின், இந்தச் சுலோகம் யாராலுமொருவித்துவானாற்செய்யப்பட்டதென் றுணரப்படுகிறது. ஆதலின் இதின்றொடக்கத்தில் எழுதவில்லையென்க. (1)

(அ-கை.) இவ்வாறு தேகேந்திரியாந்தக்கரணமுதலிய வடிவக்ஷேத்திரத்தினும் விலட்சணமான சுவப்பிரகாச க்ஷேத்திரக்ஞனை யருளிச்செய்து, இப்போது க்ஷேத்திரக்ஞனெனுஞ் சீவனுக்கு அசம்சாரியாகிய பரமான்மாவோடு ஏகத்வரூப பாரமார்த்திக சொரூபத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம் யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம ॥ ௨ ॥ (2)

ப-ம். 4 க்ஷேத்ரஜ்ஞம் 2 அ 6 அபி 5 மாம் 7 வித்தி 3 ஸர்வக்ஷேத்ரேஷு 1 ஹாரத 8 க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ: 10 ஜ்ஞாநம் 9 யத் 11 தத் 12 ஜ்ஞாநம் 14 மதம் 13 மம.

(அ-ம்.) ஹே பாரத! மற்றும் சர்வ க்ஷேத்திரங்களிலுமுள்ள க்ஷேத்திரக்ஞனை நீ அத்துவிதீயப் பிரஹ்மசொரூபமென்றே யுணர்தி. இவ்விரண்டின் ஞானமே எனக்கபிமதமானதாம். (2)

(வி-ம்.) ஹே பாரத! அதாவது பரதவம்சத்துதித்த அர்ச்சுனனே அல்லது, ஆன்மாகார விருத்தி பா வெனப்படும் அதிலெப்போதும் ரமிப்பவனே அல்லது அகண்ட விருத்தியில் எப்போதும் பிரீதியுடைய பாரதனே அதாவது ஆன்ம ஞானத்திற் பிரீதியுடைய அர்ச்சுன! கூறிப்போந்த தேகேந்திரியாதி சங்காதவடிவ சர்வ க்ஷேத்திரங்களிலும் அதிட்டானரூபமாயிருக்கப்பட்ட ஏகனாகிய க்ஷேத்திரக்ஞன் சுயம்பிரகாச சைதன்யரூபன் நித்தியன் விபு, அவித்தியாகற்பித கர்த்திருத்துவ போக்திருத்துவங்களை யுடையவன் அத்தன்மையனாகிய க்ஷேத்திரக்ஞனை அவித்தியா கற்பிதரூபத்தைவிடுத்து நானே பரமேசுரனென்றுணர்தி அதாவது அந்தக்கரணமுதலிய சர்வோபாதிரகித பிரத்தியக்கான்மாவாகிய க்ஷேத்திரக்ஞனை அசம்சாரியாகிய அத்துவிதீயப் பிரஹ்மானந்த சொரூபனென்றுணர்தி.

ஆ-சு. அயமாத்மா ப்ரஹ்ம, அஹம் ப்ரஹ்மாஸ்மி, தத்த்வமஸி, ப்ரஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம।

(பொ-ள்.) இச்சீவான்மா பிரஹ்மசொரூபம், நான் பிரஹ்மசொரூபன், அது நீயாகின்றாய் இவ்வானந்தரூபப் பிரக்ஞானமெனுஞ் சீவன் பிரஹ்மசொரூபன் என்பதாம். ஹே அர்ச்சுன! முன்னர்க்கூறிய இந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களுடைய ஞானம்; அதாவது, மாயாகற்பிதமாதலின் இந்த க்ஷேத்திரம் கயிற்றரவுபோல மித்தியாவடிவமாம். இந்த க்ஷேத்திரரூப மயக்கத்திற் கதிட்டானமாதலின் க்ஷேத்திரக்ஞனெனு மான்மாபரமார்த்த சத்தியமாம், என்னு ஞானமே மோட்சசாதனமானதால், ஞானமாமென்பது எனது சம்மதம்; அதாவது, நான் அதையே அவித்தைக்கு விரோதியாகிய பிரகாசரூபமென எண்ணுகின்றேன். இத்தன்மைத்தான ஞானத்திற்கு வேறான லௌகிக வைதிகஞானங்களனைத்தும், அவித்தியாவிரோதிகளாகாமையின் அஞ்ஞானரூபமேயாமென்க. ஈண்டு ஒரு வியாக்கியானத்திலோ, 'க்ஷேத்திரக்ஞஞ்சாபி' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரத்தால் முன்னர்க்கூறிய க்ஷேத்திரக்ஞனையுங் கொள்ளல்வேண்டும்; அதாவது, க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞரூபங்களும் பரமேசுரனாகிய நானேயென் றுணர்தி. ஆண்டு, க்ஷேத்திரக்ஞனெனும் சீவான்மாப் பிரஹ்மசொரூபமென்பதில்,முன்னரே சுருதிப்பிரமாணங்கூறப்பட்டது. க்ஷேத்திரம் பிரஹ்மரூபமென்பதில் 'பிரஹ்மைவ இதம்சர்வம்' 'சர்வம்கலு இதம்பிரஹ்ம' என்பது முதலிய சுருதிவாக்கியங்கள் பல பிரமாணமாயுண்டென்க. (2)

(அ-கை.) ஆண்டு, முன்னிரண்டு சுலோகங்களாற் சுருக்கமாய்க் கூறிய அர்த்தத்தை இப்போது விரித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் ஆரம்பித்தருளுகின்றார்.

சு-ம். தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஶ்ச யத் ।
ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத்ஸமாஸேந மே ஶ்ருணு ॥ (3)

ப-ம். 1 தத் 2 க்ஷேத்ரம் 3 யத் 4 ச 5 யாத்ருக் 6 ச 7 யத்விகாரி 9 யத: 8 ச 10 யத் 12 ஸ: 11 ச 13 ய: 15 யத்ப்ரபாவ: 14 ச 16 தத் 18 ஸமாஸேந 17 மே 19 ஶ்ருணு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சரீரமாகிய க்ஷேத்திரம் எவ்வியல்புடையது, எந்த இச்சை முதலிய தருமங்களுடையது, எவ்விந்திரிய முதலிய விகாரமுடையது, எந்த க்ஷேத்திரரூபகாரணத்தால் எக்காரியமுண்டாகின்றது, அந்த க்ஷேத்திரக்ஞன் எத்தன்மையுடையவன், அவனுடைய சொரூபம் எப்பிரபாவமுடையது, என்னு மனைத்தையும் எனது வாக்கியத்தால் சுருக்கமாய்க்கேட்பாய். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே' என முன்னர்க்கூறிய வாக்கியத்தாற் கூறப்பட்ட தேகேந்திரிய அந்தக்கரணங்கள் என்பன முதலிய சடவர்க்கரூப க்ஷேத்திரமானது எந்தச் சட திருசிய பரிச்சின்ன முதலிய சுபாவங்களையுடையது, எந்த இச்சாத்துவேஷ முதலிய தருமங்களையுடையது, எவ்விந்திரிய விகாரங்களையுடையது, எந்தக்ஷேத்திரவடிவ காரணத்தால் எக்காரியமுண்டாகின்றது, அல்லது, 'யதஶ்ச' என்னும் வாக்கியத்திற்கு வேறு பொருள்செய்க. அந்த க்ஷேத்திரம் எந்தப் பிரகிருதி புருஷர்களின் சய்யோகத்தால் உண்டானது. எந்தத் தாவரசங்கம முதலிய பேதங்களால் வெவ்வேறானது என்ப. இவ்வளவானே, க்ஷேத்திரத்தின் சொரூபம் விசாரிக்கப்பட்டது. இப்போது க்ஷேத்திரக்ஞனது சொரூபத்தை விசாரிக்கின்றார்:— 'ஸ ச' ஹே அர்ச்சுன! 'ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:' என்னும் வாக்கியத்தால் கூறப்பட்ட க்ஷேத்திரக்ஞனும் தன் சொரூபத்தால் எந்த சுவப்பிரகாச சைதன்ய ஆனந்தசுபாவமுடையது, உபாதியாலாய எந்தச் சக்திரூப பிரபாவமுடையது என்க. இவ்விசேடணங்களைத்தொடுங்கூடிய க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தை எனது வாக்கியத்தாற் சுருக்கமாய்க்கேட்பாய்; அதாவது, கேட்டு நிச்சயம்பண்ணுதி என்பதாம். (3)

(அ-கை.) ஹே பகவன்! பூர்வ சுலோகத்தில் தாங்கள் க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தைச் சுருக்கமாய்க்கேட்பாய் எனத் திருவாய் மலர்ந்தருளினீர். தாங்கள் அவ்வணந் திருவாய்மலர்ந்தருளியது, யாரேனு முன்னர் விரிவாக அதை கூறியிருப்பரேல் பொருந்தும்; என்னை எப்பொருள் முன்னர் விரிவாய்க் கூறப்பட்டதோ அப்பொருளே பின்னர்ச் சுருக்கமாய்க் கூறப்படுகின்றது. முன்னர் விரித்துரையாத அர்த்தத்தைச் சுருக்கிக்கூறல் அமையாது. அந்த க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தை முன்னர் யார்விரித்துக்கூறினர். எவ்வணம் விரித்துக்கூறிய அர்த்தத்தைத் தாங்களிப்போது சுருக்கியருளிச்செய்கின்றீர். என அர்ச்சுனன் சங்கையுண்டாக, ஸ்ரீ பகவான், கேட்போர்களின் புத்தியில் க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபவிஷயகப் பிரீதியை யுண்டுபண்ணுதற்பொருட்டு அச்சொரூபத்தைத் துதித்தருளுகின்றார்.

சு-ம். ருஷிபிர்பஹுதா கீதம் சந்தோபிர்விவிதை: ப்ருதக் ।
ப்ரஹ்மஸூத்ரபதைஶ்சைவ ஹேதுமத்பிர்விநிஶ்சிதை: ॥ (4)

ப-ம். 1 ருஷிபி: 2 பஹுதா 3 கீதம் 5 சந்தோபி: 4 விவிதை: 6 ப்ருதக் 10 ப்ரஹ்மஸூத்ரபதை: 7 ச 11 ஏவ 8 ஹேதுமத்பி: 9 விநிஶ்சிதை:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தை ஸ்ரீ வசிஷ்டர் முதலிய ரிஷிகள் பலவகையாய்க் கூறியிருக்கின்றார்கள். அங்ஙனமே, இருக்கு முதலிய வேதங்களும் பலவகையாய் வெவ்வேறாய்க் கூறியிருக்கின்றன. யுக்தியுடையதும், நிச்சயார்த்தமுடையதுமாகிய பிரஹ்மசூத்திரபதங்களாலும் அச்சொரூபம் பலவகையாய்க் கூறப்பட்டிருக்கிறது. (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இந்த க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞரின் சொரூபம் ஸ்ரீ வசிஷ்டர் முதலிய ரிஷிகளாலும் யோகசாத்திரத்தில் தாரணை தியானங்களின் விஷயரூபமாய்ப் பலவகையாய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இத்துணை கூறியதால் அச்சொரூபத்தில் யோகசாத்திரப் பிரதிபாத்தியத்தன்மை கூறப்பட்டது. பல விதமான சந்தங்களினாலும் அச்சொரூபம் வெவ்வேறாய்க் கூறப்பட்டிருக்கிறது; அதாவது, நித்திய நைமித்திககாமிய கர்ம முதலியவைகளை விஷயம்பண்ணும் இருக்கு முதலிய வேதமந்திரங்களாலும், பிராமணங்களாலும், வெவ்வேறாய் அச்சொரூபம் கூறப்பட்டிருக்கிறது. இத்துணை கூறியதால், ஸ்ரீ பகவான் அச்சொரூபத்தில் கர்மகாண்டப் பிரதிபாத்தியத்தன்மையை அருளிச்செய்தனர். பிரஹ்மசூத்திர பதங்களாலும் அச்சொரூபம் பலவிதமாய்ப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டுப் பிரஹ்ம என்னும் பதத்தைச் சூத்திரமென்பதோடும் 'பத' என்னும் பதத்தோடும் அன்னுவயம் பண்ணுவதால் பிரஹ்மசூத்திர பிரஹ்மபதமென இரு வசனங்கள் சித்தமாகின்றன. ஆண்டு, எவ்வாக்கியம் சிறிதளவு வியவதானத்தோடு பிரஹ்மப்பிரதிபாதகமாமோ, அவ்வாக்கியம் பிரஹ்மசூத்திரமெனப்படும். 'யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபி ஸம்விஶந்தி தத் ப்ரஹ்ம' பொருள்:—எதினின்று இப்பூதங்களனைத்து முண்டாகின்றனவோ, தோற்றிய பூதங்களனைத்தும் எதனாற் சீவிக்கின்றனவோ, விநாசமாகிய பூதங்களனைத்தும் எதில் இலயத்தையடைகின்றனவோ, அதுவே பிரஹ்மம். என்பது முதலிய பிரஹ்மதடத்த லக்ஷணத்தைப் பிரதிபாதிக்கும் உபநிஷத்வாக்கியம் பிரஹ்மசூத்திரமாம். எவ்வாக்கியம் நேராகவே பிரஹ்மப்பிரதிபாதகமாமோ அவ்வாக்கியம் பிரஹ்மபதமாம். பிரஹ்மத்தின் சொரூபலட்சணத்தைக்கூறும் சத்தியம், ஞானமனந்தம், பிரஹ்மம் என்பது முதலிய உபநிடதவாக்கியங்கள்போலவாம். அத்தன்மைய பிரஹ்மசூத்திரவடிவ வாக்கியங்களும், பிரஹ்மபதரூப வாக்கியங்களும், க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தைப் பலவாறாய்க்கூறியிருக்கின்றன. அவ்வாக்கியங்கள் எத்தன்மையவாமெனின் ஹேதுவையுடையன; அதாவது, இட்டமான பொருட்குச் சாதகமாகிய பலவிதமான யுக்திகளைக்கூறுவனவாம். அந்த யுக்திகள் இவைகளாம்:—சாந்தோக்கிய வுபநிடதத்தில் உத்தாலகரிஷியானவர் சுவேதகேதுவாகிய புத்திரனைக்குறித்து, 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்' ஹே இனியமைந்தனாகிய சுவேதகேதுவே! காணப்படு மிவ்வுலகம் தனது தோற்றத்திற்குப் பூர்வம் சத்துவடிவமாயிருந்தது. அந்தச் சத்து ஒரே அத்துவிதீயமாகவேயிருந்தது எனத்தொடங்கிப் பின்னர் 'தத்தைக ஆஹுரஸதேவேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் தஸ்மாதஸதஃ ஸஜ்ஜாயத' என வுபதேசித்தனர். பொருள் காணப்படு மிவ்வுலகம் தனது தோற்றத்திற்கு முன்னர் அசத்தாகவேயிருந்தது. அவ்வசத்து அத்துவிதீயமாகவே நிகழ்ந்தது. அவ்வசத்தாகிய காரணத்தால் சத்தாகிய காரியமுண்டானது எனச் சிலவாதிகள் கூறுகின்றனர் என்க. இதனால் நாத்திகமதத்தைக்கூறி அதன்பின் அவ்வுத்தாலகரிஷியானவர், 'குதஸ்து கலு ஸோம்யைவம் ஸ்யாதிதி ஹோவாச கதமஸதஃ ஸஜ்ஜாயேத' ஹே இனியமைந்தனாகிய சுவேதகேதுவே! இந்த நாத்திகர் கூற்று எவ்வாறு பொருந்தும், மற்றே பொருந்தாது. அசத்தாகிய காரணத்தினின்றும் சத்தாகிய காரியம் ஒருகாலு முளவாகாதாதலின். ஒருபோது அவ்வணமாமெனினே, அசத்தாகிய மலடிமைந்தனுக்குச் சத்தாகிய புத்திரனு முண்டாதல் வேண்டும்; ஆதலோ, இல்லை என்பது முதலிய பலவிதமான யுக்திகள் பிரதிபாதிக்கப்பட்டன. அந்தப் பிரஹ்மசூத்திர பதவடிவ வாக்கியங்கள் விநிச்சிதங்களாம்; அதாவது, தொடக்கமுடிவுவாக்கியங்களின் ஒற்றுமை வாக்கியத்தன்மையால் ஐய

மிலாப்பொருளைக் கூறுவனவாம். இவ்வாறு பிரஹ்மசூத்திர பதங்களாலும் அந்த க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞர்களின் சொரூபம் பலவகையாய்க்கூறப்பட்டதாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் அந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தில் ஞானகாண்டத்தாற் கூறப்படுவதாந்தன்மையைத் திருவாய்மலர்ந்தருளினர். இவ்வாறு பூர்வம் ஸ்ரீ வசிட்டர் முதலிய ரிஷிகளாலும் இருக்கு முதலிய வேதங்களாலும் பிரஹ்மசூத்திரபதங்களாலும், மிக விரிவாய்க்கூறப்பட்ட, க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் உண்மைவடிவத்தை நானுனக்குச் சுருக்கிக்கூறுகின்றேன். அதைக் கேட்பாயாக என்க. அல்லது, 'ப்ரஹ்மஸூத்ரபதைஃ' என்னும் வாக்கியத்தில் பிரஹ்மசூத்திரமாவதெதுவோ அதுவே பதமாம் எனப் பண்புத்தொகை கொள்ளற்பாலது. ஆண்டு, 'ஆத்மேத்யேவோபாஸீத' இவ்வதிகாரி எவ்விடத்தும் வியாபகமாகிய ஆன்மாவே நான் எனச் சிந்திக்க, என்பது முதலிய வாக்கியங்களோ வித்தியா சூத்திரமெனப்படுகின்றன. இன்னும் 'ந ஸ வேத யதா பஶுஃ' தனதான்மாவினின்றும் வேறெனக்கருதித் தேவதையை உபாசிப்பவனை பேததரிசியானவன் பசுப்போல் சிறிதளவு முணர்ந்திலன் என்பது முதலிய வாக்கியங்களோ அவித்தியாசூத்திரங்களெனப்படும். ஒரு வியாக்கியானத்தில், ப்ரஹ்மஸூத்ரபதைஃ' என்னும் வாக்கியத்தால் 'ஜந்மாத்யஸ்ய யதஃ' தோற்றமாதியிதற்கெதனின்.] என்பது முதலிய வேதாந்த சூத்திரங்களைக்கொண்டனர்.

(அ-கை.) இவ்வாறு, க்ஷேத்திர, க்ஷேத்திரக்ஞர்களின் சொரூபத்தை யுணருவதில் அர்ச்சுனனுக்கு உருசியை யுண்டுபண்ணி, இப்போது, ஸ்ரீ பகவான், அவ்வர்ச்சுனனுக்கு இரண்டு சுலோகங்களால் முன்னர் க்ஷேத்திரத்தின் சொரூபத்தை அருளிச்செய்கிறனர்.

சு-ம். மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச ।
இந்த்ரியாணி தஶைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசராஃ ॥ (5)

இச்சா த்வேஷஃ ஸுகம் து:கம் ஸங்காதஶ்சேதநா த்ருதிஃ ।
ஏதத்க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுதாஹ்ருதம் ॥ (6)

ப-ம். 1 மஹாபூதாநி 2 அஹங்காரஃ 3 புத்திஃ 5 அவ்யக்தம் ஏவ 4 ச 7 இந்த்ரியாணி 6 தஶ 9 ஏகம் 8 ச 12 பஞ்ச 10 ச 11 இந்த்ரியகோசராஃ 13 இச்சா 14 த்வேஷஃ 15 ஸுகம் 16 து:கம் 17 ஸங்காதஃ 18 சேதநா 19 த்ருதிஃ 20 ஏதத் 23 க்ஷேத்ரம் 22 ஸமாஸேந 21 ஸவிகாரம் 24 உதாஹ்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஐந்துமாபூதங்கள் அகங்காரம் புத்தி அவ்வியக்தம் சுரோத்திர முதலிய பத்திந்திரியங்கள் மனமொன்று சத்த முதலிய ஐவகை விடயங்கள் இச்சை துவேஷம் சுகம் துக்கம் சங்காதம் சேதனுதிருதி விகாரமுடைய இவ்வனைத்தும் சுருக்கமாய் க்ஷேத்திரரூபமெனச் சொல்லப்படுகின்றன.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மண்ணுதி ஐவகைமாபூதங்கள் அவற்றின் காரணரூப அபிமானலட்சணமாகிய அகங்காரம் அதன் காரணவடிவ நிச்சயலட்சணமக தத்துவமெனும்புத்தி அதன் காரணவடிவ முக்குணவடிவமான பிரதானரூப அவ்வியக்தம். அது எல்லாவற்றிற் குங்காரணமேயாகுமன்றி ஒன்றிற்குங் காரியமாவதில்லை இந்தமாபூத முதற்கொண்டு அவ்வியக்தமீறுயது எண்வகைப்பிரகிருதியெனக்கூறப்படுகின்றது. இப்பொருள் சாங்கியமதத்தைத்தழுவியதாம். வேதாந்தமதத்தைப்பற்றிப் பொருள் கூறுவாம். ஆண்டு, அவ்வியக்தமெனுஞ் சப்தத்

தாலோ அநிர்வசனீய அவ்வியாகிருதத்தைக் கொள்ளவேண்டும். எந்த அவ்வியாகிருதத்தை 'மம மாயா துரத்யயா' எனது மாயைகடத்தற்கரிது என ஸ்ரீ பகவான் மாயையெனத் தமது சக்திரூபத்தைத் திருவாய்மலர்ந்தருளினரோ, புத்தி, என்னுஞ்சப்தத்தாலோ சிருட்டியின் முற்காலத்தில் சிருட்டிக்கத்தக்க வுலகத்தை விடயம்பண்ணும் மாயாவிருத்திவடிவ ஈக்ஷணத்தைக் கொள்ளவேணடும். அகங்காரசப்தத்தாலோ அந்த ஈக்ஷணத்தின் பின்னுண்டாகத்தக்க மாயாவிருத்திவடிவ பலவகையாதல் வேண்டுமெனுஞ் சங்கற்பத்தைக் கொள்ளல் வேண்டும். அச்சங்கற்பத்தின்பின்னர் வானுதிமுறையாய்ப் பஞ்சபூதத் தோற்றத்தைக் கொள்ளல் வேண்டுமென்பதாம். சாங்கியநூலாற் பெறப்பட்ட அவ்வியக்தம் மகதத்துவம் அகங்காரம் என்னும் இம்மூன்றுதத்துவங்களும் வேதாந்த சித்தாந்தத்தில் உடன்படாதனவாம். முாணுய் 'ஈக்ஷதேர் நாசப்தம்' [ஈக்ஷணத்தால் சப்தமின்று] என்பதுமுதலிய சூத்திர வியாக்கியானத்தில் ஸ்ரீபாடியக்காரரால் சாங்கிய நூலாற் கற்பிக்கப்பட்ட பிரதானமுதலிய பதார்த்தங்கள் விரிவாய் மறுக்கப்பட்டன. ஆண்டு 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயினந்து மஹேச்வரம் தேத்யாநயோகாநுகதா அபச்யந் தேவாத்மசக்திம் ஸ்வகுணைர்நிகூடாம்' என்னுஞ் சுருதியாற் கூறப்பட்ட மாயையெனும் பரமேசுர சக்தியே ஈண்டு ஸ்ரீ பகவானல் அவ்வியக்த சப்தத்தாலருளப்பட்டது; அன்றியும் 'ததைக்ஷத' என்னுஞ் சுருதியாற் கூறப்பட்ட சிருட்டிக்கத்தக்க உலகத்தை விடயம்பண்ணும் மாயாவிருத்திவடிவ ஈக்ஷணமே ஈண்டு ஸ்ரீ பகவானல் புத்திசப்தத்தால் திருவாய்மலர்ந்தருளப்பட்டது, 'பஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்னுஞ் சுருதியாற் கூறப்பட்ட அம்மாயா விருத்திவடிவம் பலவாகவேண்டுமெனும் பரமேசுரனது சங்கற்பமே ஈண்டு ஸ்ரீ பகவானல் அகங்கார சப்தத்தாற்கூறப்பட்டது. அதன் பின்னர் 'தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாச:ஸம்பூத: ஆகாசாத்வாயு: வாயோரக்நி: அக்நேராப: அத்ப்ய: ப்ருதிவீ' என்னுஞ் சுருதியால் முறைப்படி வானுதிமா பூதத்தோற்றங்கூறப்பட்டது. இது முதலிய சுருதிப் பிரமாணத்தாற் பெறப்பட்ட இவ்வேதாந்த பட்சமே மேலானதாமென்க. ஞானேந்திரிய கருமேந்திரியங்களாகிய பத்து இந்திரியங்கள், சங்கற்ப விகற்பரூபமனம். ஒன்று, அவைகட்கு விடயமான சத்தமுதலிய ஐவகை விடயங்கள் ஆண்டு, ஞானேந்திரியங்கட்குச் சத்த முதலிய ஐந்தும் ஞாப்யரூப [பிரகாசிக்கப்படும் ரூப]த்தால் விடயங்களாம், கருமேந்திரியங்கட்குக் காரியத்தன்மையால் விடயங்களாம். ஆண்டு முன்னர்க் கூறப்பட்ட எண்வகைப் பிரகிருதி ஐவகையான ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் ஐவகை விடயங்கள் மனமொன்று இவ்வனைத்தும் சாங்கியநூலில் இருபத்துநான்கு தத்துவங்களெனப்படும் என்க. சுகத்திலும் சுகசாதனத்திலும் இஃதெனக்குப் பிராப்தியாகவேண்டும் என்னும் வேட்கைவடிவச் சித்தவிருத்தி விசேடம் யாதோ எதைச் சாத்திரத்தில் காமமென்றும் ராகமென்றும் சொல்லப்படுகின்றதோ அஃதிச்சையாம். துக்கத்திலும் துக்கசாதனத்திலும் எனக்கிது பிராப்தியாகாதொழிக; என்னும் முற்கூறிய வேட்கைவிரோதியாகிய சித்தவிருத்தி விசேடம் யாதோ எது சாத்திரத்திற் குரோதமெனவும் ஈரிஷையெனவுங் கூறப்படுகின்றதோ அது துவேஷமாம். நிருபாதிக இச்சைக்கு விடயமும் தருமத்தை அசாதாரண காரணமாகவுடையதும் பரமான்ம சுகத்திற்கு அபிவியஞ்சகமுமாகிய சித்த விருத்தி விசேடம் சுகமாம். நிருபாதிக துவேஷத்திற்கு விடயமும் அதருமத்தை அசாதாரண காரணமாகவுடையதுமாகிய சித்த விருத்தி விசேடம் துக்கமாம், பஞ்சமா பூதங்களின் பரிணமவடிவ இந்திரியத்தோடுகூடிய சரீரம் சங்காதமாம் சொரூபஞானத்தின் அபிவியஞ்சகமும் பிரமாணத்தை அசாதாரண காரணமாகவுடையதுமாகிய பிரமாஞ்ஞானமெனும் சித்தவிருத்தி விசேடம் சேதனைவாம் வியாகுலப்பட்ட வுடலிந்திரியங்களை நிலைப்படுத்தற்

குக் காரணவடிவ முயற்சி திருதியாம் ஈண்டு இச்சைமுதலியவைகளைக்கொள்ளல் அந்தக்கரண தருமங்களனைத்திற்கும் உபலட்சணமாம். அவ்வந்தக் கரண தருமங்கள் சுருதியில் இவையெனக் கூறப்பட்டிருக்கின்றன.

ஆ-சு. காம꞉ ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்தா(அ)ஶ்ரத்தா ।
த்ருதிரத்ருதிர் ஹ்ரீர் தீர் பீரித்யேதத் ஸர்வம் மன ஏவ ॥

(பொ-ள்.) இச்சை சங்கல்பம் சம்சயம் சிரத்தை அசிரத்தை திருதி அதிருதி லச்சை விருத்தி ஞானம் பயம் இவ்வனைத்தும் மனரூபங்களேயாம் என்க. இச்சுருதி வாக்கியம் மட்குடம் என்னும் வாக்கியம்போல் மனவடிவ உபாதான காரணத்தோடு காமமுதலிய காரியங்கட்கபேதத்தைக்கூறி அவைகளிடத்து மனத்தின் தருமத்தன்மையைக் கூறுகின்றது; இங்ஙனமே பஞ்சமா பூதமுதற்கொண்டு திருதியீறாக முன்னர்க்கூறிய சடப்பொருள்களனைத்தும் க்ஷேத்திரக்ஞனெனும் சாட்சியாற் பிரகாசிக்கப்படுவதால் அந்த க்ஷேத்திரக்ஞனாகிய சாட்சியினின்றும் வேறாம். இவ்வணம் சடப்பொருளனைத்தும் க்ஷேத்திரமெனும் பெயரால் என்றாற் சுருக்கிக்கூறப்பட்டன. அங்ஙனமே அந்த க்ஷேத்திரவடிவப் பொருள்களனைத்தும் விளக்கப்படுவதான அசேதனவடிவமேயாமென்க. அற்றேல் ஹே பகவன் உடலிந்திரியங்களின் கூட்டமே சேதனவடிவமானதால் க்ஷேத்திரக்ஞனென உலோகாயதர்களும் சேதனவடிவ க்ஷணிகவிஞ்ஞானமே ஆன்மாவெனச் சுகதர்களும் இச்சை துவேஷம், பிரயத்தனம், சுகதுக்கம், ஞானம் இவ்வனைத்தும் ஆன்மாவின் இலிங்கங்களென நியாயநூலாரும் கொள்கின்றனராதலின் பஞ்சமாபூத முதற்கொண்டு திருதியீறாகிய இவ்வனைத்தும் க்ஷேத்திரரூபமெனத் தாங்கள் கூறுவது எவ்வாறமையும் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அந்த க்ஷேத்திரத்தினிலக்கணத்தை அருளிச்செய்கின்றார். ‘சவிகாரம்’ என, ஈண்டுத் தோற்ற முதற்கொண்டு நாசமீறாகிய பரிணாமங்கள் விகாரமெனப்படும், அவையுடையது சவிகாரமாம்; அதாவது, உத்பத்திவிநாச முதலிய விகாரங்களையுடையது சவிகாரமாம். ஈண்டு, பஞ்சமாபூத முதற்கொண்டு திருதியீறாக முன்னர்க் கூறப்பட்ட பதார்த்தங்களனைத்தும் சவிகாரவடிவமாதலின் அப்பதார்த்தங்களனைத்தும் அவ்விகாரத்தின் சாட்சியாதலமையாது; என்னை தனது தோற்றக்கேடுகள் தன்னாலுணரப்படாதனவாமன்றோ; அன்றியும், அவ்வுத்பத்தி விநாசத்திற்கு வேறாகிய தருமங்களனைத்தும் தனது தரிசனமின்றிப் புலப்படாதனவாம். தருமியைத் தரிசித்த பின்னரே அதன் தருமங்களின் தரிசனமாமாதலின் ஈண்டு, ஒருபோது தன்னாலே தனது தரிசனங்கொள்ளிலோ, அந்தத் தரிசனக்கிரியையின் கர்த்திருத்தன்மையும் கருமத்தன்மையும் தன்னிடத்திற் பிராப்தமாம். ஒரே பொருளில் ஒரே காலத்தில் ஒரே கிரியையின் கருத்தாத்தன்மையும் கருமத்தன்மையும் மிக முரணுடையனவாம். ஆதலின், சவிகாரப்பொருள் அவ்வுற்பத்தியாதி விகாரங்கட்குச் சாட்சியாதல் அமையாது. மற்றோ, நிர்விகாரப்பொருளே அவ்விகாரங்கட்குச் சாட்சியாம் என்பது சித்திக்கின்றது, இதனாலிப்பொருள் பெறப்படுகின்றது: விகாரித்தன்மையே அந்த க்ஷேத்திரத்தினது சின்னமாம்; அதாவது, எவ்வெப்பொருளில் அந்த விகாரித்தன்மையுளதோ அவ்வப்பொருள் க்ஷேத்திரரூபமேயென்பதுணர்க. யாதானுமோர் நாமத்தைக்கொண்டெண்ணல் அந்த க்ஷேத்திரத்தின் சின்னமன்று என்பதாம்.

(5-6)

(அ-கை.) இவ்வாறு க்ஷேத்திரத்தின் சொரூபத்தைப் பிரதிபாதித்து அந்த க்ஷேத்திரத்தின் சாக்ஷிரூப க்ஷேத்திரக்ஞனை க்ஷேத்திரத்தினின்றும் வேறுபடுத்தி விரிவாய்ப் பிரதிபாதித்தற்பொருட்டு அந்த க்ஷேத்திரக்ஞனின் ஞானத்

திற் குறித்தாதற்பொருட்டு ஸ்ரீ பகவான் முன்னர் அமானித்துவ முதலிய இருபது சாதனங்களை ஐந்து சுலோகங்களா லருளிச்செய்கின்றார்.

சு-ம். அமாநித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ।
ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ꞉ ॥ (7)

ப-ம். 1 அமாநித்வம் 2 அதம்பித்வம் 3 அஹிம்ஸா 4 க்ஷாந்தி꞉ 5 ஆர்ஜவம் 6 ஆசார்யோபாஸநம் 7 ஶௌசம் 8 ஸ்தைர்யம் 9 ஆத்மவிநிக்ரஹ꞉.

(அ-ம்.) மானமின்மை, டம்பமின்மை, அகிம்சை, சாந்தி, ஆர்ஜவம், ஆசாரியருபாசனை, சௌசம், ஸ்தைரியம், ஆன்மாவின் நிக்கிரகம் என்னு மனைத்தும் ஞானத்திற்குச்சாதனமானதால் ஞானரூபங்களாம். (7)

(வி-ம்.) ஆண்டுத் தன்மாட்டிருப்பதும் இலாததுமாகிய குணங்களால் தன்னைத்துதித்தல் மானித்தன்மையாம். அஃதின்மை அமானித்தன்மையாம். (1) ஊதியம்பூஜை கியாதியின்பொருட்டு உலகர்களின் முன்னர்த் தனது தருமத்தைப் பிரகடம்பண்ணல் டம்பமாம். அஃதிலாமை அடம்பத்தன்மையாம். (2) முக்காணங்களால் பிராணிகளைப் பீடித்தல் இம்சையாம். அஃதிலாமை அகிம்சையாம். (3) சித்தத்தின் குரோத முதலிய விகாரங்களின் காரணரூப துஷ்டபுருடராற் செய்யப்பட்ட அபராதம் வந்தடையினும், விகாரமிலா மனத்தால் அவ்வபராதத்தைச் சகித்தல் சாந்தியாம். (4) தனதுள்ளத்தமைந்தவாறே வெளியில் விவகரித்தலாகிய நிட்கபடத்தன்மை ஆர்ஜவமாம்; அதாவது, பிறர்களை வஞ்சியாமை ஆர்ஜவமாம். (5) பிரஹ்மவித்தையை உபதேசிக்கும் ஆசிரியர்க்குச் சிரத்தைபக்தி பூர்வகம் பூஜைவணக்கம் முதலியவைகளால் சேவைசெய்தல் ஆசாரியோபாசனையாம். (6) சுத்தியின் பெயர் சௌசமாம். அதுவும் பாகியம், ஆந்தரமென இருவகைத்தாம். அவற்றுள், மண்ணீர்களால் உடல்மலத்தைக்கழுவுதல் பாகியசௌசமாம். விடயங்களைத்தோடமாய்ப் பார்த்தல்வடிவ விரோதிவாசனையால் மனத்தின் இராகத்துவேட முதலியவைகளை நிவிருத்தித்தல் ஆந்தர சௌசமாம். (7) மோட்சசாதனத்தில் முயன்ற புருஷனுக்குப் பலவகைத்தடைகள் வந்தடையினும் அவ்வெத்தனத்தை விடாது மீண்டும் மீண்டு மிக முயலல் ஸ்தைரியமாம். (8) தேகேந்தியங்களின் சங்காதவடிவ ஆன்மாவை மோட்சத்தினின்றும் பிரதிகூலத்தில் இயல்பாய்ப் பிரவிருத்திக்கும் பிரவிருத்தியை நிவிருத்தித்து மோட்சசாதனத்தின்கண்ணே நிலைக்கப்பண்ணல் ஆன்மவிநிக்கிரகமாம். (9) இவ்வனைத்தும் ஞானசாதனங்களானதால் ஞானரூபமெனக் கூறப்படுகின்றன. இவ்வாறு, இச்சுலோகத்தையும், மேற்கூறும் சுலோகங்களையும் பதினோராவது சுலோகத்தின் 'ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தம்' என்னும் வாக்கியத்தோடு அந்நுவயம்பண்ணுக என்பதாம். (7)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். இந்த்ரியார்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச ।
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது꞉கதோஷாநுதர்ஶநம் ॥ (8)

ப-ம். 1 இந்த்ரியார்தேஷு 2 வைராக்யம் 4 அநஹங்கார꞉ ஏவ 3 ச 5 ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது꞉கதோஷாநுதர்ஶநம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சுரோத்திர முதலிய இந்திரியங்களின் சப்த முதலிய விடயங்களில் வைராக்கியமும், அகங்காரமின்மையும், சன்மம், மிருத்தியு, ஜரை, வியாதி, துக்கம், தோஷம் இவ்வனைத்தையும் மறித்து மறித்துங்காண்டல்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுரோத்திர முதலியவைகளின் சப்த முதலிய விடயங்களில் அல்லது, இவ்வுலக பரலோகவிடய போகங்களில் இராகவிரோதி

யாகிய வேட்கையின்மைவடிவ சித்தவிருத்தி விசேடம் வைராக்கியமாம். (10) உலகத்தில் தனது துதியின்றேனும் மனத்தில் வெளிப்படும் 'நானெவரினும் மேலானேன்' என்னுங் கருவம் அகங்காரமாம், அஃதிலாமை அநகங்காரமாம். (11) தாயின் வயிற்றின் ஒன்பதுமாதம் வசித்து யோநித்துவாரத்தால் வெளிப்படல் ஜன்மமாம். பிராணன் வெளிப்படுங்கால் எல்லா மர்மஸ்தானங்களின் சீரணத் தன்மை மிருத்தியுவாம். எவ்வவத்தையில் புத்திமந்தத் தன்மை, சர்வாங்கத்தின் சிதிலத்தன்மை சுற்றத்தார் செய்யும் நிந்தை என்பன முதலிய தோடங்கள் பிராப்தியாகின்றனவோ அவ்வவத்தை ஜரையாம். சுர முதலிய ரோகங்கள் வியாதியாம். அத்தியான்ம முதலிய மூவகை யுபத்திரவங்களை நிமித்தமாகவுடையதும், இஷ்டாநிஷ்ட வஸ்துக்களின் வருதல் பிரிதல்களால் உண்டாகப்பட்ட சித்தத்தின் பரிதாபரூபப் பரிணாமவிசேடம் துக்கமாம். வாதபித்த சிலேஷ்ம மல மூத்திர முதலியவைகளாற் பூரிக்கப்பட்டதானதால், இவ்வுடலில் நிந்திதத்தன்மை தோடமாம். அத்தன்மைய சன்மமிருத்தியு, ஜரா, வியாதி, துக்கம், தோடம் இவைகளின் அநுதரிசனம்; அதாவது, மறித்து மறித்தும் உய்த்துநோக்கல் அல்லது, அவைகளை மறித்து மறித்துங்காண்டல், அல்லது, சன்ம முதலிய நான்கின்கண்ணும் துக்க தோடங்களை மறித்து மறித்துங்காண்டல், ஆண்டுச் சன்மத்திலோ தாயின்வயிற்றில் ஒன்பதுமாதம் வரையில் கட்டுப்பட்டிருத்தல், தாயின் மலத்திலுள்ள கிரிமிகளாற் கடிபடல், மாதாவின் ஜாடராக்கினியாற் றகிக்கப்படல், கருப்பையாற் கட்டுறல், சன்மகாலத்தில் பிரசவவாயுவால் தள்ளுப்படல், மிக அற்பமான யோனியந்திரத்தினின்றும் வெளிப்படல், மல மூத்திரங்களிலிருத்தல் இவை முதலாகிய பலவகையான தோடங்களும், துக்கங்களும் சென்மத்திலுள்ளனவாம். மிருத்தியுவின்கண்ணே சர்வ நாடிகளுமிழுத்தல், மர்மத்தானங்கள் சீரணப்படல், பிராணன் குருகல், மேன்மூச்செறிதல், மிகப்பீடையால் மல மூத்திரங்கள் வெளிப்படல், இவை முதலிய பலவிதமான தோடங்களும், துக்கங்களும் மிருத்தியுவின்கண்ணுள்ளனவாம். ஜரா அவத்தையின்கண்ணே சர்வாங்கங்களும் சிதிலப்படல், சுரோத்திர முதலிய இந்திரியங்களின் மந்தத்தன்மை, சரீரம் நடுக்க முதலியவைகளையடைதல், காசத்தால் மூச்செறிதல், கிளம்புமிடத்துக் கீழே வீழ்ந்துவிடல், தனது சுற்றத்தார்களால் ஆதரவின்மையாதல், சரீரத் துவாரங்களினின்றும் மல மூத்திரமொழுகுதல், முதலிய பலவகையான துக்க தோடங்கள் ஜரா அவத்தையில் உள்ளனவாம். சுர முதலிய வியாதிகளிலோ உடலில் ஆற்றல் குறைதல், குளிர்ச்சுர முதலிய வியாதிகளின் வேகத்தால் பரிதாபப்படல், மிகு கசப்பான மருந்தையுண்ணல், உடலில் நாற்றமுண்டாதல், வேர்வையொழுகுதல், இவை முதலான துக்க தோடங்கள் வியாதியிலுள்ளனவாம். அந்தச்சன்மமரண முதலியவைகளின் துக்க தோடங்களை ஆன்மபுராணத்தின் முதலாவது அத்தியாயத்தில் விரிவாய் யாம் கூறியிருக்கின்றேமாதலின், ஈண்டுச் சுருக்கிக்கூறினும். இவ்விதமான துக்க தோடங்களின் தரிசனம் விடய வைராக்கியத்திற்குக் காரணமானதால் ஆன்மஞானத்தில் உபகாரமாமாதலின், இவ்வதிகாரிகள் அதை அவசியஞ் சம்பாதித்தல் வேண்டும். 12

(8)

(அ-கை.) அன்றியும்,

ச-ம். அஸக்திர நபிஷ்வங்க꞉ புத்ரதாரக்ருஹாதிஷு ।
நித்யஞ்ச ஸமசித்தத்வ மிஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥

(9)

ப-ம். 2 அஸக்தி꞉ 3 அநபிஷ்வங்க꞉ 1 புத்ரதாரக்ருஹாதிஷு 6 நித்யம் 4 ச 7 ஸமசித்தத்வம் 5 இஷ்டாநிஷ்டோபபத்திஷு

(அ-ம்.) ஹே அர்ச்சுன! புத்திரன், கிருகம் முதலிய பதார்த்தங்களில் மிக வேட்கையின்மையும், அபினிவேசமின்மையும், இட்டாநிட்டங்கள் வந்தடைந்துழி, எப்போதுஞ் சமானசித்தமாயிருத்தலும். (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இப்பொருள் என்னுடையது என்னு மித்துணையபிமானமாத்திரத்தானே அதிற் பிரியமுண்டாதல் வேட்கையாம், அஃதிலாமை, வேட்கையின்மையாம். (13) இப்பொருள் நான் என்னும் அபேத பாவனையே அதிலுள்ள பிரீதியின் அதிசயத்தன்மையாம்; அதாவது, அப்பொருட்குச் சுக துக்கம் வந்துறின் நானே சுகி துக்கி என மிகுந்த அபினிவேசமாம்; அஃதிலாமை அபினிவேசமின்மையாம். (14) அற்றேல், ஹே பகவன்! வேட்கை அபினிவேசங்கள் எப்பொருள்களில் விடத்தக்கன என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். '𑌪𑍁𑌤𑍍𑌰𑌦𑌾𑌰 𑌗𑍃𑌹𑌾𑌦𑌿𑌷𑍁' என. இந்த வாக்கியத்திலுள்ள ஆதி சப்தத்தால் இதற்கயலான சிநேகவிடயமான திரவியம் தொழும்பன் முதலிய பொருள்களையுங் கொள்ளவேண்டும்; அதாவது, சிநேகவிடயமான சர்வ பதார்த்தங்களிலும் வேட்கை அபினிவேசங்களை விடல்வேண்டும் என்பதாம். இஷ்டாநிஷ்டங்கள் வந்தடையுமிடத்து எப்போதும் சமான சித்தனாதல்; அதாவது, பிரியமாம் பொருளைப் பெறுமிடத்துச் சந்தோடப்படாமை பிரியமிலாப் பொருளைப் பெற்றுழி துக்கமுறாமையே சமசித்தமாம், (15-9)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌮𑌯𑌿 𑌚𑌾𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨 𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀 ।
𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌮𑌰𑌤𑌿𑌰𑍍𑌜𑌨𑌸𑌂𑌸𑌦𑌿 ॥ (10)

ப-ம். 3 𑌮𑌯𑌿 5 𑌚 1 𑌅𑌨𑌨𑍍𑌯𑌯𑍋𑌗𑍇𑌨 4 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 2 𑌅𑌵𑍍𑌯𑌭𑌿𑌚𑌾𑌰𑌿𑌣𑍀 6 𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌤𑌦𑍇𑌶𑌸𑍇𑌵𑌿𑌤𑍍𑌵𑌂 8 𑌅𑌰𑌤𑌿𑌃 7 𑌜𑌨𑌸𑌂𑌸𑌦𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அனன்ய யோகத்தால் என்னிடத்து வியபிசாரமின்றிய பக்தியும் ஏகாந்ததேசசேவனமும் விஷயிகளின் கூட்டத்தே பிரியமின்மையும். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வாசுதேவனாகிய என்னிடத்திற் பக்தி; அதாவது இப்பரமேசுரர் எவற்றினும் மேலானவர் என்னும் புத்தியோடு என்னிடத்து நிரதிசயப் பிரீதி. அப்பக்தி எவ்வாறுவதெனின் அனன்ய யோகத்தால் அவ்வியபிசாரிணியாவதாம்; ஆண்டு இப்பகவான் வாசுதேவரினும் மேலான தொன்றின்மையின் ஸ்ரீ பகவானாகிய வாசுதேவரே எனது கதியாவர், என்னும் நிச்சயம் அனன்யயோகமாம். அத்தன்மையயோகத்தால்வியபிசாரமின்றியபக்தி; அதாவது எவ்வகைப் பிரதிகூலகாரணங்களாலும் நீக்கற்கேலாமையதாம். அத்தன்மையது ஞானத்திற்கே காரணமாம் இது பிறநூலிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑍍𑌨 𑌯𑌾𑌵𑌨𑍍𑌮𑌯𑌿 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍇 𑌨 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌦𑍇𑌹𑌯𑍋𑌗𑍇𑌨 𑌤𑌾𑌵𑌤𑍍 ।

(பொ-ள்.) இவ்வதிகாரிக்கு வாசுதேவனாகிய என்னிடத்தில் நிரதிசயப் பிரிய முண்டாகாதேல் இவன் தேகப்பற்றிலாதவனாகான் என்பதாம். (16) விவிக்ததேச சேவித்துவம் ஆண்டு இயல்பாகவே தூய்மையுடையதும், அல்லது காரத்தாற் சுத்தமானதும், அசுசி, சர்ப்பம், வியாக்கிர முதலியவையின் மனத்திற்கின்பத்தைக்கொடுப்பதுமாகிய தேசம் விவிக்ததேசமாம், அத்தானவை, நதிதீரம் மலைக்குகை முதலியனவாம். அதைச் சேவிக்குஞ் சுபாவம் விவிக்ததேச சேவித்துவமாம். (17) ஆன்மஞான மின்றியதும், விடய போகத்தில

மிழுமார்க்கத்தை யுபதேசம்பண்ணுவதுமாகிய விடயிகளென்னும் பகிர்முக ஜனங்களின் சபை தத்துவஞானத்திற்கு மிகப் பிரதிகூலமானதாம். அதில் ரதியின்மை; அதாவது, அதில் இரமியாமை (18) தத்துவ ஞானத்திற்கு அநுகூலமாகிய மகாத்துமாக்களின் சபையின்கண்ணே இவ்வதிகாரிகள் அவசியமாய்ப் பிரீதிவைத்தல் வேண்டும் இது பிறநூலிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. ஸங்க꞉ ஸர்வாத்மநா ஹேய꞉ ஸ சேத் த்யக்தும் ந ஶக்யதே ।
ஸ ஸத்பி꞉ ஸஹ கர்த்தவ்ய꞉ ஸதாம் ஸங்கோ ஹி பேஷஜம் ॥

(பொ-ள்.) இவ்வதிகாரிகளால் எவ்வாற்றானும் சங்கம் விடத்தக்கதாம். ஒருகால் அங்ஙனமின்றேனும் இவர்களால் விடயிகளாகிய பகிர்முகர்களின் சங்கம் ஒருபோதும் செய்யத்தகாததாம், மற்றே, மகாத்துமாக்களோடு சங்கம் பண்ணத்தக்கதாம்; அது இப்பிறவிநோய்க்கு மருந்தாமாதலின் என்க. (10)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த்ததர்ஶநம் ।
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோ(அ)ந்யதா ॥ (11)

ப-ம். 1 அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம் 2 தத்த்வஜ்ஞாநார்த்த தர்ஶநம் 3 ஏதத் 4 ஜ்ஞாநம் 5 இதி 6 ப்ரோக்தம் 10 அஜ்ஞாநம் 9 யத் 7 அத꞉ 8 அந்யதா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அத்தியாத்ம ஞானத்தில் நிஷ்டையும் தத்துவ ஞானத்தின் பயனைத் தரிசித்தலும் என்னுமிவ்வமானித்துவ முதலியவைகளனைத்தும் ஞானமென்னும் பெயராற் கூறப்படுகின்றன; இவைகட்கு மாறானமானித்துவ முதலிய குணங்களனைத்தும் அஞ்ஞானரூபங்களேயாம். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆன்மாவை ஆசிரயித்து பிரவிருத்தித்த ஆன்மானாத்மவிவேக ஞானம் அத்தியான்மஞானமெனப்படும்; அந்த ஞானத்தின்கண்ணே அத்தியந்த நிட்டையாதல் அத்தியான்மஞான நித்தியத்துவமெனப்படும். அந்த விவேகத்தில் நிஷ்டையையுடைய புருடனே மகாவாக்கியார்த்த ஞானத்தில் சமர்த்தனாகின்றானாதலின் இவ்வதிகாரியால் அந்நிட்டை அவசியஞ் செய்யத்தக்கதாம். (19) தத்துவ ஞானார்த்தத்தைத் தரிசித்தல் ஆண்டு அகம்பிரமாஸ்மிதத்துவமசி என்பன முதலிய வேதாந்த வாக்கியங்களைக் காரணமாகவுடையதும், அமானித்துவ முதலிய சர்வ சாதனங்களின் பரிபாகத்தின் பலரூபமுமாகிய நானே பிரஹ்மரூபன் என்னுஞ் சாட்சாத்காரம் தத்துவஞானமாம், அத்தன்மைய தத்துவஞானத்தின் அர்த்தம்; அதாவது, அவித்தை முதலிய சர்வானர்த்த நிவிருத்தி ரூபமும் பரமானந்தப் பிராப்திரூபமுமாகிய மோட்சவடிவப் பிரயோஜனத்தின் தரிசனம்; அதாவது, அடிக்கடி விசாரித்து நோக்கல் தத்துவ ஞானார்த்த தரிசனமாம் (20) அத்தன்மைய தத்துவஞானார்த்த தரிசனமும் இவ்வதிகாரியால் அவசியஞ் செய்யத்தக்கதாம், என்னை:—அத்தத்துவ ஞானத்தின் தரிசனானந்தரமே அதன் சாதனத்திற் பிரவிருத்தியாகின்றது. பலஞானமின்றி அதன் சாதனத்திற் பிரவிருத்தியெழாது இவ்வாறு அமானித்துவ முதற்கொண்டு தத்துவஞானார்த்த தரிசனமீறாகச் சொல்லப்பட்டவை ஆன்மஞானப் பிராப்தியின் ஏதுரூபமாதலின்; ஞானமெனக் கூறப்பெற்றன. இவ்வமானித்துவ முதலிய சாதனங்கட்கு விபரீதமாகிய மானித்துவம், தம்பித்துவம், இம்சை, அசாந்தி, அனார்ச்சவம் முதலியவைகள் ஆன்மஞானத்திற்கு விரோதிகளாதலின் அஞ்ஞானமென்னும் பெயராற்கூறப்பட்டன, ஆதலின் இவ்வதிகாரியானவன் அஞ்ஞானமெனும் மானித்துவ முதலியவைகளை விடுத்து

ஞானமெனும் அமானித்துவமுதலிய இருபது சாதனங்களையும் அவசியமாய்ச் சம் பாதித்தல் வேண்டும் என்பதாம். (11)

(அ-கை.) ஹே பகவன்! அமானித்துவ முதற்கொண்டு தத்துவ ஞானார்த் ததரிசன பரியந்தம் முன்னர்க்கூறப்பட்ட ஞானமெனும் இருபது சாதனங்களால் எப்பொருளுணரத்தக்கது; என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் ஆறு சுலோகங்களால் அந்த அறியத்தக்கபொருளை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி யஜ்ஜ்ஞாத்வா அம்ருதமச்னுதே ।
அநாதிமத்பரம்ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே ॥ (12)

ப-ம். 2 ஜ்ஞேயம் 1 யத் 3 தத் 4 ப்ரவக்ஷ்யாமி 5 யத் 6 ஜ்ஞாத்வா 7 அம்ருதம் 8 அச்னுதே 10 அநாதிமத் 11 பரம் 12 ப்ரஹ்ம 13 ந 14 ஸத் 9 தத் 16 ந 17 அஸத் 15 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முமுக்ஷுக்களால் எவ்வஸ்து உணரத்தக்கதோ அந்த ஞேயவஸ்துவை யான் நினக்குக்கூறுகின்றேன். எதனையறிந்த இம் முமுக்ஷுக்கள் அமிருதபாவத்தையடைவரோ அவ்வஸ்து அநாதிமத் பரம்பிரஹ் மமாம். அது சத்தெனவும் அசத்தெனவுங் கூறொணாததாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரியால் கூறிப்போந்த அமானித்துவ முதலிய சாதனங்களால் அறியத்தக்க ஞேயவஸ்துவை நான் உனக்கு விளக்க மாய்ச் சொல்லுகின்றேன். இப்போது ஸ்ரீ பகவான் கேட்பவனாகிய அர்ச்சுனனை அந்த ஞேயவஸ்துவில் அபிமுகமாக்குந்தற்பொருட்டு உத்தமமான பலத்தால் அந்த ஞேயவஸ்துவைத் துதிக்கின்றார். 'யஜ்ஜ்ஞாத்வா அம்ருதமச்னுதே இதி' ஹே அர்ச்சுன! மேற்கூறும் எந்த ஞேயவஸ்துவையுணர்ந்து இவ்வதிகாரி அமிருதத் தன்மையை யடைகின்றானோ; அதாவது, இத்துக்கவடிவ சம்சாரத்தினின்றும் முக்தனாகின்றானோ; அற்றேல், ஹே பகவன்! எந்த ஞேயவஸ்துவையுணர்ந்து இவ்வதிகாரி முக்தனாகின்றானோ, அந்த ஞேயவஸ்து எத்தன்மையது என்னு மர்ச்சுனன் சங்கை நிகழ அந்த ஞேயவஸ்துவின் சொரூபத்தை அருளிச்செய் கின்றார். 'பரம்ப்ரஹ்ம இதி' ஹே அர்ச்சுன! பரமெனும் அதிசயமின்றியதும் பிரஹ்மமெனப்படும். மூவிதபரிச்சேதமின்றியதுமாகிய பரமான்மாவே ஞேயரூப மாம்; அதாவது, இம்முமுட்சுவால் கூறிப்போந்த சாதனங்களாலுணரப்பால தாம். அப்பரம்பிரஹ்மம எத்தன்மையதெனின் அநாதியது. ஆண்டுக் காரணத் தின் பெயர் ஆதியாம்; அல்லது, உத்பத்தியின் பெயர் ஆதியாம். அதையுடைய பொருள் எதுவோ அது ஆதியையுடையதாம். அத்தன்மையன தேகாதிகள் அவற்றினும் விலட்சணமானது; அதாவது, காரணோற்பத்திகளின்றியது அநாதி யதாம்; அதாவது, சர்வ விகாரத்தினின்று விலட்சண வஸ்துவின் பெயர் அநாதி யதாம். ஒரு வியாக்கியானத்திலோ, 'அநாதிமத்பரம்' என்பதை ஓரே பதமென் றங்கீகரித்து ஆண்டுக்காரியத்தின் பெயர் ஆதிமத்தாம்; காரணத்தின் பெயர் பர மாம். அக்காரிய காரணங்கட்கு அயலானது அநாதிமத்பரம் எனப் பொருள்பண் ணப்பட்டது. வேறொரு வியாக்கியானத்திலோ, 'அநாதிமத்பரம்' அநாதி, மத்ப ரம் என இருபதமாய் அங்கீகரித்து; ஆண்டு, அப்பிரஹ்மம் அநாதி; அதாவது, உத்பத்தியின்றியது, அங்ஙனமே அப்பிரஹ்மம் மத்பரம்; அதாவது, சகுணப் பிரஹ்மமாகிய என்னிற் பரமாகிய நிர்விசேடரூபம் எனப் பொருள்பண்ணப்பட் டது. வேறொரு வியாக்கியானத்திலோ, 'மத்பரம்' என்னும் பதத்திற்கு வாசு தேவனாகிய நான் பராசக்தி எதற்கோ அதன்பெயர் மத்பரமாம், எனப் பொருள்

பண்ணப்பட்டிருக்கிறது. இவ்வியாக்கியானம் நலமுடையதன்று. என்னை, எந்த ஞேயவஸ்துவையுணர்ந்து இவ்வதிகாரி அமிருதபாவத்தை யடைகின்றானோ, அந்த ஞேயவஸ்துவை யுனக்குச்சொல்கின்றேன், என்னும் வாக்கியம் ஸ்ரீ பகவானால் முன்னர்க்கூறியருளப்பட்டது. அம்மோட்சப்பிராப்தி நிர்விசேஷ சுத்தப் பிரஹ்மத்தின் ஞானத்தானேயாம். சத்தியையுடைய சவிசேடப்பிரஹ்மத்தால் அம்மோட்சப்பிராப்தியாகாது. ஆதலின், ஈண்டு ஸ்ரீ பகவான் நிர்விசேடப் பிரஹ்மத்தையே அருளிச்செய்தனர். அத்தன்மைய நிர்விசேடப்பிரஹ்மத்தில் சத்தியுடையதாந்தன்மை கூறல் அசங்கதமாமென்க. இப்போது ஸ்ரீ பகவான் அந்த ஞேயவஸ்துவின் நிர்விசேடத்தன்மையை அருளிச்செய்கின்றார். ‘நஸத்தந்நாஸ து³ச்யதே இதி’ ஆண்டு, எப்பொருள் இருக்கிறது என, விதிமுகத்தாற் பிரமாண விஷயமாகின்றதோ, அப்பொருள் சத்தெனப்படுகின்றது. எப்பொருள் இல்லை என நிடேதமுகத்தால் பிரமாணவிடயமாகின்றதோ, அப்பொருள் அசத்தெனப்படுகின்றது. அந்த ஞேயப்பிரஹ்மமோ நிர்விசேடமும் சுயம்பிரகாச சைதன்யமுமாம். ஆதலின், அப்பிரஹ்மம் சத்தசத்து இரண்டற்கும் விலட்சணமாதலின் சத்தெனவும், அசத்தெனவுங் கூறப்படாததாம்.

ஆ-சு. யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ ।

(பொ-ள்.) மனத்தோடு வாக்கு எந்த நிர்க்குணப்பிரஹ்மத்தையடையாது திரும்புகின்றதோ என்பதாம். ஹே அர்ச்சுன! எதனால் அந்த ஞேயப்பிரஹ்மம் சத்தன்றோ; அதாவது, உளதாந்தன்மைக்கு ஆசிரயமன்றோ, அங்ஙனமே, அசத்துமன்றோ; அதாவது, ‘இலதாந்தன்மைக்கு’ ஆசிரயமன்றோ, அதனால் அந்த ஞேயப்பிரஹ்மம் யாதொரு சத்தத்தானும் சத்திவடிவ முக்கிய விருத்தியால் கூறப்படாததாம். கருத்திதுவாம்.—சாதி, குணம், கிரியை, சம்பந்தம் என்னும் நான்கும் சப்தப்பிரவிர்த்திக்குக் காரணங்களாம். ஆகுதிரை என்பன முதலிய சப்தங்கள் கோத்தன்மை அசுவத்தன்மை முதலிய சாதிகளைக்கொண்டு தத்தமர்த்தத்திற் பிரவிருத்திக்கின்றன. வெண்மை கருமை என்பன முதலிய சப்தங்கள் வெண்மை கருமை முதலிய குணங்களைக்கொண்டு தத்தமர்த்தத்திற் பிரவிருத்திக்கின்றன. அடுவோன், படிப்போன், என்பன முதலிய சப்தங்களோ, அடுதல், படித்தல், முதலிய கிரியைகளைக்கொண்டு தத்தமர்த்தத்திற் பிரவிருத்திக்கின்றன. தனிகன், கோமான் முதலிய சப்தங்களோ, சுவசுவாமி பாவசம்பந்த முதலியவைகளைக்கொண்டு தத்தமர்த்தத்திற் பிரவிருத்திக்கின்றன. ஈண்டுக் குணம், கிரியை, சம்பந்தம் என்பவைகட்கு வேறாகிய சாதிரூப உபாதிரூப தருமங்களனைத்தும், சாதி என்னுஞ் சப்தத்தாற் கொள்ளற்பாலனவாம். ஆண்டு, ‘நஸத்தந்நாஸ து³ச்யதே’ என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் அந்த ஞேயப் பிரஹ்மத்தினிடத்தில் சாதியை நிடேதித்தனர். அந்தச் சாதி நிடேதம் குணக் கிரியை சம்பந்தம் என்னு மூன்றன் நிடேதத்திற்கும் உபலக்ஷணமாம்; அதாவது, அந்த ஞேயப்பிரஹ்மத்தினிடத்தில் சாதி, குணம், கிரியை, சம்பந்தம் என்பவை இன்றாமென்புதாம். ஆண்டு, ஏகமேவாத்துவிதீயம், என்னுஞ்சுருதி அந்தப் பிரஹ்மத்தை ஓரத்துவிதீய ரூபமாய்க்கூறி அதனிடத்தில் சாதியை நிடேதஞ்செய்கின்றது. என்னை, அநேக வியத்திகளிலிருக்கப்பட்ட ஒரு தருமம் சாதியெனப்படும். அநேகங் கோக்களிலிருக்கின்ற ஒரு கோத்துவ தருமத்தைச் சாதியென்பது போலவாம். அத்தன்மையசாதி ஓரத்துவிதீயப்பிரஹ்மத்திற் பொருந்தாது. அன்றியும், ‘நிர்க்குணம் நிஷ்கிரியம், சாந்தம்’ என்னுஞ் சுருதி முறையாய் அப்பிரஹ்மத்தினிடத்தில் குணக்கிரியை சம்பந்தங்களை நிடேதம் பண்ணுகின்றது. அவற்றுள் ‘நிர்க்குணம்’ என்பதால் குணத்தை நிடேதிக்கின்றது ‘நிஷ்கிரியம்’ என்பதால் கிரியையை நிடேதிக்கின்றது ‘சாந்தம்’ என்பதால் சம்பந்தத்தை நிடேதிக்

கின்றது, அன்றியும் 'அசங்கோஹி அயம்புருஷ:' அதாத ஆதேசோநேதி நேதி, என்னும், இரண்டு சுருதிகளுமோ அந்த ஞேயப் பிரஹ்மத்தினிடத்தில் சர்வப் பிர பஞ்ச மாத்திரத்தை நிடேதிக்கின்றன அத்தன்மைய சாதிமுதலிய சர்வ தருமங் களுமின்றிய அந்நிர்க்குணப் பிரஹ்மம் யாதொரு சப்தத்தாலும் கூறுணுததா மென்க. அற்றேல் ஹே பகவன்! அந்த நிர்க்குணப் பிரஹ்மம் ஒருபோதும் ஒரு சப்தத்தானும் கூறுணுததாகுமேல் 'ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி' பொருள் அறி யப்படும் பொருளை யுனக்குக் கூறுகின்றேன் என்னுந் தங்களுடைய வாக்கியம் எவ்வாறமையும் அங்ஙனமே 'ஶாஸ்த்ரயோநித்வாத்' உபநிடதரூப வேதாந்த சாத் திரம் யோனியெனும் பிரமாணம் எதன்மாட்டு; அத்தன்மையது பிரஹ்மம், என் னும் ஸ்ரீ வியாசபகவான் சூத்திரமும் எவ்வாறு பொருத்தமுடையதாமெனின்:— ஹே அர்ச்சுன! அந்நிர்க்குணப் பிரஹ்மத்தை உபநிடதவடிவ சாத்திரம் பிரதி பாதிக்கின்றது சத்தி விருத்தியாலன்று; மற்றே, ஒருவாற்றால் இலட்சணுவிருத்தி யாற் பிரதிபாதிக்கின்றது; கூறுமாறே இரண்டாவது அத்தியாயத்தில் 'ஶ்ரூயதே வத் ஸ்ருதிகஸ்திதம்' என்னுஞ் சுலோக வியாக்கியானத்தில் விரிவாய்க் கூறினு மாண்டுக்காண்க. ஆதலின், அந்த ஞேயப் பிரஹ்மத்தினிடத்தில் சப்தப் பிரவிருத் தியை நிடேதம் பண்ணப்பட்ட 'நஸத்தந்நாஸதுச்யதே' என்னும் வாக்கியத் தோடு 'ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி' என்னும் எனது வாக்கியமும் சாத்திரயோனித் வாத் என்னும் சூத்திர வாக்கியமும் மூரணுதல் யாங்ஙனமென்க, ஒரு வியாக்கி யானத்திலோ 'நஸத்தந்நாஸ துச்யதே' என்னும் வாக்கியத்திற்கு இவ்வர்த்தம் பண்ணப்பட்டிருக்கின்றது; அஃதாமாறு:—அந்த ஞேயப்பிரஹ்மம், பிரதானம் பரமாணு முதலியவைகளைப்போலச் சத்தெனக்கூறப்படுவதுமன்று, சூன்யம்போல அசத்தெனக் கூறப்படுவதுமன்று.

ஆ-சு. நாஸதாஸீந்நோஸதாஸீத்ததாநீம் ।
நா ஸீத்ரஜோ நோவ்யோமா பரோயதிதி ॥

(போ-ள்.) இச்சிருட்டியின் முன்னர் சூன்யமுமில்லை, முக்குணவடிவப் பிர தானமுமில்லை, பரமாணுவுமில்லை, அவ்வியக்தமுமில்லை, என்பதாம். (12)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் 'நஸகஉச்யதே' என்னும் வாக் கியத்தால் அந்த நிருபாதிக சுத்தப் பிரஹ்மத்தினிடத்தில் சத்து என்னுஞ் சத்தத் திற்கும், சத்து என்னுஞ் சப்தத்தா லுண்டாகிய ஞானத்திற்கும் அவிடயத்தன்மை கூறப்பட்டது, அது கூறவே இச்சங்கையுண்டாகின்றது. அந்த ஞேயப் பிரஹ் மத்தை ஒருகால் சத்து என்னுஞ் சத்தத்திற்கும், அதனுலுண்டாகிய ஞானத்திற் கும் அவிடயமாமெனக்கொள்ளிலோ, அப்பிரஹ்மம் மலடிமைந்தன் முயற்கொம்பு களைப்போல அசத்தேயாமென்க. என்னுஞ் சங்கையை ஸ்ரீ பகவான் 'நாஸது ச்யதே' என்னும் வாக்கியத்தினுல் பொதுவகையால் நிவிருத்தித்தருளினர் இப் போது அவ்வசத்தாமெனும் சங்கையை விரிவாய் நிவிருத்தித்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் சர்வப் பிராணிகளின் சுரோத்திரமுதலிய காணரூப உபாதிவாயிலாய் சேதன க்ஷேத்திரக்ஞரூபத் தன்மையால் அந்த ஞேயப்பிரஹ்மத்தின் இருப்புத் தன்மையை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோக்ஷிஶிரோமுகம் ।
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥ (13)

ப-ம். 2 ஸர்வத: பாணிபாதம் 1 தத் 3 ஸர்வதோக்ஷிஶிரோமுகம் 4 ஸர்வத: ஶ்ருதிமத் 5 லோகே 6 ஸர்வம் 7 ஆவ்ருத்ய 8 திஷ்டதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம் எத்தன்மையதெனின் :— எல்லாத் தேகத்தும் கைகால்களையுடையதும், எல்லாத் தேகத்திலும் கண் தலை முகம் இவைகளையுடையதும், எல்லாத் தேகத்திலும் செவிகளையுடையதும், எல்லாப் பிராணிகளின் சரீரங்களிலும் சர்வ அசேதனவர்க்கத்தும் வியாபித்திருப்பதுமாம். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் யான்கூறிய ஞேயப்பிரஹ்மம் எத்தன்மையதெனின் :—சர்வதப்பாணிபாதமாம்; ஆண்டுச் சர்வ தேகத்திலுமிருக்கப்பட்ட அசேதனவடிவ பாணிபாதங்களை தத்தந்தொழிலிற் செலுத்தும் சேதனரூப க்ஷேத்திரக்ஞன் சர்வதப் பாணிபாதனுவன். ஆண்டு உலகத்திலுள்ள அசேதனப் பொருள்களின் தொழில்களனைத்தும் சேதனவடிவ அதிட்டான பூர்வகங்களாம். சேதனரூப அதிட்டானமொழிந்து சடப்பொருட்குப் பிரவிருத்தி யாண்டும் புலப்படவில்லை. இரதமுதலிய சடப்பொருள்களின் பிரவிருத்தி சேதனமாகிய புருட பூர்வகமேயாமாறுபோல கைகால் முதலிய சர்வ சடபதார்த்தங்களின் பிரவிருத்தியும் சேதனமாகிய பிரஹ்ம பூர்வகமேயாம். அத்தன்மைய அஸ்தபாதமுதலிய சர்வ சடவர்க்கங்களின் பிரவர்த்தக சேதன க்ஷேத்திரக்ஞரூப பிரஹ்மத்தினிடத்தில் இலதாந்தன்மை ஒருகாலும் அமையாதாமென்க. இவ்வகைத்தான யுத்தியை 'ஸர்வதோக்ஷிஶிரோமுகம்' என்பது முதலிய சர்வபரியாயங்களிலு முணர்ந்துகொள்க. ஈண்டுப் பாணிபாதம் என்னுமிரண்டிந்தியக் கிரகணம் வாக்கு முதலிய சர்வ கருமேந்திரியங்களின் உபலக்கணமாம்; மற்றும் எத்தன்மையதெனின் :— அந்த ஞேயப்பிரஹ்மம், சர்வ தோக்ஷி சிரோமுகம்; ஆண்டுச் சர்வ தேகங்களிலுமுள்ள அக்ஷிசிரம் முகங்களனைத்தையும் தத்தம் வியாபாரத்திற் செலுத்தும் சைதன்யம் சர்வ தோக்ஷி சிரோமுகமாம். மற்று மெத்தன்மையதெனின் அந்தப் பரப்பிரஹ்மம், சர்வத சுருதிமது. ஆண்டுச் சர்வ தேகங்களிலுமுள்ள சிரவணேந்திரியங்களனைத்தையும் தத் தம் வியாபாரத்திற்செலுத்தும் சைதன்யம் சர்வதச் சுருதிமதாம். ஈண்டு, அக்ஷிசுரோத்திரம் இவ்விரண்டிந்திரியங்களின் கிரகணம் சர்வ ஞானேந்திரியங்கட்கும், மனம் புத்தி முதலியவைகட்கும் உபலக்கணமாம். மற்றும் எத்தன்மையதெனின் அப்பிரஹ்மம், சர்வ தேகங்களிலும் அந்த ஒரே நித்தியவிபுவாகிய சேதனம் சர்வ சடவர்க்கத்தையும் ஆத்தியாசிக சம்பந்தத்தால் தனது சத்தாஸ்பூர்த்திரூபத்தால் வியாபித்திருக்கின்றதாம்; அதாவது, நிர்விகார ஸ்திதியையே அடைந்திருப்பதாம். கருத்திதுவாம்:—இரச்சுவடிவ அதிட்டானம் தன்னிடத்திற் கற்பிதமாகிய சர்ப்ப முதலியவைகளின் குணதோடங்களால் சம்பந்தப்படாததுபோல தன்னிடத்தில் அத்தியஸ்தமாகிய சடப்பிரபஞ்சத்தின் குணதோடங்களால் அந்தச் சேதனதேவர் சிறிதளவும் சம்பந்திக்கப்படார் என்பதாம். ஆண்டுச் சர்வ தேகங்களிலும் ஒரே சேதனமிருக்கின்றது. அது நித்தியமும் விபுவுமாம், தேக தேகங்களில் வெவ்வேறு சேதனங்களில்லை. இவையனைத்தும் முன்னர் விரிவாய்க் கூறினும். ஆண்டிச்சுலோகத்தால் ஸ்ரீ பகவான் இரண்டனுமானங்களைக் குறிப்பித்தருளினர். அது வருமாறு :—சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்கள் வாக்காதி கருமேந்திரியங்கள் மன முதலிய அந்தக்கரண சதுட்டயம் என்னு மிவ்வனைத்தும், சேதனசத்தி நிமித்தகமாய்த் தத்தம் வியாபாரத்தையுடையனவாம்: சுபாவமாய்ச்சடமாதலின், சர்ம்மமய அல்லது காஷ்டமயப் பிரதிமைகளைப்போலவாம். தேகேந்திரியாதிகளனைத்தும் சுபாவமாய்ச் சடங்கள், வேறு சேதன அதிஷ்டாதாவின் புத்தி பூர்வகப் பிரவிருத்திகளை யுடையவைகளாதலின் இரத முதலியவைகளைப்போல என்பதாம். இவ்வாற்றால் சர்வப் பிராணிகளின் தேகேந்திரியாதிகளால் அந்த ஞேயப்பிரஹ்மத்தின் இருப்புத் தன்மை நிச்சயிக்கப்பட்டதாமென்க. (13)

(அ-கை.) '𑌅𑌧𑍍𑌯𑌾𑌰𑍋 𑌪𑌾𑌪𑌵𑌾 𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌂 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍍𑌯𑌤𑍇' சுத்தப்பிரஹ்மத்தின்கண் முதலில் இவ்வுலகனைத்தையும் அத்தியாரோபஞ்செய்து, அதன்பின் நிடேதரூப அபவாதத்தால் சுத்தப்பிரஹ்மம் சுருதிபகவதியாலும், பிரஹ்மமுணர்ந்த பெரியோர்களாலும், அதிகாரிகளாகிய சிஷ்யர்களுக்கு ஆன்மரூபமாய்ப் பிரதிபாதிக்கப்படுகின்றது. என்னு முதியோர் நியாயத்தைத் தழுவி அந்த ஞேயப்பிரஹ்மத்தின்கண் சர்வப் பிரபஞ்சங்களையும் அத்தியாரோபஞ் செய்து '𑌅𑌨𑌾𑌦𑌿 𑌮𑌤𑍍𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮' என்னும் முற்கூறிய வாக்கியத்திற்குப் பூர்வ சுலோகத்தில் வியாக்கியானஞ் செய்யப்பட்டது. இப்போது, அந்த அத்தியாரோபித பிரபஞ்சங்களனைத்தையும் அபவாதஞ்செய்து '𑌨𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾 𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' என, முன்னர்க்கூறிய வாக்கியத்திற்கு வியாக்கியானஞ்செய்வான், ஸ்ரீ பகவான் அதிகாரிகட்கு நிருபாதிக சொரூபத்தை அறிவுறுத்தருளுதற்பொருட்டுத் தொடங்கியருளுகின்றார்.

சு-ம். 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 ।
𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌚𑍍𑌚𑍈𑌵 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 𑌚 ॥ (14)

ப-ம். 2 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌗𑍁𑌣𑌾𑌭𑌾𑌸𑌂 1 𑌸𑌰𑍍𑌵𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌂 3 𑌅𑌸𑌕𑍍𑌤𑌂 5 𑌸𑌰𑍍𑌵𑌭𑍃𑌤𑍍 4 𑌚 6 𑌏𑌵 7 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌂 9 𑌗𑍁𑌣𑌭𑍋𑌕𑍍𑌤𑍃 8 𑌚.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம், சர்வேந்தியங்களின்றியதும், சர்வேந்திரியங்களின் வியாபாரங்களால் விளங்குவதும், சர்வ சம்பந்தமற்றதும், சர்வத்தையுந்தாரணம் பண்ணுவதும், சத்துவ முதலிய குணங்களிலாததும், அந்தச் சத்துவ முதலிய குணங்களின் போக்தாவுமாம். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம், உண்மையிற் சுரோத்திர முதலிய சர்வேந்திரியங்களின்றியதும், தனது மாயையால் சர்வேந்திரியங்களின் குணங்களால் விளங்குவதுமாம். ஆண்டு, வெளிக்கரணவடிவ ஞானேந்திய கருமேந்தியங்களும் அந்தக்கரணவடிவ மனம் புத்தி என்பவற்றின் குணம்; அதாவது, கேட்டல், சொல்லல் முதலிய வியாபாரமாம். அந்தச் சர்வேந்தியங்களின் வியாபாரங்களால் அந்த ஞேயப்பிரஹ்மம் விளங்குகின்றது; அதாவது, அது அவைகளின் வியாபாரங்களால் வியாபாரமுடையதுபோலத் தோன்றுகின்றதாம். '𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑍀𑌵 𑌲𑍇𑌲𑌾𑌯𑌤𑍀𑌵' புத்தி முதலிய உபாதிகளின் சம்பந்தத்தால் இவ்வான்மதேவர் தியானம்பண்ணுபவர்போலும், சலனப்படுவர்போலுந் தேமற்றுகின்றனரென்பதாம். இந்தச் சுருதியின்கண் தியாயதி என்னுஞ் சப்தத்தாற் கூறப்பட்ட தியானம், சர்வ ஞானேந்திரியங்களின் வியாபாரங்கட்கும் உபலக்கணமாம். லேலாயதி என்னுஞ் சப்தத்தாற் கூறப்பட்ட சலனவடிவ லேலாயனம், சர்வ கருமேந்திரியங்களின் வியாபாரங்கட்கும் உபலக்கணமாம்; அதாவது, அவ்விந்திரியங்களின் தாதான்மியாத்தியாசத்தால் இவ்வான்மதேவர் நான் பார்க்கின்றேன், நான் கேட்கின்றேன், நான் சொல்கின்றேன், நான் செல்கின்றேன், என்றிவ்வாறு அவ்வவ்விந்திரிய வியாபாரத்தோடுகூடியவராய்த் தோற்றுகின்றனரென்பதாம். உண்மையிலோ அச்சர்வேந்தியங்களுமற்றவர்.

ஆ-சு. 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸𑌶𑍍𑌰𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌃 ।
𑌅𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑍋 𑌜𑌵𑌨𑍋𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑌾 ॥

(பொ-ள்.) இவ்வான்மதேவர் உண்மையில் நேத்திரமின்றியவரேனும் பார்க்கின்றார், சுரோத்திரமிலாதவரேனுங் கேட்கின்றார், பாணீந்திரியமின்றியவரேனும் பொருளை யேற்றுக்கொள்கின்றார், பாதேந்திரியமின்றியவரேனும் கடுநடையாா

கின்றார் என்பதாம். மற்று மெத்தன்மையதெனின் :—அந்தப்பிரஹ்மம் உண்மை லோ சர்வ சம்பந்தங்களுமிலாததாம்.

ஆ-சு. ஸஷஂமொஹ்யஂ வாரா^ஷ: ஸஷஂமொநஹிஷஜ்ஜதெ ।

(பொ-ள்.) இப்பரமான்மாச் சர்வ சங்கமிலாததாதலின் அசங்கமாம். இந்த அசங்கமாகிய ஆன்மா ஒரு பொருளோடும் பற்றையடைவதில்லை என்பதாம். இவ்வணம் உண்மையில் அசங்கமாயினும் அந்தப்பிரஹ்மம் தனது மாயாசத்தியால் சர்வபிருத்தாம். ஆண்டு, உலகத்தில் அதிட்டானமின்றி ஒரு பிராந்தியுமுண்டாகிறதில்லை. மற்றோ, இரச்சு முதலிய அதிட்டானத்தின்கண்ணே சர்ப்ப முதலிய பிராந்தியுண்டாகின்றது. ஆதலின் எந்தச் சைதன்யம் தனது சத்ரூபத்தால் சர்வ கற்பிதப்பிரபஞ்சத்தை யுத்தாரணஞ்செய்கின்றதோ, அங்ஙனமே போஷணமுஞ் செய்கின்றதோ, அது சர்வ பிருத்தாம்; மற்று மெத்தன்மையதெனின் :— அந்த ஞேயப்பிரஹ்மம் நிர்க்குணமாம்; அதாவது, உண்மையில் முக்குணங்களுமிலாததாம்; குணங்களின் போக்தாவாம்; அதாவது, சப்த முதலிய விடயவாயிலாய்ச் சுகதுக்க மோகாகாரங்களாய்ப் பரிணாமத்தையடைந்த முக்குணங்களின் போக்தாவாம், உபலப்தாவுமாம். 'ஸாக்ஷீசெதா கெவலொநிர்^ணஸ்' இப்பரமான்மாச் சர்வத்திற்கும் சாக்ஷியும் சேதனமும் அத்விதீயமும் முக்குணங்களற்றதுமாமென்பதாம். (14)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ஬ஹிரந்தஸ்ச ஹூதாநாமசரஂ சரமெவ ச ।
ஸூக்ஷ்மத்வாத்தத்விஜ்ஞெயஂ தூரஸ்தஂ சாந்திகெ ச தத் ॥ (15)

ப-ம். 4 ஬ஹி: 6 அந்த: 2 ச 3 ஹூதாநாஂ 8 அசரஂ 9 சரஂ 5 ஏவ 7 ச 10 ஸூக்ஷ்மத்வாத் 1 தத் 11 அவிஜ்ஞெயஂ 14 தூரஸ்தஂ 12 ச 16 அந்திகெ 15 ச 13 தத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம், சர்வ பூதங்களின் பாகியமும், ஆந்தரமும், தாவரரூபமும், சங்கமரூபமும், நுண்மையானதால் அவிஞ்ஞேயமும், மிகத்தூரத்திலுள்ளதும் மிகச்சமீபத்திலுள்ளதுமாம். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மற்று மெத்தன்மையதெனின் :—அந்த ஞேயப்பிரஹ்மம் உத்பத்தி தருமத்தையுடைய கற்பிதமான காரியங்களனைத்தின் உள்ளும் புறம்பும் அவ்வொன்றாகிய அகற்பித அதிட்டானப்பிரஹ்மம் வியாபகமாம்; அதாவது, இரச்சுவிற்கற்பிதமான சர்ப்பதண்டமாலை நீர்த்தாரை முதலியவைகளின் உள்ளும் புறம்பும் அந்த இரச்சுரூப அதிட்டானமே வியாபித்திருக்கிறது போல அந்தச் சர்வ பூதங்களின் உள்ளும் புறம்பும் அதிட்டானவடிவப் பிரஹ்மமொன்றே எல்லாவாற்றானும் வியாபித்திருக்கிறது. 'தத்ஸர்வஸ்யாஸ்ய தத்ஸர்வஸ்யா ஸ்யபாஹ்யத:' அவ்வதிட்டானவடிவ பரப்பிரஹ்மமே இவ்வுலகனைத்தின் உள்ளும் புறம்பும் வியாபகமாமென்பதாம். யாண்டும், வியாபகமானதால் அப்பிரஹ்மமே சர்வ தாவரபூதவடிவமும், சர்வ சங்கமபூதவடிவமுமாம்; என்னை? இவ்வுலகத்தில் எது கற்பிதப்பொருளோ அது அதிட்டானத்தினும் பின்னசத்தையுடையதன்றாம்; மற்றோ, அக்கற்பிதபதார்த்தம். அதிட்டானரூபமேயாம். இரச்சுவில் கற்பிதமாகிய சர்ப்ப முதலியவைகள் அதிட்டானவடிவமேயாமாறுபோல அதிட்டானப்பிரஹ்மத்தில் கற்பிதமாகிய இத்தாவரசங்கமரூப உலகமும், அவ்வதிட்டானப் பிரஹ்மத்தினின்றும் வேறு சத்தையையுடையதன்று; மற்றோ, அவ்வதி[illegible]

வடிவப் பொருள்கட்கு அதிட்டானம் பிரஹ்மவடிவத்தன்மை எனல் பொருந்து மென்க. 'ஸவ-ஜ ஷெஷ்த ஊஹ' இத்தாவரசங்கமரூப உலகனைத்தும் பிரஹ்ம ரூபமேயாமென்க. அற்றேல், இவ்வாறு அந்த ஞேயப்பிரஹ்மம் எல்லாவற்றின் ஆன்மரூபமாமெனிலோ, எல்லாப்பிராணிகளும் அப்பரப்பிரஹ்மத்தை நன்குணராத தென்னை? என அர்ச்சுனனது சங்கை நிகழ, ஸ்ரீ பகவான் அதை யுணராமையிற் காரணங்கூறியருளுகின்றார். 'ஸூக்ஷ்மதாத்தவிஜ்ஞேயம் ஐதி' ஹே அர்ச்சுன! அந்தப் பரப்பிரஹ்மம் எல்லாவற்றின் ஆன்மரூபமாயினும் மிக நுண்ணியதாதலி னுனும், உருவ முதலிய குணங்களின்மையினுனும் அவிஞ்ஞேயமாம்; அதாவது, இப்பிரஹ்மம் இத்தன்மையதாம், என்னும் விளக்கஞானத்திற் குரியதன்றாம். 'ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரம் நித்யம் ஐதி' இந்தப் பரப்பிரஹ்மம் வானுதி சூக்ஷ்மபதார்த்தத்தினும் மிகச் சூட்சுமமும் நித்தியமுமாமென்க. இக்காரணத் தானே இது விவேக வைராக்கிய முதலிய சாதனங்களின்றிய புருடனுக்கு ஆயி ரங்கோடி வருஷங்களானும் அடையொணுததாம். ஆதலின், அப்பரப்பிரஹ்மம் அப்பகிர்முக புருஷனுக்குத் தூரத்திருப்பதாம்; அதாவது, இலக்ஷங்கோடி யோச னைமார்க்கம் இடையீடுடைய தேசம்போல மிகத் தூரமாமென்பதாம். எவன் விவே கமுதலிய சாதனங்களையுடையவனே அவனுக்கது தனதான்மரூபமானதால் மிகச் சமீபித்ததாம்.

ஆ.சு. ஊராத்ஊரெதஹிஹாஷி கெஅவமஷிஷெவ நிஹிதம் மஹாயாம்।

(போ-ள்.) விவேகவைராக்கிய முதலிய சாதனங்களின்றிய பகிர்முக புருஷ னுக்கோ, இப்பரமான்மா மிகத் தூரமான லோகா லோக பருவதத்தினும் மிகத் தூரமாம். விவேக வைராக்கிய முதலிய சாதனசம்பன்னனாய்ப் பிரஹ்மவேத்தா வாகிய குருவைச் சரணடைந்த உத்தமாதிகாரிக்கு மிகச் சமீபமான இருதயத் தின்கண்ணே சாட்சாத்காரமாகின்றது என்பதாம். (15)

(அ-கை.) ஆண்டுப்பூர்வம் பதின்மூன்றுவது சுலோகத்தில் 'ஸவ-ஊாவ்ரு தஷிஷ்தி' என்னும் வாக்கியத்தால் ஒரே பரமான்மாச் சர்வ சடவர்க்கத்தையும் வியாபித்து ஸ்திதமானது என்னு மர்த்தஞ் சாமான்யமாய்க்கூறப்பட்டது. இப் போது அவ்வர்த்தத்தை ஸ்ரீ பகவான் தேகதேகத்தில் ஆன்மபேதத்தைக்கொள் ளும் வாதிகளை மறுத்தற்பொருட்டு விளக்கமாய் வர்ணித்தருளுகின்றார்.

சு-ம். அவிஹக்தம் அ ஹூதெஷு விஹக்தவிவ அ ஷிதம்।
ஹூதஹதூ அ தஜ்ஜேயம் ஜஸிஷ்ணு ப்ரஹவிஷ்ணு அ॥ (16)

ப-ம். 3 அவிஹக்தம் 1 அ 2 ஹூதெஷு 5 விஹக்தம் 6 ஐவ 4 அ 7 ஷிதம் 9 ஹூத ஹதூ 10 அ 8 தத் 14 ஜ்ஞேயம் 11 ஜஸிஷ்ணு 13 ப்ரஹவிஷ்ணு 12 அ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் அப்பரப்பிரஹ்மம் சர்வப் பிராணிகளிடத் தும் ஒன்றே யாயதும், பின்னம்போன்று நிலைத்திருப்பதும், சர்வ பூதங்களைத் தாரணம்பண்ணுவதும், சம்மாரம் பண்ணுவதும், உத்பன்னம் பண்ணுவதுமா மென்று நீ யுணர்தி. (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அப்பரப்பிரஹ்மம் ஒன்றே சர்வப் பிராணிகளிடத் தும் வியாபித்திருக்கிறது. தேக தேகத்திற் பின்னமன்று, அது வான்போல் யாண் டும் வியாபகமாதலின். 'ஊகொஷெவ ஸவஹூதெஷு மூடி:' விறகுக ளனைத்தின்கண்ணும் தீ குஹ்யமாயிருப்பதுபோல அப்பரமான்மா ஒன்றே சர்வ பூதங்களிடத்தும் குஹ்யமாயிருக்கின்றது என்பதாம். இவ்வாற்றால் அப்பரப்

பிரஹ்மம் உண்மையில் ஒரே அத்துவிதீயரூபமாயிருப்பினும் இத்தேகத்தோடு தாதான்மியமாய்ப் பிரதீதியாகின்றது. ஆதலின், அது தேக தேகத்தில் வெவ்வேருனதுபோலிருக்கின்றது; அதாவது, ஒரே வானில் கடமட முதலிய உபாதிகளால் பொய்பாகப் பேதந்தோன்றுவதுபோல அந்த உண்மையிலாப்பேதம் உண்மையாய வானின் ஏகத்தன்மையை யொழிக்கமுடியாததுபோன்று, ஒரே பரமான்மாவினிடத்தில் தேக முதலிய உபாதிகளால் பொய்யாய்ப் பேதந்தோற்றுகின்றது. அந்த மித்தியாபேதம் அப்பரமான்மாவின் உண்மையாகிய ஏகத்தன்மையை நிவிருத்தித்தற்கேலாததாம். அற்றேல், ஹே பகவன்! இவ்வாற்ருல் அந்த க்ஷேத்திரக்ஞனுகிய சைதன்யம் சர்வ பூதங்களிடத்தும் வியாபகமாகுக; ஆனுல், உலகனைத்திற்குங் காரணமாகிய பிரஹ்மமோ அதனின் வேறேயாம். என, அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்ருர். 'ஹூதஹதரு-உஅ' ஹே அர்ச்சுன! எந்தப் பிரஹ்மம் பூதபர்த்தா; அதாவது, எந்தப் பிரஹ்மம் திதிகாலத்தில் அதிட்டானவடிவத்தால் சர்வ பூதங்களையுங் தாரணம்பண்ணுவதும், போஷணம்பண்ணுவதும், பிரளயகாலத்தில் சர்வ பூதங்களையுஞ் சங்கரிப்பதும், சிருட்டிகாலத்தில் சர்வ பூதங்களையுந் தோற்றுவிப்பதும்; அதாவது, இரச்சு முதலிய அதிட்டானம் மாயாகற்பித சர்ப்ப முதலியவைகளின் தோற்றநிலையிறுகட்குக் காரணமாவதுபோல உலகனைத்தின் தோற்றநிலையிறுகட்குக் காரணமாமோ, அந்தப் பிரஹ்மமே எல்லாத் தேகங்களிலும் ஒரே க்ஷேத்திரக்ஞரூபமென்று நீ யுணர்தி. அப்பிரஹ்மத்தினின்றும் அந்த க்ஷேத்திரக்ஞனுகிய சேதனம் வேறென்றுணரற்க. (16)

(அ-கை.) ஹே பகவன் அந்த ஞேயப்பிரஹ்மம் எவ்விடத்து மிருப்பதாயிருந்தும் பிரதீதியாகாதொழியுங்கால் அது சடமேயாம். என அர்ச்சுனனது சங்கையுண்டாக, அந்த ஞேயப்பிரஹ்மம் தோன்ருமைமாத்திரத்தானே சடமாகாதாம்; என்னை, அந்தப்பிரஹ்மம் சுயஞ்சோதிவடிவமாயினும் உருவ முதலிய குணங்களின்றியதாதலின் அதனிடத்து நேத்திர முதலிய இந்திரிய சன்ய ஞானத்திற்கவிடயத்தன்மை சம்பவமாதற்கேலும், என உத்தரமருளிச்செய்கின்ருர். 'ஜ்யோதிஷா உவி தஜ்ஜ்யோதிஃ உதி' அல்லது, பூர்வ சுலோகத்தின் இரண்டாவது பாகத்தால் அப்பிரஹ்மத்தின் உலகத்தோற்ற நிலையிறுகளின் கர்த்தாத்தன்மைவடிவ தடத்தலக்கணங் கூறப்பட்டது. இப்போது, 'ஜ்யோதிஷா உவி தஜ்ஜ்யோதிஃ' என்னுஞ் சுலோகத்தால் அந்த ஞேயப்பிரஹ்மத்தின் சொரூபலக்கணங் கூறப்படுகின்றது.

சு-ம். ஜ்யோதிஷாஉவி தஜ்ஜ்யோதி ஹுஉஸஃ வஈஉ-அ்யதெ ।
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநமஉ்யம் ஹூதி ஸவ-உஸ்ய யிஷ்டிதழ ॥ (17)

ப-ம். 2 ஜ்யோதிஷாம் 3 அபி 1 தத் 4 ஜ்யோதிஃ 5 தமஸஃ 6 பரம் 7 உ-அ்யதெ 8 ஜ்ஞாநம் 9 ஜ்ஞேயம் 10 ஜ்ஞாநமஉ்யம் 12 ஹூதி 11 ஸவ-உஸ்ய 13 யிஷ்டிதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம் சூரியன் முதலிய ஒளிகட்கு மொளியும், சடவர்க்கரூப தமத்தினின்றும் பரமெனப்படுவதும், ஞானரூபமும், ஞேயரூபமும், ஞானத்தாலடையத்தக்கதும், சர்வப்பிராணிகளின் புத்தியில் நிலைத்திருப்பதுமாம். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் அந்த ஞேயப்பிரஹ்மம் எத்தன்மையதெனின்:—சோதிகட்குஞ் சோதியாம்; அதாவது, அனுன்ம பதார்த்தங்களை விளக்கும் மதி, இரவி, தீ, மின்னல் முதலியவை வெளி யொளிகள், மனம், புத்தி முதலியவைகள் உள்ளொளிகள் ஆகிய அவ்விருவகை ஒளிகளையும் அது விளக்குவ

தாமென்க. ஆண்டுச் சைதன்ய ஒளியின்கண் சூரியன் முதலிய சடவொளிகளைப் பிரகாசிப்பிக்குந் தன்மை யுத்தியானும் சம்பவமாதற்கேனும். அங்ஙனமே, இவ் வர்த்தத்தை நேரே சுருதிபகவதியுங் கூறுகின்றாள்.

ஆ-சு. யெநஸூயஸ்தபதி தெஜஸெஜ: தஸ்யஹாஸாஸவ௯மிஜம் விஹாதி ।

(போ-ள்.) எந்தச் சுயஞ்சோதியாகிய பரமான்மாவால் இந்த வொளியுடைய சூரியன் தகிக்கின்றதோ, எந்தப் பரமான்மாவின் பிரகாசத்தால் இந்தச் சூரிய சந்திரன் முதலிய உலகங்களனைத்தும் பிரகாசிக்கப்படுகின்றதோ என்பதாம். ஸ்ரீ பகவானும் நேரே இது 'யதாதித்யமதம் தெஜ:' என்னும் வாக்கியத்தால் திருவாய்மலர்ந்தருளப்படும். ஆதலின், சைதன்யப் பிரஹ்மசொரூபச் சோதியால் சூரியன் முதலிய சடவொளிகளின் விளக்கமாந்தன்மை பொருந்துமென்க. அற்றேல், ஹே பகவன்! அந்தச் சைதன்யவடிவப் பிரஹ்மம் இயல்பாகவே சடத்தன்மையற்றதாயினும் சடப்பொருளோடு சம்பந்தமுடையதாம், என்னு மர்ச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'தமஸ: வரமுச்யதே இதி' ஹே அர்ச்சுன! அந்தப் பரப்பிரஹ்மம் சடவர்க்கரூப தமத்தினின்றும் பரமெனப்படும்; அதாவது, அவித்தை அதன் காரியவடிவ இச்சர்வப்பிரபஞ்சம் என்னு மிரண்டும் அபாரமார்த்திகமாம். அந்தச் சைதன்யவடிவ ஞேயப்பிரஹ்மம் பாரமார்த்திகமாம். அந்த அசத்தாகிய வுலகத்திற்கும் சத்தாகிய பிரஹ்மத்திற்கும் ஒருவித சம்பந்தமும் அமையாதாம். ஆதலின், சுருதிமாதாவும் பிரஹ்மமுணர்ந்த பெரியோர்களும் அந்த ஞேயப்பிரஹ்மம் அவித்தை அதன் காரியவடிவப் பிரபஞ்சங்களோடு சம்பந்தமிலாததென்றறைந்தனர்.

ஆ-சு. ஆக்ஷராத்வரத: வர: ஸ்ரூதிருவண௯ம் தமஸ:வரஸ்தாத் ।

(போ-ள்.) ஆன்மஞான மொழிந்த வேறுபாயங்களால் கெடுக்கொணாததும் தனது காரியத்தை நோக்கப்பரமுமாகிய அவித்தையினின்றும் அப்பரப்பிரஹ்மம் பரமாம். அப்பரப்பிரஹ்மம் சூரியன்போல வேறொளியை அவாவாது உலகனைத்தையும் விளக்குகின்றது, அவித்தியா ரூபதமத்தினின்றும் பரமென்பது. இதைப் பிரஹ்மமுணர்ந்த பெரியோர்களுங் கூறுகின்றார்கள்.

ஆ-சு. நி:ஸங்கஸ்ய ஸஸங்கேந கூடஸ்தஸ்ய விகாரிணா ।
ஆத்மநோ நாத்மநா யோகோ வாஸ்தவோ நோபபத்யதே ॥

(போ-ள்.) சர்வ சங்கங்களுமின்றிய கூடத்தான்மாவிற்குச் சங்கமுடைய விகாரி அனான்மவஸ்துக்களோடு உண்மையாய்ச் சம்பந்தம் பொருந்தாதென்பதாம். அல்லது, 'தமஸ:வரமுச்யதே' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் அந்த ஞேயப்பிரஹ்மத்தின்கண் சடவர்க்கரூப தமத்தினின்றும் பின்னத் தன்மையைக் கூறியருளினர். அவ்வேறுந்தன்மை சித்தித்தற்பொருட்டு அந்த ஞேயப்பிரஹ்மத்திற்கு 'ஜெ்யாதிஷா மபிதஜ்ஜ்யோதி:' என்னும் வாக்கியத்தால் ஹேதுகர்ப்ப விசேடணத்தைக் கூறியருளினர், அதனால் இவ்வனுமானம் பெறப்படுகின்றது :—அந்த ஞேயப்பிரஹ்மம் சடவர்க்கரூப தமத்தினின்றும் வேறுதற்குரியது, ஒளிக்குமொளியாதலின், எப்பொருள் சடவர்க்கத்தினின்றும் பின்னமன்றோ, அப்பொருள் ஒளிக்கொளியன்று, கடமுதலிய சடப்பொருள்போல என்பதாம். சுயஞ்சோதிவடிவமாதலினும் சர்வ சடவருக்க சம்பந்த ரகிதமாதலினும் அந்த ஞேயப்பிரமம் ஞானரூபமாம். அல்லது, ஹே பகவன்! சந்திரவடிவச் சோதியைப் பிரகாசிப்பது பௌதிகரூபத்தால் அச்சந்திர சசாதீய சூரியரூபச்சோதி என்பது கணிதநூலில் மிக விளக்கமாபோல, அந்தச் சூரியன் முதலிய சோதியைப் பிரகாசம்பண்ணப்பட்டது அந்தச் சூரியாதிகட்குச் சசாதீயமாகிய யாதாகினுமோ ரலௌகிக ஒளியாம்

என அர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக, ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். ஞானம், என, ஹே அர்ச்சுன! அந்தச்சூரியன் முதலிய ஒளிகளை விளக்கும் ஞேயப் பிரஹ்மம் எத்தன்மையதெனின் ஞானரூபமாம்; அதாவது பிரமாணஜன்ய சித்த விருத்தியால் அபிவியக்தமான சம்வித்துரூபமாம். யாதேனுமோ ரலௌகிக பௌதிக ஜோதியன்று. அத்தன்மைய ஞானவடிவமானதால் அந்தப் பிரஹ்மம் ஞேயரூபமாம், அதாவது, அஞ்ஞாதமானதால் அது அதிகாரிகளாலுணரத்தக்க தாம். அந்த ஞானரூப பிரஹ்மத்திற்கு வேறாகிய சடபதார்த்தத்தில் அவ்வஞ் ஞாதத்தன்மை இருக்காது, ஆதலின் அச்சடப்பொருள்கள் அறிதற்குரியனவன்று; அற்றேல், ஹே பகவன்! அத்தன்மைய ஞேயப்பிரஹ்மம் சர்வப் பிராணிகளாலும் உணரப்படாததென்னை? என அர்ச்சுனன் சங்கை நிகழ ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார். (ஞானகம்யம்) என, ஹே அர்ச்சுன! முன்னர் அமானித்துவ முதற் கொண்டு தத்துவ ஞானார்த்த தரிசனமீறாகச் சொல்லப்பட்ட இருபது சாத னங்களும் ஞான சாதனங்களானதால் ஞானமெனக் கூறப்பட்டன. அத்தன்மைய ஞானரூப சாதனங்களாலே அந்த ஞேயப்பிரஹ்மம் பிராப்தமாம். அஃதிலாதிலே ஆதலின், அமானித்துவமுதலிய சாதன சம்பன்னனே அந்த ஞேயப்பிரஹ்மத்தை யடைவன் அவைகளின்றிய பகிர்முக புருஷன் அதையடையான் என்பதாம்; அற் றேல், ஹே பகவன்! யக்ஞமுதலிய சாதனங்களாலடையத்தக்க சுவர்க்க முதலிய வைகள் தேசகாலங்களால் வியவகிதமாதல்போல, அமானித்துவ முதலிய சாத னங்களாலடையத்தக்க அந்த ஞேயப்பிரஹ்மமும் தேசகாலங்களால் வியவகித மாம்; என்னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்' என. ஹே அர்ச்சுன! அந்த ஞேயப்பிரஹ்மம் சுவர்க்க முதலியவைகளைப்போல யாதொரு வியவதானமுமற்றது, சர்வப்பிராணிகளின் புத்தியின்கண்ணேயே திதமாம், அதாவது அந்த ஞேயப்பிரஹ்மம் பொதுவாய் உலகமனைத்திலுமுள்ளதாமாயினும் விசேடரூபமாய் அப்புத்தியின்கண்ணே சீவ வடிவத்தாலும், அந்தரியாமிவடிவத்தாலும் விளக்கத்தைப்பொருந்துகின்றது. சூரி யனொளி பொதுவாய்ச் சர்வப் பொருளிடத்து மிருப்பினும் கண்ணாடி சூரியகாந்த மணி முதலிய தூய்மையான பொருளிடத்து விசேடமாய் விளக்கத்தை யடைவது போல, அந்தப் பரப்பிரஹ்மம் தாவரசங்கமவடிவ சர்வப் பிரபஞ்சங்களிலும் பொது வாயிருப்பினும் புத்தியில் விசேடவடிவாய் விளக்கத்தையடைகின்றது. கருத்திது வாம்:—அப்பரப்பிரஹ்மம் சர்வப் பிராணிகட்கும் தமதான்மவடிவமானதால் உண் மையில் மிகவும் அவ்வியவகிதமாயிருந்தும் பிராந்தியால் வியவகிதம் போற்றோற்று கின்றது அந்த ஞேயப்பிரஹ்மமே தத்துவஞானத்தால் சர்வப் பிராந்திக்குங் காரணமாகிய அஞ்ஞானத்தின் நிவிருத்தியால் தமதான்மவடிவமாயடையப்படு கின்றது என்பதாம். (17)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் கூறப்பட்ட க்ஷேத்திர முதலியவைகளையும், அதிகாரியையும், பலத்தையும் கூறியருளி ஸ்ரீ பகவான் பூர்வப் பிரசங்கத்தை முடிவு செய்தருளுகின்றார்.

சு-ம். இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத꞉ ।
மத்பக்த ஏதத்விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ (18)

ப-ம். 1 இதி 2 க்ஷேத்ரம் 3 ததா 4 ஜ்ஞாநம் 6 ஜ்ஞேயம் 5 ச 8 உக்தம் 7 ஸமாஸத꞉ 9 மத்பக்த꞉ 10 ஏதத் 11 விஜ்ஞாய 12 மத்பாவாய 13 உபபத்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நான் உனக்குக் கூறிப்போந்த பிர காரமாய் க்ஷேத்திரத்தையும், ஞானத்தையும், ஞேயத்தையும் சுருக்கிக் கூறி

னேன். எனதன்பனானவன் இம்மூன்றையுமுணர்ந்து எனது பாவத்தையடை தற்கு யோக்கியனாகின்றான். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்தவாற்றால் பரமேசுரனாகிய நான் உனக்கு மாபூதமுதற்கொண்டு இருதியீறாக க்ஷேத்திர சொரூபத்தையும், அமானித்துவ முதலியன முதற்கொண்டு தத்துவஞானார்த்த தரிசனமீறாக ஞானத்தையும் 'ஜ்ஞேயம் யத்தத்' என்னும் வாக்கிய முதற்கொண்டு 'ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்' என்னும் வாக்கியமீறாக ஞேயப்பிரஹ்மத்தையும் சுருக்கமாய்க் கூறினேன்; அதாவது, க்ஷேத்திரம், ஞானம், ஞேயம் இம்மூன்றும் சுருதிமிருதிகளில் விரிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. அம்மூன்றையும், அந்தச் சுருதிமிருதி வாக்கியங்களைக்கவர்ந்து மந்தர்கட்கனுக்கிரகித்தற்பொருட்டு நான் சுருக்கமாயுனக்குக்கூறினேன். இத்துணையே சர்வ வேதாந்தங்கட்கும் இக்கீதா சாத்திரத்திற்கும் அர்த்தமாமென்க. ஆண்டு, இவ்வர்த்தத்தில் முன்னர்ப் பன்னிரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைய பரமேசுர பக்தனே அதிகாரியாவன் என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'மத்பக்த இதி' அதாவது, பரமாசாரியவடிவ ஸ்ரீ பகவான் வாசுதேவனாகிய எனக்குச் சமர்ப்பித்தவனும், பரமேசுரனாகிய எனது சரணமொன்றையே அடைந்தவனுமாகிய எனது பக்தனே கூறிப்போந்த க்ஷேத்திர, ஞான, ஞேய மூன்றையும் உள்ளவாறுணர்ந்து எனது பாவத்தையடைதற்பொருட்டு யோக்கியனாகின்றான்; அதாவது சர்வானர்த்தங்களுமின்றிய பரமானந்தப் பிரஹ்மபாவரூப மோட்சமடைதற்குரியனாகின்றான். ஆண்டுப் பரமேசுர பக்தியினானே, இவ்வதிகாரிக்குப் பிரஹ்மபாவப் பிராப்தியாம் என்பது சுருதியினுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. யஸ்ய தேவே பரா பக்திர்யதா தேவே ததா குரௌ ।
தஸ்யைதே கதிதா ஹ்யர்தா: ப்ரகாசந்தே மஹாத்மந: ॥

(போ-ள்.) எவ்வதிகாரிக்குப் பரமான்மதேவனிடத்தில் அனன்யபக்தியிருப்பதுபோலவே பிரஹ்மவேத்தாவாகிய குருவினிடத்தில் அனன்யபக்தியோ, அந்த மகாத்துமாவிற்கே இவ்வேதாந்தப் பிரதிபாதிதார்த்தம் இருதயத்தில் விளங்கும் என்பதாம். இவ்வதிகாரி ஞேயப்பிரஹ்மத்தைத் தனதான்மாவாயுணர்ந்து பிரஹ்மரூபமாகின்றான் என்பதும் சுருதியிற்கூறப்பட்டுளது 'ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி' இவ்வதிகாரி நான் பிரஹ்மசொரூபனெனப் பிரஹ்மத்தைத் தனதான்மாவாயுணர்ந்து பிரஹ்மமேயாகின்றான் என்பதாம்; இதனுலிப்பொருள் பெறப்பட்டது :—பரம புருடார்த்தத்தையடையும் வேட்கையுடைய அதிகாரி மிகவற்பமான விடயபோகேச்சையை விடுத்து எப்போதும் எனது சரணமொன்றையேயடைந்து ஆன்மஞானத்திற்காக அமானித்துவ முதலிய சாதனங்களையே முயற்சியாற்றேடுகின்றான் என்பதாம். (18)

(அ-கை.) ஆண்டுக் கூறிப்போந்த இக்கிரந்தத்தால் 'ததக்ஷேத்ரம் யச்ச யாத்ருக்' என்னும் வாக்கியத்திற்கு வியாக்கியானம் பண்ணப்பட்டது. இப்போது 'யத்விகாரி யதஶ்ச யத் ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச' என்னும் வாக்கியத்திற்கு வியாக்கியானஞ்செய்யப்படும், ஆண்டுப் பிரகிருதி புருஷன் இவ்விரண்டற்கும் சம்சார காரணத்தன்மையைக் கூறி 'யத்விகாரி யதஶ்ச' என்னும் வாக்கியார்த்தத்தை 'ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ' என்பது முதலிய இரண்டு சுலோகங்களால் விரிவாயருளிச்செய்கின்றார். 'ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச' என்னும் வாக்கியார்த்தமோ 'புருஷ: ப்ரக்ருதிஸ்தோஹி' என்பது முதலிய இரண்டு சுலோகங்க

ளால் விரிவாய் அருளிச்செய்வார் ; அவற்றுள், முன்னர் ஏழாவது அத்தியாயத்தில் க்ஷேத்திரமெனும் அபரப் பிரகிருதியையும், க்ஷேத்திரக்ஞனெனும் பரப்பிரகிருதியையும் கூறி 'ஏதத்யோநீநி பூதாநி' என்னும் வாக்கியத்தால் அவ்விரு பிரகிருதிகளிடத்தும் சர்வ பூதங்கட்கும் காரணத்தன்மை கூறப்பட்டது. இப்போது அப்பிரகிருதிகட்கு அநாதித்தன்மையைக்கூறிச் சர்வ பூதங்களிடத்துப் அப்பிரகிருதிகளின் காரியத்தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவபி ।
விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் ॥ (19)

ப-ம். 1 ப்ரக்ருதிம் 3 புருஷம் 2 ச 7 ஏவ 8 வித்தி 6 அநாதீ 4 உபௌ 5 அபி 10 விகாராந் 9 ச 12 குணாந் 11 ச 14 ஏவ 15 வித்தி 13 ப்ரக்ருதிஸம்பவாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! பிரகிருதி புருஷன் இரண்டையும் அநாதிகளென்றேயுணர்தி ; அங்ஙனமே விகாரத்தையும் குணங்களையும் அப்பிரகிருதியினின்று உண்டானதென்றே யுணர்தி. (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! மாயை அவித்தை அஞ்ஞானமென்னும் பெயர்களையுடைய முக்குணவடிவப் பரமேசுர சத்தியானதும், பூர்வ ஏழாவது அத்தியாயத்தில் எண்வகையாய்க் கூறப்பட்டதும், அபரைப் பிரகிருதி என்னும் பெயராற் கூறப்பட்டதுமாகிய அந்த க்ஷேத்திரமெனும் அபரப் பிரகிருதியே ஈண்டுப் பிரகிருதி சப்தத்தாற் கொள்ளத்தக்கதாம் ; அன்றியும், முன்னர் ஏழாவது அத்தியாயத்தில் க்ஷேத்திரக்ஞனெனும் பரப்பிரகிருதியுங் கூறப்பட்டுளது, அதுவே ஈண்டுப் புருஷ சப்தத்தாற் கொள்ளப்படுகின்றது ; அத்தன்மைய பிரகிருதி, புருஷன் இரண்டையும் நீ அநாதியென்றேயுணர்தி, ஆண்டு ஆதியெனுங் காரணமின்றியது அநாதியாம். அத்தன்மைய அநாதியென்றவற்றையுணர்தி ஆண்டு, மாயாந்து பிரகிருதிம் வித்யாத், என்னுஞ்சுருதி அம்மாயாரூபப் பிரகிருதிக்கே சர்வ சகத்காரணத் தன்மையைக்கூறியது : அத்தன்மைய உலகனைத்திற்குங் காரணமாகிய பிரகிருதியின்கண் அநாதித்தன்மை யுரித்தாம் என்னை, ஒருபோது அந்தமாயையெனும் பிரகிருதிக்கும் வேறொரு காரணபேட்சை உடன்படினோ அந்தப் பிரகிருதிக்கும் வேறொருகாரணபேட்சையாம். அவ்வன்யகாரணத்திற்கும் மற்றொரு காரணபேட்சையாம் ; இவ்வாறு காரணத்தின் அநவத்தை வரும் ; ஆதலின் அம்மாயாரூபப் பிரகிருதியின்கண் அவ்வநாதித்தன்மையே கொள்ளற்பாலது ; அல்லது, அம்மாயாரூபப் பிரகிருதியின்கண் கேவல யுக்தியானே அவ்வநாதித்தன்மையன்று மற்றோ, 'அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணாம்' என்னுஞ் சுருதியும் நேரே அதின்கண் அநாதித்தன்மையைக் கூறுகின்றது. அல்லது, மாயாவடிவப் பிரகிருதியின்கண் அவ்வநாதித்தன்மை யுக்திசுருதிகளாற் சித்தமானதுபோல க்ஷேத்திரக்ஞனெனும் ஜீவான்மாவினிடத்தும் அநாதித்தன்மை அவ்விரண்டானுஞ் சித்தமாம். அஃதாமாறுகாட்டுதும்:—இந்தச் சர்வப்பிராணிமாத்திரத்திற்கும் உத்பத்தி காலத்திலோ ஹர்ஷம், சோகம், பயம், சுகம், துக்கம், பிரவிருத்தி என்பன முதலியன பிராப்தமாகின்றன. அவைகளில் இச்செனம தருமாதருமசம்ஸ்காரமோ காரணமன்று ; மற்றோ, அச்சீவனுக்கு அவைகள் பூர்வஜென்ம தருமாதருமங்களாலும் சம்ஸ்காரங்களாலுமே பிராப்தமாகின்றன. அந்தத் தருமாதரும முதலிய தருமங்கள் ஆசிரயமின்றிச் சம்பவியாதனவாமாதலின் இந்தச் சென்மத்தின் பூர்வசென்மத்தினும் அச்சீவான்மாவின் இருப்புத்தன்மை கொள்ளற்பாலதாம். இவ்வாற்றால், தருமாதருமங்களின் ஆசிரயத்தன்மையால் இச்

சீவான்மாவின்கண் அநாதித்தன்மை சித்தமாம். இச்சீவான்மாவை ஒருகால் அநாதியெனக்கொள்ளாது தோற்றமுடையதெனக்கொள்ளிலோ, முன் செய்யப்பட்ட புண்ணியபாப கருமங்களின் இன்பத்துன்பவடிவ பயனை நுகராமலே நாசமாகின்றது· அங்ஙனமே, முன்னர்ச்செய்யப்படாத புண்ணியபாப கருமங்களின் இன்பத்துன்பவடிவ பலத்தை நுகருதலுமாம். இவ்வாறு கிருதநாசம் அகிருதாப்பியாகமமென்னும் இரண்டு தோடங்களும்வரும், அத்தோடங்களை நீக்குதற்பொருட்டும் இச்சீவான்மாவை அநாதியென்றே கொள்ளல்வேண்டும். அன்றியும், 'அஜோ ஹ்யேகொஜுஷமாணொநுசெதெ' என்பது முதலிய சுருதியிலும் அச்சீவான்மாவிற்கு அநாதித்தன்மையே கூறப்பட்டிருக்கிறது என்க. ஹே அர்ச்சுன! அம்மாயையெனும் பிரகிருதி அநாதியாதலினுனே அதற்கு முன்னர்ச் சர்வ பூதங்கட்கும் காரணத்தன்மை கூறப்பட்டது சம்பவமாதல்கூடும் என்னு மர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'விகாராம் ஶ்சதி' ஹே அர்ச்சுன! வாதிமாபூதங்கள், செவியாதி பத்திந்திரியங்கள் என்னு மிப்பதினாறுக்கும் விகாரமெனப்பெயராம். சுகதுக்க மோகவடிவசத்துவ முதலியன குணமாம். இந்தப் பதினாறுவிகாரங்களையும் முக்குணங்களையும் அம்மாயாவடிவப் பிரகிருதியினின்றே தோற்றியவைகளென்றுணர்தி என்பதாம். (19)

(அ-கை.) இப்போது அவ் விகாரங்களினிடத்தில் பிரகிருதியினின்றுந் தோற்றியதன்மையை விவேசனஞ்செய்து, ஸ்ரீ பகவான் அந்த க்ஷேத்திரக்ஞனாகிய புருஷனிடத்துச் சம்சாரத்தின் காரணத்தன்மையைத் தரிசிப்பித்தருளுகின்றார்.

சு-ம்.　காய௯காணகத௫௯கெ ஹெதுஃ வ்ரகூதிரு௯அ்யூதெ ।
　　வு௯ரு௯ஷஃஸுவ௯வ௯ஃ வாநாம் ஹொக்ஷுகெ ஹெது௯ரு௯அ்யூதெ ॥ (20)

ப-ம்.　1 காய௯காணகத௫௯கெ 3 ஹெதுஃ 2 வ்ரகூதிஃ 4 உஅ்யூதெ 7 வ௯ரு௯ஷஃ 5 ஸு௯வ௯ஃ வாநாம் 6 ஹொக்ஷுகெ 8 ஹெதுஃ 9 உஅ்யூதெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! காரியகரண கருத்திருத்தன்மைகளில் அந்தப்பிரகிருதியே காரணமெனப்படுகிறது. சுகதுக்கங்களின் போக்தாத்தன்மையில் அப்புருடனே காரணனெனப்படுகின்றனன். (20)

(வி-ம்.) ஈண்டுச் சரீரம் காரியமாம். அதன்கண்ணுள்ள ஞானகருமேந்தியங்கள், மனம், புத்தி, சித்தமென்னும் பதின்மூன்றிந்தியங்களும் கரணங்களாம். ஈண்டு, இத்தேகத்தைத் தோற்றுவிக்கப்பட்ட வாதிபஞ்சபூதங்கள் சப்தம் முதலிய ஐவகைவிடயங்கள் என்னு மிவ்வனைத்தும் அந்தச் சரீரவடிவ காரியத்தைக் கொள்வதாற் கொள்ளற்பாலனவாம். அன்றியும், சுகதுக்கமோகவடிவ சத்துவ முதலிய முக்குணங்களும் அக்கரணாசிரயங்களானதால் அக்காரணத்தைக்கொள்வதாற் கொள்ளற்பாலனவாம். அத்தன்மைய காரியகாரணங்களின் கர்த்திருத்துவத்தில் அதாவது, அவைகளின் ஆகாரபரிணமங்களில் மகரிஷிகள் அம்மாயாரூபப் பிரகிருதியே காரணமெனக்கூறுகின்றனர். ஆண்டு ஒரு புத்தகத்தில் 'காய௯காரணகத௫௯கெ' எனவும் பாடமுளது. இதிலும் கூறிப்போந்த இவ்வர்த்தமே யுணரத்தக்கது. இவ்வாறு மாயாரூபப் பிரகிருதியினிடத்தில் சம்சாரகாரணத்தன்மையைக்கூறி இப்போது அந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷனிடத்தும் எவ்வாற்றாற் காரணத்தன்மையாமோ அதை அருளிச்செய்கின்றார். 'வு௯ரு௯ஷஃ உதி' ஹே அர்ச்சுன! முன்னர்ப பரப்பிரகிருதியெனக் கூறப்பட்ட க்ஷேத்திரக்ஞரூப ஜீவனெனும் புருஷன் சுகதுக்கங்களின் போக்திருத்தன்மையில் காரணனெனப்படுகின்றனன்; அதாவது, இன்பத்துன்பமோகவடிவ சர்வ பதார்த்தங்களின்

விருத்தி யுக்த அநுபவத்தில் காரணமெனப்படுகின்றனனென்பதாம். ஒரு வியாக்கியானத்திலோ 'கார்ய-கரண கர்த்ருத்வே' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வர்த்தஞ்செய்யப்பட்டிருக்கின்றது. அது வருமாறு:—அந்த க்ஷேத்திரக்ஞ புருஷனது காரியகாரணத்தன்மைகளிலும் கருத்திருத்தன்மையிலும் அம்மாயாவடிவப் பிரகிருதியே அப்புருஷனோடு தாதான்மியபாவத்தையடைந்து காரணமாகின்றது. தீயோடொற்றுமைத்தன்மையடைந்த இரும்பு அத்தீயின் நாற்கோண முதலியவைகட்குக் காரணமாவதுபோல அப்புருஷனோடொற்றுமையையடைந்த அம்மாயாவடிவப் பிரகிருதியே அப்புருஷனது காரியத்தன்மையிலும் கரணத்தன்மையிலும் கருத்திருத்தன்மையிலுங் காரணமாம். இங்ஙனமே, அந்தப் பிரகிருதியின் இன்பத்துன்பங்களை நுகருவதில் அந்த க்ஷேத்திரக்ஞனாகிய புருஷனே அந்தப் பிரகிருதியில் தனதாபாசவடிவச் சாயைப்பிராப்திசெய்து காரணனாகின்றான். தீயானது இரும்பில் தனது சாயையையடையச்செய்து இரும்பின்தாக கருத்துருத்தன்மையிற் காரணமாகின்றதேபோல, அந்த க்ஷேத்திரக்ஞவடிவ புருஷனும் பிரகிருதியில் தனது சாயையை அடைவித்து அதனது இன்பத்துன்ப போக்திருத்தன்மையிற் காரணனாகின்றான். அதைக்காட்டுதும்:—காரியத்தன்மை, கரணத்தன்மை, கருத்திருத்தன்மை என்னும் மூன்றும் உண்மையில் பிரகிருதியின் விகாரவடிவ தேகேந்திரியமதிகளின் தருமங்களாயினும் சேதனமாகிய ஆன்மாவின்கண் ஆரோபிக்கப்படுகின்றன. எங்ஙனம் நான் வெள்ளையன், நான் இம்மனுடன்புதல்வன், நான் குருடன், நான் செவிடன், நான் கருத்தன் எனத் தேக முதலியவைகளின் காரியமாகிய தருமங்கள் சேதனமாகிய ஆன்மாவின்கண் ஆரோபிதமாய்ப் பிரதீதியாகின்றன. அன்றியும், அந்தச் சேதனான்மாவின் ஆபாசரூப சாயையைப்பெற்ற புத்தியும் நான் சேதனத்தன்மையுடையோன் நான் சுகதுக்காதிகளை உணருகின்றேன் என, சேதனான்மாவின் தருமங்களைத் தன்மாட்டபிமானிக்கின்றது. இவ்வாற்றால், பிரகிருதி புருஷர்களிடத்துப் பரஸ்பர தருமாத்தியாசமே இச்சம்சார காரணமெனச் சித்தமாகின்றது. இத்துணைகூறியதால் சாங்கியநூலார் கேவலம் புருஷனிடத்தே போக்தாத்தன்மையைக் கொண்டதும் மறுக்கப்பட்டதென்றுணர்க. ஒருபோது அவ்வாறு கோடாது பிரகிருதிக்குக் கருத்துருத்தன்மையும் புருஷனுக்குப் போக்திருத்தன்மையுங் கொள்ளினோ, கருத்திருத்தன்மை போக்திருத்தன்மைகட்கு ஓரதிகரணமென்பதமையாது; மற்றோ, வெவ்வேறதிகரணமென்பது சித்தமாம்; அது முற்றுமுரணும். அன்றியும் போக்தாவாகிய புருஷனிடத்து நிருவிகாரத்தன்மையும் சித்தியாது என்க. (20)

(அ-கை.) ஹே பகவன்! 'புருஷஃ ஸுக து:கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே' என்னும் வாக்கியத்தில் முன்னர்த் தங்களால் க்ஷேத்திரக்ஞனெனும் புருஷனிடத்துச் சுகதுக்கபோக்திருத்துவ சம்சாரித்தன்மை கூறப்பட்டது. அந்தப் புருஷனுடைய சம்சாரித்தன்மையில் ஒரு நிமித்தமுண்டா? இல்லையா? யாதொரு நிமித்தமுமின்றி அப்புருஷனிடத்துச் சம்சாரித்தன்மையைக் கொள்ளினோ, முக்திகாலத்திலும் அவனிடத்துச் சம்சாரித்தன்மையாதல் வேண்டும். இத்தோடத்தை நீக்குதற்பொருட்டு அவனுடைய சம்சாரித்தன்மையில் யாதானுமொரு நிமித்தங்கொள்ளற்பாலதாம். அந்நிமித்தம் யாதென்றருச்சுனன் வினவ ஸ்ரீ பகவான் அதை அருளிச்செய்கின்றார்.

௬-ம். புருஷஃ ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜாந்குணாந் ।
காரணம் குணஸங்கோஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு ॥ (21)

ப-ம். 1 புருஷஃ 2 ப்ரக்ருதிஸ்தஃ 3 ஹி 6 புங்க்தே 4 ப்ரக்ருதிஜாந் 5 குணாந் 10 காரணம் 9 குணஸங்கஃ 8 அஸ்ய 7 ஸதஸத்யோநிஜந்மஸு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இந்த க்ஷேத்திரக்ஞ புருஷன் மாயாவடிவப் பிரகிருதியிலிருந்தே பிரகிருதி ஜன்னிய சுகதுக்காதி குணங்களைப்போகிக்கின்றான்; ஆதலின் சத்து அசத்து யோனிசன்மங்களில் இப்புருஷனுக்கு முக்குணவடிவப் பிரகிருதியோடுள்ள தாதான்மியமே காரணமாம். (21)

(வி-ம்) ஹே அர்ச்சுன! இந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷன் பிரகிருதியினிலேத்தவனுகியே; அதாவது, மாயாவடிவப் பிரகிருதியோடு மித்தையான தாதான்மியத்தையடைந்தே அந்தப் பிரகிருதியிலுண்டாகிய இன்பதுன்பங்களை நுகர்கின்றான்; அதாவது, அந்தக்கரண விருத்தியால் அவ்வின்பதுன்பங்களை அநுபவிக்கின்றானுதலின், அந்தப் பிரகிருதி சன்ய சுகதுக்கங்களை நுகருதற்கிடமான சத்து அசத்து சதசத்து யோனிகளில் சன்மத்தையடைகின்றான் அதில் இவனுக்கு குணசங்கமேகாரணமாம்; அதாவது, முக்குணவடிவ மாயாரூபப் பிரகிருதியில் அவனுக்குள்ள தாதான்மியாபிமானமே காரணமாம். அஃதின்றிய சங்கனுக்கியல்பாகவே போக்திருத்வம் பொருந்தமாட்டாது. அவற்றுள் இந்திரன் முதலிய தேவதா சரீரங்கள் சத்துயோனியிற்றோன்றினமையின் அதில் சாத்துவிக இஷ்டபலமே நுகரப்படுகின்றது. பசு முதலியவைகள் அசத்துயோனியிற் றோன்றினமையின் அவைகளில் தாமத அனிஷ்ட பலமே நுகரப்படுகின்றது. அந்தணர் முதலிய மநுடத்தேகமோ தருமா தருமமிசிரத்தாலானமையின் சத்தசத்து யோனியிற் சன்மமாமாதலின் அதில் இராசத இஷ்டா நிஷ்டபலம் நுகரப்படுகின்றதென்க. அல்லது, 'காரணம்' என்னும் வாக்கியத்திற்கு வேறுபொருள் செய்யவேண்டும்:—இன்பதுன்ப மோகவடிவ சப்த முதலிய விடயவடிவ் குணங்களில் இவனுடைய அபிலாஷாவடிவ சங்கம் ஆம், எது சாத்திரத்திற்காமமெனக் கூறப்படுகின்றதோ; அத்தன்மைய குணசங்கமே இவனுடைய சத்தசத்துயோனி ஜன்மங்களிற் காரணமாம். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. [கிரந்த எழுத்தில் சுலோகம்] ।
[கிரந்த எழுத்தில் சுலோகம்] ॥

(பொ-ள்.) அப்புருஷன் எப்பொருள் விடயக அபிலாஷாவடிவ காமமுடையனுகின்றானே அதே வஸ்து விடயக நிச்சயமுடையனுகின்றான்; எப்பொருள் விடயக நிச்சயமுடையனுகின்றானே அப்பொருளை யடைதற்பொருட்டுக் கருமத்தைச் செய்கின்றான்; எப்பொருளை யடைதற்பொருட்டுக் கருமத்தைச் செய்கின்றானே அப்பொருளையே அடைகின்றான் என்பதாம். இப்பட்சத்திலும் அச்சம்சாரத்தின் மூலகாரணத்தன்மையால் அந்த முக்குணவடிவப் பிரகிருதி தாதான்மியாபிமானமே கொள்ளற்பாலதாமென்க. ஒரு வியாக்கியானத்திலோ '[கிரந்தம்]' என்னும் வாக்கியத்திற்கு இவ்வர்த்தஞ் செய்யப்பட்டிருக்கின்றது, தேகேந்திய மனம் என்பவைகளின் சங்காதம் பிரகிருதியாம் அத்தன்மைய பிரகிருதியிற்றுதான்மியத்தையடைந்தே இப்புருஷன் அப்பிரகிருதி சன்ய இன்பதுன்ப மோகவடிவ குணங்களை நுகர்கின்றான், அப்பிரகிருதியிற்றுதான்மிய மடையாத சுழுப்தி மூர்ச்சை சமாதி முதலிய காலங்களில் இவன் அச்சுகதுக்க முதலியவைகளை யடையான், ஆதலின்; அச்சுகதுக்க முதலியவைகள் கேவலம் உபாதியின்கண்ணே இருப்பனவாம்; அவ்வுபாதியின்றிய விடத்து அச்சுகதுக்க முதலியவைகள் தோற்றுவென்னு மர்த்தஞ்சித்தமாம்: இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. [கிரந்த எழுத்தில் சுலோகம்] ।

(பொ-ள்.) தேகசுரோத்திர முதலிய இந்திரியங்களோடும் மனதோடும் பொருந்தியே இவ்வான்மாப் போக்தாவாகின்றது எனத் தத்துவ வேத்தாக்கள் கூறுகின்றார்கள். இந்தச்சுருதி தேகஇந்திரியமன சம்பந்தத்தானே ஆன்மாவினிடத்துப் போக்தாத்தன்மையைக் காண்பிக்கின்றது, கேவல சுத்தான்மாவில் அப்போக்திருத்தன்மையை நிஷேதிக்கின்றது. ஒரு வியாக்கியானத்திலோ 'வா ரா ஷஃ வரக்ரதிஸ்ஜாஹி' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வர்த்தஞ் செய்யப்பட்டிருக்கிறது: தேகேந்திரியமன முதலிய சடப்பொருள்களின் சங்காதவடிவப் பிரகிருதியைப் பொருந்தியே வித்துவான் அல்லது அவித்துவான் அப்பிரகிருதிசன்ய சுகதுக்கங்களைப் பொதுவாகவே அநுபவிக்கின்றான். இது பிரமசூத்திரத்தில் ஸ்ரீ பாடியக்கார பகவானாலுங் கூறப்பட்டிருக்கிறது. 'வஸ்வாதிஹி ஸ்வாவிஶேஷாத்.' விவகாரகாலத்தில் வித்துவான் பசு முதலியவைகளோடு துல்யமாகின்றான். அதாவது பசு முதலியவைகள் இட்டாநிட்ட வஸ்துக்களைப் பார்த்துப் பிரவிருத்தி நிவிருத்திகளை அடைவனபோன்று அவ்வித்துவானும் இஷ்டாநிஷ்ட வஸ்துக்களைப்பார்த்துப் பிரவிருத்தி நிவிருத்திகளையடைகின்றான் என்பதாம். அற்றேல் ஹே பகவன்! பிரகிருதியைப் பொருந்தியே அப்பிரகிருதியாலுண்டாகிய சுகதுக்க முதலிய குணங்களை யநுபவிப்பதில் வித்துவான் அவித்துவான்களைச் சமமென்றே கொள்ளிலோ அவ்வித்துவான் முக்தனாகின்றதுபோல அவ்வவித்துவான் முக்தனாகாததென்னை? அங்ஙனமே அவ்வவித்துவான் பத்தனாயிருப்பதுபோல அவ்வித்துவானும் பத்தனாகாததென்னை என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'காரணம் குணஸங்கோஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு இதி' ஹே அர்ச்சுன! தேகேந்திரிய விடயவடிவ குணங்களில் இப்புருஷனுடைய சங்கமாம் அதாவது இது நான் இஃதென்னுடையது என்னும் அகங்கார மமகாரரூப அபினிவேசமாம் அதுவே இவனுடைய சத்தசத்து யோனி சன்மங்களிற் காரணமாம், ஆண்டு வித்துவானிடத்திலோ அந்தச் சன்மகாரண குணசங்கமின்மையின் அவன் சன்மமுதலிய பந்தத்தையடையான். அவித்துவான் புருஷனிடத்து அந்தச் சன்மகாரணரூப குணசங்கமிருத்தலின் அவன் முக்தனாகான்; இதிற்றிருட்டாந்தம், ஒரு புருஷனுடைய தேகத்தில் பிசாசு பிரவேசித்திடின் அத்தேகத்தில் பிசாசின் சம்பந்தமும் அத்தேக சுவாமியாகிய சீவனுடைய சம்பந்தமும் சமானமாயினும்; அந்தப் பிசாசு அத்தேகாபிமானத்தைப் பூண்டிருக்குங்கால் அப்பிசாசே அத்தேகபீடையால் பீடிக்கப்படுகின்றது; தேகபதியாகிய சீவனல்லன், தேகபதியாகிய சீவனே அத்தேகாபிமானத்தைப் பூண்டிருக்குங்கால் அத்தேக பீடையால் அத்தேகபதியாகிய சீவனே பீடிக்கப்படுகின்றான் அப்பிசாசன்று; இவ்வாறே அகங்கார மமகாராபிமானரூப சங்கத்தின்கண்ணே பந்தப்படுத்துந்தன்மை விளக்கமாய்க் காணப்படுகின்றது சமீபித்திருக்குந் தன்மையில் அது காணப்படவில்லையாதலின் வித்துவான் அவித்துவான்களிடத்துத் தேகசம்பந்தஞ் சமமாயினும் அகங்கார மமகாராபிமானவடிவ சங்கம் சங்கமின்மைகளாற் செய்யப்பட்ட அவ்விரண்டிலும் மிக விசேடத்தன்மையுண்டென்க. (21)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் பிரகிருதியின் மித்தியா தாதான்மியாத்தியாசத்தானே புருஷன் சம்சாரியாகின்றான் அஃதின்றி உருவத்தால் அஃதின்றியவனே யாவன் என்பது கூறியருளப்பட்டது; இப்போது அந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷனுக்கு எத்தன்மையது உண்மைவடிவம் எவ்வடிவத்தில் சம்சாரத்தை யேற்றுக்கொள்வதில்லை என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அவனுடைய சொரூபத்தை நேரே காண்பித்தருளிச்செய்கின்றார்.

சு-ம். உபத்ரஷ்டாநுமந்தா ச பர்தா போக்தா மஹேஶ்வர: ।
பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மிந் புருஷ: பர: ॥ (22)

ப-ம். 5 உபத்ரஷ்டா 7 அநுமந்தா 6 ச 8 பர்த்தா 9 போக்தா 10 மஹேச்வர: 12 பரமாத்மா 13 இதி 11 ச 14 அபி 15 உக்த: 2 தேஹே 1 அஸ்மிந் 3 புருஷ: 4 பர:.

(அ-ம்) ஹே அர்ச்சுன! இப்புருஷன் இத்தேகத்திலிருப்பினும் சர்வத்தினும் வேறுவன். ஆதலின், இவன் உபதிருஷ்டாவெனவும், அனுமந்தாவெனவும், பர்த்தா எனவும், போக்தாவெனவும் மகேசுரனெனவும், பரமாத்மாவெனவும் சுருதியிற் கூறப்படுகின்றான். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அந்த மாயாவடிவப் பிரகிருதி பரிணாமமாகிய இத்தேகத்தில் சீவரூபமாயிருப்பினும் இந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷன் பரனுவன், அதாவது, அப்பிரகிருதி சன்யகுண சம்பந்தங்களற்றவனும் தனது வடிவத்தால் உண்மையில் அசம்சாரியுமாவன். இப்போது அவனுடைய எதார்த்த அசங்கத்தன்மையில் ஸ்ரீ பகவான் உபதிருஷ்டா அனுமந்தா, பர்த்தா, போக்தா, மகேசுரன், பரமான்மா என்னும் அறுவகை ஏதுகர்ப்ப விசேடணங்களை அருளிச்செய்கின்றார். 'உபத்ரஷ்டா இதி' ஹே அர்ச்சுன! அந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷன் எத்தன்மையனெனின் உபதிருஷ்டாவாவன்; அதாவது, யக்ஞவடிவ கருமசித்தியின்பொருட்டு இருத்துவிக்கு யஜமானர்களுடைய சமீபத்திலிருக்கும் வேறொருவன் தான் அந்தயாகாநுகூலத்தொழிலிலாதோனாயினும் யஞ்ஞவித்தையிற் குசலனாதால் அந்த இருத்துவிக்கு யஜமானர்களின் தொழிலிலுள்ள குணதோடங்களைப் பார்க்கின்றான். அதுபோல இந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருடனும் தேகேந்திய முதலியவைகளின் வியவகாரங்களில் தான் தொழிலிலாதோனும் அவைகட்கு விலட்சணனுமாகி அந்த வியாபாரமுடைய தேகேந்திரியாதிகளின் சமீபத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கின்றான். அவன் அவைகளைப்போலக் கருத்தனுகிலன். ஆதலின், இவ்வான்மா உபதிருஷ்டாவெனப்படுகின்றது.

ஆ-சு. ஸ்வயம் அவ்யாப்ருதத்வே ஸதி ஸமீபஸ்தோ த்ரஷ்டா உபத்ரஷ்டா ப்ராஸம்கிகம் புருஷ: ।

(போ-ள்.) இவ்வான்மதேவனாகிய புருடன் அந்த நனவு கனவு முதலிய அவத்தைகளில் எவ்வெப்பொருளைப்பார்க்கின்றானோ அவ்வப்பொருளோடு சம்பந்தமுடையனாகான். இவ்வான்மா அசங்கனாதலின் என்பதாம். அல்லது தேகம் சட்சு, மனம், புத்தி, ஆன்மா என்னும் ஐந்து திருஷ்டாக்களுள் பாகியமான தேகாதி நான்கு திருஷ்டாக்களை நோக்க அவ்வியவகித திருஷ்டாவாகிய ஆன்மபுருஷன் உபதிருஷ்டாவெனப்படுகின்றான். ஆண்டு, உபதிருஷ்டா என்னும் வாக்கியத்திலுள்ள உப என்னுஞ் சப்தத்திற்கு அண்மைபொருளாம், வியவதானமின்றிய அத்தன்மைய அர்த்தம் பிரத்தியக்கான்மாவின்கண்ணே பொருந்துகிறது. வேறோரான்மப்பொருளிலன்று. இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானங் குறிப்பித்தருளினர். ஆன்மா, தேகேந்திரிய முதலியவைகட்கு வேறாம், உபதிருஷ்டாவானதால், யாகத்தின் உபதிருஷ்டா யாகத்தின் இருத்துவிக்கு யஜமானன் இவர்களின் வேறாதல்போல. மற்றுமெத்தன்மையனெனின் அந்த க்ஷேத்திரக்ஞனெனும் ஆன்மபுருஷன் அனுமந்தாவாவன்; அதாவது, தேகேந்திரிய முதலிய பிரவிருத்திகளில் தானப்பிரவிருத்தனாயினும் பிரவிருத்தன்போல அண்மைமாத்திரத்தானே அவைகட்கனுகூலனாதால் அவன் அனுமந்தாவெனப்படுகின்றான். அல்லது, தத்தம் வியாபாரத்திற் பிரவிருத்தித்த தேகேந்திரியாதிகளை ஒருபோதும் தமது வியாபாரத்தினின்றும் நிவிருத்தியாத அவைகளின் சாட்சியாகிய புருஷன் அனுமந்தாவெனப்படுகின்றான்.

ஆ-சு. உபத்ரஷ்டாநுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர: ।

(போ-ள்.) இவ்வான்மதேவர் அநுதிருஷ்டாவும் சாட்சியும் உபதிருஷ்டாவும் அனுமந்தாவுமாவர் என்பதாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வநுமானத்தைக்குறிப்பித்தருளினர். ஆன்மா, தேகேந்தியாதிகட்கு வேறும், அனுமந்தாவானதால், விவாதம் பண்ணும் புருஷர்களினும் தடத்த புருஷன் வேறுதல்போல என்பதாம். மற்றுமெத்தன்மையனெனின் அந்த க்ஷேத்திரக்ஞனெனும் புருஷன் பர்த்தாவாவன்; அதாவது, சைதன்யாபாசத்தோடுகூடியதும் சங்காதபாவத்தையடைந்ததுமாகிய தேகேந்திரிய மனோபுத்திகளை அவன் தனது சத்தானும் ஸ்புரணத்தானும் தாரணம்பண்ணுவோனும் போஷணம் பண்ணுவோனுமாவன் என்பதாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வநுமானத்தைக் குறிப்பித்தருளினர். ஆன்மா தேகேந்திரியாதிகளின் வேறும், பர்த்தாவானதால், புத்திரன் முதலியோர்களைப் பாலிக்கும் பிதா அவர்களின் வேறுதல்போல என்பதாம். மற்றுமெத்தன்மையனெனின் அந்த க்ஷேத்திரக்ஞனெனு மான்மாப் போக்தாவாம். அதாவது, புத்தியின் சுகதுக்க மோக்கவடிவ விருத்தி விசேடங்களைச் சொரூப சைதன்யத்தால் பிரகாசித்து இவ்வான்மதேவர் நிர்விகாரியாகவே அவைகளை விளக்குபவராவர். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானத்தைக்குறிப்பித்தருளினர். ஆன்மா, புத்தி முதலியவைகளினும் வேறும், போக்தாவானதால் தேவதத்தனெனும் போக்தாவாகிய புருஷன் அன்ன முதலிய பதார்த்தங்களினும் வேறுதல்போல என்பதாம். மற்றுமெத்தன்மையனெனின் அந்த க்ஷேத்திரக்ஞனெனும் ஆன்மபுருஷன் மகேசுரனுவன். ஆண்டு, மகானுகிய ஈசுரன் மகேசுரனுவன். ஆண்டு, எல்லாவற்றின் ஆன்மவடிவமானதால் அந்த க்ஷேத்திரக்ஞ புருஷன் மகான் எனப்படுகின்றான். சுவதந்திரனுதலின் ஈசுரனெனப்படுகின்றான். அல்லது, காந்தக்கல்லின் அண்மையால் இரும்பு சேஷ்டிப்பதுபோல எதனண்மையால் இப்புத்தி முதலிய சர்வ சடப்பொருள்களும் பலவகையாய்ச் சேஷ்டிக்கின்றனவோ அந்த க்ஷேத்திரக்ஞனென்னும் ஆன்மா ஈசுரனெனப்படுகின்றான்.

ஆ-சு. பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹே஽ஸ்மின் புருஷ: பர: ।

(போ-ள்.) இவ்வான்மதேவர் வானுதி மகான் (பெரிய) பொருள்களினும் மிகுந்த மகானும் சென்றவரும் நிகழும் சர்வ வுலகங்களையும் பிரேரிப்பவன் ஈசானனுமாவன் என்பதாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானத்தைக் குறிப்பித்தருளினர். ஆன்மா, பிரகிருதி அதன் காரியங்களினும் வேறுதற் குரியதாம், மகேசுரனுதலின்; மாராஜன் தனது பிரஜைகளினும் வேறுதல்போல என்பதாம். மற்றுமெத்தன்மையனெனின் அந்த க்ஷேத்திரக்ஞ புருஷன், சுருதியிற் பரமான்மாவெனுஞ் சப்தத்தாற் கூறப்படுவோன்; அதாவது, அவித்தியாவசத்தால் ஆன்மத்தன்மைரூபமாய்க் கற்பிக்கப்பட்ட தேக முதற்கொண்டு புத்தியீறுகிய சடப்பொருளனைத்தினும் உத்கிருஷ்டமானது பரமெனப்படும். அத்தன்மைய கூறிப்போந்த உபதிருஷ்டாத்தன்மை முதலிய விசேடணங்களையுடைய ஆன்மா, பரமான்மாவெனப்படும். இதை 'உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் தாமாகவே மேலருளிச்செய்வார். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானத்தைக் குறிப்பித்தருளினர். ஆன்மா, தேகேந்தியாதிகளினும் வேறும், பரமான்மாவானதால் எது அங்ஙனமன்றோ, அது பரமான்மாவுமன்றும்; தேகேந்திரிய முதலியவைகளைப்போல என்பதாம். ஒரு வியாக்கியானத்திலோ 'உபத்ரஷ்டாநுமந்தா ச' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வர்த்தஞ் செய்யப்பட்டிருக்கிறது :— ஆண்டுப் பூர்வம். '[illegible]' என்னும் வாக்கியத்தால் க்ஷேத்திரக்ஞ க்ஷேத்திரக்ஞனது பிரபாவங்களைக்

கூறுவதற்குப் பிரதிக்ஞை செய்யப்பட்டது. க்ஷேத்ரஞ்ஞன் வர்ணிக்கப்பட்டான். இப்போது இந்தச்சுலோகத்தால் அந்த க்ஷேத்திரக்ஞனது பிரபாவத்தை வர்ணிக்கின்றார். 'உபதிருஷ்டா' என அதில் பூர்வ சுலோகத்தில் புருஷனுக்கு தேகேந்திரிய மன முதலிய குணங்களோடுள்ள சங்கமே இவனுடைய ஜன்மகாரணமெனக்கூறப்பட்டது. ஆண்டு அக்குணசங்கம் நான்குவகைத்தாம். புருடனை நிடேதஞ்செய்து அக்குணமாத்திரத்தின் பிரதானத்தாலுண்டாம் குணசங்க முதலாவதாம். அப்புருஷனுக்கு அந்தர பூதத்தால் அக்குணத்தின் பிரதானத்தாலுண்டாம் குணசங்கம் இரண்டாவதாம். புருஷ குணங்களின் சமப்பிரதானத்தாலுண்டாம் குணசங்கம் மூன்றாவதாம். அக்குணங்களின் அப்பிரதானத்தாலும் புருஷனது பிரதானத்தாலும் உண்டாம் குணசங்கம் நான்காவதாம். அவற்றுள் முதலாவது குணசங்கத்திலே தேகேந்திய மன முதலிய வடிவகுணங்களின் சங்காதத்தையே ஆன்மரூபமாய்ப்பார்த்து இப்புருஷன் போக்தாவெனப்படுகின்றான். தேக முதலியவைகளையே ஆன்மாவெனக்கோடும் சார்வாகன் முதலியோர்களைப்போல, இரண்டாவது குணசங்கத்தின்கண்ணே அத்தேகேந்திரிய முதலிய குணங்கட்கே பிரதானத்தன்மையாமாதலின் ஆன்மாவின்கண் உண்மையில் கருத்திருத்வ முதலியவைகளை யபிமானித்து இவன் கருமபலன்களின் பர்த்தாவெனப்படுகின்றான். நியாயமதத்தர் முதலியோர்களைப்போல மூன்றாவது குண சங்கத்தின்கண்ணே ஆன்மாவோடு அக்குணங்களின் சமப்பிரதானத்தன்மையால் குணங்களிலிருந்தும் போக்தாத்தன்மையற்றதுமாகிய ஆன்மாவில் ஆடையில் சோரான் அங்கங்களைப்போலும் எண்ணுபவனாய் அனுமந்தாவெனப்படுகின்றான். சாங்கிய நூலார் முதலியோர்களைப்போல நான்காவது குணசங்கத்திலே எல்லாவாற்றானும் அக்குணங்களின் தர்மங்கட்கு ஆன்மாவின்கண் பிரவேசத்தைப் பாராது உதாசீன போதவடிவத்தன்மையால் அந்தச் சர்வ குணங்களின் பிரசாரங்களைப்பார்த்து இவன் உபதிருஷ்டாவெனப்படுகின்றான். வேதாந்திகளின் சாட்சியான்மாவைப்போல ஆண்டுக் கூறிப்போந்த போக்தா பர்த்தா அநுமந்தா உபதிருஷ்டா என்னும் குணசங்கமுடையவர்களுள் உபதிருஷ்டாவே உத்தமனவன், அநுமந்தா மத்தியமன், பர்த்தா அதமன், போக்தா அதமாதமன்; எந்தச்சைதன்யதேவன் அக்குணங்களின் சங்கத்தால் போக்தா முதலிய தன்மையையடைகின்றானோ, அவனே எக்காலத்தில் அக்குணங்களனைத்தையும் தன் வசமாக்கிக் கிரீடிக்கின்றானோ அக்காலத்தில் மகேசுரனெனப்படுகின்றான். இவ்வுலகத்தின் தோற்ற நிலையீறுகளின் கர்த்தா பிரபு அந்தரியாமியாகிய அச்சைதன்ய தேவனே அக்குணங்களனைத்தையும் விடுத்திருக்கும்போது பரமான்மாவெனப்படுகின்றான். உபதிருஷ்டாவும் குணங்களைப் பரித்தியாகஞ்செய்து அவைகட்குச் சாட்சிரூபமாயிருப்பினும் சங்காத வுபகித அவ்வுபதிருஷ்டாவிற்கே வேறு சங்காதப் பிரசாரத்தின் திருஷ்டாத்தன்மையில்லை. பரமான்மதேவனே சர்வ சங்காதங்களின் பிரசாரத்திற்கும் திருஷ்டாவானதால் சர்வத்தினும் மேலானவனானதால் பரமான்மாவாம். இப்பரமான்மாவை 'உபத்ரஷ்டாநுமந்தா ச பர்த்தா போக்தா மஹேச்வர: பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹேஸ்மிந் புருஷ: பர:' என்னுஞ் சுலோகத்தால் மேலே அருளிச்செய்வார். ஆண்டு, மகேசுரன் பரமான்மா என்னுமிருவரும் குண சங்கிகளாவர்கள். இதனாலிப்பொருள் பெறப்பட்டது:—இத்தேகத்திலிருப்பதும் சர்வ குணங்களுமின்றிய அகண்டைகாச அத்துவிதீய ஆன்மாவே அக்குணசங்கத்தால் உபதிருஷ்டா, அநுமந்தா, பர்த்தா, போக்தா, மகேசுரன், பரமான்மா என அறுவகைத்தாகின்றது. இதுவே இந்த க்ஷேத்திரக்ஞ ஆன்மாவின் பிரபாவமாம். அவற்றுள் அநுமந்தா, பர்த்தா, போக்தா, இம்மூன்றுவடிவங்களாலே இவ்வான்மாப் பந்தப்படுகின்றது. உபதிருஷ்டா மகேசுரபரமான்ம

வடிவங்களாலோ இவ்வான்மா நித்திய முக்த என அத்துவிதியாகுமேயாகின்றது என்பதாம்.

(22)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் 'ஸமயோபக்ஷ ஸுகாவஹ' என்னும் வாக்கியத்திற்கு வியாக்கியானஞ்செய்யப்பட்டது; அதாவது, க்ஷேத்திரக்ஞனுடைய சொரூபமும் அதனுடைய பிரபாவமும் வர்ணிக்கப்பட்டன. இப்போது, 'யஜ்ஞாத்வாம்ருதமஶ்நுதே' என முன்னர்க்கூறப்பட்ட வாக்கியத்தை முடிக்கருளுகின்றார்.

சு-ம். ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணைஸ்ஸஹ ।
ஸர்வதா வர்த்தமாநோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே ॥

(23)

ப-ம். 1 ய: 2 ஏவம் 8 வேத்தி 3 புருஷம் 7 ப்ரக்ருதிம் 4 ச 5 குணை: 6 ஸஹ 10 ஸர்வதா 11 வர்த்தமாந: 12 அபி 14 ந 9 ஸ: 13 பூய: 15 அபிஜாயதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரி கூறிப்போந்த பிரகாரமாய் க்ஷேத்திரக்ஞ புருஷனையும் தனது விகாரத்தோடுகூடிய அவித்தியாவடிவப் பிரகிருதியையும் அறிகின்றானோ அவன் எல்லாவாற்றானுமிருப்பினும் மறித்தும் பிறப்பையடையான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரி கூறிப்போந்தவாற்றால் க்ஷேத்திரக்ஞனெனும் புருஷனை யுணர்கின்றானோ; அதாவது சர்வத்திர வியாபகமாகிய பரமான்மா நானாகின்றேன் என எவன் இந்த க்ஷேத்திரக்ஞனாகிய ஆன்மாவைக் குருசாஸ்திரோப தேசங்களால் சாட்சாத் கரிக்கின்றானோ. அங்ஙனமே எவன் தேக முதலிய விகாரங்களோடுகூடிய அவித்தியாவடிவப் பிரகிருதியை யுணர்கின்றானோ; அதாவது விகாரத்தோடுகூடிய அவித்தியாவடிவப் பிரகிருதி ஆன்மஞானத்தாற் பாதிதமானதால் மித்தியாவடிவமேயாம். அவ்வான்மஞானத்தால் அஞ்ஞானமும் அஞ்ஞானத்தின் காரியவடிவப் பிரபஞ்சமும் நாசமாயின, என எவன் அந்தக் குணத்தோடுகூடிய பிரகிருதியையறிகின்றானோ அந்தத்தத்துவ வேத்தாவானவன் எப்படியிருப்பினும்; அதாவது மிகுந்தவலியுடைய பிராரத்தகன்மவசத்தால் தேவராஜனாகிய இந்திரன்போலச் சாத்திரவிதியைத் தாண்டியிருப்பினும், மறித்தும் பிறப்பையடையான்; அதாவது இவ்வித்துவானுக்கு எந்தச்சரீரத்தில் ஆன்மஞானமடையப்படுகின்றதோ அந்தச் சரீரம் விழுந்தபின்னர் அவன் மீண்டும் இரண்டாவது தேகத்தையெடுப்பதில்லை. என்னை, அவித்தையினாலே இவனுக்கு மறித்தும் சன்மப் பிராப்தியுண்டாகின்றது; பிரமஞானத்தால் அவ்வவித்தியாவடிவ காரணம் நாசமாகுமேல் அதன் காரியமாகிய சன்மமுதலியவைகளும் இன்றியவாகும். இது முன்னர்ப் பலதடவையுங் கூறப்பட்டது. அல்லது, புண்ணிய பாவகருமங்களாலே இவனுக்கு மீண்டுஞ் சன்மப்பிராப்தியாகின்றது, அப்புண்ணிய பாவங்கள் இத்தத்துவ ஞானிக்கு ஆன்மஞானத்தால் நாசமாகின்றமையினாலும் மறித்தும், சன்மப்பிராப்தியின்றாம். இது பிரமசூத்திரத்தின்கண் ஸ்ரீ வியாதபகவானாலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ததயிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷ விநாஶௌ தத்வ்யபதேஶாத் ।

(பொ-ள்.) நானே பிரமசொரூபன் என ஆன்மசாட்சாத்காரத்தையடைபவ இத்தத்துவ ஞானிக்கு முந்திய புண்ணியபாவவடிவ சருவசஞ்சித கருமங்களும் நாசமாகின்றன, அவ்வான்மஞானத்தின் பின்னர்ச் செய்யப்பட்ட கருமங்கள் அவனைப் பரிசிப்பதேயில்லை என்பதாம். இது பல சுருதிஸ்மிருதிகளிலுங் கூறப்பட்டுளதாமென்க. ஈண்டு, 'ஸர்வதா வர்த்தமாநோऽபி' என்னும் வாக்கியத்திலுள்ள அபி (உம்மை) சப்தத்தால் ஸ்ரீ பகவான் இந்தக்கைமுதிக நியாயத்தைக்

குறிப்பித்தருளினர்; மிகுந்தவலியுடைய பிராரத்தகருமவசத்தால் தேவராஜனாகிய இந்திரன்போல சாத்திரவிதியைத் தாண்டியிருப்பினும் இவன் மீண்டுஞ் சன்மப் பிராப்தியை அடைக்திலனேல் சாத்திரவிதியைத் தாண்டாது தனதுயர்ந்த ஒழுக்கத்திலிருக்கப்பட்ட ஆன்மஞானி மறித்துஞ் சன்மப் பிராப்தியையடையானென்பதிற் கூறற்பாலதென்னை என்பதாம். ஆண்டு அமரராஜனாகிய இந்திரன் சாத்திரவிதியைக்கடந்து விசுவரூபனெனும் பெயருடைய புரோகிதனையும் அநேக சந்நியாசிகளையும் எங்ஙனங் கொன்றனனோ; அது ஆன்மபுராணத்தின் இரண்டாவது அத்தியாயத்தில் எம்மால் விரிவாய்க்கூறப்பட்டிருக்கின்றது ஆண்டுக்காண்க. (23)

(அ-கை.) ஆண்டு முன்னர்க்கூறப்பட்ட பலசகித ஆன்மஞானத்தில் அதிகாரிகளின் வேறுபாட்டால் சாதனங்களின் விகற்பத்தை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.

சு-ம். யூாநெநாத்ஙநி வஶூஞி கெஅிஉாத்ஙாநஉாத்ஙநா ।
அநெ்ூ ஸாஂவெ்ூந யொமெந கஉஷயொமெந அாவமெ ॥ (24)

ப-ம். 2 யூாநெந 3 ஆத்ஙநி 6 வஶூஞி 1 கெஅிக் 4 ஆத்ஙாநஂ 5 ஆத்ஙநா 7 அநெ்ூ 8 ஸாஂவெ்ூந 9 யொமெந 12 கஉஷயொமெந 10 அ 11 அவமெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சில அதிகாரிகள் தியானம்பண்ணியே தமதுள்ளத்தின்கண் பிரத்தியக்கான்மாவைத் தியானத்தோடுகூடிய அந்தக்கரணத்தால் சாட்சாத்கரிக்கின்றார்கள். வேறு சில அதிகாரிகளோ சாங்கியயோகத்தால் ஆன்மாவைச் சாட்சாத்கரிக்கின்றார்கள். வேறு சில அதிகாரிகள் கன்மயோகத்தால் ஆன்மாவைச் சாட்சாத்கரிக்கின்றார்கள். (24)

(வி-ம்.) ஆண்டு இச்சுலோகத்தில் நான்குவகையாவர்கள் அதிகாரிகள், அவருளொருவர் உத்தமராவர், இரண்டாவது அதிகாரியர் மத்தியமராவர், மூன்றாவது அதிகாரியர் மந்தராவர், நான்காவது அதிகாரியரோ மந்ததரராவர், அவர்களுள் முதலாவதாகிய உத்தமாதிகாரியரின் ஆன்மஞான சாதனத்தை அருளிச்செய்கின்றார். 'யூாநெந' என ஆண்டுத் தேகாதி அனான்மாகார விஜாதீய விருத்திவிபவதானமின்றிய ஆன்மாகார சஜாதீயவிருத்திப் பிரவாகவடிவ ஆன்மசிந்தனமாம்; இதுவே சாத்திரத்தில் நிதித்தியாசன சப்தத்தாற் கூறப்படுகின்றதும் சிரவண முதலியவைகளின் பலவடிவமும் தேகாதிகளினுள்ள ஆன்மபுத்திவடிவ விபரீதபாவனையை நிவிருத்திப்பதுமாம். அந்த நிதித்தியாசனவடிவ ஆன்மசிந்தனம் தியானமாம் அத்தன்மைய தியானத்தானே சில உத்தமாதிகாரிகள் தமது புத்தியின்கண் பிரத்தியக் சேதனவடிவ ஆன்மாவைத் தியானமுடைய அந்தக்கரணத்தால் சாட்சாத்கரிக்கின்றார்கள் என்பதாம். இப்போது மத்திமாதிகாரிகளின் ஆன்மஞான சாதனத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'அநெ்ூ ஸாஂவெ்ூநயொமெந இதி' ஆண்டு முன்னர்க்கூறிய நிதித்தியாசனவடிவத் தியானத்தின் பூர்வபாவி (முன்னருண்டாகத்தக்கதாகிய) சிரவண மனனவடிவ ஆன்மசிந்தனமாம்; இதுவே நித்தியா நித்திய வுணர்ச்சி முதலிய நான்கு சாதனங்கட்கு உத்தரஞ்செய்யப்பட்டதும்; முக்குணவடிவ மாயாபரிணாமமாகிய அனான்மப் பொருளனைத்தும் மித்தியாபூதமாய், அவைகளின் சாட்சிவடிவாகிய நித்திய வியாபக நிர்விகாரசத்திய சடப்பொருளனைத்தின் சம்பந்தமிலாத பிரத்தியக்சேதன ஆன்மா நான் என வேதாந்தவாக்கியத்தாற் சன்னியமானதும்; பிரமாணப் பிரமேயங்களினுள்ள அசம்பாவனைகளை நிவிருத்திப்பதுமாகிய அந்தச் சிரவணமனனரூப ஆன்ம சிந்தனம் சாங்கியயோகமாம். அத்தன்மைய சாங்கிய யோகத்தால் சில மத்திமாதிகாரிகள் தமதுள்ளத்தின்கண் அப்பிரத்தியக்கான்

மாவை அந்தத்தியாமேனத்பத்திவாயிலாய்ச் சாட்சாத்கரிக்கின்றார்கள் என்பதாம். இப்போது மூன்றாவதாகிய மந்தாதிகாரிகளின் ஆன்மஞானசாதனத்தை ஶ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'கர்மயோகேந சாபரே இதி' ஆண்டு, பலேச்சையின்றிக் கேவலம் ஈசுரார்ப்பண புத்தியாற் செய்யப்பட்ட அவ்வவ் வருணாசிரமத்திற்குரிய வேதவிகித கருமங்கள் கருமயோகமாம். அத்தன்மைய கருமயோகத்தால் சில மந்தாதிகாரிகள் தமதுள்ளத்தில் அப்பிரத்தியக்கான் மாவை மனத்தூய்மை கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்பவைகளின் உத்பத்தித் துவாராச்சாட்சாத்கரிக்கின்றார்கள். (24)

(அ-கை) இப்போது நான்காவதாகிய மந்ததர அதிகாரிகளின் ஆன்மஞான சாதனத்தை அருளிச்செய்கின்றார் ஶ்ரீ பகவான்.

சு-ம். அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாந்யேப்ய உபாஸதே ।
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ॥ (25)

ப-ம். 2 அந்யே 1 து 3 ஏவம் 4 அஜாநந்த: 6 ஶ்ருத்வா 5 அந்யேப்ய: 7 உபாஸதே 8 தே 9 அபி 13 அதிதரந்தி 12 ஏவ 11 ம்ருத்யும் 10 ஶ்ருதிபராயணா:.

(அ-கை) ஹே அர்ச்சுன! மற்றும் வேறு சில அதிகாரிகள் கூறிப்போந்த உபாயங்களால் ஆன்மாவை புணராது வேறு குருவினிடத்திற் சிரவணஞ்செய்து ஆன்மாவைச் சிந்திக்கின்றார்கள். அவர்களும் சிரவண பாராயணர்களாய் இந்த மிருத்தியுவோடுற்ற சம்சாரத்தை ஒரு தலையாக்கடக்கின்றார்கள். (25)

(வி-ம்) ஈண்டு, 'அந்யேது' (அன்னியர்களோ) என்னும் வாக்கியத்தி லுள்ள (ஓ) என்னுஞ் சப்தமானது பூர்வ சுலோகத்திற் கூறப்பட்ட மூவகை அதிகாரிகளினும் இம்மந்ததர அதிகாரியினிடத்து விலட்சணத்தன்மையை அறிவுறுத்தற்பொருட்டாம். அதைக் காண்பிப்பாம்:—ஹே அர்ச்சுன! முந்திய சுலோகத்திற் கூறப்பட்ட தியானம் சாங்கிய கருமயோகங்கள் என்பவைகளுள் யாதொனு மோருபாயத்தால் ஆன்மாவை யுணராத மந்ததர அதிகாரிகளோ வேறு பரம காருணிகரான ஆசாரியரிடத்தினின்று சிரவணஞ்செய்து உபாசிக்கின்றார்கள். அதாவது, நீ இவ்வான்மாவை இவ்வாறு சிந்தனைசெய்குதி, என அந்தக்கிருபாலு வாகிய ஆசாரியரால் உபதேசிக்கப்பட்டு அந்தக் குருவின் வாக்கியத்தில் மிகச் சிரத்தையுடையனாய் அவ்வாறே அவ்வான்மாவைச் சிந்திக்கின்றான். அந்தச் சுருதி பாராயண புருஷனும்; அதாவது, தனது புத்தியால் அவ்விசாரத்தில் வலியற்றவனாயினும் மிகுந்த சிரத்தாவந்தனானதால் அந்தக் குருவுபதேச சிரவண மாத்திர பாராயணனாகியும் மிருத்யுவோடுகூடிய இச்சம்சாரத்தை ஒரு தலையாய்க் கடப்பன். கருத்திதுவாம், தியானத்திலுள்ள முயற்சி மிகுதிப்பாட்டால் அவனுக் குச் சித்தசுத்தியின்பொருட்டுக் கருமத்தினபேட்சையும் வேதங்கூறிய தத்துவத் தின்கண்ணுள்ள திடநிச்சயத்தால் அசம்பாவனை நிவிருத்தியின்பொருட்டுச் சிரவ ணாதிகளின் அபேட்சையும் வேண்டாமென்பதாம். ஈண்டு, 'தேபி' என்னும் வாக்கியத்திலுள்ள அபிசப்தத்தால் ஶ்ரீ பகவான் இந்தக் கைமுதிக நியாயத்தைக் குறிப்பித்தருளினர்:—தனக்கு விசாரஞ்செய்வதில் வலியின்றி வேறு குருவினிடத் தினின்று சிரவணித்தமாத்திரத்தால் ஆன்மாவைச் சிந்திக்கின்றவனும் இந்த மிருத்துவோடுகூடிய சம்சாரத்தைக் கடப்பனேல், விசாரம் பண்ணுவதிற் சமர்த்த னானவன் இச்சம்சாரத்தைக் கடப்பனென்பதிற் கூறற்பாலதென்னை என்பதாம். ஆண்டு, ஆன்மஞானத்தால் காரியசகித அஞ்ஞானத்தை நிவிருத்திப்பதுவே அச் சம்சாரத்தைக்கடப்பதாம் என்க. (25)

(அ-கை.) ஆண்டு அதிட்டானப் பிரமத்தை ஆசிரயம் பண்ணுவதும் அப் பிரமத்தையே விஷயப்பண்ணுவதுமாகிய அநிருவசனீய அவித்தையினுலே இச்சம்சாரமனைத்தும் உத்பன்னமாமாதலின், அவ்வதிட்டானப் பிரமத்தை விஷ யம்பண்ணப்பட்ட நானே பிரமசொரூபன் என்னும் ஆன்மஞானத்தால் அவித்தை நீங்கவே இவனுக்கு மோட்சப் பிராப்தியாதல் அமையும் என்னுமர்த் தத்தை நிச்சயஞ்செய்வான் இப்பதின்மூன்ருவது அத்தியாய முடிபீருக ஸ்ரீ பக வான் சம்சாரத்தையுஞ் சம்சார நிவர்த்தக ஆன்மஞானத்தையும் விரிவாய் நிரு பித்தருளுகின்ருர். ஆண்டு, 'காரணம் ரு-ணஸம் ஹெஸ்யஸ உஸஜெ்ரா நிஜ ஹஸு' என முன்னர்க்கூறப்பட்ட வாக்கியார்த்தத்தையே இப்போது விளக்கி யருளிச்செய்கின்ருர்.

சு-ம். யாவக்ஸஂஜாயதெ கிஂசிக ஸக்ஷஂ ஸூாவரஜஂமஂ ।
க்ஷெத்ரக்ஷெத்ரஜ்ஞஸஂயொமாக் தத்விஃி ஹரதஷஜ ॥ (26)

ப-ம். 2 யாவக் 6 ஸஂஜாயதெ 3 கிஂசிக 5 ஸக்ஷஂ 4 ஸூாவரஜஂமஂ 8 க்ஷெத்ர க்ஷெத்ரஜ்ஞஸஂயொமாக் 7 தக் 9 விஃி 1 ஹரதஷஜ.

(அ-ம்.) ஹே பாதவம்ச சிரேஷ்ட அர்ச்சுன! தாவர ஜங்கமரூபவஸ்து எத் துணை யுண்டாகின்றனவோ அவையாவும் க்ஷேத்ரக்ஷேத்ரஞ்ஞ சம்யோகத்தானே யுண்டாயினவென நீ யறிதி. (26)

(வி-ம்.) ஹே பாதவம்ச சிரேஷ்டனுகிய அர்ச்சுன! மூன்றுலகத்திலும் யாதேனுமொரு வஸ்துதாவரவடிவம் அல்லது சங்கமவடிவமாய்த் தோற்றுகின் றதோ அவ்வஸ்துக்களனைத்திற்கும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சம்யோகத் தானே தோன்றியதென்றுணர்தி. ஆண்டு அவித்தை அதன் காரியவடிவ சடா நிருவசனீய பாவாபாவ (உண்மையின்மை) வடிவமாய்க் காணப்படுமுலகனைத்தும் க்ஷேத்திரரூபமாம்; அந்த க்ஷேத்திரத்தினின்று விலட்சணமானதும் அதை விளக் குவதும் சுயம்பிரகாச பரமார்த்த சத்தானதும் அசங்கோதாசீனமும் சர்வதரும மின்றியதுமாகிய அத்துவிதீய சைதன்ய க்ஷேத்திரக்ஞும்; அத்தன்மைய க்ஷேத் திர க்ஷேத்திரக்ஞர்கட்கு மாயாவசத்தால் ஒன்றற்கொன்று விவேகமின்மையைக் காரணமாகவுடைய பொய்யுண்மைகளை ஒன்றுபடுத்தல் வடிவ மித்தியா தாதான்மி யாத்தியாசமே அவர்களின் சம்யோகமாம்; அத்தன்மைய சம்யோகத்தினின்றே இத்தாவரசங்கமரூப காரியங்களனைத்தும் உண்டாகின்றன என்று நீயுணர்தி. இது கூறியதால் இவ்வர்த்தஞ் சித்தியானது :— தனதுண்மைவடிவத்தின் ஞான மின்மையினுலே இச்சம்சாரந் தோற்றுகின்றது. அவ்வுண்மைவடிவத்தின் ஞானத் தால் இச்சம்சார நாசமேயாகின்றது, கனவு முதலிய மித்தியாப்பொருள்கள் அதிட்டானவஸ்துவின் உண்மைவடிவத்தின் அஞ்ஞானத்தினுலே தோற்றுகின் றன, அச்சொரூபத்தின் ஞானமுண்டாகவே நிவிர்த்தியாகின்றன என்பதாம். (26)

(அ-கை.) இவ்வாறு அவித்தியாவடிவ சம்சாரத்தை அருளிச்செய்து; இப் போது அதனை நிவிர்த்திசெய்யும் பிரஹ்மவித்தையை அருளிச்செய்தற்பொருட்டு 'யஸவஂ வெத்திவ-ஈரஷஂ' எனக் கூறிப்போந்த வாக்கியார்த்தத்தை ஸ்ரீ பக வான் விளக்கியருளிச்செய்கின்ருர்.

சு-ம். ஸமஂ ஸவெஷு ஹூதெஷு திஷ்ஹஂ வரமெயூரஂ ।
விநயுத்ஸ்வவிநயுஷஂ யஃ வயுதி ஸ வயுதி ॥ (27)

ப-ம். 4 ஸமஂ 2 ஸவெஷு 3 ஹூதெஷு 5 திஷ்ஹஂ 7 வரமெயூரஂ 1 விநயுத்ஸு 6 அவிநயுஷஂ 8 யஃ 9 வயுதி 10 ஸஃ 11 வயுதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நாசமுடைய சர்வ பூதங்களிடத்தும் சமமும், நிருவிகாரரூபமாய் ஸ்திதமும், விநாசமின்றியதும்; பரமேசுரரூபமுமாகிய அத்தன்மைய ஆன்மாவை எவன் காண்கின்றானோ அவனே காண்பவனாவன். (27)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தோற்றுந் தருமமுடைய தாவரசங்கமவடிவ பூதங்களனைத்தும் எத்தன்மையவெனின், பலவகையான தோற்றமுதலிய பரிணாம சுபாவமுடையனவாந் தன்மையானும், குணப்பிரதான பாவப்பிராப்தியானும், விஷமசுபாவமுடையவைகள். இதனானே அப்பூதங்கள் மிகச்சஞ்சலங்களாம், கணத்திற் கணத்திற் பரிணாமிகளாம், அப்பரிணாமத்தையடையாது ஒருகணமேனும் நிலைத்து நிற்பதற்கேலாதவைகளாம், இதனானே அப்பூதங்கள் ஒன்றற்கொன்று பாத்தியபாதக பாவத்தையடைகின்றன, இதனானே அப்பூதங்கள் விநாசமுடையனவாம், அதாவது மாயாகந்தர்வ நகரமுதலியவைகளைப்போல திருஷ்ட நஷ்ட (காணக்கெடுஞ்) சுபாவமுடையனவாம், அத்தன்மைய சர்வ தாவர சங்கமவடிவ பூதங்களின்கண் ஆன்மதேவர் சமனாவர், அதாவது யாண்டும் ஏகரூபமேயாவர், அங்ஙனமே சர்வ தேகங்களினும், ஒருவர், சர்வ பூதங்களில் தோற்றமாதி பரிணாமமிலதாந்தன்மையால் நிருவிகாரமாயிருப்பர், பரமேசுரராவர், அதாவது, தேகமுதலிய சர்வ சடவர்க்கங்கட்கும் சத்தாஸ்பூர்த்திகளைக் கொடுப்பவரானதால் பாத்திய பாதக பாவமற்றவர், ஆண்டு நாசமாதற்குரிய பொருள் பாத்தியமெனப்படும், நாசப்படுத்து பொருள்பாதகமெனப்படும், அத்தன்மைய பாத்திய பாதகங்களற்றவர், சர்வ தோடங்களுமற்றவர், மற்று மெத்தன்மையரெனின், அவிநாசியாவர், அதாவது மாயா கந்தர்வ நகரமுதலிய காணக்கெடுந்தன்மையவாய இந்தச் சர்வ துவிதங்கள் பாதமாயினும் பாதத்தையடையாதவராவர்.

ஆ-சு. "அவிநாஶீவா அரேऽயமாத்மா" ஹே மைத்திரேயி! இவ்வான்மதேவர் நாசமற்றவர் என்பதாம். இவ்வாற்றால் எல்லாவகையானும் இச்சடப்பிரபஞ்சத்தினின்றும் விலட்சணமாகிய பிரத்தியக்கான்மாவை, வேதாந்த நூலாலாகிய சட்சுவால் சாவ சடவர்க்கத்தினும் விலட்சணமாய்க் காண்கின்ற அதிகாரிகளே ஆன்மாவைப் பார்க்கின்றார்கள். நனப்போதத்தால் கனப்பிராந்தியை நிவிருத்தித்தவனே இனிது நோக்குகின்றான், அதுபோல, இவ்வாறு ஆன்மாவைக் காணாத அஞ்ஞானியோ, கனவுகாணும் புருஷன்போல் பிராந்தியால் விபரீதத்தைக்காணினும் காணாதவனே. என்னை, எது வெது பிராந்தியோ அதுவது அதரிசனரூபமேயாம். பிராந்தியில் தரிசனவடிவத்தன்மை சம்பவியாது இரச்சுவைச் சர்ப்பமாய்ப் பார்க்கினும் பிராந்த புருஷன் இதைப்பார்க்கின்றான் எனச்சொல்வதில்லை, மற்றோ, இவன் பார்க்கவில்லை எனவேசொல்லப்படுகின்றான்; என்னை, அந்தக் கற்பித சர்ப்பதரிசனம் இரச்சு அதரிசனமேயாம், ஆதலின் அந்தச் சர்ப்பத்தைக் காணினும் அந்தப் பிராந்தன் கண்டிலன், இதனாலிப்பொருள் பெறப்பட்டது:— இவ்வாறு சர்வோபாதிகளுமின்றிய சுத்தான்மாவின் தரிசனத்தால் அவ்வான்மாவின் அதரிசனரூப அவித்தை நிவிருத்தியாகின்றது; அந்த அவித்தியாவடிவ காரணம் நிவிருத்தியானதன் பின்னர், அதன் காரியவடிவ சம்சாரமும் நிவிருத்தியாகின்றது. அத்தன்மைய ஆன்மஞானம் இவ்வதிகாரியால் அவசியமாய்ச் சம்பாதிக்கத்தக்கதாமென்க. ஆண்டு இச்சுலோகத்தில் ஸ்ரீ பகவான் 'கூடஸ்தம்' என ஆன்மவடிவ விசேடியவாசகபதம் அருளிச்செய்யவில்லை; ஆயினும், யாண்டு, விசேடணவாசக பதங்களுளவோ ஆண்டு, விசேடியவாசகபதம் அர்த்தத்தானே பிராப்தியாகின்றது, இது நூலுணர்ந்தோர்களின் நியமம் அந்த விசேடண வாசக பதங்கள் ஈண்டும் (சமம். திஷ்டந்தம் பரமேசுரம் அவிநசியந்தம், என இருக்கின்றனவாதலின், ஆன்மவடிவ விசேடியத்தின் லாபம் அர்த்தத்தானே பிராப்தியா

கின்றது. அல்லது 'பரமேசுரம்' என்னும் பதமே அவ்வான்மவடிவ விசேடிய வாசகபதமென் றுணர்க. (27)

(அ-கை.) இப்போது இப்பூர்வ சுலோகத்திற் கூறிய ஆன்மதரிசனத்தை அதிகாரிகட்கு அதில் இன்பம் விளைவிப்பான் ஸ்ரீ பகவான் பலத்தாற்றுதித்தருளுகின்றார்.

சு-ம். 𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ।
𑌨 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥ (28)

ப-ம். 2 𑌸𑌮𑌂 5 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍 6 𑌹𑌿 1 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 3 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 4 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 9 𑌨 10 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑌿 7 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 8 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 11 𑌤𑌤𑌃 14 𑌯𑌾𑌤𑌿 12 𑌪𑌰𑌾𑌂 13 𑌗𑌤𑌿𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ பூதங்களிடத்துச் சமமும் சமவஸ்திதமும் ஈசுரவடிவமுமாகிய ஆன்மாவைத் தரிசித்து, இவ்வித்துவான், 'எதனால், ஆன்மாவால் ஆன்மாவை இம்சிக்கவில்லையோ, அதனானே பரமகதியை அடைகின்றான். ()

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தாவரசங்கமவடிவ சர்வ பூதங்களிடத்தும் ஆன்மா சமமாம் அதாவது, யாண்டும் ஏகரூபமாம் அங்ஙனமே சமவஸ்திதமுமாம், அதாவது, தோற்றமுதற்கொண்டு விநாசமீறாகிய சர்வ பாவவிகாரங்களுமற்றிருப்பதாம். ஈசுரனுமாம், அதாவது, சர்வப் பிராணிகளின் பிரவிருத்திகளின் காரணமாம் இவ்விதமாகக் கூறிப்போந்த சர்வ விசேடணங்களோடுகூடிய ஆன்மாவைத் தரிசித்து, அதாவது இத்தன்மைய ஆன்மதேவர் நானே எனச் சாத்திர திருட்டியால் அவ்வான்மாவைச் சாட்சாத்கரித்து, இவ்வித்துவான் தனதான்மாவைத் தனதான்மாவால் ஹனனஞ்செய்திலனாதலினானே பரமகதியை யடைகின்றான், அன்றியும் இவ்வுலகத்திலுள்ள அஞ்ஞானி ஜனங்களனைவர்களும், பரமார்த்த சத்துவடிவமும், ஏகாத்து விதீயவடிவமும், அகர்த்தா அபோக்தாவடிவமும், பரமானந்தவடிவமுமாகிய ஆன்மா இருக்கிறது, விளங்குகிறது என்னும் பொருளிடத்தும், இல்லை விளங்கவில்லை என்னுந் தோற்றத்தைச் செய்விப்பதில் சமர்த்தமாகிய அவித்தைபால், தாமே திரஸ்காரஞ்செய்து இல்லாதபொருளெனச் செய்கின்றார்களாதலின், அவ்வஞ்ஞானிகளனைவர்களும் அவ்வான்மாவை ஹனனஞ்செய்கின்றார்கள். அல்லது, அவித்தைபால் ஆன்மவடிவமாய்க் கிரகணஞ்செய்யப்பட்ட தேகேந்திரியாதிகளின் சங்காதவடிவ புராதன ஆன்மாவைக் கொன்று, புண்ணியபாவங்களின் வசத்தான் மீண்டும் புதிய சங்காதவடிவ ஆன்மாவைக் கிரகணம் பண்ணுகின்றார்கள். இதனானும், அவ்வஞ்ஞானிகள் ஆன்மாவைக் கொன்றவர்கள், ஆதலின், இருவகையானும் அவர்கள் ஆன்மாவைக் கொன்றவர்களே. இத்தன்மைய ஆன்மபாதகர்களை இலட்சியம்பண்ணியே இந்தச் சுருதியின் வாக்கிய வடிவ மிருதி எழுந்தது.

ஆ-சு. 𑌕𑌿𑌂 𑌤𑍇𑌨 𑌨 𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑍋𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌾 ।
𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥

(பொ-ள்) உண்மை யொளியானந்த வியாபகான்மாவை இன்மையிருட்டுன்பப் பரிச்சின்னரூப மென்றெண்ணும், ஆன்மாவை அபகரிக்குந் திருடனால் எந்தப் பாபஞ் செய்யப்படாததாம்; மற்றோ, அவன் சர்வ பாவங்களையும் பண்ணியவனாவன், என்பதாம். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌅𑌸𑍂𑌰𑍍𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌤𑍇 𑌲𑍋𑌕𑌾 𑌅𑌨𑍍𑌧𑍇𑌨 𑌤𑌮𑌸𑌾𑌵𑍃𑌤𑌾𑌃 ।
𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌕𑍇 𑌚𑌾𑌤𑍍𑌮𑌹𑌨𑍋 𑌜𑌨𑌾𑌃 ॥

(பொ-ள்.) தம்பம் தர்ப்பமுதலிய ஆசுரீ சம்பத்தையுடைய புருஷர்கட்குப் பிராப்தியாகத்தக்கதும், அந்ததமத்தால் மறைக்கப்பட்டதுமாகிய நரக முதலிய வுலகங்களை, அவர்கள் இறந்தடைகின்றார்கள். எவர்கள் ஆன்மாவைக்கொன்றவர்களோ. ஆண்டுத் தேகமுதலிய அனான்மபதார்த்தங்களில் ஆன்மாபிமானஞ்செய்பவன், ஆன்மஹனனனுவன் என்பதாம். இதனுவிப்பொருள் பெறப்பட்டது:—ஆன்மாவைக் குருசாஸ்திரோபதேசங்களால் சாக்ஷாத்கரித்தவன் தேகமுதலிய அனான்மபதார்த்தங்களினுள்ள ஆன்மாபிமானத்தைச் சுத்தான்மாவின் தரிசனத்தால் நாசம்பண்ணினவன்; ஆதலின், தனதுண்மைவடிவத்தின் இலாபத்தால் அந்தத்தத்துவஞானி தனதான்மாவைத் தனதான்மாவால் நாசஞ்செய்திலன். இதனானே அவன் பரகதியை அடைகின்றான், அதாவது, காரியத்தோடு அவித்தியா நிவிருத்தி பூர்வக பரமானந்தப் பிராப்திவடிவ முக்தியை அவன் அடைகின்றானென்பதாம். (28)

(அ-கை.) ஹே பகவன்! புண்ணியாபுண்ணிய கருமங்களைச் செய்வது தேகந்தோறும் வெவ்வேறான்மாவாம். அந்தச் சுகதுக்கமுதலிய விசித்திர பல போக்தாவானதால், அவ்வான்மா, விடம சுபாவமுடையதுமாம். ஆதலின், சர்வ பூதங்களினுமுள்ள ஓரான்மாவைச் சமமாய்த் தரிசித்து, இவன் தனதான்மாவால் தனதான்மாவை ஹனனஞ்செய்திலன், எனத் தாங்கள் கூறியருளியது எவ்வாறு பொருந்தும் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑍈𑌵 𑌚 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 ।
𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌤𑌥𑌾𑌤𑍍𑌮𑌾𑌨 𑌮𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ॥ (29)

ப-ம். 1 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍍𑌯𑌾 2 𑌏𑌵 𑌚 4 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 5 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌨𑌿 3 𑌸𑌰𑍍𑌵𑌶𑌃 6 𑌯𑌃 7 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 8 𑌤𑌥𑌾 9 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 10 𑌅𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 11 𑌸𑌃 12 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மாயாவடிவப் பிரகிருதியே சர்வப் பிரகாரத்தானும் சர்வ கருமத்தையுஞ் செய்கின்றது எனவும், க்ஷேத்திரக்ஞவான்மாவை அகர்த்தாவெனவும், எந்த விவேகி காண்கின்றானோ அவனே நன்கு காண்போன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முக்காரணங்களானுந் தொடங்கத்தக்க இலௌகிக வைதிக சர்வ கருமங்களையும் எல்லாவாற்றானும் பிரகிருதியே செய்கின்றது, அதாவது, தேகேந்திய முதலிய சங்காதாகாரமாய்ப் பரிணாமமடைந்ததும், சர்வ விகாரங்கட்குங் காரணவடிவமானதுமாகிய முக்குணவடிவ, ஸ்ரீ பகவானுடைய மாயையாகிய பிரகிருதியே, அச்சர்வ கருமங்களையுஞ் செய்கின்றது; சர்வ விகாரங்களுமற்ற க்ஷேத்ரக்ஞனெனும் புருஷன் அவைகளைச் செய்திலன். இவ்வாறு விவேகியானவன் சாஸ்திரவடிவ சட்சுவாற் பார்க்கின்றான். இவ்வண்ணமே அந்தப் பிரகிருதிவடிவ க்ஷேத்திரத்தாற் செய்யப்பட்ட சர்வ கருமங்களினும், எவன், க்ஷேத்திரக்ஞனாகிய ஆன்மாவை அகர்த்தாவாகவும், சர்வோபாதிரகிதமாகவும், அசங்கமாகவும், சர்வத்திர ஏகமாகவும், சர்வத்திர சமமாகவும் பார்க்கின்றானோ, அவனே, பரமார்த்த தரிசியானதால், பார்க்கின்றான். அவ்வாறு ஆன்மாவைக்காணாத சர்வாஞ்ஞானிகளும் அந்தகர்களேயாவர்கள். இதனுவிப்பொருள் பெறப்பட்டது:—சன்மமரண முதலிய விகாரங்களையுடைய க்ஷேத்திரத்திற்கு அவ்வவ்விசித்திர கருமங்களின் கருத்தாத்தன்மையால் தேகந்தோறும் பேதமாயினும், விஷமத்தன்மையுமாயினும், நிருவிசேட அகர்த்தாவாகிய ஆன்மாவின் பேதத்தினும் விஷமத்தன்மையினும், சிறிதளவும் பிரமாணமில்லை. கடமடமுதலிய சர்வ பேதங்

களுமின்றிய ஆகாயத்தின் பேதத்திலும் விஷமத்தன்மையிலும் சிறிதளவும் பிர மாணமின்றியதுபோல; நிருவிசேட அகர்த்தாவாகிய ஆன்மாவின் பேதத்தினும் விஷமத்தன்மையினும் சிறிதளவும் பிரமாணமில்லை, இதை முன்னர்ப் பல முறை யுங் கூறினும் என்க. (29)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் ஆபாதத்தால் க்ஷேத்திரத்தின் பேததரிசனத் தைக்கூறி, க்ஷேத்திரக்ஞனது பேததரிசனத்தை நிஷேதித்தருளினர்; இப்போது ஸ்ரீ பகவான் அந்த க்ஷேத்திர பேததரிசனத்தையும் மாயிகத்தன்மைவடிவ கார ணத்தால் நிஷேதித்தருளுகின்றார்.

சு-ம். யதா ஹூதவ்ருயக்ஹாவ ஜகஸ்மூஜ்ருவயஶ்யதி ।
ததவ ஸவ அ விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்வஜ்யதே ததா ॥ (30)

ப-ம். 1 யதா 2 ஹூதவ்ருயக்ஹாவம் 3 ஸகஸ்மம் 4 அநுவயஶ்யதி 6 ததஃ 7 ஸவ 5 அ 8 விஸ்தாரம் 10 ப்ரஹ்ம 11 ஸம்வஜ்யதே 9 ததா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி எப்போது பூதங்களின் வேற்று மைத்தன்மை ஏகான்மாவின்கண்ணிருப்பதையும், அவ்வான்மா ஒன்றினின்றே அப்பூதங்களின் வித்தாரத்தையும் பார்க்கின்றானோ அப்போது ஏகப்பிரமமே யாகின்றான். (30)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி எக்காலத்தில் தாவரசங்கமவடிவ சர்வ பூதங்களின் ஒன்றற்கொன்று வேறுந்தன்மைவடிவ வேற்றுமைத்தன்மையை, ஒன்றின்கண்ணுள்ளதாய், அதாவது, ஒரே சத்துவடிவ அதிட்டானமாகிய ஆன் மாவின்கண் அப்பூதங்களின் வேற்றுமைத்தன்மைகளைக் கற்பிதமாய்ப் பார்க்கின் றான். கருத்திதுவாம்:—எவ்வெப்பொருள் கற்பிதமாமோ அவ்வக்கற்பிதப் பொ ருள் அதிட்டானத்தினும் பின்னமன்று இரச்சுவில் கற்பிதமாகிய சர்ப்பதண்ட முத லியவைகள் அவ்விரச்சுவடிவ அதிட்டானத்தினும் வேறன்றாதல் போலவும், சுவர் ணத்திற் கற்பிதமாகிய குண்டலகங்கணமுதலிய பூடணங்கள், அச்சுவர்ணத்தினும் வேறன்றாம் போலவும், சத்துவடிவ ஆன்மாவிற் கற்பிதமாகிய இப்பூதங்களின் பின்னத்தன்மைகள், அவ்வதிட்டான ஆன்மாவினின்று பின்னமன்று. இவ்வாறு குருசாத்திரோப தேசானந்தரம், எவன் தனது சொரூப விசாரஞ்செய்கின்றானோ, அதாவது, இவ்வுலகனைத்தும் ஆன்மரூபமேயாம், ஆன்மாவினும் வேறுசத்தை யுடையனவன்று என விசாரித்துப் பார்க்கின்றானோ, எவன் அவ்வதிட்டான ஆன் மாவினின்றும் சர்வ பூதங்களும் பின்னமின்றாயினும் அந்த ஒரே ஆன்மாவி னின்றே மாயாவசத்தால்சர்வ பூதங்களின் விஸ்தாரத்தன்மையையும் வேற்றுமைத் தன்மையையும் கனுமாயையைப்போல் உய்த்து நோக்குகின்றானோ அவன் அப் போது சஜாதீய முதலிய பேததரிசனமின்மையின் சர்வானர்த்தங்களுமின்றிய அத்துவிதீய பிரமசொரூபமேயாகின்றான். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. "யஸ்மிந் ஸர்வாணி ஹூதாந்யாத்மைவாஹூத் விஜாநதஃ ।"
தத்ர கோ மோஹஃ கஃ ஶோக ஏகத்வமநுவஶ்யதஃ ॥

(பொ-ள்.) இவ்வித்துவானுக்குத் தாவரசங்கமவடிவ சர்வ பூதங்களும் தன தான்மவடிவமாகவேயாகின்ற ஞானவத்தையில் ஆன்மாவின் ஒரே அத்துவிதீய பாவத்தைக்காணும் அந்தத்தத்துவ வித்துக்குச் சோகமோகங்கள் ஒருபோது மின்றாமென்பதாம், ஆண்டு, 'ப்ரக்ருத்யைவ ச கர்மாணி' என்னும் பூர்வ சுலோ கத்திலோ ஸ்ரீ பகவான் க்ஷேத்திரக்ஞ ஆன்மாவின் பேதத்தை நிஷேதித்தருளி

னர். 'யதாஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாத்' என்னு மிச்சுலோகத்திலோ க்ஷேத்திரவடிவ அனன்மவஸ்துக்களின் பேதத்தையும் நிடேதித்தருளினர். இத்துணையே இவ்விரண்டு சுலோகங்கட்கும் விசேடமாமென்க. (30)

(அ-கை.) ஹே பகவன்! ஆன்மாவிற்கு இயல்பாய் அகர்த்திருத்தன்மையிருப்பினும் சரீர சம்பந்தரூப உபாதியால் கருத்திருத்தன்மை பொருந்தும் என்னும் அர்ச்சுனன் சங்கையை நிவிருத்தித்து ஸ்ரீ பகவான் 'யதைவஸர்வத்ர...' என்னும் கூறிப்போந்த வாக்கியார்த்தத்தை இப்போது விளக்கி வருணித்தருளுகின்றார்.

சு-ம். அநாதித்வாந்நிர்குணத்வாத் பரமாத்மாயமவ்யய: ।
சரீரஸ்தோ(அ)பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ (31)

ப-ம். 2 அநாதித்வாத் 3 நிர்குணத்வாத் 5 பரமாத்மா 4 அயம் 6 அவ்யய: 7 சரீரஸ்த: 8 அபி 1 கௌந்தேய 9 ந 10 கரோதி 11 ந 12 லிப்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அநாதியானதினாலும், நிர்க்குணமானதினாலும், இப்பரமான்மா அவ்வியயமாம், அத்தன்மைய ஆன்மா இச்சரீரத்தின்கண்ணிருப்பினும், செய்வதின்று, பற்றுறுவதுமின்று. (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரருக் கபின்னமானதால் பரமான்மவடிவ இந்த அபரோக்ஷப் பிரத்தியக்கான்மா அவ்வியயமாம். ஆண்டுச் சன்மமரண முதலிய விகாரங்கள் வியயமாம் அதை யடையாதது அவ்வியயமாம், அதாவது, தோற்றக்கேடு முதலிய விகாரங்களின்றிய பொருள் அவ்வியயமாம். வியயமோ இருவகையாம், ஒன்றோ:—தருமியின் வடிவமே யுற்பத்தியுடையதாதலின், வியயமாம்; மற்றொன்றோ, அத்தருமியின் வடிவத்திற் குற்பத்தியின்றேனும், அதன் தருமங்கள் உத்பத்தியுடையனவாதலின், வியயமாம். ஆண்டு ஸ்ரீ பகவான் ஆன்மாவின்கண் முதல் வியயத்தை நிடேதித்தருளுகின்றார். 'அநாதித்வாத் இதி' ஆண்டுப் பூர்வ அசத்வாவஸ்தையின் பெயர் ஆதியாம், கடமுதலிய பதார்த்தங்கட்குத் தமதுற்பத்திக்கு முன்னருள்ள அசத்துவாவத்தைபோலவாம். அதுவே அக்கட முதலியவைகட்கு ஆதியாம், அந்த ஆதி எப்பொருட்கில்லையோ அது அநாதியாம் அத்தன்மைய அநாதி எக்காலத்திலும் சத்தியான்மாவாம் அத்தன்மைய அநாதி யானதால் இவ்வான்மாக்காரணபாவ முடையதாதலின் சன்மத்தை யடைவதில்லை. என்னை? எப்பொருள் ஆதியுடையதாமோ, அப்பொருட்கே சன்மமுண்டாம், கடமுதலிய பொருள்கள் ஆதியுடையனவாதலின் சன்மத்தை யடைகின்றனபோலும், அவ்வான்மாவிற்கு அந்த ஆதித்தன்மையின் மையின் சன்மமுமின்றாம் அந்தச் சன்மத்தின் பின்னரே மரண மீறாகிய சர்வபாவ விகாரங்களும் வந்துறுவனவாம் இவ்வான்மாவிற்குச் சன்மரூப ஆதிவிகாரமின்மையின், மரணமீறாகிய அச்சர்வபாவ விகாரங்களும் இன்றாம்; ஆதலின் இவ்வான்மாத்தனது சொரூபத்தானே அந்தச் சன்மமுதலிய விகாரவடிவ வியயத்தை யடையவதில்லை. 'ந ஜாயதே ம்ரியதே வா' அவ்வான்ம தேவனைத் தோற்றுவிப்ப தொன்றுமில்லை, அதிட்டிப்பது மொன்றுமில்லை, என்க. இப்போது இரண்டாவது வியயத்தை நிடேதித்தருளுகின்றார். 'நிர்குணத்வாத் இதி' இவ்வான்மாச் சர்வ தர்மங்களுமின்றியதாதலினாலும், அவ்வியயமாம், என்னை, இவ்வுலகத்தின்கண்ணுள்ள உருவம் இரதமுதலிய தருமங்கள், தமது தருமியோடு தாதான்மியங்களேயாமாதலின், அவ்வுருவமுதலிய தருமங்கள், தமது தருமியை விகாரமடையச்செய்யாது உத்பத்தி விநாசங்களை யடையா, மற்றோ, தமது தரு

மினை விகாரமடையச்செய்தே அந்தக் கருமங்கள் உத்பத்தி விநாசமாவனவாம். இவ்வான்மதேவர், சர்வ கருமங்களுமின்றியவராதலின் அத்தருமங்களின் விய யத்தாலும் வியயத்தை யடையார்.

ஆ-௬.　ஈவிகாரபீவா லெடய ஊாதூாகூக ஆதி்ிய உா‑உ ।

(பொ-ள்.) ஹே மைத்ரேயி! இவ்வான்மதேவர் உருவத்தாலும் நாசமுத முதலிய விகாரத்தை யடையார், கருமங்களின் நாசமுதலிய விகாரங்களினாலும் நாசமுதலிய விகாரத்தை யடையார், இவர் சர்வ கருமங்களுமின்றியவராதலின், என்பதாம். இவ்வான்மதேவர், தோற்றம், இருப்பு, வளர்ச்சி, விபரிணமம், க்ஷீணம், நாசம், என்னும் அறுவகைப் பாவ விகாரங்களுமின்றியவராதலின் ஆத்தி யாசிக சம்பந்தத்தால் இச்சரீரத்தின் கண்ணிருப்பினும் இது பிரவிர்த்திக்கினும், இவர் சிறிதளவுஞ் செய்யாதவர். ஆத்தியாசிக சம்பந்தத்தால் சலத்திலிருப்பினும் சூரியன், அந்தநீர், சலனப்படினும் சலனப்படுவதின்றாவதுபோல இவ்வான்ம தேவர், இலௌகிக வைதிக கருமங்களொன்றையுஞ்செய்யாத வராதலின், யா தொரு கரும பலத்தாலும் பற்றுறார், என்னை, இவ்வுலகத்தில் எவனெவன் எவ் வெப் புண்ணியா புண்ணிய கருமங்களைச் செய்கின்றானோ அவனவனே அவ்வக் கருமபலமாகிய சுகதுக்கங்களிற்பற்றுறுகின்றான்; அவ்வக்கருமங்களைச் செய்யா தோன் அவ்வப்பலத்தால் சம்பந்தப்படான்; இவ்வான்மாவும் ஒரு கருமத்தையுஞ் செய்யாமையின் யாதொரு கருமபலத்திலுஞ் சம்பந்தப்படுவதின்றாம். 'ஊஹா ஜெஷக வ‑வ௦ஓ‑கவெ௦' என்பது முதலிய வாக்கியங்களால், அவ்விச்சைஃ தவேஷமுதலிய கருமங்கள் க்ஷேத்திரத்தின் கருமங்களென்றே கூறப்பட்டன, அல்லாமலும் 'வ கூ ஜெதூவஅக ா‑உணிகிூயசாணாதி' என்னும் வாக்கியத் தால் சர்வ கருமங்களும் மாயையின் காரியமென்றே கூறப்பட்டன. அசங்கவான் மாவிற்கு யாதொரு கருமமுமின்றாம், யாதொரு காரியமுமின்றாம்; இதனானே பரமார்த்த தரிசியாகிய வித்துவானுக்குச் சர்வ கருமங்களின் அதிகாரமிலதாந் தன்மை முன்னர்க் கூறினும். இத்துணையால் ஆன்மாவில் சர்வகரும ரகிதத் தன்மை கூறிச் சுவகத பேதத்தையும் நிவிருத்தித்தனர். அன்றியும் 'வ கூ ஜெதூவஅகூா‑உணி' என்னுஞ் சுலோகத்திலோ முன்னர் ஸஜாதீயபேதமும் நிவிருத்திக்கப்பட்டது. 'யதூாஹூ‑ஒத வூயஹூாவ௦' என்னுஞ் சுலோகத்திலோ முன்னர் விஜாதீயபேதமு நிவிருத்திக்கப்பட்டது. 'ஈநாதிகூா நிம‑உணகூாகூ' என்னு மிச்சுலோகத்திலோ சுவகதபேதமும் நிவிருத்திக்கப்பட்டது; ஆதலின் மூவகைப் பேதங்களுமின்றியதால் இவ்வான்மா, அத்துவிதீயப்பிரம சொரூபமே என்பது பெறப்பட்டது, என்க. ஆண்டிச்சமான சாதியையுடைய பதார்த்தங் கட்குள்ள பரஸ்பரபேதம் சஜாதிய பேதமாம்: ஒரு தருவில் மற்றொரு தருவின் பேதம்போலும். மாறுபட்ட ஜாதியையுடைய பதார்த்தங்கட்குள்ள பரஸ்பர பேதம் விஜாதீயபேதமாம் அதே தருவில் கல்லின் பேதம்போலும். ஒரே வஸ் துவில் தன தவயங்களாலுண்டாம் பேதம் சுவகதபேதமாம், அதே தருவில் கிளையிலை பூகனி முதலிய அவயவங்களாற் பேதம்போலும். 'ஊகொஜெவக ஸவ‑உஹ‑ஒ தெஹூ‑ம‑ஒஉக' என்னுஞ் சுருதி சர்வ பூதங்களிடத்தும் ஆன்மா ஒன்றேயெனக் கூறுகின்றது. அவ்வான்மாவிற்குச் சமானசாதியுடையது மற்றோரான்மா இல்லை யாதலின் ஆன்மாவிற் சஜாதியபேதமின்று 'ஈதொநூ ஊதூ‑உ௦' என்னுஞ் சுருதி ஆன்மாவிற்கு வேறான உலகங்களனைத்தையும் கற்பிதமெனக் கூறுகின்றது, கற்பிதப் பொருட்கு அதிட்டானத்தினும் பின்னசத்தையின்மையின், ஆன்மாவில் விஜாதீய பேதமும் பொருந்தாது 'நிஷூ௦ நிம‑உண௦ நிஷூய௦ பராணூ௦'

என்னுஞ் சுருதி ஆன்மாவை நிரவயவ நிர்க்குண நிட்கிரியமெனக் கூறுகின்றதாதலின், ஆன்மாவின்கண் சுவகதபேதமும் பொருந்ாதென்பதாம். (31)

(அ-கை.) ஆண்டுச்சரீரத்திலிருப்பினும் இவ்வான்மா அசங்கமானதால் அந்தச்சரீர கருமத்தால் சம்பந்தப்படுவதில்லை என்னுமர்த்தம் பூர்வ சுலோகத்திற் கூறியருளப்பட்டது. இப்போது ஸ்ரீ பகவான் கூறிப்போந்த அர்த்தத்தில் திருஷ்டாந்தத்தைக் கூறியருளுகின்றார்.

சு-ம். யதா² ஸர்வக³தம் ஸௌக்ஷ்ம்யாதா³காஶம் நோபலிப்யதே ।
ஸர்வத்ராவஸ்தி²தோ தே³ஹே ததா²த்மா நோபலிப்யதே ॥ (32)

ப-ம். 1 யதா² 2 ஸர்வக³தம் 4 ஸௌக்ஷ்ம்யாத் 3 ஆகாஶம் 5 ந 6 உபலிப்யதே 8 ஸர்வத்ர 10 அவஸ்தி²த: 9 தே³ஹே 7 ததா² 11 ஆத்மா 12 ந 13 உபலிப்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்விடத்தும் வியாபகமாயினும் ஆகாயம் அசங்கசுபாவமுடையதாதலின் சம்பந்தத்தை யடையாததுபோலச் சர்வ தேகங்களினுமிருப்பினும் இவ்வான்மா அசங்கசுபாவமுடையதாதலின் சம்பந்தப்படுவதில்லை.()

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கடமட முதற்கொண்டு அஷ்டா அஷ்ட மூர்த்தத்திரவியங்களனைத்திலும் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பதாயினும் ஆகாயம், நுண்ணியதானமையின், அதாவது, அசங்கசுபாவ முடையதாதலின், அந்த மூர்த்தத் திரவியங்களின் நறுநாற்றம் தீநாற்றம் மழை வெயில் நீபுகை தூளி சேறு முதலிய குணதோஷங்களோடு சம்பந்தப்படாததுபோலத் தேவாதிடமுதலிய மேற்கீழாகிய சர்வ தேகங்களினும் உள்ளும் புறம்பும் யாண்டும் வியாபித்திருப்பினும் இவ்வான்மா, அசங்கசுபாவமுடையதாதலின், அந்தத்தேக முதலியவைகளாற் செய்யப்பட்ட சுபாசுப கருமங்களோடுபற்றுவதில்லை. 'அஸங்கோ ஹ்யயம் புருஷ:' இவ்வான்மா அசங்கமானதால் யாதொரு பொருளோடும் சம்பந்தப்படுவதில்லை என்பதாம். (32)

(அ-கை.) அல்லது இவ்வான்மாவின்கண் கேவலம் அசங்கத்தன்மையாகிய காரணத்தானே அசம்பந்தித்தன்மையின்றும் மற்றோ, பிரகாசத்தன்மையாகிய ஹேதுவானுமாம், என்னு மர்த்தத்தை இப்போது ஸ்ரீ பகவான் திட்டாந்தத்தா லருளிச் செய்கின்றார்.

சு-ம். யதா² ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: ।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா² க்ருத்ஸ்னம் ப்ரகாஶயதி பா⁴ரத ॥ (33)

ப-ம். 2 யதா² 8 ப்ரகாஶயதி 3 ஏக: 6 க்ருத்ஸ்னம் 7 லோகம் 5 இமம் 4 ரவி: 12 க்ஷேத்ரம் 10 க்ஷேத்ரீ 9 ததா² 11 க்ருத்ஸ்னம் 13 ப்ரகாஶயதி 1 பா⁴ரத.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சூரியனொருவனே இவ்வுலகனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றதுபோல க்ஷேத்திரக்ஞனெனும் ஆன்மா இந்த க்ஷேத்திரமனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றது. (33)

(வி-ம்.) அர்ச்சுன! ஒரே சூரியன் உருவமுடைய தேகமுதலிய சர்வ பொருள்களையும் பிரகாசிப்பிக்கின்றான், ஆனால், அந்தப் பிரகாசிக்கப்பட்டனவாகிய தேகமுதலிய வஸ்துக்களின் தருமங்களோடு சம்பந்தப்படுவதுமில்லை, அத்தன்

மைய வஸ்துக்களின் பேதத்தால் சூரியன்பேதப்படுவதுமின்று. அதுபோல ஒன்றாகிய க்ஷேத்திரக்ஞனென்னும் ஆன்மாக் கூறிப்போந்த சர்வ க்ஷேத்திரங்களையும் பிரகாசிப்பிக்கின்றது. இதனானே அவ்வான்மா அந்தப்பிரகாசியவடிவ க்ஷேத்திர தருமங்களோடு சம்பந்திப்பதுமின்று, அவைகளின் பேதத்தால் பேதப்படுவதுமின்று; இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வனுமானத்தைக் குறிப்பித்தருளினர்:—க்ஷேத்திரக்ஞனெனும் ஆன்மா, க்ஷேத்திர தருமங்களோடு சம்பந்தப்படுவதுமில்லை, க்ஷேத்திரங்களின் பேதத்தாற் பேதப்படுவதுமில்லை; அந்த க்ஷேத்திரங்களின் பிரகாசகமானதால், எது எப்பொருட்குப் பிரகாசமாமோ அது அந்தப் பிரகாசிய வஸ்துக்களின் தருமங்களோடு சம்பந்திப்பதுமில்லை, அவற்றின் பேதத்தாற் பேதப்படுவதுமில்லை: சூரியன்போல என்பதாம். அல்லது, க்ஷேத்திரக்ஞனாகிய ஆன்மா, க்ஷேத்திர தருமங்களோடு சம்பந்திப்பதில்லையென்பது கேவலம் அனுமான வளவை மாத்திரத்தாற் பெறப்படுவதன்று; மற்றோ, சாட்சாத்து சுருதிபகவதியும் இதைக் கூறுகின்றாள்.

ஆ-சு. ஸூர்யோ யதா ஸர்வலோகஸ்ய சக்ஷு:
ந லிப்யதே சாக்ஷுஷைர் பாஹ்யதோஷை: ।
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா
ந லிப்யதே லோகது:கேந பாஹ்ய: ॥

(பொ-ள்) உலகங்களனைத்திற்கும் சட்சுவடிவ சூரியன் சட்சுவின்விடய வடிவ வெளிப்பொருள்களின் தோடத்தால் பற்றுறாததுபோலச் சர்வசடப் பொருள்களையும் பிரகாசம்பண்ணப்பட்டதும் தேகாதி சங்காதத்தினும் பின்னமுமாகிய சர்வ பூதங்களின் அந்தரான்மாவாகிய ஒரே அத்துவிதீயவான்மாவும் பிரகாசிய வடிவ தேகமுதலியவைகளினது துக்கங்களோடு சம்பந்திப்பதில்லை என்பதாம். (33)

(அ-க.) இப்போது ஸ்ரீ பகவான் இப்பதின்மூன்றாவது அத்தியாயத்தின் பொருளைப் பலத்தோடு உபசம்மரித்தருள்கின்றார்.

சு-ம். க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோரேவமந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா ।
பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥ (34)

ப-ம். 2 க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: 4 ஏவம் 3 அந்தரம் 5 ஜ்ஞானசக்ஷுஷா 8 பூதப்ரக்ருதிமோக்ஷம் 7 ச 1 யே 6 விது: 11 யாந்தி 9 தே 10 பரம்.

(அ-ம்) ஹே அர்ச்சுன! எவன் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் விலட்சணத்தன்மையைக் கூறிப்போந்தவாற்றால் ஞானசட்சுவால் உணர்கின்றானோ, அங்ஙனமே பூதங்கட்குக் காரணவடிவ மாயையின் முழுதுமின்மையையும் உணர்கின்றானோ, அவ்வதிகாரி கைவல்ய மோட்சத்தை யடைகின்றான். (34)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் விலக்ஷணத்தன்மையை எவன் ஞான நேத்திரத்தாலுணர்கின்றானோ, அதாவது இந்த க்ஷேத்திரமோ சடமும், கர்த்தாவும், விகாரியும், பரிச்சின்னமுமாம்; இந்த க்ஷேத்திரக்ஞனாகிய ஆத்துமாவோ சேதனமும், அகர்த்தாவும், அவிகாரியும், அபரிச்சின்னமுமாம். என இரண்டின் விலட்சணத்தன்மையை எவ்வதிகாரி குருசாஸ்திரோபதேசசன்ய ஆன்மஞானவடிவ நேத்திரத்தால் உணர்கின்றானோ, அவ்வண்ணமே எவன் பூதப்பிரகிருதிகளின் மோட்சத்தையும் உணர்கின்றானோ, ஆண்டு வானாதிபூதங்களனைத்தின் காரணவடிவமும் மாயை, அவித்தை, அஞ்ஞானம், பரமே

சுரசக்தி என்பன முதலிய நாமங்களையுடையதும் 'மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத்' என்பது முதலிய சுருதிகளாற் கூறப்படுவதுமாகிய மாயாசக்தி பூதப்பிரகிருதியாம். அந்தப் பூதப்பிரகிருதியின், நானேபிரமம் எனும் உண்மைவடிவ ஆன்மவித்தையால் ஆத்தியந்திக நிவிருத்தி, பூதப்பிரகிருதி மோட்சமாம். அத்தன்மையமோட்சத்தையும் எவ்வதிகாரி ஞானநேத்திரத்தா லுணர்கின்றானோ, அவ்வதிகாரியே பரமார்த்த ஆன்மவஸ்துவடிவ கைவல்ய மோட்சத்தையடைகின்றான். அத்தன்மைய மோட்சத்தையடைந்த அவ்வதிகாரி மீண்டுந் தேகத்தை எடுப்பதில்லை. இதனால் இப்பொருள் பெறப்பட்டது :—முன்னர்க்கூறிய அமானித்துவ முதலிய சாதன சம்பன்னனும், கூறிப்போந்த க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் விலக்ஷணஞான முடையவனுமாகிய அதிகாரியே, சர்வானர்த்தங்களும் நிவிருத்தியாகிப் பரமபுருடார்த்தத்தையடைகின்றான். ஆதலின், பரமபுருடார்த்த வேட்கையுடையவன் அவ்வமானித்துவ முதலிய சாதனங்களை அவசியமாய்ச் சம்பாதித்தல்வேண்டும். அங்ஙனமேக்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் விவேகஞானத்தையும் அவசியமாய்ச் சம்பாதித்தல் வேண்டும் என்பதாம். (34)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனாநந்தகிரி சுவாமிகளாலியற்றியருளிய பிராகிருதடீகையெனப் பெயரிய கீதை கூடார்த்ததீபிகையின்,

பதின்மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பதினான்காவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ ஸ்ரீ குருப்யோநமஃ
ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநமஃ

ஆண்டுப் பூர்வம் பதின்மூன்றுவது அத்தியாயத்தில்,

யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம் ।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத் தத்வித்தி பரதர்ஷப ॥

என்னுஞ் சுலோகத்தால் ஸ்ரீ பகவான் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சம்யோகத்தினின்று சர்வ தாவரசங்கம பூதோத்பத்தியை அருளிச்செய்தனர். ஆண்டு, ஈசுரனை அங்கீகரியாத நிரீசுர சாங்கியமதத்தை மறுத்து அந்த க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞர்களின் சம்யோகம் ஈசுராதீனமெனக் கூறற்பாலதவசியமாம். அங்ஙனமே அப்பதின்மூன்றுவது அத்தியாயத்தில் 'காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் குணசங்கமே சன்மகாரணமெனத் திருவாய் மலர்ந்தருளினர். ஆண்டு, எந்தக் குணத்தில் எவ்வாற்றாற் சங்கமாம் அந்தக்குணம் யாது, அது எவ்வாற்றாற் சீவனைப் பந்திக்கின்றது என்னும் அர்த்தமும் அவசியமாய்க் கூறற்பாலதாம். அங்ஙனமே, 'பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம்' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் பூதப் பிரகிருதியின் மோட்சத்தை அருளிச்செய்தனர். ஆண்டுப்

பூதப் பிரகிருதியெனும் பெயருடைய சத்துவாதி முக்குணங்களினின்றும் இவ்வதிகாரிக்கு எவ்வாற்றான் மோட்சமாம்? அந்த முக்த புருடனுக்கு இலக்கணம் யாது? என்னும் அர்த்தமும் அவசியமாய்க் கூறற்பாலதாம். இவ்வர்த்த மனைத்தையும் விரிவாய் அருளிச்செய்தற்பொருட்டு ஸ்ரீ பகவான் இப்பதினான்காவது அத்தியாயத்தை தொடங்கியருளுகின்றார். ஆண்டுக் கேட்போனுக் கின்பம் விளைவிப்பான் ஸ்ரீ பகவான் மேற்கூறும் பொருளை இரண்டு சுலோகங்களால் துதித்தருளிச்செய்கின்றார்.

ஸ்ரீ 𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚.

சு-ம். 𑌪𑌰𑌂 𑌭𑍂𑌯𑌃 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌮𑍁𑌨𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑌰𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌿𑌤𑍋 𑌗𑌤𑌾𑌃 ॥ (1)

ப-ம். 3 𑌪𑌰𑌂 5 𑌭𑍂𑌯𑌃 6 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 1 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌨𑌾𑌂 4 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 2 𑌉𑌤𑍍𑌤𑌮𑌂 7 𑌯𑌤𑍍 8 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 10 𑌮𑍁𑌨𑌯𑌃 9 𑌸𑌰𑍍𑌵𑍇 12 𑌪𑌰𑌾𑌂 13 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 11 𑌇𑌤𑌃 14 𑌗𑌤𑌾𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஞானசாதனங்களுக்குள் உத்தமமும் சிரேஷ்டமுமாகிய ஞானசாதனத்தைப் பகவானாகியயாம் மீண்டும் உனக்குரைக்கின்றேம். எந்தச் சாதனத்தை அநுட்டித்து முனிவரனைவர்களும் இத்தேகபந்தனத்தினின்றும் பரமகைவல்லிய மோட்சத்தையடைந்தார்களோ. (1)

(வி-ம்.) ஆண்டு, '𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 𑌅𑌨𑍇𑌨 𑌇𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂' பொருள் எச்சாதனத்தால் ஆன்மவஸ்து அறியப்படுகின்றதோ அது ஞானமாம். இவ்வாறு விரித்துரைப்பதால் ஈண்டு ஞானசப்தம் பரமான்ம விடயக ஞானத்தின் சாதனவாசகமாம். அந்த ஞானம் எத்தன்மையதெனின் பரமாம் அதாவது பரமான்மவடிவ பரவஸ்துவை விடயம்பண்ணுவதாதலின் சிரேஷ்டமாம். அது மற்று மெத்தன்மையதெனின் ஞானங்களுக்குள் உத்தமமாம் அதாவது, '𑌤𑌮𑍇𑌤𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍁𑌵𑌚𑌨𑍇𑌨 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌨𑍍𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌤𑌪𑌸𑌾𑌽𑌨𑌾𑌶𑌕𑍇𑌨' என்னுஞ் சுருதியாற் கூறப்பட்ட யக்ஞதான முதலியவைகள் ஞானத்தின் பகிரங்க சாதனங்களாம். அவைகளுக்குள் உத்தம பலத்தினுக்குக் காரணமானதால் உத்தமமாம். முன்னர்க்கூறிய அமானித்துவ முதலிய சாதனங்களுக்குள் அந்தஞானம் உத்தமமன்று; என்னை? அந்த அமானித்துவமுதலிய சாதனங்களும் அந்தரங்க சாதனங்களானதால் உத்தமபலத்திற்கே காரணங்களாம். ஆண்டு, பரம் என்னும் விசேஷணத்தானே அந்த ஞானத்தில் உத்கிருஷ்ட வஸ்து விஷயகத்தன்மை கூறப்பட்டது. உத்தமமென்னும் விசேஷணத்தானே உத்கிருஷ்ட பலமுடைமை கூறப்பட்டதாதலின், அவ்விரண்டினும் கூறியதுகூறலென்னுங் குற்றங் குலவாதாம். அத்தன்மைய உத்கிருஷ்ட வஸ்துவை விடயம்பண்ணுவதும், உத்கிருஷ்ட பலத்தைத் தருவதுமாகிய ஆன்மஞானத்தின் சாதனவடிவ ஞானத்தைப் பகவானாகிய யாம் உனக்கு மறித்து முரைக்கின்றேம். அதாவது இதற்கு முன்னத்தியாயத்தில் பலமுறை யாம் உனக்கு உபதேசித்த ஞானத்தையே மறித்தும் கூறிப்போந்த பிரகாரத்தினும் சிறிது விலக்ஷணப்பிரகாரத்தால் சொல்கின்றேம். எந்தச் சாதனவடிவ ஞானத்தைச் சிரத்தைபக்தியோடு அநுட்டித்து மனனசீலர்களாகிய முனிவரனைவர்களும் கைவல்ய மோட்சவடிவ பரமசித்தியை இத்தேகசம்பந்தத்தினின்றும் அடைந்தார்களோ என்பதாம். (1)

(அ-கை.) ஆண்டு, அந்தச் சாதனவடிவ ஞானத்தை யடைந்தவனுக்கு அந்த மோட்சவடிவப் பரமசித்தி அவசியமாய்ப் பிராப்தமாம் என்னும் நியமத்தை இப்போது ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: ।
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச ॥ (2)

ப-ம். 1 இதம் 2 ஜ்ஞாநம் 3 உபாஶ்ரித்ய 4 மம 5 ஸாதர்ம்யம் 6 ஆகதா: 7 ஸர்கே 8 அபி 9 ந 10 உபஜாயந்தே 12 ப்ரலயே 13 ந 14 வ்யதந்தி 11 ச.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சாதனரூப ஞானத்தை யனுட்டித்துப் பரமேசுரராகிய எமது அத்விதீய நிர்க்குணவடிவத்தை யத்தியந்தம் அபேதமாக அடைவுற்ற அறிஞன் சிருஷ்டி காலத்திற் பிறப்பதுமில்லை பிரளயகாலத்தில் இறப்பதுமில்லை. (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இந்தச் சாதனவடிவ ஞானத்தை, சிரத்தை பக்தியோடு அநுட்டித்துப் பரமேசுரராகிய எமது அத்துவிதீய நிர்க்குண சொரூபத்தை அத்தியந்தம் அபேதமாய் அடைந்த அதாவது—நானே அத்துவிதீய நிர்க்குண பிரஹ்மசொரூபன் எனத் தனதான்மாவை அத்துவிதீய நிர்க்குணப் பிரமசொரூபமாயுணர்ந்த—வித்துவான் சிருட்டியிலும் உத்பத்தியாகிறதில்லை, பிரளயத்திலு மிலயமாவதில்லை; அதாவது, இரணியகருப்பன் முதலியோர்கள் உத்பன்னராயினும் தத்துவஞானி உற்பவியான். அந்த இரணியகருப்பன் முதலியோர்களின் விநாசகாலரூபப் பிரளயத்திலும் அவன் இலயப்படான் என்பதாம். (2)

(அ-கை.) இவ்வாறு இரண்டு சுலோகங்களால் அந்த ஞானத்தைத் துதித்துக் கேட்போனை ஸ்ரீ பகவான் அந்த ஞானபிமுகமாக்கியருளினர். இப்போது பரமேசுராதீனமாயிருக்கப்பட்ட பிரகிருதிபுருஷர்களே சர்வ பூதங்களின் உத்பத்திக்குக் காரணமாம். சாங்கியநூல்போலச் சுவதந்திரமாய் அவ்விரண்டிற்கும் பூதங்களின் காரணத்தன்மையின்று என்று சொல்லக்கருதிய பொருளை ஸ்ரீ பகவான் இரண்டு சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந்கர்ப்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத ॥ (3)

ப-ம். 3 மம 4 யோநி: 2 மஹத் ப்ரஹ்ம 5 தஸ்மிந் 7 கர்ப்பம் 8 ததாமி 6 அஹம் 11 ஸம்பவ: 10 ஸர்வபூதாநாம் 9 தத: 12 பவதி 1 பாரத.

(அ-ம்.) ஹே பாரத! முக்குணாத்மக மாயை ஈசுரராகிய எமது கர்ப்பாதானத்தின்றானமாம். அம்மாயையால் பரமேசுரராகிய யாம் சங்கல்பரூப கர்ப்பத்தைத் தாரணஞ்செய்வேம் அதனானே எல்லாப் பூதங்களுமுண்டாம். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரராகிய எமது மகத்பிரமயோனி (ஈண்டு மகத்பிரம சப்தத்தால் அவ்வியாகிருதத்தைக் கொள்ளவேண்டும்) எந்த அவ்வியாகிருதம் சாஸ்திரத்தில், அவித்தை, அஞ்ஞானம், பிரகிருதி, முக்குணவடிவமாயை, எனக் கூறப்படுகின்றதோ அந்த அவ்வியாகிருதம் தனது வாறுதி சர்வ காரியங்களையும்நோக்க அதிகமானதால் மகத்தெனப்படுகின்றது. அங்ஙனமே தனது சர்வ காரியங்களின் விருத்திக்குக்காரணமானதால் பிரமமெனப்படுகின்றது; அல்லது பிரமத்திற்குபாதியானதால் பிரமமெனப்படுகின்றது; அல்லது மகதத்துவமெனப் பெயரிய முதற்காரிய விருத்தி யேதுவாதலின் பிரமமெனப்படுகின்றது. அத்தன்மைய மகத்பிரமமெனும் பெயரையுடைய முக்குணவடிவமாயை பரமேசுரராகிய எமது யோனியாம்; அதாவது கருப்பாதானஞ் செய்வதற்குத்தானமாம். அத்தன்மைய மாயாவடிவ யோனியில் நாம் கருப்பத்தைத்தாரணம் பண்ணுவோம்; அதா

வது சர்வ பூதங்களின் தோற்றத்திற்குக் காரணவடிவ 'ஸோகாமயத ப³ஹுஸ்யாம் ப்ரஜாயேய' என்னும் ஈக்ஷணவடிவ சங்கற்பமாகிய கருப்பத்தை அந்த மாயாவடிவ யோனியில் தாரணம் பண்ணுவேம்; அதாவது அந்தச் சங்கற்பவிடயமாகச் செய்வேம். இவ்வுலகத்தில் தந்தை புண்ய பாபங்களோடு கூடியதும் நெற் கோதுமை முதலிய ஆகாரத்தால் தன்னிடத்தில் விலீனப்பட்டதுமாகிய புத்திரனைத் தூலவுடலோடு சம்பந்தப்படுத்துவதற்பொருட்டுத் தனது மனைவியின் யோனியில் வீரியத்தைத் தெளித்தல் பூர்வகம் கருப்பத்தைத்தாரணஞ்செய்கின்றான். அதனால் அப்புத்திரன் தூலவாக்கையோடு தொடர்பையடைகின்றான். அந்தச் சரீரத்தின் சம்பந்தத்தின் பொருட்டு இடையில் கலிலம் புத்புதம் முதலிய பல வவத்தைகளை யடைகின்றான். அதுபோலப் பிரளயகாலத்தில் பரமேசுரராகிய நம்மிடத்தில் விலீனப்பட்டிருந்த அவித்தை காமகருமங்களையுடைய க்ஷேத்திரக்ஞனெனும் சீவனைச்சிருட்டி காலத்தில் காரியகாரணசங்காத வடிவ போக்கிய க்ஷேத்திரத்தோடு சம்பந்தப்படுத்துதற்பொருட்டே பரமேசுரராகிய நாம் சிதாபாசவடிவ வீரியத்தைத் தெளித்தல் பூர்வகம் அந்த மாயாவிருத்திவடிவ கருப்பத்தைத் தாரணஞ்செய்கின்றோம். அந்தச் சரீர சம்பந்தத்தின்பொருட்டே இடையில் வானுதி பூதங்களின் உத்பத்தி வடிவ அவத்தை யுண்டாகின்றது. அந்த மாயாவடிவ யோனியில் எம்மாற் செய்யப்பட்ட கருப்பாதானத்தினுலே இரணிய கருப்பன் முதலிய சர்வ பூதங்களுமுண்டாகின்றன என்றுற் செய்யப்பட்ட கருப்பாதான மொழிந்து அவைகள் உற்பத்தியாகா என்பதாம். (3)

(அ-கை.) ஹே பகவன்! மாயாவடிவ யோனியில் பரமேசுரராகிய உம்மாற் செய்யப்பட்ட கருப்பாதானத்தினின்றுஞ் சர்வ பூதங்களின் உற்பத்தி எவ்வாறும் தேவதாமுதலிய தேக விசேடங்கட்கு வேறுகாரணமும் சம்பவித்தல்கூடுமாதலின் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்ப⁴வந்தி யா: ।
தாஸாம் ப்³ரஹ்ம மஹத்³யோநிரஹம் பீ³ஜப்ரத³: பிதா ॥ (4)

ப-ம். 2 ஸர்வயோநிஷு 1 கௌந்தேய 4 மூர்த்தய: 5 ஸம்ப⁴வந்தி 3 யா: 6 தாஸாம் 7 ப்³ரஹ்மமஹத் 8 யோநி: 9 அஹம் 10 பீ³ஜப்ரத³: 11 பிதா.

(அ-ம்.) ஹே கௌந்தேய! தேவதை முதலிய சர்வ யோனிகளிலு முண்டாஞ் சரீரங்கட்கு அம்மாயையே மாதாவடிவினளாவள்; பரமேசுரராகிய நாமோ கருப்பாதானஞ் செய்யும் பிதாவடிவமாவேம். (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தேவ பிதிரு மநுட பசு மிருகம் என்பன முதலிய சர்வ யோனிகளிலும் எவ்வெம்மூர்த்தங்களுண்டாகின்றனவோ அதாவது ஜராயுஜாதிபேதத்தால் விலக்ஷண நானுவகை ஆகாரமுடைய எவ்வெத்தேகங்களுண்டாகின்றனவோ அவ்வச்சரீர வடிவ மூர்த்திகளின் காரண பாவத்தையடைந்த அந்த அவ்வியாகிருதமெனு மாயையே மாதாவாவள். பரமேசுரராகிய நாமோ அந்த மாயைவடிவ யோனியில் கர்ப்பாதானம் பண்ணப்பட்ட அந்தச் சர்வ சரீரங்களின் பிதாவடிவம். இதனுலிப்பொருள் பெறப்பட்டது.—அவ்வத்தேவதை முதலிய சரீரங்கட்கு உலக விளக்கமாய் எவ்வெக்காரணந்தோன்றுகின்றதோ அக்காரணங்களனைத்தும் அந்த அவ்வியாகிருதமெனும் மாயைவடிவ மகத்பிரமத்தின் அவத்தா விசேடங்களேயாம். ஆதலின், 'ஸம்ப⁴வ: ஸர்வபூ⁴தாநாம் ததோ ப⁴வதி பா⁴ரத' என்னும் ஸ்ரீ பகவான் வாக்கியம் பொருத்தமுடைய தேயாம் என்க. (4)

(அ-கை.) ஆண்டுப்பூர்வம் ஈசுரரை அங்கீகரியாத நிரீசுரவாதமாகிய சாங்கிய நூலை மறுத்து க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சம்யோகத்தை ஈசுராதீன

மென அருளிச்செய்தனர். இப்போது எந்தக் குணத்தில் எவ்வாற்றால் சங்கமாகின்றது? அக்குணம் யாது? அக்குணம் இவனை எவ்வாறு பந்தப்படுத்துகின்றது? என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் 'ஸத்த்வம்ரஜஸ்தம:' என்னுஞ் சுலோக முதற்கொண்டு 'நாந்யம் குணேப்ய: கர்த்தாரம்' என்னுஞ் சுலோகத்தினும் முற்பதினான்கு சுலோகங்களா லருளிச்செய்கின்றார்.

சு-ம். ஸத்த்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா: ।
நிபத்னந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் ॥ (5)

ப-ம். 2 ஸத்த்வம் 3 ரஜ: 4 தம: 5 இதி 7 குணா: 6 ப்ரக்ருதிஸம்பவா: 11 நிபத்னந்தி 1 மஹாபாஹோ 8 தேஹே 10 தேஹினம் 9 அவ்யயம்.

(அ-ம்.) ஹே திண்புயமுடைய அர்ச்சுன! சத்துவ ரஜசு தமசு என்னுமிந்த மாயையிலுண்டாகிய முக்குணங்களும் அவ்வியயமாகிய சீவான்மாவை இத்தேகத்தில் பந்திக்கின்றன. (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவ ரஜசு தமசு என்னு நாமங்களையுடைய முக்குணங்களும் சைதன்ய புருஷனைக்குறித்து நித்தியமேபாதந்திரம்; ஒருபோதும் சுவதந்திரமன்று, என்னை? இவ்வுலகத்தில் எவ்வெப்பொருள் அசேதனவடிவமோ அந்தச் சர்வ அசேதனப் பொருள்களும் சைதன்ய புருஷன் பொருட்டேயாம். வீடு முதலிய அசேதனப்பொருள்கள் சேதனனாகிய வீட்டிலுள்ள புருஷன் பொருட்டேயாம். அதுபோல அந்தச்சத்துவ முதலிய குணங்களும் அசேதனமானதால் சேதனபுருஷன் பொருட்டேயாம். நியாயநூலார் உருவமுதலிய குணங்களை மண் முதலிய திரவியாசிரிதமெனக் கொள்ளுமாறுபோல இக்குணங்கள் யாதொரு திரவியாசிரிதமுமன்று; அங்ஙனமே நியாயநூலார் மண் முதலிய குணித்திரவியங்களை உருவ முதலிய குணங்களின் வேறெனக்கொள்வதுபோல ஈண்டுச் சித்தாந்தத்தில் அந்தச்சத்துவ முதலிய குணங்கள் மாயாவடிவப் பிரகிருதியினும் பின்னமென விவக்ஷிதமன்று; மாயைவடிவப் பிரகிருதியை முக்குண வடிவமே யெனக்கொள்வதால். அற்றேல் ஹே பகவன்! அக்குணங்கள் பிரகிருதிவடிவமே யெனக்கொள்ளிலோ 'ப்ரக்ருதிஸம்பவா:' என்னும் வாக்கியத்தால்பிரகிருதியினின்று உற்பத்தி எவ்வாறு கூறப்பட்டதென்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ப்ரக்ருதிஸம்பவா:' என ஹே அர்ச்சுன! சத்துவ முதலிய முக்குணங்களின் சாம்யாவத்தை பிரகிருதியாம். எதைச் சாஸ்திரத்தில் பகவத்மாயை எனக் கூறுகின்றனரோ, அத்தன்மைய மாயாவடிவப்பிரகிருதியினின்றும் அச்சத்துவ முதலிய குணங்கள் தம்முள் அங்காங்கித் தன்மையால் விஷமத்தன்மையின் பரிணாமத்தை யடைகின்றன. இதனால் அக்குணங்கள் பிரகிருதிசம்பவங்களெனக் கூறப்படுகின்றன. அக்குணங்கள் இத்தேகத்தில் (அதாவது அப்பிரகிருதியின் காரியவடிவ தேகேந்திய சங்காதங்களில்) அவ்யயரூபதேகியை (அதாவது உண்மையில் சன்மமரண முதலிய விகாரங்களின்மையின் அவ்வியய வடிவமும்) அவித்தையால் தேகத்தோடு தாதான்மிய பாவத்தையுமடைந்த சீவனைப்பந்திக்கின்றன: அதாவது உண்மையில் நிருவிகார வடிவமாயினும் அச்சீவான்மாவை அந்தச்சத்துவ முதலிய குணங்கள் தமது விகாரங்களோடு பொருந்தியதுபோற் காட்டுகின்றன. இதுவே அக்குணங்களாற் செய்யப்பட்ட அச்சீவான்மாவின்கண்ணுள்ள பந்தமாம். இவ்வாறே 'நிபத்னந்தி' என்னுஞ் சப்தார்த்தம் மேற்சுலோகத்திலுமுணரத்தக்கது. அதிற்றிட்டாந்தம் நீரானிறைந்தபாத்திரம் வானிலுள்ள இரவியைப் பிரதிபிம்பாத்தியாசத்தால் தன்பாட்டுள்ளகம்பன முதலிய விகாரங்களோடு கூடியதுபோற் காட்டுவதுபோல

வாம். அச்சத்துவ முதலிய குணங்களும் உண்மையில் நிருவிகாரமாகிய ஆன்மாவையும் தன் மாட்டுள்ள விகாரங்களோடுகூடியதுபோற் காட்டுகின்றன. ஆன்மாவின்கண் உண்மையிற் பந்தந்தொடர்புறுவாற்றை '𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑍋𑌽𑌪𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇' என்னுஞ் சுலோகத்தில் முன்னர் விரிவாய்க் கூறினும் என்க. (5)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் சத்துவ முதலிய முக்குணங்கட்கு இச்சீவான்மாவைப் பந்தப்படுத்துந்தன்மை கூறப்பட்டது. இப்போது எந்தக் குணம் எதன் சங்கத்தால் இச்சீவான்மாவைப் பந்தப்படுத்துகின்றதென்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚𑌾𑌨𑌘 ॥ (6)

ப-ம். 2 𑌤𑌤𑍍𑌰 6 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 3 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 4 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂 5 𑌅𑌨𑌾𑌮𑌯𑌂 7 𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 10 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 9 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 8 𑌚 1 𑌅𑌨𑌘.

(அ-ம்.) ஹே சர்வ வியசனமின்றிய அர்ச்சுன! அந்த முக்குணங்களுள் சொச்சமானதால் பிரகாசகமும் துக்கமற்றதுமாகிய சத்துவகுணம், இச்சீவான்மாவைச் சுகசங்கத்தானும், ஞானசங்கத்தானும், பந்திக்கின்றது. (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவ ரஜசு தமசு என முன்னர்க்கூறப்பட்ட முக்குணங்களுள் முதலாவதாகிய சத்துவகுணம் எத்தன்மையதெனின், பிரகாசமாம்; அதாவது சைதன்யத்தின்தமோகுணத்தாலாய ஆவரணத்தை நாசப்படுத்துவதாம். அதிற் காரணத்தை அருளிச்செய்கின்றார் '𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍' என; அதாவது தனது சுவச்சவியல்பால் சேதனத்தின் பிரதிவிம்பத்தைக் கிரகித்தற்குரியதாதலின் அது பிரகாசகமாம்; அல்லது அது கேவலம் சைதன்யத்தின் அபிவியஞ்சகமாத்திரமேயன்று; மற்றோ, அனாமயமுமாம்: அதாவது துக்கவடிவ ஆமய விரோதியாகிய சுகத்திற்கும் அபிவியஞ்சகமாம். இவ்வாறு சைதன்யம் சுகம். இவைகளின் அபிவியஞ்சகமாகிய அச்சத்துவகுணம் இச்சீவான்மாவைச் சுகசங்க ஞானசங்கங்களால் பந்தப்படுத்துகின்றது. ஈண்டுச்சுகம், ஞானம், என்னுஞ் சப்தங்களால் அந்தக்கரணத்தின் பரிணாமவடிவ சுகம், ஞானங்களைக்கொள்ள வேண்டும் ஆன்மவடிவ சுகம், ஞானங்களைக்கொள்ளக்கூடாது, என்னை? '𑌇𑌚𑍍𑌛𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 𑌸𑍁𑌖𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌸𑌙𑍍𑌘𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃' என முன்னர்க்கூறிய சுலோகத்தில் சுகமும் சேதனவடிவஞானமும் இச்சைத்துவேட முதலியவைகளைப் போல க்ஷேத்திரத்தின் தருமவடிவமாகவே கூறப்பட்டன. ஆண்டு அந்தக்கரணத்தின் தருமவடிவ சுக ஞானங்கட்கு ஆன்மாவினுள்ள அத்தியாசம் நான் சுகி நானுணர்கின்றேன் என்னும் பிரதீதியாற்சித்தமாம். அது சுகசங்கமும் ஞானசங்கமுமாம். அத்தன்மையசுக, ஞான சங்கங்களால் அச்சத்துவகுணம் இச்சீவான்மாவைப் பந்திக்கின்றது. ஆண்டு, விஷயத்தின் தருமம் பிரகாசகவடிவ விஷயிபதாகா; கட முதலிய விஷயங்களின்தருமம் பிரகாசகவடிவ சூரியனுடையதாகாததுபோலவாம்: ஆதலின் இப்பந்தங்களனைத்தும் அவித்தியாமாத்திரமேயாம். இதை முன்னர்ப் பலமுறையுங் கூறினும். (6)

(அ-கை.) மேலும்,

சு-ம். 𑌰𑌜𑍋 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍 ॥ (7)

ப-ம். 3 𑌰𑌜𑌃 4 𑌰𑌾𑌗𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 5 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 2 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾𑌸𑌙𑍍𑌗𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌂 6 𑌤𑌤𑍍 9 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 1 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 8 𑌕𑌰𑍍𑌮𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 7 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑍍.

(அ-ம்.) ஹே கௌந்தேய! திருஷ்ணு ஆசங்கம் என்னுமிரண்டையுந் தோற்றுவிப்பதான ரசோகுணத்தை நீ ராகவடிவ மென்றுணர்தி, அந்த ரசோகுணம் இந்தத் தேகாபிமானியாகிய சீவனைக் கருமசங்கத்தாற் பந்தப்படுத்துகின்றது. (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆண்டு, இவன் சத்தமுதலிய விடயங்களில் எதனால் ரஞ்சனத்தை (பிரியத்தை) அடைகின்றானே அது ராகமாம், அந்தராகமே வடிவம் எதற்கோ அது ராகாத்மகமாம்; அத்தன்மைய ராகாத்மக ரஜோகுணத்தை நீயுணர்தி. அந்த ராகம் ரஜோகுணத்தின் தருமமாயினும், தருமதருமிகட்குத் தாதான்மியமேயாதலின், அந்த ரசோகுணத்தை ராகரூபமெனக் கூறப்பட்டது. இதனானே அந்த ரசோகுணம் திருஷ்ணு சங்கங்களை யுண்டுபண்ணுவதாம். ஆண்டு, அடையாதபொருளின் அபிலாஷை திருஷ்ணையாம்; அடைந்த வஸ்து விநாசப்படினும் அதையிரட்சிக்கும் அபிலாஷை ஆசங்கமாம். அந்தத் திருஷ்ணை ஆசங்கங்களை யுண்டுபண்ணுவது திருஷ்ணு சங்க சமுத்பவமாம்; அத்தன்மைய ரசோகுணம் உண்மையில் அகர்த்தாவடிவமாயினும் கருத்திருத்துவாபிமானமுடைய சீவனைக் கருமசங்கத்தாற் பந்திக்கின்றது. ஆண்டு, இகவுலக பரவுலகங்களின் பலங்கட்குக் காரணவடிவங்களான லௌகிக வைதிக கருமங்களுள், நானிக்கருமத்தைச் செய்கின்றேன், நானிக்கருமபலத்தை நுகருவேன், என்னும் அபினிவேச விசேஷம் கருமசங்கமாம். அத்தன்மைய கருமசங்கத்தால் அந்த ரசோகுணம் இச்சீவான்மாவைப் பந்திக்கின்றது. அது கேவலம் பிரவிருத்திக்கே காரணமாதலின் என்க. (7)

(அ-கை.) மேலும்,

சு-ம். 𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ (8)

ப-ம். 3 𑌤𑌮𑌃 2 𑌤𑍁 4 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 5 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 7 𑌮𑍋𑌹𑌨𑌂 6 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 9 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 8 𑌤𑌤𑍍 10 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 1 𑌭𑌾𑌰𑌤.

(அ-ம்.) ஹே பாரத! மற்றும் தமோகுணத்தை நீ அஞ்ஞானசன்னியமென்றுணர்தி, எல்லாச் சீவர்கட்கும் பிராந்தியையுண்டாக்கும் அந்தத் தமோகுணம் பிரமாத ஆலசிய நித்திரைகளால் இச்சீவனைப் பந்தப்படுத்துகின்றது. (8)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆண்டு, '𑌤𑌮𑌸𑍍𑌤𑍁' என்னும் வாக்கியத்திலுள்ள 'து'சப்தமானது முன்னர்க்கூறிய சத்துவரஜசுக்களை நோக்க இதில்விலட்சணத்தன்மையை அறிவுறுத்தற்பொருட்டாம். இத்தமோகுணத்தை ஆவரண சத்திவடிவ அஞ்ஞானத்தினின்றும் உண்டானதென்றுணர்தி. இதனானே அது தேகாபிமானியான சர்வ சீவர்களையும் மோகப்படுத்துகின்றது; அதாவது, அவிவேகவடிவத்தால் பிராந்தியை உண்டுபண்ணுவதாகிய தமோகுணம் இத்தேகாபிமானியாகிய சீவனைப் பிரமாத ஆலசிய நித்திரைகளாற் பந்திக்கின்றது. ஆண்டு, வஸ்துவை விவேகஞ்செய்தற்கேலாமை பிரமாதமாம்; அதுவோ, சத்துவகுணத்தின் பிரகாசவடிவ காரியத்திற்கு விரோதியாம், முயற்சி பண்ணற்கு வலியின்மை ஆலசியமாம். அதுவோ, ரசோகுணத்தின் பிரவிருத்திவடிவ காரியத்திற்கு விரோதியாம்; தமோகுணத்தை ஆலம்பனம் பண்ணப்பட்ட லயவடிவ விருத்தி விசேடம் நித்திரையாம்; அதுவோ, அவ்விரண்டு குணங்களின் காரியங்கட்கும் விரோதியாம் என்க. (8)

(அ-கை.) ஹே பகவன்! கூறிப்போந்த காரியங்களுக்குள் எக்காரியத்தில் எக்குணத்திற்கு உத்கிருஷ்டத்தன்மையாம் என அர்ச்சுனனுக் குணரும்வேட்கை வர ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌸𑍁𑌖𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 𑌰𑌜𑌃 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌯 𑌤𑍁 𑌤𑌮𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍇 𑌸𑌂𑌜𑌯𑌤𑍍𑌯𑍁𑌤 ॥ (9)

ப-ம். 2 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 3 𑌸𑍁𑌖𑍇 4 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 5 𑌰𑌜𑌃 6 𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 1 𑌭𑌾𑌰𑌤 9 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 10 𑌆𑌵𑍃𑌤𑍍𑌯 7 𑌤𑍁 8 𑌤𑌮𑌃 11 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍇 13 𑌸𑌂𑌜𑌯𑌤𑌿 12 𑌉𑌤.

(அ-ம்.) ஹே பாரத! சத்துவகுணம் இப்புருஷனைச் சுகத்திற்பொருத்து கின்றது, ரசோகுணம் கர்மத்திற் பொருத்துகின்றது, தமோகுணமோ ஞானத்தை ஆச்சாதித்துப் பிரமாதத்திலும் பொருத்துகின்றது. (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த சத்துவகுணம் உத்கிருஷ்ட (அதிக)த்தையடைந்து இத்தேகாபிமானியாகிய சீவனைச்சுகத்திற் பொருந்தவைக்கிறது; அதாவது, துக்ககாரணத்தை அமிழ்த்தி இவனைச் சுகத்திற் செலுத்துகின்றது. இவ்வாறு ரசோகுணமும் உத்கிருஷத்தையடைந்து சுககாரணத்தை அமிழ்த்தி இவனை இலௌகிகவைதிக கருமங்களில் செலுத்துகின்றது, தமோகுணமோ, பிரமாணவலியாலுண்டாயினும் சத்துவகுணத்தின் காரியமாகிய ஞானத்தை மறைத்து இவனைப் பிரமாதத்திற் செலுத்துகின்றது. ஆண்டு, அவசியமாயறிய வந்துறு பொருளை அறியாமை பிரமாதமாம், அத்தன்மைய பிரமாதத்தில் இவனைச் செலுத்துகின்றது. ஈண்டு, '𑌸𑌂𑌜𑌯𑌤𑍍𑌯𑍁𑌤' என்னும் வாக்கியத்திலுள்ள உத என்னுஞ் சப்தமானது, அபி என்னுஞ் சப்தார்த்தவாசகமாம். அதனால் ஆலசியநித்திரைகளைக் கொள்ளவேண்டும். அதாவது, அந்தத்தமோகுணம் இச்சீவான்மாவை ஆலசிய நித்திரைகளிற் செலுத்துகின்றது. ஆண்டு அவசியமாய்ச் செய்தற்குரிய காரியத்தையுஞ்செய்யாமை ஆலசியமாம், இலயமெனும் தாமசிவிருத்திவிசேடம் நித்திரையாம் என்க. (9)

(அ-கை.) ஹே பகவன்! இந்தப்பூர்வ சுலோகத்திற்கூறப்பட்ட சத்துவமுதலிய குணங்கள் தங்காரியத்தை எக்காலத்திற்செய்கின்றன என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑌿𑌭𑍂𑌯 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌰𑌜𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌮𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌮𑌃 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ (10)

ப-ம். 2 𑌰𑌜𑌃 4 𑌤𑌮𑌃 3 𑌚 5 𑌅𑌭𑌿𑌭𑍂𑌯 6 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 7 𑌭𑌵𑌤𑌿 1 𑌭𑌾𑌰𑌤 9 𑌰𑌜𑌃 10 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 11 𑌤𑌮𑌃 8 𑌚 𑌏𑌵 13 𑌤𑌮𑌃 14 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 15 𑌰𑌜𑌃 12 𑌤𑌥𑌾.

(அ-ம்.) ஹே பாரத! ரசோகுணதமோகுணங்களை அமிழ்த்திச் சத்துவகுண மிகுங்காலும், ரசோகுண சத்துவகுணங்களை அமிழ்த்தித் தமோகுணமிகுங்காலும், தமோகுண சத்துவகுணங்களை அமிழ்த்தி இரசோகுணமிகுங்காலும், அக்குணங்கள் தத்தங்காரியங்களைச் செய்வனவாம். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ரசதமோகுணங்களை ஏககாலத்திலமிழ்த்தி, அதாவது, திரஸ்காரம்பண்ணி, அச்சத்துவகுணம் மிகுதிப்பாட்டையடையுங்காலே கூறிப்போந்த தனது காரியத்தை அசாதாரண வடிவத்தாலுண்டாக்கும். இவ்வணமே ரசோகுணமும் சத்துவ தமோகுணங்களை ஏககாலத்தில் அமிழ்த்தி மிகுதிப்படுங்காலே கூறிப்போந்த தனது காரியத்தை அசாதாரணவடிவத்தாலுண்டாக்குகின்றது. இவ்வணமே தமோகுணமும் சத்துவ ரசோகுணங்களை ஏக

காலத்திலபிழ்த்தி மிகுதியை யடையுங்காலே கூறிப்போந்த தனது காரியத்தை அசாதாரணவடிவத்தாலுண்டாக்குகின்றது என்பதாம். (10)

(அ-கை.) ஹே பகவன்! அக்குணங்களின் விருத்தி [மிகுதிப்பாடு] எவ்விலிங்கத்தாலுணரப்படும்? அதை யுணர்ந்தே இவன் அதை நிவிருத்திசெய்வதிற்சமர்த்தனாவனன்றோ? என்றருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் விருத்தியை யடைந்த அக்குணங்களின் இலிங்கத்தை மூன்று சுலோகங்களாலருளிச் செய்கின்றார்.

சு-ம். ஸர்வத்வாரேஷு தேஹேஸ்மிந் ப்ரகாஶ உபஜாயதே ।
ஜ்ஞாநம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்த்வமித்யுத ॥ (11)

ப-ம். 3 ஸர்வத்வாரேஷு 2 தேஹே 1 அஸ்மிந் 6 ப்ரகாஶ: 7 உபஜாயதே 5 ஜ்ஞாநம் 4 யதா 8 ததா 12 வித்யாத் 10 விவ்ருத்தம் 9 ஸத்த்வம் 11 இதி உத.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இத்தேகத்தில் சுரோத்திரமுதலிய சர்வேந்திரியங்களில் எப்போது ஞானவடிவப் பிரகாசம் உண்டாகின்றதோ அப்போது சத்துவ குணம் விருத்தியடைந்தது என்று நீயுணர்தி. (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இச்சீவான்மாவின் இன்பதுன்பங்கட்கிருப்பிடமாகிய இத்தேகத்திலுள்ள சப்தமுதலிய விடயங்களின் உபலப்திக்குச் சாதனவடிவ சுரோத்திரமுதலிய இந்திரியவடிவ துவாரங்களில் எப்போது ஞானவடிவப் பிரகாசமுண்டாகின்றதோ; அதாவது, தீபம் தனது விடயவடிவ பதார்த்தங்களின் அந்தகாரவடிவ ஆவரணத்திற்கு விரோதியாவதுபோலத் தனது சத்தமுதலிய விடயங்களின் ஆவரணத்திற்கு விரோதியாகிய அந்தச் சத்தமுதலிய விடயாகார புத்திவிருத்திவடிவ பரிணாமவிசேடம் பிரகாசமாம். அத்தன்மைய ஞானவடிவப் பிரகாசம் உண்டாகுங்காலத்தில், அந்த ஞானப்பிரகாசவடிவ இலிங்கத்தால், இவன் இப்போது பிரகாசவடிவ சத்துவகுண மிகுதிப்பாட்டையடைந்ததென்றுணர்கின்றான். ஈண்டு 'விவ்ருத்தம் ஸத்த்வமித்யுத' என்னும் வாக்கியத்திலுள்ள உதசப்தமானது அபி என்னுஞ் சப்தார்த்தவாசகமாம். அதனுலிப்பொருளறிவுறுத்தப்படுகின்றது:—ஞான வடிவப் பிரகாசத்தால் சத்துவகுண மிகுதிப்பாட்டையறிவதுபோலச் சுகமுதலிய இலிங்கங்களாலும், இவன் சத்துவகுணத்தின் விருத்தியை அறிகின்றான் என்பதாம். ஒரு வியாக்கியானத்திலோ உத என்னுஞ் சப்தத்திற்குச் சத்துவகுணத்தின் மிகுதியையறிவதுபோல, அந்த ஞானவடிவப் பிரகாசத்தால் ரசதமோகுணங்களின் க்ஷீணத்தன்மையையு முணர்கின்றான் எனப் பொருள் பண்ணப்பட்டிருக்கின்றதென்க. (11)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணாமஶம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப ॥ (12)

ப-ம். 4 லோப: 5 ப்ரவ்ருத்தி: 7 ஆரம்ப: 6 கர்மணாம் 8 அஶம: 9 ஸ்ப்ருஹா 2 ரஜஸி 10 ஏதாநி 11 ஜாயந்தே 3 விவ்ருத்தே 1 பரதர்ஷப.

(அ-ம்.) ஹே பாதரிஷப! ரசோகுணமிகுதிப்படவே, லோபம் பிரவர்த்தி கருமங்களின் ஆரம்பம், அசமம் ஸ்பிருகை என்னு மினைத்துமுண்டாம். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இராகவடிவ ரசோகுணமிகவே இப்புருஷனிடத்து உலோபம், பிரவிருத்தி கருமங்களின் ஆரம்பம், அசமம் ஸ்பிருகை, என்

னுமித்துணை, இராகாத்மகலிங்கங்களுண்டாகின்றன ; அதாவது, இந்த உலோப முதலிய இலிங்கங்களால் இவன் இரசோகுணவிருத்தி (மிகுதி)யை யுணர்கின்றான். ஆண்டு மிகுந்த திரவியமுதலிய பொருள்கள் கிடைத்திருப்பினும், அவைகள் கிடைக்கவேண்டுமென்னும் அவைகளிலுள்ள மிகுந்த அபிலாஷை உலோபமாம் ; அதாவது, தனது விடயப்பிராப்தியாலும் நீங்காத இச்சாவிசேடம் உலோபமாம். இடைவிடாமலே முயற்சியுடையோனாதல் பிரவிருத்தியாம். பெரும் பொருட் செலவால் பெறப்படுவதும், தேகாயாசத்தைத் தருவதுமாகிய காமிய நிஷித்தலௌகிக மகாக்கிருக முதலிய விடயகவியாபாரம் கருமமாம். அத்தன்மைய கருமங்களைத் தொடங்கல் கருமாரம்பமாம். இக்காரியத்தைச்செய்து மீண்டும் நான் இக்காரியத்தைச் செய்வேன், இவ்விரண்டாவது காரியத்தைச்செய்து மீண்டும் நான் மூன்றாவது காரியத்தைச் செய்வேன், என்னுஞ் சங்கற்பத்தொடர்பின் உபராமமின்மை அசமமாம். பிறர் பொருளைக்கண்டமாத்திரத்தால் எவ்விதமான வுபாயத்தாலும் அதைக் கைப்பற்றவேண்டுமென்னும் இச்சை ஸ்பிருகையாம். இவ்வாறு உலோப முதற்கொண்டு ஸ்பிருகை ஈறாகச்சொல்லப்பட்ட இலிங்கங்களால் இவன் மிகுதிப் பாடடைந்த இரசோகுணத்தை யுணர்கின்றான் என்பதாம். (12)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍋𑌽𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋 𑌮𑍋𑌹 𑌏𑌵 𑌚 ।
𑌤𑌮𑌸𑍍𑌯𑍇𑌤𑌾𑌨𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨 ॥ (13)

ப-ம். 5 𑌅𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃 7 𑌅𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 6 𑌚 8 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌃 10 𑌮𑍋𑌹𑌃 4 𑌏𑌵 9 𑌚
2 𑌤𑌮𑌸𑌿 11 𑌏𑌤𑌾𑌨𑌿 12 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 3 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 1 𑌕𑍁𑌰𑍁𑌨𑌨𑍍𑌦𑌨.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! தமோகுணம் மிகுதியாகவே, அப்பிரகாசம், அப்பிரவிருத்தி, பிரமாதம், மோகம், என்னும் இத்துணையிலிங்கங்கள் உண்டாகின்றன. (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! தமோகுணம் மிகுதிப்படும்போது, அப்பிரகாசம், அப்பிரவிருத்தி, பிரமாதம், மோகம் என்னும் இத்துணை யிலிங்கங்களுண்டாகின்றன. அதாவது, இவன் வியாபிசாரமின்றிய இத்துணை யிலிங்கங்களானே தமோகுணத்தின் மிகுதிப்பாட்டை யுணர்கின்றான். ஆண்டு குரு நூல் முதலிய போதகாரணங்களிருப்பினும், எல்லாவாற்றானும் அப்போதத்திற்குரித்திலாமை அப்பிரகாசமாம். பொருளுணர்ச்சியை யுண்டாக்கிய பிரவிருத்திக்குக்காரணவடிவ அக்கினிஹோத்திரம் வேட்க, என்பது முதலிய சாத்திரங்களிருப்பினும், எல்லாவாற்றானும், அவ்வக்கினிஹோத்திர முதலிய கருமங்களில் முயற்சியின் தகுதியிலாமை அப்பிரவிருத்தியாம். அப்போது செயற்பாலதாந்தன்மையாற்கிடைத்த பொருளின் ஸ்மரணமுமுண்டாகாமை பிரமாதமாம் ; நித்திரை விபரியயங்கள் மோகமாம் என்க. (13)

(அ-கை.) இப்போது சாங்காலத்தில் மிகுதியை யடைந்த அச்சத்துவ முதலிய குணங்களின் பல விசேடத்தை ஸ்ரீ பகவான் இரண்டு சுலோகங்களால் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌯𑌦𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑍍 ।
𑌤𑌦𑍋𑌤𑍍𑌤𑌮𑌵𑌿𑌦𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌮𑌲𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ (14)

ப-ம். 3 𑌯𑌦𑌾 4 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 5 𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑍇 1 𑌤𑍁 6 𑌪𑍍𑌰𑌲𑌯𑌂 7 𑌯𑌾𑌤𑌿 2 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑍍
8 𑌤𑌦𑌾 9 𑌉𑌤𑍍𑌤𑌮𑌵𑌿𑌦𑌾𑌂 11 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 10 𑌅𑌮𑌲𑌾𑌨𑍍 12 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டுமித்தேகாபிமானி சத்துவகுணம் விருத்தி யடையும்போது மரிக்கின் உபாசகன் மலரகித உலகத்தை யடைகின்றான். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் இத்தேகாபிமானியாகிய சீவன் சத்துவ குணம் மிகுதிப்படவே மரணமடைவனேல், உத்தமவித்துக்களின் உலகத்தை யடைவன்; ஆண்டு இரணியகர்ப்பர் முதலிய தேவர்கள் உத்தமராவர். அவ் வுத்தமரை யுணர்வோன், அதாவது, அந்த இரணியகர்ப்பர் முதலிய தேவர்களை உபாசிப்பவர்கள் உத்தம வித்துக்களாவர்கள். அவர்களின் உலகம், அதாவது திவ்ய இன்பநுகருமிட விசேடமும், அமலமும் அதாவது ரசதமவடிவ மலங்களற்ற துமாகிய உலகத்தை அவன் அடைவன் என்பதாம். (14)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரலீநஸ்தமஸி மூடயோநிஷு ஜாயதே ॥ (15)

ப-ம். 1 ரஜஸி 2 ப்ரளயம் 3 கத்வா 4 கர்மஸங்கிஷு 5 ஜாயதே 6 ததா 8 ப்ரலீநः 7 தமஸி 9 மூடயோநிஷு 10 ஜாயதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இத்தேகாபிமானியாகிய சீவன் ரசோகுண மிகுதி யாகவே மரணத்தையடைந்து, கருமாதிகாரிகளாகிய மநுடர்களுக்குட் பிறக் கின்றான். அங்ஙனமே, தமோகுண மிகவே மரணப்பட்ட சீவன் பசு முதலிய யோனிகளிற் பிறக்கின்றான். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்தேகாபிமானியாகிய சீவன் ரசோகுணம் விருத்தியடையவே மரணப்படுவனேல் கருமசங்கிகளிடத்தில் உற்பவிக்கின்றான். அதாவது சுருதிமிருதிகளால் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திர முதலியன அவைகளால் நிடேதிக்கப்பட்ட கொலை முதலியன என்னு மிக்கருமங்களினும் அவற்றின் பலத்தினும் அதிகாரிகளாகிய மநுடர்கள் கருமசங்கிகளாவர்கள். அத்தன்மையர்களில் சன்மத்தையடைவன். இவ்வணமே தமோகுணமிகவே இச்சீவன் மரணமடைவனேல் காரியாகாரியங்களின் விசாரமின்றிய பசுமுதலிய மூடயோனிகளில் சன்மத்தையடைவன் என்பதாம். (15)

(அ-கை.) இப்போது சத்துவமுதலிய குணங்களில் தன தநுசாரக்கரும வாயிலாய் விசித்திரபலத்திற்குக் காரணத்தன்மையை தொகுத்தருளிச் செய் கின்றார்.

சு-ம். கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம் ।
ரஜஸஸ்து பலம் து:கமஜ்ஞாநம் தமஸ: பலம் ॥ (16)

ப-ம். 2 கர்மண: 1 ஸுக்ருதஸ்ய 6 ஆஹு: 3 ஸாத்விகம் 4 நிர்மலம் 5 பலம் 8 ரஜஸ: 7 து 10 பலம் 9 து:கம் 12 அஜ்ஞாநம் 11 தமஸ: 13 பலம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மகரிஷிகள், சாத்துவிக தருமத்திற்குச் சாத்துவிக மும் நிர்மலமுமாகிய பலத்தைக்கூறியிருக்கின்றார்கள். மற்றும் ராஜசதருமத்திற் குத் துக்கவடிவபலத்தையும், தாமசதருமத்திற்கு அஞ்ஞானவடிவ பலத்தையும் கூறியிருக்கின்றார்கள். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மகரிஷிகள் உத்தமமான சாத்துவிகதருமத்திற் குச் சாத்துவிகமும் நிர்மலமுமாகிய பலத்தை கூறியிருக்கின்றார்கள்; அதாவது

குணத்தாலடையப்படுவதும் ரசதமோகுணங்களா லடையொணுதது
கவடிவபலம், சாத்துவிக தருமத்திற்கென்று கூறியிருக்கின்றூர்கள்.
(கலப்பு)முடைய ராசத தருமத்திற்கோ, ராசதவடிவ பலத்தைக்
றூர்கள், அதாவது, ரசோகுணத்தா லுண்டாக்கப்பட்டுப் பலவித துக்கத்
லப்புற்ற சிற்றின்பம் ராசத கருமத்தின் பலமென்று சொல்கின்றூர்கள்.
யாது யாது காரியமாமோ அவ்வக்காரியம் தனது காரணதுல்யமேயாம்;
பாபக்கலப்புள புண்ணியவடிவ ராஜஸதருமத்திற்குப் பலவகைத் துன்
கலப்புடைய சிற்றின்பவடிவ பலமே பொருத்தமுடையது. தாமத
ற்கோ அஞ்ஞானவடிவ பலத்தையே கூறுகின்றூர்கள்; அதாவது,
ணத்தாற் றோன்றியதாதலின் தாமசவடிவ அவிவேகப்பிரயுக்த துக்கம்
கருமத்தின் பலமெனவே கூறுகின்றூர்கள். ஆண்டு, சாத்துவிக முதலிய
இலக்கணமோ 'நியதம்ஸங்கரஹிதம்' என்பதுமுதலிய வசனங்களால்,
—ாவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் தாமாகவே திருவாய்மலர்ந்
ண்டிச் சுலோகத்தில் ஸ்ரீ பகவான் ரசதமசத்தங்களை அதனதன்
வ கருமங்களிற் பிரயோகித்தருளினர், அதுவோ காரியகாரணங்கட்கு
தை அங்கீகரித்துக்கூறியதாம். (16)

௬.) இப்போது ஸ்ரீ பகவான் இவ்வாறு பலங்களின் விசித்திரத்தன்
றிப்போந்த ஹேதுவையே அருளிச்செய்கின்றூர்.

ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச।
ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாநமேவ ச॥ (17)

ஸத்த்வாத் 3 ஸஞ்ஜாயதே 2 ஜ்ஞாநம் 5 ரஜஸ: 6 லோப: 7 ஏவ 4 ச
ப்ரமாதமோஹௌ 9 தமஸ: 11 பவத: 12 அஜ்ஞாநம் 13 ஏவ 8 ச.

.) ஹே அர்ச்சுன! சத்துவகுணத்தினின்று ஞானமுண்டாம், ரசோ
னின்று உலோபமேயுண்டாம், தமோகுணத்தினின்று பிரமாதமோகங்க
அஞ்ஞானமுமுண்டாம். (17)

.) ஹே அர்ச்சுன! சுரோத்திரமுதலிய இந்திரியங்களைத்துவாரமாக
த்த முதலியவைகளை விடயஞ்செய்யும் பிரகாசவடிவ ஞானங்களோ
த்துவகுணத்தினின்றே தோன்றுவனவாம். இதனுனே அந்தப் பிர
ஞானுநுசாரியாகிய சாத்துவிக கருமத்திற்கு விளக்க மிகுதிப்பாட்டை
வடிவபலமே யுண்டாகின்றது. கோடிவிடயப் பிராப்தியானும் நீக்கற்
பிலாஷா விசேடம் உலோபமாம். அது ரசோகுணத்தினின்றே உண்
. ஆண்டு நிரந்தரம் விருத்தியையுடையதும், பூரணம் பண்ணற்
ாகிய உலோபத்திற்குத் துக்ககாரணத்தன்மை மிகவிளக்கமாம். ஆத
லோப பூர்வகஞ் செய்யப்பட்ட ராசஸகருமத்திற்கும் துக்கமே பல
மோகுணத்தினின்றும் பிரமாதமோகங்களுண்டாகின்றன, அஞ்ஞான
ாகின்றது. ஈண்டு, அஞ்ஞான சப்தத்தால் அப்பிரகாசத்தைக்கொள்ள
பிரமாதமோக சப்தங்களினர்த்தமோ 'அப்ரகாசோऽப்ரவ்ருத்திஶ்ச'
ற்கூறிய சுலோகத்திற்கூறினும் என்பதாம். (17)

௲.) இப்போது சத்துவமுதலிய முக்குணங்களின் விருத்தி விசேடத்
னுக்கு 'ஊர்த்வம் கச்சந்தி ஸத்த்வஸ்தா' என்னுஞ் சுலோகத்திற் கூறப்
தையே உத்தம மத்திம அதம பாவங்களால் அருளிச்செய்கின்றூர்.

சு-ம். ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா: ।
ஜகந்யகுணவ்ருத்தஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ॥ (18)

ப-ம். 2 ஊர்த்வம் 3 கச்சந்தி 1 ஸத்வஸ்தா: 5 மத்யே 6 திஷ்டந்தி 4 ராஜஸா:
7 ஜகந்யகுணவ்ருத்தஸ்தா: 9 அத: 10 கச்சந்தி 8 தாமஸா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவ விருத்தியிலிருக்கப்பட்டவன் மேலுலகத்தையடைகின்றான், ரஜோவிருத்தியிலுள்ளவன் மனுஷ்யலோகத்திருப்பவனாகின்றான், கீழாகிய தமோகுண விருத்தியிலுள்ள தாமதன் அதோலோகத்தை யடைகின்றான். (18)

(வி-ம்.) ஆண்டு, மூன்றாவதாகிய தமோகுணத்தினீற்றில் 'வ்ருத்தி' [விருத்தி] என்னுஞ் சப்தம் ஸ்ரீ பகவானலருளப்பட்டமையின் ஏனைய இரண்டு குணங்களினீற்றிலும் அதை யருளத்திருக்கருத்தாம். இதனால் இப்பொருள் பெறப்படுகின்றது:—சாத்திரசன்ய ஞானவடிவமும் சுபகருமவடிவமுமாகிய சத்துவ குணவிருத்தியிலிருக்கப்பட்டவன், அதாவது, சிரத்தையோடு அவ்விருத்தியைத் தாரணம் பண்ணப்பட்டவன் பிரமலோகமீறாகிய மேலுள்ள தேவலோகங்களை யடைகின்றான்; அதாவது, அந்த ஞானகருமங்களின் குறைவு மிகுதித்தன்மைகளால் அவன் குறைவு மிகுதித்தன்மைகளையுடைய அத்தேவதைகளிடத்தில் பிறக்கின்றான்; மநுட பசு முதலிய தேகங்களை அவன் எடுப்பதில்லை. உலோப முதலிய பூர்வகம் ராஜசகருமவடிவ ரசோகுண விருத்தியிலிருப்பவன், அதாவது, அந்த ராஜசகருமவடிவ விருத்தியை மிக அன்போடு செய்பவன், புண்யபாவக் கலப்புள்ள இம்மநுடலோகத்தின்கண்ணே நிலைத்திருக்கின்றான். அவன் தேவ பசு முதலிய தேகங்களையெடான். மற்றோ, இம்மநுடர்களுக்குள்ளே அவன் பிறக்கின்றான். சத்வ ரஜ குணங்களை நோக்கப் பின்னார்க் கோற்றமுடையதாதலின், அவ்விரண்டினும் நிக்கிருஷ்டமாகிய தமோகுணத்தின் நித்திரை ஆலசிய முதலிய வடிவ விருத்தியிற் பிரீதியுடைய தாமதனோ, அதோ லோகத்தையடைகின்றான். அதாவது, பசு முதலிய யோனியின்கண்ணே பிறப்பன். அவன் மநுடதேவ சரீரங்களையெடான். ஆண்டுச் சாத்துவிக ராஜச புருஷர்களும் ஒருகால் தமோ குணத்தின் நித்திரை முதலிய விருத்தியில் நிலைத்திருக்கின்றார்கள்; ஆகலின், அவர்கட்கும் பசு முதலிய சரீரங்களினடையும் ஆதல் வேண்டும், என்னுஞ் சங்கையை நீக்குவான் ஸ்ரீ பகவான் தமோகுண விருத்தியிலிருக்கின்றவனை விசேடித்தருளுகின்றார் 'தாமஸா:' என. ஆண்டு, எவனிடத்து எப்போதும் தமோ குணமே மிகுதியாமோ அத்தன்மைய தாமதனே பசு முதலிய யோனிகளிற் பிறக்கின்றான். சாத்துவிக ராஜச புருஷர்கள் ஒருகால் தமோகுண விருத்தியிலிலைப்படினும் அவர்களிடத்துத் தமோகுணமிகாது; மற்றோ, மிகக் கௌணமேயாம். ஆதலின் அவர்கள் பசுமுதலிய யோனிகளிற் சன்மமெடார்கள். சண்டு ஒரு மூலப் புத்தகத்தில் 'ஜகந்யகுணவ்ருத்திஸ்தா:' எனவும் பாடமுளது. இப்பாடத்திலும் கூறிப்போந்த வர்த்தமே யுணரத்தக்கது என்க. (18)

(அ-கை.) ஆண்டு இப்பதினான்காவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் மூன்று பொருளை அருளிச்செய்வான் பிரதிஞ்ஞை செய்தருளினர். அவற்றுள் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சம்யோகத்தின் ஈசுராதீனத்தன்மை முதலாவது, அக்குணம் யாது? அது இச்சீவான்மாவை எவ்வாறு பந்திக்கின்றது? இரண்டாவது, அக் குணத்தினின்று இவனுக்கு எவ்வாறு மோட்சமுண்டாம்? அக்குணாதீத முத்தனுக்கு இலக்கணம் யாது? மூன்றாவது, இம்மூவகையர்த்தங்களில் முந்திய இரு வகையர்த்தங்களோ முன்னர் விரிவாய்க் கூறப்பட்டன. இப்போது மூன்றாவது

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேகமுண்டாதற்குக் காரணவடிவ இச்சத்துவ முதலிய முக்குணங்களையும் பரித்தியாகஞ்செய்து சன்மமிருத்து சரா துக்கங்களி னின்று விடுபட்ட இவ்வித்துவான் மோட்சத்தை யடைகின்றான். (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தேகோத்பத்திக்குக் காரணமாகிய மாயாவடிவ முக்குணங்களையுந்தாண்டி; அதாவது, சீவனகாலத்திலே தத்துவஞானத்தால் அக்குணங்களைப்பாதித்துச் சன்மமிருத்து சரா அத்தியாத்மிக முதலிய துக்கம் இவைகளினின்று விடுபட்டவனாய்; அதாவது சீவனகாலத்திலே அந்த மாயாமய மான சன்மமுதலியவைகளின் சம்பந்தமற்றவனாகிய வித்துவான் அமிருதத்தன் மையை யடைகின்றான்; அதாவது சருவானர்த்த நிவிருத்தி பூர்வகம் பிரம பாவப்பிராப்திவடிவ மோட்சத்தை யடைகின்றான். (20)

(அ-கை.) ஆண்டு இச்சத்துவ முதலிய குணங்களைக்கடந்து இவ்வித்துவான் சீவனகாலத்திலே மோட்சவடிவ அமிருதத்தை யடைகின்றான். எனக் கூறியபோந்த வார்த்தையைக்கேட்டு அர்ச்சுனனுக்கு அந்தக் குணாதீதனுடைய இலக்கணத் தையும் ஆசாரத்தையும் குணாதீதத்தன்மையின் உபாயத்தையும் அறியவேட்கை நிகழ ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚.

சு-ம். 𑌕𑍈𑌰𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌗𑍁𑌣𑌾𑌨𑍇𑌤𑌾𑌨 𑌤𑍀𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍋 ।
𑌕𑌿𑌮𑌾𑌚𑌾𑌰𑌃 𑌕𑌥𑌂 𑌚𑍈𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌨𑍍𑌗𑍁𑌣𑌾𑌨𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ (21)

ப-ம். 6 𑌕𑍈𑌃 7 𑌲𑌿𑌙𑍍𑌗𑍈𑌃 3 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 4 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 2 𑌏𑌤𑌾𑌨𑍍 5 𑌅𑌤𑍀𑌤𑌃 8 𑌭𑌵𑌤𑌿 1 𑌪𑍍𑌰𑌭𑍋 9 𑌕𑌿𑌮𑌾𑌚𑌾𑌰𑌃 14 𑌕𑌥𑌂 10 𑌚 11 𑌏𑌤𑌾𑌨𑍍 12 𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 13 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 15 𑌅𑌤𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇.

(அ-ம்.) ஹே பிரபுவே! சத்துவமுதலிய முக்குணங்களைக் கடந்த புருஷன் எவ்விலிங்கங்களோடு கூடியவனாவன்? எத்தன்மைய ஒழுக்கமுடையவனாவன்? இம்முக்குணங்களையும் எவ்வாற்றாற் கடப்பன்? (21)

(வி-ம்.) ஹே பிரபுவே! சத்துவ முதலிய குணங்களைக்கடந்த தத்வஞானி யெனும் அக்குணாதீதன் எவ்விலிங்கங்களோடுகூடியவனாவன்; அதாவது எவ் விலக்கணவடிவ இலிங்கத்தால் அவனறியப்படுவன், அதை யெனக்கருளிச்செய் வீர். (1) அக்குணங்களைக்கடந்த தத்துவஞானிக்கு யாது ஒழுக்கமாம் அதாவது அவன் இஷ்டப்படி ஒழுக்கமுடையனோ அல்லது நியமபூர்வசேஷ்டை யுடை யனோ: அவனுடைய ஒழுக்கத்தையும் எனக்கருளிச்செய்வீர். (2) அவன் இக் குணங்களை எவ்வாற்றாற்கடப்பன் அதாவது அக்குணாதீதத்தன்மைக்கு உபாயம் யாது. அதையும் எனக்கருளிச்செய்வீர். (3) ஈண்டு (பிரபுவே) என்னுஞ் சம்போ தனத்தால் துக்கமுதலியவைகளை நீக்குதற்காற்றலுடையோன் பிரபுவாம். அரசர் முதலாயினோர் தமது வேலையாட்களின் துக்கத்தை நிவிருத்திப்பதுபோலச் சமர்த்தரானதால் ஸ்ரீ பகவானாகிய தாங்களே தொழும்பனாகிய எனது துக்கத்தை நிவிருத்தித்தருளற்குரியராவீர், என்னும் அர்த்தத்தை ஸ்ரீ பகவானுக்குக் குறிப்பித்தனன் என்க. (21)

(அ-கை.) ஆண்டு இந்நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் '𑌸𑍍𑌥𑌿𑌤𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌯 𑌕𑌾𑌭𑌾𑌷𑌾' என்பது முதலிய வாக்கியங்களால் இவ்வர்த்தத்தை முன்னரே அர்ச்சுனன் வினவியிருக்கின்றான். அதற்கு, '𑌪𑍍𑌰𑌜𑌹𑌾𑌤𑌿 𑌯𑌦𑌾 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍' என்பது

வாக்கியங்களால் யாரும் உத்தரம் முன்னரே கூறினேம். அங்ஙனமாயினும் முன்னர்க்கூறிய அர்த்தத்தை வேறோராற்றால் உணரக்கருதி இப்போது வினவுகின்றான் என அர்ச்சுனன் கருத்தை நிச்சயித்து ஸ்ரீ பகவான் முன்னர்க்கூறிய பிரகாரத்தினும் வேறு பிரகாரத்தால் தத்துவஞானியின் இலக்கண முதலியவைகளை 5 சுலோகங்களால் அருளிச்செய்கின்றார். அதில் அவன் எவ்விலக்கணவடிவ இலிங்கமுடையான் என்னும் வினவிற்கு உத்தரத்தை ஒரு சுலோகத்தாலருளிச்செய்கின்றார்.

ஸ்ரீ஭கவாநுவாச.

சு-ம். ப்ரகாஶஞ்ச ப்ரவ்ருத்திஞ்ச மோஹமேவ ச பாண்டவ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி॥ (22)

ப-ம். 3 ப்ரகாஶம் 4 ச 5 ப்ரவ்ருத்திம் 6 ச 7 மோஹம் 8 ஏவ 11 ச 1 பாண்டவ 9 ந 10 த்வேஷ்டி 2 ஸம்ப்ரவ்ருத்தாநி 13 ந 12 நிவ்ருத்தாநி 14 காங்க்ஷதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிரவிருத்தமாகிய பிரகாசத்தையும் பிரவிருத்தியையும் மோகத்தையும் யாவனொருகாலும் துவேஷஞ்செய்யானோ, நிவிருத்தமாகிய அவற்றை யிச்சியானோ, அவன் குணாதீதனெனப்படுவன். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவகுணகாரியப் பிரகாசம், ரசோகுணகாரியப் பிரவிருத்தி, தமோகுணகாரிய மோகம், என்பவைகள் அக்குணங்களின் வேறு சர்வகாரியத்திற்கும் உபலக்கணமாம். அக்குணங்களின் காரியங்களனைத்தும் தத்தம்காரண சாமக்கிரிவசத்தால் உண்டாக்கப்பட்டுத் துக்க சொரூபங்களேயாகின்றன. அங்ஙனமாயினும் இவன் துக்க புத்தியாலதில் துவேஷத்தைச்செய்யான். அதாவது இத்துக்கவடிவ குணங்களின் காரியம் எதனாலுண்டாகின்றது என அவன் அதனைத் துவேஷியான். அன்றியும் அக்குணங்களின் காரியம் தத்தம் விநாசசாமக்கிரிவசத்தானிவிருத்தியாய்ச் சுகவடிவமேயாயினும் அவன் சுகபுத்தியால் அதை யிச்சியான். அதாவது சுகவடிவ இக்குணங்களின் காரியநிவிருத்தி எனக்கெப்போதும் வேண்டுமென இச்சியான்; என்னை, அவன் அக்குணங்களையும் அதன் காரியங்களையும் கனாப்போல மித்தியாவடிவமே யென்றுணர்ந்தனனாதலின் மித்தியாவடிவத்தா லுணரப்பட்ட பொருள்கள் இவனுக்கு இராகத்துவேஷ விடயமாகா. பொய்வடிவ மென்றுணரப்பட்ட கிளிஞ்சில்வெள்ளி இவனுடைய ராகத்திற்கு விடயமாகாதது போலவும், பொய்வடிவ மென்றுணரப்பட்ட பழுதைப் பாம்பு இவனுடைய துவேஷத்திற்கு விடயமாகாதது போலவுமாம். இவ்வாறு சத்துவ முதலிய குணங்களின் பிரகாச முதலிய பிரவிருத்திகளிலும் அவற்றின் காரியங்களின் நிவிருத்தியிலும் துவேஷராகங்களை யடையாதவன் குணாதீதனெனப்படுகின்றான். இவ்வாறு இச்சுலோகத்தை நான்காவது சுலோகத்திலுள்ள (குணாதீதன் எனப்படுகின்றான்) என்னும்வாக்கியத்தோடு அந்நுவயிக்குக. இவ்விலக்கணம் அவனுக்கே பிரத்தியட்சமாம், ஏனையோர்க்கன்று; என்னை, ஒருவனுள்ளத்திலுள்ள ராகத்துவேஷங்களின் உண்மை இன்மைகளை வேறுபுருடனா லுணரமுடியாமையின் இவனுடைய இலக்கணம் சுவார்த்த இலக்கணமேயாம் பரார்த்த இலக்கணமன்று. ஆண்டு, எவ்விலக்கணம் கேவலந்தனக்கே யுணரப்பட்டதாமோ அவ்விலக்கணம் சுவார்த்த விலக்கணமெனப்படும். எவ்விலக்கணம் பிறரானுமுணரப்படுகின்றதோ அவ்விலக்கணம் பரார்த்தவிலக்கண மெனப்படும். இவைகளைச் சாஸ்திரங்களில் சுவசம்வேத்திய பரசம்வேத்தியங்களெனக் கூறுகின்றனர். (22)

(அ-கை.) இப்போது அவன் எவ்வொழுக்கமுடையன் என்னும் இரண்டாவது வினவிற்கு மூன்று சுலோகங்களால் உத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌦𑌾𑌸𑍀𑌨𑍋 𑌗𑍁𑌣𑍈𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 ।
𑌗𑍁𑌣𑌾 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌯𑍋𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌨𑍇𑌙𑍍𑌗𑌤𑍇 ॥ (23)

ப-ம். 2 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌵𑌤𑍍 3 𑌆𑌸𑍀𑌨𑌃 4 𑌗𑍁𑌣𑍈𑌃 1 𑌯𑌃 5 𑌨 6 𑌵𑌿𑌚𑌾𑌲𑍍𑌯𑌤𑍇 7 𑌗𑍁𑌣𑌾𑌃 9 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 10 𑌇𑌤𑌿 8 𑌏𑌵 11 𑌯𑌃 12 𑌅𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 13 𑌨 14 𑌇𑌙𑍍𑌗𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உதாசீனன் போன்றிருப்பவனும் சத்துவமுதலிய குணங்களால் சலனப்படாதவனும் அக்குணங்களே பரஸ்பரமிருக்கின்றன என நிச்சயித்திருப்பவனும் சிறிதளவுந் தொழிற்படாதோனுமாபவன் குணாதீதனெனப்படுகின்றான். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தம்முள் விவாதம்பண்ணும் இருவர்களில் ஒருவர் பட்சத்தையும் ஏற்றுக்கொள்ளாதவன் உதாசீனனாவன்; அவன் ஒருவரிடத்தும் ராகத் துவேடங்களைச் செய்வதில்லை; மற்றோ, அவன் அவைகளற்றவனா யிருக்கின்றான்; அதுபோல, இராகத் துவேடங்களின்றித் தனது சச்சிதானந்தவடிவத்திலே நிலைத்திருக்கின்றான். அங்ஙனமே, சுகதுக்க முதலிய வடிவமாய்ப் பரிணமித்த சத்துவமுதலிய குணங்களாலும் தனது சொரூபத்தினின்றுஞ் சலனப்படான்; மற்றோ, தேகேந்திய முதலிய வடிவங்களாய்ப்பரிணமித்த சத்துவ முதலிய குணங்களே தம்முள் சாதகபாதகபாவங்களாகவும் கிராகிய கிராககபாவங்களாகவும் உபகாரிய உபகாரகபாவங்களாகவும் இருக்கின்றன, இக்குணங்களனைத்தையும் பிரகாசிப்பவன் ஆன்மாவாகிய நானே, எனக்கு யாதொரு பிரகாசிய வஸ்துக்களின் தருமங்களோடும் சம்பந்தமில்லை, கடமுதலிய பதார்த்தங்களை விளக்கும் சூரியனுக்கு யாதொரு பிரகாசியவடிவ கடமுதலியவற்றின் தருமங்களோடும் சம்பந்தமின்றியதுபோலும், இவ்வுலகனைத்தும் திருசிய வடிவமும் சடவடிவமும் கனப்போல் பொய்யுமாம்; ஆன்மாவாகிய நானே திருஷ்டாவும் சுயஞ்சோதியும் பரமார்த்த சத்தியரூபமும் சர்வ விகாரங்களற்றதும் துவைதமற்றதுமாவேன் என்னும் நிச்சயத்தால் தனது சொரூபத்தின் கண்ணே நிலைத்திருக்கின்றான். யாதொரு காரிய சித்தியின்பொருட்டும் வியாபாரமுடையனலன். அத்தன்மையன் குணாதீதனெனப்படுகின்றான்: என்றிவ்வாறு இச்சுலோகத்தை மூன்றாவது சுலோகத்திலுள்ள 'குணாதீதனெனப்படுகின்றான்,' என்னும் வாக்கியத்தோடு அந்நுவயம்பண்ணுக. ஈண்டு, '𑌯𑍋𑌵𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿' என்னும் வாக்கியமிருக்குமிடத்து '𑌯𑍋𑌨𑍁𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿' எனவுஞ் ஒரு புஸ்தகத்திலிருக்கின்றது அதிலும் கூறிப்போந்த அர்த்தமென்றேயுணர்க. (23)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑌃 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌃 ।
𑌤𑍁𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌧𑍀𑌰𑌸𑍍𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 ॥ (24)

ப-ம். 1 𑌸𑌮𑌦𑍁𑌃𑌖𑌸𑍁𑌖𑌃 2 𑌸𑍍𑌵𑌸𑍍𑌥𑌃 3 𑌸𑌮𑌲𑍋𑌷𑍍𑌟𑌾𑌶𑍍𑌮𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌃 4 𑌤𑍁𑌲𑍍𑌯𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 6 𑌧𑍀𑌰𑌃 5 𑌤𑍁𑌲𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌤𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சுகதுக்கங்களிற் சமமும் சொரூபத்தில் ஸ்திதமும் ஓடு கல் பொன்களிலொப்பும் பிரியாப் பிரியங்களிற் சமமும் தனது நிந்தை புகழ்களிற் சமமும் உடைய தீரபுருஷன் குணாதீதனெனப்படுகின்றான். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அத்தத்துவ ஞானிக்குத் துக்கசுகங்களில் துவேடராகங்களில்லை; அவைகள் அனான்மவடிவ அந்தக்கரணத்தின் தருமங்களும் கனப்போன்று மித்தியாவடிவங்களுமாமாதலின், இராகத்துவேட ரகிதத்தானும் அனு

ன்ம தருமத்தன்மையானும் மித்திபாத்தன்மையானும் அவ்விரண்டையுஞ் சம மாகவுடையவன் சமதுக்கி சுகியாவன். அற்றேல், ஹே பகவன் அத்தத்துவ ஞானிக்கு அவைகள் எக்காரணத்தாற் சமங்களாம் என்றருச்சுனனுக்கு அறி யும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அதில் காரணத்தையருளிச்செய்கின்றார். 'ஸ்வஸ்த:' என அவன் சுவஸ்தன் ஆதலின்; அதாவது, துவைததரிசன மின்றியவ னாதலின், அவன் தனது ஆனந்தவடிவ ஆன்மாவின்கண்ணே ஸ்திதன் இதனானே அவனுக்குச் சுகதுக்கங்கள் சமங்களாம்; ஆன்மாவினிலேபடாத பகிர்முகனுக்கு அவைகள் மாறுபட்டவைகளேயாம்; தத்துவஞானி தனதானந்தவடிவ ஆன்மா வின்கண்ணே நிலைத்திருக்கின்றதனானே ஓடு பொன்களிற் சமன்; ஆண்டுச் சம மெனும் கொள்ளல்தள்ளல் களின்மையன ஓடு பொன்கள் எவனுக்கு அவன் ஓடு பொன்களிற் சமனாவன். ஆண்டு, மட்பிண்டம்-ஓடாம், பாடாணம்-கல்லாம், சுவர் ணம்-பொன்னாம், அதாவது அத்தத்துவஞானி ஓடுமுதலிய துச்சவஸ்துக்களிலும் சுவர்ணமுதலிய பெரும்பொருளிலும் தள்ளல் கொள்ளல் என்னும் புத்தியின்றிய வன். அவன் ஓடு-கல் பொன்களிற் சமனாதலினானே பிரியாப்பிரியங்களிற் சமன். ஆண்டுச் சுகசாதனவடிவப் பிரியத்திலும், துக்கசாதனவடிவ அப்பிரியத்திலும் சமன் என்பதாம்; அதாவது, தத்துவஞானிக்குப் பிரியபதார்த்தமோ, இந்தப் பிரியமானபொருள் எனது இதத்திற் சாதனம் என இதசாதன புத்திக்கு விடய மாகாது; அப்பிரிய பதார்த்தமோ இவ்வப் பிரியப்பொருள் எனது அகிதசாதனம் என அகிதசாதன புத்திக்கு விடயமாகாது; மற்றோ, அவ்விரண்டும் அவனுடைய உபேட்சா புத்திக்கே விடயமாம். அங்ஙனமே எவன் தீரனோ; அதாவது புத்தி மான் அல்லது தைரியவான்; அவன் தீரனாதலினானே, தனது நிந்தை புகழ்களிற் சமனாவன், ஆண்டுத் தனது தோடத்தைக்கூறல் நிந்தையாம். தனது குணத் தைக்கூறல் துதியாம். அவ்விரண்டிலும் ஒப்புளோன் என்பதாம். அத்தன்மைய தத்துவஞானி குணாதீதனெனப்படுகின்றான் என இச்சுலோகத்தை இரண்டாவது சுலோகத்திலுள்ள (குணாதீதனெனப்படுகின்றான்.) என்னும் வாக்கியத்தோடு அந் நுவயஞ்செய்க. (24)

(அ-கை.) மேலும்,

சு-ம். மாநாபமாநயோஸ்துல்யஸ் துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।
ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத:ஸ உச்யதே ॥ (25)

ப-ம். 1 மாநாபமாநயோ: 2 துல்ய: 4 துல்ய: 3 மித்ராரிபக்ஷயோ: 5 ஸர்வா-ரம்பபரித்யாகீ 7 குணாதீத: 6 ஸ: 8 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மானாவமானங்களிலும் மித்துரு சத்துருக்களிடத் திலும் சமனும் சருவாரம்ப பரித்தியாகியுமானவன் குணாதீதனெனப்படுகின்றான்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எந்தத் தத்துவஞானியானவன் மானாவமானங் களிற் சமானன்; ஆண்டு உலகத்தில் ஆதரவு எனப்படும் சத்காரம் மானமாம், அனாதரவெனப்படும் திரஸ்காரம் அவமானமாம். அவ்விரண்டிலுந் துல்லியன்; அதாவது, மானாவமானங்கள் வந்தவிடத்தும் சந்தோஷ விஷாதமடையாதோன் ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் 'துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி:' என்னும் வாக்கியத் தாற் கூறப்பட்ட நிந்தை துதிகட்கும் இச்சுலோகத்திற் கூறப்பட்ட மானவ மானங்கட்கும் இத்துணை வேறுபாடாம், நிந்தை துதிகளோ சப்தவடிவங்களாம் மானாவமானங்களோ சப்தமின்றியும் தேகமனங்களின் வியாபார விசேடங்க ளாம். ஒரு மூலப்புத்தகத்திலோ 'மாநாவ மாநயோஸ்துல்ய:' எனவும் பாட முளது. இப்பாடத்திலும் கூறிப்போந்த பொருளையுணர்க. அங்ஙனமே எவன்

மித்துருசத்துருக்களிற் சமன்; அதாவது அவன் மித்துரு பக்ஷத்தின் துவேஷத்திற்கு விடயமாகாததுபோல, சத்துரு பக்ஷத்தின் துவேடத்திற்கும் விடயமாகான். அல்லது, அவன் மித்துரு சத்துரு பக்ஷங்கட்கு அநுக்கிரக நிக்கிரகங்களைச்செய்யான். அங்ஙனமே எவன் சருவாரம்ப பரித்தியாகி; ஈண்டு முக்கரணங்களாலும் ஆரம்பம்பண்ணுவோன் ஆரம்பனுவன் அத்தன்மைய இலௌகிக வைதிகவடிவ சர்வாரம்பங்களையும் பரித்தியாகஞ்செய்தோன் சர்வாரம்பபரித்தியாகியாவான்; அதாவது, தேகயாத்திராமாத்திரத்திலுபயோகமான பிக்ஷாடன முதலியவைகளொழிந்த ஏனைய சர்வ கருமங்களையுந் தியாகம்பண்ணியவன் என்பதாம். இவ்வாறு 'உதாஸீநவ தாஸீநஃ' என்பதாதி மூன்று சுலோகங்களாற் கூறப்பட்ட ஆசாரங்களோடு கூடிய தத்துவஞானியே குணாதீதனெனப்படுகின்றான். கருத்திதுவாம்:—மேல் 3 சுலோகங்களாற் கூறப்பட்ட உபேட்சகத்தன்மை முதலிய தருமங்கள் ஆன்மஞானமுண்டாவதற்கு முன்னரோ பிரயத்தன சாத்தியங்களாம்; அதாவது ஆன்மஞானேச்சையையுடைய அதிகாரியால் அவ்வான்மஞானத்தின் சாதனங்களாய் அவைகள் அநுட்டிக்கப்பாலனவாம்; ஆன்மஞான முண்டான பின்னரோ குணாதீதனாகிய ஜீவன் முக்தனுக்கு அவைகள் முயற்சியின்றிச் சித்தித்த இலக்கணவடிவங்களாகின்றன. (25)

(அ-கை.) இப்போது இவ்வதிகாரி எவ்வுபாயத்தால் அக்குணங்களைத்தாண்டுவன் என்னும் மூன்றாவது வினாவிற்கு ஸ்ரீ பகவான் உத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். ஊாஞ்ச யொ2வ்யுஹிசாரெண ஹக்தியொகெந ஸெவதெ ।
ஸ ம॒ணாநு ஸமதீத்யைதாநு ப்ரஹ்மஹூயாய கல்பதெ ॥ (26)

ப-ம். 3 ஊாம் 1 ச 2 யஃ 4 அவ்யுஹிசாரெண 5 ஹக்தியொகெந 6 ஸெவதெ 7 ஸஃ 9 ம॒ணாநு 10 ஸமதீத்ய 8 ஏதாநு 11 ப்ரஹ்மஹூயாய 12 கல்பதெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் எவன் பரமேசுரராகிய எம்மை அனன்ய பக்தியோகத்தாற் சிந்திக்கின்றானே அவன் கூறிப்போந்த சத்துவமுதலிய குணங்களைக் கடந்து பிரமவடிவமாதற்குத் தக்கவனாகின்றான். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ பூதங்கட்கும் அந்தரியாமியும் தமது மாயையால் க்ஷேத்திரபாவத்தையு மடைந்த பரமானந்தகனப் பகவானாகிய எம்மையே எவ்வதிகாரி பிறழ்தலின்றிய பக்தியோகத்தால் சேவிக்கின்றானோ, ஈண்டு விஜாதீயவிருத்தி வியவதானமின்றித் தைலதாரைபோன்ற பரமான்மாவாகிய எம்மை விஷயம் பண்ணும் சஜாதீயவிருத்திப் பிரவாஹம் அவ்விபசாரியாகிய பக்தியாம். எது முன்னர்ப் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் விரிவாய்க் கூறப்பட்டதோ அத்தன்மையமிருந்த பிரேமைவடிவ அனன்ய பக்தியோகத்தால் எவன் நாராயணராகிய எம்மை இடைவிடாது சிந்திக்கின்றானோ அந்தப் பரமேசுர அனன்ய பக்தன் கூறிப்போந்த இச்சத்வ முதலிய குணங்களைத் தாண்டி; அதாவது அத்வைத தரிசனத்தால் அக்குணங்களைப்பாதித்து நிர்க்குணப்பிரமபாவவடிவ மோட்சத்திற்குச் சமர்த்தனாகின்றானாதலின் இடைவிடாது எமது சிந்தனையே, அக்குணாதீதத்தன்மைக்கு உபாயமாமெனக. (26)

(அ-கை.) ஈண்டுப்பரமேசுரராகிய எம்மைச்சிந்திக்கப்பட்டவன் மோட்சத்தையே யடைகின்றான் எனக் கூறிப்போந்த அர்த்தத்தில் ஸ்ரீ பகவான் தமது மகான்றன்மைக்காரணத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ப்ரஹ்மணொஹி ப்ரதிஷ்டாஹம॒ம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
ஶாஶ்வதஸ்ய ச யர்மஸ்ய ஸுவஸ்யைகாந்திகஸ்ய ச ॥

ப-ம். 11 ப்ரஹ்மண: 1 ஹி 13 ப்ரதிஷ்டா 12 அஹம் 2 அம்ருதஸ்ய 4 அவ்யயஸ்ய 3 ச 6 ஶாஶ்வதஸ்ய 5 ச 7 தர்மஸ்ய 10 ஸுகஸ்ய 9 ஐகாந்திகஸ்ய 8 ச.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எதனுல் அமிருதவடிவமும், அவ்விய ரூபமும், சாசுவதரூபமும், தரும ரூபமும், பிறழ்தலின்றியதாம் சுகரூபமுமாகிய சோபாதிக காரணப்பிரமத்திற்கு நிருபாதிக வாசுதேவராகிய நாம் உண்மை வடிவமாகின்றேமோ அதனுலே எமது பக்தியால் மோட்சமடைதல்கூடும் என்பதாம். (27)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தத்துவமசி என்னும் மகா வாக்கியத்திலுள்ள தத்பதத்தின் வாச்சியார்த்தமும் உலகனைத்திற்கும் தோற்ற நிலையிறுகளின் காரணவடிவமுமாகிய சோபாதிகப் பிரமத்திற்கு நிர்விகற்பக வாசுதேவராகிய நாம் பிரதிஷ்டையாகின்றேம்; அதாவது பாரமார்த்திகவடிவமும் நிருவிகற்பக வடிவமும் சச்சிதானந்தவடிவமுமாகிய சர்வோபாதிகளின்றிய தத்பதத்தினிலட்சியார்த்த வடிவம் நாமாகின்றேம். ஆண்டு இதிற் பிரதிட்டையாதலின் இது பிரதிட்டையாம், என விரித்துரைத்தலால் கற்பிதவடிவங்களின்றிய அகற்பிதவடிவமே பிரதிட்டை என்னுஞ் சத்தத்தின் பொருளாம். நிருபாதிக சுத்தப்பிரமமாகிய நாமே அந்தச் சோபாதிகப் பிரமத்திற்கு உண்மைவடிவ மாகின்றேம். ஆதலின் நிருபாதிக சுத்தப்பிரமமாகிய எம்மை இடைவிடாது சிந்திக்கின்ற அதிகாரிகள் நிர்க்குணபாவப்பிராப்திவடிவ எம்மை யடைதற்குச் சமர்த்தராகின்றார்கள் என முன்னர்க்கூறிய அர்த்தம் பொருத்தமுடையதேயாம் என்க. எவ்விதமான பிரமத்தின் பிரதிட்டையாவீர்கள் தாங்கள் என்றருச்சுனனுக்குணரும் வேட்கை யுண்டாக ஸ்ரீ பகவான் அப்பிரமத்தை விசேடித்தருளிச் செய்கின்றார். 'அம்ருதஸ்ய இதி' எம்மைப் பிரதிஷ்டையாகவுடைய பிரமம் எத்தன்மையதெனின் அமிருதமாம்; அதாவது விநாசரகிதமாம். 'ஏதத³ம்ருதமபயமேதத்³ப்ரஹ்ம' இப்பிரமம் அமிருதவடிவமும் அபயவடிவமுமாம் என்பதாம். மற்றுமெத்தன்மையதெனின் அவ்வியயமாம்; அதாவது பரிணாமமற்றதாம். சாசுவதமாம்; அதாவது அபக்ஷயமற்றதாம். ஈண்டு விநாச பரிணாம அபக்ஷய என்னும் விகாரங்களின் நிடேதம் தோற்றல் நிலைத்தல் வளர்தல் என்பவைகளின் நிடேதத்திற்கும் உபலட்சணமாம்; அதாவது அந்தப் பிரமம் அறுவகை விகாரங்களுமற்றதாம். அது மற்று மெத்தன்மையதெனின் தரும வடிவமாம்; அதாவது ஞானநிஷ்டையாகிய தருமத்தாலடையத்தக்கதாம். சுகவடிவமாம்; அதாவது பரமானந்த ரூபமாம். இப்போது அந்தச்சுகத்தில் விடயேந்திரியங்களின் சம்யோகத்தால் தோற்றுவதாந்தன்மையை நிவிருத்திப்பான் அந்தச்சுகத்தை விசேடித்தருளுகின்றார். 'ஐகாந்திகஸ்ய இதி' அந்தச் சுகம் எத்தன்மையதெனின் ஐகாந்திகமாம்; அதாவது, விடயத்தாற்றோன்றுஞ் சுகம்போலப் பிறழ்தலற்றதாம்; மற்றோ எல்லாத் தேசகாலங்களினு மிருப்பதாம்; இந்த வியாபகசுகத்தையே 'யோ வை பூமா தத்ஸுகம்' என்னுஞ் சுருதியுங் கூறுகின்றது. அத்தன்மைய அமிருதமுதலிய சர்வ விசேடணங்களையுமுடைய பிரமத்திற்குப் பரமேசுரராகிய நாம் வாஸ்தவ வடிவம் ஆதலினுலே எம்முடைய அனன்ய பக்தன் இச்சம்சாரபந்தத்தினின்றும் முக்தனுகின்றான் என்பதாம். ஆண்டு இவ்விதமான ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சொரூபத்தைப் பிரமாவும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு அருளிச்செய்திருக்கின்றார்.

ஆ-சு. ஸநக ஸ்வாந்த பாராஶர்ய பாராண:
ஸத்த்வ: ஸர்வம் ஜ்யோதிராநந்த³ரூப: ।
நித்யாஶ்ரோஜ ஸ்வஸம்வேத்³யோ நிரஞ்ஜந:
பரிணோத்³த⁴ பூர்வோ ஶாந்த உபாஸிதோ ப்³ரஹ்ம: ॥

(பொ-ள்.) ஹே கிருஷ்ணபகவன்! தாங்கள் எத்தன்மையரெனின் ஏகர்; எவ்விடத்தும் ஒரே வடிவினர். இன்னும் சர்வப் பிராணிகளின் ஆன்மவடிவர், புருஷர், சர்வ சரீரங்களிலும் இருப்புவிளக்க இன்ப வடிவங்களாயிருப்பவர்; புராணர், இதற்குமுன்னு மிருப்பவர். சத்தியர்; முக்காலங்களிலும் பாதமற்றவர். சுயஞ்சோதி. தனது விளக்கத்தின்பொருட்டு வேறொளியை விரும்பாதோர்; அனந்தர், தேசகால வஸ்து பரிச்சேதமற்றவர், ஆதியர், எல்லாவற்றிற்கும் ஆதிகாரணர், நித்தியர்; தோற்றக்கேடுகளின்றியவர்; அக்ஷரர், வியாபகசுக வடிவினர், நிரஞ்சனர், அஞ்ஞானவடிவக் களங்கமற்றவர், யாண்டும் பரிபூரணர், துவைதபாவ மற்றவர், சர்வோபாதிகளற்றவர், அமிருதவடிவர், மோட்சசொரூபர் என்பதாம். இச்சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பிரமாவானவர் சர்வோபாதிகளுமின்றிய ஆன்மவடிவமும் பிரம வடிவமுமாகக்கூறினர். அன்றியும் இவ்விதமான ஸ்ரீ பகவானுடைய சொரூபத்தை ஸ்ரீ சுகமுனிவரும் அதிப்பிரசங்கமின்றியே கூறியிருக்கின்றனர்.

ஆ-சு. ஸர்வேஷாமபி வஸ்தூநாம் பாவார்த்தோ பவதி ஸ்தித: ।
தஸ்யாபி பகவாந் க்ருஷ்ண: கிமதத்வஸ்து ரூப்யதாம் ॥

(பொ-ள்.) சர்வ காரியவடிவ வஸ்துக்களனைத்தின் பாவார்த்தமெனப்படும் சத்தாவடிவ பரமார்த்த சொரூபம் காரியவடிவமாய்த் தோற்றப்பட்ட சோபாதிகப் பிரமத்தின்கண்ணே யிருப்பதாம்; என்னை, சித்தாந்தத்தில் காரணசத்தையினும் வேறாய்க் காரியசத்தையை உடன்படவில்லை, குண்டலகங்கண முதலிய பூடணங்கட்குச் சுவர்ணவடிவ காரணசத்தையினும் வேறுசத்தையில்லாதது போலவும், கடசராவ முதலிய காரியங்கட்கு மண்வடிவகாரணசத்தையினும் வேறு சத்தை இல்லாதது போலவும், இப்பிரபஞ்சவடிவ காரியத்திற்கும் அச்சோபாதிகவடிவ காரண சத்தையினும் வேறு சத்தை யில்லை. இது 'ததனன்யத்வமாரம்பண சப்தாதிப்ய' என்னுஞ் சூத்திர வியாக்கியானத்தில் ஸ்ரீ பாடியக்காரரால் விரிவாய்க்கூறியருளப் பட்டிருக்கின்றது. அக்காரணவடிவ சோபாதிகப்பிரமத்திற்கும் சத்தாவடிவ பாவார்த்தம் ஸ்ரீ கிருஷ்ணபகவானேவர். என்னை; அந்தச் சோபாதிகக்காரணப்பிரமம் நிருபாதிகப் பிரமத்தின்கண்ணே கற்பிதமாம். யாதுயாது கற்பிதப்பொருளாமோ அதுவது அதிட்டானத்தினும் வேறாகாது, இரச்சுவிற் கற்பிதமாகிய சர்ப்பம் இரச்சுவடிவ அதிட்டானத்தினும் வேறாகாததுபோல ஸ்ரீ கிருஷ்ணபகவானே சர்வ கற்பனைகட்கும் அதிட்டானவடிவமானதால் பரமார்த்த சத்தியநிருபாதிகப் பிரமசொரூபர் ஆதலின் அத்தன்மைய ஸ்ரீ கிருஷ்ணபகவானே அக்காரண வடிவ சோபாதிகப் பிரமத்திற்குப் பரமார்த்த சத்தாவடிவ பாவார்த்தமாவர். அத்தன்மைய அதிட்டானவடிவ ஸ்ரீ கிருஷ்ணபகவானினும் வேறாக யாதொரு பொருளும் உண்மையிலின்றாம்; மற்றோ, அப்பரப்பிரம வடிவ ஸ்ரீ கிருஷ்ண பகவானே ஏகபாரமார்த்திகராவர் என்பதாம். இவ்வர்த்தத்தையே ஸ்ரீ பகவான் ஈண்டு 'ப்ரஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹம்' என்னும் வாக்கியத்தாற்றிருவாய்மலர்ந்தருளினர் என்க. அல்லது 'ப்ரஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹம்' என்னுஞ் சுலோகத்திற்கு வேறுபொருள் செய்பத்தக்கது. அஃதாமாறு: எவன் எத்தேவதையை தியானிக்கின்றானோ அவன் அத்தேவதாபாவத்தையே அடைகின்றான். ஆதலின் உமது பக்தன் உமது பாவத்தையே யடைவனுயின் அவன் பிரமபாவத்தை எவ்வாறடைவன்; மற்றோ, அடையான். தாங்கள் அப்பிரமத்தினும் வேறானமையின் என்றர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் தம்மைப் பிரமவடிவமாய் அருளிச்செய்கின்றார். 'ப்ரஹ்மணோஹி ப்ரதிஷ்டாஹம்' எனச் சர்வோபாதிகளுமின்றிய பரமான்மாவாகிய பிரமத்திற்குப் பரியவசானவடிவப் பிரதிஷ்டை நாமா

கின்றேம்; அதாவது எம்மின் வேறன்று அப்பிரமம்; மற்றோ நாமே பரப்பிரம வடிவம். அங்ஙனமே அவ்வியயவடிவ அமிருதத்திற்கும் நாமே பிரதிஷ்டை யாகின்றேம். ஆண்டுச் சர்வானர்த்தநிவிருத்தி பூர்வகப் பரமானந்தப்பிராப்தி வடிவ மோட்சம் அமிருதமாம். அது எவ்வாற்றானும் நாசமுறாமையின் அவ்வியய மெனப்படுகின்றது. அத்தன்மைய மோட்சவடிவ அமிருதத்திற்கும் பரமான்மா வாகிய எம்மிடத்திலே பரியவசானமாம்; அதாவது பரமான்மாவாகிய எம்மை யபேதமாயடைதலே மோக்ஷமாம். அங்ஙனமே சாசுவத தருமத்திற்கும் நாம் பிரதிஷ்டை யாகின்றேம். ஆண்டு நித்தியமாகிய மோட்சபலத்தையுடைய ஞான நிஷ்டைவடிவ தருமம் சாசுவத தருமமாம் அத்தன்மையதருமமும் பரமேசுர ராகிய எம்மிடத்திற் பரியவசானமுடையதாம்; அதாவது அந்த ஞானநிஷ்டை யாகிய தருமத்தால் பரமான்மாவாகிய எமக்கயலாய் வேறொருபொருளு மடையப் படவில்லை; மற்றோ, பரமான்மாவாகிய நாமே அதனாலடையப்படுகின்றேம். அங் ஙனமே ஐகாந்திக சுகத்திற்கும் நாமே பரியவசானவடிவப் பிரதிஷ்டையாகின் றேம்; அதாவது பரமானந்த சொரூபமானதால் பரமான்மாவாகிய நாமே சர்வமு மூட்சுக்கட்கும் அபேதமாயடைதற்குரியம் எமக்கயலாய் வேறு சிறிதளவு சுகமு மடைதற்குரியதன்றாம்.

ஆ-சு. யொமெவ ஹ்ஸாதத-வம் நாஜெ ஸ-வசஷிு ।

(பொ-ள்) தேசகால வஸ்துக்களால் பரிச்சேதமற்றதும் யாண்டும் வியா பகமாகியதுமாகிய பரமான்மாவே சுகவடிவமாம் பரிச்சின்ன பதார்த்தங்களிற் சிறிதளவுஞ் சுகமின்றாம் என்பதாம். பரமான்மாவாகிய நாம் இத்தன்மையமாத லினாலே எம்முடைய அனன்யபக்தன் பிரமபாவத்தையே யடைகின்றான் என முன்னர்க்கூறிய அர்த்தம் பொருத்தமுடையதேயாம் என்பதாம். ஒரு வியாக் கியானத்திலோ. 'ஙு ஹணொஹி ஓுதிஷாஹ' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வர்த்தம் பண்ணபபட்டிருக்கிறது. அஃதாவருமாறு, இந்நூலின் நான்காவது அத்தியாயத்தில் 'ஸவம் ஙஹ-வியாயஜூாவிதா ஙுஹணொ உ-வெ' என் னும் வாக்கியத்திலுள்ள பிரம சப்தத்தால் வேதமே கொள்ளப்பட்டதாதலின் ஈண்டும் பிரம சப்தத்தால் வேதமே கொள்ளற்பாலது அத்தன்மைய பிரமமெனும் பெயரிய வேதத்திற்குப் பரமான்மாவாகிய நாமே பிரதிஷ்டையாகின்றேம்; அதா வது வேத மனைத்திற்கும் தாற்பரியத்தால் பரியவசானஸ்தானம் பரப்பிரமமாகிய நாமாகின்றேம். 'ஸவெ-வெ உாயது உஉஉநஷி' கருமோபாசனா ஞானகாண்ட வடிவ இருக்குமுதலிய வேதங்களனைத்தும் நேராகவேனும் பரம்பரையாகவேனும் எந்தப் பரமான்மபதத்தைக் கூறுகின்றதோ என்பதாம். அவ்வேதம் எத்தன்மை யதெனின் அமிருதமாம்; அதாவது கரும பிரமம் என்னு மிரண்டையும் பிரதிபா திக்கும் வாயிலாய் மோட்சவடிவ அமிருதத்திற்குச் சாதனமாம். அவ்வியயமாம்; அதாவது உத்பத்தி விநாசங்களற்றதாமாதலின், அபௌருஷேயமாம்; அதனானே அப்பிரமாண்ய சங்கைவடிவக் களங்கமற்ற சுவதப் பிரமாணமாம். சாசுவத தரு மத்திற்கும் நாமே பிரதிஷ்டையாகின்றேம்; அதாவது, காமியதருமம் சுவர்க்க முதலிய பலத்தைக் கொடுத்துவிட்டு நாசப்படுவதுபோலப் பகவதர்ப்பணமாய்ச் செய்யப்பட்ட நித்திய தருமம் நாசமாவதில்லை. விவிதிஷா உத்பத்திவாயிலாக மோட்சவடிவ சாசுவத பலத்திற்கு ஹேதுவாகின்றது. ஆதலின் பகவதர்ப்பண மாய்ச் செய்யப்பட்ட நித்திய தருமம் சாசுவத தருமமெனப்படுகின்றது அத்தன் மைய தருமத்தாலடைதற் குரித்தான மேலான பல வடிவமும் பரமான்மாவாகிய நாமே விடய சம்பந்த சன்னிய சுகத்தினும் ரகிதமான சொரூப பூத மோட்ச சுகம் ஐகாந்திக சுகமாம். அத்தன்மைய சுகத்திற்கும் நாமே பிரதிஷ்டையாகின்றேம்;

அதாவது பரமகாஷ்டை வடிவமாகின்றேம். பரமான்மாவாகிய நாம் இத்தன்மைய மாதலின் எம்மைச் சிந்திக்கின்ற அதிகாரி பரம பாவத்தையே அடைகின்றான் என முன்னர்க்கூறிய அர்த்தம் பொருத்தமுடையதேயாம் என்க. (27)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவாநந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரி சுவாமிகளாலியற்றியருளிய பிராகிருதடீகையெனும் பெரிய கீதை கூடார்த்ததீபிகையில்,

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பதினைந்தாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம: ஸ்ரீ குருப்யோநம:
ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம:

ஆண்டுப் பூர்வம் பதினான்காவது அத்தியாயத்தில் சம்சார பந்தத்திற்குக் காரணவடிவ சத்துவமுதலிய குணங்களை அருளிச்செய்து இவ்வதிகாரிக்குப் பரமேசுராகிய எமது அனன்யபக்தி யோகத்தால் அக்குணங்களின் அதிக்கிரமண பூர்வகம் பிரமபாவவடிவ மோட்சப் பிராப்தியுண்டாகும் என்னுமர்த்தத்தை ஸ்ரீ பகவான்,

> மாம் ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே ।
> ஸ குணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே ॥

என்னும் வாக்கியத்தால் திருவாய்மலர்ந்தருளினர். ஆண்டு மனுடராகிய உமது பக்தியோகத்தால் இவ்வதிகாரிக்குப் பிரமப்பிராப்தி எவ்வாறுண்டாம் என்றருச்சுனனுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் தம்மிடத்தில் பிரமரூபத்தன்மையை அறிவுறுத்தற்பொருட்டு,

> ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
> சாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥

என்னுஞ் சூத்திரவடிவச் சுலோகத்தை அருளிச்செய்தனர். அதனர்த்தத்தை விரித்துக்கூறப்பட்ட உரைவடிவ பதினைந்தாவது அத்தியாயத்தை ஸ்ரீ பகவான் ஆரம்பித்தருளுகின்றார். எதனால் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய உண்மைவடிவத்தை புணர்ந்து அவாது நிரதிசயப் பிரேமைவடிவ பஜனையால் குணாதீதராகிய அதிகாரிகள் எவ்வாற்றாலேனும் பிரமபாவவடிவ மோட்சத்தையடைகின்றனர் என்பதாம். ஆண்டு, 'ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்' என்பதுமுதலிய ஸ்ரீ பகவானுடைய திருவாக்கியங்களைக்கேட்டு எனக்கொப்பான இம்மநுடவடிவக் கிருஷ்ணன் பிரமத்திற்கும் நானே பிரதிஷ்டையாகின்றேன் எனக்கூறுவதென்னை என்னும் விஸ்மயத்தையடைந்தவனாய் வினவுதற்குரிய அர்த்தம் வெளிப்படாமைவடிவ விளக்கமிலா

த்தன்மையானும், லச்சையானும் சிறிதளவும் விளுவுதற்கேலாதவனாகிய அர்ச்சுன னைப்பார்த்து கிருபையால் அவனுக்குத் தமது சொரூபத்தை யுபதேசித்தற்கு இச்சை நண்ணி ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். ஆண்டு, சம்சாரத்தினின் றும் விரக்த புருஷனுக்கே பரமேசுரருடைய உண்மைவடிவ ஞானத்தில் அதிகார முண்டு வைராக்கிய மிலாதோனுக்கில்லே. ஆதலின், முதலில் வைராக்கியஞ் சம் பாதித்தற்குரியது. ஆண்டுப் பூர்வாத்தியாயத்திற் கூறப்பட்ட பரமேசுராதீனமா யுள்ள பிரகிருதி புருஷர்களின் சம்யோகத்தின் காரியவடிவ சம்சாரத்தை அதில் வைராக்கியத்தை யடைதற்பொருட்டு விருக்ஷவடிவமாய் வர்ணித்தருளுகின்றார். அவ்வைராக்கியமும் கூறிப்போந்த குணாதீதத்தன்மைக்கு உபாயவடிவமேயாம்.

ஸ்ரீ ஹ ம வாநுவாச.

சு-ம். 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌧𑌃𑌶𑌾𑌖𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ।
𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍 ॥ (1)

ப-ம். 1 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌂 2 𑌅𑌧𑌃𑌶𑌾𑌖𑌂 3 𑌅𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌂 5 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 4 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 7 𑌛𑌨𑍍𑌦𑌾𑌂𑌸𑌿 6 𑌯𑌸𑍍𑌯 8 𑌪𑌰𑍍𑌣𑌾𑌨𑌿 10 𑌯𑌃 9 𑌤𑌂 11 𑌵𑍇𑌦 12 𑌸𑌃 13 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சுருதிமிருதிகள் இச்சம்சார விருக்ஷத்தை ஊர்த் துவ மூலமுடையதெனவும் அதோசாகையுடையதெனவும் அச்சுவத்தம் அவ்வியய மெனவுங் கூறுகின்றன. எவ்விருக்ஷத்திற்குக் கர்மகாண்டவடிவ வேதங்தழையோ அச்சம்சாரவடிவ விருக்ஷத்தை எவன் அறிகின்றானே அவனே வேதத்தை யுணர்ந்தவனாவன். (1)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இச்சம்சார விருக்ஷம் எத்தன்மையதெனின் ஊர்த்துவமூலம் ஆண்டுச் சுவப்பிரகாச பரமானந்தவடிவமானதினாலும், நித்திய மானதினாலும் எவற்றினுமேலாகிய காரணவடிவப் பிரமம் ஊர்த்துவமாம். அவ் வூர்த்துவம், மூலமெனப்படும் காரணமெதற்கோ அது ஊர்த்துவமூலமாம். அல் லது, சர்வ சம்சாரம் பாதமாயினும் பாதமாகாததும் சர்வ சம்சாரப் பிராந்திக் கும் அதிட்டானமாகியதுமாகிய பிரமம் ஊர்த்துவமாம். அவ்வூர்த்துவம் தனது மாயாசத்தியால் மூலமெனப்படும் காரணம் எதற்கோ அது ஊர்த்துவமூலமாம். மற்று மெத்தன்மையதெனின், அச்சம்சாரவடிவ விருக்ஷம் அதோசாகையாம். ஈண்டு, '𑌅𑌧𑌃' [அதோ] என்னுஞ் சப்தத்தால் பின்னுறபவிக்கத்தக்க காரியவடிவ வுபாதியையுடைய இரணியகருப்பன் முதலியோர்களைக்கொள்ளவேண்டும். உலகப் பிரசித்தமான விருக்ஷத்தின் சாகை மேற்குக் கிழக்கு முதலிய திசைகளில் விரிந் திருப்பதுபோல இரணியகருப்பர் முதலியோர்கள் பலதிசைகளிலும் விரிந்திருக் கின்றனராதலின், அவர்கள் பிரசித்தமான சாகைபோற் சாகை எதற்கோ, அது அதோசாகையாம். மற்று மெத்தன்மையதெனின் அது அச்சுவத்தம். ஆண்டு, எப்பொருள் "இப்பொருள் நெருநலினுமிருக்கும்" என விசுவசித்தற்குரியதன்றோ அப்பொருள் அச்சுவத்தமாம். இவ்வாறு விசுவசித்தற்குரியதன்றாதலின் இச்சம் சார விருக்ஷம் அச்சுவத்தமாம். மற்றுமெத்தன்மையதெனின் அது அவ்வியயமாம். அதாவது அநாதியனந்தவடிவ இத்தேகாதிகளின் பிரவாகத்திற்கு இது ஆசிரய மாம். அங்ஙனமே, ஆன்மஞானமொழிந்த வேறெவ்வுபாயத்தானும் கெடாத தாம். ஆதலின், இது அவ்வியயமாம். இவ்வாறு சுருதிமிருதிகள் இம்மாயாமய சம்சார விருக்ஷத்தை ஊர்த்துவ மூலமுடையதெனவும் அதோசாகையுடைய தெனவும் அச்சுவத்தவடிவமெனவும் அவ்வியயவடிவமெனவுங் கூறுகின்றன. (1)

ஆ-சு. 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌮𑌵𑌾𑌕𑍍𑌶𑌾𑌖𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌦 𑌸𑌂𑌪𑍍𑌰𑌤𑌿 ।

(பொ-ள்.) எவற்றினும் மேலாகிய பிரமம் ஊர்த்துவமாம். அதைக் காரணமாகஉடையது ஊர்த்துவமூலமாம். அர்வாக் என்பது நிக்கிருஷ்டத்திற்காம். அத்தன்மைய காரியவடிவ வுபாதியையுடைய இரணியகருப்பன் முதலியோர்கள், அல்லது மகதத்துவம் அகங்காரம் ஐவகைத் தன்மாத்திரைகள் என்ன அவ்விரணிய கருப்பாதிகள். அல்லது மகதத்துவ அகங்கார முதலியன பிரசித்தமான சாகைபோலச் சாகை எதற்கோ அது அர்வாக்சாகையாம். அத்தன்மைய ஊர்த்துவ மூல அர்வாக்சாகையதுமாகிய இச்சம்சாரவடிவ அச்சுவத்த விருக்ஷம் சநாதனமாம் என்பதாம். என்பது முதலிய சுருதிகள் கடவல்லியுபநிடத்தில் படிக்கப்பட்டிருக்கின்றன. ஆண்டு இச்சுருதியிலிருக்கப்பட்ட அர்வாக்சாகை என்னும் பதம் சுலோகத்திலுள்ள அதோசாகை என்னும் பதத்தின் சமானார்த்தமுடையதாம். சுருதியிலிருக்கப்பட்ட "சநாதநம்" என்னும் பதம் சுலோகத்திலுள்ள அவ்வியயமென்னும் பதத்தின் சமானார்த்தமுடையதாம். இவ்வாறே இவ்விருக்ஷத்தைமிருதிவசனமுங் கூறுகின்றது.

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑍂𑌲 𑌪𑍍𑌰𑌭𑌵𑌸𑍍𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑍋𑌤𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌸𑍍𑌕𑌨𑍍𑌧𑌮𑌯𑌶𑍍𑌚𑍈𑌵 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌕𑍋𑌟𑌰𑌃 ॥ (1)

𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌵𑌿𑌶𑌾𑌖𑌶𑍍𑌚 𑌵𑌿𑌷𑌯𑍈𑌃 𑌪𑌤𑍍𑌰𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 ।
𑌧𑌰𑍍𑌮𑌾𑌧𑌰𑍍𑌮𑌸𑍁𑌪𑍁𑌷𑍍𑌪𑌶𑍍𑌚 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌫𑌲𑍋𑌦𑌯𑌃 ॥ (2)

𑌆𑌜𑍀𑌵𑍍𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑍃𑌕𑍍𑌷𑌃 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ।
𑌏𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌨𑌂𑌚𑍈𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌚𑌰𑌤𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌵𑌤𑍍 ॥ (3)

𑌏𑌤𑌚𑍍𑌛𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚 𑌭𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑌰𑌮𑌾𑌸𑌿𑌨𑌾 ।
𑌤𑌤𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌮𑌰𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌨𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌪𑍁𑌨𑌃 ॥ (4)

(பொ-ள்.) அவ்வியாகிருத மெனும் பெயருடைய மாயாவிசிஷ்டப் பிரமம் அவ்வியத்தமாம். அதுவே மூலமெனுங் காரணவடிவம் அத்தன்மைய அவ்வியத்த வடிவ மூலத்தினின்று பிரபவம் எனும் உத்பத்தி எதற்கோ அது அவ்வியத்த மூலப்பிரபவமாம். அத்தன்மைய அவ்வியத்தவடிவ மூலத்தின் அநுக்கிரகத்தினனே இச்சம்சார விருக்ஷம் பருத்ததாம் அதாவது அம்மூலத்தின் திடத்தினனே இவ்விருக்ஷம் மிகப்பருமனை யடைந்ததாம். உலகப்பிரசித்தமான விருக்ஷத்தின் சாகைகள் கந்தத்தினின்றும் உண்டாகின்றன; அதுபோல புத்தியினின்றே இச்சம்சாரத்தின் நானுவகையான பரிணமங்களுண்டாகின்றன. இவ்வாறு சமானதர்மத் தன்மையால் இப்புத்தியே கந்த வடிவமாம். அத்தன்மைய புத்திவடிவ கந்தமுடையதாதலின் இச்சம்சாரவிருக்ஷம் புத்திக்கந்தமயமெனக் கூறப்பட்டது. பிரசித்தமான விருக்ஷத்திற்குள் துவாரவடிவ கோடரங்களிருக்கின்றனபோல இவ்விருக்ஷத்தில் சுரோத்திர முதலிய இந்தியங்களின் துவாரங்களே கோடரவடிவங்களாம். (1) உலக விருக்ஷம் அநேகசாகைகளை யுடையதாவதுபோல இவ்விருக்ஷமும் ஆகாய முதலியவடிவப் பலவகையான சாகைகளையுடையதாம். அல்லது விசாகை என்னுஞ் சப்தம் ஸ்தம்பவாசகமாதலின் மாபூதங்களாகிய விசாகையெனும் ஸ்தம்ப முடையதாம். விருக்ஷம்போல இச்சம்சாரவடிவ விருக்ஷமும் சப்தஸ்பரிச முதலிய விடயவடிவ பத்திரங்களை யுடையதாம். விருக்ஷம்போலத் தருமாதரும வடிவப் புஷ்பங்களையுடையதும் அதினின்று முண்டாகப்பட்ட சுகதுக்க வடிவ பலத்தை யுடையதுமாம். (2) விருக்ஷம் பறவை முதலியவற்றிற்கு உபசீவியமாயிருப்பதுபோல இதுவும் சர்வப் பிராணிகட்கும் உபசீவியமாம் எதனுல் உபசீவனமாமோ அது உபசீவியமாம். இச்சம்சார விருக்ஷத்தைப் பா

மான்மாவாகிய பிரமம் ஆசிரயத்திருப்பதால் இது பிரமவிருக்ஷமெனப்படும். ஆன்ம ஞான மொழிந்த வேறு எவ்வுபாயத்தானும் நாசமாகாமையின் சனாதன மெனப் படும். சீவான்மவடிவப் பிரமத்திற்குப் போக்கியமானதால் பிரமவன மெனப் படும். அத்தன்மைய சம்சாரவடிவ விருக்ஷத்தில் சுத்தப்பிரமமோ சாக்ஷியைப் போல விளங்கிக்கொண்டிருக்கிறது அதாவது இச்சம்சாரத்தின் குணதோடங் களாற் சம்பந்திப்பதில்லை. (3) அத்தன்மைய சம்சாரவடிவ விருக்ஷத்தை அகம் பிரமாஸ்மி என்னுந்திடமான ஆன்மஞானவாளால் சேதனபேதனஞ்செய்து அதா வது மூலத்தோடு கெடுத்து இவ்வதிகாரி ஆன்மவடிவகதியை அடைந்து அம் மோட்சத்தினின்று புனராவிருத்தியை யடையான் என்பதாம். (4) இது முதலிய அநேக மிருதிகளில் இச்சம்சாரம் விருக்ஷரூபமாய் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது மூலமோ மேலாகவும் சாகை கீழாகவும் உள்ள விருக்ஷம் பிரசித்தியின்றியதா மாயினும் ஸ்ரீ கங்கையின் அலையால் மோதப்பட்ட உயர்ந்தகரையினின்றுங் காற்றாற் கீழேதள்ளப்பட்ட பெரிய அரசவிருக்ஷத்திற்கு மூலமோ மேலாம் சாகையோ கீழாம். அத்தன்மைய அச்சுவத்த விருக்ஷத்தை ஒப்புமையாக்கி ஸ்ரீ பகவான் இச் சம்சாரத்தை ஊர்த்துவ மூலமுடையதென்றும் அதோசாகையுடையதெனவும் கூறியருளினர். ஆதலின் இப்பகவானுடைய வாக்கியத்திற் சிறிதளவும் முரணடை யாதென்க. மற்று மெத்தன்மையதெனின் மாயாமயச் சம்சாரவடிவ அச்சுவத்த விருக்ஷம் வேதவடிவச் சந்தசைப்பர்ணமாகவுடையது; அதாவது தத்துவப்பொரு ளின் ஆவரகமாதலினால் அல்லது சம்சாரவிருக்ஷத்தின் ரக்ஷகமானதினால் கரும காண்டவடிவ இருக்கு முதலிய நான்கு வேதங்களும் பிரசித்தமான பர்ணம்போல இவ்விருக்ஷத்திற்குப் பர்ணமாம். கருத்திதுவாம்.—பிரசித்தமான பர்ணம் விரு க்ஷத்தின் இரட்சகத்தின் பொருட்டேயாமாவது போல இந்தக்கருமகாண்ட வடிவ வேதமும் சம்சார வடிவ விருக்ஷத்தின் இரக்ஷணத்தின் பொருட்டேயாம். என்னை, அக்கருமகாண்டவடிவ வேதம் தருமாதருமங்கள் அவற்றின் காரணம் அவற்றின் பலம் என்பவற்றினையே விளக்குவதாம். ஆதலின், அந்தக்கருமகாண்ட வடிவ வேதம் இச்சம்சார விருக்ஷத்தின் பரிரக்ஷகமாமாதலின் அவ்வேதத்தில் சம் சாரவடிவ விருக்ஷத்தின் பர்ணவடிவத்தன்மை பொருத்தமுடையதேயாமென்க. ஹே அர்ச்சுன! எவ்வதிகாரி இவ்வாறு மூலத்தோடு மாயாமய அச்சுவத்தவடிவ சம்சார விருக்ஷத்தை யுணர்கின்றானோ அவனே வேதவித்தாவன் அதாவது கரும காண்ட ஞானகாண்டவடிவ வேதங்களின் அர்த்தங்களாகிய கருமப் பிரமங்களை அவனே யுணர்கின்றான் என்பதாம். ஆண்டு, இச்சம்சார விருக்ஷத்தின் மூலமோ பிரமமாம்; இரணியகருப்பன் முதலிய சீவர்களோ சாகைகளாவர்கள். இத்தன்மைய விருக்ஷம் தனது வடிவத்தால் நாசமுடையதாம்; பிரவாகரூபத்தாலோ அனந்த மாம்; வேதோக்த கருமகாண்டவடிவ நீராலோ தெளிக்கப்பட்டதாம்; பிரமஞான வடிவ கட்கத்தால் வெட்டப்படுவதாம். இத்துணையே சர்வ வேதங்களின் அர்த்த மாம்: இவ்வாறு வேதார்த்தத்தையுணர்ந்தவனே எல்லாவர்த்தத்தையு முணர்கின் றான். இத்தன்மைய ஞானத்தை ஸ்ரீ பகவான் துதித்தருளுகின்றார், ‘𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍’ என. (1)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் கூறிப்போந்த சம்சார விருக்ஷத்தின் அவயவங்கட்கு வேறு கற்பனையையு மருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌶𑌾𑌖𑌾
𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑍃𑌦𑍍𑌧𑌾 𑌵𑌿𑌷𑌯𑌪𑍍𑌰𑌵𑌾𑌲𑌾𑌃 ।
𑌅𑌧𑌶𑍍𑌚 𑌮𑍂𑌲𑌾𑌨𑍍𑌯𑌨𑍁𑌸𑌂𑌤𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍀𑌨𑌿 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑍇 ॥ (2)

ப-ம். 3 அத⁴: 4 ச 5 ஊர்த்⁴வம் 6 ப்ரஸ்ருதா: 1 தஸ்ய 2 ஶாகா²: 7 கு³ணப்ரவ்ருத்³தா⁴: 8 விஷயப்ரவாலா: 10 அத⁴: 11 ச 9 மூலாநி 12 அநுஸந்ததாநி 14 கர்மாநுப³ந்தீ⁴நி 13 மநுஷ்யலோகே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சம்சார விருக்ஷத்தின் சாகைகள் கீழும் மேலும் தழைத்திருக்கின்றன; சத்துவமுதலிய குணங்களால் பருத்தப்பட்டன; சப்தமுதலிய விஷபவடிவ பல்லவத்தையுடையன. அங்ஙனமே அவ்விருக்ஷத்தின் வாசனைவடிவமூலம் கீழும் மேலும் அநுசூதமாயிருக்கின்றது; அதிகாரியாகிய மநுடதேகத்தில் புண்ணிய பாபவடிவ கருமங்களை யுண்டுபண்ணுவது. (2)

(வி-ம்.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் காரியவடிவ வுபாதியையுடைய இரணியகருப்பன் முதலிய சீவர் இச்சம்சாரவிருக்ஷத்தின் சாகைவடிவங்களாகக் கூறப்பட்டனர். இப்போது அந்தச் சாகைகளிலுள்ள விசேடங்களை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'அத⁴ஶ்சோர்த்⁴வம் இதி' அர்ச்சுன! சாகைவடிவங்களான அச்சீவர்களுள்ளும் தீயொழுக்கமுடைய துஷ்டசீவனே இச்சம்சார விருக்ஷத்திற்குக் கீழே தழைத்த கிளையாவன் அதாவது அப்பாபியாகிய சீவன் பசுமுதலிய கீழான யோனிகளில் விரியப்பட்ட சாகையாவன்; சாத்திரவிகித நல்லொழுக்கமுடைய தருமான்மாவான சீவனே இச்சம்சார விருக்ஷத்திற்கு மேலே தழைத்துள்ள சாகையாகின்றான் அதாவது அப்புண்ணியவான் தேவதை முதலிய யோனிகளில் விரிவையடைந்த சாகையாகின்றான். இவ்வாறு மநுடலோக முதற்கொண்டு பசு பக்ஷி விருக்ஷம் நரகத்திலுள்ள சரீரமீறாகிய கீழான ஸ்தானங்களிலும் மநுடலோக முதற்கொண்டு பிரமலோக மீறாகிய மேலான ஸ்தானங்களிலும் அந்தச் சம்சார விருக்ஷத்தின் சீவரூபங்களாகிய சாகைகள் வித்தாரத்தை யடைந்திருக்கின்றன. அச்சாகைகள் எத்தன்மைத்தாயனவாமெனின், குணங்களாற் பருக்கப்பட்டன அதாவது உலகத்தின் மரக்கிளைகள் நீர் தெளித்தலாற் பருமனையடைவனபோல தேகேந்திரியவிடய முதலிய வடிவமாய்ப் பரிணாமத்தையடைந்த சத்துவ முதலிய முக்குணமாகிய நீராற்பருக்கப்பட்டனவாம். மற்று மெத்தன்மையனவெனின் விடய வடிவுப் பல்லவங்களையுடையனவாம்; அதாவது, உலகவிருக்ஷத்தின் கிளையின் நுனிப்பாகத்தோடு மிருதுவான அங்குரவடிவ பல்லவங்கள் பொருந்தியிருப்பனபோல க்கூறிப்போந்த சீவவடிசாகைகளின் நுனிப்பாகத்திலிருக்கப்பட்ட இந்திரிய சன்ய விருத்திகளோடு சப்தமுதலிய விடய சம்பந்தங்களையுடையனவாம்; இதனானே அவ்விடயங்கள் அந்தச் சாகைகளின் கோமளவடிவப் பல்லவங்களாம். மற்று மெத்தன்மையதெனின் இச்சம்சாரவடிவ விருக்ஷம், அதன் அவாந்தரமூலங்கள் கீழும் மேலும் அநுசூதமாயிருப்பனவாம். ஆண்டு அவ்வப்பதார்த்த போகங்களாலுண்டாகிய வாசனையே இவனைத் தருமாதருமங்களிற் செலுத்துகின்றது. அந்த ராகத்துவேஷ முதலியவற்றின் வாசனையே இச்சம்சார விருக்ஷத்திற்கு அவாந்தர மூலமாம். பூர்வ சுலோகத்தில் இச்சம்சார விருக்ஷத்திற்கு மாயாவிசிஷ்டப் பிரமம் மூலமெனக்கூறப்பட்டது அது முக்கிய மூலமாம். இப்போது வாசனைவடிவ அவாந்தரமூலங் கூறப்படுகின்றது. ஆதலின், ஈண்டுப் புனருக்தியின்றாமெனக. அவ்வாசனைவடிவ மூலம் எத்தன்மையதெனின் கருமானுபந்தியாம். ஆண்டுத் தருமாதருமவடிவ கருமம் எதற்குப் பின்னுண்டாகத்தக்கதாமோ அது கருமானுபந்தியாம்; அதாவது அந்த ராகத்துவேஷமுதலிய வாசனைவடிவ அவாந்தரமூலம் முதலில் தானுண்டாகிப் பின்னர் தருமாதருமவடிவ கருமத்தை யுண்டாக்குகின்றது. ஆண்டு அவ்வாசனைவடிவமூலம் எந்த ஸ்தானத்தில் அந்தக் கருமத்தையுண்டாக்குகின்றது என்றருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அந்தஸ்தானத்தை அருளிச்செய்கின்றார். 'மநுஷ்யலோகே இதி' ஆண்டு, மநுடனாகிய

வுலகம் மநுடலோகமாம் அதாவது அதிகாரியாகிய பிராமணன் முதலிய தேகங்கள் மநுடலோகமாம். அத்தன்மைய தேகங்களிடத்தே அவ்வாசனுவடிவமூலம் மிகுதியாய் அக்கருமத்தைவுண்டாக்குகின்றது. சாத்திரத்தில் மநுடனையே கருமாதிகாரியெனக் கூறியிருத்தலினென்க. (2)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் கூறிப்போந்த சம்சாரத்தில் அதிருவசனத்தன்மையைக்கூறி அதன் சேதனத்தின் உபாயத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா ।
அஶ்வத்தமேநம் ஸுவிரூடமூலம் அஸங்கஶஸ்த்ரேண த்ருடேந சித்த்வா ॥ (3)

ப-ம். 5 ந 4 ரூபம் 2 அஸ்ய 1 இஹ 3 ததா 6 உபலப்யதே 8 ந 7 அந்த: 11 ந 9 ச 10 ஆதி: 14 ந 12 ச 13 ஸம்ப்ரதிஷ்டா 17 அஶ்வத்தம் 16 ஏநம் 15 ஸுவிரூடமூலம் 19 அஸங்கஶஸ்த்ரேண 18 த்ருடேந 20 சித்த்வா

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சம்சாரத்திலுள்ள பிராணிகள் இச்சம்சார விருக்ஷத்தினது அவ்விதமான சொரூபத்தையே யுணரார்; அந்தத்தையு முணரார்; ஆதியையுமுணரார்; மத்தியத்தையுமுணரார். அத்தன்மைய திடமான மூலத்தையுடைய இந்த அச்சுவத்தவடிவ சம்சார விருக்ஷத்தை மிகத் திடமான வைராக்கியவடிவ கட்கத்தாற் சேதித்துப் பிரமமுணரப்பாலதாம். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் வர்ணிக்கப்பட்ட சம்சாரவடிவ விருக்ஷம் எத்தன்மையதெனின், இச்சம்சாரத்திலுள்ள பிராணிகள் இச்சம்சார விருக்ஷத்தினுடைய கூறிப்போந்த ஊர்த்துவமூலம் அதோசாகை என்பது முதலிய சொரூபத்தை அவ்விதமாகவே யுணரார்கள். என்னை, கனுப்பொருள், கானனீர், மாயையுண்டாக்கிய பொருள், கந்தருவ நகரம் என்னுமிவ்வனைத்தும் மித்தையானதால் திருஷ்டநஷ்ட [காணக்கெடுஞ்] சொரூபமுடையவைகளேயாம். அதுபோல இச்சம்சார விருக்ஷமும் மித்தையானதால் திருஷ்டநஷ்ட சொரூபமுடையதேயாம்; ஈண்டு எப்பொருள் காணும்போழ்தே கெடுகின்றதோ அது திருஷ்ட நஷ்டமாம். அத்தன்மைய சுபாவமுடைய இச்சம்சாரவிருக்ஷத்தின் கூறிப்போந்த ஊர்த்துவமூலம் அதோசாகை என்பது முதலிய சொரூபம் இச்சீவர்கட்குக் கட்புலப்படுவதில்லை. இதனானே இவ்விருக்ஷத்தின் முடிவுவடிவ அந்தமுந் தோற்றுவதில்லை. அதாவது இத்துணைப்போழ்து கழிந்தபின்னர் இச்சம்சார விருக்ஷம் முடிவையடையும் என இதன் அந்தமும் அறியப்படவில்லை என்பதாம். இதனானே இவ்விருக்ஷத்தின் ஆதியுந் தோற்றவில்லை; அதாவது இக்காலமுதற்கொண்டு இவ்விருக்ஷம் பிரவிருத்தியானது என இதன் ஆதியும் உணரப்படவில்லை என்பதாம். இது அநாதியாதலின் இதன் நிலைத்தல் வடிவப்பிரதிஷ்டையுந் தோற்றவில்லை. அதாவது மத்தியமுந்தோற்றவில்லை என்பதாம். என்னை, ஆதியந்தங்களின் அபேட்சையானே மத்தியமெனப்படுகின்றது அவைகள் சித்தியாதனவாகவே மத்தியமும் சித்திக்கவில்லை. இவ்வாறு இச்சம்சாரவிருக்ஷம் சேதித்தற்கருமையாதலினானும் அனர்த்தத்தைத்தருவதாதலினானும் அநாதியஞ்ஞானத்தால் மிகத்திடமாய்க்கட்டப்பட்ட மூலத்தையுடைய கூறிப்போந்த அச்சுவத்தவடிவ சம்சாரவிருக்ஷத்தைத் திடமான அசங்ககட்கத்தால் இவ்வதிகாரி சேதிக்கவேண்டும். ஈண்டு விடயசுகேச்சை சங்கமாம். அதற்கு விரோதியாகிய வைராக்கியம் அசங்கமாம் அதாவது மூவேடணைகளின்தியாகம் அசங்கமாம். உலகத்திலுள்ள கோடரி முதலிய சஸ்

திரங்கள் உலகத்திலுள்ள விருக்ஷத்திற்கு விரோதிகளாகின்றனபோல வைராக்கியமும் ராகத்துவேட முதலியவடிவ சம்சார விருக்ஷத்திற்கு விரோதியாம். ஆதலின் வைராக்கியமும் சஸ்திரவடிவமாம். அந்த வைராக்கியவடிவ அசங்கசஸ்திரம் எத்தன்மையதெனின் திடமாம் அதாவது நானே பிரமசொரூபம் என்னும் பிரமஞானத்தின் உத்கடவேட்கையால் வலியுறுத்தப்பட்டது; அன்றியும் உலகத்திலுள்ள சஸ்திரம் சாணைக்கல்லிற்றீட்டுவதாற் கூராகின்றதுபோல மறித்துமறித்தும் விவேகாப்பியாசத்தால் தீக்ஷணமாக்கப்பட்டது. அத்தன்மைய திடாசங்கசஸ்திரத்தால் இவ்வதிகாரி கூறிப்போந்த அச்சம்சார விருக்ஷத்தை மூலத்தோடு சேதிக்க வேண்டும்; அதாவது வைராக்கியம் சமம் தமம் என்பது முதலிய சாதன சம்பத்தியால் சர்வகருமங்களையுஞ் சந்நியாசஞ்செய்தல்வேண்டும். இதுவே அதனைச்சேதிப்பதாம் என்க. (3)

(அ-கை.) ஹே பகவன்! அத்தன்மைய சம்சாரவடிவ அச்சுவத்த விருக்ஷத்தை அசங்கசஸ்திரத்தால் சேதித்த பின்னரும் இவ்வதிகாரியாற் செயற்பாலது தோன்றுண்டோ அல்லது இத்துணைமாத்திரத்தானே கிருத கிருத்தியத்தன்மையோ என்றர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அதன்பின் செய்யற்பாலதை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ததஃ பதம் தத்பரிமார்கிதவ்யம் யஸ்மிந்கதா ந நிவர்த்தந்தி பூயஃ ।
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யதஃ ப்ரவ்ருத்திஃ ப்ரஸ்ருதா புராணீ ॥ (4)

ப-ம். 1 ததஃ 3 பதம் 2 தத் 4 பரிமார்கிதவ்யம் 5 யஸ்மிந் 6 கதாஃ 8 ந 9 நிவர்த்தந்தி 7 பூயஃ 15 தம் 18 ஏவ 10 ச 16 ஆத்யம் 17 புருஷம் 19 ப்ரபத்யே 11 யதஃ 12 ப்ரவ்ருத்திஃ 14 ப்ரஸ்ருதா 13 புராணீ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அப்பிரமபதமே உணரத்தக்கது. எப்பதத்தில் நிலைத்தவனும் வித்துவான் மறித்தும் ஜென்மத்தையடைவதில்லையோ எப்புருடனால் இச்சம்சார விருக்ஷத்தின் பிரவிருத்தி அநாதியாய் வந்துகொண்டிருக்கிறதோ அந்த ஆதியாகிய புருடனுக்கே சரணாகதியானேன். (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வதிகாரி அந்த வைராக்கியவடிவ அசங்க சஸ்திரத்தால் கூறிப்போந்த சம்சாரவடிவ விருக்ஷத்தை மூலத்தோடு சேதித்த பின்னர்க் கற்றொழுகிய குருவின்பாற்சென்று இச்சம்சாரவடிவ விருக்ஷத்தின் ஊர்த்துவத்திலுள்ள சுத்தப் பிரமவடிவவைணவபதம் ஆகிய 'தத்விஷ்ணோஃ பரமம்பதம்' என்பது முதலிய சுருதிகளாற் கூறப்பட்ட அந்தச் சுத்தப்பிரமபதமே இவ்வதிகாரியால் சிரவண மனனவடிவ வேதாந்த வாக்கியங்களின் விசாரத்தால் உணரற்பாலதாம்.

ஆ-சு. ஸோऽந்வேஷ்டவ்யஃ ஸ விஜிஜ்ஞாஸிதவ்யஃ ।

(பொ-ள்.) அந்தச் சுத்தப்பிரமமே இவ்வதிகாரியால் தேடத்தக்கது. அங்ஙனமே அந்தச் சுத்தப்பிரமமே இவ்வதிகாரிக்கு அறிய விரும்பத்தக்கது என்பதாம். ஆண்டு நெறிக்கண் பொருளைத்தேடல் அந்வேஷணமாம். அற்றேல் ஹே பகவன்! சர்வ கருமசந்நியாச பூர்வக சிரவணமுதலிய சாதனங்களால் இவ்வதிகாரியாலுணரத்தக்க பதம் யாது என்றருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'யஸ்மிந்கதா ந நிவர்த்தந்தி பூயஃ' என. ஹே அர்ச்சுன! எப்பதத்தில் அகம்பிரமாஸ்மி என்னும் ஞானத்தாலடையப்பட்ட

தத்துவஞானி மறித்தும் சம்சாரத்தையடைவதில்லையோ அதாவது மீண்டுஞ் சன்மத்தையடைவதில்லையோ அந்த அத்துவிதீயப் பிரமவடிவபதமே இவ்வதிகாரியால் சிரவணமுதலிய சாதனங்களால் உணரத்தக்கதாம். அற்றேல், ஹே பகவன்! அந்த நிர்க்குணப் பிரமபதம் எவ்வுபாயத்தா லுணரப்படும் என்றுணரும் வேட்கையுண்டாக அர்ச்சுனனுக்கு ஸ்ரீ பகவான் அதனையறியும் உபாயத்தை அருளிச்செய்கின்றார். ‘𑌤𑌮𑍇𑌵 𑌚𑌾𑌦𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇’ என. ஹே அர்ச்சுன! முன்னர்ப்பதசப்தத்தாற் கூறப்பட்ட நிர்க்குணப்பிரமவடிவ ஆதியான புருஷனையே அதிகாரியாகிய நான் சரணாகதியடைகின்றேன் என அப்பிரமத்தின் சரணாகதியானே அப்பிரமவடிவபதம் உணரப்படுகின்றதென்பதாம். ஆண்டு, சர்வ உலகத்தின் ஆதியில் இருக்கப்பட்டது ஆதியதாம்; இவ்வுலகனைத்தையும் அஸ்திபாதிப் பிரியவடிவத்தாற் பூரணம்பண்ணியது புருஷனும் அல்லது, இத்தேகவடிவ புரியில் அதிட்டானவடிவமாய்ச் சயனிப்பது புருஷனும். அத்தன்மைய ஆதியினுள புருஷவடிவ பரப்பிரமத்தின் நிரந்தர சிந்தனவடிவ அனன்ய பக்தியே அப்பரப்பிரமபதத்தின் சாட்சாத்காரத்திற்கு உபாயம் என்பதாம். அற்றேல், ஹே பகவன்! இவ்வதிகாரி சரணடைந்து வைணவபதத்தை யடையத்தக்க புருஷன் யார் என்றருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் ‘𑌯𑌤𑌃 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾 𑌪𑍁𑌰𑌾𑌣𑍀’ என. ஹே அர்ச்சுன! மாயையின் சம்பந்தத்தால் இந்த மாயாமய சம்சார விருக்ஷத்தின் அனாதிப் பிரவிருத்தியை நடத்திக்கொண்டிருக்கும் ஆதியினுள புருஷன். இந்திரசாலிகனால் மாயாமயமான யானை முதலியவைகளின் பிரவிருத்தியுண்டாவதுபோல எவ்வாதியினுள்ள புருஷனால் இம்மாயாமய சம்சாரவிருக்ஷத்தின் பிரவிருத்தியுண்டானதோ அந்த ஆத்ய புருஷனுடைய சரணப் பிராப்தியே அப்பதத்தை யுணர்வதற்குபாயமாம் என்க. (4)

(அ-கை.) இப்போது அந்த வைணவபதத்தின் ஞானபூர்வகம் அந்த வைணவபதத்தை யடையத்தக்க அதிகாரிக்கு அப்பதப்பிராப்தியின்பொருட்டு வேறு சாதனத்தையும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌾 𑌜𑌿𑌤𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌾 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌤𑍍𑌯𑌾 𑌵𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 ।
𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈-
𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍂𑌢𑌾𑌃 𑌪𑌦𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌤𑍍 ॥ (5)

ப-ம். 1 𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌨𑌮𑍋𑌹𑌾𑌃 2 𑌜𑌿𑌤𑌸𑌙𑍍𑌗𑌦𑍋𑌷𑌾𑌃 3 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌃 4 𑌵𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌾𑌮𑌾𑌃 6 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍈𑌃𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 5 𑌸𑍁𑌖𑌦𑍁𑌃𑌖𑌸𑌂𑌜𑍍𑌞𑍈𑌃 12 𑌅𑌮𑍂𑌢𑌾𑌃 8 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 11 𑌪𑌦𑌂 10 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 9 𑌤𑌤𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மானமோகங்களை நிவிருத்தித்தவனும் சங்கதோஷங்களைச் சயித்தவனும் பரமான்மவடிவ விசாரத்தில் தற்பரனும் காமம் நீங்கினவனும் சுகதுக்கங்களெனும் சீதோஷ்ணமுதலிய துவந்துவங்களைப் பரித்தியாகம்பண்ணினவனுமாகிய வித்துவான் அந்த அவ்வியயபதத்தை அடைவன். (5)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கருவமெனும் அகங்காரம் மானமாம்; விவேகமின்மை மோகமாம் அல்லது விபரியயம் மோகமாம். அவைகளினின்றும் வெளிப்பட்டவர்கள் நிர்மானமோகர்களாவர்கள் அல்லது அவைகளை நிவிருத்தித்தவர்கள் நிர்மானமோகர்களாவர்கள். தோஷசங்கங்களைச்செயித்தவர்கள் அதாவது பிரியாப்பிரிய வஸ்துக்கள்வந்தடையினும் ராகத்துவேஷ மின்றியவர்கள். அல்லது சங்கதோஷங்களை ஜயம் பண்ணினவர்கள். ஈண்டுச் சங்கசப்தத்தாலோ நான் கருத்தன் எனக் கருத்திருத்துவாபிமானத்தைக் கொள்ளவேண்டும். தோஷசப்தத்

தால் ராகத்துவேஷ முதலிய தோஷங்களைக்கொள்ளவேண்டும். அத்தியாத்ம நித்தியர்கள் பரமான்மாவினது உண்மைவடிவ விசாரத்தினிரந்தரந்தற்பரர்கள். விநிவிருத்தகாமர்கள். ஆண்டு விசேடமாய் விடயபோகவடிவ காமநீங்கியவர்கள்; அதாவது விவேகவைராக்கியத்துவாரா சர்வ கருமங்களையுந் தியாகம் பண்ணியவர்கள் விநி விருத்தகாமர்களாவர்கள். சுகதுக்கங்கட்குக் காரணமானதால் சுகதுக்கங்களெனும் சீதோஷ்ணம் பசிதாகம் என்பது முதலிய துவந்துவங்களைப்பரித்தியாகம் பண்ணினவர்கள். ஒரு மூலப் புத்தகத்திலோ 'ஸுகது:கஸம்ஜ்ஞை:' எனவும் பாடமுளது. அதற்கு சுகதுக்கங்களோடுசங்கமெனுஞ் சம்பந்தமுடைய சீதோஷ்ண முதலிய துவந்துவங்களைப் பரித்யாகம் பண்ணினவர்கள் என்றர்த்தம் பண்ணவேண்டும். இத்தன்மைய மூடமின்றியவர்கள் அதாவது வேதாந்தப் பிரமாணத்தாலுண்டாகிய இனிய வான்மஞானத்தால் ஆன்மாஞ்ஞானத்தை நிவிருத்தித்த தத்துவஞானிகளே கூறிப்போந்த விநாசமற்ற பரப்பிரம பதத்தை யடைகின்றார்கள் என்பதாம். (5)

(அ-கை.) ஆண்டுக் கூறிப்போந்த சாதனங்களாலடையத்தக்க அத்துவிதீய நிர்க்குணப் பிரமவடிவ வைணவபதத்தையே இப்போது விசேடமாயருளிச் செய்கின்றார்.

சு-ம். ந தத்பாஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக: ।
யத்கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥ (6)

ப-ம். 7 ந 5 தத் 8 பாஸயதே 6 ஸூர்ய: 10 ந 9 ஶஶாங்க: 12 ந 11 பாவக:
1 யத் 2 கத்வா 3 ந 4 நிவர்த்தந்தே 14 தத் 16 தாம 15 பரமம் 13 மம.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்பதத்தை யடைந்து தத்துவஞானி புனராவிருத்தியை யடைவதில்லையோ அப்பதத்தைச் சூரியனும் சந்திரனும் அக்கினியும் பிரகாசிப்பிக்கின்றதின்றாம். விஷ்ணுவாகிய எனது சொரூப பூதமாகிய அப்பதம் எல்லாவற்றினு மேலாகிய சுயம்பிரகாசவடிவமாதலின் என்க. (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த சாதனங்களால் எந்த நிர்க்குணமாகிய அத்துவிதீயப் பிரமவடிவ வைணவபதத்தையடைந்து தத்துவஞானியானவன் புனராவிருத்தியை யடைவதில்லையோ அதாவது மீண்டுஞ் சன்மத்தை யடையவில்லையோ, அந்தப் பரப்பிரமவடிவ பதத்தை உலகனைத்தையும் விளக்குமாற்றலுடைய சூரியனும் பிரகாசியான். அற்றேல், சூரியன் அத்தமிக்கினும் சந்திரனாலாயவொளி நிகழக்காண்டலின் அச்சந்திரனே அப்பதத்தை விளக்குவன் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் 'ந ஶஶாங்க:' என. சந்திரனும் அப்பதத்தைப்பிரகாசியான். அற்றேல், இரவிமதிகளில்லாவிடத்தும் தீயாலாயவொளி நிகழக்காண்டலின் அத்தீயே அப்பதத்தை விளக்கும் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் 'ந பாவக:' என. அக்கினியும் அப்பதத்தைப் பிரகாசியாது. அற்றேல் இரவி மதி தீக்கள் அப்பதத்தை விளக்குதற்கேலாதன என்னும் பிரதிக்ஞை மாத்திரத்தா லப்பொருட்சித்தியாதல் கூடாது. அங்ஙனமாகிலோ மலடிமைந்தனிருக்கின்றான் என்னும் பிரதிக்ஞை மாத்திரத்தானே மலடிமைந்தனுஞ் சித்தியாதல் வேண்டும்; சித்தியோ இன்று. ஆதலின் பிரதிக்ஞைசெய்து அப்பொருட்சித்தியில் யாதேனும் ஹேது கூறற்பாலது. அவ்வேது யாது என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அதில் அப்பரப்பிரமத்தின் சுயம்பிரகாசவடிவ ஹேதுவை அருளிச்செய்கின்றார் 'தத்தாம பரமம் மம' என. அர்ச்சுன! எதனால் அப்பதம் வியாபக விஷ்ணுவாகிய எனது சொரூபவடிவதாமமும் அதாவது சுவப்பிரகாசவடிவமும்

இரவி மதி முதலிய சர்வசடப்பொருள்களை விளக்குவதும் பரமமும் அதாவது எல்லாவற்றினும் மேலையதுமாமோ அதனால் அந்தச்சந்திரன் முதலியோர்கள் அப்பதத்தைப்பிரகாசியார்கள். உலகத்திலும் எப்பொருள் எவ்வொளியால் விளக்கப்படுகின்றதோ அவ்விளக்கப்படும்பொருள் தன்னையொளிர்விக்குமொளியை விளக்கற் கேலாதது. சூரியன் ஒளியால் விளக்கப்பட்ட குடமுதலிய பதார்த்தங்கள் தம்மையொளிர்விக்குஞ் சூரியவடிவ ஒளியை விளக்குதற்கேலாதனபோல இந்தச் சூரியசந்திரன் முதலிய சடவொளிகளும் தம்மையொளிர்விக்கும் சைதன்ய பரப்பிரமவடிவ சோதியை விளக்கற்கேலாதனவாம். இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் இவ்வநுமானத்தைக் குறிப்பித்தருளினர். இரவி மதி முதலியவைகள் பரப்பிரமத்தை விளக்குவனவன்று; அதனால் விளக்கப்பட்டனவாதலின் எப்பொருள் எவ்வொளியால் விளங்குகின்றதோ அப்பொருள் தன்னையொளிர்விக்கும் அந்த வொளியைப் பிரகாசியாது குடமுதலிய பொருள்கள் சூரியனைப்பிரகாசியாதன போல என்பதாம். இது சுருதியிலுங் கூறப்பட்டுள்ளது.

ஆ-சு. ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி: ।
தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ॥

(பொ-ள்.) அப்பிரமவடிவ பதத்தைச் சூரியனும் சந்திரனும் உடுக்கணங்களும் மின்னலும் பிரகாசித்தற் கேலாதனவாம். ஆதலின் சிற்றொளியையுடைய இவ்வக்கினி அப்பிரமத்தைப் பிரகாசஞ்செய்வ தெங்ஙனம்; மற்றே பிரகாசியாது. அப்பிரமம் பிரகாசமான பின்னரே இவ்வுலகனைத்தும் விளங்குகின்றது அங்ஙனமே அப்பரப்பிரமத்தின் பிரகாசவடிவ தேஜசால் இவ்வுலகனைத்துந் தோற்றுகின்றது என்பதாம். ஆண்டும் அப்பிரமவடிவ பதத்திற்குச் சுயம்பிரகாசத்தன்மை கூறியதால் ஸ்ரீ பகவான் இச்சங்கையை நீக்கியருளினர். அது வருமாறு:—அந்தப் பரப்பிரமவடிவ வைணவபதம் வேத்தியமோ அல்லது அவேவா; அதாவது, யாதாமொரு ஞானத்திற்கு விடயமாவதோ அல்லது ஆகாததோ. வேத்தியமெனிலோ எப்பொருள் வேத்தியமாமோ அப்பொருள் தனக்கயலாய் அறிபவனையவாவல் ஒருதலையாம். குடமுதலிய வேத்தியப் (அறியப்படு) பொருள்கள் தமக்கயலாய் ஒருதலையா யறிபவனை அவாவுகின்றனபோல அந்த வேத்தியபதமும் தன்னின் வேறாய் யாதேனுமொரு அறிபவனை அவசியமவாவும். ஆதலின் உனது மதத்தில் துவைதத்தன்மை சித்தியாம். அவேத்தியமாமெனும் இரண்டாவது பக்ஷத்தைக் கொள்ளிலோ அப்பதம் புருடார்த்தமல்லாததெனை வரும். அறியப்படாதபதத்தில் புருடார்த்த வடிவத்தன்மை சம்பவியாமையின் என்னு மிச்சங்கையை நீக்கியருளினர் என்பதாம். என்னை? அந்தப் பரப்பிரமரூபபதம் அவேத்தியமாயினும் தான் அபரோட்ச வடிவமேயாம். 'யத்ஸாக்ஷாத் அபரோக்ஷாத் ப்ரஹ்ம' எந்தப்பிரம நேரே யபரோட்சமோ என்பதாம். ஆதலின் துவைதப் பிராப்தியும் புருடார்த்தத்தன்மையின்மையும் ஆகாதென்க. ஆண்டு, அப்பரப்பிரமவடிவ பதத்தில் அவேத்தியவடிவத்தன்மையை ஸ்ரீ பகவான் 'ந தத்பாஸயதே ஸூர்ய' என்னுஞ் சுலோகத்தில் சூரியாதிகளால் விளக்கப்படாத்தன்மைவடிவ ஹேதுவால் அருளிச்செய்தனர். எல்லாவற்றின் பிரகாசகத்தன்மையால் தம்மபரோட்சத்தன்மையோ 'யதாதித்யகதம் தேஜ:' என மேற்கூறப்படுஞ் சுலோகத்தில் ஸ்ரீ பகவான் அருளிச்செய்வார். இவ்வாறு இரண்டு சுலோகங்களால் ஸ்ரீ பகவான் 'ந தத்ர ஸூர்யோ பாதி' என்னுஞ் சுருதியின் இரண்டுவிபாகார்த்தத்தை அருளிச்செய்தனர் என்பதாம். ஒரு வியாக்கியானத்திலோ 'ந தத்பாஸயதே ஸூர்ய' என்னுஞ்சுலோகத்திற்கு இவ்வர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது.—

83

அப்பரப்பிரமவடிவபதத்தைச் சூரியனும் பிரகாசியான்; என்னை? அப்பதம் உருவ முதலிய குணமின்றியதாதலின் கட்புலப்படுவதில்லை. உருவமுடைப்பொருளே கட்புலப்படுவதாம். அந்த வுருவுடைப்பொருள்களோ சட்சுவிற் கநுக்கிரகிக்கும் சூரியனால் பிரகாசிக்கப்படுகின்றன. உருவமுடைய கடமுதலிய பொருள்கள் கட்புலப்படுவதால் சூரியனால் விளங்குகின்றனபோல இப்பரப்பிரமவடிவபதமோ உருவமுடையதாய்க் கட்புலப்படாமையின் இப்பதத்தை அச்சூரியனும் பிரகாசியான். ஆண்டு 'ந தத்ர சக்ஷுர்கச்சதி ந சக்ஷுஷா க்ருஹ்யதே' என்பது முதலிய சுருதிகளில் அப்பரப்பிரமம் கட்புலப்படாததென்று கூறப்பட்டிருக்கிறது. இத்துணைக் கூறியதால் ஸ்ரீ பகவான் அப்பதத்தில் வெளியிந்திரியங்களனைத்தின் நீக்கத்தை அருளிச்செய்தனர். இப்போது அப்பதத்தில் மனத்தின் வியாவிருத்தியை அருளிச்செய்கின்றார். 'ந சசாங்க:' என. ஹே அர்ச்சுன! அப்பதத்தைச் சந்திரனும் விளக்கான்; என்னை, எப்பொருள் மனத்தாற் கிரகிக்கப்படுகின்றதோ அவ்வஸ்துவையே அம்மனத்திற் கநுக்கிரகம்பண்ணும் சந்திரன்விளக்குவன் இப்பரப்பிரமவடிவபதமே மனத்தாற் கிரகிக்கப்படாமையின் சந்திரனாலும் பிரகாசித்தற்கேலாததாம். ஆண்டு, 'யந்மநஸா ந மநுதே' என்பது முதலிய சுருதிகள் அப்பதத்தில் மனோவிடயத்தன்மையை நிவிருத்திக்கின்றன. அப்பதத்தை அக்கினியும் பிரகாசியாது; என்னை? எப்பொருள் வாக்கிந்திரியத்திற்கு விடயமாமோ அப்பொருளையே அவ்வாக்கிந்தியத்திற் கநுக்கிரகிக்கும் அக்கினி பிரகாசிப்பிக்கும். வாக்கிந்திரியத்திற்கு விடயமிலாப்பொருளை அவ்வக்கினி பிரகாசியாது. 'யத்வாசா நப்யுதிதம் ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா' என்பது முதலிய சுருதிகள் அப்பதத்தில் வாக்கிந்தியத்தின் விடயத்தன்மையை நிவிருத்திக்கின்றன. ஆதலின் அப்பரப்பிரமத்தை அவ்வக்கினி விளக்கற்கேலாததாம். ஹே அர்ச்சுன! அப்பரப்பிரமபதம் சட்சு மனவாக்குசட்கு விடயமாகாமையின் தூல சூட்சுமகாரணவடிவ சர்வப் பிரபஞ்சங்களுமற்ற பிரத்தியக்கத்துவிதீயமாம். இவ்வாறு 'நாத்ர: ப்ரஜ்ஞம் நப்ரஜ்ஞம் ப்ரஜ்ஞாநகநம் அத்ருஷ்டம் அவ்யவஹார்யம் அக்ராஹ்யம்' என்பது முதலிய சுருதிகள் சர்வ தருமங்களுமற்றதாய் அப்பிரத்தியக்கபின்ன அத்துவிதீயப் பிரமத்தைக்கூறுகின்றன. அவ்வத்துவிதீயப் பிரமம் பரமேசுராகிய எமது பரமதாமமாம்; அதாவது பரம பாவமின்றிய அந்தக்கரணவிருத்திவடிவ ஞானத்தினும் வேறாகிய சின்மாத்திர சோதிவடிவமாம். ஈண்டு இராகுவின் சிரம் என்னும் வாக்கியத்தில் இராகு பதத்தினீற்றில் சம்பந்தவாசக ஆறும் வேற்றுமையிருக்கினும் இராகுவினுடைய தலை எனப் போதமுண்டாவதில்லை; மற்றோ இராகுவினும் வேறன்று சிரம் என அபேதஞானமேயுண்டாகின்றதுபோல 'தத்தாம பரமம் மம' என்னும் வாக்கியத்தில் 'மம' [என்னுடைய] என்னும் பதத்தினீற்றில் சம்பந்தவாசக ஆறும் வேற்றுமையிருக்கினும் என்னுடைய பரமதாமம் எனப் போதமுண்டாகாது. மற்றோ, அந்த அத்துவிதீய சுவயஞ்சோதிவடிவ பரமபதம் பரமேசுராகிய எமது சொரூபமேயாம் என்னும் அபேதஞானமே யுண்டாகின்றது என்பதாம். ஹே அர்ச்சுன! அவ்வத்துவிதீய சுவயஞ்சோதியாகிய பிரமபதம் பரமேசுராகிய எமது சொரூபமேயாதலினானே அப்பதத்தை அகம்பிரமாஸ்மி என்னும் ஞானபூர்வகமடைந்து வித்துவான் மறித்தும் ஆவிருத்தியையடையான்; அதாவது மறித்துஞ் சன்மத்தையடையான்; என்னை? புனராவிருத்திக்குக் காரணமான மூலாஞ்ஞானம் அவனுக்குப் பரப்பிரமமாகிய எமது அபேதஞானத்தால் நீங்கினமையின் அத்தத்துவஞானி புனராவிருத்தியை யடைவதில்லை என்க. இவ்வாறு இச்சுலோகத்திற்கு வியாக்கியானஞ் செய்திடினே 'யதா ஸௌம்ய வைஷ்வாநரோ ந ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்னி: தமேவ பாந்தம்' என்னு மிச்சுருதியர்த்தத்திற்கு இச்சுலோகத்தில் அநுகூலத்தன்மையுண்டாம்.

சுருதியின் பொருளிதுவாம் :—இவ்வதிகாரி எப்போது இந்த அதிருசிய அனான்ம அநிருக்த அனிலயப்பிரமத்தின்கண் பயமின்றிய நிலைமையையடைகின்றானோ அப்போது இவன் புனராவிருத்தியின் பயமின்றிய பிரமபாவத்தையடைகின்றான் என்பதாம். இச்சுருதியில் அதிருசிய முதலிய நான்கு விசேடணங்கள் பிரமத்திற் குக் கூறப்பட்டன அவற்றுள் கட்புலப்படாமை அதிருசியமாம். இவ்விசேடணத் தால் அப்பிரமத்தில் சூரியனாலாய விளக்கத்தன்மை நிடேதிக்கப்பட்டது. மனவ டிவ ஆன்மாவிற்கு விடயமாவது ஆன்மியமாம். அதனின் வேறானது அனான்மிய மாம். இந்த விசேடணத்தால் அப்பிரமத்தில் மனத்திற் கவிடயத்தன்மையைக்கூ றிச் சந்திரனாலாய விளக்கத்தன்மை நிடேதிக்கப்பட்டது. தூலசூட்சுமவடிவ உல கனைத்தும் எதில் இலயத்தையடைகின்றதுவோ அது நிலயமாம். அத்தன்மைய அவ்வியாகிருதவடிவ காரண நிலயத்தினும் வேறாயது அநிலயமாம். இதனானே அப்பிரமம் அநிருத்தமாம்; அதாவது கூறற்கரியதாம். இவ்விசேடணத்தால் அப்பி ரமத்தினிடத்தில் வாக்கிந்தியத்தின் அவிடயத்தன்மையைக்கூறி அக்கினியாலாய விளக்கம் நிடேதிக்கப்பட்டது என்பதாம். சிலபேதவாதிகளோ 'நதஜூாஸயதெ ஸூயொ-உ' இச்சுலோகத்திற்கு இவ்வாறு அருத்தஞ் செய்கின்றனர். சூரியன் சந்திரன் அக்கினி என்பவைகளாற் பிரகாசிக்கப்படாததும் அர்ச்சிராதிமார்க்கத் தாலடையத்தக்கதும் பிரமலோகத்தினும் மேலாயுள்ளதும் அப்பிராகிருதமும் நித் தியமுமாகிய வைணவபதம் தேசாந்தரத்திலிருக்கின்றது. அப்பதத்தை அர்ச்சி ராதி மார்க்கத்துவாராவடைந்து இவ்வதிகாரி புனராவிருத்தியையடைவதில்லை என்பதாம் என்னு மிப்பேதவாதியின் அர்த்தம் மிகமுரணுடையதாம். என்னை? 'நாடூவ ஐஷெ்நூஹதயொவமஹூதெ' என்னுஞ் சுலோகத்தில் சர்வ திருசியப் பொருள்களும் மித்தியாவடிவமேயெனக் கூறப்பட்டன. 'அதொநூ ஊாத்து-உ°' இப்பரமான்மாவிற்கயலான சர்வ அனான்மபதார்த்தங்களு மித்தையாம் என்னு மிச்சுருதியும் பரமான்மாவிற்கயலான சர்வ திருசிய பதார்த்தங்களையும் மித்தையெ னக்கூறுகின்றது. இத்திருசியத்தன்மை இவ்வுலகத்தின்கண் ணிருப்பதுபோல வைணவபதத்திலுஞ் சமமாமாதலின் தேசாந்தரத்திலுள்ள வைணவபதத்தி லும் அம்மித்தியாத்தன்மை அவசியமாய்க் கொள்ளற்பாலதாம். அத்தன்மைய வுலகத்தையடைந்த புருஷனுக்கும் புனராவிருத்தியும் அவசியமாயுண்டாம். ஆத லின் இப்பேதவாதியின் வியாக்கியானம் நலமுடைத்தன்று மற்றை முந்திய வியாக் கியானமே நலமுடைதாம் என்க. (6)

(அ-கை.) - ஹே பகவன்! 'யஜூகூா நநிவத்ூ-உனெ' என்னும் தங்களுடைய வாக்கியம் அசங்கதமாம்; என்னை? இவ்வதிகாரி ஒருபோது அப்பதத்திற் செல்வ னேல் அதினின்றும் அவசியமாய் நிவிருத்தியையுமடைவன்; துறக்கஞ்சென்றகருமி அதினின்றுந் திரும்புவதுபோல இவ்வதிகாரி ஒருகால் அப்பதத்தினின்றுந் திரும் பானெனிலோ அப்பதத்திலுஞ் செலான். ஆதலின் இவ்வதிகாரி அப்பதத்திற் செல்கின்றான் அதினின்று மீண்டுந் திரும்பான் என்னும் வாக்கியங்கள் தம்முள் முரணுடையனவாம். எது யாண்டுச்செல்கின்றதோ அது அவ்விடத்தினின்றுந் திரும்பிவருதல் ஒருதலையாம். இது சாஸ்திரத்திலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ஸவெ-உக்ஷயாஂ தாநிஂயாஃ வதநாஷாஃ ஸஂுூயாஃ ।

ஸஂயொமாவி வ்யொமாஷா ஊணாஷஂ ஹிஜீவிதஂ ॥

(பொ-ள்.) எப்பொருள் விருத்தியுடையதாமோ அது அந்தத்தில் அவசிய மாய் க்ஷயமுடையதாம். எப்பொருள் மேலிடத்தை யடைந்ததோ அப்பொரு ளீற்றில் அவசியமாய்க் கீழேவிழும். எப்பொருள் சம்யோகமுடையதோ அப்

பொருள் ஈற்றில் அவசியம் வியோகமுடையதாம். எப்பொருள் சனித்ததோ அப்பொருள் ஈற்றில் மரணத்தையடையும் என்பதாம். ஆன்ம வஸ்துவி னடைவே புனராவிருத்தியை யுடையதாம். ஆன்மப் பிராப்தியோ அந்நியமன்று எனத் தாங்கள்கூறினும் அதுவும் பொருந்தாது; என்னை? 'ஸதாஸோம்யததா ஸம்பந்நோபவதி' என்னுஞ் சுருதி சுழுப்தியவத்தையில் சர்வப்பிராணி மாத் திரத்திற்கும் ஆன்ம பாவப் பிராப்தியைக்கூறுகின்றது. ஆனால் அவ்வான்மபாவப் பிராப்தி அந்தத்தில் புனராவிருத்தியை யுடையதாம். ஒருகால் சுழுப்தியில் ஆன்ம பாவத்தையடைந்த பிராணிகட்கு நனவில் புனராவிருத்தியைக் கொள்ளாவிடின் அச்சுழுப்திமாத்திரத்தானே சர்வப்பிராணிகளும் முக்தராவார்கள். ஆதலின் முக்தர்களானவர்கள் மீண்டு மெழும்பாதிருத்தல் வேண்டும். அந்தச்சுழுப்திக ளுடைய புனராவிருத்தியோ காணப்படுகின்றது. ஆதலின் அப்பரப்பிரமபதப் பிராப்தியில் 'யத்கத்வா' [எதை யடைந்து] எனக்கூறுதல் சம்பவியாது. அந்தக்க மனத்தைக் கௌணமாகக்கொள்ளினும் அதினின்று நிவிருத்தியின்மை சம்ப வியாது. இவ்வாறு அர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் உத்தரமருளிச் செய்கின்றார். ஹே அர்ச்சுன! அந்தப்பரப்பிரமபதத்தை யடையப்பட்ட சீவான்மா அடையத்தக்க அப்பிரமத்தினின்றும் சிறிதும் வேறன்று; மற்றோ அபின்னமே யாம். இச்சீவான்மா பிரமரூபமே என்னுமர்த்தம் தத்துவமசி அகம்பிரமாஸ்மி பிரக்ஞானமானந்தம் பிரமம், அயமாத்மாப்பிரமம் என்பது முதலிய அநேக சுருதிகளிற் கூறப்பட்டிருக்கிறது. ஆதலின் 'யத்கத்வா நநிவர்த்தந்தே' என்னும் வாக்கியத்தாற் கூறப்பட்ட சீவனுடைய பிரமப்பிராப்தியானது துறக்கமுதலியன போல முக்கியமானதன்று; மற்றோ கௌணமாம். அதாவது அஞ்ஞான மாத் திரத்தானே வியவகிதமான பிரமத்தை அகம்பிரமாஸ்மி என்னும் அதன் ஞான மாத்திரத்தானே அடைதல் கூறப்படுகின்றது. ஆண்டு எப்பட்சத்தில் அந்தக்கர ணத்தில் அல்லது அவித்தையிலுள்ள பிரமப் பிரதிவிம்பமே சீவனாவனோ அப் பட்சத்திலோ சலத்திற் பிரதிபலித்த சூரியன் சலமபாவமாகவே பிம்பபூத சூரி யனை யடைகின்றனன். அந்த விம்பபூத சூரியனினின்று அப்பிரதிவிம்பத்திற்குப் புனராவிருத்தியின்றியதுபோல அந்தக்கரணமுதலிய உபாதிகள் அபாவமாகவே இப்பிரதிபிம்பவடிவ சீவனும் அந்த நிருபாதிகப்பிரமவடிவத்தை யடைகின்றான். அப்பிரமத்தினின்றும் இச்சீவான்மாவிற்குப் புனராவிருத்தியில்லை. எப்பட்சத் தில் புத்தியவச்சின்னப்பிரமாம்சம் சீவனோ அப்பட்சத்திலோ கடவான் கடவடிவ வுபாதியொழியவே மாவானை யடைகின்றது. அம்மாவானினின்று அக்கடவா னிற்கு மீண்டும் புனராவிருத்தியின்றியதுபோல இச்சீவான்மாவிற்கும் அந்தப் புத்திவடிவ வுபாதியொழியவே அப்பிரமத்தையடைகின்றது. அதினின்றும் இதற் குப் புனராவிருத்தியில்லை. ஈண்டு உண்மையில் விம்பவடிவ சூரியனுக்கபின்னமான பிரதிவிம்பவடிவ சூரியனுக்கு அந்த விம்பவடிவ சூரியனையடைவும் அதினின்று திரும்பாமையும் கௌணமேயன்றி முக்கியமன்றாதல்போல் உண்மையில் பிரமா பின்ன இச்சீவான்மாவிற்கு அப்பிரமத்தினடைவும் அதினின்று திரும்பாமையும் கௌணமேயன்றி முக்கியமன்றாம். தன்னின் வேறான வஸ்துவினடைவு அதினி ன்று திரும்பாமையே முக்கியமெனப்படுகின்றது. இவ்வாறு உண்மையில் சீவப் பிரமங்கட்கபேதமாயினும் அவைகளின் பேதப்பிராந்தி கேவலம் அந்தக்கரணோ பாதிவசத்தானேயாம்; கடவடிவவுபாதி வசத்தால் கடவான் மாவானினும் பேத மெனப் பிராந்தி யுண்டாகின்றதுபோலவாம். அவ்வந்தக்கரண முதலிய உபாதிகள் நீங்கவே அப்பேதப்பிராந்தியும் நிவிருத்தியாகின்றது என்பதாம். சுழுப்தியவத்தை யிலோ சீவோபாதிவடிவ அந்தச் சமஸ்காரம் கருமமுதலியவைகளோடுகூடிய அந் தக்கரணம் தனது காரணவடிவ அஞ்ஞானத்தில் சூட்சுமமாய் நிலைத்திருக்கின்றதா தலின் அதினின்றே அவ்வந்தக்கரண மீண்டுமுண்டாகின்றது. ஆன்ம ஞானத்

தால் அவ்வஞ்ஞானம் கெடுமே அஞ்ஞானவடிவ காரணம் இலதாகவே அவ்வந்தக்கரண முதலிய காரியமாய பந்தங்களுண்டாய் மற்றே உண்டாகா. இதனுவிப்பொருள் பெறப்பட்டது. இச்சீவனுக்கு அஹம்பிரமாஸ்மி. என்னும் வேதாந்தவாக்கியஜன்ய சாட்சாத்காரத்தால் நான் பிரமமென் என்னும் அஞ்ஞானத்தினிவிருத்தியே ஸ்ரீ பகவானுல் 'யத்கத்வா' என்னும் வாக்கியத்தாற்கூறப்பட்டது. ஆன்ம சாட்சாத்காரத்தால் நிவிருத்தியாகிய அனுதியஞ்ஞானம் மறித்தெழுதலில்லையின் அதன் காரியவடிவ சம்சாரபாவமே ஸ்ரீ பகவானுல் 'நநிவர்த்ததே' என்னும் வாக்கியத்தாற் கூறப்பட்டது. ஆதலின் ஸ்ரீ பகவானுடைய வாக்கியத்திற் சிறிதளவும் முரணின்றாம். சீவனுடைய பாரமார்த்திகவடிவம் பிரமமே என்பது முன்னர்ப் பலமுறை கூறினோம். முன்னர்க்கூறிய வர்த்தங்களனைத்தையும் ஸ்ரீ பகவான் இதற்குப்பிந்திய சுலோகத்தாலருளிச்செய்வர். ஆண்டு இச்சீவான்மா உண்மையிற் பிரமவடிவமேயாமாதலின் பிரமசாட்சாத்காரத்தால் அஞ்ஞானம் நீங்கவே அப்பிரமவடிவத்தையடைந்த சீவன் அப்பிரமத்தினின்றும் மறித்தும் திரும்பான் என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் 'மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந:' என்னும் பாதிச் சுலோகத்தாலருளிச்செய்வார். சுழுப்தியவத்தையிலோ சர்வ காரியங்களின் சம்ஸ்காரத்தோடு அஞ்ஞானமிருத்தலினுலே சீவான்மாவிற்கு அச்சுழுப்தியினின்றும் மீண்டுஞ் சம்சாரப்பிராப்தியுண்டாகின்றது என்னு மர்த்தத்தை ஸ்ரீ பகவான் 'மந:ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி' என்னுஞ் சுலோகத்தால் திருவாய் மலர்ந்தருள்வர். பின்னர் உண்மையில் அசம்சாரிவடிவமாயினும் மாயையால் சம்சாரித்தன்மையை யடைந்ததும் புல்லறிவாளரால் தேகத்தோடு தாதான்மியபாவத்தைச்செய்யப்பட்டதுமாகிய இச்சீவான்மாவிற்கு அத்தேகத்தினும் வேறாந்தன்மையை ஸ்ரீ பகவான் 'ஶரீரம் யதவாப்நோதி' என்னுஞ் சுலோகத்தினுற்றிருவாய் மலர்ந்தருள்வர். சப்த முதலிய விடயங்களில் சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் செலுத்துகின்ற இச்சீவான்மாவிற்கு அவ்விந்திரியங்களினின்றும் வேறாந்தன்மையை 'ஶ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஶநஞ்ச' என்னுஞ் சுலோகத்தாற்றிருவாய் மலர்ந்தருள்வர். ஆண்டு இவ்வாறு தேகேந்திரியாதிகளினும் வேறாகிய ஆன்மாவை உத்கிராந்தி (வெளிப்படல்) முதலிய அவத்தைகளில் சர்வப் பிராணிகளும் பாராததென்னை என்னு மர்ச்சுனன் சங்கைக்கு விஷய வாசனையால் விக்ஷிப்தமனத்தோன் பார்க்கத்தக்கதாயினும் அவ்வான்மாவைப் பாரான் என்னு முத்தரத்தை ஸ்ரீ பகவான் 'உத்க்ராமந்தம் ஸ்திதம்வாபி' என்னுஞ் சுலோகத்தாலருளிச்செய்வார். ஆண்டு, 'உத்க்ராமந்தம்' என்னுஞ் சுலோகத்திலுள்ள 'பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ:' என்னும் வாக்கியார்த்தத்தை ஸ்ரீ பகவான் 'யதந்தோயோகிநஶ்சைநம் பஶ்யந்த்யாத்மந்யவஸ்திதம்' என்னுஞ் சுலோகத்தால் வருணித்தருள்வர் 'விமூடா நாநுபஶ்யந்தி' என்னும் வாக்கியார்த்தத்தையோ 'யதந்தோப்யக்ருதாத்மாநோ நைநம் பஶ்யந்த்யசேதஸ:' என்னும் பாதிச்சுலோகத்தாலருளிச்செய்வார். இவ்வாறு மேற்கூறும் சுலோக பஞ்சகங்களின் சம்பந்தவடிவ சங்கதி சித்தமானது, இப்போது மேலே அச்சுலோகங்களின் கேவலம் அக்ஷரப்பொருளையே வர்ணித்தருள்வர் என்பதாம்.

சு-ம். மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந: ।
மந:ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி ॥ (7)

ப-ம். 2 மம 3 ஏவ 4 அம்ஶ: 1 ஜீவலோகே 6 ஜீவபூத: 5 ஸநாதந: 7 மந:ஷஷ்டானி 9 இந்த்ரியாணி 8 ப்ரக்ருதிஸ்தானி 10 கர்ஷதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சம்சாரத்தில் பரமான்மாவாகிய எம்முடைய அம்சமே சனாதனமான சீவவடிவமாம். அச்சீவனே மனதை ஆறாவதாகவுடைய பிரகிருதிக்கண்ணுள்ள சுரோத்திரமுதலிய இந்திரியங்களை ஆகர்ஷணஞ்செய்கின்றான். (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உண்மையில் அம்சாம்சி பாவங்களின்றிய பரமான்மாவாகிய எம்முடைய மாயையாற் கற்பிக்கப்பட்ட அம்சம்போன்ற அம்சவடிவம் இச்சம்சாரத்திலிருக்கின்றது; அதாவது உண்மையில் அம்சாம்சி பாவங்களின்றிய சூரியனுக்கு நீரின்கண்ணுள்ள பொய்ப்பேதமுடைய அம்சம்போன்ற அம்சவடிவப் பிரதிவிம்பமுண்டானது போலவும்; உண்மையில் அம்சாம்சிபாவங்களின்றிய ஆகாயத்திற்குக் கடத்தின்கண்ணுள்ள பொய்ப்பேதமுடைய அம்சம்போன்ற அம்சவடிவ கடாகாய முண்டானதுபோல உண்மையில் அம்சாம்சி பாவங்களின்றிய பரமான்ம தேவராகிய எமக்கும் இச்சம்சாரத்தில் மித்திபா பேதமுடைய அம்சம்போன்ற அம்சமிருக்கின்றது அதுவே பிராணதாரணவடிவ உபாதியால் ஜீவபூகமானது; அதாவது கர்த்தா போக்தா சம்சாரி என்னும் மித்தியாப்பிரசித்தியை யடைந்தது. அந்தச்சீவரூப அம்சம் எத்தன்மையதெனின் சனாதனமெனும் நித்தியமாம்; அதாவது அந்தக்காணமுதலிய உபாதிகளாலாய பரிச்சின்னத்தன்மையை யடை யினும் உண்மையில் பரமான்மவடிவமேயாம்; என்னை? சுருதியில் அப்பரமான்மாவே இச்சரீரத்தில் சீவரூபமாய்ப்பிரவேசித்தது எனக் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. ஸ ஸஷ உஹவ்ரவிஷ் க்ஷநவாமெ ரஹ்ஃ।
தக்ஸ்ரஷ்ாத ஜெவாநு வ்ராவிமாக ॥

(பொ-ள்.) அப்பரமான்மதேவரே இச்சங்காதத்தில் நகத்தின் நுனிப்பாக முதற்கொண்டு பிரவேசித்தனர். அப்பரமான்மாவே இச்சங்காதத்தை யுண்டு பண்ணித்தாமே சீவவடிவமாய் இதிற் பிரவேசித்தது என்பதாம். ஆதலின் ஆன்ம ஞானத்தால் அஞ்ஞான நிவிருத்தியாகவே இச்சீவான்மாத் தனது சொரூபவடிவப் பிரமத்தையடைந்து அதினின்றும் புனராவிருத்தியை யடைவதில்லை என முன்னர்க்கூறிய அர்த்தம் பொருத்தமுடையதேயாம். அற்றேல் தனது சொரூபத்தை யடைந்தும் இச்சீவான்மா சுழுப்தியவத்தையினின்றும் மறித்தும் எவ்வாறு திரும்புகின்றது என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ஊநஷஷா ணி உதி' ஹே அர்ச்சுன! மனதை ஆறாவதாகவுடைய ஞானேந்திரியங்கள்; அதாவது இந்திரவடிவ ஆன்மாவிற்குச் சப்தமுதலிய விடயங்களின் உபலப்திக்குக்காரணவடிவத்தால் இலிங்கவடிவ சுரோத்திரமுதலிய இந்தியங்கள், நனவுகளுக்களின் போகஜனக கருமமொழியவே பிரகிருதியில் ஸ்திதமாகின்றன; அதாவது அஞ்ஞானவடிவப் பிரகிருதியில் சூட்சுமவடிவமாயிருக்கின்றன. அத்தன்மைய மனத்தோடுகூட இந்தியங்களை அச்சீவான்மா மறித்தும் சாக்கிரபோகத்தை யுண்டாக்கும் கருமமுதயமாகவே அப்போகத்தின்பொருட்டு ஆகர்ஷணஞ் செய்கின்றது. ஆமை தனதுடலில் இலயமாகிய தலை கால் முதலிய உறுப்புகளை மறித்தும் அவ்வுடலினின்றும் வெளியில் விரிப்பதுபோல அச்சீவான்மாவும் அவ்வஞ்ஞான வடிவப் பிரகிருதியினின்றும் மனசகித இந்திரியங்களை விடயக்கிரகணயோக்கிய வடிவமாய் மறித்து வெளிப்படுத்துகின்றது. இதனாலிப்பொருள் பெறப்பட்டது.— ஆன்ம ஞானத்தினின்றும் ஆவிருத்தியின்றேனும் அஞ்ஞானத்தினின்றும் புனராவிருத்தியாவது யாதொரு பொருந்தாமையுடையதன்று; மற்றோ அஞ்ஞானத்தினின்று இச்சீவான்மாவிற்குப் புனராவிருத்தி பொருத்தமுடையதேயாமென்க. (7)

(அவ-க.) ஹே பகவன்! இச்சீவான்மா எக்காலத்தில் மனசகித இந்திரியங்களை ஆகர்ஷணஞ்செய்கின்றது என அர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர꞉ ।
க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ॥ (8)

ப-ம். 6 ஶரீரம் 5 யத் 7 அவாப்நோதி 1 யத் 4 ச 10 அபி 3 உத்க்ராமதி 2 ஈஶ்வர꞉ 9 க்ருஹீத்வா 8 ஏதாநி 11 ஸம்யாதி 14 வாயு꞉ 15 கந்தாந் 12 இவ 13 ஆஶயாத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்போது இச்சீவான்மா வெளிப்படுகின்றதோ அப்போது அவ்விந்திரியங்களை ஆகர்ஷிக்கின்றது. அங்ஙனமே எக்காலத்தில் வேறு தேகத்தை யடைகின்றதோ அக்காலத்தில் மனத்தோடு இந்திரியங்களைக் கிரகித்துக் கொண்டுஞ் செல்கின்றது புஷ்பமுதலிய ஸ்தானத்தினின்று காற்றுக் கந்தத்தைக் கிரகித்துச்செல்வதுபோலவாம். (8)

(வி-ம்) ஹே அர்ச்சுன! தேகேந்திரியவடிவ சங்காதத்திற்குச் சுவாமியானதால் ஈசுரவடிவ இச்சீவான்மாவானது எப்போது உத்கிரமணஞ் செய்கின்றதோ; அதாவது இத்தேகத்தினின்றும் வெளியிற் செல்லுகின்றதோ அப்போது இச்சீவான்மா வெளிப்பட்ட தேகத்தினின்று மனசகித இந்திரியங்களை ஆகர்ஷிக்கின்றது. அர்ச்சுன! இச்சீவான்மா மனசகித இந்திரியங்களை ஆகர்ஷிப்பதுமாத்திரமேயன்று; மற்றோ, இச்சீவான்மா பூர்வ தேகத்தினின்று வேறுதேகத்தை யடையும்போது மனசகித இந்திரியங்களைக் கிரகணம்பண்ணிக்கொண்டுஞ் செல்கின்றது. அவ்விந்திரியங்களை விடுத்துச்செல்லாது; அதாவது, பரித்தியாகம் பண்ணிய முந்திய தேகத்தில் மறித்தும் வாராவண்ணம் நன்கு அவ்விந்திரியங்களைக்கொண்டு செல்கின்றது. இவ்வர்த்தத்தை 'ஸம்யாதி' (இனிது செல்கின்றது) என்னும் வாக்கியத்திலுள்ள 'ஸம்' (இனிது) என்னுஞ் சப்தத்தால் ஸ்ரீ பகவான் குறிப்பித்தருளினர். இப்போது இத்தூல வுடலிருக்கவே அதினின்றும் இந்திரியங்களைக் கிரகணம்பண்ணுவதில் ஸ்ரீ பகவான் திட்டாந்தத்தை அருளிச்செய்கின்றார். 'வாயுர் கந்தாநிவாஶயாத் இதி' ஹே அர்ச்சுன! புஷ்பமுதலிய ஸ்தானத்தினின்று கந்தவடிவ சூட்சுமாம்சங்களைக் கிரகித்து வாயுவானது பூர்வமுதலிய திசைகளிற் செல்கின்றதுபோல இச்சீவான்மாவும் இத்தூலதேகத்தினின்று மனசகித இந்திரியங்களைக் கிரகித்துப் பரவுலகத்திற்குச் செல்கின்றது என்பதாம். (8)

(அ-கை.) ஸ்ரீ பகவான் அவ்விந்திரியங்களை யருளிச்செய்து இச்சீவான்மா அவ்விந்திரியங்களைக்கொண்டு செல்வதின் பிரயோசனத்தை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஶ்ரோத்ரம் சக்ஷு꞉ ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்ராணமேவ ச ।
அதிஷ்டாய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ॥ (9)

ப-ம். 2 ஶ்ரோத்ரம் 3 சக்ஷு꞉ 5 ஸ்பர்ஶநம் 4 ச 6 ரஸநம் 8 க்ராணம் 12 ஏவ 7 ச 11 அதிஷ்டாய 10 மந꞉ 9 ச 1 அயம் 13 விஷயாந் 14 உபஸேவதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இச்சீவான்மாச் சுரோத்திரம் சட்சு துவக்கு ரசநம் கிராணம் மனம் என்பவைகளை ஆசிரயித்தே சப்தமுதலிய விடயங்களை நுகருகின்றது. (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இச்சீவான்மா ஞானேந்திரியபஞ்சகம் மனம் என்பவைகளை ஆசிரயித்தே சப்த முதலிய விடயங்களை நுகர்கின்றது. ஈண்டு, '𑌘𑍍𑌰𑌾𑌣𑌮𑍇𑌵 𑌚' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரத்தால் வாக்கு முதலிய கருமேந்திரியங்களையும் பிராணனையுங் கொள்ளவேண்டும்; அதாவது ஐவகை ஞானேந்திரியங்கள் ஐவகைக்கருமேந்திரியங்கள் ஐவகைப் பிராணன் அந்தக்கரண சதுட்டயம் என்பவைகளை ஆசிரயித்தே இச்சீவான்மா சப்தமுதலிய விடயங்களை நுகருகின்றது. அஃதின்றிய சுத்தான்மா நுகராது. இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. 𑌆𑌤𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍋𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑍋𑌕𑍍𑌤𑍇𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।

(பொ-ள்.) சுரோத்திர முதலிய இந்திரியங்களோடும் மனத்தோடும் பொருந்தியதாகியே ஆன்மாப் போக்தாவாகின்றது. இவ்வாறு வேதமுணர்ந்த நுண்ணறிவாளர் கூறுகின்றார்கள். (9)

(அ-கை.) அத்தன்மைய காண்டற்குரிய ஆன்மாவை மூடன் கண்டிலன் மற்றோ விவேகியே காண்கின்றான் என்னுமர்த்தத்தை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌨𑍍𑌤𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌵𑌾𑌪𑌿 𑌭𑍁𑌞𑍍𑌜𑌾𑌨𑌂 𑌵𑌾 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 ।
𑌵𑌿𑌮𑍂𑌢𑌾 𑌨𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃 ॥ (10)

ப-ம். 1 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑌨𑍍𑌤𑌂 3 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 2 𑌵𑌾 7 𑌅𑌪𑌿 5 𑌭𑍁𑌞𑍍𑌜𑌾𑌨𑌂 4 𑌵𑌾 6 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌂
8 𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌃 9 𑌨 10 𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 12 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 11 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! உத்கிரமணஞ் செய்வதும் அத்தேகத்தின்கண்ணே நிலைத்திருப்பதும் விடயங்களை நுகருவதும் குணத்தோடு பொருந்தியதுமாகிய ஆன்மாவையும் விமூட புருஷன் காணமாட்டான்; ஆனால் ஞானவடிவ நேத்திரமுடையனே அவ்வான்மாவைக் காண்கின்றான். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உண்மையில் கமனமுதலிய சர்வ விகாரங்களுமற்றதாயினும் அந்தக்கரண முதலிய உபாதிகளின் தாதான்மியாத்தியாசத்தினால் பூர்வ தேகத்தைவிடுத்து வேறு தேகத்திற்குச் செல்கின்றது இவ்வான்மா; அல்லது முந்திய தேகத்தின்கண்ணே நிலைத்திருக்கின்றது; அல்லது அந்த வேறு தேகத்தில் சப்தமுதலிய விடயங்களை நுகருகின்றது; சுகதுக்க மோகவடிவ சத்துவமுதலிய குணங்களோடுகூடியது இவ்வாறு சர்வாவத்தைகளிலும் காணற்குரியதாயிருப்பினும் இவ்வான்மாவை மூடபுருஷன் கண்டிலன். ஈண்டு இவ்வுலக பரவுலகபோகங்களின் வாசனையால் ஆகர்ஷிக்கப்பட்ட மனமுடைய ஆன்மானன்ம விவேகத்திற்குரித்திலானாகிய மூடன் உத்கிரமண முதலிய அவத்தைகளில் இவ்வான்மாவை தேகமுதலியவைகளினும் வேறாய் அறிந்திலன். அந்தோ சுருதிப் பிரமாணசன்ய ஞானவடிவ நேத்திரமுடைய புருஷனே அவ்வுத்கிரமணமுதலிய சர்வாவத்தைகளிலும் இவ்வான்மாவைத் தேகமுதலியவைகளினும் வேறாய்க் காண்கின்றான் என்பதாம். (10)

(அ-கை.) இப்போது '𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃' என்னும் வாக்கியார்த்தத்தையும் '𑌵𑌿𑌮𑍂𑌢𑌾 𑌨𑌾𑌨𑍁 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿' என்னும் வாக்கியார்த்தத்தையும் முறையாய் விளக்கி வர்ணித்தருளுகின்றார்.

சு-ம். 𑌯𑌤𑌨𑍍𑌤𑍋 𑌯𑍋𑌗𑌿𑌨𑌶𑍍𑌚𑍈𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 ।
𑌯𑌤𑌨𑍍𑌤𑍋𑌪𑍍𑌯𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌨𑍈𑌨𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑌚𑍇𑌤𑌸𑌃 ॥ (11)

ப-ம். 1 𑌯𑌤𑌨𑍍𑌤𑌃 2 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 3 𑌚 6 𑌏𑌨𑌂 7 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 4 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 5 𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 8 𑌯𑌤𑌨𑍍𑌤𑌃 9 𑌅𑌪𑌿 10 𑌅𑌕𑍃𑌤𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌃 13 𑌨 12 𑌏𑌨𑌂 14 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 11 𑌅𑌚𑍇𑌤𑌸𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முயற்சியையுடைய யோகியே தனதுள்ளத்தின் கண்ணுள்ள ஆன்மாவைப் பார்க்கின்றான். பிரயத்தனம் பண்ணியும் மலினந்தக் கரணமுடைய அவிவேகி இவ்வான்மாவைப்பார்த்திலன். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தியான முதலிய உபாயங்களால் முயன்று சுத்தாந்தக்கரணமுடைய யோகியே தனதுள்ளத்தின்கண்ணுள்ள இவ்வானந்தவடிவ ஆன்மாவைச் சாட்சாத்கரிக்கின்றான். யஞ்ஞமுதலிய நிட்காமகருமங்களால் தனதந்தக்கரணத்தைச் சுத்தி செய்யாமையின் ஆன்மாநான்மவிவேகமின்றிய அவ்வசுத்தாந்தக்கரணமுடைய அவிவேகியோ முயன்றும் இவ்வான்மாவைச் சாட்சாத்கரித்தற் கசமர்த்தனாகின்றான் என்பதாம். (11)

(அ-கை.) ஆண்டு உலகனைத்தையும் விளக்கும் இரவி மதி முதலியவைகளால் பிரகாசித்தற் கேலாததும், முமூட்சுக்களாற் புனராவிருத்தியின்றி யடையப்படுவதும், மாவாணினின்று கடமுதலிய உபாதிகளாலாய பேதங்களையுடைய கடவான் முதலியவை அம்மாவாணின் கற்பித அம்சபாவத்தை யடைகின்றனபோல உபாதியாலாய பேதத்தைப்பெற்றுத் தனது கற்பிதாம்சத்தை யடைந்து சீவன் பொய்யாகவே சம்சாரத்தை அநுபவிக்கின்றதும், கடமுதலிய உபாதிகளொழியவே அக்கடவான் முதலியவைகள் அம்மாவானோடு அபேத மடைகின்றனபோல மகாவாக்கியசன்னிய சாக்ஷாத்காரத்தால் அவித்தை முதலிய உபாதிகணீங்கவே சீவன் அபேதமாகவடைவதுமாகிய பரப்பிரமத்தின் சர்வான்மத்தன்மையையும் சர்வ வியவகாரங்களின் சாதகத்தன்மையையும் காண்பித்து ‘𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌹𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌹𑌂’ என்னும் பூர்வாத்தியாயத்திற்கூறிய வாக்கியார்த்தத்தை வர்ணித்தற் பொருட்டு இப்போது நான்கு சுலோகங்களால் ஸ்ரீ பகவான் தமது விபூதியைச் சுருக்கியருளிச் செய்கின்றார்.

சு-ம். 𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌂 ।
𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑍌 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌂 ॥ (12)

ப-ம். 2 𑌯𑌤𑍍 1 𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 3 𑌤𑍇𑌜𑌃 10 𑌜𑌗𑌤𑍍 11 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 9 𑌅𑌖𑌿𑌲𑌂 5 𑌯𑌤𑍍 4 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 8 𑌯𑌤𑍍 6 𑌚 7 𑌅𑌗𑍍𑌨𑍌 12 𑌤𑌤𑍍 13 𑌤𑍇𑌜𑌃 15 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 14 𑌮𑌾𑌮𑌕𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இரவியின்கண்ணுள்ள ஒளி மதியின்கண்ணுள்ள ஒளி தீயின்கண்ணுள்ள ஒளி என்னும் உலகனைத்தையும் பிரகாசிக்கும் அவ்வொளிகளனைத்தையும் எனது சொரூபமென்றே யுணர்தி. (12)

(வி-ம்.) ஆண்டு, ‘𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂 𑌨𑍇𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋𑌽𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃’ என்னுஞ் சுருதியின் அர்த்தபாகம் ‘𑌨 𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃’ என்னுஞ் சுலோகத்தான் முன்னர் வியாக்கியானம்பண்ணப்பட்டது. இப்போது ‘𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿’ என்னுஞ் சுருதியின் அர்த்தபாகத்தை ‘𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑍋’ என்னுஞ் சுலோகத்தால் ஸ்ரீ பகவான் வியாக்கியானஞ்செய்தருளுகின்றார். ஹே அர்ச்சுன! உலகனைத்தையும் விளக்கப்பட்ட இரவியின்கண்ணுள்ள சைதன்யான்மக சோதிவடிவ ஒளியையும் மதியின்கண்ணுள்ள சைதன்யான்மக சோதிவடிவ ஒளியையும் தீயின்கண்ணுள்ள சைதன்யான்மக சோதிவடிவ ஒளியையும் பரமான்மாவாகிய எனது சொரூபபூதமென்றே யுணர்தி. தாவரசங்கமவடிவ சர்வ

பதார்த்தங்களிலும் சைதன்யவடிவ சோதி சமானமேயாயினும் சத்துவகுணத்தின் மிகுதிப்பாட்டால் ஆதித்தன் முதலியோர்கள் எல்லாவற்றினும் மேலானவர்களாதலின் அவர்களிடத்திலே அச்சைதன்யவடிவ சோதி நன்கு அபிவியக்தியை (விளக்கத்தை) யடைகின்றது. தமரசோகுணப் பிரதானங்களாகிய ஏனைய பதார்த்தங்களில் அச்சைதன்யவடிவச் சோதி சொரூபத்தாலிருப்பினும் தெளிவாய் விளக்கத்தை யடைவதில்லையாதலின் அப்பதார்த்தங்களை நோக்க ஆதித்தன் முதலியோர்களிடத்து விசேடத்தன்மையை அறிவுறுத்துவான் ஸ்ரீ பகவான் ஈண்டு இரவி மதி முதலியவைகளைக் கிரகித்தருளினர். முகத்தின் சமீபத்தன்மை சமமாயினும் கட்டை சுவர் முதலிய சுவச்சமின்றிய பதார்த்தங்களில் அம்முகம் பிரதிவிம்பவடிவத்தால் அபிவியக்தியாவதில்லை. சுவச்சம் மிகசுவச்சமாகிய தருப்பணை முதலிய பதார்த்தங்களிலோ சுவச்சத்தின் குறைவுமிகுதிகளால் முகமும் நியூநாதிகத்தன்மைகளால் பிரதிபலித்து விளங்குகின்றதுபோல அச்சைதன்யவடிவ சோதியும் சொரூபத்தால் சர்வப்பொருள்களிடத்திலுமிருப்பினும் சத்துவகுண மிகுந்த ஆதித்தன் முதலியோர்களிடத்திலே தெளிவாய் அபிவியக்தியையடைகின்றது. தமோகுண மிகுந்துள்ள கடமுதலிய பொருள்களில் அபிவியக்தியையடைவதில்லை. என்பதாம். அல்லது 'யதாதித்ய கதம் தேஜ:' என்னும் வாக்கியத்தில் தேஜசு சப்தத்தை அருளிச்செய்து 'தத்தேஜோவித்தி மாமகம்' என்னும் வாக்கியத்தில் மீண்டும் அச்சப்தத்தையே அருளிச்செய்தனராதலின், இச்சுலோகத்திற்கு வேறொரு பொருளுந்தோன்றுகின்றது; அதாவது இரவி மதி தீக்களிடத்துள்ள அன்னியத்தை விளக்குதற்காற்றலுடைய வெண்மையொளிவடிவ தேஜசு, வடிவுடைப் பொருள்வடிவ உலகனைத்தையும் விளக்குகின்றது; அந்தத் தேஜசு பரமேசுரனாகிய எம்முடையதென்றே யுணர்தி. அதாவது பரமேசுரனாகிய எமது விபூதிவடிவ அந்தத் தேஜசில் பரமேசுர புத்தி செய்குதி என்பதாம். இவ்வாறு பரமேசுரனுடைய விபூதியை அருளிச்செய்தற்பொருட்டு இந்த வேறுபொருளுஞ் சம்பவித்தல்கூடும்:—ஒருகால் இச்சுலோகத்தை பரமேசுரனுடைய விபூதியைக் கூறுவதாய்க் கொள்ளப்படாதேல் மறித்தும் தேஜசுசப்தத்தின் கிரகணமின்றியே 'தந்மாமகம்வித்தி' என்னும் இத்துணைமாத்திரவாக்கியத்தையே ஸ்ரீ பகவான் அருளிச்செய்வர் என்க. ஒரு வியாக்கியானத்திலோ 'யதாதித்ய கதம் தேஜ:' என்னுஞ் சுலோகத்திற்கு இப்பொருள் பண்ணப்பட்டிருக்கிறது — ஆதித்தன் சந்திரன் அக்கினி என்னுஞ் சப்தங்களால் சக்ஷுராதி முதலிய கரணங்களின் அதிட்டானவடிவ சூரியன் முதலிய தேவதைகளையும் அவர்களாலநுக்கிரகிக்கப்பட்ட சட்சுமுதலியவைகளையுங் கொள்ளவேண்டும். இதனாலிப்பொருள் சித்தமாகின்றது.—சட்சுமுதலிய பாகியகரணங்களின் அதிட்டானவடிவ சூரியன் முதலிய தேவதைகள் சட்சுமுதலிய பாகியகரணங்கள் இவ்விரண்டிலும் இருக்கப்பட்ட உருவ முதலியவைகளை விளக்குமாற்றல்வடிவ தேஜசைப் பரமேசுரனாகிய எம்முடையதென்றே யுணர்தி.

ஆ-சு. யேநஸூர்ய: தபதி தேஜஸேத்த: யேந அக்ஷம் பச்யதி ।

(பொ-ள்·) எந்தச் சைதன்யவடிவ ஒளியால் இச்சூரியன் தபிக்கின்றான் அங்ஙனமே எந்தச் சைதன்யவடிவ ஒளியால் இந்நேத்திரம் உருவமுதலிய பதார்த்தங்களைப்பார்க்கின்றது என்பதாம். இவ்வாறு மனத்திலும் மனத்தின் அபிமானியாகிய சந்திரனிடத்திலும் உள்ளுநலகை விளக்குமாற்றல்வடிவ தேஜசையும் என்னுடையதென்றே யுணர்தி. இவ்வாறே வாக்கிந்திரியத்திலும் அதன் அபிமானியாகிய அக்கினிதேவதையினிடத்திலும் அவ்வியாகிருத முதலியவைகளை விளக்குஞ் சாமர்த்தியவடிவ தேஜசையும் பரமேசுரனாகிய எம்முடையதென்றே யுணர்தி என்பதாம்.

(அ-கை.) அன்றியும்,

சு-ம். காமாவிஶ்ய ச பூதாநி தாரயாம்யஹமோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ꞉ ஸர்வா꞉ ஸோமோ பூத்வா ரஸாத்மக꞉ ॥ (13)

ப-ம். 3 காம் 4 ஆவிஶ்ய 1 ச 5 பூதாநி 7 தாரயாமி 6 அஹம் 2 ஓஜஸா 14 புஷ்ணாமி 8 ச 13 ஔஷதீ꞉ 12 ஸர்வா꞉ 10 ஸோம꞉ 11 பூத்வா 9 ரஸாத்மக꞉.

(அ-ம்) ஹே அர்ச்சுன! மற்றும் எனது வலியால் இப்பூவையும் மிகத் திடஞ்செய்து சர்வ பூதங்களையும் பரமேசுரனாகிய நானே தாரணம் பண்ணுவேன். அங்ஙனமே சர்வ ரஸசுபாவமுடைய சோமவடிவமாய்ச் சர்வ ஔஷதிகளையும் நானே புஷ்டியுடையதாய்ச் செய்வேன். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே பிருதிவிதேவதாவடிவத்தால் இப்பிருதிவியை யாண்டும் வியாபித்துத் தூளி முட்டிக்குத் துல்லியமா யெனது வலியால் மிகத்திடஞ்செய்து அதன்மேலிருக்கப்பட்ட தாவரசங்கமவடிவ சர்வ பூதங்களையும் தாரணம் பண்ணுகின்றேன். காற்றுத் தனது வலியால் மேக மண்டலத்திற் புகுந்து அதிலுள்ள நீரைத்தாங்குவதுபோலப் பரமேசுரனாகிய நானும் பிருதுவிதேவதாரூபத்தால் இப்பிருதிவியிற்புகுந்து எனது வலியால் இப்பிருதிவியை மிகத்திடப்படுத்தி அந்தத் தாவரசங்கம வடிவ சர்வ பூதங்களைத் தாரணஞ் செய்கின்றேன். ஒருகால் நான் அவ்வாறு செய்திலனேல் மணன் முஷ்டியைப்போல இப்பிருதிவி விரைவாகவே கேடாந்தன்மையை யடையும் அல்லது அதோதேசத்திலமிழ்ந்திவிடும். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது. (13)

ஆ-சு. யேந த்³யௌருக்³ரா ப்ருதி²வீ ச த்³ருடா⁴ யேந ஸ்வ꞉ ஸ்தபி⁴தம் ॥

(பொ-ள்.) எப்பரமான்மாவால் சுவர்க்கமும் இம்மாபிருதிவியும் மிகத்திடம் பண்ணப்பட்டதோ எதனால் கனமுடையதாயினும் சுவர்க்கமும் பிருதிவியும் கீழே விழுவதில்லையோ இப்பிருதிவி சத்தியபரமான்ம தேவனுடைய ஆதாரத்ததேயாம். அல்லது சர்வ ரஸசுபாவமுடைய சோமவடிவமாய்ப் பரமேசுரனாகிய நானே பிருதிவியிற்றோற்றுகின்ற நெற் கோதுமை முதலிய ஔஷதிகளையும் புஷ்டியுடையதாகவும் இனிய ரஸமுடையதாகவுஞ் செய்கின்றேன் என்பதாம். (13)

(அ-கை.) மேலும்,

சு-ம். அஹம் வைஶ்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தே³ஹமாஶ்ரித꞉ ।
ப்ராணாபாநஸமாயுக்த꞉ பசாம்யந்நம் சதுர்வித⁴ம் ॥ (14)

ப-ம். 1 அஹம் 2 வைஶ்வாநர꞉ 3 பூத்வா 4 ப்ராணிநாம் 5 தே³ஹம் 6 ஆஶ்ரித꞉ 7 ப்ராணாபாநஸமாயுக்த꞉ 10 பசாமி 9 அந்நம் 8 சதுர்வித⁴ம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய நானே சாடராக்கினி வடிவமாய்ச் சர்வப் பிராணிகளின் தேகத்தையும் ஆசிரயித்தும் பிராணபானன்களால் மிகத் தேஜசுடையதாய் நால்வகை யன்னங்களையும் சீர்ணிப்பிக்கிறேன். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'அயமக்³நிர்வைஶ்வாநரோ யோ(அ)யமந்த꞉ புருஷே யேநேத³மந்நம் பச்யதே'. (பொருள்) எவ்வக்கினி இப்புருடனுக்குள்ளிருக்கின்றதோ எவ்வக்கினியால் நால்வகை யன்னமும் சீர்ணமாகின்றதோ அது வைசுவாநராக்கினியாம் என்பதாம். என்னு மிச்சுருதியால் வைசுவாநரனெனும் பெயராற் கூறப்பட்ட சாடராக்கினியாய்ப் பரமேசுரனாகிய நானே சர்வப் பிராணிகளின்

தேகங்களிற் புகுந்து அவ்வக்கினியைச் சொலிக்கப்பண்ணும் பிராணாபானன்களோடுகூடிப் பிராணிகளுண்ட பக்ஷியம் போஜ்யம் லேகியம் சோஷ்யம் என்னும் நால்வகை அன்னங்களையும் சீரணஞ் செய்கின்றேன். ஆண்டுப்பற்களால் ஈண்டு துண்டாக்கிப் பக்ஷணம் பண்ணும் பொருள் பக்ஷியமெனப்படும், அப்பமுதலியன; அதுவே சர்வியம் எனவும்படும். பற்றொழிவின்றிக் கேவலம் நாவினுலே குழைந்துட்செலும் பொருள் போஜ்யமாம், பாயாச முதலியன; நாவிற்பொருந்திய மாத்திரத்தானே ரஸத்தின் சுவாதுமாத்திரத்தால் உட்செல்வது சிறிது நெகிழ்ச்சியையுமுடைய பொருள் லேகியமெனப்படும், வெல்லம் மாம்பழரஸமுதலியன; பற்களாலரைத்து அதனிரதபாகத்தை உள்ளிறக்கி மீந்த சக்கையை வெளியிற்றள்ளும் பொருள் சோஷ்யமாம், கருப்பங்கழி முதலியன என்பதாம். ஒரு வியாக்கியானத்திலோ 'வைஶ்வாநரம் அந்நவிஷயம்' என்னும் வாக்கியத்திற்கு இவ்வர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது. பரமேசுரனாகிய நானே சாடராக்கினியாய் மநுடர் முதலிய சர்வப்பிராணிகளின் உள்ளிருப்பதாய், பார்த்திவ-ஆப்ய-தைஜஸ வாயவிய என்னும் நால்வகையான அன்னங்களையும் பாகம் பண்ணுகின்றேன். ஆண்டு, மநுடர் முதலிய பிராணிகட்கோ நென்முதலிய பார்த்திவான்னமாம்; சாதக முதலிய பிராணிகட்குச் சலவடிவ ஆப்யான்னமாம். வாலகில்ய முதலிய பிராணிகட்கு அக்கினிவடிவ தைஜஸான்னமாம். சர்ப்பமுதலிய பிராணிகட்கோ வாயுரூப வாயவியான்னமாம். ஆண்டுப் போக்தா வைசுவாநராக்கினிவடிவமாம். போஜ்யான்னம் சோமவடிவமாம். இவ்வாறு இவ்வக்கினி சோமங்கட்கே சர்வரூபமெனத் தியானிப்பவனை அன்னத்தின் தோடம் பற்றாது எனச்சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கும் பலசகிதத் தியானத்தையுமிங்குணரவேண்டுமென்பதாம். (14)

(அ-கை.) மேலும்,

சு-ம். ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்த꞉ ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச ।
வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம் ॥ (15)

ப-ம். 3 ஸர்வஸ்ய 1 ச 2 அஹம் 4 ஹ்ருதி 5 ஸந்நிவிஷ்ட꞉ 6 மத்த꞉ 7 ஸ்ம்ருதி꞉ 8 ஜ்ஞாநம் 10 அபோஹநம் 9 ச 13 வேதை꞉ 11 ச 12 ஸர்வை꞉ 14 அஹம் 15 ஏவ 16 வேத்ய꞉ 17 வேதாந்தக்ருத் 21 வேதவித் 20 ஏவ 18 ச 19 அஹம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் பரமான்மதேவனாகிய நானே சர்வப்பிராணிகளின் புத்தியில் சீவவடிவமாய்ப் புகுந்தேன். இதனாலே ஆன்மதேவனாகிய என்னினின்றே அச்சர்வப் பிராணிகட்கும் மிருதியும் ஞானமும் அவ்விரண்டினை பாவமும் உண்டாகின்றது. சர்வ வேதங்களாலும் பரமேசுரனாகிய நானே அறிதற்குரியோனும் வேதாந்தார்த்த சம்பிரதாயப் பிரவர்த்தகனும் சர்வ வேதார்த்தத்தையுமறிபவனும் நானாகின்றேன். (15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரமாமுதற்கொண்டு தாவரமீறான மேல் கீழாயுள்ள பிராணிகளனைத்தின் புத்தியில் பரமான்மாவாகிய நானே சீவவடிவாய்ப் புகுந்திருக்கின்றேன். (15)

ஆ-சு. ஸ ஏவ ஹ்ருத்யநுப்ரவிஷ்ட꞉ அநேந ஜீவேந
ஆத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி ।

(பொ-ள்.) அப்பரமான்மாச் சீவவடிவாய் இச்சங்காதத்திற் பிரவேசித்தது. இச்சீவவடிவமாய் இச்சங்காதத்திற் புகுந்து பரமான்மாவாகிய நானே நாமரூபங்களை வெளிப்படுத்துகின்றேன் என்பதாம். என்பது முதலிய அநேக சுருதிகள் இச்சர்வ சங்காதத்திலும் பரமான்மாவே சீவவடிவாய்ப் புகுந்ததெனக்கூறுகின்றன. இத்துணை கூறியதால் ஸ்ரீ பகவான் சீவப்பிரமங்களின் அபேதத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். இதனையே தத்துவமசி அஹம்பிரமாஸ்மி என்பது முதலிய சுருதிகளுங்கூறுகின்றன. ஹே அர்ச்சுன! பரமான்மாவாகிய நானே இச்சர்வப் பிராணிகளின் புத்தியில் சீவவடிவமாய்ப் புகுந்திருத்தலினாலே இச்சர்வப் பிராணிகட்கும் எவ்வெவ் மிருதி ஞானங்களுண்டாகின்றனவோ அவ்வம் மிருதி ஞானங்கள் ஆன்மதேவனாகிய என்னிடத்தினின்றே யுண்டாகின்றன. ஆண்டு முன்னநுபவித்த பொருளை விஷயம்பண்ணப்பட்ட சம்ஸ்காரசன்னிய அந்தக்கரண விருத்திவிசேஷம் மிருதியாம். அம்மிருதி யோகமிலாதோனுக்கோ இச்சன்மத்தில் முன்னனுபவித்தபொருளை விடயம் பண்ணுவதாகவேயுண்டாம். யோகிக்கோ வேறு ஜன்மத்திலநுபவித்த பொருளை விடயம்பண்ணுவது முண்டாம். இவ்வாறு அக்காட்சியுணர்ச்சியும் அயோகி புருஷனுக்கோ விடயேந்திய சம்யோக சன்னியமேயாம். யோகிக்கோ தேசகாலங்களால் வியவகிதமான வஸ்துக்களின் ஞானமுமுண்டாகும். அந்த இருவகைத்தான மிருதிகள் இருவகைத்தான ஞானங்கள் ஆன்மதேவனாகிய என்னினின்றேயுண்டாகின்றன. காமக்குரோத சோகமோக முதலியவைகளால் வியாகுலமடைந்த மனமுடையவனுக்கு உண்டாகும் அவைகளினபாவமும் என்னிடத்தினின்றே யுண்டாகின்றது என்க. இவ்வாறு ஸ்ரீ பகவான் தமது சீவவடிவத்தன்மையை அருளிச்செய்து இப்போது பிரமவடிவத்தன்மையை அருளிச்செய்கின்றார். 'வேதைஶ்ச ஸர்வை: இதி' ஹே அர்ச்சுன! இருக்கு முதலிய நான்கு வேதங்களாலும் பரமான்மாவாகிய நானே அறிதற்குரியோன். 'ஸர்வே வேதா யத்பதமாமநந்தி' கருமம் உபாசனை ஞானம் என்னும் மூன்றுகாண்டவடிவ வேதங்களனைத்தும் எந்தப்பரமான்ம தேவ வடிவ பதத்தைப் பிரதிபாதிக்கின்றனவோ என்பதாம். இருக்கு முதலிய வேதங்களின் கருமோபாசனகாண்டங்கள் இந்திரன் முதலிய தேவதைகளையே கூறுகின்றனவாமாயினும் பரமான்மாவாகிய நானே அவ்விந்திரன் முதலிய தேவதைகளின் ஆன்மவடிவினன். ஆதலின் இந்திரன் முதலிய தேவதைகளைக்கூறினும் அக்காண்டங்கள் பரமான்மாவாகிய என்னையே கூறுகின்றனவாம். ஆண்டுப் பரமான்ம தேவனே இந்திரன் முதலிய தேவதாவடிவம் என்பதை 'இந்த்ரம் மித்ரம் வருணமக்நிமாஹு: அதோ திவ்ய: ஸ ஸுபர்ணோ கருத்மான் யாவதீர்வை தேவதாஸ்தா: ஸர்வா வேதவிதி ப்ராஹ்மணே வஸந்தி தஸ்மாத் ப்ராஹ்மணேப்யோ வேதவித்ப்யோ திவே திவே நமஸ்குர்யாத் ஏதா தேவதா:' என்பது முதலிய அநேக சுருதிகள் கூறுகின்றன. மற்று மெத்தன்மையதெனின் பரமான்மதேவனாகிய நான் வேதாந்தகிருத்; அதாவது வேதவியாசர் முதலியவடிவமாய்ப் பரமான்மாவாகிய நானே உபநிடதவடிவ வேதாந்தார்த்தத்தின் சம்பிரதாயத்தைப் பிரவிருத்திப்பவன். ஹே அர்ச்சுன! கேவலம் நான் அதைமாத்திரம் பிரவிருத்திப்பவனலன் மற்றோ வேதவித்தும் நானாகின்றேன். அதாவது காண்டத்திரயவடிவ மந்திரப் பிராமணான்மக வேதங்களனைத்தின் அர்த்தத்தை உணர்பவனும் பரமான்மாவாகிய நானே; ஆதலின் 'ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்' என முன்னத்தியாயத்திற் கூறியது உண்மையேயாம் என்க. ஒரு வியாக்கியானத்திலோ 'ஸர்வஸ்ய சாஹம்' என்னுஞ் சுலோகத்திற்கு இவ்வர்த்தம் பண்ணப்பட்டிருக்கிறது. சர்வப் பிராணிகளின் புத்திவடிவக் குகையில் பரமான்மாவாகிய நான் க்ஷேத்திரக்ஞனெனுஞ் சீவவடிவாய் மிகச் சமீபமாய் நிலைத்திருக்கின்றேன். இதனாலே சர்வப் பிராணிகளின்வடிவமு நானாகின்றேன். இத்துணை கூறி

யதால் ஸ்ரீ பகவான் ஜீவப்பிரமங்களிடத்தில் பேததிருஷ்டி பொருபோதும் சிறிதுஞ் செய்யற்க என்பதை குறிப்பித்தருளினர். ஆண்டு, இவ்வுலகனைத்தும் பரமேசுரவடிவமே என எவ்விடத்தும் பரமேசுரபுத்திசெய்து பரமேசுரனைத் தியானிப்பவன் தியானியாதவன் என்னுமிருவர்களின் பலத்தையும் ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச இதி' ஹே அர்ச்சுன! பரமேசுரனாகிய என்னையுபாசித்து சுத்தாந்தக்கரணமுடைய அதிகாரிக்கோ என்னிடத்தினின்றே குருசாஸ்திரத்தின் அநுக்கிரகத்தால் ஸ்மிருதியுண்டாகின்றது, அதாவது அவ்வான்மா தத்துவமசி என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ குருவால் மூவித பரிச்சேதமற்ற நிர்விசேட ஆன்மா நீயே யென்றுணர்த்தப்பட்டு அத்தன்மைய ஆன்மாவே நான் என்று அவ்வான்மாவின் கண்ணே தனதான்மத்தன்மையின் ஸ்மிருதியும் அவ்வதிகாரிக்கு என்னினின்றே யுண்டாகின்றது அங்ஙனமே நானே பிரமசொரூபன் என உலகனைத்திலும் தன்னிடத்திலும் பிரமமாத்திரத்தன்மையின் ஞானமும் அவ்வுபாசகனுக்கு என்னினின்றே யுண்டாகின்றது. என துபாசனையின்றிபவனும் மலின புத்தியுடையவனும் இராகத்துவேஷ முதலிய தோடங்களோடு கூடியவனுமாகிய பகிர்முக புருஷனுக்கு அந்த ஸ்மிருதி ஞானங்களின் அபோஹனம் அதாவது அப்பிராப்தி அதுவும் பரமேசுரனாகிய என்னினின்றேயுண்டாகின்றது. ஹே அர்ச்சுன! மற்றும் பரமேசுரனாகிய நான் எத்தன்மையனெனின் வேதாந்த கிருத்; அதாவது இரணியகருப்பவடிவப் பிரமாவிற்கு வேதாந்தப் பிராப்திவடிவ அநுக்கிரகஞ் செய்தவன் நானே.

ஆ-சு. யோ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் ।
யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ॥

(பொ-ள்.) எந்தப் பரமேசுரர் முன்னர் இரணியகருப்பவடிவப் பிரமாவை யுண்டாக்கினரோ எந்தப் பரமேசுரர் அப்பிரமாவிற்குச் சர்வ வேதங்களையுங் கொடுத்தனரோ என்பதாம். அல்லது, 'வேதாந்தக்ருத்' என்னும் வாக்கியத்திற்கு இப்பொருள் செய்யவேண்டும். இச்சுலோகத்தில் அதிகாரியாகிய சிஷ்யனின் பொருட்டு ஆசாரியவடிவமாய் வேதாந்தார்த்தத்தைப் பிரகாசிப்பவனும் பரமேசுரனாகிய நானே; மற்றுமெத்தன்மையனெனின் நான் வேதவித் ஆண்டு, வேதார்த்தவடிவமாகிய நிர்விசேட அத்துவிதீயப் பிரமத்தை என்னுடைய அநுக்கிரகத்தினுனும் பிரஹ்மவேத்தாவான குருவின் அனுக்கிரகத்தினுனும் தனதான்மாவையுணர்பவன் வேதவித்தாவன். அத்தன்மைய பிரம வேத்தா புருஷனும் நானுகின்றேன். இது 'ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்னும் வாக்கியத்தால் முன்னருங் கூறப்பட்டதாம். ஆண்டு, 'ஸர்வபூதஸ்த மாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி' என்னும் வாக்கியத்தால் சர்வப் பிராணிகளையும் தன தான்மவடிவமாய்க்கூறி ஸ்ரீ பகவான் மற்றும் வேதாந்தகிருத் நானுகின்றேன் வேதவித்து நானுகின்றேன் என்னும் வாக்கியங்களைக் கூறியருளினது மூடபுருஷனுனும் புத்திமானுனும் வேதாந்தநூலை யுபதேசஞ்செய்யுங் குருவினிடத்திலும் வேறு பிரமவேத்தாக்களிடத்தும் பரமேசுரபுத்தி பண்ணவேண்டுவதவசியமாம் என்பதை அறிவுறுத்தற்பொருட்டாம். ஆண்டு, 'யதாதித்யகதம் தேஜ:' என்பது முதலிய வாக்கியங்களால் முமுட்சுக்கள் செய்த உபாசனையின்பொருட்டு ஸ்ரீ பகவான் தனது விபூதியை அருளிச்செய்தனர். அவ்விபூதியே பரமேசுரனுடைய உண்மை வடிவமாம் என்னுஞ் சங்கை நிகழ ஸ்ரீ பகவான் தனதுண்மைவடிவத்தை யறிவுறுத்துவான் அருளிச்செய்கின்றார். 'வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என. ஹே அர்ச்சுன! இருக்குமுதலிய வேதங்களிலுள்ள உபநிடத வேதாந்தங்களால் பரமான்மாவாகிய நானே உணர்தற் குரியோன்; அதாவது 'ஸத்யம் ஜ்ஞா

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம ப்ரஜ்ஞாநகநோ ப்ரஹ்ம ததேதத்ப்ரஹ்மாபூர்வ-
மநபரம் ஸர்வஜ்ஞம் ஸர்வாத்மகம் ஸர்வாந்தரம் ஸர்வஸாக்ஷி ஸ்வப்ரகாசம் ஸர்வேச்வரம்
நிராகாரம் ஜ்யோதிஸ்ஸ்வரூபம் ஸர்வகதம் ஸர்வவ்யாபகம் நிஷ்க-
ளம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம் ஸர்வம் ஸாக்ஷாத் அபரோக்ஷம் ஸர்வா-
ந்தர்யாமி ஸர்வாதிஷ்டாநம் சாந்தம் அத்வைதம் ப்ரஹ்மைவ ஸ்வதாமவிஜ்ஞேயம்
தத்த்வமஸி' என்பது முதலிய வாக்கியங்களால் முமூட்சுக்களாலுணரத்தக்க நிரு
விசேட நித்திய சுத்த புத்த முத்த சுபாவ சச்சிதானந்த ஏகரச அத்துவிதீய பர
மான்ம தேவவடிவமே உண்மையிலாவேன். கூறிப்போந்த மாயோபாதிக வடிவன்
அலன் என்பதாம். (15)

(அ-கை.) இவ்வாறு தமது சோபாதிகவடிவத்தை அருளிச்செய்து ஸ்ரீ
பகவான் கிருபையால் அர்ச்சுனனுக்கு க்ஷராக்ஷரமெனும் காரியகாரணவடிவ
இருவகை யுபாதிகளுமற்ற தமது நிருபாதிக சுத்த சொரூபத்தை மூன்று சுலோ
கங்களால் பிரதிபாதித்தருளுகின்றார்.

சு-ம். த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்சாக்ஷர ஏவ ச ।
க்ஷர: ஸர்வாணி பூதாநி கூடஸ்தோ(அ)க்ஷர உச்யதே ॥ (16)

ப-ம். 3 த்வௌ 2 இமௌ 5 புருஷௌ 1 லோகே 7 க்ஷர: 6 ச 9 அக்ஷர: 4 ஏவ
8 ச 12 க்ஷர: 10 ஸர்வாணி 11 பூதாநி 14 கூடஸ்த: 15 அக்ஷர:
13 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சப்சாரத்தில் புருஷர் இருவகையேயாவர்; ஒரு
வரோ க்ஷரபுருஷர் மற்றொருவரோ அக்ஷரபுருஷர். அவர்களுள் காரியவடிவ
சர்வ பூதங்களுமோ க்ஷரபுருஷர் எனப்படுவர்; காரணவடிவ மாயை அக்ஷரபுருஷ
ரெனப்படுவர். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சைதன்யபுருஷனுக் குபாதிவடிவமானதால்
புருடசப்தத்தாற் கூறப்பட்ட இருவரே புருடர்கள். இச்சம்சாரத்தில் அவர்கள்
யாவர்களெனின் அருளிச்செய்கின்றார் ஸ்ரீ பகவான் 'க்ஷரச்சாக்ஷர ஏவ ச'
என. ஹே அர்ச்சுன! ஒருவரோ க்ஷரமெனும் புருடர். மற்றொருவரோ அக்ஷர
மெனும் புருடர்; அதாவது தோற்றக்கேடுகளையுடைய காரியக்கூட்டங்களனைத்
துமோ க்ஷரமெனும் புருடராவர். ஆன்மஞானமின்றிக் கேடிலாததும் க்ஷர
மெனும் புருஷரின் உத்பத்திக்குக் காரணவடிவமுமாகிய காரணோபாதிவடிவ பக
வத்மாயாசத்தி அக்ஷரமெனும் இரண்டாவது புருடனும். இவ்வாறு இவ்விரு
வர்களின் சொரூபத்தை ஸ்ரீ பகவன் தாமே விளக்கமாய் அருளிச்செய்கின்றார்.
'க்ஷர: ஸர்வாணி பூதாநி இதி' ஹே அர்ச்சுன! தோற்றக் கேடுகளையுடைய
சர்வ காரியப் பிரபஞ்சங்களுமோ க்ஷரம் என்னும் பெயராற் கூறப்படுகின்றன;
கூடத்தன் அக்ஷரமெனும் பெயராற் கூற்ப்படுகின்றனன்; ஆண்டு உண்மைப்
பொருளை மறைத்து உண்மையிலாப்பொருளைக் காட்டுவது வஞ்சகம் என்றும்
மாயையென்றுஞ் சொல்லப்படும் கூடமாம். அவ்வடிவமாய் நிலைத்து நிற்பது கூட
த்தமாம்; அதாவது ஆவரணவிட்சேபசத்தி வடிவங்களாயிருப்பது கூடத்தமாம்.
அத்தன்மைய கூடத்தமெனும் ஸ்ரீ பகவானுடைய மாயாசத்திவடிவ காரணோ
பாதியானது இச்சம்சாரமனைத்திற்குங் காரணமானதினும் ஆன்மஞானமொ
ழிந்த வேறுபாயங்களால் கேடிலாமையினும் அனந்தமாம். ஆதலின் அம்மாயா
சத்திவடிவ காரணோபாதி அக்ஷரமென்னும் பெயராற் கூறப்படுகின்றது என்ப

தாம். ஒரு வியாக்கியானத்திலோ க்ஷர என்னுஞ் சப்தத்தால் சர்வ அசேதன வர்க்கங்களைக் கிரகணஞ்செய்து 'கூடஸ்தோ க்ஷர உச்யதே' என்னும் வாக்கியத்தால் க்ஷேத்திரக்ஞனெனுஞ் சீவான்மா கொள்ளப்பட்டது. அவ்வியாக்கியானம் நலமுடைத்தன்றாம்; என்னை? 'உத்தம: புருஷஸ்த்வந்ய:' என்னும் இனிமேற் கூறப்படும் வாக்கியத்தால் அந்த க்ஷேத்திரக்ஞனெனும் ஆன்மாவையே புருஷோத்தமவடிவமாய்ப் பிரதிபாதித்தருளுவர். ஆதலின் ஈண்டு க்ஷராக்ஷர சப்தங்களால் காரியகாரணோபாதிகளை கொள்ளற்பாலனவாம் என்க. (16)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் க்ஷராக்ஷர சப்தங்களால் காரிய காரணோபாதிகளைக் கூறியருளினர். இப்போது இச்சுலோகத்தில் அவ்வுபாதிகளினும் விலட்சணமானதும் அவைகளின் தோஷத்தாற்றீண்டுறுததுமாகிய நித்திய சுத்த புத்த முத்த சுபாவ உத்தம புருஷனை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: |
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: || (17)

ப-ம். 2 உத்தம: 3 புருஷ: 1 து 4 அந்ய: 5 பரமாத்மா 6 இதி 7 உதாஹ்ருத: 8 ய: 9 லோகத்ரயம் 10 ஆவிஶ்ய 11 பிபர்த்தி 12 அவ்யய: 13 ஈஶ்வர:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மிக மேலாகிய சேதனபுருஷனோ க்ஷராக்ஷரமிரண்டினும் வேறேயாவன்; பரமான்மாவெனப் பெயரிய சேதன புருஷன் மூன்று லோகங்கட்கும் தான் பற்றுக்கோடாய் நின்று தாங்குவன்; அவ்யயரூபனும் ஈசுவரரூபனுமாவன். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மிக மேலாகிய பிரத்தியக்சேதனன்மவடிவ புருஷனோ அன்னியனே; அதாவது க்ஷராக்ஷர சப்தங்களாற்கூறப்பட்ட காரியகாரணோபாதிகளினின்று மிக விலட்சணமும் அவைகளைப் பிரகாசிக்கப்பட்டவனுமாகிய சேதனவடிவ உத்தம புருஷன் மூன்றாவதேயாவன். அப்புருஷன் வேதாந்த நூலிற் பரமான்மாவெனக் கூறப்படுகின்றான். அதாவது அன்னமய முதலிய பஞ்ச கோசங்களையும் அவ்வவ்வாதிகள் அவிவேகத்தால் ஆன்மவடிவமாய்க் கற்பிக்கின்றார்கள். அத்தன்மைய பஞ்சகோசங்களினின்றும் பரமும் ஆன்மாவுமானது பரமான்மாவாம். ஆண்டுச் சேதனவடிவ உத்தம புருஷன் கற்பிதனுகாமையின் கற்பிதமான அப்பஞ்ச கோசங்களினின்று மிகவும் உத்கிருஷ்டமானதால் பரமும் பிரமபுச்சம் பிரதிஷ்டா என்னுஞ் சுருதியால் சர்வாதிட்டானமாய்க் கூறப்பட்டதும் சர்வ பூதங்களின் பிரத்தியக்சேதனவடிவமும் ஆதலின் வேதாந்தநூலில் அச்சேதனவடிவ உத்தம புருஷன் பரமான்மாவெனப்படுகின்றான் என்பதாம். ஹே அர்ச்சுன! எந்தபரமான்மா பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் என்னும் மூவுலகவடிவப் பிரபஞ்சங்களனைத்தையும் தமது மாயாசத்தியால் சுவாசிரிதஞ்செய்து தனது சத்தாஸ்பூர்த்தியைக்கொடுத்துத் தாரணபோஷணங்களைச் செய்கின்றது. 'வ்ருக்ஷாவ்ருக்ஷம் ஹரதே விஶ்வேஶ்வர:' காரியகாரணவடிவப் பிரபஞ்சமுழுதிற்கும் பரமேசுரன் தாரணபோஷணங்களைச் செய்கின்றனன் என்பதாம். மற்றுமெத்தன்மையனெனின் அவ்வியயம் அதாவது சன்ம மரணமுதலிய சர்வ விகாரங்களுமின்றியவன் ஈசுரன்; அதாவது சூரிய சந்திரன் முதலிய சர்வ சகத்திற்கும் நியந்தாவாகிய நாராயணவடிவன்: அத்தன்மைய உத்தம புருடன் வேதாந்தத்தில் பரமான்மாவெனக் கூறப்படுகின்றான். 'ஸ உத்தம: புருஷ:' அப்பரமான்ம தேவனே உத்தம புருடனுவன் என்பதாம். ஈண்டுப் பிரத்தியக்சேதனவடிவ ஆன்மாவின் 'அவ்யய ஈஶ்வர:' எனக் கூறப்பட்ட இரண்டு ஹேதுகர்ப்ப விசேடணங்களால்

இவ்விரண்டனுமானஞ் சித்தமாகின்றன : சேதனுன்மா, கூறிப்போந்த க்ஷராக்ஷர மெனும் இரண்டு புருஷர்களினும் வேருதற்குரியது, அவ்வியயமானதால் ; எது க்ஷராக்ஷரங்களினும் வேறன்றோ அது அவ்வியயமுமன்று புத்தி முதலியவை களைப்போல ; சேதனுன்மா, க்ஷராக்ஷரங்களினும் வேருதற்குரியது, ஈசுரனுன தால், பிரஜைகளின் நியந்தாவாகிய மகாராஜா அப்பிரஜைகளினும் வேருதல்போல என்பதாம். (17)

(அ-கை.) இப்போது முன்னர்க்கூறப்பட்ட க்ஷராக்ஷரங்களினும் விலட்சண மாகிய பரமான்மதேவனுக்கு புருடோத்தமனென்னு நாமத்தை யருளிச்செய்து அத்தன்மைய பரமான்மதேவன் நானே என ஸ்ரீ பகவான் தமது சொரூபத்தை ‘ஸ்ருஹமெனாஹி ஸ்ருதிஷூஷம் தஃாவமஂ ஸஂ’ என்பது முதலிய வாக்கியங் களால் முன்னர்க்கூறப்பட்ட தமது மகிமாவை நிச்சயித்தற்பொருட்டுக் காண் பித்தருளுகின்ருர்.

சு-ம். யஸ்மாத்க்ஷரமதீதொஹமக்ஷராதபி சொத்தமஃ ।
அதொஸ்மி லொகெ வெடெ ச ப்ரயிதஃ வுருஷொத்தமஃ ॥ (18)

ப-ம். 1 யஸ்மாத் 3 க்ஷரம் 4 அதீதஃ 2 அஹம் 6 அக்ஷராத் 7 அபி 5 ச 8 உத்தமஃ 9 அதஃ 15 அஸ்மி 10 லொகெ 12 வெதெ 11 ச 14 ப்ரயிதஃ 13 வுருஷொத்தமஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எதனுல் பரமேசுரனுகிய நான் க்ஷரத்தையும் கட ந்தவனே அக்ஷரத்தினின்றும் மிகவுத்கிருஷ்டனே அதனுனே உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென விளங்குகின்றேன். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! காரியவடிவமானதால் விநாசமுடையதும் கனுப் போல் மாயாமயமுமாகிய அச்சுவத்தமெனும் இச்சம்சார விருக்ஷவடிவ க்ஷரத்தை யும் பரமேசுரனுகிய நான் எதனுல் கடந்தவனுகின்றேனே அங்ஙனமே மாயை அவித்தை அஞ்ஞானம் பகவத்சத்தி என்னும் நாமங்களாலெது பிரசித்தமானதோ எந்த அவ்வியாகிருதவடிவ காரணம் ‘கூடஸ்தோக்ஷர உச்யதே’ என்னுஞ் சுரு தியில் அக்ஷரமெனக் கூறப்பட்டிருக்கிறதோ அந்த மாயா மய அக்ஷரம் இச்சம்சார விருக்ஷத்தின் ; பீஜரூபமாம் அத்தன்மைய உலகனைத்திற்குங் காரணவடிவ மாயையெனும் அக்ஷரத்தினின்றும் பரமேசுரனுகிய நான் உத்தமனுகின்றேன். அதாவது சைதன்யவடிவனுனதால் பரமேசுரனுகிய நான் அந்தச்சடவடிவ அக்ஷ ரத்தினின்றும் மிகவு முத்கிருஷ்டன் இதனுனே ; அதாவது சேதன புருஷர்களின் உபாதிவடிவ க்ஷராக்ஷரங்களிரண்டும் சேதன புருஷர்களின் தாதான்மியாத்தியா சத்தால் புருஷன் என்னுஞ் சப்தத்தாற் கூறப்படுகின்றன. அத்தன்மைய க்ஷரா க்ஷரவடிவ உபாதிகளினும் மிகவுமுத்கிருஷ்டனுனதால் பரமேசுரனுகிய நான் உலக வேதங்களில் புருடோத்தமனென விளக்கமானேன். ஆண்டுக் கவிகளாலியற்றப் பட்ட காவிய முதலியவடிவ வுலகங்களிலோ ‘ஹரியதொஷெகஃ வுருஷொத்தமஃ’ என்பது முதலிய வாக்கியங்களால் பரமேசுரனுகிய நான் புருடோத்தமனெனப் பிரசித்தன், வேதத்திலோ ‘ஸ உத்தமஃ வுருஷஃ’ என்பது முதலிய வாக்கியங் களால் பரமேசுரனுகிய நான் புருடோத்தமனெனப் பிரசித்தன் என்பதாம். (18)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் கூறிப்போந்த அர்த்தத்தோடு புரு டோத்தம நாமத்தின் ஞானபலத்தை வர்ணித்தருளுகின்ருர்.

சு-ம். யொ மாமெவமஸம்மூஷொ ஜாநாதி வுருஷொத்தமம் ।
ஸ ஸவவிஷஜதி மாம் ஸவஹாவெந ஹாரத ॥ (19)

ப-ம். 2 யஃ 4 ஈாம் 5 ஸ வம் 3 க்ஷாம்ஃ ஜஃ 7 ஜாநாதி 6 வ‑ஸ‑ஷோத்த௨ம் 8 ஸஃ 9 ஸ வ-ுவிக் 12 ஹஜதி 11 ஈாம் 10 ஸவ-ுஹாவெந 1 ஹாரத.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மிகுதியான மோகமின்றிப் பரமேசுரனாகிய என்னை இவ்வாறு புருடோத்தமவடிவமா யுணர்பவனாகிய சர்வக்ஞனவனே பக்தியோகத்தால் பரமேசுரனாகிய என்னைச் சேவிக்கின்றான். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வதிகாரி அசம் மூடனாய் அதாவது இக்கிருஷ்ணனும் யாதோர் ஒரு மநுட விசேடன் என்னுஞ் சம்மோக மின்றியவனாய்ப் பரமேசுரனாகிய என்னைப்புருடோத்தம நாமார்த்த ஞான பூர்வகம் புருடோத்தமனாகவே யுணர்கின்றானோ மநுடவடிவமா யுணருவதில்லையோ அவ்வதிகாரி புருடனே பரமேசுரனாகிய என்னை நிரதிசயப்பிரேமைலட்சண பக்தியோகத்தாற் சேவிக்கின்றான். அவனே சர்வவித்தாவன்; அதாவது பரமேசுரனாகிய என்னை எல்லாவற்றின் ஆன்மவடிவமா யுணர்பவனே சர்வக்ஞன். ஆதலின் 'ஈாமயொவூஹிஆரெண ஹகியொமெநவெவதெ ஸ ந‑ணாநு ஸஃதீஜெதூ‌தாநு ஙு-ஹஹ‑யாய கஜூதெ' என முன்கூறப்பட்ட வாக்கியம் பொருத்தமுடையதேயாம். அங்ஙனமே 'ஙு-ஹணொஹி ஙு-திஷ்ஹாஹம்' முன்னர்க்கூறிய வாக்கியமும் பொருத்தமுடையதேயாம் என்க. (19)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் இப்பதினைந்தாவது அத்தியாயத்தின் அர்த்தத்தைத்துதித்து இவ்வத்தியாயத்தை முடித்தருளுகின்றார்.

சு-ம். ஊதி ம‑ஹ்யதமம்ஸாஸ்த்ரமிடம் உக்தம் மயாநவ ।
ஸ தத்-யா ப‑ஸிராநுஸ்யாக் க்ருதக்ருத்யஸ்ஹ ஹாரத ॥ (20)

ப-ம். 4 ஊதி 5 ம‑ஹ்யதமம் 6 ஸாஸ்த்ரம் 7 இடம் 8 உக்தம் 3 மயா 1 அநவ 9 ஸதத் 10 ப‑யா 11 ப‑ஸிராநு 12 ஸ்யாக் 14 க்ருதக்ருத்யஃ 13 அ 2 ஹாரத.

(அ-ம்.) ஹே சர்வ வியசனரகித பாரத! பகவானாகிய நான் உனக்குக் கூறிப்போந்தவாறாய் மிகவும் ரகசியவடிவமும் சம்பூரண சாத்திரவடிவமுமாகிய இப்பதினைந்தாவது அத்தியாயத்தைக் கூறினேன்; இதை யுணர்ந்தவன் ஆன்மஞானமுடையவனும் கிருதகிருத்தியனுமாகின்றான். (20)

(வி-ம்.) ஹே அனக! அதாவது ஹே சர்வ வியசனமின்றியவனே! அங்ஙனமே. ஹே பாரத! அதாவது ஹே பாரதவம்சத்திலுற்பவித்த அர்ச்சுன! பகவானாகிய நான் உனக்கு இப்பதினைந்தாவது அத்தியாயத்தில் கூறிப்போந்தவாற்றால் மிக ரகசியவடிவ சம்பூரண சாத்திரத்தையே சுருக்கிக்கூறினேன்; அதாவது பதினெட்டாவது அத்தியாயவடிவ சர்வ கீதார்த்தத்தையும் நானுனக்குச் சுருக்கி இவ்வத்தியாயத்திற்கூறினேன். ஆதலின் இவ்வத்தியாயார்த்தத்தை பிரமமுணர்ந்த குருமுகத்தானிச்சயித்து இவ்வதிகாரி புத்திமானாகின்றான்; அதாவது நான் பிரமசொரூபன் என்னும் ஆன்மஞானமுடையவனாகின்றான். கிருதகிருத்தியனுமாகின்றான். ஆண்டு, இவ்வதிகாரிக்கு அவ்வவ் வருணாசிரமங்களிற் செய்யற்குரிய சுபகருமங்களனைத்தும் எவனால் செய்யப்பட்டனவாமோ அதாவது, எவனுக்கு மீண்டும் யாதொரு கருமமுஞ் செயற்பாலதின்றாமோ அவன் கிருதகிருத்தியனாவன். கருத்திதுவாம்:—உத்தமகுலத்திலுற்பவித்த பிராமணனால் எவ்வெச் சாத்திரவிகித கருமஞ்செயற்பாலதோ அக்கருமங்களனைத்தும் பரமான்மதேவ

னது சாக்ஷாத்காரமுண்டாகவே செய்யப்பட்டனவாம்; அப்பரமான்ம சாக்ஷாத்காரமின்றி ஒருவனுக்கும் அக்கர்த்தவ்விய கருமங்களின் சமாப்தியுண்டாகாது. ஈண்டு, வேறு அனேக பாரத என்னுஞ் சம்போதனங்களால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இப்பொருளைக் குறிப்பித்தருளினர். இப்பதினைந்தாவது அத்தியாயார்த்தத்தை யுணர்ந்து சாமானியபுருடனும் ஆன்மஞானமுடையவனுய்க் கிருதகிருத்தியனுவனேல் நீயோ பெருங்குலத்திற் பிறந்தவனும் சர்வ வியசனமற்றவனுமாதலினுல் குலகுணதன்மங்களோடுகூடிய நீ இவ்வத்தியாயார்த்தத்தையுணர்ந்து ஆன்மஞானமுடையனுய்க் கிருதகிருத்தியனுவையென்பதில் கூறற்பாலதென்னை என்பதாம். அன்றியும் வேறு அனேக என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவான் இவ்வர்த்தத்தையுங் குறிப்பித்தருளினர். சர்வ வியசனங்களுமின்றிய அதிகாரிக்கே பிரமவேத்தாவாகிய குருவானவர் மிக இரகசியமான இப்பிரமவித்தையை உபதேசிக்க வேண்டும் ஏனையோர்க்கன்றாம் என்பதாம். (20)

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சிக்ஞானந்தகிரி சுவாமிகளாலியற்றியருளிய பிராகிருதடீகையெனும் கீதா கூடார்த்ததீபிகையில்,

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பதினாறாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம:

ஈண்டுப் பூர்வ அத்தியாயத்தில் 'அபயம் ஸத்த்வஸம்ஶுத்திர் ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி:' என்னும் வாக்கியத்தால் ஸ்ரீ பகவான் மநுடதேகத்தில் முந்திய புண்ணியபாப கருமாநுசாரமாய் அபிவியக்தியாகிய சுபா சுபவாசனையைச் சம்சாரவிருக்ஷத்திற்கு அவாந்தர மூலவடிவமாய்த் திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாசனையே முன்னர் ஒன்பதாவது அத்தியாயத்தில் பிராணிகளின்பிரகிருதிவடிவத்தால் தெய்வீகம் ஆசுரம் ராக்ஷஸம் என மூவகையாய்க் குறிப்பிக்கப்பட்டது. அவற்றுள் வேதமறிவித்த நித்திய நைமித்திக கருமங்களையும் ஆன்மஞானத்தின் சமதமமுதலிய கருமங்களையும் அநுட்டிப்பதில் பிரவிருத்தி பண்ணப்பட்டது சாத்துவிகமாகிய சுபவாசனையாம்; அது தெய்வீகப் பிரகிருதியெனப் படுகின்றது. வேதங்கூறிய நிஷேதத்தைக்கடந்து இயல்பாற் சித்தமான இராகத்துவேஷங்களை யநுசரித்ததும் சர்வானர்த்தத்தின் காரணவடிவமுமாகிய பிரவிருத்திக்குக் காரணமான ராஜசதாமதவடிவ அசுபவாசனைகள் ஆசுரப் பிரகிருதியென்றும் இராக்ஷஸப் பிரகிருதியென்றுஞ் சொல்லப்படுகின்றன. ஈண்டு, விடயபோகங்களின் முக்கியத்தன்மையால் ராகத்தின் பிரபலத்தன்மையினின்று அவ்வசுப வாசனையில் ஆசுரித்தன்மையாம். ஹிம்சையின் முக்கியத்தன்மையால் துவேஷப் பிரபலத்தினின்று அவ்வசுபவாசனையில் ராக்ஷஸீத்தன்மையாம். இத்துணையே இவ்விரண்டற்கு மிடைப்பட்டபேதமாம். இப்போது இவ்வத்தியாயத்தில் இவ்

வார்த்தை கூறப்படுகின்றது. சாத்திரத்தை யநுசரித்து அதிற்கூறிய அர்த்தத்திற் பிரவிருத்திக்கின்ற சாத்துவிகமாகிய சுபவாசனையே தெய்வீக சம்பத்து எனப்படும். சாத்திரத்தை யநுசரியாது அதனால் நிஷேதிக்கப்பட்ட விஷயங்களிற் பிரவிருத்திக்கப்பட்ட ராஜஸீ தாமஸீவடிவ அசுபவாசனை ராக்ஷஸ ஆசுரத்தன்மைகளை யொன்றுபடுத்தி ஆசுரீசம்பத்தெனக்கூறப்படும். இவ்வாறு சுபாசுபத்தன்மைகளால் வாசனையின் இருவகைப்பேதத்தை 'த்வயா ஹ ப்ராஜாபத்யா தேவாஶ்சாஸுராஶ்ச' என்பது முதலிய சுருதிகள் கூறுகின்றன. ஆண்டு, தெய்வீக சம்பத்துவடிவ சுபவாசனையே இவ்வதிகாரிக்கு மோக்ஷத்திற் கேதுவாம். ஆசுரிசம்பத்துவடிவ அசுபவாசனையே இவனுக்கு பந்தகாரணமாம். ஆகலின் தெய்வீகசம்பத்துவடிவ சுபவாசனையே அவசியமாய் இவ்வதிகாரியாற் கொள்ளற்பாலதாம்; ஆசுரிசம்பத்துவடிவ அசுபவாசனையே அவசியமாய்த் தள்ளத்தக்கதாம். அவைகளைத்தள்ளுவதுங் கொள்ளுவதும் அவற்றின் சொரூப வுணர்ச்சியின்றி அமையாதாதலின் ஸ்ரீ பகவான் அச்சுபாசுப வாசனைகளைக் கொள்ளுவித்தற்பொருட்டும் தள்ளுவித்தற்பொருட்டும் அவைகளின் சொரூபத்தைக்கூறும் இப்பதினாறாவது அத்தியாயத்தைத்தொடங்கி யருளுகின்றார். ஆண்டு முதலில் மூன்று சுலோகங்களால் ஸ்ரீ பகவான் கொள்ளற்குரிய தெய்வீக சம்பத்து வடிவத்தை யருளிச் செய்கின்றார்.

ஸ்ரீபகவாநுவாச.

சு-ம். அபயம் ஸத்த்வஸம்ஶுத்திர் ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி: ।
தாநம் தமஶ்ச யஜ்ஞஶ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் ॥ (1)

ப-ம். 1 அபயம் 2 ஸத்த்வஸம்ஶுத்தி: 3 ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி: 4 தாநம் 6 தம: 5 ச 8 யஜ்ஞ: 7 ச 9 ஸ்வாத்யாய: 10 தப: 11 ஆர்ஜவம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பயமின்மை, அந்தக்கரணத்தூய்மை, ஞானயோகங்களினிலைத்தல் தானம், தமம், யஞ்ஞம், சுவாத்தியாயம், தவம், ஆர்ச்சவம் என்னுமிவ்வனைத்தும் தெய்வீக சம்பத்து வடிவங்களாம். (1)

(வி-ம்) ஹே அர்ச்சுன! நூலுபதேசித்த அர்த்தத்தில் ஐயமிலதாய் அதனனுஷ்டானத்தில் தத்பரத்தன்மை பயமின்மையாம். அல்லது யாதொன்றையுங் கொள்வதின்றி ஒரே நிலைமையிலிருக்கின்ற நான் "எவ்வணம் பிழைப்பேன் என்னும்பயாகிதத்தன்மை பயமின்மையாம். அந்தக்கரணத்தின்மிக்க தூய்தாந்தன்மை சத்துவசம்சுத்தியாம். ஆண்டு அவ்வந்தக்கரணசுத்தியில் பரமேசுர சொரூபத்தை அறிதற்குரியதாந்தன்மையே மிக்கதன்மையாம். அல்லது பிறர்வஞ்சனை மாயை பொய் என்பது முதலியவைகளின் தியாகம் சத்துவசம்சுத்தியாம். அவற்றுள் தனது பிரயோசன சித்தியின்பொருட்டு எவ்விதமாகிய வுபாயத்தாலும் பிறரை வசப்படுத்தல் பிறர்வஞ்சனையாம். மனதில் வேறுகருத்தைக்கொண்டு வெளியில் வேறுவிதமாய் வியகரித்தல் மாயையாம். கண்ட விருத்தாந்தப்படியே வாயாற் கூறாமல் அதற்குமாறாய்க்கூறுதல் பொய்யாம். என்பது முதலிய தோஷங்களின்றியதன்மை சத்துவசம்சுத்தியாம். அத்தியான்மநூலால் ஆன்மசொரூபத்தை நிச்சயித்தல் ஞானம். மனவொருமையால் அவ்வடிவத்தை தனதனுபவத்திற்கியைவித்தல் யோகமாம். அவ்விரண்டினிலைத்தல் அதாவது எப்போதுந் தத்பரத்தன்மை ஞானம்யோகங்களினிலைத்தலாம். அல்லது 'அபயம் ஸத்த்வஸம்ஶுத்திர் ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி:' என்னும் வாக்கியத்திற்கு வேறிவ்வர்த்தம் பண்ணுக. 'அபயம் ஸர்வபூதேப்யோ தத்த்வா சரேத்' என்னினின்றுஞ் சர்வ பூதப்பிராணிகட்கும்

பயமின்மையுண்டாகுக என. அபயதானங்கொடுப்பதின் சங்கற்பம் சந்நியாசங்கொள்ளுங் காலத்திலுண்டாகின்றது. அதைப்பாலித்தல் முக்கரணங்களாலும் யாதொரு பிராணிகட்கும் பயமடைவியாமை அபயமாம். இந்த அபயதானவடிவ தருமம் பரமஹம்சர்களின் சர்வ தருமங்கட்கும் உபலட்சணமாம். சிரவணாதிகளின் பரிபக்குவத்தால் அந்தக்கரணத்தின் அசம்பாவனை முதலிய மலமிலாத் தன்மை சத்துவசம்சுத்தியாம். அகம்பிரமாஸ்மி என்னும் ஆன்மசாட்சாத்காரம் ஞானமாம். மனோநாச வாசனக்ஷயங்கட்கு அநுகூலமாகிய முயற்சி யோகமாம். அந்த ஞானயோகங்களால் சம்சாரிஜனங்களினும் வேறாகிய சீவன்முத்திவடிவ நிலைமை ஞானயோக வியவஸ்திதியாம். இவ்வாறு வியாக்கியானம் பண்ணப்பட்ட பயமின்மை முதலிய தெய்வீகசம்பத்து பலவடிவமென்றுணரத்தக்கது. ஆண்டுப் பகவத்பக்தியின்றி அவ்வந்தக்கரணசுத்தி யமையாமையின் அவ்வந்தக்கரணசுத்தியைக் கூறியதனால் அப்பகவத்பக்தியுங் கூறப்பட்டதென்றுணர்க. என்னை ?

> 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌦𑍈𑌵𑍀𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
> 𑌭𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌯𑌮𑌨𑌸𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

என்னு மிவ்வொன்பதாவது அத்தியாயத்தின் சுலோகத்தில் தெய்வீகசம்பத்தில் பகவத்பக்தியையுங் கூறியிருக்கின்றது. அந்தப் பக்தி மிக மேலானதாதலின் ஸ்ரீ பகவான் ஈண்டபய முதலியவைகளோடு அதைக்கூறியருளவில்லை என்க. இவ்வாறு பெரும்பாக்கியமுடைய பரமஹம்ச சந்நியாசிகளின் பலவடிவ தெய்வீகசம்பத்தை அருளிச்செய்து ஸ்ரீ பகவான் இப்போது அவர்களினும் வேறான கிருகஸ்தன் முதலியோர்கட்குச் சாதனவடிவ தெய்வீகசம்பத்தை அருளிச்செய்கின்றார். ‘𑌦𑌾𑌨𑌞𑍍𑌚 𑌇𑌤𑌿’ ஆண்டு, தன்னுடைய என தென்னுமபிமானத்திற்கு விடயமான அன்ன சுவர்ண கோ பூமி வீடு முதலிய பதார்த்தங்களைத்தனக்கியன்றவளவு அன்போடு அதிதிப்பிராமணன் முதலியோர்கட்குக் கொடுத்தல் தானமாம். சுரோத்திரமுதலிய பாகியேந்தியங்களை தத்தம் விடயங்களினின்று நிவிருத்தித்தல்வடிவ அடக்கந் தமமாம். கிருகஸ்தனிடத்தில் எல்லாவகையானும் இந்தியங்களையடக்கல் பொருந்தாதாயினும் இருதுகால முதலியவைகளினின்றும் அன்னிய காலத்தில் புணர்தன் முதலியன செய்யொணுதனவாம். இதுவே அவர்கட்கு இந்திய நிக்கிரகமாம். ஈண்டு, ‘𑌦𑌮𑌶𑍍𑌚’ என்னும் வசனத்திலுள்ள சகாரம் ஈண்டுக்கூறுத வேறு நிவிருத்திவடிவ தருமங்களையுங் கூட்டுவித்தற்பொருட்டாம் சாத்திரவிகித கருமவிசேடத்தின் பெபர் யஞ்ஞமாம். அது சிரௌதம் ஸ்மார்த்தம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவற்றில் அக்கினிஹோத்திரம் தர்சபூர்ணமாசம் சோமயாகமுதலியன சிரௌதயக்ஞமெனப்படும். தேவயக்ஞம் பிதுருயக்ஞம் பூதயக்ஞம் மநுடயக்ஞம் என்னும் நான்கும் ஸ்மார்த்தயக்ஞமெனப்படும். பிரமயக்ஞமும் ஸ்மார்த்தயக்ஞமென்றே கூறப்படுகின்றதாயினும் ஈண்டதை சுவாத்தியாயம் என்னும் பதத்தால் வேறாகவே கூறியருளினர். ஆதலின், ஈண்டு யக்ஞசப்தத்தால் நால்வகை யக்ஞமே கொள்ளற்பாலன. ஈண்டு, ‘𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚’ என்னும் வசனத்திலுள்ள சகாரம் ஈண்டுக் கூறுதவேறு பிரவிருத்திவடிவ தருமங்களையுங் கூட்டுவித்தற்பொருட்டாம். தானம் தமம் யக்ஞமென்னும் இம்மூன்றும் கிருகஸ்தர்கட்கே தெய்வீகசம்பத்துவடிவமாம். புண்ணிய விசேடோத்பத்தியின்பொருட்டு இருக்கு முதலிய வேதங்களை அத்தியயனம் பண்ணல் சுவாத்தியயனமாம். இதையே பிரமயக்ஞமெனக்கூறுவர். முன்னர்க்கூறிய யக்ஞசப்தத்தால் ஐவகையான ஸ்மார்த்தயக்ஞங்களைக் கூறலமைதல் கூடுமாயினும் அந்தச் சுவாத்தியயனம் பிரமசாரியின் முக்கியதருமமென்றுணர்த்துவான் ஸ்ரீ பகவான் ஈண்டுச் சுவாத்தியயனத்தை வேறாகக் கூறியருளினர். மேலே பதினேழாவது அத்தியாயத்திற்

கூறப்பட்ட சாரீர வாசிக மானசிகமென்னும் மூவகையான தவமே ஈண்டுத் தவம் என்னுஞ் சப்தத்தாற் கொள்ளற்பாலது. அந்தத்தவம் வானப்பிரஸ்தனுக்கு முக்கிய தருமமாம். இவ்வாறு சந்நியாசி கிருகஸ்தன் பிரமசாரி வானப்பிரஸ்தன் என்னும் ஆசிரமங்களின் முக்கிய தருமங்களை யருளிச்செய்து இப்போது பிராமணன் முதலிய நான்கு வர்ணங்களின் முக்கிய தருமங்களை அருளிச்செய்கின்றார், 'ஆர்ஜவம் ஏதி' ஆண்டு வக்கிரத்தன்மையின்மை ஆர்ச்சவமாம். அதாவது அன்போடு கேட்போனிடத்து நிண்ணயம்பண்ணிய அர்த்தத்தை மறைத்துவையாமை ஆர்ச்சவமாம். (1)

(அ-கை.) மேலும்,

சு-ம். அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ்த்யாக: ஶாந்திரபைஶுநம் ।
தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் ॥ (2)

ப-ம். 1 அஹிம்ஸா 2 ஸத்யம் 3 அக்ரோத: 4 த்யாக: 5 ஶாந்தி: 6 அபைஶுநம் 8 தயா 7 பூதேஷு 9 அலோலுப்த்வம் 10 மார்தவம் 11 ஹ்ரீ: 12 அசாபலம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அகிம்சை, சத்தியம், அக்குரோதம், தியாகம், சாந்தி, புறங்கூறாமை, சர்வப்பிராணிகளிடத்துந்தயை, விகாரமின்மை, கோரமின்மை, லச்சை, தொழிலின்மை என்பவைகளனைத்தும் தெய்வீகசம்பத்து வடிவங்களாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிராணிகளின் சீவிகாவடிவ விருத்தியைச் சேதித்தல் இம்சையாம். அஃதின்மை அகிம்சையாம். எவ்வெப்பிராணிகள் எவ்வெவ் விருத்தியால் சீவிக்கின்றனவோ அவ்வப்பிராணிகளின் அவ்வவ்விருத்தியை ஒருபோதுஞ் சேதியாமை அகிம்சை என்பதாம். துன்பம் விளைவியாத உண்மைப் பொருளுணர்த்தும் வாக்கியத்தை எப்போதுங் கூறல் சத்தியமாம். ஆண்டு எந்த உண்மைப்பொருளுணர்த்தும் வாக்கியத்தைக் கூறியதால் பிராமணன் முதலியோர்கட்கு இம்சையுண்டாகின்றதோ அதில் சத்தியத்தன்மையை நீக்குதற்கு துன்பம் விளைவியாத என விசேடிக்கப்பட்டது; பிறர் வாக்கால் ஆதரியாவிடத்தும் அடித்தவிடத்தும் உண்டாகப்பட்ட குரோதம் அப்போதே உபசமனமாதல் அக்குரோதமாம்; சாத்திரவிதிபூர்வகம் சர்வ கருமங்களின் சந்நியாசம் தியாகமாம். தானமும் தியாகமெனப்படுமாயினும் அந்தத் தானம் பூர்வ சுலோகத்திற் கூறப்பட்டது; ஆதலின் ஈண்டுத்தியாகசப்தத்தால் சர்வ கரும சந்நியாசமேகொள்ளற்பாலது. அந்தக்கரண உபசமம் சாந்தியாம்; காணுதபோது பிறர் தோடத்தை பிறர் முன் வெளிப்படுத்தல் புறங்கூறலாம்; அஃதின்மை புறங்கூறாமையாம். துக்கிகளிடத்துள்ள கிருபை தயையாம்; விடயங்கள் சமீபத்துறினும் நுகருமாற்றலிருப்பினும் இந்தியங்களின் அவிக்கிரியத்தன்மை விகாரமின்மையாம். வெகுளாமை கோரமின்மையாம்; அதாவது பயனிலாது பூர்வபக்ஷ முதலியவைகளைச் செய்யும் சிஷ்யன் முதலியோர்கட்கும் அன்பிலாக்கூற்றிலாகிப் போதித்தல் மார்த்தவமாம். செய்பத்தகாத காரியத்தை விடயம்பண்ணும் பிரவிருத்தியாரம்பத்தில் அதைத் தடைப்படுத்துவதாய உலகலச்சை ஹ்ரீ எனும் லச்சையாம். பயனிலாத இந்தியாதிகளின் தொழில் தொழிலாம். அஃதின்மை தொழிலின்மையாம். ஆண்டு, ஆர்ச்சவம் முதற்கொண்டு தொழிலின்மையீறாய் முன்னர்க்கூறிய இவ்வனைத்தும் பிராமணாது தெய்வீகசம்பத்து வடிவ அசாதாரண தருமங்களாம் என்க. (2)

(அ-கை.) மேலும்,

சு-ம். தேஜ: க்ஷமா த்ருதி: ஶௌசமத்ரோஹோ நாதிமாநிதா ।
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத ॥ (3)

ப-ம். 2 தேஜ: 3 க்ஷமா 4 த்ருதி: 5 ஶௌசம் 6 அத்ரோஹ: 7 நாதிமாநிதா 11 பவந்தி 9 ஸம்பதம் 8 தைவீம் 10 அபிஜாதஸ்ய 1 பாரத.

(அ-ம்.) ஹே பாரத! தேஜசு, க்ஷமை, திருதி, சௌசம், துரோகமின்மை, மிருந்தமான மின்மை என்னு மிவ்வனைத்தும் சத்துவவாசனையோடு தோன்றின வனுக்குப் பிராப்தியாவன. (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மனைவி மக்கள்முதலிய மூடர்களால் அமிழ்த்தப் படாமை தேஜசாம்; வலியிருந்தும் நிந்தைபண்ணுவோரிடத்து வெகுளாமை க்ஷமையாம்; வியாகூலம்வந்துறினும் தேகேந்திரியாதிகளை நிலைப்படுத்தும்பிரயத் தனவிசேடம் எந்தப் பிரயத்தனவிசேடத்தால் நிலைப்படுத்திய தேகேந்தியங்கள் வியாகூலத்தை யடையாதனவாமோ அந்தப் பிரயத்தனவிசேடம் திருதியாம்; தே ஜசு க்ஷமை திருதி என்டவைகள் க்ஷத்திரியர்களின் தெய்வீக சப்பத்துவடிவ அசா தாரண தருமங்களாம். திரவியமுதலியவைகளைத் தேடுவதில் மாயை பொய் முத லியவைகளின்மை சௌசமாம். இது ஆந்தர சௌசமென்றுணர்க. பண்ணீர் முதலி யவைகளாலுண்டாகும் தேகசுத்திவடிவமாகிய பாகிய சௌசத்தை ஈண்டுச்சௌச சப்தத்தாற் கொள்ளற்க; என்னை? அது தேகசுத்திவடிவமானதால் பாகியமாதலின் அந்தக்காரணத்தின்வாசனைவடிவமன்று. ஈண்டுப்பிரசங்கத்திலோ சாத்துவிக முத லிய வேறுபாட்டால் பின்னமான அந்தக்காரணவாசனைகளையே தெய்வீக ஆசுர சப்பத்துவடிவங்களாய்க் கூறக்கருதியதாமாதலின் சௌசபதத்தால் பாகிய சௌ சங்கொள்ளற்பாலதன்றும் என்க. யாதேனுமொரு பிராணியைக் கொல்லவேண்டு மென்னும் வேட்கையால் சஸ்திரமுதலியவகைகளைக் கிரகித்தல் துரோகமாம். அஃதி லாமை அத்துரோகமாம். சௌசம் அத்துரோகமின்மைகளிரண்டும் வைசியரின் சம் பத்துவடிவ அசாதாரண தருமமாம். மிகுமானிக்குந்தன்மை அதிமானித்தன்மை யாம்; அதாவது தன்னிடத்துப்பூஜ்யத்துவ அதிசயத்தின் பாவனை அதிமானித்தன் மையாம், அஃதின்மை மிருந்தமானமிலாமையாம்; அதாவது தன்னாற் பூஜித்தற் குரிய பிராமண க்ஷத்திரிய வைசிய வர்ணத்தார்களுக்குமுன் வணக்கமுடைமை மிக மானமிலாமையாம். இது சூத்திரனுடைய தெய்வீகசப்பத்து வடிவ அசாதாரண தருமமாமென்க. ஈண்டு, 'தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாஶகேந' என்பது முதலிய சுருதியால் ஆன்மஞா னேச்சைக்கு உபாயவடிவமாய்க்கூறப்பட்ட முக்கியா முக்கியவடிவ வருணசிரம தருமங்களும் ஈண்டுத் தெய்வீகசப்பத்து வடிவமாய்க் கொள்ளற்பாலனவாம். இவ்வாறு பயமின்மைமுதற்கொண்டு மிகமானமின்மையீறாக மூன்று சுலோகங் களாற் கூறப்பட்ட வெவ்வேறு வருணசிரமதருமங்கள் இப்புருஷனிடத்து உண்டாகின்றன. ஆண்டு எத்தன்மைய புருஷனிடத்து இவை யுண்டாகின்றன என்றர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின் றார். 'ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய இதி' ஹே அர்ச்சுன! இத்தேகாரம்ப காலத்தில் முந்திய புண்ணிய கருமத்தால் வெளிப்பட்ட சுத்த சத்துவகுணமய வாசனைக்கூட்டங்கள் தனதுள்ளத்தில் உண்டாகவே பார்த்துச் சன்மத்தை யடைந்த எவனுக்கு பின்னர் நன்மையுண்டாமோ அவனுக்கே இதத்தருமங்கள் கிடைக்கும். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. தம்போ தர்போऽபிமாநஶ்ச க்ரோத: பாருஷ்யமேவ ச ।

(பொ-ள்.) முன்முற்சன்ம புண்யகருமவாசனையால் பிற்பிற்சன்மங்களில் புண்ணியவானுகின்றான். பூர்வபூர்வ பாபகருமவாசனையால் இவன் உத்தரோத்தர சன்மத்திலும் பாபவானுகின்ருன் என்பதாம். ஈண்டு, ‘ஹெஹாரத’ என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவான் இவ்வர்த்தத்தைக் குறிப்பித்தருளினர். தூய்மையானகுலத்திற் பிறந்தவனுதலின் நீ மிகுந்த பவித்திரன்; ஆதலின் நீ கூறிப் போந்த தெய்வீகசம்பத்துவடிவ தருமங்களைச் சம்பாதித்தற்குரியோன் என்பதாம். (3)

(அ-கை.) ஆண்டுப்பூர்வம் மூன்று சுலோகங்களால் கொள்ளத்தக்க வடிவமாய் தெய்வீகசம்பத்தை அருளிச்செய்தனர். இப்போது ஸ்ரீ பகவான் தள்ளத்தக்க வடிவமாய் ஆசுரசம்பத்தை ஒரு சுலோகத்தாலருளிச்செய்கின்ருர்.

சு-ம். உ௦ஹொ உவொ-உ௨திஉாநஸ்ஹு கொ௱யஃ வாரு¬ஷ்யூஜெவ அ ।
ஊஜ்ஞாந ஷாஹிஜாதஸ்ய வாய-உ ஸ௦வஉஉாஸு¬ரீஂ ॥ (4)

ப-ம். 5 உ௦ஹஃ 6 உவ-உஃ 8 ஊதிஉாநஃ 7 அ 9 கொ௱யஃ 11 வாரு¬ஷ்யூ௦ 14 ஊவ 10 அ 13 ஊஜ்ஞாந௦ 12 அ 4 ஊஹிஜாதஸ்ய 1 வாய-உ 3 ஸ௦வஉ௦ 2 ஶூஸு¬ரீ௦.

(அ-ம்.) ஹே பார்த்த! ரசோகுணதமோகுணமய அசுபவாசனையோடு சன்மமடைந்தவனுக்குத் தம்பம், தர்ப்பம், அதிமானம், குரோதம், கடுஞ்சொல், அஞ்ஞானம் என்னுந்தோடங்களே பிராப்தமாம். (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தனது பெருந்தன்மை சித்தித்தற்பொருட்டு உலகத்தில் தன்னைத் தருமான்மாவாகப் பிரசித்தப்படுத்தல் தம்பமாம், தனம், வித்தை. குலம், பந்து, உருவம், கருமம் என்பன முதலிய நிமித்தங்களையுடைய சிரேஷ்ட புருஷனது அவமானத்திற்குக்காரணவடிவ கர்வ விசேடம் தர்ப்பமாம். தன்னிடத்தில் மிகுந்த பூஜ்யத்துவவடிவ அதிசயாரோபம் அதிமானமாம். எதனுல் அசுரர்கள் பராபவத்தை யடைந்தார்களோ அது சதபதபிராமண சுருதியிலுங் கூறப்பட்டுளது:—‘தெவாஸ்வா ஸு¬ராஸ்வா ஹயெவ௱ஜா வதூஃ வஸ்ஷ்ரயிரெத தொ ஸு¬ராஊதிஉா தெநெதெவகஸ்ஷிநயம் ஜு¬ஹு¬யாஉதி ஸெஷெவா ஸெஷ்ஷு¬ஜு¬ஹுத ஷெரு¬ஷெஉதிஉாநெநதெவ வராபவ ஹவெ¬ஷெஷாநாதிஉ நெஷ்த வராஹவஸ்ய ஹெஷ்த ஷு¬வ௦யஉதி உாநஃ’ என்பதாம். தனக்கும் பிறர்க்கும் அநிட்டம் பண்ணுவதிற் பிரவிருத்திக்கின்ற அக்கினிவடிவ அந்தக்கரணவிருத்தி விசேடம் குரோதமாம். இதை க்ஷோபமெனவுங்கூறுவர். பிரத்தியட்ச வன்சொற்கூறல் பாருஷ்யமாம். ஈண்டு, ‘வாரு¬ஷ்யூ ஜெவஅ’ என்னும் வாக்கியத்திலுள்ள சகாரம் ஈண்டுக்கூருத பாவவடிவ சபலம் முதலிய தோடங்களைக் கூட்டுவித்தற்பொருட்டாம். இக்காரியம் எனக்குச் செயற்பாலது இக்காரியம் எனக்குச் செயற்பாலதன்று என்னுங் கர்த்தவ்யாகர்த்தவ்ய விவேகமின்மை அஞ்ஞானமாம். ஈண்டு ஊஜ்ஞாநஞ’ என்னும் வாக்கியத்திலுள்ள சகாரம் ஈண்டுக்கூருத அபாவவடிவ தோடங்களையும் சேர்த்துக்கொள்ளுவித்தற்பொருட்டாம். ஆண்டு, அத்தன்மைத் தம்பமுதலியவைகள் எத்தன்மைய புருடனுக்கெய்துவனவாம் என்றருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்ருர். ‘ஶூஸு¬ரீ௦ ஸ௦வஉ௦ ஊஹிஜாதஸ்ய உதி’ அருச்சுன! இத்தேகாரம்பகாலத்தில் முந்திய பாவகருமத்தால் வெளிப்பட்டதும் ஆசுரபுருஷனது இச்சாவிஷயமுமாகிய ரசதமோகுணமய அசுபவாசனைக் கூட்டங்களைத் தனதுள்ளத்திற் பிராதுர்ப்பூதமாகப் பார்த்து சென்மமெடுத்த புருஷன் எவனுக்குப் பின்னர்த்தீமையுண்டாமோ அத்தன்

...தி புருஷனுக்கு இடம்பமுதல் அஞ்ஞானமீறுகிய தோடங்களைத் ...தமாம். கூறிப்போந்த பயமின்மை முதலிய குணங்கள் அவனுக்கொரு ...ராப்தமாகாதனவாம். ஈண்டு, ஹே பார்த்த என்னுஞ் சம்போதனத் ...பகவான் அர்ச்சுனனுக்கு இவ்வர்த்தத்தைக் குறிப்பித்தருளினர். சுத் ...யுண்டாகிய பிருதைமாதாவின் புத்திரனாதலின், நீ இந்த இடம்பமுத ...ம்பத்துக்குரியனல்லாய் என்பதாம். ஈண்டு, மூல சுலோகத்தில் 'அதி ...ன்னுமிடத்து 'அஹிஜாதஸ்' என்னும் பாடம் பலபுத்தகங்களிலிருக் ...ங்கணமாயினும் ஸ்ரீமத் பாடியக்காரரும் பாடியவியாக்கியானக்கருத்த ஆனந்தகிரிசுவாமிகளும் ஸ்ரீ மதுசூதன சுவாமிகளும் 'அதிஜாதஸ்' ...டத்தை அங்கீகரித்தே வியாக்கியானம் பண்ணியிருக்கின்றார்களாத ...ம் 'அதிஜாதஸ்' என்னும் பாடமே எழுதப்பட்டது என்க. (4)

௫.) ஆண்டுப் பூர்வம் நான்கு சுலோகங்களால் தெய்வீகம் ஆசுரம் இருவகைச் சம்பத்துக்களையுமருளிச்செய்தனர். இப்போது ஸ்ரீ பக ...ரிகட்கு அவைகளில் பிரவிருத்தி நிவிருத்தியுண்டாதற்பொருட்டு ...ம்பத்துக்களுக்கும் வெவ்வேறு பலத்தை அருளிச்செய்கின்றார்.

தைவீ ஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா ।
மா ஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ ॥ (5)

...தைவீ ஸம்பத் 2 விமோக்ஷாய 4 நிபந்தாய 3 ஆஸுரீ 5 மதா 11 மா ...ஶுச: 8 ஸம்பதம் 7 தைவீம் 9 அபிஜாத: 10 அஸி 6 பாண்டவ.

) ஹே அர்ச்சுன! தெய்வீகசம்பத்து மோக்ஷத்தின் பொருட்டாம் ...பந்தத்தின்பொருட்டாம் என அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஹே ...நீ தெய்வீகசம்பத்தைத் தேடிக்கொண்டு தோற்றியவனாதலின் சோக ... (5)

) ஹே அர்ச்சுன! பிராமணர் முதலிய வருணங்களிலும் பிரமசரிய ...ரமங்களிலும் எவ்வெவ் வருணாசிரமங்களைக்குறித்து வேத பகவானால் ...ன்றிய சாத்துவிகக்கிரியை விதிக்கப்பட்டிருக்கிறதோ அவ்வக்கிரியை ...ணாசிரமங்களின் தெய்வீகசம்பத்தெனப்படுகிறது. அது சத்துவ சுத்தி ஞானயோகவியவஸ்திதி என்பது பரியந்தஞ் சித்தித்த இவ்வதிகா ...த்தினின்று மோட்சமடைதற் பொருட்டேயாம்; அதாவது அந்தத் ...ம்பத்து இவ்வதிகாரிக்குக் கைவல்ய மோட்சத்தையே தருமாதலின் ...மையைக்கருதிய புருடனால் அந்தத் தெய்வீக சம்பத்தேகொள்ளற் ...ந்த வருணாசிரமங்களுக்குள் எவ்வெவ் வருணாசிரமங்களைக்குறித்து ...நால் பலேச்சை பூர்வகமாகவும் அகங்கார பூர்வகமாகவும் எந்தெந்த ...க்கிரியைகள் நிடேதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வந்நிஷித்தக் ...வ்வெவ் வருணாசிரமங்களுக்கு ஆசுரசம்பத்தெனப்படுகின்றன. இதற் ...ராக்ஷசீப்பிரகிருதி அடங்கியதாம். அவ்வாசுரிசம்பத்தோ நியமமாய்ச் ...பந்தத்தின் பொருட்டேயெனச் சாத்திரங்கட்கும் அதை யுணர்ந்த ...ம்மதமாம்; அதாவது சர்வ சாத்திர சாத்திரஞ்ஞர்களால் அவ்வா ...அடிக்கடி பிறப்பிறப்பு வடிவ சம்சாரபந்தத்திற்கே காரணமென்று ...றது. ஆதலின் நன்மையடையக்கருதிய அதிகாரியால் அது அவசிய ...டாலதேயாம். ஆண்டு நான் தெய்விகசம்பத்துடையனோ அல்லது ...டையனோ என்று ஐயமுற்ற அர்ச்சுனனுக்குத் தைரியத்தைக் ...தருகின்றார். 'மாஶுச: இதி' அர்ச்சுன! நான் அசுர சம்பத்துடை

யவன் என்னுமையத்தால் சோகமடையாதே. எதனாலெனின் நீயும் இத்தே காரம்ப காலத்தில் பூர்வ புண்ணியகருமத்தால் வெளிப்பட்ட சாத்துவிக வாஸ னையை நினதுள்ளத்தில் பிராதுர்ப்பூதமாகப்பார்த்தே இச்சன்ம மெடுத்தனை தலின்; அதாவது இச்சன்மத்திற்கு முன்னரும் நீ சுபத்தையே சம்பாதித்தனை பின்னும் உனக்குச் சுபமேயுண்டாகும். இதனால் உன்னிடத்து ஆசுரசம்பத்தின் ஐயத்தாற் சோகமுறல் தகுதியன்று என்பதாம். ஈண்டு, ஹே பாண்டவ என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவான் இவ்வர்த்தத்தைக் குறிப்பித்தருளினர்: பாண்டு ராஜாவின் வேறு புத்திரரிடத்தும் அத்தெய்வீக சம்பத்து மிக விளக்கமாய்க் காணப்படுமேல் பரமேசுரராகிய எமது அனன்யபக்தனாகிய உன்னிடத்தில் தெய் வீக சம்பத்து உள்ளதென்பதிற் கூறற்பாலதென்னே என்பதாம். (5)

(அ-ஷை.) ஹே பகவன்! ராக்ஷசப்பிரகிருதிக்கு ஆசுரசம்பத்தில் அந்தர்ப் பாவமாகுக; என்னே? சாத்திர நிஷேதித்த கிரியாபிரமத்தன்மை அவ்விரண்டி னுஞ் சமமாதலின் ஓரிடத்தில் அவ்விரண்டையும் வெவ்வேறாய்க்கூறியிருக்கின் றனர். அதுவும் விடயபோகத்தின் பிரதானத்தானும் ஹிம்சையின் பிரதானத் தானும் சம்பவமாதல் கூடும். ஆனால் இத்தெய்வீக சம்பத்து ஆசுரசம்பத்துக் களின் வேறாய் மூன்றாவது மாநுடப்பிரகிருதியோ பின்னமாம்; என்னே? சுருதி யில் அம்மாநுடப்பிரகிருதி பின்னமென்றே கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. த்ரயா꞉ ப்ராஜாபத்யா꞉ ப்ரஜாபதௌ ।
விதனி ப்ரஹ்மசர்யமூஷு꞉ தேவா மனுஷ்யா அஸுரா இதி ॥

(பொ-ள்.) பிரஜாபதியினின்றுமுண்டாகிய தேவ மநுட அசுரர் என்னு மூவ ரும் அந்தப்பிரஜாபதியாகிய பிதாவின் சமீபத்தில் பிரமச்சரியத்தைச் செய்தார் கள் என்க. ஆதலின் அந்த மூன்றாவது மாநுடப்பிரகிருதியும் ஆசுரசம்பத்தைப் போலத் தள்ளத்தக்கதிற் கூறப்பட்டதோ அல்லது தெய்வீகசம்பத்தைப்போல கொள்ளத்தக்கதிற் கூறப்பட்டதோ என்னுமர்ச்சுனன் சங்கையுண்டாக ஸ்ரீ பக வான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச ।
தைவோ விஸ்தரஶ꞉ ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ஶ்ருணு ॥ (6)

ப-ம். 4 த்வௌ 6 பூதஸர்கௌ 3 லோகே 2 அஸ்மிந் 7 தைவ꞉ 9 ஆஸுர꞉ 5 ஏவ 8 ச 10 தைவ꞉ 11 விஸ்தரஶ꞉ 12 ப்ரோக்த꞉ 13 ஆஸுரம் 1 பார்த்த 14 மே 15 ஶ்ருணு.

(அ-ம்.) ஹே பார்த்த! இவ்வுலகத்தில் பூதசிருட்டி இருவகையேயாம். ஒன்றே தேவசிருட்டி மற்றொன்றே ஆசுர சிருட்டியாம். அவற்றுள் தேவசிருட் டியையே உனக்கு முன்னர் நாம் விரிவாய்க்கூறினோம். இப்போது இரண்டாவதா கிய ஆசுரசிருட்டியை எம்மிடத்தினின்றும் கேட்டி. (6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலகத்தில் பூதசிருட்டி இருவகையேயாம்; அதாவது இருவகையே மநுடசிருட்டி. அது யாதென்றறியும் வேட்கையுண்டாக அருளிச்செய்கின்றார் ஸ்ரீ பகவான். 'தைவ ஆஸுர ஏவ ச' தேவசிருட்டி அசுரசிருட்டி என்பனவாம். இதற்கயலாய் மூன்றாவதாய யாதொரு ராக்ஷஸசிருட் டியேனும் மநுடசிருட்டியேனுமின்றாம். ஆண்டு, எம்மநுடன், எப்போது சாத் திரசன்ய சம்ஸ்காரத்தின் பிரபலத்தன்மையால் சுபாவசித்தமான ராகத்துவேஷங் களைத் திரஸ்கரித்துக் கேவலம் தருமபாராயணனாகின்றானோ அம்மநுடன் தெ

காலத்தில் தேவனெனப்படுகின்றான். எவன் எப்போது சுபாவசித்த ராகத்து வேடங்களின் பிரபலத்தன்மையால் சாஸ்திரசன்ய சமஸ்காரத்தைத் திரஸ்கரித்துக் கேவலம் அதருமபராயணனே யாகின்றானோ அம்மநுடன் அக்காலத்தில் அசுரனெனப்படுகின்றான். இவ்வாற்றால் இருவகைத்தான மநுடசிருட்டியே சித்தமாகின்றது தருமாதருமங்கட்கு வேறாய் மூன்றாவது வரம்பொன்றின்மையின்; மற்றோ உலகவேதங்களில் தருமாதருமங்களெனும் வரம்பே பிரசித்தமாம். ஆண்டு இருவகைப் பூதசிருட்டி சுருதியிலுங்கூறப்பட்டுளது. (6)

ஆ-சு. த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச ।
தைவோ விஸ்தரஶ: ப்ரோக்த ஆஸுரம் பார்த மே ஶ்ருணு ॥

(பொ-ள்.) பிரஜாபதியினின்று முண்டானது இருவகைப் பூதசிருட்டியே. ஒன்றோ தேவதையாம்; மற்றொன்றோ அசுரராம்: அவற்றுள் அசுரரினின்று தேவதை சிறியதாம் தேவதையினின்று அசுரர் பெரியர் என்க. அன்றியும் தமம் தானம் தயை என்பவைகளை விதிக்கப்பட்ட 'த்வயா: ப்ராஜாபத்யா:' என்பது முதலிய வாக்கியங்களிலோ தமம், தானம், தயை என்பவைகளின்றிய மநுடனே அசுரத்தன்மையுடையனாய் யாதானுமொரு தருமசமானத்தால் தேவனெனவும் மநுடனெனவும் அசுரனெனவும் படுகின்றான். ஆதலின் அவ்வாக்கியத்தால் மூன்றாவது பூதசிருட்டி பெறப்படவில்லை. ஆண்டுப் பிரசங்கத்தில் பிரஜாபதியானவர் ஒரே-த-என்னுமிவ்வக்ஷரத்தால் தமமின்றிய மநுடர்கட்கோ இந்திரியநிக்கிரகவடிவ தமத்தையுபதேசித்தருளினர். தானமின்றிய மநுடர்கட்கோ தானத்தை யுபதேசித்தருளினர். தயையின்றிய மநுடர்கட்கோ தயையை உபதேசித்தருளினர். இவ்வாறே ஒரே மநுஷ்யத்தன்மைச் சாதியையுடைய மநுடர்களைக்குறித்தே பிரஜாபதியானவர் அதிகார வேறுபாட்டால் தமம் தானம் தயை என்னுமவைகளை உபதேசித்தனர். அவ்வாக்கியத்தில் ஒன்றற்கொன்று விஜாதீயமான தேவர் அசுரர் மநுடர் என்பவர்களைச் சொல்லக்கருதியதன்று. எதனால் சாத்திரோபதேசத்திற்கு மநுடனொருவனே அதிகாரியாவனோ தேவாசுரர்களல்லர்களோ அதனாலிப்பொருள் பெறப்பட்டது:—ராக்ஷச மாநுடப் பிரகிருதிகள் ஆசுரசம்பத்தின்கண்ணே அடங்கியவைகளாம்; ஆசுரசம்பத்தினின்று அவ்விரண்டும் பின்னங்களன்று. ஆதலின், தேவசிருட்டி அசுரசிருட்டி இருவகையே பூதசிருட்டி என முன்னர்க்கூறியது பொருத்தமுடையதேயாம். அவ்விருவகைச் சிருட்டிகளிலும் முதலாவதாகிய தேவபூத சிருட்டியோ எம்மால் உனக்கு முன்னர்க்கூறப்பட்டது. ஆண்டு, இரண்டாவது அத்தியாயத்திலோ திடப்பிரக்ஞன் லட்சணத்திலும், பன்னிரண்டாவது அத்தியாயத்திலோ பகவத்பக்தன் லக்ஷணத்திலும், பதின்மூன்றாவது அத்தியாயத்திலோ ஞானலக்ஷணத்திலும், பதினான்காவது அத்தியாயத்திலோ குணாதீத புருடலக்ஷணத்திலும், இப்பதினாறாவது அத்தியாயத்திலோ 'அபயம் ஸத்வஸம்ஶுத்தி:' என்பது முதலிய வாக்கியங்களாலும் மிக விரிவாய்க்கூறப்பட்டது என்பதாம். இப்போது இரண்டாவதாகிய ஆசுரபூத சிருட்டியை விரிவாய்க்கூறுகிறேம் கேட்டி; அதாவது அதைத் தியாகஞ்செய்தற்பொருட்டு முன்னர் அதை நிச்சயம்பண்ணுதி; என்னை? எந்த அநிட்டவஸ்துவின் ஞானம் வலிதிலுண்டாகின்றதோ அவ்வநிட்ட வஸ்துவே தள்ளத்தக்கது; அப்பொருளின்வடிவ வுணர்ச்சியின்றி அப்பொருளைத் தியாகம்பண்ணல் அமையாது என்பதாம். ஆண்டு, ஹே பார்த்த என்னுஞ் சம்போதனத்தால் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்து தமது சம்பந்தித்தன்மையைக் கூறியருளினர். அதனால் அர்ச்சுனவிடயக வுபேட்சையின்மை குறிப்பித்தருளப்பட்டது; அதாவது யாம் ஒருபோதும் உன்னை யுபேட்சியேம் என்பதாம். (6)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான்! விடத்தக்க ஆசுரசம்பத்தைப் பிராணிகளின் விசேடவடிவமாய் அருளிச்செய்கின்றார். 'தாநஹம் த்விஷத: க்ரூராந்' என்னுஞ் சுலோகத்திற்கு முந்தியுள்ள பன்னிரண்டு சுலோகங்களால்.

சு-ம். ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச ஜநா ந விதுராஸுரா: ।
ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥ (7)

ப-ம். 3 ப்ரவ்ருத்திம் ச 5 நிவ்ருத்திம் 4 ச 2 ஜநா: 6 ந 7 விது: 1 ஆஸுரா: 10 ந 9 ஶௌசம் 15 ந 14 அபி 12 ச 13 ஆசார: 17 ந 16 ஸத்யம் 8 தேஷு 11 வித்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அசுரசுபாவமுடைய மநுடர்கள் தருமாதருமங்களையுணரார்கள்; இதனாலே அவர்களிடத்துச் சௌசம் ஆசாரம் சத்தியம் என்பவைகளும் இல்லாதனவாம். (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இடம்பம் தர்ப்பமுதலிய அசுரசுபாவமுடைய மநுடர்கள் பிரவிருத்தியையும் அதற்கு விடயமான தருமத்தையுமுணரார்கள். ஈண்டு 'ப்ரவ்ருத்திஞ்ச' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரத்தா (உம்மையா)ல் அந்தத் தருமத்தைப் பிரதிபாதிக்கும் விதிவாக்கியத்தையுங் கொள்ளவேண்டும்; அதாவது தருமத்தைப் பிரதிபாதிக்கும் விதிவாக்கியத்தையும் அவர்களுணரார்கள் என்பதாம். அங்ஙனமே அவர்கள் நிவிருத்தியையுமுணரார்கள்; அதாவது நிவிருத்திக்கு விடயபூதமான தருமத்தையுமுணரார்கள் என்பதாம். ஈண்டு, 'நிவ்ருத்திஞ்ச' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரத்தால் அவ்வதருமத்தைப் பிரதிபாதிக்கும் நிடேத வாக்கியத்தையுங் கொள்ளவேண்டும்; அதாவது அதருமத்தைப் பிரதிபாதிக்கும் நிடேதவாக்கியத்தையும் அவர்கள் உணரார்கள் என்பதாம். இதனாலே அவர்களிடத்து இருவகைச் சௌசங்களும் இல்லாதனவாம். அவற்றுள் மண்ணீர் முதலியவைகொண்டு தேகத்தைத் தூய்மைபண்ணல் பாகிய சௌசமாம். மைத்திரி கருணை முதலியவைகளால் இராகத்துவேட முதலியவைகளின்றிய தன்மை ஆந்தர சௌசமாம். அன்றியும் மநுமுதலிய உத்தம புருடர்களால் தருமசாத்திரத்திற் கூறப்பட்ட ஒழுக்கமும் அவர்களிடத்திராது. இன்சொல் இதச்சொல் உண்மைச்சொல் அவர்களிடத்தில் இராது என்பதாம். அத்தன்மைய சௌசம் ஆசாரம் உண்மை என்பவைகளின்றிய மாயாவியாகிய அசுர மநுடன் இவ்வுலகத்திலும் பிரசித்தனே என்பதாம். (7)

(அ-கை.) ஹே பகவன்! பிரவிருத்தி அப்பிரவிருத்திகட்கு விடயமாகிய தருமாதருமங்களைப் பிரதிபாதிக்கும் வேதவடிவப் பிரமாணம் இருக்கின்றதே அது பிராந்தி பிரமாத முதலிய சர்வ தோடங்களுமின்றியதும் நேரே பரமேசுரனது ஆணைவடிவினதும் உலகங்களனைத்திலும்பிரசித்தமானதுமாம். அன்றியும் அதைத் தழுவிய ஸ்மிருதி புராணம் இதிகாசம் என்பன முதலியவைகளும் தருமாதருமங்களைப் பிரதிபாதிப்பவைகளாயிருக்கின்றனவே அத்தன்மைய பிரமாணபூத வேதம் ஸ்மிருதி புராணம் இதிகாசம் முதலியவைகள் இருந்தும் தருமாதருமங்களின் அஞ்ஞானமும் அவற்றின் பிரமாணத்தின் அஞ்ஞானமும் எக்காரணத்தாலாம்? அவனுக்குத் தருமாதருமங்களின் ஞானமும் அதைப்போதிக்கும் பிரமாணத்தின் ஞானமுந்தோன்றவே வேதவடிவ ஆக்ஞையைக் கடக்கப்பட்டவர்களைச் சிட்சிக்கும் பரமேசருமிருக்கவே வேதங்கூறிய பொருளை அநுட்டியாது சௌசம் ஆசாரங்களு மிலதாந்தன்மை அவர்கட்கு எக்காரணத்தாலுண்டாம்? எதனால் துஷ்டதரே யன்றோ என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 𑌤𑍇 𑌜𑌗𑌦𑌾𑌹𑌰𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 ।
𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑌤𑍍𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌮𑍍 ॥ (8)

ப-ம். 3 𑌅𑌸𑌤𑍍𑌯𑌂 4 𑌅𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌂 1 𑌤𑍇 2 𑌜𑌗𑌤𑍍 8 𑌆𑌹𑍁𑌃 5 𑌅𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 6 𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 10 𑌕𑌿𑌂 9 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 7 𑌕𑌾𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வாசுரர்கள் இவ்வுலகத்தை அசத்தியம் அப்பிரதிஷ்டம் அநீசுரம் அபரஸ்பரசம்பூதம் காமகாரணம் எனக்கூறுகின்றார்கள். இவ்வுலகத்திற்கு வேறு யாதொருகாரணமுமில்லை. (8)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வாசுரர்கள் இவ்வுலகத்தை அசத்தியமெனக் கூறுகின்றார்கள். ஆண்டுக்காட்சி முதலிய அளவைகளால் கெடாத தாத்பரிய விடயத்தையுடைய உண்மைப்பொருளை யுணர்த்தும் வேதவடிவப் பிரமாணம் அதைத்தழுவிய மிருதி புராணம் இதிகாசம் முதலியவைகள் சத்தியமாம் அத்தன்மைய சத்தியமின்றியது அசத்தியமாம். அத்தன்மைய அசத்துவடிவமென இவ்வுலகத்தைக் கூறுகின்றார்கள். இருக்குமுதலிய வேதங்கள் மநுஸ்மிருதி முதலிய மிருதிகள் பாகவத முதலிய பதினெண் புராணங்கள் மஹா பாரதமுதலிய இதிகாசங்கள் காட்சியளவையாற் சித்திக்கின்றவைகள். அத்தன்மைய வேதமுதலியவைகளை நிஷேதித்தல் சம்பவியாதாயினும் அவ்வாசுர புருஷர்கள் வேத முதலிய பிரமாணங்களை அங்கீகரித்திலர். ஆதலின் பிரமாணவடிவ விசேடமின்மையின் அந்தப்பிரமாணத்தன்மை விசிஷ்ட வேதமுதலியவைகளின் அபாவங்கூறப்பட்டது. அசத்தியமானதால் இவ்வுலகத்தை அவர்கள் அப்பிரதிஷ்டமெனக் கூறுகின்றார்கள். ஆண்டுத் தருமாதருமவடிவப் பிரதிட்டை விவஸ்தைக்குக் காரணமாகவுடையதாகாதது அப்பிரதிஷ்டமாம். அதாவது அவர்கள் தருமாதருமங்களை இவ்வுலக விவஸ்தைக்குக் காரணங்களெனக் கொண்டிலர் என்பதாம். அவர்கள் இவ்வுலகத்தை அநீசுரம் எனக்கூறுகின்றார்கள். ஆண்டுச் சுபாசுபகருமங்களின் சுகதுக்கவடிவ பலனைக்கொடுப்பதில் ஈசுரரெனும் நியந்தாவை உடையதாகாதது அநீசுரம். இவ்வுலகம் அத்தன்மையதெனக் கூறுகின்றார்கள். கருத்திதுவாம்.—வலியுடைய பாபவடிவப் பிரதிபந்தக வசத்தால் அவர்கள் வேதமிருதி புராணவிதிகாசங்களைப் பிரமாணரூபமாய்க் கொண்டிலர். இதனானே அவர்கள் அவைகள் போதித்த தருமாதருமங்களையும் ஈசுரரையுங் கொண்டிலர். இதனானே அவர்கள் பயமின்றி நிஷித்த ஆசாரணத்தையேசெய்கின்றார்கள். அந்த நிஷித்தாசரணத்தால் அவர்கள் தருமமோட்சவடிவப் புருடார்த்தங்களினின்று நழுவியவர்களேயாகின்றார்கள் என்பதாம். அற்றேல் ஹே பகவன்! கேவலம் நூலளவையாலறிதற்குரிய தருமாதருமங்களின் சகாயத்தால் இவ்வுலகனைத்திற்கும் காரணவடிவப் பிரகிருதியின் அதிட்டாதாவாகிய பரமேசுரரை இவ்வுலகத்திற்கு அவர்கள் அங்கீகரியார்களேல்காரணமின்றியதாகவேஇவ்வுலகவடிவ காரியோத்பத்தி அவர்கள் மதத்தில் எவ்வாறாம் என்னுமர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். '𑌅𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌇𑌤𑌿' ஹே அர்ச்சுன! அவ்வாசுரர்கள் இவ்வுலகத்தை ஈசுரரிடத்தினின்று முண்டானதெனக் கொண்டிலர். மற்றோ, அபரஸ்பர சம்பூதமெனக் கொண்டிருக்கின்றார்கள். அதாவது விடயவின்ப வேட்கைவடிவக் காமத்தால் பிரேரிக்கப்பட்ட புமான் பூவையர்களின் புணர்ச்சியினின்றே இவ்வுலகமுண்டானது. ஆதலின் இவ்வுலகம் காமத்தைக்காரணமாகவுடையது; அதாவது இவ்வுலகத்திற்குக் காமமேகாரணம் அதனின் வேறாயொரு காரணமுமின்று. அற்றேல் இவ்வுலகோற்பத்தியில் தருமாதருமங்களையுங் காரணமெனக்கொள்ளல்வேண்டும், என்னை, ஒருகால் அவைகளைக் காரணமெனக்கொள்ளவில்லையேல் உலகத்தில் சிலர்கள்

துக்கிகள்; சிலர்கள் சுகிகள்; சிலர்கள் மூடர்கள்; சிலர்கள் பண்டிதர்கள் என்னும் வியவஸ்தை அமையாது; அங்ஙனங்கொள்ளிலோ அமையும் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'கிமந்யத் காமஹைதுகம்' அவர்கள் தருமாதருமவடிவ அதிர்ஷ்டத்தை இவ்வுலகத்திற்குக் காரணமெனக் கொண்டிலர்; என்னை? அவ்வதிருஷ்டத்தைக்கொள்ளினும் ஈற்றில் சுபாவத்தின்கண்ணே முடிவுறும்; அச்சுபாவத்தானே இவ்வுலகத்தில் விசித்திரத்தன்மைகள் சம்பவித்தல் கூடும். அவ்விசித்திரத்தின்பொருட்டு அவ்வதிருஷ்ட கற்பனை எற்றிற்கு? சாத்திரத்திலும் திருஷ்டஞ் சம்பவிக்குமிடத்து அதிருஷ்டகற்பனை அநியாயமாதலின் என்னு நியமமுங் கூறப்பட்டிருக்கிறது. அதாவது காரியோத்பத்தியில் திருஷ்ட காரணஞ் சம்பவிக்குமிடத்து அதிருஷ்டகாரணத்தைக் கற்பித்தல் பொருத்தமுடையதன்று என்பதாம். இதனுலிப்பொருள்பெறப்பட்டது.—காமமே சர்வப்பிராணிகட்குங் காரணம்; அதனின் வேருக தருமாதருமவடிவ அதிருஷ்டம் ஈசுரன் முதலிய யாதொரு காரணமுமின்று. இவ்வாறு அவ்வாசுரர்கள் இவ்வுலகத்திற்குக் கேவலம் காமமே காரணமெனக் கூறுகின்றார்கள். கூறிப்போந்த இத்திருஷ்டி தேகான்மவாதியாகிய உலகாயதர்கட்குக் கூறியதாம் என்க. (8)

(அ-கை.) ஹே பகவன்! கூறிப்போந்த உலகாயதர்களின் திருஷ்டியுஞ் சாத்திரதிருஷ்டிபோல இஷ்டரூபமேயாம் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அத்திருஷ்டியினின்று முமூட்சுக்களை நீக்குதற்பொருட்டு அதில் அநிஷ்டரூபத் தன்மையை அருளிச்செய்கின்றார்.

சு-ம். ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மானோऽல்பபுத்தய: ।
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: ॥ (9)

ப-ம். 1 ஏதாம் 2 த்ருஷ்டிம் 3 அவஷ்டப்ய 4 நஷ்டாத்மான: 5 அல்பபுத்தய: 10 ப்ரபவந்தி 6 உக்ரகர்மாண: 9 க்ஷயாய 8 ஜகத: 7 அஹிதா:

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த திருஷ்டியை ஆசிரயித்து நஷ்டான்மாக்களும் சிற்றறிவாளிகளுமாகிய உக்கிரகருமமுடைய அந்தச் சத்துருபுருஷர்கள் சர்வப்பிராணிகளையு நாசஞ்செய்தற்பொருட்டு வியாக்கிர சர்ப்பமுதலிய வடிவங்களாக உத்பவிக்கின்றார்கள். (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த இந்த லோகாயதர்களின் திருஷ்டியை ஆசிரயித்து அவ்வாசுரர்கள் நஷ்டான்மாவாகின்றார்கள். ஆண்டுக்காமக்குரோத லோபமோகம் என்பன முதலிய வடிவ ரசோதமோ தோஷங்களால் நஷ்டமானதெனும் மறைக்கப்பட்ட ஆன்மாவெனும் விவேக புத்தியை யுடையவர்கள் நஷ்டான்மாக்கள்; அதாவது அவர்கள் பரலோகசாதனத்தினின்றும் பிரஷ்டமானவர்கள் என்பதாம். மற்று மெத்தன்மையர்களெனின் அற்பபுத்திகள். ஆண்டு, மிகத்துச்சமான மாலை சந்தனம் மாது என்பன முதலிய விடயபோகங்கள் அற்பமாம். அதிற் புத்தியுடையர்கள் அற்பபுத்திகள்; அல்லது மலம் மாம்சம் உதிரம் அத்தி மச்சை என்பன முதலிய நிந்திதப் பொருள்களின் சமுதாய வடிவ இவ்வுடல் அற்பமாம். அதில் நானெனும் புத்தியுடையர்கள் அற்பபுத்திகள்; அதாவது காணப்படும் விடய சுகமாத்திரத்தையுத்தேசித்துப் பிரவிருத்தித்த புத்தியையுடையவர்கள் அற்பபுத்திகள். மற்று மெத்தன்மையரெனின் அவர்கள் உக்கிரகருமர்கள். ஆண்டு உக்கிரமெனும் மிகக்கோரமான கருமத்தை யுடையவர்கள் உக்கிரகருமர்கள். அதாவது உடலோம்பலாகிய பயனையும் மிகுந்த சீவக்கொலை

யையுமுடைய சாஸ்திரநிஷேதித்த கருமங்களையே செய்பவர்கள் என்பதாம். மற்றுமெத்தன்மையர்களெனின் அகிதர்கள்: அதாவது அபகாரஞ்செய்வதின்றியே சர்வப்பிராணிமாத்திரத்திற்குஞ் சத்துருக்கள். இவ்வாறு கூறிப்போந்த உலகாயதர்களின் திருஷ்டியை ஆசிரயித்து நஷ்டான்மாக்களும் அற்பபுத்திகளும் உக்கிரகருமிகளும் சத்துருக்களுமாகிய அவ்வாசுரர்கள் சர்வப்பிராணிமாத்திரத்தையும் நாசஞ்செய்வான் வியாக்கிரசர்ப்பமுதலிய வடிவமாய் உத்பவிக்கின்றார்கள். ஆதலின் பூர்வசுலோகத்திற்கூறிய உலகாயதர்களின்திருஷ்டி அத்தியந்த அதோகதிக்கே காரணமாம். ஆதலின் மோட்சவேட்கையடையவனால் எல்லாவாற்றானும் அத்திருஷ்டிதள்ளத்தக்கதேயாம் என்க. (9)

(அ-கை.) இவ்வாறு வியாக்கிரசர்ப்பமுதலிய தாமத யோனிகளில் வெகுகாலபரியந்தம் சுழன்று அவர்கள் யாதானுமொருகருமவசத்தால் மநுடயோனியை அடையினும் தமது மோட்சோபாயத்திலே பிரவிருத்தியார்கள்; மற்றோ, அமோட்சவுபாயத்திலே பிரவிருத்திப்பார்கள் என்னுமர்த்தத்தை ஸ்ரீபகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌕𑌾𑌮𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌂 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑍋𑌹𑌾𑌦𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇𑌽𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 ॥ (10)

ப-ம். 2 𑌕𑌾𑌮𑌂 3 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 1 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌂 4 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 6 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 8 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 7 𑌅𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍 9 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 5 𑌅𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நிறைவிலாக்காமத்தை ஆசிரயித்து இடம்ப மான மதங்களோடுகூடி அசுசிவிரதமுடைய அவ்வாசுரபுருஷர்கள் விவேகமின்மையால் அசுபநிச்சயத்தைக்கொண்டு வேதத்திற்குமாறாகிய கருமங்களிற் பிரவிர்த்திக்கின்றார்கள். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நூறுகோடி வருடபரியந்தம் விடயங்களை யநுபவித்தும் பூரணமாகாத அவ்வதிருஷ்டவிடயங்களின் காமவடிவ நிறைவுபடாக்காமத்தை ஆசிரயித்து அவ்வாசுரர்கள் இடம்பம் மானம் மதம் என்பவைகளோடு கூடியவர்களாகின்றார்கள். ஆண்டு, உள்ளிற்றரும நிட்டையில்லாதிருந்தும் வெளியில் உலகர்களுக்குமுன் தனது தருமான்மத்தன்மையை வெளிப்படுத்தல் இடம்பமாம். உண்மையில் பூஜ்யத்தன்மைக்குத் தகுதியாகாதிருந்தும் உலகர்களுக்குமுன் தனது பூஜ்யத்தன்மையை வெளிப்படுத்தல் மானமாம். உண்மையில் மிக்கதாந்தன்மையின்றேனும் தன்னிடத்தில் மிக்கதாந்தன்மையை ஆரோபித்தல் மதமாம். எந்தமதம் உத்தமபுருடர்களின் அவமானத்திற்குக் காரணமோ அத்தன்மைய இடம்பம் மானம் மதம் என்பவைகளோடுகூடிய அவ்வாசுரர்கள் கேவலம் அவிவேகத்தால் அசத்துக்கிரகணத்தைக்கொண்டு, அதாவது இம்மந்திரத்தால் இத்தேவதையை ஆராதித்து நான் இம்மாதை ஆகர்ஷிப்பேன்; அங்ஙனமே இம்மந்திரத்தால் இத்தேவதையை ஆராதித்து நான் பெருநிதியைச்சம்பாதிப்பேன்; அங்ஙனமே இம்மந்திரத்தால் இத்தேவதையை ஆராதித்து நான் இம்மாற்றானைக்கொல்லுவேன் என்பனவாய ஆராக்கிரகவடிவ அசுப நிண்ணயத்தைக் கேவலம் அவிவேகவடிவ மோகத்தால் கிரகித்து அவ்வாசுரர்கள் அசுசிவிரதர்களாகின்றார்கள். ஆண்டு, மயானமுதலிய தேசத்தையும் உச்சிஷ்டத்தன்மைமுதலிய அவத்தையையும் மதுமாம்சபட்சணம் என்பனமுதலிய அசௌசத்தையும் அபேட்சித்துச் சித்தியாகப்பட்ட வாமதந்திரங்கூறிய விரதமுடையவர்கள் அசுசிவிரதர்கள். அத்தன்

மைத்தான ஆசுரர்கள் கேவலம் திருஷ்டபலத்தைத்தரும் அற்ப தேவதைகளின் ஆராதனவடிவ யாதானுமொரு வேதமூலமற்ற கருமத்திலே பிரவிருத்திக்கின்றார்கள். அத்தன்மைத்தான ஆசுரபுருஷர்கள் மரித்து அசுசியான நரகத்தில் விழுகின்றார்கள். இவ்வாறு இச்சுலோகத்தை 'வதந்தி நாந்யதஸ்தீதி' என்னும் மேற்கூறப்படும் வாக்கியத்தோடு அந்நுவயஞ்செய்க என்பதாம். (10)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் கூறிப்போந்த இவ்வாசுர புருடர்கட்கே மீண்டும் ஆசுரசம்பத்தை அநேக விசேடணங்களாலருளிச்செய்கின்றார்.

சு-ம். சிந்தாமபரிமேயாஞ்ச ப்ரளயாந்தாமுபாச்ரிதா: ।
காமோபபோகபரமா ஏதாவதிதி நிச்சிதா: ॥ (11)

ப-ம். 4 சிந்தாம் 3 அபரிமேயாம் 1 ச 2 ப்ரளயாந்தாம் 5 உபாச்ரிதா: 6 காமோபபோகபரமா: 7 ஏதாவத் 8 இதி 9 நிச்சிதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாங்காறுமுள்ள அளவிலாச்சிந்தையை யாசிரயித்தவர்கள்; சப்தமுதலிய விடயபோகங்களையே பரமபுருடார்த்தமெனக் கருதியவர்கள்; இவ்விடய சன்ய திருஷ்ட வின்பமேயின்பம் என நிச்சயமுடையவர்கள். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அடையாப் பொருளினடைவுவடிவ யோகம் அடைந்த பொருளைக்காத்தல்வடிவ க்ஷேமம் என்னுந்தனது யோகக்ஷேமங்களின் உபாய சிந்தனவடிவ சிந்தையாம். அது எத்தன்மையதாமெனின் அபரிமேயமாம்: அதாவது கணக்கிலாப்பொருளை விடயஞ்செய்வதானதால் அச்சிந்தையும் கணக்கற்றதாம். அது இவ்வளவு கணக்குடையதென நிச்சயித்தற்கேலாதது; மற்றுமெத்தன்மையதெனின் அச்சிந்தை பிரளயாந்தமானது. ஈண்டு, மரணம் பிரளயமாம், அந்த மரணவடிவப் பிரளயத்தை அந்தமாகவுடையது பிரளயாந்தமாம்; அதாவது சிவதசைவரையிலுமிருப்பதாம். அத்தன்மைய அபரிமேய பிரளயாந்தமாகிய சிந்தையையுடையவர்கள் அவ்வாசுரர்கள். ஈண்டு, 'சிந்தாமபரிமேயாஞ்ச' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரமானது கூறிப்போந்த அசுசிவிரதத்தைச் சேர்த்துக் கொள்ளுவித்தற்பொருட்டாம்; அதாவது அவர்கள் கேவலம் அசுசிவிரதமுடையர்களாய் வேதவிருத்த கருமங்களிற் பிரவிருத்திப்பவர்களன்று: மற்றோ, இவ்விதமாகிய சிந்தையை ஆசிரயித்தவர்களாகியும் வேதவிருத்த கருமங்களிற் பிரவிருத்திக்கின்றார்கள் என்பதாம். ஹே அர்ச்சுன! அவ்வாசுரர்கள் எப்போதும் பலவகையான சிந்தையுடையவர்களாயிருந்தும் ஒருபோதும் பரலோகசிந்தையுடையவர்களலர்; மற்றோ காமோபபோக பரமர்களே யாகின்றார்கள். ஈண்டுக் கிருபணர்களின் காமத்திற்கு விஷயமாகிய சப்தமுதலிய விடயங்கள் காமமாம். அவற்றின் உபபோகத்தை பரமவெனும் புருஷார்த்தமாகவும் தரும முதலியவைகளை அபுருடார்த்தமாகவு முடையவர்கள் காமோபபோக பரமர்களாவர்கள்; அதாவது அவர்கள் இவ்வுலகத்தின் மாலைசந்தனவனிதை முதலிய விடயபோகமே பரமபுருடார்த்தமாகவும் தருமமோட்சங்கள் அபுருடார்த்தமாகவும் அங்கீகரித்துள்ளவர்கள். அற்றேல் ஹே பகவன்! அவர்கள் இவ்வுலக விடயசன்ய சுகத்தையிச்சிக்கின்றதுபோலப் பரவுலக வுத்தமசுகத்தை வேட்டிடாததென்னை என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ஏதாவதிதி நிச்சிதா:' ஈண்டு, இவ்வுலகத்தில் சப்தமுதலிய விடயபோகசன்ய திருஷ்ட சுகமே சுகம்; இதனின் வேறாய இத்தேகம் விழுந்ததின்பின்னர் அநுபவிக்கத்தக்க சுகம் யாதொன்றுமில்லை; என்னை, பரவுலகத்திற்சென்று அச்சுகத்தை யநுபவிக்கும் போக்தா இத்தூலவுடற்கயலாய் இல்லை; மற்றோ, இத்தூலவுடலே போக்தான்

மாவாம் ; என்னும் நிச்சயமுடையவர்கள் பரலோக சுகத்தை இச்சியார்கள். இவர்களுடைய மதம் பிருகற்பதியாற் கூறப்பட்டது.

ஆ-சு. சைதந்யவிஶிஷ்டஃ காயஃ புருஷஃ காமஏவைகஃ புருஷார்த்தஃ ।

(பொ-ள்.) சைதன்யமுடைய தூலவாக்கை ஆன்மாவாம். இவ்வுலக மாலை முதலிய விடயபோகமே பருமபுருடார்த்தம் என்பதாம். பிருகற்பதி வைதிகராயினும் அசுரர்களை மோகமடைவித்தற்கு இத்தன்மைய சூத்திரங்களைச் செய்தனர். இதனுனே வைதிகர்கள் அதைப் பிரமாணமெனக் கொள்வதில்லை. (11)

(அ-கை.) மேலும்,

சு-ம். ஆஶாபாஶஶதைர்பத்தா: காமக்ரோதபராயணா: ।
ஈஹந்தே காமபோகார்த்தமந்யாயேநார்த்தஸஞ்சயாந் ॥ (12)

ப-ம். 1 ஆஶாபாஶஶதை: 2 பத்தா: 3 காமக்ரோதபராயணா: 7 ஈஹந்தே 4 காமபோகார்த்தம் 5 அந்யாயேந 6 அர்த்தஸஞ்சயாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆசைவடிவ பாசங்களின் சமூகத்தால் கட்டுப்பட்டுக் காமக்குரோதங்களை ஆசிரயித்தவர்களாகிய அவ்வாசுரர்கள் விடயபோகத்தின்பொருட்டே அநியாயமாய்த் திரவிய முதலிய பதார்த்தங்களை இச்சிக்கின்றார்கள். (12)

(வி-ம்) ஹே அர்ச்சுன! எப்பொருளை யடையுமுபாயஞ் செய்யொணுததோ அப்பொருளை யடையவேண்டுதல் ஆசையாம்; அல்லது எப்பொருட் பிராப்தியுபாயம் தன்னுலுணரப்படவில்லையோ அப்பொருளை அடையவேண்டுதல் ஆசையாம். அவ்வாசையே உலகிலுள்ள கயறுபோல இப்புருடனைக் கட்டுவதற்குக்காரணமானதால் பாசவடிவமாம். அத்தன்மைய ஆசைவடிவ அநேக பாசங்களால் அதாவது, அநேக கூட்டங்களால் அவர்கள் பந்திக்கப்பட்டவர்கள்; உலகிலுள்ள கயறு முதலிய பாசங்களால் கட்டப்பட்ட திருடன் முதலிய துட்டபுருடர்கள் அந்தக் கயறு முதலிய பாசத்தால் தமது வீடு முதலிய ஸ்தானத்தினின்று வெளிப்பட்டு யாண்டோ ஆண்டுச் சுழலப்படுகின்றார்கள். அதுபோல ஆசைவடிவ பாசத்தாற்கட்டப்பட்ட ஆசுரர்கள் அப்பாசத்தால் மோட்சவடிவ தமது ஸ்தானத்தினின்றும் வெளிப்பட்டு யாண்டோ ஆண்டுச் சுழலப்படுகின்றார்கள். மற்றுமெத்தன்மையர்களெனின், காமக்குரோதபராயணர்கள். ஆணடுக் காமக்குரோதங்கள் பர அயனமெனும் ஆசிரயம் எவர்கட்கோ அவர்கள் காமக்குரோதபராயணர்கள்; அதாவது பிறர் மனைப்புணர்ச்சிவேட்கையோடும் பிறர்க்குத் தீமைசெய்யவேண்டுமென்னு மிச்சையோடும் பொருந்தியவர்கள். எப்போதும் அத்தன்மைத்தான ஆசுரபுருஷர்கள் கேவலம் மாலை சந்தனம் மாது முதலிய விடய போகத்தின் பொருட்டே திரவிய முதலிய பதார்த்தங்களைச் சேர்ப்பதற்கிச்சிக்கின்றார்கள். வேறே யாதொரு தருமத்தின்பொருட்டுமன்றும்; மற்றே, கேவலம் அநியாயமாகவே தனத்தைச் சேர்ப்பதற் கிச்சிக்கின்றார்கள். ஆண்டுச்சலகபடத்தாலேனும் பலாத்காரத்தாலேனும் பிறர் பொருளைக்கைக்கொளல் அநியாயமாம்; அதாவது, சாத்திரமுறைமெறியாற்றனந்தேடல் அநியாயமாம். ஈண்டு, 'அர்த்தஸஞ்சயாந்' என்னும் பகுவசனத்தா (பன்மையா)ல் ஸ்ரீ பகவான் அவர்களிடத்து உலோபத்தைக் காண்பித்தருளினர்; என்னே? அவர்கட்கு தனங்கிடைக்கினும் தனதிருஷ்ணை நீங்குவதில்லை; மற்றே சாதன திருஷ்ணை தினந்தினம் மிக்கதாகின்றது. தன முதலிய விடயங்கள் கிடைப்பினும் தினந்தினம் அவ்விடய திருஷ்ணை மிகுதலையே சாத்திரத்திலும் உலகத்திலும் உலோபமென்கின்றார்கள் என்பதாம். (12)

(அ-கை.) ஹே பகவன்! அவ்வாசுரபுருஷர்களின் சித்தத்தில் இவ்வித தனதிருஷ்ணையிருக்கின்றதென்பது எவ்வாறுணரப்படுகின்றது என்னுமர்ச்சுனனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அவர்களின் இத்தன்மைய திரவியதிருஷ்ணையை அவர்களுடைய மனோராஜ்யத்தைக்கூறி வருணித்தருளுகின்றார்.

சு-ம். [illegible]
[illegible] (13)

ப-ம். [illegible]

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இத்திரவியம் இக்காலத்தில் என்னாலடையப் பட்டது; இம்மனோரதத்தை நான் விரைவிலே அடைவேன்; இத்திரவியம் எனது வீட்டில் முன்னரே யிருக்கின்றது; இத்திரவியம் மேலை வருஷத்தில் மீண்டும் மிகுதியாகும். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வாசுர புருஷர்கள் நிரந்தரம் திரவிய திருஷ்ணையோடு கூடியவர்கள். இதனானே அவர்கள் இவ்வாறு மனோராஜ்யஞ்செய்கின்றார்கள். இத்திரவியத்தை நான் இவ்வுபாயத்தாலடைந்தேன்; இத்திரவியத்தினின்றும் வேறேயும் மனோதிருப்தியைத்தரும் திரவியத்தை நான் இப்போது விரைவிலே அடைவேன்; இத்திரவியம் எனது மனையில் முன்னரே சேர்த்துவைக்கப்பட்டிருக்கிறது; இத்திரவியமும், இவ்வுபாயத்தால் மேலைவருடத்தில் மற்றும் மிகுதியாயுண்டாகும் என திரவிய திருஷ்ணையோடுகூடிய அவர்கள் அசுசிநாகத்தில் வீழ்வார்கள். இவ்வாறு இச்சுலோகத்தை '[illegible]' என மேற்கூறும் வாக்கியத்தோடு அந்நுவயிக்க என்பதாம். (13)

(அ-கை.) இவ்வாறு அவ்வாசுர புருஷர்களின் திருஷ்ணாவடிவ உலோபத்தைவர்ணித்து இப்போது அவர்களுடைய கருத்தைக்கூறி அவர்களுடைய குரோதத்தையும் வர்ணித்தருளுகின்றார்.

சு-ம். [illegible]
[illegible] (14)

ப-ம். [illegible]

(அ-ம்.) நான் இம்மாற்றானைக்கொன்றேன்; அங்ஙனமே வேறு மாற்றானையுங் கொல்வேன்; நானே ஈசுரன்; நானே போகி; நானே சித்தன்; நானே வலியன்; நானே சுகி. (14)

(வி-ம்.) அத்தியந்தஞ் ஜயிக்கொணாத இத்தேவதத்தனெனும் எனது மாற்றானை நான் கொன்றேன். ஆதலின் இப்போது நான் ஆயாசமின்றியே வேறேயும் சத்துருக்களனைவர்களையும் அதம்பண்ணுவேன். என்னிடத்தினின்று யாதொரு சத்துருவும் சீவியான். ஈண்டு, '[illegible]' என்னும் வாக்கியத்திலுள்ள சகாரத்தால் இக்கருத்துக் குறிப்பித்தருளப்பட்டது.—அச்சத்துருக்களை நான் கேவலம் கொல்கின்றேனலன்; மற்றோ, அவர்களுடைய திரவிய முத

ஸிய பொருள்களையும் நான் பறித்துக்கொள்வேன் என்பதாம். அற்றேல் உனக்கொப்புடையரும் உன்னின் மிக்காருமாகிய சத்துருக்கள் இருக்கின்றார்களாதலின் எல்லாச் சத்துருக்களையும் நாசம்பண்ணும் வலிமை உன்னிடத்தெக்காரணத்தால் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். 'ஈஶ்வரோஹம் இதி' நான் ஈசுரன் கேவல மநுடனன்று. மனுடனாயினன்றோ எனக்கொப்புடையர் என்னின் மிக்கார் யாரேனுமொருவரிருப்பர். அற்ப ஆற்றலுடைய இத்தீனர்கள் என்னைக் கொல்வார்கொலோ எல்லாவாற்றானும் எனக்கொப்புளோர் ஒருவருமிலர் என்னும் இக்கருத்தால் அவர்கள் தமது ஈசுரத்தன்மையை வர்ணிக்கின்றார்கள். 'அஹம்போகீ இதி' எதனால் நானே போகியாகின்றேன்; அதாவது விடயபோகங்களின் சர்வ சாதனங்களோடு கூடியவன் நானே; அங்ஙனமே நானே சித்தன்; அதாவது உடன்பிறந்தோர் புத்திரர் வேலைக்காரர் முதலிய சகாயத்தோடு கூடியவன்; சுயமாயும் நான் பலவான் அத்தியந்தம் ஆற்றலுடையோன்; நானே சுகி எல்லாவாற்றானும் ரோகமிலாதோன்; இதனானே நான் ஈசுரனே என்பதாம். (14)

(அவ-கை.) தனத்தாலேனும் குலத்தாலேனும் யாரேனுமொருவர் உனக்கொப்புளராவர் என்னுஞ் சங்கைக்கு அவர்கள் கூறுகின்றார்கள்.

சு-ம். ஆட்யோऽபிஜநவாநஸ்மி கோऽந்யோऽஸ்தி ஸத்ருஶோ மயா ।
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞாநவிமோஹிதா: ॥ (15)

ப-ம். 1 ஆட்ய: 2 அபிஜநவாந் 3 அஸ்மி 7 க: 6 அந்ய: 8 அஸ்தி 5 ஸத்ருஶ: 4 மயா 9 யக்ஷ்யே 10 தாஸ்யாமி 11 மோதிஷ்யே 12 இதி 13 அஜ்ஞாநவிமோஹிதா:.

(அ-ம்.) நான் தனம் குலம் இவைகளையுடையவன். ஆகலின் எனக்கொப்புளோர் வேறெவராவர்? நான் யாகதானங்களைச்செய்வேன் அதினின்று இன்பமடைவேன். இவ்வாறு அவர்கள் அவிவேகத்தால் மோகிதர்களாவார்கள். (15)

(வி-ம்.) இவ்வுலகத்தில் குலமுடையவனும் தனமுடையவனும் நானே. இதனால் இவ்வுலகத்தில் தனகுலங்களில் என்னையொத்தோர் வேறேயாவருளர்? மற்றோ, ஒருவருமிலர். அற்றேல் தனகுலங்களால் உன்னையொத்தோரில்லாதொழிக. அங்ஙனமாயினும் யாகதானங்களால் உன்னையொத்தோரிருப்பரேயெனின் அவர்கள் கூறுகின்றார்கள். 'யக்ஷ்யே தாஸ்யாமி இதி' நான் எனது பிரதிஷ்டையின்பொருட்டு இத்தன்மைய பெரும் யாகத்தைச் செய்வேன் அந்த யாகத்தினாலும் நான் வேறே யாகஞ்செய்யு மனைவரையும் தாழ்த்துவேன். ஆதலின் யாகத்தாலும் எனையொத்தோரிலர் என்னைப் புகழும் நடன் படன் நடனமாது முதலியோர்களுக்கு நான் பலதிரவியங்களைக்கொடுப்பேன். அதனால் நான் நடன் முதலியோர்களோடு பேரின்பத்தையடைவேன். ஆதலின் தானத்தாலும் என்னையொத்தோரிலர். இவ்வாறு அவர்கள் அவிவேகவடிவ அஞ்ஞானத்தால் மோகிக்கப்படுவார்கள்; அதாவது அந்த அவிவேகவடிவ அஞ்ஞானத்தால் அவர்கள் பிராந்தியின் பரம்பரைவடிவ பலவகையான மோகத்தையடைகின்றார்கள் என்பதாம். (15)

சு-ம். அநேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருதா: ।
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகேऽஶுசௌ ॥ (16)

ப-ம். 1 அநேகசித்தவிப்ராந்தா: 2 மோஹஜாலஸமாவ்ருதா: 4 ப்ரஸக்தா: 3 காமபோகேஷு 7 பதந்தி 6 நரகே 5 அஶுசௌ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலவகையான துஷ்டசங்கற்பங்களால் பிராந்தர்களாய் மோகவடிவசாலத்தால் மறைக்கப்பட்டவர்களாய் விடயபோகத்தில் மிகப் பற்றுடையர்களாய் அவர்கள் அசுசி நரகத்தில் விழுவார்கள். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கூறிப்போந்த பலவகைத் துஷ்டசங்கற்பங்களால் பலவகையான பிராந்தியையுடையவர்கள் அநேக சித்தவிப்பிராந்தர்கள். அல்லது வக வஸ்துவைச் சித்தனைவிடயமாக்காதது அநேகமாம். அநேகமெனும் கூறிப்போந்த அநேக விடயங்களிற்பற்றுடைய சித்தத்தோர் அநேகசித்தர்கள். இக்காரியம் முதலிற் செயற்பாலதோ அல்லது இக்காரியம் முதலிற் செயற்பாலதன்றோ என்னும் விசேடமாகப் பிராந்தியுடையவர்கள் விப்பிராந்தர்கள். அநேக சித்தர்களாய் விப்பிராந்தர்களானவர்கள் அநேக சித்தவிப்பிராந்தர்களாவர்கள். இப்போது அதன் பிராப்தியிற் காரணத்தை அருளிச்செய்கின்றார். '𑌮𑍋𑌹𑌜𑌾𑌲𑌸𑌮𑌾𑌵𑍃𑌤𑌾𑌃' ஹே அர்ச்சுன! அவர்கள் மோகவடிவ சாலத்தான் மறைக்கப்பட்டவர்களாதலின் கூறிப்போந்த அநேக துஷ்டசங்கற்பங்களால் பலவகையான பிராந்தியையும் அடைகின்றார்கள். ஆண்டு, இப்பொருள் எனது இதசாதனம் இப்பொருள் எனது அகிதசாதனம் என இதாகித விவேக ஆற்றலின்மை மோஹமாம். அதுவே ஆவரண வடிவத்தான் பந்தகாரணமானதால் உலகத்திலுள்ள வலைபோன்ற வலையாம். அதனால் அவர்கள் நன்கு மறைக்கப்பட்டவர்கள்; அதாவது, நாற்புறத்துஞ் சுற்றப் பட்டவர்கள். கருத்திதுவாம்.—உலகத்திலுள்ள நூல்வடிவ வலையால் மீன் முதலிய பிராணிகள் பிறர்வயப்படுகின்றனபோல அம்மோகவடிவ வலையால் அவர்கள் பிறர் வயமாகின்றார்கள். இதனானே அவர்கள் அநிட்டசாதனமாயிருந்தும் விடயபோகங்களில் மூழ்குகின்றார்கள்; அதாவது எல்லாவாற்றானும் அவ்விடயபோகத்தின் கண்ணே மிகப் பற்றுடையர்களாய் அதனாசத்தியால் ஒவ்வொரு கணத்திலும் பாபத்தைத்தேடி அசுசி நரகத்தில் வீழ்கின்றார்கள். அதாவது மலம் மூத்திரம் கபம் உதிரம் என்பன முதலிய மலின பதார்த்தங்களானிரம்பப்பட்ட வைதரணி முதலிய நரகத்தின்கண்ணே விழுகின்றார்கள் என்பதாம். (16)

(அ-கை.) ஹே பகவன்! அவ்வாசுர புருஷர்களுக்குள்ளும் சிலர்களுக்கு யாகமுதலிய கருமங்களிற் பிரவிருத்தி காணப்படுதலின் அவர்கள் நரகத்தில் விழுவார்களென்பது பொருந்தாது என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌾 𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍𑌤𑍇 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨𑌾𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥ (17)

ப-ம். 1 𑌆𑌤𑍍𑌮𑌸𑌂𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌃 2 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌾𑌃 3 𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 8 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 5 𑌨𑌾𑌮𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 4 𑌤𑍇 7 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 6 𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தன் பெருமிதம் வணங்காமை தனமானமதம் என்பவைகளோடுகூடிய அவ்வாசுரர்கள் பெயர்மாத்திர யஞ்ஞத்தால் விதிபூர்வகமின்றித் தம்பத்தால் வேட்கின்றார்கள். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும் எத்தன்மையர்களெனின் அவ்வாசுர புருஷர்கள் தம் பெருமிதர்கள்; அதாவது நான் சர்வ குணங்களோடு கூடியவனாதலின் மிகவுயர்ந்தோன் எனத் தம்மாற்றமே பூஜ்யத்தன்மையையடைந்தவர்கள். யாரேனு முத்தமர்களாலடைந்தவர்களல்லர் அல்லது தமது மகிமையினாலே பூஜ்யத்தன்மையையடைந்தவர்கள்; பெரியோராலடைந்தவரல்லர். மற்றுமெத்தன்மையர்களெனின் வணங்காதவர்கள்; அதாவது நம்ரபாவமின்றியவர்கள்

அதிற் காரண மருளிச்செய்கின்றார். ‘𑌧𑌨𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 𑌇𑌤𑌿’ ஆண்டுச் சுவர்ணம், பசு, அன்னம், மனை, பூமி, என்பன முதலியவைகள் தனமாம். அத் தனத்தையே காரணமாகவுடைய தன்னிடத்துப் பூஜ்யத்துவ வடிவ அதிசயாத்தியா சம்மானமாம். அம்மானத்தை நிமித்தமாகவுடைய தமக்கயலான குருமுதலியோர் களிடத்திலுள்ள அபூஜ்யத்துவாபிமானம் மதமாம். இவ்வாறு தனநிமித்த மானத் தோடும் மானநிமித்த மதத்தோடுங்கூடிய அவ்வாசுரர்கள் நாமயக்ஞத்தால் வேட் பார்கள். ஆண்டு, நாமமாத்திரத்தால் யக்ஞவடிவமாய் உண்மையில் யஞ்ஞ வடிவமகாதது நாமயக்ஞமாம். அல்லது யாகஞ்செய்வோருக்குத் தீட்சைபண்ணப் பட்ட சோமயாஜீ என்பது முதலிய நாமமாத்திரத்தையே சம்பாதிப்பது வே றொன்றையுஞ் சம்பாதியாதது நாமயக்ஞமாம். அத்தன்மைய யக்ஞத்தையும் அவர்கள் விதியோடு செய்யார்கள். மற்றோ, விதியின்றியே அதாவது வேதத்தால் விதிக்கப்பட்ட திரவியம் தேவதை மந்திரம் தட்சணை என்பனமுதலிய யஞ்ஞாங் கங்களின் பூரணத்தோடு அவர்கள் அந்த யக்ஞத்தைச்செய்யார்கள்; அத்தன்மைய யக்ஞத்தையும் அவர்கள் சிரத்தையோடு செய்யார்கள். மற்றோ, தம்பத்தால் உள் ளே தரும நிட்டையில்லாதிருந்தும் வெளியில் உலகர்களுக்குமுன் தனது தரு மான்மத்தன்மையை வெளிப்படுத்தல் தம்பமாம். அத்தன்மைய தம்பத்தால் அவர்கள் யக்ஞஞ்செய்வார்கள். இதனானே அவர்கள் அந்த யக்ஞபலத்தை யடை யார்கள் என்பதாம். (17)

(அ-கை) ஆண்டு, ‘𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍𑌤𑍇 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨’ என்னும் வாக்கியத்தாற்கூறப்பட்ட தம்ப அகங்காரங்களை முக்கியமாகவுடைய சங்கற்பத்தாற் பிரவிருத்தித்த அவ்வா சுரர்கட்குப் பகிரங்க சாதனைவடிவ கருமங்களும் சித்தியாவெனின் விசாரம் வைராக் கியம் பகவத்பக்தி என்பன முதலிய அந்தரங்கசாதனம் அவர்கட் கெவ்வா றுண்டாம்? மற்றோ, அவர்கட்கொருகாலும் சித்தியா என்பதை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.

சு-ம். 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌮𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 ॥ (18)

ப-ம். 1 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌂 2 𑌬𑌲𑌂 3 𑌦𑌰𑍍𑌪𑌂 4 𑌕𑌾𑌮𑌂 5 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 6 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 8 𑌮𑌾𑌂 7 𑌆𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 9 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃 10 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அகங்காரம், பலம், தர்ப்பம், காமம், குரோதம் என்பவைகளை ஆசிரயிக்கப்பட்டவர்களும் தமது தேகம் பிறர்தேகங்களிலுள்ள பரமேசுரனாகிய என்னைத் துவேஷிப்பவர்களும் ஆசூயையுடையவர்களுமாகிய அவ்வாசுரர்கள் நரகத்தின்கண்ணே கிடப்பர்கள். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நானெனும் அபிமானவடிவ அகங்காரமோ சர் வப் பிராணிகளிடத்திலும் பொதுவாம். ஆதலின் அது ஈண்டகங்கார சப்தத் தாற் கொள்ளத்தக்கதன்று; மற்றோ தன் மாட்டின்றிய குணங்களைத் தன்னிடத் தாரோபித்து அவ்வாரோபித குணங்களால் தன்னைப் பெரியவனென அபிமானித் தல் அகங்காரமாம். இவ்வாறே தேகத்திலுள்ள காரியஞ் செய்யுமாற்றல்வடிவ பலம் சர்வப் பிராணிகட்கும் பொதுவாமாதலின் அது ஈண்டு பல சப்தத்தாற்கொள்ள த்தக்கதன்று; மற்றோ அன்யப்பிராணிகளை அமிழ்த்துதற்பொருட்டுத் தேகத்தி லுள்ள சாமர்த்தியவிசேடம் பலமாம். பிறரை மதியாமைவடிவமும் குருவாசர் முத லியோர்களை உல்லங்கனஞ்செய்வதற்குக் காரணவடிவமுமாகிய சித்த தோடவிசே டம் தர்ப்பமாம். இஷ்டவஸ்து விடயக அபிலாஷை காமமாம்; அநிஷ்டவஸ்து விட யக துவேஷம் குரோதமாம். ஈண்டு, ‘𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚’ என்னும் வசனத்திலுள்ள

சகாரத்தால் பிறர் குணங்களின் சகிக்காமைச்சுபாவடிவ மாத்சரியத்தையும் வேறு பெருந்தோடங்களையுங்கொள்ளவேண்டும். அத்தன்மைத்தான அகங்காரம் பலம், தர்ப்பம், காமம், குரோதம், மாத்சரியம் என்பன முதலிய பெருந்தோடங்களை அவர்கள் இடைவிடாது ஆசிரயிக்கின்றார்கள். இதனாலே நரகத்திலேயே கிடக்கின்றார்கள். அற்றேல் ஹே பகவன்! இவ்வாறு பதிதர்களாகிய அவ்வாசுரர்கள் பரமேசுரராகிய தங்களுடைய பக்தியினால் தூயர்களாக நரகத்திற்கிடவார்கள் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு அவர்களிடத்துப் பகவத்பக்தி சம்பவியாமையை அருளிச்செய்கின்றார். ‘മാമാത്മ പരദേഹേഷു പ്രദ്വിഷന്തഃ’ என. ஈண்டுத் தேக சப்தத்தை ஆன்மசப்தத்தினீற்றிலும் பரசப்தத்தினீற்றிலும் அந்நுவயஞ்செய்வதால் ‘മാം ആത്മദേഹേഷു പരദേഹേഷു പ്രദ്വിഷന്തഃ’ என்னும் வாக்கியஞ் சித்தமாகின்றது. ஆண்டு, ‘ആത്മദേഹേഷു’ என்னும் பதத்தால் அவ்வாசுரர்களின் தேகத்தைக்கொள்ளவேண்டும். ‘പരദേഹേഷു’ என்னும் பதத்தால் அவர்களது புத்திரர் மனைவி முதலியோர்களின் தேகத்தைக்கொள்ளவேண்டும். ஆதலின் ‘മാമാത്മപരദേഹേഷു പ്രദ്വിഷന്തഃ’ என்னும் வாக்கியத்திற்கு இப்பொருள் சித்தமாகின்றது.—அவ்வாசுர புருஷர்களின் பிரேமைக்கு விடயமாகிய தமது தேகம் புத்திரன் முதலியோர்களின் சர்வ தேகங்களிலும் அவர்களின் புத்தி கரும முதலியவற்றிற்குச் சாட்சிவடிவமாகவுள்ளதும் நிரதிசயப் பிரீதிக்கு விடயமுமாகிய பரமான்மாவாகிய என்னையே துவேஷிக்கின்றார்கள். ஆண்டு எனது ஆக்ஞாவடிவ சுருதிஸ்மிருதிகளிற் கூறிய அர்த்தாநுட்டான மின்மையின் அந்தச் சாத்திரவடிவ ஆக்ஞையை உல்லங்கனஞ் செய்தலே என்னைத் துவேஷித்தலாம். உலகிலும் அரசர் முதலிய பெரியோரது ஆணையைத்தாண்டுவோரை அவரது துவேஷியெனக்கூறுகின்றனரன்றோ? அத்தன்மைய பரமேசுரத் துவேஷிகளாகிய அவ்வாசுரர்களிடத்துப் பரமேசுர பக்தியுண்டாதல் மிகத்துர்லபமாம் என்க. அற்றேல் ஹே பகவன்! அத்தன்மைய ஆசுரர்களைத் தமது குருமுதலிய பெரியோர்கள் தண்டியாததென்னை என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார். ‘അഭ്യസൂയകാഃ ഇതി’ ஹே அர்ச்சுன! வேதப் பிரதிபாதித மார்க்கத்திலுள்ள குருமுதலிய பெரியோர்களிடத்துள்ள கருணை முதலிய குணங்களில் அவர்கள் வஞ்சனை முதலிய தோடங்களையே ஆரோபிக்கின்றார்கள். அத்தன்மைய அசூயையுடைய அவர்கட்குக் குருமுதலிய முதியோர்களின் வாக்கியத்திற் சிரத்தையே யுண்டாகாது; ஆதலின் அக்குரு முதலியவர்களும் அவர்களைச் சிட்சியார்கள். இவ்வாறு பகிரங்க அந்தரங்க சாதனங்களின்றிய அவ்வாசுரர்கள் கேவலம் நரகத்தின்கண்ணே கிடப்பார்கள் என்பதாம். அல்லது ‘മാമാത്മപര ദേഹേഷു പ്രദ്വിഷന്തഃ’ என்னும் வாக்கியத்திற்கு வேறிப்பொருள் பண்ணவேண்டும். ஆண்டு, ‘ആത്മദേഹേഷു’ என்னும் பதத்தால் அவ்வாசுர புருஷர்களின் தேகத்தைக் கொள்ளவேண்டும் ‘പരദേഹേഷു’ என்னும் பதத்தால் பசு முதலியவைகளின் தேகங்களைக் கொள்ளவேண்டும். இதனால் இப்பொருள் பெறப்படுகின்றது. அத்தேகங்களனைத்திலுள்ளும் சைதன்ய அம்சத்தாலிருக்கப்பட்ட பரமேசுரனாகிய என்னைத் துவேஷித்து அவர்கள் யாகஞ்செய்கின்றார்கள். ஆண்டுத் தம்ப பூர்வகஞ் செய்யப்பட்ட அந்த யக்ஞங்களில் அவர்கட்குச் சிரத்தையின்மையின் சிரத்தையின்றிய யக்ஞங்கட்கு வேறே யாதொரு பலனுமில்லை; மற்றோ, தீக்ஷை முதலிய நியமங்களால் அவ்வாசுரர்களின் ஆன்மாவிற்குக் கேவலம் பயனின்றியே துன்பமுண்டாகின்றது. இவ்வாறு பசு முதலியவைகளையும் விதியின்றிக் கொல்வதால் வேறு பலனுண்டாவதில்லை. மற்றோ, அதனால் கேவலம் சைதன்யத்துரோக மாத்திரமே யுண்டாகின்றது. இவ்வாற்றால் தமது தேகத்திலும் பசு முதலியவைகளின் தேகத்திலுமிருக்கப்பட்ட சைதன்யவடிவப் பரமேசுரனாகிய என்னைத் துவே

ஷித்தே அவர்கள் யாகஞ்செய்கின்றார்கள் என்பதாம். அல்லது, 'மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்த:' என்னும் வாக்கியத்திற்கு மூன்றாவது இப்பொருள்செய்ய வேண்டும். ஈண்டு, 'ஆத்மதேஹேஷு' என்னும் பதத்தால் பரமேசுரனது லீலா விக்கிரகவடிவ இராம கிருஷ்ணாதி நாமமுடைய தேகங்களைக் கொள்ளவேண்டும். 'பரதேஹேஷு' என்னும் பதத்தால் பிரகலாதன் விபீஷணன் என்பன முதலிய நாம முடைய பக்தர்களின் தேகத்தைக்கொள்ளவேண்டும். இதனாலிப்பொருள் சித்தமாகின்றது. பரமேசுரனாகிய என்னுடைய லீலா விக்கிரகவடிவ வாசுதேவன் முதலிய நாமங்களுடைய தேகங்களில் மநுடத்துவ புத்திவடிவப் பிராந்தியால் அவ்வாசுரர்கள் என்னைத் துவேஷிக்கின்றார்கள். அங்ஙனமே பிரகலாதன் விபீஷணன் முதலிய பக்தர்களின் தேகங்களில் எப்போதும் ஆவிர்ப்பவித்திருக்கின்ற பரமேசுரனாகிய என்னை அவர்கள் துவேஷிக்கின்றார்கள். இது முன்னர் ஒன்பதாவது அத்தியாயத்தில்,

> அவஜாநந்தி மாம் மூடா⁴ மாநுஷீம் தநுமாஶ்ரிதம் ।
> பரம் பா⁴வமஜாநந்தோ மம பூ⁴தமஹேஶ்வரம் ॥
> மோகா⁴ஶா மோக⁴கர்மாணோ மோக⁴ஜ்ஞாநா விசேதஸ: ।
> ராக்ஷஸீமாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ஶ்ரிதா: ॥

என்னும் சுலோகங்களாற் கூறப்பட்டது. அங்ஙனமே 'அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாமபு³த்³த⁴ய:' என்னும் வாக்கியத்தாலுங் கூறப்பட்டிருக்கின்றது என்பதாம். இதனாலிப்பொருள்பெறப்பட்டது.—எந்தப் பரமேசுரபக்தியால் அதிகாரிகள் பாவனமாகின்றார்களோ அப்பரமேசுரனிடத்திலே அவர்கட்குத் துவேடமாம்; அத்தன்மைய துவேஷி புருஷர்களிடத்துப் பரமேசுரனாகிய எனது பக்தியுண்டாதல் மிக வருமையாம்; ஆதலின் அவர்கள் எவ்வாற்றானும் பாவனமாகார்கள் என்பதாம். (18)

(அவ-க.) ஹே பகவன்! பரமேசுரராகிய தங்களுடைய கிருபையால் அவ்வாசுரர்கட்கும் ஒருகால் கரையேறுதலுண்டாம் என்னு மர்ச்சுனன் சங்கைக்கு அவர்கள் ஒருபோதும் கரையேறார்கள் என உத்தரமருளிச்செய்கின்றார் ஸ்ரீ பகவான்.

சு-ம். தாநஹம் த்³விஷத: க்ரூராந்ஸம்ஸாரேஷு நராத⁴மாந் ।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபா⁴நாஸுரீஷ்வேவ யோநிஷு ॥ (19)

ப-ம். 6 தாந் 7 அஹம் 1 த்³விஷத: 2 க்ரூராந் 8 ஸம்ஸாரேஷு 3 நராத⁴மாந் 9 க்ஷிபாமி 4 அஜஸ்ரம் 5 அஶுபா⁴ந் 10 ஆஸுரீஷு 12 ஏவ 11 யோநிஷு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! துவேஷிகளும் குரூரர்களும் நராதமர்களும் இடைவிடாது பாபகருமத்தைச் செய்பவர்களுமாகிய அவ்வாசுர புருஷர்களைப் பரமேசுரனாகிய நான் நரகத்திற்கேகும் மார்க்கத்திலே தள்ளுகின்றேன். பின்னர் அத்தியந்தங் கோரமான வியாக்கிரசர்ப்ப முதலிய யோனிகளிலே தள்ளுகின்றேன். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாஸ்திரப்பிரதிபாதித சன்மார்க்க விரோதிகளாகிய அவ்வாசுரர்கள் எத்தன்மையர்களெனின் பரமேசுரனாகிய என்னையும் சாதுக்களையும் எப்போதுந் துவேஷிக்கப்பட்டவர்கள். குரூரர்கள், அதாவது எப்போதும் சீவவதையிற் பிரீதியுடையவர்கள்; இதனானே நராதமர்கள், அதாவது

அத்தியந்தம் நிந்திதர்கள்; அசுபர்கள், அதாவது எப்போதும் சாஸ்திரநிஷித்த அசுப கருமத்தையேசெய்பவர்கள். அத்தன்மைய அவ்வாசுரர்களைக் கருமபலனைக் கொடுக்கும் பரமேசுரனாகிய நான் நரகமார்க்கத்தின்கண்ணே தள்ளுகின்றேன். அவர்கள் தமது பாப கருமத்தால் அந்நரகத்தில் பலகாலபரியந்தம் பலவகைத் துன்பங்களை அநுபவித்து நரகத்தினின்றும் வருவர்களேல் நான் அவர்களை முந்திய கர்மவாசனையை யநுசரித்து வியாக்கிரசர்ப்பமுதலிய மிகக்கோரயோனிகளில் தள்ளுகின்றேன். அத்தன்மைய பரமேசுரத்துரோகிகளும் சாதுத்துரோகிகளுமாகிய ஆசுரர்களிடத்து எனக்குக் கிருபை ஒருபோதும் உண்டாகிறதில்லை. ஆண்டு, இத்தன்மைய பாபாத்மாவாகிய ஆசுரர்கள் கீழான யோனியையே அடைவார்கள் என்பது சுருதியிலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. கபூயசரணா அப்யாஶோ ஹ யத்தே
கபூயாம் யோனிமாபத்யேரந் ।
ஶ்வயோனிம்வா ஸூகரயோனிம்வா சண்டாலயோனிம்வா ॥

(பொ-ள்.) சாஸ்திரநிஷித்த பாபகருமஞ் செய்வோன் விரைவிலே நீசயோனியை யடைகின்றான். ஒருகால் நாய்ச்சன்மத்தை யடைகின்றான். ஒருகால் பன்றிச்சன்மத்தை யடைகின்றான். ஒருகால் சண்டாள யோனியை யடைகின்றான். இது முதற்கொண்டு வேறேயும் பலவகையான நீசயோனிகளையடைகின்றான் என்பதாம். இவ்வாறு சீவர்களது பூர்வ கர்மாநுசாரமாய்ப் பலத்தைக்கொடுக்கும் ஈசுரனிடத்து விஷமம் நிர்த்தயை என்னுந்தோடங்கள் பொருந்தா. இது ஸ்ரீ வியாசபகவானாலுங் கூறப்பட்டிருக்கிறது.

ஆ-சு. வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததாஹி தர்ஶயதி ।

(பொ-ள்.) இவ்வுலகத்தில் சிலர்கள் சுகிகள்; சிலர்கள் துக்கிகள்; சிலர்கள் தனிகர்கள்; சிலர்கள் தரித்திரர்கள்; சிலர்கள் பண்டிதர்கள்; சிலர்கள் மூடர்கள்; இவ்வாறு விஷம சகத்தை யுண்டுபண்ணப்பட்ட ஈசுரனிடத்து விஷமத்தன்மை நிர்த்தயைத்தன்மை என்னுந் தோடங்கள் அவசியமாய்ப்பிராப்தியாம் என்றாசங்கித்துக்கூறுகின்றார். பரமேசுரர் சீவர்களின் புண்ணியபாபகருமங்களையபேட்சித்து இந்த விஷம (மாறுபட்ட) உலகத்தைச் சிருஷ்டிக்கின்றார். அப்புண்ணிய பாபாநுசாரமாகவே சிலர்கள் துக்கிகளும் சிலர்கள் சுகிகளுமாகின்றார்கள். ஆதலின் பரமேசுரனிடத்து அத்தோடங்களின்றாம் என்னும் அர்த்தத்தை 'கபூயசரணா' என்பது முதலிய சுருதிகள் கூறுகின்றன என்பதாம். அத்தன்மைய உலகனைத்திற்குங் காரணவடிவ அந்தரியாமியாகிய பரமேசுரன் அவ்வாசுரர்களைக் கேவலம் பாப கருமத்தைச் செய்விக்கின்றான்; புண்ணிய கருமத்தைச்செய்வித்திலன். என்னை? அவர்களிடத்துக் கேவலம் பாபகர்ம பீசமேயிருக்கின்றது: புண்ணிய கர்ம பீசம் இல்லை. பீஜத்தை அநுசரித்தே அங்குரோத்பத்தியாம். வேறு பீஜத்தால் வேறு அங்குரோத்பத்தியுண்டாகாது. நிம்பபீஜத்தினின்று நிம்பத்தின் அங்குரமே யுண்டாகின்றதேயன்றி மாபீஜம் உண்டாகாததுபோலவாம். அப்பரமேசுரன் பரமகிருபாலுவாயினும் அவ்வாசுரர்களின் பாபத்தை நாசஞ்செய்திலன்; என்னை? அந்தப் பாபகர்மத்தை நாசம்பண்ணப்பட்ட புண்ணிய கர்மம் அவர்களிடத்தின்மையின் பரமேசுரன் அவர்களுடைய பாபகர்மத்தைத் தொலைத்திலன்; அன்றியும் அவர்களிடத்துப் புண்ணியகர்மஞ் செய்வதற்குத் தகுதியின்மையின் அவன் அவர்களைப் புண்ணிய கருமத்தையுஞ் செய்விப்பதில்லை. எப்புண்ணிய கருமத்தால் அவர்களுடைய பாப நிவிருத்தியாமோ, என்னை? பரமேசுரன் காரியோத்பத்தியிற் சாமர்த்தியமுளனேனும் எப்பொருளில் எக்காரியோத்பத்திக்கு யோக்கியதை

யுளதோ அப்பொருளிலே அக்காரியத்தை யுண்டுபண்ணுகிறான்; தகுதியிலாப் பொருளில் அன்றாம். கற்களில் கோதுமை அங்குரோற்பத்திக்கு யோக்கியதை இன்மையின் பரமேசுரன் அக்கற்களில் யவோங்குரோற்பத்தியை யுண்டுபண்ணுவதில்லை; மற்றோ, கோதுமை வித்தின்கண்ணே அக்கோதுமை அங்குரத்தை யுண்டுபண்ணுகின்றான். அதுபோலப் புண்ணிய கருமோற்பத்திக்கு யோக்கியதையின்றிய அவ்வாசுரர்களிடத்து அவ்வீசுரனும் புண்ணியகருமத்தை யுண்டுபண்ணுவதில்லை. சிலவாதிகள் காரியத்தைச் செய்வதற்கும் செய்யாதிருத்தற்கும் வேறொருவகையாய்ச் செய்தற்கும் ஆற்றலுடையோன் ஈசுரனுவன்; அத்தன்மையனாதலின் பரமேசுரன் அவ்வாசுரர்களிடத்துப் புண்ணியகருமத்திற்கு யோக்கியதையின்றேனும் புண்ணிய கருமத்தின் யோக்கியதையை யுண்டுபண்ணுவதில் சமர்த்தன் எனக் கூறுகின்றார்கள். அஃதுண்மையே. என்னை? அப்பரமேசுரன் சத்தியசங்கற்பனாதலின், ஒருகால் இவ்வாசுர புருஷர்களிடத்துப் புண்ணிய கருமத்தின் யோக்கியதை யுண்டாகுக எனச் சங்கற்பிப்பனேல் அவர்களிடத்தும் அதன் யோக்கியதை யுண்டாகிவிடும். ஆனாலோ இவ்வாறு சங்கற்பியான்; என்னை? பரமேசுரனுடைய ஆக்ஞாவடிவ சுருதிமிருதிகளை உல்லங்கனம் பண்ணப் பட்டவரும், பரமேசுரபக்தர்களின் துரோகிகளுமாகிய தூரான்மாக்களாகிய அவ்வாசுரர்களிடத்து அப்பரமேசுரனுக்குச் சந்தோஷமேயுண்டாகிறதில்லை. சந்தோடமின்றேல் அவ்வணம் எவ்வாறு சங்கற்பிப்பன்; மற்றோ, ஒருகாலுஞ் சங்கற்பியான். இது சுருதியிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. ஏஷஹ்யேவஸாது கர்ம காரயதி தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதே।
ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதே ॥

(பொ-ள்.) இப்பரமேசுரன் சந்தோடனாய் மேலாகிய சுவர்க்கலோகத்திற்குக் கொண்டுபோக இச்சித்தபுருடனுக்குப் புண்ணியகருமத்தைச் செய்விக்கிறான். இப்பரமேசுரன் சந்தோடமிலனாய் நரகமுதலிய கீழுலகத்திற்குக்கொண்டுபோக இச்சித்த புருடனுக்குப் பாபகருமத்தைச் செய்விக்கின்றான் என்பதாம். இதனால் விப்பொருள் பெறப்பட்டது.—பரமேசுரனுடைய பிரசன்னத்திற்குக் காரணமாகிய அவருடைய வேதவடிவ ஆஞ்ஞையைப் பாலிப்பவனிடத்து அவருக்குச் சந்தோஷமுண்டாகிறது அஃதிலாரிடத்தில்லை. காரணமுளதாகவே காரியந்தோன்றுகிறது காரணமிலதாகவே காரியந்தோன்றவில்லை யென்பது உலகத்திலும் மிக விளக்கமாம். இதில் பரமேசுரனை விஷமத்தன்மை நிர்த்தயைத்தன்மை எவ்வாறடையும்? மற்றோ, அடையாதாம் என்க. (19)

(அ-கை.) ஹே பகவன்! அத்தன்மைய ஆசுரர்கட்கும் முறையாய்ப் பல சன்மத்தினீற்றில் மோட்சமுண்டாம் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஒருபோது மோக்ஷமுண்டாகாது என உத்தரமருளிச்செய்கின்றார்.

சு-ம். ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥ (20)

ப-ம். 2 ஆஸுரீம் 3 யோநிம் 4 ஆபந்நா: 7 மூடா: 5 ஜந்மநி 6 ஜந்மநி 8 மாம் 9 அப்ராப்ய 10 ஏவ 1 கௌந்தேய 11 தத: 14 யாந்தி 12 அதமாம் 13 கதிம்.

(அ-ம்.) ஹே கௌந்தேய! எப்போதாயினும் ஆசுரயோனியை யடைந்தவர்கள் சன்மசன்மங்களில் அவிவேகிகளாய் வேதநெறியையே அடையாது அதனினும் கீழானகதியையடைகின்றார்கள், (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எப்போதாயினும் ஆசுரயோனியை யடைந்தவர்கள் சன்மசன்மங்களில் மூடர்களாய்த் தமோகுண மிகுதிப்பாட்டால் விவேக சூனியர்களாய் என்னையடையாது அதாவது நான் கூறியவேத நெறியையடையாது அதனினும் கீழானயோனியை யடைகின்றார்கள். ஈண்டு, 'மாம் அப்ராப்யைவ' என்னும் வாக்கியத்தினீற்றிலுள்ள ஏவகாரம் திரியக்குத் தாவரயோனி முதலியவைகளில் வேதநெறிப்பிராப்தியின் அயோக்கியதையை அறிவுறுத்துகின்றது, அதாவது அந்தக் கீழானயோனிகளில் வேதநெறியடையும் யோக்கியதையே இன்றென்பதாம். இதனாலிப்பொருள் பெறப்பட்டது. அத்தியந்தத் தமோகுண மிகுதிப்பாட்டால் அவ்வாசுரர்கள் வேதநெறியை யடைதற்குரித்திலர்களாய்ப் பூர்வ பூர்வ நிகிருஷ்டயோனியினின்று உத்தரோத்தரம் அத்தியந்தம் நிகிருஷ்டமாகிய அதமயோனியையடைவார்கள். வியாக்கிர யோனியினின்றும் சர்ப்பயோனி அதினின்றும் கீடபதங்க முதலிய யோனிகள். அதினின்றும் விருக்ஷயோனிகள் நிகிருஷ்டமாம். ஈண்டு, 'மாம் அப்ராப்யைவ' என்னும் வாக்கியத்திலுள்ள 'மாம்' [என்னை] என்னும் பதத்தால் பரமேசுரவடிவ அர்த்தமே பிரதீதியாகின்றது. ஆயினும் பரமேசுரனைக் கொள்ளாது அவனால் உபதேசிக்கப்பட்ட வேதநெறியையே கொள்ளவேண்டும். என்னை? எவ்வவஸ்தையில் எவ்வர்த்தம் எவ்விதத்தானும் பிராப்தியாமோ அவ்வவஸ்தையின்கண்ணே அவ்வர்த்தம் நிஷேதமாகின்றது. எல்லாவகையானும் அப்பிராப்தமாகிய வர்த்தம் நிஷேதமாவதில்லை. அவ்வாசுர புருஷர்களிடத்துப் பரமேசுரப் பிராப்தியின் சங்கைமாத்திரமுமுண்டாவதில்லை. எந்தப் பரமேசுரப் பிராப்தியின் நிஷேதம் 'அப்ராப்ய' என்னும் பதத்தால் செய்யப்படுகின்றதோ அவ்வாசுரர்களிடத்து வேதமார்க்கப் பிராப்தியும் பொருந்தாதேனும் அதன் சங்கைமாத்திரம் ஒருகாலாதலும்கூடும். அவ்வேதமார்க்கப் பிராப்தியே 'அப்ராப்ய' என்னும் பதத்தால் நிஷேதிக்கப்படுகின்றது. ஆதலின் 'மாம்' [என்னை] என்னும் பதத்திற்கு லட்சணாவிருத்தியால் பரமேசுரன் உபதேசித்த வேதமார்க்கத்தை கவர்தல் தகுதியாம். ஒருரையின்கண்ணே அதற்கு லட்சணாவிருத்தியால் பரமேசுரப் பிராப்திக்குச் சாதனவடிவ அதிகாரி புருஷர்களின் தேகம் கொள்ளப்பட்டது. ஆதலின் இச்சுலோகத்திற்கு இப்பின்டப்பொருள் சித்தமாகின்றது:—எதனால் ஒரு முறையேனும் ஆசுர யோனியையடைந்தவர்கட்கு அதினின்றும் உத்தரோத்தரம் நிகிருஷ்டதர நிகிருஷ்டதம யோனிகளே பிராப்தியாகின்றனவோ, அத்தியந்தத் தமோகுணத்தின் மிகுதிப்பாட்டால் அவர்கட்கு அந்தயோனிகளை நீக்கற்கு வழியில்லையோ, அதனானே அதிகாரியாகிய மநுடதேகத்தை இருக்கும்பரியந்தம் பெருமுயற்சியால் மிகத்தாழ்ந்த ஆசுரசம்பத்துக்களை நீக்குவான் சீக்கிரமே மோட்சவேட்கையுடையோன் இயன்றவளவில் தெய்வீகசம்பத்தைச் சம்பாதித்தல்வேண்டும். அங்ஙனமின்றேல் அவ்வசுரசம்பத்து வசத்தால் சர்ப்பமுதலிய நீசயோனிகளை அடைந்ததன் பின்னர் மோட்சசாதனானுட்டானத்திற்குத் தகுதியின்மையின் இவன் ஒருபோதுங் கரையேறான். இவ்வாறு அவன் யோரார்த்தையைப்பெறுவன். இது பிறநூலிலுங் கூறப்பட்டுளது.

ஆ-சு. இஹைவ நரகவ்யாதேச்சிகித்ஸாம் நகரோதிய: ।
கத்வா நிரௌஷதம் ஸ்தாநம் ஸருஜ: கிங்கரிஷ்யதி ॥

(போ-ள்.) அசுரசம்பத்துவடிவ நிமித்தத்தாலாய நரகவடிவ வியாதியை நீக்கப்பட்ட தெய்வீக சம்பத்துவடிவ வைத்தியத்தை அதிகாரியாகிய இம்மநுடதேகத்தின்கண்ணே செய்யாத ரோகிபுருஷன் தெய்வீக சம்பத்துவடிவ ஔடதமின்றிய ஸ்தானத்தையடைந்து, அந்த நரகவடிவ வியாதியை நிவிருத்தித்தற்பொருட்டு என்னவுபாயஞ்செய்வான். ஆண்டு, யாதொரு வுபாயமுஞ்செய்யான் என்பதாம். (20)

௱க.) ஹே பகவன்! ஓ०ஹொ ஊவொ-ஒ௨கி௯ாகஷ ' என்பது முதலிய
ளால் முன்னர்த் தங்களாலருளப்பட்ட அசுரசம்பத்துப் பலவகையாத
வசுர சம்பத்துக்களனைத்தையும் இவனால் தனதாயுள் முடிவாங்காறு
நிவிருத்திக்கமுடியாது என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான்
ம்பத்தைச் சுருக்கியருளிச்செய்கின்றார்.

த்ரிவிய० நாரகஷெஹு० ஊாா० நாஶநஊதமஃ ।
௨ஃ கொ்யஸ்தயா ஞொஹ ஹஹாதெதத்ரய० தூஜெகஃ ॥ (21)

த்ரிவிய० 5 நாரகஸ்ய 3 ஊ௨० 6 ஊாா० 2 நாஶந० 1 ஆத்மநஃ 7 காஃ
கொ்யஃ 9 தயா 10 ஞொஹஃ 11 தஸ்மாத் 12 ஏதத் 13 த்ரய० 14 தூஜெகஃ.

.) ஹே அர்ச்சுன! காமம் குரோதம் லோபம் என்பவைகள் இவ
தமயோனியைத்தரப்பட்ட மூவகையான நரகத்துவாரங்களாம்; ஆத
கள் நீக்கத்தக்கனவாம். (21)

) ஹே அர்ச்சுன! நரகப்பிராப்திக்கு இம்மூவகையானதே துவார
ம் சாதனமாம். இதுவே கூறிப்போந்த அசுரசம்பத்துக்களனைத்திற்கு
ம் ஆன்மாவை நாசம்பண்ணப்பட்டதுமாம்; அதாவது தரும மோட்ச
சர்வ புருடார்த்தத்திற்கும் அயோக்யத்தன்மையைச் சம்பாதிப்பதால்
அத்தியந்தம் அதமயோனியைத்தருவதாம். ஆண்டு, அம்மூவகை நர
ங்களைவை யென்றறியும் வேட்கையுண்டாக அர்ச்சுனனுக்கு ஸ்ரீ
அருளிச்செய்கின்றார். 'காஃ கொ்யஸ்தயா ஞொஹஃ ஊதி' ஹே
காமம் குரோதம் லோபம் என்பவைகளே இவனுக்கு நரகத்தைத்தரு
அங்ஙனமே வியாக்கிரமுதலிய மிகத் தாழ்ந்த யோனிகளையுந் தருவன
ம்மூன்றையும் அடைந்தபின்னரே இவன் சர்வ ஆசுர சம்பத்துக்களையு
றான். அருச்சுன! இம்மூன்றும் இவனுக்குச் சர்வானர்த்தங்கட்கு மூல
கவின் அதிகாரி இவைகளைப் பரித்தியாகம்பண்ணவேண்டிய தொருதலே
றுனே கூறிப்போந்த ஆசுரசம்பத்துக்களனைத்தும் பரித்தியாகம் பண்
ஙாகின்றன. சித்தத்திலுண்டாகிய காமக்குரோதலோபங்களின் அனர்த்
த்திவடிவ காரியத்திற்கு விவேகத்தாற்றடையாதலும் மீண்டுங் காமாதி
டாகாமையுமே காமாதிகளின் பரித்தியாகமாம். ஆண்டுக்காம முதலிய
சொரூபம் இவ்வத்தியாயத்திலே முன்னர்க்கூறினும். (21)

௨௨.) ஹே பகவன்! இவைகளைப் பரித்தியாகம் பண்ணினவனுக்கு
ர் கிடைக்கும் என்றர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான்
சய்கின்றார்.

ரதைவி-உஃ்கஃ கௌஷெய தவொஊா வெர்ஹிஃநாஃ ।
அாதூ்தநஃஶெ்ய ஸ்தொ யாதி வாா० மதி० ॥ (22)

வாதைஃ 5 விஃ்கஃ 1 கௌஷெய 2 தவொஊாநெஃ 4 த்ரிஹிஃ 6 நாஃ
ஆசாதி 7 ஆத்மநஃ 8 ஶெ்யஃ 10 ததஃ 13 யாதி 11 வாா० 12 மதி०.

.) ஹே கௌந்தேய! நரகத்துவாரபூத இக்காமக்குரோதலோபங்களைப்
கம்பண்ணிய இவன் தனது சிரேயசையே சித்தஞ்செய்கின்றான்; அதி
ரமகதியையடைகின்றான். (22)

.) ஹே அர்ச்சுன! நரகப்பிராப்திக்குச் சாதனவடிவமும் அத்தியந்த
ானியையடைதற்குச் சாதனவடிவமுமாகிய காமக்குரோத லோபங்க

ளின்றியவன் தனது சிரேயசையே சித்திசெய்கின்றான். அதாவது இவ்வதிகாரிக்கு வேதபகவதியால் இதவடிவமாய் விதிக்கப்பட்ட பகவத்பஜனைமுதலிய அர்த்தத்தையே அவன் அநுட்டிக்கின்றான். அர்ச்சுன! காம முதலியவைகளை விடுவதற்கு முன்னர் அவைகளாற்றடைப்பட்டவிவன் தனது சிரேயசைச்சித்தி செய்யான். எதனால் இவனுக்கு மோட்சவடிவப் புருடார்த்தம் பிராப்தியாமோ மாறுபாடாய் இவன தனது அசிரேயசையே தேடுகின்றான். எதனால் இவனுக்கு நரகவீழ்ச்சியே யாமோ அந்தக்காமமுதலியவடிவப் பிரதிபந்தமின்றியவன் தனது அசிரேயசைத் தேடாது சிரேயசையேதேடுதலின் இவ்வுலகசுகத்தை யநுபவித்து மனத்தூய்மை வாயிலாகவும் ஆன்மஞானப் பிராப்திவாயிலாகவும் மோட்சவடிவப் பரமகதியையே அடைகின்றான். ஆதலின் மோட்சவேட்கையுடைய அதிகாரியால் இக்காமாதிகள் அவசியமாய் விடத்தக்கனவாம் என்க. (22)

(அ-கை.) அசிரேயசை ஆசிரியாமைக்கும் சிரேயசை ஆசிரிப்பதற்கும் கேவலம் சாத்திரமே நிமித்தமாம்; என்னை? இவ்விரண்டும் கேவலம் சாத்திரப் பிரமாணத்தானே யுணரப்படுதலின் வேறோரளவையினுமின்றாமாதலின் அச் சாத்திரத்தைப் பரித்தியாகஞ்செய்து தனதிச்சாபூர்வகமாக நடக்கப்பட்டவன் யாதொரு புருடார்த்தத்தையுமுடையான் என்பதை ஸ்ரீ பகவான் இப்போது அருளிச்செய்கின்றார்.

சு-ம். யஃ ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரதஃ ।
 ந ஸ ஸித்திமவாப்னோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ (23)

ப-ம். 1 யஃ 2 ஶாஸ்த்ரவிதிம் 3 உத்ஸ்ருஜ்ய 5 வர்த்ததே 4 காமகாரதஃ 8 ந 6 ஸஃ 7 ஸித்திம் 9 அவாப்னோதி 11 ந 10 ஸுகம் 14 ந 12 பராம் 13 கதிம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவன் சாத்திரவிதியை விடுத்து தனதிச்சை மாத்திரத்தால் நடக்கின்றானோ அவன் அந்தக்கரணத்தூய்மையையுமடையான்; இவ்வுலகவின்பத்தையும் பெறான்; சுவர்க்கமோட்சவடிவ மேலானகதியையுமடையான். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அதிகாரிகட்கு அபூர்வார்த்தத்தை யறிவுறுத்துவது சாத்திரமாம். அத்தன்மைய சாத்திரவடிவ இருக்கு முதலிய நான்கு வேதங்களும் அதைத்தழுவிய மிருதி புராணம் இதிகாசம் சூத்திரம் என்பது முதலியவைகளும் சாத்திரவடிவங்களேயாம். அவைகளின் விதி, அதாவது இவ்வதிகாரியா விதுசெய்யற்பாலது இவ்வதிகாரியால் இது செயற்பாலதன்று என்னுங் கர்த்தவ்யாகர்த்தவ்யஞானத்திற்குக் காரணபூதப் பிரவர்த்தக நிவர்த்தக விதி, நிடேத, வாக்கியங்களாம். அவற்றில் 'அஹரஹஃ ஸந்த்யா முபாஸீத' (பொருள்) மூவர்ணத்தார்களாலு நாடோறும் சந்தியாசெய்யத்தக்கது, என்பது முதலியன விதிவாக்கியங்கள் 'பரதாராம் நகச்சேத்' (பொருள்) பிறர் மனையோடுபுணரற்க. என்பன நிடேத வாக்கியங்கள். அத்தன்மைய சாத்திரவிதியை அசிரத்தையால் விடுத்து தனது இச்சைமாத்திரத்தால் நடக்கின்றான். அதாவது சாத்திரம்விதித்த கருமத்தையுஞ் செய்திலன் சாத்திரம் நிடேதித்த கருமத்தைச் செய்கின்றான்; அந்தச்சாத்திரவிதியை விடுபவன் புருடார்த்தப்பிராப்திக்கு யோக்கியதைவடிவ அந்தக்கரணசுத்தியைக் கருமத்தைச்செயினுமடையான், இவ்வுலகவின்பத்தையுமடையான்; சுவர்க்கவடிவ அல்லது மோட்சவடிவ மேலானகதியையுமடையான். மற்றோ, சாத்திரத்தை உல்லங்கனஞ்செய்த அவன் சர்வ புருடார்த்தத்தினின்றும் நழுவுகின்றான் என்பதாம். ஈண்டு, 'ஶாஸ்த்ரவிதிம்' என்னும் வசனத்தில் ஸ்ரீ பகவான் விதி என்னுஞ் சப்தத்தைக் கூறியருளியது

விதிநிடேதவாக்கியங்களினும் வேறாகிய பிரத்தியகபின்னப் பிரமப்பிரதிபாதக தத்துவமசி அகம்பிரமாஸ்மி என்பன முதலிய வேதாந்தவாக்கியங்களும் சாத்திரரூபமேயாம் என்னும் அர்த்தத்தைச் சூசிப்பித்தருளுதற் பொருட்டாமென்க. (23)

(அ-கை.) சாத்திரபாகியனும் தனதிச்சை பூர்வகம் பிரவிருத்திப்பவன் சர்வ புருடார்த்தங்களினின்றும் நழுவியவனாகின்றானாதலின் இவ்வதிகாரி சாத்திரவிதியினாலே கருமத்தைச்செய்யவேண்டும் என்னுமர்த்தத்தை அருளிச்செய்து ஸ்ரீ பகவான் இப்பதினாறுவது அத்தியாயத்தை உபசம்மரித்தருளுகின்றார்.

சு-ம். தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ ।
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதானோக்தம் கர்ம கர்துமிஹார்ஹஸி ॥ (24)

ப-ம். 1 தஸ்மாத் 4 ஶாஸ்த்ரம் 5 ப்ரமாணம் 2 தே 3 கார்யாகார்யவ்யவஸ்திதௌ 9 ஜ்ஞாத்வா 7 ஶாஸ்த்ரவிதானோக்தம் 8 கர்ம 10 கர்தும் 6 இஹ 11 அர்ஹஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆதலின் உனக்கு காரியாகாரிய வியவஸ்தையில் சாத்திரமே பிரமாணமாம். ஆதலின் இக்கருமாதிகாரபூமியில் சாத்திரவிதானஞ் செய்து கூறியகருமத்தை யுணர்ந்து யுத்தமுதலிய கருமத்தைச் செய்தற்குரியோனாவாய். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாத்திரவிதியைத்தள்ளித் தனதிச்சாபூர்வகம் பிரவிருத்திப்பவன் இவ்வுலகபரவுலக சர்வ புருடார்த்தங்கட்கும் அயோக்கியனாகின்றான். மோட்சேச்சையுடைய உனக்குக் காரியாகாரிய வியவஸ்தையில் கேவலம் சாத்திரமே பிரமாணம்; அதாவது எனக்கு யாது செய்யத்தக்கது செய்யத்தகாதது என்னும் கர்த்தவ்யாகர்த்தவ்ய வியவஸ்தையைச் சுருதிஸ்மிருதிபுராணாதிகாசவடிவ சாத்திரப்பிரமாணமே அறிவுறுத்துவதாம். தனது புத்தி யுத்தியாதிகளின் வாக்கியம் அதிற் பிரமாணமன்று. ஆதலின் இக்கருமாதிகாரபூமியில் இவனாலிது செயற்பாலது இது செய்யொணாதது என்னும் பிரவர்த்தக நிவர்த்தக வடிவ சாத்திரவிதியாற்கூறப்பட்ட விதிநிடேதகருமங்களை நன்குணர்ந்து சாத்திரம் நிடேதித்த கருமத்தைவிடுத்து தனதந்தக்கரணம் தூயதாம்பரியந்தம் சாத்திரம் விதித்த உனது யுத்தமுதலிய கருமங்களையே நீ செய்யத்தக்கவன் என்பதாம். ஆண்டு, இப்பதினாறுவது அத்தியாயத்தில் ஸ்ரீ பகவான் இப்பொருளைத் திருவாய் மலர்ந்தருளினர். முன்னர்க்கூறிய தம்பமுதலிய சர்வ ஆசுரசம்பத்துகட்குக் காரணவடிவமும் எல்லா அசிரேயசுகளைத்தருவதும் சர்வ சிரேயசிற்குப்பிரதிபந்தமுமாகிய காமம், குரோதம், லோபம், என்னும் பெருந்தோடங்களைப்பரித்தியாகித்து மோட்சவேட்கையுடைய அதிகாரியானவன் மிகச்சிரத்தையோடும் சாத்திரசிரவணபாராயணனும் அச்சாத்திரமுபதேசித்த அர்த்தாநுட்டானபாராயணனும் ஆதல்வேண்டும் என்னுமர்த்தம் ஸ்ரீ பகவானால் தெய்வீக ஆசுர என்னு மிருவகைச்சம்பத்துகளையும் வெவ்வேறாக அருளிச்செய்து நிண்ணயிக்கப்பட்டது என்பதாம். (24)

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசாரிய ஸ்ரீ உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீ சித்கனானந்தகிரி சுவாமிகளாலியற்றியருளிய பிராகிருதடீகையெனும் கீதா கூடார்த்ததீபிகையில்,

பதினாறுவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

# பதினேழாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம꞉ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம꞉ ஸ்ரீ குருப்யோநம꞉
ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம꞉

(அ-கை) ஆண்டுக் கருமானுஷ்டானஞ் செய்பவர் முத்திறத்தினராவர், சிலரோ, நூல்விதியையுணர்ந்தும் சிரத்தையின்மையினனே அவ்விதியைவிட்டுத் தமதிச்சைப்படி சிறிது கருமத்தையனுட்டிப்பர். அவர் சர்வ புருடார்த்த அயோக்கியாதலின் ஆசுராவர். சிலரோ, நூல்விதியையுணர்ந்து அதிசிரத்தையுடையராய் அவ்விதி முறையே நிஷித்தகருமத்தை நீக்கி விகித கருமத்தையனுட்டிப்பர். அவர் சர்வ புருடார்த்த யோக்கியாதலின் தேவராவர். இப்பொருளை 16வது அத்தியாயத்தினீற்றில் நிர்ண்ணயித்தேம். இனி யாவர் நூல்விதியை ஆலசியாதி தோஷவயத்தால் விடுத்து தம் தந்தையாதி பெரியோரின் விவகாரத்தானே சிரத்தையோடும் நிஷித்தகருமத்தைவிடுத்து விதிதமாயவற்றை யனுட்டிப்பரோ அவர்பால் ஆசுரதருமமும் தேவதா தருமமும் பொருந்தும்; அவற்றுள் நூல் விதியை விடுத்தல் ஆசுரதருமமாம்; சிரத்தையோடும் விதித்ததைச் செய்தல் தேவதாதருமமாம். அவ்விருதருமத்தோடுங் கூடிய அவர் ஆசுரரிலடங்குவரா தேவதைகளிலடங்குவரா? இருகருமங்கள் காணப்படுகின்றமையானும், ஒரு கோடியை நிச்சயம் செய்விக்கும்பொருட் டரிசனத்தானும், ஐயத்தையுற்ற அர்ச்சுனன் ஸ்ரீ பகவான்பால் வினவத் தொடங்கல்.

அர்ச்சுனன் கூறல்.

சு-ம். யே ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்தயாந்விதா꞉ ।
தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்த்வமாஹோ ரஜஸ்தம꞉ ॥ (1)

ப-ம். 2 யே 3 ஶாஸ்த்ரவிதிம் 4 உத்ஸ்ருஜ்ய 7 யஜந்தே 5 ஶ்ரத்தயா 6 அந்விதா꞉ 8 தேஷாம் 11 நிஷ்டா 9 து 10 கா 1 க்ருஷ்ண 12 ஸத்த்வம் 13 ஆஹோ 14 ரஜ꞉ 15 தம꞉.

(அ-ம்.) ஹே கிருஷ்ண சுவாமியே! யாவர் நூல்விதியை விடுத்துச் சிரத்தையோடுங் கூடினவராகித் தேவபூசை முதலியவற்றைச் செய்வரோ அவர்க்கு மீண்டும் எவ்வகையாய நிஷ்டைகூடும்? சாத்விகமா, இராஜசமா அல்லது தாமதமா? (1)

(வி-ம்.) ஹே கிருஷ்ண பகவன்! ஹே சத்திய ஆனந்தரூபரே! தேவதா புருடர் சுருதியாதி சாஸ்திர அனுசாரியராவதேபோல யாவர் சாஸ்திர அனுசாரியரல்லரோ; மற்றேரு, சுருதியாதிகளின் விதியை ஆலசியாதியான் விடுத்திடுவரோ; ஆசுரர் சிரத்தை யற்றவராயிருப்பதேபோல யாவர் சிரத்தை யற்றவராகாரோ; மற்றேரு, தந்தையாதிய பெரியோரது விவகாரத்தைப் பின்பற்றன் மாத்திரையானே சிரத்தையோடுறுவரோ; அத்தகையர் தேவபூசை செய்யின் அவர் நிஷ்டை யெத்தகையதாம்? அதாவது, சாஸ்திரவிதி யுபேக்ஷா விருத்த விவகார

மாத்திரசிரத்தை யென்னு மிரண்டான் யாவர் முன்னத்தியாயத்தின் மொழிந்த தேவ அசுரர்களினும் விலக்ஷணரோ அவர்தம் சாஸ்திரவிதியவாவற்ற சிரத்தா பூர்வக தேவபூசைவடிவக் கிரியையின் விவஸ்தையெங்ஙனமாம்? சாத்விகமா இராஜ சமா தாமதமா என்பதாம். முதலதாயினோ சாத்விக இயல்பினாாதலினவர் தேவ ரேயாவர். இராஜசதாமதமாயினோ ஷூ இரு இயற்கையினாாதலின், அவர் அசுர ரேயாவர். ஈண்டுச் சத்வம் என்னும் பதத்தானே அர்ச்சுனன் ஐயத்தின் ஒரு கோடியைக் கூறினவனாயினன். இரஜஸ்தமஃ என்பதனானே அவ்வையத்தின் மற் றொருகோடியைக் கூறினவனாயினன். இவ்விபாகத்தை யறிவிக்கும்பொருட்டு அவ் விரண்டனிடையில் 'ஆஹோ' என்பதைக் கூறினனாதலின் சாத்விகீ ராஜஸீ தாமஸீ யென முக்கோடி ஈண்டுக் கவரத்தக்கதாகாதாம். (1)

(அ-கை.) ஆண்டு யாவர் சாஸ்திர விதியைவிடுத்துச் சிரத்தையோடும் தேவ பூசை முதலியவற்றைச் செய்வரோ அவர் சிரத்தையின் பேதத்தானே பேத முடையவரேயாவர். சாத்விக சிரத்தையோடு கூடியவரோ தேவரெனப்படுவர். அவர் சுருதி கூறிய சாதனத்தில் அதிகாரிகளாவர்; அதனாலுண்டாம் பயனையு மடைவர். இராஜசதாமத சிரத்தையோடுகூடிய ஆசுரரோ சுருதிகூறிய சாதனத் திலதிகாரிகளல்லர்; அதனாலாம்பயனையுமடையார். இவ்வாறு பிரித் தருச்சுனனது ஐயத்தை நீக்க இச்சித்தருளிய ஸ்ரீ பகவான் சிரத்தையின் பேதத்தைத் திரு வாய் மலர்ந்தருளல்:—

ஸ்ரீபகவாநுவாச.

சு-ம். த்ரிவிதா பவதி ஶ்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥ (2)

ப-ம். 11 த்ரிவிதா 13 பவதி 4 ஶ்ரத்தா 1 தேஹினாம் 2 ஸா 3 ஸ்வபாவஜா 5 ஸாத்விகீ 7 ராஜஸீ 6 ச 12 ஏவ 9 தாமஸீ 8 ச 10 இதி 14 தாம் 15 ஶ்ருணு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேகாபிமானிகட்கு அவ்வியற்கையாலுளதாய சிரத்தை சாத்விகீ ராஜஸீ தாமஸீயென மூவகையேயாம். அவற்றை நீ கேட்டி. (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எச்சிரத்தையோடு கூடியவர் சாத்திரவிதியை விடுத்துத்தேவபூசை முதலியவற்றைச்செய்யாநிற்பரோ அவர்க்குஇயற்கையாய்ச் சிரத்தை மூவகையாம். எச்சமஸ்காரங்கள் இப்பிறப்பைப் பயந்தனவோ அத் தகைய முற்பிறப்பிலியற்றினவாகிய தருமாதருமாதிகளின் சமஸ்காரம் இயற்கை யாம். அது சாத்விக இராஜசதாமதமென மூவகையாம். அம்மூவகையாலாய சிரத் தையும் ஷூ மூவகையாம். காரியமியாவும் காரணசமானமாகவே காண்கின்றே மன்றி விலக்ஷணமாக இலாமையின் சாத்விகாதி முச்சிரத்தைகளாலாக்கப்பட்ட சிரத்தைகள் முறையாக அம்முப்பெயரையேயடையும். இயற்கை மூவகையாத லின், சிரத்தையும் மூவகையேயெனக் கொள்ளக்கிடந்தது. ஈண்டு, 'ராஜஸீ சைவ' இதன் கண்ணிருக்கும் 'சஏவ' என்னு மிரண்டு சப்தங்களுள் 'ச' என்பதனானே ஸ்ரீ பகவான் இதனையுணர்த்தியருளினர்:—ஆரம்பித்த பிறப்பிற் கேவலம் சாஸ்திர சமஸ்காரமாத்திரஜன்னிய அறிஞனது சிரத்தை காரண ஏக ரூபத்தானே சாத்விகமேயாகுமன்றி மற்றிரண்டாக வாகாதாம். தேற்றத் தானோ, சாத்திர அபேக்ஷையிலாது பிராணிமாத்திர சாதாரணமாய் முன் மொழிந்த இயற்கையாலாம் சிரத்தையே இயற்கையின் மூவகையான் மூவகையா மென அருளினர். 'தாமஸீ ச' என்பதுள்ளிருக்கும் சகாரம், மூவகையையும்

ஒருமிப்பித்தற்காம். முற்பிறப்பின்வாதனையையழிக்கும் சாஸ்திரஜன்னிய விவேக விஞ்ஞானம் அந்நூல்விதியைத் தாண்டியவர்க்கு உண்டாகாதாதலின் அவருக்கு முன்வாதனைவடிவ இயற்கையானே சிரத்தை மூவகையேயாம்; அம்மூன்றையும் கேட்டி. கேட்பதனுனே அவர்பால் தேவபாவத்தையும் ஆசுரபாவத்தையும் நீயே நிச்சயிப்பாய். (2)

(அ-கை.) ஆண்டு முற்சுலோகத்தில் மனத்திருக்கும் முற்பிறப்பின் வாதனை வடிவ நிமித்தகாரணவிசித்திரத்தன்மையானே சிரத்தையின்விசித்திரத்தன்மை கூறியருளப்பட்டது. இப்போது ஸ்ரீ பகவான் அந்தச் சிரத்தையினுபாதான காரணரூப அந்தக்கரணத்தின் விசித்திரத்தன்மையானும் சிரத்தையின் விசித்திரத்தன்மையைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।
𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌮𑌯𑍋𑌽𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌯𑍋 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌃 𑌸 𑌏𑌵 𑌸𑌃 । (3)

ப-ம். 3 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾 2 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 4 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 5 𑌭𑌵𑌤𑌿 1 𑌭𑌾𑌰𑌤 8 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌮𑌯𑌃 6 𑌅𑌯𑌂 7 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 9 𑌯𑌃 10 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌃 11 𑌸𑌃 13 𑌏𑌵 12 𑌸𑌃.

(அ-ம்.) ஹே பாரத! எல்லாப் பிராணிகட்கும் தம்மந்தக்கரண அனுசாரமாகவே சிரத்தையாம். இவன் சிரத்தைமயனுதலின் யாவன் எச்சிரத்தை யுடையனே அவனதற் கொப்பனேயாவன். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவகுணத்தைப் பிரதானமாகவுடைய முக்குணவடிவ அபஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களினின்று முண்டாய அந்தக்கரணம் பிரகாச இயற்கையதாமாதலின் சத்வமெனப்படும். அது ஒவ்வொரு தேகத்திலோ வெளிப்பட்ட சத்வகுணமுடையதேயாகும்; தேவதைகளந்தக்கரணம்போலும். ஒவ்வொன்றிலோ இராஜோ குணத்தாலமுத்தப்பட்ட சத்வகுணமுடையதாகும். இயக்கர் முதலியோரின் அந்தக்கரணமேபோலும். ஒவ்வொன்றிலோ தமோ குணத்தாலமுத்தப்பட்ட சத்வகுண முடையதாகும்; பூதப்பிரேதாதிகளின் அந்தக்கரணமேபோலும். மனுடருக்கோ அது பெரும்பான்மையும் கலந்தேயிருக்கும். சாஸ்திரஜன்னிய விவேகஞானத்தானே இராஜ தமோகுணமமிழவே உற்பூத சத்துவகுணி எனப்படுவன். எல்லாப் பிராணிகட்கும் தத்தம தந்தக்கரணத்தையனுசரித்தே சிரத்தையாம்; அதாவது, அந்தக்கரண விசித்திரத்தானே சிரத்தையும் விசித்திரமேயாம். சத்துவாதிகள் முறையே மிகுந்த அந்தக்கரணங்களில் சிரத்தையுமப்பெயரினவேயாம். அவர்க்கெவ்வகை நிஷ்டையாமென நீ முன்னர் வினுவினுயன்றே? அதற்கு விடையினைக்கேட்டி. சாஸ்திரஜன்னிய ஞானமற்றுக் கருமத்தின் அதிகாரியாய முக்குணவடிவ அந்தக்கரண விசிஷ்டன் சிரத்தைமயனுவன்; அதாவது சிரத்தையின் மிகுதிப்பாட்டை யுடையவனுவனென்பதாம். அன்னத்தின் மிகுதிப்பாட்டான் அன்னமய யாகமென்பதேபோலும். சிரத்தைமயனுதலினுனே சிரத்தையுடையவனுவன்; அதாவது யாவன் சாத்விகாதி சிரத்தைகளையுடையவனுவனே அதனனுசாரமாகவே அவன் சாத்விகன் இராஜசன் தாமதன் எனப்படுவன். ஆகையால் சிரத்தையினுனே அந்நிஷ்டை யறியப்பெறும். மகாபாதகுலத்திற் பிறந்தவன் பாரதனுவன். அல்லது சாஸ்திர ஜன்னியஞானம் பாவெனப்படும், அதில் பிரீதியுடையவன் பாரதனுவன். அவ்வினியான் ஸ்ரீ பகவான் அர்ச்சுனன்பால் சுத்த சாத்விகத்தன்மையைக் குறிப்பித்தருளினர். (3)

(அ-கை.) ஹே பகவன்! இவனது சிரத்தையே இவனது நிஷ்டையை யுணர்த்தும் எனத்தாங்கள் முன்னருளினீர்கள் ஆஃதுண்மையேயாயினும் அது தான் அறியப்பெறுததாய் அந்நிஷ்டையை யறிவியாதாம்; மற்றே, அறியப் பெற்றே அறிவிக்குமாதலின் சிரத்தையையே எவ்வுபாயத்தாலேனும் அறிதல் வேண்டும் என அர்ச்சுனனுக்கறியும் வேட்கைவரத் தேவபூசை முதலிய காரி யக்குறியானே சிரத்தை யனுமானிக்கப்படும் என்பதாக ஸ்ரீ பகவான் அருளிச் செய்கின்றார்:—

சு-ம். யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।
ப்ரேதாந் பூதகணாம்ஸ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ॥ (4)

ப-ம். 3 யஜந்தே 4 ஸாத்விகா: 2 தேவாந் 5 யக்ஷரக்ஷாம்ஸி 6 ராஜஸா: 7 ப்ரேதாந் 9 பூதகணாந் 8 ச 11 அந்யே 10 யஜந்தே 12 தாமஸா: 1 ஜநா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவர் தேவதைகளைப் பூசிப்பரோ அவர் சாத் விகர்; யக்ஷராக்ஷதரைப் பூசிப்பவர் இராஜதர்; பூதப்பிரேதங்களைப் பூசிப்பவர் தாமதர் என அறிதி. (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நூலுணர்வின்றி இயற்கையாய சிரத்தையான் வசு ருத்திராதி சாத்விக தேவதைகளைப் பூசிக்கும் அன்னியர் சாத்விகரெனவும்; நூலுணர்விலாமல் இயற்கையாய சிரத்தையான் இரஜோகுணமுடைய குபோராதி யரையும், நிருதி முதலிய இராக்ஷசரையும் பூசிக்கும் அன்னியர் இராஜதரென வும்; நூலுணர்வின்றி இயற்கையான சிரத்தையான் தமோகுணமுடைய பிரேத பூதாதிகளைப் பூசிக்கும் அன்னியர் தாமதரெனவும் அறிதி. தமது தருமத்தினின் றும் நழுவிய பிராஹ்மணுதியர் தேகம் வீழ்ந்தபின் வாயுமய தேகத்தையடைந்து கொள்ளிவாய் முதலிய பெயருடைப் பிரேதங்களாவர்; அல்லது, பேய் விசேஷமே பிரேதமாம். ஏழுமாதாக்கள் முதலியோர் பூதகணமாவர். 'பூதகணாம்ஸ்சா ந்யே' என்னும் வசன ஈற்றிலிருக்கும் 'அந்யே' என்னும் பதத்தை 'ஸாத்விகா: ராஜஸா: தாமஸா:' இம்மூன்றிலும் ஒட்டுக; அதனுனே சாத்விகாதி மூவருள் ளும் பரஸ்பரம் விலக்ஷணத்தன்மை சித்தமாம். (4)

(அ-கை.) இவ்வாறு சுருதியாதியை விடுத்தவரின் சாத்விகாதி நிஷ்டை, தேவபூசை முதலியவற்றானே நிர்ணயிக்கப்பட்டது. ஆண்டோவ்வொரு இராஜத தாமதரும் பூர்வ புண்ணிய பரிபாகத்தானே சாத்விகராகி சாஸ்திரஞ் சாற்றிய சாதனங்களில் அதிகாரித்தன்மையையடைவர். துராக்கிரகத்தானேனும் பூர்வ பாவகரும பரிபாகத்தானேனும் அடைவுற்ற துட்டசங்கதோடத்தான் இராஜத தாமதபாவத்தை விடாதவராயிருப்பவர் சாஸ்திர சன்மார்க்கப் பிரட்டராய் நிஷித்த அசன்மார்க்கத்தை யனுசரித்து இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் கேவல துக் கத்தையே யடைவர் என்னும் பொருளை ஸ்ரீ பகவான் இப்போழ்து இரண்டு சுலோகங்களானே திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—

சு-ம். அஸாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜநா: ।
தம்பாஹங்கார ஸம்யுக்தா: காமராகபலாந்விதா: ॥ (5)
கர்ஷயந்த: ஸரீரஸ்தம் பூதக்ராமமசேதஸ: ।
மாம் சைவாந்த:ஸரீரஸ்தம் தாந்வித்த்யாஸுரநிஸ்சயாந் ॥ (6)

ப-ம். 3 அஶாஸ்த்ரவிஹிதம் 4 கோரம் 6 தப்யந்தே 1 யே 5 தப: 2 ஜநா: 7 தம்பாஹங்கார ஸம்யுக்தா: 8 காமராக பலாந்விதா: 11 கர்ஶயந்த: 9 ஶரீரஸ்தம் 10 பூதக்ராமம் 17 அசேதஸ: 15 மாம் 12 ச 16 ஏவ 13 அந்த: 14 ஶரீரஸ்தம் 18 தாந் 20 வித்தி 19 ஆஸுரநிஶ்சயாந்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவர் அசாஸ்திரவிகிதமாகிய கோரதவத்தைச் செய்வரோ, இடம்ப அகங்காரத்தோடுகூடியவரோ, காமராக பலத்தோடு கூடியவரோ, சரீரத்திலிருக்கும் பூதசமுதாயத்தை இளைப்பிப்பரோ, உட்சரீரத்திலிருக்குமெம்மையும் இளைப்பிப்பரோ. விவேகமற்றவரோ, அவரை ஆசுரநிச்சயமுடையவரென்றேயறி. (5-6)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவர் அசாஸ்திரவிகிதகோர தவத்தை யாற்றுவரோ; இருக்கு முதலிய வேதங்கள் சாஸ்திரமாம்; இப்பொழுது படனபாடனுதியோடுகூடிய வேதம்பிரத்தியக்ஷமாம்; படனபாடனுதியற்றவை ஸ்மிருதியர்த்தங்களைக்கொண்டு மூலமென அனுமித்தற் பாலனவாம், இவ்விருவேதத்தினும் விதிக்கப்படாததவம் அசாஸ்திரவிகிதமாம். அல்லது வேதவிரோதியாய பௌத்த ஆகமம் அசாஸ்திரமாம்; அது விதித்த காய்ந்தகல்லேறன்முதலிய தபம் அசாஸ்திரவிகிதமாம்; அது கோரமாம் அதாவது செய்பவனுக்கும் மற்றையருக்கும் கேவலம் பீடையையே பயப்பதாம். அக்கோரதவத்தையேயெப்போதும் யாவர்செய்வரோ; இடம்ப அகங்காரமிரண்டோடுங் கூடியவரியாவரோ, எல்லாவுலகும் என்னைத் தருமாத்மா என்னல் வேண்டுமெனவிழைந்து அவர்பால் தனது தார்மிகத்தன்மையை வெளிப்படுத்தல் இடம்பமாம்; எல்லாக்குணங்களானும் யானே யாவரினும் மேன்மையன் என்னுந்துஷ்ட அபிமானம் அகங்காரமாம்; இவ்விரண்டோடும் யாவரினிது கூடியிருப்பரோ, ஆண்டு இடம்ப அகங்காரக்கூட்டில் ஆயாசமிலாமலே பிரிவின் பிறப்பியற்ற வாற்றலிலாமையே இனிமையாம். யாவர் காமராகபலத்தோடுகூடியவரோ, இச்சைக்கு விடயீபூதமாய சத்தப்பரிசாதிகள் காமமெனப்படும்; அதன்சன்னத்தியந்த ஆசக்தி இராகமாம். அதனை நிமித்தமாகவுடைய அதிஉக்கிர துக்கங்களைச் சகிக்கும் ஆற்றல் பலமாம். இத்தகைய காம இராகபலத்தோடு யாவரெப்போதும் கூடியவராவரோ; அல்லது, சத்தப்பரிசாதிவிடயங்களில் அபிலாஷை காமமாம்; எப்போதும் அவற்றில் அபிநிவேசமான சேர்க்கை இராகமாம்; இவ்விடயத்தையான வசியம் சம்பாதிப்பேன் என்னும் ஆக்கிரகம் பலமாம்; இம்மூன்றொடும் யாவர் எப்போதுங் கூடியுள்ளாரோ? இக்காரணத்தானே பலவாகிய துக்கத்தைக்கண்டும் நீங்காதவராய்த் தேகத்திலுள்ள பூதசமூகங்களை யாவர் குறுக்குவரோ; அதாவது தேக இந்திரியாதிவடிவ சங்காத ஆகாரமாய்ப் பரிணமத்தையடைந்த பிருதிவி முதலிய பஞ்சபூத சமூகத்தை யாவர் வீணை உபவாசாதிகளான் இளைப்புறுத்துவரோ; இத்தேகத்துட் போக்தாவடிவத்தானேயிருக்கும் பரமேசுரராகிய எம்மையும் யாவர் இப்போக்கிய சரீரத்தைக் கிருசம்செய்யும் வாயிலாய்க் கிருசஞ்செய்வரோ; அல்லது, அந்தரியாமிவடிவத்தானே இத்தேகத்திலிருக்கும் மதிக்கும் மதியின் விருத்திகட்கும் சாக்ஷிரூபப் பரமேசுரராகிய எம்மை யாவரெமது சாஸ்திரவடிவ ஆணையைத் தாண்டிக் கிருசஞ்செய்வரோ; இதனானே யாவர் அசேதசரோ-விவேகமற்றவரோ; இவ்வாறு இகலோக சர்வ போகமற்றுப் பரலோகத்திலதமகதியையடையும் சர்வ புருடார்த்தத்தினும் பிரட்டராகிய புருடரை நீ ஆசுர நிச்சயரென்றறி. ஆண்டாசுரமென்னும் விபரீதபாவனையோடு கூடிய வேதஅர்த்தவிரோதி நிச்சயமுடையவர்க்கு ஆசுர நிச்சயரெனப் பெயராம்; அவர் மனுடராகத் தோற்றினும் அசுரகருமத்தையே யாற்றுவராதலின் அவரை நீ அசுரரூபமாகவேயறி; அறிந்து அவரை உபேக்ஷித்து விடுதி. ஈண்டு 'ஆஸுரநிஶ்ச

யாந்' என்னும் வசனத்தில் அவர் நிச்சயத்தின்கண்ணே ஆசுரத்தன்மை கூறப்பட்டதாதலின் அந்நிச்சய பூர்வகமாக எத்துணை யந்தக்கரணவிருத்திகள் அவர்க்குளவாகின்றனவோ அவையாவற்றினும் அவ்வாசுரத்தன்மையையேயறிக. ஆசுரத்தன்மைச் சாதியற்ற மனுடரிடத்தில் நேராக ஆசுரத்தன்மையின்றாம், மற்றோ, துஷ்டகருமங்களைச் செய்வதானேயாம். இதனானே, ஸ்ரீ பகவான் 'தாந் ஆஸுராந் வித்தி' என அவரிடத்தில் நேராக அசுரத்தன்மையைக் கூறியருளினா ரில்லை; மற்றோ, ஆசுர நிச்சயத்தானே அறைந்தருளினர். (5-6)

(அ-கை.) ஆண்டுச் சாத்விகர் தேவராவர், இராஜசர்தாமதர்விபரீதமதி யுடையராதலின் அசுரராவர் என்னும் பொருள் நிரணயிக்கப்பட்டது. இப்போது ஸ்ரீ பகவான் சாத்விகரைக்கவரும் பொருட்டும் இராஜசதாமசரைக்கழிக்கும் பொருட்டும் ஆகாரம் யாகந்தவம்தானம் என்னும் நான்கன் முப்பான்மையை யருளிச்செய்கின்றார்:—

சு-ம். ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।
யஜ்ஞஸ்தபஸ்ததா தாநம் தேஷாம் பேதமிமம் ஶ்ருணு ॥ (7)

ப-ம். 4 ஆஹார: 1 து 5 அபி 2 ஸர்வஸ்ய 6 த்ரிவித: 7 பவதி 3 ப்ரிய: 9 யஜ்ஞ: 10 தப: 8 ததா 11 தாநம் 12 தேஷாம் 14 பேதம் 13 இமம் 15 ஶ்ருணு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மற்றும், எல்லாப்பிராணிகட்கும் பிரிய ஆகாரமும் மூவகையேயாகும், யாகம் தவம் தானம் என்பவையும் மூவகையேயாம். அவற்றின் சாத்விகாதி பேதத்தை நீ கேட்பாயாக. (7)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த சிரத்தையே கேவலம் மூவகை யென்பதன்று; மற்றோ, யாவர்க்கும் பிரிய ஆகாரமும் சாத்விகாதி பேதத்தானே மூவகையேயாகும் நால்வகையாகாதாம். ஏனெனின் எல்லாப் பொருள்களும் முக்குணவடிவமாயிருத்தலின் அதனினுமயலாக நான்காவதொருவகை சம்பவியாதாம். ஆண்டு பக்ஷியம், போஜ்ஜியம், லேகியம், சோஷியம், என நான்குவகை அன்னம் ஆகாரமாம். பசியை நீக்கும் திருஷ்டபலந்தரும் ஆகாரம் மூவகையாவதே போலத் தருமமுண்டாக்கும் வாயிலாகச் சுவர்க்காதி அதிர்ஷ்டபலந்தரும் யாக தவதானமென்னும் மூன்றும் மூவகையாம். எரி முதலிய தேவதைகளை யுத்தேசித்து நெய் முதலியவற்றை விடல் யாகமாம். தேகேந்திரியாதிகளைக் காயவைக்கும் கிருச்சிரசாந்திராயணாதிகள் தவமாம். தன்னுடைய தென்பவாய பொன், கோ இல் முதலியவற்றிற் றன்னுடையதென்னும் மமதையைவிட்டு அந்தணாதியின் மமதையைச் சம்பாதித்தல் தானமாம். ஆகாரமுதலிய நான்கன் மூவகைப் பேதத்தைவெளியாய்க்கூறச் சாவதான மனத்தனாய்க் கேட்பாயாக. (7)

(அ-கை.) இப்போது ஆகாராதி நான்கன் மூவகைப்பேதத்தை ஸ்ரீ பகவான் 15 சுலோகங்களாலருளிச்செய்கின்றார்; அவற்றுள்ளும் முதலில் ஆகார பேதத்தை 3 சுலோகங்களாற் கூறியருளல்.

சு-ம். ஆயு:ஸத்த்வபலாரோக்யஸுகப்ரீதிவிவர்தநா: ।
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா: ॥ (8)

ப-ம். 1 ஆயு: ஸத்த்வபலாரோக்யஸுகப்ரீதிவிவர்தநா: 2 ரஸ்யா: 3 ஸ்நிக்தா: 4 ஸ்திரா: 5 ஹ்ருத்யா: 6 ஆஹாரா: 7 ஸாத்த்விகப்ரியா:,

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஆயுஷ், சத்வம், பலம், ஆரோக்கியம், சுகம், பிரீதி என்னுமியாவற்றையும் விருத்திசெய்வதும், இரசமுற்றதும், பசையுற்றதும், திரமும், ஹிருத்யமும் ஆகிய ஆகாரம் சாத்விகர்க்குப் பிரியமுடையதாம். (8)

(வி-ம்.) நெடுங்காலம் வாழ்தல் ஆயுஷாம். பலமாகிய துக்கந்தோன்றினும் நிர்விகாரத்தன்மையை யடைவிக்கும் மனோதைரியம் சத்துவமாம்; அல்லது, உற்சாகமாம். தான் செய்யத்தகுதியாய காரியத்தில் ஆயாசமின்மையைத் தரும் சரீர ஆற்றல் பலமாம். சுரம் சூலமுதலிய வியாதிகளின்மை ஆரோக்கியமாம். உண்ட பின்னுண்மகிழ்ச்சி சுகமாம்; உண்ணுங்கால் அருசியின்மை, அதாவது போஜன விஷயக அதிக அவா, பிரீதியாம். இவையாவற்றையும் ஆகாரம் விருத்திசெய்யும். இரசியம்-மதுரரச முக்கியத்தானே மிகவும் சுவாதான ஆகாரமாம். சிநிக்தம்-இயற்கையாய நேயத்தானும் இடையிலுறும் நெய்முதலிய நேயத்தானுஞ் சிறப்புறு மாகாரம். ஸ்திரம்-இரசாதி யங்கிசத்தானே தேகத்தில் நெடுநாணிலைத்திருப்பது. ஹிருத்யம்-தீநாற்றம் அசுசித்தன்மை முதலிய திருஷ்ட அதிருஷ்ட தோஷமற்றிருத்தலின் தரிசனமாத்திரத்தானே மனத்திற்கு மகிழ்ச்சிதருவது. இவ்வகைக் குணங்களோடுகூடிய நால்வகையாகாரம் சாத்விகர்க்கே பிரியமுடையதாம்; அதாவது முற்கூறிய இலக்கணத்தானே சாத்விகமென்றறிக. சாத்விகத்தகைமையை யிச்சிப்பவர் கூறிய ஆகாரமே கவரத்தக்கதாம். (8)

சு-ம். கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:கஶோகாமயப்ரதா: ॥ (9)

ப-ம். 1 கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷவிதாஹிந: 3 ஆஹாரா: 4 ராஜஸஸ்ய 5 இஷ்டா: 2 து:கஶோகாமயப்ரதா:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கைப்பு, புளிப்பு, கார்ப்பு, மிக வெம்மை, காழ்ப்பு, காய்ந்தது, தாகஞ் செய்வது, துக்க சோகரோகமென்னும் மூன்றையுமடைவிப்பது—இது இராஜசர்க்கே பிரியமுடையதாம். (9)

(வி-ம்.) ஈண்டு, மிக வெம்மை யென்பதிலிருக்கும் மிக வென்பதைக் கைப்பு முதலிய எழனோடுஞ் சேர்க்க. அதனானே இப்பொருள் துணியப்பெறும்; மிகக் கைப்பு என்பனவாதியாம். வேம்பு முதலிய ஆகாரம் மிகக்கைப்பாம், எலுமிச்சை முதலிய ஆகாரம் மிகப் புளிப்பாம்; உப்பு முதலிய ஆகாரம் மிகக் கார்ப்பாம்; உண்ணுங்கால் வாயும் கையும் தாகமா மாகாரம் மிக வெம்மையாம்; மிளகாய் முதலிய ஆகாரம் மிகக்காழ்ப்பாம்; பசையிலாத கருந்தினைமுதலியவை மிகக் காய்ந்ததாம். மிகச் சந்தாபத்தைத்தரும் கடுகு முதலியவை மிகத் தாகஞ்செய்வதாம்; துக்கச்சோக நோய் மூன்றையுந் தருமாகாரங்கள்; அக்காலத்திய பீடை துக்கமாம், இனிவருங் கெட்ட எண்ணம் சோகமாம்; சுர முதலியவை நோயாம் வாத பித்தாதி தாதுக்களின் விடமவாயிலாய் மேன்மூன்றையுமடைவிக்கும் ஆகாரம் துக்கசோக ஆமயப்பிரதமாம்; இத்தகைய ஆகாரம் இராஜசர்க்கே பிரியமுடையதாம். முன்மொழிந்த இலக்கணத்தோடு கூடிய ஆகாரம் இராஜசமாகும், இதனைச் சாத்விகரவசியம் விட்டொழித்தல் வேண்டும். (9)

சு-ம். யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் ।
உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜநம் தாமஸப்ரியம் ॥ (10)

ப-ம். 2 யாதயாமம் 3 கதரஸம் 4 பூதி 6 பர்யுஷிதம் 5 ச 1 யத் 7 உச்சிஷ்டம் அபி 8 ச 9 அமேத்யம் 10 போஜநம் 11 தாமஸப்ரியம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வாஹாரம், வேகாததோ, இரதமற்றதோ, நாற்றத்ததோ ஊசியதோ, எச்சிலோ, அசுசியோ, அது தாமதர்க்கே பிரிய முடையதாம். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வாகாரம் யாதயாமமாமோ-பாதிவெந்ததாமோ, கதரசமாமோ-அதிபக்குவமானதால் தீய்ந்து ருசியற்றதாமோ, அல்லது பக்குவமாகிய ஓதனாதி முகூர்த்தாதியாற்றடைப்படவே தண்ணென்றுமதுவே யாதயாமமாம். எதனது சாராம்சமெடுக்கப்பட்டதோ அது கதரசமாம்; மோர் முதலியவைபோலும். பூதி யாமோ-துர்க்கந்தமுடையதாமோ, பரியுஷிதமாமோ-பக்குவமுற்றது ஓரிரவானபின் புசிப்பவனுக்கு அக்கான்மபக்கத்தைத் தருவதாமோ; ஈண்டுப் பர்யுஷிதஞ்சயத்தென்பதிலிருக்கும் அகாரம் மற்றைய இத்தகைய கெட்ட ஆகாரங்களையும் கூட்டுவதாம். எச்சிலாமோ-அபின்ற சேடமாமோ, அமேத்தியமாமோ-யாக அயோக்கிய அசுசி மாம்சாதிகளாமோ; ஈண்டு, 'உச்சிஷ்டமபி சாமேத்யம்' என்பதிலிருக்கும் 'அபி ச' என்பது வைத்திய சாஸ்திரத்திற் கூறப்பட்ட அபத்திய ஆகாரத்தைக்காட்டும் பொருட்டாம். இவ்விலக்கணத் தோடுகூடிய ஆகாரம் தாமதர்க்குப் பிரியமாயதாம்; அதாவது கூறியதைத் தாமத ஆகாரமென்றறிக; இதனைச் சாத்விகர் அதிதூரத்திற்றள்ளல் வேண்டும். இதன்கண்ணே துக்கசோகாதிகாரணத்தன்மை மிக வெளிப்படையாமாதலின் ஸ்ரீ பகவான் நேரே கூறியருளிலர். முறையாக மூவகை ஆகாரவர்க்கத்தைத் திருவாய் மலர்ந்தருளினர். ஆண்டு 'ஆயு:' எனச் சாத்விகத்தையும், 'கட்வம்ல' என இராஜசத்தையும், யாதயாமம் எனத் தாமதத்தையும் கூறியருளினர். இராஜசதாமச ஆகாரங்களில் சாத்விகத்தின் விரோதித்தகைமையையே யுணர்க. அஃதாமாறு :—மிகக்கைப்பாதி இரசியத்வ விரோதியேயாம்; அவை மிகச் சுவையுடையனவாகாமையின் என்பது வெளிப்படையேயாம். பசையற்றது பசையுற்றதற்கு விரோதியாம். மிகக் காழ்ப்பு மிகத் தகித்தலிரண்டும் தாதுவைக்காத்தலின் விரோதியாதலின் திரத்தன்மைக்கு விரோதியாம். மிக வெம்மையாதிஹ்ருத்யத்வ விரோதியாம். நோயைக்கொடுக்குந்தன்மை, ஆயுள், சத்துவம், பலம், ஆரோக்கியம், என்னும் நான்கன் விரோதியாம். துக்க சோகத்தைக் கொடுக்குந்தகைமை, சுகம் பிரீதி என்பவற்றிற்கு விரோதியாம். இவ்வாறு இராஜசத்திற் சாத்விக விரோதம் வெளிப்படையாம். இவ்வாறு தாமதத்திலும் கதரசத்தன்மை, யாதயாமத்தன்மை, பரியுஷிதத்தன்மை மூன்றும் முறையே இரசியத்தன்மை, பசையுற்றதன்மை, திரத்தன்மை, மூன்றன்விரோதியேயாம். பூதித்தன்மை எச்சிற்றன்மை அசுசித்தன்மை மூன்றும் ஹிருத்யத்தன்மை விரோதியாம். தாமதத்தில் ஆயுள்சத்வாதிவிரோதம் வெளியேயாம். இராஜசத்திலோ கேவலம் திருஷ்ட விரோதமேயாம். தாமதத்திலோ திருஷ்ட அதிருஷ்ட விரோதமிரண்டுமேயாம். இத்துணை விசேடம் இரண்டாகாரத்துள்ளுமாம். (10)

(அ-கை.) ஆண்டு, முன் 'ஆயு:' என்பதாதி முச்சுலோகங்களான் ஸ்ரீ பகவான் முறையாகச் சாத்விகாதி மூன்றாகாரத்தையும் மொழிந்தருளினர். இப்போது 'அபலாகாங்க்ஷிபி:' என்பதாதி மூன்று சுலோகங்களால் முறையே சாத்விகாதி மூன்று யாகங்களைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். அபலாகாங்க்ஷிபிர்யஜ்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।
யஷ்டவ்யமேவேதி மந: ஸமாதாய ஸ ஸாத்விக: ॥ (11)

ப-ம். 1 அபலாகாங்க்ஷிபி: 9 யஜ்ஞ: 8 விதித்ருஷ்ட: 7 ய: 10 இஜ்யதே 2 யஷ்டவ்யம் 3 ஏவ 4 இதி 5 மந: 6 ஸமாதாய 11 ஸ: 12 ஸாத்விக:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலேச்சைபற்றவர் இஃதின்றியமையாதியற்றத் தக்கதேயாகுமென மனத்தின் நிச்சயித்து சாஸ்திரவிஹித யாக அநுஷ்டானஞ் செய்வர்; அந்த யாகம் சாத்விகமாம். (11)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அக்கினிஹோத்திரம், தரிசபூரணமாசம், சாதுர் மாசியம், ஜோதிஷ்டோமம், என்பதாதி யாகங்களிருவகையாம்; ஒன்றே காமியம் மற்றொன்றே, நித்தியமாம். அவற்றுள் "தரிசபூரணமாசங்களாற்றுறக்ககாமன் வேட்க" என்பதாதி வசனம் துறக்கபயனைப்பற்றி விதிதமாதலின் காமியமாம். அதுவோ எல்லா அங்கங்களும் நிறைவுற்ற யாகத்தானே அநுட்டிக்கத்தக்கதே யலாது பிரதிநிதிவாயிலாயன்றும்; சாங்காறு மெரியோம்புக" என்பதாதி வசனம் பயனைப் பற்றுமலே கேவலம் வாழ்தலாதி நிமித்தப்பற்றானே கூறினமை யின் நித்தியமாம். சர்வ அங்கங்களும் நிறைவிலாதொழியவே பிரதிநிதிகளா னும் அநுஷ்டிக்கத்தக்கதும் நித்தியமாம். ஆண்டுச் சர்வாங்க சம்பூர்ணமிலதே னும் பிரதிநிதியைக்கவர்ந்து எனக்கு நித்தியகருமம் இன்றியமையாது செய்யத் தக்கதேயாம்; பிரத்தியவாய நீக்கப்பொருட்டன்றே வேதபகவான் இன்றியமை யாது வாழ்தலாதி நிமித்தத்தானே நித்திய கருமவிதானஞ்செய்துளார் எனத் தன் மனத்தெண்ணி மனத்தூய்மையை வேண்டிக் காமிய கரும அநுஷ்டான விமுகர்களானே நூலளவைகொண்டு அணிந்த யாகமியாதனுஷ்டிக்கப்படுமோ அது நூற்படி மனத்தூய்மையின்பொருட்டு அநுட்டிக்கத்தக்க நித்தியமாகிய சாத்விகமாம். (11)

சு-ம். அபிஸந்தாய து பலம் தம்பார்த்தமபி சைவ யத் ।
இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் ॥ (12)

ப-ம். 4 அபிஸந்தாய 2 து 3 பலம் 6 தம்பார்த்தம் 7 அபி 5 ச ஏவ 8 யத் 9 இஜ்யதே 1 பரதஶ்ரேஷ்ட 10 தம் 13 வித்தி 12 ராஜஸம்.

(அ-ம்.) ஹே பாரதவம்ச மேன்மை மிக்க அர்ச்சுன! மறித்தும் துறக்காதி பயனைக்குறித்து இடம்பப்பொருட்டும், அநுஷ்டிக்கும் யாகம் இராஜசமென்றறி.()

(வி-ம்.) ஹே பாரத குலசிரேஷ்ட அர்ச்சுன! புருடர்களினிச்சைக்கு விடய மாய சுவர்க்காதி பயனை யுத்தேசித்து எம்மகமனுட்டிக்கப்படுமோ, மனத்தூய் மைப்பொருட்டு யாதனுட்டிக்கப்படாதோ, யாவருமென்னைத் தருமாத்மாவென் னல்வேண்டும் என விழைந்து யாவருக்குந் தனது தருமான்மத்தன்மையை வெளி யிடல் இடம்பமாம்; அஃது இடம்பப்பொருட்டும் எம்மகமியற்றப்படுமோ ஈண்டு, 'அபிசைவ' என்பது விகற்ப சமுச்சயமென்னு மிரண்டையுங்கூறி மூன்று பக்ஷங்களைக் குறிப்பிக்கும்பொருட்டாம். ஒவ்வொரு மகமோ இடம்பப்பொருட் டாற்றாவிடினும் துறக்காதி பயனைக்குறித்தே செய்யப்படும்; ஒவ்வொரு மகமோ, துறக்காதி பயனைக்குறியாமலும் கேவலம் இடம்பப்பொருட்டே இயற்றப்படும், என விகற்பித்து இருபக்ஷம் சித்தமாம். ஒவ்வொரு மகமோ துறக்காதி பலப் பொருட்டும் இடம்பப்பொருட்டும் செய்யப்படும் என இரண்டையுஞ் சமுச்ச யித்து ஒருபக்கந் துணியப்பெறும். இவ்வாறு திருஷ்ட அதிருஷ்ட திருஷ்டாதிரு ஷ்டப் பயனைக்குறித்து நூற்படி எம்மகஞ் செய்யப்பெறுமோ அது ராஜசமாம்; அதாவது அதனை இராஜசமென்றறிந்து விடுதி. ஈண்டு, ஹே பாரதசிரேஷ்டவிளி யானே ஸ்ரீ பகவான் அர்ச்சுனன்பால் இராஜச கருமபரித்தியாகத் தகுதியைக் குறிப்பித்தருளினர். 'அபிஸந்தாயது' என்பதனிற்றிலிருக்கும் து-சப்தம் முற்சுலோகத்திற்கூறிய நித்திய கருமரூப சாத்விக யாகத்தினும் இக்காமிய கரும

ப இராஜச யாகத்தில் விலக்ஷணத்தன்மையைக் குறிப்பித்தருளும்பொருட் ம்.

ம். விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம் ।
ச்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ (13)

ப. 1 விதிஹீநம் 2 அஸ்ருஷ்டாந்நம் 3 மந்த்ரஹீநம் 4 அதக்ஷிணம் 5 ச்ரத்தாவிர ஹிதம் 6 யஜ்ஞம் 7 தாமஸம் 8 பரிசக்ஷதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நூல்விதியற்றதும், அன்னதானமற்றதும், மந்திர ற்றதும், தக்கிணையற்றதும், சிரத்தையற்றதும், ஆகிய யாகத்தை வேதவேத்தாக் தாமதயாகமென்பர். (13)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எம்மகம் விதியற்றதோ அதாவது, எவ்வகை வில் அம்மகஞ் செய்யவிதித்துளதோ அதற்கு மாறுதலாமகமாமோ; எம்மகம் சிருஷ்ட அன்னமோ அதாவது எம்மகத்தில் மறையவர் முதலியோர்கட்கு ன்னதானமில்லையோ; எம்மகமந்திரமற்றதோ அதாவது, உதாத்தாதி சுரங்க ாடும், ககாராதிவர்ணங்களோடுங் கூடிய மந்திரங்களற்றதாமோ; எம்மகந் க்ஷிணையற்றதாமோ இருத்துவிக்கு மறையவர் முதலியவரின் துவேடாதியால் ம்மகஞ் சிரத்தையற்றதாமோ; அத்தகைய மகத்தை ஆரணமறிந்த ஆன்றோர் மதயாகமென்பர். ஆண்டு, விதிஹீனத்தன்மை முதலிய 5 சிறப்புகளுள் ஒவ் ாரு சிறப்போடுங்கூடிய மகம் ஐவகையாகும்; அவ்வைந்து சிறப்போடுங் டிய மகம் ஒருவகையாகும்; ஆகவே ஆறுவகையாம். அவ்வைந்து விசேஷணங் ருள் 2-3-4 விசேஷணங்களோடு கூடிய யாகம் வெவ்வேறேயாம்; ஆகவே, நேகம் வகையாம். முன்மொழிந்த இராஜசமகத்தில் மனத்தூய்மையினபாவ ாதேனும், துறக்க முதலிய பயன்களை யடையச்செய்யும் தருமமாகிய அபூர் அவசியமுண்டாம்; என்னை? அம்மகம் நூல்விதியளவாகவே அனுட்டிக்கப் தலின்; இம்மகமோ எவ்வபூர்வத்தையுமுண்டாக்காதாம். இரண்டிலிஃதே ல்பரம் பேதமாம். (13)

(அ-கை.) 'ஸமுராகாம் க்ஷிஹி' என்பதாதி 3 சுலோகங்களானே ஸ்ரீ பக ன் மூறையே சாத்விகாதி 3 வகை மகங்கூறியருளினர். இனிச் சாத்விகாதி வகைத் தவத்தைக் கூறியருளும்பொருட்டு முதலில் 3 சுலோகங்களானே றையே காயிக வாசிக மானத பேதத்தானே தவத்தை மூவகையாய்க் கூறியரு கின்றார்:—

ம். தேவத்விஜகுருப்ராஜ்ஞபூஜநம் சௌசமார்ஜவம் ।
ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச சாரீரம் தப உச்யதே ॥ (14)

ப. 1 தேவத்விஜகுருப்ராஜ்ஞபூஜநம் 2 சௌசம் 3 ஆர்ஜவம் 4 ப்ரஹ்மசர்யம் 6 அஹிம்ஸா 5 ச 7 சாரீரம் 8 தப: 9 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேவர், துவிஜர், ஆசிரியர், அறிஞர், இவரியாவ யும் பூசித்தல் காயத்தூய்மை; ஆர்ஜவம், பிரஹ்மசரியம், அஹிம்சையும், வையாவும் காயத்தபமாம். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரஹ்மா, விஷ்ணு, சிவன், சூரியன், அக்கினி, ர்க்கை, என்பவர் தேவர்; நன்னடக்கையோடுகூடிய உத்தம மறையோர் துவி; தந்தை தாயாசிரியர் என்னும் விருத்தர் ஆசிரியர்; வேதபாடப்பொருளை

யறிபவர் அறிஞர் ; என்னு மின்னோர்க்கு நூல்விதிப்படி சிரத்தை பக்திகளுடன் தகுதிப்படி நமஸ்காரம் சேவைதக்ஷிணை அன்னதானம் என்பதாதியைச் செய்தலே இவர்தம்பூசையாம். தோயமுமண்ணுங்கொண்டு காயமேவிய மலந்துய்மைசெய்தல் சௌசமாம். ஆர்ஜவமோ மனக்கோணலின்மைவடிவமென இனி 'ஸாவலம் ஶுசி' என்னுஞ் சப்தத்தான் ஸ்ரீ பகவான் மானததவத்தில் கூறியருளுவராதலின் ஈண்டு ஆர்ஜவம் அதைக்கொள்ளற்க ; மற்றோ, நூல்விதித்ததில் முயலலும் நிடேதித்ததில் நீக்கமும் ஆகிய பிரவிருத்தியே ஆர்ஜவமெனக்கொள்க. சாத்திர நிடேதமைதுனத்தினின்றும் நீங்கல் பிரஹ்மசரியமாம். சாத்திர நிடேதமாகிய பிராணிகட்குப் பீடைசெய்தலின்மை யகிம்சையாம். ஈண்டு, அஹிம்சையும் என்னு மும்மையானே அஸ்தேயத்தையும் அபரிக்கிரகத்தையும் கொள்க. இங்ஙனம் தேவபூசையே முதல் அஹிம்சையீறாக யாவுமே காயத்தவமாம். காயமுக்கியமாயிருக்கும் கத்திரு முதலியோரான் ஆற்றுந் தவம் காயிகமாம். கேவலங் காயமாத்திரையானே செய்யுந் தவம் காயிகமன்றாம். ஏனெனின்,

> அயிஷ்டாநம் தயாகத்தா கரணம் அவரூயமிர்யம் ।
> விவிய<u>ா</u>ஶ்ய வஷ்யக்ஷேஷா தெவம் தெவாத்ர வஂமம் ॥
> ஶரீரவா ஜநொஹிய-ஜக்ஷ வ்ராரஸ்தெநர: ।
> நஷாயஂ வாவிவரீதஂவா வஂதெதெ தஸ்யஹெதவ: ॥

என்னும் சுலோகங்களால் ஸ்ரீ பகவான் இனி 18-வது அத்தியாயத்தில் அதிஷ்டானம், கர்த்தா, கரணம், சேஷ்டை, தைவம், என்னும் ஐந்தன்கண்ணே சர்வ கருமங்களின் காரணத்தன்மையைக் கூறியருளுவர். இவ்வகையாய முறையை வரும் வாசிகதவத்தும் மானததவத்தும் கண்டுகொள்க. ஒருரையின்கண்ணே பிராஞ்ஞசப்தத்தானே பிரஹ்மவேத்தாக்கவரப்பெற்றுளான். யான் பிரஹ்மரூபனென்னும் பிரஞ்ஞை யாவனுக்கோ அவன் பிராஞ்ஞனுவன். துவிஜசப்தத்தாற் கூறப்பட்ட இருபிறப்பாளரினும் பிராஞ்ஞரை ஸ்ரீ பகவான் றனியே கூறியருளினது இப்பொருளைத் தெரிவித்தருளும்பொருட்டாம் :—முன்னனேக ஜன்மங்களிலாற்றிய புண்ணியத்தானே அடைவுற்ற ஈசுரரது பிரசன்னத்தன்மையானே பிரஹ்மநிஷ்டத்தன்மைவடிவ பிராஞ்ஞத்தன்மை சூத்திராதியரிடத்தும் சம்பவமாதல்கூடும் ; விதுரர், தருமவியாதர், என்பவர் முதலியோரிடத்தே ஷ பிராஞ்ஞத்தன்மை வெளிப்படையேயாம். அவ்வாறே 'ஸ்த்ரியொவெஶ்யாஸ்ததாஶூத்ராஸ்தெவியாந்தி வராம்கதிம்' என்னும் வசனத்தானே ஸ்ரீ பகவானனவர் தாமே முன்னர்க்கூறியருளியுள்ளார். இத்தகைய அறிஞர்களாகிய சூத்திராதியரும் பூசிக்கயோக்கியரேயாவர். இப்பொருளை யுணர்த்தும்பொருட்டே இருபிறப்பாளரினும் அறிஞரை வேறாய்க் கூறியருளினர் :—

சு-ம். அநுத்வெமகரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।
ஸ்வாத்யாயா஭்யஸநம் சைவ வாஙமயம் தப உச்யதெ ॥ (15)

ப-ம். 1 அநுத்வெமகரம் 6 வாக்யம் 2 ஸத்யம் 4 ப்ரியஹிதம் 3 ச 5 யத் 8 ஸ்வாத்யாயா஭்யஸநம் 7 ச ஏவ 9 வாஙமயம் 10 தப: 11 உச்யதெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! துக்கத்தையடைவியாததும், சத்தியமும், பிரியஹிதமும், ஆகிய வாக்கியம், வேதப்பயிற்சி, இவையாவும் வாங்மயத்தவமாம்,(15)

(வி-ம்.) ஹே அர்ச்சுன ! உத்வேகத்தைச் செய்யாததும், கேட்கப்பட்ட எவனுக்கும் துக்கத்தைப் பயவாததும், உண்மையாயதும்-பிரமாண மூலத்தை

யுடையதும், அயலளவைகளாற் பாதிக்கக்கூடாதபொருளையுடையதும், பிரியமும்-மொழியும்பொழுதே கேட்பவனுடைய செவிக்கு இன்பந்தருவதும், ஹிதமும்-மேற்பரிணமைப் போழ்தும் கேட்பவனுக்கின்பமேயடைவிப்பதும். ஈண்டு யாவினுங் கொடுத்த உம்மையானே சமுச்சயமுண்டாம், ஆகவே கூறிய நான்கு விசேடணங்களோடு கூடியதாகவே வாக்கியம் இருக்கவேண்டுமேயன்றி ஒரு சிறிதுங் குறைவிருக்கலாகாதென்பதாம். "சாந்தனுயாதி யென்மைந்த நின்றனது, போந்த வேதந்தனைப் புகழ்பெறப்படித்தி, யாந்துணையோகம் அரிதுபயிலுதி, வேந்தரும் புகழவீற்றிருந்திடுவாய்" என்பதில் அநுத்வேககாத்வம் முதலிய நான்கு விசேஷணங்களும் உள்ளனவாம். இத்தன்மையதாகிய உச்சாரணம் வாக்குத்தவமாம்-வாசிகதவமாம். சாத்திரம், வேதாத்தியயன காலத்திற்கூறிய நியமப்படியிருந்து வேதம் பயிறலும் வாசிகதவமாம்.

சு-ம். 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌮𑍌𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 ।
𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌤𑌪𑍋 𑌮𑌾𑌨𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ (16)

ப-ம். 1 𑌮𑌨𑌃𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌃 2 𑌸𑍌𑌮𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 3 𑌮𑍌𑌨𑌂 4 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃 5 𑌭𑌾𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 6 𑌇𑌤𑌿 7 𑌏𑌤𑌤𑍍 8 𑌤𑌪𑌃 9 𑌮𑌾𑌨𑌸𑌂 10 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மனத்தின் பிரசாதம், சௌமியத்தன்மை, மௌனம், மனத்தின் விநிக்கிரகம், ஹிருதயசுத்தி, என்னுமிவையாவும் மானசதவமாம். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! விடயசிந்தை வியாகூலமற்றிருத்தல் வடிவமனத்தின் சுவஸ்தத்தன்மை மனப்பிரசாதமாம். எல்லாருடைய ஹிதத்தையும் விரும்பலும், சாத்திர நிஷித்தத்தைச் சிந்தைசெய்யாமையும் ஆகிய நன் மனத்தகைமையே சௌமியத்தகைமையாம். ஒருமையோடும் ஆன்மாவைச் சிந்தித்தல்வடிவ நிதித்தியாசனமென்னும் முனிபாவமே மௌனமாம். அல்லது, வாக்கை யடக்குவதற்கேதுவாகிய மனத்தினடக்கமே மௌனமாம் என ஸ்ரீமத் பாடியக்காரர் பகர்ந்துளார். மனத்தின் சர்வ விருத்திகளின் விசேஷ நிக்கிரகமென்னும் அசம்பிரஞ்ஞாதப் பெயரிய நிரோதசமாதியே ஆத்மவிநிக்கிரகமாம். ஹிருதயவடிவ பாவத்தின் காமக்குரோதலோபாதிரூப மல நீக்கமாகிய நற்றூய்மை பாவசம் சுத்தியாம் ஆண்டவ்விதயத்தில் காமாதி யசுத்தி மீண்டு முண்டாகாமையே தூய்மையில் நன்மையாம். அல்லது, அயலாரோடு விவகார காலத்தில் சலகபடவடிவமாயையற்றிருத்தல் பாவசம் சுத்தியாம்; என்னும் பொருள் ஸ்ரீமத் பாடியக்காரானே கூறப்பட்டுளது. இங்ஙனம் மனப்பிரசாதமே முதலாகப் பாவசம் சுத்திவரை இவையாவும் மானததவமாம். (16)

(அ-கை.) ஆண்டு, 'தேவத்விஜ' என்பதாதி 3 சுலோகங்களானே காயிகாதி முத்தவங்கள் கூறியருளப்பட்டன. இனி முத்தவத்தின் சாத்விகாதி முப்பேதத்தை ஸ்ரீ பகவான் 3 சுலோகங்களாற் கூறியருளுகின்றார்:—

சு-ம். 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾 𑌤𑌪𑍍𑌤𑌂 𑌤𑌪𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 𑌨𑌰𑍈𑌃 ।
𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ॥ (17)

ப-ம். 5 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 4 𑌪𑌰𑌯𑌾 6 𑌤𑌪𑍍𑌤𑌂 9 𑌤𑌪𑌃 𑌤𑌤𑍍 8 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 3 𑌨𑌰𑍈𑌃 1 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 2 𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 10 𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 11 𑌪𑌰𑌿𑌚𑌕𑍍𑌷𑌤𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலேச்சையற்ற ஒருமையோடுகூடிய மனத்தையுடையவர் பரமசிரத்தையாற் செய்த முன்மொழிந்த முத்தவங்களை ஆன்றோர் சாத்விகதவமென்பர்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பலேச்சையற்ற யுக்தர்கள்-காரியசித்தி அசித்திகளில் மகிழ்ச்சி வாட்டவிகாரமற்ற சமாகித சித்தமுடைய அதிகாரிகள். அத்தகைய நிட்காமர்களால் அப்பிராமாண்ய சங்கை வடிவகளங்கமற்ற ஆஸ்திக்ய புத்திரூப சிரத்தையானே அனுட்டிக்கப்பட்ட முன்மொழிந்த காயிகாதி முத்தவத்தை அருமறையறிந்த ஆன்றோர் சாத்விகதவமென்பர். (17)

சு-ம். 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂 𑌤𑌪𑍋 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 𑌚𑍈𑌵 𑌯𑌤𑍍 ।
𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌦𑌿𑌹 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌚𑌲𑌮𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍 ॥ (18)

ப-ம். 4 𑌸𑌤𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌨𑌪𑍂𑌜𑌾𑌰𑍍𑌥𑌂 3 𑌤𑌪𑌃 5 𑌦𑌮𑍍𑌭𑍇𑌨 1 𑌚 6 𑌏𑌵 2 𑌯𑌤𑍍 7 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 8 𑌤𑌤𑍍 11 𑌇𑌹 10 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 9 𑌰𑌾𑌜𑌸𑌂 12 𑌚𑌲𑌂 13 𑌅𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் சற்காரமான பூஜையின்பொருட்டு இடம்பத்தானே செய்யப்பட்ட தவத்தை யான்றோர் இராஜசமென்பர். அத்தவ மிவ்வுலகிலேயே பயன்றருவதாம் சலமும் அத்துருவமுமாம். (18)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இத்தவத்தையுடைய பிராஹ்மணர் மிகவு மேன்மையர் என அவிவேகிகள் செய்யுந் துதிசற்காரமாம். அவிவேகிகள் செய்யுமெழுதன் முதலியவை மானமாம்; அவிவேகிகள் செய்யும் திருவடியபிடேகம், அர்ச்சனே, தக்ஷிணை செய்தல் பூசையாம்; இவற்றின்பொருட்டுக் கேவலம் இடம்பத்தானே செய்யப்படுவதும் ஆஸ்திக்ய புத்திரூப சிரத்தையினுனே செய்யப்படாததும் ஆகிய தவத்தை நூலுணரான்றோர் இராஜசதவமென்பர். அத்தவம் கேவலம் இகலோகபலத்தையேயடைவிக்குமன்றிப் பரலோக பலத்தையடைவியாதாம், அது சலமாம் மிக அற்பகாலமிருக்கும் பலஹேதுவாம். அது அத்துருவமாம்-பலகாரணத்தன்மையின் நியமமின்மையதாம். அத்தவத்தை யாற்றுபவர்க்கெல்லாம் நியமமாகச் சற்காராதி கிடைப்பதில்லை; எவனோ ஒருவனுக்கே கிடைக்குமாதலின், இகலோக பலத்திலு மது நியமமாக ஹேதுவாகாதாம். (18)

சு-ம். 𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌯𑌤𑍍 𑌪𑍀𑌡𑌯𑌾 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌤𑌪𑌃 ।
𑌪𑌰𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌵𑌾 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥ (19)

ப-ம். 3 𑌮𑍂𑌢𑌗𑍍𑌰𑌾𑌹𑍇𑌣 4 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 1 𑌯𑌤𑍍 5 𑌪𑍀𑌡𑌯𑌾 6 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 2 𑌤𑌪𑌃 8 𑌪𑌰𑌸𑍍𑌯 9 𑌉𑌤𑍍𑌸𑌾𑌦𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 7 𑌵𑌾 10 𑌤𑌤𑍍 11 𑌤𑌾𑌮𑌸𑌂 12 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எத்தவம் துராக்கிரகத்தான் இப்பொறிக் குழுவைத்துன்புறுத்திச்செய்யப்படுமோ, அல்லது, அயற்பிராணியை விநாசஞ்செய்யும்பொருட்டுச் செய்யப்படுமோ, அத்தவத்தை யான்றோர் தாமதமென்பர். (19)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவிவேகத்தின் அதிசயத்தானே செய்யப்பட்ட துராக்கிரகத்தான் தேகேந்திரியாதி சங்காதத்தைப் பீடைசெய்து எத்தவஞ்செய்யப்பெறுமோ, அல்லது வேறொரு பிராணியை விநாசஞ்செய்யும்பொருட்டு எத்தவஞ் செய்யப்படுமோ, அத்தவத்தைச் சாஸ்திரமுணர்ந்த பெரியோர் தாமதமென்பர். (19)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் '𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾 𑌪𑌰𑌯𑌾 𑌤𑌪𑍍𑌤𑌂' என்பதாதி முச்சுலோகங்களானே முறையாக தாமதாதி முத்தவம் மொழிந்தருளப்பட்டது. இப்போது '𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌯𑌦𑍍𑌦𑌾𑌨𑌂' என்பதாதி முச்சுலோகங்களானே முறையாகத் தானத்தின் சாத்விகாதி முப்பேதத்தை ஸ்ரீ பகவான் மொழிந்தருளுகின்றார் :—

சு-ம். 𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌯𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌦𑍀𑌯𑌤𑍇𑌽𑌨𑍁𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌦𑍇𑌶𑍇 𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌚 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ (20)

ப-ம். 1 தாதவ்யம் 2 இதி 3 யத் 4 தாநம் 11 தீயதே 9 அநுபகாரிணே 5 தேஶே 7 காலே 6 ச 10 பாத்ரே 8 ச 12 தத் 13 தாநம் 14 ஸாத்விகம் 15 ஸ்ம்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இத்தானம் அவசியமியற்றத்தக்கதாம் இவ்வாறு துணிந்து, எத்தானம் உத்தமதேயத்திலும், உத்தமகாலத்திலும், அநுபகாரியாய பாத்திரத்திற்குச் செய்யப்படுமோ அது சாத்விகமாம். (20)

(வி-ம்.) சுருதிமிருதிவடிவ சாத்திரம் இத்தானத்தை யெனக்கு விதித்துள தாதலின் அதனாணையின் வயத்தான் இது என்னாலின்றியமையாதியற்றத் தக்கதாம் எனத் துணிந்து, அத்தான பல இச்சையை விடுத்துச் சுவர்ணாதிகளின்றானத்தை யுத்தமதேயத்தில் உத்தமகாலத்தில் அனுபகாரிபாத்திரத்திற் செய்வது சாத்விகதானமாமென்பர் ஆன்றோர். குருக்ஷேத்திராதி தீர்த்த பூமிகள் உத்தம தேயங்களாகும், சூரியகிரகணாதிகாலம் உத்தமகாலமாம், யாவன்றனக்கு ஒரு காலத்தினும் யாதொரு உபகாரமும் செய்யானோ அவன் அநுபகாரியெனப்படுவன். வித்தை தவமிரண்டோடுங் கூடியவன் பாத்திரனவன். அல்லது தன்னையுந் தாதாவையுங் காப்பவன் பாத்திரனவன். ஆண்டுச் சாத்திரவசனம் 'வித்யாதபோப்யாம் ஸம்பந்நோ தாதாரஞ்ச ஆத்மாநஞ்ச ரக்ஷணேஸமர்த்த: பாத்ரமித்யாஹு:' (பொ-ள்.) எம்மறையவன் வித்தை தவங்களோடுகூடித் தன்னைக் காப்பதிலும் தாதாவைக் காப்பதிலும் ஆற்றலுடையவனாவனோ அவனே தாதாவின்றானத்தை யேற்றுக்கொள்க; அவையிலான் ஏற்றுக்கோடலாகாது. அத்தகைய அநுபகாரிக்கு உத்தமதேச காலத்தில் நிட்காமனாய்ச் சாத்திரவிதிப்படி கொடுக்கும் பொன்முதலியவற்றின்றானம் சாத்விகமாம். (20)

சு-ம். யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திஶ்ய வா புந: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தாநம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ (21)

ப-ம். 2 யத்து 3 ப்ரத்யுபகாரார்த்தம் 5 பலம் 6 உத்திஶ்ய 4 வா 1 புந: 9 தீயதே 7 ச 8 பரிக்லிஷ்டம் 10 தத் 11 தாநம் 12 ராஜஸம் 13 ஸ்ம்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் பிரதியுபகாரப்பொருட்டேனும் சுவர்க்காதிபயனை யுத்தேசித்தேனும், பச்சாத்தாபத்தோடுகூடியேனும், கொடுப்பது இராஜததானமாம். (21)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எத்தானம் பிரதியுபகாரப்பொருட்டுக் கொடுக்கப்படுமோ, அதாவது இம்மறையவனுக்கு யான்றானங்கொடுப்பனேல் ஒரு காலத்தில் எனக்குபகாரஞ் செய்வன் என்னும் மதியினானே கேவலம் திருஷ்டப் பிரயோஜன சித்தியின்பொருட்டே எத்தானங்கொடுக்கப்படுமோ. அல்லது, இத்தானத்தானே எனக்குத் துறக்கமுளதாகுக என வுத்தேசித்து எத்தானங்கொடுக்கப்படுமோ, இத்துணைத்தனத்தை யானேன் செலவழித்தேன் எனப் பச்சாத்தாபமுடையவனா யெத்தானங்கொடுக்கப்படுமோ அதை யான்றோர் இராஜததானமென்பர். ஈண்டு, 'யத்து' என்பதிலிருக்கும் துவென்பது முன்மொழிந்த சாத்விகதானத்தினும் இவ்விராஜததானத்தில் விலக்ஷணத்தன்மையைப் போதிக்கும்பொருட்டாம். (21)

சு-ம். அதேஶகாலே யத்தாநமபாத்ரேப்யஶ்ச தீயதே ।
அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ (22)

ப-ம். 4 அதேஶகாலே 2 யத் 3 தாநம் 5 அபாத்ரேப்ய: 1 ச 8 தீயதே 6 அஸத்க்ருதம் 7 அவஜ்ஞாதம் 9 தத் 10 தாமஸம் 11 உதாஹ்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் எத்தானம் அதேசகாலத்தில் அபாத்திரர்பொருட்டுச் சற்காரமின்றி அவமதிப்போடும் கொடுக்கப்படுமோ அது ஆன்றோராற்றாமதமெனப்படும். (22)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இயல்பாயேனும், துஷ்டர்களின் சம்பந்தத்தானேனும் பாவவேதுரூப அசுசியிடம் அதேசமாம். புண்ணியத்தின் ஹேதுவாக அப்ரசித்தமாகிய காலம் அகாலமாம். அல்லது, அசௌசகாலம் அகாலமாம். அத்தகைய தேசகாலத்தில் வித்தைதவமற்ற நடவிடாதி அபாத்திரர்பொருட்டுப் பொன் முதலிய கொடுக்கு மத்தானம் தாமதமெனப்படும். உத்தமதேசகால பாத்திரங்கிடைப்பினும் சத்காரமிலாது செயுந்தானம், அதாவது பிரியவசனபாதப் பிரக்ஷாளன சந்தன புஷ்ப அக்ஷதை முதலியவற்றானே பூசை யென்பதாதி சற்காரத்தானே யலாது செயுந்தானம், அவமதிப்போடு கொடுக்குந்தானம், அதாவது தானபாத்திரரூப மறையவரை ஆதரவுசெயாது கொடுக்குந்தானம், அதுவும் ஆன்றோரால் தாமதமெனப்படும். (22)

(அ-கை.) ஆண்டுப் பூர்வப் பிரசங்கத்தில் ஆகாரம், யாகம், தவம், தானம் என்னும் நான்கினுக்கும் சாத்விகாதி மூவகைப் பேதத்தைக் கூறியருளி அச்சாத்விகாதி ஆகாராதிகள் இன்றியமையாமற் கோடத்தக்கன, அவ்விராஜதாதி ஆகாராதிகள் இன்றியமையாமல் விடத்தக்கனவெனக் கூறியருளப்பட்டன. அவற்றுள், ஆகாரமோ கேவலம் பசி நீக்கவடிவ திருஷ்ட அருத்தசித்தியையேயாக்குமன்றி யறத்தையாக்கும்வாயிலாய்த் துறக்காதிரூப அதிருஷ்ட அருத்தசித்தியையாக்காதாமாதலின் ஏதேனு மங்கமிலதேனும் ஆகாரபல அபாவசங்கையாகாதாம். தரும உற்பத்திவாயிலாக மனத்தூய்மை வடிவ அல்லது சுவர்க்காதிவடிவ அதிருஷ்ட அருத்த அடைவுசெய்யும் யாகம் தவம் தானம் என்னும் மூன்றற்குமோ, யாதேனுமொரு மந்திராதிரூப அங்கமிலாமையானே தரும் அபூர்வமுண்டாகாமல் பல மின்மையேயாம். இதனானே, சாத்விகயாகாதிகளில் நிட்பலத்தன்மையேயாம்; என்னே, யாகாதியைச்செய்பவர்க்குப் பிரமாதத்தின் மிகுதியானே யாதேனுமொரு அங்கமீனமேயாதல் கூடுமாதலின் அவ்வீனத்தை நீக்கும்பொருட்டு ஓம் தத்ஸத்தென்னும் பகவந்நாம உச்சாரணரூப சாமான்யப்பிராயச் சித்தத்தைப் பரம கிருபாளுவாகிய ஸ்ரீ பகவான் அதிகாரிகட்குபதேசித்தருளுகின்றார்:—

சு-ம். ஓம் தத்ஸதிதி நிர்தேஶோ ப்ரஹ்மணஸ்த்ரிவித⁴꞉ ஸ்ம்ருத꞉ ।
ப்ராஹ்மணாஸ்தேந வேதா³ஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா꞉ புரா ॥ (23)

ப-ம். 1 ஓம் தத் ஸத் 2 இதி 5 நிர்தேஶ꞉ 4 ப்ரஹ்மண꞉ 3 த்ரிவித⁴꞉ 6 ஸ்ம்ருத꞉ 9 ப்ராஹ்மணா꞉ 7 தேந 11 வேதா³꞉ 10 ச 13 யஜ்ஞா꞉ 12 ச 14 விஹிதா꞉ 8 புரா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஓம் தத்சத்தென மூன்றவயவப் பரப்பிரஹ்மத்தின் நாமம் ஸ்மரிக்கப்பட்டுளது அந்நாமத்தானே பிரஜாபதியானவர், பிராஹ்மணாதி கர்த்தாவையும், காரணரூப வேதத்தையும், கர்ம ரூபயாகத்தையும், உண்டாக்கினார். (23)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அகார உகார மகாரமென்னும் மூன்றவயவங்களோடு கூடிய ஒரே பிரணவ நாமம் பரப்பிரஹ்மத்திற் காவதேபோல ஓம் தத்சத்தென்னும் மூன்றவயவத்தையுடைய ஓம்தத்சத்தென்னும் ஒரே நாமம் பரப்பிரஹ்மத்திற்கு வேதாந்த வித்துக்கள் ஸ்மரித்தனர். முன்னர் வேதாந்த வித்துக்களாகிய பேரிருடியர் அவ்வாறு ஸ்மரித்ததானே இஞ்ஞான்றுள்ள வேதாந்தவித்துக்களும் அவ்வாறே அவசியம் ஸ்மரிக்கவேண்டும். அந்நாமத்தை நினைத

லானே அதிகாரிகளாற்றும் யாகாதிகள் இடையூறுடையனவாகாவாம் என்பது ஸ்மிருதியிலுமுளது.

ஆ-சு. ப்ரமாதாத் குர்வதாம் கர்ம ப்ரச்யவேதாத்வரேஷு யத் |
ஸ்மரணாதேவ தத்விஷ்ணோ: ஸம்பூர்ணம் ஸ்யாதிதி ச்ருதி: ||

(பொ-ள்) யாகாதியைச் செய்பவனுக்கு யாதேனு மோர் பிரமாதவயத்தால் அவற்றில் மந்திராதிரூப அங்கம்பங்கமாயிடின் அது மகாவிஷ்ணுவின் ஸ்மரணத் தானே பரிபூர்ணமாம் எனச் சுருதிபகவதி கூறியுள்ளாள். வேத வேத்தாக்களாகிய ஆன்றோரும் எவ்வெவ்வைதிக கருமத்தைத் தொடங்குகின்றார்களோ அவ்வதன் றொடக்கத்தில் ஓம் தத்சத்தெனும் நாமத்தை ஸ்மரித்தே அவ்வதனை யாற்றுவர். ஆதலின் சிஷ்டாசாரரூபப் பிரமாணத்தானும் இடையூறு நீக்கும் பயனதற்குத் துணியப்பெறுவதாகும். இப்போது ஓம் தத்சத்தென்னும் நாமஸ்மாணத்தில் யாகாதிகளின் இடையூறு நீக்கற்கு ஆற்றலையறையும் பொருட்டு ஸ்ரீ பகவான் அந்தப் பிரஹ்மத்தின் நாமத்தைத் துதித்தருளுகின்றார். 'ப்ராஹ்மணா ஸ்தேந' ஈண்டுப் பிராஹ்மண சப்தம் பிராஹ்மணன் க்ஷத்திரியன் வைசியன் என்னும் மூன்று வருணங்களின் உபலக்ஷணமாதலின் இப்பொருள் சித்தமாம். முன்னர்ச் சிருஷ்டியினாதிகாலத்தில் பிரஜாபதியாகிய பிரஹ்மாவானவர் பிராஹ்மணாதி கர்மங்களின் கர்த்தாவையும் காரணரூப வேதத்தையும், கர்மரூபயாகத்தையும் உற்பன்னஞ்செய்தல் ஓம் தத்சத்தென்னும் பிரஹ்ம நாமத்தானேயாமாதலின் யாகாதிகள் சிருஷ்டியினேதுவாதலின் இம்மகா மகிமைவாய்ந்த பிரஹ்மத்தின் நாமம் இடையூறுநீக்குவதில் ஆற்றலுற்றதேயாம். (23)

(அ-கை.) ஆண்டு அகாராதி மூன்றவயவங்களை வியாக்கியானித்து அவற்றின் சமுதாயரூப ஓங்காரத்தின் வியாக்கியானமாவதேபோல ஓம் தத்சத்தென்னும் 3 அவயவங்களின் வியாக்கியானஞ் செய்தருளி அவற்றின் சமுதாயரூப ஓம் தத்சத்தென்னும் பிரஹ்ம நாமத்தை ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களானே வியாக்கியானித்தருளுகின்றார். அந்தப் பிரஹ்ம நாமஸ்துதியின் அதிசயத்தன்மையின்பொருட்டு ஆண்டு முதலில் ஓங்காரசப்த வியாக்கியானம் செய்தருளுகின்றார் :—

சு-ம். தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதானதப:க்ரியா: |
ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்மவாதினாம் || (24)

ப-ம். 1 தஸ்மாத் 2 ஓம் 3 இதி 4 உதாஹ்ருத்ய 7 யஜ்ஞதானதப:க்ரியா: 9 ப்ரவர்த்தந்தே 6 விதானோக்தா: 8 ஸததம் 5 ப்ரஹ்மவாதினாம்

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அக்காரணத்தானே ஓம் என்னும் சப்தத்தை யுச்சரித்தே வேதவேத்தாக்களின் விதிசாஸ்திரம் விளம்பியயாகதானதவ வடிவக் கிரியை நிரந்தரம் பிரவிருத்திக்கும். (24)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'ஓமிதி ப்ரஹ்ம' என்பதாதி சுருதிகளில் ஓமென்னுஞ் சப்தம் பிரஹ்ம நாமம் என வெளிப்படையாதலின் ஓமென்பதை யுச்சரித்தே வேத வேத்தாக்களின் விதிசாஸ்திரம் விளம்பியயாகதானதவ வடிவ சர்வக்கிரியையு நிரந்தரம் பிரவிருத்திக்கும், அதாவது வேதவேத்தாக்கள் எவ்வெச்சாத்திரவிகித யாகதவதானக் கிரியையைச் செய்வரோ அவ்வக்கிரியையின் முன்னே ஓமெனவுச் சரித்தே பின்னர் அவ்வக்கிரியையைச் செய்வர். அவ்வோங்கார உச்சாரண மகிமையானே அந்த வேத வேத்தாக்களின் யாகாதிரூபக் கிரியை இடையூறின்றி முடியுமாதலின் இப்பொருள் துணியப்பெறும், அம்மூன்றனுளொன்றாய

ஓமை யுரைப்பினும் சர்வ இடையூறுகளும் நீங்குமெனின், சம்பூர்ண நாம உச்சாரணத்தானே அவ்விடையூறு நீங்குமென்பதில் மீண்டுங் கூறத்தக்கதியாதுளது. ()

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தில் காமிய யாகாதி கருமங்களினும், நிட்காமயாகாதி கர்மங்களினும் சாதாரணத்தன்மை ரூபத்தானே ஓமென்னுஞ் சப்தத்திற்குபயோகஞ்செய்தருளப்பட்டது. இப்போது முமுக்ஷுக்கள் செய்த கேவல நிட்காம கருமத்தில் தத்தென்னுஞ் சப்த உபயோகத்தைக் கூறியருளுபவராய் ஸ்ரீ பகவான் அதற்கு வியாக்கியானஞ் செய்தருளுகின்றார் :—

சு-ம். தத³த்யநபி⁴ஸந்தா⁴ய ப²லம் யஜ்ஞதப꞉க்ரியா꞉ ।
தா³நக்ரியாஶ்ச விவிதா⁴꞉ க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி⁴꞉ ॥ (25)

ப-ம். 2 தத் 3 இதி 5 அநபி⁴ஸந்தா⁴ய 4 ப²லம் 7 யஜ்ஞதப꞉க்ரியா꞉ 9 தா³நக்ரியா꞉ 8 ச 6 விவிதா⁴꞉ 10 க்ரியந்தே 1 மோக்ஷகாங்க்ஷிபி⁴꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மோக்ஷ இச்சையையுடைய புருடர் தத்தென்னுஞ் சப்தத்தை யுச்சரித்துப் பயனை யிச்சியாது நானாவகையாய யாகதவ தானரூபக்கிரியைகளைச் செய்கின்றனர். (25)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தத்வமசியென்பதாதி சுருதிகளில் பிரசித்தமாகிய தத்தென்னும் பிரஹ்ம நாமத்தை யுச்சரித்தே பலேச்சையற்று முமுக்ஷுக்கள் தமதந்தக்கரண சுத்தியின்பொருட்டு நானாவகையாகிய யாகதவதான ரூபக்கிரியையைச் செய்வார்; தத்சப்த உச்சாரண மகிமையானே அவர்கட்கு யாகாதிகள் யாவும் இடையூறின்றி முடியுமாதலின் இத்தத்சப்தமும் மிக மேன்மையதாம்.(25)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் 3-வது சத்சப்தத்திற்கு 2 சுலோகங்களானே வியாக்கியானஞ் செய்தருளுகின்றார் :—

சு-ம். ஸத்³பா⁴வே ஸாது⁴பா⁴வே ச ஸதி³த்யேதத்ப்ரயுஜ்யதே ।
ப்ரஶஸ்தே கர்மணி ததா² ஸச்ச²ப்³த³꞉ பார்த² யுஜ்யதே ॥ (26)

ப-ம். 2 ஸத்³பா⁴வே 4 ஸாது⁴பா⁴வே 3 ச 5 ஸத் 6 இதி 7 ஏதத் 8 ப்ரயுஜ்யதே 10 ப்ரஶஸ்தே 11 கர்மணி 9 ததா² 12 ஸச்ச²ப்³த³꞉ 1 பார்த² 13 யுஜ்யதே.

(அ-ம்.) ஹே பார்த்த! சத்பாவத்திலும், சாதுபாவத்திலும் ஆன்றோர் சத்தென்னுஞ் சப்தத்தை யுச்சரிக்கின்றனர், புகழப்பெற்ற கருமத்தின்கண்ணும் சத்சப்தத்தை யுச்சரிக்கின்றனர். (26)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத்' என்பதாதி சுருதியிற் பிரசித்தமாகிய சத்தென்னும் பிரஹ்மத்தின் நாமத்தை நூலுணரான்றோர் சற்பாவத்தின் கண்ணுச்சரிக்கின்றனர்; அதாவது, எப்பொருட்கிருப்பின்மைச் சங்கையுண்டாமோ அதற்கிருப்புண்மையில் சத்சப்தத்தை யுச்சரிக்கின்றனர். சாதுபாவத்திலும் சத்சப்தத்தை யுச்சரிப்பர்; அதாவது எதற்கசாதுத்தன்மைச் சங்கையுண்டாமோ அதன் சாதுத்தன்மையிலும் அதனை யுச்சரிக்கின்றனர். ஆதலின், இச்சத்சப்தம், இடையூற்றை நீக்கியாகாதிகளைச் சாதுத்வமாக்கற்கும், அவற்றின் பயனை யிருத்தற்கும் ஆற்றலுடையதாம். சற்பாவத்தினும் சாதுபாவத்தினும் இச்சற்சத்தம் உச்சரிக்கப்படுவதேபோலத் தடையிலாமல் விரைவாகவே சுகஜனகமாகிய விவாகாதி மங்கல கருமத்தும் ஆன்றோர், சத்சத்தத்தை யுச்சரிப்பாராதலின், இச்சத்சத்தம், இடையூற்றை நீக்கி மகமுதலியவற்றில் தடையிலாமல் விரைவாகவே பலஜனகத்தகைமையைச் சம்பாதிப்பதில் ஆற்றலுடையதாமாதலின் இச்சத்சப்தம் மிகவும் மேன்மையதாம். (26)

(அ-கை.) அன்றியும்,

சு-ம். யஜ்ஞே தபஸி தா³நே ச ஸ்தி²தி꞉ ஸதி³தி சோச்யதே ।
கர்ம சைவ தத³ர்த²ீயம் ஸதி³த்யேவாபி⁴தீ⁴யதே ॥ (27)

ப-ம். 2 யஜ்ஞே 3 தபஸி 5 தா³நே 4 ச 6 ஸ்தி²தி꞉ 7 ஸத் 8 இதி 1 ச 9 உச்யதே 12 கர்ம 10 ச 13 ஏவ 11 தத³ர்த²ீயம் 14 ஸத் 15 இதி 16 ஏவ 17 அபி⁴தீ⁴யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் யாகத்திலும் தவத்திலும், தானத்திலும் இருப்பும், சத்தெனக் கூறியேயாம், அவ்வர்த்தசம்பந்தமாகிய கருமமும் சத்தெனக் கூறியேயாம். (27)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மகத்திலும் தவத்திலும் தானத்திலும் எவ்விருப்புளதோ, அதாவது, தற்பரமாக எவ்வவஸ்திதிவடிவ நிஷ்டையுளதோ அந்நிஷ்டைவடிவ இருப்பும், வித்வான்களாற் சத்தெனப்படும், அவ்வர்த்த சம்பந்தமாய கருமமும் சத்தென்பதனுனே கூறப்பெறும். யாகாதியர்த்தங்களில் உண்டாகிய அவற்றின் அனுகூல கருமவிசேஷம் அவ்வர்த்த சம்பந்தமாம். அல்லது எப்பிரஹ்மத்திற்கு இச்சத்தெனும் பெயரியம்பப்பட்டதோ அதுவே; அர்த்தம் அதாவது விடயம் எதற்கோ அது அவ்வர்த்தமாம். இத்தகைய சுத்தப் பிரஹ்மவிஷயக ஞானத்தின் அனுகூலகருமம் அவ்வர்த்த சம்பந்த கருமமாம். அல்லது ஸ்ரீ பகவதர்ப்பண மதியானே செய்யுங் கருமம் அவ்வர்த்த சம்பந்தகருமமாம். அல்லது பரமேசுர அடைவின்பொருட்டுச் செய்யுங்கருமம் அவ்வர்த்த சம்பந்த கருமமாம். இக்கருமத்தையும் அறிஞர் சத்தெனக்கூறினராதலின் சத்தென்னும் பெயர் யாகாதிகரும இடையூறு நீக்கற்பொருட்டு ஆற்றலுடையதாதலின் மிகவு மேன்மையதாம். கருத்திதுவாம்:—ஓம் தத்சத்தென்னும் பிரஹ்மநாமத்தின் ஒவ்வொரு ஓங்காராதிரூப அவயவத்திற்கும் இவ்வகையாய மகாத்மிய மிருப்பின் அவற்றின் சமுதாயவடிவ ஓம் தத்சத்திற்கு அத்தியந்த அற்புத மகாத்மியம் உண்டெனக் கூறவேண்டுவதென்? (27)

(அ-கை.) ஹே பகவன்! ஆலசியாதி தோடத்தானே சாஸ்திரீயவிதியைப் பரித்தியாகித்துச் சிரத்தையனுய்க் கேவலம், பெரியோரின் விவகாரமாத்திரத்தானே யாகாதிகளைச் செய்பவன் பிரமாதவயத்தான் அவற்றில் இடையூறடைவுற்று ஓம் தத்சத்தென்னும் பிரம நாமத்தானே இடையூற்றின் நீக்கமுளதாய வழி சிரத்தையின்மையினுனே சாஸ்திரீய விதியைப் பரித்தியாகித்துத் தனதிச்சை மாத்திரையானே சிற்சில யாகாதிகளை யாற்றும் ஆசுரர்கட்கும் அந்நாமத்தானே இடையூறற்று விடுமாதலின், யாகாதிகளின் சாத்விகத்தன்மைக் கேதுவாகிய சிரத்தைக்கு யாதொருபயனுமின்றாம் என்னும் அர்ச்சுனன் சங்கையுளதாக ஸ்ரீ பகவான் சிரத்தையின்றிச் செய்த சர்வ கருமங்கட்கும் நிட்பலத்தன்மையைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். அஶ்ரத்³த⁴யா ஹுதம் த³த்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதி³த்யுச்யதே பார்த² ந ச தத் ப்ரேத்ய நோ இஹ ॥ (28)

ப-ம். 2 அஶ்ரத்³த⁴யா 3 ஹுதம் 4 த³த்தம் 5 தப꞉ 6 தப்தம் 9 க்ருதம் 7 ச 8 யத் 10 அஸத் 11 இதி 12 உச்யதே 1 பார்த² 16 ந 13 ச 14 தத் 15 ப்ரேத்ய 18 நோ 17 இஹ.

(அ-ம்.) ஹே பார்த்த! அசிரத்தையோடும் ஹோமஞ்செய்வதும், தானஞ் செய்வதும், தவஞ்செய்வதும், மற்றேதேனுங் கருமஞ்செய்வதும், ஆகிய யாவும் அசத்தென்னும் நாமத்தானே கூறப்பெறும். அதனானேயன்றோ சிரத்தையற்ற கருமம் பரலோகத்திலும் இகலோகத்திலும் பயன்கொடாதாம்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவன் அசிரத்தையானே அக்கினியின்கண்ணே செய்யும் ஹவனமும், மறையவர்க்கு வழங்குஞ் சுவர்ணாதி தானமும், சரீரவாசிக மானஸமென்னும் மூவகைத்தவமும், இதனினும் வேறாகிய துதி நமஸ்காராதிகளும், மற்றும் பிறவெனும் யாவுமே அசத்தெனப்படும்; அதாவது, அக்கருமமி யாவுமே அசாதுவேயாம், ஆகையாற் சிரத்தையிலாது செய்த அக்கருமங்கட்கு ஓம் தத்சத்தென்னும் நாமத்தானே சாது பாவஞ்செய்யப்படுவதின்றாம். கருத்திதுவாம், கல்லின்மேலங்குர உற்பத்தியோக்யதையே யிலாததேபோலச் சிரத்தையற்ற கருமங்களில் எல்லாவகையானும் சாது பாவயோக்கியதையே யுண்டாகாதாம்; அவற்றில் ஓம் தத்சத்தென்னும் நாமத்தானே சாது பாவம் ஒருகாலும் சம்பவியாதாம். ஹே பகவன்! சிரத்தையிலாத கருமம் என்ன ஹேதுவினானே அசத்தெனப்படும்? என அர்ச்சுனன் வினவ, ஸ்ரீ பகவான் அதன்கண்ணே துவை யருளுகின்றார். 'நச தத்ப்ரேத்ய நோ இஹ' ஹே அர்ச்சுன! அசிரத்தையானே செய்த கருமம் பரலோகத்திலும் பலந்தாராதாம், என்னை, சிரத்தையற்ற கருமம் இடையூறுடையதாதலின் தருமரூப அபூர்வ உற்பாதகமாகாதாம். அபூர்வமிலாது துறக்கமெய்தாதாம். இகலோகப் புகழ்ச்சிப்பயனுமில்லையாகும், சிரத்தையற்றவனைச் சிட்டர் துதியார்; மற்றோ, நிந்திப்பராதலின் சிரத்தையற்ற யாகாதி இகபர லோக பலந்தாராதாம். ஆகையால் மனத்தூய்மையின்பொருட்டு அதிகாரி சாத்விக சிரத்தையானே சாத்விக யாகாதிகளைச்செய்க. சிரத்தையோடு மாற்றிய அவற்றின்கண்ணே இடையூற்றின் சங்கை யெழும்பினோ ஓம் தத்சத்தென்னும் பிரஹ்ம நாமத்தை யுச்சரித்து யாகாதிகளை இடையூறின்றியவையாக்குக. இப்பதினேழாவது அத்தியாயத்தில் இப்பொருள் நிர்ணயிக்கப்பட்டது:—ஆலசியாதி தோடத்தால் சாஸ்திரவிதியைப் பரித்தியாகித்துச் சிரத்தையோடு தந்தை தந்தையின் றந்தை முதலிய பெரியோரது விவகாரமாத்திரையானே யாகாதிகளில் முயன்று, சாஸ்திரவிதியை விடுதலாகிய ஆசுரதருமம், சிரத்தையோடுங் கருமங்களின் அனுட்டானரூப தேவதருமம், என்னுமிரண்டோடுங் கூடலின் அத்தகையர் அசுரரா? தேவரா? என்னும் அர்ச்சுனனது சம்சய விஷயீ பூதமாகியவருள் யாவர் இராஜத தாமத சிரத்தைவாயிலாக இராஜததாமதரூப யாகாதிகளையே செய்வரோ அவர் அசுரராவர், அவர் சாஸ்திரமறைந்த ஞானசாதனங்களின் அதிகாரியரல்லர். யாவர் சாத்விக சிரத்தை வாயிலாகச் சாத்விக யாகாதிகளையே செய்வரோ அவர் தேவராவர், அவர் ஷை சாதனங்களின் அதிகாரியராவர். இவ்வாறு ஸ்ரீ பகவானனவரீண்டுச் சாத்விகாதி மூவகைச் சிரத்தை வாயிலாக ஆகாராதிகளின் சாத்விகாதி மூவிதத்தைச் சித்தஞ்செய்தருளினர். (28)

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜக ஆசாரிய ஸ்ரீமத் உத்தவானந்தகிரி சுவாமிகளின் பூஜ்ஜியபாத சீடராகிய ஸ்ரீ சிற்கனானந்தகிரி சுவாமிகளால் செய்தருளப்பட்ட பிராகிருத வியாக்கியானமாகிய ஸ்ரீ பகவத்கீதை கூடார்த்ததீபிகை உரை

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# பதினெட்டாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம: ஸ்ரீ குருப்யோநம:
ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம:

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் 17வதத்தியாயத்தில் சிரத்தையின் சாத்விகாதி மூவகைப்பேதத்தைக்கூறி, ஆகார யாக தவ தான மென்னும் நான்கன் சாத்விகாதி மூவவைகப் பேதத்தைக்கூறிக் கருமிகளின் சாத்விகாதி மூவகைப் பேதத்தைக் கூறியருளினர். சாத்விகர்களைக் கவரும்பொருட்டும், இராஜச தாமசர்களை விடற் பொருட்டும், இப்போது சந்யாசத்தின் சாத்விகாதி மூவகைப்பேதத்தைக் கூறிச் சந்யாசிகளின் மூவகைப் பேதத்தையும் அவசியங் கூறியருளல் வேண்டும். ஆண்டு, ஆன்மசாக்ஷாத்காரத்தின்பின்னர்ச் செய்யதக்கதாகிய பலபூத சர்வ கருமங்களின் வித்வத் சந்நியாசமோ முன்னர் 14வதத்தியாயத்தில் குணாதீத ரூபமாய் வியாக்கியானித் தருளப்பட்டது. ஆகையால் பலமாயவித்வத் சந்யாசமோ சாத்விகாதி மூவகைப் பேதத்தருதியதாகாதாம். ஆன்மஞானத்தின் முன்னர் அதனையடைதற் பொருட்டுச் சர்வ கருமங்களின் சந்யாசத்தை ஆன்மஞான இச்சையுடையவன் வேதாந்த வாக்கியங்களின் விசாரப்பொருட்டுச் செய்வன், அது விவிதிஷா சந்யாசமாம், அதுவும், 'ഏതമേവ പ്രവ്രാജിനോ ലോകമിച്ഛന്തഃ പ്രവ്രജന്തി' என்பதாதி வசனங்களானே பூர்வம் நிர்குணரூபமாக வியாக்கியானித் தருளப்பட்டதாதலின் அதுவும் சாத்விகாதி மூவகைத்தாக்குத் தகுதியதாகாதாம்; மற்றோ, பலவடிவ வித்வத் சந்நியாசமும் விவிதிஷா சந்யாசமும் குணாதீத சந்யாசமெனப்படும். ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாகாதவர்கள், அதனிச்சைவடிவ விவிதிஷையுமுண்டாகாதவர்கள் தத்துவவித்தன்மையற்றஜிஞ்ஞாசுத்தன்மையற்றவர்களின் கரும சந்யாசம் 'സംന്യാസീ ച യോഗീ ച' என்பதாதி வசனத்தானே முன்னர்க்கௌண சந்யாசமாய்க் கூறியருளப்பட்டதாகும். அதனது சாத்விகாதி முப்பேதங்கூடும். அதனை விசேடமா யறியும் வேட்கையனாகிய அர்ச்சுனன் ஸ்ரீ பகவானை வினவுகின்றனன் :—

അർജുന ഉവാച.

சு-ம். സംന്യാസസ്യ മഹാബാഹോ തത്ത്വമിച്ഛാമി വേദിതും ।
ത്യാഗസ്യ ച ഹൃഷീകേശ പൃഥക്കേശിനിഷൂദന ॥ (1)

ப-ம். 4 സംന്യാസസ്യ 1 മഹാബാഹോ 7 തത്ത്വം 10 ഇച്ഛാമി 9 വേദിതും 6 ത്യാഗസ്യ 5 ച 2 ഹൃഷീകേശ 8 പൃഥക് 3 കേശിനിഷൂദന.

(அ-ம்.) ஹே மகாபாகுவாகிய சுவாமிந் ஹே ஹிருஷீகேச! ஹே கேசியைக் கொன்றவரே! சந்யாசத்தினதும் தியாகத்தினதும் சொரூபத்தை யான் றனித்தனியறிய விரும்புகிறேன் தயைபாற் கூறவேண்டும். (1)

(வி-ம்.) ஹே மகாபாகுவே! ஹே ஹிருஷீகேசரே! ஹே கேசியைக்கொன்றவரே! எவர்கட் கான்மஞானவடைவின்றோ அதனிச்சைவடிவ விவிதிஷையுமுண்

டாகவில்லேயோ அத்தகைய கருமாதிகாரி செய்த சிறிது கருமத்தைக்கவர்ந்து சிறிதின் பரித்தியாகமியாதோவது தியாக அம்சரூப குணயோகத்தானே கௌணீ விருத்தியாகச் சந்யாசமெனப்படும். இவ்வாறு மனத்தூய்மையின் பொருட்டு அவித்வானுகிய கருமாதிகாரி செய்த எல்லாவகையானுங் கருமங்களின் தியாகரூப மில்லாததும் ஏகதேச தியாகமுமாகிய சந்யாசம் எஃதாமோ, அதன் சொரூபத்தைச் சாத்விகாதி முப்பேதத்தானே யறிய விரும்புகின்றேன், தியாகத்தின் சொரூத்தையு மவ்வாறே யறிய விரும்புகின்றனன். சந்யாசம் தியாகமென்னு மிரண்டு சப்தமும் கடபட சப்தங்களேப்போல வேறு வேறு ஜாதியையுடைய அர்த்தவாசகமா? அல்லது, கடகலச சப்தங்களேப்போல ஒரே ஜாதியையுடைய அர்த்த வாசகமா? அவற்றுள் முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கிறே தியாகவடிவத்தைச் சந்யாசத்தினும் வேறுக்கி யறியயானிச்சிக்கின்றேன், இரண்டாவது பக்ஷத்தை யங்கிகரிக்கிறே, அவ்விரண்டன் பிரவிருத்தியின் நிமித்த பூதமாகிய உட்பட்ட உபாதியின் பேதமாத்திரம் கூறியருளவேண்டும். அவ்விரண்டனுள் ஒன்றன் வியாக்கியானஞ் செய்தே இரண்டன் வியாக்கியானஞ் சித்தமாம். மகாபாகு-பெருந்தோள்களே யுடையோன். கேசியைக் கெடுத்தோன்-கேசியென்னு மசுரனைக்கொன்றோன். இவ்விரண்டு விளியானே அர்ச்சுனன் ஸ்ரீ பகவானிடத்தே பாகிய உபத்ரவத்தை நீக்குமாற்றலேக் குறிப்பித்தனன். ஹ்ருஷீகமென்பது பொறியாம்? அதனீசன், அதாவது ஏவுபவன் ஹ்ருஷீகேசனுவன்; இவ்விளியானே உட்காமக்குரோதாதி உபத்ரவ நீக்குமாற்றலேக் குறிப்பித்தனன். ஸ்ரீ பகவானிடத்திருக்கும் பேரன்பினுனே மூன்று சம்போதனந் தந்தனன். இச்சுலோகத்திலிரண்டு வினுக்கள் சித்தித்தன. ஆண்டுக் கரும அதிகாரியாகிய அவித்வான் செய்த சந்யாசத்தில் முன்மொழிந்த யாகாதிகளின் சாதர்மியமுமிருக்கும், முன்மொழிந்த குணுதீதரூப இருவகைச் சந்யாசத்தின் சாதர்மியமுமிருக்கும் முன்மொழிந்த மகமுதலியவற்றைக் கருமாதிகாரியே செய்வதுபோலச் சந்யாசத்தையும் செய்வன், இஃதே சந்யாசத்தில் முன்மொழிந்த மகமுதலியவற்றின் சமானதருமமாம். முன்மொழிந்த குணுதீதமெனப் பெயரிய இருவகைச் சந்யாசம் சந்யாச சப்தத்தானே பிரதிபாதிக்கப்பட்டதேபோல, இச்சந்யாசமும் பிரதிபாதிக்கப்படுதலினுனே இச்சந்யாசத்தில் முன்மொழிந்த குணுதீதமெனப் பெயரிய இருவகைச் சந்யாசத்தின் சமானதருமமாம். இவ்வாறு மகமுதலியவற்றின் சமானதருமத்தினுனும், குணுதீதமென்னும் இருசந்யாச சமானதருமத்தினுனும், இச்சந்யாசத்தின்கண்ணே முக்குணத்தன்மையின் சப்பவ அசம்பவ மிரண்டானுமுண்டாஞ் சம்சயமோ முதல் வினுவின் பீஜவடிவமாம். சந்யாசம் தியாகமென்னு மிரண்டு சப்தங்கட்கும், கடகலசமென்னு மிரண்டு சப்தங்கட்கேபோலும் பரியாயரூபத்தன்மையிருத்தலின் கருமத்தியாகரூபத்தானும், கருமபலத்தியாக ரூபத்தானும் அவ்விரண்டன் விலக்ஷணத்தன்மைக் கூற்றூனுண்டாயவையமோ இரண்டாவது வினுவின் பீஜவடிவமாம். (1)

(அ-கை.) ஆண்டுச் சூசிகடாக நியாயத்தானே ஈற்றுவினுவை நீக்கற்பொருட்டு ஸ்ரீ பகவான் உத்தரத்தைக் கூறியருளுகின்றூர்:—ஆண்டு, கொல்லன் பெருமுயல்வானே சாதிக்கும் கடாகத்தை விடுத்து முதலில் சிறுமுயல்வானே சாதிக்கும் ஊசியைச் செய்துகொடுத்தலேபோல, மிகவித்தாரமாய்க் கூறத்தகுதியாய பொருளே விடுத்து முதலில் சிறிதாகக்கூறப்படும் பொருளேக் கூறுதலே சூசிகடாக நியாயமாம்.

ஸ்ரீப⁴க³வாநுவாச.

உ-ம். காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது³: |
ஸர்வகர்மப²லத்யாக³ம் ப்ராஹுஸ்த்யாக³ம் விசக்ஷணா: || (2)

ப-ம். 1 காம்யாநாம் 2 கர்மணாம் 3 ந்யாஸம் 5 ஸந்யாஸம் 4 கவய: 6 விது: 8 ஸர்வகர்மபலத்யாகம் 10 ப்ராஹு: 9 த்யாகம் 7 விசக்ஷணா:,

(அ-ம்.) ஹே அர்ச்சுன! காமிய கருமத்தியாகத்தைச் சூக்கும தரிசிகள் சந்நியாசமென்பர், விசார குசலர் சர்வ கருமங்களின் பலத்தியாகத்தைத் தியாகமென்பர். (2)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! 'ஸ்வர்க்ககாமோ யஜேத புத்ரகாமோ யஜேத பசுகாமோ யஜேத' என்பதாதி விதிவசனங்கள் சுவர்க்காதி பலத்தை யவாவுபவர்க்கு விதித்துள்ள சோதிட்டோமாதி காமியகருமம் மனத்தூய்மையிற் சிறிது மாத்திரையும் உபயோகமாகாதாம், அத்தகைய தியாகத்தைச் சூக்ஷ்ம தரிசிகள் சந்யாசமென்பர். ஏனெனின், 'தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந' என்னும் சுருதியானது நித்திய கருமங்கட்கே தடையாய பாவநீக்கவாயிலாய் ஆன்மஞானத்திலுபயோகமாமாறு கூறுகின்றது. ஆண்டிச் சுருதியில் வேதானு வசனசப்தம் பிரஹ்மசாரியின் சர்வ தரும உபலக்ஷணமாம். யாகதானமெனு மிருசப்தங்கள் கிருகஸ்தனது சர்வ தரும உபலக்ஷணமாம். தப அநாசகமெனு மிருசப்தங்களும் வானப்பிரஸ்தனது சர்வ தரும உபலக்ஷணமாம். 'ஜ்ஞாநமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண:' என்பதாதி வசனமும் தடையாய பாவ நீக்கவாயிலாய் நித்திய கருமத்திற்கே ஆன்மஞான உற்பத்தியிலுபயோகமாமாறு நிகழ்த்துகின்றது. ஆகையால் நித்திய கருமங்கட்கே ஆன்மஞானத்தின்கண்ணேனும் ஆன்மஞானத்தினிச்சைவடிவ விவிதிஷையின் கண்ணேனும் உபயோகமாம்; காமிய கருமங்கட்கோ, உபயோகமில்லையாமாதலின், மனத்தூய்மை வாயிலாயும் அறியும் வேட்கையாக்கும் வாயிலாயும் ஆன்மஞானத்தை யடையுமவாவினன் பகவதர்ப்பண புத்தியானே நித்திய கருமங்களையே யனுட்டிக்கவேண்டும். காமியகருமமோ அவ்வப்பயனோடு யாவுமேபரித்தியாகஞ் செய்யத்தக்கதாம்; இஃதொருமதமாம். இனியிரண்டாவது மதமிதுவாம்:—'ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா:' ஹே அர்ச்சுன! சர்வ காமிய கருமங்களின் நித்திய கருமங்களின் பலத்தியாகம்; அதாவது மனத்தூய்மையினிச்சையானே விவிதிஷையினடைவின் பொருட்டு எக்காமிய நித்திய சர்வ கருமங்களினனுஷ்டானமுளதோ அவற்றின் பயனைத் தியாகித்தலைத் தியாகமென்பர் ஆராய்வின் மிக்கவர். 'துறக்க காமன் வேட்க, 'புத்திரகாமன்வேட்க' 'பசுகாமன்வேட்க' என்பதாதி வசனங்கள் சோதிட்டோமாதி காமியகருமங்கட்குத் துறக்கம் மைந்தன் பசு முதலிய வேறு வேறு பயனை கூறியுள்ளன; எனினும் அதிகாரி யப்பயன்களை யிச்சியாமல் அக்காமிய கருமத்தையும் மனத்தூய்மையின்பொருட்டே செய்க; ஏனெனின், அக்கினி ஹோத்திராதி கருமங்களில் இயற்கையாயோ நித்தியத்தன்மையேனும் காமியத் தன்மையேனு முண்டாவதின்றாம்; மற்றே, கர்த்தாவின் கருத்தின் சிறப்பானே சித்தமாம். துறக்காதி பலேச்சைவாயிலாய்ச் செய்யப்படும் அக்கினிஹோத்திரத்திற் காமியத்தன்மையும், பலேச்சையிலாது பகவதர்ப்பண மதியானே செய்யுமதன்கண்ணித்தியத்தன்மையுமிருக்குமாதலின், இப்பொருள் துணியப்பெறும்:—ஆன்மஞானத்தினிச்சைவடிவ விவிதிஷையின்கண்ணே கேவலம் நித்திய கருமங்கட்கே உபயோகமாமன்றிக் காமியத்திற்கிறையளவுமில்லையாமாதலின், முமுக்ஷுக்கள் காமியகருமங்களையுமவற்றின் பயனையும் அடியோடு பரித்தியாகித்தல்வேண்டும்; இஃதோ இச்சுலோகத்தின் முற்பாதியின் பொருளெனத் துணியப்பெறும். விவிதிஷையின்கண்ணே நித்திய கருமங்கட் குபயோகமிருத்தலேபோல, அவ்வப் பலேச்சையற்ற காமியகருமத்திற்கும் உபயோகமாம். ஆகையால், விவிதிஷைபெற

க்காமிய நித்திய கருமங்களைச் செய்தபோதினும் அதிகாரி அவ்வக்கருமத்தின் அவ்வப்பயன்றன் விழைவுமாத்திரத்தைப் பரித்தியாகஞ்செய்க; சுலோகத்தின் பிற்பாதியின்பொருள் பெறப்பட்டது. பலசகித காமிய கருமமாத்திரத்தின் றியாகமோ சந்யாச சப்தப்பொருளாம். நித்திய காமியரூப சர்வ கருமங்களின் பல இச்சை மாத்திரப் பரித்தியாகம் தியாக சப்தத்தின் பொருளாமாதலின், கடபட மிரண்டனுக்கும் வேறு வேறு ஜாதியுடைய அர்த்தம் புலப்படுவதேபோலச் சந்யாசம் தியாகம் என்னு மிரண்டு சப்தங்கட்கும் வேறு வேறு ஜாதியுடைய அர்த்தமின்றும்; மற்றோ, மனத்தூய்மையின்பொருட்டுச் சொரூபமாகவே கருமங்களினனுஷ்டானமுளதாயினும் அவ்வக்கரும அவ்வப் பல இச்சையின் பரித்தியாக வடிவ ஒரே அர்த்தம் அவ்விரு சப்தங்கட்குஞ் சித்தமாம். இவ்வகையாயிச் சுலோகத்தானே ஒரு வினவின் நிர்ணயம் சித்தமாம். (2)

(அ-கை) இரண்டாவது வினவின் விடையை யருளும் பொருட்டும், சந்யாச தியாகசப்தங்களினர்த்தங்களில் மூவகைமையை யருளற்பொருட்டும் முதலிலப்பொருளில் வாதிகளினையத்தை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார் :—

சு-ம். 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌦𑍋𑌷𑌵𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇 ॥ (3)

ப-ம். 3 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 1 𑌦𑍋𑌷𑌵𑌤𑍍 4 𑌇𑌤𑌿 5 𑌏𑌕𑍇 2 𑌕𑌰𑍍𑌮 7 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 6 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 9 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃 𑌕𑌰𑍍𑌮 10 𑌨 11 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 12 𑌇𑌤𑌿 8 𑌚 13 𑌅𑌪𑌰𑍇.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இராகத்வேஷாதி தோடங்களைப்போலக் கருமமும் பரித்தியாகஞ் செய்ய யோக்கியமாம். இவ்வாறு சிலமதிமான்கள் கூறுவர்; யாக தான தவரூப கருமம் தியாகிக்க யோக்கியமன்றுமென்பர் வேறு சில மதிமான்கள். (3)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நித்திய நைமித்திக, காமிய, பிராயச்சித்த முதலிய எல்லாக் கருமமும் இவனது பந்த ஹேதுவாதலின், தோஷமுடையதாம், எல்லாக் கருமமுமே தோஷமுடையதாமாதலின் மனத்தூய்மையற்ற கரும அதிகாரியும் அவ்வெல்லாக் கருமத்தையும் பரித்தியாகமே செய்யவேண்டும் எனச் சில மதிமான்கள் கூறுகின்றனர். அல்லது, இவ்வசனத்திற் கிவ்வேறு பொருள் கொள்க :—இராகத்துவேடாதி தோடங்கள் இவ்வதிகாரியால் விடத்தக்கனவேபோல, ஆன்மஞானத்தை யடையாதவரும், அதை யறியும் வேட்கையடையாதவரும் ஆகிய கருமாதிகாரிகளும் தங்களுடைய பந்த வேதுவென வுணர்ந்து சர்வ கருமங்களையுந் தியாகமே செய்யவேண்டும். இச்சுலோகத்தின் முற்பாதியாலொருபக்கஞ் சித்தமாம். இப்போது பிற்பாதியான் மறுபக்கஞ் செப்பியருளப்பெறும் :—யாக தான தவக்கருமமெனு. மனத்தூய்மையற்ற கரும அதிகாரி மனத்தூய்மை வாயிலாயறியும் வேட்கையுண்டாதற்பொருட்டு யாகதான தவரூபகருமத்தை ஒருகாலும் விடலாகாது எனச் சில மதிமான்கள் கூறுவர். (3)

(அ-கை.) இவ்வாறு கருமபரித்தியாகத்தில் வாதிகளின் ஐயத்தைக்கூறி ஸ்ரீ பகவான்றமது துணிபையுரைத்தருளுகின்றார் :—

சு-ம். 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂 𑌶𑍃𑌣𑍁 𑌮𑍇 𑌤𑌤𑍍𑌰 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 𑌭𑌰𑌤𑌸𑌤𑍍𑌤𑌮 ।
𑌤𑍍𑌯𑌾𑌗𑍋 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ (4)

ப-ம். 5 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌂 6 𑌶𑍃𑌣𑍁 4 𑌮𑍇 2 𑌤𑌤𑍍𑌰 3 𑌤𑍍𑌯𑌾𑌗𑍇 1 𑌭𑌰𑌤𑌸𑌤𑍍𑌤𑌮 9 𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 8 𑌹𑌿 7 𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰 10 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌃 11 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃.

(அ-ம்.) ஹே பாதகுலத்தின்கண்ணே மேன்மை பொருந்திய அர்ச்சுன! ருமத்தியாகத்தின்கண்ணே எமது துணிபை நீ கேட்பாயாக; ஹே சர்வ ர்களுள்ளும் மேன்மையாய அர்ச்சுன! எதனுனே அத்தியாகம் மூவகை ் கூறப்பட்டிருக்கின்றதோ. (4)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மனத்தூய்மையற்ற கரும அதிகாரியைக் கர்த் ாக வுடையதும், சந்யாசம்தியாகம் என்னு மிருசப்தங்களானே பிரதிபாதிக் ட்ட பலேச்சாபூர்வக கருமங்களின் பரித்தியாகத்தைச் சொரூபமாயுடைய முன்னர் நீ எம்மாற் கேட்கப்பட்டனேயோ அதன் கண்ணே பூர்வ ஆசிரியர்கள் த நிச்சயத்தை நீ கேட்பாயாக என, அத்தியாகத்தில் அவ்வாறறியக் ததாந்தகைமை யென்னே எதனுற்றங்கள் பாலியான் கேட்கவேண்டுமோ, ர்ச்சுனனுக்குண்டாஞ் சங்கையை நீக்கியருள்வான் ஸ்ரீ பகவான் அதன் நற்கரியதாந் தகைமையைக் கூறியருகின்றுர்:—'நிஸ்சயம் ஶ்ருணு மே' ஹே சுன! கருமாதிகாரியைக் கருத்தாவாகவுடையதாகிய பலேச்சா பூர்வக கரு ளின் றியாகத்தை எதனல் வேதவேத்தாக்கள் மூவகையாய்க் கூறியுள்ளரோ; வது, தாமதாதி முக்குணபேதத்தானே அத்தியாகம் மூவகையாய் மொழி பறுமோ. அல்லது 'த்ரிவிதஃ ஸம்ப்ரகீர்திதஃ' என்னும் வசனத்திற்கு பாருள் செய்க:—பலத்தின் இச்சைவடிவ விசேஷணத்தானே விசிஷ்ட த்தியாகம்,விசேஷணமின்மையானே விசேடியமின்மையானே அல்லது, உபய மையானேயா மெனப்படும். அஃதாமாறு:—தண்டரூப விசேஷண விசிஷ்ட தண்டியி னபாவம் விசிஷ்டாபாவமாம். அது கூறிய மூவகையானுமாம்; விசேடிய மிருந்தும் தண்ட விசேஷண மிலதேல் தண்டியபாவமாம். இது ட விசேஷணு பாவத்தானுண்டாய தண்ட விசிஷ்ட புருடபாவமாம். தண்ட ஷணமிருந்தும் புருட விசேடியமின்றேல் தண்டியபாவமாம். இது புருட டியபாவத்தானுண்டாய தண்ட விசிஷ்ட புருட அபாவமாம். இரண்டு மில வழியும் தண்டியபாவமாம். இது இயம்பிய இரண்டனபாவத்தானுண் தண்ட விசிஷ்ட புருட அபாவமாம். இதுபோலவே, பலேச்சா விசேஷண ட கருமத்தியாகரூப விசிஷ்டா பாவம் இச்சையாகிய விசேஷணமின்மை னும், கருமரூப விசேடியமின்மையினுனும், உபயமின்மையினுனும், ஆம். மிருப்பினும் இச்சைவிடுதலானே விசிஷ்டத்தியாகமாம்; இது விசேஷண மையானுண்டாயதாம். (1) இச்சையிருப்பினும் கரும விடுகையானே ஆமது டிய மின்மையாலாயதாம். (2) இரண்டு மின்மையானே ஆமதுவோ விசேடிய ஷண மிரண்டு மின்மையானுண்டாயதாம். (3) அவற்றுள் முதற்றி யாகமோ விகமாதலின் கவாத்தகுதியதாம்; இரண்டாவதோ இராஜச தாமதபேதத் ன இருவகையாம், இவ்விருவகையுமே இகழ்ந்துவிடத்தக்கதாம். துயற்மதி செய்யப்பட்ட கருமங்களின் றியாகம் இராஜசமாம். மயல்வடிவ விபரி த்தானே செய்யப்பட்ட கருமத்தியாகம் தாமசமாம். இங்ஙன் கரும அதிகாரி ன செய்யப்பட்ட கருமத்தியாகமே ஆர்ச்சுனனது வினுவிடயமாம். மனத் மையுடையனுதலின், கரும அநதிகாரியைக் கருத்தாவாகவுடைய மூன்ருவது தீத மென்னுந் தியாகம் ஈண்டு, அர்ச்சுனன் வினுவிடயமன்றும். இத் கமும் சாதனபல வடிவத்தானே இருவகையாம். பல இச்சையின்றியாக லாய கருமானுஷ்டான ரூபசாத்விகத் தியாகத்தான் மனத்தூய்மையை ந்தவனும், ஆன்ம ஞானேச்சை வடிவவிவிதிஷை யுதிக்கப் பெற்றவனும், ஞான சாதன பூதசிரவண மனனரூப வேதாந்த விசாரப்பொருட்டுச் சுவர்க் சர்வ பலேச்சை யற்றவனும் ஆகிய அதிகாரி மனத்தூய்மையின் பின்னர்ச் த தூய்மையின் சாதனபூதமாகிய சர்வ கரும பரித்தியாகமோ முதற்சாதன

ரூப தியாக மெனப்படும்; இதனையே நூலுணர்ந்தோர் விவிதிஷா சந்யாசமென்பர். இதனையே ஸ்ரீ பகவான்மேல் 'நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம்' என்பதா லருளிச் செய்வர், முற்பிறப்பிலாற்றிய சிரவணாதி சாதனங்களின் அப்பியாசபரி பாகத்தால் இப்பிறப்பின் முதலிலே ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடைந்திருக்கிருத்திய வித்துவான் றானேசெய்த பலேச்சை கருமபரித்தியாகம் இரண்டாவது பலவடிவத்தியாகமாம். இதனைச் சாத்திரவேத்தாக்கள் வித்வத் சந்யாசமென்பர். இதனை ஸ்ரீ பகவான் முன்னர் 'யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத்' என்பதாதி யிரண்டு சுலோகங்களிற்றிருவாய் மலர்ந்தருளினர். திடப்பிரஞ்ஞன் இலக்கணாதிகளானும் முன்னர் மிக விஸ்தாரமாயும் திருவாய் மலர்ந்தருளினர். அர்ச்சுன! ஏதுனை முற்கூறிய முறையாகத் தியாகவடிவம் மிகவும் அறியத்தகாததாமோ; நீ, தியாகத்தினது தத்துவத்தையுணர விரும்புகின்றேன் என்பதனானே முன்னர்த் தியாகவடிவத்தை யுணரப்பிரார்த்தித்தனையோ; அதனானே முற்று முணர்ந்த எமதுபதேசத்தானே அந்தத்தியாகத்தினுண்மைவடிவத்தை நீ நிச்சயஞ்செய்தி. சண்டு, ஹே பரதசத்தம! ஹே புருடவியாக்கிர! என்னுமிருவிளிகளானே ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்தில் முறையாகக் குலநிமித்தகமேன்மையையும் தனது பௌருஷ நிமித்தகமேன்மையையும் திருவாய்மலர்ந்தருளினர்; அதனானே அவன்பால் தியாகவடிவத்தை நிச்சயஞ்செய்யும் யோக்யதை குறிப்பித்தருளப் பட்டது.

(4)

(அ-கை.) ஹே பகவன்! 'த்யாஜ்யம் தோஷவதித்யேகே' என்னுஞ் சுலோகத்திற் கூறியருளிய வாதிகளின் விப்பிரதிபத்திகளின் கோடிகளாகிய இருபக்கங்களில் யாது தங்களாற்றுணியப்பெற்றது? முதலாவதா? இரண்டாவதா? அல்லது, இரண்டினும் வேறாகிய மூன்றாவதா? எனவுண்டாம் அர்ச்சுனன் சங்கைக்கு 'யஜ்ஞதாநதப꞉கர்மந த்யாஜ்யமிதி சாபரே' என்னும் வசனத்தானே அருளிய இரண்டாவது பக்ஷமே எமது துணிபு என விடையருளிச்செய்கின்றார். ஸ்ரீ பகவான் 2 சுலோகங்களால்:—

சு-ம். யஜ்ஞதாநதப꞉ கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் ।
யஜ்ஞோ தாநம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம் ॥

(5)

ப-ம். 1 யஜ்ஞதாநதப꞉ கர்ம 2 ந 3 த்யாஜ்யம் 5 கார்யம் 6 ஏவ 4 தத் 8 யஜ்ஞ꞉ 9 தாநம் 10 தப꞉ 7 ச 13 ஏவ 12 பாவநாநி 11 மநீஷிணாம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாக தான தவவடிவ கருமந்தியாகிக்கத் தகுதிய தாகாதாம்; மற்றோ, அஃதாற்றத் தகுதியதேயாம். ஏதனானே யாக தான தவமென்னும் மூன்றும் பலேச்சையற்ற புருடர்களைப் பவித்திரஞ் செய்வதேயாமோ.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சிரௌதஸ்மார்த்தரூப அக்கினிஹோத்திராதி யாகம், உத்தமதேச காலத்தில் சுபாத்திரத்தில் சாத்திரவிதிப் பிரமாணம் கோ, பொன், அன்னமுதலியவற்றை யீயுந்தானம், கிருச்சிரசாந்திராயணவடிவ தவம், என்னும் மூன்றும் முதன்மூன்றாசிரமிகளின் சாஸ்திரவிகித சர்வ கருமங்களின் உபலக்ஷணமாம். அவை சுவர்க்காதி பலேச்சையற்றவரைத் தூய்தாக்கும்; அதாவது அவை ஞானத்தடையாய பாவரூப மலத்தை நீக்கி ஞானமுண்டாதற்குத் தகுதியாய புண்ணியகுணத்தையாக்கிப் பலேச்சையற்றவரின் சோதகமேயாகும். சண்டர்த்தக்காரணரூப உபாதியின் சுத்தியினானே அதனுபகிதரின் சுத்தி ஸ்ரீ பகவான் கருதியதாம். யாகாதிகள் பயனை விரும்பாதாரின் மனத்தூய்மையாக்குவன வாதலின், மனத்தூய்மையை விரும்பிய கரும அதிகாரி பலேச்சையற்ற அவற்றை யொருக்காலும் விடாதுசெய்க. 'நத்யாஜ்யம்' என்னும் வசனத்தானே, ஸ்ரீ பக

வான் யாகாதிகளைத் தியாகஞ்செய்யாமையை யருளினர்; அதனானே பொருளா லவற்றின் செய்கையடைவுறுமாதலின் மீண்டும் 'கார்யமேவதத்' என்பதனானே அவற்றின் செய்கையையருளல் பொருந்தாதாம் எனினும் அவற்றின் செய்கை யின் மிக ஆதரப்பொருட்டு மீண்டும் 'கார்யமேவதத்' என வருளினர். அல்லது, 'யஜ்ஞதாநதப:' என்பதாதிக்கு இப்பொருள்கொள்க:—எதனானே யாகாதிகள் செய்யத்தக்கனவாமோ; அதாவது செயற்பாலதாந் தன்மையானே வேதம் விதித் துளதோ; அதனானே, அவை அதிகாரியால் ஒருகாலும் விடத்தகாதனவாம். (5)

(அ-கை.) ஹே பகவன்! யாகாதிகட்கு ஒருகால் மனத்தூய்மை செய்வதில் ஆற்றலிருக்குமாயின் துறக்காதியை விழைந்தியற்றியபோதினும் அவை மனச் சோதகமாகுமாதலின், பலேச்சையைப் பரித்தியாகித்தல் பயனில் கூற்றேயா மென்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் விடையருளுகின்றார்:—

சு-ம். ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலாநி ச ।
கர்த்தவ்யாநீதி மே பார்த்த நிஶ்சிதம் மதமுத்தமம் ॥ (6)

ப-ம். 3 ஏதாநி 5 அபி 2 து 4 கர்மாணி 6 ஸங்கம் 9 த்யக்த்வா 8 பலாநி 7 ச 10 கர்த்தவ்யாநி 11 இதி 12 மே 1 பார்த்த 13 நிஶ்சிதம் 15 மதம் 14 உத்தமம்.

(அ-ம்.) ஹே பார்த்த! மீண்டும் இம்முற்கூறிய யாகதானாதி கருமமும் கர்த் திருத்துவ அபிமானத்தையும் சுவர்க்காதி பலத்தையும் பரித்தியாகித்துச் செய் யத்தக்கதாம் என்பதாகப் பரமேசுராகிய எமது மேன்மையாய துணிபாம். (6)

(வி-ம்.) ஈண்டு, 'ஏதாந்யபி து' என்னும் வசனத்திலிராநின்ற, து என்னுஞ் சப்தம் முன்மொழிந்த சங்கையை நீக்கற்பொருட்டாம். காமிய கரு மமும் தன்றரும இயற்கையானே மனத்தூய்மையைச் செய்யுமாயினும்; அதனா லுளதாயவுளத்தூய்மை அதன் பலமாய சுகத்தை யனுபவிக்குமாத்திரத்திலே யுபயோகமாம், ஆன்மஞானத்திற் சிறிது மாத்திரையு முபயோகமாகாதாம். இதனைவார்த்திககிரந்த கருத்தாவாகிய ஸ்ரீ சுரேச்சுர ஆசாரியரும் கூறியுள்ளார்:—

ஆ-சு. காம்யேபி ஶுத்திரஸ்த்யேவ போகஸித்த்யர்த்தமேவ ஸா ।
விஶ்ராமாதி தேஹைர்ந தேஹஸ்யாம் ப்ரத்யக்ஜ்ஞப்தௌ ॥

(பொ-ள்.) காமிய கருமங்களைச் செய்தபோதினும் மனத்தூய்மையோ ஆம்; ஆனால், அதனாலாய தூய்மை கேவலம் போகசித்தியின்பொருட்டேயாம்; ஞானோற் பத்தியின்பொருட்டாகாதாம். எதனானே இந்திர சம்பந்தியாய சுகபலம் மலின முந்தக்காரணத்தோடுகூடிய மலப்பன்றி முதலியவற்றின் றேகத்தானே போகிக்க முடியாதோ; மற்றோ, தூயமனமுடைய தேவதேகத்தானே போகிக்கமுடியுமோ ஞானத்திலுபயோகியாகிய மனத்தூய்மையை யுண்டாக்கும் யாகாதிகள் பலேச்சை யாயிலாய்ச் செய்யப்படின் பந்த ஹேதுரூபமாயினும் பலேச்சையிலாது செய்யப் படின் பந்த ஹேதுரூபமாகாதாமாதலின், முமுக்ஷுக்கள் பலேச்சைவாயிலாயவற் றைச் செய்யாமல் அதை விடுத்தே செய்யத்தக்கதாம், ஆண்டு யவ்வனுதியவத்தை யும் வருணமும் ஆசிரமமும் நிமித்தமாகிய யானிக்கருமத்தைச்செய்கின்றேன் என் றலிஃதின்றியமையாது செய்யயோக்கியமாயது என்னுங் கர்த்திருத்துவ அபி மானம் சங்கமாம்; இச்சைக்கு விடயமாகிய அவ்வக்கருமத்தானே யடையப்படும் துறக்கமுதலிய பொருள்கள் பயனாம். இவ்விரண்டையும் விடுத்தே கருமத்தை மனத்தூய்மையின்பொருட்டுச் செய்யவேண்டும்; இவ்வாறு பகவானாகிய எமது மதமாம். இதனானே ஹே பார்த்த! கருமாதிகாரியால் யாகாதிகள் விடத்தக்

கனவா? விடத்தகாதனவா? இவ்விருமதத்துள் விடத்தகாதனவென்னும் எமது மதம் மிகமேன்மையதாம். ஆண்டு, ஸ்ரீ பகவான் முன்னர் 'நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர' என்னும் வசனத்தாற் கூறியருளிய தமது துணிபை யுபசங்கரித்தருளினார். (6)

(அ-கை.) ஆண்டு, 'யஜ்ஞதாந' என்பதாதிய வசனத்தால் ஸ்ரீ பகவான் முன்மொழிந்தருளிய தமது பக்கத்தை யிதுகாறும் நிலைபெறுத்தியருளினர்; இப்போது 'நியதஸ்ய' மென்பதாதிய வசனத்தானே முன்மொழிந்தருளிய பாபக்ஷத்தின் முன்மொழிந்த தியாக மூவகையை வியாக்கியானித்து நிட்டிக்கத் தொடங்கியருளுகின்றார்.

சு-ம். நியதஸ்ய து ஸம்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।
மோஹாத்தஸ்ய பரித்யாக³ஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥ (7)

ப-ம். 2 நியதஸ்ய 1 து 4 ஸம்ந்யாஸ: 3 கர்மண: 5 ந 6 உபபத்யதே 8 மோஹாத் 7 தஸ்ய 9 பரித்யாக: 10 தாமஸ: 11 பரிகீர்த்தித:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் கருமத்தின் றியாகம் சம்பவியாதாம் அந்நித்திய கருமத்தை மோகத்தானே பரித்தியாகித்தல் தாமதத்தியாகமெனப்படும்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுவர்க்காதி பலேச்சையோடு மாற்றிய காமியகருமம் மனத்தூய்மையினேதுவாகாதாம், மாறாகப் பந்த ஹேதுவேயாமாதலின், அது தோடமுடையதேயாம். இதனானே பந்தத்தை நீக்கும் ஆன்மஞானம் விரும்பியோனாற்றிய காமிய கருமத்தியாகமோ சாத்திரத்தானும் ஊகத்தானும் சம்பவிப்பதேயாகும், ஆனால் மனத்தூய்மையேதுவாதலின் தோடமற்ற சுருதி மிருதி விகித அக்கினி ஹோத்திர சந்தியாவந்தனாதி நித்திய கருமத்தியாகஞ் செயல் மனத்தூய்மை விரும்பியோனாகிய முமுக்ஷுவிற்குச் சாத்திரத்தானும் ஊகத்தானுஞ் சம்பவியாதாம்; மற்றோ, மனத்தூய்மையின்பொருட்டு முமுக்ஷுக்கள் நித்திய கருமத்தை யின்றியமையாது அனுஷ்டிக்கவேண்டும். இப்பொருள் 'ஆருருக்ஷோர் முநேர்யோக³ம் கர்ம காரணமுச்யதே' என்னும் வசனத்தானே முன்னரும் மொழியப்பெற்றது. மனத்தூய்மை செய்விக்கும் நித்தியகருமத்தின் மோகவயத்தாகிய தியாகம் தாமதத்தியாகமாம். வேதவிகித நித்திய கருமத்தில் நிஷித்தத்தன்மையுணர்வும்; அர்த்தஹேதுவாகிய அதன்கண்ணே அநர்த்தஹேது மதியும், தருமரூப அதில் அதருமத்தன்மை மதியும், அனுஷ்டானயோக்கியமாய அதில் அனனுஷ்டானத்தன்மைமதியும், ஆகிய மயன்ஞானவடிவ விபரீதம் மோகமாம். இம்மோகவயத்தால் நித்தியகருமப் பரித்தியாகம் தாமசத்தியாகமாம். இம்மோகம் சாங்கிய சாத்திரமுடையார்க்குண்டாம்; அவாபிப்பிராயமிஃதாம்:—காமிய கருமங்கோஷமுடையதாவதேபோல அக்கினி ஹோத்திராதி நித்தியகருமங்களும் தோஷமுடையனவேயாம்; என்னை, நித்திய கருமங்களுள்ளும் நென் முதலியவற்றைக் குத்தலின் யாகசாலையைத் துலக்கலின், அக்கினியில் ஹோமஞ் செய்தலின், ஜீவர்கட்கிம்சையாம், பசுக்கட்கு மிம்சையாமாதலின் நித்திய கருமமும் ஹிம்சைவடிவ தோடமுடையதாதலின் காமியகருமம்போலத் துஷ்டமேயாம், 'ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூ⁴தாநி' என்னுஞ் சுருதி சர்வ பூதங்களினிம்சையை நிட்தஞ் செய்துளதாதலின் யாகத்திற் செய்யும் பசுவினிம்சையும் நிஷித்தமேயாம். மனத்தூய்மையோ ஹிம்சைப்பிரதான நித்தியகருமமின்றிக் காயத்திரியாதி மந்திரங்களின் ஜபத்தானேயாம். இது மகா பாரதத்திலும் கூறப்பட்டுளது:—

ஜவஷு-ஸவ-உ யஜெஉஹஹ்ரீ வாஸொயஉ-உ உஅஹதெ ।
அஹிம்ஸயாஹி ஹூதாநாம் ஜவயஜ்ஞ ப்ரவத்ததெ ॥

(போ-ள்.) காயத்திரி முதலிய மந்திரங்களின் ஜபமோ சர்வ தருமங்களி னும் பரமதருமமெனப்படும், என்னை, ஜபயாகத்தினும் வேருகிய ஜோதிட்டோ மாதி யாகங்களியாவும் பூதங்களினிம்சையானே பொருந்துவதாம், ஜபயாகமோ வுஹிம்சையானே முயல்வதாம், இதனுனே இஃதியாவினு முயர்ந்ததாம். இதனை னுவுங் கூறியுள்ளார்:—

ஜாவெஹ்ரெநைவதூ ஸம்ஸிஜெஹ் ஹூஹணொ நாத்ரஸம்ஶய: ।
குயாஉா உநஹ்நவா குயாஉாநெநத்ரா ப்ராஹண உஅஹதெ ॥

(போ-ள்.) காயத்திரியாதிகளின் ஜபத்தானே பிராஹ்மணன் மனத்தூய் மையையடைவன், இவ்விடயத்தில் சிறிது மாத்திரையும் ஐயமின்றும். மனத்தூய் மையின்பொருட்டு அதிகாரி வேறொரு கருமத்தை செய்யவேண்டுமென்றேனும் வேண்டாமென்றேனுமின்றும். அஹிம்சைவடிவ மைத்திரியை யுடையவனே பிராஹ்மணனெனப்படுவன். என்பதாதி சாத்திரங்கள் நித்தியகருமத்தை நிடே தித்து மனத்தூய்மைக்கு ஜபத்தையே விதிக்கின்றதாதலின் மனத்தூய்மை யற்ற கரும அதிகாரியானும் நித்திய கருமம் விடவேதக்கதாம் என்பர். இக்கூற்று மிக மூரணுடையதாம்; என்னை யாகத்தில் பசு முதலியவற்றி னிம்சை அநர்த்தவேது வாகாதாம்; மற்றே, யாகமிலா அஃதே அநர்த்தஹேதுவாம். 'நஹிம் ஸ்யாத் ஸர்வா ஹூதாநி' என்னுஞ் சுருதி பூதஹிம்சையை நிடேதிக்கினும் யாகம் போரின்றிய ஹிம்சை பரமாம் அந்நிடேதம் ஒருகாலவ்வசனம் சர்வ ஹிம்சை மாத்திரத்தையே நிடேதிப்பதாகுமேலாயின் 'அக்நிஷொமீயம் பஶுமாலபேத' என்பதாதி வசனம் யாகத்தில் பசு ஹிம்சையை விதித்தல் வீணன்றேவாம். வேதமொழியை வீணெனல் மிக முரணுமாதலின் இருவசனத்திற்கும் பாஸ்பாம் சாமானிய அபவாத பாவம் புனைந்து விவஸ்தை செய்தல் தகுதியாம். எப்பிராணி யையு மிம்சியாதொழிக வென்பது சாமானியமாம், அக்கினி ஷோமீய வசனமப வாதமாம், அபவாதத்தலத்தை விடுத்தே அயலிடத்திற் சாமானிய வசனப் பிர விருத்தியாம்; அதாவது, யாகம் போரின்றி யெவ்வுயிரையும் இம்சைசெய்யற்க வென அதன் பொருள் கொள்க. கொள்ளவே சாத்திர விகித யாக சம்பந்திஹிம் சைதோடரூபமாகாதாம். முன்மொழிந்த மகாபாரத வசனமும் மனுவசனமுமோ கேவலம் ஜபயாகத்தின் றுதி பரமாமன்றி யாகசம்பந்தி ஹிம்சையில் அதர்மத்தன் மையைப் போதியாதாம் இதை நிந்தியாமல் அதைத்துதிக்கின்றதென்பதே கருத் தாம். எவ்வசனத்திற் கெப்பொருளில் கருத்தாமோ அதற்கதுவே பொருளா மாதலின் சாங்கியர்க்கு மேற்கூறியவாறு தோற்றுதல் மோகமேயாகும். மோக மயத்தால் நித்திய கருமத்தியாகம் தாமசத்தியாகமாம்; மோகந்தமரூபமேயன்றே.

(அ-கை.) இவ்வாறு தாமதத்தியாகத்தை யியம்பியருளியிப்போது ஸ்ரீ பக வான் இராஜதத்தியாகத்தை யியம்பியருளுகின்றுர்:—

-ம். து:கமித்யேவ யத்கர்ம காயக்லேஶபயாத்த்யஜேத் ।
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥ (8)

-ம். 1 து:கம் 3 இதி 2 ஏவ 7 யத் 5 கர்ம 4 காயக்லேஶபயாத் 6 த்யஜேத் 11 ஸ: 10 க்ருத்வா 8 ராஜஸம் 9 த்யாகம் 14 ந 13 ஏவ 12 த்யாகபலம் 15 லபேத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இக்கருமந் துக்கரூபமேயென வெண்ணிச் சரீரக் கிலேசபயத்தானே நித்திய கருமத்தை விடுதலாகிய தியாகம் இராஜசமாம். இத்தியாகத்தானே தியாக பலத்தை யொருக்காலும் அடையான். (8)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன் மொழிந்த மோகமின்றேனும் மனத்தூய்மை யுறாத கருமாதிகாரி சருவ நித்திய கருமமும் துக்கரூபமேயாமென நினைந்து அவற்றைச் செய்தலானுண்டாம் சரீரக்கிலேசத்தின் பயத்தானே, அவற்றை விடல் இராஜசத்தியாகமாம். அத்துக்கம் இரஜோ குணரூபமேயன்றோ, மோகமிலாவிடினும் இராஜசத்தியாகத்தானே பயனடையமுடியாது; அதாவது, கூறப்படும் சாத்விகத்தியாகத்தின் ஞான நிஷ்டை வடிவபலத்தை இராஜசத்தியாகியடையான். (8)

(அ-கை.) ஆண்டு முன்னிரண்டு சுலோகங்களானே நித்திய கருமங்களின் தாமதத்தியாக இராஜசத்தியாகங்களை விடவேண்டியதெனக் கூறியருளப்பட்டதாதலின் அவ்விரண்டையும் விடுத்து எக்கருமத்தியாகத்தை யதிகாரியங்கீகரிக்க வேண்டும் என அருச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாகச் சாத்விகத்தியாகமே கவரத்தக்கதாம் எனக்கூறியருளுபவராய் ஸ்ரீ பகவான் அதன் வடிவத்தைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதே(அ)ர்ஜுந ।
ஸங்கம் த்யக்த்வா ஃபலம் சைவ ஸ த்யாகஃ ஸாத்விகோ மதஃ ॥ (9)

ப-ம். 2 கார்யம் 4 இதி 3 ஏவ 5 யத் 7 கர்ம 6 நியதம் 13 க்ரியதே 1 அர்ஜுந 8 ஸங்கம் 11 த்யக்த்வா 10 ஃபலம் 9 ச 12 ஏவ 14 ஸஃ 15 த்யாகஃ 16 ஸாத்விகஃ 17 மதஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இக்கருமஞ் செய்யத்தக்கதேயெனவெண்ணி நித்திய கரும சங்கத்தையும் பலத்தையும் தியாகித்தே செய்வது சாத்விகத்தியாகமென ஆன்றோரால் அங்கீகரிக்கப்படும். (9)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நித்திய கருமங்களை விதிக்கும் 'அஹரஹஸ்ஸந்த்யாமுபாஸீத' யென்பதாதி வசனங்களில் நித்திய கருமங்களின் பயன் கூறுவிடினும் வேதவிகிதமாதலின் இந்நித்தியகருமம் எனக்கவசியம் செய்யத்தக்கது என நிச்சயித்து நித்தியகருமங்களின் கர்த்திருத்துவ அபிநிவேசரூப ஸங்கத்தையும், துறக்க முதலிய பலத்தையும்விட்டு மனத்தூய்மைவரை அவற்றை யாற்றலாகிய தியாகம் சாத்விகத்தியாகமா மென்பர் ஆன்றோர்; அதாவது பலேச்சையும் அபிமானமுமிலாமல் நித்திய கருமத்தையாற்றும் வடிவச்சாத்விகத்தியாகம் ஆன்றோர் உளத்தூய்மைக்காகக் கொண்டுளாரென்பது சம்மதமாம்; முன்மொழிந்த இரண்டேபோலும் விடத்தக்கதன்றாமெனக. துறக்க காமன் வேட்க என்பதாதி வசனம் சுவர்க்காதி பயனைக்குறித்துக் காமிய கருமத்தை விதிப்பதேபோல நித்திய கருமத்தை விதிக்கும்வசனம் அப்பயனைக்குறித்து நித்தியகருமத்தை விதிப்பதாதலின் அதற்கொரு பலமுமேயின்றெனக. எனவே 'ஃபலம் த்யக்த்வா' என்பதை ஸ்ரீ பகவான் எங்ஙனங் கூறியருளினர்? நித்தியகருமத்தை நிகழ்த்தும் வசனம் துறக்காதி பயனைக்குறித்து அதை விதிக்கவில்லையெனினும் அதற்கொரு பயனையின்றியமையாது கோடல்வேண்டும், அல்லாக்கால்பயனை விடுத்து என்பது வீணாம்; என்னை, அடைவுற்றதற்கேயன்றோ அகற்றுந்தன்மையுமாதல், அடைவுறாததை விடுதலாய் யாங்ஙனம்! அதற்குப்பலமிலாவிடின், பலத்தைவிடுத்து என்பதனானே நிடேதஞ் செய்தருளாராதலின் அதற்குமொரு பலமுண்டென்றன்றோ

அம்மொழியாற் பெறப்படுகின்றது. அல்லது சாத்திரக்காரர் இந்நியாயங்கூறி யுள்ளார் 'பயனைக்குறியாதுமந்தனுமுயலான்' என. பயனிலாது மந்தனுமுயலா னேல் அறிஞன் எங்ஙன்முயல்வன்? முயலானன்றே. நித்திய கருமத்திற்கு பயனில்லையேல் அதிலெவருமுயலார். இதனானும் அதற்கொரு பயனையங்கீகரித்தல் வேண்டும். அல்லது ஆபஸ்தம்ப இருடியும் அதன்பயனை யறைந்துளார்,

> தத்யதா ஆம்ரே பலார்தே நிர்மிதே சாயாகந்தாவநூத்பத்யேதே ।
> ஏவம் தர்மம் சர்யமாணமர்தா அநூத்பத்யந்தே ॥

மாம்பழவடைவின்பொருட்டு மாந்தருவை நாட்டினனுக்கு அத்தரு நிழன்மணப் பயனையுமின்றியமையாமற்றருதலேபோலத் தனது தருமமென வெண்ணி நித் தியகரும அனுஷ்டானஞ்செய்யின் துறக்காதிவடிவப்பயன் அவசியமுண்டாம் இப்பயன், பெரும்பயன் பெறுவதற்கு முன்விருப்பிலாமலே யெய்தும் ஆநுஷங்கி கப்பயனெனப்படும் மனத்தூய்மைவாயிலாக ஆன்மஞானப் பிராப்தியானேமோ க்ஷப்பிராப்தியாம்; இதுவே நித்தியகருமத்தின் மகாபலமாம், இஃதுருத்துணை அக்கருமவயத்தால் துறக்காதிபானுஷங்கிகப்பயனவசிய முண்டாம். இதனானும் நித்திய கருமப்பலனுண்டெனக. அல்லது நித்தியகருமங்களைச்செய்யாது எப்பாவ முண்டாமோ, செய்யினுண்டாகாதோ. அப்பாவ நீக்கமே அதன்பயனும். அத னைச்செய்யாவிடின் பாவமாதல் சுருதியினும் மிருதியினுமுளது.

> அகுர்வன் வைதிகம் நித்யம் ப்ரத்யவாயீ பவேந்நர: ।

(பொ-ள்.) வேதங்கூறிய நித்தியகருமங்களைச் செய்யாவிடின் பாவத்தை யடைவன்.

> ஶ்ரௌதஸ்மார்த விதாநோக்தம் கர்மாணம் வ்யவஸ்தித: ।
> தத்விஹீந: பதத்யேவ ஹ்யந்தம் வாரஹிதாம்யவக் ॥

(பொ-ள்.) சிரௌதஸ்மார்த்த நித்திய கருமங்களைப் பற்றியே துவிஜன் நிலைப்பன் இவற்றை விடுத்ததுவிஜன் அவசியம். கீழேவிழுவன்; தடியிலாக்குரு டன் குழியில் விழல்போலும்.

> ஏககாலம் ஜபஹீநஸ்து ஸந்த்யாஹீநோ திநத்ரயம் ।
> த்வாதஶாஹம் நிரக்நிஸ்து ஶூத்ர ஏவ ந ஸம்ஶய: ॥

(பொ-ள்.) ஒரு நாள் ஜபத்தை விடுக்கின், 3 நாள் சந்தியை விடுக்கின் 12 நாள் அக்கினிஹோத்ரம் விடுக்கின் அம்மறையவன் சூத்திரனேயாவன். இப் பொருளில் யாதொரு ஐயமுமின்றாம்.

> த்ர்யஹம் ஸந்த்யா விரஹிதோ த்வாதஶாஹம் நிரக்நிக: ।
> சதுர்வேததரோ விப்ர: ஶூத்ர ஏவ ந ஸம்ஶய: ॥

(பொ-ள்.) எம்மறையவன் 3 நாள் வரை சந்தியைச் செய்யவில்லையோ, 12 நாள் வரை அக்கினிஹோத்திரம் செய்யவில்லையோ அவன் 4 வேதத்தைப் படித் தவனாயினும் சூத்திரனே யாவன் என்பதில் யாதொரு ஐயமுமின்றாம்.

> தஸ்மாந்நித்யம் வயேத்ஸந்த்யாம் ஸாயம் ப்ராத: ஸமாஹித: ।
> உல்லங்கயதி யோ மோஹாத் ஸ யாதி நரகம் த்ருவம் ॥

(பொ-ள்.) சந்தியை யுல்லங்கனஞ்செய்தலானே பிராஹ்மணன்பால் சூத்திர பாவ அடைவுண்டாதலின் ஒருகாலும் சந்தியையுல்லாங்கனஞ் செய்யலாகாது,

காலையிலும் மாலையிலும் சாவதானனுகிச் சந்திசெய்க, பிரமாதத்தால் விடின் நிச்சயமாயவன் நரகத்தையடைவன். என்பதாதி சுருதிமிருதி வசனங்கள் நித்திய கருமத்தைச் செய்யாவிடின் பாவ அடைவைக்கூறியுள்ளன. 'யஜ்ஞேந பாபம் அபஹந்தி தஸ்மாத் யஜ்ஞம் பரமம் வதந்தி' அக்கினிஹோத்திராதி நித்தியகருமத்தானே தடையாயபாவத்தை நீக்குகவெனலின் வேதவேத்தாக்கள் நித்திய தருமத்தைப் பரம தருமமென்பர்கள். என்பதாதி சுருதிகள் ஞானத்தடையாய பாவ நீக்கம், ஞானமுண்டாக யோக்கியமாகிய புண்ணியம் ஆக்கம் என்னுமான்மசமஸ்காரமே நித்திய கரும பலமாம் என்னும். ஒரு சாஸ்திரத்திலோ நித்திய கருமத்திற்குப் பிரஹ்மலோகப்பிராப்திவடிவ பலமெனப்பட்டுளது.

> ஸந்த்யாமுபாஸதே யே து ஸததம் ஸம்ஶிதவ்ரதா: ।
> விதூதபாபாஸ்தே யாந்தி ப்ரஹ்மலோகம் ஸநாதநம் ॥

(பொ-ள்.) திடவிரதத்தோடு கூடியவனுகி சந்தியை யுபாசனைசெய்பவர் சர்வபாவங்களு மற்றவராய்ப் பிரஹ்மலோகத்தையடைவர். என்பதாதிய சுருதி மிருதிமுதலியவற்றில் நித்தியகருமத்திற்கும் பலங்கூறப்பட்டுளது; அப்பலத்தை விரும்பாமலே அதனைச்செய்க வென்னுந் திருக்கருத்தானே ஸ்ரீபகவான் ஈண்டுப் பலத்தை விடுத்து என்பதால் நித்தியகருமபலபரித்தியாகத்தைக் கூறியருளினராதலின் பகவத் வசனத்தில் ஒரு சிறிதும் முரணின்றாம். அல்லது தியாக சந்யாச சப்தங்கள்கடபட சப்தங்களைப்போலப் பின்னபின்னஜாதியையுடைய அர்த்தவாசகமல்லவாம்; மற்றோ; பலேச்சாபூர்வகமாகிய கருமத்தியாகமே இருசப்தங்களின் பொருளாம்; முற்கூறிய இப்பொருளை மறவாதுறைக. பலேச்சையிருந்தபோதினும் முன்மொழிந்த மோகவயத்தால் அலது தேகக்கிலேச பயத்தால் நித்தியகருமப் பரித்தியாகமோ கருமமாகிய விசேஷிய அபாவத்தாலாகிய விசிஷ்டாபாவரூபமாம். அத்தியாகம் தாமசத்தன்மையானும் இராஜ சத்தன்மையானும் நிந்திக்கப்பட்டதாம். நித்தியகருமமிருந்தபோதினும் அதன் பலவிருப்பம் விடுந்தியாகம் பலேச்சையாகிய விசேஷணுபாவத்தாலாகிய விசிஷ்டாபாவமாம். அத்தியாகம் சாத்விகத்தன்மையானே துதிசெயப்பெற்றதாகும் இரண்டபாவங்களிடத்தும் விசிஷ்டாபாவத்தன்மைதுல்லியமேயாமாதலின் ஸ்ரீ பகவானுடைய பூர்வ அபர வசனங்களின் விரோதமின்றாம். பலேச்சை வடிவ விசேஷண, கருமவடிவ விசேஷிய அபாவங்களாலாக்கப்பட்ட விசிஷ்டாபாவ வடிவகருமங்களின்றியாகமோ சத்துவாதி முக்குணங்களுமற்றதாதலின் நிர்க்குணரூபமேயாகும்; ஆகவே மூன்றிலொன்றாய்க் கணிக்கப்படமாட்டாதாம். இவ்வாறு கூறியதுகொண்டித்தோடமும் நீக்கப்பட்டதாகும். அத்தோடமாவது:—'த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித:' என்னும் வசனத்தானே முதலில் மூவகையாய தியாகப் பிரதிஞ்ஞையைச் செய்து அதன் பின்னிருவகைக் கருமத்தியாகத்தைக் கூறிப் பின் பிரதிஞ்ஞைக்கு மாருகக் கருமானுஷ்டான ரூப 3வது வகையை ஸ்ரீ பகவான் அருளினராதலின் ஸ்ரீ பகவானுக்குப் பிரகடமேயாய அகுசலத்தன்மைவடிவ தோஷமடைவுறும். ஒருவன் மூன்று பிராஹ்மணர்கட்குப் போஜனம் செய்விக்கவேண்டுமென்று முதலிற் கூறிப் பின்னிருவர்கூட கௌண்டின்ய ரென்பர் மற்றவன் க்ஷத்திரியன் எனக் கூறுவனுக்கு வெளிப்படையாகவே அகுசலத்தன்மைத்தோட அடைவாம். முன்னர் மும்மறையவரென பதிஞ்ஞை செய்தது பின் மாறியது பதிஞ்ஞை மறதிவடிவ தோஷமாவதே போல மூன்று தியாகங் கூறியப்பின் மாறியது தோஷமாம். இத்தோஷம் பொருந்தாதாம். என்னை, 3 வகைகளில் விசிஷ்டாபாவ வடிவத்தியாக சாமானியத்தன்மையானே ஏகஜாதியத்தன்மை முன்னர் விஸ்தாரமாய்க் கூறப்பட்டதாதலின் ஸ்ரீ பகவானிடத்தில்

அருசலத்தன்மைத் தோடம் கூறலே கூறுபவன்பால் மகா அகுசலத்தன்மையா மென்றுணர்க.

(அ-கை.) இப்போது முன் மொழிந்த சாத்விகத்தியாகத்தைக்கொள்ளும் பொருட்டு ஸ்ரீ பகவான் அதன் மனத்தூய்மை வாயிலாய்ஞான நிஷ்டை வடிவப் பலத்தை அருளிச்செய்கின்றார் :—

சு-ம். ந த்வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே ।
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சிந்நஸம்ஶய: ॥ (10)

ப-ம். 7 ந 8 த்வேஷ்டி 5 அகுஶலம் 6 கர்ம 9 குஶலே 10 ந 11 அநுஷஜ்ஜதே 1 த்யாகீ 2 ஸத்வஸமாவிஷ்ட: 3 மேதாவீ 4 சிந்நஸம்ஶய: .

(அ-ம்.) ஹே அர்ச்சுன! முன் மொழிந்த சாத்விகத்தியாகமுடையவன் சத்துவத்தால் வியாப்தமாம் போதுதத்துவஞான முடையவனுவன் சர்வ சம்சயங் களுமற்றவனுவன் அப்போது அசோபன கருமத்தைப் பிரதிகூலமென்னுன், சோபனகருமத்தில் பிரீதியுஞ்செய்யான். (10)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சாத்விகத்தியாகி அதாவது முன் சுலோகத்திற் கூறிய வகையே கர்த்திருத்துவ அபிநி வேசத்தையும் சுவர்க்காதி பல இச்சை யையும் பரித்தியாகித்து மனத்தூய்மையின் பொருட்டு வேதவிகித நித்திய கருமத்தை அனுஷ்டானஞ் செய்யும் தியாகி, அக்கால் சத்துவத்தானே நன்கு கூடியவனுவன். ஆண்டு ஆன்ம அனன்ம விவேகஞானஹேது பூதமாகிய சித்தத் திலிருக்கும் நன்ஞானத்தின்றடையெனும் இராஜதமரூபமலமின்மைவடிய அதிச யத்தகைமை சத்துவமாம்; அதனுலினிது விபாபிக்கப்பெற்றவனுவனென்பதாம். கூறிய சத்துவ வியாத்தியால் நியமமாக ஆன்மஞானரூப பலஜனகத்தன்மையே நலமுடைமையாம்; அதாவது, பகவதர்ப்பித நித்தியகரும அனுஷ்டானத்தானே பாவரூபமல நீக்கமாகிய சமஸ்காரத்தானும், ஞான உற்பத்தி யோக்கியதை வடிவ புண்ணிய முண்டாவதாகிய சமஸ்காரத்தானும், சமஸ்கரிக்கப்பட்டதாயுளதாம் போது அத்தியாகி மேதாவியாவன். ஆண்டு விவேகம், வைராகம், சமதமாதிஷட் சம்பத்து, முமுக்ஷுதை, சர்வ கருமங்களின் விதிவத்தாய தியாகம், பிரஹ்ம வேத்தாவாகிய குருவின்பாற்செல்லல், என்பதாதி சாதனங்களானும், ஞானு சிரி யர் வாயிலாய் வேதாந்த சாஸ்திரசிரவணமனன நிதித்தியாசனமென்னும் மூன்று சாதனங்களானும் உண்டாயதும்; தத்துவமசிமுதலிய வேதாந்த மகாவாக்கியத் தைக் கரணமாகவுடையதும், எல்லா அப்பிரமாணிய சங்கையும் நீங்கியதும், அகண்ட அத்விதீயசைதன்யமலாத வஸ்துவை விடயஞ்செய்யாத அகம்பிரஹ்மாஸ் மியென்னும் பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் மேதையாம். அம்மேதையோடுகூடிய வனே மேதாவியாவன், அவனே திடப்பிரஞ்ஞனுவன்; அக்காலவனையமெல் லாம் நீங்கிபோனுவன். அகம்பிரஹ்மாஸ்மியென்னும் பிரஹ்மவித்தைவடிவமேதை யானே அவித்தை நீங்கிவிடும், அவ்வவித்தையே சர்வசம்சய உற்பத்தியைச் செய் தது, காரணம் நீங்கவே காரியங்களாகிய ஐயந்திரிபுகளெல்லாம் தத்துவவேத் தாவிற்கு இலவாகும். ஆண்டு ஆன்ம சாக்ஷாத்காரத்தானே அவித்தைநீக்க வாயி லாய் நீங்கும் ஐயமிவையாம் :—சஞ்சிதம், ஆகாமி, வர்த்தமானம், என்னும் மூவகையாய கருமங்களுள் ஏதேனும் என்னைப்பற்றியுளதா? இலதா? காத்திருத்வ போக் திருத்வமுதலிய சம்ஸாரம் ஆன்மாவிற் காமா? அந்தக்காண வனன்மாவிற் காமா? மோக்ஷஹேது யோகமா? உபாசனையா? கருமமா? ஆன்மசாக்ஷாத்கா ரமா? சாலோக்கியம் சாமீப்பியம் சாயுச்சியம் என்னு மிவையே மோக்ஷமா? பிரஹ்மான்மரூபமாய் நிலைபெறன் மோக்ஷமா? இவ்வெல்லாவையத்துள்ளும் ஈற்

றது சித்தாந்தமென்றுணர்க; மற்றவை பூர்வ பக்ஷங்களாம். இவ்வையங்களும் தேகாதிகளில் ஆன்மமதிவடிவ விபரீதமும் தத்துவவேத்தா அற்றவனுவன். அக்கால் சர்வ கருமமும் அற்றவனுதலின் அகுசல கருமத்தில் துவேடஞ்செய்யான்; அதாவது அஞ்ஞானிகட்குப் பந்த ஹேதுவாதலின் அசோபனரூப காமியகரும நிஷித்த கருமங்களைப் பிரதிகூலமாக எண்ணுன். மனத்தூய்மை வாயிலாயாத்ம ஞானஹேதுவாதலின் சோபனரூப நித்தியகருமத்திலும் பிரீதியைச்செய்யான்; அவன் கிருதகிருத்தியனேயன்றோ; அவனுக்கொரு கருமத்தில் துவேஷமும் மற்றொன்றில் பிரீதியு மெங்ஙனமுண்டாம்? இப்பொருளிற் சுருதியுமுளது.

பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்சித்யந்தே ஸர்வஸம்ஶயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ॥

(பொ-ள்.) யான் பிரஹ்மரூபன் எனப்பிரஹ்மசாக்ஷாத் காரத்தையடைந்த தத்துவவேத்தாவிற்குச் சிற்சடக்கிரந்திபேதிக்கும், முன்மொழிந்த, சர்வ சமசயங்களும் நீங்கும் புண்ணிய பாவ சருவ கருமங்களும் க்ஷயமாம். அச்சாத்விகத் தியாகத்திற்கிம் மகாபலங்கிடைத்தலின் அதிகாரி பெருமுயல்வாலும் சாத்விகத் தியாகத்தையெ சம்பாதனஞ்செய்க. (10)

(அ-கை.) ஆண்டுக்கருமத்தில் பிரவிருத்திக்கும் ஹேதுவாகிய இராகத்துவேஷாதிகள் ஞானமுடைய புருடனிடத்தின்றுமாதலின் அவன் பாலே சர்வ கமபரித்தியாகஞ் சம்பவிக்கும், என்னும் பொருள் பூர்வசுலோகத்திற்கூறியருளப்பட்டது; இப்போது ஞானியின் பாற் சர்வகருமங்களின் பரித்தியாகம் சம்பவியாதாம் என்பதில் ஸ்ரீ பகவான் ஹேதுவையருளிச்செய்கின்றார்:—

சு-ம். ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத: ।
யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே ॥ (11)

ப-ம். 6 ந 1 ஹி 2 தேஹப்ருதா 7 ஶக்யம் 5 த்யக்தும் 4 கர்மாணி 3 அஶேஷத: 8 ய: து 9 கர்மபலத்யாகீ 10 ஸ: 11 த்யாகீ 12 இதி 13 அபிதீயதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! தேகாபிமானியானவன் முற்றினுமே கருமத்தைத் தியாகிப்பது முடியாத காரியமாமாதலின் அஞ்ஞானி கருமபலத்தை விடுவனேல் அவனும் தியாகியே யெனப்படுவன். (11)

(வி-ம்.) யான் மனுடன் யான் பிராஹ்மணன் யான் கிருகஸ்தன் என்னும் பாதிக்கப்படாத அபிமானத்தானே தேகத்தைத் தரித்தலும் போஷணமுஞ்செய்பவன் தேகபிருத்தாவன்; அதாவது கருமாதிகாரஹேது பூதபிராஹ்மணதி வர்ண, ஆசிரமங்கள், அவற்றிற்காசிரயமாய கருத்திருத்துவாதிகள், அவற்றிற்காசிரயமாய தூலாதி தேகங்களாம்; அநாதியவித்தைவாசனைகளின் வயத்தால் வியவகார யோக்யதாரூபத்தானே கற்பிதமாதலின் அசத்தியமாகிய அவற்றைச் சத்தியமென நினைந்து, தன்னிற் பின்னமாயினும் அபின்னமாய் நினைந்து, முற்கூறிய அபிமானத்தானே தேகத்தைத்தரித்துப் போஷிப்பவன் தேகபிருத்தமாம். கருமாதிகாரஹேது பூததேகாபிமான நீங்காதவன் தேகபிருத்தாவன் என்பது கருத்தாம். அவன் கருமங்களில் முயல்வதற்கேதுபூதமாகிய இராகத்வேஷாதிகளின் மிகுதியானே நிரந்தரம் கருமங்களில் முயல்பவனுவன். விவேக சூனிய தேகாபிமானி தத்துவ வேத்தாவைப்போலக் கருமத்தை முற்றினும் விடமுடியான்; என்னே, காரண சாமக்கிரியிருக்கும்வரை முற்றினும் காரியபரித்தியாகம் செய்ய முடியாதாம். இராகத்வேஷாதிரூபகாரண சாமக்கிரி அஞ்ஞானியின் பாலுளதா

தலின் மனத்தூய்மையின் பொருட்டுக்கருமங்களைச்செய்தபோதினும் பரமேசுரகி ருபையின் வயத்தால் கருமபலத்தைவிடின் அவனும் தியாகியே யாவன்; அதாவது கருமகருத்தா அஞ்ஞானி உண்மையாயத்தியாகியாயினும் துதியின்பொருட்டுத் தியாகசப்தம் கௌணீ விருத்தியானே தியாகியெனக் கூறப்பெறுவன். முற்றினுங் கருமத்தியாகமோ தேகாபிமானமற்ற பாமார்த்த தரிசியே செய்யத்தக்கதனுவனுதலின், அத்தகைய தத்துவவேத்தாவே தியாக சப்த முக்கிய விருத்தியானே தியாகியெனப்படுவன். ஈண்டு, 'யஸ்து' என்னும் வசனத்திலிருக்கும் து சப்தம் கருமபலத்யாகியின் துர்லபத்தன்மையை யுணர்த்தும்பொருட்டாம்; அதாவது பலேச்சையை விடுத்து உளத்தூய்மைப்பொருட்டு நித்தியகருமங்களைச்செய்யும் புருடனும் துர்லபனே யாவன். (11)

(அ-கை.) ஹே பகவன்! தேகாபிமான முடைய பரமான்மஞானமற்ற கருமியும் பலேச்சையிலாத மாத்திரையானே கௌண சந்யாசியெனப்படுவன்; தேகாபிமான மற்ற பரமான்மஞானமுற்ற பலசகித சர்வ கருமத்தியாகியாகிய தத்துவவேத்தாவோ முக்கிய சந்யாசியெனப்படுவன் என முற்சுலோகத்தில் தேவரீர் திருவாய் மலர்ந்தருளினீர். ஆண்டுக் கௌண சந்யாசியின் பலத்திலும் முக்கிய சந்யாசியின் பலத்திலும் யாது விசேடமாகும். விசேட அலாபத்தான் கௌணத்தன்மையும் இலாபத்தான் முக்கியத்தன்மையும் சந்யாசியின் பாலெய்துமன்றோ, கருமபலத்தியாகித்தன்மையோ அவ்விருவர்பாலும் சமமேயாமாதலின் அதனுனும் சிறப்புச் சம்பவியாதாம்; மற்றோ, இதனினும் வேறொரு விசேடமே கூறியருளல்வேண்டும் என்னும் அர்ச்சுனன் சங்கைக்கு ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

சு-ம். அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவிதம் கர்மண: ப²லம் ।
ப⁴வத்யத்யாகி³நாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித் ॥ (12)

ப-ம். 4 அநிஷ்டம் 5 இஷ்டம் 7 மிஶ்ரம் 6 ச 8 த்ரிவிதம் 3 கர்மண: 9 ப²லம் 10 ப⁴வதி 1 அத்யாகி³நாம் 2 ப்ரேத்ய 14 ந 11 து 12 ஸந்ந்யாஸிநாம் 13 க்வசித்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கௌண சந்யாசிகட்கோ மாணத்தின் பின்னர்க் கருமங்களின் அநிஷ்ட, இஷ்ட, கலப்பு, என்னும் மூவகைப்பயன் அடைவுறும்; முக்கிய சந்யாசிகட்கோ ஒருகாலும் அத்திரிவித பலமடைவுறுதாம். (12)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! கருமங்களின் சுவர்க்காதி பலத்தியாகவானுயினும் கருமங்களை யனுஷ்டிப்பவனும், ஆன்மஞானத்தின் முயல்பவனும், அதை யடையாதவனுமாகிய அத்தியாகியென்னும் கௌண சந்யாசிக்கு ஆன்மஞான இச்சையாகிய விவிதிஷையுண்டாம் வரை மனத்தூய்மையைச் சம்பாதியாது முன்னரே சரீரம் நீங்குமாயின் அவன் மரித்தபின் முன்செய்த கருமத்திற்குச் சரீரக் கிரகணரூப பலத்தை யவசியமடைவன். ஈண்டு, 'கர்மண:' என்னும் பதத்தானே ஒரே கருமம் கூறப்பட்டிருப்பினும் அவ்வொன்றில் 3 வகைப் பலஜனகத்தன்மை சம்பவியாதாம். ஆகையால், 'கர்மண:' என்னும் பதம் கருமத்வ ஜாதிவிசிஷ்ட புண்ணியம் பாவம் கலப்பென்னும் மூவகையேயாய கருமங்களின் வாசகமாம். சரீரகிரகணரூப கருமபலம் காரணரூப கருமங்களின் மூவகைத்தன்மையானே அநிஷ்டம் இஷ்டம் மிசிரம் என மூவகையேயாம். பாவத்திற்க நிஷ்டபலமாம், புண்ணியத்திற் கிஷ்டபலமாம், இரண்டிற்கும் மிசிரபலமாம். இத்தேகம் எனக் கடையாதொழிக வென்னும் பிரா திகூலத்தன்மையின் ஞானவிஷயம் நகாசம்மந்தியாய திரியக்குத் தேகமாம்; அது அநிஷ்டபல மெனப்படும், இத்தேகமெனக் கடைவுறுக வென்னும் அநுகூலத்தன்மை ஞானவிடயம் தேவதாதேகமாம்; இஃதிஷ்ட

பலமாம். பாவ பல புண்ணியபலத்தோடு கூடிய மநுடாதி தேக அடைவு மிசிர பலமாம் 'அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரஞ்ச' என்னும் வசனத்தானே அக்கருமபலத்தில் மூவகைத்தன்மை சித்தமாமாதலின் மீண்டும் திரிவிதமெனக்கூறல் அசங்கதமாம்; ஆயினும், திரிவித சப்தத்தானே மீண்டு மப்பயனை மூவகைத்தென அனுவா தித்தது அம்மூவகைப் பயனைத் தியாகிக்கும் பொருட்டாம்; அதாவது முமுக்ஷுக்கள் அம்மூவகைப் பயன்களையும் தியாகிக்குக என்பதாம். இதுகாறும் கௌண சந்நியாசிகள் மரித்த பின்சரீரத்தை யடைவர்கள் என்பது கூறியருளலாயது. இப்போது முக்கிய சந்யாசிகட்கோ, பிரஹ்ம சாக்ஷாத்காரத்தானே காரியசகித அவித்தை நீங்கவே விதேககைவல்லிய ரூபமோக்ஷமே கிடைக்கும் என ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' விதிப்படி சருவ கருமங்களையும் விட்டவரும், யான் பிரஹ்மரூப மென்னும் பரமான்ம சாக்ஷாத்காரத்தானே கூடியவருமாகிய பரமஹம்ச பரிவிராஜகமுக்கிய சந்யாசிகள் மரித்து பின்னுரைத்த அநிஷ்ட இஷ்டமிசிரபலத்தை எத்தேயத்தும் எக்காலத்தும் அடையார்கள்; என்னை, அவர்கட்கான்ம சாக்ஷாத்காரத்தானே அஞ்ஞான நீக்கமேயாய் விடுகின்றதன்றோ. அஞ்ஞானமகலவே அதன் காரிய சர்வ கருமங்களும் நீங்கியே போம். பிறப்பினடைவில் அஞ்ஞானமும் அஞ்ஞான ஜன்னிய கருமமுமே காரணமாம். அவை நீங்கவே பிறப்பெங்ஙனுண்டாம். இது சுருதியிலுமுளது:—

> பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்சித்யந்தே ஸர்வஸம்ஶயா꞉ ।
> க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ॥

(பொ-ள்.) முன்போல். இதனை ஸ்ரீ வியாசபகவானும் அருளியுள்ளார்:—

> ததகிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத் ।

(பொ-ள்.) பிரத்தியக்கபின்ன பிரஹ்மசாக்ஷாத் காரமுளதாக வேதத்துவ வேத்தாவின் பூர்வசஞ்சித கருமமோ விநாசமாம், பின்னர்ச் செய்த கருமம் தீண்டவேமாட்டாது, இப்பொருள் சுருதி மிருதிகளிலும் கூறப்பட்டுளது. என்பதாதி சுருதி சூத்திரவசனம் பரமான்ம ஞானத்தானே சர்வ கருமங்களின் நாசத்தைக்கூறுயுளதாதலினிது துணியப்பெறும்:—முன் மொழிந்த கௌண சந்யாசிகட்கோ முற்புண்ணிய பாவகரும வயத்தால் மீண்டும் சரீரக்கிரகணரூப சம்சாரம் அவசியமுண்டாம். முக்கிய சந்யாசியாகிய தத்துவ வேத்தாவிற்கோ அவித்தை முதலியவையின்மையின் மீண்டும் சம்சாரமடைவுறுதாம்; மற்றோ, மோக்ஷமே யடைவுறும். இவ்வகை யிவ்விரண்டினும் பலவிசேடமாம். சிலவாதியர்கூறுவதாவது:—'அநாஶ்ரித꞉ கர்மபலம் கார்யம் கர்ம கரோதி ய꞉ ஸ ஸந்ந்யாஸீ' என்பதாதி வசனங்களில் கருமபலத்தியாகத்தானே கருமமாற்றும் கருமியின்பாலும் சந்யாசியென்னும் சப்தம் பிரயோகிக்கப்பட்டுள தாதலின் 'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' என்னும் வசனத்தினும் சந்யாசி சப்தத்தானே கருமபலத்தியாகம் செய்த கருமியையேகொள்க, அன்றியும், முன்மொழிந்த அநிஷ்ட இஷ்டமிசிரமென்னும் மூவகைப்பலத்தைச் சந்யாசிகளிடத்தே நிஷேதஞ்செய்யப்பட்டதும் சாத்விக கருமிகள் பாற்சம்பவிக்கும்; என்னை, நித்தியநைமித்திக கருமங்களைச்செய்யாமல், நிஷித்த கருமங்களைச்செய்தலின் உண்டாம் பாவ உற்பத்தி, சாத்விககருமிகட்கு அவற்றை முறையே செய்தலின் செய்யாமையின் உண்டாகாதாம். ஆகையா லநிஷ்டபலப்பிராப்தியுண்டாகாதாம். அவர்கள் காமிய கருமத்தைச் செய்யாமையின், ஈசுர அர்ப்பணமதியானே பலபரித்தியாகஞ்செய்தலின் இஷ்டபலப்பிராபதியுமுண்டாகாதாம். இதனானே கலப்புப்பலமுமுண்டாகாதாம். இம்முறையே சாத்விக கருமிகட்கு மூவகைப்பயனு முண்டாகாதாம். இது பற்றியே சாஸ்திரத்திலுங் கூறப்பட்டுளது:—

மோக்ஷார்த்தீ ந ப்ரவர்த்தேத தத்ர காம்யநிஷித்தயோ: ।
நித்யநைமித்திகே குர்யாத் ப்ரத்யவாய ஜிஹாஸயா ॥

(பொ-ள்.) முமுக்ஷு, காமிய கருமத்திலும் நிஷித்த கருமத்திலும் பிரவிருத்தியான்; மற்றோ, எவற்றைச்செய்யாமையானே பிரத்தியவாயமுண்டாமோ அந்தப் பிரத்தியவாய மகற்று மவாவினனா யந்நித்திய நைமித்திகங்களைச் செய்வன். இத்துணை மாத்திரையானே சமுசார அபாவமாம். இங்ஙன் ஏகபவிக வாத ரீதியாய் ஸ்ரீ பகவானது வசனத்திற்கு வியாக்கியானம் செய்பவர்பொருட்டு இது கூறுதல்வேண்டும்:—சப்தத்தின் அர்த்தத்தின் மரியாதையை நீ நிண்ணயஞ் செய்திலைபோலும்; எதனானே ஸ்ரீ பகவான் வசனத்திற்கு நீயிவ்வகை வியாக்கியானஞ்செய்கின்றனையோ:—ஈண்டுக்கௌண முக்கிய அர்த்தமத்தியில்யாதொரு பாதகமுமிலதாகவே முக்கியப் பொருளின்கண்ணே சாப்தபோதமுண்டாம். இஃதோ சப்தமரியாதையாம். ஈண்டுப் பிரசங்கத்தில் பலசகித சர்வ கருமங்களின் தியாகியோ சந்நியாசி சப்தத்திற்கு முக்கியப்பொருளாம், முக்கிய சந்நியாசியின் கண்ணே கருமபலத்தியாகித் தன்மையிருப்பதேபோல நிட்காமகருமி புருடனிடத்தும் பலத்தியாகித் தன்மையிருக்குமாதலின், அத்தன்மை வடிவசமான குணத்தைக்கொண்டு அச்சப்தம் கருமியின்பாலும் முயலுமாதலின் அவன் அதன் கௌண அருத்தமாம். 'ந த்வேவம் ந்யாஸிநாம் க்வசித்' என்பதிலிருக்கும் சந்நியாசி சப்தத்திற்கு முக்கியப் பொருள் கொள்வதில் யாதொருபாதகமுமின்றாயாதலின் முக்கியப்பொருளையே ஈண்டுச் சந்நியாசி சப்தத்தாற் கோடல் தகுதியாம். இப்பொருள் சப்தமரியாதையிற் சித்தமாம். காரண சாமக்கிரியிருப்பக்காரிய உற்பத்தியவசியமுண்டாம்; இது அர்த்த மரியாதையெனப்படும், இதனானும் அம் முன்னுரைத்த பொருளே துணிபாம். அஃதாமாறு:—ஈசுரார்ப்பணபுத்தியானே கருமபலத்தை விடுத்தவனும், மனத்தூய்மையின் பொருட்டு நித்தியகரும அனுஷ்டானஞ் செய்பவனும் ஆகியோன் மனத்தூய்மைவாயிலாய் ஞான நிஷ்டையையடையாமல் மத்தியின் மரிப்பனேல் பூர்வபுண்ணிய பாவ வயத்தானே மூவகைச் சரீரக்கவர்ச்சி வடிவச் சம்சார அனடனவ யெவரானும் நீக்கமுடியாதாம். புண்ணிய பாவவடிவகாரண மிருப்பச் சரீரக்கிரகணவடிவ காரியமவசியமுண்டாம் ஆன்ம ஞானமிலாதவன் அவசியம் அறமறவயத்தாற் பிறப்பன். இது சுருதியிலும் கூறப்பட்டுளது:—'யோ வா ஏதத் அக்ஷரம் கார்க்ய விதித்வாஸ்மால்லோகாத் ப்ரைதி ஸ க்ருபண:' ஹே கார்க்கி! இவ்வக்ஷரத்தை யறியாமல் இம்மநுடலோகத்தினின்றும் செல்வனோ அவனைக்கிருபணனென்றேயறி. ஆகையால், மனத்தூய்மையின் பலபூத ஆத்மஞான முண்டாதற் பொருட்டு நிட்காமன் மநுட சரீர அடைவையவசியம் அங்கிகரிக்கவேண்டியதேயாகும். இது பற்றியே முன்னாறுவது அத்தியாயத்தில் 'ஶுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபிஜாயதே' என்பதாதி வசனங்களானே இப்பொருள் நிர்ணயிக்கப்பட்டது. மனத்தூய்மையின் பின்னர்ச் சாஸ்திரவிதி பூர்வகம் பலசகித சர்வ கருமங்களையும் பரித்தியாகஞ்செய்தவனாகிப் பிரஹ்மவேத்தாவாய குரு சமீபத்திற் சென்று அவர் வாயிலாய் வேதாந்த சிரவணஞ்செய்பவன் இடையில் மரித்திடின், ஆன்மஞானத்தையடையாத அந்த யோகப்பிரட்டனாகிய விவிதிஷா சந்நியாசியானவன், போகேச்சையுடையனேல் ஸ்ரீமான்கள் வீட்டில் பிறப்பன். போகேச்சையில்லனேல் பிரஹ்மஞானிகள் வீட்டில் பிறப்பன். என்னும்யாவும் முன்னருளப்பட்டது. இதனைக் கைமுதிக நியாயம் சித்தமாம்:—ஆன்ம ஞான மற்ற சர்வ கருமத்தியாகியாகிய விவிதிஷா சந்நியாசிக்கும் சரீரக்கிரகண மவசியமுண்டாமேல் ஆன்மஞானமற்ற கருமிக்கு அஃதுண்டாமென்பதிற்கூறவேண்டிய தென்னை யென்ப

தாம். ஆகையால், அஞ்ஞானிக்குப் பூர்வ கருமவயத்தால் சரீரக்கிரகணமின்றி யமையாதுண்டாம். இஃதர்த்தமரியாதையானே சித்தமாம். ஆகையால், 'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' என்பதிலுள்ள சந்யாசி சப்தத்தானே நிட்காம கருமியையேகவர்க என்னும் ஏகபவிகவாதிகளின் வியாக்கியானம் முற்றினுமசங்கதமாம்; முன்மொழிந்த ஸ்ரீமத் பாடியக்காரர் முதலியோரது வியாக்கியானமே சிறந்ததாம். இச்சுலோகத்தில் ஸ்ரீபகவானது திருக்கருத்திதுவாம் :— அகர்த்தா, அபோக்தா, பரமாநந்த, அத்விதீய, சத்திய, சுவப்பிரகாசமாகிய பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்காரம் நிர்விகற்பமும், மகாவாக்கிய ஜன்னியமும், விசாரத்தானே நிச்சயிக்கப்பட்ட பிராமாண்யமுடையதும், எல்லாவகையானும் அப்பிராமாணிய சங்கையற்றதும் ஆம். அதனால், அஞ்ஞானம் நீங்கும், நீங்கவே, அதன் காரிய கர்த்திருத்துவாதி அபிமானமற்ற உண்மையாயமுக்கிய சந்யாசியோ அவித்தையோடுகூடிய சர்வ கரும அழிவானே கேவலம் சுத்த சொரூபனாகி அந்நிமித்தக சரீரக்கவர்ச்சியைமீண்டு மொருகாலுமடையான்; தத்துவ வேத்தாவின் சர்வமயல்களும் அவித்தையாகிய காரணங்கெடவே கெடவினுமென்க, அவித்தையுடையவனும், கர்த்திருத்துவாதியபிமான முடையவனும், தேகபிருத்தும் ஆயவனே முவகையினனுவன்; இராகத்துவேஷதோஷ மகிமையானே தன்னிச்சையானே காமிய கருமத்தையும் நிஷித்த கருமத்தையும் செய்யும் மோக்ஷ சாஸ்திர அநதிகாரி முதலாமவனுவன். பூர்வஞ்செய்த புண்ணிய கரும வயத்தானே சிறிது மாத்திரம் நட்டமடைந்த இராகாதியையுடையவனும், விதி பூர்வகம் சர்வ கரும பரித்தியாகம் செய்வதில் அசமர்த்தனுயினும், நிஷித்த காமிய கருமங்களைப் பரித்தியாகஞ்செய்து மனத்தூய்மைப் பொருட்டுப்பல இச்சையைப் பரித்தியாகித்து நித்திய நைமித்திகங்களையே செய்பவனும், மோக்ஷசாஸ்திர அதிகாரியாய கௌண சந்யாசியும் ஆகியோன் இரண்டாமவனுவன். நித்திய நைமித்திக அனுஷ்டானஞ்செய்து மனத்தூய்மைபெற்றபின் விவிதிஷையடைந்தவனும், சிரவணுதி சாதனங்களானே மோக்ஷ சாதனரூப ஆன்ம ஞான சம்பாதனஞ்செய்யும் வேட்கையனும், சாஸ்திரவிதி பூர்வகம் சர்வ கரும பரித்தியாகத்தான் வேதாந்த சாஸ்திர விசாரப்பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவின் சரணத்தையடைந்தவனும் ஆகிய விவிதிஷா சந்யாசி மூன்றுமவனுவன். ஆதியனுக்குச் சம்சாரித் தன்மை வெளிப்படையேயாம். மற்றை யனுக்குச் சம்சாரித்தன்மை அநிஷ்ட மிஷ்டமிசிரமுமென்பதனுனே யருளப்பட்டது, ஈற்றவனுக்குச்சம்சாரித்தன்மை ஆறுவதத்தியாயத்தில் 'அயதி: ஶ்ரத்த்யோபேத:' என்பதாதி வசனத்தானே விளக்கிளப்பி நிண்ணயித்தருளப்பட்டுளது. ஆகையால் அவித்தையாதி காரணமிருப்ப அஞ்ஞானிக்குச் சம்சாரித்தன்மை யின்றியமையாதாம்; ஒருவனுக்கோ ஞானப்பிரதிகூல சரீர மூண்டாம். ஒருவனுக்கோ ஞானனுகூல சரீரமுண்டாம். இத்துணை விசேடமாம். தத்துவ வேத்தாவோ அவித்தை முதலிய சம்சாரகாரண மபாவமாதலின் தானுகவே கைவல்லிய மோக்ஷவடைவாம் என்பதாக ஸ்ரீ பகவானிச் சுலோகத்தில் இரண்டையும் குறிப்பித்தருளினர். (12)

(அ-கை.) ஆண்டான்ம ஞானமற்ற அஞ்ஞானியின் சம்சாரித்தன்மையில் கரும பரித்தியாக அசம்பவரூப ஹேது 'நஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத:' என்பதால் முன்னர்க் கூறப்பட்டது. அவ்வஞ்ஞானியின் கருமத்தியாக அசம்பவத்தில் யாது ஹேதுவாம்; அதாவது, எவ்வேதுவினுனே கருமத்தியாகஞ் செய்யமுடியாதவனுகின்றுன். என அர்ச்சுனனுக் கறியுமவாவர, கரும ஹேதுபூத அதிஷ்டானுதி ஐந்தனுள் அஞ்ஞானிகளின்றுதான்மிய அபிமானமே கருமத்தியாக அசம்பவத்திலேதுவாம் என்னும் பொருளை யிப்போது ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களால் வருணித்தருளுகின்றுர். அவ்வைந்தும் வேதாந்த

சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடையதாம், அவற்றை நீக்கும்பொருட்டு இன்றிய மையாதுணாத்தக்கதாமென்னும் பொருளை முதற் சுலோகத்திலருளிச்செய்கின்றார் :—

சு-ம். பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே ।
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம் ॥ (13)

ப-ம். 5 பஞ்ச 4 ஏதாநி 1 மஹாபாஹோ 6 காரணாநி 8 நிபோத 7 மே 10 ஸாங்க்யே 9 க்ருதாந்தே 11 ப்ரோக்தாநி 3 ஸித்தயே 2 ஸர்வகர்மணாம்.

(அ-ம்.) ஹே மகாபாகுவையுடைய அர்ச்சுன! சர்வ கரும சித்தியின்பொருட்டுக் கூறப்புகும் அதிஷ்டாளுதி 5 காரணங்களை எமது மொழியால் நிச்சயஞ் செய்தி. அவை சர்வ கரும சமாப்தியையுடைய வேதாந்த சாஸ்திரத்தில் கூறப்பட்டுளது. (13)

(வி-ம்.) ஹே பெருந்தோளுடைய அர்ச்சுன! இலௌகிக வைதிக கரும சித்தியின்பொருட்டுக் கூறப்படும் அதிஷ்டாளுதி ஐந்து காரணங்களைச் சர்வஞ்ஞ பரமேசுரராகிய நமது வசனத்தானிச்சயஞ்செய்தி; அதாவது, அவ்வைந்தின் வடிவத்தையுணர நீ சாவதானனாகியிருத்தி. அவை முற்றினும் அறியத்தகாத தல்ல; மற்றோ, ஒருமைமனத்தனு லுணரத்தக்கனவேயாம். அவற்றை யறிவான் மனத்தை யொருமைப்படுத்தி ஸ்ரீ பகவான் அவ்வைந்தையும் துதித்தருளினர். ஹே மகாபாகோ என்னும் விளியால் அவற்றின் றுதியின்பொருட்டு இப்பொருள் குறிப்பிக்கப்பட்டது: இவ்வைந்தையு முணர்வதில் மகாபராக்கிரமமுடைய சிரேஷ்ட புருடனே சமர்த்தனுவன் அசிரேஷ்டன் சமர்த்தனுகான். நீயு மேன்மை மிக்கவனுதலின் அவற்றை யறிவதிலாற்றலுடையவனுவாய். அவ்வைந்தும் தேவரீரது திருவாக்காலறியத்தக்கனவேயோ? அல்லது, அவற்றில் வேறு பிரமாணமுமுளதோ? என ஸ்ரீ பகவான்றமது திருவாக்கில் நம்பிக்கையுண்டாக்கும்பொருட்டு வேதாந்த சாஸ்திரப் பிரமாணத்தை யவற்றிலருளுகின்றார். 'ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி' அவை கிருதாந்தரூப சாங்கிய சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றன. ஆண்டுப் பிரஹ்மாநந்தரூப நிரதிசய புருஷார்த்த அடைவின்பொருட்டும், ஜன்மமரணுதி சர்வ அநர்த்த நிவிருத்தியின்பொருட்டும் அறியத்தக்கதாகிய ஜீவபிரஹ்ம ஒருமை யுணர்ச்சிக்குபயோகியாய சிரவணுதி சாதனமென்பதாதி பதார்த்தங்களைக்கூறும் சாஸ்திரம் சாங்கியமாம்; உபநிஷத்வடிவமென்பதாம். அதன்கண்ணவ்வைந்தும் கூறப்பட்டுள்ளன. கேவல ஆன்மவஸ்து மாத்திரத்தைப் பிரதிபாதிக்கும் வேதாந்த சாஸ்திரத்தில் உலகப்பிரசித்த அனுன்மாவாகிய அவஸ்துவடிவப் பஞ்ச கருமகாரணம் பிரதிபாதித்திருத்தல் என்னை? என அர்ச்சுனன் வினவ ஸ்ரீ பகவான் வேதாந்த சாஸ்திரத்தை விசேடித்தருளுகின்றார். 'க்ருதாந்தே' என முயல்வாற் செய்யப்படுவது கிருதமாம் என்னும் விற்பத்தியானே கிருதசப்தம் சர்வ கருமவாசகமாம். அவற்றின் முடிவுபேறு ஆன்மஞான உற்பத்தியால் எதன்கண்ணது கிருதாந்தமாம். அல்லது, 'நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம்' என்பதாதி வசனத்தானே, கிருதம்-வெளிப்படுத்தப்பட்ட, அந்தம்-ஆன்மானன்மா விரண்டிற்கும் தத்துவ நிச்சயம் எதன்கண்ணே அது கிருதாந்தமாம். அல்லது, வேதப் பிரதிபாதித நித்திய நைமித்திக கருமம் கிருதமாம், அவற்றின் அந்தம் பரித்தியாகம் எச்சாஸ்திர சிரவணப்பொருட்டாமோ அது கிருதாந்தமாம். ஆண்டு, 'ஸம்ந்யஸ்ய ஶ்ரவணம் குர்யாத்' என்னுஞ் சுருதி வேதாந்த சாஸ்திர சிரவணப்பொருட்டுச் சர்வ கரும சந்யாசத்தைக் கூறுகின்றது. அத்தகைய வேதாந்த சாஸ்திரத்தில் அவையைந்துங் கூறப்பட்டுள்ளன;

அதாவது உலகிற் பிரசித்தமாகிய அநாத்மவடிவ அவ்வைந்தும் மயனுணர்ச்சியாலாய அத்தியாரோபத்தானே உலகர் ஆன்மரூபமாய்க் கவர்ந்துளார். அவ்வைந்தையும் ஆன்மதத்துவ ஞானத்தானே பாதஞ்செய்யும்பொருட்டுப் பரித்தியாச்சியரூபத்தால் வேதாந்த சாஸ்திரம் விளம்புகின்றதேயல்லாமல் அவற்றைக் கூறுவதிற் கருத்தின்றாம், அத்விதீய ஆன்மாவைக் கூறுவதன்கண்ணே அதற்குக் கருத்தாம். கருத்திதுவாம்:—தேகாதி யநான்மபதார்த்தங்களின் கருமரூப கருமமே அசங்க ஆன்மாவின்கண் அவித்தையானே அத்தியாரோபிதமாம் உண்மையின்றாம். இவ்வாறு வேதாந்த சாஸ்திரம் ஆன்மாவின் வாஸ்தவவடிவப் பிரதிபாதனஞ்செய்கின்றபோது சுத்த ஆன்மஞானத்தானே அத்தியாரோபித கருமம் பாதமாதலின், சர்வ கருமங்களின் அந்தஞ்செய்யப்படும். அதிஷ்டான ஆன்ம ஞானமின்றி வேறெவ்வுபாயத்தானும் கருமாந்தஞ் செய்யமுடியாதாம். இதனானே அசங்க ஆன்மாவின்கண்ணைக் கரும அசம்பந்தத்தைப் பிரதிபாதிக்கும்பொருட்டு மாயாகற்பித அநான்மபூத பஞ்சகரும காரணம் வேதாந்த சாஸ்திரத்திலனுவதிக்கப்பட்டுளதாமன்றி அதைப் பிரதிபாதிப்பதிற் கருத்தின்றாம். ஆகையால், அத்வைத ஆன்மாமாத்திரத்திற் கருத்தாம்; அக்கருத்திற் கிண்டாளியுண்டாகாததாமாதலின், ‘க்ருதாந்தே’ என்னுஞ் சிறப்பானே ஸ்ரீ பகவான் வேதாந்த சாஸ்திரத்தில் கருமாந்தத்தன்மையை முன்னருளியது பொருத்தமுடையதேயாம். இதே பொருளை ஸ்ரீ பகவான் ‘ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே’ என்னும் வசனத்தானும் கூறியருளினர். ஈண்டு அநேகமூலப் புஸ்தகங்களில் ‘வம்ஜெ ஸாநி, வம்ஜெ தாநி’ யெனவும் பாடமாகும்; ஆனால். ஸ்ரீமத் பாடியக்காரர், ஸ்ரீமது சூதனசரஸ்வதிசுவாமிகள், ஸ்ரீமந் நீலகண்ட பண்டிதர் ‘வம்ஜெ ஸாநி’ என்னும் பாடத்தையே யங்கீகரித்து விபாக்யானித்துளார். ஆகையாலீண்டும் அப்பாடமே வைக்கப்பட்டுளது. (13)

(அ-கை.) ஆண்டு, வேதாந்த சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடைய கரும பஞ்சகாரணம் ஆன்மாவிற் கர்த்தாத்தன்மை சித்திக்கும்பொருட்டுப் பரித்தியாச்சியரூபத்தானே அறியத்தக்கதென்பது முன்னருளப்பட்டது. அவ்வைந்தும் யாவையென அறியும் வேட்கை அர்ச்சுனனுக்குண்டாக ஸ்ரீ பகவான் 2-வது சுலோகத்தால் அருளிச்செய்கின்றார்:—

சு-ம். அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் ।
விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ (14)

ப-ம். 1 அதிஷ்டாநம் 2 ததா 3 கர்த்தா 6 கரணம் 4 ச 5 ப்ருதக்விதம் 8 விவிதா:
7 ச 9 ப்ருதக் 10 சேஷ்டா: 14 தைவம் 11 ச ஏவ 12 அத்ர 13 பஞ்சமம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அதிஷ்டானமும் கர்த்தாவும் நானாவகையாய கரணமும், நானாவகையாய பின்ன பின்ன சேஷ்டையும், இக்காரணங்களில் ஐந்தாவதாகிய தைவமும் ஆகிய ஐந்தும் கருமகாரணமாம். (14)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இச்சை, துவேஷம், சுகம், துக்கம், சேதனமென்பதாதி கரும அபிவியக்தியாசிரயரூப பஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியரூப தூலசரீரத்திற்கு அதிஷ்டானமெனப்பெயராம். யான் கருத்தாவென அபிமானமுடைய, ஞானசக்திப் பிரதான அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியரூபம் அகங்காரமாம். அது அந்தக்கரணம் புத்திவிஞ்ஞானம் என வழங்கப்பெறும்; அது ஆன்மாவோடு தாதாத்மிய அத்தியாசத்தான் தன்பாலிருக்கும் கர்த்திருத்துவாதிகளை ஆன்மாவின்கண்ணே ஆரோபிக்கும், அதுவே கர்த்தாவெனப்படும். ஈண்டு, ‘ததா கர்த்தா’ என்பதிலுள்ள ‘ததா’ என்பதனால் ஸ்ரீ பகவான் அக்கர்த்

தாவின்பால் முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டான ஒப்புமையைக் கூறியருளினர்; அதாவது, சரீரரூப அதிஷ்டானம் அநான்மாவும், ஆகாயாதிகளின் காரியமும், கனப்பொருள்போல மாயையாலுண்டாக்கப்படுவதுபோல; அகங்கார கர்த்தாவும் ஆம். ஈண்டிது கருத்தாம்:—தூலசரீரத்தை லோகாயுதிகன் ஆன்மரூபமாய்க் கவர்ந்தானுயினும் அன்னிய சாஸ்திர வேத்தாக்கள் அநான்மரூபமாகவே நிச்சயித்துளார்; அத்தகையதைக் கர்த்தாவில் திருஷ்டாந்தமாகக் காட்டியபோது தார்க்கிகன் ஆன்மரூபமாய்க் கவர்ந்த கர்த்தாவில் அநான்மரூபத்தன்மை நிச்சயம் மிகவுமெளிதென்பதாம். அபஞ்சீகிருதங்களினின்று முண்டாய, சப்தாதி விடய உபலப்தியின் சாதனரூப சுரோத்திராதி இந்திரியங்கரணமாம். அது பிருத்தக் விதமாம்; அதாவது, ஞானேந்திரியம் கருமேந்திரியம், மனம், புத்தி, என்னும் பன்னிருபேதத்தானே நானுவகையாம். சாஸ்திரத்தில் மனுதி நான்கையே அந்தக்கரணபேதத்தானே அறைந்திருந்தபோதினும் கரணவர்க்கத்திலிருக்கும் மனம் புத்தியிரண்டும் அகங்காரவிருத்தி விசேஷமாய்க்கொள்க, அவ்விருத்திகளோடுகூடிய அந்தக்கரணரூப அகங்காரமோ கேவலம் கர்த்தாரூபமேயாம் கரணரூபமன்றும். சேதனுபாசமோ யாண்டுந் துல்லியமேயாம் அந்தக்கரணரூப அகங்காரத்தில் கர்த்தாத்தன்மை 'விஜ்ஞாநம் யஜ்ஞந்தநுதெ' என்பதாதி சுருதிகளில் பிரசித்தமேயாம். ஈண்டு, 'காரணம் அ' என்பதிலிருக்கும் அகாரம் பூர்வ வசனத்திலிருக்கும் 'தயா' என்பதை யனுவிருத்தி செய்யும்பொருட்டாம்; அதாவது, முன்மொழிந்த சரீரரூப அதிஷ்டானம் அகங்காரரூப அதிஷ்டானம் அகங்காரரூப கர்த்தா அநான்மரூபமும் பௌதிகமும் கற்பிதமுமாவதேபோல இப்பன்னிருவகைக் காணமும் ஆம். கிரியாசக்திப் பிரதானமாகிய அபஞ்சீகிருதங்களின் காரியரூபமும், கிரியைப் பிரதானத்தன்மைரூபத்தாலும் வாயவீயத்தன்மைரூபத்தாலும் கூறப்பட்டதுமாகிய பிராணுதி சேஷ்டையாம். அவையநேகவிதமாம்; அதாவது, பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், என ஐவகையாம்; அல்லது, நாகன், கூர்மன், கிருகலன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் ஐந்தையுங் கூட்டி 10 வகையாம். நாகாதியைந்தும் பிராணுதியிலடங்குவனவேயாதலின் அநேக இடங்களில் ஐந்து பிராணனே கூறப்பட்டுளது. அச்சேஷ்டை பிருத்தக்காம்; அதாவது ஸ்தானபேதத்தானே காரியபேதத்தானே பின்னபின்னமாம். ஈண்டு, 'விவிதாபு' என்பதிலிருக்கும் அகாரம் பூர்வ வசனத்திலிருக்கும் 'தயா' என்பதின் அனுவிருத்தியின்பொருட்டாம்; அதாவது, அறைந்த அதிஷ்டானம் கர்த்தா காணம் என்னும் மூன்றும் அநான்மரூபமும் பௌதிகரூபமும், மாயாகற்பிதமும், ஆமாறு இச்சேஷ்டையுமாம். ஈண்டுச் சில அறிஞர் கூறுவதாவது:—துயிலின்கண்ணே கர்த்தாரூப அந்தக்கரணமிலயமாயினும் பிராண வியாபாரம் காணவருகின்றது, பற்பல இடங்களில் பிராணன் அந்தக்கரணத்தினும் வேறாகவே கூறப்பட்டிருக்கின்றதாதலின் இரண்டும் அத்தியந்தம் வேறென்பதே போலவாம். சில சூக்குமதரிசிகள் கூறுவதாவது:—கிரியாசக்தியையுடையதும் ஞான சக்தியையுடையதும் ஆயதோர அபஞ்சீகிருத காரியஞ்சேதனத்தைச் சீவனுக்குமுபாதியாம். அவ்வொரே காரியம். கிரியாசக்திப் பிரதானத்தானே பிராணனெனப்படும், ஞானசக்திப் பிரதானத்தானே அந்தக்கரணமெனப்படும், எனெனின், 'ஸம்ஸாரக்ஷாம் அக்ரு கவிநா தாஹஸ்ராந்தெ உத்ராம தொஹவிஷ்யாமி கவிநா ப்ரதிஷ்டிதெ ப்ரதிஷ்டாம யாஸ்யாமீதி ஸ ப்ராணமஸ்ரஜத' என்னுஞ் சுருதியில் உத்கிராந்தி கிதி ஆதிகளின் உபாதித்தன்மை பிராணனிடத்திற் கூறப்பட்டுளது. 'ஸயீ ஸவொஹம் ஸெவம் யொக்ஷீ க்ராக்ஷீ ஊதெயாம வாணிமயாயதீவ லெஹாயதீவ' என்பதாதி சுருதிகளில் அவ்வுத்கிராந்தி முதலியவற்றின் உபாதித்தன்மை அந்தக்கரணரூப உபாதியின்கண்ணே கூறப்பட்டது. ஈண்டொருகால்

பிராணன் அந்தக்கரணம் இரண்டுபாதிகட்கும் சுதந்திரமாகவே பேதம
கின் ஜீவான்மாவிற்கும் பேதவடைவாம். ஜீவபேதஞ் சித்தாந்தத்தி லெ
மின்றுமாதலின் அந்தக்கரணம் பிராணன் என்னுமிரண்டிற்கும் ஏகரூப
உத்கிராந்தியாதிகளின் உபாதித்தன்மை பொருத்தமாம். கூறிய பே
அவற்றின் ஏகபாவத்தின் கண்ணும் கிரியாசக்தி ஞான சக்திகளின்
தானே சம்பவமாம். துயிலில் ஞான சக்திபாகமிலயமாயினும் கிரியா
பாக தரிசனமோ அவற்றின் ஏகபாவத்தின்கண்ணும் முரணுருதாம்.
சிருஷ்டி இலயத்தில் சர்வ இலயமாயினும் பிராண வியாபாரமுடைய
வோனது தேகம் அன்னியானே இவன் தூங்குகின்றுனெனக் கற்பி
கின்றது. ஆகையால் இருவகைபானும் பிராணன் அந்தக்கரணம் என்
டன்பேதம் கூறல் கூடியதேயாம். முற்கூறிய சரீரரூப அதிஷ்டான, அ
ரூபகர்த்தா, 12 வகையாயகரணம், பிராணுதிரூப சேஷ்டை என்னும்
திற்கு மேலாகமுறையேயனுக் கிரகஞ்செய்யும் தேவதைகள் தைவமென
அது காரணவர்க்கத்தில் ஐந்தாவதாம்; அதாவது 5 என்னுஞ் சங்கை
ணஞ்செய்வதாம். ஈண்டு, 'தைவஂசு' என்பதிலிருக்கும் அகாரம் பூர்வ
திலிருக்கும் 'தயா' என்னும் சப்தத்தின் அனுவிருத்திசெய்யும் பொரு
அதாவது, கூறிய அதிஷ்டானுதிகளைப்போலத் தைவமும் அனுன்ம
பௌதிகமும், மாயாகற்பிதமும், ஆம். ஈண்டுக்கர்த்தாகாணம் சேஷ்டை
மூன்றற்கு மதிஷ்டானமாகிய சரீரத்திற்கோ பிருதிவி தேவதையாம்; எ
'யத்ராஸ்யபுருஷஸ்ய ம்ருதஸ்யாக்நிம் வாகப்யேதிவாதம் ப்ராணஶ்சக்ஷு
ர்ஆதித்யம் மநஶ்சந்த்ரம் திஶஃ ஶ்ரோத்ரம் ப்ருதிவீம் ஶரீரம்' என்னும் சுருதியில்
முதலியவற்றின் அதிஷ்டாதா அக்கினியாதிகளோடு சரீரத்தின் அதிஷ்
ரூபத்தானே பிருதிவிபடிக்கப்பட்டுளது. ஆகையால் இச்சுருதிப் பிர
தானே சரீர ரூப அதிஷ்டானத்தின் தேவதை பிருதிவியே யெனத்
பெறும், கர்த்தா ரூப அகங்காரத்திற்கு-ருத்ரதேவதையாம்; இது புரா
ளிற் பிரசித்தமாம். இவ்வாறு சுரோத்திராதி காணங்களின் தேவ
வெளிப்படையேயாம். சுரோத்திராதிகட்கு முறையே திக்கு, வாத அருக்
சேதா, அசுவினீ, என்னுமைந்தும் தேவதைகளாம்; வாக்காதிகை
முறையேவன்னி, இந்திரன், உபேந்திரன், மித்திரன், பிரஜாபதியென்னு
தேவதைகளாம். மனமதிகட்கு மதியும் பிருகற்பதியும் தேவதைகளாவ
ணுதி ஐந்திற்கும் முறையே, சத்யோஜாத, வாமதேவ அகோர, தத்புருஷ
தேவதைகளாவர்கள். இது புராணுதிகளில் வெளிப்படையேயாம். ஒருமை
கண்ணே தைவசப்தத்தானே தர்ம அதர்மங் கவரப்பெற்றுளது.

(அ-கை.) ஈண்டுப் பூர்வசுலோகத்தில் அவ்வதிஷ்டானுதி ஐந்து க
களின் சொருபங் கூறியருளப்பட்டது இப்போது இம்மூன்றுவது சுலோக
ஸ்ரீ பகவான் அவ்வைந்திலும் சருவகரும காரணத்தன்மையைக் கூற
கின்றூர்.

சு-ம். ஶரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நரஃ ।
15 ந்யாய்யம் வா விபரீதம் வா பஂசைதே தஸ்ய ஹேதவஃ ॥

ப-ம். 2 ஶரீரவாங்மநோபிஃ 3 யத் 7 கர்ம 8 ப்ராரபதே 1 நரஃ 4
5 வா 6 விபரீதம் வா 11 பஂச 10 ஏதே 9 தஸ்ய 12 ஹேதவஃ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இப்புருடன் சரீரவாங்மனமெனு
அறத்தையேனும் மறத்தையேனும் தொடங்குவன். அவ்வியாவற்றிற்கும்
டானுதியைந்துமே காரணரூபமாம்.

(வி-ம்.) ஆண்டுத் தேகத்தாலாயது வாக்காலாயது மனத்தாலாயது என விதி நிஷேதரூப 3 வகையே கருமம் தருமசாஸ்திரத்திற் பிரசித்தமாம். 'த்ரிவித கர்ம ஸம்ஸாரிணாம்' என்னும் வசனத்தால் அக்ஷபாதமுனிவரும் 3 வகையே கருமத்தைக் கூறியுள்ளாராதலின் பிரதானத்திற் கருத்தைவைத்து ஸ்ரீ பகவான் கூறியுள்ளார். அதிகாரியானவன் சரீரத்தாலேனும் வாக்காலேனும் மனத்தாலேனும் நியாயரூப கருமத்தையேனும் விபரீதரூபகருமத்தையேனும் தொடங்குவன். எல்லாக்கருமங்கட்குமே யுரைத்த ஐந்துமேகாரணமாம். ஆண்டுச்சுருதி மிருதிரூப சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திராதி தருமம் நியாயமெனப்படும். அவற்றால் நிஷேதிக்கப்பட்ட ஹிம்சாதியதருமம் விபரீதமெனப்படும். ஜீவன ஹேது பூதமாகிய உசுவாசம், நிசுவாசம், நிமேஷம், உன்மேஷம், கூ்தம், ஜிரும்பணம், என்பதாதி இயற்கையாய கருமங்களும் பிறவுமாகியவிதி நிஷேத சருவகருமங்களும் தருமா தருமங்களின் காரிய ரூபங்களேயாமாதலின் அவையாவுமே நியாயம் விபரீதம் என்னுமிரண்டிலேயடங்கும். ஆகையால், ஸ்ரீ பகவானது திருவாக்கில் குறைவுண்டாகமாட்டாது. சாத்திரத்திற்கும் சாத்திரங்கூறிய கருமத்திற்கும் மனுடனேயதிகாரி இப்பொருளேயுணர்த்துமப்பொருட்டு ஸ்ரீபகவான் மனுஷ்யவாசக நர: என்னும் சப்தத்தைக்கூறியருளினார். ஒருடீகையின்கண்ணே இச்சுலோகத்திற்கு இப்பொருள் கூறப்பட்டுளது :— சரீராதிகளானே தொடங்கிய கருமம்:என்னும் வசனத்தானே பின்னர் அச்சருவ கருமங்களின் அதிஷ்டானாதி ஐந்து காரணமாம் எனக்கூறன்மிகமுரணும்? ஈண்டு, 'ஶரீரம்' என்னும் பதத்தானே அதிஷ்டானத்தைக்கவர்க. 'நர:' என்னும் பதத்தானே கர்த்தாவைக்கொள்க. 'வாங்மந:' என்னும் பதத்தானே, கரணங்கவர்க. 'ப்ராரபதே' என்னும் பதத்தானே சேஷ்டையைக்கவர்க. 'ந்யாய்யம்வாவிபரீதம்வா' என்னும் வசனத்தானே தரும அதருமரூபதைவத்தைக்கொள்க. சருவகருமங்களினும் அதிஷ்டானாதியைந்து காரணங்களினுபயோகம் சமானமேயாம். இவ்வைந்துமிலாது எக்கருமமும் துணியப்பெறுதாமாயினும்; சுருதியாதிகளில் விதிநிஷேதரூப சாரீரவாசிகமானசிகமென்னும் மூவகையே கருமம் பிரசித்தமாமாதலின் இதுசாரீரம், என்பதாதியாகக்கூறுதல் அவ்வத்தேகாதிகளின் பிரதானத்தன்மையை யபேக்ஷித்தாமன்றியக்கூற்று அசரீராதி கருமங்களில் அதிஷ்டானாதிகளின் ஹேதுதையை நீக்கமாட்டாதாமென்றறிக; ஆகையால் சிறிதுமாத்திரையும் ஈண்டுமுரணின்றாம். (15)

(அ-கை.) ஆண்டு முன்மொழிந்த அதிஷ்டானாதிகட்கே சர்வகருமங்களின் கருத்தாத்தன்மைகூடலின், அசங்க ஆன்மாவிற்குக் கருமங்களின் கருத்தாத்தன்மையின்றாம். இவ்வாறு ஆன்மாவின்கண்ணே அகர்த்தாத்தன்மை ஞானமும் அதிஷ்டானாதிகளிற் கர்த்தாத்தன்மை ஞானமுமே அவ்வைந்தின் நிரூபணபலமாம்; அப்பயனே யிப்போது ஸ்ரீ பகவான் ஆன்மாவைக்கர்த்தாவெனவெண்ணும் மூடரையிகழும் வாயிலாக இந்நான்காவது சுலோகத்தால் கூறியருளுகின்றார் :—

சு-ம். தத்ரைவம் ஸதி கர்த்தாரமாத்மாநம் கேவலம் து ய: ।
வஶ்யத்யக்ருதபுத்தித்வாந்ந ஸ வஶ்யதி துர்மதி: ॥ (16)

ப-ம். 1 தத்ர 2 ஏவம்ஸதி 7 கர்த்தாரம் 6 ஆத்மாநம் 4 கேவலம் 5 து 3 ய:
8 வஶ்யதி 11 அக்ருதபுத்தித்வாத் 12 ந 9 ஸ: 13 வஶ்யதி 10 துர்மதி:,

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அச்சர்வ கருமங்களிலும் அதிஷ்டானாதிகளால் ஜன்யத்தன்மை யிருந்தபோதினும் எம் மூடன் அசங்க உதாசீனரூபமேயாகிய ஆன்மாவைக்கர்த்தாரூபமாய்க்காண்பனோ, அத்துர்மதி சாஸ்திரஜன்னிய விவேக புத்தியற்றவனாதலிற்காணான். (16)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முற்கூறிய தருமாதருமரூப சர்வ கருமங்களி
னும்கூறிய அதிஷ்டானாதிகளானே ஜன்யத்தன்மை சித்தமாயினும் உண்மையா
யசங்க உதாசினரூபமேயாய ஆன்மாவை யெம்மூடன் கருத்தாவாய்க்காண்கின்
றானே; அதாவது, சர்வஜடப்பிரபஞ்சத்தை யொளிர்விப்பதும், இருப்புவிளக்க
வடிவமும், சுவப்பிரகாச பரமானந்தகனமும், பாதமற்றதும், அசங்க உதாசின
மும், அகர்த்தாவும், அவிக்கிரியமும், அத்விதியமும், ஆகியுண்மையாயிருப்பி
னும் ஆன்மா அவித்தையினானே மொழிந்த அதிஷ்டானாதிகளில் பிரதிபிம்பித
மாம்; சூரியனீரில் பிரதிபிம்பித்தலேபோலும். நீர்முதலியவற்றை யொளிர்வி
க்கும் சூரியன் அவற்றினின்றும் வேறாயினும் ஜலத்தோடு சூரியனுக்குத் தாதா
மிய பாவத்தைக்கற்பித்து மூடன் ஜலத்தின் சலனத்தால் சூரியன் சலிப்பதேயா
எண்ணுகின்றதேபோல அதிஷ்டானாதிகளை யொளிர்விக்கும் அசங்க அத்விதீ
ஆன்மாவிற்கு அதிஷ்டானாதிகளோடு தாதாத்மிய பாவத்தைக்கற்பித்து அவ
றின் கருமத்தை ஆன்மாவின் கண்ணாரோபித்து யானே கருத்தன் எனச் சர்
சாக்ஷி ரூபமாய் ஆன்மாவையும் கிரியைக்காசிரயமாகக் காண்பன் கருத்தி
வாம்:—இரஜ்ஜுவினுண்மை வடிவத்தையுணராமல் சர்ப்பமாய்க் காண்பதே
போல ஆன்மாவினுண்மையாய அசங்க அகர்த்திருரூபத்தைக்காணாமல் அவித்தை
யினானே அதனைத் தேகாதி கருமாசிரயரூபமாய்க்காணும் மயங்கியோன் இவ்வா
ஆன்மாவைக்காணினும் கண்டிலன். இரஜ்ஜுவை சர்ப்பரூபமாய்க் காணினு
மயங்கியோன் கண்டிலாததேபோல, உண்மையா யசங்க உதாசின அகர்த்தா
மாவைகர்த்தாரூபமாய்க்காணினும் மயங்கியோன் கண்டிலன். மூடன் மயக்க
தானேஆன்மாவை விபரீதமாகவே காண்பன் உண்மைவடிவத்தைக் காணான் எ
பதிலேதுவென்னைகொலாமென அர்ச்சுனனுக்குச்சங்கை யுண்டாக ஸ்ரீ பகவா
அவ்விபரீத தரிசனத்தின்கண் ணேதுவைக் கூறியருளுகின்றார். 'அக்ருத பு
த்வாத்' என; குருசாஸ்திர உபதேசத்தானே யுண்டாகாத விவேகமதி யெவனு
கோ அவன் அகிருத புத்தியாம், அத்தகையனாதலினவன் ஆன்மாவை விபரீ
மாகவேகாண்பன்; அதாவது, உண்மையா யசங்க உதாசின அகர்த்தாரூபமா
னும் ஆன்மாவைப் பிராந்தன் கர்த்தாரூபமாகவே காண்பன். கருத்திதுவாம்:-
இரஜ்ஜுவினுண்மைவடிவம் சாக்ஷாத்காரமாகாதவரை சர்ப்பபயமே யெவ்வுபாய
தானும் நீக்கிக்கொள்ள முடியாததேபோலச் சத்தியஞான அநந்த அகர்த்
அபோக்தா பரமானந்த ரூபவத்தையற்ற அசங்கவுதாசீனப் பிரஹ்மம் யானென
பிரஹ்மசாக்ஷாத்காரம் குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாகாதவரை அக்க
திருத்துவமயமே எவ்வுபாயத்தானேனும் நீக்கமுடியாதாம். குருசமீபஞ்சென்
வேதாந்த வாக்கியத்தை விசாரித்து இங்ஙன் பிரஹ்மான்ம சாக்ஷாத்காரத்தை
னுண்டாக்கிக்கொள்ளவில்லை? என அர்ச்சுனனுக்காசங்கை யுண்டாக ஸ்ரீ பகவா
அதன்கண்ணேதுவை யருளுகின்றார். 'துர்மதி:' என விவேகத்தின்றடையாகி
பாவகருமங்களானே மலினாந்தக்கரணமுடையவன் றுர்மதியாவனாதலினானே பி
ந்தன் குருவையடைந்து சிரவணஞ்செய்திலன். கருத்திதுவாம்:—பாவ கருமங்க
ளானே அசுத்த புத்தியையுடையவனாதலின் நித்தியா நித்தியாவத்து விவேகா
களின்மையினானே பிரஹ்மான்ம ஞானத்திற் கயோக்கியனாதலின் அவித்தையா
மயங்கியோன் அகர்த்தாரூபமாய ஆன்மாவையும் கர்த்தாரூபமாய்க் கற்பித்து
கேவலரூபமாய ஆன்மாவை அகேவலரூபமாய்க் கற்பித்தும், கருமகருத்தா
மாகிய அதிஷ்டானாதிகளில் தாதாத்மிய அபிமானத்தானே கருமங்களைத் தி
கஞ்செய்வதில் அசமர்த்தனாகியதனானே சம்சாரி கருமத்தினதிகாரி தேகபிருத
அகிருத புத்தியென்பதாய பல பெயர்களையுற்று எல்லாவகையானும் ஜ
மாண அனடவானே அநிஷ்ட இஷ்ட மிசிரமென்னும் மூவகையாய கரும ப
லைத்தயே அனுபவிப்பன். இத்தகையானே தேகாதிகளினும் வேறாகிய ஆன்

வையே கேவலம் கர்த்தாவாகக்காணும் தார்க்கிகனும் அகிருத புத்தியே யென்றுணர்கவென்னும் பொருளு முணர்த்தப்பட்டது. ஒருவாதியோ 'தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மாநம் கேவலந்து ய:' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் செய்வன்: ஆன்மாக் கேவலம் கருத்தாவன்றாம்; மற்றோ முன்மொழிந்த அதிஷ்டானாதிகளோடு சேர்ந்த ஆன்மாக்கர்த்தாவாம். இவ்வாறுண்மையா யதிஷ்டானாதிகளோடு கூடிக்கர்த்தாத் தன்மையையடைவுற்ற ஆன்மாவைக்கேவலம் கர்த்தாவாகக்காண்பவன்; அதாவது அதிஷ்டானாதிகளின் சம்பந்தமின்றிக் கேவலம் ஏக ஆன்மாவையே கர்த்தாவாகக்காண்பவன்; துர்மதியாவன். இவ்வாறாயபொருள் (கேவலம்) என்னும் சப்தப்பிரயோகத்தானே சித்தமாம். இவ்வாதிகளின்பொருள் நல்லதல்லவாம்; ஏனெனின் சர்வக் கிரியைகளுமற்ற அசங்க ஆன்மாவிற்கு அதிஷ்டானாதிகளோடு சேர்க்கையே கூடாதாம். ஜலசூரியனைப்போல அவற்றோடு அசங்க ஆன்மாவிற்கு ஆவித்யகமாகிய கலப்புமையங்கீகரிக்கினோ அவ்வாறு சேர்தலான் ஆன்மாவின்கண்ணே அக்கர்த்திருத்துவமும் அதிஷ்டானாதிகள் யாவும் ஆவித்யகமேயாம். இவ்வாறு கற்பித அவற்றோடு ஆன்மாவின் வாஸ்தவ சம்பந்தத்தன்மை சம்பவியாதாம் (கேவலம்) என்னும் சப்தமோ இயற்கையானே சித்தித்த ஆன்மாவின் அசங்க அத்விதிய வடிவத்தை அனுவாதஞ்செய்கின்றது; ஆன்மாவைக் கர்த்தாவென வங்கீகரிப்பவன்பால் துர்மதித்தன்மையையுணர்த்துவானும். ஆகையால் கேவலம் என்னும் சப்தத்தானே வாதியினர்த்தம் சித்தியாதாம். (16)

(அ-கை.) அண்டு, 'பஞ்சைதாநி மஹாபாஹோ' என்பதாதி 4 சுலோகங்களால் 'தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மாநம் கேவலந்து ய: பஶ்யத்யக்ருதபுத்தித்வாத்' என முற்கூறியருளிய சுலோகத்தின் 3 பாதங்கள் வியாக்கியானிக்கப்பட்டது. இப்போது 'ந ஸ பஶ்யதி துர்மதி:' என்னும் நான்காவது பாதத்தை ஸ்ரீ பகவான் ஒரு சுலோகத்தானே வியாக்கியானித்தருளுகின்றார்:—

18-17

சு-ம். யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமாம்ல்லோகாந்ந ஹந்தி ந நிபத்யதே ॥ (17)

ப-ம். 1 யஸ்ய 4 ந 2 அஹங்க்ருத: 3 பாவ: 6 புத்தி: 5 யஸ்ய 7 ந 8 லிப்யதே 12 ஹத்வா 13 அபி 9 ஸ: 10 இமாந் 11 லோகாந் 14 ந 15 ஹந்தி 16 ந 17 நிபத்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வறிஞனுக்கு யான் கருத்தாவென்னும் விருத்தியுண்டாகவில்லையோ, மதிபற்றுறுவதில்லையோ அவ்வறிஞனிவ்வுலகங்களைக் கொன்றும் கொல்வதில்லை பந்திக்கப்படவுமாட்டான். (17)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன் சுலோகத்தில் கூறிய துர்மதியினும் முற்றினும் விலக்ஷண அதிகாரி பூர்வ புண்ணிய கருமத்தானே விவேக விரோதியாய பாவ கருமங்களை யழித்து விவேக வைராக்கிய சமாதிஷட்சம்பத்து முமுக்ஷுத்தையென்னும் நான்கு சாதனங்களையடைந்து குருசாஸ்திர உபதேசத்தானே உண்டாய அகர்த்தா, அபோக்தா, சுவப்பிரகாச, பரமானந்த, அத்விதியப் பிரஹ்மம் யான் என்னும் பிரஹ்ம சாக்ஷாத்கார முற்றவனுக்கு அகங்காரபாவம் நஷ்டமாம்; அதாவது தத்வ சாக்ஷாத்காரத்தானே காரியசகித அஞ்ஞானம் பாதிதமாகவே யான் கருத்தாவென்னும் விருத்தி ஒருகாலு முண்டாகாதாம். அல்லது, 'யஸ்ய நாஹங்க்ருதோ பாவ:' என்பதற்கு இவ்வேறு பொருள்கொள்க:— தத்துவ வேத்தாவி

னுடைய பாவம், அதாவது சற்பாவம், அகங்கிருதம், அதாவது அகம் எனக்கூறல் தகுதியல்லவாம்; என்னே, தத்துவ சாக்ஷாத்காரத்தானே யகங்காரம் பாதமாகவே தத்துவ வேத்தாவின் சுத்த சொரூபமாத்திரமே எஞ்சியதாய் நிற்கும். அதன்கண்ணே மனவாணியின் விடயத்தன்மையில்லையாம். அல்லது, 'யஸ்ய நாஹங்க்ருதோ பாவ:' என்பதற்கு இம்மூன்றுவது பொருள்கொள்க: தத்வவேத்தாவிற்கு அகங்கிருதம் அதாவது அகங்காரத்தன்மையாகிய தாதாத்மிய அத்தியாசமின்றும்; ஏனெனின், தத்வ வேத்தாவின்றுதாத்மிய அத்தியாசம் விவேகத்தால் நீங்கி விட்டதாகும். விவகார காலத்தில் தத்துவ வேத்தாவின் கண்ணும் பாதிதானுவிருத்தியானே கருத்தாத்தன்மை தோற்றுமாயினும் இவ்வாறுராய்ந்து தன்னுன்மாவின்கண்ணே கர்த்தாத்தன்மையை யெண்ணுகின்றுனில்லை; மற்றே, முன்மொழிந்த அதிஷ்டானுதிகளிலே கர்த்தாத்தன்மையை யெண்ணுவன். அவ்வாராய்ச்சி:—சர்வான்ம ரூப என்னிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட அதிஷ்டானுதிகளைக் கற்பித சம்பந்தத்தானே சுவப்பிரகாச அசங்கசைதன்யனுகிய யானே யொளிர்விக்கின்றேன். அதிஷ்டானுதிகளே சருவகருமங்கட்குங் கருத்தாவாம் அசங்கனுகிய யான் ஒருகாலும் கருத்தாவல்லன், யானக்கருத்தாவிற்கும் வியாபாரங்கட்கும் சாக்ஷிபூதன், கிரியாசக்தியையுடைய பிராணரூப உபாதியும், ஞானசக்தியையுடைய அந்தக்காணரூப உபாதியும், அற்றவன்; சுத்தன், சர்வ காரியகாரண சம்பந்தமற்றவன், கூடஸ்த நித்தியன், சர்வ துவைதமற்றவன், ஜன்மமாணுதி சர்வ விகாரங்களுமற்றவன், இத்தகையவெனது சொரூபத்தை, 'அஸங்கோ ஹ்யயம் புருஷ: ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணஶ்ச ஸ்வப்ரகாஶோ ஹ்யஜநா: ப்ரஹ்மாஹ்ய க்ஷராக: ஸத: ஸத: ஸஜ ஜ்யோதிஸ்ஸ்வரூப: ப்ராவ: ஸர்வஸங்கோ த்ருஷ்டா த்வைத: ஸஜோ நித்ய: ஶாஶ்வதோ(அ)யம் புராண: நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜனம்' என்பதாதி சுருதிகளும் பிரதிபாதிக்கின்றன. இவ்வாறுய வெனது சொரூபத்தை, 'அவிகார்யோ(அ)யமுச்யதே ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வஶ: அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே தத்வவித்து ந ஸஜ்ஜதே ஶரீரஸ்தோ(அ)பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே' என்பதாதி ஸ்மிருதிகளும் பிரதிபாதிக்கின்றனவாதலின் அசங்க ஆன்மாவாகிய யான் கருமங்களின் கருத்தாவல்லேன் என ஆராய்ந்து தத்துவவேத்தா அசங்க ஆன்மாவைக்கருத்தாவென வெண்ணுது கூறிய அதிஷ்டானுதிகளையே கருத்தாவென வெண்ணுவன். இதனுனே அவனது மதிபற்றுறுவதில்லை; அதாவது தத்துவ வேத்தாவின் மதி அனுசயவாலியாகாதாம். இக்கருமத்தை யான் செய்கின்றேன் இதன் பயனை யானனுபவிப்பேன் என்னு மனுசந்தானம் கர்த்தா போக்தாத்தன்மையின் வாசனை வடிவ நிமித்தத்தானே ஜன்னியமாம். அவ்வனுசந்தான ரூபபற்றிற்கு அநுசயமெனப்பெயராம். அது புண்ணிய கருமத்திலே ஹர்ஷரூபமாம், பாவகருமத்தில் பச்சாத்தாபரூபமாம். என்னுமிருவகை இலயத்தால் தத்துவவேத்தாவின் புத்தி பொருந்தாதாம்; ஏனெனின், அகர்த்தா அபோக்தாவாகிய ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தானேகர்த்திருத்வபோக்திருத்வாதிகள் நீங்கிவிட்டனவாமாதலின் அவன் மதிபற்றுறுதாமென்க. இவ்வார்த்தை சுருதியின்கண்ணும் கூறப்பட்டுளது:—'நைநம் க்ருதாக்ருதே தபத: ஸஏஷ நித்யோ மஹிமா ப்ராஹ்மணஸ்ய ந வர்த்ததே கர்மணா நோ கநீயாந் தஸ்யைவ ஸ்யாத் பதவித்தம் விதித்வா ந லிப்யதே கர்மணா பாபகேந யதா புஷ்கரபலாஶ ஆபோ ந ஶ்லிஷ்யந்த ஏவ மேவம் விதி பாபகர்ம ந ஶ்லிஷ்யதே.'

(பொ-ள்.) அஞ்ஞானியை, செய்தபாவமும் செய்யாத புண்ணியமும்தாபப் படுத்துவதேபோலப் பிரஹ்மவேத்தாவாய அறிஞன் செய்தபாவமும் செய்யாத புண்ணியமும் தபிப்பியாவாம், இப்பிரஹ்மவேத்தாவிற்கு மகாப்பிரபாவமுளது, புண்ணியத்தானே மகிழான், பாவத்தானே பரிதவியான், யான் பிரஹ்மரூபனெனப் பிரத்தியக்கபின்னப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத் கரித்துத் தத்துவவேத்தா புண்ணியத்தோடு பற்றுறான், நீரிலுறுந் தாமரையிலையை நீர்பற்றுறுதலே போலத் தத்துவ வேத்தாவைப் புண்ணிய பாவம் பற்றுறாதாம். இத்துணையானே இப்பொருள் துணியப்பெறும்:—அகங்கிருத பாவமில்லாதவனும், மதியிற் பற்றுறு தவனுமாகிய தத்துவ வேத்தாவானவன் தூர்மதியினும் விலக்ஷண சுமதியாவன். பரமார்த்த தரிசியாய அவன் ஆன்மாவைக் கேவலம் அகர்த்தாவாகவே காண்பன் ஒருகாலும் கர்த்தாவென வெண்ணான். அவனுக்குக் கர்த்திருத்துவாதியபிமான மின்மையினானே அநிஷ்ட இஷ்டமிசிரமென்னும் மூவகைக் கருமபலத்தையொரு காலுமடையான் இத்துணையே இக்கீதா சாஸ்திரத்தின் பொருளாம். இப்போது ஸ்ரீ பகவான் தத்துவவேத்தாவைத் துதிக்கும் பொருட்டு மொழிந்த அகங்கார அபாவத்தையும் மதிப்பற்றின்மையையும் கூறியருளுகின்றார். 'ஹகூாவிவ உஊ ஞொகாநு ஹஂதிநநிபெயதெ' என. தத்துவ வேத்தா சர்வப் பிராணிகளையும் கொன்றும் கொல்லான்; அதாவது, அசங்க ஆத்மா எப்போது மகர்த்தாவாவேன் என அகர்த்தா வடிவத்தின் சாக்ஷாத் காரத்தானே ஹனனரூபக்கிரியையின் கர்த்தாவாகான், இதனானே பந்திக்கப்படமாட்டான்; அதாவது, ஹநநரூபக் கிரியையின் காரியரூப அதருமபலத்தோடும் சம்பந்தத்தையடையான். ஈண்டு, 'யஸ்ரூநாஹஂ கூரதொஹாவஃ' என்னும் வசனப்பொருட்டு 'நஹஂதி' என்பதன் பலரூபமாம். 'ஶுஜிய-உஶஹ நவிவதெ' என்னும் வசனார்த்தத்திற்கோ 'நநிபெயதெ' என்பதன்பொருள் பலரூபமாம். ஈண்டு, 'ஹகூாவி.....நநிபெயதெ' என்னும் வசனத்தானே ஸ்ரீ பகவான்றத்துவ சாக்ஷாத்காரத்தின் மகத்துவத்தைத் திருவாய்மலர்ந்தருளினரேயன்றித் தத்துவவேத்தாவானவன் சர்வப்பிராணிகளையும் கொல்வன் என்பதில் திருக்கருத்தின்றாம். சர்வான்மதரிசியினிடத்தில் சர்வப் பிராணிகளின் ஹனனஞ்செய்தல் சம்பவியாதாம். அவனிவ்வுலகங்களைக் கொன்றுமென்பதனானே தத்துவ வேத்தாவின்பால் ஹனனக்கிரியையின் கர்த்தாத்தன்மைகூறியது இலௌகிக திருஷ்டியானேயாம். கொல்லான் என்பதனானே அவன் பால்கர்த்திருத்வ நிடேதஞ்செய்யப்பட்டது சாஸ்திர திருஷ்டியினானேயாம். ஆகையால் கொன்றுங் கொல்லான் என்னுமிரண்டும் முரணுவாம். இந்நூலினுதியில் 'நாயஂ ஹஂதிநஹநதெ' என்பதனானே ஆன்மாவின்கண்ணெல்லாக் கருமங்களின்றீண்டாமை பதிஞ்ஞை செய்தருளப்பட்டு 'நஜாயதெ ஶ்ரியதெ' என்பதாதி ஹேதுரூபவசனங்களால் பதிஞ்ஞைப்பொருளைத் திரப்படுத்தியருளி 'வெஷாவி நாஶிநஂ நிதஃ' என்பதாதிகளானே அறிஞனுக்குச் சர்வ கருமங்களின் அதிகார நீக்கம் சுருக்கமாயருளப்பட்டது. அவ்வதிகார நீக்கமே இடை இடையே பிரசங்கத்தை யனுசரித்து வித்தரித்து விளம்பியருளப்பட்டது. இத்துணையே கீதாசாஸ்திரத்தின் பொருளாம். இவ்வாறு சாஸ்திரார்த்தங்களின் ஒருமையுடைமையைக் காண்பித்தருளற் பொருட்டே 'நஹஂதி நநிபெயதெ' என்னும் வசனத்தானே சர்வ கரும அதிகார நீக்கத்தை உபசங்காரஞ் செய்தருளப்பட்டது. ஆகையால் இப்பொருளாயது:—அவித்தையாற் கற்பிக்கப்பட்ட அதிஷ்டானாதி 5 அனான்ம பதார்த்தங்களானே செய்யப்பட்டவிதி நிடேதகருமங்களெல்லாம் அகம் பிரஹ்மாஸ்மியென்னும் ஆத்மவித்தையினானே மூலசகிதமாய்க்கெடுமாதலினானே பரமார்த்த சந்யாசிகளை அநிஷ்டாதி 3 வகைக் கரும பலமடையாதாம், என வருளியது பொருத்தமுடையதேயாம். அகர்த்தாவாதி

யாய் ஆன்மாவின் சாக்ஷாத்காரமே பரமார்த்த சந்யாசமாம். இது ஜனகன் அஜ
சத்துருமுதலிய தத்துவவேத்தாக்களாகிய கிருகஸ்தர்களிடத்து மிருந்த
ஆகையாலவர்களும் பரமார்த்த சந்யாசமுடையவரேயாவர். ஜனகாதி கிருகஸ
ஞானிகளிடத்தில் அவரது வருணாசிரம கருமங்காணவந்ததாயினும் தத்
வேத்தாக்களாகிய பரமஹம்ச சந்யாசியினிடத்தில் நுகர்வினைவயத்தால், ப
தானுவிருத்தியானுதல் அன்னியாது கற்பனையினானுதல் பிக்ஷாடனாதிகள் பிர
யாவதேபோலப் பிரபல நுகர்வினைவயத்தால் அடியிருவகையினால் ஜனகாதிக
டத்தில் கருமங்களின்றரிசனம் முராணின்றும். இதனானே ஆன்மஞான பல
வித்வத் சந்யாசஞ்சொல்லப்படும். சாதன பூதவிவிதிஷா சந்யாசமோ முதலிவ
வாறுண்டாகாதாயினும் ஞானத்தின்பின் இவ்வாறேயாம். (

(அ-கை.) ஆண்டுப் பூர்வ மதிஷ்டானாதி ஐந்தும் சர்வ கருமங்களின் ஹே
வெனக் கூறியருளி ஆன்மாவிற்குச் சர்வ கருமங்களின் பரிசமின்மை கூறிய
ளப்பட்டது; இப்போது முன்னருளிய பொருளையே ஞானஞேயாதிப் பிரக்கிரி
யாகவருணிப்பதுடன் திரைகுண்யபேத வியாக்யானத்தானே முன்னினும் வ
க்ஷண முறையாக வருணித்தருளுகின்றார் :—

சு-ம். ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா ।
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித꞉ கர்மஸங்க்ரஹ꞉ ॥ (

ப-ம். 1 ஜ்ஞாநம் 2 ஜ்ஞேயம் 3 பரிஜ்ஞாதா 4 த்ரிவிதா 5 கர்மசோதநா 6 கரண
7 கர்ம 8 கர்த்தா 9 இதி 10 த்ரிவித꞉ 11 கர்மஸங்க்ரஹ꞉

(அ-ம்.) ஹே அர்ச்சுன! ஞானஞேய பரிஞாதாவென்னும் மூன்றும்
மப் பிரவர்த்தகங்களாம்; காணம் கர்மங்கர்த்தா என்னும் மூன்றும் கர்மாசிர
களாம். (

(வி-ம்.) ஹே அர்ச்சுன! வஸ்துவின் உண்மைவடிவத்தை யொளிர்விப்ப
ஞானமாம்; அதாவது காட்சியாதிப் பிரமாணங்களானே ஜன்னிய மாயகுட
வியவற்றின் பிரகாசவடிவக் கிரியை ஞானமென்பதாம். ஞானரூபக்கிரியைக்
கர்மபூதமாய கடாதிகள் ஞேயங்களாம். ஞானரூபக்கிரியைக்கு ஆசிரயபூத
அந்தக்கரணரூப உபாதியானே யினிது கற்பிக்கப்பட்டதும், ஆகிய போக்தா
ஞாதாவாம். அம்மூன்றும் சமுச்சய பாவத்தையடைந்தே இஷ்டா நிஷ்டரூப
மங்களைத் தொடங்கும். சமுச்சயமாகாமல் எக்கருமத் தொடக்கமுமின்றாம்; ஏ
னின், ஞேயஞாதாக்களிருந்தபோதினும் ஞானமிலதாயவழி பிரவிருத்தி யுண்
காதாமாதலின் பிரவிருத்தியின்கண்ணே அந்த ஞானத்திற்கு அவசியம் ஹே
தன்மையை யங்கீகரிக்கவேண்டும். ஞான ஞாதாக்களிருந்தபோதினும்
காலத்தானே ஞேயந்தடையாயின் பிரவிருத்தி யாகாதாதலின் அதன்கண் ஞே
தையுமின்றியமையாது ஹேதுவெனக் கொள்ளவேண்டும். துயிலில் சமஸ்கார
ஞானஞேயங்களிருந்தபோதினும் ஞாதாவின்மையின் பிரவிருத்தி யுண்டா
தாதலின், அதன்கண் ஞானத்தையும் ஹேதுவாக அவசியமங்கீகரிக்கவே
டும். ஆகையான் மூன்றும் ஒன்று சேர்ந்தே சர்வ கருமங்களையுந் தொடங்
இப்பொருளை ஸ்ரீ பகவான் 'த்ரிவிதா கர்மசோதநா' என வருளின
சோதனையென்பது பிரவர்த்தகமாம்; அதாவது, ஞானாதி மூன்று மொரு
சேர்ந்தே கருமப் பிரவர்த்தகமாம். பூர்வமீமாம்சையின்கண்ணே கிரியை
பிரவர்த்தக வசனத்தையே சோதனையெனப்படுமாயினும், ஈண்டு ஞானாதிக
டத்தில் வசனரூபத்தன்மை சம்பவியாதாமாதலின் வசனத்தன்மையைப் பரி

யாகித்துக் கிரியையின் பிரவர்த்தக மாத்திரத்தில் சோதனை சப்தத்திற்கு இலக்கணைகொள்க. கொளவே இப்பொருள் துணியப்பெறும் :—அனான்ம பதார்த்தத்தின்கண்ணே பிரேரணீயத்தன்மையும் பிரேரகத்தன்மையுமாம். அசங்க ஆன்மாவின்கண்ணே அவ்விரண்டுமின்றாம். இத்துணையானே 'ஜ்ஞாநம்....பரிஜ்ஞாதா' என்னும் பூர்வார்த்தப்பொருளாயது. இப்போது 'கரணம்....ஸங்க்ரஹ:' என்னு முத்தரார்த்தப்பொருள் வருணிக்கப்படும்; எதன் வியாபாரத்தின்பின்னர்க் கிரியையின் சித்தியாமோ அது கரணமாம். அது பாகியாந்தர பேதத்தாலிருவகையாம். சுரோத்திராதிகளோ பாகிய கரணமாம்; மனாதிகளோ அந்தக்கரணமாம். கர்த்தாவின் கிரியையால் இசையத்தக்க இஷ்டகாரகம் கருமமாம். அது உற்பாத்தியம், ஆப்பியம், சம்ஸ்காரியம், விகார்யம் என்னும் வேற்றுமையானே நான்குவகையாம். அவற்றுள் உற்பத்திக்கு யோக்கியமாயது உற்பாத்தியமாம்; அல்லது, யாது முன்னிராது பின்னுண்டாகின்றதோ அது உற்பாத்தியமாம். பூர்வம் சித்தமாயே பிராப்தமாவது ஆப்பியமாம். குணங்கொள்ளன் மலந்தள்ளல் வடிவ சமஸ்காரயோக்கியமாயது சமஸ்கார்யமாம். பூர்வ அவஸ்தையைப் பரித்தியாகித்து அவஸ்தாந்தர அடைவுவிகாரமாம், அதை யடைவது விகார்யமாம். இதர காரகங்களால் அப்பிரயோஜ்யமும், சகல காரகங்களின் பிரயோஜகமாயதும் கர்த்தாவாம். அஃதீண்டு சித்த சித்தின் கிரந்திரூபமாய்க்கொள்க. காணங்கருமம் கருத்தா மூன்றுமே பரஸ்பரம் சமுச்சய பாவத்தையடைந்து கரும சங்கிரகமாம்; அதாவது கருமங்களினாசிரயரூபமும். காணங் கர்மங் கர்த்தாவென்னும் வசனத்தினீற்றிவிருக்கும் என்னு மென்னுஞ் சப்தத்தானே சம்பிரதானம், அபாதானம் அதிகரணம் என்னு மூன்றுகாரகங்கட்கும் காணாதி மூன்றின்மேல உள்ளடக்கமெனக்கொள்க. நன்மேன்மை மதியானே எவர்க்கு வத்தியப்படுமோ அது சம்பிரதானமாம்; வேதவேத்தாவாகிய மறையவனுக்குக் கோக்கொடுத்தல்போலாம், மறையவன் சம்பிரதானமாம். சம்யோகவாயிலாய் விபாகத்தில் அவதியாதோ அஃதே அபாதானமாம்; இமாசலத்தினின்றும் ஸ்ரீ கங்காதேவி யிறங்குதல்போலவாம், பர்வதம் அபாதான காரகமாம். ஆதாரமென்பது அதிகரணமாம். இவ்வாறு கருத்தா, கருமம், காணம், சம்பிரதானம், அபாதானம், அதிகாணம், என ஆறுகாரகங்கள் வியாகரணத்திற் பிரசித்தமாம். சம்பிரதானாதி மூன்றையும் கர்த்தாதிகளிலடக்கி ஸ்ரீ பகவான் கர்த்தாதி மூன்றைக் கூறியருளினர். இவ்வாறு மூவகைத்தகைமையடைந்த காரகஷட்கமே சர்வக்கிரியைகளினாசிரயமாம். கூடஸ்த ஆன்மா எக்கிரியைக்கு மாசிரயமாகாதாம். ஆகையால் இச்சுலோகத்தாலிது துணியப்பெறும், யாது யாது கருமப்பிரேரகமாமோ, ஆசிரயமாமோ அவையாவுமே காரகரூபமேயாம், திரிகுணான்மகமேயாம். ஆன்மாவோ காரக பாவமற்றதும் முக்குணங்களற்றதுமாமாதலின், சர்வ கருமங்களின் பரிசமற்றதாம். (18)

(அ-கை.) ஆண்டுப் பூர்வ சுலோகத்தின்கண்ணே ஞானாதி காணாதி இருமும்மையருளப்பட்டது. இப்போது, அவற்றில் திரிகுணரூபத்தன்மை யவசியம் கூறத்தக்கதாமாதலின் ஸ்ரீ பகவான் அவற்றைத் தொகுத்துக் கூறியருளியவற்றில் திரிகுணரூபத்தன்மையின் பதிஞ்ஞையைச் செய்தருளுகின்றார் :—

சு-ம். ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதைவ குணபேதத: ।
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச்ச்ருணு தாந்யபி ॥ (19)

ப-ம். 2 ஜ்ஞாநம் 4 கர்ம 3 ச 6 கர்தா 5 ச 8 த்ரிதா 9 ஏவ 7 குணபேதத: 10 ப்ரோச்யதே 1 குணஸங்க்யாநே 13 யதாவத் 14 ச்ருணு 11 தாநி 12 அபி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சாங்கிய சாஸ்திரத்தின்கண்ணே ஞானமும் க
மும் கர்த்தாவும் சத்துவாதி முக்குணபேதத்தானே மூவகையேயாகுமென
அந்த ஞானுதிகளையும் அவற்றின் வேற்றுமைகளையும் நீ யுள்ளபடி கேட்பாயா

(வி-ம்.) ஆண்டு, 'ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா' என முன் வசனத்
கூறப்பட்ட பிரத்யக்ஷாதிப் பிரமாண ஜன்னிய வஸ்துவின் பிரகாசரூப அ
கரணவிருத்திரூப ஞானமே ஈண்டு ஞானசப்தத்தாற் கவரத்தக்கதாம். வஸ்து
ஞேயத்தன்மையுண்டாதல் ஞானரூப உபாதியாலாயதாம் ஞானமின்றியாக
மாதலின் மொழிந்த ஞேயத்திற்கு ஞானத்தின்கண்ணே யடக்கமாம். கரும
தத்தானே யாகாதிரூபக்கிரியையைக்கவர்க. அது 'த்ரவ்ய: கர்மஸம்க்ர
என்பதில் கரும சப்தத்தானே கூறப்பட்டதாம். 'ஜ்ஞாநம் கர்ம' என்பதில
கும் அகாரத்தானே கூறிய கருமம் கரணமென்னு மிரண்டுகாரகங்களும் கிரி
யின்கண்ணே யுள்ளடக்கமென்றறிக; என்னை, வத்துவின்கண்ணே காரகத்தன்
கிரியைவடிவ உபாதியாலாயதாம், கிரியையின்றி யுண்டாகாதாமாதலின் க
வுள்ளடக்கம் பொருத்தமுடையதேயாம். பூர்வ சுலோகத்தில் 'கரணம் கர
த்ருதி' என்பதில் கூறப்பட்ட கிரியையையுண்டாக்குவது கர்த்தாவாம் அ
கர்த்தாவை ஈண்டுக் கர்த்தா சப்தத்தானே கவர்க. 'கர்த்தா' என்பதிலிருக்
அகாரத்தானே கூறிய பரிஞாதாவை இக்கர்த்தாவின்கண்ணே யடக்கமெனவ
காரணங் கருமமென்னு மிரண்டு காரகங்களைப்போலக் கர்த்தாவின் கண்ணும் கிரி
யுபாதிகத்தன்மை துல்லியமேயாமாதலின் அவ்விரண்டைப்போலக்கர்த்தாவை
தனியே கூறுதல் கூடாது; என்றாலும் கர்த்தாவின் கண்ணே தனியாகத்
குணத்தன்மை ரூபக்கூற்றுக்குத் தார்க்கிகர்கள் மயலாற்கற்பித்த ஆன்மத்
மையை நீக்கும் பொருட்டாம்; அவரோ கர்த்தாவையே யான்மாவென்
ஞானுதி மூன்றும் குண சங்கியானத்தில் சத்துவாதி வேற்றுமையானே சா
கம் இராஜசம் தாமசம் என மூவகையாகக் கூறப்பட்டுளது. சத்துவாதிமுக்கு
காரிய வேற்றுமையானே பிரதிபாதிக்கப்பட்டுளது எந்நூலின்கண் அது குண
கியானமாமோ; அத்தகையது கபில முனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரம
அதன் கண்ணே இவை கூறப்பட்டிருக்கின்றன. ஈண்டு, 'த்ரிதைவ' என்
விருக்குந் தேற்றம் சாத்விகாதி முப்பேதங்களை யொழித்து வேறு நான்கா
வகையை நீக்கற்பொருட்டாம். கபிலமுனிவர் கூறிய சாங்கிய சாஸ்திரம் பரம
தப் பிரஹ்மத்தின் ஒருமையின்கண்ணே பிரமாண மாகாதாம்; என்னை, ஆ
நாளு ஆன்மாவே அங்கீகாரமாதலின். எனினும் சாங்கிய சாஸ்திரம் அபரமார்
ரூப சத்துவாதி குணங்களின் கௌணபேத நிரூபணத்தில் வியாவகாரிகப்
மாண பாவத்தையடையும். இதனுனே கூறப்படும் பொருளைத் துதிக்கும்பொரு
ஸ்ரீ பகவான் 'ச்ரூயதாம் தாந்யபி' என்பதைக் கூறியருளின
அதாவது, ஞானுதிகளின் மூவகைத்தன்மை கேவலம் இக்கீதா சாஸ்திரத்தி
பிரசித்தமன்றும்; மற்றோ, கபில முனிவர்கூறிய சாங்கிய சாஸ்திரத்தின் கண்
பிரசித்தமாம். இவ்வாறு கூறப்புகும் அர்த்தத்தைத் துதித்தருளும்பொரு
ஸ்ரீ பகவான் அவ்வசனத்தைக்கூறியருளினர். ஞானுதிகளையும், சத்துவ
குணங்களாலாக்கப்பட்ட ஞானுதிகளின் பேதத்தையும், உள்ளபடியே கேட
யாக; அதாவது, சாஸ்திரத்தில் அவற்றின் சொரூபங்கூறப்பட்டவாறே சி
ணிக்கும்பொருட்டு நீ சாவதானனுவாயாக. முன்னர் 14 வதத்தியாயத்தி
17 வதத்தியாயத்தினும் ஸ்ரீ பகவான் சத்துவாதிகளையும் அவற்றாலாயசா
காதிபேதங்களையும் கூறியருளி மீண்டுமீண்டுங் கூறியருளுவதானே கூறியது
லென்னுங்குற்றமாமெனினும். இவ்வித விவத்தையானே அத்தோடமனுகாத
பூர்வம் 14 வதத்தியாயத்திலோ 'ஸத்த்வம் ரஜஸ்தம இதி' என்பதாதி

ணங்களாலே சத்துவாதி குணங்களில் பந்தஹேதுத்தன்மையின் பிரகாரம் நிரூ
பித்தருளப்பட்டது, குணாதீதனுக்கு ஜீவன் முக்தத்தன்மையை நிரூபித்தருளும்
பொருட்டாம். 17 வதத்தியாயத்திலோ 'யஜந்தே ஸாத்விகா தேவாந்' என்ப
தாதி வசனங்களாலே சத்துவாதி குணங்கள்செய்த மூவகைச்சுபாவத்தை நிரூ
பித்தருளியதாலிப்பொருள் துணியப்பெறும்: அதிகாரி அசுரரூப ராஜசதாமச
சுபாவத்தைப் பரித்தியாகித்துச் சாத்விக ஆகாராதிகளைச் சேவித்துத்தைவரூப
சாத்விக இயற்கையே சம்பாதிக்கத்தக்கதென்பதாம். இப்பதினெட்டாவது அத்
தியாயத்திலோ இயற்கையாலே குணாதீத அசங்க ஆன்மாவிற்குக்கிரியைகாரகம்
பலம் என்னும் மூன்றோடும் சிறிதுமாத்திரையும் சம்பந்தமின்றாம். இப்பொருளை
யுணர்த்தியருளும்பொருட்டுக்கிரியாகாரகாதியாவற்றிற்கும் திரிகுணரூபத்தன்மை
யேயாம்; இதனினும் வேறாக யாதொருவடிவமும் அவற்றிற்கின்றாம். எதனால்
இக்கிரியாகாரகாதிகட்கு ஆன்மாவின் சம்பந்தித்தன்மையாமோ என்னும் பொருள்
கூறியருளப்பட்டது. இதுவே மூன்றத்தியாய வசனங்களில் விசேஷத்தன்மையா
மாதலின் ஈண்டுக்கூறியது கூறலுண்டாகாதாம். (19)

(அ-கை.) ஈண்டுப் பூர்வ சுலோகத்தில் ஞானம் கர்த்தாகருமம் என்னும்
மூன்றற்கும் சாத்விகாதி மூவகைத்தகைமை அறியத்தக்கதெனப் பிரதிஞ்ஞை
செய்தருளப்பட்டது; இப்போது முதலில் ஞானத்திற்கு மூவகைத்தன்மை 3
சுலோகங்களால் ஸ்ரீ பகவான் நிரூபித்தருளுவர்; அதன் கண்ணும் முதலில் அத்
வைத ஆன்மவாதிகட்குச் சாத்விக ஞானத்தைக் கூறியருளுகின்றார்.—

சு-ம். ஸர்வபூதேஷு யேநைகம் பாவமவ்யயமீக்ஷதே ।
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ஸாத்விகம் ॥ (20)

ப-ம். 2 ஸர்வபூதேஷு 7 யேந 4 ஏகம் 6 பாவம் 5 அவ்யயம் 8 ஈக்ஷதே
3 அவிபக்தம் 1 விபக்தேஷு 9 தத் 10 ஜ்ஞாநம் 12 வித்தி 11 ஸாத்விகம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரஸ்பர பேதமுடைய சர்வபூதங்களில் யாண்டும்
வியாபக ஏக அவ்யய சத்தாரூப பாவத்தை எவ்வுணர்வாற் சாக்ஷாத் கரிப்பனோ
அவ்வுணர்வைச் சாத்விக ஞானமென்றறிதி. (20)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! அவ்வியாகிருத, ஹிரண்யகர்ப்ப, விராட்டு, என்
னும் நாமங்களையுடைய காரண சூக்ஷும தூலரூப சமஷ்டிவியஷ்டிவடிவ சர்வ
பூதங்களும் விபக்தங்களாம்; அதாவது, வேறுவேறு நாமரூபங்களாலே பரஸ்
பரம் வியாவர்த்தியமும் நாசமுமாகிய உற்பத்தி நாசமுடைய திருசிய
வர்க்கரூப சர்வ பூதங்களில் சத்தைவடிவ பாவத்தை வேதாந்த வாக்கியங்களின்
விசாரஜன்னிய அந்தக்கரண விருத்திரூப ஞானத்தாலே அதிகாரி சாக்ஷாத்கரிப்
பன்; அதாவது, அச்சர்வ பூதங்களில் பரமார்த்த சத்தைவடிவ சுவப்பிரகாச
ஆனந்த ஆன்மாவை எவ்வுணர்வாற் சாக்ஷாத்கரிக்கலாமோ என்பதாம். சத்தை
யாகிய பாவம், ஒன்றாம், அதாவது, சஜாதிய விஜாதிய சுவகத பேதங்களற்றமை
யின் அத்விதீயரூபமாம். அவ்யயமும் ஆம்; அதாவது, உற்பத்தி விநாசாதி சர்வ
விகாரங்களுமற்றதும் அதிருசியமுமாம். அவிபக்தமுமாம்; அதாவது, சர்வஜட
பதார்த்தங்களின் அதிஷ்டான ரூபத்தாலும், சர்வகற்பித பதார்த்தங்களின்பாத
அவதிரூபத்தாலும் யாண்டும் வியாபகமாம், அத்தகைய அத்விதீய ஆன்மாவையதி
காரி வேதாந்தவாக்கிய ஜன்னிய ஞானத்தாலே சாக்ஷாத்கரிப்பன், மித்தையா
கிய பிரபஞ்சத்தின் பாதக ஆன்ம ஞானத்தை சாத்விக ஞானமென்றுணர்தி.
இவ்வத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத் காரத்தினும் வேறாகிய எத்துணைத்துவைத
தரிசனமுளவோ அவையாவுமே இராஜசமாதலினும் தாமதமாதலினும் சம்

சாரத்தின் காரணமேயாதலின் அந்தத்வைத தரிசனத்தில் ஒருகாலும் சாத்
தன்மையுண்டாகாதாம்.

(அ-கை.) இப்போது இராஜச ஞானத்தின் சொரூபம் வருணித்தரு
படுகின்றது.

சு-ம். ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந்ப்ருதக்விதாந் ।
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம் ॥

ப-ம். 2 ப்ருதக்த்வேந 1 து 7 யத் 8 ஜ்ஞாநம் 6 நாநாபாவாந் 5 ப்ருதக்வி
9 வேத்தி 3 ஸர்வேஷு 4 பூதேஷு 10 தத் 11 ஜ்ஞாநம் 13 வித்தி 12 
ஸம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் பரஸ்பர பேதத்தானேயிரா நி
தேகாதி சர்வ பூதங்களில் பரஸ்பர விலக்கண நானு ஆன்மாக்களின் ஞானத்
நீ இராஜசமென்றறிவாய்.

(வி-ம்.) ஈண்டு 'ப்ருதக்த்வேந து' என்னும் வசனத்திலிருக்கும் 'து' சப
முன் சுலோகத்திற் கூறியருளிய சாத்விக ஞானத்தினும் இந்த இராஜச ஞா
தின்கண்ணே விலக்ஷணத்தன்மை யுணர்த்தியருளும் பொருட்டாம். அவ்வில
ணத்தன்மையிதுவாம் :—பரஸ்பர பேதத்தானே யிராநின்ற தேகாதிக
பூதங்களில் எஞ்ஞானம் பிருத்தக்வித நானுபாவங்களைக்காணுமோ; அதா
தேகந்தோறும் சுகித்வ துக்கித்வாதிரூபத்தால் பரஸ்பர விலக்ஷண
வேறு ஆன்மாக்களை எஞ்ஞானங்காணுமோ. கருத்திதுவாம் :—இந்த லோ
தில் சிலர் சுகிகளாவர், சிலர் துக்கிகளாவர், சிலர் பண்டிதர், சிலர் மூர்
என்பதாதி அநேகவகை விலக்ஷணத்தன்மை காணவருகின்றது. ஒருகால்
தேகங்களிலும் ஒரே யான்மா இருப்பின் ஒரு பிராணி சுகியாயின் யாவருஞ்
யாகவேண்டும்; ஒரு பிராணி துக்கியாயின் யாவருந்துக்கியாகவேண்டும்;
லவ்வாறு காணவருவதில்லையாதலின் சர்வ தேகங்களிலும் ஏக ஆன்மாவி
யாம்; மற்றேறு, தேகந்தோறும் வேறுவேறு ஆன்மாவாம். இவ்வாறு குதர்
களாலுண்டாய ஞானம் தேகந்தோறும் வேறுவேறு ஆன்மாவைக் காண்ட
அது இராஜசமாம். ஈண்டு 'யஜ்ஜ்ஞாநம் வேத்தி' இவ்வசனஸ்தானத்தில் 'யேந
ஜ்ஞாநேந வேத்தி' இவ்வகையாயே கூறல் தகுதியாம்; ஆயினும் 'யஜ்ஜ்ஞாநம் வேத்தி'
ஸ்ரீ பகவான் கூறியருளியது அந்த ஞானரூப காரணத்தின்கண் கர்த்தி
துவ உபசாரத்தால் ஆம் 'ஸ்தால்யாம் பசதி' என்னும் வசனம் பாகக
ரூப காஷ்டங்களில் கர்த்திருத்துவ உபசாரத்தைக்கூறும்; அல்லது அ
ணர்வு கர்த்தாரூப அகங்காரத்தின் விருத்திரூபமா மாதலின் கர்த்தாரூப அ
காரத்திற்கு அவ்விருத்திரூப ஞானத்தோடு அபேதத்தைக் கருதியருளி ஸ்ரீ
வான் 'யஜ்ஜ்ஞாநம் வேத்தி' என்பதைக்கூறியருளினர். இவ்வசனத்தில் பூர்வம் ஞ
பதத்தையருளி, 'தஜ்ஜ்ஞாநம்' என்பதில் மீண்டும் ஞானபதங் கூறியருளி
ஆன்மாவின் பேத ஞானத்தையும் அநாத்மாவின் பேத ஞானத்தையும் அறிவ
மாதலின் இப்பொருள் துணியப்பெறும். தேகந்தோறும் ஆன்மாக்களின்
பர பேதம், ஆன்மாக்கட் கீசுரபேதம், ஆன்மாவிற்கும் அசேதனவர்க்கங்கட்
பேதம், ஈசுர அசேதனவர்க்கங்கட்கும் பேதம், அசேதனவர்க்கங்கட்குப் பர

பேதம், இவ்வாறு அநௌபாதிக பஞ்சபேதங்களை விஷயீகரிக்கும் தார்க்கிகரின் ஞானம் இராஜசமேயெனவறிக. (21)

(அ-கை.) இப்போது தாமச ஞான சொரூபத்தை வர்ணித்தருளுகின்றார்:—

சு-ம். யத்து க்ருத்ஸ்நவதேகஸ்மிந் கார்யே ஸக்தமஹைதுகம் ।
அதத்த்வார்த்தவதல்பஞ்ச தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ (22)

ப-ம். 2 யத் 1 து 5 க்ருத்ஸ்நவத் 3 ஏகஸ்மிந் 4 கார்யே 6 ஸக்தம் 7 அஹைதுகம் 8 அதத்த்வார்த்தவத் 10 அல்பம் 9 ச 11 தத் 12 தாமஸம் 13 உதாஹ்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன ! மீண்டும் எஞ்ஞானம் யாதேனுமொருகாரியத்தில் பரிபூர்ண அர்த்தத்தைப்போல அபிநிவேசமுடையதாமோ, யுக்தியற்றதாமோ, பரமார்த்த ஆலம்பனமற்றதாமோ, அற்பமாமோ, அந்த ஞானம் ஆன்றோராற்றாமசமெனப்படும். (22)

(வி-ம்.) ஈண்டுயத்து என்பதிலுள்ள, துவென்பது பூர்வ சுலோகத்திற் புகன்ற இராஜச ஞானத்திலும் தாமச ஞானத்தில் விலக்ஷணத்தன்மையைப் போதிக்கும் பொருட்டாம். அவ்விலக்ஷணத்தன்மையைக் காண்பிப்பாம்:— ஆகாசாதிகளின் காரியங்களிருந்தபோதினும் அவ்வியாவற்றினுள்ளும் ஒருதேக ரூபகாரியத்தில் அல்லது பிரதிமை முதலிய காரியத்தில் எஞ்ஞானம் பரிபூர்ண அர்த்தத்தைப் போலச்சக்தமோ ; அதாவது இத்துணை மாத்திரமே ஆன்மாவாம், இத்துணைமாத்திரமே ஈசுரராம் இதனினும் வேறாக ஓரான்மாவேனும் ஈசுரேனுமின்றாம், இவ்வாறாய அபிநிவேசத்தான் எஞ்ஞானம் ஒரு தேக ரூப ஏக காரியத்தில், அல்லது பிரதிமாதி ரூப ஏககாரியத்திலே யினிது பொருந்துவதாமோ; ஆன்மாசாவயவமாம், தேகபரிமாணமாம் என்னும் திகம்பரரது ஞானம் ; இத்தூலதேகமே யான்மாவென்னும் சார்வாகரின் ஞானம் ; பாஷாணகாஷ்டாதி ரூப இப்பிரதிமைமாத்திரமே ஈசுரர் இதனினும் மேலாக வேறு ஈசுரரில்லையென்னும் சாஸ்திர சமஸ்காரமற்ற மூடர்களின் ஞானம் ; என்பவைபோலுமென்க. எஞ்ஞானம் உற்பத்திரூப ஹேதுவற்றதாமோ ; அதாவது, தேகப்பிரதிமையினும் அபலாகமற்றெத்துணைப் பூதகாரியங்களுளவோ அவற்றுள் ஆன்மத்தன்மையின்மையதும், ஈசுரத்தன்மையின்மையதும் ஆகிய பூதகாரிய தேகத்தில் ஆன்மத்தன்மை யெங்ஙனஞ்சம்பவிக்கும், பூதகாரியப் பிரதமையின்கண்ணே ஈசுரத்தன்மை எங்ஙனஞ் சம்பவிக்கும் சம்பவியாதாம், என இவ்வாறு எஞ்ஞானம் விசாரமற்றதாமோ ; இக்காரணத்தானே எஞ்ஞானம் அதத் வார்த்தவத்தாமோ ; பிரமாணாந்தரத்தால் பாதிதமல்லாத அர்த்தம் தத்வார்த்தமாம், அது எதற்கு விடயமன்றாமோ அது அதத்வார்த்தவத்தாம் ; அதாவது எஞ்ஞானம் அயதார்த்த அர்த்த விஷயகமாமோ ; எஞ்ஞானம் அற்பமோ ; அதாவது ஆன்மாவின் நித்தியத்வ விபுத்வங்களைவிடயஞ் செய்யாமையின் யாதுமுற்றினும் அற்பமாமோ ; இவ்வாறு அநித்திய பரிச்சின்ன தேகாதிகளிடத்தில் ஆன்மத்தன்மை யபிமானவடிவ சார்வாகாதிகளின் ஞானமாமோ ; எஞ்ஞானம் ஆத்மா ஈசுரரிரண்டும் நித்தியம் விபு தேகாதி சங்காதத்தினும் வேறென்னும் தார்க்கிக புருடர்களின் ஞானத்தினும் அத்தியந்தம் விலக்ஷணமாகிய அந்த ஞானம், மதிமான்களால் தாமத ஞானமெனப்படும். (22)

(அ-கை.) ஆண்டு ஏக அத்விதீய ஆன்மாவை விடயஞ்செய்யும் உபநிடத சம்பந்திகளின் சாத்விகஞானமே முமுக்ஷுக்களாற் கவரத்தக்கதாம். நித்திய

விபுபரஸ்பர பின்னமாகிய அநேக ஆன்மாக்களைவிடயஞ் செய்யும் துவைததரி ளாயதார்க்கிகர்களின் ராஜசஞானம், அநித்திய பரிச்சின்னதேகாதிரூப ஆ மாவைவிடயீகரிக்கும் சார்வாகாதிகளின் றுமசஞானம், என்னுமிரண்டும் மு க்ஷூக்களானே விடத்தக்கனவாம். இப்பொருள் 'ஸவ்வபூதேஷு யெ கம்' என்பதாதி 3 சுலோகங்களானே முன்னர்க்கூறியருளப்பட்டது. இப்போ 'நியதம் ஸங்கரஹிதம்' என்பதாதி 3 சுலோகங்களானே ஸ்ரீ பகவான், சா காதி பேதத்தானே கருமத்தின் மூவகைமையைக் கூறியருளுகின்றார் அவற்று முதலிற் சாத்விக கரும சொரூபத்தை வர்ணித்தருளல்.

சு-ம். நியதம் ஸங்கரஹித மராகத்வேஷதः க்ருதம் ।
அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே ॥ (

ப-ம். 5 நியதம் 2 ஸங்கரஹிதம் 3 அராகத்வேஷதः 7 க்ருதம் 1 அபலப்ரேப்ஸு
6 கர்ம 4 யத் 8 தத் 9 ஸாத்விகம் 10 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலேச்சையற்றவன் செய்யாநின்ற சங்கம இராகத்வேஷமற்ற நித்திய கருமம், சாத்விகமெனப்படும். (

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாது நியதமாமோ; அதாவது, அக்கருமத்தி எத்துணைத்திரவியம் தேவதை மந்திரம் முதலிய அங்கங்கள் உளவோ அவை வற்றையும் நிறைவிப்பதிலாற்றலற்றவருக்கும் எக்கருமந் தன் பயனை யொருதலை யடைவிக்குமோ, அத்தகையது அக்கினிஹோத்திராதி நித்தியகருமமாம். எக் மம் சங்கரகிதமாமோ, யானே பெரிய மகியாவேன் எனக்குச் சமானமாக எ மேயில்லை என்பதாதி யபிமானரூப அகங்காரமெனப் பெயரிய ராஜச கர்வ வி டம் சங்கமாம், அச்சங்கமற்ற; அதாவது, எக்கருமம் இவ்வாறுய அபிமான வகம் செய்யப்படமாட்டாதோ; அஞ்ஞானம் இருக்கும்வரை கர்த்திருத்வ போ திருத்வப் பிரவர்த்தகமாய அகங்காரம் சாத்விக புருடரிடத்துமிருக்கும். அவ் ஞானமும் அகங்காரமும் அற்ற தத்துவவேத்தாவிற்கோ கருமங்களினதிகார மின்றும், என்பது முன்னர் அநேகமுறை கூறப்பட்டதாதலின், சாத்விகனி தில் கர்த்திருத்வ போக்திருத்வப் பிரவர்த்தக சாமானிய அகங்காரமிருப்பி அந்த இராஜச கர்வரூப விசேஷ அகங்காரமிருப்பதில்லை. எக்கருமம் இரா வேஷமின்றிச் செய்யப்படுமோ, இக்கருமத்தால் யான் அரசசன்மான முத வற்றை யடைவேன் என்னுமபிப்பிராயம் இராகமாம், இக்கருமத்தால் யான் துருவை ஜயிப்பேன் என்னுமபிப்பிராயம் துவேஷமாம், இவ்விரண்டால் எக் மஞ்செய்யப்பெறுதோ, இங்ஙனமே யாகதான ஹோமாதிரூப நித்தியகரு பலேச்சையின்றி நிட்காமனுல் தன்றருமமெனவெண்ணிச் செய்யப்படுமேல் ச விக கருமமெனப்படும். (

(அ-கை.) இப்போது இராஜச கருமத்தின்வடிவம் வருணித்தருளப்படு

சு-ம். யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புநः ।
க்ரியதே பஹுளாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ॥ (

ப-ம். 7 யத் 1 து 2 காமேப்ஸுநா 8 கர்ம 4 ஸாஹங்காரேண 3 வா 5 பு
9 க்ரியதே 6 பஹுளாயாஸம் 10 தத் 11 ராஜஸம் 12 உதாஹ்ருதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் சகாமபுருடனுல், அகங்காரத்தோடு யவனுல் நியதமின்றிக் கிலேச மிகத்தரக்கூடிய எக்காமியகருமம் செய்யப்படு அது ஆன்றோரான் ராஜசகருமமெனப்படும்.

(வி-ம்.) ஆண்டு, 'யத்து' என்பதிலுள்ள து என்பது முன்மொழிந்த சாத்விக கருமத்தினும் இராஜசகருமத்தில் விலக்ஷணத்தன்மையை யுணர்த்தும் பொருட்டாம். அவ்விலக்ஷணத்தன்மையைக் காண்பிப்பாம்:—சுவர்க்காதி பலத்தைவிரும்பிய சகாமன் முற்கூறிய சங்கருப கர்வத்தோடுகூடியவன் எக்காமிய கருமத்தைச் செய்கின்றானோ, எக்கருமம் மிகவும் ஆயாசத்தோடதாமோ; அதாவது, சர்வாங்கமும் நிறைவுறச்செய்வதாகிய காமியகருமம் பலத்தையடைவிக்கும், சிறிது மாத்திரம் அங்கத்தின் விகுணத்தன்மையையடைந்த காமியகருமம் பலவேதுவாகாதாமாதலின் சர்வாங்கம் நிறைவிக்கக் கர்த்தாவிற்கு அது மிகக் கிலேசத்தைத் தரும். ஈண்டு, 'வாவுநஃ' என்பதிலிருக்கும் மீண்டுமென்னுஞ் சப்தம் இராஜசகருமத்தில் அநியதத்தன்மையை யுணர்த்தும்; என்னை, நித்திய கருமத்திலெப்போதும் கர்த்தவ்யத்தன்மையா மாறுபோலக் காமியத்திலாகாதாம்; மற்றோ, பலேச்சையிருக்கும் பரியந்தமே காமியகருமத்தின் கர்த்தவ்யத்தன்மையிருக்கும். அவாவகன்றபின் காமியத்தின் கர்த்தவ்யத்தன்மை இராஜதமாதலின்; அதன் கண்ணநியதத்தன்மை பொருத்தமுடையதேயாம். இக்காமியகருமம் ஆன்றோரால் இராஜச கருமமெனப்படும். ஈண்டுச் சர்வ விசேஷணங்களானே இதில் பூர்வசுலோகத்திற் புகன்ற சாத்விக கருமத்தின் எல்லாச்சிறப்பானும் விபரீதத்தன்மை கூறியருளப்பட்டது. (24)

(அ-கை.) இப்போது தாமத கருமத்தின் சொரூபம் வருணித்தருளப்படும்.

சு-ம். அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமநபேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹாதாரப்யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே ॥ (25)

ப-ம். 2 அநுபந்தம் 3 க்ஷயம் 4 ஹிம்ஸாம் 6 அநபேக்ஷ்ய 1 ச 5 பௌருஷம் 7 மோஹாத் 10 ஆரப்யதே 9 கர்ம 8 யத் 11 தத் 12 தாமஸம் 13 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் அனுபந்தத்தையும், க்ஷயத்தையும், ஹிம்சையையும், பௌருஷத்தையும், விசாரித்துக் கேவலம் அவிவேகத்தானே எக்கருமம் தொடங்கப்படுமோ அது தாமச கருமமெனப்படும். (25)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இனியாகும் அசுபபலம் அனுபந்தமெனப்படும். தேக ஆற்றலுக்கும் தனத்திற்குஞ் சேனைக்கும் விநாசம் க்ஷயமாம். பிராணிக்குறும் பீடை ஹிம்சையாம், தனது ஆற்றல் பௌருஷமாம், இந்நான்கையும் கருமந் தொடங்குவதற்கு முன்னாராயாது கேவலம் அவிவேக ரூபமோகவசத்தால் தொடங்கப்படுங் கருமம் தாமசமெனப்படும்; துரியோதனனானவன் அனுபந்தாதி நான்கையும் ஆராயாது கேவலம் அவிவேக ரூபமோகத்தாலிப் போரைத் தொடங்கியிருப்பதேபோலும். (25)

(அ-கை.) ஆண்டு, 'நியதம் ஸங்கரஹிதம்' என்பதாதி 3 சுலோகங்களால் பூர்வம் சாத்விகாதி பேதத்தால் மூவகைக்கருமம் நிரூபித்தருளப்பட்டது. இப்போது 'முக்தஸங்கஃ' என்பதாதி 3 சுலோகங்களால் ஸ்ரீ பகவான் சாத்விகாதி பேதத்தால் மூவகைக் கர்த்தாக்களைக் கூறியருளுவர், அவருண் முதலில் சாத்விக கருத்தா வருணித்தருளப்படுகின்றான்:—

சு-ம். முக்தஸங்கோऽநஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமந்விதஃ ।
ஸித்த்யஸித்த்யோர்நிர்விகாரஃ கர்த்தா ஸாத்த்விக உச்யதே ॥ (26)

ப-ம். 1 முக்தஸங்கஃ 2 அநஹம்வாதீ 3 த்ருத்யுத்ஸாஹஸமந்விதஃ 4 ஸித்த்யஸித்த்யோஃ 5 நிர்விகாரஃ 6 கர்த்தா 7 ஸாத்த்விகஃ 8 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பலேச்சையற்ற அநகம்வாதி திருதியுற்சாக மிர
டோடு முற்றவன், சித்திய சித்தியிரண்டிலும் விகாரமின்றியவனாகிய கர்த்தா சா
விக கர்த்தாவெனப்படுவன். (2

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன் முக்த சங்கன்; அதாவது, கருமப
இச்சையை விட்டவன்; யாவன் அநகம்வாதி; அதாவது யான் கருமகருத்தா எ
னும் அபிமானவாயிலாய வசனத்தைக்கூறாதவன். அல்லது தனது குணங்களை
புகழாதவன் அநகம்வாதியாவன். யாவன் திருதியுற்சாகத்தோடுகூடியவன்
ஆண்டு, விக்கின முதலியவற்றை யடைந்தபோதினும் தொடங்கியதை விட
விருக்குமேதுவாகிய அந்தக்கரண விருத்தி விசேடம் தைரியமென்னுந் திரு
யாம், இக்கருமத்தை யானவசியஞ் சித்திக்கச்செய்வேன் என்னும் நிச்சயவடி
மதி கூறிய திருதியின் காரணரூபமாம், அஃதேயுற்சாகமென்க. அவ்விரண்டே
டும்கூடியவன். யாவன் செய்த கருமபலவடைவினும், அடைவின்மையினும் விக
மற்றவன் செய்தவினைப்பயனடையவே மகிழ்ச்சியாதலும், அடையாதகலவே ம
னோதலும், முறையே காரணமான முகமலர்ச்சியும் வதனச்சோர்வும், விகார
னப்படும், அஃதற்றவன்யாவன். யாவன் கேவலம் சாஸ்திரப் பிரமாணத்தாலே
அத்தொழிலிற் பிரவிருத்தனாகிப் பலத்தானாதல் இச்சையினானாதல் பிரவிருத்
யான்; அவன் சாத்விககருத்தா வெனப்படுவன். (2

(அ-கை.) இப்போது இராஜச கருத்தாவின்வடிவம் வருணித்தருளப்படு

சு-ம். 𑌰𑌾𑌗𑍀 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍁𑌰𑍍𑌲𑍁𑌬𑍍𑌧𑍋 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑍋𑌽𑌶𑍁𑌚𑌿𑌃 ।
𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌰𑌾𑌜𑌸𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ (2

ப-ம். 1 𑌰𑌾𑌗𑍀 2 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌪𑍍𑌰𑍇𑌪𑍍𑌸𑍁𑌃 3 𑌲𑍁𑌬𑍍𑌧𑌃 4 𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃 5 𑌅𑌶𑍁
6 𑌹𑌰𑍍𑌷𑌶𑍋𑌕𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 7 𑌕𑌰𑍍𑌤𑌾 8 𑌰𑌾𑌜𑌸𑌃 9 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யானிராகமுடையவன், கருமபல இச்சாவா
உலுப்தன், ஹிம்சையியற்கையுடையோன், அசுசி, ஹர்ஷசோகத்தோடு கூடி
வன்; இத்தகைய கருத்தா ஆன்றோரான் இராஜசகர்த்தா வெனப்படுவன். (2

(வி-ம்.) ஹே அர்ச்சுன! யாவன்ராகி; அதாவது காமாதிகளோடுகூடி
நெஞ்சன். இதனானே அவ்வக்கருமபலன்களை யவாவியவன். யாவன் உலுப்தன்
அதாவது மற்றையாது தனாதிகளிலவாவுடையோன். அல்லது, தனவானாயினு
தருமப் பொருட்டுச் செலவழிக்க ஆற்றலற்றவன். யாவன், ஹிம்சை வடிவினன்
ஆண்டுத் தனது கருத்தை வெளிப்படுத்தி மற்றையனது ஜீவிகைவடிவ விரு
தியை வெட்டு மிம்சையை யியற்கையாகவுடையோன். தனது கருத்தைத் தெ
வியாமல் மற்றையனது விருத்தியை வெட்டுபவன் நைஷ்கிருதிகனாவன். இ
விரண்டன் கண்ணுமித்துணைப் பேதமாம் அந்நைஷ்கிருதி கர்த்தாவருஞ் சுலோ
கத்திற் கூறியருளப்படுவன். யாவனசுசி அதாவது நூலுரைத்த உள் வெளி
சௌசங்களற்றவன், தோயமும் மண்ணுங்கொண்டு சுத்தமாய்க்காயமேனியமல
கழுவல் வெளித்தூய்மையாம், மைத்திரிகருணை யாதி வளர்சுபவாதனையால், சி
த்தத்தைக் காமங்கோபமின்றியதாகச்செய்தல் உட்டூய்மையாம். கருமபலத்தி
சித்தியினும் அசித்தியினும் மகிழ்ச்சி வாட்டங்களோடு கூடியவன் ஆன்றோ
இராஜசகர்த்தா வெனப்படுவன். (2

(அ-கை.) இப்போது தாமச கருத்தாவின் சொரூபம் வருணித்தருளப்ப

சு-ம். 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌶𑌠𑍋 𑌨𑍈𑌷𑍍𑌕𑍃𑌤𑌿𑌕𑍋𑌽𑌲𑌸𑌃 ।
𑌵𑌿𑌷𑌾𑌦𑍀 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑌾𑌮𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ (

ப-ம். 2 அயுக்த: 3 ப்ராக்ருத: 4 ஸ்தப்த: 5 ஶட: 6 நைஷ்க்ருதிக: 7 அலஸ: 8 விஷாதீ 9 தீர்க்கஸூத்ரீ 1 ச 10 கர்த்தா 11 தாமஸ: 12 உச்யதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் யாவன் அயுக்தனோ, பிராகிருதனோ, ஸ்தப்தனோ, சடனோ, நைஷ்கிருதிகனோ, அலசனோ, விஷாதியோ, தீர்க்க சூத்திரியோ, அத்தகைய கருத்தா, தாமச கர்த்தாவெனப்படுவன். (28)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மிண்டும் யாவன் அயுக்தனோ; அதாவது எப்போதும் விடய லோலனுப் செய்யவேண்டிய கருமத்தில் மனவொருமையற்றவனோ; யாவன் பிராகிருதனோ; அதாவது, மூடபாலகனைப்போல யாவன் சாஸ்திர சமஸ்காரமற்ற மதியுடையவனோ. யாவன் ஸ்தப்தனோ; அதாவது, குரு தேவதைமுதலியவர் முன்னிலையினும் வணக்கமின்றியவனோ. யாவன் சடனோ; அதாவது, அபலாரை வஞ்சிக்கும் பொருட்டு யாவன் அபல்வகையானே அருத்தத்தை யறிந்திருந்தபோதினும் வேறு வகையானே அவ்வர்த்தத்தைக்கூறுவனோ. யாவன் நைஷ்கிருதிகனோ; அதாவது, இவனெனக்கு மிக்கவுபகாரியென உபகாரித்தன்மை மயலேத்தன் பாலயலானுக்குண்டுசெய்து அவனது ஜீவிகை விருத்தியைக்கெடுத்து யாவன் தன் காரியத்தை முடிப்பனோ. யாவன் அலசனோ; அதாவது, இன்றியமையாது செய்யத்தக்க கருமத்தும் யாவன் முயலானோ. யாவன் விஷாதியோ; அதாவது, மகிழ்விலா வியற்கையனுதலின் யாவன் நிரந்தரம், அநுசோசன இயற்கையுடையனோ; யாவன்றீர்க்க சூத்திரியோ; அதாவது, நிரந்தரம் ஆயிரஞ்சங்கைகளோடியமனத்தனுதலின் யாவன் முற்றினும் சிதிலப்பிரவிருத்தியுடையனோ; கருத்திதுவாம், ஒருதினத்தி லியற்றத்தக்ககாரியத்தை ஒரு மாதத்தினும் செய்யத்தக்கவனேனும், தகாதவனேனும் ஆவனோ. இத்தகையன் தாமச கர்த்தாவெனப்படுவன் (28)

(அ-கை.) பூர்வம் 19 சுலோகத்தில் 'ஜ்ஞாநம் கர்ம' என்பதாதி வசனத்தானே ஸ்ரீ பகவான் ஞானம் கருமம் கருத்தா வென்னும் மூன்றற்கும் சத்துவாதி குணங்களின் பேதத்தானே மூவகைத்தன்மையை வியாக்கியானிப்பான் பிரதிஞ்ஞைசெய்தருளினர். ஞானுதிகளின் மூவகைமையை 'ஸர்வபூதேஷு யேநைகம்' என்பதாதி 9 சுலோகங்களானே பிரதிபாதித்தருளினர். இப்போது 'புத்தி .... த்ருதி:' என முன்னருளிய வசனத்தில் குறிப்பித்தருளிய புத்தி திருதியிரண்டன் மூவகைமைப் பிரதிஞ்ஞையை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—

சு-ம். புத்தேர்பேதம் த்ருதேஶ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஶ்ருணு ।
ப்ரோச்யமாநமஶேஷேண ப்ருதக்த்வேந தநஞ்ஜய ॥ (29)

ப-ம். 2 புத்தே: 8 பேதம் 4 த்ருதே: 3 ச 7 ஏவ 5 குணத: 6 த்ரிவிதம் 12 ஶ்ருணு 11 ப்ரோச்யமாநம் 9 அஶேஷேண 10 ப்ருதக்த்வேந 1 தநஞ்ஜய.

(அ-ம்.) ஹே தனஞ்சய! புத்தியும் திருதியும் சத்துவாதி குணங்களானே மூவகையே யாயபேதமாமென யாம் நினக்கு முழுவதையும் வேறு வேருகக் கூறுகின்றேம் அதனை நீ கேட்பாயாக. (29)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நிச்சயாதி ரூபவிருத்தியையுடைய மதியும், அதன் விருத்தி விசேடமாகிய திருதியும், அவற்றின் சத்துவாதி பேதத்தால் சாத்விகாதி மூவகை யேயாய பேதமுடையனவாம். மூவகைப்பேத ஆலசியாதி தோடமற்ற, பரம ஆப்தவடிவயாம் நினக்கு முழுவதையும் தனித்தனியாகக்கூறுகின்றேம்; அதாவது யாவற்றையும் கொள்ளத்தக்கது கொள்ளத்தகாதது என்

னும் விவேகத்தானே கூறுகின்றேம். அத்தகையமதி திருதிகளின் மூவகைப் பேதத்தையும் நீ கேட்பாயாக; அதாவது, அதைக்கேட்க நீ யொருமை உடையவனுதியென்பதாம். ஹே தனஞ்செய! என்றமையின் திக்குவிஜயத்தில் அர்ச்சுனனது பிரசித்த மகிமையைக் குறிப்பித்தருளிய ஸ்ரீ பகவான் அதனைச் சிரவணிப்பதில் உற்சாகத்தை யுண்டாக்கியருளினர். ஈண்டிவ்வையமுளதாம் 'புத்தேர் பேதம்'' என்பதில் ஸ்ரீ பகவான் அருளிய புத்தி சப்தத்தாற் கேவலம் விருத்தி மாத்திரத்தைக்கருதியருளியதாம். அல்லது, விருத்தியையுடைய அந்தக்காணம் கருதியருளியதாம். 1-வது பக்ஷத்திலோ அவ்விருத்திரூப புத்தியினும் ஞானசொருபத்தைத்தனியே கூறலாகாது, 2-வது பக்ஷத்திலோ, கருத்தாவைத் தனியேகூறலாகாது; விருத்தியையுடைய அந்தக்கரணத்திற்கே கர்த்திருத்தன்மையுண்மையின்; ஞானத்திருதிபிரண்டையும் தனியே சாற்றல் வீணையாம். இச்சைமுதலிய விருத்திகளை யெண்ணிக்கை செய்தற்பொருட்டு அவற்றின்றனிக் கூற்றெனின், என்றனுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், விருத்தியையுடைய அந்தக்காணத்தின் மூவகைமையைக் கூறியருளியே இச்சாதியவற்றின் மூவகைமை கூறியருளும் வேட்கையாம். ஆகையால் இச்சைமுதலியவற்றின் எண்ணிக்கையின் பொருட்டும் அவ்விரண்டன்றனிக்கூற்றுச் சம்பவியாதாம். இங்ஙனைய முறவே இவ்வண்ணந்துணிக,—முன்னங் கர்த்தாவென்றருளியது அந்தக்காண உபகிதசிதாபாசனுக்காம்,ஈண்டோ உபகிதசிதபாசனினும் தனிப்படுத்திய உபாதி மாத்திரமே காணரூபமாய்க்கூறும் வேட்கையாம் யாண்டும் கரண உபகிதத்திற்கே கர்த்தாத்தன்மையாம். 'காமஸ் ஸங்கல்போ விசிகித்ஸா ச்ரத்தா(அ)ச்ரத்தா த்ருதிரத்ருதிர் ஹ்ரீர்தீர்பீரித்யேதத்ஸர்வம் மந ஏவ' என்னுஞ் சுருதியில் கூறப்பட்ட காமாதி சர்வத்திற்கும் மூவகைமையே கூறியருளவிரும்பினும் அவ்விரண்டையும் தனியே யருளியது ஞானசக்தி கிரியா சக்தி யிரண்டன் உபலக்கணப்பொருட்டாமன்றி இச்சாதிகளின் எண்ணிக்கையின் பொருட்டன்றுமாதலின் சிறிது மாத்திரையும் கூறியது கூறலென்னுங் குற்றந்தங்குறாதாம். (29)

(அ-கை.) ஈண்டு முதலில் 'ப்ரவ்ருத்திம் ச' என்பதாதி 3 சுலோகங்களானே புத்திக்கு மூவகைமை கூறியருளப்பட்டது; அதன் கண்ணும் முதலிற் சாத்விகாதியின் வடிவம் கூறியருளப்படும்:—

சு-ம். ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே ।
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திஸ்ஸா பார்த்த ஸாத்விகீ ॥ (30)

ப-ம். 4 ப்ரவ்ருத்திம் 5 ச 6 நிவ்ருத்திம் 7 ச 8 கார்யாகார்யே 9 பயாபயே 10 பந்தம் 12 மோக்ஷம் 11 ச 2 யா 13 வேத்தி 3 புத்திஸ் 14 ஸா 1 பார்த்த 15 ஸாத்விகீ.

(அ-ம்.) ஹே பார்த்த! எம்மதி பிரவிருத்தியையும் நிவிருத்தியையும், கார்யா கார்யத்தையும், பயா பயத்தையும், பந்தத்தையும், மோக்ஷத்தையும் அறியுமோ அது சாத்விகியெனப்படும். (30)

(வி-ம்.) ஈண்டுக் கர்ம மார்க்கத்தின்பெயர் பிரவிருத்தியாம், சந்யாசமார்க்கத்தின் பெயர் நிவிருத்தியாம். முன்னதிலிருந்து கருமங்களைச்செய்தல் காரியமாம். பின்னதிலிருந்து கருமங்களைச்செய்யாமை அகாரியமாம். முன்னதில் கர்ப்பவாசாதி துக்கம்பயமாம். பின்னதில் அத்துக்காபாவம் அபயமாம். முன்னதில் மித்தியா ஞானமாகிய கர்த்திருத்வாதியபிமானம் பந்தமாம். பின்னதில் தத்துவ ஞானத்தாலாய அஞ்ஞானவதன் காரியாபாவம் மோக்ஷமாம் பிரவிருத்தியே முதலாக மோக்ஷம் வரையுமுள்ளவற்றையறியும் பிராமண ஜன்னிய நிச்சயமுடைய

புத்தி சாத்விகியெனப்படும், பிரவிருத்தியாதிகளின் ஞானத்தில் மதிக்குக்காண ரூபத்தன்மையேயாமன்றிக்கர்த்தா ரூபத்தன்மையின்றாம்; மற்றோ, அம்மதியை யுடையவனையே கர்த்தாவென்பாராதலின் 'யயாபந்தம் மோக்ஷஞ்ச வேத்தி' என இவ்வாறே யருளலுசிதமாம்; ஆயினும் அக்காரணரூபமதியில் கர்த்திருத்வ உபசாரத் தானே ஸ்ரீ பகவான் 'யாபுத்திர்வேத்தி' என்றருளினர். இம்முறையை மேலு முணர்ந்துகொள்க. இச்சுலோகத்தில் ஸ்ரீ பகவானனவர் பந்தமோக்ஷமிரண்டை யும் பிரவிருத்தியாதிகளினிற்றில் கூறியருளினராதலின் ஈண்டுப்பந்த மோக்ஷ விஷயகமாகவே அந்தப்பிரவிருத்தியாதிகளின் வியாக்கியானஞ் செய்யப்பட்டது.

(அ-கை) இப்போது ராஜஸிமதியின் சொரூபம் அருளப்படும்:—

சு-ம். யயா தர்மமதர்மஞ்ச கார்யஞ்சாகார்யமேவ ச ।
அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ்ஸா பார்த்த ராஜஸீ ॥ (31)

ப-ம். 2 யயா 3 தர்மம் 5 அதர்மம் 4 ச 7 கார்யம் 6 ச 9 அகார்யம் 11 ஏவ 8 ச 10 அயதாவத் 12 ப்ரஜாநாதி 14 புத்தி 13 ஸா 1 பார்த்த 15 ராஜஸீ.

(அ-ம்.) ஹே பார்த்த! எம்மதியானே தருமத்தையும் அதருமத்தையும், காரியத்தையும் அகாரியத்தையும் அயதாவத்தாகவே அறிகின்றானோ அது ராஜ ஸியாம். (31)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுருதி ஸ்மிருதி ரூப சாஸ்திரத்தால் விதிக்கப்பட்ட அக்கினிஹோத்திராதிகள் தருமமாம். அவற்றால் நிஷித்தமாய ஹிம்சாதிகள் அதர்மமாம். இவ்விரண்டும் அதிருஷ்ட அர்த்தத்தையே அடைவிக்கும். இவ்வாறு அதிருஷ்ட அர்த்தத்தை யடைவிக்கும் தருமா தருமமிரண்டையும், திருஷ்ட அர்த்தத்தையடைவிக்கும் காரியா காரியமிரண்டையும் எம்மதியால் அயதாவத் தாக அறிவனோ; அதாவது, இஃதொன்றொன்னும் அநிச்சயமும், அல்லது இவ் வஸ்து இவ்வகைத்தா? அல்லது வேறுவகைத்தா? என்னும் சம்சயமும் எம்ம தியாலடையலாமோ அது இராஜஸியாம். (31)

(அ-கை.) இப்போது தாமஸிமதியின் வடிவத்தை வருணித்தருளல்:—

சு-ம். அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா ।
ஸர்வார்த்தாந் விபரீதாம்ஸ்ச புத்திஸ்ஸா பார்த்த தாமஸீ ॥ (32)

ப-ம். 6 அதர்மம் 7 தர்மம் 8 இதி 4 யா 9 மந்யதே 2 தமஸா 3 ஆவ்ருதா 11 ஸர்வார்த்தாந் 12 விபரீதாந் 10 ச 5 புத்தி 13 ஸா 1 பார்த்த 14 தாமஸீ.

(அ-ம்.) ஹே பார்த்த! தமத்தான் மறைபட்ட எம்மதி அதருமத்தைத் தருமமென வெண்ணுமோ, மற்றுள எல்லாவற்றையுமே விபரீதமாகவே யெண் ணுமோ அம்மதி தாமஸியாம். (32)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! விசேஷ தரிசனத்தின் விரோதியாய தமவடிவ தோஷத்தான் மறைபட்ட எம்மதி அதருமத்தையும் தருமரூபமாக—என் ணுமோ; அதாவது, அதிருஷ்ட அர்த்தத்தையடைவிக்கும் சர்வ கருமத்தினும் எம்மதி விபரியயத்தையடையுமோ; திருஷ்டப்பிரயோஜனத்தையுடைய சர்வ ஞேயபதார்த்தங்களையும் எம்மதி விபரீதமாயே யெண்ணுமோ; அதாவது, சுகா திகளினேது பூதபதார்த்தங்களையும் எம்மதி துக்காதிகளின் ஹேதுபூதமேயா மென்னுமோ; அவ்விபரீதமுடைய மதிதாமஸியெனப்படும். (32)

(அ-கை.) ஆண்டு, 'ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச' என்பதாதி மூன்று சுலோகங்களானே மதியின் மூவகைத் தகைமை கூறியருளப்பட்டது; இப்போது 'த்ருத்யா யயா' என்பதாதி மூன்று சுலோகங்களானே திருதியின் மூவகைத் தகைமையைக் கூறியருளுபவராய் முதலில் சாத்விகதிருதியை வருணித்தருளுகின்றார் :—

சு-ம். த்ருத்யா யயா தாரயதெ மநஃப்ராணெந்த்ரியக்ரியாஃ ।
யொகெநாவ்யபிசாரிண்யா த்ருதிஃஸா பார்த ஸாத்த்விகீ ॥ (33)

ப-ம். 5 த்ருத்யா 4 யயா 7 தாரயதெ 6 மநஃப்ராணெந்த்ரியக்ரியாஃ 2 யொகெந 3 அவ்யபிசாரிண்யா 9 த்ருதிஃ 8 ஸா 1 பார்த 10 ஸாத்த்விகீ.

(அ-ம்.) ஹே பார்த்த! யோகத்தினால் வியாப்தமான எத்திருதியினால் இவன் மனப்பிராண இந்திரியங்களின் கிரியைகளைத் தடுப்பனோ அந்தத்திருதி சாத்விகீ யெனப்படும். (33)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சமாதிரூப யோகத்தானே வியாபிக்கப்பட்ட எத்திருதியானே மனச்சேஷ்டை வடிவக்கிரியைகளையும், பிராணச்சேஷ்டை வடிவக்கிரியைகளையும், இந்திரியங்களின் சேஷ்டை வடிவக்கிரியைகளையும், தாரணை செய்வனோ; அதாவது, எத்திருதியானே, மனுதிகளின் சேஷ்டைகளைச் சாஸ்திர நிஷித்த மார்க்கத்தினின்றும் தடைசெய்வனோ, எத்திருதியிருப்ப அவசியம் சமாதியாமோ; எத்திருதியானே தாரணஞ்செய்யப்பட்டமனுதிகளின் கிரியை, சாஸ்திரவிதியைத்தாண்டி சாஸ்திரஞ்சாற்றிய அர்த்தத்தினும் வேறாய அர்த்தத்தை விடயஞ்செய்யாதோ; இவ்வாறாய திருதி சாத்விகீயாம். (33)

(அ-கை.) இப்போது ராஜஸீ திருதிவடிவம் வருணித்தருளப்படும் :—

சு-ம். யயா து தர்மகாமார்தாந் த்ருத்யா தாரயதெऽர்ஜுந ।
ப்ரஸங்கெந பலாகாங்க்ஷீ த்ருதிஃஸா பார்த ராஜஸீ ॥ (34)

ப-ம். 5 யயா 2 து 7 தர்மகாமார்தாந் 6 த்ருத்யா 8 தாரயதெ 1 அர்ஜுந 3 ப்ரஸங்கெந 4 பலாகாங்க்ஷீ 11 த்ருதிஃ 10 ஸா 9 பார்த 12 ராஜஸீ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் கர்த்திருத்துவாதி அபிநிவேசத்தானே பலேச்சையுடையவனாய் எத்திருதியானே தரும காமார்த்த மூன்றையுமேதரிப்பனோ ஹே பார்த்த! அது இராஜஸீயெனப்படும். (34)

(வி-ம்.) ஈண்டு 'யயா து' என்பதிலிருக்கும் து என்பது, முன்மொழிந்த சாத்விக திருதியினும் இராஜச திருதியின்கண்ணே பின்னத்தன்மையைக் கூறுகின்றது ஹே அர்ச்சுன! கர்த்திருத்வமுதலிய அபிநி வேசத்தானே சுவர்க்காதி பலேச்சையைச் செய்பவனாய் எத்திருதியானே தருமத்தையும் காமத்தையும் அர்த்தத்தையும் தரிப்பனோ; அதாவது, தருமாதிகளே எனக்கின்றியமையாது சம்பாதனஞ் செய்யத்தக்கதாம் என இங்ஙனம் இவற்றையே நித்திய கர்த்தவ்யத் தன்மையானே நிச்சயஞ்செய்வனோ, ஒருகாலும் மோக்ஷ சம்பாதனஞ்செய்யும் நிச்சயத்தைச்செய்யானோ. ஹே பார்த்த! இவ்வாறாயதிருதி இராஜசியாம், ஈண்டு யாகாதி கருமங்களானே உண்டாய புண்ணியரூப அபூர்வம் தருமமாம், விஷய ஜன்னியசுகம் காமமாம், தனுதிபதார்த்தங்கள் பொருளாம். (34)

(அ-கை.) இப்போது தாமச திருதி வருணித்தருளப்படும் :—

ச-ம். யயா ஸ்வப்நம் பயம் ஶோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥ (35)

ப-ம். 3 யயா 4 ஸ்வப்நம் 5 பயம் 6 ஶோகம் 7 விஷாதம் 9 மதம் 10 ஏவ 8 ச 11 ந 12 விமுஞ்சதி 2 துர்மேதா: 14 த்ருதி: 13 ஸா 1 பார்த்த 15 தாமஸீ.

(அ-ம்.) ஹே பார்த்த! மதிகெட்டவன் எத்திருதியானே சொப்பனத்தையும் பயத்தையும் சோகத்தையும், விஷாதத்தையும், மதத்தையும், ஒருகாலும் விடானோ அது தாமசியாம். (35)

(வி-ம்.) ஈண்டு நித்திரை சொப்பனமெனப்படும், பிரதிகூலவஸ்துவின் தரிசன ஜன்னிய ஞானம் பயமாம். இஷ்ட வஸ்துவின் வியோக ஜன்னிய சந்தாபம் சோகமாம். பொறிகளின் வியாகூலத்தன்மை விஷாதமாம். சாஸ்திர நிஷித்த விடயங்களின் சேவைசெய்தலின் அபிமுகத்தன்மைமதமாம். இவ்வியாவற்றையும் கெடுமதி யனிவேவி எத்திருதியானே ஒருகாலும் விடானோ ; மற்றோ ; எத்திருதியானே துன்மதி சொப்பனாதிகளையே கர்த்தவ்யத்தன்மை வடித்தானே நிச்சயஞ்செய்வனோ அஃதான்றோ தாமசியெனப்படும். (35)

(அ-கை.) ஈண்டுப் பூர்வம் கிரியைகட்கும் கர்த்தா திகாரகங்கட்கும் சத்வாதி முக்குணங்களானே சாத்விகாதி மூவகைமை கூறியருளப்பட்டது ; இப்போது கிரியைகளானே உண்டாய சுகரூபபலத்திற்கு மூவகைமையை ஸ்ரீ பகவான் நான்கு சுலோகங்களானே கூறியருளுபவராய், ஈண்டு முதலில் பாதிச்சுலோகத்தானே சுகரூப பலத்திற்கு மூவகைமைப் பிரதிஞ்ஞையைச் செய்தருளி 1½-ச் சுலோகத்தானே சாத்விக சுகசொரூபத்தை வர்ணித்தருளுகின்றார்.

ச-ம். ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப ।
அப்யாஸாத்ரமதே யத்ர து:காந்தம் ச நிகச்சதி ॥ (36)

ப-ம். 6 ஸுகம் 2 து 3 இதாநீம் 5 த்ரிவிதம் 7 ஶ்ருணு 4 மே 1 பரதர்ஷப 9 அப்யாஸாத் 10 ரமதே 8 யத்ர 12 து:காந்தம் 11 ச 13 நிகச்சதி.

(அ-ம்.) ஹே பரத வம்சத்தின் மேன்மை தங்கிய அர்ச்சுன! மீண்டும் இப்போது எமது வசனத்தினின்றும் 3 வகைச்சுகத்தை நீ கேட்பாயாக. ஹே அர்ச்சுன! எச்சமாதிச் சுகத்தில் அதிகாரி பயில்வால் இரமிப்பனோ துக்காந்தத்தையடைவனோ. (36)

(வி-ம்.) ஹே பரத வம்சத்தில் சிரேஷ்ட அர்ச்சுன! இப்போது நீ எமது வசனத்தினின்றும் சாத்விகாதி பேதத்தானே சுகமூவகைமையைக் கேட்பாயாக ; அதாவது இச்சுகம் விடத்தக்கதாம், இச்சுகங்கொள்ளத்தக்கதாம் என்னும் பகுத்தறிவின்பொருட்டு நீ அன்னியசங்கற்பங்களைவிடுத்து அதன் சிரவணத்தில் நின் மனத்தை நிலைபெறுத்துதி ஈண்டு ஹே பரதர்ஷப! என்னும் விளியானே ஸ்ரீ பகவான் அருச்சுனன்பால் மனத்தைத்திரஞ்செய்யும் யோக்யதையைக்குறிப்பித்தருளினர். இவ்வாறுபாதிச் சுலோகத்தானே அச்சுகத்தின் மூவகைமையைக்கூறியருளுவதாகப் பிரதிஞ்ஞை செய்தருளி. இப்போது ' அப்யாஸாத்ரமதே யத்ர ' என்பதாதி 1½-ச்சுலோகத்தானே ஸ்ரீ பகவான் சாத்விக சுகத்தை வருணித்தருளுகின்றார்:— ஹே அர்ச்சுன! இயம நியமாதி சாதன சம்பன்ன அதிகாரி சமாதிச்சுகத்தில் அப்யாசத்தானே இரமிப்பன் ; அதாவது மிகச்செய்யும் பரி

சயத்தானே மிக மகிழ்வடைவன். விடய ஜன்னிய சுகத்தில் விரைவாகவே திருத்தனுவதேபோலச் சமாதிச் சுகத்தில் விரைவாகத் திருத்தனுகான், மற்றோ நிரந்தரதீர்க்ககாலம் சற்காரபூர்வகம் சேவித்த அத்தியந்தந்திட பரிசயவடிவ அப்யாசத்தானே பரிதிருப்தனுவன். சமாதிச் சுகத்தில் இரமணஞ் செய்பவனுச் சர்வ துக்கங்களின் அவசானரூப அந்தத்தையடைவன்; அதாவது விடய ஜன்னிய சுகத்தினீற்றில் மகா துக்கத்தையடைவதேபோல எச்சுக வீற்றில் துக்க அடைவுண்டாகாதோ; மற்றோ, சர்வ துக்கங்களின் பரிய வசானரூப அந்தமேயாம். ()

(அ-கை.) இப்போது 'து³꞉கா²ந்தஞ்ச நிக³ச்ச²தி' என்பதன் அர்த்தத்தை வெளிப்படையாய் வருணித்தருளுகின்றார் :—

சு-ம். யத்தத³க்³ரே விஷமிவ பரிணாமே(அ)ம்ருதோபமம் ।
தத்ஸுக²ம் ஸாத்த்விகம் ப்ரோக்தமாத்மபு³த்³தி⁴ப்ரஸாத³ஜம் ॥ (37)

ப-ம். 1 யத் 2 தத் 3 அக்³ரே 4 விஷம் 5 இவ 6 பரிணாமே 7 அம்ருதோபமம் 9 தத் 10 ஸுக²ம் 11 ஸாத்த்விகம் 12 ப்ரோக்தம் 8 ஆத்மபு³த்³தி⁴ ப்ரஸாத³ஜம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எச்சுகம் முதலிற்றொடங்குங்கால் விடத்தைப் போலாமோ, பரிணாமத்தில் அமிருத சமமாமோ, ஆன்மவிடயக புத்தியின் பிரசாதத்தானே ஜன்னியமாமோ அச்சுகம் யோகிகளானே சாத்விகமெனப்படும். ()

(வி-ம்.). ஹே அர்ச்சுன! எச்சமாதிச் சுகம் முதலில் விடம் போலாமோ; அதாவது, ஞான வைராக்கியத்தால் தியான சமாதிகளினாரம்பகாலத்தில் முற்றினும் ஆயாசத்தாற் சாதிக்கப்படுதலின் பிரசித்த விடம்போல எச்சுகம் துவேஷ விசேஷத்தையடைவிக்குமோ, எச்சுகம் பரிணாமத்தில் அமிருததுல்லியமாமோ; அதாவது, ஞான வைராக்கியத்தின் பரிபாகத்தின்கண்ணே எச்சுகம் அமிருதம் போல அத்தியந்தம் பிரீதிக்குவிடயமாமோ; எச்சுகம் ஆன்மபுத்திப் பிரசாத ஜன்யமாமோ; ஆன்மாவை விடயஞ்செய்யும் புத்தியான்மபுத்தியாம்; அதனது பிரசாதமாம்; அதாவது நித்திரையாலசியாதி தோடமற்றுச் சுவஸ்தமாகிய ஸ்திதி ஆன்ம புத்திப்பிரசாதமாம். இத்தகைய ஆன்ம விஷயக மதிப்பிரசாதத்தானே எச்சுக முண்டாமோ; இராஜச சுகம்போல எச்சுகம் விஷய இந்திரிய சம்யோகத்தானே யுண்டாகாதோ; தாமச சுகத்தைப்போல எச்சுகம் நித்திரை ஆலசியாதிகளானும் உண்டாகாதோ; இவ்வாறனான்ம மதியைநீக்கி ஆன்ம விஷயக மதிப்பிரசாதத்தானே ஜன்னியமாகிய சமாதிச்சுகம் யோகிகளானே சாத்விகச் சுகமெனப்படும். ஈண்டு, எவரோ ஓரறிஞரால் 'ஸுக²ம் த்விதா³னீம்' என்னும் சுலோகத்திற்கு இப்பொருள் செய்யப்படும். மீண்டும் மீண்டும் சேவனரூப அப்யாசத்தானே எச்சாத்விக சுகத்திலேனும் இராஜச சுகத்திலேனும் தாமச சுகத்திலேனும் இரதியையடைவனோ, எவ்விரதியானே புத்திர சோகாதிரூப துக்கத்தின் அவசானரூப அந்தத்தையடைவனோ அது சுகமாம். அது சத்வாதி குணங்களின் பேதத்தானே மூவகைத்தாம். அம்மூவகைச் சுகத்தை நீயிப்போது கேட்டி! இங்ஙனம் தத்தென்னும்பதத்தை யத்தியாகரித்துக் சம்பூர்ண சுலோகத்திற் கன்வயம் செய்தல்வேண்டும். இதன் பிற்பாதியானே சாமானியமாகச் சுகமாத்திரத்திற் கிலக்கணம் கூறியருளப்பட்டது. இச்சுலோகத்தின் முற்பாதியானே அச்சுகத்தின் மூவகைமையைக்கூறியருளுவான் பிரதிஞ்ஞை செய்தருளப்பட்டது 'யத்தத³க்³ரே விஷமிவ' என்னுஞ் சுலோகத்தானே சாத்விக சுகத்தினிலக்கணம் கூறியருளப்பட்டது ஸ்ரீமத் பாடியக்காரரது திருக்கருத்தமிதுவாம். (37)

(அ-கை.) இப்போது ராஜச சுகத்தின் சொரூபத்தை வருணித்தருளல் :—

சு-ம். 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌤𑌦𑌗𑍍𑌰𑍇𑌽𑌮𑍃𑌤𑍋𑌪𑌮𑌮𑍍 ।
𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑍇 𑌵𑌿𑌷𑌮𑌿𑌵 𑌤𑌤𑍍𑌸𑍁𑌖𑌂 𑌰𑌾𑌜𑌸𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ (38)

ப-ம். 3 𑌵𑌿𑌷𑌯𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 1 𑌯𑌤𑍍 2 𑌤𑌤𑍍 4 𑌅𑌗𑍍𑌰𑍇 5 𑌅𑌮𑍃𑌤𑍋𑌪𑌮𑌮𑍍 6 𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑍇 7 𑌵𑌿𑌷𑌂 8 𑌇𑌵 9 𑌤𑌤𑍍 10 𑌸𑍁𑌖𑌂 11 𑌰𑌾𑌜𑌸𑌂 12 𑌸𑍍𑌮𑍃𑌤𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன எச்சுகம் விஷயேந்திரிய சம்யோகத்தானே யுண்டாமோ, முதலாரம்பத்தில் அமிருதசமானமாமோ, பரிணாமத்தில் விஷதுல்லியமாமோ அச்சுகம் இராஜசமெனப்படும். (38)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எச்சுகம் சப்தாதி விடயங்களின் சுரோத்திராதி இந்திரியங்களின் சம்பந்தத்தானே ஜன்னியமாமோ; முன்மொழிந்த ஆன்ம விஷயக மதியின் பிரசாதத்தானே எச்சுகம் ஜன்னியமாகாதோ; எச்சுகம் முதலாரம்பத்தில் மன இந்திரியங்களின் சய்யமாதிரூபக் கிலேச அபாவத்தானே போக்தாவின் அமிருத சமானமாமோ, எச்சுகம் பரிணாமகாலத்தில் போக்தாவிற்கு இகபரலோக துக்கத்தை யடைவிப்பதாதலின் விஷசமானமாமோ; அதாவது மரண சாதனரூப விஷம் சகலருக்கும் பிரதிகூலமாவதேபோல எவ்விஷய சுகம் பரிணாமகாலத்தில் போக்தாவிற்கு முற்றிலும் பிரதிகூலமாமோ; அத்தகைய வெளிப்படையான மாலை சந்தனவனிதை முதலியவற்றின் சங்காதி ஜன்னிய விஷய சுகம் ஆன்றோரால் இராஜசமெனப்படும். (38)

(அ-கை.) இப்போது தாமச சுகத்தின் சொரூபத்தை வருணித்தருளுகின்றார்.

சு-ம். 𑌯𑌦𑌗𑍍𑌰𑍇 𑌚𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍇 𑌚 𑌸𑍁𑌖𑌂 𑌮𑍋𑌹𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌲𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋𑌤𑍍𑌥𑌂 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥ (39)

ப-ம். 1 𑌯𑌤𑍍 3 𑌅𑌗𑍍𑌰𑍇 4 𑌚 5 𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑍇 8 𑌚 2 𑌸𑍁𑌖𑌂 7 𑌮𑍋𑌹𑌨𑌂 6 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 9 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌲𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑍋𑌤𑍍𑌥𑌂 10 𑌤𑌤𑍍 11 𑌤𑌾𑌮𑌸𑌂 12 𑌉𑌦𑌾𑌹𑍃𑌤𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எச்சுகம் முதலிலாரம்பிக்கும்போதும் பரிணமத்திலும் மதியைமயக்குமோ, நித்திரையாலசியப் பிரமாதத்தானே உற்பன்னமாமோ அச்சுகம் தாமசமாம். (39)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எச்சுகம் முதற்றொடக்கத்திலும் பரிணமத்திலும் மதியைமயக்குமோ, எச்சுகம் நித்திரை ஆலசியம் பிரமாதம் என்பவற்றானேயுண்டாமோ, முதலிரண்டும் வெளிப்படையேயாம். கர்த்தவ்ய அர்த்த நிச்சயமிலாமல் கேவலம் மனோராஜ்ய மாத்திரமாயது பிரமாதமாம் இம்மூன்றானும் எச்சுகம் உண்டாமோ; எச்சுகம் சாத்விக சுகத்தைப்போல ஆன்ம விஷயக மதிப் பிரசாதத்தானும் ஜன்னியமாகாதோ; இராஜச சுகத்தைப்போல எச்சுகம் விஷயேந்திரிய சம்யோகத்தானும் ஜன்னியமாகாதோ; அத்தகையசுகம் ஆன்றோரால் தாமச சுகமெனப்படும். (39)

(அ-கை.) இப்போது பூர்வம் சாத்விகாதி மூவகைமையானே கூறியருளுந பதார்த்தங்களையும் சங்கிரகித்தருளுபவராய் ஸ்ரீ பகவான் முற்கூறிய வகையாய பொருளை உபசங்கரித்தருளுகின்றார்:—

சு-ம். 𑌨 𑌤𑌦𑌸𑍍𑌤𑌿 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌵𑌾 𑌦𑌿𑌵𑌿 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 ।
𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌯𑌦𑍇𑌭𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥ (40)

ப-ம். 14 𑌨 9 𑌤𑌤𑍍 15 𑌅𑌸𑍍𑌤𑌿 10 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 11 𑌵𑌾 12 𑌦𑌿𑌵𑌿 13 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌵𑌾 𑌪𑍁𑌨𑌃 2 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 3 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌜𑍈𑌃 7 𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 1 𑌯𑌤𑍍 4 𑌏𑌭𑌿𑌃 8 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 5 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌃 6 𑌗𑍁𑌣𑍈𑌃.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எப்பொருள் பிரகிருதிஜன்னிய இம்முன்னியம் பிய மூன்று குணங்கள் அற்றதாமோ அது இப்பிருதிவியில் அல்லது துறக்கத்தில் தேவதைகளிடத்தில் இராதாம். (40)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சத்துவாதி மூன்று குணங்களின் சாமிய அவஸ்தை வடிவப் பிரகிருதியினின்று முண்டாய சத்வாதி முக்குணங்கள்; அதாவது, அர்தப்பிரகிருதியினின்றும் வைஷம்மிய அவஸ்தையை யடைந்த சத்வாதி முக்குணங்கள். அம்முக்குணரூபமே பிரகிருதியாமாதலின் அவற்றின்கண்ணே சாக்ஷாத் பிரகிருதி ஜன்னியத்தன்மை சம்பவியாதாம்; மற்றோ, குணங்களின் சாமிய அவஸ்தை வடிவப் பிரகிருதியினின்றும் சத்வாதி குணங்களின் வைஷம்மிய அவஸ்தையே அக்குணங்களினுற்பத்தியாம். அல்லது, ஈண்டுப்பிரகிருதி சப்தத்தானே அநிர்வசநீய மாயையின் கிரகணஞ்செய்க. மாயை வடிவப்பிரகிருதியாலுண்டாய அதாவது கற்பிதமாய சத்துவாதி முக்குணங்கள். அல்லது பிரகிருதி சப்தத்தானே ஜன்மாந்தர தருமாதரும சமஸ்காரத்தைக் கவர்க. சமஸ்காரரூபப் பிரகிருதியினின்று முண்டாய பந்தஹேதுவாய சத்துவாதி முக்குணங்களற்ற பிராணியல்லது அப்பிராணி வடிவசத்துவமென்னும் பதார்த்தம் இப்பிருதிவியிலிருக்கும் மனுடாதிகளில் சுவர்க்கத்திலிருக்கும் தேவதைகளிடத்திலின்றாம்; அதாவது, எவ்வுலகிலும் முக்குணங்களற்ற அனன்ம வஸ்து இல்லையாம்; யாவுமே முக்குணத்தோடு கூடியதாம். (40)

(அ-கை.) ஈண்டு சத்வாதி முக்குணன்மக கிரியாகாரக பலவடிவச் சர்வ சம்சாரமுமே பொய்ஞ்ஞானத்தானே கற்பிக்கப்பட்ட அநர்த்தரூபமேயாம். இப்பொருள் முன்னர் 14-வது அத்தியாயத்தில் கூறியருளப்பட்டது. முற்கூறிய பொருளை ஈண்டு ஸ்ரீ பகவான் உபசம்மரித்தருளினர், முன்னர் 15 வதத்தியாயத்திலோ விருக்ஷரூபயாகக்கற்பனைசெய்து அவ்வநர்த்த வடிவ சம்சாரத்தைக்கூறி '𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍂𑌲𑌂' என்னுஞ் சுலோகத்தானே விஷயங்களில் வைராக்கிய வடிவ அசங்கசஸ்திரத்தால் அச்சம்சார விருக்ஷத்தை வெட்டிப்பிரமான்மரூப பதத்தைத் தேடவேண்டும் எனக்கூறியருளப்பட்டது. ஈண்டுச் சர்வ சம்சாரமும் முக்குண வடிவமாக இருத்தலின் அதனை வெட்டலெங்ஙன்? வெட்டும் அசங்கசஸ்திரத்தினடைவே மகா துர்க்கடமாம். எனச்சங்கையுண்டாக அதிகாரத்தையனுசரித்து வேதபகவான் விதித்தவருணாசிரம தருமத்தால் பிரசன்னமாகிய பரமேசுரரான் அதிகாரிக்கிவ்வசங்க சஸ்திரப்பிராப்தியாம். இப்பொருளைக் கூறியருளும்பொருட்டும், இத்துணையே சர்வ வேதங்களின் பொருள், அப்பொருள் பரம புருடார்த்தவிழைவுடைய அதிகாரியால் அவசிய மனுஷ்டிக்க யோக்கியமாம். இவ்வாறு இக்கீதா சாஸ்திரத்தின்கண்ணே சர்வ வேதங்களின் பொருளை உபசம்ஹாரஞ் செய்யவேண்டும் என்னும் பொருளைக்கூறியருளும் பொருட்டும் பிற்பிரகாணத்தை ஸ்ரீ பகவான் தொடங்கியருளிப்பிரதம சூத்திரரூப சுலோகத்தைக் கூறியருளுகின்றார்:—

சு-ம். 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌚 𑌪𑌰𑌂𑌤𑌪 ।
𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑍈𑌃 ॥ (41)

ப-ம். 2 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌵𑌿𑌶𑌾𑌂 4 𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 3 𑌚 1 𑌪𑌰𑌂𑌤𑌪 5 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 8 𑌪𑍍𑌰𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 6 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌪𑍍𑌰𑌭𑌵𑍈𑌃 7 𑌗𑍁𑌣𑍈𑌃.

(அ-ம்.) ஹே பரந்தப! பிராஹ்மணாதி மூன்றுவருணங்கட்கும் சூத்திரர்க்கும் கருமம் சுபாவ ஜன்னிய குணங்களானே தனித்தனியாக நிலைபெறுத்தப் பெற்றுளது அவற்றை நீ கேட்டி! (41)

(வி-ம்.) ஹே பரந்தப! அதாவது ஹே உள்வெளிப்பகைவரை ஓடுமாறடிக்கும் அர்ச்சுன! பிராஹ்மணாதி மூவர்க்கும் சூத்திருக்கும் கருமம் பரஸ்பரம் வேறு வேருகியிருக்கும் ஈண்டு, 'ப்³ராஹ்மணக்ஷத்ரியவிஶாம்' என்னும் 3 பதங்கட்குத் தொகை செய்தருளப்பட்டது, முதன் மூன்று வருணங்களில் இருபிறப்பாளத்தன்மை யுண்மையின் வேதாத்தியயன அக்கினிஹோத்திராதி சமதருமங்களைக் கூறியருளும்பொருட்டாம். 'ஶூத்³ராணாம்' என்னும் வசனத்தானே மூவருணத்தினும் தனித்தது அவர்பால் ஒரு பிறப்பாளராந்தன்மை யுண்மையின் வேத அநதிகாரத்தன்மையை யறிவித்தருளற்பொருட்டாம். இது ஸ்ரீ வசிட்டராலுங் கூறப்பெற்றுளது :—

சத்வாரோ வர்ணா ப்³ராஹ்மணக்ஷத்ரியவைஶ்யஶூத்³ராஸ்த்ரயோ வர்ணா த்³விஜாதயோ ப்³ராஹ்மணக்ஷத்ரியவைஶ்யாஸ்தேஷாம் மாதுரக்³ரே விஜநநம் த்³விதீயம் மௌஞ்ஜிப³ந்த⁴நே அத்ராஸ்ய மாதா ஸாவித்ரீ பிதா த்வாசார்ய உச்யதே.

(பொ-ள்.) பிராஹ்மணாதி நான்கு வருணங்களுள்ளன. அவற்றுள் முதன் மூன்றும் துவிஜாதியாம் 2 தாய் தந்தையர் பானின்றும் உண்டானவர் இருபிறப்பாளர் ஆவர் பிராஹ்மணாதி 3 வருணங்கட்கும் முதற்பிறப்போ பிரசித்தமாய தாய் தந்தையரினின்றுமாம்; இரண்டாம் பிறப்போ மௌஞ்சிபந்தன கருமத்திலாம்; ஆங்குச் சாவித்ரீ தாயாம் உபதேசகர்த்தாவாய ஆசாரியர் தந்தையாம். இவ்வாறு உற்பத்தி ஸ்தான விசேடத்தினின்றும் நான்கு வருணங்களின் விபாகமே சித்தமாம்.

> ப்³ராஹ்மணோஸ்ய முக²மாஸீத் பா³ஹூ ராஜந்ய: க்ருத: ।
> ஊரூ தத³ஸ்ய யத்³வைஶ்ய: பத்³ப்⁴யாம் ஶூத்³ரோ அஜாயத ॥

(பொ-ள்.) பரமேசுரருடைய வதனத்தினின்றும் பிராஹ்மணனும் தோளினின்றும் க்ஷத்திரியனும், தொடையினின்றும் வைசியனும் பாதங்களினின்றும் சூத்திரனும் உண்டாயினர். இது அன்னிய சுருதியினுங் கூறப்பட்டுளது.

> கா³யத்ர்யா ப்³ராஹ்மணமஸ்ருஜத த்ரிஷ்டுபா⁴ ராஜந்யம் ।
> ஜக³த்யா வைஶ்யம் ந கேநசிச்ச²ந்த³ஸா ஶூத்³ரமிதி ॥

(பொ-ள்.) பரமேசுரர் காயத்திரி யென்னும் சந்தசானே பிராஹ்மணனையும், திரிஷ்டுப் சந்தசானே க்ஷத்திரியனையும், ஜகதீ சந்தசினுனே வைசியனையும், உண்டாக்கினர், சூத்திரனை எச்சந்தசானு முண்டாக்கவில்லை. 'ஶூத்³ரஶ்சதுர்த்²தோ² வர்ண ஏகஜாதி:' பிராஹ்மணாதி மூன்று வருணங்களைக்குறித்துச் சூத்திரன் 4-வது வருணமுடையன் அவன் ஒரே ஜன்மமுடையவன். இவ்வாறு கௌதம இருடியும் கூறியுள்ளார் நால்வருக்குங் கருமம் பரஸ்பரம் வேறு வேருகவே நிலைபெறும். எக்காரணத்தானே யது வேறு வேருயிற்றென அர்ச்சுனனுக் கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் வேறு வேருந்தன்மையில் நிமித்தத்தைக் கூறியருளுகின்றார். 'ஸ்வபா⁴வ ப்ரப⁴வைர் கு³ணை:' பிராஹ்மணத் வாதிரூப சுபாவங்களையுண்டாக்கு மேதுக்களாகிய சத்துவாதி குணங்களால் அதன் வேற்றுமையின் நிலைபேறும். அவ்வகையைக் காட்டுதும் :— ஆண்டுப் பிராஹ்மண சுபாவத்திற்கோ பிரசாந்தரூப மிருத்தலின் சத்துவகுணமே ஹேதுபூதமாம். க்ஷத்திரிய சுபாவத்திற்கோ ஈசுரசுபாவமுடைமையின் சிறுசத்துவத்தோடுற்ற இரஜோ

குணமே ஹேதுவாம். வைசிய சுபாவத்திற்கோ இச்சை யியற்கையிருத்தலின் சிறிது தமங்கூடிய இராஜோகுணமே ஹேதுவாம். சூத்திர சுபாவத்திற்கோ மூ வியற்கையுடைமையின் சிறிது இராஜசோடுற்ற தமோகுணமே ஹேதுவாம். அ லது, மாயையெனப்பெயரிய பிரகிருதி சுபாவமெனப்படும், அவ்வுபாதான கா ணத்தினின்று முண்டாம் குணங்கள் சுபாவப் பிரபவ குணங்களாம். அவற்றா நான்கு வருணங்களின் கருமம் வேறு வேறாக நிலைபெறும். அல்லது, முற்பிற பின் சமஸ்காரம் இவ்வர்த்தமான ஜன்மத்தில் தன் பலத்தை யீவான் முற்பட் அபிவியக்தியையடைந்த சமஸ்காரம் சுபாவமாம். அது நிமித்தரூபமாகக் காரண எக்குணங்கட்கோ அவை சுபாவப் பிரபவகுணங்களாம். இத்தகையவற்றா அக்கருமம் வேறு வேறாக நிலைபெறும். தருமப் பிரதிபாதக சாஸ்திரமும் சுபா அபேக்ஷையை யவசியஞ் செய்யுமாதலின் அக்கருமம் சாஸ்திரத்தானே வே வேறாக நிலைபெறினும் சுபாவப் பிரபவகுணங்களானே வேறு வேறுபடுத்தப்பெ றனவேயாமெனப்படும். சாஸ்திரம் புருடசமஸ்காரரூப சுபாவ அபேக்ஷையை ய சியஞ் செய்யுமாதலினனுமே நூலுடையார் இந்நியாயத்தைக் கூறியுள்ளா யாகாதி கருமங்களின் விதானஞ்செய்யும் விதிவசன அதிகாரியின் சக்தி சகசா யாம். இவ்வாறக்குணங்களானே வருணங்களின் கருமம் விவஸ்தைப்படும் எ பது கௌதமாலுங் கூறப்பட்டுளது :—

[illegible]

(பொ-ள்.) பிராஹ்மணாதி மூவர் இருபிறப்பாளர், அவர்வட்கு வேதாத்ய னம் அக்கினிஹோத்திரம் தானம் என்னும் மூன்றும் சாதாரண தருமமாம் மறை படிப்பித்தல் மகஞ்செய்வித்தல், வழங்கலைவாங்கல் என்னும் இம்முத்தருமம் மறை யவனுக்கதிகமாம். க்ஷத்திரியனை சியர்க்கின்றும். சாதாரண மூன்றோடு சர்வபூதா களையுங்காத்தல் துஷ்டரை நீதிமுறையே தண்டித்தல் இவை க்ஷத்திரியனுக்கதி மாம். கிருஷிவாணிஜ்ய பசுபாலனம் விருத்தியின் பொருட்டுத் தனத்தை நியா வட்டிக்கிடல் இவை வைசியனுக்கதிகமாம் ஒரு பிறப்பாளனாகிய சூத்திரனுக்கே சத்தியம் அக்குரோதம் சௌசம் ஆசமனப் பொருட்டுப் பாணிபாதங்களைச் சுத் செய்தல், சிராத்தம், பிருத்யபாணம், சுவதாரவிருத்தி, மூவருணங்களின் சேவை என்பவையாம். இக்கௌமத இருஷியின் மதத்தில் வருணங்களின் சாதார அசாதாரண தருமங்களின் விவத்தையாம். இவ்வாறே வசிஷ்ட முனிவருங் கூற யுள்ளார் :—

[illegible]

(பொ-ள்.) தான் மறையைப் படித்தல் புத்திர சிடர்க்குப் படிப்பித்தல் வேட்டல், வேறுயஜமானனுக்கு இருத்துவிக்காயிருந்து வேட்பித்தல், கொடு தல் வாங்கல் என ஆறு கருமம் பிராஹ்மணனுக்கேயாம். வேதாத்தியயன

யாகம் தானம் என மூன்றும் க்ஷத்திரியனுக்காம், இம்மூன்றும் மூவருணத்தினருக்கும் சாதாரணமாம். சஸ்திரத்தாற் பிரஜாபாலனம் க்ஷத்திரியனுக்கு அசாதாரண சுவ தருமமாம் இவ்வசாதாரண தருமத்தானே அவன் ஜீவிக்கவேண்டும். வைசியனுக்கும் கூறிய சாதாரண தருமம் 3 உண்டு; ஆனல் கிருஷிவாணிஜ்யாதி பசுபாலனம் தனத்தை நியாய வட்டிக்கிடல் வைசியனுக்கசாதாரண கருமமாம். 3 வருணத்தார்க்கும் சேவைசெய்தல் சூத்திரன் கருமமாம். இதனை ஆபஸ்தம்ப இருடியும் கூறியுள்ளார் :—

சத்வாரோ வர்ணா: ப்ராஹ்மணக்ஷத்ரியவைஶ்யஶூத்ரா: தேஷாம் பூர்வ: பூர்வோ ஜந்மத: ஶ்ரேயாந் ஸ்வகர்ம ப்ராஹ்மணஸ்யாத்யயநமத்யாபநம் யஜ்ஞோ யாஜநம் தாநம் ப்ரதிக்ரஹணம் ஸதாந்யேவ க்ஷத்ரியஸ்யாத்யாபநயாஜநப்ரதிக்ரஹணாநீதி பரிஹாப்ய தண்டயுத்தாதிகாநி க்ஷத்ரியவத்வைஶ்யஸ்ய தண்டயுத்தவர்ஜம் க்ருஷிகோரக்ஷவாணிஜ்யாதிகம் ஶுஶ்ரூஷா ஶூத்ரஸ்யேதரேஷாம் வர்ணாநாம்,

(பொ-ள்.) பிராஹ்மணுதி நான்கு வருணங்களினிடையில் உத்தர உத்தரவருணத்தை யபேக்ஷித்து பூர்வ வருணம் ஜன்மத்தானே மேன்மையதாம். க்ஷத்திரியாதி மூவரைக் குறித்துப் பிராஹ்மணன் சிரேஷ்டன். வைசியாதி யிருவரைக்குறித்து க்ஷத்திரியனுயர்ந்தோன். சூத்திரனைக்குறித்து வைசியனுயர்ந்தோன், அத்தியயனுதி ஆறு கருமம் அந்தணனுக்காம். படிப்பித்தல் வேட்பித்தல் வாங்கல் மூன்றை விடுத்து மற்றைய மூன்றும் க்ஷத்திரியனுக்காம். போர் கொடியோரைத்தண்டித்தலிரண்டும் க்ஷத்திரியனுக்கதிகமாம். க்ஷத்திரியனுக்கே போலும் வைசியனுக்கும் யுத்த தண்டங்களையொழித்து சாதாரண கருமமூன்றுமாம், கிருஷி கோரக்ஷவாணிஜ்யம் வைசியனுக்கதிகமாம். 3 வருக்கும் சேவை செய்தல் சூத்திரன் கருமமாம். இதனை மனுபகவானுங்கூறியுள்ளார் :—

அத்யாபநமத்யயநம் யஜநம் யாஜநம் ததா தாநம் ப்ரதிக்ரஹம்சைவ ப்ராஹ்மணாநாமகல்பயத், ப்ரஜாநாம் ரக்ஷணம் தாநமிஜ்யாத்யயநமேவ ச விஷயேஷ்வப்ரஸக்திஶ்ச க்ஷத்ரியஸ்ய ஸமாஸத:, பஶூநாம் ரக்ஷணம் தாநமிஜ்யாத்யயநமேவ ச வணிக்பதம் குஸீதம் ச வைஶ்யஸ்ய க்ருஷிமேவ ச ஏகமேவ து ஶூத்ரஸ்ய ப்ரபு: கர்ம ஸமாதிஶத் ஏதேஷாமேவ வர்ணாநாம் ஶுஶ்ரூஷாமநஸூயயா.

(பொ-ள்.) சிருஷ்டியின்ஞதி காலத்தில் சர்வஞ்ஞபரமேசுரர் பிராஹ்மணருக்கு அத்தியயனுதி ஆறுகருமங்களையுபதேசித்தனர். பிரஜாரக்ஷணம், தானம், யாகம், அத்யயனம், விடயாசக்தியின்மை என்பதாதிகளை க்ஷத்திரியனுக்குபதேசித்தனர். பசுபாலனம் தானம் யாகம் வேதாத்தியயனம் வாணிஜ்யம், விருத்திக்காகத்தனத்தை நியாயவட்டிக்கிடல், கிருஷிமுதலியவற்றை வைசியனுக்குபதேசித்தனர். அசூயையின்றிப் பிராஹ்மணுதி மூன்று வருணத்தினருக்கும் சேவை செய்தலைச் சூத்திரனுக்குபதேசித்தனர். இவ்வாறு 4 வருணங்கட்கும் கருமம் சத்துவாதி பேதத்தானே பின்ன பின்னமாக நிலைபெறும். (41)

(அ-கை.) ஆண்டு முதலில் பிராஹ்மணாதி இயற்கையாய குணங்களாலுண்டாம் கருமங்களைக்கூறியருளுகின்ருர்.

சு-ம். ஶமோ தமஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் ॥ (42)

ப-ம். 1 𑌶𑌮𑌃 2 𑌦𑌮𑌃 3 𑌤𑌪𑌃 4 𑌶𑍌𑌚𑌂 5 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 6 𑌆𑌰𑍍𑌜𑌵𑌂 𑌏𑌵 7 𑌚 8 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 9 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 10 𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑍍𑌯𑌂 12 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 11 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌜𑌂.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சம, தம, தப, சௌசம், க்ஷாந்தி, ஆர்ஜவம், ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம் என்னு மொன்பதும் இயற்கையா லுண்டாய பிராஹ்மண கருமமாம். (42)

(வி-ம்.) மனத்தையடக்கல் சமமாம், வெளிப்பொறியையடக்கல் தமமாம், முன்னர் 17 வதத்தியாயத்திற் கண்டபடி சரீராதி மூவகைத்தபமே ஈண்டுத்த பசப்தத்தானே கொள்ளத்தக்கதாம். சௌசம் உள்வெளிப் பேதத்தானே யிருவகையாம். மண்ணீர்கொண்டுடன் மாசுமாற்றல் வெளியாம். மனத்தூய்மையே உள்ளாம். சௌசசப்தத்தாலிருவகையேயாய சௌசத்தையே கவர்க. கடோரவசனங்களானே நிராதஞ்செய் திருப்பினும், தண்டாதிகளாற்றூடனஞ் செய்திருப்பினும், மனத்திற்குரோதாதி விகாரமற்றிருத்தல் க்ஷமையாம். இதனையேயீண்டு க்ஷாந்தியென்பதாற்கொள்க. குடிலத்தன்மையின்மை யார்ஜவமாம். ஷடங்கசகித வேதத்தையும் வேதார்த்தத்தையும் விடயஞ்செய்யும் அந்தக்காணவிருத்தி விசேஷம் ஞானமாம். கரும காண்டத்தில் யாகாதிகளின் குசலத்தன்மை, ஞானகாண்டத்தில் பிரஹ்மான்மாவின் ஒருமையநுபவம் விஞ்ஞானமாம். முன் மொழிந்த சாத்விகி. சிரத்தை, ஆஸ்திக்பமாம். இங்ஙனம் சத்துவகுணவிபற்கையாகிய 9 தருமமும் பிராஹ்மண கருமமெனப்படும். சாத்விக அவஸ்தையின்கண்ணே நான்கு வருணத்திற்குமே இவையாமெனினும் பெரும்பான்மையும் பிராஹ்மணனுக்கேயுண்டாம்; பிராஹ்மணன் சத்துவ சுபாவ முடையவனேயாவனுதலின். பிறரிடத்தோ சத்துவ விருத்திவபத்தால் அவையோ ரொருகாலேயுண்டாம். இதனானே அன்னிய சாஸ்திரத்தின்கண்ணிவை நால்வருக்கும் பொதுவான தருமமெனப்பட்டுளது. இதனை ஸ்ரீ விஷ்ணுபகவானுங் கூறியுள்ளார்.

𑌕𑍍𑌷𑌮𑌾 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌦𑌮𑌃𑌶𑍌𑌚𑌂 𑌦𑌾𑌨𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌸𑌂𑌯𑌮𑌃 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌗𑍁𑌰𑍁𑌶𑍁𑌶𑍍𑌰𑍂-
𑌷𑌾 𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑍁𑌸𑌰𑌣𑌂 𑌦𑌯𑌾. 𑌆𑌰𑍍𑌜𑌵𑌂 𑌲𑍋𑌭𑌶𑍂𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌦𑍇𑌵𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣
𑌪𑍂𑌜𑌨𑌂 𑌅𑌨𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌾 𑌚 𑌤𑌥𑌾 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇.

(பொ-ள்.) க்ஷமை, சத்தியம், தமம், சௌசம், தானம், இந்திரியங்களின் சம்யமம், அஹிம்சை, குருசிசுருஷை, தீர்த்த சேவனம், தயை, ஆர்ஜவம், உலோபமின்மை, தேவதை மறையவரைப் பூஜித்தல், அசூயையின்மை, என்பவையாவும் பொதுத்தருமங்களாம்; அதாவது, 4 வருணங்கட்கும் 4 ஆசிரமங்கட்கும் பொது வென்பதாம். இதனைப் பிருகஸ்பதியுங் கூறியுள்ளார்:—

𑌦𑌯𑌾 𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤 𑌅𑌨𑌸𑍂𑌯𑌾 𑌅𑌶𑍌𑌚𑌾 𑌨𑌾𑌯𑌾𑌸𑌂 𑌮𑌙𑍍𑌗𑌲𑌂 ।
𑌅𑌕𑌾𑌰𑍍𑌪𑌣𑍍𑌯 𑌮𑌸𑍍𑌪𑍃𑌹𑌤𑍍𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 𑌚 ॥
𑌪𑌰𑍇 𑌵𑌾 𑌬𑌨𑍍𑌧𑍁𑌵𑌰𑍍𑌗𑍇 𑌵𑌾 𑌮𑌿𑌤𑍍𑌰𑍇 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌰𑌿 𑌵𑌾 𑌸𑌦𑌾 ।
𑌆𑌪𑌨𑍍𑌨𑍇 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌦𑌯𑍈𑌷𑌾 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾 ॥
𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌵𑌾 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑍇 𑌚𑍈𑌵 𑌦𑍁𑌃𑌖𑍇 𑌚𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌿𑌤𑍇 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 ।
𑌨 𑌕𑍁𑌪𑍍𑌯𑌤𑌿 𑌨 𑌵𑌾 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌸𑌾 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾 ॥
𑌨 𑌗𑍁𑌣𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌿𑌨𑍋 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿 𑌚𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑍍 𑌗𑍁𑌣𑌾𑌨𑌪𑌿 ।
𑌨𑌾𑌨𑍍𑌯𑌦𑍋𑌷𑍇𑌷𑍁 𑌰𑌮𑌤𑍇 𑌸𑌾𑌨𑌸𑍂𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾 ॥
𑌅𑌭𑌕𑍍𑌷𑍍𑌯 𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌸𑍍𑌤𑍁 𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑍈𑌃 ।
𑌸𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑍇 𑌚 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌶𑍌𑌚𑌮𑍇𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌂 ॥

ஶரீரம்பீட்யதே யேநஶுபேநாபி கர்மணா ।
அத்யந்தம் தந்ந குர்வீத அநாயாஸ: ஸ உச்யதே ॥
ப்ரஶஸ்தாசரணம் நித்யமப்ரஶஸ்த விவர்ஜநம் ।
ஏதத்தி மங்களம் ப்ரோக்தம் ருஷிபிஸ்தத்வதர்ஶிபி: ॥
ஸ்தோகாதபி ப்ரதாதவ்யமதீநேநாந்தராத்மநா ।
அஹந்யஹநி யத்கிஞ்சிதகார்பண்யம் ஹி தத்ஸ்ம்ருதம் ॥
யதோத்பந்நேந ஸந்தோஷ: கர்தவ்யோ ஹ்யல்பவஸ்துநா ।
பரஸ்யாசிந்தயித்வார்தம் ஸாஸ்ப்ருஹா பரிகீர்த்திதா ॥

(பொ-ள்.) தயை, க்ஷமை, அநசூயை, சௌசம், அநாயாசம், மங்களம், அகார்ப்பண்யம், அஸ்பிருகை, என்பவையெல்லா வருணங்கட்கும் ஆசிரமங்கட்கும் பொதுவாம். தயையாவது :—ஆபத்தையடைந்த பிராணியையேனும் உறவினர் மித்திரன் பகைவன் முதலியவரை யேனும் அவ்வாபத்தினின்றுங் காத்தல் தயையாம். க்ஷமையாவது :—தனது பிராரப்த கருமவயத்தால் பாகிய ஆதிபௌதிக ஆத்யாத்மிக துக்கமடைவுறவே அத்துக்கத்தையுண்டாக்கும் பகை முதலியவை யடைவுறவே குரோதத்தைச் செய்யாமல் அவற்றையும் கொல்லாமலிருக்கை க்ஷமையாம். அநசூயையாவது :—குணிகளின் குணத்தைக்கெட்டாமல் அன்னியன் அற்பகுணத்தையுந் துதிசெயல், அன்யர் தோஷத்தைச் செப்புவதிற்பிரீதியின்மை அநசூயையாம். சௌசமாவது :—கள்மாமிசாதிகளைவிடல் வித்தை முதலிய வற்றையுடையவர்பாற்பழகல், தன்றருமத்திற்றிதிபெறல் சௌசமாம். அநாயாசமாவது :—எச்சுபகருமத்தானும் சரீரம் அத்தியந்த பீடையையடையுமாயின் அத்தகையதையும் செய்யாதிருத்தல் அநாயாசமாம். மங்கலமாவது : சாஸ்திரவிகித சிரேஷ்ட ஆசாரணத்தை யெப்போதுஞ் செய்தல், சாஸ்திர நிஷித்த அசிரேஷ்ட ஆசாரணத்தை யெப்போதும் விடல் என்னுமிதனையே தத்துவ வேத்தாக்கள் மங்களமென்பர். கார்ப்பண்ய மின்மையாவது : தனது வீட்டிலன்னாதிகளற்பமாயினும் அதனையும் தீனத்தன்மையில்லாத மனத்தால் தினம் தினம் அதிதி பிராஹ்மணர் பொருட்டு ஒரு சிறிதளவு கொடுத்தல் அகார்ப்பண்யமாம். அஸ்பிருகையாவது : பரார்த்தத்தைச் சிந்தியாமல் நுகர்வினைவயத்தானுற்ற பதார்த்தங்களைக் கொண்டு மகிழ்வடைதல் அஸ்பிருகையாம். இவ்வெட்டையும் கௌதமர் ஆன்ம குணமென்பர் :—

ஶௌசாஷ்டாவாத்ம குணா: தயா ஸர்வபூதேஷு க்ஷாந்திரநஸூயா ஶௌசம்
அநாயாஸோ மங்களமகார்பண்யமஸ்ப்ருஹா.

(பொ-ள்.) சர்வ பூதங்களிடத்தில் தயை, க்ஷாந்தி, அநசூயை, சௌசம், அநாயாசம், மங்கலம், அகார்ப்பண்யம், அஸ்பிருகை, என்பவை ஆன்ம குணங்களாம். இது மகாபாரதத்தின்கண்ணும் கூறப்பட்டுளது :—

ஸத்யம் தமஸ்தப: ஶௌசம் ஸந்தோஷோ ஹ்ரீ: க்ஷமார்ஜவம் ।
ஜ்ஞாநம் ஶமோ தயா த்யாநமேஷ தர்ம: ஸநாதந: ॥
ஸத்யம் ஸ்வர்கஸ்ய ஸோபாநம் பாராவாரஸ்ய நௌரிவ ।
தப: ஸர்வார்த்தஸித்த்யர்த்தம் ஶௌசம் ஸங்கரவர்ஜநம் ॥
ஸந்தோஷோ விஷயத்யாகோ ஹ்ரீரகார்ய நிவர்தநம் ।
க்ஷமா த்வந்த்வஸஹிஷ்ணுத்வமார்ஜவம் ஸமசித்ததா ॥
ஜ்ஞாநம் தத்த்வார்த்தஸம்போத: ஶமஶ்சித்தப்ரஶாந்ததா ।
தயா ஸர்வஹிதைஷித்வம் த்யாநம் நிர்விஷயம் மந: ॥

(பொ-ள்.) சத்தியம், தபம், தவம், சௌசம், சந்தோஷம், ஹ்ரீ, க்ஷமை, ஆர்ஜவம்-ஞானம் சமம், தயை, தியானம், என்பவை யெல்லாவருணங்கட்கும் சாதாரண சநாதன தருமங்களாம். அவற்றின் விளக்கம் வருமாறு :—சர்வ பூதங்கட்கு மிதஞ்செய்தல் சத்தியமாம், மனோ நிக்கிரகம் தபமாம், தன்றருமத்திலிருத்தல் தவமாம், வருணசங்கரபரித்தியாகம் சௌசமாம், விஷயபரித்தியாகம் சந்தோடமாம், சாஸ்திர நிஷித்த கருமத்தினின்றும் நீக்கம் ஹ்ரீயாம், சீதோஷ்ணாதி துவந்துவ தருமங்களைச் சகித்தலாமியற்கை க்ஷமையாம். சமசித்தத்தன்மையார்ஜவமாம், தத்துவார்த்தத்தின் நற்போதம் ஞானமாம், சித்தத்தின் பிரசாந்தத்தன்மை சமமாம், சர்வ பூதங்களின் இத இச்சை தயையாம், விடய வாசனையற்ற மனம் தியானமாம். இதைத்தேவல இருடியும் கூறியுள்ளார் :—

ஶௌசம் தா³நம் தப: ஶ்ரத்³தா⁴ கு³ருஸேவா க்ஷமா த³யா |
விஜ்ஞாநம் விநய: ஸத்யமிதி த⁴ர்மஸமுச்சய: ||
வ்ரதோபவாஸநியமை: ஶரீரோத்தாபநம் தப: |
ஶ்ரத்³தே⁴யம் த⁴ர்மகார்யேஷு ததா² சித்தஸ்ய ஸாவதா⁴நதா ||
நாஸ்திகஸ்ய ஶ்ரத்³தா⁴ஹீநஸ்ய கஶ்சித் கார்யம் ப்ரயோஜநம் |
யத்³வேதோ³க்தீநாம் ச லௌகிகீநாம் ச ஸர்வஶ: ||
தா⁴ரணம் ஸர்வவித்³யாநாம் விஜ்ஞாநமிதி கீர்த்யதே |
விநயம் த்³விவித⁴ம் ப்ராஹுஸ்ஸர்வ த³ஶாவிதி ||

(பொ-ள்.) சௌசம், தானம், தவம், சிரத்தை, குருசேவை, க்ஷமை, தயை, விஞ்ஞானம், வினயம், சத்தியம், இவை சாதாரண தரும சமுச்சயமாம். ஆண்டு விரத உபவாச நியமமாகச் சரீரத்தை வற்றவைத்தல் தவமாம். தரும காரியத்தில் சித்தத்தின் சாவதானத்தன்மை சிரத்தையாம்; சிரத்தையின்றியவனுக்கு எக்காரியபலமுங் கிடைக்காதன்றோ, ஆகையாற் செய்யுங்காரியமெல்லாம் சிரத்தையுடனே செய்யவேண்டும். இலௌகிக வித்தைகளையும் வைதிக வித்தைகளையும் தாரணஞ் செய்தல் விஞ்ஞானம். சமந்தமம், இருவகை விநயமாகும் மற்றவையாவும் முன்னர் வியாக்கியானிக்கப்பட்டது. இதனாலிப்பொருள் துணியப்பெறும் :— இச்சமதமாதி தருமம் எவன்பாலுளதாமோ அவன் ஜாதியில் சூத்திரனாயிருந்தபோதினும் சமதமாதியிலக்கணங்களால் பிராஹ்மணரூபனேயாவன் என அறியத்தக்கதாம். இஃதெவன்பாலிலதாமோ அவன் ஜாதியில் பிராஹ்மணனாயிருந்தபோதினும் இதனின்மையானே சூத்திரரூபனேயென அறியத்தக்கதாம். இதனானே மகாபாரதத்தின் ஆரணிய பர்வத்தில் சர்ப்பபாவத்தையடைந்திருந்த நகுஷராஜாவிற்கு யுதிஷ்டிரர் கூறியதாவது ;—

ஸத்யம் தா³நம் க்ஷமா ஶீலமாந்ருஶம்ஸ்யம் தபோ க்⁴ருணா |
த்³ருஶ்யந்தே யத்ர நாகே³ந்த்³ர ஸ ப்³ராஹ்மண இதி ஸ்ம்ருத: ||
யத்ரைதல்லக்ஷ்யதே ஸர்ப வ்ருத்தம் ஸ ப்³ராஹ்மண: ஸ்ம்ருத: |
யத்ரைதந்ந ப⁴வேத்ஸர்ப தம் ஶூத்³ரமிதி நிர்தி³ஶேத் ||

(பொ-ள்.) ஹே நாகேந்திர! சத்தியம், தானம், க்ஷமை, சீலம், குரூரபாவமின்மை, தபம், தயை, என்னும் இவ்வெல்லாத் தருமங்களும் எவன் பாற்காணப்படுகின்றனவோ அவனைப் பிராஹ்மணனென்றேயறி; ஹே சர்ப்ப; இச்சத்தியாதி தருமமிராதவன் சூத்திரனே யென்றறிதி. இதன் கண்ணருளிய சமதமாதிகளியாவும் தைவீசம்பத்தருவமாம். அது முன் 16-வது அத்தியாயத்தில் விஸ்தாரமாய் வருணித்தருளப்பட்டுளது. அது பிராஹ்மணனுக்கியற்கையானது க்ஷத்திரி

யாதியர்க்கு நைமித்திகமாம். ஆகையாலீண்டுச் சிறிது மாத்திரையும் மூன்றாவதின்றும் பிராஹ்மணாது அசாதாரண தருமம் ஸ்மிருதிகளில் வெளிபாம். (42)

(அ-கை.) இப்போது க்ஷத்திரியகுண சுபாவத்தாலாய கருமத்தைக் கூறியருளல்.

சு-ம். ஶௌர்யம் தேஜோ த்⁴ருதிர்தா³க்ஷ்யம் யுத்³தே⁴ சாப்யபலாயநம் ।
தா³நமீஶ்வரபா⁴வஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபா⁴வஜம் ॥ (43)

ப-ம். 1 ஶௌர்யம் 2 தேஜ: 3 த்⁴ருதி: 4 தா³க்ஷ்யம் 6 யுத்³தே⁴ 5 ச 7 அபி 8 அபலாயநம் 9 தா³நம் 11 ஈஶ்வரபா⁴வ: 10 ச 13 க்ஷாத்ரம் 14 கர்ம 12 ஸ்வபா⁴வஜம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சௌர்யம், தேஜசு, திருதி, தாக்ஷியம், போரினு மோடாமை, தானம், ஈசுரபாவம், என்பவையாவும் சுபாவஜன்னிய க்ஷத்திரிய ஜாதியின் விகிதகருமமாம். (43)

(வி-ம்.) ஆண்டு அத்தியந்தம் பலவானையும் அடிக்கும்படியான பிரவிருத்திரூப விக்கிரமம் சௌரியமாம். சத்துருக்களானே தோல்வியுறாமையாகிய ஆற்றல் தேஜசாம். மகாவிபத்து வந்தபோதினும் தேதேந்திரியாதிகளின் வியாகூலமிலாமை திருதியாம். விரைவாகவுண்டாய காரியத்தும் வியாமோகமிலாது பிரவிருத்தி ரூப தக்ஷதாவமியாதோ அது தாக்ஷியமாம். போரில் மகா சஸ்திரங்களாற்றுக்கப்பெறினும் பின்வாங்கமை அபலாயனமாம். சங்கோசமிலாமல் பொன், கோ, கிருகம், அன்னம் பூமிமுதலியவற்றில் மமதைவையாது பிராஹ்மணதியரின் மமதை வைக்குமாறு செய்தல் தானமாம். பிரஜாபாலனஞ்செய்யும் பொருட்டுத் தனது தாதர்களிடத்தே தன்பிரபுசக்தியை வெளிப்படுத்தல் ஈசுரபாவமாம்; அல்லது சாஸ்திர நிஷித்தமார்க்கத்தில் பிரவிருத்தமாய துஷ்டரை நியமிக்குஞ் சக்தி ஈசுரபாவமாம். இவையாவும் க்ஷத்திரியனுக்காம்: சத்துவ குணத்தைக் கௌணமாகவுடைய பிரதானரஜோகுண விபற்கையானவையாம். (43)

(அ-கை.) இப்போது வைசிய சூத்திரரிருவரின் குண சுபாவத்தாலாய கருமங்களைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். க்ருஷிகோ³ரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபா⁴வஜம் ।
பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்³ரஸ்யாபி ஸ்வபா⁴வஜம் ॥ (44)

ப-ம். 1 க்ருஷிகோ³ரக்ஷ்யவாணிஜ்யம் 3 வைஶ்யகர்ம 2 ஸ்வபா⁴வஜம் 6 பரிசர்யாத்மகம் 8 கர்ம 5 ஶூத்³ரஸ்ய 4 அபி 7 ஸ்வபா⁴வஜம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! கிருஷிகோக்களின் ரக்ஷணவாணிஜ்யம் இது சுபாவ ஜன்ய வைசியன் கருமமாம்; சூத்திரனுக்கோ இருபிறப்பாளரின் சேவை சுபாவ ஜன்னிய கருமமாம். (44)

(வி-ம்.) நெற்கோதுமை முதலிய அன்னங்களினுற்பத்தியின் பொருட்டு பூமியைக்கீண்டல் கிருஷியாம். கோமுதலியவற்றைக்காத்தல் கோரக்ஷியமாம். அன்னாதிகளின் கிரிய விக்கிரியரூப வியாபாரம் வாணிஜ்யமாம்; தனவிருத்தியின் பொருட்டு நியாயவட்டிக்கிடுதலுமிதனுள்ளடங்கும். இவை வைசிய கருமங்களாம்; தமோகுணத்தைக் கௌணமாகவுடைய பிரதானரஜோகுண சுபாவத்தானுண்டானவையாம். சூத்திரனது கருமமாவது 'பரிசர்யாத்மகம்' மேன் மூவர்க்கும் சேவைசெய்தலாம்; இது, இரஜோகுணத்தைக்கௌணமாகவுடைய பிரதான தமோகுண இயற்கையானுண்டாயதாம். (44)

(அ-கை.) 'ஶமொ டமஸ்தவஶௌசம்' என்பதாதி 3 சுலோகங்களானே நான்கு வருணங்கட்கும் சுபாவ ஜன்னிய கௌண தருமம் கூறியருளப்பட்டது. இதனினும் வேருய தருமமும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டுளது; பவிஷ்யபுராணம் :—

யஸ்மாச்ஶ்ரேயஃ ஸாதநம் ஹி தர்மோऽப்யுதயலக்ஷணம் ।
ஸ த்வஞ்சவிதஃ ப்ரோக்தோ வேதமூலஃ ஸநாதநஃ ॥
வர்ணதர்மஃ ஸ்ம்ருதஸ்த்வேக ஆஶ்ரமாணாம் ததஃ பரம் ।
வர்ணாஶ்ரமஸ்த்ருதீயஸ்து கௌணோ நைமித்திகஸ்ததா ॥
வர்ணத்வமேகமாஶ்ரித்ய யோ தர்மஃ ஸம்ப்ரவர்த்ததே ।
வர்ணதர்மஃ ஸ உக்தஸ்து யதோபநயநம் ந்ருப ॥
யஸ்த்வாஶ்ரமம் ஸமாஶ்ரித்ய அதிகாரஃ ப்ரவர்த்ததே ।
ஸ ஖ல்வாஶ்ரமதர்மஃ ஸ்யாத் பி௄க்ஷாதண்டாதிகோ யதா ॥
வர்ணத்வமாஶ்ரமத்வம் ச யோऽதிக்ருத்ய ப்ரவர்த்ததே ।
ஸ வர்ணாஶ்ரமதர்மஸ்து மௌஞ்ஜ்யா யதேயம் மேகலா ॥
யோ குணேந ப்ரவர்த்தேத குணதர்மஃ ஸ உச்யதே ।
யதா மூர்த்தாபிஷிக்தஸ்ய ப்ரஜாநாம் பரிபாலநம் ॥
நிமித்தமேகமாஶ்ரித்ய யோ தர்மஃ ஸம்ப்ரவர்த்ததே ।
நைமித்திகஃ ஸ விஜ்ஞேயஃ ப்ராயஶ்சித்தவிதிர்யதா ॥

(பொ-ள்.) சாஸ்திர விகித தருமமே மேன்மையின் சாதனமாதலின், சிரேயரூப மெனப்படும், அது சுவர்க்காதியப்யுதயரூபமாம், இவ்வாறு அதனை ஐவகையாய்ச் சாஸ்திர வேத்தாக்கள் பிரித்துளார். அவையாமாறு :—வேதத்தை மூலமாகவுடையதாதலினுனே அது சநாதனமாம். வருண தருமம், ஆசிரம தருமம், வருணுசிரம தருமம், கௌண தருமம், நைமித்திக தருமம்; வருணமாத்திரத்தைப்பற்றி வெளிப்போந்த தருமம் வருண தருமமாம்; உபநயனுதிகளைப் போலும், இது பிராஹ்மணுதி வருணங்கட்கே உரியதன்ரே. ஆசிரமமாத்திரத்தைப் பற்றி யெழுந்த தருமம் ஆசிரம தருமமாம்; பிக்ஷைதண்டாதிகள் போலும்; இவையாசிரமங்கட்கே உரியதன்ரே. கூறிய இரண்டையும் பற்றயெழுந்தது வருணுசிரம தருமாம்; முஞ்சிப் புன்மேகலைபோலும். ஒரு குணத்தைப்பற்றி வருவது கௌண தருமமாம்; இராஜ்ஜியாபிஷேகத்தை யடைந்த க்ஷத்திரியனது பிரஜாபாலனரூப தருமம் குணத்தைப்பற்றி வந்ததாமென்ப. கேவல நிமித்தமாத்திரத்தைப்பற்றி யெழுந்தது நைமித்திக தருமமாம்; பாவநீக்கப்பொருட்டுச்செய்த பிராயச்சித்தரூப தருமம் பாவ நிமித்தத்தைப்பற்றியே யெழுந்ததாதலின் நைமித்திகமாம். ஹாரீத இருடியோ நால்வகைத் தருமத்தைக்கூறியுள்ளார் :—'ஆஶ்ரமிணாம் ப்ரத்யேகோ விஶேஷஸ்ஸாமாந்யஃ க்ருத்ஸ்நஶ்சேதி' ஆசிரமிகட்கோ தனித்தருமம், விசேஷ தருமம், சமான தருமம், கிருத்சின தருமம் என நான்காம். ஒரோ ஆசிரமத்தில் தனித்தனி யனுஷ்டானஞ் செய்யப்படுந்தருமம் தனித் தருமமாம். பிராஹ்மணுதி வருணங்களின் தன் தன் தருமமே போலும் தன்றன்னுசிரமத்தின்கண்ணே அனுட்டிக்கப்படுவது விசேஷ தருமமாம்; பிரஹ்மசாரியாதி ஆசிரமிகட்குத் தங்கள் தருமமேபோலும். வருண ஆசிரமங்களிற் சமானமாயனுட்டிப்பது சமான தருமமாம். அதுவோமகாபாரதத்திற் கூறப்பட்டுளது :—

> ஆந்ருஶம்ஸ்யமஹிம்ஸா சாப்ரமாத: ஸம்விபாகிதா ।
> ஶ்ராத்தகர்மாதிதேயம் ச ஸத்யமக்ரோத ஏவ ச ॥
> ஸ்வேஷு தாரேஷு ஸந்தோஷ: ஶௌசம் நித்யாநஸூயதா ।
> ஆத்மஜ்ஞாநம் திதிக்ஷா ச தர்மா: ஸாதாரணா ந்ருப ॥

(பொ-ள்.) குரூரமின்மை, அஹிம்சை, அப்பிரமாதம், பூதங்கட்கு அன்னாதி விபாகம் கொடுத்தல், சிராத்தம், கிருகமடைந்த அதிதி சன்மானம், சத்தியம், குரோதமின்மை, தன்மனைவியிடத்திற் சந்தோஷம், சௌசம், அசூயையின்மை, ஆன்மஞானம், திதிக்ஷை, என்பவை சாதாரண தருமமாம். சர்வ ஆசிரமங்களின் சாதாரண தருமமோ முன்னர் 'ஸர்வோபகாரவ:' என்னும் சுலோக வியாக்கியானத்திற் கூறப்பட்டது. மோக்ஷ ஹேதுவாய ஆன்மஞான முண்டாவதற்குத் தடையாய பிரத்யவாயத்தை நீக்கும்பொருட்டு நிட்காம கரும அனுஷ்டானம் கிருத்திய தரும மெனப்படும். நான்கு வருணங்களைப்போலவே நான்காசிரமங்களுமுண்டென்பதற்குக் கௌதம வசனம் வருமாறு :—'தஸ்யாஶ்ரமவிகல்பமேகே ப்ருவதே ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்தோ பிக்ஷுர்வைகாநஸ இதி' வேதவேத்தாக்களால் அதிகாரிக்குப் பிரஹ்மசாரி, கிருகஸ்தன் பிக்ஷு, வைகாநசன், என்னும் நால்வகை ஆசிரமவிகற்பஞ் செய்யப்பட்டுளது. பிக்ஷுவென்பது சந்யாசியாம் வைகாநசன் என்பது வானப்பிரஸ்தனும், இதனை ஆபஸ்தம்ப இருடியும் கூறியுள்ளார்.

சத்வார ஆஶ்ரமா: கார்ஹஸ்த்யமாசார்யகுலம் மௌநம் வாநப்ரஸ்த்யமிதி தேஷு ஸர்வேஷு யதோபதேஶமவ்யக்ரோ வர்தமாந: க்ஷேமம் கச்சதி இதி.

(பொ-ள்.) கார்கஸ்தியம், ஆசார்யகுலம், மௌனம், வானப்பிரஸ்தம் என நான்கே ஆசிரமங்களாம் ; ஈந்தாவதின்றும். இல்லறம், பிரஹ்மசரியம். சந்யாசம் என்பன முறையே மூன்றற்கும் பொருளாம். அவற்றுள் எவ்வெதற்குச் சாத்திரம் எவ்வெத்தருமத்தை விதித்துளதோ அவ்வதிலிருந்து அவ்வத்தருமத்தை விசுவாசத்தோடு மனுஷ்டிக்கின் சுபகதியையடைவன். இதை வசிஷ்ட முனிவரும் இயம்பியுள்ளார் 'சத்வார ஆஶ்ரமா ப்ரஹ்மசாரி க்ருஹஸ்த வாநப்ரஸ்த பரிவ்ராஜகா:' வடு, குடும்பி, வனத்தன், துறவி என நால்வகை யாசிரமிகளையுளர். சுருதி மிருதிகளில் 4 வருண ஆசிரமங்கூறியிருத்தலேபோல அவற்றின் றனித்தனித் தருமமும், அஞ்ஞானிகட்குத் தகுதிப்படியாய அவற்றின்பயனும், கூறப்பட்டுள்ளன. அதனை மனுபகவான் அறைந்துளார்.

> ஶ்ருதிஸ்ம்ருத்யுதிதம் தர்மமநுதிஷ்டந் ஹி மாநவ: ।
> இஹ கீர்த்திமவாப்நோதி ப்ரேத்ய சாநுத்தமம் ஸுகம் ॥

(பொ-ள்.) சுருதிமிருதிகளால் விதிக்கப்பட்ட வருணாசிரம தருமத்தை யனுஷ்டித்து இவ்வுலகத்திற் கீர்த்தியை யடைவன், மரித்தபின் றுறக்காதி யுத்தம சுகத்தையடைவன். அதனை யாபஸ்தம்ப இருடியும் கூறியுளார் :—

ஸர்வவர்ணாநாம் ஸ்வதர்மாநுஷ்டாநே பரமபரிமிதம் ஸுகம் தத: பரிவ்ருத்தௌ கர்மபலஶேஷேண ஜாதிம் ரூபம் வர்ணம் பலம் மேதாம் ப்ரஜ்ஞாம் த்ரவ்யாணி தர்மாநுஷ்டாநமிதி ப்ரதிபத்யதே.

(பொ-ள்.) பிராஹ்மணாதி நான்கு வருணங்கட்கும் தத்தந்தரும அனுஷ்டானத்தானே மேன்மையாய அளவிறந்த துறக்கமுதலிய சுகமடைவர். அதைப் போகித்துப் பின் மீண்டும் கருமி பூமியில்வந்து எஞ்சிய கரும சேஷத்தானே ஜாதியையும், வர்ணத்தையும் வலிமையையும், விருத்தத்தையும், மேதையையும்,

திரங்பங்களையும், தருமானுஷ்டானத்தையும், அடைவன். இதனைக்கௌதமரும் கூறியுள்ளார் :—

வணாஶ்ரமாஶ்ச ஸ்வகமநிஷ்டாঃ ப்ரேத்ய கமஃலமநுபூய ததঃ ஶேஷேண விஶிஷ்டதேஶஜாதி குலரூபாயுঃ ஶ்ருதவ்ருத்த வித்தஸுகமேதஸோ ஜந்ம ப்ரதிபத்யந்தே விஷ்வஞ்சோ விபரீதா நஶ்யந்தி.

(பொ-ள்.) 4 வருணத்தரும், 4 ஆசிரமத்தரும் தத்தந்தருமத்தில் நிஷ்டையுடைய ராய்மரித்தபின் சுவர்க்காதி லோகத்தில் சிறிது கருமத்தின் சுகரூப பலத்தையனுபவித்துப்பின்னரெஞ்சிய கருமத்தானே சிரேஷ்ட தேயத்தில், உத்தம ஜாதி, உத்தமகுல, சுந்திரரூப, ஆயுஷ், வேதாத்தியயனம், விருத்தம், சுகம், மேதை என்பதாதி குணங்களோடு ஜன்மத்தை யடைவர், நிடேத மார்க்கத்தில் செல்லும் பாவியரோ நரகாதிகளில் ஜன்மத்தையடைந்து விநாசத்தையடைவர்; அதாவது, அப்பாவியர் கிருமி கீடாதிபாவத்தானே சர்வ புருடார்த்தத்தின்றும் விலகியோராவர். இதை ஹாரீத இருடியும் கூறியுள்ளார்.

காமாத்மாঃ கேசித்யஜ்ஞை ஸ்ஸ்வர்கமாப்நுவந்தி புநராவர்த்தந்தே ச காமாத்மாঃ ஸத்யயஜ்ஞாঃ ஸ்வர்காதிஸ்தா ஸந்திஷ்டா அக்ஷயாந் லோகாந் ப்ராப்நுவந்தி.

(பொ-ள்.) சிலசகாமரோ, காமியயாக தானங்களாலும் காமிய தவங்களாலும் சுவர்க்காதி லோகங்களையடைந்து மீண்டும் இங்கு பிறப்பர். காம மற்றவரும், சத்தியரூப யாகமுடையவரும், மேலாயதானமுடையவரும், தவத்தினிட்டையுடையவரும், ஆகிய சில நிட்காமரோ அக்ஷய லோகங்களையடைவர். இச்சையிருப்பினும் இன்மையினும் பலபேதம் காட்டப்பட்டது. பவிஷ்ய புராணத்திலோ கரும பலம் இவ்வாறு கூறப்பட்டுளது :—

ஸமஸ்தாநாம் ப்ரத்யவாயோ நித்யாநாமிஷ்யதே ஹ்யதஃ ।
காம்யாநாம் ஸ்வர்கமாப்திஸ்து தோஷவாதாய சைவ து ॥
நைமித்திகாநாம் கரணே த்ரிவிதம் கர்மணாம் ஃலம் ।
க்ஷயம் கேசிது பாபஸ்ய த்வரிதஸ்ய ப்ரசக்ஷதே ॥
அநுத்பத்திம் ததா சாந்யே ப்ரத்யவாயஸ்ய மந்வதே ।
நித்யம் க்ரியாம் ததா சாந்யே அநுஷங்கஃலாம் விதுঃ ॥

(பொ-ள்.) அக்கினி ஹோத்திராதி நித்திய கருமங்களோ பலமின்றியும் அனுஷ்டானஞ் செய்யப்படும். சோதிட்டோமாதி காமிய கருமங்களோ சுவர்க்காதி பலப்பிராப்தியின்பொருட்டே யனுட்டிக்கப்படும். நைமித்திக கருமங்களோ தோட நீக்கப்பொருட்டே யனுஷ்டிக்கப்படும். இங்ஙனங் கருமங்கட்கு மூவகையே பயனும். சில இருடியரோ செய்யப்பட்ட பாவநாசமே நித்திய கருமபலமென்பர். சில இருடியரோ பிரத்தியவாய முண்டாகாமையே அதன் பயனென்பர். ஆபஸ்தம்பாதிக இருடியரோ: சுவர்க்காதியானுஷங்கிக பலத்தையே யதற்கங்கீகரித்துளார் ஆனுஷங்கிக பலத்தை 'தத்யதா ஆம்ரே ஃலார்தே நிமிதே' என்பதாதி வசனங்களானே முன்னர்க் கூறிவந்தேம். 'த்ரயோ தர்மஸ்கந்தா யஜ்ஞோऽத்யயநம் தாநமிதி ப்ரதமஸ்தப ஏவ த்விதீயோ ப்ரஹ்மசார்யாசார்யகுலவாஸீ த்ருதீயோऽத்யந்தமாத்மாநமாசார்யகுலேऽவஸாதயந்ஸர்வ ஏதே புண்யலோகா பவந்தி' என்னுஞ் சுருதியோ கிருஹஸ்த. வானப்பிரஸ்த பிரஹ்மசாரி யென்னும் 3 ஆசிரமங்களையுங் கூறிப்பின்னர்

'ஸர்வகர்மாணி மநஸா ஸந்ந்யஸ்யாஸ்தே' என்பதானே அம்மூன்றாசிரமங்கட்கும் மனத்தூய்மையிலதாக மோக்ஷ அடைவின்மையைக் கூறிப் பின்னர் மனத்தூய்மையையுடைய மூன்றாசிரமங்கட்குப் பரிவிராஜகபாவத்தானே ஞானநிஷ்டையையடைந்து மோக்ஷ அடைவை 'ப்ரஹ்மஸம்ஸ்தோऽம்ருதத்வமேதி' என்பதனானே கூறியது இவ்வாறாய விவத்தை சித்தமாகவே முமுக்ஷுக்களாகிய பிரஹ்மசாரியாதி மூவரும் பலேச்சையை விடுத்து ஸ்ரீ பகவதர்ப்பண புத்தியானே சாஸ்திர விகித வருணாசிரம கருமங்களைச் செய்பவராய்ச் சம்சித்தியையடைவரென ஸ்ரீ பகவான்றிருவாய்மலர்ந்தருளுகின்றார் :—

சு-ம். ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத꞉ ஸம்ஸித்திம் லபதே நர꞉ ।
ஸ்வகர்மநிரத꞉ ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு ॥ (45)

ப-ம். 2 ஸ்வே 3 ஸ்வே 4 கர்மணி 5 அபிரத꞉ 6 ஸம்ஸித்திம் 7 லபதே 1 நர꞉ 8 ஸ்வகர்மநிரத꞉ 10 ஸித்திம் 9 யதா 11 விந்ததி 12 தத் 13 ச்ருணு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மனுடர் தத்தங் கருமத்தில் நிஷ்டையுடையவராய்ச் சம் சித்தியையடைவர், தங்கருமத்தில் நிஷ்டையுடையவர் எவ்வாறு சித்தியைய்டைவரோ அவ்வாறு நீ கேட்பாயாக. (45)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சுருதி மிருதிகள் ஆவ்வவ்வருண ஆசிரமங்கட்கு எவ்வெக்கருமத்தை விதித்துளவோ அவ்வதிலபிரதனாகி; அதாவது, தன் தன் கருமத்தை நன்கனுட்டிப்பவனாகி; வருணாசிரமியபிமானி சம்சித்தியையடைவன்; அதாவது, தேகேந்திரிய ரூப சங்காதத்தின சுத்தியை க்ஷயஞ்செய்து நன் ஞானமுண்டாம் தகுதியையடைவன். வேதத்திலுள்ள கருமகாண்ட முழுமைக்கும் வருணா சிரம அபிமானியே அதிகாரியாவன். தேவதை முதலியோரிடத்தில் அவ்வபிமானமில்லையாதலின் கருமகாண்டங்கூறிய வருணாசிரம தருமத்தில் அவர்கட் கதிகாரமின்றாம். இப்பொருளையுணர்த்தும் பொருட்டு ஸ்ரீ பகவான் மனுட வாசக 'நர꞉' என்பதைக் கூறியருளினர். வருணாதியபிமான அபேக்ஷையில்லாத சகுணப் பிரஹ்ம உபாசனைகளில் நிர்க்குணப் பிரஹ்மவித்தைகளிலோ தேவதைகட்கு மதிகாரமாம். இவ்விடயம் தேவதாதி காணத்தில் ஸ்ரீமத் பாடியக்காரரான் விஸ்தாரமாயநுக்கிரகிக்கப்பட்டுளது 'கர்மணா பத்யதே ஜந்து꞉' என்பதானே கருமங்கட்குப் பந்தத்தின் ஹேதுத்தன்மையே சித்தமாமாதலின் பந்த ஹேதுவாகிய அக்கருமத்தில் மோக்ஷ ஹேதுத் தன்மை யெங்ஙனஞ் சம்பவிக்கும்? சம்பவியாதன்றே. என அருச்சுனனது சங்கையுண்டாக; கருமம் பந்தஹேதுவாயினும் உபாயத்திலோ அது மோக்ஷ ஹேதுவாம். என்னும் உத்தரத்தை ஸ்ரீ பகவான் அருளுகின்றார்: 'ஸ்வகர்மநிரத꞉ ஸ்தி' அதிகாரியானவன் சாஸ்திரவிகித தன்வருணாசிரம கருமத்தில் நிஷ்டையுடையவனா யெவ்வாறு சம்சித்தியையடைவன் என்பதை நீ கேட்டி! கேட்டவ்வாறே நிச்சயித்துவாழுதி. ()

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் அவ்வகையை கூறியருளுகின்றார் :—

சு-ம். யத꞉ ப்ரவ்ருத்திர்பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் ।
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ꞉ ॥ (46)

ப-ம். 1 யத꞉ 3 ப்ரவ்ருத்தி꞉ 2 பூதாநாம் 4 யேந 6 ஸர்வம் 5 இதம் 7 ததம் 9 ஸ்வகர்மணா 8 தம் 10 அப்யர்ச்ய 12 ஸித்திம் 13 விந்ததி 11 மாநவ꞉.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எவ்வீசுரரினின்றும் ஆகாசாதிகளுண்டாமோ, எவ்வீசுரரானே இவ்வெல்லா விசுவமும் வியாப்தமாமோ, அவ்வீசுரரைத் தன் கருமத்தானே மகிழ்வித்து மனுடன் மனத்தூய்மையை யடைவன். (46)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மாயா உபாதிக சைதன்ய ஆநந்தகன ரூபரும், சர்வஞ்ஞரும், சர்வசக்தி சம்பன்னரும், சருவஜகத்தின் அபிந்நநிமித்த உபாதான காரணரூபரும் ஆகிய அந்தரியாமியினின்றும் ஆகாசாதி சர்வபூத உற்பத்தியாம்; அதாவது, கனவின்கண்ணே தேர்முதலிய பதார்த்தங்களின் மாயாமயியுற்பத்தியுண்டாவதுபோலச் சர்வ பூதங்களின் மாயாமயி யுற்பத்தியாம். எவ்வேக அந்தரியாமி தமதுண்மை விளக்கவடித்தானே எல்லாத் திருசியப் பிரபஞ்சத்தையும் முக்காலத்திலும் வியாபித்திருப்பரோ; அதாவது, எவ்வந்தரியாமியாகிய சைதன்யம் சர்வ கற்பிதப் பிரபஞ்சத்தையும் தமததிஷ்டான சொரூபத்தில் அந்தர்ப்பாவஞ் செய்து கொள்ளுமோ. எக்காரணத்தானே கற்பிதவஸ்து அதிஷ்டானத்தினும் வேறாகாதோ. இராஜ்ஜுவிற் கற்பித சர்ப்பம் இராஜ்ஜுரூப அதிஷ்டானத்தினும் அதிரிக்தமாகாததேபோல அதிஷ்டான சைதன்யத்திற் கற்பிதமாகிய இவ்வெல்லாவுலகும் அதனினுமயலாகாதாம். அந்தரியாமியாகிய ஈசுரரினின்றே சர்வஜகத்தினுற்பத்தி திதி இலயம் உண்டாம்; என்பது சுருதியின்கண்ணும் கூறப்பட்டுளது. 'यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत् प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद् ब्रह्मेति' ஹே! பிருகுவே எக்காரணரூபவஸ்துவினின்றும் இவ்வாகாசாதி சர்வபூதங்களுமுண்டாமோ, உண்டாயயாவும் எக்காரண வஸ்துவானே வாழுமோ, அழிவையடைவுற்ற அவையாவும் எக்காரணரூப வஸ்துவில் இலயமாமோ அவ்வெல்லாவுலகின் அபின்ன நிமித்த உபாதான காரணரூப வஸ்துவையே நீ பிரஹ்மரூபமாயறிதி, அக்காரணரூபப் பிரஹ்மத்தை நீயாராயுதி என்னுஞ் சுருதியினானே அந்தரியாமியாகிய ஈசுரரினின்றே ஜகதுதயதிதிலயம் பிரதீதியாம். 'मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम्' என்பதாதி சுருதியினானே அந்தரியாமியினிடத்தில் மாயை வடிவ உபாதியின் பிரதீதியாம். 'यः सर्वज्ञः सर्ववित्' என்னுஞ் சுருதியானானே ஈசுரர்பால் சர்வஞ்ஞத்தன்மை பிரதீதியாம். ஆதலின் 'यतः प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम्' என்னும் வசனத்தானே ஸ்ரீ பகவான் சுருதிகூறிய பொருளையே திருவாய்மலர்ந்தருளினர். இத்தகைய சர்வ ஜகத்தின் உபாதான நிமித்த காரண வடிவ அந்தரியாமியை யதிகாரி சாஸ்திர விகித தன் வருண ஆசிரம கருமத்தானே மகிழ்வித்து அவரது திருவருளானே சித்தியையடைவன், எனின் பிரஹ்மாத்ம ஐக்கியஞான நிஷ்டைக்குத் தகுதியாய மனத்தூய்மையை யடைவனென்பதாம். வருணாசிரம அநதிகாரிகளாகிய தேவதை முதலியோர்களோ கேவலம் உபாசனையினானே சித்தியை யடைவரென்பதாம். (46)

(அ-கை.) எதனால் தத்தம் வருணாசிரம தருமமே மனுடரின் பரமேசுரப் பிரசாத வேதுவாமோ அதனால் அதிகாரி சுவதருமத்தையே யனுஷ்டிக்கவேண்டும் என ஸ்ரீ பகவானருளுகின்றார்:—

சு-ம். श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।

स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ (47)

ப-ம். 5 श्रेयान् 4 स्वधर्मः 3 विगुणः 2 परधर्मात् 1 स्वनुष्ठितात् 6 स्वभावनियतं 7 कर्म 8 कुर्वन् 10 न 11 आप्नोति 9 किल्बिषं.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நன்றாக அனுஷ்டிக்கப்பட்ட பரதருமத்தினும், இனி தனுட்டிக்கப்படாத சுவதருமம் அதி சிரேஷ்டமாம் சுபாவஜன்னிய கருமத்தைச் செய்பவனாகிப் பாவத்தையடையான். (47)

(வி-ம்.) அர்ச்சுன! மந்திரதிரவ்ய தேவதாதி சர்வ அங்கங்களின் சம்பூர்ண வாயிலாக இனிதனுஷ்டிக்கப்பட்ட பரதருமத்தினும் சிறிது மந்திராதி அங்கங்க ளற்ற இனிதிலா அனுஷ்டானம் செய்தபோதினும் சுவதருமம் மிகமேன்மையதா மாதலின் போர் முதலிய தருமம் ஹிம்சையோடு கூடியதேயாயினும், பிக்ஷாடனாதி கள் ஹிம்சைத்தோட மற்றதேயாயினும் க்ஷத்திரிய அரசன் போர் முதலிய சுவ தருமத்தையே அனுஷ்டிக்கவேண்டும், பிக்ஷாடனாதி பரதருமம் நீ யனுட்டிக்கத் தக்கதன்றாம். இது '[grantha] என்ப தாதி வசனங்களான் பூர்வமும் எம்மானுபதேசிக்கப்பட்டது. போர் முதலியவை யெனது சுவதருமமாயினும் அவை உறவினரைக் கொல்லுதல் வடிவஹிம்சையா லுண்டாய பிரத்தியவாய ஹேதுவாமாதலின் அடியேனு லநுட்டிக்கத்தகாவாம் என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் போர் முதலியவற்றிற் பிரத்தியவாய ஹேதுதையை நிஷேதிக்கின்றார். '[grantha]' முன்னர் '[grantha] [grantha]' என்பதாதியானே கூறப்பட்ட க்ஷத்திரிய அரசனுக்குக் குணத்தாலாய சுபாவத்தானேயுண்டாம் போர் முதலியவற்றைச் செய்பவனுகி உறவினரைக் கொல்லலானுண்டாம் பாவத்தையடையான் என்பது '[grantha] [grantha]' என்பதாதியால் விரிவாகக் கூறப்பட்டது. ஆகையாலிப் பொருள் துணியப்பெறும் '[grantha]' என்னும் மறையாக அங்கரூபமாக விதித்த பசுஹிம்சை வேதவிகிதமாதலின் பிரத்தியவாய ஹேது வாகாததேபோலப் போரினங்கமாய் வேதபகவான் விதித்த உறவினர் முதலிய வரினிம்சையும் வேதவிகிதமாதலின் பிரத்தியவாய வேதுவாகாதாம். இது பன் முறை முன்மொழியப்பட்டதேயாகும். (47)

(அ-கை.) எதனுனே சாஸ்திர விகிதாதிகட்குப் பிரத்தியவாய ஹேதுத்தன் மையின்றே, பரதருமம் பயத்தைச் செய்வதாமோ, சாமானிய தோஷத்தால் எல்லாக்கருமங்களுந் துஷ்டமேயாமோ, அதனுனே ஆன்மஞானமற்ற வருணு சிரம அபிமானி சுபாவஜன்னிய விகிதகருமங்களை யொருகாலும் விடலாகாது என ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:—

சு-ம். [grantha] ।
[grantha] ॥ (48)

ப-ம். 2 [grantha] 5 [grantha] 1 [grantha] 3 [grantha] 4 [grantha] 6 [grantha] 7 [grantha] 9 [grantha] 8 [grantha] 13 [grantha] 10 [grantha] 11 [grantha] 12 [grantha] 14 [grantha].

(அ-ம்.) ஹே கௌந்தேய! சுபாவ ஜன்யதோஷத்தோடுகூடியதாயினும் கருமத்தைவிடப்படாது எதனுனே சர்வ தருமங்களுமே புகையால் அக்கினியே போலச் சாமானியதோஷத்தால் மறைபட்டதேயாம். (48)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த சுபாவ ஜன்னிய தன்வருணுசிரம கருமம் தோடத்தோடுகூடியதேயாயினும்; அதாவது சாஸ்திரவிகித ஹிம்சை வடிவ தோஷத்தோடுகூடியிருந்தபோதினும்; அத்தகையதை மனத்தூய்மையின் முன் நீயேனும் அன்னியனேனும் விடலாகாது. எதனுனே ஆன்மஞானமற்ற எவ் வஞ்ஞானியும் ஒரு க்ஷணமாத்திரையும் கருமத்தைச் செய்யாமல் இருக்கச் சமர்த் தனுகான், ஏதேனுமொன்றைச் செய்துகொண்டேயிருப்பன். சுவதருமத்தைப் பரித்தியாகித்துப் பரதருமத்தை யனுஷ்டிப்பினும் தோடத்தைவிட்டு நீங்கான்; ஏனெனின், அக்கினியானது தூமத்தான் மறைபட்டதேயாகுமாபோலச் சுவபா

எல்லாத்தருமமுமே சத்துவாதி முக்குண சாமானிய தோடத்தானே வியாப்தமா மாதலின் சர்வ தருமமும் மாசுற்றதேயாம். இது 'பரிணாம தாபஸம்ஸ்கார து:க்கைர் குணவ்ருத்திவிரோதாச்ச து:கமேவ ஸர்வம் விவேகின:' என்னும் யோக சூத்திரத்தானே கூறப்பட்டது. ஆகையால் விடத்திலுதித்த கிருமிவிடத்தைவிடாததேபோல இவ்வநாத்மஞ்ஞன் கதியின்மையினானே கருமத்தைச் செய்பவனாய்த் திரிகுணாத்மக சாமானிய தோடத்தோடும் பந்துவதாதி நிமித்தக விசேடதோடத்தோடு கூடியதாயினும் சுபாவஜன்னிய போர்முதலிய கருமங்களை யொருக்காலும் விடலாகாது; எதனானே அஞ்ஞானி சர்வ கருமத்தையும் தியாகஞ் செய்வதில் சமர்த்தனாகானோ. எல்லாக்கருமத்தையும் விடுவதில் ஆற்றலுடைய மனத்தூய்மையுடையவன் எல்லாக்கருமத்தையுமே விடுவன். (48)

(அ-கை.) ஆண்ட சுத்த அந்தக்கரணமுடைய அநான்மஞ்ஞன் சர்வ கருமங்களையும் விடுவதிலாற்றலுறானாயின் அவ்வியாவற்றையும் விடுவதிலியாவனாற்றலுடையவனவன் என அறியும் வேட்கையுண்டாகக் கூறப்படுகின்றது: ஆன்மாவொன்றே நித்தியம் ஆன்மாவினும் அன்னியமெல்லா மநித்தியமென்னும் நித்தியா நித்திய வஸ்துவி வேகமுடையவனும்; விவேகமுடைமையானே இகபரலோக விடய போகங்களில் இராகமின்றியிருக்கும் வைராக்கியமுடையவனும்; வைராக்கியமுடைமையானே விடயத்தினின்றும் மனத்தை யொடுக்கல் வடிவச் சமையையும், வெளிப்பொறிகளைச் சத்தாதிகளினின்றடக்கும் தமையையும், ஸ்திரீ புத்திராதனாதி சாதனத்தோடு கூடிய சர்வ கருமங்களையும் பரித்தியாகஞ்செய்யும் உபரதியையும், சீத உஷ்ணம் பசி தாகம் என்பதாதிதுவந்துவ தருமங்களைச்சகிக்கும் திதிக்ஷையையும், வேத குரு வசனங்களில் விசுவாசமாகிய சிரத்தையையும் மனோவிக்ஷேப நீக்கமாகிய சமாதானத்தையும் உடையவனும்; பகவதர்ப்பித நிட்காம கருமங்களால் அசுத்த நீக்கவாயிலாய் மனத்தூய்மையை யடைந்தவனும் சுத்தப்பிரஹ்மான்மைக்கியத்தையறியும் வேட்கையை யடைந்தவனும் ஆகிய முமுக்ஷுவோ தனதிஷ்டமோக்ஷ ஹேதுபூத பிரஹ்மாத்மைக்கிய ஞான சாதனரூப வேதாந்த வாக்கியங்களின் சிரவணாதியைச் செய்யும்பொருட்டுச் சர்வ விக்ஷேப நீக்கவாயிலாய்ச் சிரவணாதிகட் கங்கமாகிய சுருதி மிருதி விகித சர்வ கரும சந்யாசத்தை அவசியஞ் செய்வன். இது சுருதியினும் மிருதியினும் கூறப்பட்டுளது:—

> தஸ்மாதேவம் வித் சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷு:।
> ஸமாஹிதோ பூத்வாத்மன்யேவாத்மானம் பச்யேத்॥

(பொ-ள்.) சமதமாதி சாதனமின்றிய புருடனுக்கு ஆன்மஞானப் பிராப்தியுண்டாக மாட்டாதாதலின் அதிகாரி சமை தமை உபரதி திதிக்ஷை சமாதானமுடையவனாகித் தன்மனத்தில் ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பன். உபரத: என்பதனானே சர்வ கரும சந்யாசங்கூறப்பட்டது; அதாவது சமதமாதி சாதன பூர்வக சர்வ கருமசந்யாசமுடையவனாகி ஆன்ம சாக்ஷாத்காரப் பொருட்டு வேதாந்த வாக்கியங்களையாராய்க. வேறு சுருதியாவது 'ஸம்ந்யஸ்ய ச்ரவணம் குர்யாத்' மனத்தூய்மையின் பின்னர் விதிவாயிலாகச் சர்வ கருமங்களின் சந்நியாசஞ் செய்தே வேதாந்த வாக்கிய சிரவணஞ்செய்க. மிருதி 'ஸத்யானந்தைஷணா வஞ்சை வித்வேஷிணம் லோகத்ரயம் பரித்யஜ்யா த்யாநம்ஸுதிரேத்' அதிகாரி மெய் பொய் யின்பதுன்பம் இகபரலோகம் என்பதாதியாவற்றையும் விடுத்து ஆன்ம சாக்ஷாத்காரப்பொருட்டு வேதாந்த சாஸ்திர விசாரஞ்செய்க. இவ்வாறு, பரம ஹம்ச பரிவிராஜகனை 'ப்ரஹ்மஸம்ஸ்தோ அம்ருதத்வமேதி' என்னும் சுருதி பிரஹ்மசரியாதி மூன்றினும் விலக்ஷண வடிவமாய்க் கூறுகின்றது. பரமஹம்ச சந்யாசியே பரமஹம்ச

பரிவிராஜக கிருதகிருத்திய குருசமீபத்தையடைந்து வேதாந்த வாக்கிய விசாரஞ் செய்வதில் ஆற்றலுடையவனுவன். இவனைக்குறித்தே ஸ்ரீ வியாசபகவானுல் 'அதாதொ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா' என்பதாதி 4 அத்தியாயரூப உத்தரமீமாம்சா சாஸ்திரம் தொடங்கப்பட்டதாம். இவ்வாருய தூயவுளத்தையுடைய முமுக்ஷுவை யிப்போது ஸ்ரீ பகவான் அருளுகின்ருர் :—

சு-ம். அஸக்தபுத்தி꞉ ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ꞉ ।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி ॥ (49)

ப-ம். 2 அஸக்தபுத்தி꞉ 1 ஸர்வத்ர 3 ஜிதாத்மா 4 விகதஸ்ப்ருஹ꞉ 6 நைஷ்கர்ம்யஸித்திம் 5 பரமாம் 7 ஸந்ந்யாஸேந 8 அதிகச்சதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாண்டும் அசக்த மதியும், ஜிதாத்மாவும், இச்சையற்றவனும், ஆகிய அதிகாரி பரமநைஷ்கர்மிய சித்தியைச் சந்யாசத்தானே யடைவன். (49)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆசக்திக்கு நிமித்தமாய தனுதிகளினும் அசக்த மதியன்; அதாவது இத்தனுதிகட்கு யான் இவைகள் என்னுடையன எனப் பற்றற்ற மதியுடையன்; அத்தகைய மதித்தன்மையிலேது 'ஜிதாத்மா' என்பதாம். ஆன்மா வென்பதாலந்தக் கரணத்தைக்கொள்க. அதனைச் சர்வ விடயங்களினின்றும் விலக்கி வசஞ்செய்தவன் ஜிதாத்மாவாம்; அதனுனே அசக்தமதியனுவனென்பதாம் விடய இராகமிருப்ப அவ்விடயங்களினின்றும் அந்தக்கரண நீக்கம் எங்ஙனஞ் சம்பவிக்கும்? என அருச்சுனனுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவானருளுகின்ருர். 'விகதஸ்ப்ருஹ꞉' என. தேக ஜீவன ஹேதுவாய அன்ன பானுதி போகங்களினும் இச்சையற்றவன்; அதாவது சர்வ திருசியப்பொருள்களில் தோட தரிசனத்தாலும், நித்தியபோத பரமானந்தரூப மோக்ஷகுணங்களின்றரிசனத்தாலும் சர்வ அநான்ம பதார்த்தங்களினும் விரக்தன். இவ்வாறு தூயமனமுடையவன் 'ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ꞉' என்பதால் பிரதிபாதித கரும ஜன்ம அபரம சித்தியை அடைந்தவன்; அதாவது, ஆன்ம ஞான சாதனரூப வேதாந்த வாக்கிய விசார அதிகாரம், ஞான நிஷ்டையின் யோக்யதை யென்னும் நிட்காம கரும ஜன்னிய மனத்தூய்மை வடிவ அபரம சித்தியையடைந்தவன். அத்தகையன் சிகை மக நூன் முதலியவற்ருேடுஞ் சர்வ கருமங்களின்றியாகமாகிய சந்யாசத்தானே பரம நைஷ்கர்ம்ய சித்தியை யடைவன்; அதாவது, சந்யாச வாயிலாய் வேதாந்த விசாரஞ்செய்ததனே யடைவன் என்பதாம். நிட்களம் நிட்கிரியம் சாந்தமென்னுஞ் சுருதியானது பிரஹ்மத்தைக் கிரியை வடிவ கரும மற்றதென்றமையின் பிரஹ்மம் நிட்கருமமாம்; அதனை விடயஞ்செய்யும் வேதாந்த ஆராய்ச்சியாலுண்டாய ஆன்ம ஞானம் நைஷ்கர்மியமாம்: அதாவது, அகம்பிரஹ்மாஸ்மி எனவுண்டாமான்மசாக்ஷாத்காரமாம். அந்நைஷ்கர்மிய சித்தி பரமமாம்; அதாவது, முன்மொழிந்த மனத்தூய்மையாகிய அபரம சித்தியின் பலரூபமாதலின் மிக மேன்மையதாம். ஆன்ம சாக்ஷாத்கார வடிவ பரம நஷ்கர்மிய சித்தியை அதிகாரி சந்யாசவாயிலாய்ச் சிரவணுதி சாதனங்களின் பரிபாகத்தானே யடைவனென்பதாம். அல்லது சந்யாசத்தான் என்பதிலிருக்கும் மூன்ரும் வேற்றுமையுருபு இவ்வாருமிலக்கணத்தாம்; அதனுற்றுணியப்பட்டதாவது :—சர்வகருமங்களின் சந்யாசரூப நைஷ்கர்மிய சித்தியாம்; பிரஹ்மசாக்ஷாத்காரயோக்யதை வடிவநைர்க்குண்ய லக்ஷண சித்தியாம்: அது பரமமாம்; அதாவது, முன்மொழிந்த அந்தக்கரண சுத்திவடிவ சாத்விக சித்தியின் பலவடிவமாதலின் மேன்மையதாம். இத்தகைய சர்வ கருமங்களின்

சந்யாசரூப பரமநைஷ்கர்மிய சித்தியை அவ்வசக்தமதிஜிதாத்மாவே யடைவன் என்பதாம். (49)

(அ-கை.) ஆண்டுப் பூர்வம் புகன்றருளிய சர்வ சாதனங்களோடுகூடிய சர்வ கருமங்களின் சந்யாசி பிரஹ்மஞான உற்பத்தியில் இப்போது சாதனங்களின் கிரமத்தை ஸ்ரீ பகவானருளுகின்றார் :—

சு-ம். ஸிஃம் ப்ராப்தோ யமா ப்ரஹ்ம தமாப்நோதி நிபோய மெ ।
ஸமாஸெநைவ கௌந்தெய நிஷ்டா ஜ்ஞாநஸ்ய யா பரா ॥ (50)

ப-ம். 2 ஸிஃம் 3 ப்ராப்த: 4 யமா 5 ப்ரஹ்ம 7 தமா 6 ஆப்நோதி 11 நிபோய 8 மெ 9 ஸமாஸேந 10 ஏவ 1 கௌந்தெய 15 நிஷ்டா 13 ஜ்ஞாநஸ்ய 12 யா 14 பரா.

(அ-ம்.) ஹே கௌந்தேய! சித்தியையடைந்தவன் பிரஹ்மத்தைச் சாக்ஷாத் கரிக்கும் பிரகாரத்தை நீ எமது வசனத்தானே சுருக்கமாகவே நிச்சயஞ்செய்தி; சித்தியை யடைந்தவனது பரநிஷ்டையையும் நீ நிச்சயஞ்செய்தி. (50)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! தனது வருண ஆசிரம கருமங்களானே அந்தரியாமியாகிய ஈசுரனை யாராதித்து, அவரது பிரசாதத்தானே யுண்டாய சர்வகருமங்களின்றியாக பரியந்தமாய ஞான உற்பத்திக்குத் தக்க மனத்தூய்மை வடிவ சித்தியையடைந்த அதிகாரி எவ்வாறு பிரஹ்மத்தை யடைவானோ; அதாவது எவ்வாறு பிரத்தியக்கபின்ன சுத்தப்பிரஹ்மத்தைச் சாக்ஷாத் கரிப்பனோ, அவ்வாற்றை நீ யனுட்டிக்கும்பொருட்டு எனது வசனத்தானே நிச்சயஞ்செய்தி. மிகவும் விஸ்தாரமாய்த் தேவரீர் கூறியருளும் பிரகாரம் அடியேன் மதியிலெங்ஙனங் கொள்ளும்? எனச்சங்கிப்ப ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—'ஸமாஸெநைவ' என. சுருக்கமாகவே கேட்குதி யென்பதாம். அவ்வகையை நிச்சயிப்பின் சித்திப்பது யாதோவெனச் சங்கிப்ப அருளுகின்றார் :—'நிஷ்டாஜ்ஞாநஸ்யயா பரா' சிரவண மனனரூப விசாரத்தாலுண்டாய ஆன்ம ஞானத்தின் பரிசமாப்தி வடிவ நிஷ்டை; அதாவது, அந்நிஷ்டையின் பின்னர் வேறொரு சாதன மனுட்டிக்கப்படமாட்டாதாம். அது பரமாம்; மிகவும் மேன்மையதாம். அல்லது, சாக்ஷான் மோக்ஷ ஹேதுவினானே எந்நிஷ்டை எல்லாவற்றின் முடிபினிகழுமோ முன்மொழிந்த சித்தியை அடைவுற்றவனது இவ்வாறாய பிரஹ்மப்பிராப்திரூப பரஞான நிஷ்டையையும் நீ சுருக்கமாய்க்கேட்டு நிச்சயஞ்செய்தி. ஒரு வியாக்கியானத்தின்கண்ணோ, 'நிஷ்டாஜ்ஞாநஸ்யயாபரா' இது பிரஹ்ம விசேஷணமாகவே கூறப்பட்டது; யாதொரு அடையத்தக்க பிரஹ்மஞானத்தின் பரநிஷ்டை; அதாவது, எப்பிரஹ்மத்தைக் குறித்து வேறொருபொருள் யாவினு முள்ளாயறியத்தக்கதாயிலதாமோ, அத்தகைய நிஷ்டைவடிப் பிரஹ்மத்தை மனத்தூய்மையையுடைய முமுக்ஷு எவ்வாறு சாக்ஷாத்கரிப்பனோ அவ்வாறு நீ எமது மொழியால் சுருக்கமாய் நிச்சயஞ்செய்தி என்பதாம். (50)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் அவ்வகையோடுற்ற இஞ்ஞான நிஷ்டையைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். புத்³த்⁴யா விஶுத்³த⁴யா யுக்தோ த்⁴ருத்யாத்மாநம் நியம்ய ச ।
ஶப்³தா³தீ³ந்விஷயாம்ஸ்த்யக்த்வா ராக³த்³வேஷௌ வ்யுத³ஸ்ய ச ॥ (51)

ப-ம். 2 புத்³த்⁴யா 1 விஶுத்³த⁴யா 3 யுக்த: 4 த்⁴ருத்யா 5 ஆத்மாநம் 6 நியம்ய 7 ச 8 ஶப்³தா³தீ³ந் 9 விஷயாந் 10 த்யக்த்வா 12 ராக³த்³வேஷௌ 13 வ்யுத³ஸ்ய 11 ச.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! விசுத்த புத்தியோடுகூடியவன் தைரியத்தானே இச்சங்காதத்தை நியமித்துச் சப்தாதிவிடயங்களையும், இராகத்துவேடங்களையும் பரித்தியாகித்துப் பிரஹ்மபாவத்தையடைவன். (51)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ சம்சய விபர்யயமற்றதாதலின் விசுத்தமாகிய அகம்பிரஹ்மாஸ்மியென்னும், வேதாந்த வாக்கியங்களாலுண்டாய பிரஹ்மான்மக ஐக்கியவிடயக மதிவிருத்தியோடும் எப்போதும் கூடியவனாய்த் தைரியரூபத்திருதியானே சரீர இந்திரிய சங்காதரூப ஆன்மாவை நியமித்து; அதாவது அச்சங்காதத்தைச் சாஸ்திர நிஷித்தமார்க்கத்திற் செல்வதினின்றும் தடுத்து அந்தர ஆன்மபாராயணஞ்செய்து. ஈண்டு, 'சூத்ரதம் நியம்யச' என்பதிலுள்ள ச என்பதனால் யோகசாஸ்திரத்தில் கூறப்பட்ட மற்றைய சாதனங்களையும் கூட்டிக்கொள்க; சப்தாதி விடயங்களைப் பரித்தியாகித்து; அதாவது, சப்தாதி 5 விடயங்கள் தம்போகத்தால் இப்போக்தாவைப் பந்திப்பதிற் சமர்த்துடையனவாம், அவை ஞானநிஷ்டையை யடையும்பொருட்டுத் தேகஸ்திதிமாத்திரரூபப் பிரயோஜனத்தில் உபயோகியல்லவாம், அவை விடய சாஸ்திரங்களாலும் நிடேதிக்கப்படுவவாகாவாம்; அத்தகையவற்றையும் பரித்தியாகித்து. எச்சப்தாதிகள் இத்தேகத்திதிமாத்திரத்தி லுபயோகமாமோ அவற்றிலும் இராகத்துவேஷத்தைப் பரித்தியாகித்து. ஈண்டு, 'ராகத்வேஷௌவ்யுதஸ்யச' என்பதிலிருக்கும் சகாரத்தானே வேறுமுள்ள ஞானத்தை விக்ஷேபிக்கும் வத்துக்களின் பரித்தியாகத்தையும் கொள்க. இவ்வாறு விசுத்தபுத்தியோடுகூடிய அதிகாரி திருதியாற் சங்காதத்தை நியமித்துச் சப்தாதிவிடயங்களைப் பரித்தியாகித்து இராகத்வேஷாதிகளைப் பரித்தியாகித்து விவிக்த சேவி முதலிய விசேஷணங்களோடுங் கூடியவனாய்ப் பிரஹ்ம சாக்ஷாத்காரப்பொருட்டுச் சமர்த்தனாவன். இம்முறையே இச்சுலோகத்திற்கும் மேற்சுலோகத்திற்கும் 'ப்ரஹ்மபூயாயகல்பதே' என்னும் மூன்றாவது சுலோகவசனத்தோடு அன்வயஞ்செய்துகொள்க. (51)

சு-ம். விவிக்தஸேவீ லக்வாசீ யதவாக்
ஹ்யாநயோகபரோ நித்

ப-ம். 1 விவிக்தஸேவீ 2 லக்வாச
4. நித்யம் 6 வைராக்யம்

(அ-ம்.) ஹே அர்ச்சுன!
மயில்பவனும், வாக்குக்காயமன
பாராயணனும், வைராக்கியத்தை
காரப்பொருட்டுச் சமர்த்தனாவன்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன!
குகை, முதலியவை விவிக்ததேச
யாவன்; அதாவது மன ஒருமை
களின் சம்சர்க்கமற்றவன் என்
மாய்ப் புனிதமாய அன்னத்தை
யாலசியாதிரூபச் சித்தத்தை இல
வாக்காயமானசன்-பகிர்முகப் பிர
மனத்தையுடையோன்; அதாவது
நித்தியமுமேதியான யோகபரா
களின் ஆவிருத்தி தியானமாம்;
மின்றி ஆன்மாகார சஜாதீய விரு

தானே சித்தத்தின் சர்வ விருத்தியற்றதன்மையின் சம்பாதனம் யோகமாம். இவ்வியோகவடிவத்தை 'யோகஶ்சித்தவ்ருத்திநிரோத꞉' என்னுஞ் சூத்திரத்தான் பதஞ்சலி பகவானுங் கூறியுள்ளார். அந்தத்தியானயோகத்தை நித்தியானுஷ்டான பாராயணன், இவற்றைவிடுத்து ஒருகாலும் மந்திரஜபம் தீர்த்தயாத்திரை முதலியவற்றை அனுட்டியாதவன் என்பதாம். இகபரலோக விடயங்களிலிருக்கு மிச்சைக்கு விரோதியாய சித்தபரிணும விசேடம் வைராக்கியமாம் அதை விவேக பூர்வகம் அடைந்தவன். ஆகியவனே பிரஹ்மசாக்ஷாத்காரப்பொருட்டுச் சமர்த்தனுகின்றான். (52)

சு-ம். அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।
விமுச்ய நிர்மம꞉ ஶாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ (53)

ப-ம். 1 அஹங்காரம் 2 பலம் 3 தர்பம் 4 காமம் 5 க்ரோதம் 6 பரிக்ரஹம் 7 விமுச்ய 8 நிர்மம꞉ 9 ஶாந்த꞉ 10 ப்ரஹ்மபூயாய 11 கல்பதே.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அகங்காரத்தையும், பலத்தையும் தார்ப்பத்தையும், காமத்தையும், கோபத்தையும் பரிக்கிரகத்தையும், பரித்தியாகித்து மமதையற்றவனுகி விக்ஷேபமற்றவன் பிரஹ்மசாக்ஷாத்காரப்பொருட்டுச் சமர்த்தனுகின்றான். (53)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஆண்டு யான் பெருங்குலத்தில் பிறந்தவன், மகான்மாவின் சீடன், அதிவிரக்தன், எனக்குச் சமானமாக எவனுமேயில்லை, என்னுமபிமானமே யகங்காரமாம். சுருதிமிருதி விருத்தமாகிய அசத்தாக்கிரகம் பலமாம். பலவிடங்களிற் சரீர ஆற்றல் பலமெனப்படுமெனினும், அதனையீண்டு கவரலாகாது. அஃதியற்கையதாதலின் விடமுடியாதன்றே; ஆன்மஞான சாதனங்களைச் சம்பாதிப்பதில் அநுகூலமன்றே மகிழ்வாலுண்டாயதும் அறத்தைத் தாண்டுதற்குக் காரணரூபமுமாயதுமாகிய மதம் தார்ப்பமாம். இவ்வார்த்தை மிருதியின்கண்ணும் கூறப்பட்டுளது:—'ஹ்ருஷ்டோ த்ருப்யதி த்ருப்தோ தர்மமதிக்ராமதி' சந்தோடமுற்றவன் மதரூப தார்ப்பத்தையடைந்து தருமத்தைத்தாண்டுவன். இகபரலோகங்களின் அபிலாஷை காமமாம். துவேடம் குரோதமெனப்படும், இச்சையின்றேனும் காயத்தைக்காக்கும்பொருட்டு மற்றையராற் கொடுக்கப்படும்பாகிய போகசாதனம் பரிக்கிரகமாம். இவ்வியாவற்றையும் பரித்தியாகித்துச் சாஸ்திரவிதிவாயிலாகச் சிகைமக நூல்களைப் பரித்தியாகித்துச் சரீர நிர்வாகப்பொருட்டுச் சாஸ்திர விகித தண்டகமண்டலு கௌபீனங் கந்தை முதலியவற்றைக் கவர்ந்து; அதாவது பரமஹம்ச பரிவிராஜகனுகி; தேகஜீவனமாத்திரத்தும் மமதை யபிமானமற்றவன். அகந்தை மமதையற்றதால் மகிழ்ச்சிவாட்டமற்றவனுகிச் சாந்தனுவன்; அதாவது, மனத்துறுஞ் சர்வ விக்ஷேபங்களுமற்றவனுவன். இவ்வாறுய பரமஹம்ச சந்யாசியே ஞானசாதனங்களின் பரிபாகக்கிரமத்தால் பிரஹ்மசாக்ஷாத்காரப்பொருட்டுச் சமர்த்தனுவன்; அதாவது அகம்பிரஹ்மாஸ்மியென்னும் பிரஹ்மசாக்ஷாத்காரத்தையடைவன். ஆண்டுப் பூர்வம் 'வைராக்யம் ஸமுபாஶ்ரித꞉' என்பதானே விடயாசைவடிவக் காமபரித்தியாகத்தைக் கழறியருளிமீண்டும் 'காமம் பரித்யஜ்ய' என்பதானே காமபரித்தியாகம் கழறியருளியது காமபரித்தியாகஞ் செய்வதில் முயல்வினதிகத்தன்மையை யுணர்த்தியருளும்பொருட்டாம். (53)

(அ-கை.) இவ்வகையாய பரமஹம்ச சந்யாசி எச்சாதனக் கிரமத்தானே பிரஹ்மசாக்ஷாத்காரத்தையடைவன் என அர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் அச்சாதனக் கிரமத்தை யருளிச்செய்கின்றார் :—

சு-ம். 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌶𑍋𑌚𑌤𑌿 𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 ।
𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍 ॥ (54)

ப-ம். 1 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌃 2 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 3 𑌨 4 𑌶𑍋𑌚𑌤𑌿 5 𑌨 6 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌤𑌿 9 𑌸𑌮𑌃 7 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 8 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 11 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 12 𑌲𑌭𑌤𑍇 10 𑌪𑌰𑌾𑌮𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பிரஹ்மபூதனும் பிரசன்னான்மாவும், சோகமற்றவனும், இச்சையற்றவனும், சர்வ பூதங்களிடத்துஞ் சமனும், ஆகியோன் எமது பரமபக்தியையடைவன். (54)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! பிரஹ்மபூதன்-வேதாந்த சாஸ்திர சிரவணமனன அப்யாசத்தான் அகம்பிரஹ்மாஸ்மியென்னும் திடநிச்சயமுடையவன்; பிரசன்னான்மா-சமதமாதி சாதன அப்யாசத்தானே தூயமனமுடையோன்; இதனானே யவன் அழிந்தபொருட்கிரங்கான், கிடையாதபொருளை விழையான். இதனானே, நிக்கிர அநுக்கிரக அநாரம்பத்தாற் சர்வ பூதங்களிடத்துஞ் சமனவன்; அதாவது, தனக்குச் சுகம்பிரியமாகவும், துக்கம் அப்பிரியமாகவுமிருப்பதேபோலச் சர்வப் பிராணிகளிடத்தும் காண்பவன். அல்லது, '𑌸𑌮𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁' என்பதற்கிப்பொருள்செய்க:—இவ்வெல்லாவுலகும் பிரஹ்மமே என்னும் மதியானே ஜராயுஜாதி நால்வகைப் பூதங்களிடத்தும் விடமபாவமற்றவன். இத்தகைய ஞானநிஷ்ட சந்யாசி பரமான்மாவாகிய எமது பக்தியையடைவன்; அதாவது நிர்க்குண சுத்தப் பிரஹ்மவிஷயக விஜாதீய விருத்திகளின்றடையற்ற சஜாதீய சித்தவிருத்திகளின் ஆவிருத்திவடிவ உபாசனையாகிய பரிபக்குவ நிதித்தியாசனமாம், சிரவணமனன அப்யாச பலவடிவ அதனை யதிகாரியடைவன். அது தடையிலாத பிரஹ்மசாக்ஷாத்காரப் பயனைப் பயத்தலின் மிகவும் மேன்மையதாம். அல்லது, '𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂' என்னும் சுலோகத்தில் கூறியருளப்பட்ட நால்வகையாய பக்தியின்கண்ணே ஞானரூபம் பரபக்தியாம். இத்தகைய பரபக்தியுடையவனை ஸ்ரீ பாகவதமுங் கூறுகின்றது:—

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑍇𑌨𑍈𑌕𑌂 𑌭𑌗𑌵𑌦𑍍𑌭𑌾𑌵𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇 ।
𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌭𑌗𑌵𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑍇𑌷 𑌭𑌾𑌗𑌵𑌤𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 ॥

(போ-ள்) எதனாலிவன் ஸ்தாவரஜங்கமரூப சர்வ பூதங்களிடத்தில் ஏக பகவத்பாவத்தைக்காண்பன்; அதாவது, பிரஹ்மமே இவ்வியாவும் என்னுஞ் சுருதிப்பிரமாணத்தானே சர்வ பூதங்களிடத்திலும், அஸ்திபாதிப் பிரியரூப பிரஹ்மத்தையே வியாபகமாய்க்காண்பன். சர்வப் பிராணிகளின் ஆன்மவடிவ பகவானாகிய பரப்பிரஹ்மத்தின்கண்ணே சர்வ பூதங்களையுங் கற்பிதமெனக் காண்பன். இவ்வாறு தத்துவவேத்தாவே சர்வ பகவத்பக்தர்களிலும் உத்தம பக்தனாவன். (54)

(அ-கை.) அநிதித்தியாசனரூப பக்தியானே இவ்வதிகாரிக் கெப்பலப் பிராப்தியாம், என அர்ச்சுனனுக்கறியும் வேட்கையுண்டாக ஸ்ரீ பகவான் பக்தியின்பயனை யருளிச்செய்கின்றார்:—

சு-ம். 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌾𑌮𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌯𑌾𑌵𑌾𑌨𑍍𑌯𑌶𑍍𑌚𑌾𑌸𑍍𑌮𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 ।
𑌤𑌤𑍋 𑌮𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑌤𑍇 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 ॥ (55)

ப-ம். 6 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 5 𑌮𑌾𑌂 8 𑌅𑌭𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 1 𑌯𑌾𑌵𑌾𑌨𑍍 3 𑌯𑌃 2 𑌚 4 𑌅𑌸𑍍𑌮𑌿 7 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 9 𑌤𑌤𑌃 10 𑌮𑌾𑌂 11 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 12 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 14 𑌵𑌿𑌶𑌤𑍇 13 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாம் எப்பரிமாணமுடையேம், எச்சொரூபமுடையேம், என்பதை அந்தப் பக்தியானே அவன் உள்ளபடி சாக்ஷாத்கரிப்பன், அவ்

வாறுள்ளபடி யுணர்ந்து ஆகம் வீழ்ந்தபின் றத்துவவேத்தா, பரப்பிரஹ்மமாகிய எம்மிடத்தில் அபேதரூபமாய்ப் புகுவன். (55)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நிதித்தியாசனவடிவ ஞானநிஷ்டை யென்னும் பக்தியாலதிகாரி பரமான்மாவை யுள்ளபடி சொரூபமாய்ச் சாக்ஷாத்கரிப்பன். இப்போது யதார்த்தவடிவத்தை வருணிப்பாம்:—'யாவாநு்யஶ்சாஸ்மி' யாம் அணுபரிமாணமுடையேம்; அல்லது தேகம்போலும் மத்தியம பரிமாணமுடையேம்; அல்லது நையாயிகர் கற்பித்த ஆகாசத்தைப்போன்ற சர்வ மூர்த்த திரவியங்களோடு சம்யோகித்தன்மைவடிவ விபுத்வத்திற்கு ஆசிரயமாவேம். அல்லது, சப்பிரபஞ்ச அத்வைதவாதிகளைப்போலச் சுவகதபேதமுடையேம். அல்லது, அகண்ட ஏகரச வெங்கும் வியாபகமாவேம்; என்றிவ்வாறு விசாரித்துச் சுருதிவிருத்த பக்ஷங்களைப்பாதித்துப் பரமான்மாவாகிய எம்மைக் கூறியபிரகாரமாகவே யறிவன்; கூறிய பூர்வபக்ஷங்களின் வடிவமாயறியான். யான்றேகரூபனேனும், இந்திரியரூபனேனும், பிராணரூபனேனும், மனரூபனேனும், சிறிதுகாலமிருப்பவனேனும், க்ஷணிக விஞ்ஞானரூபனேனும், சூனியரூபனேனும், கர்த்தாப் போக்தாரூபனேனும், ஜடரூபனேனும், ஜடாஜடரூபனேனும், சித்துருவனேனும், போக்தாரூபனேனும், கர்த்திருத்வ போக்திருத்வமற்ற ஆனந்த கனரூபனேனுமாவேன் என்றிவ்வாறு ஆராய்ந்து சுருதிவிருத்த சர்வ பக்ஷங்களையும் பாதித்து அதிகாரி பரமான்மாவாகிய எம்மைப் பரிபூரண சத்தியஞான ஆனந்தகன சர்வ உபாதியற்ற அகண்ட ஏகரச அத்விதீய அஜா அமா அபய அசோகரூபமேயாக வுணர்வன், தேகேந்திரியரூபமாயறியான். இவ்வாறு அந்நிதித்தியாசனரூப பக்தியானே பரமான்மாவை யுண்மையாயுணர்ந்து; அதாவது அகண்டைகரச அத்விதீய ஆனந்தரூபப் பிரஹ்மமேயானுகின்றேன் என அதனைச் சாக்ஷாத்கரித்துத் தத்துவவேத்தா அதன்கண்ணே புகுவன்; அதாவது தத்துவ சாக்ஷாத்காரத்தானே அஞ்ஞானமும் அதன் காரியமும் நீங்கவே சர்வ உபாதிகளுமற்ற பரமஹம்ச சந்யாசி நிர்க்குணப் பிரஹ்மரூபமேயாவன். சர்வ உபாதிகளுமற்றுத் தத்துவவேத்தா எப்போது பிரஹ்மரூபனுவன்? என அறியும் வேட்கையுண்டாகக் கூறியருளுகின்றார்:—'ததநந்தரமிதி' வலுமையான நுகர்வினையின் போகத்தானே ஆகம் வீழ்ந்தபின் சர்வ உபாதிகளுமற்ற பிரஹ்மரூபனுவன். அதன்பின்னரென்பதற்கு ஞானத்தின்பின்னர் என்னும் பொருளை ஒருரையாசிரியர் உரைத்தனரெனினும் அப்பொருள் சம்பவியாதாம்; ஏனெனின், ஆன்மஞானம் பிரஹ்மத்தின்கண்ணே புகுதல் என்னு மிரண்டினுக்கும் முற்பிற்றன்மையோ, 'ஜ்ஞாத்வா' என்பதினுள்ள 'க்த்வா' என்னும் விகுதியானே துணியப்பெறும். 'ததநந்தரம்' என்னும் பதம் வீணுமாதலின் அதற்கு ஆகம் வீழ்ந்தபின்னென்னும் பொருளே நலமுடையதாம். ஆண்டிச் சுலோகத்தில் ஸ்ரீ பகவான் 'தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே' என்னுஞ் சுருதியின் பொருளினைக் கூறியருளினர். பிரஹ்மவேத்தாவிற்கு விதேகமோக்ஷப் பிராப்தியின்கண்ணே அத்துணையே தடையாம், எத்துணைப் பிராரப்த கருமபோகத்தானே ஆக வீழ்ச்சியுண்டாகவில்லையோ, ஆகம் வீழ்ந்தபின் சர்வ உபாதிகளுமற்றவனுகி நிர்க்குண அத்விதீய பிரஹ்மப் பிராப்திவடிவ விதேகமோக்ஷத்தையடைவன். ஒருகால் தத்துவஞானமுண்டாகியும் ஆகம் விழும்வரை நுகர்வினையை விதேககைவல்லியத் தடையென ஒப்பாவிடின், தத்துவஞானமடைந்த பொழுதே தேகம் வீழ்ந்துவிடும். ஆண்டு ஞான சமகாலத்திலேயே தேகவீழ்ச்சியை யங்கீகரியாமையில் பிரஹ்மவித்தையின் சம்பிரதாய உச்சேதமும், ஜீவன் முக்தியைப் பிரதிபாதிக்கும் சுருதியின் அசங்கதமும் ஆம். அச்சுருதியோ 'விமுக்தஶ்ச விமுச்யதே' ...

வர்த்தீ' தத்துவஞானத்தானே முத்தனாயினு மிவ்வறிஞன் பிராரப்த கருமபோகத்தால் தேகம் வீழ்ந்தபின் மீண்டும் விசேடமாய் முத்தனாவன். தத்துவ வேத்தாவின் அஞ்ஞானரூபமாயை முன்னர்த் தத்துவஞானத்தானே நீங்கினபோதினும்; லேசரூபத்தானே யிருக்கும்மாயை மீண்டும் தேகம் வீழ்ந்தபின்னீங்கும். இவ்விரண்டு சுருதிகளும் முத்தருக்கு மீண்டும் முத்தியைமொழிந்து, நீங்கிய மாயை மீண்டும் நீங்குமெனமொழிந்து அறிஞனது ஜீவன் முத்தியைக்கூறும். இவைய சங்கதமன்றோவாமாதலின் விதேககைவல்லியத்தடை நுகர்வினையென்பதே கருதியாம். விளக்கு இருட்டோடு விரோதிப்பதாதலின் அது தனதுதயகாலத்திலே யிருட்டை நீக்கும், அதுபோலத் தத்துவஞானமும் அஞ்ஞானவிரோதியாதலின் தானுண்டாகும்போதே அஞ்ஞானத்தை நீக்கும், அஞ்ஞானமாகிய உபாதான காரணம் நீங்கவே அதன் காரியமாகிய அகங்கார தேகாதிகளும் அப்போதே நீங்கவேண்டும் எனினும் தத்துவஞானத்தானு பாதானகாரணரூப அஞ்ஞானம் நீங்கியபோதினும் அதன் காரியங்கள் உபாதான காரணமின்றியே நுகர்வினைவரை யிருக்கும். ஆதலினன்றோ அகங்காரதேகாதிகள் பிரத்தியக்ஷமாகவே தத்துவ வேத்தாவிற்குக் காணவருகின்றன. 'தஹிதரூஷாஜ வயக்ஷேம' காட்சியாற்றுணியப்பெற்ற அர்த்தத்திற் சிறிது மாத்திரையும் பொருந்தாமையின்றமென்பது எல்லா நூலின் றுணிபாம். இங்ஙன் காட்சியானே துணியப்பெற்ற தத்துவ வேத்தாவின் அகங்காராதிகளை யெவ்வாறும் நிடேதிக்க முடியாதாம். உபாதான காரண நீங்கியபின்னர்க் காரியஸ்திதி யாண்டுங் காணப்பெறுவதின்றாம் எனக் கடாவின், அஃதொவ்வாதாம், ஏனெனின், சமவாயிகாரண நாசத்தானே காரிய திரவிய நாசத்தை யங்கீகரிக்கும் நையாயிகரும் உபாதானகாரணமின்றி ஒருகண மாத்திரம் காரிய திரவியத்திதியை யங்கீகரித்துளார். அவர் மதத்தில் நித்திய பரமாணுக்களிற் சமவேதமாய இருமையணுவடிவ காரிய திரவியம் தனது சமவாயிகாரண நாசத்தானே நாசமாகாதாம்; மற்றோ, இரு பரமாணுக்களின் சம்யோகரூப அசமவாயி காரண நாசத்தானே இருமையணுநாசமாம். யாண்டும் அசமவாயி காரணநாசத்தானே காரியத்திரவிய நாசத்தின்கண்ணே வேறு வென்பவர் மதத்திலோ ஆசிரய நாசஸ்தலத்தில் உபாதானமற்றதாய்க் காரியத்திரவ்யம் இருகண பரியந்தம் திரமாம் இங்ஙனங் காரணமிறந்தும் காரியம் ஒருகணமேனும் இருகணமேனும் திதிபெற்றிருக்கும் என்பதேபோலச் சித்தாந்தத்தின்கண்ணும், அஞ்ஞானமாகிய உபாதான காரணம் நீங்கியும் நுகர்வினையாய தடையிருப்பின் அகங்காராதிரூபகாரியம் நீள் காலம்வரை எதனானும் நீங்கமாட்டாது. தத்துவவேத்தாவின் அகங்காராதிகளின் நீக்கத்தில் நுகர்வினை தடையாம். இப்பொருள் கேவலம் சுவகபோல கற்பிதமாத்திரத்தானே சித்தித்ததன்றாம்; மற்றோ, 'தஸ்ய தாவதேவ சிரம்' என முன்மொழிந்த சுருதியானே துணியப்பெறும். தத்துவவேத்தாவின் அகங்காராதிஸ்திதி பொருந்தாமையாகிய அருத்தாபத்திப்பிரமாணத்தானும் துணியப்பெறும். அல்லது, தத்துவவேத்தாவின் அகங்காராதி நீக்கத்தில் கேவலம் அவனது நுகர்வினை மாத்திரம் தடையன்றாம்; மற்றோ, அவனதுபதேசத்தாற் கிருதகிருத்தியராகுஞ் சீடரது சேவை முதலிய அதிருஷ்டமும் தடையாம். நுகர்வினையின்மையை நோக்கி முன்னரே யஃதிருந்துகொண்டு அஞ்ஞான அதன்காரிய நாசத்தைச்செய்யும். ஆகையால், அந்தக் காரணாதி நாசப்பொருட்டுத் தத்துவவேத்தாவிற்கு மீண்டும் ஞானாபேக்ஷையின்றாம். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுளது:—

தியெஷுபூவஅ மூரெமவா தஷுஷூரஅிம ஒிவஷிதூஷெதூஷ்ழ ।
ஜூாதவஃ காமுஃஷக்ஃ ஒெகெவமூஃ யாதிஷதபொகஃ ॥

(போ-ள்.) அகம் பிரஹ்மாஸ்மியென்னும் ஞானகாலத்தில் முக்தனும், சர்வ சோகங்களும் நீங்கியவனும் ஆகிய தத்துவவேத்தாவானவன் ஸ்ரீ காசிமுதலிய க்ஷேத்திரங்களில் தேகத்தைவிடினும், சண்டாளவாடியில் விடினும், சந்நிபாதாதி ரோகவயத்தால் சாஸ்திரார்த்த ஸ்மிருதியற்றவனாய் விடினும், எல்லாவாற்றானும் விதேக முக்தியையேயடைவன். அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் ஞானத்தானே அஞ்ஞானம் நீங்கப்பெற்ற பிரஹ்மவேத்தாவிற்கும், யானறிகின்றிலேன் என்னு முணர்வோ உண்டாம்; ஆனால் அஞ்ஞானிகட் கஃதஞ்ஞானத்தாலுண்டாவது போல, பிரஹ்மவேத்தாவிற்குண்டாகாதாம்; மற்றோ, அஞ்ஞான நாசத்தாற் சனித்ததும், உபாதானமற்றதும், சாக்ஷாத்தான்மாவைப் பற்றியதும், தத்துவ ஞான சமஸ்காரத்தானே நீங்குவதும் அந்தக்கரணுதி ஸ்திதியின் அவதிரூபமும், ஆகிய அஞ்ஞான சமஸ்காரத்தானே தத்துவவேத்தாவிற்கு யானறிகின்றிலேன் என்னும் ஞானமுண்டாம்; என்றிவ்வாறு விவரணுதி கிரந்தங்களில் விவஸ்தை செய்யப்பட்டுளது. கருத்திதுவாம்:—அகம் பிரஹ்மாஸ்மியென்னும் அந்திய சாக்ஷாத்காரத்தின் பின்னர் யான் பிரஹ்மம் ஆகேன் யான் பிரஹ்மத்தை யறியேன் என்னுமுணர்வோ தத்துவ வேத்தாவிற்குண்டாகாதாம்; ஆனால், தத்துவ வேத்தாவிற்கு ஒருகால் விவகாரகாலத்தில் யான் சடத்தையறிகின்றிலேன் என்பதாதி யுணர்வுண்டாதற்பொருட்டு அஞ்ஞான சமஸ்காரங் கற்பிக்கப்படும். ஆகையாலீண்டுச் சிறிது மாத்திரையும் பொருந்தாமையின்றாம். தத்துவஞானத்தால் அஞ்ஞானம் நீங்கியபின்னர் நூலாசிரியர் அஞ்ஞானலேசத்தை யங்கீகரித்துளார் அதனுனும் அஞ்ஞான சமஸ்காரமென்றே தெரிந்துகொள்ளவேண்டும். அச்சமஸ்காரத்தினும் அயலாக அவயவாதிரூப அர்த்தம் அஞ்ஞானலேசபதத்தாற் கொள்ளலாகாது; ஏனெனின், சடடாதி திரவ்யங்களைப்போல அவ்வஞ்ஞானம் ஒரு அவயவத்தோடுகூடியதாகாதாம், ஆயினன்றோ தத்துவ ஞானத்தால் சிறிதஞ்ஞானம் நீங்கிச் சிறிதஞ்ஞானம் எஞ்சிநிற்குமெனக் கற்பனைசெய்யலாம்; ஆனலது சாவயவமாகாதாம். அஞ்ஞானம் அநிர்வசநீயமாதலின் ஒருகால் அதற்கேகதேசமங்கீகரிக்கின் அவ்வஞ்ஞான ஏகதேச நீக்கப்பொருட்டு மீண்டும் அகம்பிரஹ்மாஸ்மியென்னும் அந்தியஞான அபேக்ஷயவசியமாம். இத்தகையஞானம் கடைக்காலத்திலுண்டாதல் முடியாத காரியமேயாமாதலின் அவ்வேகதேசத்திலும் தத்துவஞான சமஸ்காரத்தானே யழிவுறுந்தன்மையை யங்கீகரிக்கவேண்டிவரும். வரவே முன்மொழிந்த சமஸ்காரபக்ஷத்தினும் இவ்வேக தேசபக்ஷத்தில் சிறிது மாத்திரையும் விசேடத்தகைமை சித்தியாதாமாதலின் முற் கற்பனையே மிகவும் மேன்மையதாம். இத்தகைய ஜீவன் முக்தியை யபேக்ஷித்தே பூர்வம் ஸ்ரீ பகவான் அர்ச்சுனன்பொருட்டு:—'உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிந தத்வ தர்சிந:' எனக் கூறியருளினர்; தத்துவவேத்தாவாய திடப்பிரஞ்ஞனிலக்கணத்தைக் கூறியருளினாதலின் 'ததநந்தரம் விசதே' என்பதனனே, தத்துவவேத்தாவிற்குத் தேகம் வீழ்ந்தபின்னர் விதேக கைவல்லியப் பிராப்தியைக் கூறியருளியது பொருத்தமுடையதேயாம். ஒருரையின்கண்ணே, 'ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விசதே ததநந்தரம்' என்னும் பிற்பாதியில் 'மாம் தத்வத: ஜ்ஞாத்வா தத: பவதி அநந்தரம் தத் விசதே' என்பதாக பவதியென்னும் பதத்தைக்கொண்டு பதங்களைச்சேர்த்து இப்பொருள் கூறப்பட்டது. ஈண்டு, 'தத:' என்னும் பதத்தானே யாண்டும் நிறைந்த மாயாவிசிஷ்ட காரணப் பிரஹ்மத்தைக் கவர்க. 'தஸ்மிந்வா ஏதஸ்மிந் ஸம்ப்ரோதஸ்மிந் ப்ரஸம்பவதி' என்னுஞ் சுருதியில், தத்தென்னும் நாமம் சுத்தப்பிரஹ்மத்திற்காமாதலினிப்பொருள் துணியப்பெறும்:—யான் பிரஹ்மரூபன் என்பதாக எம்மைச் சாக்ஷாத்கரித்துத் தத்துவ வேத்தா முதலிற் சர்வான்ம பூதகாரணப் பிரஹ்மரூபனவன். 'யதைவம் வேதா

ஹம் ப்ரஹ்மாஸ்மீதி ஸ ஜதஂஸவ-ஂ ஹவதி' எத்தத்துவவேத்தா அகம்பிரஹ்மாஸ்மி யென்பதாக ஆன்மாவைச் சாக்ஷாத்கரிக்கின்றனனோ அவன் சர்வரூபனுவன், இம்மறை, முதலிற் றத்துவவேத்தாவிற்குச் சர்வான்மவடிவ காரணப் பிரஹ்மபாவத்தைக்கூறியது. அதன் பின்னர்ச் சுத்தப்பிரஹ்மபாவத்தையடைவன்; அதாவது முக்தர் மாயோபாதிக காரணப் பிரஹ்மவாயிலாகவே நிர்க்குணப் பிரஹ்மத்தையடைவர்; இப்பக்ஷ விஸ்தாரப் பிரதிபாதனம் வேறு நூலில் வெளிப்படையாம். (55)

(அ-கை.) ஹே பகவன்! அஞன்மஞ்ஞனும் அசுத்த அந்தக்கரணமுடையவனும் ஆயவன், மனத்தூய்மைவரை தன் வருண ஆசிரம கருமங்களை யொருகாலும் பரித்தியாகிக்கலாகாதாம். மனத்தூய்மையுடையவனே சர்வ கருமங்களையும் சந்யசித்தே ஆன்மஞானத்தையடைவன் எனத் தாங்கள் திருவாய் மலர்ந்தருளினீர்கள். அச்சந்யாசத்தைப் பிராஹ்மணனே செய்யத்தக்கவன், க்ஷத்திரிய வைசியர் செய்யத்தக்கவரல்லர் என்பதையும் 'கஂ-மெணெவ' என்பதனுனே கூறியருளினீர்கள். மனத்தூய்மையுற்ற க்ஷத்திரியாதியர் கருமஞ்செய்யத்தக்கவரா? சந்யாசஞ் செய்யத்தக்கவரா? முதலாவதோ சம்பவியாதாம், 'ஞூ---க்ஷா' என்பதாதிகளானே மனத்தூய்மைக்குக் கருமானுஷ்டான நிஷேதம் முன்னர்த் திருவாய்மலர்ந்தருளப்பட்டது. இரண்டாவதுஞ் சம்பவியாதாம்: ஏனெனின், 'ஸ்யஂ-ஂ நியநஂஸ்ய: ' என்பதாதி யானே கேவலம் பிராஹ்மண தருமமாகிய சர்வ கரும சந்யாசம் க்ஷத்திரிய வைசியர்பொருட்டு நிஷேதித்தருளப்பட்டது. கருமானுட்டானந் தியாகம்விடுத்து மூன்றாவது வகையோ இன்றாம்; இருந்தாலன்றோ இருவருமியற்றுவர். கருமானுஷ்டானத்தியாகங்கள் இருவருக்கும் நிஷேதிக்கப்படுதலின் வேறுவகையுமின்மையின் ஒரு பிரதிஷேதத்தைத் தாண்டுதலோ இன்றியமையாதியையும், மனத்தூய்மையுடைய க்ஷத்திரிய வைசியர்கட்குக் கருமானுஷ்டானத்திலும் கருமத்தியாகமே மேன்மையதாம். ஏனெனின், 'கஂ-ணா ஬ய்யூதெஜஂது:' என்பதாதியில் கருமங்கட்குப் பந்தஹேதுத் தன்மையே கூறியருளப்பட்டது. இத்தகைய பந்தஹேதுவாகிய கருமத்தைப் பரித்தியாகிப்பதால் மோக்ஷசாதனப் புட்கலத்தன்மையே கிடைக்கும். அவர் கருமானுஷ்டான அயோக்கியர்; ஏனெனின்? கருமம் சித்தவிக்ஷேப ஹேதுவாதலின் மோக்ஷ சாதனவடிவ ஆன்மஞானத்தடையேயாம் என்னும் அர்ச்சுனனது கருத்தை ஸ்ரீ பகவான் உணர்ந்தருளிக் கூறியருளுகின்றார்:—

சு-ம். ஸவ-ஂகஂ-ாணூவி ஸஜா கு-வ-ாணொஂஜ்வாஶ்ரய: ।
ஊதூஸாஜாஜவாஷ்ாதி ஶாஶ்வதஂ வஜஂவஸ்யஂ ॥ (56)

ப-ம். 1 ஸவ-ஂகஂ-ாணி 4 அவி 2 ஸஜா 3 கு-வ-ாண: 5 ஜ்வாஶ்ரய: 6 ஊதூஸாஜாக் 10 அவாஷ்ாதி 7 ஶாஶ்வதஂ 9 வஜஂ 8 அவஸ்யஂ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எல்லாக்கருமங்களையும் எப்போதும் செய்தபோதினும் எம்பாற் சாருகதனுனவன் எமதனுக்கிரகத்தானே சாசுவத அவ்யய பதத்தையடைவன். (56)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த நிஷ்காமகருமங்களானே மனத்தூய்மையுடையவன் அவசியம் பகவத்சரணத்தையடைவன்; ஏனெனின், அத்தூய்மை, பகவத்சரண அடைவின்கண்ணே முடிவு பேறுடைபதாகும். இவ்வாறு அத்தூய்மைவாயிலாகப் பகவத் சரணத்தையடைந்த அதிகாரி பிராஹ்மணனுயினே சந்யாசத்திற்குத் தடையாய க்ஷத்திரியத்வ ஜாதிபற்றிருத்தலின் எச்சங

கற்பமுமின்றி விதிவாயிலாகச் சர்வ கருமங்களின் சந்யாசஞ்செய்துகொள்க. மனத்தூய்மைவாயிலாயும் சந்யாசவாயிலாயும், பகவத் சரணத்தையடைந்த அம்மறையவனுக்கும் ஜனனமரண சம்சாரத்தினின்றும் மோக்ஷமோ பகவத் பிரசாதமொன்றானே யுண்டாம், அஃதின்றிக் கேவலம் கருமத்தியாகமாத்திரத்தானே மோக்ஷமுண்டாகாதாம். மனத்தூய்மையையடைந்த அதிகாரிகள் க்ஷத்திரிய வைசியர்களாயினும் கருமங்களை யவசியஞ்செய்க; ஆனால், வாசுதேவராகிய எம்மையே வியபாசிரயமென்னும் சரணமாகக் கருமத்தைச்செய்க. பரமேசுரராகிய எம்மையே சரணுபடைந்து எம்பாலே சர்வ ஆன்மபாவத்தை யர்ப்பணஞ்செய்துறல் மத்வியபாசிரயமாம் இவ்வாறுய அவ்விருவரும் சந்யாச அநதிகாரிகளாதலின் எப்போதும் சர்வ கருமங்களையுஞ் செய்தபோதினும்; அதாவது, சாஸ்திர விகித தம்வருணுசிரம தருமரூபகருமங்களையேனும், இலௌகிக கருமங்களையேனும், நிஷேதகருமங்களையேனும் செய்தபோதினும் எமதனுக்கிரகத்தானே ஹிரண்யகருப்பரைப்போலும் அகம்பிரஹ்மாஸ்மியென்னும் பிரஹ்மஞானத்தையடைவுற்றுச் சாசுவத அவ்யயபதத்தையடைவர்; அதாவது, 'தத்விஷ்ணோ: பரமம் பதம்' என்னுஞ் சுருதியானே பிரதிபாதிக்கப்பட்ட மோக்ஷரூபபதத்தையடைவர், அதனை யடைவுற்றே தத்துவவேத்தா மீண்டும் பிறப்பையடைவதில்லை. அப்பதம் சாசுவதமாகும்; அதாவது உற்பத்தி விநாசமற்றதாதலின் நித்தியமாம். அவ்யயமாம்; அதாவது பரிணுமபாவமற்றதாம். இவ்வாறு பகவத்சரண அதிகாரி ஒருகாலும் நிஷித்தகருமத்தைச் செய்யானுயினும் ஒருகாலவன் அதைச்செய்தபோதினும் எமதனுக்கிரகத்தானே பிரத்தியவாயத்தை யுண்டாக்காமல் அகம்பிரஹ்மாஸ்மியென வெமது சாக்ஷாத்காரத்தானே மோக்ஷத்தையேயடைவன் எனப் பகவத் சரணதையின் றுதியின்பொருட்டு ஸ்ரீ பகவான் 'ஸர்வ கர்மாண்யபி ஸதா குர்வாண:' என்பதைக் கூறியருளினர். (56)

(அ-கை.) எதனுனே பரமேசுரராகிய எமது சரணதையொன்றானே ஆன்மஞானப் பிராப்திவாயிலாய் மோக்ஷசாதனமாமோ; இதனினும் அயலாய கரும அனுஷ்டானமேனும், சந்யாசமேனும் மோக்ஷசாதனமன்றாமோ, அதனுல், க்ஷத்திரியனுகிய நீ கேவலம் பரமேசுரராய எமது பராயணனே ஆகுதி என்னும் பொருளையிப்போது ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸம்ந்யஸ்ய மத்பர: ।
புத்தியோகமுபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥ (57)

ப-ம். 1 சேதஸா 2 ஸர்வகர்மாணி 3 மயி 4 ஸம்ந்யஸ்ய 5 மத்பர: 6 புத்தியோகம் 7 உபாஶ்ரித்ய 9 மச்சித்த: 8 ஸததம் 10 பவ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சித்தத்தானே சர்வ கருமங்களையும் எம்மிடத்தில் அர்ப்பித்து எமது பரமாய நீ புத்தியோகத்தைச் சுவீகரித்து எப்போதும் எஞ்சித்தனுதி. (57)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! இவ்வுலக திருஷ்டார்த்தத்தை யடைவிக்கும், அவ்வுலக அதிருஷ்டார்த்தத்தை யடைவிக்கும் இலௌகிக வைதிக கருமங்களியாவற்றையும் விவேகத்தோடு கூடிய மதியானே எமதிடத்தில் அர்ப்பித்து; அதாவது, 'யத்கரோஷி' என முன்னருளியபடி யெல்லாக்கருமங்களையும் எமக்கர்ப்பித்து எம்பரமாகிய, வாசுதேவராகிய யாமே அத்தியந்தம் பிரியம் எவனுக்கே அத்தகையனுகிய நீ, முன்மொழிந்த கருமபல சித்தி அசித்தியின்கண் சமத்வ புத்திரூபமும், பந்த ஹேதுரூபமாயினும் கருமங்களில் மோக்ஷ ஹேதுத்தன்மையைச் சம்பாதிப்பதும் ஆகிய புத்தியோகத்தை அனன்ய சரணரூபமாகச் சுவீகரித்து

எப்போதும் எமது சித்தனுதி. எமதிடத்தேயே சித்தம்வைத்து வேறெவ்வாச ரிடத்தேனும், காமினியாதிகளிடத்தேனும் வையாதசித்தம் எவனுக்கோ அவன் மச்சித்தனுவன். இவ்வாறு நீ யெப்போதுமாதி. ஒரு மூலப்புத்தகத்தில் ‘பு- த்தியோகம் ஸமாச்ரித்ய’ எனவும் பாடமுளது. இப்பாடத்தும் முற்பொருளே கொள்க. (57)

(அ-கை.) ஹே பகவன்! அம்மச்சித்தனுதலின் எப்பயன் கைகூடும்? என அர்ச்சுனன் சங்கிப்ப ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்: அல்லது இம்முன்மொழிந்த பக்தியோகத்தைச் செய்வதில் குணத்தையும், செய்யாதிருப்பதில் தோடத்தையும், ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார் :—

சு-ம். மச்சித்த: ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி ।
அத சேத்த்வமஹங்காராந்ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ (58)

ப-ம். 1 மச்சித்த: 3 ஸர்வதுர்காணி 2 மத்ப்ரஸாதாத் 4 தரிஷ்யஸி 5 அத சேத் 6 த்வம் 7 அஹங்காராத் 8 ந 9 ச்ரோஷ்யஸி 10 விநங்க்ஷ்யஸி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மச்சித்தனுகிய நீ எமது திருவருளானே தாண்டக்கூடாத காமக்குரோதாதிகளையும் தாண்டிவிடுவாய், ஒருகால் நீ அகங்காரத்தானே எமது வாக்கியத்தைக்கேட்காவிடின் நட்டமடைவாய். (58)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மச்சித்தனுகிய நீ எமது பிரசாதத்தானே சர்வ துர்க்கங்களையும் தாண்டுவாய், சம்சார துக்கசாதனமாய தாண்டமுடியாத காமக்குரோதாதி துர்க்கமாம். காமக்குரோதாதிரூப சர்வ துர்க்கங்களையும் நினது முயல்வின்றியே கேவலம் எமது திருவருளானே எளிதிலே தாண்டுவாய். ஒருகால் நீ எமது வாக்கியத்தில் நம்பிக்கையிலாமல் யான் பண்டிதனென்னும் கருவரூப அகங்காரத்தானே அதைக்கேட்டி...
வாக்கியப்பொருளை அனுட்டித்தி...
முதலிய சுவதருமத்தைவிட்டுச் ச...
ரினும் நட்டனுவாய்.

(அ-கை.) ஹே பகவன்!...
செய்யாமையிலேனும், யான் ...
யான் செய்யேன் என அர்ச்சுன...
கின்றார் :—

சு-ம். யதஹங்காரமாச்ரித்ய ...
மித்யைஷ வ்யவஸாய...

ப-ம். 6 யத் 1 அஹங்காரம் 2 ...
10 மித்யா 11 ஏஷ 9 வ்...
க்ஷ்யதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன!...
னும் நினது துணிபுபொய்யே...
பிரேரணைசெய்யுமாதலின்.

(வி-ம்.) ஹே அர்ச்சுன...
குரூரகருமத்தையான் செய்யேன்...

செய்யேன் என நீ யெண்ணுமெண்ணம் பயனற்றதேயாம். க்ஷத்திரிய ஜாதியைத் தொடங்கும் ரஜோகுணவடிவப் பிரகிருதி உன்னை யிப்போர்வடிவ கருமத்தில் அவசியமேவும். இதனுனே 'ப்ரக்ருதிம்யாந்தி' என்பதானே முன்னர் எல்லாவுயிர்களின் முயற்சி தத்தமது பிரகிருதி யதீனமெனக் கூறிவந்தேமாதலின் நீ சுதந்திரனல்லன் ; மற்றோ, நினது பிரகிருதியின் அதீனன். (59)

(அ-கை.) இப்போது ஸ்ரீ பகவான் அர்ச்சுனனைத் தமது பிரகிருதியதீனன் என நிரூபித்தருளல் :—

சு-ம். ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த: ஸ்வேந கர்மணா ।
கர்தும் நேச்சஸி யந்மோஹாத் கரிஷ்யஸ்யவஶோऽபி தத் ॥ (60)

ப-ம். 2 ஸ்வபாவஜேந 1 கௌந்தேய 5 நிபத்த: 3 ஸ்வேந 4 கர்மணா 8 கர்தும் 9 ந 10 இச்சஸி 7 யத் 6 மோஹாத் 14 கரிஷ்யஸி 12 அவஶ: 13 அபி 11 தத்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! இயற்கையாலுளதாய தன் கருமத்தானே வயமானவனுகி மோகவயத்தான் எப்போரையாற்ற இச்சித்திலையோ அப்போரை நீ அவசனுகியும் செய்வாய். (60)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்மொழிந்த க்ஷத்திரிய இயற்கையானே யுண்டாய சௌரியாதி சகஜகருமத்தானே வயமானவனுகி நீ மோகவயத்தால் எப்போரைச் செய்ய இச்சியாயோ ; அதாவது, யான் சுதந்திரனுதலின் எவ்வெப்பொருளை விழைகின்றனனே அதேபொருளைச் சம்பாதிப்பேன் என்னும் மயல்வடிவ மோக வயத்தால் பந்துவதாதி நிமித்தமூக இப்போரைச்செய்ய இச்சியாயோ, அப்போர்த்தொழிலை நீ வயமற்றவனுகியும் செய்வாய் ; அதாவது, நீ யிப்போரைச்செய்ய இச்சியாவிடினும் முற்கூறிய இயற்கையாய கரும பாதந்திரனுகி, அந்தரியாமியாய பரமேசுரரது பாதந்திரனுகி, அப்போரை யவசியம் செய்வாய். (60)

(அ-கை.) ஆண்டு, 'அவஶ:' எனக்கூறிய வசனத்தானே ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்தில் சுபாவவடிவ பிரகிருதியின் அதீனத்தன்மையையும், ஈசுராதீனத்தன்மையையும் குறிப்பித்தருளினர். முன்னது முற்சுலோகத்திற் பிரதிபாதிக்கப்பட்டது. இப்போது மற்றதை வெளிப்படுத்தியருளுகின்றர் :—

சு-ம். ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந திஷ்டதி ।
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா ॥ (61)

ப-ம். 2 ஈஶ்வர: 7 ஸர்வபூதாநாம் 8 ஹ்ருத்தேஶே 1 அர்ஜுந 9 திஷ்டதி 6 ப்ராமயந் 4 ஸர்வபூதாநி 3 யந்த்ராரூடாநி 5 மாயயா.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! அந்தரியாமியாய ஈசுரர் யந்திரத்தில் ஆரூடமாய்ப் பிரதிமைகளைப்போலச் சர்வப் பிராணிகளையும் மாயையால் எங்கெங்கேயோ சுழற்றுவிப்பவராகி எல்லாப் பிராணிகளின் இருதயத்திலிருப்பர். (61)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! ஜீவர்களின் அறம்பாவானுசாரமாய்ச் சர்வ ஜீவர்களின் சுப அசுபகருமத்திற் பிரவர்த்தகராகிய அந்தரியாமி நாராயணர். 'யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் ய: ப்ருதிவீமந்தரோ யமயதி ... ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:' ... என்பதாதி சுருதிகளானே பிரதிபாதிக்கப்பட்டுளார்.

(பொ-ள்.) எவ்வந்திரியாமியாகிய ஈசுரர் பிருதிவியின்கண்ணே யிருப்பவ ராயதனுள்ளிருப்பரோ, எவரை யஃதறியாதோ, எவருக்கது சரீரமாமோ எவ ரதையேவுவரோ, அவ்வந்தரியாமியாகிய ஈசுரரே யுனதான்மாவாம். காணப்பட்ட கேட்கப்பட்ட எல்லாவுலகின்கண்ணும் உள்ளும் புறம்பும் நிறைந்து நாராயண ரிருக்கின்றார். இவ்வாறுற்ற அந்தரியாமி சர்வப் பிராணிகளின் அந்தக்கரணரூப இருதயதேசத்தின்கண்ணேயிருப்பர்; அதாவது, சாமானியமாயெங்கும் நிறைந்த தேயாயினும் சூரியப்பிரகாசம் தர்ப்பணாதி தெளிந்த உபாதிகளில் விசேஷரூபமா யபிவியக்தியையடையும்; சர்வ தீபங்கட்கு மதிபதியாயினும் ஸ்ரீராமர் உத்தர கோசலத்தில் விசேடமாயிலங்குவர்; அதுபோலச் சாமானியமாய்ச் சர்வ வியாபக மாயினும் அவ்வந்தரியாமி அந்தக்கரணங்களில் விசேடமாயிலங்குவர், இதனானே அவருக்கு இருதய தேயத்திலிருப்புரைக்கப்பட்டது. அவ்வந்தரியாமி யென்ன செய்துகொண்டு சர்வப் பிராணிகளின் இருதயதேயத்திலிருப்பர் என அர்ச்சுன னுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவானருளுகின்றார். 'ஹ்ராமயந' என ஈசுரர் தமது மாயையானே எல்லாப் பிராணிகளையும் தத்தம் அறம்பாவ அனுசாரமாக வும், பூர்வ சமஸ்கார அனுசாரமாகவும் யாண்டாண்டோ சுப அசுப கருமங்களில் ஏவுபவராய் எல்லாருடைய இருதயத்திலிருப்பர். இதன்கண்ணே திருஷ்டாந் தம்:—யஞாரூஊாநி' என யந்திரத்தின்கண்ணே ஆரூடமாகிய கட்டையாலாக் கிய குதிரை முதலிய பிரதிமைகள் அத்தியந்தம் பாதந்திரங்களாம் அவற்றைச் சூத்திரதாரியாகிய மாயாவி சுழல்விப்பதேபோல இவ்வந்தரியாமியாகிய ஈசுரரும் தமது மாயையானே சர்வப் பிராணிகளையும் யாண்டாண்டோ சுழல்விப்பர். ஆகை யால் இப்போரைச்செய்ய இச்சியாவிடினும் நீ அந்தரியாமியாய எமது ஏவலானே அவசியம் இப்போரைப்புரிவாய். ஈண்டு, ஹே அர்ச்சுனவென்னும் சம்போதனத் தானே ஸ்ரீ பகவான் அர்ச்சுனனிடத்தில் சுத்த அந்தக்கரணமுடைமையைக் கூறி யருளினர். அதனால் மனத்தூய்மையுடைய நீ சர்வாந்தரியாமியாகிய ஈசுரரைக் காணத்தகுதியனுவாயென்பது துணியப்பெறும். (61)

(அ-கை.) பாதந்திரராய சர்வப்பிராணிகளையும் ஒருகால் அந்தரியாமியாகிய ஈசுரரே ஏவுவராயின் 'துறக்ககாமன் வேட்க. பிறன்மனைவியை நயவற்க' என்ப தாதி விதிநிஷேத சாஸ்திரங்கட்கும், சர்வ புருடப் பிரயத்நங்கட்கும் அநர்த்தகத் தன்மையடைவுறும் என அர்ச்சுனனது சங்கையுண்டாக ஸ்ரீ பகவானருளிச்செய் கின்றார்:—

சு-ம். தமெவ ஶரணம் மஜ் ஸவ-உறாவெந ஹாரத ।
தத் ஹஸாதாஜாம் ஶாந்திம் ஸ்ாநம் ஹாவஹஸி ஶாஶ்வதம் ॥ (62)

ப-ம். 3 தம் 5 ஏவ 4 ஶரணம் 6 மஜ் 2 ஸவ-உறாவெந 1 ஹாரத 7 தத் ஹஸாதாத் 8 வராம் 9 ஶாந்திம் 11 ஸ்ாநம் 12 ஹாவஹஸி 10 ஶாஶ்வதம்.

(அ-ம்.) ஹே பாரத! எல்லாவகையானும் ஈசுரரூப ஆசிரயத்தையே நீ ஆசி ரயிப்பாக, அவ்வீசுரப்பிரசாதத்தானே நீ பரமாகிய சாந்தியையும் சாசுவதமாகிய ஸ்தானத்தையும் அடைவாய். (62)

(வி-ம்.) ஹே பாரத! எவ்வீசுரர் எல்லாருடைய இருதயத்திலிருந்து எல் லாரையும் சுபாசுபத்தில் ஏவுவரோ அத்தகைய எவற்றிற்கும் பற்றுக்கோடாய ஈசுரரையே, இக்குடும்பக்கடலைத் தாண்டற்கு நீ சர்வபாவத்தானே பற்றுதி; அதா வது முக்காரணங்களானும் நீ ஈசுரரைப் பற்றுதியென்பதாம். எல்லாவகையானும் நீ யவரையே பற்றுவையாயின் அவரது திருவருளானே பரமசாந்தியையடைவாய்;

அதாவது தத்வஞான உதயம்வரை அவாது திருவருளானே நீ காரியசகித அவித்யா நீக்கவடிவ பரமசாந்தியையடைவாய், சாசுவதஸ்தானத்தையுமடைவாய். ஆண்டத்விதீய ஸ்வப்பிரகாச பரமானந்த பிரஹ்மரூபத்தானே நிலைபெறுதல் ஸ்தானமாம், அது சாசுவதமாம்; அதாவது, உற்பத்தி நாசமற்றதாதலின் நித்தியமாம். அத்தகைய நித்தியஸ்தானத்தை நீ யடைவாய். ஈசுர அனுக்கிரகத்தானே யடைவுற்ற அகம்பிரஹ்மாஸ்மியென்னும் தத்துவஞானத்தானே காரிய சகித அவித்தை நீக்கமும் பரமானந்த அடைவும் ஆகிய மோக்ஷத்தையடைவாய். ஒருரையின்கண்ணே பரமசாந்தியை யென்பதனால் சமாதி கவரப்பட்டுளது, சமாதியினடைவு புருடனுக்கு ஈசுர அனுக்கிரகத்தானேயாம். இது 'ஸமாயிஸி ஷிரீயாற வ்ரணியாநாகு' என்னுஞ் சூத்திரத்தானே ஸ்ரீ பதஞ்சலிபகவானாலேயும் கூறப்பட்டுளது. (62)

(அ-கை.) இப்போது இச்சர்வகீதா சாஸ்திரப்பொருளையும் உபசங்கரித்தருளுபவராகிய ஸ்ரீ பகவான் கூறியருளல்.

சு-ம். உதி தெ ஜூாநஜாவஹாதம் மாஹ்யாஹ்ஹாதரம் உயா ।
விஶ்ரூஸெயூதஶெஷெண யமெஹஸி தமா கூறு ॥ (63)

ப-ம். 3 உதி 2 தெ 6 ஜூாநம் 7 சூவஹாதம் 4 மாஹாக 5 மாஹ்யதரம் 1 உயா 10 விஶ்ருயூ 8 வதக 9 கூஷெஷெண 11 யமா 12 ஊஹஸி 13 தமா 14 கூறு.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! பரமேசுரராகிய யாம் நின்பொருட்டு இம்முற்கூறிய வகையாகக் குகிய பதார்த்தத்தினும் அத்தியந்தங்குகிய ஆத்மஞானம் கூறினேமாதலின் இக்கீதா சாஸ்திரத்தின் ஆதியந்தம்வரை விசாரித்து எவ்வாறிச்சிக்கின்றனையோ அவ்வாறு செய்தி. (63)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எமது அனன்னியபக்தனும் அத்தியந்தம் பிரியனும் நீயாவாய். உன்பொருட்டுப் பரம ஆப்த சர்வஞ்ஞ பரமேசுரராகிய யாம் முற்கூறியவகையே மோக்ஷசாதனவடிவ ஆன்மவிஷயக ஞானத்தைக்கூறினேம். அது இரகசியப்பொருளினும் மிகவும் இரகசியமாம், பரம இரகசியரூபமென்க. அதாவது பரம இரகசியரூப சந்யாசபரியந்தமுள்ள நிட்காமகருமயோக குகியத்தினும் இவ்வான்மஞானம் குகியதரமாம். எதனானே சந்யாச பரியந்தமாகிய கருமயோகத்திற்கு இவ்வான்மஞானம் பலரூபமேயாமோ. சாதனத்தைக் குறித்துப் பலத்தில் இரகசியரூபத்தன்மை பொருத்தமேயாம். அல்லது, இவ்வுலகத்தில் இரகசியமாகவைக்கத் தக்கமந்திர தந்திரமணி இரசாயந முதலிய பொருள்களினும் இவ்வான்மஞானம் மிக இரகசியமாம்; ஏனெனின், மந்திராதிகள் கேவலம் சாம்சாரிக அநித்திய சுகத்தையேயடைவிக்கும், ஆன்மஞானமோ பிரஹ்மானந்தரூப நித்திய சுகத்தையேயடைவிக்குமாதலின் அதனினும் இதன்கண்ணே அத்தியந்தம் குகியரூபத்தன்மை பொருத்தமேயாம். ஆகையால், யாமுனக் குபதேசித்த இக்கீதா சாஸ்திரத்தின் பூர்வ உத்தரவாக்கிய ஏகவாக்கியதை வாயிலாக ஆதியந்த பரியந்தம் முழுவதையும் ஆராய்ந்து பின்றனததிகாரானுசாரம் எப்பொருளை யனுட்டிப்பான் நீவிழைகின்றனையோ அதனை யனுட்டிப்பாயாக. ஆனால், இதனை ஆதியந்தபரியந்தம் நன்காராயாது கேவலம் உனதிச்சைமாத்திரையானே நீ ஒரு சிறிதையும் செய்யத்தகுதியனாகாய். ஸ்ரீ பகவானது திருக்கருத்து இதுவாம்:—மனத்தூய்மையிலாத முமுக்ஷுவிற்கோ முதலில் மோக்ஷசாதன பூத ஆன்மஞான உற்பத்தித்தகுதியைத் தடுக்கும் பாவகருமங்களை யழிக்கும்பொருட்டுச் சுவர்க்காதி பலேச்சையைவிடுத்து, பகவதர்ப்பண மதியானே தனது வருணாசிரம தருமங்களையே யனுஷ்டித்தல் உரித்தாம். நிட்காமகரும அனுட்டானத்

தானே தூயமனத்தையுடையவன் பிராஹ்மணனாயினே ஆன்மஞான இச்சை வடிவ விவிதிஷையுண்டானபின்னர்ப் பிரஹ்மவேத்தாக் குருசமீபஞ்சென்று ஆன்மஞான சாதனரூப வேதாந்த வாக்கிய விசாரப்பொருட்டுச் சாத்திரங்கூறிய விதிப்படி மகனாலை விடுதல் வாயிலாகச் சர்வ கருமங்களையும் சந்யாசமேசெய்க. அதனைக்கவரும்விதி ஸ்ரீ ஆன்மபுராணத்தின் 11-வது அத்தியாயத்தில் யாம் விஸ்தாரமாய்க் கூறியுள்ளேமாதலினீண்டுக் கூறவில்லை. அச்சந்யாசத்தானே ஒரே பகவத்சரணதையானே முன்மொழிந்த விவிக்த தேசசேவாதி ஞானசாதனங்களின் பயில்வானே சிரவணாதிகளைச்செய்து ஆன்மஞானத்தை யுண்டாக்கி யதிகாரி மோக்ஷத்தையடைவன். சந்யாச அநதிகாரியாய க்ஷத்திரியாதி முமுக்ஷுக்களோ மனத்தூய்மையின் பின்னரும் தமது வருணாசிரம கருமங்களையேசெய்க. மனத்தூய்மையின்பொருட்டே கருமானுஷ்டானமாம் அதன் பின்னர்க் கருமானுட்டானம் பயனற்றதாமாயினும் சுருதிஸ்மிருதிவடிவ பகவதாஞ்ஞையைப் பரிபாலிக்கும் பொருட்டும், அன்னியரைச் சுபகருமங்களில் பிரவிருத்திப்பிக்கும் லோகானுக்கிரகப்பொருட்டும் அவர் மனத்தூய்மையின் பின்பும் கருமங்களையேசெய்க. இவ்வாறு நிட்காமகருமங்களைச்செய்யும் க்ஷத்திரியாதி முமுக்ஷுக்கள் பகவத்சரணதையொன்றையேயடைந்து முற்பிறப்பிலாற்றிய சந்யாசாதி சாதன பரிபாகத்தாலேனும் அல்லது இரண்யகர்ப்பரைப்போலச் சந்யாச அபேக்ஷையிலாமலே கேவலம் பரமேசுர அனுக்கிரகமாத்திரத்தானே அகம்பிரஹ்மாஸ்மியென்னும் ஆன்மஞான உற்பத்தியானே மோக்ஷ மடைவாம். அல்லது அவர்கட்கு வரும்பிறப்பில் மறையவர் சரீரங்கிடைத்துச் சந்யாசாதி சாதனவாயிலா யான்மஞானமுண்டாகி மோக்ஷ மடைவாம். இவ்வாறாயவே ஈண்டு மோக்ஷ அடைவு அடையாதாம். (63)

(அ-கை.) ஈண்டு, அத்தியந்தங் கம்பீரமாய இக்கீதா சாஸ்திரத்தின் ஆதியந்த பரியந்தம் முழுவதையும் ஆராய்வதால் ஜன்னிய பரிசிரம நீக்கம் செய்யும் பொருட்டுத் தாமே ஸ்ரீ பகவான் தயையான் சர்வ கீதா சாஸ்திரத்தின் சாரப் பொருளைத் தொகுத்துக் கூறியருளுகின்றார் :—

சு-ம். ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோ௰ஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ (64)

ப-ம். 1 ஸர்வகுஹ்யதமம் 5 பூய: 6 ஶ்ருணு 2 மே 3 பரமம் 4 வச: 10 இஷ்ட: 11 அஸி 8 மே 9 த்ருடம் 7 இதி 12 தத: 15 வக்ஷ்யாமி 13 தே 14 ஹிதம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! யாவினும் அத்தியந்தங் குகியமாகிய எமது மேலாய வசனத்தை நீ மீண்டும் சிரவணஞ்செய்தி எதனானே எமக்கு நீ அதிசயப் பிரியனோ, அதனானே யுனக்கு ஹிதத்தைக் கூறுகின்றேன். (64)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! முன்னர் யாம் சந்யாசம் வரையாய நிட்காம கருமயோகத்தைக்குகியமென்றேம், அதனினும் ஞானத்தைக் குகியதரமென்றேம். இப்போது நிட்காமகரும யோகத்தினும், அதன்பயனாய ஞானத்தினும் பிறவற்றினும் குகியதமமும், யாவினும் மேலாயதும் ஆகிய எமது வசனத்தை மீண்டும் நீ கேட்டி; அதாவது, முன்னரவ்வப் பிரசங்கத்தில் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருப்பினும் கேவலம் உனக்கனுக்கிரகிக்கும்பொருட்டு மீண்டும் அதனைத் தொகுத்துக் கூறுகின்றேம்கேட்பாயாக. குகியத்தினு அதிகுகியமாவது குகியதரமாம். குகியதரத்தினும் அதிகுகியமாவது குகியதமமாம். ஒருபொருள் கிடைக்கும் பொருட்டேனும், எமது பூஜையின்பொருட்டேனும், கீர்த்தியின்பொருட்டேனும், யாம் கூறுகின்றேமில்லை; மற்றோ, நீ பிரியதமனாதலின் வினவாவிடினும் கிருபையினானே நினது பரமசிரேயரூப ஹிதத்தைக் கூறுகின்றேம். (64)

(அ-கை) ஸ்ரீ பகவான் அந்தப் பரமசிரேயரூப ஹிதத்தைக்கூறியருளல்:—

சு-ம். ஊநாஹவ ஊஹ்தொ ஊஷ்யாஜீ ஊம் நஊஷு௱௱ ।
ஊஊெவெஷ்யஸி ஸத்யம் தெ ப்ரதிஜாநெ பிரியொஸி ஊெ ॥ (65)

ப-ம். 1 ஊநாஃ 4 ஹவ 2 ஊஹ்தஃ 3 ஊஷ்யாஜீ 5 ஊஷ 6 நஊஃ 7 கு௱ 8 ஊஷ 9 ஊவ 10 ஊஷ்யஸி 12 ஸத்யம் 11 தெ 13 ப்ரதிஜாநெ 15 பிரியஃ 16 அஸி 14 ஊெ.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நீ எம்மனனாய், எமதன்பனாய், எய்யாஜியாய், ஆகுதி. எம்மையே வணங்கு, அவ்வாறு வணங்கும் நீ எம்மையேயடைவாய், நீ யெமக்குப் பிரியனாதலின் நின்பாற் சத்தியப் பிரதிஞ்ஞையைச் செய்கின்றேம்.(65)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நீ எம்மனனாதி-பகவானாகிய எம்மிடத்தேயுடைய மனன் நீ ஆகுதி; எப்போது மெம்மையே சிந்தனஞ்செய்தி. கம்ச சிசுபாலாதிகளும், துவேஷத்தா லெப்போதும் உம்மையே சிந்தித்தனர் அதுபோல யானும் சிந்திப்பன் என அர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார். எம்மன்பன் என. எமதன்பனாகுதி, பரமப்பிரேமை யானே எம்மிடத்தில் அனுராகவடிவ அனுரக்தி பக்தியாம், அதனோடுகூடியவனாவாய்; பரமேசுர எமது விஷயக அனுராகத்தோடு கூடியதாக எப்போழ்தும் நின்மனத்தைச்செய்து கொள்க. கம்சாதிகளெப்போதும் மனத்தாலெம்மைச் சிந்தித்தபோதினும் பரமப் பிரேமையானே அனுராகத்தோடுஞ் சிந்தித்தவரல்லர்; மற்றோ, கேவலந்துவேஷத்தானே எம்மைச் சிந்தித்தவராவராதலின் அவரன்பரல்லர்; நீயோ அன்புடையனாய்ச்சிந்தி. அவ்வனுராகரூப பக்தி யெவ்வுபாயத்தானே யுண்டாம் என அர்ச்சுனனுக்குச் சங்கையுண்டாக அதனுபாயத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்:— எய்யாஜியாதியென. அவ்வன்பையடையும்பொருட்டு எய்யாஜியாவாய்; அதாவது, எம்மைப் பூஜிக்கு மியற்கையனாகுதி; எப்போது மெம்மையே பூசனைசெய்தி யென்பதாம். பூசிக்குஞ் சாமக்கிரியிலதேல் அவ்வன்பையடையு முபாயமியாதென்னும் அர்ச்சுனன் வினாவிற்கு ஸ்ரீ பகவான் கூறியருளல்:—எம்மை வணங்குதியென. பூஜாசாமக்கிரியிலதேல் எம்மை வணக்கத்தோடும் முக்கரணங்களானும் எம்மையே ஆராதி. மத்யாஜியென்பதனானே கூறிய பூஜாரூப அர்ச்சனம், நம: என்பதனானே கூறியவந்தனம் என்னுமிரண்டும் அன்னியபாகவத தருமங்கட்கும் உபலக்ஷணமாம். அவை ஸ்ரீமத் பாகவதத்தில்,

> ஶ்ரவணம் கீர்த்தநம் விஷ்ணோஃ ஸ்மரணம் பாதஸேவநம் ।
> அர்ச்சநம் வந்தநம் தாஸ்யம் ஸக்யமாத்மநிவேதநம் ॥

எனக் கூறப்பட்டுள்ளன.

(போ-ள்.) விஷ்ணுபகவானைச் சிரவணித்தல், கீர்த்தித்தல், ஸ்மரித்தல், அவர் திருவடிகளைச் சேவித்தல், அர்ச்சித்தல், நமஸ்கரித்தல் அடிமைப்படல், தோழுதல், தன்னையீதல், என்பவை 9ம் பாகவததருமங்களாம். இவற்றையே 9 விதபக்தியெனவுங்கூறுவர். இவ்வாறு பாகவத தருமங்களை யனுட்டித்து எப்போதும் எம்மிடத்தில் அனுராகத்தை யுண்டாக்கி எமது சிந்தனபாராயணனாய் நீ யெம்மையே யடைதி; அதாவது தத்துவமசி அகம்பிரஹ்மாஸ்மியென்பன முதலிய மகா வாக்கியங்களானே உண்டாய ஆன்மசாக்ஷாத்காரத்தால் நீ யபேதரூபமாய் அத்விதீய நிர்க்குணரூபப் பரப்பிரஹ்ம எம்மையேயடைவாய். இதன்கண் ஐயுறாதே. நின்பாலிப்பொருளில் சத்தியம் செய்கின்றேம். நீயதிகப் பிரியனாதலின், பிரியனுக்கு வஞ்சனைசெய்தல் எமக்குத் தகுதியன்றாம். அல்லது, 'ஸத்யெ' என்பதில் ஸதி 'அயெ' யெனப் பதச்சேதஞ்செய்து இப்பொருள் கொள்க: நுகர்வினையொழியவே எம்மை நீயடைவாய். ஆனால், 2-வது உரையினும் 1-வது உரையே மேன்மை

னெனின், 'விமுசைத உஹை,தாழு' என்பதனுனே முன்னர் நுகர்வினை
ின் தத்துவவேத்தாவிற்குப் பிரஹ்மபாவப் பிராப்தி கூறியருளப்பட்
தனையே இவ்வசனத்தானே அனுவாதஞ் செய்ததாய் முடியும். அவ்
தைக்குறித்து அர்ச்சுனனுக்கு விசுவாசதிடத்தன்மையைச் செய்விக்
வியாக்கியானமே நலமுடையதாம். இச்சுலோகத்தானே 'யதவோவ
நாம' என முற்கூறிய சுலோக வியாக்கியானம் செய்யப்பட்டது.
கண்ணே இச்சுலோகத்திற்கிப்பொருள் கூறப்பட்டுளது :—பிரத்தி
ஆனந்தகன பரிபூர்ணப் பிரஹ்மரூபன் யான் எனப் பிரத்தியக் கபின்
மாகார மனத்தையுடையவன் மன்மனனுவன் ; அத்தகையன் நீ யாகுதி.
ஸ்ரீ பகவான் ஞானகாண்டவடிவ 3-வது ஷட்கத்தின் ஜீவப்பிரஹ்ம
அர்த்தத்தைத்தொகுத்தருளினர். இவ்வாறு ஞானநிஷ்டை யெவ்
லாமென்னும் அர்ச்சுனன் சங்கைக்கு உத்தரம் ஸ்ரீ பகவானருளல் மத்
ா. ஞானநிஷ்டையை யடையும்பொருட்டு நீ எமது அனன்யபக்தனுதி.
உபாசனகாண்டவடிவ 2-வது ஷட்கத்தின் பகவத்பக்திரூப அர்த்தத்
குத்தருளினர். அற்பபுண்ணிய முடையவர்க்கு அந்தப் பகவத்பக்தி
னமுண்டாம் என அர்ச்சுனன் வினவிற்கு ஸ்ரீ பகவான் விடையருளல்
தியென. யாம் மகிழும்பொருட்டுத் தன்வருணுசிரம கருமத்தைச் செய்
மையுடையவன் மத்யாஜியாவன், அத்தகையன் நீயாதி ; அதாவது,
ழ்வின்பொருட்டு நீ யுனது வருணுசிரம கருமங்களைச்செய்தி. இத
மகாண்டரூப 1-வது ஷட்கத்தின் நிட்காமகருமரூப அருத்தத்தைத்
ருளினர். யாகாதிகட்குச் சாதனமாகிய தன மின்மையினுனும், மனைவி
றனும், யாகாதி செய்ய முடியாதவன் பகவத்பக்தி யடைதல் துர்லப
அதனுனே பிரஹ்மாகார சித்தவிருத்தி அத்தியந்தம் துர்லபமேயாகு
ாவிடையருளுகின்றார் : என்னை வணங்குதியென. இஃதத்தியந்தஞ்
மாம் யாகாதி கருமங்களைச்செய்ப அசாமர்த்தியன் நீ யாவையேல்
க்தியினுனே பிரதிமை முதலியவற்றில் எம்மைத் தூபதீபாதி சர்வ
ா சமர்ப்பிக்கும் வாயிலாக நமஸ்காராதிகளானே ஆராதனஞ்செய்தி.
ஜெூாவெ நஃ' என்பதாதிகளானே ஆசுவலாயந இருடி நமஸ்காரத்
கரூபமாய்க் கூறியுள்ளார். இப்போது சோபானக்கிரமமாய் நமஸ்
காமகருமம், பகவத்பக்தி, என்னும் முச்சாதன அடைவுவாயிலாய்
டையடைந்தவன் பயனைக் கூறியருளல் 'உாஜெவெஷ்ஸி' என.
ாதன சம்பத்திவாயிலாக ஞான நிஷ்டையையடைந்த நீ சர்வ ஜகத்
சர்வேசுர, சர்வ சக்தி சம்பன்ன அகண்ட ஏகரச தற்பதார்த்த எம்
வாய். ஆடி முதலிய உபாதிகள் நீங்கவே பிரதிபிம்பம் பிம்பபாவத்தை
பாலவும், கடரூப உபாதி நீங்கவே கடாகாசம் மகாகாசபாவத்தை
பாலவும் நீ யெம்மையேயடைதி. இப்போது கூறியபொருளில் அர்ச்
திடவிசுவாசஞ் செய்விக்கும்பொருட்டு ஸ்ரீ பகவான் சபதமாக அரு
ஂதெ வ௱திஜாநெ' என. அகம்பிரஹ்மாஸ்மியென ஞானநிஷ்டையை
ரமாத்மாவாகிய எம்மையே அபேதரூபமாயடைவாய். இவ்வாறு சத்
திஞ்ஞையை நின்முன் செய்தனம். நீ யத்தியந்தமெமக்குப் பிரிய
துனே நீ யெம்மால் வஞ்சிக்கத்தகாயென்றுண்மைப் பதிஞ்ஞையு

(65)

க.) 'ஸஂபயா8 ஹவவூஹஷதாநாம' என்னும் வசனம் முன்மொழி
ற்றது. இப்போது அவ்வசனப்பொருளை வெளிப்படையாய் நிரூபித்

சு-ம். 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜 ।
𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 ॥ (66)

ப-ம். 1 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 2 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 4 𑌮𑌾𑌂 3 𑌏𑌕𑌂 5 𑌶𑌰𑌣𑌂 6 𑌵𑍍𑌰𑌜 7 𑌅𑌹𑌂 8 𑌤𑍍𑌵𑌾 9 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 10 𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 11 𑌮𑌾 12 𑌶𑍁𑌚𑌃.

(அ-ம்) ஹே அர்ச்சுன! சர்வ தருமங்களையும் பரித்தியாகித்துப் பரமேசுர ரூப ஒரெமது சரணத்தையே நீ யடைதி. யானுன்னைச் சர்வ பாவங்களினின்றும் முக்தனாக்குவேன் நீ சோகமடையற்க. (66)

(வி-ம்.) ஆண்டொவ்வொருதருமமோ வருணதருமமாம், ஒவ்வொன்றோ ஆசிரமதருமமாம், ஒவ்வொன்றோ சாமானியதருமமாம். சுருதியாதிகள் பிராஹ்மணாதி வருணமாத்திரத்திற்கு எத்தருமத்தை விதித்துளதோ அது வருண தருமமாம். ஆசிரமமாத்திரத்திற்கு எத்தருமம் விதித்துளதோ அது ஆசிரமதருமமாம். இரண்டிற்கும் பொதுவாய் விதித்ததருமம் சாமானியதருமமாம். இம்மூன்றும் இவ்வத்தியாயத்தில் விஸ்தாரமாகக் கூறப்பட்டது. இவ்வெல்லாத்தருமங்களையும் விடுத்து; அல்லது, இருக்குந் தருமங்கள் இல்லாத்தருமங்களியாவற்றையும் பரித்தியாகித்து; அதாவது, சொரூபமாக அத்தருமங்களிருந்தபோதினும் இத்தருமமே எமது சரணரூப மெனத்தன் சரணதைரூபத்தானே அத்தருமங்களைச் சுவீகரியாது சர்வ தருமங்களின் அதிஷ்டானரூபமும், பலப்பிரதானரூபமுமாகிய அத்விதீய ஈசுரரூப எமது சரணத்தையடைதி; அதாவது, அம்முற்கூறிய தருமங்கள் உளவாகுக அல்லது இலவாகுக, அன்னிய அபேக்ஷையையுடைய அத்தருமங்களானே யாதுபயன் சித்திக்கும். அன்னிய அபேக்ஷபற்ற பகவதனுக்கிரகத்தானே யான் கிருதார்த்தனாவேன் என நிச்சயித்து அத்தருமங்களில் மிக ஆதரவுவையாமல் பரமானந்தகன மூர்த்தியாகிய எம்மையே நீ நிரந்தரம் பாவித்துப் பஜி; அதாவது, இப்பரமான்மசேவ சிந்தனமே பரமதத்வமாம். இதனினும் வேறாக அதிகதத்துவ மொன்றுமின்றாம். இவ்வகையாராய்ச்சி வாயிலாகப் பிரேமையை யதிகப்படுத்தி எல்லா அநாத்ம சிந்தனையுமற்ற, தைலதாரைபோல் இடையறாத மனோ விருத்திகளானே பரமான்மாவாகிய எம்மை நிரந்தரஞ்சிந்தி. ஈண்டு '𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜' என்னும் வசனமாத்திரத்தானே சர்வ தருமங்களின் தியாகலாபமுண்டாக மீண்டும் சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனானே சர்வ தருமநிஷேத அநுவாதஞ்செய்தது பரமேசுரர் பால் சர்வ தருமகாரியங்களின் கருத்திருத்தகைமை இலாபப்பொருட்டாம்; அதாவது, பரமேசுரராகிய யாமே சர்வ தருமகாரியங்களைச் செய்தலின் எம்மை சரணாகதியடைந்தவனுக்கு அவசியம் அத்தருமாபேக்ஷயின்றாம். இதனானே இவ்வகை வியாக்கியானமுங் கண்டிக்கப்பட்டது. அவ்வியாக்கியானம் வருமாறு:—சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனானே கேவலம் தருமமாத்திர பரித்தியாகம் புலப்படுமே யல்லது அதருமத்தியாகம் புலப்படாதாம். ஈண்டு, தருமாதரும மிரண்டன்றியாகம்கருதியதாம். ஆகையால் தருமபதம் தருமாதருமரூப கருமமாத்திரபோதகமாம். இத்தகைய கருமமாத்திரத்தைப் பரித்தியாகித்துப் பரமேசுரவடிவ எமது சரணத்தை நீ யடைதி யென்பதாம். இவ்வியாக்கியானஞ் சம்பவியாதாம்; ஏனெனின், சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனானே ஸ்ரீ பகவான் சொரூபமாகவே கருமத்தியாகத்தை விதித்தருளவில்லை; மற்றோ, சொரூபமாகக் கருமமிருந்தபோதினும் கருமங்களில் மிக ஆதாஞ்செய்யாமல் பகவத்சரணமொன்று மாத்திரம் நான்காசிரமிகட்கும் சாதாரணரூபமாய் விதிக்கப்பட்டுளது. நான்காசிரமிகட்கும் சாஸ்திரப் பிரதிபாதித தமது தருமத்திலோ மிக ஆதாஞ் சம்பவித்தல் கூடுமாதலினதை நீக்குவான் ஸ்ரீ பகவான் சர்வ தருமங்களையும் விடுத்து என்றருளினர். அநர்த்த

ரூபப் பலப்பிராப்தியையடைவிக்கும் அதருமத்தில் எம்மதிமானுக்கும் ஆதரவு சம்பவியாதாம், அதனது பரித்தியாகம் வேறு நிஷேத சாத்திரத்தானும் ஆம். ஆகையால், சர்வ தருமங்களையும் விடுத்து என்பதிலுள்ள தருமபதம் கருமமாத்திர உபலக்கணமெனக்கொண்டு ஷை வாக்கியத்தை அதருமத்தியாக போதகமென வங்கீகரித்தல் சம்பவியாதாம். இதனானே யிப்பொருள் துணியப்பெறும், சாஸ்திரப் பிரதிபாதிதவருண ஆசிரமதருமங்கட்குச் சுவர்க்காதிரூப அப்யுதயகாரணத்தன்மை நூல்களில் வெளிப்படையாமாறுபோல அத்தருமங்கட்கு மோக்ஷ காரணத்தன்மையும் ஆம். இவ்வாறாய சங்கையை நீக்கும்பொருட்டே ஸ்ரீ பகவான் சர்வ தருமங்களையும் பரித்தியாகித்து என்பதைக் கூறியருளினரே யன்றிச் சொரூபமாகக் கருமங்களைப் பரித்தியாகஞ்செய்யும் பொருட்டன்றாம். அவ்வசனம் கருமபரித்தியாகத்தையே விதிக்கின்றதெனக் கூறினது சம்பவியாதாம்; ஏனெனின், சாஸ்திரவிகித சர்வ தருமத்தியாகமோ சந்யாசவிதாயக வசனத்தானே யடைவுறும்; அதுபோல அதருமத்தியாகமும் நிஷேத சாத்திரத்தானே பிராப்தமாம். எப்பொருள் முன்னர் எவ்வளவையானேனும் அகப்படாதோ அப்பொருட்கே விதானமாம். அன்னிய அளவைகளானே கிடைத்தபொருட்கு விதானஞ் சம்பவியாதாம். ஆகையால ஷை வசனத்திற்கு ஸ்ரீ பகவான் அவ்வசனத்தானே சர்வகருமத்தியாகத்தை விதிக்கவில்லை. மேற்கூறிய பகவத்வசனமும் சர்வ கருமத்தியாக சந்யாச விதாயகமேயாம் எனச் சிலர் கூறுவதுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், என்னையே சரணெனக்கொள்ளென்பதனானே ஸ்ரீ பகவான் பகவத் சரணதையொன்று மாத்திரத்தையே விதித்துளாராதலின் சர்வ தருமங்களையும்விடுத்து என்பது கேவலம் அநுவாதமாத்திரமேயாம் கருமத்தியாக விதாயகமாகாதாம். சர்வ சாஸ்திரங்கட்கும் பரமரகசியம் ஈசுரசரணதையேயாமாதலின் ஸ்ரீ பகவானும் ஈசுரசரணதையின்கண்ணே இக்கீதா சாஸ்திரத்தைப் பரிசமாப்தி செய்தருளினர். ஈசுரசரணதையிலாது சந்யாசத்திற்கும் தன் பலத்தில் முடிவுபேறுண்டாகாதாம்; மற்றோ, அதனானேயாம். அல்லது, க்ஷத்திரியனாதலின் சந்யாச ஆசிரம அநதிகாரியாய அர்ச்சுனனுக்குச் சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனால் சர்வ கருமத்தியாக சந்யாச உபதேசம் சம்பவிக்கவும் மாட்டாது; ஏனெனின், யாவன் எத்தருமஞ் செய்வதில் அதிகாரியாவனோ அவனுக்கே அத்தரும உபதேசஞ் சம்பவிக்குமன்றி மற்றையனுக்குச் சம்பவியாதன்றோ. ஸ்ரீ பகவான் அர்ச்சுனனை முன்னிட்டு அதிகாரிப் பிராஹ்மணர்கட்கே சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனால் சந்யாசத்தை விதித்தருளினர் எனச் சிலர் கூறுவதுஞ் சம்பவியாது; ஏனெனின், ‘[illegible]’ இவ்வாறாய உபக்கிரம உபசங்கார வாக்கியங்களில் அர்ச்சுனனுக்கிவ்வுபதேசம் பிரதீதியாம். ஒருகால் அர்ச்சுனனை வாயிலாக்கி சந்யாச அதிகாரி பிராஹ்மணர்பொருட்டே இவ்வுபதேசத்தை யங்கீகரிக்கினோ உபக்கிரம உபசம்ஹாரவாக்கியம் அசங்கதமாம். ஆகையால், சர்வ தருமங்களையும் விடுத்து என்பதனானே ஸ்ரீ பகவான் சர்வ கருமங்களின்றியாகரூப சந்யாச விதானம் செய்தருளவில்லை; மற்றோ, வருணாசிரமதருமங்களைப்போலச் சந்யாச தருமங்களினும் அனாதரவுசெய்து பகவத் சரணதையொன்று மாத்திரத்தின்கண்ணே ஸ்ரீ பகவானுக்குத் திருக்கருத்தாம். ஹே அர்ச்சுன! சர்வ தருமங்களினும் ஆதரவிலாமல் எமது சரணமொன்றையே நீ பற்றினையாதலின் சர்வ தருமகாரியங்களின் பிரவர்த்தகராகிய யாம் உன்னை பந்துவதை முதலியவற்றை நிமித்தமாகவுடையதும், சம்சார ஹேதுபூதமுமாய சர்வ பாவங்களினின்றும் பிராயச்சித்தமின்றியே முக்தனாக்குவேம். கருத்திதுவாம்:—‘[illegible]’ என்னுஞ் சுருதியில் தருமத்திற்குப் பாவ நீக்கத்தினேதுக் கூறப்பட்டது அத்

திருமரூபம் பரமேசுராகிய யாமேயாதலின் பிராயச்சித்தமின்றியே எல்லாப் பாவங்களினின்றும் உன்னை விடுவிப்பேமாதலின் நீ சோகமடையற்க; அதாவது, இப்போரில் பிரவிருத்தித்த எனது பந்துவதாதி நிமித்தகப் பிரத்யவாயத்தினின்றும் எவ்வாறு நீங்குவேன் எனச் சோகமடையற்க. ஆண்டு, '𑌏𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌵𑍍𑌰𑌜' என்பதனானே ஸ்ரீ பகவான் பகவத் சரணத்தை விதானஞ் செய்தருளியுள்ளார்: அது சாஸ்திரத்தின்கண்ணே மூவகையாய்க் கூறப்பட்டுள்ளது.

𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌾𑌹𑌂 𑌮𑌮𑍈𑌵𑌾𑌸𑍌 𑌸 𑌏𑌵𑌾𑌹𑌮𑌿𑌤𑌿 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾 𑌭𑌗𑌵𑌚𑍍𑌛𑌰𑌣𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌾𑌧𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌪𑌾𑌕𑌤𑌃.

(பொ-ள்.) அதிகாரிக்குச் சாதனப்யாச பரிபாகத்தால் மூவகையாய பகவத் சரணம் பிராப்தமாம். ஆண்டு ஒன்றோ பரமேசுர சம்பந்தியேயான் என்பதாம். மற்றையதோ இப்பரமேசுரர் என்னவரே யென்பதாம். மூன்றுவதோ அப்பரமேசுரர் யானே யென்பதாம். ஆண்டு முதலதோ மிருதுவெனப்படும்.

𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌭𑍇𑌦𑌾𑌪𑌗𑌮𑍇 𑌨𑌾𑌥 𑌤𑌵𑌾𑌹𑌂 𑌨 𑌮𑌾𑌮𑌕𑍀𑌨𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 ।
𑌸𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑍋 𑌹𑌿 𑌤𑌰𑌙𑍍𑌗𑌃 𑌕𑍍𑌵𑌚𑌨 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨 𑌤𑌾𑌰𑌙𑍍𑌗𑌃 ॥

(பொ-ள்.) ஹே சர்வ சகந்நாதரே! கடற்கும் அலைக்கும் வேற்றுமையில்லாதிருந்தபோதினும் கடலினலையென்பர் அலைகளினது கடலென்னார்; அதுபோல உம்முடையதும் என்னுடையதும் வேற்றுமையற்றிருந்தும் யான் உம்முடையவனே நீர் என்னுடைய வரல்லீர் என்பதாய வசனங்களில் முதலாவது மொழியப்பட்டது. 2-வது மத்தியமமெனப்படும்.

𑌹𑌸𑍍𑌤𑌮𑍁𑌤𑍍𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯 𑌯𑌾𑌤𑍋𑌽𑌸𑌿 𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌣 𑌕𑌿𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 ।
𑌹𑍃𑌦𑌯𑌾𑌦𑍍𑌯𑌦𑌿 𑌨𑌿𑌰𑍍𑌯𑌾𑌸𑌿 𑌪𑍌𑌰𑍁𑌷𑌂 𑌗𑌣𑌯𑌾𑌮𑌿 𑌤𑍇 ॥

(பொ-ள்.) ஹே கிருஷ்ண! பலாத்காரத்தால் எனது கையைவிடுவித்துக் கொண்டு நீர் செல்கின்றீர் இத்தகைமையானே நுமது பௌருஷம் துணியப்பெற இயலாதாம், என திருதயத்தினின்றும் வெளிக்கிளம்பி விடுவீரேல் உம்முடைய பௌருஷத்தையறிவேன், என்னுடைய இருதயத்தினின்றும் ஒருகாலும் நீர் செல்பவரல்லீர் என்பதாதிகளில் 2-வது இயம்பப்பட்டது.
3-வது அதிமாத்திரமெனப்படும்.

𑌸𑌕𑌲𑌮𑌿𑌦𑌮𑌹𑌂 𑌚 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌪𑌰𑌮𑌪𑍁𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸 𑌏𑌕𑌃 ।
𑌇𑌤𑌿 𑌮𑌤𑌿𑌰𑌚𑌲𑌾 𑌭𑌵𑌤𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑍇 𑌹𑍃𑌦𑌯𑌗𑌤𑍇 𑌵𑍍𑌰𑌜 𑌤𑌾𑌨𑍍𑌵𑌿𑌹𑌾𑌯 𑌦𑍂𑌰𑌾𑌤𑍍 ॥

(பொ-ள்.) இத்தாவர ஜங்கமரூப சர்வ ஜகத்தும் யானும் வாசுதேவரூபமே, அப்பரம புருடராகிய பரமேசுரர் ஏக அத்விதீயரூபரேயாவர் என்னும் அசலமதி எவர்தம்மிருதயதேயத்திலிராநின்ற பரமான்ம தேவரிடத்திலுண்டாமோ அத்தகைய யாண்டும் பிரஹ்மதிருஷ்டியைச் செய்யுமவரது சமீபத்தில் நீ யொருகாலும் போகாதே; மற்றே, அத்தகைய தத்துவவேத்தாவை நீ தூரத்தில் விட்டுச் செல்லுதி. இது தூதனை நோக்கியமராஜ கூறியதாம். என்பதாதிகளில் 3-வது மொழியப்பட்டது. இவ்வாறுய பகவச்சரணரூப பூமிகையின்கண்ணே அம்பரீஷன், பிரகலாதன், கோபி, முதலிய அநேகம் பக்தர்கள் திருட்டாந்தமாய்க்கூறப்பட்டுளார்கள். இம்மூவகையாய பகவத்சரணம் பக்திரசாயனமெனப் பெயரிய நூலில் ஸ்ரீமது சூதன சரஸ்வதி சுவாமிகள் விஸ்தாரமாய் விளம்பியுள்ளார்கள். கீதையின்கண்ணே ஸ்ரீ பகவானுக்குக் கருமநிஷ்டை ஞானநிஷ்டை பகவத்பக்தி

நிஷ்டையென்னும் மூன்றும் பாஸ்பரம் சாத்யசாதன பாவத்தையடைந்துளவெனக் கூறியருளும்வேட்கையாம் அம்மூன்றும் முன்னர் மிக விஸ்தாரமாய்க் கூறியருளப்பட்டது. இந்த 18-வது அத்தியாயமோ சர்வ கீதா சாஸ்திர உபசங்காரரூபமாமாதலின் ஈண்டு முதலிற் சர்வ கருமசந்யாசபரியந்தம் கருமநிஷ்டையோ 'ஸக்ஷ ஊணா' என்பதில் உபசங்கரித்தருளப்பட்டது; சந்யாச பூர்வக சிரவணாதி சாதனபரிபாக சகிதஞான நிஷ்டையோ 'தஜோஊ' என்பதிலுபசங்கரித்தருளப்பட்டது. பகவத்பக்தி நிஷ்டையோ கூறிய நிஷ்டைகட்குச் சாதனமும், பலரூபமும் ஆமாதலின் பகவத்பக்தி நிஷ்டையை யீற்றில் 'ஸவஷயஊா நூஙிதூஜஷ' என்பதிலுபசங்கரித்தருளினர். ஸ்ரீ பகவான் பாடியக்காரரோ, சர்வ தருமங்களையும் விடுத்தென்பதனானே ஸ்ரீ பகவான் சர்வ கரும சந்யாச அநுவாதத்தால் எம்மையே சரணனக்கொள்ளென்பதனானே ஞானநிஷ்டையையுபசங்கரித்துளாரென வியாக்கியானித்தருளியுள்ளார் அநேகந் தர்மதங்களையுங் கண்டித்தருளியுள்ளார் அவ்வெல்லாப் பிரசங்கத்தையும் நூல்விரிவஞ்சி யீண்டு வரைந்திலேம். (66)

(அ-கை.) ஆண்டு, ஸ்ரீ பகவான் எல்லாத்தருமங்களையும் விடுத்து என்னும் சுலோகம்வரை சர்வ கீதா சாஸ்திர அர்த்தத்தைச் சமாப்திசெய்தருளினர், இப்போது பிரஹ்மவித்தைவடிவ கீதா சாஸ்திர சம்பிரதாய விதியைக் கூறியருளுகின்றார் :—

சு-ம். ஊஷ தெ நாதவஸ்காய நாஹக்தாய கஷாஅந ।
ந அாஶுஶ்ரூஷவெ வாஅூ ந அ ஊ யொஹூஸூயதி ॥ (67)

ப-ம். 2 ஊஷ 1 தெ 5 ந 3 ஸதவஸ்காய 8 ந 7 ஸஹக்தாய 4 கஷாஅந 11 ந 9 அ 10 ஸஶுஶ்ரூஷவெ 6 வாஅூ 16 ந 12 அ 14 ஊழ 13 யஃ 15 ஸஹூஸூயதி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! நினதிதப்பொருட்டு யாம் கூறிய இக்கீதா சாஸ்திரம் ஒருக்காலும் இந்திரியங்களையடக்காதவருக்கு உபதேசிக்கத்தக்கதன்றும். பக்தியற்றவனுக்கும் உபதேசிக்கத்தக்கதன்றும். பாமேசுர விஷயக அசூயையுடையவனுக்கு முபதேசிக்கத்தக்கதன்றும். (67)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! நினது ஜன்மமரணரூப சம்சார நீக்கப்பொருட்டுச் சர்வஞ்ஞ பரம ஆப்த பரமேச்சுரராகியயாம் சர்வ சாஸ்திரார்த்த இரகசியரூப இக்கீதா சாஸ்திரத்தை யுபதேசித்தேம். ஒருகாலும் இதனைத் தவமிலார்க் குபதேசிக்கலாகாது. சப்தாதி விடயங்களினின்றும் சுரோத்திராதிகளை நிக்கிரகியாதவர் தவமிலாராவர். அத்தகைய இந்திரிய நிக்கிரகமற்றவருக்கு இது எவ்வவத்தையின்கண்ணும் உபதேசிக்கத்தகாததாம்; அதாவது, மகாசங்கடத்தை யடைந்தபோதினும் கூறிய அஜிதேந்திரியர்க்குக் கூறொணாதாம். 'கஷாஅந' என்பதைக் கூறப்படும் மூன்று பரியாயங்களிலும் சேர்க்குக. இந்திரிய நிக்கிரகமுடையவனாயிருந்தபோதினும் பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் குருவின்கண்ணும் ஈசுரரிடத்தும் பக்தியிலாதவருக்கும் இஃதொருகாலும் உபதேசிக்கத்தக்கதன்றும். பொறியடக்கமுடையரும் அன்புடையரும் ஆனபோதிலும் குருவின்பாதப் பிரக்ஷாளனாதி சேவைவடிவ சுசுருஷையற்றவருக்கும் இஃதொருக்காலும் கூறொணாதாம். கூறிய மூன்று முடையவரேனும் பகவான் வாசுதேவராகிய எம்மை மனுடராகவும் அசர்வஞ்ஞத்வாதி குணமுடையராகவும் எண்ணி அசூயை செய்பவர்க்கும்; அதாவது, பரமேசுரராகிய எம்மிடத்தில் ஆன்மப் பிரசம்சை முதலிய தோடாரோபணஞ் செய்து எமது ஈசுரத்தகைமையைச் சகியாதவராகி யெம்பால்

துவேஷத்தையே செய்யும் பரமேசுர மேன்மையைச் சகியாதவ
சாஸ்திரம் ஒருகாலும் உபதேசஞ் செய்யத்தகாததாம். மற்றோ,
திரியமனோ நிக்கிரகமும், குரு ஈசுரபக்தியும், குருசேவையும், ப
மும் உடைய அதிகாரிகட்கே இஃதுபதேசஞ்செய்யத்தக்கதாம். ஏ
கத்திலொரு நகாரங்கூறுவதானே கூறியபொருளின் சித்தியுண்
ளாமல் ஸ்ரீ பகவான் 4 நகாரங்களருளியது ஒவ்வொரு சிறப்பி
சாஸ்திர உபதேச அயோக்யதை யுணர்த்தும்பொருட்டாம். 'மே
தைவா வித்யாதயா' சாஸ்திரார்த்ததாரணை செய்யும் சக்தி
வியின்பொருட்டேனும் இந்திரிய நிக்கிரகமுடைய தவத்தோன்
இந்தப் பிரஹ்மவித்தை கொடுக்கத்தக்கதாம். என்பதன்கணே
விகற்பம் காணவருகின்றதாதலின் சுசுருஷை, குருபக்தி, பக
னும் மூன்று விசேஷணங்களோடுகூடிய தவசியின்பொருட்டு
பொருட்டும். இவ்வித்தை கொடுக்கத்தக்கதாம். ஆண்டு வி
மேதை தவமெனு மிரண்டினுக்கும் பாக்ஷிகத்தன்மையுற்றபோ
ரக்தி, குருபக்தி சுசுருஷை என்னும் மூன்றற்கும் யாண்டும் நிய
வாறு ஸ்ரீ பாடியக்காரபகவான் கூறியருளியுள்ளார். ஸ்ரீ பகவா
வித்தை யுபதேச சம்பிரதாயம் பிரகாரப் சுருதியின்கண்ணும் கூ

> வித்யாஹவை ப்ராஹ்மண மாஜகாம கோபாயமா ஸேவதி
> அஸூயகாயா நருஜவெயதாய ந மா ப்ரூயா வீர்ய —
> யமேவ வித்யாஶ்ருசிமப்ரமத்தம் மேதாவினம் ப்ரஹ்மசர்ய —
> தஸ்மை மா ப்ரூயா நிதிபாய ப்ரஹ்மன் இதி ॥

(பொ-ள்.) ஒரு காலத்தில் அநதிகாரியையடைந்து கேதமு
வித்தையை யுபதேசிக்கும் பிராஹ்மணனையடைந்து இவ்வாறு
பிராஹ்மண! நீ யென்னை இரகசியமாகவை, அதனானே யு
மோக்ஷமிரண்டையுந் தருகின்றேன், ஒருகால் கிருபாதிருஷ்டி ய
மாகவைக்க முடியாவிடினும், குணங்களில் தோஷாரோபணஞ்
யுடையவனும், நேராந்தன்மையின்றியவனும், மனசகித இந்திரி
னும், குருசேவை பக்தியற்றவனும் ஆகிய அநதிகாரிக்கு நீ யெ
யுபதேசியாதே தனதிகளின் உலோபத்தானே அநதிகாரிகட்கு
டையாயின் மலடியைப்போலப் பயனற்றவளாவேன்; மற்றோ,
குணங்களோடுகூடியவனுக் கென்னையுபதேசிக்குக. அல்லது,
கண்ணே பரமபக்தியும் அவ்வாறே பிரஹ்மவித்தையை யுபதேசி
ரிடத்தே பரமபக்தியும் உடைய அம்மகாத்மாவிற்கே இவ்வேதா
அர்த்தம் மதியின்கண்ணே யிலங்குறும் என்பதாம்.

(அ-கை.) இவ்வாறு இப்பிரஹ்மவித்தை வடிவகீதா சா
விதியைக் கூறியருளி இப்போது ஸ்ரீ பகவான் அச்சம்பிரதாயப்
பலத்தைப் பகர்ந்தருளுகின்றார்:—

சு-ம். ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி ।
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥

ப-ம். 1 ய: 6 இமம் 7 பரமம் 8 குஹ்யம் 9 மத்பக்தேஷு 10 அபி
2 மயி 3 பராம் 5 க்ருத்வா 11 மாம் 12 ஏவ 13 ஏஷ்யதி

(அ-ம்.) ஹே அர்ச்சுன! எம்பால் பரபக்தியைச் செய்து இப்பரமகுஹ்ய சாஸ்திரத்தை எமது பக்தர்களிடத்தில் ஸ்தாபனஞ் செய்பவன் எம்மையே யடைவன் இப்பொருளிலையப்பாடின்றும். (68)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உனக்கு மெமக்கும் சம்வாதவடிவ இக்கீதா சாஸ்திரம் பரமமாம்; அதாவது மோக்ஷரூப நிரதிசய புருடார்த்த சாதனமாதலின் யாவினும் மேன்மையதாம். குஹ்யமாம்; அதாவது, சர்வ சாஸ்திரங்களின் இரகசியார்த்தப் பிரதிபாதகமாதலின் கண்டபேர்க்கெல்லா முபதேசிக்கத்தக்கதன்றும் இத்தகைய பரமகுஹ்ய இந்நூலை, சம்பிரதாயப்பிரவர்த்தக அறிஞன் எமது பக்தரிடத்தே ஸ்தாபனஞ்செய்க; அதாவது, பரமேசுரரிடத்தி லனுராகரூப பக்தியையுடையவரிடத்தில் இக்கீதையைப் பாடவடிவமாயேனும் அர்த்தவடிவமாயேனும் ஸ்தாபனஞ்செய்க. எமது பக்தர்களிடத்தில் என மீண்டும் பக்தியின்கவர்ச்சி, கூறிய தபசு முதலிய மூன்று விசேஷணங்களின்றேனும் பகவத்பக்தி மாத்திரையானே பாத்திரத்தன்மையைக் குறிப்பித்தருளற்காம். சம்பிரதாயப் பிரவர்த்தக அறிஞன் என்னமதியானே இக்கீதையைப் பக்தர்களிடத்தில் ஸ்தாபனஞ் செய்வன் என அறியும் வேட்கை யர்ச்சுனனுக்குண்டாக ஸ்ரீ பகவானருளுகின்றார்:— பக்தியை யெம்மின் மிகவுஞ் செய்தென. அதிகாரிகட் கிக்கீதையை யானுபதேசிப்பது 'யான் பரம குருரூப பகவானது சுசுருஷையே செய்கின்றேன்' எனத்துணிந்து எமதன்பருக்கிதனை யுபதேசிக்குக. உபதேசிப்பவன் எம்மையேயடைவன்; அதாவது, அவ்வறிஞன் இந்த ஜன்மமரணரூப சம்சாரத்தினின்றும் விரைவின் முக்தனேயாவன். ஹே அர்ச்சுன! இப்பொருளில் ஒருகா [illegible]தையப்படற்க. அல்லது அப்பிற்பகுதிக்குப் பொருளிங்ஙன் கொள்க:—பரமேசுரா[illegible] எம்மிடத்திற் பரம பக்தியைச்செய்து சர்வ சம்சயங்களுமற்ற அறிஞன் எம்மை[illegible]யவசியமடைவன். அல்லது, அவ்வறிஞன் எம்மிடத்திற் பரபக்தியைச்செய்து எம்மையேயடைவன்; மற்றொருவரையுமடையான். ஒருரையின்கண்ணே இச்சுலோகத்திற்குப் பொருளிங்ஙனியம்பப்பட்டுளது:—பகவத் பக்தியற்றவனாயினும் கேவலம் தனது மானதபூஜையை யிச்சித்து இப்பரம இரகசியரூப கீதா சாஸ்திரத்தை எமது பக்தர்களிடத்திலீக, ஈபவனும் அந்தப் புண்ணிய விசேடமகிமையானே சிந்தேகாச பரமேசுரரிடத்தில் அத்வைதபாவனைவடிவ உபாசனையாகிய பக்தியைச்செய்து; அதாவது அவ்வன்பின்கண்ணே மிகவுமாதரத்தையடைந்து பரமபக்தியை யனுட்டித்து எம்மையேயடைவன்; அதாவது, அகம்பிரஹ்மாஸ்மியென்னும் ஆன்மஞானத்தையடைந்து பிரஹ்மபாவப் பிராப்திவடிவ முக்தியையேயடைவன். இப்பொருளில் யாதொரு ஐயமுமின்றும். இத்துணையானே ஸ்ரீ பகவான் இக்கைமுதிக ந்யாயத்தைக்குறிப்பித்தருளினர்:—பரமேசுர பக்திலேச மாத்திரமுமிலாத அஜாமிளாதியர் தமது புத்திரவாஞ்சையானே புத்திரன் பெயராய நாராயண நாமத்தானே பரமேசுர ஸ்மரணஞ்செய்தனர். நாராயணநாம உச்சாரணமாத்திரத்தானே பிரசன்னத்தன்மையையடைந்த பரமேசுரர் அவர்கட்கு நற்கதியையீந்தனர். நாராயண நாமோச்சாரணமாத்திரையானே அஜாமிளாதியர் நற்கதியுற்றனரெனின் வாக்காலிக்கீதையைக் கீதஞ்செய்து இரகசியப்பொருளைப் புகலின் அவனுக்குப் பகவத்பக்திலபாதி முறையானே கிருதகிருத்தியத்தகைமையுண்டாமென்பதி லியம்பவேண்டுவதென்னே. ஒரு மூலபுத்தகத்தில் 'யஉஃ௦' என்னுமிடத்தில் 'யஉஃ௦' என்றும் பாடமுளது. இப்பாடத்திலும் முன்மொழிந்த பொருளே கொள்க. (68)

(அ-கை.) மேலும்:

சு-ம். [Grantha script verse, illegible]
[Grantha script verse, illegible] ॥ (69)

ப-ம். 8 ந 1 அ 3 தஸ்மாத் 2 மநுஷ்யேஷு 5 கச்சித் 6 மே 7 ப்ரியக்ருத்தம: 9 பவி தா 15 ந 10 அ 11 மே 12 தஸ்மாத் 4 அந்ய: 14 ப்ரியதர: 13 புவி.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சர்வ மனுடருள்ளும் அவனினுமயலாய எவனும் எமது விடயக மிகப் பிரீதியுடையவனுகான், உண்டாகவுமாட்டான் எமக்கும் அவனினுமயலா யீண்டெவருமே அதிப்பிரியரல்லர். (69)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! எமதன்பர்களிடத்தில் கீதா சாஸ்திர சம்பிரதாயத்தைப் பிரவிருத்திப்பிக்கும் அறிஞனினும் அன்னிய சர்வ மனுடர்களுள்ளும் எவனும் எமது விஷயக அதிப்பிரீதியுடையவனுகான் முற்போதும் இப்போதும் பிற்போதும்; மற்றோ, அவ்வறிஞனே அத்தகையனுவன். கேவலம் அவ்வறிஞனே அத்தகையனல்லன்; மற்றோ, எமக்கும் அவ்வறிஞனின் அயலாய எவனும் அதிப் பிரீதி விஷயகனுகான் ஈண்டிப்போதும் முற்போதும் பிற்போதும் மற்றோ அவ்வறிஞனே அதிப்பிரிய விஷயகன் எமக்காவனென்றுணர்க. (69)

(அ-கை.) ஆண்டு, 'யஇமம் பரமம் குஹ்யம்' என்பதாதி இரு சுலோகங்களானே ஸ்ரீ பகவான் இப்பிரஹ்பவித்தைவடிவ கீதா சாஸ்திர உபதேசகர் பலத்தைக் கூறியருளியிப்போது கீதா பாராயணம் செய்பவனது பலத்தையருளுகின்றார்:—

சு-ம். அத்யேஷ்யதே ச ய [illegible] இமம் தர்ம்யம் ஸம்வாதமாவயோ: ।
ஜ்ஞாநயஜ்ஞே [illegible] நாஹ மிஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥ (70)

ப-ம். 7 அத்யேஷ்யதே 1 ச 2 ய: 6 இமம் 5 தர்ம்யம் 4 ஸம்வாதம் 3 ஆவயோ: 10 ஜ்ஞாநயஜ்ஞேந 8 தேந 9 அஹம் 11 இஷ்ட: 12 ஸ்யாம் 13 இதி 14 மே 15 மதி:.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! மீண்டும் யாவர் நம்மிருவர்க்கும் சம்வாதவடிவமாய தர்மியரூப இக்கீதையைப் பாராயணஞ்செய்வரோ, அவரால் ஞானயாகத்தால் யாம்பூஜிதையை யடைவேமென்பது பரமேசுராகிய எமது துணிபாம். (70)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! மோக்ஷப்பிராப்தியின் காரணரூப ஆன்மஞானமாகிய தருமகாரணமாதலின் தர்மியரூபமாம். தருமத்தினும் அவிருத்தமாதலின் தருமியரூபமாம். அத்தர்மியவடிவ நம்மிருவர் சம்வாதமாகிய கீதாசாஸ்திரத்தைப் பாராயணஞ்செய்பவன்; அதாவது ஜபரூபமாய்ப் படிப்பவன் எவனே அவனுல் ஞானயாகத்தால் யாம் பூஜிக்கப்படுவேம்; அதாவது, கீதையின் 4-வது அத்தியாயத்தில் திரவியயாகாதி சர்வத்தினும் மேன்மைவடிவமாய்க் கூறப்பட்ட ஞானரூபயாகத்தால்யாம் பூஜிக்கப்பெறுவேம். இங்ஙனெமது துணிபாம். இக்கீதையின் பொருளை யறியாமலே கீதையைப் பாராயணஞ்செய்யினும், அவன் படிப்பதைக் கேட்குமெமக்கு அப்பாடத்தா லெம்மையே சிந்திக்கின்றானென்னும் மதியாம். இதனுனே யவன் பாடமாத்திரத்தானும் ஞானயாக பலரூபமோக்ஷத்தை பனத்துய்மைவாயிலாக ஆன்மஞான உற்பத்திவாயிலாக அடைவன். கீதையின் பாடமாத்திரத்தானும் பரம்பரையாக மோக்ஷரூபபலத்தை யடைவனுயின் இக்கீதையின் அர்த்தானுசந்தான பூர்வகம் இக்கீதையைப் படிப்பவன் நேராகவே மோக்ஷபலத்தையடைவனென்பதன்கண்ணே கூறவேண்டுவதென்னே? ஆண்டு, 'ச்ரேயாந் த்ரவ்ய' என்பதனுனே முன்னுன்காவதத்தியாயத்தில் திரவியமயாதியாகங்களெலாவற்றினுமே ஞானயாக மேன்மை கூறினேம். (70)

(அ-கை.) முன்னிக்கீதையைக் கூறுபவர் படிப்பவர் பலத்தையருளி யிப்போது கேட்பவர் பலத்தை ஸ்ரீ பகவானருளிச்செய்கின்றார் :—

சு-ம். ஶ்ரத்தாவாநநஸூயஶ்ச ஶ்ருணுயாதபி யோ நர: ।
ஸோऽபி முக்த: ஶுபாம்ல்லோகாந் ப்ராப்நுயாத்புண்யகர்மணாம் ॥ (71)

ப-ம். 3 ஶ்ரத்தாவாந் 5 அநஸூய: 4 ச 7 ஶ்ருணுயாத் 6 அபி 1 ய: 2 நர: 8 ஸ: 9 அபி 10 முக்த: 12 ஶுபாந் 13 லோகாந் 14 ப்ராப்நுயாத் 11 புண்யகர்மணாம்.

(அ-ம்.) ஹே அர்ச்சுன! சிரத்தையுடையவனாய், அசூயையாகிய தோடமற்றவனாய், கீதையைக் கேவலம் கேட்பவனும் சர்வ பாவங்களுமற்றவனாய்ப் புண்ணியவான்களுடைய சுபலோகத்தையடைவன். (71)

(வி-ம்.) ஹே அர்ச்சுன! உலகர்மீது கருணைவைத்து இக்கீதையை உரத்த தொனியானே பாடஞ்செய்யும் அன்னியன் வாயிலாய் ஆஸ்திக்யவடிவனாய்த் தோஷ ஆரோபணரூப அசூயைத்தோடமற்றவனா யிக்கீதையைக் கேவலம் கேட்பவனே யாவன்; அஃதாவது, இவனிக்கீதை யுரத்ததொனியுடன் பாடமேன் செய்கின்றான், இவனிக்கீதையை யசம்பத்த பாடஞ்செய்கின்றான், என்பதாதி தோடங்களைக்கூறுபவனிடத்தில் ஆரோபியாதவனாய்ச் சிரத்தையோடும் கீதையின் பாடமாத்திரத்தைக் கேட்பவனும் சர்வ பாவங்களுமற்றவனாய் அசுவமேதாதி புண்ணிய கருமங்களைச்செய்யும் தருமாத்மாக்களின் சுபலோகங்களையடைவன்; அதாவது, அசுவமேதாதிகளைச்செய்பவன் எங்குறுவனோ அங்கேயிவனு முறுவனென்பதாம். 'ஶ்ருணுயாதபி யோ' என்பதன்கண்ணிருக்கும் 'அபி' யென்னுஞ் சப்தத்தால் ஸ்ரீ பகவான் இக்கைமுதிக நியாயத்தைக் கூறியருளினர்: இக்கீதையைப் பொருளுணராது கேவலம் அக்ஷரமாத்திரத்தைக் கேட்டபுருடனும் உத்தம லோகத்தையடைவனாயின் பொருளுணர்தல் வாயிலாகக் கீதையைக் கேட்கும் புருடன் அவ்வுத்தமலோகங்களை யடைவனென்பதன்கண்ணே யாது கூறற்பாலதுளதாம். இத்தகைய பலம் ஸ்ரீமத் பாகவதத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

வாஸுதேவகதா ப்ரஶ்ந: புருஷாம்ஸ்த்ரீந் புநாதி ஹி ।
வக்தாரம் ப்ருச்சகம் ஶ்ரோத்ரூம் தத்பாதஸலிலம் யதா ॥

(பொ-ள்.) பரமேசரூப வாசுதேவரின் கதைவினுதல், மூவராகிய கூறுபவரையும் வினவுபவரையும், கேட்பவரையும், புனிதமாக்கும், விஷ்ணுவின் பாத உதகம் பாவனமாக்குவதேபோலும். (71)

(அ-கை.) ஐயந்திரிபற்ற ஆன்மஞானோற்பத்தி யுண்டாம்வரை பிரஹ்மவேத்தாக் கிருபாளுவாகிய குரு, உபதேசப் பிரயாசத்தைச் சீடனுக்காக எடுத்துக்கொள்ளவேண்டுமெனக் குருதருமசிக்ஷைசெய்யும்பொருட்டுச் சர்வஞ்ஞராயினும் ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு, இப்போதுனக்கு உபதேச அபேக்ஷையின்றாமென்பதை யுணர்த்தும்பொருட்டு வினவியருளுகின்றார் :—

சு-ம். கச்சிதேதச்ச்ருதம் பார்த த்வயைகாக்ரேண சேதஸா ।
கச்சிதஜ்ஞாநஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே தநஞ்ஜய ॥

ப-ம். 6 கச்சித் 2 ஏதத் 7 ஶ்ருதம் 1 பார்த 3 த்வயா 4 ஏகாக்ரேண 5 சேத ஸா 11 கச்சித் 10 அஜ்ஞாநஸம்மோஹ: 12 ப்ரநஷ்ட: 9 தே 8 தநஞ்ஜய.

(அ-ம்.) ஹே பார்த்த! நீ யிக்கீதையை ஒருமையோடுகூடிய மனத்தானே கேட்டனையா? ஹே தநஞ்சய! உனதஞ்ஞானத்துற்ற பெருமோகம் அழிவுற்றதா? கூறுதி. (72)

(வி-ம்.) ஹே பார்த்த! பரம ஆப்த சர்வஞ்ஞ பரமேசுரராகிய யாம் உனக்குபதேசித்த பிரஹ்மவித்யாவடிவ கீதையை ஒருமையோடுகூடிய மனத்தனுய்க் கேட்டனைகொல்! அதாவது பொருளோடு மிதனை நிச்சயஞ்செய்தனைகொல்! ஹே தனஞ்ஜய! இக்கீதையைக்கேட்டு உனதஞ்ஞானத்தாலாய விபரீதவடிவ பெருமோகம் காரணத்தோடு மொழிந்ததுகொல்! கருத்திதுவாம்:—அஞ்ஞானமாகிய பெருமோக மிதுவரையும் நட்டமடைந்திலதாயின் மீண்டும் யாமுபதேசிப்பேம் உனது சித்தப்பாகுபாட்டை எம்முன் கூறுதி. ஈண்டு, 'கச்சித்' இருமுறையும் வினவாசகமாம், அநான்மவடிவ தேகாதிகளில் ஆன்மத்வமதியும், சுதருமமாய போரில் அதருமத்தன்மை மதியும் ஆகிய விபரியயமே யீண்டு அஞ்ஞானமாகிய பெருமோகமென வுணர்க. (72)

(அ-கை.) இவ்வாறு ஸ்ரீ பகவானுல் வினவியருளப்பட்ட அர்ச்சுனன் இப்போது கிருதார்த்தனுதலின் எனக்கு மீண்டும் உபதேச அபேக்ஷையின்றும், என்னுந்தனதபிப்பிராயத்தைக் கூறுகின்றுன்:—

அர்ஜுந உவாச.

சு-ம். நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத ।
ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ ॥ (73)

ப-ம். 7 நஷ்ட: 6 மோஹ: 4 ஸ்ம்ருதி: 5 லப்தா 3 த்வத்ப்ரஸாதாத் 2 மயா 1 அச்யுத 9 ஸ்தித: 10 அஸ்மி 8 கதஸந்தேஹ: 13 கரிஷ்யே 12 வசநம் 11 தவ.

(அ-ம்.) ஹே அச்சுத! யான் தேவரீரது பிரசாதத்தானே ஆன்மஞானரூப மிருதியையடைந்து, அதனுனே எனது மோகம் நஷ்டமாயதாதலின் சர்வ சம்சயங்களுமற்றவனுகி தேவரீரது சாசனத்திலிருக்கின்றேன் தேவரீரது ஆணைப்படி செய்வேன். (73)

(வி-ம்.) ஹே அச்சுத! அதாவது ஸ்ரீ பகவான் தனது வடிவமேயாமெனத் துணியப்பெற்றிருத்தலின் தன்னைவிட்டுப் பிரிவு படாமையைக் காண்பித்ததாம். எனதஞ்ஞானமாகிய விபரியயரூப மோகம் நட்டமாயது; எவ்வாறு நட்டமுற்றதெனின்? 'ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயா' ஹே பகவன்! யான் தேவரீரது பிரஹ்மவித்யாவடிவ கீதா சாஸ்திர வுபதேசத்தானே சர்வ சம்சயமற்ற அகம்பிரஹ்மாஸ்மியென்னும் ஆத்மஞானரூப மிருதியையடைந்தேன் அதனுனே யெல்லாத்தடைகளுமற்ற ஆன்மஞானத்தானே எனதப் பெரும் விபரீதமோகமழிந்தது. 'ஸ்ம்ருதிலாபே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷ:' யானே பரப்பிரஹ்மரூபன் என்னு மிருதியையடைந்தவனுக்குச் சர்வ சிற்சடக்கிரந்தியும் நசிக்கும் என்னும்

சுருதிப்பொருளை யனுபவித்த அர்ச்சுனன், 'ஸ்திதோஸ்மி கதஸம் தேஹ:' என்றனன்; ஆன்மஞானரூப மிருதியையடைந்ததனுன் யான் சர்வ சந்தேகமுமற்றவனுய்த் தேவரீரது யுத்தகர்த்தவ்ய சாசனத்திலிருக்கின்றேன். ஹே பகவன்! எனது வாழ்நாள்வரையான் தேவரீரது திருமொழியை உண்மையாகச் செய்வேன்; அதாவது, பரமகுருவாகிய தேவரீரது ஆணையைப் பரிபாலிப்பேன் அவசியம். இவ்வாறு ஸ்ரீ பகவானுபதேசப் பிரயாசம் சபலமெனக்கூறி ஸ்ரீ பகவானை மகிழ்வித்தனன். இத்துணையானே இக்கீதா சாஸ்திரத்தை யத்தியயனஞ் செய்யும் அதிகாரி ஸ்ரீ பகவானது திருவருளானே மோக்ஷரூப பலபரியந்தமாய ஆத்மஞானத்தை யவசியமடைவன் என்பதாம். இவ்வண்ணம் இக்கீதா சாஸ்திரபலம் உபசங்கரிக்கப்பட்டது. 'தமேவ விதித்வா' என்னுஞ் சுருதியின்கண்ணே மோக்ஷபரியந்தம் ஆன்மஞானரூப பலம் உபசங்கரிக்கப்பட்டது. ஈண்டு, 'கதஸம் தேஹ:' என்பதனுனே அர்ச்சுனனுல் தேகாதி யனாத்ம பதார்த்தங்களில் ஆன்மத்தன்மைப் புத்திவடிவ மோக நாசங்காட்டப்பட்டது. 'கரிஷ்யே வசனம் தவ' என்பதனுனே அர்ச்சுனன் சுவதருமரூபப் போரில் அதருமத்தன்மை மதிவடிவ மோகநாசத்தைக் காட்டியதாம். அனுன்ம தேகாதிகளில் ஆன்மத்தன்மை மதிவடிவ மோகமோ சர்வப் பிராணிமாத்திரத்து மிருப்பதாதலின் சாதாரணமோகமெனப்படும். போராகிய சுவதருமத்தில் அதருமத்தன்மை மதிவடிவ மோகமோ கேவலம் அர்ச்சுனன்பாலே யிருந்ததாதலின் அசாதாரணமோகமாம். இருமோகமுமிரியும்பொருட்டு ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்கு இக்கீதையை யருளினர் அவ்வகையிதனிரண்டாவதத்தியாயத்திறுதியிற் கூறியருளப்பட்டது. (73)

(அ-கை.) ஆண்டு இத்துணையும் இக்கீதா சாஸ்திரார்த்தத்தைச் சமாப்தி செய்து சஞ்சயரிப்போது முன்மொழிந்த கதையின் சம்பந்தத்தை அனுசந்தானஞ்செய்பவராய்த் திருதராஷ்டிரரை நோக்கிக்கூறல்:—

சு-ம். ஜ_தூஹம் வாஸுதெவஸ்ய பாயஜஸ்ய ச மஹாத்மந: ।
ஸம்வாதமிமமஶ்ரௌஷமத்புதம் ரோமஹர்ஷணம் ॥ (74)

ப-ம். 10 இதி 1 அஹம் 3 வாஸுதெவஸ்ய 5 பாயஜஸ்ய 4 ச 2 மஹாத்மந: 9 ஸம்வாதம் 6 இமம் 11 அஶ்ரௌஷம் 7 அத்புதம் 8 ரோமஹர்ஷணம்.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! யான் மகானுபாவராகிய ஸ்ரீ வாசுதேவ அர்ச்சுனர் அற்புதரோம ஹர்ஷண சம்வாதத்தை முன்மொழிந்த முறையே கேட்டேன். (74)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! யான் மகானுபாவராகிய ஸ்ரீ வாசுதேவ அர்ச்சுனர்களுடைய முன்மொழிந்த கீதாசாஸ்திரவடிவ சம்வாதத்தைக்கேட்டேன். அச்சம்வாதம், அற்புதமாயது; அதாவது சித்தத்திற்கு அத்திபந்தம் விஸ்மயத்தையுண்டாக்குவது; ரோமஹர்ஷணமாயது; அதாவது, உலகில் அசம்பாவ்யமான மாதலின் அற்புத இரசமுடையதாதலின் சரீரரோமங்களை நிறுவுவதும் ஆம். (74)

(அ-கை.) ஹே சஞ்சயரே! தூரதேசத்திலிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணர்ச்சுன சம்வாதத்தை நீரிங்கேயிருந்து எங்ஙனங் கேட்டீர், சமீபத்திலிருந்தன்றே உலகர் கேட்கின்றனரெனின்? தம்பால் அதைக்கேட்கும் யோக்யதையைக் கூறுகின்றனர்.

சு-ம். வ்யாஸப்ரஸாதாச்ச்ருதவா நேதம் குஹ்யமஹம் பரம் ।
யோகம் யோகேச்வராத்க்ருஷ்ணாத் ஸாக்ஷாத்கதயத: ஸ்வயம் ॥ (75)

ப-ம். 1 வ்யாஸப்ரஸாதாத் 12 ச்ருதவாந் 3 ஏதம் 5 குஹ்யம் 2 அஹம் 4 பரம் 6 யோகம் 9 யோகேச்வராத் 10 க்ருஷ்ணாத் 11 ஸாக்ஷாத் 8 கதயத: 7 ஸ்வயம்.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ வியாசரது திருவருளாலே யான் இப்பரமகுகிய யோகத்தைச் சாக்ஷாத் சுயமாகவே கூறுபவனுகியோகீசுராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தினின்றும் நேராகவே கேட்டனன். (75)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ வியாசபகவான் எனக்கருளிய திவ்ய சக்ஷுச் சுரோத்திராதிகளே ஸ்ரீ வியாசபகவான் எனக்கருளிய பிரசாதமாகும். அதனுலே யான் இச்சம்வாதத்தைச் சாக்ஷாத்தெனது பரமேசுரரூபத்தாலே கூறிக்கொண்டு சர்வ யோகிகட்கும் ஈசுரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தினின்றும் நேராகவே சிரவணித்தனனேயலாது பரம்பரையாகச் சிரவணிக்கவில்லை. இத்துணை கூறியதாலே சஞ்சயர் தமது மகாபாக்கியத்தைக் குறிப்பித்தருளினர். அச்சம்வாதம் குகியமாம்; அதாவது, சர்வ சாஸ்திர இரகசியரூபமாதலின் கண்டவர்கட்கெல்லாம் கொடுக்கத்தக்கனவல்லவாம். பரமாம்; அதாவது, மோக்ஷசாதனமாதலின் யாவினும் மேன்மையதாம். யோகமாம்; அதாவது, நியமவாயிலாகச் சித்த நிரோதரூப யோகவேதுவாதலின் யோகரூபமாம்; அல்லது, ஞானயோகரூபமாம். ஈண்டொரு மூலப்புத்தகத்தின்கண்ணே 'ச்ருதவாநிதம்' என்னும் வசனத்தானத்தில் 'ச்ருதிவா நேதத்' என்பதாகவும் பாடமுளது அதுவும் நலமுடையதேயாம். (75)

(அ-கை.) இப்போது சஞ்சயர் அச்சம்வாத ஸ்மரணத்தாலுண்டாய தமது மகிழ்ச்சியைக்கூறுகின்றார்:—

சு-ம். ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதமிமமத்புதம் ।
கேசவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ॥ (76)

ப-ம். 1 ராஜந் 7 ஸம்ஸ்ம்ருத்ய 8 ஸம்ஸ்ம்ருத்ய 6 ஸம்வாதம் 3 இமம் 4 அத்புதம் 2 கேசவார்ஜுநயோ: 5 புண்யம் 10 ஹ்ருஷ்யாமி ச 9 முஹுர்முஹு:.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுனர்களுடைய இப்புண்ணியரூப அத்புத சம்வாதத்தை ஸ்மரித்து ஸ்மரித்து மகிழ்கின்றேன். (76)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுனர்களுடைய இக்கீதா சாஸ்திரரூப சம்வாதம் அற்புதமாயது; அதாவது சித்தத்திற்கு விஸ்மயத்தையடைவிப்பது. புண்ணியமாயது; அதாவது, கேவலம் சிரவணமாத்திரத்தானும் சர்வ பாவங்களையும் நாசஞ்செய்வது. அத்தகைய அற்புத சம்வாதத்தையான் கேவலம் கேட்டன்மாத்திரமல்லேன்; மற்றுே கேட்ட அதை மீண்டு மீண்டும் நினைந்து மகிழ்ச்சியையுமடைகின்றேன். அல்லது, 'ஹ்ருஷ்யாமி' என்பதற் கிப்பொருள்கொள்க. அச்சம்வாதத்தை மீண்டும் மீண்டும் ஸ்மரித்து அடிக்கடியெனது சரீரரோமங்களெழுகின்றன. கருத்திதுவாம்:—பூர்வ அநேகம் ஜன்மங்களில் என்ன புண்ணியம் செய்தேனே, என்ன தவஞ் செய்தேனே, என்ன தானஞ்

செய்தேனோ, எப்பகிமையாலோ ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனர்களுடைய இச்சம்வாதரூப கீதா சாஸ்திரத்தையான் சிரவணிக்கப் பெற்றேனோ அப்புண்ணியாதிசயமறியேன். (76)

(அ-கை.) ஆண்டு ஸ்ரீ பகவானர்ச்சுனனுக்குத் தியானஞ்செய்யும்பொருட்டுத் தமது விசுவரூபமென்னும் சகுணவடிவத்தைக் காட்டியருளினர்; அதை ஸ்மரித்துச் சஞ்சயர் திருதராஷ்டிரருக்குக் கூறுவதாவது :—

சு-ம். தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே: ।
விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந: ॥ (77)

4 தத் 2 ச 7 ஸம்ஸ்ம்ருத்ய 8 ஸம்ஸ்ம்ருத்ய 6 ரூபம் 5 அத்யத்புதம் 3 ஹரே: 11 விஸ்மய: 9 மே 10 மஹாந் 1 ராஜந் 14 ஹ்ருஷ்யாமி 12 ச 13 புந:புந:.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! மீண்டும் கிருஷ்ணபகவானுடைய அதி[illegible] விசுவரூபத்தை ஸ்மரித்து ஸ்மரித்து எனக்கு மகாவிஸ்மய முண்டாகின் இதனாலே யான் மீண்டும் மீண்டும் மகிழ்கின்றேன். (77)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குத் தியானிப்பா[illegible] காட்டியருளிய தமது விசுவரூபமாகிய சகுணரூப அதியற்புதத்தை மீண்டு மீண்[illegible]ம் எண்ணியெண்ணி எனக்கு மகா விஸ்மயமுண்டாகின்றது. இதனாலே யானந்த போகாநந்தக்கடலின் மூழ்குகின்றேன். (77)

(அ-கை.) ஹே திருதராஷ்டிரரே! நீர் உமது துரியோதனாதி மைந்தர் வெற்றிமுதலியவற்றை விரும்பியாதொழித்துப் பாண்டவரோடு சமாதானஞ்செய்து கொள்ளுமென்றிப்போது சஞ்சயர் அவருக்குபதேசிக்கின்றார் :—

சு-ம். யத்ர யோகேஸ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர: ।
தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம ॥ (78)

ப-ம். 1 யத்ர 2 யோகேஸ்வர: 3 க்ருஷ்ண: 4 யத்ர 6 பார்த்த: 5 தநுர்த்தர: [illegible] 8 ஸ்ரீ: 9 விஜய: 10 பூதி: 12 த்ருவா 11 நீதி: 14 மதி: 13 மம.

([illegible]ம்.) ஹே திருதராஷ்டிரரே! எப்பக்கத்தில் யோகேசுவராகிய ஸ்ரீ கிருஷ்ண[illegible]கவானும், எப்பக்ஷத்தில் காண்டீவதாரியாகிய அர்ச்சுனனுமிருக்கின்றனரோ[illegible] அப்பக்கத்திற்றான் ஸ்ரீயும், விஜயமும், பூதியும், நீதியும் அவசியமுண்டாம் [illegible]ன்பதெனது துணிபாம். (78)

([illegible]வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! எத்தருமபுத்திரர் பக்கத்தில் சர்வயோகசித்தி[illegible]ட்கு மீசுராகிய சர்வஞ்ஞ சர்வசக்தி சம்பன்ன பக்தர்களின் றுக்கத்தை யழிக்[illegible]ம் நாராயண நாமமுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கின்றோ[illegible] எத்தருமபுத்திரர் பக்கத்தில் காண்டீவமென்னும் தனுவைத்தரித்த நாமமு[illegible]டைய அர்ச்சுனனிருக்கின்றானோ; நாராயணாசிரித அப்பக்ஷத்தில் ஸ்ரீ, ஜெயம்[illegible] பூதி, நீதியென்னும் நான்கும் ஒருதலையாயுண்டாம். இராஜ்ஜிய இலக்ஷ்மி[illegible]ஸ்ரீ யாம். சத்துருக்களின் பராஜய நிமித்தகமென்மை விஜயமாம். உத்தரோத்த[illegible]ம் இராஜ்ய இலக்ஷ்மியின் விருத்தி பூதியாம். நியாயம் நீதியெனப்படும். [illegible] ஹே திருதராஷ்டிரரே! இவ்வாறெனது நிச்சயமுண்மையாயாதலின்,

உமது மைந்தருக்கு வெற்றியுண்டாமாசையைவிட்டு ஸ்ரீ பகவதனுக்கிரகம்பெற்ற இலக்ஷ்மி விஜயாதிகளோடுகூடிய தருமாதிபாண்டவர்களோடு சமாதானஞ் செய்துகொள்ளுவீராக. (78)

ஆ-சு. [illegible] ।
[illegible] ॥ (1)
[illegible] ।
[illegible] ॥
[illegible] ॥

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசாரிய ஸ்ரீமத் உத்தவாநந்தகிரி களின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீமத் சிற்கனானந்தகிரி சுவாமிகளியற்றிய இருதயதைையாகிய ஸ்ரீமத் பகவத்கீதைக் கூடார்த்ததீபிகை.

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ பகவற்கீதை உரையுடன் முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

## வாழ்த்து.

சித்திமா முகனும்வீர சேகரச் செல்வனே நின்
சத்தியவருளினுனே தனஞ்சயற் கரிமுன் சாற்றும்
புத்தமு தெனுமிக்கீதை பொலிவுறத் தமிழில் வைத்தேன்
வித்தக விளங்குவானின் விரைமலர்க் கழல்கள் போற்றி.